THE

# HOLY BIBLE.

## IN TAMIL.

**The Old Testament,**

TRANSLATED FROM THE ORIGINAL BY THE REV. J. P. FABRICIUS;

**The New Testament,**

BY THE REV. C. T. E. RHENIUS,

AND

*REVISED BY THE COMMITTEE OF THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY.*

WITH CONTENTS OF THE CHAPTERS AND CHRONOLOGY, FROM THE ENGLISH;
AND OCCASIONAL REFERENCES.

MADRAS:
PRINTED AT THE AMERICAN MISSION PRESS, FOR THE MADRAS AUXILIARY
BIBLE SOCIETY, AND AMERICAN BIBLE SOCIETY.

1844.

# சத்தியவேதம்.

இதிலே

மனிதர் இரட்சிக்கப்படும்படிக்காகச்

சர்வலோக தயாபராரான கடவுள் அருளிச்செய்த

## பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும்

அடங்கியிருக்கின்றன.

பழைய ஏற்பாடு பெப்ரோசியுஸ் ஐயராலும்,

புதிய ஏற்பாடு இரேனியுசையராலும்

மூலபாஷைகளிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டும்;

சென்னபட்டணத்திலுள்ள

சத்தியவேத சங்கத்தாராலே பரிசோதித்து

அதிகாரங்களின் அட்டவணையும், ஒத்த வாக்கியமும்

ஏற்படுத்தப்பட்டுமிருக்கிறது.

கி. பி. ௲௮௱௪௪௵லே

சென்னபட்டணத்தில அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

# மோசேஎழுதின

# முதலாம் ஆகமம்.

(கி. மு. ௪௲௪.)

## ௧. அதிகாரம்.

[(௧) வானமும், பூமியும், (௩) வெளிச்சமும், ஆகாசவிரிவுமுண்டாக்கப்பட்ட விவரம், (௯) பூமி சலத்தினின்றும் பிரிக்கப்பட்டு, (௰௧) கனிகொடுக்கும்படி செய்விக்கப்பட்டது. (௰௪) சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், (௨௰) நீர்வாழுஞ் செந்துக்களும், பறவைகளும், (௨௪) மிருகங்களும், உண்டாக்கப்பட்டு, (௨௬) பராபரனுடைய சாயலாக மனுஷன் சிருஷ்டிக்கப்பட்டது. (௨௯) சகலஉயிர்களுக்கும் ஆகாரம் நியமிக்கப்பட்டது.]

ஆதியிலே பராபரன் * வானத்தையும் பூமியையுஞ் சிருஷ்டித்தார். * சங். ௩௩; ௬. ௱௨; ௨௫. கொலோ. ௧, ௰௬. எபி. ௰௧, ௩.

௨. பூமியோவெனில் ரூபமற்றதும் வெறுமையுமாயிருந்தது. ஆழத்தின்மேலிருளுமாயிருந்தது. * ஆனாற் பராபரனுடைய ஆவி தண்ணீர்களின்மேலே அசைவாடிக்கொண்டிருந்தது. * சங். ௩௩, ௬.

௩. ¶ * பராபரன் வெளிச்சமுண்டாகக்கடவதென்றார், அப்போது வெளிச்சமுண்டாயிற்று. * ௨. கொரி. ௪, ௬.

௪. பராபரன் வெளிச்சத்தை நல்லதென்று கண்டார். வெளிச்சத்தையும் இருளையும் பராபரன் வெவ்வேறாகப் பிரித்தார்.

௫. பராபரன் வெளிச்சத்துக்குப் பகலென்று பேரிட்டார். இருளுக்கோ இராவென்று பேரிட்டார். இப்படியே சாயங்காலமானதிலும் விடியுங்காலமானதிலும் முதலாம் நாளுண்டாயிற்று.

௬. ¶ பிற்பாடு பராபரன் தண்ணீர்களுக்கு நடுவே * ஆகாசவிரிவுண்டாகக்கடவதென்றும், அத்தண்ணீர்களுக்குந் தண்ணீர்களுக்கும் பிரிவுண்டாக்கக் கடவதென்றுஞ் சொன்னார். * சங். ௱௪, ௨.

௭. அப்படியே பராபரன் ஆகாசவிரிவை உண்டுபண்ணி, ஆகாசவிரிவுக்குக் கீழேயிருக்கிற தண்ணீர்களுக்கும், * ஆகாசவிரிவுக்கு மேலேயிருக்கிற தண்ணீர்களுக்கும், பிரிவுண்டாக்கினார். அது அப்படியே ஆயிற்று. * சங். ௱௪௮, ௪.

௮. ஆகாசவிரிவுக்குப் பராபரன் வானமென்று பேரிட்டார். இப்படியே சாயங்காலமானதிலும் விடியுங்காலமானதிலும் இரண்டாம் நாளுண்டாயிற்று.

௯. ¶ பிற்பாடு பராபரன் வானத்தின் கீழிருக்கிற தண்ணீர்கள் * ஒரேயிடத்திலே சேரவும், வெட்டாந்தரை காணப்படவுங் கடவதென்றார். அது அப்படியே ஆயிற்று. * யோபு. ௩௮, ௮, ௰, ௰௧. சங். ௩௩, ௭. ௱௪, ௭-௯.

௰. பராபரன் வெட்டாந்தரைக்குப் பூமியென்றுஞ் சேர்ந்த தண்ணீர்களுக்குச் சமுத்திரங்களென்றும் பேரிட்டார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௧. அப்போது பராபரன், பூமியானது புல்லையும், விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையும், பூமியின்மேலே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைத் தங்கள் தங்கள் சாதியின்படியே கொடுக்குங் கனிவிருட்சங்களையும், முளைப்பிக்கக்கடவதென்றார். அது அப்படியே ஆயிற்று.

௰௨. பூமி தங்கள் தங்கள் சாதியின்படியே புல்லையும், விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையும், தங்கள் தங்கள் சாதியின்படியே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைக் கொடுக்கும் விருட்சங்களையும் முளைப்பித்தது. பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௩. அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதிலே மூன்றாம் நாளுண்டாயிற்று.

௰௪. ¶ பிற்பாடு பராபரன், பகலுக்கும் இராவுக்கும் வித்தியாசம் பண்ணத்தக்க * வெளிச்சங்கள் வானமென்ற ஆகாசவிரிவிலே யுண்டாகக்கடவதென்றும், அவைகள் அடையாளங்களாகவுங் குறித்தகாலங்கள் நாட்கள் வருஷங்களை யறிகிறதுக்காகவுமிருந்து; * சங். ௱௩௬, ௭-௯.

௰௫. பூமியின்மேலே பிரகாசிக்கும்படிக்கு, வானமென்ற ஆகாசவிரிவிலே வெளிச்சங்களாயிருக்கக்கடவதென்றுஞ் சொன்னார். அது அப்படியே ஆயிற்று.

௰௬. பராபரன் பகலை ஆளப் பெரிதாயிருக்கிற வெளிச்சமும், இராவை ஆளச் சிறிதாயிருக்கிற வெளிச்சமுமாகிய இரண்டு பெரிய வெளிச்சங்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார்.

௰௭. அவைகளைப் பராபரன் பூமியின்மேற் பிரகாசிக்கவும்;

௰௮. பகலையும் இராவையும் ஆளவும், வெளிச்சத்துக்கும், இருளுக்கும், வித்தியாசமுண்டாக்கவும், வானமென்ற ஆகாசவிரிவிலே வைத்தார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௯. அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால் நாலாம் நாளுண்டாயிற்று.

௨௰. ¶ பிற்பாடு பராபரன் தண்ணீர்கள், நீந்தும் உயிர்ப்பிராணிகளையும், பூமியின்மேல் ஆகாசவிரிவிலே பறக்கும் பறவைகளையுந் திரளாய்ச் ஜெனிப்பிக்கக்கடவதென்றார்.

௨௧. அப்படியே பராபரன் பெரிய திமிங்கலங்களையுந் தண்ணீர்கள் சாதிசாதியாகத் திரளாய்ச் ஜெனிப்பித்த சகலவித நீச்சுப்பிராணிகளையும், சாதி சாதியாயிருக்கிற செட்டைகளுள்ள சகலவித பட்சிகளையுஞ் சிருஷ்டித்தார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௨. பராபரன் அவைகளையாசீர்வதித்து, *நீங்கள் பலுகிப்பெருகிக் கடல்களிலுள்ள தண்ணீர்களை நிரப்புங்களென்றும், பறவைகள் பூமியிற் பெருகக்கடவதென்றுஞ் சொன்னார். * ௮, ௰௭.

௨௩. அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால் ஐந்தாம் நாளுண்டாயிற்று.

௨௪. ¶ பிற்பாடு பராபரன் பூமியானது சாதிசாதியான ஜீவஜெந்துக்களாயிருக்கிற மிருகங்களையும், ஊர்வனவற்றையும், பூமியின் காட்டுமிருகங்களையும், சாதி சாதியாக ஏழும்பப்பண்ணக்கடவதென்றார். அது அப்படியே ஆயிற்று.

௨௫. பராபரன் சாதி சாதியான பூமியின் காட்டுமிருகங்களையும், சாதிசாதியான மிருகங்களையும், சாதிசாதியான சகல பூமியின் ஊர்வனவற்றையுமுண்டாக்கினார். பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௬. ¶ பிற்பாடு பராபரன் * நம்முடைய சாயலாக, நம்முடைய ரூபத்தின்படியே மனுஷனையுண்டாக்குவோமாக. அவர்கள் சமுத்திரங்களின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனவற்றையும், ஆளக்கடவர்களென்றார். * ௫, ௧. ௯, ௬. ௧. கொ. ௰௧. ௭. எபே. ௪, ௨௩, ௨௪. கொலோ. ௩, ௰.

௨௭. * அப்படியே பராபரன் மனுஷனைத் தம்முடைய சாயலாகச் சிருஷ்டித்தார்: அவனைப் பராபரனுடைய சாயலாகச் சிருஷ்டித்தார்: ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார். * மத்தே. ௰௯, ௪.

௨௮. அப்போது பராபரன் அவர்களையாசீர்வதித்து, * நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரம்பப்பண்ணி, அதைக் கீழ்ப்படுத்திச் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல மிருகஜீவன்களையும், ஆண்டுகொள்ளுங்களென்று பராபரன் அவர்களுக்குச் சொன்னார். * ௮, ௰௭. ௯, ௧.

௨௯. ¶ பின்னையும் பராபரன் சொன்னதாவது, * இதோ பூமியின்மீதெங்குமிருக்கிற விதைதருஞ் சகலவித பூண்டுகளையும், விதைதரும் கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும், உங்களுக்குக் கொடுத்தோம். அவைகள் உங்களுக்கு ஆகாரமாயிருக்கக்கடவது. * ௯, ௩.

௩௰. ஜீவபிராணனுள்ள பூமியினுடைய சகல மிருகங்களுக்கும், ஆகாசத்தினுடைய சகல பறவைகளுக்கும், பூமியின்மேல் ஊர்வனவெல்லாவற்றுக்கும், சகல பச்சைப்பூண்டு பயிர்களையும், ஆகாரமாகக் கொடுத்தோமென்றார். அது அப்படியே ஆயிற்று.

௩௧. அப்போது பராபரன் தாமுண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார். இதோ *மெத்தவும் நன்றாயிருந்தது. அப்படியே சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால், ஆறாம் நாளுண்டாயிற்று. *௫. மோ. ௩௨, ௪.

## ௨. அதிகாரம்.

[(௧) முதலாவது ஓய்வுநாள். (௪.) சிருஷ்டிப்பின் விவரம். (௮) ஏதேனென்னுந் தோட்டம் நாட்டப்பட்டது. (௰) அதிலிருந்த நதி. (௰௭) நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைமாத்திரம் விலக்கப்பட்டது. (௰௯, ௨௰) சகல உயிர்களுக்கும் பெயர் தரிக்கப்பட்டது. (௨௧) ஸ்திரியுண்டாக்கப்பட்டு, விவாகம் நேமிக்கப்பட்டது.]

இந்தப்பிரகாரமாக வானமும் பூமியும் அவைகளுடைய எல்லாச்சேனையும் உண்டாக்கப்பட்டுத் தீர்ந்தது.

௨. * பராபரன் உண்டாக்கின தம்முடைய கிரியையை ஏழாம் நாளிலே நிறைவேற்றின பிற்பாடு, அவர் தாமுண்டாக்கின தம்முடைய கிரியையெல்லாம் முடித்தபின், ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார். * ௨. மோ. ௨௰, ௰௧. ௩௧, ௰௭. ௫. மோ. ௫, ௰௪. எபி. ௪, ௪.

௩. பராபரன் ஏழாம் நாளை யாசீர்வதித்து, அதைப் பரிசுத்தமாக்கினார். அதேதென்றால், பராபரன் உண்டுபண்ணிச் சிருஷ்டித்த தம்முடைய கிரியையெல்லாம் முடித்தபின் அதிலே ஓய்ந்திருந்தார்.

௪. ¶ பராபரனாகிய கர்த்தர் பூமியையும், வானத்தையும், உண்டாக்குகிற நாளிலே வானமும், பூமியுஞ் சிருஷ்டிக்கப்பட்ட பூர்வோத்திரங்கள் இவைகள்தான்.

௫. நிலத்தினுடைய சகலவிதச் செடிகள் பூமியின்மேல் இன்னமிருந்ததில்லை. நிலத்தினுடைய சகலவிதப் பூண்டுகள் இன்னம் முளைத்ததுமில்லை. ஏனென்றால், பராபரனாகிய கர்த்தர் பூமியின்மேல் இன்னம் வருஷிக்கப்பண்ணினதில்லை. நிலத்தைக் கையாள மனுஷனுமில்லை.

௬. அப்போது மூடுபனி பூமியிலிருந்தெழும்பி, பூமியையெல்லாம் நனைத்தது.

௭. பராபரனாகிய கர்த்தர் மனுஷனை * பூமியின் மண்ணினாலே உருவாக்கிச் சீவனின் சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார். அப்போது மனுஷன் † சீவாத்துமாவானான். * ௧. கொ. ௰௫. ௪௭. † ௧. கொ. ௰௫, ௪௫.

௮. ¶ பராபரனாகிய கர்த்தர் ஏதேனிலே கிழக்கே ஒரு தோட்டத்தை நாட்டி, தாம் உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார்.

௯. பார்வைக்கு விருப்பமும், புசிப்புக்கு நலமுமான சகலவித விருட்சங்களையும், தோட்டத்தின் நடுவிலே *சீவனின் விருட்சத்தையும், நன்மை தின்மை அறியத்தக்க விருட்சத்தையும், பராபரனாகிய கர்த்தர் பூமியிலிருந்து முளைக்கப்பண்ணினார். *அறி. ௨, ௭.

௰. * ஏதேனிலேயிருந்து, ஒரு நதி தோட்டத்துக்குப் பாயப்புறப்பட்டு, அங்கேயிருந்து பிரிந்து நாலு தலையான ஆறுகளாயிற்று.

௰௧. முதலாவதற்குப் பேர் பீசோன். இது பொன்னுண்டாயிருக்கும் ஆவிலா தேசத்தையெல்லாஞ் சுற்றி ஓடுது.

௰௨. அந்தத் தேசத்தின் பொன் நல்லது. அவ்விடத்திலே பெதோலாகும் கோமேதகக் கல்லும் உண்டு.

௰௩. இரண்டாம் ஆற்றுக்குப் பேர் கீகோன், இது எத்தியோப்பிய தேசத்தையெல்லாஞ் சுற்றி ஓடுது.

௰௪. மூன்றும் ஆற்றினுடைய பேர் *இதேக்கேல். இது அசூரியாவுக்குக் கிழக்காய் ஓடுது. நாலாம் ஆறென்றால் ஐபிராத்து. * தானி. ௰. ௪.

௰௫. ¶ பராபரனாகிய கர்த்தர் மனுஷனை அழைத்துக்கொண்டு, அவனை ஏதேன் தோட்டத்திலே அதைக் கையாளவுங் காக்கவும் வைத்தார்.

௰௬. பராபரனாகிய கர்த்தர் மனுஷனுக்குக் கற்பித்துச் சொன்னதாவது; நீ தோட்டத்தினுடைய சகல விருட்சத்தின் கனியும் புசிக்கவே புசிக்கலாம்.

௰௭. ஆனால் நன்மை தின்மை யறியத்தக்க விருட்சத்தின் கனியிலே புசியாயாக. ஏனெனில், அதிலே நீ புசிக்கிற நாளிலே *சாகவே சாவாயென்றார். *உரோ. ௫; ௰௨.

௰௮. ¶ பின்னையும் பராபரனாகிய கர்த்தர் மனுஷன் ஒண்டியாயிருக்கிறது நல்லதல்ல. அவனுக்குத் துணையாக இருக்க ஒரு துணையை அவனுக்கு உண்டாக்குவோமென்றார்.

௰௯. ஏனெனில், பராபரனாகிய கர்த்தர் மண்ணினாலே வெளியின் சகல மிருகங்களையும், ஆகாசத்தினுடைய சகல பறவைகளையும், உருவாக்கியிருந்து மனுஷனண்டைக்கு அவைகளுக்கெப்படிப் பேரிடுவானென்று பார்ப்பதற்கும், அந்தந்தச் சீவப்பிராணிக்கு மனுஷன் எதெந்தப் பேரிடுவானோ அதுவே அதுக்குப் பேராயிருப்பதற்குங் கூட்டிவந்தார்.

௨௰. அப்படியே மனுஷன் சகலவித மிருகத்துக்கும், ஆகாசத்துப் பறவைக்கும், வெளியின் சகல சீவனுக்கும் பேரிட்டான். ஆனால் தனக்குத் துணையாக இருக்குந் துணையை மனுஷன் கண்டதில்லை.

௨௧. ¶ அப்போது பராபரனாகிய கர்த்தர் மனுஷன்மேல் அசந்த நித்திரையை விழப்பண்ணினார், அவன் நித்திரைபோனான், அப்போது அவர் அவன் விலா எலும்புகளிலொன்றையெடுத்து, அந்த இடத்தைச் சதையினால் அடைத்தார்.

௨௨. * தாம் மனுஷனில் எடுத்த விலா எலும்பைப் பராபரனாகிய கர்த்தர் ஸ்திரீயாக வுண்டாக்கி, அவளை மனுஷனண்டைக்குக் கொண்டுவந்தார். * ௧. கொ. ௰௧, ௮. ௯. ௧. தீமோ. ௨, ௰௩.

௨௩. அப்போது மனுஷன், இவள் இப்போது * என் எலும்பில் எலும்பும், என் மாமிசத்தில் மாமிசமுமானாள். இவள் மனுஷனில் எடுக்கப்பட்ட படியினாலே, இவள் மனுஷியென்று பேரிடப்படுவாளென்றான். * எபே. ௫, ௩௰, ௩௧.

௨௪. * இதினிமித்தமாகப் புருஷன் தன் தகப்பனையுந் தன் தாயையும் விட்டுத் தன் பெண்சாதியுடனே இசைந்திருப்பான்; † இருவரும் ஒரே மாமிசமாக இருப்பார்களென்றார். * மத்தே. ௰௯, ௫. மாற்கு. ௰. ௭. † எபே. ௫, ௨௮. ௨௯.

௨௫. ஆதாமும் அவன் பெண்சாதியிருவரும் * நிருவாணமாயிருந்தும், வெட்கப்படாதிருந்தார்கள். * ௩, ௭.

## ௩. அதிகாரம்.

[(௧) சர்ப்பம், ஏவாளை வஞ்சித்தது. (௬) ஆதாமும், ஏவாளுமாகிய ஆதிமனுஷர்கள் பாவஞ்செய்தது. (௯) அவர்களைப் பராபரன் விசாரித்தது. (௰௪) சர்ப்பஞ் சபிக்கப்பட்டது. (௰௫) வாக்குத்தத்தம் பண்ணப்பட்டது. (௰௬) மனுஷருக்குத் தண்டனை கொடுக்கப்பட்டது. (௨௧) அவர்கள் முதல் முதல் தரித்துக்கொண்ட உடை. (௨௨) அவர்கள் பரதீசையிட்டுத் துரத்தப்பட்டது.]

௩ சர்ப்பமோவெனில், பராபரனாகியகர்த்தர் உண்டாக்கின வெளியினுடைய சகல சீவனகளைபபார்ககிலுந தநதிரமுள்ளதாயிருநது, ஸ்திரீயுடனே நீஙகள தோட்டததினுடைய எலலாவிருட்சஙகளின கனியிலும் புசிக்கவேண்டாமென்று பராபரன சொன்னதுண்டோவென்றது.

௨. அப்பொது ஸ்திரீ சர்ப்பததுடனே சொன்னதாவது; தோட்டத்தினுடைய விருட்சஙகளின கனியிறபுசிககிறோம.

௩. ஆனாலதோட்டத்தினநடுவிலேயிருக்கிற விருட்சத்தினகனியைககுறித்துப்பராபரன: நீஙகள சாவாதபடிககு அதிலேபுசிககவும அதைத்தொடவும வேண்டாமென்றொன்று சொன்னாள.

௪. * அப்பொது சர்ப்பம ஸ்திரீயுடனே: நீஙகள சாவவே சாவதிலலை. * யோ. ௮, ௪௪. ௨. கொரி. ௰௧, ௩.

௫. ஏனெனில், நீஙகள அதிலே புசிககும் நாளிலே உஙகளகண்கள திறககபபடுமெனறும, நீஙகள நனமையுந தீமையுமறிநது, பராபரனைபபோல இருபபீர்களெனறும, பராபரன அறிவாரெனறது.

௬. ¶ * அப்பொதுஸ்திரீயானவள, அந்த விருட்சம போசனததுககு நலலதெனறும், அது கண்களுககு விருபபமும, புததியைத தருகிறதற்கான இச்சிககபபடததகக விருட்சமுமாயிருககுதெனறுமபார்தது, அதின கனியிலே அறுததுப புசிதது, தன புருஷனுககுங கூடககொடுததாள. அவனும புசித்தான. * ௧. தீமோ. ௨, ௰௪.

௭. அப்பொது அவர்கள இருவருடையகண்களுந்திறககபபட்டன. அவர்கள தாஙகள நிருவாணிகளெனறு கண்டறிநது, அத்தியிலைகளைத தைததுத்தஙகளுககுக கச்சைகளையுண்டுபண்ணினார்கள. * ௨. ௨௫,

௮. பகலகுளிர்ச்சியான வேளையிலேயென்றால், தோட்டததில உலாவிககொண்டிருககிற பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைககேட்டார்கள. அப்பொது ஆதாமும், அவன பெண்சாதியும, பராபரனாகிய கர்த்தரின சனனிதியைவிட்டு, தோட்டததுவிருட்சஙகளினநடுவில ஒளிததுககொணடார்கள.

௯. ¶ ஆனால பராபரனாகியகர்த்தர் ஆதாமைககூபபிட்டு, அவனை நீஎஙகேயெனறார்.

௰. அதறகவன, நான தேவரீருடைய சத்தத்தைத் தோட்டததிலேகேட்டு, நான நிருவாணியானபடியினாலே, பயநது ஒளித்துககொண்டேனென்றான.

௰௧. அப்பொது அவர் நீநிருவாணியெனறு உனக்கறிவித்தவனார்! * புசிக்கவேண்டாமெனறு நாம உனககுககறபிதத விருட்சத்தின கனியைப புசித்தாயோவெனறார். * ௨. ௰௭, ௰௭.

௰௨. அதறகு ஆதாம, என்னுடனேயிருககத தேவரீர் கட்டளையிட்ட ஸ்திரீயானவள் விருட்சததின கனியை எனககுக கொடுததாள, நான புசிததேனென்றான.

௰௩. அப்பொது பராபரனாகிய கர்த்தர் ஸ்திரீயைநோககி, நீ இதைசசெயததெனனவெனறார். ஸ்திரீயானவள், சர்ப்பம் என்னை மோசம்போக்கினதினாலேபுசித்தேனென்றாள்.

௰௪. ¶ அப்பொது பராபரனாகிய கர்த்தர் சர்ப்பத்துடனேசொன்னதாவது; நீஇதைச் செயதபடியினாலே எலலாமிருகஙகளிலும, வெளியினுடைய எலலாசசீவனகளிலும, நீ சபிககபபட்டது; நீ உனவயிறறினாலே நகர்நது, உயிரோடிருககிறநாளெலலாம் மண்ணைததினபாய.

௰௫. ¶ உனககும ஸ்திரீககும, உன்னுடையவிததுககும, அவளுடையவித்துக்கும், பகைமையையுண்டாககுவோம. * இவர் உன தலையை நசுககுவார். நீ அவர் குதிகாலை நசுககுவாயெனறார். * ௧. யோ. ௩. ௮.

௰௬. ¶ * ஸ்திரீயோடே அவர் சொன்ன தாவது; நீ கெர்பபவதியாயிருககும வருததத்தை மிகவும பெருகபபணணுவோம, வேதனையோடே பிளளைகளைப பெறுவாயெனறும, உன்னுடைய இசசை உன புருஷனுககுக கீழாயிருபபதாக, அவன உன்னை ஆளககடவானெனறுஞ சொன்னார். * ௧. கொ. ௰௧. ௩. ௰௪. ௩௪. எபே. ௫. ௨௨, ௨௩.

௰௭. பிறபாடு ஆதாமோடே அவர் சொன்னதாவது; நீ உனபெண்சாதியின சத்தத்துககுச செவிகொடுதது, புசியாயாகவெனறு நாமுனககுக கறபிதத விருட்சததின கனியைப புசித்தபடியினாலே, பூமி உனநிமித்தஞ்சபிககபபட்டிருககும. நீஉயிரோடிருக்கிறநாளெல்லாம்வருத்தத்தோடே அதினபலனைப்புசிபபாய.

௰௮. அது உனககு முளளுங குருககும முளைபபிககும, வெளியின பயிர்வகைகளைப புசிபபாய.

௰௯. நீ பூமிககுள திருமபுமட்டும * உன முகததினவேர்வையால, அப்பம் புசிக்கக் கடவாய. அதேனெனில், அதில எடுககப பட்டாய. ஏனென்றால், † நீ மண்ணாயிருககிறாய, மண்ணுககுத திருமபுவாயெனறார். * ௨. தெச. ௩. ௰. † ௰௮. ௨௭.

௨௰. ஆதாம தனபெண்சாதிககு, ஏவாளெனறு பேரிட்டான. ஏனெனில, அவள சீவனுளளோருககெல்லாந் தாயானவள.

௨௧. ¶ பராபரனாகிய கர்த்தர் ஆதாமுககும அவன பெண்சாதிககுந தோல அஙகிகளையுண்டாககி அவர்களுககுத தரிபபித்தார்.

௨௨. ¶ பிறபாடு பராபரனாகிய கர்த்தர் இதோ மனுஷன், நனமை தீமை அறியத்தக்கதாக நமமிலொருததனைப போலா

ருந்தான. இப்போதும், அவன் தன்கையை நீட்டி, ஜீவவிருட்சத்தின் கனியையும் அறுத்துப் புசித்து, என்றைக்கும் உயிரோடிராதபடிக்குக் கட்டளைபண்ணவேண்டுமென்றுசொல்லி;

௨௩. பராபரனாகிய கர்த்தர் அவனை அவன் எடுக்கப்பட்ட பூமியைப் பயிரிடும்படிக்கு, ஏதேன்தோட்டத்திலிருந்தனுப்பிவிட்டார்.

௨௪. அவர் மனுஷனைத் துரத்திவிட்டு, ஏதேனென்கிற தோட்டத்துக்குக் கிழக்கே கேருபீன்களையும், அசைவாடுகிற சுடர் ஒளி வளைப்பட்டயத்தையும், ஜீவவிருட்சத்துக்குப் போகிறவழியைக் காப்பதற்காக வைத்தார்.

## ௪. அதிகாரம்.

[(௧) காயீன் ஆபேல் என்பவர்களுடைய பிறப்பு, தொழில், மார்க்கமுதலியவற்றைச் சொல்லியது. (௮) ஆபேலைக்கொலைசெய்யப்பட்டது. (௰௧) காயீன் சபிக்கப்பட்டது. (௰௭) ஆனோக்கென்ற முதல பட்டணம். (௰௯) லாமேக்கையும் அவன் இரண்டுபெண்சாதிகளையுங்குறித்தது. (௨௫) சேத் என்பவனும், (௨௬) ஏனோஸ் என்பவனும் பிறந்தது.]

பிறபாடு ஆதாம் தன்பெண்சாதியாகிய ஏவாளை அறிந்தான். அவள் கெர்ப்பந்தரித்து, காயீனைப்பெற்று கர்த்தராகிய புருஷனை எனக்கிருக்கிறோனென்றாள்.

௨. அப்புறம் அவன் சகோதரனாகிய ஆபேலைப்பெற்றாள். ஆபேல் ஆடுமேய்ப்பனானான். காயீனோவெனில், நிலத்தைப்பயிரிடுகிறவனானான்.

௩. சிலநாள் சென்றபிறபாடு சம்பவித்ததேதென்றால், காயீன் நிலத்தின் கனியிலே கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தான்.

௪. ஆபேலோவென்றால், அவனுந் தன்மந்தையின் தலையீற்றுகளிலும், அவைகளின் கொழுப்பிலுஞ் சிலவற்றைக்கொண்டு வந்தான். ஆனால்,* கர்த்தர் ஆபேலையும், அவன் காணிக்கையையும் நோக்கிப்பார்த்தார். * எபிரே. ௰௧. ௪.

௫. காயீனையும் அவன் காணிக்கையையும் நோக்கிப் பாராதேபோனார். அப்போது காயீனுக்கு மிகவும் எரிச்சலுண்டாய், அவனுடைய முகநாடி வேறுபட்டது.

௬. அப்போது கர்த்தர் காயீனோடே சொன்னதாவது; உனக்கேன் எரிச்சலுண்டாயிற்று! உன்முகநாடியேன்வேறுபட்டது!

௭. நீ நன்மைசெய்தால், மேன்மையில்லையோ? நீ நன்மைசெய்யாயேயாகில், பாவம் வாசற்படியிலே படுத்துக்கொண்டிருக்குது. அதின் இச்சை உன்பேரில் வைக்கப்பட்டது, * நீயோவெனில், அதை ஆண்டுகொள்ளுவாயாகவென்றார். * ௨ரோ. ௬. ௰௨.

௮. ¶ அப்போது காயீன் தன் சகோதரனாகிய ஆபேலோடே பேசினான். அவர்கள் வெளியிலேயிருக்கிறபோதேதோவெனில், சம்பவித்ததேதென்றால், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு விரோதமாயெழும்பி, * அவனைக்கொன்றுபோட்டான். * மத்தே. ௨௩. ௩௫. ௧. யோ. ௩, ௰௨. யூதா. ௰௧.

௯. கர்த்தர் காயீனுடனே உன் சகோதரனாகிய ஆபேல் எங்கேயென்றார். அதற்கவன் நான் அறியேன். நானென் சகோதரனுக்குக் காவலாளியோவென்றான்.

௰. அப்போது அவர் சொன்னதாவது; என்னசெய்தாய்! உன் சகோதரனுடைய இரத்தத்தின் சத்தம் * பூமியிலிருந்து நம்மை நோக்கிக் கூப்பிட்டுக் கொண்டிருக்குது. * எபி. ௰௨. ௨௪.

௰௧. இப்போது உன் சகோதரனுடைய இரத்தத்தை உன்கையிலே வாங்கிக்கொள்ளத் தன்வாயைத்திறந்த இந்தப்பூமியிலே, நீ யிராதபடிக்குச் சபிக்கப்பட்டிருப்பாய்.

௰௨. நீ நிலத்தைப்பயிரிடும்போது அது இனித் தன்சாரத்தை உனக்குக்கொடாது. நீ பூமியில் நிலையற்றவனும் அலைகிறவனுமாயிருப்பாயென்றார்.

௰௩. அப்போது காயீன் கர்த்தரோடே சொன்னதாவது; என் அக்கிரமம் மன்னிக்கப்படக்கூடாதபடிக்குப் பெரிதாயிருக்குது.

௰௪. இதோ இன்று என்னை இந்தத்தேசத்திலிருந்து துரத்திவிடுகிறீர். நான் தேவரீருடைய சமுகத்தைவிலகி மறைந்து, * பூமியில் நிலையற்றவனும், அலைகிறவனுமாயிருப்பேன். இப்படி என்னைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் என்னைக் கொன்றுபோடுவானென்றான். * யோபு. ௰௫. ௨௰, ௨௧.

௰௫. அப்போது கர்த்தர் அவனுடனே ஆகையால், காயீனைக்கொல்லுகிற எவன் மேலும் ஏழு பழி சுமருமென்றுசொல்லி, காயீனைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் அவனைக் கொன்றுபோடாதபடிக்குக் கர்த்தர் அவனுக்கொரு அடையாளம்போட்டார்.

௰௬. அப்படியே காயீன் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப்புறப்பட்டு ஏதேனுக்குக் கிழக்கான நோதென்றதேசத்தில் குடியிருந்தான்.

௰௭. காயீன் தன் பெண்சாதியை அறிந்தான். அவள்கெர்ப்பந்தரித்து, ஆனோக்கைப் பெற்றாள், காயீன் ஒருபட்டணத்தைக்கட்டி அந்தப் பட்டணத்துக்குத் தன் குமாரன் ஆனோக்குடைய பேரைத்தரித்தான்.

௰௮. ஆனோக்குக்கு, ஈராத் பிறந்தான். ஈராத் மெகூயவேலைப்பெற்றான். மெகூயவேல், மெத்தூசவேலைப்பெற்றான். மெத்தூசவேல், லாமேக்கைப்பெற்றான்.

௰௯. ¶ லாமேக் இரண்டு பெண்சாதிகளை விவாகம்பண்ணினான். முதலாம் பெண்சாதியின்பேர் ஆதாள், இரண்டாம் பெண்சாதியின்பேர் சில்லாள்.

௨௰. ஆதாள் யாபாலைப்பெற்றாள். அவன் கூடாரங்களில் வாசம்பண்ணி மந்தைவைச்சிருப்பவர்களுக்குத் தகப்பனானான்.

௨௧. அவன் சகோதரனுடைய பேர் யூபால், அவன் சகல சுரமண்டலக்காரருக்கும் கின்னரக்காரருக்குந் தகப்பனானான்.

௨௨. சில்லாளுங்கெர்ப்பந்தரித்துத் தூபால் காயீனைப்பெற்றாள். அவன் சகல கன்னாருக்கும் கொல்லருக்கும் முதலாளி. தூபால் காயீனுடைய சகோதரி நாமாள்.

௨௩. லாமேக் தன் பெண்சாதிகளாகிய ஆதாளோடும் சில்லாளோடுஞ் சொன்னதாவது; லாமேக்கின் பெண்சாதிகளே, என் சத்தத்தைக்கேட்டு என்சொல்லுக்குச் செவிகொடுங்கள், ஒரு மனுஷனை எனக்குக்காயமுண்டாகவும், ஒருவாலிபனை எனக்குத்தழும்புண்டாகவுங் கொன்றுபோட்டேன்.

௨௪. காயீனுக்காக ஏழுபழியும், லாமேக்குக்காக எழுபத்தேழுபழியுஞ் சுமருமென்றான்.

௨௫. ¶ ஆதாம், பின்னையுந்தன் பெண்சாதியை அறிந்தான். அவள் ஒரு குமாரனைப் பெற்று, காயீன் கொன்றுபோட்ட ஆபேலுக்குப்பதிலாகப்பராபரன் எனக்குவேறொருவித்தைக்கொடுத்தாரென்றுசொல்லி, அவனுக்கு * சேத்என்றுபேரிட்டாள். * ௫. ௩.

௨௬. சேத்துக்கும் ஒரு குமாரன் பிறந்தான். அவனுக்கு * ஏனோஸ் என்றுபேரிட்டான். அப்போது கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளத்துவக்கமாயிற்று. * ௫. ௬.

## ௫. அதிகாரம்.

[(௧) ஆதாமுதல் நோவாபரியந்த மிருந்த பிதாக்களின் வமிச அட்டவணையையும், ஆயுளையும், மரணத்தையும், (௨௪) ஏனோக்குடைய தேவபத்தியையும், அவன் பரகதி சேர்ந்தவழியையுங் குறித்தது.]

ஆதாமுடைய சந்ததிகளின் அட்டவணையாவது, * பராபரன் மனுஷனைச் சிருஷ்டிக்கிற நாளிலே † அவனைப் பராபரனுடைய சாயலாக உண்டாக்கினார். * ௧. நாளா. ௧ ௫௲ ௧. ௨௭.

௨. அவர்களை ஆணும் பெண்ணுமாகச் சிருஷ்டித்து, அவர்களையாசீர்வதித்து, அவர்கள் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலே அவர்களுக்கு மனுஷரென்று பேரிட்டார்.

௩. ஆதாம் நூற்றுமுப்பதுவருஷம் உயிரோடிருந்தபோது, தன் சாயலாகத் தன்னுடைய ரூபத்தின்படியே, ஒரு குமாரனைப் பெற்று. * அவனுக்குச்சேத்தென்று பேரிட்டான். * ௪. ௨௫.

௪. ஆதாம் சேத்தைப் பெற்றபிறபாடு, எண்ணூறுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றான்.

௫. ஆகையால் ஆதாம் உயிரோடிருந்த நாளெல்லாந் தொளாயிரத்து முப்பதுவருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௬. ¶ சேத் நூற்றைந்துவயதாயிருந்து, * ஏனோசைப்பெற்றான்.

௭. சேத் ஏனோசைப்பெற்றபிறபாடு, எண்ணூற்றேழுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௮. ஆகையால் சேத்துடைய நாளெல்லாந் தொளாயிரத்துப் பன்னிரண்டு வருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௯. ¶ ஏனோஸ் தொண்ணூறு வயதாயிருந்து கேனானைப்பெற்றான்.

௰. ஏனோஸ் கேனானைப் பெற்றபிறபாடு, எண்ணூற்றுப் பதினைந்துவருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௧. ஆகையால், ஏனோசுடைய நாளெல்லாந் தொளாயிரத்தைந்துவருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௰௨. கேனான் எழுபது வயதாயிருந்து மகலாலேயேலைப்பெற்றான்.

௰௩. கேனான் மகலாலேயேலைப் பெற்றபிறபாடு, எண்ணூற்று நாற்பதுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௪. ஆகையால், கேனானுடைய நாளெல்லாந்தொளாயிரத்துப் பத்துவருஷமாயிருந்தது. பிறபாடுமரித்தான்.

௰௫. ¶ மகலாலேயேல் அறுபத்தைந்து வயதாயிருந்து யாரேதைப்பெற்றான்.

௰௬. மகலாலேயேல் யாரேதைப் பெற்றபிறபாடு எண்ணூற்றுமுப்பதுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௭. ஆகையால், மகலாலேயேலுடைய நாளெல்லாம் எண்ணூற்றுத்தொண்ணூற்றைந்துவருஷமாயிருந்தது. பிறபாடு மரித்தான்.

௰௮. யாரேத் நூற்றறுபத்திரண்டு வயதாயிருந்து ஏனோக்கைப்பெற்றான்.

௰௯. யாரேத் ஏனோக்கைப் பெற்றபிறபாடு, எண்ணூறுவருஷம் உயிரோடிருந்து குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றான்.

௨௰. ஆகையால், யாரேத்துடைய நாளெல்லாம், தொளாயிரத்தறுபத்திரண்டு வருஷமாயிருந்தது. பிறபாடு மரித்தான்.

௨௧. ¶ ஏனோக் அறுபத்தைந்து வயதாயிருந்து மெத்தூசலாவைப்பெற்றான்.

௨௨. ஏனோக் மெத்தூசலாவைப் பெற்றபிறபாடு, முந்நூறுவருஷம் பராபரனோடே சஞ்சரித்துக்கொண்டிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றான்.

௨௩. ஏனோக்குடைய நாளெல்லாம் முந்நூற்றறுபத்தைந்து வருஷமாயிருந்தது.

௨௪. * ஏனோக் பராபரனோடே சஞ்சரித்துக் கொண்டிருக்கையில், இராதேபோனான். ஏனெனில், பராபரனவனை * எடுத்துக்கொண்டார். * எபி. ௰௧, ௫. யூதா. ௰௪. ௰௫. * ௨. இரா. ௨, ௰௧.

௨௫. ¶ மெத்தூசலாக் நூற்றெண்பத்தேழு வயதாயிருந்து லாமேக்கைப்பெற்றான்.

௨௬. மெத்தூசலாக் லாமேக்கைப் பெற்றபிற்பாடு, எழுநூற்றெண்பத்திரண்டு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றான்.

௨௭. ஆகையால், மெத்தூசலாக்குடைய நாளெல்லாந் தொளாயிரத்தறுபத்தொன்பது வருஷமாயிருந்தது. பிற்பாடு மரித்தான்.

௨௮. ¶ லாமேக் நூற்றெண்பத்திரண்டு வயதாயிருந்து ஒருகுமாரனைப்பெற்று,

௨௯. கர்த்தர்சபித்தபூமியிலே உண்டான நம்முடையவேலையிலும், நம்முடைய கைகளின்வருத்தத்திலும், இவன் நம்மைத்தேற்றுவானென்றுசொல்லி, அவனுக்கு நோவாவென்றுபேரிட்டான்.

௩௰. லாமேக் நோவாவைப்பெற்றபிற்பாடு ஐந்நூற்றுத் தொண்ணூற்றைந்து வருஷம் உயிரோடிருந்து, குமாரரையுங் குமாரத்திகளையும்பெற்றான்.

௩௧. ஆகையால் லாமேக்குடையநாளெல்லாம் எழுநூற்றெழுபத்தேழு வருஷமாயிருந்தது. பிற்பாடுமரித்தான்.

௩௨. நோவா ஐந்நூறு வயதானபோது, நோவா * சேமையுங்,காமையும்,யாப்பேத்தையும்பெற்றான். * ௬, ௰.

## ௬. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய கோபத்தை யெழுப்பின சலப்பிரளயத்தை யுண்டுபண்ணுவித்த உலகத்தாருடைய அக்கிரமங்களைக் குறித்தது. (௮) நோவா கிருபைபெற்றது (௰௪) பேழையின் அளவு முதலியவற்றைக்குறித்தது.]

மனுஷர் பூமியின்மேல் பெருகத்துவக்கி அவர்களுக்குக் குமாரத்திகள்பிறந்தபோது, சம்பவித்ததேதென்றால்,

௨. பராபரனுடையகுமாரர் மனுஷருடைய குமாரத்திகளை அவர்கள் சவுந்தரியமுள்ளவர்களென்று பார்த்துத் தாங்கள் தெரிந்துகொண்ட அனைவரிலும் பெண்களைக் கொண்டார்கள்.

௩. அப்போது கர்த்தர் * நம்முடையஆவி என்றென்றைக்கும் மனுஷரோடே போராடுவதில்லை. ஏனெனில், அவர்கள் தானும் மாமிசம். அவர்களிருக்கப்போகிறநாள்கள் நூற்றிருபது வருஷமென்றார். * கலா. ௫, ௰௬. அப்போ. ௭, ௫௧.

௪. அந்நாள்களில் இராட்சதர் பூமியிலேயிருந்தார்கள். பிற்பாடு பராபரனுடைய குமாரர் மனுஷருடைய குமாரத்திகளோடேகூடுகிறதினால், இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப்பெறறபோது இவர்களும் பூர்வத்தில் பேர்போனமனுஷராகிய பலவான்களானார்கள்.

௫. ஆனால், மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலேபெரியதென்றும், * அவன் இருதயத்தினுடைய நினைவுகளின்தோற்றமெல்லாம்நித்தமபொல்லாததேயென்றும், † கர்த்தர்கண்டபோது; † ௮, ௨௧. மத்தே. ௰௫, ௰௯. * சங்கீ. ௰௪, ௨.

௬. தாமபூமியிலேமனுஷனை உண்டாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்டார். அது அவரிருதயத்துக்குநோவாயிருந்தது.

௭. அப்போது கர்த்தர் சொன்னதாவது, நாம் சிருஷ்டித்த மனுஷனைப் பூமியின் மேலேவைக்காமல், மனுஷன்முதற்கொண்டு மிருகங்கள்பரியந்தமும் ஊர்வன பரியந்தமும் ஆகாசத்துப்பறவைகள்பரியந்தமும் உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம்பண்ணுவோம். ஏனெனில், நாம் அவர்களை உண்டாக்கினது நமக்கு மனஸ்தாபமாயிருக்குதென்றார்.

௮. ¶ ஆனால், * நோவாவுக்குக் கர்த்தருடைய கண்களில் கிருபை கிடைத்தது. * எபி. ௰௧, ௭.

௯. நோவாவின் சந்ததியாவது, நோவா தன் காலத்தில் இருக்கிறவர்களுக்குள்ளே நீதியும்உத்தமமுமானமனுஷனாயிருந்தான். * நோவா பராபரனோடே சஞ்சரித்துவந்தான். * ௫, ௨௨.

௰. * நோவா சேம், காம், யாப்பேத்தென்ற மூன்றுகுமாரரைப்பெற்றான். * ௫, ௩௨.

௰௧. பூமியோவெனில், பராபரனுக்குமுன்பாகக்கெடுக்கப்பட்டிருந்தது. கொடுமையினாலே பூமிநிறைந்தது.

௰௨. பராபரன் பூமியைப் பார்த்தார். இதோகெடுக்கப்பட்டதாயிருந்தது. ஏனெனில், மாமிசமெல்லாம் பூமியின்மேல் தன் வழியைக்கெடுத்தது.

௰௩. அப்போது பராபரன் நோவாவுக்குச் சொன்னதாவது, எல்லாமாமிசத்தின் முடிவும் நமக்கு முன்பாகவந்தது. ஏனெனில், அவர்களால் பூமிகொடுமையினாலே நிறைந்தது. இதோநாம் அவர்களைப் பூமியோடுங்கூடஅழித்துப்போடுவோம்.

௰௪. ¶ நீ கொப்பேர் மரங்களால் உனக்கொரு பேழையைஉண்டாக்கு, அந்தப் பேழையிலே அறைகளையுண்டாக்கி அதன் உள்ளும்புறம்புமாகக் கிசில்பூசுவாயாக.

௰௫. நீ அதைப் பண்ணவேண்டிய பிரகாரமாவது, பேழையின் நீளம் முந்நூறு முழமும் அதின் அகலம் ஐம்பது முழமும் அதின் உயரமுப்பது முழமுமாயிருப்பதாக.

௰௬. நீ பேழைக்கு வெளிச்சம் வரும் திறப்பைப் பண்ணி, மேலே தட்டிக்கு ஒரு முழத் தாழ்த்தியிலே அதைச் செய்து முடித்து, பேழையின் கதவை அதின் பக்கத்தில் வைத்து, கீழ் அறைகளையும் இரண்டாந் தட்டின் அறைகளையும் மூன்றாந் தட்டின் அறைகளையும் பண்ணுவாயாக.

௰௭. ஏனென்றால் இதோ, வானத்தின் கீழே சீவசுவாசமுள்ள எல்லா மாமிசத்தையும் அழிக்க நாம் பூமியின்மேல் சலப்பிரளயத்தை வரப்பண்ணுவோம். பூமியிலுள்ளதெல்லாம் மாண்டுபோம்.

௰௮. ஆனால் உன்னோடே நம்முடைய உடம்படிக்கையை நிலை நிறுத்துவோம். நீயும் உன்னோடே கூட உன் குமாரரும் உன் பெண்சாதியும் உன் குமாரரின் பெண்சாதிகளும் பேழைக்குள் பிரவேசிக்கக்கடவீர்கள்.

௰௯. உன்னோடே கூட உயிரோடே காப்பதற்கு நீ எல்லாவித மாமிசமான சகல சீவன்களிலும் *வகையொன்றுக்கு ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒவ்வொரு சோடி பேழைக்குள் சேர்த்துக்கொள்வாயாக. * ௭, ௯.

௨௰. சாதி சாதியான பறவைகளிலும் சாதி சாதியான மிருகங்களிலும் சாதி சாதியான பூமியின் எல்லா ஊர்வனவற்றிலும், வகை ஒன்றுக்கு ஒவ்வொரு சோடி உயிரோடே காக்கப்படுவதற்கு உன்னண்டைக்கு வரக்கடவது.

௨௰௧. ஆகையால், நீ தின்கிற சகலவித பண்டங்களையும் எடுத்துக்கொண்டு, உனக்கும் அவைகளுக்கும் ஆகாரமாயிருப்பதற்காக உன்னண்டையிலே சேர்த்துக்கொள்ளக்கடவாயென்றார்.

௨௰௨. * நோவா அப்படிச் செய்தான். பராபரன் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் அவன் செய்தான். * ௭, ௫. எபி. ௰௧, ௭.

## ௭. அதிகாரம்.

[(௧) நோவா தன் சமுசாரத்தோடும் மற்றச் சீவசெந்துக்களோடும் பேழைக்குள் பிரவேசித்தது. (௰௭) சலப்பிரளயமுண்டானது.]

பின்பு கர்த்தர் நோவாவோடே சொன்னதாவது, * நீயும் உன் வீட்டார் அனைவரும் பேழைக்குள் பிரவேசியுங்கள். ஏனெனில், இந்தச் சந்ததியில் உன்னை நமக்கு முன்பாக நீதிமானாகக் கண்டோம்.
* ௨. பேது. ௨. ௫.

௨. பூமியின்மீதெங்கும் வித்தை உயிரோடே காக்கும்படிக்கு நீ சுத்தமான சகல மிருகங்களிலும் ஆணும் பெண்ணுமாயிருக்கிற எவ்வேழு சோடியும், சுத்தமல்லாத மிருகங்களிலோவென்றால், ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒவ்வொரு சோடியும்;

௩. ஆகாசத்துப் பறவைகளிலும் சேவலும் பேடுமாயிருக்கிற எவ்வேழு சோடியும் உன்னண்டையிற் சேர்த்துக்கொள்ளக்கடவாய்.

௪. ஏனெனில், இன்னும் ஏழுநாள் சென்றபிற்பாடு நாம் பூமியின்மேல் இரவும்பகலும் நாற்பதுநாளாக மழையை வருஷிக்கப்பண்ணி, நாம் உண்டாக்கின சீவசெந்து அனைத்தையும் பூமியின்மேலிராதபடிக்கு நிக்கிரகம் பண்ணுவோமென்றார்.

௫. கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் நோவா செய்தான்.

௬. பூமியின்மேல் சலப்பிரளயத்தின் தண்ணீர்கள் உண்டாகிறபோது நோவா அறுநூறு வயதாயிருந்தான்.

௭. நோவாவும் அவனோடே கூட அவன் குமாரரும் அவன் பெண்சாதியும் அவன் குமாரரின் பெண்சாதிகளும் சலப்பிரளயத்தின் தண்ணீர்களுக்குத் தப்பப் * பேழைக்குள் பிரவேசித்தார்கள். * மத்தே. ௨௪, ௩௮, ௩௯. லூக்கா. ௰௭, ௨௬, ௨௭.

௮. பராபரன் நோவாவுக்குக் கற்பித்தபடியே சுத்தமான மிருகங்களிலும் சுத்தமல்லாத மிருகங்களிலும் பூமியின்மேல் ஊருகிறதெல்லாவற்றிலும்;

௯. * ஆணும் பெண்ணும் சோடி சோடாய் நோவாவண்டையிலே பேழைக்குட்பட்டது. * ௬, ௰௯.

௰. ஏழுநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததென்னவென்றால், பூமியின்மேல் சலப்பிரளயத்தின் தண்ணீர்களுண்டாயின.

௰௧. நோவா அறுநூறு வயதாகிற வருஷத்தில் இரண்டாம் மாதம் பதினேழாந் தேதியாகிய அந்நாளிலே மகா ஆழத்தின் ஊற்றுகளெல்லாம் பிளந்தன. வானத்தின் மதகுகளும் திறவுண்டன.

௰௨. இரவும் பகலும் நாற்பது நாளாகப் பூமியின்மேல் பெருமழை யுண்டாயிருந்தது.

௰௩. அந்த நாளில் தானே நோவாவும், நோவாவின் குமாரராகிய சேமும், காமும், யாப்பேத்தும் அவர்களோடே கூட நோவாவின் பெண்சாதியும், அவன் குமாரரின் மூன்று பெண்சாதிகளும், பேழைக்குட் பிரவேசித்தார்கள்.

௰௪. இவர்களதவிரச் சாதி சாதியான சகலவித சீவன்களும் சாதி சாதியான சகலவித மிருகங்களும், பூமியின்மேல் ஊருகிற சாதி சாதியான சகலவித ஊர்வனவும் சாதி சாதியான சகலவிதப் பறவைகளும் எப்படிக்கொத்த சிறகுமுள்ள சகலவிதப் பட்சிகளும் உட்பட்டன.

௰௫. இப்படியே சீவசுவாசமுள்ள எல்லா மாமிசத்திலேயும் சோடி சோடானதாக

நோவாவண்டையிலே பேழைக்குட் புகுந்தன.

௰௬. உட்போனவைகள், பராபரன அவனுக்குக்கற்பித்தபடியே சகலவிதமாமிசத்தில ஆணும்பெண்ணுமாய உட்புகுந்தன. அப்போது, கர்த்தர் அவனுக்குப்பின்னுகக் கதவடைத்தார்.

௰௭. சலப்பிரளயம்நாறபதுநாள பூமியின் மேலுண்டாகிறபோது தண்ணீர் பெருகி, பேழையைக்கிளம்பப்பண்ணி, அது பூமியைவிட்டு உயரவந்தது.

௰௮. தண்ணீர் மகாவெள்ளமாகிப் பூமியின்மேல மிகவும் பெருகிறது. ஆனால, பேழை தண்ணீரினமேல மிதந்துகொண்டிருந்தது.

௰௯ தண்ணீர் பூமியினமேல மிகவும்மிகுந்தவெள்ளமானதினாலே, வானத்தின கீழ எங்குமுள்ள உயர்ந்தபருவதங்களெல்லாம மூடப்பட்டன.

௨௰. மூடப்பட்ட பருவதங்களுக்கு மேலாயப் பதினைந்துமுழ உயரத்திறகுத தண்ணீர்பெருகிப்போயிறறு.

௨௧. அப்போது பூமியினமேல அசைவாடுகிற எல்லா மாமிசமுமாகிய பறவைகளுஞ் சாது மிருகங்களுந துஷட மிருகங்களும பூமியினமேல ஊருகிற சகல ஊர்வனவும, * எல்லாமனுஷசீவனுமாண்டன. * ஞாக. ௰௭, ௨௭.

௨௨. வெட்டாந்தரையிலுண்டான எல்லாவறறிலும, நாசியிலசீவசுவாசமான ஆவியையுடையதெல்லாஞ்செத்துப்போயிறறு.

௨௩. பூமியினமேல மனுஷனைத துவக்கி மிருகங்களபரியந்தமும, ஊர்வனபரியந்தமும, ஆகாசத்துப்பறவைகளபரியந்தமும், இருந்த உயிருள்ள வஸ்துயாவும நிக்கிரகமாயின. அவைகள பூமியில இராதபடிக்கு நிக்கிரகமாயின. நோவாவும, அவனுடனே பேழையிலிருந்த வைகளுமாத்திரமே உயிரோடேவைக்கப்பட்டமீதியாயின.

௨௪. தண்ணீர் பூமியினமேல நூற்றைம்பதுநாள மிகவும்பெருத்திருந்தது.

## ௮. அதிகாரம்.

[(௧) சலப்பிரளயங்குறைந்தது. (௪) பேழை ஆராத்மலையினமேல தங்கினது. (௭) காகமும புறவும், பேழையைவிட்டுப் புறப்பட்டது. (௰௮) நோவாகற்பனைப்படி (௰௮) பேழையைவிட்டுப் புறப்பட்டு, (௰௮) ஒரு பலிபீடத்தை யுண்டுபண்ணி, பலியிட்டது. (௨௧) பராபரன அந்தப்பலியை அங்கிகரித்து, பூமியை யினிச சபிக்கமாட்டோமென்று, வாக்குத்தத்தம்பண்ணினது.]

பராபரனோவென்றால, நோவாவையும, அவனோடேகூடப் பேழையிலிருந்த எல்லாச்சீவன்களையும, எல்லா மிருகங்களையும நினைத்தார். ஆகையால, பராபரனபூமியினமேல காற்றடிக்கப்பண்ணினுர். அப்போது தண்ணீர் அமர்ந்தது.

௨. ஆழத்தின ஊற்றுகளும, வானத்தின மதகுகளும அடைப்பட்டு, வானத்திலிருந்துண்டான மழை நிறுத்தப்பட்டுப்போயிறறு.

௩. அப்போது தண்ணீர் போகப்போகப் பூமியைவிட்டுத் திரும்பிறறு. * நூற்றைம்பதுநாளைக்குப் பிற்பாடு, தண்ணீர் குறைந்தது. * ௭, ௨௪.

௪. ஏழாமாதம பதினேழாந தேதியிலே, பேழை * ஆராத்தென்ற மலைகளினமேல தங்கிறறு. * ஏசா. ௩௭, ௩௮.

௫. பத்தாமாதமட்டுந தண்ணீர் குறைந்துவருகையில, பத்தாமாத முதல-தேதியிலே பருவதங்களின சிகரங்கள காணப்பட்டன.

௬. ¶ நாறபதுநாள சென்றபிறபாடு சம்பவித்ததென்றால, நோவாதானபேழையிலுண்டாக்கியிருந்த பலகணியைத்திறந்து,

௭. ஒரு காகத்தை வெளியே விட்டான. அது புறப்பட்டுப் பூமியினமேலிருந்த தண்ணீர் சுவறிப்போகுமட்டும போகிறதும வருகிறதுமாயிருந்தது.

௮. பிறபாடு பூமியினமேல தண்ணீர் கொஞ்சமாயிறறோவென்று பார்க்கிறதற்கு, ஒருபுறாவைத தன்னிடத்திலிருந்து வெளியிலேவிட்டான.

௯. அந்தப் புறாவோவெனில, பூமியின்மீதெங்கும் தண்ணீர் இன்னமிருந்த படியினாலே, தன்னுள்ளங்காலுக்கு இளைப்பாறுமிடத்தைக்காணுமல, திரும்பஅவனண்டையில பேழைக்குவந்தது. அப்போது அவன தன்கையைநீட்டி அதைப்பிடித்து அதைத் தன்னிடமாகப் பேழைக்குட் சேர்த்துக்கொண்டான.

௰. இன்னம வேறே ஏழுநாள் பொறுத்து மறுபடியும புறாவைப் பேழையிலிருந்து வெளியிலே விட்டான.

௰௧. அந்தப்புறாச் சாயங்காலத்திலே அவனண்டைக்குவந்துசேர்ந்தது. இதோ அது கொத்திக்கொண்டுவந்த ஒரு ஒலிவமரத்தின இலை அதினவாயிலே யிருந்தது. அதினாலே, நோவா பூமியினமேல தண்ணீர் கொஞ்சமாயிறறென்றறிந்தான.

௰௨. அவன இன்னம வேறே ஏழுநாள் பொறுத்துப்புறாவை வெளியிலேவிட்டான. அதுமறுபடியும அவனண்டைக்குத்திரும்பி வந்ததில்லை.

௰௩. ¶ அவன அறுநூற்றொருவயதாயிருந்த வருஷம, முதலமாதம முதல-தேதியிலே சம்பவித்ததென்றால, பூமியினமேலேயிருந்த தண்ணீர் வற்றிப்போனபடியினாலே நோவா பேழையினமேல தட்டை

வாங்கிப்போட்டுப்பார்த்தான். இதோ பூமியின்மேல் தண்ணீரில்லாதிருந்தது.

௰௪. பின்பு இரண்டாமாதம் இருபத்தேழாந்தேதியிலே பூமிகாய்ந்திருந்தது.

௰௫. ¶ அப்பொழுதுபராபரன்நோவாவோடேசொன்னதாவது;

௰௬. நீயும் உன்னோடேகூட உன்பெண்சாதியும், உன்குமாரரும், உன் குமாரரின் பெண்சாதிகளும், பேழையிலிருந்து புறப்படுவார்களாக.

௰௭. பறவைகளும், மிருகங்களும், பூமியின்மேல் ஊருகிற சகலஊர்வனவுமாகிய எல்லாவித மாம்சத்திலும், உன்னண்டையிலேயிருக்கிறசீவனையெல்லாம் உன்னோடேகூட வெளியேவரவிடு *அவைகள் பூமியிலே திரளாய்வர்த்தித்து, பூமியின்மேல்பலுகிப்பெருக்கக்கடவதென்றார். * க, உஉ.

௰௮. அப்பொழுதுநோவாவும், அவனோடேகூட அவனுடையகுமாரரும், அவன்பெண்சாதியும், அவன்குமாரருடைய பெண்சாதிகளும் புறப்பட்டுவந்தார்கள்.

௰௯. சகல மிருகங்களும், சகல ஊர்வனவும், சகலபறவைகளுமாகிய பூமியின்மேல் நடமாடுகிறயாவும், சாதி சாதியாகப்பேழையிலிருந்துபுறப்பட்டுவந்தன.

௨௰. ¶ அப்பொழுது நோவாகர்த்தருக்குப் பலிபீடங்கட்டிச்சுத்தமானசகலமிருகங்களிலும், சுத்தமான சகலபறவைகளிலும், சிலவற்றையெடுத்துப் பீடத்தின்மேலே தகனபலிகளாகப்பலியிட்டான்.

௨௰௧. ஆற்றுகிறவாசனையைக்கர்த்தர்மோந்தார். அப்பொழுதுகர்த்தர்தம்முடைய இருதயத்திலேசொன்னதாவது; நாம் இனிப்பூமியை மனுஷன் நிமித்தமாகத் திரும்பச்சபியோம். ஏனெனில், * மனுஷனுடைய இருதயத்தின் தோற்றுதல் அவன் சிறுவயது துவக்கிப் பொல்லாததா யிருக்கின்றது. இனித்திரும்பநானுசெய்தது போல, எல்லாச்சீவாத்துமாவையுஞ் சங்கரியோம். *௬, ௫. மத்தே. ௰௫, ௰௯.

௨௰௨. பூமியிருக்குநு சகல நாளளவும் விதைப்பும், அறுப்பும், குளிரும், அனலும், கோடைக்காலமும், மாரிக்காலமும், பகலும், இராவும், ஓய்ந்துபோகாதிருக்குமென்றார்.

### ௯. அதிகாரம்.

[(௧) பராபரன்நோவாவை ஆசீர்வதித்தது. (௪) இரத்தமும், கொலையும், விலக்கப்பட்டது. (௮) பராபரன் அவனோடே உடம்படிக்கைபண்ணினது. (௰௩) அதற்கடையாளமாக வானவில்லைவைத்தது. (௰௮) நோவாவின்சந்ததி. (௨௰) நோவா திராட்சத்தோட்டத்தையுண்டாக்கி, (௨௧) மதுமயக்கத்திலிருக்கும்போது, அவனுடைய குமாரர்களிலொருவனால் பழிக்கப்பட்டு, (௨௫) காமனைச்சபித்தது, (௨௬) சேமையாசீர்வதித்தது. (௨௭) யாபேத்துக்காக வேண்டிக்கொண்டு, (௨௯) மரணமடைந்தது.]

பிற்பாடு பராபரன் நோவாவையும், அவன் குமாரரையும், ஆசீர்வதித்து அவர்களோடே சொன்னதாவது; * நீங்கள் பலுகிப்பெருகிப்பூமியை நிரப்புங்கள். * க, உஅ. அ, ௰௭.

௨. பூமியிலுடைய சகல மிருகங்களின்மேலும் ஆகாசத்திலுடைய சகலபறவைகளின்மேலும், உங்கள்பயமும் உங்கள் அதிர்வும் உண்டாயிருப்பதாக. பூமியில்நடமாடுகிறயாவும், சமுத்திரத்தின் மச்சங்களையாவும், உங்கள்கையிலே கொடுக்கப்பட்டது.

௩. நடமாடுகிற சீவசெந்துயாவும், உங்களுக்குஆகாரமாயிருப்பதாக. * பச்சைப்பூண்டுகளைப்போல, அதையெல்லாம் உங்களுக்குக்கொடுத்தோம். * க, உ௯.

௪. ஆனாலுமாம்சத்தை அதின் உயிராகிற * அதின் இரத்தத்தோடே புசியாதிருப்பீர்களாக. * க. மோ. ௩, ௰௭. ௭, உ௬. ௰௭, ௰௨—௰௪. ௰௯, உ௬. ரு. மோ. ௰௨, உ௩, உ௪.

௫. உங்களுயிராயிருக்கிற உங்களிரத்தத்துக்கும் பழியைவாங்குவோம். சகல மிருகத்தின்கையிலும், அதை வாங்குவோம். மனுஷன்கையிலும் அவனவன் சகோதரன் கையிலும், மனுஷனுடையஉயிருக்குப் பழியைவாங்குவோம்.

௬. * எவன்மனுஷனுடையஇரத்தத்தைச் சிந்துகிறனோ, அவனிரத்தம் மனுஷனாலேசிந்தப்படக்கடவது. ஏனெனில், பராபரனுடையசாயலாக அவர் மனுஷனையுண்டாக்கினார். * உ. மோ. உக, ௰௨. மத். உ௬, ரு௨.

௭. * நீங்கள் பலுகிப்பெருகிப் பூமியிலே திரளாய்வர்த்தித்து, அதிலேபெருகிப்போங்களென்றார். * க. வசனம்.

௮. ¶ பின்னையும் பராபரன் நோவாவோடும் அவன்குமாரரோடுங் கூடச் சொன்னதாவது;

௯. இதோநாம் உங்களோடும், உங்களுக்குப்பின்னுள்ளவரும் உங்களுடைய வித்தோடும்;

௰. உங்களண்டையிலிருக்கிற சகல சீவசெந்துக்களாகிய பறவைகளோடும், மிருகங்களோடும், உங்களண்டையிலிருக்கிறபூமியினுடைய எல்லாச்சீவன்களோடும், நம்முடைய உடம்படிக்கையை ஏற்படுத்துகிறோம். பேழையிலிருந்து புறப்பட்டவையெல்லாம் முதற்கொண்டு பூமியிலிருக்கப்போகிற எல்லாச்சீவன்களோடுங்கூடத்தானே.

௰௧. * இனிமாம்சமெல்லாஞ் சலப்பிரளயத்தின் தண்ணீரால் சங்கரிக்கப்படா

தென்றும், பூமியையழிக்க இனிச் சலப்பிரளயம் வராதென்றும், உங்களோடே நம்முடைய உடம்படிக்கையை ஏற்படுத்துகிறேனென்றார்.* அ,உக,உஉ. ஏசா.ரு௪,௯.

௰௨. பின்னையும் பராபரன் சொன்னதாவது; நாம் நமக்கும் உங்களுக்கும், உங்களோடேயிருக்கிற எல்லாச் சீவசெந்துக்களுக்கும், என்றுமுள்ள தலைமுறைகளுக்கென்று பண்ணுகிற உடம்படிக்கையின் அடையாளமாவது;

௰௩. நம்முடைய வில்லை மேகத்திலே வைத்தோம். அது நமக்கும் பூமிக்குமுண்டான உடம்படிக்கைக்கு அடையாளமாயிருக்கும்.

௰௪. ஆகையால் சம்ப விப்பதேதெனில், நாம் பூமியின்மேல் மேகமந்தாரத்தை வரப்பண்ணும்போது, மேகத்திலே அந்த வில் காணப்படும்.

௰௫. அப்பொழுது, சலப்பிரளயத்தின் தண்ணீர் இனியெல்லா மாமிசத்தையும், அழிக்க வராதபடிக்கு, நமக்கும், உங்களுக்கும் எல்லாவிதமாமிசமாகிய சகல சீவசெந்துக்களுக்குமுண்டான நம்முடைய உடம்படிக்கையை நினைப்போம்.

௰௬. அந்த வில் மேகத்திலிருக்கும்போது பராபரனுக்கும் பூமியின்மேலுள்ள எல்லாவிதமாமிசமாகிய சகல சீவனுக்குமுண்டான நித்திய உடம்படிக்கையை நாம் நினைக்கும்படிக்கு அதை நோக்கிப்பார்ப்போம்.

௰௭. இது நமக்கும், பூமியின்மேலுள்ள சகல மாமிசத்துக்கும், நாம் ஏற்படுத்தின உடம்படிக்கையின் அடையாளமென்று பராபரன் நோவாவோடே சொன்னார்.

௰௮. ¶ பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின் குமாரர் சேம், காம், யாப்பேத்தென்றவர்களே. காமோவென்றால், கானானுடைய தகப்பன்.

௰௯. இந்த மூன்றுபேர் நோவாவினுடைய குமாரர். இவர்களாலே பூமியெங்குஞ்சனம் பரம்பிற்று.

௨௰. நோவா பயிரிடுங்குடியானாயிருக்கத் துவக்கி, திராட்சத்தோட்டத்தை நாட்டினான்.

௨௧. அவன் திராட்சப்பழ இரசத்திலே குடித்து வெறித்திருந்து, தன் கூடாரத்துக்குள்ளே வஸ்திரம் விலகிப் படுத்திருந்தான்.

௨௨. அப்போது கானானின் தகப்பனாகிய காம், தன் தகப்பனுடைய நிருவாணத்தைக் கண்டு, வெளியிலேயிருந்த தன் இரண்டு சகோதரருக்கு அறிவித்தான்.

௨௩. அப்போது சேமும், யாப்பேத்தும், ஒரு வஸ்திரத்தை யெடுத்து, தங்களிருவரின் தோள்மேலும் போட்டுக்கொண்டு, பின்னிட்டு வந்து, தங்கள் தகப்பனுடைய நிருவாணத்தை மூடினார்கள். அவர்கள் முகங்கள் பின்புறமாயிருந்தபடியினாலே, அவர்கள் தங்கள் தகப்பனுடைய நிருவாணத்தைக் கண்டதில்லை.

௨௪. நோவா தன் திராட்சப்பழ இரசத்தின் வெறிதெளிந்து விழித்தபோது, தன் இளைய குமாரன் தனக்குச் செய்ததையறிந்து,

௨௫. கானான் சபிக்கப்பட்டவனாகி, தன் சகோதரருக்கு அடியாரின் அடியானாயிருக்கக்கடவானென்றான்.

௨௬. பின்னையும் அவன் சொன்னதாவது; சேமுடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். கானானோவெனில், அவனுக்கூழியக்காரனாயிருக்கக்கடவான்.

௨௭. யாப்பேத்தைப் பராபரன் பரிபாலனம்பண்ணக்கடவார். அவன் சேமுடைய கூடாரங்களில் குடியிருப்பானாக. கானானோவெனில், அவனுக்கூழியக்காரனாயிருக்கக்கடவானென்றான்.

௨௮. ¶ சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு நோவா முந்நூற்றைம்பது வருஷமுயிரோடிருந்தான்.

௨௯. ஆகையால், நோவாவின் நாள்களெல்லாந் தொளாயிரத்தைம்பது வருஷமாயிருந்தன். பிற்பாடு மரித்தான்.

## ௰. அதிகாரம்.

[(க) நோவாவின் சந்ததி. (உ) யாப்பேத்தின் சந்ததி. (௬) காமின் சந்ததி. (அ) நம்ரோது உலகத்தில் முதல்முதல் அரசனானது. (உக) சேமின் சந்ததி.]

நோவாவுடைய குமாரராகிய *சேம், காம், யாப்பேத்தென்றவர்களின் சந்ததிகளாவன்; அவர்களுக்குச் சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு பிறந்த குமாரர் ஆனொன்றுல, * ரு, ௬உ.

உ. *யாப்பேத்துடைய குமாரர் கோமேர், மாகோக், மாதாய், யாவான், தூபால், மேசேக், தீராஸ். *க. நாளா. க, ரு, ௲

௬. கோமேருடைய குமாரர் அஸ்கேனாஸ், ரிப்பாத், தொகர்மா.

௪. யாவானுடைய குமாரர் எலீசா, தர்சீஸ், கித்திம், தோதானீம்.

ரு. இவர்களால் சாதிகளுடைய தேசத்தீவுகள் அவனவன் பாஷையின்படியேயும், அவர்களுடைய சாதிகளிலுள்ள அவர்களுடைய வமிசங்களின்படியேயும் அவரவர் தேசங்களாயப் பிரிந்தன்.

௬. ¶ காமுடைய குமாரர் கூஸ், மிஸ்ராயீம், பூத், கானான்.

எ. கூசுடைய குமாரர் சேபா, காவிலா, சப்தா, ராமா, சப்தேகா, ராமாவினுடைய குமாரர் சேபா, தேதான்.

அ. கூஸ் நிம்ரோதைப் பெற்றான். இவன் பூமியிலே பலவானாயிருக்கத் துவக்கினான்.

௯. இவன் கர்த்தருக்கு முன்பாகப் பலத்த

வேட்டைக்காரனாயிருந்தான். ஆகையால், நிம்ரோதைப்போலக் கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்காரன் இருக்கிறானென்று சொல்லப்படும்.

௰. சிநேயார் தேசத்திலுள்ள பாபேலும், ஏரேக்கும், அக்காதும், கல்நேயும், அவனுடைய இராச்சியத்தின் துவக்கமாயிருந்தன.

௰௧. இந்தத்தேசத்திலிருந்து அசூர்ப்புறப்பட்டுப்போய், நினிவேயையும், ரெகோபோத்பட்டணத்தையும், காலாகையும்,

௰௨. நினிவேக்கும், காலாகுக்கும், நடுவாக ரேசேனையுங் கட்டினான். இதுபெரியபட்டணம்.

௰௩. மிசுராயீம், லூதீமையும், அனாமீமையும், லெகாபீமையும், நப்துகீமையும்,

௰௪. பத்ருசீமையும், பெலிஸ்தரின்சந்ததி உண்டான கஸ்லூகீமையும், கப்தோரீமையும் பெற்றான்.

௰௫. ¶ கானான், சீதோனென்ற தன்தலைச்சனையுங் கேத்தையும்,

௰௬. எபூசியையும், எமோரியையும், கிர்காசியையும்,

௰௭. ஈவியையும், அற்கீயையும், சீனியையும்,

௰௮. அர்வாதியையும், செமாரியையும், காமாத்தியையும்பெற்றான். பிற்பாடு கானானியரின் வம்சங்கள் சிதறிப்போயின.

௰௯. கானானியரின் எல்லைசீதோனிலிருந்து கேரார்வழியாய்க் காசாமட்டுக்கும்போய், சோதோம், கொமோரா, ஆத்மா, செபோயிம் வழியாய் லாசாமட்டுக்கும்போயிற்று.

௨௰. இவர்களே தங்கள் தேசங்களிலும், தங்கள்சாதிகளிலுமுள்ள தங்கள்வம்சங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்படியேயும், காமுடைய பிள்ளைகளானவர்கள்.

௨௧. ¶ சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள். அவன் ஏபேருடைய புத்திரருக்கெல்லாந் தகப்பனும், யாப்பேத்தென்கிற மூத்தவனுக்குத் தம்பியுமாயிருந்தான்.

௨௨. சேமுடையகுமாரர் ஏலாம், அசூர், அற்பக்சாத், லூத், அராம்.

௨௩. ஆராமுடையகுமாரர் ஊத்ஸ், கூல், கேத்தேர், மாஸ்.

௨௪. * அற்பக்சாத்சாலாகைப்பெற்றான். சாலாக் ஏபேரைப்பெற்றான். * ௰௧, ௰௨.

௨௫. * ஏபேருக்கு இரண்டு குமாரர்பிறந்தார்கள். ஒருவன்பேர் பேலேக், ஏனெனில், அவன் நாள்களில்பூமி பிரிந்தது. அவனுடைய சகோதரன்பேர் யொக்கெத்தான். * ௰௧, ௰௬.

௨௬. யொக்கெத்தான்அல்மோதாதையும், சாலேப்பையும்,ஆசர்மாவெத்தையும், யாராகையும்,

௨௭. அதோராமையும், ஊசாலையும், திக்லாவையும்,

௨௮. ஓபாலையும், அபிமாவேலையும், சேபாவையும்,

௨௯. ஓப்பீரையும், காவிலாவையும், யோபாவையும் பெற்றான். இவர்கள் அனைவரும் யொக்கெத்தானுடையகுமாரர்.

௩௰ அவர்களுடைய குடியிருப்பு மேசாதுவக்கி, கிழக்குமலையாகியசேப்பாருக்குப் போகிறவழிமட்டுமிருந்தது.

௩௧. இவர்களே தங்கள் தேசங்களிலுந் தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வம்சங்களின்படியேயுந் தங்கள்பாஷைகளின்படியேயுஞ் சேமுடைய குமாரரானவர்கள்.

௩௨. இவைகளே தங்கள் சாதிகளிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே நோவாவுடைய குமாரரின்வம்சங்கள். சலப்பிரளயத்துக்குப்பிற்பாடு இவர்களால் பூமியிலே சாதிகள்பிரிந்தன.

## ௰௧. அதிகாரம்.

[(௧) உலகத்தில் ஒரே பாஷையிருந்தது. (௩) பாபேல்கோபுரந்தொடங்கப்பட்டது. (௫) பாஷை வேறுபட்டது. (௰) சேமின் சந்ததி. (௨௭) ஆபிராமின் தகப்பனாகிய தேராவின்சந்ததி. (௩௧) தேரா ஊர் என்ற விடத்தைவிட்டுக் காரானுக்குப்போனது.]

அக்காலத்திலே பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவிதவார்த்தைகளுமிருந்தன.

௨. அப்போது சம்பவித்ததேதென்றால், அவர்கள்கிழக்கேயிருந்து பயணம்பண்ணுகையில், * சிநேயார்தேசத்திலே பள்ளத்தாக்கைக்கண்டு,அங்கேகுடியிருந்து,*௯,௰.

௩. ஒருவரோடொருவர் நாம் செங்கல் அறுத்து அவைகளை நற்கோடாயச் சுடுவோம்வாருங்களென்றார்கள். பிற்பாடு செங்கல்அவர்களுக்குக்கல்லாகவும், பிசின் அவர்களுக்குச்சாந்தாகவுமிருந்தன.

௪. அவர்கள் நாம்பூமியின்மீதெங்குஞ் சிதறுண்டுபோகாதபடிக்கு, நமக்குநாம் ஒரு பட்டணத்தையும், * வானத்தை எட்டுகிற சிகரமுள்ள ஒரு கோபுரத்தையுங் கட்டி, நமக்குப்பேர் உண்டாக்குவோம் வாருங்களென்றுசொல்லிக்கொண்டார்கள்.

* ௫. மோ. ௧, உ௮. ௬, ௧.

௫. ஆனால் மநுப்புத்திரர் கட்டுகிறபட்டணத்தையுங் கோபுரத்தையும்பார்க்கிறதற்காகக் * கர்த்தர் இறங்கினார். * ௰௮, ௨௧.

௬. அப்போது கர்த்தர் சொன்னதாவது; இதோசனம் ஒரேகூட்டமானது. அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையிருக்கிறது. இதைஅவர்கள் செய்யத்தொடங்கினார்கள். இப்போதுந் தாங்கள்செய்ய நினைத்ததெல்லாந் தங்களுக்குத்தடுக்கப்படுவதில்லை. என்றிருக்கிறார்கள்.

௭. நாம் இறங்கி, ஒருவர்பாஷையை மற

ஒருவர் அறியாதபடிக்கு, அங்கே அவர்களுடைய பாஷையைத் தாறுமாறாக்குவோமாக என்றார்.

அ. அப்படியே கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் சிதறிப் போகப்பண்ணினார். அப்போது பட்டணத்தைக் கட்டி ஒய்ந்தார்கள்.

கூ. ஆகையாலே பூமி அனைத்தின் பாஷையைக் கர்த்தர் அங்கே தாறுமாறாக்கின படியினாலும், கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் சிதறிப்போகப்பண்ணினபடியினாலும், அதின்பேர் பாபேலென்னப்பட்டது.

ய. ¶ * சேமுடைய சந்ததியாவது; சேம் நூறுவயதாயிருந்து அர்பக்சாதைச் சலப்பிரளயம்போன இரண்டு வருஷத்துக்குப் பிறகு பெற்றான். * ய, உஉ.

யக. சேம் அர்பக்சாதைப் பெற்றபிறகு, ஐந்நூறு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

யஉ. * அர்பக்சாத் முப்பத்தைந்து வயதாயிருந்து, சாலாவைப்பெற்றான்.

யங. சாலாவைப்பெற்றபிறகு அர்பக்சாத் நானூற்று மூன்று வருஷம் உயிரோடிருந்து குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.

யச. சாலாக் முப்பதுவயதாயிருந்து, ஏபேரைப்பெற்றான்.

யரு. ஏபேரைப் பெற்றபிறபாடு, சாலாக் நானூற்று மூன்று வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும்பெற்றான்.

யசு. ஏபேர் முப்பத்துநாலுவயதாயிருந்து, பேலேகைப்பெற்றான்.

யஎ. பேலேகைப் பெற்றபிறபாடு, ஏபேர் நானூற்று முப்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும்பெற்றான்.

யஅ. பேலேக் முப்பதுவயதாயிருந்து ரேகூவைப்பெற்றான்.

யகூ. ரேகூவைப் பெற்றபிறபாடு பேலேக் இருநூற்றொன்பது வருஷம் உயிரோடிருந்து குமாரரையும் குமாரத்திகளையும்பெற்றான்.

உய. ரேகூ முப்பத்திரண்டுவயதாயிருந்து செரூகைப்பெற்றான்.

உக. செரூகைப் பெற்றபிறபாடு, ரேகூ இருநூற்றேழு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும்பெற்றான்.

உஉ. செரூக் முப்பதுவயதாயிருந்து, நாகோரைப்பெற்றான்.

உங. நாகோரைப்பெற்றபிறபாடு, செரூக் இருநூறு வருஷம் உயிரோடிருந்து குமாரரையும் குமாரத்திகளையும்பெற்றான்.

உச. நாகோர் இருபத்தொன்பது வயதாயிருந்து தேராகைப்பெற்றான்.

உரு. தேராகைப்பெற்றபிறபாடு நாகோர் நூற்றுப் பத்தொன்பதுவருஷம் உயிரோடிருந்து குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

உசு. தேராக் எழுபதுவயதாயிருந்து ஆபிராமையும், நாகோரையும், ஆரானையும் பெற்றான்.

உஎ. ¶ தேராகுடையசந்ததியாவது; தேராக் ஆபிராமையும், நாகோரையும், ஆரானையும் பெற்றான். ஆரான்லோத்தைப்பெற்றான்.

உஅ. ஆரானோவென்றால், தன்சென்ம பூமியாகிய ஊர்என்றகல்தேயர் தேசத்துப் பட்டணத்திலே தன்தகப்பனாகிய தேராகுக்கு முன்னே மரித்தான்.

உகூ. ஆபிராமும், நாகோரும், தங்களுக்குப் பெண்கொண்டார்கள். ஆபிராமுடைய பெண்சாதியின்பேர்சாராய். நாகோருடைய பெண்சாதியின் பேர் மில்காள். இவள் ஆரானின் குமாரத்தி. இவளுடைய தகப்பனாகிய ஆரான் மில்காளுக்கும், இஸ்காளுக்கும், தகப்பனானவன்.

ஙய. ஆனால்சாராய் புத்திரசந்தானமில்லாமல் மலடியாயிருந்தாள்.

ஙக. தேராக் தன்குமாரனாகிய ஆபிராமையும், ஆரானின் குமாரன் தன் பேரனாகிய லோத்தையும், தன்குமாரன் ஆபிராமுடைய பெண்சாதியாகிய தன்மருமகள் சாராயையும் அழைத்துக்கொண்டு, அவர்களோடே கூட * ஊர் என்றகல்தேயருடைய பட்டணத்திலிருந்து கானான்தேசத்துக்குப் போகப்புறப்பட்டான். ஆனால்,அவர்கள்கானான் மட்டுக்கும் வந்துபோய், அங்கே யிருந்து விட்டார்கள். * யரு, எ.

ஙஉ. தேராகுடைய நாள்கள் இருநூற்றைந்து வருஷமாயிருந்தன். பிறபாடு தேராக் காரானிலே மரித்தான்.

## யஉ. அதிகாரம்.

[(க) பராபரன் ஆபிராமைஅழைத்து ஆசீர்வதித்தது. கிறிஸ்துவைக்குறித்து வாக்குத்தத்தம்பண்ணினது. (ச) ஆபிராம் லோத்துடன் காரானைவிட்டு, (கூ-எ) தேவதரிசனையால் தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப்பட்டகானான்தேசத்தை உருவநடந்தது. (ய) ஆபிராம்பஞ்சத்தினிமித்தம் எகிப்துக்குப் போய், (யக) அங்கேபயத்தினால் தன்மனைவியைத் தன்சகோதரி யென்றுசொன்னது. (யச) அவளைஅவனிடத்தினின்று எடுத்துக் கொண்டபார்வோன் வாதைகளினால் வாதிக்கப்பட்டபோது அவளைமறுபடியும் அவனுக்கொப்புவித்தது.]

கர்த்தர் ஆபிராமோடே சொன்னதாவது; * நீ உன் தேசத்தையும், உன் இனத்தையும், உன் தகப்பனுடைய வீட்டையும், விட்டுப்புறப்பட்டு, நாம்உனக்குக்

வேட்டைக்காரனாயிருந்தான். ஆகையால், நிம்றோதைப்போலக் கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்காரனாயிருக்கிறானென்று சொல்லப்படும்.

௰. சிநேயார் தேசத்திலுள்ள பாபேலும், ஏரேகும், அக்காதும், கல்நேயும், அவனுடைய இராச்சியத்தின் துவக்கமாயிருந்தன.

௰௧. இந்தத்தேசத்திலிருந்து அசூர்ப்புறப்பட்டுப்போய், நினிவேயையும், ரெகோபோத்பட்டணத்தையும், காலாகையும்,

௰௨. நினிவேக்கும், காலாகுக்கும், நடுவாக ரேசேனையுங்கட்டினான். இதுபெரியபட்டணம்.

௰௩. மிசறாயீம், லூதீமையும், அனாமீமையும், லேகாபீமையும், நப்தூகீமையும்,

௰௪. பத்ருசீமையும், பெலிஸ்தரின்சந்ததி உண்டான கஸ்லூகீமையும், கப்தோரீமையும் பெற்றான்.

௰௫. ¶ கானான், சீதோனென்ற தன்தலைச்சனையுங் கேத்தையும்,

௰௬. எபூசியையும், எமோரியையும், கிர்காசியையும்,

௰௭. ஈவியையும், அறகியையும், சீனியையும்,

௰௮. அர்வாதியையும், செமாரியையும், காமாத்தியையும்பெற்றான். பிற்பாடு கானானியரின் வமிசங்கள் சிதறிப்போயின.

௰௯. கானானியரின் எல்லைசீதோனிலிருந்து கேரார்வழியாய்க் காசாமட்டுக்கும்போய், சோதோம், கொமோரா, ஆதாமா, செபோயிம் வழியாய் லாசாமட்டுக்கும்போயிற்று.

௨௰. இவர்களே தங்கள் தேசங்களிலும், தங்கள்சாதிகளிலுமுள்ள தங்கள்வமிசங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்படியேயும், காமுடைய பிள்ளைகளானவர்கள்.

௨௧. ¶ சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள். அவன் ஏபேருடைய புத்திரருக்கெல்லாந் தகப்பனும், யாப்பேத்தென்கிற மூத்தவனுக்குத்தம்பியுமாயிருந்தான்.

௨௨. சேமுடையகுமாரர் ஏலாம், அசூர், அறப்க்சாத், லூத், அராம்.

௨௩. ஆராமுடையகுமாரர் ஊத்ஸ், கூல், கேத்தேர், மாஸ்.

௨௪. * அறப்க்சாத்சாலாகைப்பெற்றான். சாலாக் ஏபேரைப்பெற்றான். * ௰௧, ௰௨.

௨௫. * ஏபேருக்கு இரண்டு குமாரர்பிறந்தார்கள். ஒருவன்பேர் பேலேக், ஏனெனில், அவன் நாள்களில்பூமிபிரிவுண்டது. அவனுடைய சகோதரன்பேர் யொக்கெத்தான். * ௰௧, ௰௯.

௨௬. யொக்கெத்தான்அல்மோதாதையும், சாலேப்பையும், ஆசர்மாவெத்தையும், யாராகையும்,

௨௭. அதோராமையும், ஊசாலையும், திக்லாவையும்,

௨௮. ஒபாலையும், அபிமாவேலையும், சேபாவையும்,

௨௯. ஓப்பீரையும், காவிலாவையும், யோபாவையும் பெற்றான். இவர்கள் அனைவரும் யொக்கெத்தானுடையகுமாரர்.

௩௰. அவர்களுடைய குடியிருப்பு மேசாதுவக்கி, கிழக்குமலையாகியசேப்பாருக்குப் போகிறவழிமட்டுமிருந்தது.

௩௧. இவர்களே தங்கள் தேசங்களிலுந் தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வமிசங்களின்படியேயுந் தங்கள்பாஷைகளின்படியேயுஞ் சேமுடைய குமாரரானவர்கள்.

௩௨. இவைகளே தங்கள் சாதிகளிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே நோவாவுடைய குமாரரின்வமிசங்கள். சலப்பிரளயத்துக்குப்பிற்பாடு இவர்களால் பூமியிலே சாதிகள்பிரிந்தன.

## ௰௧. அதிகாரம்.

[(௧) உலகத்தில் ஒரே பாஷையிருந்தது. (௩) பாபேல்கோபுரந்தொடங்கப்பட்டது. (௫) பாஷை வேறுபட்டது. (௰) சேமின் சந்ததி. (௨௭) ஆபிராமின் தகப்பனாகிய தேராவின்சந்ததி. (௩௧) தீரா ஊர் என்ற விடத்தைவிட்டுக் காரானுக்குப்போனது.]

அக்காலத்திலே பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவிதவார்த்தைகளுமிருந்தன.

௨. அப்போது சம்பவித்ததேதென்றால், அவர்கள்கிழக்கேயிருந்து பயணம்பண்ணுகையில், * சிநேயாதேசத்திலே பள்ளத்தாக்கைக்கண்டு, அங்கேகுடியிருந்து, * ௰, ௰.

௩. ஒருவரோடொருவர் நாம் செங்கல் அறுத்து அவைகளை நற்கோட்டாயச் சுடுவோம்வாருங்களென்றார்கள். பிற்பாடுசெங்கல்அவர்களுக்குக்கல்லாகவும், பிசின் அவர்களுக்குச்சாந்தாகவுமிருந்தன.

௪. அவர்கள் நாம்பூமியின்மீதெங்குஞ்சிதறுண்டுபோகாதபடிக்கு, நமக்குநாம் ஒரு பட்டணத்தையும், * வானத்தை எட்டுகிற சிகரமுள்ள ஒரு கோபுரத்தையுங் கட்டி, நமக்குப்பேர் உண்டாக்குவோம் வாருங்களென்றுசொல்லிக்கொண்டார்கள்.

* ௫. மோ. ௧, ௨௮. ௬, ௧.

௫. ஆனால் மநுப்புத்திரர் கட்டுகிறபட்டணத்தையுங் கோபுரத்தையும்பார்க்கிறதற்காகக் * கர்த்தர் இறங்கினார். * ௰௮, ௨௧.

௬. அப்போது கர்த்தர் சொன்னதாவது; இதோசனம் ஒரேகூட்டமானது. அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையுமிருக்கிறது. இதைஅவர்கள் செய்யத்தொடங்கினார்கள். இப்போதுந் தாங்கள்செய்ய நினைத்ததெல்லாந் தங்களுக்குத்தடுக்கப்படுவதில்லை. என்றிருக்கிறார்கள்.

௭. நாம் இறங்கி, ஒருவர்பாஷையை மற

௨௯. உஙகளுககுப பொலலாபபுசசெயய என கையிலே வலலமையிருககும. ஆனால, நீ யாககோபோடே நலநதபபிததிஙகாயபபேசாதபடிககு எசசரிககையாயிருவென று உஙகளுததகபபனுடைய பராபரன இராததிரி எனனோடேசொனனார்.

௩௰. இபபொழுதும உன தகபபனுடைய வீட்டினமேலுளளவாஞசையினாலே நீ புறபபட்டுப போகிறபொழுது, என தேவர்களை ஏன திருடிககொணடாயெனறான.

௩௧. யாககோபு லாபானுககுப பிரதியுததாரமாகச சொனனதாவது; உமமுடைய குமாரததிகளை எனனிடததிலிருநது பறிததுககொளவீரோ எனறு நானபயபபட்டதினாலே யிபபடிவநதுவிட்டேன.

௩௨. ஆனால ஆரிடததில உமமுடைய தேவர்களைக கணடுபிடிபபீரோ அவன உயிரோடிருககவேணடாம. எனவசததிலே உமமுடையதாயிருககிறதேதெனறு நீர் நமமுடைய சகோதரருககு முனபாகப பார்ததறிநது அதை யெடுததுக கொளளுமெனறான. ஏனெனில ராகேல அவைகளைததிருடினதை யாககோபு அறியாதிருநதான.

௩௩. அபபொழுது லாபான யாககோபின கூடாரததிலும, லேயாளினகூடாரததிலும இரணடு வேலைககாரிகளின கூடாரததிலும பிரவேசிதது அவைகளைக கணடுபிடியாமல லேயாளின கூடாரததிலிருநது புறபபட்டு ராகேலினகூடாரததிலேவநதான.

௩௪. ராகேலோவெனில, சுருபஙகளையெடுத்து ஒட்டகக்கலணையிற்போட்டு அவைகள மேலஉளுககாநதிருநதாள. லாபானகூடாரமெஙகுந தடவிபபார்தது, அவைகளைக கணடுபிடியாதேபோனான.

௩௫. அவள தனதகபபனோடே, நானுமக குமுனபாக எழுநதிருக்கககூடாதது. என னாணடவனுடைய கணகளுககுததாஙகலாயிருககவேணடாம. ஏனெனில, ஸதிரிகளுககுள்ள வழிபாடு எனக்குவநதிருக்கின்றதெனறாள. அபபடியே அவனசோதிததுமஅநதச சுருபஙகளைக்கணடுபிடியாதேபோனான.

௩௬. ¶ அபபொழுதுயாககோபுககுககோபமூணடு. லாபானோடேவாககுவாதமபணணி, லாபானுககுப பிரதியுததாரமாகச சொனனதாவது; நீஎனனை எரிபநதயாய்ப பினதொடருகிறதறகு எனனுடைய மீறுதலெனன! எனபாவமெனன!

௩௭. என தட்டுமுட்டுகளை யெலலாந தடவிப்பார்ததீரே! உமமுடைய வீட்டுத தட்டுமுட்டுகளிலெலலாம எதைக கணடுபிடித தீர்! என சகோதரருககும உமமுடைய சகோதரருககு முனபாக இஙகேவையும. அவர்களெஙகள இருவருககும நடுவறுக்கக கடவர்கள.

௩௮. இநத இருபது வருஷம உமமிடத திலேநானிருநதேன. உமமுடைய ஆடுகளும வெளளாடுகளுந சினையழிநததிலலை. உமமுடைய மநதையின கடாககளை நான தினறதிலலை.

௩௯. பீறுணடதை நானஉமமணடைககுக கொணடுவராமல, அதறகு நான உததரவாதம பணணினேன். பகலிற களவுபோனதையும, இரவிற களவுபோனதையும என கையிறகேட்டீர்.

௪௰. பகலிலே வெயிலும, இரவிலே குளிரும எனனைபபட்சிததது. என நிததிரை என கணகளை விட்டு விலகிறறு. இபபடி யிருநதேன.

௪௧. இநத இருபதுவருஷம உமமுடைய வீட்டிலே யிருநதேன. பதினாலு வருஷம உயமுடைய இரணடு குமாரத்திகளுக்காகவும ஆறுவருஷம உமமுடைய மநதைககாகவும, உமமைசசேவிததேன. பததுமுறை எனசமபளததைமாறறினீர்.

௪௨. எனபிதாவின பராபரனாகிய ஆபிரகாமினபராபரனும, ஈசாககினபயமுமெனக்கிராதேபோனால, நீர் இபபொழுது வெறுமையே யெனனையனுபபிவிடுவீர். பராபரனோவெனறால எனசிறுமையையும என கைகளினவருத்தத்தையுமபார்தது இராததிரி உமமைககடிநதுகொணடாரெனறான.

௪௩. ¶ அபபொழுது லாபான யாககோபுக்குபபிரதியுததாரமாகசசொனனதாவது; குமாரத்திகள எனகுமாரததிகளும, பிளளைகள எனபிளளைகளும, மநதை எனமநதையுநதானே. நீ காண்கிறதெலலாம எனனுடையது. இநத எனனுடைய குமாரத்திகளுககும அலலது அவர்கள பெறற பிளளைகளுககும இனறெனனசெயவேன!

௪௪. இபபொழுதும வா. நானும நீயும ஒரு உடமபடிககையைப் பணணிககொளளுவோம. அதெனககும உனககும நடுவான சாட்சியாயிருபபதாகவெனறான.

௪௫. அபபொழுது யாககோபு ஒரு கலலை யெடுதது அதைத்தூணாக நிறுத்தினான.

௪௬. பினபாடு யாககோபு தன சகோதரரோடே கற்களைச்சேருஙகளெனறான. அபபொழுது கறகளை யெடுததுககொணடுவநது ஒரு குவியலுணடாககி அநதக குவியலினமேல அசனமபணணினார்கள.

௪௭. அதறகுலாபான ஏகார் சக்தூத்தாவெனறு பெயரிட்டான. யாககோபோவெனில, அதறகுக்கலெயேததெனறுபெயரிட்டான.

௪௮. இநதக குவியல இனறு எனககும உனககும நடுவானசாட்சியெனறு லாபான சொனனபடியினாலே அதினபெயர் காலெயேததெனனபபட்டது.

௪௯. மிஸபாவெனறுஞசொலலபபட்டது. ஏனெனிலஅவனசொனனதாவது; நாம ஒரு

வரையொருவர் விட்டு மறைந்தபிறபாடு நீ என் குமாரத்திகளை உபத்திரவப்படுத்தி என் குமாரத்திகளைத் தவிர வேறு ஸ்திரீகளை விவாகம்பண்ணினாயானால், கர்த்தர் எனக்கும் உனக்கும் நடுவராயக் கண் காணிக்கக் கடவர்.

௫௰. நம்முடனே ஒருவருமில்லை. பார் பராபரனே எனக்கும் உனக்கும் நடுவான சாட்சியென்றான்.

௫௧. பின்னையும் லாபான் யாக்கோபோடே சொன்னதாவது; இதோ இந்தக் குவியல் இதோ, எனக்கு முனக்கும் நடுவாக நான் போட்டதூண்.

௫௨. தீங்குசெய்ய நானிந்தக் குவியலைக் கடந்து உன்னண்டைக்கு வராமலும், நீ இந்தக் குவியலையும் இந்தத் தூணையுங்கடந்து என்னண்டைக்கு வராமலுமிருக்கிறதற்கு இந்தக் குவியலுஞ் சாட்சி இந்தத் தூணுஞ் சாட்சி.

௫௩. ஆபிரகாமின் பராபரனும், நாகோரின் பராபரனும் அவர்கள் பிதாக்களின் பராபரனுமானவர் நமக்குள்ளே நடுவராயிருக்கக்கடவரென்றான். அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனாகிய ஈசாக்குடைய பயத்தின்பேரிலே ஆணையிட்டான்.

௫௪. பிறபாடு யாக்கோபு பர்வதத்தின் மேற் பலியிட்டுத் தன் சகோதரரை அப்பம் புசிக்க அழைத்தான். அப்படியே அப்பம் புசித்து அப்பர்வதத்திலே இராத்தங்கினார்கள்.

௫௫. லாபான் அதிகாலமே யெழுந்திருந்து தன் பிள்ளைகளையுந் தன் குமாரத்திகளையும் முத்திசெய்து, அவர்களை ஆசீர்வதித்தான். பிறபாடு லாபான் புறப்பட்டுத் தன்னிடத்திற்குத் திரும்பிப்போனான்.

## ௩௨. அதிகாரம்.

[(௧) யாக்கோபு மகனயீமிலே தரிசனை கண்டது. (௩) அவன் ஏசாவுக்குச் செய்தி அனுப்பினது. (௬) ஏசாவருகிறதைக் கேள்விப்பட்டுப் பயந்தது. (௯) இரட்சிக்கப் படும்படிக் கர்த்தரை வேண்டிக்கொண்டது. (௰௩) அவன் ஏசாவுக்கு வெகுமான மனுப்பினது. (௨௪) அவன் பெனியேலிலே தேவதூதனோடே போராடி இஸ்ரவேலென்ற பெயர்பெற்றது.]

யாக்கோபு தன்வழியே போகப்புறப்பட்டான். அப்பொழுது * பராபரனுடைய தூதர் அவனைச் சந்தித்தார்கள். * சங்கீதம். ௩௪, ௮.

௨. யாக்கோபு அவர்களைக் காண்கிறபொழுது, இது பராபரனுடைய இராணுவமென்றுசொல்லி, அந்தத் தலத்திற்கு மக்னயீமென்றுபெயரிட்டான். * ௨. இராசா. ௬, ௰௬. ௰௭.

௩. பிறபாடு யாக்கோபு தனக்கு முன்னாக ஏதோமுசீமையாகிய சேயீர்தேசத்திலிருக்கிற தன் சகோதரனாகிய ஏசாவண்டைக்குத் தூதரையனுப்பி,

௪. அவர்களுக்குக் கற்பித்ததாவது; நீங்கள் என்னுடையவனாகிய ஏசாவோடே சொல்லவேண்டியதேதெனில், நான் லாபானிடத்திலே இதுவரைக்கும் தங்கித்திரிந்தேன்.

௫. எனக்கு எருதுகளும், கழுதைகளும், ஆடுகளும், வேலைக்காரரும், வேலைக்காரிகளுமுண்டு. உம்முடைய கண்களில் எனக்குத் தயவுகிடைக்கத்தக்கதாக என்னுடையவனுக்கு இதையறிவிக்க மனிதரையனுப்பினேனென்று உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபு சொல்லச்சொன்னானென்பதுதானென்றான்.

௬. அந்தத் தூதர்கள் யாக்கோபண்டைக்குத் திரும்பவந்து, நாங்கள் உம்முடைய சகோதரனாகிய ஏசாவண்டைக்குப் போய் வந்தோம். அவனும் நானூறுபேரோடே உமக்கெதிராக வருகிறானென்றார்கள்.

௭. அப்பொழுதுயாக்கோபு மிகவும் பயந்து மன இடுக்கமடைந்து தன்னண்டையிலிருந்த சனத்தையும் ஆடு மாடுகளையும், ஒட்டகங்களையும், இரண்டு பாளயமாகப் பிரித்து,

௮. ஏசா ஒரு பாளயத்தின்மேல் வந்து அதைமுறியடித்தால், மறுபாளயந் தப்பிடுமென்றென்றான்.

௯. ¶ பிறபாடு யாக்கோபு சொன்னதாவது; * என் தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும், என் தகப்பனாகிய ஈசாக்கின்பராபரனுமானவரே! உன்தேசத்திற்கும் உன்னினத்தண்டைக்குந் திரும்பிப்போ. உனக்கு நன்மைசெய்வோமென்றென்னோடே சொல்லியிருக்கிற கர்த்தாவே! * ௩௧, ௩.

௰. * தேவரீர் உம்முடைய அடியானுக்குச் செய்துவந்த எல்லாக்கிருபைகளுக்கும் எல்லா உண்மைக்கும் நான் எம்மாத்திரம்! ஏனெனில், நான் என்கோலுங்கையுமாய் இந்த யோர்தானைக்கடந்துபோனேன். இப்பொழுதோவெனில், இரண்டு பாளயங்களுக்குடையவனானேன். * ௨. சாமு. ௭, ௰௮.

௰௧. என் சகோதரனாகிய ஏசாவின் கைக்கு என்னைத்தப்புவியும். அதேதெனில் அவன் வந்து என்னைத் தாயும்பிள்ளைகளுமாய் மடங்கடிப்பானென்று அவனுக்குநான் பயந்திருக்கிறேன்.

௰௨. நீரோவெனில், * நானுனக்கு நன்மைசெய்யவேசெய்து, உன்வித்தை ஏராளத்தினாலே எண்ணத்தொலையாத கடற்கரை மணலைப்போலாக்குவோமென்று சொன்னீரே யென்றான். * ௨௮, ௰௩—௰௫.

௰௩. ¶ அவன் அன்று இராத்திரி அங்கே தங்கித் தன் கைக்குத்தவினவைகளிலே

தன் சகோதரனாகிய ஏசாவுக்கு வெகுமான மாக.

௰௪. இருநூறு வெள்ளாடுகளையும், இருபது வெள்ளாட்டுக்கடாக்களையும், இருநூறு ஆடுகளையும், இருபது ஆட்டுக்கடாக்களையும்,

௰௫. பால்கொடுக்கிற முப்பது ஒட்டகங்களையும், அவைகளின் குட்டிகளையும், நாற்பது கிடாரிகளையும், பத்துக் காளைகளையும், இருபது கோளிகைக்கழுதைகளையும், பத்துக் கழுதைக் குட்டிகளையும் பிரித்தெடுத்து,

௰௬. தன் வேலைக்காரர் கையில் ஒவ்வொரு மந்தைகளைத் தனித்தனியாக ஒப்பித்துத் தன் வேலைக்காரரோடே: நீங்கள் எனக்கு முன்னேபத் தாண்டிப்போய் மந்தை மந்தைக்கும் இடம்விடுங்கள் என்று சொல்லி,

௰௭. முந்தினவனுக்குக் கற்பித்ததாவது; என் சகோதரனாகிய ஏசா உனக்கெதிர்ப்பட்டு நீ ஆருடைய மனிதன், நீ எங்கே போகிறாய்! உனக்கு முன்னேப் போகிற இவைகள் ஆருடையவைகள் என்று உன்னைக் கேட்டால்,

௰௮. அப்பொழுது நீ இது உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபுடையது. இது என் ஆண்டவனாகிய ஏசாவுக்கனுப்பப்படும் வெகுமானம். இதோ அவனும் எங்கள் பிறகாலே வருகிறான் என்று சொல்லென்றான்.

௰௯. இரண்டாம் மூன்றாம் வேலைக்காரனுக்கும் மந்தைகளின் பிறகாலே போகிற அனைவருக்கும் அவன் கற்பித்ததாவது; நீங்கள் ஏசாவைக் காணும்பொழுது, இந்தப் பிரகாரமாக அவனோடே சொல்லி,

௨௰. இதோ உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபு எங்கள் பிறகாலே வருகிறானென்கிறதைப் பின்னும் சொல்லுங்கள் என்று கற்பித்தான். ஏனெனில், எனக்கு முன்னேப் போகிற வெகுமானத்தினாலே அவன் முகத்தைக் குளிரப்பண்ணுவேன். பிற்பாடு அவன் முகத்தைப் பார்ப்பேன். அப்பொழுது என் பேரில் தயவு வைப்பானாக்கும் என்றான்.

௨௰௧. அப்படியே வெகுமானம் அவனுக்கு முன்னேப் போயிற்று. அவனோவெனில், அன்று இராத்திரி டாளயத்திலே தங்கி,

௨௰௨. இராத்திரியிலே யெழுந்திருந்து தன் இரண்டு பெண்சாதிகளையும் தன் இரண்டு வேலைக்காரிகளையுந் தன்னுடைய பதினொரு குமாரரையும் அழைத்துக்கொண்டு யாப்போக்கென்ற ஆற்றின் துறையைக் கடந்தான்.

௨௰௩. அவர்களை யழைத்துக்கொண்டு ஆற்றைக் கடக்கப்பண்ணித் தனக்குண்டானவைகளையும் அக்கரைப்படுத்தினான்.

௨௰௪. * ஆனால் யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான். அப்பொழுது ஒரு புருஷன் பொழுதுவிடியுமட்டும் அவனோடே போராடி,

௨௰௫. அவனை மேற்கொள்ளக் கூடாதென்று கண்டு அவனுடைய சில இடுப்புச் சந்தைத் தொட்டார். அதினால் யாக்கோபின் தொடை அவரோடே போராடுகையிற் சுளுக்கிற்று.

௨௰௬. அவர் நாம் போகட்டும். ஏனெனில், பொழுது விடிகிறதென்றார். ஆனால் இவன், * நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப் போகவொட்டேனென்றான்.

* ஓசே. ௰௨, ௪.

௨௰௭. அவரிவனுடனே உன் பேரென்னவென்றார். யாக்கோபென்றான்.

௨௰௮. அப்பொழுது அவர் * உன் பேர் இனி யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேலென்னப்படும். ஏனெனில், பராபரனோடும் மனிதரோடும் போராடி மேற்கொண்டாயென்றார். * ௩௫, ௰.

௨௰௯. அப்பொழுது யாக்கோபு உம்முடைய நாமத்தைஎனக்கறிவியுமென்று கேட்டான். அதற்கவர் நீ நம்முடைய நாமத்தைக் கேட்கிறதென்னவென்று சொல்லி அங்கே அவனை யாசீர்வதித்தார்.

௩௰. அப்பொழுது யாக்கோபு பராபரனை முகமுகமாய்க் கண்டேன். என் ஆத்துமா வுந் தப்புவிக்கப்பட்டதென்று சொல்லி, அந்த ஸ்தலத்திற்குப் பெனியேலென்று பேரிட்டான்.

௩௰௧. அவன் பெனியேலைக் கடந்துபோகையில் சூரியன் அவனுக்கு உதயமாயிற்று. அவனோவெனில், இடுப்புச் சுளுக்கினாலே நொண்டிநடந்தான்.

௩௰௨. அவர் யாக்கோபுடைய தொடைக்கின் ஒட்டுநரம்பைத் தொட்டபடியினாலே இஸ்ரவேல் புத்திரர் இந்நாள் வரைக்குந் தொடையின்கீழிருக்கிற ஒட்டுநரம்பைப் புசியாதே போகிறார்கள்.

## ௩௩. அதிகாரம்.

[(௧) யாக்கோபும் ஏசாவும் அன்போடே சந்தித்தது. (௰௭) யாக்கோபு சுக்கோத்துக்கு வந்தது. (௰௮) சாலேமில் ஒரு வயல்வெளியை வாங்கி அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினது.]

பிற்பாடு யாக்கோபு தன் கண்களை யேறெடுத்து, இதோ, * ஏசாவையும் அவனோடே கூட நானூறு மனிதரையும் வரக்கண்டு, பிள்ளைகளை லேயாளண்டையிலும் ராகேலண்டையிலும் இரண்டு வேலைக்காரிகளண்டையிலும் வெவ்வேறே பிரித்து வைத்து, * ௩௨, ௬.

௨. வேலைக்காரிகளையும், அவர்கள் பிள்ளைகளையும் முன்னேயும் லேயாளையும் அவள் பிள்ளைகளையும் பிறகாலேயும் ராகேலையும் யோசேப்பையும் பின்னேயும் நிறுத்தி,

வரையொருவர் விட்டு மறைந்தபிறபாடு நீ என்குமாரத்திகளை யுபத்திரவப்படுத்தி என் குமாரத்திகளைத் தவிர வேறு ஸ்திரிகளை விவாகம்பண்ணினாயானால், கர்த்தர் எனக்குமுனக்கும் நடுவராயக் கண் காணிக்கக்கடவர்.

௫௰. நம்முடனேயொருவருமில்லை. பார் பராபரனே எனக்குமுனக்கும் நடுவானசாட்சி யென்றான்.

௫௧. பின்னையும்லாபானயாக்கோபோடே சொன்னதாவது; இதோ இந்தக் குவியல் இதோ, எனக்கு முனக்கும் நடுவாக நான் போட்டதூண்.

௫௨. தீங்குசெய்ய நானிந்தக் குவியலைக் கடந்து உன்னண்டைக்கு வராமலும், நீ இந்தக்குவியலையும் இந்தத் தூணையுங்கடந்து என்னண்டைக்குவராமலுமிருக்கிறதற்கு இந்தக்குவியலுஞ் சாட்சி இந்தத் தூணுஞ் சாட்சி.

௫௩. ஆபிரகாமின் பராபரனும், நாகோரின் பராபரனும் அவர்கள் பிதாக்களின் பராபரனுமானவர் நமக்குள்ளே நடுவராயிருக்கக்கடவரென்றான். அப்பொழுதுயாக்கோபு தன்தகப்பனாகியஈசாக்குடையபயத்தின்பேரிலே ஆணையிட்டான்.

௫௪. பிறபாடு யாக்கோபு பர்வதத்தின் மேற் பலியிட்டுத் தன்சகோதரரை அப்பம் புசிக்கஅழைத்தான். அப்படியே அப்பம் புசித்தாப்பர்வதத்திலே இராத்தங்கினார்கள்.

௫௫. லாபான் அதிகாலமே யெழுந்திருந்து தன்பிள்ளைகளையுந் தன் குமாரத்திகளையும் முத்திசெய்து, அவர்களை ஆசீர்வதித்தான். பிறபாடு லாபான் புறப்பட்டுத் தன்னிடத்திற்குத்திரும்பிப்போனான்.

## ௩௨. அதிகாரம்.

[(௧) யாக்கோபு மகனயீமிலே தரிசனை கண்டது. (௩) அவன் ஏசாவுக்குச் செய்தி அனுப்பினது. (௬) ஏசாவருகிறதைக்கேள்விப்பட்டுப் பயந்தது. (௯) இரட்சிக்கப் படும்படிக் கர்த்தாவை வேண்டிக்கொண்டது. (௰௩) அவன் ஏசாவுக்கு வெகுமானமனுப்பினது. (௨௪) அவன் பெனியேலிலே தேவதூதனோடே போராடி இஸ்ரவேலென்றபெயர்பெற்றது.]

யாக்கோபு தன்வழியே போகப்புறப்பட்டான். அப்பொழுது * பராபரனுடையதூதர் அவனைச்சந்தித்தார்கள். * சங்கீதம். ௩௪, ௮.

௨. யாக்கோபுஅவர்களைக்காணுகிறபொழுது, இது பராபரனுடைய இராணுவமென்றுசொல்லி, அந்தத்தலத்திற்குமகனயீமென்றுபெயரிட்டான். * ௨. இராசா. ௬, ௰௬. ௰௭.

௩. பிறபாடு யாக்கோபு தனக்குமுன்னாக ஏதோமுசீமையாகிய சேயீர்தேசத்திலிருக்கிறதன்சகோதரனாகிய ஏசாவண்டைக்குத் தூதனையனுப்பி,

௪. அவர்களுக்குக் கற்பித்ததாவது; நீங்கள் என்னாண்டவனாகிய ஏசாவோடே சொல்லவேண்டியதேதென்னில், நான் லாபானிடத்திலே இதுவரைக்குந் தங்கித்தரித்திருந்தேன்.

௫. எனக்கு எருதுகளும், கழுதைகளும், ஆடுகளும், வேலைக்காரரும், வேலைக்காரிகளுமுண்டு. உம்முடைய கண்களில் எனக்குத் தயவுகிடைக்கத்தக்கதாக என்னாண்டவனுக்கு இதையறிவிக்க மனிதரையனுப்பினேனென்று உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபு சொல்லச்சொன்னானென்பதாயென்றான்.

௬. அந்தத்தூதர்கள் யாக்கோபண்டைக்குத் திரும்பவந்து, நாங்கள் உம்முடைய சகோதரனாகிய ஏசாவண்டைக்குப் போய் வந்தோம். அவனும் நானூறுபேரோடே உமக்கெதிராகவருகிறானென்றார்கள்.

௭. அப்பொழுதுயாக்கோபு மிகவும் பயந்து மன இடுக்கமடைந்து தன்னண்டையிலிருந்த சனத்தையும் ஆடு மாடுகளையும், ஒட்டகங்களையும், இரண்டு பாளயமாகப் பிரித்து,

௮. ஏசா ஒரு பாளயத்தின்மேல் வந்து அதைமுறியடித்தால், மறுபாளயந் தப்பிடுமென்றென்றான்.

௯. ¶ பிறபாடுயாக்கோபுசொன்னதாவது; * என் தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும், என் தகப்பனாகிய ஈசாக்கின்பராபரனுமானவரே! உன்தேசத்திற்குமஉன்னினத்தாரண்டைக்குந்திரும்பிப்போ. உனக்கு நன்மைசெய்வோமென்றென்னோடே சொல்லியிருக்கிறகர்த்தாவே! * ௩௧, ௩.

௰. * தேவரீர் உம்முடைய அடியானுக்குச் செய்துவந்த எல்லாக்கிருபைகளுக்கும் எல்லாஉண்மைக்கும் நானெய்யமாத்திரம்! ஏனென்னில், நான் என்கோலுங்கையுமாய் இந்த யோர்தானைக்கடந்துபோனேன். இப்பொழுதோவென்னில், இரண்டு பாளயங்களுக்குடையவனானேன். * ௨. சாமு. ௭, ௰௮.

௰௧. என் சகோதரனாகிய ஏசாவின் கைக்கு என்னைத்தப்புவியும். அதேதென்னில் அவன் வந்து என்னைத் தாயும்பிள்ளைகளுமாய் மடங்கடிப்பானோவென்று அவனுக்குநான் பயந்திருக்கிறேன்.

௰௨. நீரோவென்னில், * நானுனக்குநன்மைசெய்யவேசெய்து, உன்வித்தை ஏராளத்தினாலே எண்ணத்தொலையாத்கடற்கரை மணலைப்போலாக்குவோமென்று சொன்னீரேயென்றான். * ௨௮, ௰௩—௰௫.

௰௩. ¶ அவன் அன்று இராத்திரி அங்கே தங்கித் தன் கைக்குதவினவைகளிலே

தன் சகோதரனாகிய ஏசாவுக்கு வெகுமானமாக.

௰௪. இருநூறு வெள்ளாடுகளையும், இருபது வெள்ளாட்டுக்கடாக்களையும், இருநூறு ஆடுகளையும், இருபது ஆட்டுக்கடாக்களையும்,

௰௫. பால்கொடுக்கிற முப்பது ஒட்டகங்களையும், அவைகளின் குட்டிகளையும், நாற்பது கிடாரிகளையும், பத்துக்காளைஎருதுகளையும், இருபது கோளிகைக்கழுதைகளையும், பத்துக் கழுதைக் குட்டிகளையும் பிரித்தெடுத்து,

௰௬. தன்வேலைக்காரர்கையில் ஒவ்வொரு மந்தைகளைத் தனித்தனியாக ஒப்பித்துத் தன்வேலைக்காரரோடே நீங்கள் எனக்கு முன்னேபத் தாண்டிப்போய் மந்தை மந்தைக்கும் இடம்விடுங்களென்றுசொல்லி,

௰௭. முந்தினவனுக்குக் கற்பித்ததாவது; என் சகோதரனாகிய ஏசா உனக்கெதிர்ப்பட்டு நீ ஆருடைய மனிதன், நீ எங்கே போகிறாய்? உனக்கு முன்னேபோகிற இவைகள் ஆருடையவைகளென்றுன்னைக் கேட்டால்,

௰௮. அப்பொழுது நீ இது உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபுடையது. இது என்னுடையவனாகிய ஏசாவுக்கனுப்பப்பட்டவெகுமானம். இதோ அவனும் எங்கள் பிறகாலேவருகிறானென்றுசொல்லென்றான்.

௰௯. இரண்டாம் மூன்றாம் வேலைக்காரனுக்கும் மந்தைகளின் பிறகாலே போகிற அனைவருக்கும் அவன் கற்பித்ததாவது; நீங்கள் ஏசாவைக் காணும்பொழுது, இந்தப் பிரகாரமாக அவனோடேசொல்லி,

௨௰. இதோ உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபு எங்கள்பிறகாலேவருகிறானென்கிறதையுஞ்சொல்லுங்களென்றுகற்பித்தான். ஏனெனில்,எனக்குமுன்னேபோகிறவெகுமானத்தினாலே அவன்முகத்தைக் குளிரப்பண்ணுவேன். பிறபாடு அவன் முகத்தைப் பார்ப்பேன். அப்பொழுது என்பேரிலதயவுவைப்பானென்றுமென்றான்.

௨௧. அப்படியே வெகுமானம் அவனுக்கு முன்னேப் போயிற்று. அவனோவெனில், அன்று இராத்திரிபாளயத்திலேதங்கி,

௨௨. இராத்திரியிலே யெழுந்திருந்து தன் இரண்டு பெண்சாதிகளையும் தன் இரண்டு வேலைக்காரிகளையுந் தன்னுடையபதினொரு குமாரரையும் அழைத்துக்கொண்டு யாப்போக்கென்ற ஆற்றின்துறையைக்கடந்தான்.

௨௩. அவர்களை யழைத்துக்கொண்டு ஆற்றைக் கடக்கப்பண்ணித் தனக்குண்டானவைகளையும் அக்கரைப்படுத்தினான்.

௨௪. * ஆனால் யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான். அப்பொழுது ஒரு புருஷன் பொழுதுவிடியுமட்டும் அவனோடே போராடி,

௨௫. அவனை மேற்கொள்ளக் கூடாதென்றுகண்டு அவனுடைய கீல் இடுப்புச் சந்துதொட்டார். அதினால் யாக்கோபின் தொடை அவரோடே போராடுகையிற் சுளுக்கிற்று.

௨௬. அவர் நாம்போகட்டும். ஏனெனில், பொழுது விடிகிறதென்றார். ஆனால் இவன், * நீரென்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப்போகவொட்டேனென்றான்.

* ஓசே. ௰௨, ௪.

௨௭. அவரிவனுடனே உன் பேரென்னவென்றார். யாக்கோபென்றான்.

௨௮. அப்பொழுது அவர்* உன்பேர்இனி யாக்கோபுஎன்னப்படாமல் இஸ்ரவேலென்னப்படும். ஏனெனில், பராபரனோடும் மனிதரோடும் போராடிமேற்கொண்டாயென்றார். * ௩௫, ௰.

௨௯. அப்பொழுது யாக்கோபு உம்முடையநாமத்தைஎனக்கறிவியுமென்றுகேட்டான். அதற்கவர் நீ நம்முடைய நாமத்தைக் கேட்கிறதென்னவென்று சொல்லி அங்கே அவனை யாசீர்வதித்தார்.

௩௰. அப்பொழுது யாக்கோபு பராபரனை முகமுகமாயக் கண்டேன். என்னுத்துமா வுந் தப்புவிக்கப் பட்டதென்று சொல்லி, அந்த ஸ்தலத்திற்குப் பெனியேலென்று பேரிட்டான்.

௩௧. அவன்பெனியேலைக் கடந்துபோகையில் சூரியன் அவனுக்கு உதயமாயிற்று. அவனோவெனில், இடுப்புச் சுளுக்கினாலே நொண்டிநடந்தான்.

௩௨. அவர்யாக்கோபுடைய தொடைக்கீலின் ஒட்டுநரம்பைத் தொட்டபடியினாலே இஸ்ரவேல் புத்திரர் இந்நாள் வரைக்குந் தொடையின்கீலிலிருக்கிற ஒட்டுநரம்பைப் புசியாதேபோகிறார்கள்.

## ௩௩. அதிகாரம்.

[(௧) யாக்கோபும் ஏசாவும் அன்போடே சந்தித்தது. (௰௭) யாக்கோபு சுக்கோத்துக்குவந்தது. (௰௮) சாலேமில் ஒருவயல் வெளியைவாங்கி அங்கே ஒருபலிபீடத்தைக் கட்டினது.]

பிறபாடு யாக்கோபு தன் கண்களையேறெடுத்து, இதோ, * ஏசாவையும் அவனோடேகூட நானூறு மனிதரையும் வரக்கண்டு, பிள்ளைகளைலேயாளண்டையிலும் ராகேலண்டையிலும் இரண்டுவேலைக்காரிகளண்டையிலும் வெவ்வேறேபிரித்துவைத்து, * ௩௨, ௬.

௨. வேலைக்காரிகளையும், அவர்கள் பிள்ளைகளையும் முன்னேகவும் லேயாளையும் அவள் பிள்ளைகளையும் பிறகாலேயும் ராகேலையும் யோசேப்பையும்பின்னேகவும்நிறுத்தி,

௩. தான அவர்களுககு முனனாக நடநது போயத தனசகோதரனகிடடச சேருமளவும ஏழுவிசை தரைமடடுங குனிநதுவணஙகினான.

௪. அபபொழுது ஏசா அவனுக கெதிர் கொணடோடி அவனைக கடடிககொணடு, அவனகழுததிறுகப பூணடு அவனை முததி செயதான. இருவருமஅழுதார்கள.

௫. அவன தன கணகளை யேறெடுததுப பெணசாதிகளையும பிளளைகளையுங கணடு, உனனோடிருககிற இவர்களார்! எனறான. அதறகவன பராபரன உமமுடையஊழியககாரனுககருளினபிளளைகளெனறான.

௬. அபபொழுதுவேலைககாரிகளும அவர்கள பிளளைகளுஞ சேரவநது வணஙகினார்கள.

௭. லேயாளும,அவளபிளளைகளும சேரவநதுவணஙகினார்கள. பிறபாடு யோசேபபும ராகேலும சேர்நதுவநது வணஙகினார்கள.

௮. அபபொழுது அவன நான சநதிதத அநத உனனுடைய தணடெலலாம ஏதுககெனறான. அதறகவன எனனுடையவனுடையகணகளில எனககுததயவுகிடைககிறதறகெனறான.

௯. ஆனால ஏசா எனககு நிரமபவிருககினறது. எனசகோதரனே! உனனுடையது உனககிருககடடுமெனறான.

௰. யாக்கோபோவெனிலசொனனதாவது; அபபடியலல உமமுடையகணகளில எனககுத தயவுகிடைததேயாகில என காணிககையை எனகையிலே வாஙகிககொளளும. ஏனெனறால, நீர்எனனைபபிரியமாயப பார்ககையில நான உமமுடையமுகததைப பராபரனுடைய முகததைககாணகிறதுபோலக் கணடேன.

௰௧. உமககுக் கொணடு போகபபடட * எனனுடைய ஆசிர்வாதத்தை வாஙகிககொளளும. ஏனெனில, பராபரன எனககுத தநதருளினார். வேணடியதெலலாம எனககிருககினறதெனறுசொலலி, அவனை வருநதிககொணடான. அபபொழுது அவன அதைவாஙகிககொணடு, * ௧. சாமு. ௨௫, ௨௭. ௩௰, ௨௬.

௰௨. நாமபயணமபுறபபடடுபபோவோம. வா, உனககுமுனனாக நடபபேனென்றான.

௰௩. அபபொழுது இவன அவனோடே சொனனதாவது; பிளளைகள இளமபிளளைகளெனறும, பால கொடுககிற ஆடுமாடுகள எனனோடிருககினறதெனறும, எனனுடையவனறிவார். அவைகளை ஒருநாளில துரிதமாய ஓடடினால மநதையெலலாஞ செததுபபோம.

௰௪. எனனுடையவன தனனூழியககாரனுககு முனனாகபபோவாராக. நானோவெனில, சேயீரிலே எனனுடையவனணடைககு வருமடடும எனககுமுன நடககிற மநதைகளின் காலநடைககும, பிளளைகளின காலநடைககுந தககமெதுவாய அவைகளை நடததிககொணடு வருவேனென்றான.

௰௫. அபபொழுது ஏசா எனனோடிருககிற சனததிற சிலதை நானுனனிடததில நிறுததடடுமே யெனறான. அதறகிவன அதேதுககு எனனுடையவனுடைய கணகளில எனககுத தயவுமாததிரம கிடைககட்டுமெனறான.

௰௬. * அபபடியேஏசாஅநநாளிலேதிரும்பித தனவழியே சேயீருககுபபோனான.

௰௭. யாககோபோ வெனறால, சுககோததிறகுப பயணமபணணித தனககு வீடுகடடித தனமிருகஙகளுககுக் கொடடாரஙகளைபபோடடான. அதினாலேஅநதஸதலததிறகுச சுககோததெனறு பேர்தரிததான.

௰௮. * யாககோபு தான அராமிலிருநது வநதபிறபாடு கானான தேசததிலிருககிற சீகேமின ஊருககுசசுகமாயவநது, ஊருக கெதிரேபாளயமிறஙகி,

௰௯. தன கூடாரததை நாடடும வயலவெளியின நிலததைச சீகேமின தகபபனாகிய ஏமோர் புததிரர்கையிலே நூறு வெளளிககாசுககுககொணடு,

௨௰. அஙகே ஒரு பலிபீடததைக கடடிப பராபரன இஸரவேலின பராபரனெனறு அதறகுபபெயரிடடான.

## ௩௪. அதிகாரம்.

[(௧) தீனாள சீகேமினால கறபழிககபபடடது. (௪) அவன அவளைவிவாகஞ செயயககோரினது. (௰௩) அதினிமிததம யாககோபினபுததிரர் சீகேமூராரைச சுனனததுப பணணிககொளள வேணடுமெனறு தீர்மானிததது. (௨௰)ஏமோரும சீகேமும அதறகுசசனஙகளைச சமமதிககபபணணினது. (௨௫) யாககோபினபுததிரர் இநதசசமயமபார்ததுஅவர்களைச்சங்காரமபணணி,(௨௭) அவர்களபடடணததையழிததது. (௩௰)இப்படிசசெயததற்காக யாககோபு சிமியோனையும லேவியையுங கடிநதுகொணடது.]

லேயாள யாககோபுககுப பெறற அவளுடைய குமாரததி யாகிய தீனாள தேசததிற குமாரததிகளைப பார்ககபபுறபபடடாள.

௨. அவளை ஏவியனான ஏமோரின குமாரனும தேசததின பிரபுவாகிய சீகேமெனறவனகணடு, அவளை யழைததுபபோய்அவளோடேசயனிதது, அவளைககறபழிததான.

௩. அவன ஆததுமா யாககோபின குமாரததியாகிய தீனாளமேலே பிடிபபாயிருநதது. அவன அநதபபெணணைசசிநேகிதது அநதப பெணணின மனதுககு நடபாயப பேசினான.

௪. சீகேம் தன் தகப்பனாகிய ஏமோருடனே இந்தப்பெண்ணை யெனக்குக் கொள்ளுமென்று சொன்னான்.

௫ தன் குமாரத்தியாகிய தீனாளை அவன் தீட்டுப்படுத்தினதை யாக்கோபு கேட்டபொழுது அவன்குமாரர் அவனுடைய மந்தையண்டையில் வெளியிலேயிருந்தார்கள். அவர்கள் வருமட்டும் யாக்கோபு மவுனமாயிருந்தான்.

௬. ¶ அப்பொழுது சீகேமின் தகப்பனாகியஏமோர் யாக்கோபோடேபேச அவனண்டைக்குப் புறப்பட்டுவந்தான்.

௭. யாக்கோபின் குமாரர் செய்தியைக் கேட்டபொழுது வெளியிலிருந்து வந்தார்கள். அவன்யாக்கோபின்குமாரத்தியோடே சயனித்ததென்கிற செய்யப்படாத மதி கெட்டகாரியத்தை இஸ்ரவேலிலே செய்ததினாலே, அந்தமனிதருக்கு மனம் நொந்து அவர்களுக்குமிகவுங்கோபமுண்டாயிற்று.

௮. ஏமோர் அவர்களோடேபேசிச்சொன்னதாவது; என்குமாரனாகிய சீகேமின் ஆத்துமா உங்கள் குமாரத்தியின்மேல்வாஞ்சையாயிருக்கிறது. அவளையவனுக்குப்பெண்சாதியாகக்கொடுங்கள்.

௯. நீங்கள் எங்களோடேசம்பந்தங்கலந்து, உங்கள் குமாரத்திகளை யெங்களுக்குக் கொடுத்து எங்கள் குமாரத்திகளையுங்களுக்குக்கொண்டு,

௰. எங்களோடே குடியிருங்கள். தேசம் உங்கள்முன்பாகக்கிடக்கிறது. அதிலேகுடியிருந்து வியாபாரம்பண்ணி, ஆஸ்திசம்பாதித்து அதைக்கையாண்டு கொண்டிருங்களென்றான்.

௰௧. சீகேம் அவள் தகப்பனோடும், அவள் சகோதரரோடுஞ்சொன்னதாவது; உங்கள் கண்களில் எனக்குத் தயவுகிடைக்கட்டும், நீங்களெனக்குச் சொல்வதைத் தருவேன்.

௰௨. என்மேற் பரியத்தையுங் காணிக்கையையுந் திரளாய்ச் சுமத்துங்கள். நீங்களெனக்குச் சொல்லும்படி தருவேன். அந்தப்பெண்ணைமாத்திரம் எனக்குப் பெண்சாதியாகக்கொடுங்களென்றான்.

௰௩. அப்பொழுது யாக்கோபின் குமாரர் தங்கள் சகோதரியாகிய தீனாளைத் தீட்டுப் படுத்தின படியால் சீகேமுக்கும், அவன் தகப்பனாகிய ஏமோருக்கும் கபடமாய் மறுமொழி கொடுத்து, அவர்களோடேசொன்னதாவது;

௰௪. எங்கள் சகோதரியைச் சுன்னத்தில்லாத புருஷனுக்குக் கொடுக்குங் காரியத்தை நாங்கள் செய்யக்கூடாது. ஏனென்றால், அது எங்களுக்கு நிந்தையாயிருக்கும்.

௰௫. நீங்கள் உங்களிலிருக்கும் ஆண் அனைத்தையுஞ் சுன்னத்துப் பண்ணுகிறதினாலே, எங்களைப்போலானீர்களேயாகில், நாங்கள் உங்களுக்குச்சம்மதித்து,

௰௬. உங்களுக்கு எங்கள் குமாரத்திகளைக் கொடுத்து, உங்கள் குமாரத்திகளை யெங்களுக்குக்கொண்டு, உங்களோடே குடியிருந்து ஏகசனமாவோம்.

௰௭. சுன்னத்துப் பண்ணிக்கொள்ள எங்கள் சொற்கேளாதேபோனீர்களேயானால், நாங்கள் எங்கள்குமாரத்தியை யழைத்துக் கொண்டுபோவோமென்றார்கள்.

௰௮. அவர்கள் வார்த்தைகள் ஏமோருக்கும், ஏமோரின்குமாரனாகிய சீகேமுக்கும், நன்றாய்க்கண்டது.

௰௯. அப்படிச்செய்ய அந்தவாலிபன் தாமதம்பண்ணினதில்லை. ஏனெனில், யாக்கோபுடைய குமாரத்தியின்மேற் பிரியம் வைத்தான். அவன் தன் தகப்பன்வீட்டார் அனைவரிலுங் கனமாய் எண்ணப்பட்டவனுமாயிருந்தான்.

௨௰. ¶ ஏமோரும், அவன்குமாரன் சீகேமுந் தங்கள்பட்டணத்தின் ஒலிமுகவாசலில்வந்து, தங்கள்பட்டணமனிதரோடேபேசிச்சொன்னதாவது;

௨௰௧. இந்தமனிதர்நம்மோடே சமாதானமாயிருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் தேசத்திலேகுடியிருந்து அதிலேவியாபாரம்பண்ணட்டும். இதோ, அவர்களுக்குமுன்பாகத் தேசம் இருபுறமும் விஸ்தாரமாய்க் கிடக்கிறது. அவர்கள்குமாரத்திகளை நாம் நமக்குப் பெண்சாதிகளாகக்கொண்டு நம்முடைய குமாரத்திகளை அவர்களுக்குக்கொடுப்போமே.

௨௰௨. இந்தமனிதர் சுன்னத்துப்பண்ணப்பட்டவர்களாயிருக்கிறதுபோல நாம்நம்மிலுள்ள ஆண் அனைத்தையுஞ் சுன்னத்துமாத்திரம்பண்ணினோமாகில் அவர்கள்நம்மோடே ஏகசனமாகக்குடியிருப்பதற்குச்சம்மதிப்பார்கள்.

௨௰௩. அவர்கள்மந்தைகளும் அவர்கள் ஆஸ்திகளும் அவர்கள்மிருகசீவன்களுமெல்லாம் நம்மைச்சேர்வதில்லையோ! அவர்களுக்குச் சம்மதியாகமாத்திரஞ்செய்தோமானால் நம்முடனே குடியிருப்பார்களென்றார்கள்.

௨௰௪. அப்பொழுது ஏமோரின்பட்டணத்துவாசலாற் புறப்படுகிறவர்களாகிய அனைவரும் அவன்சொல்லையும் அவன்குமாரனாகியசீகேமின்சொல்லையுங்கேட்டு அவன்பட்டணத்துவாசலாற் புறப்படுகிறவர்களாகிய ஆண்சாதியாரெல்லாரும் சுன்னத்தடைந்தார்கள்.

௨௰௫. ¶ மூன்றாம்நாளில் அவர்களுக்குநோவெடுத்துக் கொண்டபொழுது சம்பவித்ததென்றால், யாக்கோபின்குமாரருந் தீனாளின் சகோதரருமாகிய * சிமெயோனும்

லேவியுமென்ற இரண்டுபேர் அவனவன் தன் தன் பட்டயத்தை யெடுத்துக்கொண்டு பயமில்லாமல் பட்டணத்தின்மேல்வந்து ஆண்அனைத்தையுங்கொன்று, * சக,ரு,கூ.

உகூ. ஏமோரையும் அவன்குமாரன் சீகேமையும் பட்டயக்கருக்காலே கொன்றுபோட்டுத் தீனாளைச் சீகேமின்வீட்டிலிருந்தழைத்துப்புறப்பட்டுப்போனார்கள்.

உஎ. யாக்கோபின்குமாரர்வெட்டுண்டவர்கள்மேல்வந்து அவர்கள் தங்கள்சகோதரியைத்தீட்டுப்படுத்தினதற்காகப் பட்டணத்தைக்கொள்ளையிட்டு,

உஅ. அவர்களுடைய ஆடுமாடுகளையும் கழுதைகளையும் ஊரிலும் ஊர்வெளியிலுமிருந்தவைகளெல்லாவற்றையுமெடுத்து,

உகூ. அவர்களுடைய எல்லாத்தட்டுமுட்டுகளையும் அவர்களுடைய எல்லாக்குழந்தைகளையும் பெண்சாதிகளையும் வீட்டிலிருந்தவெல்லாவற்றையும்பிடித்துக்கொண்டு கொள்ளையாடினார்கள்.

௩௰. அப்பொழுதுயாக்கோபு சிமியோனோடும் லேவியோடுஞ்சொன்னதாவது, நீங்கள்தேசத்திற்குடியிருக்கிற கானானியரிடத்திலும் பெரிசியரிடத்திலுமென்வாசனையைக்கெடுத்ததினாலேயென்னைக்கலங்கப்பண்ணினீர்கள். நான் கொஞ்சச்சனமாயிருக்கிறேன். அவர்கள் எனக்குவிரோதமாகக்கூட்டங்கூடி நானும் என்வீடுமழிய என்னைவெட்டுவார்களேயென்றான்.

௩க. அதற்கவர்கள் எங்கள் சகோதரியை அவர்களொரு வேசியைப்போல நடத்தலாமோ என்றார்கள்!

## ௩ரு. அதிகாரம்.

[(க) பராபரன் யாக்கோபைப்பெத்தேலுக்கு அனுப்பினது. (உ) அவன்தன்வீட்டிலிருந்த விக்கிரகங்களைவிலக்கினது. (௩) பெத்தேலில் ஒரு பலிபீடத்தைக்கட்டினது. (அ) தெப்போராளமரித்தது. (கூ) பராபரன் பெதத்தேலில் யாக்கோபை ஆசிர்வதித்தது. (௰௬) ராகேல் பென்யமீனுக்காகக் கெர்ப்பவேதனைப்பட்டு எப்பிராத்துக்குப்போகிற வழியிலேமரித்தது. (உஉ) ரூபேன்பில்காளோடேமுறைகேடுசெய்தது. (உ௩) யாக்கோபின்புத்திரரின்னொன்பது. (உஎ) யாக்கோபு தன்தகப்பன் ஈசாக்கினிடத்தில் எபிரோனுக்குவந்தது. (உஅ) ஈசாக்குடைய ஆயுள்மரணம் அடக்கம் என்பவைகளைச் சொல்லியது.]

பராபரனோவென்றால் யாக்கோபுடனே நீயெழுந்து பெத்தேலுக்குப்போய் ஏறி அங்கேகுடியிருந்து நீ உன்சகோதரனாகிய ஏசாவின்முகத்திற்குவிலகி ஓடிப்போகிறபொழுது * உனக்குத்தரிசனையான பராபரனுக்கு அங்கேயொருபலிபீடத்தை யுண்டாக்கென்றார். * உஅ, ௰உ, ௰கூ.

உ. அப்பொழுதுயாக்கோபு தன்வீட்டாரோடுந் தன்னோடேகூடவிருந்தஅனைவரோடுஞ்சொன்னதாவது, உங்கள்நடுவிலிருக்கிற அந்நியதேவர்களை விலக்கிப்போட்டு உங்களைச்சுத்தம்பண்ணிக்கொண்டு உங்கள்வஸ்திரங்களைமாற்றுங்கள்.

௩. நாமெழுந்து பெத்தேலுக்குப்போய் ஏறுவோம். என் அவதிநாளிலே எனக்குத்தரவு அருளிச்செய்து நானடந்தவழியிலே என்னோடேகூட இருந்தபராபரனுக்கங்கே ஒருபலிபீடத்தை யுண்டாக்குவேனென்றான்.

ச. அப்பொழுது அவர்கள் தங்கள்கையிலிருந்த எல்லா அந்நியதேவர்களையும் தங்கள்காதுகளிலிருந்த கடுக்கன்களையும் யாக்கோபுக்குக்கொடுத்தார்கள். யாக்கோபு அவைகளைச் சீகேமூரருகேயிருந்த ஒரு கர்வாலிமரத்தின்கீழேபுதைத்தான்.

ரு. பிற்பாடுபயணம்புறப்பட்டார்கள். அவர்களைச் சுற்றிலுமிருந்த பட்டணங்களின்மேலே பராபரனாலே பயங்கரமுண்டாகையால் யாக்கோபின்குமாரரைப்பின்றொடராதிருந்தார்கள்.

கூ. ¶ யாக்கோபும் அவனோடேகூடவிருந்த எல்லாச்சனமும் கானான்தேசத்திலிருக்கும் லூசுக்குவந்தார்கள். அதுவேபெத்தேல்.

எ. அங்கேயவன் ஒரு பலிபீடத்தைக்கட்டித் தான் தன்சகோதரனுடைய முகத்திற்குவிலகி ஓடிப்போகிறபொழுது அங்கே பராபரன்தனக்கு வெளிப்பட்டபடியினாலே அந்தஸ்தலத்திற்கு ஏல் பெத்தேலென்று பேரிட்டான்.

அ. ரெபேக்காளின் தாதியாகியதெப்போராள் மரித்துப் பெத்தேலின்பள்ளத்தாக்கிலேவெளியிலே ஒருகர்வாலிமரத்தின்கீழே யடக்கம்பண்ணப்பட்டாள். அதுபுலம்பலின்கர்வாலியுமரமென்றழைக்கப்பட்டது.

கூ. ¶ யாக்கோபு தான் அராமிலிருந்து வந்தபிற்பாடு பராபரன் அவனுக்குப்பின்னையுந்தரிசனையாகி அவனை யாசீர்வதித்து,

௰. அவனுடனே உன்பேர் யாக்கோபென்பது இனியுன்பேர்யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேலென்றபெயர் உனக்கிருக்குமென்றுசொல்லி அவனுக்கு இஸ்ரவேலென்றுபெயரிட்டார்.

௰க. பின்னையும்பராபரன்அவனோடேசொன்னதாவது, நாம் சர்வத்திற்கும்வல்லபராபரனாயிருக்கிறோம். நீ பலுகிப்பெருகு,சாதியும் சாதிகளின்கூட்டமும் உன்னாலுண்டாகும். இராசாக்களும் உன் இடுப்பின் பிறப்பாயிருப்பார்கள்.

௧௨. நான் ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும் கொடுத்த தேசத்தை யுனக்குத் தருவேன். உனக்குப்பிற்பாடு உன்வித்துக்கும் இந்தத் தேசத்தைத்தருவேனென்றுசொல்லி,

௧௩. பராபரன் அவனோடேபேசினஸ்தலத்திலிருந்து அவனைவிட்டேறிப்போனார்.

௧௪. அப்பொழுது யாக்கோபு அவர் தன்னோடேபேசின ஸ்தலத்திலே கற்றூணாகிய நினைவுத்தூணை நிறுத்தி, அதின்மேல் பானபலியூற்றி, அதின்மேல் எண்ணெயைவார்த்தான்.

௧௫. பராபரன்தன்னோடேபேசின அந்தஸ்தலத்திற்கு யாக்கோபுபெத்தேலென்றுபெயரைத்தானதரித்தான்.

௧௬. ¶ பெத்தேலிலிருந்து பயணம்புறப்பட்டார்கள். எப்பிராத்தாவுக்குவர இன்னங் கொஞ்சதூரமிருக்கிறபொழுது, ராகேல் பிள்ளைபெற்றாள். பெறுகையில், அவளுக்குக்கடிவருத்தமாயிற்று.

௧௭. அப்பொழுது சம்பவித்ததாவது; பெறுகிறதிலே யவளுக்குக் கடிவருத்தமாயிருக்கையில், மருத்துவச்சி அவளுடனே, பயப்படாதே. ஏனென்றால், இந்தப்புத்திரனும் உனக்கிருப்பானென்றாள்.

௧௮. சம்பவித்ததேதென்றால், மரணம் அடைய அவளாத்துமாப் புறப்படுகையில், அவளவனுக்குப் பெனோனியென்று பேரிட்டாள். அவன்தகப்பனோவெனில், அவனைப் பென்யமீனென்றழைத்தான்.

௧௯. ராகேல்மரித்துப்பெத்லகேமென்னப்படுகிற எப்பிராத்தா ஊர்வழியிலே யடக்கம்பண்ணப்பட்டாள்.

௨௰. அவள்கல்லறையின்மேல் யாக்கோபு நினைவுத்தூணை நிறுத்தினான். அதுவே இந்நாள்வரைக்குமிருக்கிற ராகேலுடையகல்லறைத்தூண்.

௨௧. ¶ இஸ்ரவேல்பயணம்பண்ணி, ஏதேரென்கோபுரத்திற்கப்புறத்தேதன்கூடாரத்தைப்போட்டான்.

௨௨. இஸ்ரவேல் அந்தசீமையிற் குடியிருக்கிறபொழுது சம்பவித்ததேதென்றால், *ரூபேனபோய்த்தன்தகப்பனுடைய வைப்பாட்டியாகிய பில்காளோடே சயனித்தான். அது இஸ்ரவேலுக்குக் கேள்வியாயிற்று. யாக்கோபின் குமாரரோவென்றால், பன்னிரண்டுபேராயிருந்தார்கள். * ௪௯, ௪.

௨௩. யாக்கோபுக்கு முதற் புத்திரனான ரூபேனும், சிமெயோனும், லேவியும், யூதாவும், ஈசக்காரும், செபுலோனும், லேயாளின் குமாரரானவர்கள்.

௨௪. ராகேலின்குமாரர் யோசேப்பும், பென்யமீனுமென்றவர்கள்.

௨௫. ராகேலுடைய வேலைக்காரியாகிய பில்காளின் குமாரர் தாணும், நப்தலியுமென்றவர்கள்.

௨௬. லேயாளின்வேலைக்காரியாகிய சில்பாளின் குமாரர் காதும். ஆசேருமென்றவர்கள். இவர்கள் யாக்கோபுக்குப் பதானாராமிலே பிறந்தகுமாரர்.

௨௭. ¶ யாக்கோபு அர்பாவின் ஊராகிய மம்ரேக்குத் தனதகப்பனாகிய ஈசாக்கண்டையிலே வந்தான். அது ஆபிரகாமும் ஈசாக்குந் தங்கியிருந்த எபிரோனென்கிற ஊர்தானே.

௨௮. ஈசாக்கினநாள்கள் நூற்றெண்பது வருஷமாயிருந்தது.

௨௯. பிற்பாடு ஈசாக்கு முதிர்ந்த பூரண ஆயுசிலே ஜீவித்து மரித்துத் தன்சனத்தாரோடே சேர்க்கப்பட்டான். அவனை அவன் குமாரராகிய ஏசாவும், யாக்கோபும், அடக்கம்பண்ணினார்கள்.

## ௩௰௬. அதிகாரம்.

[(௧) ஏசாவின் மூன்றுபெண்சாதிகளைக் குறித்தது. (௬) அவன் சேயீர் பருவதத்துக்குக் குடிப்போனது. (௯) அவன் புத்திரர்களைக் குறித்துச்சொல்லியது. (௰௫) அவன்புத்திரர்களிலுண்டான பிரபுக்களின்றொகைப்பது. (௨௰) சேயீரின் புத்திரரையும் பிரபுக்களையுங்குறித்துச் சொல்லியது. (௨௪) ஆனா கோவேறுகழுதைகளைக் கண்டுபிடித்தது. (௩௧) ஏதோமின் இராசாக்களின்றொகைப்பது. (௪௰) ஏசாவின் சந்ததியிலுண்டான பிரபுக்களைக்குறித்தது.]

இது ஏதோமியரின் தகப்பனாகிய ஏசாவின் சந்ததி.

௨. ஏசா கானானகுமாரத்திகளில் ஏத்தியனான ஏலோனின்குமாரத்தியாகிய ஆதாளையும், ஏவியனாகிய சிபெயோனின் பேத்தியும், ஆனாகின் குமாரத்தியுமாகிய அகோலிபாமாளையும்,

௩. இஸ்மவேலின் குமாரத்தியும், நெபாயோத்தின் சகோதரியுமாகிய பஸ்மாத்தையும் விவாகம்பண்ணினான்.

௪. ஆதாள் ஏசாவுக்கு எலிப்பாசைப்பெற்றாள். பஸ்மாத்தோ ரேகுவேலைப்பெற்றாள்.

௫. அகோலிபாமாள் ஏயூசையும் யாலாமையும் கோராகையும்பெற்றாள். இவர்கள் ஏசாவுக்குக் கானான்தேசத்திலே பிறந்த குமாரர்.

௬. ஏசா தன் பெண்சாதிகளையுந் தன் குமாரரையுந் தன் குமாரத்திகளையுந் தன் வீட்டிலுள்ள எல்லா ஆத்துமாக்களையுந், தன் ஆடுமாடுகளையுந் தன்னுடைய எல்லா மிருகஜீவன்களையுந் தான் கானான் தேசத்திலே சம்பாதித்த தன்னுடைய எல்லா ஆஸ்தியையுஞ் சேர்த்துக்கொண்டு, தன் சகோதரனாகிய யாக்கோபைவிட்டு வேறே தேசத்திற்குப்போனான்.

௭. ஏனெனில், அவர்களொருமிக்கக் குடியிருக்கக் கூடாதபடிக்கு, அவர்களுடைய

சம்பத்துமிச்சமாயிருந்தது. அவர்கள் தங்கியிருந்த பூமி அவர்களுடைய மந்தைகளின் முகாந்தரத்தினாலே அவர்களைத் தாங்கமாட்டாதே போயிற்று.

௮. ஆகையால், ஏசா சேயீர்பர்வதத்திலே குடியேறினான். ஏசாவே ஏதோமென்றவன்.

௯. சேயீர் பர்வதத்திலிருக்கிற ஏதோமியருடைய தகப்பனாகிய ஏசாவின் சந்ததிகளும்.

௰. ஏசாவின் குமாரருடைய நாமங்களாவது; ஏசாவின் பெண்சாதியாகிய ஆதாளுடைய குமாரன்பேர் எலிப்பாஸ், ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்துடைய குமாரன்பேர் ரெகுவேல்.

௰௧. எலிப்பாசுடைய குமாரர் தேமான், ஓமார், செப்போ, காத்தாம், கேனாஸ்.

௰௨. திம்னாள் ஏசாவின் குமாரனாகிய எலிப்பாசுக்கு வைப்பாட்டியாயிருந்து, எலிப்பாசுக்கு அமலேக்கைப் பெற்றாள், இவர்களே ஏசாவின் பெண்சாதியாகிய ஆதாளுடைய குமாரர்.

௰௩. ரெகுவேலுடைய குமாரர் நாகாத், சேராக் சம்மா, மீசா இவர்களே. ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்துடைய குமாரர்.

௰௪. ¶ சிபெயோனின் பேத்தியும், ஆனாகின் குமாரத்தியுமான அகோலிபாமாளென்ற ஏசாவுடைய பெண்சாதியின் குமாரர் ஆவனாறால், அவள் ஏசாவுக்கு எயூசையும், யாலாமையுங் கோராகையும் பெற்றாள்.

௰௫. ¶ ஏசாவின் குமாரரிலிருந்த பிரபுக்கள் ஏசாவுக்கு மூத்த குமாரனாகிய எலிப்பாசுடைய குமாரரில் தேமான் பிரபும் ஓமார்பிரபுஞ் செப்போபிரபுங் கேனாஸ்பிரபும்,

௰௬. கோராக்பிரபும், காத்தாம்பிரபும் அமலேக் பிரபுமிருந்தார்கள். இவர்கள் ஏதோம் தேசத்தில் எலிப்பாசின் சந்ததியும், ஆதாளின் குமாரருமாயிருந்த பிரபுக்கள்.

௰௭. ¶ ஏசாவின் குமாரனாகிய ரெகுவேலின் குமாரரோவெனில், நாகாத்பிரபு, சேராக்பிரபு, சம்மாபிரபு, மீசாபிரபு, இவர்கள் ஏதோம்தேசத்தில் ரெகுவேலின் சந்ததியும் ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்தின் குமாரருமாயிருந்த பிரபுக்கள்.

௰௮. ¶ ஏசாவின் பெண்சாதியாகிய அகோலிபாமாளின் குமாரரோவென்றால், எயூஸ்பிரபு, யாலாம்பிரபு, கோராக்பிரபு, இவர்கள் ஆனாகின் குமாரத்தியும், ஏசாவுடைய பெண்சாதியுமாகிய அகோலிபாமாளின் சந்ததியாயிருந்த பிரபுக்கள்.

௰௯. இவர்களே ஏதோமென்ற ஏசாவின் குமாரர். இவர்களே அவர்களிலிருந்த பிரபுக்கள்.

௨௰. அந்தத்தேசத்திற்குடிகளாகிய ஓரியனான சேயீரின் குமாரர் லோத்தான், சோபால், சிபெயோன், ஆனால்.

௨௰௧. திஷோன், எத்சேர், திஷான், இவர்கள் ஏதோம்தேசத்திற் சேயீரின் புத்திரராகிய ஓரியருடைய சந்ததியாயிருந்த பிரபுக்கள்.

௨௰௨. லோத்தானுடைய குமாரர், ஓரி. ஏமாம், லோத்தானின் சகோதரி திம்னாள்,

௨௰௩. சோபாலுடைய குமாரர் அல்வான், மனாகாத், எபால், செப்போ, ஓனாமென்றவர்கள்.

௨௰௪. சிபெயோனுடைய குமாரர் ஆயா, ஆனா, என்றவர்கள் வனாந்தரத்திலே தன் தகப்பனாகிய சிபெயோனின் கழுதைகளை மேய்க்கையில், கோவேறு கழுதைகள் பிறக்கும் வித்தைக் கண்டுபிடித்த ஆனா இவன்தான்.

௨௰௫. ஆனாவின் பிள்ளைகள் திஷோனும், அகோலிபாமாளுமென்றவர்கள். இவள் ஆனாவின் குமாரத்தி.

௨௰௬. திஷோனுடைய குமாரர் எம்தான், எஸ்பான், இத்ரான் கேரானென்றவர்கள்.

௨௰௭. எத்சேருடைய குமாரர் பில்கான், சாவான், அக்கானென்றவர்கள்.

௨௰௮. திஷானுடைய குமாரர் ஊத்ஸ், அரானென்றவர்கள்.

௨௰௯. ஓரியரின் சந்ததிப்பிரபுக்கள் லோத்தான்பிரபு, சோபால் பிரபு, சிபெயோன் பிரபு, ஆனாபிரபு,

௩௰. திஷோன்பிரபு, எத்சேர்பிரபு, திஷான் பிரபு, இவர்களே சேயீர்தேசத்திலே தங்கள் தங்கள் இடங்களிலிருந்த ஓரியர்சந்ததியான பிரபுக்கள்.

௩௰௧. ¶ இஸ்ரவேல்புத்திரரை ஒரு இராசா ஆளாததற்குமுன்னே ஏதோம்தேசத்திலே, ஆண்ட இராசாக்கள்.

௩௰௨. ஏதோமிலே பெயோருடைய குமாரனாகிய பேலா இராசாவாயிருந்தான். அவனுடைய பட்டணத்தின்பேர் தின்காபா.

௩௰௩. பேலா மரித்தபொழுது போத்ஸ்றா பட்டணத்தானாகிய சேராகுடைய குமாரனான யோவாப் அவன்பட்டத்திற்கு வந்தான்.

௩௰௪. யோவாப் மரித்தபொழுது, தேமானியதேசத்தானாகிய ஊஷாம் அவன்பட்டத்திற்கு வந்தான்.

௩௰௫. ஊஷாம் மரித்தபொழுது, அவன் பட்டத்திற்கு மோவாபின் நாட்டிலே மீதியானை முறியடித்த பேதாதின் குமாரனாகிய ஆதாத் வந்தான். அவனுடைய பட்டணத்தின்பேர் ஆவீத்.

௩௰௬. ஆதாத் மரித்தபொழுது, மஸ்ரேக்கா ஊராகிய சம்லா அவன்பட்டத்திற்கு வந்தான்.

௩௰௭. சம்லா மரித்தபொழுது நதிக்கருகான ரெகோபோத்தூரானாகிய சவுல் அவன்பட்டத்திற்கு வந்தான்.

௩௰௮. சவுல் மரித்தபொழுது, அக்போ

ருடைய குமாரனாகிய பாகால் ஆனான் அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௯. அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான் மரித்தபொழுது, அவன் பட்டத்திற்கு ஆதார் வந்தான். அவனுடைய பட்டணத்தின் பேர், பாகு. அவன் பெண்சாதியின் பெயர், மெகேதாபெயேல், அவள் மத்ரேத்துடைய குமாரத்தியும் மேசகாவின் பேத்தியுமாயிருந்தாள்.

௪௰. பற்பல வமிசத்தாரும் தலத்தாரும் நாமத்தாருமாகிய ஏசாவின் சந்ததி பிரபுக்களுடைய நாமங்கள், திம்னாபிரபு, அல்வா பிரபு, எதேத்பிரபு,

௪௧. அகோலிபாமாபிரபு, ஏலாபிரபு, பினோன்பிரபு.

௪௨. கேனாஸ்பிரபு, தேமானபிரபு, மிப்சார் பிரபு.

௪௩. மக்தியேல்பிரபு, ஈராம்பிரபு, இவர்களே தங்கள் கைவசமான தேசத்திலே பலபல இடங்களிலே குடியிருந்த ஏதோமின் சந்ததி பிரபுக்கள். இந்த ஏதோமியருடைய தகப்பன் ஏசாதானே.

## ௩௭. அதிகாரம்.

[(௧) யோசேப்புத்தன் சகோதரரால் பகைக்கப்பட்டது. (௫) அவன் கண்ட இரண்டு சொப்பனங்களைச்சொல்லியது. (௰௩) யாக்கோபு அவனைத் தன் சகோதரனண்டைக்கு அனுப்பினது. (௰௮) அவன் சகோதரர் அவனைக் கொலைசெய்ய யோசித்தது. (௨௧) ரூபன் அவனை இரட்சித்தது. (௨௫) அவனை அவர்கள் இஸ்மவேலர்கையில் விற்றுப்போட்டது. (௩௧) அவன் தகப்பன் இரத்தத்திலே தோய்த்த அங்கியினாலே வஞ்சிக்கப்பட்டு யோசேப்புக்காகப் புலம்பினது. (௩௬) அவன் எகிப்திலே போத்திபாருக்கு விற்கப்பட்டது.]

யாக்கோபு தன் தகப்பன் தங்கின கானான் தேசமான சீமையிலே குடியிருந்தான்.

௨. யாக்கோபுடைய சந்ததியின் நடபடியாவது; யோசேப்புப் பதினேழுவயதிலே தன் சகோதரரோடே ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். அந்த இளைஞன் பில்காள் சில்பாளென்ற தன் தகப்பனுடைய பெண்சாதிகளின் குமாரரோடேயிருந்து, இவர்கள் துர்க்கீர்த்தியை யவர்கள் தகப்பனண்டைக்குவந்து சொல்லுவான்.

௩. யோசேப்பு தனக்கு முதிர்வயதிலே பிறந்தபடியினாலே இஸ்ரயேல் தன்னுடைய எல்லாக்குமாரரைப் பார்க்கிலும் அவனைச் சிநேகித்துப் பலவர்ணமான அங்கியை யவனுக்குச்செய்வித்தான்.

௪. தங்கள் தகப்பன் அவனை அவனுடைய எல்லாச்சகோதரரைப் பார்க்கிலும் சிநேகிக்கிறதை யவன் சகோதரர் கண்டபொழுதோவெனில், அவர்கள் அவனோடே பட்சமாய்ப் பேசமாட்டாதபடியாய் அவனைப் பகைத்தார்கள்.

௫. இதுவுமல்லாமல் யோசேப்பு ஒரு சொப்பனத்தைக்கண்டு தன் சகோதரருக்கு அறிவித்தான். அதினிமித்தம் அவனை இன்னம் அதிகமாய்ப் பகைத்தார்கள்.

௬. அவன் இவர்களோடே சொன்னதேதெனில்; நான் கண்ட சொப்பனத்தைக் கேளுங்கள்.

௭. இதோ, நாம் நடு வயல்வெளியிலே அறுத்த அரிக்கட்டுகளைக் கட்டிக்கொண்டிருந்தோம், அப்பொழுது இதோ, என்னுடைய அரிக்கட்டு நிமிர்ந்தும் நின்றுமிருந்தது. ஆனால் இதோ, உங்கள் அரிக்கட்டுகள் அதைச்சுற்றி என்னுடைய அரிக்கட்டை வணங்கிக்கொண்டதென்றான்.

௮. அப்பொழுது அவன் சகோதரர் அவனோடே நீ எங்கள்மேல் துரைத்தனம் பண்ணவே பண்ணுவாயோ? நீ எங்களை ஆளவே ஆளுவாயோ! என்றுசொல்லி, அவனை அவன் சொப்பனங்களினிமித்தமும், அவன் வார்த்தைகளினிமித்தமும், இன்னம் அதிகமாய்ப் பகைத்தார்கள்.

௯. ¶ அவன் வேறொரு சொப்பனத்தைக் கண்டு, அதைத்தன் சகோதரருக்கு விவரித்துச்சொன்னதாவது; இதோ இன்னம் ஒரு சொப்பனத்தைக்கண்டேன். இதோ சூரியனும், சந்திரனும், பதினொருநட்சத்திரங்களும் என்னை வணங்கிக்கொண்டதென்றான்.

௰. இதையவன் தன் தகப்பனுக்குந் தன் சகோதரருக்கும் விவரித்தபொழுது, அவன் தகப்பன் அவனையதட்டி அவனோடே, நீ கண்ட இந்தச்சொப்பனமேது! நானுமட்டுக் குனிந்து உன்னைவணங்க நானும் உன் தாயாரும், உன் சகோதரரும் வரவே வருவோமோ! என்றான்.

௰௧. அவன் சகோதரர் அவன்மேற் பொறாமையானார்கள். அவன் தகப்பனோவெனில், இந்தவர்த்தமானத்தை மனதிலே வைத்துக்கொண்டான்.

௰௨. அவன் சகோதரர் சீகேமிலே தங்கள் தகப்பனுடைய ஆடுகளை மேய்க்கப் போனார்கள்.

௰௩. இஸ்ரவேல் யோசேப்போடே, உன் சகோதரர் சீகேமிலே ஆடுகள் மேய்க்கிறார்களல்லவோ! அங்கே போ. உன்னை அவர்களண்டைக்கு அனுப்புவேன் வா வென்றான். இவன் இதோ, நான் போகிறேனென்றான்.

௰௪. அப்பொழுது அவன் நீ போய், உன் சகோதரர் எப்படியிருக்கிறார்களென்றும், ஆடுகள் எப்படியிருக்கிறதென்றும்பார்த்து. எனக்கு மறுசெய்திகொண்டுவாவென்று அவ

னுக்குச்சொல்லி, எபிரோன் பள்ளத்தாக்கிலேயிருந்து அவனையனுப்பினான். அப்படியே சீகேமுக்குப்போனான்.

௧௫. ¶ அப்பொழுது இதோ, ஒருமனிதன் அவனைவெளியிலே வழிதப்பி நடக்கக்கண்டு, என்னதேடுகிறாயென்று அவனைக்கேட்டான்.

௧௬. அதற்கவன், என் சகோதரரைத்தேடுகிறேன். அவர்களெங்கே ஆடுமேய்க்கிறார்களென்றெனக்கு அறிவியுமென்றான்.

௧௭. அந்தமனிதன் அவர்களிங்கேயிருந்து புறப்பட்டுப் போனார்கள். ஏனென்றால், தோத்தானுக்குப் போவோமென்று அவர்கள் சொல்லக்கேட்டேனென்றான். அப்பொழுது யோசேப்புத்தன் சகோதரரைப் பின்றொடர்ந்துபோய், அவர்களைத் தோத்தானிலே கண்டுபிடித்தான்.

௧௮. அவர்கள் அவனைத்தூரத்திலே கண்டபொழுது, அவன் தங்களருகிற்சேராத்தற்குமுன்னே அவனுக்கு விரோதமாய் அவனைக்கொலைசெய்யச் சதியோசனைபண்ணி,

௧௯. ஒருவரோடொருவர் இதோ சொப்பனக்காரன் அங்கேவருகிறான்.

௨௰. இப்பொழுது, நாம் அவனைக்கொன்று, குழிகளில் ஒன்றிலே அவனைப்போட்டு, ஒரு துஷ்டமிருகம் அவனைப்பட்சித்ததென்றுசொல்லி, அவன் சொப்பனங்கள் என்னமாமென்று பார்ப்போம் வாருங்களென்றார்கள்.

௨௧. ஆனால் ரூபேன்இதைக்கேட்டு, அவன் சீவனைக் கொல்லாதிருப்போமாக வென்று சொல்லி, அவனை அவர்கள்கைக்குத் தப்புவித்து,

௨௨. நீங்கள் இரத்தஞ் சிந்தவேண்டாம், நீங்கள் அவன்மேற் கைபோடாமல் அவனைவனாந்தரத்திலிருக்கிற அந்தக்குழியிலே போடுங்களென்று, ரூபேன் அவனை அவர்கள் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும், அவனையவன் தகப்பனண்டைக்குத் திரும்பக் கொண்டுபோகும்படிக்கும், அவர்களோடேசொன்னான்.

௨௩. சம்பவித்ததென்னவென்றால், யோசேப்புத் தன் சகோதரரண்டைக்குவந்தபொழுது, அவர்கள்யோசேப்பு உடுத்துக்கொண்டிருந்த பலவர்ண அங்கியாகியஅவன் அங்கியைக்கழற்றி,

௨௪. அவனையெடுத்து அந்தக்குழியிலே போட்டார்கள். அத்தண்ணீரில்லாதவெறுங்குழியாயிருந்தது.

௨௫. பிறபடு அவர்கள் அப்பஞ்சாப்பிட உட்கார்ந்தார்கள். அவர்கள் தங்கள்கண்களை யேறெடுக்கும் பொழுதோ வெனில், இதோ, கீலேயாத்திலிருந்துவருகிற இஸ்மவேலருடைய கூட்டத்தை வரக்கண்டார்கள். அவர்களுடைய ஒட்டகங்கள் சம்பாரங்களையும், பிசினதயிலத்தையும், வெள்ளைப்போளத்தையும் எகிப்திற்குக்கொண்டுபோகச் சுமந்துநடந்தது.

௨௬. அப்பொழுது யூதா தன் சகோதரரோடேசொன்னதாவது; நாம் நம்முடைய சகோதரனைக்கொன்று அவன் இரத்தத்தை மறைப்பதினாலே ஆதாயமென்ன?

௨௭. அவனை இஸ்மவேலருக்கு விற்போம் வாருங்கள். நமது கை அவன்மேல்விழாதிருப்பதாக. ஏனெனில், அவன் நம்முடையசகோதரனும், நம்முடைய மாம்சமுமாயிருக்கிறானென்றான். அவன்சகோதரர்அவன்சொல்லைக்கேட்டார்கள்.

௨௮. ஆனால், வர்த்தகரான மீதியானர் கடந்துபோகிறபொழுது; அவர்கள் யோசேப்பை அந்தக்குழியிலிருந்து தூக்கியெடுத்து யோசேப்பை இஸ்மவேலர்கையிலே இருபது வெள்ளிக்காசுக்குவிற்றார்கள். இவர்கள் யோசேப்பை எகிப்திற்குக் கொண்டுபோனார்கள்.

௨௯. ¶ ரூபேன்திரும்ப அந்தக்குழியண்டைக்குவந்து இதோ, யோசேப்பு குழியிலிலேயென்றுகண்டு தன் வஸ்திரங்களைக் கிழித்து,

௩௰. தன் சகோதரரண்டைக்குத் திரும்பிவந்து இளைஞன் இல்லையே, நானெங்கே போகப்போகிறேனென்றான்.

௩௧. அவர்கள் யோசேப்பின் அங்கியையெடுத்துக்கொண்டு, ஒரு வெள்ளாட்டுக்கடாவையடித்து, அந்த அங்கியை இரத்தத்திலே கறைப்படுத்தி,

௩௨. பலவர்ணமான அந்த அங்கியைத் தங்கள் தகப்பனண்டைக்குக் கொண்டுபோகச்சொல்லி, இதை நாங்கள் கண்டுபிடித்தோம். இது உம்முடைய குமாரன் அங்கியோ அல்லவோவென்று பாருமென்றுசொல்லி அனுப்பினார்கள்.

௩௩. அவன் அதையறிந்து, இது என் குமாரனுடைய அங்கி. ஒரு துஷ்டமிருகம் அவனைப் பட்சித்தது. யோசேப்பு பீறுண்ணவே பீறுண்டானென்றான்.

௩௪. யாக்கோபு தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, தன் அரையில் இரட்டுக்கட்டிக்கொண்டு, அநேகநாள் தன்குமாரனுக்காகத் துக்கித்துக்கொண்டிருந்தான்.

௩௫. அவனுடைய எல்லாக்குமாரரும் அவனுடைய எல்லாக்குமாரத்திகளும் அவனுக்கு ஆறுதல்சொல்ல வந்துநின்றார்கள். ஆனால் அவன் ஆறுதலுக்கிடங்கொடாமல் நான் துக்கத்தோடே என் குமாரனண்டையிற் குழியிலிறங்குவேனென்றுசொல்லி, அவனுடையதகப்பன் அவனுக்காக அழுதுகொண்டிருந்தான்.

௩௬. மீதியானரோவென்றால், அவனை எகிப்திலே பார்வோனின் பிரதானியாகிய போத்

திபோனே தலையாரிகளின் அதிபதிக்கு விற்றார்கள்.

## ௩௮. அதிகாரம்.

[(௩) யூதா, ஏர், ஓனன், சேலே, என்றவர்களைப்பெற்றது. (௮) ஓனன், பொல்லாங்கு செய்தது. (௰௩) தாமார் சேலேவுக்காகக் காத்திருந்தது. (௰௪) யூதாவை வஞ்சித்தது. (௨௭) அவள் பேரேஸ் சேரா என்ற இரட்டைப்பிள்ளைபெற்றது.]

அக்காலத்திலே சம்பவித்ததேதென்றால், யூதா தன் சகோதரரை விட்டு இறங்கிப்போய், அதொல்லாம் ஊரானாகிய ஒரு மனிதனைச்சேர்ந்தான். அவன்பேர் ஈரா.

௨. அங்கே யூதா சூவா என்று பேருள்ள ஒரு கானானியனின் குமாரத்தியைக்கண்டு அவளைவிவாகம்பண்ணி அவளிடத்திற் பிரவேசித்தான்.

௩. அவள் கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள். அவனுக்கு ஏர் என்று பெயரிட்டான்.

௪. அவள் மறுபடியுங் கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப்பெற்று, அவனுக்கு ஓனன் என்று பெயரிட்டாள்.

௫. அவள் திரும்பக் கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப்பெற்று, அவனுக்குச் சேலா என்று பெயரிட்டாள். அவள் இவனைப்பெற்றபொழுது அவன் கேசிபிலேயிருந்தான்.

௬. யூதா தனக்கு முதற்பிறந்தவனாகிய ஏருக்குத் தாமார் என்று பேருள்ள ஒரு பெண்ணைக்கொண்டான்.

௭. ஆனால் யூதாவுக்கு முதற்பிறந்த ஏர் என்பவன் கர்த்தரின் கண்களுக்கு முன்பாகப் பொல்லாதவனானதினாலே கர்த்தர் அவனைக் கொன்றுபோட்டார்.

௮. அப்பொழுது யூதா ஓனானுடனே, நீ உன் தமையன் பெண்சாதியினிடத்திற் பிரவேசித்து, அவளை மைத்துனச்சுதந்தரமாய்ப் படைத்து உன் தமையனுக்கு வித்தையுண்டாக்கென்றான்.

௯. ஆனால் அந்த வித்து தன்னுடையதாயிராதென்று ஓனன் அறிந்தபடியினாலே அவன் தன் தமையன் பெண்சாதியினிடத்திற் பிரவேசிக்கும்பொழுது, தன் தமையனுக்கு வித்தைக் கொடாதபடிக்கு அதைத் தரையிலே விழவிட்டுக் கெடுத்தான்.

௰. அவன் செய்தது கர்த்தரின் கண்களுக்கு முன்பாகப் பொல்லாததானதினாலே அவனையும் அவர் கொன்றுபோட்டார்.

௰௧. அப்பொழுது யூதா தன் மருமகளாகிய தாமாருடனே என் குமாரனாகிய சேலா பெரியவனாகுமட்டும் உன் தகப்பன் வீட்டிலே கைம்பெண்சாதியாய்த் தங்கியிருவென்றான், ஏனெனில், இவனும் தன் சகோதரரைப் போலச் சாவானோவென்று அஞ்சுகையாயிருந்தான். அப்படியே தாமார் போய்த் தன் தகப்பன் வீட்டிலே தங்கியிருந்தாள்.

௰௨. ¶ அநேகநாள் சென்றபின்பு சூவாவின் குமாரத்தியாகிய யூதாவின் பெண்சாதி மரித்தாள். யூதா துக்கம் ஆறினபின்பு திம்னாவுக்குத் தன் ஆடுகளை மயிர்க் கத்திரிக்கிறவர்களண்டையிற் போயேறினான். அவனும் அதொல்லாம் ஊரானாகிய ஈரா என்ற அவன் சிநேகிதனுங்கூடத்தானே.

௰௩. அப்பொழுது தாமாருக்கு இதோ, உன் மாமனார் தம்முடைய ஆடுகளை மயிர்க்கத் திரிக்கத் திம்னாவுக்குப்போயேறுகிறாரென்று அறிவிக்கப்பட்டது.

௰௪. அப்பொழுது அவள் சேலா பெரியவனாயிருந்தும் தான் அவனுக்குப் பெண்சாதியாகக் கொடுக்கப்படவில்லையென்று கண்டபடியினாலே தன் கைம்பெண் இருப்பின் வஸ்திரங்களைத் தன்னைவிட்டு விலக்கி, முக்காடு போட்டு மூடிக்கொண்டு, திம்னாவுக்குப் போகிறவழியிலிருக்கிற நீரூற்றுகளுக்கு முன்பாக உட்கார்ந்தாள்.

௰௫. யூதா அவளைக்கண்டு அவளொரு வேசியென்று நினைத்தான். ஏனெனில், தன் முகத்தை மூடியிருந்தாள்.

௰௬. அவன் வழியிலே அவளிடமாய்த் திரும்பி, அவள் தன் மருமகளென்றறியாமல் நான் உன்னிடத்திற் பிரவேசிக்கட்டுமென்றான். அப்பொழுது அவள் நீர் என்னிடத்திற் பிரவேசிக்கும்படிக்கு எனக்கென்ன தருவீரென்றாள்.

௰௭. அதற்கவன் நான் மந்தையிலிருந்து ஒரு வெள்ளாட்டுக்குட்டியை யனுப்புவேனென்றான். இதற்கவள் நீர் அதை அனுப்புமட்டும் ஒரு அடைமானங் கொடுத்தால் ஆமென்றாள்.

௰௮. அப்பொழுது அவன் நான் உனக்குக் கொடுக்கவேண்டிய அடைமானமென்னவென்றுகேட்டான். அப்பொழுது அவள் உம்முடைய மோதிரமும் உம்முடைய கைச்சீலையும் உம்முடைய கையிலிருக்கிற உம்முடைய கோலுமேயென்றாள். அவன் இவைகளை அவளுக்குக்கொடுத்து அவளிடத்திற் பிரவேசித்தான். அவள் அவனாற் கர்ப்பந்தரித்து,

௰௯. பிறபாடு எழுந்திருந்துபோய்த் தன் முக்காட்டைத் தன்னைவிட்டு விலக்கித் தன் கைம்பெண் இருப்பின் வஸ்திரங்களையுடுத்துக்கொண்டாள்.

௨௰. அந்த அடைமானத்தை ஸ்திரீயின் கையிலே வாங்கிவர யூதா அதொல்லாம் ஊரானாகிய தன் சிநேகிதன் கையிலே வெள்ளாட்டுக்குட்டியை யனுப்பினான். இவன் அவளைக்காணாமல்,

௨௰௧. அவ்விடத்து மனிதரை வழியண்டை நீரூற்றுகளருகேயிருந்த சோரஸ்திரீ எங்கே

யென்றுகேட்டான். அதற்கவர்கள் இங்கே சோரஸ்திரி இருந்ததில்லை யென்றார்கள்.

௨௨. அவன் யூதாவண்டைக்குத் திரும்பி வந்து அவளைக்காணேன். அங்கேசோரஸ்திரி இருந்ததில்லையென்று அவ்விடத்துமனிதருஞ் சொல்லுகிறார்களென்றான்.

௨௩. அப்பொழுதுயூதா நாங்கள் அவகீர்த்திப்படாதபடிக்கு அவள்தைக்கொண்டுபோகட்டும், இதோ இந்த ஆட்டுக்குட்டியை யனுப்பினேனே, நீயோவென்றால், அவளைக் காணேதேபோனாயென்றான்.

௨௪. ¶ ஏறக்குறையமூன்றுமாதஞ்சென்றபின்பு சம்பவித்ததேதெனில், உன்மருமகளாகிய தாமார் வேசித்தனம்பண்ணினாள். இதோ, வேசித்தனத்தினால் கர்ப்பணியுமானாளென்று யூதாவுக்கறிவிக்கப்பட்டது. அப்பொழுது யூதா அவள் சுட்டெரிக்கப்பட அவளை வெளியே கொண்டுவாருங்களென்றான்.

௨௫. அவள் வெளியேகொண்டுவரப்பட்டபொழுது அவள் தன்மாமனாரண்டைக்காளனுப்பி இவைகளெவருடையதோ அவராலே நான் கர்ப்பணியாயிருக்கிறேன். இந்தமோதிரமும் இந்தக்கைச்சீலையும் இந்தக்கோலும் ஆருடையதென்றுபாருமென்று சொல்லியனுப்பினாள்.

௨௬. அப்பொழுது யூதா அவைகளையறிந்து என்னிலும் நீதியுள்ளவளாயிருக்கிறாள். ஏனென்றால், அவளையென்குமாரனாகிய சேலாவுக்குக் கொடாதேபோனேனென்றான். அப்புறம் அவன் அவளையறிந்ததில்லை.

௨௭. ¶ அவளுக்குப்பேறுகாலம்வந்தபொழுது இதோ, இரட்டைப்பிள்ளைகள் அவள் கர்ப்பத்திலிருந்தது.

௨௮. அவள் பெறுகிறபொழுது ஒன்று கையை நீட்டிற்று. அப்பொழுது மருத்துவச்சி யதின்கையைப்பிடித்து அதிற்சிவப்புநூலைக்கட்டி, இது முந்தவெளிப்படுகிறதென்றாள்.

௨௯. ஆனால் அது தன்கையைத் திரும்பவாங்கிக்கொண்டபொழுது இதோ, அதின் சகோதரன்வெளிப்பட்டான். அப்பொழுது அவள் நீயிப்படிப்புறப்பட்டதென்ன! உன்மேல இந்தப்பீறுதலிருக்கிறதென்றாள். அதினாலே யவனுக்குப் * பேரேஸ் என்றுபெயரிடப்பட்டது. * மத்தே. க, ௩.

௩௰. பிற்பாடு கையிற் சிவப்புநூற் கட்டியிருந்த அவன்தம்பிவெளிப்பட்டான். அவனுக்குச்சேராவென்று பெயரிடப்பட்டது.

## ௩௯. அதிகாரம்.

[(க) யோசேப்பு போத்திபாருடைய வீட்டிலே மேன்மைப்பட்டது. (எ) போத்திபாருடைய மனைவியோடே விபசாரஞ்செய்யாதபடிக்குமறுத்தது. (௰௩) அவள் அவன் மேல் பொய்யான குற்றஞ் சாற்றினது. (௨௰) அவன்காவலில் வைக்கப்பட்டது. (௨க) பராபரன் அங்கே அவனோடேகூட இருந்தது.]

யோசேப்பு * எகிப்திலே கொண்டுபோகப்பட்டான். பார்வோனின் பிரதானியுந்தலையாரிகளின் அதிபதியுமாகிய போத்திபாரென்றஎகிப்தியமனிதன் அவனை யவ்விடத்திறக்க கொண்டுவந்த இஸ்மவேலரின்கையிலேகொண்டான். *௩௭, ௩௬.

௨. ஆனால் கர்த்தர்யோசேப்போடேகூடவிருந்தார். அவன் காரியசமர்த்தனான மனிதனாய் எகிப்தியனாகிய தன் எசமானுடைய வீட்டிலேயிருந்தான்.

௩. கர்த்தர் அவனோடேயிருக்கிறாரென்றும், அவன் செய்கிறதையெல்லாங் கர்த்தர் வாய்க்கப்பண்ணுகிறாரென்றும், அவன் எசமான் கண்டான்.

௪. ஆகையாலயோசேப்புக்கு அவன்கண்களிலதயவுகிடைத்தது. அவனுக்கு இவன் ஊழியக்காரனானான். அவன் இவனைத் தன் வீட்டுக்கு விசாரிப்புக்காரனாக்கித் தனக்குண்டானதெல்லாவற்றையும், அவன் கையிலொப்புவித்தான்.

௫. சம்பவித்ததேதெனில், அவனிவனைத் தன்வீட்டுக்குந் தனக்குண்டான வைகளெல்லாவற்றிற்கும் விசாரிப்புக்காரனாக்கினதுமுதற்கொண்டு கர்த்தர் யோசேப்பினிமித்தம் எகிப்தியன் வீட்டையாசீர்வதித்தார். வீட்டிலும்வெளியிலும் அவனுக்குண்டானவைகளிலெல்லாங் கர்த்தருடைய ஆசீர்வாதமிருந்தது.

௬. ஆகையால அவன் தனக்குண்டானவைகளையெல்லாம் யோசேப்பின் கையிலேயொப்புவித்துவிட்டுத் தான் புசிக்கிறபோசனந்தவிர இவனிடத்திலிருந்த மற்றொன்றுக்குங் கவலைப்படாதிருந்தான். யோசேப்போவெனில அழகானரூபமும்பார்வைக்குச் சவுந்தரியமுமாயிருந்தான்.

௭. இந்தவர்த்தமானங்களுக்குப் பிறபாடு சம்பவித்ததேதெனில், அவனுடைய எசமானின் பெண்சாதி யோசேப்பின்மேலே கண்ணோட்டமாகி என்னோடே சயனியென்றாள்.

௮. ஆனால் அவன் அவள் சொல்லைக்கேளாமல தன் எசமானின் பெண்சாதியோடே சொன்னதாவது; இதோ, வீட்டிலே என்னோடிருக்கிற வைகளில ஒன்றுக்காகிலும் என்னாண்டவன்கவலைப்படாமல, தமக்குண்டானவைகளையெல்லாம் என்கையிலொப்புவித்தார்.

௯. இந்தவீட்டிலே என்னிலும் பெரியவனில்லை. உன்னைத்தவிரவேறொன்றையும் அவரெனக்கு விலக்கிவைத்ததில்லை. ஏனெனில், நீ அவருடைய பெண்சாதி. இப்பொழுதும

நானித்தனைப் பெரிய இந்தப் பொல்லாப்பைப் பண்ணிப் பராபரனுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்வதெப்படியென்றான்.

௰. அவள் நித்தம் நித்தம் யோசேப்போடே அப்படிக்கொத்த பேச்சைச் சொல்லுவாள். ஆனாலவனவளுக்குச் சமீபமாய்ப் படுத்துக்கொள்ளவும் அவளோடிருக்கவும் அவளுக்குச் செவிகொடாதே போகிறபொழுது,

௰௧. ஒருநாள் சம்பவித்ததேதென்றால், அவன் தன்வேலையைச் செய்கிறதற்கு வீட்டுக்குள் வந்தான். வீட்டுமனிதரில் ஒருவரும் அப்பொழுது அங்கே வீட்டிலேயில்லை.

௰௨. அப்பொழுதவள் அவனையவன் வஸ்திரத்தைப் பற்றிப்பிடித்து, என்னோடே சயனியென்றாள். அவனோவென்றால், தன் வஸ்திரத்தை அவள்கையிலே விட்டோடி வெளியே புறப்பட்டுப்போனான்.

௰௩. அவன் தன்வஸ்திரத்தைத் தன்கையிலே விட்டுவெளியே ஓடிப்போனதை அவள் கண்டபொழுது,

௰௪. அவள் தன்வீட்டுமனிதரைக் கூப்பிட்டு அவர்களுக்குச் சொன்னதாவது; பாருங்கள் எபிரேயமனிதனை நம்மைச் சரசம் பண்ணும்படிக்கு நமக்குக் கொண்டுவந்தார். அவன் என்னோடே சயனிக்கிறதற்காக என்னண்டை வந்தான். ஆனால் மகா சத்தமாய்க் கூப்பிட்டேன்.

௰௫. நானென் சத்தத்தை யுயர்த்திக் கூப்பிடுகிறதை அவன் கேட்டபொழுது, அவன் தன்வஸ்திரத்தை என்னண்டைவிட்டோடி வெளியே புறப்பட்டுப்போனானென்று சொல்லி,

௰௬. அவனுடைய எசமானன் வீட்டிற்கு வருமட்டும் அவன்வஸ்திரத்தைத் தன்கிட்ட வைத்து,

௰௭. அவனோடே அந்த வார்த்தைகளுக்குச் சரியாகப் பேசி, நீரெங்களுக்குக் கொண்டுவந்த அந்த எபிரேய வேலைக்காரன் என்னைச் சரசம்பண்ண என்னண்டை வந்தான்.

௰௮. அப்பொழுது சம்பவித்ததேதென்றால், நானென் சத்தத்தை யுயர்த்திக் கூப்பிடுகிறபொழுது, அவன் தன்வஸ்திரத்தை என்னண்டைவிட்டு வெளியேயோடிப்போனானென்றாள்.

௰௯. உம்முடைய வேலைக்காரன் எனக்கிப்படிச் செய்தானென்று தன் பெண்சாதி தன்னோடே சொன்னவார்த்தைகளை அவனுடைய எசமானன் கேட்டபொழுதோவென்றால், அவனுக்குக் கோபமூண்டது.

௨௰. அப்பொழுது யோசேப்பின் எசமானன் அவனைப் பிடித்து, இராசாவின் கட்டளையாற் கட்டுண்டவர்கள் கிடக்கிற காவல்வீட்டிலே அவனைப் போடுவித்தான். அங்கே அந்தக் காவல்வீட்டிலவனிருந்தான்.

௨௰௧. ஆனால் கர்த்தர் யோசேப்போடே கூடவிருந்து அவன்மேலே கிருபைவைத்து அவனுக்குக் காவல்வீட்டுத்தலைவன் கண்களில் தயவுகிடைக்கப்பண்ணினார்.

௨௰௨. காவல்வீட்டுத்தலைவன் காவல்வீட்டிலே கட்டுண்டிருந்தயாவரையும் யோசேப்பின் கையிலே ஒப்புவித்தான். அங்கே செய்யவேண்டியவைகளையெல்லாம் அவன் செய்தான்.

௨௰௩. அவன் கையிலிருந்த ஒன்றையுங் காவல்வீட்டுத்தலைவன் கண்ணோக்கினதில்லை. ஏனென்றால், கர்த்தர் அவனோடே கூடவிருந்தார். அவன் செய்ததானதை அதைக் கர்த்தர் வாய்க்கப்பண்ணினார்.

## ௪௰. அதிகாரம்.

[(௧) பார்வோனுக்குப் பானங்கொடுக்கிறவனும் அப்பஞ்சுடுகிறவனுங் காவலில் வைக்கப்பட்டது. (௪) அங்கே யோசேப்பு அவர்களை விசாரணைசெய்தது. (௫) அவன் அவர்கள் இருவருடைய சொப்பனங்களுக்கும் பயன்சொன்னது. (௨௰) அவைகள் அவன் சொன்னபடி சம்பவித்தது. (௨௩) பானங்கொடுக்கிறவன் நன்றியறியாமல் யோசேப்பை மறந்தது.]

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதென்றால், எகிப்தின் இராசாவுக்குப் பானங்கொடுக்கிறவனும் அப்பஞ்சுடுகிறவனும் எகிப்தின் இராசாவாகிய தங்களாண்டவனுக்குக் குற்றஞ்செய்தார்கள்.

௨. அப்பொழுது பார்வோன் தன்னுடைய இரண்டு பிரதானிகளாகிற பானங்கொடுக்கிறவர்களின் தலைவன்மேலும் அப்பஞ்சுடுகிறவர்களின் தலைவன்மேலுங் கடுங்கோபமாகி,

௩. அவர்களை யோசேப்புக் கட்டுண்டிருந்த காவல்வீடாகிய தலையாரிகளின் தலைவன் வீட்டிலே காவற்பண்ணுவித்தான்.

௪. ¶ அப்பொழுது தலையாரிகளின் தலைவன் அவர்களை விசாரிக்கும் வேலைக்கு யோசேப்பை வைத்தான். இவன் அவர்களுக்கு ஊழியஞ்செய்தான். அவர்கள் அநேகம் நாள் காவலிலிருந்தார்கள்.

௫. ¶ ஆனால் எகிப்தின் இராசாவுக்குப் பானங்கொடுத்தவனும் அப்பஞ்சுட்டவனுமாகிய காவல் வீட்டிற் கட்டுண்டிருந்த அவ்விரண்டுபேரும் ஒரே இராத்திரியில் அவனுமிவனுந் தங்களுக்கு வெவ்வேறே அர்த்தமுள்ள சொப்பனங்களைக் கண்டார்கள்.

௬. காலமே யோசேப்பு அவர்களண்டையில் வந்து அவர்களைப் பார்க்கும்பொழுது இதோ, கலங்கியிருந்தார்கள்.

௭. அப்பொழுது தன் எசமானின் வீட்டில் தன்னோடே காவற்பண்ணப்பட்டிருந்த பார்வோனின் பிரதானிகளை அவன் உங்கள்

முகஙகள இனறு துககமாயிருககிற தேதெ னறுகேடடான.

௮. அவர்களவனுடனே, சொபபனஙகணடோம. அதை வியார்ததி பணணுகிறவனிலலையெனறூர்கள. அபபொழுது யோசேபபுஅவர்களுடனே வியார்ததி பணணுதல பராபரனுடையதலலவோ? எனககதைவிவரியுஙகளெனறுன.

௯. அபபொழுது பானஙகொடுககிறவர்களின தலைவன யோசேபபுககுத தனசொபபனததைவிவரிதது அவனுககுச்சொனனதாவது; எனசொபபனததில இதோ ஒருதிராட்சச்செடி எனககுமுனபாகவிருநதது.

௰. அந்தத் திராட்சச் செடியிலே மூனறுகொடிகளிருநதது. அது துளிர்ககிறதாயிருநதது. அதின பூககள புறபபட்டது. அதினகுலைகள பழஙகளாகப பழுததது.

௰௧. பார்வோனினபாததிரம எனகையிலிருநதது. நான அநதபபழஙகளைவாஙகி, அவைகளைப பார்வோனின பாததிரததிற பிழிநது, அநதபபாததிரத்தைபபார்வோனினகையிலே கொடுத்தேனெனறுன.

௰௨. அபபொழுது யோசேபபு அவனுககுச்சொனனதாவது; அதின அர்ததமெனனவெனில, அநதமூனறுகொடிகள மூனறுநாளாயிருககினறது.

௰௩. இனனம மூனறுநாட்குளளே பார்வோன் உமமுடைய தலையையுயர்ததி, உமமைதிருமப உமதுநிலையிலேநிறுததுவார். அபபொழுது நீர் அவருககுப பானஙகொடுதத முநதின வழககததினபடியே பார்வோனின பாததிரததை அவர் கையிலே கொடுபபீர்.

௰௪. ஆனால நீர் சுகவாழவாயிருககிறபொழுது எனனை நினைதது எனமேலேதயவுவைததுப பார்வோனுககு எனசெயதியைநினைப்பூடடி, எனனையிநத வீடடிலிருநது வெளிபபடுததவேணடும.

௰௫. ஏனெனில, எபிரேயதேசததிலிருநது திருடடளவாய விலைபபடடுவநதேன. எனனையிநதககிடஙகிலேவைக்கிறதற்கு இவவிடததிலே நானொன்றுஞ செயததுமிலலையெனறுன.

௰௬. நனறுய அர்ததஞசொனனுனெனறு அபபஞ சுடுகிறவர்களின தலைவனகணடு, யோசேபபோடே சொன்னதாவது; நானும எனசொபபனததிற கணடதேதெனறுல, இதோ, வெணமையான மூனறுகூடை என தலையினமேலிருந்தது.

௰௭. மேற்கூடையிலே அபபஞசுடுகிறவனினவேலையான பார்வோனுடைய சகலவிதபோசனததிலுஞ சிலவிருநதது. அவைகளைப பறவைகள வநது எனதலையினமேலிருநத கூடையிலெடுததுப பட்சிததெனறுன.

௰௮. அபபொழுது யோசேபபுப்பிரதியுததாரயாகச்சொனனதாவது; அதின அர்ததமேதெனில, அநதமூனறுகூடைகள மூனறுநாளாயிருககினறது.

௰௯. இன்னம மூனறு நாட்குளளே பார்வோன உமமுடைய மேலிருககிறஉமமுடைய தலையையுயர்ததி, உமமைமரததிலே தூககிபபோடுவிபபார். அபபொழுது பறவைகள உமமுடைய மாம்சததைத் தினனுமெனறுன.

௨௰. ¶ பார்வோனினசெனமநாளாகியமூன்றுமநாளிற சமபவிததததெனில, அவன தனனூழியககாரருககெலலாம ஒருவிருநது பணணிப பானஙகொடுககிறவர்களுடைய தலைவனின தலையையும அபபஞசுடுகிறவர்களுடைய தலைவனின தலையையுந தமமுடைய ஊழியககாரரின நடுவே யுயர்ததி,

௨௧. பானங கொடுககிறவர்களின தலைவனைபபானங கொடுககிற தன உததியோகததிறகுத திருமபிவரபபணணினுன. அபபடியே அவனபார்வோனினகையிலேபாததிரததைககொடுததான.

௨௨. அபபஞசுடுகிறவர்களின தலைவனையோவெனறல, தூககிப போடுவிததான. யோசேபபு அவர்களுககு அர்ததஞசொன்னதறகுச சரியாகததானே.

௨௩. ¶ ஆனறுபானஙகொடுககிறவர்களின தலைவன யோசேபபை நினையாமல அவனைமறநதான.

## ௪௧. அதிகாரம்.

[(௧) பார்வோனினஇரணடுசொபபனஙகள. (௨௫) யோசேபபு அவைகளை வியார்ததிபணணியது. (௩௩) அவன பார்வோனுககுப புததிசொலலியது. (௩௮) யோசேபபு மூனனுககுவநதது. (௫௰) அவனுககு மனுசேயெனறும, எபபிறயீமெனறும, குமாரர்கள் பிறநதது. (௫௩) பஞ்சம்தொடஙகியது.]

இரணடுவருஷஞ்செனறபிறபாடு சமபவிதததேதெனறுல, பார்வோன ஒரு சொபபனததைககணடான. அதேதெனில, இதோ, நதியணடையிலே நினறுன.

௨. அபபொழுது இதோ, நேர்த்தியான ரூபமும மாம்சக கொழுபபுமான ஏழுபசுககள நதியிலிருநதேறிப புலமேயநதது.

௩. ஆனால இதோ, அவைகளின பிறகே அவலட்சணரூபமும மாமசச் சீவனுமான வேறேஏழுபசுககள நதியிலிருநதேறி, நதியோரததிலே அநதபபசுககளணடையிலே நினறது.

௪. அவலட்சணரூபமும மாமசச்சீவனுமான இநதப்பசுககள நேர்ததியான ரூபமுங கொழுபபுமான அநத ஏழுபசுககளைப படசித்தது, அபபொழுதுபார்வோனுககுநித்திரைதெளிநதது.

௬. பிறகு அவன நித்திரைபோய இரண்டாம்விசைகண்டசொபபனமாவது; இதோ கனமான ஏழுநலலகதிர்கள ஒரேமுதலிலிருந்து ஓஙகிவளர்நதன.

௭. ஆனாலஇதோ, அவைகளுக்குபபிறபாடு சாவியானவைகளும கொணடறகாறறினால் தீநதவைகளுமான ஏழுகதிர்களமுளைத்தன.

௮. சாவியான இநதககதிர்கள கனமும நிறைபலனுமான அநத ஏழுகதிர்களைவிழுஙகின். அபபொழுது பார்வோன விழித்துக் கொணடான. இதோ, அது சொபபனமாயிருந்தது.

௯. சமபவித்ததேதெனில, காலமே அவனுடைய ஆவிகலஙகியிருநதது. அபபொழுது அவன எகிப்தினுடைய சகலசாஸதிரிகளையுஞ சகலஞானிகளையும அழைத்தனுபபி அவர்களுக்குத்தனசொபபனங்களைப்பார்வோனவிவரித்தான. ஆனாற பார்வோனுககு அவைகளின அர்த்தத்தைச சொலலத்தககவன ஒருவனுமிலலை.

௰. அபபொழுது பானஙகொடுக்கிறவர்களின தலைவன பார்வோனுடனே பேசிச சொனனதாவது; இனறுநான்என்பாவங்களை நினைககிறேன.

௧௧. பார்வோன தமமுடைய ஊழியக்காரர்மேற கடுஙகோபமடைநது, எனனையும அபபஞசுடுகிறவர்களின தலைவனையுந தலையாரிகளின தலைவன வீட்டிலே காவலிலே வைத்தாரே.

௧௨. அபபொழுது நானுமவனும ஒரே இராத்திரியிலே எங்களுக்குவெவ்வேறே அர்த்தமாகிய சொபபனஙகளைககணடோம.

௧௩. அபபொழுது தலையாரிகளின தலைவனுககு வேலைககாரனாகிய எபிரேய பிளளையாணடான ஒருவனங்கே எஙகளோடேயிருநதான. அவனுககவைகளை விவரிததோம. அபபொழுது எங்கள் சொப்பனங்களுக்கிருநத வெவ்வேறேஅர்த்தஙகளின்படியேயெஙகளுககு அவன எஙகள சொபபனஙகளின வியார்த்தியைசசொனனான.

௧௪. அவனெஙகளுககு எபபடி வியார்த்தி சொனனானே அபபடியே வநதுசமபவித்தது. எனனைத்திருமப எனநிலையிலே நிறுததி, அவனைத தூக்கிப போடுவித்தாரெனறான.

௧௫. அபபொழுது பார்வோன யோசேபபை யழைததனுபபினான. அவனைததீவரமாயக் கிடஙகிலிருநது புறப்படபபணணினார்கள. அவன சவரமபணணிககொணடுதன வஸதிரஙகளைமாறறிப பார்வோனனிடத்துககு வநதான.

௧௬. அபபொழுது பார்வோன யோசேபபோடேசொன்னதாவது; ஒருசொபபனத்தைக கணடேன. அதின அர்த்தத்தைச சொலலுகிற ஒருவருமிலலை. நீயோவெனறால, ஒரு சொபபனததைக கேட்டால, அதின அர்த்தத்தைச சொல்லலாமென்று நான உனனைககுறித்துக கேளவிபபட்டேனென்றான.

௧௬. அபபொழுது யோசேப்புப்பார்வோனுககுப பிரதியுத்தாரமாக * நானலல, பராபரனதானே பார்வோனுக்குச சமாதானமுளள உத்தரவு அருளிசசெயவாரெனறான. * ௪௰, ௮. தானி. ௨, ௩௰.

௧௭. பார்வோன யோசேபபோடேசொன்னதாவது; என சொபபனததிலே இதோ, நான நதியோரததிலே நினறேன.

௧௮. அபபொழுது இதோ, மாம்சக்கொழுபபும தேர்ததியான ரூபமுமான ஏழுபசுக்கள நதியிலிருநதேறிப புலமேய்நதன.

௧௯. ஆனாலஇதோ, அவைகளினபிறகாலே ஈரமபனும மகா அவலட்சணரூபமும யாம் சச்சிவனுமான வேறே ஏழுபசுககள ஏறிவநதன. இவைகளைப்போல் அவலட்சணமான பசுககளை எகிப்துதேசமெஙகுமநானகணடதிலலை.

௨௰. சிவனும அவலட்சணமுமான இநதப பசுககள கொழுபபான அநதமுநதின ஏழு பசுககளைப பட்சிததுவிடடன.

௨௧. அவைகள இவைகளின வயிறறிற்குட் போகியும இவைகளின வயிறறிற்குட்போயினவெனறு தெரியப்படவிலலை. முனனிருநததுபோல இவைகளினரூபம அவலட்சணமாயிருநதது. அபபொழுது எனககு நித்திரைதெளிநதது.

௨௨. பினனையும என சொபபனததிலே நான கணடதாவது; இதோ, நிறைநதிருககிற ஏழு நலலகதிர்கள ஒரே முதலிலிருநதோஙகிவளர்நதன.

௨௩. ஆனால், அவைகளுககுப பிறபாடு, இதோ, சாவியானதுங கொணடறகாறறினால தீநது பதரானதுமான ஏழு கதிர் முளைத்தது.

௨௪. சாவியான இநதக கதிர் நலலவைகளான அநத ஏழுகதிர்களை விழுஙகிறறெனபதுதானே. இதைசசாஸதிரிகளுககுசசொனனேன். ஆனால இதின அர்த்தத்தை எனககு விடுவிககிறவனிலலையெனறான.

௨௫. அபபொழுது யோசேப்புப்பார்வோனோடே சொன்னதாவது; பார்வோனின சொபபனம ஒனறுதான. தாம செயயப போகிறதைப பராபரன பார்வோனுககறிவித்தார்.

௨௬. அநத ஏழுநலலப்பசுககள ஏழுவருஷமாயிருககினறன. அநதஏழுநலலகதிர்களும ஏழுவருஷநதான. இவைஒரேசொபபனமாயிருககினறன.

௨௭. அவைகளினபிறகாலே ஏறிவநத சிவனும அவலட்சணமுமான ஏழுபசுக்கள ஏழுவருஷமாயிருககினறன. கொணடறகாறறி

ருல திநது சாவியான ஏழுகதிர்களும அப படித்தான. இவைகள் பஞசமுள்ள ஏழுவருஷஙகளாயிருக்கும்.

உஅ. பராபரன செய்யப போகிறதைப பார்வோனுக்குக் காணபித்தாரென்று பார்வோனுககுச சொனனேனே. அது இநத வர்த்தமானநதான.

உகூ. இதோ, எகிப்துதேசமெஙகும மகா பரிபூரணமுண்டாயிருககிற ஏழுவருஷஙகள வருகினறன.

௩ய. ஆனால், அவைகளுக்குப்பிற்பாடு பஞ்சமுள்ள ஏழுவருஷஙகளெழுமபும. அபபொழுது எகிப்துதேசததில அநதபபரிபூரண மெலலாம மறககபபட்டிருககும. அநதப பஞசந தேசத்தைமாளபபணணும.

௩க. தேசததிலிருநத பரிபூரணம பிறபாடு வருகிற அநதபபஞசததினாலே தெரியப்ப டாதிருககும. ஏனெனில், மகா கனமானதா யிருககும.

௩௨. பார்வோனுககு இநதசசொபபனம இரட்டித்துவந்ததற்கு அர்த்தமென்னவென ருல், இநதககாரியம பராபரனால நிசசய மாய நிருணயிககபபட்டது. அதைசசெய யப பராபரன தீவரிககிறுரெனபதுதானே.

௩௩. இபபொழுதும பார்வோன உணர்வும ஞானமுமுளள ஒரு மனிதனைப பார்தது. அவனை எகிப்துதேசததினமேல அதிகாரி யாகவைக்கக்கடவர்.

௩ச. இபபடிபபார்வோனசெயது, தேசத் தினமேல மணியககாரரைவைததுப பரிபூர ணமுளள ஏழுவருஷஙகளில எகிப்துதேசத் தினபலனிலே ஐநதிலொருபஙகை வாஙகு வாராக.

௩ரு. அவர்களவருகிற இநத நலலவருஷங களின ஆகாரததையெலலாஞ சேர்ததுப பட்டணஙகளில ஆகாரமுண்டாயிருககும படிககுப பார்வோனுடைய கையினகிழத தானிய அமபாரஙகளை வைததுவைபபார் களாக.

௩௬. தேசமபஞ்சததினுற சஙகாரமாகாத படிககு, அநத ஆகாரம எகிப்துதேசத்தில வருமபஞசமுளள ஏழுவருஷஙகளுககாகத் தேசததிறகு ஒருவைபபா யிருக்கக்கடவ தெனறுன.

௩எ. இநதவார்ததை பார்வோனினகணக ளுககும அவனுடைய எலலா ஊழியககார ரினகணகளுககும நனருயிருநதது.

௩அ. அபபொழுது பார்வோன தனனூழி யக்காரரோடே பராபரனுடைய ஆவியுள்ள இநதமனிதனைபபோல ஒருவன அகபபடு வானோவெனறுன.

௩கூ. பிறபாடு பார்வோன யோசேபபோ டே சொனனதாவது; பராபரன இதை யெலலாம உனககறிவிததிருககிறபடியால,

உனனைபபோல உணர்வும ஞானமுமுளளவ னிலலை.

சய. நீ என வீட்டுவிசாரிபபுககாரனுயிருப பாய. உனவாககினபடியே என சனமெல லாம வணஙகிசசெயயககடவது. இராசா சனததிறகுமாததிரமஉனனிலுமபெரியவனு யிருபபேனென்றுன.

சக. பினனையும பார்வோன யோசேபபுட னே, பார் உனனை எகிப்துதேசததினமே லெல்லாம அதிகாரியாககினேனெனறுசொ லலி,

ச௨. பார்வோன தனகையிறபோட்டிருநத தனனுடைய மோதிரததைக்கழறறி, அதை யோசேபபின கையிலேபோட்டு, மெலலிய புடவையான வஸதிரஙகளை அவனுககுத் தரிபபிததுப பொறசரபபளியை யவன கழுததிலேபோட்டு,

ச௩. தனககிருநத இரணடாம இரதத்தின மேல அவனை யேறபபணணி, முழஙகாற படியிடுஙகளெனறு அவனுககு முனபாகக கூறுவிதது, அவனை எகிப்துதேசத்தினமே லெல்லாம அதிகாரியாககினுன.

சச. பார்வோன யோசேபபுடனே, நான பார்வோன. ஆனால உனனையல்லாமல, எகி ப்துதேசமெஙகும ஒருவனுநதனகையையுந தனகாலையும எடுபபதிலலையெனறுன.

சரு. பார்வோன யோசேபபுககு இரகசி யஙகளை வெளிபபடுததுகிறவனென்ற பெய ரைத்தரிதது, அவனுககு ஓன்பட்டணததி ஆசாரியனுகிய போததிபேராவின குமாரத் தியாகிய அஸநாததைப பெணசாதியாகக் கொடுததான. யோசேபபு எகிப்துதேசத் தைசசுறறிவரபபுறபபட்டான.

ச௬. யோசேபபுஎகிப்தின இராசாவாகிய பார்வோனுககுமுனபாக நிறகிறபொழுது முபபது வயதாயிருநதான. யோசேபபு பார்வோனைவிட்டுபபுறபபட்டு எகிப்துதேச ததையெலலாங கடநதான.

சஎ. பரிபூரணமுளள ஏழு வருஷஙகளில தேசம மிகுதியாயப பலனதநதது.

சஅ. எகிப்துதேசததிலவநத அநத ஏழு வருஷஙகளினஆகாரததையெலலாம அவன சேர்தது, அநத ஆகாரததைப பட்டணங களிற கட்டிவைத்தான. ஒவவொருபட்ட ணததிறகுளளே அதின்தின சுறறுபபுறத்தா காரததையே கட்டிவைததான.

சகூ. அபபடியே யோசேபபுத் தானியத தைக கடற்கரை மணலைபபோல மிகவுந திரட்சியாகவெண்ணி ஓயுமட்டுங குவிதது வைத்தான. ஏனெனில், எணணிக்கைக்கடங காததாயிருநதது.

ருய. பஞசமுளளவருஷஙகள வாராததறகு முனனே யோசேபபுககு இரணடு குமாரர் களபிறநதார்கள. அவர்களை ஓன்பட்ட ணததது ஆசாரியனுகிய போததிபேராவின

குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுக்குப் பெற்றாள்.

௫௧. யோசேப்பு மூத்தவனுக்கு மனாசேயென்று பேரிட்டான். ஏனெனில், என்னுடைய எல்லா வருத்தத்தையும் என் தகப்பனுடைய வீட்டனைத்தையும் பராபரன் என்னை மறக்கப்பண்ணினாரென்றான்.

௫௨. இரண்டாங் குமாரனுக்கு எப்பிராயீமென்று பேரிட்டான். ஏனெனில், நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்திலே பராபரன் என்னைப் பலுகப்பண்ணினாரென்றான்.

௫௩. எகிப்துதேசத்திலே வந்த பரிபூரண முள்ள ஏழுவருஷங்களு முடிந்தபொழுது,

௫௪. பஞ்சமுள்ள ஏழுவருஷங்கள் யோசேப்புச் சொன்னபடியே வரத்துவக்கின. அப்பொழுது எல்லாத்தேசங்களிலும் பஞ்சமுண்டாயிற்று. ஆனாலெகிப்துதேசமெங்கும் ஆகாரமிருந்தது.

௫௫. எகிப்து தேசமெங்கும் பஞ்சமுண்டாகும்போது சனம் அப்பத்திற்காகப் பார்வோனை நோக்கிக் கூப்பிட்டது. அப்பொழுது பார்வோன் எல்லா எகிப்தியருக்கும் நீங்கள் யோசேப்பண்டைக்குப்போய் அவனுங்களுக்குச்சொல்லும்படியே செய்யுங்களென்றான்.

௫௬. பஞ்சந் தேசமெங்கும் உண்டாகும்போது யோசேப்புக் களஞ்சியங்களையெல்லாந்திறந்து எகிப்தியருக்குவிற்றான். ஏனெனில், பஞ்சம் எகிப்துதேசத்திற் கனமானதாயிற்று.

௫௭. சகல தேசங்களின் மனிதரும் யோசேப்பினிடத்திலேகொள்ள எகிப்திற்கு வந்தார்கள். ஏனெனில், பூமி யெங்கும் பஞ்சமிகுதியாயிருந்தது.

## ௪௨. அதிகாரம்.

[(௧) யாகோபு தன் பத்துக்குமாரர்களை எகிப்திலே தானியங்கொள்ள அனுப்பியது. (௭) யோசேப்பு இவர்களைவேவுகாரரென்று காவலிலேவைத்தது. (௰௮) பென்யமீனைக் கொண்டுவருகிறோமென்கிற உடம்படிக்கையினால் அவர்களை விடுவிட்டது. (௨௧) யோசேப்புக்குச்செய்த குற்றத்துக்காகத் துக்கித்தது. (௨௪) சிமேயோனைக் கட்டி வைத்தது. (௨௫) அவர்கள் தானியத்தோடும், பணத்தோடுந் திரும்பியது. (௨௯) யாகோபுக்கு அவர்கள் தங்களுக்குச் சம்பவித்ததையறிவித்தது. (௩௬) யாகோபு பென்யமீனை யனுப்பத்தடுத்தது.]

எகிப்திலேதானியமுண்டென்று யாகோபு அறிந்தபொழுது யாகோபு தன்குமாரருக்கு நீங்கள் ஒருவரை யொருவர் பார்க்கிறதென்ன?

௨. இதோ எகிப்திலே தானியமுண்டென் றுகேட்டேன், நாம் சாகாமல் உயிரோ டிருக்கும்படிக்கு, அங்கே இறங்கிப்போய் நமக்காகத்தானியங்கொள்ளுங்களென்றான்.

௩. அப்பொழுது யோசேப்பின் சகோதரரிற் பத்துப்பேர் எகிப்திலேதானியங்கொள்ள இறங்கிப்போனார்கள்.

௪. ஆனால் யோசேப்பின் தம்பியாகிய பென்யமீனை யாகோபு அவன் சகோதரரோடேகூட அனுப்பாதேயிருந்தான். ஏனென்றால், அவனுக்கொருவேளை மோசம் வருமேயென்று சொன்னான்.

௫. அப்படியே கொள்ளுகிறதற்காக வருகிறவர்களோடேகூட இஸ்ரவேலின் குமாரரும்வந்தார்கள். ஏனெனில், கானான்தேசத்திலே பஞ்சமுண்டாயிருந்தது.

௬. யோசேப்போவென்றால், தேசத்தின் மேல் அதிகாரியாயிருந்து, அவனே தேசத்தின் சனத்திறகெல்லாம்விற்றான். யோசேப்பின் சகோதரர்வந்து, முகங்குப்புறத் தரையிலேவிழுந்து அவனைவணங்கினார்கள்.

௭. யோசேப்புத் தன்சகோதரரைப்பார்க்கிறபொழுது அவர்களை யறிந்தான். ஆனால் அறியாதவன்போல அவர்களுக்குக் காண்பித்து அவர்களோடே கடினமாய்ப்பேசி, அவர்களுடனே எங்கேயிருந்து வந்தீர்களென்றான். அப்பொழுது அவர்கள் ஆகாரங் கொள்ளக் கானான்தேசத்திலிருந்துவந்தோமென்றார்கள்.

௮. யோசேப்புத் தன் சகோதரரை யறிந்தான். அவர்களோவெனில், அவனையறியாதிருந்தார்கள்.

௯. யோசேப்பு அவர்களைக்குறித்துத்தான் கண்டிருந்த * சொப்பனங்களை நினைத்து, அவர்களோடே நீங்கள் வேவுகாரர், தேசம் எங்கேதிறந்துகிடக்கிறதென்று பார்க்கவந்தீர்களென்றான். * ௩௭, ௫—௰.

௰. அவர்களோவென்றால், அவனோடே சொன்னதாவது; அல்ல, எங்களாண்டவனே! ஆகாரங்கொள்ள உம்முடைய அடியார்வந்தார்கள்.

௰௧. நாங்களெல்லாரும் ஒருவருடைய பிள்ளைகள். நாங்களுண்மையுள்ளவர்கள். உம்முடைய அடியார்வேவுகாரரல்லவென்றார்கள்.

௰௨. அவனோவெனில், அவர்களோடே இப்படியல்ல, தேசம் எங்கேதிறந்துகிடக்கிறதென்று பார்க்கவே வந்தீர்களென்றான்.

௰௩. அப்பொழுது அவர்கள் சொன்னதாவது; உம்முடைய அடியார் கானான்தேசத்திலிருக்கிற ஒருவருக்குக்குமாரராகிய பன்னிரண்டு சகோதரர், ஆனால் இதோ, இளையவன் இந்நாளில் எங்கள் தகப்பனண்டையிலிருக்கிறான். ஒருவனோவென்றால், காணாமற்போனானென்றார்கள்.

௰௪. யோசேப்பு அவர்களோடேசொன்னதாவது; நீங்கள் வேவுகாரரென்று நானுங்களோடே சொன்னபடியேயிருக்கும்.

௰௫. உங்கள் இளைய சகோதரன் இங்கே வந்தாலொழிய நீங்கள் இங்கேயிருந்து புறப்படுவதில்லையென்று பார்வோனின் ஜீவனைக் கொண்டு சொல்லுகிறேன். இதினாற் சோதிக்கப்படுவீர்கள்.

௰௬. உங்கள் சகோதரனை யழைத்து வர உங்களிலொருவனை அனுப்புங்கள். நீங்களோவென்றால், கட்டுண்டிருப்பீர்கள். உங்களில் நிசமுண்டோவென்றுங்கள் வார்த்தைகள் சோதிக்கப்படும். இல்லாவிட்டால், நீங்கள் வேவுகாரரென்று பார்வோனின் ஜீவனைக் கொண்டு சொல்லுகிறேனென்று சொல்லி,

௰௭. அவர்களை ஏகமாய மூன்று நாட்காவலிலே போடுவித்தான்.

௰௮. மூன்றாம் நாளிலே யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது; நீங்களுயிரோடேயிருக்கும்படிக்கு ஒன்று, செய்யுங்கள். நான் பராபரனுக்குப் பயப்படுகிறவன்.

௰௯. நீங்கள் நிசமுள்ள மனிதரானால், உங்கள் சகோதரனாகிய ஒருவன் நீங்கள் காவற்பண்ணப்பட்ட வீட்டிற் கட்டுண்டிருக்கட்டும். நீங்களோவென்றால், புறப்பட்டு உங்கள் வீட்டாரின் பசிக்காகத் தானியங் கொண்டுபோய,

௨௰. உங்கள் இளைய சகோதரனை என்னண்டைக்கழைத்து வாருங்கள். அப்பொழுது நீங்கள் சாவாதபடிக்கு, உங்கள் வார்த்தைகள் மெய்ப்பட்டிருக்குமென்றான். அவர்கள் அப்படிச் செய்யப்போய,

௨௧. ஒருவரோடொருவர் சொன்னதாவது; நாம நம்முடைய சகோதரனுக்குச் செய்த குற்றமே நம்முடையமேற் சுமருகிறது. அவன் நம்மை இரக்கங்கேட்கும்போது அவனாத்துமாவிற்கிருந்த இடுக்கத்தை நாம கண்டும் அவனுக்குச் செவிகொடாதே போனோமே. ஆகையால், இந்த இடுக்கம் நம்முடையமேல் வருகிறதென்றார்கள்.

௨௨. அப்பொழுது ரூபேன் அவர்களுக்குப் பிரதியுத்தாரமாக, * இளைஞனுக்கு விரோதமாகப் பாவஞ்செய்யாதிருங்களென்று நானுங்களோடே சொன்னதில்லையோ! நீங்களோ கேளாதே போனீர்கள். இப்பொழுது இதோ, அவன் இரத்தப்பழி கேட்கப்படுகிறதென்றான். * ௩௭, ௨௧. ௨௨.

௨௩. ஆனால் யோசேப்பு இதைக்கேட்டானென்று அவர்களறியாதே போனார்கள். ஏனெனில், துபாசித்தனம் பண்ணுகிறவன் அவர்களுக்குள்ளேயிருந்தான்.

௨௪. அவனிவர்களை விட்டப்பாலே போய, அழுது, திரும்ப அவர்களண்டை வந்து அவர்களோடே பேசி, அவர்களுக்குள்ளே சிமெயோனைப்பிடித்து அவனையவர்கள் கண்களுக்குமுன்பாகக் கட்டுவித்தான்.

௨௫. பிறகு அவர்களுடைய சாக்குகளைத் தானியத்தால் நிரப்பவும், அவர்களுடைய பணத்தைத் திரும்ப அவனவன் சாக்கிலே போடவும் அவர்களுக்கு வழிக்கு ஆகாரங் கொடுக்கவும் யோசேப்புக் கற்பித்தான். அப்படியே அவர்களுக்குச் செய்யப்பட்டது.

௨௬. அவர்கள் தங்கள் தானியத்தைத் தங்கள் கழுதைகளின்மேலேற்றிக்கொண்டு, அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

௨௭. தங்குகிற இடத்திலே அவர்களிலொருவன் தன் கழுதைக்குக் கவளங் கொடுக்கத் தன் சாக்கைத் திறக்கிறபொழுது இதோ, தன் சாக்கின் வாயிலே தன் பணமிருக்கிறதைக் கண்டு,

௨௮. தன் சகோதரரோடே என் பணம் எனக்குத் திரும்ப வந்தது. இதோ, என் சாக்கிலே யிருக்கிறதென்றான். அப்பொழுது, அவர்கள் திடன்ற்றுப்போய், ஒருவரையொருவர் கலக்கமாய்ப் பார்த்து, பராபரன் நமக்கிதைச் செய்ததேதென்றார்கள்.

௨௯. அவர்கள் கானான் தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டையிலே வந்து சேர்ந்தபொழுது, தங்களுக்குச் சம்பவித்தவைகளை யெல்லாம் அவனுக்கறிவித்துச் சொன்னதாவது;

௩௰. தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்களோடே கடினமாய்ப் பேசி, எங்களைத் தேசத்தை வேவுபார்க்கிறவர்களாக எண்ணினான்.

௩௧. நாங்களோவெனில், அவனோடே சொன்னதாவது; நாங்கள் வேவுகாரராயிராமல் நிசமுள்ள மனிதராயிருக்கிறோம்.

௩௨. எங்கள் தகப்பனுக்குப் பிறந்த நாங்கள் பன்னிரண்டு சகோதரர். ஒருவன் காணாமற்போனான். இளையவனோவென்றால், இந்நாளிற் கானான் தேசத்தில் எங்கள் தகப்பனண்டையிலேயிருக்கிறானென்றோம்.

௩௩. அப்பொழுது தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்களோடே சொன்னதாவது; நீங்கள் நிசமுள்ளவர்களாயிருக்கிறதையேதினாலே யறிவேனென்றால், உங்கள் சகோதரனாகிய ஒருவனை நீங்கள் என்னிடத்திலே வைத்து, உங்கள் வீட்டாரின் பசிக்காகத் தானியம் வாங்கிக்கொண்டுபோய்,

௩௪. உங்கள் இளைய சகோதரனை என்னண்டைக்கழைத்து வாருங்கள். அதினாலே நான் நீங்கள் வேவுகாரராயிராமல், நிசமுள்ளவர்களதானென்றறிந்துகொண்டு, உங்கள் சகோதரனை உங்களுக்குக் கொடுத்து விடுவேன். நீங்கள் தேசத்திலே தொழிலும் பண்ணலாமென்றானென்று சொன்னார்கள்.

௩௫. சம்பவித்ததேதென்றால், அவர்கள் தங்கள் சாக்குகளிலிருக்கிறதைக் கொட்டுகையில் இதோ, அவனவன் சாக்கிலே அவனவன் பணமுடிப்பிருந்தது. தங்கள் பணங்

கனைமுடிப்புகளை அவர்களும் அவர்கள் தகப்பனும் கண்டுபயந்தார்கள்.

௩௬. அவர்கள் தகப்பனாகிய யாக்கோபு அவர்களுடனே, என்னைப் பிள்ளைகளற்றவனாக்குகிறீர்கள். யோசேப்பு இல்லாதே போனான். சிமியோனுமில்லாதேபோனான். பென்யமீனையும் அழைத்துக்கொண்டு போகிறீர்கள். என்மேலே இவையெல்லாம் வருகிறதேயென்றான்.

௩௭. அப்பொழுது ரூபேன் தன் தகப்பனோடே, அவனை நான் உம்மண்டைக்கழைத்து வராதேபோனால், என்னிரண்டு குமாரரைக் கொன்றுபோடுவீராக. என்கையிலே அவனை ஒப்புவியும், நான் அவனை உம்மண்டைக்குத் திரும்ப அழைத்து வருவேனென்றான்.

௩௮. அதற்கவன், என்மகன் உங்களோடேகூட இறங்கிப்போவதில்லை. ஏனெனில், அவன் தமையன் மரணமடைந்தான். இவனொருவன் மீதியானவன். நீங்கள் போகும்வழியிலே இவனுக்கொரு சேதம் வந்தால், நீங்கள் என் நரையைச் சஞ்சலத்தோடே குழியிலிறங்கப் பண்ணுவீர்களென்றான்.

## ௪௩. அதிகாரம்.

[(௧) யாக்கோபு பென்யமீனை அனுப்ப மிகுதியாய்ப் போதிக்கப்பட்டது. (௰௬) யோசேப்பு தன் சகோதரரை ஏற்றுக்கொண்டது. (௩௧) அவன் அவர்களுக்கு ஒரு விருந்து செய்தது.]

பஞ்சமோவென்றால், தேசத்திலே மிகுதியாயிருந்தது.

௨. ஆகையால், அவர்கள் எகிப்திலிருந்து கொண்டுவந்த தானியத்தைச் சாப்பிட்டுத் தீர்ந்தபொழுது அவர்கள் தகப்பன் அவர்களுடனே நீங்கள் திரும்பப்போய்க் கொஞ்சம் ஆகாரம் நமக்குக்கொள்ளுங்களென்றான்.

௩. அப்பொழுது யூதா அவனோடேசொன்னதாவது; உங்கள் சகோதரன் உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள் என் முகத்தைப் பார்ப்பதில்லையென்கிறதை அந்தமனிதன் எங்களுக்குத் திடச்சாட்சியாய்ச்சொல்லிக்கறபித்தான்.

௪. நீர் எங்கள்சகோதரனை எங்களோடேகூட அனுப்புகிறதுண்டானால், நாங்கள் இறங்கிப்போய், உமக்கு ஆகாரங்கொள்ளுவோம்.

௫. அனுப்பாமற்போனீரேயானால், நாங்கள் இறங்கிப்போவதில்லை. ஏனெனில், உங்கள் சகோதரன் உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள் என்முகத்தைப்பார்ப்பதில்லையென்று அந்தமனிதன் எங்களோடே சொன்னானேயென்றான்.

௬. அப்பொழுது இஸ்ரவேல், உங்களுக்கின்னமொருசகோதரனிருக்கிறதை நீங்கள் அந்தமனிதனுக்கு அறிவித்ததினாலே எனக்கேன் பொல்லாப்புண்டு பண்ணினீர்களென்றான்.

௭. அதற்கவர்கள்சொன்னதாவது; உங்கள் தகப்பனின்னம் உயிரோடிருக்கிறானோவென்றும், உங்களுக்கின்னமொரு சகோதரன் உண்டோவென்றும், அந்தமனிதன் எங்கள் செய்தியையும், எங்கள் வம்சத்தின் செய்தியையும் கேட்கவே கேட்டான். அந்தக் கேள்விகளுக்குத்தக்கதாக அவனுக்கு அறிவித்தோம். உங்கள்சகோதரனை உங்களோடேகூட இங்கே அழைத்துவாருங்களென்றவன்சொல்லுவானென்கிறதையறிந்தோமோ என்றார்கள்.

௮. பின்னையும்யூதாதன்தகப்பனாகிய இஸ்ரவேலோடே சொன்னதாவது; நாங்களும் நீரும் எங்கள் குழந்தைகளும் சாவாமல், உயிரோடிருக்கும்படிக்கு, நாங்கள் எழுந்திருந்து போகத்தக்கதாகப் பிள்ளையாண்டானை என்னோடேகூட அனுப்பும்.

௯. அவனுக்காக நான் பிணையாயிருப்பேன், என்கையிலவனைக்கேட்பீராக. நான் அவனையும்மண்டைக்குக் கொண்டுவந்து அவனையுமக்குமுன்பாக நிறுத்தாதே போனால், சகலநாளும் உமக்கு நேரஸ்தனாயிருப்பேன்.

௰. ஏனெனில், நாங்கள் தாமதிக்காதிருந்தோமானால், இப்பொழுது இரண்டுவிசை திரும்பிவந்திருப்போமேயென்றான்.

௰௧. அப்பொழுது அவர்கள் தகப்பனாகிய இஸ்ரவேல் அவர்களோடே சொன்னதாவது; இப்படிவேண்டியதேயானால், ஒன்று செய்யுங்கள். இந்தத்தேசத்தின் உச்சிதங்களாகிய கொஞ்சம் பிசின்தயிலத்தையும், கொஞ்சந் தேனையும், சம்பாரங்களையும், வெள்ளைப் போளத்தையும், தெரோபிந்து கொட்டைகளையும், வாதுமைக்கொட்டைகளையும் உங்கள்சாக்குகளிற்போட்டு, அந்த மனிதனுக்குக் காணிக்கையாகக் கொண்டு போங்கள்.

௰௨. இரட்டிப்பாய்ப் பணத்தை யுங்கள் கைகளிலும்வைத்து, உங்கள் சாக்குகளின் வாயிலே திரும்பிவந்த பணத்தை மறுபடியும் உங்கள்கைகளிலே கொண்டுபோங்கள், அது பிசகாயிருந்ததாகும்.

௰௩. உங்கள் சகோதரனையுங் கூட்டிக்கொண்டு, எழுந்து அந்தமனிதனண்டைக்குத்திரும்பிப்போங்கள்.

௰௪. ஆனால் அந்தமனிதன் உங்களுடைய மற்றச் சகோதரனையும், பென்யமீனையும், உங்களோடேகூட அனுப்பிவிடும்படிக்குச் சர்வதந்திரத்தும வல்லபராபரன் அவன்முன்பாக உங்களுக்கிரக்கங் கிடைக்கப்பண்ணுவாராக. நானோவெனில், பிள்ளையற்றுப்போனவனைப்போல இருப்பேனென்றான்.

௧௫. அப்பொழுது அவர்கள் அந்தக் காணிக்கையையும், தங்கள் கைகளில் இரட்டிப்பான பணத்தையுமெடுத்துப் பென்யமீனைக் கூட்டிக்கொண்டு, பயணம் புறப்பட்டு எகிப்திறகிறங்கிப்போய், யோசேப்புக்கு முன்பாக வந்து நின்றார்கள்.

௧௬. அப்பொழுது பென்யமீன் அவர்களோடே கூட இருக்கிறதை யோசேப்புக் கண்டு, தன் வீட்டு விசாரிப்புக்காரனோடே, நீ இந்த மனிதரை வீட்டிற்கழைத்துப்போய்ச் சாப்பாட்டுக்கு வேண்டியவைகளையடித்து ஆயத்தம்பண்ணு. ஏனெனில், மத்தியானத்திலே இந்த மனிதர் என்னோடே சாப்பிடுவார்களென்றான்.

௧௭. அவன் யோசேப்பு தனக்குச் சொன்னபடியே செய்து, அந்த மனிதரை யோசேப்பின் வீட்டிற்கழைத்துப்போனான்.

௧௮. அப்பொழுது அவர்கள் தாங்கள் யோசேப்பின் வீட்டிற்கழைத்துப் போகப்படுகிறதைக் கண்டு பயந்து முந்தின முறை நம்முடைய சாக்குகளில் திரும்பி வந்த பணத்தினிமித்தம் நம்மேற் குற்றஞ்சாற்றி நம்முடைய மேல் விழுந்து நம்மைச் சிறைகளாக்கி நம்முடைய கழுதைகளையெடுத்துக்கொள்ளுவதற்காக நாங்கொண்டுபோகப்படுகிறோமென்று சொல்லி,

௧௯. யோசேப்பின் வீட்டு விசாரிப்புக்காரனண்டையிலே சேர்ந்து, வீட்டு வாசற்படியிலே அவனோடே பேசிச் சொன்னதாவது;

௨௰. எங்களாண்டவனே, ஆகாரங்கொள்ள முந்த இறங்கி வந்திருந்து போனோமே.

௨௧. அப்பொழுது சம்பவித்ததேதெனில், நாங்கள் தங்குமிடத்தில் வந்து எங்கள் சாக்குகளைத் திறந்தபொழுது, இதோ, நாங்கள் எங்கள் பணத்தை நிறுத்துக்கொடுத்த நிறையாய் அவனவன் பணம் அவனவன் சாக்கின் வாயிலிருந்தது. அதை எங்கள் கையிலே திரும்பக்கொண்டு வந்தோம்.

௨௨. ஆகாரங்கொள்ள வேறே பணத்தையும் எங்கள் கையிலே யெடுத்துக்கொண்டு வந்தோம். எங்கள் பணத்தை யாரெங்கள் சாக்குகளில் வைத்தானென்கிறதை யறியோமென்றார்கள்.

௨௩. அவனோவென்றால், உங்களுக்குச் சமாதானம். நீங்கள் பயப்படவேண்டாம். உங்கள் பராபரனும், உங்கள் தகப்பனுடைய பராபரனுமானவர் உங்கள் சாக்குகளில் உங்களுக்குப் பொக்கிஷங்களைக் கட்டளையிட்டார். உங்கள் பணம் எனக்கு வந்து சேர்ந்ததென்று சொல்லிச் சிமெயோனை வெளியே அவர்களண்டையில் அழைத்து வந்துவிட்டு,

௨௪. அவர்களை யோசேப்பின் வீட்டிற்குள்ளழைத்துக்கொண்டுபோய்த் தங்கள் கால்களைக் கழுவ அவர்களுக்குத் தண்ணீர் கொடுத்து, அவர்கள் கழுதைகளுக்கு இரைபோட்டான்.

௨௫. மத்தியானத்திலே யோசேப்பு வருமளவும் அவர்கள் காணிக்கையை ஆயத்தமாய் வைத்தார்கள். ஏனெனில், தாங்கள் அங்கே அப்பஞ் சாப்பிடப்போகிறதைக் கேட்டிருந்தார்கள்.

௨௬. யோசேப்பு வீட்டிற்கு வந்தபொழுது, அவர்கள் தங்கள் கையிலிருந்த காணிக்கையை அவனுக்கு வீட்டிற்குட்கொண்டுபோய்த் * தரைமட்டுங் குனிந்து அவனை வணங்கினார்கள். * ௩௭, ௭.

௨௭. அப்பொழுது அவன் சுகமாயிருக்கிறீர்களோவென்று கேட்டு நீங்கள் சொன்ன முதிர்வயதான உங்கள் தகப்பன் சுகமாயிருக்கிறானே! அவனின்னம் உயிரோடிருக்கிறானோவென்று விசாரித்தான்.

௨௮. அவர்கள் எங்கள் தகப்பனாகிய உம்முடைய ஊழியக்காரன் சுகமாயிருக்கிறான். இன்னம் உயிரோடிருக்கிறானென்று சொல்லிக் குனிந்து வணங்கினார்கள்.

௨௯. அவன் தன் கண்களையேறெடுத்துத் தன் தாயின் குமாரனாகிய தன்னோடே கூடப் பிறந்த பென்யமீனைக் கண்டு, இவன் நீங்களென்னோடே சொன்ன உங்கள் இளைய சகோதரனோவென்று கேட்டு, என் மகனே! பராபரன் உன்மேலே கிருபைவைக்கக் கடவரென்றான்.

௩௰. ஆனால் தன் சகோதரனுக்காக யோசேப்பின் உள்ளம் பொங்கின படியினாலே அவன் அழுகிறதற்கிடந்தேடித் தீவிரித்து, அறையிலேபோய் அங்கேயழுதான்.

௩௧. பிறகு அவன் தன் முகத்தைக் கழுவிப் புறப்பட்டுத் தன்னையடக்கிக்கொண்டு போசனம் வையுங்களென்றான்.

௩௨. அப்பொழுது அவனுக்குத் தனிப்படவும், அவர்களுக்குத் தனிப்படவும், அவனோடே சாப்பிடுகிற எகிப்தியருக்குத் தனிப்படவும் வைத்தார்கள். ஏனெனில், எகிப்தியர் எபிரேயரோடே அப்பஞ்சாப்பிடமாட்டார்கள். அதேனென்றால், அது எகிப்தியருக்கு அருவருப்பாயிருக்கும்.

௩௩. அவர்கள் அவனுக்கு முன்பாக மூத்தவன் தன் மூத்த வயதின்படியேயும், இளையவன் தன் இளைய வயதின்படியேயும் உட்காரவைக்கப்பட்டார்கள். அதற்காக அவர்கள் ஒருவருக்கொருவர் ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪. அவன் தன் முன்னே யிருக்கிறதில் அவர்களுக்குப் பங்கிட்டனுப்பினான். ஆனால் அவர்களெல்லாருடைய பங்குகளைப்பார்க்கிலும் பென்யமீனுடைய பங்கு ஐந்தத்தனை யதிகமாயிற்று. அவர்கள் குடித்து அவனோடே சந்தோஷமாயிருந்தார்கள்.

## ௪௪. அதிகாரம்.

[(௧) யோசேப்புத்தன் சகோதரர்களைச் சிறுத்த உபாயம்பண்ணியது. (௰௪) யூதா யோசேப்புக்கு வணக்கமாக மன்றாடியது.]

பிற்பாடு அவன் தன் வீட்டு விசாரிப்புக்காரனுக்குக் கற்பித்ததாவது; நீ இந்த மனிதருடைய சாக்குகளை அவர்கள் ஏற்றிக்கொண்டுபோகத்தக்க பாரமாய் ஆகாரத்தினாலே நிரப்பி, அவனவன் பணத்தை அவனவனுடைய சாக்கின் வாயிலே போட்டு,

௨. இளையவனுடைய சாக்கின் வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்னுடைய பாத்திரத்தையும், அவனுடைய தானியத்தின் பணத்தையும் போடென்று கற்பித்தான். அவன் யோசேப்புச் சொன்ன வார்த்தையின்படியே செய்தான்.

௩. காலமே வெளிச்சமாகிறபொழுது, அந்த மனிதர் தங்கள் கழுதைகளோடுங்கூட அனுப்பிவிடப்பட்டார்கள்.

௪. அவர்கள் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுத் தூரமாய்ப் போகாததற்குமுன்னே யோசேப்புத் தன் வீட்டுவிசாரிப்புக்காரனோடே சொன்னதாவது; நீ எழுந்து அந்த மனிதரைப் பின்தொடர்ந்து அவர்களைக் கிட்டிப்பிடிக்கும்பொழுது, அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டினதென்ன!

௫. அதுவென் எசமான் குடிக்கிற பாத்திரமல்லவோ! அதுபோனவகை அவருக்கு ஞானதிஷ்டியால் தெரியாதோ! நீங்கள் செய்தது பொல்லாத காரியமாயிருக்கிறதென்று சொல்லென்றான்.

௬. அவன் அவர்களைத் தொடர்ந்துபிடித்து, இந்த வார்த்தைகளை யவர்களோடே சொன்னான்.

௭. அப்பொழுது அவர்கள் அவனோடே சொன்னதாவது; எங்கள் ஆண்டவன் இப்படிக்கொத்த வார்த்தைகளைச் சொல்லுவானேன்! இப்படிக்கொத்த காரியத்தை உம்முடைய அடியார் ஒருக்காலுஞ்செய்வதில்லை.

௮. இதோ எங்கள் சாக்குகளின் வாயிலே நாங்கள் கண்டபணத்தைக் கானான் தேசத்திலிருந்து திரும்ப உம்மண்டைக்குக்கொண்டுவந்தோமே; நாங்கள் உம்முடைய எசமானின் வீட்டிலிருந்து வெள்ளியையாகிலும், பொன்னையாகிலுந் திருடிக்கொண்டுபோவதெப்படி!

௯. உம்முடைய அடியாரில் எவனிடத்திலே அது கண்டுபிடிக்கப்படுமோ அவன் சாவக்கடவன். நாங்களும் எங்கள் ஆண்டவனுக்கு அடிமைகளாவோமென்றார்கள்.

௰. அதற்கவன் இப்பொழுதும் நீங்கள் சொன்ன வார்த்தைகளின்படியே ஆகக்கடவது. எவனிடத்தில் அது கண்டுபிடிக்கப்படுமோ அவன் எனக்கடிமையாவான். நீங்களோவென்றால், குற்றமற்றிருப்பீர்களென்றான்.

௰௧. அவர்கள் தீவிரித்து அவனவன் தன்தன் சாக்கைத் தரையிலே யிறக்கிப்போட்டு, ஒவ்வொருவராய்த் தங்கள் சாக்குகளைத் திறந்துவைத்தார்கள்.

௰௨. அவன் மூத்தவனைத் துவக்கி, இளையவன்மட்டுஞ் சோதிக்கிறபொழுது, பாத்திரம் பென்யமீனுடைய சாக்கிலே கண்டுபிடிக்கப்பட்டது.

௰௩. அப்பொழுது அவர்கள் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு அவனவன் தன் தன் கழுதையின்மேலே சுமையையேற்றிப் பட்டணத்திற்குத் திரும்பினார்கள்.

௰௪. யூதாவும், அவன் சகோதரரும் யோசேப்பின் வீட்டிலே வந்தார்கள். ஏனெனில், அவன் அதுவரையில் அங்கேயிருந்தான். அவனுக்கு முன்பாகத் தரையிலே விழுந்தார்கள்.

௰௫. யோசேப்பு அவர்களுடனே, நீங்கள் செய்த இந்தக் கிரியையேது! என்னைப்போலொத்த மனிதனுக்குக் காரியம் ஞானதிஷ்டியினால் தெரியுமென்று அறியாதே போனீர்களோவென்றான்.

௰௬. அப்பொழுது யூதா என்னுடைய ஆண்டவனுக்கு நாங்களென்ன சொல்லப்போகிறோம்! என்னபேசுவோம்! எதினால் எங்களை நீதிமான்களாக்குவோம்! பராபரன் உம்முடைய அடியாரின் அக்கிரமத்தைக் கண்டுபிடித்தார். இதோ, நாங்களென்னுடைய ஆண்டவனுக்கடிமைகள். நாங்களும், பாத்திரங்கண்டுபிடிக்கப்பட்ட அவனுந்தானேயென்றான்.

௰௭. அவனோவென்றால், இப்படிக்கொத்த செய்கை எனக்குத் தூரமாயிருப்பதாக. எவன்வசத்திற் பாத்திரங் கண்டுபிடிக்கப்பட்டதோ அவனே எனக்கடிமையாயிருப்பான். நீங்களோவெனில், சமாதானத்தோடே உங்கள் தகப்பனண்டைக்குப்போய் ஏறுங்களென்றான்.

௰௮. அப்பொழுது யூதா அவனண்டையிலே சேர்ந்துசொன்னதாவது; ஆ, என்னுடைய ஆண்டவனே! உம்முடைய அடியான் என்னுடைய ஆண்டவனுடைய செவிகளுக்குமுன்பாக ஒருவார்த்தை பேசட்டும். உம்முடைய அடியான்மேல் உம்முடைய கோபம் எரியாதிருப்பதாக. ஏனெனில், நீர் பார்வோனைப் போலிருக்கிறீர்.

௰௯. * உங்களுக்குத் தகப்பனாவது, சகோதரனாவது உண்டோவென்று என்னுடைய ஆண்டவன் உம்முடைய அடியாரைக் கேட்டீர். * ௪௨, ௭.

௨௰. அப்பொழுது என்னுடைய ஆண்டவனுடனே, எங்களுக்கு முதிர்வயதுள்ள தகப்பனும், அவருக்கு முதிர்வயதிலே பிறந்த இளைய சகோதரனுமுண்டு. இவனுடைய தமையன்

செததுபபோனுன. இவனொருவன தன தாயாருககு மீதியானவன. இவனுடைய தகபபன இவனமேலே பட்சமாயிருககிறுனென்றேம.

௨௧. அபபொழுது நீருமமுடைய அடியாரோடே அவனை என்னண்டைக கழைததுவாருஙகள. எனகணணை அவனமேலேவைபபேனென்றீர்.

௨௨. நாஙகளோவெனறுல, என்னுணடவனோடே, அநத இளைஞன தன தகபபனை விடக்கூடாது. தன தகபபனைவிடடால, அவர்செததுபபோவாரெனறேம.

௨௩. நீரோவெனில, உமமுடைய அடியாருடனே, உஙகள இளையசகோதரன உஙகளோடேகூடஇறங்கிவராதேபோனுல,நீஙகளெனமுகத்தைஇனிபபார்பபதில்லையெனறு சொனனீர்.

௨௪. நாங்களுமமுடைய அடியாருகியஎன தகபபனண்டைககு வநதேறின பொழுது சமபவிததததெனறுல, என்னுணடவனுடையவார்ததைகளை அவருககறிவிததோம.

௨௫. நீஙகள திருமபப்போயக்கொஞசம ஆகாரம நமககுககொளளுஙகளெனறு எஙகள தகபபனுர்சொனனுர்.

௨௬. அதறகு நாஙகள சொனனதேதெனில, நாஙகள இறஙகிபபோகக்கூடாது. எஙகள இளையசகோதரன எஙகளோடிருநதானேயானுல, இறஙகிபபோவோம. ஏனெனறுல், எஙகள இளையசகோதரன எஙகளோடேயிராவிடடால, நாஙகள அநதபபுருஷனுடைய முகததைப பார்ககக்கூடாதென்றேம.

௨௭. அபபொழுது உமமுடைய அடியாருகிய எனதகபபன எஙகளோடேசொனனதாவது; என்பெணசாதி எனககிரணடு பிள்ளைகளைபபெறருளெனகிறதையும,

௨௮. அவர்களில ஒருவன என்னிடததிலிருநது புறப்படடுபபோனுன. அவன பீறுணடுவேபீறுணடானெனறுமுனசொலலி,இதுவரைககும அவனைக காணுதிருககிறேனென்கிறதையும நீஙகள அறிவீர்கள.

௨௯. நீஙகளிவனையும எனமுனபாகஇராதபடிககு அழைததுப போகுமபோது ஒரு சேதம அவனுககுவநதால, என நரையை நிர்ப்பநதத்தோடேகுழியிலிறஙகப பணணுவீர்களெனறுன.

௩௰. இபபொழுதும இளைஞன எஙகளோடிராமல்நாஙகள எஙகளதகபபனுகிய உமமுடைய அடியானண்டையிலே போனுல, அபபொழுது அவருடைய ஆததுமம் அவனுத்துமத்தோடே ஒட்டிககொணடிருககிறபடியினுலே சமபவிபபதேதெனில,

௩௧. அவர் இளைஞனிலலையெனறு காணுமபொழுதுசெததுபபோவார்.அபபடியேஉமமுடையஅடியாருமமுடைய ஊழியக்காரனுகியஎங்கள்தகப்பனுடையநரையைச்சஞ்சலததோடே குழியிலிறஙகப பணணுவோமே.

௩௨. ஏனெனில, * நானவனைஉம்மணடைக் கழைததுவராதேபோனுல, நான சகல நாளும என தகபபனுககு நேரஸதனுயிருபபேனெனறு உம்முடைய அடியானுகிய நான எனதகபபனிடததிலே இநத இளைஞனுக்காகப்பிணைப்படடேன. * ௪௩, ௯.

௩௩. இபபொழுதும இளைஞன தன சகோதரரோடேகூடபபோய ஏறுமபடிககு உமமுடையஅடியானுகிய நான இளைஞனுக்குப் பதிலாக இஙகே என்னுணடவனுக அடிமையாயிருக்கட்டுமே!

௩௪. ஏனெனில, இளைஞன எனனேடிலலாவிடடால, எபபடி என தகபபனண்டைககுபபோய ஏறுவேன! எனதகபபனைபபிடிககுந்தீங்கை அபபொழுதுகாண்பேனேயென்றுன்.

## ௪௫. அதிகாரம்.

[(௧) யோசேபபுத் தன சகோதாருககுத தனனை அறியபபடுததினது. (௫) அவன அவர்களுககுப பராபரனுடைய செயலாற்றேறுதல சொலலியது. (௯) அவன தன தகபபனை அழைபபித்தது. (௰௬) பார்வோனதை யுறுதிபணணியது. (௨௧) யோசேட்பு அவர்களுடையபிரயாணததுககுவேணடியவைகளைச சவுதரிததுககொடுதது அவர்கள ஒருமிததிருககுமபடி புததிசொலலியது. (௨௫) யாககோபு சமாசசாரததைப பறறிததிடன்கொணடது.]

அபபொழுதுயோசேபபுத் தன்னணடையில நிற்கிற எலலார்முனபாக வுநதனனை யடககிககொணடிருககக்கூடாமல், யாவரையும எனனைவிடடு வெளியே போகபபணணுஙகளெனறு கூப்பிடடான். யோசேபபுத தன சகோதரருககுத தனனை அறியபபடுததுகையில ஒருவரும அவனணடையிலே நினறதிலலை.

௨. அவன சததமிடடழுதான. அதைத எகிப்தியர் கேடடார்கள. பார்வோனின வீடடாருஙகேடடார்கள.

௩. யோசேப்புத் தன் சகோதரரோடே நான்யோசேட்பு. எனதகபபனஇனனமஉயிரோடிருககிறுரோவெனறுன. ஆனுல,அவன சகோதரர் அவனுககுமுனபாகக் கலஙகினதினுலே அவனுககுபபிரதியுததாரஞசொலல அவர்களுககுக கூடாதேபோயிறறு.

௪. அபபொழுது யோசேபபுததனசகோதரரோடே என்னண்டையிலே கிடடிவாருஙகளெனறுன. அவர்கள கிடடிபபோனுர்கள அபபொழுது அவனசொனனதாவது; நீஙகள எகிப்திறகுப போகிறவர்களுககு விறற உஙகள சகோதரனுகிய யோசேபபு நானே.

௫. இப்பொழுதும் நீங்கள் என்னை இவ்விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே நீங்கள் சஞ்சலப்படவும், அது உங்கள் பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கவும் வேண்டாம். ஏனெனில், உங்கள் ஜீவனுக்காகப் பராபரன் என்னை உங்களுக்கு முன்னாக அனுப்பினார்.

௬. ஏனென்றால், இந்த இரண்டுவருஷந் தேசத்திற்குள்ளே பஞ்சமுண்டாயிருந்தது. உழவும் அறுப்புமில்லாத ஐந்து வருஷங்களும் இன்னமிருக்கும்.

௭. ஆனால் உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்பதற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயிரோடே காப்பதற்குமாகப் பராபரன் என்னை உங்களுக்கு முன்னாக அனுப்பினார்.

௮. இப்பொழுதும் நீங்களல்ல, பராபரன் என்னை இங்கேயனுப்பி, என்னைப் பார்வோனுக்குத் தகப்பனாகவும், அவர்வீட்டிற்கெல்லாத் துரையாகவும் எகிப்துதேசத்தையெல்லாம் ஆளுகிறவனாகவும் வைத்தார்.

௯. நீங்கள் தீவிரத்தோடே என் தகப்பனண்டைக்குப் போய் அவரோடே சொல்லவேண்டியதேதெனில், உம்முடைய குமாரனாகிய யோசேப்பு சொல்லியனுப்புகிறதாவது; பராபரன் என்னை எகிப்திற்கெல்லாந் துரையாக வைத்தார். என்னண்டைக்கு இறங்கிவாரும் தாமதிக்கவேண்டாம்.

௰. நீர் கோசேன்தேசத்திலே வாசம்பண்ணி, எனக்குச் சமீபத்திலேயிருப்பீர். நீரும் உம்முடைய பிள்ளைகளும், உம்முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும், உம்முடைய ஆடுகளும், உம்முடைய மாடுகளும், உமக்குண்டானயாவுங்கூடத்தானே.

௰௧. நீரும் உம்முடைய வீட்டாரும் உமக்கிருக்கிறயாவுந் தாழ்வுபடாதபடிக்கு, அங்கே உம்மைப் பராமரிப்பேன். ஏனெனில், பஞ்சம் இன்னம் ஐந்து வருஷமட்டுமிருக்குமென்கிறேனென்று சொல்லுங்கள்.

௰௨. இதோ, என்னுடைய வாய், உங்களோடே பேசுகிறதென்கிறதை உங்கள் கண்களும் என் தம்பியாகிய பெஞ்யமீனின் கண்களுங் காண்கிறதே.

௰௩. எகிப்திலே எனக்கிருக்கிற என்னுடைய எல்லா மகிமையையும், நீங்கள் கண்டதெல்லாவற்றையும், என் தகப்பனுக்கு அறிவித்து, தீவிரமாய் என் தகப்பனை இவ்விடத்திற்கிறங்கிவரப் பண்ணுங்களென்று சொல்லி,

௰௪. தன் தம்பியாகிய பெஞ்யமீனுடைய கழுத்திறகக் கட்டிக்கொண்டழுதான். பெஞ்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டழுதான்.

௰௫. தன்னுடைய எல்லாச் சகோதரரையும் முத்திசெய்து, அவர்கள்முன்பாக அழுதான். அதற்குப் பிற்பாடு அவன் சகோதரர் அவனோடே பேசினார்கள்.

௰௬. யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று பார்வோன் வீட்டிலே செய்தி கேட்கப்பட்டபொழுது, அது பார்வோனின் பார்வைக்கும், அவனூழியக்காரரின் பார்வைக்கும் நன்றாயிருந்தது.

௰௭. அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னது; நீ உன் சகோதரரோடே சொல்லவேண்டியதாவது; நீங்கள் செய்யவேண்டியதேதெனில், உங்கள் மிருகஜீவன்களின்மேல் பொதியேற்றிப் புறப்பட்டுக் கானான்தேசத்திற்குப் போய்,

௰௮. உங்கள் தகப்பனையும், உங்கள் வீட்டாரையுங் கூட்டிக்கொண்டு என்னண்டைக்கு வாருங்கள். நான் உங்களுக்கு எகிப்துதேசத்தின் நன்மையைக் கொடுப்பேன். தேசத்தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள்.

௰௯. நீங்கள் செய்யவேண்டியதேதெனில், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும், உங்கள் பெண்சாதிகளுக்காகவும், வண்டில்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுபோய் உங்கள் தகப்பனையும் ஏற்றிவாருங்கள்.

௨௰. உங்கள்கண் உங்களுடைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம். ஏனெனில், எகிப்துதேசமெங்கும் நன்மையாயிருக்கிறது உங்களுடையதாயிருக்குமென்று அவர்களோடே சொல்ல நீ கட்டளையிடுமென்றான்.

௨௧. இப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார்கள். யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனுடைய கட்டளையின்படியே வண்டில்களைக் கொடுத்து, வழிக்கு ஆகாரத்தையுமவர்களுக்குக் கொடுத்தான்.

௨௨. அவர்களிலெவ்வொருவனுக்கும் அவ்வா மாற்றுவஸ்திரங்களையுங் கொடுத்து, பெஞ்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும், ஐந்து மாற்றுவஸ்திரங்களையுங் கொடுத்து,

௨௩. அப்படியே தன் தகப்பனுக்கு எகிப்தின் உச்சிதங்களைச் சுமந்துபோகிற பத்துக் கழுதைகளையும், தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும், அப்பமும், இன்பண்டங்களையுஞ் சுமந்துபோகிற பத்துக் கோளிகைக்கழுதைகளையும் அனுப்பினான்.

௨௪. அப்படியே அவன் தன் சகோதரரை யனுப்பிவிட்டு நீங்கள் போகிறபொழுது, வழியிலே சண்டை பண்ணீர்களாகவேண்டாமென்றும், அவர்களோடே சொன்னான்.

௨௫. அவர்கள் எகிப்திலிருந்து போய் கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டைக்கு வந்து,

௨௬. யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறானென்றும், அவன் எகிப்துதேசத்தையெல்லாம் ஆளுகிறானென்றும் அவனுக்கு அறிவித்தார்கள். ஆனால், அவன் இருதயந்

தனையபிறகு. ஏனெனில், அவர்களை நமபாதிருநதான.

௨௭. அவர்களோவெனறால், யோசேபபுத தங்களுடனே பேசின எல்லாவார்த்தைகளையும அவனுககுச சொலலுகிறபொழுதும், தனனையேறறிக கொணடுபோக யோசேபபு அனுபபின வணடிலகளையவன காணகிற பொழுதும, அவர்களுடைய தகபபனாகிய யாககோபின ஆவி திடப்பட்டது.

௨௮. அபபொழுது இஸ்ரவேல எனகுமாரனாகிய யோசேபபு இனனம உயிரோடிருக்கிறபடியால, நான மரணமடையாததறகு முனனேபோய அவனைப பார்ப்பேனெனறான.

## ௪௬. அதிகாரம்.

[(௧) யாககோபு பேர்சேபாவிலே பராபரனூற் றேறுத லடையப்பட்டது. (௫) அங்கேயிருநது அவன கூட்டத்தாரோடு எகிப்திறகுப்போனது. (௮) எகிப்திறகுப்போன அவன குடுமபத்தினதொகை. (௨௮) யோசேபபு யாககோபைச சநதித்தது. (௩௧) பார்வோனுக்குப பதிலுத்தரவு கொடுகக அவனதனசகோதரருக்குக்கற்பித்தது.]

இஸ்ரவேல தனககுணடானதையெலலாங கூட்டிககொணடு பயணமபுறப்பட்டுப பேர்சேபாவுககு வநது தன தகபபனாகிய ஈசாககுடைய பராபரனுககுப பலிகளையிட்டான.

௨. இராததரிசனங்களிற பராபரன இஸ்ரவேலோடே பேசி யாககோபே! யாககோபே! என்றார். அவன இதோ, அடியேனெனறான.

௩. அபபொழுது அவர் சொனனதாவது; நாம உன தகபபனுடைய தேவனாகிய பராபரன எகிப்திறகிறங்கிப்போகப பயப்படாயாக. ஏனெனில், அங்கே உனனைப்பெரிய சாதியாககுவோம.

௪. நாம உனனோடேகூட எகிப்திறகிறங்கிப்போவோம, நாமுனனைத திருமபிவரச்செயவும்பணணுவோமெனறும, யோசேபபுத்தனகையால உனகணகளைமூடுவானெனறுஞ்சொனனார்.

௫. அதறகுப்பிறபாடு யாககோபு பேர்சேபாவிலிருநதுபயணம்புறப்பட்டுப்போனான். இஸ்ரவேலின்குமாரர் தங்கள தகபபனாகிய யாககோபையுந தங்கள்குழநதைகளையும, தங்கள பெணசாதிகளையும, பார்வோன அவனையேறறிவர அனுபபினவணடிலகளின் மேல ஏறறிககொணடுபோனார்கள.

௬. அவர்கள தங்கள ஆடுமாடுகளையுந தாங்கள கானானதேசததிற சமபாதித்த தங்கள ஆஸ்தியையுங் கூட்டிககொணடு எகிப்திறகுவநதார்கள. யாககோபும அவன விததார் அனைவருங்கூடத்தானே.

௭. தனகுமாரரையுந தனகுமாரரின குமாரரையுந தனகுமாரத்திகளையுந தன குமாரரின குமாரத்திகளையுந தனவிததார் அனைவரையும், அவனதனனோடேகூட எகிப்திறகு அழைத்துககொணடுவநதான.

௮. எகிப்திலேவநத இஸ்ரவேலபுததிரரின நாமங்கள, யாககோபும அவனகுமாரரும, யாககோபுடைய முதறபேறானவன் ரூபேன.

௯. ரூபேனுடையகுமாரர்ஆனோக்,பலலூ, எத்ஸ்ரோன், கர்மீயெனறவர்கள.

௧௦. சிமெயோனுடைய குமாரர் ஏமுவேல, யாமின, ஓகாத், யாகீன், சோகார், கானானதேசத்தாளின குமாரனாகியசவுலெனறவன.

௧௧. லேவியின குமாரர் கேர்சோன, கேகாத், மெராரியெனறவர்கள.

௧௨. யூதாவினகுமாரர் ஏர், ஒனான,சேலா, பேரேஸ், சேரா எனறவர்கள. ஏரும ஒனானுமோவெனறால, கானானதேசததிலேசெத்துப்போனார்கள. பேரேசுடைய குமாரர் எத்ஸ்ரோன, அமூலென்றவர்கள.

௧௩. இசசக்காருடையகுமாரர் தோலா, பூவா யோப் சிம்ரோனெனறவர்கள.

௧௪. சேபுலோனுடைய குமாரர் சேரேத், ஏலோன, யாலேயேலெனறவர்கள.

௧௫. இவர்கள லேயாளின குமாரர் இவர்களையும், யாககோபுடைய குமாரத்தியாகிய தீனாளையும, அவள அவனுக்குப்பதான் அராமிலே பெறறாள. அவன குமாரரும அவன குமாரத்திகளுமாகிய எலலா ஆத்துமாககளும முப்பத்துமூனறு.

௧௬. காததுடைய குமாரர் சிபபியோன, அகி, சூனி, எத்ஸ்போன, ஏரி, அரோதி, அரேலியெனறவர்கள.

௧௭. ஆசேருடைய குமாரர் இம்னா, இஸ்வா, இஸ்வி, பெரீயாவெனறவர்கள. இவர்களுடையசகோதரிசேராகஎனறவள. பெரீயாவினகுமாரர், ஏபேர், மல்க்கியேலெனறவர்கள.

௧௮. இவர்கள லாபான தன குமாரத்தியாகிய லேயாளுககுக கொடுதத சில்பாளுடைய பிளளைகள. அவள யாககோபுககு இநதபபதினாறு ஆத்துமாககளைப்பெறறாள.

௧௯. யாக்கோபின்பெணசாதியாகியராகேலுடைய குமாரர் யோசேபபும பென்யமீனுநதானே.

௨௰. யோசேபபுககு எகிப்துதேசததிலே மனாசேயும, எப்பிராயீமும பிறநதார்கள. அவர்களை ஓன்பட்டணத்து ஆசாரியனாகிய போததிபேராவின குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுககுப்பெறறாள.

௨௧. பென்யமீனுடைய குமாரர் பேலா, பேகேர், அஸ்பேல, கேரா, நாமான், ஏகி ரோஸ், மூபபிம, உப்பீம், ஆர்து எனபவர்கள.

௨௨. ராகேல யாககோபுககுப பெறற

குமாரராகிய இவர்களெல்லாரும் பதினாலு ஆத்துமாவே.

௨௩ தாணுடைய குமாரன் ஊசீமென்பவன்.

௨௪. நப்தலியின் குமாரர் யாத்சேயேல், கூனி, எத்சேர், சில்லேமென்பவர்கள்.

௨௫. இவர்கள் லாபான் தன்குமாரத்தியாகிய ராகேலுக்குக்கொடுத்த பில்காள் யாக்கோபுக்குப்பெற்றவர்கள். இவர்களெல்லாரும் ஏழு ஆத்துமாக்கள்.

௨௬. யாக்கோபுடைய குமாரரின் பெண்சாதிகளைத்தவிர அவனுடையகர்ப்பப்பிறப்பாயிருந்து, அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்களெல்லாம் அறுபத்தாறு ஆத்துமாக்கள்.

௨௭. யோசேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டு ஆத்துமாக்கள். எகிப்திலே வந்த யாக்கோபின் வீட்டாராகிய ஆத்துமாக்களெல்லாம் எழுபது.

௨௮. கோசேனுக்குப் போகிறவழியைத் தனக்குக்காட்டும்படிக்கு அவன் தனக்குமுன்னாக யோசேப்பண்டைக்கு யூதாவையனுப்பினான். அப்படியேகோசேன்தேசத்திலே வந்தார்கள்.

௨௯. யோசேப்புத் தன் இரதத்தைப் பூட்டி, தன் தகப்பனாகிய இஸ்ரவேலுக்கெதிர்கொண்டு கோசேனுக்குப் போய், அவனுக்குத் தன்னைக்காண்பித்து, அவனுடைய கழுத்தைக்கட்டிக்கொண்டு அநேகநேரமாய் அவன்கழுத்தைவிடாமல் அழுதான்.

௩௰. அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்புடனே நீ இன்னம் உயிரோடிருக்கிறாயென்று நான் உன்முகத்தைக்கண்டபடியினாலே இனிமரணமனைக்கப்போதாகிலும் வரட்டுமென்றான்.

௩௧. பின்பு யோசேப்புத் தன் சகோதரரோடும், தன்தகப்பனுடைய வீட்டாரோடுஞ் சொன்னதாவது; நான்போய் ஏறிக் கானான்தேசத்திலிருந்து என்னுடைய சகோதரரும், என்தகப்பன்வீட்டாரும் என்னண்டைக்கு வந்தார்களென்று பார்வோனுக்கறிவித்து,

௩௨. இந்த மனிதர் ஆடுகளைமேய்க்கிறவர்கள். ஏனெனில், மிருகஜீவன்களை உடையவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் ஆடுகளையுந் தங்கள்மாடுகளையுந் தங்களுக்குண்டானவைகளெல்லாவற்றையுங் கொண்டுவந்தார்களென்று அவரோடே சொல்லுவேன்.

௩௩. ஆகையால், பார்வோன் உங்களையழைத்து, உங்கள் தொழிலென்னவென்று கேட்கிறதுண்டானால்,

௩௪. அப்பொழுது நீங்கள், கோசேன் தேசத்திலே குடியிருக்கும்படிக்குச் சொல்லவேண்டியது. எங்கள் பிதாக்களைப்போல் உமதுடைய அடியாராகிய நாங்களும் எங்கள் சிறுவயதுதொடங்கி இதுவரைக்கும் மிருகஜீவன்களையுடையவர்களாயிருந்தோமென்று சொல்லுங்கள். ஏனெனில், * மந்தைமேய்க்கிறவர்களெல்லாரும் எகிப்தியருக்கு அருவருப்பாயிருக்கிறார்களென்றான்.

* ௪௩, ௩௨.

## ௪௭. அதிகாரம்.

[(௧) யோசேப்புத் தன்சகோதரரில் ஐந்துபேரையும், (௭) தன்தகப்பனையும் பார்வோனுக்குமுன்பாகக் கொண்டுவந்தது. (௰௩) அவன் அவர்களுக்கு வாசஸ்தலத்தையும், ஆகாரத்தையுங்கொடுத்தது. (௰௫) அவன் எல்லா எகிப்தியருடையபணத்தையும், (௰௬) அவர்களுடையமிருகஜீவன்களையும், (௰௮) அவர்களுடையநிலங்களையும் பார்வோனுக்குச் சம்பாதித்துக்கொடுத்தது. (௨௨) ஆசாரியருடைய நிலங் கொள்ளப்படாதிருந்தது. (௨௩) அவன் அவர்களுக்குநிலத்தை ஐந்திலொருபங்குவிட்டுவிட்டது. (௨௮) யாக்கோபினுடைய ஆயுசு. (௨௯) அவன்தன்பிதாக்களுடனே தன்னையும்புதைக்க யோசேப்பை யாணையிடச்செய்தது.]

யோசேப்பு வந்து பார்வோனுக்கறிவித்து என்தகப்பனும், என் சகோதரரும், தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுகளோடும், தங்களுக்குண்டானவையெல்லாவற்றோடுங்கூடக் கானான்தேசத்திலிருந்து வந்தார்கள். இதோ, கோசேன்தேசத்திலேயிருக்கிறார்களென்றுசொல்லி,

௨. தன்சகோதரரில் ஒருபங்காகிய ஐந்துபேரை யழைத்துக்கொண்டு, அவர்களைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்.

௩. அப்பொழுது பார்வோன் அவன்சகோதரரோடே உங்கள்தொழிலென்னவென்றான். அவர்கள் பார்வோனோடே உமதுடைய அடியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்களும் மந்தைமேய்க்கிறவர்களென்று சொல்லி,

௪. பின்னையும் பார்வோனோடே தேசத்திலே தங்கவந்தோம். ஏனெனில், உமதுடைய அடியாருக்கிருக்கிற மந்தைக்கு மேய்ச்சலில்லை. அதேனென்றால் பஞ்சங் கானான்தேசத்திலே கடினமாயிருக்கிறது; இப்பொழுது உமதுடைய அடியார் கோசேன் தேசத்திலே குடியிருக்கட்டுமென்றார்கள்.

௫. அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது; உன்தகப்பனும் உன்சகோதரரும் உன்னண்டைக்கு வந்தார்கள்.

௬. எகிப்துதேசம் உனக்குமுன்பாக்கிடக்கிறது. தேசத்தில் நலமான இடத்திலே உன்தகப்பனையும் உன்சகோதரரையுங்குடியேற்று. அவர்கள் கோசேன்தேசத்திலே குடியிருக்கட்டும். அவர்களுக்குள்ளே திற

மையான மனிதருண்டென்று அறிந்திருந்தாயானால், அவர்களை எனக்கிருக்கிற ஆடுமாடுகளை விசாரிக்கிற தலைவராக்கவையென்றான்.

எ. யோசேப்புத்தன் தகப்பனாகிய யாக்கோபையும் அழைத்துக்கொண்டுவந்து, அவனைப் பார்வோனுக்கு முன்பாக நிறுத்தினான். யாக்கோபு பார்வோனை யாசீர்வதித்தான்.

அ. பார்வோன் யாக்கோபோடே உன்னுடைய ஆயுசின்நாள்களெத்தனையென்றான்.

கூ. யாக்கோபுபார்வோனோடே நான் பரதேசம்பண்ணின நாள்கள் நூற்றுமுப்பது வருஷங்கள். என்னுடைய ஜீவனநாள்கள் பரதேசிகளான என்பிதாக்களுடைய ஆயுசின்நாள்களுக்கு வாராமற்கொஞ்சமும்பொல்லாப்புமாயிருந்ததென்றான்.

ய. பிற்பாடு யாக்கோபு பார்வோனையாசீர்வதித்துப் பார்வோனிடத்திலிருந்து புறப்பட்டான்.

யக. யோசேப்புத் தன் தகப்பனையும் தன் சகோதரரையுங் குடியேற்றிப் பார்வோன் கட்டளையிட்டபடி அவர்களுக்கு எகிப்துதேசத்தின் நாட்டிலே நல்லதாகிய ராமசேஸ் சீமையிலே காணிகொடுத்தான்.

யஉ. யோசேப்புத் தன் தகப்பனையுந் தன் சகோதரரையுந் தன்தகப்பனுடைய வீட்டாரனைவரையும், பிள்ளைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய ஆகாரங்கொடுத்துப் பராமரித்துவந்தான்.

யஈ. தேசமெங்கும் அப்பமில்லாதேபோயிற்று. ஏனெனில், பஞ்சம் மிகவுங் கடினமாயிருந்தது. பஞ்சத்தினாலே எகிப்துதேசமுங் கானான்தேசமும் இளைத்துப்போயின.

யச. அப்பொழுது அவர்கள் கொள்ளுந் தானியத்திற்காக யோசேப்பு எகிப்துதேசத்திலுங் கானான்தேசத்திலுமுண்டான திரவியத்தையெல்லாஞ்சேர்த்தான். அந்தத் திரவியத்தை யோசேப்புப் பார்வோன்வீட்டிலே கொண்டுவந்துவைத்தான்.

யரு. எகிப்துதேசத்திலுங் கானான் தேசத்திலுந் திரவியஞ்செலவழிந்துபோனபொழுதோவெனில், எகிப்தியரெல்லாரும் யோசேப்பண்டைக்குவந்து, எங்களுக்கு அப்பந்தாரும். திரவியம் இல்லாதேபோனதினாலே நாங்கள் உமக்குமுன்பாகச் சாவானேனென்றார்கள்.

யசா. அப்பொழுது யோசேப்புத்திரவியமில்லாதேபோயிற்றானால், உங்கள் மிருகஜீவன்களைக்கொடுங்கள். உங்கள்மிருகஜீவன்களுக்கீடாக உங்களுக்குத் தருகிறேனென்றான்.

யஎ. அப்பொழுது தங்கள் மிருகஜீவன்களை யோசேப்பண்டைக்குக் கொண்டுவந்தார்கள். யோசேப்புக் குதிரைகளையும், ஆடுகளையும், மாடுகளையும், கழுதைகளையும்வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு அப்பங்கொடுத்து, அந்த வருஷத்திலே அவர்களுடைய எல்லா மிருகஜீவன்களுக்குமீடாக அவர்களைப் பிழைப்பைநடப்பித்துக்கொண்டுவந்தான்.

யஅ. அந்தவருஷமமுடிந்தபொழுது, அவர்கள் மறுவருஷத்திலே அவனண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது; திரவியமுஞ் செலவழிந்துபோயிற்று. மிருகஜீவன்களின் ஆஸ்தியும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது. எங்கள் சரீரமும் எங்கள் நிலமுமேயொழிய எங்கள் ஆண்டவனுக்குமுன்பாக ஒன்றும் மீதியானதில்லையென்கிறதை எங்கள் ஆண்டவனுக்கு மறைக்கமாட்டோம்.

யகூ. நாங்களும் எங்கள் நிலமும் உமதுடையகண்களுக்குமுன்பாக மடிவானேன்! நீர் எங்களையும் எங்கள் நிலத்தையுங்கொண்டு அப்பந்தாரும். நாங்கள் எங்கள் நிலத்தோடுங்கூடப் பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம். நாங்கள் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கும், நிலம் பாழாய்ப்போகாதபடிக்கும், விதையைத் தாருமென்றார்கள்.

உய. அப்படியே யோசேப்பு எகிப்தின்நிலத்தையெல்லாம், பார்வோனுக்குக் கொண்டான். ஏனெனில், எகிப்தியர் அவரவர்பஞ்சந்தங்கள்மேற் பலத்துக்கொண்டபடியினாலே, தங்கள்வயல்களைவிற்றார்கள். ஆனது கொண்டு நிலம்பார்வோனைச்சேர்ந்தது.

உக. ஆனால் சனத்தை அவன் எகிப்தினுடைய எல்லையின் இந்தமுனைதுவக்கி அந்தமுனைமட்டும் இருந்தபட்டணங்களிற் குடிமாறிப் போகப்பண்ணினான்.

உஉ. ஆசாரியரின் நிலத்தைமாத்திரங் கொள்ளாதேபோனான். ஏனெனில், அது பார்வோனாலே ஆசாரியருக்குப்படித்திட்டமாகக் கட்டளைபண்ணப்பட்டது. பார்வோன்தங்களுக்குக் கட்டளைபண்ணின தங்கள் படியைச் சாப்பிட்டார்கள். ஆகையால், அவர்கள் தங்கள் நிலத்தை விற்றதில்லை.

உஈ. யோசேப்பு சனத்தோடேசொன்னதாவது; இதோ, இன்று உங்களையும் உங்கள்நிலத்தையும், பார்வோனுக்குக் கொண்டேன். இதோ, உங்களுக்குத் தரப்படுகிற விதை, அதினால நிலத்தை விதையுங்கள்.

உச. பலனுண்டாகும்பொழுது நடப்பதேதென்றால், பார்வோனுக்கு ஐந்திலொருபங்கைக் கொடுப்பீர்கள். நாலுபங்கோவென்றால், வயலுக்கு விதையும் உங்களுக்கும் உங்கள் வீட்டாருக்கும் உங்கள்குழந்தைகளுக்கும் ஆகாரமுண்டாக உங்களுடையதாயிருக்குமென்றான்.

உரு. அப்பொழுது அவர்கள் எங்களை உயிரோடேகாத்தீர். எங்கள் ஆண்டவனுடைய கண்களில் எங்களுக்குத் தயவே கிடைக்க

கட்டும். நாங்கள் பார்வோனுக்கு அடிமைகளாயிருப்போமென்றார்கள்.

௨௬. அப்படியே ஐந்திலொன்று பார்வோனுக்குச் சேரும் வாரமென்பதை யோசேப்பு எகிப்து நிலத்தின்மேல் இந்நாள் மட்டுஞ்செல்லுங் கட்டளையாக்கினான். ஆசாரியரின் நிலமாத்திரம் பார்வோனைச் சேராமல் நீங்கலாயிற்று.

௨௭. இஸ்ரவேல் எகிப்து தேசத்திலிருக்குங் கோசேன் சீமையிலே குடியிருந்தான். அதிற் காணியாட்சிக்காரராகி மிகவும் பலுகிப்பெருகினார்கள்.

௨௮. யாக்கோபு எகிப்து தேசத்திலே பதினேழுவருஷம் உயிரோடிருந்தான். ஆகையால், யாக்கோபுடைய ஆயுவின் நாள்கள் நூற்று நாற்பத்தேழுவருஷங்களானது.

௨௯. மரணமடைய இஸ்ரவேலின்காலஞ் சமீபித்தபொழுது, அவன் தன்குமாரனாகிய யோசேப்பை வரவழைத்து, அவனுக்குச் சொன்னதாவது; உன்கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், என்னை எகிப்திலே யடக்கம் பண்ணாதபடிக்கு நீ தயவையும் உண்மையையும் எனக்குச் செய்வதற்காக உன்கையை என் தொடையின்கீழே போடு.

௩௰. நான் என்பிதாக்களோடே படுத்துக் கொள்ளுவேன். ஆகையால், நீ என்னை எகிப்திலிருந்தெடுத்துக் கொண்டுபோய் அவர்கள் அடக்கம்பண்ணப்பட்ட நிலத்திலே என்னை அடக்கம்பண்ணுவாயாகவென்றான். அதற்கவன் உம்முடைய சொற்படி நான் செய்வேனென்றான்.

௩௧. அப்பொழுது அவன் எனக்காணையிடு வென்றான். அவனுக்காணையிட்டான். அப்பொழுது இஸ்ரவேல் கட்டிலின் தலைமாட்டிலே சாய்ந்து பணிந்துகொண்டான்.

## ௪௮. அதிகாரம்.

[(௧) யோசேப்புத்தன்குமாரர்களோடு வியாதியாயிருந்த தன் தகப்பனைப் பார்க்கப் போனது. (௨) யாக்கோபு அவர்களையாசீர்வதிக்கத் தன்னைத் தான் திடப்படுத்திக் கொண்டது. (௩) அவன் வாக்குத்தத்தத்தை உறுதிப்படுத்தியது. (௫) அவன் எப்பிராயீமையும் மனாசேயையுந் தன்னுடையவர்களாக வெடுத்துக் கொண்டது. (௭) அவன் யோசேப்புக்கவன் தாயாரின் கல்லறையைச்சொல்லியது. (௯) அவன் எப்பிராயீமையும் மனாசேயையும் ஆசீர்வதித்தது. (௰௭) அவன் மூத்தவனைப்பார்க்கிலும் இளையவனைச் சிலாக்கியப்படுத்தினது. (௨௧) அவன் அவர்கள் கானான்தேசத்திற்குத் திரும்பிவருதலை முன்னறிவித்தது.]

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், இதோ, உம்முடைய தகப்பனார் வியாதியாயிருக்கிறாரென்று யோசேப்புக்குச் சொல்லப்பட்டது. அப்பொழுது அவன் தன் இரண்டுகுமாரராகிய மனாசேயையும், எப்பிராயீமையுந் தன்னோடே கூட அழைத்துக்கொண்டுபோனான்.

௨. இதோ உம்முடைய குமாரனாகிய யோசேப்பு உம்மண்டைக்கு வருகிறானென்று யாக்கோபுக்கறிவிக்கப்பட்டது. அப்பொழுது இஸ்ரவேல் தன்னைத் திடனாக்கிக் கட்டிலின்மேல் உட்கார்ந்தான்.

௩. யாக்கோபு யோசேப்போடே சொன்னதாவது; சர்வத்துக்குமுள்ள பராபரன் கானான்தேசத்திலிருக்கிற லூசிலிலே எனக்குத் தரிசனையாகி என்னையாசீர்வதித்து,

௪. * இதோ, நானுன்னைப் பலுகவும் உன்னைப் பெருகவும் பண்ணி, உன்னைச் சனசதனங்களான கூட்டமாக்கி, உனக்குப் பிற்பாடு இருக்கும் உன்வித்துக்கு இந்தத்தேசத்தை நித்தியகாணியாட்சியாகக் கொடுப்பேனென்று என்னோடே சொன்னார்.

* ௩௫, ௰௧, ௰௨.

௫. இப்பொழுதும் நானுன்னண்டைக்கு எகிப்திலே வாராததற்குமுன்னே உனக்கு எகிப்துதேசத்திற் பிறந்த உன் இரண்டுகுமாரர் என்னுடையவர்கள். ரூபன் சிமியோனென்றவர்களைப்போல எப்பிராயீமும் மனாசேயும் என்னுடையவர்களாயிருப்பார்கள்.

௬. இவர்களுக்குப்பிறகு நீ பெறுகிற சந்தானமோவெனில், உன்னுடையதாயிருக்கும். இவர்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்தில், அவர்களுக்கொத்தபேராய் அழைக்கப்படுவார்கள்.

௭. நான் பதானிலிருந்துவருகையில், ராகேல் கானான்தேசத்தின் வழியிலே எப்பிராத்தாவுக்குவர இன்னங்கொஞ்சந்தூரமிருக்கிறபொழுது, எனக்குமுன்பாக மரணமடைந்தாள். அவளையங்கே பெத்லகேமென்னப்படுகிற எப்பிராத்தா ஊரின்வழியிலே யடக்கம்பண்ணினேனென்றான்.

௮. பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்பின் குமாரரைக்கண்டு இவர்கள் ஆரென்றான்.

௯. யோசேப்புத்தன் தகப்பனோடே இவர்களே பராபரன் இவ்விடத்திலெனக்குக் கொடுத்த என்னுடைய குமாரரென்றான். அப்பொழுது இவன் நான் அவர்களையாசீர்வதிக்கும்படிக்கு, அவர்களையென்கிட்டக் கொண்டுவாவென்றான்.

௰. இஸ்ரவேலின் கண்களோவென்றால் பெரியவயதினால் இருளடைந்துபோயின. பார்க்கக்கூடாதிருந்தான். அவர்களை அவனண்டையிலே சேரப்பண்ணினான். அப்பொழுது அவன் அவர்களை முத்திசெய்து அணைத்துக்கொண்டான்.

௰௧. பிறகு இஸ்ரவேல் யோசேப்போடே உன்முகத்தைப் பார்ப்பேனென்று நினையாதேபோனேன். ஆனால் இதோ, பராபரன்

என்னை உன்வித்தையுங் காணப்பண்ணினாரென்றான்.

௰௨. அப்பொழுது யோசேப்பு அவன் முழங்கால்களுக்குள்ளிருக்கிற அவர்களைப் பின்னிடப்பண்ணி அவன்முகத்திற்குமுன்பாகத் தரைமட்டுங்குனிந்து வணங்கினான்.

௰௩. பிற்பாடு யோசேப்பு இருவரையுங் கொண்டுவந்து எப்பிருயீமைத் தன் வலது கையிலே இஸ்ரவேலின் இடதுகைக்கு நேராகவும் மனாசேயைத் தன்னிடதுகையிலே இஸ்ரவேலின்வலதுகைக்கு நேராகவும் அவனண்டையிலே சேரப்பண்ணினான்.

௰௪. அன்றி இஸ்ரவேல் தன்வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிருயீமுடைய தலையின்மேலும் மனாசே மூத்தவனாயிருந்தாலுந் தன் இடதுகையை மனாசேயினுடைய தலையின்மேலும் வைத்தான். அவனறிந்து அப்படித் தன்கைகளை வைத்து,

௰௫. யோசேப்பை யாசீர்வதித்துச்சொன்னதாவது; பராபரனுக்கு முன்பாக என் பிதாக்களாகிய ஆபிரகாமும் ஈசாக்குமநடந்துகொண்டார்களே. நானுண்டானநாள் துவக்கி இந்நாள்வரைக்கும் என்னையாதரித்துவந்த அந்தப்பராபரனும்,

௰௬. என்னை எல்லாத்தீமைக்கும் நீங்கலாக்கி மீட்டதூதனுமானவர் இந்த இளைஞரை ஆசீர்வதிக்கக்கடவர். என்பேரும் ஆபிரகாம் ஈசாக்கென்றவென்பிதாக்களின் பெயரும் அவர்களுக்குத் தரிக்கப்படக்கடவது. தேசத்தினடுவிலே பேராளமான திரட்சியாய்ப் பலுகக்கடவர்களென்றான்.

௰௭. தன்தகப்பன் தன்வலதுகையை எப்பிருயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோசேப்புக் காணுகிறபொழுதோவெனில், அவனுக்கு ஆகாததாய்க் கண்டது. ஆகையால், எப்பிருயீமுடையதலையின்மேலிருந்த தன் தகப்பனுடைய கையை யோசேப்பு மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து,

௰௮. தன் தகப்பனோடே அப்படியல்ல, என்தகப்பனே! ஏனெனில், இவன்மூத்தவன் இவன் தலையின்மேல் உம்முடைய வலது கையைவையுமென்றான்.

௰௯. அவன் தகப்பனோவெனில், தடுத்தல் பண்ணி அறிவேன் என்மகனே! அறிவேன். இவனுமொரு சனசந்தளமாவான். இவனும் பெருகிப்போவான். ஆகிலும் இவனுடைய தம்பி இவனைப் பார்க்கிலும் பெருகிப்போவான். அவன்வித்துச் சனசந்தளங்களால் நிறைந்த திரட்சியாமென்றான்.

௨௰. அப்படியே அவன் அந்நாளிலே அவர்களை யாசீர்வதித்துப் பராபரன் உன்னை எப்பிருயீமைப்போலவும், மனாசேயைப்போலவுமிருக்கப் பண்ணுவாராகவென்று இஸ்ரவேலர் உன்னைத் தொட்டு வாழ்த்துவார்களென்றுசொல்லி, எப்பிருயீமை மனாசேக்கு முன்னே வைத்தான்.

௨௧. பிறபாடு இஸ்ரவேல் யோசேப்போடே சொன்னதாவது; இதோ, நான் மரணமடைகிறேன். ஆனால் பராபரன் உங்களோடிருந்து, உங்கள் பிதாக்களின்தேசத்திற்கு உங்களைத்திரும்பிவரப்பண்ணுவாரென்றும்,

௨௨. நான் என்பட்டயத்தாலும், என் வில்லினாலும், எமோரியர்கையிலேவாங்கின *ஒருநிலத்தை உன் சகோதரரைப்பார்க்க உனக்கு முன்பாகக் கொடுத்தேனென்றுஞ் சொன்னான். * யோவான். ௪, ௫.

## ௪௯. அதிகாரம்.

[(௧) யாக்கோபு தன்னுடைய குமாரர்களை யாசீர்வதிக்கவழைத்தது. (௩) அவர்கள் தனித்தனியேபெற்ற ஆசீர்வாதம். (௨௯) அவனவர்களுக்குத் தன்னைப் புதைப்பதைக்குறித்துக் கற்பித்தது. (௩௩) அவன் மரணமடைந்தது.]

பிற்பாடு யாக்கோபு தன்குமாரரையழைப்பித்துச் சொன்னதாவது; கூடிவாருங்கள். முடிவுநாள்களில் உங்களுக்கு வந்து சம்பவிப்பதை யுங்களுக்கறிவிப்பேன்.

௨. யாக்கோபின் குமாரரே! கூடிவந்து கேளுங்கள். உங்கள்தகப்பனாகிய இஸ்ரவேலைக்கேளுங்கள்.

௩. ரூபேனே! நீ என்னுடையதலைச்சனும் என்சத்துவமும் என் முந்தின பலமுமானவன். நீ மேன்மையிற் பிரதானமும், வல்லமையிற் பிரதானமுமானவன்.

௪. தண்ணீரைப்போலப்பாய்ந்தவனே! நீ பிரதானமாயிருப்பதில்லை. ஏனெனில்,* உன் தகப்பனுடைய மஞ்சத்தின்மேலேறினாய். அதை அப்பொழுது தீட்டுப்படுத்தினாய். என் படுக்கையின்மேல் அவனேறினான். * ௩௫, ௨௨.

௫. சிமெயோனும்,லேவியும் ஏக சகோதரராயிருக்கிறார்கள். அவர்களுடைய பட்டயங்கள்கொடுமையின் ஆயுதங்கள்.

௬. என்னாத்துமா அவர்கள் இரகசிய ஆலோசனையில் வராதிருப்பதாக. என் மகிமை அவர்கள்கூட்டத்தோடே ஒன்றிப்போகாதிருப்பதாக. ஏனெனில்,அவர்கள்தங்கள் கோபத்திலே * ஒரு புருஷனைக்கொன்று போட்டுத் தங்கள் ஆங்காரத்திலேபலவான்களை அதமபண்ணினார்கள். * ௩௪, ௨௫. ௲

௭. வலிதான அவர்களுடைய கோபமுங் கடினமானஅவர்களுடையமூர்க்கமுஞ் சபிக்கப்படக்கடவது. அவர்களை யாக்கோபிலே * பிரியவும், இஸ்ரவேலிலே சிதறவும்பண்ணுவேன். * யோசுவா. ௰௯, ௧.

௮. யூதாவே! நீயே பிரதானமானவன். உன்னையுன்சகோதரர்புகழுவார்கள்.உன்னு

டைய கை உன் சத்துருக்களுடைய பிடரியின்மேலிருக்கும். உனக்கு முன்பாக உன் தகப்பனுடைய புத்திரர் வணங்குவார்கள்.

௯. யூதா சிங்கக்குட்டியானவன். என் மகனே! நீ இரைபெடுத்துயர்ந்தாய். சிங்கத்தைப்போலவும், கிழச் சிங்கத்தைப்போலவும், மடங்கிப் படுத்துக்கொள்ளுகிறான். அவனை எழுப்பப்போகிறவன் ஆர்?

௰. * சமாதானகர்த்தர் வருமட்டுஞ் செங்கோல் யூதாவிலிருந்தும், நியாயங்கற்பிக்கிறவன் அவன் பாதங்களிலிருந்தும், அற்றுப் போவதில்லை. அவராச் சனசதனங்கள் சேரும். * சங். ௭௨, ௭. ஏசா. ௯, ௬. ௭. எபேசி. ௨, ௰௭.

௰௧. தம்முடைய கழுதைமறியைத் திராட்சச்செடியோடும், தம்முடைய கோளிகைக் கழுதையின்குட்டியை நற்குல திராட்சச்செடியோடுங் கட்டிப்போடுவார். தமது உடுப்பைத் திராட்சப்பழ இரசத்திலுந் தமது சால்வையைத் திராட்சப் பழங்களின் இரசத்திலுந் தோய்ப்பார்.

௰௨. அவருடைய கண்கள் திராட்சப்பழ இரசத்திலுஞ் சிவப்பும், அவருடைய பற்கள் பாலிலும் வெண்மையுமாயிருக்கும்.

௰௩. செபுலோன் * கடல்துறை யருகே குடியிருப்பான். அவன் கப்பல்துறையருகேயிருப்பான். அவன் எல்லை சீதோனுக்கெதிராகவிருக்கும். * யோசுவா. ௰௯, ௰, ௰௧.

௰௪. இசக்கார் பொதியின் நடுவே படுத்துக் கிடக்கிற பலத்த எலும்புள்ள கழுதை.

௰௫. அவன் இளைப்பாறுதலை நல்லதென்றும், சீமையை வசதியானதென்றுங் கண்டு, சுமக்கிறதற்குத் தன் தோளைச் சாய்த்துப் பகுதி கட்டுகிறவனானான்.

௰௬. தாண் இஸ்ரவேல் கோத்திரங்களில் ஒன்றைப்போலத் தன் சனத்தை நியாயம் விசாரிப்பான்.

௰௭. தாண் குதிரையின் குதிகால்களைக் கடிக்கிறதினால் அதின்மேல் ஏறியிருக்கிறவன் மல்லாக்க விழக்கடிக்கிற வழியருகான சர்ப்பமும், பாதையருகான விரியனுமாயிருப்பான்.

௰௮. கர்த்தாவே! * உம்முடைய இரட்சிப்புக்குக் காத்துக்கொண்டிருக்கிறேன். * சங். ௨௰௯, ௨௯.

௰௯. காத்தென்றவன் மேல் இராணுவக் கூட்டம் பாய்ந்துவிழும். அவனோவென்றால், கடைசியிலே யதின்மேற் பாய்ந்துவிழுவான்.

௨௰. ஆசேருடைய அப்பம் புஷ்டியாயிருக்கும். இராசாக்களுக்கான ருசிவர்க்கங்களைக் கொடுப்பான்.

௨௧. நப்தலி நீங்கலாய்விடப்பட்ட பெண்மான். வடிப்பமான வசனங்களைத் தருகிறான்.

௨௨. யோசேப்புக் கனிதருகிற செடி. அவன் நீரூற்றண்டையிலே கனிதருகிற செடி. அதின் கொடிகள் சுவரின்மேற் படரும்.

௨௩. அம்பையெய்கிறவர்கள் அவனை மனமடிவாக்கி எய்து அவனைவிரோதித்தார்கள்.

௨௪. ஆனால், அவனுடைய வில் கெட்டியாய் நின்றது. அவன் கைகளின் புயங்கள் யாக்கோபுடைய வல்லவரின் கரங்களாலே பலத்தன். இதைத் தொட்டு மேய்ப்பனும், இஸ்ரவேலின் அஸ்திபாரக்கல்லுமானான்.

௨௫. உன் தகப்பனுடைய பராபரனாலே, அப்படியாயிற்று. அவர் உனக்குத் துணையாயிருப்பார். சர்வத்திறகும் வல்லவராலே அப்படியாயிற்று. அவர் உயரவானத்திலிருந்துண்டாகிய ஆசீர்வாதங்களாலும், கீழே கிடக்கிற பாதாளத்தின் ஆசீர்வாதங்களாலும், முலைகளுக்குங் கர்ப்பங்களுக்குமுண்டாகுகிற ஆசீர்வாதங்களாலும், உன்னையாசீர்வதிப்பார்.

௨௬. உன் தகப்பனுடைய ஆசீர்வாதங்கள் என் பிதாக்களுடைய ஆசீர்வாதங்களுக்கு மேல்வட்டமாயிருந்து நித்திய மேடுகளின் முடிவுமட்டும் போகிறது. அவைகள் யோசேப்புடைய சிரசின்மேலும், தன் சகோதரரில் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்மேலும் வருவதாக.

௨௭. பென்யமீன் பீறிப்போடுகிற ஓநாய். காலமே எடுத்ததைப் பட்சிப்பான். சாயங்காலத்திலே கொள்ளையிட்டதைப் பங்கிடுவான்.

௨௮. இஸ்ரவேலின் கோத்திரங்களாகிய இவைகளெல்லாம் பன்னிரண்டு. அவர்கள் தகப்பன் அவர்களையாசீர்வதிக்கையில், அவர்களுக்குச் சொன்னதிதுதான். அவர்களில் அவனவனை அவனவனுக்கடுத்த ஆசீர்வாதத்தினாலே ஆசீர்வதித்தான்.

௨௯. பிற்பாடு அவனவர்களுக்குக் கற்பித்துச் சொன்னதாவது; நான் என் சனத்தோடே சேர்க்கப்படுகிறேன். ஏத்தியனான எப்பேரோனின் நிலத்திலுள்ள கெவியிலே என்னை என் பிதாக்களண்டையிலே யடக்கம் பண்ணுங்கள்.

௩௰. கானானதேசத்திலே மம்ரேக்கெதிராகவிருக்கிறதும், ஆபிரகாம் நிலத்தோடே கூட ஏத்தியனாகிய எப்பெரோனின் கையிலே பிரேதங்களை யடக்கம்பண்ணுஞ் சொந்த நிலமாகக்கொண்டதும், மக்பேலாவென்னப்பட்ட நிலத்தின் கெவியிலேதானே.

௩௧. அங்கே ஆபிரகாமையும், அவர் பெண்சாதியாகிய சாராளையும் அடக்கம் பண்ணினார்கள். அங்கே ஈசாக்கையும், அவர் பெண்சாதியாகிய ரெபேக்காளையும் அடக்கம் பண்ணினார்கள். அங்கே லேயாளையும் அடக்கம்பண்ணினேன்.

௩௨. அந்த நிலமும், அதிலிருக்கிற கெவியும், ஏத்புத்திரரின் கையிலே கொள்ளப்பட்டதென்றான்.

௩௩. யாக்கோபு தன் குமாரருக்குக் கற்பனை தந்துமுடித்தபிற்பாடு அவன் தன் கால்களைக்

கட்டிலின்மேற் சேர்ந்துகொண்டு ஜீவித்துப்போய்த் தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

## ரு௰. அதிகாரம்.

[(க) யாக்கோபுக்காகத் துக்கங்கொண்டாடியது. (ச) யோசேப்பு அவனையடக்கம்பண்ணப் பார்வோனிடத்திலிருந்து உத்தாரம் பெற்றது. (எ) மரணச்சடங்கு. (௰ரு) மன்னிப்புக்கேட்டுக்கொண்ட தன் சகோதரர்களையோசேப்புச் சவிப்பாற்றியது. (உ௨) அவனுடைய ஆயசு. (உ௩) அவன் தன் குமாரர்களில் மூன்றாந்தலைமுறையைக் கண்டது. (உச) அவன் தன் சகோதரரின் திரும்புதலை முன்னறிவித்தது. (உரு) அவன் தன் எலும்புகளுக்காக அவர்களிடத்தில் ஆணையிடுவித்துக்கொண்டது. (உகூ) அவன் மரித்ததும் பெட்டியிலே வைத்ததும்.]

அப்பொழுது * யோசேப்பு தன் தகப்பனுடைய முகத்தின்மேல் விழுந்து அவன்மேல் அழுது அவனை முத்திசெய்தான். * சகூ, ௪.

௨. பிற்பாடு தன் தகப்பனுக்குக் கந்தவர்க்கங்களையிட யோசேப்பு வயித்தியராகிய தன்னுடைய ஊழியக்காரருக்குக் கற்பித்தான். அப்படியேவயித்தியர் இஸ்ரவேலுக்குக் கந்தவர்க்கங்களையிட்டார்கள்.

௩. அது ஆகிற நாற்பதுநாளும் நிறைவேறிற்று. ஏனெனில், கந்தவர்க்கங்களையிடும் வேளையிதற்கான நாளில் நிறைவேறும். எகிப்தியர் அவனுக்கு எழுபதுநாள் துக்கங்கொண்டாடினார்கள்.

௪. அவனுக்குத் துக்கங்கொண்டாடின நாள் முடிந்தபொழுது யோசேப்பு பார்வோனின் வீட்டாரோடே பேசிச்சொன்னதாவது; உங்கள் கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததானால், நீங்கள் பார்வோனுடைய காதுகளுக்குமுன்பாகப்பேசி,

௫. இதோ நான் சாகிறேன். நான் கானான் தேசத்திலே எனக்குவெட்டியிருக்கிற என் பிரேதக்குழியிலேதானே என்னை யடக்கம்பண்ணுவாயாகவென்று * என் தகப்பன் என்னையாணையிடுவித்துக்கொண்டார். இப்பொழுதும் நான்போய்ஏறி என் தகப்பனையடக்கம்பண்ணி வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேனென்று சொல்லுங்களென்றான். * சஎ, உகூ. ஜ

கூ. அதற்குப் பார்வோன் உன் தகப்பன் உன்னையாணையிடுவித்ததின்படியே நீ போயேறி அவனையடக்கம்பண்ணென்றான்.

எ. அப்படியேயோசேப்பு தன் தகப்பனையடக்கம்பண்ணப் போயேறினான். பார்வோனுடைய வீட்டின்மூப்பராகிய அவனுடைய சகல ஊழியக்காரரும், எகிப்துதேசத்தினுடைய சகல மூப்பரும்,

அ. யோசேப்புடைய எல்லாவீட்டாரும், அவன் சகோதரரும், அவன் தகப்பன் வீட்டாரும் அவனோடே கூடப்போயேறினார்கள். தங்கள் குழந்தைகளையும் தங்கள் ஆடுமாடுகளையுமாத்திரம் கோசேன் தேசத்திலேவிட்டுப்போனார்கள்.

௯. அவனோடே இரதங்களும் குதிரைக்காரரும்போய் ஏறினார்கள். மிகவும் பலத்த தண்டாயிருந்தது.

௰. அவர்கள் யோர்தானுக்கக்கரையிலிருக்கிற ஆட்டாடின் சமபூமிவெளியிலேவந்தபொழுது, அவ்விடத்திலேமகாபலத்தபெரியபுலம்பலாய்ப் புலம்பினார்கள். அங்கே தன் தகப்பனுக்கு ஏழுநாள் துக்கங்கொண்டாடினான்.

௰௧. தேசத்தின் குடிகளாகிய கானானியர் ஆட்டாடின் சமபூமிவெளியிலே கொண்டாடப்படுகிற துக்கத்தைக் காண்கையில், இதுஎகிப்தியரின் கன துக்கமென்றார்கள். ஆனதுகொண்டு யோர்தானுக்கப்பாலிருக்கிற அந்தஸ்தலத்திற்கு எகிப்தியரின் துக்கமென்றுபேருண்டாயிற்று.

௰௨. அவன் குமாரர் அவன் தங்களுக்குக் கற்பித்திருந்தபடியே அவனுக்குச்செய்து,

௰௩. அவனைக் கானான்தேசத்திலேகொண்டுபோய், மம்ரேக்கெதிராயிருக்கிறதும், * ஆபிரகாம் நிலத்தோடேகூட ஏத்தியனாகிய எப்பெரோனிடத்திலே பிரேதங்களை யடக்கம்பண்ணுஞ் சொந்தநிலமாகக் கொண்டதுமான மக்பேலாவெனனப்பட்ட நிலத்தின் கெவியிலே அவனையடக்கம்பண்ணினார்கள். * உ௩, ௰கூ. ஜ

௰௪. யோசேப்பு தன் தகப்பனையடக்கம்பண்ணின பிற்பாடு அவனும் அவன் சகோதரரும் அவனுடைய தகப்பனை யடக்கம்பண்ணுவதற்கு அவனோடேகூட ஏறிவந்தவர்கள் எல்லாரும் எகிப்திற்குத் திரும்பினார்கள்.

௰ரு. ஆனால் தங்கள் தகப்பன் மரணமடைந்ததை யோசேப்பின் சகோதரர்கண்டு, ஒருவேளை யோசேப்பு நம்மைப்பகைத்து நாம் தனக்குச்செய்த எல்லாப் பொல்லாப்பையும் நமக்குச் சரிக்குச்சரிகட்டுவானென்று சொல்லி,

௰கூ. உமமுடைய தகப்பனார் மரணமடையாததற்குமுன்னே ஆ, உன் சகோதரரின் துரோகத்தையும் அவர்களுனக்குப் பொல்லாப்புச்செய்த அவர்கள் பாவத்தையும் மன்னியென்றதாய யோசேப்புக்குச்சொல்லுங்களென்று கற்பித்தாரென்றும்,

௰எ. இப்பொழுதும் உமமுடைய தகப்பனுடைய பராபரனின் ஊழியக்காரர் செய்த துரோகத்தை மன்னியுமென்றும் யோசேப்புக்குச் சொல்லியனுப்பினார்கள். இப்படி

யவர்களை யோசேப்புக்குச் சொல்லியனுப்புகிறபொழுது அவன் அழுதான்.

௰௮. பிற்பாடு அவன் சகோதரரும் போய், அவனுக்கு முன்பாகத் தாழவிழுந்து இதோ, உமக்கு நாங்கள் அடிமைகளென்றார்கள்.

௰௯. அப்பொழுது யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது; பயப்படாதிருங்கள். ஏனெனில், நான் பராபரனுடையஸ்தலத்திலிருக்கிறவனோ?

௨௰. * நீங்களோ எனக்கு விரோதமாகப் பொல்லாத நினைவாயிருந்தீர்கள். பராபரனோவென்றால், திரளசனத்தை உயிரோடேகாக்க இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி செய்யும்படிக்கு, அதைநன்மையாக நினைத்தார். * சங், ௫.

௨௰௧. இப்பொழுதும் பயப்படாதிருங்கள். நானுங்களையும் உங்கள் குழந்தைகளையும் பராமரிப்பேனென்றுசொல்லி, அவர்களைச் சவிப்பாற்றி, அவர்களோடே பட்சமாய்ப் பேசினான்.

௨௰௨. அப்படியே யோசேப்பும் அவன் தகப்பன்வீட்டாரும் எகிப்திலே குடியிருந்தார்கள். யோசேப்பு நூற்றுப் பத்துவருஷம் உயிரோடிருந்தான்.

௨௰௩. யோசேப்பு எப்பிராயீமுக்குப் பிறந்த மூன்றாந்தலைமுறைப் பிள்ளைகளைக் கண்டான். மனாசேயின் குமாரனாகிய மாகீரின் பிள்ளைகளும் யோசேப்புடைய மடியின்மேலிருக்கப்பிறந்தன.

௨௰௪. யோசேப்புத் தன் சகோதரரோடே நான்சாகிறேன். ஆனால், * பராபரன் உங்களைவிசாரிக்கவேவிசாரித்து, உங்களை இந்தத்தேசத்திலிருந்து தாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்டதேசத்திலே போய் ஏறப்பண்ணுவாரென்றான். * எபிரே. ௰௧, ௨௨.

௨௰௫. பராபரன் உங்களைவிசாரிக்கவேவிசாரிக்கும்பொழுது * என்னெலும்புகளை இவ்விடத்திலிருந்து கொண்டு போவீர்களாகவென்று யோசேப்பு இஸ்ரவேல் புத்திரரை ஆணையிடுவித்துக்கொண்டான். * ௨. மோசே. ௰௩, ௰௯. யோசு. ௨௪, ௩௨.

௨௰௬. பிற்பாடு யோசேப்பு நூற்றுப்பத்துவயதுள்ளவனாய் மரித்தான். அப்பொழுது அவனுக்குச் சுக்கந்தவர்க்கங்களையிட்டு அவனை எகிப்துதேசத்தில் ஒரு பெட்டியிலே வைத்துவைத்தார்கள்.

---

# மோசே எழுதின

# இரண்டாம் ஆகமம்.

---



## ௧. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல் புத்திரர்கள் யோசேப்பு இறந்தபின்பு அதிகரித்தது. (௮) புதியஅரசனாலவர்கள்மிகவும்வருத்தப்படுத்தப்பட்டதும், அதிகமாயப்பெருகியதும், (௰௫) மருத்துவச்சிகள் ஆண்பிள்ளைகளை உயிரோடேகாப்பாற்றுதலினதெய்வபத்தி, (௨௨) பார்வோன் ஆண்பிள்ளைகளை யாற்றிற்போடவுத்தரவுசெய்தது.]

எகிப்திலேவந்தஇஸ்ரவேலுடையகுமாரரின் நாமங்கள். யாக்கோபுடனே அவரவர் தங்கள்வீட்டாரோடுங் கூடவந்தார்கள்.

௨. ரூபேன், சிமெயோன், லேவி, யூதா,

௩. இசக்கார், செபுலோன், பென்யமீன்,

௪. தாண், நப்தலி, காத், ஆசேரென்பவர்கள்.

௫. * யாக்கோபின் கர்ப்பப் பிறப்பாகிய எல்லா ஆத்துமாக்களும் எழுபது ஆத்துமாக்கள், யோசேப்போவென்றால், எகிப்திலிருந்தான். * ௧. மோ. ௪௬, ௨௭.

௬. யோசேப்பும் அவனுடைய எல்லாச் சகோதரரும் அந்த எல்லாத்தலைமுறையாரும் மரித்தபிற்பாடோவெனில்,

௭. இஸ்ரவேல் புத்திரர் மிகுதியும் பலுகி ஏராளமாகிப் பெருகிப் பலத்துப்போனார்கள். தேசம் அவர்களாலந்நிறைந்தது.

௮. யோசேப்பையறியாத புதிய இராசாவும் எகிப்திலே யெழும்பினான்.

௯. அவன் தன்சனத்தோடே சொன்னதாவது; இதோ, இஸ்ரவேல்புத்திரராகியசனம் நம்மிலும் பெரியதும், பலத்ததுமாயிருக்கின்றது.

௰. அது பெருகாதபடிக்கும் ஒருயுத்தமுண்டானால், அதுவும் நம்முடைய பகைஞரோ

டேகூடி நமககு விரோதமா யுததமபண்ணி தேசததைவிடடுப புறபபடடுபபோகா தபடிககும, நாம அவர்களநிமிததம புததியுளளவர்களாயிருபபோமாகவென்றான.

௰௧. அபபடியே அவர்களைத தஙகளசுமைகளால ஒடுககுமபடிககு, அவர்களமேற்பகுதிககாரரான தலைவரைவைததார்கள. ஏனென்னில, படைமுஸதிப்புகளை வைககுமபடடணஙகளாகிய பீததோமும,ராமசேசும பார்வோனுககுககடடபபடடன்.

௰௨. ஆனால எததனைககுச சனததையொடுககினார்களோ, அததனைககும அதுபெருகிபபரமபிற்று. ஆகையினாலே, இஸரவேல புததிரரைபபார்ததுவிதனபபடடார்கள.

௰௩. எகிப்தியர் இஸரவேல புததிரரைக கொடூரமாயவேலைகொண்டு,

௰௪. களிமண்ணிலுஞசெஙகலவிலுஞசெயயுஙகடினமானவேலையிலும, வயலிறசெயயும எலலாவித வேலையிலும, அவர்களைக கொடூரமாயப பணிசெயவிககப பண்ணுந தஙகளுடைய மறற எலலாவேலையிலும, அவர்களுககுச சீவனைக்கசபபாககினார்கள்.

௰௫. இதுவுமலலாமல, எகிப்தின இராசா எபிரேய மருததுவசசிகளோடேபேசினான. அவர்களில ஒருததியின பேர், சிபபிராள, மறறவளபேர், பூகாள.

௰௬. அவர்களோடே அவன சொன்னதாவது; பெற் ஆசனஙகளில உளுககாநத எபிரேய பெண்சாதிகளுககு நீஙகள மருததுவமபார்ககையில, அது ஆணபிளளையானால அதைககொலலுஙகள. அது பெணபிளளையானால, உயிரோடிருககடடுமென்றான.

௰௭. ஆனால மருததுவசசிகள பராபரனுக்குபபயநது எகிப்தினஇராசா தஙகளுககுச சொன்னபடிசெயயாமற பிளளைகளையுயிரோடேகாபபாற்றினார்கள.

௰௮. ஆகையால, எகிப்தினஇராசா மருததுவசசிகளையழைபபிதது, அவர்களோடே நீஙகள பிளளைகளை யுயிரோடே காபபாற்றுகிற இநதககாரியததை ஏன செய்கிறீர்களென்றான.

௰௯. அபபொழுதுமருததுவசசிகள பார்வோனோடேஎபிரேயபபெண்சாதிகள எகிப்தியபபெண்சாதிகளைபபோலிருககிறதிலலை. அவர்களநலலபலமுளளவர்கள. மருததுவசசி அவர்களண்டைககு வராததற்குமுன்னேயவர்கள பெறறுத்தீர்ததென்றார்கள.

௨௰. இதினிமிததம பராபரன மருததுவசசிகளுககு நன்மைசெயதார். சனமபெருகிமிகுதியுமபலததுபபோயிறறு.

௨௰௧. சமபவிததத்தென்றால, மருததுவசசிகள பராபரனுககுப பயநதபடியினாலே, அவர் இவர்களுககு வீடுகளையுண்டாககினார்.

௨௰௨. அபபொழுது பார்வோன பிறககிற ஆணபிளளையையெலலாம ஆற்றிலேபோடடுவிடடுப பெணபிளளையையெலலாம உயிரோடேவையுஙகளென்று தன்னுடைய எலலாச்சனததிறகுங்கற்பிததான.

## ௨. அதிகாரம்.

[(௧) மோசேபிறநதது. (௩) நாணற்பெடடியிற்போடடபபடடது. (௫) அவன கண்டெடுககபபடடுப பார்வோன குமாரததியால வளர்ககபபடடது. (௰௧) எகிப்தியனைக கொன்றது. (௰௩) எபிரேயசாதியானையவன கண்டிததது. (௰௫) மீதியானதேசததிறகுவோடிபபோனது. (௨௰௧) சிபபோராளையவன விவாகமபண்ணினது. (௨௰௨) கேர்சோன பிறநதது. (௨௰௩) பராபரன இஸரவேலருடைய கூககுரலையேறறுககொண்டது.]

ஆனால, * லேவி வீடடாரில ஒருமனிதன போய் லேவியின குமாரததி ஒருததியைவிவாகமபண்ணினான. * ௯,௨௰.

௨. அநதபபெண்சாதிகர்பபநதரிதது ஒரு ஆண்பிளளையைப்பெறறு அது அழகுள்ளதென்றுகண்டு, * அதைமூன்றுமாதமஒளிததாள. * எபிரே. ௰௧, ௨௩.

௩. அதை யவள அபபுறம ஒளிக்கக்கூடாதபொழுதோவெனில, அவள நாணற்பெடடியைவாஙகிககொண்டு அதைபபிசினாலும கீலாலும்பூசி அதிலே பிளளையை வளர்த்தி ஆறறோரமாய நாணலிலேவைததாள.

௪. அதற்கென்ன சமபவிககுமென்றறிய அதினதமககை தூரததிலே நின்றுகொண்டிருநதாள.

௫. அபபொழுது பார்வோனின குமாரததி ஆறறிலே குளிகக இறஙகிவநதாள. அவளுடைய பணிவிடைக்காரிகள ஆறறஙகரையிலேநடநதார்கள. அவள நாணல நடுவிலேயிருககிற பெடடியைக கண்டு அதைக கொண்டுவரத தனவேலைககாரியை யனுபபினாள.

௬. அதைத்திறநது அநதப பிளளையைக கண்டாள. இதோ, பிளளையழுதது. அபபொழுது அவள அதின்பேரில இரககமாகி இது எபிரேயரின பிளளைகளிலொன்றென்றாள.

௭. அபபொழுது அதின தமககை பார்வோனினகுமாரததியோடே, உமககிநதப பிளளையை வளர்ககுமபடிககு, எபிரேயப பெண்சாதிகளில முலைகொடுககிற ஒருததியை யுமககழைததுவரநானபோகடடுமோ வென்றாள.

௮. அபபொழுது பார்வோனின குமாரததி அவளோடேபோவென்றாள. அநதபபெண்பிளளைபோய்ப் பிளளையின தாயை யழைததுவநதாள.

௯. அவளோடே பார்வோனின குமாரததி நீ இநதப பிளளையை யெடுததுககொண்டு போய்அதையெனககுவளர்ததிடு,நானஉனக்

ருக் கூலியைக் கொடுப்பேனென்றாள். அப்படியே அந்தப் பெண்சாதி பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய் அதை வளர்த்தாள்.

௰. பிள்ளை பெரியதானபொழுது, அவள் அதைப் பார்வோனின் குமாரத்தியண்டையிலே கொண்டுபோனாள். அவளுக்கு அது குமாரனாயிற்று. அவள் அதற்கு மோசேயென்று பேரிட்டாள். ஏனென்றால், அதைத் தண்ணீரிலிநின்று தூக்கினேனென்றாள்.

௰௧. * மோசே பெரியவனாய்ப்போன அந்நாட்களிற் சம்பவித்ததேதென்றால், அவன் தன் சகோதரரண்டையிலே புறப்பட்டுப் போய், அவர்கள் பாரமான வேலைகளைப் பார்த்துத் தன் சகோதரரில் எபிரேயமனிதனாகிய ஒருவனையடித்துக்கொண்டிருக்கிற எகிப்தியமனிதனைக் கண்டு, * எபி. ௰௧, ௨௪. ௨௫.

௰௨. இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் திரும்பிப்பார்த்து ஒருவரும் இல்லையென்று கண்டபொழுது, எகிப்தியனை வெட்டி அவனை மணலிலே யடக்கிப்போட்டான்.

௰௩. மறுநாளிலும் வெளியே போனான். இதோ, எபிரேயமனிதர் இரண்டுபேர் சண்டைபண்ணினார்கள். அப்பொழுது அநியாயஞ்செய்கிறவனோடே நீ உனக்கடுத்தவனை யடிக்கிறதென்னவென்றான்.

௰௪. அதற்கவன், உன்னை எங்கள்மேல் துரைத்தனக்காரனும், நியாயாதிபதியுமாக வைத்தவரார்! நீ எகிப்தியனைக் கொன்றுபோட்டதுபோல், என்னையுங் கொன்றுபோட இதைச்சொல்லுகிறாயோவென்றான். அப்பொழுது மோசே பயந்து அந்தக்காரியம் வெளியானது நிச்சயமென்றான்.

௰௫. பார்வோன் அந்தக்காரியத்தைக் கேட்டு மோசேயைக் கொலைசெய்யத்தேடினான். ஆனால், மோசே பார்வோனுக்குவிலகி ஓடிப்போய் மீதியான் தேசத்திலே தங்கி ஒரு துரவண்டையிலே உட்கார்ந்தான்.

௰௬. மீதியானிலிருக்கிற ஆசாரியனுக்கு ஏழு குமாரத்திகளிருந்தார்கள். அவர்கள் தங்கள் தகப்பனுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டும்படிக்கு அங்கே வந்து மொண்டு தொட்டிகளை நிரப்பினார்கள்.

௰௭. ஆனால் மேய்ப்பர் வந்து அவர்களைத் துரத்தினார்கள். அப்பொழுது மோசே எழுந்திருந்து அவர்களைக் காப்பாற்றி * அவர்களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டினான். * ௧. மோசே. ௨௯, ௰.

௰௮. அவர்கள் தங்கள் தகப்பனாகிய ரேகுவேலண்டையிலே வந்தபொழுது, அவன் நீங்கள் இன்று இத்தனை சீக்கிரமாய் வந்ததென்னவென்றான்.

௰௯. அதற்கவர்கள், எகிப்தியமனிதனொருவன் மேய்ப்பரின் கைகளுக்கு எங்களைத் தப்புவித்து எங்களுக்கு மொண்டுகொடுத்து ஆடுகளுக்குத் தண்ணீருங் காட்டினானென்றார்கள்.

௨௰. அப்பொழுது அவன் தன் குமாரத்திகளோடே அவனெங்கேயிருக்கிறான். அந்த மனிதனை நீங்கள் விட்டுவந்ததென்ன! அவன் அப்பஞ்சாப்பிடுகிறதற்கு அவனை யழைத்து வாருங்களென்றான்.

௨௧. மோசே அந்த மனிதனிடத்திலே தங்கித் தரிக்கச் சம்மதப்பட்டான். அவன் மோசேக்குத் தன் குமாரத்தியாகிய சிப்போராளைக் கொடுத்தான்.

௨௨. இவள் ஒரு குமாரனைப் பெற்றாள். அவனுக்குக் கேர்சோனென்று பேரிட்டான். ஏனெனில், அந்நியதேசத்திலே பரதேசியாயிருக்கிறேனென்றான்.

௨௩. சம்பவித்ததேதெனில், அநேகநாள் வட்டத்திலே எகிப்தின் இராசா செத்துப்போனான். இஸ்ரவேல் புத்திரரோவென்றால், அடிமைத்தனத்திலிருந்து தவித்துக் கூப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அடிமைத்தனத்திலிருந்து கூப்பிடுகிற சத்தம் பராபரனண்டைக்கேறிற்று.

௨௪. பராபரன் அவர்கள் தவிப்பைக் கேட்டுத் தாம் ஆபிரகாமோடும் ஈசாக்கோடும் யாக்கோபோடும் பண்ணின உடம்படிக்கையைப் பராபரன் நினைவுகூர்ந்தார்.

௨௫. பராபரன் இஸ்ரவேல் புத்திரரை நோக்கிப்பார்த்தார். பராபரன் அவர்களை யறிந்தார்.

## ௩. அதிகாரம்.

[(௧) மோசே எத்திரோவின் மந்தையை வைத்துக்கொண்டது. (௨) பராபரன் எரிகிற முட்செடியண்டையில் அவனுக்குக் காணப்பட்டது. (௯) இஸ்ரவேலரை இரட்சிக்கும்படி அவரவனை யனுப்பினது. (௰௪) பராபரனுடைய பேர். (௰௫) அவன் இஸ்ரவேலரண்டைக்கனுப்பப்பட்டது.]

மோசேயோவென்றால், மீதியானில் ஆசாரியனாயிருக்கிற தன் மாமனாகிய எத்திரோவின் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான். அவன் ஆடுகளை வனாந்தரத்தின் பிற்புறத்திலே ஓட்டிப் பராபரனுடைய பர்வதமாகிய ஓரேப்மட்டும் வந்தான்.

௨. அங்கே கர்த்தருடைய தூதனானவர் ஒரு முட்செடியின் நடுவிலிருந்துண்டாகிற அக்கினிச் சுவாலையிலே அவனுக்குத் தரிசனையானார். இதோ, முட்செடி அக்கினியாயெரிந்தாலும் முட்செடி வெந்துபோகாதிருக்கிறதென்று கண்டான்.

௩. அப்பொழுது மோசே நான் சேரப்போய் அந்த முட்செடி வெந்துபோகாதிருக்கிறதேதென்கிற அந்தப் பெரிய தரிசனையைப் பார்ப்பேனாகவென்றான்.

௪. அதைப் பார்க்கிறதற்காக அவன் சேர

வருகிறதைக கர்ததர்கண்டு பராபரனமுட்செடியினநடுவிலிருநது அவனுககுநேராகக் கூபபிட்டுமோசேயே! மோசேயே!என்ருர். அவன இதோ, அடியேனென்ருன.

௫. அபபொழுது அவர் இஙகே கிட்டிச சேராயாக. உனகாலகளிலிருககிற உனபாதரட்சைகளைக்கழறறு ஏனெனில, நீ நிறகிற ஸதலம பரிசுதத பூமியாயிருககிறதென்று சொலலி,

௬. பின்னேயும * நாம ஆபிரகாமுடைய பராபரனும, ஈசாக்குடையபராபரனும,யாககோபுடைய பராபரனுமாகிய உனபிதாக் களுடைய பராபரனென்ருர். அபபொழுது மோசே தனமுகததைமூடிககொணடான. ஏனென்ருல, பராபரனைநோககிபபார்ககப பயநதான. * மாறகு. ௰௨, ௨௬. ௨௭.

௭. கர்ததர் சொன்னதாவது; நாம எகிப்திலிருககிற நமது சனததின உபததிரவததைபபார்க்கவேபார்ததோம். அவர்கள் ஆளோட்டிகளினிமிததம அவர்கள கூபபிடுகிற கூபபிடுதலைககேட்டோம. ஏனென்ருல, அவர்கள வேதனைகளையறிநதோம.

௮. ஆகையால, அவர்களை எகிப்தியரின கைக்கு நீஙகலாககிவிடவும, அவர்களையநததேசததிலிருநது கானானியரும, ஏததியரும, எமோரியரும, பெரிசியரும, ஏவியரும, எபூசியருமிருககிற இடமாகிய பாலுநதேனும் ஓடுகிற நலமும விசாலமுமானதேசததிறகு ஏறிவரபபணணவும இறஙகினேம.

௯. இபபொழுதும இதோ, இஸரவேல புததிரரின கூபபிடுதல நமமணடைககு வநதது. எகிப்தியர் அவர்களையொடுககுகிற ஒடுககுதலையுமபார்ததோம.

௰. இபபொழுதும நீ இஸரவேலபுததிரராகிய நமது சனததை எகிப்திலிருநதுவெளியே அழைததுவருமபடிககுனனைப பார்வோனண்டைககு அனுபபுவோம வாவென்ருர்.

௰௧. அபபொழுது மோசே பராபரனேடேபார்வோனண்டைககுப போகிறதறகும இஸரவேல புததிரரை எகிப்திலிருநது வெளியே அழைததுவருகிறதறகும, நானெனமாததிரமென்ருன.

௰௨. அதற்கவர் நாம உனனுடனே இருபபோம. நீ சனததை எகிப்திலிருநதுவெளியே அழைததுவநதபொழுது; இநதபபர்வததிலே பராபரனுககாராதனை செயவீர்களெனபது நாம உன்னை யனுபபினதறகு அடையாளமாயிருககுமென்ருர்.

௰௩. அபபொழுது மோசே பராபரனேடேசொன்னதாவது; இதோ, நான இஸரவேல புததிரரணடைககுவநது உஙகள பிதாககளுடைய பராபரன என்னையுஙகளணடைககனுபபினுரென்று அவர்களுககுச சொலலும்பொழுது, அவர்கள அவருடைய நாமமென்ன வென்றென்னைககேட்டால, அவர்களோடே என்ன சொலலுவேனென்ருன.

௰௪. அபபொழுது பராபரன இருககிறவராக இருபபோமென்று மோசேயுடனே சொலலி இருபபோமெனபவர் என்னையுஙகளணடைககனுபபினுரென்று இஸரவேல புததிரரோடேசொலவாயாகவென்ருர்.

௰௫. அபபுறம் பராபரன மோசேயோடே சொன்னதாவது; நீ இஸரவேலபுததிரருடனே, ஆபிரகாமுடைய பராபரனும, ஈசாககுடையபராபரனும, யாககோபுடையபராபரனுமாயிருக்கிற உஙகள் பிதாக்களுடைய பராபரனுகிய கர்ததர் என்னை யுஙகளணடைககனுபபினுரெனபாயாக. இது என்னைககும நமமுடைய நாமமும, இது தலைமுறை தலைமுறையாக நமமுடைய பேர்பிரஸதாபமுமாயிருககும.

௰௬. நீ போய இஸரவேலின மூபபரைக கூட்டி அவர்களோடே சொலலவேணடியதாவது; ஆபிரகாம, ஈசாககு, யாககோபென்றவர்களுடைய பராபரனுமிருககிற உஙகளபிதாககளுடைய பராபரனுகியகர்ததர்எனககுததரிசனையாகி உங்களையும எகிப்திலே உஙகளுககுச செயயபபட்டதையும விசாரிககவே விசாரிததோமென்றும,

௰௭. நாமுஙகளை எகிப்தினசிறுமையிலிருநதேறிவரபபணணிப பாலுநதேனுமோடுகிறதேசமாகிய கானானியர்,ஏததியர், எமோரியர், பெரிசியர், ஏவியர், எபூசியருடையதேசததிறகுக கொணடு போவோமென்றுஞ் சொன்னேமென்றுசொன்று சொலலு.

௰௮. அவர்கள உன சததத்திறகுககேளவி கொடுபபார்கள. அபபொழுது நீயும இஸரவேலினமூபபரும எகிப்தின இராசாவணடைககுபபோய அவனேடே எபிரேயருடைய பராபரனுகிய கர்ததர் எஙகளைச சநதிததார். இபபொழுதும நாஙகள மூன்று நாட்பயணம வனுநதரததிலேபோய எஙகள பராபரனுகிய கர்ததருககுபபலியிட்டுமெனபீர்களாக.

௰௯. ஆனுல எகிப்தின இராசா வலலமையானகையைககணடாலும, உஙகளைபபோகவிடானென்றுநாமறிவோம்.

௨௰. ஆகையால, நாம்நமமுடையகையை நீட்டி எகிப்தினநடுவிலே நாமசெயயும நம்முடைய சகலவித அதிசயங்களாலும அதை யடிபபோம். அதறகுபபிறகு உங்களை யனுபபிவிடுவான.

௨௧. அபபொழுது நாம இநதச்சனததிறகுள எகிப்தியரின கணகளுககு முனபாகத தயவுகிடைககபபணணுவதினுற சமபவிப்பதேதெனில, நீஙகள போகிறபொழுது வெறுமையாய்ப்போகபபோகிறதிலலை.

௨௨. ஒவவொருஸதிரி தன தன அயலகத

நாளைக்கிழுத்த தன் தன் வீட்டுக்காரியை வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையுங் கேட்டு வாங்குவாள். அவைகளை உங்கள் குமாரர்மேலும், உங்கள் குமாரத்திகள் மேலும் வைத்து, * எகிப்தியரைக் கொள்ளையிட்டுப் போவீர்களென்றார். * ௰௧, ௨. ௰௨, ௩௫, ௩௬.

## ௪. அதிகாரம்.

[(௩) மோசேயின் கோல் சர்ப்பமாக்கப்பட்டது. (௬) அவன் கை குஷ்டம்பற்றியது. (௰) அவன் அனுப்பப்படுவதற்கு இஷ்டமில்லாதவனாயிருந்தது. (௰௪) ஆரோன் அவனுக்குத் துணைசெய்ய நியமிக்கப்பட்டது. (௰௮) மோசே யெத்திரோவினிடத்திலிருந்து புறப்பட்டது. (௨௧) பராபரன் பார்வோனுக்குச் செய்த எச்சரிக்கை. (௨௪) சிப்போராள் தன் குமாரனை சுன்னத்துப்பண்ணினது. (௨௭) ஆரோன் மோசேயைக் காணும்படி அனுப்பப்பட்டது. (௩௧) ஜனங்களவர்களை நம்பினது.]

அப்பொழுது மோசே பிரதியுத்தரமாக ஆனால் இதோ, அவர்களென்னை நம்பாமலும், என் சத்தத்திற்குக் கேள்வி கொடாமலும்போவார்கள். ஏனெனில், கர்த்தர் உனக்குத் தரிசனையானதில்லை யென்று சொல்லுவார்களென்றான்.

௨. அப்பொழுது கர்த்தர் அவனுடனே உன் கையிலிருக்கிறதென்னவென்றார், ஒரு கோலென்றான்.

௩. அதைத் தரையிலே போடென்றார். அவன் அதைத் தரையிலே போட்டபொழுது, அது சர்ப்பமாயிற்று. அதற்கு மோசே விலகியோடினான்.

௪. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே உன் கையை நீட்டி அதின் வாலைப் பிடியென்றார். அவன் தன் கையை நீட்டி அதைப் பிடிக்கிறபொழுது, அது அவன் கையிலே கோலாயிற்று.

௫. இது ஆபிரகாமுடைய பராபரனும், ஈசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய பராபரனுமாயிருக்கிற தங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உனக்குத் தரிசனையானதை அவர்கள் நம்பும்பிறத்தற்கான அடையாளமென்றார்.

௬. பின்னையுங் கர்த்தர் அவனுக்கு உன் கையை உன் மடியிலே போடென்றார். அவன் தன் கையைத் தன் மடியிலே போட்டு அதை வெளியே வாங்குகிறபொழுது இதோ, அவன் கை உறைந்த மழையைப்போல வெண்குஷ்டம் பிடித்திருந்தது.

௭. பிறகு அவர் உன் கையைத் திரும்ப உன் மடியிலே போடென்றார். அவன் தன் கையைத் திரும்பத் தன் மடியிலே போட்டுத் தன் மடியிலிருந்து அதை வெளியே வாங்குகிறபொழுது, இதோ, அது திரும்ப அவனுடைய மற்றச் சதையைப்போலாயிற்று.

௮. அப்பொழுது அவர் சொன்னதாவது; அவர்கள் முந்தின அடையாளத்தைக் கண்டு உன்னை விசுவாசியாமலும், உனக்குக் கேள்வி கொடாமலும் போனால், பிந்தின அடையாளத்தைக் கண்டு விசுவாசிப்பார்கள்.

௯. அவர்கள் இவ்விரண்டு அடையாளங்களையும் விசுவாசியாமலும் உன் சத்தத்திற்குக் கேள்வி கொடாமலும் போனார்களேயானால் அப்பொழுது நீ நதியின் தண்ணீரை மொண்டு பூமியில் ஊற்றுவாயாக. அப்பொழுது நீ நதியிலே மொண்ட தண்ணீர் பூமியிலே இரத்தமாமென்றார்.

௰. மோசேயோவென்றால், கர்த்தரோடே சொன்னதாவது, ஆ, ஆண்டவரே! முன்னும் எப்பொழுதும் தேவரீர் உமது அடியானோடே பேசினது முதற்கொண்டும் நான் பேசுகுகாரனல்ல. ஏனெனில், நாய்க்குவாயனும் திக்குநாவுக்காரனுமானவனென்றான்.

௰௧. அப்பொழுது கர்த்தர் அவனோடே சொன்னதாவது; மனிதனுக்கு வாயைக் கொடுத்தவராார்! அல்லவென்றால் ஊமையனையும், அல்லது செவிடனையும், அல்லது பார்வையுள்ளவனையும், அல்லது குருடனையும் உண்டாக்கினவரார்! கர்த்தராகிய நாமல்லவோ!

௰௨. இப்பொழுதும் நீ போ. நாம் உன் வாயோடேயிருந்து, * நீ பேசவேண்டியதை யுனக்குப் போதிப்போமென்றார்.

* மத். ௰, ௰௯, ௨௰.

௰௩. அவனோவென்றால், ஆ, ஆண்டவரே! நீர் அனுப்பச் சித்தமாயிருக்கிற ஆளையாகிலும் அனுப்புமென்றான்.

௰௪. அப்பொழுது கர்த்தர் மோசேயின் மேற்கோபமூண்டவராகிச் சொன்னதாவது; லேவியனாகிய ஆரோன் உன் சகோதரனல்லவோ! அவன் நன்றாய்ப் பேசுகிறவனென்றறிவோம். இதோ, அவன் உன்னைச் சந்திக்கவும் புறப்பட்டுவந்து, உன்னைக் கண்டு தன் இருதயத்திலே மகிழ்ச்சியாயிருப்பான்.

௰௫. * நீ அவனோடே பேசி வார்த்தைகளை அவன் வாயிலே போடுவாயாக. நாமோவென்றால், உன் வாயோடும் அவன் வாயோடுமிருந்து, நீங்கள் செய்யவேண்டியதை உங்களுக்குப் போதிப்போம். * எ, ௨.

௰௬. அவனுனக்குப் பதிலாகச் சனத்தோடே பேசுவான். இப்படியே அவன் உனக்கு வாயாகவிருப்பான். நீ யவனுக்குத் தேவனாகவிருப்பாய்.

௰௭. நீ யடையாளங்களைச் செய்யும்படிக்கு இந்தக் கோலை உன் கையிலே பிடித்துக்கொண்டு போவென்றார்.

௰௮. மோசே போய்த் திரும்பத் தன் மாமனாகிய எத்திரோவண்டைக்கு வந்து, நான் புறப்பட்டு எகிப்திலிருக்கிற என் சகோதரரண்டைக்குத் திரும்பிப்போய் அவர்கள் இன்னம் உயிரோடேயிருக்கிறார்களோவென்று பார்க்கட்டுமேயென்று அவனோடே சொன்னான். அப்பொழுது எத்திரோ மோசேக்குச் சமாதானமாய்ப்போவென்றான்.

௰௯. பின்னையும் கர்த்தர் மீதியானிலே மோசேயோடே எகிப்திற்குத் திரும்பிப் போ. ஏனெனில், உன்பிராணனை வாங்கத் தேடின மனிதரெல்லாருஞ் செத்துப்போனார்களென்றார்.

௨௰. அப்பொழுது மோசே தன் பெண்சாதியையுந் தன் பிள்ளைகளையுங் கூட்டிக் கொண்டு, அவர்களைக் கழுதையின்மேலேற்றி எகிப்துதேசத்திற்குத் திரும்பினான். மோசே பராபரனுடைய கோலைத் தன்கையிலே பிடித்துக்கொண்டுபோனான்.

௨௧. கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ எகிப்திலே திரும்பிவந்துசேர்ந்தபொழுது, நானுன்கையிலே கொடுத்த எல்லா அற்புதங்களையும் பார்வோனுக்கு முன்பாகச் செய்யப்பார். நானோவெனில், அவனிருதயத்தைச் சனத்தை விடாதபடிக்குக் கெட்டிப்படுத்துவோம்.

௨௨. அப்பொழுது நீ பார்வோனோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தர் உரைக்கிறதேதெனில், இஸ்ரவேல் நம்முடைய முதற்பேறான குமாரன்.

௨௩. நம்முடைய குமாரனை நமக்கு ஆராதனை செய்யும்படிக்கு விடுவென்று நானுன்னோடே சொல்லியும் நீ அவனை விடமாட்டோமென்றாய். இதோ, நாம் உன் முதற்பேறான உன் குமாரனைக் கொன்றுபோடுகிறோமென்று உரைத்தாரென்று சொல்லுவாயாகவென்றார்.

௨௪. வழியிலே தங்குமிடத்திலே சம்பவித்ததேதென்றால், கர்த்தர் அவனுக்கெதிர்ப்பட்டு அவனைக் கொல்லவேண்டுமென்றிருந்தார்.

௨௫. அப்பொழுது சிப்போராள், * கருக்கான கல்லையெடுத்துத் தன்பிள்ளையின் நுனித்தோலையறுத்து அதையவன் கால்களுக்கு முன்பாகப்போட்டு, நீயெனக்கு இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையாமேயென்றாள்.
* யோசு. ௫, ௨.

௨௬. அப்பொழுது அவனை விட்டு விலகினார். அவள் சுன்னத்துகளினிமித்தம் அப்பொழுது அவனை இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையென்றாள்.

௨௭. கர்த்தர் ஆரோனுடனே, நீ வனாந்தரத்திலே மோசேக்கு எதிர்கொண்டுபோவென்றார். அவன்போய்ப் பராபரனுடைய பர்வதத்திலே அவனைச் சந்தித்து அவனை முத்திசெய்தான்.

௨௮. அப்பொழுது மோசே தன்னையனுப்பின கர்த்தருடைய எல்லா வார்த்தைகளையும் அவர் தனக்குக் கற்பித்த எல்லா அடையாளங்களையும் ஆரோனுக்கறிவித்தான்.

௨௯. மோசேயும் ஆரோனும் போய் இஸ்ரவேல் புத்திரரின் மூப்பரையெல்லாங் கூட்டினார்கள்.

௩௰. ஆரோனோவென்றால், கர்த்தர் மோசேயோடே பேசின எல்லா வார்த்தைகளையுஞ் சொல்லிச் சனத்தின் கண்களுக்கு முன்பாக அந்த அடையாளங்களைச் செய்தான்.

௩௧. சனம் விசுவாசித்தது. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை விசாரித்தாரென்றுந் தங்கள் சிறுமையைப் பார்த்தாரென்றும் அவர்கள் கேட்டபொழுது குனிந்து பணிந்துகொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) பார்வோன் மோசேயையும், ஆரோனையும், அவர்களறிவித்தலுக்காகக் கடிந்துகொண்டது. (௫) அவன் இஸ்ரவேலரின் வேலையை யதிகரிக்கச் செய்தது. (௰௫) அவன் அவர்களுடைய விண்ணப்பங்களைத் தடுத்தது. (௨௰) அவர்கள் மோசே ஆரோனென்பவர்களிடத்தில் முறையிட்டுக்கொண்டது. (௨௨) மோசே பராபரனிடத்தில் விண்ணப்பஞ்செய்தது.]

பிற்பாடு மோசேயும் ஆரோனும் உட்பிரவேசித்துப் பார்வோனோடே நமக்கு வனாந்தரத்திலே பண்டிகையை யாசரிக்கும்படிக்கு நம்முடைய சனத்தைப் போகவிடுவென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்கள்.

௨. பார்வோனோவென்றால், நான் இஸ்ரவேலைப் போகவிடக் கர்த்தரின் சத்தத்தைக் கேட்கிறதற்கு அவராா்! நான் கர்த்தனையறியேன். நான் இஸ்ரவேலை விடுவதுமில்லையென்றான்.

௩. அப்பொழுது அவர்கள் எபிரேயருடைய பராபரன் எங்களைச் சந்தித்தார். அவர் பெருவாரிக்காய்ச்சலோடும், அல்லவென்று பட்டயத்தோடும் எங்களுக்கு நேரிடாதபடிக்கு நாங்கள் மூன்றுநாட்பயணம் வனாந்தரத்திலேபோய், எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிட்டுமேயென்றார்கள்.

௪. ஆனால் எகிப்தின் இராசா அவர்களுடனே மோசே ஆரோனென்றவர்களே, நீங்கள் சனத்தைத் தங்கள் வேலைகளை விட்டுக் கலையப்பண்ணுகிறதென்ன! உங்கள் சுமைகளைச் சுமக்கப்போங்களென்றான்.

௫. பின்னையும் பார்வோன் இதோ, தேசத்தின் சனந் திரட்சியாயிருக்க அவர்களை நீங்கள் தங்கள் சுமைகளைவிட்டு ஓய்ப்பண்ணுவீர்களோவென்றுசொல்லி,

௬. அந்நாளிலே பார்வோன் சனத்தின

விசாரிப்புக்காரருக்கும், அதின் தலைவருக்குங் கற்பித்துச்சொன்னதாவது;

௭. நீங்களினிச் சனத்திற்கு நேற்றையப் போலவும், முந்துநேற்றையப் போலவும், செங்கல்வேலைக்கு வைக்கோல் கொடுக்க வேண்டாம். அவர்கள் தாமேபோய்த்தங்களுக்கு வைக்கோல்சேர்க்கக்கடவர்கள்.

௮. ஆனால் அவர்கள் நேற்றும் முந்து நேற்றுஞ் செய்த செங்கல்லுகளுடைய இலக்கத்தின் திட்டத்தைத்தானேயவர்கள் மேலே சுமத்துவீர்களாக. அதிலே நீங்களொன்றுங்குறைக்கவேண்டாம். ஏனெனில், அவர்கள் சும்மாயிருக்கிறார்கள். ஆகையாற் போவோம், எங்கள் பராபரனுக்குப் பலியிடுவோமென்று கூப்பிடுகிறார்கள்.

௯. அந்த மனிதர்கள் பொய் வார்த்தைகளைக் கவனிக்காமல் தங்கள் பணிவிடை வேலைகளில் முயற்சியா யிருக்கும்படிக்கு, அதுஅவர்கள்மேல் அதிகரிக்கப்படக்கடவதென்றான்.

௰. அப்பொழுது சனத்தின் ஆளோட்டிகளும் அதின் தலைவரும் புறப்பட்டுச்சனத்தோடே சொன்னதாவது; நாம் உங்களுக்குவைக்கோல்கொடுப்பதில்லையென்றும்,

௰௧. நீங்களே போய் உங்களுக்ககப்படுகிற இடங்களில் வைக்கோலைச்சம்பாதியுங்கள். உங்கள் பணிவிடைவேலையிலோவென்றால், ஒன்றுங் குறைக்கப்படுவதில்லையென்றும், பார்வோன்சொன்னானென்றார்கள்.

௰௨. அப்பொழுது வைக்கோலுக்குப்பதிலாகத் தாளடிகளைச் சேர்க்கும்படிக்குச் சனம் எகிப்துதேசமெங்குஞ் சிதறிப்போயிற்று.

௰௩. ஆளோட்டிகளோவென்றால், துரிதம் பண்ணி வைக்கோலிருந்த நாளிற்செய்ததற்குச் சரியாக உங்கள் பங்கிடுவேலைகளை ஒவ்வொருநாளிலே முடித்துத் தீருங்களென்றார்கள்.

௰௪. பிற்பாடு நீங்கள் முந்தியதுபோலச் செங்கலில் உங்கள்திட்டத்தை நேற்றும் இன்றும்முடிக்காதே போனதென்னவென்று பார்வோனுடைய ஆளோட்டிகள் இஸ்ரவேல்புத்திரர்மேல்வைத்த இவர்களுடைய தலைவர்களைக்கேட்டடித்தார்கள்.

௰௫. ஆகையால், இஸ்ரவேல்புத்திரரின்தலைவர் உட்பிரவேசித்துப் பார்வோனைநோக்கிக்கூப்பிட்டு, உம்முடைய அடியாருக்கு நீரிப்படிச்செய்வானேன்?

௰௬. உம்முடையஅடியாருக்குவைக்கோல் கொடுக்கப்படாவிட்டாலுஞ் செங்கலைய நத்துத் தீருங்களென்றெங்களுக்குச்சொல்லுகிறார்கள். இதோ, உம்முடையசனத்தின் மேலே குற்றமிருக்கும்போது, உம்முடைய அடியார் அடிக்கப்படுகிறார்களென்றார்கள்.

௰௭. அதற்கவன்சொன்னதாவது; நீங்கள் சும்மாவிருக்கிறீர்கள். சும்மாத்தா னிருக்கிறீர்கள். ஆகையினாலே போவோம். கர்த்தருக்குப் பலியிடுவோமென்கிறீர்கள்.

௰௮. இப்பொழுதும் போங்கள். பணிவிடைசெய்யுங்கள். உங்களுக்குவைக்கோல் கொடுக்கப்படுவதில்லை. செங்கல்லுகளுடைய இலக்கத்தின் திட்டத்தையோவெனில், நீங்கள் ஒப்புவிக்கவேண்டுமென்றான்.

௰௯. நீங்கள் ஒவ்வொருநாளிலே அறுத்துத் தீரவேண்டிய செங்கல்லுகளிலே ஒன்றுங் குறைக்காதிருக்க வென்னப்பட்டதினாலே தங்களுக்கு வந்த இக்கட்டை இஸ்ரவேல்புத்திரரின் தலைவர்கண்டு,

௨௰. பார்வோனைவிட்டுப் புறப்படுகையில் தங்களுக்கெதிரே நிற்கிற மோசேக்கும், ஆரோனுக்கும், எதிர்ப்பட்டு,

௨௰௧. அவர்களுடனே, நீங்கள் பார்வோனின் கண்களுக்கு முன்பாகவும், அவருடைய ஊழியக்காரரின் கண்களுக்கு முன்பாகவும், எங்கள் வாசனையை நாறப்பண்ணி, எங்களைக்கொல்ல அவர்கள் கையிலே பட்டயத்தைக் கொடுத்ததினிமித்தங் கர்த்தர் உங்களை நோக்கிப் பார்த்து, நியாயந்தீர்க்கக்கடவரென்றார்கள்.

௨௰௨. அப்பொழுது மோசே கர்த்தரண்டைக்குத் திரும்பி ஆண்டவரே! இந்தச் சனத்திற்கேன் தீங்குவரப் பண்ணினீர்! நீரென்னை யனுப்பினதேது!

௨௰௩. நான் உம்முடைய நாமத்திலேபேசப்பார்வோனண்டையில் உட்பிரவேசித்தது முதற்கொண்டு தானே இந்தச் சனத்தை யுபத்திரவப் படுத்தினான். நீரோவெனில், உம்முடைய சனத்தை விடுவித்ததே யில்லையென்றான்.

## ௬. அதிகாரம்.

[(௧) பராபரன் இயேகோவாவென்கிற தம்முடைய பெயரினால் தம்முடைய வாக்குத்தத்தத்தைப் புதிதாக்கியது. (௰௪) ரூபேன் வம்ச அட்டவணை. (௰௫) சிமெயோனைக் குறித்துச்சொல்லியது. (௰௬) மோசேயையும் ஆரோனையும் பெற்ற லேவியைக்குறித்துச்சொல்லியது.]

அப்பொழுதுகர்த்தர்மோசேயுடனே நாம் பார்வோனுக்குச் செய்வதை இப்பொழுது காண்பாய். அதேதென்றால், பலத்த கையைக்கண்டு, அவர்களைப்போக விடும்படி பலத்த கையைக்கண்டு, அவர்களைத் தன் தேசத்திலிருந்து துரத்திவிடுவானென்றார்.

௨. பின்னையும் பராபரன்மோசேயுடனே, பேசி அவனோடே சொன்னதாவது; நாம் கர்த்தர்.

௩. நாம் சர்வத்திறத்துமவல்ல பராபரனாய் ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோ

புக்குந் தரிசனையானேன். ஆனால் கர்த்தரென்ற நம்முடைய நாமத்தினாலே நாம் அவர்களுக்கு அறியப்படவில்லை.

௪. அவர்கள் பரதேசிகளாய்த் தங்கின தேசமாகிற கானான்தேசத்தை யவர்களுக்குக் கொடுக்க நாம் அவர்களோடே நம்முடைய உடம்படிக்கையையும் ஏற்படுத்தி,

௫. எகிப்தியர் அடிமைகொள்ளுகிற இஸ்ரவேல் புத்திரரின் தவிப்பையும் நாங்கேட்டு, நம்முடம்படிக்கையை நினைத்தோம்.

௬. ஆகையால், இஸ்ரவேல் புத்திரருக்கு நீசொல்லவேண்டியதேதெனில், நாம் கர்த்தர். நாமுங்களை எகிப்தியருடைய சுமைகளின்கீழிருந்து புறப்படப்பண்ணி, உங்களை யவர்கள் அடிமைத்தனத்திற்கு நீங்கலாக்கி விடுவித்து உங்களை நீட்டப்பட்டபுயத்தினாலும், மகாநியாயத்தீர்ப்புகளினாலும் மீட்டு,

௭. உங்களை நமக்குச் சனமாகச்சேர்த்துக்கொண்டு, உங்களுக்குப் பராபரனாயிருப்போம். நாமுங்களை எகிப்தியருடைய சுமைகளின் கீழிருந்துபுறப்படப்பண்ணுகிற உங்கள் பராபரனாகிய கர்த்தரென்றறிவீர்கள்.

௮. நாம் ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்குங் கொடுப்போமென்று நம்முடைய கரத்தையேறெடுத்த தேசத்திலே உங்களைக்கொண்டுபோய் அதையுங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்போம். நாம் கர்த்தரென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

௯. இந்தப் பிரகாரமாக மோசே இஸ்ரவேல்புத்திரரோடேபேசினான். ஆனால் அவர்கள் ஆவியின் இடுக்கணினாலுங் கடினவேலையினாலும் மோசேயைக் கேளாதேபோனார்கள்.

௰. பிற்பாடு கர்த்தர் மோசேயுடனேபேசி,

௰௧. நீ உட்பிரவேசித்து எகிப்தின் இராசாவாகிய பார்வோன் இஸ்ரவேல் புத்திரரைத் தன்தேசத்திலிருந்துபோகவிட அவனோடேபேசு என்றார்.

௰௨. ஆனால் மோசே கர்த்தருக்குமுன்பாகப்பேசி இதோ, இஸ்ரவேல்புத்திரர் என்னைக்கேட்கவில்லை. பார்வோன் என்னை எப்படிக் கேட்பான்! நான் சுன்னத்தில்லாத உதடுகளுமுள்ளவனென்றான்.

௰௩. கர்த்தரோவென்றால், மோசேயோடும், ஆரோனோடும்பேசி, இஸ்ரவேல் புத்திரரை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக்கொண்டுபோகும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்திரரண்டைக்கும்; எகிப்தின் இராசாவாகிய பார்வோனண்டைக்கும், அனுப்பிக்கட்டளைகளைக் கொடுத்துவந்தார்.

௰௪. அவர்களுடைய பிதாக்களின் வீட்டாரில் தலைவராவது இஸ்ரவேலுக்கு முதற்பிறந்தவனான ரூபேனின்குமாரர் ஆனோக், பல்லூக்,

எத்ரோன், கர்மீ, இவர்கள் ரூபேனுடைய வம்சங்களின் தலைவர்.

௰௫. சிமெயோனின் குமாரர் எமுவேல், யாமீன், ஓகாத், யாகின், சோகார், கானானித்தியின் குமாரனாகிய சவுல் இவர்கள் சிமெயோனுடைய வம்சங்களின் தலைவர்.

௰௬. தங்கள் சந்ததிகளாய்ப்பிரிந்த லேவியினுடைய குமாரரின் நாமங்கள் கெர்சோன், கேகாத், மெராரியென்றவைகள். லேவி உயிரோடிருந்த வருஷங்களோவென்றால்; நூற்றுமுப்பத்தேழுவருஷங்கள்.

௰௭. தங்கள் வம்சங்களாய்ப்பிரிந்த கெர்சோனின் குமாரர் லிப்னியுஞ் சிமேயியுந்தானே.

௰௮. கேகாத்தின் குமாரர் அம்ராம், இத்சேயார், எப்ரோன், ஊசியேலென்றவர்கள். கேகாத் உயிரோடேயிருந்த வருஷங்களோவென்றால், நூற்றுமுப்பத்துமூன்றுவருஷங்கள்.

௰௯. மெராரின்குமாரர் மகேலியும், மூசியுந்தானே. இவர்கள் தங்கள் சந்ததிகளாய்ப்பிரிந்த லேவியினுடைய வம்சங்களின் தலைவர்.

௨௰. அம்ராம் தன்னுடைய அத்தையாகிய யோகெபேத்தை விவாகம் பண்ணினான். இவள் அவனுக்கு ஆரோனையும் மோசேயையும் பெற்றாள். அம்ராம் உயிரோடிருந்த வருஷங்களோவென்றால், நூற்றுமுப்பத்தேழுவருஷங்கள்.

௨௧. இத்சேயாரின் குமாரர் கோராக், நெப்பேக், சிக்ரியென்றவர்கள்.

௨௨. ஊசியேலின்குமாரர் மீசவேல், எல்சாப்பான், சித்ரியென்றவர்கள்.

௨௩. ஆரோன் அம்மினதாபின் குமாரத்தியும் நகசோனின் சகோதரியுமாகிய எலிசபாளை விவாகம்பண்ணினான். இவள் அவனுக்கு நாதாபையும், அபியூவையும் எலெயாசாரையும், இத்தாமாரையும்பெற்றாள்.

௨௪. கோராகின்குமாரர் ஆசீர், எல்க்கானா, அபியாசாப் என்றவர்கள். இவர்கள் கோராகியரின் வம்சங்களின் தலைவர்.

௨௫. ஆரோனின் குமாரனாகிய எலெயாசார் பூத்தியேலுடைய குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணினான். இவள் அவனுக்குப் பினெகாசைப்பெற்றாள். இவர்கள் தங்கள்வம்சங்களாய்ப்பிரிந்த லேவியருடைய பிதாக்களாகியதலைவர்.

௨௬. நீங்கள் இஸ்ரவேல்புத்திரரை அவர்கள் சேனைகளின்படியே எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக் கொண்டு போங்களென்று கர்த்தர்சொன்ன ஆரோனும் மோசேயும் இவர்கள்தான்.

௨௭. இஸ்ரவேல் புத்திரரை எகிப்திலிருந்து அழைத்துக்கொண்டு போகும்படிக்கு எகிப்தின் இராசாவாகிய பார்வோனோடே

பேசின மோசேயும ஆரோனும இவர்கள தானே.

உஅ. கர்த்தர் எகிப்துதேசத்திலே மோசேயோடே பேசினநாளிலேசமபவித்ததே தென்றால,

உகூ. கர்த்தர் மோசேயுடனே நாம கர்த்தர். நாமஉனனோடேசொலலுகிறதையெல லாம நீ எகிப்தின இராசாவாகிய பார்வோ னோடேசொலலென்று சொனனபொழுது,

௩௰. மோசேகர்த்தருககுமுனபாக இதோ, நான சனனத்திலலாத உதடுகளுளளவன. பார்வோன எனனை யெபபடிக கேட்பா னென்றான.

## எ. அதிகாரம்.

[(க) மோசே பார்வோனிடத்திற போகும் படி தைரியங்கொணடது. (எ) அவனுடை ய அற்புதங்காலம. (அ) அவனுடையகோல சர்பபமாகமாறினது. (யக) சூனியககாரர் கள அந்தபபிரகாரஞ செயகிறார்க ளெனப து. (யங) பார்வோனுடைய இருதயங கடி னப்பட்டது. (யச) பராபரனபார்வோனுக குசசெயத அறிக்கை. (யகூ) நதியானது இரத்தமாகமாறினது.]

பராபரன மோசேயோடே சொனன தாவது; பார். உனனை நாமபார்வோ னுககுத தேவனாககினோம. உன சகோதர னாகிய ஆரோனோவெனறால, உன தீர்க்கதரி சியாயிருபபான.

உ. நாம உனககுக்கற்பிபபதையெலலாம நீ சொலலுமபோது * உன சகோதரனா கியஆரோனபார்வோனோடேஇஸரவேலபுத திரரைத் தனதேசத்திலிருந்து போகவிடும படிககுபபேசக்கடவன. * ச, யநி.

௩. நாமோவெனில, பார்வோனின இருத யத்தைக் கடினபபடுத்தி எகிப்துதேசத் தில நமமுடைய அடையாளஙகளையும, நம் முடைய அற்புதங்களையும் மிகுதியாயநடக கபபணணுவோம.

ச. பார்வோன உஙகளைக கேளாதேபோ வான. ஆகையால்,நாமநமமுடையகையை எகிப்திற்கு விரோதமாகநீட்டி இஸரவேல புததிரரொனற நமதுசனமாகிய நம்முடைய சேனைகளைபபெரிய நியாயததீர்பபுகளால எகிப்து தேசத்திலிருந்து அழைத்துக கொண்டுபோவோம.

ரு. அபபடியே நாம நமதுகையை எகிப் தினமேல நீட்டி இஸரவேலபுததிரரை அவர் கள நடுவிலிருந்து அழைததுககொண்டு போகையில, நாம கர்த்தரொனறதை எகிப் தியர் அறிவார்களெனறார்.

சு. மோசேயும ஆரோனும கர்த்தர் தங களுககுக்கற்பித்தபடியேசெயதார்கள.

எ. அவர்கள பார்வோனோடே பேசுகிற பொழுது மோசேககு எண்பதுவயதும, ஆரோனுககு எண்பததுமூனறு வயதா யிருந்தது.

அ. கர்த்தர் மோசேயோடும ஆரோனோ டுஞசொனனதாவது;

கூ. உஙகளுககாக ஒரு அற்புதங்காட்டுங களெனறு பார்வோனஉஙகளோடேசொன னால, அபபொழுது நீ ஆரோனுடனே உன கோலையெடுத்து அதைப பார்வோனுககு முனபாகபபோடென்பாயாக. அபபொழு து அது சர்ப்பமாகுமெனறார்.

ய. மோசேயும ஆரோனும பார்வோனண் டையிற் பிரவேசித்துக கர்த்தர் தஙகளுக குக்கற்பித்தபடியே செயதார்கள. ஆரோன தனகோலைபபார்வோனுககும, அவனஊழி யககாரருககுமுனபாகபபோட்டான. அப பொழுது அது சர்பபமாயிற்று.

யக. அபபொழுது பார்வோனும ஞானிக ளையுஞ சூனியககாரரையும அழைபபித் தான. * எகிப்தினசாஸதிரிகளாகிய இவர் களுந் தஙகள சூனியஙகளினாலஅபபடிச்செ யது, * அ, எ,யஎ,யஅ. உ. தீமோ. ௩,அ.கூ.

யஉ. அவனவன தன தன கோலைபபோட் டார்கள. அபபொழுது அவைகளசர்பபங களாயின. ஆரோனுடைய கோலோவென றால, இவர்களுடைய கோலகளை விழுஙகி விட்டது.

யங. ஆனால, கர்த்தர் சொலலியிருந்தபடி பார்வோனின இருதயம உரங்கொணடது. அவர்களைக கேளாதேபோனான.

யச. அபபொழுது கர்த்தர் மோசேயோ டேசொனனதாவது; பார்வோனின இருத யம அழுத்தமாயிருக்கிறது. சனத்தைவிட மாட்டோமெனகிறான.

யரு. காலமே பார்வோன அண்டைககுப போ. இதோ, தணணீரணடையிலே புறப படடுவருவான. நீ அவனுககெதிராக நதி யின கரையிலே நினறு சர்பபமாயமாறி யிருந்த கோலை யுனகையிலே பிடித்துக கொணடு,

யசு. அவனோடே சொலல வேணடியது. எபிரேயருடைய பராபரனாகிய கர்த்தர்என னை உம்மணடைககனுபபி நமது சனத்தை வனாந்தரத்திலே நமககாராதனை செயயும படிககுபபோகவிடெனறு சொல்லச்சொல லியும இதோ, இதுவரைககுங கேளாதே போனீர்.

யஎ. இதோ, என கையிலிருககிற கோலினா லேநானநதியிலிருக்கிறதணணீரினமேலடிப் பேன. அபபொழுதுஅதுஇரத்தமாயமாறி,

யஅ. நதியிலிருககிற மீனகளசெத்து நதி நாறிபபோம. அபபொழுது நதியிலிருககி ற தணணீரைக குடிகக எகிப்தியருககுக் குமட்டலெடுககும நாம கர்த்தரொனப தையதினால அறிவாயெனறு, கர்த்தர்சொல லுகிறாரொனறு சொலலெனறார்.

௰௯. பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ ஆரோனோடே சொல்லவேண்டியதேதெனில், உன் கோலை யெடுத்துக்கொண்டு உன் கையை எகிப்தியரின் தண்ணீர்களாகிய அவர்கள் நதிகளின்மேலும் அவர்கள் ஆறுகளின்மேலும், அவர்கள் குளங்களின்மேலும், தண்ணீர்சேர்ந்து நிற்கிற அவர்களுடைய எல்லா இடங்களின்மேலும் அவைகள் இரத்தமாகும்படிக்கு நீட்டு அப்பொழுது, எகிப்துதேசமெங்கும் மரப்பாத்திரங்களிலும், கற்பாத்திரங்களிலும் இரத்த முண்டாயிருக்குமென்று சொல்லென்றார்.

௨௰. மோசேயும், ஆரோனுங் கர்த்தர் கற்பித்தபடிசெய்தார்கள். இவன் பார்வோனுடையகண்களுக்கும், அவன் ஊழியக்காரரின்கண்களுக்கும் முன்பாகக்கோலை ஓங்கி, நதியிலிருக்கிற தண்ணீரையடித்தான். அப்பொழுது நதியிலிருக்கிற தண்ணீரெல்லாம் இரத்தமாய் மாறிப்போயிற்று.

௨௧. நதியிலிருந்த மீன்கள் செத்து நதி நாறிப்போயிற்று. நதியிலிருக்கிற தண்ணீரைக்குடிக்க எகிப்தியருக்குக் கூடாதே போயிற்று. எகிப்துதேசமெங்கும் இரத்தமிருந்தது.

௨௨. எகிப்தின் சாஸ்திரிகளுந் தங்கள் சூனியங்களினால் அப்படிச்செய்தார்கள். ஆனதுகொண்டு கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்வோனின் இருதயம் உரங்கொண்டது. அவர்களைக்கேளாதேபோனான்.

௨௩. பார்வோன் திரும்பிக்கொண்டு தன் வீட்டிற்குட் பிரவேசித்துத் தன் மனதை அதின்மேலும் வைக்காதேபோனான்.

௨௪. தண்ணீர் குடிக்க எகிப்தியரெல்லாரும் நதியைச் சுற்றி ஊற்று வெட்டினார்கள். ஏனெனில், நதியின் தண்ணீரைக் குடிக்கஅவர்களுக்குக்கூடாதிருந்தது.

௨௫. கர்த்தர் நதியையடித்து ஏழுநாள் நிறைவேறிற்று.

## ௮. அதிகாரம்.

[(௧) தவளைகள் அனுப்பப்பட்டது. (௮) பார்வோன் மோசேயிடத்தில் முறையிட்டுக் கொண்டது. (௰௨) மோசே அவைகளைச் செபத்தினால் நீங்கச்செய்தது. (௰௯) ஸ்தம்பன வித்தைக்காரர்கள் செய்யக்கூடாத மண்ணைப் பேனுகமாற்றினது. (௨௰) விஸ்தாரமான வண்டுகளையனுப்பினது. (௨௫) பார்வோன்சனங்கள் போய்விடும்படியாக உத்தரங்கொடுத்தது. (௩௨) ஆயினும் இன்னம் கடினஇருதயமுள்ளவனாயிருந்தது.]

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீபார்வோனண்டையிலே உட்பிரவேசித்து அவனோடேசொல்லவேண்டியது. கர்த்தருரைக்கிறதேதெனில், நம்முது சனத்தை நமக்காராதனை செய்யும்படிக்குவிடு.

௨. நீ அதைவிட மாட்டேனென்றுபோனால் இதோ, நாம் உன் எல்லையையெல்லாந் தவளைகளாலே வாதிப்போம்.

௩. நதி தவளைகளைத் திரளாயப் பிறப்பிக்கும். அவைகளேறிஉன்வீட்டிலும், உன்படுக்கையறையிலும், உன் மஞ்சத்தின்மேலும் உன் ஊழியக்காரர் வீடுகளிலும், உன்சனத்திறகுள்ளும், அப்பஞ் சுடுகிற உன் அடுப்புகளிலும், மாப்பிசைகிற உன் தொட்டிகளிலும் படரும்.

௪. அந்தத் தவளைகள் உன்மேலும், உன் சனத்தின்மேலும், உனனுடையஎல்லா ஊழியக்காரர் மேலும், ஏறுமென்கிறோனென்று சொல்லென்றார்.

௫. பிற்பாடு கர்த்தர் மோசேயோடேசொன்னதாவது; நீ ஆரோனோடேசொல்லவேண்டியதேதெனில், நீ உன்கோலோடே உன்னுடைய கையைநதிகளின்மேலும், ஆறுகளின்மேலுங்குளங்களின்மேலும்நீட்டி, எகிப்துதேசத்தின்மேலே தவளைகளையேறிவரப்பண்ணென்றுசொல்லென்றார்.

௬. அப்படியே ஆரோன்தன்கையை எகிப்தினுடைய தண்ணீர்களின்மேல் நீட்டினான். அப்பொழுது தவளைகள் ஏறிவந்து எகிப்துதேசத்தைமூடின.

௭. சாஸ்திரிகளுந் தங்கள் சூனியங்களினாலே அப்படிச்செய்து எகிப்துதேசத்தின்மேலே தவளைகளை ஏறிவரப்பண்ணினார்கள்.

௮. ஆனாற் பார்வோன் மோசேயையும் ஆரோனையும்அழைப்பித்துக்கர்த்தர் அந்தத் தவளைகளை என்னையும் என்சனத்தையும் விட்டகற்ற அவரைவேண்டிக் கொள்ளுங்கள். கர்த்தருக்குப் பலியிடும்படிக்குச் சனத்தைவிடுவேனென்றான்.

௯. அப்பொழுது மோசே பார்வோனுக்குத்தவளைகள் நதியிலேமாத்திரமிருப்பதற்கு அவைகளையுமிடத்திலும் உம்முடைய வீட்டிலுமிராதபடிக்கழிக்க நாம் உமக்காகவும்,உம்முடையஊழியக்காரருக்காகவும், உம்முடைய சனத்திற்காகவும் எப்பொழுது விண்ணப்பம்பண்ண வேண்டுமென்பதை எனக்குக் குறிக்குமேன்மை உமக்கேயிருக்கட்டுமென்றான்.

௰. அவன் நாளையென்றான். அப்பொழுது இவன்சொன்னதாவது; எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கொப்பானவர் இல்லையென்பதை நீரறியும்படிக்குமமுடைய வார்த்தையின்படி ஆகக்கடவது.

௰௧. தவளைகள் உம்மையும், உம்முடைய வீட்டையும், உம்முடைய ஊழியக்காரரையும்,உம்முடையசனத்தையும் விட்டகன்று நதியிலேமாத்திரமிருக்குமென்றான்.

௰௨. மோசேயும்,ஆரோனும் பார்வோனை

விட்டுப்புறப்பட்டார்கள். பிறபாடு மோசே பார்வோனுக்கு வரப்பண்ணின தவளைகளி நிமித்தம் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டான்.

௰௩. கர்த்தர் மோசேயின் சொற்படிச்செய்தார். வீடுகளிலும் முற்றங்களிலும் வயல்களிலுமிருந்த தவளைகள் செத்துப்போயின.

௰௪. அவைகளைக் குவியல்குவியலாகச்சேர்த்துப்போட்டார்கள். அதினால் பூமி நாற்றமெடுத்தது.

௰௫. விருவுண்டாயிற்றென்று பார்வோன் கண்டபொழுதோவெனில், கர்த்தர் சொல்லியிருந்தபடி தன்னிருதயத்தைக் கடினப்படுத்தி அவர்களைக் கேளாதேபோனான்.

௰௬. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ ஆரோனுடனே உன் கோலை நீட்டிப் பூமியின் தூளையடி. அப்பொழுது அது எகிப்துதேசமெங்கும் பேன்களாய்ப்போமென்று சொல்லென்றார்.

௰௭. இப்படிச்செய்தார்கள். ஆரோன் தன் கோலோடே தன்கையை நீட்டிப் பூமியின் தூளையடித்தான். அப்பொழுது ஏராளமான பேன்கள் மனிதரிலும் மிருகஜீவன்களிலுமுண்டாயின. எகிப்துதேசமெங்கும் பூமியின் தூளெல்லாம் பேன்களாய்ப்போயின.

௰௮. சாஸ்திரிகளும் தங்கள் குளிகைகளாலே பேன்களைப்பிறப்பிக்கும்படிக்கு, அப்படிச்செய்தார்கள். * ஆனால் அவர்களுக்குக் கூடாதேபோயிற்று. ஏராளமான பேன்கள் மனிதரிலும் மிருகஜீவன்களிலுமிருந்தன.

* ௭, ௰௧, ௰௨, ௨௨. ௮, ௭, ௯, ௰௧.

௰௯. அப்பொழுது சாஸ்திரிகள் பார்வோனோடே இது பராபரனுடைய விரலென்றார்கள். ஆனாற்கர்த்தர்சொல்லியிருந்தபடி பார்வோனுடைய இருதயம் உரங்கொண்டது. அவர்களைக் கேளாதேபோனான்.

௨௰. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ நாளை யதிகாலமே யெழுந்திருந்து போய்ப்பார்வோனுக்குமுன்பாக நில். இதோ, தண்ணீரண்டையிலே புறப்பட்டுவருவான். அவனோடே நீ சொல்லவேண்டியதாவது; கர்த்தருரைக்கிறதேதெனில், நமது சனத்தை நமக்காராதனை செய்யும்படிக்குவிடு.

௨௧. நீ நமது சனத்தைவிடாயேயாகில் இதோ, நாம் உன்மேலும், உன் ஊழியக்காரர்மேலும், உன் சனத்தின்மேலும், உன் வீடுகளின்மேலும் பலவிதவண்டுகளை யனுப்புவோம். எகிப்தியர்வீடுகளும் அவர்களிருக்கிற தேசமும் அந்த வண்டுகளாலே நிரம்பிப்போம்.

௨௨. பூமியின் நடுவில் நாமே கர்த்தர் என்பதை நீ அறியத்தக்கதாக நாம் நமது சனமிருக்கிற கோசேன்சீமையை யந்நாளிலே அங்கே வண்டுசாதிகள் வராதபடிக்கு விசேஷித்ததாக்கி,

௨௩. நமது சனத்திற்கும் உன் சனத்திற்கும் வித்தியாசம்பண்ணும் இரட்சிப்பைக்காண்பிப்போம். நாளை இந்த அடையாளஞ் சம்பவிக்குமென்றொன்று சொல்லென்றார்.

௨௪. அப்படியே கர்த்தர்செய்தார். மகாத்திரளான வண்டுசாதிகள் பார்வோன் வீட்டிலும், அவன் ஊழியக்காரர் வீடுகளிலும், எகிப்துதேசமனைத்திலும் வந்தன. வண்டுகளாலே தேசங்கெட்டுப்போயிற்று.

௨௫. அப்பொழுது பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து நீங்கள் போய் உங்கள் பராபரனுக்கு இந்த தேசத்திலேதானே பலியிடுங்களென்றான்.

௨௬. அதற்கு மோசே சொன்னதாவது; இப்படிச்செய்யத்தகாது ஏனெனில், எகிப்தியர் அருவருக்கிறபிரகாரமாய் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடுகிறோம். இதோ, எகிப்தியர் அருவருக்கிறபிரகாரமாக நாங்கள் அவர்கள் கண்களுக்கு முன்பாகப் பலியிட்டால் எங்களைக் கல்லெறியார்களோ!

௨௭. * எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குச்சொன்னபடி நாங்கள் மூன்றுநாட் பயணமவனாந்தரத்திலேபோய் அவருக்குப் பலியிடுவோமென்றான். * ௩, ௰௮.

௨௮. அப்பொழுது பார்வோன் நீங்களுங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு வனாந்தரத்திலே பலியிடும்படிக்கு நான் உங்களைவிடுவேன். நீங்கள் அதிதூரமாய் மாத்திரம் போகாமல், எனக்காக வேண்டுதல்செய்யுங்களென்றான்.

௨௯. மோசே சொன்னதாவது; இதோ, நான் உம்மைவிட்டுப் புறப்பட்டபின் கர்த்தர் நாளை வண்டுசாதிகளைப் பார்வோனையும், அவர் ஊழியக்காரரையும், அவர் சனத்தையும் விட்டகற்ற நான் அவரை வேண்டிக்கொள்ளுவேன் ஆனால் சனத்தைக் கர்த்தருக்குப் பலியிடவிடாததினாலே பார்வோன் இனி வஞ்சனைமாத்திரம் பண்ணிக்கொண்டிராராக வென்றான்.

௩௰. மோசே பார்வோனைவிட்டுப்புறப்பட்டுக் கர்த்தரைவேண்டிக்கொண்டான்.

௩௧. அப்பொழுது கர்த்தர் மோசேயின் சொற்படிசெய்து வண்டுசாதிகளைப் பார்வோனையும், அவன் ஊழியக்காரரையும், அவன் சனத்தையும் விட்டகற்றினார் ஒன்றாகிலும் மீந்திருந்ததில்லை.

௩௨. பார்வோனோவென்றால், அந்தமுறையுந் தன்னிருதயத்தைக் கடினப்படுத்திச் சனத்தைவிடாதேபோனான்

## ௯. அதிகாரம்.

[(௧) மிருகங்களின் பேரில் அனுப்பப்பட்டவாதை. (௮) கொள்ளைப்பத்திரயத்தின் வாதை. (௰௩) கல்மழையைக்குறித்தகளுடைய அறிக்கை. (௨௭) பார்வோன் மோசேயை

வேண்டிக்கொண்டது. (௩௫) முன்போலவே யவனிருதயங்கடினப்பட்டது.]

பின்பு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ பார்வோனண்டையிற்பிரவேசித்து அவனோடே சொல்லவேண்டியது. எபிரேயருடைய பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நமது சனத்தை நமக்காராதனை செய்யும்படிக்கு விடு.

௨. ஏனெனில், நீ அவர்களை விடமாட்டேனென்று இன்னம் அவர்களை நிறுத்திவைத்தால்,

௩. இதோ, கர்த்தருடையகை வெளியிலிருக்கிற உன்மந்தையாகிய குதிரைகளின்மேலும், கழுதைகளின்மேலும், ஒட்டகங்களின்மேலும், ஆடு மாடுகளின்மேலும் மகா கனமான பெருவாரிக்காய்ச்சல் உண்டாகவந்திருக்கும்.

௪. கர்த்தர் இஸ்ரவேலரின் மந்தைக்கும் எகிப்தியரின் மந்தைக்கும் விசேஷித்த வித்தியாசமும்பண்ணுவார். இஸ்ரவேல் புத்திரரின் சகலமந்தையிலும் ஒன்றாகிலுஞ் சாவதில்லையென்றார்.

௫. நாளைக்குக்கர்த்தர்இந்தக்காரியத்தைத் தேசத்திலே செய்வாரென்றும், கர்த்தர் காலத்தைக்குறித்தாரென்றுஞ் சொல்லென்றார்.

௬. மறுநாளிலே கர்த்தர் இந்தக்காரியத்தைச்செய்தார். எகிப்தியருடைய எல்லாவிதமான மந்தை செத்துப்போயின. ஆனால், இஸ்ரவேல்புத்திரரின் மந்தையில் ஒன்றாகிலுஞ்செத்ததில்லை.

௭. பார்வோன் விசாரித்தனுப்பினான். இதோ, இஸ்ரவேலரின் மந்தையில் ஒன்றாகிலுஞ் சாவவில்லை. பார்வோனுடைய இருதயமோவென்றால் கடினப்பட்டது. அவன் சனத்தைவிட்டதில்லை.

௮. அப்பொழுது கர்த்தர்மோசேயோடும் ஆரோனோடுஞ் சொன்னதாவது; உங்கள் கைப்பிடிகள் நிறைய அடுப்பின் நீறு அள்ளிக்கொள்ளுங்கள். அதைமோசே பார்வோனுடைய கண்களுக்குமுன்பாக வானத்திற்குநேராக இறைக்கக்கடவன்.

௯. அப்பொழுது அது எகிப்துதேசமீது எங்கும் தூசியாகி, எகிப்துதேசமெங்கும் மனிதரிலும், மிருகஜீவன்களிலுங் கொப்புளங்களை எழும்பப் பண்ணுகிற எரிபந்தமாய்ப்போமென்றார்.

௰. அப்படியே அவர்கள் அடுப்பின் நீறள்ளிக்கொண்டு பார்வோனுக்கு முன்பாகவந்து நின்றார்கள். மோசே அதைவானத்திற்கு நேராகஇறைத்தான். அப்பொழுது மனிதரிலும், மிருகஜீவன்களிலுங் கொப்புளங்களையெழும்பப்பண்ணுகிற எரிபந்தமுண்டாயிற்று.

௰௧. அந்தஎரிபந்தத்தினிமித்தஞ் சாஸ்திரிகளும் மோசேக்கு முன்பாக நிற்கக்கூடாதிருந்தது. ஏனெனில், அந்தஎரிபந்தஞ்சாஸ்திரிகளிலும் எல்லாஎகிப்தியரிலும் உண்டாயிருந்தது.

௰௨. ஆனால், கர்த்தர் மோசேயோடே சொல்லியிருந்தபடியே கர்த்தர் பார்வோனின் இருதயத்தை யுரங்கொள்ளப்பண்ணினார் அவர்களுக்குக்கேளாதேபோனான்.

௰௩. அப்பொழுதுகர்த்தர்மோசேயோடே சொன்னதாவது; நீ அதிகாலமே எழுந்திருந்துபோய்ப் பார்வோனுக்கு முன்பாக நின்று அவனோடேசொல்லவேண்டியதுஎபிரேயருடைய பராபரனாகியகர்த்தர் உரைக்கிறதேதெனில், நமதுசனத்தை நமக்காராதனைசெய்யும்படிக்குவிடு.

௰௪. ஏனென்றால், பூமியெங்கும் நம்மைப்போலவேறொருவருமில்லையென்பதை நீயறியும்படிக்கு, இந்தமுறை நாம நம்முடைய வாதைகளையெல்லாம உன்னிருதயத்திலும் உன் ஊழியக்காரரிலும் உன் சனத்திலும் போகவிடுவோம்.

௰௫. ஏனெனில்,அப்பொழுதே நாம நமது கையைநீட்டி நீ பூமியிலிராமல் அறுப்புப்போகும்படிக்கு, உன்னையும், உன் சனத்தையும் பெருவாரிக்காய்ச்சலால்வாதிப்போம்.

௰௬. ஆனால், * நம்முடைய வல்லமையையுனக்குக்காண்பிக்கிறதற்கும், நம்முடைய நாமம் பூமியெங்கும் பிரஸ்தாபமாகிறதற்குமே உன்னைநிறுத்தினோம். * ரோமர். ௯.௰௭.

௰௭. இன்னம் நீ நமது சனத்தைவிடாதபடிக்கு அதற்குவிரோதமாய் உன்னையுயர்த்துகிறாயோ?

௰௮. இதோ எகிப்து அஸ்திவாரப்பட்ட நாள்முதற்கொண்டு இற்றைவரைக்குமதிலேவராதிருக்கிற மகாகனமான கல்மழையை நாம நாளையிந்நேரத்திலே வருஷிக்கப்பண்ணுவோம்.

௰௯. இப்பொழுதும ஆளனுப்பி உன் மந்தையையும் வெளியிலுனக்கிருக்கிறயாவையுஞ்சேர்த்துக்கொள். வீட்டிலேசேர்த்துக்கொள்ளப்படாமல்வெளியிலே அகப்பட்டுப்போகிற எல்லாமனிதஜீவனும், மிருகஜீவனும அந்தக்கல்மழை அவைகள்மேலிறங்குவதினாலே செத்துப்போம என்றொன்று சொல்லென்றார்.

௨௰. பார்வோனுடைய ஊழியக்காரரில் எவன் கர்த்தருடைய வார்த்தைக்குப்பயப்பட்டானோ அவன் தன்வேலைக்காரரையும், தன்மந்தையையும் வீடுகளுக்கு கோடிவரப்பண்ணினான்.

௨௧. ஆனால், எவன் கர்த்தருடைய வார்த்தையைத் தன்மனதிலேவைக்காதேபோனானோ அவன்தன்வேலைக்காரரையுந் தன் மந்தையையும்வெளியிலேவைத்துவிட்டான்.

உஉ. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, எகிப்து தேசமெங்கும், மனிதர்மேலும், மிருகஜீவன்களின்மேலும், எகிப்துதேசத்திலிருக்கிற சகலமான பயிர்வகைகள்மேலும் கல்மழைவரஉன்கையைவானத்திற்கு நேராக நீட்டென்றார்.

உங. அப்படியே மோசே தன்கோலைவானத்திற்கு நேராகநீட்டினன். அப்பொழுது, நெருப்புத்தரையில இறங்கி ஓடத்தக்கதாகக் கர்த்தர் இடிமுழக்கங்களையும், கல்மழையையும் கட்டளையிட்டு, எகிப்து தேசத்தின்மேல கல்மழையை வருஷிக்கப்பண்ணினர்.

உச. கல்மழையும் கல்மழையினநடுவிலே கலந்தநெருப்பும மிகக்கொடியதாயிருந்தது. எகிப்துதேசம் குடியேறினது முதற்கொண்டு, அதிலெங்கும அப்படிக்கொத்ததுண்டானதில்லை.

உரு. எகிப்து தேசமெங்கும மனிதரைத்துவக்கி மிருகஜீவன்களமட்டும வெளியிலேயிருந்ததோ அவைகளையெல்லாம அந்தக்கலமழையடித்துவிட்டது. அதுவெளியின பயிர்வகைகளையெல்லாம அடித்து வெளியினசெடிகளையெல்லாம முறித்துவிட்டது.

உசா. இஸ்ரவேல புத்திரரிருந்த கோசேனசீமையிலே மாத்திரம கலமழை பெய்யாதிருந்தது.

உஎ. அப்பொழுது பார்வோன மோசேயையும்ஆரோனையும்அழைத்தனுப்பி, அவர்களோடேசொன்னதாவது; * இந்தமுறை பாவஞ்செய்தேன. கர்த்தர் நீதியுள்ளவர். நானும என சனமுமோவென்றால், துன்மார்க்கராயிருக்கிறோம. * ௯, ௰௬, ௰எ.

உஅ. பராபரனுடைய இடிமுழக்கங்களும கலமழையுமிராதபடிக்குக் கர்த்தரை விண்ணப்பமபண்ணுங்கள. இனிப்போதும, நீங்களினி இங்கேதரித்திராதபடிக்கு உங்களை விடுவேனென்றான.

உகூ. மோசேஅவனோடேசொன்னதாவது; நான பட்டணத்திலிருந்து புறப்பட்ட பிறகு நான என உள்ளங்கைகளைக் கர்த்தருக்குநேராகவிரிப்பேன. அப்பொழுது பூமி கர்த்தருடையதென்பதை நீரறியும்படிக்கு, இடிமுழக்கங்களோய்ந்து கல்மழை இனிப்பெய்யாது.

ஙய. ஆனால நீரும உமமுடைய ஊழியக்காரரும இன்னம பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாகப் பயப்படவில்லையென்கிறதை யறிவேனென்றான.

ஙக. அப்படியே சணலும, வாற்கோதுமைப் பயிரும அழிக்கப்பட்டுப் போயின. ஏனெனில, வாற்கோதுமை கதிர்ப்பயிருஞ்சணல தாட்பயிருமாயிருந்தது.

ஙஉ. ஆனால், கோதுமையும், கம்புமஅழிக்கப்படவில்லை. ஏனென்றால, அவைகளின்னமவளராதிருந்தன.

ஙங. மோசேபார்வோனைவிட்டுப்பட்டணத்திலிருந்து புறப்பட்டுத்தன்னுள்ளங்கைகளைக்கர்த்தருக்குநேராகவிரித்தான. அப்பொழுது இடிமுழக்கங்களும கலமழையும் ஓய்ந்துமழைதரையிலிறங்காதேபோயிற்று.

ஙச. மழையும்,கல்மழையும, இடிமுழக்கங்களும ஓய்ந்துபோயிற்றென்று பார்வோன கண்டபொழுதோவெனில, அவன பாவஞ்செய்யத்தொடர்ந்து தன்னிருதயத்தைக் கடினப்படுத்தினன. அவனும அவனூழியக்காரருந்தானே.

ஙரு. கர்த்தர் மோசேயைக்கொண்டுசொல்லியிருந்தபடியே பார்வோனின இருதயம உரங்கொண்டது. அவன இஸ்ரவேல புத்திரரைவிடாமற்போனன.

## ௰. அதிகாரம்.

[(க) பராபரன வெட்டுக்கிளிகளை அனுப்புவோமென்று பயமுறுத்தினது. (எ) பார்வோன தன்னுடைய வேலைக்காரர்களால பிரயத்தனஞ் செய்யப்பட்டு இஸ்ரவேல சனங்களைப் போய விடும்படிக்கு நினைவுகொண்டது. (௰உ) வெட்டுக்கிளிகளின்வாதை. (௰௬) பார்வோன மோசேயிடத்தில முறையிட்டுக்கொண்டது. (உக) இருளின வாதை. (உச) பார்வோன மோசேயிடத்தில மறுபடியும முறையிட்டுக்கொண்டது. (உஎ) அவனின்னமுங்கடினஇருதயமுள்ளவனாயிருந்தது.]

பிற்பாடுகர்த்தர்மோசேயோடேசொன்னதாவது; நீ பார்வோனண்டையிற்பிரவேசி. ஏனெனில், அவர்கள நடுவே நாம இந்த நமமுடையஅடையாளங்களைச் செய்யும்படிக்கும்,

உ. நாம எகிப்திலே நடப்பித்ததையும நாம அவர்களுக்குச்செய்த நமமுடைய அடையாளங்களையும நீ உனபிள்ளைகளின செவிகளுக்குமுன்பாகவும, உனபிள்ளைகளுடைய பிள்ளைகளின செவிகளுக்கு முன்பாகவுமவிவரிக்கும்படிக்கும, நாமேகர்த்தரென்பதை நீங்களறியும்படிக்கும, நாம அவனிருதயத்தையும, அவனூழியக்காரரின இருதயத்தையுங் கடினப்படுத்தினோமென்றார்.

ங. அப்படியேமோசேயும ஆரோனுமபார்வோனண்டையிற்பிரவேசித்து அவனோடே சொன்னதாவது; எபிரேயருடைய பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நமக்குமுன்பாக நீ உன்னைத்தாழ்த்த எந்தமட்டும மனதில்லாதேபோகிறாய. நமது சனத்தை நமக்காராதனைசெய்யும்படிக்குவிடு.

ச. நீ நமதுசனத்தை விடமாட்டேனென்றுசொல்வாயானால இதோ, நாம நாளையுன எல்லையிலேவெட்டுக்கிளிகளை வரப்பண்ணுவோம.

௫. அவைகள பூமியின முகததைத தரையைக காணககூடாதபடிககு மூடிக கலமழைககுததபபி, உஙகளுககுமீதியாகவைககபபடடதைப பட்சிதது வெளியிலே உஙகளுககுத துளிர்ககிற செடிகளையெலலாந தினறுவிடும.

௬. அவைகளால உனவீடுகளும, உனனுடைய எலலா ஊழியககாரரின வீடுகளும, எலலாஎகிப்தியரினவீடுகளுமநிரமபும. உனபிதாககளும உனபிதாககளின பிதாககளுந தாஙகள தேசததிலிருநத நாளதுவககிஇநநாளவரைககும அப்படிக் கணடதிலலையெனறுசொலலித திருமபிககொணடுபார்வோனைவிடடுபபுறபபடடான.

௭. அபபொழுது பார்வோனுடைய ஊழியககாரர் அவனோடேசொனனது; எநதமடடும இவன நமககுக கணணியாயிருககவேணடும! அநதமனிதரைத தஙகள பராபரனாகிய கர்த்தருககாராதனைசெயயுமபடிக் குவிடும. எகிப்து அழிநதுபோயிறறெனறு இனனம அறியீரோவெனறார்கள.

௮. அபபொழுது மோசேயும, ஆரோனும பார்வோனணடைககுத திருமப அழைக்கப் படடார்கள. அவன அவர்களுடனே நீங்கள் போய உஙகள பராபரனாகிய கர்த்தருககு ஆராதனைசெயயுங்களெனறுசொலலிவிடபோகிறவர்களார்! எவர்களெனறுகேடடான.

௯. மோசேசொனனதாவது; எஙகளஇளைஞரோடும, எஙகள முதிர் வயதுககாரரோடும, எஙகள குமாரரோடும, எஙகள குமாரததிகளோடும, எஙகளாடுகளோடும, எஙகளமாடுகளோடுஙகூடபபோவோம. ஏனெனில, எஙகளுக்குக்கர்த்தரினபணடிகையுண்டாயிருக்குமெனறான.

௰. அபபொழுது அவன அவர்களோடே சொனனதாவது; நானுஙகளையும, உஙகள குழநதைகளையும எபபடிவிடுவேனோ அபபடிககர்த்தர் உஙகளோடிருபபாராக. உங்களமுகததிறகுமுனபாகப பொலலாபபிருககிறதெனறுபாருஙகள.

௰௧. அபபடியலல, புருஷராகிய நீஙகள போயக கர்த்தருககாராதனைசெயயுஙகள. ஏனெனில, நீஙகள்தேடினதுஇதுதானெனறு அவனசொனனபிற்பாடுஅவர்கள்பார்வோன முகததைவிடடுத துரததபபடடார்கள.

௰௨. அபபொழுது கர்த்தர் மோசேயுடனே வெடடுக கிளிகள எகிப்துதேசததின மேலேறிக கலமழைககுப பினவைதத பூமியின சகல பயிர்வகைகளையெலலாந தினனுமபடிககு அவைகளுககாக உனகையை எகிப்துதேசததினமேல நீடடெனறார்.

௰௩. அபபடியேமோசேதனகோலை எகிப்துதேசததினமேல நீடடினான. அபபொழுது, கர்த்தர் அனறுபகலமுழுவதும, அனறு இராமுழுவதுங கீழகாறறைத தேசததின மேலவரபபணணினார். விடியற்காலமாகிறபொழுது, கீழகாற்று வெடடுககிளிகளைக கொணடுவநதது.

௰௪. வெடடுககிளிகள எகிப்துதேசமெஙகுமேறி, எகிப்தின எலலையிலெலலாம மகா ஏராளமாயிறஙகின. அதற்குமுன்அபபடிக் கொதத வெடடுககிளிகள இருநததுமிலலை. அதறகுபபிறகு இருபபதுமிலலை.

௰௫. அவைகள பூமியின முகததையெலலாம மூடின. தேசம அவைகளால அநதகாரபபடடது. அவைகள கலமழைககுப பினவைதத நிலததின எலலாபபயிர்வகைகளையும மரஙகளின எலலாபபலனையுந தினறுவிடடன. எகிப்து தேசமெஙகும மரஙகளிலாகிலும நிலததினபயிர்வகைகளிலெனகிலும ஒருபசசிலையும மீதியானதிலலை.

௰௬. * அபபொழுது பார்வோன மோசேயையும ஆரோனையும அழைபபிககத தீவிரிதது உஙகள பராபரனாகிய கர்த்தருககும உஙகளுககும விரோதமாகப பாவஞ்செயதேன. * அ, அ, உரு. கூ, உஎ.

௰௭. இபபொழுதும இநத முறைமாததிரம நீ யெனபாவததைமனனி. உஙகளபராபரனாகிய கர்த்தர் இநதச சாவைமாததிரம எனனைவிடடகற்ற அவரைவிணணபபமபணணுஙகளெனறான.

௰௮. அவன பார்வோனை விடடுபபுறபபடடுக கர்த்தரை விணணபபமபணணினான.

௰௯. அபபொழுது கர்த்தர் மகாபலதத மேலகாறறைத திருமபவரவிடடார். அது வெடடுககிளிகளையெடுதது நாணற்சமுததிரததிலேபோடடது. எகிப்தின எலலையிலெலலாம அவைகளில ஒருவெடடுககிளியாகிலும மீதியாயிருநததிலலை.

௨௰. கர்த்தரோவெனறால, பார்வோனின இருதயததைக கடினப்படுததினார். அவன இஸரவேல புததிரரைவிடடதிலலை.

௨௧. அபபொழுது கர்த்தர் மோசேயுடனே தடவிககொணடிருககததககதாக இருள்எகிப்துதேசததினமேலஉணடாகுமபடிககு உன கையைவானததிறகு நேராக நீடடெனறார்.

௨௨. மோசே தனகையை வானததிறகு நேராகநீடடினான. அபபொழுது எகிப்து தேசமெஙகும மூனறுநாளமடடுமகாரிருள உணடாயிறறு.

௨௩. மூனறுநாளமடடும ஒருவரையொருவர்கணடதுமிலலை, ஒருவருந தம்மிடத்தைவிடடு எழுநததுமிலலை. எலலா இஸரவேலபுததிரருககுமோவெனில, அவர்கள வாசஸதலஙகளிலே வெளிசசமிருநதது.

௨௪. அபபொழுதுபார்வோனமோசேயை அழைபபிதது நீஙகளபோயக கர்த்தருககாராதனைசெயயுஙகள. உஙகள ஆடுகளும்

உங்கள் மாடுகளுமாத்திரம் நிறுத்தப்படவேண்டும். உங்கள் குழந்தைகளும் உங்களோடேகூடப் போகலாமென்றான்.

௨௫. மோசே சொன்னதாவது; நாங்கள் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் படைக்கும் பலிகளையுந் தகனபலிகளையும் நீர் எங்கள் கையிலே கொடுக்கவேண்டும்.

௨௬. எங்கள் மந்தையும் எங்களோடேகூடப் போகவேண்டும். ஒரு குளம்பும் பின்வைக்கப்படுவதில்லை. ஏனெனில், எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ஆராதனைசெய்கிறதற்கு அதிலே எடுப்போம். எதினாலே கர்த்தருக்கு ஆராதனைசெய்வோமென்கிறதை நாங்கள் அங்கே வருமட்டும் அறியோமென்றான்.

௨௭. ஆனால் கர்த்தர் பார்வோனுடைய இருதயத்தைக் கடினப்படுத்தினார். அவர்களைவிடமனதில்லாதேபோனான்.

௨௮. பார்வோன் அவனுக்கு என்னைவிட்டு அப்பாலேபோ. நீ இனி என் முகத்தைக் காணாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. ஏனென்றால், நீ என் முகத்தைக் காணும் நாளிலே சாவாயென்றான்.

௨௯. அப்பொழுது மோசே நீர் சொன்னபடி இனியும் உம்முடைய முகத்தை நான் காண்டில்லையென்றான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலர் அயலாரிடத்தில் நகைஇரவலாங்கப் பராபரன் செய்த அறிக்கை. (௪) முதற்பேறுகளிறக்குமென்று மோசே பார்வோனைப் பயமுறுத்தினது.]

அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; இன்னமொரு வாதையைப் பார்வோன்மேலும் எகிப்தின்மேலும் வரப்பண்ணுவோம். அதற்குப்பிறகு உங்களை இவ்விடத்திலிருந்து போகவிடுவான். சகலமாய்ப் போகவிடுவதுமல்லாமல், உங்களை இவ்விடத்திலிருந்து துரத்தவே துரத்துவான்.

௨. * இப்பொழுதும் ஒவ்வொருவன் தன் அயலான்கையிலும் ஒவ்வொருத்தி தன் அயலாள்கையிலும் வெள்ளியுடைமைகளையும் பொன் உடைமைகளையுங் கேட்கவேண்டுமென்று சனத்தின் செவிகளுக்குமுன்பாகச் சொல்லென்றார். * ௩, ௨௧, ௨௨.

௩. அதற்காகக் கர்த்தர் சனத்திற்கு எகிப்தியருடைய கண்களுக்குமுன்பாகத் தயவு கிடைக்கப்பண்ணினார். மோசே என்ற புருஷனும் எகிப்துதேசத்திலே பார்வோனுடைய ஊழியக்காரரின்பார்வைக்கும் சனத்தின் பார்வைக்கும் மிகப் பெரியவனாயிருந்தான்.

௪. அப்படியே மோசே சொன்னதாவது; கர்த்தர் உரைக்கிறதேதெனில், பாதி இராத்திரியிலே நாம் எகிப்தின்நடுவாகப்புறப்பட்டுப்போவோம்.

௫. அப்பொழுது பார்வோனுடைய இராசாசனத்தின்மேல் உளுக்காரும் அவருடைய தலைச்சன்குமாரனைத் துவக்கி எந்திரத்தின் பிறகாலேயிருக்கிற அடிமைப் பெண்ணுடைய தலைச்சன் பிள்ளைமட்டும் எகிப்துதேசத்திலிருக்கிற முதற்பேறனைத்தும் மிருகசீவன்களுக்குள்ளேயுந் தலையீற்றனைத்துஞ் சாகும்.

௬. அதினால் எகிப்து தேசமெங்கும் முன் ஒருக்காலும் உண்டாகாததும் இனி உண்டாகப்போகாததுமான பெரிய கூக்குரலிருக்கும்.

௭. ஆனால், கர்த்தர் எகிப்தியருக்கும் இஸ்ரவேலருக்கும் பண்ணுகிற வித்தியாசத்தை நீங்களறியும்படிக்கு இஸ்ரவேல் புத்திரரானவருக்குள்ளும் மனிதரைத் துவக்கி மிருகசீவன்கள்மட்டும் ஒரு நாயாகிலுந் தன் நாவையசைப்பதில்லை.

௮. அப்பொழுது இந்த உம்முடைய ஊழியக்காரரெல்லாரும் என்னண்டைக்கிறங்கி வந்து, நீயும் உன்கீழிருக்கிற எல்லாச் சனமுமாய்ப் புறப்படு என்று என்னை வணங்குவார்கள். அதின்பிறகு புறப்படுவேனென்று சொல்லி, உக்கிரமான கோபத்தோடே பார்வோனைவிட்டுப் புறப்பட்டான்.

௯. கர்த்தர் மோசேயுடனே எகிப்துதேசத்தில் நம்முடைய அற்புதங்கள் அநேகமாகும்படிக்குப் பார்வோன் உங்களைக் கேளாதே போவானென்று சொல்லியிருந்தபடியே,

௰. மோசேயும், ஆரோனும் இந்த அற்புதங்களையெல்லாம் பார்வோனுக்கு முன்பாகச் செய்தாலுங் கர்த்தர் பார்வோனின் இருதயத்தையுரங்கொள்ளப் பண்ணினார். அவன் இஸ்ரவேல் புத்திரரைத் தன் தேசத்திலிருந்துபோகவிட்டதில்லை.

## ௰௨. அதிகாரம்.

[(௧) வருடத்தின் ஆரம்ப மாறப்பட்டது. (௩) பஸ்காவென்னும் பண்டிகை ஸ்தாபிக்கப்பட்டது. (௰௧) பஸ்காபண்டிகையின் சடங்கு. (௰௫) புளியாத அப்பம். (௨௯) முதற்பேறுகள் கொல்லப்பட்டது. (௩௧) இஸ்ரவேல் சனங்கள் தேசத்தை விட்டுத் துரத்தப்பட்டது. (௩௭) அவர்கள் சுக்கோத்திற்குவந்தது. (௪௩) பஸ்காபண்டிகையின் முறைமை.]

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் எகிப்துதேசத்திற்சொன்னதாவது;

௨. இந்த மாதம் உங்களுக்குத் தலையான மாதம். இது உங்களுக்கு வருஷத்திலே முதலாமாதமாவது.

௩. நீங்கள் இஸ்ரவேல் சபையோடெல்லாம் பேசிச் சொல்லவேண்டியதேதெனில்,

இந்தமாதம் பத்தாந்தேதியிலே பிதாக்களாகிய வீட்டுக்காரர் அவரவர் ஒவ்வொரு ஆட்டுக் குட்டியை ஒவ்வொரு வீட்டிற்கு ஒவ்வொரு ஆட்டுக்குட்டியிருக்கும்படிக்குப் பிடிக்கக்கடவர்கள்.

௪. வீட்டிலேயிருக்கிறவர்கள் ஆட்டுக்குட்டியைப் புசிக்கப்போதாத கொஞ்சம்பேர்களாயிருந்தார்களேயாகில், அப்பொழுது ஆத்துமாக்களின் இலக்கத்திற்குத் தக்கதாக ஒருவன் தானும் சமீபமான தன்னுடைய அயல்வீட்டுக்காரனுமாய் ஒன்றைப் பிடிக்கக்கடவர். அவனவன் புசிப்பதற்குத் தக்கதாக ஆட்டுக்குட்டியின்மேலே இலக்கம் பார்க்கக்கடவீர்கள்.

௫. பழுதற்றதும் ஆணும் ஒருவயதுள்ளதுமாகிய ஆட்டுக்குட்டி உங்களுக்கிருக்கவேண்டும். ஆடுகளிலாகிலும், வெள்ளாடுகளிலாகிலும் அதை யெடுப்பீர்களாக.

௬. அதை இந்தமாதம் பதினாலாந்தேதி மட்டும் வைத்துக்கொண்டிருந்து, இஸ்ரவேல் சபையின் ஒவ்வொரு கூட்டத்தாரும் அந்திநேரமான வேளையிலே அதின் குரல்வளையை யறுத்து,

௭. அதின் இரத்தத்திற்கொஞ்சமெடுத்துத் தாங்கள் அதைப்புசிக்கும்வீடுகளிலேவாசல் இரண்டு நிலைகளிலும், வாசற்கூட்டின்மேற் சட்டத்திலும் பூசி,

௮. நெருப்பினாலே பொரித்ததாக அந்த மாம்சத்தையும் புளிப்பில்லாத அப்பங்களையும் அன்று இராத்திரியிலே புசிக்கக்கடவர்கள். கசப்பான கீரைகளோடே யதைப் புசிக்கக்கடவர்கள்.

௯. பச்சையானதாய் அல்லது தண்ணீரிலே வெவித்ததாய் அல்ல. நெருப்பினாலே அதின் தலையும், அதின் தொடைகளும், அதற்குள்ளிருக்கிறதும், ஏகமாய்ப் பொரிக்கப்பட்டதாய் அதிலே புசிப்பீர்களாக.

௰. அதிலே விடியற்காலமட்டும் ஒன்றும் மீதியாக வைக்காமல், விடியற்காலமட்டும் அதிலேமீதியாயிருக்கிறதை அக்கினியாலே சுட்டெரிப்பீர்களாக.

௰௧. நீங்களுங்கள் அரைகள்கட்டப்பட்டவைகளாகவும், உங்கள்பாதரட்சைகள் உங்கள் கால்களிலும், உங்கள் தடிகள் உங்கள் கைகளிலுமிருக்கிறதாகவும், அதைப் புசித்துத் தீவரத்துடனே அதைப் புசிக்கக்கடவீர்கள். அது கர்த்தருடைய பஸ்கா.

௰௨. அந்த இராத்திரியிலே நாம் எகிப்து தேசத்திலே கடந்துபோய், எகிப்துதேசத்தில் மனிதனைத்துவக்கி, மிருக சீவன்கள் மட்டுமே முதற்பேறாயிருக்கிறதையெல்லாம் அடித்து எகிப்தின் தேவர்களில் நியாயத்தீர்ப்புகளைச்செய்வோம். நாம் கர்த்தர்.

௰௩. நீங்களிருக்கும்வீடுகளில் அந்த இரத்தம் உங்களுக்கான அடையாளமாயிருக்கும். அந்த இரத்தத்தைக்கண்டு உங்களை விலகிக் கடந்து போவோம். அப்படியே நாம் எகிப்துதேசத்தையழிக்கும்பொழுது அழிக்கிறவாதை உங்களுக்குள்ளேவாராதிருக்கும்.

௰௪. அந்தநாள் உங்களுக்கு நினைவுகூருதலுக்காக இருக்கக்கடவது. அதைக் கர்த்தருக்குப் பண்டிகையாக ஆசரிப்பீர்களாக. அதையுங்கள் தலைமுறைகளில் நித்திய கட்டளையாய் ஆசரிப்பீர்களாக.

௰௫. ஏழுநாள்புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்கக்கடவீர்கள். ஆனால் முதல்நாளிலே தானே புளித்தமாவை யுங்கள் வீடுகளில் அற்றுப்போகப்பண்ணக்கடவீர்கள். ஏனெனில், முதல்நாள் துவக்கி, ஏழாம்நாள் மட்டும், எவனாகிலும் புளித்த அப்பம் புசித்தால், அந்த ஆத்துமா இஸ்ரவேலிவிராமல், அறுப்புண்டுபோவான்.

௰௬. முதலாம்நாளிலேபரிசுத்தமானசபை கூடுதலும், ஏழாம்நாளிலே பரிசுத்தமான சபைகூடுதலும் உங்களுக்கிருக்கக்கடவது. அவைகளில் ஒரு வேலையுஞ் செய்யப்படவேண்டாம். ஒவ்வொரு ஆத்துமாவுக்குஞ் சாப்பிடுகிறதற்குத் தேவையானதுமாத்திரமே உங்களுக்காகச் செய்யப்படலாம்.

௰௭. புளிப்பில்லாத அப்பங்களின் புசிக்குதலைக் கைக்கொள்ளுவீர்களாக. ஏனெனில், அந்தநாளிலே தானே உங்கள் சேனைகளை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினோம். ஆகையால், அந்தநாளையுங்கள் தலைமுறைகளில் நித்திய கட்டளையாக ஆசரிப்பீர்களாக.

௰௮. முதலாம் மாதம் பதினாலாந்தேதி சாயங்காலந் துவக்கி, மாதத்தின் இருபத்தோராந்தேதி சாயங்காலமட்டும் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்கக்கடவீர்கள்.

௰௯. ஏழுநாள்மட்டும் உங்கள் வீடுகளிலே புளித்தமாக்காணப்படாதிருப்பதாக. ஏனெனில், எவனாகிலும் புளித்த அப்பத்தைப் புசித்தால், அந்த ஆத்துமா பரதேசியானாலுஞ் சரி. தேசத்திலே பிறந்தவனானாலுஞ் சரி. இஸ்ரவேல் சபையிவிராமல், அறுப்புண்டுபோவான்.

௨௰. நீங்கள்புளித்த அப்பமானயாதொன்றையும் புசிக்கவேண்டாம். உங்களுடைய எல்லா வாசஸ்தலங்களிலும் புளிப்பில்லாத அப்பங்களைப்புசிக்கக்கடவீர்களென்று சொல்லென்றார்.

௨௰௧. அப்பொழுது மோசே இஸ்ரவேலின் மூப்பரையெல்லாம் அழைப்பித்து அவர்களோடே சொன்னதாவது; நீங்கள் உங்களுக்குங்கள் வம்சத்திற்குத் தக்கதாக ஆட்டுக்குட்டிகளைத் தெரிந்தெடுத்துக்கொண்டு * பஸ்காவை அடித்து,

* எபி. ௰௧, ௨௮.

அடிமையெல்லாம் நீ யவனைச் சுன்னத்துப் பண்ணினபிற்பாடு அதிலே புசிப்பானாக.

௪௫. அந்நியனும் கூலியாளும் அதிலே புசிக்கவேண்டாம்.

௪௬. ஒவ்வொரு வீட்டில் ஒவ்வொன்று புசிக்கப்படக்கடவது. நீ அந்த மாம்சத்தில் ஒன்றும் வீட்டிலிருந்து வெளியே கொண்டுபோகவேண்டாம். * அதிலே நீங்கள் ஒரு எலும்பை முறிக்கவும் வேண்டாம்.
* ௪. மோசே. ௯, ௰௨. யோவா. ௰௯, ௩௯.

௪௭. இஸ்ரவேல் சபையெல்லாம் அதை யாசரிக்கக்கடவது.

௪௮. அந்நியனொருவன் உன்னிடத்திலே தங்கிக் கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்கவேண்டுமென்றிருந்தானேயாகில், அவனிடத்திலிருக்கிற ஆணெல்லாஞ் சுன்னத்தடையவேண்டும். பிற்பாடு அவன் அதை யாசரிக்கிறதற்குச் சேர்ந்து, தேசத்திலே பிறந்தவனைப்போலிருப்பானாக. ஆனாற் சுன்னத்தில்லாத ஒருவனும் அதிலே புசிக்கவேண்டாம்.

௪௯. * தேசத்திலே பிறந்தவனுக்கும் உங்கள் நடுவிலே தங்குகிற பரதேசிக்கும் ஒரே நியாயப்பிரமாணமிருக்கக்கடவதென்றார். * ௩. மோசே. ௨௪, ௨௨.

௫௰. இஸ்ரவேல் புத்திரரெல்லாரும் இப்படிச்செய்தார்கள். கர்த்தர் மோசேக்கும், ஆரோனுக்குங் கற்பித்தபடியே செய்தார்கள்.

௫௧. இந்தப் பிரகாரமாக அந்நாளிலே தானே கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை அவர்களுடைய சேனைகளின்படியே எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) முதற்பேறுகள் பராபரனுக்குப் பரிசுத்தமாக்கப்பட்டது. (௩) பஸ்காபண்டிகை தினவுகூரக் கட்டளையிடப்பட்டது. (௰௧) மிருகத்தின் தலையீற்றுகள் கர்த்தருக்காக வைக்கப்பட்டது. (௰௭) இஸ்ரவேல்சனங்கள் யோசேப்பினெலும்புகளை யெடுத்துக்கொண்டு எகிப்தைவிட்டுப்போனது. (௨௰) அவர்கள் ஏத்தாமுக்குவந்தது. (௨௧) பராபரன் அவர்களுக்கு மேகத்தூணாகவும், நெருப்புத்தூணாகவும் வழிகாட்டினது.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. * இஸ்ரவேல் புத்திரரில் எங்கும் மனிதரிலும், மிருகஜீவன்களிலும் கர்ப்பந்திறந்து பிறக்கிற முதற்பேறானதையெல்லாம் நமக்குப் பரிசுத்தமாக்கு. அது நம்முடையதென்றார். * ௨௨, ௨௯, ௩௰. ௩௪, ௰௯.

௩. அப்பொழுது மோசே சனத்தோடே சொன்னதாவது; நீங்கள் அடிமைத்தனவீடாகிய எகிப்திலிருந்து புறப்பட்ட இந்நாளை நினை. ஏனெனில், கர்த்தர் பலத்தகையினாலே உங்களை யவ்விடத்திலிருந்து புறப்படப்பண்ணினார். ஆனதுகொண்டு புளித்த அப்பம் புசிக்கப்படவேண்டாம்.

௪. * ஆபிப்மாதத்தினுடைய இந்தநாளிலே நீங்கள் புறப்படுகிறீர்கள். * ௨௩, ௰௫.

௫. ஆகையால், கர்த்தருனக்குக் கொடுப்பபோமென்று உன் பிதாக்களுக்கு ஆணையிட்டதும், பாலுந்தேனும் ஓடுகிறதுமான தேசமாகிய கானானியர், ஏத்தியர், எமோரியர், ஏவியர், எபூசியரென்றவர்களுடைய தேசத்திலே உன்னை வரப்பண்ணினபொழுது, நீ இந்த மாதத்திலே இந்த ஆராதனையைச் செய்வாயாக.

௬. ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்கக்கடவாய். ஏழாநாளிலோவெனில், கர்த்தருக்குப் பண்டிகை ஆசரிக்கப்படுவதாக.

௭. அந்த ஏழுநாளும் புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படக்கடவது. உன்னிடத்திலே புளித்த அப்பமுங் காணப்படவேண்டாம். உன் எல்லைகளிலெல்லாம் உன்னிடத்திலே புளித்தமாவுங் காணப்படவேண்டாம்.

௮. அந்நாளிலே உன் குமாரனுக்கு நான் எகிப்திலிருந்து புறப்படுகையில் கர்த்தர் எனக்குச் செய்ததற்காக இப்படிச் செய்கிறேனென்றறிவிப்பாயாக.

௯. கர்த்தரின் நியாயப்பிரமாணம் உன் வாயிலிருக்கும்படிக்கு * இது உனக்குன் கையில் அடையாளமாகவும், உன் கண்களின் நடுவே நினைப்பூட்டுதலாகவும் இருக்கக்கடவது. ஏனெனில், பலத்தகையினாலே கர்த்தருன்னை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார். * ௫. மோசே. ௬, ௮.

௰. ஆகையால், வருஷத்திற்கு வருஷம் இந்தக் கட்டளையைக் குறித்த காலத்திலே கைக்கொண்டுவருவாயாக.

௰௧. பின்னையுஞ் செய்யப்படவேண்டியதேதெனில், கர்த்தர் உனக்கும், உன் பிதாக்களுக்கும் ஆணையிட்டபடியே உன்னைக் கானானியரின் தேசத்திலே வரப்பண்ணி அதை யுனக்குக் கொடுத்தபொழுது,

௰௨. கர்ப்பந்திறந்து பிறக்கிறதனைத்தையும், உனக்கிருக்கும் மிருகஜீவன்களின் தலையீற்றனைத்தையுங் கர்த்தருக்குக் கொடுப்பாயாக. அவைகளிலிருக்கிற ஆண்கள் கர்த்தருடையவைகள்.

௰௩. ஆனால் கழுதையின் தலையீற்றையெல்லாம் ஒரு ஆட்டுக்குட்டியினால் மீட்டுக்கொள்வாயாக. மீட்காயேயாகில், அதின் தலையை வெட்டிப்போடு. உன் பிள்ளைகளில் முதற்பேறானசகல நரஜீவனையோவென்றால், மீட்டுக்கொள்வாயாக.

௰௪. இதென்னவென்று நாளை யுன் குமாரனுன்னைக் கேட்கிறதுண்டானால், நீ அவனோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தரொங்

கைப்பலத்தினாலே அடிமைவீடாகிய எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௰௫. அதேதெனில், எங்களை விடாதபடிக்குப் பார்வோன் கடின மனதாயிருக்கிறபொழுது, கர்த்தர் எகிப்துதேசத்தில மனிதரின் தலைச்சனபிளளைகள் துவக்கி, மிருகஜீவன்களின் தலையீற்றுகளமட்டும் உண்டாயிருந்தமுதற்பேறுகளையெல்லாங் கொன்றுபோட்டார். ஆனபடியினாலே கர்ப்பத்திறந்து பிறக்கிறஆணையெல்லாம நான கர்த்தருக்குப்பலியிட்டு என்பிளளைகளில முதறபேறனவர்களை யெல்லாம மீட்டுக்கொளளுகிறேன.

௰௬. ஆகையால, கர்த்தரெங்களைப்பலத்தகையினாலே எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதற்கு இது உனகையில அடையாளமாகவும, உனகண்களின நடுவே ஞாபகக்குறியாகவுமிருக்கக்கடவதென்று சொல்லுவாயாகவென்றான.

௰௭. பார்வோன சனததைவிட்ட பிறபாடு சமீபமாயிருந்தது பெலிஸ்தரின தேசவழியாய்ப் பராபரன அவர்களை யழைத்துக்கொண்டுபோகவில்லை. ஏனென்றால், சனம யுத்தத்தைக காணுமபொழுது, மனஸ்தாபப்பட்டு எகிப்திற்குத் திரும்புமென்றார்.

௰௮. ஆகையாற்பராபரன நாணற சமுத்திரத்தின வனாந்தரவழியாய்ச சனத்தைச சுற்றிப்போகப்பண்ணினார். இஸ்ரவேலபுத்திரரோவெனில, எகிப்து தேசததிலிருந்து, அணியணியாய்வந்தேறினார்கள.

௰௯. மோசே தனனோடேகூட யோசேப்பின எலும்புகளை யெடுத்துக்கொண்டு வந்தான. * ஏனெனில, பராபரன உங்களை விசாரிக்கவே விசாரிப்பார். அப்பொழுது உங்களோடேகூட என எலும்புகளை இவவிடத்திலிருந்துபோய ஏறப்பண்ணுங்களென்று அவன இஸ்ரவேலபுத்திரரோடே கெட்டியாய் ஆணையிட்டுவித்துக் கொண்டிருந்தான.

* ௧. மோசே. ௫௰, ௨௫ யோசு. ௨௪, ௩௨.

௨௰. அவர்கள சுக்கோத்திலிருந்து பயணமபுறப்பட்டு, வனாந்தரத்தின எல்லையான ஏத்தாமிலே பாளயமிறங்கினார்கள.

௨௧. கர்த்தரோவெனில, அவர்களை வழிநடத்துமபடிக்குப பகலிலே மேகத்தூணிலும, அவர்களுக்குவெளிச்சங்காட்டுமபடிக்கும, அவர்களிரவும்பகலும போகக்கூடுமபடிக்கும இராத்திரியிலே அக்கினித் தூணிலும அவர்களுக்கு முனபாகநடந்தார்.

௨௨. பகலிலே மேகத்தூணும, இரவிலே அக்கினித்தூணுஞ சனத்திறகு முனபாகவிருந்துவிலகிப்போனதிலலை.

## ௰௪. அதிகாரம்.

[(௧) பராபரன இஸ்ரவேலசனங்களினயாத்திரையைக்குறித்துக் கற்பித்தது. (௫) பார்வோனஅவர்களைப்பினசென்றது. (௰) இஸ்ரவேல சனங்கள முறுமுறுத்தது. (௰௩) மோசே அவர்களுக்கு ஆறுதலைச சொனனது. (௰௫) பராபரனமோசேக்குக கற்பித்தது. (௰௯)மேகமானது, பாளயத்தினபினபுறத்தில்வந்தது. (௨௧)இஸ்ரவேலசனங்கள் நாணறகடலின மார்க்கமாய்ப போனது. (௨௩) அது எகிப்துதேசத்தாரை முழுகடித்தது.]

கர்த்தர் மோசேயுடனே பேசிச்சொனனதாவது;

௨. திருமபிக்கொண்டு, மிக்தோலுக்கும, சமுத்திரத்துக்குமநடுவேபாகாலசெப்போனுக்குமுனபாக விருக்கிற ஈரோத் பள்ளத்தாக்கினமுனனடியிலேபாளயமிறங்கவேண்டுமென்று இஸ்ரவேலபுத்திரரோடேசொலலு.

௩. அதறகெதிராகச சமுத்திரக்கரையிலே பாளயமிறங்குவீர்களாக.

௪. அப்பொழுது அவர்கள தேசத்திலே திகைத்துத்திரிகிறார்கள. வனாந்தரம அவர்களை யடைத்துப்போட்டதென்று பார்வோன இஸ்ரவேல புத்திரரைக் குறித்துச சொலலுவான.

௫. ஆகையால, பார்வோனஅவர்களைப்பின்றொடருமபடிக்கு நாம அவனிருதயத்தை யுரங்கொளளப்பண்ணி, நாம கர்த்தர் என்பதை எகிப்தியர் அறிகிறதற்காகப் பார்வோனாலும, அவனுடைய எலலா இராணுவத்தாலும்மகிமைப்படுவோமென்றார். அவர்கள அப்படிச்செய்தார்கள.

௫. சனம ஓடிப்போயிற்றென்று எகிப்தின இராசாவுக்கு அறிவிக்கப்பட்டபொழுது, சனத்திறகு விரோதமாகப பார்வோனும, அவனூழியக்காரருமவேறுமனதாகி நாம் இஸ்ரவேலை நமக்குவேலைசெய்யாதபடிக்கு இபபடிவிட்டது என்ன செய்கையாயிருக்கிறதென்றார்கள.

௬. அவன தன இரதங்களைப பூட்டித்தன சனத்தைக் கூட்டிக்கொண்டு,

௭. தெரிந்துகொளளப்பட்ட அறுநூறு இரதங்களையும, எகிப்தினுடையஎலலா இரதங்களையும,அவைகள்எலலாவறறினமேலும் அதிகாரிகளான ஆகிகக்காரரையுங் கூட்டிக்கொண்டுபோனான.

௮. கர்த்தர் எகிப்தின இராசாவாகிய பார்வோனின இருதயத்தை யுரமாக்கினபடியினாலே, அவன இஸ்ரவேல புத்திரரைப பின்றொடர்ந்தான. இஸ்ரவேலபுத்திரரோவெனில, உயர்ந்தகையினாலே புறப்பட்டிருந்தார்கள.

௯. எகிப்தியர் அவர்களைப பினறொடர்ந்து பார்வோனின எலலாக்குதிரைகளும,இரதங்களும, அவனுடையகுதிரைக்காரரும, அவனுடையஇராணுவமுமாயச சமுத்திரத்தண

டையிலே பாகால்சேபோனுக்குமுன்பாக இருக்கிற ஈரோத்பள்ளத்தாக்கின் முன்னடியிலே பாளயமிறங்கியிருக்கிற அவர்களைக் கிட்டினார்கள்.

௰. பார்வோன் சமீபித்துவருகிறபொழுது, இஸ்ரவேல்புத்திரர் தங்கள் கண்களை ஏறெடுத்தார்கள். இதோ, எகிப்தியர் தங்கள் பிறகாலே வருகிறதைக் கண்டு, மிகவும் பயந்தார்கள். அப்பொழுது இஸ்ரவேல்புத்திரர் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு,

௰௧. மோசேயுடனே, எகிப்திலே பிரேதக்குழிகள் இல்லாததினாலேயோ! எங்களை வனாந்தரத்திலே சாகும்படிக்கு அழைத்துவந்தீர் நீர் எங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதினாலே, எங்களுக்கிப்படிச்செய்ததென்னவென்றும்,

௰௨. நாங்கள் எகிப்திலிருக்கும்பொழுது, எங்களை எகிப்தியருக்கு வேலைசெய்யவிட்டுவிடும். ஏனென்றால், நாங்கள் வனாந்தரத்திலே சாகிறதைப்பார்க்கிலும் எகிப்தியருக்கு வேலைசெய்கிறது, எங்களுக்கு நல்லதென்று உம்மோடே சொன்னவார்த்தை இதுதானல்லவோவென்றுஞ் சொன்னார்கள்.

௰௩. அதற்கு மோசே ஜனத்தோடே சொன்னதாவது; பயப்படாதிருங்கள். நீங்கள் நின்றுகொண்டு, கர்த்தர் இன்றுங்களுக்குச் செய்யும் அவருடைய இரட்சிப்பைப் பாருங்கள். ஏனெனில், நீங்கள் இன்றுகாண்கிற எகிப்தியரை இனி என்றைக்குந் திரும்பக்காண்பதில்லை.

௰௪. கர்த்தர் உங்களுக்காக யுத்தம்பண்ணுவார். நீங்கள் சும்மா இருப்பீர்களென்றான்.

௰௫. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ நம்மை நோக்கிக் கூப்பிடுகிறதென்ன! பயணம் புறப்படவேண்டுமென்று இஸ்ரவேல்புத்திரரோடே சொல்லு.

௰௬. நீயோவென்றால், உன் கோலையோங்கி, உன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டி, அதைப்பிளந்துபோடு. அப்பொழுது இஸ்ரவேல்புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே நடந்துபோவார்கள்.

௰௭. நானோவென்றால். இதோ, எகிப்தியர் உங்கள்பிறகாலே வரும்படிக்கு அவர்களிருதயத்தை யுரமாக்குவேன். பார்வோனாலும், அவனுடைய எல்லா இராணுவத்தினாலும், அவன் இரதங்களாலும், அவன் குதிரைக்காரராலும் மகிமைப்படுவோம்.

௰௮. இப்படி நாம் பார்வோனாலும், அவனிரதங்களாலும், அவன் குதிரைக்காரராலும் மகிமைப்படும்பொழுது, நாம் கர்த்தர் என்பதை எகிப்தியர் அறிவார்களென்றார்.

௰௯. அப்பொழுது இஸ்ரவேலின் சேனைக்குமுன்னே நடக்கிற பராபரனுடைய தூதனானவர் தாண்டிவந்து, அவர்கள் பிறகாலே நடந்தார். அவர்களுக்குமுன்பாக இருந்த மேகத்தூண் தாண்டிவந்து, அவர்கள் பிறகாலே நின்றது,

௨௰. எகிப்தியரின் சேனைக்கும், இஸ்ரவேலரின் சேனைக்கும் நடுவாக வந்தது, இராமுழுவதும் அது இதைச்சேராதபடியாய் அதற்கு மேகமும், அந்தகாரமுமாயிருந்தது, இதற்கோவென்றால், இரவை வெளிச்சமாக்கிற்று.

௨௰௧. மோசே தன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டினான். அப்பொழுது கர்த்தர் சமுத்திரத்தை இராமுழுவதும் பலத்த கிழக்காற்றினாலே விலக்கி, அதை வறண்டுபோகப்பண்ணினார். அப்படியே தண்ணீர்கள் பிளந்து பிரிந்துபோயிற்று.

௨௰௨. இஸ்ரவேல்புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே பிரவேசித்தார்கள். அவர்களுடைய வலதுபுறமாகவும், அவர்களுடைய இடதுபுறமாகவும் தண்ணீர்கள் அவர்களுக்கு மதிலாகவிருந்தது.

௨௰௩. அப்பொழுது எகிப்தியர் பின்றொடர்ந்து பார்வோனுடைய எல்லாக்குதிரைகளும், அவனுடைய இரதங்களும், அவனுடைய குதிரைக்காரரும் அவர்கள்பிறகாலே சமுத்திரத்தின் நடுவே பிரவேசித்தார்கள்.

௨௰௪. கிழக்குவெளுத்துவருகிற சாமத்திலே சம்பவித்ததென்னவென்றால், கர்த்தர் அக்கினியும் மேகமுமான தூணிலிருந்து, எகிப்தியரின் சேனையை நோக்கிப்பார்த்து, அவர்கள் சேனையைக் கலங்கடித்து,

௨௰௫. உருளைகளை அவர்கள் இரதங்களிலிருந்து கழலவும், அவர்கள் வருத்தமாய் நடக்கவும்பண்ணினார். அப்பொழுது எகிப்தியர் இஸ்ரவேலைவிட்டு, ஓடிப்போவோமாக. ஏனெனில், கர்த்தர் அவர்களுக்காக எகிப்தியருக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிறாரென்றார்கள்,

௨௰௬. கர்த்தரோவென்றால், மோசேயுடனே தண்ணீர்கள் எகிப்தியர்மேலும், அவர்களுடைய இரதங்களின்மேலும், அவர்களுடைய குதிரைக்காரர்மேலும் திரும்பும்படிக்கு உன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டென்றார்.

௨௰௭. அப்படியே மோசே தன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டினான். அப்பொழுது, விடியற்காலத்திற்கு முன்னே சமுத்திரம் தன்பலத்தோடே திரும்பிவந்தது. எகிப்தியர் அதற்கெதிராக ஓடிப்போனார்கள், கர்த்தரவர்களைக் கடலின் நடுவிலே விழுத்தள்ளினார்.

௨௰௮. தண்ணீர்கள் திரும்பிவந்து, இரதங்களையும், குதிரைக்காரரையும், அவர்கள்பிறகாலே சமுத்திரத்துக்குட்பிரவேசித்திருந்த பார்வோனின் இராணுவமனைத்தையுமூடிட்

போட்டது. அவர்களில் ஒருவனாகிலும் மீதி யானதில்லை.

௨௯. இஸ்ரவேல்புத்திரரோவென்றால், சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே நடந்துபோனார்கள். தண்ணீர்கள் அவர்களுக்கு அவர்கள் வலதுபுறத்திலும், அவர்கள் இடதுபுறத்திலும் மதிலாகவிருந்தது.

௩௰. இப்படிக் கர்த்தர் அந்நாளிலே இஸ்ரவேலை எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து இரட்சித்தார். இஸ்ரவேலர் எகிப்தியரைக் கடற்கரையிலே செத்துக்கிடக்கக்கண்டார்கள்.

௩௧. கர்த்தர் எகிப்தியரிற்செய்த அவருடைய பெரிய கைக்கிரியையை இஸ்ரவேல் கண்டது. அதையாற்சனங்கர்த்தருக்குப்பயந்து கர்த்தர்மேலும், அவருடைய ஊழியக்காரனாகிய மோசேயின்மேலும் விசுவாசித்தது.

## ௰௫. அதிகாரம்.

[(௧) மோசேபாடியபாட்டு. (௨௨) அந்தச்சனங்கள் தண்ணீரில்லாதிருந்தது. (௨௩) மாராவின்தண்ணீர்கசப்பாயிருந்தது. (௨௫) அவர்களுக்கு ஒரு மரத்தினாலது தித்திப்பானது. (௨௭) ஏலிமில பன்னிரண்டு நீரூற்றுகளும், எழுபதுபேரீச்சமரங்களுமிருந்தது.]

அப்பொழுதுமோசேயும் இஸ்ரவேல புத்திரருங்கர்த்தனைப்பாடினபாட்டாவது; கர்த்தனைப்பாடுவேன். ஏனென்றால், உயரவே உயர்ந்தார். குதிரையையும் அதில் ஏறினவனையும் கடலிலே தள்ளினார்.

௨. * என்பெலமும் என் கீதமுங்கர்த்தர். அவரெனக்கு இரட்சிப்பானவர். அவரே என்பராபரன். ஆகையால், அவருக்குவாசஸ்தலத்தை ஆயத்தம்பண்ணுவேன். அவரே என்தகப்பனுடையபராபரன். ஆகையால், அவரையுயர்த்துவேன். * சங். ௱௰௮, ௰௪.

௩. கர்த்தரே யுத்தம்பண்ணவல்லவர். கர்த்தரென்பது அவருடைய நாமம்.

௪. பார்வோனின் இரதங்களையும், அவன் இராணுவத்தையுஞ் சமுத்திரத்திலேதள்ளிவிட்டார். தெரிந்துகொள்ளப்பட்ட அவன் அதிக்கக்காரர் நாணற்சமுத்திரத்தில் அமிழ்ந்துபோனார்கள்.

௫. ஆழங்கள் அவர்களைமூடிற்று. கல்லைப்போலப் பள்ளங்களில் இறங்கினார்கள்.

௬. கர்த்தாவே! உம்முடைய வலதுகரம் பலத்தினால் மகிமையாயிருக்கின்றது. கர்த்தாவே! உம்முடைய வலதுகரம் பகைஞனை நொறுக்கிப்போட்டது.

௭. உமக்கு விரோதமாய் எழும்பினவர்களை உம்முடைய முகத்தின் மகத்துவத்தினாலே நிர்மூலமாக்கினீர். உம்முடைய உக்கிரத்தை யனுப்பினீர். அது அவர்களைத் தாளடியைப்போலப்பட்சித்தது.

௮. உம்முடைய நாசியின் சுவாசத்தினாலே தண்ணீர்கள் குவிந்தது. நீரோட்டங்கள் குவியலாக நின்றது. ஆழங்கள் நடுக்கடலிலே கெட்டியாயிற்று.

௯. பின்தொடருவேன். பிடிப்பேன் கொள்ளையாடிப் பங்கிடுவேன். என்னுடைய மன அவர்களால் நிரப்பப்படும். என் பட்டயத்தை யுருவுவேன். என்கை யவர்களைச் சங்கரிக்குமென்று பகைஞன் சொன்னான்.

௰. உம்முடைய காற்றினாலே ஊதினீர். கடல் அவர்களைமூடிற்று. ஈயத்தைப்போல மிகுந்த தண்ணீர்களில் அமிழ்ந்துபோனார்கள்.

௰௧. கர்த்தாவே! தேவர்களில் உமக்கொப்பானவனார்! பரிசுத்தத்தில் மகத்துவமானவரும் துதிக்கிறபயப்படத்தக்கவரும் அற்புதங்களைச்செய்கிறவருமாகிய உமக்கொப்பானவனார்!

௰௨. உம்முடைய வலதுகையை நீர் நீட்டினீர். பூமி அவர்களை விழுங்கிப்போட்டது.

௰௩. நீர்மீட்டுக்கொண்ட இந்தச்சனத்தை உம்முடைய கிருபையினாலே நடத்தி வந்தீர். உம்முடைய பரிசுத்தவாசஸ்தலத்துக்குநேராக அதையும்முடையபலத்தினாலே வழிநடத்தினீர்.

௰௪. சனசதளங்கள் அதைக்கேட்டுத் தத்தளிக்கும், பெலிஸ்தேயாவின்குடிகளை வேதனைபிடிக்கும்.

௰௫. அப்பொழுது ஏதோமின் பிரபுக்கள் கலங்குவார்கள். மோவாபில் வல்லமையுள்ளவர்களை நடுக்கம் பிடிக்கும். கானானின் குடிகளெல்லாங் கரைந்துபோவார்கள்.

௰௬. பயங்கரமும், திகிலும் அவர்களமேல் விழுங்கும். கர்த்தாவே! உம்முடைய சனங் கடக்குமட்டும் நீர் மீட்ட இந்தச்சனமேகடந்துபோகுமட்டும் அவர்கள் உம்முடைய புயத்தின் மகத்துவத்தினாலே கல்லைப்போல மவுனமாயிருப்பார்கள்.

௰௭. நீர் அவர்களை உட்பிரவேசிக்கப்பண்ணி அவர்களைக் கர்த்தராகிய தேவரீர் வாசம்பண்ணுகிறதற்குப் படைத்த தானமாகிய உம்முடைய சுதந்தரத்தின் பர்வதத்திலும், ஆண்டவராகிய தேவரீருடைய கரம் ஸ்தாபித்த பரிசுத்தஸ்தலத்திலும் நாட்டுவீர்.

௰௮. * கர்த்தர் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் இராசரிகம் பண்ணுவார். * சங். ௯௫, ௧.

௰௯. ஏனென்றால் பார்வோனின் குதிரை அவன் இரதங்களோடும், அவன் குதிரைக்காரரோடுஞ் சமுத்திரத்துக்குட்பிரவேசித்தது. அப்பொழுது கர்த்தர் சமுத்திரத்தின் தண்ணீர்களை அவர்கள்மேலே திரும்பப்பண்ணினார். இஸ்ரவேல் புத்திரரோ

வென்று சமுத்திரத்தின் நடுவே வெட்டாந்தரையிலே நடந்துவந்தார்களென்று பாடினார்கள்.

௨௰. ஆரோனின் சகோதரியாகிய மீரியாமென்ற தீர்க்கதரிசியுந் தன்கையிலே உடுக்கையெடுத்துக்கொண்டாள். சகல ஸ்திரிகளும் உடுக்கைகளையும், கீதவாத்தியங்களையுமெடுத்து அவள் பிறகாலே புறப்பட்டார்கள்.

௨௧. மீரியாம் அவர்களுக்கு மறுமொழியாகக் கர்த்தரைப்பாடுங்கள். ஏனென்றால், உயரவே உயர்ந்தார். குதிரையையும், அதிலேறினவனையுங் கடலிலேதள்ளினாரென்பது முதலானவைகளைப்பாடினாள்.

௨௨. பிறபாடு மோசே இஸ்ரவேலை நாணற்சமுத்திரத்தைவிட்டுப் பயணம் புறப்படப்பண்ணினான். அவர்கள் சூர்வனாந்தரத்திற்குப்புறப்பட்டுப்போய் மூன்றுநாள் வனாந்தரத்திலே தண்ணீர் கிடையாமல் நடந்து,

௨௩. மாராவிலே வந்தார்கள். ஆனால் மாராவின் தண்ணீரைக்குடிக்க அவர்களுக்குக் கூடாதிருந்தது. ஏனெனில், அது கசப்பாயிருந்தது. ஆனதுகொண்டு அவ்விடத்திற்கு மாராவென்றுபேரிடப்பட்டது.

௨௪. அப்பொழுது சனம் மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்து, எதைக்குடிப்போமென்றார்கள்.

௨௫. மோசே கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டான். அப்பொழுது கர்த்தர் மோசேக்கு ஒருமரத்தைக் காண்பித்தார். அதை அவன் தண்ணீரிலே போட்டபொழுது, தண்ணீர் தித்திப்பாயிற்று. அவரங்கே அவர்களுக்குப் பிரமாணமும், நியாயமுங் கட்டளையிட்டு அங்கேயவர்களைச் சோதித்துச் சொன்னதாவது;

௨௬. நீ உன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே கேட்டு அவர் கண்களுக்குச் செம்மையானதைச்செய்து அவர் கற்பனைகளுக்குச் செவிகொடுத்து அவருடைய எல்லாக்கட்டளைகளையுங் கைக்கொண்டால், நாம் எகிப்தியரின்மேல் இறங்கப்பண்ணினவியாதிகளில் ஒன்றையும் உன்மேலே இறங்கப்பண்ணேன். ஏனெனில், நாம் உன்பரிகாரியாகிய கர்த்தரென்றார்.

௨௭. பிறபாடு ஏலிமுக்குவந்தார்கள். அங்கே பன்னிரண்டு நீரூற்றுகளும், எழுபது பேரீச்சமரங்களும் இருந்தன. அங்கே தண்ணீர்களண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல்சனங்கள் சீன்வனாந்திரத்துக்கு வந்தது. (௨) அவர்களப்பமில்லாமையால் முறுமுறுத்தது. (௪) பராபரன் வானத்திலிருந்து அப்பந் தருவிக்கிறேமென்றது. (௰௧) காடைகளையும் (௰௪) மன்னாவையும் அனுப்பினது. (௰௯) மன்னாவைக்குறித்த கட்டளை. (௨௫) ஓய்வுநாளிலேயது காணப்படாதது. (௩௨) அதை ஒருநாழியிற் பத்திரப்படுத்தினது.]

இஸ்ரவேல்புத்திரர் ஏலிமைவிட்டுப் பயணம் புறப்பட்டார்கள். அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாமாதம் பதினைந்தாந்தேதியிலே அவர்களுடைய சபையெல்லாம் ஏலிமுக்கும், சீனாய்க்கும் நடுவேயிருக்கிற சீன்வனாந்தரத்திலே வந்தது.

௨. அங்கே வனாந்தரத்திலே இஸ்ரவேல்புத்திரரின் சபையெல்லாம் மோசேக்கும், ஆரோனுக்கும் விரோதமாக முறுமுறுத்து.

௩. அவர்களோடே சொன்னதாவது; * நாங்கள் இறைச்சிப்பானைகளண்டையிலே உட்கார்ந்து அப்பத்தைத் திர்ப்தியாகச் சாப்பிட்ட எகிப்துதேசத்திலே கர்த்தரின் கையினாலே, செத்துப் போனோமானால் தாவலை. ஏனெனில், இந்தக்கூட்டத்தையெல்லாம் பட்டினியினாலே கொன்றுபோட எங்களைப்புறப்படப்பண்ணி, இந்தவனாந்தரத்திலே அழைத்து வந்தீர்களென்றார்கள். * ௪. மோசே. ௰௧, ௪.

௪. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; இதோ, நாம் உங்களுக்கு வானத்திலிருந்து அப்பம் வருஷிக்கப் பண்ணுவோம். சனம் நமது நியாயப்பிரமாணத்திலே நடக்குமோ இல்லையோவென்று நாம் சோதிக்கும்படிக்கு அது புறப்பட்டு அன்றன்றுள்ளபடியை ஒவ்வொருநாளிலே சேர்க்கக்கடவது.

௫. ஆறாம் நாளிலோவென்றால், அவர்கள் கொண்டுவருகிறதைச் சேகரம் பண்ணக்கடவர்கள். அவர்கள் தினந்தினஞ்சேர்க்கிறதைப் பார்க்கிலும் அப்பொழுது இரண்டத்தனையுண்டாயிருக்குமென்றார்.

௬. அப்பொழுது மோசேயும், ஆரோனும் இஸ்ரவேல்புத்திரரெல்லாரோடுஞ் சொன்னதாவது; கர்த்தர் உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவரென்பதைச் சாயங்காலத்திலேயறிவீர்கள்.

௭. விடியற்காலத்திலே கர்த்தருடைய மகிமையையுங் காண்பீர்கள். ஏனெனிற் கர்த்தருக்குவிரோதமான உங்கள் முறுமுறுப்புகளையவர் கேட்டார். நீங்கள் எங்களுக்கு விரோதமாய் முறுமுறுக்கிறதற்கு நாங்களெம்மாத்திரமென்றார்கள்.

௮. பின்னையும் மோசே சொன்னதாவது; கர்த்தர் உங்களுக்குச் சாயங்காலத்திலே நீங்கள் புசிக்கிறதற்கு இறைச்சியையும்,

விடியற் காலத்திலே நீங்கள் திப்பியடையும்படிக்கு அப்பத்தையுங் கொடுக்கையில் அறிந்து காண்பீர்கள். ஏனெனில், கர்த்தருக்கு விரோதமாக நீங்கள் முறுமுறுத்த உங்கள் முறுமுறுப்புகளை யவர் கேட்டார். நாங்களெம்மாத்திரம்! உங்கள் முறுமுறுப்புகள் எங்களுக்கல்ல, கர்த்தருக்கே விரோதமாயிருக்கிறதென்றான்.

௯. பிறபாடு மோசே ஆரோனுடனே கர்த்தருக்கு முன்பாகச் சேருங்கள். ஏனெனில், உங்கள் முறுமுறுப்புகளைக் கேட்டாரென்று இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கெல்லாஞ் சொல்லென்றான்.

௰. ஆரோன் இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கெல்லாம் இதைச் சொல்லுகிற பொழுது, அவர்கள் வனாந்தர திசையாகத் திரும்பிப் பார்த்தார்கள். அப்பொழுது இதோ, கர்த்தருடைய மகிமை மேகத்திலே காணப்பட்டது.

௰௧. கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௰௨. இஸ்ரவேல் புத்திரரின் முறுமுறுப்புகளைக் கேட்டோம். நீ அவர்களுடனே பேசி நீங்கள் சாயங்காலத்திலே இறைச்சியைப் புசித்து விடியற்காலத்திலே அப்பத்தால் திர்ப்தியாகி, நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்பதை அறிவீர்களென்று சொல்லென்றார்.

௰௩. சாயங்காலத்திலே சம்பவித்ததேதென்றால், * காடைகள் வந்தேறிப் பாளயத்தை மூடின. விடியற்காலத்திலோவென்றால், பாளயத்தைச் சுற்றிப் பனி விழுந்திருந்தது.
* சங். மோசே. ௰௧, ௩௧.

௰௪. விழுந்திருந்த பனி எழும்பினபிறபாடு இதோ, வனாந்தரத்தின் மீதெங்கும் உருட்சியான பொடித் துணிக்கைகள் இருந்தன. அவைகள் தரையின்மேல் உறைந்த பனியத்தனைப் பொடியாய்க் கிடந்தன.

௰௫. இஸ்ரவேல் புத்திரர் அதைக் கண்டு, ஒருவருக்கொருவர் அது மன்னாவென்றார்கள். ஏனெனில், அதென்னவென்றறியாதிருந்தார்கள். அப்பொழுது மோசே அவர்களோடே சொன்னதாவது; இது கர்த்தர் உங்களுக்குப் புசிக்கக்கொடுத்த அப்பம்.

௰௬. கர்த்தர் கற்பித்த காரியம் ஏதென்றால், அவனவன் புசிக்கத்தக்கமட்டும் அதிலெடுத்துச் சேர்க்கக்கடவீர்கள். உங்கள் ஆத்துமாக்களுடைய இலக்கத்தின்படியே அவனவன் தன் தன் கூடாரத்திலிருக்கிறவர்களுக்காக ஒவ்வொரு தலைக்கு ஒவ்வொரு நாழி விழுக்காடு எடுத்துக்கொள்ளக்கடவீர்களாகவென்றான்.

௰௭. இஸ்ரவேல் புத்திரர் அப்படிச் செய்து, சிலர் அநேகமுஞ் சிலர் கொஞ்சமுமாய்ச் சேர்த்தார்கள்.

௰௮. பிறகு நாழியினால் அளந்தார்கள். * அநேகமாய்ச் சேர்த்தவனுக்கு அதிகமானதுமில்லை. கொஞ்சமாய்ச் சேர்த்தவனுக்குக் குறைச்சலானதுமில்லை. அவரவர் தாங்கள் புசிக்கத்தக்கமட்டும் எடுத்துக்கொண்டார்கள். * ௨. கொரி. ௮, ௰௫.

௰௯. மோசே அவர்களுடனே ஒருவனும் அதில் விடியற்காலமட்டும் ஒன்றும் வைக்க வேண்டாமென்றான்.

௨௰. ஆனால் மோசேயின் சொற்கேளாமற் சிலர் அதில் விடியற்காலமட்டுங் கொஞ்சம் மீதியாய் வைத்தார்கள். அது பூச்சிபிடித்து நாற்றமெடுத்தது. அவர்கள் மேலே மோசே கடுங்கோபமடைந்தான்.

௨௰௧. அதைக் காலமே அவனவன் புசிக்கத்தக்கமட்டுஞ் சேர்த்தார்கள். ஏனெனில், வெயில் ஏறுகிறபொழுது, உருகிப்போம்.

௨௰௨. ஆறாம்நாளிலே சம்பவித்ததேதென்றால், அவர்கள் இரண்டத்தனை அப்பம் ஒவ்வொருவனுக்கு இரண்டு இரண்டு நாழியாகச் சேர்த்தார்கள். அப்பொழுது சபையின் தலைவரெல்லாரும் வந்து அதை மோசேக்கறிவித்தார்கள்.

௨௰௩. அவன் இவர்களோடே சொன்னதாவது; கர்த்தர் சொன்னது இதுதானே. நாளைக்குக் கர்த்தருடைய பரிசுத்த ஓய்வுநாளாகிய ஓய்ந்திருக்குதல். நீங்கள் சுடப்போகிறதைச் சுட்டுச் சமைக்கப்போகிறதைச் சமைத்து மீதியாயிருக்கிறதையெல்லாம் நாளைமட்டும் உங்களுக்காக வைத்துவையுங்களென்றான்.

௨௰௪. மோசே கற்பித்தபடியே அதை மறுநாள்மட்டும் வைத்தார்கள். அப்பொழுது அது நாறினதுமில்லை. அதிலே பூச்சிபிடித்திருந்ததுமில்லை.

௨௰௫. அப்பொழுது மோசே சொன்னதாவது; அதை இன்றைக்குப் புசியுங்கள். ஏனெனில், இன்று கர்த்தரின் ஓய்வுநாள். இன்று நீங்கள் அதை வெளியிலே கண்டுபிடிப்பதில்லை.

௨௰௬. ஆறு நாளும் அதைச் சேர்ப்பீர்களாக. ஏழாம்நாள் ஓய்வுநாளாயிருக்கின்றது. அதிலே அது உண்டாயிராதென்றான்.

௨௰௭. ஏழாம்நாளிலே சம்பவித்ததேதெனில், சனத்திலே சிலர் அதைச் சேர்க்கப் புறப்பட்டார்கள். ஆனாற் கண்டுபிடியாதே போனார்கள்.

௨௰௮. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நமது கற்பனைகளையும், நமது நியாயப்பிரமாணங்களையுங் கைக்கொள்ள எந்தமட்டும் மனதில்லாதே போகிறீர்கள்.

௨௰௯. பாருங்கள். கர்த்தர் உங்களுக்கு ஓய்வுநாளைக் கொடுத்தபடியினாலே, அவர் உங்களுக்கு ஆறாம்நாளிலே இரண்டு நாளுடைய

அப்பத்தைக் கொடுக்கிறோர். ஏழாம் நாளில் ஒருவனும் தன் தானத்திலிருந்து புறப்படாமல் நீங்கள் அவனவன் தன் தன் தானத்திலிருங்களென்றார்.

௩௰. அப்படியே சனம் ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தது.

௩௰௧. இஸ்ரவேல்வீட்டார் அதற்கு மன்னாவென்று பெயரிட்டார்கள். * அது கொத்துமல்லி விதையத்தனை மாத்திரமும், வெண்மையுமாயிருந்தது. அதின் ருசி தேனிட்ட கச்சாயத்தைப் போலாயிருந்தது. * ௪. மோசே. ௰௧, ௭.

௩௰௨. மோசே சொன்னதாவது; கர்த்தர் கற்பித்த காரியமேதெனில், நாமுங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின பொழுது, உங்களுக்கு வனாந்தரத்திலே புசிக்கக் கொடுத்த அப்பத்தை உங்கள் தலைமுறைகளார் பார்க்கும்படிக்கு அவர்களுக்காகக் காத்துவைப்பதற்கு அதிலே ஒரு நாழி நிரப்ப எடுத்து வையென்பதுதானென்றான்.

௩௰௩. பின்னையும் மோசே ஆரோனுடனே, * நீ ஒரு பாத்திரத்தைவாங்கி அதிலே ஒரு நாழி மன்னாவைப் போட்டு, அதை உங்கள் தலைமுறைகளுக்காகக் காப்பதற்குக் கர்த்தருக்கு முன்பாக வையென்றான். * எபி. ௯, ௪.

௩௰௪. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அது காக்கப்படும்படிக்கு ஆரோன் அதைச் சாட்சிக்கு முன்பாக வைத்தான்.

௩௰௫. * இஸ்ரவேல்புத்திரர் குடியிருப்பான தேசத்திற்கு வருமட்டும் நாற்பது வருஷமட்டும் மன்னாவைப் புசித்தார்கள். அவர்கள் கானான் தேசத்தின் எல்லையில் வருமட்டாகத்தானே மன்னாவைப் புசித்தார்கள். * யோசு. ரு, ௰௨.

௩௰௬. ஒரு நாழியாவென்றால், மரக்காலிலே பத்திலொருபங்காயிருக்கின்றது.

## ௰௭. அதிகாரம்.

[(௧) இரவீதிமிலே சனங்கள் தண்ணீரில்லாமல் பொறுகின்றது. (ரு) பராபரன் மோசேயை ஓரேபிலே கன்மலையில் தண்ணீருண்டாம்படி செய்ய அனுப்பினது. (௮) மோசே தன் கைகளை யேறெடுத்ததால், ஆமலேக் தோற்றுப்போனது. (௰ரு) மோசே பலிபீடத்தைக் கட்டிக் கர்த்தரோனுடைய கொடியென்று பெயர்கொடுத்தது.

பிற்பாடு இஸ்ரவேல்புத்திரரின் சபையெல்லாரும் சீன்வனாந்தரத்திலிருந்து பயணம்புறப்பட்டுக் கர்த்தருடைய கட்டளையின்படியே பயணமாய் தங்கள் பயணங்களில் இரவீதிமிலே வந்து பாளயமிறங்கினார்கள். அங்கே சனங்குடிக்கத் தண்ணீரில்லாதிருந்தது.

௨. அப்பொழுது சனம் மோசேயோடே வாதுபண்ணி, நாங்கள் குடிக்கிறதற்கு எங்களுக்குத் தண்ணீர் தாருங்களென்றார்கள். மோசேயோவென்றால், அவர்களுடனே என்னோடே ஏன் வாதுபண்ணுகிறீர்கள்! கர்த்தனையேன் பரிட்சைபார்க்கிறீர்களென்றான்.

௩. ஆனால் சனம் அவ்விடத்திலே தண்ணீர்த் தவனமாயிருந்தபடியினாலே சனம் மோசேக்கு விரோதமாக முறுமுறுத்து, நீர் எங்களையும், எங்கள் பிள்ளைகளையும், எங்கள் ஆடுமாடுகளையும் தண்ணீர்த் தவனத்தினாலே கொன்றுபோட எங்களை எகிப்திலிருந்து வரத்தேற்பண்ணினதேதென்றார்கள்.

௪. மோசே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு, இந்தச் சனத்திற்கென்ன செய்வேன்! * அவர்கள் என்னைக் கல்லெறியச் சற்றுத்தப்புமென்றான். * ௪. மோசே. ௰௪, ௰.

ரு. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ சனத்திற்கு முன்பாக நடந்து இஸ்ரவேல் மூப்பரில் சிலரை உன்னோடே கூட்டி, நீ ஆற்றையடித்த உன் கோலை உன் கையிலே பிடித்துக்கொண்டு போ.

௬. இதோ; நாம் அங்கே ஓரேபிலே உனக்கு முன்பாகக் கன்மலையின்மேல் நிற்போம். அங்கே கன்மலையையடிப்பாயாக. அப்பொழுது சனங்குடிக்க, அதிலிருந்து தண்ணீர் புறப்படுமென்றார். இப்படியே மோசே இஸ்ரவேலருடைய மூப்பரின் கண்களுக்கு முன்பாகச் செய்தான்.

௭. இஸ்ரவேல்புத்திரருடைய வாதினிமித்தமும், கர்த்தர் எங்கள் நடுவிலிருக்கிறாரோ இல்லையோ என்று, அவர்கள் கர்த்தரைப் பரிட்சைபார்த்ததினிமித்தமும் அவன் அந்தஸ்தலத்திற்கு, * மாசா என்றும், மெரிபா வென்றும் பெயரிட்டான். * சங். ௯ரு, அ. ௯.

௮. ஆமலேக்கியர் வந்து இரவீதிமிலே இஸ்ரவேலரோடே யுத்தம்பண்ணினார்கள்.

௯. அப்பொழுது மோசே யோசுவாவுடனே, நீ நமக்கு மனிதரைத் தெரிந்துகொண்டு புறப்பட்டு, ஆமலேக்குக்கு விரோதமாக யுத்தம்பண்ணு. நாளைக்கு நான் மேட்டினுடைய சிகரத்தின்மேலே பராபரனுடைய கோலை என் கையிற் பிடித்துக்கொண்டு நிற்பேனென்றான்.

௰. மோசே தனக்குச் சொன்னபடியே யோசுவா ஆமலேக்குக்கு விரோதமாக யுத்தம்பண்ணும்படிக்குச் செய்தான். ஆனால் மோசேயும், ஆரோனும், ஊரும் மேட்டினுடைய சிகரத்தின்மேலேறினார்கள்.

௰௧. அப்பொழுது சம்பவித்ததேதென்றால், மோசே தன் கையை ஏற்றெடுத்திருக்கையில், இஸ்ரவேல் மேற்கொண்டது. ஆனால் அவன் தன் கையைத் தாழவிடுகையில், ஆமலேக் மேற்கொண்டது.

௰௨. மோசேயின் கைகளோவென்றால், பாரமாயின. ஆகையால் ஒரு கல்லைக் கொண்டுவந்து, அவனுக்கிழே வைத்தார்கள். அதின்மேல் உட்கார்ந்தான். ஆரோனும்

னூறுபோமேனில், ஒருவனிந்தப்பக்கமும், ஒருவன் அந்தப்பக்கமுமாயிருந்து, அவன் கைகளைத்தாங்கினார்கள். இந்தவிதமாய் அவன் கைகள் சூரியன் அஸ்தமிக்குமட்டும் ஒரேநேராயிருந்தது.

௰௩. அப்படியே யோசுவா ஆம்லேக்கையும், அவன் சனத்தையும் பட்டயத்தின் கருக்கினாலே முறிய அடித்தான்.

௰௪. பிற்பாடு கர்த்தர்மோசேயுடனே, நீ இதை நினைவுகூருதலுக்காக ஒருபுத்தகத்திலெழுதி யோசுவாவின் செவிகளுக்கொப்புவி. ஏனெனில், ஆம்லேக்கைவானத்தின் கீழிராதபடிக்கு நாசம்பண்ணவே பண்ணுவோமென்றார். * ௫. மோசே. ௨௫. ௰௭, ௰௯. ௧. சாமு. ௰௫, ௨௩.

௰௫. மோசே ஒருபீடத்தைக்கட்டி அதற்குக்கர்த்தர் என்னுடைய கொடியென்றுபேரிட்டு,

௰௬. ஆம்லேக்கினகை கர்த்தருடைய ஆசனத்திற்குவிரோதமானபடியினாலே, கர்த்தரின் யுத்தந் தலைமுறை தலைமுறையாக அவனுக்குவிரோதமாக விருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) மோசேமனைவியையும், இரண்டுகுமாரரையும் எத்திரோ கூட்டிக்கொண்டுவந்தது. (௭) மோசேயவனுக்குபசாரஞ் செய்தது. (௰௯) எத்திரோவினாலோசனையங்கிகரிக்கப்பட்டது. (௨௭) எத்திரோபோய்விட்டது.]

பராபரன் மோசேக்குந் தமதுசனமாகிய இஸ்ரவேலுக்குஞ் செய்ததெல்லாவற்றையும், கர்த்தர் இஸ்ரவேலை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதையும் * மீதியானில் ஆசாரியனாயிருக்கிற மோசேயின் மாமனாகிய எத்திரோகேட்டபொழுது, * ௩, ௧.

௨. அவன் * மோசே திருப்பித் தன்னண்டைக்கனுப்பியிருந்த அவன்பெண்சாதியாகிய சிப்போராளையும், * ௪, ௨௰.

௩. அவனுடைய இரண்டு குமாரரையுங் கூட்டிக்கொண்டு பயணப்பட்டான். * ஒருவன்பேர் கேர்சோன். ஏனென்றால், அந்நிய தேசத்திலே பரதேசியானேனென்றான். * ௨, ௨௨.

௪. மற்றவன்பேர் எலியேசர். ஏனென்றால் என் பிதாவின் பராபரன் என் துணையாயிருந்து என்னைப்பார்வோனின் பட்டயத்திற்குத் தப்புவித்தாரென்றான்.

௫. மோசேயின் மாமனாகிய எத்திரோ அவன் குமாரரோடும், அவன் பெண்சாதியோடுங்கூட மோசே பாளயம்போட்டிருந்த பராபரனுடைய பர்வதமிருக்கும் வனாந்தரத்திலே அவனண்டையில்வந்து,

௬. எத்திரோவென்ற உன்மாமனாகிய நானும், உன்பெண்சாதியும், அவளோடேகூட அவளுடைய இரண்டுகுமாரரும் உன்னண்டைக்கு வந்தோமென்று மோசேக்குச் சொல்லியனுப்பினான்.

௭. அப்பொழுது மோசே தன்மாமனுக்கு எதிர்கொண்டுபோய் அவனைவணங்கி முத்தஞ்செய்தான். ஒருவரையொருவர் சுகமுண்டோவென்று கேட்டுக் கூடாரத்திலே வந்தார்கள்.

௮. பிற்பாடு மோசே தன்மாமனுக்குக் கர்த்தர் இஸ்ரவேலுக்காகப் பார்வோனுக்கும், எகிப்தியருக்குஞ் செய்ததெல்லாவற்றையும், வழியிலே தங்களுக்கு நேரிட்ட எல்லாவருத்தத்தையும், கர்த்தர் தங்களை நீங்கலாக்கி விடுவித்ததையும் விவரித்தான்.

௯. கர்த்தர் இஸ்ரவேலை எகிப்தியரின்கைக்குத் தப்புவித்து, அதற்குச்செய்த எல்லா நன்மையினிமித்தமும் எத்திரோ சந்தோஷப்பட்டுச் சொன்னதாவது;

௰. உங்களையெகிப்தியரின்கைக்கும்,பார்வோனின்கைக்குந் தப்புவித்து எகிப்தியருடைய கையின்கீழிருந்தசனத்தை விடுவித்தகர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

௰௧. கர்த்தர் எல்லாத் தேவர்களையும் பார்க்கப்பெரியவரென்பதை இப்பொழுது அறிவேன். ஏனெனில், அவர்கள் இடும்புசெய்த காரியத்திலே அவர்களை மேற்கொண்டாரென்றுசொல்லி,

௰௨. மோசேயின்மாமனாகிய எத்திரோ,சர்வாங்கதகனத்தையும், பலிகளையும் பராபரனுக்குக் கொண்டுபோய்ச் செலுத்தினான். பிறபாடு ஆரோனும், இஸ்ரவேல் மூப்பர் அனைவரும் மோசேயின் மாமனோடேகூடப் பராபரனுக்கு முன்பாக அப்பம் புசிக்க வந்தார்கள்.

௰௩. மறுநாளிலே சம்பவித்ததேதெனில், மோசேசனத்தை நியாயம்விசாரிக்க உட்கார்ந்தான். சனங்காலமே துவக்கிச் சாயங்காலமட்டும் மோசேக்குமுன்பாக நின்றது.

௰௪. அவன் சனத்திற்காகச் செய்ததையெல்லாம் மோசேயின் மாமன்கண்டு நீ சனத்திற்காகச் செய்கிற இந்தக் காரியமென்ன? நீ ஒருவனே உட்கார்ந்திருக்கச் சனமெல்லாங்காலமே துவக்கிச் சாயங்காலமட்டும் உனக்குமுன்பாக நிற்பானேனென்றான்.

௰௫. அப்பொழுது மோசே தன்மாமனுக்குச் சொன்னது; பராபரனைக்கேட்கச்சனம் என்னண்டைக்குவருகிறது.

௰௬. ஏனெனில், அவர்களுக்கு ஒருகாரியமிருந்தால், என்னண்டைக்கு வருகிறார்கள். அப்பொழுது நான் அவனவனுக்கும், அவனவனுக்கடுத்தவனுக்கும், நியாயந்தீர்த்துப் பராபரனுடைய கட்டளைகளையும், அவருடைய நியாயப்பிரமாணங்களையும் அறிவிக்கிறேனென்றான்.

௰௭. அப்பொழுது மோசேயின் மாமன் அவனோடே சொன்னதாவது; நீ செய்கிற காரியம் நல்லதல்ல.

௰௮. நீயும் தொய்யவே தொய்ந்துபோகிறாய். உன்னோடிருக்கிற இந்தச் சனமும் அப்படித்தான். ஏனென்றால், அது உனக்கு மிஞ்சின பாரமான காரியம். நீ ஒருவனாய் அதைச்செய்யக்கூடாது.

௰௯. இப்பொழுதும் என்சொல்லைக்கேள். உனக்கொரு ஆலோசனை சொல்லுவேன். அப்பொழுது பராபரன் உன்னோடேகூட இருப்பார். சனத்திற்காக நீ பராபரனுக்கு முன்பாக இரு. நீ விசேஷங்களைப் பராபரனண்டைக்குக்கொண்டுபோய்,

௨௰. கட்டளைகளையும், நியாயப்பிரமாணங்களையும், அவர்களுக்குத் தெளிப்படுத்தி அவர்கள் நடக்கவேண்டிய வழியையும், அவர்கள் செய்யவேண்டிய கிரியையையும், அவர்களுக்குத் தெரியப்பண்ணுவாயாக.

௨௧. ஆனால் நீ எல்லாச் சனத்திலும் பராபரனுக்குப் பயந்தவர்களும், உண்மையுள்ளவர்களும், பொருளாசையைப் பகைக்கிறவர்களுமான திறமையுள்ள மனிதரைப்பார்த்து அவர்களை அவர்கள்மேல் ஆயிரம்பேருக்கு அதிபதிகளாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாகவும், ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்துப் பேருக்கு அதிபதிகளாகவும் வைவை.

௨௨. அவர்கள் சகல்காலத்திலும் சனத்தை நியாயம் விசாரித்துச் சகல பெரிய காரியத்தையும் உன்னண்டைக்குக்கொண்டு வந்து சகலசிறியகாரியத்தையுந் தாங்கள் தானே தீர்க்கக்கடவர்கள். இப்படி உன்மேல் இருக்கிறபாரத்தை லகுவாக்கு. அவர்கள் உன்னோடேகூடச் சுமப்பார்களாக.

௨௩. இந்தப்பிரகாரமாக நீ செய்வதும் இப்படிப் பராபரன் உனக்குக் கட்டளையிடுவதுமுண்டானால், நீ தரித்திருக்கக்கூடும். இந்த எல்லாச் சனமும் சுகமாய்த் தங்களிடத்திற்கு வந்துசேரலாமென்றான்.

௨௪. மோசே தன் மாமன் சொற்கேட்டு அவன் சொன்னபடி யெல்லாஞ் செய்தான்.

௨௫. மோசே இஸ்ரவேலிலெல்லாந் திறமையுள்ள மனிதரைத் தெரிந்துகொண்டு, அவர்களை ஆயிரம்பேருக்கு அதிபதிகளாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாகவும், ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்துப் பேருக்கு அதிபதிகளாகவுஞ் சனத்தின் மேலே தலைவராக்கினான்.

௨௬. அவர்கள் சகல காலத்திலும் சனத்தை நியாயம்விசாரிப்பார்கள். பலத்தகாரியத்தை மோசேயண்டைக்குக் கொண்டுவந்து சிறிய காரியத்தையெல்லாந் தாங்கள்தானே தீர்ப்பார்கள்.

௨௭. பிறபாடு மோசே தன்மாமனையனுப்பிவிட்டான். இவன் திரும்பத் தன்தேசத்திற்குப்போய்விட்டான்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல் சனங்கள் சீனாய்ப்பர்வதத்திற்கு வந்தது. (௩) அவர்களுக்குப்பர்வதத்திலிருந்து மோசேயைக்கொண்டு பராபரனனுப்பியது. (௮) அவர்கள் மறுமொழியனுப்பினது. (௰) மூன்றும் நாட்கவர்கள் ஆயத்தமாயிருந்தது. (௰௨) அம்மலை தொடப்படாதிருக்கவேண்டுமென்பது. (௰௬) பராபரனுடைய பயங்கரமான தோற்றம் மலையின்மேலிருந்தது.]

இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்டமூன்றுமாதமாகிற அன்றுதானே சீனாய் வனாந்தரத்திலே வந்தார்கள்.

௨. அவர்கள் ரவீதிமிலிருந்து பயணம்புறப்பட்டுச் சீனாய்வனாந்தரத்திலேவந்து வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள். அங்கே பர்வதத்திற்கெதிராக இஸ்ரவேல் பாளயமிறங்கினபொழுது,

௩. மோசே பராபரனண்டைக்கேறினான். கர்த்தர் பர்வதத்திலிருந்து அவனைக்கூப்பிட்டுச் சொன்னதாவது; நீ யாக்கோபு வீட்டாருக்குச் சொல்லவும், இஸ்ரவேல் புத்திரருக்கு அறிவிக்கவும் வேண்டியதேதெனில்,

௪. நாம் எகிப்தியருக்குச் செய்ததையும், * நாமுங்களைக் கழுகுகளுடைய செட்டைகளின்மேலே சுமந்து உங்களை நம்மண்டையிற்சேர்த்ததையும் நீங்கள் கண்டீர்கள்.
* ரு. மோசே. ௩௨, ௰௧.

௫. இப்பொழுதும் நீங்கள் நமது சத்தத்தைக் கேட்கவேகேட்டு நமது உடம்படிக்கையைக்கைக்கொண்டால் சகலசனசதனங்களிலும் * நீங்கள் நமக்குச் சொந்த சம்பத்தாயிருப்பீர்கள். ஏனெனில் பூமியெல்லாம் நம்முடையது. * ரு. மோசே. எ, ௬.

௬. நீங்கள் நமக்கு * ஆசாரிய இராசாங்கமும் பரிசுத்த சாதியுமாயிருப்பீர்களென்பது நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியவார்த்தைகளென்றார்.
* க. பேதுரு. ௨, ௯.

௭. மோசே வந்து சனத்தின் மூப்பரை யழைப்பித்துக் கர்த்தர் தனக்குக் கற்பித்த இந்த வார்த்தைகளையெல்லாம் அவர்களுக்கு முன்பாகச்சொன்னான்.

௮. அப்பொழுது சனமெல்லாமேகமாய்ப் பிரதியுத்தரங் கொடுத்துக் * கர்த்தர் சொன்னதை யெல்லாஞ் செய்வோமென்றார்கள். மோசே சனத்தின் வார்த்தைகளைக் கர்த்தரண்டைக்குத் திரும்பக் கொண்டு போனான். * ௨௪, ௩.

க. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே: இதோ, நானுன்னோடே சொல்லும் வார்த்தைகளைச் சனங்கேட்டு அது உன்னையும் என்றைக்கும் விசுவாசிக்கும்படிக்கு, நான் மேகத்தின் இருட்டிலே உன்னண்டைக்கு வருவேனென்றார். ஏனெனில், சனத்தின் வார்த்தைகளை மோசே கர்த்தருக்கு அறிவித்திருந்தான்.

ய. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ சனத்தண்டைக்குப் போய் இன்றைக்கும், நாளைக்கும் அவர்களைப் பரிசுத்தமாக்கு. அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வெளுத்து,

யக. மூன்றாம் நாளைக்கு ஆயத்தப்பட்டிருக்கக்கடவர்கள். ஏனென்றால், மூன்றாம் நாளிலே கர்த்தர் எல்லாச் சனத்தின் கண்களுக்கு முன்பாகச் சீனாய்ப்பர்வதத்தின் மேலிறங்குவார்.

யஉ. நீ சனத்திற்குச் சுற்றிலும், எல்லை குறித்துப் * பர்வதத்திலேறாத படிக்கும், அதின் அடிவாரத்திலதைத் தொடாதபடிக்கும் எச்சரிக்கையாயிருங்களென்று சொல்லுவாயாக. ஏனெனிற், பர்வதத்தைத் தொடுகிற எவனாகிலுங் கொலையுண்ணவே கொலையுண்பான். * எபிரே. யஉ, யஅ.

யங. ஒரு கையாலும் அதைத் தொட வேண்டாம். மிருகமானாலும் மனிதனானாலுஞ்சரி. அதைத் தொட்டால் உயிரோடே வைக்கப்படாமற் கல்லெறியுண்ணவேயெறியுண்டு, அல்லது எய்யவே எய்யுண்டு சாவ வேண்டும். எக்காளம் நெடுந் தொனியாய்த் தொனிக்கையிலே அவர்கள் பர்வதத்திலே ஏறக்கடவர்களென்றார்.

யச. அப்படியே மோசே பர்வதத்திலிருந்து சனத்தண்டைக்கு இறங்கிச் சனத்தைப் பரிசுத்தமாக்கினான். அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வெளுத்தார்கள்.

யரு. அவன் சனத்துடனே மூன்றாம் நாளைக்கு ஆயத்தப்பட்டிருங்கள். பெண்சாதியைச் சேராதிருங்களென்றான்.

யசா. மூன்றாம் நாளிலே விடியற்காலமாகிற பொழுது சம்பவித்ததேதெனில், இடிமுழக்கங்களும் மின்னல்களும் பர்வதத்தின் மேலே கன்மேகமும் மகா பலத்த எக்காளசத்தமும் உண்டாயிற்று. பாளயத்திலிருந்த சனமெல்லாம் நடுங்கிறது.

யஎ. அப்பொழுது மோசே சனத்தைப் பராபரனுக்கெதிர்கொண்டு போகப் பாளயத்திலிருந்து புறப்படப் பண்ணினான். * அவர்கள் பர்வதத்தின் அடியிலே தாழ்ந்தரித்து நின்றார்கள். * ரு. மோசே. ச, யக.

யஅ. கர்த்தர் சீனாய்ப்பர்வதத்தின்மேல் அக்கினியில் இறங்கினபடியினாலே, அவையெல்லாம் புகைக்காடாயிருந்தது. அதின் புகை சூளையின் புகையைப்போல் எழும்பிற்று. பர்வதமெல்லாம் மிகவும் அதிர்ந்தது.

யகூ. எக்காள சத்தம் வரவர மிகவும் பலமாயிற்று. மோசே பேசினான். பராபரன் அவனுக்குச் சத்தமாய் மறுமொழி கொடுத்தார்.

உய. கர்த்தர் சீனாய்ப்பர்வதத்தின் மீதிலிருக்கிற கொடுமுடியிலே இறங்கினபோது, கர்த்தர் மோசேயைப் பர்வதத்தின் கொடுமுடியிலே வரவழைத்தார். மோசே ஏறினான்.

உக. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; சனங் கர்த்தரண்டைக்கேறிப்பார்க்கிறதற்கு எல்லையைக் கடவாதபடிக்கும், அவர்களில் அநேகர் விழுந்து போகாதபடிக்கும், நீ இறங்கி அவர்களைத் திடச்சாட்சியாக எச்சரி.

உஉ. கர்த்தரண்டையிலே சேருகிற ஆசாரியர்களுங் கர்த்தர் தங்களுக்குள்ளே அழிக்குதல் செய்யாதபடிக்குத் தங்களைப் பரிசுத்தமாக்கக்கடவர்களென்றார்.

உங. அப்பொழுது மோசே கர்த்தருடனே, சனஞ் சீனாய்ப்பர்வதத்தில் ஏறமாட்டாது. ஏனெனில், பர்வதத்தை எல்லைபிரித்து அதைப் பரிசுத்தமாக்கென்று தேவரீர் எங்களைத் திடச்சாட்சியாய் எச்சரித்தீரென்றான்.

உச. அதற்குக் கர்த்தர் மோசேயுடனே இறங்கிப்போ. நீயும் உன்னோடேகூட ஆரோனுமாயேறிவரக்கடவீர்கள். ஆசாரியர்களுஞ் சனமுமோவென்றால், கர்த்தர் தங்களுக்குள்ளே அழிக்குதல்செய்யாதபடிக்கு, அவரண்டைக்கு ஏற எல்லையைக் கடவாதிருப்பார்களாகவென்றார்.

உரு. அப்படியே மோசே சனத்தண்டைக்கு இறங்கி அதையவர்களுக்குச் சொன்னான்.

## உய. அதிகாரம்.

[(க) பத்துக் கற்பனைகள். (யஅ) அந்தச் சனங்கள் பயப்பட்டது. (உய) மோசே யவர்களுக்காறுதல்பேசினது. (உஉ) விக்கிரக ஆராதனை விலக்கப்பட்டது (உச) இவ்விதமாகப் பலிபீடமிருக்கவேண்டுமென்பது.]

அப்பொழுது பராபரன் பேசிச்சொன்ன எல்லாவார்த்தைகளுமாவது;

உ. * உன்னையடிமைவீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் நாமே. * ரு. மோ. ரு, சா. மூ சங்கீதம். அக, யக.

ங. நமக்கு முன்பாக உனக்குவேறு தேவர்களுண்டாயிருக்கவேண்டாம்.

ச. உயரவானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த்தண்ணீரிலும் உண்டானவைகளுக்கொத்திருக்கிற * ஒரு சுரூபத்தையாகிலும், யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீயுனக்குண்டாக்கவேண்டாம் * ரு. மோசே. உசா, க. சங்கீதம். கஎ, எ.

ரு. நீ அவைகளை நமஸ்கரிககவும, அவைகளைச்சேவிககவுமவேணடாம. ஏனெனறல, உன பராபரனுகிய கர்ததராயிருககிற நாம எரிசசலுளள தேவனுயிருநது, நமமைப பகைககிறவர்களுககோவெனறுற பிதாககளுடைய அநியாயததைப பிளளைகளிடததிலே மூனருமநான்காந தலைமுறைமட்டும விசாரிககிறவராயிருககிறேம்.

சு. ஆனல நமமைச சிநேகிதது நமமுடைய கற்பனைகளைக கைக்கொளளுகிறவர்களுககு ஆயிரந்தலைமுறைமட்டுந தயவுசெயகிறவராயிருக்கிறேம.

எ. உனபராபரனுகிய கர்ததருடைய நாமததை வீணிலே வழஙகாயாக. ஏனெனறல, கர்ததர் தமமுடைய நாமத்தை வீணிலே வழஙகுகிறவனைத தணடியாமலவிடார்.

அ. ஓய்வுநாளைப பரிசுததமாககக நினைப பாயாக.

கூ. ஆறுநாள நீவேலைசெயது உன்கிரியையையெலலாம நடபபிபபாயாக.

ய. ஆனல ஏழாமநாள உன் பராபரனுகிய கர்ததருடைய ஓய்வுநாள. அதிலே நீயானுலும, உனகுமாரனுனுலும, உனகுமாரததியானுலும, உனவேலைக்காரனுனுலும, உன் வேலைககாரியானுலும, உன் மிருகசீவனுனுலும, உன்வாசலகளிலிருககிற உனபரதேசியானுலும யாதொரு வேலையைச செயய வேணடாம.

யக. ஏனெனறல, கர்ததர் ஆறுநாளைககுளளே வானத்தையும, பூமியையும், சமுததிரத்தையும, அவைகளிலுளள தெலலாவறறையும உணடாககி, *ஏழாமநாளிலே ஓயநதிருநதார். ஆகையாற கர்ததர் ஓயவுநாளை ஆசீர்வதிதது அதைப பரிசுததமாககினர்.

* க. மோசே. உ, உரு.

யஉ. உனபராபரனுகிய கர்ததர் உனககுக கொடுககிற தேசததிலே உன் நாளகள நீடிததிருககிறதறகு உன் தகபபனையும, உன தாயையுங கனமபணணுவாயாக.

யரு. கொலைசெயயாயாக.

யச. விபசாரமபணணுயாக.

யரு. களவுசெயயாயாக.

யசு உனககடுததவனுககு விரோதமாகப பொயசசாட்சி சொலலாயாக.

யஎ. உனககடுததவன வீட்டை இச்சியாயாக. உனககடுததவனுடைய பெணசாதியையும, அவனுடைய வேலைககாரனையும, அவனுடைய வேலைககாரியையும, அவனுடைய எருதையும, அவனுடைய கழுதையையும, பினனையு முனககடுததவனுககுளள யாதொனறையும இச்சிககாயாக வெனறர்.

யஅ. சனமெலலாம இடிமுழககஙகளையும, மினனலகளையும, எககாள சத்தத்தையும, பர்வதம புகைகிறதையுங கணடார்கள. அதைக காணகையிற சனம பினவாஙகித தூரததிலே நினறு,

யசு. மோசேயுடனே நீர் எஙகளோடே பேசும, நாஙகள கேட்போம. நாஙகள சாவாதபடிக்குப பராபரன் எஙகளோடே பேசாதிருபபாராக வெனறர்கள.

உய. மோசே சனததுடனே பயபபடாதிருஙகள. ஏனெனில, உஙகளைச் சோதிபபதற்காகவும, நீஙகள பாவஞ்செயயாதபடிககு அவர் பயம உஙகள முகததிறகு முனபாக இருப்பதறகாகவும, பராபரன வநதாரெனறன்.

உக. சனந தூரததிலே நினறது. மோசேயோவெனறல, பராபரன இருநத இருளுககுளளே சேர்நதுபோனுன.

உஉ. அப்பொழுது கர்ததர் மோசேயோடே சொன்னதாவது; நீ இஸ்ரவேல புததிரரோடே சொலலவேணடிய தேதெனில, நாமவானததிலிருநது உஙகளோடேபேசினதை நீஙகள கணடீர்கள.

உரு. நீஙகள நமககு முனபாக வெளளித தேவர்களையாகிலும, பொனதேவர்களையாகிலும, உஙகளுககுணடாககவே உணடாககவேணடாம.

உச. நீ மணணுனபலிபீடததை நமககுணடாககி அதினமேல உன தகனபலிகளையும, உன சமாதானபலிகளையும, உன ஆடுகளையும, உனமாடுகளையுமபலியிடுவாயாக நாம எவவிடத்திலாகிலும நமமுடையநாமததைப பிரஸ்தாபம பணணினுல, அவவிடததில உனனணடைககுவநது உனனை யாசீர்வதிபபோம.

உரு. கலலான பலிபீடததை நமககுணடாககப போனுயேயாகில, அதைவெட்டின கற்களாலே கட்டாயாக. ஏனெனறல, நீ உனஉளியை அதினமேல நடமாடபபணணுகிறதினுல, அதைப பரிசுததக குலைசசலாககுவாய.

உசு. நமது பலிபீடததிறகு முனபாக உன நிருவாணங காணபபடாதபடிககு நீ அதறகுட்படிகளாலேறவும வேணடாம.

## உக. அதிகாரம்.

[(க) அணவேலைககாரரைககுறிததும, (ரு) காதுகுததபபட்ட வேலைககாரரைககுறிததும, (எ) பெணவேலைககாரர்களைககுறிததும, (ய) மனிதர் கொலையைக குறிததும, (யசு) மனிதர்களைத திருடுகிறவர்களைக குறிததும, (யஎ) தாய்தந்தையரைச் சபிக்கிறவர்களைக குறிததும, (யஅ) அடிக்கிறவர்களைக் குறிததும, (உஉ) தற்செயலாய் நேரிடுகிறகாயததைககுறிததும, (உஅ) ஒருமாடு முட்டினதைக்குறிததும, (ருரு) ஒருவனுக்குச்சேதமவரப்பணணினவனைக் குறிததுமதரப்பட்ட கட்டளை.]

பின்னும் நீ அவர்களுக்கு அறியப் பண்ணவேண்டிய நியாயமாவது;

௨. எபிரேய சாதியான அடிமையைக் கொண்டாயானால், அவன் ஆறுவருஷஞ் சேவித்து, ஏழாம்வருஷத்திலே இலவசமாகத் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்பட்டுப்போவானாக.

௩. ஒண்டிக்காரனாய் வந்திருந்தானானால், ஒண்டிக்காரனாய்ப் புறப்படுவானாக. பெண் சாதிக்குப் புருஷனாயிருந்தானானால், அவன் பெண்சாதி அவனோடேகூடப் புறப்படுவாளாக.

௪. அவனெசமான் அவனுக்குப் பெண்சாதியைக் கொடுத்ததும், இவள் அவனுக்கு ஆண்பிள்ளைகளையாகிலும் பெண்பிள்ளைகளையாகிலும் பெற்றதுமுண்டானால், பெண்சாதியும், அவள் பிள்ளைகளும் எசமானைச் சேர்வார்களாக. அவனொருவனாய்ப் புறப்படுவானாக.

௫. அந்த வேலைக்காரனோவென்றால், என் எசமானையும், என் பெண்சாதியையும், என் பிள்ளைகளையுஞ் சிநேகிக்கிறேன். நான் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்படுவதில்லையென்று சொல்லவே சொன்னால்,

௬. அவன் எசமான் அவனைத் தேவர்களண்டைக்கழைத்துப்போய் அவனைக் கதவின்கிட்ட அல்லது கதவின் நிலையின்கிட்டச் சேரப்பண்ணக்கடவன். அங்கே அவனெசமான் அவன் காதைக் கம்பியினாலே குத்துவானாக. அதற்குப்பின் என்றைக்கும் அவனுக்கு வேலைசெய்யக்கடவன்.

௭. ஒருவன் தன் மகளை வேலைக்காரியாக விற்றுப்போட்டானானால், அவள் வேலைக்காரர் புறப்படுகிறதுபோலப் புறப்படலாகாது.

௮. அவளைத் தனக்கு நியமித்த எசமானின் பார்வைக்கு ஆகாதேபோனால், அவள் மீட்கப்படட்டும். அவன் அவளைத் துரோகம்பண்ணி அவளை அந்நியசாதியார் கையிலே விற்றுப்போட அவனுக்கதிகாரமில்லை.

௯. அவன் தன் குமாரனுக்கவளை நியமித்தானானால் குமாரத்திகளின் நியாயத்திற்குத் தக்கதாய் அவளுக்குச் செய்யக்கடவன்.

௰. அவனுக்கு வேறொருத்தியைக் கொண்டானேயாகில், அவளுடைய பிழைப்பையும், உடுப்பையுங், குடியிருப்பையுங் குறைக்காமலிருப்பானாக.

௰௧. அவன் இந்த மூன்றும் அவளுக்குச் செய்யாதேபோனால், அவள் கிரயமில்லாமல் இலவசமாய்ப் புறப்படவேண்டும்.

௰௨. * ஒருவனைச் சாகஅடித்தவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

* ௧. மோசே. ௯, ௬.

௰௩. இவன் அவனுக்குச் சதிபண்ணாமற் பராபரன் அவனை இவன் கைக்கு நேரிடப் பண்ணினாரேயாகில், இவனோடிப்போயிருக்கும் அடைக்கலத்தை யுனக்குக் கட்டளையிடுவோம். * ௪. மோசே. ௩௫, ௬.

௰௪. ஒருவன் தனக்கடுத்தவனுக்கு விரோதமாக அவனைச் சற்பனையாய்க் கொன்றுபோடும் அகங்காரத்தைப் பண்ணினானேயானால், அவன் சாகும்படிக்கு, அவனை நம்முடைய பீடத்தண்டையிலுமிருந்து பிடித்துக்கொண்டுபோவாயாக.

௰௫. தன் தகப்பனையாகிலும், தன் தாயையாகிலும் அடிக்கிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௬. எவனொருவன் ஒரு மனிதனைத் திருடி அவனை விற்றுப்போட்டால், அல்லது இவன் அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டானானால், அவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௭. * தன் தகப்பனையாகிலும், தன் தாயையாகிலுஞ் சபிக்கிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். * ௩. மோசே. ௨௰, ௯.

௰௮. மனிதர் சண்டைபண்ணி ஒருவன் தனக்கடுத்தவனைக் கல்லினாலெறிந்து, அல்லது கையினாலே அடித்ததினாலே இவன் சாவாமற் கட்டிறக்கிடையாய் விழுந்து,

௰௯. திரும்ப எழுந்திருந்து வெளியிலே தன் ஊன்றுகோலைப் பிடித்து நடமாடினால், அடித்தவன் ஆக்கினைக்கு நீங்கலாயிருப்பான். ஆனால் அவனுக்கு வேலையின் கெட்ட நஷ்டத்தைக் கொடுத்து, அவனை நன்றாகக் குணமாக்குவிக்கக்கடவன்.

௨௰. ஒருவன் தன்னடிமையை அல்லது தன்னடிமைப்பெண்ணைக் கோலினால் அடிக்கிறதினாலே இவர் அவன் கையின் கீழ்ச் செத்துப்போனால் பழிக்குப்பழி வாங்கப்படவேண்டும்.

௨௰௧. ஒருநாள் அல்லது இரண்டுநாள் இருந்தானேயாகிற் பழிவாங்கப்படவேண்டாம். ஏனெனில், இவன் அவனுடைய உடைமையாயிருந்தவன்.

௨௰௨. மனிதர் சண்டைபண்ணிக் கர்ப்பவதியான ஒரு ஸ்திரீயை யடிக்கிறதினாலே அவளுக்கு வேறே சேதமில்லாமற் கர்ப்பம் விழுந்தபோனால், அப்பொழுது அடித்தவன் ஸ்திரீயின் புருஷன் தன்மேலே சுமத்துகிற தண்டத்துக்குத்தக்கதாயத் தருமத்தாருடைய தீர்ப்பின்படியே தண்டங்கொடுக்கவே கொடுக்கவேண்டும்.

௨௰௩. வேறே சேதமுண்டாயிற்றேயானால் சீவனுக்குச் சீவன்.

௨௰௪. கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலுக்குக் கால்,

௨௰௫. சூட்டுக்குச் சூடு, காயத்துக்குக் காயம், தழும்புக்குத் தழும்பு பழிகொடுக்கக்கடவன்.

௨௬. ஒருவன் தன்னடிமையின் கண்ணிலே அல்லது தன்னடிமைப் பெண்ணின் கண்ணிலே அடிக்கிறதினாலே அதைக்கெடுத்தால், அவன் இவர்கண்ணுக்குப் பதிலாக இவரைத் தன்னிச்சைக்காரராக அநுப்பிவிடவேண்டும்.

௨௭. அவன் தன்னடிமையின் பல்லை அல்லது தன்னடிமைப்பெண்ணின் பல்லைவிழப் பண்ணினால், அவன் இவன்பல்லுக்குப்பதிலாக இவரைத் தன்னிச்சைக்காரராக அநுப்பிவிடவேண்டும்.

௨௮. ஒரு மாடு ஒரு ஆண்சாதியை அல்லது ஒரு பெண்சாதியை முட்டிப்போட்டதினாலே சாவுண்டானால், அந்தமாடு கல்லெறியவேகல்லெறியப்படவும், அதின்மாம்சம் புசிக்கப்படாதே போகவுங்கடவது. அப்பொழுது மாட்டின் எசமான் ஆக்கினைக்கு நீங்கலானவன்.

௨௯. ஆனால் மாடு முதலே முட்டுகிறதாயிருந்து, அது அதின் எசமானுக்கு அறிவிக்கப்பட்டும், அவன் அதைப் பத்திரம்பண்ணாததினாலே அது ஒரு ஆண்சாதியை அல்லது ஒருபெண்சாதியைக்கொன்றுபோட்டால், மாடு கல்லெறியப்படவேண்டும். அதின் எசமானுங் கொலைசெய்யப்படவேண்டும்.

௩௰. மீட்புக்கு அபராதம் அவன்மேலே சுமத்தப்பட்டதேயானால், அவன் தன்ஜீவனை மீட்கும்பொருளாகத் தன்மேலேசுமத்தப்பட்டபடி எல்லாஞ் செலுத்தக்கடவன்.

௩௧. அது ஒருவன் மகனை முட்டிப்போட்டாலுஞ்சரி, ஒருவன்மகளை முட்டிப்போட்டாலுஞ்சரி, இந்தநியாயத்தின்படியே அவனுக்குச் செய்யப்படக்கடவது.

௩௨. மாடு ஒரு அடிமையை அல்லது அடிமைப்பெண்ணை முட்டிப்போட்டிருந்தால், அவன் இவருடைய எசமானுக்கு முப்பது சேக்கல்நிறை வெள்ளியைக் கொடுக்கவும், மாடுகல்லெறியப்படவும்வேண்டும்.

௩௩. ஒருவன் ஒருகுழியைத்திறந்துவைத்ததினாலே அல்லது ஒருகுழியைவெட்டி அதை மூடாதேபோனதினாலே அதிலே ஒருமாடாவது ஒருகழுதையாவது விழுந்தால்,

௩௪. குழிக்குடையவன் அதின் விலையைக் கொடுத்துப் பணமாய் அதின் எசமானுக்குச்செலுத்தவுங்கடவன். செத்ததோ, அவனுடையதாகவேண்டியது.

௩௫. ஒருவனுடைய மாடு அவனுக்கடுத்தவனுடையமாட்டை முட்டிப் போட்டதினாலேஇதுசெத்தால், அவர்உயிரோடிருக்கிறமாட்டைவிற்று, அதின் கிரயத்தைப்பங்கிட்டுச் செத்ததையும் பங்கிட்டுக்கொள்ளக்கடவர்கள்.

௩௬. அல்லவென்று அந்தமாடுமுதலேமுட்டுகிறமாடென்று அறியப்பட்டிருந்தும் அதின்எசமான் அதைப் பத்திரம்பண்ணாதிருந்தானானால், அவன் மாட்டுக்கு மாட்டைக் கொடுக்கவேகடவன். செத்ததோ அவனுடையதாகவேண்டியது.

## ௨௨. அதிகாரம்.

[(௧) களவைக்குறித்தது. (௫) நஷ்டத்தைக் குறித்தது. (௭) நியாயவிரோதத்தைக்குறித்தது. (௰௪) கடன்வாங்குகிறதைக்குறித்தது. (௰௬) புணர்ச்சியைக்குறித்தது. (௰௮) சூனியத்தைக்குறித்தது. (௰௯) மிருகத்தோடேபுணருகிறவனைக்குறித்தது. (௨௰) விக்கிரகாராதனையைக்குறித்தது. (௨௧) அந்நியர்களையும், கைம்பெண்சாதிகளையும், தகப்பனில்லாதவர்களையுங் குறித்தது. (௨௫) அநியாயவட்டியைக்குறித்தது. (௨௬) கொதுவைகளைக் குறித்தது. (௨௮) நியாயாதிபதிக்குச்செய்யும்மரியாதையைக்குறித்தது. (௨௯) முதல்விளைச்சலைக்குறித்தது.]

ஒருவன் ஒருமாட்டை அல்லது ஒரு ஆட்டைத்திருடி அதையடித்தால், அல்லவென்று அதைவிற்றுப்போட்டால், அவன் மாட்டுக்கைந்துமாடுகளையும், ஆட்டுக்கு நாலு ஆடுகளையுந் திரும்பக்கொடுக்கக்கடவன்.

௨. திருடன் கன்னமிடுகையிற் கண்டுபிடிக்கப்பட்டு அடிக்கப்பட்டுச் செத்தால், அவனுக்காக இரத்தப்பழிசுமக்காது.

௩. சூரியன் அவன்மீதில் உதித்திருந்ததேயானால், அவனுக்காக இரத்தப்பழிசுமக்கும். திருடனோவென்றால், திரும்பச்செலுத்தவேசெலுத்தக்கடவன். அவனுக்கு இல்லாதிருந்தால் தன்களவுக்காக விலைப்படக்கடவன்.

௪. அவன் திருடின மாடாகிலும், கழுதையாகிலும், ஆடாகிலும் உயிருடனே அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டால், இரட்டிப்பாகத் திரும்பச்செலுத்தக்கடவன்.

௫. வயலையாகிலும், திராட்சத்தோட்டத்தையாகிலும் பட்டிமேய ஒருவன் தன்மிருகஜீவன்களை வேறொருவன் நிலத்திலே விட்டால், அவன் தன்வயலிலே நலமானதிலும், தன் திராட்சத் தோட்டத்திலே நலமானதிலும் எடுத்து உத்தரவாதம்பண்ணக்கடவன்.

௬. அக்கினியெழும்பி முள்ளுகளிலே பற்றிக்கொண்டு, கதிர்ப்போரையாகிலும், பயிரையாகிலும் நிலத்திலுள்ளதையாகிலுஞ் சுட்டுப்போட்டால், அக்கினியைக்கொளுத்தினவன் அக்கினிச்சேதத்திற்கு உத்தரவாதம் பண்ணவேண்டும்.

௭. ஒருவன் தனக்கடுத்தவன் வசத்திலே திரவியத்தையாகிலும், உடமையையாகிலும் அடைக்கலமாக வைத்திருக்கும்போது அது அவன் வீட்டிலிருந்து திருடப்பட்டுப்போனால், அப்பொழுது திருடன் அகப்பட்டானேயாகில், அவன் இரட்டிப்பாகத் திரும்பச்செலுத்தவேண்டும்.

அ. திருடன் அகப்படாதேபோனால், அப்பொழுது அந்தவீட்டுக்காரன் தனக்கடுத்தவனுடைய பொருளின்மேலே தன்கையைப் போட்டதில்லையோவென்பதற்காகத் * தேவர்களண்டைக்குக் கொண்டுபோகப் படக்கடவன். * உக, கூ.

கூ. ஒரு மாட்டுக்காகிலும், கழுதைக்காகிலும், ஆட்டுக்காகிலும், வஸ்திரத்திற்காகிலும், ஒருவன் தன்னுடையதென்று சொல்லுகிற காணாமற்போன யாதொருபொருளுக்காகிலும் அநியாய நியாயத்திலுடைய யாதொரு வழக்கிருந்தால், இருதிறத்தாருடைய நியாயமும் தேவர்களண்டைக்கு வரக்கடவது. தேவர்கள் எவனைக் குற்றவாளியென்று தீர்க்கிறார்களோ, அவன் தனக்கடுத்தவனுக்கு இரட்டிப்பாகத் திருப்பச் செலுத்தக்கடவன்.

ய. ஒருவன் தனக்கடுத்தவன்வசத்தில் ஒரு கழுதை, மாடு, ஆடுமுதலான மிருகஜீவனை அடைக்கலமாகவிட்டிருக்கும்போது அது செத்தால் அல்லது சேதப்பட்டால், அல்லது ஒருவருங்காணாமல் ஓட்டிக்கொண்டு போகப்பட்டால்,

யக. அப்பொழுது அவன் தன் கையைத் தனக்கடுத்தவனுடைய பொருளின்மேலே போட்டதில்லையோவென்பதற்காகக் கர்த்தருடைய ஆணையிருவருக்குள்ளும் நடுவாகக் கக்கடவது. அதில் அதின் எசமான் அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். மற்றவன் கொடுக்கத்தேவையில்லை.

யஉ. அது அவன்வசத்திலிருந்து திருட்டுப் பட்டுப்போயிற்றேயானால், அவன் அதின் எசமானுக்கதற்காக உத்தரவாதம்பண்ணக்கடவன்.

யங. அது பீறப்பட்டதேயானால், அதற்குச் சாட்சியைக் கொண்டுவரக்கடவன். பீறுண்டதற்காக அவன் உத்தரவாதம்பண்ணத் தேவையில்லை.

யச. ஒருவன் தனக்கடுத்தவனிடத்தில் இரவல்வாங்கினது அதின் எசமானண்டையில் இராதிருக்கும்போது சேதப்பட்டால், அல்லது செத்துப்போனால், அவன் உத்தரவாதம்பண்ணக்கடவன்.

யரு. அதின் எசமான் அண்டையில் இருந்தானேயாகில், இவன் உத்தரவாதம்பண்ணுவதில்லை. அது குடிக்கூலிக்கு வாங்கப்பட்டிருந்தால், அது அவன் குடிக்கூலிக்கு வந்தசேதம்.

யசு. நியமிக்கப்படாத ஒரு கன்னியாஸ்திரீயை ஒருவன் மோசம்போக்கி அவளோடே சயனித்தால், அவன் அவளுக்காகப் பரியங்கொடுக்கவேகொடுத்து அவளை விவாகம்பண்ணவேண்டும்.

யஎ. அவள்தகப்பன் அவளை அவனுக்குக் கொடுக்கமாட்டோமென்றானேயாகில், இவன் கன்னியாஸ்திரீகளுக்காகக் கொடுக்கப்படுகிற பரியமுறைமையின்படியே திரவியம் நிறுத்துக்கொடுக்கவேண்டும்.

யஅ. சூனியக்காரியை நீ உயிரோடே வைக்கவேண்டாம்.

யகூ. * மிருகத்தோடே புணர்ச்சிபண்ணுகிறவனெவனாகிலுங் கொலையுண்ணவேகொலையுண்ணக்கடவன். * ங. மோசே. ஙய, யரு.

உய. கர்த்தர் ஒருவருக்கேயொழிய வேறே தேவர்களுக்குப் பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக்கடவன்.

உக. பரதேசியைச் சிறுமைப்படுத்தாமலும் ஒடுக்காமலுமிருப்பாயாக. ஏனெனில், நீங்கள் எகிப்துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள். * ங. மோசே. யகூ, ஙங. ஙச.

உஉ. ஒரு கைம்பெண்சாதியையும், தாய்தகப்பனில்லாத பிள்ளையையும் ஒடுக்காமலிருப்பீர்களாக.

உங. அவர்களை நீ ஒடுக்கவே ஒடுக்கும்போது அவர்கள் நம்மைநோக்கிக் கூப்பிடவே கூப்பிட்டால், அவர்கள் கூப்பிடுதலை நாம் கேட்கவே கேட்டு,

உச. நாம் கோபமூண்டவராகி உங்களைப் பட்டயத்தாலே கொன்றுபோடுவோம். உங்கள் பெண்சாதிகள் கைம்பெண்சாதிகளும், உங்கள் பிள்ளைகள் தாய்தகப்பனில்லாத பிள்ளைகளுமாய்ப்போவார்கள்.

உரு. * உன்னிடத்திலே சிறுமைப்பட்டிருக்கிற நம்முடைய சனத்திலொருவனுக்கு நீ திரவியங்கடனாகக்கொடுத்தால் அவனுக்கு வட்டி சுமத்துகிறவன் போலிராயாக. * ங. உரு, ஙரு, ஙசு.

உசு. * உனக்கடுத்தவனுடைய வஸ்திரத்தை நீ அடகாக வாங்கினால் பொழுதுபோகிறதற்குமுன்னே அதை அவனுக்குத் திருப்பிக் கொடுப்பாயாக. * ரு. மோசே. உச, யஉ. யங.

உஎ. ஏனெனில், அவன் மூடிக்கொள்ளுகிறது அதுமாத்திரந்தானே. அதுவே அவன் தன்தோலை மூடிக்கொள்ளுகிற அவனுடைய வஸ்திரம். வேறேதினாலே மூடிக்கொண்டு படுத்துக்கொள்ளுவான். ஆகையால் சம்பவிப்பதேதெனில், அவன் நம்மைநோக்கிக் கூப்பிடும்பொழுது, நாம் கேட்போம். ஏனெனில், நாம் இரக்கமுள்ளவர்.

உஅ. தேவர்களைத் தூஷணியாமலும், உன் சனத்தில் அதிபதியானவனைச் சபிக்காமலுமிருப்பாயாக.

உகூ. உன்போர்க்களத்தின் காணிக்கையையும், உன் ஆலையின் காணிக்கையையுஞ் செலுத்தத் தாமதிக்கவேண்டாம். உன்குமாரரில் முதற்பேறானவனை நமக்குக்கொடுப்பாயாக.

ஙய. உன் மாடுகளிலும், உன் ஆடுகளிலும், அப்படியே செய்வாயாக. குட்டி ஏழுநாள் தன்தாயோடேயிருக்கட்டும். எட்டாம

நாளிலே அதை நமககுச்செலுததுவாயாக.

௩௧. நீஙகள நமககுப பரிசுதத மனிதரா யிருககக்கடவீர்கள. ஆகையால வெளியிலே பீறுணடுபோன மாம்சததைப புசியாமல, அதைநாயகளுககுபபோடுவீர்களாக.

## உ௩. அதிகாரம்.

[(க) தூஷணையையும, பொய்ச்சாட்சிகளை யுஙகுறிததது. (௩) நியாயததைககுறிதத து. (௪) தருமததைககுறிததது. (௰) ஓயந திருககுமவருடததைககுறிததது. (௰௨) ஓய் வுநாளைககுறிததது. (௰௩) விககிரக ஆரா தனையைககுறிததது. (௰௪) மூனறுபணடி கைகளையுஙகுறிததது. (௰௮) பலிபீடஙக ளின இரத்தத்தையுங,கொழுபபையுஙகுறித தது. (உ௰) ஒரு தேவதூதனுடைய வரு கைய்யையும்,அவனைக்கீழபபடிதலினாலேவரும் ஆசீர்வாதத்தையுஙகுறித்தது.]

அபாணடமான விசேஷததை யேற றுககொளளாயாக. கொடுமையுள ள சாட்சியாயிருகக ஆகாதவனோடே கல வாயாக.

உ. பொலலாபபுச செயயபபோகிற திர ளினைபபினசெலலாமலும, நியாயததைப புரட்டபபோகிற திரளினர்களின பிறகாலே சாயகிறதறகான உததரவை வழககிலே சொலலாமலுமிருபபாயாக.

௩. தரிததிரனுடைய முகததையும, அவன இராசகியததிலேபாராயாக.

௪. சிதறிப்போனதாகிய*உனசததுருவின மாட்டையாகிலும, அவனுடைய கழுதை யையாகிலுஞ சநதிததாயானால, அதை அவனணடையிலே திருபபவே திருபபிக கொணடுபோவாயாக. * லூக. ௬, உ௭.

௫. உனனைபபகைககிறவனுடைய கழுதை யைத தனசுமையினகீழக் கிடககக்கணடா யானால, அதறகுதவாதிருபபாயோ! அவ னோடேகூட அதறகுதவவே உதவுவாயாக.

௬. உனனிடததிலிருககிற எளியவனுடைய வியாசகியததிலே அவனுடைய நியாயத தைபபுரட்டாயாக.

௭. களளககாரியததுககுத தூரமாயிருப பாயாக. குறறமிலலாதவனையும, நீதிமானை யுங கொலைபபடுததாயாக. ஏனெனில, ஆகாதவனை நீதிமானாககேனோம்.

௮. பரிதானம வாஙகாயாக. ஏனெனில, பரிதானம பார்வையுளளவர்களைக குருடா ககி நீதிமானகளின நியாயஙகளைத தாறு மாறுககுகினறது. * ௫. மோசே. ௰௬, ௰௯.

௯. * பரதேசியை யொடுககாயாக. ஏனெ னில, எகிப்துதேசததிலே பரதேசிகளா யிருநத நீஙகள பரதேசியின இருதயததை யறிவீர்கள. * உஉ, உக.

௰. நீ ஆறுவருஷம உனதேசததை விதை ததுப பயிரிட்டு அதினபலனைசசேர்ததது,

௰௧. ஏழாமவருஷததிலோவெனறால,அதை உன சனததில எளியவர்கள புசிககுமபடிக் கும, மீதியானதை வெளியின சீவனகள தின னுமபடிககுஞ சும்மாவைததுவிடுவாயாக. உன திராட்சத்தோட்டததிறகும, உன ஒலீ வததோபபுககும அபபடியேசெயவாயாக.

௰௨. நீ ஆறுநாள், உனவேலையைசசெயது ஏழாமநாளிலோவெனில உனமாடும, உன கழுதையும, இளைபபாறவும, உன அடிமைப பெணணின பிளளையும, பரதேசியும மூசிப பாறவும ஓயந்திருபபாயாக.

௰௩. நாம உஙகளுககுச சொனனதிலெல லாஞ சாவதானமாயிருஙகள. வேறேதேவர் களினபேரை நினையீர்களாக. அது உனவாயி னாலேகேட்கபபடாதிருபபதாக.

௰௪. வருஷததில மூனறுதரம நமககுப பணடிகை ஆசரிபபாயாக.

௰௫. நீ புளிபபிலலாத அபபஙகளினபண டிகையைக கைககொணடு, நாமுனககுக கறபிததபடி ஆபிப்மாதத்தினுடைய திட்ட மானகாலததிலே ஏழு நாள புளிபபிலலாத அபபஙகளைபபுசிபபாயாக. ஏனெனில, அதி லே எகிப்திலிருநது புறபபட்டாய. ஆனால, வெறுஙகையாய நமககுமுனபாகக் காணப் படீர்களாக.

௰௬. நீ வயலிலவிதைத்த உன பயிர்வேலை களின முதறபலனைசசெலுததுகிற அறுபபு நாளினபணடிகையையும, வருஷமுடிவிலே நீ வயலின உனவேலைகளின பலனைசசேர்த் துததீர்நதபொழுது சேர்பபின பணடிகை யையும ஆசரிபபாயாக.

௰௭. * வருஷததில மூனறுதரம உன ஆண் சாதியெலலாங கர்ததராகிய ஆணடவரு டைய சனனிதிககுமுனபாகக் காணபபட ககடவது. * ௩௪, உ௩.

௰௮. புளிததமாவிருககுமபோது, நமது பலியின இரத்தத்தைபபலியிடாயாக, நம முடைய பணடிகையின கொழுபபுவிடியற காலமட்டும இராததஙகவுமவேணடாம.

௰௯. உன சீமையின முதலவிளைசசலகளில முநதின கனியை யுனபராபரனாகிய கர்த்த ருடைய வீட்டிறகுககொணடுவருவாயாக. * வெளளாட்டுககுட்டியை அதினுடைய தாயின பாலோடேகூடச் சமைககாயாக. * ௫. மோசே. உஉ, உ௮.

உ௰. இதோ, உனனைவழியிலே காககிறதற கும, நாம ஆயததமபணணின தானததிற குனனைககொணடுபோகிறதறகும நாம ஒரு தூதனையுனககுமுனபாக அனுபபுகிறோம.

உ௧. நீ அவர் முகததிறகுமுனபாகச சாவ தானமாயிருநது அவர் சததத்தைககேள. அவரைககோபப்படுததாதே. ஏனெனில, உஙகள துரோகஙகளை அவர்பொறுபபதில லை. அதேதென்றால, நமது நாமம் அவருள ளததிலிருககினறது.

உஉ. நீ அவர் சத்தத்தைக் கேட்கவே கேட்டு நாம்சொல்லுவதையெல்லாஞ்செய் தாயேயாகில், நாமுன்னைப் பகைக்கிறவர் களைப் பகைத்து, உன்னை நெருக்குகிற வர்களை நெருக்குவோம்.

உ௩. ஏனெனில், நம்முடைய தூதர் உனக்கு முன்பாக நடந்து உன்னை எமோரியரும், ஏத்தியரும், பெரிசியரும், கானானியரும், ஏவியரும், எபூசியருமிருக்கிற இடத்திலே கொண்டுபோவார். அவர்களை நாம் அதம் பண்ணுவோம்.

உ௪. நீ அவர்கள் தேவர்களைப் பணிந்து கொள்ளாமலும், அவர்களைச் சேவிக்காமலு ம், அவர்கள் செய்கைகளின்படி செய்யாமலு ம், அவர்களை நிர்மூலம் பண்ணவேபண்ணி, அவர்கள் சிலைகளையுடைக்கவேயுடைத்துப் போடுவாயாக.

உ௫. உங்கள் பராபரனாகிய கர்த்தரையே சேவிப்பீர்களாக. அப்பொழுது அவர் உன் அப்பத்தையும், உன் தண்ணீரையும் ஆசீர் வதிப்பார். அப்பொழுது வியாதியை உன் நடுவிலிருந்து விலக்குவோம்.

உ௬. கர்ப்பம் விழுகிறவளும், மலடியுமுன் தேசத்திலே உண்டாயிருப்பதில்லை. உன் நாள்களின் இலக்கத்தை நிறைவேற்றுவோம்.

உ௭. நாம் நம்முடைய பயங்கரத்தை உனக்குமுன்பாக அனுப்பி, நீ வந்துசேரும் எல்லாச் சனத்தையுங் கலங்கடித்து, உன் சத்துருக்களையெல்லாம் உனக்கு முதுகைக் காட்டப்பண்ணி,

உ௮. உன்முகத்திற்கு முன்பாக ஏவியனை யும், கானானியனையும், ஏத்தியனையுந்துரத்தி விட வண்டுகளையுனக்குமுன்பாக அனுப்பு வோம்.

உ௯. தேசம் பாழாகாமலும், வெளியின் மிருகங்களுனக்கு விரோதமாய் வர்த்திக்கா மலுமிருக்கும்படிக்கு, நாம் அவர்களை ஒரே வருஷத்திற்குள்ளே உனக்கு முன்பாகத் துரத்திவிடாமல்,

௩௰. நீ பலுகித் தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுமட்டும், அவர்களைக் கொஞ்சங் கொஞ்சமாய் உனக்குமுன்பாகத் துரத்தி விடுவோம்,

௩க. உன் எல்லையை நாணற் சமுத்திரந் துவக்கிப், பெலிஸ்தரின் சமுத்திரமட்டாக வும், வனாந்தரந்துவக்கி, நதிமட்டாகவும் வைப்போம். ஏனெனில், நாம் தேசத்தின் குடிகளை நீ அவர்களை உனக்குமுன்பாகத் துரத்திவிடும்படிக்கு, உங்கள் கைகளில் ஒப் புக்கொடுப்போம்.

௩உ. அவர்களோடும், அவர்கள் தேவர்க ளோடும் நீ உடம்படிக்கை பண்ணாயாக.

௩௩. அவர்கள் உன்னை நமக்கு விரோத மாகப் பாவஞ்செய்யப்பண்ணாதபடிக்கு உன் தேசத்திலே குடியிரார்களாக. ஏனெனில், நீ அவர்கள் தேவர்களைச் சேவித்தால், உனக் குக் கண்ணியாகவேயிருக்குமென்றார்.

## உ௪. அதிகாரம்.

[(க) மோசே மலையின்மேலாக அழைக்கப் பட்டது. (௩) சனங்கள் கீழ்ப்படிவோமெ ன்றுவாக்குத்தத்தஞ்செய்தது. (௪) மோசே ஒரு பலிபீடத்தையும், யஉ-தூண்களை யுங்கட்டினது. (௮) அவர் உடம்படிக்கை யின் இரத்தத்தைத் தெளித்தது. (௰) பரா பரனுடைய மகிமைகாணப்பட்டது. (௰௪) ஆரோனுக்கும், ஊருக்கும் சனங்களின் கா ரியத்துக்கொள்ளச்சொல்லப்பட்டது. (௰௫) மோசேமலையின்மேலாகப்போய், ச௰-நாள் இரவும், பகலுமிருந்தது.]

பின்பு அவர் மோசேயோடே சொன் னதாவது; நீயும், ஆரோனும், நாதாப் பும், அபியூவும், இஸ்ரவேலின் மூப்பரில் எழு பது பேருமாயக் கர்த்தரண்டைக்கு ஏறி வந்து தூரத்திலிருந்து பணியுங்கள்.

உ. இவர்கள் கர்த்தரண்டைக்குச் சேரா மல் மோசே ஒருவனே சேரக்கடவன். சனம் இவனோடேகூட ஏறிவரவேண்டாமென்றார்.

௩. மோசே வந்து கர்த்தருடைய எல்லா வார்த்தைகளையும், எல்லா நியாயங்களையுஞ் சனத்திற்கு விவரித்தான். அப்பொழுது சன மெல்லாம் ஒரு சத்தமாய்க் கர்த்தர் சொன்ன எல்லா வார்த்தைகளின் படியேயுஞ் செய் வோமென்று பிரதியுத்தாரஞ் சொன்னார் கள்.

௪. அப்பொழுது மோசே கர்த்தருடைய வார்த்தைகளையெல்லாம் எழுதிவைத்து, அதிகாலமே யெழுந்திருந்து பர்வதத்தினது அடியிலே ஒருபலிபீடத்தையும், இஸ்ரவே லுடைய பன்னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே பன்னிரண்டு தூண்களை யுங்கட்டி,

௫. இஸ்ரவேல்புத்திரரில் வாலிபரையனுப் பினான். அவர்கள் தகனபலிகளைச் செலுத் திக் கர்த்தருக்குச் சமாதான பலிகளாகக் காளை யெருதுகளைப் பலியிட்டார்கள்.

௬. அப்பொழுது மோசே பாதி இரத்தத்தை வாங்கிப் பாத்திரங்களில் வார்த்து, பாதி இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே தெளி த்து,

௭. உடம்படிக்கையின் புஸ்தகத்தையெடு த்துக்கொண்டு சனத்தின் காதுகள் கேட்க வாசித்தான். அப்பொழுது அவர்கள் கர்த் தர் சொன்னதையெல்லாஞ் செய்து, கீழ்ப் படிவோமென்றார்கள்.

௮. அப்பொழுது மோசே இரத்தத்தை வாங்கிச் * சனத்தின்மேலே தெளித்து, இதோ, இந்தஎல்லாவார்த்தைகளின்மேலும், கர்த்தர் உங்களோடேபண்ணின உடம்படி க்கையின் இரத்தமென்றான். * எபி ௯, உ௰.

கூ பிற்பாடு மோசேயும், ஆரோனும், நாதாபும், அபியூவும், இஸ்ரவேலுடைய மூப்பரில் எழுபதுபேரும் ஏறிப்போய்,

ய. இஸ்ரவேலின் பராபரனைக் கண்டார்கள். அவருடைய பாதத்தின்கீழே நீலக்கல்லின் வேலைக்கொப்பாகவும், வானத்தின் காந்தியான பிரபைக்கொப்பாகவுமிருந்தது. * ஏசேக். க, உசா.

யக. அவர் இஸ்ரவேல்புத்திரருடைய தலைவர்பேரிலே தம்முடைய கையைப்போகவிடாதிருந்தார். அவர்கள் பராபரனைத் தரிசித்த பிற்பாடு புசித்துக்குடித்தார்கள்.

யஉ. பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ நம்மண்டைக்குப் பர்வதத்தின்மேலேறிவந்து, அங்கேயிரு. நாம் உனக்குக் கற்பலகைகளையும், அவர்களைப் போதிப்பதற்கு நாம் எழுதின ந்யாயப்பிரமாணத்தையும், கற்பனைகளையுங் கொடுப்போமென்றார்.

யங. அப்பொழுது மோசே தன் வேலைக்காரனாகிய யோசுவாவோடுங்கூட எழுந்து போனான். மோசே பராபரனுடைய பர்வதத்திலேறினான்.

யச. அவன் மூப்பரோடே சொன்னதாவது; நாங்கள் உங்களண்டைக்குத் திரும்பிவருமட்டும், இங்கே எங்களுக்குக் காத்திருங்கள். இதோ, ஆரோனும், ஊருமுங்களிடத்திலிருக்கிறார்கள். எவனுக்குக் கவைகாரியங்களுண்டோ அவன் அவர்களண்டையிலே சேரக்கடவனென்றான்.

யரு. மோசே பர்வதத்திலேறினபொழுது, ஒரு மேகம் பர்வதத்தை மூடிற்று.

யசா. கர்த்தருடைய மகிமை சீனாயப் பர்வதத்தின்மேலே தங்கியிருந்தது. மேகம் ஆறு நாளளவும் மூடியிருந்தபிற்பாடு, அவர் ஏழாம் நாளிலே மேகத்தின் நடுவிலிருந்து மோசேயைக் கூப்பிட்டார்.

யஎ. பர்வதத்தின் கொடுமுடியிலே கர்த்தருடைய மகிமையின் உருவு இஸ்ரவேல்புத்திரருடைய கண்களுக்குப் பட்சிக்கிற அக்கினியைப்போலிருந்தது.

யஅ. மோசே மேகத்தின் நடுவிலே பிரவேசித்து, பர்வதத்திலேறி இரவும், பகலும் நாற்பதுநாள் பர்வதத்திலிருந்தான்.

## உரு. அதிகாரம்.

[(க) இஸ்ரவேல் சனங்கள் கூடாரத்தைச் செய்வதற்கு இன்ன இன்ன கொடுக்கச் சொல்லப்பட்டது. (ய) பெட்டகத்தினுருவம், (யஎ) கிருபையின் ஆசனமும், கேருபீன்களும், (உங) மேசையும், அதினுடைய சாமானும், (ஙஎ) விளக்குத்தண்டும், அதினுடைய ஆயுதமும்.]

**க**ர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

உ. நமக்குக் காணிக்கையையெடுத்துச் செலுத்தும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரரோடே பேசு. நமக்குச் செலுத்துங் காணிக்கையை * மனப்பூர்வமான ஒவ்வொருவர் கையிலும் வாங்குவீர்களாக. * ஙரு, ரு. உ. கொரிந்தர். கூ, யங.

ங. நீங்கள் அவர்கள் கையில் வாங்கவேண்டிய காணிக்கையாவது; பொன்னும், வெள்ளியும், வெண்கலமும்,

ச. இளநீல நூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், மெல்லிய பஞ்சுநூலும், வெள்ளாட்டுமயிரும்,

ரு. சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களும், தக்சுகளின் தோல்களும், சீத்திம் மரங்களும்,

சா. விளக்குக்கு எண்ணெயும், அபிஷேக எண்ணெய்க்குப் பரிமள வர்க்கங்களும், தூபங் காட்டுதலுக்குச் சுகந்த வர்க்கங்களும்,

எ. ஆசாரிய சால்வைக்கும், மார்ப்பதக்கத்திற்கும், கோமேதகக்கற்களும், பதித்துவைக்கும் இரத்தினங்களுந்தானே.

அ. நாம் தங்கள் நடுவிலே வாசம்பண்ண நமக்கொரு பரிசுத்தஸ்தலத்தையுண்டாக்குவார்களாக.

கூ. வாசஸ்தலத்தின் மாதிரியையும், அதினுடைய எல்லாப்பணிமுட்டுகளின் மாதிரியையும் நாமுனக்குக் காண்பிக்கும்படியெல்லாம் அதைச் செய்வீர்களாக.

ய. சீத்திம் மரங்களால் ஒரு பெட்டியைப் பண்ணக்கடவர்கள். அதின் நீளம் இரண்டரைமுழமும், அதின் அகலம் ஒன்றரைமுழமும், அதின் உயரம் ஒன்றரைமுழமுமாயிருப்பதாக.

யக. அதைச் சுத்தமான பொற்றகட்டால் மூடுவாயாக. நீ அதின் உட்புறத்தையும், வெளிப்புறத்தையும் அதனால் மூடி அதின்மேற் சுற்றிலும் பொன்னினால் திரணையையுண்டாக்கி,

யஉ. அதற்கு நான்கு பொன்வளையங்களை வார்ப்பித்து, அவைகளை அதின் நாலுகோடிகளிலே இந்தப்பக்கம் இரண்டுவளையங்களும், அந்தப்பக்கம் இரண்டுவளையங்களும் இருக்கும்படிக்குத் தைத்து,

யங. சீத்திம் மரங்களான வாரைகளைச் செய்ப்பண்ணி, அவைகளைப் பொற்றகட்டால் மூடி,

யச. அந்த வாரைகளால் பெட்டியைச் சுமக்கும்படிக்கு, அவைகளைப் பெட்டியின் பக்கங்களிலிருக்கும் வளையங்களிலே பாய்ச்சக்கடவாய்.

யரு. அந்த வாரைகள் பெட்டியிலிருந்து கழற்றப்படாமல், அதின் வளையங்களிலே யிருக்கக்கடவது.

யசா. நீ அந்தப்பெட்டியிலே நாமுனக்குக் கொடுக்கப்போகிற சாட்சியை வைத்து,

௰௭. சுத்தமான பொன்னினாலே கிருபாசனமான மூடியைப்பண்ணுவாயாக. அது இரண்டரை முழ நீளமும், ஒன்றரை முழ அகலமுமாயிருக்கக்கடவது.

௰௮. பொன்னான இரண்டு கேருபீன்களையும் அடிக்கப்பட்ட பொன்னினாலே யுண்டாக்கிக் கிருபாசனமானமூடியின் இரண்டு ஓரங்களிலிருக்கப்பண்ணக்கடவாய்.

௰௯. ஒரு கேருபீன் இந்தப்புறத்து ஓரத்திலும், மற்றக்கேருபீன் அந்தப் புறத்து ஓரத்திலுமிருக்கத்தானே. அந்தக்கேருபீன்களைக் கிருபாசனமானமூடியின் இரண்டு ஓரங்களிலே அதனோடேயேகவேலையாயிருக்கும்படிக்கு, அவைகளைப்பண்ணக்கடவீர்கள்.

௨௰. அந்தக் கேருபீன்கள் தங்கள் செட்டைகளை உயர விரித்துத் தங்கள்செட்டைகளாலே கிருபாசனமான மூடியை மூடுகிறவைகளும், ஒன்றுக்கொன்று எதிர்முகங்களுமாயிருக்கக்கடவது. கேருபீன்களின் முகங்கள் கிருபாசனமான மூடியை நோக்குகிறவைகளாயிருப்பதாக.

௨௰௧. நீ கிருபாசனமான மூடியைப் பெட்டியின்மேல் வைத்துப் பெட்டியிலேயென்றால், நானுனக்குக்கொடுக்கப்போகிற சாட்சியை வைப்பாயாக.

௨௰௨. * அங்கே உன்னைச் சந்திப்போம். கிருபாசனமான மூடியின் மீதிலும், சாட்சியினுடைய பெட்டியின்மேல் நிற்கும் இரண்டு கேருபீன்களின் நடுவிலுமிருந்து நாம் இஸ்ரவேல் புத்திரருக்காக உனக்குக் கற்பிக்கப்போகிறதையெல்லாம் உன்னோடே சொல்லுவோம். * ௪. மோசே. ௭, ௮௯.

௨௰௩. சித்திம மரங்களால் ஒரு மேசையை யுண்டுபண்ணுவாயாக. அது இரண்டுமுழ நீளமும், ஒருமுழ அகலமும், ஒன்றரைமுழ உயரமுமாயிருக்கக்கடவது.

௨௰௪. அதை நீ சுத்தமானபொற்றகட்டால் மூடிச் சுற்றிலும் அதற்குப் பொன்னான திரணையையுண்டாக்கி,

௨௰௫. சுற்றிலும் அதற்கு நான்கு விரற்கடையான சட்டத்தையும், அதின் சட்டத்திற்குச் சுற்றிலும் பொன்னான திரணையையுமுண்டாக்கி,

௨௰௬. அதற்கு நான்குபொன் வளையங்களைப் பண்ணி அவைகளை யதின் நான்குகால்களுக்கிருக்கும் நான்குகோடிகளில் தைக்கக்கடவாய்.

௨௰௭. அந்தவளையங்கள் மேசையைச் சுமக்கும் வாளைகளுக்கிடங்களாயிருக்கும்படிக்குச் சட்டத்திற்கு எதிரேயிருக்கவேண்டும்.

௨௰௮. அந்த வாளைகளைச் சித்திம மரங்களாலேபண்ணி, அவைகளைப் பொற்றகட்டால் மூடக்கடவாய். அவைகளால் மேசை சுமக்கப்படுவது.

௨௰௯. அதின்கலங்களையும், தூபக்கிண்ணிகளையும், தட்டுகளையும், அதை மூடுகிறதாகிய வார்க்கிறகரகங்களையும் பண்ணக்கடவாய். சுத்தமான பொன்னினாலே யுண்டாக்கக்கடவாய்.

௩௰. மேசையின் மேலே எப்பொழுதும் நமக்கு முன்பாகச் சமுகத்தப்பங்களை வைக்கக்கடவாய்.

௩௰௧. சுத்தமான பொன்னினாலே ஒரு குத்துவிளக்கையும் உண்டாக்குவாயாக. அது அடிக்கப்பட்ட பொன்னினாலே பண்ணப்படவேண்டும். அதின் தண்டும், அதின் கிளைகளும், அதின்மொக்குகளும், அதின்மாதளம்பழங்களும், அதின் பூக்களும் அதனோடொன்றாயிருப்பதாக.

௩௰௨. ஆறு கிளைகள் அதின் பக்கங்களிலிருந்து புறப்படவேண்டும். குத்துவிளக்கின் மூன்று கிளைகள் அதின் ஒருபக்கத்திலும், குத்துவிளக்கின் மூன்றுகிளைகள் அதின் மறுபக்கத்திலுமிருந்து புறப்படுவது.

௩௰௩. ஒவ்வொருகிளையிலே வாதுமைக்கொட்டைகளின் சாயலான மூன்று மொக்குகளும், ஒருமாதளம்பழமும், ஒருபூவுமிருப்பதாக. குத்துவிளக்கிலிருந்து புறப்படுகிற ஆறுகிளைகளிலும் அப்படியிருக்கவேண்டும்.

௩௰௪. விளக்குத்தண்டிலோவென்றால், வாதுமைக் கொட்டைகளின் சாயலான நான்கு மொக்குகளும், அதின் மாதளம்பழங்களும், அதின்பூக்களுமிருப்பதாக.

௩௰௫. அதிலிருந்து புறப்படுகிற இரண்டு கிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும், வேறு இரண்டுகிளைகளின்கீழ் ஒருமாதளம்பழமும், மற்ற இரண்டு கிளைகளின் கீழ் ஒரு மாதளம்பழமுமிருப்பதாக. விளக்குத்தண்டிலிருந்து புறப்படுகிற ஆறு கிளைகளுக்கும் அப்படியிருக்கவேண்டும்.

௩௰௬. அவைகளின்மாதளம்பழமும், அவைகளின் கிளைகளும், அதிலிருந்துண்டானதாயிருப்பதாக. இவையெல்லாம் அடிக்கப்பட்டசுத்தமான பொன்னாகிய ஒரே துண்டாயிருக்கவேண்டும்.

௩௰௭. அதின்மேல் ஏழுவிளக்குகளையும் உண்டாக்குவாயாக. அதற்கு நேரொளிவாய் எரியும்படிக்கு ஏற்றப்படக்கடவது.

௩௰௮. அதின் கத்திரிகளும், விளக்கணைக்கிற கருவிகளுஞ் சுத்தப் பொன்னாயிருப்பதாக.

௩௰௯. அதை யிந்த எல்லாருபகரணங்களோடுங்கூட ஒருதாலந்து சுத்தமான பொன்னினாலே யுண்டுபண்ணுவார்களாக.

௪௰. * பர்வதத்திலே உனக்குக் காண்பிக்கப்பட்ட அவைகளுடைய மாதிரியின்படியே அவைகளைச்செய்யப் பார்ப்பாயாக.
* ௨௫, ௩௰. எபிரே ௮, ௫.

## ௨௬. அதிகாரம்.

[(௧) கூடாரத்தின் திரைச்சீலைகளும். (௭) வெள்ளாட்டுமயிர்த் திரைச்சீலைகளும்,

(௰௪) ஆட்டுக்கடாவின் தோலகளினாற்செய்த மூடியும, (௰௫) ஆசரிப்புக் கூடாரத்தின் நிமிர்ந்துநிற்கிற பலகைகளும, அவைகளின கவவுகாலகளும, தாப்பாள்களும, (௩௧) பெட்டகத்துக்கு மூடியும, (௩௬) வாசற் படிக்குத் திரையும.]

**வா**சஸ்தலத்தையோவென்றால, திரித்த மெல்லிய பஞ்சு நூலும, இளநீல நூலும, இரத்தாம்பர நூலும், சிவப்பு நூலு மான பத்துச் சமுக்காளங்களால உண்டுபண்ணுவாயாக. அவைகளில் விசித்திரவேலையான கேருபீன்கள இருக்கத்தக்கபடியாக அவைகளைப் பின்னக்கடவாய. * ௩௬, அ. ௩௫

௨. ஒவ்வொரு சமுக்காளம் இருபத்தெட்டு முழ நீளமும, நாலு முழ அகலமுமாயிருப்பதாக. சமுக்காளங்களுக்கெல்லாம ஒரே அளவிருக்கக்கடவது.

௩. ஐந்து சமுக்காளங்கள ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கவும், மற்ற ஐந்து சமுக்காளங்களும ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கவும்வேண்டும்.

௪. இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின கடையோரத்தில இளநீலநூற் காதுகளையுண்டுபண்ணி, இணைக்கப்பட்ட மற்றச்சமுக்காளத்தின கடையோரத்திலும அப்படியே யுண்டுபண்ணுவாயாக.

௫. ஒருசமுக்காளத்தில ஐம்பதுகாதுகளையும, இணைக்கப்பட்ட மற்றச்சமுக்காளத்தின ஓரத்தில ஐம்பதுகாதுகளையும, காதுகள் ஒன்றுக்கொன்று எதிராய்ச்சேர்ந்திருக்கும்படிக்கு உண்டுபண்ணுவாயாக.

௬. ஏகவாசஸ்தலமாய்ப் போகும்படிக்கு, ஐம்பது பொற்றுறடுகளையுமபண்ணிச் சமுக்காளங்களை ஒன்றுக்கொன்று துறடுகளாலே யிணைத்துப்போடுவாயாக.

௭. வாசஸ்தலத்தின மேற கூடாரமாகப் போடும் ஆட்டுமயிர்ச்சமுக்காளங்களாகிய பதினொரு சமுக்காளங்களையும்பண்ணக்கடவாய.

௮. ஒவ்வொரு சமுக்காளம முப்பதுமுழ நீளமும, நாலுமுழ அகலமுமாயிருப்பதாக. பதினொரு சமுக்காளங்களுக்கும ஒரே அளவிருக்கக்கடவது.

௯. ஐந்து சமுக்காளங்களை ஒன்றாகவும, ஆறுசமுக்காளங்களை ஒன்றாகவும இணைத்து, ஆறாஞ் சமுக்காளத்தைக் கூடாரத்தின்முகப்பிற்கு முன்னே இரட்டையாய்ப் போடுவாயாக.

௰. இணைக்கப்பட்ட ஒருசமுக்காளத்தின்கடையோரத்தில, ஐம்பதுகாதுகளையுமஇணைக்கப்பட்ட மற்றச் சமுக்காளத்தின ஓரத்தில ஐம்பதுகாதுகளையும உண்டுபண்ணி,

௰௧. ஐம்பது வெண்கலத் துறடுகளைப்பண்ணித் துறடுகளைக் காதுகளிற்பூட்டிக் கூடாரத்தைய து ஒன்றாயிருக்கும்படிக்கு இணைத்து விடுவாயாக.

௰௨. கூடாரத்தின்சமுக்காளங்களில்மிச்சமான அரைச் சமுக்காளத்தின மீதியோவென்றால, வாசஸ்தலத்தின பிற்புறத்திலே மிஞ்சித்தொங்குவதாக.

௰௩. கூடாரத்திலுடைய சமுக்காளங்களின நீளத்திலும மீதியானதிலே இந்தப் புறத்திலொருமுழமும்அந்தப்புறத்திலொரு முழமும, வாசஸ்தலத்தைமூடும்படிக்குஅதின பக்கங்களிலே மிஞ்சித்தொங்குவதாக.

௰௪. சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாக்களின தோலகளாலே கூடாரத்துக்கு ஒருமூடியையும, அதின்மேலே தகசுகளின்தோலகளாலே ஒரு மூடியையுமுண்டுபண்ணுவாயாக.

௰௫. நிமிர்ந்துநிற்கிறபலகைகளையும, வாசஸ்தலத்திற்குச் சீத்திம் மரங்களாற செய்ப்பணிவாயாக.

௰௬. ஒவ்வொருபலகை பத்துமுழநீளமும, ஒன்றரை முழ அகலமுமாயிருக்கக்கடவது.

௰௭. ஒன்றுக்கொன்றெதிரே இசைவான ஒழுங்காயிருக்கிற இரண்டுமுனைகள ஒவ்வொரு பலகைக்கிருக்கவேண்டும். இப்படியே வாசஸ்தலத்தின்பலகைகளுக்கெல்லாஞ் செய்வாயாக.

௰௮. நீ வாசஸ்தலத்திற்காகச் செய்ப்பணிடுகிறபலகைகளில இருபது பலகை தெற்கே தென்றிசைக்கெதிராக நிற்கக்கடவது.

௰௯. அந்த இருபது பலகைகளின கீழே வைக்கும நாற்பது வெள்ளிக்காலகளை ஒவ்வொருபலகையின்கீழ அதின அதின இரண்டிரண்டுமுனைகளுக்கான இரண்டிரண்டுகாலகளாகத் தானே பண்ணக்கடவாய.

௨௰. வாசஸ்தலத்தினவடக்கான மறுபக்கத்திலும இருபதுபலகையும,

௨௧. அவைகளின்கீழ நாற்பது வெள்ளிக்காலகளும, ஒவ்வொரு பலகையின கீழே இரண்டிரண்டு காலகளாகநிற்கக்கடவது.

௨௨. வாசஸ்தலத்தின மேற புறத்துக்கு ஆறுபலகைகளையும,

௨௩. வாசஸ்தலத்தின இரண்டு பக்கக் கோடிகளுக்கு இரண்டு பலகைகளையுஞ் செய்ப்பணிவாயாக.

௨௪. இவைகள தாழத்துவக்கி இரண்டு பக்கங்களை ஏகமாய்ப்பிடித்து உயரத்தையொரு அளவிலே இசைத்திருக்கவேண்டும். இரண்டு கோடிகளுக்கப்படியிருக்க இரண்டும அப்படிச் செய்யப்படுவதாக.

௨௫. அப்படியேயெட்டு பலகைகளிருப்பது. அவைகளினுடையவெள்ளிக்காலகள ஒவ்வொருபலகையினகீழ இரண்டிரண்டாகாலகளாகப் பதினாறுகாலகளிருக்கவேண்டும்.

௨௬. சீத்திம மரங்களால வாசஸ்தலத்தின ஒருபக்கத்துப பலகைகளுக்கைந்து தாப்பாள்களையும,

உஎ. வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகைகளுக்கைந்து தாப்பாள்களையும், வாசஸ்தலத்தின் மேற்புறமான பின்பக்கத்துப் பலகைகளுக்கைந்து தாப்பாள்களையும் பண்ணுவாயாக.

உஅ. நடுத்தாப்பாள் ஒரு முனைதுவக்கி மறுமுனைமட்டும் பலகைகளின் மையத்தை உருவிப்பாய்ச்சப்படுவதாக.

உகூ. பலகைகளைப் பொற்றகட்டால் மூடித் தாப்பாள்களின் இடங்களாகிய அவைகளின் வளையங்களைப் பொன்னினாலே பண்ணித் தாப்பாள்களைப் பொற்றகட்டால் மூடக்கடவாய்.

ஙய. அப்படியே வாசஸ்தலத்தைப் பர்வதத்தில் உனக்குக் காண்பிக்கப்பட்ட அதினுடைய நியாயத்தின்படியே எடுப்பிப்பாயாக.

ஙக. * இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலுமான ஒரு திரையையும் உண்டுபண்ணக்கடவாய். அதிலே விசித்திரவேலையான கேருபீன்கள் இருக்கும்படியாக அது பண்ணப்படுவதாக. * ஙசு, ஙரு.

ஙஉ. பொற்றகடு மூடியதும், பொன்னுளைவாணிகளுள்ளதும், நான்கு வெள்ளிக்கால்களின்மேல் நிற்கிறதுமான நான்கு சீத்திமரத் தூண்களிலே அதைத் தூக்கிவைப்பாயாக.

ஙங. துறடுகளின் கீழ் அந்தத் திரையைத் தூக்கிவைத்துச் சாட்சியின் பெட்டியை அங்கே திரைக்குள்ளாக வைப்பாயாக. அந்தத் திரை உங்களுக்குப் பரிசுத்த ஸ்தலத்திற்கும், பரிசுத்தத்திற்கும் பரிசுத்தமான ஸ்தலத்திற்கும் நடுவேயிருப்பதாக.

ஙச. பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்திலே சாட்சியினுடைய பெட்டியின் மீதிற் கிருபாசனமான மூடியை வைத்து,

ஙரு. திரைக்குப் புறம்பாக மேசையையும், மேசைக்கெதிரே வாசஸ்தலத்தின் தென்புறமாகக் குத்துவிளக்கையும் வைத்து மேசையை வடபுறமாக வைப்பாயாக.

ஙசு. இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலும், சித்திரத்தையல்வேலையுமான ஒரு மறைவையுங் கூடாரத்தின் வாசலுக்குண்டாக்கி,

ஙஎ. அந்த மறைவுக்குச் சீத்திமரமான ஐந்து தூண்களைச் செப்பனிட்டு அவைகளைப் பொற்றகட்டால் மூடி அவைகளுக்குப் பொன்வளைவாணிகளையுண்டாக்கி அவைகளுக்கைந்து வெண்கலக் கால்களை வார்ப்பிக்கக்கடவாய்.

## உஎ. அதிகாரம்.

[(க) சுட்டபலியிடும்படியான பலிபீடமும், அதினுடைய பாத்திரமும். (கூ) ஆசரிப்புக் கூடாரத்தின் பிரகாரம் திரைச்சீலைகளினாலும், தூண்களினாலுஞ் சூழப்பட்டது. (யஅ) பிரகாரத்தின் அளவும், (உய) விளக்குக்காக எண்ணெயும்.]

ஐந்துமுழ நீளமும், ஐந்துமுழ அகலமுமான பலிபீடத்தையும் சீத்திமரங்களால் உண்டுபண்ணக்கடவாய். அது நாற்சதுரமும், மூன்றுமுழ உயரமுமாயிருப்பதாக.

உ. அதின் நான்குகோடிகளின்மேல் அதனோடேயேகமாயிருக்கும் அதின் கொம்புகளையுண்டாக்கி அதை வெண்கலத் தகட்டால் மூடி,

ங. அதின் சாம்பலையெடுக்கும் அதின் செப்புச்சட்டிகளையும், அதின் கரண்டிகளையும், அதின் கலங்களையும், அதின் முட்டுக்கோல்களையும், அதின் கலசங்களையும் உண்டாக்கி, அதின் முட்டுகளையெல்லாம் வெண்கலத்தாற் பண்ணி,

ச. வலைபோலிருக்கிற ஒரு வெண்கலச் சல்லடையை அதற்குண்டாக்கி அந்த வலையின் நான்கு முனைகளின்மேல் நான்கு வெண்கல வளையங்களையுண்டாக்கி,

ரு. அந்த வலை பலிபீடத்தின் பாதிமட்டும் வரும்படிக்கு அதைத் தாழப் பலிபீடத்தின் சுற்றுக்குக் கீழ்ப்புறமாக வைக்கக்கடவாய்.

சு. பலிபீடத்திற்குச் சீத்திம மரவாரைகளையும் பண்ணி, அவைகளை வெண்கலத் தகட்டால் மூடி,

எ. பலிபீடமெடுத்துப் போகப்படுகையில் அந்த வாரைகள் அதின் இரண்டு பக்கங்களிலிருக்கும்படிக்கு, அவைகள் வளையங்களிலே பாய்ச்சப்படுவதாக.

அ. அது குழாயாயிருக்கும்படிக்கு அதைப் பலகைகளினாலே பண்ணுவாயாக. உனக்குப் பர்வதத்திற் காண்பிக்கப்பட்டபடியே அதைப் பண்ணக்கடவாய்.

கூ. * வாசஸ்தலத்தின் பிரகாரத்தையும் உண்டுபண்ணுவாயாக. தெற்கே தென்றிசைக்கெதிரான பக்கத்திற்குத் திரித்த மெல்லிய பஞ்சுநூலும், நூறுமுழ நீளமுமான வெளியாடைகளும், * ருஅ, கூ.

ய. அவைகளின் இருபது தூண்களும் இருபதாக. இவைகளின் இருபது கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவாணிகளும், அவைகளின் வளையங்களும், வெள்ளியுமாயிருப்பதாக.

யக. அப்படியே வடபக்கத்தின் நீளத்திற்கு நூறுமுழ நீளமான வெளியாடைகளும், அவைகளின் இருபது தூண்களுமிருபதாக. இவைகளின் இருபது கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவாணிகள் வெள்ளியுமாயிருப்பதாக.

யஉ. பிரகாரத்தினுடைய மேற்பக்கமான அகலத்திற்கு ஐம்பதுமுழ நீளமான வெளி

யாடைகளும், அவைகளுக்குப் பத்துத் தூண்களும், இவைகளுக்குப் பத்துக் கால்களுமிருப்பதாக.

௰௩. சூரியனுதிக்கிற திசையாகிய பிரகாரத்தின் கீழ்ப்பக்கமான அகலமும் ஐம்பது முழமாயிருப்பதாக.

௰௪. அங்கே ஒருபுறத்திற்குப் பதினைந்து முழநீளமான வெளியாடைகளும், அவைகளுக்கு மூன்று தூண்களும், இவைகளுக்கு மூன்றுகால்களுமிருப்பதாக.

௰௫. மறுபுறத்திற்குப் பதினைந்துமுழநீளமான வெளியாடைகளும், அவைகளுக்கு மூன்று தூண்களும், இவைகளுக்கு மூன்று கால்களுமிருப்பதாக.

௰௬. பிரகாரத்தின்வாசலுக்கோவென்றால், இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலும், சித்திரத்தையல்வேலையும், இருபதுமுழநீளமுமான ஒருமறைவும், அதற்கு நான்கு தூண்களும், இவைகளுக்கு நான்குகால்களுமிருப்பதாக.

௰௭. சுற்றிலுமிருக்கும் பிரகாரத்தின்தூண்களெல்லாம் வெள்ளிவளையங்கள் போட்டப்பட்டிருப்பதாக. அவைகளின் வளைவாணிகள் வெள்ளியும், அவைகளின்கால்கள் வெண்கலமுமாயிருப்பதாக.

௰௮. பிரகாரத்தின் நீளம் நூறுமுழமும், இருபுறத்தகலம் ஐம்பதுமுழமும், உயரம் ஐந்துமுழமுமாயிருப்பதாக. அது திரித்த மெல்லியபஞ்சுநூலும், அவைகளின்கால்கள் வெண்கலமுமாயிருப்பதாக.

௰௯. வாசஸ்தலத்தின் சகலவேலையிலும் அதற்குத்தேவையான எல்லாப்பணிமுட்டுகளும், அதினுடைய எல்லாமுளைக்கூச்சுகளும், பிரகாரத்தினுடைய எல்லாமுளைக்கூச்சுகளும் வெண்கலமாயிருப்பதாக.

௨௰. குத்துவிளக்கை எப்பொழுதும் எரியப்பண்ணும்படிக்கு இஸ்ரவேல் புத்திரர் இடித்துவடிக்கப்பட்ட தெளிவான ஒலிவ எண்ணெயை யுன்னண்டைக்குக்கொண்டுவர நீ அவர்களுக்குக்கற்பிப்பாயாக.

௨௧. ஆசரிப்பின்கூடாரத்தில் சாட்சிக்கு முன்னிருக்குந் திரைக்கு வெளிப்புறமாக ஆரோனும், அவன்குமாரருமஅதைச்சாயங்காலந்துவக்கி, விடியற்காலமட்டுங் கர்த்தருக்கு முன்பாக எரியவைக்கக்கடவர்கள். இது அவர்களுக்குத் தலைமுறை தலைமுறையாக இஸ்ரவேல்புத்திரராலே நடக்கும் நித்தியகட்டளையாயிருக்கக்கடவது.

## ௨௮. அதிகாரம்.

[(௧) ஆரோனும், அவனுடையகுமாரரும குருவின்பட்டத்திற்கு நேமிக்கப்பட்டது. (௨) பரிசுத்தமான வஸ்திரங்கட்டளையிடப்பட்டது. (௬) ஆசாரியர்சால்வையும், (௰௫) விலையேறப்பெற்றபன்னிரண்டு இரத்தினங்களினாலே பதக்கமும். (௩௰) ஊரீம் என்பவனும், தும்மீம் என்பவனும், (௩௧) மாதளஞ்செடிகளினாலும், மணிகளினாலும் ஆசாரிய சால்வையுடனே அங்கியும், (௩௬) ஆசாரியனமுடியின்பட்டமும், (௩௯) சரிகைவேலை செய்தசட்டையும், (௪௰) ஆரோனுடைய குமாரருக்குவஸ்திரமும.]

நீ உன சகோதரனாகிய ஆரோனையும், அவனோடேகூட அவன் குமாரரையுமநமக்கு ஆசாரியஊழியஞ்செய்யும்படிக்கு இஸ்ரவேல் புத்திரரின் நடுவிலிருந்துபிரித்து உன்னண்டையிற் சேர்த்துக்கொள். ஆரோனையும், நாதாப், அபீகூ, எலெயாசார், இத்தமாரென்ற ஆரோனின்குமாரரையுந்தானே.

௨. உனசகோதரனாகிய ஆரோனுக்கு மகிமைக்கும், அலங்காரத்திற்குமான பரிசுத்த வஸ்திரங்களையுண்டுபண்ணுவாயாக.

௩. ஆரோனைப் பரிசுத்தம் பண்ணுகிறதற்கும், அவன்நமக்கு ஆசாரியஊழியஞ்செய்கிறதற்கும அவனுடைய வஸ்திரங்களையுண்டாக்கும்படிக்கு நாமஞானத்தின் ஆவியால் நிரப்பினஞானமான இருதயமுள்ள யாவரோடும் நீபேசுவாயாக.

௪. அவர்களுண்டாக்கவேண்டிய வஸ்திரங்களாவது; மார்ப்பதக்கமும், ஆசாரிய சால்வையும், அங்கியும், முத்துவர்ணமான உட்சட்டையும், பாகையும், நடுக்கட்டுந்தானே. அந்த அடைவாய. உனசகோதரனாகிய ஆரோன நமக்கு ஆசாரிய ஊழியஞ்செய்யும்படிக்கு அவனுக்கும், அவன்குமாரருக்கும பரிசுத்தவஸ்திரங்களையுண்டுபண்ணக்கடவர்கள்.

௫. அவர்கள்பொன்னும், இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், மெல்லிய பஞ்சுநூலுமெடுத்து,

௬. ஆசாரியசால்வையைப் பொன்னினாலும, இளநீலநூலாலும, இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், திரித்த மெல்லியபஞ்சுநூலாலுமவிநோதவேலையாயப்பண்ணக்கடவர்கள்.

௭. இரண்டுதோளின்மேலும அதின்இரண்டு முனைகள் சேர்க்கப்பட்டு அப்படியது இணைக்கப்படவேண்டும்.

௮. அந்த ஆசாரியசால்வையின் மேலிருக்கவேண்டிய விநோதமான கச்சை அந்த வேலையாயத்தானே பொன்னினாலும, இளநீலநூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்புநூலாலும, திரித்தமெல்லிய பஞ்சுநூலாலும பண்ணப்பட்டு அதனோடேயேகத்துண்டாயிருப்பதாக.

௯. பின்னையும நீ இரண்டு கோமேதகக்கல்லைவாங்கி அவைகளில இஸ்ரவேல்புத்தி

ரின் நாமங்களை வெட்டுவாயாக. அவர்கள் பிறந்த வரிசையின்படியே,

௰. அவர்கள் நாமங்களில் ஆறு நாமங்கள் ஒருகல்லிலும், மற்ற ஆறு நாமங்கள் மறுகல்லிலுமிருக்கத்தானே.

௰௧. இரத்தினங்களில் முத்திரை வெட்டுகிறவர்கள் செய்கிறதுபோல அந்த இரண்டு கற்களில் இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களை வெட்டி அவைகளுக்குச் சுற்றிலுந் தங்கம் இழைத்து,

௰௨. ஆரோன் கர்த்தருக்கு முன்பாகத் தன் இரண்டு தோள்களின்மேலும் இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களை நினைப்புக்காகச் சுமந்துவர அந்த இரண்டு கற்களை யாசாரிய சால்வையினுடைய தோள்களின்மேலே அவர்கள் நினைப்புக்கான கற்களாக வைக்கக்கடவாய்.

௰௩. ஆகையால் பொன் வளையங்களையும் பண்ணி,

௰௪. சரியான அளவுகளும், முடிச்சுக்குத்தி வேலையுமான இரண்டு சரப்பளிகளையுஞ் சுத்தப்பொன்னினாலே யுண்டாக்கி, முடிச்சுக்குத்தினான சரப்பளிகளை அந்த வளையங்களிற் சேர்க்கக்கடவாய்.

௰௫. விசித்திரவேலையாய் நியாயத்தின் மார்ப்பதக்கத்தையும் பண்ணுவாயாக. அதை யாசாரிய சால்வையின் வேலைக்கொத்ததாய்ப் பண்ணக்கடவாய். பொன்னினாலும், இளநீல நூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும், திரித்த மெல்லிய பஞ்சு நூலாலும் அதைச் செய்வாயாக.

௰௬. அது நாற்சதுரமும், இரட்டையும், ஒரு சாண் நீளமும், ஒரு சாண் அகலமுமாயிருக்கக்கடவது.

௰௭. அதிலே நாலுபத்தி இரத்தினக்கற்களை நிறையப் பதிப்பாயாக. முதலாம்பத்தி கெம்பும், புஷ்பராகமும், மரகதமும்,

௰௮. இரண்டாம்பத்தி சிவப்புக் கல்லும், நீலக்கல்லும், வச்சிரமும்,

௰௯. மூன்றாம்பத்தி பத்மராகமும், வயிடூரியமும், அமெதிஸ்தமும்,

௨௰. நாலாம்பத்தி தர்ஷீஸ் இரத்தினமும், கோமேதகமும், யஸ்பியுமாயிருப்பதாக, அவைகள் தங்களிடங்களிற் பொன்னினாலே பதித்திருக்கக்கடவது.

௨௰௧. இந்தக்கற்கள் இஸ்ரவேல் புத்திரருடைய நாமங்களின்படியே பன்னிரண்டும், அவர்களுடைய நாமங்களுள்ளவைகளுமாயிருக்கவேண்டும். பன்னிரண்டு கோத்திரங்களில் ஒவ்வொன்றினுடைய நாமம் ஒவ்வொன்றிலே முத்திரைவெட்டாய் வெட்டியிருக்கக்கடவது.

௨௰௨. அந்த மார்ப்பதக்கத்திற்கென்று நீ சரியளவுகளும், முடிச்சுக்குத்திகள் வேலையுமான சுத்தப் பொன் சரப்பளிகளையும் பண்ணி,

௨௰௩. இரண்டு பொன் மோதிரங்களையும் மார்ப்பதக்கத்திற்குப் பண்ணி, இந்த இரண்டு மோதிரங்களை மார்ப்பதக்கத்தின் இரண்டு முனைகளிலே வைத்து,

௨௰௪. பொன்னுன அந்த இரண்டு முடிச்சுக்குத்திகளை மார்ப்பதக்கத்தின் முனைகளிலிருக்கிற இரண்டு மோதிரங்களில் மாட்டி,

௨௰௫. இரண்டு முடிச்சுக்குத்திகளின் இரண்டு நுனிகளை யாசாரிய சால்வையினுடைய தோள்களின்மேல் அதின் முன்புறத்திலிருக்கிற இரண்டு வளையங்களில் மாட்டிப்போடுவாயாக.

௨௰௬. நீ பின்னையும் இரண்டு பொன்மோதிரங்களைப் பண்ணி அவைகளை யாசாரிய சால்வையின் கீழ்ப்புறத்திற்கெதிரான மார்ப்பதக்கத்தினுடைய மற்ற இரண்டு முனைகளில் அதினுடைய ஓரத்திற்குள்ளாக வைத்து,

௨௰௭. வேறே இரண்டு பொன் மோதிரங்களையும் பண்ணி அவைகளை யாசாரிய சால்வையினுடைய முன்புறத்தின் இரண்டு கீழ்ப்பக்கங்களில் அதின் இணைப்புக்கெதிராகவும், ஆசாரிய சால்வையின் விசித்திரமான கச்சைக்கு மேலாகவும் வைத்து,

௨௰௮. மார்ப்பதக்கம் ஆசாரிய சால்வையின் விசித்திரமான கச்சைக்குமேலாகவிருக்கும்படிக்கும், அது ஆசாரிய சால்வையிலிருந்து விட்டுப் போகாதபடிக்கும் அதையதின் மோதிரங்களால் ஆசாரிய சால்வையின் மோதிரங்களோடே இளநீலமான கயிற்றினாலே கட்டுவார்களாக.

௨௰௯. அப்படியே ஆரோன் பரிசுத்த ஸ்தலத்திற்குட் பிரவேசிக்கையில் தன் இருதயத்தின்மேல் நியாயத்தின் மார்ப்பதக்கத்திலே இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களை எப்பொழுதுங் கர்த்தருக்கு முன்பாக நினைப்புண்டாகும்படிக்குச் சுமந்துவரக்கடவன்.

௩௰. நியாயத்தின் மார்ப்பதக்கத்திலே வெளிச்சங்களையும், உத்தமங்களையும், ஆரோன் கர்த்தரின் சந்நிதிக்குட் பிரவேசிக்கையில் அவைகள் அவனிருதயத்தின்மேலிருக்கும்படிக்கு வைப்பாயாக. அப்படியே ஆரோன் தன்னிருதயத்தின்மேலே இஸ்ரவேல் புத்திரருடைய நியாயத்தை எப்பொழுதுங் கர்த்தருக்கு முன்பாகச் சுமந்துவரக்கடவன்.

௩௰௧. ஆசாரிய சால்வையின் கீழிருக்கும் அங்கியை முழுவதும் இளநீல நூலால் உண்டாக்கக்கடவாய்.

௩௰௨. தலை நுழைகிற அதின் வாய் அதின் நடுவிலிருக்கவும், அதின் வாய்க்கு நெய்த வேலையான ஒரு நாடா சுற்றிலுமிருக்கவும் வேண்டும். அது கிழியாதபடிக்கு மார்க்கவசத்தின் வாய்க்கொத்தது அதற்கிருப்பதாக.

௩௰௩. அதின் கீழோரங்களிலேவென்றால், இளநீல நூல், இரத்தாம்பர நூல், சிவப்பு

நூல் வேலையான மாதளம் பழங்களையும், அவைகளின் நடுவே சுற்றிலும் பொன்மணிகளையும் அதின் ஓரங்களிலே சுற்றிலுந் தொங்கப்பண்ணி வைப்பாயாக.

௩௪. அங்கியின் ஓரங்களிலே சுற்றிலும் ஒரு பொன்மணியும், ஒரு மாதளம்பழமும், ஒரு பொன்மணியும், ஒரு மாதளம்பழமுமாய்த் தொங்குவதாக.

௩௫. ஆரோன் ஆராதனைசெய்யக் கர்த்தருக்கு முன்பாகப் பரிசுத்தஸ்தலத்திற்குட் பிரவேசிக்கும்பொழுதும், அவன் சாவாதபடிக்கு அது அவனில் அவன் சத்தங்கேட்கப்படத் தரிக்கப்பட்டிருக்கவேண்டும்.

௩௬. நீ சுத்தப் பொன்பட்டத்தையும் பண்ணி அதிலே கர்த்தருக்குப் பரிசுத்தமென்பதை முத்திரைவெட்டாக வெட்டி,

௩௭. அது பாகையிலிருக்கும்படியாக அதை இளநீலமான கயிற்றிலே பாகையின் முகப்பிலே கோத்துக் கட்டிவைப்பாயாக.

௩௮. இஸ்ரவேல்புத்திரர் தங்கள் காணிக்கைகளிலெல்லாம் பரிசுத்தம்பண்ணிச் செலுத்தும் பரிசுத்தவஸ்துக்களுடைய அக்கிரமத்தை ஆரோன் சுமந்துவரும்படிக்கு அது ஆரோனுடைய நெற்றியின்மேலிருப்பதாக. கர்த்தருக்குமுன்பாக அவர்கள்மேற் பிரியமுண்டாகும்படிக்கு அது எப்பொழுதும் அவன்நெற்றியின்மேலிருப்பதாக.

௩௯. மெல்லிய பஞ்சு நூல் முத்துவருணமான உட்சட்டையையும், மெல்லிய பஞ்சுநூலாற் பாகையையும் உண்டாக்கி நடுக்கட்டையோவென்றால் சித்திரத்தையல் வேலையாய்ப்பண்ணுவாயாக.

௪௰. நீ ஆரோனுடைய குமாரருக்கு உட்சட்டைகளையும், நடுக்கட்டுகளையும், மகிமைக்கும், அலங்காரத்திற்குமான குல்லாக்களையும் உண்டுபண்ணுவாயாக.

௪௧. உன்சகோதரனாகிய ஆரோனும், அவனோடேகூட அவன்குமாரரும் நமக்கு ஆசாரிய ஊழியஞ்செய்யும்படிக்கு நீ அந்தவஸ்திரங்களை யவர்களுக்குடுத்து அவர்களை யபிஷேகம்பண்ணி அவர்கள் கைகளை நிரப்பி அவர்களைப் பரிசுத்தம்பண்ணுவாயாக.

௪௨. அவர்களுக்கு இடுப்புத்துவக்கி முழங்கால்கள்மட்டும் வருகிற சணல்நூற்சல்லடங்களையும் நிருவாணத்தின் சதையை மூடும்படிக்கு உண்டுபண்ணக்கடவாய்.

௪௩. ஆரோனும், அவன் குமாரரும் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்ய ஆசரிப்பின் கூடாரத்திற்குட் பிரவேசிக்கும்பொழுது அல்லது பலிபீடத்தண்டைக்குச் சேரும்பொழுது அவர்கள் அக்கிரமஞ்சுமந்து சாவாதபடிக்கு அவைகள் அவர்களில் தரித்திருக்கவேண்டும். அவனுக்கும், அவனுக்குப் பிறபாடு அவன்வித்தாருக்கும் அது நித்தியகட்டளை.

## உகூ. அதிகாரம்.

[(க) குருக்கள் அபிஷேகத்துக்குச்செய்யும் பலியையும், சடங்குகளையும், (௩௮) நாள்தோறுஞ் செலுத்துஞ் சுட்டபலியையுங் குறித்தது. (௪௫) பராபரன் இஸ்ரவேல்சனங்களுக்குள் ளிருப்போமென்று சொல்லப்பட்டது.]

நமக்கு ஆசாரியவூழியஞ்செய்ய அவர்களைப் பரிசுத்தம்பண்ணும்படிக்கு நீ அவர்களுக்குச்செய்யவேண்டியதாவது; நீ ஒரு காளை எருதையும், பழுதற்ற இரண்டு ஆட்டுக்கடாக்களையும்,

உ. கோதுமையின் மெல்லிய மாவினாலே சுட்ட புளிப்பில்லாத அப்பத்தையும், எண்ணெயிலே பிசைந்த புளிப்பில்லாத அதிரசங்களையும், எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைகளையும் வாங்கு.

௩. நீ இவைகளை ஒரே கூடையிலே வைத்துக் கூடையோடே இவைகளையும், காளையெருதையும், இரண்டு ஆட்டுக்கடாக்களையுங் கொண்டுவந்து,

௪. ஆரோனையும், அவன்குமாரரையும் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசல் முன்பாகச் சேரப்பண்ணி அவர்களைத் தண்ணீரினாலே கழுவி,

௫. வஸ்திரங்களையெடுத்துக்கொண்டு ஆரோனுக்குட் சட்டையையும், ஆசாரிய சால்வையின் அங்கியையும், ஆசாரிய சால்வையையும், மார்ப்பதக்கத்தையுந் தரித்து அவனுக்கு ஆசாரியசால்வையின் விசேதமானக்கச்சையைக்கட்டி,

௬. அவன் தலையிலே பாகையைப்போட்டுப் பரிசுத்த கிரீடத்தைப் பாகையிலே தரித்து,

௭. அபிஷேகத்தெண்ணெயைவாங்கி அவன் தலையின்மேலேவார்த்து அவனை யபிஷேகம்பண்ணி,

௮. பிறபாடு அவன்குமாரரைச்சேரப்பண்ணி ஆசாரிய ஊழியம் அவர்களுக்கு நித்தியகட்டளையாகவிருக்கும்படிக்கு அவர்களுக்குச் சட்டைகளையுடுத்து,

௯. ஆரோனையும், அவன்குமாரரையும் நடுக்கட்டுகளால் அரைக்கட்டி இவர்களுக்குக் குல்லாக்களைப் போட்டுக்கட்டி ஆரோனுடையகையையும், அவன் குமாரரின்கையையும் நிரப்பி,

௰. காளையெருதை ஆசரிப்பின் கூடாரத்திற்குமுன்பாகக்கொண்டுவருவாயாக. அப்பொழுது ஆரோனும், அவன் குமாரருந்தங்கள் கைகளைக் காளையெருதினுடைய தலையின்மேலேவைக்கக்கடவர்கள்.

௰௧. பிறபாடு நீ அந்தக்காளையெருதை ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலண்டையிலே கர்த்தருக்குமுன்பாகக் கொல்லவாயாக. அதற்கு,

௧௨. அதின் இரத்தத்திலே கொஞ்சம் வாங்கி உன் விரலினாற் பலிபீடத்தின் கொம்புகள் மேல் இட்டு, மற்ற இரத்தத்தையெல்லாம் பலிபீடத்தடியிலே ஊற்றி,

௧௩. குடல்களை மூடிய எல்லாக் கொழுப்பையுங் கல்லீரலின் மேலிருக்கிற சவ்வையும் இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின் மேலிருக்கிற கொழுப்பையும் எடுத்துப் பலிபீடத்தின் மேலே கொளுத்திப் போட்டு,

௧௪. காளையுடைய மாமிசத்தையும், அதின் தோலையும் அதின் சாணியையும் பாளயத்திற்குப் புறம்பே அக்கினியாற் சுட்டெரிக்கக்கடவாய். அது பாவம்போக்கும் பலி.

௧௫. அதற்குப் பிறகு அந்த ஆட்டுக்கடாக்களில் ஒன்றைக் கொண்டுவந்து நிறுத்துவாயாக. அதினுடைய தலையின் மேல் ஆரோனும் அவன் குமாரருந் தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள்.

௧௬. பிற்பாடு நீ அதைக் கொல்லுவாயாக. அதின் இரத்தத்தைப் பிடித்துப் பலிபீடத்தின் மேலே சுற்றிலுந் தெளித்து,

௧௭. ஆட்டுக்கடாவை யதின் சந்துசந்தாய்த் துண்டித்து அதின் குடல்களையும் அதின் தொடைகளையுங் கழுவி அவைகளை யதின் துண்டங்களின் மேலும் அதின் தலையின் மேலும் வைத்து,

௧௮. ஆட்டுக்கடாவை முழுவதும் பலிபீடத்தின் மேற் கொளுத்திப் போடுவாயாக. அது கர்த்தருக்கான சர்வாங்கதகனபலி. அது ஆற்றுந்தரவாசனையுங் கர்த்தருக்கான தகனமுமாயிருக்கும்.

௧௯. அதற்குப்பிறகு நீ மற்ற ஆட்டுக்கடாவைக் கொண்டுவந்து நிறுத்துவாயாக. அதினுடைய தலையின் மேல் ஆரோனும் அவன் குமாரருந் தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள்.

௨௦. பிற்பாடு நீ அதைக் கொல்லுவாயாக. அதின் இரத்தத்திற் கொஞ்சம் வாங்கி ஆரோனின் வலது காதுமடலிலும் அவன் குமாரரின் வலதுகாதுமடலிலும் அவர்கள் வலதுகையினுடைய பெருவிரலின் மேலும் அவர்கள் வலதுகாலினுடைய பெருவிரலின் மேலும் இட்டு மற்ற இரத்தத்தைப் பலிபீடத்தின் மேற் சுற்றிலுந் தெளித்து,

௨௧. பலிபீடத்தின் மேலிருக்கும் இரத்தத்திலும், அபிஷேகதைலத்திலுங் கொஞ்சம் எடுத்து ஆரோனும் அவன் வஸ்திரங்களும் அவனோடேகூட அவன் குமாரரும் அவர்கள் வஸ்திரங்களும் பரிசுத்தமாக்கப்படும்படிக்கு அவன் மேலும் அவன் வஸ்திரங்கள் மேலும் அவன் குமாரர் மேலும் அவர்கள் வஸ்திரங்கள் மேலுந் தெளித்து,

௨௨. அந்த ஆட்டுக்கடாக்களை நிரப்புதலின் ஆட்டுக்கடாவானபடியினாலே அதிலிருக்குங் கொழுப்பையும் வாலையுங் குடல்களை மூடிய கொழுப்பையுங் கல்லீரலின் மேலிருக்கிற சவ்வையும் இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின் மேலிருக்கிற கொழுப்பையும் வலது முன்னந்தொடையையும்,

௨௩. கர்த்தருக்கு முன்பாக வைத்திருக்கிற புளிப்பில்லாத அப்பங்களின் கூடையில் ஒரு அப்பத்தையும் எண்ணெய்விட்டுப் பிசைந்த ஒரு அதிரசத்தையும் ஒரு அடையையும் எடுத்து,

௨௪. அவைகளையெல்லாம் ஆரோனின் உள்ளங்கைகளிலும் அவன் குமாரரின் உள்ளங்கைகளிலும் வைத்து அவைகளைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டப்படுகிற காணிக்கையாக அசைவாட்டி,

௨௫. பிற்பாடு அவைகளை அவர்கள் கைகளிலிருந்தெடுத்துப் பலிபீடத்தின் மேலே சர்வாங்கதகனபலியின் மீதிலே வைத்துக் கர்த்தருக்கு முன்பாக ஆற்றுந்தரவாசனையாகக் கொளுத்திப் போடக்கடவாய். அது கர்த்தருக்கான தகனம்.

௨௬. ஆரோனின் கைகளை நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே நீ மார்க்கண்டத்தை எடுத்து அதைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டப்படுங் காணிக்கையாக அசைவாட்டக்கடவாய். அது உன் பங்காயிருக்கும்.

௨௭. ஆரோனின் கைகளையும் அவன் குமாரரின் கைகளையும் நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே அசைவாட்டப்படுகிற மார்க்கண்டத்தையும் ஏறெடுத்துப் படைக்கப்படுகிற முன்னந்தொடையையும் பரிசுத்தமாக்குவாயாக.

௨௮. இஸ்ரவேல் புத்திரர் பலியிடுகிறதிலே அப்படிக்கொத்தவைகள் நித்திய கட்டளையாக ஆரோனையும் அவன் குமாரரையுஞ் சேர்வதாக. ஏனெனில், அது ஏறெடுக்கப்படும் படைப்பு. இஸ்ரவேல் புத்திரருடைய சமாதானபலிகளிலே ஏறெடுக்கப்படும். அவர்களுடைய படைப்புக் கர்த்தருடையது.

௨௯. ஆரோனுக்கிருக்கிற பரிசுத்த வஸ்திரங்களை அவனுக்குப் பிற்பாடு அவன் குமாரர் உடுத்து அபிஷேகம் பண்ணப்படவும், அவர்கள் கைகள் நிரப்பப்படவும், அவைகள் இவர்களைச் சேர்வதாக.

௩௰. பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்ய ஆசரிப்பின் கூடாரத்திற்குட் பிரவேசிக்கத்தக்கதாக அவன் குமாரரில் அவன் பட்டத்திற்கு வருகிற ஆசாரியன் அவைகளை ஏழு நாள்மட்டும் உடுத்துக்கொள்ளக்கடவன்.

௩௧. கைகளை நிரப்புதலின் ஆட்டுக்கடாவை நீ யெடுத்து அதின் மாமிசத்தைப் பரிசுத்த இடத்திலே வேவிப்பாயாக.

௩௨. அந்த ஆட்டுக்கடாவின் மாமிசத்தையுங் கூடையிலிருக்கிற அப்பத்தையும் ஆரோனும், அவன் குமாரரும், ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிலே புசிக்கக்கடவர்கள்.

௩௩. ஏனெனில், அவர்களுடைய கைகளை நிரப்பவும் அவர்களைப் பரிசுத்தம்பண்ணவும் அதினாலே பாவநிவிர்த்தி செய்யப்பட்டது. அந்நியனோவெனில், அவைகளிலே புசிக்கவேண்டாம். ஏனெனில், அவைகள் பரிசுத்தம்.

௩௪. கைகளை நிரப்புதலினாலாகிய மாம்சத்திலும் அப்பத்திலும் ஏதாகிலும் விடியற்காலமட்டும் மீதியிருந்ததேயானால், அதை அக்கினியாலே சுட்டெரிப்பாயாக. அது புசிக்கப்படவேண்டாம். ஏனெனில், அது பரிசுத்தம்.

௩௫. இந்தப்பிரகாரமாக நீ ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் நானுனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்வாயாக. நீ ஏழுநாள் மட்டும் அவர்கள் கைகளை நிரப்பி,

௩௬. பாவநிவிர்த்திக்காக ஒவ்வொருநாளிலே ஒவ்வொரு காளையைப் பாவம்போக்கும்பலியாக்கிப் பலிபீடத்தையும் பாவநிவிர்த்தியை அதற்காகச்செய்கிறதினாலே பாவமற்றதாக்கி, அதைப் பரிசுத்தமாக்கும்படிக்கு, அதை யபிஷேகம்பண்ணுவாயாக.

௩௭. ஏழுநாள்மட்டும் பலிபீடத்திற்காகப் பாவநிவிர்த்தியைப்பண்ணி, அதைப் பரிசுத்தமாக்கக்கடவாய். பலிபீடம் பரிசுத்தத்திற்குப்பரிசுத்தமாயிருப்பது; பலிபீடத்தைத் தொடுகிறதெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.

௩௮. பலிபீடத்தின்மேல் நீ பலியிடவேண்டியதேதெனில், எப்பொழுதும் ஒவ்வொருநாளிலே ஒருவயதான இரண்டிரண்டு ஆட்டுக்குட்டிகள்தானே.

௩௯. ஒரு ஆட்டுக்குட்டியைக் காலமேயும் மற்ற ஆட்டுக்குட்டியை அந்திநேரமான வேளையிலும் பலியிடுவாயாக.

௪௰. ஒரு மரக்காலிலே பத்திலொரு பங்கானதும் இடித்து வடிக்கப்பட்ட காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய மெல்லிய மாவையுந் திராட்சப்பழ இரசத்திலே காற்படியாகிய ஒரு ஊற்றுதலையும் ஒரு ஆட்டுக்குட்டிக்காகப் படைத்து,

௪௧. மற்ற ஆட்டுக்குட்டியை அந்திநேரமாகிற வேளையிலே பலியிடுகிறபொழுது, காலமே படைத்த காணிக்கைக்கும், அதினூற்றுதலுக்கும் ஒத்தபிரகாரமாக அதை யாற்றுகிற வாசனைக்காகச் செய்யக்கடவாய். அது கர்த்தருக்கான தகனம்.

௪௨. நானுன்னுடனே பேச உங்களைச் சந்திக்கப்போகிற தானமாகிய ஆசரிப்புக் கூடாரத்தினுடைய வாசலிலே கர்த்தரின் சந்நிதியிலே இவைகள் உங்கள் தலைமுறை தலைமுறையாக எப்பொழுதுஞ் செலுத்தப்படவேண்டிய சர்வாங்க தகனபலிகள்.

௪௩. * அங்கே இஸ்ரவேலபுத்திரரைச் சந்திப்போம். அந்த ஸ்தலம் நம்முடைய மகிமையினாலே பரிசுத்தமாக்கப்படும்.

* ௨௰, ௨௪.

௪௪. நாம் ஆசரிப்பின் கூடாரத்தையும், பலிபீடத்தையும் பரிசுத்தமாக்கி, ஆரோனையும், அவன் குமாரரையும், நமக்கு ஆசாரிய ஊழியஞ்செய்யும்படிக்குப் பரிசுத்தமாக்கி,

௪௫. இஸ்ரவேலபுத்திரரின் நடுவே வாசம்பண்ணி, அவர்களுக்குப் பராபரனாயிருப்போம்.

௪௬. தங்கள் நடுவே நாம் வாசம்பண்ணும்படிக்குத் தங்களை எஜிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அறிவார்களாக. நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்தர்.

## ௩௰. அதிகாரம்.

[(௧) தூபபீடத்தின் வேலையும், (௰௧) ஆத்துமாக்களின் மீட்பும், (௰௮) பித்தளைத் தொட்டியும், (௨௨) அபிஷேகத்தினெண்ணெயும், (௩௪) பரிமளக்கலப்புங் குறிக்கப்பட்டது.]

தூபங்காட்டுகிறதற்கு, * ஒரு தூபபீடத்தையுஞ் சித்திம் மரங்களினாலே உண்டாக்குவாயாக. * ௩௭, ௨௫.

௨. அது ஒருமுழ நீளமும் ஒருமுழ அகலமுமான சதுரமும், இரண்டுமுழ உயர்த்தியும், அதின் கொம்புகள் அதோடே ஏகமாயிருப்பதாக.

௩. நீ அதையெல்லாம், அதின்மேலே பலகையையுஞ் சுற்றிலுமிருக்கும் அதின் பக்கங்களையும் அதின் கொம்புகளையுஞ் சுத்தப் பொற்றகட்டால் மூடிச் சுற்றிலும் அதற்குப் பொன்திரணையையுண்டுபண்ணி,

௪. அதினுடைய திரணையின்கீழ் அதின் இரண்டு பக்கங்களிலும் அதைச் சுமக்கும் வாரைகளின் இடங்களாகிற இவ்விரண்டு பொன்வளையங்களை அதற்குப் பக்கத்தின் இரண்டுகோடிகளருகேயுண்டாக்கி,

௫. அதின்வாரைகளையுஞ் சித்திம்மரங்களாலே பண்ணிப் பொற்றகட்டால் மூடக்கடவாய்.

௬. சாட்சியினுடைய பெட்டியின் முன்னேயுஞ் சாட்சியின்மேலிருக்கிறதும் நானுனைச் சந்திப்பதுமான கிருபாசன மூடியின் முன்னேயுமிருக்குந் திரைக்கு முன்பாக அதை வைக்கக்கடவாய்.

௭. ஆரோன் காலையில் விளக்குகளைச் சீர்ப்படுத்துகிற பொழுது, அந்திநேரமாகிற வேளையிலே விளக்குகளையேற்றுகிறபொழுதும், அதின்மீதிற் சுகந்தவர்க்கங்களினாலே தூபங்காட்டக்கடவன்.

௮. அது எப்பொழுதும் உங்கள் தலைமுறை தலைமுறையாய்க் கர்த்தருக்கு முன்பாகக் காட்டப்படுந் தூபம்.

௯. அதின்மீதில் அந்நிய தூபவர்க்கத்தையாகிலும், ஒருதகனபலியையாகிலும், காணி

சேதயையாகிலும், வார்ப்பனைகளாக. அதின்மேலே ஒரு பானீயத்தையும் வார்க்காக.

௰. வருஷத்திலொருமுறை ஆரோன் அதின் கொம்புகளின்மேலே பாவங்களை நிவிர்த்திபண்ணும் பலியின் இரத்தத்தாலே பாவ நிவிர்த்திபண்ணுவானாக. அப்படியவனுங்கள் தலைமுறை தலைமுறையாக வருஷத்தில் ஒருமுறை பாவ நிவிர்த்திபண்ணுவானாக. அது கர்த்தருக்குப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்குமென்றார்.

௰௧. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰௨. நீ இஸ்ரவேல் புத்திரரை அவர்கள் இலக்கத்தின்படியே கணக்குப் பார்க்கிறபொழுது, அவர்களுக்குள்ளே ஒரு வாதையுண்டாகாதபடிக்கு அவர்களில் ஒவ்வொருவர் தன்தன் ஆத்துமாவிற்காகக் கர்த்தருக்கு மீட்கும்பொருளைக் கொடுக்கக்கடவர்கள்.

௰௩. எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வருகிறவனெல்லாரும் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்கின்படி அரைச் சேக்கலைக் கொடுக்கவேண்டும். சேக்கலானது, இருபது கேரா. அரைச்சேக்கலே கர்த்தருக்குச் செலுத்தப்படுவது.

௰௪. எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வருகிற இருபது வயது முதற்கொண்டு மேற்பட்டவனெல்லாரும் அதைக் கர்த்தருக்குச் செலுத்தவேண்டும்.

௰௫. உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவ நிவிர்த்திபண்ணுங் காணிக்கையை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்துகையில், அரைச் சேக்கலுக்கு ஐசுவரியவான் ஏறக்கொடுக்கவும் வேண்டாம். தரித்திரன் குறையக்கொடுக்கவும் வேண்டாம்.

௰௬. பாவ நிவிர்த்தியின் அந்தத் திரவியத்தை நீ இஸ்ரவேல் புத்திரர் கையில் வாங்கி அதை ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்குக் கொடுப்பாயாக. அப்படியே உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவ நிவிர்த்தியாகும்படிக்கு அது கர்த்தருக்குமுன்பாக இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக இருக்குமென்றார்.

௰௭. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰௮. * கழுவுகிறதற்கு நீ வெண்கலத்தால் ஒரு தொட்டியையும் வெண்கலத்தால் அதின் பீடத்தையும் உண்டாக்கி, அதை ஆசரிப்பின் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து, அதிலே தண்ணீர் வார்ப்பாயாக. * ௩௮, ௮. ௪௰, ௩௰.

௰௯. அதினிடத்தில், ஆரோனும் அவன் குமாரரும், தங்கள் கைகளையுந் தங்கள் கால்களையுங் கழுவக்கடவர்கள்.

௨௰. அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்திற்குட் பிரவேசிக்கும்பொழுதும், அல்லவென்று கர்த்தருக்குத் தகனத்தைக் கொளுத்தவும், பலிபீடத்தண்டைக்கு ஆராதனை செய்ய வந்து சேரும்பொழுதும், அவர்கள் சாவாதபடிக்குத் தண்ணீரினாலே தங்களைக் கழுவக்கடவர்கள்.

௨௰௧. அவர்கள் சாவாதபடிக்குத் தங்கள் கைகளையுந் தங்கள் கால்களையுந் தாமே கழுவக்கடவர்கள். அது அவனுக்குந் தலைமுறை தலைமுறையாகவிருக்கும். அவன் வித்தாருக்கும் நித்தியகட்டளையென்றார்.

௨௰௨. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨௰௩. நீ மேன்மைத்தரமான சுகந்தவர்க்கங்களாகிற தானாய்வடிந்த வெள்ளைப்போளத்திலே பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே ஐந்நூறு சேக்கல்நிறையையும், சுகந்தகருவாப்பட்டையிலே பாதியளவாகிய இருநூற்றைம்பது சேக்கல்நிறையையும் சுகந்தவசம்பில் இருநூற்றைம்பது சேக்கல்நிறையையும்,

௨௰௪. காசியாவில் ஐந்நூறு சேக்கல்நிறையையும், ஒலிவஎண்ணெயில் ஒருபடியையும் வாங்கிக்கொண்டு,

௨௰௫. அதினால் தயிலக்காரன் வேலையாய்க் கூட்டப்பட்ட பரிமளதயிலமான * பரிசுத்த அபிஷேக எண்ணெயை யுண்டுபண்ணுவாயாக. அது பரிசுத்த அபிஷேக எண்ணெயாயிருக்கக்கடவது. * ௩௭, ௨௯.

௨௰௬. அதினாலே நீ ஆசரிப்பின் கூடாரத்தையுஞ் சாட்சியின் பெட்டியையும்,

௨௰௭. மேசையையும் அதினுடைய எல்லா முட்டுகளையும், குத்துவிளக்கையும், அதின் முட்டுகளையும், தூபங்காட்டும்பீடத்தையும்,

௨௰௮. தகனபலிபீடத்தையும் அதினுடைய எல்லா முட்டுகளையும், தொட்டியையும், அதின் பீடத்தையும் அபிஷேகம்பண்ணி,

௨௰௯. அவைகள் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கும்படிக்கு அவைகளைப் பரிசுத்தமாக்குவாயாக. அவைகளைத் தொடுகிறதெல்லாம் பரிசுத்தமாயிருப்பது.

௩௰. நீ ஆரோனையும் அவன் குமாரரையும் நமக்கு ஆசாரிய ஊழியஞ்செய்யும்படிக்கு அபிஷேகம்பண்ணி, அவர்களைப் பரிசுத்தமாக்குவாயாக.

௩௰௧. இஸ்ரவேல் புத்திரரோடே நீ பேசிச் சொல்லவேண்டியதாவது; இது உங்கள் தலைமுறை தலைமுறையாக நமக்குப் பரிசுத்த அபிஷேக எண்ணெயாயிருப்பது.

௩௰௨. அது மனிதனுடைய மாமிசத்தின்மேல் வார்க்கப்படவேண்டாம். அவர்கள் அது செய்யப்பட்ட திட்டத்தின்படியே ஒத்ததாகச் செய்யவும்வேண்டாம். அது பரி

சுத்தமானது, அது உங்களுக்குப் பரிசுத்தமாயிருப்பதாக.

௩௩. அதைப்போலொத்த தயிலத்தைக் கூட்டுகிறவனும், அதிலெடுத்து அந்நியவஸ்துவின்மேல் வார்க்கிறவனுந் தன்சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டு போகக்கடவனென்று சொல்லென்றார்.

௩௪. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ கந்தவர்க்கங்களாகிய வடிந்த வெள்ளைப்போளமும் குக்கிலும் அல்பான்பிசினும் என்ற கந்தவர்க்கங்களையுஞ் சுத்தமான குங்குலியத்தையும் ஒன்றுக்கொன்று சரியிடையாக வாங்கிக்கொண்டு,

௩௫. அதைத் தயிலக்காரன் வேலையாய்ப் பரிமளமேற்றித் துப்புரவும் பரிசுத்தமுமான * தூபவர்க்கமாக்கி, * ௩௭, ௨௯.

௩௬. அதிலே சிலவற்றை யிடித்துப் பொடியாக்கி நாமுன்னைச் சந்திக்கப்போகிற ஆசரிப்பின் கூடாரத்திலிருக்குஞ் சாட்சிக்கு முன்பாக வைப்பாயாக. உங்களுக்கு அது பரிசுத்தத்திற் பரிசுத்தமாயிருக்கக்கடவது.

௩௭. இந்தத் தூபவர்க்கத்தை நீ செய்கிற இடட்டத்திற்கொத்தவிதமாக நீங்கள் உங்களுக்குச் செய்யவேண்டாம். அதுவுனக்குக் கர்த்தருக்கென்று பரிசுத்தமாயிருப்பதாக.

௩௮. அதைப்போலொத்ததை மோப்பதற்காகச் செய்கிறவன் தன்சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டுபோகக்கடவனென்றார்.

## ௩௧. அதிகாரம்.

[(௧) பெத்சாலேயேலென்பவனும், அகோலியாவென்பவனும், கூடாரத்தின் வேலைக்காக அழைப்பிக்கப்பட்டதும், எத்தனிக்கப்பட்டதும், (௰௨) ஓய்வுநாளை யநுசரிக்கவேண்டுமென்று கட்டளையிட்டதும். (௰௮) மோசே சாட்சியின் இரண்டு கற்பலகைகளைப் பெற்றுக்கொண்டதும்.]

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௨. இதோ, நாம் யூதாவின் கோத்திரத்திலே ஊருடைய மகனான ஊரியின் குமாரன் பெத்சாலேயேலைப் பேர்சொல்லியழைத்து,

௩. அவன் விநோதமான வேலைகளை யோசித்துப் பண்ணுகிறதற்கும் பொன்னிலும் வெள்ளியிலும் வெண்கலத்திலும் வேலைசெய்கிறதற்கும்,

௪. இரத்தினங்களை முத்திரைவெட்டாய் வெட்டிப் பதித்துவைக்கிறதற்கும், மரத்தில் நேர்த்தியான வேலைசெய்கிறதற்கும், சகலவித வேலையைப் பண்ணுகிறதற்கும்,

௫. ஞானமும் உணர்வும் அறிவுஞ் சகலவித வேலைக்கான விதத்தையும் அவனுக்குண்டாக அவனைப் பராபரனுடைய ஆவியினாலே நிரப்பினோம்.

௬. இதோ நாம் தாண் கோத்திரத்திலே அகிசாமாகின் குமாரனாகிய அகோலியாபை அவனோடே கூட்டி, ஞானமான இருதயமுள்ளயாவருடைய இருதயத்திலும் ஞானத்தைக் கொடுத்தோம். நாமுனக்குக் கற்பித்ததையெல்லாம் அவர்கள் செய்வார்கள்.

௭. ஆசரிப்பின் கூடாரத்தையும், சாட்சியின் பெட்டியையும் அதின்மேலிருக்குங் கிருபாசன மூடியையுங் கூடாரத்தினுடைய எல்லாமுட்டுகளையும்,

௮. மேசையையும் அதின் முட்டுகளையுஞ் சுத்தமான குத்துவிளக்கையும் அதினுடைய எல்லாமுட்டுகளையுந் தூபப்பீடத்தையும்,

௯. தகன பலிபீடத்தையும் அதினுடைய எல்லாமுட்டுகளையும், தொட்டியையும், அதின் பாதத்தையும்,

௰. ஆராதனையின் சீலைகளையும் ஆசாரிய ஊழியஞ்செய்கிறதற்கான ஆசாரியனாகிய ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும் அவன் குமாரரின் வஸ்திரங்களையும்,

௰௧. அபிஷேகத்தெண்ணெயையும் பரிசுத்த ஸ்தலத்திற்கான சுகந்த வர்க்கங்களாகிய தூபவர்க்கத்தையும் அவர்கள் நாமுனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்வார்களென்றார்.

௰௨. கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது;

௰௩. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நம்முடைய ஓய்வுநாள்களையே கைக்கொள்ளக்கடவீர்கள். ஏனெனில், நாமுங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தரென்று நீங்களறிவதற்கு அது உங்கள் தலைமுறை தலைமுறையாக நமக்கும் உங்களுக்கும் நடுவான அடையாளம்.

௰௪. ஆகையால் ஓய்வுநாளைக் கைக்கொள்ளுவீர்களாக. ஏனெனில், அது உங்களுக்குப் பரிசுத்தமானது, அதைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். அதிலே வேலைசெய்கிற எந்த ஆத்துமாவுந் தன்சனத்தின் நடுவிலிராதபடிக்கு அறுப்புண்பதாக.

௰௫. ஆறுநாள் வேலைசெய்யப்படுவதாக. ஏழாம்நாளோவெனில், வேலை யொழிந்திருக்கும் ஓய்வுநாள். அது கர்த்தருக்குப் பரிசுத்தம். ஓய்வுநாளிலே வேலைசெய்கிறவனெவனுங் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௬. ஆகையால் இஸ்ரவேல்புத்திரர் தங்கள் தலைமுறைகளில் ஓய்வுநாளை நித்திய உடம்படிக்கையாய் ஆசரிக்கும்படிக்கு அதைக் கைக்கொள்ளக்கடவர்கள்.

௰௭. அது எனறைக்கும் நமக்கும் இஸ்ரவேல்புத்திரருக்கும் நடுவான அடையாளம். ஏனெனில், ஆறுநாளைக்குள்ளே கர்த்தர்வா

னதையும்பூமியையுமுண்டாக்கி, ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்து பூரித்தாரென்றார்.

௰௮. அவர் சீனாய்ப்பருவதத்திலே மோசேயோடே பேசித்தீர்ந்தபிற்பாடு அவரவனுக்குப் பராபரனுடைய விரலினாலே எழுதப்பட்ட கற்பலகைகளாகிய சாட்சியின் இரண்டு பலகைகளைக் கொடுத்தார்.

## ௩௨. அதிகாரம்.

[(௧) மோசேயில்லாதவேளையில் சனங்கள் ஆரோனைப் பொற்கன்றுக்குட்டியைச் செய்யவேண்டுமென்றது. (௭) அதினாற் பராபரன் கோபங்கொண்டது. (௰௧) மோசேயின் மன்றாட்டத்தினாற் பராபரன் கோபந்தணிந்தது. (௰௫) மோசே சாட்சியின் கற்பலகைகளைக் கொண்டிறங்கியது. (௰௯) அவைகளை உடைத்துவிட்டது. (௨௰) அவர் பொற்கன்றுக்குட்டியை யழித்தது. (௨௨) ஆரோன் சனங்களமேற் குற்றஞ்சாற்றியது. (௨௫) மோசேயின் கிரகாரத்தினாற் காரரைக் கொல்லக்கட்டளையிட்டது. (௩௰) சனங்களுக்காக அவர் செபம்பண்ணினது.]

மோசே பர்வதத்திலிருந்திறங்கிவரத் தாமதிக்கிறதைச் சனங்கண்டபொழுதோவெனிற் சனம் ஆரோனண்டையிலே கூட்டமாய்க்கூடி, அவனுடனே நீ யெழுந்து, எங்கள் முன் நடந்துபோகிற தேவர்களை எங்களுக்குண்டுபண்ணும். ஏனென்றால், எங்களை எகிப்து தேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின அந்தமோசே என்கிறவனுக்கு என்ன சம்பவித்ததென்றறியோமென்றார்கள். * ௫. மோசே. ௯, ௭. மு

௨. அப்பொழுது ஆரோன் அவர்களுடனே உங்கள் பெண்சாதிகள் குமாரர் குமாரத்திகளுடைய காதுகளிலிருக்கிற பொற்கடுக்கன்களைக் கழற்றி என்னண்டைக்குக்கொண்டுவாருங்களென்றான்.

௩. அப்பொழுது சனமெல்லாருந்தங்கள் காதுகளிலிருந்த பொற்கடுக்கன்களைக் கழற்றி ஆரோனண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

௪. அவனவர்கள் கையிலே அதை வாங்கி, ஒரு எழுத்தாணியினாலே குறிபோட்டு, வார்ப்பிக்கப்பட்ட ஒரு கன்றுக்குட்டியையதினாலுண்டுபண்ணினான். அப்பொழுது அவர்கள் இஸ்ரவேலே! இவைகளுன்னை எகிப்து தேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின உன்னுடைய தேவர்களென்றார்கள்.

௫. ஆரோன் அதைக்கண்டு அதற்கு முன்பாக ஒரு பலிபீடத்தைக்கட்டி, நாளைக்கர்த்தருக்குப் பண்டிகையென்று கூறினான்.

௬. மறுநாளவர்கள் அதிகாலமேயெழுந்திருந்து, சர்வாங்கதகன பலிகளைப் பலியிட்டுச் சமாதானபலிகளைச் செலுத்தினார்கள். பிற்பாடு சனம் புசிக்கிறதற்குங் குடிக்கிறதற்கும் உட்கார்ந்து, விளையாடுகிறதற்கும் எழுந்திருந்தார்கள்.

௭. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது, இறங்கிப்போ. ஏனெனில், நீ எகிப்துதேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின உன்னுடைய சனந் தன்னைக்கெடுத்துப் போட்டது.

௮. நாந் தங்களுக்குக் கற்பித்தவழியைச் சீக்கிரமாய் விட்டுவிலகினார்கள். அவர்கள் வார்ப்பிக்கப்பட்ட ஒரு கன்றுக்குட்டியைத் தங்களுக்குண்டாக்கி அதைப் பணிந்துகொண்டு அதற்குப் பலியிட்டு, இஸ்ரவேலே! இவைகளுன்னை எகிப்து தேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின உன்னுடைய தேவர்களென்றுசொல்லி,

௯. பின்னையும் கர்த்தர் மோசேயோடே சொன்னதேதெனில், இந்தச் சனத்தைப் பார்த்தோம். இதோ, அது கடினக்கழுத்துள்ள சனம்.

௰. இப்பொழுது நாம் அவர்களையழிக்கும்படிக்கு நம்முடைய கோபம் அவர்களுக்கு விரோதமாக எரிய நம்மைவிட்டுவிடு. அப்பொழுது * உன்னைப் பெரியசாதியாக்குவோமென்றார். * ௪. மோசே. ௰௪, ௰௨.

௰௧. * ஆனால் மோசே தன்பராபரனாகிய கர்த்தருடைய முகத்தை நோக்கிக்கெஞ்சிச் சொன்னதாவது; கர்த்தாவே! தேவரீர் மகாபலத்தினாலும் வல்லமையான கையினாலும் எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உம்முடைய சனத்திற்கு விரோதமாக உம்முடைய கோபமெரிவானேன்? * ௪. மோசே. ௰௪, ௰௩. மு

௰௨. அவர்களை மலைகளிலே கொன்றுபோடவும், அவர்களைப் பூமியின்மேலிராதபடிக்குத் திர்மூலமடாக்கவும், அவர்களைத் தீமைக்கென்றே புறப்படப்பண்ணினாரென்று எகிப்தியர் சொல்லுவானேன்! உம்முடைய கோபத்தின் உக்கிரத்தைவிட்டுத்திரும்பி உம்முடைய சனத்திற்குத் தீங்குசெய்யாதபடிக்குப் பரிதாபமாயிரும்.

௰௩. உம்முடைய ஊழியக்காரராகிய ஆபிரகாமையும், ஈசாக்கையும் இஸ்ரவேலையும் நினைத்தருளும். உங்கள் வித்தை வானத்தின் நட்சத்திரங்கள் அத்தனையாய்ப் பெருகப்பண்ணி, நாஞ்சொன்ன இந்தத்தேசத்தையெல்லாம் உங்கள் வித்திற்கு அதை யென்றைக்கும் சுதந்தரிக்கும்படிக்குக் கொடுப்போமென்று உம்மைக்கொண்டு அவர்களுக்கு ஆணையிட்டு அவர்களோடே சொன்னீரேயென்றான்.

௰௪. அப்பொழுது கர்த்தர் தம் சனத்திற்குச் செய்வோமென்று சொன்ன தீங்கைச் செய்யாதபடிக்குப் பரிதாபப்பட்டார்.

௰௫. அப்பொழுது மோசே திரும்பிக்கொண்டு பர்வதத்திலிருந்து இறங்கிப்போனான். சாட்சியின் இரண்டுபலகைகள் அவன் கையிலிருந்தது. அவைகள் இருபுறங்களிலும் இந்தப்பக்கமும், அந்தப்பக்கமும் எழுதப்பட்டபலகைகளாயிருந்தது.

௰௬. * அந்தப்பலகைகள் பராபரனுடையசெய்கையும் அவைகளிலே பதிந்த எழுத்துப்பராபரனுடையஎழுத்துமாயிருந்தது. * ௩௧, ௰௮.

௰௭. சனங்கெம்பீரத்திலே கூப்பிடுகிற சத்தத்தை* யோசுவா கேட்டு மோசேயோடே யுத்தத்தின் இரைச்சல் பாளயத்திலுண்டாயிருக்கின்றதென்றான். * ௨௪, ௰௩, ௰௪.

௰௮. அவனோவென்றால், அது செயித்ததுக்குக் கூப்பிடுகிறவர்களின் சத்தமுமல்ல, முறிந்துக் கூப்பிடுகிறவர்களின் சத்தமுமல்ல; பாடுகிறவர்களின் சத்தத்தை நான் கேட்கிறேனென்றான்.

௰௯. அவன் பாளயத்திற்குச் சமீபித்துக் கன்றுக்குட்டியையுங் கூத்துகளையுங் காண்கிறபொழுது, சம்பவித்ததேதெனில், மோசே கோபமூண்டவனாகித் தன் கையிலிருக்கிற பலகைகளைப் பர்வதத்தடியிலே எறிந்துடைத்துப்போட்டு,

௨௰. அவர்களுண்டுபண்ணின கன்றுக்குட்டியையெடுத்து அக்கினியிலெரித்துப்போட்டு அதைப்பொடியாகுமட்டும் அரைத்துத் * தண்ணீரின்மேல் தூவி இஸ்ரவேலபுத்திரருக்குக்குடிக்கக்கொடுத்தான். * ௫. மோசே. ௯, ௨௧.

௨௧. மோசே ஆரோனோடே நீ இந்தச் சனத்தின்மேலே பெரியபாவத்தைச் சுமக்கப்பண்ண அது உனக்கென்னசெய்ததென்றான்.

௨௨. அப்பொழுது ஆரோன் சொன்னதாவது; என் ஆண்டவனுக்குக் கோபமூளாதிருப்பதாக. இந்தச் சனத்தை நீர் அது பொல்லாததென்றறிவீர்.

௨௩. அவர்களென்னோடே எங்கள் முன் நடந்துபோகிறதேவர்களை எங்களுக்குண்டுபண்ணும். ஏனெனில், எங்களை எகிப்துதேசத்திலிருந்தே திரவரப்பண்ணின அந்த யோசேயென்கிறவருக்கென்னசம்பவித்ததென்றறியோமென்றார்கள்.

௨௪. அப்பொழுது நானவர்களோடே யெவர்களுக்குப் பொன்னுடைமையுண்டோ அவர்களதைக் கழற்றி எனக்குத் தரக்கடவர்களென்றேன். அதையக்கினியிலேபோட்டேன். அதனால் இந்தக்கன்றுக்குட்டி உண்டாயிற்றென்றான்.

௨௫. சனம் நிருவாணமானதென்றும், அதற்குவிரோதமாய் எழும்புகிறவர்களுக்கு முன்பாக அபகீர்த்தியை ஆரோன் அதை நிருவாணப்படுத்தினானென்றும், மோசே பார்த்து,

௨௬. அவன் பாளயத்தின் வாசலிலே நின்றுகொண்டு எவர்கள் கர்த்தருடையவர்களோ அவர்களென்னிடத்தில் சேரக்கடவர்களென்றான். அப்பொழுது லேவியின் புத்திரரெல்லாரும் அவனண்டையிலே வந்துகூடினார்கள்.

௨௭ அவர்களோடே அவன் சொன்னதாவது; நீங்கள் அவனவன் தன் பட்டயத்தைத் தன் அரையிலே கட்டிக்கொண்டு பாளயத்தில் வாசலுக்கு வாசல் கடந்து திரிந்து அவனவன் தன் சகோதரனையும் அவனவன் தன் சிநேகிதனையுந் தனக்கடுத்தவனையுங் கொன்றுபோடுங்களென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௨௮. லேவியின் புத்திரர் மோசே சொன்னபடி செய்தார்கள். சனத்தில் அந்நாளிலே ஏறக்குறைய மூவாயிரம்பேர் விழுந்தார்கள்.

௨௯. ஏனென்றால் கர்த்தர் இன்று உங்கள் மேல் ஆசீர்வாதத்தைக் கட்டளையிடும்படிக்கு நீங்கள் இந்நாளிலே அவனவன் தன் மகனுக்கும் தன் சகோதரனுக்கும் விரோதமாகிறதினாலே கர்த்தருக்கு உங்கள் கைகளை நிரப்புங்களென்று மோசே சொல்லியிருந்தான்.

௩௰. மறுநாளிலே சம்பவித்ததேதெனில், மோசே சனத்துடனே நீங்கள் கனபாதகமான பாவஞ்செய்தீர்கள். இப்பொழுதும் நானுங்களுக்காகப் பாவநிவிர்த்தியடையலாமோவென்று கர்த்தரண்டைக்குப்போய் ஏறுவேனென்றான்.

௩௧. அப்படியே மோசே கர்த்தரண்டைக்குத் திரும்பிச் சொன்னதாவது; ஆ இந்தச் சனங் கனபாதகமான பாவஞ்செய்து தங்களுக்குப் பொன்தேவர்களை யுண்டாக்கினார்கள்.

௩௨. இப்பொழுதும் அவர்கள் பாவத்தை மன்னித்தருளும். இல்லாவிட்டால் என்னை நீரெழுதின உம்முடைய புஸ்தகத்திலே கிறுக்கிப்போடுமென்றான்.

௩௩. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; ஆர் நமக்குவிரோதமாய்ப்பாவஞ்செய்கிறானோ அவனை நமது புஸ்தகத்திலே கிறுக்கிப்போடுவோம்.

௩௪. இப்பொழுதும் நீ போய் நானுனக்குச் சொன்னஇடத்திற்குச் சனத்தையழைத்துப்போ. இதோ நம்முடைய தூதன் உனக்கு முன்பாக நடப்பான். ஆனால் நாம் விசாரிக்கும்நாளிலே அவர்களுடைய பாவத்தை அவர்களிடத்திலே விசாரிப்போமென்றார்.

௩௫. அப்படியே சனம் உண்டுபண்ணினதாகிய ஆரோனுடைய செய்கையான கன்றுக்குட்டியினிமித்தங் கர்த்தர் அவர்களை வாதித்தார்.

## ௩௩. அதிகாரம்.

[(௩) பராபரன் சனங்களோடே கூட நடந்தேனென்று மறுத்தது. (௪) சனங்கள் அதைக் குறித்து முறுமுறுத்தது. (௭) கூடாரம் பாளயத்தை விட்டு நீக்கப்பட்டது. (௯) பராபரன் மோசேயுடனே பட்சத்தோடே பேசினது. (௰௨) மோசே பராபரனுடைய மகிமையைப் பார்க்க விரும்பினது.]

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீயும் எகிப்து தேசத்திலிருந்து நீ வரப்பண்ணின சனமுமாயிவ்விடத்தை விட்டு உன் வித்துக்குக் கொடுப்போமென்று நாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்ட பாலும் தேனும் ஓடுகிற தேசத்துக்குப் போய் ஏறுங்கள்.

௨. நாம் ஒரு தூதனை யுனக்கு முன்பாக அனுப்பிக் கானானியனையும் எமோரியனையும் ஏத்தியனையும் பெரிசியனையும் ஏவியனையும் எபூசியனையுந் துரத்திவிடுவோம்.

௩. ஆனால் வழியிலே நாமுன்னை நிர்மூலம் பண்ணுதபடிக்கு நாம் உன் நடுவே நடந்தேறோம். ஏனெனில் நீங்கள் கடினக் கழுத்துள்ள சனமென்றார்.

௪. தீங்கான இந்த வார்த்தையைச் சனங் கேட்டபொழுது, ஒருவருந் தங்கள் ஆபரணங்களைப் போட்டுக்கொள்ளாமல் துக்கித்துக் கொண்டிருந்தார்கள்.

௫. ஏனென்றால், நீங்கள் கடினக் கழுத்துள்ள சனம். நாமொருக்ஷணத்திலே உன் நடுவிலே எழும்பினால் உன்னை நிர்மூலம் பண்ணுவோம். இப்பொழுதும் நாம் உனக்கென்ன செய்ய வேண்டுமென்று அறியும்படிக்கு நீ போட்டிருக்கிற உன் ஆபரணங்களைக் கழற்றிப்போடென்று இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லென்பதைக் கர்த்தர் மோசேயோடே சொல்லியிருந்தார்.

௬. ஆகையால் இஸ்ரவேல் புத்திரர் ஓரேப் பர்வதத்திற்கு முன்பாகத் தங்கள் ஆபரணங்களைக் கழற்றிப்போட்டார்கள்.

௭. மோசே கூடாரத்தைப் பேர்த்து அதைப் புறம்பே பாளயத்திற்குத் தூரமாகப் போட்டுக்கொண்டு அதையாசரிப்பின் கூடாரமென்றான். ஆனதுகொண்டு கர்த்தரைக் கேட்பவனெல்லாம் பாளயத்திற்குப் புறம்பான ஆசரிப்பின் கூடாரத்திற்குப் புறப்பட்டுப் போவான்.

௮. மோசே கூடாரத்திற்குப் புறப்பட்டுப் போகும்பொழுது சனமெல்லாமெழுந்திருந்து அவரவர் தந்தம் கூடாரத்தின் வாசற்படியில் நின்று அவன் கூடாரத்திற்குட் பிரவேசிக்குமட்டும் அவன் பிறகே பார்த்துக்கொண்டிருப்பார்கள்.

௯. மோசே கூடாரத்திற்குட் பிரவேசிக்கையில் மேகத்தூண் இறங்கிக் கூடாரத்தின் வாசற்படியிலே நின்றது. அங்கே மோசேயோடே பேசினார்.

௰. சனமெல்லாம் மேகத்தூணைக் கூடாரத்தின் வாசற்படியிலே நிற்கக்காணும்பொழுது, எழுந்திருந்து அவரவர் தங்கள் கூடாரத்தின் வாசற்படியிலே பணிந்துகொள்ளுவார்கள்.

௰௧. * கர்த்தர் மோசேயோடே முகமுகமாய் ஒருவன் தன் சிநேகிதனோடே பேசுகிறதுபோலப் பேசுவார். பிற்பாடு இவன் பாளயத்திற்குத் திரும்பிவருவான். ஆனால் நூனின் குமாரனாகிய யோசுவாவென்றவனான வேலைக்காரனாகிய வாலிபன் ஆசரிப்பின் கூடாரத்தை விட்டுப் பிரியாதிருப்பான்.

* ௪. மோசே. ௰௨, ௮.

௰௨. மோசே கர்த்தரோடே சொன்னதாவது; இதோ, தேவரீர் என்னோடே இந்தச் சனத்தைப் போய் ஏறப்பண்ணென்று சொன்னீர். ஆனால், உன்னைப் பேர்சொல்லியறிந்திருக்கிறோமென்றும், நம்முடைய கண்களில் உனக்குக் கிருபை கிடைத்ததென்றும் தேவரீர் சொல்லியிருந்தும், ஆனா என்னோடே கூட அனுப்புவீரென்பதை எனக்கறிவிக்காதிருக்கிறீர்.

௰௩. இப்பொழுது உம்முடைய கண்களில் எனக்குக் கிருபைகிடைத்ததேயானால், உம்முடைய வழியை யெனக்கறிவியும். உம்முடைய கண்களில் எனக்குக் கிருபைகிடைக்கும்படியாக உம்மை நான் அறியட்டும். இந்தச் சாதி உம்முடைய சனமென்று பாரும் என்றான்.

௰௪. அதற்கவர் நாமுன்னை இளைப்பாறப் பண்ணும்படிக்கு * நம்முடைய முகம் உனக்கு முன்பாக நடந்துபோமென்றார்.

* யோசு. ௰௪, ௬. கொலோ. ௧, ௰௫. எபிரே. ௬, ௩.

௰௫. அப்பொழுது அவன் அவரோடே சொன்னதாவது; உம்முடைய முகம் நடந்து போகாதிருந்தால், எங்களை இங்கேயிருந்து புறப்படப்பண்ணீராக.

௰௬. ஏனெனில், எனக்கும், உம்முடைய சனத்திற்கும், உம்முடைய கண்களிலே கிருபை கிடைத்ததென்பது எதினால் அறியப்படலாம்! நீர் எங்களோடே நடந்துபோவதினாலேயல்லவோ! அப்படியே பூமியின் மீதுள்ள எல்லாச் சனத்திலும், நானும் உம்முடைய சனமும் விசேஷித்தவர்களென்று விளங்குமென்றான்.

௰௭. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே நீ சொன்ன இந்த வார்த்தையின்படியேயுஞ் செய்வோம். ஏனெனில், நம்முடைய கண்களில் உனக்குக் கிருபை கிடைத்தது. உன்னைப் பேர்சொல்லி யறிந்திருக்கிறோமென்றார்.

௰௮. அப்பொழுது அவன் உம்முடைய மகிமையை எனக்குக் காண்பியுமென்றான்.

௰௯. அதற்கவர் நாம் நமது தயையெல்லாம் உனக்கு முன்பாகக் கடக்கப்பண்ணிக் கர்த்தருடைய நாமத்தை யுனக்கு முன்பாகக் கூறி, நாம் கிருபைவைத்தவன்மேற் கிருபையாயிருந்து, நாம் இரக்கம்வைத்தவன்மேல் இரக்கமாயிருப்போமென்று சொல்லி,

௨௰. பின்னையும் நம்முடைய முகத்தை நீ பார்க்கமாட்டாய். ஏனெனில், ஒரு மனிதனும் நம்மைப் பார்த்து, உயிரோடிருக்கக் கூடாதென்றார்.

௨௰௧. பின்னையுங் கர்த்தர்சொன்னதாவது; இதோ, நம்மண்டையிலொருவிடமிருக்கின்றது. அங்கே நீ கன்மலையில் நிற்பாயாக.

௨௰௨. அப்பொழுது சம்பவிப்பதேதெனில், நம்முடைய மகிமை கடக்கும்போது, நாமுன்னை அந்தக் கன்மலையின் வெடிப்பிலே வைத்து, நாம் கடந்துபோகுமட்டும் நம்முடைய கரத்தினால் உன்னைமூடுவோம்.

௨௰௩. பிற்பாடு நம்முடைய கரத்தை வாங்குவோம். அப்பொழுது நமக்குப் பின்னுகப் பார்ப்பாய். நம்முடைய முகமோவென்றுப் பார்க்கப்படக் கூடாதென்றார்.

## ௩௰௪. அதிகாரம்.

[(௧) சாட்சியின் கற்பலகைகள் மறுபடியுஞ் செய்யப்பட்டது. (௫) பராபரனுடைய நாமம் பிரசித்தமானது. (௮) மோசே சனங்களோடு போகும்படி மன்றாடினது. (௰) பராபரன் முகற்பலகையின் கட்டளையைக் குறித்துச் சனங்களுடன் உடம்படிக்கை செய்தது. (௨௮) மோசே ௪௰-நாள் மலையின்மேலிருந்து சாட்சியின் கற்பலகைகளைக் கொண்டுவந்தது. (௨௯) அவருடைய முகம் பிரகாசமானது, அதை அவர் ஒரு முக்காட்டினாலே மூடினதும்.]

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை இழைத்துக் கொள். நீ உடைத்துப்போட்ட முந்தின பலகைகளிலிருந்த வார்த்தைகளை அவைகளிலெழுதுவோம்.

௨. நீ விடியற்காலத்திற்கு ஆயத்தமாயிருந்து காலமே சீனாய்ப் பர்வதத்திலேறி, அங்கே பர்வதத்தின் கொடுமுடியிலே நமக்குக் காத்து நில்.

௩. உன்னோடேகூட ஒருவரும் ஏறவும், பர்வதமெங்கும் ஒருவருங் காணப்படவும் வேண்டாம். இந்தப் பர்வதத்திற்கெதிராக ஆடுமாடு மேயவுமவேண்டாமென்றார்.

௪. அப்பொழுது மோசே முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளையிழைத்து, அதிகாலமேயெழுந்திருந்து, கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே இரண்டு கற்பலகைகளைத் தன்கையிலே பிடித்துக்கொண்டு சீனாய்ப்பர்வதத்திலேறினன்.

௫. அப்பொழுது கர்த்தர் ஒருமேகத்திலே இறங்கி அங்கே அவன்னண்டையிலே நின்றுகொண்டு கர்த்தருடைய நாமத்தைக்கூறினார்.

௬. கர்த்தர் அவனுக்கு முன்பாகக் கடந்துபோகிறபொழுது, அவர் கூறினதாவது; அவர் கர்த்தர் அவர் கர்த்தர் * அவர் மன உருக்கமும் இரக்கமும் நீடியசாந்தமும் மகா கிருபையுமுண்மையுமுள்ள பராபரன். * ௪. மோசே. ௰௪, ௰௭, ௰௮. சங்கீ. ௮௬, ௰௫. ௱௩, ௭, ௮. ௱௪௫, ௮. யோவான. ௨, ௰௩.

௭. அவர் ஆயிரந்தலைமுறைகளுக்குக் கிருபையைக்காக்கிறவர். அவர் அக்கிரமத்தையும் மீறுதலையும் பாவத்தையும் மன்னிக்கிறவர். அவர் குற்றமுள்ளவனைக் குற்றமற்றவனாக்கவொட்டாமற் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலும் பிள்ளைகளுடைய பிள்ளைகளிடத்திலும் மூன்றும் நான்காந் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவரென்று கூறினர். * சங்கீ. ௱௩, ௩. மிகா. ௭, ௰௮, ௰௯.

௮. மோசே தீவிரமாகத் தரைமட்டுங் குனிந்து பணிந்துகொண்டு,

௯. ஆண்டவரே! உம்முடைய கண்களில் எனக்குக் கிருபைகிடைத்ததேயானால், ஆண்டவர் எங்கள் நடுவிலே நடந்துபோவாராக. ஏனெனில் அது கடினக் கழுத்துள்ள சனம் நீரோவெனில் எங்கள் அக்கிரமத்தையும் எங்கள் பாவத்தையும் மன்னித்து எங்களைச் சுதந்தரித்துக்கொள்வீராகவென்றான்.

௰. அப்பொழுது அவர் சொன்னதாவது; இதோ நாம் உடம்படிக்கைபண்ணுகிறோம். பூமியெங்கும் எந்தச்சாதிகளிடத்திலும் நிகழ்த்தப்படாதிருக்கிற அதிசயங்களை யுன்னுடைய எல்லாச் சனத்திற்கும் முன்பாகச் செய்வோம். நீ தங்கியிருக்கிற சனமெல்லாங் கர்த்தருடைய செய்கையைப் பார்க்கப்போம் ஏனெனில் நாமுன்னோடேயிருந்து செய்யப்போகிறது பயங்கரமாயிருக்கும்.

௰௧. இன்று நாமுனக்குக் கற்பிக்கிறதையே கைக்கொள். இதோ, எமோரியனையுங் கானானியனையும் ஏத்தியனையும் பெரிசியனையும் ஏவியனையும் எபூசியனையும் உனக்கு முன்பாகத் துரத்திவிடுவோம்.

௰௨. நீ போய்ச் சேருகிறதேசத்தின் குடிகளுடனே உடம்படிக்கைபண்ணாதபடிக்கு, நீ எச்சரிக்கையாயிரு. அது உன்னடுவே கண்ணியாகாதபடிக்கு,

௰௩. அவர்களுடைய பலிபீடங்களை இடித்து அவர்கள் சிலைகளைத் தகர்த்து அவர்கள் தோப்புகளை வெட்டிப்போடக் கடவீர்கள்.

௰௪. ஏனெனில் அன்னியதேவனை நீ பணிந்துகொள்ளலாகாது. அதேனென்றால் கர்த்

தருடைய நாமம் எரிச்சலுள்ளவரென்பது. அவர் எரிச்சலுள்ள பராபரன்.

௧௫. அந்தத் தேசத்தின் குடிகளோடே உடம்படிக்கை பண்ணாயாக. மற்றப்படி அவர்களுடைய தேவர்களின் பிறகாலே சோரம்போய் அவர்கள் தேவர்களுக்குப் பலியிடுவார்கள். அவர்கள் உன்னை அழைக்கையில், நீ போய் அவர்கள் பலியிட்டதிலே புசித்து,

௧௬. அவர்கள் குமாரத்திகளில் உன் குமாரருக்குப் பெண்களைக் கொள்ளுவாய். அப்படியே அவர்கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகையில், உன் குமாரரையுந் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம் போகப்பண்ணுவார்கள்.

௧௭. வார்ப்பிக்கப்பட்ட தேவர்களை உனக்கு உண்டாக்காயாக.

௧௮. நீ புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையைக் கைக்கொண்டு நானுனக்குக் கற்பித்தபடி ஆபீப் மாதத்தின் திட்டமான காலத்திலே ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிப்பாயாக. ஏனெனில், ஆபீப் மாதத்திலே எகிப்திலிருந்து புறப்பட்டாய்.

௧௯. கர்ப்பந்திறந்து பிறக்கிறயாவும் உன் ஆடுமாடுகளின் மந்தையிலே தலையீற்றான ஆண்யாவும், நம்முடையது.

௨௦. ஆனால் கழுதையின் தலையீற்றை ஒரு ஆட்டுக்குட்டியால் மீட்டுக்கொள்வாயாக. மீட்காயேயானால் அதின் தலையை வெட்டிப் போடக்கடவாய். உன் பிள்ளைகளில் முதற்பேறானதையெல்லாம் மீட்டுக் கொள்வாயாக. வெறுங்கையாய் நமக்கு முன்பாகக் காணப்படார்களாக.

௨௧. ஆறுநாள் வேலைசெய்து ஏழாம் நாளில் ஓய்ந்திருப்பாயாக. உழுகிறகாலமானாலும் அறுக்கிறகாலமானாலும் ஓய்ந்திருப்பாயாக.

௨௨. கோதுமையறுப்பின் முதற்பலனைச் செலுத்தும் வாரங்களின் பண்டிகையையும், வருஷமுடிவிலே சேர்ப்பின் பண்டிகையையும், ஆசரிப்பாயாக.

௨௩. வருஷத்திலே மூன்றுதரம் உன் ஆண்சாதியெல்லாம் இஸ்ரவேலின் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய ஆண்டவரின் சந்நிதிக்கு முன்பாகக் காணப்படக்கடவது.

௨௪. ஏனெனில், நாம் புறச்சாதிகளை உனக்கு முன்பாகத் துரத்திவிட்டு உன் எல்லைகளை விஸ்தாரமாக்குவோம். நீ வருஷத்திலே மூன்றுதரம் உன் பராபரனாகிய கர்த்தரின் சந்நிதிக்கு முன்பாகக் காணப்படப்போயிருக்கையில் ஒருவரும் உன் தேசத்தை இச்சிப்பதில்லை.

௨௫. புளித்தமாவிருக்கும்போது நமது பலியின் இரத்தத்தைப் பலியிடாயாக. பஸ்காப் பண்டிகையின் பலியைக் காலம்பரமட்டும் வைத்திருக்கவும் வேண்டாம்.

௨௬. உன் நிலத்தின் முதல் விளைச்சலின் முந்தின கனியை உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிற்குக் கொண்டுவருவாயாக. வெள்ளாட்டுக்குட்டியை அதின் தாயின் பாலிலே சமைக்காயாக என்றார்.

௨௭. பின்னுங் கர்த்தர் மோசேயுடனே: இந்த வார்த்தைகளையெழுதிக்கொள். ஏனெனில், இந்த வார்த்தைகளின்படியே உன்னோடும் இஸ்ரவேலோடும் உடம்படிக்கை பண்ணினேனென்றார்.

௨௮. அவனங்கே கர்த்தரோடே இராப்பகலும் நாற்பது நாள் அப்பம்புசியாமலுந் தண்ணீர் குடியாமலுமிருந்தான். அவர் பத்து வசனங்களாகிய உடம்படிக்கையின் வார்த்தைகளைப் பலகைகளிலெழுதினார்.

௨௯. மோசே சாட்சியின் இரண்டு பலகைகளைத் தன் கையிலே பிடித்துச் சீனாய்ப் பர்வதத்திலிருந்திறங்குகிறபோது, அவர் தன்னோடே பேசினதினாலே தன் முகத்தின் தோல் பிரகாசிக்கிறதென்கிறதை அவன் அறியாதிருந்தான்.

௩௦. ஆரோனும் இஸ்ரவேலின் எல்லாப் புத்திரரும் மோசேயைப் பார்க்கும்பொழுது, இதோ, அவன் முகத்தின் தோல் பிரகாசித்தது. ஆகையால் அவனண்டைக்குச் சேரப்பயந்தார்கள்.

௩௧. ஆனால் மோசே அவர்களைக் கூப்பிட்டான். அப்பொழுது ஆரோனுஞ் சபையிலுள்ள எல்லாப் பிரபுக்களும் அவனண்டைக்குத் திரும்பினார்கள். மோசே அவர்களோடே பேசினான்.

௩௨. அதற்குப்பிறகு இஸ்ரவேல் புத்திரரெல்லாரும் அவனண்டையிற் சேர்ந்தார்கள். அப்பொழுது அவன் சீனாய்ப் பர்வதத்திலே கர்த்தர் தன்னோடே பேசினதையெல்லாம் அவர்களுக்குக் கற்பித்தான்.

௩௩. மோசே அவர்களோடே பேசி * முடியுமட்டுந் தன் முகத்தின்மேல் முக்காடு போட்டிருந்தான். * உ. கொரி. ௩, ௭.

௩௪. ஆனால் மோசே கர்த்தரின் சந்நிதியிலே அவரோடே பேசும்படிக்கு உட்பிரவேசிக்கையில், முக்காட்டை வாங்கிப் புறப்படுமட்டும் போடாதிருந்தான். அவன் புறப்பட்டு வந்து தனக்குக் கற்பிக்கப்பட்டதை இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லும்பொழுதோவெனில்,

௩௫. இஸ்ரவேல் புத்திரர் அவன் முகத்தை அதின் தோல் பிரகாசிக்கிறதென்று பார்த்தார்கள். ஆகையால் மோசே அவரோடே பேசும்படிக்கு உட்பிரவேசிக்குமட்டும் முக்காட்டைத் திரும்பத் தன் முகத்தின்மேல் போடுவான்.

## ௩௫. அதிகாரம்.

[(௧) ஓய்வுநாள். (௪) கூடாரத்துக்காகக் கொடுத்த காணிக்கை. (௨௰) அதைச் செலுத்துவதற்குச் சனங்கள் பிரியப்பட்டது. (௩௰) பெத்சாலெயேலும் அகோலியாபும் அவ்வேலைக்கு அழைக்கப்பட்டது.]

மோசே இஸ்ரவேல் புத்திரரின் சபையையெல்லாம் கூட்டி அவர்களோடே சொன்னதாவது; கர்த்தர் செய்யக் கற்பித்ததேதெனில்,

௨. ஆறுநாளைக்குள்ளே உன் வேலையைச் செய்வாயாக. ஏழாம் நாளோவென்றால், உங்களுக்குப் பரிசுத்தமாயிருப்பதாக. அது கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் ஓய்வுநாள். அதிலே வேலை செய்கிறவனெல்லாம் கொலையுண்ணக்கடவன்.

௩. ஓய்வுநாளில் உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் நெருப்பு மூட்டாதிருப்பீர்களாகவென்று கற்பித்தாரென்றான்.

௪. பின்னையும் மோசே இஸ்ரவேல் புத்திரரின் சபையோடெல்லாஞ் சொன்னதாவது; கர்த்தர் கற்பித்ததேதெனில்,

௫. * உங்களுக்குண்டானதிலே கர்த்தருக்கொரு காணிக்கையை யெடுத்துச் செலுத்துங்கள். மனப்பூர்வமுள்ளவனெல்லாம் அதைக் கொண்டுவரக்கடவன். கர்த்தருக்குச் செலுத்துங் காணிக்கை யென்னவெனிற் பொன்னும், வெள்ளியும், வெண்கலமும்.

* ௨௫, ௨. மு

௬. இளநீல நூலும் இரத்தாம்பர நூலும் சிவப்பு நூலும் மெல்லிய பஞ்சு நூலும் வெள்ளாட்டு மயிரும்,

௭. சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களுந் தகசுகளின் தோல்களுஞ் சீத்திம் மரங்களும்,

௮. விளக்குக் கெண்ணெயும் அபிஷேகத் தெண்ணெய்க்குப் பரிமள வர்க்கங்களுந் தூபங் காட்டுதலுக்குச் சுகந்தவர்க்கங்களும்,

௯. ஆசாரிய சால்வைக்கும் மார்ப்பதக்கத்திற்குங் கோமேதகக்கற்களும் பதித்து வைக்கும் இரத்தினங்களுந்தானே.

௰. உங்களில் ஞானமான இருதயமுள்ள அனைவரும் வந்து கர்த்தர் கற்பித்ததையெல்லாஞ் செய்வார்களாக.

௧௧. வாசஸ்தலத்தையும் அதின் கூடாரத்தையும், அதின் மூடியையும், அதின் கொக்கிகளையும், அதின் பலகைகளையும், அதின் தாழ்ப்பாள்களையும், அதின் தூண்களையும், அதின் கால்களையும்,

௧௨. பெட்டியையும், அதின் வாரைகளையும், கிருபாசனமான மூடியையும், மறைவின் திரையையும்,

௧௩. மேசையையும், அதின் வாரைகளையும், அதினுடைய எல்லா முட்டுகளையுஞ் சமுகத்தப்பங்களையும்,

௧௪. வெளிச்சங்காட்டுங் குத்துவிளக்கையும் அதின் முட்டுகளையும் அதின் விளக்குகளையும் வெளிச்சத்திற் கெண்ணெயையும்,

௧௫. தூபபீடத்தையும் அதின் வாரைகளையும் அபிஷேகத் தெண்ணெயையுஞ் சுகந்தங்களின் தூபவர்க்கத்தையும் வாசஸ்தலத்தின் வாசலுக்கு மறைவையும்,

௧௬. தகனபலிபீடத்தையும் அதின் வாரைகளையும் அதினுடைய எல்லா முட்டுகளையுந் தொட்டியையும் அதின் பாதத்தையும்,

௧௭. பிரகாரத்தின் வெளியாடைகளையும் அதின் தூண்களையும் அதின் கால்களையும் பிரகாரத்து வாசலின் மறைவையும்,

௧௮. வாசஸ்தலத்தின் முளைக்கூச்சுகளையும் பிரகாரத்தின் முளைக்கூச்சுகளையும் அவைகளின் கயிறுகளையும்,

௧௯. பரிசுத்த ஸ்தலத்திலே செய்கிற ஆராதனையின் சீலைகளையும் ஆசாரிய ஊழியஞ்செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும் அவன் குமாரரின் வஸ்திரங்களையும் அவர்கள் செய்வார்களாகவென்று சொன்னான்.

௨௰. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் மோசேயை விட்டுப் புறப்பட்டது.

௨௧. எவர்களை யவர்களிருதய மெழுப்பி அவர்கள் ஆவி பூர்வமாக்கிறதோ அவர்களெல்லாரும் வந்து ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்கும் அதின் சகல ஊழியத்திற்கும் பரிசுத்த வஸ்திரங்களுக்குங் கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தார்கள்.

௨௨. கர்த்தருக்குப் பொன்னை அசைவாட்டுங் காணிக்கையாகச் செலுத்துகிற புருஷரும் பெண்சாதிகளுமான மனப்பூர்வமுள்ள அனைவரும் வந்து சரடுகள் கடுக்கன்கள் மோதிரங்கள் காப்புகள் முதலான சகலவிதப் பொற்பணிகளைக் கொண்டுவந்தார்கள்.

௨௩. தங்களிடத்தில் இளநீல நூலையும் இரத்தாம்பர நூலையுஞ் சிவப்பு நூலையும் மெல்லிய பஞ்சு நூலையும் வெள்ளாட்டு மயிரையுஞ் சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களையுந் தகசுகளின் தோல்களையுங் கண்டுபிடித்த யாவருங் கொண்டுவந்தார்கள்.

௨௪. வெள்ளியையும் வெண்கலத்தையுங் கொடுக்கத்தக்க யாவரும் அவைகளைக் கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தார்கள். வேலையிலே சகலவித கிரியைக்குமான சீத்திம் மரங்களைத் தங்களிடத்திற் கண்டுபிடித்த யாவருங் கொண்டுவந்தார்கள்.

௨௫. ஞானமான இருதயமுள்ள ஸ்திரீகளெல்லாருந் தங்கள் கைகளினாலே நூற்றுத் தாங்கள் நூற்ற இளநீல நூலையும் இரத்தாம்

பரநூலையும் சிவப்பு நூலையும் மெல்லிய பஞ்சுநூலையும் கொண்டுவந்தார்கள்.

௨௬. எந்த ஸ்திரீகளை அவர்களிருதயம் ஞானமாய்ச்செய்ய எழுப்பிற்றோ அவர்கள் வெள்ளாட்டுமயிரை நூற்றார்கள்.

௨௭. பிரபுக்கள் ஆசாரிய சால்வைக்கும் மார்ப்பதக்கத்திற்குமென்று கோமேதகக் கற்களையும், பதித்து வைக்கும் இரத்தினங்களையும்,

௨௮. பரிமள வர்க்கங்களையும் விளக்குக்கு எண்ணெயையு மபிஷேகத்தெண்ணெய்க்குஞ் சுகந்த வர்க்கங்களின் தூபங்காட்டுதலுக்கும் வேண்டியவைகளையுங் கொண்டுவந்தார்கள்.

௨௯. செய்கிறதற்குக் கர்த்தர் மோசேயைக்கொண்டு கற்பித்ததெல்லாவேலைக்குங் கொண்டுவர இஸ்ரவேல் புத்திரரில் தங்களிருதயத்தால் மனப்பூர்வமாக்கப்பட்ட எல்லாப்புருஷரும் ஸ்திரீகளுங்கர்த்தருக்குக் காணிக்கையைக்கொண்டுவந்தார்கள்.

௩௰. மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது; பாருங்கள் கர்த்தர் * யூதாவின் கோத்திரத்திலஊருடைய மகனான ஊரியின் குமாரன்பெத்சாலெயேலைப் பேர்சொல்லி அழைத்து, * ௩௧, ௨.

௩௧. அவன் விசித்திரமான வேலைகளையோசித்துச்செய்யவும் பொன்னிலும்வெள்ளியிலும் வெண்கலத்திலும்வேலைசெய்யவும்,

௩௨. இரத்தினங்களை முத்திரைவெட்டாய் வெட்டிப்பதித்து வைக்கவும், மரத்திலே தச்சுவேலைசெய்து சகல விசித்திரமான வேலையைப்பண்ணவும்,

௩௩. அவனுக்கு ஞானமும் உணர்வும் அறிவுஞ் சகல விதவேலையின் வித்தையும் உண்டாக அவனைப் பராபரன் தம்முடைய ஆவியினாலே நிரப்பினார்.

௩௪. அவனிருதயத்திலும் தான்கோத்திர அகிசாமாகின்குமாரனாகிய அகோலியாபின் இருதயத்திலும் போதிக்கிறதற்கான வரத்தையுங் கொடுத்தார்.

௩௫. சகல விதத்தொழிலின் சித்திரவேலையையும் இளநீல்நூலாலும் இரத்தாம்பர நூலாலுஞ் சிவப்பு நூலாலும் மெல்லிய பஞ்சு நூலாலும்பண்ணுகிற சித்திரத்தையல் வேலையையும் நெய்கிற எல்லாவேலையையுஞ்செய்ய அவர்களை யிருதயத்தின் ஞானத்தினாலே நிரப்பினார். அவர்கள்சகல விதவேலையைச்செய்த விசித்திரமான வேலைகளை யோசித்துப்பண்ணுவார்களென்றான்.

## ௩௬. அதிகாரம்.

[(௧) கூடாரத்துக் காகக் கொடுத்தசாமான்வேலைக்காரர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டது. (௫) சனங்களுடைய உதாரத்துவந் தடைசெய்யப்பட்டது. (௮) கேருபீன்களின் திரைகளையும், (௰௪) ஆட்டுமயிர்களின் திரைகளையும், (௰௯) ஆட்டுக்கடாத்தோலின் மூடியையும், (௨௰) பலகைகளையுங் கவர்க்கால்களையும், (௩௧) தாழ்ப்பாள்களையும், (௩௫) முகத்திரையையும், (௩௭) வாசலின் திரையையுங் குறித்தது.]

அப்பொழுது பெத்சாலெயேலும் அகோலியாபும் பரிசுத்த வேலையின் எல்லாக் கிரியையையுங் கர்த்தர் கற்பித்தபடி எல்லாஞ்செய்ய அறியும்படிக்குக் கர்த்தர் ஞானமும் உணர்வுங் கொடுத்த ஞானமான இருதயமுள்ள அனைவருடனே வேலைக்குட்பட்டார்கள்.

௨. ஏனென்றால், மோசே பெத்சாலெயேலையும் அகோலியாபையுங் கர்த்தர் ஞானங் கொடுத்தவர்களிலே, அந்தவேலையைச் செய்யச் சேருகிறதற்குத் தங்கள் இருதயத்தால் எழுப்பப்பட்ட ஞானமுள்ள இருதயத்தாராகிய எல்லாரையும் வரவழைத்தான்.

௩. அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் பரிசுத்த வேலையின் கிரியைக்குக் கொண்டுவந்ததாகிய மோசேக்குமுன்பாக இருந்த காணிக்கையையெல்லாம் அதைச்செய்யும்படிக்கு ஒப்புவித்துக்கொண்டார்கள். இவர்களோவென்றால், இன்னங் காலையில் மனப்பூர்வமான காணிக்கைகளை அவனண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

௪. அப்பொழுது பரிசுத்த வேலையையெல்லாஞ் செய்கிற சகல ஞானிகளும் அவரவர் தாங்கள் செய்கிற வேலையின் காரியமாய்வந்து,

௫. மோசேயுடனே கர்த்தர் செய்யக்கற்பித்தக்கிரியையின் வேலைக்குவேண்டியதைப் பார்க்கிலுஞ் சனம் மிச்சமாய்க்கொண்டுவருகின்றதென்றார்கள்.

௬. அப்பொழுது மோசே இனிப்புருஷரும் ஸ்திரீகளும் பரிசுத்த காணிக்கைக்கென்று வேலைசெய்யார்களாகவென்று பாளயத்திலே கூறக்கட்டளையிட்டான். அப்படியே சனங்கொண்டுவருகிறது நிறுத்தப்பட்டது.

௭. ஏனெனில், செய்யப்போகிற எல்லா வேலைக்கும் போந்ததளவாட்டம் அதிகமாயிருந்தது.

௮. வேலையைச் செய்கிறவர்களில் ஞானமான இருதயமுள்ள அனைவரும், * வாசஸ்தலத்தைப் பண்டாக்கினார்கள். அதற்குத் திரித்தமெல்லியபஞ்சுநூலும் இளநீலநூலும் இரத்தாம்பரநூலுஞ் சிவப்புநூலுமாய் நெய்தலான விசித்திர வேலையாகிய கேருபீன்களுமுள்ள பத்துச்சமுக்காளங்களைப் பண்ணுவித்தான். * ௨௬, ௧.

௯. ஒவ்வொருசமுக்காளம் இருபத்தெட்டு முழநீளமும், நாலுமுழ அகலமுமாய், சமுக்

கனமுமெல்லாம் ஒரே அளவுமாயிருந்தது.

௯. ஐந்து சமுக்காளங்களை ஒன்றோடொன்றாக இணைத்து, மற்ற ஐந்து சமுக்காளங்களையும் ஒன்றோடொன்றாக இணைத்தான்.

௰. இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடையோரத்திலே இளநீலநூலால் ஐம்பது காதுகளையுண்டுபண்ணி அப்படியே இணைக்கப்பட்ட மற்றச் சமுக்காளத்தின் கடையோரத்திலும் உண்டுபண்ணினான்.

௰௧. காதுகள் ஒன்றுக்கொன்று எதிராகச் சேர்ந்தவைகளாயிருந்தது.

௰௨. ஐம்பது பொற்கொக்கிகளையும் பண்ணி அவைகளாற் சமுக்காளங்களை வாசஸ்தலமாய்ப் போதும்படிக்கு ஒன்றுக்கொன்று இணைத்துப்போட்டான்.

௰௩. வாசஸ்தலத்தின் மேற் கூடாரமாக ஆட்டுமயிரினாலே நெய்த பதினொரு சமுக்காளங்களையுமுண்டாக்கினான்.

௰௪. ஒவ்வொரு சமுக்காளம் முப்பது முழ நீளமும் நான்கு முழ அகலமும் பதினொரு சமுக்காளங்களும் ஒரே அளவுமாயிருந்தது.

௰௫. ஐந்து சமுக்காளங்களையொன்றாகவும் ஆறு சமுக்காளங்களையொன்றாகவும் இணைத்து,

௰௬. இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடையோரத்தில் ஐம்பது காதுகளையும் இணைக்கப்பட்ட மற்றச் சமுக்காளத்தின் ஓரத்தில் ஐம்பது காதுகளையும் உண்டாக்கி,

௰௭. கூடாரத்தை ஒன்றாய் இணைத்துவிட ஐம்பது வெண்கலக்கொக்கிகளையுண்டாக்கினான்.

௰௮. சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத்தோல்களினாலே கூடாரத்திற்கு ஒரு மூடியையும் அதின்மேலே தகசுத்தோல்களினாலே ஒரு மூடியையும் உண்டுபண்ணினான்.

௰௯. நிமிர்ந்து நிற்கிற பலகைகளையும் வாசஸ்தலத்திற்குச் சீத்திம் மரங்களாலே செய்பண்ணினான்.

௨௰. ஒவ்வொரு பலகை பத்துமுழ நீளமும் ஒன்றரைமுழ அகலமுமாயிருந்தது.

௨௰௧. ஒன்றுக்கொன்று எதிரேயிசைவான இரண்டு முளைகள் ஒவ்வொரு பலகைக்கிருந்தது. இப்படி வாசஸ்தலத்தின் பலகைகளுக்கெல்லாஞ் செய்தான்.

௨௰௨. வாசஸ்தலத்திற்காகச் செய்பண்ணின பலகைகளில் இருபதைத் தெற்கே தென்றிசைக்கெதிராக நிறுத்தி,

௨௰௩. அந்த இருபது பலகைகளின் கீழே நாற்பது வெள்ளிக்கால்களை ஒவ்வொரு பலகையின் கீழ் அதின் இரண்டு முளைகளுக்கான இரண்டு கால்களாக உண்டுபண்ணி வைத்து,

௨௰௪. வாசஸ்தலத்தின் வடக்கான மறுபக்கத்திலும் இருபது பலகைகளை நிறுத்தி,

௨௰௫. அவைகளின் நாற்பது வெள்ளிக்கால்களையும் ஒவ்வொரு பலகையின் கீழ் இரண்டு கால்களாகப் பண்ணுவித்தான்.

௨௰௬. வாசஸ்தலத்தின் மேற்புறமாக ஆறு பலகைகளை நிறுத்தி,

௨௰௭. வாசஸ்தலத்தின் இரண்டு பக்கக் கோடிகளுக்கு இரண்டு பலகைகளையுஞ் செய்பண்ணினான்.

௨௰௮. இவைகள் தாழத்துவக்கி இரண்டு பக்கங்களையேகமாய்ப் பிடித்து உயர ஒரே சட்டமாயிசைந்திருந்தது. இரண்டு கோடிகளிலுமிருக்கும் இரண்டையும் அப்படிச் செய்தான்.

௨௰௯. அப்படியே பலகைகள் எட்டும் அவைகளுடைய வெள்ளிக்கால்கள் ஒவ்வொரு பலகையின் கீழ் இரண்டிரண்டு காலாகப் பதினாறுமாயிருந்தது.

௩௰. சீத்திம் மரங்களால் வாசஸ்தலத்தின் ஒரு பக்கத்துப் பலகைகளுக்கைந்து தாழ்ப்பாள்களையும்,

௩௰௧. வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகைகளுக்கைந்து தாழ்ப்பாள்களையும் வாசஸ்தலத்தின் மேற்புறமான பின்பக்கத்துப் பலகைகளுக்கைந்து தாழ்ப்பாள்களையும் பண்ணி,

௩௰௨. நடுத்தாழ்ப்பாளைப் பலகைகளின் மையத்திலே ஒரு முனைதுவக்கி மறுமுனைமட்டும் பாயச்செய்யப்படுகிறதாகச் செய்தான்.

௩௰௩. பலகைகளைப் பொற்றகட்டால் மூடித் தாழ்ப்பாள்களின் இடங்களாகிய அவைகளின் வளையங்களைப் பொன்னினாலே பண்ணித் தாழ்ப்பாள்களைப் பொற்றகட்டால் மூடினான்.

௩௰௪. இளநீலநூலும் இரத்தாம்பரநூலுஞ் சிவப்புநூலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலுமாய் நெய்தலின் விநோத வேலையாகிய கேருபீன்களுமுள்ள திரையையுண்டுபண்ணி,

௩௰௫. அதற்குச் சீத்திம் மரமான நான்கு தூண்களைச் செய்பண்ணிட்டு அவைகளைப் பொற்றகட்டால் மூடி அவைகளின் வளைவாணிகளைப் பொன்னினாலே பண்ணி அவைகளுக்கு நான்கு வெள்ளிக்கால்களை வார்ப்பித்தான்.

௩௰௬. கூடாரத்தின் வாசலுக்கு இளநீலநூலும் இரத்தாம்பரநூலுஞ் சிவப்புநூலுந் திரித்த மெல்லிய பஞ்சுநூலுஞ் சித்திரத்தையல் வேலையுமான ஒரு மறைவையும்,

௩௰௭. அதின் ஐந்து தூண்களையும் அவைகளின் வளைவாணிகளையுமுண்டாக்கி அவைகளின் குமிழ்களையும் அதின் வளையங்களையும் பொற்றகட்டால் மூடினான். அவைகளுக்கு வார்ப்பித்த ஐந்து கால்களோ வெண்கலம்.

## ௩௭. அதிகாரம்.

[(௧) நியாயப்பிரமாணப்பெட்டகம். (௬) கேருபீன்களுடனே செய்யப்பட்ட கிருபா

௬௰. (௰) மேசையும அதின பாத்திரங்களும, (௰௭) விளக்குத்தண்டும் விளக்குகளும அதின ஆயுதங்களும, (௨௫) தூபதீபத்தின பலிபீடம. (௨௯) அபிஷேக எண்ணெய்.]

**பெ**ச்சாலேயேல சீத்திம்மரங்களாற் * பெட்டியை யுண்டு பண்ணினான. அதின நீளம இரண்டரைமுழமும, அதின அகலம ஒன்றரைமுழமும, அதின உயரம்ஒன்றரைமுழமுமானது. *௨௫, ௰. ஶ

௨. அதையுள்ளும்புறம்புஞ்சுத்தப்பொற்றகட்டாலமூடிச் சுற்றிலும அதற்குப்பொற்றிரணையையுண்டாக்கி,

௩. அதற்கு நான்கு பொனவளையங்களை வார்ப்பித்து அவைகளையதின நான்குகோடிகளிலே ஒரு பக்கத்தில இரண்டுவளையங்களும, மறுபக்கத்தில இரண்டு வளையங்களுமிருக்கும்படிக்குத்தைத்தது,

௪. சீத்திம் மரங்களாலவாரைகளைச்செயப்பணிடு, அவைகளைப் பொற்றகட்டால் மூடி,

௫. அந்த வாரைகளாற்பெட்டியைச்சுமக்கும்படிக் கவைகளைப பெட்டியின பக்கங்களிலுள்ள வளையங்களிற் பாய்ச்சினான்.

௬. சுத்தப பொனனினாலே * கிருபாசனமானமூடியையும்பண்ணினான. அது இரண்டரைமுழநீளமும ஒன்றரைமுழ அகலமுமானது. * ௨௫, ௰௭. ஶ

௭. பொனனான இரண்டு கேருபீனகளையும அடிக்கப்பட்ட பொனனினாலே யுண்டாக்கிகிருபாசனமானமூடியின இரண்டோரங்களிலே,

௮. ஒரேகேருபீன இந்தப புறத்தினோரத்திலுமமறறக்கேருபீனஅந்தப்புறத்தினோரத்திலுமிருக்கும்படி பண்ணினான. அந்தக் கேருபீனகளைக் கிருபாசனமான மூடியின இரண்டோரங்களில அதிலிருந்துண்டானவைகளாக விருக்கப்பண்ணினான.

௯. அந்தக் கேருபீனகள தங்கள செட்டைகளையுயரவிரித்துத் தங்கள செட்டைகளாலே கிருபாசனமானமூடியை மூடுகிறவைகளும ஒன்றுக்கொன்று எதிர் முகங்களுமாயிருந்தது. கேருபீனகளின முகங்கள கிருபாசனமான மூடியை நோக்கிக்கொண்டிருந்தது.

௰. சீத்திம் மரங்களால * மேசையையும் பண்ணினான. அது இரண்டுமுழ நீளமும ஒருமுழ அகலமும ஒன்றரைமுழ உயரமுமானது. * ௨௫, ௨௩. ஶ

௰௧. அதைச சுத்தப பொற்றகட்டால மூடிச சுற்றிலும அதற்குப பொற்றிரணையையுண்டாக்கி,

௰௨. சுற்றிலும அதற்கு நான்கு விரற்கடையான சட்டத்தையுஞ சுற்றிலும அதின சட்டத்திற்கும பொற்றிரணையையுண்டுபண்ணி,

௰௩. அதற்கு நான்கு பொனவளையங்களை வார்ப்பித்து அவைகளையதின நான்குகாலகளுக்கிருக்கும நான்குகோடிகளிலே தைத்தான.

௰௪. அந்தவளையங்கள மேசையைச சுமக்கும வாரைகளின இடங்களாயிருக்கப பண்ணினான.

௰௫. மேசையைச சுமக்கும அந்தவாரைகளைச சீத்திம் மரங்களாலேபண்ணி அவைகளைப பொற்றகட்டாலமூடி,

௰௬. மேசையின மேலிருக்கும மூடுகளாகிய அதினகலங்களையும, அதின தூபக்கிண்ணிகளையும, அதினகரகங்களையும மூடுகிறதற்கான அதின தட்டுகளையுஞ சுத்தப பொனனினாலே யுண்டாக்கினான.

௰௭. * அடிக்கப்பட்ட சுத்தப பொனனினாலேகுத்துவிளக்கையும உண்டாக்கினான. அதினதண்டும அதின கிளைகளும அதின மொக்குகளும அதினமாதளம் பழங்களும அதின பூக்களும அதிலிருந்து புறப்படுகிறவைகளாயிருந்தது. * ௨௫, ௩௧. ஶ

௰௮. குத்துவிளக்கின பக்கங்களிலிருந்து ஆறுகிளைகள்மூனறு அதினொருபக்கத்திலும மூனறு அதின மறுபக்கத்திலு மிருந்து புறப்பட்டது.

௰௯. ஒவவொரு கிளையிலே வாதுமைக் கொட்டைகளின சாயலான மூனறு மொக்குகளும ஒருமாதளமபழமும ஒருபூவுமிருந்தது. குத்துவிளக்கிலிருந்து புறப்படுகிற ஆறுகிளைகளிலும அப்படியிருந்தது.

௨௰. விளக்குத் தண்டிலோ வென்றால, வாதுமைக் கொட்டைகளின சாயலான நானகு மொக்குகளும அதினமாதளமபழங்களும அதின பூக்களுமிருந்தது.

௨௧. அதிலிருந்து புறப்படுகிற இரண்டு கிளைகளினகீழ ஒருமாதளம பழமும வேறேயிரண்டுகிளைகளினகீழ ஒருமாதளம பழமும் மறறை இரண்டுகிளைகளினகீழ ஒருமாதளம் பழமுமிருந்தது. விளக்குத்தண்டிலிருந்து புறப்படுகிற ஆறுகிளைகளுக்கும அப்படியிருந்தது.

௨௨. அவைகளின மாதளம பழங்களும அவைகளினகிளைகளும் அதிலிருந்துண்டானதாகவிருந்தது. எலலாம் அடிக்கப்பட்ட சுத்தப்பொனனாகியஒருதுண்டாயிருந்தது.

௨௩. அதின ஏழு விளக்குகளையும அதின கத்திரிகளையும விளக்கணைக்கிற எத்தனங்களையுஞ சுத்தப் பொனனினாலே யுண்டாக்கினான.

௨௪. அதையதினுடைய எல்லா முஸ்திதுகளோடுங்கூட ஒருதாலந்து சுத்தபபொனனினாலே யுண்டுபண்ணினான.

௨௫. சீத்திம்மரங்களினாலே, * தூபபீடத்

தையும் உண்டாக்கினான். அது ஒரு முழ நீளமும், ஒரு முழ அகலமுமாகிய சதுரமும், இரண்டு முழ உயரமுமாய், அதின் கொம்புகள் அதனோடே ஒருதுண்டமாயிருந்தது.
* ௩௰, ௧. மு

௨௬. அதையெல்லாம் அதின் மேற்பலகையையும், அதின் சுற்றுப் பக்கங்களையும், அதின் கொம்புகளையுஞ் சுத்தப்பொற்றகட்டால் மூடிச் சுற்றிலும் அதற்குப் பொற்றிரணையையுண்டுபண்ணி,

௨௭. அதின் திரணையின்கீழ் அதின் இரண்டு பக்கங்களிலிருக்கும் இரண்டு கோடிகளில் இவ்விரண்டு பொன் வளையங்களை அதைச் சுமக்கும் வாரைகளினிடங்களாகத் தைத்து.

௨௮. சீத்திம் மரங்களால் அந்த வாரைகளைச் செய்து, அவைகளைப் பொற்றகட்டால் மூடினான்.

௨௯. பரிசுத்த அபிஷேகத் தைலத்தையுஞ் சுத்தமான சுகந்தங்களின் தூபவர்க்கத்தையுந் தயிலக்காரன் வேலையாயுண்டுபண்ணினான்.

## ௩௮. அதிகாரம்.

[(௧) சுட்டபலியின் பலிபீடம். (௮) பித்தளைத் தாம்பாளம். (௯) பிரகாரம். (௨௧) சனங்கள் கொடுத்தவைகளின் தொகை.]

சீத்திம்மரங்களால் * தகனபலிபீடத்தையும் உண்டாக்கினான். அது ஐந்து முழ நீளமும், ஐந்து முழ அகலமுமான சதுரமும் மூன்று முழ உயரமுமானது. * ௨௭, ௧. மு

௨. அதின் நான்கு கோடிகள்மேல் அதனோடேகமாயிருக்கிற அதின் நாலு கொம்புகளையும் உண்டாக்கி, அதை வெண்கலத் தகட்டால் மூடி,

௩. அந்தப்பீடத்தின் சகல முட்டுகளாகிய செப்புச் சட்டிகளையுஞ் சாம்பலெடுக்குங் கரண்டிகளையுங் கலங்களையும் முட்கறடுகளையும் கலசங்களையும் உண்டாக்கினான். அதின் முட்டுகளையெல்லாம் வெண்கலத்தினாலே பண்ணினான்.

௪. வலைபோலிருக்கிற ஒரு வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்திற்குண்டாக்கி, அதைத் தாழ அதின் சுற்றிற்குக் கீழ்ப்புறமாக அதின் பாதிமட்டும் வரவைத்து,

௫. வாரைகளின் இடங்களாகிய நான்கு வளையங்களை வார்ப்பித்து, வெண்கலச் சல்லடையின் நாலு முனைகளில் வைத்து,

௬. சீத்திம் மரங்களால் வாரைகளைப் பண்ணி, அவைகளை வெண்கலத் தகட்டால் மூடி,

௭. அவைகளைப் பலிபீடத்தின் பக்கங்களிலிருக்கிற வளையங்களிலே அதை அவைகளாலே சுமக்கும்படிக்குப் பாய்ச்சினான். அதைப் பலகைகளாலே குழாயாக்கினான்.

௮. * ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிற்றும்புதும்பாய்வந்து காணிக்கை செலுத்துகிற ஸ்திரீகளின் கண்ணாடிகளாலே வெண்கலத் தொட்டியையும், அதின் வெண்கலப் பரிமணையையும் உண்டாக்கினான். * ௩௰, ௰௮.

௯. * பிரகாரத்தையும் உண்டுபண்ணினான். தெற்கே தென்பக்கத்திற்கெதிராயிருக்கிற திரித்த மெல்லிய பஞ்சுநூலால் நெய்த பிரகாரத்தின் வெளியாடைகள் நூறுமுழம். * ௨௭, ௯. மு

௰. அவைகளின் தூண்கள் இருபது. இவைகளின் இருபது கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவாணிகளும், அவைகளின் வளையங்களும் வெள்ளியுமானது.

௰௧. வடபக்கத்திற்கெதிரானதுகளும் நூறு முழம். அவைகளின் தூண்கள் இருபது. இவைகளின் இருபது கால்கள் வெண்கலமுந் தூண்களின் வளைவாணிகளும் வளையங்களும் வெள்ளியுமானது.

௰௨. மேற்பக்கத்திற்கெதிரான வெளியாடைகள் ஐம்பதுமுழமானது. அவைகளின் தூண்கள் பத்து. இவைகளின் கால்களும் பத்து. தூண்களின் வளைவாணிகளும் வளையங்களும் வெள்ளி.

௰௩. சூரியனுதிக்கிற கிழக்குப்பக்கத்திற்கெதிரானதுகளும் ஐம்பதுமுழம்.

௰௪. அங்கே ஒருபுறத்து வெளியாடைகள் பதினைந்துமுழமானது. அவைகளின் தூண்கள் மூன்றும் இவைகளின் கால்கள் மூன்றுந்தானே.

௰௫. பிரகாரவாசலின் இந்தப் பக்கத்துக்குச் சரியாக அந்தப் பக்கத்திலும் மறுபுறத்து வெளியாடைகள் பதினைந்து முழமானது. அவைகளின் தூண்கள் மூன்றும் இவைகளின் கால்கள் மூன்றுந்தானே.

௰௬. சுற்றிலும் பிரகாரத்தின் வெளியாடைகளெல்லாம் மெல்லிய பஞ்சுநூலால் நெய்தது.

௰௭. தூண்களின் கால்கள் வெண்கலமுந் தூண்களின் வளைவாணிகளும், வளையங்களும், வெள்ளியுமானது. அவைகளின் குமிழ்கள் வெள்ளித் தகட்டால் மூடப்பட்டதும், பிரகாரத்தின் தூண்களெல்லாம் வெள்ளி வளையங்கள் போடப்பட்டதுமாயிருந்தது.

௰௮. * பிரகாரவாசலின் மறைவோவென்றால், இளநீலநூலும் இரத்தாம்பரநூலுஞ் சிவப்புநூலுந் திரித்த மெல்லிய பஞ்சுநூலுமாகிய சித்திரத்தையல்வேலையாயிருந்தது. அதின் நீளம் இருபது முழமும், அகலமாகிய அதின் உயர்வு பிரகாரத்தின் வெளியாடைகளுக்குச் சரிசமானமாய் ஐந்துமுழமுமானது. * ௨௭, ௰௪.

௰௯. அவைகளின் தூண்கள் நான்கு. அவைகளின் நான்குகால்கள் வெண்கலமும், அவைகளின் வளைவாணிகள் வெள்ளியும், அவைகளின் குமிழ்கள் மூடப்பட்டதகடும், அவைகளின் வளையங்களும் வெள்ளியுமாயிருந்தது.

௨௰. வாசஸ்தலத்திற்கும் பிராகாரத்திற்குஞ் சுற்றிலுமிருந்த எல்லா முளைக்கூச்சுகளும் வெண்கலம்,

௨௧. சாட்சியின் வாசஸ்தலத்திற்குச் செலவானவைகளின் கணக்கேதென்றால், அவைகள் மோசேயின் சொற்படி ஆசாரியனாகிய ஆரோனின் குமாரனாகிய இத்தமாரின் கையிலே லேவியரின் ஊழியத்திற்கென்று எண்ணப்பட்டது.

௨௨. யூதா கோத்திரத்து ஊரின் மகனாகிய ஊரியின் குமாரன் பெத்சாலேயேல் கர்த்தர் மோசேக்குக் கற்பித்ததையெல்லாம் பண்ணினான்.

௨௩. அவனோடே கூடத் தாண் கோத்திரத்து அகிசாமாகின் குமாரனாகிய அகோலியாப் கொட்டுவேலை செய்கிற தொழிலாளியும் இளநீல நூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலும், மெல்லிய பஞ்சு நூலாலும், சித்திரத்தையல் வேலை செய்கிறவனுமாயிருந்தான்.

௨௪. பரிசுத்த ஸ்தலத்தின் வேலைக்கெல்லாம் அசைவாட்டுங் காணிக்கையாயக் கொடுக்கப்பட்டுச் செலவான பொன்னெல்லாம் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே இருபத்தொன்பது தாலந்தும் எழுநூற்று முப்பது சேக்கல் நிறையுமாயிருந்தது.

௨௫. சபையில் எண்ணப்பட்டவர்களின் வெள்ளி பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலால் நூறு தாலந்தும், ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலுமாயிருந்தது.

௨௬. அதெதெனில், எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வந்த இருபது வயது முதற்கொண்டு மேற்பட்டவரான ஆறுலட்சத்து மூவாயிரத்தைந்நூற்றைம்பது பேர்களில் ஒவ்வொரு தலைக்காகப் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே அரைச்சேக்கல் விழுக்காடு சேர்ந்தது.

௨௭. வெள்ளியில் நூறு தாலந்து பரிசுத்த ஸ்தலத்தின் காலகளையுந் திரையின் காலகளையும் வார்ப்பிக்கிறதற்குச் செலவாயிற்று. காலுக்கு ஒரு தாலந்து விழுக்காடு நூறு கால்களுக்கு நூறு தாலந்தானதே.

௨௮. அன்றியும் அந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலாலே தூண்களுக்கு வளைவாணிகளைப் பண்ணி, அவைகளின் குமிழ்களைத் தகடுகளால் மூடி, அவைகளுக்கு வளையங்களை யுண்டாக்கினான்.

௨௯. அசைவாட்டுங் காணிக்கையாய்ச் செலுத்தப்பட்ட வெண்கலமோவெனில், எழுபது தாலந்தும் இரண்டாயிரத்து நானூறு சேக்கல் நிறையுமாயிருந்தது.

௩௰. அதினாலே ஆசரிப்புக் கூடார வாசல் மறைவின் கால்களையும் வெண்கலப் பலிபீடத்தையும் அதற்கிருக்கிற வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்தின் சகல முட்டுகளையும்,

௩௧. சுற்றிலுமிருக்கிற பிராகாரத்தின் கால்களையும், பிராகார வாசல் மறைவின் கால்களையும், வாசஸ்தலத்தின் சகல முளைக்கூச்சுகளையும், சுற்றிலுமிருக்கிற பிராகாரத்தின் சகல முளைக்கூச்சுகளையும் உண்டுபண்ணினான்.

## ௩௯. அதிகாரம்.

[(௧) பணிவிடைச் சீலைகளும் பரிசுத்த வஸ்திரங்களும், (௨) ஆசாரிய சால்வை, (௮) பதக்கம், (௨௨) ஆசாரிய சால்வையின் அங்கி. (௨௭) சட்டைகளும், குல்லாவும், மெல்லிய நூலாற்செய்த நடுக்கட்டும், (௩௰) பரிசுத்த கிரீடத்தின் தகடு. (௩௨) மோசே யென்பவர் வேலையையெல்லாம் பார்வையிட்டு ஒத்துக்கொண்டது.]

இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலும் சிவப்பு நூலாலும் அவர்கள் பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனை செய்கிறதற்கு வேண்டிய சீலைகளையும், ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங்களையுங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே பண்ணினார்கள்.

* ௨௮, ௧. ௴

௨. ஆசாரிய சால்வையைப் பொன்னினாலும் இளநீல நூலாலும் இரத்தாம்பர நூலாலுஞ் சிவப்பு நூலாலுந் திரித்த மெல்லிய பஞ்சு நூலாலும் பண்ணினான்.

௩. பொன்னை இளநீல நூலுக்கும், இரத்தாம்பர நூலுக்கும், சிவப்பு நூலுக்கும், மெல்லிய பஞ்சு நூலுக்கும் நடுவே விநோதமாய் நெய்யும்படிக்கு அதின் தகடுகளை வளர்த்தினார்கள். அவைகளை நூல்களாக அறுத்தான்.

௪. இரண்டு தோளின் மேலும் அதை அதின் இரண்டு முனைகளாலே சேர்த்தார்கள். அப்படியே இணைக்கப்பட்டிருந்தது.

௫. அதின்மேல் அதனோடே ஏகத்துண்டாயிருக்கிற விநோதமான கச்சை அந்த வேலையாயப் பொன்னினாலும், இளநீல நூலாலும், இரத்தாம்பர நூலாலும், சிவப்பு நூலாலுந் திரித்த மெல்லிய பஞ்சு நூலாலுங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி பண்ணப்பட்டது.

௬. முத்திரைகள் வெட்டப்படுகிற வேலையாய இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களைக் கோமேதகக் கற்களில் வெட்டிச் சுற்றிலுமிருக்கிற பொன்னில் இவைகளைப் பதிந்தவைகளாக்கினார்கள்.

௭. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவைகளை இஸ்ரவேல் புத்திரருக்கான நினைப்புக்கற்களாக ஆசாரிய சால்வையினுடைய தோள்களின் மேலே வைத்தான்.

௮. ஆசாரிய சால்வையின் வேலைக்கொத்த விநோத வேலையாக மார்ப்பதக்கத்தையும் பொன்னினாலும் இளநீல நூலாலும் இரத்

௮. அப்படிப் புசிக்கிறவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான். ஏனெனில், கர்த்தருக்குப் பரிசுத்தமானதைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினான். அந்த ஆத்துமா தன் சனத்தாரிலிராதபடிக்கு அறுப்புண்பான்.

௯. உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை நீங்கள் அறுக்கையில் உன் வயலின் ஓரத்திலிருக்கிறதைத் தீர அறுக்காமலும் சிந்திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும்,

௰. உன் திராட்சத் தோட்டத்திலே பின்றுப்பையறுக்காமலும் அதிலே சிந்திக்கிடக்கிற பழங்களைப் பொறுக்காமலும், அவைகளை எளியவனுக்கும் பரதேசிக்கும் விட்டுவிடுவாயாக. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௰௧. களவுசெய்யாமலும் பொய்சொல்லாமலும் ஒருவர்க்கொருவர் கவடுபண்ணாமலும்,

௰௨. நமது நாமத்தைக்கொண்டு பொய்யாணையிடுகிறதினால், உங்கள் பராபரனுடைய நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமலுமிருப்பீர்களாக. நாம் கர்த்தர்.

௰௩. உனக்கடுத்தவனை யொடுக்காமலுங் கொள்ளையிடாமலுமிருப்பாயாக. கூலிக்காரனுடைய கூலி உன்னிடத்தில் விடியற்காலமட்டும் இராத்தங்கவேண்டாம்.

௰௪. செவிடனைச் சபிக்காமலுங் குருடன் முன்பாகத் தடுக்கலை வைக்காமலும் உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக. நாம் கர்த்தர்.

௰௫. நியாயத்திலே நியாயக்கேடுசெய்யீர்களாக. சிறியவனுடைய முகத்தைப் பாராமலும் பெரியவனுடைய முகத்தை யெண்ணாமலும் உனக்கடுத்தவனுக்கு நீதியாக நியாயந்தீர்ப்பாயாக.

௰௬. உன் சனத்தாருக்குள்ளே பின்புரணிக்காரனாய்த் திரியாயாக. உனக்கடுத்தவனுடைய இரத்தத்திற்கு விரோதமாய் நிற்காயாக. நாம் கர்த்தர்.

௰௭. உன் சகோதரனை யுன்னிருதயத்திலே பகையாயாக. உனக்கடுத்தவன் மேலே பாவத்தையிருக்கவொட்டாமல் அவனைக் கடிந்துகொள்ளவே கொள்வாயாக.

௰௮. சரிக்குச்சரிக்கட்டாமலும் உன் சனபுத்திரர் மேலே கோபம் வைக்காமலும் உனக்கடுத்தவனை யுன்னைப்போல, சிநேகிப்பாயாக. நாம் கர்த்தர்.

௰௯. நமது கட்டளைகளைக் கைக்கொள்வீர்களாக. உன் மிருகசீவன்களை வேற்றுச்சாதியோடே கூட்டிவிடாயாக. உன் வயலில் வெவ்வேறு வகைவிதையை விதையாயாக. இருவகை நூலுள்ள வஸ்திரம் உன் மேலேறுதிருப்பதாக.

௨௰. ஒருவனுக்கடிமையாயிருந்து அவனாலே இகழ்ச்சியாக்கப்பட்டும் மீட்கப்படாமலுந் தன்னிச்சையாய் விடப்படாமலும் போன பெண்ணோடே ஒருவன் அநுபோகமாய்ச் சயனித்தால், அவர்கள் சாவாமல் அடிக்கப்படவேண்டும். ஏனெனில், அவள் தன்னிச்சையானவளல்ல.

௨௧. அவன் தன் குற்றத்தைப் போக்கும்பலியாகக் கர்த்தருக்கு ஒரு ஆட்டுக்கடாவை யாசரிப்புக் கூடாரவாசலிலே கொண்டுவரக்கடவன்.

௨௨. அதினாலே ஆசாரியன் அவன் செய்த பாவத்தினிமித்தம் அவனுக்குக் கர்த்தருக்கு முன்பாகப் பாவநிவிர்த்தியை யுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்படும்.

௨௩. நீங்கள் தேசத்திலே வந்து புசிக்குங் கனிகளைத் தருகிற பலவித மரங்களை வைத்தால், அவைகளின் கனியைச் சுன்னத்துப்பண்ணிப் போடக்கடவீர்கள். மூன்றுவருஷம் அது புசிக்கப்படாமல் உங்களுக்குச் சுன்னத்தில்லாததாயெண்ணப்படுவதாக.

௨௪. பிறகு நாலாம் வருஷத்திலே அவைகளின் கனியெல்லாங் கர்த்தருக்குத் துதிசெலுத்தப் பரிசுத்தமாயிருப்பதாக.

௨௫. ஐந்தாம் வருஷத்திலோவென்றால், அவைகளின் கனியைப் புசிக்க அவைகள் உங்களுக்குத் தங்கள் பலனைக் கொடுத்துவரக்கடவது. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௨௬. இரத்தத்தோடிருக்கிறதைப் புசியீர்களாக. நிமித்தம் பாராமலும் நாள்களைப் பாராமலுமிருப்பீர்களாக.

௨௭. உங்கள் தலையின் சுற்றிலும் ஒதுக்காயலுந் தாடியின் ஓரங்களைக் கெடுக்காமலும்,

௨௮. செத்தவனுக்காக உங்கள் மாமிசத்தைக் கீறிக்கொள்ளாமலும் அடையாளமான எழுத்தை உங்களிலே போடாமலுமிருப்பீர்களாக. நாம் கர்த்தர்.

௨௯. தேசம் வேசித்தனம்பண்ணித் தோஷத்தால் நிறையப்படாதபடிக்கு, உன் குமாரத்தியை வேசித்தனம்பண்ண விடுகிறதினாலே பரிசுத்தக்குலைச்சலாக்காயாக.

௩௰. நம்முடைய ஓய்வுநாள்களைக் கைக்கொண்டு நம்முடைய பரிசுத்தஸ்தலத்திற்குப் பயப்படுவீர்களாக. நாம் கர்த்தர்.

௩௧. அஞ்சனம்பார்க்கிறவர்களையுங் குறிக்காரரையும் நோக்காதிருப்பீர்களாக. அவர்களைத் தேடியவர்களாலே தீட்டுப்படாதீர்களாக. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௨. நரைத்தவனுக்கு முன்பாக எழுந்து முதிர்வயதுள்ளவன் முகத்தைக் கனம்பண்ணி உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக. நாம் கர்த்தர்.

௩௩. பரதேசி உங்கள் தேசத்தில் உன்னோடே தங்கினால், அவனைச் சிறுமைப்படுத்தாதிருப்பீர்களாக.

௩௪. உங்களிடத்திலே தங்குகிற பரதேசி உங்களுக்குத் தேசத்திலே பிறந்தவனைப் போலிருப்பானாக. அவனை உன்னைப்போல, நேசிப்பாயாக. ஏனெனில், எகிப்துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள். நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௫. அளவிலும் நிறுக்கிற நிறையிலும் படியிலும் நியாயக்கேடுசெய்யாதிருங்கள்.

௩௬. சுமுத்திரையான தராசுஞ் சுமுத்திரையான படிக்கற்களுஞ் சுமுத்திரையான மரக்காலுஞ் சுமுத்திரையானபடியும் உங்களுக்கிருக்கக்கடவது. நாம் உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௭. ஆகையால் நம்முடைய எல்லாக்கட்டளைகளையும் நம்முடைய எல்லா நியாயங்களையுங் கைக்கொண்டு அவைகளின்படிச் செய்யக்கடவீர்கள். நாம் கர்த்தரென்று சொல்லென்றார்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) மோளேகுக்குத் தன்வித்தைக்கொடுக்கிறவனையும், (௪) அவனுக்கு உதவிசெய்கிறவனையும், (௬) அஞ்சனக்காரர்களிடத்திற் போவதையும், (௭) பரிசுத்தமாகுதலையும், (௯) தாய்தந்தையைச் சபித்தவனையும், (௰) விபசாரத்தையும், (௰௧) (௰௬) (௰௭) (௰௯) முறைகெட்டபுணர்ச்சியையும், (௰௩) ஆண்புணர்ச்சியையும், (௰௫) மிருகத்தோடுபுணர்தலையும், (௰௮) அசுத்தத்தையுங் குறித்தது. (௨௨) பரிசுத்தத்தோடு நற்கிரியைகளைச் செய்யவேண்டியது. (௨௭) அஞ்சனக்காரர் கொல்லப்படவேண்டியது.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. பின்னையும் நீ இஸ்ரவேல்புத்திரரோடே சொல்லவேண்டியதேதெனில், இஸ்ரவேல் புத்திரரிலும் இஸ்ரவேலிலே தங்குகிற பரதேசிகளிலும் எவனாகிலுந் தன் வித்திலே யாதொன்றை மோளேகுக்குக்கொடுத்தால் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். தேசத்தின்சனம் அவனைக் கல்லெறிவதாக.

௩. நாம் அப்படிக்கொடுத்தவனுக்கு விரோதமாக நமது முகத்தைத்திருப்பி அவன் நமது பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தி நமது பரிசுத்த நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கும்படிக்குத் தன்வித்தை மோளேகுக்குக்கொடுத்தபடியினாலே, அவனைத் தன் சனத்தாரிலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.

௪. அப்படிக்கொடுத்தவன் தன் வித்திலே யாதொன்றை மோளேகுக்குக் கொடுக்கும்போது தேசத்தின் சனம் அவனைக்கொலை செய்யாதபடிக்குத் தங்கள் கண்களை அவனை விட்டு மறைக்கவேமறைத்தால்,

௫. நாம் அந்த மனிதனுக்கும் அவன் வமிசத்தாருக்கும் விரோதமாக நம்முடைய முகத்தைத்திருப்பி அவனையும் அவன்பிறகாலே மோளேகைப் பின்தொடர்ந்து சோரம்போனயாவரையுந் தங்கள் சனத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.

௬. * அஞ்சனம்பார்க்கிறவர்களையுங் குறிக்காரரையும் பின்தொடர்ந்து சோரம்போக எந்த ஆத்துமா அவர்களை நோக்கியிருக்கிறதோ அந்த ஆத்துமாவுக்கு விரோதமாகவும் நமது முகத்தைத்திருப்பி அவனைத்தன் சனத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.
* ௰௯, ௩௧.

௭. ஆனபடியினாலே உங்களைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு பரிசுத்தவான்களாயிருங்கள். ஏனெனில், நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௮. நமது கட்டளைகளைக் கைக்கொண்டு அவைகளின்படிச்செய்யுங்கள். நாம் உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.

௯. எவனாகிலுந் தன் தகப்பனையுந் தன் தாயையுஞ் சபித்தாற் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். தன் தகப்பனையுந் தன் தாயையுஞ் சபித்ததால் அவன் இரத்தப்பழி அவன்மேலிருப்பதாக.

௰. ஒருவனுடைய பெண்சாதியோடே எவனொருவனாகிலும் விபசாரம்பண்ணினால் அப்பொழுது தன்னகத்தவன் பெண்சாதியோடே விபசாரம்பண்ணின அந்தவிபசாரனும் அந்தவிபசாரியுங் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவர்கள்.

௰௧. தன்தகப்பன் பெண்சாதியோடேசயனிக்கிறவன் தன் தகப்பன் நிருவாணத்தைத் திறந்ததால், இருவருங் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவர்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௨. ஒருவன் தன் மருமகளோடே சயனித்தால் இருவருங்கொலையுண்ணவேகொலையுண்ணக்கடவர்கள். தாறுமாறுபண்ணினார்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௩. ஒருவன் ஸ்திரீயின் அனுபோகமாய் ஆணோடேசயனித்தால் அருவருப்பானகாரியஞ்செய்த இருவருங் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவர்கள். அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருப்பதாக.

௰௪. ஒருவன் ஒருபெண்சாதியையும் அவள் தாயையுமடைந்தால் அது தோஷம். உங்கள் நடுவே தோஷமிராதபடிக்கு அவனையும் இவர்களையும் அக்கினியாலேசுட்டெரிப்பார்களாக.

௰௫. ஒருவன் மிருகத்தினிடத்திலே தன்னனுபோகத்தைவிட்டால் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். அந்த மிருகத்தையுங்கொல்லக்கடவீர்கள்.

௰௬. ஒரு ஸ்திரீயானவள் ஒரு மிருகத்தோடே அதைச் சேரப்பண்ணிச் சேர்ந்தால், அந்த ஸ்திரீயையும் அந்த மிருகத்தையுங் கொல்லக்கடவாய் இருவரும் கொலையுண்ணக் கொல்லுண்ணக்கடவது அவைகளின் இரத்தப்பழி அவைகளின்மேலிருப்பதாக.

௰௭. ஒருவன் தன் தகப்பனுக்கு அல்லது தன் தாய்க்குக் குமாரத்தியாகிய தன் சகோதரியைச் சேர்த்துக்கொண்டு அவன் இவள் நிருவாணத்தையும் இவள் அவன் நிருவாணத்தையும் பார்த்தால், அது பாதகம். அவர்கள் தங்கள் ஜனபுத்திரரின் கண்களுக்கு முன்பாக அழிப்புண்ணக்கடவர்கள். தன் சகோதரியின் நிருவாணத்தைத் திறந்த அவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான்.

௰௮. ஒருவன் தூரஸ்திரீயோடே சயனித்து அவளுடைய நிருவாணத்தையும் ஊறலையும் திறந்து அவளும் தன் உதிரத்தின் ஊறலைத் திறந்துவைத்தால், இருவருந் தங்கள் ஜனத்தாரின் நடுவிலிராதபடிக்கு அழிப்புண்ணக்கடவர்கள்.

௰௯. உன் தாயினுடைய சகோதரியின் நிருவாணத்தையும் உன் தகப்பனுடைய சகோதரியின் நிருவாணத்தையுந் திறவாயாக. அப்படிச் செய்தவன் தன் சதையையவமானமாக்கினான். தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.

௨௰. ஒருவன் தன் சிறிய தகப்பன் பெண்சாதியோடே சயனித்தால், அவன் தன் சிறிய தகப்பன் நிருவாணத்தைத் திறந்தான். தங்கள் பாவத்தைச் சுமப்பார்கள். சந்தானமில்லாமற் சாவார்களாக.

௨௧. ஒருவன் தன் சகோதரன் பெண்சாதியைப் படைத்தால் அது அசுத்தம். தன் சகோதரன் நிருவாணத்தைத் திறந்தான். சந்தானமற்றிருப்பார்கள்.

௨௨. ஆகையால், நீங்கள் குடியிருப்பதற்காக நான் உங்களைக் கொண்டுபோகிற தேசம் உங்களைக் கக்கிப்போடாதபடிக்கு நீங்கள் நம்முடைய சகல கட்டளைகளையும் சகல நியாயங்களையுங் கைக்கொண்டு அவைகளின்படி செய்யுங்கள்.

௨௩. நாம் உங்களுக்கு முன்பாகத் துரத்திவிடுகிற சாதியினுடைய வழிபாடுகளில் நடவாதிருங்கள். ஏனெனில், அப்படிக்கொத்தகாரியங்களையெல்லாஞ் செய்தார்கள். ஆகையால் நாம் அவர்களை அருவருத்து,

௨௪. நீங்கள் அவர்களுடைய தேசத்தைச் சுதந்தரிப்பீர்களென்றுங்களோடே சொன்னோம். பாலுந் தேனும் ஓடுகிற அந்தத் தேசத்தையுங் களுக்குச் சுதந்தரமாகவுங் கொடுப்போம். நாம் உங்களைச் சனசதனங்களைவிட்டுப் பிரித்தெடுத்த உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௨௫. ஆகையால் சுத்தமான மிருகங்களுக்குந் தீட்டான மிருகங்களுக்குந் தீட்டான பறவைகளுக்குஞ் சுத்தமான பறவைகளுக்கும் நீங்கள் வித்தியாசம்பண்ணி நாமுங்களுக்குத் தீட்டாக எண்ணச்சொல்லி விலக்கின மிருகங்களாலும் பறவைகளாலுந் தரையோடே ஊருகிறயாதொன்றாலும் உங்கள் ஆத்துமாக்களை அருவருப்பாக்காதிருப்பீர்களாக.

௨௬. நமக்குப் பரிசுத்தவான்களாயிருப்பீர்களாக. ஏனெனில், கர்த்தராகிய நாம் பரிசுத்தராயிருந்து நீங்கள் நம்முடையவர்களாயிருக்கும்படிக்கு உங்களைச் சனசதனங்களை விட்டுப் பிரித்தெடுத்தோம்.

௨௭. * அஞ்சனம்பார்க்கிற ஆவியுள்ள அல்லது குறிசொல்லுகிற மனிதனுக்கும் ஸ்திரீயானாலுங் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவர்கள். அவர்களைக் கல்லெறிவார்களாக. அவர்கள் இரத்தப்பழி அவர்கள்மேலிருக்கக்கடவதென்று சொல்லென்றார்.

௨. இமோ. ௨௨, ௰௮.

## ௨௧. அதிகாரம்.

[(௧) ஆசாரியர்கள் இழவுக்குத் துயரடைவதையும், (௬) அவர்கள் பரிசுத்தமாயிருப்பதையும், (௮) அவர்களின் கனத்தையும், (௰௩) அவர்களின் விவாகங்களையுங் குறிக்குது. (௰௭) அங்கவீனர் தேவசந்நிதானத்திலே ஊழியஞ்செய்வதைவிலக்கியது.]

பின்பு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்களிலொருவனுந் தன் ஜனத்தாரில் செத்துப்போனொருவனாலே தன்னைத் தீட்டுப்படுத்த வேண்டாமென்று அவர்களோடேசொல்லு.

௨. தன்னுடைய கிட்டினசனையாகிய தன் தாயினாலுந் தன் தகப்பனாலுந் தன் குமாரனாலுந் தன் குமாரத்தியாலுந் தன் சகோதரனாலும்,

௩. புருஷனுக்கு வாழ்க்கைப்படாமல் தன் கிட்டவிருந்த கன்னியாஸ்திரீயான தன் சகோதரியாலுமே ஒழிய,

௪. வேறொருவராலுந் தன் சனத்தாரிலே பெரியவனாகிய அவன் தன்னைப் பரிசுத்தக் குலைச்சலாக்கித் தீட்டுப்படுத்தவேண்டாம்.

௫. அவர்கள் தங்கள் தலையை மொட்டையிடாமலுந் தங்கள் தாடியின் ஓரங்களைச் சிரைத்துப்போடாமலுந் தங்கள் மாமிசத்தைக் கீறிக்கொள்ளாமலுமிருப்பார்களாக.

௬. தங்கள் பராபரனுடைய நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமல் அவருக்குப் பரிசுத்தராயிருப்பார்களாக. ஏனெனில், கர்த்தரின் தகனங்களென்ற தங்கள் பராபரனுடைய அப்பத்தை அவர்கள் செலுத்திப் பரிசுத்தமாயிருக்கிறார்கள்.

௭. சோரஸ்திரீயையும் பரிசுத்தங்குலைந்தவளையும் விவாகம்பண்ணார்களாக, தன் புரு

மனிதனையாகிலுந் தொட்டவனும் அப்படித் தானே.

௬. அப்படித் தொட்டவன் சாயங்காலமட்டுந் தீட்டுப்பட்டிருப்பான். அவன் பரிசுத்த வஸ்துக்களிலே புசியாமல் தன் மாமிசத்தைத் தண்ணீரிலே கழுவக்கடவன்.

௭. சூரியன் அஸ்தமித்தபிற்பாடு சுத்தமாயிருப்பான். பிறகு அவன் பரிசுத்தவஸ்துக்களிலே புசிக்கலாம். ஏனெனில், அது அவனுடைய அப்பம்.

௮. தானாய்ச் செத்ததையும் பீறுண்டதையும் அவன் புசிக்கிறதினாலே தீட்டுப்படவேண்டாம். நாம் கர்த்தர்.

௯. ஆகையால், பரிசுத்தமானதையவர்கள் பரிசுத்தக்குலைச்சலாக்குகிறதினாலே தங்கள் மேலே பாவஞ்சுமத்திச் சாவாதபடிக்கு நம்முடைய காவலைக் காக்கக்கடவர்கள். நாம் அவர்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.

௰. அந்நியமனிதனொருவனும் பரிசுத்தவஸ்துக்களிலே புசிக்கவேண்டாம். ஆசாரியன் வீட்டில் விருந்தியாயிருக்கிறவனுங் கூலிவேலை செய்கிறவனும் பரிசுத்தவஸ்துவிலே புசிக்க வேண்டாம்.

௰௧. ஆசாரியன் தன்பணத்தினாலே கொண்டவனும் அவன் வீட்டிலே பிறந்தவனுமோவெனில், அவனுடைய அப்பமாகிய அதிலே புசிப்பார்களாக.

௰௨. ஆசாரியனுடைய குமாரத்தி பிறனுக்கு வாழ்க்கைப்பட்டால் பரிசுத்த வஸ்துக்களின் படைப்பிலே புசிக்கவேண்டாம்.

௰௩. கைம்பெண்சாதியாய்ப்போன் அல்லது தள்ளப்பட்டவளான ஆசாரியனுடைய குமாரத்தி பிள்ளையில்லாதிருந்து தன் தகப்பன் வீட்டிலே தன்னுடைய இளவயதிலிருந்ததுபோலத் திரும்பவந்திருந்தாளேயாகில், தன் தகப்பன் அப்பத்திலே புசிப்பாளாக. ஆனால் அந்நியனாகிய ஒருவனும் அதிலே புசிக்கவேண்டாம்.

௰௪. ஒருவன் அறியாமற் பரிசுத்தவஸ்துவிலே புசித்ததுண்டானால் அவன் அதிலே ஐந்திலொருபங்கை யதிகமாகக் கூட்டிப் பரிசுத்தவஸ்துவோடேகூட ஆசாரியனுக்குக் கொடுக்கக்கடவன்.

௰௫. அவர்கள் கர்த்தருக்குச் செலுத்துகிற இஸ்ரவேல்புத்திரரின் பரிசுத்தவஸ்துக்களைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமலும்,

௰௬. அவைகளைப் புசிக்கிறதினாலே அவர்கள் மேலே குற்றமான அக்கிரமத்தைச் சுமரப்பண்ணாமலு மிருப்பார்களாக. ஏனெனில், நாம் அவர்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தரென்று சொல்லென்றார்.

௰௭. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰௮. நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் இஸ்ரவேல்புத்திரர் அனைவரோடும் பேசிச் சொல்லவேண்டியதேதெனில், இஸ்ரவேல் வீட்டாரிலும் இஸ்ரவேலிலே தங்குகிற பரதேசிகளிலும் எவர்கள் தங்களுடைய சகல பொருத்தனைகளின்படியாகிலும் உச்சாயத்தின்படியாகிலுஞ் சர்வாங்க தகனமாகக் கர்த்தருக்குத் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தப்போகிறார்களோ!

௰௯. அவர்கள் தங்கள் மனதின்படியே மாடுகளிலாகிலும் ஆடுகளிலாகிலும் வெள்ளாடுகளிலாகிலும் பழுதற்றஒரு ஆண்ஜீவனைப் பிடித்துவந்து செலுத்துவார்களாக.

௨௰. பழுதுள்ள ஒன்றையுஞ் செலுத்தீர்களாக. ஏனெனில், அது உங்களுக்காகக் கர்த்தருக்குப் பிரியமாயிருப்பதில்லை.

௨௰௧. ஒருவன் விசேஷித்த பொருத்தனைக்காக அல்லது உச்சாயமனதாகக் கர்த்தருக்கு மாடுகளிலாகிலும் ஆடுகளிலாகிலுஞ் சமாதானப்பலியைச் செலுத்தப்போனால், அது பிரியமாயிருக்கும்படிக்கொரு பழுதுமில்லாத உத்தமமாயிருக்கவேண்டும்.

௨௰௨. குருடு நெரிசல் ஊனங் கழிச்சல் சொறி புண்ணுள்ளது முதலானவைகளை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தாமலும் அவைகளாலே கர்த்தருக்குப் பலிபீடத்தின்மேலே தகனப்பலியை யேற்றாமலுமிருப்பீர்களாக.

௨௰௩. நீண்ட அல்லது குறைந்த அவயவமுள்ள மாட்டையும் ஆட்டையும் நீ உச்சாயபலியாக்கலாம். ஆனால் பொருத்தனைக்காக அது பிரியமாயிருப்பதில்லை.

௨௰௪. நசுங்கினதையும் நொறுங்கினதையுங் காயம்பட்டதையும் விதையறுக்கப்பட்டதையும் நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தாமலும் உங்கள் தேசத்திலே பலியிடாமலுமிருப்பீர்களாக.

௨௰௫. அந்நியபுத்திரன் கையிலும் இப்படிக் கொத்ததைவாங்கி உங்கள் பராபரனுடைய அப்பமாகச் செலுத்தீர்களாக. ஏனெனில், அவைகளின் கேடும் பழுதும் அவைகளிலிருக்கிறது. அவைகள் உங்களுக்காகப் பிரியமாயிருப்பதில்லையென்று சொல்லென்றார்.

௨௰௬. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨௰௭. ஒரு கன்று அல்லது ஆட்டுக்குட்டி அல்லது வெள்ளாட்டுக்குட்டி பிறந்தால், அது ஏழுநாள் தன் தாயின்கீழிருக்கக்கடவது. எட்டாம்நாள்முதற்கொண்டு அது கர்த்தருக்குத் தகன காணிக்கையாகச் செலுத்தப்படப் பிரியமாயிருக்கும்.

௨௰௮. மாட்டையும் அதின் கன்றையும் அல்லது ஆட்டையும் அதின் குட்டியையும் ஒரே நாளிலே கொல்லவேண்டாம். [illegible: "குரல்வளையறுக்கீர்களாக"]

௨௰௯. ஸ்தோத்திரப்பலியைக் கர்த்தருக்குச் செலுத்தினீர்களானால், உங்கள் மனப்பூர்வத்தாலதைச் செலுத்துவீர்களாக.

போக்கும்பலியும் ஒருவயதான இரண்டு ஆட்டுக்குட்டிகளைச் சமாதானபலியுமாக்கக் கடவீர்கள்.

உய. அவைகளை யாசாரியன் முதற்பலனாகிய அப்பத்தோடும் இரண்டு ஆட்டுக்குட்டிகளோடுங்கூடக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டக்கடவன். கர்த்தருக்குப்பரிசுத்தமாகிய அவைகள் ஆசாரியனுடையதாம்.

உக. அந்தநாள்தானே உங்களுக்குச்சபைகூடும்பரிசுத்தநாளென்று கூறக்கடவீர்கள். யாதொருபணிவிடைவேலையைஅதிலேசெய்யீர்களாக. இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச்செல்லும் நித்தியகட்டளை.

உஉ. * உங்கள்தேசத்தின் வெள்ளாமையை நீங்கள் அறுக்கையில்,உன்வயலின் ஓரத்திலிருக்கிறதைத் தீர அறுக்காமலும் சிந்திக்கிடக்கிற கதிர்களைப்பொறுக்காமலும் எளியவனுக்கும்பரதேசிக்கும் அவைகளை விட்டுவிடுவாயாக. நானுங்கள்பராபரனாகிய கர்த்தரென்றுசொல்லென்றார். * ௩கூ, கூ.

உங. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

உச. நீ இஸ்ரவேலபுத்திரரோடே பேசிச்சொல்லவேண்டியதேதெனில்; உங்களுக்கு ஏழாம் மாதம்முதலாந்தேதி கெம்பீர பிரஸ்தாபத்தின்பண்டிகையென்ற சபைகூடும்பரிசுத்த ஓய்வுநாளாயிருப்பதாக.

உரு. அதிலே யாதொரு பணிவிடைவேலையைச்செய்யாமற் கர்த்தருக்குத் தகனஞ்செலுத்துவீர்களாகவென்றுசொல்லென்றார்.

உசா. பின்னையுங்கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

உஎ. அந்தஏழாமாதம் பத்தாந்தேதியோவென்றால், உங்களுக்குப்பாவநிவிர்த்தியாகுதலின்நாளும் சபைகூடும் பரிசுத்தநாளுமாயிருக்கும். அப்பொழுது நீங்கள்உங்கள் ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்திக் கர்த்தருக்குத் தகனஞ்செலுத்தக்கடவீர்கள்.

உஅ. ஆகையால் அந்நாளிலே யாதொரு வேலையையுஞ் செய்யீர்களாக. ஏனெனில், அது உங்கள் பராபரனாகியகர்த்தரின் சந்நிதியில் உங்களுக்காகப் பாவநிவிர்த்தி செய்யப்படும் நாளாயிருக்கின்றது.

உகூ. அந்நாளிலே தன்னைத் தாழ்மைப்படுத்தாத எந்த ஆத்துமாவுந் தன்சனத்தாரிலிராதபடிக்கு அறுப்புண்பான்.

ஙய. அந்நாளிலே யாதொரு ஆத்துமா யாதொருவேலையைச்செய்தால், அந்த ஆத்துமாவை அவன்சனத்தினடுவிலேவைக்காமல் அழிப்பேன்.

ஙக. நீங்கள் எந்தவேலையுஞ் செய்யாதிருப்பீர். இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்தியகட்டளை.

ஙஉ. அது உங்களுக்கு ஓய்வுக்கோய்வுநாள். அதிலே உங்கள்ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்தக்கடவீர்கள், அந்தமாதத்தின் ஒன்பதாந்தேதி சாயங்காலந்துவக்கி மறுசாயங்காலமட்டும் உங்கள்ஓய்வை யாசரிக்கக்கடவீர்களென்றார்.

ஙங. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

ஙச. நீ இஸ்ரவேல புத்திரரோடே பேசிச்சொல்லவேண்டியதேதெனில்; அந்தஏழாம் மாதம் பதினைந்தாந்தேதி கர்த்தருக்கு ஏழுநாளாய் ஆசரிக்குங் கூடாரப்பண்டிகை.

ஙரு. முதலாம்நாள் சபைகூடும் பரிசுத்தநாள், யாதொருபணிவிடைவேலையைச்செய்யீர்களாக.

ஙசா. ஏழுநாளுங் கர்த்தருக்குத் தகனஞ்செலுத்தக்கடவீர்கள். எட்டாம்நாளும் உங்களுக்குச்சபைகூடும்பரிசுத்தநாள். அதிலே கர்த்தருக்குத்தகனஞ்செலுத்தக்கடவீர்கள். அது ஆசரிக்கப்படும்நாள். அதிலேயாதொரு பணிவிடைவேலையைச் செய்யாதிருப்பீர்களாக.

ஙஎ. நீங்கள் கர்த்தருடைய ஓய்வுநாள்களிலே செலுத்துவதல்லாமலும், நீங்கள்கர்த்தருக்குப்படைக்கிற உங்களெல்லாக்காணிக்கைகளும் பொருத்தனைகளும் உற்சாகப்பலிகளுமல்லாமலும்,

ஙஅ. நீங்கள் அந்தந்தநாளுக்குத்தக்கபடி, கர்த்தருக்குச்சர்வாங்கதகனம்,காணிக்கைப்பலி, ஊற்றுதல்முதலான தகனங்களைச்செலுத்தும்படிக்குச் சபைகூடிவந்து, பரிசுத்தமாய் ஆசரிப்பதற்காக நீங்கள்கூறவேண்டிய கர்த்தருடைய பண்டிகைகள் இவைகள்தானே.

ஙகூ. நிலத்தின்பலனை நீங்கள் சேர்த்திருக்கும் ஏழாமாதம்பதினைந்தாந்தேதியிலோவென்றால், கர்த்தருடைய பண்டிகையையேழுநாளாக ஆசரிக்கக்கடவீர்கள். முதலாம் நாளிலும் ஓய்வு. எட்டாம் நாளிலும்ஓய்வு.

சய. முதலாம்நாளிலே அலங்காரவிருட்சங்களின் கனிகளையும் பேரீச்சமட்டை ஓலைகளையுந் தழைத்திருக்கிறவிருட்சங்களின் கிளைகளையும் ஆற்றலரிகளையுங் கொண்டுவந்து, உங்கள்பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக ஏழுநாளமகிழ்ச்சியாயிருந்து,

சக. வருஷந்தோறும் ஏழுநாள் கர்த்தருக்கிந்தப்பண்டிகையையாசரிக்கக்கடவீர்கள். இது உங்கள் தலைமுறைகளுக்குச்செல்லும் நித்தியகட்டளை. ஏழாமாதத்தில் அதையாசரிக்கக்கடவீர்கள்.

சஉ. நாம் இஸ்ரவேலபுத்திரரை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினபொழுது, அவர்களைக்கூடாரங்களிலே குடியிருக்கப்பண்ணினதை யுங்கள்தலைமுறை தலைமுறையாய் அறியும்படிக்கு,

௪௩. ஏழுநாள் கூடாரங்களிலே குடியிருக்கக்கடவீர்கள். இஸ்ரவேலிலே பிறந்தவர்களெல்லாரும் கூடாரங்களிலே குடியிருப்பார்களாக. நானுங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அறிசொல்லென்றார்.

௪௪. அப்படியே மோசே கர்த்தருடைய பண்டிகைகளின் வர்த்தமானத்தை இஸ்ரவேல்புத்திரருக்குச்சொன்னான்.

## ௨௪. அதிகாரம்.

[(௧) விளக்குகளுக்குள்ள எண்ணெய், (௫) தேய்வ சமுகத்தப்பம். (௰) செலோமீத்தின் மகன் தூஷணித்தது. (௰௩) தேவதூஷணையையும், (௰௭) கொலையையும், (௰௮) நஷ்டத்தையுங் குறித்த கட்டளை. (௨௩) தேவதூஷணைசெய்தவன் கல்லெறியப்பட்டது.]

பின்னும் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. *குத்துவிளக்கு எப்பொழுதும் வெளிச்சமேற்றும்படிக்கு இஸ்ரவேல்புத்திரர் இடித்துப்பிழியப்பட்ட தெளிவான ஒலிவெண்ணெயையுன்னண்டைக்குக் கொண்டுவர அவர்களுக்குக்கற்பி. * ௨. மோ. ௨௭, ௨௰.

௩. ஆசரிப்புக்கூடாரத்திலே சாட்சியின் திரைக்கு வெளிப்புறமாக ஆரோன் அதை யெப்பொழுதுஞ் சாயங்காலந்துவக்கி விடியற்காலமட்டுங் கர்த்தருக்கு முன்பாக எரிய வைக்கக்கடவன். இது உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்தியகட்டளை.

௪. அவன் எப்பொழுதுங் கர்த்தருக்கு முன்பாகச் சுத்தமான குத்துவிளக்கின்மேலிருக்கிற விளக்குகளையெரியவைக்கக்கடவன்.

௫. மெல்லியமாவைவாங்கி அதைப் பன்னிரண்டு அப்பங்களாகச் சுடுவாயாக. ஒவ்வொரு அப்பம் மரக்காலிலே பத்திலிரண்டு பங்கு மாவினாலே செய்யப்படுவதாக.

௬. அவைகளை நீ கர்த்தருக்கு முன்பாகச் சுத்தமான மேசையின்மேல் இரண்டு அடுக்காக ஒவ்வொரு அடுக்கில் ஆவாறிருக்கும்படிக்கு வைத்து,

௭. ஒவ்வொரு அடுக்கினிடத்திலே சுத்தமான தூபவர்க்கம் போடக்கடவாய். அது அப்பத்தோடிருந்து நினைப்புக்கென்று கர்த்தருக்குத் தகனமாயிருக்கும்.

௮. அதை நித்திய உடம்படிக்கைப்பாய் இஸ்ரவேல்புத்திரர் கையிலேவாங்கி ஓய்வுநாள்தோறுங் கர்த்தருக்கு முன்பாக அடுக்கிவைக்கக்கடவன்.

௯. அது ஆரோனையும் அவன் குமாரரையுஞ் சேரும். அதைப் பரிசுத்தஇடத்திலே புசிக்கக்கடவர்கள். ஏனெனில் அது பரிசுத்தத்திற் பரிசுத்தம். கர்த்தருடைய தகனங்களில் அது அவனுக்கு நித்தியகட்டளையென்றார்.

௰. இஸ்ரவேல்சாதியான ஸ்திரீக்கும் எகிப்திய புருஷனுக்கும் மகனாகிய ஒருவன் இஸ்ரவேல்புத்திரரோடே கூடப் புறப்பட்டுவந்திருந்தான். இவனும் இஸ்ரவேலனாகிய ஒரு மனிதனும் பாளயத்திலே சண்டைபண்ணினார்கள்.

௰௧. அப்பொழுது இஸ்ரவேல்சாதியான அந்த ஸ்திரீயின் மகன் நாமத்தைச் சொல்லித் தூஷணித்தான். ஆகையால் அவனை மோசேயண்டைக்குக் கொண்டுவந்தார்கள். அவன் தாயின் பேர் செலொமீத், அவள் தாண்கோத்திரத்தானாகிய திப்ரியின் குமாரத்தி.

௰௨. கர்த்தரின் வாக்கினாலே தங்களுக்கு உத்தரவு வருமட்டும் அவனைக் காவற்படுத்தினார்கள்.

௰௩. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰௪. தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோ. கேட்டவர்களெல்லாருந் தங்கள் கைகளை அவன் தலையின்மேல் வைப்பார்களாக. பிற்பாடு சபையெல்லாம் அவனைக் கல்லெறியக்கடவது.

௰௫. ஆனால் இஸ்ரவேல்புத்திரரோடே நீ சொல்லவேண்டியதேதென்றால், எவனாகிலுந் தன் பராபரனைத் தூஷணித்தால் அவன் தன் பாவத்தைச் சுமப்பான்.

௰௬. கர்த்தரின் நாமத்தை நிந்தையாகச் சொல்லுகிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். சபையெல்லாம் அவனைக் கல்லெறியவேயெறியக்கடவது. பரதேசியாகிலுஞ் சரி தேசத்திலே பிறந்தவனாகிலுஞ் சரி நாமத்தைத் தூஷணித்தானானாற் கொலையுண்ணக்கடவன்.

௰௭. யாதொரு மனிதனையாவது ஒருவன் கொன்றாற் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௮. மிருகசீவனைக்கொன்றவன் சீவனுக்குச் சீவனைச்செலுத்தக்கடவன்.

௰௯. ஒருவன் தனக்கடுத்தவனில் ஊனமுண்டாக்கினால், அவன் செய்தபடி அவனுக்குச் செய்யப்படக்கடவது.

௨௰. நொறுக்குதலுக்கு நொறுக்குதலும் கண்ணுக்குக் கண்ணும் பல்லுக்குப் பல்லுந் தானே அவன் மனிதனில் ஊனமுண்டாக்கினபடியே அவனிலும் உண்டாக்கப்படக்கடவது.

௨௧. மிருகத்தைக்கொன்றவன் பதில்கொடுக்கக்கடவன். மனிதனைக் கொன்றவனோ கொலையுண்ணக்கடவன்.

௨௨. உங்களில் பரதேசிக்கும் தேசத்திலே பிறந்தவனுக்கும் ஏகமான நியாயமிருக்கக்கடவது. ஏனெனில், நானுங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

௨௩. அப்படியே தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய் அவனைக் கல்லெறிவதற்காக மோசே இஸ்ரவேல்புத்திரரோடே சொன்னான். கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இவர்கள் செய்தார்கள்.

## ௨௫. அதிகாரம்.

[(௧) ஓய்ந்திருக்கும் ஏழாம் வருஷம். (௮) ஐம்பதாம் வருஷத்தின் யூபிலி பண்டிகை. (௰௪) ஒடுக்குதலைக்குறித்து. (௰௮) கீழ்ப்படிதலுக்கு ஆசீர்வாதம். (௨௩) நிலத்தையும், (௨௯) வீட்டையும் மீட்குதல். (௩௫) எளியவர்களுக்கு இரங்குதல். (௩௯) அடிமைகளை நடத்துதல். (௪௭) கிரையப்பட்டவர்களை மீட்குதல்.]

கர்த்தர் சீனாய் பர்வதத்தில் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௨. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதென்னவெனில்; நான் உங்களுக்குக் கொடுக்கும் தேசத்திலே நீங்கள் வந்திருக்கும்பொழுது தேசம் கர்த்தருக்கென்று ஓய்வுகொண்டாடவேண்டும்.

௩. * ஆறு வருஷம் உன் வயலில் விதைத்து, உன் திராட்சத்தோட்டத்தைக் கிளைநறுக்கி அதின் பலனைச் சேர்ப்பாயாக. *௨. மோசே. ௨௩, ௰-௰௧.

௪. ஏழாம் வருஷத்திலோவென்றால், கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் ஓய்வு தேசத்துக்கிருக்கவேண்டும். உன் வயலில் விதைக்காமலும் உன் திராட்சத்தோட்டத்தைக் கிளை நறுக்காமலும்,

௫. சுயமாய் உனக்கு விளைந்த பயிரானதை யறுத்துக்கொள்ளாமலும், நீ கிளைநறுக்காமல் விட்ட திராட்சச்செடியின் பழங்களைச் சேர்க்காமலுமிருப்பாயாக. தேசத்திற்கது ஓய்ந்திருக்கும் வருஷமாயிருக்கக்கடவது.

௬. தேசத்தின் ஓய்விலே பயிராகிறது உங்களுக்கு ஆகாரமாயிருப்பதாக. உனக்கும் உன் வேலைக்காரனுக்கும் உன் வேலைக்காரிக்கும் உன் கூலியாளுக்கும் உன்னிடத்திலே தங்குகிற உன்னுடைய பரதேசிக்கும்,

௭. உன் மிருகஜீவனுக்கும் உன் தேசத்திலிருக்கிற காட்டுச்சீவனுக்கும் அதின் பலனெல்லாம் ஆகாரமாயிருப்பதாக.

௮. பின்னையும் ஏழு ஓய்வு வருஷங்களுள்ள ஏழேழு வருஷங்களையெண்ணுவாயாக. அந்த ஏழேழு ஓய்வு வருஷங்களுள்ள நாள்கள் உனக்கு நாற்பத்தொன்பது வருஷமாகும்.

௯. அப்பொழுது ஏழாமாதம் பத்தாந்தேதியிலே தொனிக்கிற எக்காளத்தைச் சுற்றித்திரியப்பண்ணுவாயாக. பாவநிவிர்த்தியாகுதலின் நாளிலே அதையுங்கள் தேசமெங்கும் திரியப்பண்ணி,

௰. ஐம்பதாம் வருஷத்தைப் பரிசுத்தமாக்கித் தேசமெங்கும் அதின் குடிகளுக்கெல்லாம் விடுதலையைக் கூறக்கடவீர்கள். அது உங்களுக்கு யூபிலி வருஷம். அதிலே நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்கும் அவரவர் தங்கள் வம்சத்திற்குத் திரும்புவீர்கள்.

௰௧. அந்த ஐம்பதாம் வருஷம் உங்களுக்கு யூபிலி வருஷமாயிருப்பதாக. அதிலே விதைக்காமலும், சுயமாய் விளைந்த பயிரானதை யறுத்துக்கொள்ளாமலும், கிளைநறுக்காதே விடப்பட்ட திராட்சச்செடியின் பழங்களைச் சேர்க்காமலுமிருப்பீர்களாக.

௰௨. ஏனெனில், அது யூபிலி வருஷம். அது உங்களுக்குப் பரிசுத்தமாயிருக்கவேண்டும். அதின் பலனை வயலிலெடுத்துப் புசித்துக்கொண்டிருப்பீர்களாக.

௰௩. யூபிலி வருஷத்தில் நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்குத் திரும்புவீர்கள்.

௰௪. ஆகையால், ஏதாகிலும் உங்களுக்குக் கொடுக்கவேனும் விற்றாலும் அல்லவென்று அவன் கையிலே கொண்டிட்டுக்கொண்டால், ஒருவனையொருவர் ஒடுக்கஞ்செய்யீர்கள்.

௰௫. யூபிலி வருஷத்திற்குப் பிறகு சென்ற வருஷங்களின் இலக்கத்திற்குத்தக்கதாக உனக்கடுத்தவன் கையிலே கொள்ளுவாயாக. பலனுள்ள வருஷங்களின் இலக்கத்திற்குத் தக்கதாக அவன் உனக்கு விற்பானாக.

௰௬. வருஷங்கள் அநேகமானால் அதின் விலையையுயர்த்திக் கொஞ்சமானால் அதைத் தாழ்த்துவாயாக. ஏனெனில், பலனுள்ள வருஷங்களின் இலக்கத்தைப் பார்த்து அவன் உனக்கு விற்கிறான்.

௰௭. உங்களிலொருவனும் தனக்கடுத்தவனை ஒடுக்கஞ்செய்யவேண்டாம். உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக. ஏனெனில், நானுங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௰௮. நம்முடைய கட்டளைகளின்படி செய்து நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்யக்கடவீர்கள். அப்பொழுது தேசத்திலே சுகமாய்க் குடியிருந்து,

௰௯. பூமி தன் கனியைத் தருகிறதினாலே திர்த்தியாய்ச் சாப்பிட்டு அதிலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௨௰. ஏழாம் வருஷத்திலே தைப் புசிப்போம். இதோ, நாங்கள் விதைக்காமலும் எங்கள் பலனைச் சேர்க்காமலுமிருக்க வேண்டுமேயென்றீர்களேயானால்,

௨௧. ஆறாம் வருஷம் மூன்று வருஷங்களின் பலனைத்தர நமது ஆசீர்வாதத்தை யுங்களுக்காகக் கட்டளையிடுவோம்.

௨௨. ஆனதினாலே நீங்கள் எட்டாம் வருஷத்திலே விதைத்துப் பழைய பலனிலே ஒன்பதாம் வருஷமட்டுஞ் சாப்பிடுவீர்கள். இதின் பலன் வருமட்டுக்கும் பழைய பலனைச் சாப்பிடுவீர்கள்.

௨௩. நீங்கள் நிலங்களை யறுதியாய் விற்கவேண்டாம். அதேனென்றால், தேசம் நம்முடையது. நீங்கள் நமக்குமுன்பாகப் பரதேசிகளுந் தங்கியிருக்கிறவர்களுந்தானே.

௨௪. ஆகையால் உங்கள் காணியாட்சியான தேசமெங்கும் நிலங்களின் மீட்புக்கு இடங்கொடுக்கக்கடவீர்கள்.

௨௫. உன் சகோதரன் தரித்திரப்பட்டுத் தன் காணியாட்சியிலே சிலதை விற்றால், அவனைச் சேர்ந்த மீட்பன் வந்து தன் சகோதரன் விற்றதை மீட்கக்கடவன்.

௨௬. மீட்பனில்லாதவனுக்கோவெனில், தன் மீட்புக்குத் தேவையான அவகாசம் அகப்பட்டால்,

௨௭. அவன் தன்னுடைய காணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு அதை விற்றபிறகு சென்ற வருஷங்களின் கணக்கைத் தள்ளி மீதியானதை அதைக்கொண்டவனுக்குத் திருப்பிக்கொடுப்பானாக.

௨௮. இவனுக்குத் திருப்பிக்கொடுப்பதற்கான அவகாசம் அவனுக்குக் கைப்படாமற் போயிற்றேயாகில், அவன் விற்றது கொண்டவனுடைய கையிலே சீர்திருந்தும் வருஷமட்டுமிருந்து சீர்திருந்தும் வருஷத்திலோவென்றால், அவன் தன் காணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு அது நீங்கலாகக்கடவது.

௨௯. ஒருவன் மதிலுள்ள பட்டணத்தில், வாசஸ்தலமாகிய வீட்டை விற்றால், அதை விற்றபிறகு ஒரு வருஷமட்டும் அதின் மீட்புச் செல்லும். அதின் மீட்புக்கொரு முழுவருஷத் தவணையாயிருப்பதாக.

௩௰. ஒரு முழுவருஷகாலம் நிறைவேறுமட்டும் அது மீட்கப்படாதிருந்ததேயானால், அப்பொழுது மதிலுள்ள பட்டணத்திலிருக்கும். அந்த வீட்டைக் கொண்டவனுக்கு அது தலைமுறை தலைமுறையாக நிலைத்திருக்கக்கடவது. சீர்திருந்தும் வருஷத்தில் அது நீங்கலாவதில்லை.

௩௧. சுற்றிலும் மதிலில்லாத கிராமங்களின் வீடுகளோவெனில், தேசத்தின் வயல்வெளிக்குச் சரியாக எண்ணப்படுவதாக. அவைகளுக்கு மீட்பிருக்கும். சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலுமாகும்.

௩௨. லேவியரின் காணியாட்சியாகிய பட்டணங்களின் வீடுகளுக்கோவென்றால், லேவியருக்கெந்நேரத்துக்கும் மீட்புக்கிடமுண்டு.

௩௩. விற்றவனுடைய காணியாட்சிப் பட்டணமான ஊரின் வீடு லேவியரிற் பின்னொருவரால் மீட்கப்பட்டிருந்தாலும் சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலாகவேண்டும். ஏனெனில், லேவியருடைய பட்டணங்களின் வீடுகள் இஸ்ரவேல் புத்திரரின் நடுவிலே அவர்களுக்கிருக்கிற காணியாட்சி.

௩௪. ஆனால் அவர்கள் பட்டணங்களுடைய பேட்டைகளின் வயல்வெளி விற்கப்படாதிருப்பதாக. ஏனெனில், அது அவர்களுக்கு நித்திய காணியாட்சியாயிருக்கின்றது.

௩௫. உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரப்பட்டுக் கையிளைத்தவனானால், அவனைத் திடப்படுத்துவாயாக. பரதேசியையுந் தங்க வந்தவனையும் போல அவனும் உன்னோடே பிழைப்பானாக.

௩௬. நீ அவன் கையில் வட்டியையும் லோபச்சத்தையும் வாங்காமல் உன் சகோதரன் உன்னோடே பிழைக்கும்படிக்கு உன் பராபரனுக்குப் பயப்படக்கடவாய்.

௩௭. அவனுக்கு உன் பணத்தை வட்டிக்கும் உன் போசனத்தைச் சோக்சத்திற்கும் கொடாயாக.

௩௮. நானுங்களுக்குக் கானான் தேசத்தைக் கொடுக்க, உங்களுக்குப் பராபரனாயிருக்கும்படிக்கு உங்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௯. உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரனாகி உனக்கு விலைப்பட்டுப்போனால், அவனை அடிமைவேலை கொள்ளாயாக.

௪௰. அவன் கூலிக்காரனைப் போலவுந் தங்க வந்தவனைப்போலவும் உன்னோடேயிருந்து சீர்திருந்தும் வருஷமட்டும் உன்னிடத்திலே சேவித்து,

௪௧. அப்பொழுது தன் பிள்ளைகளோடுங் கூட உன்னைவிட்டு நீங்கலாகித் தன் வமிசத்தன்னிடத்துக்குந் தன் பிதாக்களின் காணியாட்சிக்குந் திரும்பி வருவானாக.

௪௨. ஏனெனில், அவர்கள் நாம் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காரர் அடிமைவிற்கப்படுவதுபோல அவர்கள் விற்கப்படவேண்டாம்.

௪௩. * நீ அவனைக் கொடூரமாய் ஆளாமல் உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக.

* எபேசி. ௬, ௯.

௪௪. உனக்கிருக்கும் அடிமையும் அடிமைப்பெண்ணும் உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறசாதிகளின் மனிதராயிருக்கவேண்டும். அவைகளில் நீ அடிமையையும் அடிமைப்பெண்ணையுங் கொள்ளலாம்.

௪௫. உங்களிடத்திற் பரதேசிகளாய்த் தங்குகிற அந்நியரின் புத்திரரிலும் உங்கள் தேசத்தில் உங்களிடத்திலே பிறந்திருக்கிற அவர்களுடைய வமிசத்தாரிலுங்கூட நீங்கள் உங்களுக்கு அடிமைகளைக் கொண்டு,

௪௬. அவர்களை உங்களுக்கும் உங்களுக்குப் பிறபாடு உங்கள் பிள்ளைகளுக்குஞ் சொந்தச் சுதந்தரமாக என்றைக்கும் ஆண்டுகொண்டிருக்கலாம். ஆனால் இஸ்ரவேல் புத்திராகிய உங்கள் சகோதரரில் ஒருவனையொருவர் கொடூரமாய் ஆளவேண்டாம்.

௪௭. உன்னிடத்திலிருக்கிற பரதேசியும் அந்நியனும் அவகாசம் பெற்றிருக்கும்போது அவனிடத்திலிருக்கிற உன் சகோதரன் தரித்திரப்பட்டு அவனுக்கும் அல்லது அவன் வமிசசந்ததிக்கும் விலைப்பட்டுப்போனால்,

௪௮. விலைப்பட்டுப் போனபிறபாடு அவ

னுக்கு மீட்பு உண்டாவதாக. அவன் சகோதரரில் ஒருவன் அவனை மீட்கக்கடவன்.

௪௯. அவனுடைய பெரிய சிறிய தகப்பனாரும் பெரிய சிறிய தகப்பன் குமாரனும், அவன் வமிசத்தில் அவனைச் சேர்ந்த சதையாரில் ஒருவனும் அவனை மீட்பானாக. அல்லவென்று அவனுக்கு அவகாசங் கிடைத்தால் தன்னைத் தான் மீட்கலாம்.

௫௰. அவன் தன்னைக் கொண்டவனைக் கையிலே விலைப்பட்டுப் போன வருஷத்திற் துவக்கி யிருந் தும் வருஷத்திற்கு மிருக்குங் காலத்தைக் அவனோடே கணக்குப் பார்ப்பானாக. அவனோடே ஒரு கூலிக்காரனைய இத்தனை நாளிருந்தது போல அவனுடைய விலைக்கிரயம் வருஷங்களின் இலக்கத்திற் கொத்துப் பார்க்கப்படக் கடவது.

௫௧. இன்னம் அநேகம் வருஷங்களிருந்தால், அவன் தன் விலைக்கிரயத்திலே அவைகளுக்குத் தக்கதைத் தன்னை மீட்கும் பொருளாகத் திருப்பிக் கொடுக்கக் கடவன்.

௫௨. சீர்திருந்தும் வருஷமட்டும் மீதியாயிருக்கிற வருஷங்கள் கொஞ்சமேயானால், அவனோடே கணக்குப் பார்த்துத் தன் வருஷங்களுக்குத் தக்கதைத் தன்னை மீட்கும் பொருளாகத் திருப்பிக் கொடுக்கக் கடவன்.

௫௩. ஒரு கூலிக்காரனைப் போல அவனோடே வருஷத்திற்கு வருஷமிருப்பானாக். அவனிவனை யுன்பார்வைக்குக் கொடூரமாய் ஆள்வேண்டாம்.

௫௪. இவ்விதங்களாய் அவன் மீட்டுக்கொள்ளப்படாதே போனால், அவனும் அவன் பிள்ளைகளுங்கூடச் சீர்திருந்தும் வருஷத்திலே நீங்கலாவார்கள்.

௫௫. ஏனெனில், இஸ்ரவேல் புத்திரர் நமக்கு வேலைக்காரர், அவர்கள் நாமெகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காரராயிருக்கிறார்கள். நாமுங்கள் பராபரனாகிய கர்த்தர்.

## ௨௬. அதிகாரம்.

[(௧) விக்கிரக ஆராதனையையும், (௨) மார்க்கவழிபாட்டையுங் குறித்தது. (௩) கட்டளையைக் கைக்கொள்வோர்க் காசீர்வாதம். (௰௪) அவைகளை மீறுகிறவர்களுக்குச் சாபம். (௪௰) மனந்திரும்புவோரைத் தேவன் மன்னிப்பாராகக் குறித்தது.]

நீங்கள் உங்களுக்கு * விக்கிரகங்களையுஞ் சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலையை நாட்டாமலுஞ் சித்திரந்தீர்ந்த கல்லையதற்கு முன்பாகப் பணிய உங்கள் தேசத்தில் வைக்காமலுமிருப்பீர்களாக. ஏனெனில், நாமுங்கள் பராபரனாகிய கர்த்தர். * ௨. மோசே. ௨௰, ௪.

௨. நம்முடைய ஓய்வுநாள்களைக் கைக்கொண்டு நம்முடைய பரிசுத்த ஸ்தலத்திற்கு அஞ்சியிருப்பீர்களாக. நாம் கர்த்தர்.

௩. * நீங்கள் நமது கட்டளைகளில் நடந்து நமது கற்பனைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்தால், * ௫. மோ. ௨௮, ௧. ௰

௪. நாம் ஏற்றகாலத்தில் உங்கள் மழைகளைத் தருவோம். பூமி தன் பலனையும் நிலத்தின் மரங்கள் தங்கள் கனியையுங் கொடுக்கும்.

௫. போரடிப்பு உங்களுக்குத் திராட்சப்பழ அறுப்புமட்டும் வரும். திராட்சப்பழ அறுப்பு விதைப்புக்காலமட்டும் வரும். நீங்களுங்கள் அப்பத்தைத் திர்ப்தியாகச் சாப்பிட்டு உங்கள் தேசத்திலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௬. தேசத்திலே சமாதானங் கட்டளையிடுவோம். திகிலிக்கப் பண்ணுவாரில்லாமல் படுத்துக்கொண்டிருப்பீர்கள். துஷ்டமிருகங்களைத் தேசத்திலிராதபடிக்கு ஒழியப் பண்ணுவோம். பட்டயம் உங்கள் தேசத்தில் உலாவுவதில்லை.

௭. உங்கள் சத்துருக்களைத் துரத்துவீர்கள். அவர்கள் உங்கள் முன்பாகப் பட்டயத்தால் விழுவார்கள்.

௮. உங்களில் ஐந்துபேர் நூறுபேரைத் துரத்துவார்கள். உங்களில் நூறுபேர் பதினாயிரம்பேரைத் துரத்துவார்கள். உங்கள் சத்துருக்கள் உங்களுக்கு முன்பாகப் பட்டயத்தால் விழுவார்கள்.

௯. நாமுங்கள் மேலே நோக்கமாயிருந்து உங்களைப் பலுகவும் பெருகவும் பண்ணி உங்களோடிருக்கும் நம்முடைய உடம்படிக்கையைத் திடப்படுத்துவோம்.

௰. போன வருஷத்தின் பழைய தானியத்தைச் சாப்பிட்டுப் புதியது வந்ததினாலே பழையதை விலக்குவீர்கள்.

௰௧. நமது வாசஸ்தலத்தை யுங்கள் நடுவிலே வைப்போம். நம்முடைய ஆத்துமா உங்களையரோசிப்பதில்லை.

௰௨. நாமுங்கள் நடுவிலே உலாவி உங்களுக்குப் பராபரனாயிருப்போம். நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள்.

௰௩. நீங்கள் எகிப்தியருக்கு அடிமைகளாயிராதபடிக்கு நாமுங்களை அவர்கள் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணி உங்கள் நுகத்தடிகளையுடைத்து உங்களை நிமிர்ந்து நடக்கப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௰௪. நீங்கள் நம்முடைய சொற்கேளாமலும் இந்தக் கற்பனைகளின்படியெல்லாஞ் செய்யாமலும்,

௰௫. நம்முடைய கட்டளைகளை வெறுக்கிறதும், உங்கள் ஆத்துமா நமது நியாயங்களையரோசிக்கிறதும், நீங்கள் நமது கற்பனைகளின்படியெல்லாஞ் செய்யாதபடிக்கு நம்முடைய உடம்படிக்கையை முறித்துப்போடுகிறதுமுண்டேயாகில்,

௰௬. நாமுங்களுக்குச் செய்வதேதென்றால், கண்களைப் பூத்துப்போகப்பண்ணுகிறதும

ஆத்துமாவைக் கலிக்கப்படுத்துகிறதுமான திகிலையும் ஈளையையும் காய்ச்சலையும் உங்கள்மேலே வரப்பண்ணுவோம். உங்கள் விதையை விருதாவாக விதைப்பீர்கள். உங்கள் சத்துருக்கள் அதைத் தின்னுவார்கள்.

௰௭. நமது முகத்தையும் உங்களுக்கு விரோதமாகத் திருப்புவோம். உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக முறியடிக்கப்படுவீர்கள். உங்களைப் பகைஞர் உங்களை யாண்டுகொள்ளுவார்கள். உங்களைத் துரத்துவாரில்லாமல் ஓடுவீர்கள்.

௰௮. நீங்கள் இதனோடே இன்னம் நம்முடைய சொற்கேளாதேபோனால், நாமுங்கள் பாவங்களினிமித்தம் பின்னையும் ஏழத்தனையாய் உங்களைத் தண்டித்து,

௰௯. உங்கள் வல்லமையின் பெருமையை முறித்து உங்கள் வானத்தை யிரும்பைப் போலவும் உங்கள் பூமியை வெண்கலத்தைப் போலவுமிருக்கப்பண்ணுவோம்.

௨௰. உங்கள் பலம் விருதாவிலே செலவழியும், உங்கள் தேசந்தன் பலனையுந் தேசத்தின் மரங்கள் தங்கள் கனியையுங் கொடாதே போம்.

௨௰௧. நீங்கள் நமது சொற்கேட்க மனதில்லாமல் நமக்கெதிர்த்து நடந்ீர்களேயானால், நாமுங்கள் பாவங்களுக்குத் தக்கதாக இன்னம் ஏழத்தனைவாதையை யுங்கள்மேலே வரப்பண்ணி,

௨௰௨. உங்களுக்குள்ளே வெளியின் துஷ்ட மிருகங்களை வரவிடுவோம். அவைகள் உங்களைப் பிள்ளைகளற்றவர்களாக்கி உங்கள் மிருகஜீவன்களை யழித்து உங்களைக் குறைந்துபோகப்பண்ணும். உங்கள் வழிகள் பாழ்த்துக் கிடக்கும்.

௨௰௩. நீங்கள் இத்தமட்டில் நமது தண்டனையாலே குணப்படாமல் நமக்கெதிர்த்து நடந்தால்,

௨௰௪. நாமுங்களுக்கெதிர்த்து நடந்து நாமுங்களையுங்கள் பாவங்களினிமித்தம் ஏழத்தனையாய் வாதித்து,

௨௰௫. உடம்படிக்கையின் நீதியைவிசாரிக்கிறதாகிய சரிக்குச்சரிக்கட்டும் பட்டயத்தை யுங்கள்மேலே வரப்பண்ணி நீங்களுங்கள் பட்டணங்களில் வந்தடைந்த பிறகு கொள்ளைநோயை உங்கள் நடுவிலே அனுப்புவோம். சத்துருவினகையிலொப்புக்கொடுக்கப்படுவீர்கள்.

௨௰௬. நாம் அப்பமென்ற ஆதரவுகோலை யுங்களுக்கு ஒடித்திருக்கும்பொழுது பத்து ஸ்திரீகள் ஒரே அடுப்பில் உங்கள் அப்பத்தைச் சுட்டு அதைத் திருப்ப உங்களுக்கு நிறுத்துக்கொடுப்பார்கள். திர்ந்தி யடையாமற் சாப்பிடுவீர்கள்.

௨௰௭. இதனுடனே நீங்கள் நம்முடைய சொற்கேளாமல் நமக்கெதிர்த்து நடந்தால்,

௨௰௮. நாமும் உக்கிரத்தோடே உங்களுக்கெதிர்த்து நடந்து உங்களையுங்கள் பாவங்களினிமித்த ஏழத்தனையாய்த் தண்டிப்போம்.

௨௰௯. உங்கள் குமாரரின் மாம்சத்தையும் உங்கள் குமாரத்திகளின் மாம்சத்தையும் புசிப்பீர்கள்.

௩௰. நாமுங்கள் மேடைகளையழித்து உங்கள் விக்கிரகச்சிலைகளை நிர்த்தூளியாக்கி உங்கள் உடல்களையுங்கள் நரகலான தேவர்களுடைய உடல்களின்மேலே போட்டுவிடுவோம். நம்முடைய ஆத்துமா உங்களை யரோசிக்கும்.

௩௰௧. நாம் உங்கள் பட்டணங்களை வெறுந்தரமும் உங்கள் பரிசுத்தஸ்தலங்களைப் பாழுமாக்கி உங்களுடைய ஆறுதலின் வாசனையை மோவாதிருப்போம்.

௩௰௨. நாம் தேசத்தையந்திலே குடியிருக்கப் போகிற உங்கள் சத்துருக்கள் பிரமிக்கத்தக்கதாகப் பாழாக்கி,

௩௰௩. உங்களைச் சாதிகளுக்குள்ளே சிதறடித்து உங்கள் பிறகாலே பட்டயத்தை யுருவுவோம். உங்கள் தேசம் பாழும் உங்கள் பட்டணங்கள் வெறுந்தரமுமாம்.

௩௰௪. நீங்கள் உங்கள் சத்துருக்களின் தேசத்திலிருக்கும் அப்பொழுது தேசமானது பாழாய்க்கிடக்கிற நாளெல்லாம் தன்னுடைய ஓய்வுகளை இரம்மியமாய் அனுபவிக்கும். அப்பொழுது ஓய்வடைந்து தன் ஓய்வுகளை இரம்மியமா யனுபவிக்கும்.

௩௰௫. நீங்கள் அதிலே குடியிருக்கும்போது அது உங்கள் ஓய்வுவருஷங்களில் ஓய்வடையாதபடியினாலே அது பாழாய்க்கிடக்கும் நாளெல்லாம் ஓய்வடைந்திருக்கும்.

௩௰௬. உங்களில் மீதியாயிருப்பவர்களின் இருதயங்களில் நாம் அவர்கள் சத்துருக்களின் தேசங்களிலே மனத்தளர்ச்சியை வரப்பண்ணுவோம். காற்றடிக்கும் இலையின் இரைச்சல் அவர்களையோட்டும். அவர்கள் பட்டயத்திற்குத் தப்பி ஓடுகிறதுபோல ஓடித் துரத்துவாரில்லாமல் விழுவார்கள்.

௩௰௭. துரத்துவாரில்லாமல் ஒருவர்மேலொருவர் பட்டயம் பிறகாலே வருகிறதுபோல இடறிவிழுவார்கள். உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக உங்களுக்குத் தரிக்கக்கூடாததாயிருக்கும்.

௩௰௮. புறச்சாதிகளுக்குள் அழிவீர்கள். உங்கள் சத்துருக்களின் தேசம் உங்களைப் பட்சிக்கும்.

௩௰௯. உங்களில் மீதியாயிருப்பவர்கள் உங்கள் சத்துருக்களின் தேசங்களிலே தங்கள் அக்கிரமங்களினாலுந் தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களினாலுங் கூடவாடிப்போய்,

௪௰. தாங்கள் நமக்குவிரோதமாகத் துரோகம்பண்ணி நடப்பித்த தங்கள் அக்கிரமத்தையுந் தங்கள் பிதாக்களின் அக்கிரமத்தையும்,

௪௧. தாங்கள் நமக்கெதிர்த்து நடந்தபடியினாலே நாமுந்தங்களுக்கெதிர்த்து நடந்து தங்களைத் தங்கள் சத்துருக்களின் தேசத்திலே கொண்டுபோய்விட்டதையும் அறிக்கையிடுவார்கள். அப்பொழுது சுன்னத்தில்லாத அவர்கள் இருதயந் தாழ்ந்துபோய் அவர்கள் தங்கள் அக்கிரமத்தின் ஆக்கினையை நல்லதென்று ஒத்துக்கொண்டால்,

௪௨. நாம் யாக்கோபோடே பண்ணின நமது உடன்படிக்கையையும் ஈசாக்கோடே பண்ணின நமது உடம்படிக்கையையும் ஆபிரகாமோடே பண்ணின நமது உடன்படிக்கையையும் நினைப்போம். தேசத்தையும் நினைப்போம்.

௪௩. அவர்கள் நிமித்தம் வெறுமையே விடப்பட்டதும் பாழாய்க்கிடக்கிறதினாலே தன் ஓய்வுகளை இரம்மியமாய் அனுபவிக்கிறதுமான தேசத்தைத்தானே. அவர்களும் நம்முடைய நியாயங்களை வெறுத்தபடியினாலும் அவர்களுடைய ஆத்துமா நம்முடைய கட்டளைகளை யோசித்தபடியினாலும் அடைந்த தங்களுடைய அக்கிரமத்தின் தண்டனையை நல்லதென்று ஒத்துக்கொள்ளுவார்கள்.

௪௪. ஆனதுகொண்டு அவர்கள் தங்கள் சத்துருக்களின் தேசத்திலிருந்தாலும் நாம் அவர்களை நிர்மூலமாக்கத் தக்கதாகவும் அவர்களோடிருக்கிற நமது உடம்படிக்கையை யவத்தமாக்கத் தக்கதாகவும் அவர்களைப் புறக்கணிப்பதுமில்லை யரோசிப்பதுமில்லை. ஏனெனில், நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்தர்.

௪௫. அவர்களுடைய பராபரனாயிருக்கும்படிக்கு நாம் புறச்சாதிகளின் கண்களுக்கு முன்பாக எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின அவர்களுடைய முன்னோர்களோடே நாம் பண்ணின உடம்படிக்கையையவர்களுக்காக நினைவுகூருவோம். நாம் கர்த்தரென்று சொல்லென்றார்.

௪௬. தமக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் நடுவேயிருக்கும்படிக்குக் கர்த்தர் சீனாய்ப் பர்வதத்திலே மோசேயைக்கொண்டு கொடுத்த கட்டளைகளும் நியாயங்களும் நியாயப் பிரமாணங்களும் இவைகள்தாமே.

## ௨௭. அதிகாரம்.

[(௧) அரியபொருத்தனைசெய்பவன் தேவனுடையவன். (௩) அவனைமதிக்குதல், (௯) பிரார்த்தனையாறக் கொடுத்த மிருகத்தையும், (௰௪) வீட்டையும், (௰௯) ஒருபுலத்தையும் அதின்மீட்சியையுங் குறித்தது. (௨௮) பிரார்த்தனையாகவிட்டதையும், (௩௨) தசபாகத்தையும் மாற்றப்படாதென்பது.]

பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில்; ஒருவன் ஒரு விசேஷித்த பொருத்தனையைப் பண்ணியிருந்தால் ஆத்துமாக்கள் உன் மதிப்பின்படிக் குக்கர்த்தருடையவர்கள்.

௩. இருபதுவயதுமுதற்கொண்டு அறுபதுவயதிறகுள்ளிருக்கிற ஆண்பிள்ளையை நீ பரிசுத்தஸ்தலத்தின்சேக்கலாகிய ஐம்பதுவெள்ளிச்சேக்கலாகவும்,

௪. பெண்சாதியை முப்பது சேக்கலாகவும் மதிப்பாயாக.

௫. ஐந்துவயது முதற்கொண்டு இருபது வயதிறகுள்ளிருக்கிற ஆண்பிள்ளையை யிருபது சேக்கலாகவும், பெண்பிள்ளையைப் பத்துச் சேக்கலாகவும்,

௬. ஒருமாதமுதற்கொண்டு ஐந்துவயதிறகுள்ளிருக்கிற ஆண்பிள்ளையை ஐந்துவெள்ளிச்சேக்கலாகவும் பெண்பிள்ளையைமூன்று வெள்ளிச்சேக்கலாகவும்,

௭. அறுபதுவயதும் அதிகமுமான ஆண் பிள்ளையைப் பதினைந்து சேக்கலாகவும், பெண்சாதியைப் பத்துச்சேக்கலாகவும் மதிக்கக்கடவாய்.

௮. உன் மதிப்பைச் செலுத்தக் கூடாத தரித்திரனாயிருந்தானேயாகில், அவன் ஆசாரியனுக்குமுன்பாகத் தன்னைமதிக்கும்படிக்கு வந்துநிற்கக்கடவன். பொருத்தனைபண்ணினவனுடைய கைக்குதவுகிறதற்குத் தக்கதாய ஆசாரியன் அவனைமதிப்பானாக.

௯. கர்த்தருக்குப்பலியிடப்படத்தக்கமிருகமேயானால், அவன் கர்த்தருக்குக்கொடுக்கிறஅப்படிக் கொத்ததெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.

௰. அதைமாற்றுமலிருப்பானாக. இளப்பமானதற்குப்பதிலாக நல்லதையும் நல்லதுக்குப்பதிலாக இளப்பமானதையுங் கொடாமலிருப்பானாக. அவன்மிருகத்திற்குப் பதிலாக மிருகத்தைக் கொடுத்தானேயாகில், அப்பொழுது அதுவும் அதற்குப்பதிலானதும்பரிசுத்தமாயிருப்பதாக.

௰௧. அது கர்த்தருக்குப் பலியிடப்படத்தகாத்தீட்டானயாதொருமிருகமேயானால், அதை ஆசாரியனுக்குமுன்பாக நிறுத்தக்கடவன்.

௰௨. ஆசாரியன் அதையதின் நன்மைக்கும் இளப்பத்திற்குந் தக்கதாய மதிப்பானாக. அவன்மதிக்கிறபடியே யிருக்கக்கடவது.

௰௩. அதை மீட்கமனதாயிருந்தானேயாகில் உன்மதிப்போடே ஐந்திலொருபங்கைக் கூட்டக்கடவன்.

௰௪. ஒருவன் தன் வீட்டைக் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினால் ஆசாரியன் அந்த அதின் நன்மைக்கும் இளப்பத்திற்குந் தக்கதாய மதிப்பானாக. அவன் அதை மதிக்கிறபடி யிருக்கக்கடவது.

௰௫. பரிசுத்தம்பண்ணினவன் தன் வீட்டை மீட்கமனதாயிருந்தானேயாகில், உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவன். அப்பொழுது அவனுடையதாயிருக்கும்.

௰௬. ஒருவன் தன் காணியாட்சி வயல்வெளியிலே எதாகிலும் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினால், உன் மதிப்பு அதின் விதைப்புக்குத்தக்கதாயிருக்கவேண்டும். ஒருகலம் வாற்கோதுமை விதைக்கிற வயல் ஐம்பது வெள்ளிச்சேக்கலாக மதிக்கப்படக்கடவது.

௰௭. சித்திரத்தும வருஷமுதற்கொண்டே அவன் தன் வயலைப் பரிசுத்தம்பண்ணினால் உன் மதிப்பின்படி யிருக்கக்கடவது.

௰௮. சித்திரத்தும வருஷத்திற்குப்பிற்பாடு அதைப் பரிசுத்தம் பண்ணினானேயாகில், அப்பொழுது சித்திரத்தும வருஷமட்டுமிருக்கும். குறைவருஷங்களின்படியே திரவியம் ஆசாரியனாலே கணக்குப்பார்க்கப்பட்டு அதற்குத்தக்கது உன் மதிப்பிலே தள்ளப்படக்கடவது.

௰௯. வயலைப் பரிசுத்தம் பண்ணினவன் அதை மீட்கமனதாயிருந்தானேயாகில், உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவன். அப்பொழுது அவனுடையதாயிருக்கும்.

௨௰. அவன் வயலை மீட்காதேபோய் அதை வேறொருவனுக்கு விற்றானேயானால், இனி மீட்கப்படக்கூடாமல்,

௨௧. அது சித்திரத்தும வருஷத்தில் நீங்குகிறபொழுது, சாபத்தீடான வயலாகக் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கக்கடவது. அதின் காணியாட்சி ஆசாரியனைச் சேரும்.

௨௨. ஒருவன் தன் காணியாட்சி வயல் அல்லாத்தாகிய தான் கொண்ட ஒரு வயலைக் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினானேயாகில்,

௨௩. அந்த சித்திரத்தும வருஷமட்டும் உன் மதிப்பின்படிப் பெறும் விலையை ஆசாரியன் அவனோடே கணக்குப்பார்ப்பானாக. அந்த உன் மதிப்பையவன் அந்நாளிலே கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும்படிக்குக் கொடுக்கக்கடவன்.

௨௪. ஆர் கையிலே யந்த வயலைக்கொண்டானோ அந்தக் காணியாட்சிக்காரன் வசமாய் அது சித்திரத்தும வருஷத்திலே திரும்பும்.

௨௫. உன் மதிப்பெல்லாம் பரிசுத்தஸ்தலச் சேக்கல் கணக்காயிருக்கக்கடவது. சேக்கலானது இருபது கேரா.

௨௬. தலையீற்றுகளோவென்றால் கர்த்தருடையதானபடியினாலே தலையீற்றுகளாயிருக்கிறவைகளை யொருவரும் பரிசுத்தம்பண்ணவொண்ணாது. அது மாடானாலும் ஆடானாலும் கர்த்தருடையதாயிருக்கிறதே.

௨௭. தீட்டான மிருகத்தினுடையதேயானால், அவன் உன் மதிப்பின்படி யதை மீட்டு அதினுடனே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவன். மீட்கப்படாமற்போயிற்றேயாகில் உன் மதிப்பின்படி விற்கப்படக்கடவது.

௨௮. ஒருவன் தனக்குண்டான நரஜீவன், மிருகஜீவன், காணியாட்சி, நிலம் முதலானதில் எதையாகிலும் சாபத்தீடானதாகக் கர்த்தருக்குக் கொடுத்தானேயாகில், அது விற்கப்படவும் மீட்கப்படவும் வேண்டாம். சாபத்தீடானதாகக் கொடுக்கப்பட்டதெல்லாம் கர்த்தருக்குப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௨௯. நரஜீவனில் சாபத்தீடாக நியமிக்கப்பட்டதெல்லாம் மீட்கப்படாமல் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவது.

௩௰. தேசத்திலே நிலத்தின் விதைகளிலும் மரங்களின் கனியிலும் பத்திலொரு பங்காகிறதெல்லாம் கர்த்தருடையது. அது கர்த்தருக்குப் பரிசுத்தம்.

௩௧. ஒருவன் பத்திலொரு பங்காகிய அதிலே சிலவற்றை மீட்கமனதாயிருந்தானேயானால், அதினுடனே ஐந்திலொரு பங்கைக் கூட்டக்கடவன்.

௩௨. கோலின்கீழ்ப்போகிற ஆடுமாடுகளிலே பத்திலொரு பங்காகுகிறதெல்லாம் கர்த்தருக்குப் பரிசுத்தம்.

௩௩. அது நல்லதோ இளப்பமானதோவென்று அவன் பார்க்கவேண்டாம். அதற்குப்பதில் கொடுக்கவும் வேண்டாம். பதில் கொடுத்தானேயாகில், அதுவும் அதற்குப்பதிலானதும் பரிசுத்தமாயிருக்கும். அது மீட்கப்படக்கூடாதென்று அவர்களோடே சொல்லென்றார்.

௩௪. இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லும்படிக்குக் கர்த்தர் மோசேக்குச் சீனாய்ப் பர்வதத்திலே கற்பித்த கற்பனைகள் இவைகள்தானே.

# மோசே எழுதின

# நாலகாம் ஆகமம்.

(கி. பி. மு. ௲௪௱௯௰.)

## க. அதிகாரம்.

[(க) சனங்களைக் கணக்கிடப் பராபரன் மோசேக்குக் கற்பிக்கிறது. (ரு) வம்சப் பிரபுக்கள். (௰எ) ஒவ்வொரு வம்சச்சனக்கணக்கு. (சஎ) இலேவியர் தேவ ஊழியத்தினிமித்தங் கணக்கிடப்படாதது.]

அவர்கள் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் இரண்டாம் மாதம் முதற்றேதியிலே கர்த்தர் சீனாய் வனாந்தரத்திலிருக்கிற ஆசரிப்புக் கூடாரத்திலே மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

உ. நீங்கள் இஸ்ரவேல் புத்திரரின் முழுச் சபையாயிருக்கிறவர்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சங்களிலுள்ள ஆண்பிள்ளைகளாகிய சகல தலைகளையும் பேர் பேராக எண்ணித் தொகையேற்றுங்கள்.

௩. இஸ்ரவேலிலே இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்கவர்களையெல்லாம் நீயும் ஆரோனுமாய் அவர்கள் சேனைகளின்படியே இலக்கம்பார்ப்பீர்களாக.

௪. ஒவ்வொரு கோத்திரத்துக்கு அவர்களுடைய பிதாக்களின் வீட்டுத் தலைவனாகிய ஒவ்வொருவன் உங்களோடிருப்பானாக.

ரு. உங்களோடே நிற்கும் மனிதரின் நாமங்களாவன் ரூபன் கோத்திரத்திலே சேதேயூரின் குமாரன் எலிசூர்.

௬. சிமியோன் கோத்திரத்திலே சூரிஷதாயின் குமாரன் செலூமியேல்.

எ. யூதா கோத்திரத்தில் அம்மினதாபின் குமாரன் நாகசோன்.

அ. இசக்கார் கோத்திரத்திலே சூகாரின் குமாரன் நெதனெயேல்,

௯. செபுலோன் கோத்திரத்தில் ஏலோனின் குமாரன் எலியாப்.

௰. யோசேப்பின் குமாரராகிய எப்பிராயீம் கோத்திரத்தில் அம்மியூதின் குமாரன் எலிஷாமா, மனாசே கோத்திரத்திலே பெதாசூரின் குமாரன் கமாலியேல்.

௰க. பென்யமீன் கோத்திரத்திலே கிதெயோனின் குமாரன் அபீதான்.

௰உ. தாண் கோத்திரத்தில் அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.

௰௩. ஆசேர் கோத்திரத்தில் ஒக்கிரானின் குமாரன் பாகியேல்.

௰௪. காத் கோத்திரத்திலே தேகுவேலின் குமாரன் எலியாசாப்.

௰ரு. நப்தலி கோத்திரத்தில் ஏனானின் குமாரன் அகிரா.

௰௬. சபையில் அழைக்கப்பட்டுத் தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களின் பிரபுக்களும் இஸ்ரவேலில் ஆயிரங்களுக்குத் தலைவருமாயிருப்பவர்கள் இவர்கள்தானென்றார்.

௰எ. அப்படியே மோசேயும் ஆரோனும் பேர்பேராகக் குறிக்கப்பட்ட இந்த மனிதரைக் கூட்டிக்கொண்டு,

௰அ. இரண்டாம் மாதம் முதற்றேதியிலே சபையையெல்லாங் கூட்டங்கூட்டினார்கள். அவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சப்பிறப்புகளின்படியே பார்க்கப்பட்டு இருபது வயது முதற்கொண்டிருந்த பேர்கள் தலைதலையாக எண்ணப்பட்டார்கள்.

௰௯. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இவன் அவர்களைச் சீனாயின் வனாந்தரத்தில் இலக்கம்பார்த்தான்.

உ௰. இஸ்ரவேலின் மூத்தவனாகிய ரூபெனின் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாந் தலைதலையாக எண்ணப்பட்டபோது,

உ௰க. ரூபென் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தாறாயிரத்தைந்நூறுபேர்.

உ௰உ. சிமியோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளிலிருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாந் தலைதலையாக எண்ணி இலக்கம்பார்க்கப்பட்டபோது,

உ௰௩. சிமியோன் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறுபேர்.

உ௰௪. காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயது முதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபோது,

உ௰ரு. காத் கோத்திரத்தில் இலக்கம்பார்க்

கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்து அறுநூற்றைம்பதுபேர்.

௨௬. யூதா புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபதுவயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௨௭. யூதாகோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் எழுபத்துநாலாயிரத்து அறுநூறுபேர்.

௨௮. இசக்காருபுத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபதுவயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௨௯. இசக்கார் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்துநாலாயிரத்து நானூறுபேர்.

௩௰. செபுலோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபதுவயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௧. செபுலோன்கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்தேழாயிரத்து நானூறுபேர்.

௩௨. யோசேப்பினகுமாரரில் எப்பிராயீம் புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப் பிறப்புகளில் இருபதுவயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப்புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௩. எப்பிராயீம் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் நாற்பதினாயிரத்து ஐந்நூறுபேர்.

௩௪. மனாசேபுத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபது வயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௫. மனாசே கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் முப்பத்திரண்டாயிரத்து இருநூறுபேர்.

௩௬. பென்யமீன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபதுவயது முதற்கொண்டு யுத்தத்துக்குப்புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௭. பென்யமீன்கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் முப்பத்தையாயிரத்து நானூறுபேர்.

௩௮. தாண் புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபது வயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௯. தாண்கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் அறுபத்திரண்டாயிரத்து எழுநூறுபேர்.

௪௰. ஆசேர் புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபது வயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௪௧. ஆசேர்கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தோராயிரத்தைந்நூறுபேர்.

௪௨. நப்தலிபுத்திரருடைய பிதாக்களின் வீட்டுவமிசப்பிறப்புகளில் இருபதுவயதுமுதற்கொண்டு யுத்தத்துக்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௪௩. நப்தலிகோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்துமூவாயிரத்து நானூறுபேராயிருந்தார்கள்.

௪௪. மோசேயும் ஆரோனும் இஸ்ரவேலுடைய பிதாக்களின் வீடுகளிலே ஒவ்வொருவனாகிய ஒவ்வொரு பிரபுக்களான பன்னிரண்டுபேரும் இலக்கம் பார்த்தவர்கள் இவர்கள்தானே.

௪௫. இஸ்ரவேல் புத்திரருடைய பிதாக்களின் வீட்டாரில் இருபதுவயதுமுதற்கொண்டு இஸ்ரவேலில் யுத்தத்துக்குப் புறப்படத்தக்கவர்களாகிய இலக்கம் பார்க்கப்பட்ட பேர்களெல்லாம்,

௪௬. அறுநூற்று மூவாயிரத்தைந்நூற்றைம்பதுபேராயிருந்தார்கள்.

௪௭. ஆனால் லேவியர் தங்கள்பிதாக்களுடைய கோத்திரத்தின்படியே அவர்களுக்குள்ளே இலக்கம் பார்க்கப்படவில்லை.

௪௮. ஏனெனில், கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௪௯. லேவிகோத்திரத்தைமாத்திரம் நீ இஸ்ரவேல்புத்திரருக்குள்ளே இலக்கம் பாராமலும், அவர்கள் தொகையை யேற்றாமலும்,

௫௰. லேவியரை நீ சாட்சியின்வாசஸ்தலத்துக்கும் அதினுடைய எல்லாப்பணிமுட்டுகளுக்கும், அதிலுள்ள எல்லாவற்றுக்கும் விசாரிப்புக்காரராக வை. அவர்கள் வாசஸ்தலத்தையும், அதின் எல்லாப்பணிமுட்டுகளையுஞ் சுமந்து அதினிடத்திலே ஊழியஞ்செய்து வாசஸ்தலத்தைச் சுற்றிலும் பாளயமிறங்கக்கடவர்கள்.

௫௧. வாசஸ்தலம் பயணப்படுகையில் லேவியர் அதை இறக்கிவைத்து அது பாளயமிறங்குகையில் லேவியர் அதை எடுத்து நிறுத்தக்கடவர்கள். சேருகிற அந்நியன் கொலையுண்பானாக.

௫௨. இஸ்ரவேல்புத்திரர் அவரவர்தங்கள் பாளயத்தோடும், அவரவர் தங்கள் சேனை

யின்கொடியோடே கூடாரம் போடக்கடவர்கள்.

௫௩. இஸ்ரவேலபுத்திரருடைய சபையின்மேலே கடுங்கோபம் வாராதபடிக்கு லேவியர் வாசஸ்தலத்தின்சுற்றிலும் பாளயமிறங்கி லேவியர் சாட்சியினுடைய வாசஸ்தலத்தின் காவலைக்காப்பார்களாகவேண்டும்.

௫௪. கர்த்தர்மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேலபுத்திரர்செய்தார்கள்.

## ௨. அதிகாரம்.

[கோத்திரங்கள் கூடாரம் போட்டிருக்கவேண்டிய ஒழுங்கு.]

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச்சொன்னதாவது;

௨. இஸ்ரவேலபுத்திரர் அவரவர் தங்கள் பிதாக்களுடைய வீட்டின் அடையாளமாகிய தங்களுடைய கொடியண்டையிலே தங்கள் கூடாரங்களைப் போட்டு ஆசரிப்புக்கூடாரத்திற்கெதிராகச் சுற்றிலும் பாளயமிறங்கக்கடவர்கள்.

௩. யூதாவுடைய பாளயத்தின் கொடியின் கீழிருக்கிற சேனைகள் சூரியனுதிக்குங் கிழப்புறத்திலே பாளயமிறங்குவது யூதாபுத்திரரின்பிரபு அம்மினதாபின்குமாரன் நாகசோன்.

௪. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை எழுபத்துநாலாயிரத்தறுநூறுபேர்.

௫. அவன்கிட்டப் பாளயமிறங்குபவர்கள் இசக்காரின்கோத்திரத்தார், இசக்கார்புத்திரரின்பிரபு சூவாரின்குமாரன் நெதனெயேல்.

௬. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்துநாலாயிரத்துநானூறுபேர்.

௭. பிறபாடு செபுலோன்கோத்திரத்தாருந்தானே செபுலோன்புத்திரரின்பிரபு ஏலோனின்குமாரன் எலியாப்.

௮. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்தேழாயிரத்து நானூறுபேர்.

௯. இலக்கம்பார்க்கப்பட்ட யூதாவின் பாளயத்தாரெல்லாருந் தங்கள் சேனைகளின்படியே நூற்றெண்பத்தாறாயிரத்துநானூறுபேர். இவர்கள்பயணத்திலே முதற்பாளயமாய்ப்போகக்கடவர்கள்.

௰. ரூபனுடையபாளயத்தின் கொடியின்கீழிருக்கிறசேனைகள் தெற்புறத்திலிறங்குவது ரூபன்புத்திரரின் பிரபு சேதேயூரின்குமாரன் எலிசூர்.

௰௧. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடையசேனை நாற்பத்தாறாயிரத்தைந்நூறுபேர்.

௰௨. அவன்கிட்டப் பாளயமிறங்குபவர்கள் சிமியோன் கோத்திரத்தார், சிமியோன்புத்திரரின்பிரபு சூரிஷதாயின்குமாரன் செலூமியேல்.

௰௩. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடையசேனை ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறுபேர்.

௰௪. பிறபாடு காத்கோத்திரத்தாருந்தானே. காத்புத்திரரின்பிரபு ரேகுவேலின்குமாரன் எலியாசாப்.

௰௫. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடையசேனை நாற்பத்தையாயிரத்தறுநூற்றைம்பதுபேர்.

௰௬. இலக்கம்பார்க்கப்பட்ட ரூபனின் பாளயத்தாரெல்லாருந்தங்கள் சேனைகளின்படியே நூற்றைம்பத்தோராயிரத்து நானூற்றைம்பதுபேர். இவர்கள் பயணத்திலே இரண்டாம்பாளயமாய்ப் போகுமவர்கள்.

௰௭. பிறபாடு ஆசரிப்புக்கூடாரம்லேவியரின்சேனையோடே பாளயங்களின் நடுவே பயணப்படும்போம். எப்படிப் பாளயமிறங்குகிறார்களோ அப்படியவரவர்தங்கள் வரிசையிலே தங்கள் கொடிகளின்படியே பயணப்படுவார்களாக.

௰௮. எப்பிராயீமுடைய பாளயத்திற்கொடியின் சேனைகள் மேற்புறத்திலிறங்குவது எப்பிராயீமின்புத்திரரின்பிரபு அம்மியூதின்குமாரன் எலிஷாமா.

௰௯. இலக்கம்பார்க்கப்பட்டஅவனுடைய சேனை நாற்பதினாயிரத்தைந்நூறுபேர்.

௨௰. அவன்கிட்டப்பாளயமிறங்குபவர்கள் மனாசேகோத்திரத்தார், மனாசேகோத்திரத்தாரின்பிரபு பெதாத்சூரின்குமாரன்கமாலியேல்.

௨௧. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடையசேனை முப்பத்திராயிரத்திருநூறுபேர்.

௨௨. பிறபாடு பென்யமீன்கோத்திரத்தாருந்தானே. பென்யமீன் புத்திரரின் பிரபு கிதெயோனின்குமாரன் அபீதான்.

௨௩. இலக்கம்பார்க்கப்பட்டஅவனுடைய சேனை முப்பத்தையாயிரத்துநானூறுபேர்.

௨௪. இலக்கம் பார்க்கப்பட்ட எப்பிராயீமின்பாளயத்தாரெல்லாருந் தங்கள்சேனைகளின்படியே லட்சத்தெண்ணாயிரத்தொருநூறுபேர். இவர்கள்பயணத்திலே மூன்றாம்பாளயமாய்ப்போகுமவர்கள்.

௨௫. தாணுடையபாளயத்திற கொடியின்சேனைகள் வடக்கேயிறங்குவது தாண் புத்திரரின்பிரபு அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.

௨௬. இலக்கம்பார்க்கப்பட்டஅவனுடையசேனை அறுபத்திராயிரத்தெழுநூறுபேர்.

௨௭. அவன்கிட்டப் பாளயமிறங்குபவர்கள் ஆசேர்கோத்திரத்தார், ஆசேர்கோத்திரத்தாரின்பிரபு ஓக்கிரானின்குமாரன் பாகியேல்.

௨௮. இலக்கம்பார்க்கப்பட்டஅவனுடையசேனை நாற்பத்தோராயிரத்தைந்நூறுபேர்.

௨௯. பிறகு நப்தலி கோத்திரத்தாருந் தானே, நப்தலி புத்திரரின்பிரபு ஏனானின் குமாரன் அகீரா.

௩௰. இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்துமூவாயிரத்து நானூறுபேர்.

௩௧. இலக்கம்பார்க்கப்பட்ட தாணின்பாளயத்தாரெல்லாரும் நூறாயிரத்தைம்பத்தேழாயிரத்தறுநூறுபேர். இவர்கள் தங்கள் கொடிகளின்படியே பின்பாளயமாய்ப்போகும்வர்களென்றார்.

௩௨. இவர்கள் இஸ்ரவேல்புத்திரருடைய பிதாக்களின்வீட்டாரில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள். பாளயங்களிலே தங்கள் தங்கள் சேனைகளின்படியே இலக்கம்பார்க்கப்பட்டவர்களெல்லாரும் அறுநூற்றுமூவாயிரத்தைந்நூற்றைம்பதுபேராயிருந்தார்கள்.

௩௩. லேவியரோவென்றால் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி இஸ்ரவேல்புத்திரருக்குள்ளே இலக்கம்பார்க்கப்படவில்லை.

௩௪. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேல்புத்திரர்செய்து அப்படியே தங்கள் கொடிகளின் கீழ்ப்பாளயமிறங்கி அப்படியவரவர் தங்கள் பிதாக்களுடையவீட்டுவமிசங்களின்படியேபயணப்பட்டுப்போனார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) ஆரோனின் புத்திரரையும், (௫) முதற்பேற்றுக்குப் பதில் கூடாரத்தின் வேலைக்காக ஆசாரியருக்கு இலேவியர் கொடுக்கப்பட்டதையும், (௰௪) இலேவி வமிசத்தார் குடும்பங்களாகக் கணக்கிடப்பட்டதையும், (௨௧) கெர்சோனருடைய குடும்பத்தையும், தொகையையும், தொழிலையும், (௨௭) கேகாத்தியரையும், (௩௩) மெறாரியரையும், (௩௮) மோசே ஆரோன் என்பவர்களுடைய இடத்தையும், தொழிலையும், (௪௰) இலேவியர் நிமித்தம் விடப்பட்ட முதற்பேறுகளையும், (௪௪) மீதியானவர்களின் மீட்பையுங் குறித்தது.]

சீனாய்ப்பர்வதத்திலே கர்த்தர் மோசேயோடே பேசினநாளிலே ஆரோன் மோசேயென்றவர்களுடைய சந்ததிகளின் நடபடியாவது;

௨. ஆரோனுடைய குமாரர் ஆரோனுடைய முதற்பிறந்தவனாகிய நாதாபும், அபியூவும், எலெயாசாரும், இத்தாமாருமென்னப்பட்டவர்கள்.

௩. ஆசாரிய ஊழியஞ்செய்கிறதற்குக் கைகள் நிரப்பப்பட்டு அபிஷேகம்பெற்ற ஆசாரியரான ஆரோனுடையகுமாரரின் நாமங்கள் இவைகள்தான்.

௪. ஆனால் நாதாபும், அபியூவுஞ் சீனாயின் வனாந்தரத்தில் அந்நிய அக்கினியைக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவருகையிற் கர்த்தருக்கு முன்பாகச்செத்தார்கள். அவர்களுக்குப் பிள்ளைகளில்லை. எலெயாசாரும் இத்தாமாருமோவென்றால், தங்கள் தகப்பனாகிய ஆரோனுக்கு முன்பாக ஆசாரிய ஊழியஞ் செய்தார்கள்.

௫. கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௬. நீ லேவிகோத்திரத்தாரைச் சேர்த்து ஆசாரியனாகிய ஆரோனுக்கு முன்பாக அவனுக்குப் பணிவிடை செய்யும்படிக்கு நிறுத்து.

௭. அவர்கள் வாசஸ்தலத்தின் பணிவிடை வேலைசெய்யும்படிக்கு ஆசரிப்புக்கூடாரத்திற்கு முன்பாக அவனுடையகாவலையும் எல்லாச்சபையின் காவலையுங் காத்து,

௮. வாசஸ்தலத்தின்பணிவிடைவேலையைச் செய்யும்படிக்கு ஆசரிப்புக்கூடாரத்தின் எல்லாத்தட்டுமுட்டுகளையும் இஸ்ரவேல்புத்திரரின் காவலையுங் காக்கக்கடவர்கள்.

௯. ஆகையால், லேவியரை ஆரோனுக்கும் அவன் குமாரருக்குந் கொடுப்பாயாக. இஸ்ரவேல்புத்திரரில் இவர்கள் அவனுக்குக் கொடுக்கவே கொடுக்கப்பட்டவர்கள்.

௰. ஆரோனையும் அவன் குமாரரையுமோவென்றால், தங்கள் ஆசாரியஊழியத்தைக் காத்துக்கொள்ளும்படிக்கு வைக்கக்கடவாய். சேருகிற அந்நியன் கொலையுண்ணக்கடவனென்றார்.

௰௧. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰௨. இதோ, இஸ்ரவேல்புத்திரரிற் கர்ப்பந்திறந்து பிறக்கிற முதற்பேறான யாவுக்கும் பதிலாக நாம் லேவியரை இஸ்ரவேல்புத்திரரின் நடுவில் அவர்கள் நம்முடையவர்களாயிருக்க எடுத்துக்கொண்டோம்.

௰௩. ஏனென்றால், முதற்பேறனைத்தெல்லாம் நம்முடையது. நாம் எகிப்து தேசத்தில் முதற்பேறானயாவையுஞ் சங்கரித்தநாளிலே இஸ்ரவேலிலே மனிதன் முதற்கொண்டு மிருகமட்டுமுள்ள முதற்பேறுகளையெல்லாம் நமக்குப்பரிசுத்தமாக்கினதினாலே, அவைகள் நம்முடையதாயிருக்கும். நாம் கர்த்தரென்றார்.

௰௪. பின்னையுங் கர்த்தர் சீனாயின் வனாந்தரத்தில் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௰௫. லேவிபுத்திரரை யவர்கள் பிதாக்களின் வீட்டு வமிசங்களின்படியே இலக்கம்பார். அவர்களிலொருமாதமுதற்கொண்டு மேற்பட்டவயதுள்ள ஆண்பிள்ளைகளையெல்லாம் இலக்கம் பார்ப்பாயாகவென்றார்.

௰௬. அப்பொழுது கர்த்தருடையவாக்கின்படி மோசே அவர்களைத் தனக்குக் கற்பிக்கப்பட்டபிரகாரமாக இலக்கம்பார்த்தான்.

௰௭. லேவியின்குமாரர் தங்கள் நாமங்க

னபடியே கெர்சோன், கேகாத், மெறாரி யென்னப்பட்டவர்கள்.

௧௮. தங்கள் வம்சத்தார்களாய்ப் பிரிந்த கெர்சோனுடைய குமாரரின் நாமங்கள் லிப்னீ, சிமேயி என்பவைகளே.

௧௯. தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த கேகாத்துடைய குமாரர் அம்ராம், இத்சேயார், எப்ரோன், ஊசியேல்,

௨௰. தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த மெறாரியினுடைய குமாரர் மகேலி, மூசி என்பவர்களே. இவர்களே லேவியருடைய பிதாக்களின் வீட்டு வம்சத்தார்கள்.

௨௧. கெர்சோனாலே லிப்னீயரின் வம்சமும் சிமேயியர் வம்சமுமிருந்தது. இவைகளே கெர்சோனியரின் வம்சங்கள்.

௨௨. அவர்களில் ஒரு மாதமுதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஏழாயிரத்தைந்நூறு பேராயிருந்தார்கள்.

௨௩. கெர்சோனியரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் பிறகாலே மேற்கே பாளயமிறங்குவது.

௨௪. கெர்சோனியருடைய தகப்பன் வீட்டுப் பிரபு லாயேலின் குமாரனாகிய எலியாசாப்.

௨௫. ஆசரிப்புக்கூடாரத்திலே கெர்சோனின் புத்திரரின் காவலாவது, வாசஸ்தலமும் கூடாரமும் அதின் மூடியும் ஆசரிப்புக்கூடாரவாசல் மறைவும்,

௨௬. வாசஸ்தலத்தண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்றிலுமிருக்கிற பிராகாரத்தின் வெளியாடைகளும், பிராகாரவாசல் மறைவும், அவைகளின் வேலைக்கெல்லாம் அடுத்த அவைகளின் கயிறுகளுந்தானே.

௨௭. கேகாத்தினாலே, அம்ராமியரின் வம்சமும் இத்சேயாரின் வம்சமும் எப்ரோனியரின் வம்சமும், ஊசியேலின் வம்சமுமிருந்தது. இவைகளே கேகாத்தியரின் வம்சங்கள்.

௨௮. ஒரு மாதமுதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, பரிசுத்தஸ்தலத்தின் காவலைக் காப்பவர்கள் எண்ணாயிரத்தறுநூறு பேராயிருந்தார்கள்.

௨௯. கேகாத் புத்திரரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் தென்புறமான பக்கத்திலே பாளயமிறங்குவது.

௩௰. அவர்களின் பிரபு ஊசியேலின் குமாரனாகிய எலிசாப்பான்.

௩௧. அவர்களுடைய காவலாவது, பெட்டியும் மேசையும் குத்துவிளக்கும் பீடங்களும் ஆராதனை செய்யும் பரிசுத்த ஸ்தலத்தின் பணிமுட்டுகளும் மறைவும் அதினுடைய எல்லா வேலையுந்தானே.

௩௨. லேவியருடைய பிரபுக்களின் பிரபு ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலெயாசார்தானே. அவன் பரிசுத்தஸ்தலத்தின் காவலைக் காக்கிறவர்களின் விசாரிப்புக்காரனாயிருப்பவன்.

௩௩. மெறாரியினாலே மகேலியரின் வம்சமும் மூசியரின் வம்சமுமிருந்தது. இவைகளே மெறாரியரின் வம்சங்கள்.

௩௪. அவர்களில் ஒரு மாதமுதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் ஆறாயிரத்திருநூறு பேராயிருந்தார்கள்.

௩௫. அவர்கள் பிரபு அபியாயேலின் குமாரனாகிய சூரியேல். இவர்கள் வாசஸ்தலத்தின் வடபுறமான பக்கத்திலே பாளயமிறங்குவது.

௩௬. அவர்களுடைய காவல் விசாரிப்பாவது, வாசஸ்தலத்தின் பலகைகளுந் தாழ்ப்பாள்களுந் தூண்களுங் குழிகளும் அதினுடைய எல்லா முட்டுகளும் அதினுடைய எல்லா வேலையும்,

௩௭. சுற்றுப்பிராகாரத்தின் தூண்களும் அவைகளின் காலகளுங் கூச்சுகளுங் கயிறுகளுந்தானே.

௩௮. ஆசரிப்புக்கூடாரமாகிய வாசஸ்தலத்திற்கு முன்பாகச் சூரியனுதிக்குங் கீழ்ப்புறத்திலே மோசேயும் ஆரோனும் அவன் குமாரரும் கூடாரங்களைப் போட்டிறங்கி இஸ்ரவேல் புத்திரரின் காவலுக்குப் பதிலாகப் பரிசுத்த ஸ்தலத்தின் காவலைக் காப்பவர்கள், சேருகிற அந்நியன் கொலையுண்பானாக.

௩௯. மோசேயும் ஆரோனுங் கர்த்தருடைய வாக்கின்படியே லேவியரிலவர்களுடைய வம்சங்களின்படியே இலக்கம் பார்த்த ஒரு மாதமுதற்கொண்டிருந்த ஆண்பிள்ளைகளெல்லாமிருபத்தீராயிரம் பேராயிருந்தார்கள்.

௪௰. அதின்பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ இஸ்ரவேல் புத்திரரில் ஒரு மாதமுதற்கொண்டு மேற்பட்ட வயதுள்ள முதற்பேறான ஆண்பிள்ளைகளெல்லாம் இலக்கம் பார்த்து அவர்கள் நாமங்களின் தொகையையெடுத்து,

௪௧. லேவியரை இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதற்பேறான யாவுக்கும் பதிலாகவும் லேவியரின் மிருகஜீவன்களை இஸ்ரவேல் புத்திரரின் மிருகஜீவன்களிலுள்ள தலையீற்றான யாவுக்கும் பதிலாகவும் நமக்கென்றெடுத்துக்கொள். நாம் கர்த்தரென்றார்.

௪௨. அப்பொழுது மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதற்பேறான யாவரையும் இலக்கம் பார்த்தான்.

௪௩. ஒரு மாத முதற்கொண்டு மேற்பட்ட வயதாயிருந்து பேர்பேராக எண்ணப்பட்ட

௰௬. ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலெயாசார் விசாரிப்பதெதென்றால் விளக்கின் எண்ணெயுஞ் சுகந்தங்களின் தூபவர்க்கமும் அன்றாடகக்காணிக்கையும் அபிஷேகத்தெண்ணெயும் வாசஸ்தலம் மனைத்தும் அதிலே பரிசுத்தஸ்தலத்திலும் அதின் பணிமுட்டுகளிலுமிருக்கிறதனைத்தும் அவன் விசாரிப்பாயிருப்பதாகவென்றார்.

௰௭. கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச்சொன்னதாவது;

௰௮. கேகாத் வம்சத்தாரின் கோத்திரத்தை லேவியருக்குள்ளே சங்காரமாகப் பண்ணீர்களாக.

௰௯. அவர்கள் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதைக் கிட்டுகையிற் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கு நீங்கள் அவர்களுக்காகச் செய்யவேண்டியதேதென்றால்,

௨௰. பரிசுத்தமானதை மூடும்போது அவர்கள் பார்க்கிறதற்கு உட்பிரவேசித்துச் சாவாதபடிக்கு ஆரோனும் அவன் குமாரரும் வந்து அவர்களில் அவனவனை அவனவன் வேலைக்கும் அவனவன் சுமைக்கும் வைக்கக்கடவர்களென்றார்.

௨௧. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨௨. கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம் வயதுமுதற்கொண்டு ஐம்பதாம் வயதுமட்டுமிருந்து,

௨௩. ஆசரிப்புக் கூடாரத்திலே பணிவிடைவேலைசெய்யும் இராணுவச்சேனைக்குட்பட்டதக்க எல்லாரையும் இலக்கம் பார்த்துத் தொகையேற்றுவாயாக.

௨௪. பணிவிடைசெய்கிறதிலுஞ் சுமக்கிறதிலுங் கெர்சோன் வம்சத்தாரின் வேலையேதென்றால்,

௨௫. அவர்கள் வாசஸ்தலத்திற்கும் ஆசரிப்புக் கூடாரத்திற்குமிருக்கிற சமுக்காளங்களையும் அவைகளின் மூடியையும் உயர அவைகளின் மீதிலிருக்கிற தகசுத்தோல் மூடியையும், ஆசரிப்புக் கூடாரவாசல் மறைவையும்,

௨௬. பிரகாரத்தின் வெளியாடைகளையும், வாசஸ்தலத்தண்டையிலும் பலிபீடத்தண்டையிலுஞ் சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தினுடைய வாசல் மறைவையும், அவைகளின் கயிறுகளையும் அவைகளின் வேலைக்கடுத்த எல்லாப் பணிமுட்டுகளையுஞ் சுமந்து அவைகளுக்காகச் செய்யப்படும் எல்லா வேலையையுஞ் செய்யக்கடவர்கள்.

௨௭. கெர்சோன் புத்திரருடைய எல்லாச் சுமைகளும் அவர்களுடைய எல்லாப் பணிவிடைகளுக்கடுத்த அவர்கள் வேலையெல்லாம் ஆரோனும் அவன் குமாரருஞ் சொல்லும்படியே நடக்கவேண்டும். அவர்களுடைய சுமையின் காவலையெல்லாம் அவர்களுக்கு ஒப்புவிக்கக்கடவீர்கள்.

௨௮. கெர்சோன் புத்திரரின் வம்சத்தார் ஆசரிப்புக் கூடாரத்திலே செய்யும் பணிவிடையிதுதான். அவர்களுடைய காவல் ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் இத்தாமாருடைய கையின் கீழாயிருப்பதாக.

௨௯. மெறாரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம் வயது முதற்கொண்டு, ஐம்பதாம் வயதுமட்டுமிருந்து,

௩௰. ஆசரிப்புக் கூடாரத்திலே பணிவிடைவேலைசெய்யுஞ் சேனைக்குட்பட்டதக்கவர்களையெல்லாம் இலக்கம் பார்க்கக்கடவாய்.

௩௧. ஆசரிப்புக் கூடாரத்தில் அவர்களுடைய எல்லாப் பணிவிடைக்குமடுத்த சுமையின் காவலேதென்றால் வாசஸ்தலத்தின் பலகைகளும் அவைகளின் தாப்பாள்களுந் தூண்களுங் காலகளும்,

௩௨. சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தின் தூண்களும் அவைகளின் காலகளும் முளைக்கூச்சுகளுங் கயிறுகளும் அவைகளின் எல்லா முட்டுகளும் எல்லா வேலையுங்கூடத்தானே. அவர்கள் சுமந்துகாவற்காக்கும் முட்டுகளைப் பேர்பேராக எண்ணக்கடவீர்கள்.

௩௩. ஆசாரியனாகிய ஆரோனுடைய குமாரனாகிய இத்தாமாருடைய கையின்கீழ் மெறாரி புத்திரரின் வம்சத்தார் ஆசரிப்புக் கூடாரத்திலே செய்யும் பணிவிடைக்கடுத்த எல்லாவேலையுமிதுதானென்றார்.

௩௪. அப்படியே மோசேயும் ஆரோனும் சபையின் பிரபுக்களும், கேகாத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களில், முப்பதாம் வயது துவக்கி ஐம்பதாம் வயதுமட்டுமிருந்த,

௩௫. ஆசரிப்புக் கூடாரத்திலே பணிவிடை செய்யுஞ் சேனைக்குட்படத்தக்க யாவரையும் இலக்கம் பார்த்தார்கள்.

௩௬. அவர்கள் வம்சங்களில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் இரண்டாயிரத்தெழுநூற்றைம்பதுபேர்.

௩௭. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே மோசேயும் ஆரோனும் கேகாத் வம்சத்தாரிலெல்லாரும் ஆசரிப்புக் கூடாரத்தில் வேலைசெய்கிறதற்காக இலக்கம் பார்த்தவர்கள் இவர்கள்தான்.

௩௮. கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம் வயது துவக்கி ஐம்பதாம் வயதுமட்டுமிருந்த,

௩௯. ஆசாரிப்புக் கூடாரத்திலே பணிவிடைசெய்யுஞ் சேனைக்குட்படத்தக்க யாவரும் இலக்கம் பார்க்கப்பட்டார்கள்.

௪௰. அவர்களில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள் இரண்டாயிரத்தறுநூற்று முப்பதுபேர்.

௪௧. மோசேயும் ஆரோனுங் கர்த்தர் கற்பித்தப்படியே கெர்சோன் புத்திரரின் வம்

சததாரில ஆசரிப்புக்கூடாரததில வேலை செயய இலககம பார்ததவர்கள இவர்கள தான.

சஉ. மெறாரி புததிரருடைய பிதாககளின வீட்டு வம்சஙகளிலும முபபதாம வயது துவககி ஐமபதாமவயதுமட்டுமிருநத,

சங. ஆசரிப்புககூடாரததிலே பணிவிடை. செயயுஞ சேனைககுட்படததகக யாவரும இலககமபார்ககபபட்டார்கள.

சச. அவர்களில இலககமபார்ககபபட்டவர்கள மூவாயிரததிருநூறுபேர்.

சரு. கர்ததர் மோசேககுக் கற்பிததபடியே மோசேயும ஆரோனும மெறாரிபுததிரரின வம்சததாரில இலககமபார்ததவர்கள இவர்களதான.

சசு. லேவியருடைய பிதாககளின வீட்டு வம்சஙகளில முபபதாமவயது முதறகொண்டு ஐமபதாமவயதுமட்டுமிருநத ஆசரிப்புககூடாரததிலே செயயுமபணிவிடைவேலைககும சுமையினவேலைககும உட்படததககவர்களும,

சஎ. மோசேயும ஆரோனுமஇஸரவேலின பிரபுககளும இலககமபார்ததவர்களுமெலலாம,

சஅ. எணணாயிரததைந்நூற்றெண்பதுபேராயிருநதார்கள.

சகூ. கர்ததர் மோசேககுக் கறபிததவாக்கினபடியே அவர்கள தஙகள தஙகள பணிவிடைககெனறும தஙகள தஙகள சுமைககெனறும்இலககமபார்ககபபட்டார்கள.

## ரு. அதிகாரம்.

[(க) அசுததமபாளயததைவிட்டுநீககபபடுவதையும், (ரு) அபகரிப்புககு ஈடுசெயவதையும, (யக) எரிச்சலின சோதனையையுங குறிததது.]

கர்ததர் மோசேயோடே பேசிசசொனனதாவது;

உ. எலலாககுஷ்டரோகிகளையும எலலாபபிரமியககாரரையுஞ சவததினாலே தீட்டுப்பட்டவாகளையுமபாளயததிலிருநதுவிலக்கிவிட இஸரவேல புததிரருககுககறபி.

ங. ஆணபிளளைகளும பெணபிளளைகளுமான அபபடிககொததவர்களை நீஙகளவிலக்கிநாம தஙகள நடுவே வாசமபணணுகிற தஙகளபாளயஙகளை அவர்கள தீட்டாககாதபடிககு அவர்களைப பாளயததிறகுப புறமபாகவிடக்கடவர்களெனறார்.

ச. கர்ததர் மோசேயோடேசொனனபடியே இஸரவேலபுததிரர்இநதபபடியேசெய்து அவர்களைப பாளயததிறகுபபுறமபாகவிட்டார்கள.

ரு. கர்ததர் மோசேயோடேபேசிசசொனனதாவது;

சு. நீ இஸரவேல புததிரரோடே சொலலவேணடியதேதெனில், ஒரு ஆணபிளளையாகிலும பெண்பிளளையாகிலும, மனிதன செயயுஞ சகலவிதபாவஙகளில ஒனறைச்செய்து கர்ததருககேராத அநியாயம பணணினால, அநத ஆததுமாவினமேலே குறறஞ சுமநதது.

எ. அவர்களசெயத தஙகள பாவததை யறிககையிடக்கடவர்கள. அபபடிக்கொததவன் குறறஞசெயத முதலைத திருபபக கொடுதது அததோடே ஐநதிலொரு பஙகை யதிகமாய்க கூட்டிந தான சேதம்தனக்குச் செயதவனுக்குச் சேர்ப்பிக்கக்கடவன.

அ. அதைக கேட்டு வாஙகுகிறதறகொருவருமிலலாதிருநதேயாகில அபபொழுது அவனுக்காகப பாவநிவிர்ததியுணடாக்கபபடும், ஆட்டுககடாச்செலுததபபட்டவுடனே யெலலாமற கர்ததருககாக முதறசெலுததபபட்டு ஆசாரியனைசசேரவேணடும.

கூ. இஸரவேலபுததிரர் பரிசுததம்பணணுகிற சகலததிலும ஏறெடுதது ஆசாரியனணடைககுக கொணடுவருகிற எலலாப்படைப்பும அவனுடையதாயிருககும.

ய. அவனவன்பரிசுததம்பணணுகிறது அவனுடையதாயிருககும. அவனவன் ஆசாரியனுககுக கொடுககிறதும, அவனுடையதாயிருககுமெனறுசொலலெனறார்.

யக. கர்ததர்மோசேயோடேபேசிசசொனனதாவது;

யஉ. நீ இஸரவேல புததிரரோடே பேசி அவர்களுககுச சொலலவேணடியதேதெனில எவனொருவன பெணசாதி புறமபாய்ப் பார்தது அவனுககுத துரோகமபணணி,

யங. ஒருவன அவளோடே கூடிப்போகமாய்ச சயனிததிருநதாலும், அவளுடைய புருஷனின கணகளுககு அது ஒளிப்பிடமானதினால அவள அதைமறைககிறபொழுதும,அவள தீட்டாககபபட்டிருநதுஞசாட்சியிலலாமலும அவள கையுமகளவுமாய்ப பிடிபடாமலுமிருககிறபொழுதும,

யச. எரிச்சலின ஆவி அவனமேல வநது அவள தீட்டாககபபட்ட தன பெணசாதியினமேல வயிராககியமானால, அலலவெனறு எரிச்சலின ஆவி அவனமேல வநது தீட்டாககபபடாத தன பெணசாதியினமேல வயிராககியமானால,

யரு. அபபொழுது அநதப்புருஷன தன பெண்சாதியை யாசாரியனணடைககழைததுவநது அவள நிமிததமபடைபபாக ஒருமரககால வாற்கோதுமை மாவிலே பததிலொரு பஙகைககொணடுவநது அது எரிச்சலின காணிககையும அககிரமததை நினைக்கபபணணுகிற காணிககையுமானபடியினாலே அதின்மேல எணணெயை வாரமலும தூபவர்க்கமபோடாமலுமிருபபானாக.

௰௬. ஆசாரியன் அவளைச் சேரப்பண்ணிக் கர்த்தருக்கு முன்பாக நிறுத்தி,

௰௭. ஒரு மண்பாண்டத்திலே பரிசுத்தத் தண்ணீரைவார்த்து வாசஸ்தலத்தின் தரையிலிருக்கும் தூளிலே கொஞ்சமெடுத்து அந்தத் தண்ணீரிலே போட்டு,

௰௮. பெண்சாதியைக் கர்த்தருக்கு முன்பாக நிறுத்தி அவள் தலையைத் திறந்து வைத்து எரிச்சலின் காணிக்கையாகிய நினைப்பூட்டுதலின் காணிக்கையை யவள் உள்ளங்கையிலே வைப்பானாக. ஆசாரியன் கையிலேயோவென்றால் சாபங்கொடுக்கிற அந்தக் கசப்பான தண்ணீரிருக்கக்கடவது.

௰௯. அப்பொழுது ஆசாரியன் அவளை யாணையிடுவித்துக்கொண்டு ஒருவனும் உன்னோடே சயனிக்காமலும் உன் புருஷனைக் கீழிருக்கிற நீ தீட்டுப்பட்ட புறமுகம் பாராமலுமிருந்தால் சாபங்கொடுக்கிற இந்தக் கசப்பான தண்ணீரின் தோஷத்திற்கு நீங்கலாயிரு.

௨௰. உன் புருஷனைக் கீழிருக்கிற நீ புறமுகம் பார்த்துத் தீட்டாகி உன் புருஷனல்லாத ஒருவன் உன்னோடே அனும்போகமாய்ச் சயனித்ததுண்டேயானால்,

௨௧. கர்த்தர் உன் இடுப்பைச் சூம்பவும் உன் வயிற்றை வீங்கவும் பண்ணுவதினால், உன்னை யுன் சனத்தின் நடுவே சாபமாகவும் ஆணையிடுதலாகவும் வைப்பாராக.

௨௨. உன் வயிற்றை வீங்கவும் இடுப்பைச் சூம்பவும் பண்ண இந்தக் கசப்பான தண்ணீர் உன் குடல்களுக்குட்போகவுங்கடவதென்கிற சாப வார்த்தையாலே பெண்சாதியை யாணையிடுவித்துக்கொள்வானாக. அதற்குப் பெண்சாதி ஆமென் ஆமென்னென்று சொல்லக்கடவள்.

௨௩. பிற்பாடு ஆசாரியன் இந்தச் சாப வார்த்தைகளை யொரு சீட்டிலே யெழுதிக் கசப்பான தண்ணீரிலே கழுவிப்போட்டு,

௨௪. கசப்பாக்கும் அந்தச் சாபத்தண்ணீர் அவளுக்குட்போகும்படிக்கு அதை யவளுக்குக் குடிக்கக்கொடுக்கக்கடவன்.

௨௫. எப்படியெனில், முந்தி ஆசாரியன் எரிச்சலின் காணிக்கையைப் பெண்சாதியின் கையில்வாங்கி அதைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டிப் பீடத்தின்மேலே செலுத்தி,

௨௬. நினைப்புக்கென்று அதிலே ஒருகைப்பிடிநிறைய எடுத்துப் பீடத்தின் மேலே கொளுத்திப் பிற்பாடு பெண்சாதிக்கு அந்தத் தண்ணீரைக் குடிக்கக்கொடுக்கக்கடவன்.

௨௭. குடிக்கக்கொடுக்கப் பிற்பாடு சம்பவிப்பதேதெனில், அவள் தீட்டாகித் தன் புருஷனுக்குத் துரோகம் பண்ணியிருந்தால், அந்தச் சாபத்தண்ணீர் கசப்புண்டாக அவளுக்குட்போனதினாலே அவள் வயிறு வீங்கி அவளிடுப்புச் சூம்பும். அப்படியே அந்தப் பெண்சாதி தன் சனத்திற்குள்ளே சாபமாகவிருப்பாள்.

௨௮. பெண்சாதி தீட்டாக்கப்படாமல் சுத்தமாயிருந்தாளேயாகில், அவள் கர்ப்பந்தரிக்கத்தக்கவளாய் அதற்கு நீங்கலாயிருப்பாள்.

௨௯. புருஷனைக் கீழிருக்கிற பெண்சாதி புறமுகம்பார்த்துத் தீட்டானதினாலுண்டான எரிச்சலுக்கும்,

௩௰. அல்லது புருஷன்மேலே எரிச்சலின் ஆவி வருகிறதினாலே அவன் தன் பெண்சாதியின்மேலே அடைந்த எரிச்சலுக்குமடுத்த நியாயப்பிரமாணமிதுதானே. அவன் கர்த்தருக்கு முன்பாகப் பெண்சாதியை நிறுத்துவானாக. அப்பொழுது ஆசாரியன் இந்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் அவளுக்குச் செய்யக்கடவன்.

௩௧. புருஷன் அக்கிரமத்திற்கு நீங்கலாயிருப்பான். அப்படிக்கொத்த பெண்சாதியோவென்றால் தன் அக்கிரமத்தைச் சுமப்பாளென்று சொல்லென்றார்.

## ௬. அதிகாரம்.

[(௧) நசரேயரைக்குறித்த கட்டளை. (௨௨) சனங்களை ஆசீர்வதிக்கும் விதம்]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒரு ஆண்சாதியாகிலும் பெண்சாதியாகிலுங் கர்த்தருக்கென்று வர்ச்சித்தவர்களாயிருக்கும்படிக்கு நசரேயர்பொருத்தனையாகிய ஒருவிசேஷித்த பொருத்தனையைப் பண்ணினால்,

௩. அப்படிக்கொத்தவன் * திராட்சப்பழ இரசத்தையும், லாகிரியுள்ள பானத்தையும், வர்ச்சித்திருக்கக்கடவன். அவன் திராட்சப்பழ இரசத்தின்காடியையும், லாகிரியுள்ள பானத்தின்காடியையும், திராட்சப்பழங்களுடைய எந்தவிதமான சாற்றையுங் குடிக்காமலுந் திராட்சப்பச்சைப் பழங்களையாகிலும் வற்றலான பழங்களையாகிலும் புசிக்காமலும், * ௩. மோசே. ௰, ௯.

௪. தான் நசரேயனாகிய நாளெல்லாந் திராட்சக்கனியின் விதையினாலாகிலுந் தோலினாலேயாகிலுஞ் செய்யப்பட்டயாதொன்றையும் புசிக்காமலுமிருக்கக்கடவன்.

௫. நசரேயப்பொருத்தனை அவன்மேலிருக்கும் நாளெல்லாஞ் * சவரகன்கத்தி அவன் தலையின்மேலே வரவேண்டாம். அவன் கர்த்தருக்கென்று வர்ச்சித்திருக்கும்நாள் நிறைவேறுமட்டும் பரிசுத்தமாயிருந்து தன் தலையின் மயிர்களை வளர்க்கக்கடவன். * நியா. ௰௩, ௫.

௬. அவன் கர்த்தருக்கென்று வர்ச்சித்திருக்

கும் நாளெல்லாம் செத்தசவத்தண்டையி லே வரவேண்டாம்.

௭. * மரணமடைந்த தன் தகப்பனாலாகி லுந் தாயினாலாகிலுஞ், சகோதரனாலாகி லுஞ், சகோதரியினாலாகிலுந், அவன் தீட்டுப் படானாக. ஏனெனில், அவனுடைய பராபர னின் நசரேயபொருத்தனை அவன் தலையின் மேலிருக்கின்றது. * ௩. மோசே. ௨௧, ௰௧.

௮. அவன் நசரேயனாகிய நாளெல்லாங் கர்த்தருக்குப் பரிசுத்தன்.

௯. அவனண்டையிலே எவனொருவன் அசப்பான சடுதியிலே செத்ததினாலே நசரேய பொருத்தனையுள்ள அவனுடைய தலை தீட் டுப்பட்டதேயாகில் அவன் தன் சுத்திகரிப் பின் நாளாகிய ஏழாம் நாளிலே தன் தலை யைச் சிரைத்துக்கொண்டு,

௰ எட்டாம்நாளிலே இரண்டு காட்டுப்பு றாக்களையாவது இரண்டு புறாக்குஞ்சுகளை ஆசரிப்புக்கூடாரவாசலில் ஆசாரியனண் டைக்குக்கொண்டுவரக்கடவன்.

௰௧. அப்பொழுது ஆசாரியன் ஒன்றைப் பாவம்போக்கும்பலியும் மற்றதைச் சர்வாங் கதகனபலியுமாக்கிச் சவத்தினாலே பட்ட தீட்டின் நிவிர்த்தியை யவனுக்காக உண் டாக்கி அவன் தலையை யந்நாளிலே பரிசுத் தமாக்குவானாக.

௰௨. அதின்பிறகு இவன் தன்பொருத்தனை யின் நாள்களிலேகர்த்தருக்கென்றுவர்சித் தவனாயிருந்து ஒருவயது ஆட்டுக்குட்டி யைக் குற்றம்போக்கும்பலியாகக் கொண் டுவரக்கடவன். முந்தின நாள்களோவெனில் அவனுடைய நசரேயபொருத்தனை தீட்டுப் பட்டதினால் வீணாயிற்று.

௰௩. நசரேயனுடைய நியாயப்பிரமாண மாவது; அவனுடைய பொருத்தனையின் நாள்கள் நிறைவேறின அன்றேயவன் ஆச ரிப்புக்கூடாரவாசலிலேவந்து,

௰௪. சர்வாங்கதகனபலியாக ஒருவயதுள்ள பழுதற்றஒரு ஆட்டுக்குட்டியையும் பாவம் போக்கும் பலியாக ஒருவயதுள்ள பழுதற்ற ஒரு பெண்ணாட்டுக்குட்டியையுஞ் சமாதான பலியாகப் பழுதற்றஒரு ஆட்டுக்கடாவையும்,

௰௫. ஒருகூடையில் எண்ணெயிலே பிசைந் த புளிப்பில்லாத மெல்லியமாவின் அதிரசங் களையும், எண்ணெய் தடவப்பட்ட புளிப் பில்லாத அடைகளையும், அவைகளுக்கடுத்த காணிக்கையையும் ஊற்றுதல்களையுங் கர்த் தருக்குத் தன்காணிக்கையாகச் செலுத்தக் கடவன்.

௰௬. அதை ஆசாரியன் கர்த்தருக்கு முன் பாகக் கொண்டுவந்து பாவம் போக்கும் அவனுடையபலியையும் அவனுடைய சர் வாங்கதகனபலியையுஞ் செலுத்தி,

௰௭. ஆட்டுக்கடாவைக் கூடையிலிருக்கும் புளிப்பில்லாத அப்பங்களோடுங் கூடக் கர்த் தருக்குச் சமாதானபலியாகச் செலுத்தி அவனுடைய காணிக்கையையும் ஊற்றுத லையும் படைப்பானாக.

௰௮. அப்பொழுது நசரேயன் ஆசரிப்புக் கூடாரவாசலிலே தன் பொருத்தனையுள்ள தலையைச்சிரைத்துத் தன் பொருத்தனையுள் ள தலைமயிரையெடுத்துக்கொண்டு, சமாதா ன பலியின்கீழெரிகிற அக்கினியின்மேலே போடக்கடவன்.

௰௯. நசரேயன் தன் பொருத்தனையுள்ள தலையைச் சிரைத்துக்கொண்ட பிற்பாடு ஆசாரியன் ஆட்டுக்கடாவினுடைய வேவிக் கப்பட்ட ஒரு முன்னங்கால் தொடையை யுங் கூடையிலிருக்கிறவைகளிலே புளிப்பில் லாதஒரு அதிரசத்தையும் புளிப்பில்லாதஒரு அடையையும் எடுத்துக்கொண்டு அவ னுடைய உள்ளங் கைகளிலே வைத்து,

௨௰. அவைகளைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டக்கடவன். அது அசைவாட் டப்பட்ட மார்க்கண்டத்தோடும், ஏறெடுத் துப்படைக்கப்பட்ட முன்னந் தொடை யோடும் ஆசாரியனைச்சேரும் பரிசுத்தமா னது. பிற்பாடு நசரேயன் திராட்சப்பழ இரசங்குடிக்கலாம்.

௨௧. இது பொருத்தனைபண்ணின நசரேய னுக்கும், அவன் தனக்குக்கூடியதையல் லாமல் தன் நசரேய பொருத்தனையின்மிக் கத கர்த்தருக்குச்செலுத்துங் காணிக்கைக் கும் அடுத்த நியாயப்பிரமாணம். அவன் பொருத்தனை பண்ணினதற்குச் சரியாய்த் தன் பொருத்தனையினுடைய நியாயப்பிர மாணத்தின்படியேசெய்யத்தீரவேண்டுமென் றுசொல்லென்றார்.

௨௨. கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௨௩. நீ ஆரோனோடும் அவன் குமாரரோ டும் பேசிச்சொல்லவேண்டிய தேதெனில், நீங்கள் இஸ்ரவேல் புத்திரரை யாசீர்வதிக்க அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது;

௨௪. கர்த்தர் உன்னையாசீர்வதித்து உன் னைக்காக்கக்கடவர்.

௨௫. கர்த்தர் தம்முடைய முகத்தை உன் மேலே பிரகாசிக்கப்பண்ணி உன்மேலே கிருபையாயிருக்கக்கடவர்.

௨௬. கர்த்தர் தம்முடைய முகத்தை உன் மேலேறெடுத்து உனக்குச் சமாதானங்கட் டளையிடக்கடவரென்பதுதானே.

௨௭. இப்படி நம்முடையநாமத்தை இஸ் ரவேல்புத்திரர்மேல் வைப்பார்களாக. நாம் அவர்களை யாசீர்வதிப்போமென்று சொல் லென்றார்.

## ௭. அதிகாரம்.

[(க) பிரபுக்கள் கூடாரப்பிரதிஷ்டையிலும், (உ) பீடப் பிரதிஷ்டையிலும் செலுத்தின

காணிக்கை. (௮௯) பயாபரன் கிருபாசனத்திலிருந்து மோசேயுடன் பேசினது.

மோசே வாசஸ்தலத்தை நிறுத்தி அதையும் அதினெல்லாமுட்டுகளையும் பலிபீடத்தையும், அதினெல்லாமுட்டுகளையும் அபிஷேகம்பண்ணிப் பரிசுத்தமாக்கின தீர்ந்தநாளிலே சம்பவித்ததேதெனில்,

௨. தங்கள் பிதாக்களுடைய வீட்டாரின் தலைவரும் இலக்கம்பார்க்கப்பட்டவர்களின் விசாரிப்புக்கு வைக்கப்பட்ட கோத்திரப் பிரபுக்களுமாகிய இஸ்ரவேலின் பிரபுக்கள் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

௩. தங்கள் காணிக்கையாக ஆறு மூடுவண்டில்களையும் பன்னிரண்டு மாடுகளையும் இரண்டிரண்டு பிரபுக்களுக்கொவ்வொரு வண்டிலும் ஒவ்வொரு பிரபுக்கொவ்வொரு மாடுமாகக் கர்த்தருக்குச் செலுத்த வாசஸ்தலத்திற்கு முன்பாகக் கொண்டுவந்தார்கள்.

௪. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது;

௫. நீ அவர்களிடத்தில் அவைகளையாசரிப்புக்கூடாரத்தின் ஊழியத்திற்காக வாங்கி லேவியருக்கு அவரவர் வேலைக்குத்தக்கவைகளாய்ப் பங்கிட்டுக்கொடுவென்றார்.

௬. அப்பொழுது மோசே அந்த வண்டில்களையும் மாடுகளையும் வாங்கி லேவியருக்குக் கொடுத்தான்.

௭. இரண்டு வண்டில்களையும் நான்கு மாடுகளையும் கெர்சோன் புத்திரருக்கு அவர்கள் வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்தது,

௮. நான்கு வண்டில்களையும் எட்டு மாடுகளையும் மெராரியின் புத்திரருக்கு ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் இத்தாமாருடைய கையின் கீழிருக்கிற அவர்களுடைய வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்தான்.

௯. கேகாத்தின் புத்திரருக்கோ வென்றால், ஒன்றுங்கொடுத்ததில்லை. ஏனென்றால் தோளின் மேலே சுமக்கும் பரிசுத்தஸ்தலத்தின் வேலை அவர்கள் மேலே சுமந்திருந்தது.

௰. பலிபீடம் அபிஷேகம்பண்ணப்பட்ட நாளிலே பிரபுக்கள் அதின் பிரதிஷ்டைக்காகவுங் காணிக்கைகளைச் செலுத்திப் பலிபீடத்துக்கு முன்பாகத் தங்கள் காணிக்கையைக் கொண்டுவந்தார்கள்.

௰௧. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, ஒவ்வொருநாளிலே ஒவ்வொரு பிரபு பலிபீடத்தின் பிரதிஷ்டைக்காகத் தங்கள் காணிக்கையைச் செலுத்துவார்களாகவென்றார்.

௰௨. அப்படியே முதலாம் நாளிலே தன் காணிக்கையைச் செலுத்தினவன் யூதாகோத்திரத்தானாகிய அம்மினதாபின் குமாரன் நாகேசோன்.

௰௩. அவன் காணிக்கை யேதென்றால் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கு காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௰௪. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒருதூபக் கிண்ணியும்,

௰௫. சர்வாங்கதகனபலியாக வொருகாளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௰௬. பாவம்போக்கும்பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௰௭. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது அம்மினதாபின் குமாரனாகிய நாகேசோனின் காணிக்கை.

௰௮. இரண்டாம்நாளிலே ஈசக்காரின் பிரபுவாகிய சுவாரின் குமாரன் நெத்தானியேல் செலுத்துதல்செய்தான்.

௰௯. அவன் தன் காணிக்கையாகச் செலுத்தினதாவது; பரிசுத்த ஸ்தலத்தின்சேக்கல் கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல் நிறையான ஒருவெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல் நிறையான ஒருவெள்ளிக்கலமும் இவ்விரண்டும்படைக்கு காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௨௰. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ளபொன்னான ஒருதூபக் கிண்ணியும்,

௨௧. சர்வாங்கதகனபலியாகவொருகாளையெருதும் ஒருஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௨௨. பாவம்போக்கும் பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௨௩. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது சுவாரின் குமாரனாகிய நெத்தானியேலின் காணிக்கை.

௨௪. மூன்றாம்நாளிலே ஏலோனின் குமாரனாகிய எலியாபென்ற செபுலோனின் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௨௫. அவன் காணிக்கையேதென்றால் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல் நிறையான ஒருவெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கு காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௨௬. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்

சேக்கல்நிறையுள்ள பொன்னான ஒருதூபக்கிண்ணியும்,

௨௭. சர்வாங்கதகனபலியாக வொருகாளையெருதும் ஒருஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௨௮. பாவம்போக்கும் பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௨௯. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது ஏலோனின் குமாரனாகிய எலியாபின்காணிக்கை.

௩௰. நாலாநாளிலே சேதேயூரின் குமாரனாகிய எலித்சூரென்ற ரூபேன் புத்திரரின் பிரபுசெலுத்துதல்செய்தான்.

௩௧. அவன்காணிக்கையேதெனிற்பரிசுத்தஸ்தலத்தின்சேக்கல்கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல் நிறையான ஒருவெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல்நிறையான ஒருவெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்குங் காணிக்கையாக எண்ணெயிலேபிசைந்தமெல்லியமாவிலே நிறைந்திருந்தன.

௩௨. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல்நிறையுள்ளபொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௩௩. சர்வாங்க தகனபலியாக வொருகாளையெருதும் ஒருஆட்டுக்கடாவும்ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௩௪. பாவம்போக்கும்பலியாகவொருவெள்ளாட்டுக்கடாவும்,

௩௫. சமாதானபலியாக இரண்டுமாடுகளும் ஐந்துஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்துஆட்டுக்குட்டிகளுந்தானே. இதுசேதேயூரின்குமாரனாகிய எலித்சூரின்காணிக்கை.

௩௬. ஐந்தாநாளிலேசூரிஷதாயின்குமாரனாகியசெலூமியேலென்ற சிமெயோன் புத்திரரின் பிரபுசெலுத்துதல்செய்தான்.

௩௭. அவன்காணிக்கையேதெனிற் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல்கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல்நிறையான ஒருவெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல் நிறையான ஒருவெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்குங் காணிக்கையான எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலே நிறைந்திருந்தன.

௩௮. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ளபொன்னான ஒருதூபக்கிண்ணியும்,

௩௯. சர்வாங்கதகனபலியாக வொருகாளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௪௰. பாவம்போக்கும் பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௪௧. சமாதானபலியாக இரண்டுமாடுகளும் ஐந்துஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்துஆட்டுக்குட்டிகளுந்தானே. இதுசூரிஷதாயின்குமாரனாகிய செலூமியேலின்காணிக்கை.

௪௨. ஆறாநாளிலே தேகுவேலின் குமாரனாகிய எலியாசாபென்ற காத்புத்திரரின்பிரபு செலுத்துதல்செய்தான்.

௪௩. அவன்காணிக்கையேதெனிற்பரிசுத்தஸ்தலத்தின்சேக்கல்கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல்நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல் நிறையான ஒருவெள்ளிக்கலமும்இவ்விரண்டும்படைக்குங்காணிக்கையாக எண்ணெயிலேபிசைந்த மெல்லியமாவிலேநிறைந்திருந்தன.

௪௪. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ளபொன்னான ஒருதூபக்கிண்ணியும்,

௪௫. சர்வாங்கதகனபலியாக வொருகாளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௪௬. பாவம்போக்கும் பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௪௭. சமாதானபலியாகஇரண்டுமாடுகளும் ஐந்துஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்துஆட்டுக்குட்டிகளுந்தானே. இதுதேகுவேலின்குமாரனாகிய எலியாசாபின்காணிக்கை.

௪௮. ஏழாமநாளிலே அம்மியூதின் குமாரனாகிய எலிஷாமாஎன்ற எப்பிராயீம் புத்திரரின்பிரபுசெலுத்துதல்செய்தான்.

௪௯. அவன்காணிக்கையேதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல்கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல்நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபதுசேக்கல்நிறையான ஒருவெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்குங்காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்தமெல்லியமாவிலேநிறைந்திருந்தன.

௫௰. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ளபொன்னான ஒருதூபக்கிண்ணியும்,

௫௧. சர்வாங்கதகனபலியாக வொருகாளையெருதும் ஒருஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒருஆட்டுக்குட்டியும்,

௫௨. பாவம்போக்கும் பலியாக வொருவெள்ளாட்டுக்கடாவும்,

௫௩. சமாதானபலியாக இரண்டுமாடுகளும்ஐந்துஆட்டுக்கடாக்களும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்துஆட்டுக்குட்டிகளுந்தானே. இது அம்மியூதின்குமாரனாகிய எலிஷாமாவின்காணிக்கை.

௫௪. எட்டாமநாளிலேபெதாத்சூரின்குமாரனாகிய காமாலியேலென்ற மனாசேபுத்திரரின்பிரபு செலுத்துதல்செய்தான்.

௫௫. அவன்காணிக்கையேதெனிற் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல்கணக்காக நூற்றுமுப்பதுசேக்கல்நிறையான ஒரு வெள்ளித்

தாலமும் எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௫௬. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௫௭. சர்வாங்கதகனபலியாக வொரு காளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௫௮. பாவம்போக்கும் பலியாக வொரு வெள்ளாட்டுக்கடாவும்,

௫௯. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது பெதாத்சூரின் குமாரனாகிய கமாலியேலின் காணிக்கை.

௬௰. ஒன்பதாம் நாளிலே கிதெயோனியின் குமாரனாகிய அபிதானென்ற பெஞ்யமீன் புத்திரரின் பிரபு செலுத்துதல் செய்தான்.

௬௧. அவன் காணிக்கையேதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௬௨. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௬௩. சர்வாங்கதகனபலியாக வொரு காளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௬௪. பாவம்போக்கும் பலியாக வொரு வெள்ளாட்டுக்கடாவும்,

௬௫. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது கிதெயோனியின் குமாரனாகிய அபிதானின் காணிக்கை.

௬௬. பத்தாம் நாளிலே அம்மிஷத்தாயின் குமாரனாகிய அகியேசேரென்ற தாண் புத்திரரின் பிரபு செலுத்துதல் செய்தான்.

௬௭. அவன் காணிக்கையேதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௬௮. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௬௯. சர்வாங்கதகனபலியாக ஒரு காளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௭௰. பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௭௧. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது அம்மிஷத்தாயின் குமாரனாகிய அகியேசேரின் காணிக்கை.

௭௨. பதினோராம் நாளிலே ஒகிரானின் குமாரனாகிய பாகியேலென்ற ஆசேர் புத்திரரின் பிரபு செலுத்துதல் செய்தான்.

௭௩. அவன் காணிக்கையேதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௭௪. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௭௫. சர்வாங்கதகனபலியாக வொரு காளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௭௬. பாவம்போக்கும் பலியாக வொரு வெள்ளாட்டுக்கடாவும்,

௭௭. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது ஒகிரானின் குமாரனாகிய பாகியேலின் காணிக்கை.

௭௮. பன்னிரண்டாம் நாளிலே ஏனானின் குமாரனாகிய அகிரா என்ற நப்தலி புத்திரரின் பிரபு செலுத்துதல் செய்தான்.

௭௯. அவன் காணிக்கையேதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும் எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௮௰. தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௮௧. சர்வாங்கதகனபலியாக வொரு காளையெருதும் ஒரு ஆட்டுக்கடாவும் ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௮௨. பாவம்போக்கும் பலியாக வொரு வெள்ளாட்டுக்கடாவும்,

௮௩. சமாதானபலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக்கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளுந்தானே. இது ஏனானின் குமாரனாகிய அகிராவின் காணிக்கை.

அச. அபபடியே பலிபீடம அபிஷேகம பணணபபடடபொழுது இஸரவேலின பிரபுககளாலே செயயபபடட அதினுடைய பிரதிஷடையாவது; வெளளித தாலஙகள பனனிரணடு வெளளிககலஙகள பனனிரணடு பொனனுன தூபககிணணிகள பனனிரணடு.

அரு. ஒவவொரு வெளளிததாலம நூறறு முபபதுசேககல நிறையும ஒவவொருகலம எழுபதுசேககல நிறையுமாக இநதபபாத திரஙகளின வெளளியெலலாம பரிசுததஸத லததினசேககலகணககாய இரணடாயிரதது நானூறுசேககல நிறையாயிருநதது.

அசு. தூபவர்ககததால நிறைநத பொன னுன பனனிரணடு தூபககிணணிகளில ஒவ வொனறு பரிசுததஸதலத்தினசேககலகணக் காயப்பததுசசேககல நிறையாகத் தூபக கிணணிகளின பொனனெலலாம நூறறிருப துசேககல நிறையாயிருநதது.

அஎ. சர்வாஙக தகனபலியாகச் செலுத தபபடட காளையெருதுகளெலலாம பனனி ரணடு ஆடடுககடாககள பனனிரணடு ஒரு வயதான ஆடடுக்குட்டிகள பனனிரணடு. அவைகளுககேறறத படைபபுக காணிககை களுமகூடவிருநதன. பாவமபோககும பலி யாகச செலுததபபடட வெளளாடடுக கடாககள பனனிரணடு.

அஅ. சமாதானபலியாகச செலுததபபட டகாளையெருதுகளெலலாம இருபததுநான கு ஆடடுககடாககள அறுபது வெளளாட டுககடாககள அறுபது ஒருவயது ஆடடுக குடடிகள அறுபது பலிபீடம அபிஷேகம பணணபபடட பிறபாடு செயயபபடட அதனபிரதிஷடையிததானே.

அகூ. மோசே அவரோடே பேசுகிறதற காக ஆசரிபபுககூடாரததிற்குட்பிரவேசிக் குமபொழுது தனனோடேபேசுகிற சத்தத் தைச * சாட்சியினுடைய பெடடியினமே லான கிருபாசனமான மூடியின மீதில இரணடு கேருபீனகளினநடுவே இருநதுணடாகக்கேட்பான. அஙகேயிருநது அவனோ டேபேசுவார். * உ. மோசே. உரு, உஉ. சஙகீதம. அ0, உ.

## அ. அதிகாரம்.

[(க) விளக்குக்கொளுததிவைக்குமுறைமை. (ரு) இலேவியரினஅபிஷேகம. (உரு)அவர் களணழியஞசெயயததகுநதவயதும, காலமும.]

கர்ததர்மோசேயோடே பேசிசசொன னதாவது;

உ. நீ ஆரோனோடேபேசிச்சொலலவேண டியதேதெனில, * நீவிளககுகளையேறறுகை யில ஏழுவிளக்குகளும விளககுததணடிறகு நேர்ஒழுஙகாய எரியவேணடுமெனறுசொல லெனறார். * உ. மோசே. உரு, கூஎ.

ஙா. கர்ததர்மோசேககுக் கறபிததபிரகார மாக ஆரோனசெயது விளககுததணடிறகு நேர் ஒழுஙகாக அதின விளககுகளையேறறு வான.

ச. இநதககுததுவிளககினவேலை அதினபா தந துவககி, அதினபூககளமடடும அடிக கபபடடபொனனுயிருநதது. கர்ததர் மோ சேககுக்காணபிததமாதிரியினபடியேஅவன குததுவிளககைபபணணினுன.

ரு. கர்ததர்மோசேயோடேபேசிசசொன னதாவது;

சூ நீ லேவியரை இஸரவேலபுததிரருடைய நடுவிலெடுதது அவர்களைச சுததிகரிபபா யாக.

எ. அவர்களைசசுததிகரிகக நீ அவர்களுக குசசெயயவேணடியதேதெனில, அவர்கள மேலேபாவமபோககுந தணணீரைததெளி, பிறபாடு அவர்கள தஙகளைச சுததிகரிக்கத தஙகள மாம்சததினமேலெல்லாஞசவரகன கததியைபபோகபபணணித தஙகளவஸதி ரஙகளைவெளுககது,

அ. ஒருகாளையெருதையும எணணெயிலே பிசைநத மெலலியமாவாகிய அதறகேறற காணிககையையுங கொணடுவரககடவர் கள. பாவமபோககும பலியாக வேறொரு காளையெருதையும நீ வாஙகி,

கூ லேவியரை ஆசரிபபுக கூடாரததிறகு முனபாகசசேரபபணணி இஸரவேல புததி ரரினசபையையெலலாஙகூடடுவாயாக.

௰. நீ லேவியரைக கர்ததருககுமுனபாகச சேரபபணணினபொழுது இஸரவேலபுததி ரர் தஙகளகைகளை லேவியர்மேல வைக்கக் கடவர்கள.

௰க. பிறகுலேவியர் கர்ததரின பணிவிடை வேலைசெயகிறவர்களாகுமபடிககு ஆரோன இஸரவேலபுததிரரிலெடுககபபடட அவர்க ளைக கர்ததருககுமுனபாக அசைவாடடப படுஙகாணிககையாக நிறுததககடவன.

௰உ. பிறபாடுலேவியர் தஙகள கைகளைக காளையெருதுகள தலையினமேலவைபபார்க ளாக. அதினபிறகு நீ லேவியருககாகப பாவ நிவிர்ததியை யுணடாககுவதறகுக்கர்த தருககு அவைகளில ஒனறைபபாவமபோக குமபலியும மறறதைச சர்வாஙகதகனபலியு மாககி,

௰ஙா. லேவியரை ஆரோனுககும அவனகுமா ரனுககுமமுனபாக நிறுததி அவர்களைககர்த தருககு அசைவாடடபபடுங காணிககை யாககி,

௰ச. இபபடிலேவியர் நமமுடையவர்களா யிருககுமபடிககு அவர்களை இஸரவேல புத திரர்நடுவிலிருநது பிரிததெடுககக்கடவாய.

௰ரு. அதறகுபபிறகு லேவியர் ஆசரிபபுக கூடாரததில வேலைசெயயப பிரவேசிக்கக் கடவர்கள. இபபடி அவர்களைச சுததிகரித

து அவர்களை அசைவாட்டுங்காணிக்கையாக் கக்கடவாய்.

௰௬. ஏனெனில் அவர்கள் இஸ்ரவேல்புத்திரர் நடுவிலிருந்து நமக்குக் கொடுக்கவேகொடுக்கப்பட்டார்கள். இஸ்ரவேல் புத்திரரி லெல்லாருங்கர்ப்பந்திறந்து பிறக்கிற சகல முதற்பேறுக்கும்பதிலாக அவர்களை நமக்கு எடுத்துக்கொண்டோம்.

௰௭. ஏனென்றால், இஸ்ரவேல்புத்திரரிலே மனிதரிலும் மிருகஜீவன்களிலும் * முதற்பேறனைத்தலலாம் நம்முடையது. நாம் எகிப்து தேசத்திலே முதற்பேறு சகலத்தையுஞ் சங்கரித்தநாளிலே அவைகளை நமக்குப் பரிசுத்தமாக்கி, * ௨. மோசே. ௰௩, ௨.

௰௮. பிறபாடு * லேவியரை இஸ்ரவேல்புத்திரரிலுள்ள முதற்பேறு சகலத்திற்கும்பதிலாக எடுத்துக்கொண்டு, * ௩, ௰௨.

௰௯. லேவியர் இஸ்ரவேல் புத்திரருடைய பணிவிடைவேலையை யாசரிப்புக்கூடாரத்திலே செய்யும்படிக்கும் இஸ்ரவேல்புத்திரருக்காகப் பாவநிவிர்த்தியை யுண்டாக்கும்படிக்கும் இஸ்ரவேல்புத்திரர்தானே பரிசுத்தஸ்தலத்திற்குச் சேருகிறதினால் இஸ்ரவேல் புத்திரரிலவாதையுண்டாகாதபடிக்கும் லேவியரை அவர்கள் நடுவிலெடுத்து ஆரோனுக்கும் அவன் குமாரருக்குங் கொடுக்கவே கொடுத்தோமென்றார்.

௨௰. அப்பொழுதுமோசேயும் ஆரோனும் இஸ்ரவேல்புத்திரரின் சபையனைத்துங் கர்த்தர் லேவியரைக்குறித்து மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் லேவியருக்குச் செய்தார்கள்.

௨௧. லேவியர் பாவம்போக்குதலைப் பண்ணிக்கொண்டு தங்கள்வஸ்திரங்களை வெளுத்தார்கள். பிறபாடு ஆரோன் அவர்களைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டுங்காணிக்கையாகநிறுத்தி அவர்களைச்சுத்திகரிக்க அவர்களுக்காகப் பாவநிவிர்த்தியை யுண்டாக்கினான்.

௨௨. அதற்குப்பிறகுலேவியர் ஆரோனுக்கும் அவன் குமாரருக்கு முன்பாக ஆசரிப்புக்கூடாரத்திலே தங்கள்பணிவிடைவேலையைச்செய்யப்பிரவேசித்தார்கள். கர்த்தர் லேவியரைக்குறித்து மோசேக்குக்கற்பித்தபடியே யவர்களுக்குச்செய்தார்கள்.

௨௩. கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨௪. லேவியருக்கான கட்டளையேதெனில் இருபத்தைந்துவயதுமுதற்கொண்டு அதற்குமேலதரமுமான அனைவரும் ஆசரிப்புக்கூடாரத்தின் வேலையைச்செய்யும் இராணுவத்திலே சேவிக்கவரவேண்டும்.

௨௫. ஆறுபத்தைம்பதாம்வயதுமுதற்கொண்டு அவர்களினிவேலைசெய்யாதபடிக்கு வேலைசெய்யும் இராணுவத்தைவிட்டு,

௨௬. பணிவிடைவேலையைச் செய்யாமல் ஆசரிப்புக்கூடாரத்தின் காவலைக் காக்கிற தங்கள் சகோதரரோடேகூடச் சேவிக்கக்கடவர்கள். இப்படிலேவியருக்கவர்களுடையகாவல்களின்வேலைக்காகத் திட்டம் பண்ணக்கடவாயென்றார்.

## ௯. அதிகாரம்.

[(௧) பஸ்காபண்டிகை மறுபடியுங் கட்டளையிடப்பட்டது. (௬) அசுத்தமாயுஞ் சமயத்தில் வரக்கூடாமலு மிருக்கிறவர்களுக்காகச்செய்யும் இரண்டாம்பஸ்கா. (௰௫) இஸ்ரவேலர் பிரயாணப்படவும், தரிக்கவும் மேகத்தூண்வழிகாட்டியது.]

அவர்கள் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் முதல்மாதத்திலே கர்த்தர் சீனாய்வனாந்தரத்திலே மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. இஸ்ரவேல்புத்திரர் * பஸ்காவையதின் திட்டமான காலத்திலே ஆசரிக்கக்கடவர்கள். * ௨. மோசே. ௰௨, ௩. முதலிய

௩. இந்தமாதம் பதினாலாந்தேதி அந்தி நேரமான வேளையென்றதின் திட்டமானகாலத்திலேஅதையாசரிக்கக்கடவீர்கள். அதினுடைய எல்லாக்கட்டளையின் படியேயும் நியாயத்தின்படியேயும் அதை யாசரிக்கக்கடவீர்களென்றார்.

௪. ஆகையால் பஸ்காவை யாசரிக்கிறதற்காக மோசே இஸ்ரவேல்புத்திரரோடேபேசினான்.

௫. அப்படியே முதலாமாதம்பதினாலாந்தேதி அந்திநேரமானவேளையிலேசீனாய்வனாந்தரத்திலேபஸ்காவையாசரித்தார்கள். கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி யெல்லாம் இஸ்ரவேல்புத்திரர்செய்தார்கள்.

௬. ஆனாலுஞ்சவத்தினாலே தீட்டுப்பட்டபடியினாலே அந்நாளிற் பஸ்காவை யாசரிக்கக் கூடாதமனிதர் இருந்தார்கள். அவர்கள் அந்நாளிலே மோசேக்கும் ஆரோனுக்கும் முன்பாகச்சேர்ந்துவந்து,

௭. அவர்களோடே நாங்கள் சவத்தினாலே தீட்டுப்பட்டவர்கள். இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே திட்டமானகாலத்திலே கர்த்தருக்குக் காணிக்கையைச் செலுத்தாதபடிக்கு நாங்கள் விலக்கப்பட்டிருப்பானேனென்றார்கள்.

௮. மோசேயவர்களுடனே பொறுங்கள். கர்த்தர்உங்களுக்காகக் கற்பிப்பதேதென்று கேட்பேனென்றான்.

௯. கர்த்தர்மோசேயோடேபேசிச்சொன்னதாவது;

௰. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், உங்களிலாகிலும் உங்கள் சந்ததியாரிலாகிலும் யாதொரு

வர் சுவதந்திரத்திலே விடப்பட்டு அல்லவென்று தூரப்பயணத்திலிருந்தாலும் கர்த்தருக்குப் பஸ்காவையாசரிக்கவேண்டும்.

௰௧. அவர்கள் அதை இரண்டாமாதம் பதினாலாந்தேதி அந்திநேரமான வேளையில ஆசரித்து அதைப்புளிப்பில்லாத அப்பங்களோடும் கசப்பான கீரைகளோடும் புசித்து,

௰௨. விடியற்காலமட்டும் அதிலொன்றும் மீதியாக வைக்காமலும் அதிலொரு எலும்பை முறிக்காமலும் பஸ்காவினுடைய கட்டளையின்படியெல்லாம் அதை யாசரிக்கக் கடவர்கள்.

௰௩. ஆனால் ஒருவன் சுத்தமும் பயணத்தி விராதவனுமாயிருந்தும் பஸ்காவையாசரிக்காதே போனால் அந்த ஆத்துமா திட்டமான காலத்திலே கர்த்தரின் காணிக்கையைச் செலுத்தாதபடியினாலே தன் சனத்தாரிலிராமல் * அறுப்புண்டுபோவான். அந்த மனிதன் தன் பாவத்தைச் சுமப்பான்.

* ௧. மோசே. ௰௭, ௰௪.

௰௪. ஒரு பரதேசி உங்களிடத்திலே தங்கி கர்த்தருக்குப் பஸ்காவை யாசரிக்கப் போனால் அவனதைப் பஸ்காவின் கட்டளையின்படியும் அதின் நியாயத்தின்படியும் ஆசரிக்கக்கடவன். பரதேசிக்காகவுந் தேசத்திலே பிறந்தவனுக்காகவும் ஏகக்கட்டளையுங்களுக்கிருப்பதாக வென்று சொல்லென்றார்.

௰௫. வாசஸ்தலமெடுப்பிக்கப்பட்ட நாளிலே * மேகஞ்சாட்சியின் கூடாரமிருக்கிற வாசஸ்தலத்தைமூடிற்று. சாயங்காலமான பொழுதோவென்னில், வாசஸ்தலத்தின்மேல் விடியற்காலமட்டும் அக்கினியின் உருவிருந்தது. * ௨. மோசே. ௪௰, ௩௪.

௰௬. இப்படி எப்பொழுதுமிருந்தது. மேகமும் இராவில அக்கினியுருவும் அதை மூடியிருந்தது.

௰௭. மேகங் கூடாரத்திலிருந்தெழும்புகிறதைப்பார்த்து இஸ்ரவேல்புத்திரர் அதின் பிறகு பயணப்படுவார்கள். மேகம் எந்த ஸ்தலத்திலே தங்கித்தரிக்குமோ அங்கே இஸ்ரவேல்புத்திரர் பாளயமிறங்குவார்கள்.

௰௮. கர்த்தருடைய கட்டளையின்படியே இஸ்ரவேல் புத்திரர் பயணப்படுவார்கள். கர்த்தருடையகட்டளையின்படியேயும் பாளயமிறங்குவார்கள். மேகம் வாசஸ்தலத்தின் மேலே தங்கியிருக்குமநாளெல்லாம் பாளயத்திலிறங்கியிருப்பார்கள்.

௰௯. மேகம் வெகுநாள் வாசஸ்தலத்தின் மேலே தரித்திருக்கையில் இஸ்ரவேல் புத்திரர்பயணப்படாமற் கர்த்தரின் காவலைக் காத்திருப்பார்கள்.

௨௰. மேகங் கொஞ்சநாள் வாசஸ்தலத்தின் மேலிருக்கும்பொழுது கர்த்தருடைய கட்டளையின்படியே பாளயமிறங்கியிருந்து கர்த்தருடைய கற்பனையின்படியே பயணப்படுவார்கள்.

௨௰௧. மேகஞ் சாயங்காலந்தொடங்கி விடியற் காலமட்டுமிருந்து விடியற்காலத்திலெழும்பும்பொழுது அந்நேரம் பயணப்படுவார்கள். பகலிலாகிலும் இரவிலாகிலும் மேகம் எழும்பும்பொழுது பயணப்படுவார்கள்.

௨௰௨. அல்லவென்றுமேகம் இரண்டொருநாள் அல்லது ஒருமாதம், அல்லது அநேகநாள் வாசஸ்தலத்தின்மேலே தங்கியிருக்கும்பொழுது, இஸ்ரவேல்புத்திரர் பயணப்படாமற் பாளயமிறங்கியிருப்பார்கள். அது எழும்பும்பொழுதோவென்றால் பயணப்படுவார்கள்.

௨௰௩. கர்த்தருடைய கட்டளையின்படியே பாளயமிறங்குவார்கள். கர்த்தருடைய கட்டளையின்படியே பயணப்படுவார்கள். கர்த்தர் மோசேயைக்கொண்டு கட்டளையிட்டபடியே கர்த்தருடைய காவலைக் காப்பார்கள்.

## ௰. அதிகாரம்.

[(௧) வெள்ளியெக்காளத்தின் உபயோகம். (௰௧) இஸ்ரவேலர் சீனாய் வனாந்தரத்தை விட்டுப் பாரானுக்குப் போனது. (௰௪) அவர்கள் நடைகொண்ட ஒழுங்கு. (௨௯) ஒபாபைத்தங்களைவிட்டு நீங்காதபடி மோசே வேண்டிக்கொண்டது. (௩௩) திருப்பெட்டியெடுக்கையிலும், தரிக்கையிலும், மோசேசொன்ன ஆசீர்வாதம்.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. உனக்கிரண்டு வெள்ளிப் பூரிகைகளையடிக்கப்பட்ட வெள்ளியினாலே பண்ணுவாயாக. அவைகள் உனக்குச் சபையை வரவழைப்பிக்கிறதற்கும் பாளயங்களைப் பயணப்படுத்துகிறதற்கும் உதவுவனவாக.

௩. அவைகளை யூதும்பொழுது சபையெல்லாம் ஆசரிப்பின் கூடாரத்தின் வாசலில் உன்னண்டைக்குக் கூடக்கடவது.

௪. ஒன்றையூதும்பொழுதோவென்னில், இஸ்ரவேலில ஆயிரங்களுக்குத் தலைவராகிய பிரபுக்கள் உன்னண்டைக்குக் கூடக்கடவர்கள்.

௫. நீங்கள் அவைகளைக் கெம்பீரமாக ஊதும்பொழுதோவென்றால் கிழக்கே இறங்கியிருக்கிற பாளயங்கள் பயணப்படக்கடவது.

௬. அவைகளை நீங்கள் இரண்டாமுறை கெம்பீரமாக ஊதும்பொழுது, தெற்கேயிறங்கியிருக்கிற பாளயங்கள் பயணப்படக்கடவது. அவர்களைப்பயணப்படுத்துகிறதற்கும் கெம்பீரமாய் ஊதக்கடவீர்கள்.

௭. ஆனால் சபையைக் கூட்டுகிறதற்குக் கெம்பீரமில்லாது ஊதுதலாய் ஊதக்கடவீர்கள்.

௮. ஆரோனின்குமாரராகிய ஆசாரியர் பூரிகைகளை யூதக்கடவர்கள். அவைகள் உங

களை தலைமுறைகளில் உங்களுக்கு நித்திய கட்டளையாகவிருக்கக்கடவது.

௯. நீங்கள் உங்கள் தேசத்திலுங்களை நெருக்கப்படுத்துகிற சத்துருவுக்கெதிராக யுத்தத்திற்குட் பிரவேசிக்கும்பொழுது * பூரிகைகளைக் கெம்பீரமாய் ஊதக்கடவீர்கள். அப்பொழுது நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சமுகத்திலே நினைக்கப்பட்டு உங்கள் பகைஞருக்கு நீங்கலாய் இரட்சிக்கப்படுவீர்கள். * ௩௧, ௬.

௰. உங்கள் மகிழ்ச்சியின் நாளிலும் உங்கள் பண்டிகைகளிலும் மாதப் பிறப்புகளிலும், உங்கள் சர்வாங்கதகனங்களுஞ் சமாதான பலிகளுஞ் செலுத்தப்படுகையிற பூரிகைகளையூதுவீர்களாக. அப்பொழுது அவைகள் உங்கள் பராபரன் சமுகத்திலே உங்களை நினைக்கப்பண்ணும். நானுங்கள் பராபரனாகிய கர்த்தரென்றார்.

௰௧. இரண்டாம் வருஷம் இரண்டாமாதம் இருபதாந்தேதியிலே மேகஞ் சாட்சியினுடைய வாசஸ்தலத்தின் மீதிலிருந்தெழும்பிற்று.

௰௨. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் சீனாய்வனாந்தரத்திலிருந்து தங்கள் பயணவரிசைகளாய்ப் புறப்பட்டார்கள். மேகம் பாரான் வனாந்தரத்திலே தங்கித்தரித்தது.

௰௩. இப்படியே கர்த்தர் மோசேயைக் கொண்டு கட்டளையிட்டபடியே முதற்பயணம்பண்ணினார்கள்.

௰௪. முதல் யூதா புத்திரருடைய பாளயக்கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மினதாபின் குமாரன் நகேசோன் தலைவனாயிருந்தான்.

௰௫. இசக்கார் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குச் சூவாரின் குமாரன் நெதனெயேல் தலைவனாயிருந்தான்.

௰௬. செபுலோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏலோனின் குமாரன் எலியாப் தலைவனாயிருந்தான்.

௰௭. அப்பொழுது வாசஸ்தலம் இறக்கிவைக்கப்பட்டது. அதைக் கெர்சோன் புத்திரரும் மெராரிபுத்திரருஞ் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள்.

௰௮. பிறபாடு ரூபென் புத்திரருடைய பாளயக்கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவன் சேனைக்குச் சேதேயூரின் குமாரன் எலிசூர் தலைவனாயிருந்தான்.

௰௯. சிமியோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குச் சூரிஷதாயின் குமாரன் செலூமியேல் தலைவனாயிருந்தான்.

௨௰. காத் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குத் தேகுவேலின் குமாரன் எலியாசாப் தலைவனாயிருந்தான்.

௨௧. அப்பொழுது கேகாத்தியர் பரிசுத்தமானதைச் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள். இவர்கள் வருமட்டும் அவர்கள் வாசஸ்தலத்தை யெடுத்து நிறுத்தினார்கள்.

௨௨. பிற்பாடு எப்பிராயீம் புத்திரருடைய பாளயக்கொடியின் கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மியூதின் குமாரன் எலிஷமா தலைவனாயிருந்தான்.

௨௩. மனாசே புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குப் பெதாத்சூரின் குமாரன் காமாலியேல் தலைவனாயிருந்தான்.

௨௪. பென்யமீன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குக் கிதேயோனின் குமாரன் அபிதான் தலைவனாயிருந்தான்.

௨௫. பிறபாடு தாண் புத்திரருடைய பாளயக்கொடியின் கீழிருக்கிறவர்கள் சகல பாளயங்களுக்குங் கடைப்பாளயமாகத் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள். அவனுடைய சேனைக்கு அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர் தலைவனாயிருந்தான்.

௨௬. ஆசேர் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஓகிரானின் குமாரன் பாகியேல் தலைவனாயிருந்தான்.

௨௭. நவ்தலி புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏனானின் குமாரன் அகிராத் தலைவனாயிருந்தான்.

௨௮. இந்தவரிசையாய் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சேனைகளின்படியே பயணம்போனார்கள்.

௨௯. மோசே தன் மாமனாகிய ரெகுவேலென்னும் மீதியானியனுடைய குமாரனான ஓபாபுடனே, உங்களுக்குக் கொடுக்கிறேனென்று கர்த்தர் சொன்ன ஸ்தலத்திற்கு நாங்கள் பயணம்போகிறோம். எங்களோடே கூடவா, உனக்கு நன்மைசெய்வோம். ஏனெனில் கர்த்தர் இஸ்ரவேலுக்கு நல்ல வாக்குத்தத்தம் பண்ணினாரென்றான்.

௩௰. ஆனால் இவன் அவனோடே நான் வாராமல், என் தேசத்திற்கும் என் இனத்தனிடத்துக்கும் போவேனென்றான்.

௩௧. அப்பொழுது அவன் சொன்னதாவது; நீ எங்களைவிடாயாக. ஏனெனில், வனாந்தரத்திலே நாங்கள் பாளயமிறங்குந்தானங்களை நீ அறிந்திருக்கிறபடியினாலே எங்களுக்குக் கண்களைப்போலிருப்பாய்.

௩௨. நீ யெங்களோடே கூடவந்தால் அப்பொழுது கர்த்தர் எங்களுக்குச் செய்தருளும் அந்த நன்மையின்படியே உனக்கும் நன்மைசெய்வோமென்றான்.

௩௩. அவர்கள் கர்த்தருடைய பர்வதத்தை விட்டு மூன்றுநாட்பயணம் போனார்கள். மூன்றுநாட்பயணத்திலுங் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டி அவர்களுக்கு இளைப்பாறுந் தலத்தை விசாரித்துக் காட்

டெபடிக்கு அவர்கள் முன்பாகப் போயிற்று.

௩௪. அவர்கள் பாளயத்திலிருந்து பயணம் போகிறபொழுது, கர்த்தருடைய மேகம் பகலில் அவர்கள் மேலிருந்தது.

௩௫. பெட்டி புறப்படும்பொழுது மோசே யென்றவன் * கர்த்தாவே! உம்முடைய சத்துருக்கள் சிதறடிக்கப்படவும் உம்மைப் பகைக்கிறவர்கள் உமக்கு முன்பாக ஓடிப் போகவும் எழுந்தருளுமென்பான்.

* சங்கீதம். ௬௮. ௨.

௩௬. அது தங்குகிறபொழுது அவன் கர்த்தாவே! அநேகமாயிரங்களாகிய இஸ்ரவேலரண்டைக்குத் திரும்புமென்பான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) துபிராவிலுண்டான அக்கினி மோசேயின் மன்றாட்டத்தினாலே யணைந்தது. (௪) சனங்கள் இறைச்சியைவிரும்பி மன்றாவை வெறுத்தது. (௰) மோசே சனவிசாரணையைக்குறித்து முறையிட்டது. (௰௭) பராபரன் அந்த விசாரணையின் பாரத்தை எழுபதுபேருக்குப் பகிட்டது. (௩௧) கிபிராத் அத்தாவாவில் உக்கிரந்தோடு காடைகள் கொடுக்கப்பட்டது.]

ஆனாற் சனம் முறையிட்டுக்கொண்டிருந்தது. அது கர்த்தருடைய செவிகளிலே பொல்லாப்பாயிருந்தது. ஏனெனிற் கர்த்தர் அதைக் கேட்டபொழுது அவருடைய கோபமூண்டது அப்பொழுது கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள்ளே பற்றியெரிந்து கடைசிப்பாளயத்திலிருந்த சிலரைப் பட்சித்தது.

௨. சனம் மோசேயைநோக்கிக் கூப்பிட்டது. மோசே கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணினான். அப்பொழுது அக்கினி யவிந்துபோயிற்று.

௩. கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள்ளே பற்றியெரிந்ததினாலே அவ்விடத்திற்குத் தபேராவென்றுபேரிட்டான்.

௪. அவர்களுக்குளிருந்த *பலசாதியான சனம் மகா இச்சையுள்ளதாயிற்று. அப்பொழுது இஸ்ரவேல்புத்திரருந்திரும்ப அழுது † நமக்கிறைச்சியைப் புசிக்கக்கொடுப்பவரார் என்றும்,

* ௨. மோசே. ௰௨, ௩௮. † ௨. மோசே. ௰௬, ௩. ௧. கொரி. ௰, ௬.

௫. நாம் எகிப்திலே கிரயமில்லாமற் சாப்பிட்ட மச்சங்களையும் வெள்ளரிக்காய்களையுந் கொம்மட்டிக்காய்களையுஞ் சிறுவெண்காயங்களையும் வெண்காயங்களையும் வெள்ளை வெண்காயங்களையும் நினைக்கிறோம்.

௬. இப்பொழுதோவெனில், நம்முடைய ஆத்துமா வாடிப்போயிற்று. இந்த மன்னாவைத்தவிர நம்முடைய கண்களுக்கு முன்பாகப்பின்னொன்றுமில்லையென்றுஞ் சொன்னார்கள்.

௭. மன்னாவோவென்றால் * கொத்துமல்லி விதையமட்டாத்திரமும் அதின்நிறம் பெதோளாகின் நிறம்போலவுமிருந்தது.

௮. சனந் திரிந்து அதைப் பொறுக்கிக் கொண்டுவந்து எந்திரங்களில் அரைத்து அல்லது உரல்களிலிடித்துப் பானைகளிலே சமைப்பார்கள். அதை அப்பங்களுமாக்கு வார்கள். அதின் ருசி புது எண்ணெயின் ருசியாயிருந்தது.

௯. இராவில் பனி பாளயத்தின்மேலிறங்குகையில் மன்னா அதின்மேலிறங்கிறது.

௰. சனம், வம்சம் வம்சமாகத் தங்களுங்கள் கூடாரவாசலிலழுகிறதை மோசே கேட்டான். கர்த்தருக்குக் கோபமிகவுமூண்டது. மோசேயின் பார்வைக்கும் பொல்லாப்பாயிருந்தது.

௰௧. அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன்னதாவது; நீர் இந்த எல்லாச் சனத்தின் பாரத்தையும் என்மேலே சுமத்தினதினாலே உம்முடைய அடியானுக்கு உபத்திரவம்வரப் பண்ணினதென்ன! உமது கண்களில் எனக்குக் கிருபைகிடையாதே போனதென்ன!

௰௨. நாம் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திற்கு நீ அவர்களை ஒரு தாய் தாய்முலையுண்கிற பாலகனைச் சுமக்கிறது போல உன்மடியிலே சுமந்துகொண்டுபோவென்று நீர் என்னோடே சொல்லும்படிக்கு நான் இந்தச்சனத்தையெல்லாங் கர்ப்பந்தரித்தேனோ! நான் இதைப்பெற்றேனோ?

௰௩. இந்தச் சனத்திற்கெல்லாங் கொடுக்கிறதற்கெனக்கு இறைச்சி எங்கேயிருந்து வரும்! ஏனெனில், எங்களுக்கு இறைச்சியைச் சாப்பிடக் கொடுவென்று என்னைப்பார்த்து அழுகிறார்கள்.

௰௪. நான் ஒருவன் இந்தச்சனத்தையெல்லாஞ்சுமக்கக்கூடாது. ஏனென்றால், எனக்கு மிஞ்சின பாரமாயிருக்கின்றது.

௰௫. எனக்கு உம்முடைய கண்களிலே கிருபை கிடைத்ததானால் தேவரீர் இப்படியெனக்குச் செய்கிறதைப்பார்க்கிலும், என் உபத்திரவத்தை நான் காணாதபடிக்கு என்னைக் கொல்லவே கொல்லுமென்றான்.

௰௬. அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; நீ இஸ்ரவேலின் மூப்பரிற்சனத்திற்கு மூப்பருந் தலைவருமாயிருக்கத்தக்கவர்கள் என்றறிந்திருக்கிற எழுபது பேரை நமக்குக்கூட்டி அவர்களையாசரிப்புக் கூடாரத்தண்டையிலே அங்கே உன்னோடே கூட நிற்கும்படிக்குச் சேர்த்துக்கொள்.

௰௭. அப்பொழுது நாம் இறங்கி அங்கே உன்னோடேபேசி நீ ஒருவன்சனத்தின் பாரத்தைச்சுமக்காமல் அவர்களுன்னோடே கூட

அதைச் சுமப்பதற்காக உன்மேலிருக்கிற ஆவியிலெடுத்து அவர்கள்மேலே வைப்போம்.

௰அ. ஆனால் சனத்தோடே நீ சொல்லவேண்டியதேதெனில், இறைச்சி சாப்பிட நாளைக்குங்களைப் பரிசுத்தம்பண்ணுங்கள். ஏனென்னில், எங்களுக்கிறைச்சி சாப்பிடக் கொடுப்பவர் யார்? எஜிப்திலே எங்களுக்கு நன்றாயிருந்ததென்று கர்த்தருடைய செவிகளின் முன்பாக அழுதீர்கள். ஆகையால் கர்த்தர் உங்களுக்கிறைச்சிசாப்பிடக்கொடுப்பார்.

௰௯. நீங்கள் ஒருநாளல்ல, இரண்டுநாளுமல்ல, ஐந்துநாளுமல்ல, பத்துநாளுமல்ல, இருபதுநாளுமல்ல.

௨௰. ஒரு மாதமுழுவதும் அது உங்கள் நாசிகளிலிருந்து புறப்பட்டு உங்களுக்குத் தெவிட்டிப்போகுமட்டுஞ் சாப்பிடுவீர்கள். ஏனென்றால், உங்கள் நடுவேயிருக்கிற கர்த்தரை யசட்டைபண்ணி நாங்கள் ஏன் எஜிப்திலிருந்து புறப்பட்டோமென்று அவருக்கு முன்பாக அழுதீர்களென்றுசொல்லென்றார்.

௨௧. அப்பொழுதுமோசே சொன்னதாவது; நானிருக்குஞ்சனம் ஆறுநூறாயிரங் காலாள்கள். தேவரீரோவெனில், ஒரு முழுமாதமட்டுஞ் சாப்பிட அவர்களுக்கிறைச்சி கொடுப்போமென்றீர்.

௨௨. * அவர்களுக்குப் போந்ததாகிலுண்டாகக் ஆடுமாடுகள் அவர்களுக்காக அடிக்கப்படுமோ! அவர்களுக்குப் போந்ததாகிலுண்டாகச் சமுத்திரத்து மச்சங்களெல்லாம் அவர்களுக்காகச் சேர்க்கப்படுமோ வென்றான். * யோவான். ௬, எ.

௨௩. அதற்குக் கர்த்தர்மோசேயுடனே * கர்த்தருடையகை குறுகியிருக்கிறதோ! நமது வார்த்தையின்படி உனக்குவந்து நடக்குமோ! நடவாதோவென்றிப்பொழுது பார்ப்பாயென்றார். * எசா. ௫௰, ௨. ருகூ, க.

௨௪. மோசே புறப்பட்டுக் கர்த்தருடைய வார்த்தைகளைச் சனத்திற்குச் சொல்லிச் சனத்தின்மூப்பரில் எழுபதுபேரைக்கூட்டி அவர்களைக் கூடாரத்தைச்சுற்றிலும் நிறுத்தினான்.

௨௫. அப்பொழுதுகர்த்தர் மேகத்திலிறங்கி அவனோடேபேசி அவன்மேலிருந்த ஆவியிலெடுத்து மூப்பராகிய அந்த எழுபதுபேர் மேலே வைத்தார். சம்பவித்ததேதெனில், ஆவி அவர்கள் மேலேவந்து தங்குகையில தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள். சொல்லிப் பிறகு ஓய்ந்தார்கள்.

௨௬. ஆனால் இரண்டுபேர் பாளயத்திலிருந்துவிட்டார்கள். ஒருவன்பேர் எல்தாத். மற்றவன்பேர் மேதாத். அவர்கள்கூடப்பேரெழுதப்பட்டிருந்தும் கூடாரத்திற்குப் போகப்புறப்படாதிருந்தார்கள். அவர்கள் மேல ஆவிவந்து தங்கினதினாலே பாளயத்திலே தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள்.

௨எ. ஒரு பிள்ளையாண்டான் ஓடிவந்து, எல்தாதும் மேதாதும் பாளயத்திலேதீர்க்கதரிசனஞ் சொல்லுகிறார்களென்று மோசேக்கு அறிவித்தான்.

௨அ. அப்பொழுதுமோசேயால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களில் அவன் வேலைக்காரனாகிய நூனின்குமாரன் யோசுவாபிரதியுத்தரமாக என்னுடையவனாகிய மோசேயே! * அவர்களுக்குத் தடைபண்ணுமென்றான். * லூக்கா. ௯, ௪௯.

௨௯. மோசேயோவென்றால், அவனுக்கு நீ எனக்காகப்பத்தி வைராக்கியங்காண்பிக்கிறாயோ! ஆ, கர்த்தருடைய சனமெல்லாந் தீர்க்கதரிசனஞ் சொல்லத்தக்கதாயக் கர்த்தர் தம்முடைய ஆவியை அவர்கள்மேலிறங்கப்பண்ணினால்நலதாவல்லவென்றான்.

௩௰. பிற்பாடுமோசேயும் இஸ்ரவேல்மூப்பரும் பாளயத்திலேவந்துசேர்ந்தார்கள்.

௩௧. அப்பொழுது கர்த்தரிடத்திலிருந்து * காற்றுப்புறப்பட்டுச் சமுத்திரத்திலிருந்து காடைகளை யடித்துக்கொண்டுவந்து பாளயத்தின்மேலே பாளயத்தைச்சுற்றிலும் இந்தண்டை யொருநாட்பயணமும் அந்தண்டையொருநாட்பயணமுந் தரையின்மேல இரண்டுமுழ உயரத்தியுமாய விழுந்துகிடக்கத்தெளித்தது. * சங்கீதம். ௱௫, எ.

௩௨. அப்பொழுது சனம் எழும்பி அன்று பகல்முழுவதும் இராமுழுவதும் மறுநாள் முழுவதுங் காடைகளைச் சேர்த்தார்கள். கொஞ்சமாய்ச் சேர்த்தவன் பதின்கலம் அம்மாத்திரஞ்சேர்த்தான். அவைகளைப் பாளயத்தைச்சுற்றிலுந் தங்களுக்காகப் பரப்பிப்போட்டார்கள்.

௩௩. * ஆனால் இறைச்சிஇன்னம் அவர்கள் பல்லுகளநடுவேயிருக்கையில் கர்த்தருடைய கோபம் அவர்கள் அதைச் சாப்பிடுந் தராத்தற்குமுன்னே சனத்திற்குள்ளே மூண்டுகொள்ளுகையால் கர்த்தர்சனத்தைமகாப் பெரியவாதையாலடித்தார். * சங்கீதம். எஅ, ௩௰. ௩௧.

௩௪. இச்சையுள்ளசனத்தையங்கே அடக்கம்பண்ணினதினாலே அந்த ஸ்தலத்திற்கு இச்சையின்பிரேதக்குழிகளென்று பேரிட்டான்.

௩௫. சனம் இச்சையின் பிரேதக்குழிகளை விட்டு ஆசரோத்திற்குப்பயணமவந்து ஆசரோத்திலேதரித்திருந்தது.

## ௰௨. அதிகாரம்.

[(௧) பராபரன்மிரியாமையும்,ஆரோனையுங் கலகத்துக்காகத்தண்டித்தது. (௰) மிரியாமின் குஷ்டரோகம் மோசேயின் வேண்டுதலினாலகுணமானது. (௰௪) பராபரன் அவளைப்பாளயத்திற்குப் புறம்பேவைக்கக் கற்பித்தது.]

மோசே கூஸ்சாதியான * பெண்சாதியை விவாகம்பண்ணினபடியினாலே மிரியாமும், ஆரோனும், அவன் விவாகம்பண்ணின கூஸிசாதியான பெண்சாதி நிமித்தம் அவனுக்கு விரோதமாகப்பேசி,
* ௨. மோசே. ௨, ௨௧.

௨. கர்த்தர் மோசேயைக்கொண்டுமாத்திரம் பேசினாரோ! எங்களைக்கொண்டும் அவர் பேசினதில்லையோ வென்றார்கள். அதைக் கர்த்தர் கேட்டார்.

௩. ஆனாலே மோசேயென்கிறவன் பூமியிலிருக்கிற சகல மனிதரைப்பார்க்கிலும் மகா சாந்தகுணமுள்ளவனாயிருந்தான்.

௪. அக்ஷணத்திலே கர்த்தர் மோசேயோடும், ஆரோனோடும், மிரியாமென்றவளோடும் நீங்கள் மூன்றுபேரும் ஆசரிப்புக்கூடாரத்துக்குப் புறப்பட்டுப்போங்களென்றார். மூன்றுபேரும்போனார்கள்.

௫. கர்த்தர் மேகத்தூணிலிறங்கிக் கூடாரத்தின்வாசலிலேநின்று ஆரோனையும் மிரியாமையுங் கூப்பிட்டார். அவர்களிருவரும்போனார்கள்.

௬. அப்பொழுது அவர் சொன்னதாவது; நம்முடைய வார்த்தைகளைக்கேளுங்கள். உங்களுக்குள்ளே தீர்க்கதரிசியிருந்தால் கர்த்தராகிய நாம் அவனுக்குத் தரிசனையில் நம்மை வெளிப்படுத்துவோம். சொப்பனத்தில் அவனோடே பேசுவோம்.

௭. நம்முடைய தாசனாகிய மோசே அப்படியல்ல * நம்முடைய வீட்டனைத்திலும் அவன் உண்மையுள்ளவன். * எபிரேயர். ௩, ௨.

௮. மறைபொருளாகவல்ல * முகமுகமாகவும் திருஷ்டாந்தமாகவும் அவனோடே பேசுகிறோம். அவன் கர்த்தரின் சாயலைக் காண்கிறான். இப்பொழுதும் நீங்கள் நம்முடைய தாசனாகிய மோசேக்குவிரோதமாகப் பேசப் பயப்படாமற்போனதென்னவென்றார். * ௨. மோசே. ௩௩, ௰௧. ௫. மோசே. ௩௪, ௰.

௯. கர்த்தருடையகோபம் அவர்கள் மேல் மூண்டது. அவர்போய்விட்டார்.

௰. மேகம் கூடாரத்தை விட்டு அகன்று போயிற்று. இதோ, மிரியாம் உறைந்த மழையின்வெண்மையாய்க் குஷ்டம்பிடித்திருந்தாள். ஆரோன் மிரியாமைப்பார்த்தான். இதோ அவள் குஷ்டம்பிடித்தவள்.

௰௧. அப்பொழுது ஆரோன் மோசேயோடே சொன்னதாவது; ஆ, என்னுடையவனே! நாங்கள் பயித்தியமாய்ச்செய்த இந்தப் பாவத்தை எங்கள்மேலே சுமத்தாதிரும்.

௰௨. தன்தாயின்கர்ப்பத்திலிருந்து புறப்படுகையில் பாதிமாம்சம் அழுகியிருக்கிற சாப்பிள்ளையைப்போல அவள் இராதிருப்பாளாகவென்றான்.

௰௩. அப்பொழுது மோசே ஆ, பராபரனே! இவளைச் சுகமாக்குமென்று கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்.

௰௪. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே அவளதகப்பன் அவளமுகத்திலே காறித்துப்பினதுண்டானால், அவள் ஏழுநாள் வெட்கப்படவேண்டாமோ! அவள் * ஏழுநாள் பாளயத்துக்குப்புறம்பே அடைக்கப்பட்டிருந்து பிற்பாடு சேர்க்கப்படக்கடவளென்றார்.
* ௩. மோசே. ௰௩, ௩.

௰௫. அப்படியே மிரியாம் ஏழுநாள் பாளயத்துக்குப் புறம்பே அடைக்கப்பட்டிருந்தாள். மிரியாம் சேர்க்கப்படுமட்டும் ஜனம் பயணம்போகாதிருந்தது.

௰௬. பிற்பாடு ஜனம் ஆசரோத்திலிருந்து புறப்பட்டுப் பாரான் வனாந்தரத்திலே பாளயமிறங்கிற்று.

## ௰௩. அதிகாரம்.

[(௧) தேசத்தைப் பார்வையிட அனுப்பப்பட்ட வேவுகாரரின்பெயர்கள். (௰௭) அவர்களுக்குச்சொல்லிய கட்டளைகள். (௨௧). அவர்கள் செய்தவைகள். (௨௬) அவர்கள் அறிவித்தசெய்திகள்.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. நாமிஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்குங் கானான்தேசத்தைச் சோதித்துப்பார்க்கிறதற்கு மனிதரையனுப்பு அவர்களுடைய பிதாக்களின் ஒவ்வொரு கோத்திரத்திலே ஒவ்வொரு பிரபுக்களாகிய மனிதரையனுப்பக்கடவீர்களென்றார்.

௩. அப்படியே மோசே கர்த்தருடைய வாக்கின்படியே அவர்களைப்பாரான்வனாந்தரத்திலிருந்தனுப்பினான். அந்தமனிதரெல்லாரும் இஸ்ரவேல்புத்திரரில் தலைவரானவர்கள்.

௪. அவர்கள் நாமங்களாவன, ரூபேன் கோத்திரத்திலே சக்கூரின்குமாரன் சமுமுவா.

௫. சிமியோன் கோத்திரத்திலே ஓரியின் குமாரன் சாப்பாத்.

௬. யூதாகோத்திரத்திலே எப்புனேயின் குமாரன் காலேப்.

௭. இசக்கார் கோத்திரத்திலே யோசேப்பின்குமாரன் இகேயால்.

௮. எப்பிராயீம் கோத்திரத்திலே நூனின் குமாரன் ஓசேயா.

௯. பெஞ்சமீன் கோத்திரத்திலே ரப்பூவின் குமாரன் பலதி.

௰. செபுலோன் கோத்திரத்திலே சோதியின்குமாரன் காதியேல்.

௰௧. யோசேப்பின் கோத்திரத்திற் கடுத்த மனாசே கோத்திரத்திலே சூசின் குமாரன் காதி.

௰௨. தாண் கோத்திரத்திலே கெமலியின் குமாரன அம்மியேல.

௰௩. ஆசேர் கோத்திரத்திலே மிகவேலின் குமாரனசேத்தூர்.

௰௪. நவுதலிகோத்திரத்திலே வொப்பெசியின்குமாரனநாகெபி.

௰௫. காத்கோத்திரத்திலே மாகியினகுமாரனகூவேல.

௰௬. இவைகள தேசத்தைச சோதித்துப பார்கக மோசேஅனுப்பினமனிதரினநாமங்கள். நூனின குமாரனாகிய ஓசேயாவுக்கோ வெனறால, யோசே யோசுவாவெனறு பேரிட்டான.

௰௭. அவர்களைமோசேகானானதேசத்தைச் சோதித்தறிய அனுப்பி அவர்களோடே சொனனதாவது; நீஙகள இப்படித்தெற்காகப்போய மலைத்தேசத்திலேறி,

௰௮. தேசமெப்படிககொத்தது! அதிலே குடியிருக்கிற சனம்பலத்ததோ! பலமற்றதோ! கொஞ்சமோ! அநேகமோ!

௰௯. அவர குடியிருக்கிறதேசம எபபடியிருக்கும்! அது நலலதோ! ஆகாததோ! அவர்குடியிருக்கிற ஊர்கள எப்படியிருக்கும்! அவைகள பாளயஙகளோ! கோட்டைகளோ!

௨௰. நிலம என்னமாயிருக்கும்! அதுபுஷ்டியோ! இளப்பமோ! அதில விருட்சஙகள உண்டோ! இலலையோ வெனறுபார்த்து மனதிட்டமாயிருந்து தேசத்தினகனிகளிலே சிலவற்றை யறுத்துககொணடு வாருஙகளெனறான. அந்தநாளகளோவெனறால, திராட்சிகளுடைய முதறகனிகளின நாள்களாயிருந்தன.

௨௧. அவர்களபோய்ஏறிச சீன்வனாந்தரந் துவககி, ஆமாத்திறகுப போகிறவழியாகிய ரேகொப்மட்டுந தேசத்தைச சோதித்துப பார்த்து,

௨௨. தெறகேயுமபோய் எபிரோனமட்டும்வந்தார்கள. அஙகே ஏனாககினகுமாரனாகிய அகிமானும சேசாயுந தலமாயுமிருந்தார்கள. எபிரோனேவெனில, எகிப்தினபட்டணமாகிய சோவானகட்டப்பட்ட ஏழு வருஷத்திறகுமுனனே கட்டப்பட்டது.

௨௩. பிறபாடு எஸ்கொல பள்ளத்தாககுமட்டும்வந்து அஙகே ஒரே திராட்சககுலையுள்ள ஒருகொடியையறுத்தார்கள. அதை இரணடுபேர் ஒருதடியிலே தூககிககொணடுபோனார்கள. மாதளமபழஙகளிலும அத்திப்பழஙகளிலும சிலவற்றை யறுத்துககொணடுபோனார்கள.

௨௪. இஸ்ரவேலபுத்திரர் அஙகே அறுத்த திராட்சக குலையைத்தொட்டு அவவிடம எஸ்கொல பள்ளத்தாக கெனனப்பட்டது.

௨௫. அவர்கள தேசத்தைச சோதித்துப பார்த்து நாறபதுநாளமுடிவிலேதிருமபி,

௨௬. பாரானவனாந்தரத்திலிருக்கிற காதேசுக்குவந்து, மோசே ஆரோன இஸ்ரவேலபுத்திரரின எலலாசசபையினிடத்திலுஞ் சேர்ந்து அவர்களுக்குஞ சபையினதத்திறகுமமறுசெய்தியையறிவித்து அவர்களுக்குத் தேசத்தின கனிகளைககாணபித்து,

௨௭. அவனுககு விவரித்துசசொனனதாவது; நீர் எஙகளையனுப்பினதேசத்திறகுநாங்கள்போயவந்தோம. * அதுபாலுந்தேனும ஓடுகிறதேசந்தான. இது அதினுடையகனி.
* ௨. மோசே. ௩, ௮.

௨௮. ஆனால தேசத்திலே குடியிருக்கிற சனம பலத்ததும பட்டணஙகள அரணிப்பானவைகளும மிகவும பெரியவைகளுமாயிருககினறன. அஙகே ஏனாககினகுமாரரையுங்கணடோம.

௨௯. அமலேககியர் தெனபுறமானதேசத்திலேகுடியிருககிறார்கள. ஏத்தியரும எபூசியரும எமோரியரும மலைசசீமையிலே குடியிருககிறார்கள. கானானியரோவெனறால கடலண்டையிலும யோர்தானண்டையிலுங குடியிருககிறார்களெனறார்கள.

௩௰. அப்பொழுது காலேப் மோசேககு முனபாகச சனத்தையமர்த்தி, ஏறவே ஏறிப்போய அதைச சுதந்தரிககக்கடவோம், ஏனெனில அதை நாம கட்டிககொணடுசெயிககவேசெயிப்போமெனறான.

௩௧. அவனோடேகூட ஏறிப்போயவந்தமனிதரோவெனறால, நாமஅந்தச்சனத்திறகெதிராய் ஏறிப்போகக்கூடாது. ஏனெனில, அதுநமமைப்பார்ககிலும பலத்திருக்கிறதெனறுசொலலி,

௩௨. தாஙகள சோதித்துப்பார்த்த தேசத்திறகு இஸ்ரவேல புத்திரருககுளளே அவதூறதியைப்பிறககப்பணணி, நாஙகளசோதித்தறியும்படிககுக் கடந்துவந்த அந்தத் தேசந்தனகுடிகளைப பட்சிககிறதேசமானது. நாஙகள அதிலே கணடசனமெலலாம உயர்ந்தமனிதர்.

௩௩. அஙகேஇராட்சதர்சந்ததியான ஏனாக்கினகுமாரராகிய இராட்சதரையுங கணடோம. நாஙகளஎஙகளபார்வைககுக கிளிகளைப்போலிருந்தோம. அப்படியேஅவர்கள பார்வைககுமிருந்தோமெனறார்கள.

## ௰௪. அதிகாரம்.

[(௧) செய்தியைககேட்டுச சனம மொறுமொறுத்தது. (௬) யோசுவாவும, காலேபும அதைநீககப பிரயாசபபட்டது. (௰௧) பராபரன அவர்களைப பயமுறுத்தினது. (௰௩) மோசே பராபரனைசசார்ந்து மனனிப்பையடைந்தது. (௨௬) மொறு மொறுத்தவர்கள தேசத்திறபோகாமல தடுககப்பட்டது. (௩௬) அந்ததேசத்தினபொயயான செயதிசொனனவர்கள வாதையினாலிறந்த

௪. (௪௰) பராபரனுடைய சித்தத்துக்கு விரோதமாய்த் தேசத்திற் பிரவேசிக்கத் தொடங்கினவர்கள் முறியடிக்கப்பட்டது.]

அப்பொழுது சபையெல்லாம் எழும்பிக் கூப்பிட்டுச் சனம் அன்று இராத்திரி அழுதுகொண்டிருந்தது.

௨. இஸ்ரவேல் புத்திரரெல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்தார்கள். சபையெல்லாம் அவர்களோடே சொன்னதாவது; எகிப்துதேசத்திலே செத்துப்போனோமானால் தாவிலை. அல்லது இந்த வனாந்தரத்திலே நாங்கள் செத்தால் தாவிலை.

௩. நாங்கள் பட்டயத்தால் மடியும்படிக்கும், எங்கள் பெண்சாதிகளுங் குழந்தைகளுங் கொள்ளையாகும்படிக்குங் கர்த்தர் எங்களை யிந்தத் தேசத்திற்குக் கொண்டுபோகிறதென்ன! எகிப்திற்குத் திரும்புகிறது எங்களுக்கு வாசியல்லவோவென்று,

௪. ஒருவரோடொருவர் ஒரு தலைவனை வைத்து எகிப்திற்குத் திரும்புவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.

௫. அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரருடைய சபைக்கூட்டம் எல்லாவற்றிற்கும் முன்பாகவும் முகங்குப்புற விழுந்தார்கள்.

௬. தேசத்தைச் சோதித்துப்பார்த்தவர்களில் நூனின் குமாரனாகிய யோசுவாவும் எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுந் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௭. இஸ்ரவேல் புத்திரரின் சபையோடெல்லாஞ் சொன்னதாவது; நாங்கள் சோதித்துப்பார்க்கக் கடந்துவந்த தேசம் மகா நல்ல தேசம்.

௮. கர்த்தர் நம்மேலே பிரியமாயிருந்தால் அவர் நம்மைப் பாலுந் தேனும் ஓடுந்தேசமாகிய அந்தத் தேசத்திலே கொண்டுபோய் அதை நமக்குக் கொடுப்பார்.

௯. கர்த்தருக்கு விரோதமாக மாத்திரங் கலகம்பண்ணீர்களாக. * நீங்கள் அந்தத் தேசத்தின் சனத்திற்குப் பயப்படீர்களாக. ஏனென்றால், நமக்கு அவர்கள் அப்பத்திற்குச் சரி. அவர்களுடைய நிழல் அவர்கள்மேலிருந்து விலகிற்று. நம்மோடேயென்றால் கர்த்தரிருக்கிறார். அவர்களுக்குப் பயப்படீர்களாகவென்றார்கள். * ௫. மோசே. ௨௰, ௩.

௰. அப்பொழுது சபையெல்லாம் அவர்களைக் கல்லெறியவேண்டுமென்றது. ஆனால் * கர்த்தருடைய மகிமையாசரிப்புக் கூடாரத்தில் இஸ்ரவேல் புத்திரரெல்லாருக்கும் முன்பாகவுங் காணப்பட்டது. * ௨. மோசே. ௰௬, ௰.

௰௧. கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது; எந்தமட்டும் இந்தச் சனம் நமக்குக் கோபமூட்டாக்கும்! எந்த மட்டும் அது நாம் தன் நடுவிலே செய்த சகல அடையாளங்களைக் கண்டும் நம்மை விசுவாசியாதேபோம்.

௰௨. நாம் அதைப் பெருவாரிக் காய்ச்சலால் அடித்துச் சுதந்தரத்திற்குப் புறம்பாக்கிப்போட்டு * உன்னையதைப் பார்க்கிலும் பருத்ததும் பலத்ததுமான சாதியாக்குவோமென்றார். * ௨. மோசே. ௩௨, ௰.

௰௩. மோசே கர்த்தரோடே சொன்னதாவது; * அப்பொழுது எகிப்தியர் அதைக் கேட்பார்கள். ஏனென்றால், உம்முடைய வல்லமையினாலே இந்தச் சனத்தை யவர்கள் நடுவிலிருந்து ஏறிவரப்பண்ணினீர். * ௨. மோசே. ௩௨, ௰.

௰௪. ஆகையாற் கர்த்தராகிய தேவரீர் இந்தச் சனத்தின் நடுவேயிருக்கிறதையுங் கர்த்தராகிய தேவரீர் முகமுகமாய்த் தரிசனையாகிறதையும் உம்முடைய மேகம் இவர்கள்மேல் நிற்கிறதையுந் தேவரீர் பகலில் மேகத் தூணிலும் இரவில் அக்கினித் தூணிலும் இவர்கள்முன் நடக்கிறதையுங் கேட்டிருக்கிற இந்தத் தேசத்தின் குடிகளோடேயவர்கள் என்னசொல்லுவார்கள்!

௰௫. இந்தச் சனத்தையோரே மனிதனைப் போலக் கொன்றீரானால் அப்பொழுது உம்முடைய கீர்த்தியைக் கேட்டிருக்கிற புறசாதியார்,

௰௬. கர்த்தர் அந்தச் சனத்திற்கு ஆணையிட்டிருந்த தேசத்திலே அதைக் கொண்டுபோய் விடக்கூடாதே போனபடியினாலே அவர்களை வனாந்தரத்திலே கொலைசெய்தாரென்பார்கள்.

௰௭. இப்பொழுதும் * கர்த்தர் நீடிய சாந்தமும் மகா கிருபையுமுள்ளவரென்றும் அவர் அக்கிரமத்தையும் மீறுதலையும் மன்னிக்கிறவர். அவர் குற்றமுள்ளவனைக் குற்றமற்று நீங்க ஒட்டாமற் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலே மூன்றும் நாலாந் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவரென்றும் நீர் சொன்னபடியே,

* ௨. மோசே. ௩௪, ௬. ௭.

௰௮. ஆண்டவருடைய பலம் பெரிதாயிருக்கக் கடவதே!

௰௯. உம்முடைய கிருபையினுடைய மகத்துவத்தின்படியேயும் நீர் எகிப்து துவக்கி இவ்விடமட்டும் இந்தச் சனத்திற்கு மன்னித்து வந்ததின்படியேயும் இந்தச் சனத்தின் அக்கிரமத்தை மன்னியுமென்றான்.

௨௰. அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது; உன் வார்த்தையின்படியே மன்னித்தோம்.

௨௧. ஆனால் பூமியெல்லாங் கர்த்தருடைய மகிமையினாலே நிறையப்படுமென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோம்.

௨௨. அதேதென்னில், நம்முடைய மகிமையையும் நாம் எகிப்திலும் வனாந்தரத்திலுஞ் செய்த நம்முடைய அடையாளங்களையுங் கண்டிருந்தும் நம்முடைய சத்தத்திற்குக் கீழ்ப்படியாமல், இதனோடே பத்து முறை நம்மைப் பரிட்சைபார்த்த மனிதரிலொருவரும்,

௨௩. * நாம் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தைக் காண்பதில்லை, நமக்குக் கோபமுண்டாக்கினவர்களில் ஒருவரும் அதைக் காண்பதில்லை. * ௨௬, ௬௫. சங்கீதம். ௯௫, ௰௧.

௨௪. நம்முடைய தாசனாகிய காலேபிடத்திலோவென்றால், வேறே ஆவியிருக்கிறபடியினாலும் அவன் நம்மை உத்தமமாய்ப் பின்பற்றிவந்தபடியினாலும் நாம் அவனை யவன் போய்வந்த தேசத்திலே வந்து சேரப்பண்ணுவோம். அவன் வித்தார் அதைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பார்கள்.

௨௫. அமலேக்கியருங், கானானியரும் பள்ளத்தாக்கிலே குடியிருக்கிறபடியினாலே நீங்கள் நாளைத்திரும்பிக்கொண்டு நாணற் கடலுக்குப்போகிற வழியாகிய வனாந்தரத்திற்குப் பயணம் பண்ணுங்களென்றார்.

௨௬. பின்னையுங் கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும்பேசிச் சொன்னதாவது;

௨௭. நமக்கு விரோதமாய் முறுமுறுக்கிற இந்தப் பொல்லாத சபையோடே எந்தமட்டுமிருப்போம்! இஸ்ரவேல் புத்திரர் நமக்கு விரோதமாய் முறுமுறுக்கிற முறுமுறுப்புகளைக் கேட்டோம்.

௨௮. நீ அவர்களோடே சொல்லவேண்டியதேதென்னில், நீங்கள் நம்முடைய செவிகள் கேட்கச் சொன்ன பிரகாரமாக உங்களுக்குச் செய்வோமென்கிறதை நம்முடைய ஜீவனைக் கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தர் உரைக்கிறார்.

௨௯. இந்த வனாந்தரத்திலுங்கள் பிரேதங்கள் விழும். உங்களிலிருபது வயது முதற்கொண்டு மேல்தரமாயிருந்து உங்களுடைய எல்லாத்தொகைக்குள்ளும் எண்ணப்பட்டு நமக்கு விரோதமாய் முறுமுறுத்திருக்கிற அனைவரின் பிரேதங்களுந்தானே.

௩௰. எப்புன்னேயின் குமாரன் காலேபையும் நூனின் குமாரன் யோசுவாவையுந் தவிர மற்றவர்களாகிய நீங்கள் நாமுங்களைக் குடியேற்றுவோமென்று நம்முடைய கரத்தையெடுத்த தேசத்திலே வாராதிருப்பீர்கள்.

௩௧. கொள்ளையாவார்களென்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளையோவென்றால், நாம் அதிலே சேரப்பண்ணுவோம். அவர்கள் நீங்கள் அசட்டைபண்ணின தேசத்தையறிந்துகொள்ளுவார்கள்.

௩௨. உங்கள் பிரேதங்களோவென்னில் இந்த வனாந்தரத்திலே விழும்.

௩௩. அவைகள் வனாந்தரத்திலே விழுந்து தீருமட்டும் உங்கள் பிள்ளைகள் நாற்பது வருஷம் வனாந்தரத்திலே மேய்ப்பராயிருந்து நீங்கள் சோரம்போனதைச் சுமப்பார்கள்.

௩௪. நீங்கள் தேசத்தைச் சோதித்துப் பார்த்த நாற்பது நாளுடைய இலக்கத்தின்படியே நீங்கள் நாற்பது வருஷம் உங்கள் அக்கிரமங்களைச் சுமந்து நம்முடைய உடம்படிக்கைக்கு வந்த மாறுதலையுணருவீர்கள். ஒவ்வொரு நாள் ஒவ்வொரு வருஷமாகத்தானே.

௩௫. கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம். நமக்கு விரோதமாய்க் கூட்டங்கூடின இந்தப் பொல்லாதசபைக்கெல்லாம் இப்படியே செய்வோம். இந்த வனாந்தரத்திலே சரியாவார்கள் இங்கே சாவார்களென்று சொல்லென்றார்.

௩௬. தேசத்தைச் சோதித்துப் பார்க்க மோசேயால் அனுப்பப்பட்டுத் திரும்பிவந்து தேசத்திற்குத் துர்க்கீர்த்தியையுண்டாக்கி,

௩௭. சபையையெல்லாம் அவனுக்கு விரோதமாய் முறுமுறுக்கப்பண்ணின அந்த மனிதர் கர்த்தருக்கு முன்பாக வாதையினாலே செத்தார்கள்.

௩௮. தேசத்தைச் சோதித்துப் பார்க்கப் போன அந்த மனிதரில் நூனின் குமாரன் யோசுவாவும் எப்புன்னேயின் குமாரன் காலேபுமோவென்னில், உயிரோடிருந்தார்கள்.

௩௯. மோசே இந்த வார்த்தைகளை இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடுஞ் சொன்னபிறபாடு சனம் மிகவுந் துக்கித்தது.

௪௰. அதிகாலமே எழுந்திருந்து இதோ, நாங்கள் கர்த்தர் சொன்ன இடத்திற்கேறிப் போவோம். ஏனென்றால் பாவஞ்செய்தோமென்று சொல்லிப் பர்வதத்தின் கொடுமுடியிலேறினார்கள்.

௪௧. மோசேயோவென்றால் சொன்னதாவது; நீங்கள் இப்படிக் கர்த்தருடைய வார்த்தையை மீறுவானேன்! அது உங்களுக்கு வாய்க்காது.

௪௨. நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக முறியடிக்கப்படாதபடிக்கு ஏறாதிருப்பீர்களாக. ஏனென்றால் கர்த்தர் உங்கள் நடுவிலிரார்.

௪௩. ஏனென்றால், அமலேக்கியருங் கானானியரும் அங்கே உங்களுக்கு முன்னேயிருக்கிறார்கள். பட்டயத்தினாலே விழுவீர்கள். ஏனென்னில் நீங்கள் கர்த்தரைவிட்டுப் பின்வாங்கினபடியினாலே கர்த்தர் உங்களோடிருப்பதில்லையென்றான்.

௪௪. அவர்களோவென்றால் பர்வதத்தின் கொடுமுடியில் ஏறத்துணிவாயேகினார்கள். ஆனால் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியும் மோசேயும் பாளயத்தைவிட்டசைந்ததில்லை.

செய்யாமல் ஒரு தப்பிதம் பண்ணினீர்களா னால்,

௨௪. அப்பொழுது சபையின் கண்களுக்கு மறைவாக யாதொன்றைத் தப்பிதமாகச் செய்யப்பட்டதுண்டாகிற் சபையெல்லாங் கர்த்தருக்குக் காரிய வாசனைக்கென்று சர்வாங்கதகனமாக மாடுகளிலொரு காளையொ ருத்தையும் முறைமைநியாயத்தின்படியிருக்கிற அதின் காணிக்கையையும் அதின் ஊற்று தலையும் பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையுஞ் செலுத்துவதாக.

௨௫. அதினாலே ஆசாரியன் இஸ்ரவேல் புத்திரரின் சபையனைத்திற்காகவும் பாவநிவிர்த்தியையுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவர்களுக்கு மன்னிக்கப்படும். ஏனெனில், அது ஒரு தப்பிதமாயிருந்தது. அவர்கள் அதினிமித்தங் கர்த்தருக்குத் தகனமான தங்கள் படைப்பையும் பாவம் போக்குந் தங்கள் பலியையுங் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்தார்களே.

௨௬. ஆகையால், அது இஸ்ரவேலின் புத்திரரின் சபையனைத்துக்கும் அவர்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்கும் மன்னிக்கப்படும். ஏனென்றால் சனத்திற்கெல்லாம் அது தப்பிதத்தினாலே வந்தது.

௨௭. ஒரே ஆத்துமா தப்பிதத்தினாலே பாவஞ்செய்ததேயானால் ஒருவயதான வெள்ளாட்டைப் பாவம் போக்கும் பலியாகச் செலுத்துவானாக.

௨௮. அப்பொழுது கர்த்தருக்கு முன்பாக அவன் பாவத்தை நீக்கும்படிக்கு ஆசாரியன் தப்பிதத்தினாலே பாவஞ்செய்த அந்த ஆத்துமாவுக்காகப் பாவநிவிர்த்தியையுண்டாக்கக்கடவன். அப்பொழுது அவனுக்கு மன்னிக்கப்படும்.

௨௯. தப்பிதஞ்செய்தவனுக்காக இஸ்ரவேல் புத்திரராகிய உங்களில் பிறந்தவனுக்கும் உங்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்கும் ஏக நியாயப்பிரமாணமிருப்பதாக.

௩௰. ஆனாலே தேசத்திலே பிறந்தவர்களிலாகிலும் பரதேசிகளிலாகிலுஞ்சரி. எந்த ஆத்துமா ஓங்கினகையால் யாதொன்று செய்தாரோ அவன் கர்த்தனை நிந்தித்தான். அந்த ஆத்துமா தன் சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டுபோகவேண்டும்.

௩௧. ஏனென்றால் கர்த்தரின் வார்த்தையை யசட்டைபண்ணி அவர் கற்பனையை முறித்துவிட்டான். அப்படிக்கொத்த ஆத்துமா அறுப்புண்ணவே அறுப்புண்டுபோகவேண்டும். அவன் அக்கிரமம் அவன்மேலிருக்கு மென்றுசொல்லினார்.

௩௨. இஸ்ரவேலின் புத்திரர் வனாந்தரத்திலிருக்கையில், ஓய்வுநாளில் விறகுகளைப் பொறுக்குகிற ஒரு மனிதனைக் கண்டுபிடித்தார்கள்.

௩௩. அவனை விறகுகளைப் பொறுக்குகிறவனாகக் கண்டுபிடித்தவர்கள் அவனை மோசே ஆரோன் என்றவர்களண்டைக்கும் சபையனைத்தண்டைக்குங் கொண்டுவந்தார்கள்.

௩௪. * அவனுக்குச் செய்யவேண்டியதென்னவென்று தீர்க்கமான உத்தரவில்லாதபடியினாலே அவனைக் காவலிலே வைத்தார்கள். * ௩. மோசே. ௨௪, ௰௨.

௩௫. கர்த்தர் மோசேயுடனே அந்த மனிதன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். சபையெல்லாம் அவனைப் பாளயத்திற்குப் புறம்பே கல்லெறிவதாக வென்றார்.

௩௬. அப்பொழுது சபையெல்லாங் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்க் கல்லெறிந்தார்கள். அவன் செத்தான்.

௩௭. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது;

௩௮. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்கள் தங்கள் தலைமுறைகளிலே தங்களுக்குத் * தங்கள் வஸ்திரங்களின் ஓரங்களிலே தொங்கலையுண்டாக்கி ஓரத்தின் தொங்கலிலே இளநீலமான கயிற்றைப் போடவேண்டுமென்று அவர்களோடே சொல்லு. * ௫. மோசே. ௨௨, ௰௨. மத்தேயு. ௨௩, ௫.

௩௯. நீங்கள் பின்பற்றிச் சோரம்போகிற உங்களிருதயமும் உங்கள் கண்களும் போகும் போக்கை நோக்கிப்போகாமல் அந்தக் கயிற்றைப் பார்த்துக் கர்த்தரின் கற்பனைகளையெல்லாம் நினைத்து அவைகளின்படியே செய்யும்படிக்கு அது அந்தத் தொங்கலில் உங்களுக்கிருக்கவேண்டும்.

௪௰. நீங்கள் நம்முடைய கற்பனைகளையெல்லாம் நினைத்து அவைகளின்படியே செய்து உங்கள் பராபரனுக்குப் பரிசுத்தராயிருக்கிறதற்காகத்தானே.

௪௧. நாம் உங்களுக்குப் பராபரனாயிருக்கும்படிக்கு உங்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர். நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்றுசொல்லினார்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) கோறாக், தாத்தான், அபீராம் என்றவர்களின் கலகம். (௨௰) மோசே சனங்களை அக்கலகக்காரருடைய கூடாரத்தை விட்டு நீங்கச் சொன்னது. (௩௧) கோறாக்கைப் பூமி விழுங்கியதும், மற்றவர்களை அக்கினி பட்சித்ததும், (௩௬) பரிசுத்த ஆசியத்திற்குத் தூபகலசங்கள் வைக்கப்பட்டது. (௪௧) மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்த ௰௪ ஆயிரம் பேர் வாதையால் கொல்லப்பட்டது. (௪௬) ஆரோன் தூபத்தினாலே அவ்வாதையை நீக்கியது.]

லேவிக்குப் பிறந்த கேகாத்தின் குமாரனான இத்செயாரின் மகன் * கோருகோவென்றவன், எலியாபின் குமாரராகிய தாத்தானையும் அபிராமையும் ரூபேன் புத்திரரிற் பேலேத்தின் குமாரனாகிய ஓனையுங் கூட்டிக்கொண்டு, * ௨௬, ௯. யூதா. ௰௧.

௨. இஸ்ரவேல் புத்திரரின் சபைக்குத் தலைவருஞ் சபையிலே அழைக்கப்பட்டவர்களும் பேர்பெற்ற மனிதருமாகிய இருநூற்றைம்பதுபேரோடுங் கூடமோசேக்கு முன்பாக எழும்பி,

௩. மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய்க் கூட்டங்கூடி அவர்களுடனே, நீங்கள் மிஞ்சிச்செய்கிறீர்கள். என்னென்றால் சபையாரெல்லாரும் ஏகமாய்ப் பரிசுத்தமானவர்கள். கர்த்தர் அவர்கள் நடுவிலிருக்கிறாரே; பின்னையேன் உங்களைக் கர்த்தருடைய சபையின்மேல் உயர்த்துகிறீர்களென்றார்கள்!

௪. மோசே இதைக் கேட்டபொழுது, * முகங்குப்புற விழுந்தான். * ௰௪, ௫.

௫. பிறபாடு அவன் கோருகோடும் அவனுடைய எல்லாக் கூட்டத்தோடும் பேசிச் சொன்னதாவது; நாளைக்குக் கர்த்தர் தம்முடையவனென்றுந் தம்மண்டையிலே சேரத்தாம் கட்டளையிட்ட பரிசுத்தவானென்றுமறியப் பண்ணுவார். அப்பொழுது எவனைத் தெரிந்துகொள்ளுவாரோ அவனைத் தம்மண்டையிற் சேரக்கட்டளையிடுவார்.

௬. ஒன்றுசெய்யுங்கள். கோருகே! அவனுடைய எல்லாக் கூட்டமுமானவர்களே! நீங்கள் தூபகலசங்களை யெடுத்துக்கொண்டு,

௭. நாளைக்கு அவைகளில் அக்கினிபோட்டு அவைகளிற் கர்த்தருக்கு முன்பாகத் தூபவர்க்கம் போடுங்கள். அப்பொழுது கர்த்தர் எவனைத் தெரிந்துகொள்ளுவாரோ அவன் பரிசுத்தவானாயிருப்பான். லேவியின் புத்திரராகிய நீங்கள் மிஞ்சிப்போகிறீர்களென்றான்.

௮. பின்னையும் மோசே கோருகோடே சொன்னதாவது; லேவியின் புத்திரரே! கேளுங்கள்.

௯. கர்த்தருடைய வாசஸ்தலத்தின் பணிவிடை வேலையைச் செய்யவுஞ் சபையாரின் முன்னேயவர்களுக்காகச் சேவிக்கவும் உங்களைத் தம்மண்டையிலே சேரப்பண்ணும்படிக்கு இஸ்ரவேலின் பராபரன் இஸ்ரவேல் சபையிலுங்களைப் பிரித்தெடுத்தது,

௰. இப்படியே அவருன்னையும் உன்னோடேகூட லேவியின் புத்திரராகிய உன்னுடைய எல்லாச் சகோதரரையுஞ் சேரப்பண்ணினதும் உங்களுக்குக் கொஞ்சக்காரியமோ! இப்பொழுது ஆசாரியப்பட்டத்தையுந் தேடுகிறீர்களோ!

௰௧. ஆகையால் நீயும் உன்கூட்டத்தார் அனைவருங் கர்த்தருக்கு விரோதமாகக் கூட்டங்கூடினீர்கள். * ஆரோனுக்கு விரோதமாக நீங்கள் முறுமுறுக்கிறதற்கு அவனெம்மாத்திரமென்றான். * ௨. மோசே. ௰௬, ௭.

௰௨. பிறபாடு மோசே எலியாபின் குமாரராகிய தாத்தானையும் அபிராமையும் அழைத்தனுப்பினான். ஆனாலவர்கள் சொன்னதாவது; நாங்கள் வருகிறதில்லை.

௰௩. நீ எங்களை இந்த வனாந்தரத்திலே கொன்றுபோட எங்களைப் பாலுந்தேனும் ஓடுகிற தேசத்திலிருந்து தேடிவரப்பண்ணினது கொஞ்சக்காரியமென்று சொல்லி எங்கள்மேலதிகாரத்தனமும் பண்ணவே பண்ணுவாயோ!

௰௪. நீ எப்படி எங்களைப் பாலுந்தேனும் ஓடுகிற ஒருதேசத்திற்குக் கொண்டுவந்து எங்களுக்கு நிலங்களையுந் திராட்சத்தோட்டங்களையுஞ் சுதந்தரமாகக் கொடுத்தாய்! இந்த மனிதருடைய கண்களைப் பிடுங்குவாயோ! நாங்கள் வருகிறதில்லையென்றார்கள்.

௰௫. அப்பொழுது மோசே மிகுதியுங் கோபமுண்டாகிக் கர்த்தருடனே, அவர்கள் காணிக்கையைப் பாராதிருப்பீராக. நான் அவர்களுடையதிலொரு கழுதையையாகிலும் எடுத்துக்கொண்டதுமில்லை. அவர்களில் ஒருவனுக்குப் பொல்லாப்புச் செய்ததுமில்லையென்றான்.

௰௬. பிறபாடு மோசே கோருகோடே சொன்னதாவது; நீயும் உன்னுடைய எல்லாக் கூட்டத்தாருமாய் நாளைக்குக் கர்த்தருக்கு முன்பாக வந்திருங்கள். நீயும் அவர்களும் ஆரோனுமாயத்தானே.

௰௭. நீங்கள் அவரவர் தங்கள் தூபகலசத்தையெடுத்து அவைகளின்மேலே தூபவர்க்கத்தைப் போட்டு அவரவர் தங்கள் தூபகலசங்களை இருநூற்றைம்பது தூபகலசங்களாகக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவாருங்கள். நீயும் ஆரோனும் ஒவ்வொருவன் தன் தன் தூபகலசத்தைக் கொண்டுவாருங்களென்றான்.

௰௮. அப்படியே அவரவர் தங்கள் தூபகலசங்களையெடுத்து அவைகளில் அக்கினியையுந் தூபவர்க்கத்தையும் போட்டு ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்கு முன்பாக வந்து நின்றார்கள். மோசேயும் ஆரோனும் அங்கே நின்றார்கள்.

௰௯. கோருகோவெனில், இவர்களுக்கு விரோதமாகச் சபையையெல்லாம் ஆசரிப்புக் கூடாரவாசலுக்கு முன்பாகக் கூடிவரப்பண்ணினான். ஆனால் * கர்த்தருடைய மகிமை சபைக்கெல்லாங் காணப்பட்டது.

* ௰௪, ௰.

உ௰. கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசி,

உக. இந்தச் சபையின் நடுவிலிருந்து பிரிந்துபோங்கள். க்ஷணப்பொழுதிலே அவர்களை நிர்மூலமாக்குவோமென்றார்.

உஉ. அப்பொழுது அவர்கள் முகங்குப்புற விழுந்து: சகல மாம்சத்தினுடைய ஆவிகளுக்கும் தேவனாகிய பராபரனே! ஒரு மனிதன் பாவஞ் செய்யுமளவில் சபையின்மேலெல்லாம் கடுங்கோபமடைவீரோ! என்றார்கள்.

உ௩. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே;

உ௪. கோரேச், தாத்தான், அபீராம் குடியிருக்கிற ஸ்தலத்தைச் சுற்றிலுமிருந்து விலகிப்போங்களென்று சபையோடே சொல்லென்றார்.

உ௫. அப்பொழுது மோசே எழுந்திருந்து தாத்தான் அபீராமென்றவர்களிடத்திலே போனான். இஸ்ரவேலின் மூப்பர் அவர்களுக்குப் பின்சென்றார்கள்.

உ௬. அவன் சபையுடனே, இந்த ஆகாத மனிதருடைய எல்லாப் பாவங்களிலும் நீங்கள் வாரிக்கொள்ளப்படாதபடிக்கு அவர்கள் கூடாரங்களை விட்டுவிலகி, அவர்களுக்குண்டான தொன்றையுந் தொடாதேபோங்களென்றான்.

உ௭. அப்படியே அவர்கள் கோரேச் தாத்தான் அபீராம் குடியிருந்த ஸ்தலத்தைச் சுற்றிலுமிருந்து விலகிப்போனார்கள். தாத்தானும் அபீராமுமோவென்றால், வெளியே வந்து தங்கள் பெண்சாதி பிள்ளைகள் குழந்தைகளோடுந் தங்கள் கூடாரங்களின் வாசற்படியிலே நின்றுகொண்டார்கள்.

உ௮. அப்பொழுது மோசே சொன்னதாவது; இந்தக் கிரியைகளையெல்லாஞ் செய்யக் கர்த்தர் என்னை யனுப்பினாரென்றும் அவைகளை நான் என்மனதின்படியே செய்யவில்லையென்றும் நீங்கள் எதினால் அறிவீர்களென்றால்,

உ௯. இவர்கள் சகல மனிதரும் சாகிறபடிச் செத்து சகல மனிதரும் விசாரிக்கப்படுகிறபடி விசாரிக்கப்பட்டால் கர்த்தர் என்னை யனுப்பினதில்லை.

௩௰. கர்த்தர் புதுமையான காரியத்தைச் சிருஷ்டிப்பதினாலே பூமிதன் வாயைத் திறந்து அவர்கள் உயிரோடே பாதாளத்திலிறங்க அவர்களையும் அவர்களுக்குண்டான யாவையும் விழுங்கிப்போட்டதேயானால் இந்த மனிதர் கர்த்தரைத் தூஷணித்தார்களென்றதை யறிவீர்களென்றான்.

௩௧. அவன் இந்த வார்த்தைகளையெல்லாஞ் சொல்லித் தீர்ந்தபொழுது சம்பவித்ததென்னவென்றால், * அவர்களிருந்த பூமி பிளந்து,

௩௨. பூமிதன் வாயைத் திறந்து அவர்களையும் அவர்கள் வீடுகளையுங் கோரேயுடனிருந்த எல்லா மனிதரையும் எல்லா ஆஸ்தியையும் விழுங்கிவிட்டது.

௩௩. அவர்கள் தங்களுக்குண்டான தெல்லாவற்றோடுங்கூட உயிரோடே பாதாளத்திலிறங்கினார்கள். பூமி அவர்கள்மேலே மூடிக்கொண்டது. இப்படிச் சபையின் நடுவிலிருந்து அழிந்தார்கள்.

௩௪. அவர்களைச் சுற்றிலுமிருந்த இஸ்ரவேலரெல்லாரும் அவர்கள் கூக்குரலைக் கேட்டுப் பூமி நம்மையும் விழுங்குமோவென்று ஓடிப்போனார்கள்.

௩௫. அக்கினியுங் கர்த்தரிடத்திலிருந்து புறப்பட்டுத் தூபங்காட்டின இருநூற்றைம்பதுபேரையும் பட்சித்தது.

௩௬. கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௩௭. அக்கினிக்குள்ளாகப்பட்ட தூபகலசங்களையெடுத்து அவைகளிலிருக்கிற அக்கினியைப் பாலேகொட்டிப்போட ஆசாரியனான ஆரோனின் குமாரனாகிய எலெயாசாருக்குச் சொல்லு. ஏனெனில், அவைகள் பரிசுத்தமாயின.

௩௮. தங்கள் ஆத்துமாக்களுக்கு விரோதம் பண்ணின அந்தப் பாவிகளின் தூபகலசங்களைப் பலிபீடத்தை மூடத்தக்க தகடையானத் தகடுகளாக அடிக்கக்கடவர்கள். ஏனெனில், அவர்கள் கர்த்தருக்குமுன்பாக அவைகளைக் கொண்டுவந்ததினாலே அவைகள் பரிசுத்தமாயின. அவைகள் இஸ்ரவேல் புத்திரருக்கு அடையாளமாவதாகவென்றார்.

௩௯. அப்படியே ஆசாரியனாகிய எலெயாசார் வெந்துபோனவர்கள் கொண்டுவந்திருந்த வெண்கலத் தூபகலசங்களையெடுத்து,

௪௰. * ஆரோனின் வித்தல்லாத ஒரு அந்நியன் கர்த்தருக்குமுன்பாகத் தூபங்காட்டுகிறதற்குச் சேராதபடிக்குங் கோரேயைப்போலும் அவன் கூட்டத்தாரைப்போலும் ஆகாதபடிக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கு நினைப்பூட்டாக அவைகளைக் கர்த்தர் மோசேயைக்கொண்டு தனக்குச் சொன்னபடியே பலிபீடத்தை மூடுந் தகடுகளாக அடிப்பித்தான். * ௩, ௰.

௪௧. மறுநாளிலே இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக முறுமுறுத்துக் கர்த்தரின் சனத்தைக் கொன்றுபோட்டீர்களென்றார்கள்.

௪௨. சபை மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாகக் கூடுகையிற் சம்பவித்ததென்னவென்றால், அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்திற்கு நேராக முகத்தைத் திருப்புகிறபொழுது இதோ, மேகம் அதைமூடிக் கர்த்தரின் மகிமை காணப்பட்டது.

* ௫. மோசே. ௰௪, ௬.

௪௩. மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக் கூடாரத்திற்கு முன்பாக வந்தார்கள்.

௪௪. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே பேசி,

௪௫. * இந்தச் சபையின் நடுவிலிருந்து விலகுங்கள். க்ஷணப்பிலே அவர்களை யதமாக்குவேனென்றார். அப்பொழுது முகங்குப்புற விழுந்தார்கள். * ௨௧, ௨௨. ௰௪, ௰௨.

௪௬. மோசே ஆரோனுடனே, நீ தூபகலசத்தை யெடுத்துப் பலிபீடத்திலிருக்கிற அக்கினியை யதில்வைத்து அதின் மேலே தூபவர்க்கம்போட்டுச் சீக்கிரமாய்ச் சபையண்டையிலேபோய் அவர்களுக்காகப்பாவ நிவிர்த்தியையுண்டாக்கு. ஏனென்றால் கர்த்தரின் சன்னிதியிலிருந்து கடுங்கோபம் புறப்பட்டது. வாதை துவக்கிறதென்றான்.

௪௭. மோசே சொன்னபடி ஆரோன் அதை யெடுத்துக்கொண்டு சபையின் நடுவிலோடினான். இதோ, சனத்தில் வாதை துவக்கியிருந்தது. அவன் தூபவர்க்கம்போட்டுச் சனத்திற்காகப் பாவ நிவிர்த்தியையுண்டாக்கி,

௪௮. செத்தவர்களுக்கும் உயிரோடிருக்கிறவர்களுக்கும் நடுவே நின்றான். அப்பொழுது வாதை நிறுத்தப்பட்டது.

௪௯. கோருகுடைய வர்த்தமானத்தினிமித்தஞ் செத்தவர்களைத்தவிர அந்தவாதையிலே செத்தவர்கள் பதினாலாயிரத்தெழுநூறுபேர்.

௫௰. ஆரோன் ஆசரிப்புக்கூடாரவாசலுக்கு மோசேயண்டையில் திரும்பிவந்தான். ஏனென்றால், வாதை நிறுத்தப்பட்டுப்போயிற்று.

## ௰௭. அதிகாரம்.

[(௧) கோத்திரத்துக்கோல்களுக்குள் ஆரோனுடைய கோல் துளிர்த்தது. (௰௧) அதுகலகக்காரருக்கு விரோதமான அடையாளமாக வைக்கப்பட்டது.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்களில் அவர்கள் பிதாக்களின் வீடுகளாகிய ஒவ்வொரு வீட்டினுடைய பிரபுவின் கையிலே ஒவ்வொருகோலாகப் பன்னிரண்டுகோலை வாங்கி அவனவன் கோலின்மேலே அவனவன் பெயரையெழுதி,

௩. லேவியினுடைய கோலின் மேலோ வென்றால், ஆரோனின் பெயரையெழுதக்கடவாய். ஏனென்றால், அவர்களுடைய பிதாக்களின் ஒவ்வொருவீட்டுத்தலைவனுக்காக ஒவ்வொருகோலிருக்கவேண்டும்.

௪. அவைகளை ஆசரிப்புக் கூடாரத்திலே நாம் உங்களைச் சந்திக்குந்தலமாகிய சாட்சிக்குமுன்பாக வைக்கக்கடவாய்.

௫. அப்பொழுது சம்பவிக்கிறதேதெனில், நாம் தெரிந்துகொள்பவனுடைய கோல் துளிர்க்கும். அப்படியே இஸ்ரவேல்புத்திரர் உங்களுக்கு விரோதமாக முறுமுறுக்கும் அவர்கள் முறுமுறுப்புகளை நம்மைவிட்டோயப்பண்ணுவோமென்றார்.

௬. இதைமோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னான். அப்பொழுது அவர்களுடைய பிரபுக்களெல்லாரும் அவர்கள் பிதாக்களின் ஒவ்வொருவீட்டுக்கு ஒவ்வொரு பிரபு அவனுக்கொவ்வொருகோலைப் பன்னிரண்டுகோலாகக்கொடுத்தார்கள். ஆரோனின்கோல் அவர்கள் கோல்களுக்குள்ளேயிருந்தது.

௭. அந்தக்கோல்களைமோசே சாட்சியின் கூடாரத்திலே கர்த்தருக்குமுன்பாக வைத்தான்.

௮. சம்பவித்ததேதெனில், மறுநாளிலே மோசே சாட்சியின் கூடாரத்திற்குட்பிரவேசித்தபொழுது, இதோ லேவியின்வீட்டிற்காக இருக்கிற ஆரோனின்கோல் துளிர்த்திருந்தது. அது துளிர்விட்டுப் பூப்பூத்து வாதுமப்பழங்களைக்கொடுத்தது.

௯. அப்பொழுது மோசே கர்த்தருக்குமுன்பாகவிருந்தவெல்லாக்கோல்களையும் வெளியே எல்லாஇஸ்ரவேல் புத்திரரண்டைக்குங்கொண்டுவந்தான். அவர்கள் கண்டு அவரவர் தங்கள் கோலை வாங்கிக்கொண்டார்கள்.

௰. அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே * ஆரோனின்கோல் கலகக்காரரான புத்திரருக்கடையாளமாகக் காக்கப்பட நீ அதைத் திரும்பச் சாட்சிக்குமுன்பாகக் கொண்டுபோய்வைத்து இப்படியே அவர்கள் சாவாதபடிக்கு அவர்கள் முறுமுறுப்புகளை நம்மைவிட்டு முடியப்பண்ணென்றார்.

* எபிரே. ௯, ௪.

௰௧. கர்த்தர் தனக்குக்கற்பித்த அந்தப்படியே மோசேசெய்தான்.

௰௨. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் மோசேயுடனே இதோமாண்டு அழிந்துபோகிறோம். நாங்களெல்லாரும் அழிந்துபோகிறோம்.

௰௩. கர்த்தரின் வாசஸ்தலத்திற்குச் சேரவேசெருங்கிறவனெல்லாருஞ் சாகிறான். நாங்கள் மாண்டுபோகிறதிலே சரியாகவேண்டுமோவென்றார்கள்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) ஆசாரியருக்கும் லேவியருக்கும் நியமிக்கப்பட்டவேலை. (௯) ஆசாரியருடைய பாகம். (௨௧) லேவியருடைய பாகம். (௨௫) ஆசாரியருக்காக ஏறெடுக்குங் காணிக்கை லேவியரின் பாகத்திலெடுக்கப்பட்டது.]

பின்பாடு கர்த்தர் ஆரோனோடே சொன்னதாவது; நீயுமுன்னோடே கூடவுன்

யையும் அந்திநேரமான வேளையில மற்ற ஆட்டுக்குட்டியையுஞ் செலுத்தி,

௫. காணிக்கையாக ஒரு மரக்காலிலேபத்திலொருபங்கானதும இடித்துவடிக்கப்பட்ட காற்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய மெல்லிய மாவையுஞ் செலுத்தக்கடவாய.

௬. இது சீனாய்ப் பர்வதத்திலே கட்டளையிடப்பட்ட நித்திய சர்வாங்க தகனபலி. இது கர்த்தருக்கு சுகந்த வாசனைக்கான தகனம.

௭. திராட்சப்பழ இரசத்திலே காற்படியானது ஒரு ஆட்டுக்குட்டிக்கடுத்த ஊற்றுதல பரிசுத்தஸ்தலத்திலே கர்த்தருக்கு அந்த இரசம ஊற்றுதலாக ஊற்றப்படக்கடவது.

௮. விடியற்காலத்துக் காணிக்கைக்கும அதின ஊற்றுதலுக்குஞ்சரியாக அந்திநேரமானவேளையிலே இரண்டாம ஆட்டுக்குட்டியையும கர்த்தருக்காற்றிய வாசனையான தகனமாகச்செலுத்துவாயாக.

௯. ஓய்வுநாளிலோவென்றால, ஒருவயதுள்ள பழுதற்ற இரண்டிரண்டு ஆட்டுக்குட்டிகளையும பத்திலிரண்டுபங்கானதும எண்ணெயிற் பிசைந்ததுமான மெல்லிய மாவென்ற காணிக்கையையும அதின ஊற்றுதலையுஞ் செலுத்தக்கடவாய.

௰. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும அதின ஊற்றுதலையுந் தவிர இது ஒவ்வொரு ஓய்வுநாளிலே செலுத்தப்படவேண்டிய சர்வாங்கதகனம.

௰௧. உங்கள மாதப பிறப்புகளில நீங்கள கர்த்தருக்குச சர்வாங்கதகனமாக மாடுகளிலிரண்டு காளையெருதுகளையும ஒரு ஆட்டுக்கடாவையும ஒருவயதுள்ள பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும,

௰௨. ஒவ்வொரு காளையெருதிற்காகப்பத்திலே மூன்றுபங்கானதும எண்ணெயிலே பிசைந்ததுமான மெல்லியமாவின காணிக்கையையும அந்த ஒரு ஆட்டுக்கடாவுக்காகப்பத்தி லிரண்டுபங்கானதும எண்ணெயிலே பிசைந்ததுமானமாவின காணிக்கையையும்,

௰௩. ஒவ்வொரு ஆட்டுக் குட்டிக்காகப்பத்திலொருபங்கானதும எண்ணெயிலே பிசைந்ததுமானமாவினகாணிக்கையையுஞ் செலுத்துவீர்களாக. அது கர்த்தருக்காற்றியவாசனையான சர்வாங்கதகனம.

௰௪. அவைகளின ஊற்றுதல்களகாளை எருதுக்கு அரைப்படியும ஆட்டுக் கடாவுக்குப் படியில மூன்றத்தொருபங்கும ஆட்டுக்குட்டிக்குக் காற்படியுமானதிராட்சப்பழ இரசமாயிருப்பதாக. அது வருஷத்திலே ஒவ்வொருமாதமுஞ் செலுத்தப்படவேண்டியசர்வாங்கதகனம.

௰௫. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும அதின ஊற்றுதலையுந்தவிரப்பாவப்போக்கும பலியாகக் கர்த்தருக்கொரு வெள்ளாட்டுக் கடாவுஞ் செலுத்தப்படக்கடவது.

௰௬. முதலாமாதம பதினாலாந் தேதியிலே கர்த்தருக்குப பஸ்காவாயிருக்கிறது.

௰௭. அந்தமாதம பதினைந்தாந்தேதி பண்டிகைநாள. ஏழுநாளமட்டும புளிப்பில்லாத அப்பங்கள புசிக்கப்படவேண்டும்.

௰௮. முதலாம நாளிலே பரிசுத்தசபை கூடுதல. யாதொருபணிவிடை வேலையைச செய்யீர்களாக.

௰௯. அப்பொழுது நீங்கள கர்த்தருக்குச சர்வாங்க தகனபலியாக மாடுகளிலிரண்டு காளையெருதுகளையும ஒரு ஆட்டுக்கடாவையும உங்களுக்கிருக்கவேண்டிய ஒருவயதுள்ளபழுதற்ற ஏழுஆட்டுக்குட்டிகளையும,

௨௰. அவைகளின காணிக்கையாக எண்ணெயிலேபிசைந்த மெல்லியமாவிலேகாளையெருதிற்காகப்பத்திலே மூன்றுபங்கையும ஆட்டுக்கடாவுக்காகப்பத்திலிரண்டுபங்கையும,

௨௧. ஏழுஆட்டுக்குட்டிகளிலும ஒவ்வொன்றிற்காகப பத்திலொருபங்கையும,

௨௨. உங்கள பாவ நிவிர்த்திக்கென்றுபாவம்போக்கும பலியாக ஒரு வெள்ளாட்டுக் கடாவையுஞ்செலுத்தி,

௨௩. விடியற்காலத்திலேசெலுத்தும அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையுந்தவிர இவைகளைசசெலுத்தக்கடவீர்கள.

௨௪ இந்தப்பிரகாரமாக ஏழு நாளிலும ஒவ்வொருநாளிலே கர்த்தருக்காற்றியவாசனையாகிய தகனச்செலுத்துதலைச செய்யக்கடவீர்கள. அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும அதின ஊற்றுதலையுந தவிர அது செலுத்தப்படக்கடவது.

௨௫. ஏழாமநாளிலும பரிசுத்தசபைகூடுதல உங்களுக்கிருக்கக்கடவது. யாதொரு பணிவிடைவேலையைசசெய்யீர்களாக.

௨௬. நீங்களகர்த்தருக்குப புதுக்காணிக்கையாகிய முதற்கனிகளைசசெலுத்தும உங்களவாரங்களின்பண்டிகைநாளிலும பரிசுத்தசபைகூடுதல உங்களுக்கிருக்கக்கடவது. யாதொரு பணிவிடைவேலையைச் செய்யீர்களாக.

௨௭. அப்பொழுது நீங்கள கர்த்தருக்காற்றியவாசனைக்கான சர்வாங்கதகனபலியாகமாடுகளி லிரண்டுகாளையெருதுகளையும ஒருஆட்டுக்கடாவையும ஒருவயதுள்ளஏழு ஆட்டுக்குட்டிகளையும,

௨௮. அவைகளினகாணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலொரு காளையெருதிற்காகப பத்திலே மூன்றுபங

கையும் அந்த ஒரு ஆட்டுக் கடாவுக்காகப் பத்திலிரண்டு பங்கையும்,

௨௯. ஏழு ஆட்டுக்குட்டிகளிலும் ஒவ்வொன்றிற்காகப் பத்திலொரு பங்கையும்,

௩௰. உங்களுக்காகப் பாவ நிவிர்த்தியையுண்டாக்கும்படிக்கொரு வெள்ளாட்டுக் கடாவையுஞ் செலுத்தி,

௩௧. அன்றன்றுள்ள சர்வாங்கத் தகன பலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலைகளையுந் தவிர இவைகளைச் செலுத்தக்கடவீர்கள். உங்களுக்கவைகள் பழுதற்றவைகளாயிருக்கவேண்டும்.

## ௨௯. அதிகாரம்.

[(௧) எக்காளத்தின் பண்டிகையிலும், (௭) அவர்களுடைய ஆத்துமா கஸ்திப்படும் நாளிலும், (௰௩) ஆசரிப்புப் பண்டிகையின் எட்டாம் நாளிலுஞ் செலுத்துங் காணிக்கை.]

ஏழாமாத முதல்தேதி உங்களுக்குப் பரிசுத்த சபைகூட்டப்படும் நாளாயிருக்கக்கடவது. யாதொரு பணிவிடை வேலையைச் செய்யாதிருப்பீர்களாக. அது உங்களுக்குக் கெம்பீர நாளாயிருக்கவேண்டும்.

௨. அப்பொழுது கர்த்தருக்காற்றியவாசனைக்கான சர்வாங்கத் தகன பலியாக மாடுகளிலொரு காளையெருதையும் ஒரு ஆட்டுக் கடாவையும் ஒருவயதுள்ள பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,

௩. அவைகளுக்கடுத்த காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலே காளையெருதிற்காகப் பத்திலே மூன்றுபங்கையும், ஆட்டுக்கடாவுக்காக இரண்டுபங்கையும்,

௪. ஏழு ஆட்டுக்குட்டிகளிலொவ்வொன்றிற்காக ஒருபங்கையும்,

௫. உங்கள் பாவநிவிர்த்திக்கான பலியாக ஒரு வெள்ளாட்டுக் கடாவையுஞ் செலுத்தி,

௬. மாதப்பிறப்பின் சர்வாங்கத் தகனத்தையும் அதின் காணிக்கையையும் அன்றன்றுள்ள சர்வாங்கத் தகனபலியையும் அதின் காணிக்கையையும் அவைகளின் முறைமைக்கேற்ற ஊற்றுதல்களையுந் தவிர இவைகளைக் கர்த்தருக்காற்றியவாசனையான தகனமாகச் செலுத்தக்கடவீர்கள்.

௭. இந்த ஏழாமாதம் பத்தாந்தேதி உங்களுக்குப் பரிசுத்தசபைகூட்டப்படும் நாளாயிருக்கக்கடவது. அதிலே நீங்கள் யாதொரு பணிவிடைவேலையையுஞ் செய்யாமல் உங்கள் ஆத்துமங்களையொடுங்கப்பண்ணி,

௮. கர்த்தருக்காற்றியவாசனையான சர்வாங்கத் தகனபலியாக மாடுகளிலொரு காளையெருதையும் ஒரு ஆட்டுக்கடாவையும் உங்களுக்கிருக்கவேண்டிய ஒருவயதுள்ள பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,

௯. அவைகளின் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலே காளையெருதிற்காகப் பத்திலே மூன்றுபங்கையும் அந்த ஒரு ஆட்டுக்கடாவுக்காக இரண்டு பங்கையும்,

௰. ஏழு ஆட்டுக்குட்டிகளிலொவ்வொன்றிற்காக ஒருபங்கையும்,

௰௧. பாவம்போக்கும் பலியாக ஒருவெள்ளாட்டுக்கடாவையுஞ் செலுத்திப் பாவங்களின் நிவிர்த்தியையுண்டாக்கும் பலியையும் அன்றன்றுள்ள சர்வாங்கத்தகனபலியையும் அதின்காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையுந் தவிர இவைகளைச் செலுத்தக்கடவீர்கள்.

௰௨. ஏழாமாதம் பதினைந்தாந்தேதி உங்களுக்குப் பரிசுத்தசபை கூட்டப்படும் நாளாயிருக்கக்கடவது. யாதொருபணிவிடை வேலையையதிலே செய்யீர்களாக. ஏழுநாள் கர்த்தருக்குப் பண்டிகையாசரிக்கக்கடவீர்கள்.

௰௩. நீங்கள் கர்த்தருக்காற்றிய வாசனையின் தகனமான சர்வாங்கத்தகனபலியாக மாடுகளிலே பதின்மூன்று காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்றிருக்கிற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௰௪. அவைகளின் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலே அந்தப் பதின்மூன்று காளையெருதுகளிலொவ்வொன்றிற்காகப் பத்திலே மூன்றுபங்கையும் அந்த இரண்டு ஆட்டுக்கடாக்களிலொவ்வொன்றிற்காக இரண்டுபங்கையும்,

௰௫. பதினாலு ஆட்டுக்குட்டிகளிலொவ்வொன்றிற்காக ஒருபங்கையும்,

௰௬. அன்றன்றுள்ள சர்வாங்கத் தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந் தவிரப் பாவம்போக்கும்பலியாக ஒருவெள்ளாட்டுக்கடாவையும்,

௰௭. இரண்டாம்நாளிலே மாடுகளிலே பன்னிரண்டு காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௰௮. காளையெருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத் தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௰௯. அன்றன்றுள்ள சர்வாங்கத் தகனபலியையும் அதின்காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையுந் தவிரப் பாவம்போக்கும் பலியாக ஒருவெள்ளாட்டுக் கடாவையும்,

௨௰. மூன்றாம் நாளிலே பதினொரு காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௨௰௧. காளையெருதுகளும் ஆட்டுக் கடாக்

களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௨௨. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந் தவிரப் பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்,

௨௩. நாலாம் நாளிலே பத்துக் காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௨௪. காளையெருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௨௫. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந் தவிரப் பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்,

௨௬. ஐந்தாம் நாளில் ஒன்பது காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ளபழுதற்றபதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௨௭. காளையெருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௨௮. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந்தவிரப்பாவம்போக்கும் பலியாக ஒருவெள்ளாட்டுக்கடாவையும்,

௨௯. ஆறாம்நாளில் எட்டுக்காளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக் கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்றபதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௩௰. காளையெருதுகளும் ஆட்டுக் கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௩௧. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதல்களையுந்தவிரப் பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்,

௩௨. ஏழாம்நாளில் ஏழுகாளையெருதுகளையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவயதுள்ள பழுதற்றபதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,

௩௩. காளையெருதுகளும் ஆட்டுக் கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௩௪. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந்தவிரப் பாவம்போக்கும்பலியாக ஒருவெள்ளாட்டுக்கடாவையுஞ்செலுத்தக்கடவீர்கள்.

௩௫. எட்டாம் நாள் உங்களுக்காசரிப்புநாளாயிருக்கக்கடவது. யாதொரு பணிவிடைவேலையைச் செய்யீர்களாக.

௩௬. அப்பொழுது நீங்கள் கர்த்தருக்காற்றிய வாசனைத் தகனமான சர்வாங்கதகனபலியாக ஒருகாளையெருதையும் ஒரு ஆட்டுக்கடாவையும் ஒரு வயதுள்ள பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,

௩௭. காளையெருதும் ஆட்டுக்கடாவும் ஆட்டுக்குட்டிகளுமிருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையையும் அவைகளின் ஊற்றுதல்களையும்,

௩௮. அன்றன்றுள்ள சர்வாங்க தகனபலியையும் அதின் காணிக்கையையும் அதின் ஊற்றுதலையுந் தவிரப் பாவம் போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக் கடாவையுஞ் செலுத்தக்கடவீர்கள்.

௩௯. உங்கள் பொருத்தனைகளையும் உங்கள் உச்சாகப் பலிகளையும் உங்கள் சர்வாங்க தகன பலிகளையும் உங்கள் காணிக்கைகளையும் உங்கள் ஊற்றுதல்களையும் உங்கள் சமாதானபலிகளையுந்தவிர நீங்கள் உங்கள் பண்டிகைகளிலே கர்த்தருக்குச் செலுத்த வேண்டியவைகள் இவைகள் தானென்று சொல்லென்றார்.

௪௰. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் மோசே இஸ்ரவேல் புத்திரரோடேசொன்னான்.

## ௩௰. அதிகாரம்.

[(௧) பொருத்தனைதவிர்க்கக் கூடாதென்பது. (௩) கன்னிகையும், (௬) கல்யாணப்பெண்ணும், (௯) கைம்பெண்ணும், புருஷனால் தள்ளப்பட்டவளும், அது தவிர்க்கலாமென்பது.]

மோசே இஸ்ரவேல் புத்திரருடைய கோத்திரங்களின் தலைவரோடே பேசிச்சொன்னதாவது; கர்த்தர் கற்பித்த காரியமென்னவென்னில்,

௨. ஒருவன் கர்த்தருக்குப் பொருத்தனை பண்ணி அல்லது ஆணையிடுகிறதினாலே தன் ஆத்துமாவின்மேல் கட்டளைச்சுமத்தவேசுமத்தினாலே அவன் தன் வார்த்தையைப் பரிசுத்தக்குலைச்சலாக்காமல் தன் வாயிலிருந்து புறப்பட்டதின்படியெல்லாஞ் செய்யக்கடவன்.

௩. தன் தகப்பன் வீட்டிலிருக்கிற ஒருபெண்பிள்ளை தன் சிறுவயதிலே கர்த்தருக்குப்

பொருததனைபபணணிக கடனைச சுமததிக கொணடால,

௪. அபபொழுது அவள தகபபன அவளுடைய பொருததனையையும அவள தன ஆததுமாவினமேலே கடனைச சுமததிக கொணடதையுங கேடடும அவளுக கொனறுஞ சொலலாதிருநதால அவளுடைய எலலாப பொருததனைகளும அவள தன ஆததுமாவினமேலே சுமததிக கொணட எலலாககடனுமநிறகும.

௫. அவளுடைய தகபபன அவளுடைய எலலாபபொருததனைகளையும அவள தன ஆததுமாவினமேலேகடனசுமததிககொண டதையுங கேட்கிறநாளில அவளுககுவேண டாமெனறுனேயாகில அது நிறகாது. அவள தகபபன அவளுககுவேணடாமென றபடியினாலே கர்ததர் அதை அவளுககு மனனிப்பார்.

௬. அவள பொருததனைபணணும பொழுதும அலலது தனனுதடுகளைத திறநது தன ஆததுமாவினமேலே கடனைசசுமததிக் கொளளுமபொழுதும அவளுககுப புருஷ னிருநதால,

௭. அபபொழுது அவளபுருஷன அதைச் கேட்டுங கேட்கிறநாளில அவளுககொன றுஞசொலலாதிருநதால அவளுடையபொ ருததனைகளும அவள தன ஆததுமாவின மேலே சுமததிககொணட அவளுடைய கடனகளுமநிற்கும.

௮. அவள புருஷன அதைககேட்கிறநாளி லே அவளுககுவேணடாமெனறு சொலலி அவள மேலிருககிற அவள பொருததனை யும அவள தனனுதடுகளைததிறநது தன ஆததுமாவினமேலே சுமததிக கொணட கடனையுஞசெலலாதேபணணினேனயாகில அபபொழுது கர்ததர் அதை யவளுககு மனனிபபார்.

௯. ஒருகைமபெணசாதியுந தள்ளபபட்ட வளுமோவெனறால, எநதக கடனைத தன ஆததுமாவினமேலே சுமததிக கொளளுகி றளோ அதெலலாம அவளமேலநிற்கும.

௰. அவள தன புருஷனுடைய வீடடிலே பொருததனைபணணி அலலது ஆணையினா லேதன ஆததுமாவினமேலே கடனைசசுமத் திருளேயானால,

௰௧. அபபொழுது அவளபுருஷனஅதைக் கேடடும அவளுககது வேணடாமெனறு சொலலாமல மவுனமாயிருநதால அவளு டைய எலலாபபொருததனைகளும அவள தன ஆத்துமாவினமேலேசுமத்திக்கொணட எலலாககடனுமநிறகும.

௰௨. அவளபுருஷன அவைகளைககேட்கிற நாளிலே செலலாதே பணணினேனயாகில அபபொழுது அவளுடைய பொருததனை களுககாகிலும அவளுடைய ஆததுமாவின கடனுக காகிலும அவளுதடுகளிலிருநது புறபபடடதொனறும நிறகாது. அவள புருஷன்வைகளைச செலலாதே பணணின படியினாலே கர்ததர் அதையவளுககுமன னிபபார்.

௰௩. ஆததுமாவை யொடுககப பணணுவ தறகுப பணணபபடட எலலாபபொருத தனையையும எலலா ஆணையையும அவள புருஷன நிற்கபபணணவுங கூடும செல லாதேபோகபபணணவுங கூடும.

௰௪. அவளபுருஷனநாளுககுநாள அவளுக் கொனறுஞ சொலலாருகில அவன அவளு டைய எலலாப பொருததனைகளையும அல லது அவளமேலிருககிற அவளுடைய எல லாக கடனகளையும நிற்கபபணணினுன. அவன அதைக கேடடநாளில அவளுக கொனறுஞ சொலலாதே போனதினாலே அவைகளை நிறகபபணணினுன.

௰௫. அவன அதைககேடடபிறபாடு அவை களைச செலலாதேபோகப பணணினேனே யாகில அவளுடையஅககிரமததை யவன சுமபபானென்றுன.

௰௬. புருஷனுககுமபெணசாதிககுநதகப் பனுககுந தகபபனவீடடிலே சிறுவயதி லே இருககிற அவனகுமாரததிககும அடுத் ததுங கர்ததர்மோசேககுக் கறபிததது மா கிய கடடளைகள இவைகளதானே.

## ௩௰௧. அதிகாரம்.

[(௧) மீதியானர் அழிககபபடடதும், பிலே யாங்கொலலபபடடதும், (௰௩) சேனைத தலைவர்முதலானவர்கள ஸ்திரிகளை யுயிரோ டேவைததற்காக மோசே கோபமடைந் தது. (௰௯) இராணுவததவர்களும, அவர் களாற்சிறைபிடிககபபடடவர்களும எவவி தமாயச சுததிகரிககபபடவேணடுமெனப து. (௨௫) கொளளையிடட பொருளகளைப பங்கிடடுககொளளுநதிடடம. (௪௮) கர்த் தரின பொககிசததிறகுச சனங்கள சுவாதீ னமாகக கொடுககபபடடகாணிககை.]

கர்ததர்மோசேயோடே பேசிசசொன னதாவது;

௨. இஸ்ரவேலபுததிரருககாக * மீதியானி யருககு நீதியைசசரிககடடு. பிற்பாடு உன சனததாரணடையிலே சேர்ததுக கொள ளபபடுவாயெனருர். * ௨௫, ௰௭. ௰௮.

௩. அபபொழுது மோசே சனததோடே பேசிசசொனனதாவது; கர்ததருககா மீதி யானியருககு நீதியைசசரிககடடுமபடிககு உங்களில அவர்களமேல யுததத்திறகுப போகததககமனிதரைப பிரிததெடுங்கள.

௪. இஸ்ரவேலுடைய எல்லாககோததிரங களிலும ஒவவொருகோததிரததில ஆயிரம பேரை யுத்தத்திற் கனுபபக கடவீர்க ளெனறுன.

௫. அப்படியே ஒவ்வொரு கோத்திரத்தில் ஆயிரம் ஆயிரம்பேராக இஸ்ரவேலரான அநேகம் ஆயிரங்களிலே பன்னீராயிரம்பேர் யுத்தத்திற்கு ஆயத்தமாக நிறுத்தப்பட்டார்கள்.

௬. அவர்களையும் ஆசாரியனான எலெயாசாரின் குமாரனாகிய * பினெகாசையும் மோசே யுத்தத்திற்கனுப்பி அவன் கையிலே பரிசுத்தப்புடவைகளையும் † கெம்பீரிக்கிற பூரிகைகளையுங் கொடுத்துவிட்டான். * உ௫, எ. † ௰, கூ.

௭. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவர்கள் மீதியானியர்மேலே யுத்தம்பண்ணி ஆண் சாதிகளையெல்லாங் கொன்றுபோட்டார்கள்.

௮. அவர்களை வெட்டிப்போட்டதுந்தவிர மீதியானியரின் ஐந்து இராசாக்களாகிய ஏவியையும் ரேகேமையுஞ் சூரையும் ஊரையும் ரேபாவையுங் கொன்றுபோட்டார்கள். பேயோரின் குமாரனாகிய * பிலேயாமையும் பட்டயத்தினாலே கொன்றுபோட்டார்கள். * உஉ, ரு.

௯. இஸ்ரவேல்புத்திரர் மீதியானியரின் ஸ்திரீகளையுங் குழந்தைகளையுஞ் சிறைபிடித்து அவர்களுடைய எல்லா மிருகஜீவன்களையும் எல்லா மந்தைகளையும் எல்லா ஆஸ்தியையுங் கொள்ளையிட்டு,

௰. அவர்கள் குடியிருந்த எல்லா ஊர்களையும் எல்லாக் கோட்டைகளையும் அக்கினியாற் சுட்டெரித்து,

௧௧. தாங்கள் கொள்ளையிட்டவையெல்லாவற்றையுந் தாங்கள் பிடித்த நரஜீவன் மிருகஜீவன் அனைத்தையுஞ் சேர்த்து,

௧௨. சிறைகளையுந் தாங்கள் பிடித்ததையுங் கொள்ளையிட்டதையும் எரிகோவின் கிட்ட யோர்தானுக்கப்பாலே மோவாபின் சமனுன் வெளிகளிலிருந்த பாளயத்திற்கு மோசேயண்டைக்கும் ஆசாரியனாகிய எலெயாசாரண்டைக்கும் இஸ்ரவேல் புத்திரரின் சபையண்டைக்குங் கொண்டுவந்தார்கள்.

௧௩. அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் சபையின் எல்லாப் பிரபுக்களும் பாளயத்திற்குவெளியே அவர்களைச் சந்திக்கப் புறப்பட்டார்கள்.

௧௪. மோசேயோவென்றால் யுத்தத்திலிருந்து வந்த ஆயிரத்துச்சேர்வைக்காரரும் நூற்றுச்சேர்வைக்காரருமாகிய இராணுவத் தலைவர்மேற் கோபமடைந்து,

௧௫. அவர்களோடே சொன்னதாவது; எல்லாப் பெண்சாதிகளையும் உயிரோடேவைத்தீர்களோ!

௧௬. இதோ, பேயோர்விக்கிரகத்தின் காரியத்திலே கர்த்தருக்கு விரோதமாயத் துரோகம்பண்ண இவர்கள்தாமே பிலேயாமின் யோசனையினாலே இஸ்ரவேல்புத்திரருக்குக் காரணமாயிருந்தார்கள். அதினாலே கர்த்தரின் சபையிலே உபாதையும் வந்ததே.

௧௭. இப்பொழுது குழந்தைகளில் எல்லா ஆண்பிள்ளைகளையுங் கொன்று புருஷரின் அநுபோகத்தையறிந்த எல்லாப் பெண்சாதிகளையுங் கொன்றுபோடுங்கள்.

௧௮. ஆனால் ஸ்திரீகளிலே புருஷனையறியாத எல்லாப் பெண்பிள்ளைகளையும் உங்களுக்காக உயிரோடேவையுங்கள்.

௧௯. நீங்களோவென்றால், ஏழுநாளளவாய் பாளயத்திற்குப் புறம்பே தங்குங்கள். ஜீவனைக் கொன்றவர்களும் வெட்டுண்டவர்களைத் தொட்டவர்களுமாகிய நீங்கள் அனைவரும் * மூன்றாம்நாளிலும் ஏழாம் நாளிலும் உங்களையும் உங்கள் சிறைகளையும் பாவம்போக்கிச் சுத்திகரித்து. * ௰௯, ௰௮. ௰௨.

௨௰. அந்தப்படியே எல்லா வஸ்திரத்தையுந் தோலால் மூட்டையும் வெள்ளாட்டு மயிரினால் நெய்தவையையும் மரத்தினாலுண்டானவைகளையும் பாவம்போக்கிச் சுத்திகரிக்கக்கடவீர்களென்றான்.

௨௧. யுத்தத்திற்குப் போய்வந்த இராணுவ மனிதரோடே ஆசாரியனாகிய எலெயாசாரு சொன்னதாவது; கர்த்தர் மோசேக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தின் கட்டளையிதுதானே.

௨௨. ஆனால் பொன்னும் வெள்ளியும் வெண்கலமும் இரும்பும் வெள்ளீயமுங் காரீயமுமாகிய அக்கினிக்குத் தாட்டத்தக்கதெல்லாவற்றுக்குத் தக்கபடிக்கு,

௨௩. அதை அக்கினியைக் கடக்கப்பண்ணக்கடவீர்கள். பிற்பாடு தீட்டைநீக்குந் தண்ணீரால் அது பாவம்போக்கப்படவேண்டும். ஆனால் அக்கினிக்குத் தாட்டத்தகாததையெல்லாந் தண்ணீரிலே கடந்துபண்ணக்கடவீர்கள்.

௨௪. ஏழாம்நாளிலே உங்கள் வஸ்திரங்களைவெளுக்கக்கடவீர்கள். அப்பொழுது சுத்தமாயிருப்பீர்கள். பிற்பாடு நீங்கள் பாளயத்திலே வரலாமென்றான்.

௨௫. கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது;

௨௬. பிடித்துக்கொண்டுவரப்பட்ட மனிதரையும் மிருகங்களையும் நீயும் ஆசாரியனாகிய எலெயாசாருஞ் சபையிலுள்ள பிதாக்களின் தலைவருமாய்த் தொகைபார்த்து,

௨௭. பிடிக்கப்பட்டதை யுத்தத்திற்குப் புறப்பட்டுவந்த இராணுவ மனிதருக்குஞ் சபையனைத்திற்குள்ளும் பாதிபாதியாகப் பங்கிடுங்கள்.

௨௮. சேவகத்திற்குப் போன யுத்தமனிதர் கையிலோவென்றால் கர்த்தருக்குப் பகுதியாக மனிதரிலும் மாடுகளிலுங் கழுதைகளிலும் ஆடுகளிலும் ஐந்நூற்றிலொரு ஜீவனை யேற்படுத்தக்கடவாய்.

௨௯. கர்த்தருக்கேற்றெடுக்கும் படைப்பாகிய அதை அவர்களுடைய பாதியிலெடுத்துக்கொண்டு ஆசாரியனாகிய எலெயாசாருக்குக் கொடுக்கக்கடவாய்.

௩௰. இஸ்ரவேல் புத்திரரின் பாதியிலோவென்றால், நீ மனிதரிலும் மாடுகளிலும் கழுதைகளிலும் ஆடுகளுமாகிய சகலவித மிருகங்களிலும் ஐம்பதிலொன்றைப் பிடித்தெடுத்து அவைகளைக் கர்த்தருடைய வாசஸ்தலத்தின் காவலைக் காக்கிற லேவியருக்குக் கொடுக்கக்கடவாயென்றார்.

௩௧. கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் செய்தார்கள்.

௩௨. இராணுவ சனங் கொள்ளையிட்டுப் பிடித்ததில் மீதியாயிருந்தது அறுநூற்றெழுபத்தையாயிரம் ஆடுகளும்,

௩௩. எழுபத்திரண்டாயிரம் மாடுகளும்,

௩௪. அறுபத்தோராயிரங் கழுதைகளும்,

௩௫. ஸ்திரீகளிலே புருஷனையறியாத மனிதஜீவனெல்லாம் முப்பத்திரண்டாயிரஞ் ஜீவனுமாயிருந்தது.

௩௬. யுத்தத்துக்குப் புறப்பட்டவர்களின் பங்காகிய பாதியின் இலக்கமானது ஆடுகள் மூந்நூற்று முப்பத்தேழாயிரத்தைந்நூறு.

௩௭. இந்த ஆடுகளிலே கர்த்தருக்குப் பகுதியானது அறுநூற்றெழுபத்தைந்து.

௩௮. மாடுகள் முப்பத்தாறாயிரம் அவைகளில் கர்த்தருக்குப் பகுதியானது எழுபத்திரண்டு.

௩௯. கழுதைகள் முப்பதினாயிரத்தைந்நூறு. அவைகளிலே கர்த்தருக்குண்டான பகுதி அறுபத்தொன்று.

௪௰. மனிதஜீவன் பதினாயிரம். அவைகளிலே கர்த்தருக்குண்டான பகுதி முப்பத்திரண்டு ஜீவன்.

௪௧. கர்த்தருக்கேற்றெடுத்த அந்தப் பகுதியை மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே ஆசாரியனாகிய எலெயாசாருக்குக் கொடுத்தான்.

௪௨. யுத்தம்பண்ணின மனிதருக்குள்ளும் இஸ்ரவேல் புத்திரருக்குள்ளும் மோசே பாதிபாதியாகப் பங்கிட்டதின்படியே சபையின் பாதிப்பங்கானதென்னவெனில்,

௪௩. ஆடுகளில் மூந்நூற்று முப்பத்தேழாயிரத்தைந்நூறு.

௪௪. மாடுகளில் முப்பத்தாறாயிரம்.

௪௫. கழுதைகளில் முப்பதினாயிரத்தைந்நூறு.

௪௬. மனிதஜீவனிலே பதினாயிரந்தானே.

௪௭. இஸ்ரவேல் புத்திரரின் பாதிப்பங்காகிய இந்த மனிதரிலும் மிருகஜீவன்களிலும் மோசே ஐம்பதிலொன்றைப் பிடித்தெடுத்து அவைகளைக் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே கர்த்தருடைய வாசஸ்தலத்தின் காவலைக் காக்கிற லேவியருக்குக் கொடுத்தான்.

௪௮. பிற்பாடு இராணுவச்சேனைகளின் தலைவராகிய ஆயிரத்துச்சேர்வைக்காரரும் நூற்றுச்சேர்வைக்காரரும் மோசேயண்டையிற் சேர்ந்துவந்து,

௪௯. அவனோடே சொன்னதாவது; உம்முடைய ஊழியக்காரராகிய நாங்கள் எங்கள் கீழிருக்கிற யுத்தமனிதரைத் தொகைபார்த்தோம் எங்களிலொருவனுங் குறையவில்லை.

௫௰. ஆகையால் கர்த்தரின் சந்நிதியில் எங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவநிவிர்த்தியையுண்டாக்கும்படிக்கு நாங்கள் அவரவர் கண்டுபிடித்தபடியே பொற்பணிகளாகிய கடையங்களையுஞ் சரிகளையும் மோதிரங்களையுங் கடுக்கன்களையுங் காப்புகளையுங் கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தோமென்றார்கள்.

௫௧. அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாருஞ் சகலவித வேலையுள்ள பணிகளான அந்தப்பொன்னை அவர்கள் கையிலே வாங்கினார்கள்.

௫௨. இப்படி ஆயிரத்துச்சேர்வைக்காரராலும் நூற்றுச்சேர்வைக்காரராலுங் கர்த்தருக்கேற்றெடுக்குங் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட பொன்னெல்லாம் பதினாயிரத்தெழுநூற்றைம்பது சேக்கல் நிறையாயிருந்தது.

௫௩. சேவகத்திற்குப் போனமனிதர் அவரவர் தங்களுக்காகக் கொள்ளையிட்டிருந்தார்கள்.

௫௪. அந்தப் பொன்னை மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் ஆயிரத்துச்சேர்வைக்காரர் கையிலும் நூற்றுச்சேர்வைக்காரர் கையிலும் வாங்கி இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக ஆசரிப்புக் கூடாரத்திலே கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து வைத்தார்கள்.

## ௩௨. அதிகாரம்.

[(௧) ரூபேன் புத்திரரும், காத் புத்திரரும், தாமிருந்த யோர்தான் நதியின் பக்கத்தில் தங்கள் காணியாட்சியைத் தரும்படி கேட்டது. (௬) மோசே அவர்களைக் கடிந்து கொண்டது. (௰௬) அவர்கள் அவனைச் சமாதானப்படுத்தினது. (௩௩) அவன் அந்த நிலத்தை அவர்களுக்கு நியமித்தது. (௩௯) அதை அவர்கள் செயித்தது.]

ரூபேன் புத்திரருக்குங் காத்புத்திரருக்கும் ஆடுமாடுகள் மகாத்திரட்சியாயிருந்தது. அவர்கள் யாசேர்தேசத்தையுங் கிலெயாத்தேசத்தையும் பார்க்கிறபொழுது அது ஆடுமாடுகளுக்கான இடமென்று கண்டார்கள்.

௨. ஆகையால், அவர்கள் வந்து மோசே

போமே ஆசாரியனாகிய எலெயாசாரோடும் சவையின் பிரபுக்களோடும் சொன்னதாவது;

௩. கர்த்தர் இஸ்ரவேல் சவைக்கு முன்பாக முறியடித்த அத்ரோத்தும் திபோனும் யாசேரும் நிம்ருவும் எஸ்போனும் எலெயாலெயும் செபாமும் நெபோவும் பெயோனும் என்ற பட்டணங்களிலிருக்கிற தேசம் ஆடுமாடுகளுக்கான தேசம்.

௪. உம்முடைய ஊழியக்காரருக்கோவென்றால், ஆடுமாடுகளிருக்கிறது.

௫. உம்முடைய கண்களுக்கு முன்பாக எங்களுக்குத் தயை கிடைத்ததானால் இந்தத்தேசம் உம்முடைய ஊழியக்காரருக்குக் காணியாட்சியாகக் கொடுக்கப்படட்டும். எங்களை யோர்தான் நதிக்கப்பாலே கடந்துபோகப் பண்ணீராகவென்றார்கள்.

௬. அப்பொழுது மோசேயவர்களுக்குச் சொன்னதாவது; உங்கள் சகோதரர் யுத்தத்திற்குப் போகையில் நீங்களிங்கேயிருப்பீர்களோ!

௭. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்திற்கவர்கள் ஏகிப்போகாதபடிக்கு நீங்கள் அவர்களிருதயத்தைத் திடன்றறுப்போகப் பண்ணுகிறதென்ன!

௮. இப்படித்தான் உங்கள் பிதாக்கள் நான் அவர்களைத் தேசத்தைப் பார்க்கிறதற்குக் காதேஸ்பர்னேயாவிலிருந்தனுப்பின்பொழுது பண்ணினார்கள்.

௯. அவர்கள் எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும்போய்த் தேசத்தைப்பார்த்துவந்து இஸ்ரவேல் புத்திரருக்குக் கர்த்தர் கொடுத்த தேசத்திற்கவர்கள் போகாதபடிக்கு * அவர்களிருதயத்தைத் திடன்றறுப்போகப்பண்ணினார்கள். * ௰௩, ௩௨. மு.

௰. ஆகையாற் கர்த்தர் அந்நாளிலே கோபமுண்டவராகி,

௰௧. * நம்மை உத்தம்மாயப் பின்பற்றின கேனேசியனான எப்புன்னேயின் குமாரன் காலேபையும் நூனின் குமாரன் யோசுவாவையுந்தவிர, * ௰௪, ௨௧—௨௪.

௰௨. எகிப்திலிருந்து வந்தேறின இருபது வயதுமுதலான மனிதர் நாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்ட தேசத்தைக்காண்பதில்லை. ஏனெனில், நம்மையுத்தம்மாயப் பின்பற்றுதேபோனார்களென்று ஆணையிட்டார்.

௰௩. அப்படியே கர்த்தர் இஸ்ரவேலின் மேற்கோபமுண்டவராகிக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்த அந்தச் சந்ததியெல்லாம் நிர்மூலமாகுமட்டும் அவர்களை வனாந்தரத்தில் நாற்பது வருஷம் அலையப்பண்ணினார்.

௰௪. இப்பொழுதும் இதோ, இஸ்ரவேலின் மேலிருக்கிற கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்தை இன்னம் அதிகரிக்கப்பண்ண நீங்கள் உங்கள் பிதாக்களின் ஸ்தலத்திலே பாவ மனிதரான பிறங்கூட்டமாயெழும்பினீர்கள்.

௰௫. நீங்கள் அவரைவிட்டுப் பின்வாங்கினால் அவரின்னம் அதை வனாந்தரத்திலிருக்கப்பண்ணுவார். இப்படி நீங்கள் இந்தச் சனத்தையெல்லாம் அழியப்பண்ணுவீர்களென்றான்.

௰௬. அப்பொழுது அவர்கள் அவனண்டையிற்சேர்ந்து சொன்னதாவது; எங்கள் ஆடுமாடுகளுக்காகத் தொழுவங்களையும் எங்கள் பிள்ளைகளுக்காகப் பட்டணங்களையுமிங்கே கட்டுவோம்.

௰௭. நாங்களோவென்றால், இஸ்ரவேல் புத்திரரையவர்கள் தானத்திலே கொண்டுபோய்ச் சேர்க்குமளவும் யுத்தத்திற்கு ஆயத்தப்பட்ட தீவிரத்தோடே அவர்களுக்கு முன்னுக்கு நடப்போம். இதற்குள்ளெங்கள் பிள்ளைகள் தேசத்திற் குடிகளினிமித்தம் அரணான பட்டணங்களிலே குடியிருக்கும்.

௰௮. இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் சுதந்தரத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுமட்டும் நாங்களெங்கள் வீடுகளுக்குத் திரும்புவதில்லை.

௰௯. ஏனென்றால், யோர்தானுக்கிப்பாலே கிழக்கே யெங்கள் சுதந்தரம் எங்களுக்குண்டான படியினாலே நாங்கள் அவர்களோடேகூட யோர்தானுக்கக்கரையிலும் அதற்கப்பாலேயுஞ் சுதந்தரம் வாங்குவதில்லையென்றார்கள்.

௨௰. அப்பொழுது மோசே அவர்களோடே சொன்னதாவது; நீங்களிந்த வார்த்தையின்படியே செய்து கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்காயத்தப்பட்டு,

௨௰௧. கர்த்தர் தமது சத்துருக்களைத் தமக்கு முன்பாகத் துரத்திவிடுந்திருட்டும் நீங்கள் அவரவர் அவருக்கு முன்பாக ஆயுதம் பூண்டவர்களாய் யோர்தானைக் கடந்து போயிருந்தீர்களானால்,

௨௰௨. அப்பொழுது தேசங் கர்த்தருக்கு முன்பாகக் கீழ்ப்பட்டபிறபாடு நீங்கள் கர்த்தருக்கும் இஸ்ரவேலுக்கு முன்பாகக் குற்றஞ் சுமவாதவர்களாய்த் திரும்பலாம். அப்பொழுது இந்தத்தேசத்திற்கு முன்பாக உங்களுக்குக் காணியாட்சியாயிருக்கும்.

௨௰௩. இப்படிச் செய்யாதேபோனீர்களேயாகில் அப்பொழுது இதோ, கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ் செய்தீர்களென்பதை யுங்கள்பாவம் உங்களைக் கண்டுபிடிக்கும்பொழுது உணருவீர்கள்.

௨௰௪. உங்கள் பிள்ளைகளுக்காகப் பட்டணங்களையும் உங்கள் மந்தைகளுக்குத் தொழுவங்களையும் உங்களுக்குக்கட்டி உங்கள்

வாயிலிருந்து புறப்பட்டதின்படியே செய்யுங்களென்றான்.

௨௫. அப்பொழுது காத் புத்திரரும் ரூபேன் புத்திரரும் மோசேயோடே சொன்னதாவது; எங்கள் ஆண்டவன் கற்பித்தபடியே உம்முடைய ஊழியக்காரர் செய்வார்கள்.

௨௬. எங்கள் பிள்ளைகளும் எங்கள் பெண்சாதிகளும் எங்கள் ஆடுமாடுகளும் எங்களுடைய எல்லாமிருகஜீவன்களும் இங்கே கீலேயாத்தின் பட்டணங்களிலிருக்கும்.

௨௭. உம்முடைய ஊழியக்காரரோவெனில், எங்களாண்டவன் சொன்னபடியே எல்லாரும் சேவகத்திற்கு ஆயத்தப்பட்டவர்களாய்க் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்குப்போவார்களென்றார்கள்.

௨௮. அப்பொழுது மோசே அவர்களுக்காக ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் நூனின்குமாரனாகிய யோசுவாவுக்கும் இஸ்ரவேல்புத்திரருடைய கோத்திரங்களின் பிதாக்களில் தலைவரானவர்களுக்குங் கற்பனை தந்து,

௨௯. அவர்களோடே சொன்னதாவது; காத்புத்திரரும் ரூபேன் புத்திரரும் அவரவர் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய் உங்களோடே கூடயோர்தானைக் கடந்துபோனால், அப்பொழுது தேசம் உங்களுக்கு முன்பாகக் கீழ்ப்பட்டபிறபாடு அவர்களுக்குக் கீலேயாத் தேசத்தைக் காணியாட்சியாகக் கொடுக்கக்கடவீர்கள்.

௩௰. உங்களோடேகூட யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய்க் கடந்துபோகாதிருந்தார்களேயாகில் அவர்கள் உங்கள் நடுவே கானான் தேசத்திலே காணியாட்சியடையக்கடவர்களென்றான்.

௩௧. காத் புத்திரரும் ரூபேன் புத்திரரும் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; கர்த்தர் உம்முடைய ஊழியக்காரருக்குச்சொன்னதின்படியேசெய்வோம்.

௩௨. நாங்கள் கர்த்தருக்கு முன்பாக யுத்தத்திற்காயத்தப்பட்டவர்களாய்க் கானான் தேசத்திற்குப்போவோம். அப்படியே யோர்தானுக்கப்பாலே எங்கள் சுதந்தரத்தின் காணியாட்சி எங்களுக்கிருக்குமென்றார்கள்.

௩௩. அப்பொழுது மோசே காத்புத்திரருக்கும் ரூபேன் புத்திரருக்கும் யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்கும் அமோரியரின் இராசாவாகிய சீகோனின் இராச்சியமும் பாசானின் இராசாவாகிய ஓகின் இராச்சியமுமான தேசத்தையும் அதின் எல்லைகளிலே சுற்றிலுமிருக்கிற அதின் பட்டணங்களையுங் கொடுத்தான்.

௩௪. காத்புத்திரர் தீபோனும் அத்தரோத்தும் ஆரோவேரும்,

௩௫. அத்ரோத் சோப்பானும் யாசேரும் யொகெபெகாவும்,

௩௬. பெத்நிம்ராவும் பெத்தாரானுமென்ற அரணான பட்டணங்களையும் ஆட்டுத்தொழுவங்களையுங் கட்டினார்கள்.

௩௭. ரூபேன்புத்திரர் எஸ்போனையும் எலெயாலேயையுங் கீரியத்தாயீமையும்,

௩௮. நாமங்கள் மாற்றப்பட்ட நேபோவையும் பாகால்மெயோனையுஞ் சிப்மாவையுங் கட்டித் தாங்கள் கட்டின பட்டணங்களுக்கு வேறே நாமங்களைத் தரித்தார்கள்.

௩௯. மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திரர் கீலேயாத்திற்குப்போய் அதைக் கட்டிக்கொண்டு அதிலிருந்த அமோரியரைத் துரத்திவிட்டார்கள்.

௪௰. அப்பொழுது மோசே கீலேயாத்தை மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திரருக்குக் கொடுத்தான். அவர்கள் அதிலே குடியேறினார்கள்.

௪௧. மனாசேயின் குமாரனாகிய யாவீர் போய் அவர்களுடைய கிராமங்களைக் கட்டிக்கொண்டு அவைகளுக்கு யாவீரின் கிராமங்களென்று பேரிட்டான்.

௪௨. நோபாக் போய்க் கேனாத்தையும் அதின் கிராமங்களையுங் கட்டிக்கொண்டு அதற்குத் தன் நாமத்தின்படி நோபாக்கென்று பெயரைத் தரித்தான்.

## ௩௩. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல் சனங்கள் செய்த நாற்பத்திரண்டு பிரயாணம். (௫௰) கானான் தேசத்தார் அழிவுக்கு நியமிக்கப்பட்டது.]

மோசே ஆரோன் என்பவர்களுடைய கையின் கீழ்த் தங்கள் சேனைகளின்படியே எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்திரருடைய பயணங்களாவது;

௨. ஏனெனில் அவர்கள் தங்கள் பயணங்களிலே புறப்பட்டுவிட்ட இடங்களை மோசே கர்த்தருடைய கட்டளையின்படியே எழுதினான். அவர்களோவொரு இடங்களிலிருந்து புறப்பட்டப்பண்ணின பயணங்களாவது;

௩. அவர்கள் முதலாமாதத்தின் பதினைந்தாந் தேதியிலே ரமெசேசிலிருந்து பயணம்போனார்கள். பஸ்காவின் இரண்டாம் நாளிலே இஸ்ரவேல்புத்திரர் எல்லா எகிப்தியரும் பார்க்க உயர்ந்தகையினாலே புறப்பட்டார்கள்.

௪. அப்பொழுது எகிப்தியர் கர்த்தர் தங்களுக்குள்ளே சங்கரித்த தலைச்சன்பிள்ளைகளையெல்லாம் அடக்கம்பண்ணினார்கள். அவர்கள் தேவர்களிலுங் கர்த்தர் நியாயத்தீர்ப்புகளைச் செய்திருந்தார்.

௫. இஸ்ரவேல்புத்திரர் ரமெசேசிலிருந்து

பயணம்போய்ச் சுக்கோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௬. சுக்கோத்திலிருந்து பயணம்போய் வனாந்தரத்தின் கடைசியான ஏத்தாமிலே பாளயமிறங்கினார்கள்.

௭. ஏத்தாமிலிருந்து பயணம்போய்ப் பாகால்செபோனுக்கெதிராகவிருக்கிற ஈரோத்பள்ளத்தாக்கின் முனையடிக்குத் திரும்பி மிக்தோலுக்கு முன்பாகப் பாளயமிறங்கினார்கள்.

௮. ஈரோத்தைவிட்டுப் பயணம் பண்ணிச் சமுத்திரத்தை நடுவாகக் கடந்து வனாந்தரத்திற்குப் போய் ஏத்தாம் வனாந்தரத்திலே மூன்றுநாள் நடந்து மாராவிலே பாளயமிறங்கினார்கள்.

௯. மாராவிலிருந்து பயணம்போய் ஏலீமுக்கு வந்தார்கள். ஏலீமிலே பன்னிரண்டு நீரூற்றுகளும் எழுபது பேரீச்சு மரங்களுமிருந்தது. அங்கே பாளயமிறங்கினார்கள்.

௰. ஏலீமிலிருந்து பயணம்போய் நாணற் சமுத்திரத் தண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

௰௧. நாணற் சமுத்திரத்தைவிட்டுப் பயணம்போய்ச் சீன்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௨. சீன் வனாந்தரத்திலிருந்து பயணம்போய்த் தொப்பாக்காவிலே பாளயமிறங்கினார்கள்.

௰௩. தொப்பாக்காவிலிருந்து பயணம்போய் ஆலூசிலே பாளயமிறங்கினார்கள்.

௰௪. ஆலூசிலிருந்து பயணம்போய் ரபீதீமிலே பாளயமிறங்கினார்கள். அங்கே ஜனத்திற்குக் குடிக்கத் தண்ணீரில்லாதிருந்தது.

௰௫. ரபீதீமிலிருந்து பயணம்போய்ச் சீனாய்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௬. சீனாயின் வனாந்தரத்திலிருந்து பயணம்போய் இச்சையின் பிரேதக்குழிகளுக்கு வந்து பாளயமிறங்கினார்கள்.

௰௭. இச்சையின் பிரேதக்குழிகளை விட்டுப் பயணம்போய் ஆசெரோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௰௮. ஆசெரோத்திலிருந்து பயணம்போய் ரித்மாவிலே பாளயமிறங்கினார்கள்.

௰௯. ரித்மாவிலிருந்து பயணம்போய் ரிம்மோன்பேரேசிலே பாளயமிறங்கினார்கள்.

௨௰. ரிம்மோன்பேரேசிலிருந்து பயணம்போய் லிப்னாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௧. லிப்னாவிலிருந்து பயணம்போய் ரீசாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௨. ரீசாவிலிருந்து பயணம்போய்க் கேலத்தாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௩. கேலத்தாவிலிருந்து பயணம்போய்ச் சாப்பேர்மலையிலே பாளயமிறங்கினார்கள்.

௨௪. சாப்பேர் மலையிலிருந்து பயணம்போய் ஆரதாவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௫. ஆரதாவிலிருந்து பயணம்போய் மக்கெலோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௨௬. மக்கெலோத்திலிருந்து பயணம்போய்த் தாகாத்திலே பாளயமிறங்கினார்கள்.

௨௭. தாகாத்திலிருந்து பயணம்போய்த் தாருகிலே பாளயமிறங்கினார்கள்.

௨௮. தாருகிலிருந்து பயணம்போய் மித்காவிலே பாளயமிறங்கினார்கள்.

௨௯. மித்காவிலிருந்து பயணம்போய் அஸ்மோனாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௰. அஸ்மோனாவிலிருந்து பயணம்போய் மொசெரோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௩௧. மொசெரோத்திலிருந்து பயணம்போய்ப் பெனெயாக்கானிலே பாளயமிறங்கினார்கள்.

௩௨. பெனெயாக்கானிலிருந்து பயணம்போய்க் கித்காத்மலையிலே பாளயமிறங்கினார்கள்.

௩௩. கித்காத்மலையிலிருந்து பயணம்போய் யோத்பாத்தாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௪. யோத்பாத்தாவிலிருந்து பயணம்போய் ஆபெரோனாவிலே பாளயமிறங்கினார்கள்.

௩௫. ஆபெரோனாவிலிருந்து பயணம்போய் எத்செயோன்கேபேரிலே பாளயமிறங்கினார்கள்.

௩௬. எத்செயோன்கேபேரிலிருந்து பயணம்போய்க் காதேசாகிய சீன்வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்.

௩௭. காதேசிலிருந்து பயணம்போய் ஏதோந் தேசத்தின் எல்லையிலிருக்கிற ஓர் பர்வதத்தண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

௩௮. அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோன் கர்த்தருடைய கட்டளையின்படியே ஓர் பர்வதத்தின்மேலேறி அங்கே இஸ்ரவேல்புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாற்பதாம் வருஷம் ஐந்தாம் மாதம் முதல் தேதியிலே மரணமடைந்தான்.

௩௯. ஆரோன் ஓர்பர்வதத்திலே மரணமடைகிறபொழுது நூற்றிருபத்து மூன்று வயதாயிருந்தான்.

௪௰. அந்நாட்களிலே கானான் தேசத்தில் தெற்கே குடியிருந்த ஆராத்தின் இராசாவாகிய கானானியன் இஸ்ரவேல்புத்திரர் வருகிறதைக் கேட்டான்.

௪௧. ஓர் பர்வதத்தை விட்டுப் பயணம்போய்ச் சல்மோனாவிலே பாளயமிறங்கினார்கள்.

௪௨. சல்மோனாவிலிருந்து பயணம்போய்ப் பூனோனிலே பாளயமிறங்கினார்கள்.

௪௩. பூனோனிலிருந்து பயணம்போய் ஓபோத்திலே பாளயமிறங்கினார்கள்.

௪௪. ஓபோத்திலிருந்து பயணம்போய்

மோவாபினெல்லையிலுள்ள ஆப்ரீமின் மேடுகளிலே பாளயமிறங்கினார்கள்.

௪௫. அந்த மேடுகளை விட்டுப் பயணம் போய்த் தீபோன்காத்திலே பாளயமிறங்கினார்கள்.

௪௬. தீபோன் காத்திலிருந்து பயணம் போய் அல்மோன்திப்லத்தாயிமிலே பாளயமிறங்கினார்கள்.

௪௭. அல்மோன் திப்லத்தாயிமிலிருந்து பயணம்போய் நேபோவுக்கெதிரான ஆப்ரீமின்மலைகளிலே பாளயமிறங்கினார்கள்.

௪௮. ஆப்ரீமின்மலைகளிலிருந்து பயணம் போய்எரிகோவின்கிட்ட யோர்தானண்டையிலிருக்கிறமோவாபின் சமனான வெளிகளிலே பாளயமிறங்கினார்கள்.

௪௯. யோர்தானண்டையிலிருக்கிற மோவாபின் சமனான அந்தவெளிகளில் அவர்கள் பெத்யெசிமோத்தைத் துவக்கி ஆபேல்சித்திமமட்டும் பாளயமிறங்கியிருந்தார்கள்.

௫௰. கர்த்தர் எரிகோவின்கிட்ட யோர்தானண்டையிலிருக்கிறமோவாபின்சமனான வெளிகளிலேமோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௫௧. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் யோர்தானைக் கடந்துகானான் தேசத்திலே வரும்பொழுது,

௫௨. தேசத்துக் குடிகளையெல்லாம் உங்களுக்கு முன்பாகத் துரத்திவிட்டு அவர்களுடைய எல்லாச் சிலைகளையும் வார்ப்பிக்கப்பட்ட அவர்களுடைய எல்லாச் சுரூபங்களையும் அழித்து அவர்கள் மேடைகளையெல்லாம் நிர்மூலமாக்கிப்போட்டு,

௫௩. தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு அதிலேகுடியிருக்கக்கடவீர்கள். ஏனெனில், உங்களுக்கந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளும்படிக்குக் கொடுத்தோம்.

௫௪. சீட்டுகளைப்போட்டுத் தேசத்தையுங்கள் வம்சங்களுக்குச் சுதந்தரங்களாகப் பங்கிட்டு அநேகருக்கநேகமுங் கொஞ்சமானவர்களுக்குக் கொஞ்சமுஞ் சுதந்தரமாகக்கொடுக்கக்கடவீர்கள். அவரவர்க்குச் சீட்டு எவ்விடத்திற்கு விழுகிறதோ அவ்விடமவனுக்கிருக்கும். உங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களின் பேருக்குச் சுதந்தரித்துக் கொள்ளக்கடவீர்கள்.

௫௫. நீங்கள் தேசத்தின் குடிகளையுங்களுக்குமுன்பாகத் துரத்திவிடாமற்போனீர்களேயானால், அப்பொழுது அவர்களில் நீங்கள் மீதியாகவைக்கிறவர்கள் உங்கள் கண்களில் முள்ளுகளும் உங்கள் விலாக்களிலே கூர்களுமாகி உங்களை நீங்கள் குடியிருக்கிற தேசத்திலே நெருக்கிப் போடுவார்கள்.

௫௬. அப்படியே சமபவிப்பதேதெனில்,

நாம் அவர்களுக்குச் செய்ய நினைத்ததை யுங்களுக்குச்செய்வோமென்று சொல்லென்றார்.

## ௩௪. அதிகாரம்.

[(௧) அந்தேசத்தின் எல்லைகள். (௰௬) அந்த தேசத்தைப் பகிர்ந்து கொடுப்பவர்களின் பெயர்.]

கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௨. நீ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்துச்சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் கானான்தேசத்திலே வருகிறபொழுது உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுக்கப்படுந் தேசந்தன் எல்லைகளோடிருக்கிறகானான் தேசந்தானே.

௩. உங்களுக்குத் தென்மூலை சீன்வனாந்தரந்துவக்கி ஏதோம் தேசத்தின் ஓரமாய்ப் போவது. தெற்கின் எல்லைகிழக்கேயிருக்கிற உப்புக்கடலின்முனைதுவக்கி,

௪. அங்கேயிருந்து அக்கிராபீமின் மேடுகளைச் சுற்றிச் சீன்மட்டும்போய்த் தெற்கிலேகாதேஸ்பர்னேயாவுக்கும் அங்கேயிருந்து ஆத்சார் அதாருக்கும் அங்கேயிருந்து அஸ்மோனுக்கும்போய்,

௫. அஸ்மோனிலிருந்து எகிப்தின் ஆறுமட்டுஞ்சுற்றிப்போய்க்கடலிலேமுடிவதாக.

௬. மேற்கே பெரிய சமுத்திரமே உங்களுக்கெல்லை. அதுவே உங்களுக்குமேற்குப் புறமான எல்லையாயிருப்பது.

௭. உங்களுக்குவடக்கு எல்லையாவதேதெனில் பெரிய சமுத்திரந்துவக்கி ஓரென்ற பர்வதத்தை நீங்கள் உங்களுக்குச்குறிப்பாகவைத்து,

௮. ஓர்பர்வதந்துவக்கிஆமாத்திற்குப்போகிறவழியைக்குறிப்பாகவைப்பீர்களாக. அங்கேயிருந்து எல்லைசேதாத்திற்குப்போய்,

௯. அங்கேயிருந்து அது சிப்ரோனுக்குப் போய் ஆத்சார் ஏனானிலே முடிந்துபோவதாக. அதுவேயுங்களுக்கு வடபுறமானஎல்லையாயிருக்கும்.

௰. உங்களுக்குக் கிழக்குஎல்லையாக ஆத்சார் ஏனானிலிருந்து சேப்பாமைக்குறிப்பாகவைப்பீர்களாக.

௰௧. சேப்பாமிலிருந்து எல்லையானதுஆயினுக்குக்கிழக்கான ரிப்லாவுக்கிறங்கி அங்கேயிருந்துஅது கின்னேரேத்கடலுக்கிறங்கி அதின்கிழக்கரையோடேபோய்,

௰௨. அங்கேயிருந்து அது யோர்தானுக்கிறங்கி உப்புக்கடலில்முடிந்துபோவதாக. அதுவேயுங்களுக்குத்தன்னுடைய சுற்றெல்லைகளின்படியே யுண்டாயிருக்குந் தேசமென்றுசொல்லென்றார்.

௰௩. அப்பொழுதுமோசே இஸ்ரவேல் புத்திரருக்குக்கற்பித்துச்சொன்னதாவது; நீங்

கள் சீட்டுகளைப் போட்டுச் சுதந்தரித்துக் கொள்வதும் ஒன்பதரைக் கோத்திரங்களுக்குக் கொடுக்கக் கர்த்தர் கற்பித்ததுமான தேசம் இதுதானே.

௰௪. ஏனெனில் ரூபன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டின்படிக் கோத்திரத்தாரும் காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டின்படிக் கோத்திரத்தாரும் மனாசேயின் பாதிக் கோத்திரத்தாரும் தங்கள் சுதந்தரத்தை யடைந்தார்கள்.

௰௫. இந்த இரண்டரைக் கோத்திரங்கள் சூரியோதய திசையாகிய கிழக்கே எரிகோவின் கிட்டவிருக்கிற யோர்தானுக்கப்பாலே தங்கள் சுதந்தரத்தை வாங்கித் தீர்ந்ததென்றான்.

௰௬. கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௰௭. உங்களுக்குத் தேசத்தைப் பங்கிட்டுக் கொடுக்கும் மனிதரின் நாமங்களாவது; ஆசாரியனாகிய எலெயாசாரும் நூனின் குமாரனாகிய யோசுவாவுந்தானே.

௰௮. ஒவ்வொரு கோத்திரத்திலொவ்வொரு தலைவனையுந் தேசத்தைப் பங்கிடும்படிக்குக் கூட்டவைக்கக்கடவீர்கள்.

௰௯. இந்த மனிதரின் நாமங்களாவது; யூதா கோத்திரத்திற்கு எப்புன்னேயின் குமாரனாகிய காலேப்பும்,

௨௰. சிமெயோன் புத்திரரின் கோத்திரத்திற்கு அம்மியூதின் குமாரனாகிய சாமுவேலும்,

௨௧. பெஞ்யமீன் கோத்திரத்திற்குக் கிஸ்லோனின் குமாரனாகிய எலிதாதும்,

௨௨. தாண் புத்திரரின் கோத்திரத்திற்கு யொக்லியின் குமாரனாகிய புக்கியென்றபிரபும்,

௨௩. யோசேப்பின் குமாரனாகிய மனாசேயினுடைய புத்திரரின் கோத்திரத்திற்கு எப்போதின் குமாரனாகிய அன்னியேலென்றபிரபும்,

௨௪. எப்பிராயீமின் புத்திரரின் கோத்திரத்திற்குச் சிப்தானின் குமாரனாகிய கேமுவேலென்றபிரபும்,

௨௫. செபுலோன் புத்திரரின் கோத்திரத்திற்குப் பர்னாகின் குமாரனாகிய எலிசாப்பானென்றபிரபும்,

௨௬. இசக்கார் புத்திரரின் கோத்திரத்திற்கு அசானின் குமாரனாகிய பல்த்தியேலென்றபிரபும்,

௨௭. ஆசேர் புத்திரரின் கோத்திரத்திற்குச் செலோமியின் குமாரனாகிய அகியூதென்றபிரபும்,

௨௮. நப்தலி புத்திரரின் கோத்திரத்திற்கு அம்மியூதின் குமாரனாகிய பெதாகேலென்றபிரபுந்தானேயென்றார்.

௨௯. கானான் தேசத்திலே இஸ்ரவேல் புத்திரருக்குச் சுதந்தரங்களைப் பங்கிட்டுக் கொடுக்கிறதற்குக் கர்த்தர் கற்பித்தவர்களிவர்கள்தான்.

## ௩௫. அதிகாரம்.

[(௧) இலேவியருக்குக் கொடுத்த ௪௮ பட்டணங்களும், அவைகளையடுத்த கிராமங்களும், அவைகளின் அளவும், (௬) அவைகளில் ௬ அடைக்கலமான பட்டணங்கள். (௯) கொலைபாதகத்தைக் குறித்த நியாயப்பிரமாணம். (௩௧) கொலைபாதகனுக்கு மன்னிப்பில்லையென்பது.]

எரிகோவின் கிட்ட யோர்தானண்டையிலிருக்கிற மோவாபின் சமனான வெளிகளிலே கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது;

௨. இஸ்ரவேல் புத்திரர் தங்கள் காணியாட்சியாகிய சுதந்தரத்திலே லேவியருக்குக் குடியிருக்கிற தரமான பட்டணங்களைக் கொடுக்க வேண்டுமென்று அவர்களுக்குக் கற்பி. அந்தப் பட்டணங்களைச் சுற்றிலுமிருக்கிற அவைகளின் பேட்டைகளையும் லேவியருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௩. அந்தப் பட்டணங்கள் அவர்கள் குடியிருப்புக்கும் அவைகளின் பேட்டைகள் அவர்கள் ஆடுமாடுகளுக்கும் அவர்கள் ஆஸ்திக்கும் அவர்களுடைய எல்லாச் சீவன்களுக்குங் குறிக்கப்படக்கடவது.

௪. நீங்கள் லேவியருக்குக் கொடுக்கும் பட்டணங்களின் பேட்டைகள் பட்டணமதிலுக்கு வெளியிலே சுற்றிலும் ஆயிரமுழத் தூரமாயிருப்பதாக.

௫. ஆனால் நீங்கள் பட்டணத்தின் வெளிப்புறத்தைத் துவக்கிக் கிழக்கே இரண்டாயிரமுழமும் தெற்கே இரண்டாயிர முழமும் மேற்கே இரண்டாயிரமுழமும் வடக்கே இரண்டாயிரமுழமும் பட்டணம் நடுமையத்திலிருக்கும்படியாக அளக்கக்கடவீர்கள். அது அவர்களுக்குப் பட்டணங்களின் பேட்டைகளாயிருப்பது.

௬. நீங்கள் லேவியருக்குக் கொடுக்கும் பட்டணங்களில் அடைக்கலமான ஆறு பட்டணங்களிருக்கவேண்டும். கொலைசெய்தவன் அங்கே ஓடிப்போகிறதற்கவைகளைக் குறிக்கக்கடவீர்கள். அவைகளையல்லாமல், நாற்பத்திரண்டு பட்டணங்களை யவர்களுக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௭. நீங்கள் லேவியருக்குக் கொடுக்கவேண்டிய பட்டணங்களெல்லாம் நாற்பத்தெட்டுப் பட்டணங்களும் அவைகளின் பேட்டைகளுந்தானே.

௮. நீங்கள் இஸ்ரவேல் புத்திரரின் காணியாட்சியிலே அந்தப் பட்டணங்களை யெடுத்துக் கொடுக்கையில், அநேகமுள்ளவர்களிலிருந்து அநேகமாகவுங் கொஞ்சமுள்ளவர்களிலிருந்து கொஞ்சமாகவும் எடுக்கக்கடவீர்கள். அவரவ

சுதந்தரித்துக்கொண்ட சுதந்தரத்திற்குத் தக்கதாகத் தங்கள் பட்டணங்களிலெடுத்து லேவியருக்குக் கொடுப்பார்களாக என்றார்.

௯. பின்னையுங் கர்த்தர் மோசேயோடே பேசிச்சொன்னதாவது;

௰. நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி யவர்களோடே சொல்லவேண்டிய தேதெனில, நீங்கள் யோர்தானைக்கடந்து கானான் தேசத்தில்வந்தபொழுது,

௰௧. கைப்பிசகாய் ஒருவனைக் கொன்றுபோட்டவன் ஓடிப்போயிருக்கத் தக்க அடைக்கலப் பட்டணங்களை யுங்களுக்குக் குறிக்கக்கடவீர்கள்.

௰௨. கொலைசெய்தவன் நியாயசபைக்கு முன்பாக நிற்கத்தக்கதற்கு முன்னே சாவாமற் பழிவாங்குகிறவன் கைக்குத் தப்புவித்துக் கொள்ளும்படிக்கு அவைகளுங்களுக்கடைக் கலப்பட்டணங்களாயிருக்கக்கடவது.

௰௩. நீங்கள் உங்களுக்காகக்கொடுக்கவேண்டிய அந்த அடைக்கலப்பட்டணங்கள ஆறு.

௰௪. அடைக்கலப்பட்டணங்களாகப்போகிறமூன்றுபட்டணங்களை யோர்தானுக்கிப்பாலும் மூன்றுபட்டணங்களைக் கானான் தேசத்திலுங் கொடுக்கக்கடவீர்கள்.

௰௫. கைப்பிசகாய் ஒருவனைக் கொன்றவனெவனும் அங்கே ஓடிப்போகும்படிக்கு இஸ்ரவேல் புத்திரருக்கும் உங்கள் நடுவேயிருக்கும் பரதேசிக்கும் அந்நியனுக்குமாக அந்த ஆறுபட்டணங்கள் அடைக்கலப் பட்டணங்கள் குறித்திருப்பதாக.

௰௬. ஒருவன் இரும்பு ஆயுதத்தினாலொருவனைவெட்டினதினாலே இவன் செத்தானே யாகில் அவன் கொலைபாதகனாயிருக்கிறான். கொலைபாதகன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௭. அல்லது ஒருவனைக்கொன்றுபோடத்தக்க கல்லையொருவனெடுத்து ஒருவன்மேலெறிந்ததினாலே இவன் செத்தால் அவன் கொலைபாதகனாயிருக்கிறான். கொலைபாதகன்கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௮. அல்லவென்று ஒருவனைக் கொன்றுபோடத்தக்க மர ஆயுதத்தையொருவனெடுத்து ஒருவனையடிக்கிறதினாலே இவன்செத்தால் அவன் கொலைபாதகனாயிருக்கிறான். கொலைபாதகன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௯. இரத்தப் பழி வாங்குகிறவன்தானே கொலைபாதகனைக் கொன்றுபோடலாம். அவனைச் சந்திக்கிறபொழுது அவனைக்கொன்றுபோடலாம்.

௨௰. ஒருவன் குரோதத்தினாலே ஒருவனை விழத்தள்ளினதினாலே அல்லது சதியாய் அவன்மேலேதாகிலும் எறிந்ததினாலே,

௨௧. அல்லவென்று பகையினால் அவனைத் தன்கையினால் அடித்ததினாலே அவன்செத்தால் அடித்தவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். அவன் கொலைபாதகன். இரத்தப்பழி வாங்குகிறவன் கொலைபாதகனைச் சந்திக்கிறபொழுது கொன்றுபோடலாம்.

௨௨. ஆனால் ஒருவன் பகையில்லாமற் சடிதியிலொருவனைவிழப்பண்ணினதினாலே அல்லது சதியில்லாமல் யாதொரு ஆயுதத்தை யவன்மேலே படப்பண்ணினதினால்,

௨௩. அல்லவென்று அவனுக்குப் பகைஞனாயிராமலும் அவனுக்குப் பொல்லாப்பைத் தேடாமலுமிருக்கையில் ஒருவனைக்கொன்றுபோடத்தக்க யாதொரு கல்லையவனைக் காணாமலெறிந்ததினாலும் அது அவன்மேலே பட்டதினாலும் அவன்செத்தால்,

௨௪. அப்பொழுது சபையார் கொலைசெய்தவனுக்கும் இரத்தப்பழிவாங்குகிறவனுக்கும் இந்த நியாயங்களின்படியே நியாயந் தீர்த்து,

௨௫. கொலைசெய்தவனை இரத்தப் பழி வாங்குகிறவன் கைக்குத் தப்புவித்து அவன் ஓடிப்போயிருந்த அடைக்கலப்பட்டணத்திற்கவனைத் திரும்பப் போகப்பண்ணக்கடவர்கள். பரிசுத்த எண்ணெயினால் அபிஷேகம்பண்ணப்பட்ட பிரதான ஆசாரியன் மரணமடையுமட்டும் அங்கே அவன் அதிலே யிருக்கக்கடவன்.

௨௬. ஆனால்தான் ஓடிப்போயிருக்கிறதன் அடைக்கலப் பட்டணத்தின் எல்லையைக் கொலைசெய்தவன் விட்டுப் புறப்படவேபுறப்படுகிறதும்,

௨௭. இரத்தப்பழி வாங்குகிறவன் கொலைசெய்த அவனை யவனுடைய அடைக்கலப் பட்டணத்திற்கு வெளியே கண்டுபிடித்துக் கொன்றுபோடுகிறதுமுண்டானால் இவன் மேலே பழியில்லை.

௨௮. ஏனென்றால் பிரதான ஆசாரியன் மரணமடையுமட்டுங் கொலைசெய்தவன் தன் அடைக்கலப்பட்டணத்திலிருந்து பிரதான ஆசாரியன் மரணமடைந்த பிற்பாடுதானே தன் காணியாட்சியான சீமைக்குத்திரும்பப் போகவேண்டியதாயிருந்தது.

௨௯. இவைகள் உங்கள் எல்லா வாசஸ்தலங்களிலுமிருக்கும் உங்கள் தலைமுறைகளிலுங்களுக்கு நியாயக்கட்டளையா யிருக்கக் கடவது.

௩௰. எவனாகிலும் ஒருமனிதனைக் கொன்றுபோட்டால் அப்பொழுது சாட்சிகளுடைய வாக்கின்படியே அந்தக் கொலைபாதகனைக் கொன்றுபோடக்கடவர்கள். ஆனால் மனிதன்பேரிலே சாவுக்கென்று ஒரே ஒருசாட்சி யுத்தரவு சொல்லவேண்டாம்.

௩௧. சாகிறதற்குக் குற்றஞ் சுமந்தகொலை

பாதகனுடைய சீவனுககாக நீஙகள மீட்குமபொருளை வாஙகவேணடாம. அவன கொலையுணணவேகொலையுணணவேணடும.

௩௨. தஞசமடைக்கலபபட்டணததிறகோடிபபோனவன ஆசாரியனமரணமடையாததறகுமுனனே தன சீமைககுத திருமபிவர நீஙகள அவனுககாக மீட்குமபொருளைவாஙகவுமவேணடாம.

௩௩. நீஙகளிருககுந தேசததைப பரிசுததக குலைததலாககாதீர்களாக. ஏனென்றால, அபபடிககொததத இரததந தேசததைப பரிசுததக் குலைததலாககும. தேசததிலே சிநதுணட இரததத்திற்காக இரததஞ சிநதிபபோட்டவனுடைய இரததத்தினாலே யொழியவேறொனறினாலுந தேசததினபாவம நிவிர்த்தியாகாது.

௩௪. நாம வாசமபணணும உஙகள குடியிருபபான தேசததைத தீட்டுபபடுததாதீர்களாக. ஏனென்றால, கர்ததராகியநாம இஸரவேல புததிரரின நடுவே வாசமபணணுகிறோமெனறுசொலலென்றார்.

## ௩௬. அதிகாரம்.

[(௧) குமாரததிகள சுதநதரததை யடையவந்தாலவரும விககினம. (௫) சுதநதரங குடுமபததைவிட்டு நீஙகாதபடி தஙகள கோத்திரததில விவாகஞ செயவதற்குக் கட்டளை. (௰) செலாப் பெயாததின் குமாரததிகள தஙகள தகபபன சகோதரர்களின குமாரரைவிவாகமபணணிககொணடது.]

யோசேபபுடைய குமாரரின வம்சததாரில மனாசேயின குமாரனாகிய மாகிருககுப பிறநத கிலெயாததின வம்சபபிதாககளானதலைவர் சேர்நதுவநது மோசேககும இஸரவேல புததிரருடைய பிதாககளில தலைவராகிய பிரபுககளுககும முனபாகப்பேசிச சொனனதாவது;

௨. சீட்டுகளைபபோட்டுத்தேசத்தை இஸரவேல புததிரருககுச சுதநதரமாகக் கொடுக்கக் கர்ததர் எஙகளாணடவனுககுக கறபிததாரே; எஙகள சகோதரனாகிய செலாபபெயாததின சுதந்தரததையவன குமாரததிகளுககுக கொடுககவேணடுமெனறும எஙகளாணடவனுககுக கர்ததராலே கறபிககபபட்டதே.

௩. இபபொழுது இவர்கள இஸரவேலபுததிரருடைய வேறொருகோததிரஙகளின புததிரருககுப பெணசாதிகளானால, அவர்கள சுதநதரம எஙகள பிதாககளுடையசுதநதரததிலே குறைநதுபோய அவர்கள உட்படுங்கோததிரததின சுதநதரததோடேசேர்நது எஙகள சுதநதரததிற்குச சீட்டினாலேவிழுநதபஙகிலறறுபபோம.

௪. அபபொழுது இஸரவேல புததிரருககு வரச்சிருககும வருஷமவருகையில அவர்களுடைய சுதநதரம அவர்கள உட்பட்டுபோன கோததிரததின சுதநதரததோடேசேர்நதிருநது எஙகள பிதாககளுடைய கோததிரததின சுதநதரததிலே குறைநதுபோமெனறார்கள.

௫. அபபொழுது மோசே கர்ததருடைய கட்டளையினபடியே இஸரவேல புததிரருககுக் கறபிததுச சொனனதாவது; யோசேபபுப் புததிரரின கோததிரததார் சொலலுகிறது நியாயம.

௬. கர்ததர் செலாபபெயாததின குமாரத்திகளுககாகக் கறபிககிற வார்ததையாவது; அவர்கள தங்கள் பார்வைககுச சம்மதியானவர்களுககுப்பெணசாதிகளாகலாம. ஆனால் தஙகள பிதாவினகோததிர வம்சததாருககுமாததிரம அவர்கள பெணசாதிகளாகவேணடும.

௭. அபபடியே இஸரவேல புததிரரின சுதநதரம ஒரு கோததிரததைவிட்டு மறு கோததிரத தனடைககுந தாணடாதிருககும. ஏனெனில, இஸரவேல புததிரில அவரவர் தஙகள பிதாககளுடைய கோததிரததின சுதநதரததிலே நிலைகொணடிருககவேணடும.

௮. இஸரவேல புததிரில அவரவர்தஙகள் பிதாககளின சுதநதரததை யனுபவிககுமபடிககுஇஸரவேலபுததிரருடையயாதொரு கோததிரததிலே சுதநதரமடைநதிருககிற எநதக் குமாரததியுந தன பிதாவின கோத்திர வம்சததாரில ஒருவனுககுபபெணசாதியாகவேணடும.

௯. அபபடியே சுதநதரம ஒருகோததிரததைவிட்டு வேறேகோததிரத தனடைககுந தாணடாது. ஏனெனில, இஸரவேல புததிரரினஒவ்வொருகோத்திரந தனதஞ்சுதநதரத்திலே நிலைகொணடிருககவேணடுமெனறு கறபிததாரெனறான.

௰. கர்ததர் மோசேககுக கற்பிததபடியே செலாபபெயாததின குமாரததிகள்செயது,

௧௧. மஃலாள,திர்சாள,ஒக்லாள,மில்க்காள, நோகாளெனற செலாப பெயாததின குமாரததிகள தஙகள தாய தகபபனோடேகூடபபிறநதவர்களின குமாரரெனற யோசேபபின்குமாரனாகிய மனாசேபுததிரரின வம்சத்தாரைவிவாகமபணணினார்கள.

௧௨. இபபடியே அவர்களுடைய சுதநதரம் அவர்களபிதாவினவம்சமான கோததிரத்தோடேயிருநதுவிட்டது.

௧௩. எரிகோவினகிட்டயோர்தானுக்கிப்பாலேயிருககிற யோவாபின சமனானவெளிகளிலே கர்ததர்மோசேயைககொணடு இஸரவேலபுததிரருக்குக் கற்பிததகறபனைகளும நியாயஙகளுமிவைகளதானே.

பேசேயெழுதின நான்காமாகமம் முடிநதது.

# மோசே எழுதின

# ஐந்தாம் ஆகமம்.

(கி. பி. மூன். ௲சாறுக)

## க. அதிகாரம்.

[(க) மோசே நாற்பதாம் வருஷமுடிவில் சுருக்கமாய், (௬) பராபரனுடைய வாக்குத்தத்தத்தையும், (௰௩) தலைவர்கள் வைக்கப்பட்டதையும், (௰௯) நிலங்களைவேவுபார்க்க வேவுகாரரை யனுப்பினதையும், (௩௪) சனங்களுடைய அவநம்பிக்கைக்குப் பராபரன் கோபங்கொண்டதையும், (௪௧) கீழ்ப்படியாததையுங்குறித்துச்சொன்னது.]

சேயீர்பர்வதவழியாய்ப்போனால் ஓரேபுக்குப் பதினொருநாட்பயணதூரமான காதேஸ்பர்னேயாவிலிருந்து,

உ. சூப்புக்கெதிராகவும் பாரானுக்குந் தோப்பேலுக்கும் லாபானுக்கும் ஆத்சரோத்திற்குந் திசாகாபுக்கும் நடுவாகவுமிருக்கிற யோர்தானுக்கிக்கரையான வனாந்தரத்தின் சமனான வெளியிலே வந்தபொழுது மோசே இஸ்ரவேலரெல்லாருடனே சொன்ன வசனங்கள்,

௩. நாற்பதாம்வருஷம் பதினோராமாதம் முதலாந்தேதியிலேதானே மோசே இஸ்ரவேல்புத்திரரோடே கர்த்தர் அவர்களுக்குச் சொல்லத்தனக்குக் கற்பித்தபடியெல்லாம்பேசினான்.

௪. எஸ்போனிற்குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய சீகோனையும் அஸ்தரோத்திலேகுடியிருந்த பாசானின் இராசாவாகிய ஓகென்கிறவனையும் எதிரேயில் அவன்முறியடித்ததற்குப்பிற்பாடு,

௫. யோர்தானுக்கப்பாலிருக்கிற மோவாபின்தேசத்திலே மோசேயிந்த நியாயப்பிரமாணத்தை விவரித்துக்காண்பிக்கத்துவக்கிச்சொன்னதாவது;

௬. ஓரேபிலே நம்முடைய பராபரனாகியகர்த்தர் நம்மோடேசொன்னதேதெனில் நீங்களிந்தப்பர்வதத்தண்டையில் தரித்திருந்தது போதும்,

எ. நீங்கள் திரும்பிப் பயணம்பண்ணி எமோரியரின் மலைகளுக்கும் அவைகளுடைய எல்லா அர்ப்புதங்களுமாகிய சமனானவெளிகளிலும் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலுந் தெற்கிலுங் கடலோரத்திலுமிருக்கிற கானானியரின்தேசத்திற்கும் லீபனோனு க்கும் ஐப்பிராத்துநதியென்ற பெரியநதிமட்டுக்கும் வாருங்கள்.

அ. இதோ, அந்தத்தேசத்தை யுங்களுக்கு முன்பாகவைத்தோம். நீங்கள்வந்து கர்த்தர் உங்கள்பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் அவர்களுக்குப்பிற்பாடிருக்கும் அவர்கள்வித்திற்குங்கொடுப்போமென்று ஆணையிட்ட அந்தத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்களென்றார்.

௯. அக்காலத்திலே நான் உங்களோடே சொன்னது, நான் ஒருவனாக உங்களைச்சுமக்கக்கூடாது.

௰. உங்கள்பராபரனாகியகர்த்தர்உங்களைப்பெருகப்பண்ணினார். இதோ, இந்நாளில் நீங்கள்வானத்தின் நட்சத்திரங்களைப்போல ஏராளமாயிருக்கிறீர்கள்.

௰க. உங்கள்பிதாக்களின் பராபரனாகியகர்த்தர் உங்களை யிப்பொழுதிருக்கிறதைப்பார்க்கிலும் இன்னம் ஆயிரமத்தனை யாக்கித்தாம் உங்களுக்குச்சொன்னபடியே யுங்களையாசீர்வதிப்பாராக.

௰உ நான் ஒருவனாக உங்களால் உண்டாம் வருத்தத்தையும் பிரயாசத்தையும் உங்கள் வழக்குகளையுஞ்சுமப்பதெப்படி!

௰௩ நானுங்கள்மேல்தலைவராகவைக்கும்படிக்கு உங்கள் கோத்திரங்களிலே ஞானமும் உணர்வும் அறிவுமுள்ளமனிதரைச்சம்பாதியுங்களென்றேன்.

௰௪. அப்பொழுது நீங்களெனக்குப் பிரதியுத்தாரமாக நீர்செய்யச்சொன்னகாரியம் நல்லதென்றீர்கள்.

௰௫. ஆகையால் நான்ஞானமும் அறிவுமுள்ளமனிதராகிய உங்கள் கோத்திரங்களின் தலைவரைச்சேர்த்துக்கொண்டு அவர்களையுங்கள்மேல் தலைவராயிருக்க ஆயிரம்பேருக்கதிபதிகளாகவும் நூறு ஐம்பது பத்துப்பேருக்கதிபதிகளாகவும், உங்கள் கோத்திரங்களில் மணியக்காரராகவுமவைத்தேன்.

௰௬. உங்களுடைய நியாயாதிபதிகளுக்கு அக்காலத்திலே நான்கற்பித்ததாவது; நீங்கள் உங்கள்சகோதரருக்குள்ளே வியாச்சியங்களைக்கேட்டுமனிதனுக்கும்அவன்சகோ

தரனுக்கும் அவர்களோடிருக்கிற பரதேசிக்கும் நீதியாய் நியாயங்களைத்தீருங்கள்.

௰௭. நியாயத்திலே முகமாட்டம்பாராமற் சிறியவனைப் பெரியவனுக்குச் சரியாய்க் கேட்கக்கடவீர்கள். ஒருவர்முகத்திற்கும் பயப்படீர்களாக. ஏனெனில், நியாயத்தீர்ப்புப் பராபரனுடையது. ஆனால் உங்களுக்கு மிஞ்சின அரிதாகிய காரியத்தை என்னண்டையிலே கொண்டுவாருங்கள். நான் அதைக் கேட்பேனென்றுசொல்லி,

௰௮. நீங்கள் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் அக்காலத்திலே உங்களுக்குக் கற்பித்தேன்.

௰௯. பிற்பாடு நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கற்பித்தபடியே நாம் ஓரேபைவிட்டுப் பயணம்பண்ணி நீங்கள் கண்ட அந்தப் பயங்கரமான பெரியவனாந்தரவழியாய் எல்லாம் எமோரியரின் மலைகளுக்கு நேராக நடந்துவந்து காதேஸ்பர்னேயாவிலே சேர்ந்தோம்.

௨௰. அப்பொழுது நான் உங்களோடே சொன்னதாவது; நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கொடுக்கிற எமோரியரின் மலைகளட்டும் வந்தீர்கள்.

௨௰௧. இதோ, உன் பராபரனாகிய கர்த்தர் உனக்கு முன்பாக அந்தத்தேசத்தை வைத்தார். உன் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடியே நீ போயேறி அதைச் சுதந்தரித்துக்கொள். பயப்படாமலுங் கலங்காமலுமிருவென்றேன்.

௨௰௨. அப்பொழுது நீங்களெல்லாரும் என்னண்டையிலே சேர்ந்துவந்து நமக்காக அந்தத்தேசத்தைச் சோதித்துப்பார்க்கிறதற்கும் நாம் எந்தவழியாய் அதிலே போயேறலாம்! எந்தப்பட்டணங்களுக்குப் போகலாமென்று நமக்கு மறுசெய்திகொண்டுவருகிறதற்கும் நமக்கு முன்னுக்கு மனிதரையனுப்புவோமாக என்றீர்கள்.

௨௰௩. அதெனக்கு நன்றாய்க் கண்டது. அப்படியே ஒவ்வொரு கோத்திரத்திலொவ்வொருவனாக உங்களிலே பன்னிரண்டு மனிதரையெடுத்தனுப்பினேன்.

௨௰௪. அவர்கள் போய் மலைகளின்மேலேறி எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டுஞ்சேர்ந்து அதை வேவுபார்த்து,

௨௰௫. அந்தத்தேசத்துக் கனிகளிலே சிலவற்றைத் தங்கள் கைகளிலெடுத்துக்கொண்டு நம்மண்டைக்கிறங்கிவந்து நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கொடுக்கிற அந்தத்தேசம் நன்றாயிருக்கிறதென்று நமக்கு மறுசெய்திகொண்டுவந்தார்கள்.

௨௰௬. ஆனால் நீங்கள் போயேறமாட்டோமென்று உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய வாக்குக்குக்கீழ்ப்படியாதே போய்,

௨௰௭. உங்கள் கூடாரங்களில் முறுமுறுத்துக் கர்த்தர் நம்மைப் பகைத்து நம்மையழிக்கிறதற்கென்று நம்மை எமோரியரின் கையிலொப்புக்கொடுக்கும்படிக்கு நம்மை எஜிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௨௰௮. எங்கே நாம் போயேறலாம்! ஜனம் பெரியதும் நம்மைப்பார்க்கிலும் உயர்ந்ததும் பட்டணங்கள் பெரியவைகளும் ஆகாயமட்டும் அரணிப்பாக்கப்பட்டவைகளுமாயிருக்கிறதென்றும் ஏனாக்புத்திரரையும் அங்கே கண்டோமென்றும் நம்முடைய சகோதரர் சொல்லி நம்முடைய இருதயத்தைக் கரையப்பண்ணினார்களென்றீர்கள்.

௨௰௯. அப்பொழுது நான் உங்களோடே சொன்னது, நீங்கள் கலங்காமலும் அவர்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்களாக.

௩௰. உங்களுக்கு முன்னுக்கு நடக்கிற உங்கள் பராபரனாகிய கர்த்தர்தாமே எஜிப்திலே உங்களோடிருந்து உங்கள் கண்களுக்கு முன்பாகச் செய்ததெல்லாவற்றின்படியும் வனாந்தரத்திலே செய்துவந்ததின்படியும் உங்களுக்காக யுத்தம்பண்ணுவார்.

௩௰௧. ஒரு மனிதன் தன் பிள்ளையைச் சுமக்கிறதுபோல நீங்கள் இவ்விடத்திலே சேருமட்டும் நடந்துவந்த எல்லாவழியிலும் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சுமந்துவந்தாரென்று கண்டாயேயென்றேன்.

௩௰௨. இப்படிச் சொன்னாலும் நீங்கள் உங்களுக்குப் பாளயமிறங்கத்தக்க இடங்களை விசாரிக்கவும் நீங்கள் போகவேண்டிய வழியை உங்களுக்குக் காட்டவும்,

௩௰௩. இரவிலே அக்கினியிலும் பகலிலே மேகத்திலும் உங்களுக்கு முன்னாக வழியிலே நடந்த உங்கள் பராபரனாகிய கர்த்தரை விசுவாசியாதேபோனீர்கள்.

௩௰௪. ஆகையாற் கர்த்தர் உங்கள் வார்த்தைகளின் சத்தத்தைக் கேட்டுக் கடுங்கோபம் அடைந்து,

௩௰௫. கொடுப்போமென்று நாம் உங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட அந்த நல்லதேசத்தை இந்தப்பொல்லாத சந்ததியான இந்த மனிதரிலொருவனுங் காண்பதில்லையென்றும்,

௩௰௬. எப்புன்னேயின் குமாரனாகிய காலேப் மாத்திரம் அதைக் காண்பான். அவன் கர்த்தரை உத்தமமாய்ப் பின்பற்றின படியினாலே நாம் அவன் மிதித்துவந்த தேசத்தை அவனுக்கும் அவன் பிள்ளைகளுக்குங் கொடுப்போமென்று ஆணையிட்டார்.

௩௰௭. கர்த்தர் உங்கள் நிமித்தமாக என்பேரிலுங் கோபமாகிச் சொன்னதாவது; நீயும் அதற்குட்பிரவேசிப்பதில்லை.

௩௰௮. உனக்கு முன்பாக நிற்கிற நூனின் குமாரனாகிய யோசுவா அதற்குட்பிரவேசிப்பான். அவனைத் திடப்படுத்து. ஏனென்றால், அவனே அதை இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகப் பங்கிடுவான்.

௩௯. கொள்ளையாமென்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளும் இந்நாளில் நன்மை தீமையறியாத உங்கள் பிள்ளைகளும் அதற்குட் பிரவேசிப்பார்கள். அவர்களுக்கு அதைக் கொடுப்போம். அவர்கள் அதைச் சுதந்தரிப்பார்கள்.

௪௰. நீங்களோவென்றால் திரும்பிக்கொண்டு நாணற் சமுத்திரத்திற்குப் போகிறவழியே வனாந்தரத்திற்குப் பயணம் பண்ணுங்களென்றார்.

௪௧. அப்பொழுது நீங்களெனக்குப் பிரதியுத்தாரமாகக் கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம். நாங்கள் போயேறி நம்முடைய பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம் யுத்தம்பண்ணுவோமென்றுசொல்லி அவரவர் உங்கள் யுத்த ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு மலைகளின்மேலேற ஆயத்தமாயிருந்தீர்கள்.

௪௨. அப்பொழுது கர்த்தர் என்னுடனே நீங்கள் உங்கள் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகாதபடிக்கு ஏறுமலும், யுத்தம் பண்ணாமலுமிருப்பீர்களாக. ஏனெனில், நாம் உங்கள் நடுவே யிரோமென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

௪௩. அப்படி யுங்களோடே சொன்னேன். நீங்களோவெனில் கேள்விகொடுக்கவில்லை. நீங்கள் கர்த்தருடைய வாக்குக்குக் கீழ்ப்படியாதே போய் இடும்புசெய்து மலைகளின் மேலேறினீர்கள்.

௪௪. அப்பொழுது அந்தமலைகளிலே குடியிருக்கிற எமோரியர் உங்களுக்கெதிராகப் புறப்பட்டுவந்து தேனீக்கள் செய்கிறதுபோல உங்களைத் துரத்தி யுங்களைச் சேயீர் துவக்கி ஒர்மாமட்டுக்கு முறியடித்தார்கள்.

௪௫. அப்பொழுது திரும்பிவந்து கர்த்தருக்கு முன்பாக அழுதீர்கள். ஆனால் கர்த்தர் உங்கள் சத்தத்தைக் கேட்கவில்லை. உங்களுக்குச் செவிகொடுக்கவுமில்லை.

௪௬. இப்படியே காதேசிலே அநேகநாள் தங்கியிருந்தீர்கள்.

## ௨. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல் சனங்கள் ஏதோமியரோடும், (௯) மோவாபியரோடும், (௰௭) அம்மோனோடும் போர்செய்யாமல், (௨௪) சீகோனென்ற எமோரியனுடன் போர்செய்து அவனைச் செயித்ததின் விவரம்.]

கர்த்தர் என்னோடே சொன்னபடியே நாம் திரும்பி நாணற் கடலுக்குப் போகிறவழியே வனாந்தரத்திற்குப் பயணம் பண்ணி அநேகநாளாய்ச் சேயீர்மலைகளைச் சுற்றினோம்.

௨. பிற்பாடு கர்த்தர் என்னோடே சொன்னதாவது;

௩. நீங்கள் இந்த மலைகளைச் சுற்றினது போதும் வடக்கே திரும்புங்கள்.

௪. சனத்திற்கு நீ கற்பிக்க வேண்டியதேதென்றால் சேயீரிலே குடியிருக்கிற ஏசாவின் புத்திரரான உங்கள் சகோதரரின் எல்லையைக் கடக்கப்போகிறீர்கள். அவர்கள் உங்களுக்குப் பயப்படுவார்கள். நீங்களோவென்றால் வெகு எச்சரிக்கையாயிருங்கள்.

௫. அவர்களோடே போர்கலவாதிருங்கள். ஏனென்றால், அவர்கள் தேசத்திலே ஒரு அடியம் மாத்திரம் உங்களுக்குக் கொடோம். ஏனெனில் சேயீர்மலைகள் ஏசாவின் புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௬. போசனத்தையவர்கள் கையிலே பணத்திற்கு வாங்கிப் புசித்துத் தண்ணீரையும் அவர்கள் கையிலே பணத்திற்கு வாங்கிக் குடிப்பீர்களாக.

௭. ஏனெனில், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னையுன் கைகளின் கிரியைகளிலெல்லாம் ஆசீர்வதித்து வருகிறார். இந்தப் பெரிய வனாந்தரவழியாய் நீ நடக்கிறதையறிவார். இந்த நாற்பது வருஷமும் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோடே யிருந்தார். உனக்கொன்றுங் குறைபட்டதில்லை யென்று சொல்லென்றார்.

௮. அப்படியே நாங்கள் சேயீரிலே குடியிருக்கிற ஏசாபுத்திரரான நம்முடைய சகோதரரை விட்டுக்கடந்து அந்தரவெளி வழியாய் ஏலாத்மேலும் எத்சேயோன் கேபேர் மேலும் போய்த் திரும்பிக்கொண்டு மோவாப் வனாந்தரவழியாய்க் கடந்துவந்தோம்.

௯. அப்பொழுது கர்த்தர் என்னோடே சொன்னதாவது; நீ மோவாபை நெருக்கப்படுத்தாமலும், அவர்களோடே யுத்தங்கலவாமலுமிருப்பாயாக. ஏனெனில், அவர்கள் தேசத்தில் உனக்கொன்றுஞ் சுதந்தரமாகக் கொடோம். அதேனென்றால்; ஆர் என்ற பட்டணத்தின் சீமையை லோத்புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௰. இராட்சியானதும் ஏனாக்கியரைப்போல உயர்ந்ததுமான பெரிய சனசதளமாகிய ஏமியர் முதல் அதிலே குடியிருந்தார்கள்.

௰௧. இவர்களும் ஏனாக்கியரை யொத்த இராட்சதரென்னப்பட்டார்கள். மோவாபியர் அவர்களை ஏமியரென்றார்கள்.

௰௨. அப்படியே சேயீரிலும் முதல் ஓரியர் குடியிருந்தார்கள். ஆனால் ஏசாபுத்திரர் அவர்களைத் துரத்தி அவர்களைத் தங்கள் முகத்திற்கு முன்பாக அழித்து அவர்கள் தலத்திலே குடியேறினார்கள். இஸ்ரவேலர்களுக்குச் சுதந்தரமாகக் கர்த்தர் கொடுத்த தேசத்திற்குச் செய்ததுபோலத்தானே.

௰௩. இப்பொழுதும் எழுந்து சேரேத் ஆற்றைக் கடவுங்களென்றார். அப்படியே சேரேத் ஆற்றைக்கடந்தோம்.

௰௪. நாம் காதேஸ்பர்னேயாவை விட்டுப் புறப்பட்டது முதற் கொண்டு சேரேத் ஆற்றைக் கடக்குமட்டுக்கும் யுத்தமனிதரின் சந்ததியெல்லாம் கர்த்தர் தங்களுக்கு ஆணையிட்டபடியே பாளயத்தின் நடுவிலிருந்து மாண்டு தீருமட்டுக்கும் சென்ற நாள்கள் முப்பத்தெட்டு வருஷங்களாயிருக்கின்றன.

௰௫. அவர்கள் பாளயத்தின் நடுவிலிருந்து மாண்டுதீருமட்டும் கர்த்தரின் கையும் அவர்களை நிர்மூலமாக்கும்படிக்கு அவர்களுக்கு விரோதமாயிருந்தது.

௰௬. யுத்தமனிதரெல்லாரும் சனத்தின் நடுவிலிருந்து செத்துத் தீர்ந்துபோனதற்குப் பிற்பாடோவென்றால்,

௰௭. கர்த்தர் என்னோடு சொன்னதாவது;

௰௮. நீ ஆர் பட்டணமிருக்கிற மோவாபின் எல்லையை இன்றைக்குக் கடந்து,

௰௯. அம்மோன் புத்திரருக்கு எதிராகச் சேரப்போகிறாய். அவர்களை நீ நெருக்கப்படுத்தவும் அவர்களோடே போர்கலக்கவும் வேண்டாம். ஏனெனில், அம்மோன் புத்திரரின் தேசத்திலொன்றும் உனக்குச் சுதந்தரமாகக் கொடோம். அதேனென்றால், அதை லோத்புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௨௰. அதுவும் இராட்சதரின் தேசமாக எண்ணப்பட்டது. இராட்சதர் முதல் அதிலே குடியிருந்தார்கள். அம்மோனியர் அவர்களைச் சம்சும்மீமென்றார்கள்.

௨௧. அவர்கள் திரட்சியானதும் ஏனாக்கியரைப்போல உயர்ந்ததுமான பெரிய சனசதனமாயிருந்தார்கள். கர்த்தரோ வென்றால் அவர்களை இவர்களுக்கு முன்பாக அழியப்பண்ணினார். இவர்கள் அவர்களைத் துரத்திவிட்டு அவர்கள் ஸ்தலத்திலே குடியேறினார்கள்.

௨௨. அவர் சேயீரிலே குடியிருக்கிற ஏசா புத்திரருக்காகச் செய்து ஓரியரை அவர்களுக்கு முன்பாக அழியப்பண்ணினதுபோலவும் அவர்கள் இவர்களைத் துரத்திவிட்டு இவர்கள் ஸ்தலத்தில் இந்நாள்வரைக்கும் குடியிருந்ததுபோலவுந்தானே.

௨௩. கப்தோரிலிருந்து புறப்பட்ட கப்தோரியர் ஆத்சேரீம் துவக்கிக் காத்சாமட்டும் குடியிருந்த ஆவியரையழித்து அவர்கள் ஸ்தலத்திலே குடியேறினதுபோலவுந்தானே.

௨௪. நீங்கள் எழும்பிப் பயணம்பண்ணி அர்னோன் ஆற்றைக் கடவுங்கள். இதோ, எஸ்போனின் இராசாவாகிய சீகோனென்கிற எமோரியனையும் அவன் தேசத்தையும் உன் கையிலொப்புக்கொடுத்தோம். அதைச் சுதந்தரித்துக்கொள்ளத் துவக்கி அவனோடே யுத்தங்கலந்துகொள்.

௨௫. உன்னாலுண்டாகுந் திகிலையும் உன் பயங்கரத்தையும் வானத்தின் கீழ் எங்குமிருக்கிற சனசதனங்களின்மேலே வரப்பண்ண இந்நாளிலே துவக்குவோம். உன் கீர்த்தியைக் கேட்டவர்கள் உனக்கு முன்பாகத் தத்தளித்து மன இடுக்கணடைவார்களென்றார்.

௨௬. அப்பொழுது நான் கேதேமோத் வனாந்தரத்திலிருந்து எஸ்போனின் இராசாவாகிய சீகோனண்டைக்குச் சமாதானமான வார்த்தைகளைச் சொல்லுந் தூதுவரை யனுப்பி,

௨௭. நான் உம்முடைய தேசத்தைக் கடந்துபோகட்டும். வலது இடதுபக்கமாயச் சாயாமல், வழியிலேதானே நடப்பேன்.

௨௮. சேயீரிலே குடியிருக்கிற ஏசாவின் புத்திரரும் ஆர் பட்டணத்திலே குடியிருக்கிற மோவாபியரும் எனக்குச் செய்ததுபோல நீர் எனக்கு நான் யோர்தானைக் கடந்து எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குக் கொடுக்கிற தேசத்திலே வருமட்டும்.

௨௯. நான் புசிக்கும் போசனத்தை விலைக்கிரயமாகவிற்று நான் குடிக்குந் தண்ணீரை விலைக்கிரயமாகத் தருவீராக. நான் என் கால்நடையாயக் கடக்கமாத்திரம் இடங்கொடுமென்று சொல்லியனுப்பினேன்.

௩௰. ஆனால் தன் தேசத்தைக் கடக்க எஸ்போனின் இராசாவாகிய சீகோன் நமக்கிடங் கொடுக்கமனதாயிருந்ததில்லை. ஏனென்றால், உன் பராபரனாகிய கர்த்தர் அவனை இந்நாளிலிருக்கிறதுபோல உன்கையிலொப்புக்கொடுக்கும்படிக்கு அவன் ஆவியைக் கடினப்படுத்தி அவன் இருதயத்தைத் துரங்கொள்ளப்பண்ணியிருந்தார்.

௩௧. அப்பொழுது கர்த்தர் என்னுடனே இதோ, சீகோனையும் அவன் தேசத்தையும் உனக்குமுன்பாக ஒப்புக்கொடுக்கத் துவக்கினோம். அவன் தேசத்தைக் கட்டிக்கொண்டு சுதந்தரிக்கத் துவக்கென்றார்.

௩௨. சீகோனும் அவனுடைய எல்லாச் சனமும் நமக்கெதிராக யுத்தம்பண்ணப் புறப்பட்டு யாத்சாவிலே வந்தான்.

௩௩. அவனை நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்கு முன்பாக ஒப்புக்கொடுத்தார். நாம் அவனையும், அவன் குமாரனையும், அவனுடைய எல்லாச் சனத்தையும் முறியடித்து,

௩௪. அவன் பட்டணங்களையெல்லாம் அக்காலத்திலே பிடித்து எல்லாப் பட்டணங்களிலுமிருந்த மனிதரையும் பெண்சாதிகளையும் பிள்ளைகளையும் ஒருவரையும் மீதியாக வைக்காமல் சங்காரம்பண்ணினோம்.

௩௫. மிருகஜீவன்களையும் நாம் பிடித்த பட்டணங்களின் ஆஸ்தியையுமாத்திரம் நமக்கென்று கொள்ளையிட்டோம்.

௩௬. அர்னோன் ஆற்றங்கரையிலிருக்கிற

ஆரோவேரையும் ஆற்றண்டையிலிருக்கிற பட்டணத்தைத் துவக்கிக் கீலேயாத்மட்டுக்கும் நமக்குமிஞ்சின அரணிப்பான பட்டணமிருந்ததில்லை. எல்லாவற்றையும் நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்கு முன்பாகவொப்புக்கொடுத்தார்.

௩௭. ஆனால் அம்மோன் புத்திரரின் தேசத்தையும் யாபோக்கு ஆற்றங்கரையானயாவையும் மலைகளின் பட்டணங்களையும் நம்முடைய பராபரனாகிய கர்த்தர் விலக்க நமக்குக் கற்பித்தயாவையுஞ் சேராதேவிட்டாய்.

## ௩. அதிகாரம்.

[(௧) பாசானின் இராசாவாகிய ஓகென்பவன் செயிக்கப்பட்ட செய்தி. (௰௧) அவன் கட்டிலின் அளவு, (௰௨) இரண்டரைக் கோத்திரங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேசம், (௨௩) மோசே கானான் தேசத்திலே தான் பிரவேசிக்கப் பராபரனை மன்றாடியது. (௨௭) அதைப் பார்க்க அவனுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது.]

பிற்பாடு நாம் திரும்பிக்கொண்டு பாசானுக்குப் போகிற வழியாய் ஏறிப்போனோம். அப்பொழுது பாசானின் இராசாவாகிய ஓகும் அவனுடைய எல்லாச் சனமும் நமக்கெதிராக யுத்தம் பண்ணப் புறப்பட்டு எதிரேயிலே வந்தான்.

௨. அப்பொழுது கர்த்தர் என்னுடனே அவனுக்குப் பயப்படாயாக. ஏனெனில் அவனையும் அவனுடைய எல்லாச் சனத்தையும் அவன் தேசத்தையும் உன் கையிலொப்புக்கொடுத்தோம். எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய சீகோனுக்கு நீ செய்ததுபோல அவனுக்குஞ் செய்யக்கடவாயென்றார்.

௩. அப்படியே நம்முடைய பராபரனாகிய கர்த்தர் பாசானின் இராசாவாகிய ஓகையும் அவனுடைய எல்லாச் சனத்தையும் நம்முடைய கையிலொப்புக்கொடுத்தார். அவனுக்கொருவரும் மீதியாயிராதே போகுமட்டும் அவனை முறியடித்தோம்.

௪. அக்காலத்திலே அவன் பட்டணங்களையெல்லாம் பிடித்தோம். நாம் அவர்கள் கையில் பிடிக்காத பட்டணமில்லை. பாசானிலிருந்த ஓகின் இராசசியமான அறுபது பட்டணங்களுள்ள அர்கோப் சீமையையெல்லாம் பிடித்தோம்.

௫. மதிலில்லாத மகாதிரள் ஊர்களையுந் தவிர அந்தப் பட்டணங்களெல்லாம் உயர்ந்த மதில்களாலும் வாசல்களாலுந் தாப்பாள்களாலும் அரணாக்கப்பட்டிருந்தது.

௬. அவைகளைச் சங்காரம் பண்ணினோம். நாம் எஸ்போனிலிருந்த சீகோனுக்குச் செய்ததுபோல அந்த எல்லாப் பட்டணங்களின் மனிதரையும் பெண்சாதிகளையும் பிள்ளைகளையுஞ் சங்காரம் பண்ணி,

௭. எல்லா மிருகசீவன்களையும் பட்டணங்களின் ஆஸ்தியையும் நமக்கென்று கொள்ளையிட்டோம்.

௮. அப்படியே யோர்தானுக்கிப்பாலே அர்னோன் ஆறு துவக்கி ஏர்மோன் பர்வதமட்டுமிருக்கிற தேசத்தை நாம் அக்காலத்தில் எமோரியருடைய இரண்டு இராசாக்களின் கையிலும் பிடித்தோம்.

௯. சீதோனியர் ஏர்மோனைச் சீரியோனென்கிறார்கள். எமோரியரோவெனில், அதைச் சேனீரென்கிறார்கள்.

௰. சமனான நாட்டின் எல்லாப் பட்டணங்களையும் கீலேயாத்தனைத்தையுஞ் சல்காயி எதிரேயென்ற பாசானிலிருந்த ஓகுடைய இராசசியத்தின் பட்டணங்கள்மட்டுமிருக்கிற பாசான் அனைத்தையும் பிடித்தோம்.

௰௧. ஏனெனிற் பாசானின் இராசாவாகிய ஓகென்றவன் மாத்திரம் இராட்சதரில் மீதியானவர்களில் இன்னமிருந்தான். இதோ, மனிதருடைய முழத்தின்படியே ஒன்பது முழநீளமும் நான்கு முழ அகலமுமான இருப்புக்கட்டிலாகிய அவன் கட்டில் அம்மோன் புத்திரருடைய ரபா பட்டணத்திலிருக்கவில்லையோ!

௰௨. அந்தத் தேசத்தை அக்காலத்திலே சுதந்தரித்துக்கொண்டோம். அர்னோன் ஆற்றண்டையிலிருக்கிற ஆரோவேரைத் துவக்கிக் கீலேயாத்மலைகளின் பாதியையும் அதிலிருக்கிற பட்டணங்களையும் ரூபேனியருக்குங் காதியருக்குங் கொடுத்தேன்.

௰௩. குறைக்கீலேயாத்தையும் ஓகின் இராசசியமாயிருந்த பாசான் அனைத்தையும் மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்குக் கொடுத்தேன். இராட்சதரின் தேசமென்னப்பட்டிருந்த முழுப்பாசானுமாகிய அர்கோப் சீமையையெல்லாந்தானே.

௰௪. மனாசேயின் குமாரனாகிய யாவீர் அர்கோப் சீமையையெல்லாங் கெசூரியர் மாகாத்தியரென்றவர்களின் எல்லைமட்டுங் கட்டிக்கொண்டு அதற்குத் தன் நாமத்தின்படியே யாவீரின் ஊர்களான பாசானென்று இந்நாள்வரைக்குஞ் சொல்லப்படுகிற பெயரைத் தரித்தான்.

௰௫. மாகீருக்குக் கீலேயாத்தைக் கொடுத்தேன்.

௰௬. ஆனால் கீலேயாத்தைத் துவக்கி அர்னோன் ஆறு ஓடுகிற நடுமையமுங் கடையாந்தரமுமட்டுக்கும் அம்மோன் புத்திரரின் எல்லையான யாபோக்கு ஆறுமட்டுமிருக்கிறதையும்,

௰௭. கின்னெரேத்தைத் துவக்கி அஸ்தோத் பிஸ்காவுக்குத் தாழ்வாய்க் கிழக்கேயிருக்கிற உப்புக்கடலான சமனான வெளியின் கடலம

ட்டும் யோர்தானின் எல்லைகளுக்குள்ளாயிருக்கிறசமனானவெளியையும் நான ரூபெனியருக்கும் காதியருக்குங்கொடுத்தேன.

௰௮. இப்படிவாங்கின உங்களுக்கு நான அந்நாளிலேகற்பித்ததாவது; உங்கள்பராபரனுகியகர்த்தர் உங்களுக்கு இந்தத்தேசத்தைச்சுதந்தரமாகக்கொடுத்தார். சேவகரிதராகிய நீங்களனைவரும் இஸ்ரவேல்புத்திரரான உங்கள் சகோதரருக்கு முன்னே ஆயுதப்பாடானவர்களாக நடந்துபோங்கள.

௰௯. உங்கள்பெண்சாதிகளும் உங்கள்பிள்ளைகளும்உங்கள் ஆடுமாடுகளுமாத்திரம் நாம் உங்களுக்குக்கொடுத்த உங்கள் பட்டணங்களிலிருக்கட்டும். ஏனெனில், ஆடுமாடுகள் உங்களுக்குத்திரட்சியா யிருக்கிறதெனறறிவேன.

௨௰. கர்த்தர் உங்களைப்போல உங்கள் சகோதரரையும் இளைப்பாறப்பண்ணி இவர்களுமயோர்தானுக்கப்பாலே உங்கள்பராபரனுகியகர்த்தர் தங்களுக்குக்கொடுக்கிற தேசத்தைச்சுதந்தரித்துக்கொள்ளுமட்டும் நீங்களிருந்து பிறபாடு அவரவர் நான உங்களுக்குக்கொடுத்த உங்கள்சுதந்தரத்திற்குத்திரும்பவேண்டியதாகவெனறேன.

௨௧. அக்காலத்திலே நான யோசுவாவுக்குக்கற்பித்ததாவது; உங்கள்பராபரனுகியகர்த்தர் அந்த இரண்டு இராசாக்களுக்குச செய்ததையெல்லாம் உனகணகளகணடது. இப்படியேகர்த்தர் நீபோய்ச்சேரும் எல்லா இராசசியங்களுக்குஞ்செய்வார்.

௨௨. அவர்களுக்குப் பயப்படாதேர்களாக. ஏனெனில் உங்கள் பராபரனுகியகர்த்தர் தாமே உங்களுக்காக யுத்தமபண்ணுகிறவரெனறேன.

௨௩. அக்காலத்திலே நானகர்த்தரைவிணணப்பம்பண்ணிச்சொன்னதாவது;

௨௪. கர்த்தராகிய ஆண்டவரே! தேவரீர் உமதடியானுக்கு உமமுடைய மகத்துவத்தையும உமமுடையபலமுள்ள கையையுங காணபிக்கத்துவக்கினீர். ஏனெனில வானத்திலும் பூமியிலும உமமுடையகிரியைகளுக்கும உமமுடையவல்லமைகளுக்கும ஒத்ததாகசசெய்யத்தக்கதேவனுர்!

௨௫. நான கடந்துபோய யோர்தானுக்கப்பாலிருக்கிற அந்த நல்லதேசத்தையும அந்த நல்லபர்வதத்தையும் லிபனோனையும பார்க்கட்டுமேயெனறேன.

௨௬. ஆனாற்கர்த்தர் உங்கள் நிமித்தமாக எனமேலே கோபமாயிருந்து, எனனைக்கேளாமறபோய என்னோடேசொன்னதாவது; உனக்குப்போதும இந்தக்காரியத்தைக்குறித்து இனி நம்மோடே சொல்லிக்கொளளாயாக.

௨௭. நீ பிஸ்காவின கொடுமுடியிலேறி உன்கண்களைமேற்கிலும வடக்கிலும தெற்கிலும கிழக்கிலும் ஏறெடுத்து உன்கண்களினாலேபார்த்துக்கொண்டிரு ஏனெனில இந்தயோர்தானை நீகடப்பதில்லை.

௨௮. ஆகையால நீ யோசுவாவுக்குக் கட்டளைகொடுத்து அவனைத்திடப்படுத்திப்பலப்படுத்து. ஏனென்றால அவன் இந்தச்சனத்திற்கு முன்பாகக்கடந்துபோய அவனே நீ காணுந்தேசத்தை யவர்களுக்குப் பங்கிட்டுக்கொடுப்பானென்றார்.

௨௯. இப்படியே பெத்பேயோருக்கு கெதிரான இந்தப் பள்ளத்தாக்கிலிருந்துவிடடோம.

## ௪. அதிகாரம்.

[(௧) கீழ்ப்படிதலுக்கேற்ற புத்திவார்த்தைகள். (௪௧) மோசே யோர்தான நதிக்கப்பால் மூன்று அடைக்கலப் பட்டணங்களை நியமித்தது.]

இப்பொழுதும இஸ்ரவேலே! நீங்கள் பிழைக்கும்படிக்கும நீங்கள்பிரவேசித்து உங்கள்பிதாக்களின பராபரனுகியகர்த்தர் உங்களுக்குக்கொடுக்கிற தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளும்படிக்கும நீங்கள்செய்யவேண்டியதேதென்று நான உங்களுக்குப்போதிக்கிற கட்டளைகளையும நியாயங்களையுங்கேளுங்கள்.

௨. நான உங்களுக்குக்கற்பிக்கிற உங்கள் பராபரனுகியகர்த்தரின கற்பனைகளை நீங்கள் கைக்கொள்ளும் படிக்கு நான உங்களுக்குக கற்பிக்கிற வசனத்தோடே நீங்கள்ஒன்றுங கூட்டவும அதிலொன்றுங் குறைக்கவும வேண்டாம.

௩. பாகால்பேயோரின நிமித்தங் கர்த்தர் செய்ததை உங்கள கணகளகணடது. ஏனெனிறபாகால் பேயோரைப்பின்பற்றினமனிதரையெல்லாம உன்பராபரனுகியகர்த்தர் உனனடுவிலிராதபடிக்கழித்தார்.

௪. ஆனால உங்கள்பராபரனுகியகர்த்தரைபபற்றிக்கொண்ட நீங்களனைவரும்இந்நாளில் உயிரோடிருக்கிறீர்கள்.

௫. இதோ, நீங்கள் சுதந்தரிக்கிறதற்குப் பிரவேசிக்குந் தேசத்திலே என்பராபரனுகியகர்த்தர் எனக்குக் கற்பித்தபடியேசெய்யும்படிக்கு நான உங்களுக்குக்கட்டளைகளையும நியாயங்களையும் போதித்தேன.

௬. ஆகையால அவைகளைக்கைக்கொண்டு அவைகளினபடிச்செய்யுங்கள். ஏனெனில சனசதளங்களின கணகளுக்கு முன்பாகவும அதுவே உங்கள ஞானமும உங்கள் உணர்வுமாயிருக்கும். அவர்கள இந்தக்கடடளைகளையெல்லாங் கேட்டு இந்தப் பெரிய சாதியே ஞானமும உணர்வுமான சனமெனபார்கள்.

௭. ஏனெனில், நம்முடைய பராபரனுகிய

கர்த்தரை நாந்தொழுதுகொள்ளுகிறபொழுதெல்லாம் அவர் நமக்குச் சமீபமாயிருக்கிறதுபோல, பராபரனை இத்தனைச் சமீபமாயிருக்கப்பட்ட வேறே பெரிய சாதியேது!

௮. இந்நாளிலுங்களுக்கு முன்பாக நான் நிறுத்துகிற இந்த எல்லா நியாயப்பிரமாணத்திறகும் ஒத்த இத்தனை நீதியுள்ள கட்டளைகளையும் நியாயங்களையும் பெற்றிருக்கிறவேறேபெரியசாதியுமேது.

௯. உன் கண்கள் கண்டகாரியங்களை நீ மறவாதபடிக்கும் உன் சீவனுள்ள நாளெல்லாம் அவைகள் உன் இருதயத்தை விட்டகன்று போகாதபடிக்குமாத்திரம் நீ யெச்சரிக்கையாயிருந்து உன் ஆத்துமாவை மிகவுங்காவற்பண்ணு. உன்பிள்ளைகளுக்கும் உன் பிள்ளைகளின்பிள்ளைகளுக்கும் அவைகளையறிவிக்கக்கடவாய்.

௰. விசேஷமாய் நீ ஒரேபில் உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நின்றநாளின் செய்தியைத் தான் அப்பொழுது கர்த்தரென்னுடனே சனத்தை நமக்குக்கூட்டு. நமது வார்த்தைகளையவர்களுக்குக்கேட்கப்பண்ணுவோம். அவர்கள் பூமியிலுயிரோடிருக்கும்நாளெல்லாம் நமக்குப்பயந்திருக்கும்படிக்கு அவைகளைக் கற்றுக்கொண்டு தங்கள் பிள்ளைகளுக்கும் போதிக்கக்கடவர்களென்றாரே;

௰௧. அப்பொழுது நீங்கள் சேர்ந்து பர்வதத்தின் அடியிலே நின்றீர்கள். பர்வதமோவென்றால் நடுவானமட்டும் அக்கினியாய் எரிந்தது. இருளும் மேகமும் அந்தகாரமும் உண்டாயிருந்தது.

௰௨. கர்த்தர் அக்கினியின் நடுவிலிருந்து உங்களோடேபேசினார். வார்த்தைகளின்சத்தத்தை நீங்கள் கேட்டீர்கள். ஆனால் நீங்கள் சத்தத்தைக்கேட்டதேயல்லாமல் ஒரு ரூபத்தைக்கண்டதில்லை.

௰௩. நீங்கள் செய்ய அவர் உங்களுக்குக் கற்பித்த பத்துவார்த்தைகளாகிய தம்முடைய உடன்படிக்கையை யவர் உங்களுக்கறிவித்து அவைகளை யிரண்டுகற்பலகைகளிலெழுதினார்.

௰௪. நீங்கள் சுதந்தரிக்கிறதற்குப் போயிருக்குந்தேசத்திலே கைக்கொள்ளவேண்டிய கட்டளைகளையும் நியாயங்களையும் உங்களுக்குப்போதிக்க வேண்டுமென்றும் அக்காலத்திலே கர்த்தர் எனக்குக்கற்பித்தார்.

௰௫. கர்த்தர் ஒரேபிலே அக்கினியின் நடுவேயிருந்து உங்களோடேபேசுகிறநாளிலே நீங்களொரு ரூபத்தையுங்கண்டதில்லை.

௰௬. ஆகையால், நீங்கள் உங்களைக்கெடுத்து ஆண் உருவும் அல்லது பெண் உருவும்,

௰௭. அல்லது பூமியிலிருக்கிற யாதொரு மிருகத்தின் உருவும் அல்லது ஆகாயத்திலே பறக்கிற செட்டையுள்ளயாதொரு பட்சியின் உருவும்,

௰௮. அல்லது பூமியிலுள்ளயாதொரு ஊர்வனவற்றினுருவும் அல்லது பூமியின்கீழ்த் தண்ணீரிலுள்ள யாதொரு மச்சத்தினுருவுமாயிருக்கிறயாதொரு விக்கிரகச் சாயலான உருவத்தை யுங்களுக்குண்டாக்காதபடிக்கும்.

௰௯. நீ உன்கண்களைவானத்திற கேறெடுத்து உன்பராபரனாகிய கர்த்தர் வானத்தின் கீழெங்குமிருக்கிற எல்லாச் சனசதளங்களுக்கும் பங்கிட்டவானத்தின் சகலசேனையாகிய சூரியனையுஞ் சந்திரனையும் நட்சத்திரங்களையும்நோக்கி அவைகளைப் பணிந்து சேவிக்க இணக்கப்படாதபடிக்கும், உங்கள் ஆத்துமாக்களுக்காக மிகவும் எச்சரிக்கையாயிருங்கள்.

௨௰. ஏனெனில், இந்நாளிலிருக்கிறதுபோல நீங்கள் தமக்குச் சுதந்தரமான சனமாயிருக்கும்படிக்குக் கர்த்தர் உங்களைச்சேர்த்துக்கொண்டு உங்களை எகிப்து என்ற இருப்புக்காளவாயிலிருந்து புறப்படப் பண்ணினார்.

௨௰௧. கர்த்தர் உங்கள் நிமித்தம் என்மேலேகோபமாகி நான்யோர்தானைக் கடப்பதில்லையென்றும் உன்பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக்கொடுக்கிற அந்த நல்லதேசத்தில் நான் பிரவேசிப்பதில்லையென்றும் ஆணையிட்டார்.

௨௰௨. ஆனபடியினால் நான்யோர்தானைக் கடவாமல் இந்தத்தேசத்திலேசாகிறேன். நீங்களோவென்றால் கடந்து அந்த நல்லதேசத்தைச் சுதந்தரித்துக்கொள்வீர்கள்.

௨௰௩. நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களோடேபண்ணின உடன்படிக்கையைமறந்து உன்பராபரனாகிய கர்த்தர் உனக்குவேண்டாமென்று விலக்கின எந்தவிதச்சாயலான சுரூபத்தையாகிலும் உங்களுக்குண்டாக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௨௰௪. ஏனென்றால், உன்பராபரனாகிய கர்த்தர் பட்சிக்கிற அக்கினியாகிய எரிச்சலுள்ள தேவனானவர்.

௨௰௫. உனக்குப்பிள்ளைகளும் பிள்ளைகளின்பிள்ளைகளும்பிறந்து நீங்கள்தேசத்திலேவெகுநாள் இருந்தபிறபாடு நீங்கள் உங்களைக்கெடுத்துப்பல விதச்சாயலான சுரூபங்களைப்பண்ணி உன்பராபரனாகிய கர்த்தருக்குக் கோபமுண்டாக்க அவர்பார்வைக்குப்பொல்லாப்பானதைச்செய்தால்,

௨௰௬. நீங்கள்சுதந்தரித்துக்கொள்ளயோர்தானைக்கடந்துபோகிறதேசத்திலிராமல் சீக்கிரம் அழிந்துபோவீர்களென்று இந்நாளில் வானத்தையும் பூமியையும் உங்களுக்கு விரோதமாகச்சாட்சியாக அழைக்கிறேன்.

நீங்கள் அதிலே நீடித்த நாளாயிராமல், அழிக்கவேயழிக்கப்படுவீர்கள்.

உஎ. கர்த்தர் உங்களைச் சனசதளங்களுக்குள்ளே சிதறடிப்பார். கர்த்தர் உங்களைக் கொண்டுபோய்விடப்போகிற சாதிகளிடத்திலே கொஞ்சச் சனங்களாய் மீந்திருப்பீர்கள்.

உஅ. அங்கே காணாமலுங் கேளாமலுஞ் சாப்பிடாமலும் மோக்காமலுமிருக்கிற மரமுங் கல்லுமான மனிதர்கைகளின் வேலையாகிய தேவர்களைச் சேவிப்பீர்கள்.

உக. அப்பொழுது அங்கேயிருந்து உன் பராபரனாகிய கர்த்தரைத்தேடுவாய். அவரை யுன்முழு இருதயத்திலும் உன்முழு ஆத்துமாவிலுந் தேடிக் கொண்டிருந்தாயேயானாற் கண்டுபிடிப்பாய்.

௩௰. உனக்குமன இடுக்கண் உண்டாகியிந்தக் காரியங்களெல்லாம் உன்னைப்பிடிக்கும் முடிவுநாள்களில் நீ உன்பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பி அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவாய்.

௩க. ஏனெனில், உன்பராபரனாகிய கர்த்தர் மனவுருக்கமுள்ள தேவனானவர். அவருன்னைக் கைவிடாமலுமுன்னை யழிக்காமலுந் தாமாணையிட்டு உன்பிதாக்களோடே பண்ணின உடம்படிக்கையை மறவாமலுமிருப்பார்.

௩உ. ஏனெனிற் பராபரன் மனிதனைப் பூமியிலே சிருஷ்டித்தநாள்முதற்கொண்டு உனக்குமுன்னிருந்த பூர்வநாள்களில் வானத்தின் ஒரு முனைதுவக்கி அதின் மறுமுனைமட்டுமிருக்கிற எவ்விடத்திலாகிலும் இப்படிக்கொத்த பெரியகாரியம் நடந்ததோ! அல்லவென்று இப்படிக்கொத்தது கேட்கப்பட்டதோவென்று நீ விசாரி!

௩௩. நீ கேட்டதுபோல யாதொரு சனம் அக்கினியின் நடுவிலிருந்துபேசுகிற பராபரனுடைய சத்தத்தைக்கேட்டதும் உயிரோடேயிருந்ததுமுண்டோ!

௩ச. அல்லது உங்கள் பராபரனாகிய கர்த்தர் எகிப்திலே யுன்கண்களுக்கு முன்பாக உங்களுக்குச் செய்தபடியெல்லாம் பராபரன்போய்ச் சோதனைகளினாலும், அடையாளங்களினாலும், அற்புதங்களினாலும், யுத்தத்தினாலும், பலத்தகையினாலும், நீட்டினபுயத்தினாலும், மகாபயங்கரச் செயல்களினாலும், யாதொருசாதியை யொருசாதியின் நடுவிலிருந்து தமக்குச் சேர்த்துக்கொண்டுபோக இனம் பண்ணினதுண்டோ!

௩ரு. கர்த்தரோ பராபரன். அவரையல்லாமல் வேறொருவரில்லையென்பதை நீ யறியும்படிக்கு உனக்கு அப்படித்தெரியக்காட்டப்பட்டது.

௩௬. உன்னை யுபதேசிக்கும்படிக்கு அவர் வானத்திலிருந்து தமது சத்தத்தை யுனக்குக் கேட்கப்பண்ணிப் பூமியிலே தமது பெரிய அக்கினியை யுனக்குக்காண்பித்தார். அக்கினியின் நடுவிலிருந்துண்டான அவருடைய வார்த்தைகளைக்கேட்டாய்.

௩எ. அவர் உன் பிதாக்களைச் சிநேகித்து அவர்களுக்குப்பின்னான அவர்களுடைய வித்தைத்தெரிந்துகொண்டபடியினாலே,

௩அ. அவர் உன்னிலும் பலத்த பெரியசாதிகளை யுனக்குமுன்பாகத் துரத்தவும் உன்னை யழைத்துப்போய் அவர்கள் தேசத்தை யிந்நாளில் ஆகிறதுபோல உனக்குச் சுதந்தரமாகக்கொடுக்கவும் உன்னைத் தமமுடைய முகத்தினாலும், தமமுடையமகாவல்லமையினாலும், எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௩௯. ஆனதுகொண்டு உயரவானத்திலுங் கீழேபூமியிலுங்கர்த்தரேபராபரன். அவரைத்தவிர ஒருவருமில்லையென்பதை நீ யிந்நாளிலே யறிந்து உன்மனதிலேதரித்து,

ச௰. உனக்கும் உனக்குப்பிறபாடு உன்பின்னைகளுக்கும் நன்றாயிருக்கிறதற்கும் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்கென்றைக்குமென்று கொடுக்கிறசீமையிலே நீ நீடித்த நாளாயிருக்கிறதற்கும், நான் இன்றுனக்குக் கற்பிக்கிற அவருடைய கட்டளைகளையும் அவருடையகற்பனைகளையுங் கைக்கொள்ளக்கடவாயென்றான்.

சக. அப்பொழுது மோசே யோர்தானுக்கிப்பாலே சூரியோதய முனையாயிருக்கிற மூன்றுபட்டணங்களாகிய,

சஉ. ரூபேனியரைச்சேர்ந்த சமனான பூமியென்ற வனாந்தரத்திலுள்ள பேத்சேரையுங் காதியரைச் சேர்ந்த கிலேயாத்திலுள்ள ராமோத்தையும், மனாசேயரைச் சேர்ந்த பாசானிலுள்ள கோலானையும்,

ச௩. அறியாமலும் பகையை முன்னாளில வைத்திராமலுந் தனக்கடுத்தவனைக்கொன்றுபோட்டவன் அந்த மூன்றுபட்டணங்களிலொன்றிலே ஓடிப்போய் உயிரோடிருக்கும்படிக்குப் பிரித்துவைத்தான்.

சச. இது மோசே இஸ்ரவேல் புத்திரரின் முன் நிறுத்தின நியாயப்பிரமாணம்.

சரு. இவைகள் இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலிருந்து புறப்பட்டபிறபாடு மோசேயோர்தானுக்கிப்பாலே எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய சீகோனின் தேசத்திலிருக்கிற பெத்பேயோருக்கெதிரான பள்ளத்தாக்கிலே யவர்களுக்குச்சொன்ன சாட்சிகளுங் கட்டளைகளும் நியாயங்களுமாயிருக்கின்றன.

ச௬. அவனைமோசேயும் இஸ்ரவேல்புத்திரரும் எகிப்திலிருந்து புறப்பட்டபிறபாடு முறியடித்து,

சஎ. யோர்தானுக்கிப்பாலே சூரியோதய முனையில் அர்னோன் ஆற்றோரமான ஆரோவேரைத்துவக்கி எர்மோனென்ற சீயோன

மலைமடடுமிருககிற சீமையும,

௪௮. யோர்தானுககிப்பாலே சூரியோதயமுனையில அஸ்தோத் பிஸ்காவுககுததாழவான சமபூன வெளியின கடலமட்டுமிருககிற சமபூனவெளியனைததுமாகிய,

௪௯. எமோரியருடைய இரணடு இராசாககளின தேசங்களான சீகோனுடைய தேசததையும பாசானின் இராசாவாகிய ஓகின தேசததையுங கட்டிககொணடிருநதார்கள.

## ரு. அதிகாரம்.

[(௧) ஓரேபிலேசெய்த உடமபடிககை. (௬) பத்துககற்பனைகள. (௨௨) சனஙகள வேணடுதலசெயதபடி மோசே பராபரனிடத்தில் நியாயப்பிரமாணத்தைப்பெற்றது.]

மோசே இஸ்ரவேலையெலலாமஅழைப்பித்து அவர்களுககுச சொன்னதாவது; இஸ்ரவேலே! நான இனறு உஙகளகாதுகளகேட்கச்சொல்லுகிற கட்டளைகளையும நியாயங்களையுஙகேள. நீஙகள அவைகளினபடியே செயயுமபடிககு அவைகளைககற்றுககைககொளளககடவீர்கள.

௨. நமமுடைய பராபரனாகிய கர்ததர் ஓரேபிலே நமமோடே யுடமபடிககைபணணினார்.

௩. இநதஉடமபடிககையைக்கர்ததர் நமமுடையபிதாககளோடலல, இனறு இஙகே உயிரோடிருககிற நமமோடெலலாம பணணினார்.

௪. முகமுகமாய்க கர்ததர் பர்வதத்திலே அககினியின நடுவிலிருநது உங்களோடே பேசினார்.

௫. கர்ததருடையவார்ததையை யுஙகளுககறிவிககுமபடிககு அககாலததிலே நான கர்ததருககும உஙகளுககும நடுவாக நினறேன. எனெனில பர்வதத்திலேறுமல அககினிககுப்பயநதீர்கள. அவர் சொனனதாவது;

௬. உனனைஅடிமையினவீடாகிய எகிப்துதேசததிலிருநது புறபபடபபணணின உனபராபரனாகியகர்ததர் நாமே.

௭. நமககுமுனபாக உனககுவேறு தேவர்கள உணடாயிருககவேணடாம.

௮. உயர வானததிலுங கீழே பூமியிலும பூமியினகீழ்த தணணீரிலும உணடானவைகளுக்கொததிருககிற ஒரு சுருபததையாகிலும யாதொருவிககிரகததையெனகிலும நீயுனககுணடாககவேணடாம.

௯. நீ யவைகளை நமஸ்கரிககவும அவைகளைசசேவிககவும வேணடாம. எனெனறால, உனபராபரனாகிய கர்ததராயிருககிற நாம எரிசசலுளள தேவனாயிருநது நமமைப்பகைககிறவர்களுககோ வெனறால் பிதாககளுடைய அநியாயததைப பிளளைகளிடத்திலே மூனறும நானகாநதலைமுறைமட்டும விசாரிககிறவராயிருககிறோம.

௰. ஆனால நமமைச்சிநேகிதது நமமுடைய கற்பனைகளைக் கைககொளளுகிறவர்களுககாயிரந தலைமுறைமட்டுந தயவுசெயகிறவராயிருககிறோம.

௰௧. உனபராபரனாகிய கர்ததருடைய நாமததைவீணிலேவழஙகாயாக. எனெனறால், கர்ததர்தமமுடைய நாமததைவீணிலேவழஙகினவனைத்தணடியாமலவிடார்.

௰௨. ஓயவுநாளையுனபராபரனாகியகர்ததர் உனககுககற்பிததபடியே பரிசுததமாககுமபடிககுககைககொள.

௰௩. ஆறுநாள நீவேலைசெயது உனகிரியையையெலலாம நடபபிப்பாயாக.

௰௪. ஆனால ஏழாமநாளஉனபராபரனாகிய கர்ததருடைய ஓயவுநாள. அதிலே நீயானாலும உனகுமாரனானாலும உனகுமாரத்தியானாலும்உனவேலைக்காரனானாலும் உனவேலைக்காரியானாலும்உனஎருதானாலும்உன்கழுதையானாலும உனககிருககிற யாதொரு மிருகசீவனானாலும உனவாசலகளிலிருககிற உனபரதேசியானாலும யாதொரு வேலையைச செயயவேணடாம. உன வேலைககாரனும உனவேலைககாரியுமஉனனைபபோலிளைபபாறுமபடிககுததானே.

௰௫. எனெனில, எகிப்துதேசததில அடிமையாயிருநதாயெனறும, உனபராபரனாகியகர்ததர் உனனையஙகேயிருநது பலததகையினாலும நீட்டபபட்ட புயததினாலும புறபபடபபணணினாரெனறும நினைபபாயாக. ஆனபடியினாலே ஓயவுநாளையாசரிக்க உனபராபரனாகியகர்ததர் உனககுக்கற்பித்தார்.

௰௬. உனநாள்கள நீடிததிருககிறதறகும உனபராபரனாகியகர்ததர் உனககுககொடுககிற சீமையிலே நீநனறாயிருககிறதறகும உனதகபபனையும உனதாயையும உனபராபரனாகியகர்ததர் உனககுக கற்பிததபடிகனமபணணு.

௰௭. கொலைசெயயாயாக.

௰௮. விபசாரமபணணாயாக.

௰௯. களவுசெயயாயாக.

௨௰. உனககடுததவனுககு விரோதமாகப பொய்ச்சாட்சிசொலலாயாக.

௨௧. உனக்கடுத்தவனுடையபெண்சாதியை யிச்சிக்காயாக. உனக்கடுததவனுடையவீட்டையும அவனநிலததையும அவனவேலைக்காரனையும அவனவேலைககாரியையும அவனஎருதையும அவனகழுதையையுமபினனையுனககடுததவனுககுளள யாதொனறையுமிசசிககாயாகவெனறார்.

௨௨. இந்தவார்ததைகளைக் கர்ததர் பர்வதத்திலே அககினியிலும மேகததிலும அநதகாரததிலுமிருநது உஙகளசபையோடே

ல்லாம் மகாசத்தத்தோடே சொல்லி அவைக ளோடொன்றுங் கூட்டாதிருந்து அவைகளை யிரண்டு கற்பலகைகளிலெழுதி யெனக்குக் கொடுத்தார்.

௨௩. பர்வதம் அக்கினியாயெரியும்போது அந்தகாரத்தின் நடுவிலிருந்துண்டாகிற சத்தத்தை நீங்கள் கேட்டபொழுதோ வென்றால் கோத்திரங்களின் தலைவரும் மூப்பருமாகிய நீங்களெல்லாரு மென்னண்டையிற் சேர்ந்து சொன்னதாவது;

௨௪. இதோ, எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குத் தம்முடைய மகிமையையுந் தம்முடைய மகத்துவத்தையுங் காண்பித்தார். அக்கினியின் நடுவிலிருந்துண்டான அவருடைய சத்தத்தையுங் கேட்டோம். பராபரன் மனிதனோடே பேசியும் இவனுயி ரோடிருக்கிறதை யிந்நாளிலே கண்டோம்.

௨௫. இப்பொழுதும் நாங்கள் சாவானேன்! இந்தப்பெரிய அக்கினியெங்களைப் பட்சிக் குமே; நாங்கள் அப்புறம் எங்கள் பராபர னாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்டுக்கொ ண்டேயிருந்தாற் சாவோம்.

௨௬. ஏனெனில், நாங்கள் கேட்டதுபோல அக்கினியின் நடுவிலிருந்து பேசுகிற சீவனு ள்ள பராபரனுடைய சத்தத்தைக் கேட்கிற தற்கும், உயிரோடிருக்கிறதற்கும், மாமிச மெல்லாம் எம்மாத்திரம்!

௨௭. நீர் கிட்டப்போய் எங்கள் பராபர னாகிய கர்த்தர் உனக்குச் சொல்வதையெல் லாங் கேட்டு நீரே யெங்கள் பராபரனாகிய க ர்த்தர் சொல்வதையெல்லாம் எங்களோ டேசொல்லும். நாங்கள் கேட்டு அதின்படி யேசெய்வோமென்றீர்கள்.

௨௮. இதை நீங்களென்னோடே சொல்லு கையிற கர்த்தர் உங்கள் வார்த்தைகளின் சத் தத்தைக் கேட்டு என்னோடே சொன்னதாவ து; இந்தச்சனம் உன்னோடே சொன்ன வார் த்தைகளின் சத்தத்தைக் கேட்டோம். அவ ர்கள் சொன்னதெல்லாம் நல்லது.

௨௯. அவர்களும் அவர்கள் பிள்ளைகளும் என்றென்றைக்கும் நன்றாயிருக்கும்படிக்கு அவர்கள் சகல நாளும் நமக்குப் பயப்படுகிற தற்கும், நம்முடைய கற்பனைகளையெல்லாங் கைக்கொள்ளுகிறதற்குமான இப்படிக் கொத்த இருதயம் அவர்களுக்கிருந்தால் தாவிளை.

௩௰. நீ போய் உங்கள் கூடாரங்களுக்குத் திரும்பிப்போங்களென்று அவர்களுக்குச் சொல்லு.

௩௧. நீயோவென்றால், இங்கே நம்மோடே தரித்திரு, நீ யவர்களுக்குப் போதிக்கவும் நாம் அவர்களுக்குச் சுதந்தரமாகக் கொடுக் கிற தேசத்தில் அவர்கள் செய்யவும் வேண் டிய சகல கற்பனைகளையுங் கட்டளைகளையும் நியாயங்களையும் உனக்குச் சொல்லுவோ மென்றார்.

௩௨. ஆகையால் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கற்பித்தத்தின்படியே செய்யச் சாவதானமாயிருங்கள். வலது இடதுபுறமாக விலகீர்களாக.

௩௩. நீங்கள் சுதந்தரிக்கும் தேசத்திலே பிழைத்துச் சுகித்து நீடித்திருக்கும்படிக்கு உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கற்பித்த எல்லா வழியிலும் நடக்கக்கடவீர் கள்.

## ௬. அதிகாரம்.

[(௧) நியாயப்பிரமாணங் கீழ்ப்படிதலுக் கென்பது. (௩) கீழ்ப்படிதலுக்கேற்ற புத்தி மதிகள்.]

நீயுன் பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்து உயிரோடிருக்கும் நாளெல் லாம் நீயும் உன்குமாரனும் உன்குமாரத்தி யும் நான் உனக்குக் கற்பிக்கிற அவருடைய எல்லாக் கட்டளைகளையுங் கற்பனைகளையுங் கைக்கொள்ளுகிறதினாலே நீடித்திருக்கும்ப டிக்கு,

௨. நீங்கள் சுதந்தரிக்கத்தக்கதாகக் கட ந்துபோயிருக்கும் தேசத்திலே நீங்கள் செ ய்யவேண்டுமென்று உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குப் போதிக்கக் கற்பித்த கற்பனைகளுங் கட்டளைகளும் நியாயங்களு மிவைகள் தானே.

௩. ஆகையால் இஸ்ரவேலே! நீ நன்றாயி ருக்கிறதற்கும், உன்பிதாக்களின் பராபரனா கிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி பாலுந் தேனுமோடுந் தேசத்திலே நீ மிகவும் பெ ருகிப்போகிறதற்கும் நீ கேள்விகொடுத்து அவைகளின்படி செய்யச் சாவதானமாயிரு.

௪. இஸ்ரவேலே! கேள். நம்முடைய பரா பரனாகிய கர்த்தர் ஒரே கர்த்தரானவர்.

௫. நீ யுன் பராபரனாகிய கர்த்தரை யுன் முழு இருதயத்தினாலும் உன் முழு ஆத்துமாவி னாலும் உன் முழுப்பலத்தினாலுஞ் சிநேகிப் பாயாக.

௬. இன்று நான் உனக்குக் கற்பிக்கிற இந்த வார்த்தைகள் உன்னிருதயத்திலிருக்கக்கட வது.

௭. நீ யவைகளை யுன் பிள்ளைகளுக்குக் கருத் தாய்ப்போதித்து நீ யுன் வீட்டிலுள்ளுக்கா ந்திருக்கிற பொழுதும், வழியிலே நடக்கிற பொழுதும், படுத்துக்கொள்ளுகிற பொழு தும், எழுந்திருக்கிறபொழுதும் அவைகளைக் குறித்துப் பேசி,

௮. அவைகளை யுன் கையின்மேல் அடை யாளமாகக் கட்டுவாயாக. அவைகள் உன் கண்களின் நடுவே நெற்றிப்பட்டங்களாக விருக் கக்கடவது.

௯. அவைகளை யுன்வீட்டுவாசல் நிலைகளி னமேலும உனவாசலகளிலேயும எழுதுவா யாக.

௰. உன பராபரனாகிய கர்த்தர் உனக்குக கொடுபபோமென்று ஆபிரகாம ஈசாக் யாககோப் என்ற உனபிதாககளுக்க காணை யிட்டதேசததிலுனனைப பிரவேசிககபபண ணுமபொழுதும நீ கட்டாதிருக்கிற வசதி யான பெரியபட்டணஙகளையும,

௰௧. நீ நிரபபாதிருக்கிற சகல நலல வஸ துககளால நிரம்பியவீடுகளையும நீவெட்டா மல வெட்டபபட்டிருக்கிற துரவுகளையும நீ நாட்டாத திராட்சததோட்டஙகளையும ஒலிவத்தோபபுகளையும அவர் உனக்குக கொடுபபதினால நீ சாப்பிட்டுத் திர்த்தியா கிறபொழுதும,

௰௨. உன்னையடிமைவீடாகிய எகிப்துதே சத்திலிருநது புறபபடபபணணின கர்த தனை மறவாதபடிக கெசசரிக்கையாயிரு.

௰௩. நீயுன பராபரனாகிய கர்ததருக்குப பயநது அவருக்காராதனைசெயது அவர் நா மததைககொணடாணையிடுவாயாக.

௰௪. உன பராபரனாகிய கர்ததருடைய கோபம உனக்கு விரோதமாகமூணடு உன னைபபூமியிலவைக்காமல் அழித்துபபோடா தபடிக்கு உஙகளைசசுற்றிலுமிருக்கிற சன சதஙகளின தேவர்களாகிய ஒரு அநநிய தேவர்களைப பினபற்றுதிருபபீர்களாக.

௰௫. ஏனெனிலுன பராபரனாகியகர்த்தருன் நடுவிலே எரிசசலுளள தேவனாயிருக்கிறார்.

௰௬. நீஙகள மாசாவிலே செய்ததுபோல உஙகள பராபரனாகியகர்த்தரைபபரிட்சை பாராதிருபபீர்களாக.

௰௭. உஙகள பராபரனாகிய கர்த்தர் உஙக ளுக்குக்கறபித்த அவருடைய கறபனைகளை யும அவருடையசாட்சிகளையுமஅவருடைய கட்டளைகளையுமே கைககொளவீர்களாக.

௰௮. நீ நன்றாயிருக்குமபடிக்கும கர்த்தர் உனபிதாககளுக்குக்காணையிட்ட நலலதேசத தில நீ பிரவேசித்ததைச சுதநதரிக்குமபடி க்கும,

௰௯. கர்ததர் உனசததுருக்களையெலலாந தானசொன்னபடி யுன முகததிறகு முன பாகத் துரததிவிடுமபடிக்கும நீ கர்த்தரு டைய பார்வைக்குசசெமமையும நனமையு மாயிருக்கிறதைசசெயவாயாக.

௨௰. நமமுடைய பராபரனாகிய கர்த்தர் உஙகளுக்குக கறபித்த இநதச்சாட்சிகளுங் கட்டளைகளும நியாயஙகளுமென்ன வென றுனகுமாரன நாளைககுனனைக்கேட்டால,

௨௧. நீ உனகுமாரனோடே சொலலவேண் டியது. நாஙகள எகிப்திலே பார்வோனுக கடிமைகளாயிருநதோம். கர்த்தரோவெனிற பலத்தகையினாலே எஙகளை எகிப்திலிருநது புறபபடபபணணினார்.

௨௨. அதேதெனிற கர்த்தர் எஙகள கண களுக்குமுனபாக எகிப்திலே பார்வோன மேலும அவனுடைய வீட்டனைததினமேலும அடையாளஙகளையும கொடிதான பெரிய அறபுதஙகளையுஙகட்டளையிட்டு,

௨௩. தாம நமமுடைய பிதாககளுக்குக்காணை யிட்ட தேசததிறகெஙகளைக கூட்டிககொ ணடுபோய அதைநமக்குககொடுக்குமபடிக் கெஙகளை யவவிடததிலிருநது புறபபடப பணணினார்.

௨௪. இபபொழுதும நாம நமமுடைய பராபரனாகிய கர்த்தருக்குப பயபபடுகிற தறகும சகலநாளும நாம நனறாயிருக்கிற தறகும இநநாளிலிருக்கிறதுபோல நமமை அவர் உயிரோடேகாக்கிறதறகுமாக இநத எலலாககட்டளைகளினபடியேயுஞ செயயக் கர்த்தர் நமக்குககறபிததார்.

௨௫. நமமுடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக கறபிததபடியே நாம அவருக்கு முனபாக இந்த எலலாககறபனைகளின படி யுஞசெயயசசாவதானமாயிருநதால நமக்கு நீதியாயிருக்குமெனபாயாக.

## ௭. அதிகாரம்.

[(௧) சனஙகள விககிரகஆராதனையைவிலகி நிறபதையும, (௬) அவர்கள பரிசுத்தமா யிருபபதையும, (௯) பராபரனுடையசுபா வத்திலேதானே நீதியும இரககமுஙகாணப படுகிறதையும, (௰௭) அவர் சனஙகளுக்கு வெறறியைத்தருவதையுஙகுறித்தது.]

உனபராபரனாகிய கர்ததர் நீ சுதநத ரிக்கப்போகிறதேசத்தில உன்னைப் பிரவேசிககபபணணி உன்னைபபார்க்கிலும சனமபெருதத சாதிகளாகிய ஏததியர் கர் காசியர், எமோரியர், கானானியர், பெரிசியர், எவியர், எபூசியரெனற ஏழுபலததசாதிகளை யுனக்குமுனபாகததுரததி,

௨. நீ யவர்களை முறியடிக்குமபடிக்கு உன் பராபரனாகிய கர்ததர் அவர்களை யுனக்கு முனபாக ஒபபுககொடுக்கும்பொழுது அவர் களைச சஙகரிககவே சஙகரிக்கக்கடவாய. நீ யவர்களோடே யுடமபடிக்கைபணண வும அவர்களுக்கிரஙகவுமவேணடாம.

௩. அவர்களோடே சமபநதங்கலவாயாக. உனகுமாரததிகளை யவர்கள குமாரருக்குக கொடாமலும அவர்கள குமாரததிகளை யுன் குமாரருக்குக கொளளாமலுமிருபபாயாக.

௪. ஏனெனில, நமமைபபினபறறுமல அந நியதேவர்களைசசேவிக்குமபடிக்குஅவர்கள உனகுமாரனை விலக்கபபணணுவார்கள. அப பொழுது கர்ததருடையகோபம உஙகளு க்கு விரோதமாகமூணடு உஙகளைச சீக்கிரத திலேயழிக்கும.

௫. நீஙகள அவர்களுக்குச- செயயவேண

டிய தேதெனில, அவர்கள பலிபீடஙகளை பிடிதது அவர்கள சிலைகளைததகர்தது அவர்கள தோபபுகளைவெடடி அவர்கள சுருபங்களையககினியாலெரிததுப போடவேணடும்.

சு. ஏனெனில, நீயுன பராபரனாகிய கர்த்தருககுப பரிசுத்தசனம பூசசககரததிலிருககிற எலலாசசனசதனஙகளிலும நீதமக்குச் சொநதச் சனமாயிருககிறதறகாக உன பராபரனாகிய கர்ததர் உனனைததெரிநது கொணடார்.

எ. சகலசனசதனங்களிலும்நீங்கள்திரட்சியான சனமெனபதினாலே கர்ததர்உஙகளைப பிரியமாயப பார்தது நதெரிநதுகொணடது மிலலை. ஏனெனில, நீஙகள சகல சனசதனஙகளிலுங கொஞசமானசனம.

அ. ஆனறகர்ததர் உஙகளைசசிநேகிததினாலும உஙகள பிதாககளுககிடட ஆணையைக கைககொளளுகிறதினாலுங கர்ததர் உஙகளைபபலதத கையினாலே புறபபடப பணணி உனனையடிமைவீடாகிய எகிப்தினுடைய இராசாவானபார்வோனினகைக்கு நீஙகலாககிவிடடார்.

கூ. இபபொழுதுந தமமைசசிநேகிததுத் தமதுகறபனைகளைக கைககொளளுகிறவர்களுககு உன பராபரனாகிய கர்ததர் ஆயிரந்தலைமுறைமடடுமஉடனபடிக்கையையுந் தயவையுங்காக்கிற உணமையுள்ள தேவனான பராபரனாயிருககிறவரொனறும,

ய. அவர் தமமைப பகைககிறவர்களுககு வெளியரஙகமாகச் சரிககுச்சரிக்கட்டியவர்களை யழிபபாரொனறும அவர் தாமதியாமல தமமைப பகைககிறவனுககு வெளியரஙகமாகச சரிககுசசரிக கடடுவாரொனறும நீ அறியககடவாய.

யக. ஆகையால நீசெயயுமபடிககு நான இனறுனககுககறபிககிற கறபனைகளையுங கடடளைகளையும நியாயஙகளையுங கைககொளவாயாக.

யஉ. இநதநியாயஙகளை நீஙகளகேடடுக கைககொணடு அவைகளினபடி செயதீர்களானால அபபொழுது உன பராபரனாகிய கர்ததர் உனபிதாககளுககாணையிட்ட உடனபடிக்கையையுங கிருபையையும உனககாகக்காதது,

யந. உனனைசசிநேகிதது உனனையாசீர்வதித்து உனககுக கொடுபபொமெனறு உன பிதாககளுககாணையிடட சீமையில உனனைப பெருகபபணணி உன கர்ப்பக்கனியையும் உன நிலததினகனியாகிய உனதானியததையும உனதிராட்சபபழ இரசததையும உன எணணெயையும உனமாடுகளின பலனையும் உன ஆடுகளின மநதைகளையும ஆசீர்வதிபபார்.

யச. சகலசனசதனஙகளைபபார்ககிலுமஆசீர்வதிக்கப்படடிருப்பாய. உனனிடத்திலே

உனகள

மலடனும மலடியுமிருபபதிலலை. உனமிருக சீவனகளில மலடானது மிருபபதிலலை.

யரு. கர்ததர் சகலநோயையும உனனை விடடுவிலககுவார். நீ யறிநதிருககிற எகிப்தியரின பொலலாதரோகஙகளி லொனறையும உனமேல வரபபணணாமல உனனைப பகைககிறயாவர்மேலும அவைகளை வரப பணணுவார்.

யசு. உன பராபரனாகிய கர்ததர் உனககொபபுக்கொடுககுஞ சகலசனசதனங்களையும அழிபபாயாக. உன கண அவர்களுககிரஙகாதிருபபதாக. அவர்கள தேவர்களை நீ சேவிககாமலிருபபாயாக. ஏனெனில, அதுவுனககுககணணியாயிருககும.

யஎ. அநதசசாதிகள எனனிலுஞ சனமபருததவைகள. அவைகளை நான துரததிவிடக கூடுவதெபபடியெனறு உனனிருதயததிலே சொலலிககொணடாயானால,

யஅ. அவைகளுககுப பயபபடாதேபோ. உனபராபரனாகிய கர்ததர்பார்வோனுக்கும் எலலா எகிப்தியருககுஞ செயதததையும,

யகூ. உனகணகளகணட பெரியசோதனைகளையும அடையாளஙகளையுமஅறபுதஙகளையும உன பராபரனாகிய கர்ததர் உனனைப புறபபடபபணணிக காணபிதத பலத்த கையையும நீடடினபுயததையும நினைககவே நினைபபாயாக. அபபடியே யுனபராபரனாகிய கர்ததர் நீபார்ததுப பயபபடுகிற எலலாசசனசதனஙகளுககுஞ செயவார்.

உய. மீதியாயிருந்து உனககுமுனபாகஒளிததுக கொளளுகிறவர்கள அழியுமடடும உன பராபரனாகிய கர்ததர் வணடுகளையும அவர்களுககுள அனுபபுவார்.

உக. அவர்களைபபார்த்துத்திடுக்கிடாயாக. ஏனெனில பயஙகரமாயிருககிற மகாதேவனான உன பராபரனாகிய கர்ததர்உனநடுவேயிருககிறார்.

உஉ. அநதசசாதிகளை யுன பராபரனாகிய கர்ததர் கொஞசங கொஞசமாய உனனை விடடுததுரததுவார். காடடுச சீவனகள உனககு விரோதமாயப பெருகாதபடிககு நீ யவைகளைச சீககிரததிலே நிர்மூலமாக்கக்கூடாது.

உந. அவர்கள அழியுமடடும உன பராபரனாகிய கர்ததர் அவர்களை யுனககு முனபாக ஒபபுககொடுதது அவர்களை மிகவுங கலஙகடிபபார்.

உச. அவர்களுடைய இராசாககளை யுன கையிலொபபுககொடுபபார். அவர்கள்பேர் வானததினகீழிராதபடிக கழியபபணணக் கடவாய. நீயவர்களையழிததுத் தீருமடடும ஒருவரும உனககு முனபாக நிற்கக்கூடாதிருககும.

உரு. அவர்கள தேவர்களின சுருபஙகளை யககினியினாலே சுடடெரிக்கக் கடவாய. நீ

யவைகளாற் சிக்கிக்கொள்ளாதபடிக்கு அவைகளிலிருக்கிற வெள்ளியையும் பொன்னையும் இச்சிக்காமலும் அதையெடுத்துக்கொள்ளாமலு மிருப்பாயாக. ஏனெனில், அவைகள் உன் பராபரனாகிய கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கின்றன.

௨௬. ஆகையால் அவைகளைப்போல நீ சாபமாகாதபடிக்கு அருவருப்பானதை யுன் வீட்டிலே கொண்டுபோகாயாக. அதைச் சீயென்றுசொல்லி அதை யருவருக்கவேயருவருக்கக்கடவாய். ஏனெனில், அது சாபத்திற்குள்ளானது.

## ௮. அதிகாரம்.

[(௧) பராபரன் செய்த நன்மையினிமித்தமாகவுங் கீழ்ப்படிதலைக் கற்பிக்கின்றது.]

நீங்கள் பிழைத்துப் பெருகிக் கர்த்தர் உங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே பிரவேசித்து அதைச் சுதந்தரிக்கும்படிக்கு நான் இன்றுங்களுக்குக் கற்பிக்கிற எல்லாக் கற்பனைகளின்படியுஞ் செய்யச் சாவதானமாயிருப்பீர்களாக.

௨. உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சிறுமைப்படுத்தும்படிக்குந் தம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுவாயோ கைக்கொள்ளாயோவென்று அவர் உன்னைச் சோதித்து உன் இருதயத்திலிருக்கிறதை நீயறியும்படிக்கும் உன்னை யிந்த நாற்பது வருஷமளவும் வனாந்தரத்திலே நடத்தின எல்லாவழியையும் நினைப்பாயாக.

௩. அவர் உன்னைத் தாழ்மைப்படுத்தி யுன்னைப் பசியாயிருக்கப்பண்ணி மனிதன் அப்பத்தினால் மாத்திரம் பிழைக்காமற் கர்த்தருடைய வாயிற்பிறப்பதினாலெல்லாம் பிழைக்கிறானென்பதை யுனக்கறியப்படுத்தும்படிக்கு நீயும் உன் பிதாக்களும் அறியாதிருந்த மன்னாவினாலுன்னைப் போஷித்தார்.

௪. இந்த நாற்பது வருஷம் உன்மேலிருந்த வஸ்திரம் பழையதாய்ப் போனதுமில்லை. உன் கால் வீங்கிப்போனதுமில்லை.

௫ ஆகையாலொருவன் தன் குமாரனைத் தண்டிக்கிற பிரகாரமாக உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைத் தண்டிக்கிறாரென்பதை நீ யுன் இருதயத்திலேயறிந்து,

௬. உன் பராபரனாகிய கர்த்தருடைய வழிகளில் நடந்து அவருக்குப் பயப்படும்படிக்கு அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளக்கடவாய்.

௭. ஏனெனில், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை நல்ல தேசத்திலே பிரவேசிக்கப்பண்ணுகிறார். அது பள்ளத்தாக்குகளிலும் மலைகளிலுமிருந்து புறப்படுகிற ஆறுகளும் ஊற்றுகளும் மடுக்களுமுள்ள தேசம்.

௮. கோதுமையும் வாற்கோதுமையும் திராட்சச்செடிகளும் அத்திமரங்களும் மாதளஞ்செடிகளுமுள்ள தேசமும் ஒலிவமரங்களும் எண்ணெயுந் தேனுமுள்ள தேசமும்,

௯. நீ தாட்சியில்லாமல் அப்பம் புசிக்கத்தக்கதும் ஒன்றும் உனக்குக் குறைபடாததுமான தேசமுங் கல்லுகள் இரும்புமாயிருக்கிறதும் நீ மலைகளில் வெண்கலம் வெட்டியெடுக்கத்தக்கதுமான தேசமுமாயிருக்கின்றது.

௰. நீ ஆகையால் நீ சாப்பிட்டுத் திர்ப்தியடைந்தபொழுது உன் பராபரனாகிய கர்த்தனையவர் உனக்குக்கொடுத்த நல்ல தேசத்திற்காகத் தோத்திரிக்கக்கடவாய்.

௰௧. உன் பராபரனாகிய கர்த்தனை மறவாதபடிக்கும் நான் இன்றுனக்குக் கற்பிக்கிற அவருடைய கற்பனைகளையும் நியாயங்களையுங் கட்டளைகளையுங் கைக்கொள்ளாதே போகாதபடிக்கும் எச்சரிக்கையாயிரு.

௰௨. நீ சாப்பிட்டுத் திர்ப்தியாகி நல்ல வீடுகளைக் கட்டி அவைகளிற் குடியிருக்கும்பொழுதும்,

௰௩. உன் ஆடுமாடுகள் திரட்சியாகி உனக்கு வெள்ளியும் பொன்னும் பெருகி உனக்குண்டானதெல்லாம் வர்த்திக்கும்பொழுதும்,

௰௪. உன் இருதயம் மேட்டிமையடையாமலும் உன்னை யடிமைவீடாகிய எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினவரும்.

௰௫. உன்னைச் சிறுமைப்படுத்தி உன்னைச் சோதித்து உன்னுடைய பின்னாட்களில் உனக்கு நன்மைசெய்வதற்காகக் கொள்ளிவாய்ச் சர்ப்பங்களுந் தேள்களுந் தண்ணீரில்லா வறட்சியுமுள்ள பயங்கரமான பெரிய வனாந்தரவழியாய் உன்னையழைத்துவந்தவரும் உனக்காகத் தண்ணீரைக் கற்பாறையான கன்மலையிலிருந்து புறப்படப்பண்ணினவரும்.

௰௬. உன்னை வனாந்தரத்திலே உன் பிதாக்கள் அறியாத மன்னாவினாலே போஷித்துவந்தவருமான உன் பராபரனாகிய கர்த்தனை நீ மறக்காமலும்,

௰௭. என் சாமர்த்தியமும் என் கைகளின் பலனும் இந்த ஆஸ்தியையெனக்குச் சம்பாதித்ததென்று நீ யுன்னிருதயத்திலே சொல்லிக்கொள்ளாமலு மிருக்க எச்சரிக்கையாயிருந்து,

௰௮. உன் பராபரனாகிய கர்த்தனை நினைப்பாயாக. ஏனெனில், தாம் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தம்முடைய உடன்படிக்கையையுறுதிப்படுத்த அவரே யிந்நாளிலே ஆகிறதுபோல உனக்கு ஆஸ்தியைச் சம்பாதிக்கிறதற்கான பலனைக் கொடுக்கிறவர்.

௰௯. நீ யுன் பராபரனாகிய கர்த்தனை மறக்கவே மறந்து வேறே தேவர்களைப் பின்பற்றிப் போய் அவைகளைச் சேவித்து அவைகளைப் பணிந்துகொண்டாயேயானால் அழியவே யழிவீர்களென்று இன்றுங்களுக்குத் திடச்சாட்சியாய் அறிவிக்கிறேன்.

௨௰. உங்களபராபரனுகிய கர்த்தருடைய சத்தத்திற்கு நீங்கள கீழ்ப்படியாதேபோனதினிமித்தம நீங்கள அப்பொழுதுகர்த்தர் உங்களுக்குமுன்பாக அழித்த சாதிகளைப் போலழிவீர்கள.

## ௯. அதிகாரம்.

[(௧) மோசே சனங்களின கலகங்களைச சொலலி அவர்கள தாங்கள நீதியுள்ளவர்களென றெண்ணிய எண்ணத்தைநீக்கினது.]

இஸ்ரவேலே! கேள. நீ யிந்நாளிலே யோர்தானைக்கடந்து உன்னைப்பார்க்கிலும் சனம்பெருத்ததும பலத்ததுமான சாதிகளைத்துரத்தி ஆகாயமட்டும அரணிப்பானபெரிய பட்டணங்களைப்பிடித்து,

௨. ஏனாக்கின புத்திரராகிய பெரியதும உயர்ந்ததுமான சனத்தைத்துரத்தப்போகப்போகிறுய. இவர்களசெயதியை நீ யறிந்து ஏனாக்புத்திரருக்குமுன்பாக நிற்பவனுரென்று நீகேட்டாயே.

௩. ஆகையாற் பட்சிக்கிற அக்கினியாகிய உன்பராபரனென்றகர்த்தர்தாமேஉனக்குமுன்பாகக்கடந்துபோகிறவரென்பதையின்று அறியக்கடவாய. இவர் அவர்களையழிப்பார். இவர் அவர்களை யுனக்குமுன்பாகவிழப்பண்ணுவார். அப்படியே கர்த்தர் உனக்குச்சொன்னபடியே நீ யவர்களைச சீக்கிரமாய்த்துரத்தி யவர்களையழிப்பாய.

௪. உன்பராபரனுகிய கர்த்தர் அவர்களை யுனக்குமுன்பாகத்துரத்துகையில நீ உன்னிருதயத்திலே கர்த்தர் என்னை யென நீதியினிமித்தமாக இந்தத்தேசத்தைச சுதந்தரிக்கிறதற கழைத்துவந்தாரென்றுசொலலாயாக. அந்தச்சாதிகளுடைய ஆகாமியத்தினிமித்தமாகக் கர்த்தர் அவர்களை யுனக்குமுன்பாகத் துரத்திவிடுகிறுர்.

௫. உன்நீதியினிமித்தமும உன இருதயத்தினுடைய செம்மையான குணத்தினிமித்தமும நீ அவர்களதேசத்தைசசுதந்தரிக்கப பிரவேசிக்கிறதிலலை. அந்தச்சாதிகளுடைய ஆகாமியத்தினிமித்தமாகவும கர்த்தர் ஆபிரகாம ஈசாக் யாக்கோபென்ற உன்பிதாக்களுக்கா(ணை)யிட்டுச சொன்னவார்த்தையை நிருவாகம்பண்ணுகிறதற்காகவும உன்பராபரனுகியகர்த்தர் அவர்களை யுனக்குமுன்பாகத் துரத்திவிடுகிறுர்.

௬. உன நீதியினிமித்தம உன்பராபரனுகியகர்த்தர் உனக்கிந்த நலலதேசத்தைச சுதந்தரிக்கிறதற்குக்கொடார் என்பதை யறியக்கடவாய. ஏனெனில, நீ முருட்டுக்கழுத்துள்ள சனம.

௭. நீ வனாந்தரத்தில உன பராபரனுகிய கர்த்தருக்குக்கடுங்கோபமுண்டாக்கினதை நினை. அதைமறவாயாக. நீங்கள எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாளதுவக்கி இவவிடத்திலவந்துசேருமட்டுங் கர்த்தருக்குவிரோதமாகக் கலகம பண்ணினவர்கள.

௮. ஓரேபிலே நீங்கள கர்த்தருக்குக்கடுங்கோபமுண்டாக்கினதினலே கர்த்தர் உங்களமேல உங்களையழிக்கத்தக்கதான சினமடைந்தார்.

௯. கர்த்தர் உங்களோடேபண்ணின உடம்படிக்கையினபலகைகளாகிய கற்பலகைகளைவாங்குகிறதற்கு நான பர்வதத்திலேறி இரவும்பகலும நாறபதுநாள பர்வதத்தில அப்பம புசியாமலுந தண்ணீர்குடியாமலுமிருந்தபொழுதானே,

௰. அப்பொழுது பராபரனுடைய விரலினுலெழுதியிருந்த இரண்டு கற்பலகைகளைக் கர்த்தர் எனக்குக்கொடுத்தார். சபைகூடியிருந்தநாளிலே கர்த்தர்பர்வதத்திலே அக்கினியின நடுவிலிருந்துஉங்களோடேபேசின வார்த்தைகளினபடி யெலலாம அவைகளிலெழுதியிருந்தது.

௰௧. இரவுபகல நாற்பது நாளும முடிந்து கர்த்தரெனக்கந்த உடம்படிக்கையின இரண்டு கற்பலகைகளைக் கொடுக்கிறபொழுதோவெனில,

௰௨. கர்த்தர் என்னோடே நீயெழுந்து சீக்கிரம இங்கேயிருந்திறங்கிப்போ. ஏனெனில, நீ எகிப்திலிருந்தழைத்துவந்த உன்னுடையசனந தன்னைக்கெடுத்தது. நாம அவர்களுக்குக் கற்பித்த வழியை யவர்களசீக்கிரமாகவிட்டு விலகி வார்க்கப்பட்ட சுருபத்தைத் தங்களுக்குண்டாக்கினுர்களென்றுர்.

௰௩. பின்னையுங்கர்த்தர் என்னோடேசொன்னதாவது; இந்தச்சனத்தைப்பார்த்தோம. இதோ, அது முருட்டுக்கழுத்துள்ளசனம.

௰௪. நாம அவர்களையழித்து அவர்களபெயரை வானத்தின்கீழ அறறுப்போகப்பண்ணும்படிவிடு. உன்னை யவர்களைப்பார்க்கிலும்பலத்ததுஞ் சனம பெருத்ததுமான சாதியாக்குவோமென்றுர்.

௰௫. அப்பொழுதுநான திரும்பிக்கொண்டு பர்வதத்திலிருந்திறங்கினேன். பர்வதமோ அக்கினியாயவேகுகிறதாயிருந்தது. உடம்படிக்கையின இரண்டுபலகைகள என இரண்டுகைகளிலிருந்தன.

௰௬. இதோ, நீங்கள உங்களபராபரனுகியகர்த்தருக்கு விரோதமாகப பாவஞ்செய்து வார்க்கப்பட்ட கன்றுக்குட்டியை யுங்களுக்குண்டாக்கிக் கர்த்தர் உங்களுக்குக கற்பித்தவழியைச சீக்கிரமாக விட்டுவிலகினதைக்கண்டேன.

௰௭. அப்பொழுது நான அந்த இரண்டு பலகைகளையோங்கி அவைகளையென இரண்டு கைகளிலிருந்தெறிந்து அவைகளை யுங்கள கண்களுக்கு முன்பாக வுடைத்துப்போட்டேன.

௰௮. நீங்கள கர்த்தரை மனமடிவாக்குகிற

த்தாகு அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்து நடப்பித்த உங்களுடைய எல்லாப்பாவங்களினிமித்தமும் நான் கர்த்தருக்குமுன்பாக முன்போல இரவும் பகலும் நாற்பதுநாள் விழுந்துகிடந்தேன். நான் அப்பம்புசித்ததுமில்லை தண்ணீர்குடித்ததுமில்லை.

௰௯. ஏனென்றால் கர்த்தர் உங்களையழிப்போமென்றுங்கள்மேற் சினந்திருந்தகோபத்திற்கும் உக்கிரத்திற்கும் பயப்பட்டிருந்தேன். கர்த்தர் அந்தமுறையும் என்மன்றாட்டைக் கேட்டார்.

௨௰. ஆரோன் மேலுங் கர்த்தர் மிகவுங் கோபமாகி அவனையழிப்போமென்றார். ஆனால் ஆரோனுக்காகவும் அக்காலத்திலே விண்ணப்பம்பண்ணினேன்.

௨௧. உங்கள் பாவக்கிரியையாகியகன்றுக்குட்டியையோவெனில், நான்வாங்கி அதையக்கினியாலெரித்து அதைநொருக்கித் தூளாய்ப் போகுமட்டும் நன்றாய் அரைத்துப் போட்டு அதின் தூளைப் பர்வதத்திலிருந்தோடுகிற ஆற்றிலே போட்டுவிட்டேன்.

௨௨. தபேராவிலும் மாசாவிலும் இச்சையின் பிரேதக்குழிகளான இடத்திலுங் கர்த்தருக்குக் கடுங்கோபமுண்டாக்குகிறவர்களுமாயிருந்தீர்கள்.

௨௩. நீங்கள் போயேறி நாமுங்களுக்குக் கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்களென்று கர்த்தர் உங்களைக் காதேஸ்பர்னேயாவிலிருந்தனுப்புகையிலும் நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரை விசுவாசியாமலும் அவர் சத்தத்திற்குக் கேள்விகொடாமலும் அவர் வாக்குக்கு விரோதமாயக் கலகம்பண்ணினீர்கள்.

௨௪. நானுங்களையறிந்திருக்கிற நாள்முதற்கொண்டு கர்த்தருக்கு விரோதமாகக் கலகம்பண்ணுகிறவர்களாயிருந்தீர்கள்.

௨௫. உங்களையழிப்போமென்று கர்த்தர் சொன்னபடியினாலே நான்கர்த்தருக்குமுன்பாக இரவும் பகலும் நாற்பதுநாள் விழுந்துகிடந்தேனே. அப்பொழுது நான் கர்த்தரை நோக்கிப்பண்ணின விண்ணப்பமாவது;

௨௬. கர்த்தராகிய ஆண்டவரே! தேவரீர் உம்முடைய மகத்துவத்தினாலே மீட்டுக்கொண்டு பலத்தகையினாலே எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின உமது சனத்தையும், உமது சுதந்தரத்தையும் அழிக்காதிருப்பீராக.

௨௭. கர்த்தர் அவர்களுக்குச் சொல்லியிருந்த தேசத்திலேயவர்களைப் பிரவேசிக்கப்பண்ணக்கூடாதே போனபடியினாலும், அவர்களைப் பகைத்தபடியினாலும், அவர்களை வனாந்தரத்திலே கொன்றுபோடும்படிக்குப் புறப்படப்பண்ணினாரென்று எங்களை நீர் புறப்படப்பண்ணின தேசத்தின் மனிதர் சொல்லாதபடிக்கு,

௨௮. தேவரீர் இந்தச்சனத்தின் முரட்டாட்டத்தையும், அதின் ஆகாமியத்தையும், அதின்பாவத்தையும் நோக்காமல், ஆபிரகாம் ஈசாக் யாக்கோபென்ற உம்முடைய ஊழியக்காரரை நினையும்.

௨௯. நீர் உம்முடைய பெரியபலத்தினாலும், நீட்டப்பட்ட உம்முடைய புயத்தினாலும் புறப்படப்பண்ணின உமதுசனமும் உமதுசுதந்தரமும் அவர்கள்தானென்றேன்.

## ௰. அதிகாரம்.

[(௧) பராபரன் நியாயப்பிரமாணத்தினிரண்டு கற்பலகைகளைக் கொடுத்ததும், (௬) குருபட்டத்தைத்தரித்ததும், (௮) இலேவியின் கோத்திரத்தைத் தெரிந்துகொண்டதும், (௰) மோசேசனங்களுக்காகக் கேட்டுக்கொண்டதைக்கேட்டதும், அவருடைய இரக்கத்தைக்காட்டியது. (௰௨) கீழ்ப்படிதலுக்கு அடுத்தபுத்தி.]

அக்காலத்திலே கர்த்தர் என்னோடே சொன்னதாவது; நீ முந்தினவைகளுக்கொத்த இரண்டுகற்பலகைகளையுனக்கு வெட்டி நம்மண்டைக்குப் பர்வதத்திலேறிவா. ஒருமரப் பெட்டியையும் உனக்குச் செப்பனிடுவாயாக.

௨. நீ யுடைத்துப்போட்ட முந்தின பலகைகளிலிருந்த வார்த்தைகளை நாமந்தப் பலகைகளிலெழுதுவோம். பிற்பாடு அவைகளைப் பெட்டியிலே வைப்பாயாகவென்றார்.

௩. அப்படியே நான் சித்திம்மரத்தினாலே பெட்டியையுண்டாக்கி முந்தினவைகளுக்கொத்த இரண்டுகற்பலகைகளை வெட்டி அவைகளையென்கையிலேபிடித்துப் பர்வதத்திலேறினேன்.

௪. சபை கூட்டப்பட்டிருந்தநாளிலே கர்த்தர் பர்வதத்தில் அக்கினியின்நடுவிலிருந்து உங்களோடே சொல்லியிருந்த பத்துவார்த்தைகளை அப்பொழுது அவர்முந்தின எழுத்திற்குச்சரியாக அந்தப்பலகைகளிலெழுதி அவைகளையெனக்குக்கொடுத்தார்.

௫. அப்பொழுது நான் திரும்பிக்கொண்டு பர்வதத்திலிருந்திறங்கி அந்தப்பலகைகளை நான் பண்ணியிருந்தபெட்டியிலே வைத்தேன். கர்த்தர் எனக்குக் கற்பித்தபடி யதிலே வைத்திருக்கின்றது.

௬. பிற்பாடு இஸ்ரவேல்புத்திரர் பெனேயாக்கானுக்கடுத்த பேரோத்திலேயிருந்து மோசேராவுக்குப் பயணம்பண்ணினார்கள். அங்கே ஆரோன் மரித்தடக்கம்பண்ணப்பட்டான். அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனாகிய எலெயாசார் ஆசாரியனானான்.

௭. அங்கேயிருந்து குத்கோத்திற்குங் குத்

ரோதகிலிருந்து ஆறுகளுள்ள தேசமாகிய யோத்பாத்திறகும் பயணம்பண்ணினார்கள்.

௮. அக்காலத்திலே கர்த்தர் லேவியின் கோத்திரத்தைக் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியைச் சுமக்கிறதற்கும் கர்த்தருக்கு முன்பாக நின்று இந்நாள்மட்டும் நடக்கிறதுபோல அவருக்கு ஆராதனைசெய்கிறதற்கும் அவர் நாமத்திலே ஆசீர்வதிக்கிறதற்கும் பிரித்தெடுத்தார்.

௯. ஆகையால் லேவிக்கு அவன் சகோதரரோடே பங்கும் சுதந்தரமுமில்லை. உன் பராபரனாகிய கர்த்தர் தாமே அவனுக்குச் சொன்னபடி கர்த்தர் அவன் சுதந்தரமானவர்.

௰. நான் முந்தின நாள்களுக்குச்சரியாய் இரவும் பகலும் நாற்பதுநாள் பர்வதத்தில் நின்றேனே. அந்தமுறையுங் கர்த்தரென்னைக் கேட்டருளினார். உன்னையழிக்கக் கர்த்தருக்குச் சித்தமில்லாதேபோயிற்று.

௰௧. ஆகையாற்கர்த்தர் என்னுடனே அவர்கள் போய் அவர்களுக்குக்கொடுப்பேனென்று நாம் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நீயெழுந்து சனத்திற்குமுன்பாகப் பயணப்பட்டுப்போவென்றார்.

௰௨. இப்பொழுதும் இஸ்ரவேலே! நீயுன் பராபரனாகிய கர்த்தருக்குப்பயந்து அவர் வழிகளிலெல்லாம் நடந்து அவரைச் சிநேகித்து உன்பராபரனாகிய கர்த்தருக்குனமுழு இருதயத்தாலும், உன்முழு ஆத்துமத்தாலும் ஊழியஞ்செய்து,

௰௩. நான் இன்றைக்குக் கற்பிக்கிற கர்த்தருடைய கற்பனைகளையும் அவருடைய கட்டளைகளையும் நீயுனக்கு நன்மையாகக் கைக்கொள்ள வேண்டுமென்பதையேயல்லாமல், வேறேயெதையுன் பராபரனாகிய கர்த்தர் உன்னைக்கேட்கிறார்.

௰௪. இதோ, வானங்களும் வானங்களின் வானங்களும் பூமியும் அதிலுள்ளயாவும் உன் பராபரனாகிய கர்த்தருடையது.

௰௫. ஆனால், உன்பிதாக்களின்மேலேமாத்திரங் கர்த்தர்அவர்களைச்சிநேகிக்கிறதற்குப்பிரியம்வைத்துச் சகலசாதிகளிலும் அவர்களுக்குப்பின் அவர்களுடைய வித்தாகிய உங்களை யிந்நாளிலிருக்கிறதுபோலத் தெரிந்துகொண்டார்.

௰௬. ஆகையால் நீங்கள் இனியுங்கள் பிடரியைக்கடினப்படுத்தாமல், உங்களிருதயத்தின் நுனித்தோலைச் சுன்னத்துப்பண்ணுங்கள்.

௰௭. ஏனெனில், உங்கள் பராபரனாகியகர்த்தர் தேவாதிதேவருங் கர்த்தாதி கர்த்தரும் மகத்துவமும், வல்லமையும், பயங்கரமுமான பராபரனுமானவர். அவர் முகமாட-

டம் பார்க்கிறவருமல்ல பரிதானம் வாங்குகிறவருமல்ல.

௰௮. அவர் திக்கற்றவனுக்குங் கைம்பெண்சாதிக்கும் நியாயஞ்செய்கிறவரும் பரதேசிக்கு அப்பமும் வஸ்திரமுங்கொடுக்கிறதற்கு அவனைச் சிநேகிக்கிறவருமாயிருக்கிறார்.

௰௯. ஆகையாற் பரதேசியைச் சிநேகியுங்கள். ஏனெனில், எகிப்துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள்.

௨௰. உன் பராபரனாகிய கர்த்தருக்குப்பயந்து அவருக்கூழியஞ்செய்து அவரைப் பற்றிக்கொண்டிருந்து அவர் நாமத்தைக்கொண்டாணையிடுவாயாக.

௨௧. அவரேயுன்புகழ்ச்சி. அவரேயுன்கண்கள் கண்ட இந்தப்பெரிய பயங்கரமான காரியங்களை யுன்னிடத்திலேசெய்த உன்னுடைய பராபரன்.

௨௨. உன்பிதாக்கள் எழுபது ஆத்துமாக்களாய் எகிப்திலேபோய் இறங்கினார்கள். இப்பொழுதோவெனில், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைத்திரட்சியிலே வானத்தின் நட்சத்திரங்களைப்போலாக்கினார்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய மகத்துவமுள்ள கிரியைகளைக்கண்டதினாலும், (௮) விசேஷித்த ஆசீர்வாதங்களுக்கேற்ற அவருடையவாக்குத்தத்தத்தினாலும், (௰௬) பயமுறுத்தலினாலும், சனங்களுக்குக் கீழ்ப்படிதலைக் கற்பித்தது. (௰௮) பராபரனுடைய வசனங்களை நன்றாயப்படிக்கவேண்டியது. (௨௬) ஆசீர்வாதமுஞ் சாபமுஞ் சனங்களுக்குத் தெளிவிக்கப்பட்டது.]

ஆகையால் நீயுன் பராபரனாகிய கர்த்தரைச் சிநேகித்துச் சகலநாளும் அவருடைய பிரமாணத்தையும்அவருடைய கட்டளைகளையும்அவருடையநியாயங்களையும் அவருடைய கற்பனைகளையுங் கைக்கொள்வாயாக.

௨. உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய கடிந்துகொள்ளுதலையும் அவருடையமகத்துவத்தையும்அவருடையபலத்தகையையும் நீட்டப்பட்ட அவருடைய புயத்தையும்,

௩. அவர் எகிப்தின் நடுவிலே எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கும் அவன் தேசமனைத்திற்குஞ் செய்த அவருடைய அடையாளங்களையும் அவருடைய கிரியைகளையும்,

௪. எகிப்தியரின் இராணுவமும் அவர்கள் குதிரைகளும் இரதங்களும் உங்களைப்பின் றொடருகையிற் கர்த்தர் நாணற்கடலின்தண்ணீர்களை யவர்கள்மேலே புரளப்பண்ணி இந்நாள்வரைக்குமிருக்கிறதுபோல அவர்களையழித்த அவருடையசெய்கையையும்,

௫. நீங்கள் இவ்விடத்திற்கு வருமட்டும்

தாய்ப்பறவையை அதின் குஞ்சுகளோடே பிடிக்கப்படாதென்பது. (௮) வீடுகளின் மெத்தைகளுக்குக் கைப்பிடிச்சுவர்களைக் கட்டவேண்டுமென்பது. (௯) விதைகளைக் கலந்து விதைக்கலாகாதென்பது. (௰௨) சட்டையின்மீது தொங்கல் (௰௩) மனைவிக்குத் துர்க்கீர்த்தியாகப் புறங்கூறுகிறவனுக்குத் தண்டனை. (௨௰) (௨௨) விபசாரத்தையும் (௨௫) கற்பழித்தலையும், (௨௮) புணர்ச்சியையும், (௩௰) முறைக்கேட்டையும் குறித்தது.]

உன்சகோதரனுடைய மாடாகிலும் ஆடாகிலும் வழிதப்பிப் போகிறதைக் கண்டாயானால் அவைகளைக் காணாதவன் போலிராமல் அவைகளையுன்சகோதரனண்டைக்குத் திருப்பவே திருப்பக்கடவாய்.

௨. உன்சகோதரன் உனக்குச் சமீபமாயிராமலும் உனக்கறிமுகமாயிராமலுமிருந்தானேயாகில், நீ யதை யுன் வீட்டிற்குச் சேர்த்துக்கொண்டு அதையுன்சகோதரன் தேடுமட்டும் உன்னிடத்திலே வைத்து அவனுக்குத் திரும்பக் கொடுக்கக்கடவாய்.

௩. அப்படியே அவன் கழுதைக்குஞ் செய்யக்கடவாய். அப்படியே அவன் வஸ்திரத்துக்குஞ்செய்யக்கடவாய். அப்படியேயுன் சகோதரனுக்குக் காணாதேபோன சகலத்திற்கும் அவைகளைக்கண்டு பிடித்தாயானாற் செய்யக்கடவாய். அவைகளை நீகாணாதவன் போலவிட்டுப்போகப்படாது.

௪. உன்சகோதரனுடைய கழுதையாகிலும் அவன்மாடாகிலும் வழியிலே விழுந்திருக்கிறதைக்கண்டாயானால் அவைகளைக் காணாதவன்போல விட்டுப்போகாமல் அவனோடே கூட அவைகளையெடுக்கவேயெடுத்துவிடுவாயாக.

௫. ஆண்பிள்ளையின் உடைகளைப்பெண்பிள்ளை தரித்திருக்கவேண்டாம். பெண்பிள்ளையின் வஸ்திரத்தை ஆண்பிள்ளையுடுத்துக்கொள்ளவும்வேண்டாம். ஏனெனில், அப்படிச்செய்கிறவர்களெல்லாரும் உன்பராபரனாகிய கர்த்தருக்கருவருப்பானவர்கள்.

௬. யாதொருமரத்திலே அல்லது தரையிலே குஞ்சுகளும் அல்லது முட்டைகளுமிருக்கிறகுருவிக்கூடு உனக்குவழியிலே தென்படுத் தாய் குஞ்சுகளின்மேல் அல்லது முட்டைகளின்மேல் அணைத்துக்கொண்டிருந்தால் நீகுஞ்சுகளோடேதாயையும்பிடிக்காயல்,

௭. நன்றாயிருக்கவும் உன்நாள்கள் நீடித்திருக்கவுந்தாயைப்போகவேபோகவிட்டுக் குஞ்சுகளையெடுத்துக்கொள்வாயாக.

௮. நீ புதுவீட்டைக்கட்டினால் அப்பொழுது ஒருவன் உன்மெத்தைவீட்டிலிருந்து விழுகிறதினாலே நீயிரத்தப்பழியையுன்வீட்டின்மேற் சுமக்கப்பண்ணாதபடிக்கு அதற்குக்கிராதியையுண்டுபண்ணக்கடவாய்.

௯. உன் திராட்சத்தோட்டத்திலே வெவ்வேறேசாதிவிதையை விதையாயாக. மற்றப்படி நீ விதைத் தவைகளின்பயிரையுந் திராட்சத்தோட்டத்தின் பலனையுந் தீட்டுப்படுத்துவாய்.

௰. மாட்டையுங் கழுதையையுங் கூட்டப்பிணைத்துழாயாக.

௰௧. ஆட்டுமயிரும் பஞ்சுநூலுங் கலந்த வஸ்திரத்தையுடுத்துக்கொள்ளாயாக.

௰௨. நீபோட்டுக்கொள்ளுகிற உன்மேற்சட்டையின் நாலோரங்களில் உனக்குத்தொங்கல்களை யுண்டுபண்ணுவாயாக.

௰௩. ஒருஸ்திரீயை விவாகம்பண்ணின ஒருவன் அவளிடத்திற்பிரவேசித்தபிற்பாடு அவளைப்பகைத்து,

௰௪. இந்தப்பெண்சாதியை விவாகம்பண்ணினேன். நான் அவளண்டையிற்சேர்ந்த பொழுதோவெனில், அவளிடத்திற் கன்னிக்கறையைக்கண்டுபிடித்ததில்லையென்று அவள் மேல் ஆவலாதியான விசேஷங்களைச்சாற்றி அவளுக்குத் துர்க்கீர்த்தியைப் பிறக்கப்பண்ணினால்,

௰௫. பெண்பிள்ளையின் தகப்பனும் அவள் தாயும் அவளைச்சேர்த்து அவளுடைய கன்னிக்கற்பின் றுசுவைப்பட்டணத்தின் மூப்பரண்டையிலே பட்டணத்துவாசலிற் கொண்டுவரக்கடவர்கள்.

௰௬. அங்கே பெண்பிள்ளையின் தகப்பனென்னமகளை யிந்தமனிதனுக்குப் பெண்சாதியாகக்கொடுத்தேன். ஆனால் இவன் இவளைப்பகைத்து,

௰௭. நான் உன்மகளிடத்திற் கன்னிமுத்திரையைக் கண்டு பிடித்ததில்லையென்று இதோ, ஆவலாதியான விசேஷங்களை யவள் மேற்சாற்றுகிறான். ஆனால் என்மகளுடைய கன்னிமுத்திரையின் றுசும் இங்கேயிருக்கிறதென்று மூப்பரோடே சொன்னபிற்பாடு பட்டணத்தின் மூப்பருக்கு முன்பாக வஸ்திரத்தைவிரித்துப்போடுவார்களாக.

௰௮. அப்பொழுது அந்தப்பட்டணத்தின் மூப்பர் அந்தமனிதனைப்பிடித்து அவனைத் தண்டித்து,

௰௯. அவன் இஸ்ரவேலில் ஒருகன்னியாஸ்திரியை யவதூறுபண்ணினபடியினாலே யவனைக்கையில நூறுவெள்ளிக்காசை அபராதமாகவாங்கிப் பெண்பிள்ளையின் தகப்பனுக்குக்கொடுக்கக்கடவர்கள். அவளோவெனில், அவனுக்குப் பெண்சாதியாயிருப்பாள். அவன் தன் நாள்களிலெல்லாம் அவளைத்தள்ளிவிடக்கூடாதிருக்கும்.

௨௰. பெண்பிள்ளையினிடத்திற் கன்னிமுத்திரைகண்டு பிடிக்கப்பட்டதில்லையென்று விசேஷமெய்ப்பட்டதேயானால்,

உ௧. பெண்பிள்ளையவள் தகப்பனுடைய வீட்டினவாசலுக்கு முன்பாகக்கொண்டு போய அவள் இஸ்ரவேலில மதிகெட்டகாரியத்தைச்செய்து தன தகப்பனவீட்டிலே வேசித்தனம்பண்ணினபடியினாலே யவளுடையபட்டணத்தின மனிதர் அவளைச்சாகும்படிக்குக்கலலெறிவார்களாக. இப்படிப பொலலாப்பை யுன நடுவிலிராதபடிக்கு விலக்கக்கடவாய.

உ௨. புருஷன கீழான பெண்சாதியோடே சயனிக்கிறஒருவனகண்டுபிடிக்கப்பட்டாற், பெண்சாதியோடே சயனித்த மனிதனும் பெண்சாதியும இருவருஞசாவக்கடவர்கள இப்படிப்பொலலாப்பை இஸ்ரவேலைவிட்டு விலக்கக்கடவாய.

உ௩. கன்னியாஸ்திரியான ஒருபெண ஒருவனுக்கு நியமிக்கப்பட்டிருக்கையில், ஒருவன அவளை யூரிலேகண்டுபிடித்து அவளோடேசயனித்தால,

உ௪. அப்பொழுது அந்தப்பெண ஊரிலிருந்துங கூப்பிடாதே போனபடியினாலும அந்தமனிதன தனக்கடுத்தவன பெண்சாதியைக்கற்பழித்தபடியினாலும இருவரையும அந்தப்பட்டணத்தினவாசலுக்குக்கொண்டு போய அவர்களசாகும்படிக்கு அவர்களைக் கலலெறியக்கடவீர்கள. இப்படிப் பொலலாப்பை யுன நடுவிலிராதபடிக்கு விலக்கக்கடவாய.

உ௫. நியமிக்கப்பட்ட பெண்ணை யொருவனவெளியிலே கண்டு அவளைப்பலாத்காரமாய்ப்பிடித்து அவளோடேசயனித்தானேயாகில, அவளோடேசயனித்தமனிதனமாத்திரஞ்சாவக்கடவன.

உ௬. ஆனறபெண்ணுக்கொனறுஞ் செய்யாயாக. பெண்ணினமேற சாவுக்கானகுற்றமிலலை. ஏனெனில, அது ஒருவன தனக்கடுத்தவனமேலெழும்பி அவனகொலைவாங்கினது போலவிருக்கினறது.

உ௭. ஏனெனில், வெளியிலே அவளைக் கண்டுபிடித்தான. நியமிக்கப்பட்டபெண அப்பொழுதுகூப்பிட்டும அவளைக்காப்பாற்றுவாரிலலை.

உ௮. நியமிக்கப்படாதகன்னியாஸ்திரியாகிய ஒருபெண்ணை யொருவனகண்டு கைப்பிடித்து அவளோடேசயனித்து அவர்கள கண்டுபிடிக்கப்பட்டால,

உ௯. அவளோடே சயனித்தமனிதன பெண்ணினதகப்பனுக்கு ஐமபதுவெள்ளிக்காசைக்கொடுக்கக்கடவன. அவன அவளைக் கற்பழித்தபடியினாலே யவள அவனுக்குப் பெண்சாதியுமாயிருப்பாளாக. அவன தன நாளகளிலெல்லாம அவளைத்தள்ளிவிடக் கூடாதிருக்கும.

௩௰. ஒருவனும தனதகப்பனபெண்சாதியை விவாகம்பண்ணித் தனதகப்பன உடைமானத்தைத் திறக்கவேண்டாம.

## உ௩. அதிகாரம்.

[(௧) சபையிற்சேரக்கூடியவர்களும,சேரக்கூடாதவர்களும, (௯) சேனைக்குளளானவர்கள அசுத்தமாயிருக்கப்படாதது. (௰௫) தெறிபட்டுப்போன ஊழியக்காரனையும, (௰௭) ஆகுசங்களையும், (௰௮) அருவருப்பானகாணிக்கைகளையும, (௰௯) அநியாயவட்டியையும, (உ௧) பிரதிக்கினையையும,(உ௪) பிறர்பொருளையபகரித்தலையுங குறித்தது.]

விதையடிக்கப்பட்டவன அலலது அரியப்பட்டவன கர்த்தருடைய சபைக்குட்படவேண்டாம.

உ. வேசிப்பிளளைகர்த்தருடைய சபைக்குட்படவேண்டாம. அவனுக்குப்பத்தாந்தலைமுறையானவனுங கர்த்தருடைய சபைக்குட்படவேண்டாம.

௩. அமமோனியனுமமோவாபியனுங்கர்த்தருடைய சபைக்குட்படவேண்டாம. பத்தாந்தலைமுறையிலுமஎன்றைக்குமஅவர்கள கர்த்தருடைய சபைக்குட்படவேண்டாம.

௪. நீஙகள எகிப்திலிருந்து புறப்பட்டுவருகிறவழியிலே அவர்கள உஙகளுக்கு அப்பமுந் தணணீருங்கொடுக்க நேரிடாமறபோனதினிமித்தமும உன்னைச்சபிக்க அவன மெசோப்பொத்தாமியாவின ஊராகிய பேதோரிலிருந்தபேயோரினகுமாரன பீலேயாமை யுனக்குவிரோதமாகக் கூலிபேசி யழைப்பித்ததினிமித்தமுந்தானே.

௫. உனபராபரனாகிய கர்த்தரோவென்றால் பீலேயாமைக்கேட்கச்சித்தமாயிராமலஉனபராபரனாகியகர்த்தர் உன்னைச் சிநேகித்தபடியினாலே உனபராபரனாகிய கர்த்தர் சாபத்தையுனக்கு ஆசீர்வாதமாக மாறப்பண்ணினார்.

௬. நீ யுன நாள்களிலெல்லாம என்றைக்கும அவர்களுக்குச் சமாதானத்தையும நன்மையையும பராமரியாயாக.

௭. ஏதோமியனை யருவருக்காயாக. ஏனெனில, அவன உனசகோதரன. எகிப்தியனை யருவருக்காயாக. ஏனெனில, அவன தேசத்திலே பரதேசியாயிருந்தாய.

௮. மூன்றாந்தலைமுறையில அவர்களுக்குப் பிறந்தபிளளைகள கர்த்தருடையசபைக்குட்படலாம.

௯. உன சத்துருக்களுக்கெதிராகத் தண்டெடுத்துப் புறப்படுகிறபொழுது சகல பொலலாதகாரியத்திற்கும எச்சரிக்கையாயிருப்பாயாக.

௰. இராக்காலத்திலே சம்பவித்ததினாலே சுத்தமற்றிருக்கிற ஒருவன உனனிலிருந்தால் அவனபாளயத்திற்கு வெளியேபோய்ப்பாளயத்திற்குள்வராதிருந்து,

௰௧. அந்திநேரத்திலே தண்ணீரிலே குளித்துச் சூரியன் அஸ்தமித்தப்பொழுது போகப்பாளயத்திற்குள் வரக்கடவன்.

௰௨. நீ வெளிக்குப்போயிருக்கத்தக்க இடம் பாளயத்திற்குப் புறம்பே யுனக்கிருப்பதாக.

௰௩. உன் ஆயுதங்களல்லாமல் ஒரு கூர்மையுள்ள சிறு கோலும் உன்னிடத்திலிருக்கக்கடவது. நீ மலசலாதிக்குப் போகிறபொழுது அதினால் தோண்டி மலசலாதிக்கிருந்து உன்னிலிருந்து போனதை மூடிப்போடக்கடவாய்.

௰௪. ஏனெனில், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைத் தப்புவிக்கவும் உன் சத்துருக்களை யுனக்கு முன்பாக ஒப்புக்கொடுக்கவும் உன் பாளயத்தின் நடுவில் உலாவிக்கொண்டிருக்கிறார். ஆகையால், அவர் உன்னில் இழிவான காரியத்தைக் கண்டு உன்னைவிட்டுப் போகாதபடிக்கு உன் பாளயம் பரிசுத்தமாயிருக்கக்கடவது.

௰௫. தன் எசமானைவிட்டுத் தப்பி உன்னிடத்தில் வந்து சேர்ந்த வேலைக்காரனை அவன் எசமானின் கையிலே ஒப்புக்கொடாயாக.

௰௬. அவன் உன் நடுவேயிருக்கிற உன் வாசல்களில் ஒன்றிலே தான் தெரிந்துகொண்டு தனக்கு இசைவான இடத்தில் உன்னுடனேயிருப்பானாக. அவனை ஒடுக்காயாக.

௰௭. இஸ்ரவேலின் குமாரத்திகளில் வேசியிருக்கவேண்டாம். இஸ்ரவேலின் குமாரரில் வேசிக்கள்ளனுமிருக்கவேண்டாம்.

௰௮. வேசிப்பணயத்தையும் நாயின் விலைக்கிரயத்தையும் எந்தப் பொருத்தனையினாலாகிலும் உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிலே கொண்டு வராயாக. ஏனெனில், அவைகளிரண்டும் உன் பராபரனாகிய கர்த்தருக்கு அருவருப்பானவை.

௰௯. கடனுக்குக் கொடுக்கிற பணத்திற்கும் ஆகாரத்திற்கும் கடனுக்குக் கொடுக்கிற வேறே எந்தப் பொருளுக்கும் உன் சகோதரன் கையில் வட்டி வாங்காயாக.

௨௰. அந்நியன் கையில் நீ வட்டி வாங்கலாம். ஆனால் நீ சுதந்தரிக்கப் போகிற தேசத்தில் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை நீ கையிடும் வேலையிலெல்லாம் ஆசீர்வதிக்கும்படிக்கு உன் சகோதரன் கையிலே வட்டி வாங்காதிருப்பாயாக.

௨௧. நீ உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்தனையைப் பண்ணியிருந்தால் அதைச் செலுத்தத் தாமதியாயாக. ஏனெனில், உன் பராபரனாகிய கர்த்தர் அதை யுன் கையிலே தேடவே தேடுவார். அது உன்மேலே பாவமாயிருக்கும்.

௨௨. நீ பொருத்தனையைப் பண்ணாதிருந்தால் உன்மேலே பாவமில்லை.

௨௩. உன் உதடுகளிலிருந்து புறப்பட்டதை நீ கைக்கொண்டு உன் வாயினால் நீ யுன் பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்தனைபண்ணிச் சொன்ன மனப்பூர்வமான பலியைச் செலுத்தித் தீர்ப்பாயாக.

௨௪. நீ யுனக்கடுத்தவனின் திராட்சத் தோட்டத்திற்குட் பிரவேசித்தால் உனக்கு ஆசையாயிருக்கிறபடியே திராட்சப்பழங்களைத் திருப்தியாகப் புசிக்கலாம். ஆனால் நீ யொன்றும் உன் கூடைக்குள்ளே வைத்து எடுத்துக்கொண்டுபோகவேண்டாம்.

௨௫. நீ யுனக்கடுத்தவனின் விளைச்சலுக்குட் பிரவேசித்தால் உன் கையினாலே கதிர்களைக் கிள்ளலாம். ஆனால் அரிவாளை யவன் விளைச்சலில் விடாயாக.

உ௪ அதிகாரம்.

[(௧) விவாகப்பிரிவைக் குறித்தது. (௫) புதிய விவாகஞ்செய்தவன் போருக்குப்போகலாகாதென்பது. (௬) (௰) கொத்துவைகளையும், (௭) நரசீவனைத் திருடுகிறவனையும், (௮) குஷ்டரோகத்தையுங் குறித்தது. (௰௪) கூலியைக் கொடுக்கவேண்டியது. (௰௬) நீதியையும் (௰௯) தருமத்தையுங் குறித்தது.]

ஒருவன் ஒரு பெண்ணைக் கொண்டு அவளை விவாகம்பண்ணின பின்பு அவளில் இலச்சையான காரியத்தைக் கண்டதினால் அவளுக்கவன் கண்களில் தயைகிடையாதே போய் அவன் அவளுக்குத் தள்ளுதலின் சீட்டையெழுதி அவள் கையிற்கொடுத்து அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்பிவிட்டபோது,

௨. அவள் அவன் வீட்டிலிருந்து புறப்பட்டுப் போய் வேறொருவனுக்குப் பெண்சாதியாகி,

௩. அந்த இரண்டாம் புருஷனும் அவளைப் பகைத்து அவளுக்குத் தள்ளுதலின் சீட்டையெழுதி அவள் கையிற்கொடுத்து அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்பிவிட்டால் அல்லவென்று அவளை விவாகம்பண்ணின அந்த இரண்டாம் புருஷன் செத்துப்போனால்,

௪. அப்பொழுது அவளைத் தள்ளிவிட்ட அவளுடைய முந்தின புருஷன் அவள் தீட்டான பிறகு அவளைத் திரும்ப விவாகம் பண்ணக் கூடாது. ஏனெனில், அது கர்த்தருக்கு முன்பாக அருவருப்பானது. உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கிற தேசத்தின்மேல் அதினாலே பாவம் வரப்பண்ணாயாக.

௫. ஒருவன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணிக்கொண்டவனாயிருந்தால் அவன் யுத்தத்திற்குப் புறப்படவேண்டாம். அவன்மேல் ஒன்றுஞ் சுமத்தப்படவும் வேண்டாம். அவன் ஒருவருஷமட்டும் தன் வீட்டில் தனியாகவிருந்து தான் விவாகம்பண்ணின பெண்சாதியைச் சந்தோஷிப்பிப்பானாக.

௬. எந்திரத்தையாகிலும் அதின் மேற்கல்

லயாகிலும் ஒருவரும் அடகாக வாங்கவேண்டாம்: ஏனெனில் ஜீவனையவன் அடகுவாங்குவானே.

எ. தன் சகோதரராகிய இஸ்ரவேல் புத்திரரிலுள்ள ஒரு நரஜீவனைத் திருடி அதினால் ஆதாயந்தேடி அதை விற்றுப்போட்ட ஒருவன் அகப்பட்டால் அந்தத் திருடன் சாகவேண்டும். இப்படிப் பொல்லாப்பை யுன் நடுவிலிருந்து விலக்கக்கடவாய்.

அ. நீ குஷ்டவாதைக்காகமகா எச்சரிக்கையாயிருக்கவும், லேவியராகிய ஆசாரியர் உங்களுக்குப் போதிக்கும்படியெல்லாஞ்செய்யவுங் கவனமாயிருப்பாயாக. நான் அவர்களுக்குக் கற்பித்தபடியே செய்யக் கவனமாயிருப்பீர்களாக.

கூ. நீங்கள் எகிப்திலிருந்து புறப்பட்டுவருகிற வழியில் உன் பராபரனாகிய கர்த்தர் மீரியாமுக்குச் செய்ததை நினைத்துக்கொள்.

௰. நீ யுனக்குக் கடன்பட்டவனுக்கு ஏதாகிலுங்கடனாகக் கொடுத்தால் நீ யவன் கொடுக்கும் அடகைவாங்க நீ யவன் வீட்டிற்குட் பிரவேசியாமல்,

௰௧. வெளியே நிற்பாயாக. நீ கடன்கொடுத்தவன் அடகை வெளியே உன்னண்டையிற் கொண்டுவருவானாக.

௰உ. அவன் தரித்திரனேயானால் நீயவன் அடகை வைத்துப் படுத்துக்கொள்ளப்போகாமல்,

௰௩. அவன் தன் வஸ்திரத்தைப்போட்டுப் படுத்துக்கொண்டு உன்னை ஆசீர்வதிக்கும்படிக்குப் பொழுதுபோக அடகை அவனுக்குத் திருப்பக்கொடுக்கவேகொடுப்பாயாக. அது உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக உனக்கு நீதியாயிருக்கும்.

௰௪. உன் சகோதரரிலும் அல்லது உன் தேசத்திலுள்ள வாசல்களிலேயிருக்கிற பரதேசிகளிலும் ஏழையும் எளிமையுமான கூலிக்காரனை யொடுக்காயாக.

௰௫. அவன் வேலைசெய்த நாளிலே அவன் கூலியையவனுக்குக் கொடுப்பாயாக. சூரியன் அதின்மேல் அஸ்தமிக்க வேண்டாம். ஏனெனில், அவன் ஏழையும் அதின்மேல் மனவாஞ்சையுமாயிருக்கிறான். மற்றப்படி அவன் உன்பேரில் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவான். அப்பொழுது உனக்குப் பாவமாயிருக்கும்.

௰௬. பிள்ளைகளுக்காகப் பிதாக்களும் பிதாக்களுக்காகப் பிள்ளைகளுங் கொலைசெய்யப்படவேண்டாம். அவனவன் தன் தன் பாவத்தினிமித்தங் கொலைசெய்யப்படவேண்டும்.

௰எ. நீ பரதேசிக்குந் திக்கற்றவனுக்குமிருக்கிற நியாயத்தைப் புரட்டாமலுங் கைம்பெண்சாதியின் வஸ்திரத்தை யடகுவாங்காமலுமிருந்து,

௰அ. நீ எகிப்திலே அடிமையாயிருந்ததையும் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை அங்கேயிருந்து மீட்டுக்கொண்டு வந்ததையும் நினைப்பாயாக. ஆகையால் நான் உனக்கிப்படிச் செய்யக் கற்பிக்கிறேன்.

௰கூ. நீ யுன் வெள்ளாண்மையை யறுத்த உன் வயலிலே ஒரு கட்டை மறந்து வைத்துவந்தாயானால், அதையெடுத்துவரத் திரும்பிப் போகாயாக. உன் பராபரனாகிய கர்த்தர் உன் கைக்கிரியையிலெல்லாம் உன்னை யாசீர்வதிக்கும்படிக்கு அது பரதேசிக்குந் திக்கற்றவனுக்குங் கைம்பெண்சாதிக்குமிருக்கட்டும்.

உ௰. நீ யுன் ஒலிவமரத்தைக் குலுக்கிப்போட்டபிறகு தப்பியிருக்கிறதையறுக்கத் திரும்பிப்போகாயாக. அது பரதேசிக்குந் திக்கற்றவனுக்குங் கைம்பெண்சாதிக்குமிருக்கட்டும்.

உ௰க. நீ யுன் திராட்சப்பழங்களை யறுத்தபிறகு பின் அறுப்பறுக்கத் திரும்பிப்போகாயாக. அது பரதேசிக்குந் திக்கற்றவனுக்குங் கைம்பெண்சாதிக்குமிருக்கட்டும்.

உ௰உ. நீ எகிப்திலே அடிமையா யிருந்ததை நினைப்பாயாக. ஆகையால், இப்படிச் செய்ய நானுனக்குக் கற்பிக்கிறேன்.

## உ௫. அதிகாரம்.

[(க) நாற்பதடிக்குமேலதிகமாக அடிக்கக்கூடாதென்பது. (௪) மாட்டைவாய்கட்டக்கூடாதென்பது. (௫) ஒருவன் தன் சகோதரனுடைய சந்ததியை விர்த்திசெய்யவேண்டுமென்பது. (௰க) நாணமில்லாத ஸ்திரியைக் குறித்தது. (௰௩) பெரிதுஞ்சிறிதுமான நிறைகற்களிருக்கத் தகாதென்பது. (௰எ) அமலேக்கையழிக்கவேண்டுமென்பது.]

மனிதருக்குள்ளே வழக்குண்டாய் அவர்கள் நியாயம் விசாரிக்கப்பட்ட நியாயஸ்தலத்திலே சேர்ந்தால் நீதிமானை நீதிமானென்றும் ஆகாதவனை ஆகாதவனென்றும் தீர்க்கக்கடவர்கள்.

உ. ஆகாதவன் அடிகளுக்குப் பாத்திரவானானால் நியாயாதிபதி அவனைத் தாழவிழப்பண்ணி அவன் குற்றத்திற்குத் தக்கதாய் அவனைத் தனக்கு முன்பாக அடிப்பிப்பானாக.

௩. அவனை நாற்பதடி அடிப்பித்த பிற்பாடு அவனையவைகளிலும் அதிக அடியடிப்பிக்கிறதினாலே உன் சகோதரன் உன் கண்களுக்கு முன்பாக இலச்சையாகாதபடிக்கு அவனையதிகமாய் அடிக்காமலிருப்பார்களாக.

௪. மாடுபோரடிக்கிறபொழுது அதின் வாயைக் கட்டாயாக.

௫. சகோதரர் கூடிக் குடியிருக்கும்போது அவர்களிலொருவன் புத்திரசந்தானமில்லாமல் மரித்தால் மரித்தவனுடைய பெண்சாதி புறத்திலிருக்கிற அந்நியனுக்குப் பெண்சாதியாகவேண்டாம். அவனுடைய

புருஷனுக்குச் சகோதரன் அவளிடத்திற் சேர்ந்து அவளைத் தன் புருஷனுடைய சகோதரசுதந்தரமாய் விவாகம்பண்ணுவானாக.

௬. மரித்தவனுடைய சகோதரன்பேர் இஸ்ரவேலில் அற்றுப்போகாதபடிக்கு அவன் பெயரை அவள் பெறுந் தலைச்சன் குமாரன் தரித்துக்கொள்ளவேண்டும்.

௭. தன் சகோதரனுடைய பெண்சாதியை விவாகம்பண்ண அவனுக்குச் சம்மதமில்லாதிருந்ததேயானால் அவன் சகோதரன் பெண்சாதி வாசலிற்கூடின மூப்பரண்டைக்குப் போய், என் புருஷனுடைய சகோதரன் தன் சகோதரனுடைய பெயரை இஸ்ரவேலிலே நிலைக்கப்பண்ணமாட்டேனென்கிறான், என்னை என் புருஷனுடைய சகோதரசுதந்தரமாய் விவாகம்பண்ண அவனுக்கு மனதில்லையென்பாளாக.

௮. அப்பொழுது அவன் பட்டணத்து மூப்பர் அவனை அழைப்பித்து அவனோடே பேசியும் அவன் அவளை விவாகம்பண்ண எனக்குச் சம்மதமில்லையென்று நிலையாய் நின்று சொன்னால்,

௯. அவன் சகோதரன் பெண்சாதி மூப்பர்களுக்கு முன்பாக அவனண்டையிலே சேர்ந்து அவன் காலிலிருக்கிற அவன் பாதரட்சையைக் கழற்றிப்போட்டு அவன் முகத்திலே துப்பித் தன் சகோதரன் வீட்டைக் கட்டாதவனுக்கிப்படிச் செய்யவேண்டுமென்று பிரதியுத்தரமாகச் சொல்லுவாளாக.

௰. இஸ்ரவேலில் அப்படிக்கொத்தவன் வீடு பாதரட்சையைக் கழற்றிப் போடப்பட்டவன் வீடென்னப்படுவதாக.

௰௧. புருஷர் ஒருவருக்கொருவர் சண்டைபண்ணிக்கொண்டிருக்கையில், ஒருவனுடைய பெண்சாதி தன் புருஷனையடிக்கிறவன் கைக்குத் தப்புவிக்கச் சேர்ந்துவந்து தன் கையை நீட்டி இவன் மானத்தைப் பிடித்துக்கொண்டாளேயானால்,

௰௨. அவள் கையைத் தறிக்கக்கடவாய். உன் கண் அவளுக்கிரங்காதிருப்பதாக.

௰௩. உன் பையிலே பெரிதும் சிறிதுமான வெவ்வேறே நிறைகல்லுகளுனக்கிராதிருப்பதாக.

௰௪. உன் வீட்டில் பெரிதும் சிறிதுமான வெவ்வேறே மரக்கால்களுனக்கிராதிருப்பதாக.

௰௫. உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்தில் உன் நாளுகள் நீடித்திருக்கும்படிக்குக் குறையற்ற சுமுத்திரையான நிறைகல்லும் குறையற்ற சுமுத்திரையான மரக்காலும் உனக்கிருக்கக் கடவது.

௰௬. ஏனெனில், இப்படிக்கொத்தவைமுதலான அநியாயத்தைச் செய்கிறவனெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தருக்கருவருப்பானவன்.

௰௭. நீங்கள் எஜிப்திலிருந்து புறப்பட்டுவருகிறவழியிலே அமலேக் பராபரனுக்குப் பயப்படாமல் உனக்கெதிராக வந்து,

௰௮. நீ இளைத்துவிடாய்த்திருக்கையில் உன் பின்தண்டில் உனக்குப் பிறகாலே வருகிறபலவீனரையெல்லாம் வெட்டினானென்று அவன் உனக்குச் செய்த செய்கையை நினை.

௰௯. உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரித்துக்கொள்ளக் கொடுக்கிற தேசத்திலுடைய சுற்றுப்புறத்தாராகிய உன்னுடைய சத்துருக்களையெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தர் விலக்கி உன்னை இளைப்பாறப்பண்ணினபொழுது நீ அமலேக்கின் பெயரை வானத்தின் கீழிராதபடிக்கு அழியப்பண்ணக்கடவாய் இதை மறவாயாக.

## ௨௬. அதிகாரம்.

[(௧) முதற்பலனிலொரு கூடையைச் செலுத்துகிறவனுடைய அறிக்கை. (௰௨) மூன்றுவருடத்திற் பத்திலொன்றைச் செலுத்தினவனுடைய மன்றாட்டம். (௰௬) பராபரனுக்குச் சனங்களுக்கும் நடந்த உடம்படிக்கை.]

உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாய்க் கொடுக்கிற தேசத்திலே நீ வந்து அதைக் கட்டிக்கொண்டு அதிலே குடியிருக்கும்பொழுது,

௨. உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுத்த உன் தேசத்தில் நீ பயிரிட்ட நிலத்தின் கனிகளிலெல்லாம் நீ முந்தின பலனையெடுத்து ஒரு கூடையிலே வைத்து உன் பராபரனாகிய கர்த்தர் தமது நாமத்தைத் தங்கப்பண்ணத் தெரிந்துகொண்டிருக்கும் தானத்திற்குப்போய்,

௩. அந்நாட்களிலிருக்கும் ஆசாரியனண்டைக்குவந்து அவனுடனே, எங்களுக்குக் கொடுக்கக் கர்த்தர் நமது பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே வந்தேனென்பதை யின்று உம்முடைய பராபரனாகிய கர்த்தருக்கு அறிக்கையிடுகிறேனென்பாயாக.

௪. அப்பொழுது ஆசாரியன் அந்தக் கூடையை உன் கையிலே வாங்கி அதை உன் பராபரனாகிய கர்த்தரின் பலிபீடத்திற்கு முன்பாக வைக்கக்கடவன்.

௫. அப்பொழுது நீ உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக வசனித்துச் சொல்லவேண்டியது, என் தகப்பன் அழிவுக்கு நேரான சீரியமனிதனாயிருந்தான். அவன் எஜிப்திற்கிறங்கிப்போய் அங்கே கொஞ்சச் சனங்களோடே பரதேசியாயிருந்து அங்கே சனம்பெருத்த பலத்த திரட்சியான சாதியானான்.

௬. ஆனால் எஜிப்தியர் எங்களை உபத்திரவம்பண்ணி எங்களைச் சிறுமைப்படுத்தி எங்

கள்மேலேகடினவேலையைச் சுமத்தினபொழுது,

௭. எங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டோம். அப்பொழுது கர்த்தர் எங்கள் சத்தத்தைக் கேட்டு எங்கள் சிறுமையையும் எங்கள் வருத்தத்தையும் எங்களொடுங்குதலையும் பார்த்து,

௮. எங்களைப் பலத்தகையினாலும் நீட்டின புயத்தினாலும் மகா பயங்கரத்தினாலும் அடையாளங்கள் அற்புதங்களினாலும் எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி,

௯. எங்களை இவ்விடத்திற் கழைத்துவந்து பாலுந் தேனும் ஓடுகிற தேசமாகிற இந்தத் தேசத்தை யெங்களுக்குக் கொடுத்தாரே.

௰. இப்பொழுதும் இதோ, கர்த்தாவே தேவரீர் எனக்குக் கொடுத்த நிலத்தினுடைய கனிகளின் முந்தின பலனைக் கொண்டுவந்தேனென்று சொல்லி அதை யுன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக வைத்து உன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாகப் பணிந்து,

௰௧. நீயும் லேவியனும் உன் நடுவிலிருக்கிற பரதேசியுமாய் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்கும் உன் வீட்டிற்குங் கட்டளையிட்ட எல்லா நன்மையினாலுஞ் சந்தோஷமாயிருப்பீர்களாக.

௰௨. பத்திலொன்றைச் செலுத்தும் வருஷமாகிய மூன்றும் வருஷத்திலே நீ யுன் வரத்தி லெல்லாம் பத்திலொன்றை யெடுத்து லேவியனும் பரதேசியுந் திக்கற்றவனுங் கைம்பெண்சாதியும் உன் வாசல்களிற் புசித்துத் திர்ப்தியாகும்படிக்கு நீ யவர்களுக்குக் கொடுத்துத் தீர்ந்தபிற்பாடு,

௰௩. நீ யுன் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாகச் சொல்லவதாவது; தேவரீர் எனக்குக் கொடுத்த எல்லாக் கற்பனைகளின் படியே நான் பரிசுத்தமான அதை யென் வீட்டிலிருந்தெடுத்து லேவியனுக்கும் பரதேசிக்குந் திக்கற்றவனுக்குங் கைம்பெண்சாதிக்குங் கொடுத்தேன். உமது கற்பனைகளில் யாதொன்றை நான் மீறினதுமில்லை மறந்ததுமில்லை.

௰௪. நான் துக்கப்பட்டு அதிற் புசித்ததுமில்லை தீட்டான காரியத்திற்கு அதிலொன்றும் எடுத்ததுமில்லை. இழவுகாரியத்திற்கு அதிலொன்றும் போட்டதுமில்லை. நான் என் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து தேவரீர் எனக்குக் கற்பித்தபடி யெல்லாஞ் செய்தேன்.

௰௫. நீர் உமது பரிசுத்த வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருந்து நோக்கிப்பார்த்து உமது சனமாகிய இஸ்ரவேலையும் நீர் எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்டபடியே யெங்களுக்குக் கொடுத்த பாலுந் தேனும் ஓடுகிற தேசத்தையும் ஆசீர்வதியுமென்பாயாக.

௰௬. இந்தக் கட்டளைகளின்படியேயும் நியாயங்களின்படியேயுஞ் செய்ய இன்று உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்பிக்கிறார். ஆகையால், அவைகளின்படியே உன் முழு இருதயத்தாலும் உன் முழு ஆத்துமத்தாலுஞ் செய்யக் கவனமாயிருப்பாயாக.

௰௭. கர்த்தர் உனக்குப் பராபரனாயிருப்பாரென்றும் நான் அவர் வழிகளில் நடந்து அவர் கட்டளைகளையும் அவர் கற்பனைகளையும் அவர் நியாயங்களையுங் கைக்கொண்டு அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவேனென்றும் நீ யின்று அவருக்கு வார்த்தை கொடுப்பித்தாய்.

௰௮. கர்த்தர் உனக்குச் சொல்லியிருக்கிறபடி நீ தமக்குச் சொந்தச் சனமாயிருப்பாயென்றும் நீ தமது கற்பனைகளை யெல்லாங் கைக்கொண்டால்,

௰௯. தாமுண்டுபண்ணின எல்லாச் சாதிகளின்மேலும் உன்னை யுன்னதமாகவும் புகழ்ச்சி கீர்த்தி மகிமையாகவும் வைப்போமென்று தாஞ் சொன்னபடி நீ யுன் பராபரனாகிய கர்த்தரான தமக்குப் பரிசுத்த சனமாயிருப்பாயென்றும் அவர் இன்றுனக்கும் வார்த்தை கொடுப்பித்தாரென்றுன்.

## உ௭. அதிகாரம்.

[(௧) நியாயப்பிரமாணங்களைக் கல்லின்மேலெழுதவும், (௫) உளி நாட்டாத கற்களாலே யொருபலிபீடத்தைக் கட்டவும், சனங்களுக்குக் கட்டளை கொடுத்தது. (௰௧) கெரிசீம் பர்வதத்திலும், ஏபால் பர்வதத்திலும் நிற்கக் கோத்திரங்கள் பிரிக்கப்பட்டது. (௰௫) ஏபால் பர்வதத்தில் நின்று கொடுத்த சாபம்.]

பிற்பாடு மோசே இஸ்ரவேலின் மூப்பர் கூடவிருக்கச் சனத்திற்குக் கற்பித்தாவது; நானின்றுங்களுக்குக் கற்பிக்கிற கற்பனைகளை யெல்லாங் கைக்கொள்ளுங்கள்.

௨. உன் கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திற்கு நீங்கள் போக யோர்தானைக் கடந்த நாளிலே நீ யுனக்குப் பெரிய கற்களை நாட்டி அவைகளைச் சாந்தால் பூசி,

௩. உன் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி உனக்குக் கொடுக்கிற பாலுந் தேனும் ஓடுகிற தேசத்திற்குட் பிரவேசிக்க நீ கடந்துபோனபின் இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை யெல்லாம் அவைகளிலெழுதக்கடவாய்.

௪. நான் இன்றுங்களுக்குக் கற்பித்துச் சொல்லுகிற இந்தக் கற்களை யோர்தானைக் கடந்தபொழுது ஏபால் பர்வதத்திலே நாட்டி அவைகளைச் சாந்தால் பூசி,

௫. இரும்புபடாத கற்களாலே அங்கே உன் பராபரனாகிய கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டக்கடவாய்.

௬. நீ யுன் பராபரனாகிய கர்த்தரின் பலிபீடத்தை முழுக் கற்களாலே கட்டி அதி

அதின்மேல உனபராபரனாகிய கர்த்தருக்குச்சர்வாங்கதகனபலிகளைப்பலியிட்டு,

௭. சமாதானபலிகளையும பலியிட்டு அங்கேயுன பராபரனாகிய கர்த்தருக்கு முனபாகப்புசித்துச சந்தோஷமாயிருந்து,

௮. அந்தக் கற்களில் இந்த நியாயப்பிரமாணத்தின வார்த்தைகளையெலலாந திட்டமாயெழுதககடவாயென்றான.

௯. பினனையும மோசே லேவியராகிய ஆசாரியர்கள கூடவிருககு இஸ்ரவேலோடெலலாமபேசி, இஸ்ரவேலே! கவனித்துக கேள. இந்நாளிலேயுனபராபரனாகியகர்த்தருக்குச்சனமானாய.

௰. ஆகையால, நீயுனபராபரனாகியகர்த்தரின சத்தத்திற்குக கீழ்ப்படிந்துநான இனறுனக்குக்கற்பிக்கிற அவருடைய கற்பனைகளினபடியும அவருடைய கட்டளைகளின படியுஞ்செயவாயாகவென்றான.

௰௧. அந்நாளிலே மோசேசனத்திறகுக்கற்பித்ததாவது;

௰௨. நீங்கள யோர்தானைக கடந்தபோது சனத்தையாசீர்வதிக்கக்கெரிசீம பர்வதத்திலே நிறபவர்கள சீமெயோனலேவியூதா இசக்காரியோசேப பெஞ்சமீனெனற கோத்திரங்கள.

௰௩. சாபத்தைக்கூற ஏபாலபர்வதத்திலே நிற்பவர்கள ரூபேன, காத், ஆசேர், செபுலோன, தாண், நப்தலி, என்ற கோத்திரங்கள.

௰௪. அப்பொழுது லேவியர் இஸ்ரவேல மனிதரையெலலாம பார்த்துஉரத்தசத்தமிட்டுச்சொலவதாவது;

௰௫. தொழிலாளிகளுடையகையின செயகையாலவெட்டப்படுகிற அலலது வார்ப்பிக்கப்படுகிற கர்த்தருக்கு அருவருப்பான யாதொருசுருபத்தை யுணடுபணணி ஒளிப்பிடத்திலே வைக்கிறவன சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம பிரதியுத்தரமாக ஆமெனென்பதாக.

௰௬. தனதகப்பனையலலது தனதாயைத தூஷணிக்கிறவன்சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௰௭. தனககடுத்தவனின எலலையையொததிக்கிடுகிறவன சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௰௮. குருடனை வழிதப்பபணணுகிறவன சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௰௯. பரதேசி திக்கறறவன கைமபெணசாதி என்றவர்களின நியாயத்தைப்புரட்டுகிறவன சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௨௰. தன தகப்பன பெணசாதியோடே சயனிக்கிறவன தனதகப்பனுடைய மறைவிடத்தைத் திறந்தபடியினாலே சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௨௧. யாதொருமிருகத்தோடே புணர்ச்சிபணணுகிறவன சபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௨௨. தனதகப்பனுக்கும அலலது தாயக்கும குமாரத்தியாகிய தன சகோதரியோடே சயனிக்கிறவன சபிக்கப்பட்டவனென பார்களாக. சனமெலலாமஆமெனென்பதாக.

௨௩. தன மாமியோடே சயனிக்கிறவன சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௨௪. ஒளிப்பிடத்திலே தனககடுத்தவனைக கொலைசெயகிறவன சபிக்கப்பட்டவனென பார்களாக. சனமெலலாமஆமெனென்பதாக.

௨௫. குற்றமிலலாத ஆத்துமாவைக கொலைபபணணுமபடிக்குப்பரிதானம்வாங்குகிறவனசபிக்கப்பட்டவனெனபார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

௨௬. இந்தநியாயப்பிரமாணத்தின வார்த்தைகளை அவைகளினபடி செயயுமபடிக்குக் கைக்கொளளாதவனசபிக்கப்பட்டவனென் பார்களாக. சனமெலலாம ஆமெனென்பதாக.

## ௨௮. அதிகாரம்.

[(௧) கீழ்ப்படிந்தவர்களுக்கு ஆசீர்வாதமும், (௰௫) கீழ்ப்படியாதவர்களுக்குச் சாபமும்.]

நான் இனறுனக்குக் கறபிக்கிற உன பராபரனாகிய கர்த்தருடைய கற்பனைகளினபடியெலலாஞ்செயய நீ கவனமாயிருக்குமபடிக்கு அவர் சத்தத்திற்குச செவிகொடுக்கவே கொடுக்கிறதுணடானால உனபராபரனாகிய கர்த்தர்உன்னைப்பூமியின் சாதிகள மேலெல்லாம உன்னதமாகவைப் பார்.

௨. நீயுனபராபரனாகிய கர்த்தரின சத்தத்திற்குச செவிகொடுக்குமபோது இப்பொழுதுசொலலப்படும ஆசீர்வாதங்களெலலாம உனமேலவந்து உனக்குப்பலிக்கும,

௩. நீ பட்டணத்திலும ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய. நீ வெளியிலும ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய.

௪. உனகர்ப்பத்தின்கனியும உனநிலத்தின கனியும உனமிருகஜீவனகளினபலனும உன மாடுகளினபெருக்கமும உன ஆடுகளினமந்தைகளும ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும.

௫. உனகூடையும மாப்பிசைகிற உனதொட்டியும ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும.

௬. நீ வருகையிலும ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய. நீ புறப்பட்டுப்போகையிலும ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய.

௭. உனக்குவிரோதமாயெழும்பும உனசத்துருக்களைக கர்த்தர் உனக்குமுனபாகமுறியடிக்கப்படுகிறதற் கொப்புக்கொடுப்பார்.

ஒருவழியிலே உனக்கெதிராகப் புறப்பட்டு வருவார்கள். ஏழுவழிகளில் உனக்குமுன்பாக ஓடிப்போவார்கள்.

௮. உன்பராபரனுகிய கர்த்தர் உனக்குக் கொடுக்குந்தேசத்திலே உன்னையாசீர்வதிக்கும்படிக்கும் அவருன் களஞ்சியங்களிலும் நீ கையிடும் எல்லாவேலையிலும் ஆசீர்வாதத்தினுலே யிருக்கும்படிக்குக் கற்பிப்பார்.

௯. நீயுன்பராபரனுகிய கர்த்தரின் கற்பனைகளைக்கைக்கொண்டு அவர்வழிகளில் நடக்கும்பொழுது கர்த்தர் உனக்காணையிட்டபடியே யுன்னைத் தமக்குப் பரிசுத்த சனமாக நிறுத்துவார்.

௰. அப்பொழுது கர்த்தருடைய நாமம் உனக்குத் தரிக்கப்பட்டதென்று பூமியின் சனசதனங்களெல்லாங்கண்டு உனக்குப் பயப்படும்.

௰௧. உனக்குக் கொடுப்போமென்று கர்த்தர் உன்பிதாக்களுக்குக் காணையிட்ட தேசத்திலே கர்த்தர் உன் கர்ப்பத்தின் கனியிலும் உன் மிருகஜீவன்களின் பலனிலும் உன் நிலத்தின் கனியிலும் உனக்கு நன்மையாகப் பரிபூரணங்கட்டளையிடுவார்.

௰௨. ஏற்றகாலத்தில் உன்தேசத்திற்கு மழையைக்கொடுக்கவும் உன் கையின் வேலையையெல்லாம் ஆசீர்வதிக்கவுங் கர்த்தர் உனக்குத் தமது நல்பொக்கிஷசாலையாகிய வானத்தைத் திறப்பார். அநேகஞ்சாதிகளுக்குக் கடன்கொடுப்பாய். நீயோவென்றால் கடன்வாங்காதிருப்பாய்.

௰௩. நான் இன்றுனக்குக் கற்பிக்கிற வார்த்தைகளையெல்லாம் நீ வேறே தேவர்களைச் சேவிக்கப் பின்பற்றும்படிக்கு வலதுபுறம் இடதுபுறமாகத் திரும்புகிறதினாலே விட்டுவிலகாமல்,

௰௪. நான் இன்றுனக்குக் கற்பிக்கிற உன் பராபரனுகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொள்ளவும் அவைகளின்படி செய்யவும் அவைகளுக்குச் செவிகொடுத்து வந்தால் கர்த்தர் உன்னைவாலாக்காமல் தலையாக்குவார். நீ கீழாகாமல் மேற்கொண்டேயிருப்பாய்.

௰௫. நான் இன்றுனக்குக் கற்பிக்கிற உன் பராபரனுகிய கர்த்தருடைய எல்லாக்கற்பனைகளின்படியேயுங் கட்டளைகளின்படியேயுஞ் செய்யக்கவனமாயிருக்கிறதற்கு அவர் சத்தத்திற்குச் செவிகொடாதேபோனாயேயாகில் இப்பொழுது சொல்லப்படுஞ் சாபங்களெல்லாம் உன்மேல்வந்து உனக்குப் பலிக்கும்.

௰௬. நீ பட்டணத்திலுஞ் சபிக்கப்பட்டிருப்பாய். நீ வெளியிலேயுஞ் சபிக்கப்பட்டிருப்பாய்.

௰௭. உன்கூடையும் மாப்பிசைகிற உன் தொட்டியுஞ் சபிக்கப்பட்டிருக்கும்.

௰௮. உன் கர்ப்பத்தின்கனியும் உன் நிலத்தின் கனியும் உன்மாடுகளின் பெருக்கமும் உன் ஆடுகளின் மந்தைகளுஞ் சபிக்கப்பட்டிருக்கும்.

௰௯. நீ வருகையிலுஞ் சபிக்கப்பட்டிருப்பாய். நீ புறப்பட்டுப்போகையிலுஞ் சபிக்கப்பட்டிருப்பாய்.

௨௰. நீ நம்மைவிட்டுச்செய்துவருகிற உன் துர்க்கிரியைகளினிமித்தஞ் சீக்கிரத்திலே நீ கெட்டுப்போய் அழியுமட்டும் நீ கையிட்டுச்செய்கிறதெல்லாவற்றிலுங் கர்த்தர் உனக்குச் சாபத்தையுங் கலக்கத்தையுங் கேட்டையுமவரப்பண்ணுவார்.

௨௧. நீ சுதந்தரிக்கப்போகிற சீமையிலுன்னை நிர்மூலமாக்குமட்டுங் கர்த்தர் பெருவாரிக்காய்ச்சலை உன்னையொட்டிக்கொள்ளப்பண்ணுவார்.

௨௨. கர்த்தருன்னை ஈளையிலுங் காய்ச்சலிலும் உஷ்டிணத்திலும் மழையில்லாமையிலும் வறட்சியிலுங் கருக்காயிலும் விஷப்பனியிலும் வாதிப்பார். நீ அழியுமட்டும் இவைகள் உன்னைப்பின்தொடரும்.

௨௩. உன்தலையின்மேலிருக்கும் உன்வானம் வெண்கலமும் உன் கீழிருக்கும் பூமி இரும்புமாயிருக்கும்.

௨௪. உன்தேசத்திற்கும் மழையாகக் கர்த்தர் தூசியைப்புழுதியையுங் கட்டளையிடுவார். நீயழியுமட்டும் அப்படி வானத்திலிருந்து உன்மேலிறங்கும்.

௨௫. கர்த்தர் உன்னையுன் சத்துருக்களுக்கு முன்பாக முறியடிப்பிக்கக் கொடுப்பார். ஒருவழியால் அவர்களுக்கெதிராகப் புறப்படுவாய். ஏழுவழியால் அவர்களுக்கு முன்பாக ஓடிப்போவாய். நீ பூமியிலுடைய எல்லாராச்சியங்களிலும் அலையப்பண்ணப்படுவாய்.

௨௬. உன்பிணம் ஆகாயத்திலுடைய எல்லாப்பறவைகளுக்கும் பூமியின் மிருகத்திற்கும் இரையாம். அவைகளை மிரட்டுவாரில்லாமற்போம்.

௨௭. கர்த்தருன்னை நீ குணமாகாதபடிக்கு எகிப்தின் எரிபந்தமான பருக்களினாலும் மூலவியாதியினாலுஞ் சொறியினாலுஞ் சிரங்கினாலும் வாதிப்பார்.

௨௮. கர்த்தர் உன்னைப்புத்திமயக்கத்தினாலுங் குருட்டாட்டத்தினாலும் இருதயத்தின் திகைப்பினாலும் வாதிப்பார்.

௨௯. குருடன் அந்தகாரத்திலே தடவிக்கொண்டு திரிகிறதுபோல நீ பட்டப்பகலிலே தடவிக்கொண்டு திரிவாய். உன்வழிகளிலொன்றும் உனக்கு வாய்க்காதேபோம். நீ சகலநாளும் இரட்சிப்பாரில்லாமல் ஒடுக்கப்பட்டவனும் பறிகொடுக்கிறவனுமாயிருப்பாய்.

௩௰. பெண்ணையுனக்குநியமிப்பாய். ஆனால் வேறொருவன் அவளை யவமானம்பண்ணுவான். வீட்டைக்கட்டுவாய். ஆனால் அதில் நீகுடியிருப்பதில்லை. திராட்சத்தோட்டத்தை நாட்டுவாய். ஆனால் அதையனுபவியாதிருப்பாய்.

௩௧. உன்மாடு உன்கண்களுக்குமுன்பாக அடிக்கப்படும். ஆனால் நீ அதிலொன்றும் புசிப்பதில்லை. உன்கழுதையுனக்குமுன்பாகக் கொள்ளையிட்டுக்கொண்டுபோகப்பட்டு உனக்குத்திரும்ப அகப்படாதேபோம். உன் ஆடுகள் உன்சத்துருக்களுக்குக்கொடுக்கப்படும். ஆனால் இரட்சிப்பார் உனக்கொருவருமில்லாதிருப்பார்கள்.

௩௨. உன்குமாரரும் உன்குமாரத்திகளும் அந்நியசனத்திற் கொப்புக்கொடுக்கப்படுவார்கள். அதையுன்கண்களாற்கண்டு அவர்களை நினைத்துச்சகலநாளும் தொய்ந்துதவித்தாலும் உன்கையிலேபெலமில்லாதிருக்கும்.

௩௩. உன் நிலத்தின் கனியையும் உன்னுடைய எல்லாப்பிரயாசத்தையும் நீயறியாத சனந்தின்னும். நீ சகலநாளும் ஒடுக்கப்பட்டு நொறுங்குண்டிருப்பாய்.

௩௪. உன்கண்கள் காணுங்காரியங்களினாலே மதிமயக்கமாயிருப்பாய்.

௩௫. உன்னுள்ளங்கால் துவக்கி உன்னுச்சந்தலைமட்டும் உனக்காரோக்கியம் வரக்கூடாதபடிக்குக் கர்த்தர் உன்னைமுழங்கால்களிலுந் தொடைகளிலுங்கொடிய எரிபந்தப்பருக்களினாலேவாதிப்பார்.

௩௬. கர்த்தர் உன்னையும் நீ உன்மேல் வைத்த உன் இராசாவையும் நீயும் உன் பிதாக்களும் அறியாத சாதியண்டைக்குப் போகப்பண்ணுவார். அங்கே நீ மரமுங் கல்லுமானவேறேதேவர்களைச்சேவித்து,

௩௭. கர்த்தர் உன்னைக் கொண்டுபோய விட்ட எல்லாச்சனசதளங்களிலும் பாழாகவும்பழமொழியாகவும் பரியாசச்சொல்லாகவும்போவாய்.

௩௮. அநேகம் விதையைவயல் வெளிக்குக் கொண்டுபோவாய். ஆனாற்கொஞ்சம் அறுப்பாய். ஏனெனில், வெட்டுக்கிளி அதைப் பட்சிக்கும்.

௩௯. திராட்சத்தோட்டங்களை நாட்டிப் பயிரிடுவாய். ஆனால் நீ திராட்சப்பழ இரசங்குடிப்பதுமில்லை, பழங்களைச்சேர்ப்பதுமில்லை. ஏனென்றால் பூச்சியதைத்தின்னும்.

௪௰. ஒலிவமரங்கள் உனக்குன் எல்லைகளி லெல்லாமிருக்கும். ஆனால், நீ எண்ணெய் பூசிக்கொள்வதில்லை. ஏனெனில், உன் ஒலிவமரத்தின்பிஞ்சுகள் உதிர்ந்துபோம்.

௪௧. நீ குமாரரையுங் குமாரத்திகளையும் பெற்றும் உனக்கிரார்கள். ஏனெனிற் சிறையிருப்பிலேபோவார்கள்.

௪௨. உன்மரங்களையும் உன்நிலத்தின்கனியையுமெல்லாங்கிளிகள் சுதந்தரிக்கும்.

௪௩. உன் நடுவிலிருக்கிற பரதேசி உன்மேலேமிகவும்பெருகுவான். நீ தாழ்ந்து மிகவுங்குறுகுவாய்.

௪௪. நீயவனுக்குக்கடன்கொடாமல் அவன் உனக்குக்கடன்கொடுப்பான். அவன் தலையாயிருப்பான். நீவாலாயிருப்பாய்.

௪௫. உன்பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்பித்த அவருடைய கற்பனைகளையுங் கட்டளைகளையுங்கைக்கொள்ளும்படிக்கு நீ அவர் சத்தத்திற்குச் செவிகொடாதபடியினாலே இந்தச் சாபங்களெல்லாம் உன்மேல்வந்து நீயழியுமட்டும் உன்னைத்தொடர்ந்து உன்னைப்பிடித்து,

௪௬. உன்னிலும் உன்வித்திலும் என்றைக்கும் அடையாளமாகவும் அற்புதமாகவுமிருக்கும்.

௪௭. பரிபூரணமெல்லாமுண்டாயிருக்கையில் உன்பராபரனாகிய கர்த்தரை நீ மகிழ்ச்சியோடும் நன்மனதோடுஞ் சேவிக்காதேபோனதினிமித்தமாக,

௪௮. கர்த்தர் உனக்குவிரோதமாய் வரப்பண்ணும் உன்சத்துருக்களைப்பட்டினியோடுந் தாகத்தோடும் அம்மணத்தோடுஞ்சகல மானத்தாழ்ச்சியோடுஞ் சேவிப்பாய். அவர்கள் உன்னை யழித்துத்தீருமட்டும் இருப்பு நுகத்தடியை உன்கழுத்தின் மேல்போடுவார்கள்.

௪௯. கிழவனுடையமுகம்பாராமலும் வாலிபனுக்கிரங்காமலுமிருக்குங்கொடிய முகமுள்ள,

௫௰. நீ யறியாதபாஷையையுடைய சாதியைக் கர்த்தர் உன்மேலே பூமியின்கடையாந்தரமான தூரத்திலிருந்து கழுகுபறக்குமவேகமாய வரப்பண்ணுவார்.

௫௧. நீயழியுமட்டும் அது உன்மிருகஜீவன்களின்கனியையும் உன்நிலத்தின்கனியையுந்தின்னும். அது உன்னையழித்துத்தீருமட்டும் உன்னுடைய தானியத்திலாகிலுந் திராட்சப்பழ இரசத்திலாகிலும் எண்ணெயிலாகிலும் உன்னுடைய ஆடுமாடுகளின் மந்தைகளிலேனாகிலும் உனக்கொன்றுமீதியாக வைக்காது.

௫௨. உன்தேசமெங்கும் நீ நம்பியிருக்கும் உயர்ச்சியும் அரணிப்புமான உன் அலங்கங்கள் விழுமட்டும் அது உன்வாசல்களிலெல்லாம் உன்னை இடுக்கப்பிடிக்கும். உன்பராபரனாகிய கர்த்தர் உனக்குக்கொடுத்த உன்னுடைய தேசமெங்குமுள்ள உன்னுடைய எல்லாவாசல்களிலும் அது உன்னையிறுகவேபிடிக்கும்.

௫௩. உன்சத்துரு உன்னைநெருக்கப்படுத்தும் முற்றிக்கையிலும் இடுக்கணிலும் நீயுன்பராபரனாகிய கர்த்தர் உனக்குக்கொடுத்த

உன் கர்ப்பக்கனியான உன் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளின் மாம்சத்தைத் தின்னுவாய்.

௫௪. உன் சத்துரு உன் வாசல்களிலெல்லாம் உன்னை இறுகப்பிடிக்கும் முற்றிகையிலும் இடுக்கணிலும் உன்னிடத்தில் செருக்குக்காரனும் மகா சுகசெல்வனுமாயிருந்த மனிதன் தனக்கொன்றும் மீந்திராததினாலே தின்னும் தன் பிள்ளைகளின் மாம்சத்திலே,

௫௫. தன் சகோதரனுக்காகிலும் தன் மடியிலிருக்கிற பெண்சாதிக்காகிலும் தனக்கின்னமிருக்கிற தன்னுடைய குமாரர்களில் ஒருவனுக்காகிலும் கொஞ்சங் கொடுக்காதபடிக்கு அவர்கள் மேல் வன்கண்ணனாயிருப்பான்.

௫௬. உன்னிடத்தில் சுகச்செல்வத்தினாலும் செருக்கினாலும் தன் உள்ளங்காலைத் தரையின்மேல் வைக்கத் துணியாத நாணயமுள்ள செருக்குக்காரியும் சுகச்செல்வியுமான பெண்சாதி தன் கால்களின் நடுவே புறப்பட்ட தன் நஞ்சுக்கொடியினிமித்தமும் தான் பெற்ற பிள்ளைகளினிமித்தமும் தன் மடியிலிருக்கிற புருஷன் மேலும் தன் குமாரன் மேலும் தன் குமாரத்தியின் மேலும் வன்கண்ணியாயிருப்பாள்.

௫௭. ஏனென்றால், உன் சத்துரு உன்னை உன் வாசல்களில் இறுகப்பிடிக்கும் முற்றிகையிலும் இடுக்கணிலும் சகலமுங் குறைகிறபடியினாலே அவைகளை இரகசியமாய்த் தின்னுவாள்.

௫௮. உன் பராபரனுடைய கர்த்தரென்கிற மகிமையும் பயங்கரமுமான நாமத்திற்குப் பயப்படும்படிக்கு நீ இப்புஸ்தகத்திலெழுதியிருக்கிற இந்த நியாயப்பிரமாண வார்த்தைகளின்படியெல்லாஞ் செய்யக் கவனமாயிராவிட்டால்,

௫௯. கர்த்தர் நிச்சயமான பெரிய வாதைகளாலும் நிச்சயமான பொல்லாத ரோகங்களாலும் உன்னையும் உன் வித்தையும் அதிசயமாய் வாதித்து,

௬௰. நீ கண்டு பயந்த எஜிப்தியரின் வியாதிகளெல்லாம் உன்னைப் பிடித்துக்கொண்டிருக்க அவைகளையுன்மேலே திருப்புவார்.

௬௧. இந்த நியாயப்பிரமாணப் புஸ்தகத்திலெழுதியிராத எல்லாப் பிணியையும் வாதையையுங் கூடக் கர்த்தர் உன்மேல் நீ அழியுமட்டும் வரப்பண்ணுவார்.

௬௨. நீங்கள் திரட்சியினாலே வானத்தின் நட்சத்திரங்களைப் போலிருந்ததற்குப் பதிலாக நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குச் செவிகொடாதே போனபடியினாலே கொஞ்சச் சனமாய் விடப்பட்டிருப்பீர்கள்.

௬௩. கர்த்தர் உங்களுக்கு நன்மைசெய்யவும் உங்களைப் பெருகப்பண்ணவும் எப்படி உங்கள் மேல் இரம்மியமாயிருந்தாரோ, அப்படிக் கர்த்தர் உங்களையழிக்கவும் உங்களை நிர்மூலம்பண்ணவும் உங்கள் மேல் இரம்மியமாயிருப்பார். நீ சுதந்தரிக்கப்போகிற சீமையிலிருந்து பிடுங்கிப்போடப்படுவீர்கள்.

௬௪. கர்த்தர் உன்னைப் பூமியின் ஒருமுனை துவக்கிப் பூமியின் மறுமுனைமட்டுமிருக்கிற எல்லாச் சனசந்தனங்களுக்குள்ளும் சிதறடிப்பார். அங்கே நீயும் உன் பிதாக்களும் அறியாத மரமுங் கல்லுமான அந்நிய தேவர்களைச் சேவிப்பாய்.

௬௫. அந்தச் சாதிகளுக்குள்ளே உனக்கிளைப்பாறுதலும் உன் உள்ளங்காலுக்குத் தங்குதரிப்பும் உண்டாயிருப்பதில்லை. அங்கே கர்த்தர் உனக்குத் தத்தளிக்கிற இருதயத்தையுங் கண்களின் தொய்யுதலையும் ஆத்தும சஞ்சலத்தையுங் கொடுப்பார்.

௬௬. உன் சீவன் உனக்கெதிராகத் தொங்கும். உன் சீவனை நம்பாமல் இரவும் பகலும் திகிலோடிருப்பாய்.

௬௭. நீ பயப்படும் உன்னிருதயத்தின் திகிலினாலும் உன் கண்களினாலே பார்க்குங் காரியத்தினாலும் விடியற்காலத்திலே சாயங்காலம் வந்தால் தாவலையென்றும் சாயங்காலத்திலே விடியற்காலம் வந்தால் தாவலையென்றுஞ் சொல்லுவாய்.

௬௮. இனிக் காணுதிருப்பாயென்று நான் உனக்குச் சொன்ன வழியாய்க் கர்த்தர் உன்னைக் கப்பல்களிலே எஜிப்திற்குத் திரும்பக் கொண்டுபோகப்பண்ணுவார். அங்கே உங்கள் சத்துருக்களுக்கு வேலைக்காரராகவும் வேலைக்காரிகளாகவும் விற்கப்படுவீர்கள். கொள்ளுவாருமில்லாதிருப்பார்களென்றான்.

## ௨௯. அதிகாரம்.

[(௧) அவர்கள் கண்ட அற்புதங்களை நினைத்துக் கீழ்ப்படியும்படி அவர்களுக்கு மோசே கற்பித்தது. (௰) கர்த்தருடனே யுடன்படிக்கைக்கு யாவரும் அவருக்கு முன்பாகச் சேர்ந்தது. (௰௮) தன் துன்மார்க்கத்தைக்குறித்து நிச்சந்தோஷப்படுகிறவன் மேல் தெய்வகோப மூளுதல், (௨௯) மறைவானவைகள் பராபரனுக்கே யடுத்தது.]

ஓரேபிலே இஸ்ரவேலபுத்திரரோடே பண்ணிக்கொண்ட உடன்படிக்கையையல்லாமல் மோவாபின் தேசத்திலே கர்த்தர் மோசேக்கு அவர்களோடே பண்ணக் கற்பித்த உடன்படிக்கையின் வார்த்தைகள் இவைகள்தானே.

௨. மோசே இஸ்ரவேலரையெல்லாம் வரவழைத்து அவர்களோடே சொன்னதாவது; கர்த்தர் எஜிப்துதேசத்தில் உங்கள் கண்களுக்கு முன்பாகப் பார்வோனுக்கும் அவனுடைய எல்லா ஊழியக்காரருக்கும் அவனு

டைய முழுத்தேசத்திற்குஞ் செய்ததையெல்லாம் நீங்கள் கண்டு,

௩. அந்தப் பெரிய சோதனைகளையும் அந்தப் பெரிய அடையாளங்களையும் அற்புதங்களையுமெல்லாங் கண்ணாரப்பார்த்தீர்களே.

௪. ஆகிலும் இந்நாள்வரைக்குங் கர்த்தர் உங்களுக்குணரத்தக்க இருதயத்தையுங் காணத்தக்க கண்களையுங் கேட்கத்தக்க காதுகளையுங் கொடுத்ததில்லை.

௫. நாம் நாற்பது வருஷம் உங்களை வனாந்தரத்தில் நடக்கப்பண்ணினேம். நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்பதை நீங்கள் அறிந்துகொள்ளும்படிக்கு உங்களில் உங்கள் வஸ்திரம் பழையதானதுமில்லை. உன் காலில் உன் பாதரட்சை பழையதானதுமில்லை.

௬. நீங்கள் அப்பஞ்சாப்பிட்டதுமில்லை. திராட்சப்பழரசமும், மதுவுங் குடித்ததுமில்லையென்கிறார்.

௭. நீங்கள் இவ்விடத்திற்குவந்தபொழுது எஸ்போனின் இராசாவாகிய சீகோனும் பாசானின் இராசாவாகிய ஓகும் நமக்கெதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். நாமோவென்றால், அவர்களை முறியடித்து,

௮. அவர்கள் தேசத்தைப் பிடித்து அதை ரூபேனியருக்குங் காதியருக்கும் மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்குஞ் சுதந்தரமாகக் கொடுத்தோம்.

௯. இப்பொழுதும் நீங்கள் செய்வதெல்லாம் உங்களுக்குவாய்க்கும்படிக்கு இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்வீர்களாக.

௰. உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன்னபடியேயும் உன் பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்டபடியேயும் இன்றுனைத் தமக்குச் சனமாக நிறுத்திக்கொள்ளவுந் தாமுனக்குப் பராபரனாயிருக்கவும்,

௰௧. நீ யுன் பராபரனாகிய கர்த்தருடைய உடம்படிக்கைக்கும் இன்று அவர் உன்னோடே பண்ணுகிற அவருடைய ஆணையுறுதிக்கும் உட்படும்படிக்கு,

௰௨. இன்று உங்கள் கோத்திரங்களின் தலைவரும் உங்கள் மூப்பரும் உங்கள் அதிகாரரும் இஸ்ரவேலின் சகல மனிதரும்,

௰௩. உங்கள் பிள்ளைகளும் உங்கள் பெண்சாதிகளும், உன் பாளயத்திற்குள்ளிருக்கிற உன் விறகுக்காரனும் உன் தண்ணீர்க்காரனுமான உன் பரதேசியுமாகிய, நீங்களெல்லாரும் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு முன்பாக நிற்கிறீர்கள்.

௰௪. ஆனால் நான் உங்களோடே மாத்திரமல்ல.

௰௫. இன்று இங்கே நம்மோடேகூட நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக நின்றிருக்கிறவர்களோடேயும் இன்று இங்கே நம்மோடேயிராதவர்களோடேயுங்கூட இந்த உடம்படிக்கையையும் இந்த ஆணையுறுதியையும் பண்ணிக்கொள்ளுகிறேன்.

௰௬. ஏனெனில், நாம் எகிப்துதேசத்தில் எப்படிக்குடியிருந்தோமென்றும், நீங்கள் கடந்துவந்த இடங்களிலிருந்த சாதிகளின் நடுவழியாய் எப்படிக்கடந்துவந்தோமென்றும் நீங்களறிவீர்கள்.

௰௭. அவர்களுடைய அருவருப்புகளையும் அவர்களிடத்திலிருக்கிற மரமுங் கல்லும் வெள்ளியும் பொன்னுமான அவர்களுடைய நரகலான தேவர்களையுங் கண்டீர்கள்.

௰௮. ஆகையால், அந்தச்சாதிகளின் தேவர்களைச் சேவிக்கப்போக இன்று நம்முடைய பராபரனாகிய கர்த்தரைவிட்டகலுகிற இருதயமுள்ள யாதொரு ஆணாகிலும் பெண்ணாகிலும் வம்சமாகிலுங் கோத்திரமாகிலும் உங்களிலிராதபடிக்கும் நஞ்சையும் எட்டியையும் முளைப்பிக்கிற யாதொரு வேர் உங்களிலிராதபடிக்கும் பாருங்கள்.

௰௯. அப்படிக்கொத்தவன் இந்த ஆணையுறுதியின் வார்த்தைகளைக் கேட்டும் என் மனதுக்குப் பிடித்தபடி நான் நடந்தாலும் எனக்குச் சுகமிருக்குமென்று வெறிக்கக்குடித்திருக்கிறவர்களைத் தாகமாயிருக்கிறவர்களுக்குச் சரிசமானமாக்கும்படிக்குத் தன்னிருதயத்திலே தன்னையாசீர்வதித்தால்,

௨௰. கர்த்தர் அவனுக்கு மன்னிக்கச்சித்தமாயிருப்பதில்லை. கர்த்தரின் கோபமும் எரிச்சலும் அப்பொழுது அந்த மனிதன்மேலே புகையும். இந்தப் புஸ்தகத்தி லெழுதியிருக்கிற சாபமெல்லாம் அவன்மேல் விழுகும். கர்த்தர் அவன் பெயரை வானத்தின் கீழிராதபடிக்குக் குலைப்பார்.

௨௰௧. இந்த நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலெழுதியிருக்கிற உடம்படிக்கையினுடைய சாபங்களின்படியெல்லாங் கர்த்தர் அவனைத் தீங்குக்கென்று இஸ்ரவேல் கோத்திரங்களுக்கெல்லாம் புறம்பாக்கிப் போடுவார்.

௨௰௨. அப்பொழுது உங்களுக்குப் பிறபாடெழும்பும் வேறே தலைமுறையான உங்கள் பிள்ளைகளுந் தூரதேசத்திலிருந்து வரும் அந்நியருஞ் சகல சாதிகளின் மனிதரும் இந்தத் தேசத்தின் வாதைகளையுங் கர்த்தர் அதற்குப் பிடிக்கப்பண்ணின அதின் நோய்களையும்,

௨௰௩. கர்த்தர் தமது கோபத்திலுந் தமது உக்கிரத்திலுஞ் சோதோமையுங் கொமோறாவையும் அத்மாவையுஞ் செபோயிமையுங் கவிழ்த்துப்போட்டகவிழ்தலுக்கொப்பாக அதின் நிலமெல்லாம் விதைப்பும் விளைவும் எந்தப் பூண்டின் முளைப்புமில்லாதபடிக்குக் கந்தகத்தாலும் உப்பாலும் எரிக்கப்பட்டதையுங் காணும்பொழுது,

உச. அந்தச் சாதிகளெல்லாம் எதுநிமித்தமாய்க் கர்த்தர் இந்தத் தேசத்திற்கிப்படிச்செய்தார். எதினாலே இந்தமிகுதியானகோபம் எரிந்ததென்பார்கள்.

உரு. அப்பொழுது சொல்லப்படுவதாவது; அவர்களுடைய பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் அவர்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினபொழுது அவர்களோடே பண்ணின உடம்படிக்கையை யவர்கள் விட்டுப்போய்,

உசு. தாங்கள் அறியாமலுந் தங்களுக்குக் கொண்டுங் கொடாமலுமிருக்கிற தேவர்களாகிய வேறேதேவர்களைச் சேவித்து அவைகளைப்பணிந்துகொண்டபடியினாலே,

உஎ. கர்த்தர் இந்தப்புஸ்தகத்திலெழுதியிருக்கிற சாபத்தையெல்லாம் இந்தத்தேசத்தின்மேல்வரப்பண்ண அதின்மேலேகோபமூண்டவராகி,

உஅ. அவர்களைக் கோபத்தினாலும் உக்கிரத்தினாலும் மகாகடுமையினாலும் அவர்கள் தேசத்திலிருந்து பிடுங்கிப்போட்டு இந்நாளிலிருக்கிறதுபோல அவர்களைவேறேதேசத்திலே தள்ளிவிட்டாரென்று சொல்லப்படும்.

உகூ. மறைவானவைகள் நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குரியது. வெளியானவைகளோவெனில், நமக்கும் நம்முடைய பிள்ளைகளுக்கும் இந்த நியாயப்பிரமாணத்தினுடைய வார்த்தைகளின்படியெல்லாஞ் செய்யும்படிக்கு என்றென்றைக்கும் அந்தந்திருக்கும்.

## கூய. அதிகாரம்.

[(க) குணப்பட்டவர்களுக்குத் தெய்வகிருபையின் வாக்குத்தத்தம். (யக) கற்பனையைத் தெளிவாய்க்காட்டியது. (யரு) சீவனையும் மரணத்தையுஞ் சனங்களுக்கு முன்னேவைத்தது.]

நான் உனக்குமுன்பாக வைத்த ஆசீர்வாதமுஞ் சாபமுமான இந்தக்காரியங்களெல்லாம் உன்மேல்வந்தபொழுதோவெனிற் சமயம் விடப்பட்டதென்றல், உன்பராபரனாகியகர்த்தர் உன்னைத்துரத்திவிட்ட எல்லாச் சாதிகளிடத்திலும் நீயிருக்கும்பொழுது நீயுன்னிருதயத்திற்குள்ளே சிந்தனையடைந்து,

உ. உன்பராபரனாகிய கர்த்தரண்டைக்கே திரும்பி நீயும் உன்பிள்ளைகளுமாய் உங்கள் முழு இருதயத்தாலும் உங்கள்முழு ஆத்துமத்தாலும் நான் இன்றுனக்குக் கற்பிக்கிறதின்படியெல்லாம் அவருடைய சத்தத்திற்குச்செவிகொடுத்தால்,

ங. உன்பராபரனாகிய கர்த்தர் உன்சிறையிருப்பைத்திருப்பி உனக்கிரங்கி உன்பராபரனாகிய கர்த்தர் உன்னைச்சிதறடித்த எல்லாச் சனசதளங்களிடத்திலுமிருக்கிற உன்னைத்திரும்பச் சேர்த்துக்கொள்ளுவார்.

ச. உன்னுடையவர்கள் வானத்தின் கடையாந்தரமட்டுந் துரத்துண்டிருந்தாலும் உன்பராபரனாகிய கர்த்தர் அங்கேயிருக்கிற உன்னைக்கூட்டி அங்கேயிருக்கிற உன்னைச் சேர்த்துக்கொண்டு,

ரு. உன்பிதாக்கள் சுதந்தரித்திருந்ததேசத்தை நீ சுதந்தரிக்கும்படிக்கு உன்பராபரனாகிய கர்த்தர் அதிலுன்னை வரப்பண்ணி, உனக்குநன்மைசெய்து, உன் பிதாக்களைப்பார்க்கிலும் உன்னைப்பெருகப்பண்ணுவார்.

சு. நீயுன் பராபரனாகிய கர்த்தனை உன்முழு இருதயத்தாலும் உன்முழு ஆத்துமத்தாலுஞ் சிநேகித்துப் பிழைக்கும்படிக்கு உன் பராபரனாகிய கர்த்தர் உன்னிருதயத்தையும் உன்வித்தாரின் இருதயத்தையுஞ் சுன்னத்துப்பண்ணி,

எ. இந்தச் சாபங்களையெல்லாம் உன்சத்துருக்களையேனும் உன்னைத் துன்பப்படுத்தின உன்பகைஞர்மேலுஞ் சுமக்கப்பண்ணுவார்.

அ. நீயோவெனில், மனந்திரும்பிக் கர்த்தரின் சத்தத்திற்குச்செவிகொடுத்து, நான் இன்றுனக்குக் கற்பிக்கிற அவருடைய எல்லாக்கற்பனைகளின்படியுஞ்செய்வாய்.

கூ. அப்பொழுது உன்பராபரனாகிய கர்த்தர் உன்கைகளின் எல்லாவேலையிலும் உன் கர்ப்பத்தின்கனியிலும் உன்மிருக சீவனின் பலனிலும் உன் நிலத்தின்கனியிலும் உனக்கு நன்மையுண்டாகப் பரிபூரணங்கட்டளையிடுவார்.

ய. ஏனெனில், இந்த நியாயப்பிரமாணப் புஸ்தகத்திலெழுதியிருக்கிற உன்பராபரனாகிய கர்த்தருடைய கற்பனைகளையும் அவருடைய கட்டளைகளையுங் கைக்கொள்ளும்படிக்கு நீயவர்சத்தத்திற்குச்செவிகொடுக்கும்பொழுதும் நீயுன்பராபரனாகிய கர்த்தரண்டைக்கு உன்முழு இருதயத்தாலும் உன்முழு ஆத்துமத்தாலுந் திரும்பும்பொழுது, கர்த்தர் உன்பிதாக்களின்மேலே சந்தோஷமாயிருந்ததுபோல உன்மேலேதிரும்ப நன்மையுண்டாகச் சந்தோஷமாயிருப்பார்.

யக. ஏனெனில், நானின்றுனக்குக்கற்பிக்கிற இந்தக்கற்பனை உனக்கறியப்படாதபுதுப் பொருளுமல்ல அது உனக்குத் தூரமுமல்ல.

யஉ. நாங்கள் அதைக்கேட்டு அதின்படி செய்யும்படிக்கு எங்களுக்காகப் பரமண்டலங்களுக்கேறி அதையெங்களுக்குக்கொண்டுவருபவனார் என்று நீ சொல்லத்தக்கதாக அது பரமண்டலங்களிலுள்ளதல்ல.

யங. நாங்கள் அதைக்கேட்டு அதின்படி செய்யும்படிக்கு எங்களுக்காகச் சமுத்திரத்தைக்கடந்து அதைக்கொண்டுவருபவனாரென்று நீ சொல்லத்தக்கதாக அது சமுத்திரத்திற்குப் புறத்திலுள்ளதுமல்ல.

௰௪. இந்த வசனத்தின்படியே செய்யும்படிக்கு அது உனக்கு மெத்தவுஞ் சமீபமாய் உன்வாயிலும் உன்னிருதயத்திலுமிருக்கின்றது.

௰௫. இதோ, ஜீவனையும் நன்மையையும் மரணத்தையுந் தீமையையும் இன்று உன்முன்னே வைத்தேன்.

௰௬. அதேதெனில், நீ பிழைத்துப் பெருகும்படிக்கும் நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தில் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கும் நீ உன் பராபரனாகிய கர்த்தரைச் சிநேகிக்கவும் அவர் வழிகளில் நடக்கவும் அவர் கற்பனைகளையுங் கட்டளைகளையும் நியாயங்களையுங் கைக்கொள்ளவும் நான் இன்றுனக்குக் கற்பிக்கிறேன்.

௰௭. நீ கேளாமல் உன் இருதயம் பேதித்து இழுப்புண்டுபோய் வேறேதேவர்களைப் பணிந்துகொண்டு அவர்களைச் சேவித்தாயேயானால்,

௰௮. நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு யோர்தானைக் கடந்துபோகிற சீமையிலே நீடித்திராமல் அழியவே அழிவீர்களென்பதை இன்றுங்களுக்கறிவிக்கிறேன்.

௰௯. நான் ஜீவனையும் மரணத்தையும் ஆசீர்வாதத்தையுஞ் சாபத்தையும் உன்முன்னே வைத்தேனென்று உங்கள்மேல் வானத்தையும் பூமியையும் இன்று சாட்சிவைக்கிறேன். ஆகையால், நீயும் உன் வித்தும் பிழைக்கும்படிக்கு நீ ஜீவனைத்தெரிந்துகொண்டு,

௨௰. கர்த்தர் உன் பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்குங் கொடுப்போமென்று அவர்களுக்கு ஆணையிட்ட சீமையிலே குடியிருக்கும்படிக்கு உன் பராபரனாகிய கர்த்தரைச் சிநேகித்து, அவர் சத்தத்துக்குச் செவிகொடுத்து, அவரையொட்டிக்கொண்டிருப்பாயாக. ஏனெனில், அவரே உன் ஜீவனும் உன்னுடைய நாள் நீடிப்புமானவரொன்றுன.

## ௩௰௧. அதிகாரம்.

[(௧) மோசே சனங்களையும், (௭) யோசுவாவையுந் தைரியப்படுத்தினது. (௯) அவர் நியாயப்பிரமாணத்தைச் சனங்களுக்கு ஏழாம்வருஷத்திற்படிக்க ஆசாரியர்களிடத்திற்கொடுத்தது. (௰௪) பராபரன் யோசுவாவுக்குக் கட்டளையையும், (௰௯) சனங்களுக்கு விரோதமான சாட்சியாகப் பாட்டையுங்கொடுத்தது. (௨௪) மோசே நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தை வைக்கும்படி லேவிய சாதியாருக்குக் கொடுத்தது. (௨௮) அவர் மூப்பர்களுக்குச் செய்த எச்சரிப்பு.]

பின்னையும் மோசேபோய் இஸ்ரவேலோடெல்லாஞ் சொன்னவார்த்தைகளாவது;

௨. நான் இன்று நூற்றிருபது வயதுள்ளவன். இனி நான் போக்கும் வரத்துமாயிருக்கமாட்டேன். மேலும், இந்த யோர்தானை நீ கடப்பதில்லையென்று கர்த்தர் என்னோடே சொல்லியிருக்கிறார்.

௩. உன் பராபரனாகிய கர்த்தர்தாமே உனக்குமுன்பாகக் கடந்துபோவார். நீ இந்தச் சாதிகளின் தேசத்தைக் கட்டிக்கொள்ள அவர் அவைகளை உனக்குமுன்பாக அழிப்பார். கர்த்தர் சொன்னபடியே யோசுவா உனக்குமுன்பாகக் கடந்துபோவான்.

௪. கர்த்தர் அழித்த எமோரியரின் இராசாக்களாகிய சீகோனுக்கும் ஓகுக்கும் அவர்கள் தேசத்திற்குஞ் செய்ததுபோல அவைகளுக்குஞ் செய்வார்.

௫. கர்த்தர் அவர்களை யுங்களுக்கு முன்பாக ஒப்புக்கொடுக்கும்பொழுது நீங்கள் அவர்களுக்கு நான் உங்களுக்குக் கற்பித்த கற்பனையின் படியெல்லாஞ் செய்யக்கடவீர்கள்.

௬. நீங்கள் அவர்களைப் பார்த்துப் பயப்படாமலுந் திகைக்காமலும் பலத்துத் திடமனதாயிருங்கள். ஏனெனில், உன் பராபரனாகிய கர்த்தர்தாமே உன்னோடேகூட நடந்துவருகிறார். உன்னைத் தளரவிடாமலும் உன்னைக் கைவிடாமலுமிருப்பாரென்று அவர்களோடே சொன்னான்.

௭. பிறபாடு மோசே யோசுவாவையழைத்து, இஸ்ரவேலெல்லாம் பார்க்க அவனோடே சொன்னதாவது; பலத்துத் திடமனதாயிரு. ஏனெனில், நீ இந்தச் சனத்தைக் கர்த்தர் அவர்களுக்குக் கொடுப்போமென்று அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திற்குள் அழைத்துப்போய், நீ அதையவர்களுக்குப் பங்கிடுவாய்.

௮. கர்த்தர் உனக்குமுன்பாக நடக்கிறவர் அவருனனோடேயிருப்பார். அவருன்னைத் தளரவிடுகிறதில்லை. உன்னைக் கைவிடுவதுமில்லை. நீ பயப்படாமலுங் கலங்காமலுமிருப்பாயாகவென்றான்.

௯. மோசே இந்த நியாயப்பிரமாணத்தையெழுதி அதைக் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற லேவி புத்திரரான ஆசாரியருக்கும் இஸ்ரவேலுடைய எல்லா மூப்பருக்கும் ஒப்புவித்து,

௰. அவர்களுக்குக் கற்பித்ததாவது. விடுதலையின் வருஷமாகிய ஒவ்வொரு ஏழாம் வருஷத்தின் முடிவிலே கூடாரங்களின் பண்டிகையிலே,

௰௧. இஸ்ரவேலெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக அவர் தெரிந்துகொண்டிருக்குந் தானத்திலே காணப்பட வந்திருக்கும்பொழுது, இந்த நியாயப்பிரமாணத்தை எல்லா இஸ்ரவேலருக்குமுன்பாகவும் அவர்கள் காதுகள் கேட்க வாசிக்கக்கடவாய்.

௰௨. புருஷருட ஸ்திரீகளும பிள்ளைகளும உன வாசல்களிலிருககும உனனுடைய பரதேசிகளும கேட்டுக கறறுககொணடு உஙகள பராபரனாகிய கர்ததருககுபபயநது இநத நியாயபபிரமாணவார்ததைகளின படியெலலாஞ செயயக கவனமாயிருககுமபடிககும்,

௰௩. அறியாத அவர்கள பிளளைகளுஙகேட்டு நீஙகள சுதநதரிகக யோர்தானைககடநதுபோகிற சீமையிலே உயிரோடிருககும நாளெலலாம உஙகள பராபரனாகிய கர்ததருககுபபயபபடக கறறுககொளளுமபடிககும ஜனததைககூட்டி அதை வாசியெனறான.

௰௪. கர்ததர் மோசேயுடனே இதோ, நீ மரிக்குங்காலஞ்சமீபித்தது. நீயோசுவாவை யழை. நாம அவனுககுககட்டளைகொடுக குமபடிககு ஆசரிபபின கூடாரததிலேவநது நிலலுஙகளெனறார். அபபடியே மோசேயும யோசுவாவுமபோய ஆசரிபபின கூடாரததில நினறார்கள.

௰௫. அபபொழுது கர்ததர் கூடாரததில மேகததூணிலே தரிசனையானார். மேகததூண்கூடாரததின வாசலமேல்நினறது.

௰௬. கர்ததர் மோசேயோடே சொனனதாவது; இதோ, நீ உனபிதாககளோடே படுததுககொளளப்போகிறாய. இநதச்சனமோவெனறால எழுமபி, அதுபோயிருககுந தேசததிறகுளளே அதிலிருககிற அநநிய தேவர்களபிறகாலே சோரம்போய நம்மை விட்டு நாமதனனோடேபணணிககொணட நமமுடைய உடமபடிககையை முறிததுப போடும.

௰௭. ஆகையால, அநநாளிலேநாம அதின மேற கோபமமூணடவராகி, அவர்களைக்கை விட்டு அவர்கள பட்சிககபபடுமபடிககு நமதுமுகததையவர்களுககுமறைபபதினால அநேகந தீஙகுகளும இககட்டுகளும அவர்களைப பிடிககும. அநநாளிலே அவர்கள என பராபரன எனநடுவே இராததினாலே யலலவோ இநதத்தீஙகுகளெனனைபபிடிததெனபார்கள.

௰௮. நாமோவெனறால, அவர்கள வேறே தேவர்களணடைககு முகநதிருமபிசசெயத எலலாப பொலலாபபினிமிததமும அநநாளிலே நமது முகததை மறைககவே மறைபபோம.

௰௯. இபபொழுதும நீஙகளிநதப பாட்டையெழுதிககொணடு அதைஇஸ்ரவேல்புததிரருககுப படிததுககொடுதது. இநதப பாட்டு இஸ்ரவேல புததிரருககுளளே நமககுச் சாட்சியாயிருககுமபடிக கதை அவர்களவாயிலவழஙகபபணணுஙகள.

௨௰. ஏனெனில, நாம அவர்கள பிதாககளுககாணையிட்டபாலுந தேனுமோடுகிற சீமையில அவர்களைவரபபணணியிருககும பொழுதும அவர்களபுசிததுததிர்ப்தியாகிக கொழுததுபபோனபொழுதும, அவர்கள வேறேதேவர்களணடைககுமுகந திருமபி, அவர்களைசசேவிதது, நமககுககோபமூட்டி நமதுடமபடிககையை முறிததுபபோடுவார்கள.

௨௧. ஆகையால அநேகந தீஙகுகளுமஇககட்டுகளும அவர்களைப பிடிககும்பொழுது, அவர்களவிததாரினவாயில மறதியாய்ப்போகாதிருககும. இநதபபாட்டு அவர்களுககெதிரானசாட்சியாயுததரவுசொலலும. ஏனெனில, நாமஅவர்களை நாம ஆணையிட்ட தேசததில இனனம வரபபணணுதிருககிற இனறுதானும அவர்களதோற்றலான நினைவுகளையறிவோமெனறார்.

௨௨. அநநாளிலே மோசே அநதபபாட்டையெழுதி அதைஇஸ்ரவேல்புததிரருககுப படித்துககொடுத்தான.

௨௩. நூனின குமாரனாகிய யோசுவாவுககவர் நீ பலததுத திடமனதாயிரு. ஏனெனில, நீ இஸ்ரவேல புததிரரை நாம அவர்களுககாணையிட்டதேசததிலே அழைததுக கொணடுபோவாய். நாமுனனோடிருபபோமெனறுகட்டளையிட்டார்.

௨௪. மோசே இநத நியாயபபிரமாணத தின வார்ததைகளையொருபுஸ்தகததிலே முடிய எழுதித்தீர்நதபொழுது,

௨௫. அவனகர்ததருடைய உடமபடிககைப் பெட்டியைச சுமககிற லேவியருககுக கற்பிததாவது;

௨௬. நீஙகளிநத நியாயப்பிரமாணபபுஸ்தகததைவாஙகி, அதையுஙகள பராபரனாகிய கர்ததருடைய உடமபடிக்கைபபெட்டியின பககததிலேவையுஙகள. அஙகேஅதுஉனககெதிரானசாட்சியாயிருககும.

௨௭. ஏனெனில, நான உனகலகக் குணததையுமஉனகடினககழுததையுமஅறிவேன. இதோ நான இனறினனம உஙகளுடனே உயிரோடிருககையிலே கர்ததருககு விரோதமாகக் கலகமபணணினீர்களே, எனமரணததிறகுபபிறபாடெததனையதிகம!

௨௮. உஙகளகோததிரஙகளின மூப்பரையும உஙகள ஆதிச்கக்காரரையும எலலாம எனனணடையிலே நான அவர்களகாதுகள கேட்க இநத வார்ததைகளைச சொலலவும அவர்களுககெதிராக வானததையும பூமியையுஞ்சாட்சியைககவுஙகூட்டுஙகள.

௨௯. ஏனெனில,எனமரணததிற்குபபிறபாடு நீஙகள உஙகளைக கெடுககவேகெடுதது. நான உஙகளுககுககற்பிதத வழியை விட்டு விலகுவீர்கள. ஆகையால, முடிவு நாள்களிலே தீஙகு உஙகளுககுநேரிடும. ஏனெனில, கர்ததரை உஙகள கைகளின செய்கையினாலே மனமடிவாககுமபடிக கவர்பார்வைக

குபபொலலாபபானதைச செய்வீர்களென பதையதிவேனென்றுசொலலி,

௩௰. மோசே இஸ்ரவேல சபையெலலாங கேட்க அநதபபாட்டினவார்ததைகளைமுடியசசொன்னான.

## ௩௨. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய கிருபையையும, குரோதத்தையும அறிவிககத்தகக மோசேயினபாட்டு. (௪௬) அதிலஇருதயத்தைவைக்கச்சனஙகளைஅவரெசசரிததது. (௪௮) பராபரனமோசேயைததேசததைபபார்ககவும, மரணமடையவும நேபோ பர்வதத்தினமேலனுப்பினது.]

வானஙகளே செவிகொடுஙகள. நான பேசுவேன. பூமி எனவாயின் வசனஙகளைக்கேட்பதாக.

௨. மழையினதூறல முளையினமேல விழுவதுபோல என உபதேசமவிழவும, பனியின துளிகள் பூணடுகள்மேற் பெயவதுபோல எனவசனமபெயயவுஙகடவது.

௩. ஏனெனில, கர்த்தருடைய நாமததைபபிரசித்தபபணணுவேன. நம்முடைய பராபரனுககுமகததுவததைச செலுத்துஙகள.

௪. அவர்கல்மலை அவர் கிரியை குறையறறஉததமமானது. ஏனெனில, அவர் வழிகளெலலாம நியாயம. அவர் நியாயககேடிலலாத உணமையுளளபராபரன. அவர் நீதியுஞசெமமையுமானவர்.

௫. அவர் அதறகுக் கேடுணடாககினறாரோ இலலை. கறை அவருடைய பிளளைகளுடையது. அவர்களமாறுபாடும மகாப புரட்டுமானசநததியார்.

௬. ஞானமற்றபயிததியசனமே! இபபடிககர்ததருககுபபதில அளிக்கிறீர்களோ! அவருனனைத் தமமுடையகைவசமாககின உனஎசமானனாகிய உனனுடையபிதாவலலவோ! அவருனனை யுணடாககினவரும உனனைத்திடபபடுததினவருமல்லவோ!

௭. ஆதிநாள்களைநினை. தலைமுறை தலைமுறையாய்சசெனறவருஷங்களைத தியானியுஙகள. உனதகபபனைககேள், அவனஉனககறிவிபபான. உன மூபபரகளைககேள, அவர்களுனககுசசொலலுவார்கள.

௮. உனனதமானவர் சாதிகளுககுசசுதநததரஙகளைபபஙகிட்டு, மனுபபுததிரரைப பிரிததுபோகபபணணுகிறபொழுது இஸ்ரவேலபுததிரரின இலககததிறகுததகக இடமுணடாயிருககததககதாயச சன சதனஙகளினஎலலைகளைததிட்டமபணணினார்.

௯. ஏனெனிற கர்ததருடையசனம அவருடையபஙகு. யாககோபு அவருடைய சுதந்தரவீதம.

௰. அவர் அதைவனாநதரதேசததிலும ஊளையிடுதலுளள வெறுமையான அவாநதர வெளியிலுஙகணடுபிடிததார். அதைசசூழந்துகொணடார். அதற் குணர்வுணடாககினார். அதைத்தமது கணணின கருபபு விழியைபபோலத் தற்காததார்.

௰௧. கழுகு தனகூட்டினகுஞசுகளையெழுமபபபணணி அவைகளினமேல அசைவாடிககொணடிருநது தன செட்டைகளை விரிதது அவைகளையெடுதது அவைகளைத தனசெட்டைகளின மேலேசுமநது வருகிறதுபோல,

௰௨. கர்த்தர் ஒருவரே அதை வழிநடததினார். அநநியதேவன அவரோடேகூடவிருநததிலலை.

௰௩. அவர் அதைப பூமியின உயரமானதலஙகளினமேல ஏறிவரபபணணினார். அது நிலததினபலனகளைபபுசித்தது. அதைககலமலையிலுளளதேனையுங கல்மலையின கற்பாறையிலிருநதுவநத எணணெயையும உறிஞ்சபபணணினார்.

௰௪. மாடுகளின வெணணெயையும ஆடுகளினபாலையும, பாசானிலமேயும ஆட்டுககுட்டிகள ஆட்டுககடாககள வெளளாட்டுககடாககளுடையகொழுபபையுங குணடிககாயகளின கொழுபபுககொததுககோதுமையையுந் திராட்சபபழஙகளினஇரததமபோலிருககிற சுததமான இரசததையுஞ சாபபிட்டாய்.

௰௫. செமமை மார்ககததானாயிருநதவன கொழுபபான பொழுதோவெனில, உதைத்தான. கொழுததுத்தாளிதது நிணநதுறறுபபோனபொழுது தனனையுணடாககின பராபரனைவிட்டுததனஇரட்சிபபின கலமலையையசட்டைபணணினான.

௰௬. அநநியதேவர்களால அவருககெரிசசலைமூட்டினார்கள. அருவருபபுகளினாலஅவரைமனமடிவாககினார்கள.

௰௭. தாஙகள அறியாமலிருநதஙகளபிதாககள எணணாமலுமபோன நவீனதுபாதியிலே புதிதாய உணடான தேவர்கள அல்லாத பேய்களெனற தேவர்களுககுப பலியிட்டார்கள.

௰௮. உனனைசசெனிபபிதத கலமலையை நீ நினையாதேபோய, உனனைபபெறற பராபரனைமறநதாய்.

௰௯. அதைக கர்ததர்கணடு தமமுடைய குமாரர்மேலுந தமமுடைய குமாரததிகளமேலும மனமடிவாகி அவர்களைப புறககணிததுசசொனனதாவது;

௨௰. நமது முகததை யவர்களுககுமறைபபோம. அவர்களுடையமுடிவு எப்படியிருககுமெனறுபார்பபோம. ஏனெனில, அவர்கள மகா மாறுபாடான சநததி. அவர்கள உண்மையிலலாதபிளளைகள.

௨௧. அவர்களதெயவமல்லாததினாலேநமக்கெரிசசலைமூட்டித தஙகள மாய்கைகளினாலே நமமை மனமடிவாக்கினார்கள. ஆகை

யால், சனமல்லாததினாலே நாம் அவர்களுக்கு எரிச்சலெழுப்பி மதிகெட்ட சாதியினாலே அவர்களை மனமடிவாக்குவோம்.

௨௨. ஏனெனில், நமது கோபத்தினாலே அக்கினி பற்றிக்கொண்டது. அது பாதாளமான நரகமட்டும் எரியும். அது பூமியையும் அதின் பலனையும் பட்சித்துப் பர்வதங்களின் அஸ்திபாரங்களை வேகப்பண்ணும்.

௨௩. தீங்குகளையவர்கள் மேலே குவியப்பண்ணுவோம். நம்முடைய அம்புகளையெல்லாம் அவர்கள் மேற்படவெய்வோம்.

௨௪. பசியினால் வாடி எரிபந்தக் காங்கையினாலுங் கசப்பான பெருவாரிக் காய்ச்சலாலும் மாளுவார்கள். மிருகங்களின் பற்களையும் பாம்புகளின் விஷத்தையுங்கூட அவர்களுக்குள் அனுப்புவோம்.

௨௫. வெளியிலே பட்டயமும் அறைகளுக்குள்ளே பயங்கரமும் வாலிபனையுங் கன்னியாஸ்திரியையும் பாலகனையும் நரைமனிதனையுஞ் சங்கரிக்கும்.

௨௬. எங்கள் கையுயர்ந்ததென்றுங் கர்த்தர் இதையெல்லாம் நடப்பித்ததில்லையென்றும் அவர்களுடைய சத்துருக்கள் தப்பு நினைவாய்ச் சொல்லுவார்களென்று பகைஞரின் குரோதத்திற்கு நாம் பயமாயிராதிருந்தால்,

௨௭. நாம் அவர்களை மூலைக்கு மூலை சிதறடித்து மனிதரில் அவர்கள் பெயரையற்றுப் போகப்பண்ணுவோமென்போம்.

௨௮. ஏனெனில், அது யோசனைகெட்ட சாதி. அவர்களில் உணர்வில்லை.

௨௯. அவர்கள் ஞானமடைந்து இதைப் புத்தியாய் நினைத்துத் தங்கள் பிற்காரியத்தைச் சிந்தித்துக்கொண்டால் தாவிலையென்கிறார்.

௩௰. அவர்களுடைய கன்மலை அவர்களை விற்காமலுங் கர்த்தர் அவர்களை யொப்புக்கொடாமலுமிருந்தாரானால் ஒருவன் ஆயிரம் பேரைத் துரத்தி, இரண்டுபேர் பதினாயிரம் பெயரையோட்டுவதெப்படி!

௩௧. ஏனெனில், தங்கள் கன்மலை நம்முடைய கன்மலையைப்போலல்லவென்று நம்முடைய சத்துருக்கள் தாமே நிர்மாணிக்கிறார்கள்.

௩௨. ஏனெனில், அவர்களுடைய திராட்சச்செடி சோதோமிலும், கொமோரா நிலங்களிலும் பயிரான திராட்சச் சாதி. அவைகளின் பழங்கள் பிச்சும் அவைகளுக்குண்டான குலைகள் கசப்புமாயிருக்கின்றன.

௩௩. அவர்களுடைய திராட்சப்பழ இரசம் வலுசர்ப்பங்களின் விஷமும் விரியன் பாம்புகளின் கொடிய விஷமுமானது.

௩௪. நம்மிடத்தில் இது வைத்து வைக்கப்பட்டு நமது பொக்கிஷங்களில் இது முத்திரைபோட்டிருக்கிறதில்லையோ!

௩௫. நீதியைச் சரிக்கட்டுதலும் பதிலுக்குப் பதிலளிக்குதலும் நம்முடையது, ஏற்ற காலத்திலே அவர்கள் கால் தள்ளாடும். ஏனெனில், அவர்கள் ஆபத்தின் நாள் சமீபமாயிருக்கின்றது. அவர்களுக்குக் காயத்தமானவைகள் தீவரிக்குமென்கிறார்.

௩௬. ஏனென்றால் கர்த்தர் தம்முடைய சனத்தை நியாயந்தீர்த்துத் தம்முடைய ஊழியக்காரர் மேலிரங்குவார். அதேனெனில் பலனற்றதென்றும் அடைக்கப்பட்டதும் போயிற்று. விடப்பட்டதும் போயிற்றென்றுங் காண்பார்.

௩௭. அப்பொழுது அவர் சொல்லுவதாவது; அவர்கள் பலியிட்ட பலிகளின் கொழுப்பைத் தின்று ஊற்றுதல்களின் திராட்சப்பழ இரசத்தைக் குடித்தார்களே. அந்த அவர்களுடைய தேவர்களும் அவர்கள் நம்பின கன்மலையுமெங்கே!

௩௮. அவைகளெழுந்திருந்தும் உங்களுக்குச் சகாயம்பண்ணி, உங்களுக்கு மறைவிடமாயிருக்கட்டும்.

௩௯. நாம் நாமே அவர், நம்மோடே வேறே தேவனில்லையென்கிறதை யிப்பொழுது பாருங்கள். நாம் கொன்றும்போடுகிறோம். நாம் பிழைப்பூட்டுகிறோம். நாம் வெட்டுகிறோம். நாம் குணமாக்குகிறோம். நமது கைக்குத் தப்புவிப்பாரில்லை.

௪௰. ஏனெனில், நாம் நம்முடைய கரத்தை வானத்திற்கு நேராக ஏறெடுத்து நாம் என்றென்றைக்கும் பிழைக்கிறவரென்போம்.

௪௧. நாம் நம்முடைய பட்டயத்தின் மின்னலைக் கூர்க்காக்கி நம்முடைய கையானது நியாயத்தைப் பிடித்தால் நாம் நம்முடைய சத்துருக்களுக்குச் சரிக்குச்சரிக்கட்டி நம்மைப் பகைக்கிறவர்களுக்குப் பதில் அளிப்போம்.

௪௨. நமதம்புகளை வெட்டுண்டவர்களின் இரத்தத்தாலும் பிடிப்பட்டோரின் இரத்தத்தாலும் வெறிக்கப்பண்ணுவோம். நமது பட்டயம் மாம்சத்தைப் பட்சிக்கும். தலைவரை முதற்கொண்டிருக்கும் மற்றச்சத்துருக்கள் மேலே நீதி சரிக்கட்டுதலுண்டாயிருக்குமென்கிறார்.

௪௩. சாதிகளே யவருடைய சனத்தோடேகூடக் கெம்பீரியுங்கள். ஏனெனில், அவர் தமதூழியக்காரரின் இரத்தப்பழியை வாங்கித் தம்முடைய சத்துருக்களுக்குச் சரிக்குச் சரிக்கட்டித் தமது சீமையின் மேலுஞ் சனத்தின் மேலுங் கிருபையுள்ளவராவாரென்பதுதானே.

௪௪. மோசேயும் நூனின் குமாரனாகிய யோசுவாவும் வந்து இந்தப் பாட்டின் வார்த்தைகளையெல்லாஞ் சனத்தின் காதுகள் கேட்கச் சொன்னார்கள்.

௪௫. மோசே இந்தச் சகல வார்த்தைகளை

யும் இஸ்ரவேலோடெல்லாஞ் சொல்லிமுடித்தபொழுது,

௪௬. அவர்களோடே சொன்னதாவது; இந்த நியாயப்பிரமாணவார்த்தைகளின்படியெல்லாஞ்செய்யக் கவனமாயிருக்க நீங்களுங்கள் பிள்ளைகளுக்குக் கற்பிக்கும்படிக்கு நானின்றுங்களுக்குச்சாட்சியாயொப்புவிக்கிற வார்த்தைகளையெல்லாமுங்கள்மனதிலே வையுங்கள்.

௪௭. ஏனெனில், இது உங்களுக்கு வீண் வார்த்தையாயிராமல் இது உங்கள் ஜீவனுயிருக்கிறது. நீங்கள் சுதந்தரிக்கயோர்தானைக் கடந்துபோயிருக்குந் தேசத்திலிந்த வார்த்தையினாலே உங்கள் நாளுகளை நீடிக்கப்பண்ணுவீர்களென்றான்.

௪௮. அந்நாளிலேதானே கர்த்தர் மோசேயோடேபேசிச்சொன்னதாவது;

௪௯. நீ எரிகோவுக்கெதிரான மோவாப் தேசத்திலுள்ள இந்த அபாரீமென்ற மலைகளிலிருக்கிற நேபோ பர்வதத்திலேறி நாம இஸ்ரவேல்புத்திரருக்குக் காணியாட்சியாகக்கொடுக்குங்கானானதேசத்தைப்பார்த்து,

௫௦. உன் சகோதரனாகிய ஆரோன் ஓர் என்ற பர்வதத்திலமரித்துத் தன் சனத்தாரிடத்திலே சேர்க்கப் பட்டாற்போல நீயேறியிருக்கப்போகிற அந்தப் பர்வதத்திலேமரித்து உன்சனத்தாரிடத்திலே சேர்க்கப்படு.

௫௧. நீங்களிசீன்வனாந்தரத்திலுள்ளகாதேசிலேமேரிபாவின்தண்ணீர்சமீபத்தில் இஸ்ரவேல்புத்திரரின் நடுவேநம்மைப் பரிசுத்தம பண்ணாமல் அவர்கள் நடுவேநமக்கு இரண்டகம் பண்ணினபடியினாலேதானே.

௫௨. ஆகையால், நாம இஸ்ரவேல் புத்திரருக்குக்கொடுக்கும் எதிரோயிருக்கிற தேசத்தை நீ பார்ப்பாய். ஆனால் நீ யதற்குட் பிரவேசிப்பதில்லையென்றார்.

## ௩௩. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய மகத்துவம். (௬) பன்னிரண்டுகோத்திரங்களுக்குவரும் ஆசீர்வாதம். (௨௬) இஸ்ரவேலரின்மேட்டிமை.]

பராபரனுடைய மனிதனாகிய மோசே தன்மரணத்திற்குமுன்னே இஸ்ரவேல் புத்திரரையாசீர்வதித்த ஆசீர்வாதம்.

௨. அவன் சொன்னதாவது; கர்த்தர் சீனாயிலிருந்து பிரசன்னமாகி அவர்களுக்குச சேயீரிலிருந்து உதித்தார். பாரான் பர்வதத்திலிருந்துபிரகாசித்தார். அநேகமாயிரங்களானபரிசுத்தவான்களோடேவந்தார். அவர்களுக்காக அக்கினியான நியாயப் பிரமாணம் அவர் வலதுபாரிசத்திலிருந்தது.

௩. மெய்யாகவே சனசதளங்களைச் சிநேகிக்கிறார். அவருடைய பரிசுத்தவான்களெல்லாரும் உமமுடைய கையிலிருக்கிறார்கள். அவர்கள் உமது பாதத்திலேபணிந்து உமமுடைய வார்த்தைகளிலே கலக்கிறாககொள்வார்களென்றான்.

௪. யாக்கோபுடைய சபையின் சுதந்தரமான நியாயப்பிரமாணத்தை மோசே எங்களுக்குக் கற்பித்தான்.

௫. சனத்தின் தலைவரும் இஸ்ரவேலின்கோத்திரங்களுங் கூட்டங் கூடினகையில் அவன் செம்மை மார்க்கத்தாரில் இராசாவாயிருந்தான்.

௬. ரூபேன் சாவாமற் பிழைக்கக்கடவன். அவன் மனிதரின் இலக்கம் மட்டாயிருக்குமென்றான்.

௭. யூதாவுக்காக அவன்சொன்னது; கர்த்தாவே! யூதாவின் சத்தத்தைக்கேட்டு அவனையவன் சனத்தோடே கூட்டிக்கொண்டுவாரும். அவன்கைகள் அவனிற்பலக்கக்கடவது. அவனையவன் சத்துருக்களுக்கு நீங்கலாக்கிவிடுவிக்கிற சகாயரா யிருப்பீராகவென்றான்.

௮. லேவிக்கு அவன்சொன்னதாவது; உன்னுத்தமங்களும் உன்வெளிச்சங்களும் நீ மாசாவிலே பரிட்சைபார்த்து மேரிபாவின் தண்ணீரிடத்தில் வாக்குவாதம் பண்ணின உன்னுடைய பரிசுத்தபுருஷனவசமாயிருப்பதாக.

௯. தன் தகப்பனுக்குந் தன் தாயக்கும நானுங்களைப் பாரேனென்றுசொல்லித்தன சகோதரரை யறியாமல் தன் பிள்ளைகளையுமறியாமலிருக்கிறவன் வசமாகத் தானே. ஏனெனில், அவர்கள் உமமுடையவார்த்தைகளைக்கைக்கொண்டு, உமமுடைய உடம்படிக்கையைக்காக்கிறவர்கள்.

௰. அவர்கள் யாக்கோபுக்கு உமமுடைய நியாயங்களையும் இஸ்ரவேலுக்கு உமமுடைய நியாயப்பிரமாணத்தையும் போதித்து, உமக்குமுன்பாகத் தூபவர்க்கத்தையும் உமது பலிபீடத்தின்மேலே சர்வாங்கதகனபலிகளையும் போடுவார்கள்.

௰௧. கர்த்தாவே! அவன் சத்துவத்தையாசீர்வதித்து அவன்கைகளுடைய கிரியையினமேலே பிரியமாயிரும். அவனுக்குவிரோதமாயெழும்பி அவனைப்பகைக்கிற வர்களின் இடுப்புகளையவர்கள் எழுந்திருக்கமாட்டாதபடிக்குநொறுக்குமென்றான்.

௰௨. பெஞ்யமீனுக்கவன்சொன்னது; கர்த்தருக்குப் பிரியமானவர் அவரோடே சுகமாகத்தங்கி அவனைச்சகலநாளுங் காப்பாற்றி அவன்தோள்களின் நடுவேவாசமாயிருப்பாரென்பதே.

௰௩. யோசேப்புக்கவன்சொன்னது; அவன தேசங் கர்த்தரால் வானத்தின் அருமையான பனியினாலுந் தாழவிருக்கிற ஆழத்தினாலும்,

௰௪. சூரியனின் அருமையான பலன்களினா

னும் மாதங்களின் அருமையான பலபாகங்களினாலும்,

௰௫. ஆதிபர்வதங்களின் மேலதரமான வரவினாலும், நித்தியமேடுகளின் அருமையான நன்மையினாலும்,

௰௬. நாடும் அதின் நிறைவுங் கொடுக்கிற அருமையானகனிகளினாலும் ஆசீர்வதிக்கப்படுவதாக. முட்செடியில் வாசமானவரின் தயை யோசேப்புடைய சிரசின்மேலுந் தன் சகோதரரைப் பார்க்கிலும் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்மேலும் வருவதாக.

௰௭. அவன் அலங்காரம் அவன் தலையீற்றுக்காளையினுடையதைப்போலவும், அவன் கொம்புகள் காண்டாமிருகத்தின் கொம்புகள் போலவுமிருக்கும். அவைகளாலே சனசதளங்களையேகமாய்த் தேசத்தின் கடையாந்தரங்கள்மட்டும்முட்டித் துரத்துவான். அவைகள் எப்பிராயீமின்பதினாயிரங்களும் மனாசேயின் ஆயிரங்களுமானசேனைகளென்றான்.

௰௮. செபுலோனுக்கவன்சொன்னதாவது; செபுலோனே! நீயுன் புறப்படுதலினாலும் இசக்காரே! நீ யுன் கூடாரங்களினாலுஞ் சந்தோஷமாயிரு.

௰௯. சனசதளங்களைப் பர்வதத்திற்கு வரவழைத்துப்போய் அங்கே நீதியின்பலிகளையிடுவார்கள். ஏனெனிற் கடல்களின் பரிபூரணத்தையும் மணலில் மூடியொளித்திருக்கிறவைகளையுஞ்சூப்புவார்களென்றான்.

௨௰. காத்துக்கவன்சொன்னதாவது;காத்துக்குவிஸ்தார இடமுண்டாக்குகிறவர்ஸ்தோத்திரிக்கப்பட்டவர். அவன்சிங்கத்தைப்போலத் தங்கியிருந்து புயத்தையும் உச்சந்தலையையுங் கூடப்பீறிப்போடுகிறான்.

௨௧. முந்தி அவன்தனக்காக இடம்பார்த்துக்கொண்டான். ஏனெனில், நியாயப்பிரமாணிக்கன் அங்கேகொடுத்த பங்குபத்திரமாயிருக்கின்றது. ஆனால் அவன்சனத்தின் முன்னணியாய் வந்து இஸ்ரவேலுடனே கூடக்கர்த்தரின் நீதியையும் அவருடைய நியாயங்களையும் நடப்பிப்பானென்றான்.

௨௨. தாணுக்கவன் தான் பாசானிலிருந்து பாய்கிற சிங்கக்குட்டியைப்போலிருப்பானென்றான்.

௨௩. நப்தலிக்கவன் நப்தலி இரம்மியமாய்த் திர்ப்தியடைந்து கர்த்தரின் ஆசீர்வாதத்தினால் நிரம்பியிருப்பான். மேற்புறத்தையுந் தென்புறத்தையுஞ் சுதந்தரித்துக்கொள்ளென்றான்.

௨௪. ஆசேருக்கவன் சொன்னதாவது; ஆசேர்பிள்ளைகளால் ஆசீர்வதிக்கப்பட்டுத் தன் சகோதரருக்குப் பிரியமாயிருந்து தன் காலையெண்ணெயிலேதோய்ப்பானாக.

௨௫. இரும்பும் வெண்கலமும் உன்பாதரட்சையின் கீழிருக்கும். உன்நாளிருக்குமட்டும் உன்பெலனுமிருக்குமென்றான்.

௨௬. செம்மைமார்க்கத்தாருடைய பராபரனைப்போலொருவருமில்லை. அவருனக்குச் சகாயமாய் வானங்களின்மேலுந் தமது முக்கியத்திலே ஆகாயமண்டலங்களின்மேலும் ஏறிவருகிறார்.

௨௭. அனாதி பராபரனுந் தாழவிருக்கிற அவருடைய நித்திய புயங்களும் உனக்கடைக்கலம். அவருனக்குமுன்பாகச் சத்துருவைத்துரத்தி அழியென்பார்.

௨௮. இஸ்ரவேலசுகமுந்தனிவாசமுமாய்க் குடியிருக்கும். யாக்கோபின் ஊற்றுத்தானியமுந் திராட்சப்பழ இரசமுமுள்ள தேசத்திலிருக்கும் அவருடையவானமும் பனியைப்பெய்யப்பண்ணும்.

௨௯. இஸ்ரவேலே! உன்சகாயத்தின்கேடயமும் உன்முக்கியத்தின் பட்டயமுமாகிய கர்த்தராலிரட்சிக்கப்பட்டசனமே! நீபாக்கியமானசனம். உன்னைப்போலிருக்கிறவர்களார்! உன்சத்துருக்கள் உனக்கிச்சகம் பேசியடங்குவார்கள். நீயோவெனில்,அவர்கள் மேடுகளின்மேல் மிதிப்பாயென்றான்.

## ௩௪. அதிகாரம்.

[(௧) மோசே நேபோ பர்வதத்திலிருந்து தேசத்தைப்பார்த்ததும், (௫)அவ்விடத்தில் அவன்மரித்ததும், (௬) அவன்அடக்கம்பண்ணப்பட்டதும், (௭) அவனுடையவயதும், (௮) அவனைக்குறித்து முப்பதுநாள் துக்கப்பட்டதும், (௯) யோசுவா அவனுக்குப்பதிலாகஏற்பட்டதும், (௰) மோசேயைக்குறித்தபுகழ்ச்சியும்.]

பிறபாடு மோசே மோவாபின் சமனானவெளிகளிலிருந்து எரிகோவுக்கெதிரான நேபோ பர்வதத்திலிருக்கும் பிஸ்கா என்ற கொடிமுடியிலேறினான். அப்பொழுது கர்த்தர் அவனுக்குத் தாண்மட்டும்போகிற கீலேயாத் தேசமனைத்தையும்,

௨. நப்தலிதேசமனைத்தையும், எப்பிராயீம்மனாசேயென்றவர்கள் தேசத்தையுங்கடைசிச்சமுத்திரமட்டும் போகிற யூதாதேசமனைத்தையும்,

௩. மேற்குப் புறத்தையும், பேரீச்சுகளின் ஊர்முதற்கொண்டுசோவார்மட்டும் போகிற எரிகோப்பள்ளத்தாக்கென்றசமனான பூமியையுங்காண்பித்து,

௪. அவனுடனே, நாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் உங்கள் வித்திற்குக் கொடுப்போமென்றாணையிட்டதேசமிதுதான். உன்கண்களுக்கதைக் காண்பித்தோம். ஆனால் நீ யவ்விடத்திற்குக்கடந்துபோவதில்லையென்றார்.

௫. அப்படியே மோவாப்தேசமான அவ்விடத்திலே கர்த்தரின் ஊழியக்காரனாகிய

மோசே கர்த்தருடைய வார்த்தையின்படியே மரித்தான்.

௬. அவர் அவனை மோவாப்தேசத்திலே பெத்பேயோருக்கெதிரானபள்ளத்தாக்கிலே அடக்கம்பண்ணினார். இந்நாள்வரைக்கும் ஒருத்தனும் அவன் பிரேதக்குழியை யறியான்.

௭. மோசே மரிக்கிறபொழுது நூற்றிருபது வயதாயிருந்தான். அவன்கண் இருளடையாமலும், அவன்பெலன் வாங்காமலுமிருந்தது.

௮. இஸ்ரவேல்புத்திரர் மோவாபின்சமனான வெளிகளில் மோசேக்காக முப்பதுநாள் அழுதுகொண்டிருந்தார்கள். மோசேக்காகப்புலம்புகிற அழுகையின் நாட்கள் முடிந்தது.

௯. ஆனால் மோசே தன்கைகளை நூனின் குமாரனாகிய யோசுவாவின்மேல் வைத்ததினாலே அவன்ஞானத்தின் ஆவியினாலே நிறையப்பட்டான். இஸ்ரவேல்புத்திரர் அவனுக்குக்கீழ்ப்படிந்து கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே செய்தார்கள்.

௰. கர்த்தர் முகமுகமாய் மோசே அறிந்ததையும், கர்த்தர் அவனை எகிப்துதேசத்திலே பார்வோனுக்கும் அவனுடைய எல்லா ஊழியக்காரருக்கும், அவனுடைய தேசமனைத்திற்குஞ்செய்ய அனுப்பின சகல அடையாளங்களையும், அற்புதங்களையும்,

௰௧. அவன் இஸ்ரவேலெல்லாம் பார்க்கச் செய்தஎல்லாவல்லமையானகிரியையையும், சகலபெரிய பயங்கரத்தையும் பார்த்தால்,

௰௨. மோசேயைப் போலொத்த தீர்க்கதரிசி இஸ்ரவேலிலே அப்புறம் எழும்பினதில்லை.

மோசேயெழுதின ஐந்தாம் ஆகமம்
முடிந்தது முற்றும்.

# யோசுவாவின்புஸ்தகம்.



## ௧. அதிகாரம்.

[(௧) கர்த்தர் மோசேக்குமாறாக யோசுவாவை வைத்தது. (௩) கொடுக்கப்பட்டதேசத்தின் எல்லைகள். (௫) (௯) பராபரன் யோசுவாவுக்கு உதவியின் வாக்குத்தத்தஞ்செய்ததும், (௮) அவர் அவனுக்குக் கற்பித்ததும், (௰) அவன் சனங்களையோர்தான்நதியைக்கடக்க ஆயத்தப்படுத்தினதும், (௰௨) இரண்டரைக்கோத்திரத்தார் மோசேக்குச் செய்த வாக்குத்தத்தத்தை நினைப்பூட்டியதும், (௰௬) யோசுவாவுக்கு அவர்கள் கீழ்ப்படிதலின் வாக்குத்தத்தஞ் செய்ததும்.]

கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே மரித்தபிறபாடு சம்பவித்ததேதென்றால் கர்த்தர்மோசேயின் வேலைக்காரனானநூனின்குமாரன் யோசுவாவோடே சொன்னதாவது;

௨. நம்முடைய ஊழியக்காரனாகிய மோசே மரித்தான். இப்போதும் நீயும், இந்த எல்லாச்சனமுமாய் எழும்பி, இந்தயோர்தானைக் கடந்து, இஸ்ரவேல் புத்திரருக்கு நாம்கொடுக்குந் தேசத்திற்குப் போங்கள்

௩. உங்கள் காலடிமிதிக்கும் எவ்விடத்தையும் நாம் மோசேக்குச் சொன்னபடி உங்களுக்குக்கொடுத்தோம்.

௪. வனாந்தரமும், அந்தலீபனோனுமுதற்கொண்டு ஐப்பிராத்தேநதியான பெரியநதிமட்டுமுள்ள ஏத்தியரின் தேசமனைத்தும், சூரியன் அஸ்தமிக்கிற திசையான பெரிய சமுத்திரமட்டுமிருக்கிறதும் உங்கள் எல்லையாயிருக்கும்.

௫. நீயுயிரோடிருக்கும் நாளெல்லாம் ஒருவனுமுனக்குமுன்பாக நிற்பதில்லை. நாம் மோசேயோடிருந்ததுபோலவுன்னோடுமிருப்போம், நாமுன்னைத் தளரவிடுவதுமில்லை. உன்னைக்கைவிடுவதுமில்லை.

௬. பலத்துத் திடமனதாயிரு. ஏனெனில், இந்தச் சனத்திற்கு நாம் அவர்கள் பிதாக்களுக்குக்கொடுப்போமென்றாணையிட்டதேசத்தை நீ பங்கிடுவாய்.

௭. நம்முடைய ஊழியக்காரனாகிய மோசே உனக்குக்கற்பித்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாஞ் செய்யக்கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் பலத்துத் திடமனதாயிரு. நீ போகிற இடத்திலெல்லாம் புத்தியாய் நடந்துகொள்ளும்படிக்கு, அதைவிட்டு வலது இடதுபுறத்திற்கு விலகாதிருப்பாயாக.

௮. இந்த நியாயப்பிரமாணத்தின்புஸ்தகம் உன்வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக. இதிலெழுதியிருக்கின்ற வைகளின்படியெல்லாம் நீ செய்யக்கவனமாயிருக்கும்படிக்கு இரவும், பகலும் அதையோசித்துக்கொண்

டிருப்பாயாக. ஏனெனில், அப்போது நீ யுன்வழியையுனக்குவாய்க்கப்பண்ணி அப்போது புத்தியாளாய் நடந்துகொள்ளுவாய்.

௯. பலத்துத் திடமனதாயிருவென்று நான் உனக்குக் கற்பித்திலலேயோ! திகையாமலும், கலங்காமலுமிரு. ஏனெனில், நீ போகிற இடத்திலெல்லாம் உன்பராபரனாகிய கர்த்தர் உன்னோடிருக்கிறாரென்றார்.

௰. அப்போது யோசுவா சனத்தின் அதிகக்காரருக்குக் கற்பித்துச்சொன்னதாவது;

௰௧. நீங்கள் பாளயத்தின் நடுவே நடந்துபோய்ச் சனத்திற்குக் கற்பிக்கவேண்டியதேதெனில், தவசத்தையுங்களுக்காயத்தம் பண்ணுங்கள். ஏனெனில், உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குச் சுதந்தரிக்கக் கொடுக்குந்தேசத்தை நீங்கள் சுதந்தரிக்கப்போகும்படிக் கின்னம் மூன்றுநாட்குள்ளே இந்த யோர்தானைக்கடப்பீர்களென்று சொல்லி,

௰௨. ரூபேனியருக்கும், காதியருக்கும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாருக்குஞ்சொன்னதாவது;

௰௩. கர்த்தரின் ஊழியக்காரனாகியமோசே உங்களுக்குக் கற்பித்தவார்த்தையைநினைத்துக்கொள்ளுங்கள். உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களையிளைப்பாறப்பண்ணி, உங்களுக்கிந்தத் தேசத்தைக்கொடுத்தார்.

௰௪. உங்கள் பெண்சாதிகளும், பிள்ளைகளும், மிருக சீவன்களும்மோசே உங்களுக்கு யோர்தானுக்கிப்பாலேகொடுத்ததேசத்திலிருக்கட்டும். உங்களிலேயோவெனிற பராக்கிரம சாலிகளெல்லாம் உங்கள் சகோதரருக்குமுன்பாக அணியணியாய் நடந்துபோய்,

௰௫. கர்த்தர் உங்களைப்போல உங்கள் சகோதரரையுமிளைப்பாறப்பண்ணி, அவர்களும் உங்கள் பராபரனாகிய கர்த்தர் தங்களுக்குக்கொடுக்குந் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுமட்டும் அவர்களுக்குச் சகாயம் பண்ணக்கடவீர்கள். பிறபாடு நீங்கள் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசேயுங்களுக்கு யோர்தானுக்கப்பாலே சூரியன் உதிக்குந்திசைக்கு நேராகக்கொடுத்த உங்கள் சுதந்தரமான தேசத்திற்குத் திரும்பி, அதைச் சுதந்தரித்துக் கொண்டிருப்பீர்களாகவென்றார்.

௰௬. அப்போது அவர்கள் யோசுவாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது; நீர் எங்களுக்குக் கற்பித்ததையெல்லாஞ் செய்து, நீரெங்களை யனுப்புமிடமெல்லாம் போவோம்.

௰௭. நாங்கள் மோசேக்குக் கீழ்ப்படிந்தபடியெல்லாம் உமக்குங் கீழ்ப்படிந்திருப்போம். உம்முடைய பராபரனாகிய கர்த்தர் மாத்திரம்மோசேயோடிருந்ததுபோலஉம்மோடுமிருப்பாராக.

௰௮. நீரெங்களுக்குக்கற்பிக்குஞ் சகலகாரியத்திலும் உம்முடைய சொற்கேளாமல் உம்முடைய வாக்குக்குமுருட்டாட்டம்பண்ணுபவனெல்லாங் கொலைசெய்யப்படக்கடவன். பலத்துத்திடமனதாய்மாத்திரமிருமென்றார்கள்.

## ௨. அதிகாரம்.

[(௧) சித்திமிலிருந்துவந்த இரண்டு வேவுகாரரை இராகாப் மறைத்தது. (௮) அவளுக்கும் அவர்களுக்கும் உடம்படிக்கை. (௨௫) அவர்கள் திரும்பிவந்ததும், சொன்னசங்கதியும்.]

நூனின் குமாரனாகிய யோசுவா சித்திமிலிருந்து வேவாள்களாகிய இரண்டுமனுஷரை இரகசியமாய் அனுப்பி, நீங்கள் போய்த்தேசத்தையும், எரிகோவையும் பார்த்து வாருங்களென்றான். அவர்கள் போய் இராகாப்பென்று பேர்கொண்ட வேசியாயிருந்த ஒருஸ்திரியின்வீட்டிற்குட்பிரவேசித்து, அங்கேதங்கினார்கள்.

௨. ஆனால் எரிகோவின் இராசாவுக்குஇதோ, இவ்விரவேல புத்திரரிற சிலமனுஷர் தேசத்தையுளவுபார்க்க இந்த இராத்திரிவேளையிலே இங்கேவந்தார்களென்று சொல்லப்பட்டது.

௩. அப்போது எரிகோவின் இராசா இராகாப்பண்டைக்குமனுஷரையனுப்பி, உன்னண்டைக்குவந்து உன்வீட்டிற்குட்பிரவேசித்த மனுஷரை வெளியேவரவிடு. ஏனெனில், தேசத்தையெல்லாம் உளவுபார்க்கவந்தார்களென்று சொல்லச்சொன்னான்.

௪. அந்தஸ்திரியோவெனில், அவ்விரண்டு மனுஷரையுஞ்சேர்த்துஅவர்களையொளித்துவைத்துச் சொன்னதாவது; மெய்தான். என்னண்டையில மனுஷர்வந்திருந்தார்கள். ஆனால் அவர்கள் எவ்விடத்தாரென்றறியாதிருந்தேன்.

௫. வாசலைச்சாத்தும் இருட்டானவேளையிலேயோவென்றால், அந்தமனுஷர் புறப்பட்டுப் போனார்கள். அவர்களெங்கேபோனார்களென்றறியேன். அவர்களைச் சீக்கிரமாய்ப் பின்றொடருங்கள். ஏனென்றால், நீங்களவர்களைச்சேர்ந்து பிடிக்கலாமென்றாள்.

௬. அவளோவென்றால், இவர்களை வீட்டின்மேலேறப்பண்ணி, வீட்டின்மேலேபரப்பப்பட்டசணல் கழிகளாலமறைத்துவைத்தாள்.

௭. அந்த மனுஷர் யோர்தானுக்குப்போகிறவழியில ஆற்றுத்துறைகளமட்டுமிவர்களைப் பின்றொடர்ந்துபோனார்கள். இவர்களைப் பின்றொடருகிறவர்கள் புறப்பட்டபிற்பாடு வாசற்பூட்டிவிடப்பட்டது.

௮. ஆனால் இந்தமனுஷர் படுத்துக்கொள

ராத்திரிக்குமுன்னே அவள் வீட்டின்மேல் இவர்களண்டைக்கேறிப்போய்,

௯. இவர்களோடே சொன்னதாவது; கர்த்தர் உங்களுக்குத் தேசத்தை யொப்புக்கொடுத்தாரென்றும், உங்கள்பயம் எங்கள்மேலிறங்கிற்றென்றும், உங்களுக்குமுன்பாகத் தேசத்தின் குடிகளெல்லாம் முனையற்றுப் போனார்களென்றும் அறிவேன்.

௰. ஏனெனில், நீங்கள் எகிப்திலிருந்து புறப்படுகையிற் கர்த்தர் உங்களுக்குமுன்பாகச் சிவந்த சமுத்திரத்தின் தண்ணீரை வற்றிப்போகப் பண்ணினதையும், நீங்கள் சங்காரம்பண்ணின யோர்தானுக்கப்பாலிருந்த எமோரியரின் இரண்டு இராசாக்களாகிய சீகோனுக்கும், ஓகுக்குஞ் செய்ததையுங் கேட்டோம்.

௰௧. கேட்டபோது எங்களிருதயங்கரைந்துபோயிற்று. உங்களுக்குமுன்பாக ஒருவருக்குள்ளும் இனிமுனையில்லை. ஏனெனில், உங்கள் பராபரனாகிய கர்த்தரே உயரவானத்திலும், கீழே பூமியிலும் பராபரனானவர்.

௰௨. இப்பொழுதும் நானுங்களுக்குத் தயை செய்தபடியினாலே, நீங்களும் என் தகப்பன் வீட்டிற்குத் தயை செய்வோமென்று கர்த்தர்மேல் எனக்காணைசத்தியம்பண்ணி,

௰௩. நீங்கள் என் தகப்பனையும், என் தாயையும், என்சகோதரரையும், என்சகோதரிகளையும், அவர்களுக்கிருக்கிற எல்லாவற்றையும் உயிரோடேவைத்து, எங்கள் சீவனைச் சாவுக்குத் தப்புவிப்பதற்கெனக்கு நிச்சயமான அடையாளத்தைக் கொடுங்களென்றாள்.

௰௪. அப்பொழுது அந்தமனுஷர் அவளுடனே, நீங்களிந்த எங்கள் காரியத்தைவெளிப்படுத்தாதிருந்தால், அப்பொழுது கர்த்தர் எங்களுக்குத் தேசத்தைக்கொடுக்கையில் உனக்குத் தயையையும், உண்மையையுஞ் செய்வோமென்பதற்கு எங்கள் சீவனையுங்களுக்காக ஈடுவைக்கிறோமென்றார்கள்.

௰௫. அப்பொழுது அவர்களைக் கயிற்றினாலே பலகணிவழியாய் இறக்கிவிட்டாள். ஏனெனில், அவள் வீடு அலங்கத்தின் மதிளிலிருந்தது. அலங்கத்திலே அவள் குடியிருந்தாள்.

௰௬. அவள் அவர்களுடனே, பின்தொடருகிறவர்கள் உங்களுக்கு நேரிடாதபடிக்கு நீங்கள் பருவதத்திலேபோய் அவர்கள் திரும்பிவருமட்டும் அங்கே மூன்றுநாள் ஒளித்திருந்து, பிறபாடு உங்கள் வழியேபோங்களென்றாள்.

௰௭. அப்பொழுது அந்தமனுஷர் அவளோடேசொன்னதாவது; இதோ, நாங்கள் தேசத்திற்குட்பிரவேசிக்கையில், நீ இந்தச்சிவப்புநூற்கயிற்றை நீ யெங்களையிறக்கிவிட்ட பலகணியிலேகட்டி, உன் தகப்பனையும், உன்தாயையும், உன்சகோதரர்களையும், உன் வீட்டாரனைவரையும் உன்னண்டை வீட்டிலே சேர்த்துக் கொண்டிருக்கக்கடவாய்.

௰௮. இல்லாவிட்டால் நீ யெங்கள்கையில் வாங்கிக்கொண்ட இந்த உன்னுடைய ஆணைக்கு நீங்கலாயிருப்போம்.

௰௯. எவனாகிலும் உன்வீட்டுவாசல்களிலிருந்துவெளியேபுறப்பட்டால், அவனுடைய இரத்தப்பழி அவன் தலையின்மேலிருப்பதாக. நாங்களோவென்றால் குற்றமற்றவர்கள். உன்னோடே வீட்டிலிருக்கிற எவன்மேலாகிலுங் கைபோடப்பட்டதேயாகில், அவனுடைய இரத்தப்பழியெங்கள் தலையின்மேலிருப்பதாக.

௨௰. நீ யிந்த எங்கள் காரியத்தை வெளிப்படுத்தினையேயானால், நீ யெங்கள்கையில் வாங்கிக்கொண்ட உன்னுடைய ஆணைக்கு நீங்கலாயிருப்போமென்றார்கள்.

௨௰௧. அதற்கவள், உங்கள் வார்த்தைகளின்படியேயாகக் கடவதென்றுசொல்லி, அவர்களை யனுப்பிவிட்டாள். அவர்கள் போய்விட்டார்கள் பிற்பாடவள் அந்தச்சிவப்புக் கயிற்றைப் பலகணியிலே கட்டிவைத்தாள்.

௨௰௨. அவர்கள் போய்ப் பருவதத்திலே சேர்ந்து, பின்தொடர்ந்தவர்கள் திரும்பிவருமட்டும் மூன்றுநாள் அங்கேதரித்தார்கள். பின்தொடருகிறவர்கள்வழியிலெல்லாம் அவர்களைத் தேடியுங் காணாதேபோனார்கள்.

௨௰௩. அந்த இரண்டுமனுஷர் திரும்பிப் பருவதத்திலிருந்திறங்கி ஆற்றைக்கடந்து, நூனின் குமாரனாகிய யோசுவாவண்டைக்கு வந்து, தங்களுக்குச் சம்பவித்தயாவையும் அவனுக்கு விவரித்து,

௨௰௪. கர்த்தர் தேசத்தையெல்லாம் எங்கள் கையிலொப்புக் கொடுத்தார். தேசத்தின் குடிகளெல்லாம் எங்களுக்கு முன்பாக முனையற்றுப் போனார்களென்று அவனோடேசொன்னார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) யோசுவா யோர்தான் நதியினிடத்துக்கு வந்தது. (௨) அதிகாரஸ்தர்கள் சனங்களுக்கு நதியைக்கடப்பதைக்குறித்துக் கற்பித்தது. (௭) கர்த்தர் யோசுவாவைத் தைரியப் படுத்தினது. (௯) யோசுவா சனங்களைத் தைரியப்படுத்தினது. (௰௪) யோர்தான் நதியின் தண்ணீர் பிரிந்தது.]

யோசுவா அதிகாலமேயெழுந்திருந்த பின்பு அவனும், இஸ்ரவேல்புத்திரர் அனைவருஞ் சித்தீமிலிருந்து பயணம் பண்ணி, யோர்தானமட்டும்வந்து அதைக்கடவாததற்குமுன் அங்கே இராத்தங்கினார்கள்.

௨. மூன்றுநாள் சென்றபோது அதிகாரக்காரர் பாளயத்தின் நடுவே நடந்துபோய்,

௩. ஜனத்திற்குக் கற்பித்ததாவது; நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியையும், அதைச் சுமக்கிற லேவியராகிய ஆசாரியர்களையுங் காணுகையில் நீங்களும் உங்களிடத்தைவிட்டுப் பயணப்பட்டு அதைப் பின்செல்லுங்கள்.

௪. ஆனால் உங்களுக்கும், அதற்கும் இரண்டாயிர முழத்தூரமான இடம்விட்டிருக்கக் கடவது. நீங்கள் நடக்கப்போகிற வழியை யறியும்படிக்கு அதினண்டையிற் கிட்டாதிருப்பீர்களாக. ஏனென்றால், நீங்கள் முதலொருக்காலும் அந்தவழியாயக் கடந்து போனதில்லையென்றார்கள்.

௫. யோசுவா ஜனத்துடனே, உங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுங்கள். ஏனெனில், நாளைக்கர்த்தர் உங்கள் நடுவிலே அற்புதங்களைச் செய்வாரென்றான்.

௬. ஆசாரியர்களோடே யோசுவா, நீங்கள் உடம்படிக்கையின் பெட்டியையெடுத்துக் கொண்டு ஜனத்தின் முன்னே புறப்பட்டுப் போங்களென்றான். அப்படியே உடம்படிக்கையின் பெட்டியை யெடுத்துக்கொண்டு, ஜனத்தின் முன்னேபோனார்கள்.

௭. கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது; நாம் மோசேயோடிருந்ததுபோல உன்னோடிருக்கிறதை இஸ்ரவேலரெல்லாம் அறியும்படிக்கு இன்றுமுனையவர்கள் கண்களுக்கு முன்பாகப் பெரியவனாக்கத் துவக்குவோம்.

௮. உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களுக்கு, நீங்கள் யோர்தானுடைய தண்ணீரின் ஓரமட்டும் வந்திருக்கையில் யோர்தானில் நிற்கக்கடவீர்களென்று நீ கற்பிப்பாயாகவென்றார்.

௯. யோசுவா இஸ்ரவேல் புத்திரருடனே, நீங்களிங்கே சேர்ந்து, உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய வார்த்தைகளைக் கேளுங்களென்றுசொல்லி,

௰. பின்னுஞ்சொன்னதாவது; ஜீவனுள்ள பராபரன் உங்கள் நடுவேயிருக்கிறதையும், அவர் கானானரையும், ஏத்தியரையும், ஏவியரையும், பெரிசியரையும், கிர்காசியரையும், எமோரியரையும், எபூசியரையும், உங்களுக்கு முன்பாகத் துரத்தியே துரத்துவதையும் நீங்களறியும் அடையாளமாவது;

௰௧. இதோ, சர்வபூமிக்கும் ஆண்டவருடைய உடம்படிக்கையின் பெட்டி உங்களுக்கு முன்னே யோர்தானுக்குட்போகின்றது.

௰௨. இப்போதும் இஸ்ரவேல் கோத்திரங்களிலே பன்னிரண்டுபேரை ஒவ்வொரு கோத்திரத்திற் கொவ்வொருவராகப் பிரித்தெடுங்கள்.

௰௩. சம்பவிப்பதேதென்றால், சர்வபூமிக்கும் ஆண்டவராகிய கர்த்தரின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் உள்ளங்கால்கள் யோர்தானின் தண்ணீரிலே தரிகொள்ளுகையில், மேலேயிருந்தோடிவருகிற யோர்தானின் தண்ணீரோடாமல் ஒருகுவியலாக நிற்குமென்றான்.

௰௪. ஜனம் யோர்தானைக் கடக்கத் தங்கள் கூடாரங்களிலிருந்து புறப்பட்டார்கள். ஆசாரியர்கள் உடம்படிக்கையின் பெட்டியைச் ஜனத்திற்கு முன்னே சுமந்துபோய்,

௰௫. யோர்தான்மட்டும் வந்தார்கள். யோர்தானோவெனில், அறுப்புநாள்களிலெல்லாந் தன்கரைகளின்மேலெங்கும் புரண்டிருந்தது. அப்போது சம்பவித்ததேதென்றால் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின் கால்கள் தண்ணீரின் ஓரத்தில் வைக்கப்படுகையில்,

௰௬. மேலேயிருந்தோடிவருகிற தண்ணீர் நின்று, சற்தானுக்கடுத்த ஆதாமூரர் அத்தனை தூரமட்டும் ஒருகுவியலாகக் குவிந்தது. உப்புக்கடலென்ற சமனான்வெளியின் கடலுக்கோடிப்போகிற தண்ணீரோவென்றால் பிரிந்தோடிப்போயிற்று. அப்போது ஜனம் எரிகோவுக்கெதிரே கடந்தது.

௰௭. கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்கள் யோர்தானின் நடுவிலே தண்ணீரில்லாத தரையிலுறுதியாய் நின்றார்கள். அப்படியே சகல ஜனமும் யோர்தானைக் கடந்திருமட்டும் இஸ்ரவேலரெல்லாந் தண்ணீரற்ற தரைவழியாயக் கடந்துபோனார்கள்.

## ௪. அதிகாரம்.

[(௧) யோர்தான் நதியிலிருந்து ஞாபகத்துக்காகப் பன்னிரண்டு கற்களை யெடுத்துக் கொள்ளப் பன்னிரண்டுபேரை நியமித்தது. (௯) வேறே பன்னிரண்டு கற்கள் யோர்தான் நதியின் மத்தியில் நாட்டப்பட்டது. (௰) (௰௯) ஜனங்கள் நதியைக் கடந்தது. (௰௪) பராபரன் யோசுவாவைக் கனப்படுத்தினது. (௨௰) பன்னிரண்டு கற்களையும் கில்காவிலே நாட்டினது.]

ஜனமெல்லாம் யோர்தானைக் கடந்துதீர்கையிற் கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது;

௨. நீங்கள் ஜனத்திற் பன்னிரண்டுபேரை ஒவ்வொரு கோத்திரத்திற்கொவ்வொருவராகவெடுத்து,

௩. இங்கே யோர்தானின் நடுவிலே ஆசாரியர்களின் கால்கள் நிலையாய் நிற்கிற இடத்திலே பன்னிரண்டு கற்களையெடுத்துக்கொண்டு, அவைகளையுங்களோடேகூட அக்கரைப்படுத்தி நீங்கள் இராவில் தங்குந்தானத்திலே அவைகளை வையுங்களென்றவர்களுக்குக் கற்பியுங்களென்றார்.

௪. அப்போது யோசுவா இஸ்ரவேல் புத்திரரில் ஒவ்வொரு கோத்திரத்திற் கொவ

வொருவராக ஆயத்தமாயவைத்திருந்த பன்னிரண்டுபேரையழைத்து,

௩. அவர்களோடே சொன்னதாவது; நீங்கள் யோர்தானின் நடுமையத்தில் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் பெட்டிக்குமுன் பாகப்போய், இஸ்ரவேல் புத்திரருடைய கோத்திரங்களின் இலக்கத்திற்குச்சரியாக உங்களில் ஒவ்வொருவன் ஒவ்வொருகல்லைத் தோளின்மேல் எடுத்துக்கொண்டுபோங்கள்.

அது உங்களுக்குள்ளே ஒரு அடையாளமாயிருக்கும்படிக்குத்தானே.

௬. இந்தக்கற்கள் உங்களுக்கேதென்று நாளையுங்கள் பிள்ளைகள் உங்களைக்கேட்கும்போது,

௭. நீங்கள் அவர்களுடனே, யோர்தானின் தண்ணீர் கர்த்தருடையஉடம்படிக்கையின் பெட்டிக்கு முன்பாகப் பிரிந்துபோனதினாலே அவைகளிருக்கின்றன. அது யோர்தானைக்கடக்கையில் யோர்தானின் தண்ணீர் பிரிந்துபோயிற்று. ஆகையால், இந்தக்கற்கள் இஸ்ரவேல்புத்திரருக்கு என்றைக்கும் நினைக்கும் அடையாளமென்பீர்களாகவென்றான்.

௮. யோசுவா கற்பித்தபடி இஸ்ரவேல்புத்திரர்செய்து, கர்த்தர் யோசுவாவோடே சொன்னபடியே இஸ்ரவேல்புத்திரருடைய கோத்திரங்களின் இலக்கத்திற்குச் சரியாகப் பன்னிரண்டுகற்களை யோர்தானின் நடுவிலெடுத்து அவைகளைத் தங்களோடேகூட அக்கரைக்குக்கொண்டுபோய்த்தங்குமிடத்திலேவைத்தார்கள்.

௯. யோர்தானின் நடுவிலும் உடம்படிக்கையின் பெட்டியைச்சுமந்த ஆசாரியரின் கால்கள் நின்றவிடத்திலே யோசுவாபன்னிரண்டு கற்களைநாட்டினான். அவைகள் இந்நாள்மட்டும் அங்கேயிருக்கும்.

௰. மோசேயோசுவாவுக்குக் கற்பித்திருந்த எல்லாவற்றின்படியும் சனத்திற்குச்சொல்லக் கர்த்தர் யோசுவாவுக்குக் கட்டளையிட்டவையெல்லாஞ் செய்தாகும்மட்டும் பெட்டியைச்சுமக்கிற ஆசாரியர் யோர்தானின் நடுவேநின்றார்கள். சனந்தீவிரித்துக்கடந்துபோயிற்று.

௰௧. சனமெல்லாங் கடந்து தீர்ந்தபிற்பாடு கர்த்தருடையபெட்டியுங்கடந்தது. ஆசாரியர் சனத்திற்குமுன்னேநடந்தார்கள்.

௰௨. ரூபேன் புத்திரரும், காத்புத்திரரும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும் மோசே தங்களோடேசொன்னபடி அணியணியாய்இஸ்ரவேல்புத்திரருக்குமுன்பாக நடந்தார்கள்.

௰௩. ஏறக்குறையநாற்பதினாயிரம்பேர் ஆயுத்தப்பாடானவர்களாய்க்கர்த்தருடையமுகத்திற்குமுன்பாக யுத்தம்பண்ண எரிகோவின் சமனானவெளிகளுக்கு நடந்துபோனார்கள்.



௰௪. அந்நாளிலே கர்த்தர் யோசுவாவை இஸ்ரவேல் அனைத்தின் கண்களுக்குமுன்பாகப்பெரியவனாக்கினார். அவர்கள் மோசேக்குப்பயந்ததுபோல அவனுக்கு அவனுயிரோடிருந்த நாளெல்லாம் பயந்திருந்தார்கள்.

௰௫. கர்த்தர்யோசுவாவுடனே,

௰௬. யோர்தானிலிருந்துகரையேறச்சாட்சியின் பெட்டியைச்சுமக்கிற ஆசாரியருக்குக்கற்பியென்றுசொன்னபோது,

௰௭. யோசுவாஅவர்களுக்குயோர்தானிலிருந்துகரையேறிவாருங்களென்றுகற்பித்தான்.

௰௮. அப்போது சம்பவித்ததேதெனில், கர்த்தருடைய உடம்படிக்கையின்பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்யோர்தான் நடுவிலிருந்தேறி, அவர்களுள்ளங்கால்கள்கரையில் ஊன்றிக்கொள்ளுகையில், யோர்தானின்தண்ணீர்கள் தங்களிடத்திற்குத் திரும்பி முன்புபோலத் தங்கள் எல்லாக்கரைகளிலும் புரண்டது.

௰௯. இந்தப்பிரகாரமாகச் சனம் முதலாந்தம்பத்தாந்தேதியிலே யோர்தானிலிருந்துகரையேறி, எரிகோவுக்குக் கீழெல்லையான கில்காலிலே பாளயமிறங்கினார்கள்.

௨௰. அவர்கள் யோர்தானிலெடுத்துக்கொண்டுவந்த அந்தப்பன்னிரண்டு கற்களை யோசுவாகில்காலிலேநாட்டி,

௨௰௧. இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது; இந்தக்கற்களேதென்று நாளையுங்கள்பிள்ளைகள்தங்கள்பிதாக்களாகியவுங்களைக் கேட்கும்போது,

௨௰௨. நீங்கள்உங்கள்பிள்ளைகளுக்கறிவிக்கவேண்டியதேதெனில்,இஸ்ரவேலர் கால்நனையாமல் இந்தயோர்தானைக் கடந்துவந்தது.

௨௰௩. ஏனென்றால் பூமியின் சனசதளங்களெல்லாங் கர்த்தருடைய கரத்தை அது பலத்ததென்று அறியும்படிக்கும், நீங்கள் சகலநாளும் உங்கள்பராபரனாகிய கர்த்தருக்குப்பயப்படும்படிக்கும்,

௨௰௪. உங்கள்பராபரனாகியகர்த்தர் நாணற்சமுத்திரத்தின்தண்ணீரையெங்களுக்குமுன்பாக நாங்கள் கடந்துதீருமட்டும் அற்றுப்போகப்பண்ணினதுபோல உங்கள்பராபரனாகியகர்த்தர் யோர்தானின்தண்ணீருக்குஞ்செய்து, அதையுங்களுக்குமுன்பாக நீங்கள் கடந்துவந்துதீருமட்டும் அற்றுப்போகப்பண்ணினாரென்றறிவிக்கக் கடவீர்களென்றான்.

## ௫. அதிகாரம்.

[(௧) கானானர்பயப்பட்டது. (௨) யோசுவாமறுபடியும் விருத்தசேதனத்தைக் கற்பித்தது. (௰) கில்காலிற் பஸ்காவையாசரித்தது. (௰௨) மன்னாவென்ற அப்பமற்றது. (௰௩) யோசுவாவுக்குத் தெய்வதூதன் தரிசனையானது.]

சமபவித்ததேதென்றால் கர்த்தர் யோர்தானின் தண்ணீரை இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அவர்கள் கடந்து தீருமட்டும் வற்றிப்போகப்பண்ணினதை யோர்தானுக்கு அக்கரையிலே மேற்கே குடியிருந்த எமோரியரின் சகல இராசாக்களும், சமுத்திரத்தருகே குடியிருந்த கானானரின் சகல இராசாக்களும் கேட்டதுமுதற்கொண்டு அவர்களின் இருதயங்கரைந்து, அவர்களுக்கு இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அவர்களுக்கு முனையில்லாமற்போயிற்று.

௨. அக்காலத்திலே கர்த்தர் யோசுவாவோடே நீ உனக்குக் கருக்கான கத்திகளையுண்டாக்கித் திரும்ப இரண்டாம் விசை இஸ்ரவேல் புத்திரரைச் சுன்னத்துப்பண்ணென்றார்.

௩. அப்போது யோசுவா தனக்குக் கருக்கான கத்திகளையுண்டாக்கி இஸ்ரவேல் புத்திரரை ஆர்லோத் மேட்டிலே சுன்னத்துப் பண்ணினான்.

௪. யோசுவா இப்படிச் சுன்னத்துப்பண்ணின முகாந்தரமென்னவெனில், எகிப்திலிருந்து புறப்பட்ட சகல ஆண்சாதியாராகிய யுத்தமனுஷரெல்லாம் எகிப்திலிருந்து புறப்பட்டபிற்பாடு வனாந்தரத்தின் வழியிலே செத்துப்போனார்கள்.

௫. எகிப்திலிருந்து புறப்பட்ட எல்லாச் சனமுமோ சுன்னத்துப்பண்ணப்பட்டிருந்தன. ஆனால் அவர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டபிற்பாடு வனாந்தரத்தின் வழியிலே பிறந்த சகல சனமுமோவென்றால் சுன்னத்துப்பண்ணப்படாதிருந்தன.

௬. ஏனெனில் கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்படியாதே போன எகிப்திலிருந்து புறப்பட்ட யுத்தமனுஷரான சாதியெல்லாம் மாளுமட்டும் இஸ்ரவேல் புத்திரர் நாற்பது வருஷம் வனாந்தரத்தில் நடந்து திரிந்தார்கள். அதேனென்றால், எங்களுக்குக் கொடுக்கக் கர்த்தர் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்டபாலும், தேனும் ஓடிய தேசத்தை அவர்கள் காண்பதில்லையென்று கர்த்தர் அவர்களுக்கு ஆணையிட்டிருந்தார்.

௭ அவர்கள் ஸ்தலத்தில் அவர்கள் பிள்ளைகளை எழும்பப்பண்ணினார். இவர்களையே யோசுவா சுன்னத்துப்பண்ணினான். ஏனெனில் சுன்னத்தில்லாதிருந்தார்கள். வழியிலே யவர்களைச் சுன்னத்துப்பண்ணாதே போனார்கள்.

௮. சாதியெல்லாரும் சுன்னத்துப்பண்ணப்பட்டுத் தீர்ந்தபிற்பாடு, அவர்கள் குணமாகுமட்டும் தங்களிடத்திற் பாளயத்திலே தரித்திருந்தார்கள்.

௯. கர்த்தர் யோசுவாவுடனே, இன்று எகிப்தினுடைய நிந்தையை உங்கள்மேலிராதபடிக்குப் புரட்டிவிட்டோமென்றார். அதைத்தொட்டு அந்தஸ்தலம் இந்நாள்வரைக்கும் கில்காலென்னப்படுகின்றது.

௰. இஸ்ரவேல் புத்திரர் கில்காலிற் பாளயமிறங்கியிருந்து, பதினாலாந்தேதி அந்திநேரத்திலே எரிகோவின் சமனானவெளிகளிலே பஸ்காவையாசரித்தார்கள்.

௰௧. பஸ்காவின் இரண்டாம்நாளாகிய அன்றைத்தினம் அவர்கள் தேசத்தினுடைய தானியத்தின் புளிப்பில்லா அப்பங்களையும் சுட்ட கதிர்களையும் புசித்தார்கள்.

௰௨. அவர்கள் தேசத்தின் தானியத்திலே புசிக்கிறமறுநாளிலே மன்னாபெய்தோய்ந்தது. அதுமுதல் இஸ்ரவேல் புத்திரருக்கு மன்னா இல்லாமற்போய் அவர்கள் கானான் தேசத்துப்பலனிலே அந்தவருஷத்திலே தானே புசித்தார்கள்.

௰௩. சம்பவித்ததேதென்றால், யோசுவா எரிகோவின் வெளியிலிருந்து, தன் கண்களையேறெடுத்துப்பார்க்கும்போது, இதோ ஒருவர் அவனுக்கெதிரே நின்றார். உருவின அவருடைய பட்டயம் அவர் கையிலுமிருந்தது. யோசுவா அவரண்டைக்குப்போய் அவருடனே நீர் எங்களுக்கடுத்தவரோ எங்கள் சத்துருக்களுக்கடுத்தவரோவென்றான்.

௰௪. அதற்கவர் அல்ல, நாம் கர்த்தருடைய சேனையின் அதிபதி. இப்போது வந்தோமென்றார். அப்போது யோசுவா முகங்குப்புறத் தரையிலே விழுந்து பணிந்துகொண்டு, அவருடனே, என் ஆண்டவர் தம்முடைய அடியானுக்குச் சொல்லுகிறதென்னவென்றான்.

௰௫. அப்போது கர்த்தருடைய சேனையின் அதிபதி யோசுவாவோடே, உன் கால்களிலிருக்கிற உன் பாதரட்சைகளைக் கழற்றிவிடு. ஏனெனில், நீ நிற்கிற இடம் பரிசுத்தமானதென்றார். அப்படியே யோசுவா செய்தான்.

## ௬. அதிகாரம்.

[(௧) எரிகோவென்னும்பட்டணம் அடைக்கப்பட்டது. (௨) பராபரன் யோசுவாவுக்கு அதைமுற்றிக்கைபோடும் விதத்தைக்கற்பித்தது. (௰௧) அந்தப்பட்டணம் முற்றிக்கைபோடப்பட்டது. (௰௭) அது சாபத்துக்குட்பட்டது. (௨௰) அதின் அலங்கம் இடிந்துவிழுந்தது. (௨௨) இராகாப் பிரட்சிக்கப்பட்டது. (௨௬) எரிகோவென்றபட்டணத்தைக் கட்டுவான் சபிக்கப்படுவது.]

எரிகோவோவெனில், இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாக அடைக்கப்பட்டது. ஒருவரும் வெளியே வராதபடிக்கும், உள்ளே போகாதபடிக்கும் அது அடைக்கப்பட்டுக் கிடந்தது.

௨. கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது; இதோ எரிகோவையும், அதின் இரா

சாவையும், இராணுவமனுஷரையுமஉன்கை யிலேயொப்புக்கொடுத்தேன்.

௩. யுத்தமனுஷராகிய நீங்களனைவருமபட்டணத்தைச்சுற்றிலும் ஒருசுற்றுவந்து இப்படிஆறுநாட்செய்யக்கடவீர்கள்.

௪. ஏழு ஆசாரியர் பெட்டிக்கு முன்பாகக் கொம்பான ஏழு எக்காளங்களைப்பிடித்துக் கொண்டுபோவார்களாக. ஏழாமநாளிலே பட்டணத்தையேழுவிசை சுற்றிவரக்கடவர்கள். ஆசாரியரோ எக்காளங்களை யூதுவார்களாக.

௫. அவர்கள் கொம்புகளின்தொனிப்பு நெடுந்தொனிப்பாகும்போதும், நீங்கள் எக்காளசத்தத்தைக் கேட்கும்போதும், சனமெல்லாம் மகாஆர்ப்பரிப்பாக ஆர்ப்பரிக்கக்கடவது. அப்போதுபட்டணத்தின்அலங்கம் இடிந்துவிழும். அப்போது சனம் அவரவர்களுக்கு நேர்வழியாக ஏறக்கடவர்களென்றார்.

௬. அப்போது நூனின்குமாரனாகியயோசுவா ஆசாரியரையழைத்து அவர்களுடனே, உடம்படிக்கையின்பெட்டியை யெடுத்துப் போங்கள். தொனிக்கும் ஏழு எக்காளங்களையும் ஏழு ஆசாரியர் கர்த்தருடையபெட்டிக்குமுன்பாகப் பிடித்துக்கொண்டுபோகக்கடவர்களென்றுசொல்லி,

௭. சனத்துடனே, பட்டணத்தைச் சுற்றி நடந்துபோங்கள். ஆயுதமணிந்தவர்கள் கர்த்தரின்பெட்டிக்கு முன்நடக்கக்கடவர்களென்றான்.

௮. யோசுவா சனத்தோடே சொன்னபடி செய்யப்பட்டது. தொனிக்கும் ஏழுஎக்காளங்களைப்பிடிக்கிற ஏழுஆசாரியர்கர்த்தருக்குமுன்பாக நடந்து எக்காளங்களையூதினார்கள். கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டிஅவர்களைப்பின்சென்றது.

௯. ஆயுதமணிந்தவர்கள் எக்காளங்களையூதுகிற ஆசாரியருக்குமுன் நடந்தார்கள். பின்தண்டோவெனில், எக்காளங்கள் ஊதப்படுகையில் போகிறபெட்டிக்குப் பின்சென்றது.

௰. யோசுவாசனத்திற்கு, நான்சொல்லும் நாள்மட்டும் நீங்கள் ஆர்ப்பரியாமலும் உங்கள்சத்தத்தைக் கேட்கப்பண்ணாமலுமிருப்பீர்களாக. உங்கள்வாயிலிருந்து ஒருபேச்சுப்புறப்படவும்வேண்டாம். ஆர்ப்பரியுங்களென்றுங்களோடே நான்சொல்லும்நாளிலேவென்றால் ஆர்ப்பரிப்பீர்களாகவென்று கற்பித்தான்.

௰௧. அப்படியே கர்த்தரின் பெட்டியைப் பட்டணத்தைச்சுற்றி ஒரு சுற்றுவரப்பண்ணினான். திரும்பப்பாளயத்திலேவந்துபாளயத்திலிராத்தங்கினார்கள்.

௰௨. யோசுவா அதிகாலமே யெழுந்திருந்தான். ஆசாரியர் கர்த்தரின் பெட்டியைச் சுமந்துபோனார்கள்.

௰௩. தொனிக்கும் ஏழு எக்காளங்களைப் பிடிக்கிற ஏழுஆசாரியர் கர்த்தரின்பெட்டிக்குமுன்பாக நடந்துவந்து எக்காளங்களையூதினார்கள். ஆயுதமணிந்தவர்கள் அவர்களுக்குமுன்னே நடந்தார்கள். பின்தண்டோவெனில், எக்காளங்கள் ஊதப்படுகையில் போகிற கர்த்தரின்பெட்டிக்குப் பின்சென்றது.

௰௪. அப்படியே இரண்டாமநாளிலும்பட்டணத்தை யொருசுற்றுச்சுற்றிவந்து, பாளயத்திற்குத்திரும்பினார்கள். அந்தப்படிஆறுநாள்செய்தார்கள்.

௰௫. ஏழாமநாளிலோவென்றால், அதிகாலமே கிழக்குவெளுக்கும்போதுஎழுந்திருந்து பட்டணத்தையந்தப்பிரகாரமாக ஏழுவிசை சுற்றிவந்தார்கள். அன்றைத்தினத்திலேயாத்திரமதை ஏழுவிசை சுற்றிவந்தார்கள்.

௰௬. ஏழாமவிசைசமபவித்ததேதென்றால், ஆசாரியர் எக்காளங்களையூதுகையில், யோசுவாசனத்தோடேசொன்னதாவது; ஆர்ப்பரியுங்கள். ஏனெனிற் கர்த்தருங்களுக்குப் பட்டணத்தையொப்புக்கொடுத்தார்.

௰௭. ஆனாலிந்தப்பட்டணமும், இதிலுள்ளயாவும் கர்த்தருக்குச் சாபத்தீடாயிருப்பது. இராகாபபென்றவேசியும், அவளோடே வீட்டுக்குள்ளிருக்கிற அனைவருமாத்திரம உயிரோடிருக்கக்கடவர்கள். ஏனெனில், நாமஅனுப்பின ஆள்களைமறைத்தாள்.

௰௮. சாபத்தீடானதில் ஏதாகிலுமெடுத்துக்கொள்ளுகிறதினாலே நீங்கள்சாபத்தீடாகாதபடிக்கும், இஸ்ரவேலபாளயத்தைச் சாபத்தீடாக்கி அதைக் கலங்கப்பண்ணாதபடிக்கும், நீங்கள் சாபத்தீடானதற்குமாத்திரம எச்சரிக்கையாயிருங்கள்.

௰௯. சகலவெள்ளியும், பொன்னும், வெண்கலமும், இரும்புமான தட்டுமுட்டுங் கர்த்தருக்குப்பரிசுத்தம், கர்த்தரின் பொக்கிசத்திற்குச்சேருமென்றான்.

௨௰. எக்காளங்களை யூதுகையிற சனம ஆர்ப்பரித்தது. எக்காளசத்தத்தைச் சனங்கேட்டு மகாஆர்ப்பரிப்பாக ஆர்ப்பரிக்கையில, அலங்கமிடிந்துவிழுந்தது. அப்போதுசனம அவரவர் தங்களுக்கு நேர்வழியாகப் பட்டணத்திலேறிப் பட்டணத்தைப் பிடித்து,

௨௧. பட்டணத்திலிருந்த புருஷரையும், ஸ்திரிகளையும், வாலிபரையும், கிழவரையும், ஆடுமாடுகளையும், கழுதைகளையும், சகலத்தையும் பட்டயக்கருக்கினாலே சங்காரம பண்ணினார்கள்.

௨௨. ஆனாலதேசத்தைவேவுபார்த்தஇரண்டுமனுஷருக்குயோசுவா நீங்கள்அந்தவேசிஸ்திரியின்வீட்டிலேபோய், அந்தஸ்திரியை

யும், அவளுக்குண்டானயாவையும் நீங்கள் அவளுக்காணையிட்டபடி அங்கே யிருந்து வெளியே அழைத்துவாருங்களென்றான்.

௨௩. அப்பொது வேவுகாரரான வாலிபர் உள்ளேபோய் இராகாப்பையும், அவள் தகப்பனையும், அவள்தாயையும், சகோதரர்களையும்,அவளுக்குள்ளயாவையும், அவள் வம்சத்தாரனைவரையும்வெளியேஅழைத்துக் கொண்டுவந்து, இஸ்ரவேலபாளயத்திற்குப் புறம்பே அவர்களையிருக்கப்பண்ணினார்கள்.

௨௪. பட்டணத்தையும், அதிலுள்ள யாவையும் அக்கினியாற் சுட்டெரித்தார்கள். வெள்ளியையும், பொன்னையும், வெண்கலமும், இரும்புமானமுட்டுகளையுயாத்திரங்கள்கர்த்தரின வீட்டுப்பொக்கிசத்திற்குக்கொடுத்தார்கள்.

௨௫. அப்படியே இராகாப்பென்ற வேசியையும்,அவள் தகப்பனவீட்டாரையும், அவளுக்கிருந்தயாவையும் யோசுவாஉயிரோடே வைத்தான். எரிகோவைவேவுபார்க்க யோசுவாஅனுப்பின ஆட்களைஅவள்மறைத்தபடியினாலே இந்நாளவரைக்கும் இஸ்ரவேலின நடுவிலேகுடியிருக்கிறாள்.

௨௬. அக்காலத்திலேயோசுவா, இந்தஎரிகோபட்டணத்தை யெடுப்பித்துக் கட்டுகிற மனுஷன் கர்த்தருக்குமுன்பாகச் சபிக்கப்பட்டிருக்கக்கடவன். அவன்தின அஸ்திபாரத்தைப்போடுகிறபோது தன்மூத்தகுமாரனையும், அதினவாசல்களை வைக்கிறபோது தன இளையகுமாரனையுஞ் சாகக்கொடுப்பானுகவென்றுசபித்தான்.

௨௭. அப்படிக்கர்த்தர் யோசுவாவோடே கூடவிருந்தார். அவனகீர்த்திதேசமெங்கும் பரம்பிற்று.

## ௭. அதிகாரம்.

[(௧)ஆயிபட்டணத்தில்இஸ்ரவேலசனங்கள் தோற்படைந்தது. (௬) அதற்கு யோசுவா முறையிட்டது. (௰) பராபரன அவனசெய்யவேண்டியதைக்கற்பித்தது. (௰௬) ஆகானென்பவன் விதித்தாற் பிடிக்கப்பட்டது. (௰௯) அவனஅறிக்கையிட்டது. (௨௨) அவனும், அவனுடையவைகள்யாவும் ஆகோர்பள்ளத்தாக்கில் அழிக்கப்பட்டது.]

ஆனாலஇஸ்ரவேலபுத்திரர்சாபத்தீடானதிலே துரோகம்பண்ணினார்கள். அதேனெனில், யூதாகோத்திரத்துச்சேராகுடையகுமாரனாகிய சப்தியினமகன கர்மிக்குப்பிறந்தஆகான சாபத்தீடானதிலே சில வற்றையெடுத்துக்கொண்டான். ஆகையாற் கர்த்தருக்கு இஸ்ரவேல புத்திரரின்மேலே கோபமூண்டது.

௨. யோசுவா எரிகோவிலிருந்து மனுஷரைப் பேதாவெனுக்குக்கிழக்கான பெத்தா

ஊாஅய

வெனகிட்ட யிருக்கிற ஆயிப் பட்டணத்திற்கனுப்பி, அவர்களோடே, நீங்கள்ஏறிப்போய், அந்தத் தேசத்தை வேவுபாருங்களென்றான். அந்தமனுஷர் ஏறிப்போய் ஆயியைவேவுபார்த்து,

௩. யோசுவாவண்டைக்குத் திரும்பிவந்து அவனுடனே, சனமெல்லாம் ஏறிப்போக வேண்டியதில்லை. ஏறக்குறைய இரண்டாயிரம் மூவாயிரம்பேர் ஏறிப்போய் ஆயியை முறியடிக்கலாம். எல்லாச்சனத்தையுமஅங்கே பிரயாசப்படுத்தீராக. ஏனெனில், அவ்விடத்தார்கொஞ்சந்தானென்றார்கள்.

௪. அப்படியே சனத்தில ஏறக்குறைய மூவாயிரம்பேர் அவ்விடத்திற்கேறிப்போனார்கள். ஆனால அவர்கள ஆயியினமனுஷருக்குமுனபாகமுறிந்தார்கள்.

௫. ஆயியினமனுஷர் அவர்களில ஏறக்குறைய முப்பத்தாறுபேரைவெட்டிப்போட்டார்கள். ஏனெனில்,பட்டணவாசலின்வெளிதுவக்கிச் சேபாரீமட்டுக்கும் அவர்களைத்துரத்தி மலையிறங்கலிலே அவர்களைவெட்டினார்கள். அப்பொது சனத்தின இருதயங்கரைந்து தண்ணீராய்ப்போயிற்று.

௬. அப்பொது யோசுவா தனவஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு, அவனும், இஸ்ரவேலின மூப்பருஞ் சாயங்காலமட்டுங் கர்த்தரின பெட்டிக்குமுன்பாக முகங்குப்புறத் தரையிலேவிழுந்து, தங்கள்தலைகளின்மேற் புழுதியைப் போட்டுக்கொண்டு கிடந்தார்கள்.

௭. யோசுவாசொன்னதாவது; ஆ, கர்த்தராகிய ஆண்டவரே! எங்களையழிக்கும்படிக்கெங்களைஎமோரியர்கைகளிலொப்புக்கொடுப்பதற்காகத் தேவரீர் இந்தச் சனத்தையோர்தானைக் கடக்கப்பண்ணினதென்ன! நாங்கள் மனத்திருத்தியாக யோர்தானுக்கப்பாலே யிருந்துவிட்டாலதாவனே.

௮. ஆ, ஆண்டவரே! இஸ்ரவேலர் தஞ்சத்துருக்களுக்கு முதுகைக் காட்டியிருக்கிற இப்பொதெனனசொல்லுவேன்?

௯. கானானரும் தேசத்துக் குடிகள் அனைவரும் இதைக்கேட்டு எங்களைவளைந்துகொண்டு, எங்கள பேரைப்பூமியிலிராதபடிக்கு வேரறுப்போகப் பண்ணுவார்களே. அப்பொது உமது மகத்துவமான நாமத்திற்கென்னசெய்வீரென்றான்!

௰. அப்பொது கர்த்தர் யோசுவாவுக்குச் சொன்னதாவது; எழுந்திரு. நீ இப்படிமுகங்குப்புறக் கிடக்கிறதென்ன!

௰௧. இஸ்ரவேலர்பாவஞ்செய்தார். நாம்தங்களுக்குக் கற்பித்தநமதுஉடம்படிக்கையை அவர்களமீறினதும், சாபத்தீடானதிலெடுத்துக்கொண்டதும், களவுசெய்ததும, ஒளித்ததும், தங்கள பண்டம்பாடிகளுக்குள் வைத்ததுமுண்டு.

௧௨. இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சத்துருக்களுக்கு முன்பாக நிற்கக்கூடாது. தங்கள் சத்துருக்களுக்கு முதுகைக் காட்டுவார்கள். ஏனென்றால் சாபத்திடானார்கள். நீங்கள் சாபத்திடானதையுங்கள் நடுவிலிருந்து அறுப்போகப் பண்ணுவிட்டால் இனி உங்களோடிரோம்.

௧௩. எழுந்திரு. நீ சனத்தைப் பரிசுத்தம் பண்ணிச் சொல்லவேண்டியதேதென்றால், நாளைக்கென்று உங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுங்கள். ஏனென்றால், இஸ்ரவேலே! சாபத்திடானது உன் நடுவேயிருக்கின்றது. நீங்கள் சாபத்திடானதையுங்கள் நடுவிலிருந்து விலக்காதிருக்குமட்டும், நீயுன் சத்துருக்களுக்கு முன்பாக நிற்கக்கூடாதென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

௧௪. நாளைத்தினம் உங்கள் கோத்திரங்களின்படியே சேரவரக்கடவீர்கள். அப்போது கர்த்தர் பிடிக்கிற கோத்திரம் வம்சம் வம்சமாகச் சேரவும், கர்த்தர் பிடிக்கும் வம்சம் வீடு வீடாகச் சேரவும், கர்த்தர் பிடிக்கும் வீட்டார் பேர்பேராகச் சேரவுங் கடவதென்று சொல்லு.

௧௫. அப்போது சாபத்திடானதையெடுத்தவனாய்ப் பிடிக்கப்படுமவன் கர்த்தரின் உடம்படிக்கையை மீறி இஸ்ரவேலிலே மதிகேடான காரியத்தைச் செய்தபடியினாலே, அவனும், அவனுக்குள்ளயாவும் அக்கினியால் சுட்டெரிக்கப்படக் கடவனென்றார்.

௧௬. யோசுவா அதிகாலமே எழுந்திருந்து இஸ்ரவேலைக் கோத்திரங் கோத்திரமாகச் சேரப்பண்ணினபோது யூதாவின் கோத்திரம் பிடிக்கப்பட்டது.

௧௭. அவன் யூதாவின் வம்சங்களைச் சேரப்பண்ணினபோது சேராகியரின் வம்சம் பிடிக்கப்பட்டது. அவன் சேராகியரின் வம்சத்தைப் பேர்பேராகச் சேரப்பண்ணினபோது சப்தி பிடிக்கப்பட்டான்.

௧௮. இவன் வீட்டாரை அவன் பேர்பேராகச் சேரப்பண்ணினபோது, யூதா கோத்திரத்துச் சேராவின் குமாரனாகிய சப்திக்குப் பிறந்த கர்மீயின் மகன் ஆகான் பிடிக்கப்பட்டான்.

௧௯. அப்போது யோசுவா ஆகானுடனே, என் மகனே! நீ இப்போது இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு மகிமையைச் செலுத்தி, அவருக்கு முன்பாக அறிக்கை பண்ணி என்ன செய்தாயென்று எனக்கறிவி. எனக்கதை யொளிக்காயாகவென்றான்.

௨௰. அப்போது ஆகான் யோசுவாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது; மெய்யாகவே நான் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன். இன்ன இன்னபிரகாரமாகச் செய்தேன்.

௨௧. நான் கொள்ளையிலே நேர்த்தியான ஒரு பாபிலோனின் சால்வையையும், இருநூறு வெள்ளிச் சேக்கலையும், ஐம்பது சேக்கல் நிறையான ஒரு பொன் நாக்கையுங் கண்டு அவைகளை இச்சித்து, எடுத்துக்கொண்டேன். இதோ, இவைகள் என் கூடாரத்தின் நடுத்தரையிலும், வெள்ளி அதின் கீழும் புதைத்திருக்கின்றனவென்றான்.

௨௨. அப்போது யோசுவா ஆள்களையனுப்பினான். அவர்கள் கூடாரத்திற்கோடினார்கள். இதோ, அவன் கூடாரத்தில் அதுவும், அதின் கீழே வெள்ளியும் புதைத்திருந்தன.

௨௩. அவைகளைக் கூடாரத்தின் நடுவிலேயெடுத்து, யோசுவாவண்டைக்கும், எல்லா இஸ்ரவேல் புத்திரரண்டைக்குங் கொண்டுவந்து, கர்த்தருக்கு முன்பாகக் கொட்டினார்கள்.

௨௪. அப்போது யோசுவாவும், இஸ்ரவேலெல்லாருங் கூடச் சேராவின் புத்திரனாகிய ஆகானையும், அந்த வெள்ளியையும், சால்வையையும், பொன் நாக்கையும், அவன் குமாரரையும், குமாரத்திகளையும், அவன் மாடுகளையும், கழுதைகளையும், ஆடுகளையும், அவன் கூடாரத்தையும், அவனுக்குள்ள யாவையும் பிடித்து, ஆகோர் பள்ளத்தாக்கிலே கொண்டுபோனார்கள்.

௨௫. அப்போது யோசுவா, நீ யெங்களைக் கலங்கப் பண்ணினபடியினாலே, இன்று கர்த்தர் உன்னைக் கலங்கப்பண்ணுவாரென்றான். அப்போது இஸ்ரவேலெல்லாம் அவனைக் கல்லெறிந்து அவைகளை அக்கினியால் சுட்டெரித்துக் கற்களினால் மூடி,

௨௬. அவன் மேல் இந்நாள்வரைக்குமிருக்கிற பெரிய கற்குவியலைக் குவித்தார்கள். இப்படியே கர்த்தர் தமது கோபத்தினுக்கிரத்தை விட்டுத் திரும்பினார். ஆகையால், அவ்விடம் இந்நாள் வரைக்கும் ஆகோர் பள்ளத்தாக்கென்னப்படும்.

## ௮. அதிகாரம்.

[(௧) பராபரன் யோசுவாவைத் தைரியப்படுத்தினது. (௩) ஆயிதேசம் பிடிபட்ட உபாயம். (௨௯) அதின் அரசன் தூக்கப்பட்டது. (௩௰) யோசுவா ஒரு பலிபீடத்தைக் கட்டினது. (௩௨) கற்களின்மீது நியாயப்பிரமாணத்தை யெழுதினது. (௩௩) ஆசீர்வாதங்களையும், சாபங்களையுங்கொடுத்தது.]

அப்போது கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது; பயப்படாமலும், கலங்காமலுமிருப்பாயாக. நீ யுத்தசனம் அனைத்தையுங் கூட்டிக்கொண்டு எழுந்து ஆயியின் மேலே போ. இதோ, ஆயியின் இராசாவையும், அவன் சனத்தையும், பட்டணத்தையும், சீமையையும் உன் கையிலொப்புக்கொடுத்தோம்.

௨. நீ எரிகோவுக்கும், அதின் இராசாவுக்குஞ் செய்ததுபோல ஆயிக்கும், அதின் இராசாவுக்குஞ் செய்யக்கடவாய். அதின் கொள்ளையையும், மிருகஜீவன்களையுமோவென்றால், உங்களுக்கென்று எடுத்துக்கொள்ளுவீர்களாக. பட்டணத்திற்குப் பின்னாலே உளவுக்குப் பதிவிடையை வையென்றார்.

௩. அப்பொழுது ஆயியின்மேலேபோகயோசுவாவும், எல்லா யுத்தசனமும் எழுந்து புறப்பட்டார்கள். அப்பொழுது யோசுவா பராக்கிரம சாலிகளான முப்பதினாயிரம்பேரைத் தெரிந்தெடுத்து, இராத்திரியிலே அவர்களை யனுப்பி,

௪. அவர்களுக்குக் கற்பித்ததாவது; இதோ, நீங்கள் பட்டணத்தின் பின்னாலே அதற்குப் பதிவிடையாயிருப்பவர்கள். நீங்கள் பட்டணத்திற்கு வெகு தூரமாய்ப் போயிராமல், எல்லாரும் ஆயத்தப்பட்டிருங்கள்.

௫. நானும், என்னோடிருக்கிற சனமுமோவென்றால் பட்டணத் தண்டையிலகிட்டிச் சேர்ந்து, அவர்கள் முன்போல எங்களுக்கெதிராகப் புறப்பட்டு வரும்போது, அவர்களுக்கு முன்னாக ஓடிப்போவோம்.

௬. அப்பொழுது முன்போல நமக்கு முன்னாக முறிந்துபோகிறார்களென்றுசொல்லி எங்களைத் துரத்தப் புறப்படுவார்கள். நாங்களோவென்றால், அவர்களைப் பட்டணத்தைவிட்டு இப்பாலே வரப்பண்ணுமட்டும் அவர்களுக்கு முன்னாகவோடிப்போவோம்.

௭. அப்பொழுது நீங்கள் பதிவிலிருந்தெழும்பிவந்து, பட்டணத்தைப் பிடிக்கக்கடவீர்கள். ஏனெனில், உங்கள் பராபரனாகிய கர்த்தர் அதையுங்கள் கைகளில் ஒப்புக்கொடுப்பார்.

௮. நீங்கள் பட்டணத்தைப் பிடிக்கும்போது, அதை நெருப்பிட்டுக் கொளுத்தக்கடவீர்கள். கர்த்தருடைய சொற்படிசெய்வீர்களாக. இதோ, அதையுங்களுக்குக் கற்பித்தோமென்றுசொல்லி,

௯. அவர்களை யனுப்பினான். அவர்கள் போய்ப் பேத்தேலுக்கும், ஆயிக்கும் நடுவே ஆயிக்குமேற்காகப் பதிவிருந்தார்கள். யோசுவாவோவெனில், அன்று இராத்திரிசனத்திற்குள் தங்கி,

௰. அதிகாலமே எழுந்திருந்து சனத்தை இலக்கம்பார்த்து, இஸ்ரவேலின் மூப்பரோடுங் கூடச்சனத்திற்கு முன்னே நடந்து, ஆயியின்மேலே போனான்.

௰௧. அவனோடிருந்த யுத்தசனமெல்லாம் நடந்து, பட்டணத்திற்கெதிரே வந்து சேர்ந்து ஆயிக்கு வடக்கே பாளயமிறங்கிறது. அதற்கும், ஆயிக்கும் நடுவே ஒரு பள்ளத்தாக்கிருந்தது.

௰௨. பின்னையும் ஏறக்குறைய ஐயாயிரம் பேரைப் பிரித்தெடுத்து, அவர்களைப் பேத்தேலுக்கும், ஆயிக்கும் நடுவே பட்டணத்திற்கு மேற்கேயும் பதிவிடையாக வைத்தான்.

௰௩. பட்டணத்திற்கு வடக்கேயிருக்கிற சகல பாளயத்தின் சனத்தையும், அதற்கு மேற்கேயதற்குப் பதிவிருக்கிறவர்களையும் திட்டம்பண்ணினபிறபாடு யோசுவா அன்று இராத்திரிப் பள்ளத்தாக்குக்குள்ளே போனான்.

௰௪. ஆயியின் இராசா அதைக் கண்டபோது அவனும் பட்டணத்தின் மனுஷராகிய அவனுடைய எல்லாச்சனமுந் தீவிரத்து அதிகாலமே திட்டமான குறிக்கப்பட்டவேளையில் இஸ்ரவேலுக்கெதிரே யுத்தம் பண்ணச் சமபூமிவெளிக்கு நேராகப் புறப்பட்டார்கள். ஆனால் தனக்குப் பதிவிடைப் பட்டணத்திற்குப் பின்னாலேயிருக்கிறதை யறியாதிருந்தான்.

௰௫. அவர்களுக்கு முன்னாக யோசுவாவும், இஸ்ரவேலனைத்துமமுறிந்து வனாந்தரத்திற்குப்போகிற வழியிலோடிப்போனார்கள்.

௰௬. அப்பொழுது பட்டணத்திற்குள்ளிருக்கிற சனமெல்லாம் அவர்களைத் துரத்தப் பின்றொடரவேண்டுமென்று கூப்பிட்டு, யோசுவாவைத் துரத்திப் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டார்கள்.

௰௭. ஆயியிலும், பேத்தேலிலும் இஸ்ரவேலரைப் பின்றொடராத மனுஷனிருந்ததில்லை. பட்டணத்தைத் திறந்து வைத்துப்போய் இஸ்ரவேலரைத் துரத்திக்கொண்டிருந்தார்கள்.

௰௮. அப்பொழுது கர்த்தர் யோசுவாவோடே, உன் கையிலிருக்கிற ஈட்டியை ஆயிக்கு நேராக நீட்டு. ஏனெனில், அதையுன் கையிலொப்புக் கொடுப்போமென்றார். அப்படியே யோசுவா தன் கையிலிருக்கிற ஈட்டியைப் பட்டணத்திற்கு நேராக நீட்டினான்.

௰௯. அப்பொழுது பதிவிடை தீவிரமாய்த் தன் தலத்திலிருந்தெழும்பி அவன் தன் கையை நீட்டினபோது பட்டணத்திற்கோடிவந்து, அதைப்பிடித்துத் தீவிரத்தோடே அதை நெருப்பிட்டுக்கொளுத்தினார்கள்.

௨௰. ஆயியின் மனுஷர் பின்னிட்டுப்பார்க்கிறபோது இதோ, பட்டணத்தின் புகைக்காடு ஆகாயத்திற் கெழும்புகிறதைக் கண்டார்கள். அப்பொழுது இப்படியாகிலும், அப்படியாகிலும் ஓடிப்போகிறதற்கு அவர்களுக்கிடமற்றுப்போயிற்று. ஏனெனில், வனாந்தரத்திற் கோடிப்போகிறசனந் தங்களைத் துரத்துகிறவர்கள்முகமாய்த் திரும்பியது.

௨௰௧. அதேதெனில் பதிவிடைப் பட்டணத்தைப் பிடித்ததையும், பட்டணத்தின் புகைக்காடு எழும்புகிறதையும் யோசுவாவும், இஸ்ரவேலரும் பார்க்கிறபோது, திரும்பி ஆயியின் மனுஷரைமுறியடித்தார்கள்.

௨௰௨. அவர்களும் பட்டணத்திலிருந்து இவர்களுக்கெதிர்ப்பட்டதினால் இவர்களில் இந்த

ந்தப்பக்கத்திலும், அந்தப் பக்கத்திலுமிருக்கிற இஸ்ரவேலின் நடுவே யகப்பட்டார்கள். ஆகையால், அவர்களிலொருவருந் தப்பிமீந்திராதபடிக்கு அவர்களை வெட்டிப்போட்டு,

உ௩. ஆயியின் இராசாவை யுயிரோடே பிடித்து, யோசுவா வண்டைக்குக்கொண்டுவந்தார்கள்.

உ௪. இஸ்ரவேலர் வனாந்தர வெளியிலே தங்களைத் துரத்தின ஆயியின் குடிகளையெல்லாம் வெட்டித்தீர்த்தபோதும், இவர்களெல்லாரும் சரியாகப்பட்டயக்கருக்கினாலே விழுந்து தீர்ந்தபோதும், இஸ்ரவேலரெல்லாரும் ஆயிக்குத்திரும்பி அதைப்பட்டயக் கருக்கினாலே யடித்தார்கள்.

உ௫. அந்நாளிலே விழுந்த ஆண்சாதியும் பெண்சாதியுமான ஆயியின் மனுஷரெல்லாம் பன்னீராயிரம்பேர்.

உ௬. ஆயியின் குடிகளையெல்லாஞ் சங்கரித்துத் தீருமட்டும் யோசுவா ஈட்டியை நீட்டிக்கொண்டிருக்கிற தன்கையை வாங்கின தில்லை.

உ௭. மிருகசீவன்களையும், அந்தப் பட்டணத்தின் கொள்ளையையும்மாத்திரம் இஸ்ரவேலர் கர்த்தர் யோசுவாவுக்குக் கட்டளையிட்ட வார்த்தையின்படியெடுத்துக்கொண்டார்கள்.

உ௮. யோசுவா ஆயியைச் சுட்டெரித்து, அதைஇந்நாள்வரைக்குமிருக்கிறபடி என்றைக்கும்பாழாய்க்கிடக்கும்மண்மேடாக்கி,

உ௯. ஆயியின் இராசாவை யொருமரத்திலே தூக்கிப் போட்டுவித்துச் சாயங்காலமட்டும் அதிலேதொங்கவிட்டான். சூரியன் அஸ்தமிக்கிறபோதோவெனில், யோசுவா அவனுடலை மரத்தை விட்டிறக்கச்சொன்னான். அதைப்பட்டணத்தின்ஒலிமுகவாசலிலேபோட்டு இந்நாள்வரைக்குமிருக்கிறபெரிய கற்குவியலை அதின்மேலேகுவித்தார்கள்.

௩௰ அப்போது யோசுவாகர்த்தரின்ஊழியக்காரனாம்மோசேஇஸ்ரவேல்புத்திரருக்குக் கற்பித்தபடியேயும், மோசேயின் நியாயப்பிரமாண ஆகமத்திலெழுதியிருக்கிறபடியேயும் ஏபாலபர்வதத்தில் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு இரும்புபடாதமுழுக்கற்களாலொருபலிபீடத்தைக்கட்டினான்.

௩௧. அதின்மேலே கர்த்தருக்குச் சர்வாங்க தகனங்களையும், சமாதானபலிகளையும் பலியிட்டார்கள்.

௩௨. அங்கே யவன்மோசே இஸ்ரவேல்புத்திரருக்குமுன்பாக எழுதியிருந்த நியாயப்பிரமாணத்தைக் கற்களிற் பேர்த்தெழுதினான்.

௩௩. மூழு இஸ்ரவேலரும், அதின்மூப்பரும், தலைவரும், அதின் நியாயாதிபதிகளும், பரதேசிகளும், இஸ்ரவேலிற் பிறந்தவர்களுங் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்கிறலேவியரான ஆசாரியருக் கெதிரே பெட்டிக்கிந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலும், பாதிகெரிசீம் பர்வதப்புறமாகவும், பாதி ஏபாலபர்வதப் புறமாகவும் இஸ்ரவேலசனத்தை ஆசீர்வதிக்கும்படிக்குக்கர்த்தரின் ஊழியக்காரனாகியமோசே முந்தக் கற்பித்தபடி நின்றார்கள்.

௩௪. அதற்குப்பிறகு ஆசீர்வாதமும்,சாபமுமென்ற நியாயப்பிரமாணத்தின் சகலவார்த்தைகளையும் நியாயப்பிரமாண ஆகமத்திலெழுதியிருக்கிறபடியெல்லாங்கூறினான்.

௩௫ மோசே கற்பித்தவைகளிலெல்லாம் யோசுவா இஸ்ரவேலின் முழுச்சபைக்கும், ஸ்திரிகளுக்கும், பிள்ளைகளுக்கும்,அவர்களுக்குள் நடமாடின பரதேசிகளுக்கும் முன்பாகக் கூறாதேபோனவார்த்தையில்லை.

## ௯. அதிகாரம்.

[(௧) இராசாக்கள் இஸ்ரவேல் சனங்கள் மேல் கூடிப்போனது. (௩) கிபெயோனின் குடிகள் தந்திரத்தினாலே உடம்படிக்கையைப் பெற்றுக்கொண்டது. (௰௯) அதினாலே அவர்களடிமைத்தனத்துக்குள்ளாகத் தீர்க்கப்பட்டது.]

யோர்தானுக்கப்பாலே மலைகளிலும், பள்ளத்தாக்குகளிலும், லீபனோனுக்கெதிரான பெரிய சமுத்திரத்தினுடைய சகலமான கரையோரத்திலுமிருந்த சகல இராசாக்களும், ஏத்தியரும், எமோரியரும், கானானரும், பெரிசியரும், ஏவியரும், எபூசியரும் அதைக்கேட்டபோது சமம்பவித்ததென்னவென்றால்,

௨. அவர்களேகமாய் யோசுவாவோடும், இஸ்ரவேலோடும் யுத்தம்பண்ண ஒருமனப்பட்டுக்கூடினார்கள்.

௩. கிபெயோனின்குடிகளோவெனில், யோசுவா எரிகோவுக்கும், ஆயிக்குஞ்செய்ததைக் கேட்டபோது,

௪ ஒரு தந்திரமான யோசனையைப்பண்ணித் தூதுபதிகளைப்போலக் காண்பித்துப் பழைய இரட்டுப்பைகளையும்,பீறலும், பொத்தலுமான பழைய திராட்சப்பழ இரசத்துருத்திகளையுந் தங்கள் கழுதைகள்மேலேவைத்து,

௬. அழுக்கான பழையபாதரட்சைகளைத் தங்கள் கால்களிற்போட்டுப் பழைய வஸ்திரங்களை யுடுத்துக்கொண்டார்கள். அவர்களவழிக்கு எடுத்துக்கொண்ட அப்பமெல்லாம் அழுத்தலும் பூஞ்சமும் பூத்ததுமாயிருந்தன.

௬. அவர்கள் கில்காலிலிருக்கிற பாளயத்திற்கு யோசுவாவண்டைக்குப்போய் அவனோடும், இஸ்ரவேல மனுஷரோடும் தூரதேசத்திலிருந்து வந்தோம். இப்போதும் எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்ணுமென்றார்கள்.

எ. அப்போது இஸ்ரவேல்மனுஷர் அந்த ஏவியரோடே நீங்கள் எங்கள் நடுவிலேகுடியிருக்கிறவர்களாக்கும். எப்படியுங்களுக்கு உடம்படிக்கையைக்கட்டளை பண்ணலாமென்றார்கள்.

அ. அவர்கள் யோசுவாவுடனே, நாங்கள் உம்முடைய அடியாரென்றார்கள். யோசுவா அவர்களை, நீங்கள் ஆர்! எங்கேயிருந்து வந்தீர்களென்று கேட்டான்.

கூ. அவர்கள் அவனோடேசொன்னதாவது; உம்முடைய பராபரனாகியகர்த்தரின் நாமப்பிரஸ்தாபத்தினாலே உம்முடைய அடியார் மகா தூரதேசத்திலிருந்து வந்தோம். ஏனெனில், அவருடைய கீர்த்தியையும், அவர் எகிப்திலேசெய்த தெல்லாவற்றையும்,

ய. அவர்எஸ்போனின்இராசாவாகியசீகோனும், அஸ்தரோத்திலிருந்தபாசானின் இராசாவாகிய ஓகும் என்றயோர்தானுக்கப்பாலிருந்த எமோரியரின் இரண்டு இராசாக்களுக்குச் செய்ததெல்லாவற்றையுங் கேட்டோம்.

யக. ஆகையால், உங்கள் கைகளிலவழிக்கு ஆகாரம்வாங்கிக்கொண்டு,அவர்களுக்கெதிர்க்கொண்டுபோய், அவர்களுடனே, நாங்கள் உங்கள் அடியார், இப்போதும் எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்ணுங்களென்பீர்களாகவென்று எங்கள் மூப்பரும், எங்கள்தேசக்குடிகளுமெல்லாம் எங்களோடேசொன்னார்கள்.

யஉ. உங்கள்ணடையில்வர நாங்கள் புறப்படுகிற அன்றே எங்கள் வழிப்பயணத்திற்கு இந்த எங்கள் அப்பத்தைச்சுடுகிறதாக எங்கள் வீட்டிலிருந்தெடுத்துக்கொண்டோம். இப்போது இதோ, அழுத்தமும், பூரணம்பூத்ததுமாயிற்று.

யங. நாங்கள் இந்தத் திராட்சப்பழ இரசத்துருத்திகளை நிரப்புகையிற்புதிதாயிருந்தது. ஆனாலிதோ, பொத்தலாயிற்று. இந்த எங்கள்வஸ்திரங்களும், பாதஇரட்சைகளும் மகா விஸ்தாரமான வழிப்பயணத்தினாலே பழையவைகளாயப் போயினவென்றார்கள்.

யச. அப்போது அந்தமனுஷர் கர்த்தருடைய வாக்கைக்கேளாமல் அவர்களுடைய வழிப் போசனத்திலே சிலவற்றைவாங்கிக் கொண்டார்கள்.

யரு. யோசுவா அவர்களோடேசமாதானம் பண்ணி, அவர்களை உயிரோடே காப்பாற்றும் உடம்படிக்கையை அவர்களுக்குக்கட்டளைபண்ணினான். அதற்காகச் சபையின் பிரபுக்கள் அவர்களுக்காணையிட்டார்கள்.

யசு. அவர்களுக்குஉடம்படிக்கையைக்கட்டளையிட்டுமூன்றுநாட் சென்றபோதோவெனில், அவர்கள் தங்கள்சமீபத்திலிருக்கிறவர்களென்றும்,தங்கள் நடுவேகுடியிருக்கிறவர்களென்றுங் கேட்டார்கள்.

யஎ. ஏனெனில், இஸ்ரவேல்புத்திரர் பிரயாணம்போகையில் மூன்றுநாளிலே அவர்கள் பட்டணங்களுக்குவந்தார்கள். அவைகள் கிபெயோன், கெபிரா, பெயெரோத், கீரியாத், யயாரீம் என்றவைகள்.

யஅ. சபையின் பிரபுக்கள் அவர்களுக்கு இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின்மேல ஆணையிட்டிருந்தபடியினாலே இஸ்ரவேல்புத்திரர் அவர்களைச் சேதம்பண்ணாதேபோனார்கள். ஆனாற்சபையெல்லாம பிரபுக்கள்மேல் மொறுமொறுத்தது.

யகூ. அப்போது சகல பிரபுக்களுஞ்சபையோடெல்லாஞ் சொன்னதாவது; நாங்கள் இஸ்ரவேலின்பராபரனாகியகர்த்தரின்மேலே அவர்களுக்காணையிட்டோம். ஆனதுகொண்டு அவர்களைநாம தொடக்கூடாது.

உய. நாங்கள் அவர்களுக்கிட்ட ஆணையினிமித்தங் கடுங்கோபம்நம்மேலவராதபடிக்கு நாம அவர்களை யுயிரோடேவைத்து, அவர்களுக்கொன்று செய்வோம.

உக. பிரபுக்களாகிய நாங்கள் அவர்களுக்குச்சொன்னபடி அவர்கள் உயிரோடிருந்து, சபைக்கெல்லாம விறகுவெட்டுகிறவர்களும், தண்ணீர் சுமக்கிறவர்களுமாயிருக்கக்கடவர்களென்று பிரபுக்கள் அவர்களோடேசொன்னார்கள்.

உஉ. பிற்பாடு யோசுவா அவர்களையழைப்பித்து அவர்களோடேசொன்னதாவது; எங்கள்நடுவேகுடியிருக்கிற நீங்கள்எங்களைத்தந்திரம்பண்ணி நாங்கள்உங்களுக்குவெகுதூரமாயிருக்கிறவர்களென்றுசொன்னதென்ன!

உங. இப்போதும நீங்கள் சபிக்கப்பட்டவர்கள். என் பராபரனுடைய வீட்டிற்கு விறகுவெட்டித்தண்ணீர்சுமக்கிறபணிவிடைக்காரர் உங்களிலிருக்கிறது அற்றுப்போகாதிருப்பதாகவென்றார்.

உச. அவர்கள் யோசுவாவுக்குப் பிரதியுத்தரமாகச்சொன்னதாவது; உங்களுக்குத்தேசத்தையெல்லாம் ஒப்புக்கொடுத்துத்தேசத்தின்குடிகளையெல்லாம உங்களுக்கு முன்பாக அழிப்போமென்று உம்முடைய பராபரனாகிய கர்த்தர் தம்முடைய தாசனாகிய மோசேக்குக் கட்டளையிட்டது உம்முடைய அடியாருக்குஅறிவிக்கவேஅறிவிக்கப்பட்டதினால நாங்கள் எங்கள் சீவனுக்காக உங்களுக்குமிகவும பயந்து இந்தக்காரியத்தைச்செய்தோம்.

உரு. இப்போதும இதோ, உமதுகையிலிருக்கிறோம. உம்முடைய பார்வைக்குநன்மும், நிதானமுமானபடி எங்களுக்குச்செய்யுமென்றார்கள்.

உசு. அந்தப்படி யோசுவா அவர்களுக்குச்செய்து, இஸ்ரவேல்புத்திரர் அவர்களைக்கொன்றுவிடாதபடிக்கு அவர்களை இவர்கள் கைக்குத்தப்புவித்து,

௨௭. இந்தநாள் மட்டும் இருக்கிறபடியே அவர்களை அந்நாளிலே சபைக்கும், கர்த்தர் தெரிந்துகொள்ளுமிடத்திலிருக்கும் அவருடைய பலிபீடத்திற்கும், விறகு வெட்டுகிறவர்களும், தண்ணீர் சுமக்கிறவர்களுமாக்கினான்.

## ௰. அதிகாரம்.

[(௧) கிபெயோன் பட்டணத்து ஐந்தரசர்கள் போர்செய்தது. (௬) யோசுவா அதைத் தப்புவித்தது (௰௧) பராபரன் அதின் சத்துருக்கள்மேற் கல்மழைபெய்வித்தது. (௰௨) யோசுவாவின் வார்த்தையால் சூரியனும் சந்திரனும் நின்றது. (௰௬) ஐந்தரசர்கள் கெபியிலேயொளித்ததும், (௨௬) அவர்களவெளியிற்கொண்டுவரப்பட்டதும், (௨௪) இகழப்பட்டதும், (௨௬) தூக்கப்பட்டதும், (௨௮) மற்றும் ஏழரசர்களஞ்செயிக்கப்பட்டது. (௪௩) யோசுவா கில்காலிலே மறுபடியும் வந்தது.]

யோசுவா ஆயியைப் பிடித்துச் சங்காரம்பண்ணி, எரிகோவுக்கும், அதின் இராசாவுக்குஞ்செய்தபடி ஆயிக்கும், அதின் இராசாவுக்குஞ்செய்ததையும், கிபெயோனின் குடிகள் இஸ்ரவேலோடே சமாதானம்பண்ணி அவர்களுக்குள்ளானதையும் எருசலேமின் இராசாவாகிய அதோனிசேதேக் கேட்டபோது,

௨ மிகவும் பயந்தார்கள். ஏனென்றால் கிபெயோன் இராசதானிப் பட்டணங்களில் ஒன்றைப்போலப் பெரிய பட்டணமும், ஆயியைப் பார்க்கிலும் பெரியதுமாயிருந்தது. அதின் மனுஷரெல்லாம் பலசாலிகளுமாயிருந்தார்கள்.

௩. ஆகையால், யோசுவாவோடும், இஸ்ரவேல் புத்திரரோடும் சமாதானம்பண்ணின கிபெயோனைநாம் சங்கரிக்க என்னண்டைக்கேறிவந்து எனக்குச் சகாயம்பண்ணுங்களென்று,

௪. எருசலேமின் இராசாவாகிய அதோனிசேதேக் எபிரோனின் இராசாவாகிய ஒகாமுக்கும், யர்மூத்தின் இராசாவாகிய பிரொயாமுக்கும், லாகீசின் இராசாவாகிய யப்பீயாவுக்கும், எக்லோனின் இராசாவாகிய தெபீருக்குஞ் சொல்லியனுப்பினான்.

௫. அப்படியேஎருசலேமின் இராசா, எபிரோனின்இராசா, யர்மூத்தின்இராசா, லாகீசினிராசா, எக்லோனின்இராசாவென்றஎமோரியரின் ஐந்து இராசாக்கள்கூடிக்கொண்டு அவர்களும், அவர்களுடையஎல்லாச்சேனைகளும் ஏறிப்போய்க் கிபெயோனுக்குமுன்பாகப்பாளயமிறங்கி, அதின்மேல்யுத்தம் பண்ணினார்கள்.

௬. அப்போது கிபெயோனின் மனுஷர் கில்காலிலிருக்கிற பாளயத்திற்கு யோசுவாவண்டைக்கு ஆளனுப்பி, உமதுடைய அடியாரைக் கைவிடாமல், சீக்கிரமாய் எங்களண்டைக்கேறிவந்து, எங்களை இரட்சித்து எங்களுக்குச் சகாயம்பண்ணும். ஏனென்றால் பர்வதங்களிலே குடியிருக்கிற எமோரியரின் இராசாக்களெல்லாம் எங்களுக்கு விரோதமாய்க் கூடினார்களென்றுசொல்லச் சொன்னார்கள்.

௭. அப்போது யோசுவாவும், அவனோடேகூடச் சகல இராணுவமனுஷரும், எல்லாப் பராக்கிரமசாலிகளும் ஏறிப்போனார்கள்.

௮. கர்த்தர் யோசுவாவோடே, அவர்களுக்குப் பயப்படாயாக. ஏனெனில், உன்கைகளில் அவர்களை யொப்புக்கொடுத்தேன். அவர்களிலொருவரும் உனக்குமுன்பாக நிற்பதில்லையென்றார்.

௯. யோசுவா கில்காலிலிருந்து இராமுழுதும் அசுப்பிலே அவர்கள்மேலே நடந்து வந்தான்.

௰. கர்த்தரோவெனில், அவர்களை இஸ்ரவேலுக்குமுன்பாகக் கலங்கப்பண்ணினார். ஆகையால், அவர்களைக் கிபெயோனிலே மகாசங்காரமாக மடங்கடித்து, பெத்தோரோனுக்குப்போகிறவழியிலே துரத்தி, அசெக்காமட்டுக்கும், மக்கெதாமட்டுக்கும் முறியடித்தார்கள்.

௰௧. அவர்கள் பெத்தொரோனிலிருந்திறங்குகிற வழியிலே இஸ்ரவேலுக்கு முன்பாக வோடிப்போகையில் அசெக்காமட்டுமேறுகிறவர்கள்மேலே கர்த்தர் வானத்திலிருந்து அவர்களைக்கொல்லுகிற பெரியகற்களைவிழப்பண்ணினார். இஸ்ரவேல் புத்திரர் பட்டயத்தாற் கொன்றவர்களைப் பார்க்கிலும், கன்மழையினாலே செத்தவர்கள் அதிகமாயிருந்தார்கள்.

௰௨. கர்த்தர் எமோரியரை இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாக வொப்புக்கொடுக்கிற அந்நாளில் யோசுவா கர்த்தரைநோக்கிப் பேசி இஸ்ரவேலின் கண்களுக்குமுன்பாகச் சூரியனே! நீ கிபெயோன்மேலும், சந்திரனே! நீ ஆயலோன்பள்ளத்தாக்கின்மேலும் தரித்து நில்லென்றான்.

௰௩. அப்போது சனந்தன் சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுமட்டும், சூரியன் தரித்தது. சந்திரனும் நின்றது. இது நீதிமானுடைய புஸ்தகத்திலெழுதியிருக்கவில்லையோ! அப்படியே சூரியன் அஸ்தமிக்கத் தீவரிக்காமல் ஏறக்குறைய ஒருபகல் முழுதும் நடுவானத்திலே நின்றது.

௰௪. இப்படிக்கர்த்தர் ஒருமனுஷனுடைய சொற்கேட்ட அந்நாளையொத்தநாள் அதற்குமுன்னுமில்லை, அதற்குப் பின்னுமில்லை. ஏனென்றால் கர்த்தர் இஸ்ரவேலுக்காக யுத்தம்பண்ணினார்.

௰௫. பிற்பாடு யோசுவா இஸ்ரவேல் அனைத்தோடுங்கூடக் கில்காலிலிருக்கிற பாளயத்திற்குத் திரும்பினான்.

௰௬. அந்த ஐந்து இராசாக்களோவென்றால், ஓடிப்போய், மக்கெதாவிலிருக்கிற ஒரு கெபியிலே ஒளித்துக் கொண்டிருந்தார்கள்.

௰௭. ஐந்து இராசாக்களும் மக்கெதாவிலிருக்கிற ஒரு கெபியிலே ஒளித்திருந்து அகப்பட்டார்களென்று யோசுவாவுக்கு அறிவிக்கப்பட்டது.

௰௮. அப்பொழுது யோசுவா சொன்னதாவது; பெரிய கற்களைக் கெபியின் வாயிலே புரட்டிவிட்டு, அவ்விடத்திலவர்களைக் காவற்காக்க மனுஷரை வையுங்கள்.

௰௯. நீங்களோவென்றால், நில்லாமல் உங்கள் சத்துருக்களையவர்களுடைய பின்படைகளை வெட்டிக்கொண்டு துரத்துங்கள். அவர்களைத் தங்கள் பட்டணங்களிலே பிரவேசிக்க ஒட்டாதிருங்கள். ஏனெனில், உங்கள் பராபரனாகிய கர்த்தர் அவர்களையுங்கள் கையிலொப்புக்கொடுத்தாரென்றான்.

௨௰. யோசுவாவும், இஸ்ரவேல் புத்திரரும் அவர்களை மகாப்பெரிய சங்காரமாக அவர்கள் அழியுமளவுஞ் சங்கரித்துத் தீர்ந்து, அவர்களில் மீதியானவர்கள் அரணான பட்டணங்களுக்குட் புகுந்தபிற்பாடேயென்றால்,

௨௧. சனமெல்லாஞ் சுகமாய் மக்கெதாவிலிருக்கிற பாளயத்திலே யோசுவாவண்டைக்குத் திரும்பிவந்தது. இஸ்ரவேல் புத்திரருக்கு விரோதமாக ஒருவனுந் தன்னாவை யசைக்கக்கூடாதிருந்தது.

௨௨. அப்பொழுது யோசுவா கெபியின் வாயைத்திறந்து அந்த ஐந்து இராசாக்களை அந்தக் கெபியிலிருந்து என்னண்டைக்கு வெளியே கொண்டுவாருங்களென்றான்.

௨௩. அவர்கள் அப்படிச்செய்து, எருசலேமின் இராசாவும், எபிரோனின் இராசாவும், யர்மூத்தின் இராசாவும், லாகீசின் இராசாவும், எக்லோனின் இராசாவுமென்ற அந்த ஐந்து இராசாக்களை யந்தக் கெபியிலிருந்து அவனண்டைக்கு வெளியே கொண்டுவந்தார்கள்.

௨௪. அவர்களை யோசுவாவண்டைக்குக் கொண்டுவந்தபோது யோசுவா இஸ்ரவேல் மனுஷரையெல்லாம் அழைப்பித்துத் தன்னோடேகூடவந்த மனுஷரின் சேர்வைக்காரருடனே நீங்கள் கிட்டவந்து, உங்கள் கால்களை யிந்த இராசாக்களுடைய கழுத்துகளின் மேலே வையுங்களென்றான். அவர்கள் கிட்டவந்து தங்கள் கால்களை யவர்கள் கழுத்துகளின் மேலே வைத்தார்கள்.

௨௫. அப்பொழுது யோசுவா அவர்களோடே, நீங்கள் பயப்படாமலும், கலங்காமலும் பலத்துத் திடமனதாயிருங்கள். ஏனெனில், நீங்கள் யுத்தம்பண்ணும் உங்கள் சத்துருக்களுக்கெல்லாங் கர்த்தர் அப்படிச் செய்வாரென்றான்.

௨௬. அதற்குப்பிற்பாடு யோசுவா அவர்களை யடித்துக்கொன்று, ஐந்து மரங்களிலே தூக்குப்போடுவித்தான். சாயங்காலமட்டும் மரங்களில் தொங்கியிருந்தார்கள்.

௨௭. சூரியன் அஸ்தமிக்கிற வேளையிலேயென்றால், யோசுவா அவர்களை மரங்களிலிருந்திறக்கக் கற்பித்தான். அவர்கள் ஒளித்துக் கொண்டிருந்த கெபியிலே அவர்களைப் போட்டு இந்நாள்வரைக்குமிருக்கிறபடி பெரிய கற்களைக் கெபியின் வாயிலே மூடினார்கள்.

௨௮. அந்நாளிலே யோசுவா மக்கெதாவைப் பிடித்து அதைப் பட்டயக்கருக்கினாலே யழித்து அதின் இராசாவையும், மனுஷரையும், அதிலுள்ள சகல ஆத்துமாக்களையும் ஒருவரையும் மீதியாக வைக்காமற் சங்காரம் பண்ணி, எரிகோவின் இராசாவுக்குச் செய்ததுபோல மக்கெதாவின் இராசாவுக்குஞ் செய்தான்.

௨௯. மக்கெதாவிலிருந்து யோசுவா இஸ்ரவேலனைத்தோடுங்கூட லிப்னாவுக்குப் புறப்பட்டு, லிப்னாவின்மேல் யுத்தம்பண்ணினான்.

௩௰. அதையும், அதின் இராசாவையுங் கர்த்தர் இஸ்ரவேலின் கையிலொப்புக் கொடுத்தார். அதையும், அதிலுள்ள சகல ஆத்துமாக்களையும் ஒருவரையும் அதிலே மீதியாக வைக்காமற் பட்டயக்கருக்கினாலே அழித்து எரிகோவின் இராசாவுக்குச் செய்ததுபோல அதின் இராசாவுக்குஞ் செய்தான்.

௩௧. லிப்னாவிலிருந்து யோசுவா இஸ்ரவேலனைத்தோடுங்கூட லாகீசுக்குப் புறப்பட்டு, அதற்கெதிரே பாளயமிறங்கி அதின்மேல் யுத்தம்பண்ணினான்.

௩௨. கர்த்தர் லாகீசை இஸ்ரவேலின் கையிலொப்புக்கொடுத்தார். அதை இரண்டாம் நாளிலே பிடித்து, லிப்னாவுக்குச் செய்ததற்குச் சரியாக அதையும், அதிலுள்ள எல்லா ஆத்துமாக்களையும் பட்டயக் கருக்கினாலே அழித்தான்.

௩௩. அப்பொழுது கேசேரின் இராசாவாகிய ஓராம் லாகீசுக்கொத்தாசைசெய்ய வந்தான். ஆனாலே யோசுவா அவனையும், அவன் சனத்தையும் ஒருவனும் மீதியாகாதேபோகுமட்டும் வெட்டிப்போட்டான்.

௩௪. லாகீசிலிருந்து யோசுவாவும், இஸ்ரவேலனைத்துமாய் எக்லோனுக்குப் புறப்பட்டு அதற்கெதிரே பாளயமிறங்கி அதின்மேல் யுத்தம்பண்ணி,

௩௫. அதை அந்நாளிலே பிடித்து, அதைப் பட்டயக்கருக்கினாலே அழித்தார்கள். லாகீசுக்குச் செய்ததற்குச் சரியாக அதிலுள்ள நரசீவன்களையெல்லாம் அந்நாளிலேதானே சங்காரம்பண்ணினான்.

௩௬. பிறகு எக்லோனிலிருந்து யோசுவா

வும், இஸ்ரவேல் அனைத்துமாய் எபிரோனுக்குப் புறப்பட்டு அதின்மேல் யுத்தம்பண்ணி,

௩௭. அதைப்பிடித்து, எக்லோனுக்குச் செய்ததற்குச் சரியாக அதையும், அதின் இராசாவையும், அதற்கடுத்த எல்லாப் பட்டணங்களையும், அதிலுள்ள சகல நரசீவன்களையும் ஒருவரையும் மீதியாக வைக்காமற் பட்டயக் கருக்கினாலே அழித்தார்கள். அதையும், அதிலுள்ள நரசீவன்களையும் எல்லாஞ் சங்காரம் பண்ணினான்.

௩௮. பிற்பாடு யோசுவா இஸ்ரவேலனைத் தோடுங்கூடத் தெபீருக்குத் திரும்பிப்போய் அதின்மேல் யுத்தம்பண்ணி,

௩௯. அதையும், அதின் இராசாவையும், அதைச்சேர்ந்த எல்லாப் பட்டணங்களையும் பிடித்தான். அவைகளைப் பட்டயக்கருக்கினாலேயழித்து, அதிலுள்ள நரசீவன்களையெல்லாம் ஒருவரையும் மீதியாக வைக்காமற் சங்காரம்பண்ணினார்கள். எபிரோனுக்கும், லீபனாவுக்கும், அவைகளின் இராசாவுக்குஞ் செய்ததுபோலத் தெபீருக்கும், அதின் இராசாவுக்குஞ்செய்தான்.

௪௰. இப்படியே யோசுவா மலைத்தேசமனைத்தையும், தெற்குச்சீமையையும், சமபூமியையும், தண்ணீர்பாய்கிற தலங்களையும், அவைகளின் எல்லா இராசாக்களையும் ஒருத்தரையும் மீதியாக வைக்காமல், அழித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் கற்பித்தபடியே சுவாசமுள்ள எல்லாவற்றையுஞ் சங்காரம்பண்ணி,

௪௧. காதேஸ்பர்னெயா துவக்கிக் காத்சாமட்டுமிருக்கிறதையும், கிபெயோன்மட்டுமிருக்கிற கோசென்சீமையனைத்தையும் அழித்தான்.

௪௨. அந்த எல்லா இராசாக்களையும், அவர்கள் தேசத்தையும் யோசுவா ஒருமிக்கப் பிடித்தான். ஏனெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் இஸ்ரவேலுக்காக யுத்தம்பண்ணினார்.

௪௩. பிறபாடு யோசுவா இஸ்ரவேலனைத் தோடுங்கூடக் கில்காலிலிருக்கிற பாளயத்திற்குத் திரும்பினான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) பல இராசாக்கள் மேரோம்நதியண்டையில் முறியடிக்கப்பட்டது. (௰) ஆத்சோர் பிடிபட்டுக்கொளுத்தப்பட்டது. (௰௬) அத்தேசமெல்லாம் யோசுவாவினாற்பிடிக்கப்பட்டது. (௨௧) ஏனாக்கியரை நிக்கிரகம்பண்ணினது.]

ஆத்சோரின் இராசாவாகிய யாபீன் அதைக்கேட்டபோதோவெனில், அவன் மாதோனின் இராசாவாகிய யோபாப் அண்டைக்கும், சிம்ரோனின் இராசாவண்டைக்கும், அக்சாபின் இராசாவண்டைக்கும்,

௨. வடக்கேயிருக்கிற மலைகளிலும், கின்னெரோத்திற்குத் தெற்கேயிருக்கிற நாட்டுப்புறத்திலும், சமபூமியிலும், மேற்கேயிருக்கிற நாப்போத்தோரிலுமிருக்கிற இராசாக்களண்டைக்கும்,

௩. கிழக்கிலும், மேற்கிலுமிருக்கிற கானானியரண்டைக்கும், மலைகளிலிருக்கிற எமோரியர், ஏத்தியர், பெரிசியர், எபூசியரண்டைக்கும், எர்மோன்மலையின் அடியிலே மிஸ்பா சீமையிலிருக்கிற ஏவியரண்டைக்கும் ஆளனுப்பினான்.

௪. அவர்கள் திரட்சிக்குக் கடற்கரைமணலைப்போலொத்த ஏராளசனமாகிய தங்களுடைய எல்லாச்சேனைகளோடும், மகா ஏராளமான குதிரைகளோடும், இரதங்களோடுங் கூடப்புறப்பட்டார்கள்.

௫. இந்த இராசாக்களெல்லாங் கூடி இஸ்ரவேலோடே யுத்தம்பண்ணவந்து, ஏகமாய் மேரோம் என்ற தண்ணீரண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

௬. அப்போது கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது; அவர்களுக்குப் பயப்படாயாக. ஏனெனில், நாளை இந்நேரத்திலே நாம் அவர்களையெல்லாம் இஸ்ரவேலுக்குமுன்பாகவெட்டுண்டவர்களாக ஒப்புக்கொடுப்போம். நீ அவர்கள் குதிரைகளின் குதிகால்நரம்புகளை அறவெட்டி அவர்கள் ஆயுதங்களை அக்கினியாற் சுட்டெரிக்கக்கடவாயென்றார்.

௭. யோசுவாவும், அவனோடே கூட யுத்தசனம் அனைத்தும் அகப்பமில் மேரோம் தண்ணீரண்டையிலிருக்கிற அவர்களிடத்தில் வந்து அவர்கள்மேல் விழுந்தார்கள்.

௮. கர்த்தர் அவர்களை இஸ்ரவேலின் கையில் ஒப்புக்கொடுத்தார். அவர்களை முறியடித்துப் பெரிய சீதோன்மட்டுக்கும், உப்பளங்களமட்டுக்கும், கிழக்கேயிருக்கிற மிஸ்பே பள்ளத்தாக்குமட்டுக்குந் துரத்தி அவர்களில் ஒருவரும் மீதியாகாதேபோகுமளவும் அவர்களை வெட்டிப்போட்டார்கள்.

௯. யோசுவா கர்த்தர் தனக்குச் சொன்னபடி அவர்களுக்குச் செய்து, அவர்கள் குதிரைகளின் குதிகால்நரம்புகளை அறவெட்டி, அவர்கள் இரதங்களை அக்கினியாற் சுட்டுப்போட்டான்.

௰. அக்காலத்திலே யோசுவா திரும்பிக்கொண்டு ஆத்சோரைப் பிடித்து, அதின் இராசாவைப் பட்டயத்தினாலே வெட்டிப்போட்டான். ஏனென்றால், ஆத்சோர் முதல் அந்த இராச்சியங்களுக்கெல்லாந் தலையான பட்டணமாயிருந்தது.

௰௧. அதிலிருந்த ஆத்துமாக்களையெல்லாம் பட்டயக்கருக்கினாலே வெட்டிச் சங்காரம்பண்ணினார்கள். சுவாசமுள்ளதொன்

றும் மீதியானதில்லை. ஆத்சோரையோ அக்கினியாலே சுட்டுப்போட்டான்.

௰௨. அந்த இராசாக்களுடைய எல்லாப் பட்டணங்களையும், அவைகளுடைய எல்லா இராசாக்களையும் யோசுவா பிடித்துப் பட்டயக்கருக்கினால் அழித்துக் கர்த்தருடைய ஊழியக்காரனாகிய மோசே கற்பித்தபடி அவர்களைச் சங்காரம்பண்ணினான்.

௰௩. ஆனால் தாங்கள் அரணிப்போடேயிருந்த பட்டணங்களையெல்லாம் இஸ்ரவேல் சுட்டெரித்துவிடாமல் வைத்தார்கள். ஆத்சோரைமாத்திரம் யோசுவா சுட்டெரித்துவிட்டான்.

௰௪. அந்தப் பட்டணங்களின் ஆஸ்தியையும், மிருகஜீவன்களையுமெல்லாம் இஸ்ரவேல் புத்திரர் கொள்ளையிட்டுக்கொண்டார்கள். ஆனால் எல்லா மனுஷரையும் பட்டயக்கருக்கினால் அழித்துத்தீருமட்டும் வெட்டிப்போட்டார்கள். சுவாசமுள்ள தொன்றையும் அவர்கள் மீதியாக வைத்ததில்லை.

௰௫. கர்த்தர் தம்முடைய ஊழியக்காரனாகிய மோசேக்கு எப்படிக் கற்பித்திருந்தாரோ அப்படி மோசே யோசுவாவுக்குக் கற்பித்திருந்தான். அப்படியே யோசுவா செய்தான். கர்த்தர் மோசேக்குக் கற்பித்ததிலொன்றையும் அவன் தாழ்ச்சியாகவிட்டதில்லை.

௰௬. இந்தப்பிரகாரமாக யோசுவா சேயீருக்குப் போகிற மொட்டைப் பர்வதந்துவக்கிலீபனோனின் பள்ளத்தாக்கில் எர்மோன் பருவதத்தடியிலிருக்கிற பாகால் காத்மட்டுமுள்ள அந்த முழுத்தேசமாகிய மலைகளையும், தெற்குச்சீமையாவையும், கோசென் சீமையாவையும், சமனான பூமியையும், நாட்டுப்புறத்தையும், இஸ்ரவேலின் பர்வதங்களையும், அதின் சமனான பூமியையும் பிடித்து,

௰௭. அவைகளின் இராசாக்களையெல்லாம் பிடித்து, அவர்களை வெட்டிக்கொன்றுபோட்டான்.

௰௮. அநேக நாளாய் யோசுவா அந்த இராசாக்களோடெல்லாம் யுத்தம்பண்ணினான்.

௰௯. கிபெயோனின் குடிகளாகிய ஏவியரைத்தவிர ஒரு பட்டணமும் இஸ்ரவேல் புத்திரரோடே சமாதானம்பண்ணினதில்லை. எல்லாப் பட்டணங்களையும் யுத்தம்பண்ணிப் பிடித்தார்கள்.

௨௰. ஏனெனில், யுத்தம்பண்ண இஸ்ரவேலுக்கெதிராக வரும்படிக்கு அவர்கள் தங்கள் இருதயத்தை அழுத்தமாக்கினதும், இப்படியே அவர்கள் மேல் இரக்கம் உண்டாகாமற் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி அவர்களையழித்துச் சங்காரம்பண்ணினதுங் கர்த்தரால் வந்தகாரியமாயிருந்தன.

௨௧. அக்காலத்திலே யோசுவா வந்து மலைத்தேசமாகிய எபிரோனிலும், தெபீரிலும், ஆனாபிலும், யூதாவின் சகல பர்வதங்களிலும், இஸ்ரவேலின் சகல பர்வதங்களிலுமிருந்த ஏனாக்கியரை நிக்கிரகம்பண்ணி, அவர்களை அவர்கள் பட்டணங்களோடுங் கூடச் சங்கரித்தான்.

௨௨. இஸ்ரவேல் புத்திரரின் தேசத்தில் ஏனாக்கியர் மீதியாக வைக்கப்பட்டதில்லை. காத்சாவிலும், காத்திலும், அஸ்தோத்திலுமாத்திரஞ் சிலர் மீதியானார்கள்.

௨௩. அப்படியே யோசுவா தேசமனைத்தையுங் கர்த்தர் மோசேயோடே சொன்னபடியெல்லாம் பிடித்து, அதை இஸ்ரவேலருக்கு அவர்கள் கோத்திரங்களுடைய பங்குகளின்படியே சுதந்தரமாகக் கொடுத்தான். யுத்தம்பண்ணி ஓய்ந்ததினாலே தேசம் அமைதலாயிற்று.

## ௰௨. அதிகாரம்.

[(க) யோசேபிடித்துத் தந்த இரண்டிராசாக்களின் தேசங்களையும், (எ) யோர்தானதியின் அப்புறத்தில் யோசுவா முறியடித்த முப்பத்தொரு இராசாக்களையுங் குறித்தது.]

யோர்தானுக்கப்பாலே சூரியன் உதிக்கிற திசையிலே இஸ்ரவேல் புத்திரர் முறியடித்த தேசத்தின் இராசாக்களும், அர்னோன் நதி துவக்கி எர்மோன் பர்வதமட்டுக்கும், கிழக்கே சமனான பூமியெல்லைமட்டுக்குஞ் சுதந்தரித்துக்கொண்ட அவர்களுடைய தேசமுமாவன்;

௨. எஸ்போனிற் குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய சீகோன் அவன் அர்னோன் நதியோரத்திலிருக்கிற ஆரோவேரும், நதியின் நடுமையமும் பாதி கீலேயாத்தும் நதி துவக்கி அம்மோன் புத்திரரின் எல்லையான யாபோக்காறுமட்டுக்கும்,

௩. சமனான வெளி துவக்கிக் கிழக்கேயிருக்கிற கின்னேரோத்கடல்மட்டுக்கும், பெத்எசிமோத்வழியாய்க் கிழக்கேயிருக்கிற சமனான வெளியின் கடலாகிய உப்புக்கடல்மட்டுமிருக்கிறதையும், தெற்கே அஸ்தோத்பிஸ்காவுக்குத் தாழ்வாயிருக்கிறதையும் ஆண்டிருந்தான்.

௪. இராட்சதரில் மீதியான பாசானின் இராசாவாகிய ஓகின் எல்லையையுஞ் சுதந்தரித்துக்கொண்டார்கள். அவன் அஸ்தரோத்திலும், எதிரேயிலும் வாசம்பண்ணி,

௫. எர்மோன் பர்வதத்தையும், சல்காவையும், கெசூரியர், மாகாத்தியர் எல்லைமட்டுக்கும், எஸ்போனின் இராசாவாகிய சீகோனின் எல்லையாயிருந்த பாதி கீலேயாத்மட்டுக்குமிருக்கும் பாசான் அனைத்தையும் ஆண்டிருந்தான்.

௬. அவர்களைக் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசேயும் இஸ்ரவேல் புத்திரரும் முறியடித்தார்கள். அந்தத் தேசத்தைக் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே ரூபேனியருக்

ரும், காதியருக்கும், மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்கும் சுதந்தரமாகக்கொடுத்தான்.

எ. ஆனால், யோர்தானுக்கிப்பாலே மேற்கே லீபனோனின் பள்ளத்தாக்கிலிருக்கிற பாகால் காத்முதற்கொண்டு சேயீருக்கேறிப்போகிற மொட்டை மலைமட்டும், மலைகளிலும், பள்ளத்தாக்குகளிலும், சமனான பூமியிலும், மலைகளுக்கடுத்த புறங்களிலும், வனாந்தரத்திலும், தெற்குச்சீமையிலுமிருக்கிறதும்,

அ. யோசுவா இஸ்ரவேல் கோத்திரங்களுக்குச் சுதந்தரமாகப்பங்கிட்டதுமான ஏத்தியர், எமோரியர், கானானியர், பெரிசியர், ஏவியர், எபூசியருடைய தேசத்திலிருந்தவர்களும், யோசுவாவும் இஸ்ரவேல் புத்திரரும் முறியடித்தவர்களுமான இராசாக்களானவர்கள்

கூ. எரிகோவின் இராசாவும், பெத்தேலுக்கிட்டவிருக்கிற ஆயியின் இராசாவும்,

௰. எருசலேமின் இராசாவும், எபிரோனின் இராசாவும்,

௰௧. யர்முத்தின் இராசாவும், லாகீசின் இராசாவும்,

௰௨. எக்லோனின் இராசாவும், கேசேரின் இராசாவும்,

௰௩. தெபீரின் இராசாவும், கெதேரின் இராசாவும்,

௰௪. ஒர்மாவின் இராசாவும், ஆராத்தின் இராசாவும்,

௰௫. லிப்னாவின் இராசாவும், அதுல்லாமின் இராசாவும்,

௰௬. மக்கெதாவின் இராசாவும், பெத்தெலின் இராசாவும்,

௰௭. தப்பூவாவின் இராசாவும், எப்பேரின் இராசாவும்,

௰௮. அப்பெக்கின் இராசாவும், லசரோனின் இராசாவும்,

௰௯. மாதோனின் இராசாவும், ஆத்சோரின் இராசாவும்,

௨௰. சிம்ரோன்மேரோனின் இராசாவும், அக்சாப்பின் இராசாவும்,

௨௧. தானாக்கின் இராசாவும், மெகிதோவின் இராசாவும்,

௨௨. கெதேசின் இராசாவும், கர்மேலுக்கடுத்த யக்கினேயாமின் இராசாவும்,

௨௩. நாப்போத்தோருக்கடுத்த தோரின் இராசாவும், கில்காலுக்கடுத்த சாதிகளின் இராசாவும்,

௨௪. திர்சாவின் இராசாவுந்தானே. இவர்களெல்லாம் முப்பத்தொரு இராசாக்கள்.

## ௰௩. அதிகாரம்.

[(க) செயிக்கப்படாத தேசத்தினெல்லை (அ) இரண்டரைக் கோத்திரத்தின் சுதந்தரம். (௰௪) (௩௩) கர்த்தரும் அவருக்கிடும்பலிகளும் லேவியர்களுக்குச் சுதந்தரம். (௰௫) ரூபெனின் சுதந்தரத்தினெல்லைகள். (௨௨) பாலாமைக்கொன்றது. (௨௪) காத்புத்திரர்களுக்கு, (௨௯) மனாசே அரைக்கோத்திரத்திற்குரிய தேசத்தினெல்லைகள்]

யோசுவா முதிர்ந்தவனும், வயதுசென்றவனுமாகையில், கர்த்தர் அவனோடே சொன்னதாவது; நீ முதிர்ந்தவனும், வயதுசென்றவனுமானாய்; சுதந்தரித்துக்கொள்ளவேண்டிய மற்றச்சீமையோவெனில் மகாவிஸ்தாரமானது.

௨. என்னவெனில், எகிப்துக்கு கெதிரான சீகோர் நதி துவக்கிக் கானானியரைச்சேர்ந்ததாய் எண்ணப்படுகிற வடக்கேயிருக்கும் எக்கிரோனின் எல்லைமட்டுமிருக்கிற பெலிஸ்தரின் எல்லாவெல்லைகளும், கெசூரி அனைத்தும்,

௩. காத்சா, அஸ்தோத், அஸ்கலோன், காத், எக்கிரோனென்கிற பட்டணங்களிலிருக்கிற பெலிஸ்தருடைய ஐந்து அதிபதிகளின் சீமையும், ஆவியரின் சீமையும்.

௪. தெற்கே துவக்கி ஆப்பெக்மட்டுக்கும் இருக்கிற கானானியரின் சகல தேசமும், சீதோனியருக்கடுத்த மெயாராவும்,

௫. கிப்லியரின் சீமையும் சூரியோதயப்புறத்தில எர்மோன் மலையின் அடியிலிருக்கிற பாகால்காத் முதற்கொண்டு, ஏமாத்திற்குட் பிரவேசிக்குமட்டுமுள்ள லீபனோன் அனைத்தும்,

௬. லீபனோன் துவக்கி உப்பளங்கள்மட்டும் மலைகளிற்குடியிருக்கிற யாவருடைய சீமையும், எல்லாச் சீதோனியருடைய சீமையுந்தானே. நாம் அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்துவோம். நாம் உனக்குக் கற்பித்தபடியே நீ இஸ்ரவேலுக்குச் சுதந்தர எல்லைகளின் சீட்டுகளைமாத்திரம் போட்டு,

எ. இப்போது இந்தத்தேசத்தை ஒன்பது கோத்திரங்களுக்கும், மனாசேயின் பாதிக் கோத்திரத்திற்குஞ் சுதந்தரமாகப் பங்கிடென்றார்.

அ. ஏனென்றால், அதின் மற்றப்பாதிக் கோத்திரத்தாரும், ரூபெனியரும், காதியரும் தங்கள் சுதந்தரத்தையடைந்து தீர்ந்தது. அதைக் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே யோர்தானுக்கப்பாலே சூரியோதய திசையிலே அவர்களுக்குக் கொடுத்தான்.

கூ. என்னவெனில், அர்னோன் நதியோரத்திலிருக்கிற அரோவேரும், நதியின் நடுமையத்திலிருக்கிற பட்டணமுந் துவக்கி தீபோன மட்டுமிருக்கிற மெதேபாவின் சமனான சகல பூமியையும்,

௰. எஸ்போனில் ஆண்ட எமோரியரின் இராசாவாகிய சீகோனுக்கு அம்மோன் புத்திரரின் எல்லைமட்டுமிருந்த சகல பட்டணங்களையும்,

௰௧. கிலெயாத்தையும், கெசூரியர், மாகாத்தியருடைய எல்லையையும், எர்மோன் பர்வதம் எல்லாவற்றையும்,

௰௨. அஸ்தரோத்திலும், எத்ரேயிலும் ஆண்டு, மோசே முறியடித்துத் துரத்தின இராட்சதரில் மீதியாயிருந்த பாசானின் இராசாவாகிய ஓகுக்குச் சொந்தமாயிருந்த முழுப்பாசானையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

௰௩. இஸ்ரவேல்புத்திரரோவெனிற் கெசூரியரையும், மாகாத்தியரையுந் துரத்திவிடாதேபோனார்கள். அவர்கள் இந்நாள்வரைக்கும் இஸ்ரவேலின் நடுவே குடியிருக்கிறார்கள்.

௰௪. லேவியரின் கோத்திரத்திற்கு மாத்திரம் அவன் சுதந்தரங்கொடுத்ததில்லை. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருடைய தகனபலிகட்டுத்தவைகளே அவனுக்கு அவர் சொன்னபடி அவர்களுடைய சுதந்தரம்.

௰௫. அப்படியே மோசே ரூபேன்புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்களுடைய வம்சங்களுக்குத் தக்கதாகச் சுதந்தரங்கொடுத்தான்.

௰௬. அர்னோன் நதியோரத்திலிருக்கிற ஆரோவேரும், நதியின் நடுமையத்திலிருக்கிற பட்டணமுந்துவக்கியிருக்கிற மெதெபாவின் சமனான சகலபூமியும்,

௰௭. சமனான பூமியிலிருக்கிற எஸ்போனும், அதின் எல்லாப்பட்டணங்களுமாகிய தீபோன், பாமொத்பாகால், பெத்பாகால் மெயோன்,

௰௮. யாத்சாகே, தெமொத், மேத்பாத்,

௰௯. கிரியத்தாயீம், சிப்மா, பள்ளத்தாக்கின் மலையிலுள்ள செரேத்சகார்,

௨௰. பெத்பெயோர், அஸ்தோத்பிஸ்கா, பெத்எசிமோத்முதலான,

௨௧. சமனான பூமியிலுள்ள எல்லாப்பட்டணங்களும், எஸ்போனில் ஆண்டிருந்த சீகோனென்ற எமோரியருடைய இராசாவின் இராச்சியமனைத்தும் அவர்கள் எல்லைக்குள்ளாயின. ஏனெனில், இவனையும், தேசத்திலே குடியிருந்து சீகோனின் சுபையத்தாராயிருந்த ஏவி, ரெக்கேம், சூர், ஊர், ரேபா என்ற மீதியாவின் பிரபுக்களையும் மோசே வெட்டிப்போட்டான்.

௨௨. இஸ்ரவேல் புத்திரர் வெட்டின மற்றவர்களோடேகூடப் பேயோரின் குமாரனாகிய பாலாமென்ற குறிகாரனையும், பட்டயத்தினாலே கொன்றுபோட்டார்கள்.

௨௩. அப்படியே யோர்தானும், அதற்கடுத்ததும் ரூபேன் புத்திரரின் எல்லையாயின். இந்தப்பட்டணங்களும், இவைகளின் கிராமங்களும் ரூபேன் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படிவந்த சுதந்தரம்.

௨௪. காத் புத்திரரின் கோத்திரத்திற்கு மோசே அவர்கள் வம்சங்களுக்குத் தக்கவையாகக்கொடுத்தவையென்னவெனில்,

௨௫. யாசேரும், கிலேயாத்தின் எல்லாப்பட்டணங்களும், ரபாவுக்கெதிரேயிருக்கிற ஆரோவேர்மட்டுமுள்ள அம்மோன் புத்திரரின் பாதித்தேசமும்,

௨௬. எஸ்போன்துவக்கி ராமாத்மிஸ்பெமட்டும் பெத்தொனிம்மட்டுமிருக்கிறதும், மக்னாயீந்துவக்கித் தெபீரின் எல்லைமட்டுமிருக்கிறதும்,

௨௭. எஸ்போனின் இராசாவாகிய சீகோனுடைய இராச்சியத்தின் மற்றப்பங்காகிய பள்ளத்தாக்கிலிருக்கிற பெத்தாராமும், பெத்நிம்ராவும், சுக்கோத்தும், சாப்போனும் யோர்தான்மட்டுமிருக்கிறதும், கிழக்கே யோர்தானின்கரையோரமாய்க் கின்னெரேத்கடலின் கடையாந்தரமட்டுமிருக்கிறதும் அவர்கள் எல்லைக்குள்ளாயின.

௨௮. இந்தப்பட்டணங்களும், இவைகளின் கிராமங்களுங் காத்புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்களின்படி வந்த சுதந்தரம்.

௨௯. மனாசேபுத்திரரின் பாதிக் கோத்திரத்திற்கும் மோசே அவர்கள் வம்சத்திற்குத் தக்கதாகக்கொடுத்தான்.

௩௰. மக்னாயீந்துவக்கிப் பாசானின் இராசாவாகிய ஓகினமுழு இராச்சியமாயிருக்கிற பாசான் அனைத்தும், பாசானிலுள்ள யாவீரின் சகல ஊர்களுமான அறுபதுபட்டணங்கள் அவர்கள் எல்லைக்குள்ளாயின.

௩௧. பாதிகிலேயாத்தையும், பாசானிலே அஸ்தரோத் எத்ரேயி என்ற ஓக் இராச்சியத்தின்பட்டணங்களையும் மனாசேயின்குமாரனாகிய மாகிரின்பாதிப்புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்களின்படிக்கொடுத்தான்.

௩௨. மோசே சூரியோதயதிசையில், எரிகோவின் கிட்ட யோர்தானுக்கக்கரையிலிருக்கிற மோவாபின் சமனான வெளிகளிற் சுதந்தரமாகக் கொடுத்தவைகள் அவைதானே.

௩௩. ஆனால் லேவி கோத்திரத்திற்கு மோசே சுதந்தரங்கொடுத்ததில்லை. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அவர்களுக்குச் சொல்லியிருக்கிறபடி அவரே அவர்களுடைய சுதந்தரம்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) ஒன்பதரைக்கோத்திரத்தார் சீட்டின்படிச் சுதந்தரத்தை அடையவேண்டுமென்பது. (௬) காலேப் எபிரோனைச் சுதந்தரமாகப்பெற்றது.]

கானான் தேசத்திலே இஸ்ரவேல்புத்திரர் சுதந்தரித்துக்கொண்டதையோவெனில், ஆசாரியனாகிய எலெயாசாரும், நூனின்குமாரனாகிய யோசுவாவும், இஸ்ரவேல் புத்திரருடைய கோத்திரபிதாக்களின் தலைவருங் கர்த்தர் மோசேயைக்கொண்டு

கறபிததபடிச சீடடுபோடடு, அவர்களுக குச சுதநதரமாகபபஙகிடடார்கள.

௨. ஆருககெனறுல,ஒனபதரைககோததிர ஙகளுக்குததானே.

௩. ஏனெனில, இரணடரைககோததிரஙக ளுககு மோசேயோர்தானுககபபாலே சுத நதரஙகொடுத்தான. லேவியருககோவெனி ல, அவன அவர்கள நடுவேசுதநதரஙகொடு ககவிலலை.

௪. ஏனெனில, மனுசே, எபபிராயீமெனற யோசேபபின புததிரர் இரணடுகோததிரங களானது. ஆனால் அவர்கள் லேவியருககுத் தேசததிலேபஙகுகொடாமல குடியிருககு மபடடணஙகளையும, அவர்களுடைய ஆடு மாடுகளுககும ஆஸதிககுமாக அவைகளின பேடடைகளையுமாததிரம அவர்களுககுக கொடுததார்கள.

௫. கர்ததர் மோசேககுக கறபிததபடி இஸ்ரவேல புததிரர்செயது, தேசததைப பஙகிடடார்கள.

௬. அபபோது யூதாவினபுததிரர் கில்கா விலே யோசுவாவணடைககுச சேர்நதார் கள. அவனோடேகேநேசியனான எபபுன்னே யின குமாரனாகிய காலேப்சொனனதாவது; காதேஸ்பர்னேயாவிலே கர்ததர் எனக்காக வும, உமககாகவும பராபரனுடைய மனு ஷனாகிய மோசேயோடே சொனனவார்த் தையை நீர் அறிவீர்.

௭. தேசத்தைப பார்ததறியக கர்ததரின தாசனாகிய மோசே எனனைககாதேஸ்பர் னேயாவிலிருநதனுபபுகிறபோது, எனககு நாறபது வயதாயிருநதது. என்னிருதயததி லிருநதபடியே அவருககு மறுசெயதிகொ ணடுவநதேன.

௮. ஆனால எனனோடேகூட ஏறிபபோய வநத எனனுடைய சகோதரர் சனததின இருதயததைக் கரையபபணணிரூர்கள. நானோவெனில, எனபராபரனாகிய கர்தத ரை யுததமமாயப பினபறறினேன்.

௯. அந்நாளிலே மோசே நீ என பராபர னாகிய கர்ததரை யுததமமாயப பினபறறின படியினாலே, உன்காலமிதித்த சீமை யுனக கும, உன பிளளைகளுககும எனறைககுஞ சுதநதரமாயிருக்கக்கடவதெனறு திடமா க ஆணையிடடார்.

௰. இபபோதும இதோ கர்ததர்சொனன படி எனனையுயிரோடேவைததார். இஸ்ர வேல வனாந்தரததிலநடமாடுகையில கர்த தர் அநதவார்த்தையை மோசேயோடே சொலலி, இபபோதுநாறபத்தைநது வருஷ மாயிறறு. இபபோதும இதோ இந்நாளில நான எண்பததைநது வயதுளளவன.

௰௧. மோசே எனனை யனுபபுகிற நாளில எனககிருநத அநதபபலன இனனும இந நாளில எனககிருககிறது. யுததத்திறகும போககும, வரததுமாயிருககிறதறகும அப போது எனககிருநதபுஷடி இபபோதும எனககிருககிறது.

௰௨. இபபோதும கர்ததர் அநநாளிலே சொனன இநதமலைச சீமையையெனககுத தாரும. ஏனெனில, அஙகே ஏனாக்கியரும, அரணிபபானபெரியபடடணஙகளும உண டெனறு நீர் அநநாளிலேகேடடீர். கர்ததர் சொனனபடி அவர்களைத துரததிவிடக கர்த தர் எனனோடிருபபாராககுமெனறுன.

௰௩. அபபோது யோசுவா அவனை யாசீர் வதித்து, அபபடியே எபபுனனேயினகுமார னாகிய காலேபுககு எபிரோனைச சுதநதரமா கக்கொடுத்தான.

௰௪. இபபடியே கேனேசியனான எபபுன னேயின குமாரனாகிய காலேப் இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தரை யுத்தமமாயப பின பறறினபடியினாலே, எபிரோனஇந்நாளமடடு மிருககிறபடி அவனுக்குச்சுதநதரயாயிறறு.

௰௫. முதல எபிரோனுககு ஏனாககியரிற்பெ ரிய மனுஷனாயிருநத அர்பாவின்படடண மெனறு பேரிருநதது. தேசம யுத்தமிலலா மல அமர்நதது.

## ௰௫. அதிகாரம்.

[(௧) விகிதபபடிககுணடான யூதாகோதகி ரததின காணியாட்சியின எலலைகள. (௰௩) காலேபினுடையடஙகும் செயறுமம, (௰௬) ஒத்நியேலதன பராக்கிரமததிற்காகக் கா லேப் குமாரததியாகிய அக்சாளைமனைவி யாகபபெறறது. (௰௮) அவளபிதாவினு டைய ஆசீர்வாதமபெறறது. (௨௧) யூதா புததிரரின படடணஙகள. (௬௩) எபூசிய ரைச செயிககக்கூடாதது.]

யூதாபுததிரரின கோததிரததிறகவர்க ளுடைய வம்சஙகளினபடி யுணடா னவிகிதங கடையாநதரமான தெனபுறததி லே ஏதோமின எலலையருகான சீனவனாந தரம.

௨. தெனபுறமான அவர்களுடைய எலலை உபபுககடலின கடைசியில தெறகுமுகமா யிருககிற முனைதுவககி,

௩. தெனபுறத்திலிருக்கிற அககோராபீமின மேடுகளுககும, அஙகேயிருநது சீனுககுப போய்த தெறகேயிருககிற காதேஸ்பர்னே யாவுககேறி எஸ்ரோனைககடநது ஆதாருக கேறிக கறகாவைச்சுறறிபபோய,

௪. அஸ்மோனுககும, அஙகேயிருநது எகி ப்தின ஆறறுககுபபுறபபடடுக கடலமடடுக குமபோயமுடியும. இது உங்களுககுததென புறமான எலலையாயிருககுமெனறுன.

௫. கிழபபுறமானஎலலை யோர்தானுடைய முகததுவாரமடடுமிருக்கிற உபபுக் கடல். வடபுறமான எலலையோர்தானின முகதது வாரமிருககிறகடலின முனைதுவககி,

௬. பெத்ஒக்லாவுக்கேறி, வடக்கேயிருக்கிற பெத்அரபாவைக்கடந்து ரூபேனின் குமாரனாகிய போகனின் கல்லுக்கேறிப் போய்,

௭. அப்புறம் ஆகோர் பள்ளத்தாக்கைவிட்டு தெபீருக்கேறி, வடக்கே ஆற்றின் தென்புறமான அதும்மீமின் மேட்டுக்கு முன்பாக இருக்கிற கில்காலுக்கு நேராகவும், அங்கேயிருந்து என்சேமேசின் தண்ணீருக்கும் போய், என்ரொகேலென்கிற கிணற்றிற்குப் புறப்பட்டு,

௮. அப்புறம் எபூசியர் குடியிருக்கிற எருசலேமுக்குத் தென்பக்கமாய் இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கைக்கடந்து, வடக்கேயிருக்கிற ரெப்பாயீமருடைய பள்ளத்தாக்கின் கடைசியிலே மேற்காக இன்னோம் பள்ளத்தாக்கின் முன்னிருக்கிற மலையின் சிகரமட்டும் ஏறிப்போய்,

௯. அந்தமலையின் சிகரத்திலிருந்து நெப்தோவாவுடைய நீரூற்றிற்குப் போய், எப்பிரோன் மலையின் பட்டணங்களுக்குப் புறப்பட்டுக் கீரியாத் எயாரீமாகிய பாலாவுக்குப் போய்,

௰. பாலாவிலிருந்து மேற்கே சேயீர்மலைக்குத் திரும்பி வடக்கேயிருக்கிற கெசலோனாகிய எயாரீம்மலைக்குப் பக்கமாகப் போய்ப் பெத்சேமேசுக்கிறங்கித் திம்னாவுக்குப் போய்,

௰௧. அப்புறம் வடக்கேயிருக்கிற எக்கிரோனுக்குப் பக்கமாகப் புறப்பட்டுச் சிக்ரோனுக்குப் போய்ப் பாலாமலையைக் கடந்து, யாப்நெயேலுக்குப் புறப்பட்டுக் கடலிலே முடியும்.

௰௨. மேற்புறமான எல்லை பெரியசமுத்திரம். இது யூதாபுத்திரருக்கு அவர்களுடைய வம்சங்களின்படிச் சுற்றிலுமிருக்கும் எல்லை.

௰௩. எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்கோவென்றால், யோசுவா, கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டபடி, ஏனாக்கின் தகப்பனாகிய அர்பாவின் பட்டணமான எப்ரோனை யூதாபுத்திரரின் நடுவே பங்காகக் கொடுத்தான்.

௰௪. ஏனாக்குக்குப் பிறந்து அங்கேயிருந்த சேசாய், அகிமான், தல்மாயென்ற ஏனாக்கின் மூன்று குமாரரைக் காலேப் துரத்திவிட்டு,

௰௫. அங்கேயிருந்து தெபீரின் குடிகளண்டைக்குப் போயேறினான். முற்காலத்திலே தெபீரின்பேர் கீரியாத் சேப்பேர்.

௰௬. கீரியாத் சேப்பேரை யடங்கடித்துப் பிடிக்கிறவனுக்கு என் குமாரத்தியாகிய அக்சாளை விவாகம்பண்ணிக்கொடுப்பேனென்று காலேப் சொன்னான்.

௰௭. அப்போது காலேபின் சகோதரனான கேனாசின் மகன் ஒத்னியேல் அதைப்பிடித்தான். ஆகையால் தன் குமாரத்தி அக்சாளை யவனுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்தான்.

௰௮. அவள் பிரவேசம்பண்ணுகையில் என் தகப்பனை யொருவயல்வெளியைக்கேட்பேனென்று அவனைச் சம்மதிப்பண்ணிக்கொண்டு கழுதையின்மேலிருந்திறங்கினாள். காலேப் அவளோடே உனக்கென்னவேண்டுமென்றான்.

௰௯. அப்போது அவள் ஒரு ஆசீர்வாதத்தை யெனக்குக்கட்டளையிடவேணும். என்னென்றால், வறட்சியான நிலத்தை எனக்குத் தந்தீர். நீரூற்றுகளையும் எனக்குத் தாருமென்றாள். அப்போது அவளுக்கு மேற்புறத்திலும், கீழ்ப்புறத்திலும் நீரூற்றுகளுள்ள நிலங்களைக் கொடுத்தான்.

௨௰. யூதாபுத்திரருக்கு அவர்களுடைய வம்சங்களின்படி உண்டான சுதந்தரமென்னவெனில்,

௨௧. கடையாந்தரத் தென்புறமான ஏதோமின் எல்லைக்கு நேராய யூதாபுத்திரரின் கோத்திரத்திற்கிருக்கும் பட்டணங்களாவன; கப்சேயேல், ஏதேர், யாகூர்.

௨௨. கீனா, திமோனா, அதாதா.

௨௩. கேதேஸ், ஆத்சோர், இத்னான்,

௨௪. சீப், தேலெம், பெயாலோத்.

௨௫. ஆத்சோர், அதாத்தா, கீரியோத், எஸ்ரோனென்ற ஆத்சோர்,

௨௬. ஆமாம், சேமா, மொலாதா,

௨௭. ஆத்சார்காதா, எஸ்மோன், பெத்பாலெத்,

௨௮. ஆத்சார்சூவால், பெயேர்செபா, பிஸியோதியா,

௨௯. பாலா, ஈயிம், ஆத்செம்,

௩௰. எல்தோலாத், கெசீல், ஒர்மா,

௩௧. சிக்லாக, மத்மன்னா, சன்சன்னா,

௩௨. லெபாவோத், சில்கீம், ஆயின், ரிம்மோன், என்றவைகள். எல்லாப்பட்டணங்களும், அவைகளுடைய கிராமங்களைத்தவிர இருபத்தொன்பது.

௩௩. பள்ளத்தாக்குநாட்டில், எஸ்தவோல், சோரா, அஸ்னா,

௩௪. சனோகா, என்கன்னீம், தப்புவா, ஏனாம்,

௩௫. யர்மூத், அதுல்லாம், சோகோ, அசேக்கா,

௩௬. சாராயீம், அதித்தாயீம், கெதேரா, கெதெரோத்தாயீம், இந்தப்பட்டணங்கள் அவைகளுடைய கிராமங்களைத் தவிரப்பதினாலு.

௩௭. சேனான், அதாசா, மிக்தால்காத்,

௩௮. திலான், மிஸ்பே, யொக்தெயேல்,

௩௯. லாகீஸ், போஸ்காத், எக்லோன்,

௪௰. காபோன், லத்மாஸ், கித்லீஸ்,

௪௧. கெதெரோத், பெத்தாகோன், நாமா, மக்கெதா, இந்தப் பட்டணங்கள் அவைகளுடைய கிராமங்களைத் தவிரப்பதினாறு.

௪௨. லிப்னா, எத்தேர், ஆசான்,

௪௩. இப்தா, அஸ்னா, நெத்சீப்,

சச. கேகிலா, அகசீப், மறேசா, இநதப பட்டணஙகள அவைகளுடைய கிராமஙக ளைததவிர ஒன்பது.

சரு. ஏககிறோனும், அதின பேட்டைகளும், கிராமஙகளும,

சசூ. ஏக்கிறோன துவககிச சமுததிரமட டும அஸதோததின புறததிலிருககிற சகல ஊர்களும, அவைகளின கிராமஙகளும,

சஎ. அஸதோத தும, அதினபேட்டைக ளும், கிராமஙகளும், காத்சாவும, எகிப்தினநதி மட்டுமிருக்கிற அதில் பேட்டைகளும, கிரா மஙகளுநதானே பெரியசமுததிரமேஎலலை.

சஅ. மலைகளில், சாமீர், யததிர், சொகசோ,

சகூ. தனனு, தேபீராயிருககிற கீரியாத் சன்னு.

ருய. ஆனுப், எஸதெமொ, ஆனிம,

ருக. கோசேன, ஒலோன, கிலொ, இநதப் பட்டணஙகள அவைகளுடைய கிராமஙக ளைத தவிரபபதினொனறு.

ருஉ. ஆராப், தூமா, ஏசான,

ருங. யானும, பெததப்பூவா, அபபெக்கா,

ருச. உம்தா, ஏபிறோனாகிய கீரியாத்அர்பா, சீயோர், இநதபபட்டணஙகள அவைகளு டைய கிராமஙகளைததவிர ஒனபது.

ருரு. மாகோன, கர்மேல, சீப், யுததா,

ருசூ. இஸரெயெல், யொக்தெயாம், சனொவா,

ருஎ. காயின, கிபேயா, திம்னா, இநதப பட்டணஙகள அவைகளுடைய கிராமஙக ளைததவிரபபதது.

ருஅ. கல, கூல், பெத்சூர், கெதோர்,

ருகூ. மாருத், பெத், ஆனோத், எலதெக கோன, இநதபபட்டணஙகள அவைகளு டைய கிராமஙகளைத்தவிர ஆறு.

சூய. கீரியாத், ஏயாரீமாகிய கீரியாத், பாகால், ரபா, இநதபபட்டணங்கள அவை களுடைய கிராமஙகளைத தவிர இரணடு.

சூக. வனாநதரததில, பெத், அர்பா, மீதின, செக்காகக,

சூஉ. நிப்சான, உபபுபபட்டணம, என கேதி, இநதபபட்டணஙகள அவைகளு டைய கிராமஙகளைத்தவிர ஆறு.

சூங. எருசலேமிலே குடியிருநத எபூசி யனை யூதாபுததிரர் துரததிவிடக கூடா தேபோயிறறு. ஆகையால, இநநாளமட் டும எபூசியர் யூதா புததிரரோடே கூட எருசலேமிலே குடியிருககிறார்கள.

## யசூ. அதிகாரம்.

[(க) யோசேப புததிரர்களுடைய நாட டின சாதாரணமான எலலைகள. (ரு) எபபி ராயீமின காணியாட்சியான எலலைகள. (ய) கானானதேசத்தர்கள செயிக்கபபடாதது.]

யோசேப புததிரருககுவிழுநத சீட டினாலே அகபபட்ட விதிதம எரி கோவின கிட்டவிருக்கிறயோர்தானிலிருநது யோர்தானுககுக கிழககான தணணீருககுப போய, எரிகோதுவககிப பெதேலின மலைகளமட்டுமுளள வனாநதரவழியாகவும போய,

உ. பெதேலிலிருநது லூசுககுப புறப பட்டு, அர்கியினுடைய எல்லையாகிய அத தரோததைக்கடநது,

ங. மேறகே யப்லெததியரின எலலைக்கும், தாழவான பெதொரோனின எலலைமட்டு ககும், காசேர்மட்டுககுமஇறஙகிசசமுததிர மட்டுமபோயமுடியும.

ச. இதை யோசேபபின புததிரராகிய மனா சேயும, எபபிராயீமுஙசுதநதரிததார்கள.

ரு. எபபிராயீம புததிரருககு அவர்களுடை யவம்சஙகளினபடி உணடான சுதநதரத்தி னுடைய கிழககெலலை அததரோத அதார் துவககி மேலான பெதொரோனமட்டும போகினறது.

சூ. மேறகு எலலை மிகமேததாததிறகுவட ககாகப புறபபட்டுக கிழககே தானாத், சீலோவுககுத திருமபி, அதை யநோவாவுக் குக கிழககாகக்கடநது,

எ. யநோகாவிலிருநது அததரோததிறகும், நகராததிறகுமிறஙகி எரிகோகிட்ட வநது யோர்தானுககுப புறபபடும.

அ. தப்புவாவிலிருநது மேறகு எலலை கா னான் நதிககுபபோயசசமுததிரததிலேமுடி யும. இது எபபிராயீம புததிரரின கோததி ரததிறகு அவர்கள வமசஙகளினபடி யுண டான சுதநதரம.

கூ. பினனையும எபபிராயீம புததிரருககுக கொடுககபபட்ட பட்டணஙகளும, அவை களின கிராமஙகளுமெலலாம மனாசேபுததி ரருடையசுதநதரத்தினநடுவேயிருக்கினறன.

ய. காசேரிலேகுடியிருநத கானானைத் துரததிவிடாதேபோனார்கள. ஆகையால கானானர் இநநாளமட்டிமிருககிறபடி எபபி ராயீமருககுளளே குடியிருநது, பகுதிகட்டு கிறவர்களாயிருநது சேவிககிறார்கள.

## யஎ. அதிகாரம்.

[(க) மனாசேகோததிரததினவிதிதம. (எ) அதினஎலலை. (யஉ) கானானர்துரததபபடா தது. (யச) யோசேபபின குமாரர்கள மற றுமொரு விதிதத்தைபபெறறது.]

மனாசேகோததிரத்திறகும விதிதமுண டாயிறறு. ஏனெனில், அவனயோசேப புக்குமுததறபேறானவனாயிருந்தான. மனாசே யினமூததகுமாரனும், கீலேயாததினதகபப னுமான மாகீர்யுததமனுஷனானபடியினாலே கீலேயாததும், பாசானும் அவனுககுணடா யின.

உ. அபியேசேரின புததிரரும, ஏலேக்கின புத்திரரும், அஸரியேலின புத்திரரும், சேகே மின புததிரரும், எபபேரின புததிரரும், சேமி

தாவின புத்திரருமான மனாசேயினுடைய மற்றக்குமாரரின புத்திரராகிய அபியேசேரின வம்சங்களுக்குத்தக்க சுதந்தரங்கொடுக்கப்பட்டது. தங்கள வம்சங்களுக்குள்ளே அவர்களதானே யோசேப்புடையகுமாரனாகிய மனாசேயின ஆண்பிள்ளைகளாயிருந்தார்கள.

௩. மனாசேயின குமாரனாகிய மாகீருக்குப பிறந்த கிலேயாத்தினுடையகுமாரனான ஏப்பெரின மகனசெலாப்பேகாத்துக்கோவெனில குமாரத்திகளைத்தவிரக குமாரர்களில்லாதிருந்தார்கள. அவன குமாரத்திகளின நாமங்கள மக்லாள, நோகாள, ஒக்லாள, மில்க்காள, திர்சாள என்பவைகள.

௪. அவர்கள ஆசாரியனாகிய எலெயாசாருக்கும, நூனின்குமாரனாகிய யோசுவாவுக்கும், பிரபுக்களுக்கும் முன்பாகச்சேர்ந்துவந்து எங்களுக்கெங்கள சகோதரர்நடுவேசுதந்தரங்கொடுக்கக் கர்த்தர்மோசேக்குக் கற்பித்தாரென்றார்கள. ஆகையால அவர்கள தகப்பனுடைய சகோதரரினநடுவே அவர்களுக்குக் கர்த்தருடையவாக்கின்படி சுதந்தரங்கொடுத்தான.

௫. யோர்தானுக்கப்பாலேயிருக்கிற கிலேயாத் பாசானென்கிற தேசத்தைத்தவிர மனாசேக்குச சீட்டிலே விழுந்தது பத்துப்பங்குகளாயின.

௬. ஏனெனில, மனாசேயின குமாரத்திகள அவன குமாரருக்குள்ளே சுதந்தரம்பெற்றார்கள. மனாசேயின மற்றப்புத்திரருக்கோவென்றால கிலேயாத தேசமுண்டாயிற்று.

௭. மனாசேயின எல்லை, ஆசேர்துவக்கிச சீகேமின முன்னிருக்கிறமிக்மேத்தாவுக்கும், அங்கேயிருந்து வலதுபுறமாய என்தப்புவாகின குடிகளண்டைக்கும்போகின்றது.

௮. தப்புவாகின நிலம மனாசேயின வசமும, மனாசேயின எல்லையோடிருக்கிறதப்புவாகோவெனில, எப்பிராயீம புத்திரரின வசமுமாயின.

௯. அப்புறம அந்த எல்லை கானாவென்கிற ஆற்றுக்குப்போய, ஆற்றுக்குத தெற்காக இறங்குகின்றது. மனாசேயினுடைய பட்டணங்களின நடுவேயிருக்கிற அவ்விடத்துப பட்டணங்கள எப்பிராயீமுடையவைகள. மனாசேயின எல்லையாற்றுக்கு வடக்கேயிருந்து சமுத்திரத்திற்குப புறப்படுமுடியும.

௰. தெற்குச சீமை எப்பிராயீமுடையது. வடக்குச சீமை மனாசேயினுடையது. சமுத்திரம அதின எல்லையாயிருக்கும. வடக்கே ஆசேரையும கிழக்கே இசக்காரையுந்தொடுகின்றது.

௰௧. இசக்காரிலும ஆசேரிலுமிருக்கிறமூன்று சீமைகளாகிய பெத்செயானும, அதின ஊர்களும இப்லெயாமும, அதினஊர்களுந் தோரினகுடிகளும, அதினுடைய ஊர்களும் என்தோரினகுடிகளும், அதினுடைய ஊர்களுந்தானாகினகுடிகளும், அதினுடையஊர்களுமமெகிதோவினகுடிகளும, அதினுடைய ஊர்களும மனாசேயினுடையவைகள.

௰௨. மனாசேயின புத்திரர் அந்தப்பட்டணங்களின குடிகளைத்துரத்திவிடக்கூடாதே போயிற்று. ஏனெனிற கானானியர் அந்தச சீமையிலேதானே குடியிருக்கவேண்டுமென்றிருந்தார்கள.

௰௩. இஸ்ரவேல புத்திரர் பலத்தபோது கானானியரைத துரத்தவேதுரத்தாமல அவர்களைப பகுதிகட்டுகிறவர்களாக்கிக்கொண்டார்கள.

௰௪. யோசேப்பின்புத்திரர் யோசுவாவோடேபேசிக கர்த்தர் என்னையிதுவரைக்கும ஆசீர்வதித்து வந்ததினாலே நான சனம்பெருத்தவனாயிருந்தாலும நீரெனக்குச சுதந்தரமாக ஒரே விகிதத்தையும, ஒரேபங்கையுங் கொடுத்ததென்னவென்றார்கள.

௰௫. யோசுவா அவர்களுடனே, நீ பெருத்தசனமானால காட்டிலேபோயேறி, எப்பிராயீமின மலைகள உனக்குநெருக்கமாயிருக்கிறபடியினாலே அங்கேபெரிசியர் ரெப்பாயீமருடைய தேசத்திலே உனக்கிடமுண்டாக்கிக்கொள்ளென்றான்.

௰௬. அதற்கு யோசேப்புபுத்திரர் மலைகள எங்களுக்குக்கிடையாது. பள்ளத்தாக்குச சீமையிலிருக்கிற பெத்செயானிலும, அதின ஊர்களிலும, இஸ்ரவேலபள்ளத்தாக்கிலுங் குடியிருக்கிற எல்லாக கானானியரிடத்தில இருப்பு இரதங்கள உண்டென்றார்கள.

௰௭. ஆனால யோசுவா யோசேப்பு வீட்டாராகிய எப்பிராயீமுக்கும, மனாசேக்கும் சொன்னதாவது; நீசனம்பெருத்திருக்கிறாய. உனக்குப்பெரியபெலனுண்டு ஒருவிகிதமாத்திரம உனக்கிருக்கவேண்டாம.

௰௮. மலைகள உன்னுடையவைகளாயிருப்பவைகள். அவைகள காடானபடியினாலே அதைவெட்டு, அப்போது அவைகளினகடையாந்தரங்களமட்டும அது உன்னுடையதாயிருக்கும். ஏனென்றாற்கானானியருக்கு இருப்பு இரதங்களிருந்தாலும, அவர்கள பலத்தவர்களாயிருந்தாலும நீ யவர்களைத்துரத்திவிடுவாயென்றான.

## ௧௮. அதிகாரம்.

[(௧) சீலோவில கூடாரத்தைநிறுத்தினது. (௨) மீதியாயிருந்த தேசத்தைக்குறித்து ஏழுபங்காகப்பங்கிட்டது, (௰) யோசுவா சீட்டின்படி கொடுத்தது. (௰௧) பென்யமீனகோத்திரத்தார் விகிதத்தின எல்லை. (௨௧) அவர்களுடையபட்டணங்கள.]

இஸ்ரவேலபுத்திரரின சபையெல்லாஞ் சீலோவிலே கூடி அங்கே ஆசரிப்பு

கூடாரத்தை நிறுத்தினார்கள். ஏனென்றால், தேசம் அவர்களுக்குமுன்பாகக் கீழ்ப்பட்டிருந்தது.

௨. ஆனால் இஸ்ரவேல் புத்திரரில் தங்கள் சுதந்தரத்தை இன்னம்பங்கிட்டுக்கொள்ளாத ஏழு கோத்திரங்களிருந்தன.

௩. ஆகையால் யோசுவா இஸ்ரவேல்புத்திரரோடேசொன்னதாவது; உங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக்கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளவருகிறதற்கு நீங்கள் எந்தமட்டும் அசதியாயிருப்பீர்கள்.

௪. கோத்திரத்திற்கு மும்மூன்று மனுஷரைத்தெரிந்தெடுங்கள். அவர்கள் எழுந்து புறப்பட்டுத்தேசத்திலே சுற்றித் திரிந்து, அதைத் தங்கள் சுதந்தரத்திற்குத் தக்கதாக எழுதி என்னண்டைக்குக்கொண்டுவரும்படிக்கு அவர்களையனுப்புவேன்.

௫. அதை யேழுபங்காகப் பகிரக்கடவர்கள். யூதா தெற்கேயிருக்கிறதன்எல்லையிலும், யோசேப்பின்வீட்டார் அதற்குவடக்கேயிருக்கிற தங்கள்எல்லையிலும்,நிலைநிற்கட்டும்.

௬. நீங்கள்தேசத்தை யேழுபங்காக எழுதி இங்கே என்னண்டைக்குக்கொண்டுவாருங்கள். அப்போது இவ்விடத்திலே நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக உங்களுக்குச் சீட்டுகளைப்போடுவேன்.

௭. ஏனெனில், லேவியருக்குங்கள் நடுவே பங்கில்லை. அதேதென்றால் கர்த்தருடைய ஆசாரியப்பட்டம் அவர்கள்சுதந்தரமானது. காத்தும்,ரூபெனும்,மனாசேயின்பாதிக்கோத்திரமுமோவெனில், யோர்தானுக்கப்பாலே கிழக்கே கர்த்தரின் ஊழியக்காரனாகியமோசே தங்களுக்குக்கொடுத்த தங்கள் சுதந்தரத்தைவாங்கித் தீர்ந்ததென்றான்.

௮. அப்போது அந்தமனுஷர் எழுந்து புறப்பட்டுப்போனார்கள். நீங்கள் போய்த் தேசத்திலே சுற்றித்திரிந்து, அதின்வயணத்தையெழுதி, என்னண்டையில் திரும்பிவாருங்கள். அப்போது இங்கேசீலோவிலேகர்த்தருக்குமுன்பாக உங்களுக்குச் சீட்டுகளைப்போடுவேனென்று யோசுவாதேசத்தையெழுதப்போகிறவர்களுக்குக் கற்பித்தான்.

௯. அந்தமனுஷர்போய்த் தேசத்தைக் கடந்து, அதைப்பட்டணங்களின்படியேழு பங்காக ஒருபுஸ்தகத்திலெழுதிச் சீலோவிலிருக்கிற பாளயத்திலே யோசுவாவண்டைக்குவந்தார்கள்.

௰. அப்போது யோசுவா அவர்களுக்குச் சீலோவிலே கர்த்தருக்குமுன்பாகச் சீட்டுகளைப்போட்டு அங்கே இஸ்ரவேல்புத்திரருக்குத்தேசத்தை யவர்கள் பங்குகளாகப் பங்கிட்டான்.

௰௧. பென்யமீன் புத்திரருக்கவர்களுடைய வம்சங்களின்படி அவர்களுடைய கோத்திரச்சீட்டுவிழுந்தது. அவர்கள் விழுந்தின எல்லையூதாபுத்திரருக்கும், யோசேப்பு புத்திரருக்கும் நடுவேபுறப்பட்டது.

௰௨. அவர்களுடைய எல்லைவடமூலையிலே யோர்தானிலிருந்துவந்து, எரிகோவுக்குவடபக்கமாயேறி, அப்புறம் மேற்கேமலையிலே நீப்பெத்தாவேன்வனாந்தரத்திற்போயமுடியும்.

௰௩. அங்கேயிருந்து எல்லை பெத்தேலாகிய லூசுக்குவந்து லூசுக்குத் தென்பக்கமாய்ப்போய், அத்தேரோத் அதாருக்குத் தாழ்வான் பெத்தோரோனுக்குத் தெற்கேயிருக்கிற மலையண்டைக்கு இறங்கும்.

௰௪. பிற்பாடு அந்த எல்லைமேற்குமூலைக்குப் பெத்தோரோனுக்கெதிரே தெற்காகவிருக்கிற மலைக்குத் தென்புறமாய்ப்போய்த் திரும்பிக்கீரியாத்பாகாலென்னப்பட்ட யூதாபுத்திரரின்பட்டணமாகிய கீரியாத் எகாரீம் அருகேபோயமுடியும். இது மேற்குமூலை.

௰௫. தென்மூலை கீரியாத் எகாரீமின்முடிவிலிருக்கின்றது. அங்கேயிருந்து எல்லைமேற்கேபோய், நெப்தோவாகின் நீரூற்றிற்குப் புறப்பட்டு,

௰௬. அங்கேயிருந்துரேப்பயீமின்பள்ளத்தாக்கில் வடக்கேயிருக்கிற இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்குக்கெதிரானமலையடிவாரத்திற்கிறங்கி, அப்புறந்தெற்கே எபூசியருக்குப்பக்கமான இன்னோமின்பள்ளத்தாக்குக்கும், அங்கேயிருந்து ரொக்கேலென்ற கிணற்றிற்கும் இறங்கிவந்து,

௰௭. வடக்கேபோய், என்சேமேசுக்கும், அங்கேயிருந்து அதமீம் ஏற்றுக்கெதிரான கெலிலோத்திற்கும் அங்கேயிருந்து ரூபெனகுமாரன் போகானின் கல்லுக்குமிறங்கிவந்து,

௰௮. அர்பாவுக்கெதிரான வடபக்கமாய்ப்போய், அர்பாவுக்கிறங்கிவருகின்றது.

௰௯. அப்புறம் அந்த எல்லைபெத் ஒக்லாவுக்கு வடபக்கமாய்ப்போய், யோர்தானின் முகத்துவாரத்திற்குத் தெற்கான உப்புக்கடலின் வடமூலையிலே முடிந்துபோம். அதுதென்புறத்தெல்லை.

௨௰. கிழக்குப் புறத்திலே யோர்தானே அதின் எல்லை இது பென்யமீன் புத்திரருக்கவர்களுடைய வம்சங்களின்படிச் சுற்றிலுமிருக்கிற எல்லைகளுக்குள்ளான சுதந்தரம்.

௨௰௧. பென்யமீன் புத்திரரின் கோத்திரத்திற்கவர்களுடைய வம்சங்களின்படியிருக்கிற பட்டணங்கள் எரிகோ, பெத் ஒக்லா, ஏமேக்கேத்சீஸ்.

௨௰௨. பெத்தார்பா, செமாரயீம், பேதேல்,

௨௰௩. ஆவீம், பாரா, ஒப்பிரா,

௨௰௪. கேப்பார், ஆமோனாய், ஒப்னி, காபாவென்றபன்னிரண்டு பட்டணங்களும் அவைகளின் கிராமங்களும்,

௨௫. கிபெயோன், ராமா, பேரோத்,
௨௬. மிஸ்பே, கெப்பீரா, மோத்சா,
௨௭. ரெக்கேம், இற்பெயேல், தரியாலா,
௨௮. சேலா, ஏலேப், எருசலேமாகிய எபூசி, கிபெயாத், கீரியாத் என்கிற பதினாலு பட்டணங்களும், அவைகளின் கிராமங்களும். பென்யமீன் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படியிருக்கிற சுதந்தரம் இவைகளே.

## ௰௯. அதிகாரம்.

[(௧) சிமெயோன், (௰) செபுலோன், (௰௭) ஈசஷார் (௨௪) ஆசேர், (௩௨) நப்தலி, (௪௰) தாண் பெயரால் விழுந்த தேசத்தின் சீட்டு. (௪௯) இஸ்ரவேல் புத்திரர் யோசுவாவுக்குச் சுதந்தரத்தைக் கொடுத்தது.]

விழுந்த இரண்டாஞ் சீட்டு சிமெயோனுடையது. சிமெயோன் புத்திரரின் கோத்திரத்திறகவர்கள் வம்சங்களின்படியுண்டான சுதந்தரம் யூதா புத்திரருடைய சுதந்தரத்தின் நடுவேயிருக்கின்றது.
௨. அவர்களுக்கு அவர்கள் சுதந்தரத்திலே சேர்ந்தவைகளென்னவென்னில், பெயெர்செபா, சேபா, மொலாதா,
௩. ஆத்சார்சூகால், பாலா, ஆத்செம்,
௪. எல்தொலாத், பேத்தூல், ஒர்மா,
௫. சிக்லாக், பெத்மார்க்கபோத், ஆத்சார்சூசா,
௬. பெத்லெபாவோத், சருகேனென்கிற பதின்மூன்று பட்டணங்களும் அவைகளின் கிராமங்களும்,
௭. ஆயின், ரிம்மோன், ஏத்தேர், ஆசான் என்கிற நாலு பட்டணங்களும் அவைகளின் கிராமங்களும்,
௮. இந்தப் பட்டணங்களைச் சுற்றிலும், பாலாத்பெயேர் மட்டுக்கும் தென்கேயிருக்கிற ராமாத் மட்டுக்குமிருக்கிற எல்லாக் கிராமங்களும். இவை சிமெயோன் புத்திரருடைய கோத்திரத்திறகவர்கள் வம்சங்களின்படியுண்டான சுதந்தரம்.
௯. சிமெயோன் புத்திரருடைய சுதந்தரம் யூதா புத்திரரின் வீதத்திற்குள்ளிருக்கின்றது. ஏனெனில், யூதா புத்திரரின் பங்கு அவர்களுக்கு மிச்சமாயிருந்தது. ஆனதுகொண்டு சிமெயோன் புத்திரர் அவர்கள் சுதந்தரத்தின் நடுவிலே சுதந்தரம் பெற்றார்கள்.
௰. விழுந்த மூன்றாஞ் சீட்டு செபுலோன் புத்திரருடையது. அவர்களுக்கு அவர்கள் வம்சங்களின்படியுண்டான சுதந்தரவெல்லை சாரீத் மட்டும் போகின்றது.
௰௧. அவர்களுடைய எல்லை மேற்கே, மாருலாவுக்கேறி தாபேசேத்திற்கு வந்து யொக்கினேயாமுக்கெதிரான ஆற்றிற்கும் வருகின்றது.
௰௨. சாரீதிலிருந்து அது கிழக்கே சூரியனுதிக்கும் முனையாகக் கிஸ்லோத்தாபோரின் எல்லையண்டைக்குத் திரும்பித் தாபருத்திற்குப் புறப்பட்டு யப்பியாவுக்கேறி,
௰௩. அங்கேயிருந்து கிழக்குப்புறத்திலே காத்தேபேருக்கும், எத்காத்சீனுக்குங் கடந்து, ரிம்மோன் மெத்தோவாருக்கும், நேயாவுக்கும் புறப்படுகின்றது.
௰௪. அப்புறம் அந்த எல்லை வடக்கே அன்னத்தோனுக்குத் திரும்பி, இப்தாயேலின் பள்ளத்தாக்கிலே முடிந்துபோகின்றது.
௰௫. காத்தாத்தும், நகலாலும், சிம்ரோனும், இதாலாவும், பெத்லேகேமுமுதலான பன்னிரண்டு பட்டணங்களும், அவைகளின் கிராமங்களும்,
௰௬. செபுலோன் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படியுண்டான சுதந்தரம்.
௰௭. விழுந்த நாலாஞ் சீட்டு ஈசஷாருடையது.
௰௮. ஈசஷார் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படியுண்டான எல்லை இஸ்ரெயேலாவும், கெசுலோத்தும், சூனேமும்,
௰௯. அப்பிராயீமும், சீகோனும், அனகராத்தும்,
௨௰. ராப்பித்தும், கிசியோனும், ஏபெத்சும்,
௨௧. ரொமேத்தும், ஏங்கன்னீமும், ஏங்காதாவும், பேத்பாத்செசுமானது.
௨௨. அப்புறம் அந்த எல்லை தாபோருக்கும், சகசீமாவுக்கும், பெத்செமேசுக்கும் வந்து, யோர்தானிலே முடிகின்றது. அதற்குட் பதினாறு பட்டணங்களும், அவைகளுடைய கிராமங்களுமுண்டு.
௨௩. இந்தப் பட்டணங்களும், இவைகளுடைய கிராமங்களும் ஈசஷார் புத்திரரின் கோத்திரத்திறகவர்களுடைய வம்சங்களின்படியுண்டான சுதந்தரம்.
௨௪. விழுந்த ஐந்தாஞ் சீட்டு ஆசேர் புத்திரருடைய கோத்திரத்தினுடையது.
௨௫. அவர்கள் வம்சங்களின்படி அவர்களுக்குண்டான எல்லை எல்க்காத்தும், ஆலியும், பேத்தேனும், அக்சாப்பும்,
௨௬. அலம்மெலெக்கும், ஆமாதும், மீசாலுமானது. பிற்பாடு அது மேற்கே கர்மேலுக்கும், சீகோர்லிபனாத்திற்கும் வந்து,
௨௭. சூரியோதய முகமாய்ப் பெத்தாகோனுக்குத் திரும்பிச் செபுலோனுக்கும், வடக்கேயிருக்கிற இப்தாயேலின் பள்ளத்தாக்குக்கும், பெத்தேமேக்குக்கும், நேகியேலுக்கும் வந்து, இடதுபுறமான காபூலுக்கும்,
௨௮. அப்ரோனுக்கும், ரெகொபுக்கும், அம்மோனுக்கும் கானாவுக்கும், பெரிய சீதோன் மட்டுக்கும் புறப்படுகின்றது.
௨௯. அப்புறம் அந்த எல்லை ராமாவுக்குத் திரும்பி, தீருவென்ற அரணிப்பான பட்டணம் மட்டுக்குந் திரும்புகின்றது. பிற்பாடு அந்த எல்லை ஓசாவுக்குத் திரும்பிச் சமுத்திரத்திலே அக்சீபாவின் எல்லையோரத்திலே முடிகின்றது.

களே! செவிகொடுங்கள. நான நானே கர்த்தரைபபாடி, இஸ்ரவேலின பராபரனுகிய கர்த்தரைக கீர்த்தனமபணணுவேன.

ச. கர்த்தாவே! தேவரீர் சேயீரிலிருநது புறபபடடு, ஏதோமின வெளியிலிருநதுநடந்துவருகையிற் * பூமியதிர்ந்தது. வானமுஞ்சொரிநதது. மேகஙகளுந தணணீராய்ச சொரிந்தன. * ௬௮. சங். ௬.

ரு. கர்த்தருககுமுனபாகப் பர்வதங்கள கரைநதன. இஸ்ரவேலின பராபரனுகிய கர்த்தருக்குமுனபாக அநதச சீனய்தானேகரைந்தது.

௬. ஆனாத்தினகுமாரனுகிய சம்காரின நாள்களிலும, யாகேலினநாள்களிலும, வழிநடபபுகளோய்ந்தன பாதைகளில நடபபவர் கோணலான வழிகளிலநடநதார்கள.

எ. தேபொராளாகிய நான எழுமபி, இஸ்ரவேலிலே நான தாயாகஎழுமபுமட்டும,இஸ்ரவேலிலேகிராமஙகளபாழாகவேபாழாயபபோயின.

அ. புதிய தேவர்கள தெரிநதுகொளளபபடடபோது, யுததம வாசலகளுககு முனபாகவநதது. இஸ்ரவேலிலே நாறபதினாயிரமபேருககுளளே கேடயமும, ஈடடியுங் காணபபடடதோ!

௯. சனததில மனபபூர்வமாயிருநத இஸ்ரவேலின நியாயககாரருககு என இருதயங் கர்ததரை ஸ்தோததிரியுஙகளெனகினறது.

௰. வெண் கழுதைகளினமேலேறு மவர்களே! நியாயஸ்தலததில உளுககாநதிருபபவர்களே! வழியிலும்நடக்கிறவர்களே!இதை தியானியுஙகள.

௰௧. தணணீர்ததொடடிகளினநடுவே ஆடுகளைடபிரிககிறவர்களின சததந் திருமபக கேட்கபபடுகையால், அஙகேகர்ததரினநீதிகளைக்குறிததுபபேசிக் கொளளுவார்களாக. அவர்தமது இஸ்ரவேலிலே கிராமஙகளுககாகச செயத நீதியைககுறிததுததானே. அககுறற கர்ததரின சனம ஒலிமுகவாசலகளிலேபோயிறஙகும.

௰௨. விழி, விழி, தேபொராளே! விழி, விழி, பாடடுபபாடு. பாருகே! எழுமபு அபினோகாமின குமாரனே! நீ சிறைபிடிததவர்களைககொணடுபோ.

௰௩. மீதியானவர்கள இனிசசனததிறபிரஸ்தாபமாயிருநதவர்களின மேலே ஆளுவார்கள. எனக்காகக் கர்ததர் பராககிரம சாலிகளினமேலே ஆளுவார்.

௰௪. ஆமலேக்குக்கு விரோதமாக இவர்களுடைய வேர் எபபிராயீமிலிருநது தளிர்ந்தது. உனசனஙகளுககுளளே பென்யமீன மனுஷர் உனனைபபினசெனறார்கள. மாகீரிலிருநது நியாயபபிரமாணிக்கக்காரரும, சேபுலோனிலிருநது சனததைத்ருபஙகளாலவரவழைபபிக்கிறவர்களும இறஙகிவநதார்கள.

௰௫. ஈசஷாரிலும பிரதானமானவர்கள தேபொராளோடேயிருநதார்கள. பாருகைபபோல, அவன பினனாலேபோன ஈசஷார் மனுஷரும பளளத்தாககில அனுப்பப்படடுபபோனார்கள. ரூபெனின பிரதிய மான தேசப்பஙகுகளிலோவெனறால, மனதின அழுதத நினைவுகள பெரியவைகளாயிருநதன.

௰௬. மநதைகளின கூக்குரலகளைககேட்க, நீ தொழுவஙகளின நடுவேயிருநதுவிட்டதென்ன! ரூபெனின பிரதியமான தேசபபஙகுகளிலே மனதில ஆய்நதோயநதுபார்ககுதல மகாபபெரியதாயிருநதது.

௰௭. கிலேயாத்மனுஷர் யோர்தானுக்க கரையிலேயிருநதுவிட்டார்கள. தான மனுஷர் கபபலகளமேல தங்கிததரிததததென்ன! ஆசேர்மனுஷர் கடறகுடாவுகளிலே தாவரிதது உடைபபுணடு தஙகள தலஙகளிலிருநதுவிட்டார்கள.

௰௮. சேபுலோனும,நவுதலியும வெளியின் உயர்நத தலஙகளிலே தஙகள சீவனை மரணயோககியததிறகுளளாககின சனம.

௰௯. இராசாக்களவநது யுததமபணணினார்கள. அபபோது கானானின இராசாககள மெகிதோவின தணணீரருகான தானாகிலேயுததமபணணினார்கள. வெளளி ஆதாயம அவர்களுககுககிடைககவிலலை.

௨௰. நட்சததிரங்கள வானததிலிருநது யுததமபணணின அவைகள் தஙகள் ஓடடஙகளிலிருநது சிசேராவோடே யுத்தமபணணின.

௨௧. கிசோன ஆறு பூர்வதது ஆறுகிய கிசோன ஆறுதானே அவர்களை யடிததுககொணடுபோயிறறு. என ஆததுமாவேபலவானகளை மிதி.

௨௨. அபபோது தரையைத தடடித்தடடியோடுகிற குதிரைகளின குளமபுகள தஙகள வலலமையானவர்களை நசுககிவிட்டன்.

௨௩. மேரோசைச்சபியுங்கள. அதினகுடிகளைசசபிககவே சபியுஙகளென்று கர்த்தருடைய தூதனானவர் சொலலுகிறார். ஏனெனறால, அவர்கள கர்ததருககுச சகாயமாக வரவிலலை. கர்ததருககுசசகாயமாகப பராககிரமசாலிகளோடே வராதேபோனார்கள்.

௨௪. பெண்சாதிகளைபபார்ககிலும கேனியனான ஏபேரினபெணசாதியாகேல ஆசீர்வதிககபபடுவாளாக. கூடாரததிலவாசமான அவளபெணசாதிகளைபபார்ககிலும ஆசீர்வதிககபபடுவாளாக.

௨௫. தணணீரைககேடடான. பாலைக்கொடுததாள. தலைவர்களின கிணணியிலே வெணணெயகொணடுவநதாள.

௨௬. தனகையால ஆணியையும,தனவலது கையால வேலையாளகளின சுததியையும பிடிததுககொணடு, சிசேராதலையில அதை

யடித்து நசுக்கி, அவனை அவன் நெற்றியை யுருவக்குத்திவிட்டாள்.

௨௭. அவன் அவள் கால்களின் நடுவே மடங்கிவிழுந்து கிடந்தான். அவள் கால்களின் நடுவே எங்கே முடங்கினானோ அங்கே மடிந்து கிடந்தான்.

௨௮. சிசெராவின் தாய் பலகணியாலே கிராதிகள் வழியாய்ப் பார்த்துக்கொண்டிருந்து, அவனுடைய இரதம் வரத் தாமதிக்கிறதென்ன! அவனுடைய இரதங்களின் நடை பிந்தியிருக்கிறதென்னவென்று புலம்பினாள்.

௨௯. அதற்கு அவளுடைய நாயகிகளில் ஞானமுள்ளவர்களும், அவளுடைய வார்த்தைகளுக்கு அவள் தானும் சொன்ன மறுமொழியாவது;

௩௰. அவர்கள் கொள்ளையைக்கண்டு பிடித்துப் பங்கிட்டு ஆளுக்கு இரண்டொரு சிறு பெண்களையும், சிசெராவுக்குப் பலவர்னமான ஆடைகளின் கொள்ளையையும், பலவர்னமான சித்திரத்தையலாடைகளின் கொள்ளையையும், கொள்ளையிட்ட அவர்களின் கழுத்துகளுக்கு இருபுறமும் சித்திரத்தையலுள்ள பலவர்னமான ஒவ்வொரு ஆடையையுங் கொடுக்கவேண்டாமோவென்றார்கள்.

௩௰௧. கர்த்தாவே! உம்மைப் பகைக்கிற யாவரும் இப்படியழியக்கடவர்கள். அவரைச் சிநேகிக்கிறவர்களோவென்றால், தன் வல்லமையோடே உதிக்கிற சூரியனைப்போலிருக்கவுங்கடவதென்பதுதானே. பிற்பாடு தேசம் நாற்பது வருஷம் அமரிக்கையாயிருந்தது.

## ௬. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலபுத்திரர்கள் தங்களுடைய பாவத்துக்காக மீதியானியரால் ஒடுக்கப்பட்டது. (௮) ஒரு தீர்க்கதரிசி யவர்களை அதட்டியது. (௰௧) கர்த்தருடைய தூதன் கிதெயோனை அவர்களை யிரட்சிக்க அனுப்பியது. (௰௭) கிதெயோனுடைய காணிக்கை அக்கினியினால் பட்சிக்கப்பட்டது. (௨௫) கிதெயோன் பாகாலின் பலிபீடத்தை அழித்துக் கர்த்தர் சமாதானம் அளிப்பவரென்ற பலிபீடத்தின்மீது பலிகளைச் செலுத்தியது. (௨௮) யோவாஸ் தன்குமாரனுக்காகப் பரிந்துபேசி, அவனுக்கு எருப்பாகாலென்றுபேரிட்டது. (௩௩) கிதெயோனின் சேனை. (௩௪) அவனுக்குக்கிடைத்த அடையாளம்.]

ஆனால் இஸ்ரவேலபுத்திரர் கர்த்தரின் பார்வைக்குப்பொல்லாப்பானதைச் செய்தார்கள். அப்போது கர்த்தர் அவர்களை ஏழுவருஷமாக மீதியானரின் கையில் ஒப்புக்கொடுத்தார்.

௨. மீதியானரின் கை இஸ்ரவேலின்மேலே பலத்துக்கொண்டபடியால், இஸ்ரவேலபுத்திரர் அவர்கள் நிமித்தம் தங்களுக்குப் பர்வதங்களிலுள்ள கெபிகளையும், குகைகளையும், அரணான தலங்களையும் அடைக்கலங்களாக்கினார்கள்.

௩. ஏனென்றால், இஸ்ரவேலர் விதைவிதைத்திருக்கும்போது, மீதியானரும், அமலேக்கியரும், கிழக்கத்திப்புத்திரரும் அவர்கள்மேலே வந்து,

௪. அவர்களுக்கு விரோதமாய்ப் பாளயமிறங்கிக் காத்சாவின் எல்லைமட்டும் நிலத்தின் பலனைக்கெடுத்துவிட்டு, இஸ்ரவேலிலே ஆகாரத்தையாகிலும், ஆடுமாடுகள் கழுதைகளையாகிலும் வைக்காதேபோவார்கள்.

௫. ஏனெனில், அவர்கள் தங்கள் மிருகஜீவன்களோடும், தங்கள் கூடாரங்களோடும் வெட்டுக்கிளிகளத்தனைத் திரளாயேறிவருவார்கள். அவர்களும், அவர்கள் ஒட்டகங்களும் எண்ணிமுடியாத திரட்சியாயிருக்கும். இந்தப்பிரகாரமாகத் தேசத்தைக் கெடுத்துவிட அதிலே வருவார்கள்.

௬. மீதியானராலே இஸ்ரவேல் மிகவுஞ்சிறுத்துப்போயிற்று. அப்போது இஸ்ரவேலபுத்திரர் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டார்கள்.

௭. இஸ்ரவேலபுத்திரர் மீதியானர்நிமித்தங் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருக்கிறபோதோவெனில்,

௮. கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியை யவர்களண்டைக்கனுப்பினார். அவன் அவர்களுக்குச் சொன்னதாவது; இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நாம் உங்களை எகிப்திலிருந்து தேறிவரவும், அடிமைவீட்டிலிருந்து புறப்படவும்பண்ணி,

௯. எகிப்தியர்கைக்கும், உங்களையொடுக்கின யாவர்கைக்கும், உங்களை நீங்கலாக்கிவிட்டு, இவர்களை யுங்களுக்கு முன்பாகத் துரத்தி, இவர்கள் தேசத்தை யுங்களுக்குக் கொடுத்து,

௰. நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்றும், நீங்கள் குடியிருக்கும் அவர்கள் தேசத்திலுள்ள எமோரியருடைய தேவர்களுக்கஞ்சி நடக்காதிருங்களென்றும் உங்களுக்குச் சொன்னோம். நீங்களோ நம்முடைய சத்தத்தைக்கேளாதே போனீர்களென்கிறாரென்று சொல்லுகிறார்கள்.

௰௧. அதற்குப்பிறகு கர்த்தருடைய தூதனானவர் வந்து, அபியேஸ்றியனான யோவாசின் ஊராகிய ஒப்பிறாவிலிருக்கும் ஒரு கர்வாலியுமரத்தின்கீழ் உட்கார்ந்தார். அப்போது அவனுடைய குமாரன் கிதெயோன் கோதுமையை மீதியானரின் கைக்குத் தப்புவிக்கிறதற்காக, ஆலையினிடத்தில் தைப்போரடித்தான்.

௰௨. கர்த்தருடைய தூதனானவர் அவனுக்குத் தரிசனையாகி, அவனுடனே, கர்த்தர் உன்னோடிருக்கிறார். பலத்த பராக்கிரமனே யென்றார்.

௰௩. அப்பொழுது கிதெயோன் அவருடனே, ஆ, என் ஆண்டவனே! கர்த்தர் எங்களோடிருந்தால், இவையெல்லாம் எங்களுக்கு நேரிட்டதென்ன! கர்த்தர் எங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதில்லையோவென்று எங்கள் பிதாக்கள் எங்களுக்கு விவரித்துச் சொன்ன அவருடைய அற்புதங்களெல்லாம் எங்கே! இப்பொழுது கர்த்தர் எங்களைக் கைவிட்டு மீதியானர் கையிலே எங்களை யொப்புக்கொடுத்தாரேயென்றான்.

௰௪. அப்பொழுது கர்த்தர் அவனை நோக்கிப் பார்த்து, இந்த உன்னுடைய பலத்தோடே போ. நீ இஸ்ரவேலை மீதியானரின் கைக்கு நீங்கலாக்கி இரட்சிப்பாய். நாமுன்னை யனுப்பினதில்லையாவென்றார்.

௰௫. அதற்கவன், அவருடனே, ஆ, என் ஆண்டவரே! எதினாலே நான் இஸ்ரவேலை யிரட்சிப்பேன்! இதோ, மனாசேயில் என் சந்ததி நொய்மையானது. என் தகப்பன் வீட்டில் நான் எல்லாரிலுஞ் சிறியவனென்றான்.

௰௬. அதற்குக் கர்த்தர் அவனுடனே, நாமுன்னோடேகூட இருக்கப்போகிறபடியினாலே, நீ மீதியானரை யொரே மனுஷனைப்போல முறிய அடிப்பாயென்றார்.

௰௭. அப்பொழுது அவன் சொன்னதாவது; இப்பொழுதும் உம்முடைய கண்களில் எனக்குத் தயை கிடைத்ததானால், என்னோடே பேசுகிறவர் தேவரீர் தானேயென்று, எனக்கொரு அடையாளத்தைக் காட்டியருளும்.

௰௮. நான் உம்மண்டைக்கென் காணிக்கையை வெளியே கொண்டுவந்து, உமக்கு முன்பாக வைக்குமளவும் இவ்விடம் விட்டு நீர் போகாதிருமென்றான். அதற்கவர், நீ திரும்பி வருமட்டும் நாமிருப்போமென்றார்.

௰௯. அப்பொழுது கிதெயோன் உள்ளே போய் ஒரு வெள்ளாட்டுக்குட்டியையும், ஒரு மரக்கால் மாவிலே புளிப்பில்லா அப்பங்களையுஞ் சேகரமாக்கி இறைச்சியையொரு கூடையில் வைத்து, ஆணத்தை ஒரு கிண்ணியில் வார்த்து, அதை வெளியே கர்வாலி மரத்தின் கீழிருக்கிற அவரண்டைக்குக் கொண்டுவந்து வைத்தான்.

௨௰. அப்பொழுது பராபரனுடைய தூதனானவர் அவனுடனே, நீ இறைச்சியையும், புளிப்பில்லா அப்பங்களையுமெடுத்து இந்தக் கன்மலையின் மேலே வைத்து, ஆணத்தை யூற்றென்றார். அவன் அப்படியே செய்தான்.

௨௰௧. அப்பொழுது கர்த்தருடைய தூதன் தமது கையிலிருந்த கோலின் நுனியை நீட்டி, இறைச்சியையும், புளிப்பில்லா அப்பங்களையுந் தொட்டார். அப்பொழுது அக்கினி கன்மலையிலிருந்தெழும்பி இறைச்சியையும், புளிப்பில்லா அப்பங்களையும் பட்சித்தது. கர்த்தரின் தூதனோவென்றால், அவன் கண்களுக்கு மறைந்துபோனார்.

௨௰௨. அப்பொழுது கிதெயோன், அவர் கர்த்தருடைய தூதனென்றுகண்டு, ஆ, கர்த்தரான ஆண்டவரே! நான் கர்த்தருடைய தூதனை முகமுகமாய்க் கண்டதினால் எனக்கென்ன வருமோவென்றான்.

௨௰௩. கர்த்தரோவென்றால், உனக்குச் சமாதானம். பயப்படாதே. நீ சாவதில்லையென்று அவனுக்குச் சொன்னார்.

௨௰௪. அங்கே கிதெயோன் கர்த்தருக்கு ஒரு பீடத்தைக் கட்டிக் கர்த்தர் சமாதானம் அளிப்பவரென்று அதற்குப் பேரிட்டான். அது இன்னம் இந்நாள் வரைக்கும் அபியெஸ்ரியரின் ஊராகிய ஒப்பிறாவிலிருக்கின்றது.

௨௰௫. அன்று இராத்திரியிலே கர்த்தர் அவனுக்குச் சொன்னதாவது; நீ உன் தகப்பனுக்கிருக்கிற எருதுகளில் ஏழுவயதான இரண்டாம் எருதைக்கொண்டுபோய் உன் தகப்பனுக்கிருக்கிற பாகாலின் பலிபீடத்தைத் தகர்த்து, அதின் அருகேயிருக்கிற தோப்பை வெட்டிப்போட்டு,

௨௰௬. இந்த அரணின் கொடுமுடியிலே பாங்கான ஒரு இடத்தில் உன் பராபரனாகிய கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி அந்த இரண்டாம் எருதைக்கொண்டுவந்து, அதை நீ வெட்டிப்போட்ட தோப்பினுடைய கட்டைவிறகுகளின் மேலே சர்வாங்க தகனமாகப் பலியிடக் கடவாயென்றார்.

௨௰௭. அப்பொழுது கிதெயோன் தன் வேலையாட்களில் பத்துப்பேரைச் சேர்த்துக் கர்த்தர் தன்னோடே சொன்னபடியே செய்தான். ஆனால் அதைப் பகலிலே செய்ய அவன் தன் தகப்பன் வீட்டாருக்கும், அந்த ஊர் மனுஷருக்கும் பயப்பட்டபடியினாலே, அதை இரவிலே செய்தான்.

௨௰௮. அந்த ஊர் மனுஷர் காலமே எழுந்திருக்கிறபோது இதோ, பாகாலின் பலிபீடந் தகர்க்கப்பட்டதும், அதின் அருகேயிருந்த தோப்பு வெட்டிப் போடப்பட்டதும், கட்டப்பட்டிருந்த பலிபீடத்தின் மேல் அந்த இரண்டாம் எருது பலியிடப் பட்டதுமாயிருக்கிறதையவர்கள் கண்டு,

௨௰௯. ஒருவரோடொருவர், இந்தக் காரியத்தைச் செய்தவனாரென்றார்கள். கேட்டு விசாரிக்கிறபோது, யோவாசின் மகன் கிதெயோன் இதைச் செய்தானென்றார்கள்.

௩௰. அப்பொழுது ஊரார் யோவாசோடே, உன் மகன் சாகும்படிக்கவனை வெளியே கொண்டுவா. ஏனெனில், அவன் பாகாலின் பலிபீடத்தைத் தகர்த்து, அதின் அருகேயிருந்த தோப்பை வெட்டிப்போட்டானென்றார்கள்.

௩௰௧. ஆனால் யோவாஸ் தனக்கு விரோதமாக நிற்கிற அனைவருக்கும், நீங்கள் பாகாலுக்காக வழக்காடுவீர்களோ! நீங்கள் அதை இரட்சிப்பீர்களோ? அதற்காக வழக்காடுகிறவன் இந்த அதிகால நேரத்திலேதானே

சாகக்கடவான. அது தெயவமானால அது தானே யவன தனபலிபீடததைத் தகர்தத நிமிததம அதுதானே தனககாக வழககாடட்டுமெனருன.

௩௨. தனபலிபீடததைத் தகர்ததானெனறு பாகால அவனேடே வழககாடடட்டுமெனறு சொலலி, அநநாளிலே அவனுககு எருபபாகாலெனறுபேரிடடான.

௩௩. மீதியானரும, அமலேககியரும், கிழககததுப் புததிரரு மெலலாம ஏகமாயககூடி, ஆறறைக கடநது வநது, இஸரவேலபளளததாக்கிலேபாளயமிறங்கினபோதோவெனில,

௩௪. கர்ததருடைய ஆவியானவர் கிதெயோனுககுபபலனகொடுததார். அவன எககாளமூதி, அபியேஸரியரைக கூபபிடடுத தனனைபபினசெல்லபபணணி,

௩௫. மனுசே சீமையெஙகுந தாதுபதிகளை யனுபபி, அவர்களையுங கூபபிடடுததனனைப பினசெலலபபணணி ஆசேர், செபுலோன, நபதலி சீமைகளிலுந தாதுபதிகளை யனுபபினன. அவர்களும அவனுககெதிர்கொணடேறிவநதார்கள.

௩௬. அபபோது கிதெயோன பராபரனோடேசொனனதாவது; தேவரீர்சொனனபடியெனனைகயினாலே இஸரவேலை இரட்சிககபபோனால,

௩௭. இதோ, நானமயிருளள ஒருதோலைப போர்ககளததிலே போடுவேன. பனிதோலினமேலமாததிரம பெயது, பூமியெலலாங காயநதிருநதால அபபோது தேவரீர்சொனனபடி இஸரவேலை யெனனைகயினாலே இரட்சிபபீரெனபதையறிவேனெனருன.

௩௮. அபபடியேயாயிறறு. அவனமறுநாட்காலமே யெழுநதிருந்து தோலைக ககசககி, அதிலிருநது பனிததணணீரை யொருகிணணி நிறையபபிழிநதான.

௩௯. அபபோது கிதெயோன பராபரனுடனே, நானினனமொருவிசைமாததிரம பேசுவதினால, உமதுகோபம எனமேறபறறியெரியவேணடாம. தோலினாலே, நானினனம் ஒரேவிசை சோதனைபபணணடடும. தோலமாததிரங காயநதிருககவும, பூமியெஙகும பனிபெயதிருககவுங கடடளையிடுமெனருன.

௪௰. அபபடியே பராபரன அனறு இராததிரிசெயதார். தோலமாத்திரங காயநது பூமியெஙகும பனிபெயதிருநதது.

## எ. அதிகாரம்.

[(௧) கிதெயோனினசேனையில-௩௰௨ ஆயிரம்பேர் ௩௱ பேரானது. (௯) அவன வாறகோதுமையபபததைககுறிதது கணடசொபபனததினாலும, அதின பயனாலும தைரியஙகொணடது. (௰௬) எக்காளததினாலும, பானைககுளளவைககுந தீவட்டியினாலுங குறிதது அவன செயத உபாயம. (௨௪) எபபிராயீமர் ஓரேபையும, சேபையும பிடிததுககொணடது.]

அபபோது கிதெயோனாகிய எருபபாகாலும, அவனோடிருநதசனமனைத்துங காலமே எழுநதுபுறபபடடு, ஆரோததெனற நீரூறறினகிடடபபாளயமிறஙகினர்கள. மீதியானரினபாளயம அவனுககுவடககே மோரேமேடடிறகுப பினனான பளளததாககிலேயிருநதது.

௨. அபபோது கர்ததர் கிதெயோனோடே சொனனதாவது; நாம மீதியானரைசசனததினகையிலொபபுககொடுககிறதறகு உனனோடிருககிற சனம மிசசமாயிருககினறது. எனகை யெனனையிரட்சிததெனறு இஸரவேல நமக்கு விரோதமாக வீமபுபேசுகிறதறகிடமாகும.

௩. ஆகையால ஆருககுப்பயமுநதத்தளிபபுமுணடோ, அவன திருமபிக கிலெயாத் மலைகளிலிருநது புறநதுபோகக்கடவானெனறு நீ சனததின செவிகளிலேபடககூறுவியென்றார். அபபோதுசனததில இருபததீராயிரமபேர்திருமபிப பதினாயிரமபேர் மீதியாயிருநதார்கள.

௪. கர்ததர் கிதெயோனோடே, சனம இனனம மிசசமாயிருககினறது. அவர்களைத தணணீரணடைககிறஙகிபபோகபபணணு. அஙகே யவர்களை யுனககுப பரிட்சைகாடடுவோம. உனனோடேகூடவர அவனேயவனைக்குறிதது உனனோடேசொல்லுவோமோ! அவன உனனோடேகூட வருவானாக. ஆனால உனனோடேகூடவரவேணடாமெனறு நாமுனனோடேசொலலபபோகிற அனைவருமஉனனோடேகூட வராதிருபபார்களாகவெனறார்.

௫. அபபடியே சனததைத் தணணீரணடைககிறஙகிபபோகபபணணினான. அபபோதுகர்ததர் கிதெயோனுடனே, தணணீரையளளி ஒரு நாய் நககுமபிரகாரமாக அதைத் தனனாவினாலே நககிககொளளுகிறவனையெலலாந தனியேயும், குடிககிறதறகு முழஙகாலகள ஊனறிக குனிகிறவனையெலலாந தனியேயும நிறுததுவாயாகவெனறார்.

௬. அபபோது தஙகள கையால அளளித் தஙகள வாயககெடுத்து நககிக்கொணடவர்களின இலககம முநநூறுபேராயிருநதது. மறறச்சனமெல்லாந தணணீர்குடிககிறதறகு முழஙகாலகள ஊனறிககுனிநதது.

௭. அபபோது கர்ததர்கிதெயோனுடனே, நககிககுடிதத அநத முநநூறுபேராலே நாமுஙகளை யிரட்சிதது, மீதியானரையுனகையிலொபபுககொடுபபோம. மறறச்சனமெலலாந தஙகள தஙகள இடததிறகுப போகக்கடவதெனறார்.

௮. அபபோதுசனந தவசததையும, எககாளஙகளையுந தஙகளகையிலெடுததுககொ

ணடார்கள். மறற இஸ்ரவேலரையெல்லாந தஙகள தஙகள கூடாரஙகளுககனுபபி, அநத முநநூறுபேரை வைததுககொணடான. மீதியானியனபாளயமோவெனில, அவனுக்குத்தாழவிடமானபளளததாககிலிருநதது.

௯. அனறு இராததிரி சமபவிததகேதெனிற கர்ததர் அவனோடே சொனனதாவது; நீ யெழுநது பாளயததிறகிறஙகிபபோ. ஏனெனில, அதை யுனகையிலொபபுககொடுததோம.

௰. இறஙகிபபோகபயமாயிருநதாயேயாகில், முதல நீயும, உன வேலைககாரனாகிய பூறவுமாய்ப் பாளயததிற கிறஙகிபபோய,

௰௧. அஙகே யெனனபேசுகிருர்களெனறு கேள. பிறபாடு பாளயததிற்கிறஙகிபபோய உனகைகள திடப்படுமெனருர் அபபடியே அவனும, அவனவேலைககாரனாகிய பூறவும பாளயததினமுனையிலே சாமஙகாககிறவர்களின இடமட்டும இறஙகிபபோனூர்கள.

௰௨. மீதியானரும, அமலேககியரும், சகல கிழக்கத்துபபுததிரருமோவெனருல, வெட்டுககிளிகளத்தனைத திரட்சியாயப பளளததாககிலே கிடநதார்கள. அவர்களுடைய ஒட்டகஙகளுககும இலககமிலலை. கடறகரைமணலத்தனைத திரட்சியாயிருநதன.

௰௩. கிதெயோனவநதபோது இதோ, ஒருவன ஒருவனுககொருசொப்பனததைவிவரிததுச சொனனதாவது; இதோ, ஒருசொப்பனததைககணடேன. இதோ, சுட்டிருநத ஒருவாற்கோதுமை யபபம மீதியானியின பாளயததிறகு உருணடுவநது கூடாரமட்டுமவநதபோது, அதைவிழததளளிக கீழதுமேலதாககிப் போடடது. அபபடியே கூடாரமவிழுநது கிடநததெனருன.

௰௪. அபபோது மறறவன பிரதியுததாரமாக, இதுயோவாசின குமாரனாகிய கிதெயோனென்றஇஸ்ரவேலனுடைய பட்டயமே ஒழிய மறறப்படியலல. பராபரன மீதியானையும, இநதபபாளயம அனைததையும அவனகையிலொபபுக் கொடுத்தாரெனறுன.

௰௫. கிதெயோன அநதச சொபபனத்தின விவரததையும, அதின வியாக்கியானததையுங கேடடபோது, அவனபணிநதுகொணடு, இஸ்ரவேலின பாளயததிறகுததிருமபிவநது, எழுநதிருஙகள. ஏனெனிற கர்ததர் மீதியானியின பாளயததை யுஙகளகைகளிலொபபுககொடுததாரெனறுசொலலி,

௰௬. அநதமுநநூறுபேரை மூனறுபவிசாகவகுதது, அவர்களெலலார்கையிலும எககாளஙகளையும, வெறுமபானைகளையும, அவைகளுககுளவைககுந தீவட்டிகளையுங கொடுதது,

௰௭. அவர்களோடேசொனனதாவது; நான செயவதைபபார்தது அபபடியேசெயவீர்களாக இதோ, நானபாளயததினமுனையில வநதிருககுமபோது எபபடிச்செய்வேனே அபபடிச்செயவீர்களாக.

௰௮. நானும, எனனோடிருககுஞசகலமானபேரும எககாளமூதுமபோது நீஙகளும பாளயததையெலலாஞசுறறி எககாளஙகளையூதிக கர்ததருடையதும், கிதெயோனுடையதுமெனபீர்களாகவெனறுசொன்னூன்.

௰௯. நடுச்சாமததுவககிச்சாமககாரர் நிலை திருத்தப்பட்டவுடனே, கிதெயோனும், அவனோடிருநத நூறுபேரும அநதச சாமததின துவககததிலே பாளயததினமுனையில வநது, எககாளஙகளையூதித தஙகளகையிலிருநத பானைகளையுடைததார்கள.

௨௰. மூனறுபவிசுகளின மனுஷரும எககாளஙகளையூதிப பானைகளையுடைததுவிட்டுத தீவட்டிகளைத தஙகள இடதுகைகளிலும, ஊதும எககாளஙகளைத தஙகள வலதுகைகளிலுமபிடிததுக் கர்த்தருடையதும், கிதெயோனுடையதுமான பட்டயமெனறு கூபபிட்டு,

௨௧. பாளயததைச சுறறிலும அவரவர் தஙகள நிலையிலே நினருர்கள. அபபோது பாளயததிலிருநதவர்களெலலாரும ஓடித திரிநது, கூககுரலிட்டு, ஓடிபபோனூர்கள.

௨௨. முநநூறுபேரும எக்காளஙகளையூதுகையிறகர்த்தர் பாளயமெஙகும ஒருவர்பட்டயததையொருவருககு விரோதமாயபபோககபபணணினூர். பாளயததினசேனையானது பெத்சித்தாசெரொத்தாமட்டுககும், தாபாத்திட்டவிருககிற ஆபேல்மெகொலாவின எலலைமட்டுககும ஓடிபபோயிறறு.

௨௩. ஆசேர் நவ்தலிமனுஷரும, ஆசேர் மனுஷரும, மனாசேயின சகல மனுஷருமாகிய இஸ்ரவேலர் அழைபபிககபபடடுவநது, மீதியானரைப பினதொடர்நதுபோனூர்கள.

௨௪. கிதெயோன எபபிராயீம மலைகளெஙகுந தூதரையுமனுபபி, நீஙகள மீதியானியருககெதிராக இறஙகி, பெததாபராயிருககும யோர்தானமட்டுமவநது தணணீரையவர்களுக்குமுநதிககட்டிககொளளுஙகளெனறுசொலலசசொனனூன. அபபடியே எபபிராயீமின மனுஷரெலலாரும அழைபபிககபபட்டு, பெததாபராயிருககும யோர்தானமட்டுமவநது, தணணீரைக்கட்டிக்கொணடு,

௨௫. மீதியானியின இரணடு அதிபதிகளாகிய ஓரேபையும், சேபையுமபிடிதது, ஓரேபை ஓரேப் எனனபபட்ட கனமலையிலும், சேபைச்சேப் எனனபபட்ட ஆலையிலுங கொனறுபோட்டு மீதியானியரைத துரத்தி, ஓரேப்,சேப்பெனறவர்களின தலைகளையோர்தானுககிககரையிலிருநத கிதெயோனணடைககுக கொணடுவநதார்கள.

## அ. அதிகாரம்.

[(க) கிதேயோன் எப்பிராயீமரைச் சமாதானப்படுத்தியது. (ச) சுக்கோத்தூரும், பெனூவேலும் கிதேயோன் சேனைக்கு உதவி செய்யாதது. (ய) சேபாகும், சல்முனாவும் பிடிக்கப்பட்டது. (யரு) சுக்கோத்தும், பெனூவேலும் அழிக்கப்பட்டது. (யஅ) கிதேயோன் தன் சகோதரனைக் கொன்ற சேபாக், சல்முனாவைக் கொன்றது. (உஉ) அவன் அரசாளுகையை மறுத்தது. (உச) அவனுடையாகிய பொற்சாலவை விக்கிரகாராதனைக்குக் காரணமாயிருந்தது. (உஅ) மீதியான் செயிக்கப்பட்டது. (உகூ) கிதேயோனின் பிள்ளைகளும், அவனுடைய மரணமும், (நக) இஸ்ரவேலர்களின் விக்கிரகாராதனைகளும், அவநன்றியும்.]

அப்போது எப்பிராயீம் மனுஷர் அவனுடனே, நீ மீதியானர்மேல் யுத்தம்பண்ணப்போகிறபோது, எங்களையழைப்பிக்காதேபோன இந்தக்காரியத்தை நீ யெங்களுக்குச்செய்ததென்னவென்று, அவனோடேமகா வாக்குவாதம் பண்ணினார்கள்.

உ. அவனோவென்றால், அவர்களோடே சொன்னதாவது; நீங்கள் செய்த்தற்கொத்தளந்தக்காரியத்தை நான் இப்போது செய்தேன்? அபியேஸரியரின் திராட்சப்பழ அறுப்பைப் பார்க்கிலும், எப்பிராயீமரின் பின்னறுப்புத் தாவனையல்லவோ!

ங. உங்கள் கையிலே பராபரன் மீதியானரின் அதிபதிகளாகிய ஓரேபையும், சேபையும் ஒப்புக்கொடுத்தாரே; நீங்கள் செய்தற்கொத்த எந்தக் காரியத்தைச்செய்ய எனக்குக்கூடிற்றென்றான். இந்தவார்த்தையையவன்சொன்னபோது அவன்மேலிருந்த அவர்களுடைய கோபம் ஆறிற்று.

ச. கிதேயோன் யோர்தானுக்கு வந்தபோது, அவனும், அவனோடிருந்த முந்நூறு பேருமதைக்கடந்துபோய், விடாய்த்திருந்தும் சத்துருவைப் பின்றொடர்ந்து கொண்டிருந்தார்கள்.

ரு. அவன் சுக்கோத்தின் மனுஷருக்கு, என் கீழிருக்கிறசனத்திற்குச் சில அப்பங்களைக் கொடுங்கள். அதேனெனில், விடாய்த்திருக்கிறார்கள். நான் மீதியானரின் இராசாக்களாகிய சேபாவையும், சல்முனாவையும் பின்றொடருகிறவனென்றான்.

சு. சுக்கோத்தின் பிரபுக்களோவென்றால், உன் இராணுவத்திற்கு நாங்கள் அப்பங் கொடுக்கிறதற்குச் சேபாக், சல்முனாவென்றவர்களின் உள்ளங்கை அப்போதே உன்கை வசமாகித் தீர்ந்ததோவென்றார்கள்.

எ. அப்போது கிதேயோன் அவர்களுடனே, கர்த்தர் சேபாவையும், சல்முனாவையும் என்கையிலொப்புக் கொடுத்தபோது, உங்கள் மாம்சத்தை வனாந்தரத்தின் முள்ளுகளாலும், நெரிஞ்சில்களாலுங்கிழித்துவிடுவேனென்றுசொல்லி,

அ. அவ்விடம்விட்டுப் பெனூவேலுக்குப் போயேறி அவ்வூராரோடே அந்தப்படிச் சொன்னான். ஆனாற் சுக்கோத்தின் மனுஷர் பிரதியுத்தரமாகச் சொன்னபடியே பெனூவேலின் மனுஷரும் அவனுக்குச்சொன்னார்கள்.

கூ. அப்போது அவன் பெனூவேலின் மனுஷரோடும் நான் சமாதானத்தோடே திரும்பி வரும்போது, இந்தக் கோபுரத்தையிடித்துவிடுவேனென்றான்.

ய. சேபாகும், சல்முனாவும், அவர்களோடுங்கூட ஏறக்குறையப் பதினையாயிரம்பேராகிய அவர்களுடைய சேனைகளுமோவென்றால் கற்கோரிலிருந்தார்கள். கிழக்கத்தியாரின் சகல இராணுவத்திலும் மீதியானவர்களெல்லாம் அவர்கள்தான். ஏனெனில், பட்டயம் உருவத்தக்க லக்ஷத்திருபதினாயிரம்பேர் விழுந்தார்கள்.

யக. கிதேயோன் கூடாரங்களிலே குடியிருக்கிறவர்கள் வழியாய் நோபாகுக்கும், யொக்பெயாவுக்கும் கிழக்கேபோயேறி அந்த இராணுவத்தை முறியடித்தான். ஏனெனில், அந்த இராணுவம் நிர்விசாரமாயிருந்தது.

யஉ. சேபாகும், சல்முனாவும் ஓடிப்போனார்கள். அவனோவென்றால், அவர்களைத் துரத்திச் சேபாக், சல்முனாவென்ற மீதியானரின் இரண்டு இராசாக்களைப்பிடித்து, இராணுவத்தையெல்லாங்கலங்கடித்தான்.

யங. யோவாசின் குமாரனாகிய கிதேயோன் யுத்தம்பண்ணிச் சூரியனுதிக்கத்தற்கு முன்னே திரும்பிவந்தபோது,

யச. சுக்கோத்தின் மனுஷரில் ஒருவாலிபனைப்பிடித்து அவனைக்கேட்டான். இவன் சுக்கோத்தின் பிரபுக்களும், அதின்மூப்பருமாகிய எழுபத்தேழுபேரையவனுக்கெழுதிக்கொடுத்தான்.

யரு. அவன் சுக்கோத்தின் ஊராரண்டைக்கு வந்து, இதோ, விடாய்த்திருக்கிற உன் மனுஷருக்கு நாங்கள் அப்பங்கொடுக்கிறதற்குச் சேபாக், சல்முனாவென்றவர்களின் உள்ளங்கை அப்போதே உன்கையிலிருக்கின்றதோவென்று நீங்கள் என்னை நிந்தித்துச் சொன்ன சேபாகும், சல்முனாவும் இங்கேயிருக்கிறார்களென்றுசொல்லி,

யசு. பட்டணத்தின் மூப்பரைப் பிடித்து, வனாந்தரத்தின் முள்ளுகளையும், நெரிஞ்சில்களையும் எடுத்துக்கொண்டு அவைகளாற் சுக்கோத்தின் மனுஷருக்குத் தெளிவுவரப் பண்ணி,

யஎ. பெனூவேலின் கோபுரத்தையும் இடித்து, அவ்வூர் மனுஷரைக் கொன்றுபோட்டான்.

௰௮. பிற்பாடு அவன் சேபாகோடும், சல்முனாவோடும், நீங்கள் தாபோரிலே கொன்றுபோட்ட அந்த மனுஷர் எந்த ரூபமாயிருந்தார்களென்றான். அதற்கவர்கள், அவர்கள் உம்மைப்போலும், அவரவர் பார்வைக்கு இராசகுமாரரைப்போலுமிருந்தார்களென்றார்கள்.

௰௯. அப்போது அவன் அவர்கள் என் தாயாரின் பிள்ளைகளாகிய என்னுடைய சகோதரராயிருந்தார்கள். அவர்களை உயிரோடே வைத்திருந்தீர்களானால், உங்களைக் கொல்லாதிருப்பேனென்று கர்த்தரின் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றுசொல்லி,

௨௰. தன் மூத்தகுமாரனாகிய ஏத்தெருக்கு, நீ யெழுந்து அவர்களைக் கொன்றுபோடென்றான். ஆனால் அந்தப் பிள்ளையாண்டான் பயப்பட்டிருந்ததினாலே, தன் பட்டயத்தையுருவாதேபோனான். ஏனெனில், இளம்வாலவயதாயிருந்தான்.

௨௰௧. அப்போது சேபாகும், சல்முனாவும், நீர்தான் எழுந்து எங்கள்மேல்விழும். ஏனெனில், மனுஷன் எப்படியோ அப்படி அவன் பெலனுமிருக்குமென்றார்கள். அப்படியே கிதெயோன் எழுந்து சேபாகையும், சல்முனாவையுங் கொன்றுபோட்டு, அவர்கள் ஒட்டகங்களின் கழுத்துகளிலிருந்த சந்திரக்காரைகளை யெடுத்துக்கொண்டான்.

௨௰௨. அப்போது இஸ்ரவேல்மனுஷர் கிதெயோனுடனே, நீரெங்களை மீதியானருடைய கைக்கு நீங்கலாக்கி விட்டபடியினாலே, நீரும், உம்முடைய குமாரரும், உம்முடைய குமாரனின் குமாரனும் எங்களையாளக் கடவீர்களென்றார்கள்.

௨௰௩. கிதெயோனோவென்றால், அவர்களுடனே, நான் உங்களையாளுவதுமில்லை. என் குமாரன் உங்களை யாளுவதுமில்லை. கர்த்தர் உங்களையாளுவாராகவென்றான்.

௨௰௪. பிற்பாடு கிதெயோன் அவர்களுடனே, உங்களை ஒருகாரியத்தைக் கேட்கிறேன். நீங்கள் அவரவர் கொள்ளையிட்ட கடுக்கன்களை எனக்குத் தாருங்களென்றான். ஏனெனில், அவர்கள் இஸ்மாவேலராயிருந்தபடியினாலே, அவர்களுக்குப் பொன்கடுக்கன்களிருந்தன.

௨௰௫. கொடுக்கவே கொடுப்போமென்று அவர்கள்சொல்லி, ஒருவஸ்திரத்தைவிரித்து அங்கே அவரவர்கொள்ளையிட்டகடுக்கன்களைப் போட்டார்கள்.

௨௰௬. பிறைச்சிந்தாக்குகளையும், ஆரங்களையும், மீதியானரின் இராசாக்கள் போர்த்துக்கொண்டிருந்த இரத்தாம்பரங்களையும், அவர்களுடைய ஒட்டகங்களின் கழுத்துகளிலிருந்த சரப்பளிகளையுந்தவிர அவன் கேட்டுவாங்கின பொன்கடுக்கன்களின் நிறை ஆயிரத்தெழுநூறு பொன் சேக்கலின் நிறையாயிருந்தது.

௨௰௭. அதினாலே கிதெயோன் ஒரு ஆசாரியசால்வையையுண்டாக்கி, அதைத் தன்னூரான ஒப்பிராவிலே வைத்தான். ஆனால் இஸ்ரவேலரெல்லாம் அங்கே அதின்பின்னாலே சோரம்போனார்கள். அது கிதெயோனுக்கும், அவன் வீட்டாருக்குங் கண்ணியாயப்போயிற்று.

௨௰௮. இந்தப் பிரகாரமாக மீதியானர் தங்கள் தலையைத்திரும்ப எடுக்கக்கூடாதபடிக்கு இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் தாழ்த்தப்பட்டார்கள். தேசமானது கிதெயோனின் நாள்களில் நாற்பது வருஷம் அமர்ந்திருந்தது.

௨௰௯. யோவாசின் குமாரனாகிய எருப்பாகால்போய்த் தன்வீட்டிலே குடியிருந்தான்.

௩௰. கிதெயோனுக்கு அவனுடைய கெர்ப்பப் பிறப்பான எழுபது குமாரரிருந்தார்கள். ஏனெனில், அவனுக்கு அநேகம்பெண்சாதிகளிருந்தார்கள்.

௩௰௧. சீகேமிலிருந்த அவனுடைய வைப்பாட்டியும், அவனுக்கு ஒருகுமாரனைப்பெற்றாள். அவனுக்கு அபிமெலேக்கென்றுபேரிட்டான்.

௩௰௨. பிற்பாடு யோவாசின் குமாரனாகிய கிதெயோன் நல்ல விருத்தாப்பியத்திலே மரித்து, ஒப்பிராவிலே தன் தகப்பனாகிய யோவாசென்ற அபியேஸ்ரியனுடைய கல்லறையில் அடக்கம்பண்ணப்பட்டான்.

௩௰௩. கிதெயோன் மரித்தபின் சம்பவித்ததேதென்றால், இஸ்ரவேல் புத்திரர் திரும்பிப் பாகால்களின் பின்னாலே சோரம்போய்ப் பாகால் பேரீத்தைத் தங்களுக்குத் தேவனாக வைத்தார்கள்.

௩௰௪. சுற்றிலுமிருந்த தங்கள் எல்லாச் சத்துருக்களின் கைக்குந் தங்களைத் தப்புவித்த தங்கள் பராபரனாகிய கர்த்தரை நினையாமலும்,

௩௰௫. கிதெயோனென்ற எருப்பாகால் இஸ்ரவேலுக்குச் செய்த சகல நன்மைக்குந் தக்கதயவை அவன் வீட்டாருக்குச் செய்யாமலும்போனார்கள்.

## ௯. அதிகாரம்.

[(௧) அபிமெலேக், சீகேமியரிற் சில கலகமுண்டாக்கித் தன் சகோதரர்களைக்கொன்று இராசாவானது. (௭) யோத்தாம் அவர்களை ஒருவமையால் அதட்டிவருங் கேட்டைமுன்னறிவித்தது. (௨௨) காலால் அபிமெலேக்கின்மேல் விரோதமாய்ச் சீகேமியருடன் கூடினது. (௩௰) சேபூல் அதைவெளிப்படுத்தியது. (௩௰௪) அபிமெலேக் அவர்களைச் செயித்து அவர்கள் பட்டணத்தில் உப்பை த்தெளித்தது. (௪௰௬) அவன் பேரீத் தேவனு

தெழு

டைய ஆலயததைச சுடடெரித்தது. (ருய) அவன தேபேத்சில் ஒரு எநதிரக கலலின துணடினறகொல்லபபடடது. (ருகூ)யோத் தாமினசாபம பலிததது.]

ஏருபபாகாலினகுமாரன அபிமெலேக், சீகெமிலிருககிற தனதாயினசகோதரரணடைககுபபோய அவர்களோடும், தன தாயினுடைய தகபபன வீடடுவம்சமான அனைவரோடுமபேசி,

உ. எழுபது பேராகிய எருபபாகாலின குமாரரெலலாம உஙகளையாளுவது உஙகளுககுநலலதோ! ஒருவன உஙகளையாளுவது உஙகளுககு நலலதோவென று நீஙகள் சீகெமிலிருககிற எலலாப்பெரியமனுஷரினகாதுகளுககுமுனபாகபபேசி, நான உஙகள எலுமபும, உஙகளமாம்சமுமானவனெனகிறதை நினையுஙகளெனறான.

ங. அபபடியே யவனுடைய தாயினசகோதரர் சீகெமிலிருககிற எலலாப பெரியமனுஷரின காதுகளுககுமுனபாக இநதவார்ததைகளை யெலலாம அவனுககாகப பேசினார்கள. அபபோது அவனநமமுடைய சகோதரனென று அவர்கள்சொனனதினாலே, அவர்களிருதயம அபிமெலேகுககுப பினனுகசசாயநதுபோயிறறு.

ச. அவர்கள பாகால பேரீத்தினவீடடில எழுபதுவெளளிககாசையெடுதது அவனுககு கொடுததார்கள. அவைகளால, அபிமெலேக் வீணரும், சணடாளருமான மனுஷரை வேலைகொணடான. அவர்கள அவனுககுப பின்செனறார்கள.

ரு. அவன ஒபபிறத்திலிருககிற தன தகபபனவீடடிறகுவநது, எருபபாகாலினகுமாரராகிய தனசகோதரர் எழுபதுபேரையும, ஒரேகலலினமேலேகொனறான. ஆனால எருபபாகாலின இளையகுமாரனாகிய யோத்தாம ஒளிததிருநதபடியினாலே மீதியானான.

சா. பிறபாடு சீகெமிலிருககிற எல்லாபபெரிய மனுஷரும, மிலலோவின வீடடாரனைவரும கூடிககொணடுபோயச சீகெமிலிருககிற உயர்நத கர்வாலியுமரத் தணடையிலே அபிமெலேகை இராசாவாககினார்கள.

எ. இது யோததாமுககறிவிககப படட போது அவனபோயக கெரிசீம மலையின கொடுமுடியிலேறி நினறு, தன சத்தத்தையுயர்த்திக்கூபபிடடு, அவர்களுககுச சொனனதாவது; சீகெமின்பெரியமனுஷரே! பராபரன உங்களையுங் கேட்பதறகாகவெனனைக் கேளுஙகள.

அ. விருட்சஙகள தஙகளமேல ஒரு இராசாவைவைதது,அபிஷேகமபணணபபோய, ஒலிவமரததோடே, எஙகளமேல இராசாவாயிருவெனறன.

கூ. ஆனால ஒலிவமரம அவைகளோடே தேவர்களும, மனுஷரும புகழுகிற எனனிலுளள எனனுடைய புஷ்டியை நானவிடடு, மரஙகளினமேல அசையப்போவேனோவெனறது.

ய அபபோது மரஙகளானவை அததிமரத்தோடே, நீவநது எஙகளமேல இராசாவாயிருவெனறன.

யக. ஆனால அததிமரம அவைகளோடே, எனனுடைய மதுரததையும, எனனுடைய நற்கனியையும் நானவிடடு, மரங்களினமேல் அசையபபோவேனோ வெனறது.

யஉ. அபபோது மரஙகளதிராட்சச்செடியோடே, நீ வநது எஙகளமேல் இராசாவாயிருவெனறன.

யங. ஆனால திராட்சச்செடி அவைகளோடே, தேவர்களையும, மனுஷரையும மகிழசசியாககுகிற எனனுடைய இரசததைநான விடடு மரஙகளினமேல அசையபபோவேனோவெனறது.

யச. அபபோதுசகலமரஙகளும்முட்செடியோடே, நீவநது எஙகளமேல இராசாவாயிருவெனறன.

யரு. முட்செடியானது மரஙகளுடனே, நீஙகளெனனை உஙகளமேல இராசாவாக அபிஷேகம பணணுகிறது மெயயானால, எனநிழலிலே வநதடையுஙகள. இலலாவிடடால, முட்செடியிலிருநது அககினிபுறப்படடுலீபனோனினகேதுருமரங்களைப்பட்சிக்கக்கடவதெனறது.

யசா. என தகபபன உஙகளுககாகயுததம பணணித தனசிவனையெணணாமறபோயஉங்களை மீதியானரின கைக்கு நீஙகலாககிவிடடார்.

யஎ. நீஙகளோவெனறால, இனறு எனதகபபனுடைய வீடடுக்கு விரோதமாயெழும்பி அவர்குமாரரானஎழுபதுபேரையொரே கலலினமேலே கொனறுபோடடு, அவனவேலைககாரியின மகனான அபிமெலேக், உஙகள சகோதரனானபடியினாலே, அவனைச சீகெம படடணததார்மேலே இராசாவாககினீர்கள.

யஅ. இபபோதும நீஙகள அவனை இராசாவாககினசெயகை உணமையோடும, உததமததோடுங்கூடிய செயகையாயிருககிறதும,

யகூ. நீஙகள எருபபாகாலையும, அவர்வீடடாரையும நலமாகநடததி, அவர்கைகளின செயகைககுததககதை யவருககுச்சரிககடடி இபபடியே இநநாளிலே அவரையும, அவர்வீடடாரையும நடததினது உணமையும, உததமுமாயிருககிறதுமுணடானால, அபிமெலேக்கினாலே நீஙகளும சநதோஷமாயிருஙகள. உஙகளாலே அவனும சநதோஷமாயிருப்பானாக.

உய. இலலாவிட்டால அபிமேலேகிலிருந்து அககினி புறப்பட்டுச சிகேம்பட்டணத்தாரையும, மிலலோவின்வீட்டாரையும பட்சிககவும், சிகேம்பட்டணத்தாரிலும, மிலலோவின வீட்டாரிலுமிருநது அககினி புறப்பட்டு அபிமேலேகைப பட்சிககவுககடவதென்றுயோததாஞசொலலி,

உக. ஓடித்தப்புவித்துககொண்டு, பேயேருககுபபோய, அஙகே தனசகோதரனுகிய அபிமேலேககுககு இடைநதலாயக குடியிருநதான.

உஉ. அபிமேலேக் இஸரவேலை மூன்றுவருஷம ஆண்டுகொணடபோதோவெனில,

உங. அபிமேலேககும், சிகேமினபெரிய மனுஷருககும ஆகாதேபோகும ஆவியைப பராபரன அவர்களுககுள்ளே வரபபணணினூர்.

உச. எருப்பாகாவின எழுபது குமாரருககுசசெயயபபட்ட கொடுமைவநதுபலித்து, அவர்களுடைய இரததபபழி அவர்களைககொன்ற அவர்களுடைய சகோதரனுகிய அபிமேலேகினமேலும், தன சகோதரரைககொல்லக கைகளை யவன திடபபடுத்தின சிகேம மனுஷர்மேலும் சுமருமபடியாகச சிகேமின பெரியமனுஷர் அபிமேலேககுககு இரண்டகமபணணினூர்கள.

உரு. மலைகளுடையசிகரஙகளினமேல அவனுககுப பதிவிருககிறவர்களைவைததார்கள. இவர்கள்தஙகளருகேவழியிலே நடநதுபோகிறபாவரையுஙகொளளையிட்டார்கள. அது அபிமேலேககுககு அறிவிககபபட்டது.

உசு. ஏபேதின குமாரனுகிய காகாலும, அவன சகோதரருமவநது சிகேமுககுப்போனுர்கள. சிகேமினபெரியமனுஷர் அவர்களைநமபி,

உஎ. வெளியேபுறபபட்டுத்தஙகள திராட்சததோட்டஙகளினபழஙகளையறுததுஆலையாடிப புகழ்ச்சியான பாட்டுகளைபபாடித்தஙகள தேவனின வீட்டிறகுட்போயபபுசித்துககுடித்து அபிமேலேகைச்சபித்தார்கள.

உஅ. ஏபேதினகுமாரனுகியகாகாலசொன்னதாவது; அபிமேலேகை நாம சேவிகக அவனூர்! அவனைசசேவிககச சிகேமென்பவனூர்! அவன எருப்பாகாவினமகனும், சேபூலெனபவனஅவனகாரியககாரனுமலலவோ! சிகேமின தகபபனுன ஏமோரின மனுஷரைபபே சேவியுஙகள. அவனைநாஙகளசேவிபபதெனன!

உகூ. அபிமேலேகை நானவிலககிவிட இநதச்சனம என கையினகீழிருநதால நாலையெனறுன. ஆனுல அபிமேலேககுககு உன இராணுவததைப பெருககபபணணிப புறப்பட்டுவாவெனறுசொலலபபட்டது.

ஙய. அந்தெனிற பட்டணததின அதிக்ககாரனுகிய சேபூல ஏபேதின குமாரனுகிய காகாவின வார்ததைகளைக கேட்டபோது கோபமூணடவனுகி,

ஙக. இரகசியமாய அபிமேலேககணடைககுத்தாதுபதிகளையனுபபி, இதோ,ஏபேதின குமாரனுகிய காகாலும, அவனசகோதரருஞசிகேமுககுவநதிருககிறுர்கள. இதோ,பட்டணததையுமககு விரோதமாககுகிறுர்கள.

ஙஉ. இபபோது நீர் உமமோடிருககுஞசனததோடே கூட இரவிலெழுநதுவநது வெளியிலேபதிவிருநது,

ஙங. காலமே சூரியனுதிககையிலெழுமபிப பட்டணததினமேலவிழுநது, இதோ, அவனும, அவனேடிருககிற சனமும உமக்கெதிரே புறபபடுமபோது, உமமுடைய கைககு நேரிடுகிறபடி அவனுககுசசெயயுமெனறு சொலலியனுபபினுன.

ஙச. அபபடியே அபிமேலேகும, அவனேடிருநத எலலாசசனமும இரவிலெழுநதுவநது, சிகேமுககுவிரோதமாக நாலுபவிஞசாயபபதிவிருநதார்கள.

ஙரு. ஏபேதின குமாரன காகாலபுறபபட்டுப பட்டணததின ஒலிமுகவாசலில நினறுகொணடான. பதிவிருநத அபிமேலேகோவெனறுல, தனனேடிருககிற சனததோடுகூட எழுமபிவநதான.

ஙசு. காகால அநதச சனததைககணடு, இதோ, மலைகளினசிகரஙகளிலிருநது சனம் இறஙகிவருகிறதெனறுசேபூலோடேசொனனுன. அனறு, சேபூல அவனேடே, நீமலைகளின நிழலைககணடு மனுஷரெனறு நினைககிறுயெனறுன.

ஙஎ. காகாலோவெனறுல், திருமபப்பேசி, இதோ, சனநதேசததின நடுவிலிருநதிறஙகிவநது ஒரு பவிஞசுமெயயோனெனிமின கர்வாலியுமரவழியாய வருகிறதெனறுன.

ஙஅ. அப்போது சேபூலஅவனேடே, அபிமேலேகை நாம சேவிககிறதறகு அவன ஆரெனறு நீசொனன உனவாய இபபோது எஙகே? அது நீ அசட்டைபணணின சனமலலவோ? இபபோது நீ புறபபட்டு அதனேடே யுததமபணணெனறுன.

ஙகூ. காகால சிகேமின மனுஷருககு முனபாகபபுறபபட்டு அபிமேலேகோடே யுததமபணணினுன.

சய. ஆனுல அபிமேலேக் அவனைததுரததினுன. அவனுககுமுனபாக அவன ஓடினுன. பட்டணவாசலமட்டும அநேகர் வெட்டுணடுவிழுநதார்கள.

சக. ஆனுல அபிமேலேக், அருமாவிலிருநதுவிட்டான. சேபூலோவெனில, காகாலையும, அவன சகோதரரையுஞ சிகேமிலே யிராதபடிககுத துரததிவிட்டான.

சஉ. மறுநாளிலோவெனறுற சனமவெளியிலேபுறபபட்டது. அது அபிமேலேககுககு அறிவிககபபட்டபோது,

௪௩. அவன சனததைககூடடிககொணடு, அதை மூனறு பவிஞசாகவகுதது வெளியிலெட்டிவிருநது சனமபடடணததிலிருநது புறபபடடுவருகிறதைககணடபோது, அவர்களமேலெழுமபி அவர்களை வெடடினுன.

௪௪. அபிமெலேகும், அவனேடிருநதபவிஞசு மனுஷருமபாயநதுவநது, படடணததின ஒலிமுகவாசலில நினறுகொணருர்கள. மறற இரணடு பவிஞசு மனிதர்களோவெனில, வெளியிலிருககிற யாவர்மேலும விழுநது அவர்களைவெடடினர்கள.

௪௫. அபிமெலேக, அநநாளமுழுதும படடணததினமேலயுததமபணணிப படடணததைபபிடிதது, அதிலிருநதசனததைககொனறு, படடணததையிடிததுவிடடு அதில உபபுவிதைத்தான.

௪௬. அதைச சீகேந துருககதது மனுஷரெலலாருங கேடடபோது, அவர்களபேரித தேவனுடைய வீடடின அரணுககுட்பிரவேசிததார்கள.

௪௭. சீகேந துருககதது மனுஷரெலலாம அஙகேகூடினது அபிமெலேகுக்கு அறிவிககபபடடபோது,

௪௮. அபிமெலேக் தனனேடிருநத எலலாச சனததோடுங கூடசசலமோன மலையிலேறித தனகையிலே கோடாலியைபபிடித்து, ஒருமரததினகொமபைவெடடி, அதையெடுதது தனதோளினமேறபோடடுககொணடு, தனனேடிருநதசனததோடே, நான என்ன செயகிறேனெனறு காண்கிறீர்களோ, அதைத் தீவரமாய எனனைபபோலசசெயயுஙகளெனறுன.

௪௮. அபபோது சகலசனமும அவரவர் ஒவவொரு கொமபைவெடடி, அபிமெலேகுககுபபினசெனறு, அவைகளைஅநதஅரண் அருகேபோடடுப புருஷருமபெணசாதிகளும் ஏறககுறைய ஆயிரமபேராகிய சீகேந துருககதது மனுஷரெலலாருஞ சாகுமட்டியாய அவர்களிலிருநத அநத அரணையககினியாலே சுடடுபபோடடார்கள.

௫௰. பிறபாடு அபிமெலேச், தேபேச்சுககுபபோய, அதறகுவிரோதமாயப பாளயமிறஙகி, அதைபபிடிநதான.

௫௧. ஆனுல படடணததின நடுவேபலதத துருககமிருநதது. அஙகே சகலபுருஷருமபெண்சாதிகளும, படடணதது மனுஷர் அனைவரும ஓடியடைநது, தஙகள பினனுலே கதவைபபூடடிபபோடடுத துருககததினமேலே யேறினர்கள.

௫௨. அபிமெலேகோவெனருல, அநதத் துருககமடடுமவநது, அதினமேல யுததமபணணித துருககததின கதவைசசுடடுபபோடுமபடிககு அதினணடையிறசேர்நதான.

௫௩. ஆனல ஒருபெணசாதி ஒரு எநதிரககலலின துணடை அபிமெலேகுடைய தலையினமேலேபோடடாள. அது அவன கபாலததைநொறுககிறறு.

௫௪. அபபோது அவன சீககிரமாயத தன ஆயுதஙகளைசசுமககிற வேலைக்காரனைககூபபிடடு, எனனை ஒரு பெண்சாதிகொனருளெனறு எனமேலேசொலலாதபடிககு, நீ யுனபடடயததையுருவி எனனைககொலலெனறு அவனேடேசொனனுன. அபபடியே அவன வேலைககாரன அவனைக்குததிபபோடடான. அவன செததான.

௫௫. அபிமெலேக்செததுபபோனதை இஸரவேலமனுஷர் கணடபோது அவரவர் தஙகள இடஙகளுககுபபோயவிடடார்கள.

௫௬. இபபடி அபிமெலேக் தனனுடைய எழுபதுசகோதரரைககொலலுகிறதினலே தன தகபபனுக்குசசெய்தபொலலாபபைப் பராபரன அவனமேலேதிருபபி,

௫௭. சீகேம மனுஷருஞசெயத எலலாபபொலலாபபையுமபராபரன அவர்களதலையினமேலே திருபபிவிடடார். எருபபாகாலினகுமாரன யோததாமினசாபம அவர்கள் மேலவநதது.

## ௰. அதிகாரம்.

[(௧) தோலாசாமீரில இஸரவேலரை நியாயமவிசாரிததது. (௩) முபபது படடணஙகளையுடைய முபபதுகுமாரர்களுககுததகபபனுகிய யாவீர் சனஙகளையாணடது. (௬) பெலிஸதர்களும், அம்மோனர்களும் இஸரவேலரை வருததபபடுததியது. (௰) வருததமானகாலததில அவர்களைபபராபரன அனனிய தேவர்களிடத்திறபோகசசொனனது. (௰௫) அவர்கள மனஸதாபப் படடபோது அவர்களுககிரஙகியது.]

அபிமெலேகுககுபபிறபாடு, தோதோவினமகனுனபூவாவின்குமாரனதோலாளெனற ஈசகஷார்கோததிரததான இஸரவேலையிரட்சிகக எழுமபினுன. அவன எபபிராயீம மலைததேசதது ஊரானசாமீரிலே குடியிருநது.

௨. இஸரவேலை இருபததுமூனறு வருஷம நியாயமவிசாரிததுப பிறபாடுமரிததுசசாமீரிலே அடககமபணணபபடடான.

௩. அவனுககுபபிறபாடு கிலெயாததியனுன யாவீர் எழுமபி இஸரவேலை இருபததிரணடு வருஷம நியாயம விசாரிததான.

௪. முபபது கழுதைககுடடிகளினமேலேறும முபபதுகுமாரர் அவனுககிருநதார்கள. இவர்களுககு முபபது ஊர்களுமிருநதன. கிலெயாத தேசததிலிருககிற அவைகளுககு இநநாளவரைககும யாவீரின கிராமஙகளெனற பேரிருககினறது.

௫. யாவீர் மரிததுக காமோனிலே அடககமபணணபபடடான.

௬. இஸ்ரவேல்புத்திரரோவெனில், அப்புறம் கர்த்தருக்குமுன்பாகப் பொல்லாப்புச்செய்து, கர்த்தரைவிட்டு அவரைச்சேவிக்காமற்போய்ப்பாகால்களையும், அஸ்தரோத்தையும், சூரியாவின் தேவர்களையும், சீதோனின் தேவர்களையும், மோவாபின் தேவர்களையும், அம்மோன் புத்திரரின் தேவர்களையும், பெலிஸ்தரின்தேவர்களையுஞ் சேவித்தார்கள்.

௭. அப்போது கர்த்தர் இஸ்ரவேலின்மேற் கோபமூண்டவராகி, அவர்களைப் பெலிஸ்தர் கையிலும், அம்மோன் புத்திரர் கையிலும் விற்றுப்போட்டார்.

௮. அவர்கள் அந்தவருஷமுதற்கொண்டு பதினெட்டுவருஷமாய் யோர்தானுக்கப்பாலே கிலெயாத்திலுள்ள எமோரியரின்தேசத்திலிருக்கிற இஸ்ரவேல்புத்திரரையெல்லாம் நொறுக்கி முறித்தார்கள்.

௯. அம்மோன்புத்திரர் யூதாவின்மேலும், பென்யமீனமேலும், எப்பிராயீம் வீட்டார்மேலும் யுத்தம்பண்ண யோர்தானையுங் கடந்துவந்தார்கள். இஸ்ரவேலுக்கும்மிகுந்தியும் நெருக்கமாயிற்று.

௰. அப்போது இஸ்ரவேல்புத்திரர் கர்த்தரை நோக்கிக்கூப்பிட்டு, உமக்குவிரோதமாகப்பாவஞ்செய்தோம். ஏனெனில், எங்கள் பராபரனைவிட்டுப் பாகால்களைச்சேவித்தோமென்றார்கள்.

௧௧. ஆனாற்கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரோடேசொன்னதாவது; எகிப்தியரும், எமோரியரும், அம்மோனபுத்திரரும், பெலிஸ்தரும்,

௧௨. சீதோனியரும், அமலேக்கியரும், மாகோனியரும் உங்களையிறுக்கப்பிடிக்குஞ்சமயங்களில் நீங்கள் நம்மைநோக்கிக் கூப்பிட்டபோது, நாம் உங்களையவர்கள் கைக்கு நீங்கலாக்கிப் பிரட்சித்ததில்லையோ!

௧௩. நீங்களோவென்றால், நம்மைவிட்டு, அந்நிய தேவர்களைச் சேவித்துவந்தீர்கள். ஆகையால் இனியுங்களைப்பிரட்சியோம்.

௧௪. நீங்கள்போய் உங்களுக்கு நீங்கள் தெரிந்துகொண்டிருக்கிற தேவர்களைநோக்கிக் கூப்பிடுங்கள். அவைகள் உங்கள் நெருக்கத்தின்காலத்திலே உங்களை இரட்சிக்கட்டுமென்றார்.

௧௫. ஆனால் இஸ்ரவேல்புத்திரர் கர்த்தருடனே, பாவஞ்செய்தோம். தேவரீர் உமது டையபார்வைக்கு நன்றாயிருக்கிறபடியெல்லாம் எங்களுக்குச்செய்யும். ஆனால் இந்நாளில் எங்களைத்தப்புவியுமென்றுசொல்லி,

௧௬. அந்நியதேவர்களைத் தங்கள் நடுவிலிருந்து விலக்கிவிட்டுக் கர்த்தருக்காராதனை செய்தார்கள். அப்போது அவர் இஸ்ரவேலின் வருத்தத்தைப்பார்த்து மனதுருகினார்.

௧௭. அம்மோன புத்திரர்கூடி வரவழைப்பிக்கப்பட்டுக் கிலெயாத்திலே பாளயமிறங்கினார்கள். இஸ்ரவேல புத்திரரோவென்று கூடிக்கொண்டு மிஸ்பாவிலே பாளயமிறங்கினார்கள்.

௧௮. அப்போது சனமும், கிலெயாத்தின் பிரபுக்களும், ஒருவரோடொருவர் அம்மோனபுத்திரர்மேல் யுத்தம்பண்ணத் துவக்கப்போகிறமனுஷனார்? அவன் கிலெயாத்தின் குடிகளுக்கெல்லாந் தலைவனாயிருப்பானென்றார்கள்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) எப்தாவைக் கிலெயாத்தியர் தங்களுக்குத் தலைவனாக ஏற்றுக்கொள்வதற்குச் செய்தவுடம்படிக்கை. (௰௨) அவனுக்கும், அம்மோனருக்கும் நடந்த சமாதானவுடம்படிக்கை வீணானது. (௨௯) எப்தாவின்பொருத்தனை. (௩௨) அவன் அம்மோனரைவென்றது. (௩௪) அவன் பொருத்தனையைத் தன்குமாரத்தியின்மேற்செலுத்தியது.]

கிலெயாத்தியனான எப்தா, பலத்தபராக்கிரமனாயிருந்தான். ஆனால், அவன் பரஸ்திரீயின் குமாரன் கிலெயாத் அவனைப்பெற்றவன்.

௨. ஆனால் கிலெயாத்தின் பெண்சாதியும், அவனுக்குக் குமாரர்களைப்பெற்று இந்த அவன்பெண்சாதியின் குமாரர் பெரியவர்களானபிறபாடு, அவர்கள் எப்தாவைத்துரத்தி, நீயெங்கள்தகப்பன்வீட்டிலேசுதந்தரவாளியாயிருப்பதில்லை. ஏனெனில், நீ வேறேஸ்திரீயின்மகனென்று அவனுக்குச்சொன்னார்கள்.

௩. அப்போதுஎப்தாதன்சகோதரரைவிட்டோடிப்போய்த் தோப்தேசத்திலே குடியிருந்தான். நீசயற்றமனுஷர் எப்தாவோடே கூடிக்கொண்டு அவனோடேகூட யுத்தத்திற்குப்போவார்கள்.

௪. சிலநாளுக்குப்பிறபாடோவெனில், அம்மோனபுத்திரர் இஸ்ரவேலின்மேல் யுத்தம் பண்ணினார்கள்.

௫. அவர்கள் இஸ்ரவேலின்மேல் யுத்தம்பண்ணும்போதோவென்றால், கிலெயாத்தின் மூப்பர் எப்தாவைத் தோப்தேசத்திலிருந்தழைத்துவரப்போய்,

௬. எப்தாவுடனே, நீ வந்து, நாங்கள் அம்மோன புத்திரரோடு யுத்தம்பண்ண எங்கள் சேனாபதியாயிருப்பாயாகவென்றார்கள்.

௭. அப்போது எப்தா கிலெயாத்தின்மூப்பருடனே, நீங்களல்லவோ என்னைப்பகைத்து என் தகப்பன்வீட்டிலிருந்தென்னைத்துரத்தினவர்கள் நீங்களல்லவோ. இப்போது உங்களுக்கு நெருக்கிடையானதினாலே என்னண்டைக்கு ஏன்வருகிறீர்களென்றான்.

௮. ஆனால் கிலெயாத்தின்மூப்பர் எப்தாவுடனே, நீ யெங்களுடனே கூடவந்து அம்மோன புத்திரரோடு யுத்தம்பண்ணிக் கிலெயாத்தின் குடிகளாகிய எங்களனைவர்மேலும், நீ தலைவனாயிருப்பதற்காகத்தானே

இபபோது உன்னண்டைககுத திருமபிவநதோமென்றார்கள.

௯. அபபோது ஈப்தா, அமமோன புததிரரோடே யுததமபணண நீஙகள என்னைத திருமப அழைததுபபோனபிறபாடு கர்ததர் அவர்களை யெனககுமுனபாக ஒபபுக கொடுததால நான உஙகளுககுத தலைவனாயிருபபேனோவென்று கிலெயாததின மூபபரைக்கேட்டான.

௧௦. கிலெயாததின மூபபர் ஈப்தாவுடனே, நாஙகள இநத உனவார்ததையினபடியே செயயாவிட்டால, கர்ததர் நமககுநடுவாக நியாயங கேட்பாராகவென்றார்கள.

௧௧. அபபடியே ஈப்தா கிலெயாததின மூபபரோடே கூடப்போனான. சனம அவனைத் தஙகளமேலே தலைவனுப், சேனாபதியுமாகவைதது, ஈப்தா தனவார்ததைகளையெலலாம மிஸபாவிலே கர்ததருககு முனபாகப பேசிககொண்டான.

௧௨. பிறபாடு ஈப்தா, அமமோன புததிரரின இராசாவண்டைககுத தானாபதிகளையனுபபி, நீ என்தேசததிறகு விரோதமாக யுததமபணணஎன்னண்டையிலவருகிறதறகு எனககும, உனககுமென்னவழககிருககிறதென்று சொலலச்சொன்னான.

௧௩. அமமோன புததிரரின இராசா ஈப்தாவின தானாபதிகளோடே சொன்னதாவது; இஸரவேலர் எகிப்திலிருநதேறிவருகிறபோது, அர்னோன்துவககி யாபோக்மட்டுககும, யோர்தானமட்டுககு மிருககிற என்னுடைய தேசததைக கட்டிககொண்டார்களே; இபபோதும அதையெனககுச சமாதானமாயத திருமபக கொடுவென்று சொலலுஙகளென்றான.

௧௪. ஆனால்ஈப்தா, மறுபடியும அம்மோன புததிரரின இராசாவண்டைககுத தானாபதிகளையனுபபி, அவனுககுச்சொலலச்சொன்னதாவது;

௧௫. ஈப்தா சொலலுகிறதேதெனில, இஸரவேல மோவாபியரின தேசததையாகிலும், அமமோன புததிரரின தேசததையாகிலுங கட்டிககொண்டதிலலையே;

௧௬. ஏனெனில, இஸரவேலஎகிப்திலிருநது ஏறிவருகிறபோது, இஸரவேல வனாநதரததிலே நாணற்சமுததிரமட்டும்நடநதுபிறகு காதேசுககுவநது,

௧௭. அபபோது இஸரவேல ஏதோமின இராசாவண்டைககுத தானாபதிகளையனுபபி, நான உனதேசததுவழியாயக கடநதுபோகட்டுமே என்றுசொலலச சொன்னார்கள. ஆனால ஏதோமின இராசா கேளவிகொடுககவிலலை. மோவாபின இராசாவண்டைககும அனுபபினார்கள. அவனுமவேண்டாமென்றான. அபபடியேஇஸரவேலகாதேசிலே தரிததிருநதது.

௧௮. பிறபாடு வனாநதரததிலே நடநது ஏதோந தேசததையும, மோவாப் தேசததையுஞ சுறறிபபோய, மோவாபினதேசததிறகுக் கிழககேவநது, மோவாபின எலலைக்குட்பிரவேசியாமல, மோவாபின எலலையான அர்னோன நதிககபபாலே பாளயமிறஙகினார்கள.

௧௯. அபபோது இஸரவேல எஸ்போனில ஆளுகிற சீகோனென்ற எமோரியரின இராசாவண்டைககுத தானாபதிகளை யனுபபி, நான உனதேசததுவழியாய என்னுடைய தானததிறகுக கடநதுபோகட்டுமே என்று சொலலச்சொன்னார்கள.

௨௦. ஆனால தன எலலையைக கடககிறதற்குச சீகோன இஸரவேலைநமபாமல, தன சனததையெலலாங கூட்டி யாத்சாவிலே பாளயமிறஙகி, இஸரவேலோடே யுததம பணணினான்.

௨௧. அபபோது இஸரவேலின பராபரனாகிய கர்ததர் சீகோனையும அவனுடைய எலலாச சனததையும இஸரவேலினகையிலே அவர்களை முறியடிககக ஒபபுககொடுததார். அபபடியே இஸரவேல அநதத்தேசததிலே குடியிருநத எமோரியரின சீமையையெலலாமபிடிதது அர்னோனதுவககி,

௨௨. யாபோக் மட்டாகவும, வனாநதரந துவககி யோர்தான மட்டாகவு மிருக்கிற எமோரியரின எலலையையெலலாஞ சுதநதரமாயக கட்டிககொண்டார்கள.

௨௩. இபபோதும இஸரவேலின பராபரனாகிய கர்ததர் எமோரியரைத தமமுடைய சனமாக இஸரவேலுககுமுனபாகத் துரததியிருககையில, நீ அநதத்தேசததைக்கட்டிககொளளுவாயோ!

௨௪. உனதேவனாகிய காமோஸ உனககு முனபாகத துரததுகிறவர்களின தேசததை நீ கட்டிககொளளுவாயலலவோ! அபபடியே எஙகள பராபரனாகிய கர்ததர் எஙகளுககு முனபாகத துரததுகிறவர்களினதேசததையெலலாம நாஙகளுஙகட்டிக்கொளளுகிறோம.

௨௫. இபபோதும, சிபபோரின குமாரனாகிய பாலாககென்ற மோவாபின இராசாவைப பார்ககிலும உனககு அதிகநியாயமுணடோ! அவன இஸரவேலோடே எபபோதாகிலும வழககாடினானோ! எபபோதாகிலும அவர்களுககு விரோதமாகயுததம பணணினானோ!

௨௬. இஸரவேல எஸ்போனிலும, அதின கிராமஙகளிலும, ஆரோவேரிலும, அதின கிராமஙகளிலும, அர்னோன நதியருகான எலலா ஊர்களிலும முநநூறுவருஷங குடியிருககையில, இத்தனைகாலததிலே நீஙகள அவைகளைத்திருமபவிடுவிக்காதேபோனதென்ன!

௨௭. நான் உனக்கு விரோதமாகப் பாவஞ்செய்யாதிருந்தும், நீ என்மேல் யுத்தம் பண்ணும் பொல்லாப்பை யெனக்குச் செய்கிறாய். நியாயாதிபதியாகிய கர்த்தர் இன்று இஸ்ரவேல் புத்திரருக்கும், அம்மோன் புத்திரருக்கும் நடுவாக நியாயந்தீர்க்கக்கடவரென்று சொல்லியனுப்பினான்.

௨௮. ஆனால் அம்மோன் புத்திரரின் இராசா ஈப்தா தனக்குச் சொல்லியனுப்பின வார்த்தைகளுக்குச் செவிகொடாதேபோனான்.

௨௯. அப்போது கர்த்தருடைய ஆவி ஈப்தாவின்மேலே வந்திருக்கையால், அவன் கீலெயாத்தையும், மனாசேயையுங் கடந்துபோய்க் கீலெயாத்திலிருக்கிற மிஸ்பேக்கு வந்து, அங்கேயிருந்து அம்மோன் புத்திரருக்கு எதிராகப் போனான்.

௩௰. ஈப்தா கர்த்தருக்கு ஒரு பொருத்தனையைப் பண்ணிச் சொன்னதாவது; தேவரீர் அம்மோன் புத்திரரை யென்கையிலொப்புக்கொடுக்கவே ஒப்புக்கொடுத்தால்,

௩௧. அவர்களிடத்திலிருந்து சமாதானத்தோடே திரும்பவருகிற எனக்கு என் வீட்டு வாசற்படியிலிருந்து எதிர்கொண்டு வருகிறது கர்த்தருடையதாயிருக்கும். அதைச் சர்வாங்க தகனபலியாகச் செலுத்துவேனென்றான்.

௩௨. இப்படியே ஈப்தா அம்மோன் புத்திரரின்மேல் யுத்தம்பண்ண அவர்களுக்கு எதிராகப் புறப்பட்டுப்போனான். கர்த்தர் அவர்களை அவன் கையிலொப்புக்கொடுத்தார்.

௩௩. அவன் அவர்களை ஆரோவேர் துவக்கி மின்னித்திற்குப் போகுமட்டுக்கும், ஆபேல் கேராமீம் மட்டுக்கும் மகா பெரிய முறியடியாக முறியடித்து, இருபது பட்டணங்களைப் பிடித்தான். இப்படி அம்மோன் புத்திரர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் தாழ்த்தப்பட்டார்கள்.

௩௪. ஈப்தா, மிஸ்பாவிலிருக்கிற தன் வீட்டுக்கு வருகிறபோதோவெனில், இதோ, அவன் குமாரத்தி மேளங்களோடும், சங்கீதவாத்தியங்களோடும் அவனுக்கு எதிர்கொண்டு புறப்பட்டாள். அவள் அவனுக்கு ஒரே பிள்ளையானவள். அவளைத் தவிர அவனுக்குக் குமாரனுமில்லை. குமாரத்தியுமில்லை.

௩௫. அவன் அவளைக் காண்கிறபோது தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, ஐயோ, என் குமாரத்தியே! என்னை மெத்தவும் மனமடியவும், கலங்கவும் பண்ணுகிறாய். என்னென்றால் கர்த்தரை நோக்கி, என் வாயைத் திறந்து பேசினேன். அதை நான் திருப்பக்கூடாதென்றான்.

௩௬. அப்போது அவள் அவனோடே, என் தகப்பனே! நீர் கர்த்தரை நோக்கி, உம்முடைய வாயைத் திறந்து பேசினீரல்லவோ? அம்மோன் புத்திரராகிய உம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறதைக் கர்த்தர் உமக்குக் கட்டளையிட்டபடியினாலே, உம்முடைய வாயிலிருந்து புறப்பட்டபடி எனக்குச் செய்யுமென்றாள்.

௩௭. பின்னையும் அவள் தன் தகப்பனுடனே, நான் மலைகளின்மேலே போய்த்திரிந்து நானும் என் தோழிகளுமாய் என்னுடைய கன்னிமையிருப்புக்காகத் துக்கங்கொண்டாட எனக்கு இரண்டு மாதந் தவணை கொடும். இந்தக் காரியம் எனக்குச் செய்யப்படுவதாகவென்றாள்.

௩௮. அப்போது அவன், போவென்று அவளை இரண்டு மாதத்துக்கனுப்பிவிட்டான். அவள் தன் தோழிகளோடேகூடப் போய்த் தன் கன்னிமையிருப்புக்காக மலைகளின்மேலே துக்கங்கொண்டாடி,

௩௯. இரண்டு மாதம் முடிந்தபோது, தன் தகப்பனண்டைக்குத் திரும்பிவந்தாள். அப்போதவன் பண்ணியிருந்த தன் பொருத்தனையின்படி அவளுக்குச் செய்தான். ஆகையால், அவள் புருஷனை யறியாதிருந்தாள்.

௪௰. இஸ்ரவேலின் குமாரத்திகள் போய்க் கீலெயாத்தியனான ஈப்தாவின் குமாரத்தியோடே பேசிக்கொள்ள வருஷந்தோறும் நாலு நாள் இஸ்ரவேலிலே பழக்கமாயிற்று.

## ௰௨. அதிகாரம்.

[(௧) எப்பிராயீமர் ஈப்தாவுடன் யுத்தஞ்செய்து ஷிபோலேத்தென்று சொல்லாலறியப்பட்டுக் கீலெயாத்தியராலே கொல்லப்பட்டது. (௭) ஈப்தா மரித்தது. (௮) முப்பது குமாரர்களையும், முப்பது குமாரத்திகளையுமுடைய எப்சானும், (௰௧) ஏலோனும், (௰௩) நாற்பது குமாரர்களையும், முப்பது அண்ணன் குமாரர்களையுமுடைய அப்தோனும் இஸ்ரவேலை நியாயம் விசாரித்தது.]

எப்பிராயீம மனுஷர் கூடிவரவழைக்கப்பட்டு வடக்கே புறப்பட்டுவந்து, ஈப்தாவுடனே, * நீ எங்களை உன்னோடே கூடவரவழைப்பிக்காமல், அம்மோன் புத்திரர்மேல் யுத்தம் பண்ணப்போனதென்ன! உன் வீட்டை உன்னோடுங்கூட அக்கினியாற் சுட்டுப்போடுவோமென்றார்கள். * அ, க.

௨. அப்போது ஈப்தா, அவர்களோடே சொன்னதாவது; எனக்கும் என் சனத்திற்கும் அம்மோன் புத்திரரோடே பெரிய வழக்கிருக்கிறபோது உங்களைக் கூப்பிட்டேன். ஆனால் நீங்கள் என்னை யவர்கள் கைக்கு நீங்கலாக்கி யிரட்சித்ததில்லை.

௩. நீங்கள் என்னை யிரட்சிக்கிறதில்லையென்று நான் கண்டபோது, நான் என் சீவனை என் கையிலே பிடித்துக்கொண்டு அம்மோன் புத்திரருக்கெதிராகப் போனேன். கர்த்தர் அவர்களை யென் கையிலொப்புக்கொடுத்தார்.

இபபோதும எனமேலயுததமபணண நீஙகள இனறு எனனண்டைக கேறிவநததென னவெனறுசொலவி,

௪. ஈப்தா கிலெயாத் மனுஷரையெலலாங கூட்டி, எபபிறுயீமோடு யுததமபணணி ளுன. எபபிறுயீமுககும, மனுசேககும நடுவே குடியிருககிற கிலெயாததியரான நீஙகள எபபிறுயீமை விடடோடிபபோனவர்களெனறு எபபிறுயீமர் சொனனபடியினுலே, கிலெயாத்மனுஷர் அவர்களைமுறியடிததார்கள.

௫. எபபடியெனறுற கிலெயாததியர் எபபிறுயீமருககு முநதிககொணடு, யோர்தானின துறைகளைபபிடிததார்கள. அபபோது சமபவிதததெனனுல, எபபிறுயீமரில தபபினவர்களில ஒருவனவநது, நான அக்கரைககுபபோகடடுமெனறு சொலலுமபோது, கிலெயாத்மனுஷர், நீ எபபிறுயீமனே? எனறு அவனைககேட்பார்கள. அவனலலவெனறுல்,

௬. அவனுடனே, ஷிபோலேத தெனறு சொலலெனபார்கள. அபபோது அவன அபபடிச்சொலலக கூடாமல், சிபோலேத தெனபான. அபபோது அவனைபபிடிதது, யோர்தான துறையிலே வெடடிபபோடுவார்கள. அககாலததிலே எபபிறுயீமில நாறபததிரணடாயிரமபேர் விழுநதார்கள.

௭. ஈப்தா, இஸ்ரவேலை ஆறுவருஷம நியாயம விசாரிததான. பிறபாடு கிலெயாததியனுன ஈப்தா, மரிதது கிலெயாத்படடணஙகளில அடககம பணணபபடடான.

௮. அவனுககுப பிறகு பெத்லகேமூரானுகிய எப்சான, இஸ்ரவேலை நியாயமவிசாரிததான.

௯. அவனுககு முபபது குமாரரிருநதார்கள. முபபதுகுமாரததிகளைப புறததிலே விவாகமபணணிககொடுதது தனகுமாரருககு முபபதுபெணகளைப புறததிலேகொணடான. அவன இஸ்ரவேலை ஏழுவருஷமநியாயமவிசாரிததான.

௰. பிறபாடு எப்சான மரிததுபபெத்லகேமிலே அடககமபணணபபடடான.

௰௧. அவனுககுபபிறகு சேபுலோனனுன ஏலோன, இஸ்ரவேலைநியாயமவிசாரிததான. பததுவருஷம இஸ்ரவேலை நியாயம விசாரிததான.

௰௨. பிறபாடு சேபுலோனனுன ஏலோன மரிததுச சேபுலோன தேசமான ஆயலோனூரில அடககமபணணபபடடான.

௰௩. அவனுககுபபிறகு இலலேலின குமாரனுகிய அப்தோனெனறபிரததோனியன இஸ்ரவேலை நியாயமவிசாரிததான.

௰௪. அவனுககு எழுபது கழுதைககுடடிகளினமேலேறும நாறபது குமாரரும முபபது பேரபபிளளைகளுமிருநதார்கள. அவன இஸ்ரவேலை எடடுவருஷம நியாயமவிசாரிததான.

௰௫. பிறபாடு இலலேலின்குமாரனுகிய அப்தோனமரிதது, எபபிறுயீம தேசததில ஆமலேககியன மலையிலிருககிற பிரததோனில அடககமபணணபபடடான.

## ௰௩. அதிகாரம்.

[(௧) பெலிஸ்தர்கையில இஸ்ரவேலரை ஒபபுககொடுததது. (௨) தேவதூதன மனோவாவின பெணசாதிககும, (௮) மனோவாவுககும தரிசனையானது. (௰௫) மனோவாவின பலியெரிநததினுல அவன தேவதூதனை அறிநதது. (௨௪) சிம்சோனபிறநதது.]

இஸ்ரவேல்புததிரர் அபபுறஙகர்ததரின பார்வைககுப பொலலாபபானதைச செயதபடியினுலே கர்ததர் அவர்களை நாறபது வருஷமடடும பெலிஸ்தர்கையில ஒபபுககொடுததார்.

௨. ஆனுல தாணியரின வம்சததானுகிய சோறு ஊரானுன ஒரு மனுஷனிருநதான. அவனபேர் மனோவா. அவனபெணசாதிபிளளை பெறுதமலடியாயிருநதாள.

௩. கர்ததருடையதூதர் அந்த ஸ்திரீககுத தரிசனையாகி, அவளோடேசொன்னதாவது; இதோ, பிளளைபெறுத மலடியான நீ கெர்ப்பநதரிதது ஒருகுமாரனைபபெறுவாய.

௪. இபபோதும நீ திராட்சபபழ இரசமும், லாகிரியுள்ளபானமுங்குடியாதபடிககும்,தீட்டானதொனறும புசியாதபடிககும எசசரிககையாயிருபபாயாக.

௫. ஏனெனில, இதோ, நீ கெர்பபநதரிதது ஒரு குமாரனைபபெறுவாய. * அவன தலையினமேற சவரகன கத்திபடுவதிலலை. ஏனெனறுற பிறநதது முதறகொணடு அநதபபிளளை பராபரனுடைய நசரேயனுயிருபபான. அவன இஸ்ரவேலைப பெலிஸ்தரினகைககு நீஙகலாககி ரட்சிககத துவககுவானெனறுர். * ௪. யோசே. ௬, ௫.

௬. அபபோது அநதப பெணசாதிவநது தன புருஷனுககுச சொனனதாவது; பராபரனுடையமனுஷன எனனணடைககு வநதார். அவருடைய உருவம பராபரனுடைய தூதரின உருவைபபோல மகாபயஙகரமாயிருநதது. அவர் எவவிடததாரெனறு நான அவரைககேடகவிலலை. அவர் தமமுடைய நாமததை யெனககு அறிவிததது மிலலை.

௭. அவரெனககுச்சொனனது; இதோ, நீ கெர்பபநதரிதது ஒருகுமாரனைப் பெறுவாய. இபபோதும நீ திராட்சபபழ இரசமும, லாகிரியுளள பானமுமகுடியாமலும, தீடடானதொனறும புசியாமலு மிருபபாயாக. ஏனெனில, அநதபபிளளை பிறநதது முதறகொணடு தனமரணநாளமடடும பராப

பரனுடைய நசரேயனாயிருப்பானென்றொ ன்றுசொன்னாள்.

அ. அப்போது மனோவா, கர்த்தரை விண் ணப்பம்பண்ணி, ஆ, என் ஆண்டவரே! பராபரனாகிய தேவரீர் அனுப்பின பராபர னுடைய மனுஷன் இன்னமொருவிசை எங்களண்டைக்குவந்து, பிறக்கும் அந்தப் பிள்ளைக்காக நாங்கள் செய்யவேண்டியதை எங்களுக்குப் போதிப்பாராகவென்றுவேண் டிக்கொண்டான்.

கூ. பராபரன் மனோவாவின் சத்தத்தைக் கேட்டார். அந்தஸ்திரிவெளியிலே உட்கா ந்திருக்கிறபோது, பராபரனுடையதூதர் திரும்ப அவளண்டைக்குவந்தார். அப்போ து அவள் புருஷனாகிய மனோவா, அவளண் டையிலிருந்ததில்லை.

௰ ஆகையால், அவள் சீக்கிரமாய் ஓடித் தன் புருஷனுக்கறிவித்து, அவனுடனே, இதோ, அன்று என்னண்டைவந்தவர் எனக் குத்தரிசனையானாரென்றாள்.

௰க. அப்போது மனோவா எழுந்திருந்து தன்பெண்சாதியின் பின்னாலேபோய் அவ ரண்டைக்குவந்து, நீர் இந்த ஸ்திரீயோடே பேசினவரோ? என்று அவரைக்கேட்டான். அவர் நான்தானென்றார்.

௰௨. அப்போது மனோவா, நீர் சொன்ன காரியம்வரும்போது அந்தப்பிள்ளையினவண் மையும், அதின்செய்கையும் என்னவென்று கேட்டான்.

௰௩. கர்த்தருடையதூதர் மனோவாவோடே சொன்னதாவது; நான்ஸ்திரீயோடேசொன் னயாவுக்கும் அவள்எச்சரிக்கையாயிருந்து,

௰௪. திராட்சச்செடியிலே பிறக்கிறதொன் றும் சாப்பிடாமலும், திராட்சப்பழ இரச மும், வாகிரியுள்ளபானமும் குடியாமலும், தீட்டானதொன்றும் புசியாமலும், நான் அவளுக்குக் கற்பித்ததையெல்லாங் கைக் கொள்ளக்கடவளென்றார்.

௰௫. அப்போது மனோவா கர்த்தருடைய தூதரோடே, நாங்கள் ஒரு வெள்ளாட்டுக் குட்டியை உமக்குச் சமைத்துக்கொண்டு வருமட்டுந்தரித்திருமென்றான்.

௰௬. கர்த்தருடைய தூதர் மனோவாவுட னே, நீ என்னையிருக்கச்சொன்னாலும் நான் உன் உணவைப்புசியேன். நீ சர்வாங்கதகன பலியிட்டாயேயானால், அதை நீ கர்த்தருக் குப் பலியாய்ச் செலுத்துவாயாகவென்றார். ஏனென்றால், அவர் கர்த்தருடைய தூதனா னவரென்கிறதை மனோவா அறியாதிருந்தான்.

௰௭. அப்போது மனோவா, நீர்சொன்னகா ரியம் வரும்போது நாங்கள் உம்மைக்கனம் பண்ண உம்முடைய நாமமென்னவென்று கர்த்தருடைய தூதனைக்கேட்டான்.

௰௮. கர்த்தருடைய தூதனானவனென்றால், அவனுடனே, என்னுடைய நாமமென்னவெ ன்று நீ இப்படிக்கேட்பானேன்! அது அதி சயமானவரென்பதென்றுசொன்னார்.

௰௯. மனோவாபோய், வெள்ளாட்டுக்குட் டியையும், காணிக்கையையுங்கொண்டுவந்து அதைக் கன்மலையின்மேலே கர்த்தருக்குச் செலுத்தினான். அப்போது மனோவாவும், அவன் பெண்சாதியும் பார்க்கையில் அதிசய மான நடத்தையைக்காண்பித்தார்.

௨௰. சம்பவித்ததெதென்றால், அக்கினிச்சு வாலைப்பலிபீடத்திலிருந்து வானத்திற்குநேரா க எழும்புகையிற்கர்த்தருடையதூதர் பலிபீ டத்தின்சுவாலையிலேயேறிப்போனார். அதை மனோவாவும், அவன்பெண்சாதியுங் கண்டு, முகங்குப்புறத் தரையிலேவிழுந்தார்கள்.

௨௧. அப்புறங்கர்த்தருடைய தூதர்மனோ வாவுக்கும், அவன்பெண்சாதிக்குங் காணப் படவில்லை. அப்போது அவர்கர்த்தருடைய தூதனென்பதை மனோவா அறிந்துகொண்டு,

௨௨. தன்பெண்சாதியோடே, நாம்பரா பரனைக் கண்டதினாலே சாவவேசாவோ மென்றான்.

௨௩. ஆனால் அவன்பெண்சாதி அவனுடனே கர்த்தர் நம்மைக்கொன்றுபோடச் சித்தமா யிருந்தாரானால், அவர்நம்முடையகையிலே சர்வாங்க தகனபலியையும், காணிக்கையை யும் வாங்குவதுமில்லை. இவைகளையெல்லாம் நமக்குக் காண்பிப்பதுமில்லை. இப்போது அவர்செய்தபடி இவைகளைநமக்குக் கேட்கப் பண்ணுவதுமில்லையென்றாள்.

௨௪. பிறபாடு அந்தப்பெண்சாதிஒருகுமா ரனைப்பெற்று அவனுக்குச் சிம்சோனென்று பேரிட்டாள். அந்தப் பிள்ளை வளர்ந்தது. கர்த்தர் அவனையாசீர்வதித்துக்கொண்டிருந் தார்.

௨௫. சோராவுக்கும், எஸ்தவோலுக்கும் நடு வேயிருந்த தாணின்பாளயத்திலிருக்கிற அவ னைக் கர்த்தருடைய ஆவியானவர் ஏவத் துவக்கினார்.

## ௰௪. அதிகாரம்.

[(க) பெலிஸ்தரிலொருபெண்ணை விவாகஞ் செய்யச் சிம்சோன் இச்சித்தது. (ரு) அவ னபிரயாணத்தில் ஒரு சிங்கத்தைக்கொன்ற து. (அ) அதின் சவத்தில் தேனை அவனிர ண்டாம் பிரயாணத்திற்கண்டது. (ய) சிம் சோனின்விவாக விருந்து. (௰௨) அவனுடை ய விடுகதை அவன்பெண்சாதியினால் வெளிப் பட்டது. (௰௯) அவன்பெலிஸ்தரில் முப்ப துபேரைக்கொன்றது. (௨௰) அவனுடைய பெண்சாதி அவன்தோழனுக்குக் கொடுக் கப்பட்டது.]

சிம்சோன் திம்னாத்திற்கிறங்கிப்போய்த் திம்னாத்திலே பெலிஸ்தரின் குமாரத் திகளிலொருபெண்ணைக்கண்டு,

ச. தாவீது காத்பட்டணத்திற்கு ஓடிப்போனானென்று சவுலுக்கு அறிவிக்கப்பட்டபோது, அப்புறம் அவனைத் தேடாதிருந்தான்.

ரு. தாவீது ஆகீசுடனே, உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்ததானால், நான் வாசமாயிருக்கத்தக்கதாக வெளிகளிலிருக்கிற பட்டணங்களில் ஒன்றிலே ஒரு ஸ்தலமெனக்குக் கொடுக்கப்படுவதாக. உம்முடைய அடியான் உம்மோடேகூட இராசதானிப்பட்டணத்திலே வாசமாயிருப்பானேனென்றான்.

சா. அப்பொழுது ஆகீசு அன்றைத்தினம் சிக்லாகை யவனுக்குக் கொடுத்தான். ஆனதுகொண்டு சிக்லாக் இந்நாள்வரைக்கும் யூதாவின் இராசாக்களைச் சேர்ந்திருக்கின்றது.

எ. தாவீது பெலிஸ்தரின் நாட்டுப்புறத்திலே குடியிருந்தநாள் ஒருவருஷமும், நாலுமாதமுமாயிருந்தது.

அ. அங்கேயிருந்து தாவீதும், அவன் மனுஷரும் கெசூரியர்மேலும், கேர்சியர்மேலும், அமலேக்கியர்மேலும் போய்விழுவார்கள். ஏனென்றால் சூருக்குப்போகிற எல்லைதுவக்கி எகிப்து தேசமட்டுமிருக்கிற சீமையிலே பூர்வகாலந்துவக்கிக் குடியிருந்தவர்கள் இவர்கள்தான்.

கூ. ஆனால் தாவீது அந்தச் சீமையைக் கொள்ளையடிக்கிறபோது, புருஷர்களையும், ஸ்திரிகளையும் உயிரோடே வைக்காமல், ஆடுமாடுகளையும், கழுதைகளையும், ஒட்டகங்களையும், வஸ்திரங்களையும் எடுத்துக்கொண்டு, ஆகீசண்டைக்குத் திரும்பிவருவான்.

ய. இன்று எதின்மேல் விழுந்தீர்களென்று ஆகீசு கேட்கும்போது, தாவீது யூதாவுடைய தென்புறத்தின்மேலும், யெராமேயேலருடைய தென்புறத்தின்மேலும், கேனியருடைய தென்புறத்தின்மேலுமென்பான்.

யக. இன்னவின்னபடி தாவீது செய்தானென்று தங்களுக்கு விரோதமான செய்தியை யறிவிக்கத்தக்க ஒருவரையுந் தாவீது காத்பட்டணத்திற்குக் கொண்டுவராதபடிக்கு ஒரு புருஷனையாகிலும், ஸ்திரியையாகிலும் உயிரோடே வைக்காதிருப்பான். அவன் பெலிஸ்தரின் நாட்டுப்புறத்திலே குடியிருக்கிறநாளெல்லாம் இது அவனுடைய பழக்கமாயிருந்தது.

யஉ. ஆகீசு தாவீதை நம்பி, அவன் இஸ்ரவேலராகிய தன்னுடைய சனத்திற்குத் தன்னை நாற்றமெடுக்கிறவனாக்கினபடியினாலே என்றைக்கும் என்னூழியக்காரனாயிருப்பானென்பான்.

## உஅ. அதிகாரம்.

[(க) ஆகீசு தாவீதை நம்பினது. (ங) சவுல் சூனியக்காரிகளைக் கொன்றது. (ச) தான் பராபரனால் கைவிடப்பட்டுப் பயமடைந்து, (எ) சூனியக்காரியைத் தேடினது. (கூ) சூனியக்காரி சவுலினால் தயிரியப்பட்டுச் சாமுவேலை எழுப்பவரப்பண்ணினது. (யரு) சவுல் தனக்கு வரும் நாசத்தைக் கேள்விப்பட்டுச் சோர்ந்தது. (உக) அந்த ஸ்திரி அவனையும், அவனுடைய வேலைக்காரர்களையும் போஷித்தது.]

அந்நாட்களிலே சம்பவித்ததேதென்றால், பெலிஸ்தர் இஸ்ரவேலரின்மேல் யுத்தம்பண்ணத் தங்கள் இராணுவங்களைப் படைக்குக் கூட்டிக்கொண்டார்கள். அப்பொழுது ஆகீசு, தாவீதுடனே, நீயும் உன் மனுஷரும் என்னோடேகூடத் தண்டுக்குப் புறப்பட்டு வரவேண்டுமென்பதை யறியவே யறியக்கடவாயென்றான்.

உ. தாவீது ஆகீசுடனே அப்படியே யும்முடைய அடியான் செய்யப்போகிறதை நீர் அறிந்துகொள்ளுவீரென்றான். அப்பொழுது ஆகீசு தாவீதுடனே, இதற்காக உன்னை எந்நாளும் என் தலையைக் காப்பாற்றுகிறவனாக வைப்பேனென்றான்.

ங. சாமுவேலோவென்றால், முன்னமே மரித்துப்போயிருந்தான். இஸ்ரவேலரெல்லாரும் அவனுக்கு இழவுகொண்டாடி, அவனூராகிய இராமாவிலே யவனை யடக்கம்பண்ணியிருந்தார்கள். சவுலோவென்றால் அஞ்சனம்பார்க்கிறவர்களையும், குறிசொல்லுகிறவர்களையுந் தேசத்திலிராதபடிக்குத் துரத்தியிருந்தான்.

ச. பெலிஸ்தர் கூடிக்கொண்டுவந்து சூனேமிலே பாளயமிறங்கினார்கள். சவுலும் இஸ்ரவேலரையெல்லாங் கூட்டினான். இவர்கள் கில்போவாவிலே பாளயமிறங்கினார்கள்.

ரு. சவுல் பெலிஸ்தரின் பாளயத்தைக் கண்டபோது பயந்தான். அவனிருதயம் மிகவுந் தத்தளித்துக்கொண்டிருந்தது.

சா. ஆனாற் சவுல் கர்த்தரைக் கேட்கும்போது கர்த்தர் அவனுக்குச் சொப்பனங்களினாலாகிலும், வெளிச்சங்களினாலாகிலும், தீர்க்கதரிசிகளைக் கொண்டாகிலும் மறுவுத்தரவருளினதில்லை.

எ. அப்பொழுது சவுல் தன்னூழியக்காரருக்கு, அஞ்சனம்பார்க்கிற ஒரு ஸ்திரியை யெனக்குத் தேடுங்கள். நான் அவளண்டைக்குப்போய் அவளைக் கேட்பேனென்றான். அவனுடைய ஊழியக்காரர் அவனுடனே, இதோ, எந்தோரில் அஞ்சனம்பார்க்கிற ஒரு ஸ்திரியிருக்கிறாளென்றார்கள்.

அ. அப்பொழுது சவுல் தன்னுருவைமாற்றி, வேறேவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அவனும், அவனோடேகூட இரண்டுபேருமாய்ப்போய் இராத்திரியிலே அந்த ஸ்திரியண்டைக்கு வந்தார்கள். அவனோடவன், நீ அஞ்சனம்பார்க்கிறதினாலே எனக்குக் குறி

சொலலி, நானுனனோடேசொலலுகிறவனை எனககேறிவரபபணணெனனுன.

கூ. அநதஸதிரியவனுடனே, இதோ, சவுல் அஞசனமபார்க்கிறவர்களையும்,குறிசொல்லுகிறவர்களையும, தேசததிலிராதபடிககு நிர்மூலயாககினசெயதியை நீரறிவீரோ! இப போது எனனைககொலைபபடுததநீர் என பிராணனுககுச் கணணியை வைபபானே னெனறுள்.

ய. அபபோது சவுல இநதககாரியததிற காக உனககுப பொலலாபபுவாராதெனகிற தைக கர்ததருடைய சீவனைககொணடுசொலலுகிறேனெனறு அவளுககுக்கர்ததர்மேல ஆணையிடடான.

யக. அபபோது அநதஸதிரி, உமககு நான யாரை யெழுபபிவரபபணணவேணடுமெனறதற்கு அவன சாமுவேலை யெனககேறிவரப பண்ணெனனுன்.

யஉ. அநதஸதிரி, சாமுவேலைககணடுமகா சததமாயககூபபிடடுச சவுலுடனே, ஏன எனனைமோசமபோககினீர்! நீர் தானே சவுலெனறுள.

யங. இராசா அவளோடே, நீ பயபபடாதே. நீ காண்கிறதெனனவெனறதறகு, அநதஸதிரி சவுலுடனே, தேவர்கள பூமியிலிருநதேறுகிறதைக காணகிறேனெனறுள.

யச. அவருடையரூபமெனனவெனறு அவளைககேடடான. அதறகவள, சாலவையைப போர்ததுககொணடிருககிற முதிர்நதவயதானமனுஷன ஏறிவருகிறுனெனறுள. அதினுலே சவுல அவன சாமுவேலெனறறிநது கொணடு தரைமடடுமமுகங்குனிநது வணங்கினுன.

யரு. சாமுவேல சவுலுடனே, நீயெனனை யேறிவரபபணணுகிறதினுல, எனனைககலங்கடிததெனனவெனறதறகுச சவுல சொனனதாவது; மிகவும் நெருககபபடடிருககிறேன. ஏனெனில், பெலிஸதர்எனககுவிரோதமாய யுததமபணணுகிறர்கள. பராபரனே வெனறல,எனனைவிடடுவிலகினுர். அவர்தீர்க்கதரிசிகளைககொணடாகிலும, சொபபனங்களிலெனகிலும, எனககபபுறம மறுவுததரவருளுகிறதிலலை. ஆகையால, நானசெயயவேணடியதை நீரெனககறிவிககுமபடிககு உமமையழைபபிததேனெனனுன.

யகூ. சாமுவேல சொனனதாவது; கர்ததருனனைவிடடுவிலகி உனககுச சததுருவாயபபோயிருககையில் நீ யெனனைககேட்டானேன!

யஎ. கர்ததரெனனைககொணடு சொனனபடியே செயதுகொணடு, இராசசியததை யுனகையிலிருநதுபறிதது அதை யுனதோழனுகிய தாவீதுககுககொடுததார்.

யஅ. நீ கர்ததருடையசொறகேளாமலும், அமலேககினமேல அவருககிருநத கோபததினுககிரததைதத தீர்ததுககொளளாமலும போனபடியினுலே, கர்ததர் இநநாளிலே உனககிநதபபிரகாரமாகசசெயதார்.

யகூ. கர்ததருனனுடைய சனமாகிய இஸரவேலரையும, பெலிஸதர்கையிலொபபுககொடுபபார். நாளை நீயுமுன குமாரரும எனனேடிருபபீர்கள். இஸரவேலினபாளயததையும கர்ததர்பெலிஸதரின கையிலொபபுககொடுபபாரெனறுன.

உய. அககணமே சவுல நெடுஞ்சாணகிடையாயததரையிலேவிழுநது சாமுவேலின வார்ததைகளினுலே, மிகவும பயபபடடான. அவன இராபபகலமுழுதும ஒனறுஞசாபபிடாதிருநதபடியினுலே, அவனுககுப் பலனுமிலலாதேபோயிறறு.

உக. அபபோது அநதஸதிரி சவுலணடைககுவநது, அவன மிகவுங கலங்கினவனெனறுகணடு, அவனோடே சொனனதாவது; இதோ, உமமுடைய அடியாளாகிய நான உமமுடைய சொறகேடடு, எனபிராணனை யெனகையிலேவைதது,நீர் எனககுசசொனன உமமுடையவார்ததைகளுககுக் கீழ்ப்படிநதேனே!

உஉ. இபபோதும நீர் உமமுடைய அடியாளுடைய சொறகேடடு நான உமககு முனனேவைககும அபபததுணடததைப புசிபபீராக. அபபோது நீர் வழிநடககததககபலன உமககுளளிருககுமெனறுள.

உங. அவனே வெனறுல, நடபுசிப்பணணி, நான புசிபபதிலலையெனறுன. ஆனுல அவனுடைய ஊழியககாரரும அநத ஸதிரியும அவனைமிகவும்வருநதிககொணடதினுல, அவன அவர்கள சொறகேடடுத தரையைவிடடெழுநதிருநது கடடிலினமேல உளுககாநதான.

உச. அநத ஸதிரிககுககொழுதத கனறுககுடடி வீடடிலிருநதது. அதைத்தீவரமாய அடிதது, மாவெடுததுப பிசைநது, அதைப புளிபபிலலாத அபபங்களாகசசுடடு,

உரு. சவுலுககும அவன ஊழியககாரருக்கும முனபாகக் கொணடுவநது வைததாள. அவர்களபுசிதது எழுநதிருநது, அநதஇராததிரியிலேதானே புறபபடடுபபோனுர்கள்.

## உகூ. அதிகாரம்.

[(க) தாவீது பெலிஸதர்களோடு நடநது போனதும. (ஙு) அவர்களுடைய பிரபுககளால நீககபபடடதும. (கூ) ஆகீசு அவனுடைய உணமையைப புகழநதுவிலககிவிடடது.]

பெலிஸதர் தங்கள் இராணுவங்களையெல்லாம் ஆபபெக்கிலே கூடடிக்கொணடிருககுமபோதும, இஸரவேலர் இஸரயேலிலிருககிற துரவணடையிலே பாளயமிறங்கியிருககுமபோதும,

௨. பெலிஸ்தரின் அதிபதிகள் நூறும் ஆயிரமுமான சேர்வைகளோடே நடந்துவந்தார்கள். ஆனால் தாவீதும் அவன் மனுஷரும் ஆகீசோடே பின்தண்டிலே வந்தார்கள்.

௩. அப்போது பெலிஸ்தரின் பிரபுக்கள் இந்த எபிரேயர் ஏதுக்கென்றார்கள். ஆகீசு அவர்களுடனே, இஸ்ரவேலின் இராசாவாகிய சவுலின் ஊழியக்காரனாயிருந்த இந்தத் தாவீது இத்தனை நாட்களும் இத்தனை வருஷங்களுமாய் என்னோடிருந்ததில்லையோ? இவன் நம்முடைய வசமாய் ஓடிவந்த நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் நான் ஒன்றும் அவனிடத்தில் கண்டுபிடித்ததில்லையென்றான்.

௪. ஆனால் பெலிஸ்தரின் பிரபுக்கள் அவன்மேல் கடுங்கோபமாகி, அவனோடே சொன்னதாவது; இந்த மனுஷன் நீர் அவனுக்குக் குறித்த தன் ஸ்தலத்துக்குத் திரும்பப்போகும்படிக்கு அங்கே அவனை மறுபடியும் அனுப்பிவிடும். யுத்தத்தில் இவன் நமக்குச் சத்துருவாயிராதபடிக்கு, இவன் நம்மோடே கூடயுத்தத்திற்கிறங்கிவரவேண்டாம். ஏனெனில், இவன் எதினாலே தன்னுடைய ஆண்டவனுக்குத் தன்னைப்பிரியமாக்கிக்கொள்ளுவான். இந்த மனுஷருடைய தலைகளினாலல்லவோ?

௫. சவுல் ஆயிரம்பேரையுந் தாவீது பதினாயிரம்பேரையும் மடங்கடித்தானென்று இந்தத் தாவீதைக்குறித்தல்லவோ ஆடிப்பாடிச்சொன்னார்களென்றார்கள்.

௬. அப்போது ஆகீசு, தாவீதையழைத்து அவனோடே சொன்னதாவது; நீ உத்தமனென்றும், நீ பாளயத்தில் என்னோடே போக்குவரத்துமாயிருக்கிறது என்பார்வைக்கு நலமென்றும், கர்த்தருடைய ஜீவனைக்கொண்டுசொல்லுகிறேன். ஏனென்றால், நீயென் வசமாய்வந்த நாள்முதற்கொண்டு இன்றைவரைக்கும் நான் உன்னில் ஒருபொல்லாப்புங் கண்டதில்லை. அந்த அதிபதிகளின்பார்வைக்கோவென்றால், நீபிரியப்பட்டவனல்ல.

௭. ஆகையால் நீ பெலிஸ்தருடைய அதிபதிகளின் பார்வைக்கு ஏராததைச்செய்யாதபடிக்கு இப்போது சமாதானமாய்த்திரும்பப்போய்விடுவென்றான்.

௮. தாவீது ஆகீசுடனே, ஏன்? நான்செய்ததென்ன? நான்வந்து இராசாவாகிய என் ஆண்டவனுடைய சத்துருக்களோடே யுத்தம்பண்ணாதபடிக்கு நான் உமக்குமுன்பாக வந்திருக்கிற அன்றுமுதற்கொண்டு இன்றைத்தினமட்டும் உம்முடைய அடியானிலே கண்டுபிடித்ததென்னவென்றான்.

௯. ஆனால் ஆகீசு, தாவீதுக்குப் பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது; அதை யறிவேன். ஏனெனில், நீபராபரனுடைய தூதனைப்போல என்பார்வைக்குப் பிரியமானவன். ஆனால் இவன் எங்களோடேகூடயுத்தத்திற்குவந்தேறவேண்டாமென்று பெலிஸ்தரின் பிரபுக்களசொன்னார்கள்.

௰. இப்போதும் நீ நாளையதிகாலமே உன்னோடேவந்த உன்னுடைய ஆண்டவனுடைய வேலைக்காரரைக் கூட்டிக்கொண்டு உங்களுக்கு வெளிச்சமாகிறபொழுது விடியும் நேரத்திலேதானேபோய்விடுங்களென்றான்.

௰௧. அப்படியேதாவீது அதிகாலமே தன் மனுஷரைக் கூட்டிக்கொண்டு பொழுது விடிகிறநேரத்திலே பெலிஸ்தரின்தேசத்துக்குத்திரும்பப்போகப்புறப்பட்டான். பெலிஸ்தரோவெனில், இஸ்ரெயேலுக்கு ஏறிப்போனார்கள்.

## ௩௰. அதிகாரம்.

[(௧) ஆம்லேக்கியர் சிக்லாகைக்கொள்ளையடித்தது. (௪) தாவீது அவர்களைப் பின்றொடரப் பராபரனாலே தைரியங்கொண்டது. (௰௧) சோர்ந்துபோய மறுபடியும் பெலனடைந்த எகிப்தியனுதவியினாலே, அவன் சத்துருக்களை கொள்ளையடித்துக்கொண்டுவந்த பொருள்களை மீட்டுக்கொண்டது. (௨௨) கொள்ளையடித்த உடைமைகளையுத்தஞ் செய்தவர்களுக்கும், ரஸ்துக்களைக் காத்துக்கொண்டிருந்தவர்களுக்கும் சமமாய்ப்பங்கிட்டுத்தரக்கட்டளை. (௨௬) தாவீது தன்சிநேகிதர்களுக்கு வெகுமதியை அனுப்பியது.]

ஆனால் தாவீதும், அவன் மனுஷரும் மூன்றாம்நாளிலே சிக்லாகுக்குவந்து சேருகிறதற்குள்ளே ஆம்லேக்கியர் தென்புறச் சீமையின்மேலும், சிக்லாகின்மேலும் விழுந்து, சிக்லாகைக் கொள்ளையடித்து, அதையக்கினியால் சுட்டுப்போட்டு,

௨. அதிலிருந்த ஸ்திரிகளாகிய சிறியவர்களையும், பெரியவர்களையுஞ்சிறைபிடித்து, ஒருவரையுங்கொன்றுபோடாமல், அவர்களைப் பிடித்துக்கொண்டு தங்கள் வழியேபோனார்கள்.

௩. தாவீதும், அவன்மனுஷரும் அந்தப்பட்டணத்திற்குவந்தபோது, இதோ, அது அக்கினியினாலேசுட்டுப்போடப்பட்டதென்றும், தங்கள்பெண்சாதிகளும், தங்கள்குமாரரும், தங்கள் குமாரத்திகளுஞ் சிறைபிடித்துக்கொண்டுபோகப்பட்டார்களென்றுங் கண்டார்கள்.

௪. அப்போது தாவீதும், அவனோடிருந்த சனமும் அழுகிறதற்குத் தங்களிடத்தில் பலனில்லாமற்போகுமட்டுஞ்சத்தமிட்டழுதார்கள்.

௫. தாவீதின் இரண்டுபெண்சாதிகளாகிய இஸ்ரெயேலூராளான்அகினோகாமும், கர்மேலூராளான்நாபாலின்பெண்சாதியாயிருந்த அபிகாயிலுஞ் சிறைபிடித்துக் கொண்டுபோகப் பட்டவர்களா யிருந்தார்கள்.

௬. தாவீது மிகவும் நெருக்கப்பட்டான். ஏனென்றால், சகலசனமுந் தங்கள் தங்கள் குமாரர், குமாரத்திகள் நிமித்தம் மனக்கிலேசமானதினாலே அவனைக் கல்லெறிய வேண்டுமென்று சனங்கள் சொன்னார்கள். தாவீதோவென்றால் தன் பராபரனாகிய கர்த்தருக்குள்ளே தன்னைத் திடனாக்கிக்கொண்டு,

௭. அகிமெலேக்கின் குமாரனாகிய அபியத்தாரென்ற ஆசாரியனுடனே, ஆசாரிய சால்வையை யென்னண்டைக்குக் கொண்டுவாவென்றான். அபியத்தார் ஆசாரியசால்வையைத் தாவீதண்டைக்குக் கொண்டுவந்தபிறபாடு,

௮. தாவீது கர்த்தரை, நான் அந்தத் தண்டைப் பின்றொடருவேனோ! அதைப் பிடிப்பேனோ வென்று கேட்டான். அதற்கவர், அதைப் பின்றொடர். ஏனென்றால், அதை நீ பிடிக்கவே பிடித்து, இரட்சிப்புண்டுபண்ணுவாயென்றார்.

௯. அப்போது தாவீதும் அவனோடிருந்த அறுநூறுபேரும் போனார்கள். அவர்கள் பேசோர் ஆற்றண்டைக்கு வந்தபோது, அங்கே சிலர் நின்றுபோனார்கள்.

௰. தாவீதோவென்றால், நானூறுபேரோடுங் கூடத்தொடர்ந்துபோனான். ஏனெனில், இருநூறுபேர் பேசோர் ஆற்றைக் கடக்கமாட்டாதபடிக்கு விடாய்த்தபடியினாலே நின்றுபோனார்கள்.

௰௧. ஒரு எகிப்துமனுஷனை வெளியிலே கண்டுபிடித்து, அவனைத் தாவீதண்டைக்குக் கொண்டுவந்து, புசிக்க அவனுக்கப்பமுங் குடிக்கத் தண்ணீருங்கொடுத்து,

௰௨. அத்திப்பழ அடையின் ஒரு துண்டையும், வற்றலான இரண்டு திராட்சப்பழக்குலைகளையும் அவனுக்குக் கொடுத்தார்கள். அதையவன் சாப்பிட்டபிறபாடு அவனுடைய உயிர் திரும்ப அவனுக்கு வந்தது. ஏனென்றால், இராப்பகல் மூன்றுநாளாய் அப்பஞ் சாப்பிடாமலும், தண்ணீர்குடியாமலுமிருந்தான்.

௰௩. தாவீது அவனை நீ யாருடையவன்? நீ எவ்விடத்தான் என்றுகேட்டதற்கு நான் ஒரு அமலேக்கியனுடைய வேலைக்காரனாகிய எகிப்துதேசத்துப் பிள்ளையாண்டான், இன்றையமூன்றுநாள் நான் வியாதியானபோது என் எசமான் என்னைக் கைவிட்டான்.

௰௪. நாங்கள் கிரேத்தியருடைய தென்புறத்தின்மேலும், யூதாவுக்கடுத்ததின்மேலும், காலேபுடைய தென்புறத்தின்மேலும் விழுந்து, சிக்லாகை யக்கினியாலே சுட்டுப்போட்டோமென்றான்.

௰௫. தாவீது அவனை நீ யென்னை யந்தத் தண்டைக்குக் கொண்டுபோவாயோவென்று கேட்டதற்கு அவன் நீர் என்னைக் கொன்றுபோடுவதுமில்லை, என்னை யென் எசமானன் கையிலொப்புக் கொடுப்பதுமில்லையென்று பராபரன்மேலே யெனக்கு ஆணையிட்டீரானால், உம்மை யந்தத்தண்டைக்குக் கொண்டுபோவேனென்றான்.

௰௬. அவனை யிவன் கொண்டுபோகிறபோது, இதோ அவர்கள் வெளியெங்கும் பரவிப் புசித்துக் குடித்துத் தாங்கள் பெலிஸ்தர் தேசத்திலும், யூதாதேசத்திலுங் கொள்ளையிட்டுவந்த மகாப்பெரிதான அந்த எல்லாக் கொள்ளைக்காகவும், கொண்டாடிக்கொண்டிருந்தார்கள்.

௰௭. அவர்களைத் தாவீது இருட்டானவேளை துவக்கி மறுநாட்சாயங்காலமட்டும் முறியடித்தான். ஒட்டகங்களின்மேலே ஏறியோடிப்போன நானூறு வாலிபரைத் தவிர அவர்களிலேயொருவருந் தப்பிப்போனதில்லை.

௰௮. அமலேக்கியர் பிடித்துக்கொண்டுபோன எல்லாவற்றையும், தன்னுடைய இரண்டு பெண்சாதிகளையுந் தாவீது தப்புவித்தான்.

௰௯. அவர்கள் கொள்ளையாடிக்கொண்டுபோன எல்லாவற்றிலும், சிறியதிலும், பெரியதிலும், குமாரரிலும், குமாரத்திகளிலும், ஒன்றுங் குறைபடாமல் எல்லாவற்றையுந் தாவீது திருப்பிக்கொண்டான்.

௨௰. எல்லா ஆடுமாடுகளையும் தாவீது பிடித்துக்கொண்டான். அவைகளைத் தங்கள் மிருகஜீவன்களுக்கு முன்னாலே யோட்டி, இவை தாவீது கொள்ளையாடினவைகளென்றார்கள்.

௨௧. விடாய்ப்பட்டதினாலே தாவீதைப் பின்செல்லாமற் பேசோர் ஆற்றண்டையிலே தரித்திருந்த இருநூறுபேரண்டைக்குத் தாவீது வருகிறபோது, இவர்கள் தாவீதுக்கும், அவனோடிருந்த சனத்திற்கும் எதிர்கொண்டுவந்தார்கள். தாவீது அந்தச் சனத்தண்டையிலே சேர்ந்து அவர்கள் சுகசெய்தியை விசாரித்தான்.

௨௨. அப்போது தாவீதோடே நடந்துவந்த மனுஷரிற் பொல்லாதவர்களும், பேலியாளின் மனுஷருமான எல்லாரும் பிரதியுத்தரமாக, அவர்கள் எங்களோடே வராதபடியினாலே நாங்கள் தப்புவித்த கொள்ளையுடைமைகளில் அவர்களுக்கு ஒன்றுங் கொடுப்பதில்லை. அவர்களில் ஒவ்வொருவன் தன் தன் பெண்சாதியையும், தன் தன் பிள்ளைகளையுமே யழைத்துப்போகட்டுமென்றார்கள்.

௨௩. ஆனால் தாவீது சொன்னதாவது; என் சகோதரரே! கர்த்தர் நமக்குக் கொடுத்ததை நீங்களிப்படி செய்யவேண்டாம்! ஏனென்றால், கர்த்தர் நம்மைக் காப்பாற்றி நம்மேல் வந்திருந்த அந்தத் தண்டை நம்முடைய கையிலொப்புக்கொடுத்தார்.

௨௪. இந்தக்காரியத்தில் உங்களுக்குச் செவிகொடுக்கத் தக்கவனார்? யுத்தத்திற்கு

ஙகிபபோனவர்களின் பஙகு எமமாத்திரமோ அம்மாத்திரம இரஸதுககளணடையிலிருநதவர்களினபஙகும இருக்கவேணடும. சரிபபஙகாகபபஙகிடுவார்களாகவென்ருன்.

௨௫. அப்படியே அநநாள முதறகொணடு நடக்கிறதாயிறறு. ஏனெனருல, அதை இஸ்ரவேலிலே இந்நாளவரைக்கு மிருக்குங கட்டளையும, பிரமாணமுமாகவைததான.

௨௬. தாவீது சிக்லாகுக்கு வநதபோது அவனகொளளையாடினவைகளிலேதன்சிநேகிதராகிய யூதாவினமூபபருக்குச் சிலவற்றையனுப்பி, இதோ கர்த்தருடையசத்துருக்களினகொளளையிலுங்களுக்குணடாயிருக்கும ஆசீர்வாதமெனறு சொலலச்சொன்ருன்.

௨௭. ஆருக்கனுப்பினுனெனருல், பெதேலிலிருக்கிறவர்களுக்கும், தெறகானராமோததிலிருக்கிறவர்களுக்கும, யாததீரிலிருக்கிறவர்களுக்கும,

௨௮. ஆறோவேரிலிருக்கிறவர்களுக்கும, சிப்மோததிலிருக்கிறவர்களுக்கும, எஸ்தேமோகாவிலிருக்கிறவர்களுக்கும,

௨௯. ராககாலிலிருக்கிறவர்களுக்கும,யெராம்மெயேலியரின் பட்டணஙகளிலிருக்கிறவர்களுக்கும, கேனியரினபட்டணஙகளிலிருககிறவர்களுக்கும,

௩௰. ஒர்மாவிலிருக்கிறவர்களுக்கும, கொருசானிலிருக்கிறவர்களுக்கும, ஆத்தாகிலிருக்கிறவர்களுக்கும,

௩௧. எபிரோனிலிருக்கிறவர்களுக்கும்,தாவீதும,அவனமனுஷருமநடமாடினஎலலாஇடஙகளிலிருக்கிறவர்களுக்கும அனுப்பினுன.

## ௩௧. அதிகாரம்.

[(௧) சவுல தனசேனைகளையிழநததும, அவனகுமாரர்களகொலலபபட்டதும, தானும் ஆயுதமபிடிததவனும தமமைததாமேகொன்றதும, (௭) இஸ்ரவேலர்கள விட்டுவிட்ட பட்டணஙகளிற பெலிஸ்தர்களவாசமபணணினது. (௮) அவர்கள செததவர்களமேல தங்களமேனமையபாராட்டியது (௰௧) கிலெயாத்யாபேசுபட்டணததார் அநத உடலகளையிரவில எடுதது யாபேசிலதுககததோடு சுட்டெரிதது எலுமபுகளையடக்கமபணணினது.]

பெலிஸ்தரோவெனருல, இஸ்ரவேலமேல யுததம பணணினுர்கள. ஆனுல இஸ்ரவேலமனுஷர் பெலிஸ்தருக்கு முனபாக முறிநதோடிக கில்போவா பர்வதத்திலே வெட்டுணடுவிழுநதார்கள.

௨. பெலிஸ்தர் சவுலையும், அவனகுமாரரையும நெருஙகிச சவுலினகுமாரராகிய யோனததானையும, அபினதாபையும, மலகிசுவாவையுமவெட்டினுர்கள.

௩. அமபெய்கிற வில்காரர் சவுலுக்குநேராகபபிடிததிருல, அவனமேல யுததமபலததது. அபபோது சவுல விற்காரருக்கு மிகவும பயபபட்டு,

௪. தன ஆயுதஙகளைபபிடிக்கிறவனுேட, அநதச சுனனததிலலாதவர்களவநது, எனனைககுததிபபோட்டு என்னைமிகழுச்சிபணணுதபடிக்கு நீ யுன பட்டயததையுருவி யெனனையதினுலே குததிபபோடடெனருன. ஆனுல அவன ஆயுதஙகளைபபிடிக்கிறவன மிகவும்பயபபடுகிறதினுல, அபபடிசசெயய மாட்டேனெனருன. அபபோது சவுல பட்டயததைநட்டு அதினமேல விழுநதான.

௫. சவுல்செததுபபோனதை அவன ஆயுதஙகளைபபிடிக்கிறவனகணடபோது அவனுநதன பட்டயததிலேவிழுநது அவனேடேகூடசசெததுபபோனுன.

௬. அபபடியே அனறைததினஞ்சவுலும, அவனமூனறுகுமாரரும, அவன ஆயுதங்களைபபிடிக்கிறவனும, அவனுடைய எலலாமனுஷரும ஒருமிக்க செததுபபோனுர்கள.

௭. இஸ்ரவேல மனுஷர்முறிநதோடினுர்களெனறும, சவுலும, அவனகுமாரரும்செததுபபோனுர்களெனறும், பள்ளத்தாககுக்கு இபபாலும, யோர்தானுக்கு இபபாலுமிருநத இஸ்ரவேலமனுஷர்கணடபோது, அவர்கள்பட்டணங்களைவிட்டோடிபபோனுர்கள். அபபோது பெலிஸ்தர்வநது அவைகளிலே குடியிருநதார்கள.

௮. வெட்டுணடவர்களை யுரிந்துகொளளபபெலிஸ்தர் மறுநாளிலே வநதபோதோவெனில், அவர்கள சவுலும, அவனமூனறுகுமாரரும் கில்போவாப்பர்வதத்திலே கிடக்கிறதைக்கணடு,

௯. அவனதலையைவெட்டி அவன ஆயுதஙகளை யெடுததுககொணடு, தங்கள்விக்கிரகஙகளின வீட்டிலும், சனததிற்குளளும் செயதியைப பிரசங்கிக்கததக்கவிதமாக அவைகளைபபெலிஸ்தர்தேசததிலேசுறறிலுமனுபபி,

௰. அவன ஆயுதங்களை அஸ்தரோத்தேவனுடைய வீட்டிலேவைதது அவனஉடலைப பெத்சானின அலஙகததிலே தூக்கிப்போட்டார்கள.

௰௧. பெலிஸ்தர் சவுலுக்குச செயததைக கீலெயாததேசதது யாபேசுபட்டணததார் கேட்டபோதோவெனில,

௰௨. அவர்களிலே பலதத மனுஷரெலலாரும எழுநது இராமுழுதும நடநதுபோயப பெத்சானின அலங்கததிலிருநத சவுலின உடலையும, அவன குமாரரின உடலகளையுமெடுதது, யாபேசுக்குக கொணடுவநது, அவைகளையஙகே சுட்டெரிததுபபோட்டு,

௰௩. அவர்களுடைய எலுமபுகளை யெடுதது, யாபேசிலிருக்கிற தோபபிலே யடக்கமபணணி, ஏழுநாள்உபவாசம்பணணினுர்கள.

சாமுவேலமுதலாமபுஸ்தகம்முடிநதது முறறும.

# சாமுவேலின் இரண்டாம்புஸ்தகம்.

(கி. பி. முன். ௲௫௬.)

## ௧. அதிகாரம்.

[(௧) சவுல் அப்செய்யப்பட்ட சங்கதியை யறிவித்து அவனைக்கொன்றேனென்றுசொன்ன அமலேக்கியன்கொல்லப்பட்டது. (௰௭) தாவீது சவுலையும், யோனத்தானையுங்குறித்துப்பாட்டுப்பாடிப்புலம்பினது.]

சவுல் மரித்தபிற்பாடும், தாவீது அமலேக்கியரை முறியடித்துச் சிக்லாகுக்குத்திரும்பிவந்து இரண்டுநாள் அங்கேயிருந்தபிற்பாடும் சம்பவித்ததேதென்றால்,

௨. இதோ, மூன்றாம்நாளிலே தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு தன் தலையின்மேலே புழுதியைப் போட்டுக்கொண்டிருந்த ஒருமனுஷன் சவுலின் பாளயத்திலிருந்து வந்தான். அவன்தாவீதண்டைக்கு வருகையில், தரையிலேவிழுந்து வணங்கிக்கொண்டான்.

௩. தாவீது அவனை நீ எங்கேயிருந்துவந்தாய் என்றுகேட்டதற்கு அவன், இஸ்ரவேலின்பாளயத்திலிருந்துதப்பிவந்தேனென்றான்.

௪. தாவீது அவனை நடந்த செய்தியென்ன? நீ யெனக்கறிவியென்று கேட்டதற்கவன் சனம்யுத்தத்தைவிட்டு முறிந்து ஓடிச் சனத்தில்நேகம்பேரும் விழுந்துமடிந்தார்கள். சவுலும், அவர்குமாரனாகிய யோனத்தானும் மடிந்தார்களென்றான்.

௫. சவுலும், அவன் குமாரனாகிய யோனத்தானும் மடிந்துபோனதை நீ யெதினாலே யறிவாய் என்றுதாவீது தனக்கதையறிவிக்கிறவாலிபனைக் கேட்டதற்கு,

௬. அந்தவாலிபன் சொன்னதாவது; நான் தற்செயலாய்க்கில்போவாப்பர்வதத்தில் வந்தேன். அப்போது இதோ, சவுல்தம்முடைய ஈட்டியின்மேலே சாய்ந்து கொண்டிருந்தார். ஆனால் இதோ, இரதங்களும், குதிரைக்காரரும் அவரைநெருங்கியிருந்தார்கள்.

௭. அவர் திரும்பிப்பார்த்து என்னைக்கண்டு என்னையழைத்தார். இதோ, இருக்கிறேனென்றேன்.

௮. அப்போது அவர் நீயார்? என்று என்னைக்கேட்டதற்கு, நான் அமலேக்கியனென்று அவரோடேசொன்னேன்.

௯. அப்போது அவர், என்னுடனே, நீயென்னண்டையிற் சேர்ந்து நின்று என்னைக் கொன்றுபோடு. ஏனென்றால், குத்து சீராவிலேபிடித்தது. என் சீவனின்னமுழுதும் எனக்குள்ளேயிருக்கிறதென்றார்.

௰. அப்போது நான் அவரண்டையிற்சேர்ந்து, அவரைக் கொன்றுபோட்டேன். ஏனென்றால், அவர் விழுந்தபிறகுப் பிறபாடு பிழைக்கமாட்டாரென்று நான் அறிவேன். பிறபாடு அவர்தலையின்மேலிருந்தமுடியையும், அவர் புயத்திலிருந்த அஸ்தகடையத்தையு மெடுத்துக்கொண்டு அவைகளையிங்கே என் ஆண்டவனண்டைக்குக் கொண்டுவந்தேனென்றான்.

௰௧. அப்போது தாவீதும், அவனோடிருக்கிற எல்லாமனுஷருந் தங்கள்வஸ்திரங்களைப்பிடித்துக்கிழித்துக்கொண்டு,

௰௨. சவுலும், அவன்குமாரனாகிய யோனத்தானும், கர்த்தருடையசனமும், இஸ்ரவேல் வீட்டாரும் பட்டயத்தாலே விழுந்தபடியினாலே, புலம்பியழுதுகொண்டு அஸ்தமான காலமட்டும் உபவாசமாயிருந்தார்கள்.

௰௩. தாவீது அதைத் தனக்கறிவித்தவாலிபனை, நீ யெவ்விடத்தான்! என்றுகேட்டதற்கு, அவன், நான் அந்நிய சாதியானவனுடையமகன். நான் அமலேக்கியனென்றான்.

௰௪. அப்போதுதாவீது அவனுடனே, கர்த்தர் அபிஷேகம் பண்ணுவித்தவரையழிக்கிறதற்கு நீ யுன்கையை நீட்டப்பயப்படாமற் போனதெப்படி! என்றுசொல்லி,

௰௫. வாலிபரிலொருவனைக் கூப்பிட்டு, நீசேர்ந்து அவன்மேல் விழுந்து அவனைவெட்டென்றான். இவன் அவனைவெட்டினான். அவன்செத்தான்.

௰௬. தாவீது அவனைப்பார்த்து, உன் இரத்தப்பழி உன் தலையின்மேலிருப்பதாக. ஏனெனில், கர்த்தர் அபிஷேகம்பண்ணுவித்தவரை நான்கொன்றுபோட்டேனென்று உன்வாய் தானே யுனக்குவிரோதமான உத்தரவுசொல்லிறதென்றான்.

௰௭. தாவீது சவுலின்மேலும், அவன்குமாரனாகிய யோனத்தானின்மேலும் பாடின்புலம்பலாவது;

௰௮. இதோ, வில்லென்கிறதை யூதாபுத்திரருக்குக் கற்றுக்கொடுக்க அதுசெம்மார்க்கரின் புஸ்தகத்தில் எழுதிவைக்கப்பட்டவேண்டுமென்று சொல்லிப் பின்னையுஞ்சொன்னதாவது;

௰௯. ஆ! இஸ்ரவேலின் அலங்காரம் உன்னுடைய மேடுகளின்மேல் வெட்டுண்டது. பலசாலிகளெப்படி விழுந்தார்கள்!

௨௰. பெலிஸ்தரின் குமாரத்திகள் சந்தோஷப்படாதபடிக்கும், விருத்தசேதனமில்லாதவர்களின் குமாரத்திகள் களிகூராதபடிக்கும், அதைக்காத்பட்டணத்தில் அறிவியாமலும், அஸ்கலோனின் வீதிகளிலேபிரசங்கியாமலுமிருங்கள்.

௨௧. கில்போவாப் பர்வதங்களே! உங்கள்மேலே பனியும், மழையும் பெய்யாமலும், காணிக்கைசெலுத்தத்தக்க பலனைக்கொடுக்கும்வயல்களில்லாமலும்போவதாக. ஏனென்றால், அங்கே பலசாலிகளுடைய கேடயமும், சவுல் எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்படாதவர்போல அவர்கேடயமும் எண்ணமற்றவைகளாய்ப்போயின.

௨௨. யோனத்தானின் வில்லும், சவுலின் பட்டயமும் மடிந்து விழுகிறவர்களின் இரத்தஞ்சிந்தப்படாமலும்,பலவான்களுடைய கொழுப்பிலேபடாமலும்,ஒருக்காலும்பின்னிட்டுப் போனதுமில்லை. வீணாய்த்திரும்பினதுமில்லை.

௨௩. உயிரோடேயிருக்கையில் பிரியமுமின்பமுமாயிருக்கப்பட்ட சவுலும், யோனத்தானும் தங்கள் மரணத்திலும்பிரிந்துபோனதில்லை. கழுகுகளைப்பார்க்கிலும்,வேகமும், சிங்கங்களைப்பார்க்கிலும் முனையுமுள்ளவர்களாயிருந்தார்கள்.

௨௪. இஸ்ரவேலின் குமாரத்திகளே! உங்களுக்கு இரத்தாம்பரத்தைச் சிறப்பாயுடுப்பித்து உங்களுடுப்பின்மேலே பொன்னாபரணங்களைத் தரிக்கப்பண்ணின சவுலுக்காக அழுங்கள்.

௨௫. யுத்தத்திற்குள்ளே பலசாலிகளெப்படி விழுந்தார்கள்! உன்மேடுகளின்மேலே யோனத்தானெப்படிவெட்டுண்டான்!

௨௬. யோனத்தானாகிய என்சகோதரனே! உனக்காக எனக்கு வியாகுலமாயிருக்கின்றது. நீயெனக்குவெகுஇன்பமாயிருந்தவன். ஸ்திரீகளின் சிநேகத்தைப்பார்க்க உன்சிநேகம் எனக்காச்சரியமாயிருந்தது.

௨௭. பலவான்களெப்படி விழுந்தார்கள்! யுத்தத்தின் ஆயுதங்களெப்படியழிந்துபோயினவென்பதுதானே.

## ௨. அதிகாரம்.

[(௧) தாவீது பராபரனுடையகட்டளையின்படி தன்னுடைய கூட்டத்தோடு எபிரோனுக்குவந்து யூதாவின் சனங்கள் மேலிராசாவாகப்பட்டது. (௫) அவன் கீலெயாத்யாபேசின மனிதர் சவுலின்மேல் வைத்த தயைக்காக அவர்களைப் புகழ்ந்தது. (௮) அப்னேர் இஸ்போசேத்தை இஸ்ரவேலின்மேலிராசாவாக்கினது. (௰௨) அப்னேரின் மனிதர்களில்-௰௨-பேர்களுக்கும் யோவாபின் மனிதர்களில்-௰௨-பேர்களுக்கு முண்டானமரணத்துக்கேதுவானசண்டை.(௰௮) ஆசகேல் கொல்லப்பட்டது. (௨௫) அப்னேர்சொற்கேட்டு யோவாப் தன்சேனைகள் திரும்பிவர எக்காளமூதினது. (௩௨) ஆசகேலடக்கம்பண்ணப்பட்டது.]

இதற்குப்பிற்பாடு தாவீது கர்த்தரை நான் யூதாவின் பட்டணங்களில் ஒன்றிலேபோயேறவேணுமென்று கேட்டான். கர்த்தர் அவனுடனே, போயேறென்றார். எவ்விடத்திலேபோயேறுவேன்? என்று தாவீதுகேட்டதற்கு அவர்,எபிரோனிலேயென்றார்.

௨. அப்படியே தாவீது தன்னிரண்டு பெண்சாதிகளாகிய இஸ்ரெயேல் ஊராளான அகினோவாமோடும், நாபாலின் பெண்சாதியாயிருந்த கர்மேலூராளான அபிகாயிலோடுங்கூட அவ்விடத்திலேபோயேறி,

௩. தன்னோடிருக்கிறமனுஷரில் அவரவனையும், அவர்கள் வீட்டாரையும் போயேறப்பண்ணினான். அவர்கள்வந்து எபிரோனின் சுற்றூர்களிலே குடியேறினார்கள்.

௪. அப்போது யூதாவின் மனுஷர்வந்து அங்கேதாவீதை யூதாவீட்டாரின்மேலிராசாவாக அபிஷேகம்பண்ணினார்கள். கீலெயாத்தேசத்து யாபேசினமனுஷர் சவுலையடக்கம்பண்ணினவர்களென்று அவர்கள் தாவீதுக்கறிவித்தபோது,

௫. தாவீது கீலெயாத்தேசத்து யாபேசின மனுஷரண்டைக்குத் தானுபதிகளையனுப்பி, நீங்களுங்கள் ஆண்டவனாகியசவுலுக்கிந்தத் தயையைச்செய்து அவனை யடக்கம்பண்ணினபடியினாலே நீங்கள் கர்த்தருக்காசீர்வதிக்கப்பட்டவர்கள்.

௬. இப்போதுங்கர்த்தர் உங்களைக்கிருபையும், உண்மையுமாய நடத்துவாராக. நீங்களிந்தக்காரியத்தைச்செய்தபடியினாலே நானும் இந்த நன்மைக்குத்தக்கதாக உங்களுக்கு நடத்துவேன்.

௭. இப்போதும் நீங்கள் நல்லசேவகராயிருக்கும்படிக்கு உங்கள் கைகள் திடப்படக்கடவது. ஏனெனில், உங்களாண்டவனாகிய சவுல் மரித்திருந்தும், யூதாவீட்டார் என்னைத் தங்கள்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணினார்களென்று அவர்களுக்குச்சொல்லச்சொன்னான்.

௮. சவுலின் படைத்தலைவனாகிய நேரின் குமாரனான அப்னேரோவென்றால், சவுலின்

குமாரனாகிய இஸ்போசேததைச் சேர்த்து, அவனை மக்னாயிமுக்கு அழைத்துக்கொண்டு போய்,

௯. அவனைக் கிலெயாத்தின் மேலும், ஆசேரியர்மேலும், இஸ்ரயேலின்மேலும், எப்பிராயீமின்மேலும், பென்யமீன்மேலும், இஸ்ரவேலனைத்தின்மேலும் இராசாவாக்கினான்.

௰. சவுலின்குமாரனாகிய இஸ்போசேத் இஸ்ரவேலின்மேல் இராசாவாகிறபோது, நாற்பதுவயதாயிருந்து இரண்டுவருஷம் இராசரிய பாரம்பண்ணினான். யூதாவீட்டார்மாத்திரந் தாவீதைப்பின்பற்றினார்கள்.

௰௧. தாவீது எபிரோனிலே யூதாவீட்டாரின்மேல் இராசாவாயிருந்தநாள்களின் இலக்கம் ஏழுவருஷமும், ஆறுமாதமுமானது.

௰௨. நேரின் குமாரனாகிய அப்னேர் சவுலின்குமாரனாகிய இஸ்போசேத்தின் சேவகரைக்கூட்டிக்கொண்டு, மக்னாயிமிலிருந்து கிபெயோனுக்குப்புறப்பட்டுவந்தான்.

௰௩. அப்போது செருயாவின்குமாரனாகிய யோவாபும், தாவீதின்சேவகரும் புறப்பட்டார்கள். கிபெயோனின்குளத்தண்டையில் ஒன்றுக்கொன்று எதிர்ப்பட்டு, அவர்கள் குளத்திற்கு அந்தப்பக்கத்திலும், இவர்கள் குளத்திற்கு இந்தப்பக்கத்திலுமிறங்கினார்கள்.

௰௪. அப்னேர் யோவாபுடனே, வாலிபர் எழுந்து நமக்குமுன்பாகச் சிலம்பம்பண்ணட்டுமேயென்றான். அதற்கு யோவாப், அவர்கள் எழுந்து அப்படிச்செய்யட்டுமென்றான்.

௰௫. அப்போது சவுலின்குமாரனாகிய இஸ்போசேத்தின் பக்கத்திற்குப் பென்யமீன் மனுஷரில் இலக்கத்திற்குப் பன்னிரண்டுபேரும், தாவீதுடையசேவகரிலே பன்னிரண்டுபேரும் எழுந்திப்பாலேவந்து,

௰௬. ஒருவர் தலையை யொருவர்பிடித்து ஒருவருடைய விலாவிலே யொருவர் பட்டயத்தினாலேகுத்தி ஒருமிக்கவிழுந்தார்கள். அதிலே கிபெயோனிலிருக்கிற அந்தஸ்தலம் கூராரின்நிலமென்னப்பட்டது.

௰௭. அன்றைத்தினம் மிகவுங் கடினமான யுத்தமாகி, அப்னேரும், இஸ்ரவேல் மனுஷரும் தாவீதின்சேவகரால் முறியடிக்கப்பட்டார்கள்.

௰௮. அங்கே செருயாவின் மூன்றுகுமாரராகிய யோவாபும், அபிசாயும், ஆசகேலுமிருந்தார்கள். ஆசகேலோவென்றால், வெளியிலிருக்கிறகலையானகளிலொன்றைப்போலத் தீவிரக்கால்களுள்ளவனாயிருந்து,

௰௯. அப்னேரைப் பின்றொடர்ந்து, அப்னேரைத்துரத்துகிறதினாலே வலதுபுறத்திலாகிலும், இடதுபுறத்திலாகிலும் அவனைவிட்டு விலகாதிருந்தான்.

௨௰. அப்னேர் திரும்பிப்பார்த்து, நீ ஆசகேலல்லவோ? என்றான். அவன் நான்தானென்றான்.

௨௧. அப்போது அப்னேர், அவனுடனே, நீ வலதுபக்கத்திற்காகிலும், இடதுபக்கத்திற்காகிலும்விலகி, வாலிபரிலொருவனைப் பிடித்து அவனையுரிந்துகொள்ளென்றாலும், ஆசகேல் அவனைவிட்டுப்போக மனதில்லாதிருந்தான்.

௨௨. பின்னையும் அப்னேர், ஆசகேலுடனே, நீ யென்னைவிட்டுப்போ. நான் உன்னையேன் தரையோடே வெட்டவேண்டும்! பிற்பாடு உன் சகோதரனாகிய யோவாபின் முகத்திலே யெப்படிவிழிப்பேன்! என்றான்.

௨௩. ஆனால் அவன்விலகிப்போகமாட்டேனென்றபடியினாலே, அப்னேர்அவனையீட்டியின் பின்புறஅலகினாலேயவனைவிலாவெலும்புகளில் ஈட்டிமுதுகிலே புறப்படக்குத்தினான். அவன் அங்கேதானேவிழுந்துசெத்தான். ஆனதுகொண்டு, ஆசகேல் விழுந்துகிடக்கிற ஸ்தலத்திலே வந்தவர்களெல்லாருந் தரித்து நின்றார்கள்.

௨௪. ஆனால் யோவாபும், அபிசாயும், சூரியன் அஸ்தமிக்குமட்டும் அப்னேரைப் பின்றொடர்ந்தார்கள். கிபெயோன் வனாந்தரவழிக்கருகான கீயாக்குச்செதிரேயிருக்கிற ஆம்மாமேடுமட்டும் வந்தார்கள்.

௨௫. அப்போது அப்னேரைப்பின்சென்ற பென்யமீன்புத்திரர் ஒரே பவுஞ்சாகக் கூடி ஒரேமேட்டின் கொடுமுடியிலே நின்றுகொண்டிருந்தார்கள்.

௨௬. அப்போது அப்னேர் யோவாபைப் பார்த்துக்கூப்பிட்டுப் பட்டயம் எப்போதைக்கும் சங்காரம்பண்ணிக்கொண்டிருக்கவேண்டுமோ? கடைசியிலே கசப்புண்டாகுமென்று அறியீரோ! தங்கள்சகோதரரைவிட்டுப் பின்வாங்கும்படிக்குச் சனத்திற்கு எந்தமட்டுஞ்சொல்லாதிருப்பீரென்றான்!

௨௭. அதற்குயோவாப், இன்றுகாலமே நீர் பேசினதில்லாதிருந்தால்அப்போதுதானே சனம் அவரவர் தங்கள் சகோதரரைப்பின்றொடராதபடிக்குத் திருப்பப்படுவார்களென்று பராபரனுடையசீவனைக்கொண்டுசொல்லுகிறேனென்றுசொல்லி,

௨௮. யோவாப் எக்காளமூதினான். அப்போது சனமெல்லாம் இஸ்ரவேலைப்பின்றொடராதபடிக்கும், அப்புறம்யுத்தம்பண்ணாதபடிக்கும் நின்றது.

௨௯. அன்று இராமுழுதும் அப்னேரும், அவன் மனுஷரும் அந்தரவெளிவழியாய்ப்போய், யோர்தானைக்கடந்து, பித்ரோனெல்லையையெல்லாந்தாண்டி மக்னாயிமுக்குவந்தார்கள்.

௩௰. யோவாபும் அப்னேரைவிட்டுத் திரும்பிச் சனத்தையெல்லாங் கூட்டிக்கொண்

டான. தாவீதின சேவகரிற பததொனபது பேரும, ஆசகேலுங குறைநதார்கள.

௩௧. தாவீதின சேவகரோவென்றால பென்யமீனரிலும, அப்னேரின மனுஷரிலும முந்நூற்றறுபதுபேரை படங்கடித்தார்கள.

௩௨. அவர்கள ஆசகேலையெடுதது பெத்லகேமிலிருக்கிற அவனுடைய தகப்பனகல்லறையிலே யவனையடக்கமபண்ணினார்கள. யோவாபும, அவனமனுஷரும இராமுழுதும் நடநது எபிரோனுக்குச சேருகிறபோது அவர்களுக்குப்பொழுதுவிடிந்தது.

## ௩. அதிகாரம்.

[(௧) யுத்தத்திலதாவீதுபலத்தது. (௨) எபிரோனிலே அவனுக்கு-௬-குமாரர்கள பிறந்தது. (௬) அப்னேர் இஸபோசேததின்மேல கோபிததுககொண்டதும. (௰௨) தாவீதிடததிற சேர்நததும. (௰௩) அவனைததாவீது தன்மனைவிமீகாளைததன்னண்டைக்கழைததுவரச்சொன்னது. (௰௭) அப்னேர் இஸரவேலர்களோடு யோசனைசெய்தபின்பு தாவீது அவனுக்கு விருநதிட்டனுப்பியது. (௨௨) யோவாப் யுத்தத்திலிருநது திருமபிவநது தாவீதினசெய்கைக்குச் சம்மதியாமல அப்னேரைககொனறது. (௨௮) தாவீது யோவாபைச்சபித்தது. (௩௧) அப்னேருக்காகத் துககங்கொண்டாடியது.]

சவுலின வீட்டுக்கும, தாவீதினவீட்டுக்கும நெடுநாளயுததமநடநதது. ஆனால தாவீது பலததுபபோனான. சவுலினவீட்டாரோவென்றால சிறுகிபபோனார்கள.

௨. எபிரோனிலேதாவீதுக்குபபிறநதகுமாரராவது, இஸரெயேல ஊராளான அகினோவாமிடததிலேபிறநத அம்னோன் அவனுக்கு முதறபிறநதவன.

௩. நாபாலின பெண்சாதியாயிருநத கறமேலூராளான அபிகாயிலிடததிலே பிறநதகிலேயாம் அவனுடைய இரண்டாங குமாரனானவன. மூன்றாங்குமாரன கேசூரின இராசாவானதலமாயிகுமாரததியாகியமாககாளபெறற அப்சலோமென்றவன.

௪. நாலாங்குமாரன ஆகீத்பெறற அதொனியாவென்றவன. ஐநதாங்குமாரன அபித்தாலபெறற செபபத்தியாவென்றவன.

௫. ஆறாங்குமாரன தாவீதின பெண்சாதியான எக்லாளிடததிலேபிறநத இத்ரேயாமென்றவன. இவர்கள எபிரோனிலே தாவீதுக்குபபிறநதார்கள.

௬. சவுலினவீட்டுக்கும, தாவீதின வீட்டுக்குமயுததமநடந்துவருகிறபோதேதேவெனில, அப்னேர்சவுலினவீட்டிலேபலததவனானான.

௭. சவுலுக்கு ஆயாவின குமாரததியாகிய ரிஸபாளென்று பேருள்ள ஒருவைப்பாட்டியிருநதாள. இஸபோசேத் அப்னேருடனே நீ யென தகப்பனுடைய வைப்பாட்டியினிடததிலே பிரவேசிததென்னவென்றான.

௮. அப்போது அப்னேர், இஸபோசேததின வார்த்தைகளுக்காக மிகவுங்கோபமாயெரிநதுசொன்னதாவது; உமமைத தாவீதினகையி லொப்புக்கொடாமல இநதாளமட்டும உமமுடைய தகப்பனாகிய சவுலின வீட்டுக்கும, அவருடைய சகோதரருக்கும, சிநேகிதருக்கும, தயவுசெய்கிறவனாகியஎன்னை நீர் இன்று ஒருஸதிரிககாகக்குற்றமபிடிக்கிறதற்குநான யூதாவுக்குட்கையானநியாயத்தலையோ!

௯. நான இராசசியபாரததைச சவுலின வீட்டைவிட்டுத தாண்டப்பண்ணித தாவீதின ஆசனததைத் தானதுவக்கிப பெர்சேபாமட்டுமுள்ள இஸரவேலினமேலும, யூதாவினமேலும நிலைநிறுததுமபடிக்கு,

௰. கர்த்தர் தாவீதுக்கு ஆணையிட்டபடியே நான அவனுக்குச்செய்யாதிருநதாற பராபரன அப்னேருக்கிப்படியும, அப்படியுஞ்செய்யக்கடவரென்றான.

௰௧. அப்போது அவன அப்னேருக்குப பயப்படுகிறதினால அப்புறம ஒருமறுமொழியை யவனுக்குச்சொலல அவனுக்குக் கூடாதிருநதது.

௰௨. அப்னேரோவென்றால, தனநாமததிலே தாவீதண்டைக்குத தானுபதிகளையனுபபித தேசமாருடையதென்றும, என்னோடேயுடம்படிக்கைபண்ணும. இதோ,இஸரவேலையெல்லாம உமமண்டைக்குததிருப்ப என்கையுமமோடிருக்குமென்றுஞ் சொல்லச்சொன்னான.

௰௩. அதற்கவன,நல்லது,உன்னோடேநான உடம்படிக்கைபண்ணுவேன. ஆனால ஒரேகாரியததையுன்னைக் கேட்கிறேன. என்னவெனில, நீ யென்முகததைபபார்க்கவரும போது சவுலினகுமாரததியாகிய மீகாளை நீ யழைததுவரவேணடும. அதற்குமுன நீ யென்முகத்தைப்பார்ப்பதில்லையென்றுசொல்லச்சொல்லி,

௰௪. தாவீது சவுலின குமாரனாகிய இஸபோசேத்தண்டைக்கும, தானுபதிகளையனுபபி, நான பெலிஸதருடைய நூறுநுனித்தோலகளைப பரிசாகக்கொடுதது விவாகமபண்ணின என்பெண்சாதியாகிய மீகாளையெனக்குக் கொடுததுவிடுமென்று சொல்லச்சொன்னான.

௰௫. அப்போது இஸபோசேத், அவளை லாயிசினகுமாரனாகிய பலததியேலென்றபுருஷனைவிட்டழைததுவர ஆள்களையனுபபினான.

௰௬. அவள புருஷன அவளோடேகூடப்பகூரீம்மட்டும அழுதுநடநது அவளைபபின்சென்றான. அப்னேர் அவனுடனே, நீ திருமபிப்போவென்றான். அப்போது திருமபிப போனான.

௰௭. அப்னேர் இஸ்ரவேலின் மூப்பரோடே பேசிக்கொண்டு சொன்னதாவது; நீங்கள் தாவீதை யுங்கள்மேல் இராசாவாக்கவைக்கும்படிக்கு நேகநாளாய்த் தேடுகிறவர்களாமே.

௰௮. இப்போதும் அப்படிச்செய்யுங்கள். ஏனெனில், நம்முடைய தாசனாகிய தாவீதின் கையினாலே நம்முடைய சனமாகிய இஸ்ரவேலைப் பெலிஸ்தரின் கைக்கும், அவர்களுடைய எல்லாச் சத்துருக்களின் கைக்கும் நீங்கலாக்கி இரட்சிப்போமென்று கர்த்தர் தாவீதைக்குறித்துச் சொன்னாரென்றான்.

௰௯. இந்தப்பிரகாரமாக அப்னேர் பெஞ்யமீனுடைய காதுகளிலும் விழப்பேசினான். பிறபாடு அப்னேர் இஸ்ரவேலர் பார்வைக்கும், பெஞ்யமீனுடைய எல்லாவீட்டாரின் பார்வைக்கும் சம்மதியானதையெல்லாம் எபிரோனிலே தாவீதினகாதுகளுங் கேட்கப்பேசுகிறதற்குப்போனான்.

௨௰. அப்னேரும், அவனோடேகூட இருபதுபேரும் எபிரோனிலிருக்கிற தாவீதண்டைக்கு வந்தபோது தாவீது அப்னேருக்கும், அவனோடேவந்த மனுஷருக்கும் விருந்துசெய்வித்தான்.

௨௧. பிறபாடு அப்னேர், தாவீதுடனே, நானெழுந்துபோய், இஸ்ரவேலரையெல்லாம் உம்மோடே உடம்படிக்கை பண்ணும்படிக்கு இராசாவாகிய என்னாண்டவனண்டையிலே சேர்த்துக்கொண்டு வருகிறேன். அப்படியே உம்முடைய ஆத்துமா இச்சிக்கிறதின்மேலெல்லாம் இராசரியபாரம் பண்ணுவீரென்றான். அப்படியே தாவீது அப்னேரை யனுப்பிவிட்டான். அவன் சமாதானத்தோடேபோனான்.

௨௨. அல்லவிதோ, தாவீதின் சேவகரும், யோவாபும் அநேகம் பொருள்களைக்கொள்ளையிட்டுத் தண்டிலிருந்துகொண்டு வந்தார்கள். அப்போது அப்னேர், எபிரோனில தாவீதண்டையிலேயில்லை. ஏனெனில், அவனையனுப்பிவிட்டான். அவன் சமாதானத்தோடேபோய்விட்டான்.

௨௩. யோவாபும், அவனோடிருந்த எல்லா இராணுவமும்வந்தபோது, நேரின் குமாரனாகிய அப்னேர் இராசாவண்டைக்குவந்தானென்றும், அவரவனைச் சமாதானமாய்ப் போகவனுப்பிவிட்டாரென்றும் யோவாபுக்கறிவித்தார்கள்.

௨௪. அப்போது யோவாப், இராசாவண்டையிற் பிரவேசித்துச் சொன்னதாவது; என்னசெய்தீர்! இதோ, அப்னேர் உம்மண்டைக்குவந்தபோது நீர் அவனைப்போகவிட்டதென்ன!

௨௫. நேரின்குமாரனாகிய அப்னேரையறிவீரே! அவன் உம்மைமோசம்போக்கவும், உம்முடைய போக்குவரத்தை யறியவும், நீர் செய்கிறதையெல்லாம் ஆராயவும்வந்தானென்றுசொல்லி,

௨௬. யோவாப்தாவீதை விட்டுப்புறப்பட்டுத் தாவீதறியாமற் சீராத் துரவுமட்டும்போன அப்னேரைத்திரும்பிவரச்சொல்ல அவன் பிறகாலே ஆள்களையனுப்பினான்.

௨௭. அப்னேர் எபிரோனுக்குத்திரும்பிவருகிறபோதோவென்னில், யோவாப், அவனோடே ரகசியமாய்ப் பேசப்போகிறவன்போல அவனை யொலிமுகவாசலின் நடுவே நெருப்பக்கமாயழைத்துப்போய்த் தன்தம்பி ஆசகேலுடைய இரத்தப்பழியைவாங்க அங்கே அவனை வயிறறில் குத்திக்கொன்றுபோட்டான்.

௨௮. பிறபாடு தாவீது அதைக்கேட்டபோது சொன்னதாவது; நேரின் குமாரனாகிய அப்னேரின் இரத்தத்திற்காக என்மேலும், என் இராசரியத்தின்மேலும் கர்த்தருக்கு முன்பாக என்றைக்கும்பழியில்லை.

௨௯. அது யோவாபுடைய தலையின் மேலும், அவன் தகப்பன்வீட்டினத்தின்மேலும் சுமந்திருப்பதாக. யோவாபின்வீட்டாரிலே பிரமியக்காரனும், குஷ்டரோகியும், தடிபிடித்து நடக்கிறவனும், பட்டயத்தால் விழுகிறவனும், அப்பங்குறைச்சலுள்ளவனும் ஒருக்காலுங் குறையாதிருக்கக் கடவனென்றான்.

௩௰. அப்படியே அப்னேர், கிபெயோனில யுத்தத்திலே தங்கள் தம்பியாகிய ஆசகேலைக்கொன்றதினிமித்தம், யோவாபும், அவன் சகோதரனாகிய அபிசாயும் அவனைச் சங்காரம் பண்ணினார்கள்.

௩௧. தாவீது யோவாபோடும், அவனோடிருந்த எல்லாச்சனத்தோடும் நீங்களுங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு இரட்டுடுத்து, அப்னேருக்குமுன்னாலே நடந்து துக்கங்கொண்டாடுங்களென்று சொல்லித் தாவீது இராசாதாமும் பாடையைப்பின் சென்றான்.

௩௨. அவர்கள் அப்னேரை எபிரோனிலே அடக்கம்பண்ணுகையில், இராசா அப்னேரின் கல்லறையண்டையிலே சத்தமிட்டழுதான். சகலசனமும் அழுதது.

௩௩. இராசா அப்னேருக்காகப் புலம்பிச் சொன்னதாவது; மதியில்லாதவன் சாகிறதுபோல அப்னேர் மடிந்தானோ!

௩௪. உன்னுடைய கைகள் கட்டப்பட்டிருந்ததுமில்லை. உன்னுடைய கால்கள் விலங்குபோட்டப் பட்டிருந்ததுமில்லை. அக்கிரமக்காரர்கையில் மடிகிறதுபோல மடிந்தாயென்றான். அப்போது சனமெல்லாம் பின்னையும் அதிகமாயவனுக்காக அழுதது.

௩௫. பகலினனமுண்டாயிருக்கையில், சனமெல்லாம்வந்து அப்பம்புசியுமென்றுதாவீதுக்குச் சொல்லுகிறபோது, தாவீது சூரியன் அஸ்தமிக்கிறதற்குமுன்னே நான் அப

பதனையாகிலும், வேறெதையாகிலும் ருசி பார்த்தால் பராபரன் எனக்கிப்படியும், அப்படிக்கும் செய்யக்கடவரென்று ஆணையிட்டுச் சொன்னான்.

௩௬. சனமெல்லாம் அதையறிந்தன. அது அவர்கள் பார்வைக்கு நன்றாயிருந்தது. இராசா செய்ததையெல்லாம் எல்லாச் சனத்திற்கும் நன்றாய்க் கண்டன.

௩௭. அப்படியே நேரின் குமாரனாகிய அப்னேரைக் கொன்றுபோட்டது இராசாவினாலே வந்ததல்லவென்று அந்நாளிலே சகல சனமும், இஸ்ரவேலனைத்தும் அறிந்துகொண்டன.

௩௮. இராசா தன் ஊழியக்காரரோடே சொன்னதாவது; இன்றைத்தினம் இஸ்ரவேலிலொரு பிரபும், பெரிய மனுஷனும் விழுந்தானென்றறியீர்களோ?

௩௯. இராசாவாக அபிஷேகம் பண்ணப்பட்ட நானோவென்றால், இன்னம் புதியவன். ஆனால் செருயாவின் குமாரராகிய இந்த மனுஷர் என்னைவிடக் கெட்டியானவர்களாயிருக்கிறார்கள். அந்தப் பொல்லாப்பைச் செய்தவனுக்குக் கர்த்தர் அவன் பொல்லாப்புக்குத் தக்கதாய்ச் சரிக்கட்டுவாராகவென்றான்.

## ச. அதிகாரம்.

[(௧) அப்னேரின் மரணத்தைக் குறித்து இஸ்ரவேலர்கள் கலங்கினது. (௨) பாணாவும், ரேகாபும், இஸ்போசேத்தைக் கொன்று அவன் தலையை எபிரோனுக்குக் கொண்டுவந்தது. (௯) தாவீது அவர்களைக் கொல்லவும், இஸ்போசேத்தின் தலையை அடக்கம் பண்ணவும் கட்டளையிட்டது.]

அப்னேர் எபிரோனிலே செத்துப்போனதைச் சவுலின் குமாரன் கேட்டபோது அவன் கைகள் திடனற்றுப்போய இஸ்ரவேலெல்லாங் கலங்கின.

௨. ஆனால் சவுலின் குமாரனுக்குத் தண்டு சேவகரின் தலைவரான இரண்டு மனுஷரிருந்தார்கள். ஒருவனுக்குப் பாணாவென்றும், மற்றவனுக்கு ரேகாபென்றும் பேரிருந்தது. அவர்கள் பென்யமீன் புத்திரரில் பேரோத்தியனாகிய ரிம்மோனின் குமாரரானவர்கள். ஏனென்றால் பேரோத்தும் பென்யமீனுக்கடுத்ததாயெண்ணப்பட்டது.

௩. பேரோத்தியரோவென்றால், கித்தாயீமுக்கோடிப்போய், இந்நாள்வரைக்கும் அங்கே பரதேசிகளாய்த் தங்கியிருக்கிறார்கள்.

௪. சவுலின் குமாரன் யோனத்தானுக்கோவெனில், இரண்டு கால் முடமான ஒரு குமாரனிருந்தான். சவுலும், யோனத்தானும் பட்ட செய்தி இஸ்ரேயேலிலிருந்து வருகிறபோது, அவன் ஐந்து வயதுள்ளவனாயிருந்தான். அப்போது அவனுடைய தாதி அவனை யெடுத்து ஓடிப்போனாள். அவள் ஓட்டத் தீவரிக்கையில், அவன் விழுந்து சப்பாணியானான். அவன் பேர் மேவிபோசேத்தென்பது.

௫. பேரோத்தியனான அந்த ரிம்மோனின் குமாரராகிய ரேகாபும், பாணாவும் போய், இஸ்போசேத்து மத்தியானத்திலே படுக்கையின் மேலே சயனித்திருந்த வெய்யில்வேளையிலே அவன் வீட்டிற்குட் பிரவேசித்து,

௬. கோதுமையை வாங்கவருகிறவர்களைப்போல நடுவீட்டுமட்டும் வந்து, அவனை வயிற்றிலே குத்திப்போட்டார்கள். பிறகு ரேகாபும், அவன் சகோதரன் பாணாவும் தப்பித்துக்கொண்டுபோனார்கள்.

௭. அவன் தன் படுக்கைவீட்டிலே தன் கட்டிலின்மேலே படுத்திருக்கும்பொழுது தானே இவர்கள் உள்ளே போய், அவனைக் குத்திக் கொன்றுபோட்டு, அவன் தலையை வெட்டிப்போட்டார்கள். பிறகு அவன் தலையை யவர்களெடுத்துக்கொண்டு, இராமுழுதும் அந்தரவெளி வழியாய் நடந்து,

௮. எபிரோனிலிருக்கிற தாவீதண்டைக்கு இஸ்போசேத்தின் தலையைக் கொண்டுவந்து, இராசாவுடனே, இதோ, உம்முடைய பிராணனை வாங்கத் தேடின உம்முடைய சத்துருவாயிருந்த சவுலின் குமாரனான இஸ்போசேத்தின் தலை. இன்றைத்தினங் கர்த்தர் இராசாவாகிய எங்கள் ஆண்டவனுக்காகச் சவுலின் கையிலும், அவன் வித்தாரின் கையிலும் பழிவாங்கினாரென்றார்கள்.

௯. ஆனால் தாவீது, பேரோத்தியனான ரிம்மோனின் குமாரராகிய ரேகாபுக்கும், அவன் சகோதரன் பாணாவுக்கும் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது; என் ஆத்துமாவையெல்லா இக்கட்டுக்கும் நீங்கலாக்கிமீட்ட கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு நான் சொல்லுகிறதைக் கேளுங்கள்.

௰. இதோ, சவுல் செத்துப்போனானென்று எனக்கறிவித்துத் தன் பார்வைக்குச் சுகசெய்தியைச் சொல்லுகிறவனாயிருந்து, அதற்காகத் தனக்கு வெகுமானங் கொடுப்பேனென்று நினைத்த அவனை நான் பிடித்துச் சிக்லாகிலே கொன்றுபோட்டேனே.

௰௧. தம் வீட்டிற்குள் தம் படுக்கையின் மேலே படுத்திருந்த நீதிமானைக் கொலைசெய்த பொல்லாத மனுஷர் எத்தனையதிகம்? இப்போதும் நான் அவருடைய இரத்தப் பழியை யுங்கள் கைகளில் வாங்கியுங்களைப் பூமியிலிருந்து கழித்துப் போடாதிருப்பேனோவென்றுசொல்லி,

௰௨. அவர்களைக் கொன்றுபோடவும், அவர்கள் கைகளையும், கால்களையுந் தறித்து எபிரோனிலிருக்கிற குளத்தண்டையிலே தூக்கிப்போடவும் தாவீது வாலிபருக்குக் கற்பித்தான். ஆனால் இஸ்போசேத்தின் தலையையெடுத்து, எபிரோனிலிருக்கிற அப்னேரின் கல்லறையிலேயடக்கம்பண்ணினார்கள்.

## ரு. அதிகாரம்.

[(௧) கோத்திரங்கள் தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ண எபிரோனுக்குவந்தது. (௪) தாவீதின்வயது. (௬) அவன் எபூசியரிலிருந்து சீயோனைப் பிடித்து அதிலவாசம் பண்ணினது. (௧௧) ஈராம் தாவீதண்டைக்குஆள்களை யனுப்பியது. (௧௩) எருசலேமில் தாவீதுக்கு-௰௧ குமாரர்கள் பிறந்தது. (௰௭) தாவீது பராபரனாலே கட்டளையிடப்பட்டுப் பாலபிருசீமிலும், (௨௨) முசுக்கட்டைச்செடிகளிலும் பெலிஸ்தரையடித்தது.]

அக்காலத்திலே இஸ்ரவேலின்கோத்திரங்களெல்லாம் எபிரோனிலிருக்கிற தாவீதண்டைக்குவந்து சொன்னதாவது; இதோ, நாங்கள்வந்திருக்கிறோம். நாங்கள் உம்முடைய எலும்பும், உம்முடைய மாம்சமுமானவர்கள்.

௨. சவுல் எங்கள்மேல் இராசாவாயிருக்கிற அப்போதுதானும் நீர் இஸ்ரவேலோடே போக்கும்வரத்துமாயிருந்தீர். நம்முடைய சனமாகிய இஸ்ரவேலை நீ மேய்த்து, நீ இஸ்ரவேலின்மேலே தலைவனாயிருப்பாயென்று உம்மோடேகர்த்தர்சொன்னாரென்றார்கள்.

௩. இஸ்ரவேலின்மூப்பரெல்லாரும் எபிரோனிலே இராசாவண்டைக்கு வந்தார்கள். தாவீது இராசா எபிரோனிலே கர்த்தருக்கு முன்பாக அவர்களோடேயுடன்படிக்கை பண்ணினபிற்பாடு அவர்கள்தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணினார்கள்.

௪. தாவீது இராசாவாகிறபோது முப்பது வயதாயிருந்தான். அவன்நாற்பதுவருஷம் இராசரியபாரம்பண்ணினான்.

௫. அவன் எபிரோனிலேயூதாவின்மேலேழுவருஷமும், ஆறுமாதமும், எருசலேமிலேஎல்லா இஸ்ரவேலின்மேலும், யூதாவின்மேலும் முப்பத்துமூன்றுவருஷமும்இராசரியபாரம் பண்ணினான்.

௬. தேசத்திலேகுடியிருக்கிற எபூசியர்மேலயுத்தம்பண்ண இராசாவானவன் தன்மனுஷரோடேகூட எருசலேமுக்குப்போனான். அவர்கள் தாவீதுக்கு, நீ இதற்குட்பிரவேசிப்பதில்லை. குருடரும், சப்பாணிகளும் உன்னைவிலக்குவார்களென்றுசொல்லித் தாவீது இதிலே உட்பிரவேசிப்பதில்லையென்றார்கள்.

௭. ஆனாலும்தாவீது, சீயோன்கோட்டையைப் பிடித்தான். அது தாவீதின்பட்டணம்.

௮. ஏனெனில், எவன் எபூசியரைமுறியடித்துச் சாலகத்திலும், தாவீதின் ஆத்துமாப் பகைக்கிறசப்பாணிகள் குருடரிடத்திலுஞ் சேர்ந்தேறுகிறானோ அவன் தலைவனாயிருப்பானென்று தாவீது அன்றைத்தினஞ்சொல்லியிருந்தான். குருடரும், சப்பாணியும் வீட்டிலே வரவேண்டாமென்றதைத் தொட்டுச் சொல்லுகிறார்கள்.

௯. அந்தக்கோட்டையிலே தாவீதுவாசம் பண்ணி, அதற்குத் தாவீதின்பட்டணமென்றுபேரிட்டு, மில்லோவென்றதலந்துவக்கி உட்புறமட்டும், சுற்றிலுமிருக்கிறதைக்கட்டுவித்தான்.

௰. தாவீது நாளுக்கு நாள்பெரியவனாய்ப் போனான். ஏனென்றால் சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் அவனோடேகூடவிருந்தார்.

௰௧. தீருவின் இராசாவாகிய ஈராம், தாவீதண்டைக்குத்தூதுபதிகளையும், கேதுருமரங்களையும், தச்சரையும், கற்றச்சரையும் அனுப்பினான். இவர்கள் தாவீதுக்கு ஒருவீட்டைக்கட்டினார்கள்.

௰௨. கர்த்தர் தன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவாகத் திடப்படுத்தித் தம்முடைய சனமாகிய இஸ்ரவேலினிமித்தந் தன்னுடைய இராசரியத்தை யுயர்த்தினாரென்று தாவீது கண்டறிந்தபோது,

௰௩. அவன் எபிரோனிலிருந்து வந்தபிற்பாடு எருசலேமூராராகிய இன்னம் அதிகமான வைப்பாட்டிகளையும், ஸ்திரீகளையும் படைத்தான். இன்னம் அதிக குமாரரும், குமாரத்திகளுந் தாவீதுக்குப்பிறந்தார்கள்.

௰௪. எருசலேமில் அவனுக்குப் பிறந்த குமாரரின் நாமங்களாவன. சம்முவா, சோபாப், நாத்தான், சாலோமோன்.

௰௫. இப்கார், எலிசுவா, நேப்பேக், யப்பியா,

௰௬. எலிசாமா, எலியாதா, எலிப்பேலேத்தென்றவர்கள்.

௰௭. தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணினார்களென்றுபெலிஸ்தர்கேட்டபோதோவெனில், அவர்களெல்லாரும், தாவீதைத்தேட வந்தேறினார்கள். அதைத் தாவீதுகேட்கிறபோது, ஒரு அரணிப்பானவிடத்திலே போயிறங்கினான்.

௰௮. பெலிஸ்தரோவெனில், வந்து ரெப்பாயீம்பள்ளத்தாக்கிலே பரவியிருந்தார்கள்.

௰௯. பெலிஸ்தரின்மேலே போயேறுவேனோ? அவர்களை என்கையிலொப்புக்கொடுப்பீரோவென்று தாவீது கர்த்தரைக்கேட்டபோது, கர்த்தர் தாவீதுடனே, ஏறு. ஏனென்றால் பெலிஸ்தரையுன்கையிலொப்புக்கொடுக்கவே யொப்புக்கொடுப்பேனென்றார்.

௨௰. தாவீது பாலபிருசீமுக்குவந்து அங்கேயவர்களைமுறியடித்துத் தண்ணீர்வடிகிறதுபோலே கர்த்தரென் சத்துருக்களையெனக்குமுன்பாக வழியறுத்துக்கொண்டு போனாரென்றுசொல்லி, அதுநிமித்தம் அத்தலத்திற்குப் பாலபிருசீமென்றுபேரிட்டான்.

உக. அங்கே பெலிஸ்தர் தங்கள் விக்கிரகங்களை விட்டுப்போனார்கள். அவைகளைத் தாவீதும், அவன் மனுஷரும் எடுத்துக்கொண்டார்கள்.

உஉ. பெலிஸ்தர் திரும்பவும் வந்தேறி, ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே விசாலத்தில் விரவினார்கள்.

உ௩. தாவீது கர்த்தரைக் கேட்டதற்கு, அவர், நீ நேராயேறிப்போகாமல், அவர்களுக்குப் பின்னாலே சுற்றி முசுக்கட்டைச் செடிகளுக்கெதிரேயிருந்து அவர்கள்மேல் வந்து,

உ௪. முசுக்கட்டைச் செடிகளின் நுனிகளிலே நடந்துவருகிற இரைச்சலை நீ கேட்கையில், அப்போது சீக்கிரமாய்ப்போவாயாக. ஏனெனில், அப்போது பெலிஸ்தரின் பாளயத்தை முறியடிக்கக் கர்த்தர் உனக்கு முன்னே புறப்பட்டிருப்பாரென்றார்.

உ௫. கர்த்தர் தனக்குக் கற்பித்த பிரகாரமாகத்தானே தாவீது செய்து, பெலிஸ்தரைக் கேபாவைத் துவக்கிக் கேசேரைச்சேருமெல்லைமட்டும் முறியடித்தான்.

## ௬. அதிகாரம்.

[(௧) தாவீது உடன்படிக்கையின் பெட்டியைப் பாலே யூதாவிலிருந்து புதிய இரதத்தின்மேற்கொண்டுவந்தது. (௬) ஊசா அழிக்கப்பட்டது. (௯) பராபரன் அந்தப் பெட்டியினிமித்தம் ஓபேத்ஏதோமை ஆசீர்வதித்தது. (௰உ) தாவீது பலிசெலுத்தி அந்தப் பெட்டியைச் சீயோனுக்குக்கொண்டுவந்து அதின்முன் நடனஞ் செய்ததற்காக மீகாள் அவனை அசட்டைபண்ணினது. (௰௭) அவனதைக் கூடாரத்திலவைத்துச் சந்தோஷமடைந்து சனங்களுக்குவிருந்து செய்தது. (உ௰) தெய்வககளிப்புள்ள தாவீதைக் கடிந்துகொண்டதினாலே மீகாள் தன் மரணபரியந்தம் பிள்ளையில்லாதிருந்தது.]

பின்னையுந் தாவீது இஸ்ரவேலிலெல்லாந் தெரிந்துகொள்ளப்பட்ட முப்பதினாயிரம் பேரைக்கூட்டி,

உ. கேருபீன்களின் நடுவே வாசமாயிருக்கிற சேனைகளுடைய கர்த்தரின் நாமந்தொழுது கொள்ளப்படுகிற பராபரனுடைய பெட்டியைப் பாலே யூதாவிலிருந்தேறிவரப்பண்ணும்படிக்கு, அவனும், அவனோடிருந்த அத்தலத்துச் சகலரும் எழுந்துபோய்,

௩. பராபரனுடைய பெட்டியையொரு புது இரதத்தின்மேலேற்றி, அதைக் கிபெயாவிலிருக்கிற அபினதாபின் வீட்டிலிருந்து கொண்டுவந்தார்கள். அபினதாபின் குமாரராகிய ஊசாவும், அகியோவும், அந்தப் புது இரதத்தை நடத்தினார்கள்.

௪. அவர்கள் பராபரனுடைய பெட்டியேற்றியிருந்த அதைக் கிபெயாவிலிருக்கிற அபினதாபின் வீட்டிலிருந்து நடத்திக்கொண்டு வருகிறபோது அகியோப், பெட்டிக்குமுன்னாலே நடந்தான்.

௫. தாவீதும், இஸ்ரவேல்வீட்டாரனைவரும் தேவதாரிமரத்தாற்பண்ணப்பட்ட சகலவித்தத்தவாத்தியங்களாகிய சுரமண்டலங்களையும், தம்புருக்களையும், மேளங்களையும், வீணைகளையும், கைத்தாளங்களையும், கர்த்தருக்கு முன்பாகச் சேவித்துக்கொண்டுபோனார்கள்.

௬. அவர்கள் நாகோனின் களமிருக்கிற இடமட்டும் வந்தபோதோவெனில், மாடுகள் மிரண்டோடுகிறபடியினாலே, ஊசா, பராபரனுடைய பெட்டியண்டைக்குத் தன் கையை நீட்டியதைப்பிடித்தான்.

௭. அப்போது பராபரனாகிய கர்த்தர் ஊசாவின்மேலே கோபமூண்டவராகி, அவனுடைய சாவதானமில்லாமையினிமித்தம் அங்கே அவனை அழித்தார். அங்கே பராபரனுடைய பெட்டியண்டையிலே அவன் செத்தான்.

௮. அப்போது கர்த்தர் ஊசாவையிடித்த இடிக்காகத் தாவீது மனஸ்தாபப்பட்டு அந்தஸ்தலத்திற்கு இந்நாள்மட்டுமிருக்கிற ஊசாவின் இடியென்றுபேரிட்டு,

௯. தாவீது அன்றைத்தினங் கர்த்தருக்குப் பயந்து, கர்த்தருடைய பெட்டி என்னண்டைக்கு வருவதெப்படியென்றுசொல்லி,

௰. அதைத் தன்னண்டைக்குத் தாவீதின் பட்டணத்திலேகொண்டுவரமனதில்லாமல், கேத்தியனாகிய ஓபேத்ஏதோமின் வீட்டிலே சேர்த்தான்.

௰௧. கர்த்தருடைய பெட்டி கேத்தியனாகிய ஓபேத்ஏதோமின் வீட்டிலே மூன்றுமாதமிருக்கையில், கர்த்தர் ஓபேத்ஏதோமையும், அவன்வீட்டனைத்தையும் ஆசீர்வதித்தார்.

௰உ. பராபரனுடைய பெட்டியினிமித்தங் கர்த்தர் ஓபேத்ஏதோமின்வீட்டையும், அவனுக்குண்டான எல்லாவற்றையும் ஆசீர்வதித்தாரென்று தாவீது இராசாவுக்கு அறிவிக்கப்பட்டது. அப்போது தாவீது, பராபரனுடைய பெட்டியை ஓபேத்ஏதோமின் வீட்டிலிருந்து தாவீதின் பட்டணத்திலே மகிழ்ச்சியுடனே ஏறிவரப்பண்ணினான்.

௰௩. கர்த்தருடைய பெட்டியைச் சுமந்து போகிறவர்கள் ஆறுதப்படி நடந்தபோதோவெனில், மாடுகளையும், கொழுத்த ஆட்டுக்கடாக்களையும் பலியிட்டான்.

௰௪. தாவீது சணல்நூற்சால்வையைத்தரித்துக்கொண்டு சகல பலத்தோடும், கர்த்தருக்குமுன்பாக நடனம்பண்ணிக்கொண்டிருந்தான்.

௰௫. அப்படியே தாவீதும், இஸ்ரவேல்வீட்டாரனைவரும் கர்த்தருடைய கெம்பீரத்தோடும், எக்காளத்தொனிப்போடும் ஏறிவரப்பண்ணினார்கள்.

௰௬. கர்த்தருடைய பெட்டி தாவீதின் பட்டணத்திற்குட் பிரவேசிக்கிறபோது வெளி ல, சவுலின் குமாரத்தியாகிய மீகாள், பலகணி வழியாய்ப் பார்த்துத் தாவீது இராசா கர்த்தருக்கு முன்பாகக் குதித்து நடனம்பண்ணுகிற தைக் கண்டு, தன் இருதயத்திலே அவனை அசட்டைபண்ணினாள்.

௰௭. அவர்கள் கர்த்தருடைய பெட்டியை யுள்ளேகொண்டுவந்து, தாவீது, அதற்குப் போட்ட கூடாரத்திற்குள்ளிருக்கிற அதின் ஸ்தானத்திலே அதைவைத்தபோது, தாவீது, கர்த்தருடைய சந்நிதியிலே சர்வாங்க தகனங்களையும், சமாதானபலிகளையும் பலியிட்டான்.

௰௮. தாவீது, அவைகளைப் பலியிட்டபிற பாடு சேனைகளுடைய கர்த்தரின் நாமத்திலே சனத்தையாசீர்வதித்து,

௰௯. இஸ்ரவேலின் திரள்கூட்டமாகிய எல்லாச் சனத்திற்கும், புருஷருக்கும், ஸ்திரிகளுக்கும், அவரவருக்கு ஒவ்வொரு பணியாரத்தையும், ஒவ்வொரு இறைச்சித்துண்டத்தையும், ஒவ்வொருபடி திராட்சப்பழ இரசத்தையும் பங்கிட்டான். பிற்பாடு சனமெல்லாம், அவரவர் தங்கள் வீட்டிற்குப்போனார்கள்.

௨௰. தாவீது, தன் வீட்டையாசீர்வதிக்கிற தற்குத் திரும்புகிறபோது, சவுலின் குமாரத்தியாகிய மீகாள், தாவீதுக்கு எதிர்கொண்டுவந்து அற்பமனுஷரிலொருவன் வஸ்திரங்களைக் கழற்றிப்போடுகிறதுபோல, இன்று தம்முடைய ஊழியக்காரருடைய சிறுக்கிகளின் கண்களுக்கு முன்பாகத் தம்முடைய வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டிருந்த இஸ்ரவேலின் இராசா இன்று எத்தனை மகிமைப்பட்டிருந்தாரென்றாள்.

௨௰௧. அல்லால் தாவீது, மீகாளோடே சொன்னது; உன் தகப்பனைப் பார்க்கிலும், அவருடைய எல்லா வீட்டாரைப் பார்க்கிலும் என்னை இஸ்ரவேலாகிய கர்த்தருடைய சனத்தின்மேலே தலைவனாகக் கட்டளையிடும்படிக்குத் தெரிந்துகொண்ட கர்த்தருடைய சமுகத்திற்கு முன்பாக ஆடிப்பாடினேன்.

௨௰௨. இன்னமிதைப் பார்க்கிலும், நான் நீசனும், என் பார்வைக்குப் பணிந்தவனுமாகி, இப்படியே நீ சொன்ன சிறுக்கிகளோடுங் கூடத்தானே மகிமைப்படுவேனென்றான்.

௨௰௩. சவுலின் குமாரத்தியாகிய மீகாள் மரணமடையுமட்டும் அவளுக்குப் பிள்ளையில்லாதிருந்தது.

## ௭. அதிகாரம்.

[(௧) தாவீது பராபரனுக்கு ஆலயங்கட்டும்படி கொண்ட விருப்பத்தை நாத்தான் முதல் ஏற்றுக்கொண்டு, (௪) பின்பு பராபரனுடைய கட்டளையின்படி தடைசெய்து, (௰௨) உன் சந்ததியில் ஆசீர்வாதமுண்டாகுமென்று சொன்னது. (௰௮) தாவீதின் செபமும், துதியும்.]

இராசா தன் வீட்டிலே வாசமாயிருந்து, கர்த்தர் அவனைச் சுற்றிலுமிருந்த அவனுடைய எல்லாச் சத்துருக்களுக்கும் அவனை நீங்கலாக்கி இளைப்பாறப்பண்ணினபோது சம்பவித்ததேதென்றால்,

௨. இராசா தீர்க்கதரிசியாகிய நாத்தானுடனே, நான் கேதுருமரங்களுடைய வீட்டிலே வாசம்பண்ணும்போது, பராபரனுடைய பெட்டி திரைகளின் நடுவே வாசமாயிருக்கிறதை நீ பாரென்றான்.

௩. அப்போது நாத்தான், இராசாவுடனே, உம்முடைய இருதயத்திலிருக்கிறதையெல்லாம் நீர் போய்ச்செய்யும். ஏனெனில், கர்த்தர் உம்மோடிருக்கிறாரென்றான்.

௪. அன்று இராத்திரியிலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய வார்த்தை நாத்தானுக்கு உண்டாகி அவர் சொன்னதாவது;

௫. நீ போய் நம்முடைய தாசனாகிய தாவீதுடனே சொல்லவேண்டியது. கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாம் வாசமாயிருக்கத் தக்க வீட்டை நீ நமக்குக் கட்டுவாயோ?

௬. ஏனென்றால், நாம் இஸ்ரவேல் புத்திரரை எசிப்திலிருந்தே நீ வரப்பண்ணின நாள் முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் நாமொரு வீட்டிலே வாசம்பண்ணாமல், கூடாரத்திலும், வாசஸ்தலத்திலும் உலாவியிருந்தோமே!

௭. நாம் இஸ்ரவேலாகிய நம்முடைய சனத்தை மேய்க்கக் கற்பித்த இஸ்ரவேல் கோத்திரங்களிலொன்றோடாகிலும் நீங்கள் நமக்குக் கேதுருமரங்களுடைய வீட்டைக் கட்டாதிருக்கிறதென்னவென்று நாம் இஸ்ரவேல் புத்திரரோடெல்லாம் உலாவிவந்த எவ்விடத்திலாகிலுமிருந்து யாதொரு வார்த்தையைச் சொன்னதுண்டோ!

௮. இப்போதும் நீ நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச் சொல்வது, சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நீ இஸ்ரவேலென்ற நம்முடைய சனத்தின்மேலே தலைவனாயிருக்க, நாம் ஆடுகளின் பிறகாலே நடந்த உன்னை ஆட்டுமந்தையை விட்டெடுத்துக்கொண்டு,

௯. நீ நடந்த எவ்விடத்திலும் உன்னோடேயிருந்து, உன் சத்துருக்களையெல்லாம் உனக்கு முன்பாக நிர்மூலமாக்கிப் பூமியிலிருக்கிற பெரியவர்களின் நாமத்திற்கொத்த பெரிய நாமத்தை யுனக்குண்டாக்கினோம்.

௰. நாம் நம்முடைய சனமாகிய இஸ்ரவேலுக்கொரு இடத்தையேற்படுத்தி, அது தன் ஸ்தானத்திலே குடியிருக்கவும், அது இனி அலைக்கப்படாமலும், முன்போலும் நாம் நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்மேலே

வனுங்கூட முனையற்றுப்போகவேபோவான. ஏனெனில, உமமுடைய தகப்பனசவுரியவானென்றும, அவனோடிருக்கிறவர்கள பலசாலிகளென்றும இஸ்ரவேலெல்லாம அறியும.

௰௧. நான சொலலுகிற யோசனையென்னவெனில, தாண்துவக்கிப பேர்சேபாமட்டுமிருக்கிற கடற்கரைமணலத்தனைத திரட்சியான இஸ்ரவேலெல்லாம உமமண்டையிற கூட்டவேகூட்டப்பட்டு, நீர்தானேகூடயுத்தத்திற்குப போகவேண்டும் என்பதுதானே.

௰௨. அப்போது அவன கண்டுபிடிக்கப்படுகிற எவ்விடத்திலாகிலும, நாம அவனண்டையிற்போயப்பனிபூமியின்மேலேபெயகிற அத்தனையாய அவனமேலவிழுவோம. அப்படியே அவனோடிருக்கிற எலலாமனுஷரிலும ஒருவனும அவனுக்கிருக்கப்போகிறதிலலை.

௰௩. ஒரு பட்டணத்திற்குட் புகுந்தானேயானால, இஸ்ரவேலெல்லாம அந்தப்பட்டணத்தினமேலே கயிறுகளைப்போட்டு, அங்கேயொருபொடிக்கலலுங் காணப்படாதே போகுமட்டும, அதையாற்றிலே யிழுத்துப போடுவோர்களாகவென்றான.

௰௪. அப்போது அப்சலோமும, இஸ்ரவேலமனுஷரனைவரும அகித்தோப்பேலின் ஆலோசனையைப பார்க்க அர்க்கியனாகிய ஊசாயின ஆலோசனையை நலலதென்றார்கள. இப்படிக் கர்த்தர் அப்சலோமினமேலே பொலலாப்பை வரப்பண்ணும்படிக்கு, அகித்தோப்பேலின நலல ஆலோசனையை யபத்தமாக்குகிறதற்குக கர்த்தர் கட்டளையிட்டார்.

௰௫. பிறபாடு ஊசாய, சாதோக், அப்பியத்தாரென்ற ஆசாரியர்களோடே சொன்னது; இன்னவின்னபடி அகித்தோப்பேல அப்சலோமுக்கும, இஸ்ரவேலின மூப்பருக்கும ஆலோசனைசொன்னான. நானோ இன்னவின்னபடி ஆலோசனைசொனனேன்.

௰௬. இப்போதும, நீங்கள சீக்கிரமாயத தாவீதுக்கறிவிக்கும்படிக்குச செயதியையனுப்பி, நீர் இராத்திரிக்கு வனாந்தரத்தின வெளிகளிலேதங்கவேண்டாம. இராசாவும், அவரோடிருக்கிற எல்லாச சனமும விழுங்கப்படாதபடிக் கச்சுகளைக்கடந்தாகிலும்போகவேபோமென்று சொலலச சொலலுங்களென்றான.

௰௭. யோனத்தானும, அகிமாகும் ரோகேலென்றதுரவண்டைநின்றிருந்தார்கள். அவர்கள்போயத தாவீது இராசாவுக்கு அதையறிவிக்கும்படிக்கு ஒரு வேலைக்காரிபோய அதையவர்களுக்குச்சொன்னாள. ஏனெனில், அவர்கள தங்களைக்காண்பிக்கிறதற்குப பட்டணத்திற்குள வரக்கூடாதிருந்தது.

௰௮. ஆனால ஒருபிள்ளையாண்டான, அவர்களைக்கண்டு அப்சலோமுக்கு அறிவித்தான. ஆகையால அவர்களிருவரும, சீக்கிரமாயப்போய்ப்பகூரிமிலிருக்கிற ஒருமனுஷனவீட்டிற்குட்பிரவேசித்து, அவனுக்கு அவன முற்றத்தில ஒரு கிணறிருக்கையால, அதிலிறங்கினார்கள.

௰௯. வீட்டுக்காரி ஒரு பாயையெடுத்துக் கிணற்றுவாயினமேலே விரித்துக் காரியம அறியவராதபடிக்கு, அதினமேல நொய்யைத்திராவிவைத்தாள.

௨௰. அப்சலோமினசேவகர் அந்த ஸ்திரீயண்டைக்கு வீட்டிற்குள்வந்து, அகிமாகும், யோனத்தானும எங்கேயென்று கேட்டார்கள. அவர்களுக்கு அந்த ஸ்திரீ, வாய்க்காலுக்கப்பாலே போயவிட்டார்களென்றாள. இவர்கள தேடிக்காணாதேபோய எருசலேமுக்குத திரும்பினார்கள.

௨௧. இவர்கள போனபிறபாடோவெனில, அவர்கள கிணற்றிலிருந் தேறிப்போயத தாவீது இராசாவுக்கறிவித்துத தாவீதுடனே, சீக்கிரமாயெழுந்து ஆற்றைக்கடந்து போங்கள. ஏனெனில, இன்னபடி அகித்தோப்பேல உங்களுக்குவிரோதமாய ஆலோசனை சொன்னானென்றார்கள.

௨௨. அப்போது தாவீதும, அவனோடிருக்கிற எலலாச சனமும எழும்பி யோர்தானைக்கடந்தார்கள. பொழுதுவிடியுமட்டும, யோர்தானைக்கடவாதவொருவருமபின்வைக்கப்படடதிலலை.

௨௩. அகித்தோப்பேலோவெனில, தன யோசனையினபடி நடந்ததில்லையென்றுகண்டபோது, தனகழுதையினமேலே சேணம வைத்தேறித தன ஊரிலிருக்கிற தனவீட்டுக்குபபோயத தன வீட்டாருக்குத திட்டம பண்ணி, நான்றுகொண்டு செத்துத தன தகப்பன கலலறையிலடக்கம்பண்ணப்பட்டான.

௨௪. தாவீது மக்னாயிமுக்கு வந்தான. அப்சலோமும, தனனுடைய சனமாகிய எலலா இஸ்ரவேலோடுங்கூட யோர்தானைக கடந்தான.

௨௫. அப்சலோம, அமாசாவை யோவாபுக்குப்பதிலாக இராணுவத்தலைவனாகவைத்திருந்தான. இந்த அமாசா, நாகாசினகுமாரத்தியும, செருயாவின சகோதரியும, யோவாபின் அத்தையாருமாகிய அபிகாலைப்படைத்த இஸ்ரவேலனாகிய எத்திராவென்று பேருள்ள ஒருமனுஷனுடைய குமாரனாயிருந்தான.

௨௬. இஸ்ரவேலும, அப்சலோமும கிலெயாத்தேசத்திலே பாளயமிறங்கினார்கள.

௨௭. தாவீது மக்னாயிமுக்குச சேர்ந்தபோதோவெனில, அமமோன புத்திரரின தேசத்து இரப்பாபட்டணத்தானாகிய சோ

பியெனற நாகாசின குமாரனும, லோதேபார் ஊரான அமமியேலினகுமாரன மாகீருமம, ரொகிலும ஊரானும, கிலெயாததியனுமாகிய பர்சிலாயும,

௨அ. மெததைகளையும, கலஙகளையும, மணபாணடஙகளையும, கோதுமையையும, வாறகோதுமையையும, மாவையும, வறுததபயறறையும, பெருமபயறறையும, சிறுபயறறையும, வறுததசிறுபயறறையும,

௨௯. தேனையும, வெணணெயையும, ஆடுகளையும, பசுவினகேஸகட்டிகளையுமதாவீதுககும, அவனோடிருககிறசனததிறகும, சாபபிடுகிறதறகுக கொணடுவநதார்கள். ஏனெனில், அநதச்சனம் வனாநதரததிலேபசியும், இளைபபும, தவனமுமாயிருககுமெனறார்கள்.

## ௰அ. அதிகாரம்.

[(க) தாவீது சேனையைபபோகையிறபார்ததது, அப்சலோமைககுறிததுக கட்டளைகொடுத்தது. (௬) இஸ்ரவேலர் அதிகமாய எபபிராயீமினகாட்டில முறியடிககபபட்டது. (௯) அப்சலோம ஒருகர்வாலியுமரததில தொஙகியிருநது யோவாபினாலே கொலலபபட்டதும, ஒரு குழியிறபோடபபட்டதும. (௰அ) அப்சலோமின அடையாளம. (௰௯) அகிமாசும,கூசியும, தாவீதுககுசசெயதிகொணடுவநதது. (௩௩) தாவீது அப்சலோமுககாகததுககிததது.]

தாவீது தனனோடிருககிற சனததைத் தொகைகமபார்தது அவர்களமேல ஆயிரததுச சேர்வைககாரனையும, நூறறிற்குச சேர்வைககாரனையுமவைதது,

௨. பிறபாடு தாவீது, சனததில மூனறததொருபஙகை யோவாபுடைய கையினகீழும, மூனறததொருபஙகைச செருயாவினகுமாரனும, யோவாபின சகோதரனுமான அபிசாயின கையினகீழும, மூனறததொருபஙகைக கேததியனாகிய ஈததாயின கையினகீழும அனுபபி, நானுமுஙகளோடேகூடப புறபபடடுவருவேனெனறு இராசா சனததோடேசொனனான.

௩. சனமோவெனறால, நீர் புறபபடடவேணடாம. ஏனெனில, நாஙகள முறிநதோடிபபோனாலும, அவர்களெஙகள காரியததை மனதிலேவைபபதிலலை. நாஙகள பாதிப பேர்செததுபபோனாலும, எஙகள காரியததை மனதிலேவைபபதிலலை. ஏனெனில, இன்னம எஙகளைபபோலொததபதினாயிரம் பேரைத திருமபசசேர்பபீர். இபபோதும நீர் பட்டணததிலிருநது, எஙகளுககொததாசையாயிருககிறது எஙகளுககுத தாவளையெனறார்கள்.

௪. அபபோது இராசா, அவர்களுடனே, உஙகளுககு நனறாககக காணகிறதைசசெயவேனெனறுசொலலி, இராசா ஒலிமுகவாசலோரததிலேநினறான. சனமெலலாம நூறுகளும, ஆயிரஙகளுமாயபபுறபபட்டார்கள்.

௫. இராசா, யோவாபுககும, அபிசாய்ககும, ஈததாய்ககும் அப்சலோமெனற வாலிபனையெனககாக மெதுவாய நடததுஙகளெனறு கறபிததான. இபபடி இராசா, அப்சலோமுககாகத தலைவருககெலலாங கறபிககிறதைச சனமெலலாங கேட்டார்கள்.

௬. சனம வெளியே இஸ்ரவேலுககெதிராகப புறபபட்டபிறபாடு, எபபிராயீமின காட்டிலே யுததமுணடாயிறறு.

௭. அஙகே இஸ்ரவேலசனம தாவீதினசேவகருககுமுனபாக முறியடிககபபட்டார்கள். அஙகே யனறைததினம இருபதினாயிரமபேர் விழததககதான பெரிய சஙகாரமாயிறறு.

௮. அஙகே யுததம அநதத் தேசததின மீதெஙகுமபரநது அனறைததினம பட்டயம பட்சிததவர்களைப பார்ககிலும, காடு சனததில வெகுபேரைப பட்சிததது.

௯. அப்சலோம, தாவீதினசேவகருக்கெதிர்ப்பட்டான. ஆனால அப்சலோம, கோவேறுகழுதையினமேலேறிவருமபோது, அநதக் கோவேறுகழுதை சன்னபின்னலான ஒரு பெரிய கர்வாலியுமரததின கீழவநததினால், அவனுடையதலை கர்வாலியுமரததில மாட்டிககொணடு, அவன ஆகாயததிறகும,பூமிக்கும நடுவேதொஙகினான. ஏனெனறால, அவனகீழிருநத கோவேறுகழுதை அபபாலே போயிறறு.

௰. அதை யொருவனகணடு யோவாபுககறிவிதது, இதோ, அப்சலோமை யொரு கர்வாலியுமரததிலே தொஙகக் கணடேனெனறான.

௰௧. அபபோது யோவாப், தனககதையறிவிததவனுககு இதோ, அதைககணடாயேயினனையேன அவனை யஙகேவெட்டித்தரையிலே போடாதேபோனாய! நானுனககுப பதது வெளளிககாசையும, ஒரு கசசையையுங கொடுககக் கடனாளியாயிருபபேனேயெனறான.

௰௨. ஆனால அநதமனுஷன யோவாபுடனே சொனனதாவது; நானெனகைகளில் ஆயிரம் வெளளிககாசை நிறுதது கொளளக கொடுககபபட்டாலும, நான இராசாவுடைய குமாரனமேல எனகையை நீட்டுவதிலலை. ஏனெனில, அப்சலோமெனற வாலிபனை நீஙகள அவரவர் காபபாறறுஙகளெனறு இராசா உமககும, அபிசாய்ககும, ஈததாய்ககும எஙகள காதுகளகேட்கக் கறபிததாரே.

௰௩. அலலவெனறு நான எனமனசசாட்சிககு விரோதமாய அதைசசெயதுமறைததாலும, இராசாவுக கெநதககாரியமும

மறைநதிருபபதிலலை. நீர் தாமும, எனக கெதிராக திறபீரெனறான.

௰௪. அதறகு, யோவாப் நான, இபபடியுன னோடேபேசித தாமதிககமாடடேனென று சொலலி, மூனறுவலலயஙகளைத தனகையி லேபிடிததுககொணடு, அப்சலோம இன னம கர்வாலியுமரததின நடுவிலே யுயிரோ டே தொஙகுகையில, அவைகளையவன இரு தயததிறகுட் குததினான.

௰௫. அபபோது யோவாபின ஆயுதங்களைப பிடிககிற பததுவேலைககாரர் சூழநதுகொ ணடு, அப்சலோமை யடிததுககொனறு போடடார்கள.

௰௬. அபபோது யோவாப், எககாளமூதி னான. அனறுகொணடு இஸரவேலைப பின றொடருகிறதைவிடடுச சனம திருமபிறறு. ஏனென்றால, யோவாப், சனததை நிறுததி விடடான.

௰௭. அவர்கள அப்சலோமை யெடுதது அவனைக்காடடிலிருநத ஒருபெரியகுழியிலே போடடு, அவனமேல மகாபபெரிய கற்குவி யலைக குவிததார்கள. ஆனால இஸ்ரவேலெல லாம அவரவர் தஙகள கூடாரஙகளுக கோடிபபோனார்கள.

௰௮. அப்சலோமோவெனில, உயிரோடே யிருககையில, எனபேரை நினைக்கபபண்ண எனககுக குமாரனிலலையென றுசொலலி, இராசாவின பளளததாககிலிருககிற ஒரு தூணைத தனககெடுதது நிறுததி, அந்தத் தூணுககுத தனபேரைத தரிததிருநதான. அது இந்நாளவரைககும அப்சலோமின அடையாளமென று சொலலபபடுகினறது.

௰௯. சாதோககினகுமாரனாகிய அகிமாஸ கர்த்தர் இராசாவை யவர் சததுருககளின கைககு நீஙகலாககி நியாயஞ செயதாரெ னற சுபசசெயதியை யவருககுககொணடு போக நான ஓடட்டுமேயெனறான.

௨௰. ஆனால யோவாப், அவனுடனே, இன் றைததினம நீ சுபசசெயதியைககொணடு போகிறவனலல, பினனொருநாளிலே நீசுபச் செயதியைக கொணடுபோகலாம. இராசா வினகுமாரன செததபடியினாலே, இனறைக கு நீ செயதியைக கொணடுபோகாயாக வென றுசொலலி,

௨௧. யோவாப், கூசியுடனே, நீபோயக கணடதைஇராசாவுக்கறிவியெனறான. கூசி, யோவாபைவணஙகியோடினான.

௨௨. ஆனாற சாதோககின குமாரனாகிய அகிமாஸ், இனனமயோவாபுடனே, எனன வானாலும கூசியினபிறகாலே நானும ஓட ட்டுமேயென றுதிருமபககேடடதறகு, யோ வாபபெனறவன எனமகனே! உனககுநல லசெயதிகிடையாதிருககையில, நீ யோட வேணடியதெனனவெனறான்.

௨௩. ஆனால, அவன எனனவானாலும ஓடு வேனெனறான். அபபோதுயோவாப், அவனை ஓடெனறான். அபபடியே அகிமாஸ, சமனான பூமிவழியாயோடிக கூசியைககடநதுபோ னான.

௨௪. தாவீதோவெனறால, இரணடு ஒலி முகக்கெவுனிவாசலுககு நடுவாக உளுககாந் திருநதான. சாமங காககிறவன அலஙகத திலிருககிற கெவுனியினமேல நடநதுதன கணகளையேறெடுதது, இதோ,ஒருமனுஷன தனியே ஓடிவருகிறதைககணடு,

௨௫. கூபபிடடு, இராசாவுக கறிவிததான. அபபோது இராசா, அவன ஒருவனாயவந தால அவனவாயிலே நலலசெயதியிருககு மெனறான. அவனநடநதுகிடடிவருமபோது,

௨௬. சாமஙகாககிறவனவேறொருவனஓடி வருகிறதைககணடு, அதோ, பினனொருவன தனியே ஓடிவருகிறானென்று வாசறகாக கிறவனோடே கூபபிடடுசசொனனான. அப போது இராசா, அவனும நற்செயதியைக கொணடுவருகிறவனென்றான.

௨௭. பினனையும, சாமங காககிறவனமுந தினவனுடைய ஓடடம, சாதோககினகுமா ரன அகிமாசுடைய ஓடடமபோலிருககின றதெனறு நான காணகிறேனென்றான. அப போது இராசா,அவன நலலமனுஷன. அவன நலலசெயதியைச சொலல வருகிறானென் றான்.

௨௮. அகிமாஸவநது இராசாவுடனே,சமா தானமென று கூபபிடடுககொணடு, முகங குபபுறவிழுநது இராசாவை வணஙகி, இரா சாவாகிய எனனாணடவனமேலே தஙகள கைகளை யெடுததமனுஷரை யொபபுககொ டுததிருககிற உமமுடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோததிரிககபபடடவரெனறான.

௨௯. அபபோது இராசா, அப்சலோமெ னற வாலிபன சுகமாயிருககிறானோவென று கேடடதறகு, அகிமாசெனறவன, யோவாப் இராசாவின வேலைககாரனையும, உமமு டைய அடியானையும அனுபபுகிறபோது ஒருபெரியசநதடியைககணடேன. ஆனால அது என்னவெனகிறதையறியேனென்றான்.

௩௰. அபபோது இராசா, நீ அபபடிசசுற றிவநது நிலலெனறான. அவனசுறறிவநது நினறான.

௩௧. இதோ, கூசிவநது, இனறுகர்த்தர் உமககு விரோதமாயெழுமபின எலலாரின கைககும உமமைநீஙகலாககி நியாயஞசெ யதார். இனறு இராசாவாகிய எனனாணட வனுககுநலலசெயதிவருகினறதெனறான.

௩௨. அபபோது இராசா, கூசியை, அப்ச லோமெனற வாலிபன சுகமாயிருககிறானோ வென று கேடடதறகுக கூசியெனறவன, அநதவாலிபனுககு நடநததுபோல, இரா சாவாகிய எனனாணடவனுடைய சததுருக

களுக்கும், பொல்லாப்புச்செய்ய உமக்கு விரோதமாய் எழும்புகிறயாவருக்கும் நடக்கக்கடவதென்றான்.

௩௩. அப்போது இராசா, கலங்கிக்கெவுனி வாசலின் மேல்வீட்டிலேறி, அழுது, என் குமாரனாகிய அப்சலோமே! என்குமாரனே! என்குமாரனாகிய அப்சலோமே! நான் உனக்குப்பதிலாகச்செத்தேனானால் தாவிளை. அப்சலோமாகிய என்குமாரனே! என்குமாரனே! என்று உலாவிச் சொல்லிக்கொண்டிருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

[(க) யோவாப் இராசாவினதுக்கத்தைநீக்கினது. (௯) இஸ்ரவேலர்மறுபடியும் இராசனை அழைக்க ஆசைகொண்டது. (௰க) தாவீது யூதர்களையெழுப்ப ஆசாரியர்களுக்குச்சொல்லி அனுப்பியது. (௰௮) சீமேயி மன்னிக்கப்பட்டது. (உ௪) மேவிபோசேத்து மன்னித்தது. (௩உ) பர்சிலாவிடப்பட்டதும், அவனுடைய குமாரன் கிமேகாம் இராசாவின் குடிமபத்திலெடுத்துக்கொள்ளப்பட்டதும். (௪க) தங்களுக்கறிவிக்காமல் இராசனைக்கூட்டிக்கொண்டுவந்ததைக் குறித்து இஸ்ரவேலர் யூதரைக்கடிந்துகொண்டது.]

இதோ, இராசா, அப்சலோமுக்காக அழுது துக்கங்கொண்டாடுகிறானென்று யோவாபுக்கறிவிக்கப்பட்டதினால்,

உ. அன்றைத்தினம் அந்தச்செயம், சனத்திற்கெல்லாந்துக்கமாயமாறிற்று. ஏனெனில், இராசா தம்முடைய குமாரனுக்காக மனம் நொந்திருக்கிறானென்று அன்றைத்தினஞ்சனங்கேட்டது.

௩. ஆகையால், சனம் யுத்தத்திலமுறிந்ததினால் வெட்கப்பட்டுத் திருட்டளவாய்வருகிறதுபோலச் சனம் அன்றைத்தினந் திருட்டளவாயப் பட்டணத்திற்குள்வந்தது.

௪. இராசாவோவென்றால், முகத்தை மூடிக்கொண்டு மகாசத்தமாய், என்குமாரனாகிய அப்சலோமே! அப்சலோமாகிய என்குமாரனே! என் குமாரனே! என்று அலறிக்கொண்டிருந்தான்.

௫. அப்போது யோவாப், உள்ளே இராசாவண்டையிற் பிரவேசித்துச் சொன்னதாவது; இன்று உம்முடைய சீவனையும், உம்முடைய குமாரர்குமாரத்திகளின் சீவனையும், உம்முடைய பெண்சாதிகளின் சீவனையும், உம்முடைய வைப்பாட்டிகளின் சீவனையும் தப்புவித்த உம்முடைய எல்லா ஊழியக்காரரின் முகத்தையும், இன்று நீர் உம்மைப்பகைக்கிறவர்களைச் சிநேகிக்கிறதினாலும், உம்மைச் சிநேகிக்கிறவர்களைப் பகைக்கிறதினாலும் வெட்கப்படுத்தினீர்.

௬. ஏனென்றால், தலைவரும் சேவகரும் உமக்கு அற்பமானவர்களென்று இன்று அறியப்பண்ணினீர். அதேதென்றால், அப்சலோம் உயிரோடிருந்து நாங்களனைவரும் இன்று செத்திருந்தால் அப்போது உம்முடைய பார்வைக்கு நல்லதாயிருக்குமென்று இன்று அறிந்துகொண்டேன்.

எ. இப்போதும் எழுந்திருந்து வெளியே வந்து உம்முடைய ஊழியக்காரரோடே அன்பாயப்பேசும். ஏனென்றால், நீர் வெளியே வராதிருந்தால் இராத்திரிக்கு ஒருவரும் உம்மோடேதங்கியிருப்பதில்லையென்று கர்த்தர்மேல் ஆணையிடுகிறேன். அப்போது உம்முடைய சிறுவயது துவக்கி, இதுவரைக்கும் உம்மேலவந்த எல்லாப்பொல்லாப்பையும்பார்க்கிலும், அது உமக்கதிகப் பொல்லாப்பாயிருக்குமென்றான்.

அ. அப்போது இராசாஎழுந்திருந்துபோய் ஒலிமுகவாசலிலுளுக்காந்தான். இதோ, இராசாஒலிமுகவாசலிலுளுக்காந்திருக்கிறானென்று எல்லாச்சனத்திற்கு மறிவிக்கப்பட்டபோது சனமெல்லாம் இராசாவுக்கு முன்பாகவந்தனர். இஸ்ரவேலரோவென்றால், அவரவர் தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்போனார்கள்.

௯. இஸ்ரவேலுடைய எல்லாக்கோத்திரங்களிலுமுள்ள சகலசனமுமோவென்றால்,தங்களுக்குள்ளே வழக்காடிச் சொன்னதாவது; இராசா நம்முடைய சத்துருக்களின்கைக்கு நம்மை நீங்கலாக்கிவிட்டு, அவர்தானே பெலிஸ்தரின்கைக்கு நம்மைத் தப்புவித்தார். இப்போதோவெனில், அப்சலோமுக்குத் தப்பத்தேசத்தை விட்டோடிப்போனார்.

௰. ஆனால்நாம் நம்மேல் அபிஷேகம்பண்ணிவைத்த அப்சலோம், யுத்தத்திலேசெத்தானே, இப்போதும் இராசா, திரும்ப அழைத்துவர நீங்கள் அமர்ந்திருப்பானேனென்று சொல்லிக்கொண்டார்கள்.

௰க. இப்படி இஸ்ரவேலெல்லாம் பேசிக்கொண்டிருக்கிறது இராசாவிருக்கிறவீட்டிலேயவனுக்குக் கேள்வியானபடியினாலே, தாவீது இராசா சாதோக் அபியத்தாரென்ற ஆசாரியரண்டைக்கு ஆளனுப்பி, நீங்கள் யூதாவின்மூப்பரோடேபேசி இராசாவைத் தம்முடைய வீட்டுக்குத்திரும்ப அழைத்துவர நீங்கள் பிந்தினவர்களாயப்போவானேன்!

௰உ. நீங்களென்னுடைய சகோதரர். நீங்கள் என்னெலும்பும், என்மாம்சமுமானவர்கள். இராசாவைத்திரும்ப அழைத்துவர நீங்கள் பிந்தினவர்களாயிருப்பானேனென்றுசொல்லுங்கள்.

௰௩. அமாசாவுக்கும் நீங்கள் சொல்லவேண்டியது. நீ யென்னெலும்பும், என்மாம்சமுமல்லவோ! நீ யோவாபுக்குப்பதிலாகஎந்

நாளும் எனக்கு முன்பாகப் படைத்தலைவனு
மாயிராவிட்டால், பராபரன் இப்படியும், அப்
படியும் எனக்குச் செய்யக்கடவரென்று சொ
ல்லுங்கள் என்று சொன்னான்.

௰௪. இப்படியே சகல யூதாமனுஷரின் இரு
தயத்தையும் ஒரேயொருவன் இருதயத்
தைப்போலே யிணங்கப்பண்ணினதினாலே
யவர்கள் இராசாவுக்கு, நீர் உம்முடைய
எல்லா ஊழியக்காரரோடுந் திரும்பிவாரு
மென்று சொல்லியனுப்பினார்கள்.

௰௫. இராசா திரும்பவருகிறதற்கு யோர்
தான்மட்டும் வந்தபோது, யூதாகோத்திரத்
தார் இராசாவுக்கெதிர்கொண்டுபோய்,
இராசாவை யோர்தானைக் கடக்கப்பண்ணக்
கில்காலமட்டும் வந்தார்கள்.

௰௬. பகூரிமூரான ஏமினியின் குமாரனாகிய
கேராவின் மகன் சீமேயியும், தீவரித்துக்கொ
ண்டு யூதமனுஷரோடுங்கூடத் தாவீது இரா
சாவுக்கெதிர்கொண்டிறங்கிப்போனான்.

௰௭. அவனோடே பென்யமீன் மனுஷர்
ஆயிரம்பேரும், சவுலின் வீட்டுவேலைக்கார
னாகிய சீபாவும், அவனோடேகூட அவனு
டைய பதினைந்து குமாரரும், அவனுடைய
இருபது வேலைக்காரருங்கூடவிருந்தார்கள்.
அவர்கள் இராசாவுக்கு முன்பாக யோர்தா
னை வேகமாய்க் கடந்துவந்தார்கள்.

௰௮. அவர்கள் இராசாவின் வீட்டாரையிக்
கரைப்படுத்தவும், அவன் பார்வைக்குப் பொ
ருந்திய வேலையைச் செய்யவும் படகு அக்
கரையிலே வந்தது. அப்போது கேராவின்
குமாரனாகிய சீமேயி யோர்தானைக் கடக்கப்
போகிற இராசாவுக்கு முன்பாகத் தாழவிழு
ந்து,

௰௯. இராசாவோடே சொன்னதாவது;
என்னுடையவன் என் அக்கிரமத்தை யென்
மேலே சுமத்தாமலும், இராசாவாகிய என்
னுடையவன் எருசலேமிலிருந்து புறப்பட்டு
வருகிறநாளிலே உம்முடைய அடியான் செ
ய்ததோஷத்தை இராசா நினைக்காமலும்,
தம்முடைய மனதில் வைக்காமலுமிருப்பா
ராக.

௨௰. ஏனெனில், நான் பாவஞ்செய்தேனெ
ன்று உம்முடைய அடியானாயிருக்கிற நான்
அறிந்திருக்கிறேன். இப்போதும் இதோ,
இராசாவாகிய என்னுடையவனுக்கெதிர்க்
கொண்டிறங்கிவர யோசேப்புவீட்டாரனை
வருக்கும் நான் இன்று முந்திக்கொண்டே
னென்றான்.

௨௧. அப்போது செருயாவின் குமாரனா
கிய அபிசாய், பிரதியுத்தரமாகக் கர்த்தர்
அபிஷேகம் பண்ணுவித்தவரைச் சீமேயி
தூஷணித்தபடியினாலே அவன் அதற்காகக்
கொலைசெய்யப்படவேண்டாமோ? என்றான்.

௨௨. தாவீதோவென்றால், செருயாவின்
குமாரரே! இன்று நீங்கள் எனக்குச் சா
சாயன

தானாகிறதற்கு எனக்கும், உங்களுக்கு
மென்ன! இன்று இஸ்ரவேலிலொருவன் கொ
லைசெய்யப்படலாமோ? ஏனென்றால், இன்று
நான் இஸ்ரவேலின்மேல் இராசாவானேனெ
ன்கிறதை யறியேனோ! என்று சொல்லி,

௨௩. இராசா, சீமேயியுடனே, நீ சாவதில்லை
யென்று அவனுக்கு ஆணையிட்டான்.

௨௪. சவுலின் குமாரனாகிய மேவிபோசேத்
தும், இராசாவுக்கெதிர்கொண்டிறங்கிவந்
தான். இராசா போனநாள் துவக்கி அவன்
சமாதானத்தோடே திரும்பிவருகிறநாள்மட்
டும் அவன் தன் கால்களையும், தன் தாடியை
யுஞ் சுத்தம்பண்ணிக்கொள்ளாமலும், தன்
வஸ்திரங்களை வெளுக்காமலுமிருந்தான்.

௨௫. அவன் எருசலேமிலிருந்து இராசா
வுக்கெதிர்கொண்டுவருகிறபோதோவென்
றால், இராசா அவனை, மேவிபோசேத்தே!
நீ யென்னோடேகூடவராதேபோனதென்ன
வென்று கேட்டான்.

௨௬. அவன் சொன்னதாவது; இராசா
வாகிய என்னுடையவனே! என் வேலைக்காரன்
என்னை மோசம்போக்கினான். அதேதென்
றால், உம்முடைய அடியானாயிருக்கிறநான்
சப்பாணியானபடியினாலே, ஒரு கழுதையின்
மேலே சேணம்வைத்து அதின்மேலேறி இரா
சாவோடே கூடப்போகிறேனென்று அடி
யேன் சொன்னேன்.

௨௭. அவன் இராசாவாகிய என்னுடையவ
னோடே உம்முடைய அடியான்மேலே குத்
திரமுஞ்சொன்னான். இராசாவாகிய என்னு
டையவனோவெனில், பராபரனுடைய தூத
னைப்போலிருக்கிறார். உம்முடைய பார்வை
க்கு நல்லதாய்க் காண்கிறபடியே செய்யும்.

௨௮. ஏனெனில், இராசாவாகிய என்னுடை
யவனுக்கு முன்பாக என் தகப்பன் வீட்டா
ரெல்லாரும், சாவுக்கேதுவாயிருந்தார்களே
யொழிய மற்றப்படியல்ல. என்றாலும், உம்
பந்தியிலே சாப்பிடுகிறவர்களுக்குள்ளே உம்
முடைய அடியானை வைத்தீர். இனிமேல் நான்
இராசாவைப்பார்த்து முறையிட இனியெ
னக்கு என்ன நீதியிருக்கின்றதென்றான்.

௨௯. அப்போது இராசா, அவனுடனே,
இனியுன் காரியங்களை யதிகமாய்ப் பேசுவா
னேன்! நீயும், சீபாவும், நிலத்தைப் பங்கிட்
டுக்கொள்ளுங்கள். இதைநான் சொன்னே
னென்றான்.

௩௰. அதற்கு மேவிபோசேத், இராசாவுட
னே, இராசாவாகிய என்னுடையவன் சமாதா
னத்தோடே தம்முடைய வீட்டிற்கு வந்திருக்
கும்போது, அவன் எல்லாவற்றையுமெடுத்
துக்கொள்ளட்டுமென்றான்.

௩௧. கிலெயாத்தியனாகிய பர்சிலாயும், ரோகி
லிமிலிருந்திறங்கிவந்து யோர்தான்மட்டும்
இராசாவை வழிவிட்டனுப்ப அவனோடே

கூட யோர்தானின் துறைமட்டுங் கடந்து வந்தான்.

௩௨. பர்சிலாவோவெனில், எண்பது வயது சென்றமகாக் கிழவனாயிருந்தான். இராசா மகனாயீமிலே தங்கியிருக்குமட்டும் அவன் இவனைப் பராமரித்துக் கொண்டிருந்தான். ஏனென்றால், அவன் மகாப்பெரிய மனுஷனாயிருந்தான்.

௩௩. இராசா, பர்சிலாவுடனே, நீ என்னோடே கூடக் கடந்துவா. எருசலேமிலே உன்னை என்னண்டையிலே வைத்துப் பராமரிப்பேனென்றான்.

௩௪. ஆனால் பர்சிலா, இராசாவோடே சொன்னதாவது; நான் இராசாவோடே கூட எருசலேமுக்கேறிவர நான் இன்னம் உயிரோடிருக்கும் ஆயுசின் நாள்களெம்மாத்திரம்!

௩௫. இப்போதும் நான் எண்பது வயதுள்ளவன். இனி நன்மைதீமையினுடைய வித்தியாசத்தையறிவேனோ? புசிக்கிறதும், குடிக்கிறதும் உம்முடைய அடியானுக்கு ருசிகரமாயிருக்குமோ? கீதக்காரர் கீதக்காரிகளுடைய சத்தத்தை யினிக்கேட்பேனோ! இனியும் உம்முடைய அடியானாயிருக்கிற நான் இராசாவாகிய என்னாண்டவனுக்குப் பாரமாயிருக்கவேண்டியதென்ன!

௩௬. அடியேன் கொஞ்சதூரம் யோர்தானமட்டும், இராசாவோடே கூடவருவேன். அப்படிக்கொத்த பதில் உபகாரத்தை இராசா எனக்குச் செய்வானேன்!

௩௭. நான் என் பட்டணத்திலே என் தாய் தகப்பனின் கல்லறையண்டையிலே மரணமடையும்படிக்கு, உம்முடைய அடியான் திரும்பிப் போகட்டும். ஆனால் இதோ, உம்முடைய அடியானாகிய கிம்காம், இராசாவாகிய என்னாண்டவனோடே கூட நடந்துவருவான். உம்முடைய பார்வைக்கு நலமானபடி அவனுக்குச் செய்யுமென்றான்.

௩௮. அப்போது இராசா, கிம்காம் என்னோடே கூடவரட்டும். உன் பார்வைக்கு நலமானபடியே நான் அவனுக்கு நடப்பித்து நீ என்மேலே சுமத்தத்தெரிந்துகொள்வதெல்லாவற்றையும் உனக்குச் செய்வேனென்றான்.

௩௯. சனமெல்லாம் யோர்தானைக் கடந்தபோது, இராசா, பர்சிலாவை முத்தமிட்டு அவனையாசீர்வதித்துத் தானுங் கடந்துபோனான். அவனோ தன்னிடத்துக்குத் திரும்பினான்.

௪௰. இராசா கடந்து கில்காலமட்டும் போனான். கிம்காம், அவனோடே கூடக் கடந்து வந்தான். யூதாவின் சனமனைத்தும், இஸ்ரவேலிலே பாதிசனமும், இராசாவை யிக்கரைப்படுத்திவந்திருப்பார்,

௪௧. இதோ, இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் இராசாவண்டைக்கு வந்து, இராசாவுடனே, எங்கள் சகோதரராகிய யூதாவின் மனுஷர் திருட்டளவாய், உம்மையழைத்துவந்து இராசாவையும், அவர் வீட்டாரையும், அவரோடேகூடவிருக்கிற தாவீதின் மனுஷரனைவரையும் யோர்தானைக் கடக்கப்பண்ணினதென்னவென்றார்கள்.

௪௨. அப்போது யூதாவின் மனுஷரெல்லாரும், இஸ்ரவேல் மனுஷருக்குப் பிரதியுத்தரமாக, இராசா எங்களைச் சேர்ந்தவரானபடியினாலே இதைச் செய்தோம். இதற்காக நீங்கள் கோபமாயிருப்பானேன்? நாங்கள் இராசாவின் கையிலேவாங்கித் தின்னவேதின்றோமோ! எங்களுக்கு வெகுமானங் கொடுக்கப்பட்டதோவென்றார்கள்.

௪௩. இஸ்ரவேல் மனுஷரோவெனில், யூதா மனுஷருக்குப் பிரதியுத்தரமாக, இராசாவினிடத்திலே எங்களுக்குப் பத்துப்பங்கிருக்கின்றது. உங்களைப் பார்க்கிலும், எங்களுக்குத் தாவீதினிடத்திலே அதிகமும் உண்டாயிருக்கின்றது. பின்னையேன் எங்களையற்பமாயெண்ணினீர்கள்! எங்கள் இராசாவைத் திரும்ப அழைத்துவரவேண்டுமென்று முந்திச் சொன்னவர்கள் நாங்களல்லவோ? என்றார்கள். ஆனால் இஸ்ரவேலின் மனுஷரின் பேச்சைப் பார்க்கிலும், யூதாமனுஷரின் பேச்சுப் பலத்தது.

## ௨௰. அதிகாரம்.

[(௧) கலகம் நேரிட்டதினால், சேபா இஸ்ரவேலரில் சிலரைத் தன்வசமாக்கிக்கொண்டது. (௩) தாவீதின் பத்துவைப்பாட்டிகள் நிரந்தரமான காவலில் வைக்கப்பட்டது. (௪) ஆமாசா, யூதர்மேலே படைத்தலைவனேற்படுத்தி யோவாபினால் கொல்லப்பட்டது. (௰௪) யோவாப் ஆபேலுக்குச் சேபாவைப்பிடிக்க அவன்பின்சென்றது. (௰௬) ஒரு ஞானமுள்ள ஸ்திரீ சேபாவின் தலையைக் கொடுத்துப் பட்டணத்தைக் காத்தது. (௨௩) தாவீதுடைய தலைவர்கள்.]

அப்போது ஏமினிமனுஷனாகிய பிக்கிரியின் குமாரனான சேபாவென்று பேருள்ள பேலியாளமனுஷன் ஒருவன் தற்செயலாய் அங்கேயிருந்தான். அவன் எக்காளமூதி எங்களுக்குத் தாவீதினிடத்திலே பங்குமில்லை. ஈசாயின் குமாரனிடத்தில் எங்களுக்குச் சுதந்தரமுமில்லை. இஸ்ரவேலிலே அவரவர் தங்கள் கூடாரங்களுக்குப் போகக்கடவர்களென்றான்.

௨. அப்போது இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் தாவீதைவிட்டுப் பின்வாங்கிப் பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப் பின்சென்று போனார்கள். ஆனால் யோர்தான் துவக்கி எருசலேமட்டுமுள்ள யூதாமனுஷர் தங்கள் இராசாவைச் சார்ந்திருந்தார்கள்.

௩. தாவீது எருசலேமிலிருக்கிற தன்வீட்டுக்கு வந்தபோது, வீட்டைக் காக்க இராசா பின்வைத்துப்போன பத்து வைப்பாட்டிகளையழைத்து அவர்களை யொரு காவல்வீட்டிலே வைத்துப் பராமரித்து, அவர்களிடத்திலே பிரவேசியாதிருந்தான். அப்படியே யவர்கள் சாகிறநாளமட்டும், அடைக்கப்பட்டு உயிரோடிருக்கும் நாளெல்லாம் விதவைகளைப்போலிருந்தார்கள்.

௪. பின்பு இராசா ஆமாசாவுடனே, நீ யூதா மனுஷரை மூன்றும் நாளிலென்னண்டைக்கு வரவழைப்பித்து, அப்போது நீயும் இங்கே வந்து நிற்கவேண்டுமென்றான்.

௫. அப்பொழுது ஆமாசா யூதாவை யழைப்பிக்கப்போய்த் தனக்குக் குறித்த காலத்திலே வராமல் தாமதித்தான்.

௬. அப்போது தாவீது, அபிசாயுடனே, அப்சலோமைப்பார்க்கிலும் பிக்கிரியின் குமாரனாகிய சேபா, இப்போது நமக்குப் பொல்லாப்புச்செய்வான். அவன் அரணான பட்டணங்களில் வந்தடைந்து நம்முடைய கண்களுக்குத் தப்பிப்போகாதபடிக்கு நீயுன் எசமானுடைய சேவகரைக் கூட்டிக்கொண்டு அவனைப் பின்றொடர்ந்து போவென்றான்.

௭. அப்படியே யோவாபின் மனுஷரும், கிரேத்தியரும், பிலேத்தியரும், எல்லாப் பலசாலிகளும் அவன்பிறகாலே புறப்பட்டுப் பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப் பின்றொடர எருசலேமிலிருந்து போனார்கள்.

௮. அவர்கள் கிபெயோனிலிருக்கிற பெரிய கல்லண்டையிலே வந்தபோதோவெனில், ஆமாசா அவர்களுக்கெதிர்ப்பட்டு வந்தான். யோவாபோவென்றால், தான் உடுத்துக்கொண்டிருக்கிற தன் சட்டையின்மேல் ஒரு கச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான். அதில் உறையோடே ஒரு பட்டயம் அவன் இடுப்பண்டையிலே தொங்கிற்று. அவன் புறப்படுகையில் அது விழுந்தது.

௯. அப்போது யோவாப், ஆமாசாவுடனே, என் சகோதரனே! சுகமாயிருக்கிறாயோ? என்று சொல்லி, ஆமாசாவை முத்தஞ்செய்யத் தன் வலதுகையினாலே அவன் தாடியைப் பிடித்து,

௰. தன் கையிலிருக்கிற பட்டயத்துக்கு ஆமாசா எச்சரிக்கையாயிராதபோது, யோவாப் அவனை யவன் குடலகளத்திலே குத்தினதினாலே சரிந்து போகத்தக்கதாய் அவனை மறுபடியும் குத்தாமல் குத்திப்போட்டான். அவன் செத்துப்போனான். அப்போது யோவாபும், அவன் சகோதரனாகிய அபிசாயும் பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப் பின்றொடர்ந்தார்கள்.

௰௧. யோவாபுடைய வாலிபரில் ஒருவன் செத்தவனண்டையிலே நின்று, எவன் யோவாபின்மேல் பிரியப்பட்டு, எவன் தாவீதுக்குச் சார்பாயிருக்கிறானோ அவன் யோவாபைப்பின் செல்வானாகவென்றான்.

௰௨. ஆமாசா அந்தப் பெருவழியிலே இரத்தத்திலே புரண்டு கிடந்தபடியினாலே சனமெல்லாம் தரித்து நிற்கிறதை யவன் கண்டு, ஆமாசாவை வழியிலிருந்து வயலிலே இழுத்துப்போட்டு, அவனண்டையில் வருகிறவனெல்லாம் நிற்கிறதைக் கண்டபடியினாலே ஒரு வஸ்திரத்தை யவன்மேலே போட்டான்.

௰௩. அவன் வழியிலிருந்து எடுத்துப் போடப்பட்டபின்பு, எல்லாரும் கடந்து பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைத் தொடரும்படி யோவாபைப் பின்சென்றார்கள்.

௰௪. அவன் இஸ்ரவேல் கோத்திரங்களையெல்லாம் கடந்து, பெத்மாக்காவாகிய ஆபேல்மட்டாகவும், பேரீமின் சகல புறங்களமட்டாகவும் வந்திருந்தான். ஆனால் அவ்விடத்தாருங் கூடித் தாங்களும் அவனைப் பின்சென்றார்கள்.

௰௫. அவர்கள் வந்து பெத்மாக்காவாகிய ஆபேலிலே அவனை முற்றிக்கைபோட்டு, பட்டணத்துக்கெதிராகத் தெருமுனையில் கொத்தளம்போட்டார்கள். யோவாபோடேயிருக்கிற சனமெல்லாம் அலங்கத்தை விழப்பண்ண அழிக்கத்தக்கதாய் இடித்தார்கள்.

௰௬. அப்போது ஞானமுள்ள ஒரு ஸ்திரீ பட்டணத்திலிருந்து, கேளுங்கள், கேளுங்கள். நான் யோவாபோடே பேசத்தக்கதாக அவரிங்கே கிட்டவர அவருக்குச் சொல்லுங்களென்று கூப்பிட்டாள்.

௰௭. அவன் அவளண்டைக்குச் சேர்ந்து வந்தபோது, அந்த ஸ்திரீ, நீர் யோவாபோ! என்று கேட்டாள். அவன் நான்தானென்றபோது, அவள் அவனுடனே, உம்முடைய அடியாளின் வார்த்தைகளைக் கேளுமென்றாள். நான் கேட்கிறேனென்றான்.

௰௮. அப்போது அவள் சொன்னதாவது; பூர்வகாலத்திலே மனுஷர் ஆபேலிலிருக்கிறவர்களையாலோசனைகேட்கவேண்டியதாக்கவேண்டுமென்று சொல்லவேசொல்லி, இப்படியே காரியத்தைத் தீர்த்துப்போடுவார்கள்.

௰௯. இஸ்ரவேலிலே நான் சமாதானமும், உண்மையுமுள்ளதாயிருக்கையில், நீர் இஸ்ரவேலிலே தாயாயிருக்கிற பட்டணத்தை நிர்மூலமாக்கப் பார்க்கிறீரோ! நீர் கர்த்தருடைய சுதந்தரத்தை விழுங்குவதென்னவென்றாள்.

௨௰. யோவாப் பிரதியுத்தரமாகச் சொன்னது; நான் விழுங்கவேண்டும், அழிக்கவேண்டுமென்கிற ஆசையெனக்குத் தூரமாயிருப்பதாக.

௨௧. காரியம் அப்படியிராது. பிக்கிரியின் குமாரனாகிய சேபாவென்னும்பேருள்ள எப்பிராயீம் பர்வதத்தானொருவன் இருக்கிற ஒரு மனுஷ

ரேமென்றால், தாவீதாகிய இராசாவுக்கு விரோதமாய்த் தன் கையையெடுத்தான். அவன் ஒருவனையே யொப்புக்கொடுங்கள். அப்போது பட்டணத்தைவிட்டுப் போவேனென்றான். அப்போது அந்த ஸ்திரீ, யோவாபுடனே, இதோ, அவன் தலை மதிலின்மேலிருந்து உம்மண்டையிலே போடப்படுமென்றுசொல்லி,

௨௨. அவள் தன் ஞானத்தோடே யெல்லாச் சனத்தண்டைக்கும் உட்பிரவேசித்ததினாலே, அவர்கள் பிக்கிரியின் குமாரனாகிய சேபாவின் தலையைவெட்டி யோவாப்பண்டையிலே போட்டார்கள். அப்போது அவன் எக்காளம் ஊதுவித்ததினால் அவரவர் பட்டணத்தைவிட்டுக் கலைந்து தங்கள் கூடாரங்களுக்குப் புறப்பட்டுப்போனார்கள். யோவாபும் இராசாவண்டைக்குப்போக எருசலேமுக்குத் திரும்பினான்.

௨௩. யோவாப் இஸ்ரவேலுடைய எல்லா இராணுவத்தின்மேலும், யோய்தாவின் குமாரனாகிய பெனாயா, கிரேத்தியர்மேலும், பிலேத்தியர்மேலுந் தலைவராயிருந்தார்கள்.

௨௪. அதோராம் பகுதிகளை வாங்குகிறவனும் அகிலூதின் குமாரனாகிய யோசபாத் மந்திரியும்,

௨௫. சேவா சம்பிரதியும், சாதோக்கும், அபியத்தாரும் ஆசாரியருமாயிருந்தார்கள்.

௨௬. யயீரியனாகிய ஈராவும், தாவீதுக்கு ஆலோசனைக்காரனாயிருந்தான்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) சவுலின் குமாரர்களிலே ஏழுபேர் தூக்கப்பட்டதால், கிபெயோனர்களுக்கு வந்த மூன்றுவருஷப் பஞ்சம் நீங்கியது. (௰) இறந்தவர்கள்மேல் ரிஸ்பாள் பட்சம்வைத்தது. (௰௨) தாவீது சவுல், யோனத்தானுடைய எலும்புகளைத் தன் தகப்பனுடைய கல்லறையில் அடக்கம்பண்ணினது. (௰௫) பெலிஸ்தருக்கு விரோதமாகவுண்டான நாலுயுத்தங்களில் தாவீதின் நாலுவீரர்கள் நாலு இராட்சதர்களைக் கொன்றது.]

**தா**வீதின் நாள்களில் மூன்றுவருஷமாய் ஓயாதபஞ்சமுண்டாயிருந்தது. அப்போது தாவீது கர்த்தருடைய முகத்தைத் தேடினதற்குக் கர்த்தர் கிபெயோனியரைக் கொன்றுபோட்ட சவுலுக்காகவும், இரத்தப்பிரியரான அவன்வீட்டாருக்காகவுந்தானேயென்றார்.

௨. அப்போது இராசா, கிபெயோனியரை யழைப்பித்தான். கிபெயோனியரோவெனில், இஸ்ரவேல் புத்திரராயிராமல் எமோரியரில் மீதியாயிருந்தார்கள். அவர்களுக்கு இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்டிருந்தாலும், சவுல் இஸ்ரவேல்புத்திரருக்காகவும், யூதாவுக்காகவும், காணப்பட்டவைராக்கியத்தினாலே அவர்களைவெட்டவகைபார்த்தான்.

௩. ஆகையால், தாவீது, கிபெயோனியரை, நான் உங்களுக்குச் செய்யவேண்டியதென்ன! நீங்கள் கர்த்தருடைய சுதந்தரத்தை யாசீர்வதிக்கும்படிக்கு எதினாலே சரிபண்ணுவேனென்றுகேட்டான்.

௪. அப்போது கிபெயோனியர், அவனுடனே, சவுலோடும், அவன் வீட்டாரோடும், எங்களுக்கிருக்கிற காரியத்திற்காக எங்களுக்கு வெள்ளியும், பொன்னும் வேண்டுவதில்லை. இஸ்ரவேலில் ஒருவனைக்கொன்றுபோடவேண்டுமென்கிறதும் எங்களுக்குக் கவையில்லையென்றார்கள். அப்போது, அவன், ஆனால் நான் உங்களுக்கு என்னசெய்யவேண்டுமென்று சொல்லுகிறீர்களென்றான்.

௫. அவர்கள் இராசாவோடே சொன்னதாவது; நாங்கள் இஸ்ரவேலின் எல்லையிலெங்கும் நிலைக்காதபடிக்கு அழிந்துபோகவென்று எங்களை நிர்மூலமாக்கி யெங்களுக்குப் பொல்லாப்புச்செய்ய நினைத்தானே!

௬. அவன் குமாரரில் ஏழுபேர் கர்த்தர் தெரிந்துகொண்ட சவுலின் ஊராகிய கிபெயாவிலே நாங்கள் அவர்களைக் கர்த்தருக்கென்று தூக்கிப்போட எங்களுக்கொப்புக்கொடுக்கப்பட்டுமென்றார்கள். நான் அவர்களை யொப்புக்கொடுப்பேனென்று இராசா சொன்னான்.

௭. ஆனால் தாவீதாகியதனக்கும், சவுலின் குமாரனாகிய யோனத்தானுக்கும் முண்டான கர்த்தனாகக்கொண்டிட்ட ஆணையினிமித்தம் இராசா சவுலின் குமாரனாகிய யோனத்தானின் மகன் மேவிபோசேத்தைத் தப்பவிட்டு,

௮. ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பாள், சவுலுக்குப்பெற்ற அவளுடைய இரண்டு குமாரராகிய அற்மோனியையும், மேவிபோசேத்தையும், சவுலின் குமாரத்தியாகிய மீகாள், மெகொலாவியனான பர்சிலாவின் குமாரனாகிய ஆதரீயேலுக்குப்பெற்ற அவளுடைய ஐந்துகுமாரரையும் பிடித்துக்கொண்டு,

௯. அவர்களைக் கிபெயோனியர் கையிலொப்படைக்கொடுத்தான். இவர்கள் அவர்களைக் கர்த்தருக்குமுன்பாகப் பர்வதத்தின்மேலே தூக்கிப்போட்டார்கள். அப்படியே யவர்களேழுபேரும் ஒருமிக்கவிழுந்தார்கள். வாற்கோதுமை யறுப்புத்துவக்குகிற அறுப்புக்காலத்தின் முந்தினநாள்களிலேதானே அவர்கள் கொன்றுபோடப்பட்டார்கள்.

௰. அப்போது ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பாள், இரட்டுப்புடவையை யெடுத்துக்கொண்டுபோய், அதைக் கன்மலையில் தனக்காகவிரித்து, அறுப்புநாளின் துவக்கமுதற்கொண்டு வானத்திலிருந்து அவர்கள்மேல

மழைபெய்யுமட்டும், பகலில் ஆகாயத்துப் பறவைகளாகிலும், இரவில் காட்டுமிருகங்களாகிலும் அவர்கள்மேல் விழவொட்டாதிருந்தாள்.

௰௧. ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பாளென்ற சவுலின் வைப்பாட்டி செய்தது தாவீதுக்கு அறிவிக்கப்பட்டபோது,

௰௨. தாவீது போய்ப் பெலிஸ்தர் கில்போவாவிலே சவுலை வெட்டினபோது, பெத்சானின் வீதியிலே தூக்கிப்போட்டதும், கிலேயாத்திலுள்ள யாபேஸ் பட்டணத்தார் அங்கே போய்த் திருடிக்கொண்டுவந்ததுமான சவுலின் எலும்புகளையும், அவன் குமாரனாகிய யோனத்தானின் எலும்புகளையும் அவர்களிடத்திலே பெற்று,

௰௩. அங்கேயிருந்து அவைகளைக் கொண்டுவந்து, தூக்கிப்போடப்பட்டவர்களின் எலும்புகளையும் அவைகளோடே சேர்த்துக்கொண்டு,

௰௪. சவுலின் எலும்புகளையும், அவன் குமாரனாகிய யோனத்தானின் எலும்புகளையும், பென்யமீன் தேசத்துச் சேலாவூரிலிருக்கிற அவன் தகப்பனாகிய கீசின் கல்லறையில் அடக்கம்பண்ணுவித்தான். இராசாகற்பித்தபடியெல்லாம் செய்தார்கள். அதற்குப்பிற்பாடு, பராபரன் தேசத்திற்காகச் செய்யப்பட்ட வேண்டுதலைக் கேட்டருளினார்.

௰௫. பின்னையும் பெலிஸ்தராலே, இஸ்ரவேலின்மேல் யுத்தமுண்டாகிறபோது, தாவீதும், அவனோடேகூட அவன் சேவகருமிறங்கிப்போய்ப் பெலிஸ்தரோடு யுத்தம்பண்ணினார்கள். தாவீது விடாய்த்துப்போனான்.

௰௬. அப்போது முந்நூறு சேக்கல் நிறை வெண்கலமான ஈட்டியைப்பிடிக்கிறவனும், புதுப்பட்டயத்தை அரையிலே கட்டிக்கொண்டவனுமான இஸ்பிபெனோபென்ற ரபாபுத்திரரில் ஒருவன் தாவீதை வெட்டவேண்டுமென்றிருந்தான்.

௰௭. ஆனால் செருயாவின் குமாரனாகிய அபிசாய் அவனுக்கு ஒத்தாசையாக வந்து, பெலிஸ்தனை வெட்டிக் கொன்றுபோட்டான். அப்போது தாவீதின் மனுஷர் நீர் இஸ்ரவேலின் விளக்கை அணைத்துப்போகப்பண்ணாதபடிக்கு, இனி நீர் எங்களோடே யுத்தத்திற்குப் புறப்படவேண்டாமென்று அவனுக்கு ஆணையிட்டார்கள்.

௰௮. அதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், பெலிஸ்தரோடே திரும்பவும் கோபிலே யுத்தமுண்டாகிறபோது, ஊசாத்தியனான சிபேக்காய் இராட்சத சந்ததியான சாப்பை வெட்டிப்போட்டான்.

௰௯. பெலிஸ்தரோடின்னம் வேறொரு யுத்தம் கோபிலே உண்டாகிறபோது, யாரேயோரெகிமின் குமாரனாகிய எல்க்கானானென்ற பெத்லகேமியனான காத்தூரானாகிய கோலியாத்தை வெட்டினான். அவன் ஈட்டிமரம் நெய்கிறவர்களின் படமரமத்தனையாயிருந்தது.

௨௰. இன்னமொரு யுத்தம் காத்தூரிலே உண்டாகிறபோது, அங்கே நெட்டையான ஒரு மனுஷனிருந்தான். அவன் கைகளின் விரல்கள் அவ்வாறும், அவன் கால்களின் விரல்கள் அவ்வாறும், ஆக இருபத்துநாலு விரல்களுமாயிருந்தன. இவனும் இராட்சதனுக்குப் பிறந்திருந்து,

௨௧. இஸ்ரவேலை நிந்தித்தான். ஆனால் தாவீதின் சகோதரனான சிமெயாவின் குமாரனாகிய யோனத்தான் அவனை வெட்டினான்.

௨௨. இந்த நாலுபேரும் காத்தூரிலே ரபாவுக்குப் பிறந்திருந்து, தாவீதின் கையினாலும், அவன் சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய வல்லமையுள்ள நீடிய தயவுக்காகவும், பலபல ஆசீர்வாதத்துக்காகவும், புகழ்தலின் ஒருபாட்டு.]

கர்த்தர் தாவீதையவனுடைய எல்லாச் சத்துருக்களின் கைக்கும், சவுலின் கைக்கும் நீங்கலாக்கி விடுவித்தபோது, அவன் கர்த்தருக்கு முன்பாகச் சொன்னபாட்டின் வார்த்தைகளாவது;

௨. கர்த்தரென்னுடைய, என் கோட்டையும், என்னை விடுவிக்கிறவருமானவர்.

௩. பராபரன் நான் நம்பியிருக்கிற துருக்கம், என் கேடயமும், என் இரட்சிப்பின் கொம்பும், என் உயர்ந்த அடைக்கலமும், என் மறைவிடமுமானவர். என்னைக் கொடுமைக்கு நீங்கலாக்கிவிட்ட என் இரட்சகராயிருக்கிறார்.

௪. ஸ்தோத்திரிக்கப்பட்ட கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன். அப்போது என் சத்துருக்களுக்கு விலகி இரட்சிக்கப்பட்டேன்.

௫. ஏனென்றால், மரணத்தின் அலைகள் என்னைச் சூழ்ந்துகொண்டு, பேலியாளின் வாய்க்கால்கள் என்னைக் கலங்கப்பண்ணின.

௬. நரகத்தின் கயிறுகள் என்னைச் சூழ்ந்து பிடித்து, மரணத்தின் கண்ணிகள் எனக்கு நேரிட்டன.

௭. எனக்குண்டான நெருக்கத்திலே கர்த்தரைத் தொழுதுகொண்டு, என் பராபரனை நோக்கிக் கூப்பிட்டேன். தமது தேவாலயத்திலிருந்து என் சத்தத்தைக் கேட்டார். என் கூப்பிடுதல் அவர் செவிகளுக்கு எட்டினது.

௮. அப்போது பூமி அசைந்து அதிர்ந்து, வானத்தின் அஸ்திபாரங்கள் குலுங்கி அசைந்தன. ஏனெனில், எரிச்சலானார்.

௯. புகை அவர் நாசியாலும், பட்சிக்கிற அக்கினி அவர் வாயாலும் எழும்பி, அவராலே தணலாக எரிந்தது.

௰. பரமண்டலங்களைத் தாழ்த்தியிறங்கினார். அவர்பாதங்களின்கீழே மந்தாரமிருந்தது.

௰௧. கேருபீனின் மேலேறிப்பறந்து, காற்றின் செட்டைகளின்மீதிலே தரிசனையானார்.

௰௨. ஆகாயத்து மேகங்களிலே, கூடிய தண்ணீர்களின் இருளைத்தம்மைச்சுற்றிலும் இருக்கும் கூடாரமாக்கினார்.

௰௩. அவர் முகத்தாவின் பிரகாசத்தினால், நெருப்புத்தணலாயெரிந்தது.

௰௪. கர்த்தர் வானத்திலிருந்து குமுறிஉன்னதமானவர் தமது சத்தத்தைத்தொனிக்கப்பண்ணினார். [1]

௰௫. அவர் அம்புகளையனுப்பி அவர்களைச் சிதறடித்து, மின்னல்களைப் போகவிட்டு அவர்களைக் கலங்கப்பண்ணினார்.

௰௬. கர்த்தருடைய உதும்புதலாலும், அவருடைய நாசியின் சுவாசக்காற்றினாலும், சமுத்திரத்தின்பள்ளங்கள் காணப்பட்டுப் பூதலத்தின் அஸ்திபாரங்கள் திறவுண்டன.

௰௭. உயரத்திலிருந்து கைநீட்டி, என்னைப் பிடித்துத் திரளத்தண்ணீர்களிலிருந்து என்னைத் தூக்கிவிட்டார்.

௰௮. என்வலுசத்துருவுக்கும், என்பகைஞருக்கும் என்னைவிலக்கிவிடுவித்தார். ஏனெனில், என்னிலும்பலத்திருந்தார்கள்.

௰௯. என் ஆபத்தின்நாளிலே எனக்கெதிரிட்டுமறித்தார்கள். ஆனால் கர்த்தர் எனக்காதரவாயிருந்து,

௨௰. என்னையெடுத்து விலாசத்திலேவைத்துத் தப்புவித்தார். ஏனெனில், என்மேலே பிரியமாயிருந்தார்.

௨௧. கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாக வெனக்குப் பதிலளித்தார். என் கைகளின் சுத்தத்திறகுத் தக்கதாகவெனக்குவரப்பண்ணினார்.

௨௨. ஏனென்றால். கர்த்தருடைய வழிகளைக்காத்துக்கொண்டிருந்தேன். நான் என் பராபரனைவிட்டு, ஆகாமியஞ்செய்ததில்லை.

௨௩. ஏனெனில், அவருடைய நியாயங்களையெல்லாம் எனக்குமுன்பாக நிறுத்தினேன். நான் அவருடைய பிரமாணங்களை விட்டுவிலகாமல்,

௨௪. அவர்முன்பாக மனவுண்மையாயிருந்து, மனதூர்ச்குணத்திறகென்னை விலக்கிக்காத்தேன்.

௨௫. ஆகையால் கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாகவும், தம்முடைய கண்களுக்குமுன் நிற்கிற என்னுடைய சுத்தத்திறகுத்தக்கதாகவும் எனக்கு வரப்பண்ணினார்.

௨௬. சன்மார்க்கனுக்கு உம்மைச்சன்மார்க்கமாகவும், மனவுண்மையான புருஷனுக்கு உம்மை மனவுண்மையாகவும்,

௨௭. சுத்தனுக்கு உம்மைச் சுத்தமாகவும், மாறுபாடானவனுக்கு உம்மைக்கோணலாகவுங் காண்பிக்கிறீர்.

௨௮. சிறுமைப்பட்டசனத்தை யிரட்சிக்கிறீர். ஆனால், மேட்டிமையானவர்களைத் தாழ்த்த உம்முடையகண்கள் அவர்களுக்கு விரோதமாகத் திருப்பப்பட்டிருக்கின்றன.

௨௯. ஏனெனில், கர்த்தராகிய தேவரீர் என்விளக்காயிருக்கிறீர். கர்த்தரென்னிருளை வெளிச்சமாக்குகிறார்.

௩௰. ஏனெனில், உம்மோடே ஒரு இராணுவத்தைத்தாக்கிப்பாய்ந்துவேன். என் பராபரனோடே, ஒரு மதிலைத்தாண்டுவேன்.

௩௧. பராபரனுடையவழி யுத்தமமானது. கர்த்தருடையவசனம், புடமிடப்பட்டதாயிருக்கின்றது. தம்மையண்டிக்கொள்ளுகிற அனைவருக்கும், அவர் கேடயமாயிருக்கிறார்.

௩௨. ஏனென்றால், கர்த்தரையல்லாமல் தேவனார்! நம்முடைய பராபரனைத்தவிரக் கன்மலையுமார்!

௩௩. பராபரன் எனக்குப்பலத்த அரணானவர். அவரென்வழியைத் தடையில்லாத நல்வழியாக்குகிறார்.

௩௪. என்கால்களை மான்கால்களுக்கொப்பாக்கி, என்னுயர்தலங்களில் என்னை நிறுத்துகிறார்.

௩௫. வெண்கலவில்லும், என் புயங்களால் வளைய என்கைகளை யுத்தத்திற்குப் பழக்குவிக்கிறார்.

௩௬. உம்முடைய இரட்சிப்பின் கேடயத்தையும், எனக்குத்தந்தீர். நீர் என்னைச் சிறுமைப்படுத்தாததினால், என்னைப்பெரியவனாக்குகிறீர்.

௩௭. என்கணுக்கால்கள் தள்ளாடாதபடிக்கு, நான் நடக்கிறவழியை யகலமாக்கினீர்.

௩௮. என் சத்துருக்களைப் பின்றொடர்ந்து, அவர்களையழிப்பேன். அவர்களை நிர்மூலமாக்குமட்டுந் திரும்பேன்.

௩௯. அவர்களெழுந்திருக்க மாட்டாமல், என்பாதங்களின் கீழ்விழும்படியாய், அவர்களை நிர்மூலமாக்கிவெட்டுவேன்.

௪௰. ஏனெனில், யுத்தத்திற்கு நீர் என்னைப் பலத்தால்இடைகட்டி, என்மேலெழும்பினவர்களை யென்கீழ்மடங்கப்பண்ணி,

௪௧. நான் என் பகைஞரைப் பாழ்க்கடிக்கும்படியாக, என் சத்துருக்களின்பிடரியை யெனக்கொப்புக்கொடுத்தீர்.

௪௨. பார்த்துக்கொள்ளுகிறார்கள். ஆனால் இரட்சிக்கிறவரில்லை. கர்த்தரைப்பார்த்துக்கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு, மறுவுத்தரவு கொடாதிருக்கிறார்.

௪௩. அவர்களைப் பூமியின்தூளாகநொருக்கித் தெருக்களின் சேற்றைப்போலே யவர்களை மிதித்துச் சிதறப்பண்ணுவேன்.

௪௪. நீர் என்சனத்தின் சண்டைகளுக்கென்னை விலக்கிவிட்டு, என்னைச்சாதிகளுக்குத் தலைவனாக்குகிறீர். நான் அறியாத சனமென்னைச் சேவிக்கின்றது.

௪௫. அன்னியர் இச்சகம்பேசி என்க்கடங்கி, என் சத்தத்தைக் கேட்டவுடனே என்க்குக் கீழ்ப்படிகிறார்கள்.

௪௬. அன்னியர் முனைவிழுந்துபோய்த் தங்கள் அடைப்புகளிலிருந்து, தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.

௪௭. கர்த்தர் சீவனுள்ளவரும், என் கன்மலையும், ஸ்தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.

௪௮. என் இரட்சிப்பின் கன்மலையாகிய பராபரனும், நீதியைச் சரிக்கட்டிச் செய்கிறவராகிய தேவனுமானவர் என்னிமித்தம் சனங்களைக் கீழ்ப்படுத்தி, என் சத்துருக்களுக்கென்னை விலக்கி விடுவிக்கிற பராபரனுமானவர் உயர்ந்தவர்.

௪௯. என்னை யெதிர்த்து விரோதமாயெழும்புகிறவர்கள்மேல், உயர்த்துகிறீர். வல்லடி பண்ணுகிற மனுஷனுக்கென்னைத் தப்புவிக்கிறீர்.

௫௰. கர்த்தாவே! இதினிமித்தம் சாதிகளுக்குள் உம்மைத் துதித்து, உம்முடைய நாமத்தைச் சங்கீதம்பாடுவேன்.

௫௧. தாம் வைத்த இராசாவின் இரட்சிப்புகளை அவர் பெரியவைகளாக்கித் தாம் அபிஷேகம்பண்ணின தாவீதுக்கும், அவன் வித்துக்கும், என்றென்றைக்குங் கிருபைசெய்கிறார்.

## ௨௩. அதிகாரம்.

[(௧) தாவீது தன்முடிவானவார்த்தையிலேயும் பராபரனுடைய வாக்குத்தத்தத்திலேவைத்த விசுவாசம் புத்திக்கும், உணர்வுக்கும், எட்டாததாயிருக்கிறதென்று அறிக்கையிட்டது. (௬) பொல்லாதவர்களின் ஆக்கினை. (௮) தாவீதின் பராக்கிரமசாலிகளின் பெயர்கள்.]

தாவீதுடைய கடைசிவார்த்தைகளாவது; மேன்மையாய் உயர்த்தப்பட்டு, யாக்கோபுடைய பராபரனாலே அபிஷேகம்பெற்று, இஸ்ரவேலின் சங்கீதங்களை இன்பமாய்ப்பாடின ஈசாயின்குமாரனாகிய தாவீதென்றபுருஷன் உரைத்துச் சொல்லுகிறதென்னவெனில்,

௨. கர்த்தருடைய ஆவியானவர் என்னைக்கொண்டுபேசினார். அவருடைய வசனம் என்னுடைய நாவின்மேலிருந்தது.

௩. இஸ்ரவேலின் பராபரனும், இஸ்ரவேலின் கன்மலையுமானவர். எனக்குச் சொல்லியுரைத்ததேதென்னில், நீதிபரராய் மனுஷரையாண்டு, தெய்வபயமாய்த் துரைத்தனம்பண்ணுகிறவர் உண்டாயிருப்பார்.

௪. அவர் காலமேகமந்தாரமில்லாமல் உதிக்கிறதும், மழைக்குப்பிறகு தன் காந்தியினாலே புல்லைப்பூமியிலிருந்து, முளைக்கப்பண்ணுகிறதுமான சூரியனுடைய விடியற்காலத்தின் வெளிச்சத்தைப்போலிருப்பாரென்றார்.

௫. என் வீடு, பராபரனிடத்தில், என்னுடைய வீட்டிலேவரையாயிராதோ! ஏனென்றால், எல்லாவற்றிலும், திட்டப்பட்டதும், கைக்கொள்ளப்படுவதுமான நித்தியவுடன்படிக்கையை யெனக்கு ஸ்தாபித்தார். ஆனாலும் கொண்டு என்னுடைய எல்லா இரட்சிப்பும், எல்லா விருப்பமும் முளைத்தெழும்பாதோ!

௬. பேலியாளின் மனுஷரனைவருமோவென்றால் கையினாலே பிடிக்கப்படக்கூடாததினாலே யெறியப்பட்டுப்போகிற முள்ளுக்குச்சமானமானவர்கள்.

௭. அவைகளையொருவன் தொட்டுப்போனால், இருப்பாயுதத்தையும், ஈட்டிக்கம்பியையும், கெட்டியாய்ப்பிடிக்கவேண்டும். அவைகளிருக்கிற இடத்திலேதானே அக்கினியினால் சுட்டெரிக்கப்படவே சுட்டெரிக்கப்படுமென்றான்.

௮. தாவீதுக்கிருந்த பராக்கிரமசாலிகளின் நாயகங்களாவன; தக்கெமோனியின் குமாரனாகிய யோசேப்பாசெபெத்தென்ற சேர்வைக்காரரின்தலைவன். இவன் எண்ணூறுபேர்களின்மேல்விழுந்து, அவர்களையொருமிக்க வெட்டிப்போட்ட அதினோ, எஸ்னியனானவன்.

௯. இவனுக்கு இரண்டாவது, அகோயின் குமாரனாகிய தோதோவின்மகன் எலெயாசாரென்றவன். இவன் பெலிஸ்தர் யுத்தத்திற்குக் கூடினஸ்தலத்திலே இஸ்ரவேல்மனுஷர் எதிர்ப்போகையில், தாவீதோடேயிருந்து, பெலிஸ்தரை நிந்தித்த மூன்றுபராக்கிரமக்காரரிலொருவனாயிருந்தான்.

௰. இவன் எழும்பித்தன்கைசலித்துத் தன்கை பட்டயத்தோடொட்டிக்கொள்ளுமட்டும், பெலிஸ்தரைவெட்டினான். அன்றைத்தினங் கர்த்தர்பெரிய இரட்சிப்பைநடப்பித்தார். சனம் கொள்ளையாடமாத்திரம் அவனைப்பின்சென்றது.

௰௧. இவனுக்கு மூன்றுவது, ஆகேயின் குமாரனாகிய சம்மாவென்ற ஆராரியன் சிறுபயறு நிறைந்தவயலிருந்த இடத்திலே பெலிஸ்தர் ஏராளமாய்க்கூடிச் சனம் பெலிஸ்தரைக்கண்டு ஓடுகிறபோது,

௰௨. இவன் அந்தநிலத்தின் நடுவிலே நின்று அதைக்காப்பாற்றிப் பெலிஸ்தரை மடங்கடித்துப் போட்டான். அதினால் கர்த்தர் பெரிய இரட்சிப்பை நடப்பித்தார்.

௰௩. முப்பது தலைவருக்குள்ளே யிந்தமூன்றுபேரும் இறங்கிப்போய் அறுப்புநாளிலே அதுல்லாங் கெபியிலே தாவீதண்டைக்கு வந்திருந்தார்கள். பெலிஸ்தரின்தண்டு இப்பாயீம் பள்ளத்தாக்கிலே பாளயமிறங்கின போதோவெனில்,

௰௪. தாவீது அரணான ஒருவிடத்திலிருந்தான். ஆனால் பெத்லகேமிலே அப்போது பெலிஸ்தரின் தாணயமிருந்தது.

௧௫. தாவீது ஆசைப்பட்டு பெத்லேகேமின் ஒலிமுகவாசலிலிருக்கிற கிணற்றின் தண்ணீரிலே கொஞ்சம் என்தாகத்திற்குக் கொண்டுவருபவன் யாரென்றான்.

௧௬. அப்போது இந்த மூன்று பராக்கிரமசாலிகள் பெலிஸ்தரின் பாளயத்திலே வலுமையாய்ப் புகுந்துபோய்ப் பெத்லேகேமின் ஒலிமுகவாசலிலிருக்கிற கிணற்றிலே தண்ணீர் மொண்டு, தாவீதண்டைக்குச் சுமந்து கொண்டுவந்தார்கள். ஆனால் அவன் அதைக் குடிக்க மனதில்லாமல் அதைக் கர்த்தருக்கென்று ஊற்றிப்போட்டு,

௧௭. கர்த்தாவே! தங்களுக்குப் பிராணமோசம் வருமென்றறிந்தும் போய்வந்த அந்த மனுஷரின் இரத்தத்தைக் குடிக்கும், இந்தச் செயல் எனக்குத் தூரமாயிருப்பதாக வென்று சொல்லி, அதைக் குடிக்க மனதில்லாதிருந்தான். இப்படி இந்த மூன்று பராக்கிரமசாலிகள் செய்தார்கள்.

௧௮. யோவாபின் சகோதரனும், செருயாவின் குமாரனுமான அபிசாய் என்கிறவன் அந்த மூன்றுபேரில் பிரதானமானவன். அவன் தன் ஈட்டியையோங்கி முந்நூறு பேரை மடங்கடித்ததினால், இந்த மூன்று பேரிலும் பேர்பெற்றவனானான்.

௧௯. இந்த மூன்றுபேர்களில் அவன் சமர்த்தனாயிருந்ததினாலல்லவோ அவர்களில் தலைவனானான்? ஆனால் அந்த முந்தின மூன்று பேருக்கு அவன் சரியானவனல்ல.

உ௦. நல்ல சேவகனான யோய்தாவின் குமாரனும், கப்செயேல் ஊரானுமாகிய பெனாயாவும், செய்கைகளால் பெரியவனாயிருந்தான். அவன் மோவாப் தேசத்திலுடைய இரண்டு வலுமையான சிங்கங்களைக் கொன்றதுமல்லாமல், அவனிறங்கிப்போய் உறைந்த மழையின் நாளில் ஒரு சிங்கத்தையொரு கெபிக்குள்ளே கொன்றுபோட்டான்.

உ௧. அவன் பயங்கரரூபான ஒரு எகிப்திய மனுஷனையுங் கொன்றுபோட்டான். அந்த எகிப்தியன் கையில் ஒரு ஈட்டியிருக்கையில், இவன் ஒரு தடியைப்பிடித்து அவனண்டைக்கிறங்கிப்போய், அந்த ஈட்டியை எகிப்தியன் கையிலே பறித்து அவனை யவன் ஈட்டியினாலே கொன்றான்.

உஉ. இவைகளை யோய்தாவின் குமாரனாகிய பெனாயா செய்தபடியினாலே மூன்று பராக்கிரமசாலிகளுக்குள்ளே பேர்பெற்றவனாயிருந்தான்.

உ௩. முப்பது பேரைப்பார்க்கிலும் அவன் பிரபலமானவன். ஆனால் அந்த முந்தின மூன்றுபேருக்கு அவன் சரியானவனல்ல. அவனைத் தாவீது தன் அரமனைச் சேர்வைக்காரனாக வைத்துக்கொண்டான்.

உ௪. யோவாபின் தம்பியாகிய ஆசகேல் முப்பதுபேருக்குட்பட்டவன். அவர்க



ளாவன், பெத்லேகேம் ஊரானான தோதோவின் குமாரனாகிய எல்கானான்.

உ௫. ஆரோதியனான சம்மா, ஆரோதியனான எலிக்கா,

உ௬. பல்தியனான ஏலெஸ், இக்கேசின் குமாரனாகிய ஈராவென்ற தெக்கோவியன்,

உஎ. ஆனதோத்தியனான அபியேசர், ஊசாத்தியனான மெபுனாயி,

உ௮. அகோகியனான சல்மோன், நெத்தோபாத்தியனான மகராயி,

உ௯. பானாவின் குமாரனாகிய ஏலேப்பென்ற நெத்தோபாத்தியன் பென்யமீன் புத்திரரின் கிபெயா ஊரானாகிய ரிபாயின் குமாரன் இத்தாயி,

௩௦. பிரத்தோனியனான பெனாயா, காகாஸ் மலையாறுகளின் ஈரையான ஈத்தாயி,

௩௧. அர்பாத்தியனான அபி அல்போன், பருமியனான அஸ்மாவேத்,

௩உ. சால்போனியனான எலியாபா, யாசேனின் குமாரரில் யோனத்தானென்றவன்,

௩௩. ஆராரியனான சம்மா, சாராரின் குமாரனாகிய அகியாம் என்ற ஆராரியன்.

௩௪. மாகாத்தியனின் குமாரனாகிய அகஸ்பாயிம் மகன் எலிப்பேலேத், கிலோனியனாகிய அகித்தோப்பேலின் குமாரனாகிய எலியாமென்றவன்.

௩௫. கர்மேலியனான எஸ்றாயி, அரபியனான பாராயி,

௩௬. சோபா ஊரானாகிய நாத்தானின் குமாரன் ஈகால், காதியனான பானி,

௩எ. அம்மோனியனான சேலேக், செருயாவின் குமாரனாகிய யோவாபின் ஆயுதங்களைப் பிடிக்கிற பேரோத்தியனான நகராய்,

௩௮. ஈத்தேரியனான ஈரா, ஈத்தேரியனான காரேப்,

௩௯. ஏத்தியனான உரியாவுந்தானே. இவர்களெல்லாரும் முப்பத்தேழுபேர்.

## உ௪. அதிகாரம்.

[(௧) தாவீது சாத்தானாலே ஏவப்பட்டு சனங்களையிலக்கப்படுத்த யோவாபைப் பலவந்தஞ்செய்தது. (௫) படைத்தலைவர்கள் ஒன்பதுமாதம் இருபது நாள்களில் ௧௩-லட்சம் சேவகரின் கணக்குக்கொண்டுவந்தது. (௰) தாவீது மனஸ்தாபப்பட்டுக் காத்சொன்ன மூன்று வாதைகளில் மூன்றுநாள் பெருவாரிக் காய்ச்சலைத் தெரிந்துகொண்டது. (௧௫) எ௰-௬ஆ௬ செனறுபோன பின்பு தாவீது மனஸ்தாபப்பட்டு ஒருசவேலை யழிப்பதைத் தடுத்தது. (௧௮) தாவீது காத் சொன்னபடி அர்வினாவின் போரடிக்களத்தைவாங்கிப் பலி செலுத்தினதினால் பெருவாரிக் காய்ச்சல் நின்றது.]

கர்த்தருடைய கோபந்திரும்ப இஸ்ரவேலின்மேல் மூண்டு, நீ போய், இஸ்ர

வேல் யூதாவென்றவர்களின் இலக்கத்தை பாரென்று அவர்களுக்குச் சேதமாகச் சொல்லுகிறதாகத் தாவீதையேவிவிட்டது.

௨. அப்படியே இராசாதன்னோடிருக்கிற சேனாபதியான யோவாபுடனே, சனத்தின் இலக்கத்தை நானறியும்படிக்கு நீதாண் துவக்கிப் பெர்சேபாமட்டுமுள்ள இஸ்ரவேலின் கோத்திரங்களிலெல்லாஞ் சுற்றித்திரிந்து சனத்தையிலக்கம்பாருங்களென்றான்.

௩. அப்போது யோவாப், இராசாவுடனே, இராசாவாகிய என்னுடைய ஆண்டவனுடைய கண்கள் பார்க்கும்படி உம்முடைய பராபரனாகிய கர்த்தர் சனம் இப்போதிருக்கிறதைப் பார்க்க அதை நூறத்தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக. ஆனால் இராசாவாகிய என்னுடைய ஆண்டவன் இந்தக்காரியத்தின்மேலே விருப்பம்வைப்பதென்னவென்றான்.

௪. ஆனால் யோவாபும், இராணுவத்தலைவருஞ் சொன்னவார்த்தை செல்லாதபடிக்கு இராசாவினவார்த்தை பலத்தது. அப்படியே இஸ்ரவேலாகிய சனத்தை யிலக்கம்பார்க்க யோவாபும், இராணுவத்தலைவரும் இராசாவைவிட்டுப் புறப்பட்டுப்போய்,

௫. யோர்தானைக்கடந்து, காதுடைய ஆறுகளின் நடுவேயிருக்கிற பட்டணத்திற்கு வலதுபுறமான ஆரோயேரிலும் யாசேரண்டையிலும் பாளயமிறங்கி,

௬. அங்கேயிருந்து கிலெயாத்திற்கும், தத்திமென்றப்பட்ட சீமைக்கும்வந்து, அங்கேயிருந்து தாண்யானுக்கும், சீதோனின் சுற்றுப்புறங்களுக்கும்வந்து,

௭. பிறகு தீருவென்ற கோட்டைக்கும், ஏவியர் கானானியருடைய சகலபட்டணங்களுக்கும்வந்து, அங்கேயிருந்து யூதாவின் தெற்குப்புறமான பெர்சேபாவுக்குப் புறப்பட்டு,

௮. இப்படியே தேசத்திலெல்லாஞ் சுற்றித்திரிந்து ஒன்பதுமாதமும்,இருபதுநாளுமானபிறபாடு எருசலேமுக்குவந்தார்கள்.

௯. யோவாப், சனத்தையிலக்கம்பார்த்த தொகையை இராசாவுக்குக் கொடுத்தான். இஸ்ரவேலிலே பட்டயமுருவத்தக்கசேவக மனுஷர் எண்ணூறுயிரம் பேரிருந்தார்கள். யூதாமனுஷர் ஐந்நூறயிரம் பேருமாயிருந்தார்கள்.

௰. ஆனால் சனத்தைப்படி எண்ணினபிறபாடு இராசாவினிருதயம் அவனைக்குத்திற்று.

அப்போது தாவீது கர்த்தரைநோக்கி, தான் இப்படிச்செய்ததினாலே மகாப்பெரிய பாவஞ்செய்தேன். இப்போதும் ஆண்டவரே! உம்முடைய அடியானின் அக்கிரமத்தை நீக்கிவிடும். ஏனென்றால்,வெகுபயித்தியமாகச்செய்தேனென்றான்.

௰௧. தாவீதுகாலமே எழுந்திருந்தபோது தாவீதின் ஞானதிருஷ்டிபுருஷனாகிய காத் தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடையவார்த்தையுண்டாயச்சொன்னதாவது;

௰௨. நீபோய்த்தாவீதுடனே, மூன்றுகாரியங்களை நானுனக்கு முன்பாகவைக்கிறேன். அவைகளில்,நாம் உனக்குச்செய்யப்போகிற ஒருகாரியத்தைத்தெரிந்துகொள்ளென்று கர்த்தராகிறேனென்றுசொல்லென்றார்.

௰௩. அப்படியே காத், தாவீதண்டைக்கு வந்து,அவனுக்கறிவித்துச்சொன்னதாவது; உம்முடையதேசத்திலே ஏழுவருஷம் பஞ்சம் உமக்குவரவேண்டுமோ? அல்லவென்று மூன்றுமாதம் உம்முடைய சத்துருக்கள் உம்மைத்தொடர நீரவர்களுக்குமுன்பாக ஓடிப்போகவேண்டுமோ! அல்லவென்றுஉம்முடைய தேசத்திலே மூன்றுநாள்பெருவாரிக்காய்ச்சலுண்டாயிருக்கவேண்டுமோ! இப்போதும் என்னையனுப்பினவருக்குநான் என்னமறுசெய்திகொண்டுபோகவேண்டும்! என்கிறதை நீர்யோசித்துப்பாருமென்றான்.

௰௪. அப்போது தாவீது, காத்துடனே, வெகு இடுக்கண் அடைந்திருக்கிறேன். இப்போது நாம் கர்த்தருடைய கையிலே விழுவோமாக. ஏனெனில், அவருடைய இரக்கம் பெரிதாயிருக்கின்றது. மனுஷர் கையிலே விழாதிருப்பேனாகவென்றான்.

௰௫. அப்போது கர்த்தர் இஸ்ரவேலிலே அன்றுகாலமே துவக்கி மறுநாளின் அந்தவேளைமட்டும் மிருக்கும் பெருவாரிக்காய்ச்சலைவரப்பண்ணினார். அதினால் தாண் முதல் கொண்டு பெர்சேபாமட்டுமுள்ள சனத்தில் எழுபதினாயிரம்பேர் செத்துப்போனார்கள்.

௰௬. தேவதூதன் எருசலேமையழிக்கத் தன்கையை யதின்மேலே நீட்டினபோதோ வென்றால், கர்த்தர் அந்தத்தீங்குக்குப் பரிதாபப்பட்டுச் சனத்தையழிக்கிற தூதனுடனே, போதும். இப்போது உன்கையை நிறுத்தென்றார். அப்போது கர்த்தருடைய தூதன் எபூசியனாகிய அர்வினாவின் போரடிக்கிறகளத்திற்கு நேரேயிருந்தான்.

௰௭. சனத்தை யுபாதிக்கிற தூதனைத்தாவீது கண்டபோது, அவன் கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணி, இதோ, நான்தான் பாவஞ்செய்தேன். நான்தான் அக்கிரமம் பண்ணினேன். இந்த ஆடுகள் செய்ததென்ன! உம்முடைய கை யெனக்கும், என்தகப்பன் வீட்டுக்கும் விரோதமாயிருக்கட்டுமென்றான்.

௰௮. அன்றைத்தினம் காத், தாவீதண்டைக்குவந்து அவனுடனே, நீர் ஏறிப்போய், எபூசியனாகிய அர்வினாவின் களத்திலே கர்த்தருக்கொரு பலிபீடத்தை ஸ்தாபியுமென்றான்.

௰௯. காத்துடைய வார்த்தையின்படியே தாவீது கர்த்தர் கற்பித்தபிரகாரமாக ஏறிப்போனான்.

௨௰. அர்வினா கண்ணோக்கி, இராசாவும், அவனுடைய ஊழியக்காரரும் தன்னண்டைக்கு வருகிறதைக் கண்டபோது, அர்வினா புறப்பட்டுத் தரைமட்டுங் குனிந்து, இராசாவை வணங்கி,

௨௧. இராசாவாகிய என்னாண்டவன் தம்முடைய அடியானண்டைக்கு வருகிறகாரியமென்னவென்றதற்குத் தாவீது: வாதை சனத்தைவிட்டு நிறுத்தப்படக் கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு இந்தக் களத்தை உன்கையிலே கொள்ளவந்தேனென்றான்.

௨௨. அர்வினா தாவீதுடனே, இராசாவாகிய என்னாண்டவன் அதை வாங்கிக்கொண்டு தம்முடைய பார்வைக்கு நலமானபடி பலியிடுவாராக. இதோ, பலிக்கு மாடுகளும், விறகுக்கு ஏரடிக்கிற உருளைகளும், மாடுகளின் நுகத்தடிகளுமிங்கே யிருக்கின்றனவென்றுசொல்லி,

௨௩. அவையெல்லாவற்றையும் இராசாவாயிருந்த அர்வினா இராசாவுக்குக்கொடுத்து, அர்வினா இராசாவுடனே, உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உம்மிடத்திலே பிரியமாவதாகவென்றான்.

௨௪. ஆனால் இராசா அர்வினாவுடனே, அப்படியல்ல. நான் இலவசமாய் வாங்கி என் பராபரனாகிய கர்த்தருக்குச் சர்வாங்கதகனங்களைப் பலியிடாமல் அதை உன்கையிலே விலைக்கிரயமாய் வாங்குவேனென்று சொல்லித் தாவீது அந்தக் களத்தையும், மாடுகளையும் ஐம்பது சேக்கல் நிறைவெள்ளிக்குக் கொண்டான்.

௨௫. அங்கே தானே தாவீது கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டிவித்துச் சர்வாங்க தகனங்களையும், சமாதான பலிகளையுஞ் செலுத்தினான். அப்போது கர்த்தர் தேசத்திற் கொப்புரவாக்கப்பட்டார். இஸ்ரவேலின்மேலிருந்த அந்த வாதை நிறுத்தப்பட்டது.

சாமுவேலின் இரண்டாம்புஸ்தகம் முற்றும்.

---

# இராசாக்களின் முதலாம்புஸ்தகம்.

---

(கி. பி. முன். ௲௰௫.)

## ௧. அதிகாரம்.

[(௧) தாவீதுக்கு வயதுசென்றபோது, அபிஷாகு உதவிசெய்தது. (௫) தாவீதுக்கிஷ்டமுள்ள அதோனியா அரசாட்சியை அபகரித்துக்கொண்டது. (௰௧) நாத்தானுடைய ஆலோசனையினால், (௰௫) பத்சேபாள் இராசனுக்கு அதையறிவித்தது. (௨௨) நாத்தானுஞ் சொன்னது. (௨௮) தாவீது பத்சேபாளுக்கு மறுபடியும் ஆணையிட்டது. (௩௨) தாவீதின் உத்தரவின்படி சாலோமோன் சாதோக்கினாலும், நாத்தானாலும், அரசனென்று எண்ணெயால் அபிஷேகம் பண்ணப்பட்டது. (௪௧) யோனத்தான் இந்தச்சங்கதிகளையறிவித்ததினால், அதோனியாவின் கூட்டத்தார் ஓடிப்போனது. (௫௰) அதோனியா ஓடிப் பலிபீடத்தின் கொம்பைப்பிடித்தபோது, அவனடக்கையைப் பார்க்கும்படி சாலோமோனவனை விடுவித்தது.]

தாவீது இராசா வயதுசென்ற கிழவனானபோது வஸ்திரங்களினாலே அவனை மூடினாலும் அவனுக்கு அனற்கண்டதில்லை.

௨. அப்போது அவனுடைய ஊழியக்காரர் அவனுடனே, இராசாவுக்கு முன்பாக நின்று, அவருக்குதவியாயிருந்து, இராசாவாகிய எங்களாண்டவனுக்கு அனலுண்டாகும்படிக்கு, உம்முடைய மடியிலே படுத்துக்கொள்ளத்தக்க கன்னியாஸ்திரியாகிய ஒருபெண்பிள்ளையை இராசாவாகிய எங்களாண்டவனுக்குத் தேடட்டுமென்றுசொல்லி,

௩. இஸ்ரவேலின் எல்லையிலெல்லாம் அழகான பெண்பிள்ளையைத் தேடிச் சூனேம் ஊராளாகிய அபிஷாகைக் கண்டுபிடித்து அவளை இராசாவண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

௪. அந்தப்பெண்பிள்ளை வெகு அழகாயிருந்தாள். அவள் இராசாவுக்குதவியாக அவனுக்கு வேலைசெய்தாள். ஆனால் இராசா அவளையறிந்ததில்லை.

௫. ஆகீத்திற்குப்பிறந்த அதோனியாவோவெனில், நான் இராசாவாவேனென்றுதன்னைத்தானுயர்த்தித் தனக்கு இரதங்களையும், குதிரைக்காரரையும், தனக்குமுன்னோடும் ஐம்பது ஆட்களையுஞ் சம்பாதித்தான்.

௬. அவன் அப்படியிருக்கும் நாட்களில் அவனைத் தகப்பன் நீயப்படிச் செய்வானே

கர்த்தர் அவனைக்கேட்டார். ஏனென்றால் சூரியாவின் இராசா இஸ்ரவேலை யொடுக்குகிறதினால், அவர்கள் ஒடுங்கிப்போகிறதைப் பார்த்தார்.

ரு. கர்த்தர் இஸ்ரவேலுக்கு ஒரு இரட்சகனைக் கொடுத்ததினால், அவர்கள் சூரியருடைய கையின்கீழிருந்து நீங்கலானார்கள். ஆனது கொண்டு இஸ்ரவேலபுத்திரர் முன்போலத் தங்கள் கூடாரங்களிலே குடியிருந்தார்கள்.

சா. ஆகிலும் இஸ்ரவேலைப்பாவஞ்செய்யப் பண்ணின எரோபெயாமின் வீட்டாரின் பாவங்களை யவர்கள் விட்டுவிலகாமல் அதிலே நடந்தார்கள். சமாரியாவிலிருந்த தோப்பும் நிலையாயிருந்துபோயிற்று.

எ. யோவாகாசுக்குச் சூரியாவின் இராசா ஐம்பது குதிரைக்காரரையும், பத்து இரதங்களையும், பதினாயிரங் காலாள்களையுமேயல்லாமல் வேறொன்றும் மீதியாகவைக்காதிருந்தான். ஏனெனில், அவன் அவர்களை யழித்துப் போரடிக்குதலின் தூளைப்போலாக்கியிருந்தான்.

அ. யோவாகாசின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும், அவனுடைய வல்லமையும் இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

கூ. யோவாகாசு தன்பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைச் சமாரியாவிலே யடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய யோவாசு அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.

ய. யூதாவின் இராசாவாகிய யோவாசுடைய முப்பத்தேழாம் வருஷத்துவக்கில் யோவாகாசின் குமாரனாகிய யோவாசு இஸ்ரவேலின் மேலே சமாரியாவிலே பதினாறுவருஷமாய இராச்சியபாரம்பண்ணி,

யக. கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப்பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமின் பாவங்களைவிலகாமல் அவைகளிலெல்லாம் நடந்தான்.

யஉ. யோவாசின் மற்றவர்த்தமானங்களும், அவன்செய்தவையனைத்தும், அவன் யூதாவின் இராசாவாகிய அமத்சியாவோடே யுத்தம்பண்ணின அவன்வல்லமையும் இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

யங. யோவாசு தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் எரோபெயாம் அவன் ஆசனத்திலுருக்கார்ந்தான். யோவாசோவெனில், சமாரியாவில இஸ்ரவேலின் இராசாக்களிடத்திலே யடக்கம்பண்ணப்பட்டான்.

யச. அவன்நாட்களில் எலிசா தான்மரணமடையப்போகிற வியாதியோடேகிடந்தான். அப்போது இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு அவனண்டைக்கிறங்கிப்போய் அவன்மேலவிழுந்து, அழுது, என்தகப்பனே! என்தகப்பனே! இஸ்ரவேலுக்கு இரதங்களும், குதிரைக்காரருமாயிருந்தவனே! என்றான்.

யரு. எலிசா அவனுடனே, வில்லையும், அம்புகளையும் பிடியுமென்றான். அப்படியேவில்லையும், அம்பையும்பிடித்துக்கொண்டான்.

யசா. அப்போது அவன் இஸ்ரவேலின்இராசாவுடனே, உம்முடைய கையைவில்லின் மேலவையுமென்றான். அவன்தன்கையைவைத்தபோது, எலிசா தன்கைகளை இராசாவுடைய கைகளமேலவைத்து,

யஎ. கிழக்கேயிருக்கிற பலகணியைத்திறவுமென்றான். அவன் அதைத்திறந்தபோது எலிசா, எய்யுமென்றான். இவன் எய்தபோது அவன், அது கர்த்தருடைய இரட்சிப்பின் அம்பும், சூரியருக்கு விரோதமான இரட்சிப்பின் அம்புமானது. நீர் ஆபெக்கிலே சூரியரைத்தீர முறியடிப்பீரென்று சொல்லி,

யஅ. அம்புகளைப்பிடியுமென்றான். அவைகளைப்பிடித்தான். அப்போது அவன் இஸ்ரவேலின் இராசாவுடனே, தரையிலேயடியுமென்றான். அவன்மூன்றுதரமடித்து நின்றான்.

யகூ. அப்போது பராபரனுடைய மனுஷன் அவன்மேலே கடுங்கோபமாகி, நீர் ஐந்தாறுவிசையடித்தீரானால், அப்போது சூரியரைத்தீரமுறியடிப்பீர். இப்போதோ சூரியரை மூன்றுவிசைமுறியடிப்பீரென்றான்.

உய. எலிசா, மரணமடைந்தபின் அவனை யடக்கம்பண்ணினார்கள். மறுவருஷத்திலே மோவாபியரின் தண்டுகள் தேசத்திலேவந்தன.

உக. அப்போது சம்பவித்ததென்னவென்றால், அவர்கள் ஒருமனுஷனையடக்கம் பண்ணப்போகையில் இதோ, அந்தத்தண்டைக்கண்டு, அந்தமனுஷனை எலிசாவின்கல்லறையிலே போட்டார்கள். அந்தமனுஷன் அதிலேவிழுந்து, எலிசாவின் எலும்புகளின் மேலேபட்டபோதோவெனில், அவன்உயிரடைந்து தன் கால்களையூன்றியெழுந்திருந்தான்.

உஉ. யோவாகாசின் நாட்களிலெல்லாஞ் சூரியாவின் இராசாவாகிய ஆசகேல் இஸ்ரவேலையிறுக்கப்பிடித்திருந்தான்.

உங. ஆனால் கர்த்தர் அவர்களுக்கிரங்கித் தமக்கு ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபென்பவர்களோடிருந்த உடன்படிக்கையினிமித்தமாக அவர்களையிரக்கச் சித்தமாயிராமலும், அவர்களைநிர்மூலம்பண்ணாமலும் தம்முடைய முகத்தைவிட்டுத்தள்ளாமலும் அவர்கள்மேல மனதிருங்கியவர்கள வசமாயத்திரும்பினார்.

உச. சூரியாவின் இராசாவாகிய ஆசகேல் செத்துப்போய், அவன்குமாரனாகிய பெனாதாத் அவனஸ்தலத்தில் இராசாவானபின்பு,

(கி. பி. முன். ௮௱௩௰.)

௨௫. யோவாகாசின்குமாரனாகிய யோவாகசு ஆசகேலயுத்தம்பண்ணித் தன் தகப்பனாகிய யோவாகாசின் கையிலே பிடித்திருந்த பட்டணங்களைத் திரும்ப அவன் குமாரனாகிய பெனாதாதின் கையிலே பிடித்துக்கொண்டான். மூன்றுவிசை யோவாகசு அவனை முறியடித்து இஸ்ரவேலின் பட்டணங்களைத் திரும்பக் கட்டிக்கொண்டான்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) அமத்சியாவின் நல்லாளுகை. (௫) அவன் தன் தகப்பனைக் கொன்ற கொலைபாதகரைக் கொன்றது. (௭) அவன் ஏதோமியரை மடங்கடித்தது. (௮) அமத்சியா யோவாசைக் கொட்டமூட்டி யவனாலே முறியடிக்கப்பட்டது. (௰௫) எரொபெயாம் யோவாகசுக்குப்பின் அரசாண்டது. (௰௭) அமத்சியா லாகீசிலே கொலைசெய்யப்பட்டது. (௨௧) அசரியா அவனுக்குப்பின் அரசாண்டது. (௨௩) எரொபெயாமின் கெட்ட ஆளுகை. (௨௯) சகரியா அவனுக்குப்பின் அரசாண்டது.]

இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாகாசின் குமாரன் யோவாசுடைய இரண்டாம்வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய யோவாசின் குமாரன் அமத்சியா இராசாவானான்.

௨. அவன் இராசாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து, எருசலேமிலே இருபத்தொன்பதுவருஷமாய் இராச்சியபாரம் பண்ணினான். எருசலேம்பட்டணத்தாளான அவன் தாயின்பேர் யோவாதான்.

௩. அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். ஆனாலும் தன் தகப்பனாகிய தாவீதைப்போலல்ல. தன் தகப்பனாகிய யோவாசு செய்தபடியெல்லாஞ் செய்தான்.

௪. மேடைகளமாத்திரம் அகற்றப்பட்டதில்லை சனம் இன்னம் மேடைகளின்மேலே பலியிட்டுத் தூபங்காட்டுகிறதாயிருந்தது.

௫. இராச்சியபாரம் அவன் கையிலே திடப்பட்டபோது, அவனுடைய தகப்பனாகிய இராசாவைக் கொன்றுபோட்ட தன் ஊழியக்காரரைக் கொன்றுபோட்டான்.

௬. ஆனாலும் பிதாக்கள் பிள்ளைகளினிமித்தங் கொலையுண்ணப்படாமலும், பிள்ளைகள் பிதாக்களினிமித்தங் கொலையுண்ணப்படாமலும், அவனவன் தன்தன் பாவத்தினிமித்தங் கொலையுண்பானாகவென்று மோசேயின் நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலெழுதியிருக்கிறபடி கர்த்தர் கற்பித்தபிரகாரமாகக் கொலைசெய்தவர்களின் பிள்ளைகளையவன் கொல்லாதிருந்தான்.

௭. அவன் உப்புப்பள்ளத்தாக்கிலே ஏதோமியரில் பதினாயிரம்பேரை மடங்கடித்துச்





சேலாவை யுத்தம்பண்ணிப் பிடித்து, அதற்கு இந்நாள்வரைக்குமிருக்கிற யொக்தெயேலென்னும்பேரைத் தரித்தான்.

௮. அப்பொழுது அமத்சியா ஏகூவின் குமாரனாகிய யோவாகாசின் குமாரனாகிய யோவாசென்ற இஸ்ரவேலின் இராசாவினிடத்துக்குத் தானுபத்திகளையனுப்பி, நம்முடைய சாமர்த்தியத்தைப் பார்ப்போம்வாவென்று சொல்லச்சொன்னான்.

௯. ஆனாலும் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு யூதாவின் இராசாவாகிய அமத்சியாவுக்குச் சொல்லியனுப்பினதாவது; லீபனோனிலிருக்கிற முட்செடி லீபனோனிலிருக்கிற கேதுருமரத்தினிடத்து உன்குமாரத்தியை என்குமாரனுக்குப் பெண்சாதியாகக் கொடுவென்று சொல்லச்சொல்லிற்று. ஆனாலும் லீபனோனிலிருக்கிற காட்டுமிருகங்கள் முட்செடியின்மேலோடி யதைமிதித்தது.

௰. நீ ஏதோமியரை முறியடிக்கவேயடித்ததினாலே உன்னிருதயம் உன்னை மேட்டிமையாக்கிற்று. நீ பெருமைபாராட்டி உன் வீட்டிலேயிரு. நீயும், உன்னோடேகூட யூதாவும் விழும்படிக்குப் பொல்லாப்பைத்தேடிக்கொள்ளுவானேனென்று சொல்லியனுப்பினான்.

௰௧. ஆனாலும் அமத்சியா செவிகொடாதே போனான். ஆகையால் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு எழும்பினான். யூதாவிலிருக்கிற பெத்சேமேசிலே அவனும், யூதாவின் இராசா அமத்சியாவுந் தங்கள் சாமர்த்தியத்தைப் பார்க்கிறபோதோவெனில்,

௰௨. யூதா இஸ்ரவேலுக்கு முன்பாக முறிந்து அவரவர் தங்கள் கூடாரங்களுக்கோடிப் போனார்கள்.

௰௩. அகசியாவின்குமாரனாகிய யோவாசின் குமாரனான அமத்சியாவென்ற யூதாவின் இராசாவையோ இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு பெத்சேமேசிலே பிடித்து எருசலேமுக்கு வந்து எருசலேமின் அலங்கத்திலே எப்பிராயீம்வாசல்தொடங்கி கோடிவாசல்மட்டும் நானூறு முழநீளம் இடித்துவிட்டு,

௰௪. கர்த்தருடைய வீட்டிலும், இராசாவுடைய வீட்டின்பொக்கிஷங்களிலும் அகப்பட்ட சகல பொன்னையும், வெள்ளியையும், சகலமுட்டுகளையும், கிரி இருப்பவர்களையும் பிடித்துக்கொண்டு சமாரியாவுக்குத் திரும்பினான்.

௰௫. யோவாசு செய்த மற்ற விருத்தாந்தங்களும், அவனுடைய வல்லமையும், அவன் யூதாவின் இராசாவாகிய அமத்சியாவோடே யுத்தம்பண்ணின செய்தியும் இஸ்ரவேலின் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லோ எழுதியிருக்கின்றது.

௰௬. யோவாசு தன் பிதாக்களோடே சேர்ந்து நித்திரையடைந்தபின் சமாரியாவிலே இஸ்ரவேலி

ன இராசாககளணடையிலே அடககமபண ணபபடடான. அவன குமாரனாகிய எரோ பெயாம அவன ஸதலததிலஇராசாவானான.

௰எ. இஸரவேலின இராசாவாகிய யோவா காசின குமாரன யோவாசுமரணமடைநத பின யூதாவின இராசாவாகிய யோவாசின குமாரன அமசியாபதினைநதுவருஷம உயி ரோடிருநதான.

௰அ. அமசியாவினமறறவர்ததமானஙகள் யூதாவுடைய இராசாககளின நாளாகமப புஸதகததிலலலவோ எழுதியிருககினறது.

௰௯. எருசலேமிலே அவனுககுவிரோதமா க ஒபபநதமபணணினார்கள. அபபோது லாகீசுக்கோடிபபோனான. ஆனால அவர்கள் அவன பிறகாலே லாகீசுககுமனுஷரையனு பபி அஙகேயவனைககொனறுபோடடு,

உ௰. குதிரைகளமேல அவனையெடுததுவந தார்கள. அவனஎருசலேமிலிருககிற தாவீ தின படடணததிலே தனபிதாககளணடை யிலே யடககமபணணபபடடான.

உக. யூதசனமெலலாம பதினாறுவயதுள்ள அசரீயாவை யழைததுவநது அவனை யவன தகபபனாகிய அமசியாவின ஸ்தலத்தில இராசாவாககினார்கள்.

உஉ. இராசா தனபிதாககளோடே நிததி ரையடைநதபிறபாடு இவன ஏலாதைக்கடடி யதைத்திருமப யூதாவினவசமாக்கிககொண டான.

உ௩. யூதாவின இராசாவாகியயோவாசின குமாரன அமசியாவின பதினைநதாமவருஷ நதுவககி இஸரவேலின இராசாவாகிய யோ வாசின குமாரன எரோபெயாம, சமாரியா வில நாறபததொருவருஷமாய அரசாணடு,

உ௪. கர்ததரினபார்வைககுப பொலலாப பானதைசசெயதான. இஸரவேலைபபாவஞ் செயயபபணணின நேபாததின குமாரனான எரோபெயாமினசகலபாவஙகளையும் அவன விடடுவிலகினதிலலை.

உ௫. காத்தேபபேர் ஊரானாகிய அமிததா யெனற தீர்கககதரிசியின குமாரனான யோனா வெனற தமமுடைய ஊழியககாரனைககொ ணடு இஸரவேலின பராபரனாகிய கர்ததர் சொலலியிருநத வார்ததையினபடியே அவ ன ஆமாததின எலலைமுதறகொணடு சமனான பூமியினகடலமடடுமுள்ள இஸரவேலினஎல லைகளைத திருமபசசேர்ததுககொணடான.

உ௬. ஏனெனில், இஸரவேலின சிறுமைத தனமமெததக கடுமையெனறும், அடைக கபபடடவனுமிலலை. விடுதலையானவனுமில லை. இஸரவேலுககொததாசை செயகிறவ னுமிலலையெனறுங் கர்ததர்பார்ததார்.

உ௭. இஸரவேலினபேரை வானததின கீ ழிருநது குலைபபோமெனறு கர்ததர்சொல லாதிருநது யோவாசின குமாரனாகியஎரோ பெயாமினகையாலஅவர்களையிரட்சிததார்.

உ௮. எரோபெயாமின மறறவர்ததமானங களும, அவனசெயதவையனைததும, அவன யுததமபணணி யூதாவுக்கிருநத தமஸகுவை யும, ஆமாததையும இஸரவேலுககாகத திரு மபசசேர்ததுககொணட அவனுடைய வல லமையும இஸரவேல இராசாககளின நாளா கமப் புஸதகததிலலலவோ எழுதியிருககின றது.

உ௯. எரோபெயாம இஸரவேலின இரா சாககளாகிய தனபிதாககளோடே நிததி ரையடைநதபின அவனகுமாரனாகிய சகரி யா அவனஸதலததில இராசாவானான.

## ௰௫. அதிகாரம்.

[(க) அசரீயாவின நலலஆளுகை. (௫) அவ ன குஷடரோகததால மரிதததும, யோத தாம் அவனுக்குபபினனரசாகிவநததும் (அ) ஏகூமின முடிவான சநததியாகிய சகரியா தனயார்ககமாய அரசாணடு சலலூமினால கொலைசெயயபபடடது. (௰௩) சலலூம ஒருமாதம அரசாணடு மெனாகேமினாறகொ லலபபடடது. (௰௯) பூலினால மெனாகேம் பலபபடடது. (உக) அவனுக்குபபினபெக் காகியா அரசாகிவநதது. (உ௩) பெக்காகி யா பெககாவினாறகொலலபபடடது. (உஎ) பெக்காதிகிலாதபிலேசேரினால முறியடிகக பபடடு ஓசேயாவினாற் கொலலப்பட்டது. (௩உ)யோததாமினுடையகெடடஆளுகை. (௩௯)ஆகாஸ அவனுககுபபின அரசாகிவந தது.]

இஸரவேலின இராசாவாகியஎரோபெ யாமின இருபததேழாமவருஷததில யூதாவின இராசாவாகியஅமசியாவினகுமா ரன அசரீயா இராசாவானான.

உ. அவன இராசாவாகிறபோது பதினாறு வயதாயிருநது ஐம்பத்திரணடுவருஷமாயஎரு சலேமிலே அரசாணடான. எருசலேமபட டணததாளான அவனதாயினபேர் எகலோ லியாள.

௩. அவனதனதகபபனாகிய அமசியாசெ யதபடியெலலாங கர்ததரினபார்வைககுச செமமையானதைசசெயதான.

௪. மேடைகளமாததிரம அகறறபபடட திலலை. சனம இனனம மேடைகளமேலே பலியிடடுத தூபஙகாடடுகிறதாயிருநதது.

௫. கர்ததர் இநத இராசாவைவாதிததத னாலே அவனதன மரணநாளமடடுங்குஷட ரோகியாயிருநது தனிததவீடடிலே வாசம பணணினான. இராசாவின குமாரனாகியயோ ததாமோவெனில, அரமனைவிசாரிபபுககார னாயிருநது தேசததினசனததை நியாயம விசாரிததான.

௬. அசரீயாவின மறறவர்ததமானஙகளும, அவனசெயதவையனைததும யூதாவுடைய

இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்ல வோ எழுதியிருக்கின்றது.

௭. அசரியா தன் பிதாக்களோடே நித்திரை யடைந்தபின் அவனைத் தாவீதின் பட்டணத் திலே அவன் பிதாக்களண்டையிலே யடக் கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய யோ த்தாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௮. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தெட்டாம் வருஷத்திலே எரொபெ யாமின் குமாரனாகிய சகரியா இஸ்ரவேலின் மேலே சமாரியாவிலே ஆறுமாதமாய் இராசரியபாரம்பண்ணி,

௯. தன் பிதாக்கள் செய்ததுபோலக் கர்த்த ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெ யாமின் பாவங்களைவிட்டு விலகினதில்லை.

௰. யாபேசின் குமாரனாகிய சல்லூம் அவ னுக்கு விரோதமாகப் பந்துகட்டிப் பண் ணி சனத்தின் முன்பாக அவனை வெட்டிக் கொன்றுபோட்டு அவன் ஸ்தலத்தில் இரா சாவானான்.

௰௧. சகரியாவின் மற்றவர்த்தமானங்கள் இதோ, இஸ்ரவேலின் இராசாக்களின் நாளா கமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின் றது.

௰௨. உன் குமாரர் நாலாந்தலைமுறைமட்டும் இஸ்ரவேலுடைய ஆசனத்தின்மேலிருக்கா த்திருப்பார்களென்று கர்த்தர் ஏகூவோடே சொன்னவார்த்தை யிதுதான். அப்படியே யாயிற்று.

௰௩. யூதாவின் இராசாவாகிய உசியாவின் முப்பத்தொன்பதாம் வருஷத்தில் யாபேசின் குமாரனாகிய சல்லூம் இராசாவாகிச் சமா ரியாவிலொருமாதம் அரசாண்டான்.

௰௪. அந்நேரத்தினில், காதியின் குமாரனாகிய மெனாகேம் திர்சாவிலிருந்து சமாரியாவுக் கேறிவந்து, யாபேசின் குமாரனாகிய சல்லூ மைச் சமாரியாவிலே வெட்டிக்கொன்றுபோ ட்டு அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௫. சல்லூமின் மற்றவர்த்தமானங்களும், அவனுடைய ஒப்பந்தமும் இதோ, இஸ்ர வேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத் திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௰௬. அப்போது மெனாகேம் திப்சாப்பட் டணத்தையும், அதிலிருக்கிறவையனைத்தை யும், திர்சாவைத் துவக்கிப்போகிற அதின் எல்லைகளையும் அவர்கள் தனக்குத் திறந்தில லையென்று இடறடித்து, அவர்களை வெட்டி, அவர்களுடைய கர்ப்பவதிகளையெல்லாம் பீறி னான்.

௰௭. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தொன்பதாம் வருஷந்துவக்கிக் காதி யின் குமாரனாகிய மெனாகேம் இஸ்ரவேல் மேலே சமாரியாவிலே பத்து வருஷமாய் இராசரியபாரம்பண்ணி, அவன் தன் நாள் களிலெல்லாங் கர்த்தரின் பார்வைக்குப் பொ ல்லாப்பானதைச் செய்தான்.

௰௮. இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணி ன நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் பாவங்களைவிட்டு விலகாதிருந்தான்.

௰௯. அசூரின் இராசாவாகிய, பூல் தேசத் திற்கு விரோதமாய் வந்தான். அப்போது பூலின் கைகள் தன்னோடிருக்கும்படிக்கும், இரா சரியபாரத்தை யவன் தன் கையிற் பலப்படுத் துகிறதற்கும் மெனாகேம் அவனுக்கு ஆயி ரந்தாலந்து வெள்ளியைக் கொடுத்தான்.

௨௰. இந்தத் திரவியத்தை அசூரின் இராசா வுக்குக் கொடுக்க, மெனாகேம் இஸ்ரவேலிற் பலத்திருக்கிற அவரவர்களையிலும், ஒவ்வொ ருவன் கையில் ஐம்பது வெள்ளிச்சேக்கலாகத் தண்டினான். அப்படியே அசூரின் இராசா அந்தத்தேசத்திலே நிற்காமல், திரும்பிப் போனான்.

௨௧. மெனாகேமின் மற்றவர்த்தமானங்க ளும், அவன் செய்தவையனைத்தும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்ல வோ எழுதியிருக்கின்றது.

௨௨. மெனாகேம் தன் பிதாக்களோடு நித் திரையடைந்தபின் அவன் குமாரனாகிய பெக காகியா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௩. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் ஐம்பதாம் வருஷந்துவக்கி மெனாகேமின் குமா ரனாகிய பெககாகியா இஸ்ரவேலின் மேலே சமாரியாவில் இரண்டுவருஷமாய் இராசரிய பாரம்பண்ணி,

௨௪. கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப் பானதைச் செய்தான். அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமார னாகிய எரொபெயாமின் பாவங்களைவிட்டு விலகினதில்லை.

௨௫. ஆனால் ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவென்ற அவனுடைய சேர்வைக்கா ரன் அவனுக்கு விரோதமாய்ப் பந்துகட் டிப்பண்ணிக் கீலேயாத்புத்திரரில் ஐம்பது பேரைக்கூட்டிக்கொண்டு, அவனையும், அர் கோபையும், அரியேயையும் இராசாவின் வீடாகிய அரமனையிலே சமாரியாவில் வெட் டிக்கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இரா சாவானான்.

௨௬. பெககாகியாவின் மற்றவர்த்தமான ங்களும், அவன் செய்தவையனைத்தும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ் தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௨௭. யூதாவின் இராசாவாகிய அசரியா வின் ஐம்பத்திரண்டாம் வருஷந்துவக்கி ரெம லியாவின் குமாரனாகிய பெக்கா இஸ்ரவேலின் மேலே சமாரியாவில் இருபது வருஷமாய் இராசரியபாரம்பண்ணி,

௨௮ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களை அவன் விட்டு விலகினதில்லை.

௨௯. இஸ்ரவேலின் இராசாவாகிய பெக்காவின் நாட்களில் அசூரின் இராசாவாகிய திக்லாத்பிலேசேர் வந்து, ஈயோனையும், பெத்மாக்காவென்ற ஆபேலையும், யனோவாகையும், கேதேசையும், ஆத்சோரையும், கிலெயாதையும், கலிலேயாவாகிய நப்தலியின் சமஸ்தத்தையும் பிடித்துக் குடிகளை அசூரியாவுக்குக் கொண்டுபோனான்.

௩௰. ஆனால் ஏலாவின் குமாரனாகிய ஓசெயா ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவுக்கு விரோதமாய்க் கட்டுப்பண்ணி, அவனை உசியாவின் குமாரனாகிய யோதாமின் இருபதாம் வருஷத்தில் வெட்டிக்கொன்றுபோட்டு, அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.

௩௧. பெக்காவின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௩௨. இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவின் இரண்டாம் வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய உசியாவின் குமாரனாகிய யோதாம் இராசாவானான்.

௩௩. அவன் இராசாவாகிறபோது, இருபத்தைந்து வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறுவருஷம் அரசாண்டான். சாதோக்கின் குமாரத்தியாகிய அவன் தாயின்பேர் எருஷாள்.

௩௪. அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். தன் தகப்பனாகிய உசியா செய்தபடியெல்லாம் செய்தான்.

௩௫. மேடைகள்மாத்திரம் அகற்றப்படவில்லை. சனம் இன்னும் மேடைகளின்மேலே பலியிட்டுத் தூபங்காட்டிவந்தாயிருந்தது. இவன் கர்த்தருடைய வீட்டின் உயர்ந்த வாசலைக் கட்டினான்.

௩௬. யோதாமின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும், யூதா இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௩௭. அந்நாட்களிலே கர்த்தர் சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனையும், ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவையும் யூதாவில் அனுப்பத்துவக்கினார்.

௩௮. யோதாம் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டையில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன்ஸ்தானத்தில் இராசாவானான்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) ஆகாசின் கெட்ட ஆளுகை. (௫) ஆகாஸ் ரேத்சீனாலும் பெக்காவினாலும் நெருக்கப்பட்டபோது அவர்களுடன் யுத்தம்பண்ணத் திக்லாத்பிலேசேருக்குக் கூலிகொடுத்தது. (௰) ஆகாஸ் தமஸ்குவிலிருந்த பலிபீடத்தின் மாதிரியை உரியாவுக்கு அனுப்பி யதின்படி செய்வித்தது. வெண்கலப்பலிபீடத்தைத் தன் தொழுகைக்கு வைத்துக்கொண்டது. (௰௭) அவன் ஆலயத்திற்கு அழித்தவைகளைச் சிரசித்தது. (௰௯) எசேக்கியா அவனுக்குப்பின் அரசாளவந்தது.]

ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவின் பதினேழாம்வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய யோதாமின் குமாரன் ஆகாஸ் இராசாவானான்.

௨. ஆகாஸ் இராசாவாகிறபோது இருபது வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறுவருஷம் அரசாண்டான். ஆனால் அவன் தன் தகப்பனாகிய தாவீதைப்போலத் தன் பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,

௩. இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து, கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன் குமாரனைமுதலாய் அக்கினியை மிதிக்கப்பண்ணினான்.

௪. மேடைகளிலும், மேடுகளின்மேலும், பச்சையான சகல மரத்தின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.

௫. அப்போது சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனும், இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ண வந்து, ஆகாசை முற்றிக்கைபோட்டார்கள். ஆனால் அதைப் பிடிக்கமாட்டாதேபோனார்கள்.

௬. அக்காலத்திலே சீரியாவின் இராசாவாகிய ரேத்சீன் ஏலாத்தைத் திரும்பச் சீரியாவோடே சேர்த்துக்கொண்டு, யூதரை ஏலாத்திலிருந்து துரத்தினான். சீரியர் ஏலாத்துக்கு வந்து, இந்நாள்வரைக்கும் அவ்விடத்திலே குடியாயிருந்தார்கள்.

௭. ஆகாஸோவென்றால், அசூரின் இராசாவாகிய திக்லாத்பிலேசேரண்டைக்குத் தூதுகளையனுப்பி, நான் உமதுடைய அடியானும், உமதுடைய குமாரனுமாயிருக்கிறேன். நீர் எழுந்து, எனக்கு விரோதமாயெழும்பின சீரியாவுடைய இராசாவின் கைக்கும், இஸ்ரவேல் இராசாவின் கைக்கும் என்னை நீங்கலாக்கவேண்டுமென்று சொல்லச்சொல்லி,

௮. கர்த்தருடைய வீட்டிலும், இராசாவின் வீட்டுப்பொக்கிஷங்களிலும் அகப்பட்ட வெள்ளியையும், பொன்னையும் எடுத்து, அசூ

ன இராசாககளணடையிலே அடககமபண
ணபபடடான. அவன குமாரனாகிய எரோ
பெயாம அவன ஸதலததிலஇராசாவானான.

௧௭. இஸரவேலின இராசாவாகிய யோவா
காகின குமாரன யோவாசுமரணமடைநத
பின யூதாவின இராசாவாகிய யோவாசின
குமாரன அமத்சியாபதினைநதுவருஷம உயி
ரோடிருநதான.

௧௮. அமத்சியாவினமறறவர்த்தமானஙகள்
யூதாவுடைய இராசாககளின நாளாகமப
புஸதகததிலலலவோ எழுதியிருககினறது.

௧௯. எருசலேமிலே அவனுககுவிரோதமா
க ஒபபநதமபணணினார்கள. அபபோது
லாகீசுக்கோடிபபோனான. ஆனால அவர்கள்
அவன பிறகாலே லாகீசுககுமனுஷரையனு
பபி அஙகேயவனைககொனறுபோடடு,

௨௰. குதிரைகளமேல அவனையேற்றிக்கொண்டுவந
தார்கள. அவனஎருசலேமிலிருககிற தாவீ
தின படடணததிலே தனபிதாககளணடை
யிலே யடககமபணணபபடடான.

௨௧. யூதசனமெலலாம பதினாறுவயதுள்ள
அசரீயாவை யழைததுககொணடு அவனை யவன
தகபபனாகிய அமத்சியாவின ஸதலத்தில
இராசாவாககினார்கள்.

௨௨. இராசா தனபிதாககளோடே நிததி
ரையடைநதபிறபாடு இவன ஏலாத்தைக்கட்டி
யதைத்திருமப யூதாவினவசமாக்கிககொண
டான.

௨௩. யூதாவின இராசாவாகியயோவாசின
குமாரன அமத்சியாவின பதினைநதாமவருஷ
ததுவககி இஸரவேலின இராசாவாகிய யோ
வாசின குமாரன எரோபெயாம, சமாரியா
வில நாறபததொருவருஷமாய அரசாணடு,

௨௪. கர்ததரினபார்வைககுப பொலலாப
பானதைச்செயதான. இஸரவேலைபபாவஞ்
செயயபபணணின நேபாதின குமாரனான
எரோபெயாமினசகலபாவஙகளையும் அவன
விடடுவிலகினதிலலை.

௨௫. காத்தேபபேர் ஊராராகியஅமிததா
யெனற தீர்ககதரிசியின குமாரனான யோனா
வெனற தமமுடைய ஊழியககாரனைககொ
ணடு இஸரவேலின பராபரனாகிய கர்ததர்
சொலலியிருநத வார்ததையினபடியே அவ
ன ஆமாததின எலலைமுதறகொணடு சமபான
பூமியினகடலமடடுமுளள இஸரவேலினஎல
லைகளைத் திருமபச்சேர்ததுககொணடான.

௨௬. ஏனெனில, இஸரவேலின சிறுமைத
னமமெததக கடுமையெனறும, அடைக
கபபடடவனுமிலலை. விடுதலையானவனுமில
லை. இஸரவேலுககொததாசை செயகிறவ
னுமிலலையெனறுங் கர்ததர்பார்ததார்.

௨௭. இஸரவேலினபேரை வானததின கீ
ழிருநதுகுலைபபோமெனறு கர்ததர்சொல
லாதிருநது யோவாசின குமாரனாகியஎரோ
பெயாமினகையால அவர்களையிரட்சிததார்.

௨௮. எரோபெயாமின மறறவர்த்தமானங
களும, அவனசெயததையனைததும, அவன
யுததமபணணி யூதாவுக்கிருநத தமஸகுவை
யும, ஆமாததையும இஸரவேலுககாகத திரு
மபச்சேர்ததுககொணட அவனுடைய வல
லமையும இஸரவேல இராசாககளின நாளா
கமப் புஸதகததிலலலவோ எழுதியிருககின
றது.

௨௯. எரோபெயாம இஸரவேலின இரா
சாககளாகிய தனபிதாககளோடே நிததி
ரையடைநதபின அவனகுமாரனாகிய சகரீ
யா அவனஸதலததில இராசாவானான.

## ௰ரு. அதிகாரம்.

[(க) அசரீயாவின நலலஆளுகை. (ரு) அவ
ன குஷடரோகததால மரிததது, யோத
தாம அவனுக்குப்பினனரசாகிவநதது. (அ)
ஏகூவின முடிவான சநததியாகிய சகரீயா
தனயார்ககமாய அரசாணடு சலலூமினால
கொலைசெயயபபடடது. (௰௩) சலலூம
ஒருமாதம அரசாணடு மெனாகேமினாறகொ
லலபபடடது. (௰௯) பூலினால மெனாகேம்
பலபபடடது. (௨௨) அவனுககுபபினபெக்
காகியா அரசாகிவநதது. (௨௫) பெக்காகி
யா பெககாவினாறகொலலபபடடது. (௨௭)
பெக்காவின காலததிலே சேரினாலமுறியடிகக
பபடடு ஓசேயாவினாற் கொலலப்பட்டது.
(௩௨) யோததாமினுடையநலலஆளுகை.
(௩௮) ஆகாஸ அவனுககுபபின அரசாகிவந
ததது.]

இஸரவேலின இராசாவாகியஎரோபெ
யாமின இருபததேழாமவருஷததில
யூதாவின இராசாவாகியஅமத்சியாவினகுமா
ரன அசரீயா இராசாவானான.

௨. அவன இராசாவாகிறபோது பதினாறு
வயதாயிருநது ஐம்பத்திரணடுவருஷமாயஎரு
சலேமிலே அரசாணடான. எருசலேமபட
டணததாளான அவனதாயினபேர் எககோ
லியாள.

௩. அவனதனதகபபனாகிய அமத்சியாசெ
யதபடியெலலாங கர்ததரினபார்வைககுச
செமமையானதைசசெயதான.

௪. மேடைகளமாததிரம அகறறபபடட
திலலை. சனம இனனம மேடைகளமேலே
பலியிடடுத தூபஙகாடடுகிறதாயிருநதது.

௫. கர்ததர் இநத இராசாவைவாதிததத
னாலே அவனதன மரணநாளமடடுங்குஷட
ரோகியாயிருநது தனிததவீடடிலே வாசம
பணணினான. இராசாவின குமாரனாகியயோ
ததாமோவெனில, அரமனைவிசாரிபபுககார
னாயிருநது தேசததினசனததை நியாயம
விசாரிததான.

௬. அசரீயாவின மறறவர்த்தமானஙகளும,
அவனசெயததையனைததும யூதாவுடைய

இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௭. அசரியா தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவனைத் தாவீதின்பட்டணத்திலே அவன் பிதாக்களண்டையிலே யடக்கம்பண்ணினார்கள். அவன் குமாரனாகிய யோதாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௮. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தெட்டாம் வருஷத்திலே எரொபெயாமின் குமாரனாகிய சகரியா இஸ்ரவேலின் மேலே சமாரியாவிலே ஆறுமாதமாய் இராசரிய பாரம்பண்ணி,

௯. தன் பிதாக்கள் செய்ததுபோலக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் பாவங்களை அவன் விட்டுவிலகினதில்லை.

௰. யாபேசின் குமாரனாகிய சல்லூம் அவனுக்கு விரோதமாகப் பந்துக்கட்டுப்பண்ணி சனத்தின் முன்பாக அவனை வெட்டிக்கொன்றுபோட்டு அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௧. சகரியாவின் மற்றவர்த்தமானங்கள் இதோ, இஸ்ரவேலின் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௰௨. உன் குமாரர் நாலாந்தலைமுறைமட்டும் இஸ்ரவேலுடைய ஆசனத்தின்மேலுட்கார்ந்திருப்பார்களென்று கர்த்தர் ஏகூவோடே சொன்ன வார்த்தை இதுதான். அப்படியே யாயிற்று.

௰௩. யூதாவின் இராசாவாகிய உசியாவின் முப்பத்தொன்பதாம் வருஷத்தில் யாபேசின் குமாரனாகிய சல்லூம் இராசாவாகிச் சமாரியாவிலொருமாதம் அரசாண்டான்.

௰௪. அத்தெத்தினில், காதியின் குமாரனாகிய மெனாகேம் திர்சாவிலிருந்து சமாரியாவுக்கேறிவந்து, யாபேசின் குமாரனாகிய சல்லூமைச் சமாரியாவிலே வெட்டிக்கொன்றுபோட்டு அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௰௫. சல்லூமின் மற்றவர்த்தமானங்களும், அவனுடைய ஒப்பந்தமும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௰௬. அப்போது மெனாகேம் திப்சாப்பட்டணத்தையும், அதிலிருக்கிறவையனைத்தையும், திர்சாவைத் துவக்கிப்போகிற அதின் எல்லைகளையும் அவர்கள் தனக்குத் திறக்கவில்லையென்று இடறடித்து, அவர்களை வெட்டி, அவர்களுடைய கர்ப்பவதிகளையெல்லாம் கீறினான்.

௰௭. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் முப்பத்தொன்பதாம் வருஷத்துவக்கத்திலே காதியின் குமாரனாகிய மெனாகேம் இஸ்ரவேல் மேலே சமாரியாவிலே பத்து வருஷமாய் இராசரியபாரம்பண்ணி, அவன் தன் நாள்களிலெல்லாம் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௰௮. இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் பாவங்களைவிட்டு விலகாதிருந்தான்.

௰௯. அசூரின் இராசாவாகிய, பூல் தேசத்துக்கு விரோதமாய் வந்தான். அப்போது பூல் தன்னைக் கைகொடுத்திருக்கிறதற்கும், இராசரியபாரத்தை யவன் தன் கையில் ஸ்திரப்படுத்துகிறதற்கும் மெனாகேம் அவனுக்கு ஆயிரந்தாலந்து வெள்ளியைக் கொடுத்தான்.

௨௰. இந்தத் திரவியத்தை அசூரின் இராசாவுக்குக் கொடுக்க, மெனாகேம் இஸ்ரவேலிலே பலத்திருக்கிற அவரவர் கையிலும், ஒவ்வொருவனைகையில் ஐம்பது வெள்ளிச்சேக்கலாகத் தண்டினான். அப்படியே அசூரின் இராசா அங்கே தேசத்திலே நிற்காமல், திரும்பிப் போனான்.

௨௧. மெனாகேமின் மற்றவர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௨௨. மெனாகேம் தன் பிதாக்களோடு நித்திரையடைந்தபின் அவன் குமாரனாகிய பெக்காகியா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௩. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் ஐம்பதாம் வருஷத்துவக்கில் மெனாகேமின் குமாரனாகிய பெக்காகியா இஸ்ரவேலின் மேலே சமாரியாவில் இரண்டுவருஷமாய் இராசரிய பாரம்பண்ணி,

௨௪. கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். அவன் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய எரொபெயாமின் பாவங்களைவிட்டு விலகினதில்லை.

௨௫. ஆனால் ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவென்ற அவனுடைய சேர்வைக்காரன் அவனுக்கு விரோதமாய்ப் பந்துக்கட்டுப்பண்ணிக் கிலெயாத்புத்திரரில் ஐம்பதுபேரைக் கூட்டிக்கொண்டு, அவனையும், அர்கோபையும், ஆரியேயையும் இராசாவின் வீடாகிய அரமனையிலே சமாரியாவிலே வெட்டிக்கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௨௬. பெக்காகியாவின் மற்றவர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௨௭. யூதாவின் இராசாவாகிய அசரியாவின் ஐம்பத்திரண்டாம்வருஷத்துவக்கில் ரெமலியாவின் குமாரனாகிய பெக்கா இஸ்ரவேலின் மேலே சமாரியாவில் இருபது வருஷமாய் இராசரியபாரம்பண்ணி,

௨௮ கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களை அவன் விட்டு விலகினதில்லை.

௨௯. இஸ்ரவேலின் இராசாவாகிய பெக்காவின் நாட்களில் அசூரின் இராசாவாகிய திகிலாத்பிலேசேர் வந்து, ஈயோனையும், பெத்மாக்காவென்ற ஆபேலையும், யனோவாகையும், கேதேசையும், ஆத்சோரையும், கிலெயாதையும், கலிலேயாவாகிய நப்தலிதேசமனைத்தையும் பிடித்துச் சனங்களை அசூரியாவுக்குக் கொண்டுபோனான்.

௩௰. ஆனால் ஏலாவின் குமாரனாகிய ஓசேயா ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணி, அவனை உசியாவின் குமாரனாகிய யோதாமின் இருபதாம் வருஷத்தில் வெட்டிக்கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

௩௧. பெக்காவின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும் இதோ, இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௩௨. இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவின் இரண்டாம் வருஷத்தில் யூதாவின் இராசாவாகிய உசியாவின் குமாரனாகிய யோதாம் இராசாவானான்.

௩௩. அவன் இராசாவாகிறபோது, இருபத்தைந்து வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறு வருஷம் அரசாண்டான். சாதோக்கின் குமாரத்தியாகிய அவன் தாயின்பேர் எருஷாள்.

௩௪. அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான். தன் தகப்பனாகிய உசியா செய்தபடியெல்லாஞ் செய்தான்.

௩௫. மேடைகள் மாத்திரம் அகற்றப்பட்டதில்லை. சனம் இன்னமும் மேடைகளின்மேலே பலியிட்டுத் தூபங்காட்டிவந்தாயிருந்தது. இவன் கர்த்தருடைய வீட்டின் உயர்ந்த வாசலைக் கட்டினான்.

௩௬. யோதாமின் மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்தவையனைத்தும் யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

௩௭. அந்நாட்களிலே கர்த்தர் சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனையும், ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவையும் யூதாவில் அனுப்பத் தொடங்கினார்.

௩௮. யோதாம் தன் பிதாக்களோடே நித்திரையடைந்தபின் அவன் தகப்பனாகிய தாவீதின்பட்டணத்தில் தன் பிதாக்களண்டையில் அடக்கம்பண்ணப்பட்டான். அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) ஆகாஸின் கெட்ட ஆளுகை. (௫) ஆகாஸ் ரேத்சீனாலும் பெக்காவினாலும் நெருக்கப்பட்டபோது அவர்களுடன் யுத்தம்பண்ணத் திகிலாத்பிலேசேருக்குக் கேளிகொடுத்தது. (௰) ஆகாஸ் தமஸ்குவிலிருந்த பலிபீடத்தின் மாதிரியை உரியாவுக்கு அனுப்பி யதின்படி செய்வித்து வெண்கலப்பலிபீடத்தைத் தன் தொழுதலுக்குவைத்துக்கொண்டது. (௰௭) அவன் ஆலயத்திற்கு அடுத்தவைகளைச் சிதைத்தது. (௰௯) எசேக்கியா அவனுக்குப்பின் அரசாள்வது.]

ரெமலியாவின் குமாரனாகிய பெக்காவின் பதினேழாம் வருஷத்தில் யூதாவின் இராசாவாகிய யோதாமின் குமாரன் ஆகாஸ் இராசாவானான்.

௨. ஆகாஸ் இராசாவாகிறபோது இருபது வயதாயிருந்து, எருசலேமிலே பதினாறு வருஷம் அரசாண்டான். ஆனால் அவன் தகப்பனாகிய தாவீதைப்போலே தன் தேவனாகிய கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,

௩. இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து, கர்த்தர் இஸ்ரவேல்புத்திரருக்கு முன்பாகத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன் குமாரனைமுதலாய் அக்கினியை மிதிக்கப்பண்ணினான்.

௪. மேடைகளிலும், மேடுகளின்மேலும், பச்சையான சகல மரத்தின் கீழும் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.

௫. அப்போது சீரியாவின் இராசாவாகிய ரேத்சீனும், இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலியாவின் குமாரன் பெக்காவும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ண ஏறிவந்து, ஆகாஸை முற்றிக்கைபோட்டார்கள். ஆனால் அவனைப் பிடிக்கமாட்டாதேபோனார்கள்.

௬. அக்காலத்திலே சீரியாவின் இராசாவாகிய ரேத்சீன் ஏலாத்தைத் திரும்பச் சீரியாவோடே சேர்த்துக்கொண்டு, யூதரை ஏலாத்திலிருந்து துரத்தினான். சீரியர் ஏலாத்துக்கு வந்து, இந்நாள்வரைக்கும் அவ்விடத்திலே குடியாயிருந்தார்கள்.

௭. ஆகாஸோவென்றால், அசூரின் இராசாவாகிய திகிலாத்பிலேசேரண்டைக்குத் தூதுபதிகளையனுப்பி, நான் உம்முடைய அடியானும், உம்முடைய குமாரனுமாயிருக்கிறேன். நீர் ஏறிவந்து, எனக்கு விரோதமாயெழும்பின சீரியாவுடைய இராசாவின் கைக்கும், இஸ்ரவேல் இராசாவின் கைக்கும் என்னை நீர் காக்கவேண்டுமென்று சொல்லச்சொல்லி,

௮. கர்த்தருடைய வீட்டிலும், இராசாவின் வீட்டுப்பொக்கிஷங்களிலும் அகப்பட்ட வெள்ளியையும், பொன்னையும் எடுத்து, அசூ

௬. ஓசேயாவின் ஒன்பதாம் வருஷத்தில் அசூரின் இராசா சமாரியாவைப்பிடித்து இஸ்ரவேலை அசூரியாவுக்குச்சிறைபிடித்துப் போய், அவர்களைக்கோசான்நதியோரமான ஆலாகிலும், ஆபோரிலும், மேதியரின்பட்டணங்களிலுங் குடியேற்றுவித்தான்.

௭. அதேதென்றால் எகிப்தின்இராசாவாகிய பார்வோனுடையகையின் கீழிருந்த தங்களை எகிப்துதேசத்திலிருந்தேற்பண்ணின தங்கள் பராபரனாகிய கர்த்தருக்குவிரோதமாக இஸ்ரவேல்புத்திரர் பாவஞ்செய்து, வேறே தேவர்களுக்குப்பயந்துநடந்து,

௮. கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன் பாகத் துரத்தின்சாதிகளின் வழிபாடுகளிலும் நடந்துகொண்டிருந்தார்கள்.

௯. செம்மையல்லாத காரியங்களுக்குஇஸ்ரவேல்புத்திரர் தங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகப் போகச்சொல்லிக்கொண்டு, சாமங்காக்கிற கோபுரங்களைத் துவக்கி அரணான பட்டணங்கள்மட்டுமுள்ள தங்களெல்லா ஊர்களிலுந் தங்களுக்கு மேடைகளைக்கட்டி,

௰. உயர்ந்த சகலமேட்டின்மேலும், பச்சையான சகலமரத்தின்கீழுந் தங்களுக்குச் சிலைகளையும், விக்கிரகத்தோப்புகளையும் நிறுத்தி,

௰௧. கர்த்தர் தங்களைவிட்டுக் குடிவிலக்கின சாதிகளைப்போலே அங்கே சகலமேடைகளிலுந் தூபங்காட்டிக் கர்த்தருக்குக்கோபமுண்டாக்கப் பொல்லாத காரியங்களைச் செய்து,

௰௨. இப்படிச் செய்யாதேயுங்களென்று கர்த்தர் தங்களை விலக்கச்சொன்ன நரகலான தேவர்களைச் சேவித்துக் கொண்டிருந்தார்கள்.

௰௩. நீங்கள் உங்கள் பொல்லாத வழிகளை விட்டுத்திரும்பி நானுங்கள் பிதாக்களுக்குக் கற்பித்ததும், நம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு உங்களுக்குக் கற்பித்ததுமான நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் நம்முடைய கற்பனைகளையும், நம்முடைய கட்டளைகளையுங் கைக்கொள்ளுங்களென்று கர்த்தர் எல்லாத்தீர்க்கதரிசிகளையும், எல்லாஞானதிர்ஷ்டிக்காரரையுங் கொண்டு இஸ்ரவேலுக்கும், யூதாவுக்குந் திடச்சாட்சியாயெச்சரித்துக்கொண்டிருந்தாலும்,

௰௪. அவர்கள் கேள்விகொடாமல், தங்கள் பராபரனாகிய கர்த்தர்மேலேவிசுவாசியாதே போன கடினக்கழுத்தான தங்கள் பிதாக்களைப்போலத் தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி,

௰௫. அவருடைய கட்டளைகளையும், அவர் தங்கள் பிதாக்களோடேபண்ணின அவருடைய உடம்படிக்கையையும், அவர் தங்களுக்குத் திடச்சாட்சியாய்க் காண்பித்த அவருடைய சாட்சிகளையும்வெறுத்துவிட்டு மாயையைப்பின்பற்றி மாயைக்காரராகிஅவர்களைச் சுற்றிலுமிருக்கிறவர்களைப்போல அவர்களைச் செய்யவேண்டாமென்று கர்த்தர் அவர்களுக்குக் கற்பித்திருக்கிறதே. அந்தச் சாதிகளைத்தான் அவர்கள்பின்பற்றி,

௰௬. தங்கள் பராபரனாகிய கர்த்தரின்கற்பனைகளையெல்லாம் விட்டுவிட்டு இரண்டு கன்றுக்குட்டிகளாகிய வார்ப்பித்த சுரூபங்கள் தங்களுக்குண்டாக்கி, விக்கிரகத்தோப்புகளைநாட்டி வானத்தின் சேனையையெல்லாம் பணிந்துகொண்டு பாகாலைச்சேவித்தார்கள்.

௰௭. அவர்கள் தங்கள் குமாரரையும், தங்கள் குமாரத்திகளையும், அக்கினிமிதிக்கப்பண்ணி நிமித்தங்களைப்பார்த்துச் சகுனங்களை நம்பிக் கர்த்தருக்குக் கோபமுண்டாக்க அவர் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்கிறதற்குத் தங்களை விற்றுப்போட்டார்கள்.

௰௮. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின் மேல் மிகவுங்கோபமடைந்து அவர்களைத் தம்முடைய முகத்தைவிட்டகற்றினார். யூதா கோத்திரமாத்திரமே மீதியாயிற்று.

௰௯. யூதாவுந் தங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொள்ளாமல், இஸ்ரவேல் திட்டம்பண்ணினவழிபாடுகளில் நடந்தார்கள்.

௨௰. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின்வித்தாரையெல்லாம்புறக்கணித்து, அவர்களைத் தம்முடையமுகத்தைவிட்டுத் தள்ளுமட்டாகவொடுக்கி, அவர்களைப் பறிகாரர்கையில் ஒப்புக்கொடுத்தார்.

௨௧. ஏனெனில், இஸ்ரவேல் தாவீதுவீட்டாரைப்பிரிந்து நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமை இராசாவாக்கினார்கள். அப்போது எரோபெயாம் இஸ்ரவேலைக் கர்த்தரைவிட்டுப் பின்வாங்கவும், பெரியபாவத்தைச்செய்யவும் பண்ணினான்.

௨௨. அப்படியேஇஸ்ரவேல்புத்திரர்எரோபெயாம் செய்த எல்லாப்பாவங்களிலும் நடந்துகொண்டு,

௨௩. கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய எல்லா ஊழியக்காரரைக்கொண்டு சொல்லியிருந்தபடி தம்முடையமுகத்தை விட்டகற்றுமட்டாக அவைகளைவிட்டுவிலகாதிருந்தார்கள். இப்படியே இஸ்ரவேல் இந்நாள்வரைக்குந் தங்கள் சீமையிலேகுடியாயிருந்து அசூரியாவுக்குக் கொண்டுபோகப்பட்டது.

௨௪. அசூரின் இராசாவோவெனில், பாபேலிலும், கூத்தாவிலும், ஆபாவிலும், ஆமாத்திலும், செப்பார்வாயிமிலுமிருந்து மனுஷரைவரப்பண்ணி, அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்குப் பதிலாகச் சமாரியாவின்பட

டணங்களிலே குடியேற்றினான். இவர்கள் சமாரியாவைச் சொந்தமாய்க் கட்டிக்கொண்டு அதின் பட்டணங்களிலே குடியிருந்தார்கள்.

௨௫. கர்த்தருக்குப் பயப்படாத அவர்கள் அங்கே குடியிருக்கத் துவக்கின போதோவென்னில், கர்த்தர் அவர்களுக்குள்ளே சிங்கங்களை யனுப்பினார். அவைகள் அவர்களில் சிலரைக் கொன்றுபோட்டன.

௨௬. அப்போது அசூரின் இராசாவுக்கு நீர் இங்கேயிருந்தனுப்பிச் சமாரியாவின் பட்டணங்களிலே குடியேற்றுவித்த சாதிகள் அந்தத் தேசத்தினுடைய தேவனுடைய நியாயத்தை யறியாதபடியினாலே அவர்களுக்குள்ளே சிங்கங்களை யனுப்பினார். இதோ அந்தத் தேசத்தினுடைய தேவனுடைய நியாயத்தை யவர்களறியாதபடியினாலே, அவைகள் அவர்களைக் கொன்று போடுகின்றனவென்று சொன்னார்கள்.

௨௭. அப்போது அசூரின் இராசா, நீங்கள் அங்கேயிருந்து கொண்டுவந்த ஆசாரியர்களிலொருவனை யங்கே யழைத்துக்கொண்டு போங்கள். அவர்கள் போய் அங்கே குடியிருக்கும்படிக்கு, இவன் அவர்களுக்கு அந்தத் தேசத்தினுடைய தேவனுடைய நியாயத்தைப் போதிக்கக்கடவனென்று கற்பித்தான்.

௨௮. அப்படியே அவர்கள் சமாரியாவிலிருந்து கொண்டு போயிருந்த ஆசாரியர்களிலொருவன் வந்து, பெத்தேலிலே குடியிருந்து கர்த்தருக்குப் பயந்து நடக்கிறவிதத்தை யவர்களுக்குப் போதித்தான்.

௨௯. ஆனால் அந்தந்தச் சாதி அந்தந்தத் தேவர்களைத் தங்களுக்குண்டாக்கி, ஒவ்வொரு சாதியாகிய அந்தச் சமாரியர் குடியேறின தங்கள் தங்கள் பட்டணங்களிலுண்டுபண்ணின மேடைகளின் வீடுகளிலே வைத்தார்கள்.

௩௰. பாபேலின் மனுஷர் சுக்கோத் பெனோத்தையும், கூத்தின் மனுஷர் நேர்காலையும், ஆமாத்தின் மனுஷர் அசிமாவையும்,

௩௧. ஆவியர் நிபேகாசையும், தர்த்தாகையும் உண்டாக்கினார்கள். செப்பர்வியர், செப்பர்வாயிமின் தேவர்களாகிய அத்ரமேலெக்குக்கும், அனமேலெக்குக்கும் தங்கள் பிள்ளைகளை யக்கினியாலே தகனிப்பார்கள்.

௩௨. அவர்கள் கர்த்தருக்கும் பயந்தார்கள். மேடைகளின் வீடுகளிலே தங்களுக்காக ஆராதனை செய்கிறதற்காகத் தங்களுக்குள் நீசமானவர்களிலே தங்களுக்கு ஆசாரியர்களை யேற்படுத்தினார்கள்;

௩௩. அப்படியே கர்த்தருக்கும் பயந்து, தாங்கள் விட்டுவந்த சாதிகளுடைய முறைமையின்படியே தங்கள் தேவர்களையுஞ் சேவித்திருந்தார்கள்.

௩௪. இந்நாள்வரைக்கும் அவர்கள் தங்கள் முந்தின முறைமைகளின்படியே செய்கிறார்கள். அவர்கள் கர்த்தருக்குப் பயந்து நடக்கிறதுமில்லை. தங்கள் சட்டதிட்டங்களின் முறைமைகளின்படியாகிலும், கர்த்தர் இஸ்ரவேலென்று பேரிட்ட யாக்கோபின் புத்திரருக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்திற்கும், கற்பனைக்கும் ஏற்றபடியேயாகிலும் செய்கிறதுமில்லை.

௩௫. அதெதென்னில், கர்த்தர் இவர்களோடே உடன்படிக்கைபண்ணி, இவர்களுக்குக் கற்பித்ததாவது; நீங்கள் வேறே தேவர்களுக்குப் பயப்படாமலும், அவர்களைப் பணிந்துகொள்ளாமலும், சேவிக்காமலும், அவர்களுக்குப் பலியிடாமலும்,

௩௬. உங்களை மகா வல்லமையினாலும், நீட்டின புயத்தினாலும், எகிப்துதேசத்திலிருந்து தேறிவரப்பண்ணின கர்த்தருக்கே பயந்து அவரையே பணிந்துகொண்டு அவருக்கே பலியிட்டு,

௩௭. அவர் உங்களுக்கெழுதிக்கொடுத்த திட்டங்களின்படியும், முறைமைகளின்படியும், நியாயப்பிரமாணத்தின்படியும், கற்பனைகளின்படியுமே நீங்கள் சகல நாளுஞ்செய்கிறதற்குக் கவனமாயிருந்து வேறே தேவர்களுக்குப் பயப்படாதிருங்கள்.

௩௮. நாம் உங்களோடே பண்ணின உடன்படிக்கையை மறக்காமலும், வேறே தேவர்களுக்குப் பயப்படாமலும்,

௩௯. உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கே பயந்து நடப்பீர்களாக. அப்போது அவர் உங்களை யுங்களெல்லாச் சத்துருக்களின் கைக்குந் தப்புவிப்பாரென்று அவர்களுக்குக் கற்பித்திருந்தார்.

௪௰. ஆனால் அவர்கள் கேள்விகொடாமல் தங்கள் முந்தின முறைமைகளின்படியே செய்தார்கள்.

௪௧. அப்படியே அந்தச் சாதிகள் கர்த்தருக்கும் பயந்து தங்கள் விக்கிரகங்களையுஞ் சேவித்திருந்தார்கள். அவர்கள் பிள்ளைகளும், அவர்கள் பிள்ளைகளின் பிள்ளைகளுந் தங்கள் பிதாக்கள் செய்தபடியே இந்நாள்வரைக்குஞ் செய்கிறார்கள்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) எசேக்கியாவின் நல்ல அரசாட்சி. (௪) அவன் விக்கிரகாராதனையைத் தடுத்து வாழ்ந்தது. (௯) சமாரியாதேசத்தார் தங்கள் பாவத்துக்காகச் சிறைகொண்டு போகப்பட்டது. (௰௩) சனகெரிப் யூதாவிலேறிவந்தபோது, திரவியம் வாங்கிக்கொண்டு சமாதானப்பட்டது. (௰௭) மறுபடியும் சனகெரிப்பினால் அனுப்பப்பட்ட ரப்சாக்கே எசேக்கியாவை நிந்தித்த தூஷணவார்த்தைகளினால் சனங்களைக் கலக்கப்பண்ணினது.]

இஸ்ரவேலின் இராசாவாகிய ஏலாவின் குமாரன் ஓசேயாவின் மூன்றாம் வருஷத்திலே

ஷத்திலேயென்றால், ஆகாசென்ற யூதாவுடைய இராசாவின் குமாரனாகிய எசேக்கியா இராசாவானான்.

௨. அவன் இராசாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து, எருசலேமிலே இருபத்தொன்பது வருஷம் அரசாண்டான். சகரியாவின் குமாரத்தியாகிய அவன் தாயின் பேர் ஆபி.

௩. அவன் தன் தகப்பனாகிய தாவீது செய்தபடியெல்லாம், கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.

௪. அவன் மேடைகளையகற்றிச் சிலைகளைத் தகர்த்து விக்கிரகத் தோப்பைவெட்டி, மோசே பண்ணியிருந்த வெண்கலச் சர்ப்பத்தையுடைத்துவிட்டான். ஏனென்றால், அந்நாள்கள் மட்டும் இஸ்ரவேல் புத்திரர் அதற்குத் தூபங்காட்டினார்கள். அதை வெண்கலத்துண்டென்று சொன்னான்.

௫. அவன் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின்மேல் வைத்த நம்பிக்கையிலே அவனுக்குப் பிற்பாடும் அவனுக்கு முன்னுமிருந்த யூதாவின் இராசாக்களிலெல்லாம் அவனைப் போலொத்தவனிருந்ததில்லை.

௬. அவன் கர்த்தரைவிட்டுப் பின்வாங்காமல் அவரைச் சார்ந்திருந்து, கர்த்தர் மோசேக்குக் கற்பித்த அவர் கற்பனைகளைக் கைக்கொண்டான்.

௭. ஆகையால் கர்த்தர் அவனோடிருந்தார். அவன் செய்யப்புறப்பட்டிற காரியமெல்லாம் அவனுக்குக் கைகூடிவந்தன. அவன் அசூரின் இராசாவைச் சேவிக்காமல், அவனைவிட்டு மருளவிழுந்தான்.

௮. அவன் பெலிஸ்தரைக் காசா மட்டுக்கும் அதின் எல்லைகள் பரியந்தமும், சாமங்காக்கிற கோபுரங்களைத் துவக்கி அரணான பட்டணங்கள் பரியந்தமும் இடறடித்தான்.

௯. இஸ்ரவேலின் இராசாவாகிய ஏலாவின் குமாரன் ஓசெயாவின் ஏழாம் வருஷமாகிற எசேக்கியா இராசாவின் நாலாம் வருஷத்திலே சம்பவித்ததேதென்றால், அசூரின் இராசாவாகிய சல்மனாசார் சமாரியாவுக்கு விரோதமாய் எறிவந்து அதை முற்றிக்கை போட்டான்.

௰. மூன்று வருஷஞ் சென்றபிற்பாடு அவர்கள் அதை எசேக்கியாவின் ஆறாம் வருஷத்திலே பிடித்தார்கள். சமாரியா பிடிபட்டது. இஸ்ரவேலின் இராசாவாகிய ஓசெயாவின் ஒன்பதாம் வருஷமாயிருந்தது.

௰௧. அசூரின் இராசா இஸ்ரவேலை அசூரியாவுக்குச் சிறைபிடித்துக்கொண்டு போய்க் கோசான் நதியோரமான ஆலாகிலும், ஆபோரிலும், மேதியரின் பட்டணங்களிலுமிருக்கப்பண்ணினான்.

௰௨. ஏனென்றால், அவர்கள் தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்திற்குச் செவிகொடாமல் அவருடைய உடம்படிக்கையையும், கர்த்தரின் தாசனாகிய மோசே கற்பித்தயாவையும் மீறி, அதற்குச் செவிகொடாமலும், அதின்படிச் செய்யாமலுமிருந்தார்கள்.

௰௩. யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின் பதினாலாம் வருஷத்திலேயென்றால், அசூரின் இராசாவாகிய சனகேரிப், யூதாவிலிருக்கிற அரணான சகல பட்டணங்களுக்கும் விரோதமாயெறிவந்து, அவைகளைப் பிடித்தான்.

௰௪. அப்போது யூதாவின் இராசாவாகிய எசேக்கியா லாகீசிலிருக்கிற அசூரின் இராசாவுக்கு, நான் குற்றஞ்செய்தேன். என்னைவிட்டுத் திரும்பிப்போம். நீர் என்மேற்சுமத்துவதைச் சுமப்பேனென்று சொல்லியனுப்பினான். அப்படியே அசூரின் இராசா யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின்மேல் முந்நூறு தாலந்து வெள்ளியையும், முப்பது தாலந்து பொன்னையுஞ் சுமத்தினான்.

௰௫. ஆனதுகொண்டு எசேக்கியா கர்த்தரின் வீட்டிலும், இராசாவுடைய வீட்டுப் பொக்கிஷங்களிலும் அகப்பட்ட எல்லா வெள்ளியையுங் கொடுத்தான்.

௰௬. அக்காலத்திலே யூதாவின் இராசாவாகிய எசேக்கியா கர்த்தருடைய தேவாலயக் கதவுகளிலும், நிலைகளிலுந் தான் அழுத்தியிருந்த பொற்றகடுகளைக் கழற்றி அவைகளை அசூரின் இராசாவுக்குக் கொடுத்தான்.

௰௭. ஆகிலும் அசூரின் இராசா லாகீசிலிருந்து தர்த்தானையும், ரப்சாரீசையும், ரப்சாக்கேயையுங் கன் இராணுவத்தோடே எருசலேமுக்கு எசேக்கியா இராசாவண்டைக்கனுப்பினான். இவர்கள் எருசலேமுக்கேறிவந்து, வண்ணார் துறையின் வழியிலுள்ள மேன்குளத்துச் சாலகத்தண்டையிலே நின்று,

௰௮. இராசாவை யழைத்தனுப்பினார்கள். அப்போது இல்க்கியாவின் குமாரன் எலியாக்கீமென்ற அரமனைவிசாரிப்புக்காரனும், செப்னாவென்ற சம்பிரதியும், ஆசாப்பின் குமாரனாகிய யோவாகென்ற கணக்கனும் அவர்களண்டையிலே புறப்பட்டுப்போனார்கள்.

௰௯. ரப்சாக்கே அவர்களோடே சொன்னதாவது; அசூரின் இராசாவாகிய பெரிய அரசனானவர் உரைக்கிறதும், நீங்கள் எசேக்கியாவுக்குச் சொல்லவேண்டியதுமேதென்னில், நீ நம்பியிருக்கிற இந்த நம்பிக்கையேது?

௨௰. யுத்தத்திற்கு யோசனையும், பலனுமுண்டென்று நீ சொல்லுகிறது உதடுகளின் வசனிப்புமாத்திரந்தானே. இப்போதும் நீ யென்னைவிட்டு மருளவிழுந்ததற்கு யாரை நம்பியிருக்கிறாய்?

௨௰௧. இப்போதும் இதோ, முறிந்த அந்த நாணற்கோலாகிய எகிப்தியை நம்புகிறாய். அதின்மேலொருவன் சாய்ந்தால் அது அவ

னுள்ளவைகயிற படநிருவிப்போம். அப்படி எகிப்தின் இராசாவாகிய பார்வோன் தன்னை நம்புகிற யாவருக்குமிருக்கிறன்.

௨௨. நீங்களென்னுடனே, எங்கள் பராபரனாகிய கர்த்தரை நம்புகிறோமென்பீர்களேயாகில், அவருடைய மேடைகளையும், அவருடைய பலிபீடங்களையுமல்லவோ! எசேக்கியா அகற்றிப்போடவோம், எருசலேமியரோடும், எருசலேமிலிருக்கிற இந்தப்பலிபீடத்தின் முன் பணியுங்களென்றனே!

௨௩. இப்போதும் உனக்கு இரண்டாயிரங் குதிரைகளைக்கொடுப்பேன். அவைகள்மேலேற்றத்தக்கவர்களைச் சம்பாதித்துக்கொள்ள உனக்குக் கூடுமோ! என்று அசூரின் இராசாவாகிய என்னுடைய வேந்தனோடே நீ சபதங் கூறு.

௨௪. பின்னையெப்படி நீ யென்னுடைய வனுடைய சிறிய ஊழியக்காரரில் ஒரே ஒரு தலைவனின் முகத்தைத் திருப்புவாய்! இரதங்களும், குதிரைக்காரரும் உனக்குவருமென்று எகிப்தியனையோ நம்புகிறாய்!

௨௫. இப்போதும் இந்தஸ்தலத்தையழிக்கக் கர்த்தரையல்லாமல் அதின்மேலேறிவந்தேனோ! இந்தத்தேசத்தின்மேலேறிப்போய் அதையழியென்று கர்த்தர் என்னோடேசொன்னொன்றுசொன்னுன்.

௨௬. அப்போது இலக்கியாவின் குமாரன் எலியாக்கீமும், செப்னாவும், யோவாகும், ரப்சாக்கேயுடனே, உம்முடைய அடியாரோடே சூரியபாஷையிலே பேசும். அதையறிந்திருக்கிறோமே. அலங்கத்திலிருக்கிற சனத்தின் செவிகளிலேபட எங்களோடே யூதர்பாஷையிலே பேசீராக என்றார்கள்.

௨௭. ரப்சாக்கேயோவென்றால், அவர்களுடனே, உங்களோடுங்கூடத் தங்கள் கஷ்டத்தைத் தின்னவும், தங்கள் நீரைக்குடிக்கவும், அலங்கத்திலே தங்கியிருக்கிற மனுஷரண்டைக்கேயல்லாமல் உன் ஆண்டவரண்டைக்கும், உன்னண்டைக்கும் என்னுண்டவன் என்னையிந்த வார்த்தைகளைப்பேச அனுப்பினானோ! என்றுசொல்லி,

௨௮. ரப்சாக்கே நின்றுகொண்டு யூதர்பாஷையிலே மகாசத்தமாயக் கூப்பிட்டுச் சொன்னதாவது; அசூரின் இராசாவாகிய பெரிய அரசனுடைய வார்த்தையைக்கேளுங்கள்.

௨௯. எசேக்கியா, உங்களையெத்தவொட்டாதேயுங்கள். ஏனெனில், அவனுங்களையவர் கைக்குத்தப்புவிக்கமாட்டான்.

௩௰. கர்த்தர் நம்மைத்தப்பவே தப்பப்பண்ணுவார். இந்தப்பட்டணம் அசூரியஇராசாவின் கையிலொப்புக்கொடுக்கப்படுவதில்லையென்று எசேக்கியா உங்களைக் கர்த்தரை நம்பப்பண்ணவும் ஒட்டாதேயுங்களென்று இராசாசொல்லுகிறார்.

௩௧. எசேக்கியாவின் சொல்லைக்கேளாதிருங்கள். ஏனெனில், அசூரின் இராசாசொல்லுகிறதாவது; நீங்கள் நன்மையாக நமக்கிணங்கி நம்மண்டையிலே புறப்பட்டு,

௩௨. நான் வந்து உங்களையுங்கள் தேசத்தைப்போலிருக்கிறதானியமும், திராட்சப்பழ இரசமுமுள்ள தேசமும், அப்பமும், திராட்சத்தோட்டமுமுள்ள தேசமும், எண்ணெய் தருகிற ஒலீவ மரங்களும், தேனுமுள்ள தேசமுமாகிய சீமைக்கழைத்துக்கொண்டுபோகுமளவும் அவரவர்தம்தம் திராட்சியின் கனியையும், தம் தம் அத்திமரத்தின் கனியையும் புசித்து, அவரவர் தம் தம் கிணற்றின் தண்ணீரைக்குடியுங்கள். அப்படியே நீங்கள் சாவாமற் பிழைப்பீர்கள். கர்த்தர் நம்மைத்தப்புவிப்பாரென்று உங்களைப்பயிற்றுவிக்கிற எசேக்கியாவுக்குச் செவிகொடாதிருங்கள்.

௩௩. சாதிகளின் தேவர்கள் அவரவர் தங்கள் தேசத்தை அசூருடைய இராசாவின் கைக்குத்தப்புவிக்கவே தப்புவித்ததுண்டோ!

௩௪. ஆமாத் அர்ப்பாத் பட்டணங்களின் தேவர்களெங்கே! செப்பர்வாயிம், ஏனா, ஈவாப் பட்டணங்களின் தேவர்களெங்கே! சமாரியாவை நம் கைக்குத்தப்புவித்தார்களோ!

௩௫. கர்த்தர் எருசலேமை நம் கைக்குத்தப்புவிக்கத்தக்கதாக, அந்தத்தேசங்களின் எல்லாத்தேவர்களிலே தங்கள் தேசத்தை நம்முடைய கைக்குத்தப்புவித்தவராா! என்றானென்றுசொன்னான்.

௩௬. ஆனால் சனம் அவனுக்கொருவார்த்தையையும் பிரதியுத்தரமாகச்சொல்லாமல் மவுனமாயிருந்தார்கள். ஏனெனில், அவனுக்கு மறுவுத்தரஞ்சொல்லாதிருங்களென்று இராசாவின் கட்டளையுண்டாயிருந்தது.

௩௭. அப்போது இலக்கியாவின் குமாரன் எலியாக்கீமென்ற அரமனைவிசாரிப்புக்காரனும், செப்னாவென்ற சம்பிரதியும், ஆசாபின் குமாரன் யோவாகென்கணக்கனும் வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டவர்களாய் எசேக்கியாவண்டைக்குவந்து அவனுக்கு ரப்சாக்கேயின் வார்த்தைகளையறிவித்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) எசேக்கியா மனஸ்தாபப்பட்டுச் செப்பமபனை ஏசாயாவிடத்திற்கு ஆளனுப்பினது. (௬) ஏசாயா அவர்களுக்கு ஆறுதல் செய்தது. (௮) சனகேரிப் திர்ராக்காவுடனே யுத்தம்பண்ணப்போய் எசேக்கியாவினிடத்துக்குத் தேவதூஷணமான நிருபம் அனுப்பினது. (௰௪) எசேக்கியாவின் விண்ணப்பம். (௨௰) சீயோன்பர்வதத்தின் நன்மையையும், சனகேரிபின் அகந்தையையும், நாசத்தையும் ஏசாயா தீர்க்கதரிசன

வாக்குகிறதற்கு இந்த யுத்தமனுஷரெல்லாரும் அணியணியாய் வைக்கப்பட்டவர்களாய் உத்தம இருதயத்தோடே எபிரோனுக்கு வந்தார்கள். இஸ்ரவேலில் மற்றனைவரும் தாவீதை இராசாவாக்குகிறதற்கு ஒருமனப்பட்டிருந்தார்கள்.

௩௯. அவர்கள் அங்கே தாவீதோடேகூட மூன்றுநாளிருந்து புசித்துக்குடித்தார்கள். ஏனெனில், அவர்கள்சகோதரர் அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.

௪௰. இசக்கார், செபுலோன், நப்தலியின் எல்லைமட்டும் அவர்களுக்குச் சமீபமாயிருந்தவர்களும் கழுதைகள்மேலும், ஒட்டகங்களின்மேலும், கோவேறுகழுதைகள்மேலும், மாடுகள்மேலும் ஏற்றின தின்பண்டங்களாகிய மாவின்வர்க்கங்களையும், அத்திப்பழ அடைகளையும், வற்றலான திராட்சப்பழங்களையும், திராட்சப்பழரசத்தையும், எண்ணெயையும், ஆடுமாடுகளையும் நிரம்ப ஏற்றிக்கொண்டுவந்தார்கள். ஏனெனில், இஸ்ரவேலிலே மகிழ்ச்சியுண்டாயிருந்தது.

## ௰௩. அதிகாரம்.

[(௧) தாவீது கீரியாத்யாரீமிலிருந்து நியாயப்பிரமாணப்பெட்டியை வணக்கத்தோடு கொண்டுவந்தது. (௯) ஊசா அழிக்கப்பட்டதும், பெட்டி ஓபேத்தேதோமின் வீட்டில் வைக்கப்பட்டதும்.]

தாவீது ஆயிரத்திற்குச்சேர்வைக்காரரோடும், நூற்றிற்குச்சேர்வைக்காரரோடும், சகல பிரபுக்களோடும் ஆலோசனைபண்ணி,

௨. இஸ்ரவேல் சபைக்கெல்லாருஞ்சொன்னதாவது; உங்களுக்குச் சம்மதியும், நம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய சித்தமுமாயிருந்தால் இஸ்ரவேலின் தேசங்களெல்லாமிருக்கிற நம்முடைய மற்றச்சகோதரரும், அவர்களோடே தங்கள் பேட்டைகளின்பட்டணங்களிலிருக்கிற ஆசாரியர்களும், இலேவியரும் நம்மோடேகூடும்படிக்கு நாம் சீக்கிரமாக அவர்களண்டைக்கு ஆள்களையனுப்பி,

௩. நம்முடைய பராபரனுடைய பெட்டியைத் திரும்ப நம்மண்டைக்குக்கொண்டுவருவோமாக. ஏனென்றால் சவுலின் நாட்களில் அதைத்தேடாதேபோனோமென்றான்.

௪. அப்போது சபையெல்லாம் இப்படிச் செய்யவேண்டுமென்றார்கள். ஏனெனில் இந்தக் காரியஞ் சகலசனத்தின்பார்வைக்குஞ்செம்மையாயிருந்தது.

௫. அப்படியே பராபரனுடைய பெட்டியைக் கீரியாத்யாரீமிலிருந்து கொண்டுவரத் தாவீது எகிப்தினுடைய சீகோர் நதியைத் துவக்கி ஆமாத்தின் எல்லைமட்டுமுள்ள இஸ்ரவேலையெல்லாங்கூட்டி,

௬. கேருபீன்களின் நடுவே வாசம்பண்ணுகிற கர்த்தராகிய பராபரனுடைய நாமந் தொழுதுகொள்ளப்படுகிற அவருடைய பெட்டியை யூதாவிலிருக்கிற கீரியாத்யாரீமுக்கடுத்த பாலாவிலிருந்து தேறிவரப்பண்ணும்படிக்கு அவனும், இஸ்ரவேல் அனைத்துமாய் அவ்விடத்திற்கேறிப்போனார்கள்.

௭. அவர்கள் பராபரனுடைய பெட்டியை அபினதாபின்வீட்டிலிருந்து ஒரு புது இரதத்தின்மேலேற்றிக்கொண்டு வந்தார்கள். ஊசாவும் அகியோவும் இரதத்தை நடத்தினார்கள்.

௮. தாவீதும், சகல இஸ்ரவேலும் எல்லாப் பலத்தோடும் பராபரனுக்கு முன்பாகப் பாட்டுகளைப்பாடிச் சுரமண்டலங்களையும், தம்புருகளையும், மேளங்களையும், கைத்தாளங்களையும், பூரிகைகளையும் மகிழ்ச்சியாய்ச் சேவித்துக்கொண்டிருந்தார்கள்.

௯. அவர்கள் கீதோனின் களமட்டும் வந்தபோதோவெனில், மாடுகள் இடறினபடியினாலே ஊசா பெட்டியைப்பிடிக்கத்தன் கையை நீட்டினான்.

௰. அப்போது கர்த்தர் ஊசாவின்மேற்கோபமுண்டவராகி அவன்தன் கையைப்பெட்டியண்டைக்கு நீட்டின நிமித்தம் அவனையடித்தார். அங்கேயவன் பராபரனுக்குமுன்பாக மரித்தான்.

௰௧. அப்போது கர்த்தர் ஊசாவையடித்த இடிக்காகத் தாவீது மனஸ்தாபப்பட்டு அந்தஸ்தலத்திற்கு இந்நாள்மட்டுமிருக்கிற ஊசாவினிடியென்றுபேரிட்டு,

௰௨. அன்றைத்தினம் பராபரனுக்குப் பயந்து பராபரனுடைய பெட்டியை நானென்னண்டைக்குக்கொண்டுவருவது எப்படி! என்றுசொல்லி,

௰௩. பெட்டியைத் தன்னண்டைக்குத் தாவீதின் பட்டணத்திலே கொண்டுவராமல் அதைக் கேத்தியனாகிய ஓபேத்தேதோமின் வீட்டிலே சேர்த்தான்.

௰௪. ஆனால் பராபரனுடைய பெட்டி ஓபேத்தேதோமின் வீடாகிய அவனிடத்திலே மூன்றுமாதமிருக்கையில் கர்த்தர் ஓபேத்தேதோமின்வீட்டையும், அவனுக்குண்டானவையெல்லாவற்றையும் ஆசீர்வதித்தார்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) ஈராம் தாவீதினிடத்தில் அன்புகூர்ந்தது. (௨) தாவீதின் சனங்களும், பெண்சாதிகளும். (௮) அவன் பெலிஸ்தர்களை இரண்டுதரஞ்செயித்தது.]

தீருவின் இராசாவாகிய ஈராம் தாவீதண்டைக்குத் தாறுபதிகளையும், அவனுக்கு ஒருவீட்டைக்கட்டுகிறதற்குக் கேதுருமரங்களையும், கற்றச்சரையும், தச்சரையும் அனுப்பினான்.

௨. கர்த்தர் தன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவாகத் திடப்படுத்தினாரென்பதைத் தாவீது கண்டறிந்தான். ஏனெனில், இஸ்ரவேலென்கிற அவருடைய சனத்தினிமித்தம் அவனுடைய இராசகியம் மிகவுமுயர்ந்தது.

௩. எருசலேமிலே தாவீது பின்னையுஞ் சில ஸ்திரிகளை விவாகம்பண்ணி இன்னங் குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.

௪. எருசலேமிலேயவனுக்குப்பிறந்த குமாரரின் நாமங்களாவது; சம்மூவா, சோபாப், நாத்தான், சாலோமோன்,

௫. இப்கார், எலிசூவா எலிப்பெலேத்,

௬. நோகா, நெபெக், யப்பீயா,

௭. எலிஷாமா, பெலியாதா, எலிப்பெலேத் தென்பவர்கள்.

௮. தாவீது இஸ்ரவேலின்மேலெல்லாம் இராசாவாக அபிஷேகம்பண்ணப்பட்டதைப் பெலிஸ்தர் கேட்டபோதோவென்றால் பெலிஸ்தரெல்லாருந் தாவீதைத் தேட ஏறிவந்தார்கள். அதைத் தாவீது கேட்கிறபோதவர்களுக்கெதிராகப் புறப்பட்டான்.

௯. பெலிஸ்தரோவென்றால், வந்து ரெப்பாயீம் பள்ளத்தாக்கில் விசாலத்தில் இறங்கினார்கள்.

௰. பெலிஸ்தரின்மேலே போயேறுவேனோ! அவர்களை யென்கையில் ஒப்புக்கொடுப்பீரோ? என்று தாவீது பராபரனைக் கேட்டபோது கர்த்தர் அவனுக்கு ஏறு. அவர்களை யுன்கையிலொப்புக்கொடுப்போமென்றார்.

௰௧. அவர்கள் பால்பிரூசிமுக்கேறிவந்தபோது தாவீது அங்கேயவர்களைமுறியடித்துத் தண்ணீர்கள் வடிந்துபோகிறதுபோலே பராபரன் என்கையினால் என்சத்துருக்களை வடிந்துபோகப் பண்ணினாரென்றான். அதைக்குறித்து அந்தஸ்தலத்திற்குப் பால்பிரூசிமென்றுபேரிட்டார்கள்.

௰௨. அங்கேயவர்கள் தங்கள் தேவர்களை விட்டோடினார்கள். அவைகள் தாவீது கற்பித்தபடியக்கினியாலே சுட்டெரிக்கப்பட்டன.

௰௩. ஆனால் பெலிஸ்தர்மறுபடியும் அந்தப் பள்ளத்தாக்கின் விசாலத்திலே வந்திறங்கினார்கள்.

௰௪. அப்போது தாவீது திரும்பப் பராபரனைக் கேட்டதற்குப் பராபரன் அவனுக்கு நீ அவர்களுக்குப் பின்னாலேயேறிப்போகாமல் அவர்களுக்குப் பக்கமாய்ச் சுற்றி முசுக்கட்டைச்செடிகளுக்கெதிரேயிருந்து அவர்கள்மேல் வந்து,

௰௫. முசுக்கட்டைச்செடிகளின் நுனிகளில் நடந்துவருகிற இரைச்சலை நீ கேட்கையில் அப்போது யுத்தத்திற்குப் புறப்படு. ஏனெனில், அப்போது பெலிஸ்தரின் பாளயத்தை முறியடிக்கப் பராபரன் உனக்கு முன்னாகப் புறப்பட்டிருப்பாரென்றார்.

௰௬. பராபரன் தனக்குக் கற்பித்தபடியே தாவீது செய்கிறபோது பெலிஸ்தரின் இராணுவத்தைக் கிபெயோனைத் துவக்கிக் காசேர்மட்டும் முறியடித்தார்கள்.

௰௭. அப்படியே தாவீதின் கீர்த்தி சகல தேசங்களிலும் பிரசித்தமாகி அவனுக்குப் பயப்படுகிற பயத்தைக் கர்த்தர் சகலசாதிகளின்மேலும் வரப்பண்ணினார்.

## ௰௫. அதிகாரம்.

[(௧) தாவீது ஒரு இடத்தையேற்படுத்தி ஓபேதேதோமின் வீட்டிலிருந்து பெட்டியை ஆசாரியர்களும், இலேவியருங் கொண்டுவருமபடி செய்தது. (௨௫) அவன் அதைமிகுந்த சந்தோஷத்துடனே ஏறிவரப்பண்ணினது. (௨௯) மீகாள் அவனைத் தன்னிருதயத்தில் அசட்டைபண்ணினது.]

அவன் தனக்குத் தாவீதின்பட்டணத்தில் வீடுகளையுண்டாக்கிப் பராபரனுடைய பெட்டிக்கு ஒருஸ்தலத்தை யாயத்தப்படுத்தி அதின்மேல் ஒருகூடாரத்தை விரித்தான்.

௨. பிறபாடு தாவீது இலேவியரொழிய வேறொருவரும் பராபரனுடைய பெட்டியை யெடுக்கலாகாது. ஏனெனில், பராபரனுடைய பெட்டியை யெடுக்கவும், என்றைக்கும் அவருக்குப் பணிவிடை செய்யவும் அவர்களைக் கர்த்தர் தெரிந்துகொண்டாரென்றான்.

௩. அப்படியே தான் கர்த்தருடைய பெட்டிக்கு ஆயத்தப்படுத்தின அதின் ஸ்தலத்திற்கு அதையேறிவரப்பண்ணத் தாவீது இஸ்ரவேலையெல்லாம் எருசலேமிலே கூட்டி,

௪. ஆரோனின் புத்திரரையும்,

௫. இலேவியராகிய கோகாத்புத்திரரிற் பிரபுவாகிய ஊரியேலையும், அவன் சகோதரராகிய நூற்றிருபதுபேரையும்,

௬. மெராரியின் புத்திரரிற் பிரபுவாகிய அசாயாவையும், அவன்சகோதரராகிய இருநூற்றிருபதுபேரையும்,

௭. கெர்சோம்புத்திரரிற் பிரபுவாகிய யோவேலையும், அவன்சகோதரராகிய நூற்றுமுப்பதுபேரையும்,

௮. எலிசாப்பாம் புத்திரரிலே பிரபுவாகிய செமாயாவையும், அவன் சகோதரராகிய இருநூறுபேரையும்,

௯. எப்ரோன் புத்திரரிலே பிரபுவாகிய எலியேலையும், அவன்சகோதரராகிய எண்பதுபேரையும்,

௰. ஊசியேல்புத்திரரிலே பிரபுவாகிய அம்மினதாபையும், அவன்சகோதரராகிய நூற்றுப்பன்னிரண்டுபேரையுந் தாவீது கூடிவரப்பண்ணினான்.

௰௧. பிறபாடு தாவீது ஆசாரியராகிய சாதோக்கையும், அபியத்தாரையும், இலேவியராகிய ஊரியேல், அசாயா, யோவேல்,

செமாயா, எலியேல், அம்மினதாபென்றவர்களையும் அழைத்து,

௰௨. அவர்களுடனே இலேவியரில் நீங்கள் பிதாக்களுடைய சந்ததிகளின் தலைவர். நீங்கள் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் பெட்டியை யதற்கு நான் ஆயத்தம்பண்ணின ஸ்தலத்திற்கேறிவரப்பண்ண, உங்களையும், உங்கள் சகோதரரையும் பரிசுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள்.

௰௩. ஏனென்றால், முதல் நீங்கள் அதைச்சுமக்காதபடியினாலும், நாம் நம்முடைய பராபரனாகிய கர்த்தரை நியாயமானபடியே தேடாதேபோனபடியினாலும், அவர் நமக்குள்ளே இடிக்குதலையுண்டாக்கினாரென்றான்.

௰௪. அப்படியே ஆசாரியர்களும், இலேவியர்களும் இஸ்ரவேலின்பராபரனாகிய கர்த்தரின்பெட்டியை யேறிவரப்பண்ணத் தங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டார்கள்.

௰௫. பிற்பாடு இலேவிபுத்திரர் கர்த்தருடைய வார்த்தையின்படியே மோசே கற்பித்தபிரகாரமாகப் பராபரனுடைய பெட்டியை யவைகளிலிருக்கிற வாங்குகளினாலே தங்கள் தோள்களின்மேலே வைத்தார்கள்.

௰௬. தாவீது இலேவியரின் பிரபுக்களுடனே நீங்கள் உங்கள்சகோதரராகிய பாட்டகரைக்கீதவாத்தியங்களாகிய தம்புருகளாலும், சுரமண்டலங்கள், கைத்தாளங்களாலுந் தங்கள் சத்தத்தையுயர்த்திச் சந்தோஷமுண்டாகக்கேட்கப்பண்ணும்படிக்கு நிறுத்தவேண்டுமென்று சொன்னான்.

௰௭. அப்படியே இலேவியர் யோவேலின் குமாரனாகிய ஏமானையும், அவன் சகோதரரில் பெரகியாவின்குமாரன் ஆசாபையும், மெராரியின்புத்திரரான தங்கள்சகோதரரில் குஷாயாவின்குமாரன் ஏத்தானையும்,

௰௮. இவர்களோடுங்கூட இரண்டாவதுவரிசையாகத் தங்கள் சகோதரராகிய சகரியா, பேன், யாசியேல், செமிரமோத், எகியேல், உன்னி, எலியாப், பெனாயா, மசெயா, மத்தித்தியா, எலிப்பெலேகு, மிக்கினேயா, ஓபேத்தேதோம், ஏயேலென்ற வாசற்காப்பாளரை நிறுத்தினார்கள்.

௰௯. பாட்டகராகிய ஏமானும், ஆசாபும், ஏத்தானும், பஞ்சலோகக்கைத்தாளங்களைத் தொனிக்கப்பண்ணிப்பாடினார்கள்.

௨௰. சகரியா, ஆசியேல், செமிரமோத், எகியேல், உன்னி, எலியாப், மாசெயா, பெனாயாவென்றவர்கள் கீச்சுக்குரலாய்ப்பாடித் தம்புருகளைவாசித்தார்கள்.

௨௧. ஆனால் மத்தித்தியா, எலிப்பெலேகு, மிக்னேயர், ஓபேத்தேதோம், ஏயேல், அசசியாவென்றவர்கள் இராகம்பிடிக்க எண்ணரம்பு, சுரமண்டலங்களைவாசித்தார்கள்.

௨௨. இலேவியரின் பிரபுவாகிய கெனானியாவோவென்கிற பெட்டியைச்சுமக்கிற வேலையைவிசாரித்து அதைச்சுமக்கும் விதத்தைப் போதித்தான். ஏனென்றால், அவன் உணர்வுள்ளவனாயிருந்தான்.

௨௩. பெரகியாவும், எல்க்கானாவும் பெட்டிக்கு முன்பாகக் காவற்காத்து நடந்தார்கள்.

௨௪. ஆனால் செப்னியா, யோஷபாத், நெதனெயேல், அமாசாயி, சகரியா, பெனாயா, எலியேசரென்ற ஆசாரியர் பராபரனுடையபெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளை யூதினார்கள். ஓபேத்தேதோமும், எகியாவுயோவென்கிற பெட்டியின்பிறகாலே காவற்காத்துவந்தார்கள்.

௨௫. இப்படித்தாவீதும், இஸ்ரவேலின்மூப்பரும், ஆயிரத்துச்சேர்வைக்காரரும் கர்த்தருடைய உடம்படிக்கையின்பெட்டியை ஓபேத்தேதோமின் வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடே ஏறிவரப்பண்ணப்போனார்கள்.

௨௬. கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச்சுமக்கிற இலேவியருக்குப் பராபரன் அனுக்கிரகம் பண்ணுகிறபோதோவெனில், அவர்கள் ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும் பலியிட்டார்கள்.

௨௭. தாவீதும், பெட்டியைச்சுமக்கிற எல்லா இலேவியரும், பாட்டகர்களும், பாட்டகரின்வேலையை விசாரிக்கிறபிரபுவாகிய கெனானியாவும் மெல்லியபுடவையான சால்வைகளைத் தரித்திருந்தார்கள். தாவீது சணல்நூலான ஆசாரியசால்வையையும் போர்த்துக்கொண்டிருந்தான்.

௨௮. அப்படியே இஸ்ரவேலனைத்துங் கர்த்தருடைய உடம்படிக்கையின்பெட்டியைக் கெம்பீரத்தோடும், எக்காளங்கள், பூரிகைகள், கைத்தாளங்களுடைய தொனிப்போடும், தம்புருகளையும், சுரமண்டலங்களையும் வாசிக்கிற சத்தத்தோடும் ஏறிவரப்பண்ணினார்கள்.

௨௯. கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டி தாவீதின்பட்டணமட்டும்வந்தபோதோவென்கிற சவுலின்குமாரத்தியாகிய மீகாள் பலகணிவழியாய்ப்பார்த்துத் தாவீதுராசா நடனம்பண்ணுகிறதையும், கீதவாத்தியம் பாடுகிறதையுங்கண்டு, அவனைத் தன்னிருதயத்திலே அசட்டைபண்ணினாள்.

## ௰௬. அதிகாரம்.

[(க) தாவீதுசெலுத்திய கொண்டாட்டப்பலி. (௪) அவனிலைப்பாடுத்துவைத்தது. (௭) அவர்கள்பாடினபாட்டு (௩௭) அவன்பெட்டியினிடத்திலசேவகர்களையும், வாசற்காக்கிறவர்களையும், வாத்தியக்காரர்களையும்வைத்தது.]

அவர்கள் பராபரனுடைய பெட்டியை உள்ளே கொண்டுவந்தபோது அவர்கள் அதைத்தாவீது அதற்குப்போட்ட கூடாரத்தின் நடுவேவைத்துப் பராபரனு

டைய சன்னிதியிற் சர்வாங்க தகனபலிகளையும், சமாதானபலிகளையுஞ் செலுத்தினார்கள்.

௨. தாவீது சர்வாங்கதகனபலிகளையும், சமாதானபலிகளையுஞ்செலுத்தித் தீர்ந்தபிற்பாடு அவன் சனத்தைக் கர்த்தருடைய நாமத்திலே ஆசீர்வதித்து,

௩. புருஷரைத்துவக்கி ஸ்திரீகள்மட்டுக்கும், இஸ்ரவேலராகிய அனைவருக்கும் அவரவருக்கு ஒவ்வொரு பணியாரத்தையும், ஒவ்வொரு இறைச்சித்துண்டையும், ஒவ்வொருபடி திராட்சப்பழ இரசத்தையும் பங்கிட்டான்.

௪. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைப் பிரஸ்தாபம்பண்ணித் துதித்துப் புகழுகிறதற்குக் கர்த்தருடைய பெட்டிக்கு முன்பாகச் சேவிக்கத்தக்க இலேவியரிற் சிலரை அவன் வைத்தான்.

௫. அவர்களில் ஆசாப் தலைவனும், சகரியா அவனுக்கு இரண்டாவதுமாயிருந்தார்கள். ஏயேல் செமிராமோத், எகியேல், மத்தித்தியா, எலியாப், பெனாயா, ஓபேதேதோம், ஏயேலென்றவர்கள் தம்புருகள், சுரமண்டலங்களென்கிற வாத்தியங்களையும், ஆசாப் போவென்கிற கைத்தாளங்களையும் வாசிக்கவும்,

௬. பெனாயா, யகாசியேலென்கிற ஆசாரியர்கள் எப்போதும் பராபரனுடைய உடம்படிக்கையின் பெட்டிக்கு முன்பாகப் பூரிகைகளையூதவும் வைக்கப்பட்டார்கள்.

௭. அப்படித் துவக்கப்பட்ட அந்நாளிலே தானே தாவீது ஆசாபையும், அவன் சகோதரரையுங்கொண்டு கர்த்தரைத் துதிக்கிறதற்கு வாசிக்கப்பண்ணின சங்கீதமாவது;

௮. கர்த்தரைத் துதித்து அவர் நாமத்தைப் பிரஸ்தாபமாக்கி அவர் செய்கைகளைச் சனசதனங்களுக்குள்ளே யறிவியுங்கள்.

௯. அவரைப்பாடி அவரைக்கீர்த்தனம்பண்ணி அவருடைய அதிசெயங்களையெல்லாந் தியானியுங்கள்.

௰. அவருடைய பரிசுத்தநாமத்தைப் பற்றி மேன்மைபாராட்டுங்கள். கர்த்தரைத்தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக.

௰௧. கர்த்தருக்காகவும், அவர் வல்லமைக்காகவும் விசாரித்துக்கொண்டு நித்தம் அவர் சமுகத்தைத் தேடுங்கள்.

௰௨. அவருடைய தாசனாகிய இஸ்ரவேலின் வித்தானவர்களே! அவர் தெரிந்துகொண்டவர்களாகிய யாக்கோபின் புத்திரரே.

௰௩. அவர் செய்த அவருடைய அதிசெயங்களையும், அவருடைய அற்புதங்களையும், அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நினையுங்கள்.

௰௪. அவரே நம்முடைய பராபரனாகிய கர்த்தர். பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகள் விளங்கும்.

௰௫. உனக்குக்கானானதேசத்தைப் பங்குகளாக

ஞாங்க

ந்தரவிதமாகக் கொடுப்பேனென்றவர் ஆபிரகாமோடே,

௰௬. இவர்கள் கொஞ்சத் தொகைக்குட்பட்டபேரும், அதிற் பரதேசிகளுமாயிருக்கையில்,

௰௭. பண்ணின அவருடைய உடம்படிக்கையும், ஈசாக்குக்கிட்ட ஆணையுமாகிய,

௰௮. அவருடைய ஏற்பாட்டையும், அவர் ஆயிரந்தலைமுறைக்குக் கட்டளையிட்டவார்த்தையையும் என்றைக்கும் நினையுங்கள்.

௰௯. அதை யாக்கோபுக்குக் கட்டளையாகவும், இஸ்ரவேலுக்கு நித்திய உடம்படிக்கையாகவும் நிலைப்படுத்தினார்.

௨௰. அவர்கள் சாதிசாதிக்கும், ஒரு இராச்சியத்திலிருந்து மறுசனத்தாரிடைக்கும் நடந்துபோனார்கள்.

௨௰௧. ஒருவரும் அவர்களை யொடுக்கவொட்டாதிருந்தார்.

௨௰௨. நாம் அபிஷேகம்பண்ணினவர்களை நீங்கள் தொடாமலும், நம்முடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்குசெய்யாமலுமிருங்களென்று அவர்கள் நிமித்தமாக இராசாக்களைக்கடிந்துகொண்டார்.

௨௰௩. பூமியின்குடிகளே! கர்த்தரைப்பாடி நாளுக்குநாள் அவருடைய இரட்சிப்பைச் சுவிசேஷமாயறிவியுங்கள்.

௨௰௪. சாதிகளுக்குள் அவருடைய மகிமையையும், எல்லாசனசதனங்களுக்குள்ளும் அவருடைய அதிசெயங்களையும் விவரியுங்கள்.

௨௰௫. ஏனெனில், கர்த்தர் பெரியவரும், மிகுதியாய்த் துதிக்கப்படத்தக்கவரும், எல்லாத்தேவர்களின்மேலும் பயங்கரமுமானவர்.

௨௰௬. ஏனென்றால் சனசதனங்களுடைய எல்லாத்தேவர்களும் மாயைதானே. கர்த்தரோ வானங்களையுண்டாக்கினார்.

௨௰௭. மகிமையும், பிரகாசமும் அவருக்கு முன்பாகவும், வல்லமையும், சந்தோஷமும் அவர் ஸ்தலத்திலுமிருக்கின்றன.

௨௰௮. சனசதனங்களின் வம்சங்களே! கர்த்தருக்கு மகிமையையும், பலனையுஞ்செலுத்துங்கள். கர்த்தருக்கு அதைச்செலுத்துங்கள்.

௨௰௯. கர்த்தருக்கு அவருடைய நாமத்தின் மகிமையைச்செலுத்திக் காணிக்கைகளைக் கொண்டுவந்து, அவருக்குமுன்பாகச்சேருங்கள். கர்த்தரைப்பரிசுத்த அலங்காரத்துடனே பணியுங்கள்.

௩௰. பூமியின் சகலகுடிகளே! அவருக்குமுன்பாக நடுங்குங்கள். அவர் பூச்சக்கரத்தையசையாதபடிக்கு உறுதிப்படுத்துகிறவர்.

௩௰௧. வானங்கள் மகிழ்ந்து பூமி பூரிப்பதாக. கர்த்தர் இராசரிகம் பண்ணுகிறாரென்று சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவதாக.

௩௰௨. சமுத்திரமும், அதின் நிறைவும் முழ

கின்றாம், அதிலுள்ள நிலைத்துங் களிகூருவதாக.

௩௩. அப்போது கர்த்தருக்கு முன்பாகக் காட்டுமரங்களுங் கெம்பீரிக்கும். ஏனெனில், அவர் பூமியை நியாயந்தீர்க்கவருகிறார்.

௩௪. கர்த்தரைத் துதியுங்கள். ஏனெனில், அவர் நல்லவர். ஏனென்றால், அவர் கிருபையென்றுமுள்ளது.

௩௫. எங்கள் இரட்சிப்பின் பராபரனே! நாங்கள் உம்முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி உம்மைத் துதிக்கிறதினாலே மேன்மைபாராட்டும்படிக்கு எங்களையிரட்சித்து எங்களைச் சேர்த்துக்கொண்டு சாதிகளுக்கெங்களை நீங்கலாக்கியருளுமென்று சொல்லுங்கள்.

௩௬. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சதாகாலங்கள் சதாகாலங்களாக ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்பதுதானே. அதற்குச் சனமெல்லாம் ஆமென் என்றுசொல்லிக் கர்த்தரைத் துதித்தன.

௩௭. பிறபாடு பெட்டிக்குமுன்பாக நித்தம் அன்றன்றுமுறையாய்ச் சேவிக்கும் படிக்கு அவன் அங்கே கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டிக்கு முன்பாக ஆசாப்பையும், அவன் சகோதரரையும், ஓபேத்தேதோமையும், அவர்களுடைய சகோதரராகிய அறுபத்தெட்டுப்பேரையும் வைத்துவிட்டு,

௩௮. எதித்தூனின் குமாரனாகிய இந்த ஓபேத்தேதோமையும், ஓசாமையும் வாசற்காக்கிறவர்களாக வைத்துவிட்டான்.

௩௯. ஆனால் கிபெயோனிலுள்ள மேட்டின் மேலிருக்கிற கர்த்தருடைய கூடாரத்திற்கு முன்பாகவிருக்கிற சர்வாங்கதகனபலி பீடத்தின்மேலே சர்வாங்கதகனங்களை நித்தம் அந்தி, சந்தி கர்த்தர் இஸ்ரவேலுக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்திலெழுதியிருக்கிறபடி யெல்லாங் கர்த்தருக்குச் செலுத்துவதற்காக,

௪௰. அங்கேயவன் ஆசாரியனாகிய சாதோக்கையும், அவன் சகோதரராகிய ஆசாரியர்களையும் வைத்து,

௪௧. இவர்களோடுங் கூட ஏமானையும், எதித்தூனையும், பேர்பேராகக் குறித்துத் தெரிந்துகொள்ளப்பட்ட மற்றச்சிலரையுங் கர்த்தருடைய கிருபை யென்றுமுள்ளதென்று அவரைத் துதிக்கவும்,

௪௨. இவர்களிலிருக்கிற ஏமானையும், எதித்தூனையும் பூரிகைகளையும், கைத்தாளங்களையும், பராபரனைப்பாடுகிற கீதவாத்தியங்களையுந் தொனிக்கப்பண்ணவும் வைத்து, எதித்தூனின்குமாரரை வாசற்காக்கிறவர்களாகக் கட்டளையிட்டான்.

௪௩. பிறபாடு சனமெல்லாம் அவரவர் தங்கள் வீட்டிற்குப்போனார்கள். தாவீதுந்தன் வீட்டாரை யாசீர்வதிக்கத் திரும்பினான்.

## ௧௭. அதிகாரம்.

[(௧) தாவீது பராபரனுக்குத் தேவாலயத்தைக்கட்டும்படி நியமித்ததற்கு நாத்தான் சம்மதித்தும், (௩) பின்பு பராபரனுடைய வார்த்தையினால் தடுத்தது. (௰௧) அவனைச் சந்ததிக்கும் ஆசீர்வாதம்வருமென்றுசொன்னது. (௰௬) தாவீதின்பிரார்த்தனையும், வந்தனமும்.]

**தாவீது** தன்வீட்டிலே வாசமாயிருக்கிறபோதேதோவெனில், அவன்தீர்க்கதரிசியாகிய நாத்தானுடனே இதோ, நான் கேதுருமரவீட்டிலே வாசம்பண்ணுகிறேன். கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டியோவென்றால், திரைகளின் கீழிருக்கிறதென்றான்.

௨. அப்போது நாத்தான் தாவீதுடனே உம்முடைய இருதயத்திலிருக்கிறதை யெல்லாஞ்செய்யும். ஏனெனிற் பராபரன் உம்மோடிருக்கிறாரென்றான்.

௩. அன்று இராத்திரியிலே சம்பவித்ததேதென்றால் பராபரனுடைய வார்த்தை நாத்தானுக்குண்டாகியவர்சொன்னதாவது;

௪. நீபோய் நம்முடையதாசனாகிய தாவீதுடனே சொல்லவேண்டியது, கர்த்தருரைக்கிறதேதெனில், நாம் வாசமாயிருக்க நீ நமக்கு வீட்டைக்கட்டவேண்டாம்.

௫. ஏனெனில், நாம் இஸ்ரவேலை யெறிவரப்பண்ணின நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் நாம் ஒருவீட்டிலே வாசம்பண்ணாமற் கூடாரங் கூடாரமாகவும், வாசஸ்தலம் வாசஸ்தலமாகவும் நடந்தோம்.

௬. நாம் இஸ்ரவேலோடெல்லாம் உலாவிவந்த எவ்விடத்திலாகிலும், நாம் நம்முடைய சனத்தையேய்க்கக் கற்பித்த இஸ்ரவேலின் நியாயாதிபதிகளி லொருவனோடாகிலும் நீங்கள் நமக்குக் கேதுருமரவீட்டைக் கட்டாதிருக்கிறதென்ன? என்றியாதொரு வார்த்தைசொன்னோமோ?

௭. இப்போதும் நீ நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச்சொல்லவேண்டியது. சேனைகளுடைய கர்த்தருரைக்கிறதேதெனில், நீ நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதியாயிருக்க நாம் ஆடுகள் பிறகாலே நடந்த உன்னை ஆட்டுமந்தையை விட்டெடுத்துக்கொண்டு,

௮. நீ போன இடமெல்லாம் உன்னோடேகூட இருந்து உன்பகைஞரையெல்லாம் உனக்குமுன்பாக நிர்மூலமாக்கிப் பூமியிலிருக்கிற பெரியவர்களின் நாமத்திற்கொத்த நாமத்தையுனக்குண்டாக்கினோம்.

௯. நாம் நமதுசனமாகிய இஸ்ரவேலுக்கு ஒரு இடத்தையும் ஏற்படுத்தி அது தன் தானத்திலே குடியிருக்கவும், அது இனி அலையாமலும் முன்போலும், நாம் நமது சன

மாகிய இஸ்ரவேலின்மேல் நியாயாதிபதிகளைக் கட்டளையிட்ட நாள்முதற்கொண்டு நடந்தது போலும் அக்கிரமப்புத்திரர் அதைப் பின்னுஞ் சிறுமைப்படுத்தாமல் விருக்கவுமாக அதை நாட்டி,

௰. உன் பகைஞரையெல்லாந் தாழ்த்திவிட்டோம். இப்போதுங் கர்த்தர் உனக்கு ஒரு வீட்டைக் கட்டுவாரென்கிறதை யுனக்கறிவிக்கிறோம்.

௰௧. நீ யுன் பிதாக்களிடத்திலே போக உன் நாட்கள் நிறைவேறின போது நாம் உனக்குப் பிற்பாடு உன் புத்திரரில் ஒருவராகிய உன் வித்தையெழும்பப்பண்ணி, அவன் இராச்சியத்தைத் திடப்படுத்துவோம்.

௰௨. அவர் நமக்கு வீட்டைக் கட்டுவார். அவருடைய ஆசனத்தை என்றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம்.

௰௩. நாம் அவருக்குப் பிதாவாயிருப்போம். அவர் நமக்குக் குமாரனாயிருப்பார். நாம் உனக்கு முன்னிருந்தவனைவிட்டு நம்முடைய கிருபையை விலக்கப்பண்ணினதுபோல அதை யவரைவிட்டு விலக்கப்பண்ணோமல்,

௰௪. அவரை நம்முடைய வீட்டிலும், நம்முடைய இராச்சியத்திலும், என்றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம். அவருடைய ஆசனம் என்றென்றைக்கும் நிலைவரமாயிருக்குமென்று சொல்லென்றார்.

௰௫. நாத்தான் இந்த எல்லா வார்த்தைகளுக்கும், இந்த எல்லாத் தரிசனத்திற்குஞ் சரியாய்த் தாவீதுக்குச் சொன்னான்.

௰௬. அப்போது தாவீது இராசா உட்பிரவேசித்துக் கர்த்தருக்கு முன்பாகத் தரித்திருந்து சொன்னதாவது; பராபரனாகிய கர்த்தாவே! தேவரீர் என்னை இந்தமட்டுங் கொண்டுவந்ததற்கு நானெம்மாத்திரம்? என்னுடைய வீடும் எம்மாத்திரம்!

௰௭. பராபரனே! இது இன்னம் உம்முடைய பார்வைக்குக் கொஞ்சக்காரியமாயிருக்கின்றதென்று, பராபரனே கர்த்தராயிருக்கிற தேவரீர் உம்முடைய அடியானுடைய வீட்டைக் குறித்து இதற்குந் தூரமாயிருக்குங் காலத்துச் செய்தியையுஞ் சொல்லி, என்னை மகா மேன்மையான சந்ததியின் மனுஷனாகப் பார்த்தீர்.

௰௮. உம்முடைய அடியானுக்குண்டாகுங் கனத்தைக் குறித்துத் தாவீது அப்புறம் உம்மோடே சொல்வதென்ன! தேவரீர் உம்முடைய அடியானையறிவீர்.

௰௯. கர்த்தாவே! உம்முடைய அடியானின் நிமித்தமும், உம்முடைய இருதயத்தின்படியேயும் இந்தப் பெரிய காரியங்களையெல்லாம் அறியப்பண்ணும்படிக்கு இந்தப் பெரிய காரியத்தையெல்லாஞ் செய்தீர்.

௨௰. கர்த்தாவே! நாங்கள் எங்கள் காதுகளாற் கேட்டவையெல்லாவற்றின்படியே யுந் தேவரீரைப்போலொத்தவரில்லை. உம்மைத்தவிர வேறே தேவனுமில்லை.

௨௰௧. உம்முடைய சனமாகிய இஸ்ரவேலைப்போலொத்த சனமுமேது! பூலோகத்தில் இந்த ஒரே சாதியைப் பராபரனாகிய தேவரீர் உமக்குச் சனமாக மீட்கப்போய்ப் பயங்கரமான பெரிய காரியங்களினாலுண்டாகுங் கீர்த்தியையுண்டாக்கி நீர் எகிப்திலிருந்து நீங்கலாக்கி மீட்ட உம்முடைய சனத்திற்கு முன்பாகச் சாதிகளைத் துரத்தி,

௨௰௨. உம்முடைய சனமாகிய இஸ்ரவேலை என்றைக்கும் உம்முடைய சனமாயிருப்பதற்கு அதை நிலைப்படுத்தி அவர்களுக்குக் கர்த்தராகிய தேவரீர் பராபரனானீரே.

௨௰௩. இப்போதுங் கர்த்தாவே, தேவரீர் அடியேனையும், என் வீட்டையுங் குறித்துச் சொன்ன வார்த்தை என்றென்றைக்கும் நிலைவரப்பட்டிருப்பதாக. தேவரீர் சொன்னபடியே செய்யும்.

௨௰௪. ஆம் அது நிலைவரப்பட்டிருக்கவும், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் இஸ்ரவேலுக்குப் பராபரனென்றும், உம்முடைய அடியானாகிய தாவீதின் வீடு உமக்கு முன்பாகத் திடமானதென்றுஞ் சொல்லப்படுவதினாலே உம்முடைய நாமம் என்றைக்கும் மகிமைப்படவுங்கடவது.

௨௰௫. ஏனென்றால், உனக்கு வீட்டைக் கட்டுவோமென்று என் பராபரனாகிய தேவரீர் உம்முடைய அடியான் செவிகேட்க வெளிப்படுத்தினீர். ஆகையால் உமக்கு முன்பாக விண்ணப்பம்பண்ண உம்முடைய அடியானுக்கு மனத்தயிரியங் கிடைத்தது.

௨௰௬. இப்போதுங் கர்த்தாவே! தேவரீர் பராபரனானவர் தேவரீர் உம்முடைய அடியானைக் குறித்து இந்த நல விசேஷத்தைச் சொன்னீர்.

௨௰௭. இப்போதும் உம்முடைய அடியானின் வீடு என்றைக்கும் உமக்கு முன்பாக விருக்கும்படிக்கு அதையாசீர்வதித்தருளினீர். கர்த்தராகிய தேவரீர் அதை யாசீர்வதித்தபடியினாலே அது என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) தாவீது பெலிஸ்தர்களையும், மோவாபியர்களையும் முறியடித்தது. (௩) ஆதாரேசேரையும், சூரியர்களையும் அவன் அடித்தது. (௯) தோகு அதோராமைக்கொண்டு தாவீதை வெகுமதியோடே வினவினது. (௰) அந்தக் காணிக்கைகளையும், மற்றுங் கொள்ளையாடின பொருளையுங் கர்த்தருக்குச் செலுத்தினது. (௰௩) அவன் ஏதோமிலே தாணயங்களை வைத்தது. (௰௪) தாவீதுவைத்த தலைவர்கள்.]

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், தாவீது பெலிஸ்தரை முறியடித்

ளை அவர்களைக் கீழ்ப்படுத்திக் காத்பட்டணத்தையும், அதின் கிராமங்களையும் பெலிஸ்தரின் கையிலே வாங்கினான்.

உ. அவன் மோவாபியரையும் முறியடித்ததினால் மோவாபியர் தாவீதைச் சேவித்து அவனுக்குக் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

ங. சோபாவின் இராசாவாகிய ஆதாரேசர் ஐபிறாத் நதியண்டையில் தன் இராணுவத்தை நிறுத்தப்போகிறபோது தாவீது அவனையும் ஆமாத்தினிடத்திலே முறியடித்தான்.

ச. அவனுக்கிருந்த ஆயிரம் இரதங்களையும், ஏழாயிரங் குதிரைக்காரரையும், இருபதினாயிரங் காலாள்களையும் பிடித்து இரதங்களில் நூறு இரதங்களை வைத்து மற்றவைகளையெல்லாம் முறித்துப்போட்டான்.

ரு. சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேருக்கொத்தாசைபண்ணத் தமஸ்குவின் சூரியர் வந்தார்கள். ஆனால் தாவீது சூரியரில் இருபத்தீராயிரம்பேரை வெட்டிப்போட்டு,

சா. தமஸ்குவிருக்கிற சூரியாவிலே தாணயமவைத்தான். அப்படியே சூரியர் தாவீதைச் சேவித்து அவனுக்குக் காணிக்கைகளைச் செலுத்தினார்கள். தாவீது போன இடத்திலெல்லாங் கர்த்தர் அவனை இரட்சித்தார்.

எ. ஆதாரேசேரின் சேவகருக்கிருந்த பொற்பரிசைகளைத் தாவீது எடுத்து எருசலேமுக்குக் கொண்டுவந்தான்.

அ. ஆதாரேசேரின் பட்டணங்களாகிய திப்காத்திலும், கூனிலுமிருந்து தாவீது வெகு திரளான வெண்கலத்தையுமெடுத்து வந்தான். அதினாலே சாலோமோன் வெண்கலக் கடல்தொட்டியையும், தூண்களையும், வெண்கலத் தட்டுமுட்டுகளையும் உண்டாக்கினான்.

கூ. தாவீது சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேரின் இராணுவத்தையெல்லாம் முறியடித்த செய்தியை ஆமாத்தின் இராசாவாகிய தோகூ கேட்டபோது,

௰. அவன் தாவீது இராசாவின் சுகச்செய்தியை விசாரிக்கவும், அவன் ஆதாரேசேரோடு யுத்தம்பண்ணி, அவனை முறியடித்ததற்காக அவனுக்கு வினயுகிறவார்த்தையைச் சொல்லவுந் தன் குமாரனாகிய அதோராமையும், பொன்னும், வெள்ளியும், வெண்கலமுமான சகலவிதத் தட்டுமுட்டுகளையும் அவனண்டைக்கனுப்பினான். ஏனென்றால், ஆதாரேசேர் தோகூவின் மேல் யுத்தங்களைப்பண்ணுகிறவனாயிருந்தான்.

௰க. அந்தத் தட்டுமுட்டுகளையும், தான் ஏதோமியர், மோவாபியர், அம்மோன்புத்திரர், பெலிஸ்தர், அமலேக்கியரென்ற சகல சாதிகளின் கையிலும் வாங்கின வெள்ளியையும், பொன்னையுங்கூடத் தாவீது இராசா கர்த்தருக்குப் பரிசுத்தமாக்கினான்.

௰உ. செருயாளின் குமாரன் அபிசாயி உப்பள்ளத்தாக்கிலே பதினெண்ணாயிரம் ஏதோமியரை முறியடித்தான்.

௰ங. ஆகையால் தாவீது ஏதோமிலே தாணயமவைத்தான். ஏதோமியரெல்லாரும் அவனைச் சேவிக்கிறவர்களானார்கள். தாவீது போன இடத்திலெல்லாங் கர்த்தர் அவனை இரட்சித்தார்.

௰ச. தாவீது இஸ்ரவேலையெல்லாம் ஆண்டு தன்னுடைய சனத்திற்கெல்லாம் நியாயமும், நீதியுஞ்செய்தான்.

௰ரு. செருயாளின் குமாரன் யோவாப் இராணுவத் தலைவனாயிருந்தான். அகிலூதின் குமாரனாகிய யோசபாத் மந்திரியாயிருந்தான்.

௰சா. அகித்தூவின் குமாரன் சாதோக்கும், அபியத்தாரின் குமாரன் அபிமெலேக்கும் ஆசாரியராயிருந்தார்கள். சவுஷா சம்பிரதியாயிருந்தான்.

௰எ. யோய்தாவின் குமாரன் பெனாயா, கிரேத்தியருக்கும், பிலேத்தியருக்குந் தலைவனாயிருந்தான். ஆனால் தாவீதின் மூத்த குமாரர் இராசாவுக்குதவியாயிருந்தார்கள்.

## ௰கூ. அதிகாரம்.

[(க) நாகாசின் புத்திரனாகிய ஆனூனை ஆறுதல்செய்யத் தாவீதினால் அனுப்பப்பட்ட தூதர்கள் அவமானப்பட்டது. (சா) அம்மோனியர்கள் சூரியர்களால் உதவிசெய்யப்பெற்றும் அபிசாயினாலும், யோவாபினாலுஞ்செயிக்கப்பட்டது. (௰சா) சோப்பாள் மறுபடி சூரியர்களைச் சேர்த்துக்கொண்டும் தாவீதால் கொல்லப்பட்டது.]

இதற்குப் பிற்பாடு சம்பவித்ததேதெனில், அம்மோன் புத்திரரின் இராசாவாகிய நாகாஸ் மரித்து அவன் குமாரன் அவனஸ்தலத்தில் இராசாவானபோது,

உ. தாவீது ஆனூனின் தகப்பனாகிய நாகாஸ் எனக்குத் தயவுசெய்ததுபோலே நான் அவன் குமாரனாகிய இவனுக்குத் தயவுசெய்வேனென்றுசொல்லி, அவன் தகப்பனுக்காக அவனுக்காறுதல்சொல்லத் தானாபதிகளையனுப்பினான். ஆனால் தாவீதினூழியக்காரர் ஆனூனுக்காறுதல்சொல்ல அம்மோன்புத்திரரின் தேசத்திலே வந்தபோது,

ங. அம்மோன் புத்திரரின் பிரபுக்கள் ஆனூனுக்குச் சொன்னதாவது; தாவீது ஆறுதல் சொல்லுகிறவர்களையுமக்கனுப்பினதினாலே உம்முடைய தகப்பனைக் கனம்பண்ணுகிறதாய் உமக்குத் தோன்றுகின்றதோ? தேசத்தையாராயவும், அதைக் கீழ்தும்மேலதாக்குமபடிக்கும் உளவுபார்க்கவுமல்லவோ அவன் ஊழியக்காரர் உம்மண்டைக்கு வந்தார்கள்!

ச. அப்பொழுது ஆனூன் தாவீதினூழியக்காரரைப்பிடித்து அவர்களைச் சிரைத்து அவர்களுக்கிருந்த வஸ்திரங்களையிடுப்புமட்டுமவைத்

து விடமற்றப்பாதியைக் கத்தரித்துப்போட்டு அவர்களையனுப்பிவிட்டான்.

௫. அந்தமனுஷர் வருகையில் அவர்களசெய்திதாவீதுக்கறிவிக்கப்பட்டது. அப்போது அவன் அந்தமனுஷர் மிகவும் இகழ்ச்சிபண்ணப்பட்டபடியினாலே அவர்களுக்கெதிராக ஆட்களையனுப்பி, உங்கள் தாடிமுளைக்குமட்டும் நீங்கள் எரிகோவிலிருந்து பிற்பாடு திரும்பிவாருங்களென்று இராசாசொல்லச்சொன்னான்.

௬. தாங்கள் தாவீதுக்கு நாற்றமெடுத்தவர்களானதை அம்மோனபுத்திரர் கண்டபோது, ஆனூனும், அம்மோனபுத்திரரும் மெசோபொத்தாமியாவிலும், மாக்கா,சோபா வென்ற சீரியரின் தேசத்திலுமிருந்து தங்களுக்கு இரதங்களும், குதிரைக்காரருங்கூலிக்குவரும்படிக்கு ஆயிரந்தாலந்துவெள்ளியையனுப்பி,

௭. முப்பத்தீராயிரம் இரதங்களையும், மாக்காவினஇராசாவையும், அவனசனத்தையுங் கூலிபொருந்திக்கொண்டார்கள். இவர்கள் வந்து மேதேபாவுக்கு முன்புறத்திலேபாளயமிறங்கினார்கள். அம்மோனபுத்திரருந்தங்கள் பட்டணங்களிலிருந்து கூடிக்கொண்டுயுத்தம்பண்ணவந்தார்கள்.

௮. அதைத் தாவீது கேட்டபோது, யோவாபையும், பலசாலிகளின் இராணுவமனைத்தையுமனுப்பினான்.

௯. அம்மோனபுத்திரர்புறப்பட்டு பட்டணத்தின் ஒலிமுகவாசலண்டையிலும், வந்த இராசாக்களோவெனில், தனித்துவெளியிலும்போருக்காயத்தமாய்நின்றார்கள்.

௰ யுத்தஇராணுவங்களினமுகப்புத்தனக்கு முன்னும்,பின்னுமிருக்கிறதையோவாப்காண்கையில், அவன் இஸ்ரவேலிலே தெரிந்துகொள்ளப்பட்ட அனைவரிலும் ஒருபங்கைப்பிரித்தெடுத்ததைச் சீரியருக்கெதிராகநிறுத்தி,

௰௧. மற்றச்சனத்தை அம்மோனபுத்திரருக்கெதிராகப்போருக்கு ஆயத்தமாயிருக்கப்பண்ணித்தனசகோதரனாகியஅபிசாயிக்கொப்பித்துச்சொன்னதாவது;

௰௨. சீரியர்என்னைப்பார்க்கிலும் பலத்தாலதியெனக்கொத்தாசையாயிரு. அம்மோனபுத்திரர் உன்னைப்பார்க்கிலும் பலத்தால நானஉனக்கொத்தாசையாயிருப்பேன்.

௰௩. திடனாயிரு. நாமநம்முடையசனத்திற்காகவும், நம்முடைய பராபரனுடைய பட்டணங்களுக்காகவுந் திடனகொண்டிருக்கக்கடவோம். கர்த்தர்தமதுபார்வைக்குநலமானதைச்செய்வாராகவென்றுசொல்லி,

௰௪. யோவாபும், அவனோடிருந்தசனமும் சீரியரோடு யுத்தம்பண்ணச்சேர்ந்தார்கள். அவர்கள் அவனுக்குமுன்பாக முறிந்தோடினார்கள்.

௰௫ சீரியர் முறிந்தோடுகிறதை அம்மோனபுத்திரர்கண்டபோது அவர்களும் அவன் சகோதரனாகிய அபிசாயிக்கு முன்பாக முறிந்தோடிப் பட்டணத்திற்குட் பட்டார்கள். யோவாப் திரும்ப எருசலேமுக்குவந்தான்.

௰௬. தாங்கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறியடிக்கப்பட்டதைச்சீரியர் கண்டபோதோவெனில், அவர்கள் நதிக்கப்பாலிருக்கிற சீரியரையழைத்தனுப்பிப் புறப்பட்டு வரப்பண்ணினார்கள். ஆதாரேசரின் படைத்தலைவனாகிய சோப்பாக் அவர்களுக்கு முன்னாலே நடந்தான்.

௰௭. அது தாவீதுக்கு அறிவிக்கப்பட்டபோது அவன் இஸ்ரவேலையெல்லாங் கூட்டிக்கொண்டு யோர்தானைக்கடந்து அவர்களுக்குச்சமீபமாய்வந்தபோது அவர்களுக்கெதிராக இராணுவங்களை நிறுத்தினான். தாவீது சீரியருக்கெதிராகஇராணுவங்களைப்போருக்கு ஆயத்தமாயிருக்கப்பண்ணினபின் அவனோடேயுத்தம்பண்ணினார்கள்.

௰௮. ஆனால் சீரியர் இஸ்ரவேலுக்கு முன்பாகமுறிந்தோடினார்கள். தாவீது சீரியரில் ஏழாயிரம் இரதங்களினமனுஷரையும், நாற்பதினாயிரங் காலாட்களையுங்கொன்றுபடைத்தலைவனாகிய சோப்பாகையுமடிவித்தான்.

௰௯. தாங்கள் இஸ்ரவேலுக்கு முன்பாக முறியடிக்கப்பட்டதை ஆதாரேசரின்சேவகர் கண்டபோதோவென்றால், அவர்கள் தாவீதோடே சமாதானம்பண்ணி அவனைச்சேவித்தார்கள். அப்புறம் அம்மோன் புத்திரருக்கு ஒத்தாசைபண்ணச் சீரியர்மனதில்லாதிருந்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) யோவாப் ரபாவை முற்றிக்கைபோட்டதும், தாவீது அதின்பொருளையெடுத்ததும், (௪)பெலிஸ்தர்கள் மூன்றுதரம் செயிக்கப்படுகையில்அவர்களில் மூன்றுஇராட்சதர்கொல்லப்பட்டதும்.]

மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்திற்குப் புறப்படுங் காலம் வந்தபோது, யோவாப் இராணுவப்பலனைக்கூட்டிக்கொண்டுபோய் அம்மோன் புத்திரரின்தேசத்தைப்பாழாக்கிவந்து ரபாவை முற்றிக்கைபோட்டான். தாவீதோவெனில், எருசலேமிலிருந்து விட்டான். யோவாப்ரபாவை யடித்துவிட்டபோது,

௨. தாவீதுவந்து அவர்கள் இராசாவுடைய தலையின்மேல் இருந்த கிரீடத்தையெடுத்துக்கொண்டான். அது ஒரு தாலந்துபொன்நிறையும், இரத்தினங்கள் பதிந்ததுவுமாயிருந்தது. அது தாவீதின் தலையில்வைக்கப்பட்டது. பட்டணத்தின் கொள்ளையையும் வெகு விஸ்தாரமாய் அதிலிருந்து கொண்டுபோனான்.

௩. ஆனால் அதிலிருந்த சனத்தை அவன் வெளியே கொண்டுபோய் அவர்களை வாள் அறுக்கிற வேலைக்கும், இருப்புப் பாரைகளின் வேலைக்கும், கோடாலிகளின் வேலைக்கும் வைத்து இப்படி அம்மோன் புத்திரரின் பட்டணங்களுக்கெல்லாந் தாவீது செய்து எல்லாச் சனத்தோடுங் கூட எருசலேமுக்குத் திரும்பினான்.

௪. அதற்குப்பிறபாடு காசேரிலே பெலிஸ்தரோடு யுத்தமுண்டாயிற்று. அப்பொழுது ஊஷாத்தியனான சிபேக்காய் இராட்சத புத்திரரிலொருவனான சிப்பாயியென்றவனை மடங்கடித்தான். அதினால் அவர்கள் தாழ்த்தப்பட்டார்கள்.

௫. திரும்பப் பெலிஸ்தரோடு யுத்தமுண்டான போது யாவீரின் குமாரனாகிய எல்க்கானன் காத்தூரானாகிய கோலியாத்தின் சகோதரனான லாகேமியை மடங்கடித்தான். அவன் ஈட்டி பட்டங்கு நெய்கிறவர்களின் படைமரமத்தனையாயிருந்தது.

௬. மறுபடியும் ஒரு யுத்தங் காத்திலேயுண்டாகிறபோது அங்கே உயர்ந்த ஒரு மனுஷனிருந்தான். அவனுக்கு அவ்வாறு விரலாக இருபத்து நாலுவிரல்களிருந்தன. அவனும் இராட்சத சந்ததியாயிருந்தது.

௭. இஸ்ரவேலை நிந்தித்தான். ஆனால் தாவீதின் சகோதரனாகிய சிமெயாவின் குமாரன் யோனத்தான் அவனை மடங்கடித்தான்.

௮. காத்தூரிலிருந்த இராட்சதனுக்குப் பிறந்தவர்கள், தாவீதின் கையினாலும், அவன் சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) தாவீது சாத்தானால் ஏவப்பட்டு சனங்களை இலக்கம்பார்க்க யோவாபைப் பலவந்தஞ்செய்தது. (௫) சனங்களின் தொகை கொண்டுவரப்பட்டபோது தாவீது மனஸ்தாபப்பட்டது. (௯) காத்தினால் அறிவிக்கப்பட்ட மூன்று வாதைகளில் அவன் பெருவாரிக்காய்ச்சலை வேண்டிக்கொண்டது. (௰௪) எழுபதினாயிரம் சனங்கள் மரித்தபிறகு அவனையனந்திரும்பினதினால் எருசலேமுக்குவரும் அழிவு நீங்கினது. (௰௮) அவன் காத்சொன்னபடி ஒர்னானின் போரடிக்கிற களத்தைவாங்கிப் பலிபீடத்தைக் கட்டின பின்பு, பராபரன் அக்கினியினால் அவனுக்கு மறு உத்தரவு கொடுத்து வாதையை நிறுத்தினது. (௨௮) அவன் மேசேவைத்தனுக்குப் பயந்து கிபேயோனுக்குப் போகாமல் அதிலே பலிசெலுத்தினது.]

**சா**த்தானென்பவன் இஸ்ரவேலுக்கு விரோதமாயெழும்பித் தாவீதை இஸ்ரவேலைத் தொகைபார்க்கிறதற்கு ஏவிவிட்டான்.

௨. அப்படியே தாவீது யோவாபுக்கும், சனத்தின் சேர்வைக்காரருக்கும் நீங்கள்போய்ப் பெயர்செபாவைத் துவக்கித் தாண்மட்டுமிருக்கிற இஸ்ரவேலையெண்ணி அவர்கள் இலக்கத்தை நான் அறியும்படிக்கு என்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.

௩. அப்பொழுது யோவாப் என்றவன் கர்த்தருடைய சனம் இருக்கிறதைப்பார்க்க அவரதை நூறத்தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக. ஆனால் இராசாவாகிய என்னுடைய ஆண்டவனே! அவர்களெல்லாரும் என்னுடைய ஆண்டவனின் சேவகரல்லவோ? என்னுடைய ஆண்டவன் இதை விசாரிப்பானேன்? இஸ்ரவேலின்மேல் குற்றமுண்டாக இது நடக்கவேண்டியதென்ன? என்றான்.

௪. ஆனால் யோவாப் அப்படிச்சொல்லியும் இராசாவின் வார்த்தை மேல்வட்டமானபடியினாலே யோவாப் புறப்பட்டு, இஸ்ரவேலி லெங்கும் சுற்றித்திரிந்து எருசலேமுக்கு வந்து,

௫. சனத்தை யிலக்கம்பார்த்த தொகையைத் தாவீதுக்குக் கொடுத்தான். இஸ்ரவேலிலெல்லாம் பட்டயம் உருவத்தக்கவர்கள் பதினொரு இலட்சம்பேரும், யூதாவிற்பட்டயம் உருவத்தக்கவர்கள் நாலு லட்சத்தெழுபதினாயிரம்பேருமாயிருந்தார்கள்.

௬. ஆனால் இலேவி பென்யமீன் கோத்திரங்களிலுள்ளவர்களை அவர்களுடைய இலக்கத்திற்குட்பட எண்ணாதேபோனான். ஏனெனில், இராசாவின் வார்த்தை யோவாபுக்கு அருவருப்பாயிருந்தது.

௭. இந்தக்காரியம் பராபரனுடைய பார்வைக்கும் ஆகாததானபடியினாலே அவர் இஸ்ரவேலை வாதித்தார்.

௮. தாவீது பராபரனை நோக்கி, நான் இந்தக்காரியத்தைச் செய்ததினாலே மிகவும் பாவஞ்செய்தேன். இப்பொழுதும் உம்முடைய அடியானின் அக்கிரமத்தை நீக்கிப்போடும் ஏனென்றால், வெகு பயித்தியமாய்ச்செய்தேனென்றான்.

௯. அப்பொழுது கர்த்தர் தாவீதுக்குஞான திர்ஷ்டியுள்ள புருஷனாகிய காத்துடனே பேசி,

௰. நீ போய்த் தாவீதுக்குச்சொல்லவேண்டியதேதெனில், மூன்றுகாரியங்களை நாம் உனக்கு முன்பாகவைக்கிறோம். அவைகளில், நாம் உனக்குச்செய்ய ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்று கர்த்தருரைக்கிறானென்றுசொல்லென்றார்.

௰௧. அப்படியே காத் தாவீதண்டைக்கு வந்து அவனுக்குச்சொன்னதாவது; கர்த்தருரைக்கிறதேதெனில்,

௰௨. மூன்று வருஷம் பஞ்சத்தையாகிலும், மூன்றுமாதம் உன் பகைஞரின் பட்டயம் உன்னைத் தொடர்ந்து சேர நீ உன் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகுதலையாகிலும்

ம, மூனறுநாட் கர்ததருடைய தூதன இஸரவேலுடைய எலலையெஙகும அழிவுணடாககுமபடிககுததேசததிலுணடாகுங கர்ததருடைய படடயததையெனகிலுநதெரிநதுகொளளெனகிருர் இபபோதும எனனையனுபபினவருககு நானெனன மறு உததரவுகொணடுபோகவேணடும! எனகிறதைபபாருமெனருன.

௰௩. அபபோது தாவீதுகாத்துடனே, வெகுவுடுக்கண் அடைநதிருககிறேன: இபபோதுஙகர்ததரினகையிலே விழுவேனுக. ஏனெனில, அவருடைய இரககஙகள மகாபபெரியவைகள. மனுஷர்கையிலே விழாதிருபபேனுக எனருன.

௰௪. ஆகையால கர்ததர் இஸரவேலிலே பெருவாரிககாய்சசலைக கடடளையிடடார். அதினுல இஸரவேலில எழுபதினுயிரமபேர் மடிநதார்கள்.

௰௫. எருசலேமையும அழிககப பராபரன தூதனையனுபபினுர். ஆனுல அவன அழிககையிற கர்ததர்பார்தது அநதத்தீஙகுககு மனஸ்தாபப்படடு அழிககிற தூதனுககுப போதும, இபபோது உனகையை வாஙகிககொளளெனருர். கர்ததருடைய அநதத் தூதன எபூசியனுகிய ஒர்னுனின களத்தணடையிலே நினருன.

௰௬. தாவீது தன கணகளையேறெடுததுப பூமிககும, வானததிறகும நடுவேநிறகிற கர்ததருடையதூதனை எருசலேமினமேல நீடடித தனகையிலுருவின தனனுடைய படடயததைபபிடிததவனுககககணடான.அபபோது தாவீதும, மூபபரானவர்களும ரெடடுககளைபபோர்ததவர்களாய முகஙகுபபுறவிழுநதார்கள.

௰௭. தாவீது பராபரனுடனே சனததையெணணசசொனனவன நானலலவோ! பாவஞ்செயது பொலலாபபு நடபபிககசவே நடபபிததவனநான்தானே! இநத ஆடுகள செயததெனன! என பராபரனுகிய கர்ததாவே! வாதைசெயய உமமுடைய கரம் உமமுடையசனததிறகலல எனககும, எனதகபபனவீடடிறகும விரோதமாயிருககடடுமேயெனருன.

௰௮. அபபோது எபூசியனுகிய ஒர்னுனின களததிலே கர்ததருககொரு பலிபீடததையெடுபபிககுமபடிககுத தாவீது அஙகே போய ஏறவேணடுமெனகிறதைத தாவீதுககுசசொலலெனறு கர்ததருடையதூதன காததுககுசசொனனுன.

௰௯. அபபடியே தாவீது கர்ததரினநாமததிலே காத்சொனன வார்ததையினபடியே போயேறினுன.

௨௰. ஆனுல ஒர்னுன திருமபிபபார்தது அவனும, அவனோடிருககிற அவனுடைய நாலுகுமாரரும அநதத் தெய்வதூதனைக கணடு ஒளிததுககொணடார்கள. ஒர்னுனே வெனிற போரடிததுககொணடிருநதான.

௨௧. தாவீது ஒர்னுனணடைககு வநதபோது ஒர்னுனகவனிதது தாவீதைபபார்ககிறபோது, அவன களததிலிருநது புறபபடடுத தரையடடும முகஙகுனிநது தாவீதைவணஙகினுன.

௨௨. அபபோது தாவீது ஒர்னுனுடனே இநதககளததின நிலததிலே நான கர்ததருககொரு பலிபீடததைக கடடுமபடிககு அதையெனககுககொடு. இநதவாதை சனததைவிடடு நிறுததபபட எனககதைப பெறும விலைககுககொடுமெனருன.

௨௩. அபபோது ஒர்னுன தாவீதுடனே, இராசாவாகிய என ஆணடவன அதைவாஙகிககொணடு, தமமுடைய பார்வைககு நலமானபடிசெயவாராக. இதோ, சர்வாஙகதகனஙகளுககு மாடுகளும, விறகுகளுககுப போரடிககிற உருளைகளும, காணிககைககுககோதுமையுமாகிய யாவையுஙகொடுககிறேனெனருன.

௨௪. ஆனுல தாவீது இராசா ஒர்னுனுக்கு அபபடியலல. நான உனனுடையதை இலவசமாயவாஙகிக கர்ததருககுச சர்வாஙகதகனததைபபலியிடாமல, அதைப பெறும விலைககு வாஙகவே வாஙகுவேனெனறுசொலலி,

௨௫. தாவீது அநத நிலததிறகு அறுநூறு சேககல நிறைபொனனை ஒர்னுனுககுககொடுதது,

௨௬. அஙகே கர்ததருககொரு பலிபீடததைககடடிச சர்வாஙக தகனஙகளையும, சமாதானபலிகளையுஞ்செலுததிக கர்ததரை நோககிக கூபபிடடான. அபபோது அவர் வானததிலிருநது சர்வாஙக தகனபலிபீடததினமேலிறஙகின அககினியினுல அவனுககு மறு உததரஙகொடுததுமலலாமல,

௨௭. தெய்வதூதன தனனுடைய படடயததை யதின உறையிலே திருமபப்போடடவேணடுமெனறு கர்ததர் அவனுககுசசொனனுர்.

௨௮. எபூசியனுகிய ஒர்னுனின களததிலே கர்ததர் தனககு உததரவருளினதைத் தாவீது அககாலததிலே கணடு அஙகேதானே பலியிடுவான.

௨௯. ஏனெனருல, மோசே வனாநதரததில உணடாககின கர்ததருடைய வாசஸதலமும, சர்வாஙகதகனபலிபீடமும அககாலததிலே கிபெயோனின மேடடிலிருககுமபோது,

௩௰. தாவீது அதினமுனபாகபபோயப பராபரனைததேடககூடாதிருநதது. ஏனெனருல கர்ததருடைய தூதனுடையபடடயததிறகுக கலஙகியிருநதான.

௩. ஆனால் அதிலிருந்த சனத்தை அவன் வெளியே கொண்டுபோய் அவர்களை வாள் அறுக்கிற வேலைக்கும், இருப்புப் பாரைகளின் வேலைக்கும், கோடாலிகளின் வேலைக்கும் வைத்து இப்படி அம்மோன் புத்திரரின் பட்டணங்களுக்கெல்லாந் தாவீது செய்து எல்லாச் சனத்தோடுங் கூட எருசலேமுக்குத் திரும்பினான்.

௪. அதற்குப்பிறபாடு காசேரிலே பெலிஸ்தரோடு யுத்தமுண்டாயிற்று. அப்பொழுது ஊஷாத்தியனான சிப்பேக்காய் இராட்சதபுத்திரரிலொருவனான சிப்பாயியென்றவனை யடங்கடித்தான். அதினால் அவர்கள் தாழ்த்தப்பட்டார்கள்.

௫. திரும்பப் பெலிஸ்தரோடு யுத்தமுண்டாகிறபோது யாவீரின் குமாரனாகிய எல்க்கானான் காத்தூரானாகிய கோலியாத்தின் சகோதரனான லாகேமியைமடங்கடித்தான். அவன் ஈட்டி பட்டுக்கு நெய்கிறவர்களின் படைமரத்தையாயிருந்தது.

௬. மறுபடியும் ஒரு யுத்தங்காதிலேயுண்டாகிறபோது அங்கே உயர்ந்த ஒரு மனுஷனிருந்தான். அவனுக்கு அவ்வாறு விரலாக இருபத்து நாலு விரல்களிருந்தன. அவனும் இராட்சத சந்ததியாயிருந்து,

௭. இஸ்ரவேலை நிந்தித்தான். ஆனால் தாவீதின் சகோதரனாகிய சிமெயாவின் குமாரன் யோனத்தான் அவனை மடங்கடித்தான்.

௮. காத்தூரிலிருந்த இராட்சதனுக்குப் பிறந்தவர்கள், தாவீதின் கையினாலும், அவன் சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) தாவீது சாத்தானாலேவப்பட்டுச் சனங்களை இலக்கம்பார்க்க யோவாப்பைப் பலவந்தஞ்செய்தது. (௫) சனங்களின் தொகை கொண்டுவரப்பட்டபோது தாவீது மனஸ்தாபப்பட்டது. (௯) காத்தினால் அறிவிக்கப்பட்ட மூன்று வாதைகளில் அவன் பெருவாரிக்காய்ச்சலை யேற்றுக்கொண்டது. (௰௪) எழுபதினாயிரஞ் சனங்கள் மரித்தபிறகு அவனையனந்திரும்பினதினால் எருசலேமுக்கு வரும் அழிவு நீங்கினது. (௰௮) அவன் காத் சொன்னபடி ஓர்னானின் போரடிக்கிற களத்தை வாங்கிப் பலிபீடத்தைக் கட்டின பின்பு, பராபரன் அக்கினியினால் அவனுக்கு மறு உத்தரவு கொடுத்து வாதையை நிறுத்தினது. (௨௮) அவன் தேவதூதனுக்குப் பயந்து கிபேயோனுக்குப் போகாமல் இங்கே பலிசெலுத்தினது.]

சாத்தானோவென்றால் இஸ்ரவேலுக்கு விரோதமாயெழும்பித் தாவீதை இஸ்ரவேலின் தொகைபார்க்கிறதற்கு ஏவிவிட்டது.

௨. அப்படியே தாவீது யோவாபுக்கும், சனத்தின் சேர்வைக்காரருக்கும் நீங்கள் போய்ப் பெயர்செபா வைத்துவக்கித் தாண்மட்டுமிருக்கிற இஸ்ரவேலையெண்ணி அவர்கள் இலக்கத்தை நான் அறியும்படிக்கு என்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.

௩. அப்பொழுது யோவாப்பென்றவன் கர்த்தருடைய சனம் இருக்கிறதைப் பார்க்கிலும் அவரதை நூற்றத்தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக. ஆனால் இராசாவாகிய என்னுடையவனே! அவர்களெல்லாரும் என்னுடையவனின் சேவகரல்லவோ? என்னுடையவன் இதை விசாரிப்பானேன்! இஸ்ரவேலின்மேல் குற்றமுண்டாக இது நடக்கவேண்டியதென்ன? என்றான்.

௪. ஆனால் யோவாப் அப்படிச் சொல்லியும் இராசாவின் வார்த்தை மேல்வட்டமான படியினாலே யோவாப் புறப்பட்டு, இஸ்ரவேலெங்குஞ் சுற்றித்திரிந்து எருசலேமுக்கு வந்து,

௫. சனத்தை யிலக்கம்பார்த்த தொகையைத் தாவீதுக்குக் கொடுத்தான். இஸ்ரவேலிலெல்லாம் பட்டயமுருவத்தக்கவர்கள் பதினொரு இலட்சம் பேரும், யூதாவிற்பட்டய முருவத்தக்கவர்கள் நாலுலட்சத்தெழுபதினாயிரம் பேருமாயிருந்தார்கள்.

௬. ஆனால் இலேவி பென்யமீன் கோத்திரங்களிலுள்ளவர்களை அவர்களுடைய இலக்கத்திற்குட்பட எண்ணாதேபோனான். ஏனெனில், இராசாவின் வார்த்தை யோவாபுக்கு அருவருப்பாயிருந்தது.

௭. இந்தக்காரியம் பராபரனுடைய பார்வைக்கும் ஆகாத்தானபடியினாலே அவர் இஸ்ரவேலை வாதித்தார்.

௮. தாவீது பராபரனை நோக்கி, நான் இந்தக்காரியத்தைச் செய்ததினாலே மிகவும் பாவஞ்செய்தேன். இப்பொழுதும் உம்முடைய அடியானின் அக்கிரமத்தை நீக்கிப்போடும் ஏனென்றால், வெகு பயித்தியமாய்ச் செய்தேனென்றான்.

௯. அப்பொழுது கர்த்தர் தாவீதுக்கு ஞானதிருஷ்டியுள்ள புருஷனாகிய காத்துடனே பேசி,

௰. நீ போய்த் தாவீதுக்குச் சொல்லவேண்டியதேதெனில், மூன்று காரியங்களை நாம் உனக்கு முன்பாக வைக்கிறோம். அவைகளில், நாம் உனக்குச் செய்ய ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௧. அப்படியே காத் தாவீதண்டைக்கு வந்து அவனுக்குச் சொன்னதாவது; கர்த்தருரைக்கிறதேதெனில்,

௰௨. மூன்று வருஷம் பஞ்சத்தையாகிலும், மூன்றுமாதம் உன் பகைஞரின் பட்டயம் உன்னைத்தொடர்ந்து சேர நீயுன் சத்துருக்களுக்கு முன்பாக முறிந்துபோகுதலையாகிலும்

ம, மூன்று நாட் கர்த்தருடைய தூதன் இஸ்ரவேலுடைய எல்லையெங்கும் அழிவுண்டாக்கும்படிக்குத் தேசத்திலுண்டாகுங் கர்த்தருடைய பட்டயத்தையென்கிலுந் தெரிந்துகொள்ளென்கிறார் இப்போதும் என்னையனுப்பினவருக்கு நானென்ன மறு உத்தரவுகொண்டுபோகவேண்டும்! என்கிறதைப்பாருமென்றான்.

௰௩. அப்போது தாவீதுகாத்துடனே, வெகுடுக்கண் அடைந்திருக்கிறேன். இப்போது நாங் கர்த்தரின் கையிலே விழுவோமாக. ஏனெனில், அவருடைய இரக்கங்கள் மகாபெரியவைகள். மனுஷர்கையிலே விழாதிருப்பேனாக என்றான்.

௰௪. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே பெருவாரிக்காய்ச்சலைக் கட்டளையிட்டார். அதினால் இஸ்ரவேலில் எழுபதினாயிரம்பேர் மடிந்தார்கள்.

௰௫. எருசலேமையும் அழிக்கப் பராபரன் தூதனையனுப்பினார். ஆனால் அவன் அழிக்கையில் கர்த்தர்பார்த்து அந்தத் தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு அழிக்கிற தூதனுக்குப் போதும், இப்போது உன்கையை வாங்கிக்கொள்ளென்றார். கர்த்தருடைய அந்தத் தூதன் எபூசியனாகிய ஒர்னானின் களத்தண்டையிலே நின்றான்.

௰௬. தாவீது தன் கண்களையேறெடுத்துப் பூமிக்கும், வானத்திற்கும் நடுவே நிற்கிற கர்த்தருடைய தூதனை எருசலேமின்மேல் நீட்டித் தன்கையிலுருவின தன்னுடைய பட்டயத்தைப்பிடித்தவனாகக்கண்டான். அப்போது தாவீதும், மூப்பரானவர்களும் இரட்டுக்களைப்போர்த்தவர்களாய் முகங்குப்புற விழுந்தார்கள்.

௰௭. தாவீது பராபரனுடனே சனத்தையெண்ணச்சொன்னவன் நானல்லவோ! பாவஞ்செய்து பொல்லாப்பு நடப்பிக்கவே நடப்பித்தவன்நான்தானே! இந்த ஆடுகள் செய்ததென்ன! என் பராபரனாகிய கர்த்தாவே! வாதைசெய்ய உம்முடைய கரம் உம்முடையசனத்திற்கல்ல எனக்கும், என்தகப்பன்வீட்டிற்கும் விரோதமாயிருக்கட்டுமே யென்றான்.

௰௮. அப்போது எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே கர்த்தருக்கொரு பலிபீடத்தை யெடுப்பிக்கும்படிக்குத் தாவீது அங்கே போய் ஏறவேண்டுமென்கிறதைத் தாவீதுக்குச்சொல்லென்று கர்த்தருடையதூதன்காத்துக்குச்சொன்னான்.

௰௯. அப்படியே தாவீது கர்த்தரின்நாமத்திலே காத்சொன்ன வார்த்தையின்படியே போயேறினான்.

௨௰. ஆனால் ஒர்னான் திரும்பிப்பார்த்து அவனும், அவனோடிருக்கிற அவனுடைய நாலுகுமாரரும் அந்தத் தெய்வதூதனைக் கண்டு ஒளித்துக்கொண்டார்கள். ஒர்னானோவெனில் போரடித்துக்கொண்டிருந்தான்.

௨௧. தாவீது ஒர்னானண்டைக்கு வந்தபோது ஒர்னான் கவனித்துத் தாவீதைப்பார்க்கிறபோது, அவன் களத்திலிருந்து புறப்பட்டுத் தரைமட்டும் முகங்குனிந்து தாவீதை வணங்கினான்.

௨௨. அப்போது தாவீது ஒர்னானுடனே இந்தக்களத்தின் நிலத்திலே நான் கர்த்தருக்கொரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு அதையெனக்குக்கொடு. இந்தவாதை சனத்தைவிட்டு நிறுத்தப்பட எனக்கதைப் பெறும் விலைக்குக்கொடுமென்றான்.

௨௩. அப்போது ஒர்னான் தாவீதுடனே, இராசாவாகிய என்னாண்டவன் அதைவாங்கிக்கொண்டு, தம்முடைய பார்வைக்கு நலமானபடிசெய்வாராக. இதோ, சர்வாங்கதகனங்களுக்கு மாடுகளும், விறகுகளுக்குப் போரடிக்கிற உருளைகளும், காணிக்கைக்குக்கோதுமையுமாகிய யாவையுங்கொடுக்கிறேனென்றான்.

௨௪. ஆனால் தாவீது இராசா ஒர்னானுக்கு அப்படியல்ல. நான் உன்னுடையதை இலவசமாய்வாங்கிக் கர்த்தருக்குச் சர்வாங்கதகனத்தைப்பலியிடாமல், அதைப் பெறும் விலைக்கு வாங்கவே வாங்குவேனென்றுசொல்லி,

௨௫. தாவீது அந்த நிலத்திற்கு அறுநூறு சேக்கல் நிறைபொன்னை ஒர்னானுக்குக்கொடுத்து,

௨௬. அங்கே கர்த்தருக்கொரு பலிபீடத்தைக்கட்டிச் சர்வாங்க தகனங்களையும், சமாதானபலிகளையுஞ்செலுத்திக் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான். அப்போது அவர் வானத்திலிருந்து சர்வாங்க தகனபலிபீடத்தின்மேலிறங்கின அக்கினியினால் அவனுக்கு மறு உத்தரங்கொடுத்ததுமல்லாமல்,

௨௭. தெய்வதூதன் தன்னுடைய பட்டயத்தை யதின் உறையிலே திரும்பப்போடவேண்டுமென்று கர்த்தர் அவனுக்குச்சொன்னார்.

௨௮. எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே கர்த்தர் தனக்கு உத்தரவருளினதைத் தாவீது அக்காலத்திலே கண்டு அங்கேதானே பலியிடுவான்.

௨௯. ஏனென்றால், மோசே வனாந்தரத்தில் உண்டாக்கின கர்த்தருடைய வாசஸ்தலமும், சர்வாங்கதகனபலிபீடமும் அக்காலத்திலே கிபெயோனின் மேட்டிலிருக்கும் போது,

௩௰. தாவீது அதின்முன்பாகப்போய்ப் பராபரனைத்தேடக்கூடாதிருந்தது. ஏனென்றால் கர்த்தருடைய தூதனுடையபட்டயத்திற்குக் கலங்கியிருந்தான்.

## உஉ. அதிகாரம்.

[(க) தாவீது ஆலயத்தைக் கட்டுமிடத்தை யறிந்துகட்டுதற்கு அநேகஞ் சாமானங்களை யெத்தனம்பண்ணினது. (சு) அவன் பராபரனுடைய வாக்குத்தத்தத்தைச் சாலோமோனுக்கு அறிவித்து, ஆலயத்தைக் கட்டக் கட்டளையிட்டது. (ய௪) தன் குமாரனுக்கு உதவிசெய்யும்படி பிரபுக்களுக்குத் தான் சொன்னது.]

அப்போது தாவீது பராபரனாகிய கர்த்தருடைய வீடு இருக்கும் ஸ்தலமிதுதானே. இஸ்ரவேல் பலியிடுஞ் சர்வாங்கதகனபலிபீடமிருக்கும் ஸ்தலமுமிதுதானே யென்றான்.

உ. பிறபாடு தாவீது இஸ்ரவேல் தேசத்திலிருக்கிற அந்நியசாதியாரைக் கூட்டிக்கொள்ளச்சொல்லிப் பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதற்கான கல்லுகளை வெட்டுங் கற்றச்சரை யேற்படுத்தினான்.

ங. தாவீது வாசல்களின் கதவுகளுக்கு வேண்டிய ஆணிகளுக்கும், கீல்களுக்குமிகுதியான இரும்பையும், நிறுத்துமுடியாத திரள் வெண்கலத்தையும்,

௪. எண்ணிமுடியாத கேதுருமரங்களையுஞ் சம்பாதித்தான். ஏனெனில் சீதோனியரும், தீரியருந் தாவீதுக்குத் திரளான கேதுருமரங்களைக் கொண்டுவந்தார்கள்.

ரு. ஏனென்றால், தாவீதென்றவன். என் குமாரனாகிய சாலோமோன் வாலிபனும், இளந்தையுமாயிருக்கிறான். கர்த்தருக்குக் கட்டப்படும் வீடோவென்றாற் சகலதேசங்களுக்குங் கீர்த்தியும், மகிமையும் விளங்கத்தக்கதாக மகாப்பெரியதாயிருக்கும். ஆகையால், அதற்காகச் சிலவற்றைச் சம்பாதிப்பேனென்றுசொல்லித் தாவீது தன்மரணத்திற்குமுன்னே திரளாயச் சவதரித்துவைத்து,

சு. தன்குமாரனாகிய சாலோமோனையழைத்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு வீட்டைக் கட்டுகிறதற்காக அவனுக்குக் கற்பனைதந்து,

எ. சாலோமோனுக்குச் சொன்னதாவது; என்குமாரனே! நான் என் பராபரனாகிய கர்த்தரின் நாமத்திற்கொரு வீட்டைக் கட்டவென்னிருதயத்திலே நினைத்திருந்தேன்.

அ. ஆனால் கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது; நீ திரளான இரத்தத்தைச் சிந்திப் பெரிய யுத்தங்களைப் பண்ணினாய். நீ நம்முடைய நாமத்திற்கு வீட்டைக் கட்டவேண்டாம். ஏனெனில், நமக்கு முன்பாக வெகு இரத்தத்தைத் தரையிலே சிந்தப்பண்ணினாய்.

௯. இதோ, உனக்குப் பிறக்கப்போகிற குமாரன் இளைப்பாறுகிற புருஷனாயிருப்பான். ஏனெனில் சுற்றிலுமிருக்கும் அவன் சத்துருக்களையெல்லாமவிலக்கி அவனுக்கிளைப்பாறுதலைக்கொடுப்போம். ஆகையால், அவன் பேர் சாலோமோனென்றிருக்கும். அவன் நாட்களிலே இஸ்ரவேலின்மேற் சமாதானத்தையும், அமரிக்கையையுங் கட்டளையிடுவோம்.

ய. அவன் நம்முடைய நாமத்திற்கு வீட்டைக் கட்டுவான். அவன் நமக்குக் குமாரனாயிருப்பான். நாம் அவனுக்குப் பிதாவாயிருந்து அவன் இஸ்ரவேலையாளும் இராச்சியபாரத்தின் ஆசனத்தை யென்றென்றைக்குந் திடப்படுத்துவோமென்றார்.

யக. இப்போதும் என்குமாரனே! நீ பாக்கியவானாயிருந்து, கர்த்தர் உன்னைக்குறித்துச் சொன்னபடியே உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டைக் கட்டும்படிக்கு அவர் உன்னுடனேகூடவிருப்பாராக.

யஉ. கர்த்தர் உனக்கு விவேகத்தையும், உணர்வையுமேகட்டளையிட்டு, இஸ்ரவேலுக்காகவும், உன் பராபரனாகிய கர்த்தரின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்வதற்காகவும் உனக்குக் கல்வியைக் கற்பிப்பாராக.

யங. கர்த்தர் இஸ்ரவேலுக்காக மோசேக்குக் கற்பித்த கட்டளைகளின்படியும், நியாயங்களின்படியுஞ்செய்ய நீ கவனமாயிருந்தால், அப்போது பாக்கியவானாயிருப்பாய். நீ திடன்கொண்டு பலப்படு. பயப்படாமலும், கலங்காமலுமிரு.

ய௪. இதோ, நான் என் சிறுமையிலே கர்த்தருடைய வீட்டிற்காக ஒருலட்சந்தாலந்து பொன்னையும், பத்துலட்சந்தாலந்து வெள்ளியையும், நிறுத்து முடியாத திரளான வெண்கலத்தையும், இரும்பையுஞ் சவதரித்தும், மரங்களையும், கல்லுகளையுஞ் சவதரித்தும் வைத்தேன். நீ பின்னும் அவைகளுக்கதிகமாயச் சவதரிப்பாய்.

யரு. வேலைசெய்யத்தக்க திரளான சிற்பாசாரிகளும், கற்றச்சரும், தச்சரும், எந்த வேலைக்குமான சகலவித சாஸ்திரிகளும் உன்னோடிருக்கிறார்கள்.

யசு. பொன்னுக்கும், வெள்ளிக்கும், வெண்கலத்திற்கும், இரும்புக்கும் இலக்கமில்லை. நீ யெழும்பிக் காரியத்தை நடப்பி. கர்த்தர் உன்னுடையேயிருக்கிறார்.

யஎ. தன் குமாரனாகிய சாலோமோனுக்கு ஒத்தாசைசெய்யத் தாவீது இஸ்ரவேலின் பிரபுக்கள் அனைவருக்குங் கற்பித்துச்சொன்னதாவது;

யஅ. உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களோடிருந்து, சுற்றுப்புறத்தாரை யடக்கி யுங்களுக் கிளைப்பாறுதலைக்கொடுத்ததில்லையோ? ஏனெனில், தேசத்தின் குடிகளை யென் கையி லொப்புக்கொடுத்தார். கர்த்தருக்கு முன்பாகவும், அவருடைய சனத்திற்கு முன்பாகவுந் தேசங் கீழ்ப்பட்டிருக்கின்றது.

ய௯. இப்போதும் நீங்கள் உங்கள் இரு

தயத்தையும், உங்கள் ஆத்துமத்தையும், உங்கள் பராபரனாகிய கர்த்தரைத்தேடுகிற தற்கு நேராக்கி கர்த்தருடைய உடம்படிக்கைப்பெட்டியையும், பராபரனுடைய பரிசுத்தப்பணிமுட்டுகளையுங்கர்த்தருடைய நாமத்திற்குக் கட்டப்படும் அந்தவீட்டிற் குட்கொண்டுபோகும்படிக்கு நீங்களெழும்பி பராபரனாகிய கர்த்தரின் பரிசுத்தஸ்தலத்தைக் கட்டுங்களென்றான்.

## ௨௩. அதிகாரம்.

[(௧) தாவீது வயதுசென்றவனானபோது சாலோமோனைஇராசாவாக்கினது. (௨) இலேவியரின்தொகையும், வகுப்பும். (௭) கேர்சோனியரின் குடும்பம். (௰௨) கேகாத்தின் குமாரர். (௨௧) மேராரியின்குமாரர். (௨௪) இலேவியர்களின் அலுவல.]

தாவீதுகிழவனாகிப பரிபூரணவயதானபோது தன்குமாரனாகிய சாலோமோனை இஸ்ரவேலின்மேல இராசாவாக்கி,

௨. இஸ்ரவேலின் எல்லாபபிரபுக்களையும், ஆசாரியரையும், இலேவியரையுங் கூட்டிக்கொண்டான்.

௩. அப்போது முப்பதுவயது முதற்கொண்டு அதற்குமேல தரமான இலேவியர் எண்ணப்பட்டார்கள். அவர்களுடைய இலக்கந் தலைக்குத்தலையாக முப்பத்தெண்ணாயிரம புருஷரானது.

௪. இவர்களில இருபத்து நாலாயிரம்பேர் கர்த்தருடைய வீட்டின்வேலையை விசாரித்து, ஆறாயிரம்பேர் தலைவரும், நியாயாதிபதிகளுமாயிருந்து,

௫. நாலாயிரம்பேர் வாசற்காக்கிறவர்களாயிருக்கவேண்டுமென்று தாவீதுசொல்லித் துதிசெய்கிறதற்குநாம் பண்ணுவித்தவாத்தியமுட்டுகளால நாலாயிரம்பேரோ கர்த்தரைத் துதிக்கிறவர்களாயிருக்கவேண்டுமென்று சொல்லி,

௬. அவர்களை இலேவியின குமாரராகிய கேர்சோன, கேகாத், மேராரியென்றவர்களுடையசந்ததிகளின்படி பங்குபிரித்தான.

௭ கெர்சோனியரில, லாதானும, சிமேயும இருந்தார்கள.

௮. லாதானின குமாரர், எகியேலென்ற தலைச்சன, சேத்தாம்,யோவேலென்றமூன்றுபேர்.

௯. சிமேயின்குமாரர், செலோமித், ஆசியேல, ஆரானென்ற மூன்றுபேர். இவர்கள லாதானவம்சப பிதாக்களின தலைவராயிருந்தார்கள.

௰. யாகாத், சீனா, எகூஸ், பெரியாவென்ற நாலுபேருஞ் சிமேயின்குமாரராயிருந்தார்கள.

௰௧. யாகாத் தலைச்சனாயிருந்தான. சீனா இரண்டாங்குமாரனாயிருந்தான. ஆனாலஎகூசுக்கும, பெரியாவுக்கும அநேககுமாரரிராதபடியினாலே யவர்களபிதாக்களின வீட்டாரிலஒரேவம்சமாக எண்ணப்பட்டார்கள.

௰௨. கேகாத்தின்குமாரர், அம்ராம், இசசேகார், எபிரோம, ஊசியேலென்ற நாலுபேர்.

௰௩. அம்ராமின்குமாரர், ஆரோன,மோசேயென்றவர்கள. ஆனால ஆரோனும, அவன குமாரரும பரிசுத்தத்திற்குப பரிசுத்தமான ஸ்தலத்தை என்றைக்கும பரிசுத்தமாய்க்காக்கிறதற்கும, என்றைக்குங் கர்த்தருக்கு முன்பாகத்தூபங்காட்டுகிறதற்கும்,அவரைச் சேவிக்கிறதற்கும, அவர்நாமத்திலே ஆசீர்வாதங்கொடுக்கிறதற்கும பிரித்து வைக்கப்பட்டார்கள.

௰௪. பராபரனுடைய மனுஷனாகிய மோசேயின்குமாரரோவெனில, இலேவிகோத்திரத்தாருக்குளளெண்ணப்பட்டார்கள்.

௰௫. மோசேயின்குமாரர் கெர்சோம், எலியேசரென்றவர்கள.

௰௬. கெர்சோமின குமாரரிற் சேபுவேல தலைச்சனாயிருந்தான.

௰௭. எலியேசருடையகுமாரரில ரெகபியாவென்ற அவன்குமாரன தலைவனானவன. எலியேசருக்குவேறேகுமாரரிருந்ததில்லை. ரெகபியாவின்குமாரரோவெனில மிகவும்பெருகினார்கள.

௰௮. இசசேகாரின்குமாரரிலேசெலோமீத் தலைச்சனாயிருந்தான.

௰௯. எபிரோனின குமாரர் எரியாவென்ற தலைச்சனும, அமரியா இரண்டாங் குமாரனும, யாகாசியேலமூன்றாங்குமாரனும, எக்காமாம நாலாங்குமாரனுந்தானே.

௨௰. ஊசியேலின குமாரர் மிகாவென்ற தலைச்சனும, இஷியாவென்ற இரண்டாங்குமாரனும,

௨௧. மேராரியின்குமாரர்மகேலி,மூசியென்றவர்கள. மகேலியின்குமாரர் எலெயாசார், கீஸ் என்றவர்கள.

௨௨. எலெயாசார் மரிக்கிறபோது அவனுக்குக்குமாரத்திகளல்லாமற் குமாரர்உண்டாயிருந்ததில்லை. இவர்களைக் கீசின்குமாரராகிய இவர்களுடைய சகோதரர் விவாகம பண்ணினார்கள.

௨௩. மூசியின்குமாரர் மகேலி, எதேர்,எரேமோத்தென்றமூன்றுபேர்.

௨௪. தங்களபிதாக்களுடைய வீட்டாரின படியேபிதாக்களின்தலைவராகியஇலேவிபுத்திரர்பேர்களுடைய டாப்பின்படியே தலைதலையாக எண்ணப்பட்ட இருபதுவயதும், அதற்குமேல்தரமுமான இவர்களுடையசந்ததியார் கர்த்தருடையவீட்டுப பணிவிடையைசசெய்பவர்கள.

௨௫. ஏனென்றால, இஸ்ரவேலின பராபரனாகியகர்த்தர் தமது சனத்தை இளைப்பாறப

# எஸ்றாவின் புஸ்தகம்.

(கி. பி. முன். ௫௱௩௬.)

## க. அதிகாரம்.

[(க) தேவாலயத்தைக் கட்டும்படிக்குக் கோரேசு பிரசித்தம்பண்ணினது. (ரு) அதைச்செய்யச் சனங்கள் எத்தனப்பட்டது. (எ) கோரேஸ் ஆலயத்தின் தட்டுமுட்டுகளைச் சேஸ்பாத்சாருக்குக் கொடுத்தது.]

**எ**ரேமியாவின் வாயினாலே கர்த்தர் சொன்ன வார்த்தை நிறைவேறும்படிக்குப் பெர்சியாவின் இராசாவாகிய கோரேசுடைய முதலாம் வருஷத்திலே கர்த்தர் பெர்சியாவின் இராசாவாகிய கோரேசின் ஆவியை யெழுப்பினதினாலே அவன் தன் இராசியமெங்கும் சத்தங்காட்டி, வாசகத்தினாலும் பறையிடுவித்தது,

உ. பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் சொல்லுகிறதேதெனில், பரமண்டலங்களின் பராபரனாகிய கர்த்தர் பூமியின் இராசியங்களையெல்லாமெனக்குக் கொடுத்து, யூதாவிலிருக்கிற எருசலேமிலே தமக்கு வீட்டைக் கட்டுவிக்க அவர் எனக்குக் கற்பித்தார்.

ங. அவருடைய எல்லாச் சனத்திலும் உங்களில் எவனுண்டோ அவனோடே அவனுடைய பராபரன் இருப்பாராக, அவன் யூதாவிலிருக்கிற எருசலேமுக்குப் போய் ஏறி, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருடைய வீட்டைக் கட்டுவிக்கக்கடவன். அவர்தானே எருசலேமிலே வாசம்பண்ணுகிற பராபரனானவர்.

ச. எவன் தான் பறத்தேசமாய்த் தங்குகிற எவ்விடங்களிலாகிலும் மீதியாயிருக்கிறானோ அவனுடைய தலத்து மனிதர் எருசலேமிலிருக்கிற பராபரனுடைய வீட்டுக்கென்று உச்சாகமாய்க் கொடுக்கிறதுமல்லாமல் அவனுக்கு வெள்ளியினாலும், பொன்னினாலும், உடைமைகளினாலும், மிருகசீவன்களினாலும் உதவிபண்ணக்கடவர்களென்று கூறுவித்தான்.

ரு. அப்பொழுது யூதா, பெஞ்யமீனுடைய வம்சங்களின் தலைவரும், ஆசாரியரும், இலேவியரும் எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டைக் கட்டுகிறதற்குப் போயேறி, எவர்களை ஆவியைப் பராபரன் எழுப்பினாரோ அவர்களெல்லாரும் எழும்பினார்கள்.

சு. அவர்களைச் சுற்றிலுங் குடியிருக்கிற யாவரும் மன உச்சாகமாய்க் கொடுத்தவை யெல்லாவற்றையுந் தவிர அவர்களுடைய கைகளை வெள்ளித்தட்டுமுட்டுகளையும், பொன்னையும், உடைமைகளையும், மிருகசீவன்களையும், உச்சிதங்களையுங் கொடுக்கிறதினாலே திடப்படுத்தினார்கள்.

எ. நேபுகாத்நேத்சார் எருசலேமிலிருந்து கொண்டுவந்து, தன் தேவனுடைய வீட்டிலே வைத்த கர்த்தருடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையுங் கோரேஸ் இராசா எடுத்துக்கொடுத்தான்.

அ. அவைகளைப் பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் பொக்கிசக்காரனாகிய மித்திரோதாதின் கையினாலெடுத்து யூதாவின் பிரபுவாகிய சேஸ்பாத்சாருக்கு எண்ணிக்கொடுப்பித்தான்.

கூ. அவைகளின் இலக்கமாவது; முப்பது பொற்றட்டுகளும், ஆயிரம் வெள்ளித்தாலங்களும், இருபத்தொன்பது கத்திகளும்,

ய. முப்பது பொற்கிண்ணிகளும், நானூற்றுப்பத்து வெள்ளிக்கிண்ணிகளும், வேறே தட்டுமுட்டுகள் ஆயிரமும்.

யக. பொன் வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாம் ஐயாயிரத்து நானூறாயிருந்தன. சிறையிருப்பானவர்கள் பாபேலிலிருந்து எருசலேமுக்கேறிப்போகையில் அவைகளையெல்லாஞ் சேஸ்பாத்சார் எடுத்துக்கொண்டு போனான்.

## உ. அதிகாரம்.

[(க) திரும்பிப்போன சனங்களின் இலக்கம். (ஙசு) ஆசாரியர். (சய) இலேவியர். (சங) நெத்தானியர். (ருரு) சாலோமோனின் வேலைக்காரர். (சூஉ) தங்கள் வம்சத்தையறியாத ஆசாரியர். (சூச) சனங்களின் தொகையும், ஆஸ்தியும். (சூகூ) அவர்கள் செலுத்தின காணிக்கைகள்.]

**பா**பேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார், பிடித்துப் பாபேலுக்குக் கொண்டுபோனவர்களின் சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்கும், யூதாவிலுள்ள தங்கள் தங்கள் பட்டணங்களுக்குந் திரும்பி,

உ. செருபாபேல், எசுவா, நெகேமியா, செராயா, ரெலாயா, மர்தேகாய், பில்சான், மிஸ்பார், பிக்வாய், ரேகூம், பானா என்கிறவர்களோடேகூட வந்தேறின சீமையின் புத்திரராகிய இஸ்ரவேல் சனமான மனிதரின் இலக்கமாவது;

௩. பாரோசின் புத்திரர் இரண்டாயிரத்தொருநூற்றெழுபத்திரண்டு.
௪. செபத்தியாவின் புத்திரர் முந்நூற்றெழுபத்திரண்டு.
௫. ஆராகின் புத்திரர் எழுநூற்றெழுபத்தைந்து.
௬. ஏசுவா, யோவாபின் புத்திரருக்குள்ளிருந்த பாகாத்மோவாபின் புத்திரர் இரண்டாயிரத்தெண்ணூற்றுப்பன்னிரண்டு.
௭. ஏலாமின் புத்திரர் ஆயிரத்திருநூற்றைம்பத்துநான்கு.
௮. சத்தூவின் புத்திரர் தொள்ளாயிரத்துநாற்பத்தைந்து.
௯. சக்காயின் புத்திரர் எழுநூற்றறுபது.
௰. பானியின் புத்திரர் அறுநூற்றுநாற்பத்திரண்டு.
௰௧. பெபாயின் புத்திரர் அறுநூற்றிருபத்துமூன்று.
௰௨. அஸ்காதின் புத்திரர் ஆயிரத்திருநூற்றிருபத்திரண்டு.
௰௩. அதொனிக்காமின் புத்திரர் அறுநூற்றறுபத்தாறு.
௰௪. பிக்வாயின் புத்திரர் இரண்டாயிரத்தைம்பத்தாறு.
௰௫. ஆதீனின் புத்திரர் நானூற்றைம்பத்துநான்கு.
௰௬. எசக்கியாவின் சந்ததியான அதேரின் புத்திரர் தொண்ணூற்றெட்டு.
௰௭. பெத்சாயின் புத்திரர் முந்நூற்றிருபத்துமூன்று.
௰௮. யோராகின் புத்திரர் நூற்றுப்பன்னிரண்டு.
௰௯. ஆசூமின் புத்திரர் இருநூற்றிருபத்துமூன்று.
௨௰. கிபாரின் புத்திரர் தொண்ணூற்றைந்து.
௨௰௧. பெத்லெகேமின் புத்திரர் நூற்றிருபத்துமூன்று.
௨௰௨. நெத்தோபாவின் மனிதர் ஐம்பத்தாறு.
௨௰௩. ஆனதோத்தின் மனிதர் நூற்றிருபத்தெட்டு.
௨௰௪. அஸ்மாவேத்தின் புத்திரர் நாற்பத்திரண்டு.
௨௰௫. கீரியாத்யாரீம், கெபீரா, பேரோத் என்றவைகளின் புத்திரர் எழுநூற்றுநாற்பத்துமூன்று.
௨௰௬. ராமா, காபா என்றவைகளின் புத்திரர் அறுநூற்றிருபத்தொன்று.
௨௰௭. மிக்மாசின் மனிதர் நூற்றிருபத்திரண்டு.
௨௰௮. பேதேல், ஆயி என்றவைகளின் மனிதர் இருநூற்றிருபத்துமூன்று.
௨௰௯. நேபோவின் புத்திரர் ஐம்பத்திரண்டு.
௩௰. மக்பீசின் புத்திரர் நூற்றைம்பத்தாறு.
௩௰௧. மற்ற ஏலாமின் புத்திரர் ஆயிரத்திருநூற்றைம்பத்துநான்கு.
௩௰௨. ஆரீமின் புத்திரர் முந்நூற்றிருபது.
௩௰௩. லோத், ஆதீத், ஓனோ என்றவைகளின் புத்திரர் எழுநூற்றிருபத்தைந்து.
௩௰௪. எரிகோவின் புத்திரர் முந்நூற்றுநாற்பத்தைந்து.
௩௰௫. சேனாகின் புத்திரர் மூவாயிரத்தறுநூற்றுமுப்பது.
௩௰௬. ஆசாரியராவது; ஏசுவாவின் வீட்டாரான எதாயாவின் புத்திரர் தொள்ளாயிரத்தெழுபத்துமூன்று.
௩௰௭. இம்மேரின் புத்திரர் ஆயிரத்தைம்பத்திரண்டு.
௩௰௮. பஸ்கூரின் புத்திரர் ஆயிரத்திருநூற்றுநாற்பத்தேழு.
௩௰௯. ஆரீமின் புத்திரர் ஆயிரத்துப்பதினேழு.
௪௰. லேவியராவது, ஒதாயாவின் சந்ததியான ஏசுவா, கத்மியேல் என்பவர்களின் புத்திரர் எழுபத்துநான்கு.
௪௰௧ பாடகராவது; ஆசாபின் புத்திரர் நூற்றிருபத்தெட்டு.
௪௰௨. வாசற்காப்பாளரின் புத்திரராவது, சல்லூமின் புத்திரரும், அதேரின் புத்திரரும், தல்மோனின் புத்திரரும், அக்கூபின் புத்திரரும், அதிதாவின் புத்திரரும், சோபாயின் புத்திரருமானவர்களெல்லாம் நூற்றுமுப்பத்தொன்பது.
௪௰௩. இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களாவது; சீகாவின் புத்திரர், அசுபாவின் புத்திரர், தபாகோத்தின் புத்திரர்.
௪௰௪, கேரோசின் புத்திரர், சீயாகாவின் புத்திரர், பாதோனின் புத்திரர்,
௪௰௫. லெபானாகின் புத்திரர், அகாபாவின் புத்திரர், அக்கூபின் புத்திரர்.
௪௰௬. ஆகாபின் புத்திரர், சம்லாயின் புத்திரர், ஆனானின் புத்திரர்.
௪௰௭. கித்தேலின் புத்திரர், காகாரின் புத்திரர், ராயாகின் புத்திரர்.
௪௰௮. ரேத்சீனின் புத்திரர், நெகோதாவின் புத்திரர், காசாமின் புத்திரர்,
௪௰௯. ஊசாவின் புத்திரர், பாசெயாகின் புத்திரர், பேசாயின் புத்திரர்,
௫௰. அஸ்னாவின் புத்திரர், மெயூனீமின் புத்திரர், நெபுசீமின் புத்திரர்,
௫௰௧. பக்பூக்கின் புத்திரர், அகுபாவின் புத்திரர், அர்கூரின் புத்திரர்,
௫௰௨. பஸ்லூதின் புத்திரர், மெகிதாவின் புத்திரர், அர்சாவின் புத்திரர்,
௫௰௩. பர்கோசின் புத்திரர், சிஸ்ராவின் புத்திரர், தாமாகின் புத்திரர்,
௫௰௪. நெத்சியாவின் புத்திரர், அதிபாவின் புத்திரருந்தானே.

௫௫. சாலொமோனுடைய வேலையாட்களின் புத்திரராவது; சோத்தாயின் புத்திரர், சொபெரேத்தின் புத்திரர், பெருதாவின் புத்திரர்,

௫௬. யாலாகின் புத்திரர், தற்கோனின் புத்திரர், கிதேலின் புத்திரர்,

௫௭. செபத்தியாவின் புத்திரர், அத்தீலின் புத்திரர், பொகெரேத், அத்செபாயீமின் புத்திரர், ஆமியின் புத்திரருந்தானே.

௫௮. இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களும், சாலொமோனுடைய வேலையாட்களின் புத்திரருமெல்லாம் முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு.

௫௯. தெல்மெலாகிலும், தெல் அரசாவிலும், கெருபிலும், ஆதோனிலும், இம்மேரிலுமிருந்தே தேறிவந்தும் தாங்கள் இஸ்ரவேலரோவென்று தங்கள் பிதாக்களின் வீட்டையும், தங்கள் பூர்வோத்தரத்தையுஞ் சொல்லமாட்டாமலிருந்தவர்களாவது;

௬௰. தெலாயாவின் புத்திரரும், தொபியாவின் புத்திரரும், நெகொதாவின் புத்திரருமான அறுநூற்றைம்பத்திரண்டுபேர்.

௬௧. ஆசாரியரின் புத்திரரிலும், அபாயாவின் புத்திரர், கோசின் புத்திரர், கீலேயாத்தியனான பற்சிலாயின் குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணி அவர்கள் நாமந்தரிக்கப்பட்ட பற்சிலாயினுடைய புத்திரர்தானே.

௬௨. இவர்கள் தங்கள் வம்ச அட்டவணையைத் தேடி அதைக் காணாமற்போய் ஆசாரிய ஊழியத்திற்கு அசுத்தமானவர்களானபடியினாலே விலக்கப்பட்டார்கள்.

௬௩. வெளிச்சங்களும், உத்தமங்களுமுள்ள ஆசாரியன் எழும்புமட்டும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதிலே புசிக்கவேண்டாமென்று திறஷாதா அவர்களுக்குச் சொன்னான்.

௬௪. இந்தச் சபையெல்லாம் ஏகத்திற்கு நாற்பத்திராயிரத்து முந்நூற்றறுபதுபேராயிருந்தது.

௬௫. அவர்களைத் தவிர ஏழாயிரத்து முந்நூற்று முப்பத்தேழுபேரான அவர்களுடைய வேலைக்காரரும், வேலைக்காரிகளும், இருநூறு பாடகரும், பாடகிகளும் அவர்களுக்கிருந்தார்கள்.

௬௬. அவர்களுடைய குதிரைகள் எழுநூற்று முப்பத்தாறும், அவர்கள் கோவேறு கழுதைகள் இருநூற்று நாற்பத்தைந்தும்,

௬௭. அவர்களுடைய ஒட்டகங்கள் நானூற்று முப்பத்தைந்தும், கழுதைகள் ஆறாயிரத்தெழுநூற்றிருபதுமாயிருந்தன.

௬௮. வம்சங்களின் தலைவரிற் சிலர் எருசலேமில் வாசம்பண்ணின கர்த்தருடைய வீட்டுக்கு வந்தபொழுது பராபரனுடைய வீட்டை அதின் தானத்திலே எடுப்பிக்கும்படிக்கு அதற்காக மன உற்சாகமான காணிக்கைகளைக் கொடுத்தார்கள்.

௬௯. அவர்கள் தங்கள் சத்திக்குத்தக்கவிதமாக வேலையின் பொக்கிசத்திற்கு அறுபத்தோராயிரந் தங்கக்காசையும், ஐயாயிரம் இராத்தல் வெள்ளியையும், நூறு ஆசாரிய வஸ்திரங்களையுங் கொடுத்தார்கள்.

௭௰. ஆசாரியரும், இலேவியரும், சனத்திரளில் சிலரும், பாடகரும், வாசற்காப்பாளரும், இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களுந் தங்கள் தங்கள் பட்டணங்களிலும், இஸ்ரவேலெல்லாந் தங்கள் பட்டணங்களிலுந்தானே குடியேறினார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) பலிபீடங் கட்டப்பட்டது. (௪) பலமுறை செலுத்தின பலிகள். (௭) வேலைக்காரர்கள் ஏற்றனப்பட்டதும், (௮) ஆலயத்தின் அஸ்திபாரத்தைச் சந்தோஷத்தோடும், துக்கத்தோடுங் கட்டினதும்.]

ஏழாம் மாதம் வந்து இஸ்ரவேல் புத்திரர் பட்டணங்களிலே குடியிருக்கிறபொழுது சனம் ஒரு மனிதனைப்போலே எருசலேமிலே கூடிக்கொண்டது.

௨. அப்பொழுது யோத்சதாக்கின் குமாரனாகிய ஏசுவாவும், அவன் சகோதரராகிய ஆசாரியரும், செயல்தியேலின் குமாரனாகிய செருபாபேலும், அவன் சகோதரரும் எழும்பிப் பராபரனுடைய மனிதனாகிய மோசேயின் நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி சர்வாங்கதகனங்களைப் பலியிடும்படிக்கு இஸ்ரவேலுடைய பராபரனின் பலிபீடத்தைக் கட்டி,

௩. பலிபீடத்தை மூலாதாரங்களின் மேலே எடுப்பித்தார்கள். ஏனென்றால், தேசத்தின் சனங்களுக்குப் பயப்படுகிற பயங்கரம் அவர்கள் மேலிருந்தது. அதின்மேல் அவர்கள் அந்தி, சந்தி கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தினார்கள்.

௪. எழுதியிருக்கிறபடியே அவர்கள் கூடாரப் பண்டிகையை ஆசரித்து ஒவ்வொரு நாளுக்குத் தக்க நியாயமானபடி ஒவ்வொரு நாளின் இலக்கமானதை ஒவ்வொரு நாளிலும் பலியிட்டார்கள்.

௫. அதற்குப்பிறபாடு நித்தமும் மாதப்பிறப்புகளிலும், கர்த்தருடைய பரிசுத்த எல்லாப் பண்டிகைகளிலுஞ் செலுத்துஞ் சர்வாங்கதகனத்தையும், கர்த்தருக்கு அவரவர் செலுத்தும் உற்சாகபலிகளையும் நடத்தினார்கள்.

௬. ஏழாம் மாதம் முதல் தேதியிலே கர்த்தருக்குச் சர்வாங்கதகன பலிகளைச் செலுத்தத் துவக்கினார்கள். ஆனால் கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம் இன்னம் போடப்படவில்லை.

௭. அப்பொழுது அவர்கள் கற்றச்சருக்கும், சிற்பாசாரிகளுக்குந் திரவியத்தையும்,

பெர்சியாவின இராசாவாகிய கோரேஸ்தங்களுககுககொடுதத உததரவினபடியே லீபனோனிலிருநது கேதுருமரஙகளைச சமுததிரததினமேலயாபோமட்டுங்கொணடுவரச சீதோனியருககும, தீரியருககும போசனத்தையும, பானததையும, எணணெயையுங கொடுததார்கள.

௮. அவர்கள எருசலேமிலிருநத பராபரனுடைய வீடடிறகுவநத இரணடாமவருஷம இரணடாம மாதத்திலேயெனறாற்சேயல்தியேலின குமாரனாகிய செருபாபேலும, யோத்சதாககின குமாரனாகிய ஏசுவாவும, மறறுமுணடான அவர்கள சகோதரராகிய ஆசாரியரும, இலேவியரும, சிறையிருபபிலிருநது எருசலேமுககுவநத அனைவருந துவககமபணணி இருபதுவயதும, அதறகுமேலதரமுமான இலேவியரைக கர்ததருடைய வீடடினவேலையைக கணகாணிககவைததார்கள.

௯. அபபடியே பராபரனுடைய வீடடினவேலையைசசெயகிறவர்களைத தூரிதமபணணி ஏசுவாவும, அவனுடைய குமாரரும, சகோதரரும, கத்மியேலும, அவனகுமாரரும, யூதாவினகுமாரரும, ஏன்தாதும, அவனகுமாரரும, சகோதரர்களுமாகிய இலேவியர் ஒருவனைபபோல நினறார்கள.

௰. சிற்பாசாரிகள கர்ததருடைய தேவாலயததிறகு அஸ்திபாரம போடுகிறபொழுது இஸ்ரவேல இராசாவாகிய தாவீதுடைய கட்டளையினபடியே கர்ததரைத துதிககுமபடிககு வஸ்திரஙகள தரிககபபட்டுப பூரிகைகளையூதுகிற ஆசாரியரையும, தாளஙகளைககொட்டுகிற ஆசாபின குமாரராகிய இலேவியரையும நிறுததினார்கள.

௰௧. கர்ததர் நலலவர். ஏனெனில, இஸ்ரவேலினமேலே அவருடைய கிருபையெனறுமுளளதெனறு அவரைபபுகழநது துதிககையில மாறறிமாறறிபபாடினார்கள. கர்ததரைத துதிககையிற சனமெலலாங கர்ததருடையவீடடின அஸ்திபாரம போடபபடுகிற நிமிததம மகாகெமபீரமாயககெமபீரிததன.

௰௨. முதிர்நதவயதான ஆசாரியரிலும, இலேவியரிலும, பிதாககளின வமிசங்களின தலைவரிலுந தன அஸ்திபாரததினமேலிருநத முநதின வீடடைககணடிருநதது இநத வீடடையுந தஙகள கணகளினாலே நோககியிருககிற அநேகரோ மகாசததஙகாட்டி அழுதார்கள. வேறேஅநேகமபேரோவெனறாறகெமபீரமும,சநதோஷமுமாயசசததங காட்டினார்கள.

௰௩. ஆனாற சநதோஷகெமபீரததின சததம இனனதெனறும்,சனததினுடைய அழுகையின சததம இனனதெனறுஞ சனம அறியாதேபோனார்கள. ஏனெனில, சனம மகா கெமபீரமாயககெமபீரிககிறதினாலே அவர்கள சததநதூரததிறகுககேட்கபபட்டது.

## ௪. அதிகாரம்.

[(க) ஆலயததைககடடுதறகு யூதர்களுடனேசததுருககள சேர்ககபபடாததினாலே அவர்கள அதைத்தடைசெயதது. (எ) அவர்கள அறதசஷ்டாவுககு எழுதினகாகிதம. (௰எ) அறதசஷ்டாவினகட்டளை. (உ௩) ஆலயஙகட்டுதலதடைபபட்டது.]

சிறையிருபபின புததிரர் இஸ்ரவேலின பராபரனாகிய கர்ததருககுத தேவாலயததைககட்டுகிறார்களெனபதை யூதாவுககும, பெனயமீனுககுமிருநத சததுருககள கேட்டபொழுதோவெனில,

௨. அவர்கள செருபாபேலணடைககும, தலைவரான பிதாககளணடைககுஞசேர்நதுவநது உஙகளோடே கூடககட்டுவோம. ஏனெனறால, உஙகள பராபரனை உஙகளைபபோலேதேடுவோம. எஙகளை இஙகே ஏறிவரபபணணின அசூரின இராசாவாகிய ஆசார் அதோனின நாள்களமுதறகொணடு அவருககு நாஙகளும பலியிடுகிறோமெனறு அவர்களோடேசொனனார்கள.

௩. ஆனாற செருபாபேலும, ஏசுவாவும, இஸ்ரவேலில மறறுமுணடான தலைவரான பிதாககளும, அவர்களுடனே, எஙகளபராபரனுடைய வீடடைநீஙகளும, நாஙகளுங கட்டவொணணாது.பெர்சியாவின்இராசாவாகிய கோரேஸஇராசாஎஙகளுககுககறபிததபடி நாஙகளே இஸ்ரவேலின பராபரனாகிய கர்த்தருககுஅதைககட்டுவோமெனறார்கள.

௪. ஆகையினாலே அநதத்தேசததினசனம் யூதாசனததினகைகளைத தளர்நதுபோகபபணணிக கட்டாதபடிககு அவர்களைககலஙக அடித்து,

௫. பெர்சியாவின இராசாவாகிய கோரேசின நாளெலலாந தரியு எனறபெர்சியாவுடைய இராசாவின இராசசியபாரம் மட்டும அவர்களயோசனையை அவததமாககததகக ஆலோசனைககாரரை அவர்களுககு விரோதமாயககையிலைகட்டி,

௬. ஆகாஸவேரு அரசாளுகிறபொழுது அவனுடைய இராசசியபாரததினதுவககததிலேயூதாவிலும, எருசலேமிலுஙகுடியிருககிறவர்களுககு விரோதமாக மிகையையெழுதினார்கள.

௭. அறதசஷ்டாவினநாள்களிலும பிஸ்லாமும, மிததிரோதாததும, தபேயேலும, மறறுமுணடான அவர்களகூட்டததாருமபெர்சியாவின இராசாவான அற்தசஷ்டாவுககு ஒருகாகிதத்தையெழுதினார்கள.அநதககாகிதத்தின வயனஞ சூரிய எழுததும, சூரியபாஷையுமாய எழுதியிருநதது.

௮. ஆலோசனைததலைவனாகிய ரேகூமும,

கணக்கனாகிய சிம்சாவும் எருசலேமுக்கு விரோதமாக அர்த்தசஷ்டாவென்ற இராசாவுக்கெழுதின காகிதத்திலே போடப்பட்ட நாமங்களாவது;

௯. ஆலோசனைக்குத் தலைவனாகிய ரேகூமும், கணக்கனாகிய சிம்சாயும், மற்றுமுண்டான அவர்கள் கூட்டத்தாராகிய தீனாயர், அபற்சாத்கியர், தர்பேலியர், அப்பார்சியர், அற்கேவியர், பாபிலோனியர், சூஷங்கியர், தெகாவியர், ஏலாமியரானவர்களும்,

௰. பெரியவரும், பேர்போனவருமான அஸ்னாப்பார் அவ்விடங்களிலிருந்தழைத்துவந்து சமாரியாவின் பட்டணத்திலே குடியேறப்பண்ணின மற்றச் சனசதளங்களும், நதிக்கப்பாலேயிருக்கிற மற்றச் சனங்களுமுதலான நாமங்கள்தானே.

௰௧. அவர்கள் அர்த்தசஷ்டாவென்ற இராசாவுக்கனுப்பின காகிதத்தின் விவரமாவது; நதிக்கப்பாலேயிருக்கிற உம்முடைய அடியாராகிய மனிதர் மற்றது.

௰௨. உம்மிடத்திலிருந்து எங்களண்டையில் எருசலேமுக்குவந்தேறியிருக்கிற யூதர் அந்தக்கலகமும், பொல்லாப்புமான அந்தப்பட்டணத்தைக் கட்டி, அதின் மதில்களையெழுப்பி, அஸ்திபாரங்களைப்போட்டிசைக்கிறார்களென்பது இராசாவுக்கறியலாகக்கடவது.

௰௩. இப்பொழுதும் அந்தப்பட்டணங்கட்டப்பட்டு அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத் தீர்ந்தால், அவர்கள் பகுதியையும், இறையையும், தீர்வையையுங்கொடாதேபோவார்கள். அப்படியே இராசாக்களின்வரத்திற்கு நஷ்டம்வருமென்று இராசாவுக்கறியப்படக்கடவது.

௰௪. இப்போதும் நாங்கள் இராசாவினுடைய அரமனைச் சம்பளக்காரராயிருந்துகொண்டு, இராசாவுக்குக் கனயீனம் வரப்பார்த்திருக்கிறது எங்களுக்கடாத்தானபடியால், நாங்களிதையனுப்பி உம்முடைய பிதாக்களின் நாளாகமத்தில் ஆராயப்படும்படிக்கு, இதை இராசாவுக்குத் தெரியப்பண்ணுவித்தோம்.

௰௫. அது கலகமும், இராசாக்களுக்கும், சீமைகளுக்கும் நஷ்டமுண்டாக்குகிறதுமான பட்டணமாயிருந்ததென்றும், அதிலே அவர்கள் பூர்வகாலந்துவக்கிக் கலாதியுண்டாக்கினபடியினாலேதானே அந்தப் பட்டணம் பாழ்க்கடிக்கப்பட்டதென்றும், அந்த நாளாகமத்திலே கண்டறிந்துகொள்ளுவீர்.

௰௬. ஆகையால் அந்தப்பட்டணங் கட்டப்பட்டு அதின் அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத்தீர்ந்தால், நதிக்கப்பாலே உமக்கதிலொன்றுமிராதேபோமென்கிறதை இராசாவுக்கு அறியப்பண்ணுகிறோமென்று எழுதியனுப்பினார்கள்.

௰௭. அப்பொழுது இராசா ஆலோசனைத் தலைவனாகிய ரேகூமுக்கும், கணக்கனாகிய சிம்சாயிக்கும், சமாரியாவிற் குடியிருக்கிற மற்ற அவர்களுடைய கூட்டத்தாருக்கும், நதிக்கப்பாலிருக்கிற மற்றவர்களுக்குமெழுதியனுப்பின பிரதியுத்தாரமாவது; உங்களுக்குச் சமாதானமுண்டு:

௰௮. நீங்கள் எங்களுக்கனுப்பின காகிதம் எனக்குமுன்பாகத் தீர்க்கமாய்வாசிக்கப்பட்டது.

௰௯. என் கட்டளையினால் ஆராய்ந்துபார்க்கப்பட்டபொழுது, அந்தப்பட்டணம் பூர்வகாலந்துவக்கி இராசாக்களுக்கு விரோதமாயெழும்பிற்றென்றும், அதிலே கலகமும், பந்தக்கட்டும் பிறந்ததென்றும்,

௨௰. எருசலேமில் வல்லமையுள்ள இராசாக்களிருந்தார்களென்றும், அவர்கள் நதிக்கப்பாலிருக்கிறஎல்லாஇடங்களின்மேலும், ஆண்டுகொண்டார்களென்றும், பகுதியும், இறையும், தீர்வையும் அவர்களுக்குச் செலுத்தப்பட்டவையென்றுங்கண்டுபிடிக்கப்பட்டன.

௨௧. இப்பொழுதும் என்னாலே வேறேகட்டளை கொடுக்கப்படுமட்டும் அந்தப் பட்டணங் கட்டாதபடிக்கு அந்த மனிதர் அதை நிறுத்திவிட நீங்கள் கற்பியுங்கள்.

௨௨. இதிலே நீங்கள் தப்பிதஞ்செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள். இராசாக்களுக்கு நஷ்டமாய்ச்சேதம் அதிகரிப்பதேனென்றெழுதியனுப்பினான்.

௨௩. இராசாவாகிய அர்த்தசஷ்டாவுடைய நிருபத்தின்விவரம். ரேகூமுக்கும், கணக்கனாகிய சிம்சாயிக்கும், அவர்கள் கூட்டத்தாருக்குமுன்பாக வாசிக்கப்பட்டபொழுது, அவர்கள் தீவிரத்துடனே எருசலேமிலிருக்கிற யூதரண்டைக்குப்போய்ப் பராக்கிரமத்தோடும், பலவந்தத்தோடும், அவர்களைவேலைசெய்யாதபடிக்குத்தவிர்த்துவிட்டார்கள்.

௨௪. அப்பொழுது எருசலேமிலுள்ள பராபரனுடைய வீட்டுவேலை நிறுத்தப்பட்டுப் பெர்சியாவின் இராசாவாகிய தரியு இராசரிகபாரம்பண்ணின இரண்டாம் வருஷமட்டும் தவிர்ந்திருந்தது.

## ௫. அதிகாரம்.

[(௧) ஆலயத்தைக்கட்டும்படி செருபாபேலும், ஏசுவாவும் அகாயினாலும், சகரீயாவினாலும் ஏவப்பட்டது. (௩) தத்னாயும், சேதார்பொஸ்னாயும் யூதர்களைத்தடுக்கக்கூடாதது. (௬) அவர்கள் யூதர்களுக்கு விரோதமாகத் தரியுவுக்கெழுதின கடிதம்.]

ஆனால் தீர்க்கதரிசியாகிய அகாயும், இத்தோவின்குமாரனாகிய சகரீயாவும் என்ற தீர்க்கதரிசிகள் யூதாவிலும், எருசலேமிலுமுள்ள யூதருக்குத் தீர்க்கதரிசனஞ்சொ

லவி, இஸ்ரவேலுடைய பராபரனின நாமத திலே அவர்களோடே பேசினார்கள.

௨. அபபொழுது சேயலதியேலின குமாரனாகிய செருபாபேலும, யோத்சதாககின குமாரனாகிய ஏசுவாவும எழுமபி, எருசலேமிலுளள பராபரனுடைய வீடடைக்கடடத துவககினார்கள. அவர்களுககுத்திடனசொலலுகிற பராபரனுடைய தீர்ககதரிசிகளும அவர்களோடிருநதார்கள.

௩. அககாலததிலே நதிககிப்பாலிருககிற தத்னாயெனகிற துரையுஞ சேத்தார் பொஸனாயும, அவர்கள கூடடததாரும அவர்களண்டைககுவநது, இநத வீடடைக்கட்டவும, இநதமதிலை யெடுபபிககவும உஙகளுககுக் கடடளையிடடவனாரொனறு அவர்களைக கேடடார்கள.

௪. அபபொழுது அதையும, இநத மாளிகையைக்கடடுகிற மனிதரின நாமஙகளஏதெனகிறதையும அவர்களுககுசசொனனோம.

௫. ஆனால இநதசசெயதி தரியுவணடைககுபபோய எடடுமடடுககும இவர்கள யூதருடைய மூப்பரினவேலையைத் தவிர்க்காதபடிககு அவர்களுடைய பராபரனின்கண் அவர்களமேல வைககப்படடிருநதது. அபபொழுது இதைககுறிதது அவர்களசொனனமறுமொழியைக் காகிதத்திலெழுதியனுபபினார்கள.

௬. நதிககிப்பாலிருககிற தத்னாய் எனற துரையும, சேத்தார்பொஸனாயும, நதிககிப்பாலிருககிற அப்பற்சாகியரான அவனகூடடததாரும, இராசாவாகிய தரியுவுககெழுதியனுபபின காகிதத்தினவிவரமாக,

௭. அதில எழுதியிருநததாவது; இராசாவாகிய தரியுவுககுச சகலவிதமான சமாதானமுணடாகக்கடவது.

௮. நாஙகள யூதர் சீமையிலுளள மகா பராபரனுடையவீடடுக்குபபோனோம். அது பெருங கற்களாற் கடடப்படுகிறது. மதிலகளினமேல உததிரஙகள பாய்ச்சப்படடு அநதவேலை தீவிரமாய நடநது அவர்களுககுக் கைகூடிவருகிறதெனபது இராசாவுககறியப்படக்கடவது.

௯. அபபொழுது இநத வீடடைக்கடடவும, இநதமதிலையெடுபபிககவும உஙகளுககுக் கட்டளையிடடவனாரொனறு அநதமூப்பரைக் கேடடோம.

௰. இதுவுமலலாமல, அவர்களுககுளளே தலைவரான மனிதரின நாமஙகளை உமககு எழுதியறியப்பணணும்படிக்கு அவைகளையும் அவர்களைககேடடோம.

௰௧. அவர்கள எஙகளுககுககொடுததபிரதியுத்தாரமாவது; நாஙகள பரலோகததுககும, பூலோகததுககும பராபரனாயிருககிறவருககு ஊழியககாரராயிருநது அநேக வருஷஙகளுககுமுனனேகட்டப்படடிருநத வீடடைக்கடடுகிறோம. அதை இஸ்ரவேலுடைய பெரிய இராசா ஒருவன கடடித்தீர்ததான.

௰௨. ஆனால எஙகள பிதாககள பரமணடலததின பராபரனுககுக் கோபம வருவிததபிற்பாடு அவர் இவர்களைப் பாபேலினஇராசாவாகிய நேபுகாத்நேத்சார் எனற கலதேயனகையில ஒபபுககொடுததார். அவர் இநதவீடடைநிர்மூலமாககிசசனததைபபாபேலுககுக கொணடுபோனார்.

௰௩. ஆனாற பாபேலின இராசாவாகியகோரேசின முதலாமவருஷத்திலே கோரேஸ இராசாவானவர் பராபரனுடைய இநதவீடடைக்கடடக்கடடளையிடடார்.

௰௪. நேபுகாத்நேத்சார் எருசலேமிலிருந்த தேவாலயததிலெடுததுப் பாபேலின தேவாலயததிறகொணடுபோயவைதத பராபரனுடையவீடடின பொன்வெள்ளித் தட்டுமுட்டுகளையுமஇராசாவாகிய கோரேஸ பாபேலின் தேவாலயததிலெடுததுக்கொடுததார். அவர் துரையாகவைதத செஸபாத்சாரெனறநாமமுளளவனுககு அவை ஒபபுவிககப்படடன்.

௰௫. இவனோடே அவர், நீ யிநதத் தட்டுமுட்டுகளைவாங்கி எருசலேமிலிருககுநதேவாலயததுககுக கொணடுபோயப் பராபரனுடையவீடு தனனுடையதானததிலேகட்டப்படுவதை விசாரியெனறார்.

௰௬. அபபொழுது அநதச செஸபாத்சார் வநது எருசலேமிலுளள பராபரனுடைய வீடடின அஸதிபாரததைப் போடடான. அநநாளதுவக்கிஇதுவரைககும்அதுகட்டப்படுகிறது. ஆனால அது இனனமமுடியவிலலையெனறார்கள.

௰௭. இபபொழுதும இராசாவுககுச சமமதியாயிருநதால, எருசலேமிலிருககிற பராபரனுடைய அநத வீடடைக்கடட இராசாவாகிய கோரேஸ கட்டளையிடடதுணடோவெனறு பாபேலிலிருககிற இராசாவினபொககிசவீடடிலே ஆராயந்துபார்ககப்படடு இதறகாக இராசாவினுடைய சிததமினனதெனறு எஙகளுககு எழுதியனுப்பப்படககடவதெனறெழுதியிருநதது.

## ௬. அதிகாரம்.

[(௧)கோரேசின்பிரசிததபததிரததைத்தரியு கணடுபிடிதது ஆலயததைக கடடுமபடிப புதியகடடளையிடடது. (௰௩)பகையாளிகளின உதவியினாலும, தீர்ககதரிசிகளினகடடளைகளினாலும ஆலயமமுடிநதது. (௰௬) பிரதிஷடைபபணடிகையும. (௰௯) பஸ்காபணடிகையும செயயபபடடது.]

அபபொழுது இராசாவாகிய தரியு இட்டகட்டளையினபடியே பாபேலின பொககிசஙகளின சாலையிலேதேடினார்கள.

௨. பிற்பாடு மேதியசீமையிலிருக்கிற அக்மெதாப்பட்டினத்தின் அரமனையிலே ஒரு புஸ்தகச்சுருள் கண்டுபிடிக்கப்பட்டது. அதிலே நினைவுகூருதலுக்காக எழுதியிருந்ததாவது;

௩. இராசாவாகிய கோரேசின் முதலாம் வருஷத்திலே கோரேஸ் என்ற இராசா இட்டகட்டளையேதென்றால், எருசலேமிலிருந்த பராபரனுடைய வீடு பலிகள் செலுத்தப்படுந்தானத்திலே கட்டப்படக்கடவது. அதின் அஸ்திபாரங்கள் பலமாயிருப்பதாக. அது அறுபது முழ உயரமும், அறுபது முழ அகலமுமாயிருக்கவேணும்.

௪. பெருங்கற்களான மூன்று வரிசைகளும், புது உத்திரங்களான ஒரு மச்சுவரிசையும் அதிலுண்டாயிருக்கக்கடவது. செலவுந்செலவு இராசாவின் அரமனையிலிருந்து கொடுக்கப்படுவது.

௫. இதுவுமல்லாமல், நேபுகாத்நேச்சார் எருசலேமிலிருந்த தேவாலயத்திலெடுத்துப் பாபேலுக்குக் கொண்டுவந்த பராபரனுடைய வீட்டுக்கடுத்த பொன் வெள்ளித்தட்டுமுட்டுகள் எருசலேமிலிருக்கும் தேவாலயமாகிய தங்கள் தானத்திற்குப் போய்ச்சேரும்படிக்குத் திரும்பக் கொடுக்கப்படக்கடவது. அவைகளைப் பராபரனுடைய வீட்டுக்குக் கொண்டுபோகக் கடவர்களென்று அதில் எழுதியிருந்தது.

௬. அப்பொழுது தரியு இராசா எழுதிய உத்தரவாவது; இப்பொழுதும் நதிக்கப்பாலிருக்கிற துரையாகிய தத்னாயே சேத்தார்பொஸ்னாயே நீங்களும், நதிக்கப்பாலிருக்கிற அப்பற்சேக்காயரான உங்கள் கூட்டத்தாரும் அவ்விடத்தைவிட்டு விலகியிருங்கள்.

௭. பராபரனுடைய அந்தவீட்டின் வேலையை அவர்கள் செய்யட்டும். யூதருடைய துரையும், யூதரின் மூப்பரும் பராபரனுடைய அந்தவீட்டை அதின் தானத்திலே கட்டக்கடவர்கள்.

௮. பராபரனுடைய அந்தவீட்டை யூதரின் மூப்பர் கட்டும்படிக்கு நீங்கள் அவர்களுக்குச் செய்ய நம்மாலுண்டான கட்டளையேதென்றால், அந்த மனிதருக்குத் தடையுண்டாகாதபடிக்கு நதிக்கப்பால் எடுக்கும் பகுதியென்ற இராசாவின் ஆஸ்திகளிலே அவர்களுக்குத் தாமதமில்லாமற் செலவுந்செலவு கொடுக்கப்படுவதாக.

௯. பரமண்டலங்களின் பராபரனுக்குச் சர்வாங்கதகனங்களைப் பலியிடத் தேவையானகாளையெருதுகள், ஆட்டுக்கடாக்கள், ஆட்டுக்குட்டிகள், கோதுமை, உப்பு, திராட்சப்பழ இரசம், எண்ணெய் முதலானவை தினந்தினம் அவர்கள் சொற்படி தாழ்ச்சியில்லாமற் கொடுக்கப்படக்கடவது.

௰. எருசலேமிலிருக்கிற ஆசாரியர்கள் பரமண்டலங்களின் பராபரனுக்கு உகந்த வாசனையான பலிகளைச் செலுத்தி இராசாவுக்கும், அவர் குமாரருக்கும் சுகத்திற பிராணனுக்காகவும் மன்றாடும்படிக்கு அப்படியே தருவதாக.

௰௧. பின்னையும் நம்மால் உண்டான கட்டளையென்னவெனில், எந்தமனிதனாகிலும் இந்தக் கட்டளையைப் புரட்டினால் அவன் வீட்டில் ஒரு உத்திரம் பிடுங்கி நாட்டப்பட்டு அவன் அதில் தூக்கிப்போடப்படவும், அவனுடைய வீடு அதின் நிமித்தமாகக் குப்பைமேடாக்கப்படவும் வேணுமென்பதுதானே.

௰௨. ஆகையால், இதைப் புரட்டவும், எருசலேமிலிருக்கிற பராபரனுடைய அந்த வீட்டைக் கெடுக்கவுந் தங்கள் கையை நீட்டப்போகிற எந்த இராசாவையும், சனத்தையுந் தமதுடைய நாமத்தை அங்கே வாசமாயிருக்கப்பண்ணின பராபரன் நிர்மூலமாக்கக்கடவார், தரியுவாகிய நாம் இந்தக் கட்டளையைக் கொடுத்தோம். அதின்படி சீக்கிரமாகச் செய்யப்படக்கடவதென்று எழுதியனுப்பினான்.

௰௩. அப்பொழுது நதிக்கப்பாலிருக்கிற துரையாகிய தத்னாயும், சேத்தார்பொஸ்னாயும், அவர்கள் கூட்டத்தாருந் தரியு இராசா கட்டளையிட்டபிரகாரமாகச் சீக்கிரமாய்ச் செய்தார்கள்.

௰௪. அப்படியே யூதரின் மூப்பர் தீர்க்கதரிசியாகிய அகாயும், இத்தோவின் குமாரனாகிய சகரீயாவுந் தீர்க்கதரிசனஞ் சொல்லுகையிற் கட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் கைகூடியும் வந்தது. அவர்கள் இஸ்ரவேலுடைய பராபரனின் கட்டளையின்படியேயும், கோரேஸ், தரியு, பெர்சியாவின் இராசாவாகிய அர்த்தசஷ்டா என்றவர்களுடைய கட்டளையின்படியேயும், அதைக்கட்டிமுடித்தார்கள்.

௰௫. இராசாவாகிய தரியு அரசாளுகிற ஆறும் வருஷம் ஆதார் என்ற மாதம் மூன்றாந்தேதியிலே அந்தவீடு கட்டித்தீர்ந்தது.

௰௬. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரும், ஆசாரியரும், லேவியரும், சிறையிருப்பிலிருந்து வந்தமற்றவர்களும் பராபரனுடைய அந்தவீட்டைச் சந்தோஷத்தோடே பிரதிஷ்டைபண்ணி,

௰௭. பராபரனுடைய அந்தவீட்டின் பிரதிஷ்டைக்காக நூறு காளைகளையும், இருநூறு ஆட்டுக்கடாக்களையும், நானூறு ஆட்டுக்குட்டிகளையும், இஸ்ரவேல் கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே இஸ்ரவேலனைத்தின் பாவம் போக்குதலுக்காகப் பன்னிரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும் பலியிட்டு,

௰௮. மோசேயின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடியே அவர்கள் எருசலேமில் வாசமாயிருக்கிற பராபரனுடைய ஆராதனைக்கென்று ஆசாரியரை அவர்கள் வகுப்புகளிலும்,

இலேவியரை அவர்கள் முறைவரிசைகளிலும் நிறுத்தினார்கள்.

௰௯. பஸ்காவையும் சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் முதலாம் மாதம் பதினாலாந் தேதியிலே ஆசரித்தார்கள்.

௨௰. ஏனெனில், ஆசாரியரும், இலேவியரும், ஒருவனைப்போலே தங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டதினாலே யெல்லாரும் சுத்தமாயிருந்து சிறையிருப்பிலிருந்து வந்தவர்களெல்லாருக்காகவும், ஆசாரியரான தங்கள் சகோதரருக்காகவும், தங்களுக்காகவும் பஸ்காவின் ஆட்டுக்குட்டிகளைக் கொலைசெய்தார்கள்.

௨௰௧. அப்படியே சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த இஸ்ரவேல்புத்திரரும், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைத் தேடப் பூலோகசாதிகளின் அசுத்தத்தைவிட்டு அவர்களண்டையிலே சேர்ந்த அனைவருமாய் அதைப் புசித்து,

௨௰௨. புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையை ஏழுநாளாகச் சந்தோஷத்துடனே ஆசரித்தார்கள். ஏனென்றால், கர்த்தர் அவர்களை மகிழ்ச்சியாக்கி அவர்கள் கைகளை இஸ்ரவேலின் பராபரனாகிய பராபரனுடைய வீட்டின் வேலையிலே பலப்படுத்தத்தக்கவிதமாய் அசூருடைய இராசாவின் இருதயத்தை யவர்களுக்குச் சார்ந்திருக்கப்பண்ணியிருந்தார்.

## ௭. அதிகாரம்.

[(௧) எஸ்றா எருசலேமுக்குப்போனது. (௰௧) அர்த்தசஷ்டா அவனுக்குத்தத்தையாகக்கொடுத்த அதிகாரபத்திரம். (௨௭) பராபரன் செய்த கிருபைக்காக அவன் அவரைத் துதித்தது.]

இந்தவர்த்தமானங்களுக்குப்பிறபாடு செராயாவின் குமாரனாகிய எஸ்றா பெர்சியாவின் இராசாவாகிய அர்த்தசஷ்டா அரசாளுகிறகாலத்திலே பாபேலிலிருந்தேறிவந்தான். அந்தச்செராயா அசரீயாவின் குமாரனும், இவன் இல்கீயாவின் குமாரனும்,

௨. இவன் சல்லூமின் குமாரனும், இவன் சாதோக்கின் குமாரனும், இவன் அகித்தூபின் குமாரனும்,

௩. இவன் அமரீயாவின் குமாரனும், இவன் அசரீயாவின் குமாரனும், இவன் மெராயோதின் குமாரனும்,

௪. இவன் செராகியாவின் குமாரனும், இவன் ஊசியின் குமாரனும், இவன் புக்கியின் குமாரனும்,

௫. இவன் அபிசூகாவின் குமாரனும், இவன் பினெகாசின் குமாரனும், இவன் எலெயாசாரின் குமாரனும், இவன் பிரதான ஆசாரியனான ஆரோனின் குமாரனுமாயிருந்தார்கள்.

௬. ஏறிவந்த இந்த எஸ்றா இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் கொடுத்த மோசேயின் நியாயப்பிரமாணத்திலே சவரணையான வேதபாரகனாயிருந்தான். அவன்மேலிருந்த அவனுடைய பராபரனாகிய கர்த்தருடைய கரத்தின்படியே இராசா அவனுக்கு அவன் கேட்டவைகளையெல்லாங்கொடுத்தான்.

௭. அவனோடேகூட இஸ்ரவேல்புத்திரரிலும், ஆசாரியரிலும், இலேவியரிலும், பாடகரிலும், வாசற்காப்பாரிலும், இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களிலுஞ் சிலர் அர்த்தசஷ்டா இராசாவின் ஏழாம்வருஷத்திலே எருசலேமுக்கேறிப்போனார்கள்.

௮. ஐந்தாம்மாதத்தில் அவன் எருசலேமுக்கு வந்தான். அது அந்த இராசாவின் ஏழாம் வருஷமானது.

௯. அதெப்படியெனில், முதலாம்மாதம் முதல் தேதியிலே அவன் பாபேலிலிருந்தேறிப்போகுதல் திட்டப்பட்டு ஐந்தாம்மாதம் முதல் தேதியிலே அவன் தன்மேலிருந்த தன் பராபரனுடைய தயவுள்ள கரத்தின்படி எருசலேமுக்கு வந்தான்.

௰. ஏனென்றால், கர்த்தருடைய வேதத்தை ஆராயவும், அதின்படி செய்யவும், இஸ்ரவேலில் கட்டளைகளையும், நீதிநியாயங்களையும், உபதேசிக்கவும் எஸ்றா தன் இருதயத்தைப் பண்படுத்தியிருந்தான்.

௰௧. கர்த்தருடைய கற்பனைகளின் வார்த்தைகளிலும், அவர் இஸ்ரவேலுக்குக்கொடுத்த கட்டளைகளிலும் படித்தெளிந்த வேதபாரகனாகிய எஸ்றாவென்னும் ஆசாரியனுக்கு இராசாவாகிய அர்த்தசஷ்டா கொடுத்த நிருபத்தின் விவரமாவது;

௰௨. இராசாக்களுக்கு இராசாவாகிய அர்த்தசஷ்டா பரமண்டலங்களின் பராபரனுடைய நியாயப்பிரமாணத்திறந்த உத்தம வேதபாரகனாகிய எஸ்றாவென்ற ஆசாரியனுக்குப் பூரணசமாதானம். இது

௰௩. நம்முடைய இராச்சியத்திலிருக்கிற இஸ்ரவேல்சனத்திலும், அதின் ஆசாரியரிலும், இலேவியரிலும் உன்னோடேகூட எருசலேமுக்குப்போக மனப்பூர்வமாயிருக்கிற யாவரும் போகலாமென்று நம்மாலே கட்டளையிறந்தது.

௰௪. ஏனென்றால், நீ உன் கையிலிருக்கிற உன்னுடைய பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படி யூதாவிலும், எருசலேமிலும் நடக்கிறதோவென்று விசாரிக்கவும்,

௰௫. இராசாவும், அவருடைய ஆலோசனைக்காரரும் எருசலேமில் வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின் பராபரனுக்கும் மனப்பூர்வமாய்க்கொடுத்த வெள்ளியையும், பொன்னையும்,

௰௬. பாபேலின் சீமையெங்கும் உனக்குக் கிடைக்கும் எல்லாவெள்ளியையும், பொன்னையும் உன்னுடைய சனமும், ஆசாரியரும

எருசலேமிலுள்ள தங்கள் பராபரனுடைய வீட்டுக்கென்று மனஉச்சாகமாய்க்கொடுக்கும் காணிக்கைகளையும் நீ கொண்டுபோகவும், நீ இராசாவினாலும், அவருடைய ஏழு ஆலோசனைக்காரராலும் அனுப்பப்படுகிறாய்.

யஎ. ஆகையால், அந்தத் திரவியத்தினாலே நீ சீக்கிரமாக எருதுகளையும், ஆட்டுக்கடாக்களையும், ஆட்டுக்குட்டிகளையும், அவைகளுக்கடுத்த காணிக்கைகளையும், பானபலிகளையும் வாங்கி அவைகளை எருசலேமிலிருக்கிற உங்கள் பராபரனுடைய வீட்டுப்பலிபீடத்தின்மேற் செலுத்துவாயாக.

யஅ. மீதியான வெள்ளியினாலும், பொன்னினாலும் செய்ய உனக்கும், உன் சகோதரருக்கும் எப்படி எது நன்றாய்க்காணுமோ அதை உங்கள் பராபரனுடைய சித்தத்தின்படியே செய்யுங்கள்.

யக. உன்பராபரனுடைய வீட்டின் ஆராதனைக்காக உனக்குக்கொடுக்கப்பட்ட தட்டுமுட்டுகளையும் நீ எருசலேமின் பராபரனுக்குமுன்பாக ஒப்புவிக்கக்கடவாய்.

உய. பின்னையும் உன்பராபரனுடைய வீட்டுக்கு நீ கொடுக்கவேண்டியதும், வேண்டியதுமாயிருப்பதை நீ இராசாவின்பொக்கிசவீட்டிலவாங்கிக்கொடுப்பாயாக.

உக. நதிக்கப்பாலிருக்கிற எல்லாப்பொக்கிசக்காரருக்கும் அர்த்தசஷ்டாவென்ற இராசாவாகியநாம் இடுகிற கட்டளையேதென்றால், பரமண்டலங்களுடைய பராபரனின் வேதபாரகனாகிய எஸ்றவென்ற ஆசாரியன் நூறு தாலந்து வெள்ளி, நூறுமரக்கால் கோதுமை, நூறுகலத் திராட்சப்பழ இரசம், நூறுகல எண்ணெயமட்டாக உங்களைக்கேட்பவையெல்லாவற்றையும்,

உஉ. கணக்கெழுதக் கவையில்லாத உப்பையுந் தாமதமில்லாமற்கொடுக்கவும்,

உங. பரமண்டலங்களின் பராபரனுடைய கற்பனையின்படியே எது தேவையாயிருக்குமோ அதுவெல்லாம் பரமண்டலத்துப் பராபரனுடைய வீட்டுக்குச் சுருதிகோடே செலுத்தப்படவும் வேணும். ஏனெனில், இராசாவும், அவர்குமாரரும் ஆளும் இராசசியத்தின்மேற் கடுங்கோபம் வருவானேன்,

உச. பின்னையும் ஆசாரியர்களும், இலேவியரும், பாடகரும், வாசற்காப்பாளரும், இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களும், அந்தப் பராபரனுடைய வீட்டின்வேலைக்காரருமான ஒருவன்மேலும் பகுதியாகிலும், வரியாகிலும், தீர்வையெனகிலும் சுமத்தப்படவேண்டாமென்று அவர்களைக்குறித்து உங்களுக்கறிவிக்கப்படுத்துகிறோம்.

உரு. பின்னையும் நதிக்கப்பாலிருந்து உன் பராபரனுடைய நியாயப்பிரமாணங்களை அறிந்த எல்லாசனத்தையும், நியாயம்விசாரிக்கத்தக்க தலைவர்களையும், நியாயாதிபதிகளையும் எஸ்றவாகிய நீ உன்னிலுள்ள உன் பராபரனுடைய ஞானத்தின்படியே வைப்பாயாக. அவைகளை அறியாதவர்களுக்கு அவைகளை உபதேசிக்கக்கடவீர்கள்.

உசு. உன்பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படியேயும், இராசாவினுடைய நியாயப்பிரமாணத்தின்படியேயுஞ் செய்யாதவனெல்லாம் உடனே தானே மரணத்துக்காகிலும், தேசத்துக்குப் புறம்பாகத் துரத்தப்படுகிறதற்காகிலும், ஆஸ்தியின் அபராதத்துக்காகிலும், காவலுக்கென்கிலுந் தீர்க்கப்படக்கடவனென்று எழுதியிருந்தது.

உஎ. எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டை அலங்கரிக்க இப்படிப்பட்டவைகளை இராசாவின் இருதயத்திற்கொடுத்து,

உஅ. இராசாவுக்கும், அவர் ஆலோசனைக்காரருக்கும், இராசாவின்கீழான பலத்த எல்லாப் பிரபுக்களுக்குமுன்பாக எனக்குக் கிருபையடையப்பண்ணின எங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் தோத்திரிக்கப்படுவர்.

உஅ. அப்படியே என்மேலுள்ள என் பராபரனாகிய கர்த்தருடைய கரத்தினாலே நான் பலத்துக்கொண்டு இஸ்ரவேலில் சில தலைவரை என்னோடேகூட ஏறிப்போகும்படிக்குச் சேர்த்துக்கொண்டேன்.

## அ. அதிகாரம்.

[(க) பாபேலிலிருந்துபோன எஸ்றவின் கூட்டாளிகள். (யரு) அவன் தேவாலயத்திற்காகப் பணிவிடைக்காரரை யனுப்புமபடி இரந்தோனைக்கேட்டது. (உச) அவன் பொக்கிசங்களை ஆசாரியர்களின் வசத்தில் வைத்தது (ஙக) அவர்கள் அகபாவிலிருந்து எருசலேமுக்கு வந்தது. (ஙங) பொக்கிசங்களை ஆலயத்தில் தந்தது. (ஙசு) அதிகாரப்பத்திரம் ஒப்புவிக்கப்பட்டது.]

அர்த்தசஷ்டா இராசா அரசாளுங்காலத்திற் பாபேலிலிருந்து என்னோடேகூட ஏறிப்போன தங்கள் பிதாக்களின் வம்சங்களின் தலைவரும், அவர்கள் வம்சத்திட்டவணைகளுமாவன

உ. பினேகாஸ்புத்திரரில் கெர்சோம், இத்தாமாரின் புத்திரரில் தானியேல், தாவீதின் புத்திரரில் அத்தூஸ்,

ங. பாரோஷின்புத்திரரில் ஒருவனான செக்னியாவின் புத்திரர் சகரியாவும், அவனோடேகூட வம்சத்திட்டவணையில் எழுதியிருக்கிற நூற்றைம்பது ஆண்பிள்ளைகளும்,

ச. பாகாத்மோவாபின்புத்திரரில் செரகியாவின்குமாரனாகிய எலியோனாயும், அவனோடேகூட இருநூறு ஆண்பிள்ளைகளும்,

ரு. செக்னியாவின் புத்திரரில் யசீயேலின் குமாரனும், அவனோடேகூட முந்நூறு ஆண்பிள்ளைகளும்,

௬. ஆதினினபுததிரரில யோனததானின குமாரனாகிய எபேதும, அவனோடேகூட ஐம்பது ஆண்பிளளைகளும,

௭. ஏலாமினபுததிரரில அதலியாவின குமாரனாகிய எசாயாவும, அவனோடேகூட எழுபது ஆண்பிளளைகளும,

௮. செப்பதியாவினபுததிரரில மிக்வேலின குமாரனாகிய செப்பதியாவும, அவனோடேகூட எணபது ஆணபிளளைகளும,

௯. யோவாபினபுததிரரில் எகியேலின குமாரனாகிய ஒப்தியாவும, அவனோடேகூட இருநூற்றுப்பதினெட்டு ஆண்பிளளைகளும,

௰. செலோமீதின புததிரரில யோசிபியாவின குமாரனும, அவனோடேகூட நூற்றறுபது ஆண்பிளளைகளும,

௰௧. பெபாயி புததிரரிற்பெபாயிகுமாரனாகிய சகரியாவும, அவனோடேகூட இருபததெட்டு ஆணபிளளைகளும,

௰௨. அஸ்காதின புததிரரிற் காத்தானின குமாரனாகியயோகனானும, அவனோடேகூட நூற்றுப்பதது ஆண்பிளளைகளும,

௰௩. அதோனிகாமினகடைசிப்புத்திரரான எலிபேலேத், ஏயேல, செமாயாவெனறநாமங்களுளளவர்களும, அவர்களோடேகூட அறுபது ஆண்பிளளைகளும,

௰௪. பிகேவாயினபுததிரரில ஊத்தாயும, சபூதும அவர்களோடேகூட எழுபது ஆண்பிளளைகளுந்தானே.

௰௫. இவர்களை நான அகாபாவுககு ஓடுகிற நதியணடையிலே கூட்டிககொணடு போனேன். அங்கே மூனறுநாள இறங்கியிருந்தோம. நானசனத்தையும, ஆசாரியரையும ஆராயந்து பார்க்கிறபோது, லேவியின புததிரரில ஒருவனையும அங்கேகாணவிலலை.

௰௬. ஆகையால நான எலியேசர், அரியேல, செமாயா, எலநாததான, யாரிப், எல்நாத்தான, நாத்தான, சகரியா, மெசுலலாமெனற தலைவரையும, யோயாரிப், எல்நாத்தானெனறவிவேகிகளையும்அழைத்தனுப்பி,

௰௭. கசிப்பியாவெனற ஸ்தலததிலிருக்கிற தலைவனாகிய இததோவண்டைககுச் செயதியைககொணடுபோக அவர்களுக்குக் கற்பிதது, நமமுடையபராபரனுடையவீட்டுக்குப் பணிவிடைககாரரை எங்களணடைககழைததுவருமபடிககு அவர்கள கசிப்பியாவெனறஸ்தலததிலிருக்கிற தங்களசகோதரனாகிய இததோவுககும, இஸ்ரவேலைச சேர்ந்தவர்களுககுஞசொலலுமவார்த்தைகளை அவர்கள வாயிலேபோட்டேன.

௰௮. அவர்கள எங்களமேலிருந்த எங்கள பராபரனுடைய தயையுளள கரததினபடியே, இஸ்ரவேலுககுப்பிறந்த லேவியின குமாரனாகிய மகிலீயினபுததிரரிற் புததியுளளமனுஷனாகிய செரேபியாவும, அவனகுமாரரும, சகோதரருமான பதினெட்டுப்பேரையும,

௰௯. மெராரியரினபுததிரரில அஷபியாவும, அவனோடே எசாயாவும, அவனசகோதரரும, அவர்கள குமாரருமான இருபது பேரையும,

௨௰. தாவீதும, பிரபுககளும லேவியருககுப பணிவிடைககாரராகவைதத இஸ்ரவேலைச்சேர்ந்தவர்களில இருநூற்றிருபது பேரையும எங்களுககு அழைததுககொணடுவந்தார்கள. அவர்களெலலாருடையபேர்களுஞ் சொலலப்பட்டன.

௨௰௧. அபபோது நாங்கள எங்கள பராபரனுககுமுனபாக எங்களைத தாழததுகிறதற்கும, எங்களுககும, எங்கள பிளளைகளுக்கும, எங்கள எலலா ஆஸ்திககும, அவராலே செவ்வையானவழியைத தேடுகிறதற்கும நான அங்கே அந்த அகாபாவு நதியணடையிலே உபவாசததைககூறினேன்.

௨௰௨. ஏனெனில, வழியிலேசதுருவைவிலககி யெங்களுககுத துணையாயிருகக நான இராசாவைச சேவகரையும, குதிரைககாரரையுங கேட்க வெட்கப்பட்டிருந்தேன. ஏனெனறால, எங்கள பராபரனுடையகரம நலமுணடாகத் தமமைததேடுகிறவர்களெலலாரினமேலும், அவருடையபெலனும், அவருடையகோபமும அவரைவிட்டு விலகுகிறவர்களெலலாரினமேலுமிருககிறதெனறு நாங்கள இராசாவுககுச சொலலியிருந்தோம.

௨௰௩. அபபடியே நாங்கள உபவாசமபணணி எங்கள பராபரனிடததிலே அதைத்தேடினோம, எங்கள விணணபபததைககேட்டுத்தந்தார்.

௨௰௪. பிற்பாடு நான ஆசாரியரின தலைவரிலே பன்னிரணடுபேராகிய செரேபியாவையும, அஷபியாவையும, அவர்கள சகோதரரிலே பததுப்பேரையுங கூடப பிரிததெடுதது,

௨௰௫. இராசாவும, அவருடைய ஆலோசனைககாரரும, அவருடைய பிரபுககளும, தென்பட்ட எலலா இஸ்ரவேலரும எங்கள பராபரனுடையவீட்டுககெனறு எடுததுககொடுததகாணிக்கையாகியவெளளியையும், பொனனையும, தட்டுமுட்டுகளையும அவர்களுககு நிறுததுககொடுததேன.

௨௰௬. அவர்கள கையிலே நான அறுநூற்றைமபதுதாலநது வெள்ளியையும, நூறுதாலநது நிறையான வெள்ளிததட்டுமுட்டுகளையும, நூறுதாலநது பொனனையும,

௨௰௭. ஆயிரந தங்கக்காசின விலையான இருபது பொற்கிணணிகளையும, பொனனைப்போலெண்ணப்பட்ட பளபளப்பான நலல வெண்கலமான இரணடு பாததிரங்களையும நிறுததுக்கொடுதது,

௨௰௮. அவர்களுடனேசொனனது; நீங்கள

கர்த்தருக்குப் பரிசுத்தவான்கள். இந்தத் தட்டுமுட்டுகளும், உங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தருக்கு மன உற்சாகமாயச்செலுத்தப்பட்ட இந்தவெள்ளியும், இந்தப்பொன்னும் பரிசுத்தம்.

௨௯. நீங்கள் அதை எருசலேமிலிருக்கிற பராபரனுடையவீட்டின் அறைகளில் ஆசாரியர்,இலேவியருடையபிரபுக்களுக்கும்,இஸ்ரவேலுடைய பிதா வம்சங்களின் தலைவருக்கும் முன்பாக நிறுத்தொப்புவிக்குமட்டும் விழித்து அதைக்காத்துக்கொண்டிருங்களென்றேன்.

௩௰. அப்படியே அந்தஆசாரியரும், இலேவியரும்,அந்தவெள்ளியையும்,பொன்னையும், தட்டுமுட்டுகளையும் எருசலேமிலிருக்கிறஎங்கள் பராபரனுடையவீட்டுக்குக் கொண்டு போகும்படிக்கு நிறைப்பிரகாரமாய் வாங்கிக்கொண்டார்கள்.

௩௰௧. அப்படியே நாங்களெருசலேமுக்குப் போக முதலாம்மாதம் பன்னிரண்டாந்தேதியிலே அகாபா நதியைவிட்டுப் பயணமாயப் புறப்பட்டோம். எங்கள் பராபரனுடையகரம் எங்கள்மேலிருந்து வழியிலே சத்துருவினகைக்கும், பதிவிருக்கிறவர்களுடையகைக்கும் எங்களைத்தப்புவித்தது.

௩௰௨. நாங்களெருசலேமுக்குவந்து அங்கே மூன்றுநாளிருந்தபிற்பாடு.

௩௰௩. நாலாம்நாளிலே அந்த வெள்ளியும், பொன்னும், தட்டுமுட்டுகளும் எங்கள்பராபரனுடையவீட்டில ஆசாரியனாகிய உரியாவின்குமாரனமெரேமோதின் கையிலும், பினேகாசின்குமாரன எலேயாசாரின் கையிலுங்கூட எல்லாவற்றிற்குமிருந்த இலக்கத்தின்படியேயும் நிறுத்தொப்புவிக்கப்பட்டன. ஏசுவாவின்குமாரனயோசபாத்தும்,பின்னுவின் குமாரன நொவதியாவுமென்ற இலேவியரும் அவர்களோடேகூட இருந்தார்கள்.

௩௰௪. அந்தநிறையெல்லாம அக்காலத்தில எழுதப்பட்டன.

௩௰௫. குடிவிலகிச்சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் இஸ்ரவேலின பராபரனுக்குச் சர்வாங்கத்தகனங்களாக இஸ்ரவேலனைத்தினிமித்தம்பன்னிரண்டு எருதுகளையும், தொண்ணூற்றாறு ஆட்டுக்கடாக்களையும், எழுபத்தேழு ஆட்டுக்குட்டிகளையும், பாவம்போக்கப்பன்னிரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும்பலியிட்டு, அவையெல்லாங் கர்த்தருக்குச்சர்வாங்கத்தகனமாகச்செலுத்தினார்கள்.

௩௰௬. பிற்பாடு இராசாவின கட்டளைகளை நதிக்கப்பாலிருக்கிற இராசாவின சபையார்களுக்கும், அதிகாரிகளுக்கும ஒப்புவித்தார்கள். அப்போது இவர்கள்சனத்துக்கும், பராபரனுடைய வீட்டுக்கும உதவியாயிருந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலர் அன்னியர்களுடனேசெய்த சம்பந்தத்திற்காக எஸ்றாதுக்கித்தது. (௫) பாவத்தை மன்னிக்கும்படியவன்பராபரனை மன்றாடினது.]

இவைகளசெய்துமுடிந்தபிற்பாடு பிரபுக்கள என்னண்டைக்குச் சேர்ந்து சொன்னதாவது; இஸ்ரவேலசனமும், ஆசாரியரும்,இலேவியரும கானானியர், ஏத்தியர், பெரிசியர், எபூசியர், அம்மோனியர், மோவாபியர்,எகிப்தியர், அமோரியரென்பவர்களுடைய அருவருப்புகளின்படியிருக்கிற இந்தத் தேசங்களின சனசதளங்களைவிட்டுப்பிரியாதேபோனார்கள்.

௨. அந்தத்தேசங்களின அவர்களுடையகுமாரத்திகளில தங்களுக்கும், தங்களகுமாரருக்குமபெண்களைக்கொண்டார்கள்.இப்படியே பரிசுத்தவித்துத் தேசங்களினசனசதளங்களோடே கலந்துபோயிற்று. பிரபுக்களின கையும், அதிகாரிகளின்கையும இந்தப பாதகத்தில முந்தினவையுமாயிருந்ததென்றார்கள்.

௩. நான இந்தவர்த்தமானத்தைக் கேட்ட பொழுது நான என வஸ்திரத்தையும், என சால்வையையுங்கிழித்து,என தலையிலும், என தாடியிலுமமயிரைப்பிடுங்கிக்கொண்டு திகைத்தவனாய உளுக்காந்திருந்தேன்.

௪. அப்போது சிறையிருப்பிலிருந்துவந்தவர்களுடைய பாதகத்தினிமித்தம இஸ்ரவேலுடைய பராபரனின்வார்த்தைகளால நடுங்குகிறயாவரும என்னோடே கூடிக்கொண்டார்கள். நானோவெனில அந்திப்பலிசெலுத்தப்படுமட்டுந் திகைத்தவனாய உளுக்கார்ந்துகொண்டிருந்தேன்.

௫. அந்திப்பலியினநேரத்திலோவெனில், நானென்சிறுமையோடும், கிழித்துக்கொண்டிருக்கிற என்வஸ்திரத்தோடும், என்சால்வையோடும எழுந்திருந்து என்முழங்கால்களையுமுடக்கி, என்கைகளை என்பராபரனாகிய கர்த்தருக்கு நேராகவிரித்து.

௬. என்பராபரனே, நான என முகத்தை யென்பராபரனாகிய தேவரீருக்கு முன்பாக ஏறெடுக்கவெட்கிக் கூச்சப்பட்டிருக்கிறேன். ஏனெனில எங்கள அக்கிரமங்களஎங்கள தலைக்குமேலாகப்பெருகி எங்கள குற்றமவானபரியந்தமவளர்ந்து போயிற்று.

௭. எங்கள பிதாக்களின நாளகள்துவக்கி இந்நாளமட்டும நாங்களபெரியகுற்றத்துக்குளளாயிருக்கிறோம். எங்கள அக்கிரமங்களினிமித்தம நாங்களும், எங்கள இராசாக்களும், எங்கள ஆசாரியர்களும், இந்நாளிலிருக்கிறதுபோலத்தேசங்களுடைய இராசாக்களின்கையிலேபட்டயத்துக்கும், சிறையிருப்புக்கும், கொள்ளைக்கும், முகச்செத்துப

போகுதலுக்கும் ஒப்புக்கொடுக்கப் பட்டோம்.

௮. இப்போதும் எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களில் தப்பினவர்களை மீதியாக வைக்கவும், தம்முடைய பரிசுத்த ஸ்தலத்தில் எங்களுக்கொரு ஆசனைக் கொடுக்கவும், இப்படியே எங்கள் பராபரன் எங்கள் கண்களைப் பிரகாசிப்பித்து, எங்கள் அடிமைத்தனத்திலே எங்களுக்குக் கொஞ்சம் சீவனைக் கட்டளையிடவும் அவராலே கொஞ்ச நிமிஷம் போலே கிருபை கிடைத்தது.

௯. ஏனெனில் நாங்கள் அடிமைகளாமே. ஆனால் எங்கள் அடிமைத்தனத்திலே எங்கள் பராபரன் எங்களைக் கைவிடாமல் நாங்கள் எங்கள் பராபரனுடைய வீட்டையெடுப்பித்துப் பாழாய்ப்போன அதை ஸ்தாபிக்கிறதற்காக எங்களுக்குச் சீவனைக் கொடுக்கும்படிக்கும், எங்களுக்கு யூதாவிலும் எருசலேமிலும் ஒரு வேலியைக் கட்டளையிடும்படிக்கும், பெர்சியாவின் இராசாக்களுக்கு முன்பாக எங்கள் மேல் கிருபையைச் சாய்த்தார்.

௰. இப்போதும் எங்கள் பராபரனே, நாங்கள் இதின் பிற்பாடு என்ன சொல்லுவோம். ஏனென்றால் தேவரீர் உமதூழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக் கொண்டு கற்பித்த உம்முடைய கற்பனைகளை விட்டுவிட்டோமே.

௰௧. நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு உட்பிரவேசிக்கும் தேசம் தேசங்களுடைய சனசதளங்களின் அழுக்கினாலும், அவர்கள் அதை ஒரு முனை துவக்கி மற்றமுனைமட்டும் நிறையப் பண்ணின அவர்களுடைய அருவருப்புகளினாலும், அவர்களுடைய அசுத்தத்தினாலும் தீட்டுப்பட்ட தேசமாயிருக்கிறது.

௰௨. இப்போதும் நீங்கள் பலத்துக்கொண்டு தேசத்தின் நன்மையைப் புசித்து அதை நித்தியகாலமாக உங்கள் பிள்ளைகளுக்கு உம்பிளிக்கையாகப் பின்வைக்கும்படிக்கு, நீங்கள் உங்கள் குமாரத்திகளை அவர்களுடைய குமாரருக்குக் கொடாமலும், அவர்களுடைய குமாரத்திகளை உங்கள் குமாரருக்குக் கொள்ளாமலும், அவர்களுக்குச் சமாதானமும், நன்மையுமாயிருக்கிறதையென்றென்றைக்கும் பராமரிக்காமலுமிருப்பீர்களாகவென்றீரே.

௰௩. இப்போதும் எங்கள் பராபரனே! எங்கள் பொல்லாத செய்கைகளினாலும், எங்கள் பெரிய குற்றத்தினாலும் எங்கள் மேல் எல்லாம் வந்தபிற்பாடு தேவரீர் எங்கள் அக்கிரமத்துக்குத் தக்க ஆக்கினையை எங்களுக்குக் கொடாமல், எங்களை இப்படித் தப்பவிட்டிருக்கையில்,

௰௪. நாங்கள் உம்முடைய கற்பனைகளை மீறுக்கவும், இந்த அருவருப்புகளுள்ள சனசதளங்களோடே சம்பந்தங்கலக்கவுந்திரும்புவோமோ, அப்படியானால் எங்களிலொருவரும் மீந்து தப்பாதபடிக்குத் தேவரீர் எங்களை நிர்மூலமாக்குமட்டும் எங்கள் மேலே கோபமாயிருப்பீரல்லவோ.

௰௫. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் நீதியுள்ளவர். ஏனெனில் இதின் மிகுந்தார் இந்நாளிலிருக்கிறது போலே நாங்கள் தப்பிமீந்தியாரோமே. இதோ, நாங்கள் உமக்கு முன்பாக எங்கள் குற்றத்திலிருக்கிறோம். உமக்கு முன்பாக நிற்கத்தக்கவனொருவனுமில்லையென்று சொன்னேன்.

## ௰. அதிகாரம்.

[(௧) எஸ்றா அந்நியவிவாகத்தை விலக்கச் செகனியா அவனைத் தைரியப்படுத்தினது. (௨) எஸ்றா துக்கப்பட்டு சனங்களைக் கூட்டினது. (௯) அவன் கடிந்துகொண்டதனால் அவர்கள் மனஸ்தாபப்பட்டுச் சீராய் நடப்போமென்று சொன்னது. (௰௫) அவர்கள் அப்படிச் செய்யத்தேடினது. (௰௮) அந்நியவிவாகஞ்செய்தவர்களின் பேர்.]

எஸ்றா இப்படி விண்ணப்பம்பண்ணி அறிக்கையிட்டு அழுது பராபரனுடைய வீட்டுக்கு முன்பாகத் தாழவிழுந்து கிடக்கையில் இஸ்ரவேலிற் புருஷரும், பெண்சாதிகளும், பிள்ளைகளுமான மகாப்பெரிய சபை அவனண்டையிலே கூடிக்கொண்டது. ஏனெனில் சனம் மிகவும் அழுதுகொண்டிருந்தது.

௨. அப்போது ஏலாமின் புத்திரரில் ஒருவனாகிய எகியேலின் குமாரன் செகனியா எஸ்றாவுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; நாங்கள் தேசச்சனசதளங்களிலுண்டான அந்நிய ஸ்திரிகளைச் சேர்த்துக்கொண்டதினால் எங்கள் பராபரனுக்கு விரோதமாகப் பாதகம்பண்ணினோமே. ஆகிலும் இப்போது இந்தக்காரியத்திலே இன்னம் இஸ்ரவேலுக்காக நம்பிக்கையிருக்கிறது.

௩. இப்போதும் அந்த எல்லா ஸ்திரிகளையும், அவர்களிற் பிறந்தவர்களையும் ஆண்டவருடைய ஆலோசனைக்கும், எங்கள் பராபரனுடைய கற்பனைக்கு நடுங்குகிறவர்களின் ஆலோசனைக்கும் ஒத்த பிரகாரமாக அகற்றிப்போடுவோமென்று எங்கள் பராபரனோடே உடம்படிக்கை பண்ணக்கடவோம், நியாயப் பிரமாணத்தின்படியே செய்யப்படக்கடவது.

௪. எழுந்திரும். ஏனென்றால் இந்தக்காரியத்தை நடப்பிக்க உமக்கடுத்திருக்கிறது. நாங்கள் உம்மோடே கூடவிருப்போம். நீர் திடன்கொண்டு இப்படி நடப்பியுமென்றான்.

௫. அப்போது எஸ்றா எழுந்திருந்து ஆசாரியர், லேவியருடைய பிரபுக்களும், இஸ்ரவேலனைத்தும் இந்த வார்த்தையின்படி செய்யும்படிக்கு அவர்களை ஆணையிட்டுக்கொண்டான். அவர்கள் ஆணையிட்டார்கள்.

௬. அதின்பிறகு எஸ்றா பராபரனுடைய

வீட்டுக்குமுன்பாக இருந்தெழுந்து எலியாசிபின் குமாரனாகிய யோகனானின் அறைக்குட் பிரவேசித்து அங்கே வந்தபோது அப்பம் புசிக்காமலும், தண்ணீர் குடிக்காமலுமிருந்தான். ஏனென்றால் சிறையிருப்பிலிருந்து வந்தவர்களுடைய பாதகத்தினிமித்தந் துக்கித்துக்கொண்டிருந்தான்.

௭. அப்போது சிறையிருப்பிலிருந்து வந்தவர்களெல்லாரும் எருசலேமிலே வந்து கூடவேணுமென்றும்,

௮. மூன்று நாட்களுக்குள்ளே பிரபுக்கள், மூப்பர்களுடைய ஆலோசனையின்படியே எவனாகிலும் வராதேபோனால் அவனுடைய ஆஸ்தியெல்லாஞ் சாபத்துக்கீடாகி அவன் சிறையிருப்பிலிருந்து வந்த சபைக்குப் புறம்பாக்கப்படுவானென்றும் யூதாவிலும், எருசலேமிலும் கூறப்பண்ணினார்கள்.

௯. அப்படியே யூதா, பென்யமீன் கோத்திரத்தாரெல்லாரும் மூன்று நாட்களுக்குள்ளே எருசலேமிலே கூடினார்கள். அது ஒன்பதாம் மாதம் இருபதாந் தேதியாயிருந்தது. சனமெல்லாம் பராபரனுடைய வீட்டின் வீதியிலே அந்தக் காரியத்துக்காகவும், மழைக்காகவும் நடுங்கிக்கொண்டிருந்தார்கள்.

௰. அப்போது ஆசாரியனாகிய எஸ்று எழுந்திருந்து அவர்களுடனே சொன்னதாவது; நீங்கள் இஸ்ரவேலின்மேலிருக்கிற குற்றத்தை அதிகரிக்கப்பண்ண மறுசாதியான ஸ்திரிகளைப் படைத்திருக்கிற பாதகம்பண்ணினீர்கள்.

௰௧. இப்போதும் நீங்கள் உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தருக்கு அறிக்கைபண்ணி, அவருடைய பிரியத்தின்படியே செய்து தேசத்தின் சனசதளங்களையும், மறுசாதியான ஸ்திரிகளையும் விட்டுவிலகுங்களென்றான்.

௰௨. அதற்குச் சபையெல்லாம் மகா சத்தத்தோடே சொன்ன பிரதியுத்தரமாவது; ஆம் நீர் எங்களோடே சொன்ன உமதுடைய வார்த்தைகளின்படியே செய்யப்படக்கடவது.

௰௩. ஆனால் சனந்திரளானது. இது மாரி காலமுமாயிருக்கிறதினால், இங்கே வெளியிலே நிற்கப்பெலனில்லை. அது ஒருநாள் வேலையுமல்ல. இரண்டு நாள் வேலையுமல்ல. ஏனென்றால், இந்தக்காரியத்திலே விஸ்தாரமானபடி பாதகம்பண்ணினோம்.

௰௪. ஆகையால் இதற்குச் சபையெங்கும் எங்கள் பிரபுக்கள் விசாரிப்புக்காரராக வைக்கப்படட்டும்! அப்படியே இந்தக்காரியத்தினிமித்தம் நம்முடைய பராபரனுக்கிருக்கிற உக்கிரமான கோபத்தை நாங்கள் எங்களைவிட்டுத் திரும்பப்பண்ணுமட்டும் எங்கள் பட்டணங்களில் மறுசாதியான ஸ்திரிகளைப் படைத்த அனைவரும் ஒவ்வொருபட்டணத்தின் மூப்பரோடுந் தங்கள் நியாயாதிபதிகளோடுங்கூடக் குறித்தகாலங்களில் வரக்கடவர்களென்றார்கள்.

௰௫. அல்லால் ஆசகேலின் குமாரன் யோனத்தானும், திக்வாவின் குமாரன் யக்சியாவும் மாத்திரம் அதை விசாரிக்க வைக்கப்பட்டார்கள். மெசுல்லாமும், சப்பெதாயென்ற இலேவியனும் அவர்களுக்கொத்தாசைபண்ணினார்கள்.

௰௬. சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் இந்தப்பிரகாரமாகச் செய்தார்கள். ஆசாரியனாகிய எஸ்றுவும், தங்கள் பிதாக்களுடைய வீட்டின்படியே பேர்பேராக அழைக்கப்பட்ட பிதா வம்சங்களின் தலைவரனைவரும் இந்தக் காரியத்தை ஆராய்ந்துபார்க்கும்படிக்குப் பத்தாம் மாதம் முதல்தேதியிலே தனித்து உட்கார்ந்து,

௰௭. அந்நியசாதியான ஸ்திரிகளைப் படைத்தவர்களெல்லாருடைய காரியத்தையும் முதலாம் மாதம் முதல்தேதியிலே முடித்துவிட்டார்கள்.

௰௮. ஆசாரியரின் புத்திரரில் மறுசாதியான பெண்சாதிகளைப் படைத்தவர்களாகக் காணப்பட்டவர்கள் ஆரென்றால், யோத்சதாக்கின் குமாரனாகிய யெசுவாவின் குமாரரிலும், அவன் சகோதரரிலும் மாசெயாவும், எலியேசரும், யாரீபும், கெதலியாவும்,

௰௯. இவர்கள் தங்கள் ஸ்திரிகளைத் தள்ளிவிடுவோமென்று தங்கள் கைகொடுத்துத் தாங்கள் குற்றவாளிகளானபடியினாலே குற்றம் போகத்தக்கபலியாக ஒரு ஆட்டுக்கடாவைச் செலுத்தினார்கள்.

௨௰. இம்மேரின் புத்திரரில் அனானியும், செபதியாவும்,

௨௧. ஆரீமின் புத்திரரில் மசெயா, எலியா, செமாயா, யெகியேல், உசியாவென்கிறவர்களும்,

௨௨. பாசூரின் புத்திரரில் எலியோனாயு, மசெயா, இஸ்மவேல், நெத்தனெயேல், யோசபாத், எலாசாவென்றவர்களும்,

௨௩. இலேவியரில் யோசபாத், சிமேயி, கெலித்தாவென்றும் பேருள்ள கெலாயா, பெத்தகியா, யூதா, எலியேசர் என்றவர்களும்,

௨௪. பாட்டகரில் எலியாசிபும், வாசற்காப்பாரிற் சல்லூமும், தேலேமும், ஊரியென்றவர்களும்,

௨௫. மற்ற இஸ்ரவேலுக்குள்ளே பாரோசின் புத்திரரில் ரமீயா, எசியா, மல்கியா, மியாமின், எலெயாசார், மல்கியா, பெனாயாவென்றவர்களும்,

௨௬. ஏலாமின் புத்திரரில் மத்தனியா, சகரியா, எகியேல், அப்தி, எரேமோத், எலியாவென்றவர்களும்,

௨௭. சத்தூவின் புத்திரரில் எலியோனாயு, எலியாசிப், மத்தனியா, எரேமோத், சாபாத், அசீசாவென்றவர்களும்,

௨௮. பெபாயின் புத்திரரில் யோகனான், அனனியா, சாபாயி, அத்லாயி என்றவர்களும்,

௨௯. பானியின் புத்திரரில் மெசுல்லாம், மல்லூக், அதாயா, யாசூப், செயால், எரேமோத் என்றவர்களும்,

௩௰. பாகாத் மோவாபின் புத்திரரில் அத்னா, கேலால், பெனாயா, மாசெயா, மத்தனியா, பெத்சாலெயேல், பின்னூயி, மனாசே என்றவர்களும்,

௩௧. ஆரிமின் புத்திரரில் எலியேசர், இசியா, மல்கியா, செமாயா, சிமியோன்,

௩௨. பென்யமீன், மல்லூக், செமரியா என்றவர்களும்,

௩௩. ஆசூமின் புத்திரரில் மத்னாயி, மத்தத்தா, சாபாத், எலிப்பெலேத், எரேமாயி, மனாசே, சிமேயி என்றவர்களும்,

௩௪. பானியின் புத்திரரில் மாதாயி, அம்ராம், ஊவேல்,

௩௫. பெனாயா, பெதியா, கெலூகி,

௩௬. வனியா, மெரேமோத், எலியாசிப்,

௩௭. மத்தனியா, மத்னாயு, யாசாய,

௩௮. பானி, பின்னூயி, சிமேயி,

௩௯. செலேமியா, நாத்தான், அதாயா,

௪௰. மக்நாத்பாயி, சாசாயி, சாராயி,

௪௧. அசரேயேல், செலேமியா, செமரியா,

௪௨. சல்லூம், அமரியா, யோசேப் என்றவர்களும்,

௪௩. நேபோவின் புத்திரரில் ஏயேல், மத்தித்தியா, சாபாத், செபினா, யத்தாய, யோவேல், பெனாயா என்றவர்களுந்தானே.

௪௪. இவர்களெல்லாரும் மறுசாதியான ஸ்திரீகளைப் படைத்தவர்கள்; இவர்களிற் சிலர் தங்களுக்குப் பிள்ளைகளைப் பெற்ற ஸ்திரீகளைப் படைத்தவர்களுமாயிருந்தார்கள்.

முற்றிற்றுமுற்றும்.

---

# நெகெமீயாவின் புஸ்தகம்.

---

(கி. பி. முன். ௪௱௪௯.)

## ௧. அதிகாரம்.

[(௧) நெகெமீயா எருசலேமின் இக்கட்டை அறிவிலிருந்து அறிந்துகொண்டு உபவாசித்துமன்றாடினது. (௫) அவனுடைய பிரார்த்தனை.]

அசலியாவின் குமாரனாகிய நெகெமீயாவின் வர்த்தமானங்கள். இருபதாம் வருஷம் கிஸ்லேயுமாதத்தில் நான் சூசான் என்ற கோட்டையிலிருக்கிறபோது, சம்பவித்ததென்னவெனில்,

௨. என் சகோதரரில் ஒருவனாகிய அனானியும், வேறே சில மனுஷரும் யூதாவிலிருந்து வந்தார்கள். அவர்களை நான் சிறையிருப்பில் மீந்து தப்பின யூதரின் செய்தியையும், எருசலேமின் செய்தியையும் கேட்டேன்.

௩. அவர்கள் எனக்குச் சொன்னதாவது; சிறையிருப்பில் மீந்திருக்கிறவர்கள் அந்தச் சீமையிலே மகா தீங்கையும், நிந்தையையும் அனுபவிக்கிறார்கள். எருசலேமின் அலங்கம் இடிபட்டதும் அதின் வாசல்கள் அக்கினியாற் சுட்டுப்போடப் பட்டதுமாயக் கிடக்கிறதென்றார்கள்.

௪. நான் இந்த வார்த்தைகளைக் கேட்டபோது, சம்பவித்ததேதென்றால், நான் உட்கார்ந்து அழுது சில நாளாய்த் துக்கித்துக் கொண்டு பரமண்டலங்களின் பராபரனுக்கு முன்பாக உபவாசிக்கிறவனும், மன்றாடுகிறவனுமாயிருந்து,

௫. சொன்னதாவது; ஆ, பரமண்டலங்களின் பராபரனாகிய கர்த்தாவே, உம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கும், உம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கும், உடன்படிக்கையையும், கிருபையையுங் காக்கிற மகத்துவமும், பயங்கரமுமுள்ள பராபரனே,

௬. உம்முடைய அடியாராகிய இஸ்ரவேல் புத்திரருக்காக இன்று இரவும், பகலும் உமக்கு முன்பாக மன்றாடி, இஸ்ரவேல் புத்திரராகிய நாங்கள் உமக்கு விரோதமாகச் செய்த பாவங்களை அறிக்கையிடுகிற அடியேனுடைய செபத்தைக் கேட்கிறதற்கு உம்முடைய செவி கவனித்தும், உம்முடைய கண்கள் திறந்துமிருப்பதாக. நானும், என் தகப்பன் வீட்டாரும் பாவஞ்செய்தோம்.

௭. நாங்கள் உமக்கு முன்பாகக் கெட்டுப் போகவே கெட்டுப்போய்த் தேவரீர் உம்முடைய தாசனாகிய மோசேக்குக் கற்பித்த கற்பனைகளையும், கட்டளைகளையும், நியாயங்களையுங் கைக்கொள்ளாமற்போனோம்.

௮. நீங்கள் துரோகம்பண்ணுவீர்கள். அப்போது நாமுங்களைச் சனசதளங்களுக்குள்ளே சிதறடிப்போமென்றும்,

௯. நீங்கள் நம்மண்டைக்குத் திரும்பி நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு அதி

வுக்கும, இவன இதியேலுக்கும, இவன எசாயாவுக்கும குமாரனானவன.

௮. அவனுக்குப பிறகு காபாயி, சல்லாயி முதலானவர்கள தொளளாயிரத்தெழுபதெட்டுப்பேர்.

௯. அவர்களமேல விசாரிப்புககாரனான சிக்கிரியின குமாரன யோவேலும, பட்டணத்தினமேல இரண்டாவது விசாரிப்புககாரனான செனுபாவின குமாரன யூதாவுமதானே.

௰. ஆசாரியர்களில யோயாரிபின குமாரன எதாயா, யாகின என்றவர்களும.

௰௧. அகிதூவின குமாரன மெராயோத்துக்குப பிறநத சாதோகின குமாரனாமெசுலலாம பெறற இல்கியாவின மகன செராயாவெனற பராபரனுடைய வீட்டின தலைவனும,

௰௨. அவர்வீட்டிலே பணிவிடையைசசெயகிற அவர்கள சகோதரராகிய எணணூற்றிருபத்திரணடுபேரும, மல்கியாவின குமாரன பஸ்கூருக்கு மகனான சகரியாவின குமாரன அம்சிக்குப பிறநத பெலலியாவின குமாரன எரோகாமுக்குப பிறநத அதாயாவும,

௰௩. பிதா வம்சங்களின தலைவராகிய அவனுடைய சகோதரர் இருநூற்றுநாற்பத்திரணடுபேரும, இம்மேரின குமாரன மெசிலலேமோத்தின மகனாகிய ஆக்சாயக்குப பிறநத அசாரெயேலினமகன அமாசெசாயும,

௰௪. அவர்களுடைய சகோதரராகிய பராக்கிரம சாலிகள இருநூற்றிருபத்தெட்டுப பேருமதானே. இவர்களமேல அகேதோலிமின குமாரன சப்தியேல விசாரிப்புககாரனாயிருநதான.

௰௫. இலேவியரிலே பூனியின குமாரன அசபியாவின மகனாகிய அஸ்ரீக்காமின குமாரனான அசுபின மகன செமாயாவும,

௰௬. பராபரனுடைய வீட்டின வெளிவேலையை விசாரிக்கிற இலேவியரின தலைவரிலே சபெதாயும, யோசபாத்தும,

௰௭. ஆசாபின குமாரன சப்தியின குமாரனாகிய மிகாவின மகன மத்தனியாவெனகிற செபத்தில துதிசெயதலைத துவக்குகிறதலைவனும இரண்டாவதான பக்பூக்கியாவெனற அவன சகோதரரிலொருவனும, எதுததூனின குமாரன காலாவின மகனாகிய சமுவாவின குமாரன அப்தாவுமதானே.

௰௮. பரிசுததபட்டணததிலிருநத இலேவியரெலலாம இருநூற்றெணபத்துநாலுபேர்.

௰௯. வாசற்காப்பார் அக்கூபும, தல்மோனும, வாசலகளிற காவற்பணணுகிற அவர்கள சகோதரரும நூற்றெழுபத்திரணடுபேராயிருநதார்கள.

௨௰. மற்ற இஸ்ரவேலும, ஆசாரியரும, இலேவியரும யூதாவின சகல பட்டணங்களிலும அவரவர் தங்கள சுதநதரததிலிருநதார்கள.

௨௧. இஸ்ரவேலைச்சேர்நதவர்கள ஒப்பேலிலே குடியிருநதார்கள. அவர்களமேல சீகாவும, கிச்பாவுமவிசாரிப்புககாரராயிருநதார்கள.

௨௨. எருசலேமிலிருக்கிற இலேவியரின விசாரிப்புககாரன மீகாவின குமாரன மத்தனியாவின மகனாகிய அசபியாவுக்குப பிறநத பானியின குமாரன ஊசி எனகிற பராபரனுடைய வீட்டினவேலைக்கெதிராக நிற்கிற பாட்டகராகிய ஆசாபின குமாரரிலொருவன.

௨௩. ஒவவொருநாள பாடடகராகிய அவர்களுக்காக அனுகூலப்படியாகிய ஒரு கட்டளை இராசாவினாலே கற்பிக்கப்பட்டிருநதது.

௨௪. யூதாவின குமாரனாகிய சேராகின புததிரரில மெசேசாபெயேலின குமாரன பெததகியா சனததினகாரியததுககெல்லாம இராசாவினாலவைக்கப்பட்டிருநதான.

௨௫. தங்கள நாட்டுப்புறங்களான கிராமங்களிலிருக்கிறவர்களுக்குள்ளே யூதாவின புததிரரிலே சிலர் கீரியத அர்பாவிலும, அதின கிராமங்களிலும, தீபோனிலும, அதின கிராமங்களிலும, எகாபசெயேலிலும, அதின கிராமங்களிலும,

௨௬. ஏசுவாவிலும, மொலாதாகிலும, பெத்பேலேத்திலும,

௨௭. ஆத்சார் சூகாலிலும, பெர்செபாவிலும, அதின கிராமங்களிலும,

௨௮. சிக்லாகிலும, மேகோனாகிலும, அதின கிராமங்களிலும,

௨௯. ஏனரிம்மோனிலும, சாரோயாகிலும, யர்மூதிலும,

௩௰. சானோவாகிலும, அதுலலாமிலும, அவைகளின கிராமங்களிலும, லாகீசிலும, அதின நாட்டுப்புறங்களிலும, அசெக்காவிலும, அதின கிராமங்களிலும பெர்செபாவைத்துவக்கி இனனோமின பளளததாக்குமட்டுங குடியிறங்கினார்கள.

௩௧. கேபாவின ஊராராயிருநத பெனயமீனபுததிரர், மிக்மாஸ், ஆயா பெதேலஊர்களிலும, அதினகிராமங்களிலும,

௩௨. ஆனதோத், நோப் அனனியா,

௩௩. ஆத்சோர், ராமா, கிததாயிம,

௩௪. ஆதீத், செபோயிம, நெப்லாத்,

௩௫. லோத், ஓனோஎனகிற ஊர்களிலும, சிறபாசாரிகளின பளளததாக்கிலுங்குடியிருநதார்கள.

௩௬. இலேவியரிலே சிலவகுப்புகள யூதாவிலும, சில பெனயமீனிலுமிருநதன.

## ௰௨. அதிகாரம்.

[(௧) ஆசாரியர்கள. (௮) செருபாபேலோடுவநத இலேவியர். (௰) ஆசாரியர்களின வம்சவரிசை. (௨௨) முக்கியமான இலேவியர்கள. (௨௭) அலங்கத்தை வணக்கத்தோடுபிரதிஷ்டைபணணினது. (௪௪) ஆசாரியர்

களுக்கும, இலேவியருக்கும நியமிக்கப்பட்டதேவாலயத்தின ஊழியம.]

செயல்தியேலினகுமாரனுகிய சொரோபாபேலோடும, ஏசுவாவோடும ஏறிவந்த ஆசாரியரும, இலேவியரும ஆரொனருல, செராயா, எரேமீயா, எஸ்ரு,

௨. அம்ரீயா, மலலூக், அதூஸ,

௩. செக்னீயா, ரெகூம், மெரேமோத்,

௪. இத்தோ, கினேதோயி, அபியா,

௫. மீயாமின, மாதியா, பில்கா,

௬. செமாயா, யோயரீப், எதாயா,

௭. சலலூ, ஆமோச், இல்கீயா, எதாயாவெனறவர்கள. இவர்கள ஏசுவாவின நாள்களில ஆசாரியர்களுக்கும, தஙகள சகோதரருக்கும தலைவராயிருநதார்கள.

௮. இலேவியராரொனருல், ஏசுவா, பின்னூயி, கத்மியேல, செரேபியா, யூதா, மத்தனியா என்றவர்கள. இவனும, இவன சகோதரரும துதிசெய்தலைவிசாரித்தார்கள.

௯. பக்புகியாவும, உன்னியும என்ற அவர்கள சகோதரர் அவர்களுக்கெதிரே காவற்காத்திருநதார்கள.

௰. ஏசுவா யோயகீமைப்பெற்றுன. யோயகீம எலியாசிபைப்பெற்றுன. எலியாசிப் யோய்தாவைப்பெற்றுன.

௰௧. யோய்தா, யோனததானைப்பெற்றுன. யோனததான, யதுவாவைப்பெற்றுன.

௰௨. யோயகீமின நாள்களிலே பிதா வம்சஙகளினதலையான ஆசாரியர்களாரொனருல, செராயாவின சநததியில மெராயா, எரேமீயாவின சநததியில அன்னீயா,

௰௩. எஸ்ருவினசநததியிலமெசுலலாம, அம்ரீயாவின சநததியில யோக்னுன,

௰௪. மெலிகுவினசநததியில யோனததான, செபனீயாவின சநததியில யோசேப்,

௰௫. ஆரீமின சநததியில அத்னு, மெரேயோதின சநததியில எலகாயி,

௰௬. இத்தோவினசநததியிலே சகரீயா, கினேததோனின சநததியில மெசுலலாம,

௰௭. அபியாவின சநததியிலே சிக்ரி, மினியாமீன, மொவதியா, என்றவர்களின சநததியிலே பிலதாயி,

௰௮. பில்காவின சநததியிலே சமமுவா, செமாயாவின சநததியிலே யோனததான,

௰௯. யோயரீபின சநததியிலே மததனாயி, எதாயாவின சநததியில ஊசி,

௨௰. சலலாயின சநததியிலே கலலாயி, ஆமோக்கின சநததியிலே ஏபேர்,

௨௧. இல்கீயாவின சநததியிலே அசபீயா, எதாயாவின சநததியிலே நத்தானெயேலென்றவர்கள.

௨௨. எலியாசிபின நாள்களில யோய்தா, யோக்னுன, யதுவா என்ற இலேவியர் பிதா வம்சஙகளின தலைவராக எழுதப்பட்டார்கள. பேர்சியனுகிய தரீயுவின இராசசியபாரமட்டும இருநத ஆசாரியர்களும அப்படித்தானே.

௨௩. இலேவிபுததிரராகிய பிதா வம்சஙகளின தலைவர் எலியாசிபினகுமாரனுகிய யோக்னுனின நாள்கள்மட்டும நாளாகமப்புஸ்தகத்திலெழுதப்பட்டார்கள்.

௨௪. இலேவியரின தலைவராகிய அசபீயாவும, செரேபியாவும, கத்மீயேலின்குமாரன ஏசுவாவும, அவர்களுக்கெதிரே நிறகிற அவர்கள சகோதரரும பராபரனுடைய மனுஷனுகிய தாவீதினுடைய கற்பனையினபடியே துதிக்கவும, தோததிரிக்கவும ஒருவர்க்கொருவர் எதிராக முறைமுறையாயிருநதார்கள.

௨௫. மததனியா, பக்புகியா, ஒபதியா, மெசுலலாம, தலமோன, அக்கூபென்றவர்கள வாசலகளிலிருக்கிற பொக்கிச அறைகளைக் காவற்காக்கிறவர்களாயிருந்தார்கள்.

௨௬. யோத்சதாக்கினகுமாரனுகிய ஏசுவாவினகுமாரன யோயகீமின நாள்களிலும, துரையாகியநெகேமீயாவும, வேதபாரகனுகிய எஸ்ருவென்ற ஆசாரியனுமிருக்கிறநாள்களிலும அவர்களிருநதார்கள.

௨௭. எருசலேமின அலஙகததைப பிரதிஷ்டைபணணுகையில, தோததிரிப்புகளினுலும, கைத்தாளஙகள, தமபுருகள, சுரமணடலஙகளின கீதவாததியததாலும பிரதிஷ்டையை மகிழ்ச்சியோடேசெய்யும்படிக்கு எலலா இடஙகளிலுமிருக்கிற இலேவியரை எருசலேமுக்கு வரப்பணணததேடினுர்கள.

௨௮. அப்படியே பாட்டகரின புததிரர் எருசலேமின சுற்றுப்புறஙகளான சமபூமியிலும, நெததோபாததியரின கிராமஙகளிலும,

௨௯. பேத்கில்காலிலும, கேபா, அஸ்மாவேத ஊர்களின நாட்டுப்புறஙகளிலுமிருநது வநதுகூடினுர்கள. அதேதெனிற பாட்டகர் எருசலேமைச சுற்றிலும தஙகளுக்குக் கிராமஙகளைக கட்டியிருநதார்கள.

௩௰. ஆசாரியர்களும, இலேவியரும சுததம பணணிக்கொணடு சனததையும, பட்டண வாசலகளையும, அலஙகததையும சுததம பணணினுர்கள.

௩௧. அப்போது நான யூதாவினபிரபுக்களை அலஙகததினமேலேறப்பணணித் துதிசெயதுநடநதுபோக இரணடு பெரியகூட்டஙகளை நிறுததினேன். அவைகளிலொன்று அலஙகததினமேல வலதுபுறமாகக்குப்பைமேட்டுவாசலுக்குப்போயிறறு.

௩௨. இவர்கள்பிறகாலே ஒசாயாவும, யூதாவின பிரபுக்களிற பாதிப்பேரும,

௩௩. அசரியா, எஸ்ரு, மெசுலலாம,

௩௪. யூதா, பென்யமீன, செமாயா, எரேமீயாவென்றவர்களும்,

௩௫. பூரிகைகளைப்பிடிக்கிற ஆசாரியரின் புத்திரரில் ஆசாப்பின் குமாரன் சக்கூரின் மகனாகிய மிகாயாவுக்குக் குமாரனான மத்தனியாவின் மகன் செமாயாவுக்குப் பிறந்த யோனத்தானின் குமாரன் சகரியாவும்,

௩௬. பராபரனுடைய மனுஷனாகிய தாவீதின் கீதவாத்தியங்களை வாசிக்கிற அவன் சகோதரரான செமாயா, அசாரேயேல், மிலாலாயி, கிலாலாயி, மாகாயி, நெதனெயேல், யூதா, அனானி என்றவர்களும் போனார்கள். வேதபாரகனாகிய எஸ்றா இவர்களுக்கு முன்னாக நடந்தான்.

௩௭. அங்கேயிருந்து அவர்கள் தங்களுக்கு எதிரான ஊற்றுவாசலுக்கு வந்தபோது அலங்கத்தின் உயரமான தாவீதுப்பட்டணத்தின் படிகளாலேறித் தாவீது வீட்டின்மேலாகக் கிழக்கேயிருக்கிற தண்ணீர்வாசல்மட்டுக்கும் போனார்கள்.

௩௮. துதிசெய்கிற இரண்டாம் கூட்டம் எதிரேயிருக்கிற வழியாய் நடந்துபோயிற்று. அதின் பிறகாலே நான் வந்தேன். சனத்தின் இந்தப் பாதிப்பேர் அலங்கத்தின்மேல் சூளைகளின் கொம்மையைக் கடந்து அகல் மதில்மட்டும் நெருங்கிப்போய்,

௩௯. எப்பிராயீம் வாசலையும், பழைய வாசலையும், மீன்வாசலையும், அனனெயேலின் கொம்மையையும், மேயா என்ற கொம்மையையுங் கடந்து ஆட்டுவாசல்மட்டும் புறப்பட்டுக் காவல்வீட்டுவாசலிலே நின்றார்கள்.

௪௰. அதற்குப்பிறபாடு துதிசெய்கிற இரண்டு கூட்டங்களும் பராபரனுடைய வீட்டுக்கு வந்து நின்றன. நானும், என்னோடேகூட இருக்கிற தலைவரின் பாதிப்பேரும்,

௪௧. பூரிகைகளைப்பிடிக்கிற எலியாக்கீம், மாசேயா, மின்யாமீன், மிகாயா, எலியோனாயி, சகரியா, அனனியா என்ற ஆசாரியர்களும்,

௪௨. மாசேயா, செமாயா, எலெயாசார், ஊசி, யோகனான், மல்கியா, ஏலாம், ஏசேர் என்றவர்களுந்தானே. பாட்டகரும், அவர்கள் விசாரிப்புக்காரனாகிய இஸ்ராகியாவுஞ் சத்தமாய்ப்பாடினார்கள்.

௪௩. அந்நாளிலே பெரிய பலிகளைச்செலுத்திப் பராபரன் தங்களுக்கு மகா சந்தோஷத்தை யுண்டாக்கினதினாலே மகிழ்ச்சியாயிருந்தார்கள். ஸ்திரிகளும், பிள்ளைகளுங்கூடக் களிகூர்ந்தார்கள். எருசலேமின் மகிழ்ச்சி தூரத்திலே கேட்கப்பட்டது.

௪௪. அன்றைத்தினம் பொக்கிஷங்களையும், படைப்புகளையும், முதற்கனிகளையும், பத்திலொன்றுகளையும் வைக்கும் அறைகளின்மேலே சிலமனுஷர் ஆசாரியர்களுக்கும், இலேவியர்களுக்கும் நியாயப்பிரமாணத்தின்படியே வரவேண்டிய பட்டணங்களுடைய நிலங்களின் பங்குகளை அவைகளில் சேர்க்கும்படிக்கு விசாரிப்புக்காரராக வைக்கப்பட்டார்கள். ஏனென்றால், ஊழியஞ் செய்துநிற்கிற ஆசாரியர்களையேயும், இலேவியர்மேலும், யூதமனிதர் சந்தோஷமாயிருந்தார்கள்.

௪௫. ஏனெனில், அவர்கள் தங்கள் பராபரனுடைய காவலையும், சுத்தம்பண்ணுதலின் காவலையுங் காத்தார்கள். பாட்டகரும், வாசற்காப்பாரும், தாவீதும், அவன் குமாரனாகிய சாலோமோனுங் கற்பித்தபடியே நின்றார்கள்.

௪௬. ஏனென்றால், தாவீதும், ஆசாப்பும் இருந்த பூருவநாள்களில் பாட்டகரின் தலைவருமல்லவைக்கப்பட்டுப் பராபரனுக்குத் துதியும், தோத்திரங்களுஞ் செலுத்துகிறவிதங்கள் திட்டம்பண்ணப்பட்டிருந்தன.

௪௭. ஆகையால் செருபாபேலின் நாள்களிலும், நெகெமியாவின் நாள்களிலும் இஸ்ரவேலெல்லாம் பாட்டகருக்கும், வாசற்காப்பாருக்கும் அனுதினத்திட்டமாகிய பங்குகளைக் கொடுத்து இலேவியருக்கென்று பரிசுத்தம்பண்ணினார்கள். இலேவியரோவெனில், ஆரோனின் புத்திரருக்கென்று அவர்கள் பங்கைப் பரிசுத்தம்பண்ணிக்கொடுத்தார்கள்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தை வாசித்தபிறகு கலந்தசனம் பிரிக்கப்பட்டது. (௪) நெகெமியா வந்து அறைவீட்டைச் சுத்திசெய்தது. (௰) அவன் பராபரனுடைய வீட்டின் ஊழியத்தைச் சீர்திருத்தினது. (௰௫) சனங்கள் ஓய்வுநாளை மீறினது. (௨௩) அந்நியவிவாகம்.]

அந்நாளிற் சனங்கேட்க மோசேயின் புஸ்தகத்தில் வாசிக்கப்படுகிறபோது அதிலே அம்மோனியரும், மோவாபியரும் இஸ்ரவேல் புத்திரருக்கு அப்பமும், தண்ணீருங்கொடுக்க எதிர்கொண்டுவராமல் அவர்களைச் சபிக்க அவர்களுக்கு விரோதமாகப் பிலேயாமைக் கூலிபொருந்திக்கொண்டபடியினாலே,

௨. அவர்கள் என்றைக்கும் அந்தச்சாபத்தை ஆசீர்வாதமாகத் திருப்பின எங்கள் பராபரனுடைய சபைக்குட்படவேண்டாமென்றெழுதியிருக்கிறது கண்டுபிடிக்கப்பட்டது.

௩. ஆகையால், அவர்கள் அந்த நியாயப்பிரமாணத்தைக்கேட்ட பிறபாடு கலந்துகொண்ட சனத்தையெல்லாம் இஸ்ரவேலை விட்டுப்பிரித்துவிட்டார்கள்.

௪. இதற்குமுன்னே எங்கள் பராபரனுடைய வீட்டின் அறைகளை விசாரிக்கவைக்கப்பட்ட ஆசாரியனாகிய எலியாசிப் தொபியாவோடே சம்பந்தங்கலந்தவனாயிருந்து.

௫. முதற்காணிக்கைகளும், தூபங்களும்,

தட்டுமுட்டுகளும், இலேவியருக்கும், பாட்டகருக்கும், வாசற்காப்பாளருக்கும் கட்டளை பண்ணப்பட்ட தானியம், திராட்சப்பழ இரசம், எண்ணெய் என்றவைகளிலே பத்திலொன்றானதும், ஆசாரியனைச் சேருகிற படைப்பான காணிக்கைகளும் வைக்கப்பட்டிருந்த இடத்தில் ஒரு பெரிய அறையை அவனுக்கு உண்டுபண்ணியிருந்தான்.

௬. ஆனால் இப்படியெல்லாம் நடக்கையில் நான் எருசலேமிலிருந்ததில்லை. ஏனென்றால், பாபேலின் இராசாவாகிய அர்த்தசஷ்டாவின் முப்பத்திரண்டாம் வருஷத்திலே நான் இராசாவண்டைக்குப்போய்ச் சில நாளுக்குப்பிறபாடு திரும்ப இராசாவினிடத்தில் உத்தாரம் வாங்கி,

௭. எருசலேமுக்கு வந்தேன். அப்போது எலியாசிப் தொபியாவுக்குப் பராபரனுடைய வீட்டுப் பிரகாரங்களில் ஒரு அறையை உண்டுபண்ணினதினாலே செய்த பொல்லாப்பை அறிந்துகொண்டேன்.

௮. அதினால் நான் மிகவும் மனமடிவாகித் தொபியாவின் வீட்டுத் தட்டுமுட்டுகளையெல்லாம் அந்த அறையிலிருந்து வெளியே எறிந்துவிட்டேன்.

௯. பிறகு நான் அறைவீடுகளைச் சுத்திகரிக்கச்சொல்லிப் பராபரனுடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையும், காணிக்கைகளையும், குங்குலியத்தையும் அங்கே திரும்ப வைப்பித்தேன்.

௰. பின்னையும், இலேவியருக்கு அவர்கள் பங்குகள் கொடுக்கப்பட்டதில்லையென்கிறதையும், பணிவிடைசெய்கிற இலேவியரும், பாட்டகரும் அவரவர் தங்கள் நாட்டுக்கோடிப்போனார்களென்கிறதையும் நான் அறிந்தேன்.

௰௧. அப்போது நான் தலைமையானபேர்களோடே வழக்காடிப் பராபரனுடைய வீடு கைவிடப்பட்டுப் போவானேனென்று சொல்லி, அவர்களைச் சேர்த்து அவர்களுடைய ஸ்தலத்திலே அவர்களை வைத்தேன்.

௰௨. அப்போது யூதரெல்லாரும் தானியம், திராட்சப்பழ இரசம், எண்ணெய் என்றவைகளிற் பத்திலொரு பங்கைப் பொக்கிச அறைகளிற் கொண்டுவந்தார்கள்.

௰௩. அப்போது நான் ஆசாரியனாகிய செலேமியாவையும், இலேவியரில் வேதபாரகனாகிய சாதோக்கையும், பெதாயாவையும், இவர்களுக்குக் கைத்துணையாக மத்தனியாவின் குமாரன் சக்கூரின் மகனாகிய ஆனானையும் பொக்கிச அறைகளின்மேல் விசாரிப்புக்காரராக வைத்தேன். ஏனென்றால், அவர்கள் உண்மையுள்ளவர்களென்றெண்ணப்பட்டார்கள். ஆகையால், தங்கள் சகோதரருக்குப் பங்கிடுகிற தொழில் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டது.

௰௪. என் பராபரனே! இதற்காகத் தேவரீர் என்னை நினைத்து, நான் என் பராபரனுடைய வீட்டுக்கும், அதின் காவல்களுக்கும் ஆசச் செய்த என்னுடைய உபகாரங்களைக் குலைக்காதிரும்.

௰௫. அந்த நாள்களில் நான் யூதாவிலே ஓய்வுநாளில் ஆலைகளை மிதிக்கிற சிலரையும், கழுதைகள்மேலேற்றின தானியப் பொதிகளைக் கொண்டுவருகிற சிலரையும், ஓய்வுநாளிலே எருசலேமுக்குக் கொண்டுவரப்படுகிற திராட்சப்பழரசம், திராட்சப்பழங்கள், அத்திப்பழங்கள் முதலானவைகளின் பலபல சுமைகளையுங்கண்டு அவர்கள் தின்பண்டங்களை விற்கிற நாளிலே திடச்சாட்சியாய் அவர்களைக் கடிந்துகொண்டேன்.

௰௬. மீன்களையும், சகலவிதச் சரக்குகளையும் கொண்டுவந்து ஓய்வுநாளிலே யூதபுத்திரருக்கும், எருசலேமிலும் விற்கிற சில தீரியரும் உள்ளே குடியிருந்தார்கள்.

௰௭. ஆகையால், நான் யூதாவின் பெரியவர்களோடே வழக்காடி நீங்கள் ஓய்வுநாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிற இந்தப் பொல்லாத செய்கையென்ன?

௰௮. உங்கள் பிதாக்கள் இப்படிச் செய்ததினால் எங்கள் பராபரன் எங்கள்மேலும், இந்தப் பட்டணத்தின்மேலும் இந்தத் தீங்கையெல்லாம் வரப்பண்ணினதில்லையோ? நீங்களோவென்றால், ஓய்வுநாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்குகிறதினால் இஸ்ரவேலின்மேலிருக்கிற உக்கிரத்தை வர்த்திக்கப் பண்ணுகிறீர்களென்று அவர்களுக்குச் சொன்னேன்.

௰௯. ஆகையால், ஓய்வுநாளுக்குமுன்னே எருசலேமின் பட்டணவாசல்களுக்கு நிழல் படுகிறபோது நான் கதவுகளைப் பூட்டவும், ஓய்வுநாள் கழியுமட்டும் அவைகளைத் திறவாதிருக்கவும் வேணுமென்று சொல்லி ஓய்வுநாளிலே ஒரு சுமையும் உள்ளே வராதபடிக்கு வாசலண்டையிலே என் வேலைக்காரரிலே சிலரை நிறுத்தினேன்.

௨௰. அப்போது வர்த்தகரும், சகலவிதச் சரக்குவிற்கிறவர்களும் இரண்டொருதரம் எருசலேமுக்குப்புறம்பே இராத்தங்கினார்கள்.

௨௰௧. அப்போது நான் அவர்களைத் திடச்சாட்சியாய்க் கடிந்துகொண்டு நீங்கள் அலங்கத்தண்டையிலே இராத்தங்குகிறதென்ன? நீங்களின்னமொருதரம் அப்படிச்செய்தால் உங்கள்மேலே கைகளைப் போடுவேனென்று அவர்களோடே சொன்னேன். அந்தக்காலந் துவக்கி அவர்கள் ஓய்வுநாளில் வராதிருந்தார்கள்.

௨௰௨. ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்கும்படிக்கு உங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டு வாசல்களைக் காக்க வாருங்களென்று இலேவியருக்குஞ் சொன்னேன். என் பராபரனே! இதையுந் தேவரீர் எனக்கு நன்மையாக நினை

தது உமமுடைய மிகுநதகிருபையினிமித்த மாய எனககிரஙகும.

௨௩. அஸ்தோத், அமமோன, மோவாப்சாதிகளான ஸதிரிகளைச சேர்ததுககொணட சிலயூதரையும அநதநாள்களிற்கணடேன.

௨௪. அவர்கள பிளளைகள, பாதி அஸ்தோத்பாஷையைபபேசினார்கள. இவர்கள அநதநதச சனசசாதியினபாஷையையேதவிரயூத பாஷையைபபேச அறியாதிருநதார்கள.

௨௫. அவர்களோடேநான வழககாடி அவர்களைசசபிதது அவர்களிலே சிலமனுஷரை அடிதது மயிரைபபிய்தது நீஙகள உஙகள குமாரததிகளை அவர்கள குமாரருககுககொடாமலும, அவர்கள குமாரததிகளில ஒருவரையும உஙகள குமாரருககாகவும, உஙகளுககெனகிலுங கொளளாமலும இருககவேணடுமெனறு அவர்களைபபராபரன்மேலே ஆணையிடபபணணி நானசொனனதாவது;

௨௬. இஸ்ரவேலின இராசாவாகிய சாலொமோன இதினாலே பாவஞசெயதானலலவோ. அவனைபபோலொதத இராசா அநேகஞசாதிகளுககுளளே உணடாயிருநததிலலை. தன பராபரனாலே சிநேகிககபபடடவனாயிருநதான. பராபரன அவனை இஸ்ரவேலினதினமேலும இராசாவாகவைததார். அபபடிககொததவனையும மறுசாதியான ஸதிரிகள பாவஞசெயயபபணணினார்களே

௨௭. நீஙகள மறுசாதியான ஸதிரிகளைச சேர்ததுககொளளுகிறதினாலே நமமுடைய பராபரனுககுத்துரோகிகளாயபபோய இநதப்பெரிய பொலலாபபையெலலாஞ செயயுமபடிககு உஙகளுககுச்செவிகொடுப்போமோவெனறேன.

௨௮. யோய்தாவின புததிரரிலே பிரதான ஆசாரியனாகிய எலியாசிபினகுமாரன ஒருவனுக்குச சனெபலலாத்தென்கிற ஒரோனியனாகிய மருமகனுமானான. ஆகையால, அவனையெனனைவிடடுத்துரததினேன.

௨௯. எனபராபரனே! அவர்கள ஆசாரிய ஊழியததையும், ஆசாரியஊழியததுககும், இலேவியருககுமிருககிறஉடனபடிக்கையையுந தீடடுபபடுததினார்களெனறு அவர்களை நினையும.

௩௰. இபபடியே நான மறுசாதியாரையெலலாம நீககி அவர்களைசசுததிகரிதது ஆசாரியர்களையும, இலேவியரையும அவரவரை இவர்களவேலையினமுறைகளில நிறுததி,

௩௧. குறிககபபடடகாலஙகளிலே செலுததபபடவேணடிய விறகுகளின காணிககையையும, முதறபலனையுந திடடமபணணினேன. எனபராபரனே! எனனைநனமைககெனறு நினைததருளும.

முற்றிற்று.

# எஸ்தரெனறவளுடைய சரித்திரம்.

(கி. பி. முன். ௫௱௨௧.)

## ௧. அதிகாரம்.

[(௧) அகாஸ்வேரு இராசவிருநதுசெய்தது. (௰) வஸ்தியாள அழைககபபடடபோது வரமாடடேனெனறுதத்தது. (௰௩) அகாஸ்வேருவுடைய ஆலோசனையினாலே எநதப்புருஷனுந தனவீடடாரையாளக கடடளையிடடது.]

இநது தேசநதுவககி எததியோபபிய தேசமடடுமிருககிற நூற்றிருபததேழு சீமைகளையாணட அகாஸ்வேருவின நாள்களிலே சமபவிதததாவது;

௨. இராசாவாகிய அகாஸ்வேரு சூசான கோடடையிலிருககிற தனனுடைய இராசசியபாரததின ஆசனததினமேல உடகாநத அநநாள்களுககுபபிறபாடு,

௩. அவனதன இராசசியபாரததின மூனறும வருஷததிலே தனனுடைய எலலாபபிரபுககளுககும, ஊழியககாரருககுமவிருநதுபணணினான. பெர்சியா, மேதியா தேசஙகளின பெலசாலிகளும, சீமைகளின துரைகளும, பிரபுககளும் அபபோது அவனுககுமுனபாக இருநதார்கள்.

௪. அவனதன இராசசியபார மகிமையின ஐசுவரியததையும, தனனுடைய மகததுவத்தின சிஙகாரமான முககியததையுங காணபிககுமபடிககு அநேகநாளாகிய நூற்றெணபது நாளாகவிருநதுகொடுததான.

௫. அநதநாள்கள முடிநதபோது இராசா சூசானகோடடையில அகபபடட பெரியோர்துவககிச சிறியோர்மடடுமாகிய எலலாசசனததுககும இராசா அரமனையினுடைய தோடடததினமுறறததிலேழுநாளாகவிருநதுசெயவிததான.

௬. அஙகேவெணகலலான தூணகளினமேலுணடான வெளளிவளையஙகளில மெலலிய நூலும, சிவபபுநூலுமான கயிறுகளால வெளளையும, பசசையும, இளநீலமுமாகிற

திரைகள் கட்டித் தொங்கியிருந்தன. சிவப்பும், நீலமும், வெள்ளையும், கறுப்புமான கற்கள் பதித்திருக்கிற தளவரிசையின் மேலே பொற்சரிகையும், வெள்ளிச்சரிகையுமான மெத்தைகள் வைக்கப்பட்டன.

௭. பொற்பாத்திரங்களாகிய வெவ்வேறு விதமான பாத்திரங்களிலே பானங்கொடுக்கப்பட்டது. மேல்தரமான திராட்சப்பழ இரசம் இராசாவுடைய ஆஸ்திக்குத் தக்கதாய்ப் பரிபூரணமாயிருந்தது.

௮. ஒருவனையும் பலவந்தம்பண்ணவேண்டாமென்ற கட்டளையின்படி குடிக்கப்பட்டது. ஏனெனில், அவரவருடைய மனதின்படியே செய்யவேணுமென்றதாக இராசா தன் அரமனையின் பெரிய மனுஷருக்கெல்லாங் கற்பித்திருந்தான்.

௯. இராசஸ்திரீயாகிய வஸ்தியும் இராசாவாகிய அகாஸ்வேருவின் அரமனையில் ஸ்திரீகளுக்கு ஒரு விருந்து செய்வித்தாள்.

௰. ஏழாம் நாளிலே இராசா திராட்சப்பழ இரசத்தினால் மனமகிழ்ச்சியாயிருக்கிறபோது சனசதளங்களுக்கும், பிரபுக்களுக்கும் இராசஸ்திரீயாகிய வஸ்தியின் சவுந்தரியத்தைக் காண்பிக்கும்படிக்கு அவளை இராசகிரீடந்தரிக்கப்பட்டவளாக இராசாவுக்கு முன்பாக அழைத்து வரவேணுமென்று,

௰௧. இராசாவாகிய அகாஸ்வேரு தனக்கு முன்பாகச் சேவிக்கிற மெகுமான், பிஸ்தா, அற்போனா, பிக்தா, அபக்தா, சேதார், கற்காசென்ற ஏழு பிரதானிகளுக்குக் கட்டளையிட்டான். ஏனென்றால், அவள் ரூபவதியாயிருந்தாள்.

௰௨. ஆனால் இராசா பிரதானிகளைக்கொண்டு சொல்லியனுப்பின வார்த்தைக்கு இராசஸ்திரீயாகிய வஸ்தி வரமாட்டோமென்றாள். அப்போது இராசா கடுங்கோபமடைந்து தனக்குள்ளே மூர்க்கமுண்டவனாகி,

௰௩. இராசஸ்திரீயாகிய வஸ்தி இராசாவாகிய அகாஸ்வேரு பிரதானிகளைக்கொண்டு சொல்லியனுப்பின வார்த்தையின்படியே செய்யாதே போனதினிமித்தம் அவளுக்கு நியாயப் பிரமாணத்தின்படி செய்யவேண்டியதென்னவென்று,

௰௪. காலாகாலங்களை யறிந்த ஞானிகளை இராசா கேட்டான். ஏனெனில், இந்தப்பிரகாரமாக இராசாவின் காரியங்கள் நியாயப் பிரமாணத்தையும், நீதியையும் அறிந்தவெல்லாருக்கும் முன்பாக வைக்கப்படும்.

௰௫. அப்போது கறேஷேனா, சேதார், அத்மாதா, தர்சீஸ், மேரேஸ், மற்சேனா, மெமுகான் என்கிற இராசாவின் சமுகத்தைப் பார்க்கிறவர்களும், இராசியத்தின் முதல் ஆசனங்களில் உட்கார்ந்திருக்கிறவர்களுமான பெர்சியர், மேதியருடைய ஏழு பிரபுக்களவனைச் சேர்ந்தவர்களாயிருந்தார்கள்.

௰௬. அப்போது மெமுகான் இராசாவுக்கும், பிரபுக்களுக்கும் முன்பாகச் சொன்னதாவது; இராசஸ்திரீயாகிய வஸ்தி இராசாவுக்குமாத்திரமல்ல, இராசாவாகிய அகாஸ்வேருவினுடைய சகல சீமைகளிலுமுள்ள எல்லாப் பிரபுக்களுக்கும், எல்லாச் சனசதளங்களுக்கும் ஏயாத அநீதியைச் செய்தாள்.

௰௭. ஏனென்றால், இராசாவாகிய அகாஸ்வேரு இராசஸ்திரீயாகிய வஸ்தியைத் தமக்கு முன்பாக அழைத்து வரச்சொன்னபோது அவள் வரமாட்டோமென்றாளென்கிற இராசஸ்திரீயின் செய்தி எல்லா ஸ்திரீகளுக்கும் பிரசித்தமானதினால் இவர்கள் தங்கள் புருஷர்களைத் தங்கள் பார்வைக்குக் கொஞ்சமானவர்களாய் எண்ணுவார்கள்.

௰௮. இன்றைக்குத்தானே பெர்சியா, மேதியாவினுடைய பிரபுக்களின் ஸ்திரீகள் இராசஸ்திரீயின் செய்தியைக் கேட்கும்போது இராசாவின் பிரபுக்களுக்கெல்லாம் அப்படித்தான் சொல்லுவார்கள். மிகுந்த அசட்டையும், கடுமையும் எழும்பும்.

௰௯. இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் வஸ்தி இனி இராசாவாகிய அகாஸ்வேருக்கு முன்பாக வரவேண்டாமென்றும், இராசா அவளுடைய இராசமேன்மையை அவளைப் பார்க்கிலும் நல்லவளான அவளுடைய கூட்டாளிக்குக் கொடுப்பாராகவென்றும் அவரால் ஒரு இராசகட்டளை பிறந்து அது மீறப்படாதபடிக்குப் பெர்சியர் நியாயப்பிரமாணத்திலும், மேதியர் நியாயப்பிரமாணத்திலும் எழுதப்படக்கடவது.

௨௰. இப்படி இராசாதீர்த்த காரியம் விஸ்தாரமாயிருக்கிற அவருடைய இராசியமெங்கும் கேட்கப்படும்போது பெரியோர் துவக்கிச் சிறியோர்மட்டுமுள்ள எல்லா ஸ்திரீகளுந் தங்கள் புருஷர்களைக் கனம்பண்ணுவார்களென்றான்.

௨௰௧. இந்த வார்த்தை இராசாவுக்கும், பிரபுக்களுக்கும் நன்றாயக்கண்டு இராசா மெமுகானுடைய வார்த்தையின்படியே செய்து,

௨௰௨. எந்தப் புருஷனும், தன் வீட்டிலே அதிகாரஞ்செய்கிறவனுந் தன் சனசாதியின் பாஷையைப் பேசிக்கொண்டிருக்கவுந் தக்கதென்று, இராசாவின் சீமைகளுக்கெல்லாம் சீமை சீமையினுடைய எழுத்திலும், சாதி சாதியின் பாஷையிலும் எழுதியிருக்கிற நிருபங்களையனுப்பினான்.

## ௨. அதிகாரம்.

[(௧) அழகுள்ள கன்னிகைகளில் ஒருத்தியைத் தெரிந்துகொள்வதற்கான நியமம். (௫) எஸ்தரென்றவளை வளர்த்த மொர்தேகாயி. (௮) மற்றவர்களைப்பார்க்கிலும் எஸ்தர் ஏகோபுகத்துப் பிரியமாயிருந்தது. (௰௨) கன்னிகைகள் அலங்கரித்துக்கொண்டு இரா

சனிடத்துக்குப் பிரவேசிக்குமுறை. (௰௫) இராசன் எஸ்தரைநேசித்து இராசஸ்திரியாக்கினது. (௨௧) மொர்தேகாயி துரோகத்தைவெளிப்படுத்தினது நாளாகமப்புத்தகத்திலெழுதப்பட்டிருக்கின்றது.]

இவைகள் சம்பவித்துத்தீர்ந்து, இராசாவாகிய அகாஸ்வேருவின் உக்கிரந்தணிந்தபிறபாடு அவன் வஸ்தியையும், அவள் செய்ததையும், அவள்மேல் தீர்மானிக்கப்பட்டதையுந்நினைத்தான்.

௨. அப்போது இராசாவைச் சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர்சொன்னதாவது; ரூபவதிகளாயிருக்கிற கன்னிப்பெண்கள் இராசாவுக்காகத் தேடப்படக்கடவர்கள்.

௩. அதற்காக இராசாதம்முடைய இராச்சியத்தின் சீமைகளிலெல்லாம் விசாரிப்புக்காரரை வைப்பாராக. இவர்கள் ரூபவதிகளாயிருக்கிற சகல கன்னிப்பெண்களையுங் கூட்டிச் சூசான்கோட்டையிலிருக்கிற ஸ்திரீகளின் மடத்துக்கழைத்துவந்து ஸ்திரீகளைக்காவல்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய எகேயின் வசத்திலே ஒப்புவிப்பார்களாக. இவர்களுக்கு இவர்கள் சோடிப்புக்கொடுக்கப்படக்கடவது.

௪. அப்போது இராசாவின் கண்களுக்குச் சம்மதமான குமரி வஸ்திக்குப்பதிலாக இராசஸ்திரியாவாளாகவென்றார்கள். இந்தவார்த்தை இராசாவுக்கு நன்றாய்க்கண்டு அப்படித்தான் செய்தான்.

௫. அப்போது சூசான்கோட்டையிலே பென்யமீனனாகிய கீசின் குமாரன் சீமேயினுடைய மகனாகிய யாயீரின் குமாரன் மொர்தேகாயி என்றபேருள்ள ஒரு யூதமனுஷனிருந்தான்.

௬. இவன் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் யூதாவின் இராசாவாகிய எகோனியாவைப் பிடித்துப்போகிறபோது அவனோடேகூட எருசலேமிலிருந்து பிடித்துக்கொண்டுபோகப்பட்டவர்களிலொருவனாயிருந்தான்.

௭. இவன் தன்சிறியதகப்பன் குமாரத்தியாகிய எஸ்தரென்ற அத்சாளை வளர்த்தவனாயிருந்தான். ஏனெனில், தாயுந்தகப்பனுமில்லாதவளாயிருந்தாள். அவள் சவுந்தரவதியும், ரூபவதியுமான பெண்பிள்ளையாயிருந்தாள். அவள் தகப்பனும், அவள் தாயும் மரணம் அடைந்தபோது மொர்தேகாயி அவளைத் தன்குமாரத்தியாக ஏற்றுக்கொண்டான்.

௮. சம்பவித்ததேதெனில் இராசாவின் கட்டளையும், அவனுடைய தீர்மானமும் பிரசித்தமாகி அநேகம்பெண்பிள்ளைகள் கூட்டப்பட்டுச் சூசான்கோட்டையிலுள்ள எகேயின் வசத்திலொப்புவிக்கப்படுகிறபோது எஸ்தரும் இராசாவின் வீட்டுக்கு அழைத்துப் போகப்பட்டு ஸ்திரீகளைக் காவல்பண்ணுகிற எகேயின் வசத்திலொப்புவிக்கப்பட்டாள்.

௯. அந்தப்பெண்பிள்ளை அவன்பார்வைக்கு நன்றாயிருந்ததினால் அவளுக்கு அவன் கண்களிலே தயைகிடைத்தது. ஆகையால் அவளுடைய சோடிப்புகளையும், அவளுக்குக் கொடுக்கவேண்டியவைகளையும் அவளுக்குக் கொடுக்கவும், இராசாவின் வீட்டிலிருக்கிற ஏழுபெண்களையும் அவளுக்குக்கொடுக்கவுந் தீவிரித்து ஸ்திரீகளின் மடத்திலே நல்லதாகிய வேறே ஸ்தலத்திலே அவளையும், அவள்வேலைக்காரிகளையும் வைத்தான்.

௰. எஸ்தரோவென்றால், தன் சனத்தையும், தன் பூருவோத்தரத்தையும் அறிவிக்காதிருந்தாள். ஏனெனில், அதை அறிவிக்கவேண்டாமென்று மொர்தேகாயி அவளுக்குக் கற்பித்திருந்தான்.

௰௧. ஆனால் எஸ்தருடையக்ஷேமத்தையும், அவளுக்கு என்ன நடக்குமென்கிறதையும் அறியமொர்தேகாயி ஒவ்வொருநாளிலே ஸ்திரீகளுடைய மடத்து முற்றத்துக்கு முன்பாக உலாவுவான்.

௰௨. ஒவ்வொரு பெண்பிள்ளை ஆறுமாதம் வெள்ளைப்போளத் தயிலத்தினாலும், ஆறுமாதம் சுகந்தவர்க்கங்களாலும், ஸ்திரீகளின் ஆபரணங்களினாலுஞ் சோடிக்கப்படுகிற நாட்கள் நிறைவேறி இப்படியே பன்னிரண்டு மாதமாக ஸ்திரீகளுடைய திட்டத்தின்படியே செய்யப்பட்டுத் தீர்ந்தபிறபாடு இராசாவாகிய அகாஸ்வேருவண்டைக்குப் பிரவேசிக்க அவள் அவளுடைய முறைவருகிறபோது,

௰௩. இப்படிச்சோடிக்கப்பட்ட பெண்பிள்ளை இராசாவண்டையிற் பிரவேசிப்பாள். ஸ்திரீகளின் மடத்திலிருந்து தன்னோடேகூட இராசாவின் வீட்டுக்குப்போகக் கேட்பவையெல்லாம் அவளுக்குக்கொடுக்கப்படும்.

௰௪. சாயங்காலத்திலே அவள் உட்பிரவேசித்துக் காலமே மறுபடிக்கு மறுமனையாட்டிகளைக் காவல்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய சாஸ்காசுடையவிசாரிப்பிலிருக்கிற ஸ்திரீகளின் இரண்டாம் மடத்துக்குத் திரும்பி இராசா தன்னை விரும்பிப் பேர்சொல்லி அழைப்பித்தாலொழிய இனி இராசாவண்டைக்குப் பிரவேசியாதிருப்பாள்.

௰௫. மொர்தேகாயி தன் குமாரத்தியாய் ஏற்றுக்கொண்ட அவன் சிறியதகப்பனாகிய அபிகாயிலின் குமாரத்தியான எஸ்தரின் முறை இராசாவண்டைக்குப் பிரவேசிக்கிறதற்கு வந்தபோது அவள் ஸ்திரீகளைக்காவல்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய எகாயி சொன்னகாரியமேயல்லாமல், ஒன்றுங் கேட்டதில்லை. எஸ்தருக்கோவென்றால், தன்னைக் காண்கிற எல்லார்கண்களிலுந் தயைகிடைத்தது.

௰௬. அப்படியே எஸ்தர் இராசாவாகிய அகாஸ்வேரு அரசாளுகிற ஏழாம்வருஷத் தேபேத்மாதமாகிய பத்தாமாதத்திலே அவனண்டைக்கு அவனுடைய இராச அரமனையில் அழைத்துப்போகப்பட்டாள்.

௰௭. இராசா சகல ஸ்திரிகளைப் பார்க்கிலும், எஸ்தர்மேலே அன்புவைத்தான். சகல கன்னியாஸ்திரிகளைப்பார்க்கிலும், அவளுக்கு அவனுக்குமுன்பாகக் கிருபையும், தயையுங் கிடைத்தது. ஆகையால் அவன் இராச கிரீடத்தை அவள் சிரசின்மேல் வைத்து, அவளை வஸ்தியின்ஸ்தலத்திலே இராசஸ்திரியாக்கினான்.

௰௮. அப்போது இராசாதனனுடையஎல்லாப் பிரபுக்களுக்கும், ஊழியக்காரருக்கும் எஸ்தருக்காகச்செய்கிற ஒருபெரியவிருந்து செடவித்துச் சீமைகளுக்குச் சலகைகரனை யுண்டாக்கி இராசா ஆஸ்திக்குத்தக்க அதியாகங்களைக்கொடுத்தான்.

௰௯. இரண்டாம்விசை கன்னியாஸ்திரிகள் சேர்க்கப்படுகிறபோது மொர்தெகாயிஇராசாவின் அரமனைவாசலிலுக்காந்திருந்தான்.

௨௰. எஸ்தர் மொர்தெகாயி தனக்குக் கற்பித்திருந்தபடி தன் பூர்வோத்தரத்தையும், தன்சனசாதியையும் அறிவிக்காதிருந்தாள். ஏனெனில், எஸ்தர்மொர்தெகாயினிடத்திலே வளர்ந்தகாலத்திலேசெய்ததுபோலே இன்னம் அவன்சொற்படிசெய்தாள்.

௨௧. அந்தநாள்களில் மொர்தெகாயி இராசாவின் அரமனைவாசலிலுக்காந்திருக்கிற போது வாசற்காக்கிற இராசாவின் இரண்டு பிரதானிகளாகிய பிக்தானும், தேரேசுங்கடுங்கோபம்அடைந்து இராசாவாகிய அகாஸ்வேருவின்மேலே கைபோடவகைதேடினார்கள்.

௨௨. இந்தக்காரியம் மொர்தெகாயிக்கறியப்பட்டபடியினாலே அவன் அதை இராசஸ்திரியாகிய எஸ்தருக்கறிவித்தான் எஸ்தர் மொர்தெகாயியின் நாமத்தில் இராசாவுக்குச்சொன்னாள்.

௨௩. இந்தக்காரியம் விசாரிக்கப்படுகிற போது அது மெய்யென்று கண்டுபிடிக்கப்பட்டது. ஆகையால் அவர்கள் இருவரும் மரத்திலே தூக்கிப்போடப்பட்டார்கள். இது இராசாவுக்கு முன்பாக நாளாகமப்புஸ்தகத்திலெழுதப்பட்டது.

## ௩. அதிகாரம்.

[(௧) ஆமானஇராசனாலஉயர்த்தப்பட்டும மொர்தெகாயினாலே சங்கிக்கப்படாமையால் யூதர்களைச்சங்கரிக்கத்தேடினது. (எ) அவன் கிருவுளச்சீட்டுப் போட்டது (அ) அவன்அவதூறுபேசி யூதர்களைக்கொல்லும்படி இராசாவின்கட்டளைபெற்றது.]

இந்த நடபடிகளுக்குப்பிற்பாடு இராசாவாகிய அகாஸ்வேரு அம்மெதாத்தாவின்குமாரனாகிய ஆமானென்ற ஆகாகியனைப்பெரியவனாக்கி அவனை யுயர்த்தி அவனுடையஆசனத்தைத்தனனிடத்திலிருக்கிற சகல பிரபுக்களுக்கும் உயரவைத்தான்.

௨. ஆகையால் இராசாவின் அரமனைவாசலிலிருக்கிற இராசாவின் ஊழியக்காரரெல்லாம் ஆமானைக் குனிந்து பணிந்துகொண்டார்கள். ஏனெனில், இராசாஇப்படிச்செய்ய அவனுக்காகக் கற்பித்தான். ஆனால் மொர்தெகாயி குனிந்ததுமில்லை பணிந்ததுமில்லை.

௩. அப்போது இராசாவின் அரமனை வாசலிலிருக்கிறஇராசாவின்ஊழியக்காரர்மொர்தெகாயியுடனே, நீர் இராசாவின் கற்பனையைமீறுவானேனென்றார்கள்.

௪. இப்படி அவர்கள் நாளுக்குநாள் அவனுடனேசொல்லியும், அவன் தங்களுக்குச் செவிகொடாதபோதேனெனில், அவர்கள் மொர்தெகாயியின்சொற்கள் நிலைநிற்குமோவென்றுபார்க்கிறதற்கு அதை ஆமானுக்கறிவித்தார்கள். ஏனெனில், தான் யூதனென்று அவன் அவர்களுக்கறிவித்திருந்தான்.

௫. மொர்தெகாயி தன்னைக் குனிந்துபணிந்துகொள்ளாததை ஆமான் கண்டபோது, ஆமான் மூர்க்கமநிறைந்தவனானான்.

௬. ஆனால்மொர்தெகாயியின்மேலமாத்திரங்கைபோட அவனுக்குக் கொஞ்சக்காரியமாகக்கண்டது. ஏனென்றால்,மொர்தெகாயியின்சனம்ஏதென்றுஅவனுக்கறிவித்திருந்தார்கள். ஆகையால் அகாஸ்வேருவின் இராசசியமெங்குமிருக்கிறமொர்தெகாயியின் சனமாகிய யூதரையெல்லாஞ் சங்கரிக்க ஆமான் வகைதேடினான்.

௭. இராசாவாகிய அகாஸ்வேருவின் பன்னிரண்டாம்வருஷம் நீசான்மாதமாகியமுதலாம்மாதத்திலே ஆமானுக்கு முன்பாகப் பூர் என்னப்பட்ட தாயம்நாளுக்குநாளும், மாதத்துக்குமாதமும் போடப்பட்டு ஆதார் மாதமான பன்னிரண்டாம் மாதத்தின்மேல் விழுந்தது.

௮. அப்போது ஆமான் அகாஸ்வேருஇராசாவுடனே சொன்னதாவது; உமதுடைய இராசசியத்தின் சகல சீமைகளிலுமுள்ள சனசதளங்களுக்குள்ளே ஒரேயொரு சனசதளம் சிதறுண்டும், பரம்பினதுமாயிருக்கிறது. அவர்களுடைய நியாயப்பிரமாணங்கள் சகல சனசதளங்களைப்பார்க்கிலும், வெவ்வேறாயிருக்கின்றன. அவர்கள் இராசாவுடைய நியாயப்பிரமாணங்களின்படிசெய்கிறதில்லை. அவர்களை அப்படிவிட இராசாவுக்கு நியாயமல்ல.

௯. இராசாவுக்குச்சம்மதியானால்அவர்களை அழிக்கவேண்டுமென்றெழுதி யனுப்பப்படக

கடவது. அபபோது நான அநதவேலையை செயதிருபபவர்களினகைகளிலே பதினாயிரந்தாலநதுவெளளியை இராசாவின பொககிசஙகளிலே கொணடுவநதுவைகக நிறுத்துக கொடுபபேனெனறுன.

௰. அபபோது இராசா தனகையிலிருககிற தன மோதிரததைககழறறி அதை அமமெதாத்தாவினகுமாரனுகிய ஆமானெனறயூதரின சததுருவாகிய ஆகாகியனுககுக கொடுத்து,

௰௧. ஆமானுடனே அநதவெளளிஉனககுக் கொடுககப்பட்டிருககிறது. உன பார்வைககுச் சமமதியானபடி அநதச சனததுககுச செயகிறதறகு அதுவும உனககொபபுககொடுககப்பட்டிருககிறதெனறுன.

௰௨. அபபோது முதலாம்மாதம பதினமூனருநதேதியிலேஇராசாவினசமபிரதிகள அழைககப்பட்டார்கள. ஆமான கறபிதத படியெலலாம இராசாவின சுபையதார்களுககும, ஒவவொரு சீமையினமேலவைககப்பட்டிருநத துரைகளுககும, ஒவவொருசனசதளததின பிரபுககளுககும சீமைசீமையினுடைய எழுததிலும, சாதி சாதியினுடையபாஷையிலும எழுதபபட்டது. இராசாவாகிய அகாஸவேருவின நாமததிலே எழுதபபட்டு இராசாவின மோதிரததினுல முததிரைபோடபபட்டது.

௰௩. ஆதார் மாதமாகிய பனனிரணடாம மாதமபதினமூனருநதேதியாயிருக்கும் ஒரே நாளிலே எலலாயூதரையும, சிறியோர்முதற் பெரியோர்மட்டுமிருககிறஎலலாயூதரையும, குழநதைகளையும, ஸதிரிகளையும அழிததுக கொனறுநிர்மூலமாககவும, அவர்களைககொளளையிடவுமநிருபஙகள அஞ்சலகாரர்கையிலே இராசாவின சீமைகளுககெலலாம அனுப்பப்பட்டன.

௰௪. அநதநாளுககு ஆயததப்பட்டிருகக வேணுமெனறு சகல சனசதளஙகளுககுங கூறுவிககிறதறகான பிரமாணம ஒவவொரு சீமையிலே அறிவிககப்படவேணுமெனபது அவைகளில எழுதியிருநதது.

௰௫. அநத அஞ்சலகாரர் இராசாவின கறபனையிஞலே தீவரிககப்பட்டுப புறபபட்டுப போனுர்கள. அநதப பிரமாணம சூசான கோட்டையிலும அறிவிககப்பட்டது. இராசாவும, ஆமானும குடிததுககொணடிருகக உளுககாநதார்கள. சூசான்பட்டணமோ வெனறுற் கலஙகலாயிறறு.

## ௪. அதிகாரம்.

[(௧) மொர்த்தேகாயியும, மறறயூதரும மிக வுததுககபபட்டிருநதது. (௪) எஸ்தர்அதையறிநது மொர்த்தேகாயியினிடததுககு ஆளனுபபினதும, அவன அதைககுறிததுவிசாரிகக அவளுககுபபுததிசொனனதும, (௰) அதைமறிததகினமேல மொர்த்தேகாயி அவளைபபயமுறுததியது. (௰௫) அவள அதை விசாரிககவுடனபட்டு உபவாசத்தைக கட்டளையிட்டது.]

௧. செய்யப்பட்டவைகளையெலலாம் மொர்த்தேகாயி அறிநதபோது மொர்த்தேகாயி தனவஸ்திரஙகளைக்கிழிதது இரட்டுடுதது சாமபலபோட்டுககொணடு பட்டணததினநடுவே புறபபட்டுபபோய துயரமுளள மகா சத்தத்தோடே அலறி,

௨. இராசாவின அரமனைவாசல முகடபுமட்டுககுமவநதான. ஏனெனில, இரட்டுடுததவனுய இராசாவின அரமனைவாசலுககுட் பிரவேசிகக ஒருவனுககும உததாரமிலலை.

௩. இராசாவினவார்ததையும், அவனுடைய நியாயபபிரமாணமும போயச்சேர்நத ஒவவொரு சீமையிலும, ஸதலததிலும யூதருககுளளே மகா துககமும, உபவாசமும, அழுகையும, புலமபலுமுணடாய அநேகர் இரட்டிலும, சாமபலிலுங்கிடநதார்கள.

௪. அபபொழுது எஸ்தரினகுமரிபபெணகளும, அவளுடையபிரதானிகளுமவநது அதை அவளுககறிவிததார்கள. அதிஞலே இராசஸ்திரிமிகவும மனநோவடைநதுமொர்த்தேகாயி உடுததிருநதஇரட்டையெடுததுபபோட்டு அவனை உடுததுவிககிறதறகு வஸ்திரஙகளை அவனுககனுபபினுள். ஆனுல அவன அவைகளை ஏறறுககொளளாதிருநதான.

௫. அபபோது எஸ்தர் தன ஊழியததுககு இராசாவைததிருநத அவனுடைய பிரதானிகளில ஒருவனுகிய ஆததாகையழைபபிதது அதேதெனறும, அதினமுகாநதரமேதெனறும அறிய மொர்த்தேகாயியினிடததில விசாரிகக அவனுககுககட்டளையிட்டாள.

௬. அபபடியே ஆததாக் இராசாவின அரமனைவாசலுககுமுனனுன பட்டணவீதியிலிருககிற மொர்த்தேகாயி அணடைககுபபுறபபட்டுபபோனுன.

௭. அபபோது மொர்த்தேகாயிதனககுசசமபவிததவையெலலாவறறையும, யூதரைஅழிககுமபடிககு ஆமான அவர்கள நிமிததம இராசாவினபொககிசஙகளுககு நிறுததுக கொடுபபேனெனறுசொனன ரொககவெளளியினசெயதியையும அவனுககறிவிதது,

௮. எஸ்தருககுக காணபிககுமபடிககும, அவளுககறிவிககுமபடிககும, அவள தன சனததுககாக இராசாவைவேணடிககொணடு அவர்சமுகத்திலேவிணணபபம்பணணுவதறகு அவரணடைககுபபோக அவளுககுக கறபிககுமபடிககும அவன இவனுககு அவர்களைச சஙகரிககிறதறகுச சூசானில அறிவிக்கபபட்ட கட்டளையினுடையகடிதாசிபின பிரதியைககொடுததான.

௯. ஆத்தாக்வந்து மொர்தெகாயியின்வார்த்தைகளை எஸ்தருக்கறிவித்தான்.

௰. அப்போது எஸ்தர் மொர்தெகாயிக்குச் சொல்லச்சொல்லி ஆத்தாக்குக் கற்பித்ததாவது;

௰௧. அழைப்பிக்கப்படாமல் இராசாவண்டைக்கு அவருடைய உள்முற்றத்திலே பிரவேசிக்கிற எந்த ஆணாகிலும், பெண்ணாகிலுஞ்சரி அப்படிப்பட்டவர்கள் பிழைக்கும்படிக்கு இராசா பொற்செங்கோலை அவர்களண்டைக்கு நீட்டினாலொழியக் கொல்லப்படவேண்டுமென்கிறதே அவனுடைய நியாயப் பிரமாணமாயிருக்கிறதென்கிறதை இராசாவின் சகல ஊழியக்காரரும், இராசாவினுடைய சீமையின் சனமும் அறிந்திருந்திருக்கிறார்கள். நானோவெனில், இந்த முப்பது நாளிலே இராசாவண்டைக்கு வரவழைப்பிக்கப்படவில்லையென்று சொல்லக் கற்பித்தாள்.

௰௨. எஸ்தரின் வார்த்தைகளை மொர்தெகாயிக்கு அறிவித்தார்கள்.

௰௩. ஆனால் மொர்தெகாயி எஸ்தருக்குத் திரும்பச் சொல்லச் சொன்னதாவது; நீ இராசாவின் அரமனையிலிருக்கிறதினால் எல்லா யூதரைப் பார்க்கிலும் தப்புவாயென்று உன் மனதிலே நினைவுகொள்ளாதே.

௰௪. ஏனென்றால், நீ இந்தக் காலத்திலே மவுனமாயிருக்கவேயிருந்தால் யூதருக்கு முசிப்பாறுதலும், விடுவிப்பும் வேறொரு ஸ்தலத்திலிருந்தெழும்பி நீயும், உன் தகப்பன் வீட்டாரும் அழிவீர்கள். நீ இப்படிக்கொத்த காலத்துக்கு உதவியாக இராசமேன்மைக்கு வந்ததில்லையோவென்கிறது ஆருக்குத் தெரியுமென்று சொல்லச்சொன்னான்.

௰௫. அப்போது எஸ்தர் மொர்தெகாயிக்கு மறுபடியும் சொல்லச்சொன்னதாவது;

௰௬. நீர் போய்ச் சூசானில் அகப்படுகிற யூதரையெல்லாங் கூட்டிக்கொண்டு எனக்காக உபவாசம்பண்ணி மூன்று நாள் அல்லும், பகலும் புசியாமலும், குடியாமலுமிருங்கள். நானும், என் குமரிப்பெண்களுங்கூட இப்படி உபவாசம்பண்ணுவோம். இந்தப்பிரகாரமாக நியாயப்பிரமாணத்தை மீறி இராசாவண்டைக்குப் பிரவேசிப்பேன். நான் மடிந்தாலும் மடிகிறேனென்று சொல்லச்சொன்னாள்.

௰௭. அப்போது மொர்தெகாயி அப்புறப்பட்டு எஸ்தர் தனக்குக் கற்பித்தபடியெல்லாஞ்செய்தான்.

## ௫. அதிகாரம்.

[(௧) எஸ்தர் இராசாவின் தயையைப் பெறத்துணிந்து செங்கோலைத்தொட்டு அவனையும், ஆமானையும் விருந்துக்கு வரவழைத்தது. (௯) அவன் இராசனுல்லதைரியமடைந்து அவர்களை மறுநாள் விருந்துக்கு அழைத்தது. (௯) ஆமான் மேம்பட்டு மொர்தெகாயியை நிந்தித்தது. (௰௪) அவனுக்காகச் சேரின ஆலோசனையின்படி ஒரு சோத்துக்குமரத்தைச் செப்பனிட்டது.]

சம்பவித்ததேதெனில், மூன்றாம் நாளிலே எஸ்தர் இராசவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு இராச அரமனையின் உள்முற்றத்தில் இராசாவின் வீட்டுக்கெதிராகப் போய் நின்றாள். இராச அரமனையிலே அரமனைவாசலுக்கெதிரேயிருக்கிறதனனுடைய இராசாசனத்தில் இராசா உளுக்கார்ந்திருந்தான்.

௨. சம்பவித்ததேதென்றால், இராசா இராசஸ்திரியாகிய எஸ்தர் முற்றத்தில் நிற்கிறதைக் காணுகையில் அவளுக்கு அவன் கண்களிலே தயைகிடைத்ததினால் இராசா தன் கையிலிருக்கிற பொற்செங்கோலை எஸ்தரண்டைக்கு நீட்டினான். அப்போது எஸ்தர் சேர்ந்து செங்கோலின் நுனியைத்தொட்டாள்.

௩. இராசா அவளுடனே, இராசஸ்திரியாகிய எஸ்தரே, உனக்கென்னவேணும்! நீ கேட்கிற உன் மன்றாட்டென்ன! நீ இராச்சியத்தின் பாதிமட்டுங் கேட்டாலும் உனக்குக் கொடுக்கப்படுமென்றான்.

௪. அப்போது எஸ்தர், இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் நான் தமக்குச்செய்வித்த விருந்துக்கு இராசாவும், ஆமானும் இன்றைக்குவரவேணுமென்றாள்.

௫. அப்போது இராசா எஸ்தர் சொற்படி செய்ய ஆமானைத் தீவரியுங்களென்று சொல்லி எஸ்தர் செய்வித்த விருந்துக்கு இராசாவும் ஆமானும் வந்தார்கள்.

௬. திராட்சப்பழ இரசம் நடந்த விருந்திலே இராசா எஸ்தருடனே, நீ வேண்டிக்கொள்ளுகிறதென்ன! உனக்குக் கொடுக்கப்படும். நீ கேட்கிறதென்ன? நீ இராச்சியத்தின் பாதிமட்டுங் கேட்டாலும் நடக்குமென்றான்.

௭. எஸ்தர் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது;

௮. இராசாவின் கண்களில் எனக்குக் கிருபை கிடைத்து என் வேண்டுதலைக் கட்டளையிடவும், என் விண்ணப்பத்தின்படி செய்யவும் இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் இராசாவும், ஆமானும் நான் இன்னந்தங்களுக்குச்செய்விக்கப்போகிற விருந்துக்குவரவேணுமென்கிறதே என் வேண்டுதலும், என் விண்ணப்பமுமாயிருக்கின்றது. நாளைக்கு இராசாவுடைய சொற்படி செய்வேனென்றாள்.

௯. அன்றைத்தினம் ஆமான் சந்தோஷமும், மனமகிழ்ச்சியுமாய்ப் புறப்பட்டான். ஆனால்,

இராச அரமனையின்வாசலிலிருக்கிற மொர்தேகாயி எழுந்திராமலும், தன்னிமித்தம் அசையாமலுமிருக்கிறதை ஆமான் காணுகையில் அவன்மொர்தேகாயின்மேல் உக்கிரம் நிறைந்தவனானான்.

௰. ஆகிலும் ஆமான் அதை அடக்கிக்கொண்டு தன் வீட்டுக்குவந்து தன் சிநேகிதரையும், தன் பெண்சாதியாகிய சேரேசையும் அழைத்தனுப்பி,

௰௧. தன்னுடைய ஐசுவரியத்தின் மகிமையையும், தன் பிள்ளைகளின் திரட்சியையும், இராசா தன்னைப் பெரியவனாக்கித் தன்னைப் பிரபுக்களின்மேலும், இராசாவின் ஊழியக்காரர்மேலும் உயர்த்தினவையெல்லாவற்றையும் ஆமான் அவர்களுக்கு விவரித்தான்.

௰௨. பின்னையும் ஆமான் சொன்னதாவது; இராசஸ்திரீயாகிய எஸ்தர் தான் செய்வித்த விருந்துக்கு என்னைத்தவிர வேறொருவரையும் இராசாவுடனே கூடவரச்சொன்னதில்லை. நாளைக்கும் இராசாவுடனே கூட அவளால் விருந்துக்கு அழைக்கப்பட்டவனானேன்.

௰௩. ஆனால் எந்தமட்டும் யூதனாகிய மொர்தேகாயி இராச அரமனையின்வாசலிலுக்காந்திருக்கிறதை நான் காணுகிறேனோ அந்தமட்டும் அவையெல்லாம் எனக்குப்போதாதென்றான்.

௰௪. அப்போது அவன்பெண்சாதியாகிய சேரேசும், அவனுடைய எல்லாச்சிநேகிதரும் அவனுடனே ஐம்பதுமுழ உயரமான ஒரு தூக்குமரஞ்செய்யப்படக்கடவது. அதிலே மொர்தேகாயி தூக்கிப்போடப்படநாளைக்காலமே நீர் இராசாவுக்குச்சொல்லிப் பிறபாடு சந்தோஷமாய் இராசாவுடனே கூட விருந்துக்குப்போமென்றார்கள். இந்தக்காரியம் ஆமானுக்கு நன்றாய்க்கண்டதினாலே தூக்குமரத்தைச்செய்ப்பண்ணுவித்தான்.

## ௬. அதிகாரம்.

[(௧) அகாஸ்வேரு நாளாகமப்புஸ்தகத்திலே மொர்தேகாயின் நன்மையை வாசித்து அவனுக்கு உபகாரஞ்செய்ய நினைத்தது. (௪) ஆமான் மொர்தேகாயியைத் தூக்குமபடி யுத்தரவைக்கேட்கவந்தபோது அறியாமையாயவன் சங்கைக்குரியாசனைச்சொன்னது. (௰௨) அவன்தனக்கு நேரிட்ட அவமானத்தைச் சொன்னபோது அவனுடைய சிநேகிதர் இனி நாசம்வருமென்றுசொன்னது.]

அந்த இராத்திரியிலே இராசாவுக்கு நித்திரைவராதபடியினாலே, நினைப்புக்காக எழுதியிருக்கிற நாட்செய்திகளின் புஸ்தகத்தைக்கொண்டுவரச்சொன்னான். அது இராசாவுக்கு முன்பாக அவைகள் வாசிக்கப்பட்டது.

௨. அப்போது வாசற்படிக் காவலாளிகளில் இராசாவின் இரண்டு பிரதானிகளாகிய பிக்தானாவும், தேரேசும் இராசாவாகிய அகாஸ்வேருவின்மேலே கைபோடப்பார்த்த செய்தியைமொர்தேகாயி அறிவித்தானென்றெழுதியிருக்கிறது கண்டுபிடிக்கப்பட்டபோது,

௩. இராசாவானவன் இதற்காக மொர்தேகாயிக்குச் செய்யப்பட்டகனமும், வெகுமானமும் என்னவென்றுகேட்டான். ஒன்றும் அவனுக்குச் செய்யப்படவில்லையென்று இராசாவைச்சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர்சொன்னார்கள்.

௪. அப்போது இராசா முற்றத்திலிருக்கிறவன் யாரென்றுகேட்டான். ஆனால் ஆமான் மொர்தேகாயிக்குத் தான்செய்ப்பண்ணுவித்தமரத்திலே அவனைத்தூக்கிப் போடும்படிக்கு இராசாவுக்குச்சொல்லவந்ததற்காக இராச அரமனையின் புறமுற்றத்திலே வந்திருந்தான்.

௫. ஆகையால், இராசாவின் வேலைக்காரர் அவனுடனே, இதோ, ஆமான் முற்றத்திலே நிற்கிறானென்றார்கள். அப்போது இராசா அவன்வரட்டுமென்றான்.

௬. ஆமான் உள்ளேவந்தபோது இராசா அவனுடனே, இராசா, கனம்பண்ணவிருப்பமாயிருக்கிற மனுஷனுக்குச்செய்யப்பட வேண்டியதென்னவென்றான். அப்போது ஆமான் என்னைப்பார்க்கிலும், இராசா ஆரைக் கனம்பண்ண விருப்பமாயிருப்பாரென்று தன்னிருதயத்திலே நினைத்துக்கொண்டு,

௭. இராசாவுடனே சொன்னதாவது; இராசா கனம்பண்ணவிருப்பமாயிருக்கிற மனுஷனுக்குச்செய்யவேண்டியதேதெனில்,

௮. இராசா உடுத்துக்கொள்ளுகிற இராசவஸ்திரமும், இராசா ஏறுகிறகுதிரையுங் கொண்டுவரப்பட்டு இராசமுடி அவன்தலையின்மேல்வைக்கப்பட்டு,

௯. அந்தவஸ்திரமும், குதிரையும் இராசாவுடையபிரதானபிரபுக்களில் ஒருவனுடைய கையிலேகொடுக்கப்படக்கடவது. இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு வஸ்திரந்தரிப்பித்தபின் அவனைக்குதிரையின்மேலேற்றிப் பட்டண வீதியாயக் கொண்டுபோய் இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு இப்படிச்செய்யப்படுமென்று அவனுக்கு முன்பாகக்கூறக்கடவார்களென்றான்.

௰. அப்போது இராசா ஆமானுடனே, நீ சீக்கிரமாய் வஸ்திரத்தையும், குதிரையையும் நீ சொன்னபடி வாங்கி இராசஅரமனையின்வாசலில் உட்காந்திருக்கிற யூதனாகிய மொர்தேகாயிக்கு அந்தப் பிரகாரமாகச் செய். நீ சொன்னவையெல்லாவற்றிலும் ஒன்றுமொன்றையும் விடாதேயென்றான்.

௰௧. அப்படியே ஆமான் வஸ்திரத்தையும், குதிரையையும் வாங்கி மொர்தேகாயிக்கு

வஸ்திரந்தரித்து அவனைக் குதிரையின்மே லேற்றிப்பட்டணவீதியாய்க் கொண்டுபோய் இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனிதனுக்கு இப்படிச் செய்யப்படுமென்று அவனுக்கு முன்பாகக் கூறினான்.

௰௨. பிற்பாடு மொர்தெகாயி இராசஅரமனையின் வாசலுக்குத் திரும்பிவந்தான். ஆமானோவென்றால் சஞ்சலப்பட்டவனும், முக்காடிட்டவனுமாய்த் தன்வீட்டுக்குத் தீவிரித்தான்.

௰௩. ஆமான் தனக்குச் சம்பவித்ததையெல்லாவற்றையுந் தன் பெண்சாதியாகிய சேரேசுக்கும், தன்னுடைய எல்லாச் சிநேகிதருக்கும் விவரித்தபோது அவனுடைய ஞானிகளும், அவன் பெண்சாதியாகிய சேரேசும் அவனுடனே, மொர்தெகாயிக்கு முன்பாக நீர் விழத்துவக்கினீரே, அவன் யூதரின் வித்தாயிருந்தால் நீர் அவனை மேற்கொள்ளாமல் அவனுக்கு முன்பாக விழவே விழுவீரென்றார்கள்.

௰௪. அவர்கள் இன்னம் அவனோடே பேசும்போது இராசாவின் பிரதானிகள் வந்து எஸ்தர் செய்வித்த விருந்துக்கு வர ஆமானைத் துரிதப்படுத்தினார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) எஸ்தர் இராசனையும், ஆமானையும் விருந்துக்கு வரவழைத்து, தன் சீவனுக்காகவும், தன் சனங்களின் சீவனுக்காகவும் மன்றாடினது. (௫) அவள் ஆமானைக் குற்றஞ்சாட்டினது. (௭) இராசன் மொர்தெகாயிக்காகத் தூக்குமரஞ் செய்யப்பட்டதை அறிந்து கோபமடைந்து அதில் ஆமானைத் தூக்கக் கட்டளையிட்டது.]

இராசஸ்திரியாகிய எஸ்தருடனே விருந்துண்ண இராசாவும், ஆமானும் வந்தபோது,

௨. திராட்சப்பழ இரசம் நடந்த அந்த இரண்டாம் நாள் விருந்திலும் இராசா எஸ்தருடனே இராசஸ்திரியாகிய எஸ்தரே, உன் மன்றாட்டென்ன உனக்குக் கொடுக்கப்படும், நீ கேட்கிற காரியமென்ன நீ இராச்சியத்தின் பாதிமட்டுங் கேட்டாலும் நடக்குமென்றான்.

௩. அப்போது இராசஸ்திரியாகிய எஸ்தர் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; இராசாவே உம்முடைய கண்களிலெனக்குக் கிருபை கிடைத்து இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் என் வேண்டுதலுக்கென் சீவனும், என் விண்ணப்பத்துக்கு என் சனமும் எனக்குக் கட்டளையிடப்படுவதாக.

௪. ஏனெனில் எங்களைச் சங்கரிக்கிறதற்கும், கொன்றுபோடுகிறதற்கும், அழிக்கிறதற்கும் நானும், என் சனமுமாய் விற்கப்பட்டோம். அடிமைகளாகவும், வெள்ளாட்டிகளாகவும் விற்கப்பட்டோமானால் அப்போது அந்தச் சத்துரு இராசாவின் நஷ்டத்துக்கு உத்தரவாதம் பண்ணக்கூடாதிருந்தாலும் நான் மவுனமாயிருப்பேனென்றாள்.

௫. அப்போது இராசாவாகிய அகாஸ்வேரு உத்தரவுகொடுத்து இராசஸ்திரியாகிய எஸ்தருடனே, அவனார்? இப்படிச்செய்யும் நினைவுகளாலே தன் இருதயத்தை நிரப்பினவன் எங்கேயிருக்கிறானென்றான்.

௬. அதற்கு எஸ்தர், சத்துருவும், பகைஞனுமாகிய மனிதன் இந்தப்பொல்லாத ஆமான்தானென்றாள். அப்போது ஆமான் இராசாவுக்கும், இராசஸ்திரிக்கும் முன்பாகத் திகிலடைந்தான்.

௭. இராசாவோவென்றால் தன் உக்கிரத்தோடே திராட்சப்பழ இரசம் நடந்த விருந்தை விட்டெழுந்து அரமனைத் தோட்டத்துக்குப் போனான். ஆனால் ஆமான் இராசஸ்திரியாகிய எஸ்தரைத் தன் பிராணனுக்காக விண்ணப்பம் பண்ணினான். ஏனெனில் இராசாவினால் தனக்குப் பொல்லாப்பு நிருணயிக்கப்பட்டதென்று கண்டான்.

௮. இராசா அரமனைத் தோட்டத்திலிருந்து திராட்சப்பழ இரசம் நடந்த விருந்தின் வீட்டுக்குத் திரும்பிவருகையில் எஸ்தர் உட்கார்ந்திருக்கிற மெத்தையின்மேல் ஆமான் விழுந்திருந்தான். அப்போது இராசா இவன் என்னோடே வீட்டிலுமிருந்து இராசஸ்திரியைப் பலவந்தஞ்செய்யவேணுமென்றிருக்கிறானோவென்றான். இந்தவார்த்தை இராசாவின்வாயிலிருந்து புறப்பட்டவுடனே ஆமானின் முகத்தை மூடினார்கள்.

௯. அப்போது இராசாவுக்கு முன்பாக நிற்கிற பிரதானிகளிலொருவனான அற்போனா என்றவன் இதோ, இராசாவின் நன்மைக்காகப் பேசின மொர்தெகாயிக்கு ஆமான் செப்பனிடுவித்த ஐம்பது முழ உயரமான தூக்குமரமும் ஆமானின் வீட்டண்டை நாட்டப்பட்டிருக்கிறதென்றான். அப்போது இராசா அதிலே அவனைத் தூக்கிப்போடுங்களென்றான்.

௰. அப்படியே ஆமான் மொர்தெகாயிக்கு ஆயத்தப்பண்ணின தூக்குமரத்திலே அவனைத் தூக்கிப்போட்டார்கள். அப்போது இராசாவின் உக்கிரந்தணிந்துபோயிற்று.

## ௮. அதிகாரம்.

[(௧) மொர்தெகாயி உயர்த்தப்பட்டது. (௩) ஆமான் எழுதின கடிதத்தை விலக்க எஸ்தர் விண்ணப்பஞ்செய்தது. (௭) அகாஸ்வேரு சத்துருக்களை எதிர்க்க யூதர்களுக்கு உத்தரவுகொடுத்தது. (௰௫) மொர்தெகாயினுடைய கனமும், யூதரின் சந்தோஷமும்.]

அன்றைத்தினம் அகாஸ்வேரு இராசா யூதரின் சத்துருவாயிருந்த ஆமானின் வீட்டை இராசஸ்திரியாகிய எஸ்தருக்

க்குக் கொடுத்தான். மொர்தெகாயி இராசாவுக்கு முன்பாகவும் வந்தான். ஏனெனில், அவன் தனக்கு என்னமாயிருக்கிறானென்று எஸ்தர் அறிவித்திருந்தாள்.

௨. இராசா ஆமானின் கையிலிருந்து வாங்கிப்போட்ட தம்முடைய மோதிரத்தை எடுத்து அதை மொர்தெகாயிக்குக் கொடுத்தான். எஸ்தரோவெனில் மொர்தெகாயியை ஆமானின் வீட்டுக்கு அதிகாரியாக வைத்தாள்.

௩. பின்னையும் எஸ்தர் இராசாவுக்கு முன்பாகப் பேசி அவன் பாதங்களில் விழுந்தழுது ஆகாகியனான ஆமானின் தீவினையையும், அவன் யூதருக்கு விரோதமாக நினைத்த அவனுடைய யோசனையையும் பரிகரிக்க அவனை விண்ணப்பம்பண்ணினாள்.

௪. அப்போது இராசா பொற்செங்கோலை எஸ்தர் அண்டைக்கு நீட்டினான். எஸ்தர் எழுந்திருந்து இராசாவுக்கு முன்பாக நின்று,

௫. சொன்னதாவது; இராசாவுக்குச் சம்மதியாயிருந்து தமக்கு முன்பாக எனக்குக் கிருபை கிடைத்து இராசாவுக்கு முன்பாக நான் சொல்லும் வார்த்தை சரிப்பட்டுத் தம்முடைய கண்களுக்கு நான் பிரியப்பட்டிருந்தால் அப்போது இராசாவின் சீமைகளிலெல்லாம் இருக்கிற யூதரை அழிக்கவேணுமென்று அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற ஆகாகியன் தீவினையாய் எழுதின நிருபங்களைச் செல்லாதே போகப்பண்ணும் பிரகாரமாக எழுதி அனுப்பப்படக்கடவது.

௬. ஏனென்றால் என் சனத்தின்மேல் வரும் பொல்லாப்பைப் பார்க்க எனக்கெப்படிக் கூடும்! என் வம்சத்தின் அழிவையும் பார்க்க எனக்கெப்படிக் கூடுமென்றாள்.

௭. அப்போது அகாஸ்வேரு இராசா இராசஸ்திரியாகிய எஸ்தருக்கும், யூதனாகிய மொர்தெகாயிக்குஞ் சொன்னதாவது; இதோ, ஆமானின் வீட்டை எஸ்தருக்குக் கொடுத்தேன், அவன் யூதரின்மேல் தன் கையைப் போடப்போனபடியினாலே அவனையும் மரத்திலே தூக்கிப்போட்டார்கள்.

௮. இப்போதும் உங்கள் பார்வைக்குச் சம்மதியானபடி நீங்கள் இராசாவின் நாமத்திலே யூதருக்காக எழுதி இராசாவின் மோதிரத்தினால் முத்திரைபோடுங்கள். ஏனெனில், இராசாவின் நாமத்தில் எழுதப்பட்டு இராசாவின் மோதிரத்தால் முத்திரைபோடப்படுகிறதைச் செல்லாதேபோகப் பண்ணக் கூடாதென்றான்.

௯. சீவான்மாதமென்ற மூன்றாம் மாதம் இருபத்துமூன்றாந் தேதியாகிய அக்காலத்திலேதானே இராசாவின் சம்பிரதிகள் அழைக்கப்பட்டார்கள். மொர்தெகாயி கற்பித்தபடியெல்லாம் யூதருக்கும் இந்துதேசந் துவக்கி எத்தியோப்பியாமட்டுமுள்ள நூற்றிருபத்தேழு சீமைகளின் சுபையதாருக்கும், துரைகளுக்கும், பிரபுக்களுக்கும் சீமைசீமையின் எழுத்திலும், சாதிசாதியின் பாஷையிலும், யூதருக்கு அவர்கள் எழுத்திலும், அவர்கள் பாஷையிலும் எழுதப்பட்டது.

௰. அது அகாஸ்வேரு இராசாவின் நாமத்திலெழுதப்பட்டு இராசாவின் மோதிரத்தால் முத்திரைபோடப்பட்டபின் அந்த நிருபங்கள் அஞ்சற்குதிரைக்காரர் கையிலும், வேகமான ஒட்டகங்களின்மேலும், கோவேறு கழுதைகளின்மேலும், ஏறிப்போகிற அஞ்சற்காரர் கையிலும் அனுப்பப்பட்டன.

௰௧. அகாஸ்வேரு இராசாவுடைய எல்லாச் சீமைகளிலும் ஆதார்மாதமென்ற பன்னிரண்டாம் மாதம் பதின்மூன்றாந் தேதியாகிய அந்த ஒரேநாளில்,

௰௨. ஒவ்வொரு பட்டணங்களிலிருக்கிற யூதர் கூடிக்கொண்டு தங்கள் பிராணனைக் காப்பாற்றவும், தங்கள்மேல் சத்துருக்களாய் விழுஞ் சனத்தாரும், தேசத்தாருமான எல்லா இராணுவங்களையும், அவர்கள் குழந்தைகளையும், ஸ்திரீகளையுஞ் சங்கரிக்கவும், கொன்றுபோடவும், அழிக்கவும், அவர்கள் உடைமைகளைக் கொள்ளையிடவும் இராசா யூதருக்குக் கட்டளையிட்டானென்று அவைகளில் எழுதியிருந்தது.

௰௩. யூதர் தங்கள் பகைஞருக்குச் சரிக்குச் சரிக்கட்ட அன்றைத்தினத்துக்கு ஆயத்தமாயிருக்கவேணுமென்று ஒவ்வொரு சீமையிலுள்ள எல்லாச் சனத்தாருக்குங் கூறப்படுகிறதற்கான கட்டளை கொடுக்கப்பட்டதென்றும், அவைகளிலெழுதியிருந்தது.

௰௪. அப்படியே வேகமான ஒட்டகங்களின்மேலும், கோவேறு கழுதைகளின்மேலும் ஏறின அஞ்சற்காரர் இராசாவின் வார்த்தையினாலே ஏவப்பட்டுத் தீவரத்தோடே புறப்பட்டுப்போனார்கள். அந்தப் பிரமாணஞ் சூசான் கோட்டையிலும் அடிக்கப்பட்டது.

௰௫. அப்பொழுது மொர்தெகாயி இளநீலமும், வெள்ளையுமான இராச வஸ்திரமும், பெரிய பொன்முடியும், மெல்லிய புடவையும், சிவப்பான சால்வையும் அணிந்தவனாய் இராசாவினிடத்திலிருந்து புறப்பட்டான். அதற்காகச் சூசான் பட்டணம் ஆர்ப்பரித்து மகிழ்ந்திருந்தது.

௰௬. அப்படியே யூதருக்கு வெளிச்சமும், மகிழ்ச்சியும், களிகூருதலும், கனமும் உண்டாயின.

௰௭. இராசாவின் வார்த்தையும், அவனுடைய பிரமாணமும் போய்ச்சேர்ந்த எல்லாச் சீமையிலும், எல்லாப் பட்டணத்திலும் யூதருக்குள்ளே மகிழ்ச்சியும், சந்தோஷமும், விருந்துண்டு கொண்டாடுகிற நாளுமாயிருந்தன். தேசச்சனங்களில் அநேகர் யூதமார்க்கமடைந்தார்கள். ஏனெனில், யூதருக்குப் பயப்படுகிற பயம் அவர்களைப் பிடித்தது.

## ௯. அதிகாரம்.

[(௧) மொர்தெகாயிக்குப் பயந்து பிரபுக்கள் உதவிசெய்ததினாலே யூதர்கள் ஆமானின் புத்திரர்பத்துப்பேரையும், மற்றப்பகையாளிகளையும் கொன்றது. (௰௨) அகாஸ்வேரு எஸ்தரின் வேண்டுதலினாலே வேறொருநாளிற் சத்துருக்களைக் கொல்லவும், ஆமானின் புத்திரர்களைத் தூக்கவுங் கட்டளைகொடுத்தது. (௨௰) பூரிமைக்குறித்துச் செய்த இரண்டு பண்டிகை.]

இராசாவின் வார்த்தையின்படியும், அவனுடைய பிரமாணத்தின்படியுஞ் செய்யப்படுகிறதற்கு ஆதார்மாதமென்கிற பன்னிரண்டாம் மாதம் பதின்மூன்றாந்தேதியிலே யூதரின்பகைஞர் அவர்களை மேற்கொள்ளலாமென்று நம்பினார்களே. அந்நாளிலே தான் யூதரானவர்கள் தங்கள் பகைஞரை மேற்கொள்ளும்படிக்குக் காரியம் மாறிப்போய்,

௨. யூதர் அகாஸ்வேரு இராசாவின் சகல சீமைகளிலுமுள்ள பட்டினங்களிலே தங்களுக்குப் பொல்லாப்புவரப்பண்ணப்பார்த்தவர்கள்மேற் கைபோடக் கூடிக்கொண்டார்கள். ஒருவரும் அவர்களுக்குமுன்பாக நிற்கக்கூடாதிருந்தது. ஏனெனில், அவர்களாலே சகலசனசதிரங்களின்மேலும் பயங்கரமவிருந்தது.

௩. சீமைகளின் சகல பிரபுக்களும், சேனைத்தலைவர்களும், தேசாதிபதிகளும், இராசாவின்வேலையை நடப்பிக்கிறவர்களும் யூதரையுயர்த்தினார்கள். ஏனென்றால், மொர்தெகாயினாலுண்டான பயங்கரம் அவர்கள்மேல் விழுந்தது.

௪. ஏனெனில், மொர்தெகாய் இராசாவின் அரமனையிற் பெரியவனாயிருந்தான். அவனுடைய கீர்த்தி எல்லாச்சீமைகளிலும் பிரசித்தமாயிற்று. ஏனென்றால், இந்தமொர்தெகாயென்கிறவன் வரவரப் பெலத்துப்போனான்.

௫. அப்படியே யூதர் தங்கள் பகைஞரையெல்லாம் பட்டயத்தாலே வெட்டிக்கொன்று அழித்துவிட்டுத் தங்கள் விரோதக்காரருக்குத் தங்களுக்குச் சரிப்போனபடி செய்தார்கள்.

௬. சூசான்கோட்டையிலும் யூதர் ஐந்நூறு பேரைக்கொன்று அழித்தார்கள்.

௭. அம்மெதாத்தாவின்குமாரனாகிய ஆமானென்ற யூதருடைய சத்துருவின் பத்துக்குமாரரான பற்சான்தாத்தாவையும், தல்போனையும், அஸ்பாத்தாவையும்,

௮. பொராத்தாவையும், அதலியாவையும், அரிதாத்தாவையும்,

௯. பர்மஷ்டாவையும், அரிசாயையும், அரிதாயையும், வாய்சாத்தாவையுங் கொன்றுபோட்டார்கள்.

௰. ஆனாற்கொள்ளையிடத் தங்கள் கைகளை நீட்டினதில்லை.

௰௧. அன்றைத்தினம் சூசான்கோட்டையிற் கொன்றுபோடப்பட்டவர்களின் தொகை இராசாவுக்குமுன்பாக வந்தது.

௰௨. அப்போது இராசா இராசஸ்திரீயாகிய எஸ்தருடனே, சூசான்கோட்டையில் யூதர் ஐந்நூறுபேரையும், ஆமானின் பத்துக்குமாரரையுங் கொன்று அழித்தார்கள். இராசாவின் மற்றச்சீமைகளில் என்னசெய்திருப்பார்களோ, இப்போதும் உன்மனுவென்ன உனக்குக் கட்டளையிடப்படும். நீ அப்புறங்கேட்குங் காரியமென்ன அதுஞ்செய்யப்படுமென்றான்.

௰௩. அப்போது எஸ்தரென்றவள், இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால் இன்றையின் பிரமாணத்துக்கொத்தபடி சூசானிலிருக்கிற யூதர் நாளைத்தினஞ்செய்யவும், ஆமானின் பத்துக்குமாரரைத் தூக்குமரத்தில் தூக்கிப்போடவும் உத்தரவுகொடுக்கப்படக்கடவதென்றாள்.

௰௪. அப்போது அப்படிச்செய்யும்படிக்கு இராசா சொன்னான். அதற்குச் சூசானிலே பிரமாணங் கட்டளையிடப்பட்டது. ஆமானின் பத்துக்குமாரரைத் தூக்கிப்போட்டார்கள்.

௰௫. சூசானிலிருக்கிற யூதர் ஆதார்மாதத்தின் பதினாலாந்தேதியிலுங் கூடிக்கொண்டு சூசானில் முந்நூறுபேரைக்கொன்றுபோட்டார்கள். ஆனாற்கொள்ளையிடத் தங்கள் கையை நீட்டினதில்லை.

௰௬. இராசாவின் சீமைகளிலுள்ள மற்ற யூதர் தங்கள் பிராணனைத்தற்காக்கவும், தங்கள் பகைஞரைவிலக்கி இளைப்பாறுதல் அடையவுங்கூடிக்கொண்டு தங்கள் விரோதக்காரரில் எழுபத்தையாயிரம் பேரைக்கொன்றுபோட்டார்கள். ஆனாற்கொள்ளையிடத் தங்கள் கையை நீட்டினதில்லை.

௰௭. ஆதார்மாதத்தின் பதின்மூன்றாந்தேதியிலே இப்படிச்செய்து, பதினாலாந்தேதியில் இளைப்பாறி அதைவிருந்துண்கிற சந்தோஷநாளாக்கினார்கள்.

௰௮. சூசானிலுள்ள யூதரோவெனில், அந்தமாதத்தின் பதின்மூன்றாந்தேதியிலும், பதினாலாந்தேதியிலுங் கூடிக்கொண்டிருந்து பதினைந்தாந்தேதியில் இளைப்பாறி அதை விருந்துண்கிற சந்தோஷநாளாக்கினார்கள்.

௰௯. ஆனதுகொண்டு அலங்கமில்லாத ஊர்களிற்குடியிருக்கிற நாட்டுப்புறத்தாரான யூதர் ஆதார்மாதத்தின் பதினாலாந்தேதியைச் சந்தோஷமும், விருந்துண்கிற பூரிப்புமான நாளும், ஒன்றுக்கொன்று அதியாபனங்களை அனுப்புகிறநாளுமாக்கினார்கள்.

௨௰. இந்த வர்த்தமானங்களைமொர்தெகாய் எழுதி அகாஸ்வேருஇராசாவின் சகலசீமை

களிலுங்கிட்டவும், தூரமுமாயிருக்கிற எல்லாயூதருக்கும் நிருபங்களையனுப்பி,

உக. யூதர்தங்கள் பகைஞரைவிலகி இளைப்பாறுதல் அடைந்தநாள்களின்படியேயும், அவர்கள் சஞ்சலம் சந்தோஷமாகவும், அவர்கள் துக்கம் மகிழ்கிறநாளாகவும் மாறின மாதத்தின் படியேயும் வருஷந்தோறும் ஆதார்மாதத்தின் பதினாலாந்தேதியையும், பதினைந்தாந்தேதியையும் ஆசரிக்கவும்,

உஉ. அவைகளை விருந்துண்கிற சந்தோஷ நாள்களுமாக்கவும், ஒருவருக்கொருவர் காணிக்கைகளையும், எளியவர்களுக்கீவுகளையும் அனுப்புகிற நாள்களுமாக்கவும் அவர்களுக்குக் கட்டளைபண்ணினான்.

உங. அப்பொழுது யூதர்தாங்கள் செய்யத்துவக்கினபடியும், மொர்தேகாயி தங்களுக்கெழுதினபடியுஞ்செய்ய ஏற்றுக்கொண்டார்கள்.

உச. அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற ஆகாகியனும், யூதருக்கெல்லாஞ் சத்துருவுமானவன் யூதரைச் சங்கரிக்க நினைத்து அவர்களை அழிக்கவும், நிர்மூலமாக்கவும் பூரென்னப்பட்ட சீட்டைப்போட்டிருந்தானென்றும்,

உரு. ஆனால் அது எஸ்தர் இராசாவுக்கு முன்பாக வந்தபின் யூதருக்கு விரோதமான அவன் நினைத்த அவனுடைய பொல்லாத யோசனை அவனுடைய தலையின்மேல் திரும்புகிறதற்காக நிருபங்களினாலே கட்டளைபண்ணினதினால் அவனையும், அவன் குமாரரையும் மரத்திலே தூக்கிப்போட்டார்களென்றும்,

உசா. ஆகையினாலே அந்தநாள்கள் பூரென்ற நாமத்தினால் பூரீமென்னப்பட்டதென்றும் வந்த நிருபத்தில் எழுதியிருந்த எல்லா வார்த்தைகளினிமித்தமும், தாங்கள் தானே இதைத்தொட்டுக்கண்டதினிமித்தமும், தங்கள் மேல் இப்படிவந்ததினிமித்தமும்

உஎ. யூதர் அதைத்திட்டப்படுத்தி இந்த இரண்டு நாள்களைக் குறித்தெழுதியிருக்கிறபடியே அவைகளை வருஷந்தோறும் அவைகளின் திட்டமான காலத்திலே ஆசரியாதிருப்பதில்லையென்பதையும்,

உஅ. இந்தநாள்கள் எல்லாத்தலைமுறைகளிலும், வருஷங்களிலும், சீமைகளிலும், ஊர்களிலும் நினைக்கப்பட்டாசரிக்கப்படுகிறதென்பதையும், இந்தப்பூரீமென்றநாள்கள் யூதருக்குள்ளே அற்றுப்போகாமலும், அவைகளை நினைவுகூருதல் தங்கள் வித்தாருக்குள்ளே அழியாமலுமிருக்குமென்பதையும் தங்கள்மேலும், தங்கள் வித்தாரின்மேலும், தங்களை யார்க்கத்தமைப்போகிற யாவர்மேலும் ஏற்றுக்கொண்டார்கள்.

உகூ. பூரீமைக்குறித்தெழுதியிருக்கிற இந்த இரண்டாம் நிருபத்தைத்திட்டப்படுத்தும்படிக்கு அபிகாயலின் குமாரத்தியாகிய எஸ்தரென்ற இராசஸ்திரீயும், யூதனாகிய மொர்தேகாயியும்பின்னையும் மகா பெலனுடனெழுதினார்கள்.

ஙய. யூதனாகிய மொர்தேகாயியும், இராசஸ்திரீயாகிய எஸ்தரும் யூதருக்கு உறுதிப்பாடுபண்ணினதும், அவர்கள் தானே உபவாசத்தோடும், அலறுதலோடும் ஆசரிப்போமென்று தங்கள்மேலும், தங்கள் வித்தாரின்மேலும் உறுதிப்பாடாகக்கொண்டதுமான பூரீமென்னப்பட்ட இந்தநாள்கள் அவைகளின் திட்டமான காலங்களில் ஆசரிக்கப்படுங்காரியத்தை உறுதியாக்க,

ஙக. அவன் அகாஸ்வேருவின் இராச்சியத்திலுள்ள நூற்றிருபத்தேழு சீமைகளிலிருக்கிற எல்லா யூதருக்குஞ் சமாதானமும், உண்மையுமான வார்த்தைகளாய நிருபங்களையனுப்பினான்.

ஙஉ. இப்படியே எஸ்தரின் கட்டளை பூரீம் நாள்களின் வர்த்தமானத்தைத் திட்டப்படுத்த ஒரு புஸ்தகத்திலெழுதப்பட்டது.

## ௰ அதிகாரம்.

[(க) அகாஸ்வேருவின் பெருந்தன்மை. (ங) மொர்தேகாயின் மேன்மை.]

இராசாவாகிய அகாஸ்வேரு தேசத்தின்மேலும், சமுத்திரத்தின் தீவுகள்மேலும் இறைவரி வைத்தான்.

உ. பெலனும், வல்லமையுமான அவனுடைய எல்லாச்செய்கைகளும், இராசா பெரியவனாக்கின மொர்தேகாயினுடைய முக்கியத்தின் விவரமும் மேதியா, பெர்சியா இராசாக்களின் நாளாகமப்புஸ்தகத்திலல்லவோ வெழுதியிருக்கின்றது

ங. ஏனென்றால், யூதனாகிய மொர்தேகாயி இராசாவாகிய அகாஸ்வேருக்கு இரண்டாவதும், யூதருக்குப் பெரியவனும், தன்னுடைய திரள்சகோதரருக்குப் பிரியமானவனுமாயிருந்து தன்சனத்தாருக்கு நன்மையைப் பாராமரித்துத் தன்வித்தாருக்கெல்லாஞ் சமாதானமுண்டாகப் பேசிக்கொண்டிருந்தான்.

முற்றிற்றுமுற்றும்.

# யோபுடைய சரித்திரம்.

(ஹி. பி. மூன. தூறொஉல)

க. அதிகாரம்.

[(க) யோபினுடைய உத்தமமும், ஐசுவரியமும, பிள்ளைகளைவிசாரித்ததும. (௬) சாத்தான பராபரனுக்குக் காணப்பட்டு யோபைச்சோதிக்கவிடைபெற்றது. (௰௩) அவன ஆஸ்தியையும, பிள்ளைகளையும இழந்தபோது துக்கப்பட்டும, பராபரனைத்துதித்தது.]

ஊத்ஸ்தேசத்திலே யோபபென்றுபேருள்ள ஒருமனுஷனிருந்தான். அந்தமனுஷன் உத்தமனும், செம்மைமார்க்கத்தானும, பாரபரனுக்குப்பயந்து பொல்லாப்பை விலக்குகிறவனுமாயிருந்தான.

உ. அவனுக்கு ஏழு குமாரரும, மூன்று குமாரத்திகளும பிறந்தார்கள்.

௩. அவனுக்கு மிருகஜீவனகள ஏழாயிரம் ஆடுகளும், மூவாயிரம ஒட்டகங்களும, ஐந்நூறு ஏர்மாடும, ஐந்நூறு கழுதைகளும், அவனுடைய பணிவிடைச்சனம மகாத்திரளுமாயிருந்ததினால், அந்த மனுஷன கிழக்கத்திப்புத்திரரெல்லாரைப்பார்க்கிலும பெரியவனாயிருந்தான்.

௪. அவனகுமாரர் அவனவன தன்தன நாளிலே தன்தன வீட்டிலும விருந்துசெயவிக்கப போயத்தங்கள மூன்று சகோதரிகளைத் தங்களோடேகூடப் புசித்துக்குடிக்கிறதற்கழைத்தனுப்புவார்கள.

௫. விருந்துசெய்விக்கிற அவரவருடைய நாள்களின் வரிசை முடிகிறபோதோவென்றால, யோப் அவர்களை அழைத்தனுப்பிப் பரிசுத்தமபண்ணி அதிகாலமே யெழுந்திருந்து அவர்களெல்லாருடைய இலக்கத்தின்படியேயுஞ் சர்வாங்கதகனபலிகளைச்செலுத்துவான. ஏனென்றால், யோப் ஒருவேளை என்குமாரர் பாவஞ்செய்து பராபரனைத்தங்களிருதயத்தில வெறுத்துவிட்டிருப்பார்கள் என்பான. இந்தப்பிரகாரமாக யோப் அப்படிக்கொத்த நாள்களிலெல்லாஞ் செயவான.

௬. ஆனால பராபரனுடைய குமாரர்கள் கர்த்தருக்குமுன்பாக நிற்கவந்த ஒரு நாளிலே சாத்தானும அவர்கள நடுவிலேவந்தது.

௭. கர்த்தர் சாத்தானுடனே, நீ யெங்கேயிருந்துவந்தாயென்றார். சாத்தான கர்த்தருக்குப பிரதியுத்தரமாக, தேசத்தைச்சுற்றி அதிலே நடந்து திரிந்துவந்தேனென்றது.

௮. கர்த்தர் சாத்தானுடனே, நமமுடைய ஊழியக்காரனாகிய யோபினமேலே கவனம் வைத்தாயோ? ஏனென்றால, உத்தமமனுஷனும், செம்மைமார்க்கத்தானும, பராபரனுக்குப்பயந்து பொல்லாப்பைவிலக்குகிறவனுமாகிய அவனைப்போலத் தேசத்திலொருவனுமில்லையென்றார்.

௯. அப்போது சாத்தான கர்த்தருக்குப் பிரதியுத்தரமாகச்சொன்னதாவது; யோப் விருதாவாயப் பராபரனுக்குப்பயந்துநடக்கிறானோ?

௰. தேவரீர் அவனையும, அவனவீட்டையும், அவனுக்குண்டான வெல்லாவற்றையுஞ் சுற்றிலும வேலி அடைக்கவில்லையோ, அவனகைகளின்கிரியையை ஆசீர்வதித்தீர். அவனுடையமிருகஜீவனகள தேசத்திலே ஏராளமாயின.

௰௧. ஆனால, தேவரீர் உமமுடையகையை நீட்டி அவனுக்குண்டானவையெல்லாந்தொடும. அப்போது அவன உமமுடைய முகத்துக்கெதிரே உமமை வெறுக்கானோவென்று பாருமென்றது.

௰௨. அப்போதுகர்த்தர் சாத்தானுடனே, இதோ, அவனுக்குண்டானவையெல்லாம உனகையிலிருப்பதாக. அவனமேல மாத்திரம உன்கையை நீட்டாதேயென்றார். அப்போது சாத்தான கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப புறப்பட்டுப்போயிற்று.

௰௩. பிறகு அவனகுமாரரும, அவனகுமாரத்திகளும தங்கள மூத்தசகோதரனவீட்டிலே புசித்துத்திராட்சப்பழஇரசங்குடிக்கிற ஒருநாளிலே சம்பவித்ததேதெனில்,

௰௪. ஒரு ஆள் யோப் அண்டைக்குவந்து, எருதுகள உழுது கழுதைகள அவைகளின பக்கத்திலே மேயந்துகொண்டிருக்கையில்,

௰௫. சபேயோர் அவைகளமேல விழுந்து அவைகளைப பிடித்துக்கொண்டு வேலையாள்களைப்பட்டயக்கருக்கினால வெட்டிப்போட்டார்கள. நான ஒருவனமாத்திரம அதையுமக்கறிவிக்கும்படிக்குத்தப்பிவந்தேனென்றான.

௰௬. இவன இன்னமபேசுகையில வேறெ

ருவன்வந்து, பராபரனுடைய அக்கினிவானத்திலிருந்து விழுந்து ஆடுகளையும், வேலையாட்களையுஞ் சுட்டெரித்துப்போட்டது. நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

௰௭. இவன் இன்னம்பேசுகையில் வேறொருவன்வந்து, கல்தேயர் மூன்றுடவியாய் வந்து ஒட்டகங்களின்மேல்விழுந்து அவைகளையோட்டிக்கொண்டு வேலையாட்களைப் பட்டயக்கருக்கினால் வெட்டிப்போட்டார்கள். நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

௰௮. இவன் இன்னம்பேசுகையில் வேறொருவன்வந்து உம்முடையகுமாரரும், உம்முடையகுமாரத்திகளுந் தங்கள் மூத்தசகோதரன்வீட்டிலே புசித்துத் திராட்சப்பழ இரசங்குடிக்கையில்,

௰௯. இதோ, பெருங்காற்று வனாந்தரவழியாய்வந்து அந்தவீட்டினுடைய நாலுகோடியிலேயும் அடித்தது. அப்போது அது பிள்ளைகளின்மேல் விழுந்ததினால் அவர்கள் மடிந்துபோனார்கள். நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.

௨௰. அப்போது யோப் எழுந்திருந்து தன் சால்வையைக்கிழித்துக்கொண்டு தன் தலையிலே வாங்கித் தரையிலே விழுந்து பணிந்துகொண்டு,

௨௧. நிருவாணமாய் என் தாயின் கெர்ப்பத்திலிருந்து புறப்பட்டேன். நிருவாணமுமாய் அவ்விடத்துக்குத் திரும்புவேன். கர்த்தர் கொடுத்தார் கர்த்தர் எடுத்தார் கர்த்தருடைய நாமந் தோத்திரிக்கப்படக்கடவதென்றான்.

௨௨. இவைகளெல்லாவற்றிலும் யோப்பாவஞ்செய்யாமலும், பராபரனுக்கெராதத்தொன்றும் நினைக்காமலுமிருந்தான்.

## ௨. அதிகாரம்.

[(௧) சாத்தான்பராபரனுக்குக் காணப்பட்டு-மறுபடியும் யோபைச்சோதிக்க விடைபெற்றது. (௭) அவனைப்பொல்லாதபருக்களால்வாதித்தது. (௯) பராபரனைச்சபிக்க வவன்பெண்சாதியை யோப்கடிந்துகொண்டது. (௰௧) மூன்றுசிநேகிதர்கள் அவனுக்காறுதல்செய்யவந்து மௌனமாயிருந்தது.]

பராபரனுடைய குமாரர்கள் கர்த்தருக்குமுன்பாக நிற்கவந்த பின்னொருநாளிலேயென்றால், அவர்கள் நடுவிலே சாத்தானுங் கர்த்தருக்குமுன்பாக நிற்கவந்தது,

௨. கர்த்தர் சாத்தானுடனே, நீ எங்கேயிருந்து வருகிறாயென்றார். சாத்தான்கர்த்தருக்குப்பிரதியுத்தாரமாகத் தேசத்தைச்சுற்றி அதில் நடந்துதிரிந்துவந்தேனென்றது.

௩. அப்போது கர்த்தர் சாத்தானுடனே, நீ நம்முடைய ஊழியக்காரனாகிய யோபின்மேலே கவனம்வைத்தாயோ? ஏனென்றால், உத்தமனும், செம்மை மார்க்கத்தானும், பராபரனுக்குப்பயந்து பொல்லாப்பைவிலக்குகிறவனுமான மனுஷனாகிய அவனைப்போலே தேசத்திலே ஒருவனுமில்லை. முகாந்தரமில்லாமல் அவனை நிர்மூலம்பண்ண நம்மை ஏவிவிட்டிருந்தாலும் அவன் இன்னந்தன் உத்தமத்திலே உறுதியாய் நிற்கிறானென்றார்.

௪. ஆனாற் சாத்தான் கர்த்தருக்குப்பிரதியுத்தாரமாக, தோலுக்குப்பதிலாகத் தோலையும், தனக்குண்டானவெல்லாவற்றையும், தன் ஜீவனுக்குப்பதிலாக மனுஷன் கொடுத்துவிடுவான்.

௫. ஆனாலிப்போதுமக்கையைநீட்டி அவன் எலும்பையும், அவன் மாம்சத்தையுந்தொடும். அப்பொழுதவன் உம்முகத்துக்கெதிரே உம்மைவெறுக்காரோவென்றுபாருமென்றது.

௬. அப்போது கர்த்தர் சாத்தானுடனே இதோ, அவன் உன் கையிலிருப்பானாக. ஆகிலும் அவன்பிராணனைக்காவென்றார்.

௭. அப்போது சாத்தான் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப்புறப்பட்டு யோபினுள்ளங்கால்துவக்கி அவனுச்சந்தலைமட்டும் மனமுங்கிற பொல்லாதபருக்களால் அவனைவாதித்தது.

௮. அப்போது அவன் ஒரு ஓட்டையெடுத்துக்கொண்டு தன்னைச்சுறண்டிச் சாம்பலினுட்காந்தான்.

௯. அவன்பெண்சாதி அவனைப்பார்த்து இன்னம் உம்முடைய உத்தமத்திலுறுதியாயிருக்கிறீரோ! பராபரனை அரோசித்துச் செத்துப்போமென்றாள்.

௰. அவனோவென்றால், அவளுடனே நீ பயித்தியக்காரிகளில் ஒருத்திபேசுகிறதுபோலப்பேசுகிறாய். பராபரன்கையிலே நன்மையைவாங்கின நாம் தின்மையையும் வாங்கவேண்டாமோவென்றான். இவைகளிலெல்லாம் யோப் தன் உதடுகளினாலே பாவஞ்செய்யாதிருந்தான்.

௰௧. யோபுடைய மூன்று சிநேகிதராகிய தேமானியனான எலிப்பாசும், சூகியனான பில்தாதும், நாயமாத்தியனான சோப்பாரும் யோபின்மேல்வந்த இந்தப்பொல்லாப்பெல்லாங் கேட்டபோது, அவரவர் தங்கள் ஸ்தலங்களிலிருந்து வந்து அவனுக்காகப் பரிதவிக்கவும், அவனுக்காறுதல்சொல்லவும் ஒருவர்க்கொருவர் யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

௰௨. அவர்கள் தூரத்திலிருக்கையில் தங்கள் கண்களையேறெடுக்கிறபோது, அவனையறியாதேபோய்ச் சத்தமிட்டழுது

அவரவர் தங்கள் சால்வையைக் கிழித்து, வானத்தைப் பார்த்துத் தங்கள் தலைகளின் மேல் புழுதியைத் தூற்றிக்கொண்டு,

௰௩. வந்து ஒருவரும் அவனோடொருவார்த்தையும் பேசாமல் இரவுபகல் ஏழுநாள் அவனோடேகூடத் தரையிலே உட்கார்ந்திருந்தார்கள். ஏனெனில், அந்த நோய் மகா கடினமென்று கண்டார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) யோபு தான் பிறந்த நாளைச் சபித்தது. (௰௩) மரணத்துச் சஞ்சலமில்லாமை. (௨௰) தன் உபத்திரவத்தினாலே சீவனைக் குறித்து முறையிட்டது.]

அதற்குப்பிற்பாடு யோப் தன் வாயைத்திறந்து தான் பிறந்தநாளைச் சபித்துக்கொண்டு,

௨. வசனித்துச் சொன்னதாவது;

௩. நான் பிறந்தநாளும், ஒரு ஆண்பிள்ளை உற்பத்தியாயிற்றென்று சொல்லப்பட்ட இராத்திரியும் அழிவதாக.

௪. அந்தநாள் அந்தகாரமாவதாக. பராபரன் உயர இருந்து அதை விசாரியாமலும், பிரகாசம் அதின்மேலே துலங்காமலும்,

௫. இருளும், மரண நிழலும் அதையழுக்குப்படுத்தி, மப்பும் அதைமூடி, மந்தாரநாளின் பயங்கரங்கள் அதை அருவருப்பாக்குவதாக.

௬. அந்த இராத்திரியை அந்தகாரம் பிடிப்பதாக. அது வருஷத்தின் நாள்களிற் சந்தோஷப்படுகிற நாளாயிராமலும், மாதங்களின் கணக்கிலே வராமலும் போவதாக.

௭. இதோ அந்த இராத்திரி தனிமையாகவும், அதிலே கெம்பீரசத்தமில்லாமலும், இருந்தாலல்தாவிள.

௮. நாளைச் சபிக்கிறவர்களும், முதலைகளையும் எழுப்பப்பண்ணத்தக்கவர்களும் அதைச் சபித்திருந்தால்தாவிள.

௯. அஸ்தமித்தவுடனே அதிலுதித்த நட்சத்திரங்கள் இருண்டு அது வரப்பார்த்த வெளிச்சம் உண்டாகாமலும், விடியுங்காலத்தின் வெளுப்பை அது காணாமலுமிருந்தாலதாவிள.

௰. ஏனென்றால், நான் கிடந்த கெர்ப்பத்தின் வாசல்களை அது அடைக்காமலும், என் கண்கள் காண்கிற வருத்தத்தை மறைத்துவிடாமலுமிருந்ததே.

௰௧. நான் கெர்ப்பத்திலதானே சாகாமலும், கெர்ப்பத்திலிருந்து புறப்படுகிறபோதே சீவித்துப்போகாமலும் போனதென்ன?

௰௨. முழங்கால்கள் என்னை ஏந்திக்கொண்டதென்ன? நான் முலையுண்ணக் கொங்கைகளுண்டாயிருந்ததென்ன?

௰௩. ஏனென்றால் இப்போது கிடந்து அமர்ந்திருப்பேனே.

௰௪. பாழ்நிலங்களில் தங்களுக்கு மாளிகைகளைக் கட்டின பூமியிலுள்ள இராசாக்களோடும், ஆலோசனைக்காரரோடும்,

௰௫. அல்லவென்றால் பொன்னுள்ளவர்களாயிருந்து, தங்கள் வீடுகளை வெள்ளியினால் நிரப்பினவர்களுமான பிரபுக்களோடுங்கூட நான் இப்போது இளைப்பாறிக்கொண்டு தூங்குவேனே.

௰௬. அல்லவென்று கெர்ப்பம் விழுந்துபோன அடக்கமான பிண்டமும், வெளிச்சத்தைக் காணாத குழந்தைகளும் இல்லாமற்போகிறதுபோலாவேனே.

௰௭. அங்கே ஆகாதவர்கள் கலங்கடிக்குந்தலைவிட்டோய்ந்திருக்கிறார்கள். அங்கே பெலனற்று விடாய்த்துப்போனவர்கள் இளைப்பாறுகிறார்கள்.

௰௮. கட்டுண்டிருந்தவர்கள் அங்கே ஏகமாக அமைதலாயிருந்து ஒடுக்குகிறவனுடைய சத்தத்தைக் கேளாதிருக்கிறார்கள்.

௰௯. சிறியவனும், பெரியவனும் அங்கே ஏகம். அங்கே அடிமை தன் எசமானை விட்டுத் தனிங்கலாயிருக்கிறான்.

௨௰. மரணத்துக்காசையாய்க் காத்திருந்து புதையல்களைத் தோண்டித் தேடுகிறதைப் பார்க்கிலும் அதைத்தேடியும் அதையடையாமற்போகிறவர்களுக்கும்,

௨௧. பிரேதக்குழியைக் கண்டு பிடித்ததினால் மிகவுங்களிகூர்ந்து,

௨௨. அதற்காகச் சந்தோஷப்படுகிற நிர்ப்பந்தக்காரருக்கு வெளிச்சமும், மனச்சஞ்சலக்காரருக்குச் சீவனும் கொடுக்கப்படுகிறதென்ன!

௨௩. அந்தவழியை அறியாதவனுக்கும், பராபரன் அதை மறைந்திருக்கிறவனுக்கும் கொடுக்கப்படுகிறதென்ன!

௨௪. ஏனென்றால், என்னுடைய சாப்பாட்டுக்கு முன்னே எனக்குப் பெருமூச்சுவரும். என் அலறுதல்கள் தண்ணீரோட்டம்போல் ஊற்றுண்ணுகிறது.

௨௫. ஏனெனில், வருமென்று நான் அருவருத்தது எனக்கு நேரிட்டது. நான் பயந்தது எனக்கு வந்தது.

௨௬. சுகிக்காமலும், அமராமலும், இளைப்பாறாமலும் இருக்கிற எனக்குத் தத்தளிப்பு வந்தது.

## ௪. அதிகாரம்.

[(௧) யோபுக்குத் தேவபத்தியில்லாமையை எலிப்பாஸ் கண்டித்தது. (௭) அவன் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள் நீதிமான்களுக்காகவல்ல, துன்மார்க்கருக்காக உண்டென்று போதித்தது. (௰௨) பராபரனுக்கு முன்பாகச் சிருஷ்டிகளின் மகிமையை அடக்கும்படியவனுக்குண்டான பயங்கரமுள்ள தரிசனை.]

அப்பொது தேமானியனாகிய எலிப்பாஸ் பிரதியுத்தரமாகச்சொன்னதாவது;

உ. நாங்கள் உம்மோடேபேசவகைபார்த்தால் ஆயாசப்படுவீரோ? ஆனாலும் வசனிக்காதபடிக்கு அடக்கிக்கொள்ளத்தக்கவனார்!

ங. இதோ நீர் அநேகருக்குப் புத்திசொல்லி, இளைத்தகைகளைத் திடப்படுத்தினீர்.

ச. விழுகிறவனை உம்முடையவார்த்தைகள் நிற்கப்பண்ணின; தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்தினீர்.

ரு. இப்பொதோவென்றால், இது உம்முடையமேல் வந்தபடியினாலே ஆயாசப்படுகிறீர். இது உம்மைத்தொட்டதினால் நீர் கலங்குகிறீர்.

சு. உம்முடைய தேவபத்தி உம்முடைய உறுதியும், உம்முடையவழிகளின் உத்தமம் உம்முடைய நம்பிக்கையுமாயிருக்கவேண்டியதல்லவோ?

எ. குற்றமில்லாமல் அழிந்தவனார்! செம்மைமார்க்கத்தார் அதம்பண்ணப்பட்டது எப்போதென்கிறதை நினைத்துக்கொள்ளும்.

அ. நான் கண்டிருக்கிறபடி அநியாயத்தை உழுது வருத்தத்தை விதைத்தவர்கள் அதைத்தான் அறுக்கிறார்கள்.

கூ. பராபரனுடையசுவாசத்தினாலே அவர்கள் அழிந்து அவருடைய நாசியின் காற்றினாலே நிர்மூலமாகிறார்கள்.

ய. சிங்கத்தின் கெர்ச்சிப்பும், துஷ்டசிங்கத்தின் சத்தமும், இளஞ்சிங்கங்களின் பற்களும் முறிந்துபோம்.

யக. கிழச்சிங்கம் இரையில்லாததினால் அழிந்து சிங்கக்குட்டிகள் சிதறுண்டுபோகின்றன.

யஉ. இப்பொழுதும் ஒருவார்த்தை இரகசியமாய் என்னண்டைக்கு வந்தது. அதினுடைய சிறிப்பொசை என் செவியில் விழுந்தது.

யங. மனுஷர்மேல் அயர்ந்தநித்திரைவிழுங்குகிறபோது இராத்தரிசனைகளான பலவித் தோற்றல்கள் உண்டாயிருக்கையில்,

யச. திகிலும், நடுக்கமும் என்னைப்பிடித்து என்னெலும்புகளையெல்லாம் திடுக்கிடப்பண்ணின.

யரு. அப்பொது ஒரு ஆவி என் முகத்துக்கு முன்பாகக் கடந்தது. என் உடலின் மயிர் சிலிர்த்துக்கொண்டது.

யசு. அது நின்று ஒரு உருப்போலே என் கண்களுக்கெதிரேயிருந்தது. ஆனால் நான் அதின் உருவத்தை அறிந்ததில்லை. அமைதலுண்டானபின் நான் கேட்டசத்தமாவது;

யஎ. மனுஷன் பராபரனைப் பார்க்கிலும் நீதிமானாயிருப்பானோ? ஒருபுருஷன் தன்னையுண்டாக்கினவரைப் பார்க்கிலும் சுத்தமாயிருப்பானோவென்றது.

யஅ. இதோ அவர் தம்முடைய வேலையாட்களை நம்பாமல் தம்முடைய தூதரிடத்திலே புத்தியில்லாமையைச்சுமத்துவாரே.

யகூ. களிமண்வீடுகளில் வாசம்பண்ணி, மண்ணில் அஸ்திபாரப்பட்டுப் பொட்டாலிக்கப்படுகிறவர்கள் மேலெத்தனையதிகம்!

உய. அவர்கள் காலமே துவக்கிச் சாயங்காலமாகுமட்டும் நொறுங்குண்டு ஒருவருங்கவனியாமல் நித்தியஅழிவடைகிறார்கள்.

உக. அவர்களிலிருக்கிற அவர்களுடைய மகிமைபோய்விடுமல்லவோ! ஞியாயமில்லாமற்சாகிறார்கள்.

## ரு. அதிகாரம்.

[(க) யோசனையில்லாமையின் கேடு (ங) பொல்லாதவர்களின் முடிவு நிர்ப்பாக்கியம். (கூ) துன்பத்திலே பராபரனை நினைக்கிறது நியாயம். (யஎ) பராபரனுடைய தண்டனையின் முடிவு ஆசீர்வாதம்.]

இப்பொதும் உமக்காக மறுவுத்தரஞ்சொல்வாருண்டோவென்று கூப்பிடும்! பரிசுத்தவான்களிலெவனிடத்தைநோக்கிப்பார்ப்பீர்!

உ. ஏனென்றால், நிர்மூடனையே மனமடிவு கொல்லும். புத்தியில்லாதவனை எரிச்சல் மடிவிக்கும்.

ங. நிர்மூடன் ஒருவன் வேர்ப்பிடிக்கிறதை நான் கண்டு உடனே அவன் வாசஸ்தலத்தைச் சபித்தேன்.

ச. அவன் பிள்ளைகள் இரட்சிப்புக்குத் தூரமாகித் தப்புவிப்பாரில்லாமல் வாசலில் நொறுங்கப்பட்டார்கள்.

ரு. அவனுடைய அறுப்பைப் பசித்தவன் தின்று முட்செடிகளுக்குள்ளுமிருந்து அதைப் பறித்தான். பறிகாரன் அவன் ஆஸ்தியை விழுங்குகிறான்.

சு. ஏனெனில், அக்கிரமம் மண்ணிலிருந்து புறப்படாமலும், வருத்தம் பூமியிலிருந்து முளைக்காமலும்

எ. அக்கினியின் பொறிகள் உயரப்பறக்கிறதுபோல மனுஷன் வருத்தமனுபவிக்கிறதற்குப்பிறந்தான்.

அ. ஆனால் நான் பராபரனுடைய நியாயத்தை ஆராய்ந்து என்வசனத்தைப் பராபரனுக்கு நேராகத்திருப்பினாலதாவனே.

கூ. அவர் ஆராய்ந்து முடியாத பெரியகாரியங்களையும், எண்ணிமுடியாத அதிசயங்களையுஞ்செய்கிறார்.

ய. தாழ்ந்தவர்களை உயர்த்திவைக்கவும், இந்தஅடைவாய்த் துக்கிக்கிறவர்கள் இரட்சிக்கப்பட்டுயரவும்,

யக. அவர் பூமியின்மேல் மழையைக்கட்டளையிட்டு, வெளிகளின்மேலே தண்ணீர்களை வரவிடுகிறார்.

யஉ. தந்திரக்காரரின் கைகள் காரியத்தை

முடியாதபடிக்குக் கூடாதபடிக்கு அவர் இவர்களுடைய ஆலோசனைகளை அவாந்தரமாக்குகிறார்.

௰௩. அவர் ஞானிகளை அவர்கள் தந்திரத்திலே பிடிக்கிறார். அதினாலே திரியாவரக்காரரின் ஆலோசனை கவிழ்ந்துபோகிறது.

௰௪. பகற்காலத்திலே அந்தகாரத்துக்கு நேராகி மத்தியான வேளையிலே இராவிலிருக்கிறதுபோலே தடவித்திரிகிறார்கள்.

௰௫. ஆனாலே எளியவனை அவர்கள் வாயிலிருக்கிறபட்டயத்துக்கும், பெலவானின் கைக்கும் விலக்கி இரட்சிக்கிறார்.

௰௬. அப்படியே தரித்திரனுக்கு நம்பிக்கையுண்டு. ஆனாலே அக்கிரமமானது தன் வாயை மூடும்.

௰௭. இதோ, பராபரன் தண்டிக்கிற மனுஷன் பாக்கியவான். ஆகையால் சர்வத்துக்கும் வல்லவருடைய கண்டனையை வெறுக்காதேயும்.

௰௮. ஏனெனில், அவர் நோவுண்டாக்கித் திருமபக் காயங்கட்டுகிறார். அவர் காயப்படுத்துகிறார் அவருடைய கை திரும்ப ஆற்றுகிறது.

௰௯. ஆறு இக்கட்டுகளுக்கு உம்மை நீங்கலாக்குவார். ஏழாவதிலும் பொல்லாப்பு உம்மைத் தொடாதிருக்கும்.

௨௰. பஞ்சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்கும், யுத்தத்திலே பட்டயத்தின் வெட்டுக்களுக்கும் விலக்கி மீட்பார்.

௨௧. நாவின் சவுக்குக்கும் மறைக்கப்படுவீர். பாழ்க்கடிப்பு வரும்போது பயப்படாமலுமிருப்பீர்.

௨௨. பாழ்க்கடிப்பையும், பஞ்சத்தையும் நகைப்பீர், பூமியின் மிருகங்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்.

௨௩. ஏனெனில், வெளியின் கற்களோடும் உமக்கு உடம்படிக்கையிருக்கும், வெளியின் மிருகஜீவன்களும் உம்மோடே சமாதானமாயிருக்கும்.

௨௪. உம்முடைய கூடாரஞ் சமாதானத்தோடிருக்குமென்பதை நீர் கண்டறிந்து உம்முடைய வாசஸ்தலத்தைப் பார்த்துவராதபடிக்குப் பராமரிப்பீர்.

௨௫. உம்முடைய வித்தார் பெருகி உம்முடைய சந்ததியார் பூமியின் பூண்டுகளைப்போலிருப்பார்களென்றதையறிந்துகொள்வீர்.

௨௬. தானியம் ஏற்றகாலத்திலே அம்பாரமாயக் கட்டப்படுவதுபோல முதிர்வயதிலே கல்லறையிலே சேருவீர்.

௨௭. இதோ, நாங்கள் ஆராய்ந்தறிந்தது இதுதான் இப்படியிருக்கிறது. இதை நீர் கேட்டு உமக்கு நன்மையாக அறிந்துகொள்ளுமென்றான்.

## ௬. அதிகாரம்.

[(௧) யோபு தன் முறைப்பாடுகளின் நியாயத்தைக் காட்டினது. (௮) மரணத்தினாலே வரும் ஆறுதலை விரும்பினது. (௰௪) தன் சிநேகிதர் வெறுப்படைந்ததைக் கண்டித்தது.]

யோபு மறுமொழியாகச் சொன்னதாவது;

௨. என்னுடைய சஞ்சலம் நிறுக்கவே நிறுக்கப்பட்டு என்னுடைய நிர்ப்பந்தமெல்லாம் ஒருமித்துத் தராசிலே வைக்கப்பட்டால் தாவலை.

௩. ஏனெனில், அது இப்போது கடற்கரை மணலைப்பார்க்கிலும் பாரமாயிருக்கும். ஆகையால், என்னுடைய வார்த்தைகள் உள்ளடங்கிப்போம்.

௪. ஏனென்றால், சர்வத்துக்கும் வல்லவரின் அம்புகள் எனக்குள் தைத்திருக்கின்றன. அவைகளின் எரிவை என்னுடைய ஆவி குடிக்கிறது. பராபரனுடைய பயங்கரங்கள் எனக்கு முன்பாக அணியணியாய் நிற்கின்றன.

௫. புல்லிருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கத்துமோ! தன்னுடைய தீனியிருக்கிற இடத்திலே எருது கூப்பிடுமோ!

௬. ருசியில்லாதது உப்பில்லாமல் சாப்பிடக்கூடுமோ! முட்டையின் வெள்ளைக்கருவில் ருசியுண்டோ!

௭. உங்கள் வார்த்தைகளை என் ஆத்துமா தொட்டமாட்டேனென்கிறது. அவைகள் குமட்டலெடுக்கிற என்னுடைய போசனத்துக்கொத்தவைகள்.

௮. என்னுடைய மன்றாட்டு எனக்கு வந்து நான் வரப்பார்த்திருக்கிறதைப் பராபரன் எனக்குக் கொடுத்தது,

௯. பராபரன் என்னை நொறுக்கச் சித்தமாயிருந்து தம்முடைய கையை என்னைவிட்டெடுத்து என்னைத் துண்டித்தாலதாவலை.

௰. அது இன்னம் எனக்கு ஆறுதலாயிருக்குமே, அப்பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்திருப்பேன். ஏனெனில், பரிசுத்தமுள்ளவருடைய வார்த்தைகளை நான் மறைத்ததில்லை.

௰௧. நான் காத்துக்கொண்டிருக்க என்னுடைய பெலன் எம்மாத்திரம்! என் ஜீவனை நீடித்திருக்கப்பண்ண என் முடிவேது!

௰௨. என்னுடைய பெலன் கற்களின் பெலனோ! என் மாம்சம் வெண்கலமோ?

௰௩. எனக்குதவியான உத்தரவு என்னக்குள்ளில்லையோ! மெய்ஞ்ஞானம் என்னைவிட்டு வாங்கிப்போயிற்றோ!

௰௪. உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய சிநேகிதனாலே தயைகாண்பிக்கப்படவேணும். ஆனாலே இவன் சர்வத்துக்கும் வல்லவருக்குப் பயப்படாதேபோகிறான்.

௰௫. என்னுடைய சகோதரர் ஆற்றைப்போல மோசம்பண்ணுகிறார்கள். ஆறுகளின் வெள்ளத்தைப்போலக் கடந்துபோகிறார்கள்.

௧௬. அவைகள் குளிர்காலப்பனியினாலும், உறைந்தமழை அவைகளிலுருகினதினாலும் அவ்விசேஷமாய்வந்து நிறைந்து,

௧௭. உஷ்டணமாகிற காலத்திலே வற்றி அனல்பட்டபோது தங்கள் ஸ்தலத்திலிருந்து வழிந்துபோகின்றன.

௧௮. அவைகளுடைய வழிகளின்போக்குகள் திருப்பப்படுகிறது. அவைகள் விருதாவிலே ஏறுமானபின் ஒன்றுமில்லாமற் போம்.

௧௯. தேமாவின் பயணக்காரர் பார்த்துத் தேடிச் சேபாவின் பயணக்கூட்டங்கள் அவைகள்மேல் நம்பிக்கைவைத்து,

௨௰. தாங்கள்பட்டி நம்பினதினாலே வெட்கப்படுகிறார்கள். அவ்விடம் மட்டும்வந்து கலங்கிப்போகிறார்கள்.

௨௧. அதேதன்னவென்றால், இப்போது நீங்கள் ஒன்றுக்குமுதவாமற்போனீர்கள். என் கலங்குதலைக்கண்டு ஐயப்படுகிறீர்கள்.

௨௨. எனக்கேதாகிலுங் கொண்டுவாருங்களென்றும், உங்கள் ஆஸ்தியில் எனக்குயாதொரு அதியாலைக்கொடுங்களென்றும்,

௨௩. அல்லது சத்துருவினகைக்கு என்னைத் தப்புவியுங்கள். வல்லடிக்காரரினகைக்கு என்னை நீங்கலாக்கி மீட்டுக்கொள்ளுங்களென்றும் நான்சொன்னேனோ!

௨௪. என்னை உபதேசியுங்கள். நான்மவுனமாயிருப்பேன், நான் எதிலேபிசகிப்போனேனென்பதையெனக்கு அறியப்படுத்துங்கள்.

௨௫. செம்மையானவார்த்தைகளில் என்ன கடினமிருக்கிறது! உங்களில் ஆராகிலுங் கடிந்துகொள்ளத்தக்ககாரியமென்ன!

௨௬. கடிந்துகொள்ள நீங்கள் வார்த்தைகளை யோசித்துத் திடனற்றவனுடைய வார்த்தைகளைக்காற்றிலேவிட்டுவிடுகிறீர்களோ!

௨௭. இப்படிச்செய்து திக்கற்றவன்மேலே நீங்கள்விழுந்து உங்கள் சிநேகிதனுக்குப் படுகுழியைவெட்டுகிறீர்கள்.

௨௮. இப்போதும்உங்களுக்குச்சித்தமானால் என்னைநோக்குங்கள். அப்போது நான்பொய்சொல்லுகிறேனோவென்று உங்கள்முகத்துக்குமுன்பாகத் தெரியவரும்.

௨௯. நீங்களிப்படித் திரும்பினாலும் அக்கிரமங்காணாதிருக்கும், அப்படித்திரும்பினாலும் என்னுடைய நீதி அதிலேவிளங்கும்.

௩௰. என்னுடையநாவிலே அக்கிரமமுண்டோ! என்னுடையவாய் எனதிர்ப்பந்தங்களையறிவிக்காதிருக்குமோ!

## ௭. அதிகாரம்.

[(௧)யோபு தான் மரணத்தை விரும்பினது நியாயமென்றது. (௰௨) அவன்தன்கலக்கத்தையும், (௰௭) பராபரனபாதுகாத்தலையுங் குறித்துமுறையிட்டது.]

மனுஷனுக்குப் பூமியின்மேல்போராட்டமல்லவோ! அவன்நாள்கள் ஒரு கூலிக்காரன்நாள்களைப் போலிருக்கிறதல்லவோ!

௨. ஒருவேலையாள் நிழலைவாஞ்சித்து ஒரு கூலிக்காரன்தன் கூலியைவரப்பார்த்திருக்கிறதுபோல,

௩. மாயையானமாதங்கள் என்னுடையசுதந்தரமாகிப்பிரயாசமான இராத்திரிகள் எனக்குக்குறிக்கப்பட்டன.

௪. நான்படுத்துக்கொள்ளுகிறபோது நான் எழுந்திருப்பதெப்போது! இராத்திரிகாலஞ்சரியாவதெப்போதென்று சொல்லிக் கிழக்குவெளுக்கிறநேரமட்டும் அரண்டு புரளுகிறதினால் எனக்குப் போதுமென்றுபோகிறது.

௫. என்னுடைய மாம்சம்பூச்சிகளினாலும், அடைப்பற்றின புழுதியினாலும், மூடப்பட்டிருக்கிறது. என்னுடைய தோல்வெடித்து அருவருப்பாயிற்று.

௬. என்னுடைய நாள்கள் நெய்கிறவன் எறிகிறநாடாவிலுந் தீவிரமாய் ஓடி நம்பிக்கையில்லாமல் முடிந்துபோகும்.

௭. என்னுடைய பிராணன்காற்றைப்போலிருக்கிறதென்றும், என்கண்கள் திரும்பநன்மையைக்காணப்போகிறதில்லையென்றும் நினைத்தருளும்.

௮. இப்போது என்னைக்காண்கிறவர்களின் கண்கள் இனியென்னைப்பார்ப்பதில்லை. உம்முடைய கண்கள் என்மேலிருக்கிறது. ஆனால் நான் இல்லாமற்போகிறேன்.

௯. ஒருமேகம் பறந்துபோகிறதுபோலக் குழியிலிறங்குகிறவன் இனிவராதிருப்பான்.

௰. இனித்தன்வீட்டுக்குத்திரும்பான். அவன் ஸ்தலம் இனி அவனையறியாது.

௧௧. ஆகையினாலே நானும் என்வாயை அடக்காமல் என் ஆவியின் இடுக்கத்திலே பேசி என் ஆத்துமத்தின் கசப்பிலே அங்கலாய்ப்பேன்.

௧௨. தேவரீர்என்னைக்காவல்வைக்கிறதற்கு நான் ஒருசமுத்திரமோ! நானொருதிமிங்கலமோ!

௧௩. என்னுடைய கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்குமென்றும், என்னுடைய படுக்கை என்னுடையதவிப்பைக்குறைக்குமென்றும் நான்சொன்னால்,

௧௪. நீர்சொப்பனங்களினால் என்னைக் கலங்கப்பண்ணித் தரிசனங்களால் எனக்குத் திகிலுண்டாக்குகிறீர்.

௧௫. ஆனால் என் ஆத்துமம் நெருக்குண்டு சாகிறதையும், என்னெலும்புகளோடேஉயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும், மரணத்தையுந் தெரிந்துகொள்ளும்.

௧௬. இப்படியிருக்கிறதையரோசிக்கிறேன்.

முடியக்கூடாதபடிக்கு அவர் இவர்கள நினைவுகளை அவத்தமாக்குகிறார்.

௰௩. அவர் ஞானிகளை அவர்கள் தந்திரத்திலே பிடிக்கிறார். அதினால திரியாவரக்காரரின் ஆலோசனை கவிழ்ந்துபோகிறது.

௰௪. பகற்காலத்தில அந்தகாரத்துக்கு நேராகி மத்தியானவேளையிலே இராவிலிருக்கிறதுபோலே தடவித்திரிகிறார்கள.

௰௫. ஆனால எளியவனை அவர்கள் வாயிலிருக்கிற பட்டயத்துக்கும், பெலவானின் கைக்கும் விலக்கி இரட்சிக்கிறார்.

௰௬. அப்படியே தரித்திரனுக்கு நம்பிக்கையுண்டு. ஆனால அக்கிரமமானது தன வாயை மூடும.

௰௭. இதோ, பராபரன தண்டிக்கிற மனுஷன பாக்கியவான. ஆகையால சர்வத்துக்கும வல்லவருடைய கண்டனையை வெறுக்காதேயும.

௰௮. ஏனெனில, அவர் நோவுண்டாக்கித் திரும்பக் காயங்கட்டுகிறார். அவர் காயப்படுத்துகிறார் அவருடைய கை திரும்ப ஆற்றுகிறது.

௰௯. ஆறு இக்கட்டுகளுக்கு உம்மை நீங்கலாக்குவார். ஏழாவதிலும பொல்லாப்பு உம்மைத்தொடாதிருக்கும்.

௨௰. பஞ்சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்கும், யுத்தத்திலே பட்டயத்தின வெட்டுக்களுக்கும விலக்கிமீட்பார்.

௨௧. நாவின சவுக்குக்கும் மறைக்கப்படுவீர். பாழ்க்கடிப்புவரும்போது பயப்படாமலுமிருப்பீர்.

௨௨. பாழ்க்கடிப்பையும, பஞ்சத்தையும நகைப்பீர், பூமியின மிருகங்களுக்குப் பயப்படாமலுமிருப்பீர்.

௨௩. ஏனெனில, வெளியின கற்களோடும உமக்கு உடம்படிக்கையிருக்கும, வெளியின மிருகஜீவன்களும உம்மோடே சமாதானமாயிருக்கும.

௨௪. உம்முடைய கூடாரம சமாதானத்தோடிருக்குமென்பதை நீர் கண்டறிந்து உம்முடைய வாசஸ்தலத்தைப் பழுதுவராதபடிக்குப் பராமரிப்பீர்.

௨௫. உம்முடைய வித்தார் பெருகி உம்முடைய சந்ததியார் பூமியின பூண்டுகளைப்போலிருப்பார்களென்பதையறிந்துகொள்வீர்.

௨௬. தானியம் ஏற்றகாலத்திலே அம்பாரமாயக் கட்டப்படுவதுபோல முதிர்வயதிலே கல்லறையில வந்து சேருவீர்.

௨௭. இதோ, நாங்கள் ஆராய்ந்தறிந்தது இதுதான இப்படியிருக்கிறது. இதை நீர் கேட்டு உமக்கு நன்மையாக அறிந்துகொள்ளுமென்றான.

## ௬. அதிகாரம்.

[(௧) யோபு தன முறைபாடுகளின நியாயத்தைக் காட்டினது. (௮) மரணத்திலே வருமாறுதலைவிரும்பினது. (௰௪) தன சிநேகிதர் வெறுப்படைந்ததைக் கண்டித்தது.]

யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது;

௨. என்னுடைய சஞ்சலம் நிறுக்கவே நிறுக்கப்பட்டு என்னுடைய தீர்ப்பந்தமெல்லாந்தராசிலே வைக்கப்பட்டாலதாவனே.

௩. ஏனெனில, அது இப்போது கடற்கரை மணலைப்பார்க்கிலும் பாரமாயிருக்கும். ஆகையால, என்னுடைய வார்த்தைகள உள்ளடங்கிப்போம.

௪. ஏனென்றால, சர்வத்துக்கும வல்லவரின அம்புகள எனக்குள்ளிறங்கியிருக்கின்றன. அவைகளின எரிவை என்னுடைய ஆவி குடிக்கிறது. பராபரனுடைய பயங்கரங்கள எனக்குமுன்பாக அணியணியாய நிற்கின்றன.

௫. புல்லிருக்கிற இடத்திலே காட்டுக்கழுதை கத்துமோ! தன்னுடைய தீனியிருக்கிற இடத்தில எருது கூப்பிடுமோ!

௬. ருசியில்லாதது உப்பில்லாமற் சாப்பிடக்கூடுமோ! முட்டையின வெள்ளைக்கருவிலே ருசியுண்டோ!

௭. உங்கள வார்த்தைகளை என்னுத்துமா தொடமாட்டேனென்கிறது. அவைகள குமட்டலெடுக்கிற என்னுடைய போசனத்துக்கொத்தவைகள.

௮. என்னுடைய மன்றாட்டு எனக்குவந்து நான வரப்பார்த்திருக்கிறதைப் பராபரன எனக்குக்கொடுத்து,

௯. பராபரன என்னை நொறுக்கச் சித்தமாயிருந்து தம்முடைய கையை என்னைவிட்டெடுத்து என்னைத் துண்டித்தாலதாவனே.

௰. அது இன்னம எனக்காறுதலாயிருக்குமே, அப்பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்திருப்பேன. ஏனெனில, பரிசுத்தமுள்ளவருடைய வார்த்தைகளை நான மறைத்ததில்லை.

௰௧. நான காத்துக்கொண்டிருக்க என்னுடைய பெலன எம்மாத்திரம? என ஜீவனை நீடித்திருக்கப்பண்ண என முடிவேது?

௰௨. என்னுடைய பெலன கற்களின பெலனோ! என மாம்சம வெண்கலமோ?

௰௩. எனக்குதவியான உத்தரவு எனக்குள்ளில்லையோ! மெய்ஞ்ஞானம் என்னைவிட்டு வாங்கிப்போயிற்றோ!

௰௪. உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய சிநேகிதரால தயைகாண்பிக்கப்படவேணும. ஆனால இவன சர்வத்துக்கும்வல்லவருக்குப்பயப்படாதேபோகிறான.

௰௫. என்னுடைய சகோதரர் ஆற்றைப்போலமோசம்பண்ணுகிறார்கள. ஆறுகளின வெள்ளத்தைப்போலக் கடந்துபோகிறார்கள.

௰௬. அவைகள குளிர் காலபபனியினலும, உறைநதமழை அவைகளிலுருகினதினலும அலலிரிசலாயவநதுகசறுதது,

௰௭. உஷ்டணமாகிற காலததிலே வறறி அனலபடடபோது தஙகள ஸதலததிலிருநது வழிநதுபோகினறன.

௰௮. அவைகளுடைய வழிகளினபோககுகள திருமபததிருமபியும், அவைகள விருதாவிலே ஏறறமானபின ஒனறுமிலலாமற போம.

௰௯. தேமாவின பயணககாரர் பார்ததுத தேடிச சேபாவின பயணக கூடடஙகள அவைகளமேல நமபிககைவைதது,

௨௰. தாஙகளிபபடி நமபினதினலே வெட்கபபடுகிருர்கள. அவவிடமடடுமவநது கலஙகிபபோகிருர்கள.

௨௧. அதேதனனவெனறல, இபபோது நீஙகள ஒனறுககுமுதவாமறபோனீர்கள. என கலககததைககணடு ஐயபபடுகிறீர்கள.

௨௨. எனககேதாகிலுங கொணடுவாருஙகளெனறும, உஙகள ஆஸ்தியில எனககுயாதொரு அதியாலைககொடுஙகளெனறும,

௨௩. அலலது சததுருவினகைககு எனனைத தபபுவியுஙகள. வலலடிககாரரினகைககு எனனை நீஙகலாககி மீடடுககொளளுஙகளெனறும நானசொனனேனே!

௨௪. எனனை உபதேசியுஙகள. நானமெளனமாயிருபபேன, நான எதிலேபிசகிபபோனேனெனபதையெனககு அறியபபடுததுஙகள.

௨௫. செமமையானவார்ததைகளில எனன கடினமிருககிறது! உஙகளில ஆராகிலுங கடிநதுகொள்ளத்தக்ககாரியமெனன!

௨௬. கடிநதுகொளள நீஙகள வார்ததைகளையோசிததுத் திடனறறவனுடைய வார்த்தைகளைககாறறிலேவிடடுவிடுகிறீர்களோ!

௨௭. இபபடிசசெயதுதிககறறவனமேலே நீஙகளவிழுநது உஙகள சிநேகிதனுககுப படுகுழியைவெடடுகிறீர்கள.

௨௮. இபபோதும்உஙகளுக்குசசிததமான டாறல எனனைநோககுஙகள. அபபோது நானபொயசொலலுகிறேனேவெனறு உஙகளமுகததுககுமுனபாகத தெரியவரும.

௨௯. நீஙகளிபபடித திருமபினலும அககிரமஙகாணுதிருககும, அபபடித திருமபினலும எனனுடைய நீதி அதிலேவிளஙகும.

௩௰. எனனுடையநாவிலே அககிரமமுணடோ! எனனுடையவாய என நிர்ப்பநதஙகளையறியககாதிருககுமோ!

## ௭. அதிகாரம்.

[(௧)யோபு தான மரணததை விருமபினது நியாயமெனறது. (௰௨) அவனதனகலககததையும, (௰௭) பராபரனபாதுகாததலையுங குறிததுமுறையிடடது.]



மனுஷனுககுப பூமியினமேலபோராடடமுணடலலவோ! அவனநாள்கள் ஒரு கூலிககாரனநாள்களைப போலிருககிறதலலவோ!

௨. ஒருவேலையாள நிழலைவாஞசிககிறது ஒரு கூலிககாரனதன கூலியைவரபபார்த்திருககிறதுபோல,

௩. மாயையானமாதஙகள எனனுடையசுதநதரமாகிபபிரயாசமான இராததிரிகள எனககுக குறிககபபடடன.

௪. நானபடுததுக கொளளுகிறபோது நான எழுநதிருபபதெபபோது! இராததிரிகாலநது சரியாவதெபபோதெனறு சொலலிக கிழககுவெளுககிறநேரமடடும அரணடு புரளுகிறதினல எனககுப போதுமெனறுபோயிறறது.

௫. எனனுடைய மாம்சமபூசசிகளினலும, அடைபபறறின புழுதியினலும, மூடபபடடிருககிறது. எனனுடைய தோலவெடிதது அருவருபபாயிறறு.

௬. எனனுடைய நாளகள நெயகிறவன எறிகிறநாடாவிலுந தீவிரமாய ஓடி நமபிககையிலலாமல முடிநதுபோகும.

௭. எனனுடைய பிராணனகாறறைபபோலிருககிறதெனறும், எனகணகள் திருமபநனமையைககாணபபோகிறதிலலையெனறும நினைததருளும.

௮. இபபோது எனனைககாணகிறவர்களின கணகள இனியெனனைபபார்பபதிலலை. உமமுடைய கணகள எனமேலிருககிறது. ஆனல நான இலலாதேபோகிறேன.

௯. ஒருமேகம பறிநதுபோகிறதுபோலக குழியிலிறஙகுகிறவன இனிவருதிருபபான.

௰. இனித்தனவீடடுககுததிருமபான. அவன ஸதலம இனி அவனையறியாது.

௰௧. ஆகையினலே நானும எனவாயை அடககாமல மன ஆவியின இடுககததிலே பேசி என ஆதுமததின கசபபிலே அஙகலாயபபேன.

௰௨. தேவரீர எனனைச்காவலவைககிறதறகு நான ஒருசமுததிரமோ! நானொருதிமிஙகலமோ!

௰௩. எனனுடைய கடடில எனககாறுதல கொடுககுமெனறும, எனனுடைய படுககை எனனுடையதவிபபைககுறைககுமெனறும் நானசொனனல,

௰௪. நீர்சொபபனஙகளினலே எனனைக கலஙகபபணணித தரிசனஙகளாலே எனககுத் திகிலுணடாககுகிறீர்.

௰௫. ஆனல என ஆதுமம் நெருககுணடு சாகிறதையும், எனனெலும்புகளோடேஉயிரோடிருககிறதைபபார்ககிலும்,மரணத்தையுந தெரிநதுகொளளும.

௰௬. இபபடியிருககிறதையரோசிக்கிறேன்.

இப்படியென்றும் உயிரோடிருக்கமாட்டேன் என்னைப்போகவிடும். ஏனெனில், என் நாள்களின்மாயைதானே.

௰எ. மனுஷனை நீர் ஒருபொருட்டாய் எண்ணுகிறதற்கும், அவன்மேல் உம்முடைய இருதயத்தைவைக்கிறதற்கும்,

௰அ. அவனைக்காலையில் விசாரித்து அடிக்கடி அவனைச்சோதிக்கிறதற்கும் அவன் எம்மாத்திரம்!

௰கூ. நான் என் உமிழ்நீரைவிழுங்குமட்டும் எத்தனைகாலம் என்னைநெகிழாமலும், என்னைவிடாமலுமிருப்பீர்.

உ௰. மனுஷனைக்காப்பவரே! பாவஞ்செய்தேனானால் உமக்கு நான் செய்யவேண்டியதென்ன! நான் எனக்குத்தானே பாரமாயிருக்கும்படிக்கு நீர் என்னை உமக்குஇலக்காகவைத்ததென்ன!

உக. என்மீறுதலை நீர் மன்னிக்காமலும், என் அக்கிரமத்தை நீக்காமலுமிருப்பானேன்! ஏனென்றால், இப்போது மண்ணிலே படுத்துக்கொள்ளுவேன். விடியற்காலத்திலே என்னைத்தேடினீரானால் இல்லாதிருப்பேனென்றான்.

## அ. அதிகாரம்.

[(க) பில்தாத் பராபரன்மனிதருடைய கிரியைகளின்படி அவர்களை நடத்துகிறது நியாயமென்றது. (அ) அவன் மாயக்காரர் அழிவதைப் பூர்வசரித்திரத்தால் காட்டினது. (உ௰) அவன்யோபுக்குப் பராபரன் நீதியைச்செய்வாரென்றது.]

அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது;

உ. நீர் எந்தமட்டும் இப்படிப்பட்டவைகளைப்பேசுவீர்! எந்தமட்டும் உம்முடையவாயினவார்த்தைகள் வலுவான காற்றைப்போலிருக்கும்.

ங. பராபரன்நியாயத்தைப்புரட்டுவாரோ! சர்வத்துக்கும்வல்லவர் நீதியைப் புரட்டுவாரோ!

ச. உம்முடையபிள்ளைகள் அவருக்குவிரோதமாகப் பாவஞ்செய்திருந்தால் இவர் அவர்களை அவர்கள்பாதகத்தின் ஆக்கினைக்குஒப்புக்கொடுத்தார்.

ரு. நீர் பராபரனைக் காலம்பெறத்தேடிச் சர்வத்துக்கும்வல்லவரைநோக்கி விண்ணப்பஞ்செய்து,

சு. சுத்தமும், செம்மையுமாயிருந்தீரோனால், அப்போது அவர் உமக்காகவிழித்து நீதியுள்ள உம்முடைய வாசஸ்தலத்தைச் சாங்கோபாங்கமாக்குவார்.

எ. உம்முடையதுவக்கங்கொஞ்சமாயிருந்தாலும், உமக்கிருக்கிறது பிற்பாடு மிகவும் வர்த்திக்கும்.

அ. இதற்காக நீர் முந்தின தலைமுறையில விசாரித்து அவர்கள்பிதாக்களின்செய்தியை ஆராய்வகைபாரும்.

கூ. ஏனெனில், நாம் நேற்றுண்டாகினோம் ஒன்றுமறியாதிருக்கிறோம். ஏனென்றால் பூமியின்மேல் நம்முடைய நாள்கள் நிழலைப்போலிருக்கிறது.

௰. அவர்கள் உம்மை உபதேசித்து உமக்கு அதைச்சொல்லித் தங்கள் இருதயத்திலிருக்கும் நியாயங்களை வெளிப்படுத்துவார்களல்லவோ!

௰க. சேறில்லாமல் நாணல் ஓங்கிவளருமோ! தண்ணீரில்லாமற் கோரைப்புல் முளைக்குமோ?

௰உ. இல்லாவிட்டால், அது இன்னந் தண்பச்சையோடிருந்தும், அறுக்கப்படாதிருந்தும் மற்றப்புல்லையெல்லாம்பார்க்க வாடிப்போமல்லவோ!

௰ங. பராபரனை மறக்கிற எல்லாருடைய வழிகளுமப்படித்தானிருக்கும். மாயக்காரன் வரப்பார்த்துக்கொள்ளுதல் அழியும்.

௰ச. அவனுடைய வீண் நினைவு அறுந்துபோய் அவனுடைய நம்பிக்கை சிலந்திப் பூச்சிக்கூடுபோலிருக்கும்.

௰ரு. அவன் தன் வீட்டின்மேல் ஊன்றுகிறான். ஆனால் அது உறுதியாயிராது. அதைப்பிடித்துக்கொண்டிருக்கிறான். ஆனால் அது நிற்காது.

௰சு. வெயில் எறிக்காத்தற்குமுன்னே அவன் பச்சைச்செடி, அதின்கொடிகள் அவன் தோட்டத்தின்மேலே படருகிறது.

௰எ. அதின்வேர்கள் கற்குவியலிற் சிக்கிக் கற்பாறைக்குநேரிடும்.

௰அ. அது அதினிடத்திலிராதபடிக்கு நீர் மூலமானபின் அது இருந்த இடம் உன்னை நான் கண்டதில்லையென்று அதைமறுதலிக்கும்.

௰கூ. இதோ, அவன் மார்க்கத்தின்மகிழ்ச்சி இப்படிப்போகிறது. ஆனால் வேறேபேர் மண்ணிலிருந்து முளைப்பார்கள்.

உ௰. இதோ, பராபரன் உத்தமனைவெறுக்கிறதுமில்லை, பொல்லாதவர்களுக்குக் கைலாகுகொடுக்கிறதுமில்லை.

உக. நீர் உத்தமனாயிருக்கும்போது, உம்முடையவாய் நகைப்பினாலும், உம்முடைய உதடுகள் கெம்பீரத்தினாலும் நிரப்பப்படுமட்டும் இப்படிக்காணபீர்.

உஉ. உம்மைப் பகைக்கிறவர்கள் வெட்கத்தால்மூடப்படுவார்கள். ஆகாதவர்களுடையகூடாரம் இல்லாதேபோமென்றான்.

## கூ. அதிகாரம்.

[(க) யோபு பராபரனுடைய நீதியை ஒத்துக்கொண்டு அவரிடத்தில் வழக்காடுவதில்லையென்றது. (உஉ) அவன் மனிதனுடைய

உத்தமத்திற்கு உபத்திரவத்தால் கேடில்லையென்றது.]

**யோப்** மறுவுத்தரவுகொடுத்துச்சொன்னதாவது;

௨. ஆம், இது இப்படியிருக்கிறதென்கிறதையறிவேன். பராபரனுக்கு முன்பாக மனுஷன் நீதிமானாயிருப்பதெப்படி!

௩. அவர் இவனோடே வழக்காடச்சித்தமாயிருந்தால், ஆயிரத்திலொன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவுசொல்லமாட்டான்.

௪. அவர் இருதயத்திலே ஞானமுள்ளவரும் பெலத்திற்பராக்கிரமருமாயிருக்கிறார். அவருக்குவிரோதமாகத் தன்னைக் கடினப்படுத்திச்சுகித்தவனார்?

௫. அவர் பர்வதங்களை அவைகளறியாமற் பேர்த்துத் தமமுடையகோபத்தில் அவைகளைப் புரட்டிப்போடுகிறார்.

௬. அவர் பூமியை அதின்தூண்கள் அதிரத்தக்கதாய் அதின் ஸ்தலத்தைவிட்டு அசைக்கிறார்.

௭. அவர் சூரியனுக்குச்சொல்ல அது உதிக்காதிருக்கும். அவர் நட்சத்திரங்களை முத்திரிக்கிறார்.

௮. அவர் ஒருவர்வானங்களைவிரித்துச்சமுத்திர அலைகளின்மேல் நடக்கிறவர்.

௯. அவர் ஆயிலியத்தையும், மிருகசீரிஷத்தையும், சத்த நட்சத்திரத்தையும், தெற்கத்திமண்டலங்களையுமுண்டாக்கினவர்.

௰. ஆராய்ந்துமுடியாத பெரியகாரியங்களையும், எண்ணிமுடியாத அதிசயங்களையும் அவர்செய்கிறார்.

௰௧. இதோ, நான்காணாமல் அவர் என்னைக் கடந்து நான் அவரையுணராமல் அவர் மாறிப்பட்டுப்போகிறார்.

௰௨. இதோ, அவர் பறித்துக்கொண்டுபோகிறபோது அவரைமறிப்பவனார்! நீர் என்ன செய்கிறீரென்று அவரைக்கேட்பவனார்!

௰௩. பராபரன் தமமுடைய கோபத்தைத் திருப்பார். பெருமையாய்ச் சகாயம்பண்ணுபவர்கள் அவர் கீழ்ப்பணியவேணும்.

௰௪. இப்படியிருக்கையில், நானவருக்கு மறுமொழிகொடுத்து அவரோடேபேசஎன்கக்கான வார்த்தைகளைத் தெரிந்துகொள்ளுகிறதற்கு நான் எம்மாத்திரம்!

௰௫. நான் நீதிவிளங்கப்பட்டாலும் அவருக்குமறுமொழிசொல்லக்கூடாமல் என்னை நியாயந்தீர்க்கிறவரை இரக்கத்துக்குக்கெஞ்சுவேன்.

௰௬. எனக்குமறுஉத்தரவுகொடுப்பாரென்று நான் கூப்பிட்டாலும் அவர் என் சத்தத்துக்குச்செவிகொடுப்பாரென்று நம்பேன்.

௰௭. ஏனென்றால், அவர் பிசவினால் என்னை நொறுக்கி, முகாந்தரமில்லாமல் அநேகங் காயங்களை எனக்கு வருவிக்கிறார்.

௰௮. நான் சுவாசம்வாங்குகிறதற்கு எனக்கிடங்கொடாமற் கசப்புகளால் என்னைத் திருத்தியாக்குகிறார்.

௰௯. சத்துவத்தைப் பார்த்தால் இதோ, அவரே பெலத்தவர், நியாயத்தைப் பார்த்தால் என்னைவரவழைத்து விசாரிப்பவனார்?

௨௰. நான் என்னை நீதிமானாக்கினாலும் என் வாய் என்னைக்குற்றஞ்சுமத்தும். நான் உத்தமனென்றாலும் என்னை மாறுபாடானவனென்று தீர்ப்பார்.

௨௰௧. நான் உத்தமனென்றாலும் என்னைத் தானே நானெண்ணேன். என் சீவனை அரோசிக்கிறேன்.

௨௰௨. இந்த ஒருகாரியம்நமக்கு வழக்காயிருக்கிறது. ஆகையினால் அதைச் சொல்லுகிறேன். அதென்னவெனில், உத்தமனையும், ஆகாதவனையும் அவர் அழிக்கிறார் என்பது தானே.

௨௰௩. சவுக்கானது அகப்பிலே வாதித்துக்கொல்லுகிறபோது, குற்றமில்லாதவர்களின் சோதனைக்கு நகைக்கிறார்.

௨௰௪. தேசம் ஆகாதவன் கையிலொப்புக்கொடுக்கப்படும். அதிலிருக்கிற நியாயாதிபதிகளின்முகத்தைமூடிப்போடுகிறார். அவர் இதைச்செய்கிறதில்லையென்றால் பின்னையார் இதைச்செய்கிறார்.

௨௰௫. என்னுடையநாள்கள் அஞ்சல்காரனைப்பார்க்கிலுந் தீவிரித்து நன்மைகாணாமற் பறந்துபோம்.

௨௰௬. அவைகள் நன்றாய் ஓடுகிற கப்பல்களைப்போலும், இரையின்மேற்பாய்கிற கழுகைப்போலுங் கடந்துபோம்.

௨௰௭. என்னுடைய அங்கலாய்ப்பை நான் மறந்து என்முகத்தின் துக்கத்தைவிட்டுத் திடன்கொள்வேனென்றுசொன்னால்,

௨௰௮. என் நோய்களுக்கெல்லாம் பயமாயிருக்கிறேன். என்னைக் குற்றமில்லாதவனாக நடத்தீரென்றறிவேன்.

௨௰௯. நானபொல்லாதவனாயிருந்தால், நான் இத்தனைவிருதாவாய்ப்போராடுவானேன்!

௩௰. நான் என்னை உறைந்தமழைத் தண்ணீரால்கழுவி என்கைகளைச் சவுக்காரத்தினாலே சுத்தம்பண்ணினாலும்,

௩௰௧. அப்போது தேவரீரென்னை என் வஸ்திரங்கள் எனக்கு அருவருப்பாயிருக்கும்படிக்குச் சேற்றுப்பள்ளத்திலே தோய்ப்பீர்.

௩௰௨. ஏனெனில், நான் அவருக்குப்பிரதியுத்தாரஞ் சொல்லுகிறதற்கும், நாங்கள்கூட நியாயத்திற்குவருகிறதற்கும் அவர் என்னைப்போல மனுஷனல்ல.

௩௰௩. எங்களிருவரின்மேலே தன் கையை வைக்கத்தக்க மத்தியஸ்தன் எங்களுக்குள்ளேயில்லை.

௩௰௪. அவர் தமது மிலாற்றை என்னைவிட்

டகற்றுவாராக. அவருடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௩௫. அப்போது நான் பேசி அவருக்குப் பயப்படாதிருப்பேன். ஏனென்றால், நீங்கள் நினைக்கிறபடி எனக்கு இடமிராது.

## ௰. அதிகாரம்.

[(௧) யோபு முறையிட்டுத் தன் இருதயத்திரவத்தைக் குறித்துப் பராபரனோடே தர்க்கித்தது. (௰௮) அவன் சீவித்ததைக் குறித்து முறையிட்டு மரணத்தின் முன் சிறிது ஆறுதலைக் கேட்கிறது.]

நான் உயிரோடிருக்கிறதை என் ஆத்துமா அரோசிக்கிறது. நான் என் துயரத்துக்கு எனக்குள்ளே இடங்கொடுத்து, என் மனச்சஞ்சலத்திலே பேசுவேன்.

௨. நான் பராபரனுடனே என்னைத் துன்மார்க்கனென்று தீர்க்காதேயும். தேவரீர் எதினிமித்தம் என்னோடே வழக்காடுகிறீரென்று எனக்குத் தெரியப்பண்ணுமென்பேன்.

௩. நீர் என்னை ஒடுக்கி உம்முடைய கைகளின் வேலையை வெறுத்து ஆகாதவர்களின் யோசனையைக் கிருபாகடாட்சமாய்ப் பார்க்கிறது உமக்கு நன்றாயிருக்குமோ!

௪. மாம்சக்கண்கள் உமக்குண்டோ! மனுஷன் பார்க்கிறபிரகாரமாய்ப் பார்க்கிறீரோ!

௫. நீர் என் அக்கிரமத்தை நோண்டித்தேடி என் பாவத்துக்காக ஆராய்ந்து விசாரிக்கிறதற்கு,

௬. உம்முடைய நாள்கள் ஒரு மனுஷனின் நாள்களைப்போலும், உம்முடைய வருஷங்கள் ஒரு புருஷனுடைய நாள்களைப்போலுமிருக்கிறதோ!

௭. நான் துன்மார்க்கனல்லவென்பது உம்முடைய அறிவிலிருக்கிறது. ஆனால் உம்முடைய கைக்கு என்னைத் தப்புவிக்கிறவனில்லை.

௮. உம்முடைய கரங்கள் என்னையும், என்னைச் சூழ்ந்திருக்கிறவையெல்லாவற்றையும் உருவாக்கிப் படைத்திருந்தும் என்னை நிர்மூலமாக்குகிறீர்.

௯. தேவரீர் என்னைக் களிமண்ணைப்போலுண்டாக்கினீரென்பதையும், என்னைத் திரும்பத் தூளாகப்போகப்பண்ணுவீரென்பதையும் நினைவுகூரும்.

௰. தேவரீர் என்னைப் பாலைப்போல வார்த்துத் தயிரைப்போல என்னை உறையப்பண்ணினீரல்லவோ!

௰௧. எனக்குத் தோலையும், சதையையுந் தரித்து என்னை எலும்புகளாலும், நரம்புகளாலும் இசைத்தீர்.

௰௨. எனக்கு உயிரைத் தந்ததுமல்லாமல் உபகாரத்தையும் எனக்குச் செய்துவந்தீர். உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக் காப்பாற்றிற்று.

௰௩. ஆனால் இவைகளை உம்முடைய மனதிலே யடக்கினீரும் இது உமக்குள்ளிருக்கிறதென்கிறதையறிவேன்.

௰௪. நான் பாவஞ்செய்தால் அதை நீர் என்னிடத்திலே விசாரித்து என் அக்கிரமத்தை என்மேற் சுமத்தாமல் விடீர்.

௰௫. நான் துன்மார்க்கனாயிருந்தால் எனக்கு ஐயோ! நான் நீதிமானாயிருந்தாலும் என் தலையை நானெடுக்கக்கூடாது. கனவீனத்தால் திருத்தியானேன், நீர் என் சிறுமையைப் பாரும்.

௰௬. ஏனென்றால், அது பெருகுகிறது. சிங்கத்தைப்போல என்னை வேட்டையாடுகிறீர். பின்னையும் ஆச்சரியமானபடி என்னை நடத்துகிறீர்.

௰௭. நீர் உம்முடைய சாட்சிகளை யெனக்கெதிராக இரட்டிக்கவும், என்மேல் உம்முடைய தாங்கலைப் பெருகப்பண்ணுகிறீர். விசைக்குவிசை அதிகப் போராட்டமெனக்குண்டு.

௰௮. நீர் என்னைக் கெர்ப்பத்திலிருந்து புறப்படப்பண்ணினதென்ன! ஒருகண்ணும் என்னைக் காணாதபடிக்கு நான் அப்போதே சீவித்துப்போனாலதாவலை.

௰௯. அப்போது நான் ஒருக்காலுமில்லாததுபோலிருந்து கெர்ப்பத்திலிருந்து பிரேதக்குழிக்குக் கொண்டுபோகப்பட்டிருப்பேன்.

௨௰. என்னுடைய நாள்கள் கொஞ்சமல்லவோ!

௨௧. காரிருளும், மரண அந்தகாரமுமான இருண்ட தேசத்துக்கும், அந்தகாரமாய்க் கிடக்கிற ஒழுங்கில்லாத மரணநிழலிலுள்ள தேசத்துக்கும் நான் போய்த் திரும்பவராததற்குமுன்னே,

௨௨. நான் சற்று இளைப்பாறும்படிக்குத் தேவரீர் ஓய்ந்து என்னைவிட்டிருமென்றான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) யோபு தன்னை நீதிமானென்றதினால் சோப்பார் கண்டித்தது. (௬) பராபரனுக்கு ஆராயப்படாத ஞானம். (௰௩) குணப்படுதலுக்கு நிச்சயமாய் வருமநன்மை.]

அப்போது நாகமாத்தியனான சோப்பார் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது;

௨. வார்த்தைகளின் ஏராளத்துக்கு எதிர் உத்தரஞ்சொல்லப்படத்தேவையில்லையோ! சளுவாயன் நீதிவிளங்கப்படுவானோ!

௩. உம்முடைய வீம்பு வார்த்தைகளுக்கு மனுஷர் மவுனமாயிருப்பார்களோ! நீர் சக்கந்தம்பண்ணுகையில் ஒருவரும் உம்மை வெட்கப்படுத்தத் தேவையில்லையோ!

௪. நான் சொல்லிக் காண்பிக்கிறது சுத்தமென்றும், நான் தேவரீருடைய பார்வைக

குற்றப்புரவானவனென்றும் நீர் சொல்லுகிறீர்.

௫. ஆனாலும் பராபரன் பேசி, உமக்கெதிராகத் தம்முடைய உதடுகளைத் திறந்து,

௬. உமக்கு ஞானத்தின் இரகசியங்களை யறியப்பண்ணினால் நலமாயிருக்கும். ஏனெனில், உள் நியாயத்தைப்பார்த்தால் அது இரட்டிப்புள்ளதாயிருக்கிறது. ஆகையால் உம்முடைய அக்கிரமத்தினிமித்தம் பராபரன் உம்மை மறந்தாரென்றறியும்.

௭. பராபரனுடைய அந்தரங்க ஞானத்தை நீர்கண்டு சர்வத்துக்கும் வல்லவருடைய குறையற்ற நியாயமட்டும் எட்டி அதைக்கண்டுபிடிப்பீரோ!

௮. அது வானம் அத்தனையாய் உயர்ந்தது. நீர் செய்யத்தக்கதென்ன! அது பாதாளத்திலும் ஆழமானது, நீர் அறியத்தக்கதென்ன!

௯. அதின் அளவு பூமியைப்பார்க்கிலும் நீளமும், சமுத்திரத்தைப்பார்க்கிலும் அகலமுமாயிருக்கிறது.

௰. அவர் கடந்துபோனாலும், அவர் அடைத்துப்போட்டாலும், அவர் கூட்டங்கூட்டினாலும் அவருக்குத் தடைபண்ணுபவனார்!

௰௧. ஏனெனில், அவர் மாயையான மனுஷரையறிவார். அவர் அக்கிரமத்தைக்கண்டும் அதையுணர்ந்துகொள்ளாரோ!

௰௨. மனுஷன் புத்தியில்லாமலிருந்தாலுங் காட்டுக்கழுதைக்குட்டிக்கொப்பாகப் பிறந்திருக்கிறான். பெருநெஞ்சுள்ளவனாயிருக்கிறான்.

௰௩. நீர் உம்முடைய இருதயத்தை ஆயத்தப்படுத்தி உம்முடைய கைகளை அவருக்குநேராக விரித்தால் தாயனை.

௰௪. உம்முடைய கையிலே அக்கிரமமுண்டாயிருந்தால் அதைத் தூரத்துக்ககற்றி அநியாயம் உம்முடைய கூடாரங்களில் வாசமாயிருக்கவொட்டாதிரும்.

௰௫. ஏனென்றால், அப்போது உம்முடைய முகத்தைமாசில்லாமல் ஏறெடுத்துப் பயப்படாமற்பெலப்பட்டிருப்பீர்.

௰௬. அப்போது நீர் வருத்தத்தை மறந்து அதைக் கடந்துபோன தண்ணீரைப்போல நினைப்பீர்.

௰௭. அப்போது உம்முடைய ஆயுசுகாலம் பட்டப்பகலைப்பார்க்கிலும் விளங்கிநிற்கும் இருளடைந்தநீர் விடியுங்காலத்தைப்போலிருப்பீர்.

௰௮. நம்பிக்கையுண்டாகையால் திடனாயிருப்பீர். தோண்டியெடுத்துச் சுகமாய்ப் படுத்துக்கொள்ளுவீர்.

௰௯. பயப்படுத்துவாரில்லாமற் படுத்துக்கொண்டிருப்பீர். அநேகர் உம்முகத்தை நோக்கிவிண்ணப்பம்பண்ணுவார்கள்.

௨௰. ஆனால் ஆகாதவர்களுடைய கண்கள் பூத்துப்போய் அவர்கள் அடைக்கலம் அவர்களைவிட்டழிந்து அவர்கள் நம்பிக்கை சீவித்துப்போகுதலாயிருக்குமென்றான்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) யோபு தன்னை வெறுத்தவர்களுக்குத் தன் ஞானத்தைச் சொன்னது. (௭) பராபரனுடைய சர்வவல்லமையைக் குறித்துச் சம்மதித்தது.]

யோபு பிரதியுத்தரமாகச் சொன்னதாவது;

௨. ஆம். நீங்களே ஞானமுள்ள சனம். உங்களுடனே ஞானம் சாகும்.

௩. எனக்கும் உங்களைப்போல் புத்தியிருக்கிறது. நான் உங்களுக்குத் தாழ்ந்தவனில்லை. இப்படிக்கொத்தவைகளுடைய அறிவு அருகிலில்லாதிருக்கும்!

௪. எனசிநேகிதரால் நான் நகைக்கப்பட்டுப் பராபரனை நோக்கிக் கூப்பிடுகிறேன். அவனுக்கும் உத்தரவருளுவார். உத்தமனாகிய நீதிமான் நகைப்புக்கிடமானவன்.

௫. ஆபத்துப் படுகிறவனுக்குச் சுகமாயிருக்கிறவனுடைய நினைவிலே உண்டாகிற நிசங்கத்தம், காலிடறினவர்களுக்கு அது நேரிட்டிருக்கிறது.

௬. பாழ்க்கடிக்கிறவர்கள் கூடாரங்களுக்குச் சாங்கோபாங்கமும், பராபரனுக்குச் சினமூட்டாகுகிறவர்களுக்கு அவர் தம்முடைய கையிலிருந்து கொடுத்ததினாலே வெகுசுகமுமுண்டு.

௭. இப்போதும் நீ மிருகங்களைத்தானே கேள். அவைகளுன்னைப் போதிக்கும், ஆகாசத்துப் பறவைகளைக் கேள். அவைகள் உனக்கறிவிக்கும்.

௮. அல்லது பூமியை விசாரித்துக் கேள், அது உன்னை உபதேசிக்கும், சமுத்திரத்தின் மச்சங்கள் அதையுனக்கு விவரிக்கும்.

௯. கர்த்தருடைய கரம் இதைச்செய்ததென்று இவைகளெல்லாவற்றினாலும் அறியாதவனார்!

௰. எல்லா உயிர்ப்பிராணிகளின் சீவனும் எல்லாமனுஷமாம்சத்தின் ஆவியும் அவர் கையிலிருக்கிறது.

௰௧. வாய் போசனத்தை ருசிபார்க்கிறது போலச் செவி வார்த்தைகளைச் சோதித்துப் பார்க்கிறதுமில்லையோ!

௰௨. விருத்தாப்பியரிடத்தில் ஞானமும், வயதுசென்றவர்களிடத்தில் உணர்வுமிருக்கிறதே;

௰௩. எத்தனையதிகம்? அவரிடத்தில் ஞானமும், வல்லமையுமிருக்கும். அவருக்குத்தான் ஆலோசனையும், உணர்வுமிருக்கிறது.

௰௪. இதோ, அவரிடித்தால் கட்டப்படுதலில்லை, அவர் மனுஷனை அடைத்தால் திறக்கப்படுதலில்லை.

௰௫. இதோ அவர் தண்ணீர்களையடக்கினால

அவைகள் தவறிப்போம், அவர் அதை வர விட்டால் பூமியைக் கீழ்துமேலதாக்கும்.

௰௬. அவரிடத்திலே பெலனும், மெய்ஞ்ஞானமுமிருக்கின்றன். மோசம் போகிறவனும், மோசம்போக்குகிறவனும் அவர் கையின் கீழிருக்கிறார்கள்.

௰௭. அவர் யோசனைக்காரரைக் கொள்ளையிட்டுக்கொண்டுபோய் நியாய திபதிகளின் புத்தியைப் பயித்தியமாக்குகிறார்.

௰௮. அவர் இராசாக்களுடைய கச்சைக் கட்டவிழ்த்து அவர்கள் இடுப்புகளைக் கச்சைகட்டுகிறார்.

௰௯. அவர் மந்திரிகளைக் கொள்ளையிட்டுக் கொண்டுபோய்ப் பெலத்தோரைப் புரட்டிப்போடுகிறார்.

௨௰. அவர் நிச்சயமுள்ளவர்களுடைய உதட்டை விலக்கி முதிர்வயதுள்ளவர்களின் ஆலோசனையை வாங்கிப்போடுகிறார்.

௨௧. அவர் பிரபுக்களின்மேல் அசங்கத்தைத்தூற்றி வல்லமையுள்ளவர்களின் கச்சையைத் தளர்ந்துபோகப்பண்ணுகிறார்.

௨௨. அந்தகாரத்திலிருக்கிற ஆழங்களை அவர் வெளியரங்கமாக்கி மரணநிழலை வெளிச்சத்திரப்புறப்படப்பண்ணுகிறார்.

௨௩. அவர் சாதிகளைப் பெருகவும், அழியவும் பண்ணுகிறார். அவர் சாதிகளைப் பரவவும், குடிவிலகவும்பண்ணுகிறார்.

௨௪. அவர் தேசச் சனத்தினுடைய தலைவரின் நெஞ்சை வாங்கிப்போட்டு அவர்களை வழியில்லாத அந்தரத்திலே அலையப்பண்ணுகிறார்.

௨௫. அவர்கள் வெளிச்சமற்ற இருளிலே தடவித்திரிகிறார்கள். அவர்களை வெறித்தவர்களைப்போலத் தடுமாறித் திரியப்பண்ணுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) யோபு பாரபட்சத்தைக்குறித்துத் தன் சிநேகிதரைக் கண்டித்தது. (௰௪) பராபரனில் தனக்குள்ள நம்பிக்கையை யறிக்கையிட்டது. (௨௰) தன் பாவத்தையும், பராபரன் தன்னையுபத்திரவப்படுத்திய காரணத்தையுமறியவேண்டிக்கொண்டது.]

இதோ, இவைகளெல்லாவற்றையும் என்னுடையகண் கண்டு என்னுடைய காது கேட்டு உணர்ந்துகொண்டிருக்கின்றன்.

௨. நீங்கள் அறிந்திருக்கிறதை நானும் அறிந்திருக்கிறேன், நான் உங்களுக்குத் தாழ்கிறவனல்ல.

௩. சர்வத்துக்கும் வல்லவரோடே நான் பேசினால் நல்லது, பராபரனோடே என் நியாயத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்புவேன்.

௪. ஏனெனில், நீங்கள் பொய்யைப் பிணைக்கிறவர்களாமே. நீங்களெல்லாரும் காரியமில்லாத வயித்தியர்.

௫. நீங்கள் மவுனமாயிருக்கவேயிருந்தால் நலமாமே. அது உங்களுக்கு ஞானமாயிருக்கும்.

௬. நீங்கள் என் நியாயத்தைக்கேட்டு என் உதடுகள் சொல்லும் விசேஷங்களைக் கவனியுங்கள்.

௭. நீங்கள் பராபரனுக்காக நியாயக்கேடாய்ப் பேசி அவருக்காகக் கபடவசனிக்கவேணுமோ?

௮. அவர் முகத்தைப் பார்ப்பீர்களோ! பராபரனுக்காக வழக்காடுவீர்களோ?

௯. அவர் உங்களை ஆராய்ந்தால் அது உங்களுக்கு நன்மையோ! மனுஷனைச் சக்கந்தம்பண்ணுகிறதுபோல அவரைச் சக்கந்தம்பண்ணுவீர்களோ!

௰. நீங்கள் அந்தரங்கமாய் முகதாட்சிணியம் பண்ணினால் அவர் உங்களைக் கண்டிக்கவே கண்டிப்பார்.

௰௧. அவருடைய மகத்துவம் உங்களைத் திடுக்கிடப்பண்ணாதோ! அவருடைய பயங்கரம் உங்கள்மேல் விழாதோ.

௰௨. நீங்கள் உங்கள் வேறே நினைக்கப்பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்கும், உங்கள் மேட்டிமைகள் சேற்றுக்குவியல்களுக்குஞ்சமானமானது.

௰௩. நான் பேசும்படிக்கு எனக்கு முன்பாக மவுனமாயிருங்கள். என்மேல் வருகிறது வரட்டும்.

௰௪. நான் என் பற்களினால் என் சதையைப் பிடுங்கி என் பிராணனை என் கையிலே யோகியத்துக்குள் வைப்பானேன்!

௰௫. இதோ, அவர் என்னைக் கொன்றுபோட்டாலும் அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன். ஆனால் என் வழிகளை அவருக்கு முன்பாக ரூபிக்கப்பண்ணுவேன்.

௰௬. அவர் என் இரட்சிப்புமாயிருப்பார். ஏனெனில், ஒரு மாயக்காரன் அவருக்கு முன்பாக வரமாட்டான்.

௰௭. நீங்கள் என் வசனத்தையும், நான் சொல்விக்காண்பிக்கிறதையும் உங்கள் செவிகளாற் கேட்கவே கேளுங்கள்.

௰௮. இதோ, என்னுடைய நியாயத்தை அணியணியாய் வைத்தேன். நான் நீதிவிளங்கப்படுவேனென்றறிவேன்.

௰௯. என்னோடே வழக்காடவேணுமென்றிருக்கிறவனார்! இப்போது நான் மவுனமாகிச் சீவித்துப்போவேனே.

௨௰. இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச் செய்யாதிருப்பீராக. அப்போது உமது முகத்துக்கு முன்பாக ஒளித்துக்கொள்ளாதிருப்பேன்.

௨௧. உம்முடைய கையை என்னை விட்டுத் தூரப்படுத்தும். உம்முடைய பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்பதாக.

௨௨. அப்போது நீர் கூப்பிடும், நான் மறு உத்தரவு கொடுப்பேன். அல்லது நான் பேசு

வேன், நீரெனக்கு மறுமொழியை யருளும்.

௨௩. என்மேலிருக்கிற அக்கிரமங்களும், பாவங்களுமெத்தனை! என் மீறுதலையும், என் பாவத்தையும் எனக்கறிவியும்.

௨௪. தேவரீர் உம்முடைய முகத்தை மறைத்து என்னை உமக்குப் பகைஞனாக வெண்ணிக்கொள்ளுவானேன்?

௨௫. காற்றடித்த சருகைத் தொடருவீரோ? காய்ந்துபோன துரும்பைப் பின்றொடருவீரோ!

௨௬. ஏனெனில், தேவரீர் மகா கசப்பான தீர்ப்புகளை என்மேலெழுதி என்சிறுவயதின் அக்கிரமங்களை எனக்குப் பலிக்கப்பண்ணி,

௨௭. என்கால்களைத் தொழுவடித்துப்போட்டு என்வழிகளையெல்லாங் காவற்பண்ணுகிறீர். என்கால் அடிகளில் அடையாளத்தைப் போடுகிறீர்.

௨௮. இப்படிக்கொத்தவன் அழுகிப்போகிற வஸ்துவைப்போலவும், பொட்டரித்த வஸ்திரத்தைப்போலவும் அழிந்துபோகையிலதானே.

## ௰௪. அதிகாரம்.

[(௧) யோபு ஆயுசு குறுகினதும், மரணம் நிச்சயமுமென்று பராபரனுடைய தயவைவேண்டினது. (எ) இறந்தவுயிரைப் பெறக்கூடாதிருந்தும் இறப்பை யெதிர்பார்த்தது. (௰௬) பாவத்திலே கிருஷ்டிகேட்டுக்குள்ளானது.]

ஸ்திரீயினிடத்திற் பிறந்த மனுஷன் நாட்குறுகினவனும், சஞ்சலம் நிறையப்பட்டவனுமாயிருக்கிறான்.

௨. அவன் பூப்போலப் பூத்து அறுப்புண்டு நிலைநிற்காமல் நிழலைப்போல ஓடிப்போகிறான்.

௩. ஆகிலும் இப்படிக்கொத்தவன்மேலே தேவரீர் உம்முடைய கண்களைத் திறந்துவைத்து உம்மோடே நீர்த்துக்கொள்ளும், நியாயத்துக்கு என்னைக்கொண்டுவருகிறீர்.

௪. அசுத்தமானவர்களிலே சுத்தமான ஒருவனையாகிலுங் கண்டெடுக்கத் தக்கவனார்!

௫. அவனுடைய நாள்கள் இம்மாத்திரமென்று குறிக்கப்பட்டிருக்கையால் அவனுடைய மாதங்களின்தொகை உம்மிடத்திலிருக்கிறது. அவன் கடந்துபோகக்கூடாத எல்லைகளை அவனுக்குக் கட்டளையிட்டீர்.

௬. அவன் ஒருகூலிக்காரனைப்போலே தன் நாளின்வேலையாயிற்றென்று இரம்மியப்படுமட்டும் அவன் ஓய்ந்திருக்கும்படிக்கு உமது பார்வையை அவனைவிட்டுவிலக்கும்.

௭. ஒருமரம் வெட்டிப்போடப்பட்டாலும் இன்னம் பயிராகுமென்றும், அதின் துளிர் துளிர்க்காதிருப்பதில்லையென்றும் அதற்கு நம்பிக்கையுண்டு.

௮. அதின்வேர் தரையிலே பழையதாகி அதின் அடிக்கட்டை மண்ணிலே செத்தாலும்,

௯. தண்ணீரின்வாசனையினாலே அது துளிர்த்து ஒருநாற்றைப்போலக் கிளைக்கும்.

௰. மனுஷனோவென்றால் செத்தபின் சாரமில்லை. நரஜீவன் ஜீவித்துப்போனபின் அவனெங்கே!

௰௧. தண்ணீர்கள் ஏரியிலிருந்து வடிந்து ஆறுவற்றிச் சுவறிப்போகிறதுபோலே,

௰௨. மனுஷர் படுத்துக்கிடந்து வானங்கள் இல்லாதேபோகுமளவிலும் எழுந்திருக்கிறதுமில்லை நித்திரைதெளிந்து விழிக்கிறதுமில்லை.

௰௩. தேவரீர் என்னைப் பிரேதக்குழியில் மறைத்து உமதுகோபந்திரும்புமட்டும் என்னையொளித்து என்னைத்திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு ஒருதிட்டத்தைக்குறித்தாலதாவனே.

௰௪. மனுஷன் செத்தபின் பிழைப்பானோ? என்னுடைய போராட்டத்தின் நாளெல்லாம் என்னுடைய சீர்மாறுதல் எப்போது வருமென்று காத்திருக்கிறேன்.

௰௫. என்னைக்கூப்பிடும், அப்போது நான் உமக்கு மறு உத்தரவுசொல்லுவேன். உம்முடைய கைகளின் கிரியையின்மேல் விருப்பம்வைப்பீராக.

௰௬. இப்போதோவென்றால், என் நடைகளையெண்ணுகிறீர். என்பாவத்தின்மேலல்லவோ கவனமாயிருக்கிறீர்.

௰௭. என்னுடைய மீறுதல் ஒருகட்டாகக் கட்டப்பட்டு முத்திரைபோட்டிருக்கிறது. என் அக்கிரமத்தை ஒருமிக்கச்சேர்த்தீர்.

௰௮. ஒருபர்வதமுந்தலாய்விழுந்து கரையும், ஒருகன்மலைதன் இடத்தைவிட்டுப்பேர்ந்துபோம்.

௰௯. தண்ணீர்கள் கற்களைக்குடையும், பூமியின்தூள் அதிலே தானே முளைத்து அதை மூடும், அப்படி மனுஷன்வரப்பார்த்துக்கொண்டதையழிக்கிறீர்.

௨௰. தேவரீர் என்றைக்கும் அவனைப்பெலத்தோடே நெருக்குகிறதினாலே அவன்போகிறான். அவன் முகவுருவைமாறப்பண்ணி அவனை அனுப்பிவிடுகிறீர்.

௨௧. அவன் பிள்ளைகள் கனப்பட்டாலும் அவன் அறியான். அவர்கள் சிறுமைப்பட்டாலும் அவர்களைக்கவனியான்.

௨௨. அவன் மாம்சம் அவனிலிருக்குந் தறுவாயிலோவென்றால், அதற்குநோவிருக்கும். அவன் ஆத்துமம் அவனுக்குள்ளிருக்குமட்டும் துக்கிக்குமென்றான்.

## ௰௫ அதிகாரம்.

[(௧) யோபு தன்னை நீதிமானாக எண்ணச் செய்த அவபத்தியை எலிப்பாஸ் கண்டித்த

யை நிறைவேற்ற வாக்குத்தத்தம்பண்ணின் தும்.]

**உ**மமைத் துதிக்கிறோம் பராபரனே, உம்மைத் துதிக்கிறோம், உம்முடைய நாமம் சமீபமாயிருக்கிறது, உம்முடைய அதிசயங்களைச் சொல்லிவருகிறார்கள்.

௨. நியமிக்கப்பட்டதை நான் அடையும் போது நான் உத்தம நிதானமாய் நியாயந் தீர்ப்பேன்.

௩. பூமியும், அதின் எல்லாக்குடிகளும் இளகிப்போனாற்போலேயாயிற்று, நான் அதின் தூண்களை நிலை நிறுத்துவேன். சேலா.

௪. வீம்புக்காரருடனே வீம்புசொல்லாதேயுங்களென்றும், ஆகாதவர்களுடனே கொம்புகளை ஏற்றிக்காதேயுங்களென்றுஞ்சொன்னேன்.

௫. உங்கள் கொம்புகளை உயரமாயெடுக்காதேயுங்கள், பெருமைக்கழுத்தினால் கடினமாய்ப் பேசாதேயுங்கள். ௬௧, சங். ௰௬.

௬. ஏனெனிற் கிழக்கிலாகிலும், மேற்கிலாகிலும், மலைகளின்வனாந்தரத்திசையிலாகிலுமிருந்து உங்களுக்குச்செயம்வராதென்றேன்.

௭. ஏனென்றால் பராபரனே நியாயாதிபதி, இவனைத்தாழ்த்தி அவனையுயர்த்துகிறார். ௧. சாமுவேல். ௨, ௭. ௮.

௮. ஏனெனில் மிகுதியுங் கலங்கிப்பொங்குகிற மதுபானத்தினாலே நிறைந்தபாத்திரங் கர்த்தருடையகையிலிருக்கிறது, அதிலிருந்து வார்க்கிறார், ஆனால் பூமியிலுள்ள ஆகாதவர்கள் அனைவரும் அதின்வண்டல்களையுறுஞ்சிக்குடிப்பார்கள். ௬௰, சங்கீதம். ௩.

௯. நானோவெனில் என்றைக்கும் இதையறிவித்து யாக்கோபுடைய பராபரனைக்கீர்த்தனம்பண்ணி,

௰. ஆகாதவர்களின் கொம்புகளையெல்லாம் வெட்டுவேன், நீதிமானுடையகொம்புகளோ உயர்த்தப்படும்.

## ௭௬. சங்கீதம்.

[(௧) திருச்சபையில் பராபரனுடைய மகிமைவிளங்குமென்றது, (௰௧) வணக்கத்தோடே அவரைச்சேவிப்பதற்கு எச்சரிப்பு.]

**யூ**தாவின்பராபரன் அறியப்பட்டவர் இஸ்ரவேலில் அவருடையநாமம்பெரியது.

௨. சாலேமில் அவருடைய கூடாரமும், சீயோனில் அவருடைய வாசஸ்தலமுமிருக்கிறது.

௩. அங்கேயிருந்துவில்லின் அம்புகளையும், கேடயத்தையும் பட்டயத்தையும் யுத்தத்தையுமுறிக்கிறார். சேலா.

௪. மகத்துவமானவரே. கொள்ளையிடுகிற மலைகளைப்பார்க்கிலுந் தேவரீர் பிரகாசமுள்ளவர்,

௫. வீரியநெஞ்சுள்ளவர்கள் கொள்ளையாய்ப்போனார்கள், தங்கள் நித்திரையையடைந்து அசைந்தார்கள், வல்லமையுள்ள எல்லாமனிதருடையகைகளும் அவர்களுக்குக் கவைக்குவராதேபோயின.

௬. யாக்கோபின்பராபரனே, உம்முடைய உதம்புதலால் இரதங்களும், குதிரைகளும் உறங்கிவிழுந்தன.

௭. நீர் நீரோ பயங்கரமானவர், உமதுகோபம் பற்றியெரிகிறதுமுதல் ஆர் உமக்கு முன்பாகநிற்பான்.

௮. வானங்களிலிருந்து நியாயத்தீர்ப்பைக் கேட்கப்பண்ணினீர்.

௯. பூமியிலுள்ளஎல்லாச்சிறுமையானவர்களையும் இரட்சிக்கப்பராபரன் நியாயம்விசாரிப்பதற் கெழும்புகையிற் பூமிபயந்தமர்ந்தது. சேலா.

௰. ஏனெனில் மனிதனுடைய உக்கிரம் உம்து மகிமையைவிளங்கப்பண்ணும், இன்னம் அதிக உக்கிரங்களால் இடைகட்டிக்கொள்ளுவீர்.

௰௧. உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்தனைகளைச் சொல்லிச் செலுத்துங்கள். அவரைச்சூழ்ந்திருக்கிறஅனைவரும் பயங்கரமானவருக்குக் காணிக்கைகளைக் கொண்டுவரக்கடவார்கள்.

௰௨. பிரபுக்களின்ஆவியைத்தறிக்கிறார், பூமியின் இராசாக்களுக்கவர்பயங்கரமானவர்.

## ௭௭. சங்கீதம்.

[(௧) சங்கீதக்காரன் அவநம்பிக்கையோடே தனக்கிருந்த அகோரப்போராட்டத்தையும், (௰) பராபரனுடைய கிருபையுள்ள பெரியகிரியைகளைக்குறித்த சிந்தனையினால் தானடைந்த செயத்தையுங்காட்டினது.]

**நா**ன் பராபரனுக்குநேராக என் சத்தத்தையுயர்த்திக்கூப்பிடுகிறேன். என் சத்தத்தைப் பராபரனண்டைக்குயர்த்துகிறேன். அவர் எனக்குச் செவிகொடுக்கிறார்.

௨. என் நெருக்கத்தின் நாளிலே ஆண்டவரைத்தேடினேன். என்கைஇராக்காலத்திலே ஒழிந்திராமல் விரிக்கப்பட்டிருந்தது. என்னுத்துமா ஆறுதலடைந்துகொள்ளாதே போயிற்று. ௫௰, சங்கீதம். ௰௫.

௩. நான் பராபரனைநினைக்கும்போது, அலறினேன். நான்யோசிக்கும்போது, என்ஆவி தொய்ந்துபோயிற்று. சேலா.

௪. என் கண்களின் இமைகளைப்பிடித்திருந்தீர். நான் பேசமாட்டாதபடிக்கு மனமுறிந்தலாயிருந்தேன்.

௫. பூருவநாள்களையும், ஆதிகாலத்துவருஷங்களையுஞ் சிந்தித்தேன். ௱௪௩, சங். ௫.

௬. நான் இராக்காலத்திலென் கின்னரங்களைநினைத்து என்னிருதயத்தோடே சம்பா

ஷித்துக்கொண்டேன். என் ஆவி ஆராய்ந்த தாவது;

எ. ஆண்டவரினி அப்புறந் தயைசெய்யா மல் நித்தியகாலங்களாக வொழித்துவிடு வாரோ?

அ. அவருடைய கிருபை என்றென்றைக்கு மற்று வாக்குத்தத்தமானது தலைமுறை தலை முறைக்குமொழிந்து போயிற்றோ?

கூ. பராபரன் இரக்க மறந்தாரோ? தமமு டைய இரக்கங்களைக் கோபத்தினாலே அடை த்துப்போட்டாரோவென்றேன். சேலா.

ய. ஆனாலு இது பெலஈனப்படுமவகை காய த்தின் யாறுதலஉன்னதமானவருடைய வலது கரத்திலிருக்கிறதென்றுசொல்லி,

யக. கர்த்தருடையசெயல்களை நினைவுகூர்ந் தேன், உமமுடைய பூர்வகாலத்து அதிசயங் களைத்தானே நான் நினைவுகூர்ந்து,

யஉ. உமமுடைய எல்லாக் கிரியைகளையுந் தியானித்து உமமுடையசெயல்களை யோசி த்தேன்.

யங. பராபரனே, உமது வழி பரிசுத்த ஸ்த லத்திலுள்ளது. பராபரனைப்போலப்பெரிய தேவனார்!

யச. அதிசயங்களைச் செய்கிற பராபரன தேவரீரோ, சனசதளங்களுக்குள்ளே உம முடைய வல்லமையைத் தெரியப்பண்ணி னீர்.

யரு. யாக்கோப் யோசேப் என்றவர்களின் புத்திரராகிய உமமுடையசனத்தை உமது புயத்தினாலே மீட்டுக்கொண்டீர். சேலா.

யகூ. சலங்களுமமைக்கண்டன், பராபர னே, சலங்களுமமைக்கண்டுத்தளித்தன,ஆ ழங்களுங்குலுங்கின.

யஎ. மேகங்கள்சலங்களைப் பொழிந்துவி ட்டன, ஆகாயமண்டலங்கள் முழக்கமிட் டன, உமமுடையஅமபுகளுந்தெறிப்புண்டு பறந்தன. யஅ, சங்கீதம். யஉ—யகூ.

யஅ. உமமுடைய குமுறலின்சத்தம வட்ட மிட்டு முழங்கிற்று. மின்னல்கள் பூச்சக்க ரத்தைப்பிரகாசித்தன. பூமி குலுங்கி அதிர் ந்தன.

யகூ. உமமுடையவழி கடலிலும், உமது பாதைகள் வலு தண்ணீர்களிலுமிருந்தன. உமமுடைய காலடிகள் தெரியப்படாதே போயின.

உய. மோசே ஆரோன் என்றவர்களின் கை யால் உமது சனத்தையொரு ஆட்டுமந்தை யைப்போலே வழிநடத்தினீர்.

## எஅ. சங்கீதம.

[(க) பராபரனுடைய நியாயப்பிரமாணத் தைப்படிக்கவும், பிரசங்கிக்கவுமானஏவுதல், (கூ) அவநமபிக்கையுள்ளவர்களுக்கும், கீழ ப்படியாதவர்களுக்கும வந்ததேவகோபத் தின சரித்திரம், (கூஎ) இஸ்ரவேலனாத்தள ளிப் பராபரன் யூதாவையும, சீயோனையும, தாவீதையுந்தெரிந்து கொண்டது.]

ஏன சனமே, என உபதேசத்திறகுக் கேள்விகொடுத்து என்வாயினவசனங் களுக்கு உங்கள் செவிகளைச்சாயுங்கள்.

உ. என்வாயை உவமைகளால திறப்பேன், பூர்வகாலமுதற புதைபொருளானவைகளை வெளிப்படுத்துவேன். சங், சங்கீ. ரு. மத். யங, ஙரு.

ங. நாங்கள்கேட்டதும, அறிந்ததும, எங கள் பிதாக்கள எங்களுக்குச்சொல்லிவந்த துமான விசேஷங்களை,

ச. நாங்கள் அவர்களுடைய பிள்ளைகளுக்கு மறைக்காமற கர்த்தரின் துதிகளையும, அவ ருடைய பெலத்தையும, அவர்செய்த அவ ருடைய அதிசயங்களையும பினசந்ததிக்கு விவரிப்போம.

ரு. ஏனெனில, அவர்யாக்கோபிலே சாட்சி யை ஏற்படுத்தி இஸ்ரவேலிலேவேதத்தைஸ் தாபித்து அதைத் தங்கள்பிள்ளைகளுக்கறிவி க்கநமமுடையபிதாக்களுக்குக்கற்பித்தார்.

கூ. பிறக்கப்போகிற பிள்ளைகளாகிய பின சந்ததி அதை அறிந்துகொண்டு எழுமபித் தங்கள் பிள்ளைகளுக்குஞ்சொல்லவும,

எ. பராபரனமேலேதங்கள்நமபிக்கையை வைத்துப் பராபரனுடைய செயல்களைமற வாமலஅவா கறபனைகளைக்கைக்கொள்ளவும,

அ. முருட்டாட்டமும, கலகமுமுள்ளசந்த தியாகிய தங்கள் பிதாக்களுக்கொப்பாகா திருக்கவுந்தானே. அவர்கள் தங்கள் இருத யத்தைச் செம்மைப்படுத்தாத சந்ததியா யிருந்தார்கள, அவர்களுடைய ஆவி பரா பரனுடனே உணமையாயிருந்ததில்லை.
ரு. மோசே. ஙஉ, ரு. கூ.

கூ. ஆயுதமணிந்த விற்காரரானஎப்பிராயீம் புத்திரர் யுத்தநாளிலே முதுகைக்காட்டினார் கள்.

ய பராபரனுடைய உடம்படிக்கையைக் கைக்கொள்ளாமல அவர்நியாயப்பிரமாணத் திலே நடக்கமாட்டோமென்று,

யக. அவர்செயல்களையும, அவர் தங்களுக் குக்காணபித்த அவருடைய அதிசயங்களையு மறந்தார்கள.

யஉ. அவர்களுடையபிதாக்களின்முனபாக எகிப்துதேசத்துச் சோவானபட்டணவெளி யிலே அதிசயங்களைச்செய்தார்.

யங. கடலைப்பிளந்து அவர்களைக் கடக்கப் பணணிச் சலங்களைக்குவியலாகநிறுத்தி,

யச. அவர்களைப் பகறகாலத்திலே மேகத் தாலும, இராமுழுவதும அக்கினிவெளிச்சத் தாலும் வழிகாட்டியழைத்தார்.

யரு. வனாந்தரத்திற கன்மலைகளைப்பிளந்து அவர்களுக்கு மகா ஆழங்களுக்குச் சரியான தண்ணீர்களால தாகந்தீர்த்து,

௰௬. கன்மலையிலிருந்து நதிகளைப்புறப்படப்பண்ணித் தண்ணீர்களை ஆறுகளாய் இறங்கி ஓடவிட்டார்.

௰௭. ஆனால் அவர்கள் அப்புறம் அவருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்யவும், உன்னதமானவருக்கு வறண்டவெளியிலே கோபமூட்டவுந்தொடர்ந்து,

௰௮. தங்கள் மனதுக்கேற்கும் போசனத்தைக்கேட்கிறதினால் பராபரனைத் தங்களிருதயங்களிற் பரிட்சைபார்த்து, ௨. மோசே. ௰௧, ௪ — ௬.

௰௯. பராபரன் வனாந்தரத்திலே பந்தியை ஆயத்தப்படுத்தமாட்டுவாரோவென்றும்,

௨௰. இதோ, அவர் கன்மலையையடித்ததினால் தண்ணீர்கள் புறப்பட்டு நதிகளாய்ப் புரண்டுவந்தது. அப்பத்தையுங் கொடுக்கமாட்டுவாரோ! தம்முடையசனத்துக்கு மாம்சத்தையும் ஆயத்தப்படுத்துவாரோவென்றும் பராபரனுக்குவிரோதமாய்ப்பேசினார்கள்.

௨௧. ஆகையாற் கர்த்தர்கேட்டு உக்கிரமானார். யாக்கோபுக்குவிரோதமாய் அக்கினி பற்றியெரிந்தது.

௨௨. அவர்கள் பராபரன்மேல் விசுவாசியாமலும், அவர் இரட்சிப்பை நம்பாமலும் போசனத்தினாலே இஸ்ரவேலுக்குவிரோதமாகக் கோபம் எழும்பிற்று.

௨௩. அவர் உயரவிருக்கும் ஆகாயமேகங்களுக்குக்கற்பித்து வானங்களின் கதவுகளைத் திறந்து,

௨௪. அவர்கள்மேல் மன்னாவை ஆகாரமாக வருஷிக்கப்பண்ணி வானதானியத்தை அவர்களுக்குக்கொடுத்தார்.

௨௫. வல்லவர்களின் அப்பத்தை அவனவன் சாப்பிட்டான். அவர்களுக்குப் பரிபூரண ஆகாரத்தையனுப்பினார்.

௨௬. ஆகாயத்திலே கீழ்க்காற்றை வரப்பண்ணித் தம்முடைய வல்லமையினாலே தென்றலையுமெடுத்துவந்து,

௨௭. அவர்கள்மீதில் மாம்சத்தைத் தூளத்தனையுஞ் செட்டையுள்ள பட்சிகளைக் கடற்கரைமணலத்தனையுமாய் வருஷிக்கப்பண்ணி,

௨௮. அவைகளை அவர்கள் நடுப்பாளயத்திலே அவர்கள் கூடாரங்களைச் சுற்றிலும் இறங்கப்பண்ணினார்.

௨௯. அவர்கள் புசித்து மிகவுந் திருத்தியானார்கள். அவர்களுடைய இச்சையை அவர்களுக்கு நிறைவேற்றினார்.

௩௰. அவர்கள் தங்களிச்சையை வெறுக்காதிருந்தார்கள். அவர்களுடைய போசனம் இன்னம் அவர்கள்வாயிலிருக்கையில்,

௩௧. பராபரனுடைய கோபம் அவர்கள்மேல் எழும்பி அவர்களிற் கொழுத்தவர்களுக்குள்ளே அவர் சங்காரஞ்செய்து இஸ்ரவேலில் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை மடியப்பண்ணினார். ௪. மோசே. ௰௧, ௩௩.

௩௨. இப்படியெல்லாமிருந்தும் அவர்கள் இன்னம் அவருடைய அதிசயங்களை நம்பாமற் பாவஞ்செய்தார்கள்.

௩௩. ஆனதுகொண்டு அவர்கள் நாள்களை மாயையிலும், அவர்கள் வருஷங்களைப் பயங்கரத்திலுங் கழியப்பண்ணினார்.

௩௪. தங்களை அவர்கொல்லும்போது அவர்கள் அவருக்காக விசாரித்துத் திரும்பிக்கொண்டு பராபரனைக்காலமே தேடி,

௩௫. பராபரன் தங்கள் கன்மலையென்றும், உன்னதமான பராபரன் தங்கள் மீட்பரென்றும் நினைவுகூர்ந்து,

௩௬. தங்கள்வாயினாலே அவருக்கிச்சகம் பேசித் தங்கள் நாவுகளினாலேபொய்சொன்னார்கள்.

௩௭. ஏனெனில், அவர்கள் இருதயம் அவரோடே நிலைவரமாயிருந்ததில்லை, அவருடைய உடம்படிக்கையில் அவர்கள் உண்மையாயிருக்கவில்லை.

௩௮. அவரோ இரக்கமாயிருந்து அவர்களை அழிக்காதபடிக்கு அவர்கள் அக்கிரமத்தை மூடித் தம்முடைய எல்லா உக்கிரத்தையும் எழுப்பாமல் அநேகந்தரந் தமது கோபத்தை விலக்கி,

௩௯. இவர்கள் மாம்சமும், திரும்பிவராமல் அகலுகிற காற்றுமாயிருக்கிறார்களென்று நினைவுகூர்ந்தார்.

௪௰. எத்தனைவிசை அவருக்கு வனாந்தரத்திலே கோபமூட்டி, அவாந்தரவெளியிலே அவருக்கு நோகநடந்தார்கள்.

௪௧. அடிக்கடி பராபரனைப் பரிட்சைபார்த்து இஸ்ரவேலின் பரிசுத்தரை மட்டுப்படுத்தினார்கள்.

௪௨. அவருடைய கரத்தையும், அவர் எகிப்திலே தம்முடைய அடையாளங்களையும், சோவான்பட்டணவெளியிலே தம்முடைய அற்புதங்களையுஞ்செய்து,

௪௩. தங்களைச் சத்துருவுக்கு விலக்கிமீட்ட நாளையும் இவர்கள் நினையாதேபோனார்கள்.

௪௪. அவர்களுடைய நதிகளையும், அவர்களுடைய ஆறுகளையும் அவர்கள் அவைகளிற் குடிக்கக்கிடையாதபடிக்கு இரத்தமாக மாற்றினார்.

௪௫. அவர்களைத் தின்னும் வண்டுச் சாதிகளையும், அவர்களைக் கெடுக்குந் தவளைகளையும் அவர்களுக்குள் அனுப்பி,

௪௬. அவர்கள் பலனைப் பச்சைப்புழுக்களுக்கும், அவர்கள் பிரயாசத்தை வெட்டுக்கிளிகளுக்குங்கொடுத்தார்.

௪௭. அவர்களுடைய கொடிமுந்திரிகைச் செடிகளைக் கன்மழைகளினாலும், அவர்கள் முசுக்கட்டைமரங்களை ஆலங்கட்டியினாலும் அழித்து,

௪௮. அவர்கள் மிருகஜீவன்களைக் கன்மழ

கதும, அவர்கள ஆபோசேனிடிகளுககுப ஒப்புககொடுததார்.

௪௯. தமது கோபததின உககிரததையும, மூர்ககததையும, சினததையும, நெருககததையும, தீங்குசெய்யவிடப்பட்ட தூதர்களையும அவர்களுககுளளனுப்பினுர்.

௫0. தமமுடைய கோபததுககுவழியைச சரிப்படுததார், அவர்கள ஆததுமாவை அவர்மரணததிறகுவிலககிககாககாமல அவர்கள சீவனை அவர்பெருவாரிககாயசசலுககொப்புக்கொடுதது,

௫௧. காமின கூடாரஙகளாகிய எகிப்திலே தலைசசனகளாயிருநத முதறபேறுயாவையும அழிதது,

௫௨. தமமுடையசனத்தை ஆடுகளைப்போலே புறப்படப்பணணி அவர்களைவனாநதரததிலே மநதையைப்போலே கூட்டிககொணடுவநது,

௫௩. அவர்களைப்பததிரமாயப்பயப்படாதபடிககுநடததினுர். ஆனால அவர்கள்சததுருககளைககடலமூடிப்போட்டது.

௫௪. அவர்களைத தமமுடையபரிசுதத எலலைமட்டுககும, தமமுடைய வலதுகரஞசமபாதிதத இநதப்பருவதமட்டுககும அழைததுவநது,

௫௫. அவர்களமுகதத கககுமுனபாகசசாதிகளைததுரததிவிட்டு இவர்களதேசததைச சீட்டுப்போட்டுப்பங்கிட்டுவித்து இஸரவேலின கோததிரஙகளை இவர்களுடைய கூடாரங்களிறகுடியேறறினுர்.

௫௬. ஆகிலும அவர்களஉனனதமானபராபரனைப பரிட்சைபார்தது அவருககுககோபமூட்டி அவருடையசாட்சிகளைககைக்கொளளாமறபோய,

௫௭. தஙகள பிதாககளைப்போலே வழிவிலகிததுரோகமபணணி மோசமபோககுமவிலலைப்போலததுவணடு. ஓசேயா. எ, ௰௬.

௫௮. அவருககுத் தஙகளமேடைகளாலே கோபததையும, தஙகளசுரூபஙகளாலஎரிசசலையும உணடாககினுர்கள.

௫௯. பராபரன அதைககேட்டு உககிரமாகி இஸரவேலைமிகவுமவெறுதது,

௬0. தாமமனுஷருககுளளே தாஙகல்போட்ட கூடாரமாகிய சீலோவிலுளளவாசஸ்தலததைநெகிழநது, க. சாமு. ச, ச—௰௧.

௬௧. அவர்கள பெலததைச சிறையிருப்பிலும, அவர்கள மகிமையைசசததுருவினகையிலுமஒப்புககொடுதது, க. சாமுவேல. ரு, க. உ.

௬௨. தமமுடைய சனததைப பட்டயததிறகிரையாககிவிட்டுததமது சுதநதரததிறகுவிரோதமாய உககிரமானுர்.

௬௩. அவர்கள இளைஞரை அககினிபட்சித்தது, அவர்கள கனனியாஸதிரிகள வாழககைப்படாதிருநதார்கள.

௬௪. அவர்கள ஆசாரியர்கள பட்டயததால விழுநதார்கள, அவர்கள விதவைகள அழுததிலலை.

௬௫. அப்பொழுது ஆணடவர் நிததிரைதெளிநதவனைப்போலவும, மதுபானததாறகெமபீரிககிற பராககிரமசாலியைப்போலவும, விழிதது,

௬௬. தமமுடைய சததுருககளைப்பினபுறமாக அடிப்படுததிஅவர்களுககு நிததியநிநதையைவரப்பணணினுர். க. சாமு. ரு, ௬.

௬௭. ஆனால அவர் யோசேப்பின கூடாரததைப்புறககணிதது எப்பிராயீமகோததிரததைததெரிநதுகொளளாமல,

௬௮. தாமசிநேகிததசீயோனபருவதமிருககிறயூதாகோத்திரத்தைத்தெரிநதுகொணடு,

௬௯. தமமுடைய பரிசுதத ஸதலததை உயர்நதமேடுகளாகவும, எனறைககும நிறககததாம அஸதிவாரப்படுததின பூமியைப்போலாகவுஙகட்டி,

எ0. தமமுடைய தாசனுகிய தாவீதைததெரிநது அவனை ஆட்டுததொழுவஙகளிலிருநதெடுததுககொணடார். க. சாமுவேல. ௰௬, ௰௧—௰௩.

எ௧. கறவலாடுகளின பிறகாலே நடநத அவனைத தமமுடைய சனமாகிய யாககோபையும, தமமுடைய சுதநதரமாகிய இஸரவேலையும மேயப்பதறகாக அழைததுககொணடுவநதார்.

எ௨. இவன அவர்களைத தனனிருதயததினுடைய உணமையினபடியேமேயதது அவர்களைததன கைகளுடைய விவேகததினலநடததினுன.

## எ௯. சங்கீதம்.

[(௧) சங்கீதககாரன எருசலேமபட்டணமபாழாயப்போனதைககுறிதது முறையிட்டதும, (௮) விடுதலைக்காக வேணடிககொணடதும, நனறியறிநத தோததிரஞ்செலுத்தவாக்குத்தத்தம பணணினதும.]

பராபரனே, புறசசாதியார் உமமுடைய சுதநதிரத்திலவநது உமது பரிசுதத தேவாலயததைத்தீட்டுப்படுததி எருசலேமை மணமேடுகளாககிவிட்டார்கள.

௨. உமமுடைய ஊழியககாரரினபிரேதஙகளை ஆகாயத்துப்பறவைகளுக்கும், உமமுடையபரிசுததவானகளினமாமசததைப்பூமியின மிருகஙகளுககும இரையாகக்கொடுததார்கள.

௩. எருசலேமைசசுறறிலும தணணீரைப்போல அவர்களுடைய இரத்தத்தைச்சிநதிவிட்டார்கள, அடககமபணணுவாருமிலலை.

௪. எஙகள அயலாருககு நிநதையும, எஙகளைசசுறறுப்புறததாருககுப்பரியாசமும், சககதமுமானேும. சச, சஙகீதம. ௰௪. ௮0, சங்கீதம. எ.

௫. எந்தமட்டும் கர்த்தாவே என்றென்றைக்குங் கோபமாயிருப்பீரோ! எந்தமட்டும் உம்முடைய எரிச்சல் அக்கினியைப்போல் எரியும். அ௫. ௪௫. ௫. அ௬, ௪௩. ௪௭.

௬. உம்மையறியாத சாதிகள்மேலும், உம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளாத இராச்சியங்கள்மேலும் உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும். எரேமி. ௰, ௨௫.

௭. ஏனெனில், யாக்கோபைப் பட்சித்து அவன் குடியிருப்பைப் பாழாக்கினார்கள்.

௮. எங்கள் முந்தின அக்கிரமங்களை நினையாதேயும், தீவிரமாய் உம்முடைய இரக்கங்கள் எங்களுக்கு நேரிடுவதாகக்கடவது. ஏனெனில், மெத்தவுங் குறுகிப்போனோம். ஏசாயா. ௬௪, ௯.

௯. எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் உம்முடைய நாமத்தினுடைய மகிமையினிமித்தமாக எங்களுக்கொத்தாசைசெய்து எங்களைத் தப்புவித்து, உம்முடைய நாமத்தினிமித்தமாக எங்கள் பாவங்களை நிவிர்த்தியாக்கும்.

௰. அவர்களுடைய பராபரன் எங்கேயென்று புறச்சாதிகள் சொல்லுவானேன்? உம்முடைய ஊழியக்காரருடைய சிந்துண்ட இரத்தத்தின் பழிவாங்குதல் சாதிகளுக்குள்ளே எங்கள் கண்களுக்குமுன்பாகத் தெரியப்படக்கடவது. ௱௰௫, சங்கீ. ௨. யோவேல். ௨, ௰௭.

௰௧. கட்டுண்டவனுடைய பெருமூச்சு உம்முடைய சமுகத்துக்குமுன்பாக வரட்டும், கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களை நீர் உம்முடைய புயபெலத்தினுடைய பெருக்கத்தின்படியே உயிரோடே காப்பாற்றும்.

௰௨. ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மை நிந்தித்த நிந்தையை அவர்களுக்கு ஏழத்தனையாக அவர்கள் மடியிலே திரும்பப்பண்ணும்.

௰௩. அப்படியே உம்முடைய சனமும், உம்முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நாங்கள் உம்மையென்றென்றைக்கும் புகழுவோம், தலைமுறைதலைமுறையாக உம்முடைய துதியைச் சொல்லிவருவோம்.

## அ௰. சங்கீதம்.

[(௧) சங்கீதக்காரன் திருச்சபையின் சிறுமையையும், (௮) பராபரனுடைய பூர்வ தயவுகள் நியாயத்தீர்ப்புகளாகமாறினதையுங் குறித்துத் தன் செபத்தில் முறையிட்டதும், (௰௪) விடுதலைக்காக வேண்டிக்கொண்டதும்.]

இஸ்ரவேலின் மேய்ப்பரே செவிகொடும், யோசேப்பை ஆட்டுமந்தையைப்போலே நடத்துகிறவரே, கேருபீன்களின்மேல் வாசம்பண்ணுகிறவரே பிரகாசியும். ௨. மோசே. ௰௫, ௨௧. ௨௫, ௨௨.

௨. எப்பிராயீமுக்கும், பென்யமீனுக்கும், மனாசேக்கும் முன்பாக நீர் உம்முடைய வல்லமையையெழுப்பி, எங்களுக்கிரட்சிப்பாக வாரும். ௪. மோ. ௨, ௰௭—௨௪. ௰, ௨௧—௨௪.

௩. பராபரனே, எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து உம்முடைய முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொழுது இரட்சிக்கப்படுவோம். ௬௭, சங்கீதம். ௩.

௪. சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, எந்தமட்டும் உம்முடைய சனத்தினுடைய செபத்துக்கு விரோதமாய்ப் புகைவீர்.

௫. கண்ணீரின் அப்பத்தை அவர்களுக்குப் புசிக்கவும், கண்ணீரை மகாப்பெரிய அளவாக அவர்களுக்குக் குடிக்கவுங் கொடுத்தீர். ௱௨, ௪௩. ௯.

௬. எங்களையெங்கள் அயலாருக்கு வழக்காக வைக்கிறீர், எங்கள் சத்துருக்கள் தங்களுக்குள்ளே பரியாசம்பண்ணுகிறார்கள்.

௭. சேனைகளின் பராபரனே, எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து உம்முடைய முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்.

௮. ஒரு கொடிமுந்திரிகையை எகிப்திலிருந்து கொண்டுவந்தீர், சாதிகளைத் துரத்திவிட்டு அதை நாட்டினீர்.

௯. அதற்குமுன்பாக இடமாக்கி அதை வேர்தரிக்கப்பண்ணினீர், அது தேசத்தைச் சூழ்ந்துகொண்டது.

௰. அதின் நிழலால் பருவதங்கள் மூடப்பட்டன. அதின் கொம்புகள் பராபரனுடைய கேதுருகளைப்போலாயின.

௰௧. தன் கொடிகளைச் சமுத்திரமட்டாகவும், தன் கிளைகளை நதிமட்டாகவும் விட்டது.

௰௨. இப்பொழுதும் வழிநடக்கிற யாவரும் அதையொடிக்க அதின் அடைப்புகளையேன் தகர்த்துவிட்டீர். அ௯, சங்கீதம். ௪௨.

௰௩. காட்டுப்பன்றி அதையுழுதுபோட்டு வெளியின் மிருகங்கள் அதைப்பட்டிமேய்ந்தது.

௰௪. சேனைகளின் பராபரனே, திரும்பிவாரும், நீர் வானங்களிலிருந்து கண்ணோக்கிப் பார்த்து இந்தக் கொடிமுந்திரிகைச்செடியையும்,

௰௫. உம்முடைய வலதுகரம் நாட்டின கிளையையும் உமக்கு நீர் திடப்படுத்தின குமாரனினிமித்தியமாகவிசாரியும். ௨. சாமு. ௭, ௰௨—௰௬.

௰௬. அக்கினியாற் சுட்டப்பட்டும் வெட்டுண்டும் போயிற்று, உம்முடைய முகத்தின் உதம்புதலால் அழிந்துபோகிறார்கள்.

௰௭. உம்முடைய கரம் உம்முடைய வலதுபாரிசத்து புருஷனின்மேலும், உமக்கு நீர் திடப்படுத்தின மனுஷகுமாரன்மேலுமிருப்பதாக.

௰௮. அப்பொழுதும் உம்மைவிட்டு விலகோம். எங்களையுயிர்ப்பியும் அப்பொழுது உம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுவோம்.

௰௯. சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, எங்களைத் திருப்பிக்கொண்டுவாரும், உம

குழந்தனத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்.

## அக. சங்கீதம்.

[(க) பராபரனுக்குத் துதிசெலுத்தத் தூண்டினதும், அக்கடமையைப் பராபரன் தாமுண்டாக்கின உபகாரங்களின் நிமித்தமாகக் கேட்டதும், (அ) அவர் சனங்களுக்குத் தம்முடைய கற்பனைக்குக் கீழ்ப்படியாமையைக் கண்டித்துக் கீழ்ப்படிதலைத் தூண்டிக்காட்டினதும்.]

நம்முடைய பெலனாகிய பராபரனைக் கெம்பீரித்துப் பாடி யாக்கோபின் பராபரனுக்கென்று ஆர்ப்பரியுங்கள்.

உ. கீதத்தை எடுத்து மேளத்தையும், இன்ப இசையான சுரமண்டலத்தையும் தம்புரோடேகூட்டத் தாருங்கள்.

ங. மாதப்பிறப்பிலும், நம்முடைய திட்டமான பண்டிகைநாளிலும் எக்காள மூதுங்கள். ங. மோசே. உங, உச.

ச. ஏனெனில், அவை இஸ்ரவேலுக்குப் பிரமாணமும், யாக்கோபுடைய பராபரனின் நியாயமுமாயிருக்கின்றன.

ரு. நாமறியாத பாஷையைக் கேட்ட எகிப்து தேசத்துக்கு விரோதமாக அவர் எழும்பிப் புறப்பட்டபோது யோசேப்பிலே அதைச் சாட்சியாக ஏற்படுத்தினார்.

சு. அவன் தோளைச் சுமைக்கு விலக்கினேன், அவன் கைகள் கூடைக்கு நீங்கலாயப் போயின.

எ. நெருக்கத்திலே கூப்பிட்டாய் அப்போது உன்னைத் தப்புவித்தோம், குமுறலின் மந்தாரத்திலிருந்து உனக்கு மறுவுத்தரவருளிச் செய்தோம், மெரிபாவின் தண்ணீர்களிடத்தில் உன்னைச் சோதித்திருந்தோம். சேலா.

அ. நம்முடைய சனமே கேள். உனக்குச் சாட்சியிடுவோம், இஸ்ரவேலே நீ நம்முடைய சொற்கேட்டால் தாவிளை.

கூ. உனக்குள் வேறுதேவன் உண்டாயிருக்கவேண்டாம், நீ அன்னிய தேவனை நமஸ்கரிக்கவும் வேண்டாம்.

ய. உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறப்பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் நாமே, உன் வாயை விரிவாய்த் திற, நாம் அதை நிரப்புவோம் என்றோம். உ. மோசே. உய,உ.

யக ஆனாலும் நம்முடைய சனம் நம்முடைய சத்தத்தைக் கேட்டதில்லை. இஸ்ரவேல் நம்மை விரும்பினதில்லை.

யஉ. ஆகையால் அவர்களை அவர்களிருதயத்தின் கடினத்துக்கு விட்டோம், தங்கள் யோசனைகளிலே நடந்தார்கள்.

யங. ஆ, நம்முடைய சனம் நம்முடைய சொற்கேட்டு இஸ்ரவேல் நம்முடைய வழிகளில் நடந்தால் தாவிளை.

யச. நாம் கொஞ்சக்காலத்திலே அவர்கள் சத்துருக்களைத் தாழ்த்தி நம்முடைய கையை அவர்கள் சத்துருக்களுக்கு விரோதமாகத் திருப்புவோமே.

யரு. அப்பொழுது கர்த்தரைப் பகைக்கிறவர்கள் அவர்களுக்கு இச்சகம்பேசி அடங்குவார்கள். அவர்கள் காலம் என்றென்றைக்கும் இருக்கும்.

யசு. கோதுமையின் புஷ்டியால் அவர்களைப் போஷிப்பார், கன்மலையின் தேனிலேயே உன்னைத் திருத்தியாக்குவோம். ஏசா, சங.யச.

## அஉ. சங்கீதம்.

[(க) சங்கீதக்காரன் நியாயாதிபதிகளைச் சகரித்ததும். (ரு) அவர்களின் அக்கிரமத்தைக் கண்டித்ததும், (அ) நியாயந்தீர்க்கப் பராபரனை வேண்டிக்கொண்டதும்.]

பராபரன் தேவசபையிலே நின்றிருக்கிறார், தேவர்களின் நடுவிலே அவர் விசாரிக்கிற நியாயமாவது;

உ. எந்தமட்டும் நீதிகேடாய் நியாயந்தீர்த்து ஆகாதவர்களின் முகமாட்டம்பார்ப்பீர்கள். சேலா.

ங. தரித்திரனுக்கும், திக்கற்றவனுக்கும் நியாயம்பண்ணிச் சிறுமையானவனுக்கும், ஏழைக்கும் நீதிசெய்யுங்கள். ஏசாயா. க.யஎ.

ச. தரித்திரனையும், எளியவனையும் விடுவித்து அவர்களை ஆகாதவர்களின் கைக்குத் தப்புவியுங்கள்.

ரு. அறியாமலும், உணராமலுமிருக்கிறார்கள். அந்தகாரத்திலே நடக்கிறார்கள், தேசத்தின் அஸ்திவாரங்களெல்லாம் அசைகின்றன. உ, சங்கீதம். ய.

சு. நீங்கள் தேவர்களென்றும், நீங்களனைவரும் உன்னதமானவரின் மக்களென்றும் நான் சொன்னேன். உ. யோசே. உக, கூ. உஉ, உஅ. யோவான். ய, ஙச.

எ. ஆகிலும் நீங்கள் மனுஷரைப்போலே செத்து லோகப்பிரபுக்களிலொருவனைப்போலே விழுந்துபோவீர்களென்றார்.

அ. பராபரனே எழுந்திருந்து பூமியை நியாயந்தீரும். ஏனெனில், தேவரீர் எல்லாச் சாதிகளையும் சுதந்தரமாக ஆண்டிருப்பவர். உ, சங்கீதம். அ.

## அங. சங்கீதம்.

[(க) சத்துருக்களின் சர்ப்பனையான யோசனைகளைக் குறித்துப் பராபரனோடே பண்ணின முறைப்பாடும், (கூ) சபையைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கு விரோதமாகப் பண்ணின செபமும்.]

பராபரனே சும்மாயிராதேயும், பராபரனே மவுனமும், அமரிக்கையுமாயிராதேயும். உஅ, சங்கீதம். க.

உ. ஏனென்றால் இதோ உம்முடைய சத்துருக்கள் கொந்தளித்து உம்முடைய பகைஞர்தலையெடுக்கிறார்கள்.

ரு. அவர்கள உமதுசனததுககு விரோதமாகச சர்ப்பனையோசனையாயிருநது உமது மறைவிலிருககிறவர்களுககுவிரோதமாக ஆலோசனைபணணுகிருர்கள.

ச. நாம அவர்களையவர்கள ஒருசாதியாயிராமலும, இஸ்ரவேலினபேர் இனி நினைககபபடாமலுமபோவதறகாக அதமபணணுவோம வாருஙகளெனகிருர்கள.

ரு. அதெதெனில ஏதோமினகூடாரததாரும, இஸமவேலரும, மோவாபும, ஆகாரியருமம,

சு. கேபாலும, அமமோனும, அமலேககும, தீருவினகுடிகளோடே கூடபபெலிஸதரும,

எ. ஏகமானநிருணயமாய ஆலோசனைபணணி உமககுவிரோதமாக ஒபபநதமபணணிருர்கள.

அ. அசூரியரும அவர்களோடே கூடககலநது லோததினபுததிரருககுப புயபலமாருர்கள. சேலா.

கூ. மீதியானியருககுந சீசோனெனனும ஆற்றணடை எநதோரிலேயழிககபபடடு,

நியாயாதிபதி எ, உஉ.

ய. பூமிககு எருவாயபபோன சிசேராவுககும, யாபீனுககுஞ செயதது போலே அவர்களுககுசசெயயும. நியாயாதிபதி ச, யரு. யசு.

யக. அவர்களையும, அவர்கள அதிபதிகளையும ஓரேபுககும, சேபுககும அவர்கள பிரபுககளெலலாருஞ சேபாககுககும, சலமுனாவுககுஞ சரியாககும. நியாயாதிபதி. எ, உரு. அ, யஉ—உக.

யஉ. ஏனெனிற பராபரனுடைய வாசஸதலஙகளை நாம எஙகளுககுச சுதநதிரமாககக கடடிககொளளுவோமெனருர்கள.

யரு. எனபராபரனே அவர்களைச்சுழறகாற்றின புழுதிககும, காறறுககொணடுபோகுந துருமபுககுஞ சரியாககும.

யச. காடடை நெருபபுச சுடுகிறதுபோலேயும மலை வனஙகளை அககினிசசுவாலை யெரிததுவிடுகிறதுபோலேயும,

யரு. நீர் அவர்களையுமது புசலினாலே தொடர்நது உமதுபெருஙகாறறினாலே அவர்களைககலஙகபபணணும.

யசு. கர்ததாவே அவர்கள உமதுநாமததைததேடுமபடிககு அவர்கள முகஙகளைக கனஈனததாலேமூடும.

யஎ. தேவரீர் ஒருவர் உமமுடைய நாமததினபடியேகர்ததருமம, பூமியனைத்தினமேலஉன்னதமானவருமெனகிறதை யவர்கள உணர,

யஅ. அவர்கள எனறைககும வெட்கிககலஙகவும, நாணவும, அழிபவுமகடவார்கள.

## அச. சஙகீதம்.

[(க) நீர்ககதரிசி பரிசுததாலயததிலாராதனையைச்செய்ய விருமபினதும, (உ) அஙகே தரிததிருபபவர்கள பாக்கியவானகளெனறு காடடினதும, (அ) அதறகுமறுபடியுநதனனை ஸதாபிககவேணடிககொணடதும.]

சேனைகளுடையகர்ததாவே உமமுடைய வாசஸதலஙகள எததனை இனபமானவைகள!

உ. என ஆததுமா கர்ததருடைய பிரகாரஙகளினமேல வாஞசையும, தவனமுமாயிருககிறது, எனவிருதயமும, எனமாமசமுஞ சீவனுளள பராபரனைநோககிக கெமபீரசததமிடுகினறன. உசு, சஙகீதம. அ. உஎ, சங்கீ. ச. சஉ, சஙகீ. ரு.

ரு. அடைககலான குருவிககுமுதலாய வீடும, தகைவிலான்குருவிககுத தனகுஞசுகளை வைககுஙகூடுஙகிடைககும, என இராசாவும, என பராபரனுமாகிய சேனைகளுடைய கர்ததாவே, உமமுடையபீடஙகளையே வாஞசிததிருககிறேன.

ச. உமமுடையவீடடிலே வாசமாயிருநது எபபோதும உமமைததுதிககிறவர்கள பாககியவானகள. சேலா.

ரு. உமமிலே பெலனகொளளுகிற மனுஷனும, தஙகளிருதயஙகளில வழிகளைச செவவையாககினவர்களும பாககியவானகள.

சு. அழுகையின பளளததாககை உருவநடநது அவரை நீருற்றுககிககொளளுகிருர்கள, போதகனும ஆசீர்வாதஙகளால மூடபபடுகிறன.

எ. பராபரனுககுமுனபாகச சீயோனிலே வநதுகாணபபடுமடடும்பெலத்திலிருநதுபெலததுபபோகிருர்கள.

அ. சேனைகளின பராபரனாகிய கர்ததாவே என விணணபபததைககேளும. யாககோபினபராபரனே செவிகொடும. சேலா.

கூ. எஙகளகேடயமாகியபராபரனே கணணோககமாயிரும, நீர் அபிஷேகமபணணினவரினமுகததைபபாரும.

ய. ஏனெனில, ஆயிரமநாளைபபார்ககிலும உமமுடையபிரகாரஙகளில ஒரேநாள நலலது, ஆகாமியககூடாரஙகளில வாசமாயிருபபதைப பார்ககிலும என பராபரனுடையவீடடினவாசற்படியிற காபபதையே தெரிநதுகொளளுவேன.

யக. அதெதெனருற பராபரனாகியகர்ததர் சூரியனும, கேடயமுமானவர், கர்ததர் கிருபையையும, மகிமையையுமஅளிபபார். யஙன உணமையாய நடககிறவர்களுககு நனமையைவழஙகாதிரார்.

யஉ. சேனைகளுடையகர்ததாவே, உமமை நமபியிருககிறமனுஷன பாககியவான.

உச, சஙகீதம. கூ.

## அரு. சஙகீதம்.

[(க) சஙகீதககாரன முனனேதான அடைநத இரககததிலென்றும நிலைபெற்று நிறகவேணடிக்கொணடதும, (அ) பராபரனு

டைய நன்மையை நம்பி அதிலுனறிநிற்க வாகக்கூத்த்தம்பண்ணினதும்.]

**கர்த்தாவே, உம்முடைய தேசத்தின்மேற் பிரியமவைத்து யாக்கோபின் சிறையிருப்பைத் திருப்பினீர்.**

௨. உம்முடைய சனத்தின் அக்கிரமத்தை மன்னித்து அவர்கள் பாவத்தையெல்லாம் மூடினீர். சேலா.

௩. உம்முடைய உக்கிரத்தையெல்லாம் வாங்கிக்கொண்டு உம்முடைய கோபத்தின் எரிச்சலைவிட்டுத் திருமபினீர்.

௪. எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் எங்களைத் திருப்பிக்கொண்டுவந்து, எங்கள் மேலுள்ள உமது தாங்கலையாற்றப்பண்ணும்.

௫. என்றென்றைக்கும் எங்கள்மேற் கோபமாயிருப்பீரோ! தலைமுறை தலைமுறையாகவும் உமது கோபத்தை நீடித்திருக்கப்பண்ணுவீரோ! என, சங்கீதம். அ—௰. ௭௯, சங்கீ ௫.

௬. உம்முடைய சனம் உம்மில் மகிழ்ந்திருப்பதற்குத் தேவரீர் எங்களைத் திரும்ப உயிர்ப்பிப்பதில்லையோ!

௭. கர்த்தாவே, உம்முடைய கிருபையை யெங்களுக்குக் காண்பித்து உம்முடைய இரட்சிப்பையெங்களுக்குக் கட்டளையிடும்.

௮. கர்த்தராகிய பராபரன் என்ன விளம்புகிறாரென்று கேட்பேன். ஏனெனில், அவருடைய சனமும், அவருடைய சனமார்க்கரும் மதிகெட்டுக்குத் திரும்பாதபடிக்கவர்களுக்குச் சமாதானந்தருவார்.

௯. ஆம், மகிமை நம்முடைய தேசத்தில்வாசமாயிருக்கும்படிக்கு அவருடைய இரட்சிப்பு அவருக்குப் பயந்தவர்களுக்குச் சமீபமாயிருக்கிறது. ௱௪௫, சங்கீ. ௰௮. ௰௯.

௰. கிருபையும், உண்மையும் ஒன்றுக்கொன்று சந்திக்கும், நீதியும், சமாதானமும் ஒன்றுக்கொன்று முத்திசெய்யும்.

௰௧. உண்மை பூமியிலிருந்து முளைக்கும், நீதி வானங்களிலிருந்து தாழப்பார்க்கும்.

௰௨. கர்த்தர் நன்மையுங் கொடுப்பார், எங்கள் தேசந் தன் பலனையுந் தரும்.

௰௩. நீதி அவருக்கு முன்னே போம், தம் அடிகளை வழியிலே வைப்பார்.

## அ௫. சங்கீதம்.

[(௧) தாவீது வேதத்தின்மேல் வைத்த தன் மனப்பற்றுதலினாலும், (௫) பராபரனுடைய நன்மையினாலும், வல்லமையினாலும் தன் செபத்தையுறுதிப்பண்ணினதும், (௰௧) முந்தின கிருபை நடந்துவரவிரும்பினதும், (௰௪) செருக்குள்ளவர்களைக் குறித்து முறையிட்டு பராபரனுடைய நன்மையின் அடையாளத்தைக் கேட்டதும்.]

**கர்த்தாவே, உம்முடைய செவியைச் சாய்த்து என் விண்ணப்பத்தைக் கே**ளும். ஏனெனில், நான் சிறுமையும், எளிமையுமானவன்.

௨. என் ஆத்துமாவைக் காத்தருளும். ஏனெனில், நான் பரிசுத்தன், என் பராபரனே உம்மை நம்பியிருக்கிற உம்முடைய அடியானைத் தேவரீர் இரட்சியும்.

௩. ஆண்டவரே என்கிருபையாயிரும். ஏனெனில், நாள்தோறும் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்.

௪. உம்முடைய அடியானுடைய ஆத்துமாவை மகிழ்ச்சியாக்கும். ஏனெனில், ஆண்டவரே, உம்மண்டைக்கென் ஆத்துமாவை யேறப்பண்ணுகிறேன்.

௫. ஏனெனில், ஆண்டவரே, தேவரீர் நல்லவரும், மன்னிக்கிறவரும், உம்மை நோக்கிக் கூப்பிடுகிறயாவர்மேலும் கிருபை மிகுந்தவருமாயிருக்கிறீர்.

௬. கர்த்தாவே, என் செபத்துக்குச் செவிகொடுத்து என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கவனியும்.

௭. நான் நெருக்கப்படுகிற நாளிலே உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன். ஏனெனில், எனக்கும் மறுமொழி கொடுக்கிறீர். ௫௰, சங். ௰௫. ௭௭, சங்கீதம். ௩.

௮. ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே உமக்கு நிகருமில்லை. உம்முடைய கிரியைகளுக்குப் பொப்புமில்லை. ௭௧, சங்கீதம். ௰௯.
௨. மோசே. ௰௫, ௰௫.

௯. ஆண்டவரே, நீர் உண்டாக்கின எல்லாச் சாதிகளும் வந்து உமக்கு முன்பாகப் பணிந்து உமது நாமத்துக்கு மகிமை செலுத்துவார்கள்.

௰. ஏனெனில், தேவரீர் பெரியவரும், அதிசயங்களைச் செய்கிறவருந்தானே தேவரீர் ஒருவரே தேவன்.

௰௧. கர்த்தாவே, நான் உமது சத்தியத்திலே நடப்பதற்கு உமது வழியையெனக்குப் போதியும், உமது நாமத்துக்குப் பயந்திருப்பதற்கென்னிருதயத்தை யொருமுகமாக்கும்.

௰௨. என் பராபரனாகிய ஆண்டவரே, உம்மை யென்முழு இருதயத்தோடுந் துதித்து உமது நாமத்தை யென்றென்றைக்கும் மகிமைப்படுத்துவேன்.

௰௩. ஏனெனில், உம்முடைய கிருபை என்மேற் பெருகியது. என் ஆத்துமாவை நரகபாதாளத்திற்குத் தப்புவித்தீர்.

௰௪. பராபரனே, அகந்தைக்காரர் எனக்கு விரோதமாயெழும்பி பலவந்தருடைய கூட்டம் என் பிராணனை வாங்கத் தேடி உம்மைத் தங்களுக்கு முன்பாக நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள். ௫௪, சங்கீதம். ௫.

௰௫. ஆனால் ஆண்டவரே, தேவரீர் மன உருக்கமும், இரக்கமும், நீண்டசாந்தமும், கிருபையிலும், உண்மையிலும் பெருக்கமுமான தேவன். ௨. மோசே. ௩௪, ௬.

௰௬. என்மேல் நோக்கமாகி எனக்கிரங்கும், உமது பெலனை உம்முடைய அடியானுக்குக் கட்டளையிட்டு உம்முடைய அடியாளின் குமாரனை யிரட்சியும். ௱௰௬, சங்கீதம். ௰௬.

௰௭. கர்த்தாவே, நீரெனக்கொத்தாசைசெய்து என்னைத் தேற்றரவுபண்ணுகிறீரென்று பகைஞர்கண்டு வெட்கும்படியாக என்னிடத்தில் எனக்கு நலமாக ஒரு அடையாளஞ்செய்யும்.

## ௮௭. சங்கீதம்.

[(௧) திருச்சபையினியல்பும், மகிமையும். (௪) அதைச் சேர்ந்தவர்களுடைய விர்த்தியும், கனமும், ஆறுதலும்.]

அதின் அஸ்திபாரம் பரிசுத்த பருவதங்களிலிருக்கிறது.

௨. கர்த்தர் யாக்கோபுடைய வாசஸ்தலங்களையெல்லாம்பார்க்கிலும் சீயோனின் வாசஸ்தலங்களைச் சிநேகிக்கிறார்.

௩. பராபரனுடைய பட்டணமே, மகிமையான விசேஷங்கள் உன்னில் வசனிக்கப்படும். சேலா.

௪. நம்மையறிந்தவர்களுக்குள்ளே இராகாபையும், பாபேலையும் நினைக்கப்பண்ணுவேன். இதோ, பெலிஸ்தரிலும், தீரியரிலும், எத்தியோப்பியரிலுங்கூட இன்னான் அங்கே பிறந்தானென்றும்,

௫. இவன் அவன் அதிலே பிறந்தானென்று சீயோனைக்குறித்துச் சொல்லப்படும், உன்னதமானவர்தாமே அதைத் திடப்படுத்துவார்.

௬. கர்த்தர் சனங்களை யெழுதும்போது இன்னார் அதிலே பிறந்தார்களென்று அவர்களை யெண்ணுவார். சேலா.

௭. பாடுவார்கள், துள்ளிக்களிகூருகிறவர்களைப்போலிருப்பார்கள். நம்முடைய ஊற்றுகளெல்லாம் உன்னிலிருக்கும்.

## ௮௮. சங்கீதம்.

[(௧) துக்கத்துக்கடுத்த முறைப்பாட்டடங்கிய செபம்.]

என் இரட்சிப்பின் பராபரனாகிய கர்த்தாவே, பகற்காலத்திலும், இராக்காலத்திலும் உமக்கு முன்பாகக் கூப்பிடுகிறேன்.

௨. என் விண்ணப்பம் உம்முடைய முகத்துக்கு முன்பாக வரட்டும், என் கூப்பிடுதலுக்கு உமது செவியைச் சாயும்.

௩. ஏனெனில், என்னாத்துமா துக்கங்களால் நிறையப்பட்டது, என் சீவன் பாதாளத்துக்குச் சமீபமாய்ச் சேர்ந்தது.

௪. நான் குழியிலிறங்குகிறவர்களோடே யெண்ணப்பட்டுத் திடனற்ற புருஷனைப்போலானேன்.

௫. மரித்தவர்களிலொருவனைப் போலிருக்கிறேன், நீர் அப்புறம் நினையாமல் உமது கையால் அறுப்புண்டுபோனவர்களும், பிரேதக்குழிகளிலே கிடக்கிறவர்களுமாகிய வெட்டுண்டவர்களைப்போலே நிகழ்ப்பட்டிருக்கிறேன்.

௬. என்னைப் பாதாளக்குழியிலும், இருளிலும், ஆழங்களிலும் வைத்தீர்.

௭. உம்முடைய உக்கிரம் என்னைப் பிருந்துகிறது, உம்முடைய வெள்ளங்களெல்லாம் என்னைப் பிடிக்கப்படுத்துகிறீர். சேலா.

௮. எனக்கறிமுகமானவர்களை யெனக்குத் தூரமாய் விலக்கி என்னை யவர்களுக்கருவருப்பாக்கினீர், நான் புறப்படக்கூடாதபடி அடைபட்டிருக்கிறேன். ௩௧, சங்கீ. ௰௨. ௩௮, சங்கீ. ௰௨. யோபு. ௰௯, ௰௩-௰௯.

௯. நோயினால் என் கண் தொய்ந்துபோயிற்று. கர்த்தாவே, அனுதினமும் நானும்மை நோக்கிக் கூப்பிட்டு உமக்குநேராக என் கைகளை விரிக்கிறேன்.

௰. மரித்தவர்களில் அதிசயங்களைச் செய்வீரோ? செத்த இராட்சதர் எழுந்து உம்மைத் துதிப்பார்களோ? சேலா.

௰௧. பிரேதக்குழியில் உமது கிருபையும், அழிவில் உமது உண்மையும் விவரிக்கப்படுமோ? ௬, சங்கீதம். ௬.

௰௨. இருளில் உமது அதிசயங்களும், மறதியின் பூமியில் உமது நீதியும் அறியப்படுமோ?

௰௩. கர்த்தாவே, நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன். காலமே யென் விண்ணப்பம் உமக்கு நேரிடும்.

௰௪. கர்த்தாவே, ஏன் என்னாத்துமாவை யொளித்துவிட்டு உம்முடைய முகத்தை யெனக்கு மறைக்கிறீர். ௰௩, சங்கீதம். ௨.

௰௫. சிறுவயது முதல் நான் சிறுமையானவனும், மாண்டுபோகிறவனுமாயிருக்கிறேன். உம்மாலவருந் திகில்களைச் சுமந்து அஞ்சிக்கையாயிருக்கிறேன்.

௰௬. உம்முடைய எரிச்சல்கள் என்மேல் கடக்கின்றன. உம்முடைய பயங்கரங்கள் என்னைச் சங்கரிக்கின்றன.

௰௭. அவைகளென்னை நாடோறுந் தண்ணீர்களைப்போலச் சூழ்ந்து ஏகமாய் என்னை வளைந்துகொள்ளுகின்றன.

௰௮. சிநேகிதனையும், தோழனையும் எனக்குத் தூரமாக விலக்கினீர். எனக்கறிமுகமானவர்கள் அந்தரங்கமானார்கள்.

## ௮௯. சங்கீதம்.

[(௧) சங்கீதக்காரன் பராபரனுடைய உடன்படிக்கைக்காகவும், (௫) அவருடைய அதிசயமுள்ள வல்லமைக்காகவும், (௰௫) அவருடைய சபையின் பராமரிப்புக்காகவும், (௰௯) தாவீதின் இராச்சியத்தின்மேல் அவருக்கிருக்கின்ற தயைக்காகவும், அவரைத் துதிக்கிறதும், (௩௮) விரோதமுள்ள சங்கதிகளைக்குறித்து முறையிட்டு, (௪௬) பராப

றேறி வார்த்தினதும, அவனைவேண்டிக்கொண்டதும, துதித்ததும.]

**க**ர்த்தரின்கிருபைகளை யென்றென்றைக்கும்பாடுவேன. உமமுடைய உணமையைத் தலைமுறைதலைமுறையாக என வாயி னால் அறிவிப்பேன. ஏசாயா. ருரு, ரு.

௨ ஏனெனில, என்றென்றைக்கும் உனவித்தை நிலைப்படுத்தித்தலைமுறைதலைமுறையாக உன இராசாசனத்தைக் கட்டுவோமென்று, உ. சாமுவேல. எ, யஉ—யசு.

௩. நாம நம்மால தெரிந்துகொள்ளப்பட்டவனுக்குடமபடிக்கைபண்ணி நமமுடைய தாசனாகிய தாவீதுக்கு ஆணையிட்டோமென றீர். சேலா.

௪. இந்தக்கிருபை என்றென்றைக்குந் திடமாகக்கப்பட்டிருக்கும. வானங்களிலேதானும உமது உணமையை உறுதியாக்கிக்கொண்டிருக்கிறீரென்பேன.

௫. இதினிமித்தங் கர்த்தாவே, வானங்கள உமமுடைய அதிசயத்தைத் துதிக்கும. பரிசுத்தவானகளின்சபையில உமமுடையஉணமையும விளங்கும.

௬. ஏனெனில, ஆகாயமண்டலத்திற் கர்த்தருக்கு நிகரானவரார்! பெலவானகளுடைய குமாரர்களிற் கர்த்தருக்கொப்பானவரார்! அசு, சங்கீதம. அ. உ. மோசே. யரு, யக.

௭. பராபரன பரிசுத்தருடைய பெரிய ஆலோசனைச் சங்கத்திலே பயங்கரமானவரும, தமமைச் சுற்றிலுமிருக்கிற அனைவர்மேலும பயப்படத்தக்கவருந்தானே.

௮. சேனைகளின பராபரனாகியகர்த்தாவே, கர்த்தராயிருக்கிற உமமைப்போலவல்லமையுள்ளவரார்! உமமுடைய உணமை உமமைச் சுற்றியிருக்கிறது.

௯. தேவரீர் சமுத்திரத்தின பெருமையின மேலஆளுகையாயிருக்கிறவர். அதின அலைகளெழுமபினால தேவரீர் அவைகளை யடக்குகிறீர்.

௰. தேவரீர் இராகாபைவெட்டுணடவனைப்போலேநசுக்கி உமது வல்லமையானபுயத்தினால உமமுடைய சத்துருக்களைச் சிதறடித்தீர். ஏசா. ருக, எ. உ. மோசே. யச. உஅ.

யக. வானங்கள உமமுடையது. பூமியும உமமுடையது. பூச்சக்கரமும, அதின நிறைவுந்தானே. தேவரீர் அவைகளை அஸதிபாரப்படுத்தினீர்.

யஉ. தேவரீர் வடக்கையும, தெற்கையுஞ் சிருஷ்டித்தீர். தாபோரும, எர்மோனும உமமுடையநாமம் விளங்கக்கெமபீரிக்கும.

யஙு. உமக்கு வலலமையுள்ள புயமிருக்கிறது. உமமுடையகை பலத்ததும, உமமுடைய வலதுகரம உயர்நததுமானது.

யச. நீதியும, நியாயமும உமமுடைய ஆசனத்தின அஸதிபாரமாயிருக்கின்றன. கிருபையும, உணமையும உமமுடைய முகத்துக்கு முனனேநடக்கின்றன. கூஎ, சங்கீ. உ.

யரு. கெமபீரத்தைத் தறிந்தசனம பாக்கியமுள்ளது. கர்த்தாவே, உமமுடைய முகத்தின வெளிச்சத்திலே நடப்பார்கள.

யசு. அவர்கள உமமுடைய நாமத்தினமேலே நாளதோறுங்களிகூர்நது உமமுடைய நீதியால உயருவார்கள.

யஎ. ஏனெனில, அவர்களபெலத்தினுடைய மகிமை தேவரீர்தானே. உமமுடைய தயையினாலே எங்கள கொமபு உயரும.

யஅ. ஏனெனறால கர்த்தராலெங்களுடைய கேடயமும, இஸரவேலின பரிசுத்தரால எங்களுடைய இராசாவுமுணடு.

யகூ. அப்போது நீர் தரிசனத்திலே உமமுடைய பரிசுத்தவானைக்குறித்துச் சொலலியதாவது; ஒரு சவுரியவானமேலே சகாயம பணணுஞ் சத்தியைவைத்தோம. சனத்தில தெரிந்துகொள்ளப்பட்டவனையுயர்த்தினோம. க. சாமுவேல. யசு, க.

உய. நமமுடையதாசனாகியதாவீதைக்கணடுபிடித்தோம. நமமுடைய பரிசுத்த எணணெயினால அவனை அபிஷேகம்பணணினோம. க. சாமு. யசு, யஉ. யங.

உக. அவனோடே நமமுடையகை உறுதியாயிருக்கும. நமமுடையபுயம அவனைத் திடப்படுத்தும.

உஉ. சத்துரு அவனை எதுவுஞ்செய்வதிலலை. நியாயக்கேட்டினமகன அவனையொடுக்குவதிலலை.

உங. அவன சத்துருக்களை யவனுக்குமுனபாகநருக்கிஅவனபகைஞரைவெட்டுவோம.

உச. நமமுடைய உணமையும, நமமுடையகிருபையுமஅவனோடிருக்கும. நமமுடைய நாமத்தினாலே அவனகொமபு உயரும.

உரு. அவனகையைச் சமுத்திரத்தையும, அவன வலதுகரத்தை ஆறுகளையும ஆளவைப்போம. எச, சங்கீதம. அ.

உசு. அவனநமமைத்தேவரீர் எனபிதாவும, எனபராபரனும, என இரட்சிப்பினகனமலையும என்றழைப்பான. உ. சாமு. எ, யச.

உஎ. நாமும அவனை முதறபேறானவனும, பூமியின இராசாக்களைப்பார்க்கிலும உன்னதமானவனுமாகவைப்போம. எபி. க, ரு. கொலோசர். க, யரு.

உஅ. என்றென்றைக்குமநமது கிருபையை அவனுக்குக்காப்போம. நமது உடன்படிக்கை யவனுக்குச் சேட்டியாயிருக்கும.

உகூ. அவன வித்தையென்றென்றைக்கும, அவன இராசாசனத்தைவானங்களுள்ளமட்டும நிலைப்படுத்துவோம.

ஙய. அவனகுமாரர் நமமுடைய நியாயங்களிலநடவாமல நமது வேதத்தைவிட்டு, உ. சாமுவேல எ, யச. யரு.

௩௧. நம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் நம்முடைய பிரமாணங்களைக் குலைத்துப்போட்டால்,

௩௨. அவர்கள் மீறுதல்களைமிலாறுகளாலும், அவர்கள் அக்கிரமத்தை வாதைகளாலும் விசாரிப்போம்.

௩௩. ஆனால் நம்முடைய கிருபையை அவனைவிட்டு விலக்காமலும், நம்முடைய உண்மையிலே பிசகாமலுமிருப்போம். ஏசாயா. ௫௪, ௰.

௩௪. நம்முடைய உடம்படிக்கையைக் குலைத்துப்போடாமலும், நம்முடைய உதடுகள் விளம்பினதை மாற்றாமலுமிருப்போம்.

௩௫. தாவீதுக்குப் பொய்சொல்லோமென்று ஒருவிசை நம்முடைய பரிசுத்தத்தின் மேலே ஆணையிட்டோம்.

௩௬. அவன் வித்து என்றென்றைக்குமிருக்கும். அவன் இராசாசனம் சூரியனைப்போல நமக்குமுன்பாக நிற்கும். எ௨, சங்கீ. ௰௭.

௩௭. அது சந்திரனைப்போலே என்றென்றைக்கும் உறுதியும், ஆகாயமண்டலத்துச் சாட்சியைப்போலே உண்மையுமாயிருக்குமென்றீர். சேலா. ௧. மோசே. ௯, ௰௨-௰௪.

௩௮. ஆனால் தேவரீர் எங்களையொழித்துவிட்டு வெறுத்தீர், நீர் அபிஷேகம்பண்ணுவித்தவன்மேல் உக்கிரமானீர்.

௩௯. உம்முடைய தாசனுக்குப்பண்ணின உடம்படிக்கையை அருவருத்து அவனுடைய கிரீடத்தைத் தரையிலே தள்ளிப் பரிசுத்தக்குலைச்சலாக்கினீர்.

௪௰. அவன் மதில்களையெல்லாந் தகர்த்துவிட்டு அவன் அரணிப்புகளை இடித்தலாக்கினீர்.

௪௧. வழிநடக்கிற அனைவரும் அவனைக் கொள்ளையிட்டார்கள், தன் அயலாருக்கு நிந்தையானான். ௮௰, சங்கீதம். ௰௩.

௪௨. அவன் சத்துருக்களின் வலதுகையை உயர்த்தி அவன் விரோதக்காரர் அனைவருக்கும் சந்தோஷமுண்டாக்கினீர்.

௪௩. அவனை யுத்தத்திலே தரிகொள்ளப்பண்ணாமல் அவன் பட்டயத்தின் கருக்கையும் மழுக்கிவிட்டீர்.

௪௪. அவன் சுத்தத்தை யற்றுப்போகப்பண்ணி அவன் இராசாசனத்தைத் தரையிலே தள்ளினீர்.

௪௫. அவன் வாலவயதின் நாள்களைக் குறுக்கி அவனை வெட்கத்தால் மூடினீர். சேலா.

௪௬. கர்த்தாவே, எந்தமட்டும் என்றென்றைக்கும் மறைந்திருப்பீரோ! எந்தமட்டும் உம்முடைய உக்கிரம் அக்கினியைப்போலெரியும். ௭௪, சங்கீதம். ௰.

௪௭. என் சீவன் எத்தனை நிலையற்றதென்கிறதை நினைத்தருளும், ஏன் சகலமானமனுப்புத்திரரையும் விருதாவாய்ச் சிஷ்டித்திருப்பீர்.

௪௮. எந்த மனுஷன் மரணத்தைக் காணாமல் உயிரோடிருந்து தன் ஆத்துமாவைப் பாதாள வல்லடிக்கு விலக்கிவிடுவிப்பான். சேலா.

௪௯. ஆண்டவரே, நீர் தாவீதுக்கு உம்முடைய உண்மையைக்கொண்டு சத்தியம்பண்ணின உம்முடைய முந்தின கிருபைகளெங்கே!

௫௰. ஆண்டவரே, உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஊழியக்காரரையும், நீர் அபிஷேகம்பண்ணினவனின் காலடிகளையும் நிந்திக்கிறதை,

௫௧. நான் மகா சனசதளங்களையெல்லாம் என்மடியிற் சுமத்துக்கிறதினாலுண்டான நிந்தையை நினையுங் கர்த்தாவே,

௫௨. கர்த்தர் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். ஆமென். ஆமென்.

## ௯௰. சங்கீதம்.

[(௧) மோசே பராபரனுடைய பராமரிப்பை வெளிப்படுத்தி, (௩) மனிதருடைய சுபாவத்தின் பலவீனத்தையும், (௭) தேவதண்டனைகளையும், (௰) அப்பாயசையுங் குறித்துமுறையிட்டும், (௰௨) பராபரனுடைய நல்ல பராமரிப்பின் அநுபவத்தை அறிந்துணர்வதற்காக அவனை வேண்டிக்கொண்டதும்.]

ஆண்டவரே, தேவரீர் தலைமுறைதலைமுறையாக எங்களுக்கடைக்கலமானவர்.

௨. பருவதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியையும், பூச்சக்கரத்தையும் உருவாக்குமுன்னுந்தேவரீர் அநாதியாய் என்றென்றைக்கும் பராபரனாயிருக்கிறீர். வாக. ௮, ௨௫. ஏசாயா. ௪௩, ௰௩.

௩. நீர் மனிதனை நிர்த்தூளியாக்கி மனுப்புத்திரரே, திரும்பிவாருங்களென்கிறீர்.

௪. ஏனென்றால், ஆயிரம்வருஷம் உம்முடைய பார்வைக்கு நேற்றுக்கழிந்தநாளும், இராச்சாமமும்போலிருக்கிறது. ௨. பேது. ௩, ௮.

௫. அவர்களைப் பெருவெள்ளமாயடித்துக்கொண்டுபோகிறீர், நித்திரைக்கொத்திருக்கிறார்கள், காலமே அவர்கள் உருவுமாறிய புல்லுக்கொப்பானவர்கள். ஏசா. ௪௰, ௬-௭.

௬. அது காலமே பூத்து உருவுமாறிச் சாயங்காலத்தில் அறுப்புண்டுலரும்.

௱௩, சங். ௰௫. ௰௬.

௭. ஏனெனில், உமது கோபத்தால் அழிந்து, உம்முடைய உக்கிரத்தால் கலங்கிப்போனோம். ௧. கொரி. ௰, ௫.

௮. எங்கள் அக்கிரமங்களையுமக்கு முன்பாகவும், எங்கள் அந்தரங்கமானதையும் உம்முடைய முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தினீர்.

௯. ஆகையால், எங்கள் நாள்களெல்லாம் உம்முடைய சினத்தாற்போய்விட்டன, எங்

கள் வருஷங்களை யொருகதையைப்போலக் கழித்துவிட்டோம்.

ய. எங்கள் ஆயசுநாள்களில் எழுபது வருஷம், வெகுவாய்ப் பெலத்திருந்தால் எண்பது வருஷமுண்டு. அவைகளில் மேன்மையானதோ வென்றால் பிரயாசமும், வீணுந்தானே. ஏனென்றால் கடுக அறுப்புண்டு பறந்துபோகிறோம்.

யக. உமது கோபத்தின் பெலனையும், உம்முடைய சினத்தையும் உமக்குப் பயப்படத்தக்க பயமாய் அறிந்துகொள்ளுகிறவனார்?

யஉ. நாங்கள் ஞானமுள்ள இருதயத்தைத் தரித்துக்கொள்ளும்படியாக எங்கள் நாள்களையெண்ணும் அறிவை யெங்களுக்குக் கட்டளையிடும்.

யங. கர்த்தாவே, திரும்பிவாரும், எந்தமட்டுங் கோபமாயிருப்பீர்? உம்முடைய அடியாருக்காகப் பரிதபியும்.

யச. நாங்கள் எங்கள் நாள்களிலெல்லாங் கெம்பீரித்து மகிழ்க்காலமே எங்களையுந் கிருபையாலே திருத்தியாக்கும்.

யரு. தேவரீர் எங்களைச் சிறுமைப்படுத்தின நாள்களுக்கும், நாங்கள் தீங்கைக்கண்ட வருஷங்களுக்குஞ் சரியாக எங்களை மகிழ்ச்சியாக்கும்.

யசா. உம்முடைய கிரியை உம்முடைய ஊழியக்காரருக்கும், உம்முடைய மகிமை அவர்கள் பிள்ளைகளுக்குங் காணப்படுவதாக.

யஎ. எங்கள் பராபரனாகிய ஆண்டவரின் இன்பம் எங்கள்மேலிருக்கக்கடவது, எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும், ஆம் எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்.

## கூக. சங்கீதம்.

[(க) தேவபத்தியுள்ளவர்களுடைய ஸ்துதியும், (ங) காப்பும், (கூ) வாசஸ்தலமும், (யக) ஊழியக்காரர்களும், (யச) சிநேகிதனும், அவர்களுக்குண்டாகிய மற்றயாவும்.]

கர்த்தனை யென்னடைக்கலமும், என் கோட்டையும், நான் நம்பியிருக்கிற என்பராபரனுமென்கிறேன்.

உ. ஏனென்றால், அவருன்னைக் குருவிபிடிக்கிறவனுடைய கண்ணிக்கும், விக்கினமான பெருவாரிக்காய்ச்சலுக்குந் தப்புவிப்பார். ௱உச, சங்கீ. எ.

ங. தம்முடைய சிறகுகளாலே உன்னை மூடுவார், அவர் செட்டைகளின்கீழே திடன்கொண்டிருப்பாய், அவருடைய உண்மை பரிசையும், கேடயமுமாம். ருஉ, சங்கீ. உ. மத்தே. உங, ஙஎ.

ச. இராவின் அருக்களிப்புக்கும், பகலிற் பறக்கும் அம்புக்கும், வாச. ங, உச. உரு.

ரு. இருளில் நடமாடும் பெருவாரிக்காய்ச்சலுக்கும், மத்தியானத்திற் பாழாக்கடிக்குஞ் சங்காரத்துக்கும் பயப்படாதிருப்பாய்.

சா. உன்பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலதுபுறத்திற் பதினாயிரம்பேரும் விழுந்தாலும், அது உன்னண்டைக்குச் சேராது.

எ. உன்கண்களால் மாத்திரம் அதைப் பார்த்து ஆகாதவர்களுக்கு வருஞ் சிக்ஷிக்கடுத்தலைக் காண்பாய்.

அ. ஏனென்றால் கர்த்தாவே, தேவரீரென்னடைக்கலமாயிருக்கிறீர், உன்னதமானவரையுனக்குத் தாபரமாக வைத்தாய்.

கூ. பொல்லாப்புனக்கு வராமலும், வாதையுன் கூடாரத்தை அணுகாமலுமிருக்கும்.

ய. உன்னைக்காக்கத் தம்முடைய தூதர்களுக்குக் கற்பிப்பார். ஏனென்றால், உன் வழிகளிலெல்லாமுன்னைக் காக்கும்படிக்கு, ஙச, சங. அ.

யக. உன் பாதங் கல்லில் இடறாதபடிக்குக் கைகளிலுன்னையேந்திக்கொண்டுபோவார்கள்.

யஉ. சிங்கத்தின்மீதிலும், விரியன்பாம்பின் மீதிலும் நடந்து சிங்கக்குட்டியையும், வலுசர்ப்பத்தையும் மிதித்துவிடுவாய். லூக்கா. ய, யகூ.

யங. நம்முடையமேல் அவன் வாஞ்சையாயிருக்கிறபடியினாலே அவனை விடுவிப்போம், நம்முடைய நாமத்தையவன் அறிந்திருக்கிறபடியினாலே அவனையுயர்ந்த அடைக்கலத்திலே வைப்போம்.

யச. நம்மை நோக்கிக் கூப்பிடுவான், நாம் அவனுக்கு மறுவுத்தரவருளிச்செய்வோம், நெருக்கத்தில் நாம் அவனோடிருந்து அவனைத் தப்புவித்து அவனை மகிமைப்படுத்துவோம்.

யரு. நீடித்த நாள்களால் அவனைத் திருத்தியாக்கி நம்முடைய இரட்சிப்பையவனுக்குக் காண்பிப்போம்.

## கூஉ. சங்கீதம்.

[(க) பராபரனுடைய உன்னதமான கிரியைகளுக்காகவும், (ச) துன்மார்க்கர்மேலிறங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகளுக்காகவும், (ய) தேவபத்தியுள்ளவர்களுக்குண்டாகும் அவருடைய நன்மைக்காகவும் அவரைத் துதிக்கத் தீர்க்கதரிசி தூண்டினது.]

பத்துநரம்புவீணையாலும், தம்புராவும், சுரமண்டலத்தில் வாசிக்குந்தியானத்தாலும்,

உ. கர்த்தனைத் துதிக்கிறதும், உன்னதமானவரே, உமது நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுகிறதும். ௱சஎ, சங்கீதம். க.

ங. காலமே உம்முடைய கிருபையையும், இராத்திரியில் உம்முடைய உண்மையையும் அறிவிக்கிறது நலமாயிருக்கும்.

ச. ஏனென்றால் கர்த்தாவே, உமது செய்கைகளால் என்னை மகிழ்ச்சியாக்கினீர், உம்முடைய கரங்களின் கிரியைகளினிமித்தங் கெம்பீரிக்கிறேன்.

௫. கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் எத்தனை பெரியவைகள்! உம்முடைய சிந்தனைகள் மகா ஆழமானவைகள். ௱௪, சங்கீ. ௨௪. ௱௩௯, சங். ௰௭. ரோமர். ௰௧, ௩௩.

௬. மிருககுணமனுஷன் இதையறியான், மூடன் இதையுணரான்.

௭. ஆகாதவர்கள் புல்லைப்போலே செழித்துச் சகல அக்கிரமக்காரரும் பூக்கும்போது அவை அவர்களையென்றென்றைக்கும் அழிப்பதற்காகின்றன.

௮. ஆனாற் கர்த்தாவே, என்றென்றைக்கும் உயர்ந்தவர்.

௯. ஏனெனில், இதோ, கர்த்தாவே உம்முடைய சத்துருக்கள் இதோ, உம்முடைய சத்துருக்கள் அழிவார்கள், சகல அக்கிரமக்காரருஞ் சிதறுண்டுபோவார்கள்.

௰. ஆனால் என் கொம்பைக் காண்டாமிருகத்தினுடையதைப்போலுயர்த்துவீர், புது எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்படுகிறேன். ௮௯, சங்கீ. ௰௮.

௰௧. என் சத்துருக்களிலும், என்மேலெழும்புகிற பொல்லாதவர்களிலும் நடக்கும் சரிக்கட்டுதலை என் கண்கண்டு என் காதுகள் கேட்கும்.

௰௨. நீதிமான் பனையைப்போலே செழித்து லீபனோனிலுள்ள கேதுருவைப்போலே வளருவான். ௫௨, சங். ௰.

௰௩. கர்த்தருடைய வீட்டிலே நாட்டப்பட்டவர்கள் எங்கள் பராபரனுடைய முற்றங்களிற் செழித்திருப்பார்கள்.

௰௪. என் கன்மலையாகிய கர்த்தர் உத்தமரென்றும், அவரில் அநியாயமில்லையென்றும் அறிவிப்பதற்காக, ௫. மோ. ௩௨, ௪.

௰௫. அவர்கள் நரைவயதில் இன்னுங் கனிதந்து புஷ்டியும், பசுமையுமாயிருப்பார்கள். ௧, சங். ௩.

## ௯௩. சங்கீதம்.

[கிறிஸ்துவினிராசரியத்தின் மகத்துவமும், திறமும், தூய்மையும்.]

கர்த்தர் இராசரிகம்பண்ணி மகத்துவத்தை யணிந்துகொண்டார். கர்த்தர் அதையணிந்துபெலத்தினாலே யரைக்கட்டிக்கொண்டார், ஆனதுகொண்டு பூச்சக்கரம் அசையாதபடிக்கு உறுதிப்படும்.
௯௭, சங்கீ. ௧. ௯௯, சங்கீ. ௧.

௨. உம்முடைய இராசாசனம் அப்போது முதலாய் உறுதியானது, தேவரீர் அநாதியாயிருக்கிறீர்.

௩. நதிகள் ஏறெடுக்குங் கர்த்தாவே, நதிகள் தங்களிரைச்சலையேறெடுக்கும், நதிகள் தங்கள் அலைகளையேறெடுக்கும்.

௪. திரளான தண்ணீரின் இரைச்சலைப்பார்க்கிலும், சமுத்திரத்தின் வீரியமான அலைகளைப்பார்க்கிலுங் கர்த்தர் உன்னதத்திலே வீரியமானவர். ௪௯, சங்கீதம். ௧. ௯௫, சங். ௮.

௫. உம்முடைய சாட்சிகள் மகாவுண்மையானவைகள், கர்த்தாவே பரிசுத்தம் நித்தியநாளாக உம்முடைய வீட்டின் அலங்காரமாயிருக்கிறது. யோவான். ௰௭, ௭.

## ௯௪. சங்கீதம்.

[(௧) தீர்க்கதரிசி நீதியைக்கேட்டுக் கொடூரத்தையும், அவபத்தியையுங்குறித்து முறையிட்டும், (௮) தேவபராமரிப்பையறிவித்தும், (௰௨) துன்பத்திலுண்டாகும் நன்மையையும், (௰௬) பராபரன் துன்பப்படுகிறவர்களைக்காப்பதையுங்காட்டினதும்.]

நீதியைச்சரிக்கட்டுகிற பராபரனாகிய கர்த்தாவே, நீதியைச்சரிக்கட்டுகிற பராபரனே, பிரகாசியும். ௫. மோசே. ௩௨, ௩௫. ௮௰, சங்கீதம். ௨.

௨. பூமியின் நியாயாதிபதியே, நீர் உயர்ந்து பெருமைக்காரருக்குப் பதிலைச்சரிக்கட்டும்.

௩. கர்த்தாவே, ஆகாதவர்கள் எத்தமட்டுங் களிகூர்ந்து, ஆகாதவர்கள்தானே எத்தமட்டுங் களிகூர்ந்திருப்பார்கள்.

௪. சகல அக்கிரமக்காரரும், வாயாடிக்கடினமாய்ப்பேசிப்பெருமைபாராட்டுகிறார்கள்.

௫. கர்த்தாவே அவர்கள் உமது சனத்தை நோக்கி உம்முடைய சுதந்திரத்தையொடுக்கி,

௬. விதவையையும், பரதேசியையுங்கொன்று திக்கில்லாதவர்களைக்கொலைப்படுத்தி, எசேக்கியேல். ௨௨, ௭.

௭. கர்த்தர் பாராபரனென்றும், யாக்கோபின் பராபரன் உணராரென்றுஞ்சொல்லுகிறார்கள்.

௮. சனத்தில் மிருககுணத்தாரே உணர்வடையுங்கள், பயித்தியக்காரரே எப்போது புத்திமான்களாவீர்கள்.

௯. காதை நாட்டுகிறவர் கேளாரோ! கண்ணை உருவாக்குகிறவர் காணாரோ!

௰. சாதிகளைத் தண்டிக்கிறவர் கடிந்து கொள்ளாரோ! மனுஷனுக்கு அறிவைப் போதிக்கிறவர் அறியாரோ!

௰௧. கர்த்தர் மனுஷனுடைய நினைவுகளை அவைகள் மாயையென்றறிவார். ௧. கொரிந்தர். ௩, ௨௰.

௰௨. கர்த்தாவே ஆகாதவனுக்குக் குழி வெட்டப்படுமட்டுக்கும், நீர் திக்குத்தாங்கலில் அமர்ந்திருக்கப்பண்ணிப் புத்திசொல்லி,

௰௩. உம்முடைய வேதத்தாற் போதிக்கிற மனுஷன் பாக்கியவான்.

௰௪. ஏனெனிற் கர்த்தர் தம்முடைய சனத்தை நெகிழாமலும், தம்முடைய சுதந்திரத்தைக் கைவிடாமலுமிருப்பார்.

௰௫. அதேதென்றால் நியாயம் நீதியாகத் திரும்பும், செம்மையிருதயத்தார் அனைவரும் அதைப்பின்செல்லுவார்கள்.

௰௬. எனனோடேகூடப பொலலாதவர்க ளுககெதிராய எழுமபுபவனூர்! எனனோடே கூட அககிரமககாரருககெதிராய நிறப வனூர்!

௰௭. கர்ததர் எனககுத துணையாயிராதிருந தாராகில எனனுததுமா மவுனததில வாச மாவதறகுக கொஞசநதபபுமதாயிருககும.

௰௮. எனகாலதளளாடுகெனறுநானசொன னபோதோவெனிற கர்ததாவே உமதுகிரு பையெனனைத தாஙகிறறு.

௰௯. என உளளததிலெனனுடையவிசாரங களபெருகுகையில உமமுடைய தேறறுதல கள எனனுததுமாவைத துளிர்க்கபபண ணுகிறது.

௨௰. பிரமாணததிறகு விரோதமான பாரததை உணடுபணணுகிற கேடுபாடான ஆசனமு மககொததுவருமோ? அறிவிப்பு. ௨, ௰௩. ௰௩. அதி. ௨. ௨. கொரி. ௬, ௰௪. ௰௫.

௨௧. அவர்கள நீதிமானுடைய ஆததுமா விறகு விரோதமாகக் கும்புகூடிக குறறமில லாத இரத்தத்தைக குறறபபடுததுகிறார்கள.

௨௨. ஆனாறகர்ததர் எனககுயர்நதவடைக கலமும, எனபராபரன நான நமபியகனம லையுமாயிருககிறார்.

௨௩. இவர் அவர்கள அககிரமததை அவர் களமேலதிருபபி அவர்கள பொலலாபபி னிமிததம அவர்களைச சஙகரிபபார், நமமு டையபராபரனாகியகர்ததர் அவர்களைச சங கரிபபார்.

## ௯௫. சங்கீதம்.

[(௧) பராபரனுடைய பெருமைககாகவும, (௬) நனமைககாகவும அவரைத துதிகக வும, (௮) அவரைப்பெய்ககாதபடிககும எச சரிபபு.]

**க**ர்ததரைக் கெமபீரிததுபபாடி நமமு டைய இரட்சிபபின கனமலையைச சங கீர்ததனமபணணககடவோமவாருஙகள.

௨. துதியோடே அவர் சனனிதிககு முன பாகவநது சஙகீதஙகளால அவரை ஆர்ப பரிததுபபாடககடவோம. ௱, சஙகீ. ௨.

௩. ஏனெனிறகர்ததர்பெரியதேவனும, எல லாததேவர்களினமேலும பெரிய இராசாவு மாயிருககிறார். ௯௬, சஙகீதம. ௪.

௪. அவர்கையிற பூமியின அநதரஙகங்களி ருககினறன், பருவதஙகளின உயரஙகளும் அவருடையவைகள.

௫. சமுததிரம அவருடையது, அவரே அவைகளையுணடாககினூர், வெட்டாநதரை யைஅவருடையகரஙகளஉருவாககின.

௬. நாம பணிநது குனிநது நமமையுண டாககின கர்ததருககுமுனபாக முழஙகாற படியிடககடவோம, வாருஙகள.

௭. ஏனெனில, அவர் நமமுடையபராபர னும, நாமஅவருடைய மேயசசலினசன ஙகளுமா, அவருடையகரததின ஆடுகளுமாமே, இனறு அவருடைய சத்தத்தைககேட்டீர்க ளாகில, எபிரேயர். ௩, ௭. ௰௧. ௱, ௪௰. ௩.

௮. வனாநதரததிலே சணடை மூட்டுதலி லும, சோதனையினநாளிலும நடநததுபோ லே உஙகளிருதயததைக கடினபபடுததா திருஙகள. ௨. மோசே. ௰௭, ௭. ௪. மோ சே. ௨௰, ௰௩.

௯. அஙகே உஙகளபிதாககள நமமைச சோதிதது நமமைபபரிட்சைபார்தது நம முடையகிரியையையுஙகணடார்கள.

௰. நாறபதுவருஷமாக நாம அநதசசநத தியை அரோசிதது அவர்கள மனநதபபி நடககிறசனமெனறும, அவர்களநமமுடை யவழிகளையறியாதே போகிறவர்களெனறுஞ சொலலி,

௰௧. அவர்நம்முடையஓயவுக்குட்பிரவேசிப பதிலலையெனறு நமமுடைய கோபததிலே ஆணையிட்டோம. ௪. மோசே. ௰௪, ௨௧— ௩௫.

## ௯௬. சங்கீதம்.

[(௧) பராபரனுடைய பெருமைககாகவும, (௮) அவருடைய ஆளுகைக்காகவும, (௰௩) அவருடைய பொதுததீர்பபுககாகவும அவ ரைத துதிககததூணடுதல.]

**க**ர்ததரைப புதுபபாட்டாய்ப பாடுங கள, பூமியின குடிகளே எலலாருங கர்ததரைபபாடுஙகள. ௯௮, சஙகீ. ௧. அறி. ௫, ௯. ௰.௰௪, ௩. ௧. நாளாக.௰௬, ௩௩.

௨. கர்ததரைப பாடி அவருடையநாமத தைததோததிரிதது நாளுககுநாள அவரு டைய இரட்சிபபைச சுவிசேஷமாயறிவி யுஙகள.

௩. சாதிகளுககுள அவருடையமகிமையை யும, எலலாசசனசதளஙகளுககுளளும அவ ருடைய அதிசயஙகளையுமவிவரியுஙகள.

௪. ஏனெனில, கர்ததர்பெரியவரும, மிகு தியாய்த தோததிரிககபபட்டவருமானவர், அவர்எலலாத தேவர்களினமீதிலும, பயங கரமாயிருககிறார்.

௫. ஏனென்றால, எலலாச சனசதளஙகளு டைய தேவர்களும, விககிரகஙகளதானே, கர்ததரோவானஙகளையுணடாககினூர். ஏசாயா. ௪௪, ௨௧.

௬. மகிமையும, கனமும அவருககுமுன பாகவும, வலலமையும, மகததுவமும அவர் பரிசுததஸதலததிலுமிருககினறன.

௭. சனசதளஙகளின வம்சஙகளே, கர்த்த ருககுமகிமையையும, பெலனையுஞசெலுத துஙகள, கர்ததருககலவைகளைச்செலுததுங கள. ௨௯, சஙகீ. ௧. ௨.

௮. கர்ததருககு அவருடையநாமததினமகி மையைச செலுததிக காணிககைகளைக கொணடுவநது அவருடைய பிரகாரஙகளுக குட்பிரவேசியுஙகள.

௯. கர்த்தரைப் பரிசுத்த அலங்காரத்துடனே பணியுங்கள், பூமியின் குடிகளே எல்லாரும் அவருக்கு முன்பாக நடுங்குங்கள்.

௰. கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார், ஆனதுகொண்டு பூச்சக்கரம் அசையாதபடிக்கு உறுதிப்படுமென்றும், சனங்களை நீதாயமாய் நியாயந்தீர்ப்பாரென்றும் சாதிகளுக்குள்ளே சொல்லுங்கள். ௯௩, சங்கீதம். ௧. ஞூ அறிவிப்பு. ௰௧, ௰௫.

௰௧. வானங்கள் மகிழ்ந்து பூமி பூரிப்பாகச் சமுத்திரமும், அதின் நிறைவும் முழங்குவதாக. ௯௮, சங்கீதம். ௭. ஞூ

௰௨. நாடும், அதிலுள்ளவைகளுங் களிகூருவதாக. அப்பொழுது கர்த்தருக்கு முன்பாக எல்லாக் காட்டுவிருட்சங்களுங் கெம்பீரிக்கும்.

௰௩. ஏனெனில் அவர் வருகிறார், அவர் பூமியை நியாயந்தீர்க்கவருகிறார், பூச்சக்கரத்தை நீதியாகவும், சனங்களை உண்மையாகவும் நியாயந்தீர்ப்பார்.

## ௯௭. சங்கீதம்.

[(௧) பராபரனுடைய இராச்சியத்தின் மகத்துவத்தையும், (௭) விக்கிரகாராதனைக்காரர்மேல் வருந்தேவகோபாக்கினையைக் குறித்துத் திருச்சபையின் மகிழ்ச்சியையுஞ்சொன்னதும், (௰) தேவபத்தியும், மனமகிழ்ச்சியுமுள்ளவர்களாயிருக்கத் தூண்டினதும்.]

கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார், பூமி பூரிப்பாகத் திரளான தீவுகள் மகிழ்க்கடவது. ௯௩, சங்கீ. ௧. ௯௯, சங்கீ. ௧.

௨. மேகமும், மந்தாரமும் அவரைச் சூழ்ந்திருக்கின்றன. நீதியும், நியாயமும் அவருடைய இராசாசனத்தின் மூலையானது. ௮௯, சங்கீ. ௰௪.

௩. அக்கினி அவர்முன்னே நடந்து சுற்றிலுமிருக்கிற அவருடைய சத்துருக்களைச் சுட்டெரிக்கிறது. ௫௰, சங்கீ. ௩. மல்கி. ௪, ௧.

௪. அவருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்பிக்கின்றன, பூமி அவைகளைக் கண்டதிரும்.

௫. கர்த்தரின் பிரசன்னத்திலே பருவதங்கள் மெழுகைப்போல உருகுது, சர்வ பூமியினுடைய ஆண்டவரின் பிரசன்னத்திலேதானே.

௬. வானங்கள் அவருடைய நீதியை அறிவிக்கும், எல்லாச்சனங்களும் அவருடைய மகிமையைக் காண்பார்கள். ௫௰, சங்கீ. ௬. அறிவிப்பு. ௧, ௭.

௭. சுரூபங்களை வணங்கி விக்கிரகங்களைமேலே பெருமைபாராட்டுகிறயாவரும் வெட்கப்படுவார்கள், எல்லாத் தேவர்களே அவரைப் பணியுங்கள். எபிரேயர். ௧, ௬.

௮. சீயோன் கேட்டு மகிழும், கர்த்தாவே உம்முடைய நியாயத்தீர்ப்புகளாலே யூதாவின் குமாரத்திகள் களிகூருவார்கள்.

௯. ஏனென்றால் கர்த்தாவே, தேவரீர் சர்வ பூமியின்மீதிலும் உன்னதமானவர், எல்லாத் தேவர்கள்மீதிலும் மிகுதியும் உயர்ந்திருக்கிறீர்.

௰. கர்த்தரைச் சிநேகிக்கிறவர்களே, பொல்லாப்பை வெறுங்கள். அவர் தம்முடைய பரிசுத்தவான்களின் ஆத்துமாக்களைக் காப்பாற்றி அவர்களை ஆகாதவர்களின் கைக்குத் தப்புவிக்கிறார். ஆமோஸ். ௫, ௰௪. ௰௫. உரோமர். ௰௨, ௯.

௰௧. நீதிமானுக்கு வெளிச்சமும், செம்மையிருதயத்தாருக்கு மகிழ்ச்சியும் விதைக்கப்பட்டிருக்கிறது. ௱௰௨, சங்கீதம் ௪.

௰௨. நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து அவருடைய பரிசுத்தம் பிரஸ்தாபமாகும்படியாகத் துதியுங்கள். ௩௨, ச௰. ௰௧. ௩௩, சங்கீதம். ௧.

## ௯௮. சங்கீதம்.

[(௧) சங்கீதக்காரன் யூதர்களையும், (௪) புறச்சாதியாரையும், (௭) மற்றச்சிருஷ்டிகள் யாவையும் பராபரனைத் துதிக்கத் தூண்டினது.]

கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள். ஏனெனில், அதிசயங்களைச் செய்கிறார். அவருடைய வலதுகரமும், அவருடைய பரிசுத்தபுயமும் அவருக்கு இரட்சிப்புண்டாக்குகிறது. ௯௬, சங்கீதம். ௧.

௨. கர்த்தர் தம்முடைய இரட்சிப்பைப் பிரஸ்தாபமாக்கி, தமது நீதியைச் சாதிகளுடைய கண்களுக்கு முன்பாக விளங்கப்பண்ணுகிறார்.

௩. அவர் இஸ்ரவேல்வீட்டுக்காகத் தம் கிருபையையும், தம் உண்மையையும் நினைக்கிறார், பூமியின் எல்லைகளெல்லாம் நம்முடைய பராபரனுடைய இரட்சிப்பைக் காணுகிறது.

௪. பூமியின் குடிகளே, எல்லாருங் கர்த்தருக்கென்று ஆர்ப்பரியுங்கள். முழங்கிக் கெம்பீரித்துப் பாடுங்கள். ௱, சங்கீதம். ௧.

௫. கர்த்தரைச் சுரமண்டலத்தாற் கீர்த்தனம்பண்ணுங்கள். சுரமண்டலத்தாலும், கீதசத்தத்தாலுந்தானே. ௱௫௰, சங்கீ. ௩. ஞூ

௬. கர்த்தராகிய இராசாவுக்கு முன்பாகப் பூரிகைகளாலும், எக்காள சத்தத்தாலுங் கெம்பீரியுங்கள்.

௭. சமுத்திரமும், அதின் நிறைவும், பூச்சக்கரமும், அதிற்குடியிருக்கிறவர்களும் முழங்குவதாக. ௯௬, சங்கீதம். ௰௧.

௮. கர்த்தருக்கு முன்பாக ஆறுகளைக் கொட்டவும், பருவதங்கள் ஏகமாய்க் கெம்பீரிக்கவுங்கடவது.

௯. ஏனெனில், அவர் பூமியை நியாயந்தீர்க்கவருகிறார். பூச்சக்கரத்தை நீதியோடும், சனங்களை மகா நிதானத்தோடும் நியாயந்தீர்ப்பார். ௯, சங்கீ. ௮. ௯௬, ச௰. ௰௩.

ய. உன் நேசங்கள் எத்தனை நேர்த்தியாயிருக்கின்றன. என் சகோதரியே, மனைவியே, திராட்சப்பழ இரசத்தைப்பார்க்கிலும், உன் நேசங்களும், சகல கந்தவர்க்கங்களைப்பார்க்கிலும், உன் பரிமளத்தயிலங்களின் வாசனையும் எத்தனை யினபமாயிருக்கும்.

யக. மனைவியே, உன்னுதடுகள் தேன்கூடொழுகலாயிருக்கிறது. தேனும், பாலும் உன்னாவின்கீழிருக்கிறது. உன் வஸ்திரங்களின் வாசனை லீபனோனின் வாசனைக்குச் சமானம்.

யஉ. என் சகோதரியே, மனைவியே, நீ யடைக்கப்பட்ட தோட்டமும், மறைவுகட்டப்பட்ட நீரூற்றும், முத்திரிக்கப்பட்ட கிணறுமாயிருக்கிறாய்.

யங. உன் தோட்டம் மாதளஞ்செடிகளும், அருமையான கனிமரங்களும், கோப்பேர் செடிகளும், நர்த்துச்செடிகளும்,

யச. நர்த்தும், குங்குமமும், வசம்பும், கருவாமரமும், லீபனோனின் சகலவித மரங்களும், வெள்ளைப்போளச் செடிகளும், சந்தனவிருட்சங்களும், கந்தவர்க்கச்செடிகளின் சகலவிதங்களுமுள்ள சிங்காரவனமாயிருக்கிறது.

யரு. தோட்டங்களுக்கு நீரூற்றும், சீவனுள்ள தண்ணீரின் துரவும், லீபனோனிலிருந்தோடிவருகிற வாய்க்கால்களுமுண்டாயிருக்கின்றன.

யசு. வாடையே, நீ யெழும்பித் தென்றலே, நீ வந்து கந்தப்பிசின்கள் வடிய என் தோட்டத்திலே வீசு. என் நேசர் தம்முடைய தோட்டத்துக்கு வந்து தம் அருமையான கனிகளில் * புசிப்பாராக. * அறிவி. ங, உய.

## ரு. அதிகாரம்.

[(க) கிறிஸ்துத் திருச்சபையை அழைத்தெழுப்பினது. (உ) திருச்சபை கிறிஸ்துவின் அன்பை ருசிபார்த்து அதிக அன்பு கூர்ந்தது. (ங) கிறிஸ்துவை யறியும்படி யவருடைய இலட்சணங்களைச் சொன்னது.]

என் சகோதரியே, மனைவியே, என் தோட்டத்துக்கு * வந்தேன். என் வெள்ளைப்போளத்தை யென் கந்தவர்க்கத்தோடுங்கூட அறுத்தேன். என் தேன் கூட்டை என் தேனோடுங்கூடப் புசித்தேன். என் திராட்சப்பழ இரசத்தை என் பாலோடுங் கூடக்குடித்தேன். சிநேகிதரே, புசியுங்கள். பிரியமானவர்களே, குடித்து மஸ்தாகுங்கள். * யோவான். யச, உக.

உ. நான் நித்திரைபண்ணினேன். என்னெஞ்சோ விழித்திருந்து * கதவு தட்டுகிற என் நேசரின் சத்தத்தைக் கேட்டேன். என் சகோதரியே, என் சிநேகிதியே, என் புறாவே, என் உத்தமியே, எனக்குத் திற, ஏனெனில், என் சிரசு பனியினாலும், என் மயிர்கள் இராவிற் பெய்யுந் துளிகளினாலும் நிறைந்திருக்கிறதென்றார். * அறிவி. ங, உய.

ங. என் அங்கியைக் கழற்றினேன். எப்படி அதைத் திரும்ப உடுப்பேன்! என் கால்களைக் கழுவினேன் எப்படி அவைகளைத் திரும்ப அழுக்காக்குவேனென்றேன்.

ச. என் நேசர் தமது கரத்தைக் கதவின் துவாரத்திலே நீட்டினார். அப்போது என் குடல்கள் அவர் நிமித்தம் அசைந்தன.

ரு. என் நேசருக்குத் திறப்பதற்கு நான் எழுந்தேன். என் கைகள் வெள்ளைப்போளமும், பூட்டின கைப்பிடிகள் மேல் என் விரல்கள் மேல் நற வெள்ளைப்போளமுமாய் வடிந்தன.

சு. நான் என் நேசருக்குத் திறந்தேன். ஆனால் என் நேசர் விலகிப்போயிருந்தார். அவர் வசனித்ததினிமித்தம் என்னுத்துமா என்னைவிட்டுப்போயிற்று, * அவரைத் தேடினேன். ஆனால் அவரைக் காணாதிருந்தேன். அவரைக் கூப்பிட்டேன். ஆனால் அவரெனக்கு மறுவுத்தரவு கொடுத்ததில்லை. * ங, க. உ.

எ. பட்டணத்தில் திரிகிற காவலாளர்கள் என்னைக் கண்டு என்னையடித்து என்னைக் காயப்படுத்தினார்கள். அலங்கத்தின் காவற்காரர் என் மேலிருந்த என் முக்காட்டுச் சீலையையெடுத்துப்போனார்கள்.

அ. எருசலேமின் குமாரத்திகளே, என் நேசரைக் கண்டீர்களானால் * நான் சிநேகத்தால் வியாதியாயிருக்கிறேனென்று அவருக்கறிவிக்க உங்களை ஆணையிடுகிறேன். * உ, ரு.

கூ. வேறே நேசரைப்பார்க்கிலும் உன் நேசர் எப்படிக்கொத்தவர்! ஸ்திரிகளில் ரூபவதியே, நீ இப்படி யெங்களை யாணையிடுகிறதற்கு வேறே நேசரைப்பார்க்கிலும், உன் நேசர் எப்படிக்கொத்தவர்!

ய என் நேசர் வெண்மையும், சிவப்புமானவர். பதினாயிரம்பேர்களிற் கொடியைப்போலிருக்கிறார்.

யக. அவருடைய சிரம் அபரஞ்சியான தங்கம். அவர் மயிர்கள் சுருள் சுருளாகவும், காகத்தைப்போலக் கறுப்பாகவுமிருக்கின்றன.

யஉ. அவருடைய கண்கள் தண்ணீர் நதிகளின் ஓரத்திலே தங்கும் புறாக்களின் கண்களுக்கொத்தவைகளும், பாலிற் கழுவப்பட்டவைகளும், நேர்த்தியாய்ப் பதிந்தவைகளுமாயிருக்கின்றன.

யங. அவருடைய கன்னங்கள் சுகந்தப் பாத்திகளைப்போலவும், கந்தவகைச்செடிகளின் சிகரங்களைப்போலவுமிருக்கின்றன. * அவருடைய உதடுகள் லீலியா புஷ்பங்களைப்போலவுமிருந்து மேல் வெள்ளைப்போளம் வடிகிறதுமாயிருக்கின்றன. * சங்கீ. சரு, உ.

யச. அவருடைய கரங்கள் தர்சீஸ் இரத்தினங்கள் பொருந்தின பொன் வளையல்களைப் போலவும், அவருடைய அங்கம் நீலக்கற்கள் இழைத்திருக்கிற சுத்த தந்தத்தைப் போலவுமிருக்கின்றன.

அராச

௰௫. அவருடைய தொடைகள் பசும்பொன் ஆதாரங்களின்மேல் நிற்கிற வெண்கற்றூண்களைப்போலிருக்கின்றன. அவருருவம் லீபனோனின் சாயலும், கேதுருக்களைப்போலத் தெரிந்துகொள்ளப்பட்டதுமாயிருக்கின்றன.

௰௬. அவருடைய வாக்கு சுத்த மதுரமும், அவரிலுள்ளவையெல்லாம் இச்சிக்கப்படத்தக்கவையுமாயிருக்கின்றன. இவ்வண்ணமாக என்நேசரிருக்கிறார். எருசலேமின் குமாரத்திகளே, இவ்வண்ணமாக என் சிநேகிதரிருக்கிறார்.

## ௬. அதிகாரம்.

[(௧) திருச்சபை கிறிஸ்துவில் தனக்கிருக்கும் விசுவாசத்தை வெளியிட்டது. (௨) கிறிஸ்துத் திருச்சபையின் அலங்காரத்தையும், (௰) அதன்மேல் தமக்கிருக்கும் அன்பையுங் காட்டியது.]

உன் நேசர் எங்கே போனார்! ஸ்திரீகளில் ரூபவதியே, உன் நேசர் எவ்விடத்துக்குத் திரும்பினார்! உன்னோடேகூட நாங்களும் அவரைத் தேடுவோம்.

௨. தோட்டங்களில் மேயவும், லீலியாபுஷ்பங்களை யருக்கவும், என் நேசர் தம்முடைய தோட்டத்துக்கும், சம்பாரப்பாத்திகளுக்கும் இறங்கிப்போனார்.

௩. * நான் என் நேசருடையவள். லீலியாபுஷ்பங்களில் மேய்கிற என் நேசர் என்னுடையவர். * ௨, ௰௬.

௪. என் சிநேகிதியே, நீ திர்சாபட்டணத்தைப்போல * அதிகரூபமும், எருசலேமைப்போல வடிவமும், கொடிகள் பறக்கும் படைப்பவிஞ்சுகளைப்போலக் கெட்டியுமானவள். * ௧, ௰௧. ௪, ௫. சங்கீ. ௪௫, ௰௨.

௫. உன் கண்களை என்னைவிட்டுத் திருப்பு. ஏனெனில், என்னைப் பலத்துப்பிடிக்கும். * உன் அளகபாரங் கிலேயாத்பருவதத்திலே தழைமேயும் வெள்ளாடுகளின் மந்தையைப்போலிருக்கிறது. * ௪, ௧—௩. மத்தே. ௨௫, ௧.

௬. உன் பற்கள் குளிர்ப்பாட்டப்பட்டுக் கரையேறுகிறவைகளும், ஒன்றாகிலும் மலடாயிராமல் இரட்டைக்குட்டியுள்ளவைகளுமான ஆடுகளின் மந்தையைப்போலிருக்கின்றன.

௭. உன் கூந்தலின் நடுவே யுன் கன்னங்கள் மாதளங்கனி வெடிப்பைப்போலானது.

௮. இராசஸ்திரிகள் அறுபதும், வைப்பாட்டிகள் எண்பதுமுண்டு. குமரிகளுக்கு இலக்கமில்லை. * சங்கீ. ௪௫, ௰௫.

௯. ஒருத்தியோ என் புறாவும், என் உத்தமியுமாயிருக்கிறாள், இவள் தன் தாயக்கொருத்தியானவள். இவள் தன்னைப் பெற்றவளுக்குத் தெரிந்துகொள்ளப்பட்டவள். குமாரத்திகள் அவளைப்பார்த்து அவளைப் பாக்கியவதியென்கிறார்கள். இராசஸ்திரிகளும், பலஸ்திரீகளும் அவளைப்பார்த்துப் புகழ்ந்தார்கள்.

௰. விடியற்காலவெளுப்பைப்போல எட்டிப்பார்த்துச் சந்திரனைப்போல அழகும், சூரியனைப்போலத் துலக்கமும், கொடிகள் பறக்கும் படைப்பவிஞ்சுகளைப்போலக் கெட்டியுமாகிய இவளார்!

௰௧. பள்ளத்தாக்கிலே முளைத்தவைகளைப் பார்க்கிறதற்கும், திராட்சச்செடி துளிர்விட்டு மாதளஞ்செடிகள் பூப்பூக்குமோவென்று பார்க்கிறதற்கும், நொச்செடித்தோட்டத்துக்கிறங்கிவந்தேன்.

௰௨. நான் நினையாததற்குமுன் என்னுத்தமாவென்னை * என் மனப்பூர்வமான சனத்தின் இரதங்களுக்கொப்பாக்கிற்று. * சங்கீ. ௱௰, ௩.

௰௩. திரும்பு திரும்பு சூலமித்தியே உன்னை நாங்கள் பார்க்கும்படிக்குத் திரும்பு திரும்பு. சூலமித்தியில் என்னத்தைப்பார்க்கிறீர்கள்! அவர்களிருபாளயப்பவிஞ்சுக்குச் சமானம்.

## ௭. அதிகாரம்.

[(௧) திருச்சபையின் அலங்காரத்தை விசேஷமாய்ச் சொன்னது. (௰) திருச்சபை தன் விசுவாசத்தையும், விருப்பத்தையும் வெளியிட்டது.]

பிரபுகுமாரத்தியே, பாதரட்சைகளில் உன்னடைகள் எத்தனை யந்தமாயிருக்கின்றன. உன்னிடைகளின் நெளிவுகள் சூஸ்திரக்காரரின் கைவேலையாகிய பூஷணங்களைப்போலிருக்கின்றன. * சங்கீ. ௪௫, ௰௪.

௨. உன் தொப்புள் பானங்குறையாத உருண்டைக்கலயம்போலவும், உன் வயிறு லீலியாபுஷ்பங்களால் சூழப்பட்ட கோதுமை யம்பாரம்போலவுமிருக்கிறது.

௩. * உன்னிரண்டு ஸ்தனங்கள் வெளிமானின் இரண்டு இரட்டைக்குட்டிகளுக்குச் சமானமாயிருக்கின்றன. * ௪, ௫.

௪. உன் கழுத்துத் தந்தத்துருக்கத்தைப்போலவும், உன் கண்கள் எஸ்போனூரிலே பத்ராபிம் வாசலண்டையிலிருக்கிற குளங்களைப்போலவும், உன் மூக்குத் தமஸ்குவின் திசையை நோக்கியிருக்கும் லீபனோனின் கோபுரத்தைப்போலவுமிருக்கிறது. * ௪, ௪.

௫. உன் மீதிலுள்ள உன் சிரம் கர்மேலைப்போலவும், உன் சிரத்தின் மெல்லியமயிர் இரத்தாம்பரப்பட்டைப் போலவுமிருக்கிறது. இராசா நடைகாவனங்களிற் கட்டுண்டவரைப்போலத் தரித்து நின்றுபார்க்கிறார்.

௬. மனமகிழ்ச்சிகளையுண்டாக்குகிற சிநேகிதியே நீ யெத்தனை ரூபமும், எத்தனை யுசிதமுமாயிருக்கிறாய்.

௭. இந்த உன்னுடைய வளர்ச்சி பனைமரத்துக்கும், உன ஸ்தனங்கள திராட்சக்குலைகளுக்கும ஒத்திருக்கிறது.

௮. பனைமரத்திலேறி யதின மடலகளைப பிடிப்பேனென்றேன, இப்போதும உன ஸ்தனங்கள திராட்சச்செடியின குலைகளைப போலவும, உன மூசியின வாசனை கொளுஞ்சிப்பழங்களைப போலவும,

௯. உன தொண்டை உன நேசருக்குள மெதுவாயிறங்குகிறதும, உறங்குகிறவர்களின உதடுகளைப் பேசப்பண்ணுகிறதுமான நலல திராட்சப்பழ இரசத்தைப்போலவு மிருக்கட்டுமே.

௰. * நான என நேசருடையவள, அவர் விருப்பம என்மேலுமிருக்கிறது. * உ, ௰௬. ௬, ௩.

௰௧. வாரும என நேசரே வெளியிலேபோய்க கிராமங்களில இராத்தங்குவோமாக.

௰௨. நாம காலமே திராட்சத்தோட்டங்களுக்குப்போய்த திராட்சச்செடி துளிர்த்து அதின பூ மலருமோவென்றும, மாதளஞ் செடிகள பூப் பூக்குமோவென்றும பார்ப்போமாக, அங்கே என நேச உச்சிதங்களையுமக்குத் தருவேன.

௰௩. தூதாயிமவாசனை தரும, நமமுடைய வாசலகளண்டையிலே சகலவித அருமையான புதியபழைய கனிகளுமுண்டு, என நேசரே உமக்கவைகளை வைத்தேன.

அ. அதிகாரம்.

[(க) கிறிஸ்துவினமேல திருச்சபைக்குண்டாகிய அன்பு. (௬) அன்பின பெருக்கம, (அ) அந்நியமதஸ்தரையழைத்தல, (௰௪) திருச்சபை கிறிஸ்துவருவதற்காக மன்றாடினது.]

ஆ நீர் எனக்கு என தாயினமுலைகளையுண்ட சகோதரனைப்போலிருந்தால தாவனே, அப்போது உம்மைநான வெளியிலே சந்தித்து முத்திசெய்வேன, என்னை நிந்திக்கவுமாட்டார்கள.

௨. நீர் என்னைப்போதிக்கும்படிக்கு உம்மை நான கூட்டிக்கொண்டு, * என தாயின் வீட்டுக்கழைத்துப்போவேன, சம்பாரமிட்ட திராட்சப்பழ இரசத்தையும, என மாதளம்பழங்களின் இரசத்தையும உமக்குக்குடிக்கக்கொடுப்பேன. * ங, ௪.

௩. * அவரிடதுகரம என தலையின கீழிருப்பதாக, அவர் வலதுகரம என்னை யணைப்பதாக. * உ, ௬.

௪. * எருசலேமின குமாரத்திகளே, சிநேகிதிக்கு மனதாகுமளவும, நீங்கள அவளை விழிக்கப்பண்ணாமலும, எழுப்பாமலுமிருக்க உங்களை ஆணையிடுகிறேன. * உ, எ. ங, ரு.

அரு ௬

௫. வனாந்தரத்திலிருந்தெழும்பித் தன நேசனைச்சார்ந்துகொள்ளுகிற இவளார்! கொளுஞ்சிமரத்தின கீழே உம்மையெழுப்பினேன, அங்கே உம்முடையதாய உம்மைப்பெறவேதனைப்பட்டாள, அங்கே பெறவேதனைப்பட்டு உம்மைப்பெற்றாள.

௬. என்னை முத்திரையைப்போல உமது இருதயத்தின்மேலும, முத்திரையைப்போல உமது புயத்தின்மேலும வையும. ஏனெனில, சிநேகம மரணத்தைப்போல வல்லபமும, நேசவைராக்கியம பாதாளத்தைப்போலக்கெட்டியுமாயிருக்கின்றன. அதின தழல அக்கினித்தழலும, கர்த்தரின ஜுவாலையுமாயிருக்கிறது.

௭. * அநேகந்தண்ணீர்கள இந்தச் சிநேகத்தையவிக்கமாட்டாது. நதிகள அதைத்தணிப்பதுமிலலை, ஒருவன தன வீட்டின் ஆஸ்தியையெலலாம இந்தச் சிநேகத்திற்குப்பதிலாகக்கொடுத்தாலும, அவனை மிகவும அசட்டைபண்ணுவார்கள. * உரோ. அ, ௩௫.

௮. நமக்குச் சிறியசகோதரியிருக்கிறாள அவளுக்கு ஸ்தனங்களிலலை, நம்முடைய சகோதரிக்காகப் பேசப்படுமநாளில அவளுக்கென்னசெய்வோம!

௯. அவள மதிலானால அவளமேல * வெளளிக்கோட்டையைக்கட்டுவோம, அவள கதவானால கேதுருப்பலகைகளை யதற்கிணைப்போம. * க. கொரி. ங, ௰௨. ௰௩.

௰. நான மதிலும, என ஸ்தனங்கள கொம்மைகளுமாகையால, அவர் பார்வைக்குச் சமாதானம பெற்றவளைப்போலானேன்.

௰௧. பாகால ஆமோனிலே சாலொமோனுக்குத் திராட்சத்தோட்டமுண்டாயிருந்தது, அந்தத்தோட்டத்தைக் காவலாளிகள வசத்திலே அவனவன ஆயிரம வெளளிக்காசை அதினபலனுக்குக்கொண்டுவரும்படிக்குக் கொடுத்தார்.

௰௨. என்னுடைய திராட்சத்தோட்டமென்க்குமுன்பாகவிருக்கும, சாலொமோனே, உமக்கு அந்த ஆயிரமும, அதின கனியைக் காக்கிறவர்களுக்கு இருநூறும உண்டாகவும,

௰௩. தோட்டங்களில வாசமாயிருக்கிறவளே தோழர் உன சத்தத்தைக்கவனிக்கிறார்கள, அதை நானகேட்கட்டும.

௰௪. என நேசரே * நீர் தீவிரித்துக்கொண்டு கந்தவர்க்கங்களினமலைகளமேல வெளிமானுக்கும, அலலது மானகளின குட்டிக்கும ஒப்பாகும. * உ, ௰௭. அறிவி. உஉ, உ௰.

சாலொமோனுடைய உன்னதமான பாட்டுகளமுடிந்தனமுற்றும.

# ஏசாயாவின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். எ௱௬௰.)

## க. அதிகாரம்.

[(க) ஏசாயா யூதாவின் கலகத்தைக்குறித்து அதன்மேல் முறையிட்டது. (ரு) அதன்மேல் வந்த நியாயத்தீர்ப்பைக் குறித்துப் புலம்பினது. (ய) அது செய்யு மூழியமுறு மையையுங் கடிந்து கொண்டது. (ய௬) வாக்குத்தத்தங்களோடும், பயமுறுத்துதல்களோடும் மனந்திருப்புதலுக்குத் தூண்டினது. (உக) அதினுடைய நியாயாதிபதிகளைக் குறித்து விசனமுற்றுப் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளை அவனுக்குறப்படுத்தினது. (உரு) கிருபைகிடைக்குமென்று வாக்குத்தத்தம்பண்ணினது. (உஅ) துன்மார்க்கருக்கு அழிவு வருமென்று பயமுறுத்தினது.]

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா, யூதாவின் இராசாக்களாகிய உசியா, யோத்தாம், ஆகாஸ், எசேக்கியா என்றவர்களின் நாள்களில் யூதாவின்மேலும், எருசலேமின்மேலுங் கண்டதரிசனம்.

உ. * வானங்களே கேளுங்கள், பூமியே செவிகொடு. ஏனென்றால் கர்த்தர் பேசுகிறார். பிள்ளைகளை வளர்த்துயர்த்தினேன், ஆனால் அவர்கள் நம்மைவிட்டுமருள விழுந்தார்கள். * ரு. மோசே. ௩உ, க. சங்கீ. ருய, க—௪.

௩. மாடுதன் எசமானையும், கழுதை தன்னுடையவனின் முன்னணையையும் அறியும். ஆனால் இஸ்ரவேல் அறிவில்லாமலும், நம்முடைய சனம் உணர்வில்லாமலுமிருக்கிறதென்கிறார்.

௪. ஐயோ, பாவசசாதியும், அக்கிரமத்தாற்பாரமுள்ள சனமும், பொல்லாதவர்களின் வித்தும், கேடுண்டாக்குகிறபுத்திரருமாயிருக்கிறார்கள், கர்த்தரைவிட்டு இஸ்ரவேலின் பரிசுத்தருக்குக் கோபமுண்டாக்கிப் பின்வாங்கிப்போனார்கள்.

ரு. * இனியேன் அடிக்கப்படுவீர்கள், பின்னையும் அதிகமாய் விலகிப்போகிறீர்கள், தலையெல்லாம் வியாதியும், இருதயமெல்லாம் பலட்சயமுமாயிருக்கிறது.

௬. உள்ளங்கால் துவக்கித் தலைமட்டுக்கும் அவனிற சிறப்பில்லாமல் காயமும், வீக்கமும், நொதிக்கிற இரணமுமேயல்லாமல் ஒரு ஆரோக்கியமுமில்லை. [running column: ...அவனிற சிழப்பிறக்கப்படாமலும், கட்டப்படாமலும், எண்ணெயால் ஆற்றப்படா]

அான

மலுமிருக்கிற காயமும், வீக்கமும், நொதிக்கிற இரணமுமேயல்லாமல் ஒரு ஆரோக்கியமுமில்லை.

எ. * உங்கள்தேசம் பாழாயிருக்கிறது, உங்கள் பட்டணங்கள் அக்கினியால் சுட்டுப் போடப்பட்டன. உங்கள் சீமையை மறுசாதியார் உங்கள் முகத்துக்கு முன்பாக அநுபவிக்கிறார்கள், அது மறுசாதியாரால் கவிழ்க்கப்பட்டாற்போலப் பாழாயிருக்கிறது.
* ரு. யோசே. உஅ, ருக. ருஉ.

அ. சீயோன் குமாரத்தி திராட்சத்தோட்டத்திலுள்ள ஒரு குச்சுப்போலவும், வெள்ளரித் தோட்டத்திலுள்ள ஒரு குடிசையைப் போலவும், முற்றிக்கைபோடப்பட்ட பட்டணத்தைப்போலவும் மீந்திருக்கிறாள்.

௯. * சேனைகளின் கர்த்தர் நமக்குக்கொஞ்ச மீதியைவைக்காதிருந்தாரானால், நாம் † சோதோமைப்போலாகிக் கொமோறாவுக்கொத்திருப்போம். * உரோமர். ௯, உ௯.
† க. மோசே. ய௯, உ௪. உரு.

ய. சோதோமின் தலைவர்களே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள், கொமோறாவின் சனமே நமது பராபரனுடைய வேதத்துக்குச் செவிகொடுங்கள்.

யக. * உங்கள் பலிகளின் திரள் நமக்கென்னத்துக்கென்று கர்த்தர் சொல்லுகிறார், ஆட்டுக்கடாக்களின் தகனங்களும், கொழுத்த மிருகங்களின் நெய்யும் நமக்குத் தெவிட்டிப்போயிருக்கிறது. காளைகள் ஆட்டுக்குட்டிகள் கடாக்களுடைய இரத்தத்தின்மேல் நமக்குப் பிரியமில்லை. * ௬௬, ௩. வாக. உக. உஎ. எரே. ௬, உய. யச, யஉ. ஆமோ. ரு, உக-உ௩.

யஉ. நீங்கள் நமது சந்நிதியிலே காணப்படவரும்போது நம்முடைய பிராகாரங்களைமிதிக்கவேணுமென்று உங்கள் கைகளில் கேட்கிறதார்!

ய௩. வீணகாணிக்கைகளை இனிக் கொண்டுவராதேயுங்கள், தூபங்காட்டுதல் நமக்கருவருப்பாயிருக்கிறது, சவைகூடிவரவழைக்கப்படுகிற மாதப்பிறப்பிலும், ஓய்வுநாளிலும் அக்கிரமத்தோடேகூடிய ஆசரிப்பை இனிச் சகிக்கமாட்டோம்.

௰௪. உங்கள் மாதப்பிறப்புகளையும், உங்கள் பண்டிகைகளையும் நம்முடைய ஆத்துமா பகைக்கிறது, அவை நமக்கு வருத்தமாயிருக்கின்றன, அவைகளைச் சுமக்க மெய்சோர்ந்திருக்கிறோம்.

௰௫. நீங்கள் * உங்கள் கைகளை விரித்தாலும், நம்முடைய கண்களை உங்களை விட்டு மறைக்கிறோம், நீங்கள் மிகுதியாய்ச் செபம் பண்ணினாலுங் கேளோம். ஏனெனில், உங்கள் கைகள் இரத்தத்தாலே நிறைந்திருக்கின்றன. * எரேமியா. ௰௪, ௰௨.

௰௬. உங்களைக் கழுவிச் சுத்திகரியுங்கள். * உங்கள் கிரியைகளின் பொல்லாப்பை நம்முடைய கண்களுக்கு மறைவாக அகற்றிவிட்டுத் தீங்குசெய்தலை விட்டோயுங்கள்.
* சங். ௩௪, ௰௫. ஏசேக்கி. ௰௮, ௩௧.

௰௭. * நன்மைசெய்யப்படியுங்கள், நியாயத்தைத் தேடுங்கள். † ஒடுக்கப்பட்டவனைச் சீர்ப்படுத்தி திக்கற்றவன் நியாயத்தையும், விதவையின் வழக்கையும் விசாரியுங்கள்.
* எரே. ௭, ௩. † சங்கீ. ௮௨, ௩.

௰௮. அப்போது வழக்காடுவோம் வாருங்கள். * உங்கள் பாவங்கள் சிவேரென்றிருந்தாலும் உறைந்த மழையைப்போல் வெண்மையாகும், அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும், பஞ்சைப்போலாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங். ௨௫. சச. ௨௨. சங்கீ. ௫௧, ௯.

௰௯. நீங்கள் மனம்பொருந்திக் கேள்விகொடுத்தால் தேசத்தின் நன்மையைப் புசிப்பீர்கள்.

௨௰. மாட்டோமென்றெதிர்த்து நின்றீர்களேயாகில் பட்டயத்துக்கிரையாவீர்கள். ஏனென்றால் கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று.

௨௧. உண்மையுள்ள பட்டணம் எப்படி வேசியாய்ப் போயினது! நியாயத்தால் நிறைந்திருந்தது, நீதி அதிலே வாசமாயிருந்தது. இப்போதோவெனில், அதின் குடிகள் * கொலைபாதகர். மத்தே. ௨௩, ௩௭.

௨௨. * உன் வெள்ளி களிம்பாயிற்று, உன் திராட்சப்பழரசந் தண்ணீர்கலப்பானது.
* ஏசேக்கியேல். ௨௨, ௰௮.

௨௩. உன் பிரபுக்கள் முரடரும், திருடரின் தோழருமாயிருக்கிறார்கள், அவர்களில் எவனும் பரிதானத்தைச் சிநேகித்துக் கைக்கூலிகளை நாடித்தொடருகிறான், * திக்கற்றவனுடைய நியாயத்தை விசாரியார்கள். விதவையின் வழக்கு அவர்களிடத்திலே ஏறுகிறதுமில்லை. * எரேமியா. ௫, ௨௮.

௨௪. ஆகையால் சேனைகளின் கர்த்தரும், இஸ்ரவேலின் வல்லவருமாகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; ஓகோ நாம் நம்முடைய சத்துருக்களில் * கோபமாறி நம்முடைய பகைஞருக்கு நீதியைச் சரிக்கட்டுவோம்.
* உபா. மோசே. ௨௮, ௬௩.

௨௫. நாம் உனக்கு விரோதமாக நம்முடைய கையைத் திருப்பி உன்களிம்பைச் சுத்தமாய்ப் புடமிட்டு, * உன் ஈயத்தையெல்லாம் நீக்கி, * மல்கி. ௩, ௨. ௩.

௨௬. இப்படியே உன் நீதிக்காரரை முன்னிருந்தது போலவும், உன் ஆலோசனைக்காரரை ஆதியிலிருந்தது போலவுந் திரும்பக்கட்டளையிடுவோம், அதின் பிறகு நீ நீதியின் ஊரும், உண்மையுள்ள பட்டணமுமென்னப்படுவாய்.

௨௭. சீயோன் நியாயத்தாலும், அதிலே திரும்புகிறவர்கள் நீதியாலும் மீட்கப்படவேணும்.

௨௮. அநேக பாதகரும், பாவிகளும் ஏகமாய் நொறுங்குண்டு கர்த்தரை விட்டவர்கள் நிர்மூலமாவார்கள்.

௨௯. ஏனெனில், நீங்கள் விரும்பின கர்வாலிய மரங்களினிமித்தம் * வெட்கப்படுவீர்கள். நீங்கள் தெரிந்துகொண்ட தோப்புகளினிமித்தம் நாணமடைவீர்கள். * ௬௨, ௰௭.

௩௰. ஏனென்றால், இலையுதிர்ந்த கர்வாலிய மரத்தைப்போலும், தண்ணீரில்லாத தோப்பைப்போலுமிருப்பீர்கள்.

௩௧ பராக்கிரமன் சணற்கூளமும், அவன் கிரியை அக்கினிப்பொறியுமாகி, அவனும், இதுவும் ஏகமாய் அவிப்பாரில்லாமல் வெந்துபோவதுண்டு.

## ௨. அதிகாரம்.

[(௧) ஏசாயா கிறிஸ்துவின் ராச்சியம் வருவதைக் குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொன்னது. (௬) துன்மார்க்கம் பராபரனைவிடுவதற்குக் காரணமென்றது. (௰) பராபரனுடைய சத்துவம் பொருந்திய மகா உன்னத பிரபலத்துக்கு அஞ்சத்தூண்டினது.]

ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா யூதாவின் மேலும், எருசலேமின் மேலும் வரக்கண்ட வர்த்தமானம்.

௨. * கடைசி நாட்களிற் சம்பவிப்பதேதெனில் கர்த்தருடைய வீட்டின் பருவதம் பருவதங்களின் கொடுமுடியாய்த் திடப்பட்டு மேடுகளிலும் உயரும், எல்லாச் சாதிகளும் அதற்கோடி. * எரேமியா. ௩, ௰௭.
மீகா. ௪, ௧. ௩.

௩. திரளான சனசங்கங்கள் நடந்துவந்து, கர்த்தரின் பருவதத்துக்கும், யாக்கோபின் பராபரனுடைய வீட்டுக்கும் நாம் போய் அவர் தம்முடைய வழிகளை நமக்குப் போதிக்கவும், நாம் போய் அவர் பாதைகளில் நடக்கவும் ஏறுவோம் வாருங்களென்பார்கள். ஏனெனில், * வேதம் சீயோனிலும், கர்த்தரின் வசனம் எருசலேமிலுமிருந்து புறப்படும்.
சங்கீ. ௱௨, லூக்கா. ௨௪, ௪௭.

௪. அவர் சாதிகளுக்குள் நியாயந்தீர்த்துத் திரளான சனசங்கங்களைக் கடிந்துகொள்

ளுவார், அப்பொழுது தஙகள படடயங்களை மண்வெட்டிகளாகவும, தஙகள ஈட்டிகளை அரிவாள்களாகவும அடிப்பார்கள, சாதிக்குவிரோதமாயச்சாதி பட்டயம எடுப்பதில்லை, இனியுத்தத்தைககாப்பதுமில்லை.

௫. யாக்கோபினவீட்டாரே, கர்த்தரினவெளிச்சத்திலே நடப்போமவாருங்கள.

௬. ஆனால யாக்கோபின வீட்டாராகிய உமமுடைய சனத்தைக கைவிடடீர். ஏனெனில, கிழக்குததிசையாரின போதகததால நிறைநது, பெலிஸதரைபபோல நாள் பார்க்கிறவர்களாயிருநது, அன்னியரினபுததிரர்மேலே பிரியபபடுகிறார்கள.

௭. அவர்களதேசமவெள்ளியினாலும, பொன்னினாலும நிறைநதது, அவர்களபொககிசங்களுக்கு முடிவில்லை, அவர்கள தேசங்குதிரைகளாலும நிறைநதது, அவர்கள இரதங்களுக்குமுடிவுமில்லை.

௮. அவர்களதேசம விககிரகஙகளாலும நிறைநதிருககிறது, தஙகளகைகளின கிரியையையும, தஙகளவிரலகளஉணடுபணணினதையும பணிநதுகொளளுகிறார்கள.

௯. சிறியவனுவந்தனிகிறான, பெரியவனும பணிகிறான, ஆகையால, அவர்களுக்கு மன்னியாதிருபபீர்.

௰. கர்த்தரினபயஙகரததினாலும, அவர்முக்கியததினமகததுவததினாலும, நீ கலமலையில ஒதுஙகிமணணிலொளிததுககொள.

௰௧. * நரரின மேட்டிமையான கணகள தாழநது, மனுஷரினவீறாப்புததணியும, அநநாளிலே கர்த்தர் ஒருவரே உயர்நதிருபபார். * ௫, அதிகாரம. ௰௫.

௰௨. ஏனெனில, தாழமையுணடாகச்சேனைகளுடையகர்த்தரினநாள்பெருமையும, மேட்டிமையுமானவையெல்லாவறறினமேலும, உயர்நதவையெல்லாவறறினமேலும,

௰௩. லீபனோனிலுள்ள உயரமும, ஓஙகலுமான எல்லாககேதுருக்களினமேலும, பாசானிலுள்ள எல்லாக கர்வாலிமரஙகளின மேலும,

௰௪. உயரமானஎல்லாப பர்வதஙகளினமேலும, மேட்டிமையானஎல்லாககுனறுகளின மேலும,

௰௫. உயர்நதஎல்லாக கோபுரததினமேலும, அரணான எல்லாமதிலினமேலும,

௰௬. தர்ஷீசினகபபலகளெல்லாவறறினமேலும, அருமையான எல்லாச்சித்திரஙகளின மேலுமவரும.

௰௭. அபபோது நரரினமேட்டிமைதாழ்நது மனுஷரினவீறாப்புததணியும, அநநாளில கர்த்தர் ஒருவரே உயர்நதிருபபார்.

௰௮. விககிரகஙகளோவெனில கட்டோடேயொழிநதுபோம.

௰௯. பூமியைத தத்தளிககபபணணககர்த்தர் எழுமபுமபோது அவர் பயஙகரததினாலும, அவர் முககியததின மகததுவததினாலும கனமலைகளினகெபிகளிலும, மணணின குழிகளிலும புகுநதுகொளளுவார்கள. * லூக்கா. ௨௩, ௩௰.

௨௰. பூமியைத்தத்தளிககபபணணக கர்த்தர் எழுமபும அநநாளிலே அவர்பயஙகரததினாலும, அவர்முககியததின மகததுவததினாலுஙகனமலைகளினவெடிப்புகளிலும, குன்றுகளின சநதுகளிலும புகுநதுகொளளும படிககு,

௨௰௧. மனுஷன பணிநதுகொளளத தனககுணடாககியிருநத * தன வெளளிவிககிரகஙகளையும, தன பொனவிககிரகஙகளையும, மூஞ்சூறுகளுககும, வௌவால்களுககும எறிநதுவிடுவான. * ௩௰, ௨௨. ௩௧, ௭.

௨௰௨. மூக்கிலேசுவாசமுளளமனுஷனைநமபுவதைவிட்டோயுஙகள. ஏனெனறால, அவன எமமாத்திரமெனறெணணபபடலாம.

## ௩. அதிகாரம்.

[(௧) பாவததினாலேவருகிறபெரியகலககமும. (௯) மனிதரினகுணஙகெட்டதனமையும, (௰௨) நியாயாதிபதிகளுடைய பேராசையும, கொடுமையும, (௰௬) ஸதிரிகளுடைய கர்வததைக குறிததிருககும நியாயததீர்ப்பும் சொலலபபட்டது.]

ஏனெனில, இதோ சேனைகளின கர்த்தராகிய ஆணடவர் ஆதரவுக கோலையும, தடியையும, * அபபமெனற எல்லா ஆதரவுககோலையும, தணணீரெனற எல்லா ஆதரவுககோலையும, * எசேககி. ௪, ௰௬. ௰௭.

௨. பராககிரம சாலியையும, யுததவீரனையும, நியாயாதிபதியையும, தீர்க்கதரிசியையும, சாஸதிரியையும, மூப்பனையும,

௩. ஐமபதுககுச்சேர்வைககாரனையும, கனமுகமானவனையும, ஆலோசனைசொலலுகிறவனையும, தொழிலாளிகளில ஞானமுளளவனையும, சாதுரியககாரனையும எருசலேமிலும, யூதாவிலுமிருநதுவிலககுவார்.

௪. அவர்களுக்கு வாலிபரை பிரபுககளாகததருவோமெனகிறார். * பிளளைகள அவர்களையாளுவார்கள. * பிரச. ௰, ௰௬.

௫. சனம ஒடுககபபடும, ஒருவருககொருவரும, அயலாருககயலாரும விரோதமாயிருபபார்கள, கிழவனுககிளைஞனும, கனமுடையவனுககுக கனஈனனும இடுமபுசெயவார்.

௬. உனககுவஸதிரமிருககிறது, எஙகளதலைவனாயிரு, கேடடுககனமான இநதககாரியம உனகையினகீழாகாதாகவெனறு அப போதொருவன தனதகபபனவீட்டாளுகிய தனசகோதரனைபபிடிததால,

௭. இவன அநநாளிலே கையையுயர்ததி நானஇரணவயிததியனாயிருககமாட்டேன, எனவீட்டிலே அபபமுமிலலை வஸதிரமு

மில்லை, என்னைச்சனத்தின் தலைவனாக்கவேண்டாமென்பான்.

அ. ஏனெனில், எருசலேம் இடறி யூதா விழுந்துபோம். அதேனென்றால், அவர்கள் நாவும், அவர்கள் கிரியைகளும் கர்த்தருடைய மகிமையின் கண்களுக்கு எரிச்சலுண்டாக்கத்தக்கவைகளாய் அவருக்கு விரோதமாயிருக்கின்றன.

கூ. அவர்களுகங்களின் ஓட்டாரம் அவர்களுக்கு விரோதமாய்ச் சாட்சியிடும், அவர்கள் சோதோமரைப்போலே தங்கள் பாவத்தைமறைக்காமற் கூறுகிறார்கள், அவர்கள் ஆத்துமாவுக்கு ஐயோ, ஏனெனில், ❊ தங்களுக்குத் தீமையைக்கட்டிக்கொள்ளுகிறார்கள். * ஓசே. ௰௩, கூ.

௰. ❊ நன்றாயிருப்பீர்களென்று நீதிமானகளுக்குச்சொல்லுங்கள். ஏனெனில், தங்கள் கிரியைகளின் கனியைப்புசிப்பார்கள்.
❊ சங்கீதம். ருஎ, ரு௱.

௰க. பொல்லாத ஆகாமியக்காரனுக்கு ஐயோ, ஏனெனில், அவன்கைகளின்பலன் அவனுக்குண்டாகும்.

௰உ. பிள்ளைகள் நமது சனத்தின் வாத்தக்காரராயிருக்கிறார்கள், ஸ்திரிகள் அதையாளுகிறார்கள், நமது சனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னைமோசம்போக்கி, நீ நடக்கவேண்டின வழியைவிழுங்குகிறார்கள்.

௰ங. கர்த்தர் வழக்காட எழுந்திருந்து, * சனசமூகங்களை நியாயந்தீர்க்க நிற்கிறார்.
* சங்கீதம். கூ, அ. கூ.

௰ச. கர்த்தர் தமது சனத்தின் மூப்பரோடும், அதின் பிரபுக்களோடும் நியாயத்துக்குட்பிரவேசிப்பார். ஏனெனில், நீங்களே இந்தத்திராட்சத்தோட்டத்தை மேய்ந்துவிட்டீர்கள், சிறுமையானவனுடைய கொள்ளையுங்கள் வீடுகளிலிருக்கிறது.

௰ரு. நீங்கள் நமது சனத்தை நொறுக்கிச் சிறுமையானவர்களின் முகத்தை நெரித்துவிடுகிறதென்னவென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.

௰சு. பின்னையுங்கர்த்தர் சொல்லுகிறதாவது; சீயோனுடைய குமாரத்திகள் அகந்தையாயிருந்து கழுத்தைநெரித்து நடந்து கண்களால் மருட்டிப்பார்த்துத் தத்தித் தத்தி நடந்து தங்கள் கால்களிற பாடகங்களைப் போட்டுத்திரிகிறபடியினாலே,

௰எ. ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் உச்சந்தலையைமொட்டையாக்குவார், கர்த்தர் அவர்கள் மானத்தை அம்மணமாக்குவார்

௰அ. அந்நாளிலே ஆண்டவர் பாடகங்களின் சிங்காரத்தையும், சுட்டிகளையும், பிறைச்சிந்தாக்குகளையும்,

௰கூ. ஆரங்களையும், சரிகளையும், மினுக்கு வஸ்திரங்களையும்,

உ௰. தலையின் ஆபரணங்களையும், அஸ்த கடையங்களையும், சரப்பளிகளையும், மார்க்கச்சைகளையும், உருவல்களையும்,

உக. மோதிரங்களையும், மூக்குத்திகளையும்,

உஉ. மாற்றுடைகளையும், சால்வைகளையும், போர்வைகளையும், குப்பிகளையும்,

உங. கண்ணாடிகளையும், மெல்லியபுடவைகளையும், குல்லாக்களையும், முக்காடிச்சல்லாக்களையும் விலக்குவார்.

உச. சம்பவிப்பதேதென்றால் சுகந்தவர்க்கத்துக்குப்பதிலாகத் துர்க்கந்தமும், கச்சைக்குப்பதிலாகப்பீறலும், மயிர்ச்சுருளுக்குப்பதிலாக மொட்டையும், தளதளப்பான வஸ்திரங்களுக்குப்பதிலாக ரட்டுடுக்குதலும், அழகுக்குப்பதிலாகக் கருகிப்போகுதலுமிருக்கும்.

உரு. உன்மனுஷர் யுத்தவெட்டினாலும், உன்பெலசாலிகள்படையிலும்விழுவார்கள்.

உசு. அவளுடையவாசல்கள் சஞ்சலமும் துக்கமுமாயிருக்கும், அவள்வெறுமையாய்த் தரையிலுட்காருவாளென்கிறார்.

## ச. அதிகாரம்.

[மிகுந்தவுபத்திரவத்திலே கிறிஸ்துவினிராச்சியம் அடைக்கலஸ்தானமாயிருக்குமென்றது.]

ஏழுஸ்திரிகள் ஒரேபுருஷனையந்நாளிற் பிடித்து, நாங்களெங்கள் அப்பத்தையேபுசித்து எங்கள் வஸ்திரங்களையே யுடுப்போம், எங்கள் நிந்தையைநீக்க உன்பேர்மாத்திரம் எங்கள்மேலிடப்படட்டுமென்பார்கள்.

உ. இஸ்ரவேலிலதப்பினவர்களுக்கு அக்காலத்திலே கர்த்தருடைய ❊ முளை சிங்காரமும், மகிமையும், பூமியின்கனி முக்கியமும், அலங்காரமுமாயிருக்கின்றன. ❊ ௰க, க. எரேமி. உங, ரு.

ங. அப்போது சம்பவிப்பதேதெனில், ஆண்டவர் நியாயத்தின் ஆவியினாலும், சுத்திகரிப்பின் ஆவியினாலுஞ் சீயோன்குமாரத்திகளின் ஊத்தையைக்கழுவி, எருசலேமின் இரத்தப்பழிகளை அதின் நடுவிலிருந்து நீக்கிவிட்டபோது,

ச. சீயோனில் மீந்து எருசலேமிற் பின்வைக்கப்பட்டிருக்கிறவன் பரிசுத்தனென்றழைக்கப்படுவான், எருசலேமிற் சீவனுக்கென்றெழுதப்பட்டவனெல்லாந்தானே.

ரு. அப்போதுகர்த்தர் சீயோன் பருவதத்தினுடைய எல்லாவாசஸ்தலத்தின்மேலும், அதினுடைய சபைகளின்மேலும், பகலிலிருக்கும் மேகத்தையும், புகையையும், இரவிலேகொழுந்துவிட்டெரியும் அக்கினியின் பிரகாசத்தையுஞ்சிருட்டிப்பார். ஏனெனில், மகிமையானவைகளின்மேலெல்லாம் மறைவுண்டாயிருக்கும்.

சு. ❊ பகலிலே வெயிலுக்கு நிழலாகவும்,

பெருவெள்ளத்துக்கும், மழைக்கும், அடைக்கலமாகவும், மறைவிடமாகவும், ஒருகூடாரமுண்டாயிருக்கும். * உடு, ௪.

## ரு. அதிகாரம்.

[(௧) திராட்சத்தோட்டத்தின் உவமையைக் கொண்டு பராபரன் தமது கொடியநியாயத்தீர்ப்பை அறிவித்தது. (அ) பொருளாசையின்மேலும், (௰௧) காமத்தின்மேலும், (௰௩) அவபத்தியின்மேலும், (உ௰) அநியாயத்தின்மேலுமுண்டாகிய பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளையும், (உ௬) அவைகளை நிறைவேற்றுகிறவர்களையுங்குறித்தது.]

என்னேசருடைய திராட்சத்தோட்டத்தின்மேலே எனக்குப் பிரியமாயிருக்கிற அவருக்காக அவருடைய பாட்டைப் பாடுவேனாக, என் பிரியருக்கு மகா செழிப்பான மேட்டிலே * ஒருதிராட்சத்தோட்டமிருக்கிறது. * மத்தே. உக, ௩௩—௪௧.

௨. அவர் அதை வேலியடைத்து, அதைக் கலபொறுக்கி, அதிலே நற்குல திராட்சச் செடிகளை நட்டு, அதின் நடுவிலொரு கோபுரத்தைக்கட்டி, அதிலே ஆலையையும்நாட்டி, அது நல்ல திராட்சப்பழங்களைத் தருமென்று காத்திருந்தார். ஆனால், அது கசப்பான பழங்களைத்தந்தது.

௩. இப்போதும் எருசலேமின் குடிகளே, யூதாவின் மனுஷரே, நமக்கும், நமது திராட்சத்தோட்டத்துக்கும் நியாயந்தீருங்கள்.

௪. நாம் நமது திராட்சத்தோட்டத்துக்காகச்செய்யாத ஏதுவில்லை யதற்கினிச் செய்யலாம்! பின்னை நல்ல திராட்சப்பழங்களைத் தருமென்று * நாம் காத்திருக்கும்போது அது கசப்பான பழங்களைத் தந்ததென்ன!

௫. இப்போது நாம் நமது திராட்சத்தோட்டத்துக்குச்செய்வதை யுங்களுக்கறிவிப்போம். அது மேய்ந்துபோடப்படுவதற்காக அதின் வேலியை வாங்கிப்போடுவோம். அது மிதியுண்பதற்காக அதின் அடைப்பையுடைத்தெறிப்போம்.

௬. அதைப் பாழாக்கிவிடுவோம். அதின் கிளை நறுக்கப்படாமலும், களைகொத்தியெடுக்கப்படாமலும் போவதினால், முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமுளைக்கும் அதின்மேல மழையை வருஷிக்கப்பண்ணாதபடிக்குமேகங்களுக்குங் கற்பிப்போமென்கிறார்.

௭. ஆனாற் சேனைகளுடையகர்த்தரின் திராட்சத்தோட்டம் இஸ்ரவேலின் வீடும், அவர் மனமகிழ்ச்சியின் நாற்று யூதாவின்மனுஷருந்தானே. அவர் நியாயத்திற்குக் காத்திருந்தார். ஆனால் இதோ, கேடு நீதிக்குங் காத்திருந்தார். ஆனால் இதோ அலறுதல்.

அாயக

அ. * நீங்கள் மாத்திரந்தேசத்தின் நடுவில வாசமாயிருக்கும்படிக்கு இனி இடமில்லாமற போகுமட்டும் வீட்டோடே வீட்டைச் சேர்த்து வயலோடேவயலைச்சேர்ப்பண்ணுகிற உங்களுக்கு ஐயோ. * மீகா. உ, உ.

௯. அது சேனைகளின் கர்த்தராயிருக்கிற நம்முடைய செவிகளுக்குப்பட்டது. மெய்யாகவே அநேகந் திரளானவீடுகள் பாழாகும், பெரியவைகளும், நேர்த்தியானவைகளும் குடியில்லாமலிருக்கும்.

௰. பத்தேர் நிலமாகிய திராட்சத்தோட்டம் ஒரேகுருணிதரும், ஒரு கலவிதை யொருகுருணிதரும்.

௰௧. * கர்த்தரின் கிரியையை நோக்காமலும், அவர் கரங்களின்செய்கையைப்பாராமலும், லொட்டியை நாட அதிகாலமே யெழுந்து இருட்டிப்போகுமளவும், மதுபானந் தங்களைச் சூடாக்கும்படியாய்த் தரித்திருந்த, * ஆமோஸ். ௬, ௩—௬.

௰௨. தங்கள் விருந்துகளிற் சுரமண்டலத்தையும், தம்புரையும், மேளத்தையும், நாகசுரத்தையும், மதுபானத்தையுமவைத்திருக்கிறவர்களுக்கு ஐயோ.

௰௩. ஆனதுகொண்டு நமது சனம் அறிவில்லாமையினாலேசிறைப்பட்டுப்போகும். அதின் கனமுள்ளவர்கள் பட்டினியினாலே தொய்வார்கள். அதின் திரளானகுடிப் தவனத்தால் நாவறண்டுபோகும்.

௰௪. ஆனதுகொண்டு அவர்களமகிமையும், அவர்கள் திரளும், அவர்கள் சந்தடியும், அவர்களிற் களிகூருகிறவர்களும் பாதாளத்திலிறங்கிப்போக அது தன்னுளேசை விரிவாக்கி தன்வாயை ஆவென்று மட்டில்லாமலே திறந்தது.

௰௫. அப்படியே சிறியவனும், குனியப்பண்ணப்பட்டுப் பெரியவனுந் தாழ்ந்துபோவான். மேட்டிமையானவர்களின்கண்கள்தாழும்.

௰௬. ஆனாற் சேனைகளின் கர்த்தர் நியாயத்தீர்ப்பினாலுயர்ந்து பரிசுத்த பராபரன் நீதியினாலே பரிசுத்தமுள்ளவராய் விளங்குவார்.

௰௭. அப்போது ஆட்டுக்குட்டிகள் தங்கள் வாடிக்கையாய்த் தொழுவத்திலே மேயும். கொழுப்பானவர்களுக்கிருந்து பாழாய்ப்போனவைகளைப் பரதேசிகளனுபவிப்பார்கள்.

௰௮. மாயையின் கயிறுகளால் அக்கிரமத்தையும், வண்டில் வடங்களாலே பாவத்தையும் இழுத்து வந்து,

௰௯. அவர் தீவரித்துச் சீக்கிரமாய் நாம் பார்க்கத் தமது கிரியையை நடப்பிக்கட்டுமென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் ஆலோசனை நாமறியும்படிக்குச் சேர்ந்து வரட்டுமென்றுஞ் சொல்லுகிறவர்களுக்கு ஐயோ.

௨௰. தீமையை நன்மையென்றும், நன்மையைத் தீமையென்றுஞ் சொல்லி, இருளை வெளிச்சமும், வெளிச்சத்தை இருளுமாக்கிக் கசப்பைத் தித்திப்பும், தித்திப்பைக் கசப்புமாக்குகிறவர்களுக்கும் ஐயோ.

௨௧. * தங்கள் பார்வைக்கு ஞானிகளும், தங்கள் எண்ணத்துக்குப் புத்திமான்களுமாயிருக்கிறவர்களுக்கு ஐயோ. * வாக்கி. ௩, ௭. ௨ரோ. ௰௨, ௰௬.

௨௨. மதுவைக்குடிக்கப் பராக்கிரமரும், லொட்டியைக் கலந்துவைக்கப் பெலசாலிகளுமாயிருந்து,

௨௩. * குற்றவாளியைப்பரிதானத்தினிமித்தங் குற்றமற்றவர்களாக்கி நீதிமான்களின் நியாயத்தை யவர்களைவிட்டு விலக்குகிறவர்களுக்கு ஐயோ. * வாக்கி. ௰௭, ௰௫.

௨௪. இதினிமித்தமாக அக்கினிச்சுவாலை வைக்கோலைப்பட்சிக்கும்போதும், செத்தை நெருப்புக்கிரையாகித்தணியும்போதும் அவர்கள் வேர் வாடி அவர்கள் துளிர் தூசியைப்போலப்பறந்து போம். ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தரின் வேதத்தை வெறுத்து இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் வசனத்தை யசட்டைபண்ணினார்கள்.

௨௫. ஆகையால் கர்த்தருடைய கோபந் தமது சனத்துக்கு விரோதமாய் மூண்டது. அவர் தமது கையை அதற்குவிரோதமாக நீட்டிப்பாருவதங்கள் அதிரத்தக்கவிதமாகவும், அவர்கள் பிணங்கள் நடுவீதிகளிற் குப்பைபோலாகத்தக்கவிதமாகவும் அதையடித்துப்போடுவார். * இதிலேயெல்லாம் அவருடைய கோபமாறாமல் அவருடைய கை யின்னம் நீட்டினதாயிருக்கிறது. * ௯, ௰௨. ௰௭, ௨௧. ௰, ௪.

௨௬. அவர் தூரத்திலுள்ள சாதியாருக்கு ஒரு கொடியையேற்றி அவர்களைப் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து அவர்பயில்காட்டியழைப்பார். அப்போது இதோ தீவிரமும், வேகமுமாய்வருவார்கள்.

௨௭. அவர்களில் விடாயத்தவனும், இடறுகிறவனுமில்லை. அவர்களிலொருவனுடைய இடுப்பின்கச்சை அவிழ்வதும், பாதரட்சைகளின்வார் அறுந்துபோவதுமில்லை.

௨௮. அவர்கள் அம்புகள் கூர்மையும், அவர்கள் விற்களெல்லாம் நாணேற்றினவைகளும், அவர்கள் குதிரைகளின் குளம்புகள் கற்பாறையாக எண்ணப்பட்டவைகளும், அவர்கள் உருளைகள் புசலுக்கொத்தவைகளுமாயிருக்கும்.

௨௯. அவர்கள் கெர்ச்சிப்பு துஷ்டசிங்கத்தினுடையது. சிங்கக்குட்டிகளைப்போலக் கெர்ச்சித்து, உறுமி, இரையைப் பிடித்து அதைத் தப்புவிக்கிறவனில்லாமல் எடுத்துப் போய்விடுவார்கள்.

௩௰. அவர்கள் அந்நாளிலே சமுத்திரஇரைச்சலுக்குச் சரியாய் அதின்மேல் இரைவார்கள். அப்போது தேசத்தைப்பார்த்தால் இதோ, * அந்தகாரமும், வியாகுலமுமுண்டு. அதின் பாழ்க்கடிப்பின்மேல் வெளிச்சம் இருண்டிருக்கும். * ௮, ௨௨.



## ௬. அதிகாரம்.

[(௧) ஏசாயா தரிசனத்தில் மகிமையையுடைய கர்த்தரைக்கண்டு, (௫) நடுங்கித்தன் சமாசாரத்தை யறிவிக்க விதிரப்பட்டது. (௯) அறிவுவரைக்குஞ் சனங்களின் மனக்கடினத்தைக் காட்டினது. (௰௩) மீதியானவர்கள் இரட்சிக்கப்படுவார்களென்றது.]

உசியா இராசா மரணமடைந்தவருஷத்திலே * ஆண்டவர் உயரமும், உன்னதமுமான ஆசனத்தின்மேல் உட்கார்ந்திருக்கக்கண்டேன். அவருடைய வஸ்திரத்தொங்கல்கள் தேவாலயத்தை நிரப்பின. * ௨. நாளா. ௨௬, ௨௩. ௨ மோ. ௨௪, ௰.

௨. சேராபீன்கள் அவருக்குமேலாக நின்றார்கள். அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவ்வாறு செட்டைகளிருந்தன. அவனவன் இரண்டு செட்டைகளால் தன்தன் முகத்தை மூடி இரண்டு செட்டைகளால் தங்கள்கால்களைமூடி இரண்டுசெட்டைகளால் பறந்து,

௩. சேனைகளுடைய கர்த்தர் * பரிசுத்தர் பரிசுத்தர் பரிசுத்தர், * * பூமியனைத்தும் அவர்மகிமையால் நிறைந்திருக்கிறதென்று ஒருவரோடொருவர் கூப்பிட்டுச் சொன்னார்கள். * அறிவி. ௪, ௮. * * சங்கி. ௭௨, ௰௯.

௪. வாசல்களின் நிலைகள் கூப்பிடுகிறவர்களின் சத்தத்தால் அசைந்து * வீடு புகையினால் நிறைந்தது. * ஏசேக்கி. ௰, ௪.

௫. அப்போது நான் எனக்கு ஐயோ, ஏனென்றால், நான் அசுத்த உதடுகளுள்ள மனுஷனும், அசுத்த உதடுகளுள்ள சனத்தின் நடுவில்வாசமாயிருக்கிறவனுமாகையால் அதமாவேனே, ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தராகிய இராசாவை என் கண்கள் கண்டனவென்றேன்.

௬. அன்றைச் சேராபீன்களிலொருவன் பலிபீடத்திற் குறட்டாலெடுத்த ஒரு கட்டை நெருப்பைத் தன் கையிலே பிடித்திருந்து என்னண்டைக்குப் பறந்துவந்து,

௭. அதினால் என்வாயைத்தொட்டு இதோ, இது உன்னுதடுகளைத்தொட்டதினால் உன் அக்கிரமம் நீங்கி உன் பாவம் நிவிர்த்தியானதென்றான்.

௮. அதின்பிறகு ஆரையனுப்புவோம்? ஆர் நங்கள் காரியமாய்ப்போவானென்றுரைக்கிற ஆண்டவருடைய சத்தத்தைக் கேட்டேன். அதற்கு நான் இதோ, அடியேன் இருக்கிறேன். என்னை யனுப்புமென்றேன்.

௯. அப்போது அவர் சொன்னதாவது; நீ போய் இந்தச்சனத்துக்கு * நீங்கள் காதா

ரக்கேட்டும் உணராமலும், கண்ணுரைக்கண்டும் அறியாமலுமிருங்களென்று சொல்லு. * மத்தே. ௰௩, ௰௪. ௰௫. மாற்கு. ௪, ௰௨. லூக்கா. ௮, ௰. அப்போஸ். ௨௮, ௨௫—௨௭.

௰. இந்தச் சனந் தங்கள் கண்களினுலே காணுமலும், தங்கள் காதுகளினுலே கேளாமலும், தங்களிருதயத்தினுல உணர்ந்துமனந்திரும்பாமலும், நாம் அதை ஆரோக்கியமாக்காமலுமிருக்க நீ * அதின் இருதயத்தை நிணத்ததாக்கி அதின் காதுகளை மந்தப்படுத்தி அதின் கண்களை மூடிப்போடென்றார். * உ௧, ௰—௰௨ ரு. மோசே ௨௮, ௨௧. யோவான். ௰௨, ௪௰. உரோமர். ௰௧, ௮.

௰௧. அப்பொழுது ஆண்டவரே, எந்தமட்டும் என்றேன். அவர் சொன்னதாவது; பட்டணங்கள் குடியில்லாமலும், வீடுகளும் மனுஷசஞ்சாரமில்லாமலும் பாழாகிப் பூமி அவாந்தரவெளியாகுமட்டுந்தானே.

௰௨. ஏனெனில் கர்த்தர் மனுஷரைத்தூரமாக விலக்குவதினுலே தேசத்தின் நடுமையம் மகாவெறுமையாகிவிடப்படும்.

௰௩. ஆகிலும் அதிலே இன்னம் பத்திலொரு பங்கிருந்தும் அது திரும்ப நிர்மூலமாக்கப்படும், கர்வாலியமரமும், இச்சிலமரமும் இலையற்றுப்போனபிறபாடு அதின் அடிமரமிருக்கிறதுபோலே அவைகளின் அடிமரமுமிருந்துபரிசுத்தவித்தாயிருக்குமென்றார்.

## ௭. அதிகாரம்.

[(௧) ஆகாசு ரேத்சீனுலும், பெக்காவினுலுங் கலங்கி நின்றபோது ஏசாயாவினுலே ஆறுதலடைந்தது. (௰) அவன் ஒரு அடையாளத்தைத்தெரிந்துகொள்ள இடம்பெற்றும், அலுத்விலகிக் கிறிஸ்துவருகையின் வாக்குத்தத்தத்தை அடையாளமாகப் பெற்றுக்கொண்டது. (௰௭) அவனுக்கு அசூரியாவைக்கொண்டு நியாயத்தீர்ப்புவருமென்று தீர்க்கதரிசனஞ்சொல்லப்பட்டது.]

உசியாவினுடையகுமாரனுகிய யோதாமின்குமாரன் ஆகாசென்றயூதாவுடைய இராசாவின் நாள்களிலே சம்பவித்ததேதென்றால் * ரேத்சீன் என்ற சூரியாவின் இராசாவும், ரெம்லியாவின் குமாரனுகிய பெக்காவென்ற இஸ்ரவேலுடைய இராசாவும் எருசலேமின்மேல் யுத்தம்பண்ணவந்தேறி அதைப் பிடிக்கமாட்டாதேபோனார்கள். * ௨. இராசா. ௰௫, ௫.

௨. சூரியர் எப்பிராயீமைச்சார்ந்திருக்கிறார்களென்று தாவீதின் வீட்டுக்கறிவிக்கப்பட்டபோது அவனிருதயமும், அவன்சனத்தினிருதயமுங்காட்டிலேமரங்கள்காற்றினுலேதத்தளிக்குமாப்போலேதத்தளித்தன.

௩. அப்பொழுது கர்த்தர் ஏசாயாவுடனே சொன்னதாவது; இப்பொழுது நீயும், உன்மகன்சேயார்யாசூபுமாயவண்ணார்துறைவழியிலுள்ள மேற்குளத்துப்பத்தின் கடைசிமட்டும் ஆகாசுக்கெதிர்கொண்டுபோய்,

௪. நீ அவனுடனே சொல்லவேண்டியதேதெனில் நாம் யூதாவுக்கு விரோதமாய்ப்போயேறி அதை யிறுக்கப்பிடித்து அதை நமக்குள்ளேபங்கிட்டுக்கொண்டுதபேயாலின்குமாரனை அதில்இராசாவாக்கி அரசாளப்பண்ணுவோமென்று,

௫. சூரியன் எப்பிராயீமோடும், ரெமலியாவின்மகனோடுங்கூட உனக்குவிரோதமாயப்பொல்லாத ஆலோசனையைப்பண்ணினதினிமித்தம்,

௬. நீ பயப்படாமல் அமர்ந்திருக்கப்பார், புகைகிற இரண்டு அடிக்கொள்ளிகளாகிய சூரியரோடேவந்த ரேத்சீனும், ரெம்லியாவின்மகனும் எரிகிறகோபத்தினிமித்தம் உன்னிருதயந்தளரவேண்டாம்.

௭. அது நிலைநிற்பதுமில்லை. அது அப்படியாவதுமில்லையென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

௮. ஏனென்றால் சூரியாவின்தலைப்பட்டணந் தமஸ்குவும், தமஸ்குவின் தலைவன் ரேத்சீனுந்தானே. இன்னம் அறுபத்தைந்து வருஷங்களிலே எப்பிராயீம், சனமாயிராதபடிக்கு நொறுங்கப்படும்.

௯. * இப்போதோ எப்பிராயீமின் தலைப்பட்டணஞ்சமாரியாவும், சமாரியாவின்தலைவன்ரெம்லியாவின் மகனுந்தானே. நீங்கள் விசுவாசியாதேபோனால் நிலைப்படமாட்டீர்களென்றுசொல்லென்றார்.

௰ அப்புறங் கர்த்தர் ஆகாசைப்பார்த்துப்பேசி.

௰௧. உன் பராபரனுகிய கர்த்தரிடத்தில் ஒரு அடையாளத்தையுனக்குக்கேள். அதை பாதாளத்திலேயாகிலும், உயர உன்னதத்திலேயாகிலுமிருந்துண்டாகக் கேளென்று சொன்னார்.

௰௨. ஆகாசோவென்றால், அதை நான்கேளேன். நான்கர்த்தரைப்பரிட்சைபாராதிருப்பேனென்றான்.

௰௩. அப்பொழுது ஏசாயாசொன்னதாவது; இப்போது தாவீதின்வீட்டாரே கேளுங்கள். மனுஷரை விசனப்படுத்துகிறது உங்களுக்கொருசககாரியமாயக்காணுகிறதென்று என்பராபரனையுமவிசனப்படுத்துகிறீர்களோ!

௰௪. ஆனதுகொண்டு ஆண்டவர் தாமாய் உங்களுக்கொரு அடையாளத்தைக்கொடுப்பார். * இதோ ஒரு கன்னியாஸ்திரி கர்ப்பவதியாகி ஒருகுமாரனைப்பெறுவாள். அவருக்கு இம்மானுவேலென்றுபேரிடுவாள்.
* மத்தேயு ௧, ௨௩. லூக்கா. ௧, ௩௧.

௰௫. தீமையைவெறுத்து நன்மையைத்தெரிந்துகொள்ள அறியும்வயதுமட்டாக அவர் வெண்ணெயும், தேனுஞ் சாப்பிடுவார்.

௰௬. இந்த இளைஞன் தீமையை வெறுக்கவும், நன்மையைத் தெரிந்துகொள்ளவும் அறிகிறதற்கு முன்னே நீர் அருவருக்கிற தேசம் அதின் இரண்டு இராசாக்களாலும் விடப்பட்டதாயிருக்கும்.

௰௭. ஆனால் எப்பிராயீம் யூதாவைவிட்டுப் பிரிந்த நாள்முதற்கொண்டு வராதிருக்கிற நாட்களைக் கர்த்தர் உம்முடையமேலும், உம்முடைய சனத்தின்மேலும், உம்முடைய பிதாவுடைய வீட்டின்மேலும் அசூரியாவின் இராசாவினாலே வரப்பண்ணுவார்.

௰௮. பின்னையுஞ் சம்பவிப்பதாவது; கர்த்தர் எகிப்தினுடைய நதிகளின் கடையாந்தரத்திலுள்ள ஈக்களையும், அசூரியாதேசத்திலிருக்குந் தேனீக்களையும் பயில்போட்டழைப்பார்.

௰௯. அவைகள் வந்து ஏகமாய் வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலும், கன்மலைகளின் வெடிப்புகளிலும், எல்லா முள்ளுக்காடுகளிலும், எல்லாச் சாலைகளிலுந் தங்கும்.

௨௰. அக்காலத்திலே ஆண்டவர் * கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியாகிய நதிக்கக்கரையான அசூரியாவின் இராசாவினாலே சிரசையும், கால்களின் மயிரையுஞ் சிரைப்பித்து, தாடியையும் வாங்கிப்போடுவிப்பார். * ௰,௫

௨௧. அக்காலத்திலொருவன் ஒரு கிடாரியையும், இரண்டாடுகளையும் வளர்த்தால்,

௨௨. அவன் அவைகள் பரிபூரணமாய்ப் பால்கறக்கிறபடியினாலே வெண்ணெயைச் சாப்பிடுவதுமன்றி, தேசத்தின் நடுவில் மீதியாயிருப்பவனெல்லாம் வெண்ணெயையுந், தேனையுமே சாப்பிடுவான்.

௨௩. பின்னையுஞ் சம்பவிப்பதேதெனில், ஆயிரம் வெள்ளிக்காசு பெறும் ஆயிரந் திராட்சச்செடியிருந்த நிலமெல்லாம் முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமாம்.

௨௪. அம்புகளையும், வில்லையும் பிடித்து அங்கே போகவேண்டியதாயிருக்கும். ஏனெனில், தேசமனைத்தும் முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமாயிருக்கும்.

௨௫. குந்தாளியாலே கொத்தப்படுகிற எல்லா மலைகளுமுண்டே, அங்கேயுள்ள முட்செடிகளுக்கும், நெரிஞ்சில்களுக்கும் பயப்படுவதினாலே போகக்கூடாதபடியினாலே அது மாடுகளைப் போட்டுவிடுவதற்கும், ஆடுகள் மிதிப்பதற்குமான இடமாயிருக்குமென்றான்.

## ௮. அதிகாரம்.

[(௧) கொள்ளைக்குத் துரிதமாய்ச் சேருகிறவனென்ற அர்த்தத்தினபடி குமாரனைப் பெற்றது. சமாரியாவும், இஸ்ரவேலும் அசூரியராலே செயங்கொள்ளப்படுவதை ஏசாயா தீர்க்கதரிசனமாகச் சொன்னது. (௫) அவன் அவ்வத்தியிலே நியாயத்தீர்ப்பு வருமென்றது. (௯) பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள் எதிர்க்கப்படாதவைகளென்றும், (௰௧) அவருக்குப் பயப்படுகிறவர்கள் ஆறுதலடைவார்களென்றும், (௰௯) விக்கிரகாராதனைக்காரருக்கு உபத்திரவங்கள் வருமென்றுஞ் சொல்லியது.]

பின்னையுங் கர்த்தர் என்னுடனே ஒரு பெரிய கடிதாசைச் சுருளை யெடுத்துக்கொண்டு மனுஷன் எழுதுகிறபிரகாரமாய் அதிலே கொள்ளைக்குத் துரிதமாய்ச் சேருகிறவனென்றெழுதென்றார்.

௨. அப்போது நான் உண்மையுள்ள சாட்சிகளாயிருக்கிற ஆசாரியனாகிய உரியாவையும், எபெரெகியாவின் குமாரனாகிய சகரியாவையும் அதற்குச் சாட்சியாக வைத்துக்கொண்டேன்.

௩. நான் தீர்க்கதரிசியானவளண்டைக்குச் சேர்ந்தபோது அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெற்றாள், அப்போது கர்த்தர் என்னுடனே கொள்ளைக்குத் துரிதமாய்ச் சேருகிறவனென்ற பேரை அவனுக்கிடு.

௪. ஏனெனில், இந்தப் பாலகன் என்னப்பா, என்னம்மா வென்று கூப்பிட அறிகிறதற்கு முன்னே தமஸ்குவின் ஆஸ்தியும், சமாரியாவின் கொள்ளையும் அசூரியாவின் இராசாவுக்கு முன்பாகக் கொண்டுபோகப்படுமென்றார்.

௫. கர்த்தர் அப்புறம் என்னோடே பேசித் தொடர்ந்து சொன்னதாவது;

௬. இந்தச் சனம் மெதுவாய் ஓடுகிற சீலோவாவின் தண்ணீர்களைத் தள்ளிவிட்டுப் பண்ணிரேத்சீனையும், ரெமலியாவின் குமாரனையுங் குறித்துச் சந்தோஷிக்கிறபடியினாலே,

௭. இதோ, ஆண்டவர் அசூரியாவின் இராசாவும், அவனுடைய சகல ஆடம்பரமுமாகிய ஆற்றினுடைய வலுவும், திரளுமான தண்ணீர்களை அவர்கள்மேலே புரளப்பண்ணுவார். அது அவர்களுடைய ஓடைகளெல்லாவற்றின்மேலும் புரண்டு அவர்களுடைய எல்லாக் கரைகள்மேலும் போய்,

௮. யூதாவுக்குள் புகுந்து புரண்டு கடந்து கழுத்துமட்டும் வருமென்றார். * இம்மானுவேலே, அவன் செட்டைகளின் விரிவு உமது தேசத்தின் அகலத்தை நிரப்பும். * ௭. ௰௪.

௯. சனசதளங்களே, ஏகக்கூட்டமாகி * முறியுங்கள். சகல தூரதேசத்தாரே செவிகொடுங்கள், இடைகட்டிக்கொண்டு முறியுங்கள். இடைகட்டிக்கொண்டு முறியுங்கள்.
* ௨. இராசா. ௰௯, ௨௧.

௰. யோசனையை யோசியுங்கள், அது அவத்தமாகும் வார்த்தையை வசனியுங்கள். அது நிற்காது. ஏனெனில், எங்களுடனே பராபரனிருக்கிறார்.

௰௧. ஏனெனில், கர்த்தர் என்னுடனே பேசி, என் கையைத் திடப்படுத்தி நானிந்தச் சனத்தின் வழியிலே நடவாதபடிக்கெனக்குப் புத்தி சொல்லி விளம்பினதாவது;

அாயக

யஉ. இந்தச் சனம் ஒப்பந்தமென்று சொல்லுகிறதையெல்லாம் நீங்கள் ஒப்பந்தமென்று சொல்லாமலும், அது பயப்படுகிறபயத்தால் நீங்கள் பயப்படாமலும், கலங்காமலும்,

யங. சேனைகளின் கர்த்தரையே பரிசுத்தம்பண்ணுங்கள், அவரே உங்கள் பயமும், அவரே உங்கள் திகிலுமாயிருப்பாராக.

யச. அவர் உங்களுக்குப் பரிசுத்தஸ்தலமும், இஸ்ரவேலின் இரண்டு வீடுகளுக்கோ * தடுக்கலின் கல்லும், இடறுதலின் கன்மலையும், எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும், கண்ணியுமாயிருப்பார். * உசு. யசு. உரோ. சு, ஙங.

யரு. அவர்களில் அநேகர் இடறிவிழுந்து நொறுங்கிச் சிக்குண்டு பிடிபடுவார்கள்.

யசு. சாட்சியைக் கட்டிப்போடு, நம்முடைய சீஷருக்குள்ளிருக்கிற வேதத்தை முத்திரியென்றார்.

யஎ. யாக்கோபின் வீட்டுக்குத் தமது முகத்தை மறைக்கக் கர்த்தருக்கு நான் காத்து அவருக்கெதிர்பார்த்திருப்பேன்.

யஅ. * இதோ நானும், கர்த்தர் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும், சீயோன் பருவதத்தில் வாசமான சேனைகளுடைய கர்த்தராலே இஸ்ரவேலில் அடையாளங்களாகவும், அற்புதங்களாகவும் இருக்கிறோம். * எபி. உ, யங.

யகூ. ஆனால் அவர்கள் உங்களுடனே அஞ்சனம் பார்க்கிறவர்களையும், முணுமுணுத்துச் சத்தமிடுகிற குறிகாரரையும் கேளுங்கள் என்பார்கள். சனம் தம் பராபரனைக் கேட்கவேண்டாமோ! உயிருள்ளவர்களுக்காகச் செத்தவர்களைக் கேட்கலாமோ!

உய. வேதத்தையும், சாட்சியையும் கவனிக்கவேணும், இந்தவார்த்தையின்படியே அவர்கள் சொல்லாவிட்டால் அவர்களுக்கு விடியற்காலவெளுப்பில்லை.

உக. இக்கட்டை அடைந்தவர்களும், பட்டினியுமாய்த் தேசத்தைத் தாண்டுவார்கள். அவர்கள் பட்டினியாயிருக்கும்போது மூர்க்க வெறியாகித் தங்கள் இராசாவையும், தங்கள் பராபரனையும் தூஷணிக்கிறவர்களாய் அண்ணாருவார்கள்.

உஉ. தேசத்தைநோக்கிப் பார்ப்பார்கள். ஆனால் இதோ, இக்கட்டும், இருட்டுமாம், இடுக்கத்தாலிருளடைந்து அந்தகாரத்திலே தள்ளுண்டுபோவார்கள்.

## கூ. அதிகாரம்.

[(க) கிறிஸ்துவின் பிறப்பினாலும், இராசசியத்தினாலும் உபத்திரவங்களுக்கு நீங்கே அதிகசந்தோஷமாகுமென்றும், (அ) இஸ்ரவேலுடைய மேட்டிமைக்காகவும், (யங) மாயத்துக்காகவும், (யஅ) மனதுருக்காமைக்காகவும், அவர்கள்மேல் நியாயத்தீர்ப்பு வருமென்றும் சொல்லியது.]

ஆகிலும் அவர் செபுலோன் தேசத்தையும், நப்தலி தேசத்தையும் சனப்படுத்தின முந்தின காலத்தது இக்கட்டாயிருந்தது இரண்டிருப்பதில்லை. ஏனென்றால், அவர் * கடற்கரை வழியும், யோர்தான் நதியோரமுமான புறசாதியாருடைய கலிலேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே மகிமைப்படுத்துவார். * மத். ச, யரு—யசு.

உ. * இருளில் நடக்கிற சனம் பெரிய வெளிச்சத்தைக் காணும், மரண நிழலின் தேசத்திற் குடியிருக்கிறவர்களின்மேல் வெளிச்சம் பிரகாசிக்கும். * லூக். க, எஅ, எகூ.

ங. அந்தச் சாதியைத் திரளாக்கி அதற்கு மகிழ்ச்சியைப் பெருகப்பண்ணுவீர், அறுப்பில் மகிழுகிறதுபோலவும், * கொள்ளையைப் பங்கிட்டுக்கொள்ளுகையில் களிகூருகிறதுபோலவும் உமக்கு முன்பாக மகிழுவார்கள். சங்கீ. ஙயகூ, ஙசுஉ.

ச. ஏனெனில், அவர்கள் சுமையான நுகத்தடியையும், அவர்கள் தோளின் மிலாற்றையும், அவர்கள் ஆளோட்டியின் கோலையும் * மீதியானின் நாள் நடப்பிக்கச் சரியாய் முறித்துப்போட்டீர். * நியாயாதி எ, உஉ.

ரு அமளியாய் யுத்தம் பண்ணுகிற எல்லாப்படைமூஸ்திதும், இரத்தங்களிலே புரண்ட உடுப்பும் சுட்டெரிக்கப்பட அக்கினிக்கிரையாகும்.

சு. ஏனெனில், * நமக்கொரு பாலகன் பிறந்தார், நமக்கொரு குமாரன் கொடுக்கப்பட்டார், கர்த்தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும், அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்லமையுள்ள பராபரன், நித்திய பிதா, சமாதானப்பிரபு என்னப்படும். * ஆக்கா. உ, எ—யக. யோவா. ங, யசு.

எ. * தாவீதின் ஆசனத்தையும், அவனுடைய இராசசியத்தையும் அவர் திடப்படுத்தி அதை இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்தினாலும், நீதியினாலும் நிலைப்படுத்தும்படிக்கு அதையவர் ஆளுகைசெய்து அவருடைய துரைத்தனத்தின் பெருக்கத்துக்கும், அதின்மேலுள்ள சமாதானத்துக்கும் முடிவில்லை. † சேனைகளுடைய கர்த்தரின் வைராக்கியம் அதைச்செய்யும். * ஆக்கா. க, ஙஉ. ஙங. † ஙஎ, ஙஉ. உ. இராசா. யகூ. ஙக.

அ. ஆண்டவர் யாக்கோபிலே ஒரு வார்த்தையை அனுப்பினார், அது இஸ்ரவேலின்மேல் இறங்குகிறதாயிருக்கிறது.

கூ. செங்கற்கள் இடிந்துபோயின, வெட்டின கற்களால் திரும்பக் கட்டுவோம். காட்டத்திமரங்கள் வெட்டிப்போடப்பட்டன. கேதுருமரங்களை அவைகளுக்குமாறினவைப்போமென்று,

ய. அகந்தையும், மனப்பெருமையுமாய்ச் சொல்லுகிற எப்பிராயீமரும், சமாரியாவின்

அரமு

௧௬. இந்த இளைஞன் தீமையை வெறுக்கவும், நன்மையைத்தெரிந்துகொள்ளவும் அறிகிறதற்குமுன்னே நீர் அருவருக்கிற தேசம் அதின் இரண்டு இராசாக்களால் விடப்பட்டதாயிருக்கும்.

௧௭. ஆனால் எப்பிராயீம் யூதாவைவிட்டுப் பிரிந்த நாள்முதல் வராதிருக்கிற நாட்களைக் கர்த்தர் உம்முடையமேலும், உம்முடைய சனத்தின்மேலும், உம்முடைய பிதாவுடைய வீட்டின்மேலும் அசூரியாவின் இராசாவினாலே வரப்பண்ணுவார்.

௧௮. பின்னும் சம்பவிப்பதாவது; கர்த்தர் எகிப்திலுடைய நதிகளின் கடையாந்தரத்தில ஈக்களையும், அசூரியாதேசத்திலிருக்கும் தேனீக்களையும் பயில்போட்டழைப்பார்.

௧௯. அவைகள்வந்து ஏகமாய் வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலும், கன்மலைகளின் வெடிப்புகளிலும், எல்லா முள்ளுக்காடுகளிலும், எல்லாச்சாலைகளிலும் தங்கும்.

௨0. அக்காலத்திலே ஆண்டவர் * கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியாகிய நதிகளையான அசூரியாவின் இராசாவினாலே சிரசையும், கால்களின் மயிரையும் சிரைப்பித்துத் தாடியையும் வாங்கிப்போடுவிப்பார். * ௨. ந

௨௧. அக்காலத்திலொருவன் ஒரு கிடாரியையும், இரண்டாடுகளையும் வளர்த்தால்,

௨௨. அவன் அவைகள் பரிபூரணமாய்ப் பால்கறக்கிறபடியினாலே வெண்ணெயைச் சாப்பிடுவதுமன்றி, தேசத்தின் நடுவில் மீதியாயிருப்பவனெல்லாம் வெண்ணெயையும், தேனையுஞ் சாப்பிடுவான்.

௨௩. பின்னுஞ்சம்பவிப்பதேதெனில், ஆயிரம் வெள்ளிக்காசுபெறும் ஆயிரந் திராட்சச்செடியிருந்த நிலமெல்லாம் முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமாம்.

௨௪. அம்புகளையும், வில்லையும் பிடித்து அங்கே போகவேண்டியதாயிருக்கும். ஏனெனில், தேசமனைத்தும் முள்ளுச்செடியும், நெரிஞ்சிலுமாயிருக்கும்.

௨௫. மண்வெட்டியாலே கொத்தப்படுகிற எல்லாமலைகளுமுண்டே, அங்கே முள்ளுச்செடிகளுக்கும்,நெரிஞ்சில்களுக்கும்பயப்படுவதினால் போகக்கூடாதபடியினாலே அது மாடுகளைப்போட்டுவிடுவதற்கும், ஆடுகளை மிதிப்பதற்குமான இடமாயிருக்குமென்றான்.

## அ. அதிகாரம்.

[(௧) தொள்ளைக்கக்கடிச் சூறைக்குத்தீவிரிப்பானென்ற சருத்தின்படி சூரியாவும், இஸ்ரவேலும் அசூரியராலே செயங்கொள்ளப்படுவதை ஏசாயா தீர்க்கதரிசனமாகச் சொன்னது. (௫) அவன் அவபத்தியினாலே நியாயத்தீர்ப்படைவருமென்றது. (௯) பராபரனுடையநியாயத்தீர்ப்புகள் எதிர்க்கப்படாதவைகளென்றும், (௧௧) அவருக்குப் பயப்படுகிறவர்கள் ஆறுதலடைவார்களென்றும், (௧௯) விக்கிரகாராதனைக்காரருக்கு உபத்திரவங்கள்வருமென்றுஞ்சொல்லியது.]

பின்னுங் கர்த்தர் என்னுடனே ஒரு பெரியகடிதாசிச்சுருளை யெடுத்துக்கொண்டு மனுஷன் எழுதுகிறபிரகாரமாய் அதிலே கொள்ளைக்குக்கடிச் சூறைக்குத் தீவிரிப்பானென்றெழுதென்றார்.

௨. அப்போது நான் உண்மையுள்ளசாட்சிகளாயிருக்கிற ஆசாரியனாகிய உரியாவையும், எபெரெகியாவின் குமாரனாகிய சகரியாவையும் அதற்குச்சாட்சியாக வைத்துக்கொண்டேன்.

௩. நான் தீர்க்கதரிசியானவளண்டைக்குச் சேர்ந்தபோது அவள் கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்பெற்றாள், அப்போது கர்த்தர் என்னுடனே கொள்ளைக்குக்கடிச் சூறைக்குத்தீவிரிப்பானென்றபேரை யவனுக்கிடு.

௪. ஏனெனில், இந்தப்பாலகன் என்னப்பா, என்னம்மாவென்று கூப்பிட அறிகிறதற்கு முன்னே தமஸ்குவின் ஆஸ்தியும், சமாரியாவின்கொள்ளையும் அசூரியாவின் இராசாவுக்கு முன்பாகக் கொண்டுபோகப்படுமென்றார்.

௫. கர்த்தர் அப்புறம் என்னோடேபேசித் தொடர்ந்துசொன்னதாவது;

௬. இந்தச்சனம் மெதுவாய் ஓடுகிற சீலோவாவின் தண்ணீர்களையசட்டைபண்ணி, ரேத்சீனையும், ரெமலியாவின் குமாரனையுங்குறித்துச் சந்தோஷிக்கிறபடியினாலே,

௭. இதோ, ஆண்டவர் அசூரியாவின் இராசாவும், அவனுடைய சகல ஆடம்பரமுமாகிய ஆற்றினுடைய வலுவும், திரளுமான தண்ணீர்களை அவர்கள்மேலே புரளப்பண்ணுவார். அது அவர்களுடைய ஓடைகளெல்லாவற்றின்மேலும்புரண்டு அவர்களுடைய எல்லாக்கரைகள்மேலும்போய்,

௮. யூதாவுக்குள் புகுந்து புரண்டு கடந்து கழுத்துமட்டும் வருமென்றார். * இம்மானுவேலே, அவன்செட்டைகளின் விரிவு உமது தேசத்தின் அகலத்தைநிரப்பும். * ௭. ௰௪.

௯. சனசதளங்களே, ஏகக்கூட்டமாகி * முறியுங்கள். சகல தூரதேசத்தாரே செவிகொடுங்கள், இடைகட்டிக்கொண்டு முறியுங்கள். இடைகட்டிக்கொண்டுமுறியுங்கள்.
* ௨. இராசா. ௰௬, ௨௧.

௰. யோசனைபண்ணுங்கள், அது அவத்தமாகும் வார்த்தையைவசனியுங்கள். அது நிற்காது. ஏனெனில், எங்களுடனே பராபரனிருக்கிறார்.

௧௧. ஏனெனில், கர்த்தர் என்னுடனே பேசி, என்கையைத்திடப்படுத்தி நானிந்தச்சனத்தின்வழியிலே நடவாதபடிக்கெனக்குப் புத்திசொல்லி விளம்பினதாவது;

௰௨. இந்தச்சனம் ஒப்பந்தமென்றுசொல்லுகிறதையெல்லாம் நீங்கள் ஒப்பந்தமென்றுசொல்லாமலும், அது பயப்படுகிறபயத்துக்கு நீங்கள்பயப்படாமலும், கத்தளியாமலும்,

௰௩. சேனைகளின்கர்த்தரையே பரிசுத்தம்பண்ணுங்கள், அவரே உங்கள் பயமும், அவரே உங்கள் திகிலுமாயிருப்பாராக.

௰௪. அவர் உங்களுக்குப் பரிசுத்தஸ்தலமும், இஸ்ரவேலின் இரண்டுவீடுகளுக்கோ * தடுக்கலின்கல்லும், இடறுதலின் கன்மலையும், எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும், கண்ணியுமாயிருப்பார். * உ௯. ௰௯ உரோ. ௯, ௩௩

௰௫. அவர்களில் அநேகர் இடறிவிழுந்து நொறுங்கிச்சிக்குண்டுபிடிபடுவார்கள்.

௰௬. சாட்சியைக் கட்டிப்போடு, நம்முடைய சீஷருக்குள்ளேவேதத்தைமுத்திரியென்றார்.

௰௭. யாக்கோபின் வீட்டுக்குத்தம்முடைய முகத்தைமறைக்கக் கர்த்தருக்கு நான் காத்து அவருக்கெதிர்பார்த்திருப்பேன்.

௰௮. * இதோ நானும், கர்த்தரெனக்குக் கொடுத்த பிள்ளைகளும் சீயோன் பர்வதத்தில் வாசமானசேனைகளுடையகர்த்தராலே இஸ்ரவேலில் அடையாளங்களாகவும், அற்புதங்களாகவுமிருக்கிறோம். * எபி. ௨, ௰௩

௰௯. ஆனால் அவர்கள் உங்களுடனே அஞ்சனம்பார்க்கிறவர்களையும், முணுமுணென்று சத்தமிடுகிறகுறிகாரரையுங் கேளுங்களென்பார்கள். சனந் தம் பராபரனைக்கேட்கவேண்டாமோ! உயிருள்ளவர்களுக்காகச் செத்தவர்களைக்கேட்கலாமோ!

௨௰. வேதத்தையும், சாட்சியையுங் கவனிக்கவேணும், இந்தவார்த்தையின்படியே அவர்கள் சொல்லாவிட்டால் அவர்களுக்கு விடியற்காலவெளுப்பில்லை.

௨௧. ஒடுக்கணை அடைந்தவர்களும், பட்டினியுமாய்த் தேசத்தைத்தாண்டுவார்கள். அவர்கள் பட்டினியாயிருக்கும்போது மூர்க்கவெறியாகித் தங்கள் இராசாவையும், தங்கள் பராபரனையுந் தூஷணிக்கிறவர்களாய் அண்ணாருவார்கள்.

௨௨. தேசத்தைநோக்கிப் பார்ப்பார்கள். ஆனால் இதோ, இக்கட்டும், இருட்டுமாம், இடுக்கத்தாலிருளடைந்து அந்தகாரத்திலே தள்ளுண்டுபோவார்கள்.

## ௯. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவின் பிறப்பிலும், இராச்சியத்திலும் உபத்திரவங்களுக்கு நீங்கே அதிசயசந்தோஷமுண்டுமென்றும், (௮) இஸ்ரவேலுடைய மேட்டிமைக்காகவும், (௰௩) மாயத்துக்காகவும், (௰௮) மனமுருகாமைக்காகவும், அவர்கள்மேல் நியாயத்தீர்ப்புவருமென்றுஞ்சொல்லியது.]

ஆகிலும் அவர்செபுலோன்தேசத்தையும், நப்தலிதேசத்தையும் சனப்படுத்தினமுந்தினகாலத்தது இக்கட்டாயது இருண்டிருப்பதில்லை. ஏனென்றால், அவர் * கடற்கரைவழியும், யோர்தானுக்கு அக்கரையுமான புறசாதியாருடைய கலிலேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே மகிமைப்படுத்துவார். * மத். ௪, ௰௫—௰௬.

௨. * இருளில் நடக்கிறசனம் பெரியவெளிச்சத்தைக்காணும், மரணநிழலின்தேசத்திற்குடியிருக்கிறவர்களின்மேல்வெளிச்சம் பிரகாசிக்கும். * ஆக். ௧, ௭௮. ௭௯.

௩. அந்தச்சாதியைத்திரளாக்கி அதற்கு மகிழ்ச்சியைப்பெருகப்பண்ணுவீர், அறுப்பில் மகிழுகிறதுபோலவும், * கொள்ளையைப்பங்கிட்டுக்கொள்ளுகையிற்களிகூருகிறதுபோலவும் உமக்குமுன்பாக மகிழுவார்கள். * சங்கீ. ௱௰௯, ௱௬௨.

௪. ஏனெனில், அவர்கள் சுமையான நுகத்தடியையும், அவர்கள் தோளின்மேலாற்றையும், அவர்கள் ஆளோட்டியின்கோலையும் * மீதியானின் நாள் நடப்பிக்குச் சரியாய் முறித்துப்போட்டீர். * நியாயாதி ௭, ௨௨.

௫. அம்தனெல்றல, அமளியாய் யுத்தம்பண்ணுகிற எல்லாப்படைமுஸ்திதும், இரத்தங்களிலேபுரண்ட உடுப்புஞ்சுட்டெரிக்கப்பட அக்கினிக்கிரையாகும்.

௬. ஏனெனில், * நமக்கொரு பாலகன்பிறந்தார், நமக்கொருகுமாரன் கொடுக்கப்பட்டார், கர்த்தத்துவம் அவர்தோளின்மேலிருக்கும், அவர்நாமம்அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்லமையுள்ளபராபரன், நித்தியபிதா, சமாதானப்பிரபு எனப்படும். * ஆக்கா. ௨, ௭—௰௧. யோவா. ௩, ௰௬.

௭. * தாவீதின் ஆசனத்தையும், அவனுடைய இராச்சியத்தையும் அவர்திடப்படுத்தி அதையிதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்திலும், நீதியிலும் நிலைப்படுத்தும்படிக்கு அதையவர் ஆளுகைத்தத்துவத்தின் பெருக்கத்துக்கும், அதின்மேலுள்ள சமாதானத்துக்கும் முடிவில்லை. † சேனைகளுடைய கர்த்தரின்வைராக்கியம் அதைச்செய்யும். * ஆக்கா. ௧, ௩௨. ௩௩. † ௩௭, ௩௨. ௨. இராசா. ௰௯. ௩௧.

௮. ஆண்டவர்யாக்கோபின்மேலொருவார்த்தையையனுப்பினர், அது இஸ்ரவேலின்மேலிறங்குகிறதாயிருக்கிறது.

௯. செங்கற்கள் இடிந்துபோயின, வெட்டின கற்களால் திரும்பக்கட்டுவோம். காட்டத்திமரங்கள் வெட்டிப்போடப்பட்டன. கேதுருமரங்களை அவைகளுக்குமாறாய்வைப்போமென்று,

௰. அகந்தையும், மனப்பெருமையுமாய்ச் சொல்லுகிற எப்பிராயீமரும், சமாரியாவின

குடிகளுமாகிய எல்லாச்சனத்துக்கும் அது தெரியவரும்.

யக. என்னவெனில், கர்த்தர் ரேத்சீனுடைய சத்துருக்களையவர்கள்மேல் உயர்த்தி அவர்களுடைய மற்றச்சத்துருக்களையவர்களோடே கூட்டிக்கலப்பார்.

யஉ. சூரியர் முற்புறத்திலும், பெலிஸ்தர் பிற்புறத்திலுமிருந்து வந்து இஸ்ரவேலைமுழுவாயாலும் பட்சிப்பார்கள். * இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது.

* ரு, உரு. யஉ, ச.

யங. ஏனெனில், இந்தச்சனந் தன்னையடிக்கிறவரண்டைக்குத் திரும்பாமல், சேனைகளுடைய கர்த்தரைத்தேடாதேபோகிறார்கள்.

யச. ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலில்லே தலையையும், வாலையும், கிளையையும், நாணலையும் ஒரேநாளிலே அறுப்பார்.

* உ. இராசா. யஎ, ரு. உச.

யரு. மூப்பனும், கனமுகமானவனுந்தலை பொய்ப்போதகம்பண்ணுகிற தீர்க்கதரிசியால்,

யசு. ஏனென்றால், * இந்தச் சனத்தை நடத்துகிறவர்கள் எத்தரும், அவர்களால் நடத்தப்படுகிறவர்கள் விழுங்கப்படுகிறவர்களுமாயிருக்கிறார்கள். * ரு, யஉ. லூக். சு, ஙசு.

யஎ. ஆனபடியால், ஆண்டவர் அதின்வாலிபரின்மேல் பிரியமாயிருப்பதுமில்லை அதிலிருக்கிற தாய்தகப்பனில்லாதவர்கள்மேலும், விதவைகள்மேலும் இரங்குவதுமில்லை. ஏனெனில், அவர்கள் அனைவரும் மாயக்காரரும், பொல்லாதவர்களுமாயிருக்கிறார்கள். எல்லா வாயும் பயித்தியம்பேசும், * இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது.

* யஉ. வச.

யஅ. அக்கிரமமானது அக்கினியைப்போலெரிகிறபடியினாலே அது முட்செடியையும், நெரிஞ்சிலையும் பட்சித்து, சனபின்னலான காட்டைப்புகைதிரண்டெழும்பத் தக்கதாகக் கொளுத்தும்.

யகூ. சேனைகளுடைய கர்த்தரின் சினத்தால் தேசம் மந்தாரப்பட்டுச் சனம் அக்கினிக்கிரையாய்ப்போம், ஒருவனுந் தன்சகோதரனைத் தப்பவிடான்.

உய. வலதுபுறத்தில் அறுத்தாலும் பசித்திருப்பார்கள், இடதுபுறத்திலே தின்றாலுந்திருத்தியாவதில்லை. தன் தன் புயத்தின் மாம்சத்தை அவனவன் தின்பான்.

உக. எப்பிராயீமை மனாசேயும், மனாசேயை எப்பிராயீமுந்தானே, இவர்கள் ஏகமாய் யூதாவுக்கும் விரோதமாயிருப்பார்கள்,* இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்கும். * யஉ, யஎ.

அா யகூ

## ய. அதிகாரம்.

[(க) கொடியருக்குத் தண்டனை வருமென்றும், அமர்க்கமாயடிக்கும் கோலாகிய அசூரியர் முறிவார்களென்றும், (உய) இஸ்ரவேலரில் மீதியானவர்கள் இரட்சிக்கப்படுவார்களென்றுஞ் சொல்லியது. (உச) இஸ்ரவேலர் அசூரியரிடத்திலிருந்து விடுதலையாவார்களென்று ஆறுதலான வாக்குத்தத்தம் பெற்றது.]

ஏழைகளை வழக்கிலே தோற்கப்பண்ணவும், நம்முடைய சனத்திற் சிறுமையானவர்களின் நியாயத்தைப்பறிக்கவும், விதவைகளைச் சூறையிடவும், திக்கற்றவர்களைத் தாங்கள் கொள்ளையிடவுமாக,

உ. அக்கிரமப் பிரமாணங்களைத் தீர்மானிக்கிறவர்களுக்கும், பாரமானவைகளையெழுதுகிறவேதபாரகருக்கும் ஐயோ,

ங. விசாரிப்பின் நாளிலும், தூரத்திலிருந்து வருகிற பாழ்க்கடிப்பின் நாளிலும் நீங்கள் என்னசெய்வீர்கள்! ஆரண்டையிலே ஒத்தாசைத்தேட ஓடுவீர்கள்! உங்கள் மகிமை கட்டுண்டவர்களின் கீழ்முடங்கிவிழாதபடிக்கதையெங்கே வைத்துப்போவீர்கள்!

ச. கொலைசெய்யப்பட்டவர்களுக்குள்ளும் விழுவார்கள். இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவருடைய கையின்னம் நீட்டினதாயிருக்கும்.

ரு. நம்முடைய கோபத்தின் கோலாகிய* அசூரியருக்கு ஐயோ, அவர்கையிலிருக்கிறது நம்முடைய சினத்தின்மிலாறு. * கூ, அதிகாரம். க. உ. இராசா. யஅ. யங.

சு. நாம் அமர்க்கமான சாதிக்குவிரோதமாய் அவனையனுப்பி, நம்முடையகோபம் மூண்டிருக்கிற சனத்தின்மேல் அதைக்கொள்ளையிடவும், சூறையாடவும், அதைவீதிகளின் சேற்றைப்போலமிதித்துப்போடவும் அவனுக்குக்கட்டளைகொடுப்போம்.

எ. அவனோவெனில், அப்படிக்கொத்தவன்றும், அவனிருதயம் அப்படிக்கொத்த நினைவுமாயிராமல் கொஞ்சமாயிராதசாதிகளையழிக்கவும், சங்கரிக்கவுந்தன் மனதிலே நினைவாயிருக்கிறான்.

அ. ஏனெனில், * என்பிரபுக்கள் அனைவரும் இராசாக்களல்லவோ! * கூ, அதி. ச-உய.

கூ. கல்னேபட்டணம், கர்கேமிசைப்போலானதில்லையோ! ஆமாத்து அற்பாத்தைப்போலானதில்லையோ! சமாரியா தமஸ்குவைப்போலானதில்லையோவென்றும்,

ய. எருசலேமையும், சமாரியாவையும் பார்க்கிலுமவிசேஷித்த சொரூபங்களுள்ள விக்கிரகஇராச்சியங்களையென்கை கண்டுபிடித்ததுபோலவும்,

யக. நான் சமாரியாவுக்கும், அதின் விக்கிரகங்களுக்குஞ் செய்ததுபோலவும், எருச

லேமுக்கும், அதின் விக்கிரகங்களுக்கும் செய்யேனோவென்று சொல்லுகிறான்.

௧௨. ஆகையால் ஆண்டவர் சீயோன் பருவதத்திலும், எருசலேமிலும் தம்முடைய கிரியையெல்லாம் முடித்திருக்கும்போது * அசீரிய இராசாவினுடைய பெருமையான நெஞ்சின் கனியையும், அவனுடைய கண்களின் மேட்டிமையையும் நாம் விசாரிப்போமென்றார். * ௩௭, அதி. ௩௬. ௨. இராசா. ௧௯, ௩௫.

௧௩. ஏனென்றால், அவன் சொல்லுகிறது: என் கையின் பெலத்தினாலும், என் ஞானத்தினாலும் இதைச் செய்தேன். ஏனெனில், உணர்வுள்ளவனாயிருக்கிறேன். அதினாலே நான் சனசதளங்களின் எல்லைகளை வாங்கிவிட்டு அவர்கள் உக்கிராணங்களைக் கொள்ளையிட்டு வல்லவனைப்போலக் குடியானவர்களைத் தாழ்த்தினேன்.

௧௪. என் கை சனசதளங்களின் ஆஸ்தியை ஒரு குருவிக்கூட்டைப்போலக் கண்டுபிடித்தது; தனித்துவிடப்பட்ட முட்டைகளை வாரிக்கொள்ளப்படுவதுபோலே பூமியையெல்லாம் நான் வாரிக்கொண்டேன். செட்டையை அசைத்தவர்களும், வாயைத் திறந்தவர்களும், கசுகுசென்று சிணுங்கினவர்களுமில்லையென்கிறான்.

௧௫. கோடாலி தன்னாலே வெட்டுகிறவனுக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டலாமோ! அல்லது வாள் தன்னை இழுக்கிறவனுக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டலாமோ? தடி தன்னை எடுக்கிறவர்களை அசைப்பதுபோலவும், மிலாறு தான் மரமல்லவென்று எழும்புமாப்போலவுந்தானே.

௧௬. ஆகையால் சேனைகளுடைய ஆண்டவராகிய கர்த்தர் அவனுடைய கொழுத்தவர்களில் இளைப்பையனுப்பி, வேகிற அக்கினிக்கொத்த நெருப்பை அவன் மகிமையின் கீழ்க் கொளுத்துவார்.

௧௭. இஸ்ரவேலின் வெளிச்சமானவர் அக்கினியும், அதின் பரிசுத்தர் அக்கினிச்சுவாலையுமாகி எரிந்து ஒரே நாளிலே அவனுடைய முள்ளுச்செடிகளையும், நெருஞ்சில்களையும் பட்சிக்கும்.

௧௮. அவனுடைய காட்டின் மகிமையையும், அவனுடைய பயிர் நிலத்தின் மகிமையையும் ஆத்துமாதுவக்கச் சரீரபரியந்தம் அழிப்பார், கொடிபிடிக்கிறவன் களைத்துவிழுந்தவண்ணமாய் அருகிருக்கும்.

௧௯. அவனுடைய காட்டின் மீதியான மரங்கள் மட்டாயிருக்கும். ஒரு பையன் அவைகளை எண்ணியெழுதலாம்.

௨௰. அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், இஸ்ரவேலில் மீதியானவர்களும், யாக்கோபுடைய வீட்டிலே தப்பினவர்களுந் தங்களை

அடித்த

யடித்தவனை இனிச் சார்ந்துகொள்ளாமல் இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரை உண்மையாய்ச் சார்ந்துகொள்ளுவார்கள்.

௨௧. மீதியாயிருப்பவர்கள் யாக்கோபிலே மீதியாயிருப்பவர்களே, வல்லமையுள்ள பராபரனண்டைக்குத் திரும்புவார்கள்.

௨௨. ஏனெனில் * இஸ்ரவேலே, உன்னுடைய சனம் சமுத்திரத்தின் மணலத்தனையாயிருந்தாலும் அதில் மீதியாயிருப்பவர்களே திரும்புவார்கள். அழிக்குதல் அறுதியாயத் தீர்க்கப்பட்டபோது நீதி புரண்டுவரும். * உரோமர். ௯, ௨௭, ௨௮.

௨௩. ஏனென்றால் சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் தேசத்துக்குள்ளெங்கும் அறுதியான அழிக்குதலைச் செய்வார்.

௨௪. ஆகையால் சீயோனிலே வாசமாகிய நம்முடைய சனமே உன்னைக் கோலால் அடிக்குந்தன் தடியை எகிப்தைப்போல உன்மேல் ஓங்குகிற அசீரியனுக்குப் பயப்படாதே.

௨௫. ஏனெனில், இன்னும் மெத்தக் கொஞ்சப்போதிலே சினந் தீர்ந்திருக்கும் அப்போது நம்முடைய கோபம் அவர்களைச் சங்கரிக்கப்போகிறதென்று சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் விளம்புகிறார்.

௨௬. * ஓரேப்கன்மலையண்டையிலே மீதியானர் வெட்டுண்டவண்ணமாய்ச் சேனைகளுடைய கர்த்தர் அவன்மேலொரு சவுக்கையெழுப்பித் தம்முடைய கோலை எகிப்திலே கடலின்மேல் ஓங்கினதுபோலே ஓங்குவார். * நியாயாதி. ௭, ௰௯. ௨௫

௨௭. அந்நாளிலே அவன் சுமை உன் தோளிலும், அவன் நுகத்தடி உன் கழுத்திலுமிருந்து நீங்குந் தயிலத்தால் நுகத்தடி கெட்டுப்போம்.

௨௮. அவன் ஆயாத்துக்கு வந்து, மிக்ரோனைக் கடந்து மிக்மாசிலே தன் படைமுஸ்திருக்களை வைத்துவைப்பான்.

௨௯. கணவாயைத் தாண்டிக் கேபாவிலே பாளயமிறங்குகிறார்கள். ராமா அதிர்கிறது சவுலின் ஊராகிய கிபேயா ஓடிப்போகிறது.

௩௰. கல்லிம் குமாரத்தியே, உரத்துக் கூப்பிடு. சிறுமையான ஆனதோத்தே, லாயீசுப்புறமாக உன் சத்தத்தை நீட்டிக்கூப்பிடு.

௩௧. மத்மேனா வலசைவாங்குது கேபிமின் குடிகள் கூட்டங்கூடுகிறார்கள்.

௩௨. இன்னமொரு நாள் நோபிலே நிற்கிறதற்கிருந்து தன் கையைச் சீயோன் குமாரத்தியின் பருவதத்துக்கும், எருசலேமின் மேட்டுக்கும் விரோதமாய் அசைப்பான்.

௩௩. ஆனால் இதோ, சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் * கொப்புகளை வலுமையாய் அறுப்பார், ஓங்கிவளர்ந்தவைகள் வெட்டுண்டு மேட்டிமையானவைகள் தாழ்த்தப்படும். * ௩௭, ௩௬.

௩௪. அவர் காட்டின் அடர்த்தியைக் கோடாலியினாலே தணிப்பார், மகத்துவமானவராலே அந்த லீபனோன் விழும்.

## ௧௧. அதிகாரம்.

[(௧) ஈசாயின் வேர்களிலிருந்தெழும்பும் ஒரு கிளையின் சமாதானமுள்ள இராச்சியமும், (௰) இஸ்ரவேலர் சேர்த்தேற்றப்படுவதும், அந்நியஜாதிகள் அழைக்கப்படுவதுஞ் சொல்லப்பட்டது.]

வெட்டப்பட்ட ஈசாயின் * அடிமரத்திலிருந்தொரு துளிர் புறப்பட்டு அவன் வேர்களிலிருந்தொரு கிளை எழும்பிக் கனிதரும். * ௪, அதி. ௨. எரேமி. ௨௩, ௫. அப்போ. ௨, ௧—௰௪.

௨. இவர்மேலே கர்த்தருடைய ஆவியாகிய ஞானம் உணர்வென்றவைகளின் ஆவியும், ஆலோசனை பெலனென்றவைகளின் ஆவியும், அறிவும், கர்த்தருக்குப் பயப்படுதலுமென்றவைகளின் ஆவியுமானவர் தங்கியிருப்பார்.

௩. அவர் முகந்துணருதல் கர்த்தருக்குப் பயப்படுதலோடேயிருக்கும் * அவர் தம்முடைய கண்களுடைய பார்வையின்படி நியாயந்தீர்க்காமலும், தமது காதுகளுடைய கேள்வியின்படி கடிந்துகொள்ளாமலும், * யோபு. ௭, ௨௪.

௪. ஏழைகளை நீதியாய் நியாயம் விசாரித்துப் பூமியிற் சிறுமையானவர்களைச் செம்மையாய்க் கடிந்துகொண்டு பூமியைத் * தம்முடைய வாக்கின் கோலாலடித்துத் தம்முடைய உதடுகளின் ஆவியால் ஆகாதவனைக் கொல்லுவார். * ௪௯, ௨. ௨. தெச. ௨, ௮. அறிவி. ௰௯, ௰௫.

௫. நீதி அவர் அரையின் கச்சையும், சத்தியம் அவர் இடுப்பின் கச்சையுமாயிருக்கும்.

௬. அப்போது ஓநாய் ஆட்டுக்குட்டியோடே தங்கிச் சிவிங்கு வெள்ளாட்டுக் குட்டியோடே படுத்துக்கொள்ளும் கன்றுக்குட்டியும், பாலசிங்கமும், காளையும் ஒரு சிறிய பையல் அவைகளை ஓட்டத்தக்க விதமாய் ஒருமித்திருக்கும். * ௬௫, ௨௫. ஓசே ௨, ௰௮.

௭. பசுமாடும், கரடியும் கூடமேய்ந்து அவைகளின் குட்டிகளொருமித்துப் படுத்திருக்கும் சிங்கம் மாட்டைப்போலே வைக்கோலைத் தின்னும்.

௮. முலைகுடிக்கிற குழந்தை விரியன்பாம்பு வளையின்மேல் விளையாடிப் பாலகன் கட்டுவிரியன் புற்றிலே தன்கையைப் பாய்ச்சும்.

௯. பரிசுத்த பருவதமெங்கும் தீமை பண்ணுவாருமில்லை கேடுசெய்வாருமில்லை. ஏனெனில், தண்ணீர்கள் கடலின் ஆழத்தை மூடுவதுபோலப் பூமி கர்த்தனையறிகிற அறிவினாலே நிறைந்திருக்கும்.

௰. அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், * சனசதனங்களுக்குக் கொடியாக நிற்கிற ஈசாயின் வேருக்காகச் சாதிகள் விசாரித்துக் கேட்பார்கள் அவருடைய தாபரஸ்தலம் மகிமையாயிருக்கும். * உரோ. ௰௫, ௰௨.

௰௧. அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில் ஆண்டவர் அசூரியாவிலும், எகிப்திலும், பத்ரோசிலும், எத்தியோப்பியாவிலும், பெர்சியாவிலும், சீனேயாரிலும், ஆமாத்திலும், சமுத்திரத்தின் தீவுகளிலும் தம்முடைய சனத்தின் மீதியானவர்களை வசப்படுத்திக்கொள்ளத் திரும்ப இரண்டாம்விசை தம்முடைய கரத்தை நீட்டி,

௰௨. சாதிகளுக்குக் கொடியேற்றி இஸ்ரவேலிலே துரத்துண்டவர்களைச் சேர்த்து யூதாவிற் சிதறடிக்கப்பட்டவர்களைப் பூமியின் நாலு திசைகளிலுமிருந்து கூட்டுவார்.

௰௩. எப்பிராயீமின் பொறாமையும் நீங்கும், யூதாவின் சத்துருக்களோவென்றால், சங்கரிக்கப்படுவார்கள். எப்பிராயீம் யூதாவின் மேற்பொறாமையாயிராமலும், யூதா எப்பிராயீமையிறுகப்பிடியாமலும்,

௰௪. அவர்கள் மேற்கேயிருக்கிற பெலிஸ்தருடைய தோளின்மேலே பாய்ந்து இருவரும் ஏகமாய்க் கிழக்குத்திசையாரையுங் கொள்ளையிட்டுத் தங்கள் கைகளை ஏதோமின்மேலும், மோவாபின்மேலும் போடுவார்கள், அம்மோன் புத்திரரும் அவர்களுக்குக் கீழ்ப்படுவார்கள்.

௰௫. எகிப்தின் சமுத்திரமுனையையுங் கர்த்தர் சாபமிட்டு நதியின்மேலே தமது கையைத் தம்முடைய காற்றின் சத்துவத்தினாலேயசைத்து அதைப் பாதரட்சைகள் நனையாமல் கடக்கப்பண்ணத்தக்கவிதமாயே ஏழாறுகளாக அடிப்பார்.

௰௬. அப்படியே இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து வந்தேறுகிற நாளில் அவர்களுக்குச் சம்பவித்ததுபோலே அவருடைய சனத்தின் அசூரியாவிலே மீதியானவர்களுக்கு நடக்கத்தக்க வழியுண்டாயிருக்கும்.

## ௧௨. அதிகாரம்.

[பராபரனுடைய இரக்கத்திற்காக விசுவாசிகள் செலுத்துங்களிப்புள்ள நன்றியறிந்த தஸ்தோத்திரம்.]

அக்காலத்திலே நீ சொல்லுவதாவது; கர்த்தாவே என்மேலே கோபமாயிருந்தீர், ஆனாலும் உம்முடைய கோபந்திரும்பிற்று, என்னைத் தேற்றரவுபண்ணுகிறீர் என்கிறதினிமித்தந் தேவரீரைத் துதிக்கிறேன்.

௨. இதோ * என் இரட்சிப்பின் பராபரன், நான் அவனை நம்பிப் பயப்படாதிருப்பேன், ஏனெனில் என் பெலனும், என் கீதமுங் கர்த்தராகிய பராபரன், அவனெனக்கு இரட்சிப்பானவனானான். * ௨. மோசே. ௰௫, ௨.

௩. நீங்கள் மகிழ்ச்சியோடே இரட்சிப்

பின் ஊற்றுகளில் * தண்ணீர்களை மொண்டு, * யோவான். ௭, ௩௭. ௩௮.

௪. அக்காலத்திலே சொல்வதாவது; கர்த்தரைத் துதியுங்கள். அவர் நாமத்தைத் தொழுதுகொள்ளுங்கள். சனசதளங்களுக்குள்ளே அவர் செய்கைகளை யறிவியுங்கள். அவருடைய நாமம் உயர்ந்ததென்று பிரஸ்தாபம் பண்ணுங்கள்.

௫. * கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணுங்கள். ஏனெனில், மகத்துவமானதைச் செய்தார். இது பூமியெங்கும் அறியப்படக்கடவதென்பீர்கள். * சங்கீ. ௪௭, ௭.

௬. சீயோனில் வாசமாயிருக்கிறவளே, நீ சத்தமிட்டுக் கெம்பீரி. ஏனெனில், இஸ்ரவேலின் பரிசுத்தர் உன் நடுவிலே பெரியவராயிருக்கிறார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) பராபரன் தம்முடைய உக்கிரகோபத்தின் சேனைகளைக் கூட்டினது. (௬) வேதியனைக்கொண்டு பாபிலோனையழிப்போமென்று பயமுறுத்தினது. (௰௯) பாபிலோனின் அழிவு சொல்லப்பட்டது.]

ஆமோத்ஸின் குமாரனாகிய ஏசாயா * பாபேலின்மேல் தரிசனங்கண்டபாரம். * ௰௪, அதி. ௪. மீகா. ௨௧, ௧—௰. எரே. ௫௰, ௧. ழு ௫௧, ௧. ழு

௨. ஓங்கியிருக்கிற பருவதத்தின்மேற் கொடியேற்றுங்கள். சனங்கள் வர உரத்தசத்தமிடுங்கள். அவர்கள் பிரபுக்களின் வாசல்களுக்குட் பிரவேசிப்பதற்குச் சாடைகாட்டுங்கள்.

௩. நாம் பரிசுத்தமாக்கினவர்களுக்கு நாம் கட்டளைகொடுத்தோம். நமது கோபத்தை நிறைவேற்ற நம்முடைய பராக்கிரமசாலிகளை யழைத்துமிருக்கிறோம், அவர்கள் நமது மகத்துவத்தினாலே களிகூருகிறவர்களென்கிறார்.

௪. வெகுசனத்தின் சத்தத்துக்கொத்த திரளானவர்களின் இரைச்சலும், கூட்டப்பட்ட சாதிகளுடைய இராச்சியங்களின் அமளியான இரைச்சலும், மலைகளிற் கேட்கப்படுகிறது, சேனைகளின் கர்த்தர் யுத்தராணுவத்தை இலக்கம்பார்க்கிறார்.

௫. தேசத்தையெல்லாம் அழிக்க வானத்தின் அடியிலுள்ள தூரதேசத்திலிருந்து வருகிறார்கள். கர்த்தரும், அவருடைய சினத்தின் பணிமுட்டுகளுந்தானே.

௬. அலறுங்கள். ஏனெனில், கர்த்தரின் நாள் சமீபமாயிருக்கிறது. சர்வவல்லமையுள்ளவராலே அது பாழ்க்கடிப்பாய் வரும்.

௭. ஆனதினால் எல்லாக் கைகளும் நெகிழ்ந்து எல்லா மனுஷரின் இருதயமுங் கரைந்துபோம்.

௮. திகிலாயிருப்பார்கள். வேதனைகளும், வாதைகளும் அவர்களைப் பிடிக்கும். * பெறுகிறவளைப்போல வேதனைப்படுவார்கள். ஒருவரையொருவர் பிரமித்துப் பார்ப்பார்கள். அவர்கள் முகங்கள் நெருப்பான முகங்களாயிருக்கும். * ௨௧, ௩.

௯. இதோ, தேசத்தைப் பாழ்க்கடித்து விட்டு அதின் பாவிகளை அதிலிருந்து அழிப்பதற்காகக் கர்த்தருடைய நாள் குரூரமும், மூர்க்கமும், கோப உக்கிரமுமாய் வருகிறது.

௰. ஏனெனில், வானங்களின் நட்சத்திரங்களும், அவைகளின் கிரகங்களுந் தங்கள் ஒளியைவிளங்கப்பண்ணாதிருக்கும். * சூரியன் தன் உதயத்தில் இருண்டுபோம், சந்திரன் தன் ஒளியைக்காட்டாததாயிருக்கும்.

* எசேக்கி. ௩௨, ௭. ௮. யோவேல். ௩, ௪. ௨௰. மத்தே. ௨௪, ௨௯. மாற். ௰௩, ௨௪. ௨௫. லூக்கா. ௨௧, ௨௫. அபிவி. ௬, ௰௨. ௰௩.

௰௧. நாம் பூச்சக்கரத்திலே அதின் பொல்லாப்பையும், ஆகாதவர்களிடத்திலே அவர்கள் அக்கிரமத்தையும் விசாரித்து அகந்தைக்காரரின் பெருமையை ஓயப்பண்ணிப் பெலவந்தரின் இடம்பத்தைத் தாழ்த்தி,

௰௨. புருஷனை அபரஞ்சியிலும், மனுஷனை ஓப்பீரின் தங்கத்திலும் அபூருவமாக்குவோம்.

௰௩. ஆகையாற் சேனைகளுடைய கர்த்தரின் மூர்க்கத்தினாலே அவருடைய கோப உக்கிரத்தின் நாளிலே பூமி தன்னிடத்தைவிட்டசையும்படிக்கு வானத்தை யதிரப்பண்ணுவோம்.

௰௪. துரத்தப்பட்ட வெளிமானைப்போலும், ஒருவருஞ் சேர்க்காத ஆட்டைப்போலுமிருப்பார்கள். அவரவர் தங்கள் சனத்தண்டைக்குப்போக முகத்தைத் திருப்பி அவரவர் தங்கள் தேசத்துக்கோடிப்போவார்கள்.

௰௫. அகப்பட்டவனெல்லாங் குத்துண்டு சேர்ந்திருந்தவனெல்லாம் பட்டயத்தால் விழுவான்.

௰௬. அவர்கள் குழந்தைகள் அவர்கள் கண்களுக்குமுன்பாகச் சிதைக்கப்படும். அவர்கள் வீடுகள் கொள்ளையாய்ப்போம். அவர்கள் பெண்சாதிகள் அவமானப்படுவார்கள்.

௰௭. இதோ, நாமவர்கள்மேல் மேதியரை யெழுப்புவோம். அவர்கள் வெள்ளியையெண்ணாமலும், பொன்னின்மேற் பிரியம்வைக்காமலும்,

௰௮. விற்களால் இளைஞரைச் சிதைத்து விடுவார்கள். அவர்கள் கர்ப்பக்கனிகளின்மேலிரங்குவதுமில்லை. அவர்கள் கண் பிள்ளைகளைத் தப்பவிடுவதுமில்லை.

௰௯. அப்படியே இராச்சியங்களின் அலங்காரமும், கல்தேயருடைய பெருமையின் முக்கியமுமாகிய பாபேல் பராபரன் * சோதோமையும், கொமோராவையுங் கவிழ்த்தது

போலே கவிழ்ந்துகிடக்கும். * எரே. ௪௯, ௰௮. ௫௰, ௪௰.

௨௰. என்றென்றைக்கும் அதிலே சஞ்சிதரிப்பாருமில்லை. அங்கே அராபியன் கூடாரம் போடுவதுமில்லை. அங்கே மேய்ப்பர் மந்தையை மறிப்பதுமில்லை.

௨௧. * வனாந்தரச் சீவன்கள் அங்கே தங்கி அவர்கள் வீடுகளை ஊளையிடுதல்களாலே நிரப்பும்; கோட்டான்கள் அங்கே தாபரிக்கும்; பேய்கள் அங்கே துள்ளும். * அபி. ௰௮, ௨.

௨௨. அவர்கள் பாழான மாளிகைகளில் ஓரிகள் ஊளையிட்டு மறுத்தரவுகொடுக்கும். வலுசர்ப்பங்கள் அவர்கள் செல்வவிருக்கையான அரமனைகளிற் கூடும். அதின் காலஞ் சமீபித்துவரும். அதின் நாட்கள் நீடித்திராதென்கிறார்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) பராபரன் இஸ்ரவேலரை முற்சேர்க்கக் கொண்டுவர இரக்கமுற்றது. (௪) அவர்கள் பாபிலோனைச் செயிக்கும்போது செய்யும் நிந்தனை. (௨௪) பராபரன் அசூரியாவுக்கு விரோதமான நியமம் பண்ணினது. (௨௯) பெலிஸ்தேயா பயமுறுத்தப்பட்டது.]

ஏனெனில், கர்த்தர் யாக்கோபுக்கிரங்கி இஸ்ரவேலை இன்னந்தெரிந்துகொண்டு அவர்களை யவர்கள் தேசத்திலே தாபரிக்கப்பண்ணுவார். மறுதேசத்தாரும் அவர்களுக்குச் சேர்க்கையாகி, யாக்கோபின் வீட்டோடே கூடிக்கொள்ளுவார்கள்.

௨. சனசதளங்கள் அவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களை அவர்கள் தானத்துக்கழைத்துவருவார்கள். இஸ்ரவேல் வீட்டார் அவர்களைக் கர்த்தருடைய தேசத்திலே வேலைக்காரிகளுமாகச் சுதந்தரித்துக்கொண்டு தங்களைச் சிறையாக்கினவர்களைச் சிறையாக்கித் தங்களை யொடுக்கினவர்களை யாளுவார்கள்.

௩. கர்த்தர் உன் வாதையையும், உன் தத்தளிப்பையும், நீ அடிமையாக்கப்பட்டிருந்த கடின அடிமைத்தனத்தையும் நீக்கி உன்னை இளைப்பாறப்பண்ணும் அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால்,

௪. நீ பாபேலுடைய இராசாவின்மேலே ஏற்றிச்சொல்லும் வாக்கியமொழியாவது; ஒடுக்கினவன் என்னமாய் ஓய்ந்தான்! பொற்கோல் என்னமாய் ஒழிந்துபோனது!

௫. கர்த்தர் ஆகாதவர்களின் மிலாறையும் ஆண்டிருந்தவர்களின் செங்கோலையும் முறித்துவிட்டார்.

௬. ஓயாத அடியாயச் சனசதளங்களை உக்கிரமாயடித்துச் சாதிகளைக் கோபமாய் ஆண்டிருந்தவன் தப்பாரில்லாமல் துன்பப்படுத்தப்படுகிறான்.

௭. பூமியனைத்தும் இளைப்பாறி அமர்ந்திருக்கிறது. கெம்பீரமாய் முழங்குகிறார்கள்.

௮. பாயமரவிருட்சங்களும், லீபனோனின் கேதுருக்களும், உன்னிமித்தஞ் சந்தோஷமாயிருந்து நீ விழுந்துகிடக்கிறபடியால் முதற்கொண்டெங்களை வெட்ட ஏறிவருவாரொருவருமில்லையென்கிறது.

௯. தாழவிருக்கிற நரகம் உன்னிமித்தம் அசைந்து நீ வருமளவில் எதிர்கொண்டு இராட்சதரையும், பூமியிலிருந்த எல்லாக்கடாக்களையும் உன்னிமித்தம் எழுப்பிச் சாதிகளுடைய எல்லா இராசாக்களையுந் தங்கள் ஆசனங்களிலிருந்தெழுந்திருக்கப்பண்ணும்.

௰. இவர்களெல்லாரும் பிரதியுத்தாரமாக நீயுமெங்களைப்போலப் பலட்சயமாகி எங்களைப்போலானாயோவென்று உன்னுடனே சொல்லுவார்கள்.

௰௧. உன்முழக்கமும், உன் தம்புருகளின் முழக்கமும் நரகத்திலே தள்ளுண்டுபோயின. புழுக்கள் உன் கீழ்ப்போடப்பட்ட படுக்கையும், பூச்சிகள் உன்மூடலுமாயிருக்கின்றன.

௰௨. அதிகாலத்தின் மகனாகிய விடிவெள்ளியே, நீ எப்படி வானத்திலிருந்து விழுந்தாய்! சாதிகளைப் பலவீனப்படுத்தினவனே, எப்படித் தரையிலே விழ வெட்டப்பட்டாய்?

௰௩. * நான் வானத்துக்கேறி என் ஆசனத்தைப் பராபரனுடைய நட்சத்திரங்களின் மேலாகவுயர்த்தி † வடபுறங்களிலுள்ள ஆராதனைக்கூட்டத்தின் பருவதத்திலே உட்காருவேனென்றும், * ௨. தெச. ௨, ௪. † சங்கீ. ௪௮, ௨.

௰௪. மேகங்களுடைய உயர்ந்த தலங்களின்மேலேறி உன்னதமானவருக்கொப்பாவேனென்றும் நீ யுன்னிருதயத்திற் சொன்னாயே.

௰௫. ஆனாற் பாதாளப்புறங்களாகிய நரகத்திலே தள்ளுண்டாயே.

௰௬. உன்னைக் காண்கிறவர்கள் உன்னைக் கண்ணோக்கி உன்மேல் சிந்தனைவைத்துப் பூமியைத் தத்தளிக்கவும், இராச்சியங்களை யதிரவும் பண்ணினவனும்,

௰௭. பூச்சக்கரத்தை வனாந்தரமாக்கி அதின் பட்டணங்களை யழித்துவிட்டுத் தான் கட்டிவைத்தவர்களை யூருக்குப்போக விடுதலையாக்காதேபோனவனுமாகிய புருஷன் இவனோவென்பார்கள்.

௰௮. சாதிகளுடைய சகல இராசாக்களோவென்றால், அனைவருங் கனத்தோடே அவரவர் தங்கள் வீட்டிலே கிடக்கிறார்கள்.

௰௯. நீயோ அருவருப்பான கிளையைப்போலவும், பட்டயக்குத்தாயக் கொலையுண்டவர்களின் உடுப்பைப்போலவும், ஒருகுழியின் கற்குவியலோடே கிடக்க இறைக்கப்பட்டவர்களைப்போலவும், மிதித்துவிடப்பட்ட பிணத்தைப்போலவும் உன் கல்லறைக்குப் புறம்பா யெறிந்துவிடப்பட்டாய்.

௨௰. நீ அவர்களோடொத்து அடக்கம்பண்ணப்பட்டாய். ஏனெனில், உன்தேசத்

தைககெடுதது உனசனததைக கொனறு போடடாய, பொலலாதவருடைய விததது எனறெனறைககும பேர்கொளளுவதிலலை.

௨௧. அவன பிளளைகளெழுமபித் தேசததைச் சுதநதரிததுககொணடு பூசசககரததைப் படடணஙகளால நிரபபாதபடிககு அவர்களுககவர்கள பிதாககளுடைய அககிரமததினிமிததம வதையை ஆயததமபணணுஙகள.

௨௨. ஏனெனறால சேனைகளுடைய கர்ததர் விளமபுகிறதாவது; நாம அவர்களமேலெழுமபி பாபேலுடைய பேரையும, மீநததையும, குமாரனையும, பேரனையுஞ சஙகரிபபோமெனறு கர்ததர்சொலலுகிறார்.

௨௩. நாம அதை முளளமபனறிகளுடைய சுதநதிரமுந தணணீர்ததடாகஙகளுமாககி அதையழிபபினதுடைபபததினாலே பெருககிவிடுவோமெனறு சேனைகளுடைய கர்ததர் விளமபுகிறார்.

௨௪. நாம நினைததிருககிறபடியே நடககும, நாம நிர்ணயிததுககொணடமேதநிறைவேறி நிறகுமெனறு சேனைகளுடையகர்ததர் ஆணைசததியமபணணினார்.

௨௫. எனனவெனறால, நாம அசூரியனை நமது தேசததிலேமுறிதது நமமுடைய பருவ்தஙகளினமேல அவனைமிதிததுபபோடுவோம அபபோதவனுடைய நுகததடி அவர்களமேலிருநதுவிலகி அவனசுமையவர்களதோளிலிருநது நீஙகும.

௨௬. இது தேசமனைததினமேலும நிருணயிககபபடடயோசனையும, இது சகலசாதிகளமேலும நீடடபபடடிருககிறகையுமாயிருககிறதெனறார்.

௨௭. ஏனெனறால சேனைகளுடைய கர்ததர் இபபடிநிருணயிததுககொணடார். அதை யவததமாககுபவனார்! அவருடையகை நீடடபபடடிருககிறது. அதைத்திருபபுமவனார்!

௨௮. * ஆகாஸ இராசா மரணமடைநத வருஷத்திலேயுணடான பாரமானகாட்சியாவது; * ௨. இராசா. ௰௬, ௨௰.

௨௯. முழுபெலிஸதேயாவே, உனனையடிதத கோலுடைநததெனறு களிபபாயிராதே. ஏனெனில, பாமபினவேரிலிருநதுகடடுவிரியனபுறபபடும. அதினகனி பறககிறநெருபபுபபாமபாயிருககும.

௩௰. ஆனதுகொணடு தரிததிரரின தலைசசனகள மேயநது எளியவர்கள சுகமாயபபடுததிருபபார்கள. ஏனெனறால பஞசததினாலேயுனவேரைசசாகபபணணுவோம, உனனில மீதியானவர்களையோ அவனகொனறு போடுவான.

௩௧. வாசலே அலறு, படடணமேகதறு, பெலிஸதியாவே நீ முழுதுஙகரைநதுபோகிறாய. ஏனெனில, வடககேயிருநது புகைக்காடாயவருகிறான, அவனகூடடஙகளிலதனிததவனிலலை.

௩௨. இபபோதும அநதசசாதியினதூதுபதிகளுககெனன மறுவுததரவு சொலலபபடும! * கர்ததர் சீயோனை அஸதிபாரபபடுததினார், அவருடையசனததிற்சிறுமையானவர்கள அதிலேயடைககலமகொணடு தஙகுவார்களெனபதுதானே. * சஙகீ. ௮௭, ௧.

## ௰௫. அதிகாரம்.

[மோவாபின புலமபத்தக்கஸ்திதி.]

மோவாபினமேலிறஙகுமபாரம. இராவிலே மோவாபின ஆர்படடணம பாழாககபபடடது. அது சஙகாரமானது, இராவிலேமோவாபின கீர்படடணம பாழாககபபடடது, அது சஙகாரமானது. * எரேமி. ௪௮, ௧. ஏசேக. ௨௫, ௮-௰௧. செபப. ௨, ௮. ௯.

௨. ஆனபடியால, அழுமபடிககுப பாயிததுககும, தீபோனுககும, பாமேடுகளுககும போயேறுகிறார்கள, நேபோவினிமிததமும, மெதேபாவினிமிததமுமமோவாபபு அலறுகிறது, * அவர்களுடைய எலலாததலைகளும மொடடையிடடிருககும, எலலாததாடிகளுங கததரிததிருககும. * எரே. ௪௮, ௩௭.

௩. அதினவீதிகளில இரடடைககடடிககொணடு அதினவீதிகளினமேலும, அதின தெருககளிலும எலலாரும அலறியழுகையில இறஙகி இருககிறார்கள.

௪. எஸபோனஊராரும, எலெயாலேஊராருங கூககுரலிடுகிறார்கள. அவர்களசததம ஆகாசமடடுங கேட்கபபடுகிறது. ஆனபடியால, மோவாபின ஆயுதபபாடானவர்கள கதறுகிறார்கள, அவனவனுடைய ஆததுமா அவனவனில நொநதுபபடுகிறதாயிருககிறது.

௫. * எனனிருதயம மோவாபினிமிததங கூவுகிறது, அதிலிருநதோடிவருகிறவர்கள மூனறுவயதினகிடாரியைபபோலே அலைகிறார்கள. லூகிததுககேறுகிறவழியிலே அழுகையோடே ஏறுகிறார்களே, ஒரொனாயீமின வழியிலுங குளறுடடமான கூக்குரலிடுகிறார்களே. * எரே. ௪௮, ௩௪—௩௬.

௬. ஏனெனில, நிமரீமின நீர்பபாயசசலகள பாழாயககிடககினறன. அதினாற புலலுலர்நது முளையழிநது பசசையிலலாமற போகிறது.

௭. ஆனபடியால, மீதியாகசசேர்நததையும, அவர்களவைததுவைததசதையும, * அலரிகளின ஆறறுககபபாலே எடுததுபபோவார்கள. * சஙகீ. ௱௩௭, ௨.

௮. ஏனெனறால கூககுரல மோவாபின எலலையைசசுறறும, எகலாயிமமடடும அதின அலறுதலும, பெயேரேலிமமடடும அதின அலறுதலும எடடும.

௯. அதேதெனில, தீமோனின தணணீர்

கள் இரத்தத்தால் நிறைந்திருக்கும். ஏனென்றால், நாம் திமோனின்மேல் அதிகக்கேடுகளைக் கட்டளையிட்டு மோவாபிலே தப்பினவர்கள்மேலும், தேசத்தில் மீதியானவர்கள் மேலும் சிங்கத்தை வரப்பண்ணுவோம்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) மோவாப் கிறிஸ்துவின் இராச்சியத்துக்குக் கீழ்ப்படிய ஏவப்பட்டது. (௬) அதின் செல்வச் செருக்கைக் குறித்துப் பயமுறுத்தப்பட்டது. (௯) தீர்க்கதரிசி அதைக் குறித்துப் புலம்பினது. (௰௨) மோவாபுக்கு வரும் நியாயத்தீர்ப்புச் சொல்லப்பட்டது.]

தேசாதிபதிக்குச் செலுத்தும் ஆட்டுக்குட்டிகளை நீங்கள் சேலாப் பட்டணந்தொடங்கி வனாந்தரமட்டுஞ் சேர்த்துச் சீயோன் குமாரத்தியின் பருவதத்துக்கு அனுப்புங்கள்.

௨. இல்லாவிட்டால் மோவாபின் குமாரத்திகள் கூட்டைவிட்டுத் துரத்தப்பட்டலைகிற குருவியைப்போலே அர்னோன் நதியின் துறைகளண்டையிலிருப்பார்கள்.

௩. நீ ஆலோசனைபண்ணி நியாயஞ்செய்து மத்தியான உருமத்திலே உன் நிழலை இரவைப்போலாக்கித் துரத்துண்டவர்களை மறைத்து ஓடிவருகிறவர்களைக் காட்டிக்கொடாதிரு.

௪. மோவாபே, துரத்துண்ட நம்முடையவர்கள் உன்னிலே தங்கட்டும், சங்கரிக்கிறவனுக்குத் தப்ப அவர்களுக்கு அடைக்கலமாயிரு. ஏனெனில், இறுகப்பிடிக்கிறவன் இல்லாதேபோவான், சங்கரிப்பு ஒழிந்துபோம், மிதிக்கிறவர்கள் தேசத்திலிராதபடிக்கு அழிந்துபோவார்கள்.

௫. ஏனெனில், இராசாசனங் கிருபையோடே உறுதிபண்ணப்படும், தாவீதின் கூடாரத்திலே நியாயாதிபதியாயிருந்து நியாயம் விசாரித்து நீதிக்குத் தீவிரிக்கிற * ஒருவர் அதின்மேல் உண்மையோடே உட்காருவார். * ௯, ௬. ௭. லூக்கா. ௧, ௩௩.

௬. மிகவும் ஒய்யாரமான மோவாபின் பெருமையையும், அதின் மட்டிமையையும், அதின் அகந்தையையும், அதின் உக்கிரத்தையுங் கேட்டிருக்கிறோம், அதின் வீம்பு அத்தப்படியல்லவென்கிறது. * எரே. ௪௮, ௨௯. செப்ப. ௨, ௮.

௭. ஆகையால், மோவாபியர் ஒருவரையொருவர் பார்த்து அலறி எல்லாரும் ஏகமாய் அலறுவார்கள், கிராரேசேத்தின் அஸ்திபாரங்கள் தகர்க்கப்பட்டதேயென்று அவைகளுக்காகப் பெருமூச்சு விடுவீர்கள்.

௮. ஏனெனில், எஸ்போனின் வயல்கள் சத்தியற்றுப்போயின, சிப்மாவூர் திராட்சப்பயிருங்கூடவென்று சாதிகளின் அதிபதிகள் அதின் நற்சாதிச் செடிகளை நறுக்கிப்போட்டார்கள், யாசேர்மட்டுஞ் சேர்ந்து வந்துவனாந்தரத்தில் சுற்றித்திரிகிறார்கள், அதின் நாற்றுகள் கிளைத்துப் பட்டுக்கடலுக்கப்பாலே எட்டிப்போம்.

௯. ஆகையால், யாசேருக்காகவும், சிப்மாவூர் திராட்சப்பயிருக்காகவும் மிகவும் அழுகிறேன். எஸ்போனே, எலெயாலேயே உனக்கு என் கண்ணீரைப் பாயச்சுகிறேன், நீ உலர்ந்த காலத்துக்காகவும், உன் அறுப்புக்காகவுங் கொக்கரிக்கிற சந்தோஷசத்தம் விழுந்துபோனது.

௰. * சந்தோஷமும், களிப்பும் பயிர்வெளியிலிருந்து வாங்கிப்போனது. திராட்சத் தோட்டங்களிற் கெம்பீரிப்புமில்லை ஆர்ப்பரிப்புமில்லை, மிதிக்கிறவன் ஆலைகளில் இரசத்தை மிதிப்பதில்லை, கொக்கரிப்பை ஓயப்பண்ணினோம். * எரே. ௪௮, ௩௩.

௰௧. * ஆகையால் என் குடல்கள் மோவாபினிமித்தமும் என் உள்ளம் கிராரேசினிமித்தமும் சுரமண்டலத்தைப்போல் முழங்குகிறது. * ௰௫, ௫. எரே. ௪௮. ௩௬.

௰௨. சம்பவிப்பதேதெனில், மோவாபியர் மேடைகளின்மேல் இளைப்படைந்தார்களென்று காணப்படும்போது தங்கள் பரிசுத்தஸ்தலத்திலே பணியப்பிரவேசிப்பார்கள், ஆனால் ஒன்றும் அடையமாட்டார்கள்.

௰௩. இதுவே கர்த்தர் அக்காலமுதல் மோவாபின்மேற் சொன்னவார்த்தை.

௰௪. இப்போதுங் கர்த்தர் உரைக்கிறதாவது; ஒருகூலிக்காரனுடைய வருஷங்களைப் போலொத்த மூன்று வருஷங்களிலே மோவாபின் மகிமை மந்தவெல்லாப் பெரிய திரளோடுங்கூடச் சிறுத்துப்போம், அதில் மீதியாயிருப்பதோ பெலத்திராமற்கொஞ்சமும் மட்டுமாயிருக்குமென்கிறார்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) சீரியாவையும், இஸ்ரவேலரையும் பயமுறுத்தினது. (௬) மீதியானவர்கள் விக்கிரகாராதனையைவிடுவார்களென்பது. (௯) மற்றவர்கள் தங்கள் அவபத்தினிமித்தம் உபாதிக்கப்படுவார்களென்பது. (௰௨) இஸ்ரவேலருடைய சத்துருக்களின்மேல் வரும் வேதனை சொல்லப்பட்டது.]

* தமஸ்குவினுடைய பாரம் இதோ தமஸ்கு பட்டணமாயிராதபடிக்குத் தள்ளப்பட்டு இடிந்த மண்மேடாயிருக்கும்.
* எரே. ௪௯, ௨௩—௨௭. ஆமோ. ௧, ௩—௫.

௨. ஆரோவேரின் பட்டணங்கள் பாழாய் விடப்பட்டு மந்தைகளின் வெளியாயிருக்கும், அவைகள் அங்கே மருட்டுவாரில்லாமல் படுக்கும்.

௩. அரண் எப்பிராயீமையும், இராசாங்கந் தமஸ்குவையும் விட்டொழியும், சீரியாவில் மீதியாயிருப்பவர்கள் இஸ்ரவேல் புத்திரரு

டைய மகிமையின சாயலாயிருபபார்களெ னறுசேனைகளுடையகர்த்தர்சொலலுகிருர்.

ச. அககாலததிலேசமபவிபபதேதெனில, யாககோபின மகிமைகுறுகி அவன மாம் சததினகொழுபபுக கரைநதுபோம.

ரு. ஒருவன ஒஙகின பயிரை அரிநதுகொ ணடு தன புயததினுற கதிர்களை யறுததுக் கொப்பாயீம்பள்ளததாககிலேகதிர்களைசசேர் ககுமாபபோவிருககும.

கூ. ஆனுலஒலிவமரததைய லுபபினபோது நுனிககொமபிலே இரணடுமூனறு காயக ளும, அலலது காயககிற அதின கிளைகளில நாலைநது காயகளும மீதியாயிருககுமாப போலே அதிலே பின அறுபபுககொருசம மீதியாயிருககுமெனறு இஸரவேலின பரா பரனுகிய கர்ததர் சொலலுகிருர்.

எ. அககாலததிலேமனுஷன தனனைசசிரு ஷ்டிததவரை நோககுவான. அவன கணகள இஸரவேலின பரிசுததரை நோககிககொணடிருககும,

அ. தனகைகளின கிரியையாகியபீடஙகளைநோக்காமலும், தன விரலகள உணடுபணணினதையும, தோபபு களையும, சிலைகளையுமநோககாமலும,

கூ. அககாலததிலே அவர்களுடைய பெல லுள பட்டணஙகள இஸரவேலபுததிரருக குபபின வைககப்பட்டுபபோன தழையின மீதியைபபோலவும, நுனிககொமபின மீதி யைபபோலவுமிருநது பாழாயக்கிடககும.

ய. ஏனெனில, உனபலனின கனமலையை நீ நினையாமல உன இரட்சிபபின பராபரனை மறநதாய. ஆனபடியால நீ நேர்த்தியான நாற்றுகளைநட்டும அனனியதேசத்துக்கண ணுகளைவைததும.

யக. பகறகாலததிலே உன நாற்றை வளர வும, காலமே உன விதையை முளைககவும பணணியும பலனைக கைவசமாககிககொள ளுமநாளிலே அறுபபு ஒருபோரும, நோயா னவேதனையுமாயிருககும.

யஉ. ஐயோ கடலகள கொநதளிககுமாப போலே கொநதளிககிற அநேகஞசனசத னஙகளின திரளும, பலத்த தணணீர்கள இரைவதுபோலே இரைகிற சனககூட்டங களின அமளியுமுணடு.

யங. சனககூட்டஙகள திரளான தணணீர் கள இரையுமாபபோலே இரையும, ஆனுல * அவனை யதட்டுவார். அபபோதுபருவதங களிலே காறறுககொணடுபோம பதரைப போலவும, பெருஙகாறறிலஅகபபட்டதுரு மபைப்போலவுந தூரததிலே ஓடித தூரத தப்படுவான. * ௬எ, சஙகி. ௬௬. ௰

யச. சாயஙகாலததிலே இதோ கலககமுண டு. ஆனுல விடியறகாலமாகாத்தறகுமுன னே அவனிலலை. இது நமமைக கொளளை யாடுகிறவர்களின பஙகும, நமமைச சூறை யாடுகிறவர்களின வீதமுமாயிருககும.



## யஅ. அதிகாரம்.

[(க) பராபரன தமது சனததைக காககும பொருட்டு எதியோபபியரை அழிபபாரெ னபது. (எ) அதனுலசபை பெருகுமெனப து.]

எததியோபபியாவின ஆறுகளுக்கக் கரையிலே நிழல இருபுறமாகத திரும புகிறது.

உ. கடலிலே தாளுபதிகளையும் ஜலபபிததண ணீர்களின்மேல் முஙகிலதோணிகளிலே போ கிறதுமாகிய தேசததினசனததுககு ஐயோ வேகமான தூதர்களே நீணடதூரமாயககுடி யிருககிறதும, மயிர்சிரைக்கப்பட்டதுமாகிய சாதியணடைககும, உணடானதுமுதறகொ ணடு இதுவரைககுங கொடியதாயிருநததும, அளவிடபபடுவதும,மிதிக்கப்படுவதும,ஆறு கள புரணடு தேசததைப பாழுக்கடிபபது மான சாதியாகியசனத்தணடைககுமபோங கள.

௩. பூச்சககரததில வாசமாயிருககிறவர்க ளும, தேசததுககுடிகளுமாகிய நீஙகளெல லாரும பருவதஙகளிற கொடியேறறபபடும போது பார்தது எககாளம ஊதபபடும போது கேட்பீர்கள.

ச. ஏனெனில, நாம அமர்நதிருநது வெளி சசததினமேலே காயும காநதியுளள காங கையைபபோலவும, அறுபபுககாலததின வெயிலிலேபனிமேகததைபபோலவுமநமது வாசஸதலததிலிருநது கவனிககுவோமெ னகிறதாயக கர்ததர் எனனுடனே சொன னுர்.

ரு. ஏனெனில, அறுபபுககுமுனனே பூப் பூததுத்தீர்நது காயககிற திராட்சககாய கள பிஞ்சாயிருககுமபோதே அவர் அரிவா ளகளினுலே கப்புக கயிறுகளை யறுததுக கொடிகளை யரிநது வாஙகிபபோடுவார்.

௬. அவைகள ஏகமாயப் பருவதஙகளின பட்சிகளுககும, பூமியின மிருகஙகளுககும விடபபடும, பட்சிகள அதினமேல கோடை காலததுககும, பூமியினமிருகஙகளெலலாம அதினமேல மாரிகாலததுககுந தஙகும.

எ. அககாலததிலே நீணடகரையோரமா யக குடியிருககிறதும, உணடானதுமுதற கொணடு கெடியாயிருநததுமான சனமும, அளவிடபபட்டதும, மிதிககபபட்டதும, ஆறுகள புரணடு தேசததைப பாழக்கடித ததுமானசாதியும, சேனைகளுடைய கர்தத ரினநாமம தஙகுநதலமாகிய சீயோன பருவ தத்தணடையில * சேனைகளுடைய கர்தத ருககுக காணிககையாகக் கொணடுவரபபடு ம. * சஙகீதம. ௬அ, ௩௨.

## ய௯. அதிகாரம்.

[(க) எகிப்தின கலககமும, (யக) அவர்க ளுடைய அரசரினமூடததனமும், (யஅ) எகி

ப்தைச் சபையிலே சேர அழைத்ததும், (௨௫) எகிப்து, அசூரியா இஸ்ரவேல்களின் உடம்படிக்கையுஞ் சொல்லப்பட்டது.]

ஏகிப்தினுடைய பாரம் * இதோ கர்த்தர் வேகமான மேகத்தின்மேல் ஏறி எகிப்துக்கு வருவார். அப்போது எகிப்தின் † விக்கிரகங்கள் அவருக்கு முன்பாக அசைந்து எகிப்தின் இருதயம் அவர்களுள்ளத்திலே கரைந்துபோம். * எரேமி. ௪௬, ௨. யெசே. ௨௯, ௧. யெசே. ௩௰, ௧. யெசே. † ௨. மோசே ௰௨, ௰௨.

௨. சகோதரனோடே சகோதரனும், சிநேகிதனோடே சிநேகிதனும், பட்டணத்தோடே பட்டணமும், இராச்சியத்தோடே இராச்சியமும் யுத்தம்பண்ணும்படியாய் எகிப்தரை எகிப்தரோடே போர்கலக்கப்பண்ணுவேன்.

௩. அதினால் எகிப்தருடைய ஆவி அவர்களுக்குள் வெறுமையாகும்; அவர்கள் ஆலோசனையை முழுகிப்போகப்பண்ணுவேன். அப்போது விக்கிரகங்களையும், மந்திரவாதிகளையும், சன்னதக்காரர்களையும், குறிசொல்லுகிறவர்களையுந் தேடுவார்கள்.

௪. ஆனால் எகிப்தரைக் கடினமான அதிபதிகளின் கைக்குள் அடைப்பேன்; கடூர இராசா அவர்களை யாளுவானென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௫. அப்போது கடலின் தண்ணீர்கள் குறைந்து நதி வற்றி வறண்டுபோம்.

௬. ஆறுகளை விட்டுவிடுவார்கள். அரணிப்பான அகழ்கள் குறுகிவற்றிப்போம்; கொறுக்கையும், நாணலும் வாடிம்.

௭. நதியண்டையிலும், நதியோரத்திலுமிருக்கிற மடலுள்ள செடிகளும், நதியருகே விதைக்கப்பட்ட யாவும் உலர்ந்துபோம். அது பறக்கடிக்கப்பட்டில்லாமற்போம்.

௮. மீன்பிடிக்கிறவர்கள் பெருமூச்சுவிட்டு நதியிலே தூண்டில்போடுகிற யாவருந் துக்கித்துத் தண்ணீர்களின்மேல் வலைகளை வீசுகிறவர்கள் சலித்துப்போவார்கள்.

௯. மெல்லிய சணல்வேலைகளைச் செய்து சல்லாக்களை நெய்கிறவர்கள் நாணுவார்கள்.

௰. மீன்வளர்க்கிற குளங்களைக் கூலிக்குக் கட்டுகிற அனைவருடைய அணைக்கட்டுகளும் நசுங்குண்டுபோம்.

௰௧. சோவான்பட்டணத்தின் பிரபுக்கள் பயித்தியக்காரர்தானே, பார்வோனுடைய ஞானமுள்ள ஆலோசனைக்காரரின் ஆலோசனை மதியற்றுப்போனது, நான் ஞானிகளின் பிள்ளை, நான் பூருவ இராசாக்களின் புத்திரனென்று பார்வோனுடனே எப்படிச் சொல்லுகிறீர்கள்!

௰௨. இப்போது உன்னுடைய ஞானிகள் எங்கே! சேனைகளின் கர்த்தர் எகிப்தின்மேல் பண்ணின யோசனையை அவர்கள் உனக்கு அறிவிக்கட்டும், அல்லது தாங்கள் அறிந்துகொள்ளட்டும்.

௰௩. சோவான் ஊர்ப்பிரபுக்கள் பயித்தியக்காரரானார்கள். நோப்பூர்ப்பிரபுக்கள் மோசம்போய், எகிப்தையும் அதின் கோத்திரங்களுடைய தலைவரையும் வழிதப்பப்பண்ணுகிறார்கள்.

௰௪. * கர்த்தர் அதின் நடுவில் தாறுமாறுகளின் ஆவியை யூற்றினார். ஆனது கொண்டு வெறித்தவன் வாந்திபண்ணுகையில் திகைகெட்டுத் திரிகிறதுபோலே அவர்கள் எகிப்தை அதின் எல்லாச்செய்கையிலுந் திகைகெட்டுத் திரியப்பண்ணுகிறார்கள். * ௧. இரா. ௨௨, ௨௩.

௰௫. * தலையும், வாலும், கிளையும், நாணலுமென்றவர்கள் செய்யும்வேலை எகிப்துக்கு உதவாத வேலையாயிருக்கும். * ௯, ௰௪. ௰௫.

௰௬. அக்காலத்திலே எகிப்தர் பெண்சாதிகளைப்போலிருந்து சேனைகளின் கர்த்தர் தங்கள்மேல் அசைக்குங்கை யசைவினாலே நடுநடுங்கிப் பயப்படுவார்கள்.

௰௭. யூதாவின்தேசம் எகிப்தருக்குத் தத்தளிப்புண்டாக்குகிறதாயிருக்கும். தனக்குள் அதை நினைக்கிறவனெல்லாரும் சேனைகளின் கர்த்தர் தங்களுக்கு விரோதமாக நிர்ணயித்துக்கொண்ட ஆலோசனையினிமித்தம் நடுங்குவான்.

௰௮. அக்காலத்திலே கானான் பாஷையைப் பேசிச் சேனைகளின் கர்த்தருக்கு ஆணையிடுகிற ஐந்து பட்டணங்கள் எகிப்துதேசத்திலிருக்கும்; ஒன்று நிர்மூலமான பட்டணமென்னப்படும்.

௰௯. அக்காலத்திலே எகிப்து தேசத்தின் நடுவிலே கர்த்தருக்கொரு பீடமும், அதின் எல்லையருகே கர்த்தருக்கொரு தூணும் உண்டாயிருக்கும்.

௨௰. அது எகிப்து தேசத்திலே சேனைகளின் கர்த்தருக்கு அடையாளமும், சாட்சியுமாயிருக்கும். ஏனெனில், ஒடுக்குகிறவர்களினிமித்தம் அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவார்கள். அப்போதவர்களுக்கொரு இரட்சகனையும், ஒரு பெலவானையும் அனுப்பி அவர்களை விடுவிப்பார்.

௨௰௧. அப்போது கர்த்தர் எகிப்தருக்கறியப்படுவார், எகிப்தர் கர்த்தரை அக்காலத்திலேயறிந்து * அவருக்குப் பலிகளோடும், காணிக்கைகளோடும் ஆராதனைசெய்து கர்த்தருக்குப் பொருத்தனைகளைப்பண்ணி அவைகளைச் செலுத்துவார்கள். * மல்கி. ௧, ௰௧.

௨௰௨. கர்த்தர் எகிப்தரை வாதையினாலே அடித்துக்குணமாக்குவார், அவர்கள் கர்த்தரண்டைக்குமனந்திரும்புவார்கள். அப்போதவர்கள் விண்ணப்பத்தைக் கேட்டவர்களைக் குணமாக்குவார்.

உங. அக்காலத்திலே எகிப்திலிருந்து அசூரியாவுக்குப்போகிற பாதையுண்டாயிருக்கும். அசூரியர் எகிப்திலும், எகிப்தர் அசூரியாவிலும் வந்து எகிப்தர் அசூரியரோடுங் கூடத் தேவாராதனைசெய்வார்கள்.

உச. அக்காலத்திலே பூமியின் நடுவிலிருக்கும் ஆசீர்வாதத்தினாலே இஸ்ரவேல் எகிப்தோடும், அசூரியாவோடும் மூன்றாவதாயிருக்கும்.

உரு. அவர்களைச் சேனைகளுடைய கர்த்தர் ஆசீர்வதித்து எகிப்தராகிய நமது சனமும் அசூரியராகிய நம்முடைய கரங்களின் கிரியையும், இஸ்ரவேலராகிய நமது சுதந்தரமும் ஆசீர்வதிக்கப்பட்டதென்பார்.

## உய. அதிகாரம்.

[எகிப்து எத்தியோப்பியாவின் தாணமற்ற அடிமைத்தனத்தின் அடையாளஞ் சொல்லப்பட்டது.]

தர்த்தான் அசூரியாவின் இராசாவாகிய சர்கோனாலே யனுப்பப்பட்டு அஸ்தோத்துக்குவந்து அஸ்தோத்தின்மேல் யுத்தம்பண்ணி யதைப்பிடித்த வருஷமாகிற அக்காலத்திலே, * உ. இராசா. யஅ, யே.

உ. கர்த்தர் ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவைக்கொண்டுபேசி நீபோய் உன் அரையின்மேலிருக்கிற இரட்டையவிழ்த்து உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழற்றென்றார். அப்படியே யவன்செய்து அம்மணமும், வெறுங்காலுமாய் நடந்தான்.

ங. அப்போது கர்த்தர் உரைத்ததாவது; எகிப்தின்மேலும், எத்தியோப்பியாவின்மேலும்வரும் மூன்று வருஷத்துக்காரியங்களுக்கடையாளமும், அற்புதமுமாகத் தம்முடைய ஊழியக்காரனாகிய ஏசாயா அம்மணமும், வெறுங்காலுமாய் நடக்கிறதுபோலே,

ச. அசூரியாவின் இராசா தான் சிறைபிடிக்கப்போகிற எகிப்தரையும், தான் குடிவிலக்கப்போகிற எத்தியோப்பியரையும், இளைஞரையும், கிழவரையும் அம்மணமாகவும், வெறுங்காலாகவும், எகிப்தரின் வெட்கத்துக்குத் திறந்த இருப்பிடமாகவுங்கொண்டுபோவான்.

ரு அப்போது இந்தக்கரை குடிகள் தாங்கள் நம்பியிருந்த எத்தியோப்பியாவைத்தொட்டும், தாங்கள் பெருமைபாராட்டின எகிப்தைத்தொட்டுங் கலங்கிவெட்கி,

சு. இதோ அசூரிய இராசாவின் முகத்துக்குத் தப்புமபடிக்கு நாங்கள் நம்பிச்சகாயத்துக்கென்று ஓடிவந்து அண்டினவனிப்படியானேன, நாங்களெப்படி விடுவிக்கப்படுவோமென்று அக்காலத்திலே சொல்லுவார்களென்றார்.

## உக. அதிகாரம்.

[(க) தீர்க்கதரிசி தனசனத்தின் அடிமைத்தனத்தைக்குறித்து விதனமுற்றாலும், மேதியராலும் பெர்சியராலும் பாபிலோனவிழுகிறதை ஒருதரிசனத்திலே கண்டது. (யக) தீர்க்கதரிசியைத்தூஷித்த ஏதோமகுணப்படுதலுக்கு எச்சரிக்கப்பட்டது. (யரு) அராபியாவுக்குவருந்துன்பக்காலத்தின்குறிப்புச்சொல்லப்பட்டது.]

தெற்புறமான வனாந்தரத்திலுடையபாரங் சுழல்காற்றுகள் தேறத்தந்தேசத்திலெழும்பிக் கடந்துவருமாப்போலே பயங்கரமானதேசமாகிய வனாந்தரத்திலிருந்து வருகிறான.

உ கடின தரிசனமெனக்கு அறிவிக்கப்பட்டது, துரோகி துரோகம்பண்ணிப்பாழ்க்கடிக்கிறவன்பாழ்க்கடித்துக்கொண்டேயிருக்கிறான், பெர்சியனே எழும்பு, மேதியனே முற்றிக்கைபோடு அதினாலுண்டான தவிப்பையெல்லாம் ஓயப்பண்ணுகிறேம்.

ங. ஆகையால் என்னிடுப்பு நோவேதனையால் நிறைந்திருக்கிறது, பிள்ளை பெறுகிறவளின் வாதைகளுக்கொத்த வாதைகள் என்னைப்பிடித்தன. கேட்கிறதினாலே மடங்கிக்காண்கிறதினாலே கலங்குகிறேன்.

ச. என்னிருதயந் திகைக்கிறது, திகில் என்னைத்திடுக்கிடப்பண்ணுகிறது. * அதெனக்கு விருப்பயான இராவிருளையெனக்கு நடுக்கமுள்ளதாக்கிறது. * தானி. ரு, க. கூ.

ரு பந்தியையாயத்தம்பண்ணுதலும், சாமங்காக்குதலும், புசித்துக்குடிக்குதலுமுண்டு, பிரபுக்களே யெழுந்து பரிசைகளைப்பூசுங்கள்.

சு. ஏனெனில், ஆண்டவர் என்னுடனே, நீ போய்க் காண்பதையறிவிக்குஞ் சாமக்காரனைவையென்றார்.

எ அவன் சோடு சோடாகக் கழுதைகளின்மேலும், ஒட்டகங்களின்மேலும், ஏறிவருகிறவர்களைக்கண்டு மிகுந்தகவனமாய்க் கவனித்துக்கொண்டேயிருந்து,

அ. ஆண்டவரே, நான் காவலிலே பகலிலெப்போதும் நின்று நான் இராக்காலங்கள் முழுதும் என் சாமத்திலே தரித்திருக்கிறேனென்று சிங்கசத்தமாய்க் கூப்பிடுகிறான.

கூ. இப்போதும் இதோ ஒருசோடுகுதிரை பூண்ட இரதத்தின்மேலேறியிருக்கிற ஒரு மனுஷன்வந்து * பாபேல் விழுந்தது விழுந்தது. அதின் விக்கிரகதேவர்களையெல்லாந் தரையோடேமோதியுடைத்தாரென்று பிரதியுத்தரமாகச்சொல்லுகிறான். * எரேமி. ருக, அ. அறிவிப். யச, அ. யஅ, உ.

ய. என்போரடித்தானியமே என்களத்தின் கோதுமையே, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடையகர்த்தராலே நான் கேள்வியானதையுங்களுக்கறிவித்தேன்.

உங. அக்காலத்திலே எகிப்திலிருந்து அசூரியாவுக்குப்போகிற பாதையுண்டாயிருக்கும். அசூரியர் எகிப்திலும், எகிப்தர் அசூரியாவிலும் வந்து எகிப்தர் அசூரியரோடு கூடத்தேவாராதனைசெய்வார்கள்.

உச. அக்காலத்திலே பூமியின் நடுவிலிருக்கும் ஆசீர்வாதத்தினாலே இஸ்ரவேல் எகிப்தோடும், அசூரியாவோடுமே மூன்றாவதாயிருக்கும்.

உரு. அவர்களைச் சேனைகளுடைய கர்த்தர் ஆசீர்வதித்து எகிப்தராகிய நமது சனமும் அசூரியராகிய நம்முடைய கரங்களின் கிரியையும், இஸ்ரவேலராகிய நமது சுதந்தரமும் ஆசீர்வதிக்கப்பட்டதென்பார்.

## உய. அதிகாரம்.

[எகிப்து எத்தியோப்பியாவின் நாணமற்ற அடிமைத்தனத்தின் அடையாளஞ் சொல்லப்பட்டது.]

தர்த்தான் அசூரியாவின் இராசாவாகிய சர்கோனாலே யனுப்பப்பட்டு அஸ்தோத்துக்கு வந்து அஸ்தோத்தின்மேல் யுத்தம்பண்ணி யதைப்பிடித்து வருஷமாகிற அக்காலத்திலே, * உ. இராசா. யஅ, யஎ.

உ. கர்த்தர் ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவைக்கொண்டு பேசி நீபோய் உன் அரையின்மேலிருக்கிற இரட்டையவிழ்த்து உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக்கழற்றென்றார். அப்படியே யவன்செய்து அம்மணமும், வெறுங்காலுமாய் நடந்தான்.

ங. அப்போது கர்த்தர் உரைத்ததாவது; எகிப்தின்மேலும், எத்தியோப்பியாவின்மேலும் வரும் மூன்று வருஷத்துக்காரியங்களுக்கு அடையாளமும், அற்புதமுமாகத் தம்முடைய ஊழியக்காரனாகிய ஏசாயா அம்மணமும், வெறுங்காலுமாய் நடக்கிறதுபோலே,

ச. அசூரியாவின் இராசா தான் சிறைபிடிக்கப்போகிற எகிப்தரையும், தான் குடிவிலக்கப்போகிற எத்தியோப்பியரையும், இளைஞரையும், கிழவரையும் அம்மணமாகவும், வெறுங்காலாகவும், எகிப்தரின் வெட்கத்துக்குத் திறந்த இருப்பிடமாகவுங்கொண்டுபோவான்.

ரு. அப்போது இந்தக்கரைத்துறைக்குடிகள் தாங்கள் நம்பியிருந்த எத்தியோப்பியாவைத்தொட்டும், தாங்கள் பெருமைபாராட்டின எகிப்தைத்தொட்டும் கலங்கிவெட்கி,

சு. இதோ அசூரிய இராசாவின் முகத்துக்குத் தப்பும்படிக்கு நாங்கள் நம்பிச்சகாயத்துக்கென்று ஓடிவந்து அண்டினவனிப்படியானானே, நாங்களெப்படி விலகப்பட்டுப்போவோமென்று அக்காலத்திலே சொல்லுவார்களென்றார்.

## உக. அதிகாரம்.

[(க) தீர்க்கதரிசி தன் சனத்தின் அடிமைத்தனத்தைக்குறித்து விசனமுற்று, மேதியராலும் பெர்சியராலும் பாபிலோன் விழுதலை ஒரு தரிசனத்திலே கண்டது. (யக) தீர்க்கதரிசியைத்தூஷித்த ஏதோம் குணப்படுதலுக்கு எச்சரிக்கப்பட்டது. (யரு) அராபியாவுக்கு வருந்துன்பக்காலத்தின் குறிப்புச்சொல்லப்பட்டது.]

அாஉரு

கடற்புறமான வனாந்தரத்தினுடைய பாரம். சுழல்காற்றுகள் தெற்குதேசத்திலெழும்பிக் கடந்துவருமாப்போலே பயங்கரமான தேசமாகிய வனாந்தரத்திலிருந்து வருகிறான்.

உ. கடின தரிசனமெனக்கு அறிவிக்கப்பட்டது, துரோகி துரோகம்பண்ணிப்பாழ்க்கடிக்கிறவன் பாழ்க்கடித்துக்கொண்டேயிருக்கிறான், பெர்சியனே எழும்பு, மேதியனே முற்றிக்கைபோடு அதினாலுண்டான தவிப்பையெல்லாம் ஒய்ப்பண்ணுகிறேன்.

ங. ஆகையால் என்னிடுப்பு மகாவேதனையால் நிறைந்திருக்கிறது, பிள்ளைபெறுகிறவளின் வாதைகளுக்கொத்தவாதைகள் என்னைப்பிடித்தன. கேட்கிறதினாலே மடங்கிக்காண்கிறதினாலே கலங்குகிறேன்.

ச. என்னிருதயந் திகைக்கிறது, திகில் என்னைத்திடுக்கிடப்பண்ணுகிறது. * அதெனக்கு விருப்பமான இராவிருளையெனக்கு நடுக்கமுள்ளதாக்கிறது. * தானி. ரு, க. ரு.

ரு பந்தியையாயத்தம்பண்ணுதலும், சாமங்காக்குதலும், புசித்துக்குடிக்குதலுமுண்டு, பிரபுக்களே யெழுந்து பரிசைகளைப்பூசுங்கள்.

சு. ஏனெனில், ஆண்டவர் என்னுடனே, நீ போய்க் காண்பதையறிவிக்குஞ் சாமக்காரனைவையென்றார்.

எ அவன் சோடு சோடாகக் குதிரைகளின்மேலும், ஒட்டகங்களின்மேலும், ஏறிவருகிறவர்களைக்கண்டு மிகுந்தகவனமாயக் கவனித்துக்கொண்டேயிருந்து,

அ. ஆண்டவரே, நானெனக்காவலிலே பகலிலெப்போதும் நின்று நான் இராக்காலங்கள் முழுதும் என் சாமத்திலே தரித்திருக்கிறேனென்று சிங்கசத்தமாயக் கூப்பிடுகிறான்.

கூ. இப்போதுமஇதோ ஒருசோடு குதிரைப்பூட்ட இரதத்தின்மேலேறியிருக்கிற ஒரு மனுஷன் வந்து * பாபேல் விழுந்தது விழுந்தது. அதின் விக்கிரகதேவர்களையெல்லாம் தரையோடேமோதியுடைத்தானென்று பிரதியுத்தரமாகச்சொல்லுகிறான். * எரேமி. ருக, அ. அறிவிப்பு. யச, அ. யஅ, உ.

ய. என்போரடித்தானியமே என்களத்தின் கோதுமையே, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தராலே நான் கேள்வியானதையுங்களுக்கறிவித்தேன்.

௰௧. தூமாவினுடைய பாரஞ் சேயீரிலிருந்து என்னை நோக்கிச் சாமங்காக்கிறவனே, இராத்திரியிலே நடந்த செய்தியென்ன! சாமங்காக்கிறவனே, இரவுபோகிற செய்தியென்னவென்று கூப்பிடுகிறார்கள்.

௰௨. விடியற்காலம் வந்திருந்தும் இராவாயிருக்கிறது, நீங்கள் கேட்கமனதானால் திரும்பிவந்து கேளுங்களென்று சாமங்காக்கிறவன் சொல்லுகிறான்.

௰௩. அராபியாவின்மேற் சுமரும்பாரம் தெதானியராகிய பயணக்கூட்டங்களே, அராபியாவில் இராத்தங்குவீர்கள்.

௰௪. தேமாதேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமாயிருக்கிறவர்களுக்குத் தண்ணீரை யெதிராகக்கொண்டுபோய் வலசைவருகிறவர்களுக்கு அவர்களுடைய அப்பத்தைக் கொடுக்கநேரிட்டுப்போங்கள்.

௰௫. ஏனென்றால் பட்டயங்களுக்கும், உருவின பட்டயத்துக்கும், நாணேற்றின வில்லுக்கும், கன யுத்தத்துக்குந் தப்ப வலசை வருகிறார்கள்.

௰௬. ஏனெனில், * ஆண்டவர் என்னுடனே சொன்னதாவது; ஒரு கூலிக்காரனுடைய வருஷங்களைப்போலொத்த ஒரே வருஷத்திலே கேதாருடைய மகிமையெல்லாம் அற்றுப்போய், * ௰௬, ௰௪.

௰௭. கேதார் புத்திரருடைய பலத்த விற்காரரின் தொகையில் மீதியானவர்கள் கொஞ்சம்பேராயிருப்பார்களென்றார். இதை இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைத்தார்.

## ௨௨. அதிகாரம்.

[(௧) பெர்சியானராலே எருசலேம் பிடிபடுவதைக்குறித்துத் தீர்க்கதரிசிபுலம்பினது. (௮) அவர்களுக்குண்டாகிய மனிதஞானத்தையும், லோகசந்தோஷத்தையுங் கண்டித்தது. (௰௫) செப்னாதாழ்ந்துபோவதைத் தீர்க்கதரிசனமாயறிவித்தது. (௨௰) அவனுக்குப்பதிலாக எலியாக்கீம் கிறிஸ்துவின் இராசியத்துக்கிருப்பதை அடையாளமாகக்குறிக்கப்பட்டது.]

தரிசனப்பள்ளத்தாக்கின்பாரம் உன்னிலுள்ளவர்களெல்லாரும் வீடுகளின் மேலேறுவதற்கு உனக்கு இப்போது வந்ததென்ன?

௨. களிகூர்ந்திருந்த பட்டணமே, நீ அமளிகளால் நிறைந்து கலங்கின ஊரானாய், உன்னிற் கொலையுண்டவர்கள் பட்டயத்தாற் கொலையுண்டதில்லை, யுத்தத்திற் செத்ததுமில்லை.

௩. உன் அதிபதிகளெல்லாரும் ஏகமாயோடியலைந்து விற்காரரால் கட்டுண்கிறார்கள், உன்னில் அகப்பட்டயாவருந் தூரத்துக்கோடியும் ஏகமாய்க் கட்டுண்கிறார்கள்.

௪. ஆகையால் என்னைவிட்டுக் கண்ணைத் திருப்புங்கள், * மனங்கசந்தழுவேன், என் சனமாகிய குமாரத்தியினுடைய பாழாக்குதலினிமித்தம் எனக்கு ஆறுதல்சொல்ல நெருங்காதேயுங்களென்கிறேன். * எரேமியா. ௧, ௯.

௫. ஏனென்றால் சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவராலே தரிசனப்பள்ளத்தாக்கிலே அமளியும், மிதியுண்குதலும், கலக்கமுமான நாளாயிருக்கிறது, அலங்கத்தைத் தகர்த்துப் பருவதத்துக்குநேரே யார்ப்பரிக்கும் நாள்தானே.

௬. பெர்சியன் அம்பறாத்தூணியை யெடுத்து இரதங்களோடும், மனுஷரோடும், இரவுத்தரோடும் வருகிறான், அலங்கங்கேடயங்களற்றுப்போம்.

௭. மகாவடிவான உன் பள்ளத்தாக்குகள் இரதங்களால் நிறையப்படுவதுண்டு, குதிரைக்காரரை வாசல்கள்மட்டும் நிறுத்துவார்கள்.

௮. அவன் யூதாவின் மறைவை வாங்கிப்போடுவான். அந்நாளிலே காட்டுமரவீட்டின் ஆயுதசாலையை நோக்குவாய்.

௯. நீங்கள் தாவீதுடைய பட்டணத்தின் இடிதல்களை மிகுதியானவைகளென்று கண்டு கீழ்க்குளத்தண்ணீர்களைச் சேர்த்து.

௰. எருசலேமின் வீடுகளையெண்ணி அலங்கத்தை யரணிப்பாக்கும்படிக்கு வீடுகளையிடித்து,

௰௧. இரண்டு மதில்களுக்கு நடுவே பழைய குளத்தண்ணீர்களுக்கொரு அகழையுண்டுபண்ணுவீர்கள். ஆனால், அதைச்செய்கிறவரை நீங்கள் நோக்காமலும், அதையேற்படுத்தித் தூரத்திலிருந்து வரப்பண்ணுகிறவரைக் கவனிக்காமலும்போகிறீர்கள்.

௰௨. சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் அக்காலத்திலே அழுகையையும், புலம்பலையும், மொட்டையிடுதலையும், இரட்டுடுக்குதலையும் வரவழைப்பார்.

௰௩. இப்போதோவெனில், இதோ சந்தோஷமும், களிப்பும், மாடுகளைக்கொல்லுகிறதும், ஆடுகளையடிக்கிறதும், இறைச்சியைச் சாப்பிடுகிறதும், மதுவைக் குடிக்கிறதும், புசித்துக்குடிப்போம். ஏனெனில், நாளைச் சாகிறோமென்று சொல்லுகிறதுமுண்டு.

* ௧. கொரிந்தர். ௰௫, ௩௨.

௰௪. அது சேனைகளின் கர்த்தராகிய நம்முடைய செவிகளுக்கு வெளியரங்கமாயிருக்கிறது. மெய்யாகவே நீங்கள் சாகுமட்டும் இந்த அக்கிரமம் உங்களுக்கு நிவிர்த்தியாவதில்லையென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் உரைத்ததாவது; நீ வீட்டுவிசாரிப்புள்ள இந்தப் பொக்கிசக்காரனாகிய செப்னாவண்டைக்குப்போய்ச் சொல்லவேண்டியதேதெனில்,

௧௬. தனக்கல்லறையை யுயர்ந்தஸ்தலத்திலே வெட்டிக்கன்மலையிலே தனக்குவாசஸ்தலத்தைத்தோண்டுகிறவனைப்போலே நீ உனக்கிங்கேகல்லறையைவெட்டும்படிக்கு உனக்கிங்கேயிருப்பதென்ன? அல்லது உனக்கிங்கேயிருப்பவர்களார்!

௧௭. இதோ பலவான் ஒருவனைத்துரத்துகிறவண்ணமாகக் கர்த்தர் உன்னைத்துரத்திவிட்டு உன்னைமூடவேமூடுவார்.

௧௮. ஒருவன் ஒரு உண்டையையுருட்டுமாப்போலே உன்னையகலமும், விசாலமுமான தேசத்திலே உருட்டவேஉருட்டுவார், அங்கேசாவாய், அங்கே உன்மகிமையின் இரதங்கள் உன்னுடையவனுடைய வீட்டுக்கு இகழ்ச்சியாகவிருக்கும்.

௧௯. உன்னையுன் நிலையைவிட்டுப்பறக்கடிப்போம், உன்தானத்திலிருந்துன்னைப் பிடுங்கிப்போடுவான்.

௨௰. அந்நாளிலேசம்பவிப்பதாவது; * இல்க்கியாவின் குமாரனாகிய எலியாக்கிமென்னுந்தம்முடைய ஊழியக்காரனை நாமழைத்து, * ௬௬, ௬.

௨௧. உன்வஸ்திரத்தையவனுக்குடுத்துஉன் கச்சையாலவனைத்திடனுக்கட்டி உன்னதிகாரத்தை யவன் கையிலே கொடுப்போம். அவன் எருசலேமின்குடிகளுக்கும், யூதாவின் வீட்டுக்குந்தகப்பனாயிருப்பான்.

௨௨. தாவீதுடைய வீட்டின் திறவுகோலையவன் தோளின்மேலவைப்போம், அவன் * ஆரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறந்து ஆரும் திறக்கக் கூடாதபடிக்குப் பூட்டுவான். * அறிவி. ௩, ௭.

௨௩. அவனையுறுதியானஇடத்திலே ஆணியாகக்கடாவுவோம், அவன் தன்தகப்பன் வீட்டுக்குக்கனமானஆசனமாகவிருப்பான்.

௨௪. அதின்மேல அவன்தகப்பன்வீட்டாராகியபிள்ளைகள் பேரன்மார்களுடைய மகிமையனைத்தையும், குடிக்கிற பாத்திரங்கள் முதற்கொண்டு சகலதயபுருமட்டுக்கள் மட்டுமிருக்கிற சகலசிறுபாத்திரங்களையுந் தூக்கிப்போடுவார்கள்.

௨௫. உறுதியான இடத்திற் கடாவப்பட்டிருந்த ஆணி அந்நாளிலே பிடுங்கப்பட்டு வெட்டுண்டுவிழும், அப்போது அதின்மேலிருந்தசுமை அற்றுப்போகுமென்று சேனைகளின்கர்த்தர் உரைக்கிறார், இதைக்கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

[(௧) தீருப்பட்டணத்தின் பாழ்க்கடிப்பும் (௰௭) அப்பட்டணத்தார் சிறுமைப்பட்டுத் திரும்புதலும் சொல்லப்பட்டது.]

தீருவினுடையபாரமதர்சீஸ் கப்பல்களின் மனுஷரே அலறுங்கள், அது வீடில்லாதபடிக்கும், வருவாரில்லாதபடிக்கும் பாழாக்கப்பட்டது. கித்திம் தேசத்திலிருந்து இந்தச்செய்திவந்து அவருக்குவெளிப்படுகிறது. * எரே. ௪௭, ௪. எசே. ௨௬, ௨. ௨௭, ௨. ௨௮, ௨. ௨௮, ௨௧. ௬, ௨—௪.

௨. தீவுக்குடிகளேமவுனமாகுங்கள், சீதோனின்வர்த்தகர் சமுத்திரத்திலே யாத்திரைபண்ணிஉன்னை நிரப்பினார்கள்.

௩. சீகோர்நதியின்விருந்த நீர்ப்பாய்ச்சல்களால் விளையும்பயிர்வகைகளும், அதின்மகசூலுமுன் வரத்தாயிருந்தன, நீ சாதிகளின் சந்தையாயிருந்தாய்.

௪. சீதோனேவெட்கப்படு, ஏனெனில், நானினிக்கர்ப்பவேதனைப்படுகிறதுமில்லை, பெறுகிறதுமில்லை. இளைஞரை ஆளாக்குகிறதுமில்லை, கன்னியாஸ்திரிகளைவளர்க்கிறதுமில்லையென்று சமுத்திரக்கோட்டையான கடல்துறைசொல்லுகிறது.

௫. எகிப்தின்செய்தி கேட்கப்பட்டதினால் நோவுண்டானதுபோலே தீருவின் செய்தி கேட்கப்படுவதாலுமுண்டாம்.

௬. கரைதுறைக்குடிகளே நீங்கள் தர்சீஸ்மட்டும் புறப்பட்டுப்போய் அலறுங்கள்.

௭. பூர்வநாள்கள் முதல்துவக்கங்கொண்டு களிகூர்ந்திருந்த உங்கள் பட்டணம் இதுவோ பரதேசம்போக இதின் குடிகளுடைய கால்கள் இவர்களைத் தூரமாய்க் கொண்டுபோம்.

௮. கிரீடந்தரித்துக்கொண்டிருக்கிற தீருவுக்குவிரோதமாக இதையோசித்துத் தீர்த்தவரார்! * அதின்வர்த்தகர் பிரபுக்களும், அதின்வியாபாரிகள் தேசத்திற் கனமுள்ளவர்களுமாமே.

௯. எல்லாச்சிறப்பின் அகந்தையையுங்குலைத்துத்தேசத்திலே கனமுள்ள யாவரையுங் கனவீனமாக்குவதற்காகச்சேனைகளின்கர்த்தரோ இதையோசித்துத்தீர்த்தார்.

௰. தர்சீஸின்குமாரத்தியே, ஒருஆற்றைக்கடக்குமாப்போலே உன்தேசத்தைக் கடந்துபோ, கட்டுங்கச்சை இனியில்லை.

௰௧. தமதுகையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி இராச்சியங்களைக் குலுங்கப்பண்ணுகிறார். கானானின் அரண்களையழிக்கக் கர்த்தர் அதற்கு விரோதமாகக் கட்டளைகொடுத்து,

௰௨. ஒடுங்குண்ட கன்னியாகிய சீதோன் குமாரத்தியே, இனிக் களிகூர்ந்துகொண்டிராய், எழுந்திருந்து கித்திமுக்குப் புறப்பட்டுப்போ, அங்கேயும் உனக்கிளைப்பாறுதலில்லையென்றார்.

௰௩. அதோகல்தேயருடைய தேசம், அந்தச்சனமுன்னிருந்ததில்லை. அசூர்என்றவனவனுந்தரத்தாருக்காக அதின்அஸ்திபாரத்தை யேற்படுத்தினான், இப்படித் தங்கள் துருக்கங்களையெடுப்பித்துத் தங்கள் அரம

௰௯. அவைகளின் தேவர்களை நெருப்பிலே போட்டார்கள். ஏனெனில், அவைகள் தேவர்களாயிராமல் மனுஷர் கைகளின் வேலையாகிய மரமும், கல்லுமாயிருந்தன. ஆகையால், அவைகளை நிர்த்தூளியாக்கினார்கள்.

௨௰. இப்போதும் எங்கள் பராபரனாகிய கர்த்தாவே தேவரீர் ஒருவரே கர்த்தரென்று பூமியின் இராச்சியங்களெல்லாம் அறியும்படிக்குத் தேவரீர் எங்களை அவன் கைக்கு நீங்கலாக்கி இரட்சியுமென்று ஏசேக்கியா விண்ணப்பம்பண்ணினான்.

௨௧. அப்போது ஆமோத்ஸின் குமாரனாகிய ஏசாயா ஏசேக்கியாவுக்குச் சொல்லியனுப்பினதாவது; இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நீ அசூரியாவின் இராசாவாகிய சனகேரீபினிமித்தம் நம்மை நோக்கி விண்ணப்பம்பண்ணினையே.

௨௨. அவனைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறவசனமாவது; சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி உன்னை இகழ்ந்து உன்னையாக்கியம்பண்ணுகிறாள். எருசலேம் குமாரத்தி உன் பின்னாலே தலையைத் துலுக்குகிறாள்.

௨௩. ஆரை நிந்தித்துத் தூஷணித்தாய்? ஆருக்கு விரோதமாய்ச் சத்தத்தையுயர்த்தினாய்? நீ இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோதமாகவல்லவோ உன் கண்களை மேட்டிமையாய் நெரித்தாய்.

௨௪. உன் ஊழியக்காரரைக்கொண்டு நீ ஆண்டவரை நிந்தித்து என் இரதங்களின் திரளினாலே நான் லீபனோனின் பக்கங்களாகிய மலைகளின் உயரத்திலே ஏறினேன், அதின் ஓங்கலாகிய அதின் கேதுருக்களையும், தெரிந்துகொள்ளப்பட்ட பாயமரவிருட்சங்களையும் நான் வெட்டி அதின் கடைசி உயரமாகிய அதின் செழுமையான காட்டிடம்மட்டும் வருவேனென்றும்,

௨௫. நான் ஊற்றுகளை வெட்டித் தண்ணீர்களைக் குடித்தேன். என் உள்ளங்கால்களின் அடியினாலே எகிப்தின் ஆறுகளையெல்லாம் வறளவும் பண்ணுவேனென்றுஞ் சொன்னாய்.

௨௬. நாம் வெகுகாலத்துக்கு முன் அதைச் செய்ப்பண்ணிப் பூருவ நாள்களமுதற்கொண்டதைச் செய்ய யோசித்திருக்கிறோமென்று நீ கேட்டதில்லையோ? இப்போது நீ அரணான பட்டணங்களைப் பாழான மண்மேடுகளாக்குகிறவனாயிருக்க அதை வரப்பண்ணினோம்.

௨௭. அதினாலே அவைகளின் குடிகள் கை பெலனற்றவர்களாகிக் கலங்கி வெட்கப்பட்டு வெளியின் பூண்டுக்கும், பசுமையான பூண்டுக்கும், வீடுகளின் மேல் முளைத்த புல்லுக்கும், ஓங்கி வளராத்தற்குமுன் தீந்துபோன பயிருக்குஞ் சமானமானார்கள்.

௨௮. ஆனாலும் உன்னிருப்பையும், உன் புறப்பாட்டையும் உன் வருகையையும், நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளிக்கிறதையும் அறிவோம்.

௨௯. ஆனதுகொண்டு நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளித்து உன் அகங்காரம் நம்முடைய செவிகளிலே ஏறினபடியினாலே நாம் நம்முடைய துறட்டையுன் மூக்கிலும், நம்முடைய கடிவாளத்தை யுன் வாயிலும் போட்டு நீ வந்தவழியே யுன்னைத் திருப்பிக்கொண்டு போவோமென்பதுதானே.

௩௰. உனக்கோவெனில், அடையாளமாயிருப்பதாவது; இந்த வருஷத்திலே தப்பிப்பயிராகிறதையும், இரண்டாம் வருஷத்திலே அதினாலே விளைகிறதையுஞ் சாப்பிடு. மூன்றாம் வருஷத்திலோ விதைத்து அறுத்துத் திராட்சத்தோட்டங்களை நாட்டி அவைகளின் கனிகளைச் சாப்பிடுங்கள்.

௩௧. யூதாவின் வீட்டாரிலே தப்பிமீதியானவர்கள் அப்புறந் தாழவேர்ப்பற்றி உயரக் கனிகொடுப்பார்கள்.

௩௨. ஏனெனில், மீதியானவர்கள் எருசலேமிலும், தப்பினவர்கள் சீயோன் பருவதத்திலுமிருந்து புறப்படுவார்கள். * சேனைகளுடைய கர்த்தரின் சுறுசுறுப்பு அதைச் செய்யும். * ௯, எ.

௩௩. ஆகையாலே கர்த்தர் அசூரியாவின் இராசாவைக் குறித்து உரைக்கிறதாவது; அவன் இந்தப்பட்டணமட்டும் வருவதுமில்லை. அதிலே அம்பை யெய்வதுமில்லை. அதற்கு முன் கேடயத்தோடே வருவதுமில்லை. அதற்கு விரோதமாய்க் கொத்தளம்போடுவதுமில்லை.

௩௪. அவன் இந்தப் பட்டணத்துக்குட்பிரவேசியாமலே தான் வந்தவழியே திரும்பிப்போவான்.

௩௫. ஏனெனில், நம்முடைய நிமித்தமாகவும், நம்முடைய தாசனாகிய தாவீதின் நிமித்தமாகவும் நாம் இந்தப்பட்டணத்தை இரட்சிக்கும்படிக்கு அதற்காதரவாயிருப்போமென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லியனுப்பினான்.

௩௬. அப்போது * கர்த்தருடைய தூதன் புறப்பட்டு அசூரியர் பாளயத்திலே நூற்றெண்பத்தையாயிரம்பேரைச் சங்கரித்தான். அவர்கள் அதிகாலமே எழுந்திருக்கும்போது, இதோ, எல்லாருஞ் செத்த சவங்களாய்க் கிடந்தார்கள். * ௰, ௰௪. ௨. இராசா. ௰௯, ௩௫.

௩௭. அப்போது அசூரியாவின் இராசாவாகிய சனகேரீப் பயணப்பட்டுத் திரும்பிக்கொண்டுபோய் நினிவேயிலிருந்துவிட்டான்.

௩௮. பிறகு சமயவித்ததேவன் தனில், அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் வீட்டிற் பணிந்துகொள்ளுகிறபோது அவன் குமாரராகிய

அதிரமேலேக்கும், சரேத்சேரும், அவனைப் பட்டயத்தாலே வெட்டிப்போட்டு ஆரராத் தேசத்துக்குத் தப்பியோடிப்போனார்கள். அவன் குமாரனாகிய ஏசர்காதோன் அவன் பட்டத்துக்கு வந்து ராசாவானான்.

## ௩௮. அதிகாரம்.

[(௧) எசேக்கியா மரணச்செய்தியைக் கேட்டுச் செபத்தினாலே தான் ஆயுவிருத்தியடைந்தது. (௯) அதற்கு அடையாளமாகச் சூரிய கடியாரத்தில் நிழல் பத்துவரியின்னிட்டுப் போனது. (௯) நன்றியறிதற்கு எசேக்கியா பாடின பாட்டு.]

அந்நாட்களில் எசேக்கியா சாகத்தக்கதான வியாதிப்பட்டிருந்தான். அப்போது ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா என்ற தீர்க்கதரிசி அவனண்டைக்கு வந்து: அவனுடனே உன் வீட்டுக்குத் திட்டம்பண்ணவேண்டிய திட்டங்களைக் கட்டளைபண்ணு. ஏனெனில், நீ பிழைக்காமல் மரிப்பாயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான். * ௨. இராசா. ௨௰, ௧. முதல்

௨. அப்போது எசேக்கியா தன் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக் கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி,

௩. ஆ, கர்த்தாவே நான் உமக்கு முன்பாக உண்மையும், மன உத்தமுமாய் நடந்துகொண்டு உமது பார்வைக்கு நலமானதைச் செய்தேனென்கிறதை நினையுமே என்று எசேக்கியா மகா அழுகையாய் மிகுதியும் அழுதான்.

௪. அப்போது ஏசாயாவுக்குண்டான கர்த்தருடைய வார்த்தையாவது;

௫. நீ போய் எசேக்கியாவுடனே சொல்லவேண்டியது: உன் தகப்பனாகிய தாவீதின் பராபரனாயிருக்கிற கர்த்தர் சொல்லுகிறதேதெனில், உன் விண்ணப்பத்தைக் கேட்டோம். உன் கண்ணீரைக் கண்டோம். இதோ நாம் உன் நாளகளோடே பதினைந்துவருஷங்களைக் கூட்டி,

௬. அசூரியா இராசாவின் கைக்கு உன்னையும், இந்தப் பட்டணத்தையும் தப்புவித்து இந்தப் பட்டணத்துக்கு ஆதரவாக விருப்போம்.

௭. இதோ நாம் ஆகாசுடைய சூரியகடியாரத்தில் வரிக்குவரியிறங்கின நிழலைப் பத்துவரி பின்னிட்டுத் திருப்புவோமென்றார்.

௮. தாம் சொன்ன இந்த வார்த்தையின்படி கர்த்தர் செய்வாரென்கிறதற்கு இது கர்த்தரால் உனக்கு அடையாளமாயிருக்குமென்று சொல்லென்றார். அப்படியே கடியாரத்தில் இறங்கியிருந்த சூரிய நிழல் பத்துவரி திரும்பிற்று.

௯. யூதாவின் இராசாவாகிய எசேக்கியா வியாதியாகித் தன் வியாதியும் நீங்கிச் சொஸ்தமானபோது எழுதிவைத்ததாவது;

௰. என் குறையாட்சின வருஷங்களுக்குச் சேராமல் பாதாள வாசல்களுக்குட்படுவேனென்று நானென்னுள்ளகள அழுப்புண்கிற போது சொன்னேன்.

௰௧. கர்த்தரைக் கர்த்தரையே நான் இனி உயிரோடிருக்கிறவர்களின் தேசத்திலே தரிசிப்பதில்லை. நான் இனிப் பூலோகக்குடிகளோடிருந்து மனுஷரைக் காண்பதில்லை.

௰௨. என்னுடைய மேய்ப்பனுடைய கூடாரத்தைப்போலென்னைவிட்டுப் பேர்ந்துபோகிறது. நெய்கிறவன் பாவையறுக்கிறதுபோல் என் சீவனையறுக்கக்கொடுக்கிறேன். என்னைத் தறிபாவிலிருந்தறுத்து விடுகிறார். இன்றிராவிற்குள்ளே என்னை முடிவடையப்பண்ணுவீர்

௰௩. விடியற்காலத்தோடென்னைத் தேற்றினேன். சிங்கத்தைப்போலென்னெலும்புகளையெல்லாம் நொறுக்குவார். இன்றிராவுக்குள்ளே என்னை முடிவடையப்பண்ணுவீர் என்று சொல்லி,

௰௪. நமுட்டைப்போலும், தகைவிலான் குருவியைப்போலும் கீச்சென்று கூவினேன். * புறாவைப்போலப் புலம்பினேன். என் கண்களுயரப்பார்க்கிறதினாலே பூத்துப்போயின. கர்த்தாவே ஒடுங்கிப்போகிறேன். எனக்காக மேற்போட்டுக்கொள்ளுமென்றேன். * ௫௯, ௰௧. ௰௫.

௰௫. நானென்னசொல்லுவேன். அவரொன்றைக் கருத்தரவுகொடுத்தார். அந்தப்பிரகாரமுஞ் செய்தார். என்னுத்துமாவின் கசப்பை என்னுடைய வருஷங்களிலெல்லாம் நினைத்து நடந்துகொள்ளுவேன்.

௰௬. ஆண்டவரே அதினால் பிழைக்கிறார்கள். அதில் முழுதுமென்னுயிரின் சீவனிருக்கிறது. என்னைச் சொஸ்தப்படவும், பிழைக்கவும்பண்ணினீர்.

௰௭. இதோ சமாதானத்துக்குப் பதிலாக எனக்கு மகா கசப்புவந்திருந்தது. தேவரீரோ என்னுத்துமாவை அழிவின் குழிக்கு விலக்கி வரவழைத்தீர். ஏனெனில், என் பாவங்களையெல்லாம் உமது முதுகுக்குப் பின்னாக எறிந்துவிட்டீர்.

௰௮. ஏனென்றால், பாதாளம் உம்மைத்துதிப்பதும், மரணம் உம்மைப்போற்றுவதுமில்லை. குழியிலிறங்குகிறவர்கள் உம்முடைய சத்தியத்தைத் தியானிக்கிறதில்லை.

௰௯. உயிரோடே உயிரோடிருக்கிறவனே யும்மை நான் இன்று செய்கிறதுபோலே துதிப்பான். தகப்பன் பிள்ளைகளுக்கு உமது சத்தியத்தை யறிவிப்பான்.

௨௰. கர்த்தர் என்னை இரட்சிக்கவந்தார். ஆகையால் எங்கள் சீவனுடைய எல்லா நாட்களிலும் கர்த்தருடைய வீட்டிலே என் கீதவாத்தியங்களை வாசிப்போமென்றெழுதிவைத்தான்.

௨௧. அத்திப்பழக் குழம்பை யெடுத்துக்கொண்டுவந்து எரிபந்தப்பருவின்மேலே பற்றுப்போடுங்கள். அப்பொழுது பிழைப்பானென்று ஏசாயா சொல்லியிருந்தான்.

௨௨. அப்பொழுது எசேக்கியா நான் கர்த்தருடைய வீட்டுக்குப் போயேறுவதற்கு அடையாளமென்னவென்று கேட்டிருந்தான்.

## ௩௯. அதிகாரம்.

[(௧) எசேக்கியாவை வினவும்படி மெரோதாக்கினால் அனுப்பப்பட்டஆள்கள் அவனுடைய பொக்கிஷத்தைப் பார்வையிட்டது. (௫) ஏசாயா அதையறிந்து பாபிலோனின் சிறையிருப்பை முன்னே தெரிவித்தது.]

அக்காலத்திலே * பலாதானுடைய குமாரனாகிய மெரோதாக் பலாதான் என்ற பாபிலோன் இராசா எசேக்கியா வியாதிப்பட்டு ஆரோக்கியமானதைக்கேட்டு அவனிடைக்குக் காகிதங்களையும், வெகுமானத்தையும் அனுப்பினான். * ௨. இரா. ௨௰, ௨௰. முதலிய

௨. அவர்கள்மேலே எசேக்கியா சந்தோஷப்பட்டு அவர்களுக்குத்தன் பொக்கிஷசாலையையும், வெள்ளியையும், பொன்னையும், கந்தவர்க்கங்களையும், நல்ல பரிமளதயிலத்தையும், தன்னாயுதச்சாலையனைத்தையும், தன்பொக்கிஷங்களிலுள்ளவையெல்லாவற்றையுங் காண்பித்தான். தன்வீட்டிலும், தன்னுடைய எல்லாவிராச்சியத்திலும்எசேக்கியா அவர்களுக்குக் காண்பியாதபொருளில்லை.

௩. அப்பொழுது ஏசாயாதீர்க்கதரிசி எசேக்கியா இராசாவண்டைக்குவந்து அவனுடனே அந்தமனுஷர் என்னசொன்னார்கள். எங்கேயிருந்து உம்மண்டைக்குவந்தார்களென்றான். அதற்கு எசேக்கியாபாபேலென்கிற தூரதேசத்திலிருந்து என்னண்டைக்கு வந்தார்களென்றான்.

௪. அப்பொழுது அவன் உம்முடையவீட்டிலே என்னத்தைக்கண்டார்களென்றான். அதற்கு எசேக்கியா என் வீட்டிலுள்ளவையெல்லாவற்றையுங்கண்டார்கள். என் பொக்கிஷங்களில் நான் அவர்களுக்குக் காண்பியாத பொருளில்லையென்றான்.

௫. அப்பொழுது ஏசாயாஎசேக்கியாவுடனே சொன்னதாவது; சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தையைக்கேளும்.

௬. இதோ, நாள்கள்வரும், அப்பொழுது உன் வீட்டிலுள்ளதிலும், உன் பிதாக்கள் இந்நாள்வரைக்குஞ் சேர்த்ததிலும் ஒன்றும் மீதியாய்வைக்கப்படாமல் எல்லாம் பாபேலுக்குக்கொண்டுபோகப்படும்.

௭. நீ பெறப்போகிற உன் சந்தானமாகிய உன் குமாரரிலுஞ் சிலரை பாபேலுடைய இராசாவின் அரமனையிலே பிரதானிகளாயி



ருக்க எடுப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

௮. அப்பொழுது எசேக்கியா ஏசாயாவுடனே நீ சொன்ன கர்த்தருடையவார்த்தை நல்லதேயென்றுசொல்லி என் நாள்களில் ஆகிலுஞ் சமாதானமும், உண்மையுமிருக்குமேயென்றான். ௩௯. அதி.

## ௪௰. அதிகாரம்.

[(௧) சுவிசேஷத்தின்பிரசித்தம். (௩) யோவான்ஸ்நானனுடைய பிரசங்கம். (௯) அப்போஸ்தலர்களுடையபிரசங்கம். (௰௨) தீர்க்கதரிசி பராபரனுடைய சர்வவல்லமையினாலும், (௰௮) அவருடைய ஒப்பின்மையினாலும், (௨௭) சனத்தைத்தேற்றினது.]

நீங்கள் நமது சனத்தை ஆற்றுங்கள். தேற்றுங்கள்.

௨. நீங்கள் எருசலேமுடனே * பட்சமாய்ப்பேசி அதின்போர்முடிந்ததென்றும், அதின் அக்கிரமம் நிவிர்த்தியாக்கப்பட்டதென்றும், அது தன்னுடைய எல்லாப் பாவங்களின் நிமித்தங் கர்த்தரின் கையிலிரட்டிப்பா யடைந்து தீர்ந்ததென்றும், அதற்குக் கூறுங்களென்றும் உங்கள் பராபரன்சொல்லுகிறார்.

௩. * வனாந்தரத்திலே கர்த்தருடைய வழியை ஆயத்தப்படுத்துங்கள். நம்முடையபராபரனுக்கு அந்தரவெளியிலே பாதையைச் செவ்வைபண்ணுங்களென்றும், * மத்தே. ௩, ௩. மாற்கு. ௧, ௩. லூக்கா. ௩, ௪—௬. யோவா. ௧, ௨௩.

௪. பள்ளமெல்லாம உயர்த்தப்பட்டுச்சகல மலையும், குன்றுந் தாழ்த்தப்பட்டுக்கோணலானது செவ்வையாகிக் கரடுமுரடானவைகள் சமனாக்கடவதென்றும்,

௫. கர்த்தரின் மகிமை வெளியரங்கமாகும், அதை யெல்லா மாம்சமும், ஏகமாய்க்காணும். ஏனெனில், கர்த்தரின்வாக்கு அதை யுரைத்ததென்றுங் கூப்பிடுகிற சத்தமுண்டாம்.

௬. கூப்பிடு என்றொரு சத்தமுண்டாம். என்னத்தைக்கூப்பிட்டுச்சொல்லுவேனென்கிறான். * எல்லா மாம்சமும் புல்லைப்போலும், அதின் மேன்மையெல்லாம் வெளியின் பூவைப்போலுமிருக்கின்றன. * யோபு ௰௪, ௨. சங்கீ. ௯௰, ௫. ௱௩, சங்கீ. ௰௫. ௰௬. ௧. பேது. ௧, ௨௪. ௨௫.

௭. கர்த்தரின் ஆவியதின்மேலூதும்போது புல்லுலர்ந்து பூவுதிரும் சனமே புல்லு.

௮. புல்லுலர்ந்து பூவுதிரும். * நம்முடைய பராபரனுடைய வசனமோ என்றென்றைக்கும் நிற்கும் என்பதையேயென்று உரைக்கும். * லூக்கா. ௨௧, ௩௩.

௯. சீயோனென்ற சுவிசேஷகியே, நீ உயர்ந்த பருவதத்திலேறு. எருசலேமென்ற சுவி

## ௪௧. அதிகாரம்.

[(௧) பராபரன் சபையின்மேல் தம்முடைய இரக்கங்களையும், (௰) வாக்குத்தத்தங்களையும் (௨௧) விக்கிரகத்தின் மாயையையுங் குறித்துத் தமது சனத்தோடே விவாதஞ்செய்தது.]

தீவுகளே நமக்கு முன்பாக மவுனமாகுங்கள். சனசதளங்கள் தங்கள் பெலனைப் புதிதாக்கிக்கொண்டு சமீபித்துவந்து பிறபாடு பேசக்கடவார்கள். ஒருமிக்க நியாயத்திலே சேருவோம்.

௨. நீதியாய்த் தம்முடைய காலடியில் வரக் கிழக்கிலிருந்து ஒருவனையெழுப்பி அழைத்தவர் ஆர்? * அவனுக்கு முன்பாகச் சாதிகளையொப்புக்கொடுத்து அவனை இராசாக்களுக்காண்டவனாக்கி இவர்களை அவன் பட்டயத்துக்குத் தூசியும், அவன் வில்லுக்குச் சிதறடிக்கப்பட்ட தாளடியுமாக்கி, * எஸ்றா. ௧, ௨.

௩. அவனிவர்களைத் துரத்தவும், தன் கால்கள் வராதிருந்த பாதையிலே சமாதானத்தோடே கடக்கவும்பண்ணுகிறவர் ஆர்?

௪. அதை நடப்பித்துச்செய்து ஆதிமுதற்கொண்டு தலைமுறைகளைவரவழைத்துக்கொண்டிருக்கிறவர் ஆர்! * முந்தினவராயிருக்கிற கர்த்தராகிய நாம் தாமே பிந்தினவர்களோடுமிருப்பவராகிய நாம் தாமே. * ௪௪, ௬. ௪௮, ௰௨. அறி. ௧, ௰௭. ௨௨, ௰௩.

௫. தீவுகள் அதைக்கண்டு பயப்படும், பூமியின் கடையாந்தரங்கள் நடுங்கும் அவர்கள் சேர்ந்துவந்து,

௬. ஒருவனுக்கொருவன் ஒத்தாசைசெய்து சகோதரனோடே சகோதரனே பெலப்படுவென்றுசொல்லுகிறான்.

௭. சித்திரக்காரன் தட்டானையும், சுத்தியலாலே மெல்லிசாய்த்தட்டுகிறவன் அடையின்மேல் அடிக்கிறவனையுந் தயிரியப்படுத்தி இசைவுநல்லதென்றுசொல்லி அதை அசையாதபடி காணிகளாலே கெட்டியாக்குகிறான்.

௮. ஆனால் * நம்முடைய தாசனாகிய இஸ்ரவேலே நாம் தெரிந்துகொண்ட யாக்கோபே நம்முடைய † சிநேகிதனான ஆபிரகாமின் வித்தே. * லூக். ௧, ௫௫. † நாளாக. ௨௰, ௭, யாக. ௨, ௨௩.

௯. நாம் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து உன்னை எடுத்து அதின் எல்லைகளிலிருந்தழைத்துவந்து நீ நம்முடைய தாசன் உன்னை நாம் வெறுக்காமல் உன்னைத் தெரிந்துகொண்டோமென்று நாம் சொன்னோமே.

௰. நீ பயப்படாதே. ஏனெனில், நாம் உன்னுடனேயிருக்கிறோம். திகையாதே. ஏனெனில், நாம் உன் பராபரன் நாம் உன்னைப் பலப்படுத்தி உனக்குச் சகாயம்பண்ணுகிறவரும், உன்னை நமது நீதியின் வலதுகரத்தினாலே தாங்குகிறவருமாயிருக்கிறோம். * ௬௩, ௧.

௰௧. இதோ, உன்மேலெரிச்சலாயிருக்கிற யாவரும் வெட்கி இலச்சையடைவார்கள் உன்னோடே வழக்காடுகிற மனுஷர் மாயையாகி அழிவார்கள்.

௰௨. உன்னோடே போராடினவர்களைத் தேடி * காணாதிருப்பாய். உன்னோடே யுத்தம்பண்ணின மனுஷர் ஒன்றுமில்லாததும், மாயையுமாவார்கள். * சங்கீ. ௩௭, ௩௬.

௰௩. ஏனெனில், உன் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய நாம் உன் வலதுகையைப் பிடித்து உன்னுடனே பயப்படாதே, நாம் உனக்கொத்தாசைசெய்கிறோமென்கிறோம்.

௰௪. யாக்கோபென்னும் பூச்சியே இஸ்ரவேலின் சிறிய கூட்டமே பயப்படாதே நாம் உனக்கொத்தாசை செய்கிறோமென்று கர்த்தரும், இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய † உன் மீட்பருமானவர் உரைக்கிறார். * லூக்கா. ௰௨, ௩௨, † ௪௩, ௩.

௰௫. இதோ, போரடிக்கிறதற்கு நாம் உன்னைப் புதிதும், கூர்மையுமான பற்களுள்ள தளவாடங்களாக்குகிறோம். நீ பருவதங்களை மிதித்து நொறுக்கி மேடுகளைப் பதருக்கொப்பாக்கிவிடுவாய்.

௰௬. அவைகளைத் தூற்றுவாய், அப்போது, காற்று அவைகளைக்கொண்டுபோய்ப் பிசல் அவைகளைப் பறக்கடிக்கும் நீயோவெனில் கர்த்தருக்குள்ளே களிகூர்ந்து இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள் மேன்மைபாராட்டிக்கொண்டிருப்பாய்.

௰௭. சிறுமையானவர்களும், ஏழைகளுந் தண்ணீரைத்தேடுகிறார்கள். அது இல்லாதிருக்கும், அவர்கள் நாக்கு தாகத்தால் வறளும், கர்த்தராகிய நாம் அவர்களுக்குக் கேள்விகொடுத்து இஸ்ரவேலின் பராபரனாகிய நாம் அவர்களைக் கைவிடாதிருப்போம்.

௰௮. * நாம் உயர்ந்த நிலங்களில் ஆறுகளையும், பள்ளத்தாக்குகளின் நடுவே ஊற்றுகளையுந் திறந்து வனாந்தரத்தைத் தண்ணீர்த்தடாகமும், வறண்ட பூமியைத் தண்ணீர்க்கேணிகளுமாக்கி. * ௩௫, ௭. ௪௪, ௩.

௰௯. வனாந்தரத்திலே கேதுருமரங்களையும், சித்தீம்மரங்களையும், மிறுதுச்செடிகளையும், ஒலிவமரங்களையும் நட்டுவைத்து அவாந்தரவெளியிலே தேவதாரிவிருட்சங்களையும், பின்னமரங்களையும், புன்னைமரங்களையுங்கூட உண்டுபண்ணுவோம்.

௨௰. * கர்த்தருடைய கரம் அதைச்செய்ததென்றும், இஸ்ரவேலின் பரிசுத்தர் அதைப்படைத்தாரென்றும் யாவருங் கண்டறிந்து தியானித்துணரும்படியாகத்தானே.

௨௧. உங்கள் வழக்கைக்கொண்டுவாருங்களென்று கர்த்தர்சொல்லுகிறார், உங்கள் பெலப்படியான நியாயங்களைச் சேரப்பண்ணு

ங்கள் என்று யாக்கோபின் இராசா சொல்லுகிறார்.

௨௨. அவர்கள் அவைகளைச் சேரப்பண்ணிச் சம்பவிக்கப்போகிறவைகளை நமக்கறிவிக்கட்டும், அவைகள் முந்தச் சம்பவிப்பவைகளே என்று சொல்லி நாம் நம்முடைய மனதை அவைகளின் மேல் வைத்து அவைகளின் முடிவையும் அறியும்படிக்கு நமக்கறிவிக்கட்டும், அல்லது வருங்காரியங்களை நமக்குக் கேட்கப்பண்ணட்டும்.

௨௩. பின் வருங்காரியங்களை நமக்கறிவியுங்கள், அப்போது நீங்கள் தேவர்களென்றறிவோம், அல்லவென்று நன்மை தீமையேதாகிலுஞ் செய்யுங்கள், அப்போது நாமதிசைத்து ஏகமாய்க் கூடி அதைப் பார்ப்போம்.

௨௪. இதோ, நீங்கள் ஒன்றுமில்லாததிலுங் கடையாயிருக்கிறீர்கள். உங்கள் செயலும் மற்றதற்கு நதாழ்ச்சியானது, உங்களைத் தெரிந்துகொள்ளுகிறவன் அருவருப்பானவன்.

௨௫. ஒருவனை வடக்கேயிருந்தெழும்பப்பண்ணுகிறோம், அவன் சூரியோதயத்திலிருந்து வருவான், அவன் நமது நாமத்தைப் பிரஸ்தாபமாக்குவான், அவன் வந்து அதிகாரிகளைச் சேற்றைப்போலவும், குயவன் களிமண்ணை மிதிப்பதுபோலவும் மிதிப்பான்.

௨௬. ஆதிமுதற்கொண்டு அல்லது முற்காலமுதற்கொண்டு அதை நாம் அறியும்படியாகவும், நாம் அவனை நீதிமானென்று சொலத்தக்கவிதமாகவும் அறிவித்தவனார்! அறிவிக்கிறவனொருவனுமில்லையே. கேட்கப்பண்ணுகிறவனுமில்லை. உங்கள் வார்த்தைகளைக் கேள்விப்படுகிறவனுமில்லையே.

௨௭. நாமே முதல் முதல் இதோ, இதோ, என்று சீயோனுக்குச் சொல்லி எருசலேமுக்குச் சுவிசேஷகனைக் கொடுக்கிறோம்.

௨௮. நாம் பார்த்தோம். ஆனால் அவர்களில் அறிவிக்கிறவனொருவனுமில்லை. அவர்களிலே நாம் கேட்குங் காரியத்துக்குப் பிரதியுத்தாரங் கொடுக்கத்தக்கவொரு ஆலோசனைக்காரனுமில்லை.

௨௯. இதோ, அவர்களெல்லாரும் மாயை, அவர்கள் கிரியைகளொன்றுமில்லை, வார்க்கப்பட்ட அவர்களுடைய சுரூபங்கள் * காற்றும், வெறுமையுந்தானே. * சங்கீ. ௱௧௫, ௪. எரேமி. ௰, ௩—௰௪.

## ௪௨. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவினுடைய தொழில் சாந்தத்தினாலும், உறுதியினாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. (௫) அவருக்குண்டாகிய பராபரனுடைய வாக்குத்தத்தம், (௰) சுவிசேஷத்துக்காக அவரைத் துதிக்கத் தூண்டினது. (௰௭) அவநம்பிக்கையைக் குறித்துக் கண்டித்தது.]

இதோ நாம் தெரிந்துகொண்டவரும்,* நமதாத்துமா பிரியமாயிருக்கிறவருமாய், நாம் ஆதரிக்கிறவருமாகிய † நம்முடைய பணிவிடைக்காரன் ‡ நம்முடைய ஆவியை அவர்மேல் வைக்கிறோம், அவர் சாதிகளுக்கு நியாயத்தை வெளிப்படுத்துவார். * மத். ௩, ௰௭. ௰௭, ௫. எபே. ௧, ௬. † மத். ௰௨, ௰௮—௨௧. ‡ ௰௧, ௨.

௨. அவர் கூப்பிடாமலும், சத்தத்தை உயர்த்தாமலும், தம்முடைய சத்தத்தை வீதியிலே கேட்கப்பண்ணாமலுமிருப்பார்.

௩. அவர் நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கியெரிகிற திரியை அவிக்காமலும், நியாயத்தை உண்மையாக வெளிப்படுத்துவார்.

௪. அவர் நியாயத்தைப் பூமியிலே நிலைப்படுத்துமட்டும் இளைக்கிறதில்லை. பதறுவதுமில்லை. அவருடைய உபதேசத்துக்குத் தீவுகள் காத்திருக்கும்.

௫. வானங்களைச் சிஷ்டித்து அவைகளை விரித்துப் பூமியையும், அதிலே பிறக்கிறவைகளையும், பரப்பினவரும், அதிலிருக்கிற சனத்துக்குச் சுவாசத்தையும், அதிலே நடமாடுகிறவர்களுக்கு ஆவியையுங் கொடுக்கிறவருமான கர்த்தராகிய பராபரன் சொல்லுகிறதாவது;

௬. நீர் குருடருடைய கண்களைத் திறக்கவும், கட்டுண்டவர்களைக் காவலிலும், இருளிலுளுக்காந்திருக்கிறவர்களைச் சிறைச்சாலையிலுமிருந்து புறப்படப்பண்ணவும்,

௭. கர்த்தராகிய நாம் உம்மை நீதியாய் அழைத்து உம்முடைய கையைப் பிடித்துக் கொண்டு உம்மைத் தற்காத்து உம்மைச் சனத்தின் உடம்படிக்கையாகவும், * சாதிகளின் வெளிச்சமாகவும் வைக்கிறோம். * ௪௯, ௬. லூக்கா ௨, ௩௨. ௩௨.

௮ நாம் கர்த்தர், இது நமது நாமம், * நாம் நமது மகிமையை வேறொருவனுக்கும், நமது துதியை விக்கிரகங்களுக்குங் கொடோம். * ௪௮, ௰௧.

௯. முந்தின காரியங்கள் இதோ வந்ததே, புதியவைகளையும், நாமே அறிவிக்கிறவர், அவைகள் தோன்றுதற்கு முன்னே அவைகளை உங்களுக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௰. * கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள், சமுத்திரத்திற்கிறங்கிப் போகிறவர்களும், அதிலுள்ளவைகளும், தீவுகளும், அவைகளின் குடிகளும் பூமியின் கடையாந்தரத்திலிருந்து அவருடைய துதியைப் பாடுவதாக. * சங்கீதம். ௯௬, ௧.

௰௧. வனாந்தரமும், அதின் ஊர்களும், கேதாரியர் குடியிருக்கிற கிராமங்களுஞ் சத்தத்தையுயர்த்துவதாக, கன்மலைகளிலே குடியிருக்கிறவர்கள் கெம்பீரித்துப் பருவதங்களின் கொடுமுடியிலிருந்து ஆர்ப்பரிப்பார்களாக.

ஆ௱௪௭

தூரததிலிருநது நமமுடையகுமாரரையும, பூமியினகடையாநதரததிலிருநது நமமுடையகுமாரததிகளையும,

௭. நமது நாமநதரிககபபடடு நாம நம முடைய மகிமைககென்று சிஷடிதது உருவாககிப படைததயாவையுங கொண்டுவா வெனபோம.

௮. கணகளிருநதுங குருடராகிறசனத தையும, காதுகளிருநதுஞ செவிடரானவர்க ளையும புறப்படபபண்ணுங்கள.

௯. சகலசாதிகளும் ஏகமாயச சேர்நது கொணடு சகலசனசதொகைகளுங கூடிவரட டும, * இதையறிவிதது முநதசசமபவிககுங காரியஙகளை நமககுககேட்கபபணணததக கவனார்! கேட்டு மெயயெனறு சொலலப படககூடுமபடிககு அவர்களதஙகளசாட்சிக ளைக்கொணடுவநது நிதானக்காரராய்விளங கட்டும. * ௪௧, ௨௬.

௰. நாமே யவரெனறு நீஙகளறிநது நம மைவிசுவாசிதது உணர்நதுகொளளுமபடி க்கு நீஙகளும * நாம தெரிநதுகொணட நமமுடையதாசருமா யிருககிறீர்களெனறு கர்ததர்சொலலுகிறார். † நமககுமுனன ஏற் பட்டதேவனிலலை, நமககுப பினனிருபபது மிலலை. * ௪௧, ௮. † ௪௪, ௮.

௰௧. நாம நாமே கர்ததர் நமமையலலா மல இரட்சகரிலலை. * ஏசேக. ௰௩, ௪.

௰௨. நாமேயறிவிததுஇரட்சிதது அதைக் கேட்கபபணணுகிறோம, உஙகளிலஅபபடி சசெயயததகக அனனியதேவனிலலை, நா மேபராபரனெனகிறதற்கு நீஙகள்நமமுடை யசாட்சிகளெனறு கர்ததர்சொலலுகிறார்.

௰௩. * நாளுணடாகாததற்குமுனனும நா மேயிருககிறோம, நமமுடையகைககுத தப புவிககததககவனிலலை. † நாம நடபபிபப தைத்திருபபுகிறவனார்! * சஙகீ. ௯௰, ௨. † ௰௪, ௨௭.

௰௪. உஙகளுககாகநாம தாபபாளஅரண களையெலலாம இடிநதுவிழபபணணவும, கலதேயரைப படவுகளிலுட்பட்டலறபப ணணவுநதககவர்களைப பாபேலுககனுட்பி னேமெனறு உஙகளமீட்பரும, இஸ்ரவேலி னபரிசுததருமாகிய கர்ததர்சொலலுகிறார்.

௰௫. நாமேயுஙகள பரிசுததராகிய கர்தத ரும, இஸ்ரவேலின சிருட்டிகருமம, உஙகளி ராசாவுமானவர்.

௰௬. சமுததிரததிலே வழியையும, வலல மையான தணணீர்களிலே பாதையையுங கடடளையிடடு, * ௨. இயா. ௰௪, ௨௧. ௨௯

௰௭. இரதஙகளையும், குதிரைகளையும், இரா ணுவததையும், பெலனையும்வரவிடடு அவை களெழுநதிராதபடிககு ஒருமிததுவிழுநது கிடககவும், ஒருதிரியவியுமாப்போலஅவை அணைநதுபோகவும்பணணின கர்ததர்சொ லலுகிறதாவது;

௰௮. முநதினவைகளை நினையாதேயுஙகள, பூருவமானவைகளைச சிநதியாதேயுஙகள.

௰௯. இதோ * நாம் புதுககாரியததைச்செ ய்வோம், இபபொழுதேதோனறும், நீஙகளதைய றியபபோவதிலலையோ! நாம் வனாநதரத் திலே வழியையும், அவாநதரவெளியிலே ஆறு களையுமுணடாககுவோம். * எரே. ௩௧, ௨௨.

௨௰. நாம் தெரிநதுகொணட நமதுசனத தின் தாகததுககு * வனாநதரததிலே தண ணீர்களையும், அவாநதரவெளியிலே ஆறுகளை யுமுணடாககுவதினால வெளியின மிருகஙக ளும், வலுசாபுளள பாமபுகளும், கோட டானகுஞசுகளும் நமமைககனமபணணும். * ௪௧, ௰௮.

௨௧. இநதச்சனததை நமககெனறு ஏற்ப டுததினோம், இவர்கள நமது துதியைச சொலலிவருவார்கள.

௨௨. ஆனாலும யாககோபே, நீ நம்மைநோ க்கிக்கூபபிடடதிலலை, இஸ்ரவேலே அநத விடட நீ நம்மைவிசுவாசபபடுததினாய்.

௨௩. நீ நமககு உனறுபலிகளின தகனபபலி களைச்செலுததினதிலலை, நீ நமமையுன்பலி களாலே கனமபணணினதுமிலலை, காணிக கைகளைச்செலுதத நாமுனனைப பிரயாசப படுததாமலும், தூபஙகாட்ட உனனைவருத தபபடுததாமலுமிருநதோம்.

௨௪. நீ நமககுப்பணஙகளாற சுகநதப்பட டையைக கொளளாமலும், உன பலிகளின கொழுபபினாலே நமமைநிரபபாமலும், உன பாவஙகளினாலே நமமைப பிரயாசபபடுததி உன அக்கிரமஙகளினாலே நம்மை வருததப படுததினாய்.

௨௫. * நாம் நாமே யுன் மீறுதலகளை நம் முடைய நிமிததமாகக் குலைக்கிறோம், உன பாவஙகளை நினையாமலுமிருபபோம்.
* ௪௪, ௨௨. எசேக். ௩௬, ௨௨.

௨௬. நாம் ஒருவர்கொருவர் வழககாடும் படியாக நமககு நினைபபூட்டு, நீ நீதிமானாகு ம்படியாக விவரிததுச்சொலலு.

௨௭. உன ஆதித் தகபபன பாவஞ்செய் தான, உனககுமுனனின்னறுபேசுகிறவர்களும் நமககு விரோதமாய்த் துரோகமபணணி னார்கள.

௨௮. ஆகையால, நாம் பரிசுததஸ்தலத தலைவர்களைப்பரிசுததக்குலைச்சலாக்கி யாக் கோபைச்சங்காரததுககும், இஸ்ரவேலைத தூஷணஙகளுககு மொபபுககொடுபபோம்.

## ௪௪. அதிகாரம்.

[(௧) பராபரன வாககுத்தத்தஙகளினாலே சபையைததேற்றினது. (௭) விககிரகஙகளு டையமாயை. (௯) விககிரகஙகளைபபணணு கிறவர்களுடைய மடமை. (௨௧) மீட்சிககா கவும், வலலபததுககாகவும பராபரனைத துதிககததூணடினது.]

இப்போதும் * நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலே கேள். * ௪௧, அதி. ௮.௱௪,௰.

௨. * உன்னையுண்டாக்கினவரும், உன்னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவரும், உனக்கொத்தாசை செய்கிறவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நாம் தெரிந்துகொண்ட உத்தமனே † பயப்படாதே. * ௫. மோசே. ௩௨, ௧௫. † ௪௧, அதி. ௰. ௰௪. ௪௩, அதி. ௧—௫.

௩. ஏனென்றால், * தாகமுள்ளவன் மேலே தண்ணீரையும், வறண்ட நிலத்தின்மேலே ஆறுகளையும் ஊற்றுவோம், நம்முடைய ஆவியை உன் சந்ததியின்மேலும், நம்முடைய ஆசீர்வாதத்தை உன் சந்தானத்தின்மேலும் ஊற்றுவோம். * யோவா. ௩, ௫. யோவா. ௩, ௮.

௪. அதினாலே புல்லின் நடுவே * நீர்க்கால்களின் ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப்போலே வளருவார்கள். * சங்கீ. ௧, ௩.

௫. இவனும் நான் கர்த்தருடையவனென்பான், அவனும் யாக்கோபின் பேராய் அழைக்கப்படுவான், அவனுந்தான் கர்த்தருடையவனென்று தன் கையெழுத்துப்போட்டு இஸ்ரவேலின் நாமத்தைத் தரித்துக்கொள்ளுவான்.

௬. * நாம் முந்தினவரும், நாம் பிந்தினவருந்தானே நம்மைத்தவிரத் தேவனில்லையென்று இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தரும், சேனைகளின் கர்த்தராகிய அவனுடைய மீட்பருஞ்சொல்லுகிறார். * ௪௧, ௪. ௪௮, ௰௨. அறிவி. ௧, ௮. ௨௨, ௰௩.

௭. நித்தியசனத்தை நாம் ஸ்தாபித்தகாலமுதற்கொண்டு நம்மைப்போலெவனாகிலுமுண்டாகவரவழைத்து இன்னதின்னதை முன்னறிவித்து நமக்கு முன்பாக வரிசையாக நிறுத்தக்கடவனோ! * பின்னடிச்செய்திகளையும், வருங்காரியங்களையுந் தங்களுக்கவர்கள் அறிவிக்கக்கடவும். * ௪௧, அதி. ௨௨. ௨௩.

௮. நீங்கள் கலங்காமலும், பயப்படாமலுமிருங்கள், நாம் அந்நாள் முதற்கொண்டு அதை உனக்குக் கேட்கப்பண்ணினதும், முன்னறிவித்ததுமில்லையோ! என்பதற்கு நீங்கள் நம்முடைய சாட்சிகள். * நம்மைத்தவிர ஒரு தேவனுண்டோ! வேறொரு கன்மலையுமில்லையே, ஒருவனையும் அறியோம். * ௫. மோசே. ௪, ௩௫.

௯. சுரூபங்களை யுருவாக்குகிற யாவரும் மாயைதானே, அவர்களால் இச்சிக்கப்பட்ட காரியங்கள் ஒன்றுக்கும் உதவாது, தங்களுக்கு வெட்கமாக அவர்களேதான் அவைகளின் சாட்சிகளாயிருக்கிறார்கள், [illegible] அவைகள் ஒன்றும் அறியாமலும் [illegible] இருக்கிறார்கள்.

௰. ஒன்றுக்குமுதவாத தேவனை யுருவாக்கிச் சுரூபத்தை வார்க்கிறவன் எப்படிக்கொத்தவன்!

௰௧. இதோ, அவனுடைய கூட்டாளிகளெல்லாம் வெட்குவார்கள். ஏனென்றால், தொழிலாளிகள் நரஜீவன்கள்தானே, அவர்களெல்லாருங் கூடிக்கொண்டு நிற்கட்டும், அவர்களேகமாய்த் திகைத்து வெட்கப்படுவார்கள்.

௰௨. * கொல்லன் இரும்பைக் குறட்டாலிடுக்கித் தழலிலே வைத்துச் சுத்தியல்களால் அதை யுருவேற்படுத்தித் தன் புயத்தின் பலத்தினாலே அதைச் செப்பனிடுகிறான், பின்னும் பசியாயிருக்கிறான், பெலனற்றுப் போகுமட்டும் தண்ணீர் குடியாமலுமிருக்கிறான். * ௪௰, அதி. ௰௮—௨௰. ௪௧, ௭. எரே. ௰, ௩—௫.

௰௩. தச்சன் நூல்பிடித்து மட்டப்பலகையால் மரத்துக்குக் குறிப்போட்டு அதைக் கோணங்கோணமாகப் பிடித்துக் கவராசத்தால் அதைக் குறித்து அது வீட்டிலே வாசமாயிருப்பதற்காக அதை யொரு புருஷனுடைய சாயலும், ஒரு மனுஷனுடைய வுருவமுமாக்குகிறான்.

௰௪. அவன் தனக்குக் கேதுருக்களை வெட்டப்போகிறபோது, ஒரு புங்கமரத்தை அல்லது ஒரு கர்வாலிமரத்தைத் தெரிந்துகொண்டு, காட்டுமரங்களிலே பலக்க அதைத் தனக்கு வளர்க்கிறான். அல்லது அசோகமரத்தை, மழையதைப் பயிராக்கும்படிக்கு நாட்டுகிறான்.

௰௫. மனுஷனுக்கு அவைகள் அடுப்புக்காகும்போது அவன் அவைகளிலெடுத்துக் குளிர்காய்ந்து கொள்ளுகிறான், நெருப்பை மூட்டி அப்பமுஞ் சுடுகிறான். என்றாலும், ஒரு தேவனையுமுண்டுபண்ணி, அதைப்பணிந்து ஒரு சுரூபத்தையதினாலே செப்பனிட்டு, அதை வணங்குகிறான்.

௰௬. அதிலொருபங்கை அடுப்பிலெரிக்கிறான் ஒருபங்கினாலிறைச்சியைச் சமைத்துப் புசித்துப் பொரியலைப் பொரித்துத் திருத்தியாகக் குளிருங்காய்ந்துகொண்டு ஆகா அனலானேன் நெருப்பைக்கண்டேனென்று சொல்லி,

௰௭. அதின்மீதியான பங்கைத் தேவனாகவும், தனக்குச் சுரூபமாகவுஞ் செப்பனிட்டு, அதற்கு முன் விழுந்து, அதையணங்கி என்னை விடுவி. ஏனென்றால், நீ யென் தேவனென்று அதை நோக்கிவிண்ணப்பஞ்செய்கிறான்.

௰௮. அறியாமலும், உணராமலுமிருக்கிறார்கள். ஏனென்றால், காணாதபடிக்கவர்கள் கண்களும், உணராதபடிக்கவர்கள் இருதயமும் பூசப்பட்டிருக்கிறது.

௰௯. அதிலே பாதியையடுப்பிலெரித்தேன், அதினுடைய தழலின்மேலே அப்பத்தையும் சுட்டு இறைச்சியையும் பொரித்துப் புசித்த

தேன், அதின்மீதியானபங்கைநான் அருவருப்பாக்குவேனோ? ஒரு மரத்தின்கட்டைவணங்குவேனோவென்றுசொல்ல அவன் தன்மனதுக்குள்ளே தோன்றவில்லை. அம்மாத்திரம் அறிவும், சொரணையுமில்லை.

௨௰. அவன்சாம்பலிலே மேய்கிறான், அவனுடையஇருதயம்அவனைப்புரட்டிவிட்டது; அவன்தன்னாத்துமாவைத்தப்புவிக்காமலும், என்வலதுகையிலே மோசமல்லவோவிருக்கிறதென்று சொல்லாமலுமிருக்கிறான்.

௨௧. யாக்கோபே இஸ்ரவேலே இவைகளை நினை. ஏனெனில், * நீ நம்முடைய தாசன் உன்னையுருவாக்கினோம். நீ நம்முடையதாசன் இஸ்ரவேலே நீ நம்மால் மறக்கப்படுவதில்லை. * ௨. வசனம்.

௨௨. உன்மீறுதல்களைமந்தாரத்தைப்போலவும், உன்பாவங்களை மேகத்தைப்போலவும் நிச்சிரகம்பண்ணுகிறோம். நம்மண்டைக்குத்திரும்பு. ஏனெனில், உன்னைமீட்டுக்கொண்டோம். * ௧, ௰௮ ௪௩, ௨௫.

௨௩. *வானங்களே,கெம்பீரியுங்கள்.ஏனெனில், கர்த்தர்அதைச்செய்தார், பூதலமான தாழ்விடங்களே ஆர்ப்பரியுங்கள், பருவதங்களே, காடுகளே, காட்டிலுள்ள சகலமரங்களே, கெம்பீரமாய் முழங்குங்கள். ஏனெனில், கர்த்தர்யாக்கோபைமீட்டு, இஸ்ரவேலில்மகிமைப்படுகிறார். * ௪௯, ௰௩. ௪௨. ௬௬, ௧. ௨.

௨௪. உன்மீட்பரும். உன்னைத்தாயின்கர்ப்பந்துவக்கி உருவாக்கினவருமான கர்த்தர் சொல்லுகிறதாவது; நாமேயெல்லாவற்றையுஞ் செய்கிறகர்த்தர் நாம் ஒருவராய்வானங்களை விரித்து, நாமாய்ப்பூமியைப்பரப்பினவர்.

௨௫. நாம் கட்டுக்கதைக்காரரின் குறிகளையவத்தமாக்கிக் குறிசொல்லுகிறவர்களை நிர்மூடராக்கி ஞானிகளைப்பின்னிட்டுத்திருப்பி, அவர்கள அறிவைப்பயித்தியமாக்கப்பண்ணுகிறவர்.

௨௬. நாம் நம்முடைய ஊழியக்காரரின் வார்த்தையை நிலைப்படுத்தி நம்முடையதாதுதிகளின் ஆலோசனையைநிறைவேற்றிக் குடியேறுவாயென்று எருசலேமுக்கும், கட்டப்படுவீர்களென்று யூதாவின்பட்டணங்களுக்குஞ்சொல்லி அவைகளின் பாழானவிடங்களையெடுப்பிப்பவர்.

௨௭. நாம் ஆழத்துடனே வறண்டுபோ, உன்நதிகளைவெட்டாந்தரையாக்குவோமென்றுசொல்லுகிறவர்.

௨௮. கோரேசைக்குறித்து அவன் நம்முடையமேய்ப்பன், அவன் எருசலேமுக்குக் கட்டப்படு என்றும், தேவாலயத்துக்குத் அஸ்திபாரப்படு என்றுஞ்சொல்லி நமக்குப் பிரியமானதையெல்லாம் நிறைவேற்றுவானென்று நாஞ்சொல்லுகிறவர்.





## ௪௫. அதிகாரம்.

[(௧) பராபரன் தம்முடைய சபையின்நிமித்தம் கோரேசை அழைத்து, (௫) தமது வல்லமையினாலே கீழ்ப்படிதலைக் கட்டளையிட்டது. (௨௰) இரட்சிப்புக்கேதுவாகிய தமது வல்லமையினாலே விக்கிரகத்தினமாயையையுணர்த்தினது.]

கர்த்தராகிய நாம் அபிஷேகம்பண்ணுவித்த * கோரேசுக்குமுன்பாகச்சாதிகளைக்கீழ்ப்படுத்தி இராசாக்களின் இடைகளைக்கட்டவிழ்க்கும்படிக்கும், அவனுக்குமுன்பாகவாசல்கள் பூட்டப்படாதிருக்கக் கதவுகளைத்திறந்துவைக்கும்படிக்கும், அவனையவன்வலதுகையைப்பிடித்துக்கொண்டு அவனுக்குச்சொல்லுகிறதாவது; * ௪௪, ௨௮.

௨. நாம் உனக்குமுன்பாகநடந்துகோணலானவைகளைச்செவ்வையாக்குவோம்.

௩. உன்னைப்பேர்சொல்லியழைக்கிற இஸ்ரவேலின்பராபரனாகியநாமேகர்த்தரென்று, நீ யறியும்படிக்கு நாம் நம்முடையதாசனாகிய யாக்கோபின் நிமித்தமும், நாம்தெரிந்துகொண்ட இஸ்ரவேலின் நிமித்தமும், வெண்கலக்கதவுகளையுடைத்து இருப்புத்தாழ்ப்பாள்களைமுறித்து, அந்தகாரத்திலிருக்கிற பொக்கிஷங்களையும், ஒளிக்கப்பட்டிருக்கிற புதையல்களையும் உனக்குக்கொடுப்போம்.

௪. அதற்காக நாமுன்னைப்பேர்சொல்லியழைத்து நீ நம்மையறியாதிருக்கையில் உனக்குநாமந்தரித்தோம்.

௫. *நாமே கர்த்தர் வேறொருவரில்லை. நம்மைத்தவிரத்தேவனில்லை. * ௫. மோசே. ௬௨, ௬௯.

௬. நம்மைத்தவிரஒருவருமில்லையென்பது சூரியனுதிக்கிறதிசையும், அது அஸ்தமிக்கிறதிசையுந்துவக்கி யறியப்படும்படிக்கு நாமுன்னை நீ நம்மை யறியாதிருக்கையில் இடைக்கட்டினோம், நாமேகர்த்தர் வேறொருவரில்லை.

௭. வெளிச்சத்தையும் உருவேற்படுத்தி இருளையுஞ் சிருஷ்டித்துச் சுகவாழ்வையும் உண்டுபண்ணித் * தீமையையும் படைப்பிக்கிறவர் நாமே கர்த்தராகிய நாமேயிவைகளையெல்லாஞ் செய்கிறவர். * ஆமோ. ௩, ௬.

௮. வானங்களே மேலே இருந்துசொரியுங்கள், ஆகாயமண்டலங்கள் *நீதியைப்பொழியக்கடவது, பூமி திறக்கப்பட்டு இரட்சிப்பின் கனியைத் தந்து நீதியுங்கூட விளைவதாகக் கர்த்தராகிய நாம் இவைகளைச்சிருஷ்டிக்கிறோம் * ஓசி. ௰, ௰௨.

௯. மண் ஓடுகளோடொத்த ஓடாயிருந்தும், தன்னையுருவாக்கினவரோடே வழக்காடுகிறவனுக்கையோ, * களிமண் தன்னை

உருவாக்கினவனுடனே என்னசெய்கிறாயென்றும், அல்லது உன் கிரியைக்கு கைகளில்லையென்றும் சொல்லுமோ?
* உரோமர். ௯, ௨௰.

௰. தகப்பனை நோக்கி என்னத்தைப் பிறப்பித்தாயென்றும், தாயை நோக்கி என்னத்தைப் பெற்றாயென்றும் சொல்லுகிறவனுக்கையோ.

௰௧. இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரும், அதை உருவாக்கினவருமானவர் சொல்லுகிறதாவது; வருங்காரியங்களைக் குறித்து நம்மைக் கேட்கிறீர்கள். நம்முடைய பிள்ளைகளுக்காகவும், நம்முடைய கரங்களின் கிரியைகளுக்காகவும் நமக்குத் திட்டங்கற்பிப்பீர்களோ?

௰௨. * நாம் பூமியைப் பண்ணி, நாமே அதின்மேலிருக்கிற மனுஷனைச் சிருஷ்டித்தோம், நம்முடைய கரங்கள் வானங்களை விரித்தன. அவைகளின் சேனைகளுக்கெல்லாம் நாம் கற்பித்தோம். * ஆதி. ௨, ௨.

௰௩. நாம் நீதியாக அவனை எழுப்புகிறோம். அவன் வழிகளையெல்லாஞ் செவ்வையாக்குவோம். * அவன் நம்முடைய பட்டணத்தைக் கட்டிச் சிறைப்பட்டுப்போன நம்முடையவர்களைக் கிரயமில்லாமலும், பரிதானமில்லாமலும் விடுதலையாக்குவானென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
* ௨. நாளாக. ௩௬, ௨௨. எஸ்றா. ௧, ௧. முதலிய.

௰௪. எகிப்தின் பிரயாசமும், எத்தியோப்பியரின் வர்த்தகமும், நெடிய ஆள்களாகிய சபேயரின் வர்த்தக இலாபமும் உன்னண்டைக்குத் தாண்டிவந்து உன்னுடையதாகும். அவர்கள் உன் பிறகே சென்று விலங்குகளில் நடந்துவந்து உனக்குள்ளே தானே பராபரனிருக்கிறார். அவரையல்லாமல் வேறே தேவனில்லையென்று உன்னைப் பணிந்துகொண்டு, உன்னை நோக்கி விண்ணப்பம் பண்ணுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫. இஸ்ரவேலின் பராபரனும், இரட்சகருமாகிய தேவரீர் மெய்யாகவே * மறைவான பராபரனாயிருக்கிறீர். * சங்கீ. ௯, ௫. உரோ. ௰௧, ௩௩.

௰௬. சுரூபங்களைப் பண்ணுகிற அனைவரும் நாணி, இலச்சையுமடைந்து ஏகமாய் வெட்கப்பட்டுப்போவார்கள்.

௰௭. இஸ்ரவேலோவெனில், கர்த்தராலே நித்திய இரட்சிப்பாக இரட்சிக்கப்படும். நீங்கள் என்றென்றைக்கும் உள்ள சதாகாலங்களிலும் நாணமலும், வெட்கப்படாமலுமிருப்பீர்கள்.

௰௮. ஏனெனில், வானங்களைச் சிருஷ்டித்துப் பூமியையும் வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல் அதைக் குடியிருப்பாகச் செப்பனிட்டுப் படைத்து அதை உருவேற்படுத்தின பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது; * நாமே கர்த்தர் வேறொருவரில்லை.
* ரு. வசனம்.

௰௯. நாம் அந்தரங்கத்திலும், பூமியின் அந்தகாரமான விடத்திலும் பேசினதில்லை. நாம் யாக்கோபின் வித்துக்கு விருதாவாக நம்மைத் தேடுங்களென்று சொன்னதுமில்லை நாம் நீதியைப் பேசி நிதானங்களையறிவிக்கிற கர்த்தர்.

௨௰. சாதிகளிலே தப்பினவர்களே, * கூடிக்கொண்டு வாருங்கள் ஏகமாய்ச் சேருங்கள். தங்கள் சுரூபங்களின் மரத்தைச் சுமந்து, இரட்சிக்கமாட்டாத தேவனைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் அறிவில்லாதிருக்கிறார்கள். * ௪௪. அதி. ௯.

௨௧. நீங்கள் அறிவிக்கும்படிக்குச் சேர்ந்து ஏகமாய் யோசனையும் பண்ணுங்கள். இதைப் பூருவகாலமுதற்கொண்டு கேட்கப்பண்ணி அப்போது துவக்கி அதையறிவித்தவரார்? கர்த்தராகிய நாமல்லவோ? நீதிபரனும், இரட்சகருமாகிய நம்மையல்லாமல் வேறே தேவனேயில்லை, நம்மைத் தவிர வேறொருவருமில்லை.

௨௨. * பூமியின் எல்லா எல்லைகளே நம்மை நேரிட்டு நோக்குங்கள். அப்போதிரட்சிக்கப்படுவீர்கள். ஏனென்றால் நாமே பராபரன் வேறொருவருமில்லை. * ௧. திமோத். ௨, ௩—௬.

௨௩. * நமக்கு முழங்கால் யாவும் முடங்கி கர்த்தருக்குள் மாத்திரம் எனக்கு நீதிகளும், பெலனுமுண்டென்று நாவு யாவுஞ் சத்தியம் பண்ணவேணுமென்று, நம்மைக்கொண்டு நாம் ஆணையிட்டோம். இந்த நீதியான வார்த்தை நம் வாயிலிருந்து புறப்பட்டது, அது மாறுவதில்லையென்கிறார். * பிலிப். ௨, ௯-௰௧.

௨௪. அப்படிக்கொத்தவர்கள் அவரண்டைக்கு வந்து சேருவார்கள். ஆனால், அவருக்கு விரோதமாயெரிகிறயாவரும் வெட்கப்படுவார்கள்.

௨௫. இஸ்ரவேலின் வித்தாகிய யாவரும் கர்த்தருக்குள் நீதிமான்களாகிமேன்மைபாராட்டுவார்கள்.

## ௪௬. அதிகாரம்.

[(௧) பாபிலோனின் விக்கிரகங்கள் தங்களைத்தானே இரட்சித்துக்கொள்ளக்கூடாதென்பது. (௩) பராபரன் தம் சனத்தை முடிவுமட்டுங் காப்பாற்றுவாரென்பது. (௫) விக்கிரகங்கள் வல்லமையிலும், (௰௨) தற்கால இரட்சணியத்திலும் பராபரனுக்கிணையல்லவென்பது.]

பேல் குனிந்து நேபோ மடங்கிப்போம், அவர்களுடைய விக்கிரகங்கள் சீவன்களுக்கும், மிருகங்களுக்குஞ் சுமையாகும், மூட்டைகளாகிய உங்கள் சுமைகள் இளைப்பான சீவன்களுக்குப் பாரமாம்.

௨. ஏகமாய் மடங்கிக் குனியும், மூட்டை

யாகாதபடிககு அவைகளதபபமாட்டாது. அவைகள தாமே தான சிறைபபட்டுப போம.

௩. தாயின வயிற்றிலேதுவககி நமமாலே ஏநதபபட்டுத தாயினகர்பபததிலே துவககிச சுமககபபட்டவர்களாகிய யாககோபின வீட்டாரே இஸ்ரவேலின வீட்டில மீதியாகிய சகலசனஙகளே நமமைககேளுங்கள.

௪. ✻ உஙகள முதிர்நத வயது மட்டுககும நாம அவரே, நரைமட்டுககும நாம்சுமப போம, நாம அபபடிசசெயதுவநதோம இனிமேலும நாமெடுபபோம. நாம சுமப போம தபபுவிபபோம. ✻ சஙகீதம. எக, ௰அ.

௫. ✻ ஆருககுநமமைசசாயலும, சமானமுமாககி, ஆருககு நாமசாயலாகுமபடிககு நமமையொபபிடுவீர்கள! ✻ சஙகீ. சய, ௰.

௬. ✻ பையிலிருககிற பொனனைசசெலவழிதது, வெளளியைததராசில நிறுததுத தட்டானுடனே கூலிபொருநதிககொளளுகிறார்கள, அவன அதைத்தேவனாககுகிறான, அதைவணஙகிபபணிநதுகொளளுகிறார்கள. ✻ சக,எ. ௪௪, ௬—உ௰.

௭. அதைத்தோளினமேலெடுதது அதைச சுமநது அதையதினதானததிலேவைககிறார்கள, அஙகேநிறகுந தனனிடததைவிட்டசையாது, ஒருவன அதைநோககிக கூபபிட்டால அது மறுவுததரவு கொடுககிறதுமிலலை, அவனிககட்டை நீககி அவனை இரட்சிககிறதுமிலலை.

௮. இதை நினைதது உஙகளைததிடபபடுததிக்கொளளுஙகள பாதகரே இதைமனதிலே வையுஙகள.

௯. முநதிப பூருவகாலநதுவககி நடநதவைகளை நினையுஙகள. ஏனெனில, ✻ நாமே பராபரன,வேறொருதேவனிலலை,நமககொததவனொருவனுமிலலை. ✻ சரு, ௫.

௰. நாம பிறகாரியத்தை ஆதிமுதறகொண்டும, இனனுஞசெயயபபடாதவைகளைப பூருவகாலமுதறகொண்டும அறிவிதது, ✻ நமமுடைய ஆலோசனை நிறகுமெனறும, நமககுசசித்தமான வைகளையெலலாஞ செயவோமெனறுஞசொலலி, ✻ சஙகீ. ௩௩, ௰க. வாககி. ௰௯, உக. உக, ௩௰.

௰க. உராஞசுகிற ஒரு பட்சியைககிழககிலும, நமமுடைய ஆலோசனையினமனுஷனைததூரதேசததிலுமிருநதுவர வழைககிறவராயிருககிறோம. அதைசசொனனோம, அதைவரவும்பணணுவோம, அதைததிட்டம்பணணினோம, அதைசசெயதுமிருப போம.

௰உ. முருட்டிருதயததாரே, நீதிககுததூரமானவர்களே, நமமைககேளுஙகள.

௰௩. நமமுடைய நீதியைசசமீபிககபபணணுகிறோம, அதுதூரமாயிருபபதிலலை, நம

து இரட்சிபபுத தாமதிபபதுமிலலை. நாம சீயோனிலே இரட்சிபபையும,இஸ்ரவேலுக்கு நமதுமகிமையையுஙகட்டளையிடுவோம.

## ௪எ. அதிகாரம்.

[(க) பாபிலோனமேலும, கலதேயாவினமேலும, (௬) அவர்களுடைய இரககமிலலாமைககாகவும, (எ) மேட்டிமைககாகவும, (௰, இறுமாபபிறகாகவும, (௰க) விலககப்படாத நியாயத்தீர்பபுச சொலலப்பட்டது.]

பாபேலகுமாரததியாகிய கனனிபாஸ்திரியே நீயிறஙகி ✻ மணணிலேயுட்காரு, கல்தேயரின குமாரததியே தரையிலேயுட்காரு, இனி சிஙகாசனமிலலை. ஏனெனில நீயபபுறஞ செருககுககாரியும், சுகசெலவியுமெனறழைககபபடுவதிலலை. ✻ உ௬, ௫.

௨ எநதிரததைவாஙகி மாவரை, உன கூநதலைவிரிதது விடு வெறறுககாலும, அமமணமுமாயாறுகளைககடநதுபோ.

௩. ✻ உன நிர்வாணந திறககபபடும, உன இலசசை காணபபடுமபபோம, ஒருவனையும பாராமல நீதியைசசரிககட்டுவோம. ✻ நாகூம. ௩, ௫.

௪. எஙகளமீட்பருடைய நாமம் இஸ்ரவேலினபரிசுததராகிய சேனைகளுடைய கர்த்தரென்பது.

௫. கல்தேயரினகுமாரததியே, நீ மவுனமாயுட்காநது இருளுககுட்பிரவேசி. ஏனெனில, இனி இராசசியஙகளுடைய நாசசியாரெனறழைககபபடாய,

௬. நாம நமது சனததினமேல கடுஙகோபமடைநது நமதுசுதநதரததைபபரிசுததககுலைசசலாககி அவர்களையுன கையிலொபபுககொடுததோம, நீயோவெனில, அவர்களுககாக இரககமவைககாமல முதிர்நதவயதுளளவர்களினமேல உன நுகததடியை மகாபாரமாக்கி,

௭. ✻ எனறெனறைககும நாசசியாராயிருபபேனெனறுசொலலி இநதக்காரியஙகளையிதுவரைககும உனமனதிலே வைககாமலும, அதினமுடிவை நினையாமலும்போனாய, ✻ அறிவி. ௰அ, எ.

௮. இபபோதுஞ சுகமாயிருநது நானதானெனனைததவிர ஆருமிலலை. நானவிதவையாயுட்காரமலும, சநதான சேதத்தையறியாமலுமிருபபேனெனறு உனனிருதயததிலேசொலலுகிற செல்வியே நாமசொலவதைக்கேள.

௯. சநதானசேதமும, விதவையிருபபும, இவவிரணடுமஉனககுசசடிபபிலே ✻ ஒரேநாளிலேவரும. உன திரளான சூனியஙகளினிமித்தமும,உனதமபனஙகளின மகாவெகுதது

வதின் நிமித்தமும் அவைகள் நிறைவாய் உன்மேல் வரும். * அதிவி. ௰௪, ௮.

௰. ஏனெனில், உன் பொல்லாப்பிலே நீ திடநம்பிக்கையாயிருந்து என்னைப் பார்க்கிறவரில்லையென்றாய். உன் ஞானமும், உன் அறிவுமே உன்னைப் புரட்டின. ஆகையால் உன் இருதயத்திலே நான்தானே என்னைத் தவிர ஒருமில்லையென்றாய்.

௰௧. ஆனபடியால் எங்கேயிருந்து உதித்ததென்று நீயறியாத ஒரு பொல்லாப்பு உன்மேல் வந்து நீ நிவிர்த்தியாக்கமாட்டாத ஒரு விக்கினம் உன்மேல் விழுந்து நீயறியாதபடிக்கு அசுப்பிலே உண்டாகும் பாழ்க்கடிப்பு உன்மேல் வரும்.

௰௨. இப்போதும் இலாபம் அடையமாட்டுவாயோவென்றும், உன்னைப் பலப்படுத்துவாயோவென்றும், நீ உன் சிறுவயதுதுவக்கிப் பிரயாசப்பட்டு உன் தம்பனங்களிலும், உன் திரளான சூனியங்களிலும் நீ நில்.

௰௩. உன் திரளான யோசனைகளிலே வேசாறினையே, இப்போதும் * வானத்தைக் கவனித்து நட்சத்திரங்களை நோக்கி அமாவாசைகளைப் பார்த்துக் கணிக்கிறவர்கள் எழும்பி உன்மேல் வருகிறவைகளுக்கு உன்னை விலக்கி இரட்சிக்கட்டும். * தானியேல், ௨, ௨.

௰௪. இதோ, தாளடிகளைப்போலிருப்பார்கள். நெருப்பு அவர்களைச் சுட்டெரிக்கும், தங்கள் பிராணனையே யவர்கள் அக்கினிச் சுவாலையினின்று தப்புவிப்பதில்லை. அது குளிர்காயுந் தழலல்ல, அது எதிரே யுட்காரத்தக்க அடுப்புமல்ல.

௰௫. அப்படி யுன் சிறுவயதுதுவக்கி நீ பிரயாசப்பட்ட உன் வியாபாரிகள் உனக்கிருப்பார்கள். அவரவர் தங்கள் போக்கிலே போய் அலைவார்கள். உன்னை இரட்சிப்பாரில்லை.

## ௪௮. அதிகாரம்.

[(௧) பராபரன் சனத்தினுடைய பிரசித்தமான முரட்டுத்தனத்தை அவர்களுக்குத் தெரிவித்துத் தீர்க்கதரிசனங்களை வெளியிட்டது. (௯) தமது நிமித்தமாக அவர்களைக் காப்பாற்றினது. (௰௨) தமது வல்லமைக்காகவும், பராமரிப்புக்காகவும் அவர்களைக் கீழ்ப்படிதலுக்குத் தூண்டினது. (௰௬) அவர்களுடைய உணர்வற்ற தன்மைக்காக அவர்களைக் குறித்துப் புலம்பினது. (௨௰) பாபிலோனைவிட்டுத் தமது சனத்தை வல்லமையுள்ளவிதமாய் விடுதலையாக்குவாரென்பது.]

இஸ்ரவேலென்றபேராய் அழைக்கப்பட்டு யூதாவின் நீரூற்றிலிருந்து சுரந்தவர்களுங் கர்த்தருடைய நாமத்தின்மேல் ஆணையிட்டு, இஸ்ரவேலுடைய பராபரனை நினைத்தும் அதை யுண்மையும், நீதியுமாய்ச் செய்யாதவர்களும்,

௨. பரிசுத்த பட்டணத்தாரின் பேரைத் தரித்துக்கொண்டு சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இஸ்ரவேலுடைய பராபரன்மேல் ஊன்றிக்கொள்ளுகிறவர்களுமாகிய யாக்கோபின் வீட்டாரே, கேளுங்கள்.

௩. முன்னடந்தவைகளை யதற்கு முன்னறிவித்தோம். நமது வாயிலிருந்து பிறந்து, அவைகளைக் கேட்கவும் பண்ணினோம். அப்படியே அசுப்பிலே செய்தோம். அப்படி வந்ததே.

௪. * நீ கடினமுள்ளவனென்றும், உன் பிடரியிருப்பு நரம்பும், உன் நெற்றி வெண்கலமென்றும் அறிந்திருக்கிறோம். * எரேமி. ௫, ௩. எசேக்கி. ௨, ௪.

௫. ஆகையால், என் விக்கிரகம் அவைகளைச் செய்ததென்றும், என் சுரூபமும், என் வார்ப்பித்ததும், அவைகளைக் கட்டளையிட்டனவென்றும் நீ சொல்லாதபடிக்கு நாம் அதற்கு முன் அவைகளை உனக்கு முன்னறிவித்து அவைகள் வராததற்கு முன்னே யுனக்குக் கேட்கப்பண்ணினோம்.

௬. அவைகளைக் கேட்டாயே அவைகளையெல்லாம் பார், இப்போது நீங்களுமல்லவோ அவைகளையறிவிக்கத்தகும் இதுமுதற் புதியவைகளானவைகளையும், நீ யறிந்திராமல் வைத்துவைக்கப்பட்டவைகளையும் உனக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

௭. அவைகள் அதுமுதற்கொண்டல்ல இப்போது சிருஷ்டிக்கப்பட்டன. இதோ அவைகளை அறிவேனென்று நீ சொல்லாதபடிக்கு இந்நாட்களுக்கு முன்னே நீ யவைகளைக் கேட்டிருந்ததில்லை.

௮. நீ கேட்டதுமில்லை அறிந்ததுமில்லை, அதுமுதல் உன் செவி திறந்துபோனதுமில்லை. ஏனெனில், நீ துரோகம்பண்ணுவதையும், நீ தாயின் கர்ப்பந்துவக்கி மீறுகிறவனென்றழைக்கப்பட்டதையும் அறிந்திருந்தோம்.

௯. நமது நாமத்தின் நிமித்தம் நம்முடைய கோபத்தைத் தாமதிக்கப்பண்ணினோம், உன்னைச் சங்கரிக்காதபடிக்கு நாம் நமது புகழ்ச்சியினிமித்தம் உனக்காகப் பொறுத்துமிருப்போம்.

௰. இதோ உன்னைப் புடமிடுகிறோம். ஆனால், வெள்ளியைப்போலல்ல. சிறுமையின் குகையிலே யுன்னைத் தெரிந்துகொள்ளப்பட்டவனாக்குகிறோம்.

௰௧. நம்முடைய நிமித்தம் நம்முடைய நிமித்தமே அதைச் செய்வோம். ஏனெனில், எப்படி நமது நாமத்தின் பரிசுத்தங் குலைக்கப்படலாம், * நமது மகிமையை வேறொருத்தனுக்குக் கொடோம். * ௪௨, ௮.

௰௨. யாக்கோபே, நாம் அழைத்திருக்கிற இஸ்ரவேலே, நமக்குச் செவிகொடு. நாம் அவரே, * நாம் முந்தினவரும், நாம் பிந்தினவருந்தானே. * ௪௧, ௪. ௪௪, ௬.

௰௯. நம்முடையகரமே பூமியை யஸ்திபாரப்படுத்தி நம்முடையவலதுகை வானங்களையளவிட்டது, நாம் அவைகளைக்கூப்பிட அனைத்துநிற்கும்.

௰௪. நீங்களெல்லாருங் கூடிவந்து சேருங்கள். * கர்த்தர் சிநேகித்திருக்கிறவன் அவருக்குச் சித்தமானதைப் பாபேலிலேசெய்வான், அவன்புயங்கல்தேயரின்மேலிருக்கும் என்பவைகளை யிவர்களில் அறிவித்தவனார்! * சஅ, உஅ.

௰௫. நாம் நாமே அதைச் சொன்னோம், நாம் அவனையழைக்கிறவருமாயிருக்கிறோம், அவனைவரப்பண்ணுவோம், அவன் வழிவாய்க்கிறதுமாயிருக்கும்.

௰௬. நம்மண்டை சேர்ந்து நாம் சொல்வதைக்கேளுங்கள். நாம் ஆதிமுதற்கொண்டு அந்தரங்கத்திலே பேசினதில்லை, அது உண்டாகுங்காலந்துவக்கி அங்கேநாமிருந்தோம். இப்போதோவெனில, கர்த்தராகிய ஆண்டவரும், அவருடையஆவியும் நம்மையனுப்புகிறார்.

௰௭ இஸ்ரவேலின் பரிசுத்தராயிருக்கிற உனமீட்பரானகர்த்தர்சொல்லுகிறதாவது; நாம் பிரயோசனமாயிருக்கிறதை யுனக்குப் போதித்து * நீ நடக்கவேண்டியவழியிலுனைநடத்துகிற உனபராபரனாகியகர்த்தர். * சங்கீதம். ௩உ, அ.

௰௮. * ஆ, நம்முடையகற்பனைகளைக் கவனித்தாயானாலதாவலை. அப்போது உனசமாதானம் நதியத்தனையும், உன நீதி சமுத்திரத்தின அலைகளத்தனையுமாயிருக்கும். * சங்கீதம். அக, ௰௪. மூ

௰௯. அப்போது உனவித ஞமணலத்தனையும, உன கர்ப்பப்பிறப்புகள அதினபொடிக்கறகளத்தனையுமாயிருக்கும * அப்போது அதினபேர்நமமைவிட்டு அறுப்புணணுமலும, அழிக்கப்படாமலுமிருக்கும.

உ௰. *பாபேலிலிருந்துபுறப்படுங்கள,கல்தேயரைவிட்டுக்கெம்பீரசத்தமாயஓடிவாருங்கள, இதையறிவித்துக்கேட்கப்பணணுங்கள இதைப் பூமியினகடையாந்தரமட்டும் வெளிப்படுத்துங்கள கர்த்தர் தமதடியானாகிய யாககோபைமீட்டுக்கொண்டாரென்று சொல்லுங்களெனகிறார் * எரேமி. ருய, அ அறிவி. ௰அ, ச.

உக. * அவரிவர்களை வனாந்தரங்களில நடத்தும்போது இவர்களுக்குத் தாகத்தவனமாயிராது தணணீர்களைக்கனமலையிலிருந்து இவர்களுக்குச் சுரக்கப்பணணித்தணணீர்கள் ஓடிவரக்கனமலையைப்பிளப்பார். * உ. மோசே. ௰௭, ௬.

உஉ. * ஆகாதவர்களுக்கோ சமாதானமில்லையென்று கர்த்தர்சொல்லுகிறார். * ருள,உக.

## சக௯. அதிகாரம்.

[(க) கிறிஸ்து யூதரிடத்திறகனுப்பப்பட்டிருந்து அவர்களமேல்முறையிடுவாரென்பது. (௫) அவர்கிருபையுள்ளவாகருந்தத்தோடே பரமதலைநரிடத்தில அனுப்பப்படுவாரெனபது. (௰௩)பராபரனுடைய அனபுதமது சபைமேலென்றுமுள்ளதெனபது. (௰௮) திருச்சபைமுந்தினசீருக்குக்குறைவிலலாமற்கொணடுவரப்படுமெனபது. (உச) சிறையிருப்பிலிருந்து வலலமையுளளவிதமாயவிடுதலைகிடைக்குமெனபது.

தீவுகளே, நமக்குச்செவிகொடுங்கள, தூரத்திலிருக்கிற சனசதளங்களே கவனியுங்கள, கர்த்தர்நமமைத்தாயின கர்ப்பத்திலேதுவக்கியழைத்து நான எனதாயினகுடலகளிலிருக்கையில என நாமத்தைப் பிரஸ்தாபப்படுத்தினார்.

உ. * அவர்எனவாயைக் கூர்மையானபட்டயமாக்கித் தமமுடையகரத்தின நிழலிலே எனனைமறைத்து எனனைத் துலக்கமான அம்பாக்கி, எனனைத் தமமுடைய அம்பறாத்தூணியிலே மூடிவைத்தார்.
* அறிவி. க, ௰௬.

௩. நமமுடனேநீரோ * நமமுடைய ஊழியக்காரன இஸ்ரவேல நாம் மகிமைப்படுகிற சாதியெனறார். * சஉ, அதி. க.

ச. நாயோவெனறால, சொன்னதாவது; விருதாவாயஉழைக்கிறோம். வீணும, அவத்தமுமாய நம்முடைய பெலனைச்செலவழிக்கிறோம். ஆகிலும நமமுடைய நியாயங்கர்த்தரிடத்திலும், நமமுடையபெலன நமமுடைய பராபரனிடத்திலு மிருக்கிறதெனறோம.

௫. இப்போதும நமமைத் தாயினகர்ப்பத்திலே துவக்கித் தமக்கு ஊழியக்காரனாக உருவேற்படுத்தின கர்த்தர் யாககோபைத் தமமண்டைக்குத் திருப்பச்சொல்லுகிறார். ஆனாலும இஸ்ரவேல சேராதேபோகிறது ஆகிலுங் கர்த்தருடைய பார்வையிற கனமடைவோம், நமது பராபரன நமமுடைய பெலனாயிருப்பார்.

௬. யாககோபினகோத்திரங்களை நிமிர்த்தவும, இஸ்ரவேலிலமீதியாவைக்கப்பட்டவர்களைத்திருப்பவும நீர் நமக்கு ஊழியக்காரனாயிருக்கிறது கொஞ்சக்காரியமாயிருக்கிறது, நீர் பூமியினகடைசிபரியந்தமும நமது இரட்சிப்பாயிருக்கவுமமைக் * சாதிகளின வெளிச்சமாகவும வைத்தோமெனகிறார்.
* சஉ, ௬. எ. லூக. உ, ௩௰—௩உ. அப்போ. ௰௩, சஎ.

எ. சத்தியமுளள கர்த்தரின நிமித்தமும, உமமைத் தெரிந்துகொணட இஸ்ரவேலுடைய பரிசுத்தரின நிமித்தமும இராசாக்கள கணடெழுந்திருந்து பிரபுக்களபணிந்

து கொள்ளுவார்களென்று இஸ்ரவேலின் மீட்பரும், அதின் பரிசுத்தருமாகிய கர்த்தர் சாதியால் அருவருக்கப்பட்டவரும், அதிகாரிகளின் பணிவிடைக்காரனுமான அசட்டைபண்ணப்பட்ட ஆத்துமாவுக்குச் சொல்லுகிறார்.

அ. கர்த்தர் சொல்லுகிறதாவது; * பிரியமான காலத்திலும் முடைய வேண்டுதலைக் கேட்டு இரட்சிப்பின் நாளிலே உமக்கொத்தாசைபண்ணுகிறேம். நீர் பூமியை நிமிர்த்து பாழாய்க்கிடக்கிற சுதந்தரங்களைச் சுதந்தரிக்கப்பண்ணவும், * உ. கொரி. சு, உ.

கூ. கட்டுண்டவர்களுடனே புறப்படுங்களென்றும், இருளிலிருக்கிறவர்களுடனே வெளிப்படுங்களென்றும் சொல்லவும் நாம் உம்மைக்காப்பாற்றி உம்மைச் சனத்தினுடம்படிக்கையாகக் கட்டளையிடுவோம், அவர்கள் வழிகளோரமாய் மேய்வார்கள் சகல மேடுகளிலும் அவர்களுக்கு மேய்ச்சலுண்டாயிருக்கும்.

ய. * அவர்கள் பசியாயிருப்பதுமில்லை, தாகமாயிருப்பதுமில்லை. உஷ்ணமாகிலும், வெயிலாகிலும் அவர்கள்மேற் படுவதுமில்லை. ஏனெனில், அவர்களுக்கிரங்குகிறவர் அவர்களை நடத்தி அவர்களை நீரூற்றுகளண்டைக்குக் கொண்டுபோய்விடுவார்.
* சங்கீ. உரு, க. ழூ ௬௬. அதி. கூ. அறிவி. எ, யசு. யகூ—யஎ.

யக. * நம்முடைய பருவதங்களையெல்லாம் வழிகளாக்குவோம், நம்முடைய பாதைகள் உயர்த்தப்பட்டவைகளுமாயிருக்கும்.
* சய, ச.

யஉ. இதோ இவர்கள் தூரத்திலும், அதோ அவர்கள் வடக்கிலும், மேற்கிலும், அவர்கள் சீனீம் தேசத்திலுமிருந்து வருவார்களென்கிறார்.

யங. * வானங்களே கெம்பீரியுங்கள். பூமியே களிகூரு. பருவதங்களே கெம்பீரமாய் முழங்குங்கள். ஏனெனில், கர்த்தர் தம்முடைய சனத்தைத் தேற்றரவுபண்ணினார், சிறுமைப்பட்டிருக்கிற தம்முடையவர்கள்மேல் இரக்கமாயிருப்பார் * சச, அதி. உச.

யச. சீயோனோவென்றால், கர்த்தர் என்னைக் கைவிட்டார். ஆண்டவர் * என்னை மறந்தாரென்கிறது. * ருச. அதி. கூ—அ.

யரு. ஒரு ஸ்திரீ தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கிரங்காதபடிக்குத் தன் பாலகனை மறப்பாளோ! அப்படிப்பட்டவள் அவைகளை மறந்தாலும் நாமுன்னை மறப்பதில்லை.

யசு. இதோ, உள்ளங்கைகளில் உன்னைப் பதித்தோம், * உன் மதில்கள் நித்தம் நமக்கு முன்பாகவிருக்கின்றன. * சங்கீ. ருக, உய.

யஎ. உன் குமாரர் தீவரித்து வருவார்கள், உன்னை நிர்மூலமாக்கினவர்களும், உன்னைப் பாழ்க்கடித்தவர்களும் உன்னைவிட்டுப் புறப்பட்டுப்போவார்கள்.

யஅ. * உன் கண்களையேறெடுத்துச் சுற்றிலும்பார், இவர்களெல்லாரும் கூட்டப்பட்டு உன்னண்டைக்கு வருவார்கள், நீ இவர்களையெல்லாம் ஆபரணமாகத் தரித்து ஒரு மணவாட்டியைப்போலே இவர்களையுடையாகக் கட்டிக்கொள்ளுவாயென்கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தருரைக்கிறார். * கூய, ச.

யகூ. ஏனெனில், உன்னுடைய வனாந்தரங்களும், பாழான உன்னுடைய தானங்களும், நிர்மூலமான உன்னுடைய தேசமுமே இனிக் குடிகளின் திரளினாலே உனக்கு நெருக்கமாயிருக்கும், உன்னை விழுங்கினவர்களோவெனில் தூரமாவார்கள்.

உய. இடம் எனக்கு நெருக்கமாயிருக்கிறது, நான் குடியிருக்குமட்டிக்கு ஒறறிப்போவென்று, உனக்கு உண்டாயிருக்கப்போகிற பிள்ளைகளற்றிருந்த உன் காதுகள் கேட்கச்சொல்லுவார்கள்.

உக. நீயுன் இருதயத்திலே இவர்களையெனக்குப் பிறப்பித்தவரார்! நான் பிள்ளைகளற்றும், தனித்தும், சிறைப்பட்டும், நிலையற்றுமிருந்தேனே இவர்களையெனக்கு வளர்த்தவரார்! இதோ, நான் ஒண்டியாய் விடப்பட்டிருந்தேனே இவர்களெங்கேயிருந்தவர்களென்பாய்.

உஉ. இதோ சாதிகளுக்கு நேராக நமது கரத்தை உயர்த்திச் சனசதளங்களுக்கு நேராக நமது கொடியையேற்றுவோம், அப்போது உன் குமாரரைக் கொடுங்கைகளிலே நதிக்கொண்டுவருவார்கள், உன் குமாரத்திகள் தோள்களின்மேலெடுத்து வரப்படுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

உங. * இராசாக்கள் உன்னை வளர்க்கிறவர்களும், அவர்கள் நாயகிகள் உன் தாதிகளுமாயிருப்பார்கள். † தரையிலே முகங்குப்புற விழுந்து உன்னைப் பணிந்து உன் கால்களின் தூளை நக்குவார்கள் நாம் கர்த்தர், நமக்குக் காத்திருக்கிறவர்கள் வெட்கப்போவதில்லையென்கிறதை அப்போது அறிந்துகொள்ளுவாய். * கூய, யசு. † சங்கீ. உகூ, கூ.

உச. பராக்கிரமனுகையிலே கொள்ளையுடைமை பறிக்கப்படக்கூடுமோ! அல்லது நீதியாய்ச் சிறைப்பட்டுப்போனவர்கள் விடுவிக்கப்படக்கூடுமோ?

உரு. இப்போதும் இதோ * பராக்கிரமன் சிறைப்படுத்தினவர்களும் பறிக்கப்படுவார்கள், பலவந்தன் கொள்ளையிட்டதும் விடுவிக்கப்படும், உன்னோடே வழக்காடுகிறவர்களோடே † நாம் வழக்காடி உன் பிள்ளைகளை நாம் இரட்சித்துக்கொண்டு, * ஆக. யச, உஉ. † சங்கீ. ௬௫, ௬.

உசு. *உனனையொடுககினவர்களுடையமா ம்சததையவர்களுககேதினகைகொடுபபோம், மதுபானததாலவெறியாகுமாபபோலே தஙகளுடைய இரத்தத்தினாலேவெறியாவார்கள், கர்ததரும், யாககோபிலேவலலவருமாகிய நாமுன இரட்சகரும, உனமீட்பருமாயிருககிறதைமாம்சமெலலாம அறியபபோமென்று கர்ததர் சொலலுகிறார்.
* அறிவிப்பு. யகூ, கூ.

## ருய. அதிகாரம்.

[(க) யூதர்கள கைவிடபபடடும் கிறிஸ்துத்தம் இரட்சிககுமவலலமையினாலும,(ங) அககிரியையைமுடிககுந தமது பணிதலினாலும, (எ) தேவ உதவியிலதமது நமபிக்கையினாலுந் தமமேலபழிசுமராதென றுககாட்டினது. (ய) நம்மைநமபாமலபராபரனிலநமபிககைவைககததாணடினது.]

கர்ததர் சொலலுகிறதாவது; நாம உங்கள தாயையனுபபிவிடடோமென அவளுககுககொடுத்த தளளுதலின சீட்டெஙகே! அலலது நாம்கடனபடட எவனுககுமஉஙகளைவிறறுபபோடடோம. *இதோ உஙகள அககிரமஙகளின நிமித்தமவிறறுபபோடடபபடடீர்கள. உஙகள பாதகஙகளின நிமிததம உஙகளதாய அனுபபிவிடபபடடாள.* மததே. யகூ, எ.

உ.*நாமவநதபோதுஒருவனுமிலலாமலும, நாம்கூபபிடடபோதுமறுவுததரவுகொடுககிற ஒருவனுமிலலாமலும போனதேது! மீட்கக்கூடாதபடிககு நமமுடையகைகுறுகிறதோ?விடுவிககிறதறகு நமமிலேபெலனிலலாமலேபோனதோ? இதோ நமது உதமபுதலினாலே,நாம் கடலைவறளபபணணி நதிகளைவெடடாநதரையாககிப போடுகிறோம. அவைகளினமீனதணணீரிலலாமல தாகததால செதது நாறறமெடுக்குமபடியாகததானே.
* ருசு, க. ச. மோசே. யக, உகூ.

ங. நாம வானஙகளுககுக காரிருளை யுடுதது இரடடையவைகளின் மூடுசீலையாக்குகிறோம்.

ச. இளைபபானவனோடே நாம்சமயததிலே வார்ததைசொலல அறியுமபடிககுககர்ததராகிய ஆணடவர் நமககுககலவிமானகளின நாவைததநதார்.*காலையிலநமமையெழுபபுகிறார். கறறுககொளளுகிறவர்களைபபோலே கேட்குமபடிககு நமககுசசெவியையெழுபபுகிறார். * மததே. யக, உஅ. உகூ.

ரு. கர்ததராகிய ஆணடவர்நமககுசசெவியைததிறநதார், நாமமுணடுததனமபணணுகிறவருமல்ல, நாமபினவாஙகிவிலகோம.

கூ. * நமமுடைய முதுகினமேலடிககிறவர்களுககும, நமமுடைய தாடையயிறைபபிடுஙகுகிறவர்களுககுமஒபபுககொடுககிறோம,நமமுடையமுகத்தையவமானஙகளுக்கும், உமிழ்நீருககும் மறையோம. * மத. உசு, கூஎ. கூஅ யோவா. யகூ, க.

எ. ஏனெனில, கர்ததராகிய ஆணடவர்நம ககுததுணைசெயகிறார். ஆகையால, நாம வெட்கபபடோம. ஆனபடியால நம முடைய முகததைககறபாறையாக வைததோம. ஏனெனில.நாமவெட்கப்படுபோவதிலலையெனறறிவோம.

அ. நமமை நீதிவிளஙகப பணணுகிறவர் சமீபமாயிருககிறார். ஆர் நமமோடே வழககாடுவான? கூடிககொணடுநிறபோம, ஆர் நமமுடைய எதிராளி! அவன நம்மணடையிற்சேரடடும.

கூ. இதோ கர்ததராகிய ஆணடவர்நமககுததுணைசெயகிறார். நமமுடையமேலேகுற றஞ சுமததுபவயார்!' இதோ, அவர்களெலலாரும ஒருவஸ்திரததைபபோலபபழைசாவார்கள. பொட்டவர்களையழிககும.

ய. உஙகளிலெவன கர்ததருககுபபயநது அவருடைய ஊழியககாரனுடைய சொலலைககேடடுததனககு வெளிச்சமிலலாததினாலே இருட்டிலேநடக்கிறானோ அவன கர்ததருடைய நாமததைநமபிததன பராபரனைச்சார்நதுகொளளககடவான.

யக. இதோ, நெருபபைககொளுததி அககினிபபொறிகளால அரைககட்டிககொணடிருககிறநீஙகளனைவரும்உஙகள நெருபபின தீயிலும, நீஙகளமூடடின அககினிசசுவாலைகளிலுமநடவுஙகள. நமமுடைய கரததினாலே இது உஙகளுககு உணடாகும, வேதனையிலேகிடபபீர்கள.

## ருக. அதிகாரம்.

[(க) ஆபிரகாமைபபோல,(ங)கிறிஸ்துவினமீதறுதலுளளவாககுத் தத்தஙகளினாலும், (ச)நீதியுளள இரட்சிபபினாலும,(எ) மனிதனுடையசாவுககுரியதனமையினாலுமஅவரிலநமபிககைவைககத்தூணடினது.(கூ) கிறிஸ்துதமது பரிசுததகரததினாலேமனிதருககுபபயபபடாமல தமதுசனததைககாபபாறெனபது. (யஎ)அவர்எருசலேமின்துனபததைககுறிததுதுககிககிறது. (உக) விடுதலையைவாககுத்தத்தம்பணணுகினறது.]

நீதியைததொடர்நது கர்ததரைததேடுகிறநீஙகள நமமுடையசொலலைக்கேளுஙகள,*நீஙகளவெட்டியெடுககபபடடகனமலையையும, †நீஙகளதோணடியெடுக்கப்படட துரவினகுழியையும நோக்கிபபாருஙகள. * உரோமர்.ச,யகூ—உக.†எபி.யக,யக.

உ. உஙகள தகபபனாகிய ஆபிரகாமையும், உஙகளைபபெறறசாராளையும நோககிபபாருஙகள. ஏனெனறால, அவன ஒருததனாயிருககையில * நாம அவனையழைத்து அவனையாசீர்வதிததது அவனைப பெருகபபணணினோம. * க. மோசே. யஉ, க. ங.

௩. அதேதெனில், கர்த்தர் சீயோனைத் தேற்றரவுபண்ணுவார், அவர் அதின் பாழான தலங்களையெல்லாந் தேற்றரவுபண்ணி, அதின் வனாந்தரத்தை ஏதேனைப்போலவும், அதின் அந்தரவெளியைக் கர்த்தரின் தோட்டத்தைப்போலவும் ஆக்குவார், சந்தோஷமும், மகிழ்ச்சியும், துதியும், கீதசத்தமும் அதிலுண்டாயிருக்கும்.

௪. நம்முடைய சனமே! நம்மைக் கவனியுங்கள், நம்முடைய சனசதளமே! நமக்குச் செவிகொடுங்கள். ஏனெனில், வேதம் நம்மிலிருந்து வெளிப்படும், நம்முடைய நியாயத்தைச் சனசதளங்களின் வெளிச்சமாக வீசப்பண்ணுவோம்.

௫. நமது நீதி சமீபித்திருக்கிறது, நமது இரட்சிப்பு வெளிப்படும், நம்முடைய புயங்கள் சனசதளங்களை நியாயந்தீர்க்கும். தீவுகள் நமக்குக் காத்திருந்து நம்முடைய புயத்தின்மேல் நம்பிக்கையாயிருக்கும்.

௬. உங்கள் கண்களை வானத்துக்கேறெடுத்துத் தாழவிருக்கிற பூமியையும் நோக்கிப் பாருங்கள். ஏனெனில், * வானம் புகையைப்போல உருவழிந்து பூமி வஸ்திரத்தைப்போலப் பழைசாய்ப்போம், அதின் குடிகளும் அப்படியே சாவார்கள், நம்முடைய இரட்சிப்போவென்றால், என்றென்றைக்குமிருக்கும், நம்முடைய நீதி முறிந்துபோவதில்லை.
* சங்கீ. ௱௨, ௨௭. லூக்கா. ௨௧, ௩௩.

௭. நீதியையறிந்தவர்களே, * நமது சொல்லைக் கேளுங்கள். நம்முடைய வேதத்தையிருதயத்திலே தரித்திருக்கிற சனமே, † மனுஷரின் நிந்தனைக்குப் பயப்படாமலும், அவர்கள் தூஷணங்களாலே கலங்காமலுமிருங்கள். * சங்கீ. ௩௭, ௩௧. † மத். ௫, ௰௧.

௮. ஏனென்றால், பொட்டு அவர்களை வஸ்திரங்களைப்போலே யரித்துப் பூச்சியவர்களை ஆட்டுமயிரைப்போலே சதைத்துப்போடும். நம்முடைய நீதியோவென்றால், என்றென்றைக்கும் நம்முடைய இரட்சிப்புத் தலைமுறை தலைமுறைகளாகவுமிருக்கும்.

௯. எழும்பு எழும்பு பெலன்கொள் கர்த்தரின் புயமே. முந்தின நாள்களுக்கும், பூருவ தலைமுறைகளுக்கும் ஒத்தபடி யெழும்பு. * இராகாபைத் துண்டித்ததும், † முதலையை வதைத்ததும் நீதானல்லவோ!
* ௨. மோசே. ௰௪, ௨௫. † எசேக்கியேல். ௨௯, ௩.

௰. மகா ஆழத்தின் தண்ணீர்களாகிய சமுத்திரத்தை வறளப்போகப்பண்ணினதும், மீட்கப்பட்டவர்கள் கடந்துபோகக் கடலின் பள்ளங்களை வழியாக்கினதும் நீதானல்லவோ!

௰௧. அப்படியே * கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கெம்பீரத்தோடே சீயோனுக்கு வருவார்கள். நித்திய மகிழ்ச்சியவர்கள் தலையின்மேலிருக்கும். சந்தோஷமும், மகிழ்ச்சியும், அவர்களைப் பிடிக்கும். சஞ்சலமும், தவிப்பும் ஓடிப்போம். * ௩௫, ௰.

௰௨. நாம் நாமே உங்களைத் தேற்றரவுபண்ணுகிறவர், * சாகப்போகிற மனுஷனுக்கும், புல்லுக்கொப்பாகுகிற மனுஷபுத்திரனுக்கும் பயப்படுகிறதற்கும், * சங்கீ. ௱௰௮, ௬. மத்தேயு. ௰, ௨௮.

௰௩. வானங்களை விரித்துப் பூமியை யஸ்திபாரப்படுத்தி யுன்னையுண்டாக்கின கர்த்தரை மறக்கிறதற்கும் நீ யார்! இடுக்கண்செய்கிறவன் அழிக்க ஆயத்தமாகிறபோது நீ அவனுடைய உக்கிரத்துக்கு நித்தமெந்நாளிலும் அஞ்சிக் கிடப்பானேன்! இடுக்கண் செய்பவனுடைய உக்கிரமெங்கே!

௰௪. பரதேசியாய்ப்போகிறவன் தீவிரமாய் விடுதலையாவான். அவன் கெபியிலே சாவதுமில்லை. அவனுடைய அப்பம் அவனுக்குக் குறைபடுவதுமில்லை.

௰௫. ஏனெனில், நாமே சமுத்திரத்தையதின் அலைகள் கொந்தளிக்கத்தக்கவிதமாகக் கலக்குகிற சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள உன் பராபரனாகிய கர்த்தர்.

௰௬. நாம் வானத்தை நாட்டிப் பூமியை யஸ்திபாரப்படுத்திச் சீயோனுடனே, நீ நம்முடைய சனமென்று சொல்லுவதற்காக நாம் நம்முடைய வார்த்தையையுன் வாயிலே கொடுத்து நம்முடைய கரத்தின் நிழலினாலுன்னை மறைக்கிறோம்.

௰௭. எழும்பு எழும்பு, கர்த்தருடைய உக்கிரத்தின் பாத்திரத்தையவர் கையில் வாங்கிக் குடித்திருக்கிற எருசலேமே, எழும்பு. * தத்தளிப்பினுடைய பாத்திரத்தின் வண்டல்களைக் குடித்து உறிஞ்சினாய். * சங்கீதம். ௬௰, ௫.

௰௮. அவள் பெற்ற எல்லாக் குமாரரிலும், அவளை மெதுவாய் நடத்துவாருமில்லை, அவள் வளர்த்த எல்லாக் குமாரரிலும் அவளைக் கைகொடுத்து அழைப்பாருமில்லை.

௰௯. இவ்விரண்டும் உனக்குச் சம்பவித்தன, உனக்குப் பரிதபிக்கத்தக்கவனார்! பாழ்க்கடிப்பும், நொறுக்குதலும், பஞ்சமும், பட்டயமும் வந்ததே, ஆரைக்கொண்டு உன்னைத் தேற்றரவுபண்ணுவோம்?

௨௰. உன் குமாரர் மூர்ச்சித்து விழுந்தார்கள், அவர்கள் வலையிலே சிக்குண்ட கலைமானைப்போலே எல்லா வீதிகளின் முனையிலுங் கர்த்தருடைய உக்கிரத்தினாலும், உன் பராபரனுடைய உதம்புதலினாலும் நிறைந்தவர்களாய்க் கிடக்கிறார்கள்.

௨௰௧. ஆனதுகொண்டு சிறுமைப்பட்டவளே, மதுபானமல்லாமல் வெறிகொண்டவளே, நீ கேள்.

௨௰௨. கர்த்தராகிய உன்னுடையவரும், தம்முடைய சனத்துக்காக வழக்காடப்போகிற

உன்பராபரனுமானவர் சொல்லுகிறதாவது; இதோ, தத்தளிப்பின் பாத்திரத்தை உன் கையிலே வாங்கிப்போடுகிறேன், இனி நம்முடைய உக்கிரத்தினுடைய பாத்திரத்தின் வண்டல்களை நீ குடிப்பதில்லை.

௨௩. * கடந்துபோகிறவர்களுக்கு நீ உன் முதுகைத் தரையும், தெருவுமாக்கும்படியாக உன்னுத்தமாவுடனே நாங்கள் கடந்துபோகும்படிக்குக் குனியென்று சொல்லி உன்னைச் சஞ்சலப்படுத்தினவர்களின் கையிலே அதைக் கொடுப்பேனென்கிறார்.

* சங்கீதம். ௱௨௯, ௩.

## ௫௨. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத்தம இலவசமான மீட்பை நம்பவும், (௭) அதின் போதகனாயேற்றுக் கொள்ளவும், (௯) அதின் வல்லமையைக் கொண்டாடவும், (௰௧) அடிமைத்தனத்திலிருந்து நீங்கவும், சபைக்குப் போதிப்பது. (௰௩) கிறிஸ்துவின் இராச்சிய மேன்மைப்படுமென்பது.]

எழும்பு எழும்பு சீயோனே, உன் பெலனைத் தரித்துக்கொள். பரிசுத்த பட்டணமாகிய எருசலேமே, உன் அலங்கார வஸ்திரங்களைத் தரித்துக்கொள். ஏனெனில், சுன்னத்தில்லாதவனும், அசுத்தனும் இனி உன்னுக்குள் வருவதில்லை.

௨. தூளை உதறிப்போட்டெழுந்திரு, எருசலேமே, உட்கார். சிறைப்பட்டுப்போன சீயோன் குமாரத்தியே, உன் கழுத்தின் கட்டுகளை அவிழ்த்துவிடு.

௩. ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது; இலவசமாய் விற்கப்பட்டீர்கள், பணங்கொடாமலும் மீட்கப்பட்டுப்போவீர்கள்.

௪. ஏனென்றால், முந்தி நம்முடைய சனம் பரதேசியாய்த் தங்கி எகிப்துக்கிறங்கிப் போயிருந்தது, அசூரியனும் முகாந்தரமில்லாமல் அதை ஒடுக்கிப்போட்டானென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௫. இப்போதும் நமக்கிங்கே என்ன இருக்கிறதென்று சொல்லுகிறார், ஏனெனில், நம்முடைய சனஞ் சும்மாய்க் கொண்டுபோகப்பட்டது, அதையாளுகிறவர்கள் அதை அலறப்பண்ணுகிறார்கள். நித்தம் எந்நாளும் * நம்முடைய நாமந் தூஷணிக்கப்படுகிறது. * ஏசே. ௩௬, ௨௰. உரோமர். ௨, ௨௪.

௬. இதினிமித்தம் இதினிமித்தமே, நம்முடைய சனம் அக்காலத்திலே நம்முடைய நாமத்தையறியும். ஏனெனில், இதைச் சொல்லுகிறவர் நாமே, இதோ இங்கேயிருக்கிறோமென்று கர்த்தர் விளம்புகிறார்.

௭. * சமாதானத்தைக் கூறி நற்காரியத்தைச் சுவிசேஷமாயறிவித்து இரட்சிப்பைக் கூறிச் சீயோனுடனே, உன் பராபரன் இராச்சியம் பண்ணுகிறானென்று சொல்லுகிற சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின்மேல் எத்தனை அழகானவைகள்! * நாகூம். ௨, ௧. உரோமர். ௰, ௰௫.

௮. உன் சாமக்காரருடைய சத்தங் கேட்கப்படும், அவர்கள் சத்தத்தையுயர்த்தி ஏகமாய்க் கெம்பீரிக்கிறார்கள். ஏனென்றால், கர்த்தர் சீயோனைத் திரும்பிவரப்பண்ணும்போது அதைக் கண்ணாரக் காண்பார்கள்.

௯. எருசலேமின் பாழான தலங்களே, முழங்கி ஏகமாய்க் கெம்பீரியுங்கள். ஏனெனில், கர்த்தர் தம்முடைய சனத்தைத் தேற்றரவு பண்ணி எருசலேமை மீட்டார்.

௰. எல்லாச் சாதிகளின் கண்களுக்கு முன்பாகவுங் கர்த்தர் தம்முடைய பரிசுத்த புயத்தை வெளிப்படுத்துவார், * பூமியின் எல்லைகளெல்லாம் நம்முடைய பராபரனுடைய இரட்சிப்பைக் காணும். * சங். ௯௮, ௩. ௪.

௰௧. அகன்று அகன்று * அவ்விடம் விட்டுப் புறப்படுங்கள், அசுத்தமானதைத் தொடாதேயுங்கள், கர்த்தருடைய பாண்டங்களைச் சுமக்கிறவர்களே, அதின் நடுவிலிருந்து புறப்பட்டு உங்களைச் சுத்திகரியுங்கள்.

* ௨. கொரி. ௬, ௰௭. அறிவி. ௰௮, ௪.

௰௨. ஏனெனில், நீங்கள் தீவரித்துப் புறப்படுவதில்லை, நீங்கள் ஓடிப்போகிறவர்களாய் நடப்பதுமில்லை, ஏனென்றாற் கர்த்தர் உங்கள் முன் நடப்பார், இஸ்ரவேலின் பராபரன் உங்கள் பிற்புறத்தைக் காப்பார்.

௰௩. இதோ நம்முடைய ஊழியக்காரன் ஞானமாய் நடந்துகொண்டு * உயர்த்தப்பட்டு மேன்மையும், மகா உன்னதமுமாயிருப்பார். * பிலிப்பி. ௨, ௯—௰௧.

௰௪. மனுஷனைப் பார்க்கிலும் அவருடைய முகப்பார்வையும், மனுப்புத்திரரைப் பார்க்கிலும் அவருடைய ரூபமும் * இத்தனை அந்தக்கேடடைந்தபடியினாலே அநேகர் உம்முடைய பேரில் எப்படி பிரமிப்பார்களோ? * ௫௩, ௩.

௰௫. அப்படி அநேகஞ் சாதிகள் மேலும் * அவர் தெளிப்பார், அவருக்காக இராசாக்கள் தங்கள் வாயை மூடுவார்கள். ஏனெனில், † எவர்களுக்கு விவரிக்கப்படாதிருந்ததோ அவர்கள் காண்பார்கள், எவர்களுக்குக் கேள்விப்படாதிருந்ததோ அவர்கள் உணர்வார்கள். * எபிரே. ௯, ௰௩. ௰௪. ௰௨, ௨௪. ௧. பேதுரு. ௧, ௧. ௨. † ஏசா. ௬௫, ௧. உரோமர். ௰௫, ௨௧.

## ௫௩. அதிகாரம்.

[(௧) தீர்க்கதரிசி அவநம்பிக்கையின்மேல் முறையிட்டு, (௪) கிறிஸ்துவினுடைய பாடுகளின் பயனாலும், (௰) அதின் பிரயோசனத்தினாலும் சிலுவையின் அவமானத்தை நீக்கினது.]

எங்களாலே கேள்விப்பட்டதை விசுவாசித்தவனார்! * கர்த்தருடைய புயம் ஆருக்கு வெளிப்பட்டது! * யோவா. யஉ, ஙஅ. உரோமர். ய, யசு.

உ. இளையைப்போலவும், வறண்ட பூமியிலிருந்து துளிர்க்கிற வேரைப்போலவும் அவனுக்கு முன்பாக எழும்புகிறார், அவருக்கு உருவமுமில்லை, பகத்துவமுமில்லை, நாம் அவரைப் பார்த்தபோது நாம் இச்சிக்கத்தக்க உருவு அவருக்கில்லாதிருந்தது.

ங. * அவர் அசட்டைபண்ணப்பட்டவரும், மனுஷரில் ஈனமானவரும், வேதனைகளுள்ளவரும், பலஈனத்தை யறிந்தவருமாயிருந்தார், அவரைவிட்டு முகங்களை மறைத்துக்கொள்ளலாயிற்று, அவர் அசட்டைபண்ணப்பட்டிருந்தார், அவரை யெண்ணாதேபோனோம். * சங். உஉ, எ. ருஉ, யச. சங்கீ. உஉ, எ. அ. யோவா. எ, சஅ.

ச. மெய்யாகவே * நம்முடைய பலஈனங்களை யவரேற்றுக்கொண்டு நம்முடைய நோவுகளைச் சுமந்தார். நாமோவெனில், அவர் பராபரனால் அடிபட்டு ஒடுங்குண்டவராய வாதிக்கப்பட்டாரென்றெண்ணினோம். * மத்தே. அ, யஎ.

ரு. ஆனால் அவர் * நம்முடைய மீறுதல்களின் நிமித்தங்காயப்பட்டு நம்முடைய அக்கிரமங்களின் நிமித்தம் நொறுக்கப்பட்டார், நமக்குச் சமாதானத்தையுண்டுபண்ணும் ஆக்கினையவர்மேல் வந்திறங்கிற்று, † அவருடைய தழும்புகளாலே குணமாகுகிறோம்.
* உரோமர். ச, உரு. † க. பேது. உ, உச.

சு. நாமெல்லாரும் * ஆடுகளைப்போல வழிதப்பித்திரிந்து அவரவர் பாட்டிலே தன்தன் வழியே நோக்கிப்போனோம், கர்த்தரோவென்றால், † நமமெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார்.
* க. பேது. உ, உரு. † யோவா. க, உகூ. உ. கொரிந்தர். ரு, உக.

எ. கடன் கேட்கப்பட்டபோது அவரே ஒடுக்கப்பட்டார். ஆனால், * தம்முடைய வாயையவர் திறந்ததில்லை, † அவரொரு ஆட்டுக்குட்டியைப்போல அடிக்கப்படக்கொண்டுபோகப்பட்டுத் தன்னை மயிர்க்கத்தரிக்கிறவனுக்கு முன்பாகச் சத்தமற்றிருக்கிற ஆட்டைப்போலே தம்முடைய வாயைத்திறவாதிருந்தார். * மத். உகூ, கூஉ. கூ௩. உஎ, யஉ. யச. † அப்போ. அ, ௩உ. ௩௩.

அ. * அவர் இடுக்கணிலும், நியாயத்தீர்ப்பிலுமிருந்தெடுக்கப்பட்டார், அவருடைய ஆயுசையெண்ணுபவனார்! ஏனெனில், சீவனுள்ளோருடைய தேசத்திலிருந்து வெட்டிப்போடப்பட்டார். என்சனத்தினுடைய மீறுதலினாலே அவருக்கு அந்த வாதையுண்டானது. * மத்தே. அ, க

அாகூய

கூ. ஆகாதவர்களோடே அவருடைய பிரேதக்குழியை நியமித்தார்கள், ஆனால் ஐசுவரியவானோடே தம்முடைய மரணத்திலிருந்தார். ஏனென்றால், அவர் கொடுமைசெய்ததில்லை. * அவர் வாயிலே வஞ்சனையிருந்ததுமில்லை. * மத்தேயு. உஎ, ருஎ—சூய. க. பேதுரு. உ, உஉ.

ய. கர்த்தரோவென்றால், அவரை நொறுக்க சித்தமாயிருந்து அவனைப் பலட்சயமாக்கினார், அவருடைய ஆத்துமாத் தன்னைக் குற்றம்போக்கும் பலியாக ஒப்புக்கொடுத்தபின் அவர் * வித்தைக்கண்டு நீடிய நாளாயிருப்பார், கர்த்தருக்கு விருப்பமானது அவர் கையால் வாய்க்கும். * சங்கீ. உஉ, ௩க. ௩உ.

யக. தமதாத்துமவருத்தத்தின் பலனையவர் கண்டு திருத்தியாவார், நம்முடைய ஊழியக்காரனாகிய நீதிபரர் அநேகரைத் தம் அறிவினாலே நீதியானவர்களாக்குவார், ஏனெனில், அவர்களுடைய அக்கிரமங்களை யவர் சுமந்துகொள்ளுகிறார்.

யஉ. ஆனபடியினாலே யவர் தம்முடைய ஆத்துமாவை மரணத்தினூற்றிப * பாதகரிலொருவராக எண்ணப்பட்டு அநேகரானவர்களின் பாவத்தைத் தாமே சுமந்து † பாதகருக்காக வேண்டிக்கொண்டதினிமித்தம் அநேகரை யவருக்குப் பங்காகக் கொடுப்போம், பலவான்களை யவர் தமக்குக் கொள்ளையாகப் பங்கிட்டுக்கொள்ளுவார். * மாற்கு. யரு, உஅ. லூக். உ௩, ௩எ. லூக்கா. உ௩, ௩உ.

ருச. அதிகாரம்.

[(க) தீர்க்கதரிசி பரமதஸ்தருக்கு ஆறுதலாக அவர்களுக்கு விஸ்தாரமான சபையுண்டாகுமென்று தீர்க்கதரிசனமுரைத்தது. (ச) அவர்களுடைய தஞ்சம். (கூ) துன்பத்தில் நின்றுண்டாகும் அவர்களுடைய விடுதலை. (யக) அவர்களுடைய நாயமான ஏற்கட்டுதல். (யரு) அவர்களுடைய நிச்சயமான பாதுகாத்தல்.]

பிள்ளைபெறாத மலடியே, கெம்பீரித்துப்பாடு. கர்ப்பவேதனைப்படாதவளே, கெம்பீரமாய முழங்கிச் சந்தோஷசத்தமிடு. * ஏனெனில், வாழ்க்கைப்பட்டவளுடைய பிள்ளைகளைப்பார்க்கிலும் † அவாந்தரமானவளுடைய பிள்ளைகள் அதிகமென்று கர்த்தர் சொல்லுகிறார். * கலா. ச, உஎ. † யோவான். க, யக—யங.

உ. உன் கூடாரத்தினிடத்தை விசாலமாக்கு. உன் வாசஸ்தலங்களின் திரைகள் விரிவாகட்டும். தடைசெய்யாதே, உன் கயிறுகளை நீளமாக்கி, உன் கூச்சுகளை யுறுதிப்படுத்து.

ங. ஏனெனில், வலதிடத்துப்புறமாகவும் இடங்கொண்டு பெருகுவாய். உன் வித்தானவர்கள் சாதிகளைச் சுதந்தரித்துக்கொண்டு பாழாய

கிடந்த பட்டணங்களைக் குடியேற்றுவிப்பார்கள்.

௪. பயப்படாதே. ஏனெனில், நீ வெட்கிப்போவதில்லை. நாணாதே. ஏனெனில், நீ இலச்சையடைவதில்லை உன் வாலிபத்தின் வெட்கத்தை நீ மறந்து உன் விதவையிருப்பின் நிந்தையை இனி நினையாதிருப்பாய்.

௫. ஏனெனில், உன்னையுண்டாக்கின சேனைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ளவர், * உன் பர்த்தாவும், சர்வபூமியினுடைய பராபரனென்னப்பட்டுப்போகிற இஸ்ரவேலின் பரிசுத்தர் உன் மீட்பருமாயிருக்கிறார். * ஓசே. ௨, ௰௬.

௬. அதேதெனில், தள்ளிவிடப்பட்டவளும், மனமநொந்தவளுமான ஸ்திரியைப்போலிருக்கிற உன்னைக் கர்த்தர் அழைத்தார். நீ புறக்கணிக்கப்பட்டிருந்தும் இளவயதின் ஸ்திரியாயிருக்கிறாயென்று உன் பராபரன் சொல்லுகிறார்.

௭. கொஞ்ச நிமிஷம் உன்னைக் கைவிட்டோம். * ஆனாலும் மகா உருக்கமான இரக்கங்களால் உன்னைச் சேர்ப்போம். * சங்கீ. ௩௰, ௬.

௮. கொஞ்சப்போதான கோபத்திலே நம்முடைய முகத்தை யொரு நிமிஷம் உனக்கு மறைத்தோம். ஆனால் நித்திய கிருபையாய் உனக்கிரங்குவோமென்று கர்த்தராகிய உன் மீட்பர் சொல்லுகிறார்.

௯. ஏனெனில், இது நமக்கு நோவாவின் சலங்களைப்போலிருக்கும். நோவாவின் சலங்கள் இனிப் பூமியின்மேலே புரளுவதில்லையென்று நாம் * ஆணையிட்டதுபோலே உன்மேல் நாம் கோபமாவதில்லையென்றும், உன்னை நாம் உதட்டுவதில்லையென்றும் ஆணையிட்டோம். * ௧. மோசே. ௯, ௰௧. எபிரே. ௬, ௰௭.

௰. ஏனெனில், பருவதங்கள் விலகிக் குன்றுகள் சாய்ந்தாலும் * நம்முடைய கிருபை உன்னைவிட்டு விலகாமலும், நம்முடைய சமாதானத்தின் உடம்படிக்கை சாயாமலுமிருக்குமென்று உன்மேல் மனதுருகுகிற கர்த்தர் சொல்லுகிறார். * சங்கீ. ௱௩, ௰௭. ௰௮.

௰௧. சிறுமையானவளே, பிசல்களிலடிபட்டவளே, தேற்றரவற்றவளே, இதோ, * நானுன் கற்களை மினுக்காக வைத்து நீலக்கற்களை உன் அஸ்திபாரமாக்கி, * அறிவி. ௨௧, ௰௯.

௰௨. உன் பலகணிகளைப் பளிங்கும், உன் வாசல்களை மாணிக்கக் கற்களும், உன்னெல்லைகளையெல்லாம் உச்சிதமான கற்களுமாக்குவோம்.

௰௩. * உன் பிள்ளைகளெல்லாங் கர்த்தராலே போதிக்கப்பட்டிருப்பார்கள். உன் பிள்ளைகளுடைய † சமாதானம் பெருத்திருக்கும். * யோவான். ௬, ௪௫. † உரோமர். ௫, ௧.

௰௪. நீதியினாலே திடப்படுவாய். இடுக்கணுக்கு நீங்கித் தூரமாகு. ஏனெனில், பயப்படாதிருப்பாய், கலக்கத்துக்குத் தூரமாகு. ஏனெனில், அது உன்னை யணுகுவதில்லை.

௰௫. இதோ, உன்மேலே கூட்டங்கூடினால் அது நம்மாலே கூடுகிற கூட்டமல்ல, எவர்கள் உனக்கு விரோதமாய்க் கூடுகிறார்களோ அவர்கள் உன்னிமித்தமாக விழுவார்கள்.

௰௬. இதோ, கரிநெருப்பையூதித் தன் கிரியைக்கான ஆயுதத்தை யுண்டுபண்ணுகிற கொல்லனையும் நாம் சிருஷ்டித்தோம். அதைக் கெடுத்து நிக்கிரகமாக்குகிறவனையும் நாம் சிருஷ்டித்தோம்.

௰௭. உனக்கு விரோதமாயுருவாக்கப்படும் ஆயுதமெல்லாம் வாய்க்காதேபோம். உனக்கு விரோதமாய் நியாயத்தில் எழும்பும் எந்த நாவையும் நீ குற்றப்படுத்துவாய். இது கர்த்தருடைய ஊழியக்காரரின் சுதந்தரமும், நம்மாலுண்டான அவர்களுடைய நீதியுமாயிருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௫௫. அதிகாரம்.

[(௧) தீர்க்கதரிசி கிறிஸ்துவினுடைய வாக்குத்தத்தத்தினாலே விசுவாசத்துக்கும், (௬) மனஸ்தாபத்துக்கும் அழைத்தது. (௮) விசுவாசிப்பவர்களுடைய நற்செயம்.]

ஓய், * தாகமாயிருக்கிற நீங்களெல்லாரும் தண்ணீர்களண்டைக்கு வாருங்கள். பணமில்லாதவர்களே, நீங்கள் வந்து கொண்டு சாப்பிடுங்கள். நீங்கள் வந்து பணமுமின்றி விலையுமின்றித் திராட்சப்பழ இரசமும், பாலுங் கொள்ளுங்கள். * யோவா. ௭, ௩௭. ௩௮. அறிவி. ௨௨, ௰௭.

௨. நீங்கள் அப்பமில்லாததிலே பணத்தையும், திருத்தியாகாததிலே உங்கள் பிரயாசத்தையுஞ் செலவழிப்பானேன்! நீங்கள் நமக்குச் செவிகொடுக்கவே கொடுத்து நலமானதைச் சாப்பிடுங்கள். அப்போது * உங்கள் ஆத்துமாக் கொழுப்பானதிலே மகிழ்ச்சியாயிருக்கும். * மல்கி. ௪, ௨.

௩. உங்கள் செவியைச் சாய்த்து நம்மண்டைக்கு வாருங்கள். கேளுங்கள். அப்போது உங்கள் ஆத்துமாப் பிழைக்கும். ஏனெனில், * தாவீதின் நிச்சயமான கிருபைகளை யுங்களுக்கு நித்திய உடம்படிக்கையாய் உடம்படிக்கைபண்ணுவோம். * ௨. சாமு. ௭, ௰௨. சங்கீ. ௮௯, ௧—௫. அப்போ. ௰௩, ௩௪.

௪. இதோ, அவனைச் சனக்கூட்டங்களுக்குச் சாட்சியாகவும், சனத்தளங்களுக்குத் தலைவராகவும், அதிகாரியாகவுங் கொடுத்தோம்.

௫. இதோ, நீ யறியாதிருந்த சாதியை வரவழைப்பாய். உன்னை யறியாதிருந்த சாதி உன் பராபரனாகிய கர்த்தரின் நிமித்தமும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் நிமித்தமும் உன்னண்டைக்கு ஓடிவரும். ஏனெனில், உன்னை மேன்மைப்படுத்தினார்.

௬. கர்த்தர் கண்டுபிடிக்கப்படுகையில் அவரைத் தேடுங்கள். அவர் சமீபமாயிருக்கையில் அவரை நோக்கிக் கூப்பிடுங்கள்.

௭. * ஆகாதவன் தன் வழியையும், அக்கிரமக்காரன் தன் நினைவுகளையும் விட்டுக் கர்த்தரண்டைக்கு மனந்திரும்பக்கடவான். அப்போது அவன்மேல் மனதுருகுவார். நம்முடைய பராபரனண்டைக்கே மனந்திரும்பக்கடவான். ஏனெனில், † அவர் மன்னிக்கிறதற்குத் தயைபெருத்திருக்கிறார். * ஏசாயா. ௧௮, ௩௰. ௩௧. ௩௩, ௰௩. † சங்கீ. ௱௩௰, ௪.

௮. ஏனெனில், நம்முடைய நினைவுகள் உங்கள் நினைவுகளல்ல, உங்கள் வழிகள் நம்முடைய வழிகளுமல்லவென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯. ஏனென்றால், பூமியைப்பார்க்கிலும் வானங்கள் எப்படி உயர்ந்திருக்கிறதோ, அப்படியே உங்கள் வழிகளைப்பார்க்கிலும் நம்முடைய வழிகளும், உங்கள் நினைவுகளைப்பார்க்கிலும் நம்முடைய நினைவுகளும் உயர்ந்திருக்கும்.

௰. அதேதென்றால் மாரியும், உறைந்த மழையும் வானத்திலிருந்திறங்கி அவ்விடத்துக்குத் திரும்பாமல், பூமியையே நனைத்து, அதை முளைக்கப்பண்ணவும், விளையவும்பண்ணி, விதைக்கிறவனுக்கு விதையையும், சாப்பிடுகிறவனுக்கு ஆகாரத்தையும் எப்படிக் கொடுக்கிறதோ,

௰௧. அப்படி நம்முடைய வாயிலிருந்து புறப்படும் வசனமுமிருக்கும். அது வெறுமையாய் நம்மண்டைக்குத் திரும்பாமல், அது நாம் விரும்புகிறதைச் செய்து, நாம் அதை யனுப்பின காரியமாகும்படியாகவாய்க்கும்.

௰௨. அதேதெனில், நீங்கள் மகிழ்ச்சியாயப் புறப்பட்டுச் சமாதானமாய்க் கொண்டுபோகப்படுவீர்கள். பருவதங்களும், மேடுகளும் உங்களுக்கு முன்பாகக் கெம்பீரமாய் முழங்கி வெளியின் மரங்களெல்லாங் கைகொட்டும்.

௰௩. முள்ளுச்செடிக்குப்பதிலாகத் தேவதாரிவிருட்சமுளைக்கும். காஞ்சொறிக்குப்பதிலாக மிறுதுச்செடியெழும்பும். அது கர்த்தருக்குக் கீர்த்தியாகவும், நிர்மூலமாகாத நித்திய அடையாளமாகவுமிருக்கும்.

## ௫௬. அதிகாரம்.

[(௧) தீர்க்கதரிசி பரிசுத்தமாயிருக்கத்தூண்டினது. (௩) இரட்சிப்பு பேதமில்லாமல் மனிதர்யாவர்க்கும் பொதுவாய் வழங்குமென்று வாக்குத்தத்தம்பண்ணினது. (௯) குருட்டுச் சாமக்காரரைக் கண்டித்தது.]

கர்த்தர் சொல்லுகிறதாவது; நீங்கள் நியாயத்தைக் கைக்கொண்டு, நீதியைச் செய்யுங்கள். ஏனெனில், நம்முடைய இரட்சிப்பு வரவும், நம்முடைய நீதி வெளிப்படவும் சமீபித்திருக்கிறது.

௨. இப்படிச் செய்கிற மனுஷனும், இதைப் பற்றிக்கொண்டிருந்து ஓய்வுநாளைப் பரிசுத்தக்குலைச்சலாக்காதபடிக்குக் காத்து ஒருபொல்லாப்பையுஞ் செய்யாதபடிக்குத் தன் கையைக் காத்துக்கொண்டிருக்கிற மனுஷப்புத்திரனும் பாக்கியவான்.

௩. கர்த்தரைச் சேர்ந்த அன்னிய புத்திரனும் கர்த்தரென்னைத் தம்முடைய சனத்தை விட்டுப் பிரிக்கவே பிரித்துப் போடுவாரென்று சொல்லலாகாது. அண்ணகனும் இதோ நான் பட்டமரமென்று சொல்லலாகாது.

௪. ஏனெனில், நம்முடைய ஓய்வுநாள்களைக் காத்து நயக்கிரமியமாயிருக்கிறதைத் தெரிந்துகொண்டு நம்முடைய உடன்படிக்கையைப் பிடித்திருக்கிற அண்ணகர்களைக் குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது;

௫. நாம் குமாரனைப்பார்க்கிலும், குமாரத்திகளைப்பார்க்கிலும் அவர்களுக்கு நம்முடைய வீட்டிலும், நம்முடைய மதில்களுக்குள்ளும் நல்ல இடத்தையும், கீர்த்தியையுங் கட்டளையிடுவோம், அழிந்துபோகாதிருக்கும் நித்திய கீர்த்தியை அப்படிக்கொத்தவனுக்குக் கட்டளையிடுவோம்.

௬. கர்த்தரைச் சேவிக்கவும், கர்த்தருடைய நாமத்தைச் சிநேகிக்கவும், அவருக்கூழியக்காரராயிருக்கவும் அவரைச்சேர்ந்து ஓய்வுநாளைப் பரிசுத்தக் குலைச்சலாக்காதபடிக்குக் காத்து நம்முடைய உடன்படிக்கையைப் பிடித்திருக்கிற அன்னிய புத்திரரனைவரையும்,

௭. நாம் * நம்முடைய பரிசுத்த பருவதத்துக்குக் கொண்டுவந்து அவர்களை நம்முடைய செபவீட்டிலே மகிழப்பண்ணுவோம், அவர்களுடைய சர்வாங்கதகனங்களும், அவர்களுடைய பலிகளும் நம்முடைய பலிபீடத்தின் மேல் அங்கிகரிக்கப்பட்டிருக்கும், ஏனெனில், † நம்முடைய வீடு சகல சனங்களுக்குமான செபத்தின் வீடென்னப்படும். * எபி. ௰௨, ௨௨. ௨௪. † க.இரா. ௮, ௪௧. ௪௩. மத்தே. ௨௧, ௰௩. மாற்கு. ௰௧, ௰௭. லூக்கா. ௰௯, ௪௬.

௮. இஸ்ரவேலசனத்தில் தள்ளுண்டவர்களைச் சேர்க்கிற கர்த்தராகிய ஆண்டவர் அதிலே சேர்க்கப்பட்டவர்களையல்லாமல் இன்னம் நாம் அதனோடே சேர்ப்போமென்கிறார்.

௯. காட்டிலேயிருக்கிற சகல மிருகங்களே சகல காட்டுமிருகங்களே, பட்சிப்பதற்கு வாருங்கள்.

௰. அதின் சாமக்காரரெல்லாரும் ஒன்றும் அறியாத குருடர், அவர்களெல்லாருங் குலைக்கமாட்டாத ஊமையான நாய்கள், அவர்கள் தூக்கக்கலக்கமாகிப் பேச்சயணித்திருந்து உறக்கத்தைச் சிநேகிக்கிறவர்கள்.

௰௧. அவர்கள் திருத்தியடைய அறியாத

வலு ஆசையுள்ள நாய்களும், அவர்கள் உணரவறியாத மேய்ப்பருந்தானே, அவர்களனைவருந் தங்கள் தங்கள் வழியையும் அவரவர் தன் தன் மூலையிலிருந்து * தன் தன் பொழிவையும் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். * எரேமியா. ௬, ௰௩. ௰௪.

௰௨. வாருங்கள் மதுபானத்தைக் கொண்டுவருவேன். லொட்டிக்குடிப்போம் * நாளைத் தினமும் இன்றைத்தினம்போலவும் இன்னும் மகா அதிகமாகவுமிருக்குமென்பார்கள். * வாக்கியம். ௨௩, ௩௫.

## ௫௰௭. அதிகாரம்.

[(௧) நீதிமான்களுடைய நல்லமரணம். (௩) பராபரன் யூதருடைய விபசாரவிக்கிரகாராதனைக்காக அவர்களைக் கண்டித்தது. (௰௩) குணப்பட்டவனுக்குச் சுவிசேஷவாக்குத்தத்தத்தைக் கொடுத்தது.]

நீதிமான் மடிந்துபோகிறான். * ஆனால், ஒருவரும் அதை மனதிலே வைக்கிறதில்லை, சன்மார்க்கர் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள். ஆனால், தீங்குவராததற்கு முன்னே நீதிமான் எடுத்துக்கொள்ளப்படுகிறானென்பதைச் சிந்திப்பாரில்லை. * மீகா. ௭, ௨.

௨. நேராய் நடந்தவர்கள் சமாதானத்துக்குட்பிரவேசித்துத் தங்கள் படுக்கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

௩. ஆனால் நாள்பார்க்கிறவளின் பிள்ளைகளே விபசாரனுக்கும், வேசிக்கும் வித்தானவர்களே, நீங்களிங்கே கிட்டிவாருங்கள்.

௪. ஆர்மேலே சிமாளிக்கிறீர்கள்! ஆர்மேலே வாயை விஸ்தாரமாய்த் திறந்து நாக்கை அளாவுகிறீர்கள். நீங்கள் துரோகப்பிள்ளைகளும், கள்ளத்தன வித்தாருமல்லவோ!

௫. நீங்கள் * பச்சையான சகலமரத்தின் கீழும், விக்கிரகத்தேவர்களோடே மோகாக்கினியால் வெந்து பள்ளத்தாக்குகளிலே பிள்ளைகளைக் கன்மலைவெடிப்புகளின் கீழ்க் கொன்றுபோடுகிறவர்கள். * எரேமி. ௨, ௨௪. ௩, ௰௩.

௬. பள்ளத்தாக்குகளிலுள்ள பெருக்கான சிலைகளிடத்தில் உன் பங்கிருக்கிறது, அவைகள் அவைகளே உன்னுடைய வீதம், அவைகளுக்கு நீ யூற்றுதலையும் ஊற்றிக் காணிக்கையையுஞ் செலுத்துகிறாய், இவைகளின் பேற பிரியப்படுவோமோ!

௭. நீ மேட்டிமையும், உயரமுமான பருவதங்களின்மேல் உன் மஞ்சத்தை வைக்கிறாய், அங்கேயும் பலியிடவேறுகிறாய்.

௮. கதவுகளுக்கும், நிலைகளுக்கும் பின்னுக்கு உன் நினைப்படையாளங்களை வைக்கிறாய், ஏனெனில் நீ நம்மைவிட்டு வேறேபேர்களுக்குத் திறப்பாக்கியேற உன் மஞ்சத்தை யகலமாக்கி அவர்களோடேயுடன்படிக்கையாகிறாய், அவர்களுடைய மஞ்சத்தைக் காண்கிற எல்லாவிடத்திலும் அதைச் சிநேகிக்கிறாய்.

௯. நீ பிராசாவுக்குக் காணிக்கையாக எண்ணெயைக் கொண்டுபோகிறாய், உன் பரிமளதயிலங்களைத் திரளாக்கி உன் தாறுபதிகளைத் தூரத்துக்கு அனுப்பி உன்னைப் பாதாளமட்டுந் தாழ்த்துகிறாய்.

௰. உன் மார்க்கத்தின் விஸ்தாரத்திலுழன்றுக்கிறாய், அதுவிருதாவென்று நீ சொல்லுகிறதில்லை, உன் கைக்கான பிழைப்பைக் கண்டுபிடித்தாய். ஆகையால் நீ வேசாறப்படுகிறதில்லை.

௰௧. நீ யாருக்கு ஐயமும், பயமுமாயிருக்கிறாய், நீ புளுகுகிறாயே, நீ நம்மை நினையாமலும், உன் மனதிலே வைக்காமலும்போகிறாயே. நாம் வெகுகாலமவளையாய் மவுனமாயிருந்தோமல்லவோ! ஆகையால் நமக்குப் பயப்படாதே போகிறாய்.

௰௨. உனக்குத் தவாதிருக்கும் உன் நீதியையும், உன் கிரியைகளையும் நாமறியப்படுத்துவோம்.

௰௩. நீ கூப்பிடும்பொழுது உன் கூட்டங்கள் உன்னைத் தப்புவிக்கட்டும், ஆனால் காற்று அவைகளையெல்லாம் பறக்கடித்து மாயை அவைகளைக் கொண்டுபோம். * நம்மை நம்பியிருக்கிறவனோ தேசத்தைச் சுதந்தரித்து நமது பரிசுத்தபருவதத்திலே காணியாட்சிக்காரனாயிருப்பான்.

௰௪. வழியையுயர்த்தியுயர்த்தி அதைச் செம்மைப்படுத்தி இடறல்களை நம்முடைய சனத்தின் வழியிலிருந்தெடுத்துப்போடுங்களென்னப்படும். * ௬௨, ௰௧.

௰௫. ஏனெனில், * நித்தியவாசகரும், பரிசுத்தரென்று நாமமுள்ளவருமாகிய † உயரமும், உன்னதமுமானவர் சொல்லுகிறதாவது; பணிந்தவர்களின் ஆவியையுயிர்ப்பிக்கவும், நருங்குண்டவர்களின் இருதயத்தையுயிர்ப்பிக்கவும் நாமேயுன்னதத்திலும், பரிசுத்தஸ்தலத்திலும், நருங்குண்டு பணிந்த ஆவியுள்ளவர்களிடத்திலும் வாசம்பண்ணுகிறோம். * ௬௬, ௧. ௨. † சங்கீ. ௱௰௩, ௫. ழ

௰௬. ஏனென்றால், * நாம் சதாகாலமாய் வழக்காடுவதில்லை, நாமென்றைக்குங் கோபமாயிருப்பதுமில்லை, அதேதெனில், ஆவியும், நாம் உண்டுபண்ணின ஆத்துமாக்களும் நம்முடைய முகத்துக்கு முன்பாகத் தொய்ந்துபோவதாயிருக்கும். * சங். ௱௩, ௯.

௰௭. நாம் அவர்கள் பொருளாசையினுடைய அக்கிரமத்தினிமித்தங் கடுங்கோபமாகி அவர்களையடித்தோம். நாம் மறைந்து கடுங்கோபமாயிருந்தோம். ஆனால் தங்கள் மனம்போகிறபோக்கிலே மாறுபாடாய் நடந்தார்கள். * ௫௬, அதி. ௨.

௰௮. அவர்கள் வழிகளை நாம் பார்த்து அவர்களைக் குணமாக்குவோம். அவர்களை நடத்தி

தியவர்களுக்குத் திரும்ப ஆறுதல்களையளிப்போம், அவர்களிலே துக்கப்படுகிறவர்களுக்குத்தானே.

௰௯. * சமாதானஞ்சமாதானமென்று தூரமாயிருக்கிறவர்களுக்கும், சமீபமாயிருக்கிறவர்களுக்குங்கூறும், உதடுகளின் பலனைச் சிருஷ்டிக்கிறேம். அவர்களைக் குணமாக்குவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௫௨, ௭.

௨௰. ஆகாதவர்களோ கொந்தளிப்பான கடலைப்போலிருக்கிறார்கள். ஏனென்றால், அது அமர்ந்திருக்கக்கூடாமல் அதின் சலங்கள் சேற்றையும், அழுக்கையுங் கரையிலொதுக்குகிறது.

௨௧. * ஆகாதவர்களுக்குச் சமாதானமில்லையென்று என் பராபரன் சொல்லுகிறார். * ௪௮, ௨௨.

## ௫௮. அதிகாரம்.

[(௧) தீர்க்கதரிசியாயதைக் கண்டிக்க அனுப்பப்பட்டு, (௩) மாறுபாடான உபவாசத்தையுஞ் சத்திய உபவாசத்தையுஞ் சொல்லி, (௮) தேவபத்திக்கும், (௰௩) ஓய்வுநாளை ஆசரிப்பதற்கும் வேண்டிய வாக்குத்தத்தத்தை வெளியிட்டது.]

அடக்கிக்கொள்ளாமலே சத்தமாய்க் கூப்பிடு. நீ உன் சத்தத்தை எக்காளத்தைப்போலுயர்த்தி, நம்முடைய சனத்துக்கு அவர்கள் மீறுதல்களையும், யாக்கோபின் வீட்டாருக்கு அவர்கள் பாவங்களையும் அறிவி.

௨. அவர்களோவென்றால், நீதியைச்செய்து வருகிறதினும், தங்கள் பராபரனுடைய நியாயத்தைவிடாததுமான சாதியைப்போல நம்மைத் தினந்தினந்தேடி நம்முடைய வழிகளையறியவிரும்பி நாங்கள் உபவாசம்பண்ணுகையில் நீர் அதைப்பாராமலும் நாங்கள் எங்களாத்துமாக்களை யொடுக்குகையில் நீர் அதையறியாமலும் போகிறதேதென்று நம்மிடத்திலே நீதி நியாயத்தைக்கேட்டுப் பராபரன் கிட்டச்சேரவேணுமென்று விரும்புகிறார்கள்.

௩. இதோ நீங்கள் உபவாசிக்கும் நாளிலே இச்சைக்கானதைக் கண்டுபிடித்து உங்கள் கடன்களையெல்லாந்தண்டுகிறீர்கள்.

௪. இதோ வழக்குக்கும், வாதுக்கும், ஆகாமியமான குட்டுதலுக்குமாக உபவாசிக்கிறீர்கள். நீங்கள் உங்கள் கூக்குரலையுயரத்திலே கேட்கப்பண்ணும்படியாய் இந்நாளில் உபவாசிக்குமாப்போலே உபவாசியாதிருப்பீர்களாக.

௫. மனுஷன் ஒருநாள் தன்னாத்துமாவை யொடுக்குகிறதும், * தன் தலையை நாணலைப்போல் மடக்கி இரட்டையும், சாம்பலையுங் கீழேபோட்டுக்கொள்ளுகிறதும், † நாம் தெரிந்துகொள்ளும் உபவாசமாயிருக்குமோ அதைத்தான் உபவாசமும், கர்த்தருக்குப் பொருந்திய நாளுமென்பாயோ! * மத்தே. ௬, ௰௬. † சகரி. ௭, ௫.

௬. நீ ஆகாமியத்தின் கட்டுகளையவிழ்த்து நுகத்தடியின் பிணையல்களை நெகிழ்த்து நெரிசலாயிருக்கிறவர்களை விடுதலையாக அனுப்பிச் சகல நுகத்தடியையுமுடைத்துப்போட்டு,

௭. * பசியுள்ளவனுக்குன்னப்பத்தைப்பிட்டுக்கொடுத்துத் துரத்துண்ட சிறுமையானவர்களை வீட்டிலேசேர்த்துக்கொண்டு அம்மணமானவனைக் கண்டாயானால் அவனுக்கு வஸ்திரங்கொடுத்து உன்மாம்சமானவனுக்கு உன்னையொளிக்காமலிருந்தால் அதல்லவோ நாம் தெரிந்துகொள்ளுகிற உபவாசம். * ஏசேக். ௰௮, ௭. மத்தே. ௨௫, ௩௫.

௮. அப்பொழுது உன்வெளிச்சம் விடியற்காலவெளுப்பைப்போலெழும்பி உன் குணமாகுதல் சீக்கிரமாய்த் துளிர்த்து உன் நீதி உன் முன்னடக்கும், கர்த்தருடைய மகிமை உன் பிற்புறத்தைக் காக்கும்.

௯. அப்பொழுது கூப்பிடுவாய் கர்த்தர் மறுவுத்தரவு கொடுப்பார். சத்தமிடுவாய் இதோ நாமிருக்கிறேமென்றுஞ் சொல்லுவார். நீ நுகத்தடியையும், விரல் நீட்டுதலையும், நிப்பச்சொல்லையும் உன் நடுவிலிருந்தகற்றி,

௰. பசியுள்ளவனிடைக்கு உன் ஆத்துமாவைச் சாயத்துச் சிறுமைப்பட்ட ஆத்துமாவைத் திருத்தியாக்கினால் அப்பொழுது * உன் வெளிச்சம் இருளிலுதித்து உன் அந்தகாரம் மத்தியானத்தைப்போலாகும். * சங்கீதம். ௱௰௨, ௪.

௰௧. அப்பொழுது கர்த்தர் உன்னை நித்தம் நடத்தி மகாவறட்சியான காலங்களில் உன் ஆத்துமாவைத் திருத்தியாக்கி உன்னெலும்புகளைப் புஷ்டியாக்குவார். நீ நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போலேயும், சலங்கள் வற்றாத நீரூற்றைப்போலேயுமிருப்பாய்.

௰௨. * சதாகாலமாய்ப் பாழாய்க்கிடந்த தலங்களையுன்னைத் தொட்டுக்கட்டுவார்கள், தலைமுறை தலைமுறையாகவிருக்கும் அஸ்திபாரங்களைப்போட்டெழுப்புவாய், திறப்பானதையடைக்கிறவனென்றும், குடியிருக்கும்படியாகப் பாதைகளைத் திருத்துகிறவனென்றும் நீயழைக்கப்படுவாய். * ௬௧, ௪.

௰௩. நீ நம்முடைய பரிசுத்தநாளிலே உன் இச்சையானதைச் செய்யாதபடிக்கு உன் காலை ஓய்வுநாளுக்கிடைஞ்சலாய் விலக்கி ஓய்வுநாளை மனமகிழ்ச்சியென்றும், கர்த்தருடைய பரிசுத்தநாளை மகிமையுள்ள நாளென்றுஞ்சொல்லி உன்வழிகளின்படி செய்யாமலும், உனக்கிச்சையானதைக் கண்டுபிடிக்காமலும், உன்பேச்சைப்பேசாமலும் அதை மகிமையாக எண்ணினாயானால்.

௰௪. அப்பொழுது கர்த்தரின்மேலே மனமகி

பூசியாயிருப்பாய், நான் பூமியினுடைய உயரங்களின்மேல் உன்னை ஏறிடப்போகவும் பண்ணி உன் தகப்பனாகிய யாக்கோபுடைய சுதந்தரத்தால் உன்னைப் போஷிப்பேன். ஏனெனில், கர்த்தருடைய வாய் அதைச் சொல்லிற்று.

## ௫௯. அதிகாரம்.

[(௧) பாவத்தினுடைய அக்கிரமக்கொடுமை. (௩) யூதர்களுடைய பாவங்கள். (௯) பாவத்தினால் வரும் நிர்ப்பாக்கியம். (௰௬) இரட்சணியம் பராபரனுடையதே. (௨௰) மீட்பருடைய உடன்படிக்கை.]

இதோ இரட்சிக்கக்கூடாதபடிக்குக் கர்த்தருடைய கை குறுகிப்போனதில்லை, கேட்கக்கூடாதபடிக்கு அவருடைய செவி மந்தமானதுமில்லை. * ௫, ௨. ௪. மோசே. ௰௧, ௨௩.

௨. உங்கள் அக்கிரமங்களே உங்களுக்கும், உங்கள் பராபரனுக்கும் நடுவாகப் பிரிவினையுண்டாக்குகின்றன. உங்களைக் கேளாதபடிக்கு உங்கள் பாவங்களே * அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கின்றன. * மீகா. ௩, ௪.

௩. ஏனென்றால், * உங்கள் கைகள் இரத்தத்தாலும், உங்கள் விரல்கள் அக்கிரமத்தாலுங் கறைப்பட்டிருக்கின்றன, உங்கள் உதடுகள் பொய்யைப் பேசி உங்கள் நாவு நியாயக்கேட்டை வசனிக்கிறது. * ௧, ௰௫.

௪. நீதிக்காகக் கூப்பிடுகிறவனுமில்லை சத்தியத்துக்காக நியாயஞ்சொல்லுகிறவனுமில்லை, மாயையை நம்பி அவத்தமானதைப் பேசுகிறார்கள், * தீவினையைக் கர்ப்பந்தரித்து அக்கிரமத்தைப் பெறுகிறார்கள். * சங். ௭, ௰௪.

௫. கட்டுவிரியன் முட்டைகளை அடைகாத்துச் சிலந்தியின் தெசவுகளை நெய்கிறார்கள், அவர்களுடைய முட்டைகளைச் சாப்பிடுகிறவன் சாவான், அவைகள் நெரிக்கப்பட்டதேயானால் விரியன் புறப்படும்.

௬. அவர்கள் தெசவுகள் உடுப்புகளாவதில்லை, தங்கள் கிரியைகளாலே தங்களை மூடமாட்டார்கள், அவர்கள் கிரியைகள் அக்கிரமக்கிரியைகளானவை, கொடுமையின் செய்கை அவர்கள் கைகளிலிருக்கிறது.

௭. * அவர்கள் கால்கள் பொல்லாப்புக்கோடிக் குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தத் தீவிரிக்கின்றன, அவர்கள் நினைவுகள் அக்கிரம நினைவுகளானவை, பாழ்க்கடிப்பும், அழிவும் அவர்கள் வழிகளிலிருக்கிறது. * உரோ. ௩, ௰௫.

௮. சமாதானத்தின் வழியை அறியார்கள், அவர்கள் நடைகளில் நியாயமில்லை. தங்கள் பாதைகளைத் தங்களுக்குக் கோணலாக்கினார்கள், அவைகளில் நடக்கிற ஒருவனும் சமாதானத்தை அறியான்.

௯. ஆனபடியால், நியாயம் எங்களுக்குத் தூரமாயிருக்கிறது, நீதி எங்களைத் தொடர்ந்துபிடிக்காது, வெளிச்சத்துக்குக் காத்திருந்தோம். ஆனால் இதோ, இருள், பிரகாசத்துக்குக் காத்திருந்தோம். ஆனால் அந்தகாரத்திலே நடக்கிறோம்.

௰. * நாங்கள் குருடரைப்போலே சுவரைப் பிடித்துக் கண்ணில்லாதவர்களைப்போலே தடவுகிறோம், இராவிருளில் இடறுகிறதுபோலே மத்தியானத்திலே இடறுகிறோம், செத்தவர்களைப்போலே பாழ்ந்தலங்களிலிருக்கிறோம். * ௫. மோசே. ௨௮, ௨௮. ௨௯.

௰௧. நாங்களெல்லாரும் கரடிகளைப்போலே உறுமி, * புறாக்களைப்போலே கூவிக்கொண்டேயிருக்கிறோம், நியாயத்துக்குக் காத்திருந்தோம் அதைக் காணோம், இரட்சிப்புக்குக் காத்திருந்தோம் அது எங்களுக்குத் தூரமானது. * ௩௮, அதி. ௰௪. எசேக். ௭, ௰௬.

௰௨. ஏனெனில், எங்கள் மீறுதல்கள் உமக்கு முன்பாக மிகுதியாயிருந்து எங்கள் பாவங்கள் எங்களுக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகின்றன. ஏனெனில், எங்கள் மீறுதல்கள் எங்களுடனேயிருக்கின்றன, எங்கள் அக்கிரமங்களை அறிந்திருக்கிறோம்.

௰௩. கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணுகிறதும், பொய்சொல்லுகிறதும், எங்கள் பராபரனை விட்டுப் பின்வாங்குகிறதும், ஒடுக்குதலாகவும், கலகமாகவும் பேசுகிறதும், கள்ள வார்த்தைகளைக் கர்ப்பந்தரித்து இருதயத்திலிருந்து புறப்படப்பண்ணுகிறதுமுண்டே.

௰௪. நியாயம் பின்னிட்டு அகன்றது, நீதி தூரமாக நிற்கிறது. ஏனெனில், சத்தியம் வீதியிலே இடறி நிதானம் வந்து சேரமாட்டாமற்போகிறது.

௰௫. சத்தியம் தள்ளுபடியானது, பொல்லாப்பை விட்டு விலகுகிறவன் கொள்ளையாகிறான். இதைக் கர்த்தர் பார்த்து நியாயமில்லையென்று விசனப்பார்வையாகி,

௰௬. ஒருவருமில்லையென்று கண்டு, விண்ணப்பம்பண்ணுகிறவனில்லையென்று ஆச்சரியப்பட்டார், ஆனதுகொண்டு * அவருடைய புயமே அவருக்கு இரட்சிப்பாகி அவருடைய நீதியே அவரைத் தாங்கும். * ௬௩, அதி. ௫.

௰௭. அவர் நீதியை மார்க்கவசமாக அணிந்து இரட்சிப்பின் தலைச்சோட்டைத் தம்முடைய சிரசின்மேல் தரித்து நீதிசரிக்கட்டுதலின் வஸ்திரங்களை உடுப்பாக உடுத்து, எரிச்சலைச் சால்வையாகப் போர்த்துக்கொள்ளுகிறார்.

௰௮. கிரியைகளுக்குத் தக்கபடி தருவார், அப்படியே அவர் தம்முடைய சத்துருக்களுக்கு உக்கிரத்தைச் சரிக்கட்டித் தம்முடைய பகைஞருக்குத் தக்கதையும், தீவுகளுக்குத் தக்கதையும் சரிக்கட்டுவார்.

௧௯. அப்போது அஸ்தமிக்குந்திசை துவக்கி கர்த்தரின் நாமத்துக்கும், சூரியனுதிக்குந்திசை துவக்கி அவருடைய மகிமைக்கும் பயப்படுவார்கள், வெள்ளப்பிரளயமாய்ச் சத்துருவரும்போது கர்த்தருடைய ஆவி அவனுக்கு விரோதமாகக் கொடியையேற்றுவார்.

௨௰. சீயோனுக்கும், யாக்கோபிலே தங்கள் மீறுதலைவிட்டுத் திரும்புகிறவர்களுக்கும் மீட்கிறவர் வருவாரென்று கர்த்தர் சொல்லுகிறார். * உரோ. ௧௧, ௨௬.

௨௧. உம்முடையமேலிருக்கிற நம்முடைய ஆவியும், நாம் உம்முடைய வாயிலே வைத்த நம்முடைய வார்த்தைகளும் இதுமுதலாய் என்றைக்கும் உம்முடைய வாயையும், உம்முடைய வித்தினவாயையும், உம்முடைய வித்தினுடைய வித்தின வாயையும் விட்டுப்பிரிவதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார், இதுநமக்கு அவர்களோடிருக்கும், நம்முடைய உடன்படிக்கையென்று கர்த்தர்சொல்லுகிறார்.

## ௬௰. அதிகாரம்.

[(௧) பரமதஸ்தர் விஸ்தாரமாய்ச் சேர்வதினாலே சபைக்குண்டாகும் மகிமை. (௰௫) சிலகாலத் துன்பத்தைச் சகித்தபின்புண்டாகும் ஆசீர்வாதம்.]

நீ எழும்பிவெளிச்சமாகு. ஏனெனில், உன்வெளிச்சம்வருகிறது, கர்த்தருடைய மகிமையுன்மேலேயுதிக்கிறது. * ௫௨, ௧.

௨. ஏனெனில், இதோ இருள் பூமியையும், அந்தகாரம் சனசதளங்களையும் மூடும். ஆனால் உன்மேல் கர்த்தர் உதிக்கிறார், உன்மேல் அவருடைய மகிமைகாணப்படும்.

௩. உன்வெளிச்சத்தண்டைக்குச் சாதிகளும், உனக்கு உதிக்கிற ஒளியண்டைக்கு இராசாக்களும் நடந்துவருவார்கள். * ௪௯, ௯. அறி. ௨௧, ௨௪.

௪. சுற்றிலும் உன்கண்களையேறெடுத்துப்பார், இவர்களெல்லாருங் கூட்டப்பட்டுவருகிறார்கள். உன்குமாரர் தூரத்திலிருந்துவந்து உன்குமாரத்திகள் உன்பக்கத்திலே வளர்க்கப்படுவார்கள். * ௪௯, ௰௮.

௫. அப்போது நீ அதைக்கண்டு ஓடிவருவாய். உன்னிருதயம் அதிசயப்பட்டு விரிவாகும். ஏனெனில், கடற்கரையின் திரளானகூட்டம் உன்வசமாகத்திரும்பிச் சாதிகளின்பலத்த சேனை யுன்னண்டைக்குவரும்.

௬. ஒட்டகங்களின் ஏராளமும், மீதியான் ஏப்பாத்தேசங்களின்வேகமான ஒட்டைகளும் உன்னைமூடும், * சேபாவிலிருந்து அனைவரும்வந்து பொன்னையும், தூபவர்க்கத்தையுங்கொண்டுவந்துக் கர்த்தரின் துதிகளைச் சுவிசேஷமாய்ச் சொல்லுவார்கள். * சஙீ. ௭௨, ௰.

௭. * கேதாரின் ஆடுகளெல்லாம் உன்னைச்சேர்ந்துகொண்டு நெபயோத்தின்கடாக்கள் உன்னைச்சேவித்து விருப்பமாக நம்முடைய பலிபீடத்தின்மேலேறும், நம்முடைய மகிமையின்வீட்டை மகிமையாக்குவோம். * ௪௨, ௰௧.

௮. மேகங்களைப்போலவும், தங்கள் பலகணித்துவாரங்களுக்குத் திரிகிற புறாக்களைப்போலவும் பறந்துவருகிற இவர்களார்!

௯. ஏனெனில், தீவுகள் நமக்குக்காத்திருக்கும், அவர் உன்னைமகிமைப்படுத்தினதினால் உன்பிள்ளைகளையும், அவர்களோடேகூட அவர்கள் பொன்னையும், அவர்கள்வெள்ளியையும் உன்பராபரனாகிய கர்த்தரின் நாமத்துக்கென்றும், இஸ்ரவேலுடையபரிசுத்தருக்கென்றுந் தூரத்திலிருந்துகொண்டுவர முதலிலே தர்ஷீசின்கப்பல்களும் நமக்குக் காத்திருக்கும்.

௰. அன்னியரின்புத்திரர் உன்மதில்களைக்கட்டி அவர்களுடைய இராசாக்கள் * உன்னைச்சேவிப்பார்கள். ஏனெனில், † நம்முடைய கடுங்கோபத்திலுன்னை யடித்தோம். ஆனால், நம்முடைய கிருபையினாலுனக்கிரங்குகிறோம். * ௪௯, ௨௩. † ௫௪, ௭. ௮.

௰௧. உன்னண்டைக்குச் சாதிகளின் பலத்தசேனையைக்கொண்டுவரும்படிக்கும், அவர்களுடைய இராசாக்கள் அழைத்துவரப்படும்படிக்கும் * உன்வாசல்கள் இராவும், பகலும் பூட்டப்படாமல் நித்தந்திறந்திருக்கும். * அறி. ௨௧, ௨௫.

௰௨. ஏனெனில், உன்னைச்சேவிக்காதசாதியும், இராச்சியமும் அழியும், அப்படிக்கொத்தசாதிகள் பாழாகவேபாழாகும்.

௰௩. நம்முடைய பரிசுத்தஸ்தலத்தின்தானத்தைச் சிங்காரிக்கும்படிக்கு, * லீபனோனின்மகிமையும், தேவதாரி விருட்சங்களும், பிசின்மரங்களும், புன்னை மரங்களுங்கூட உன்னண்டைக்குவரும், அப்படி நம்முடைய பாதங்களின்தானத்தை மகிமைப்படுத்துவோம். * ௩௫, ௨.

௰௪. உன்னையொடுக்கினவர்களின் பிள்ளைகளும், உன்னண்டைக்குக்குனிந்துவந்து உன்னையசட்டைபண்ணின யாவரும் உன்னுள்ளங்கால்களருகே பணிந்து உன்னைக் கர்த்தருடைய பட்டணமென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் சீயோனென்றும் அழைப்பார்கள்

௰௫. * நீ நெகிழப்பட்டதும், பகைக்கப்பட்டதும், ஒருவருங்கடந்து நடவாததுமாயிருந்ததற்குப்பதிலாக உன்னை நித்தியமுகக்கியமாகவும், தலைமுறை தலைமுறையாகவிருக்கும் மகிழ்ச்சியாகவும்வைப்போம். * ௪௯, அதி. ௰௯.

௰௬. நீ சாதிகளின்பாலையுமுண்டு * இராசாக்களின் முலைப்பாலையும் உண்டு கர்த்தரு

ம், யாக்கோபிலே வல்லவருமாகிய நாமுன் இரட்சகரும், உன்மீட்பருமாயிருக்கிறதை யறிந்துகொள்வாய். * ௪௯, ௨௬.

௰௭. நாம் வெண்கலத்துக்குப் பதிலாகப் பொன்னைவரப்பண்ணி, இரும்புக்குப்பதிலாகவெள்ளியையும், மரங்களுக்குப்பதிலாக வெண்கலத்தையும், கற்களுக்குப் பதிலாக இரும்பையும்வரப்பண்ணி, உன் கலகாணிகளைச் சமாதானமும், உன் தண்டற்காரரை நீதியுமுள்ளவர்களாக்குவோம்.

௰௮. இனிக்கொடுமை யுன்தேசத்திலும், அழிப்பும், நொறுக்குதலும் உன்னெல்லைகளிலுங் கேட்கப்பட்டன, * உன் மதில்களை இரட்சிப்பும், உன்வாசல்களைத் துதியுமென்றழைப்பாய். * ௨௬, அதி. ௧.

௰௯. * இனிச் சூரியன் உனக்குப்பகலிலே வெளிச்சமாயிராமலும், சந்திரன் தன்வெளிச்சத்தால் உனக்குப்பிரகாசியாமலும், * கர்த்தரே யுனக்கு நித்திய வெளிச்சமும், உன்பராபரனே யுன்னுடைய அலங்காரமுமாயிருப்பார். * அறிவி. ௨௧, ௨௩.

௨௰. உன்சூரியனினியஸ்தமிப்பதுமில்லை. உன்சந்திரன் மறைவதுமில்லை. ஏனெனில், கர்த்தரேயுனக்கு நித்தியவெளிச்சமாயிருப்பார், உன்துக்கநாட்கள் முடிந்திருக்கும்.

௨௧. உன்சனமெல்லாம் நீதிமான்களும், என்றைக்கும் * பூமியின்சுதந்தரக்குடிகளும், † நாம் நட்டகிளைகளும் நாம் மகிமைப்படும்படிக்கு நம்முடையகரங்களின் கிரியையுமாயிருப்பார்கள். * மத்தே. ௫, ௫. † மத்தே. ௰௫, ௰௩.

௨௨. சின்னவன் ஆயிரமும், சிறியவன் பலத்தசாதியுமாவான். கர்த்தராகிய நாம் அதை யதின்காலத்திலே தீவிரமாக நடப்பிப்போம்.

## ௬௧. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவின் உத்தியோகம். (௪) விசுவாசிகளுடைய சுறுசுறுப்பும். (௭) ஆசீர்வாதங்களும்.]

கர்த்தராகிய பராபரனுடைய ஆவியானவரென்மேலிருக்கிறார். * ஏனெனில், † சிறுமையானவர்களுக்குச் சுவிசேஷத்தையறிவிக்கக்கர்த்தர் என்னையபிஷேகம்பண்ணினார். இருதயம் நருங்குண்டவர்களைக் காயங்கட்டவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், கட்டுண்டவர்களுக்குக் காவல்நீங்குதலையுங்கூறவும், * லூக். ௪, ௰௭.—௨௰. † மத்தே. ௫, ௩.

௨. கர்த்தருடைய பிரியத்தின்வருஷத்தையும், நம்முடையபராபரன் நீதியைச்சரிக்கட்டும் நாளையுங்கூறவும், துயரப்பட்ட அனைவரையுந் தேற்றரவுபண்ணவும், சீயோனிலே துயரப்பட்டவர்களைச் சீர்ப்படுத்தவும் அவரென்னையனுப்பினார்.

௩. அவர்களுக்குச் சாம்பலுக்குப்பதிலாகச் சிங்காரத்தையும், துயரத்துக்குப்பதிலாகச் சந்தோஷத்தின் எண்ணெயையும், ஒடுங்கின ஆவிக்குப்பதிலாகத் துதியினுடையையுங்கொடுப்பதற்கும், அவர்கள் கர்த்தர்தம்முடைய மகிமைக்கென்றுநாட்டின நீதியின் விருட்சங்களென்னப் படுவதற்குமாகத்தானே.

௪. * அவர்கள் சதாகாலமாய்ப் பாழாய்க்கிடந்தவைகளைக்கட்டி முந்தி நிர்மூலமானவைகளையெடுப்பித்துத் தலைமுறை தலைமுறையாய் இடிந்துகிடந்த பாழான பட்டணங்களைப்புதிதாய்க்கட்டுவார்கள். * ௫௮, ௰௨.

௫. மறுசாதியார் நின்றுகொண்டு உங்கள் மந்தைகளைமேய்த்து அன்னியபுத்திரர் உங்கள் பண்ணையாள்களும், உங்கள்திராட்சத்தோட்டக்காரருமாயிருப்பார்கள்.

௬. நீங்களோ * கர்த்தரின் ஆசாரியரென்றழைக்கப்படுவீர்கள். உங்களைநமது பராபரனுடைய ஊழியக்காரரென்பார்கள். நீங்கள்சாதிகளின் ஆஸ்தியைப்புசித்து அவர்கள்மகிமையாலே மேன்மைபாராட்டுவீர்கள். * ௧. பேது. ௨. ௯. அறி. ௧, ௬. ௫, ௰.

௭. உங்கள்வெட்கத்துக்குப்பதிலாக இரண்டத்தனையாய்வரும். இலச்சைக்குப்பதிலாகத் தங்கள்வீதத்திலேகெம்பீரிப்பார்கள். அதினிமித்தந் தங்கள் தேசத்திலிரட்டிப்பாகச் சுதந்தரிப்பார்கள். நித்தியமகிழ்ச்சி அவர்களுக்குண்டாம்.

௮. ஏனெனில், கர்த்தராகிய நாம் நியாயத்தைச்சிநேகித்துத் தகனபலியிலே கொள்ளையைப்பகைக்கிறவர் நாமவர்கள்கிரியையையுண்மையாக்கி அவர்களோடேநித்திய உடன்படிக்கையைப்பண்ணுவோம். * ௫௪, ௰. ௫௫, ௩.

௯. அவர்கள் வித்துச்சாதிகளிலும், அவர்கள் சந்தானங்கள் சனத்தலங்களின் நடுவிலும் அறியப்பட்டிருக்கும், அவர்களைப்பார்க்கிறயாவரும் அவர்களைக்கர்த்தர் ஆசீர்வதித்த வித்தென்றறிந்துகொள்வார்கள்.

௰. கர்த்தருக்குள் பூரிப்பாய் மகிழுகிறேன். என் பராபரனுக்குள் என்னாத்துமாக்களிகூர்ந்திருக்கிறது. ஏனெனில், மணவாளன் ஆசாரியனுடைவாய்ச் சிங்காரித்துக்கொள்ளுகிறதற்கும், மணவாட்டி தன்னாபரணங்களால் அலங்கரித்துக்கொள்ளுகிறதற்கும் ஒப்பாக அவர் * இரட்சிப்பின்வஸ்திரங்களையெனக்கு உடுத்தி நீதியின்சால்வையையெனக்குத்தரித்தார். * ௪௩. ௪௫, ௰.

௰௧. ஏனெனில், பூமி தன்முளைகளைப் புறப்படப்பண்ணுமாப்போலவும், தோட்டந்தனில் விதைக்கப்பட்டவைகளை முளைப்பிக்குமாப்போலவுங் கர்த்தராகிய ஆண்டவர் எல்லாச் சாதிகளுக்குமுன்பாக நீதியையும், துதியையும் முளைக்கப்பண்ணுவார்.

## ௬௨. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய வாக்குத்தத்தங்களின்மேலே சபையை நிறுத்தத் தீர்க்கதரிசிக்குண்டாகிய அளவான ஆசை. (௫) சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதற்கும், (௰) அதற்குச் சனத்தை ஆயத்தப்படுத்துவதற்கும் அழைக்கப்படுகிற போதகர்களின் தொழில்.]

சீயோனின் நிமித்தமும், எருசலேமின் நிமித்தமும் நாம் மவுனப்படாமலும், அதின் நீதி பிரகாசத்தைப்போலும், அதின் இரட்சிப்பு எரிகிற தீவட்டியைப்போலும் வெளிப்படுமட்டாக அமராமலுமிருப்போம்.

௨. சாதிகள் உன் நீதியையும், சகல இராசாக்கள் உன் மகிமையையுங் காண்பார்கள்; கர்த்தரின் வாய் * புது நாமமாய் அழைக்கப்படுவாய். * ௬௫, ௰௫.

௩. நீ கர்த்தருடைய கையில் அலங்காரமான கிரீடமும், உன் பராபரனுடைய கரத்தில் இராசமுடியுமாயிருப்பாய்.

௪. * நீ இனி நெகிழப்பட்டவளென்னப்படாமலும், உன் தேசம் இனிப் பாழானதென்னப்படாமலும், இனி நாம் பிரியம் வைத்தவளென்றும், உன் தேசம் வாழ்க்கைப்பட்டதென்றும் அழைக்கப்படுவதாய். ஏனெனில், கர்த்தர் உன்மேலே பிரியம் வைக்கிறார். உன் தேசம் வாழ்க்கைப்படும். * ௬௰, ௰௫.

௫. ஏனெனில், வாலிபன் கன்னியாஸ்திரியை விவாகம்பண்ணுகிறதுபோல உன் குமாரர் உன்னை விவாகம்பண்ணுவார்கள். மணவாளன் மணவாட்டியின்மேல் மகிழ்ச்சியாயிருக்கிறதுபோல * உன் பராபரன் உன்மேல் மகிழ்ச்சியாயிருப்பார். * சேபா. ௩, ௰௭.

௬. எருசலேமே உன் மதில்களின்மேலே பகலுமுழுதும், இராமுழுதும் ஒருக்காலும் * மவுனமாயிராத சாமக்காரரைக் கட்டளையிடுகிறேம். கர்த்தரைப் பிரஸ்தாபம்பண்ணுகிறவர்களே, உங்களில் அமர்க்கையில்லாதிருப்பதாக. * ௫௨, ௮.

௭. அவர் எருசலேமைத் திடப்படுத்திப் பூமியிலே * புகழ்ச்சியாக வைக்குமட்டாக அவரை யமர்ந்திருக்கவொட்டாதிருங்கள். * ௬௧, ௰௧.

௮. இனி நாமுன் சத்துருக்களுக்கு உன் தானியத்தை யாகாரமாகக்கொடோம். நீ பிரயாசப்பட்ட உன் கொடிமுந்திரிகைப்பழ இரசத்தை அன்னியபுத்திரர் குடிப்பதுமில்லையென்று கர்த்தர் தம்முடைய வலதுகரத்தின்மேலும், தமது வல்லமையினுடைய புயத்தின்மேலும் ஆணையிட்டார். * ௬௫, ௨௧. ௨௨.

௯. அதைச் சேர்த்தவர்கள் தாமேயதைப் புசித்துக் கர்த்தரைத் துதிப்பார்கள். அதைக் கூட்டிவைத்தவர்கள்தாமே யதைத் தம்முடைய பரிசுத்தஸ்தலத்தின் பிரகாரங்களிலே குடிப்பார்கள்.

௰. * வாசல்களால் பிரவேசியுங்கள். பிரவேசியுங்கள். சனத்துக்கு வழியைச் செவ்வைப்படுத்துங்கள். பாதையை யுயர்த்துயர்த்துங்கள். அதைக் கற்பாறைக்கற்களைச் சுத்தப்படுத்துங்கள். சனங்களுக்குக் கொடியேற்றுங்கள். * ௫௭, ௰௪. மத்தே. ௨௮, ௰௯.

௰௧. * இதோ உன் இரட்சிப்பு வருகிறது. இதோ அவருடைய பலன் அவரோடே, அவருடைய கூலி அவர் முன்பாகவும் வருகிறதென்று நீங்கள் சீயோன் குமாரத்திக்குச் சொல்லுங்களென்பதை இதோ கர்த்தர் பூமியின் கடையாந்தரமட்டாகக் கூறுகிறார். * ௪௰, ௰. அறிவி. ௨௨, ௰௨.

௰௨. * அவர்களைப் பரிசுத்தசனமென்றும், கர்த்தரால் மீட்கப்பட்டவர்களென்றும் அழைப்பார்கள். நீயோவெனில், தேடிக்கொள்ளப்பட்டதென்றும், * நெகிழப்படாதபட்டணமென்றும் அழைக்கப்படுவாய். * ௧. பேதுரு. ௨, ௯.

## ௬௩. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத்தாம் ஆனென்றும், (௨) தம்முடைய சத்துருக்களைச் செயித்தநிச்சயமின்னதென்றும், (௭) சபையின்மேல் வைத்த இரக்கமின்னதென்றுங் காட்டினது. (௰) நீதியான கோபத்திலே இலவசமான இரக்கத்தை நினைவுகூர்ந்தது. (௰௫) சபையார் செபத்தினாலும், (௰௭) முறைப்பாட்டினாலுந் தங்கள் விசுவாசத்தை வெளியிட்டது.]

ஏதோமிலும், * அதிலுள்ள போஸ்றாப்பட்டணத்திலுமிருந்து † சாயந்தீரப்பட்ட வஸ்திரங்களுடையவராகவும், மகத்துவமாய் உடுத்திருக்கிறவராகவும், தமது மகா சத்துவத்திலே நடந்தேறுகிறவராகவும் வருகிறஇவரார்! நீதியாய்ப்பேசி இரட்சிக்கவல்லவராகிய நாமதானே.
* அறிவி. ௰௯, ௰௩. † ௩௪, ௫ ௬.

௨. உம்முடைய உடுப்புச் சிவப்பாகவும், உம்முடைய வஸ்திரங்கள் ஆலையை மிதிக்கிறவன் வஸ்திரங்களைப்போலவும் இருக்கிறதேன்!

௩. நாமொருவராய் ஆலையை மிதித்தோம், சனத்தாங்களில் ஒருவரும் நம்மோடிருந்ததில்லை, நாம் நம்முடைய கோபத்திலே அவர்களை மிதித்து நம்முடைய உக்கிரத்திலே அவர்களை நசுக்கிப்போட்டோம், ஆனதுகொண்டு அவர்கள் இரத்தம் நமது வஸ்திரங்களின்மேலே தெறித்தது, நமது உடுப்பையெல்லாங் கறைப்படுத்திக்கொண்டோம். அறி. ௰௪, ௰௯. ௨௰.

௪. * ஏனெனில், நீதியைச் சரிக்கட்டும் நாள் நம்முடைய மனதிலிருந்தது, நம்முடையவர்களை மீட்கும் வருஷம் வந்திருந்தது.
* ௩௪, ௮.

௫. * நாம் பார்த்தோம், ஆனால் ஒத்தாசைசெய்கிறவனில்லை தாங்குகிறவனில்லையே

னாச்சரியப்பட்டோம். ஆனதுகொண்டு நமது புயமே நமக்கிரட்சிப்பாகி நம்முடைய உக்கிரமே நம்மைத்தாங்கிற்று. * ௫௯. ௰௬.

௬. நாம் நம்முடைய கோபத்திலே சனங்களை மிதித்துப்போட்டு நம்முடைய உக்கிரத்தில் அவர்களை வெறியாக்கி அவர்கள் சாரத்தைத் தரையிலிறங்கப்பண்ணினோம்.

௭. கர்த்தர் எங்களுக்குச் செய்தருளின எல்லாவற்றுக்குந் தக்கவிதமாகவும், அவர் தம்முடைய இரக்கங்களின்படியேயும், தம்முடைய திரளான தயவுகளின்படியேயும் இஸ்ரவேல் வீட்டாருக்குச்செய்த மகா நன்மைக்குத் தக்கவிதமாகவுங் கர்த்தருடைய கிருபைகளையும், கர்த்தருடைய துதிகளையும் பிரஸ்தாபம் பண்ணுவேன்.

௮. ஏனெனில், அவர்கள் நம்முடைய சனந்தானென்றும், அவர்கள் கட்டுச்செய்யாதிருக்கப்போகிற பிள்ளைகளென்றுஞ்சொல்லி அவர்களுக்கிரட்சகரானார்.

௯. அவர்களுடைய எல்லா நெருக்கத்திலும் அவர் நெருக்கப்பட்டார், ஆனதுகொண்டு அவருடைய சமுகத்தின் தூதனானவர் அவர்களை இரட்சித்தார், அவர் * தமது அன்பினிமித்தமுந், தமது பரிதாபத்தினிமித்தமும் அவர்களை மீட்டுப் பூர்வநாள்களிலெல்லாம் அவர்களைத் தூக்கிச் சுமந்துவந்தார். * மோசே. ௭, ௬—௯.

௰. அவர்களோ கலகம்பண்ணி அவருடைய பரிசுத்த ஆவிக்கு நோகநடந்தார்கள். ஆகையால் அவர்களுக்குச் சத்துருவாயமாறி அவரே அவர்களுக்கு விரோதமாய் யுத்தம் பண்ணினார்.

௰௧. ஆகிலும் பூர்வநாள்களையும், மோசேயையும், தம்முடைய சனத்தையும் நினைவுகூர்ந்தாரோ, ஆனால் அவர்களையும், தம்முடைய மந்தையின் மேய்ப்பனையுஞ் சமுத்திரத்திலிருந்தேறப் பண்ணினவரிப்போதெங்கே?

௰௨. அவர்கள் நடுவிலே தம்முடைய பரிசுத்த ஆவியையிருக்கக்கட்டளையிட்டு அவர்களை மோசேயின் வலதுபக்கத்திலுள்ள தமது மகிமையின் புயத்தினாலே நடத்தித் தமக்கு நித்திய கீர்த்தியுண்டாக்க அவர்களுக்கு முன்பாகத் தண்ணீர்களைப் பிளந்து,

௰௩. ஒரு குதிரை வனாந்தரவெளியிலே நடக்குமாப்போல அவர்களை ஆழங்களில் இடறாதபடிக்கு நடக்கப்பண்ணினவரெங்கே!

௰௪. கர்த்தருடைய ஆவியானவர் அவர்களைப் பள்ளத்தாக்கிலே போய் இறங்குகிற மிருகஜீவன்களைப்போல இளைப்பாறப் பண்ணினார், அப்படியே தேவரீர் உமக்கு மகிமையுள்ள கீர்த்தியையுண்டாக்க உம்முடைய சனத்தை நடத்தினீரே.

௰௫. * தேவரீர் பரமண்டலங்களிலிருந்து கண்ணோக்கி உம்முடைய பரிசுத்தமும், உம்முடைய மகிமையுமான வாசஸ்தலத்திலிருந்து பாரும், உம்முடைய வைராக்கியமும், உம்முடைய வல்லமைகளுமெங்கே? உம்முடைய குடல்களின் இரைச்சலும், உம்முடைய மனவுருக்கமும் எனக்கு முன்பாகத் தன்னையடக்கிக்கொள்ளுகிறது. * ௫. மோசே. ௨௬, ௰௫.

௰௬. தேவரீர் எங்கள் பிதாவாமே. ஏனெனில், ஆபிரகாம் எங்களையறியான், இஸ்ரவேலுக்கும் நாங்கள் அறியப்பட்டவர்களுமல்ல, கர்த்தாவே தேவரீரோ எங்கள் பிதாவும். எங்கள் மீட்பருந்தானே, இது பூர்வகாலமுதல் உம்முடைய நாமம்.

௰௭. கர்த்தாவே தேவரீர் எங்களை உம்முடைய வழிகளைத் தப்பிப்போகவிட்டு எங்களிருதயத்தை உமக்குப் பயப்படாதபடிக்குக் கடினப்படுத்துவானேன்! உம்முடைய ஊழியக்காரரினிமித்தமும், உம்முடைய சுதந்தரமான கோத்திரங்களினிமித்தமுந் திரும்பும்.

௰௮. உம்முடைய பரிசுத்த சனத்தைக் கொஞ்சக்குறையச் சந்ததியாக வசப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள், எங்கள் சத்துருக்கள் உம்முடைய பரிசுத்தஸ்தலத்தை * மிதித்துவிட்டார்கள். * ௬௪, ௰.௰௧, சங்கீ. ௭௯, ௧.

௰௯. ஒருக்காலுந் தேவரீர் ஆண்டுகொள்ளாதவர்களைப்போலும், உமது நாமம் விளங்காதவர்களைப்போலுமானோமே.

## ௬௪. அதிகாரம்.

[(௧) திருச்சபை பராபரனுடைய வல்லமை விளங்குவதற்காக மன்றாடினது. (௫) அது அவருடைய இரக்கத்தைப் புகழ்ந்து தனது பாவங்களை வெளியிட்டது. (௯) தனதுன்பத்தைக் குறித்து முறையிட்டது.]

ஆ! உமது நாமத்தைச் சத்துருக்களுக்கறியப்பண்ணுவதற்கும், சாதிகள் உம்முடைய சன்னிதிக்கு முன் தத்தளிப்பதற்குமாக,

௨. தேவரீர் வானங்களைக் கிழித்திறங்கி உருக்குகிற அக்கினியெரியுமாப்போலவும், அக்கினி தண்ணீரைப் பொங்கப்பண்ணுமாப்போலவும், பருவதங்கள் உமக்கு முன்பாகக் கரைந்தால் தாவிளை.

௩. நாங்கள் வரப்பார்த்திராத பயங்கரமான காரியங்களைத் தேவரீர் செய்து இறங்குகிறபோது உமக்கு முன்பாகப் பருவதங்கள் கரைந்துபோமே தானே.

௪. பராபரனே * உமக்குக் காத்திருக்கிறவர்களுக்கு நீர் செய்பவைகளைத் தேவரீரையல்லாமல் உலகத்தோற்றமுதற்கொண்டு ஒருவருங்கேட்டதுமில்லை செவியால் உணர்ந்ததுமில்லை அவைகளைக் கண்டதுமில்லை.
* ௧. கொரி. ௨, ௯.

௫. மகிழ்ச்சியாய் நீதியைச்செய்கிறவர்க

அப்போது நாம் உங்களுக்குப் பராபரனாயிருப்போம், * நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள், நாம் உங்களுக்குக் கற்பிக்கும் எல்லாவழியிலும் நீங்கள் உங்களுக்கு நன்றாயிருக்கும்படிக்கு நடவுங்களென்கிற விசேஷத்தையே அவர்களுக்குச் சொல்லிக் கற்பித்தோம். * யக, ௩. ச.

உச. ஆனால் அவர்கள் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும் போய்த் தங்கள் பொல்லாத இருதயத்தினுடைய யோசனைகளிலும், கடினத்திலும் நடந்து முன்னிட்டல்ல பின்னிட்டுப் போனார்கள். * யக. அதி.

உரு. உங்கள் பிதாக்கள் எஜிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாள் துவக்கி இந்நாள் மட்டும் நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரையெல்லாந் தினம் உங்களண்டைக்கு ஏற்கனவேயனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

உசா. ஆனால் நம்முடைய சொற்கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும் போய்த் தங்கள் பிடரியைக் கெட்டியாயாக்கி * தங்கள் பிதாக்களைப்பார்க்கிலும் பொல்லாப்புச் செய்தார்கள். * யசா, யஉ.

உஎ. நீயிந்த வார்த்தைகளையெல்லாம் அவர்களுக்குச் சொன்னாலும் அவர்களுனக்குக் கேட்பதில்லை, நீயவர்களைக் கூப்பிட்டாலும் அவர்களுனக்கு மறுவுத்தரவு கொடுப்பதில்லை.

உஅ. ஆகையாலே தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேளாமலும், புத்தியையேற்றுக்கொள்ளாமலுமிருக்கிற சாதியிதுதானென்றும், விசுவாசமழிந்து அவர்கள் வாயிலவேரற்றுப்போனதென்றும் அவர்களுக்குச் சொல்லுவாயாக.

உகூ. நீ யுன் தலைமயிரைச் சிரைத்து எறிந்துபோட்டு உயர்தலங்களிலே புலம்பிக்கொண்டிரு. ஏனெனில், கர்த்தர் தமதுசினத்துக்கேதுவான சந்ததியை * வெறுத்துநெகிழ்ந்தார்.

௩ய. ஏனென்றால், யூதாபுத்திரர் நமதுபார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார், தமமுடைய நாமந்தரிக்கிற வீட்டைத் தீட்டுப்படுத்தத்தங்கள் அருவருப்புகளையதிலே வைத்தார்கள்.

௩க. * தங்கள் குமாரரையும், தங்கள் குமாரத்திகளையும் அக்கினியாலே சுட்டெரிப்பதற்காக, அவர்கள் இன்னோமினுடைய குமாரரின் பள்ளத்தாக்கிலுள்ள தோப்பேத்தின் மேடைகளைக் கட்டினார்கள், அதை நாம் கற்பித்ததுமில்லை அது நம்முடைய மனதிலே தோன்றினதுமில்லை. * ௩. மோ. யஅ, உக.

௩உ. ஆனதுகொண்டு இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போது அது அப்புறந் தோப்பேத்தென்றும், இன்னோமுடைய குமாரரின் பள்ளத்தாக்கென்றுஞ் சொல்லப்படாமல் கொலையின் பள்ளத்தாக்கென்று சொல்லப்படும், இடமில்லாமையால் தோப்பேத்திலே சவங்களையடக்கம்பண்ணுவார்கள்.

௩௩. * இந்தச்சனத்தின் பிணங்கள் ஆகாயத்தின் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் ஆகாரமாயிருக்கும், அவைகளை வெருட்டுவாருமில்லாதிருப்பார்கள்.
* கூ, உஉ. யசா, எ.

௩ச. நாம் யூதாவின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளிலும் * களிப்பின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்தையும், மணவாளன் சத்தத்தையும், மணவாட்டியின் சத்தத்தையும் ஒய்ப்பண்ணுவோம். ஏனெனில், தேசம் பாழாம்.

## அ. அதிகாரம்.

[(க) யூதர்களில் மரித்தோருக்கும், உயிரோடிருப்பவர்களுக்கு முண்டாகிய சிறுமை. (ச) அவர்களுடைய குணப்படாமையின் பயித்தியத்தையும், வெட்கக்கேட்டையுங் கண்டித்தது. (யங) அவர்களுக்குவருந் துன்பமுள்ள நியாயத்தீர்ப்பைக்காட்டி, (யஅ) அவர்களுடைய நம்பிக்கையற்ற ஸ்திதியைக்குறித்துத் துக்கித்தது.]

அக்காலத்திலே யூதாவினுடைய இராசாக்களின் எலும்புகளையும், அவர்களுடைய பிரபுக்களின் எலும்புகளையும், ஆசாரியர்களின் எலும்புகளையும், தீர்க்கதரிசிகளின் எலும்புகளையும், எருசலேமுடைய குடிகளின் எலும்புகளையும் அவர்களுடைய பிரேதக்குழிகளைவிட்டெடுத்து,

உ. அவர்கள் சிநேகித்ததும், சேவித்ததும், பின்றொடர்ந்ததும், நாடினதும், பணிந்துகொண்டதுமாயிருந்த சூரியனுக்கும், சந்திரனுக்கும், வானத்தினுடைய எல்லாச்சேனைக்கும் முன்பாக அவைகளைப் பரப்பிவைப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். அவைகள் வாரியடக்கம்பண்ணப்படாமல் பூமியின்மேல் எருவாகும்.

௩. இந்தப் பொல்லாத வம்சத்தில் மீதியாய் வைக்கப்பட்டகுறைப்பேர் அனைவருக்கும் மீந்திருந்த தங்களை நாம் துரத்திவிட்ட எல்லாவிடங்களிலுஞ் சீவனைப்பார்க்கிலுஞ் சாவே விருப்பமாயிருக்குமென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

ச. நீயவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தருரைக்கிறதேதெனில், விழுந்தவர்கள் எழுந்திருக்கிறதில்லையோ?

ரு. ஆனால் எருசலேமியராகிய இந்தச்சனமென்றைக்கும் வழிதப்பிப்போகிறதேது! கபடத்தைப்பிடித்திருக்கிறார்கள்.

சா. நிசமானதைப் பேசார்களென்கிறதைக் கவனித்துக் கேட்டோம், என்னசெய்தேனென்றுதன் பொல்லாப்பின் நிமித்தம் மன

ஸ்தாபப்படுகிறவனொருவனுமில்லை, யுத்தத்துக்குட்பாய்கிற குதிரையைப்போலே யவரவர் தங்கள் ஓட்டமாய்த்திரும்புகிறார்கள்.

௭. ஆகாசத்திலுள்ள செங்கால்நாரை முதலாய்த்தன்வேளையையறியும், காட்டுப்புறாவும், நமுடும், தகைவிலான்குருவியுந் தாங்கள் வரத்தக்ககாலத்தைக்கவனிக்கும், நம்முடைய சனமோகர்த்தரின் நியாயத்தையறியார்கள்.

௮. நாங்கள் ஞானிகளென்றும், கர்த்தருடையவேதம் எங்களோடிருக்கிறதென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி! மெய்யாகவே இதோ, வேதபாரகரின் கள்ளவெழுத்தாணி அதையவத்தமாக்குகிறது.

௯. ஞானிகள் வெட்கிக் கலங்கிப் பிடிபடுவார்கள், இதோகர்த்தருடையசொல்லைவெறுத்துப்போட்டார்கள், அவர்க்கு ஞானமேது!

௰. ஆகையினாலே யவர்களுடையபெண்சாதிகளையன்னியருக்கும், அவர்களுடையவயல்களை அவைகளைக் கட்டிக்கொள்பவர்களுக்குங்கொடுப்போம். ஏனெனில், * அவர்களிலே சிறியோர்துவக்கிப் பெரியோர்மட்டும் அவரவர் பொருளாசைக்காரராயிருக்கிறார்கள், தீர்க்கதரிசிகள் துவக்கி ஆசாரியர்கள் மட்டும் அவரவர் பொய்க்காரராயிருந்து,
* கூ. அதி. ௰௩—௰௫.

௰௧. சமாதானமில்லாதிருந்தும் சமாதானம் சமாதானமென்றுசொல்லி நம்முடைய சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலை இலகுவாய்க்குணமாக்குகிறார்கள்.

௰௨. நாங்கள் அருவருப்பானதைச்செய்ததினிமித்தம் வெட்குகிறார்களோ! பரிசசேதம்வெட்கார்கள், நாணவும் அறியார்கள், ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்ளே விழுவார்கள், நாம் அவர்களை விசாரிக்குங்காலத்திலே இடறுண்டுபோவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௩. அவர்களை வாரவே வாருவோமென்று கர்த்தர்சொல்லுகிறார், திராட்சச் செடியிலேகுலைகளிராது, அத்திமரத்திலே பழங்களிராது, இலையும் உதிரும், நாமவர்களுக்குக்கொடுத்தது அவர்களைவிட்டுத்தாண்டிப்போமென்றுசொல்லு.

௰௪. என்னத்தைப்பற்றி நாம் தரித்திருப்போம்! கூடிக்கொள்ளுங்கள். * நாம் அரணான பட்டணங்களுக்குட்பிரவேசித்து அங்கே சங்காரமாவோம். ஏனெனில், நாம் கர்த்தருக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்தபடியினாலே, நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மைச்சங்காரம்பண்ணி, * நமக்குப்பிச்சுத்தண்ணீரைக்குடிக்கக்கொடுக்கிறார்.
* ச. அதி. ௫. † கூ, ௰௫. உ௩, ௰௫.

௰௫. சமாதானத்துக்குக் காத்திருந்தோம். ஆனால் நலமில்லை. ஆரோக்கிய காலத்துக்குக்காத்திருந்தோம் ஆனால் இதோகேடு.

௰௬. * தாணிலிருந்தவர்களுடைய குதிரைகளின் சீறுதல்கேட்கப்படுகிறது, அவர்களுடைய வலுப்புரவிகள் கனைக்கிற சத்தத்தினாலே தேசமெல்லாம் அதிர்கிறது. அவர்கள் வந்து தேசத்தையும், அதின் நிறைவையும், பட்டணத்தையும், அதின்குடிகளையும் பட்சிப்பார்கள். * ச, ௰௫.

௰௭. மெய்யாய் இதோ, தடைகட்டப்படாத சர்ப்பங்களையும், கட்டுவிரியன்களையும், உங்களுக்குள்ளனுப்புகிறோம், அவைகள் உங்களைக்கடிக்குமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௰௮. நான் சஞ்சலத்தில் மூச்சுப்பாறப்பார்த்தும் என்னிலே என்னிருதயம் பலட்சயமாயிருக்கிறது.

௰௯. இதோ, சீயோனிலே கர்த்தரிருப்பதில்லையோ! அதின்ராசாவுண்டாயிருப்பதில்லையோவென்று நம்முடையசனமாகியகுமாரத்தி தூரதேசத்திலிருந்து கூப்பிடுஞ்சத்தமுண்டாம். ஆனால், அவர்கள் தங்கள் சுரூபங்களினாலும் நமக்குக் கோபமுண்டாக்கினதென்னவென்கிறார்.

௨௰. அறுப்புக்காலஞ்சென்றது கோடைக்காலமும் முடிந்தது, நாமிரட்சிக்கப்பட்டதுமில்லை.

௨௧. என்சனமாகியகுமாரத்தியின் நொறுங்குதலினாலே நொறுங்குண்டேன், கருகறுத்திருக்கிறேன், திகைப்பென்னைப்பிடித்தது.

௨௨. * கீலேயாத்திலே பிசின்தயிலமில்லையோ! இரணவயித்தியனும் அங்கேயில்லையோ! பின்னையேன் என்சனமாகியகுமாரத்தியின் குணமாகுதல் நடந்தேறாமலே போயிற்று. * சகூ, ௰௧. க. யோ. கஎ,உ௫.

௨௩. ஆ, குமாரத்தியாகிய என்னுடைய சனத்திலே கொலையுண்டவர்கள் நிமித்தம் நாமிரவும், பகலும் அழும்படியாக * என் தலை தண்ணீரும், என்கண்கள் கண்ணீரூற்றுமானாலதாவலை. * ௰௩, ௰௭. ௰௪, ௰௭. புலா. உ௨, ச.

## கூ. அதிகாரம்.

[(க) யூதர்களுடைய பலவிதமானபாவங்களைக்குறித்தும், (கூ) அவர்களுக்கு வந்த நியாயத்தீர்ப்பைக் குறித்தும் எரேமியா புலம்பினது. (௰௨) கீழ்ப்படியாமைஅவர்களுடைய கைப்பானதுன்பத்துக்குக்காரணமென்பது. (௰௭) அவர்களுடைய அழிவைக்குறித்து அவர்கள் துக்கிப்பதற்கும், (௨௩) தங்களைநம்பாமல் பராபரனில் நம்பிக்கையைவைப்பதற்கும் அவர்களைத்தூண்டினது. (௨௫) யூதர்களையும், புறசாதியாரையும் பயமுறுத்தினது.]

அ, வனாந்தரத்திலெனக்கு வழிப்பய ணக்காரரின தாபரமிருந்தாலதா வலை, அப்போது நான என சனத்தைவிட்டு அவர்களிடத்தி விராதபடிக்குப் போயவிடு வேன, ஏனெனில, அவர்களெல்லாரும விப சாரரும, துரோகிகளின கூட்டமுமாயிருக்கி ருர்கள.

௨. * தங்களுக்குவில்லாயிருக்கிற தங்கள நாக்கைப்பொய்களைப்பெய்ய நாணேற்று கிருர்கள, அவர்கள இந்தத்தேசத்திலேபெ லத்துக்கொளவது சத்தியத்துக்காகவல்ல, ஏனெனில, † பொல்லாப்பிலிருந்து பொல லாப்புக்கு நடந்தேறுகிருர்கள, நம்மை யோவென்ருல, அறியார்களென்று கர்த்தர் சொல்லுகிருர். * சங்கீ. ௫௨, ௪. † ௬, ௭.

௩. * நீங்கள அவனவன தன தன சிநே கிதனுக்கெச்சரிக்கையாயிருங்கள, ஏனெ னில, எந்தச்சகோதரனுங்கவிழக்கவேகவி ழக்கிருன, எந்தச்சிநேகிதனுந்தூறறிந்திரி கிருன. * மீகா. ௭, ௫. ௬.

௪. அவர்களமெய்யைப்பேசாமல ஒவவொ ருவர் தமக்கடுத்தவனையேய்க்கிருர்கள, அக் கிரமஞ்செய்யவுழைக்கிருர்கள.

௫. கபடத்தின நடுவிலே குடியிருக்கிருய, கபடத்தின நிமித்தம நம்மையறியமாட டோமெனகிருர்களென்று கர்த்தர்சொல்லு கிருர்.

௬. ஆகையால சேனைகளையுடையகர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ நாம அவர்க ளையொடுக்கி அவர்களைப் புடமிடுவோம, ஏனெனில, நமது சனமாகிய குமாரத்தியை வேறெந்தப்பிரகாரமாகநடத்துவோம!

௭. அவர்கள நாவு கூர்மையாக்கப்பட்ட அம்பாயிருந்துகபடம்பேசுகிறது, * தனக் கடுத்தவனோடே அவனவன தனவாயினலே சமாதானமாயப்பேசுகிருன, ஆனல தன னுளளத்திலே அவனுக்குப பதிவிடைவைக் கிருன. * சங்கீதம. ௨௮, ௩. ௫௫, ௨௨. ௬௨, ௪.

௮. * இவைகளினநிமித்தமஅவர்களைவிசா ரியாதிருப்போமோ? இப்படிக்கொத்தசாதி க்கு நம்முடைய ஆத்துமா நீதியைச்சரிக் கட்டாதிருக்குமோவென்று கர்த்தர் சொல லுகிருர். * ௫, ௯—௨௯.

௯. மலைகளினமேல அழுகையையும, துக் கங்கொணடாடுதலையும, வனாந்தரத் தாபர ங்களினமேலபுலம்பலையுமெடுப்பேன. ஏனெ னில, ஒருவனும அவைகளைக் கடந்து போகான, அத்தனைமையாயவைகள பாழாக் கடிக்கப்பட்டுக்கிடக்கின்றன. * ஆடுமாடுக ளினசத்தங்கேட்கப்படுகிறதுமில்லை, ஆகா சத்தினபறவைமுதறகொணடு மிருகங்கள மட்டும யாவுந்தெறித்துப்போயின. * ௰௨, ௪.

௰. * நாம எருசலேமை மண்மேடுகளும, வலுசர்ப்பங்களின தாபரமுமாக்கி யூதாவி னபட்டணங்களைக் குடியில்லாதபடியாய்ப் பாழாக்கிப்போகப்பண்ணுவோம. * மீகா. ௩, ௰௨. சங்கீ. ௭௯, ௧.

௰௧. * இதையுணரத்தக்கஞானமுளளமனு ஷனர்! தேசமழிந்து ஒருவனுங்கடவாத படியாயப்பாழ்க்கடிக்கப்படுகிற முகாந்தர மெனனவென்று கர்த்தருடையவாய தனனு டனேசொல்லுகிறதைக்கேட்டு அறிவிக்கத் தக்கவனர்! * ௫. மோசே. ௩௨, ௨௯.

௰௨. கர்த்தர் சொல்லுகிறதாவது; நாம அவரவருக்குமுனபாகக் கட்டளையிட்டநம முடைய நியாயப்பிரமாணத்தையவர்களவி ட்டு நம்முடைய சொல்லைக்கேளாமலும, அதினபடியேநடவாமலும,

௰௩. * தங்களுடைய இருதயத்தின கடின த்தையும. தங்களபிதாக்கள தங்களுக்குக் கற்றுக்கொடுத்தபடி பாகாலகளையும பின றொடர்ந்தபடியினலே, * ௭, ௨௪—௨௭.

௰௪. இதோ, * நாமிந்தச சனத்துக்கு எட்டியைப்புசிக்கவும, பிச்சுத்தணணீரைக் குடிக்கவுங்கொடுத்து, * ௨௩, ௰௫.

௰௫. அவர்களும, அவர்கள பிதாக்களுமறி யாத புறச்சாதிகளுக்குளளே அவர்களைச் சிதறவடித்துப்பட்டயத்தையவர்களுக்குப் பினனுக அவர்களை நிர்மூலமாக்குமட்டும அனுப்புவோமென்று இஸ்ரவேலின பரா பரனுகிய சேனைகளையுடையகர்த்தர்சொல லுகிருர்.

௰௬. நீங்களசிந்தனையாகிப புலம்பற்காரி களைவரவழைத்து அதற்கான ஞானமுளள ஸ்திரிகளையழைத்தனுப்புங்களென்றுசேனை களையுடையகர்த்தர்சொல்லுகிருர்.

௰௭. அவர்களசீக்கிரமாயவந்து நம்முடை யக்கணகள கணணீராயச சொரியத்தக்க விதமாகவும, நம்முடையஇமைகள தண ணீராயஓடத்தக்கவிதமாகவும நம்முடைய மேற்புலம்பும்படிக்குத்தானே.

௰௮. ஏனெனருல, எத்தனையாயப் பாழ்க் கடிக்கப்பட்டோமென்றும, நாங்களதேச த்தைவிட்டுப்போகிறதினலும, எங்களவா சஸ்தலங்களைக் கவிழத்தார்களெனகிறதின லும மிகவும வெட்கப்பட்டோமென்றும சீயோனிலிருந்துணடாகுகிறபுலம்பலினசத் தங்கேட்கப்படும.

௰௯. ஆனதுகொணடு ஸ்திரிகளே கர்த்தரு டையவார்த்தையைக் கேளுங்கள, உங்கள செவி அவருடையவாயின வசனத்தையேற றுக்கொளளட்டும, நீங்களஉங்களகுமாரத் திகளுக்குத் துக்கங் கொணடாடுதலையும, அவளவள தனதோழிக்குப் புலம்பலையுங்கற றுக்கொடுங்கள.

௨௰. ஏனெனில, வீதியிலிருக்கிறகுழந்தை களையும, தெருக்களிலிருக்கிற இளைஞரை

புகுந்து சங்காரம்பண்ணச் சாவு நம்முடைய அரமனைகளிலே பிரவேசிக்கும்.

௨௧. * மனுஷரின் சவங்கள் வயல்வெளியின்மேல் எருவைப்போலவும், அறுக்கிறவனுக்குப்பின்னாலே ஒருவனும் வாரிக்கொள்ளாதிருக்கிற அரியைப்போலவுங் கிடக்குமென்று கர்த்தருரைத்தாரென்றுசொல்லு. * ௭, ௩௩.

௨௨. கர்த்தர்சொல்லுகிறதாவது; ஞானி தன் ஞானத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவேண்டாம், பராக்கிரமமனிதன் பராக்கிரமத்தைத்தொட்டு மேன்மை பாராட்டவும்வேண்டாம், ஐசுவரியவான் தன் ஐசுவரியத்தைத்தொட்டு மேன்மைபாராட்டவும் வேண்டாம்.

௨௩. *மேன்மைபாராட்டுகிறவன் நாம் பூமியிலே கிருபையையும், நியாயத்தையும், நீதியையுஞ்செய்கிற கர்த்தரென்றுநம்மையுணர்ந்தறிந்திருக்கிறதையேதொட்டு மேன்மைபாராட்டக்கடவான். ஏனெனில், இவைகளின்மேலே பிரியமாயிருக்கிறேனென்று கர்த்தர்சொல்லுகிறார். * கொரி. ௧, ௩௧. ௨. கொரி. ௰, ௰௭.

௨௪. இதோ நாட்கள்வரும், அப்போது சுன்னத்திலாதவர்களோடுங்கூடச் சுன்னத்துள்ளயாவரையும்,

௨௫. எகிப்தையும், யூதாவையும், ஏதோமையும், அம்மோன்புத்திரரையும், மோவாபையும், கடைசிமூலைகளிலுள்ள வனாந்தரக்குடிகளானயாவரையும் விசாரிப்போம். ஏனெனில், புறச்சாதியாரனைவரும் சுன்னத்திலாதவர்கள், ஆனால் இஸ்ரவேல்வீட்டாரனைவரும் * இருதயசுன்னத்திலாதவர்களென்றுகர்த்தர்சொல்லுகிறார். * ௩. மோசே. ௨௬, ௪௧. அப்போஸ்தலர். ௭, ௫௧. உரோமர். ௨, ௨௮. ௨௯.

## ௰. அதிகாரம்.

[(௧) பராபரனுக்கும், விக்கிரகங்களுக்கும் ஒப்பில்லாமை. (௰௭) வருகிற பொல்லாங்குக்குவிலகியோடத் தீர்க்கதரிசி தூண்டினது. (௰௯) புத்தியற்ற மேய்ப்பர்களாலே கூடாரத்தின் பாழ்க்கடிப்பைக்குறித்துப் புலம்பினது. (௨௩) தாழ்மையுள்ள விண்ணப்பம்பண்ணினது.]

இஸ்ரவேல்வீட்டாரே! கர்த்தர் உங்களுடனேசொல்லுகிற வசனத்தைக்கேளுங்கள்.

௨. கர்த்தர்சொல்லுகிறதாவது; புறச்சாதிகளுடையமார்க்கத்தைக்கற்றுக்கொள்ளாதேயுங்கள், வானத்தின் அடையாளங்களாலே புறச்சாதிகள்கலங்குகிறார்களேயென்று சொல்லி நீங்கள் அவைகளாலே கலங்காதேயுங்கள்.

௩. ஏனெனில், சனசதனங்களின் பிரமாணங்கள் மாயையாயிருக்கின்றது. அதெப்படியென்றால், * காட்டிலொருமரத்தை வெட்டுகிறார்கள். அதிலே தச்சனைக்கைகளிலிருக்கிறவாச்சியால் வேலைசெய்யப்படும். * ஏசா. ௪௪, ௰௪—௨௰.

௪. வெள்ளியினாலும், பொன்னினாலும் அதைச் சிங்காரித்து, அது அசையாதபடிக்கு அதை ஆணிகளாலும், சுத்தியல்களாலும் உரமாக்குகிறார்கள்.

௫. அவைகள் பனைமரத்தைப்போல நெட்டையாயிருக்கிறது. * அவைகள் பேசமாட்டாது, அவைகள் நடக்கமாட்டாததினாலே சுமக்கப்படவேணும், அவைகளுக்குப் பயப்படாதிருங்கள். ஏனெனில், தீமைசெய்யமாட்டாது. நன்மைசெய்வதும் அவைகளில் இல்லையென்கிறார். * சங்கீ. ௱௧௫, ௫. ௭.

௬. கர்த்தாவே, * உமக்கொப்பானவனில்லையே. தேவரீரோபெரியவர். உமதுநாமமே வல்லமையிற்பெரியது. * சங்கீ. ௮௬, ௮-௰.

௭. சாதிகளின்கர்த்தாவே, * உமக்குப்பயப்படாதிருப்பவனார்? தேவரீருக்குத்தான் பயப்படவேண்டியது. அதேனென்றால் சாதிகளுடைய எல்லாஞானிகளிலும், அவர்களுடைய எல்லாஇராச்சியத்திலும் உமக்கொப்பானவனில்லை. * சங்கீ. ௩௩, ௮. அபொ. ௰௫, ௪.

௮. அவர்கள் ஏகமாய் * மிருககுணமும், பயித்தியமுமாயிருக்கிறார்கள். அந்தமரம் மகாமாயையானபோதகந்தானே.
* உரோமர். ௧, ௨௨. ௨௩.

௯. தகடாக்கப்பட்டவெள்ளி தர்சீசிலும், பொன் உப்பாசிலுமிருந்துகொண்டுவரப்பட்டுத் தொழிலாளியினாலும், தட்டானைகைகளினாலுஞ்செப்பனிடப்படுகிறது, இளநீலமும், இரத்தாம்பரமும் அவைகளினுடுப்பு அவையெல்லாம் ஞானிகளின்செய்கையாயிருக்கின்றன.

௰. கர்த்தரோவெனில், மெய்யானதெய்வம். அவர் சீவனுள்ளபராபரனும், நித்திய இராசாவுந்தாமே. அவருடைய கடுமையினாலே பூமியதிரும், அவருடையசினத்தைச்சாதிகள் சகிக்கமாட்டார்கள்.

௰௧. வானத்தையும், பூமியையும் உண்டாக்காததேவர்கள் பூமியிலும், இந்தவானத்தின் கீழுமிராதபடிக்கு அழிவார்களென்றுதாய் அவர்களுக்குச்சொல்லுவீர்களாக.

௰௨. அவரோ பூமியைத்தமமுடையபெலத்தினாலே உண்டாக்கிப் பூச்சக்கரத்தைத்தம்முடைய ஞானத்தினாலேபடைத்து வானத்தைத்தம்முடைய உணர்வினாலே * விரித்தார். * யோபு. ௯, ௮. சங்கீ. ௱௪, ௨. ஏசாயா. ௪௰, ௨௨.

௰௩. * அவர்சத்தமிடுகையில் திரளானதண்ணீர் வானத்திலுண்டாகுகிறது, அவர்பூமியினதுஎல்லையிலிருந்து மேகங்களையெழும்பப்

பண்ணி, மழையுடனே மின்னல்களையுண்டாக்கிக் காற்றைத் தமது பண்டகசாலைகளிலிருந்து எவிவிடுகிறார். * சங்கீதம். ௱௩௫, ௭. யோபு. ௩௮, ௨௫—௨௮.

௰௪. * மனுஷரனைவரும் அறிவில்லாமல் மிருககுணமானார்கள், தட்டாரனைவரும் சுருபங்களாலே வெட்கிப்போகிறார்கள். ஏனெனில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவைகளில் ஆவியில்லை. * ௫. அதி. ௰௭. ௰௮. ௰௬.

௰௫. அவைகள் மாயையும், மகா எத்தான கிரியையுமாயிருக்கின்றன, அவைகள் விசாரிக்கப்படும் நாளிலே அழியும்.

௰௬. யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போல அல்ல. ஏனெனில், அவர் சருவத்தையும் உருவாக்கினவர், இஸ்ரவேல் அவருடைய சுதந்தரமான கோத்திரம், சேனைகளையுடைய கர்த்தரென்பது அவருடைய நாமம்.

௰௭. அரணானதிற் குடியிருக்கிறவளே, தேசத்திலிருந்து உன் வியாபாரத்தைச் சேர்த்துக்கொள்.

௰௮. ஏனெனில், இதோ நாம் இந்த விசை தேசத்தின் குடிகளைக் கவண் எறிந்து, அவர்கள் கண்டுணரும்படிக்கு அவர்களுக்கு நெருக்கமுண்டாக்குவோம் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௯. என் நொறுங்குதலின் நிமித்தம் எனக்கு ஐயோ, என் காயம் கேவலமாயிருக்கிறது, * ஆனாலிது நான் சுமக்கவேண்டிய என்னுடைய நோவென்று நான் சொல்லுவேன். * சங்கீ. ௭௭, ௰.

௨௰. என்னுடைய கூடாரம் பாழாக்கடிக்கப்பட்டு, என் கயிறுகளெல்லாம் அறுப்புண்டன, என் பிள்ளைகள் புறப்பட்டுப்போனார்கள், அவர்களிலொருவனுமில்லை, இனி என் கூடாரத்தை விரித்து, என் திரைகளைத் தூக்கிக்கட்டுவாரில்லை.

௨௧. ஏனென்றால், மேய்ப்பர் மிருககுணமாகிக் கர்த்தரைத் தேடாதேபோனார்கள். ஆகையால், அவர்கள் காரியம் வாய்க்காமல், அவர்கள் மந்தையெல்லாஞ் சிதறடிக்கப்பட்டது.

௨௨. இதோ, யூதாவின் பட்டணங்களைப் பாழும், வலுசர்ப்பங்களின் தாவுமாக்கிப்போடும், செய்தியின் சத்தமும் * வடதேசத்திலிருந்து பெரிய கொந்தளிப்பும் வருகிறது. * ௧, ௰௪. ௪, ௬.

௨௩. கர்த்தாவே, * மனுஷனுடைய வழி அவனாலே ஆகிறதல்லவென்றும், தன் நடைகளை நடத்துவது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும் அறிவேன். * வாக். ௨௰, ௨௪. பிரசங். ௮, ௰௬.

௨௪. கர்த்தாவே, * என்னைத் தண்டியும், ஆனால் என்னை மாயையாக்காதபடிக்கு † உம்முடைய கோபத்தினாலேயல்ல, ‡ நியாயமட்டாய்த் தண்டியும். * சங்கீதம். ௬, ௨. † ௩௮, ௨. ‡ ௪௬, ௨௮.

௨௫. * உம்மையறியாத சாதிகளின்மேலும், உமது நாமத்தைத் தொழுதுகொள்ளாத வம்சங்களின்மேலும் உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும். ஏனெனில், அவர்கள் யாக்கோபைப் பட்சித்து அவனை விழுங்கி அவனை நிர்மூலமாக்கி அவன் வாசஸ்தலத்தைப் பாழ்க்கடித்தார்கள். * சங்கீ. ௭௯, ௬.

## ௰௧. அதிகாரம்.

[(௧) எரேமியா பராபரனுடைய உடம்படிக்கையைப் பிரசித்தம்பண்ணினது. (௮) அதற்குக் கீழ்ப்படியாத யூதரைக் கண்டித்தது. (௰௧) அவர்கள்மேலும், (௰௮) தன்னைக் கொல்ல யோசனைபண்ணினதற்காக ஆனதோத்தின் மனுஷர்கள்மேலும் வருந் தீங்கைத் தீர்க்கதரிசனமாயுரைத்தது.]

கர்த்தராலே எரேமியாவுக்கு உண்டான வசனம் அவர் சொன்னதாவது;

௨. நீங்கள் கேட்டு யூதாவின் மனுஷருக்கும், எருசலேமின் குடிகளுக்குஞ் சொல்லிக்காட்டவேண்டிய உடன்படிக்கையின் வார்த்தைகளாவது;

௩. * நமது சத்தத்தைக் கேட்டு நாமுங்களுக்குக் கற்பிக்கிற எல்லாக்காரியங்களிலும் அதின்படி செய்யுங்கள், அப்போது நீங்கள் நமக்குச் சனமாக இருப்பீர்கள், நாமுங்களுக்குப் பராபரனாயிருப்போமென்று சொல்லி, * ௭, ௨௩.

௪. நாமுங்கள் பிதாக்களை இருப்புக்குகையாகிய எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே அவர்களுக்குக் கற்பித்த இந்த உடன்படிக்கையின் வார்த்தைகளைக் கேளாத மனுஷன் * சபிக்கப்பட்டவனென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறாரென்று அவர்களுக்குச் சொல்லு. * ௫. மோசே. ௨௭, ௨௬.

௫. இன்றைத்தினமிருக்கிறபடி பாலும், தேனும் ஓடுகிற தேசத்தையுங்கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று நாம் அவர்களுக்கிட்ட ஆணையை நாம் திடப்படுத்தும்படியாகத்தானே என்றார், அதற்கு நான் பிரதியுத்தாரமாக ஆம் கர்த்தாவே என்றேன்.

௬. அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது; நீ யூதாவின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளிலும் இந்த வார்த்தைகளையெல்லாம் கூறிச்சொல்லவேண்டியதேதெனில் இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளை நீங்கள் கேட்டு அவைகளின்படியே செய்யுங்கள்.

௭. ஏனென்றால், நாமுங்கள் பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்தேறப்பண்ணின நாளிலும், இந்நாள்மட்டாகவும் நாம் அவர்களுக்குத் திடச்சாட்சியாய் நம்முடைய சத்தத்

தைக் கேளுங்களென்று ஏற்கனவே சாட்சிகளாகத் தக்கவிதமாய்ச் சாட்சிசொல்லி வந்தோம்.

௮. ஆனால் அவர்கள் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும்போய் அவரவர் தங்கள் பொல்லாத இருதயத்தினுடைய கடினத்தின்படி நடந்தார்கள். ஆனதுகொண்டு நாம் அவர்களுக்குச் செய்யக் கற்பித்ததும், அவர்கள் செய்யாமற்போனதுமான இந்த உடன்படிக்கையின் வார்த்தைகளையெல்லாம் அவர்கள்மேல் வரப்பண்ணுவோமென்று சொல்லென்றார்.

௯. பின்னையுங் கர்த்தர் என்னுடனே சொன்னதாவது; யூதாவின் மனுஷருக்குள்ளும், எருசலேமின் குடிகளுக்குள்ளும் ஒரு ஒப்பந்தங் காணப்படுகிறது.

௰. அவர்கள் நமது வார்த்தைகளைக் கேட்கமாட்டோமென்றவர்களும், அன்னிய தேவர்களைச் சேவிக்கப் பின்சென்றவர்களுமாகிய தங்களுடைய முந்தின பிதாக்களின் அக்கிரமங்களுக்குத் திரும்பினார்கள், நாம் தங்கள் பிதாக்களோடே பண்ணின உடம்படிக்கையை இஸ்ரவேல் வீட்டாரும், யூதாவின் வீட்டாரும் மீறிப்போட்டார்கள்.

௰௧. ஆகையினாலே கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, அவர்கள் நீங்கிப்போகமாட்டாத தீங்கையவர்கள்மேல் வரப்பண்ணுவோம். * அப்போது நம்மை நோக்கிக் கூப்பிடுவார்கள். ஆனால் அவர்களைக் கேளாதிருப்போம். * வாக. ௧, ௨௮. ஏசா. ௧, ௰௫.

௰௨. அப்போது யூதாவுடைய பட்டணங்களின் மனுஷரும், எருசலேமின் குடிகளும் போய்த் தாங்கள் தூபங்காட்டியிருந்த தேவர்களை நோக்கிக் கூப்பிடும், * அவைகள் அவர்களையவர்கள் இக்கட்டுக்காலத்தில் இரட்சிப்பதேயில்லை. * ௨, ௨௮. ௫. மோசே. ௩௨, ௩௭. ௩௮.

௰௩. ஏனெனில், யூதாவே உன் பட்டணங்களின் இலக்கமும், * உன் தேவர்களின் இலக்கமுஞ்சரி, எருசலேமுடைய வீதிகளின் இலக்கமும், நீங்கள் பாகாலுக்குத் தூபங்காட்டுவதற்காக இலச்சைக்குத் தாபித்த பீடங்களின் இலக்கமுஞ்சரி. * ஓசேயா. ௰, ௧. ௰௨. அதி. ௰௨.

௰௪. ஆனதுகொண்டு * நீ இந்த ஜனத்துக்காக விண்ணப்பம்பண்ணாமலும், அவர்களுக்காகக் கூப்பிடுதலும், கெஞ்சுதலுஞ் செய்யாமலுமிருப்பாயாக. ஏனெனில், அவர்கள் தங்கள் தீங்கின் நிமித்தமாய் நம்மை நோக்கிக் கூப்பிடுங்காலத்திலே நாம் அவர்களைக் கேளாதிருப்போம். * ௭, ௰௬. ௰௪, ௰௧.

௰௫. வல்லவர்களால் மகா தீவினை செய்யப்படுகையில் நம்முடைய நேசருக்கு நமது வீட்டிலென்ன இருக்கிறது? பரிசுத்த மாம்சத்தையுன்னைவிட்டுத் தாண்டப்பண்ணுவார்கள், உன் பொல்லாப்பு நடக்கும்போது நீ களிகூருகிறாயே.

௰௬. அலங்காரக்கனியுண்டாயிருக்கிற தேர்த்தியும், பச்சையுமான ஒலிவமரமென்கிற பேரைக் கர்த்தருனக்கிட்டார். ஆனால் மகா அமளியின் சத்தமாய் அதைச் சுற்றிலும் நெருப்பைக் கொளுத்துகிறார், அதின் கொம்புகள் முறிக்கப்படும்.

௰௭. ஏனென்றால் பாகாலுக்குத் தூபங்காட்டுகிறதினாலே நமக்குக் கோபமுண்டாக்க இஸ்ரவேல் வீட்டாரும், யூதாவின் வீட்டாரும் தங்களுக்குக் கேடாகச் செய்த பொல்லாப்பின் நிமித்தம் உன்மேலே தீங்கை வரப்பண்ணுவோமென்று உன்னை நாட்டின சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮. அதைக் கர்த்தரெனக்கறிவித்ததினாலே அறிந்தேன், அவர்களுடைய செய்கைகளை அப்போதெனக்குத் தெரியக்காட்டினார்.

௰௯. என்னவெனில், நான் அடிக்கப்படுவதற்குக் கொண்டுபோகப்படுஞ் சாதுவான ஆட்டைப்போலிருக்கிறவன். மரத்தை அதின் கனியோடுங்கூட அழிக்கக்கடவோமென்றும், அவன் ஜீவனுள்ளோருடைய தேசத்திலிராமலும், அவன் பேர் இனி நினைக்கப்படாமலும்போக அவனைச் சங்கரிக்கக்கடவோமென்றும், எனக்கு விரோதமாய் யோசனைகளை யோசித்தார்களென்கிறதை யறியாதிருந்தேன்.

௨௰. ஆனால் சேனைகளின் கர்த்தாவே, * உள்ளிந்திரியங்களையும், இருதயத்தையுஞ் சோதித்தறிகிற நீதியுள்ள நியாயாதிபதியே, நீர் அவர்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறதைப் பார்ப்பேனாக. ஏனெனில், என் வழக்கையுமக்கு வெளிப்படுத்திவிட்டேனென்றேன். * சங்கீ. ௭, ௰.

௨௰௧. ஆனதுகொண்டு நீ எங்கள் கையினாலே சாகாதபடிக்குக் கர்த்தருடைய நாமத்தினாலே தீர்க்கதரிசனஞ் சொல்லாதிருவென்று சொல்லி உன் பிராணனை வாங்கத்தேடுகிற ஆனதோத்தின் மனுஷரைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது;

௨௰௨. இதோ, இதுநிமித்தமாய் அவர்களை விசாரிப்போம், இளவயதுள்ள மனுஷர் பட்டயத்தாலே சாவார்கள், அவர்கள் குமாரரும், அவர்கள் குமாரத்திகளும் பஞ்சத்தாலே சாவார்கள்.

௨௰௩. அவர்களில் மீதியாயிருப்பவர்களில்லை. ஏனெனில், நாம் ஆனதோத்தின் மனுஷரை விசாரிக்கும் வருஷத்திலே அவர்கள்மேலே தீங்கை வரப்பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) எரேமியா துன்மார்க்கருடைய சுகசெல்வத்தைக்குறித்து முறையிட்டு விசுவா

சமாய் அவர்களுடைய நாசத்தைப்பார்த்தது. (௫) பராபரன் அவனுக்கு விரோதயாக வஞ்சனைசெய்த அவனுடைய சகோதரரைக் குறித்து எச்சரித்ததும், (௭) தமது சுதந்தரத்தைக்குறித்து மனஸ்தாபப்பட்டதும், (௰௪) குணப்பட்டவர்களுக்குச் சிறையிருப்பு நீங்க வாக்குத்தத்தம்பண்ணினது.]

**க**ர்த்தாவே, உம்மோடே நான் வழக்காடப்போனால் தேவரீர் நீதியுள்ளவராமே, ஆகிலும் நியாயங்களைக்குறித்து உம்மோடே நான் பேசிக்கொள்ளட்டும், * ஆகாதவர்களின் வழிவாய்த்து, துரோகஞ்செய்து வருகிற அனைவரும் சுகிக்கிறதென்ன?

* யோபு. ௨௧, ௭—௰௫. சங. ௭௩, ௩—௰௨.

௨. அவர்களை நாட்டினீர், வேரும்பற்றித் தேறிப்போனார்கள், கனியுங்கொடுக்கிறார்கள், அவர்கள் வாயிலே நீர் சமீபமும், அவர்கள் உள்ளிந்திரியங்களுக்கோ நீர் தூரமுமானவர்.

௩. ஆனால் கர்த்தாவே, தேவரீர் என்னையறிந்திருக்கிறீர், என்னைக்காணுகிறீர், என் இருதயம் உமக்குமுன்பாக எப்படிக்கொத்ததென்று சோதித்தறிகிறீர், அவர்களையடிக்கப்படும் ஆடுகளைப்போலே பிடுங்கிப்போட்டு, கொலைநாளுக்கு நேமியும்.

௪. எந்தமட்டும் தேசம் புலம்பி எல்லாவெளியின் புலனும் வாடி அதின் குடிகளுடைய பொல்லாப்பின் நிமித்தம் மிருகங்களும், பறவைகளும் அழியவேணும். ஏனெனில், எங்கள் கடைசிமுடிவை அவன் காணப்போகிறதில்லையென்கிறார்கள்.

௫. நீ காலாள்களோடே ஓடுகையில் உன்னை இளைக்கப்பண்ணினார்களானால் குதிரைகளோடே எப்படிக் கலந்தோடுவாய்! சமாதானமிருக்கிற தேசத்திலே நீ அடைக்கலந்தேடினால் யோர்தான் பொங்கும்புகிற மேட்டிமையிலென்னமாயிருப்பாய்?

௬. ஏனெனில், உன் சகோதரரும், உன் தகப்பன்வீட்டாரும் முதலாய் உனக்குத் துரோகம்பண்ணி அவர்களுங்கூட உனக்குப்பின்னாக மிகவுங்கூப்பிடுகிறார்கள், அவர்கள் உன்னோடே நல்ல விசேஷங்களாய்ப்பேசும்போது அவர்களை நம்பாயாக.

௭. நமது வீட்டைவிட்டுவிடுகிறோம், நம்முடைய ஆத்துமா நேசித்ததை அதினுடைய சத்துருவின் கையிலே கொடுக்கிறோம்.

௮. நமது சுதந்தரம் நமக்குக் காட்டிலே சிங்கத்துக்குச் சரியானது, அது நமக்கு விரோதமாய்த் தன் சத்தத்தைக் காட்டுகிறது. ஆனபடியினால் அதைப் பகைத்திருக்கிறோம்.

௯. நமது சுதந்தரம் நமக்குப் பலவர்ணமான உராஞ்சுகிற பட்சி. ஆகையால், உராஞ்சுகிற பட்சிகள் அதைச் சுற்றிலும் வருவதாக, வெளியினுடைய சகல ஜீவன்களே, அதைப் பட்சிக்கக்கூடிவாருங்கள்.

௰. * அநேக மேய்ப்பர்கள் நமது திராட்சத்தோட்டத்தையழித்து நம்முடைய விருப்பமான வீதத்தைப் பாழான வனாந்தரமாக்குகிறார்கள்.

* ௬, அதி. ௩.

௰௧. அதைப் பாழாக்கிவிட்டார்கள், பாழாய்க்கிடக்கிற அது நம்மை நோக்கித் துக்கிக்கிறது, தேசமெல்லாம் பாழாம். ஏனெனில், ஒருவனும் இதை மனதிலே வைக்கிறதில்லை.

௰௨. வனாந்தரத்திலுள்ள எல்லா உயர்நிலங்களின்மேலும் பாழ்க்கடிக்கிறவர்கள் வருகிறார்கள். ஏனெனில், கர்த்தருடைய பட்டயம் ஒருதேசமுனை துவக்கி மறுதேசமுனைமட்டும் பட்சித்துக்கொண்டிருக்கும், ஒரு மாம்சத்துக்கும் சமாதானமில்லை.

௰௩. * கோதுமையை விதைத்தார்கள், முள்ளுகளையறுப்பார்கள், ஒன்றுக்குமுதவாமல் உழன்றலுக்கிறார்கள். ஆகையாலே கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்தினாலுங்களுக்கு வரும் வரத்துக்காக வெட்கப்படுங்கள். * ஓசே. ௮, ௭.

௰௪. இதோ, நாம் நமது சனமாகிய இஸ்ரவேலுக்குக் காணியாட்சியாகக் கொடுத்த நம்முடைய சுதந்தரத்தைத் தொடுகிற நம்முடைய பொல்லாத அயலார் அனைவரையும் தங்கள் தேசத்திலிராதபடிக்குப் பிடுங்கிப்போடுவோமென்று கர்த்தர் அவர்களைக்குறித்துச் சொல்லுகிறார், யூதாவீட்டாரையும் அவர்கள் நடுவிலிராதபடிக்குப் பிடுங்கிப்போடுவோம்.

௰௫. அவர்களை நாம் பிடுங்கிப்போட்டபிறபாடு சமபவிப்பதேதென்றால், நாம் திரும்ப அவர்கள்மேலிரங்கி அவர்கள் தங்கள் சுதந்தரத்துக்குத் தங்கள் தங்கள் தேசத்துக்குத் திரும்பப்பண்ணுவோம்.

௰௬. அப்புறஞ் சமபவிப்பதாவது; அவர்கள் நம்முடைய சனத்துக்குப் பாகாலின்மேலே ஆணையிடக் கற்றுக்கொடுத்ததுபோலே கர்த்தருடைய ஜீவனைக்கொண்டென்று, * நம்முடைய நாமத்தின்மேலே ஆணையிடும்படியாக நம்முடைய சனத்தின் வழிகளை நன்றாய்க்கற்றுக்கொண்டால் அவர்கள் நம்முடைய சனத்தின் நடுவிலே புனர்நகட்டப்படுவார்கள். * ௪, ௨. ௫. மோசே. ௬, ௰௬.

௰௭. கேளார்களேயாகில் நாம் அப்படிக்கொத்தசாதியைப் பிடுங்கவே பிடுங்கிப்போட்டழிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) ஐப்பிராத்து நதியிலே ஒளித்துவைத்த சணற் கச்சையின் அடையாளத்தினாலே பராபரன் தமது சனத்தின் அழிவைக்காட்டினது. (௰௨) திராட்சரசத்தினால் நிரப்பப்பட்டபுட்டிகளின் உவமையினாலே அவர்கள் சிறுமையில் வெறிகொள்வதைமுன

ளூடி யுரைத்தது. (௰௫) அவர்கள் மேல் இனிவரும் நியாயத்தீர்ப்புகளை விலக்கிக் கொள்வதற்குத் தூண்டினது. (௨௨) அவற்றிற்கு அவர்களுடைய அருவருப்பே காரணமென்று காட்டினது.]

கர்த்தரென்னுடனே சொன்னதாவது; நீ போய் உனக்கொரு சணல் கச்சையைக் கொண்டு அதை யுன் அரையிலே கட்டிக் கொள். ஆனால் அதைத் தண்ணீரிலே படவொட்டாதேயென்றார்.

௨. அப்பொழுது நான் கர்த்தருடைய வார்த்தையின்படியே கச்சையைக் கொண்டு அதையென் அரையிலே கட்டிக்கொண்டேன்.

௩. இரண்டாம்விசை கர்த்தருடைய வார்த்தையெனக்கு உண்டாகி அவர் சொன்னதாவது;

௪. நீ கொண்டதும், உன் அரையிலிருக்கிறதுமான கச்சையை நீ யெடுத்துக்கொண்டு எழுந்து ஐப்பிராத்து நதிமட்டும் போய் அதையங்கே ஒரு கன்மலைவெடிப்பிலே ஒளித்து வையென்றார்.

௫. அப்பொழுது நான் போய்க் கர்த்தரெனக்குக் கற்பித்தபடியே அதை ஐப்பிராத்து நதியோரத்திலே ஒளித்து வைத்தேன்.

௬. அப்புறஞ் சம்பவித்ததேதெனில், அநேக நாள் சென்றபிற்பாடு கர்த்தரென்னுடனே சொன்னதாவது; நீயெழுந்து ஐப்பிராத்து நதிக்குப் போய் நீ யங்கே யொளித்து வைக்க நானுனக்குக் கற்பித்த கச்சையை அவ்விடத்திலெடுத்துக்கொள்ளென்றார்.

௭. அப்பொழுது நான் ஐப்பிராத்து நதிக்குப் போய் நான் கச்சையையொளித்து வைத்த இடத்திலே தோண்டி அதையெடுத்துக் கொண்டேன். ஆனால் இதோ அந்தக் கச்சை கெட்டு ஒன்றுக்குமாகாதே போனது.

௮. அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௯. இப்படியே யூதாவுடைய பெருமையையும், எருசலேமுடைய மிகுபெருமையையுங் கெட்டுப்போகப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰. நம்முடைய வார்த்தைகளைக் கேட்கமாட்டோமென்கிறதும், * தங்களிருதயத்தின் கடினத்திலே நடக்கிறதும், வேற்றுத் தேவர்களைச் சேவிக்கவும், பணிந்துகொள்ளவும் பின்தொடருகிறதுமான இந்தப் பொல்லாத சனம் ஒன்றுக்குமாகாதே போன இந்தக் கச்சையைப்போலாகும். * ௯, ௰௨.

௰௧. ஏனென்றால், கச்சை மனுஷனுடைய அரைக்குச் சேர்க்கையாயிருக்கிறதுபோலே நாம் இஸ்ரவேல் வீட்டாரனைத்தையும், யூதாவின் வீட்டாரனைத்தையும் நமக்குச் சனமாகவும், கீர்த்தியாகவும், துதியாகவும், சிங்காரமாகவும் நமக்குச் சேர்க்கையாக்கிக்கொண்டோம். ஆனால் அவர்கள் கேளாதே போனார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௨. சகல சாடிகளும் மதுவினாலே நிரப்பப்படுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறாரென்கிற வார்த்தையையவர்களுடனே சொல்லு. அதற்கவர்கள் சகல சாடிகளும் மதுவினாலே நிரப்பப்படுமென்பதை யறியவே யறியோமோவென்று உன்னுடனே சொல்லுவார்கள்.

௰௩. அப்பொழுது நீயவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தருரைக்கிறதேதெனில், இதோ இந்தத் தேசத்தின் குடிகளெல்லாரையும், தாவீதுடைய ஆசனத்தின்மேலே உட்காந்திருக்கிற இராசாக்களையும், ஆசாரியர்களையும், தீர்க்கதரிசிகளையும், எருசலேமின் குடிகளெல்லாரையும் நாம் வெறியினாலே நிரப்பி,

௰௪. அவர்களைச் சகோதரரோடே சகோதரரையும், பிதாக்களைப் பிள்ளைகளோடேகமாக வுந்நொறுங்கடிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். நாம் அவர்களை யழிக்காதபடிக்கு மன்னிப்பதுமில்லை. தப்பவிடுவதுமில்லை. இரங்குவதுமில்லையென்று சொல்லென்றார்.

௰௫. நீங்கள் கேட்டுச் செவிகொடுங்கள், மேட்டிமையாயிராதேயுங்கள். ஏனென்றால், கர்த்தர் இதைச் சொன்னார்.

௰௬. அவர் அந்தகாரத்தை வரப்பண்ணுகிறதற்கு முன்னும், இருளுள்ள மலைகளிலே உங்கள் கால்கள் இடறுகிறதற்கு முன்னும் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு மகிமையைச் செலுத்துங்கள். மற்றப்படிக்கு * வெளிச்சத்துக்குக் காத்திருப்பீர்கள். ஆனால் அவர் அதை மரணநிழலாக்கி அந்தகாரப்படுத்திவிடுவார். * ஏசாயா. ௫௯, ௯.

௰௭. நீங்கள் இதைக் கேளாமற்போனீர்களேயாகில் என்னாத்துமா ஒளிப்பிடங்களிலே உங்கள் பெருமையினிமித்தம் அழுதுகொண்டு கர்த்தருடைய மந்தை சிறைப்பட்டுப் போனதென்று * என் கண் மிகவுங் கண்ணீர் விட்டுக் கண்ணீராயோடும். * ௮, ௨௧. ௰௪, அதி. ௰௭.

௰௮. தாழ உட்காருங்கள். ஏனெனில், * உங்கள் தலைகளின் சிங்காரமாகிய உங்கள் மகிமையின் கிரீடம் விழுந்ததென்று இராசாவுக்கும், இராசாத்திக்கும் நீ சொல்லு. * புலம்பல். ௫, ௰௬.

௰௯. தெற்குத்திசைப்பட்டணங்கள் அடைக்கப்பட்டன. அவைகளைத் திறப்பாரில்லை. யூதாவனைத்துங் குடி விலக்கப்பட்டுப் போம். அது சமூலமாயெடுபட்டுப்போம்.

௨௰. உங்கள் கண்களையேறெடுத்து வடக்கேயிருந்து வருகிறவர்களைப் பாருங்கள். உனக்குக் கொடுக்கப்பட்டிருந்த மந்தையும், உன் மகிமையான ஆட்டுக்கிடாவும் எங்கே?

௨௧. அவர் உன்னை விசாரிக்கும்போது என்ன

ன் சொல்லுவாய்! அவர்கள் உன்மேல் ஆதிக்கரும், தலைவருமாயிருக்க நீயவர்களைப் பழக்குவித்தாயே. * பிள்ளைபெறுகிறவர்களைப் போலே உன்னை வேதனைகள் பிடிப்பதில்லையோ! * ௬, அதி. ௨௪. ௨௨, அதி. ௨௩.

௨௨. இவைகள் என்மேல் நேரிட்டதேதென்று நீ யுன்னிருதயத்திலே சொன்னாயேயாகில் உன்னுடைய திரளான அக்கிரமத்தின் நிமித்தமே உன் வஸ்திரத்தோரங்கள் விலக்கப்பட்டு உன் குதிகால்கள் பலவந்தஞ்செய்யப்படுகின்றன.

௨௩. * எத்தியோப்பியன் தன் தோலையும், சிவிங்கி தன் புள்ளிகளையுமாற்றிவிடக்கூடுமோ! கூடுமானாற்பொல்லாப்புக்குப்பழகின நீங்களும் நன்மைசெய்யக்கூடும். * சங். ௫௫, ௨௰.

௨௪. ஆனதுகொண்டு * வனாந்தரக்காற்றால் அடிபட்டுப்பறக்கிற துரும்பைப்போலே அவர்களைச்சிதறவடிப்போம். * சங். ௧, ௪.

௨௫. நீ நம்மை மறந்து பொய்யை நம்பின படியினாலே இது உன்னுடைய வீதமும், நம்மால் உனக்களக்கப்பட்ட உன்னுடைய பங்குமாயிருக்குமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௬. நாமும் உன் வஸ்திரத்தோரங்களை யுன் முகத்தின்மேல் விழத்தக்கவிதமாயெடுத்துப்போடுவோம்.

௨௭. அப்போது உன்விபசாரங்களும், உன் கனைக்குதல்களும், வெளியிலே மேடுகளின் மேல் நீ பண்ணின வேசித்தனத்தின்தோஷமுமென்கிற உன்னுடைய அபிமானங் காணப்படும் உன் அருவருப்புகளை நாம் கண்டோம், எருசலேமே, உனக்கு ஐயோ, நீ சுத்திகரித்துக்கொள்வதில்லையோ! இது இன்னமெத்தனைகாலத்துக்குப் பிறபாடாகுமென்கிறார்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) தண்பத்துக்கேதுவாகிய பஞ்சத்தினிமித்தம் (௭) எரேமியாமன்றாடினது. (௰) சனத்துக்காக வேண்டுதலைக் கர்த்தர்விரும்பாதொன்பது. (௰௩) கள்ளத்தீர்க்கதரிசிகளால் மோசம்போன சனத்திறகுப்போக்கில்லையென்பது. (௰௭) எரேமியா அவர்களுக்காகமுறையிடவேப்பட்டது.]

**வ**ற்பகாலத்தைக்குறித்து எரேமியாவுக்குண்டான கர்த்தருடையவசனம்.

௨. யூதா துக்கித்து அதின் வாசல்கள் பெலனற்றுக்கிடக்கின்றன. தரைமட்டுங்குனிந்து கருகறுத்துத் திரிகிறார்கள். எருசலேமின் கூக்குரலெழும்புகிறது.

௩. அவர்களிற் பிரபலமானவர்கள் தங்கள் சிறியவர்களைத் தண்ணீருக்கனுப்புகிறார்கள், இவர்கள் பள்ளங்களுக்குவந்து தண்ணீரைக் காணாமல் தங்கள் வெறும்பாத்திரங்களோடே திரும்பிவருகிறார்கள். வெட்கி நாணித் தங்கள் தலையை மூடிக்கொள்ளுகிறார்கள்.

௪. ஏனெனில், தேசத்தின்மேல் மழையில்லாததினாலே தரைவெடித்திருக்கிறது. பயிர்செய்கிறவர்கள் வெட்கித் தங்கள் தலையை மூடிக்கொள்ளுகிறார்கள்.

௫. ஏனென்றால், வெளியின் பெண்மானும் குட்டிபோட்டுப் புல்லும்முளைக்காததினாலே அவைகளை விட்டுப்போகும்.

௬. காட்டுக் கழுதைகள் உயர்ந்த நிலங்களிலே நின்று முதலைகளைப்போலே காற்றை யுட்கொள்ளுகின்றன. புல்லில்லாததினாலே அவைகளுடைய கண்கள் பூத்துப்போகின்றனவென்றார்.

௭. கர்த்தாவே, * எங்கள் அக்கிரமங்கள் எங்களுக்கு விரோதமாக உத்தரவுசொன்னாலும் உம்முடைய நாமத்தின் நிமித்தங்கிருபைசெய்யும். ஏனெனில், எங்கள் மாறுபாடுகள் திரளாயிருக்கின்றன. உமக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்தோம். * ௨, ௰௯.

௮. இஸ்ரவேலின் நம்பிக்கையே, இக்கட்டின்காலத்தில் அதின் இரட்சகரே, நீர் தேசத்திற் பரதேசியைப்போலவும், இராத்தங்க இறங்குகிற வழிப்போக்கனைப்போலவுமிருப்பானேன்!

௯. நீர் விடாயத்துப்போன புருஷனைப்போலவும், இரட்சிக்கமாட்டாத பராக்கிரமனைப்போலவுமிருப்பானேன்! கர்த்தாவே, தேவரீரெங்கள் நடுவிலிருக்கிறவராமே * உம்முடைய நாமமெங்களுக்குத் தரிக்கப்பட்டுமிருக்கிறதே. எங்களைவிட்டுப்போகாதேயும். * ௰௫, ௰௬.

௰. அவர்கள் தங்கள் கால்களையடக்கிக்கொள்ளாமல் அலையவிரும்புகிறார்களென்று கர்த்தர் இந்தச் சனத்தைக்குறித்துச்சொல்லுகிறார். ஆகையால் கர்த்தர் அவர்கள்மேல் பிரியமாயிராமல் இப்போதவர்கள் அக்கிரமத்தை நினைத்து அவர்கள் பாவங்களைவிசாரிப்பார்.

௰௧. கர்த்தரென்னுடனே சொன்னதாவது; * நீ இந்தச்சனத்துக்காக நன்மைக்கென்று விண்ணப்பம்பண்ணாயாக. * ௭, அதி. ௰௬. ௰௧, ௰௪.

௰௨. * அவர்கள் உபவாசித்தாலும், நாம் அவர்கள் கூப்பிடுதலைக் கேட்பதில்லை. † அவர்கள் தகனபலிகளையும், காணிக்கைகளையுஞ் செலுத்தினாலும் நாம் அவர்கள்மேலே பிரியமாயிருப்பதில்லை. பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் நாம் அவர்களை நிர்மூலமாக்குவோமென்றார். * ஏசாயா. ௫௮, ௩. † ௬, அதி. ௨௰. ஏசா ௧, ௰௧.

௰௩. அப்போது நான் ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, நீங்கள் பட்டயத்தைக் காண்பதில்லை. உங்களுக்குப் பஞ்சம் வருவதில்லை. * உறுதியான சமாதானத்தை இவ்விடத்திலுங்களுக்குத் தருவோமென்று

றென்று தீர்க்கதரிசிகள் அவர்களுக்குச் சொல்லுகிறார்களென்றேன். * ௬, அதி. ௰௩. ௰௪.

௰௪. அப்பொழுது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது; தீர்க்கதரிசிகள் * நம்முடைய நாமத்தைக்கொண்டு பொய்யாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறார்கள். நாம் அவர்களையனுப்பினதுமில்லை. அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை. அவர்களோடே பேசினதுமில்லை. அவர்கள் கள்ளத்தரிசனத்தையும், நிமித்தத்தையும், எல்லாவிசேஷத்தையும், தங்களிருதயத்தின் கபடத்தையுமே உங்களுக்குத் தீர்க்கதரிசனமாகச் சொல்லுகிறார்கள்.
* ௨௩, அதி. ௨௧. ௨௭, அதி. ௰௫. ௨௯, அதி. ௮. ௯. மத்தே. ௭, ௰௫.

௰௫. ஆனதுகொண்டு நாம் அனுப்பாதிருந்தும் நமது நாமத்தைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்சொல்லி இந்தத்தேசத்திலே பட்டயமும், பஞ்சமும் வருவதில்லையென்கிற தீர்க்கதரிசிகளைக்குறித்துக் கர்த்தருரைக்கிறதாவது; பட்டயத்தாலும், பஞ்சத்தாலும் இப்படிக்கொத்த தீர்க்கதரிசிகள் சாவார்கள்.

௰௬. அவர்கள் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற சனமோவெனில் எருசலேமின் வீதிகளிலே பட்டயத்தாலும், பஞ்சத்தாலும் அழிந்து அவர்களும், அவர்கள் பெண்சாதிகளும், அவர்கள் குமாரரும், அவர்கள் குமாரத்திகளும் அடக்கம்பண்ணுவாரில்லாமற் கிடப்பார்கள், அவர்களுடைய பொல்லாப்பை யவர்கள்மேல் ஊற்றிவிடுவோம்.

௰௭. இந்த வார்த்தையை யவர்களுக்குச் சொல்லுவாயாகவென்றார். * என் கண்கள் ஓயாமலிரவும், பகலுங் கண்ணீராயோடிக்கொண்டிருக்கும். ஏனெனில், என் சனமென்ற குமாரத்தியாகிய கன்னியாஸ்திரீ பெரிய நொறுங்குதலாலும், மகா வேதனையுள்ள அடியினாலும் நொறுங்கப்பட்டிருக்கிறாள். * ௮, ௨௧. ௰௩, ௰௭.

௰௮. வெளியேபோனேனாகில் இதோ பட்டயத்தாற்கொன்றுவிடப்பட்டவர்கள் பட்டணத்தில்வந்தேனேயாகில் இதோ பஞ்சத்தாலே தொய்ந்தவர்கள் அதேனென்றால், தீர்க்கதரிசிகளும். ஆசாரியர்களும் ஒன்றும் அறியாமலே தேசத்தில் அலைகிறார்கள்.

௰௯. யூதாவை வெறுக்கவே வெறுத்தீரோ? சீயோன் உம்முடைய ஆத்துமாவுக்கு அரோசிகமானதோ? நாங்கள் ஆரோக்கியமடையக்கூடாதபடியா யெங்களை யேன் அடித்தீர்? * சமாதானத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் நன்மையில்லை. ஆரோக்கியகாலத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் இதோ கெடி.

௨௰. கர்த்தாவே, * எங்கள் ஆகாமியத்தையும், எங்கள் பிதாக்களின் அக்கிரமத்தையும் அறிந்திருக்கிறோம். ஏனெனில், உமக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்தோம்.
* சங்கீ. ௱௬, ௬. தானியேல். ௯, ௮.

௨௧. உம்முடைய நாமத்தின் நிமித்தமாய் எங்களை யருவருக்காதிருப்பீராக உம்முடைய மகிமையின் ஆசனத்தையீனப்படுத்தீராக, எங்களோடே உமக்கிருக்கிற உடன்படிக்கையை யவத்தமாக்காதபடியாய் நினைத்தருளும்.

௨௨. புறசசாதிகளுடைய வீண் தேவர்களில் வருஷிக்கப்பண்ணத் தக்கவர்களுண்டோ? அல்லது வானங்கள் தானும் மழைகளைக் கொடுக்குமோ? எங்கள் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற தேவரீரல்லவோ அதைச் செய்கிறவர், ஆகையால் உமக்குக் காத்திருக்கிறோம். ஏனெனில் * தேவரீரிவைகளையெல்லாமுண்டுபண்ணினீர். * ரு, அதி. ௨௪. ௰, அதி. ௰௩. சங்கீ. ௱௩௫, ௭. ௱௪௭, ௮.

## ௰௫. அதிகாரம்.

[(௧) யூதருடைய முற்றிலும் நீக்கலும், அபரிமிதமான நியாயத்தீர்ப்புகளும், (௰) எரேமியா அவர்களைக்குறித்து முறையிட்டுத் தனக்காகவாக்குத்தத்தத்தையும், (௰௨) அவர்களுக்காகப் பயமுறுத்தலையும் பெற்றது. (௰௫) அவன் செபம்பண்ணி, (௰௯) கிருபையுள்ள வாக்குத்தத்தத்தைப்பெற்றுக் கொண்டது.]

கர்த்தரென்னுடனே சொன்னதாவது; * மோசேயும், சாமுவேலும் நம்முடைய முகத்துக்கு முன்பாக நின்றாலும் நம்முடைய ஆத்துமா இந்தச்சனத்தைநோக்குகிறதில்லை, இவர்கள் நம்முடைய முகத்தை விட்டுப் புறப்பட்டுப்போகும்படிக்கவர்களைத் துரத்திவிடும். * ௯௯, சங்கீ. ௬.

௨. எங்கே புறப்பட்டுப்போவோமென்றவர்கள் உன்னைக்கேட்பதுண்டானால் நீயவர்களுடனே, * சாவுக்கேதுவானவர்கள் சாவுக்கும், பட்டயத்துக்கேதுவானவர்கள் பட்டயத்துக்கும், பஞ்சத்துக்கேதுவானவர்கள் பஞ்சத்துக்கும், சிறையிருப்புக்கேதுவானவர்கள் சிறையிருப்புக்கும் நேராகத்தானேயென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்வாயாக. * சகரி. ௰௧, ௯.

௩. கொன்றுபோடும்பட்டயமும், பிடித்திழுக்கும்நாய்களும் பட்சிப்பதும், அழிப்பதுமான ஆகாசத்துப்பறவைகளும், பூமியின் மிருகங்களுமென்கிற நாலுவிதமான தீங்குகளை நாம் அவர்கள்மேலே கட்டளையிடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪. எசேக்கியாவின் குமாரனும், யூதாவின் இராசாவுமாகிய * மனாசே எருசலேமிலே செய்ததின் நிமித்தமாக அவர்களைப்பூமியிலுள்ள எல்லா இராச்சியங்களிலும் அலையப்பண்ணுவோம். * ௨. இராசா. ௨௧, ௰௧. ௨௩, ௨௬. ௨. நாளாக. ௩௩, ௯.

௫. ஏனெனில், எருசலேமே, ஆர் உன்மேலிரங்கலாம்? ஆர் உன்மேலே பரிதபிக்கலா

ம! ஆருனனன்டைக்குததிரும்பி உனசுகத தூககாக விசாரிககலாம!

௬. நீ நமமைவிட்டுப பினவாங்கிப போனாய. ஆகையால், நமதுகையை யுனக்குவிரோதமாயநீட்டியுனனையழிப்போம, இளைய செய்ய விதனப்பட்டோமெனறு கர்ததர் சொலலுகிறார்.

௭. தேசத்தின வாசலகளில அவர்களைத * தூற்றுக் கூடையாலே தூற்றிப்போடுவோம, நமமுடையசனஙகள வழிகளைவிட்டுத திரும்பாதபடியினாலே நாம அவர்களைப பிளளைகளறறவர்களாக்கியழிப்போம.
* மத. ௩, ௰௨.

௮. கடற்கரைமணலைப்பார்ககிலும அதிகவிதவைகள நமக்கவர்களிலுண்டாவார்கள, பட்டப்பகலிலே பாழ்ககடிக்கிறவனை யவர்கள்மேலே வாலிபருடையதாயினமேலுந தானேவரப்பண்ணுவோம, அவளமேலே பட்டணத்தின கலகத்தையும, பயஙகரஙகளையும விழப்பண்ணுவோம்.

௯. ஏழுபிளளைகளைப்பெற்றவள களைத்துப போகிறாள, அவள ஆத்துமாபோயவிடும. இனனம பகலாயிருக்கையில அவளுடைய சூரியன அஸ்தமித்துப்போகிறது, வெட்கமுமு, இலச்சையுமடைகிறாள, அவர்களில மீதியாகிறவர்களையோ அவர்களுடையசத்துருககளுக்குமுனபாகப பட்டயத்துக்கொப்புக்கொடுப்போமெனறு கர்ததர்சொலலுகிறார். * ஆமோ. ௮, ௯.

௰. என தாயாரேதேசத்துக்கெலலாம வழக்குக்கும, வாதுக்கும வைககப்பட்ட எனனை நீர்பெறறதினாலே எனக்கு ஐயோ, நான வட்டிக்குக் கொடுத்ததுமிலலை, அவர்கள எனக்கு வட்டிககுககொடுத்ததுமிலலை,என்றாலும எலலாரும எனனைச்சபிக்கிறார்கள. * உ௰, ௰௪. மு

௰௧. கர்ததர்சொனனதாவது; உனனில மீதியாயிருபபவர்கள நனமைக்குவைககப்படுவார்கள, தீஙகினகாலத்திலும, நெருக்கத்தினகாலத்திலுமஉனக்காகநாமசத்துருவுக்கெதிர்ப்பட்டுஉனக்குச்சகாயம்பணணுவோமெனறு மெயயாகவேசொலலுகிறேம.

௰௨. வடக்கேயிருந்துவரும இருமபையும, வெண்கலத்தையுமஇருமபுநொறுக்குமோ?

௰௩. உனனுடைய எலலாப பாவஙகளின நிமித்தமும நாமுனனுடைய எலலா எலலைகளிலும உன ஆஸ்தியையும, உனபொக்கிசங்களையுங கிரயமிலலாமல * கொளளைவிடுவோம. * ௰௭, ௩.

௰௪. நாமுனனை நீ யறியாததேசத்திலுன சத்துருககள வசமாககத தாணடிப்போகப பணணுவோம். ஏனெனில, உஙகளமேலெரியப்போகிற அககினி * நமதுகோபத்தினாலே மூணடதெனறார். * ௫. யோசே. ௩௨, உஉ.

௰௫. கர்ததாவே தேவரீர் அதை அறிவீர், தேவரீரெனனைநினைத்து எனக்குநேரிடடுஎனனைத்துனபப்படுத்துகிறவர்களுககு எனநிமித்தம நீதியைச்சரிக்கட்டும, உமமுடைய நீடியகோபத்திலெனனை வாரிககொளளாதையும, நான உமமுடைய நிமித்தம நிந்தையைச் சுமக்கிறேனெனறறியும.

௰௬. உமமுடையவார்த்தைகள கிடைத்தவுடனேஅவைகளைஉட்கொணடேன, * உமமுடையவார்த்தைகள எனக்குச்சநதோஷமும, என்னிருதயத்துககு மகிழ்ச்சியுமான வை. ஏனெனில் சேனைகளின பராபரனாகிய கர்ததாவே, உமமுடையநாமம் எனக்குத தரிப்பிக்கப்பட்டதே. * சங். ௰௯, அ. ௱௰௯, ௱௩.

௰௭. * நானபரியாசக்காரருடைய ஆலோசனையில உளுக்காந்து களிகூர்ந்ததிலலை, உமமுடைய கையின நிமித்தந தனித்திருக்கிறேன. ஏனெனில் கினத்தால எனனை நிரப்பினீர். * சங். க, க.

௰௮. எனனோவு நித்தியகாலமாகவும, என னுடையகாயம ஆறாதகேவலமாகவுமிருப்பானேன்? எனக்குநீர்பிசகுளளவனைப்போலவும, நிசமிலலாத தணணீரைப்போலவுமிருப்பீரோ!

௰௯. இதினிமித்தங கர்த்தர் சொலலுகிறதாவது; நீதிருமபினாலநாமுனனைத்திருமபச்சேர்ப்பித்துக்கொளவோம, நமதுமுகத்துக்குமுனபாக நிலைத்துமிருப்பாய, விலையேறப்பெறறதை நீ தீழ்ப்பானதைவிட்டுப்பிரித்தால நமமுடையவாயைப்போலிருப்பாய, நீ யவர்களண்டைக்குத்திரும்பாமல அவர்களஉனனண்டைக்குத் திரும்புவார்களாக.

உ௰. ஏனெனில், உனனை இநதச்சனத்துக்கெதிரே * அரணான வெண்கலஅலஙகமாக்குகிறேம, அவர்கள உனக்குவிரோதமாய யுத்தமபணணுவார்கள, ஆனால உனனை மேற்கொளளாதேயிருப்பார்கள. ஏனெனில, உனனைஇரட்சிப்பதற்காகவும, உனனைத தப்புவிப்பதற்காகவும நாமுனனுடனே யிருக்கிறேமெனறு கர்ததர்சொலலுகிறார். * க, ௰௮.

உ௧. நாம உனனைப பொலலாதவர்களின கைக்குத தப்புவித்து உனனைப பெலவந்தரினகைப்பிடிக்கு நீஙகலாக்கி விடுவிப்போமெனறார்.

## ௰௬. அதிகாரம்.

[(க) தீர்க்கதரிசி விவாகத்தையும, துக்கப்பூம் வீருநதுமுளள வீடுகளையும விலக்குவதின அடையாளஙகளினாலே, (௰) யூதர்கள தஙகளபிதாககளைவிட அதிகக்கெட்டுபோனவர்களாயிருந்தமையால அவர்கள முழுநாசமடைவதைக்காட்டினது. (௰௪) அவர்கள சிறையிருப்பிலிருநது திருமபிவருவது

எகிப்திலிருந்து விடுதலையாக்கப்பட்டதை விட அதிக வியப்பாயிருக்குமென்பது. (௰௬) பராபரன் அவர்களுடைய விக்கிரகாராதனையைக் குறித்துத் திரட்டிப்பான பதிலளிப்பதைச் சொன்னது.]

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. நீ யொரு பெண்ணை விவாகம்பண்ண வேண்டாம், இவ்விடத்தில் உனக்குக் குமாரரும், குமாரத்திகளும் வேண்டாம்.

௩. ஏனெனில், இவ்விடத்திலே பிறக்கிற குமாரரையும், குமாரத்திகளையும், அவர்களைப் பெறுகிற தாய்களையும், இந்தத் தேசத்தில் அவர்களைப் பெறுகிற பிதாக்களையுங் குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதேதெனில்,

௪. மகா நோயுள்ள சாவுகளால் சாவார்கள், புலம்பப்படாமலும், * அடக்கம்பண்ணப்படாமலும் நிலத்தின் மேல் எருவாவார்கள். பட்டயத்தாலும், பஞ்சத்தாலும் மடிந்துபோவார்கள், அவர்களுடைய பிரேதம் ஆகாசத்துப் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் இரையாகும். * ௰௪, ௰௬.

௫. ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது; நீ துக்கவீட்டிற் பிரவேசியாமலும், புலம்பப்போகாமலும், அவர்களுக்குப் பரிதவிக்காமலும் இருப்பாயாக. ஏனெனில், நம்முடைய சமாதானத்தையும், கிருபையையும், இரக்கத்தையும் இந்தச் சனத்தை விட்டு எடுத்துப்போட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬. பெரியோரும், சிறியோரும் இந்தத் தேசத்திலே அடக்கம்பண்ணுவாரில்லாமற் சாவார்கள், ஒருவரும் அவர்கள் மேற் புலம்புவதுமில்லை அவர்கள் நிமித்தங் கீறிக்கொண்டு மொட்டையிடுவதுமில்லை. * ௩. மோசே. ௰௯, ௨௮.

௭. செத்தவன் மேற் றுக்கமாற அவர்களுக்கென்று அப்பம் பிட்டுக் கொடுப்பதுமில்லை, ஒருவனுடைய தகப்பன் மேலாகிலும், ஒருவனுடைய தாயின் மேலாகிலும் அவர்களுக்குத் தேற்றரவின் பாத்திரங் குடிக்கக் கொடுக்கப்படுவதுமில்லை.

௮. நீ யவர்களோடே புசித்துக் குடிக்க உட்கார்ந்திருக்கிறதற்கு * விருந்து வீட்டிலும் பிரவேசியாயாக. * பிரசங்கி. ௭, ௩.

௯. ஏனெனில், இதோ இவ்விடத்திலே நாமுங்கள் கண்களுக்கு முன்பாகவும் உங்களுடைய நாள்களிலுமே * சந்தோஷத்தின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்தையும், மணவாளன் சத்தத்தையும், மணவாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணுவோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார். * ௭, ௩௪.

௰. நீ யிந்த வார்த்தைகளையெல்லாம் இந்தச் சனத்துக்கு அறிவிக்கும்போது அவர்கள் உன்னுடனே * கர்த்தரெங்கள் மேல் இந்தப் பெரிய தீங்காகச் சொல்லுவானேனென்றும், எங்கள் அக்கிரமமென்ன? நாங்கள் எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாகச் செய்த எங்கள் பாவமென்னவென்றுஞ் சொல்வதுண்டானால், * ௫, ௰௯.

௰௧. நீ யவர்களுடனே சொல்லவேண்டியதாவது; உங்கள் பிதாக்கள் நம்மைவிட்டு அன்னிய தேவர்களைப் பின்சென்று அவர்களைச் சேவித்து அவர்களைப் பணிந்துகொண்டு நம்மைவிட்டு நம்முடைய நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாதே போனார்களே.

௰௨. * நீங்கள் உங்கள் பிதாக்களைப் பார்க்கிலும் அதிகக் கேடாகவும் நடந்தீர்களே, இதோ நீங்கள் அவரவர் நம்முடைய சொற் கேளாதபடிக்கு † உங்கள் பொல்லாத இருதயத்தின் கடினத்தைப் பின்செல்லுகிறவர்களாமே. * ௭, ௨௬. † ௰௩, ௰.

௰௩. ஆனபடியினாலே உங்களை யிந்தத் தேசத்திலிருந்து நீங்களும், உங்கள் பிதாக்களும் அறியாத தேசத்திலே துரத்திவிடுவோம், அங்கே இரவும், பகலும் அன்னிய தேவர்களைச் சேவிப்பீர்கள், அங்கே நாமுங்களுக்குத் தயையைக் காட்டுவதில்லை.

௰௪. ஆனதுகொண்டு இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், * அப்போது அப்புறம் இஸ்ரவேல் புத்திரரை எகிப்து தேசத்திலிருந்தேறப்பண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்தியம் பண்ணப்படாமல், * ௨௩, ௭. ௮.

௰௫. இஸ்ரவேல் புத்திரரை வடதேசத்திலும், தாம் அவர்களைத் துரத்தியிருந்த எல்லாத் தேசங்களிலுமிருந்தேறப்பண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்தியம் பண்ணப்படும். ஏனென்றால், நாம் அவர்கள் பிதாக்களுக்குக் கொடுத்த அவர்களுடைய தேசத்துக்கு அவர்களைத் திரும்பப்பண்ணுவோம்.

௰௬. இதோ, நாம் மீன் பிடிக்கிற அநேகரை யழைத்தனுப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், இவர்கள் அவர்களைப் பிடிப்பார்கள், அதற்குப்பிறகு வேட்டைக்காரராகிய அநேகரை யழைத்தனுப்புவோம், இவர்கள் அவர்களையெல்லா மலைகளிலும், எல்லாக் குன்றுகளிலும், கன்மலைகளின் வெடிப்புகளிலும் வேட்டையாடி வருவார்கள்.

௰௭. ஏனென்றால், * நம்முடைய கண்கள் அவர்களுடைய எல்லா வழிகளின் மேலும் நோக்கமாயிருக்கின்றன. அவைகள் நம்முடைய முகத்துக்கு முன்பாக வொளித்திருக்கிறதில்லை, அவர்களுடைய அக்கிரமம் நம்முடைய கண்களுக்கு முன்பாக மறைவாயிருக்கிறதுமில்லை. * ௨௩, ௨௪.

௰௮. நாம் முதலிரட்டிப்பாய் அவர்களு

டைய அக்கிரமத்துக்கும், அவர்களுடைய பாவத்துக்கும் நீதியைச் சரிக்கட்டுவோம் ஏனென்றால், அவர்கள் நம்முடைய தேசத்தின் பரிசுத்தத்தைக் குலைத்து நமது சுதந்தரத்தைச் சீயென்னப்பட்டதுக்கும், அருவருக்கப்பட்டதுக்குமான தங்கள் காரியங்களின் நாற்றத்தினாலே நிரப்பினார்களென்றார்.

௰௯. என் பெலனும், என் கோட்டையும், நெருக்கப்படுகிற நாளில் என் அடைக்கலமுமாகிய கர்த்தாவே, உம்மண்டைக்குச் சாதிகள் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து வந்து மெய்யாகவே எங்கள் பிதாக்கள் பிரயோசனமில்லாத பொய்யையும், மாயையையுங் கைக்கொண்டார்களென்பார்கள்.

௨௰. மனுஷன் தனக்குத் தேவர்களை யுண்டுபண்ணுவானோ? அவைகள் தேவர்களல்லவே.

௨௧. ஆனதுகொண்டு இதோ, இந்த விசை நாம் அவர்களுக்குத் தெரியப்பண்ணுவோம், நம்முடைய கரத்தையும், நம்முடைய பெலத்தையுமே அவர்களுக்குத் தெரியப்பண்ணுவோம், அப்போது நம்முடைய நாமம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) யூதாவின் பாவத்துக்காக வுண்டாகுஞ் சிறையிருப்பு. (௫) மனிதனை நம்புவது சாபமும், பராபரனை நம்புவது பாக்கியமுமென்பது. (௯) தந்திரமுள்ள இருதயத்தினாலே பராபரனை வஞ்சிக்கக் கூடாதென்பது. (௰௨) பராபரனுடைய இரட்சணியம். (௰௫) தீர்க்கதரிசி தன் தீர்க்கதரிசனத்தைப் பரிகாசம்பண்ணுகிறவர்களைக் குறித்து முறையிட்டது. (௰௯) சனங்கள் ஓய்வுநாளை யாசரிப்பதற்கும், உடம்படிக்கையைப் புதுப்பிக்கிறதற்கும் அவன் அனுப்பப்பட்டது.]

யூதாவின் பாவம் இரும்பெழுத்தாணியினாலும், வச்சிரத்தின் நுனியினாலும் எழுதப்பட்டு அவர்களுடைய இருதயத்தின் பலகையிலும், * உங்கள் பலிபீடங்களுடைய கொம்புகளிலும் பதிந்திருக்கிறது. * லக, அதி. ௰௩.

௨. உயர்ந்த மேடுகளின்மேற் பச்சையான மரங்களண்டையிலிருந்த அவர்களுடைய பலிபீடங்களையும், அவர்களுடைய தோப்புகளையும் அவர்கள் பிள்ளைகள் நினைக்கும்படியாகத்தானே.

௩. நீயுன் எல்லைகளிலெல்லாஞ் செய்த பாவத்தின் நிமித்தமாக நாம் வயல்நிலத்திலுள்ள உன் பர்வதத்தையும், * உன் ஆஸ்தியையும், உன்னுடைய எல்லாப் பொக்கிஷங்களையும், உன் மேடைகளையுங் கூடச் சூறையிடுவோம். * ௰௫, ௰௩.

௪. அப்படியே நாம் உனக்குக் கொடுத்த சுதந்தரத்தை நீ யுன்னாலேதானே தாரவிட்டுப் போவாய், நீ யறியாத தேசத்திலுன்னை யுன் சத்துருக்களுக்கு அடிமையுமாக்குவோம். ஏனென்றால், * நம்முடைய கோபத்திலே யென்றென்றைக்கும் எரியும் அக்கினியைக் கொளுத்தினீர்கள். * ௰௫, அதி. ௰௪.

௫. * மனுஷன்மேல் நம்பிக்கையை வைத்து மாம்சத்தைத் தன் புயமாகக்கொண்டு கர்த்தரைவிட்டு மனம் விலகுகிற மனுஷன் சபிக்கப்பட்டவனென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங்கீ. ௱௰௮, ௮. ௱௪௬, ௩.

௬. அவன் அந்தரவெளியின் இளப்பமான செடியைப்போலிருந்து நன்மை வருகிறதைக் காணாமல் வனாந்தரத்தின் வறட்சிகளிலும், குடியில்லாத உவர்நிலத்திலுந் தங்குவான்.

௭. * கர்த்தர்மேலே நம்பிக்கையை வைத்துக் கர்த்தரைத் தன் நம்பிக்கையாகக்கொண்டிருக்கிற மனுஷன் ஆசீர்வதிக்கப்பட்டவன். * சங்கீ. ௨, ௰௨. ௱௪௬, ௫. ஏசா. ௩௰, ௰௮.

௮. * அவன் தண்ணீரண்டையிலே நாட்டப்பட்டதும், கால்வாய் ஓரமாகத் தன் வேர்களைவிடுகிறதும், உஷ்ணம் வருகிறதையுணராமல் இலைபச்சையாயிருக்கிறதும், வற்ப வருஷத்திலே ஐயப்படாமலே பிசகின்றிக் கனிகொடுக்கிறதுமான மரத்தைப்போலிருப்பான். * சங்கீ. ௧, ௩.

௯. எல்லாவற்றைப் பார்க்கிலும், இருதயமே திருக்குள்ளதும், மகாகேடுள்ளதுமாயிருக்கிறது அதை யறிபவனார்!

௰. கர்த்தராகிய நாம் * அவனவனுக்கு அவனவன் வழிகளுக்கும், அவனவன் செய்கைகளின் கனிகளுக்குந் தக்கதைக் கொடுக்கும்படிக்கு † இருதயத்தை யாராய்கிறவரும், உள்ளிந்திரியங்களைச் சோதித்தறிகிறவருமாயிருக்கிறோம். * ௨௰, அதி. ௰௨. சங்கீ. ௭, ௯. † ௩௨, அதி. ௰௯. மத். ௰௬, ௨௭. ௧. கொரி. ௩, ௮.

௰௧. நியாயமில்லாமல் * ஐசுவரியத்தைச் சம்பாதிக்கிறவன் முட்டையிட்டுக் கூட்டியும், குஞ்சு பொரிக்காதே போகிற கவுதாரிக்குச் சமானமானவன், அவன் தன் பாதிவயதிலே யதைவிட்டுத் தன் முடிவிலே பயித்தியகாரனாயிருப்பான். * சங்கீ. ௧௯, ௭.

௰௨. எங்கள் பரிசுத்தஸ்தலத்தினுடைய தானம் ஆதிகாலமுதற்கொண்டு உயர்ந்த மகிமையின் ஆசனமாயிருக்கிறது.

௰௩. இஸ்ரவேலின் நம்பிக்கையாகிய கர்த்தாவே, உம்மைவிடுகிற யாவரும் வெட்கப்படுவார்கள், நம்மைவிட்டு அகன்றுபோகிறவர்கள் நிலத்திலெழுதப்படுவார்கள். ஏனென்றால், * ஜீவனுள்ள தண்ணீரின் ஊற்றாகிய கர்த்தரைவிடுகிறார்கள். * ௨, அதி. ௰௩.

௰௪. கர்த்தாவே என்னைக் குணமாக்கும் அப்போது குணமாவேன், என்னை யிரட்சியும் அப்போது இரட்சிக்கப்படுவேன். ஏனென்றால், தேவரீரென் துதி. * சங்கீ. ௱௯, ௧.

௰௫. இதோ, அவர்களென்னுடனே கர்த்

தருடைய வார்த்தையெஙகே! அதுவரடடுமேயெனகிறுர்கள. * எரேமி. ரு, யங.

யசு. நாஞேவெனில, உம்மைபபினபறறுகிற மேயபபஞபிருக்கிறதைவிடடுமிஞ்சிபபோனதுமிலலே, கேவலமானநாளே யிசசிததுமிலலேயெனறுநீர் அறிவீர், எனனுதடுகளிவிருநது புறபபடடது உம்முடையமுகததுககுமுனபாகவிருந்தது.

யஎ. எனககுககலஙகலாக விராதையும, * இஙகுநாளிலே தேவரீரே யெனனடைககலம. * யசு, அதி. யசு.

யஅ. நான வெட்கபபடடாமல எனனேத்துனபப்படுத்துகிறவர்கள வெட்கபபடுவார்களாக, நானகலஙகாமலஅவர்களகலஙகுவார்களாக, தேவரீர் இஙகுநாளேயவர்களமேலேவரபபணணி இரடடிப்பான நொறுக்குதலால அவர்களேநொறுககும.

யக. கர்த்தரெனனுடனேசொனனதாவது; நீபோய யூதாவின இராசாககளவரததும போக்குமாயிருககிற இநதசசனஙகளினபுததிரருடைய வாசலிலும, எருசலேமுடைய எலலாவாசலகளிலுமநினறுகொணடு.

உய. அவர்களுடனே சொலலவேணடியதேதெனில, இநதவாசலகளிறபிரவேசிககிற யூதாவின இராசாககளும, எலலாயூதரும, எருசலேமுடைய எலலாககுடிகளுமாகிய நீஙகள கர்த்தருடைய வார்த்தையைக்கேளுஙகள.

உக. கர்த்தர் சொலலுகிறதாவது; நீஙகள் ஒய்வுநாளிலே சுமைகளேயெடுதது அவைகளே எருசலேமின வாசலகளுககுட்கொணடுவராதபடிக்கும,

உஉ. ஓயவுநாளிலுஙகள வீடுகளிலிருநது சுமையை வெளியேகொணடுபோகாதபடிககும, ஒரு வேலேயையுஞசெயயாதபடிககும உஙகளாததுமாககளுககாக வெசசரிககையாயிருநது நாமுஙகள பிதாககளுககுக் கற்பிததபடி * ஓயவுநாளேப பரிசுததமாககுவீர்களாக. * உ. மோ. உய, அ. உங, யஉ.

உங. அவர்களோ கேளாமலும, தஙகள செவிகளேச சாயககாமலுமபோய, கேளாதபடிககும, புததியையேறறுககொளளாதபடிககுந தஙகள பிடரியைக கடினபபடுததிஞர்கள.

உச. நீஙகளோவெனில, ஓயவுநாளிலிநதப்படடணததின வாசலகளுககுளளே சுமையைககொணடுவராதபடிககும, ஓயவுநாளிலொருவேலேயையுஞசெயயாமல *அதைபபரிசுததமாககுமபடிககும நமமுடையசொலலேக கேட்கவேகேடடால, * எசா. ருஅ, யங. யச.

உரு. அபபோது * தாவீதின ஆசனததில உளுககாநதிருககிறவர்களும, இரதஙகளின மேலும, குதிரைகளினமேலும ஏறுகிறவர்களுமாகிய இராசாககளும, இராசகுமாரரும,





அவர்களும, அவர்கள பிரபுககளும, யூதாவின மனுஷரும, எருசலேமினகுடிகளும இநதபபடடணததின வாசலகளுககுட் பிரவேசிபபதுணடு. இநதபபடடணமெனறைககுங்குடியேறினதுயாயிருககும. * உஉ, ச.

உசு. யூதாவினபடடணஙகளிலும, எருசலேமினசுறறுபபுறமானஊர்களிலும, பென்யமீனதேசததிலும, பளளததாக்கான சீமையிலும,மலேசசீமையிலும,தெற்கிலுமிருநது சனஙகள சர்வாஙகதகனஙகளேயும, பலிகளேயும, காணிககைகளேயும, தூபததையுங கொணடுவநது தோத்திரபபலிகளேயுஙகர்த்தருடைய வீடடுககுக் கொணடுவருவார்கள.

உஎ. நீஙகள ஓயவுநாளேப பரிசுததமாககுமபடிககும, ஓயவுநாளிலே சுமையைஎருசலேமினவாசலகளுககுளளேடுததுவராதிருககுமபடிககுமநமமுடையசொலலேககேளாதேபோனீர்களேயாகில, நாம அதினவாசல்களிலஅககினியைககொளுததுவோம. அது எருசலேமின அரமனேகளேப்பட்சிததது அவிநதுபோகாதிருககுமெனறுரைததாரெனறு சொலலெனருர்.

## யஅ. அதிகாரம்.

[(க) குயவனுடைய அடையாளததைககொணடு சாதிகளேக கிரமபபடுததின பராபரனுடைய சுயவலலமையைககாடடினது. (யக) யூதாவின ஆதனகலகததைககுறிதது நியாயததீர்பபுவருமெனறு பயமுறுததினது. (யஅ) எரேமியா தனககுவிரோதமாக யோசிககிறவர்களேககுறிததுமனறுடினது.]

கர்த்தரால எரேமியாவுககுணடானவசனமாவது;

உ. நீயெழுநது குயவன் வீடடிவிறஙகிபபோ. அஙகே நமமுடைய வார்த்தைகளேயுனககுக் கேட்கபபணணுவோமெனருர்.

ங. அபபடியே குயவன வீடடிவிறஙகிபபோனேன். இதோ, அவன திரிகையினமேல வேலேசெயதுகொணடிருநதான.

ச. ஆனுல குயவன பணணிககொணடிருககிற களிமணணுகிய பாணடம அவன கையிலேகெடடுபபோனது. அபபோது அதைத் திருததிச் செயயுமபடிககுத்தன பார்வைககுச்சரியாயக் கணடபிரகாரமாயக் குயவன அதைத்திருமப வேறே பாணடமாககினுன.

ரு. அபபோது கர்த்தருடையவசனமெனக்குணடாகி அவர்சொனனதாவது;

சு. இஸரவேலவீடடாரே, இநதககுயவனேபபோலே நாமுஙகளுககுச செயயககூடாதோவெனறுகர்த்தர்சொலலுகிருர். இதோ, * களிமணணு குயவனகையிலிருககிறதுபோல நீஙகள நமதுகையிலிருககிறீர்கள. * எசா. சுச, அ.

எ. பிடுஙகுவோம. * நிர்மூலமாககுவோம. அழிபபோமெனறு நாம அசுபபிலே ஒரு

* வெளியின் மிருகஜீவன்களையும் அவனுக்குக் கொப்புக்கொடுத்தோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௫. பிற்பாடு எரேமியா தீர்க்கதரிசி கானனியா என்ற தீர்க்கதரிசியுடனே சொன்னதாவது; இப்போது கானனியாவே கேள், கர்த்தர் உன்னை யனுப்பினதில்லை. நீயோ இந்தச் சனத்தைப் பொய்யை நம்பப்பண்ணினாய்.

௰௬. ஆகையால் இதோ உன்னைப் பூமியின் மேலிராதபடிக்குத் தள்ளிவிடுவோம். இந்த வருஷத்திலே நீ சாவாயென்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனெனில், * கர்த்தருக்கு விரோதமாய்க் கலகமாகப் பேசினாயென்றான்.

* ௫. மோசே. ௰௩, ௫.

௰௭. அப்படியே கானனியா என்ற தீர்க்கதரிசி அவ்வருஷத்திலே தானே ஏழாம் மாதத்திலே செத்துப்போனான்.

## ௨௯. அதிகாரம்.

[(௧) பாபிலோனிலே சிறைப்பட்டிருப்பவர்கள் அங்கே அமருகையாயிருப்பதையும், (௮) அவர்களுடைய தீர்க்கதரிசிகளின் கள்ளங்களை நம்பாமலிருப்பதையும், (௰) அவர்கள் எழுபது வருஷம் அடிமைத்தனத்திலிருந்து தயவுபெற்றுத் திரும்பி வருவதையுங் குறித்து எரேமியா காகிதம் அனுப்பினது. (௰௫) மற்றவர்கள் கீழ்ப்படியாமையினால் அழிவதை முன்னறிவித்தது. (௨௰) பொய்சொல்லுகிற இரண்டு தீர்க்கதரிசிகளாகிய ஆகாபுக்கும், சிதேக்கியாவுக்கும் வரும் பயங்கரமுள்ள முடிவைக் காட்டினது. (௨௪) செமாயா எரேமியாவுக்கு விரோதமாக எழுதினது. (௩௰) எரேமியா அவனுடைய நியாயத்தீர்ப்பைச் சொன்னது.]

எகோனியா என்ற இராசாவும், இராசஸ்திரியும், பிரதானிகளும், யூதாவிலும், எருசலேமிலுமிருந்த பிரபுக்களும், தச்சரும், கொல்லரும் எருசலேமைவிட்டுப் புறப்பட்டுப்போன பிற்பாடு, * ௨௪, அதி. ௧. ௨. இரா. ௨௪, ௰௨. முதலிய

௨. எரேமியா தீர்க்கதரிசி சிறைப்பட்டுப் போன மூப்பர்களில் மீதியானவர்களுக்கும், ஆசாரியர்களுக்கும், தீர்க்கதரிசிகளுக்கும், நேபுகாத்நேச்சார் சிறைப்படுத்தி எருசலேமிலிருந்து பாபேலுக்குக் கொண்டுபோன எல்லாச் சனத்தாருக்கும் எழுதி,

௩. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா பாபேலுக்குப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரண்டையிலே அனுப்பின சாப்பானின் குமாரனாகிய எலெயாசாவின் கையிலும், இல்க்கியாவின் குமாரனாகிய கேமரியாவின் கையிலும் எருசலேமிலிருந்தனுப்பின நிருபத்தின் வார்த்தைகளாவது;

௪. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் தாம் எருசலேமிலிருந்து பாபேலுக்குச் சிறைப்பட்டுப் போகப்பண்ணின அனைவருக்குஞ் சொல்லுகிறதென்னவெனில்,

௫. நீங்கள் வீடுகளைக் கட்டிக் குடியிருந்து தோட்டங்களை நாட்டி அவைகளின் கனியைச் சாப்பிடுங்கள்.

௬. நீங்கள் பெண்சாதிகளை விவாகம்பண்ணிக் குமாரரையும், குமாரத்திகளையும் பெற்று உங்கள் குமாரருக்குப் பெண்சாதிகளைக் கொண்டு உங்கள் குமாரத்திகளைப் புருஷருக்குக் கொடுத்து இவர்களும் குமாரரையுங் குமாரத்திகளையும் பெறட்டும். நீங்கள் அங்கே குறுகிப்போகாமற் பெருகிப்போய்,

௭. நாமுங்களைச் சிறைப்பட்டுப் போகப்பண்ணின பட்டணத்தின் சமாதானத்தைத் தேடி அதற்காகக் கர்த்தரை விண்ணப்பம் பண்ணுங்கள். ஏனெனில், அதற்குச் சமாதானமிருக்கையில் உங்களுக்குஞ் சமாதானமிருக்கும்.

௮. ஏனெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; உங்கள் நடுவிலிருக்கிற உங்கள் தீர்க்கதரிசிகளும், உங்கள் குறிக்காரரும் உங்களை மோசம்போக்கவொட்டாதேயுங்கள், நீங்கள் சொப்பனங் காணப்பண்ணுகிற உங்கள் சொப்பனக்காரருக்குக் கேள்விகொடாமலுமிருங்கள்.

௯. ஏனெனில், அவர்கள் நமது நாமத்தைச் சொல்லி உங்களுக்குப் பொய்த் தீர்க்கதரிசனமுரைக்கிறார்கள். நாம் அவர்களை யனுப்பினதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰ ஏனென்றால், கர்த்தருரைக்கிறதாவது; பாபேலிலே எழுபது வருஷம் நிறைவேறுகையில் நாமுங்களைச் சந்தித்து உங்களை இவ்விடத்துக்குத் திரும்ப வரப்பண்ணும்படிக்கு உங்கள் மேல் நம்முடைய நல்வார்த்தையை நிறைவாக்கப்பண்ணுவோம். * ௨௫, அதி. ௰௧.

௰௧. ஏனெனில், நீங்கள் காத்திருக்கு முடிவை உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு நாமுங்கள் பேரில் நினைத்திருக்கிற நினைவுகளை நாம் அறிவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். அவைகள் தீமைக்கல்ல, சமாதானத்துக்கடுத்த நினைவுகள்தானே.

௰௨. அப்போது நீங்கள் நம்மைத் தொழுதுகொண்டு * நம்மை நோக்கி விண்ணப்பம் பண்ணுகையில் உங்களைக் கேட்டருளுவோம். * சங்கீ. ௫௰, ௰௫.

௰௩. * நம்மை முழு இருதயத்தோடுந் தேடினீர்களானால் நம்மைத் தேடுகையில் கண்டு பிடிப்பீர்கள். * ஏசா. ௫௫, ௬. மத்தே. ௭, ௭. அ.

௰௪. நாமுங்களுக்குத் தென்படுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். நாமுங்கள் சிறை

யிருப்பைத் திருப்பி நாமுங்களைத் துரத்தி விட்ட எல்லாச் சாதிகளிலும், எல்லாவிடங்களிலுமிருந்து உங்களைச் சேர்த்து, நாமுங்களை விலக்கியிருந்த ஸ்தலத்துக்கே யுங்களைத் திரும்பிவரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫. ஏனென்றால், கர்த்தரெங்களுக்குப் பாபேலிலே தீர்க்கதரிசிகளை யெழுப்பினாரென்கிறீர்கள்.

௰௬. ஆனால் தாவீதின் ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிற இராசாவைக் குறித்தும், உங்களோடேகூடச் சிறையிருப்பிலே புறப்பட்டுப்போகாமல் இந்தப் பட்டணத்திலே குடியிருக்கிற உங்கள் சகோதரராகிய எல்லாச் சனத்தைக் குறித்தும் கர்த்தர் சொல்லுகிறதாவது;

௰௭. * இதோ, நாம் பட்டயத்தையும், பஞ்சத்தையும், பெருவாரிக்காய்ச்சலையும் அவர்களுக்குள் அனுப்பி, ஆகாதவகையானதினாலே புசிக்கப்படாத ஆகாத அத்திப்பழங்களுக்கு அவர்களை யொப்பாக்குவோமென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
* ௨௪. அதி. ௮—ம்.

௰௮. அவர்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேளாதேபோனபடியினாலே நாம் அவர்களைப் பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக் காய்ச்சலாலும் பின்தொடர்ந்து * அவர்களைப் பூமியிலுள்ள எல்லா இராச்சியங்களிலும் அலைச்சலாகவும், நாம் அவர்களைத் துரத்துகிற எல்லாச் சாதிகளிடத்திலும் சாபமாகவும், பாழாகவும், பயப்போக்கலாகவும், நிந்தையாகவும் வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௰௫. அதி. ௪. ௨௪. அதி. ௯. ௫. மோசே. ௨௮, ௩௭. எசேக். ௫, ௰௫.

௰௯. நாமுங்களண்டைக்குத் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரை ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும் நீங்கள் கேளாதேபோனீர்களேயென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௰. இப்போது சிறையிருக்கத்தக்கவிதமாக நாம் எருசலேமிலிருந்து பாபேலுக்கு அனுப்பிவிட்ட நீங்களெல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௨௧. நம்முடைய நாமத்தைச் சொல்லி உங்களுக்குப் பொய்த் தீர்க்கதரிசனமுரைக்கிற கோலாயாவின் குமாரனாகிய ஆகாபையும், மாசேயாவின் குமாரனாகிய சிதேக்கியாவையுங் குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் அவர்களைப் பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையில் ஒப்புக்கொடுக்கிறோம், இவன் அவர்களை யுங்கள் கண்களுக்கு முன்பாக வெட்டுவான்.

௨௨. பாபேலின் இராசா அக்கினியிலே சுட்டுப்போட்ட சிதேக்கியாவுக்கும், ஆகாபுக்கும் கர்த்தர் உன்னைச் சமானமாக்கக்கடவாரென்று அவர்களைக்கொண்டு பாபேலில் சிறையிருக்கிற யூதரனைவருக்குள்ளும் ஒரு சாபவார்த்தையுண்டாகும்.

௨௩. அதேதென்றால், அவர்கள் இஸ்ரவேலிலே பயித்தியவேலையைச்செய்து, தங்கள் அயலகத்தவர்களுடைய பெண்சாதிகளோடே விபசாரம்பண்ணி நாம் அவர்களுக்குக் கற்பிக்காத பொய்வார்த்தையை நம்முடைய நாமத்தைச் சொல்லியுரைத்தார்கள், நாம் அதை அறிந்தவர், நாம் அதற்குச் சாட்சியுமானவரென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றெழுதினான்.

௨௪. பின்னும் கர்த்தர் சொன்னதேதென்னில், நெகெலாமியனாகிய சேமாயாவுக்கும் நீ சொல்லியனுப்பவேண்டியதாவது;

௨௫. நீ யெருசலேமிலிருக்கிற எல்லாச் சனத்துக்கும், மாசேயாவின் குமாரனாகிய செப்பனியாவென்ற ஆசாரியனுக்கும், எல்லா ஆசாரியர்களுக்கும் உன் நாமத்திலே நிருபத்தையெழுதியனுப்பினதென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்பதைத் தாமென்கிறார்.

௨௬. இவனுக்கவன் எழுதியிருந்த நிருபமாவது; நீங்கள் கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்காரராயிருக்கும்படிக்கும், பிரமைகொண்டவனும், தீர்க்கதரிசியுமாகிய எந்த மனுஷனையும் நீர் காவலறையிலும், தொழுவிலும்போடும்படிக்கும் கர்த்தருமையாசாரியனாயிருந்த யோயதாவின் ஸ்தலத்திலே ஆசாரியனாக வைத்தாரே.

௨௭. இப்போதும் உங்களுக்குத் தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற ஆனதோத்தூரானாகிய எரேமியாவை நீர் அதட்டாமற்போனதென்ன!

௨௮. ஏனென்னில், நெடுங்காலமாக அப்படியிருக்கும், நீங்கள் வீடுகளைக் கட்டி அவைகளிற் குடியிருந்து, தோட்டங்களை நாட்டி அவைகளின் கனிகளைச் சாப்பிடுங்களென்று அதினாலேயவன் பாபேலிலிருக்கிற உங்களுக்கு வார்த்தையை யனுப்பினானென்றெழுதியிருந்தான்.

௨௯. இந்த நிருபத்தைச் செப்பனியாவென்ற ஆசாரியன் எரேமியா தீர்க்கதரிசியினுடைய காதுகள் கேட்க வாசித்திருந்தான்.

௩௰. அன்றுகொண்டு கர்த்தருடைய வார்த்தை எரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னது;

௩௧. நீ சிறையிருக்கிற அனைவருக்கும் அனுப்பவேண்டிய வார்த்தையாவது; நெகெலாமியனாகிய சேமாயாவைக் குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதேதென்னில், சேமாயாவை நாம

அனுப்பாதிருந்தும் அவனுங்களுக்குத் தீர்க்கதரிசனஞ்சொல்லி * உங்களைப்பொய்யை நம்பப்பண்ணுகிறபடியினாலே,
* உ௮, ௰௫. ௰௬.

௩௨. கர்த்தர்சொல்லுகிறதாவது; இதோ, நெகேலாமியனாகிய செமாயாவையும், அவனவித்தையும் விசாரிப்போம், இந்தச்சனத்தின் நடுவிலே குடியிருப்பவனொருவனும் அவனுக்கில்லாதிருப்பான், நாம் நமதுசனத்துக்குச்செய்யும் நன்மையையவன்காணபதுமில்லை. ஏனெனில், கர்த்தருக்குவிரோதமாகக்கலகமாய்ப்பேசினானென்று கர்த்தர் சொல்லுகிறானென்றதைத்தானென்றார்.

## ௩௰. அதிகாரம்.

[(௧) பராபரன் யூதர்கள்திரும்பிவருவதைக் குறித்து எரேமியாவுக்குக்காட்டினது. (௪) அவர்களுடைய துன்பமுடிந்தபின்பு அவர்களுக்குவிடுதலைகிடைக்குமென்பது. (௰) அவர் யாக்கோபைத்தேற்றினது. (௰௮) அவர்கள் திரும்புதல் கிருபையுள்ளதாயிருக்குமென்பது. (உ௩) துன்மார்க்கர்மேல் தேவகோபமிறங்குமென்பது.]

**க**ர்த்தராலே எரேமியாவுக்குண்டான வார்த்தையாவது;

௨. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாமுனனோடே பேசின எல்லாவார்த்தைகளையும் ஒருபுஸ்தகத்திலெழுதிக்கொள்.

௩. ஏனெனில், இதோ, நாட்கள்வருமென்று கர்த்தர்சொல்லுகிறார், * அப்போது நாம் இஸ்ரவேலும், யூதாவுமாகிய நமதுசனத்தினுடைய சிறையிருப்பைத்திருப்பி நாம் அவர்கள் பிதாக்களுக்குக் கொடுத்ததேசத்துக்கு அவர்களைத்திரும்பி வரப்பண்ணுவோம், அதையவர்கள் சுதந்தரித்துக்கொள்ளுவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.
* உ௬. அதி. ௰௪.

௪. இவைகள்கர்த்தர்இஸ்ரவேலையும், யூதாவையுங் குறித்துச்சொன்ன வார்த்தைகள்.

௫. ஏனெனில் கர்த்தர்சொல்லுகிறதாவது; நடுக்கத்தின்சத்தத்தைக்கேட்கிறோம், திகிலுண்டு சமாதானமில்லை.

௬. ஆணாய்ப் பிறந்தவன் பெறுகிறதுண்டோவென்று கேட்டுப்பாருங்கள், எல்லாப் புருஷரும் * பிள்ளைபெறுகிறவளைப்போலத் தங்கள்கைகளைத் தங்கள் இடுப்புகளின் மேற்போட்டிருக்கிறதையும், எல்லாமுகங்களும்வெளுத்து மாறினதையும் நாம் காண்கிறதெப்படி! * ௪. அதி. ௩௧. ௬௧. அதி. ௬.

௭. ஐயோ அந்தநாள் பெரியது, அதைப்போலொத்தநாளில்லை. அது யாக்கோபுக்கு இக்கட்டுக்காலம். ஆனால் அதற்கு நீங்கலாகி இரட்சிக்கப்படுவான்.

௮. அந்தநாளிலேசம்பவிப்பதேதென்றால், நாம் அவனுக்கத்தடியை யுனக்கழுத்தின்மேலிராதபடிக்கு உடைத்து உனக்கட்டுகளையறுப்போமென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார், அன்னியரினியவனையடிமைகொள்வதில்லை.

௯. * தங்கள்பராபரனாகிய கர்த்தரையும், நான் தங்களுக்கெழுப்பப்போகிற தங்கள் இராசாவாகிய தாவீதையுஞ்சேவிப்பார்கள். * ஏசேக். ௩௪, உ௩. உ௪. ௩௭. அதி. உ௪. ஒசே. ௩, ௫.

௰. ஆகையால், நம்முடைய தாசனாகிய யாக்கோபே * நீ பயப்படாயாக, இஸ்ரவேலே கலங்காயாகவென்று கர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், இதோ, நாம் உன்னைத் தூரத்திலும், உனவித்தைத்தங்கள் சிறையிருப்பின் தேசத்திலும் வைக்காதபடிக்கு இரட்சிப்போம், யாக்கோபுதிரும்பிவந்து அமர்ந்து சுகித்துமிருப்பான், அவனைத்தத்தளிக்கப்பண்ணுபவனில்லை. * ௪௬. அதி. உ௭. உ௮. ஏசா. ௪௧, உ௭.

௰௧. ஏனென்றால், உன்னை யிரட்சிப்பதற்காக நாமுனனுடனேகூடவிருக்கிறோமென்றுகர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், நாம் உன்னைச்சிதறவடித்த எல்லாச்சாதிகளையும் நிர்மூலம்பண்ணுவோம், * உன்னையோநாம் நிர்மூலம்பண்ணாமல் உன்னைநியாயமட்டாய்த்தண்டிப்போம் உன்னைக்குற்றமற்று நீங்கலாயிருக்கவொட்டோம். * ௰. அதி. உ௪. உ௫. ஏசா. ௪௧, ௰௪.

௰௨. ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது; * உனனொறுங்குதல்கேவலமும், உன்காயம் நோக்காடுள்ளதுமாயிருக்கிறது.
* ௰௫. அதி. ௰௮.

௰௩. ஆற்றுவிக்கும்பொருட்டாக உன்காரியத்தைமேற்போட்டுக் கொள்ளுகிறவனில்லை, மேலுக்குப்போடும் ஔஷதங்கள் உனக்கில்லை.

௰௪. உன்னைச் சிநேகித்தயாவரும் உன்னை மறந்தார்கள், அவர்கள் உன்னைத்தேடார்கள். ஏனெனில், உன் அக்கிரமத்தினுடைய திரளினிமித்தமும், உன்பாவங்கள் பெலத்துப்போனதினிமித்தமும் * நாம் சத்துருவெட்டுமவனைப்போலவும், க்ரூரன் தண்டிக்கிறவனைப்போலவும் உன்னையடித்தோம்.
* உ. அதி. ௰௬.

௰௫. உன்னொறுங்குதலினாலும், உன்வேதனை கேவலமாயிருக்கிறதினாலும் நீ கூப்பிடுவானேன், உன் அக்கிரமத்தினுடைய திரளினிமித்தமும், உன் பாவங்கள் பலத்துப்போனதினிமித்தமும் இப்படியுனக்குச்செய்தோம்.

௰௬. ஆனதுகொண்டு உன்னைப் பட்சிக்கிறவர்கள் * பட்சிக்கப்படுவார்கள், உன் சத்துருக்களெல்லாருஞ் சிறையிருப்புக்குப் போவார்கள், உன்னைச் சூறையாடுகிறவர்

கள்ளுறையாவார்கள், உன்னைக்கொள்ளையிடுகிற அனைவரையுங்கொள்ளையாக ஒப்புக்கொடுப்போம். * ௨. மோசே. ௨௩, ௨௨.

௰௭. ஏனெனில், அவர்கள் உன்னைத் தள்ளுண்டவளென்றழைத்து இது ஒருவனும் விசாரிக்காத சீயோனென்று சொல்லுகிறபடியினாலே நாமுனக்கு ஆரோக்கியம் வரப்பண்ணி உன் காயங்களையாற்றுவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮. கர்த்தருரைக்கிறதாவது; * இதோ, நாம் யாக்கோபுடைய கூடாரங்களின் சிறையிருப்பைத் திருப்பி அதின் வாசஸ்தலங்களுக்கிரங்குவோம், பட்டணந்தன் மண்மேட்டின்மேற் கட்டப்பட்டு அரமனை தன் நியாயத்தின்படி நிறுத்தப்படும். * ௩௧. அதி. ௨௩. ௩௨. அதி. ௪௪. ௩௩. அதி. ௭. ௰௧.

௰௯. அவைகளிலிருந்து தோத்திரமும், கீதவாத்தியக்காரரின் சத்தமும் புறப்படும், அவர்கள் குறுகிப்போவதில்லை, அவர்களை வர்த்திக்கப்பண்ணுவோம், அவர்கள் சிறுகிப்போவதில்லை அவர்களை மகிமைப்படுத்துவோம்.

௨௰. அதின்பிள்ளைகள் முந்தியதுபோலிருப்பார்கள், அதின் சபை நமக்குமுன்பாகத் திடப்படுப்போம், ஆனால் அதை ஒடுக்கின யாவரையும் விசாரிப்போம்.

௨௧. * அதின் மகத்துவசாலி அதிலிருந்துண்டாகி அதையாளுகிறவர் அதின் நடுவிலிருந்து புறப்படுவார், அவரைச் சேர்ந்துவரப்பண்ணுவோம், அவர் நம்மைக் கிட்டுவார், ஏனெனில், அவரைத்தவிர நம்மண்டையிற் சேரும்படிக்குத் தன்னிருதயத்தைப் பிணைப்படுத்துபவனொன்று கர்த்தர் சொல்லுகிறார். * ௨௯. அதி ௫. ௯. மிகா. ௫, ௧. லூக்கா. ௧, ௩௩.

௨௨. * நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள் நாமுங்களுக்குப் பராபரனாயிருப்போம் * ௨௪, ௭. ௩௧, ௧. ௩௩, ௩௨. ௩௮.

௨௩. இதோ * கோராவாரிக்காற்றாகிய கர்த்தருடைய பெருங்காற்று உக்கிரமாயெழும்பியடித்து ஆகாதவர்களுடைய தலையின்மேற்பாயும். * ௨௩. அதி. ௰௯.

௨௪. கர்த்தர் அதைச்செய்யுமளவும், தம்முடைய இருதயத்தின் நினைவுகளை நிருவாகம் பண்ணுமளவும் அவருடைய கோபத்தின் உக்கிரந்திரும்பாது, கடைசிநாள்களில் இதையுணர்ந்துகொள்வீர்கள்.

## ௩௧. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலர் முந்தின சீருக்குக் கொண்டுவரப்படுதல், (௰) அதினுடைய பிரசித்தம், (௰௫) இராகேல் துக்கப்பட்டு ஆறுதலடைந்தது. (௰௮) எப்பிராயீம் மனஸ்தாபப்பட்டுத் தன்தேசத்திற்குக் கொண்டுவரப்பட்டது. (௨௨) கிறிஸ்துவின் வருகை வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது. (௨௭) திருச்சபையின்மேல் அவருக்குண்டாகிய கவலை. (௩௧) அவருடைய புது உடம்படிக்கை. (௩௫) திருச்சபையினுறுதியும், (௩௮) அதன் விரிவும்.]

அக்காலத்திலே இஸ்ரவேலின் வம்சங்களுக்கெல்லாம் * பராபரனாயிருப்போம், அவர்கள் நமக்குச் சனமாயிருப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
* ௩௰. அதி. ௨௨.

௨. கர்த்தர் சொல்லுகிறதாவது; பட்டயத்திற்குத் தப்பி மீந்தசனம் வனாந்தரத்தில் இரக்கம்பெற்றது, இஸ்ரவேலுக்குச் சாங்கோபாங்கத்தைக் கட்டளையிடப் போகிறேம்.

௩. * வெகுகாலமுதற்கொண்டு கர்த்தரெனக்குத் தரிசனையானாரென்பாய், ஆம் அநாதிசிநேகத்தால் உன்னைச்சிநேகித்தோம், ஆனபடியால் கிருபையாயுன்னை யிழுத்துக்கொள்ளுகிறோம். * உன்னத. ௧, ௪.

௪. இஸ்ரவேலென்ற கன்னியாஸ்திரீயே, இன்னமுன்னைக் கட்டுவிப்போம், நீ கட்டப்பட்டிருப்பாய், நீ யின்னம் உன் மேளங்களால் அலங்காரமாய்க் கீதவாத்தியக்காரரின் களிப்புள்ள கூட்டத்தோடே புறப்படுவாய்.

௫. இன்னும் சமாரியாவின் மலைகளிலே திராட்சத்தோட்டங்களை நாட்டுவாய், நாட்டுகிறவர்கள் அவைகளை நாட்டியநுபவமும்பண்ணுவார்கள்.

௬. ஏனெனில், எழுந்திருங்கள், * சீயோனுக்கு நம்முடைய பராபரனாகிய கர்த்தரண்டையிலே போயேறுவோமாகவென்று சமாரியாவின் கன்மலைகளிற் காவற்காரர் கூப்பிடப்போகிறநாள் வரும். * ஏசாயா. ௨, ௩. மிகா. ௪, ௭.

௭. ஏனென்றால் கர்த்தர் சொல்லுகிறதாவது; யாக்கோபின்மேலே மகிழ்ச்சியாய்க் கெம்பீரித்துச் சாதிகளுடைய தலைவரினிமித்தமாக ஆர்ப்பரியுங்கள், சத்தத்தைக்கேட்கப்பண்ணித் துதித்துக் கர்த்தாவே, இஸ்ரவேலில் மீதியான உமதுசனத்தையிரட்சியுமென்று சொல்லுங்கள்.

௮. இதோ நாம் அவர்களை * வடதேசத்திலிருந்துவரப்பண்ணி அவர்களைப் பூமியின் பக்கங்களிலிருந்து கூட்டிவருவோம், குருடரும், சப்பாணிகளும், கர்ப்பவதிகளும், பிள்ளைத்தாய்ச்சிகளுங்கூட அவர்களிலிருப்பார்கள், மகாகூட்டமாக இவ்விடத்துக்குத் திரும்புவார்கள். * ௩. அதி. ௰௮.

௯. * அழுகையோடே, விண்ணப்பங்களோடேவருவார்கள், அவர்களை வழிநடத்துவோம், அவர்களைத் தண்ணீர் நதிகளண்டைக்குத் தாங்களிடறுணாத செம்மையான

வழியிலும் நடக்கப்பண்ணுவோம், ஏனெனில், இஸ்ரவேலுக்குத் தகப்பனாயிருக்கிறோம், எப்பிராயீம் † நம்முடைய தலைச்சனான பிள்ளையுமாயிருக்கிறான். * ரு௰, அதி. ௪. † ௨. மோசே. ௪, ௨௨.

௰. சாதிகளே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தையைக் கேட்டுத் தூரத்திலுள்ள தீவுகளில் அறிவித்து, இஸ்ரவேலைச் சிதறடித்தவர் அதைச் சேர்த்துக்கொண்டு ஒரு மேய்ப்பன் தன் மந்தையைக் காக்கும் வண்ணமாக அதைக் காப்பாரென்று சொல்லுங்கள்.

௰௧. * ஏனென்றால் கர்த்தர் யாக்கோபை மீட்டு இவனை இவனிலும் பலத்தவனுடைய கைக்கு நீங்கலாக்கி விடுவிக்கிறார். * சங். ௱௩௰, ௮.

௰௨. அவர்கள் வந்து சீயோனின் உயரத்திலே கெம்பீரித்துக் கோதுமை, திராட்சப்பழரசம், எண்ணெய், ஆட்டுக்குட்டிகள், கன்றுக்குட்டிகளென்றவைகளாகிய கர்த்தருடைய நன்மைக்கோடி வருவார்கள், அவர்களுடைய ஆத்துமா நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப்போலாகும், அவர்களினித் தொய்ந்துபோவதில்லை.

௰௩. * அப்போது கன்னியாஸ்திரிகளும், இளைஞரும், முதிர்ந்த வயதுள்ளவர்களுங்கூட ஆனந்தக்களிப்பாயிருப்பார்கள், ஏனெனில், நாம் அவர்கள் துக்கத்தைச் சந்தோஷமாக மாற்றி அவர்களைத் தேற்றரவுபண்ணி அவர்கள் துக்கம் நீங்க அவர்களைச் சந்தோஷப்படுத்துவோம். * சங். ௱௪௰, ௮. ௰௨. ௰௩.

௰௪. ஆசாரியர்களின் ஆத்துமாவைக் * கொழுப்பினாற் பூரிப்பாக்குவோம், நமது சனம் நம்முடைய நன்மையினாலே திருப்தியாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங். ௬௩, ௫.

௰௫. கர்த்தர் சொல்லுகிறதாவது; இராமாவிற் * புலம்பலும், கசப்பான அழுகையுமாகிய சத்தங் கேட்கப்படுகிறது, இராகேல் தன் பிள்ளைகளுக்காக அழுது தன் பிள்ளைகளில்லாதபடியால் அவைகளினிமித்தம் ஆறுதலடைந்துகொள்ளாதிருக்கிறாளென்கிறார். * மத்தே. ௨, ௰௮.

௰௬. கர்த்தர் சொல்லுகிறதாவது, நீ யுன் சத்தத்தை யழாதபடிக்கும், உன் கண்களைக் கண்ணீர்விடாதபடிக்கும் அடக்கிக்கொள், ஏனெனில் உன் கிரியைக்குப் பலனுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார். அவர்கள் சத்துருவின் தேசத்திலிருந்து திரும்பிவருவார்கள்.

௰௭. உன் பிற்காரியத்துக்காக நம்பிக்கையுண்டு, ஏனெனில், உன் பிள்ளைகள் தங்கள் எல்லைக்குத் திரும்பிவருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮. என்னைத் தண்டித்தீர், நான் பழக்கிவைக்கப்படாத கன்றுக்குட்டியைப்போலே தண்டிக்கப்பட்டேன், * என்னைத் திருப்பும் அப்போது திருப்பப்படுவேன், ஏனெனில், தேவரீர் என் பராபரனாகிய கர்த்தர். * புலம். ரு, ௨௧.

௰௯. நான் திரும்பின பிற்பாடு தானே மனஸ்தாபப்பட்டிருக்கிறேன், நான் என்னையறிந்துகொண்ட பிற்பாடு பக்கத்தில் அடித்துக்கொண்டிருக்கிறேன், வெட்கி நாணிக்கொண்டுமிருக்கிறேன், ஏனெனில், என் இளவயதின் நிந்தையைச் சுமந்து வருகிறேனென்று எப்பிராயீம் கெஞ்சிக்கொண்டிருக்கிறதைக் கேட்கவே கேட்டோம்.

௨௰. எப்பிராயீம் நமக்கருமையான குமாரனும், நாம் மனமகிழ்ச்சியாயிருக்கிற பிள்ளையுமல்லவோ! ஏனெனில், நாம் அவனுக்கு விரோதமாய்ப் பேசின பிற்பாடு * இன்னம் அவனை நினைக்கவே நினைக்கிறோம், ஆகையால், நம்முடைய குடல்கள் அவனுக்காகத் துடிக்கின்றன. அவனுக்கிரங்கவே இரங்குவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * சங். ௨௫, ௭. ௱௬, ௪.

௨௧. உனக்குக் குறிப்படையாளங்களை நிறுத்து, உனக்குத் தூண்களை நாட்டு, நீ நடந்த வழியாகிய பாதையின்மேல் உன் மனதை வை, இஸ்ரவேலாகிய குமாரத்தியே! திரும்பு, இந்த உன்னுடைய பட்டணங்களுக்குத் திரும்பு.

௨௨. மாறுபாடாய்ப்போன குமாரத்தியே எந்தமட்டும் விலகித் திரிவாய்! ஏனென்றால் கர்த்தர் பூமியிலே புதுமையைச் சிருஷ்டிப்பார், * ஸ்திரீ புருஷனைச் சூழ்ந்துகொள்ளுவாள். * அதி. ௰௨, ௧. ௨.

௨௩. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; * நாம் அவர்கள் சிறையிருப்பைத் திருப்பும்போது அவர்களின்னம் யூதாவின் தேசத்திலும், அதின் பட்டணங்களிலும் நீதியின் வாசஸ்தலமே பரிசுத்த பருவதமே! கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கக்கடவாரென்ற வார்த்தையைச் சொல்லுவார்கள். * ௨௯, அதி. ௰௪. ௩௰, ௮. ௩௨, ௪௪.

௨௪. அதிலே யூதாவும், அதினுடைய எல்லாப் பட்டணங்களின் மனுஷரும், பயிர்க்குடிகளும், மந்தைகளை மேய்த்துத் திரிகிறவர்களும் ஏகமாய்க் குடியிருப்பார்கள்.

௨௫. ஏனென்றால் * நாம் விடாய்த்த ஆத்துமாவைச் சம்பூரணம் அடையப்பண்ணித் தொய்ந்த எல்லா ஆத்துமாவையும் நிரப்புவோம். * மத்தே. ௰௧, ௨௮.

௨௬. இதற்காக விழித்துப் பார்த்துக்கொண்டிருக்கிறேன், நம்முடைய நித்திரை நமக்கின்பமாயிருந்தது.

௨௭. இதோ நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்போது இஸ்ரவேலின் வீட்டையும், யூதாவின் வீட்டையும் மனுஷவித்தினாலும், மிருகவித்தினாலும் விதைப்பாக்குவோம்.

௨௮. அப்பொழுது சமயம்பார்த்ததென்றால், நாம் பிடுங்கவும், இடிக்கவும், நிர்மூலமாக்கவும், அழிக்கவும், தீங்குசெய்யவும் அவர்கள்மேலே எப்படிச் சாக்கிரதைப்பட்டிருந்தோமோ அப்படிக் கட்டவும், நாட்டவும் அவர்கள்மேலே சாக்கிரதைப்பட்டிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௯. * பிதாக்கள் திராட்சக்காய்களைத் தின்றார்கள், பிள்ளைகளின் பற்கள் கூசிப்போயின, அந்நாட்களில் அப்புறஞ்சொல்லார்கள்.
* புலம். ரு, எ. எசே. ௰அ, உ. மு

௩௰. அவனவன் தன்னுடைய அக்கிரமத்தினிமித்தமே சாவான், எந்த மனுஷன் திராட்சக்காய்களைத் தின்பானோ அவனுடைய பற்களே கூசிப்போகும்.

௩௧. * இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார், அப்பொழுது இஸ்ரவேலின் வீட்டோடும், யூதாவின் வீட்டோடும் புது உடன்படிக்கை பண்ணுவோம். * எபி அ, அ. மு.

௩௨. நாம் அவர்கள் பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து அழைத்துவரக் கைப்பிடித்த நாளிலே அவர்களோடே பண்ணின உடன்படிக்கையின்படியோவல்ல. ஏனெனில், அந்த நம்முடைய உடன்படிக்கையை அவர்கள் முறித்துப்போட்டார்கள். நாமும் அவர்களில் நம்முடைய அதிகாரத்தைக் காண்பித்தோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௩. இந்நாட்களுக்குப்பிறபாடே இஸ்ரவேல் வீட்டோடே பண்ணப்போகிற உடன்படிக்கையாவது; நாம் நம்முடைய நியாயப்பிரமாணத்தை * அவர்கள் உள்ளத்திலே கொடுத்து அதையவர்களிருதயத்திலெழுதி † அவர்களுக்குப் பராபரனாயிருப்போம், அவர்கள் நமக்குச் சனமாயிருப்பார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
* எசா. ரு௯, ௰௧. † உச. அதி. எ. ௩௰, உ௨.

௩௪. இனியொருவனும் தன் அயலானையும், ஒருவனும் தன் சகோதரனையும், கர்த்தரையறியென்று போதிப்பதுமில்லை. ஏனென்றால் அவர்களில் சிறியவன்துவக்கிப் பெரியவன்மட்டும் எல்லாரும் நம்மையறிவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனென்றால் * நாம் அவர்கள் அக்கிரமத்தை மன்னித்து † அவர்கள் பாவங்களையப்புறம் இனி நினையாதிருப்போம். * கூ. அதி. அ. மீகா. எ, ௰அ. அப். ௰. சக. † எசா. சசு, உரு. எசே. ௩௩, ௰௬.

௩௫. * சூரியனைப் பகல் வெளிச்சமாகவும், சந்திரனும், நட்சத்திரங்களுமென்ற திட்டங்களை இராவெளிச்சமாகவுங் கட்டளையிட்டவரும், சமுத்திரத்தையதின் அலைகள் கொந்தளிக்கத்தக்கவிதமாய்க் கலக்குகிறவரும், சேனைகளையுடைய கர்த்தரென்றநாமமுள்ளவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது;
* க. மோசே. க, ௰௬. ௰எ. சங். ௱௩௬, அ.௯.

௩௬. * இந்தத்திட்டங்கள் நமக்குமுன்பாக இல்லாதபடிக்கு விலகிப்போயிருந்தால், அப்பொழுது இஸ்ரவேலின் வித்தும் நமக்குமுன்பாக எல்லாநாட்களிலும் ஒருசாதியாயிராதபடிக்கு ஒழிந்துபோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௩௩. அதி. உ௫.

௩௭. கர்த்தர் சொல்லுகிறதாவது; உயரவிருக்கிற வானங்கள் அளக்கப்படவும், தாழவிருக்கிற பூமியின் அஸ்திபாரங்கள் ஆராயப்படவுங்கூடுமானால் நாமும் இஸ்ரவேலின் வித்தான அனைவரையும் அவர்கள் செய்ததெல்லாவற்றினிமித்தமும் வெறுத்துப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௮. இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார். அப்பொழுதிந்தப்பட்டணம் அனமேயேலின் கோபுரத்தைத் துவக்கிக் கோடிவாசல்மட்டும் கர்த்தருக்குக் கட்டப்படும்.

௩௯. அப்புறமும் அளவுநூல் அதற்கெதிராய்க் காரேபென்ற மேட்டின்மேலேபுறப்பட்டுக் கோவாத்புறமாய்ச் சுற்றிப்போம்.

௪௰. பிரேதங்களைப் புதைக்கிறதும், சாம்பலைக் கொட்டுகிறதுமானப்பள்ளத்தாக்கனைத்தும், கீதரோன் வாய்க்காலுக்கப்பாலே கிழக்கேயிருக்கிற குதிரைகளுடைய வாசலின் கோடிமட்டுக்கும் உண்டான சகல நிலங்களும் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும். அப்புறம் அது என்றென்றைக்கும் பிடுங்கப்படுவதுமில்லை இடிக்கப்படுவதுமில்லையென்கிறார்.

## ௩௨. அதிகாரம்.

[(க) எரேமியா சொன்ன தீர்க்கதரிசனத்துக்காக அவன் சிதேக்கியாவாலே சிறைச்சேயப்பட்டு, (௬) அனமெயேலுடைய நிலத்தைக் கொண்டது. (௰௩) பாருக்குச் சனம் திரும்பிவருவதற்கடையாளமாகக் கிரயசாதனத்தை வைத்தது. (௰௬) எரேமியா தன் செபத்திலே பராபரனிடத்தில் முறையிட்டது. (௨௬) பராபரன் அவர்களுடைய பாவங்களுக்காக அவர்கள் சிறையிருப்பை உறுதியாக்கினதும், (௩௬) கிருபையுள்ள திரும்புதலைச் சொன்னதும்.]

யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட பத்தாம்வருஷத்திலகர்த்தராலே எரேமியாவுக்குண்டானவார்த்தை இது நேபுகாத்நேச்சார் அரசாண்ட பதினெட்டாம்வருஷம். * உ௫. அதி. க.

௨. அப்பொழுது பாபேலினுடைய இராசாவின்சேனை எருசலேமை முற்றிக்கைபோட்டிருந்தது. எரேமியாதீர்க்கதரிசியோவென்றால் யூதாவுடைய இராசாவின் வீட்டிலுள்ள காவற்சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருந்தான்.

௩. ஏனென்றால் இதோ இந்தப் பட்டணத்தைப் பாபேலுடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுக்கிறேம், இவன் அதைப் பிடிப்பானென்கிறதைக் கர்த்தர் சொல்லுகிறோனறும்.

௪. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா கல்தேயருடைய கைக்குத் தப்பிப்போகாமற் * பாபேலுடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுக்கவே ஒப்புக்கொடுக்கப்படுவான். அவன் வாய் இவன் வாயோடே பேசி அவன் கண்கள் இவன் கண்களைப் பார்க்கும். * ௩௪, அதி. ௩.

௫. இவன் சிதேக்கியாவைப் பாபேலுக்குக் கொண்டுபோவான். நாம் அவனைச் சந்திக்குமட்டும் அங்கேயவனிருப்பான். நீங்கள் கல்தேயரோடே யுத்தம்பண்ணினாலும் உங்களுக்கு வாய்ப்பதில்லையென்கிறதைக் கர்த்தர் சொல்லுகிறோனறும் * நீ தீர்க்கதரிசனஞ்சொல்லுவானேனென்று சொல்லி யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவங்கேயடைத்துப்போடுவித்தான்.

௬. அங்கேயிருக்கையிலே எரேமியா சொன்னதாவது; கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவருரைத்ததேதெனில்,

௭. இதோ உன்தகப்பனுடனே கூடப்பிறந்த சலூமின் குமாரனாகிய அனமெயேல் உன்னண்டைக்கு வந்து ஆனதோத்திலிருக்கிற என்னுடைய நிலத்தை நீ வாங்கிக்கொள். ஏனென்றால் அதைக்கொள்ள உனக்கே மீட்கும் நியாயம் அடுத்திருக்கிறதென்பானென்றுரைத்தார்.

௮. அப்படியே யென்தகப்பனுடனே கூடப்பிறந்தவனுடைய குமாரனாகிய அனமெயேல் கர்த்தருடைய வார்த்தைக்குச் சரியாய்க் காவற்சாலையின் முற்றத்திலென்னண்டைக்கு வந்து பென்யமீன் தேசத்து ஆனதோத்தூரிலுள்ள என்னுடைய நிலத்தை நீ வாங்கிக்கொள். ஏனெனில், சுதந்தர நியாயம் உனக்குண்டு, மீட்பு உனக்கடுத்தது அதைக்கொள்ளென்றான். இப்போதிது கர்த்தருடைய வார்த்தையென்றறிந்துகொண்டேன்.

௯. ஆகையாலென் தகப்பனுடனே கூடப்பிறந்தவனுடைய குமாரனாகிய அனமெயேலின் கையிலே நான் ஆனதோத்திலிருக்கிற அவனுடைய நிலத்தைக்கொண்டு விலைக்கிரயமாகிய பதினேழு சேக்கல் வெள்ளியை யவனுக்கு நிறுத்துக்கொடுத்தேன்.

௰. நான் கடிதாசியிலே கையெழுத்தையும், முத்திரையையும்போட்டுச் சாட்சிகளை வைத்து வெள்ளியைத் தராசிலே நிறுத்துக்கொடுத்தபிறபாடு,

௰௧. நான் கட்டளைக்கும், திட்டமுறைமைகளுக்குமொத்தபடி முத்திரைபோடப்பட்டக்கிரயக்கடிதாசியையும், திறந்திருக்கிற பிரதியையும் எடுத்து,

௰௨. என்னினத்தானாகிய அனமெயேலுடையகண்களுக்கு முன்பாகவும், கிரயக்கடிதாசியிற் கையெழுத்துப்போட்ட சாட்சிகளுடைய கண்களுக்குமுன்பாகவும், காவற்சாலையின் முற்றத்திலுள்ளுக்காந்திருந்த எல்லா யூதருடையகண்களுக்குமுன்பாகவும் அதை மக்சேயாவின் குமாரனாகிய நேரியாவினுடைய குமாரனான பாருக்குக்குக்கொடுத்து,

௰௩. அவர்களுடைய கண்களுக்குமுன்பாகப் பாருக்குக்குக் கற்பித்துச்சொன்னதாவது;

௰௪. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தருரைக்கிறதேதெனில் நீ முத்திரைபோடப்பட்ட இந்தக்கிரயக்கடிதாசியும், திறந்திருக்கிற இந்தப்பிரதியுமென்ற கடிதாசிகளை வாங்கி அவைகள் அநேகம் நாளிருக்கும்படிக்கு அவைகளையொரு மண்பாண்டத்திலே வை.

௰௫. ஏனெனில் இனம் இந்தத்தேசத்திலே வீடுகளும், நிலங்களும், திராட்சத்தோட்டங்களும் கொள்ளப்படுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தருரைக்கிறோனறுன.

௰௬. நான் கிரயக்கடிதாசியை நேரியாவின் குமாரனாகிய பாருக்குக்குக்கொடுத்தபிறபாடு நான் கர்த்தரை நோக்கிப்பண்ணின விண்ணப்பமாவது;

௰௭. ஆ, கர்த்தராகிய ஆண்டவரே! இதோ தேவரீர் உம்முடைய பெரியபலத்தினாலும், நீட்டப்பட்டவும்முடைய புயத்தினாலும் வானங்களையும், பூமியையும் உண்டாக்கினீர். * உம்மாலே கூடாத அதிசயமான காரியமொன்றுமில்லை. * ஆதகா. ௧, ௩௭.

௰௮. * ஆயிரங்களானவைகளுக்குக் கிருபைசெய்கிறவரும், பிதாக்களுடைய அக்கிரமத்தை யவர்களுக்குப் பின்னிருக்கும் பிள்ளைகளின் மடியிலே சரிக்கட்டுகிறவருமாகிய சேனைகளையுடைய கர்த்தரென்ற நாமமுள்ள மகத்துவமும், சவுரியமுமான பராபரனே. * உ. மோசே. ௩௪, ௯. ௭.

௰௯. யோசனையிலே பெரியவரும், கிரியையிலே வல்லமையுள்ளவருமாயிருக்கிறீர். * ஏனெனில் † அவனவனுக்கு அவனவனுடைய வழிக்குத்தக்கதாகவும், அவனவனுடைய கிரியைகளின் கனிக்குத்தக்கதாகவும் அளிக்கும்படிக்கு ‡ உம்முடைய கண்கள் மனுபுத்திரருடைய எல்லாவழிகளின்மேலும் திறந்தவைகளாயிருக்கின்றன. * ஏசாயா. ௨௮, ௨௯. † ௰௭, ௰. ‡ ௰௯, ௰௭.

௨௰. இஸ்ரவேலிலும், மற்றமனுஷருக்குள்ளும் இந்நாள்வரைக்கும் விளங்குகிற அடையாளங்களையும், அற்புதங்களையுந் தேவரீர் எகிப்துதேசத்திலேசெய்து இந்நாளில் நிற்குங் கீர்த்தியை யுமக்குண்டுபண்ணி,

௨௰௧. இஸ்ரவேலாகிய உமது சனத்தை

அடையாளங்களினாலும், அற்புதங்களினாலும், பலத்த கையினாலும், நீட்டப்பட்ட புயத்தினாலும், மகா பயங்கரத்தினாலும் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணி,

௨௨. அவர்களுடைய பிதாக்களுக்கு நீர் கொடுப்போமென்று ஆணையிட்டபாலும், தேனும் ஓடுகிற தேசமாயிருக்கிற இந்தத் தேசத்தை யவர்களுக்குக் கொடுத்தீர்.

௨௩. அவர்கள் அதற்குட் பிரவேசித்து அதைச் சுதந்தரித்துக்கொண்டார்கள். ஆனால், அவர்கள் உமது சத்தத்துக்குக் கீழ்ப்படியாமலும், உமது நியாயப்பிரமாணத்தில் நடவாமலும் போய், நீர் தங்களுக்குக் கற்பித்ததெல்லாவற்றையுஞ் செய்யாமலும் போனார்கள். ஆனதுகொண்டு இந்தத் தீங்கையெல்லாம் அவர்களுக்கு நேரிடப்பண்ணினீர்.

௨௪. இதோ மண்கொத்தளங்கள் போடப்பட்டிருக்கின்றன. பட்டணத்தைப் பிடிக்க வருகிறார்கள். பட்டயத்தினிமித்தமும், பஞ்சத்தினிமித்தமும், கொள்ளைநோயினிமித்தமும் இந்தப் பட்டணம் அதற்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிற கல்தேயரின் கையிலே கொடுக்கப்படுகிறது. நீர் சொன்னபடியுண்டாகிறது. இதோ நீர் அதைப் பார்க்கிறீர்.

௨௫. கர்த்தராகிய ஆண்டவரே, பட்டணம் கல்தேயரின் கையிலே கொடுக்கப்படுகிறதாயிருந்தும் தேவரீர் என்னுடனே நீ உனக்கு ஒரு நிலத்தை விலைக்கிரயமாய்க் கொண்டு அதற்குச் சாட்சிகளை வையென்று சொன்னீரென்றேன்.

௨௬. அப்போது கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்கு உண்டாகி அவருரைத்ததாவது;

௨௭. இதோ, நாம் எல்லா மாம்சத்தினுடைய பராபரனாகிய கர்த்தர், நம்மாலே கூடாத அதிசயமான காரியமொன்றுண்டோ!

௨௮. ஆனதுகொண்டு கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் இந்தப் பட்டணத்தைக் கல்தேயரின் கையிலும், பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலும் ஒப்புக்கொடுக்கிறோம், இவன் அதைப் பிடிப்பான்.

௨௯. இந்தப் பட்டணத்துக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிற கல்தேயர் உள்ளே பிரவேசித்து இந்தப் பட்டணத்தை * அக்கினியாற்கொளுத்தி அதைச் சுட்டெரிப்பார்கள், அவர்கள் நமக்குக் கோபமுண்டாகும்படிக்கு எந்த வீடுகளின் மேற்பாகங்களில் பாகாலுக்குத் தூபங்காட்டி அந்நிய தேவர்களுக்குப் பானபலிகளை வார்த்தார்களோ அந்த வீடுகளோடுங்கூடத்தானே. * ௰௯. அதி. ௰௩. ௨௧. அதி. ௰.

௩௰. ஏனெனில், இஸ்ரவேல் புத்திரரும், யூதா புத்திரரும் தங்கள் சிறுவயது துவக்கி நமது பார்வைக்குப் பொல்லாப்பானதையே செய்து வந்தார்கள். அதேதெனில், இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கைகளின் செய்கையினாலே நமக்குக் கோபத்தையேயுண்டாக்கி வந்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧. ஏனென்றால், அவர்கள் இந்தப் பட்டணத்தைக் கட்டின நாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் அது நமக்குக் கோபமுண்டாகவும், நமக்கு உக்கிரமுண்டாகவும், நாம் அதை நமது முகத்தைவிட்டகற்றுகிறதற்கேதுவாகவுமிருந்தது.

௩௨. நமக்குக் கோபமுண்டாகும்படிக்கு இஸ்ரவேல் புத்திரரும், யூதா புத்திரரும், அவர்கள் இராசாக்களும், அவர்கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்களும், அவர்கள் தீர்க்கதரிசிகளும், யூதாவின் மனுஷரும், எருசலேமின் குடிகளுஞ் செய்த எல்லாப் பொல்லாப்பினிமித்தமுந்தானே.

௩௩. * முகத்தையல்ல பிடரியை நமக்குக் காட்டினார்கள், நாம் ஏற்கெனவே அவர்களை யுபதேசிக்கவே யுபதேசித்தும் அவர்கள் புத்தியை யேற்றுக்கொள்ளாதே போனார்கள். * ௨. அதி. ௨௨. ஏசேக். ௨௩, ௩௫.

௩௪. அவர்கள் நம்முடைய நாமந் தரிப்பிக்கப்பட்ட வீட்டைத் தீட்டுப்படுத்தும்படிக்குத் தங்கள் அருவருப்புகளை அதிலே வைத்தார்கள். * எ. அதி. ௩௰. ௨. இராசா. ௨௧, ௪. ௫.

௩௫. அவர்கள் * மோளேகுக்கென்று தங்கள் குமாரரையும், தங்கள் குமாரத்திகளையுந் தீயைக் கடக்கப்பண்ணும்படிக்கு † இன்னோமுடைய குமாரரின் பள்ளத்தாக்கிலிருக்கிற பாகாலின் மேடைகளைக் கட்டினார்கள், யூதாவைப் பாவஞ் செய்யப்பண்ணுவதற்கு அவர்கள் இந்த அருவருப்பான காரியத்தைச் செய்யவேணுமென்று நாம் அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை அது நம்முடைய மனதிலே தோன்றினதுமில்லை. * ௩. யோசே. ௰௮. அதி. ௨௧. † எ. அதி. ௩௧. ௰௬. அதி ௫.

௩௬. இப்போதும் இப்படியிருக்கையில் பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், கொள்ளைநோயாலும் பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படும்போமென்று நீங்கள் சொல்லுகிற இந்தப் பட்டணத்தைக் குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது;

௩௭. இதோ, நமது கோபத்திலும், நமது உக்கிரத்திலும், நமது மகாகடுமையிலும், நாம் அவர்களைத் துரத்தின எல்லாத் தேசங்களிலுமிருந்து * நாம் அவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களை இந்த ஸ்தலத்துக்குத் திரும்பிவரவும், அதிலே சுகமாய்த் தங்கவும்பண்ணுவோம். * ௨௩. அதி. ௩. ௨௯. அதி. ௰௪. ௩௩. அதி. ௰.

௩௮ * அவர்கள் நமக்குச் சனமாக இருப்பார்கள், நாம் அவர்களுக்குப் பராபரனுமாக இருப்போம், * ௨௪. அதி. ௭. ௩௰. அதி. ௨௨. ௩௪. அதி. ௧. ஏசேக். ௩௬. ௨௮.

௩௯. அவர்கள் தங்களுக்கும், தங்களுக்குப் பின்னுசவிருக்குந் தங்கள் பிள்ளைகளுக்கும் நன்மையாக நடக்கச் சகல நாட்களிலும் பயப்படும்படிக்கு நாம் அவர்களுக்கு ஒரே இருதயத்தையும், ஒரே வழியையுங் கட்டளையிட்டு,

௪௰ நாம் அவர்களுக்கு நன்மை செய்யும்படிக்கு அவர்களை விட்டுப் பின்வாங்காத * நித்திய உடன்படிக்கையை அவர்களோடே பண்ணி அவர்கள் நம்மைவிட்டகன்று போகாதபடிக்கு நம்முடைய பயத்தை அவர்களிருதயத்திலே கொடுத்து,

* ஏசாயா. ௫௫. அதி. ௩.

௪௧. அவர்களுக்கு நன்மை செய்ய அவர்கள் பேரிலே சந்தோஷமாயிருந்து அவர்களை இந்தத் தேசத்திலே உண்மையாய் நம்முடைய இருதயத்தாலும், நம்முடைய முழு ஆத்துமாவாலும் நாட்டுவோம்.

௪௨. ஏனென்றால் கர்த்தர் சொல்லுகிறதாவது; நாம் இந்தச் சனத்தின் மேலே இந்தப் பெரிய தீங்கையெல்லாம் வரப்பண்ணினது போலே அவர்களைக் குறித்து நாஞ் சொன்ன நன்மையையெல்லாம் நாம் அவர்கள் மேல் வரப்பண்ணுவோம்.

௪௩. மனுஷனும், மிருகமுமில்லாதபடிக்குப் பாழாய்ப் போயிற்றென்றும், கல்தேயரின் கையிலே ஒப்புக்கொடுக்கப்பட்டுப் போயிற்றென்றும் நீங்கள் சொல்லுகிற இந்தத் தேசத்திலே நிலங்கள் கொள்ளப்படும்.

௪௪. பென்யமீன் தேசத்திலும், எருசலேமின் சுற்றுப்புறங்களிலும், யூதாவின் பட்டணங்களிலும், மலைச்சீமையின் பட்டணங்களிலும், பள்ளத்தரைச்சீமையின் பட்டணங்களிலும், தெற்றத்திசைப் பட்டணங்களிலும் நிலங்கள் விலைக்கிரயமாகக் கொள்ளப்படுவதும், கடிதாசிகளில் கையெழுத்தும், முத்திரையும் போடப்படுவதும், அதற்குச் சாட்சி வைக்கப்படுவதுமுண்டு. ஏனென்றால், * அவர்கள் சிறையிருப்பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

* ௩௰. அதி. ௩. ௩௩. அதி. ௭.

## ௩௩. அதிகாரம்.

[(௧) பராபரன் சிறையிருப்பவர்களுக்குக் கிருபையுள்ள திரும்புதலையும், (௩) சந்தோஷத்தின் சத்தத்தையும் (௰௨) கிறிஸ்து நீதியின் கிளையென்னப்பட்டதையும், (௰௫) இராச்சியமும், குருத்துவமும் நீடித்திருப்பதையும், (௰௭) நிலையான ஆளுகையையும், (௨௰) உறுதியும் பாக்கியமுமானவிதத்தையும் வாக்குத்தத்தம்பண்ணினது.]

எரேமியா இன்னுங் காவற்சாலையின் முற்றத்திலே யடைக்கப்பட்டிருக்கையில் கர்த்தருடைய வார்த்தை இரண்டாந்தரம் அவனுக்குண்டாகி அவர் சொன்னதாவது; * ௩௨. அதி. ௨.

௨. அதைச் செய்கிற கர்த்தருமாய் அதைத் திட்டப்படுத்தும்படிக்கு அதை உருவேற்படுத்துகிற கர்த்தருமாயிருக்கிற கர்த்தரென்னும் நாமமுள்ளவருமானவர் சொல்லுகிறதேதென்றால்,

௩. நம்மை நோக்கிக் கூப்பிடு, அப்பொழுது நாமுனக்கு மறுஉத்தரவு கொடுத்து நீயறியாத பெரியவைகளும், உனக்கெட்டாதவைகளுமாகிய காரியங்களை யுனக்கறிவிப்போம்.

௪. அதேதென்றால், எதிர்க்கொத்தளங்களாலும், பட்டயத்தாலும் இடிக்கப்பட்டவைகளாகிய இந்தப் பட்டணத்தின் வீடுகளையும், யூதாவுடைய இராசாக்களின் வீடுகளையுங் குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது; * ஏசாயா. ௨௨. ௰.

௫. இந்தப் பட்டணத்தினுடைய எல்லாப் பொல்லாப்பினிமித்தமும் நாம் நம்முடைய முகத்தை மறைத்தபடியினாலே அவர்கள் அவைகளை நாம் நம்முடைய கோபத்திலும், உக்கிரத்திலும் வெட்டுகிற மனுஷப்பிரேதங்களினாலே நிரப்பும்படியாகக் கல்தேயரோடே யுத்தம்பண்ணப்போகிறார்கள்.

௬. இதோ, * நாம் அவர்களுக்கு ஆரோக்கியமும், குணமும் வரப்பண்ணி அவர்களைக் குணமாக்கி அவர்களுக்குப் பரிபூரணமான சமாதானத்தையும், உண்மையையும் வெளிப்படுத்துவோம். * ௩௰. அதி. ௭.

௭. * நாம் யூதாவின் சிறையிருப்பையும், இஸ்ரவேலின் சிறையிருப்பையுந் திருப்பி முந்தினதைப்போலே யவர்களைக் கட்டுவித்து, * ௨௪, ௬௪.

௮. * அவர்கள் நமக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்த அவர்களுடைய எல்லா அக்கிரமங்களுக்கும், அவர்களை நீங்கலாக்கிச் சுத்திகரித்து அவர்கள் நமக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்து நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணின அவர்களுடைய எல்லா அக்கிரமங்களையும் மன்னிப்போம்.

* ௩௧. அதி. ௩௪.

௯. நாம் அவர்களுக்குச் செய்யும் நன்மையை எல்லாங் கேட்கப்போகிற பூமியின் எல்லாச் சாதிகளுக்கு முன்பாக அது நமக்கு மகிழ்ச்சியுள்ள கீர்த்தியாகவும், புகழ்ச்சியாகவும், மகிமையாகவுமிருக்கும், நாம் அவர்களுக்கருளிச் செய்யும் எல்லா நன்மையினிமித்தமும், எல்லாச் சமாதானத்தின் நிமித்தமும் இவர்கள் திகைத்துத் திகிலடைவார்கள்.

௰. கர்த்தர் சொல்லுகிறதாவது; மனுஷ

னில்லாமலும், மிருகமில்லாமலும் அவாந்தரவெளியாய்க் கிடக்கிறதென்று நீங்கள் சொல்லுகிற இவ்விடத்திலும், யூதாவின் பட்டணங்களிலும் ஒரு மனுஷனும், ஒரு குடியும், ஒரு மிருகமுமில்லாதபடியாகப் பாழான எருசலேமின் வீதிகளிலும்,

௰௧. * இன்னும். களிப்பின் சத்தமும், மகிழ்ச்சியின் சத்தமும், மணவாளன் சத்தமும், மணவாட்டியின் சத்தமும் சேனைகளையுடைய கர்த்தரைத் துதியுங்கள். ஏனென்றால் கர்த்தர் நல்லவர், அவருடைய கிருபையென்றுமுள்ளதென்று சொல்லுவர்களின் சத்தமும், கர்த்தருடைய வீட்டுக்குத் தோத்திரப்பலிகளைக் கொண்டு வருபவர்களின் சத்தமுங் கேட்கப்படும். ஏனெனில், அவர்கள் முந்தியதைப்போலிருக்கும்படிக்கு இந்த தேசத்தின் சிறையிருப்பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * ௭, அதி. ௩௪.

௰௨. சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; ஒரு மனுஷனும், ஒரு மிருகமுமில்லாமல் அவாந்தரவெளியாய்க் கிடக்கிற இவ்விடத்திலும், இதற்கடுத்த பட்டணங்களிலும் இன்னமும் ஆட்டுமந்தையை மேய்த்துமடக்குகிற மேய்ப்பரின் தாபரங்களுண்டாயிருக்கும்.

௰௩. மலைச்சீமையான பட்டணங்களிலும், பள்ளத்தாக்குச் சீமையான பட்டணங்களிலும், தெற்குத்திசைப் பட்டணங்களிலும், பென்யமீன் தேசத்திலும், எருசலேமின் சுற்றுப்புறங்களிலும், யூதாவின் பட்டணங்களிலும் இன்னம் ஆட்டுமந்தைகளையெண்ணிக்கொள்ளுகிறவனுடைய கைகளைக் கடந்து வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௪. இதோ நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார். அப்போது நாம் இஸ்ரவேலின் வீட்டுக்கும், யூதாவின் வீட்டுக்குஞ் சொன்ன நல்வார்த்தையை நிருவாகப்பண்ணுவோம்.

௰௫. அந்நாட்களிலும், அக்காலத்திலும் * தாவீதுக்கு நீதியின் முளையை முளைக்கப்பண்ணுவோம். அவர் பூமியிலே நியாயத்தையும், நீதியையும் நடப்பிப்பார். * ௨௩, அதி. ௫. ௬. எசாயா. ௪, ௨. ௩௨, அதி. ௧. ௨.

௰௬. அந்நாட்களில் யூதா இரட்சிக்கப்பட்டு எருசலேம் சுகமாய்த் தங்கும். அவர் எங்கள் நீதியாயிருக்கிற கர்த்தரென்றழைக்கப்படுவார்.

௰௭. ஏனென்றால், * இஸ்ரவேல் வீட்டினுடைய இராசாசனத்தின்மேல் உட்காரத்தக்க புருஷன் தாவீதுக்கில்லாமற்போவதில்லை. * ௨. சாமு. ௭, ௰௬.

௰௮. தகனபலியைச் செலுத்திக் காணிக்கையின் புகையைக்காட்டி நாள்தோறும் பலியிடும் புருஷன் நமக்கு முன்பாக ஆசாரியர்களுக்கும், இலேவியருக்குமில்லாமற்போவதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறொன்றார்.

௰௯. பின்னையும் எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவருரைத்ததாவது;

௨௰. கர்த்தர் சொல்லுகிறதேதெனில், குறித்த நேரங்களிற் பகற்காலமும், இராக்காலமும் உண்டாகாதபடிக்கு நீங்கள் பகற்காலத்தைக்குறித்து நாம் பண்ணின திட்டத்தையும், இராக்காலத்தைக்குறித்து நாம் பண்ணின திட்டத்தையும் அவத்தமாக்கினால்,

௨௧. அப்போது நம்முடைய தாசனாகிய தாவீதோடே நாம் பண்ணின உடன்படிக்கையும், அவன் ஆசனத்தில் அரசாளுங்குமாரன் அவனுக்கில்லாதேபோகும்படியாக அவத்தமாம். நம்முடைய ஊழியக்காரராகிய இலேவியரோடும், ஆசாரியர்களோடும் நாம் பண்ணின உடன்படிக்கையும் அப்போது அவத்தமாம்.

௨௨. வானங்களின் சேனை யெண்ணப்படாததும், கடற்கரைமணல் அளக்கப்படாததுமாயிருக்கிறதுபோலே நாம் நம்முடைய தாசனாகிய தாவீதின் சந்ததியையும், நமக்கு ஊழியஞ்செய்கிற இலேவியரையும் வர்த்திக்கப்பண்ணுவோமென்றார்.

௨௩. பின்னையும் எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது;

௨௪. கர்த்தர் தெரிந்துகொண்ட இரண்டு வம்சங்களையும் வெறுத்துப்போட்டாரென்று இந்த ஜனஞ்சொல்லித் தங்களுக்கு முன்பாக நம்முடைய ஜனம் இனியொரு சாதியல்லவென்கிறதாய் அதைத் தூஷணிக்கிறார்களென்கிறதை நீ கண்டதில்லையோ!

௨௫. வானங்களுக்கும், பூமிக்குமிருக்கிற திட்டங்களை நாம் வைக்காதபடிக்குப் பகற்காலத்தையும், இராக்காலத்தையுங்குறித்து நாம் பண்ணின உடன்படிக்கையும் போனால்,

௨௬. அப்போது நாம் யாக்கோபின் வித்திலும், நம்முடைய தாசனாகிய தாவீதின் வித்திலும், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபென்றவர்களின் வித்தை யாளத்தக்கவர்களை யதிலெடுக்காதபடிக்கு வெறுத்துப்போடுவோம். ஏனென்றால், * அவர்களுடைய சிறையிருப்பை நாம் திருப்பி அவர்களுக்கிரங்குவோமென்று கர்த்தர் சொல்லுகிறொன்றார்.
* ௩௨, அதி. ௪௪. எசேக்கி. ௩௯, ௨௫. ஓசே. ௯, ௰௧. யோவான். ௫, ௯.

## ௩௪. அதிகாரம்.

[(௧) எரேமியா சிதேக்கியாவும், பட்டணத்தாரும் சிறைப்பட்டுப்போவதைத் தீர்க்கதரிசனமாயுரைத்தது. (௮) பிரபுக்களும், குடி-

களும் தங்கள் அடிமைகளை நிவர்த்திசெய்தும் பராபரனுடைய உடன்படிக்கைக்கு விரோதமாக அவர்களை மறுபடியும் சேர்த்துக்கொண்டது. (௰௨) எரேமியா அவர்களுடைய கீழ்ப்படியாமைக்காக அவர்களையும், சிதேக்கியாவையும் சத்துருக்கள் கையிலே ஒப்புக்கொடுப்பது.]

**பா**பேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சாரும், அவனுடைய எல்லாச் சேனையும், அவனுடைய கையின் ஆளுகைக்குக்கீழான பூமியினுடைய சகல இராச்சியங்களும், சகல சனசங்கங்களும் எருசலேமுக்கும், சகல பட்டணங்களுக்கும் விரோதமாக யுத்தம்பண்ணுகையில் எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டான வசனம்.

* ௨. இராசா. ௨௫, ௧. ௨.

௨. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது; நீ போய் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவுடனே பேசி அவனுக்குச் சொல்லவேண்டியதேதெனில், கர்த்தர் உரைக்கிறதாவது; இதோ நாம் இந்தப் பட்டணத்தைப் பாபேலுடைய இராசாவின் கையிலே ஒப்புக்கொடுக்கிறோம். அவன் அதை அக்கினியால் சுட்டெரிப்பான்.

௩. நீ அவன் கைக்குத் தப்பிப்போகாமல் பிடிபடவே பிடிபட்டு அவன் கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவாய். * உன் கண்கள் பாபேலுடைய இராசாவின் கண்களைப் பார்க்கும், அவன் வாய் உன் வாயோடே பேசும், நீ பாபேலுக்கும் போவாய். * ௩௨, அதி. ௪.

௪. ஆகிலும் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள். உன்னைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது; நீ பட்டயத்தாலே சாவதில்லை.

௫. சமாதானத்திலே சாவாய். உனக்குமுன்னிருந்த முந்தின இராசாக்களாகிய உன் பிதாக்களினிமித்தமாகக் * கந்தவர்க்கங்களைக் கொளுத்தினதுபோலே உனனிமித்தமுங் கொளுத்தி ஐயோ ஆண்டவனேயென்று உனக்காகப் புலம்புவார்கள். ஏனெனில், இது நாம் சொன்ன வார்த்தையென்று கர்த்தர் உரைத்தாரென்று சொல்லென்றார்.

* ௨. நாளாக. ௰௬, ௰௪.

௬. இந்த வார்த்தைகளையெல்லாந் தீர்க்கதரிசியாகிய எரேமியா எருசலேமிலே யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவோடே சொன்னான்.

௭. அப்போது பாபேலுடைய இராசாவின் சேனை எருசலேமுக்கு விரோதமாகவும், யூதாவினுடைய எல்லாப் பட்டணங்களிலும் மீந்த பட்டணங்களாகிய லாகீசுக்கு விரோதமாகவும், அசேக்காவுக்கு விரோதமாகவும் யுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். ஏனென்றால், அரணிப்பான பட்டணங்களாகிய இவைகளே யூதாவின் பட்டணங்களில் மீந்திருந்தது.

௮. ஒருவனும் யூதசாதியாகிய தன் சகோதரங்களையடிமைகொள்ளாதபடிக்கு * அவனவன் எபிரேயனாகிய தன் வேலைக்காரனையும், எபிரேயசாதியாகிய தன் வேலைக்காரியையுந் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்று அவர்களுக்கு விடுதலையைக் கூற, * ௨. மோசே. ௨௧, ௨. ௩. மோசே. ௨௫, ௩௯—௪௩. ௫. மோசே. ௰௫, ௰௨.

௯. இராசாவாகிய சிதேக்கியா எருசலேமிலிருக்கிற எல்லாச் சனத்தோடும் உடன்படிக்கைபண்ணினபிற்பாடு எரேமியாவுக்குக் கர்த்தராலே வார்த்தையுண்டானது.

௰. ஏனென்றால், அவனவன் தன் வேலைக்காரனையும், தன் வேலைக்காரியையும் இனி அடிமைகொள்ளாதபடிக்குத் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்ற உடன்படிக்கைக்குட்பட்ட எல்லாப் பிரபுக்களும், எல்லாச் சனமுஞ் செவிகொடுத்தார்கள். செவிகொடுத்து அவர்களையனுப்பிவிட்டார்கள்.

௰௧. ஆனால் அதற்குப்பிறகு அவர்கள் மாறுபட்டுப்பண்ணித் தாங்கள் தன்னிச்சைக்காரராக அனுப்பிவிட்ட வேலைக்காரரையும், வேலைக்காரிகளையுந் திரும்ப அழைத்துவந்து அவர்களை வேலைக்காரரும், வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டார்கள்.

௰௨. ஆனதுகொண்டு கர்த்தராலே எரேமியாவுக்கு வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது;

௰௩. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதெனில், * ஏழுவருஷங்களின் முடிவிலே நீங்கள் அவனவன் தனக்கு விற்கப்பட்ட எபிரேயசாதியாகிய தன் சகோதரனையனுப்பிவிடுவார்களாகவென்றும், அவன் உனக்கு ஆறுவருஷம் அடிமையானபிற்பாடு அவனை யுன்னிடத்தில் வைக்காமல் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடென்றும்,

* ௨. மோசே. ௨௧, ௨. ௫. மோ. ௰௫, ௰௨.

௰௪. நாமுங்கள் பிதாக்களைச் சிறைச்சாலையாகிய எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினநாளிலே யவர்களோடே உடன்படிக்கைபண்ணினோம். ஆனால் உங்கள் பிதாக்கள் நம்முடைய சொல்லைக் கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும் போனார்கள்.

௰௫. நீங்களோவெனில், இந்நாளிலே மனந்திரும்பி அவனவன் தனக்கடுத்தவனுக்கு விடுதலையைக் கூறினதிலே நம்முடைய பார்வைக்குச் செம்மையாயிருக்கிறதைச் செய்து நமது நாமந் தரிப்பிக்கப்பட்ட வீட்டிலே இதற்காக நம்முடைய முகத்துக்குமுன்பாக உடன்படிக்கையைப் பண்ணியிருந்தீர்கள்.

௰௬. ஆனால் நீங்கள் மாறுபட்டம்பண்ணி நம்முடைய நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி, நீங்கள் அவனவனை விடுதலையாகவும், தன்னிச்சைக்காரராகவும் அனுப்பிவிட்ட தன் வேலைக்காரனையும், தன் வேலைக்காரியையும் திரும்ப அழைத்துவந்து அவர்களை யுங்களுக்கு வேலைக்காரரும், வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டீர்கள்.

௰௭. ஆகையாலே கர்த்தர் சொல்லுகிறதாவது; நீங்கள் அவனவன் தன் சகோதரனுக்கும், அவனவன் தனக்கடுத்தவனுக்கும் விடுதலையைக் கூற நம்முடைய சொல்லைக் கேளாமற்போனீர்களே. இதோ நாமுங்களைப் பட்டயத்துக்கும், பெருவாரிக்காய்ச்சலுக்கும், பஞ்சத்துக்கும் விடுகிற விடுதலையை யுங்களுக்குக் கூறுகிறோம். பூமியின் இராச்சியங்களிலெல்லாம் அலைகிறதற்கும் உங்களையொப்புக்கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௮. நமக்கு முன்பாகப் பண்ணின உடன்படிக்கையின் வார்த்தைகளை நிறைவேற்றாமல் நம்முடைய உடன்படிக்கையை மீறின மனுஷரை நாம் தாங்களிரண்டாக அறுத்துத்* துண்டுகளின் நடுவாகக் கடந்துபோன கன்றுக்குட்டியைப்போலாக்குவோம். * ௧. மோசே. ௰௫. ௰௭.

௰௯. கன்றுக்குட்டியினுடைய துண்டுகளின் நடுவே கடந்துபோன யூதாவின் பிரபுக்களையும், எருசலேமின் பிரபுக்களையும், பிரதானிகளையும், ஆசாரியர்களையும், தேசத்தின் சகல சனங்களையுந்தானே.

௨௰. நாம் அவர்களையவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும் ஒப்புக்கொடுப்போம். * அவர்களுடைய பிரேதம் ஆகாசத்தின் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் இரையாம். * ௭, ௩௩. ௬. அதி. ௨௨.

௨௰௧. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவையும், அவனுடைய பிரபுக்களையும் அவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்கள் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும் * உங்களைவிட்டுப் பேர்ந்துபோன பாபேலின் இராசாவினுடைய சேனையின் கையிலும் ஒப்புக்கொடுப்போம். * ௩௭. அதி. ௫.

௨௰௨. இதோ நாம் கட்டளைகொடுத்து அவர்களை * இந்தப் பட்டணத்துக்குத் திரும்பப்பண்ணுவோம். அவர்கள் அதற்கு விரோதமாக யுத்தம்பண்ணி அதைப் பிடித்து அதை யக்கினியாற் சுட்டெரிப்பார்கள். யூதாவின் பட்டணங்களையோ ஒருவரும் அவைகளிற் குடியிராதபடியாகப் பாழ்த்துப்போகப்பண்ணுவோமென்று கர்த்தருரைக்கிறாரென்று சொல்லென்றார். * ௩௭. அதி. ௮.

## ௩௰௫. அதிகாரம்.

[(௧) இரேகாபியருடைய கீழ்ப்படிதலிலே (௰௨) யூதருடைய கீழ்ப்படியாமையைக் குறித்து எரேமியா கண்டித்தது. (௰௮) பராபரன் இரேகாபியருடைய கீழ்ப்படிதலுக்காக அவர்களை ஆசீர்வதித்தது.]

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவினுடைய இராசாவின் நாள்களில் எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டானவார்த்தையாவது;

௨. நீ இரேகாபியருடைய வீட்டுக்குப்போய் அவர்களோடே பேசி அவர்களைக் கர்த்தருடைய வீட்டின் அறைகளிலொன்றிலே யழைத்துப்போய் அவர்களுக்குத் திராட்சப்பழரசங்குடிக்கக்கொடுவென்றார்.

௩. அப்பொழுது நான் கபத்சீனியாவின் குமாரனாகிய எரேமியாவுக்கு மகனாய யாசனியாவையும், அவனுடைய சகோதரரையும், அவனுடைய எல்லாக் குமாரரையும், இரேகாபியருடைய வீட்டாரனைவரையும் அழைத்து,

௪. கர்த்தருடைய வீட்டிலே பிரபுக்களுடைய அறையின் அருகேயும் வாசலைக்காக்கிற சல்லூமின் குமாரனாகிய மாசேயாவினுடைய அறையின்மேலுள்ள இக்தலியாவின் குமாரனாகிய ஆனானென்ற பராபரனுடைய மனுஷபுத்திரரின் அறையிலேயும் அவர்களைக் கூட்டிக்கொண்டுபோய்,

௫. திராட்சப்பழரசத்தினால் நிறையப்பட்ட கரங்களையும், பாத்திரங்களையும் இரேகாபியருடைய வீட்டுப்புத்திரரின் முன்னே வைத்து அவர்களுடனே திராட்சப்பழரசங்குடியுங்களென்றேன்.

௬. ஆனால் அவர்கள் சொன்னதாவது; நாங்கள் திராட்சப்பழரசங் குடிக்கிறதில்லை. ஏனென்றால், நீங்கள் பரதேசிகளாய்த் தங்குகிற சீமையில் நீடித்துவாழ்ந்திருக்கும்படிக்கு,

௭. நீங்களும், உங்கள் பிள்ளைகளுமென்றென்றைக்குந் திராட்சப்பழரசங்குடியாமலும், வீட்டைக்கட்டாமலும், விதையை விதைக்காமலும், திராட்சத்தோட்டத்தை நாட்டாமலும், கையாளாமலும் உங்களுடைய எல்லாநாள்களிலுங் கூடாரங்களிலே குடியிருப்பீர்களாகவென்று இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன் யோனதாப்பு எங்களுக்குக் கற்பித்தார்.

௮. அப்படியே எங்களுடைய எல்லாநாள்களிலும் நாங்களும், எங்கள் பெண்சாதிகளும், எங்கள் குமாரரும், எங்கள் குமாரத்திகளுந் திராட்சப்பழரசங்குடியாமலும்,

௯. நாங்கள் குடியிருக்கிறவீடுகளைக் கட்டாதபடிக்கு இரேகாபின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன் யோனதாபின் சத்தத்துக்குக் கீழ்ப்படிந்திருக்கிறோம், எங்களுக்குத் திராட்சத்தோட்டமும், வயலும், விதைப்பாடுமில்லை.

௰. நாங்கள் கூடாரங்களில் குடியிருந்து எங்கள் தகப்பனாகிய யோனதாப் எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாங் கீழ்ப்படிந்து செய்துவந்தோம்.

௰௧. ஆனால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் தேசத்திலேவந்தேறுகையில் நாம் கல்தேயருடைய இராணுவத்துக்கும், சீரியருடைய இராணுவத்துக்குந் தப்ப எருசலேமுக்குப் போவோம், வாருங்களென்று சொன்னோம். அப்படியே யெருசலேமிலே தரித்திருக்கிறோமென்றார்கள்.

௰௨. அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை யெரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰௩. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தருரைக்கிறதேதெனில், நீ போய் யூதாவின் மனுஷருக்கும், எருசலேமின் குடிகளுக்குஞ் சொல்லவேண்டியதாவது; நீங்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் புத்தியை யேற்றுக்கொள்ளவில்லையோவென்று கர்த்தர் கேட்கிறார்.

௰௪. திராட்சப்பழரசங் குடியாதபடிக்கு இரேகாபின் குமாரனாகிய யோனதாப் தன் பிள்ளைகளுக்குக் கற்பித்தவார்த்தைகள் நிறைவாக்கப்பண்ணப்பட்டுவருகின்றன. அவர்கள் இந்நாள்மட்டுக்கும் அதைக்குடியாமல் தங்கள் தகப்பனுடைய கற்பனைக்குக் கீழ்ப்படிகிறார்கள். ஆனால் * நாமுங்களுக்கு ஏற்கெனவே சொல்லிக்கொண்டிருந்தும், நமக்குக் கீழ்ப்படியாதேபோனீர்கள். * ௨௫. அதி. ௩. ௩௨. அதி. ௩௩.

௰௫. * நீங்கள் அவனவன் தன் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பி உங்கள் கிரியைகளைச் சீர்ப்படுத்தி அன்னியதேவர்களைச் சேவிக்கும்படிக்குப் பின்சென்றாதிருங்கள். அப்போது நாமுங்களுக்கும், உங்கள் பிதாக்களுக்குங் கொடுத்த தேசத்திலே குடியிருப்பீர்களென்றுசொல்லித் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரையெல்லாம் நாமுங்களண்டைக்கு ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும், † நீங்கள் உங்கள் செவியைச் சாய்க்காமலும், நமக்குக் கீழ்ப்படியாமலும்போனீர்கள். * ௰௮. அதி. ௰௧. † ௭. அதி. ௨௬.

௰௬. இப்போதும் இரேகாபின் குமாரனாகிய யோனதாபின் பிள்ளைகள் தங்கள் தகப்பன் தங்களுக்குக் கற்பித்த கற்பனையை நிறைவாக்கப்பண்ணிவந்தபடியினாலும், இந்தச்சனம் நமக்குக் கீழ்ப்படியாமற்போனபடியினாலும்,

௰௭. இஸ்ரவேலின் பராபரனும், சேனைகளையுடைய பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ * நாம் அவர்களுடனே சொல்லியும் அவர்கள் கேளாமலும், நாம் அவர்களை நோக்கிக் கூப்பிட்டும் அவர்கள் மறுவுத்தரவு கொடாமலும் போனபடியினாலே யூதாவின்மேலும், எருசலேமின் குடிகளெல்லாரின்மேலும் நாம் அவர்களுக்கு விரோதமாகச் சொன்ன எல்லாத் தீங்கையும் வரப்பண்ணுவோமென்று சொல்லுகிறார். * எ, ௰௩. ௰௪. ஏசா. ௬௫, ௰௨. ௬௬, ௪.

௰௮. இரேகாபியருடைய வீட்டாருக்கோவென்றால், எரேமியா சொன்னதாவது; இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நீங்கள் உங்கள் தகப்பனாகிய யோனதாபின் கற்பனைக்குக் கீழ்ப்படிந்து அவனுடைய கற்பனைகளையெல்லாங் கைக்கொண்டு அவனுங்களுக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்துவந்தபடியினாலே,

௰௯. சகல நாள்களிலும் * நமக்கு முன்பாக நிற்கத்தக்க புருஷன் இரேகாபின் குமாரனாகிய யோனதாபுக்கில்லாமற்போவதில்லையென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்றான். * ௩௩, ௰௮.

## ௩௬. அதிகாரம்.

[(௧) எரேமியா பாருக்கைத் தன் தீர்க்கதரிசனத்தையெழுதவும், (௫) அதைப் பிரசித்தமாய் வாசிக்கவுஞ் செய்தது. (௰௧) பிரபுக்கள் மிகாயாவினாலே அதின் செய்தியையறிந்து சுருளையெடுத்துக்கொண்டுவரவும், அதைவாசிக்கவும் ஏகூதியை அனுப்பினது. (௰௯) அவர்கள் பாருக்கையும், எரேமியாவையும் ஒளித்துக்கொள்ளச் சொன்னது. (௨௰) இராசாவாகிய யோயாக்கீம் சுருளைக் குறித்தறிந்து அதிலொருபாகத்தைக் கேட்டு அதைக் கொளுத்திப்போட்டது. (௨௭) அவனுக்குவரும் நியாயத்தீர்ப்பை எரேமியா சொன்னது. (௩௨) பாருக்குச் சுருளைத் திரும்பவெழுதினது.]

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற யூதாவுடைய இராசாவின் * நாலாம் வருஷத்திற் சம்பவித்ததேதென்றால், கர்த்தராலே எரேமியாவுக்குண்டான வார்த்தையாவது; * ௨௫. அதி. ௧.

௨. நீ யுனக்கொரு புஸ்தகச்சுருளை வாங்கி நாம் யோசியாவின் நாள்களிலே உன்னுடனே பேசின நாள்முதற்கொண்டு இந்நாள் மட்டும் இஸ்ரவேலைக்குறித்தும், யூதாவைக்குறித்தும், சகலசாதிகளைக்குறித்தும் உன்னோடே சொன்ன எல்லாவார்த்தைகளையும் அதிலேயெழுது.

௩. * ஒருவேளை யூதாவின்வீட்டார் அவரவர் தங்கள் பொல்லாதவழியைவிட்டுத் திரும்பும்படியாகவும், நாம் தங்கள் அக்கிரமத்தையும் மன்னிக்கும்படியாகவுந் தங்களுக்கு நாம் செய்ய நினைத்திருக்கிற தீங்கையெல்லாங் கேட்பார்களென்றான். * ௨௬. அதி. ௩.

௪. அப்போது எரேமியா நேரியாவின் குமாரனாகிய * பாருக்கை அழைத்தான். இந்தப்பாருக்கு என்கிறவன் கர்த்தர் எரேமியாவுடனேசொல்லிவந்தஎல்லாவார்த்தைகளையும் அவன்வாய்ச்சொல்ல ஒருபுஸ்தகச்சுருளில் எழுதினான். ✻ ௩௨. அதி. ௰௨.

௫. பிற்பாடு எரேமியாபாருக்குக்குக் கற்பித்துச்சொன்னதாவது; நான் அடைக்கப்பட்டவன் நான் கர்த்தருடைய வீட்டுக்குட்பிரவேசிக்கக்கூடாது.

௬. நீயுள்ளேபிரவேசித்து என்வாய்ச்சொல்ல நீயெழுதினசுருளிலே கர்த்தருடையவீட்டில் உபவாசநாளிலே கர்த்தருடையவார்த்தைகளைச்சனங்கள்கேட்கவாசி, தங்களட்டணங்களிலிருந்து வருகிறவெல்லா யூதாகோத்திரத்தாருங்கேட்க அவைகளைவாசிப்பாயாக.

எ. ஒருவேளை கர்த்தருடைய முகத்துக்கு முன்பாக அவர்கள் பணிந்து விண்ணப்பம்பண்ணி அவரவர் தங்கள் பொல்லாவழியைவிட்டுத் திரும்புவார்கள். ஏனெனில், கர்த்தர் இந்தச் சனத்துக்கு விரோதமாகச் சொன்ன கோபமும், உக்கிரமும் பெரியதென்றான்.

அ. அப்படியே நேரியாவின்குமாரனாகிய பாருக்கு அந்தப்புஸ்தகத்திற் கர்த்தருடையவீட்டிலே கர்த்தருடைய வார்த்தைகளை வாசிக்கும்படிக்கு,எரேமியாதீர்க்கதரிசிதனக்குக்கற்பித்தபடியெல்லாஞ்செய்தான்.

௯. யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற யூதாவினுடைய இராசாவின் ஐந்தாம் வருஷத்து ஒன்பதாம் மாதத்திலே சம்பவித்ததென்னில், எருசலேமிலிருக்கிற எல்லாச்சனத்துக்கும், யூதாவுடைய பட்டணங்களிலிருந்து எருசலேமுக்குவருகிற எல்லாச்சனத்துக்குங்கர்த்தருக்குமுன்பாக ஒரு உபவாசத்தைக்கூறினார்கள்.

௰. அப்பொழுது பாருக்குக்கர்த்தருடைய வீட்டின்மேல் முற்றத்திற் கர்த்தருடையவீட்டுப்புதுவாசலின் நடைக்கருகான சாப்பானுடைய குமாரனாகிய கேமரியாவென்ற சம்பிரதியின் அறையிலே அந்தப்புஸ்தகத்திலே எரேமியாவின்வார்த்தைகளையெல்லாச்சனமுங் கேட்கவாசித்தான்.

௰௧. சாப்பானுடைய குமாரனாகிய கேமரியாவின் மகன்மிகாயா கர்த்தருடையவார்த்தைகளையெல்லாம் அந்தப் புஸ்தகத்திலே வாசிக்கக்கேட்டும்போது,

௰௨. அவன் இராசாவின்வீட்டுக்குச்சம்பிரதியின் அறையிலிறங்கிப்போனான். இதோ, அங்கேயெல்லாப்பிரபுக்களும் உட்கார்ந்திருந்தார்கள், சம்பிரதியாகிய எலிசாமாவும், செமாயாவின் குமாரனாகிய தேலாயாவும், அக்போரின் குமாரனாகிய எல்நாத்தானும், சாப்பானின் குமாரனாகிய கேமரியாவும், அனனியாவின் குமாரனாகிய சிதேக்கியாவும், மற்ற எல்லாப்பிரபுக்களுந்தானே.

௰௩. பாருக்குச் சனத்தின்செவிகளிற்பட்ப் புஸ்தகத்திலே வாசிக்கையில் தான்கேட்ட எல்லாவார்த்தைகளையும் மிகாயா அவர்களுக்கறிவித்தான்.

௰௪. அப்போது எல்லாப்பிரபுக்களுங்கூஷியின்குமாரனாகிய செலேமியாவின்மகனான நேத்தானியாவினுடைய குமாரனாயிருக்கிற யெகுதியைப் பாருக்கு அண்டைக்கனுப்பி, சனங்கேட்க நீ வாசித்துக்கொண்டிருந்தச் சுருளைப் புகையிலெடுத்துக்கொண்டு வாவென்று சொல்லச்சொன்னார்கள். ஆகையால், நேரியாவின் குமாரனாகிய பாருக்குச் சுருளைத் தன்கையிலெடுத்துக்கொண்டு அவர்களண்டைக்கு வந்தான்.

௰௫. அவர்கள் அவனுடனே, நீ உட்கார்ந்துகொண்டு நாங்கள் கேட்கவாசியென்றார்கள், அவர்கள் கேட்கவாசித்தான்.

௰௬. அப்போது சம்பவித்ததென்றால், அவர்கள் எல்லாவார்த்தைகளையுங் கேட்கையில் ஒருவரையொருவர் பயமுற்றவர்களாய்ப்பார்த்துப் பாருக்குடனே இந்த எல்லாவார்த்தைகளையும் இராசாவுக்கறிவிக்கவே யறிவிப்போமென்றார்கள்.

௰எ. நீ உவர்வாய்ச்சொல்ல இந்த வார்த்தைகளையெல்லாம் எந்தப்பிரகாரமாய் எழுதினாயென்கிறதை யெங்களுக்கறிவியென்று பாருக்கைக்கேட்டார்கள்.

௰அ. பாருக்கு அவர்களுடனே தமதுவாயினாலேயிந்த எல்லா வார்த்தைகளையும் உரைத்து என்னுடனேசொன்னார். நான் மையினாலே புஸ்தகத்திலெழுதினேனென்றான்.

௰௯. பிரபுக்கள் பாருக்குடனே, நீ போய் ஒளித்துக்கொள். நீயும், எரேமியாவுந்தானே நீங்களெங்கே யிருக்கிறீர்களென்று ஒருவரும் அறியாதிருப்பதாகவென்றுசொல்லி,

௨௰. சுருளைச்சம்பிரதியாகியஎலிசாமாவின் அறையிலேவைத்து இராசாவண்டைக்கு அரமனையிலேபோய் இராசாவின் செவிகளுக்கிந்தவார்த்தைகளையெல்லாம் அறிவித்தார்கள்.

௨௧. அப்போது இராசா அந்தச்சுருளையெடுத்துக்கொண்டுவர யெகுதியை யனுப்பினான்; யெகுதியதைச் சம்பிரதியாகிய எலிசாமாவின் அறையிலிருந்து எடுத்துக்கொண்டுவந்து இராசாகேட்கவும், இராசாவண்டையில் நின்ற எல்லாப்பிரபுக்களுங் கேட்கவும்வாசித்தான்.

௨௨. ஒன்பதாமாதமாகிய அப்போது இராசாகுளிர்காலத்துக்குரிருமம் வீட்டில் உட்கார்ந்திருந்தான், அவனுக்குமுன்பாகக் கணப்பெரிகிறதாயிருந்தது.

௨௩. சம்பவித்ததென்றால், யெகுதி மூன்று நாலுபந்திகளைவாசித்தபிற்பாடு அவனை

ரு கணக்கன் கத்தியினால் அதை யறுத்துச் சுருளைத் தணப்பிலுள்ள அக்கினியிலே வெந்து தீருமளவுந் தணப்பிலிருந்த அக்கினியில் எறிந்துபோட்டான்.

௨௪. இராசாவானாலும், அந்த வார்த்தைகளையெல்லாங் கேட்ட அவனுடைய சகல ஊழியக்காரரானாலும் பயப்பட்டதுமில்லை தங்கள் வஸ்திரங்களைக் கிழித்ததுமில்லை.

௨௫. எல்நாத்தானும், தெலாயாவும், கெமரியாவுமோவெனில், அந்தச் சுருளைச் சுட்டெரிக்காதபடிக்கு இராசாவுக்கு விண்ணப்பம்பண்ணினார்கள். ஆகிலும் அவர்களுக்குக் கேள்விகொடாமல்,

௨௬. பாருக்கென்னுங் கணக்கனையும், எரேமியா தீர்க்கதரிசியையும் பிடிக்கும்படிக்கு இராசாவும்மேலேக்கின் குமாரனாகிய எராமேயேலுக்கும், அஸ்ரியேலின் குமாரனாகிய செராயாவுக்கும், அப்தேயேலின் குமாரனாகிய செலேமியாவுக்குங் கட்டளைகொடுத்தான். ஆனாற் கர்த்தரவர்களை மறைத்தார்.

௨௭. இராசா அந்தச் சுருளையும், அதிலே பாருக்கு எரேமியாவின் வாய்ச்சொல்லால் எழுதியிருந்த வார்த்தைகளையுஞ் சுட்டெரித்தபிற்பாடு எரேமியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாய் அவர் சொன்னதாவது;

௨௮. நீ திரும்ப வேறொரு சுருளை யுனக்கு வாங்கி யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் சுட்டெரித்த முதலாஞ் சுருளிலிருந்த முந்தின வார்த்தைகளையெல்லாம் அதிலே யெழுது.

௨௯. யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமுக்கு நீ சொல்லவேண்டியதாவது; கர்த்தருரைக்கிறதேதெனிற் பாபேலின் இராசா வரவே வருவானென்கிறதையும், அவன் இந்தத் தேசத்தை யழித்து அதிலிருந்து மனுஷரையும், மிருகங்களையும் ஒழியப்பண்ணுவானென்கிறதையும் நீ அதில் எழுதினதேதென்று சொல்லி அந்தச் சுருளை நீ சுட்டெரித்தாய்.

௩௰. ஆகையால், யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறதாவது; தாவீதுடைய இராசாசனத்தின்மேல் உட்காருபவன் அவனுக்கில்லை, * அவனுடைய பிரேதமோவெனிற் பகலின் உஷ்டணத்துக்கும், இராவின் குளிருக்கும் ஏதுவாக எறிந்துவிடப்பட்டுக்கிடக்கும்.

* ௨௨, அதி. ௰௯.

௩௧. நாம் அவனிடத்திலும், அவனுடைய வித்தினிடத்திலும், அவனுடைய பிரபுக்களிடத்திலும் அவர்கள் அக்கிரமத்தைவிசாரித்து அவன்மேலும், எருசலேமுடைய குடிகளின்மேலும், யூதாவுடைய மனுஷர்மேலும் நாம் அவர்களுக்குச் சொன்னதும், அவர்கள் கேளாதேபோனதுமான * தீங்கனைத்தையும் வரப்பண்ணுவோமென்று உரைத்தாரென்று சொல்லென்றார். * ௩௫, அதி. ௰௭.

௩௨. அப்போது எரேமியா வேறொரு சுருளை வாங்கி அதை நேரியாவின் குமாரனாகிய பாருக்கென்னுங் கணக்கனுக்குக் கொடுத்தான். இவன் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அக்கினியாற் சுட்டெரித்த புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம் அதிலே எரேமியாவின் வாய்ச்சொல்லால் எழுதினான், இன்னம் அவைகளுக்கொத்த அநேக வார்த்தைகளும் அவைகளோடே சேர்க்கப்பட்டன.

## ௩௭. அதிகாரம்.

[(௧) கல்தேயரை முற்றிகை போட்டதை எகிப்தியர் விலக்கியபோது சிதேக்கியா இராசா சனத்துக்காக வேண்டிக்கொள்ளும்படி எரேமியாவுக்கு ஆள்களையனுப்பினது. (௯) கல்தேயர் திரும்பவார்களென்று எரேமியா தீர்க்கதரிசனஞ் சொன்னது. (௰௧) அவன் அடிமையாகப் பிடித்து அடித்துச் சிறையிருத்தப்பட்டது. (௰௬) அவன் சிதேக்கியா சிறைப்படுவானென்று உறுதியாய்ச் சொன்னது. (௰௮) அவன் விடுதலையாகவேண்டிச் சிறிது தயவையடைந்தது.]

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் யோயாக்கீமுடைய குமாரனாகிய கோனியாவின் பட்டணத்தில் யூதா தேசத்தில் இராசாவாக வைத்த யோயாவின் குமாரனாகிய சிதேக்கியா அரசாண்டான்.

௨. ஆனாற் கர்த்தர் எரேமியா தீர்க்கதரிசியைக்கொண்டு சொன்ன வார்த்தைகளை அவனாகிலும், அவனுடைய ஊழியக்காரராகிலும், தேசத்தின் சனமாகிலுங் கேட்டதில்லை.

௩. * சிதேக்கியா இராசாவோவென்றால் செலேமியாவின் குமாரனாகிய யூகாலையும், மாசேயாவின் குமாரனாகிய செப்பானியாவென்ற ஆசாரியனையும், எரேமியா தீர்க்கதரிசியண்டைக்கனுப்பி, நீ நம்முடைய பராபரனாகிய கர்த்தரை நோக்கி யெங்களுக்காக விண்ணப்பம்பண்ணென்று சொல்லச்சொன்னான். * ௪௨, அதி. ௨.

௪. அப்போது எரேமியா சனத்தின் நடுவே வரத்தும், போக்குமாயிருந்தான், அவனை யவர்கள் காவல்வீட்டிலின்னம் போட்டதில்லை.

௫. பார்வோனின் சேனையோவென்றால், எகிப்திலிருந்து புறப்பட்டது, எருசலேமை முற்றிகைபோட்ட கல்தேயர் அவர்களுடைய செய்தியைக் கேட்டு எருசலேமைவிட்டெழும்பிப்போனார்கள்.

௬. அப்போது எரேமியா தீர்க்கதரிசிக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது;

௭. இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருரைக்கிறதேதெனில், நம்மைக்கேட்கும்படி

க்கு உங்களை நம்பண்டைக்கனுப்பின யூதா
வின் இராசாவுக்கு நீங்கள் சொல்லவேண்
டியதாவது; இதோ, உங்களுக்கொத்தாசை
யாகப் புறப்பட்டபார்வோனின்சேனைதன்
தேசமாகிய எகிப்துக்குத்திரும்பிப்போம்.

௮. கல்தேயரோவென்றால், திரும்பிவந்து
இந்தப்பட்டணத்துக்கு விரோதமாய் யுத்
தம்பண்ணி அதைப்பிடித்து அதையக்கினி
யால் சுட்டெரிப்பார்கள்.

௯. கல்தேயர் நம்மைவிட்டுப்போகவே
போவார்களென்றுசொல்லி, உங்களாத்து
மாக்களைமோசம்போக்காதேயுங்களென்று
கர்த்தர்சொல்லுகிறார். ஏனென்றால், அவர்
கள்போவதில்லை.

௰. உங்களோடே யுத்தம்பண்ணுகிற கல
தேயருடைய சேனையையெல்லாம் நீங்கள்
வெட்டிக்குத்திக்காயம்பட்ட மனுஷர்மாத்
திரம் அவர்களில் மீதியாயிருந்தாலும் இவர்
களில் அவரவர்தங்கள் கூடாரங்களிலெழும்
பி இந்தப்பட்டணத்தையக்கினியாற்சுட்டெ
ரிப்பார்களென்று சொல்லுங்களென்றார்.

௰௧. பார்வோனின் சேனைவருகிறதென்று
கல்தேயருடைய சேனை எருசலேமைவிட்டு
எழும்பிப்போனபோது,

௰௨. எரேமியா அவ்விடத்தைவிட்டுச்சனத்
தின் நடுவிலே சாடையாய்விலகிப் பென்ய
மீன்தேசத்துக்குப்போக மனதாய் எருச
லேமிலிருந்து புறப்பட்டுப்போனான்.

௰௩. அவன் பென்யமீன்வாசலில் வந்தபோ
தோவெனில், காவற்சேர்வையின் அதிபதி
யாகிய எரியாவென்ற நாமமுள்ள ஒருவன்
அங்கேயிருந்தான். அவன் அனனியாவின்
குமாரனாகிய செலேமியாவின்மகன், அவன்
நீ கல்தேயர் வசமாகப்போகிறவனென்று
சொல்லி, எரேமியா தீர்க்கதரிசியைப்பிடித்
தான்.

௰௪. அப்போது எரேமியா இது பொய்,
நான் கல்தேயர்வசமாகப் போகிறவனல்ல
வென்றான். ஆனாலும் எரியா இவனுடையசொ
ல்லைக்கேளாமல் எரேமியாவைப் பிடித்து
அவனைப் பிரபுக்களண்டைக்குக் கொண்டு
போனான்.

௰௫. அப்போது பிரபுக்கள் எரேமியாவின்
பேரிற் கடுங்கோபம் அடைந்து * அவனை
யடித்து அவனைச்சம்பிரதியாகிய யோனத்
தானுடைய வீட்டிற் காவல்வைத்தார்கள்.
ஏனெனில், அதையவர்கள் காவல்வீடாக்கி
னார்கள். * உ௰.

௰௬. அப்படியே எரேமியா கெபியாயிருக்
கிறவீட்டிலும், நிலவறைகளிலும்பிரவேசித்
தான். அங்கே எரேமியா அநேகம்நாளிருந்
தான்.

௰௭. பிறகு சிதேக்கியா இராசா அவனை
யழைத்தனுப்பிக்கர்த்தரால்ஒருவார்த்தை
யுண்டோவென்று இராசா அவனைத்தன்வீட
டிலே இரகசியமாய்க்கேட்டான். அதற்கு
எரேமியா உண்டு, பாபேலுடைய இராசா
வின் கையிலொப்புக்கொடுக்கப் படுவீரென்
றுசொன்னான்.

௰௮. பின்னையும் எரேமியா சிதேக்கியாஇரா
சாவுடனே சொன்னதாவது; நீங்கள் என்னை
க்காவல்வீட்டிலே அடைத்ததற்கு நான்
உமக்கும், உமதுடைய ஊழியக்காரருக்கு
ம், இந்தச்சனத்துக்கும் விரோதமாக என்
னபாவஞ்செய்தேன்!

௰௯. பாபேலின் இராசா உங்களுக்கும்,
இந்தத் தேசத்துக்கும் விரோதமாக வருவ
தில்லையென்று உங்களுக்குத் தீர்க்கதரிசன
ஞ்சொன்ன உங்களுடைய தீர்க்கதரிசிகளெ
ங்கே?

உ௰. இப்போதும் இராசாவாகிய என்னு
டையவாண்டவனே கேளும். நான் சமுகத்தினதய
யோனத்தானுடைய வீட்டிலே சாகாதப
டிக்கு அங்கே என்னைத் திரும்பஅனுப்பா
தேயும் என்கிற என்னுடைய விண்ணப்பத்
துக்கு உமக்குமுன்பாக இடமுண்டாகக்க
டவதென்றான்.

உ௧. அப்போது எரேமியாவைக் * காவ
ற்சாலையின் முற்றத்திலே காக்கவும், பட்ட
ணத்தில் அப்பமெல்லாம் சரிப்போகிறமட்
டும் தினம் அப்பஞ்சுடுகிறவர்களின் வீ
தியில் ஒரு அப்பத்தை யவனுக்குவாங்கிக்
கொடுக்கவுங் கட்டளையிட்டான். அப்படி
யே எரேமியா காவற்சாலையின் முற்றத்தி
ருந்தான். * ௩௨, ௨.

## ௩௮. அதிகாரம்.

[(௧) தப்பான எண்ணத்தினாலே எரேமியா
மல்கியாவின் துரவிலே போடப்பட்டது.
(எ) எபெத்மேலேக் விண்ணப்பத்தினாலே
அவனை விடுதலையாகினது. (௰௪) இராசா
வினுயிரைக்காக்க மனமிணங்குமட்டி யவ
னுக்கு எரேமியா அந்தரங்க ஆலோசனை
சொன்னது. (உ௪) இராசாவின் கற்பனைப
படியே அந்தயோசனையைப்பிரபுக்களுக்கு
மறைத்தது.]

ஆனால் * இந்தப்பட்டணத்திலே தரித்
திருக்கிறவன்பட்டயத்தாலும், பஞ்
சத்தாலும், கொள்ளைநோயாலும் சா
வான், கல்தேயரண்டைக்குப்புறப்பட்
டுப்போகிறவனோ உயிரோடிருப்பான். அவ
னுடைய பிராணன் அவனுக்குக் கிடைத்த
கொள்ளை யுடைமையைப்போலிருக்கும்,
அவன் பிழைப்பானென்கிறதைக் கர்த்தர்
உரைக்கிறாரென்றும், * உ௧, ௯.

௨. இந்தப் பட்டணம் பாபேலுடைய
இராசாவினுடைய இராணுவத்தின்கையிற்
கொடுக்கவேகொடுக்கப்படும், அவன்அதை
ப்பிடிப்பானென்கிறதைக்கர்த்தர் உரைக்கி
றாரென்றும்,

௩. எரேமியா எல்லாச்சனத்தோடுஞ்சொல்லிக்கொண்டிருக்கும் வார்த்தைகளை மாத்தானின் குமாரனாகிய செப்பத்தியாவும், பஸ்கூரின் குமாரனாகிய கெதலியாவும், சேலேமியாவின் குமாரனாகிய யூகாலும், மல்கியாவின் குமாரனாகிய பஸ்கூருங்கேட்டார்கள்.

௪. அப்பொழுது பிரபுக்கள் இராசாவோடே சொன்னதாவது; இந்த மனுஷன் கொல்லப்படட்டும். அதேனென்றால், இந்தப்பட்டணத்தில் மீதியாயிருக்கிற யுத்தமனுஷரின் கைகளையும் இவன் இப்படிக்கொத்தவார்த்தைகளை யவர்களுடனே சொல்லுகிறதினாலே தளர்ந்துபோகப்பண்ணுகிறான். ஏனெனில், இந்தமனுஷன் இந்தச்சனத்தின் சுகவாழ்வுக்கானதையல்ல, அதின் பொல்லாப்புக்கானதையே தேடுகிறானென்றார்கள்.

௫. அப்பொழுது சிதேக்கியா இராசா, இதோ அவன் உங்கள் கைகளிலிருக்கிறான். ஏனெனில், உங்களுக்கு விரோதமாய் இராசா ஒன்றுஞ்செய்யமாட்டானென்றான்.

௬. அப்பொழுதவர்கள் எரேமியாவைப்பிடித்து அவனைக்காவற்சாலையின் முற்றத்திலிருந்த அம்மெலேகின் குமாரனாகிய மல்கியாவினுடைய துரவிலேப்போட்டார்கள். அங்கே எரேமியாவைக் கயிறுகளினாலே தத்தனமாய் இறக்கிவிட்டார்கள். ஆனால் துரவிலே தண்ணீரிராமல் உளையாயிருந்தது, அந்த உளையிலே எரேமியா அமிழ்ந்தினான்.
* ௩௭, ௰௬. க. மோசே. ௩௭, ௨௪.

௭. ஆனால் அவர்கள் எரேமியாவைத் துரவிலேப்போட்டதை யிராசாவின் வீட்டிலிருந்த * எத்தியோப்பியனாகிய எபெத்மெலேக்கென்ற ஒரு பிரதானிகேட்டான், இராசாவோவென்றால் பென்யமீன்வாசலிலே உட்கார்ந்திருந்தான். * ௩௯, ௰௬.

௮. அப்பொழுது எபெத்மெலேக்கு இராசாவின் வீட்டிலிருந்து புறப்பட்டு இராசாவுடனேபேசிச்சொன்னதாவது;

௯. இராசாவாகிய என்னாண்டவனே, இந்தப் புருஷர் எரேமியா தீர்க்கதரிசியைத் துரவிலேபோட்டு நடப்பித்தவிதமெல்லாம் பொல்லாதசெயலாயிருக்கிறது. அவன் இருந்தவிடத்திலேதானே பஞ்சத்தினால் சாவானே. ஏனெனில், இனிப்பட்டணத்திலே அப்பமில்லையென்றான்.

௰. அப்பொழுது இராசா எபெத்மெலேக்கென்ற எத்தியோப்பியனுக்கு நீயிவ்விடத்திலே முப்பது மனுஷரை யுன்னுடனே கூட்டிக்கொண்டுபோய் எரேமியா தீர்க்கதரிசி சாகாததற்குமுன்னே அவனைத் துரவிலிருந்து தூக்கிவிடு என்றுகற்பித்தான்.

௰௧. அப்பொழுது எபெத்மெலேக்கு அந்த மனுஷரைத்தன்னுடனே கூட்டிக்கொண்டு இராசாவின் வீட்டிற் பொக்கிசச்சாலையின் கீழிருந்த தலத்திலேபோய்ப் பிய்ந்தபழம் புடவைகளையும், தேய்ந்தபழம்புடவைகளையும் அங்கே யெடுத்துக் கொண்டுபோய் அவைகளைக்கயிறுகளில் எரேமியாவண்டைக்குத் துரவிலிறக்கிவிட்டு,

௰௨. எபெத்மெலேக்கென்ற எத்தியோப்பியன் எரேமியாவுடனே பிய்ந்ததும், தேய்ந்ததுமான இந்தப்பழம்புடவைகளை உமதுடைய அக்குள்களிற் கயிறுகளுக்குட்புறமாகப்போட்டுக்கொள்ளுமேயென்றான். எரேமியா அந்தப்பிரகாரமாகச்செய்தான்.

௰௩. அப்பொழுது எரேமியாவைக் கயிறுகளாலே தூக்கி அவனைத் துரவிலிருந்தெடுத்துவிட்டார்கள். அப்படியே எரேமியா காவற்சாலையின் முற்றத்திலிருந்தான்.

௰௪. பிறகு சிதேக்கியா இராசா எரேமியா தீர்க்கதரிசியைக் கர்த்தருடையவீட்டிலிருக்கும் மூன்றாம்நடையிலே தன்னண்டைக்கு வரவழைப்பித்தான். அங்கே இராசா எரேமியாவுடனே நானுன்னையொருகாரியத்தைக் கேட்கிறேன், நீ யெனக்கொன்றுமறைக்கவேண்டாமென்றான்.

௰௫. அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனே நான் அதையுமக்கறிவித்தால் என்னைத் கொல்லவேகொல்லுவீரல்லவோ! நானுமக்கொரு ஆலோசனையைச்சொன்னாலும் என்சொல்லைக் கேளாதிருப்பீரென்றான்.

௰௬. அப்பொழுது சிதேக்கியா இராசா, நானுன்னைக்கொல்லாமலும், நானுன்பிராணனைவாங்கத்தேடுகிற * இந்தமனுஷர்கையிலுன்னை யொப்புக்கொடாமலுமிருப்பேனென்கிறதை நமக்கிந்த ஆத்துமாவையுண்டுபண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டுசொல்லுகிறேனென்று எரேமியாவுக்கு இரகசியமாய் ஆணையிட்டான். * ௪, ௫.

௰௭. அப்பொழுது எரேமியா சிதேக்கியாவுடனே சொன்னதாவது; நீர் பாபேலுடைய இராசாவின்பிரபுக்களண்டைக்குப் புறப்பட்டேபுறப்பட்டால் உமதுடைய ஆத்துமா உயிரோடிருக்கும் இந்தப்பட்டணம் அக்கினியாற்சுட்டெரிக்கப்படுவதுமில்லை. நீரும், உமதுடையவீட்டாரும் உயிரோடுமிருப்பீர்கள்.

௰௮. நீர் பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டைக்குப் புறப்படாதிருந்தீரேயாகில் அப்பொழுது * இந்தப்பட்டணங் கல்தேயர்கையிற்கொடுக்கப்படும். அவர்களதை யக்கினியாலேசுட்டெரிப்பார்கள். நீர் அவர்களுக்குத் தப்பிப்போவதுமில்லையென்கிறதை இஸ்ரவேலின் பராபரனும், சேனைகளையுடைய பராபரனுமாகிய கர்த்தர்சொல்லுகிறாரென்றான். * ௩௪, ௨௩.

௰௯. அப்பொழுது சிதேக்கியாஇராசா எரேமியாவுடனே கல்தேயர் என்னைத்தங்களவசமாயவந்துவிட்ட யூதரின்கையிலே என்னைப் பரியாசம்பண்ண ஒப்புக்கொடுப்பார்க

ளோவென்று நான் ஐயப்படுகிறேனென்றான்.

௨௰. எரேமியாசொன்னதாவது; உம்மை யொப்புக்கொடார்கள். நானும்மோடே பேசுகிற * கர்த்தருடைய சத்தத்துக்குக் கேள்விகொடும், அப்போதுமக்கு நன்றாயிருக்கும். அப்போதுமமுடைய ஆத்துமா உயிரோடிருக்கும். * நாளாக. ௯௯, ௰௨.

௨௧. நான்புறப்படுகிறதில்லையென்றீரேயாகில் கர்த்தரெனக்குத் தெரியப்படுத்தினவார்த்தையாவது;

௨௨. இதோ யூதாவுடைய இராசாவின் வீட்டிலே மீதியான எல்லா ஸ்திரீகளும்வெளியே பாபேலுடைய இராசாவின் பிரபுக்களண்டையிற் கொண்டுபோகப்படுவார்கள். இதோ அவர்கள்தானே உமக்குஇராசியான மனுஷர் உம்மைப் பயிராறுவித்து உம்மை மேற்கொண்டார்களென்றும், உம்முடைய கால்கள் உளையிலே அமிழ்ந்தின பிறபாடு அவர்கள் பின்வாங்கிப் போனார்களென்றுஞ் சொல்லுவார்கள்.

௨௩. உம்முடைய எல்லா ஸ்திரீகளையும், உம்முடையபிள்ளைகளையும் வெளியே கல்தேயரண்டையிற் கொண்டுபோவார்கள். நீரும் அவர்களகைக்குத் தப்பிப்போகாமற் * பாபேலுடைய இராசாவின்கையினாற்பிடிக்கப்பட்டு இந்தப்பட்டணம் அக்கினியாற் சுட்டெரிக்கப்படக் காரணராயிருப்பீரென்பது தானென்றான். * ௩௨, ௪.

௨௪. அப்போது சிதேக்கியா எரேமியாவுடனேசொன்னதாவது; இந்தவார்த்தைகளை யொருவரும் அறியாதிருக்கக்கடவது. அப்போது நீ சாகப்போகிறதில்லை.

௨௫. நான் உன்னோடே பேசினேனென்று பிரபுக்கள்கேட்டு உன்னண்டைக்குவந்து நீ இராசாவோடே பேசிக்கொண்டதை எங்களுக்கறிவி. எங்களுக்கொன்றும் மறைக்காதை. அப்போதுன்னைக்கொல்லாதிருப்போம், இராசா உன்னோடென்ன பேசினானென்றுன்னைக்கேட்டார்களேயாகில்,

௨௬. * நான் யோனத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு இராசா என்னை அங்கே திரும்ப அனுப்பவேண்டாமென்றுஅவர்களமுகத்துக்குமுன்பாகவிண்ணப்பம்பண்ணினேனென்று சொல்வாயாகவென்றான். * ௩௭, ௨௰.

௨௭. பிறகு எல்லாப்பிரபுக்களுமெரேமியாவண்டைக்குவந்து அவனைக் கேட்டார்கள். அப்போதவன் இராசா கற்பித்த இந்த எல்லாவார்த்தைகளுக்குந்தக்கதாய் அவர்களுக்கறிவித்தான். ஆனதுகொண்டுகாரியங்கேள்விப்படாதேபோனபடியினாலே அவனைவிட்டுச் சும்மாயிருந்தார்கள்.

௨௮. அப்படியே எரேமியா எருசலேம் பிடிபடுகிறநாளமட்டாகக் * காவற்சாலையின் முற்றத்திலிருந்தான். எருசலேம்பிடிபட்டுப் போனபோதும் அங்கேதானிருந்தான்.
* ௩௭, அதி. ௨௧.

## ௩௯. அதிகாரம்.

[(௧) எருசலேம் பிடிக்கப்பட்டது. (௪) சிதேக்கியா குருடனாக்கிப் பாபேலுக்கனுப்பப்பட்டது. (௮) பட்டணம் அழிந்தது. (௯) சனஞ்சிறையாக்கப்பட்டது. (௰௧) எரேமியாவைச் சீராய்நடப்பிக்க நேபுகாத்நேத்சார்கட்டளைகொடுத்தது. (௰௫) ஏபேத்மெலேக்குக்குண்டாகியபராபரனுடைய வாக்குத்தத்தம்.]

யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட * ஒன்பதாம்வருஷம் பத்தாமாதத்திலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சாரும், அவனுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்குவிரோதமாய்வந்து அதை முற்றிக்கைபோட்டார்கள். * ௫௨, அதி. ௪. ௨. இரா. ௨௫, ௧. நாளாக. ௯௯, ௰௭.

௨. சிதேக்கியா அரசாண்ட பதினோராம் வருஷம் நாலாமாதம் ஒன்பதாந்தேதியிலே பட்டணமதில் திறப்பானது.

௩. அப்போது பாபேலுடையஇராசாவின் எல்லாப் பிரபுக்களாகிய நேர்கல்சரேத்சேர், சம்கார், நேபுசர், சேகிம், ரபசாரீஸ், நேர்கல் சரேத்சேர், ரபமாக்கு என்றவர்களும், பாபேலின் இராசாவினுடைய மற்ற எல்லாப் பிரபுக்களும் உட்பிரவேசித்து நடுமையவாசலிலே தரிகொண்டார்கள்.

௪. அப்போதுசம்பவித்ததேதெனில், யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவும், சகல யுத்தமனுஷரும் அவர்களைக்கண்டபோது, * ஓடி, இராத்திரிகாலத்தில்இராசாவுடைய தோட்டத்துவழியே இரண்டுமதில்களுக்கு நடுவான வாசலாற்பட்டணத்திலிருந்து புறப்பட்டுப்போனார்கள். அவன் வயல்வெளியின் வழியேபோய்விட்டான். * எசேக். ௰௨, ௰௨.

௫. ஆனால் கல்தேயருடைய இராணுவம் அவர்களைப்பின்றொடர்ந்து எரிகோவின்வயல்வெளிகளிற் சிதேக்கியாவைக்கிட்டி அவனைப்பிடித்து அவனைக்காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக்குப் பாபேலின்இராசாவாகிய நேபுகாத்நேத்சாரண்டையிலே போயேறப் பண்ணினார்கள். இவன் அவன்மேற் சுமரும் ஆக்கினைகளைச் சொன்னான்.

௬. * பிறகுபாபேலின் இராசாரிப்லாவிலே சிதேக்கியாவின் பிள்ளைகளை யவன் கண்களுக்குமுன்பாக வெட்டுவித்தான். யூதாவிலமேன்குலத்தாரனைவரையும் பாபேலின்இராசா வெட்டி,

௭. சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி அவனைப் பாபேலுக்குக்கொண்டுபோகஅவ

னுக்கிரண்டு வெண்கல விலங்குகளைப்போட்டுவித்தான். * ஏசே. ௰௨, ௰௩.

௮ இராசாவின் வீட்டையும், சனத்தின் வீடுகளையுங் கல்தேயர் அக்கினியாற் சுட்டெரித்து, எருசலேமின் மதில்களை இடித்துப்போட்டார்கள்.

௯. பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், தன்வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும், மீதியான மற்றச்சனத்தையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோனான்.

௰. ஒன்றுமில்லாத நீசமான சனத்திலோ வென்றால், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் சிலரை யூதேயாதேசத்திலே வைத்து அவர்களுக்கு அந்நாளிலே திராட்சத்தோட்டங்களையும், வயல்களையுங் கொடுத்தான்.

௰௧. ஆனால் எரேமியாவைக்குறித்துப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானுக்கு,

௰௨. நீ அவனையழைத்து உன்கண்களை அவன்மேல் வைத்து, * அவனுக்கொரு பொல்லாப்பையுஞ்செய்யாமல் அவன் உன்னோடே சொல்லும்படியெல்லாம் அவனை நடத்தென்று கற்பித்திருந்தான். * சங்கீ. ௱௫, ௰௫.

௰௩. அப்படியே தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதானும், நேபூசஸ்பான், ரப்சாரீஸ், நேர்கல்சரேத்சேர், ரப்மாகு என்றவர்களும், பாபேலுடைய இராசாவின் எல்லாப்பிரபுக்களும்,

௰௪. எரேமியாவைக் காவற்சாலையின் முற்றத்திலிருந்து வரவழைப்பித்து அவனை வெளியேவிட்டுக்கழைத்துக்கொண்டு போகும்படிக்கு அவனைச் சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவுக்கு ஒப்புவித்தார்கள், அப்படியே அவன் சனத்துக்குள்ளே தங்கியிருந்தான்.

௰௫. இதுவுமல்லாமல் எரேமியா இன்னங் காவற்சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருக்கையில் அவனுக்குண்டான கர்த்தருடைய வசனமாவது;

௰௬. நீ போய் * எத்தியோப்பியனாகிய எபெத்மெலேக்குக்குச் சொல்லவேண்டிய தேதெனில், இதோ, நம்முடைய வார்த்தைகளை யிந்தப்பட்டணத்தின் மேல் நன்மையாகவல்ல தீமையாகவே வரப்பண்ணுவோம். அவைகள் அந்நாளிலே உன்கண்களுக்கு முன்பாக நிறைவேறுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார். * ௫௮, அதி. ௭.

௰௭. ஆனால் அந்நாளிலே உன்னைத் தப்புவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். நீ பயப்படுகிற மனுஷரின்கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை.

௰௮. உன்னை விடுவிக்கவே விடுவிப்போம். நீ பட்டயத்துக்கிரையாவதில்லை. நீ நம்மை நம்பினபடியினாலே உன் பிராணன் உனக்குக் கிடைத்த கொள்ளையுடைமையைப்போலிருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்பதுதானே.

## ௪௰. அதிகாரம்.

[(௧) எரேமியா நேபுசாரதானாலே விடுதலையாகிக் கெதலியாவண்டைக்குப் போனது. (௭) சிதறுண்டயூதர்கள் அவனிடத்திற்சேர்ந்தது. (௰௩) அவனுக்கு இஸ்மவேலின் இரகசியயோசனையை யோகனான் அறிவித்தும் நம்பாமற்போனது.]

தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் எரேமியாவையழைப்பித்து அவனை ராமாவிலிருந்து விடுதலையாய் அனுப்பினபிற்பாடு இவனுக்குக் கர்த்தரால் உண்டான வசனம், ஏனெனில், பாபேலுக்குக் கொண்டுபோகப்பட்ட எருசலேமிலும், யூதாவிலுஞ் சிறைகளாயப்பிடித்து வைக்கப்பட்ட அனைவரின் நடுவிலே இவனுஞ் சங்கிலிகளாற் கட்டுண்டிருந்தான்.

௨. ஆனால் தலையாரிகளின் அதிபதி எரேமியாவை யழைப்பித்து அவனுடனே சொன்னதாவது; உன் பராபரனாகிய கர்த்தர் இந்த ஸ்தலத்துக்கு இந்தத்தீங்குவருமென்று சொல்லியிருந்தார்.

௩. தாஞ்சொன்னபடியுங் கர்த்தர் வரப்பண்ணினார். ஏனெனில், * நீங்கள் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து அவருடைய சத்தத்துக்குச்செவிகொடாதேபோனீர்கள். ஆகையால் உங்களுக்கு இந்தக்காரியம்வந்தது. * ௫௰, ௭.

௪. இப்போதும் இதோ, உன்கைகளிற்கட்டியிருந்த சங்கிலிகளை யின்று வாங்கிவிட்டேன். என்னோடேகூடப் பாபேலுக்குவர உனக்கு நன்றாய்க்கண்டால் வா, என் கண்களை யுன்மேல்வைப்பேன். என்னோடேகூடப் பாபேலுக்குவர உனக்கு விதனமாய்க்கண்டதேயானால் இருக்கட்டும், இதோ தேசமெல்லாம் உனக்குமுன்பாக இருக்கிறது. எவ்விடத்துக்குப்போக உனக்கு நன்றும், செவ்வையுமாய்க்காணுகிறதோ அவ்விடத்துக்குப் போ.

௫. அவ்விடம் இன்னுஞ் சேர்திருந்தாதிருந்ததாகில், நீ பாபேலின் இராசா யூதாவுடைய பட்டணங்களின்மேல் அதிகாரியாகவைத்த * சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவண்டைக்குத் திரும்பிக்கொண்டு அவனோடே சனத்தின் நடுவிலே தங்கியிரு அல்லவென்று எவ்விடத்துக்குப் போக உனக்குச் செம்மையாய்க்காணுகிற

தோ அவவிடத்துககுப போவென றுசொல லித் தலையாரிகளின அதிபதி அவனுக்குவழி சசெலவையும, காணிக்கையையுங்கொடுத் து அவனை யனுப்பிவிட்டான. * ௬௯, ௰௪.

௬. அபபடியே எரேமியா மிஸ்பாவுக்கு அகிக்காமின குமாரனாகிய கெதலியாவண்டையிலேவந்து அவனோடே தேசத்தில்மீதியான சனத்தினநடுவில தங்கியிருந்தான.

௭. பாபேலின இராசா அகிக்காமினகுமாரனாகிய கெதலியாவைத் தேசத்தினமேல அதிகாரியாக்கினானென றும, புருஷரையும, ஸ்திரிகளையும, குழந்தைகளையும பாபேலுக்குச சிறைகளாகக் கொண்டுபோகப்படாத தீசமான தேசத்தாரையும அவனுடைய விசாரிப்புககொப்புவித்தானென றும, வெளியிலிருக்கிற இராணுவச சேர்வைககாரரனைவரும, அவர்களுடைய மனுஷருங் கேட்டபோதேவெனில,

௮. அவர்கள மிஸ்பாவுக்குக கெதலியாவண்டையிலேவந்தார்கள. ஆரெனில, நெத்தானியாவின குமாரனாகிய இஸமவேலும, கரேயாவினகுமாரராகிய யோகனானும, யோனத்தானும, தன்கூமேத்தின குமாரனாகிய செராயாவும, நெத்தோபாத்தியனாகிய எப்பாயினகுமாரரும, மாகாத்தியனான ஒருவனகுமாரனாகிய இசனியாவும, அவர்களும, அவர்கள மனுஷருந்தானே.

௯. * அப்போது சாப்பானுடையகுமாரனாகிய அகிக்காமினமகன கெதலியா அவர்களுக்கும, அவர்களமனுஷருக்கும ஆணையிட்டுச்சொன்னதாவது; நீங்கள கல்தேயரைச சேவிக்கப்பட்டப்படவேண்டாம. நீங்கள தேசத்திலிருந்து பாபேலின இராசாவைச்சேவியுங்கள, அப்போது உங்களுக்கு நன்றாயிருக்கும. * ௨. இராசா. ௨௫, ௨௪.

௰. நானோவெனில இதோ நம்மண்டையிலேவருகிற கல்தேயருக்கு முன்பாகமுன்னிலையாய நிறகமிஸ்பாவிலே குடியிருக்கிறேன. நீங்களோவென்றால போய, திராட்சப்பழரசத்தையும, அறுப்பையும, எண்ணெயையுஞ்சேர்த்து உங்கள பாண்டங்களிலவைத்து உங்களவசமாக்கிக்கொள்ளுகிற ஊர்களிறகுடியிருங்களென்றான.

௰௧. மோவாபிலும, அம்மோனபுத்திரரிடத்திலும, ஏதோமிலும, சகலதேசங்களிலுமிருக்கிறயூதரும பாபேலின இராசா யூதேயாவிற சிலர் மீதியாயிருக்கக் கட்டளையிட்டானென றும, சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமினமகனான கெதலியாவையவர்களமேலே அதிகாரியாக்கினானென றுங் கேட்டபோது,

௰௨. எல்லாயூதருந்தாங்கள துரத்துண்ட எல்லாவிடங்களிலுமிருந்து யூதேயாதேசத்திற கெதலியாவண்டையிலேமிஸ்பாவுக்கு வந்து திராட்சப்பழரசத்தையும, அறுப்பையும வெகுதிரளாயச்சேர்த்துவைத்தார்கள.

௰௩. அப்போது கரேயாவின குமாரனாகிய யோகனானும, வெளியிலேயிருந்த சகல இராணுவச்சேர்வைக்காரருமமிஸ்பாவுக்குக கெதலியாவண்டையிலேவந்து,

௰௪. அவனுடனே உமமுடைய சீவனைககொன றுபோடும்படிக்கு அம்மோன புத்திரரின இராசாவாகிய பாலிஸ நெத்தானியாவின குமாரனாகிய இஸமவேலை யனுப்பினானென்கிறதை நீர் அறியவே அறியவில்லையோவென்றார்கள, ஆனால அகிக்காமினகுமாரனாகிய கெதலியா அவர்களவார்த்தையை நம்பினதில்லை.

௰௫. பின்னையுங் கரேயாவின குமாரனாகிய யோகனான மிஸ்பாவிலே கெதலியாவோடே இரகசியமாயச்சொன்னதாவது; நானபோய ஒருவருமறியாமல நெத்தானியாவினகுமாரனாகிய இஸமவேலை வெட்டிப்போட்டுப்பே, உம்மண்டையிற்சேர்ந்த யூதரெல்லாருஞ்சிதறுண்டுபோகவும, யூதாவிலமீந்தவர்கள அழியவும அவனுமமுடையசீவனைககொன றுபோடுவானேனென்றான.

௰௬. ஆனால அகிக்காமினகுமாரனாகிய கெதலியா கரேயாவினகுமாரனாகிய யோகனானுடனே நீயிந்தக்காரியத்தைச்செய்யாயாக, ஏனெனில இஸமவேலினமேலே நீபொய சொல்லுகிறாயென்றான.

## ௪௧. அதிகாரம்.

[(௧) இஸமவேலகெதலியாவையும், மற்றுஞ்சிலரையுங்கொன்று மீதியானவர்களை அம்மோனபுத்திரரண்டைக்குப்போக நினைத்தது. (௰௧) யோகனான சிறைப்பட்டவர்களைப பிடித்துக்கொண்டு எகிப்துக்கோடிப்போகமனதாயிருந்தது.]

ஆனால ஏழாம மாதத்திற சம்பவித்ததென்னவென்றால, இராசவித்திலேபிறந்தவனும, எலிசாமாவின குமாரனாகிய நெத்தானியாவின மகனுமான * இஸமவேலும, அவனுடனேகூட இராசாவினபிரபுக்களான பத்து மனுஷரும மிஸ்பாவுக்கு அகிக்காமினகுமாரனாகிய கெதலியாவண்டையிலேவந்து அங்கேமிஸ்பாவிலே யேகமாய அப்பஞ்சாப்பிட்டார்கள. * ௫௨, அதி. ௮.

௨. அப்போது நெத்தானியாவின குமாரனாகிய இஸமவேலும, அவனோடிருந்த பத்து மனுஷரும எழும்பிப்பாபேலின இராசா தேசத்தினமேல அதிகாரியாகவைத்தசாப்பானின்குமாரனாகிய அகிக்காமினமகனான கெதலியாவைப்பட்டயத்தாலேவெட்டினார்கள.

௩. மிஸ்பாவிலே கெதலியாவினிடத்திலேயிருந்த எல்லாயூதரையும, அங்கேகாணப்ப

ட்ட உயுத்தமனுஷராகிய கல்தேயரையும் இஸ்மவேல் வெட்டிப்போட்டான்.

௪. அவன் கெதலியாவைக் கொன்றபிற்பாடு இரண்டாம் நாளிலே அதை யொருவரும் இன்னம் அறியாதிருக்கையில் சம்பவித்த தாவது;

௫. தாடியைச் சிரைத்து வஸ்திரங்களைக் கிழித்துத் தங்களைக் கீறிக்கொண்டிருந்த எண்பது மனுஷர் சீகேமிலும், சீலோவிலும், சமாரியாவிலுமிருந்து தங்கள் கைகளிற் காணிக்கைகளையும், தூபவர்க்கத்தையுங் கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டுபோகும் படிக்குச் சுமந்து வந்தார்கள்.

௬. அப்பொழுது நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து புறப்பட்டு அவர்களுக்கெதிராக அழுதுகொண்டே நடந்து அவர்களைச் சந்திக்கிறபோது அவர்களுடனே அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவண்டைக்கு வாருங்களென்றான்.

௭. ஆனால் அவர்கள் பட்டணத்தின் நடுமையமட்டும் வந்தபோது சம்பவித்ததேதென்றால் நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலும், அவனோடிருந்த மனுஷரும் அவர்களை வெட்டி ஒரு பள்ளத்துக்குள்ளே தள்ளிப் போட்டார்கள்.

௮. ஆனால் அவர்களிற் பத்துப்பேரிருந்தார்கள். அவர்கள் இஸ்மவேலுடனே எங்களைக் கொலைசெய்யாதேயும், ஏனென்றால் கோதுமையும், வாற்கோதுமையும், எண்ணெயும், தேனுமுள்ள புதையல்கள் எங்களுக்கு நிலத்தின் கீழிருக்கிறதென்றார்கள். அப்பொழுதவர்களை யவர்கள் சகோதரரோடுங்கூடக் கொலைசெய்யாமல் விட்டுவைத்தான்.

௯. இஸ்மவேல் கெதலியாவினிமித்தமாக வெட்டின மனுஷருடைய பிரேதங்களையெல்லாந் தள்ளிப்போட்ட பள்ளமோவெனில், ஆசாவென்ற இராசா இஸ்ரவேலின் இராசாவாகிய பாசாவுக்கெதிராக வுண்டுபண்ணியிருந்ததானே, அதை நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டுண்டவர்களாலே நிரப்பினான்.

௰. பிறகு இஸ்மவேல் மிஸ்பாவிலிருக்கிற மீதியான சனத்தையெல்லாஞ் சிறைப்படுத்திக்கொண்டுபோனான், இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவின் விசாரிப்புக்கொப்புவித்துப் போன மிஸ்பாவிலுள்ள மீதியான சனமனைத்தையும் நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் சிறைப்படுத்திக்கொண்டுபோய் அம்மோன் புத்திரரண்டைக்குத் தாண்டிப்போகப் புறப்பட்டான்.

௰௧. நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் செய்த பொல்லாப்பையெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்காரருங் கேட்டபோதோவெனில்,

௰௨. அவர்களெல்லாப் புருஷரையுங் கூட்டிக்கொண்டு நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்பண்ணப்போய் அவனைக் கிபெயோனிலிருக்கும் பெருங்குளத்து தண்ணீரண்டையிலே கண்டார்கள்.

௰௩. அப்பொழுது சம்பவித்ததேதென்றால், இஸ்மவேலண்டையிலிருந்த சனமெல்லாங் கரேயாவின் குமாரனாகிய யோகனானையும், அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரரையுங் காண்கையிற் சந்தோஷப்பட்டு,

௰௪. இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து சிறைபிடித்துக் கொண்டுபோன சனமெல்லாம் பின்னிட்டுத்திரும்பிக் கரேயாவின் குமாரனாகிய யோகனானண்டையிலே வந்துவிட்டார்கள்.

௰௫. நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலோவென்றால் எட்டுப்பேரோடுங்கூட யோகனானின் கைக்குத் தப்பி அம்மோன் புத்திரரண்டைக்குப் புறப்பட்டுப்போனான்.

௰௬. ஆனாற் கரேயாவின் குமாரனாகிய யோகனானும், அவனோடிருந்த எல்லா இராணுவச்சேர்வைக்காரரும் அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை வெட்டிப்போட்ட நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் கொண்டுபோனதும், தாங்கள் கிபெயோனிலே விடுதலையாக்கித் திருப்பப்பண்ணினதுமான மீதியான சகலசனமுமாகிய சேவகரான மனுஷரையும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும், அரமனைப் பிரதானிகளையுஞ் சேர்த்துக்கொண்டு,

௰௭. பாபேலின் இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக்கின அகிக்காமின் குமாரனாகிய கெதலியாவை நெத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் வெட்டிப்போட்டதினிமித்தமாகக் கல்தேயருக்குப் பயப்படுகிறபடியினாலே,

௰௮. * போய்த் தாங்கள் எகிப்துக்குப் புறப்பட்டுப்போகும்படிக்குப் பெத்லகேமூருக்கருகான கிம்காமின் பேட்டையிலிறங்கித் தங்கினார்கள். * ௨. இராசா. ௨௫, ௨௬.

## ௪௰௨. அதிகாரம்.

[(௧) யோகனான் கீழ்ப்படிவேனென்றுசொல்லிப் பராபரனுடைய சித்தத்தைத்தனக்கறிவிக்க எரேமியாவைக்கேட்டது. (௭) எரேமியா அவனுக்கு யூதாவிலே அடைக்கலமும், (௰௫) எகிப்திலே நாசமுமென்று அறிவித்தது. (௰௯) அவர்கள் பராபரனுடைய சித்தத்தையறிவிக்கும்படித் தந்திரமாய்ப் பேசினதைக்குறித்து அவன் அவர்களைக் கண்டித்தது.]

அபபோது எலலா இராணுவசசேர்வைககாரரும, கரேயாவின குமாரனாகிய யோகனானும, ஓசாயாவின குமாரனாகிய இசனியாவும, சிறியோர் முதறகொணடு பெரியோர்மடடும உணடான எலலாச சனமுஞசேர்நதுவநது,

உ. தீர்க்கதரிசியாகிய எரேமியாவுடனே சொனனதாவது; உமமுடைய பராபரனாகிய கர்ததர் நாஙகள நடககவேணடிய வழியையும, செயயவேணடிய காரியததையும எஙகளுககுத தெரியபபணணுமபடிககு நீரெஙகள விணணபபததுககிடஙகொடுதது மீதியாயிருககிற இநதசசகலசனமாகிய எஙகளுககாக உமமுடைய பராபரனாகிய கர்ததரை நோககிசசெபமபணணும.

ரு. ஏனெனில, உமமுடைய கணகள எஙகளைககாணகிறபடியே திரளான சனஙகளிற கொஞசமபேராய மீநதிருககிறேமெனறார்கள.

ச. அபபோது எரேமியாதீர்ககதரிசியவர்களுடனே நீஙகள சொனனதைககேடடேன, இதோ உஙகள வார்ததையினபடியே யுஙகள பராபரனாகிய கர்ததரை நோககிச செபமபணணுவேன, கர்ததருஙகளுககும றுவுததாரமாகசசொலலும எலலா வார்ததையையும, நானுஙகளுககொனறையும மறைககாமல அறிவிபபேனெனறான.

ரு. அபபோது அவர்கள எரேமியாவுடனேசொனனதாவது; உமமுடைய பராபரனாகிய கர்ததர் உமமைககொணடு எஙகளுககுசசொலலியனுபபும எல்லா வார்ததையினபடியேயும நாஙகள செயயாவிடடால கர்ததர் நமககுச் சததியமும, உணமையுமான சாட்சியாயிருககக்கடவார்.

சா. அது நனமையானாலும, தினமையானாலுஞசரி. எஙகள பராபரனாகிய கர்ததரின சத்தத்துககு நாஙகள கீழப்படிவதினாலெஙகளுககு நனறாயிருககுமபடிககு நாஙகளஉமமையனுபபுகிற எஙகள பராபரனாகிய கர்ததருடைய சத்தத்துககுக கீழபபடிநது நடபபோமெனறார்கள.

எ. பததுநாள செனறபோது கர்ததருடையவார்ததை எரேமியாவுக்குணடானது.

அ. அபபோது அவன கரேயாவினகுமாரனாகியயோகனானையும, அவனோடிருநத எலலா இராணுவசசேர்வைககாரரையும், சிறியோர்முதறகொணடு பெரியோர்மடடுமுணடானசனமனைததையும அழைதது,

கூ. அவர்களுடனேசொனனதாவது; உஙகளுககாக விணணபபஞ செயயுமபடிககு நீஙகளெனனையனுபபின இஸரவேலின பராபரனாகியகர்ததருரைககிறதெதெனறால,

ய. நீஙகளிநதத்தேசததிலே தரிககவேதரிததிருநதால * நாமுஙகளை நிர்மூலமாககாமலகடடுவிதது உஙகளைபபிடுஙகாமலநாடடுவோம. ஏனெனில, நாமுஙகளுககுச செயதிருககிறதீஙகுககு மனஸதாபப்படடோம. * உச, சா.

யக. * நீஙகளபயபபடுகிறபாபேலின இராசாவுககுப பயபபடவேணடாம, அவனுக்குப பயபபடாதிருபபீர்களாகவெனறு கர்ததர் சொலலுகிறார். ஏனெனில உஙகளை இரட்சிககுமபடிககும, உஙகளையவனகைககுததபபுவிககுமபடிககும நாமுஙகளுடனேயிருநது, * சக, யஅ.

யஉ. அவனுஙகளுககிரஙகுகிறதறகும,உஙகளை யுஙகள தேசததுககுத திருமபிவரபபணணுகிறதறகுமாக உஙகளுககிரககஞ செயவோம.

யரு. நீஙகள உஙகள பராபரனாகிய கர்ததருடைய சத்தத்துககுசசெவிகொடாமல இநதத்தேசததிலே நாஙகளிருககிறதிலலையெனறும,

யச. நாஙகள யுத்தத்தைக் காணாதததும. எக்காளததினசத்தத்தைக்கேளாததும, அபபத்தாட்சியினாற படடினியாயிராததுமான எகிப்துதேசததுககேபோய அஙகேதரிததிருபபோமெனறுஞசொனனீர்களேயாகில,

யரு. இபபோதும யூதாவில மீதியானவர்களே அதைத்தொடடு உணடான கர்ததருடையவார்ததையைககேளுஙகள, இஸரவேலினபராபரனாகிய சேனைகளையுடைய கர்ததர்சொலலுகிறதாவது; நீஙகள எகிப்துககுபபோகவுஙகள முகஙகளைத திருபபவே திருபபி அஙகே தஙகபபோனீர்களானால,

யசா. சமபவிபபதேதெனில நீஙகளபயபபடுகிறபடடயம அஙகே எகிப்துதேசததிலே உஙகளைபபிடிககும, நீஙகள ஐயபபடுகிற பஞசம அஙகே எகிப்திலே உஙகளைபபினபறறிககொணடிருககும, அஙகேசாவீர்கள.

யஎ. எகிப்திலேதஙகவேணடுமெனறு அவவிடததுககுத தஙகள முகஙகளைததிருபபின எலலாமனுஷருககும எனனசமபவிககுமெனில் படடயததாலும, பஞசததாலும, பெருவாரிககாயச்சலாலுஞசாவார்கள, நாம அவர்கள மேல வரபபணணுந தீஙகினாலே அவர்களில மீதியாவாரும, தபபுவாருமிலலை.

யஅ. ஏனெனில, இஸரவேலின பராபரனாகிய சேனைகளையுடைய கர்ததர் சொலலுகிறதாவது; தமமுடையகோபமும,தமமுடைய உககிரமும எருசலேமுடைய குடிகளினமேல எபபடி ஊறறபபடடதோ அபபடி நமமுடைய உககிரம நீஙகளஎகிப்துககுப் போகுமபோது உஙகளமேல ஊறறபபடும. * நீஙகள சாபமாகவும, பாழாகவும, பழிப்பாகவும, நிநதையாகவுமிருநது இவவிடததையினிக்காணாதிருபபீர்களெனகிறார். * உச, அதி. சா. உசா, அதி. யஅ. யசா.

௰௯. யூதாவிலமீதியானவர்களே எகிப்துக்குப் போகாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் உங்களைக் குறித்துச் சொன்னாரென்பதை யிந்நாளில் உங்களுக்குச் சாட்சியாக அறிவித்தேனென்பதை யறியவே யறிவீர்களாக.

௨௰. ஏனெனில், உங்களாத்துமாக்களுக்கு விரோதமாய் உங்களைமோசம்போக்கினீர்கள். அதெப்படியென்றால், நீர் எங்கள்பராபரனாகியகர்த்தனை எங்களுக்காக விண்ணப்பம்பண்ணி எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்லும்படியெல்லாமெங்களுக்கறிவியும் அதின்படியேசெய்வோமென்று நீங்கள்சொல்லி என்னையுங்கள்பராபரனாகியகர்த்தரண்டைக்கு அனுப்பினீர்கள்.

௨௧. நான் இந்நாளில் அதையுங்களுக்கு அறிவித்தேனே, ஆனால், உங்கள்பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கும், அவர் என்னைக்கொண்டு உங்களுக்குச்சொல்லியனுப்பின எல்லாவற்றுக்குஞ் செவிகொடாதே போனீர்கள்.

௨௨. இப்போதுந் தங்கியிருப்பதற்கு நீங்கள் போகவிரும்புகிறதலத்திலேதான் பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலுஞ்சாவீர்களென்று அறியவே அறிவீர்களாகவென்றான்.

## ௪௩. அதிகாரம்.

[(௧) யோகனான் எரேமியாவின் தீர்க்கதரிசனத்தைநம்பாமல் அவனையும், மற்றவர்களையும் எகிப்துக்குக்கொண்டுபோனது. (௮) எரேமியா எகிப்து பாபிலோனியராலேசெயங்கொள்ளப்படுமென்று அடையாளத்தினாலே தீர்க்கதரிசனமுரைத்தது.]

எரேமியா எல்லாச்சனத்துக்கும் அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் தன்னைக்கொண்டு அவர்களுக்குச் சொல்லியனுப்பின எல்லாவார்த்தைகளையுஞ்சொன்னானே, அவர்களுடைய பராபரனாகியகர்த்தருடைய இந்த எல்லா வார்த்தைகளையும் அவன் அவர்களுக்குச் சொல்லிமுடிந்தபோது சம்பவித்ததேதென்றால்,

௨. ஓசாயாவின் குமாரனாகிய அசரியாவும், கரேயாவின்குமாரனாகிய யோகனானும், அகந்தையான எல்லாமனுஷரும் எரேமியாவுடனேசொன்னதாவது; நீ பொய்சொல்லுகிறாய், எகிப்துக்கு அங்கேதங்கும்படிக்குப் போகாதேயுங்களென்று சொல்ல, எங்கள்பராபரனாகிய கர்த்தர் உன்னை எங்களண்டைக்கனுப்பினதில்லை.

௩. கல்தேயர் எங்களைக் கொன்றுபோடவும், எங்களைப்பாபேலுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகவும் எங்களை யவர்களகையிலொப்புக்கொடுக்கும்படிக்கு நேரியாவின் குமாரனாகிய பாருக்குத்தானே உன்னை எங்களுக்குவிரோதமாகப் பயிற்றுவிக்கிறானென்றார்கள்.

௪. அப்படியேயூதாவின்தேசத்திலே தரிக்கவேண்டுமென்ற கர்த்தருடையசத்தத்துக்குக் கரேயாவின்குமாரனாகிய யோகனானும், சகல இராணுவச்சேர்வைக்காரரும் செவிகொடாதேபோனார்கள்.

௫. யூதேயா தேசத்திலே தங்கியிருப்பதற்குத் தாங்கள் துரத்துண்டிருந்த சகல சாதிகளிடத்திலுமிருந்து திரும்பிவந்த மீதியானயூதரெல்லாரையும், புருஷரையும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும், இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் சாப்பானின்குமாரனாகிய அகிக்காமின் மகனான கெதலியாவண்டையிலவைத்துப்போன சகல ஆத்துமாக்களையும், தீர்க்கதரிசியாகிய எரேமியாவையும், நேரியாவின்குமாரனாகியபாருக்கையும்,

௬. கரேயாவின் குமாரனான யோகனானும், சகல இராணுவச்சேர்வைக்காரருங் கூட்டிக்கொண்டு,

௭. கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாதபடியினாலே எகிப்துதேசத்துக்குப் போய்த் தக்பானேஸ்மட்டும் வந்துசேர்ந்தார்கள்.

௮. தக்பானேசிலே கர்த்தருடைய வார்த்தைஎரேமியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௯. நீயுன்கையிலே பெரிய கற்களையெடுத்துக்கொண்டு யூதமனுஷர் பார்க்கையில் அவர்களைத் தக்பானேசிலிருக்கிற பார்வோனுடைய வீட்டின் ஒலிமுகவாசலிலுண்டான செங்கற்சூளையின் களிமண்ணிலே புதைத்துவைத்து,

௰. அவர்களுடனே சொல்லவேண்டியதாவது; இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறதேதெனில், இதோ * நம்முடைய வேலைக்காரனாகிய நேபுகாத்நேச்சாரென்ற பாபேலின் இராசாவை நாம் அழைத்தனுப்பி நாம் புதைப்பித்த இந்தக் கற்களின் மேல் அவனுடைய ஆசனத்தைவைப்போம், அவன் தன் இராச கூடாரத்தை அவைகளின்மேலே விரிப்பான். * ௨௫, ௯. ௨௭, அதி. ௬.

௰௧. அவன்வந்து எகிப்துதேசத்தை யழிப்பான், * சாவுக்கேதுவானவன் சாவுக்கும், சிறையிருப்புக்கேதுவானவன் சிறையிருப்புக்கும், பட்டயத்துக்கேதுவானவன் பட்டயத்துக்குமுள்ளாவான். * ௰௫, அதி. ௨.

௰௨. எகிப்தினுடைய தேவர்களின் வீடுகளில் அக்கினியைக்கொளுத்துவோம். அவன் அவைகளைச்சுட்டெரித்து அவைகளைச்சிறைபிடித்துப்போய், ஒருமேய்ப்பன்தன் கம்பளியைப் போர்த்துக்கொள்ளுமாப்போலே எகிப்துதேசத்தைப் போர்த்துக்கொண்டு

அவ்விடத்திலிருந்து சுகமாய்ப்புறப்பட்டுப் போவான். * ௪௬. அதி. ௨௫. ௨௬.

௰௩. அவன் எகிப்துதேசத்திலிருக்கிற பெத்சேமேசின் சிலைகளையுடைத்து, எகிப்தினுடைய தேவர்களின் வீடுகளையக்கினியாற் சுட்டுப்போடுவானென்கிறானென்று சொல்லென்றார்.

## ௪௪. அதிகாரம்.

[(௧) எரேமியா விக்கிரகத்தொழும்புக்காக யூதாவின் பாழ்க்கடிப்பை விவரித்தது. (௰௧) விக்கிரகபத்திக்காரர் எகிப்திலே அழிவதைத் தீர்க்கதரிசனமாயுரைத்தது. (௰௫) யூதருடைய மனங்கடினப்பட்டது. (௨௰) அதற்காக எரேமியா அவர்களைப்பயமுறுத்தி, (௨௬) எகிப்தின் அழிவையடையாளமாகச் சொன்னது.]

எகிப்துதேசத்திற் குடியேறி மிக்தோலிலும், தக்பானேசிலும், நோப்பிலும், பத்ரோஸ்சிமையிலும் வாசமான எல்லா யூதரையுங்குறித்து எரேமியாவுக்குண்டான வசனம்.

௨. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; நாம் எருசலேமின்மேலும், யூதாவுடைய எல்லாப் பட்டணங்களின்மேலும் வரப்பண்ணின தீங்கையெல்லாம் நீங்கள் கண்டீர்கள்.

௩. இதோ, அவர்களும், நீங்களும், உங்கள் பிதாக்களும் அறியாத தேவர்களுக்கு அவர்கள் தூபங்காட்டவும், ஆராதனைசெய்யவும் போய் நமக்குக் கோபமுண்டாகும்படிக்குச்செய்த அவர்களுடைய பொல்லாப்பினிமித்தம் அவைகள் இந்நாளிற் பாழாய்க் கிடக்கின்றன. அவைகளிற் குடியில்லை.

௪. நாம் பகைக்கிற இந்த அருவருப்பான காரியத்தைச் செய்யாதேயுங்களென்று நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு உங்களுக்கு ஏற்கெனவே சொல்லி அனுப்பிக்கொண்டேயிருந்தோம்.

௫. ஆனால் அவர்கள் அன்னியதேவர்களுக்குத் தூபங்காட்டாதபடிக்குத் தங்கள் பொல்லாப்பைவிட்டுத் திரும்புவதற்கு * கேளாமலும், தங்கள் செவிகளைச் சாய்க்காமலும் போனார்கள். * ௭, ௨௫. ௨௬.

௬. ஆகையால், நம்முடைய உக்கிரமும், நம்முடைய கோபமும் ஊற்றப்பட்டு யூதேயாவின் பட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளிலும் * பற்றியெரிந்தது. அவைகள் இந்நாளிலிருக்கிறபடி வனாந்தரமும், பாழுமாய்ப்போனது. * ௭,

௭. இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய பராபரனான கர்த்தர் சொல்லுகிறதாவது; நீங்கள் யூதாவிலொருவரையும் உங்களுக்கு மீதியாகக் காக்காமல் உங்களிற் புருஷனையும், ஸ்திரீயையும், பிள்ளையையும், பாலகனையும் அறுப்புண்டுபோகப் பண்ணும்படிக்கு உங்கள் கைகளின் கிரியைகளாலே நமக்குக் கோபமுண்டாக்குகிற பெரிய பொல்லாப்பை உங்களாத்துமாக்களுக்கு விரோதமாகச் செய்து,

௮. உங்களைத் தானே வேரறுப்புப்போகப் பண்ணுவதற்காகவும், பூமியினுடைய சகல சாதிகளுக்குள்ளும் சாபமும், நிந்தையுமாவதற்காகவும் நீங்கள் தங்கியிருக்கவந்த எகிப்துதேசத்திலே அன்னிய தேவர்களுக்குத் தூபங்காட்டுவானேன்!

௯. யூதாதேசத்திலும், எருசலேமின் வீதிகளிலும் உங்கள் பிதாக்கள் செய்த பொல்லாப்புகளையும், யூதாவின் இராசாக்கள் செய்த பொல்லாப்புகளையும், அவர்களுடைய பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும், நீங்கள் செய்த பொல்லாப்புகளையும், உங்கள் பெண்சாதிகள் செய்த பொல்லாப்புகளையும் மறந்துபோனீர்களோ!

௰. அவர்கள் இந்நாள்மட்டுக்கும் மனம்நொறுங்குண்டதுமில்லை பயப்படுகிறதுமில்லை, நாம் உங்கள் முன்னேயும், உங்கள் பிதாக்களின் முன்னேயும் வைத்த நமது வேதத்தின்படியேயும், நம்முடைய கட்டளைகளின்படியேயும் நடக்கிறதுமில்லை.

௰௧. ஆகையால், இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் * உங்களுக்குத் தீங்காகவும், யூதாவனைத்தையுஞ் சங்கரிக்கத்தக்கதாகவும் நமது முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திருப்பி, * ஆமோ. ௯. ௪.

௰௨. எகிப்து தேசத்திலே தங்கும்படிக்கு வரத் தங்கள் முகங்களைத் திருப்பின மீதியான யூதரை வாரிக்கொள்ளுவோம், அவர்கள் அனைவரும் எகிப்துதேசத்திலே நிர்மூலமாவார்கள், அவர்கள் சிறியவன் துவக்கிப் பெரியவன்மட்டும் * பட்டயத்துக்கிரையாகிப் பஞ்சத்தாலும் நிர்மூலமாவார்கள். அவர்கள் பட்டயத்தாலும், பஞ்சத்தாலுஞ் செத்துச் சாபமும், பாழும், பழிப்பும், நிந்தையுமாவார்கள். * ௪௨, அதி. ௰௭. ௰௮.

௰௩. நாம் எருசலேமை விசாரித்தபடி, எகிப்துதேசத்திற் குடியிருக்கிறவர்களையும், பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் விசாரிப்போம்.

௰௪. எகிப்துதேசத்திலே தங்கவும், மறுபடியுந் தங்களாத்துமா வாஞ்சித்திருக்கிற யூதாதேசத்திலேதானே குடியேறுவதற்கு அங்கே திரும்பிப்போகவும் வேண்டுமென்று இங்கே வந்த மீதியான யூதரிலே தப்புவாரும், மீதியாயிருப்பாருமில்லை தப்பிப்போபவர்களாகிய மற்றவர்களையேயொழிய அவர்களிலொருவரும் அங்கே திரும்புவதில்லையென்று சொன்னான்.

யரு. அபபோது தஙகள பெணசாதிகள வேறே தேவர்களுககுத தூபஙகாட்டுகிற தையறிநதிருநதஎலலாபபுருஷரும், பெரிய கூட்டமாய நினறிருநத எலலாஸ்திரிகளும், எகிப்து தேசததிறபத்ரோசிலே குடியிருநதசகலசனமும எரேமியாவுககுபபிரதியுத்தாரமாகசசொனனதாவது;

யசு. நீ கர்த்தருடைய நாமததிலெஙகளுககுசசொனனவார்ததையினபடியே * நாங்கள உனககுசசெவிகொடாமல,

* யஅ, அதி. யஉ.

யஎ. எஙகளவாயிலிருநது புறபபட்ட எலலாவார்ததையினபடியேயும் நாஙகள செயயவேசெயது * வானததின இராசஸ்திரிககுத்தூபஙகாட்டி அவளுக்குஊறறுதலகளை யூறறுவோம. நாஙகளும, எஙகள பிதாககளும், எஙகளஇராசாககளும, எஙகளபிரபுக்களும யூதாபட்டணஙகளிலும, எருசலேமின வீதிகளிலுஞசெயதது போலேதானே, அபபோது நாஙகள அபபததாலே திருததியாகிவாழநது ஒருபொலலாபபையுஙகாணாதிருநதோம. *எ, அதி. யஅ.

யஅ. நாஙகளவானததின இராசஸ்திரிககுததூபஙகாட்டாமலும, அவளுககு ஊறறுதலகளையூறறாமலும போனதுமுதறகொணடோவெனில, எலலாம எஙகளுககுக குறைபட்டது, பட்டயததாலும, பஞசததாலும நிர்மூலமானோம.

யகூ. அலலவெனறு நாஙகள வானததின இராசஸ்திரிககுத தூபஙகாட்டி அவளுககு ஊறறுதலகளை யூறறுகிறபோது நாஙகள அவளை நமஸ்கரிககவும, அவளுககு ஊறறுதலகளை யூறறவும, எஙகள புருஷரையலலாமல * அவளுககு அசசுபபணியாரஙகளைசசுடுகிறோமோவெனறார்கள. * எ, அதி. யஅ.

உய. அபபோது எரேமியா எலலாசசனத்துககும, புருஷருககும,ஸ்திரிகளுககும்,தனக்குப்படிககொதத மறுமொழியைககொடுத்த சகலசனததுககுஞசொனனதாவது;

உக. யூதாவின பட்டணஙகளிலும, எருசலேமினவீதிகளிலும நீஙகள உஙகளபிதாக்களும, உஙகள இராசாககளும, உஙகளபிரபுககளும, தேசததின சனமுந தூபஙகாட்டின தூபஙகளையலலவோ கர்த்தர் நினைத்துத்தமமுடைய மனதிலேவைததுக கொணடார்.

உஉ. உஙகள கிரியைகளின பொலலாபபையும, நீஙகளசெயத அருவருபபுகளையுங கர்த்தர் அபபுறமபொறுததிருககக்கூடாதபடியினாலேயலலவோ உஙகள தேசம இநநாளிலிருககிறபடி குடியறற அநதரவெளியும, பாழும, சாபமுமாயிறறு.

உங. நீஙகள தூபஙகாட்டிககர்த்தருககு விரோதமாகபபாவஞசெயது கர்த்தருடைய சத்தத்துககுசசெவிகொடாமலும, அவருடைய வேதத்துககும, அவருடைய கட்டளைககும, அவருடைய சாட்சிகளுககும இணஙகி நடவாமலும போனபடியினாலே தானேயிநதத்தீஙகு இநநாளிலிருககிறபடி உஙகளுககுநேரிட்டதெனறான.

உச. பினனையும எரேமியா எலலாசசனத்துககும, எலலா ஸ்திரிகளுககுஞசொனனதாவது; எகிப்து தேசததிலிருக்கிற யூதராகிய நீஙகளெலலாருஙகர்த்தருடைய வார்த்தையைககேளுஙகள.

உரு. இஸ்ரவேலின பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொலலுகிறதாவது; வானததின இராசஸ்திரிககுத தூபங காட்டவும, அவளுககு ஊறறுதலகளை யூறறவும நாஙகள நேர்நதுகொணட பொருததனைகளைசசெலுததவே செலுத்துவோமெனறு நீஙகளும, உஙகளபெணசாதிகளுமஉஙகள் வாயினாலுஞசொலலிஉஙகளகைகளினாலும நிறைவேறறினீர்கள, உஙகள பொருததனைகளைத்திட்டபபடுத்தவே திட்டபபடுததிச செலுததவேசெலுததினீர்கள.

உசு. ஆகையால, எகிப்துதேசததிலகுடியிருககிறயூதராகிய நீஙகளெலலாருஙகர்த்தருடையவார்த்தையைககேளுஙகள. இதோ, கர்த்தராகிய ஆணடவருடைய சீவனாணை எகிப்து தேசமெஙகும ஒருயூதமனுஷனவாயினாலும இனிநமமுடையநாமம்அழைக்கபபடுவதிலலையெனறு நாம நமது பெரிய நாமததைககொணடு ஆணையிடுகிறோமெனகிறதைககர்த்தர்சொலலுகிறார்.

உஎ. இதோ, * நாமஅவர்களபேரிலேநனமைககலல தீமைககேசாககிரதையாயிருபபோம, எகிப்து தேசததிலிருககிற யூதமனுஷரெலலாரும ஒழிநது தீருமளவுமபட்டயத்தாலும, பஞசததாலுஞ சஙகாரமாவார்கள. * கக, அதி. உஅ.

உஅ. ஆனாலும பட்டயததுககுத் தபபுபவர்கள எகிப்து தேசததிலிருநது யூததேசததுககுககொஞசம்பேராய்த்திரும்புவார்கள், அபபடியே எகிப்து தேசததிலே தஙகியிருக்கவநதமீதியான யூதரனைவரும ஆருடைய வார்ததைமெய்பபடுமெ, தஙகளுடையதோ நமமுடையதோவெனறு அறிவார்கள.

உகூ. கர்த்தர்சொலலுகிறதேதெனில, நாம் இவவிடத்திலுஙகளுககு விரோதமாயவிசாரிககிறவராயிருபபதறகும, நமமுடைய வார்த்தைகளையுஙகள பேரிலே தீமையாக மெயபபடுமெனறு நீஙகளறிவதறகும உஙகளுககடையாளமாவது;

ஙய இதோ, நாம் யூதாவின இராசாவாகிய சிதேககியாவை அவனுடைய சத்துருவும, அவனபிராணனைவாஙகத்தேடினவனுமாகிய நேபுகாத்நேத்சாரெனும பாபேலுடைய இராசாவின கையிலொபபுககொடுத்தது போலேநாம்பார்வோன ஒபபிரவெனற

எகிப்தின் இராசாவையும் அவனுடைய சத்துருக்களின் கையிலும், அவன் பிராணனை வாங்கத் தேடுகிறவர்களின் கையிலும் ஒப்புக்கொடுப்பேனென்பதுதானே யென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம்.

[(௧) பாருக்கு நடிக்கமுறாததால, (௪) எரேமியா அவனைப் போதித்துத் தேற்றினது.]

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்திலே நேரியாவின் குமாரனாகிய பாருக்கு இந்த வசனங்களை * எரேமியாவின் வாய்ச்சொல்லை ஒரு புஸ்தகத்தில் எழுதுகையில் எரேமியா தீர்க்கதரிசி அவனுடனே சொன்ன வார்த்தை.

* ௩௬, அதி. ௪.

௨. பாருக்கே! உன்னைக்குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது;

௩. * நீ, ஆ, எனக்கையோ! ஏனெனில் கர்த்தர் என்னுடைய நோவைச் சஞ்சலத்தால வர்த்திக்கப்பண்ணினாரென்றும், என் தவிப்பினால் இளைத்தேன், இளைப்பாறுதலைக் காணாதே போனேனென்றும் சொல்லுகிறாய்?

* சங்கீ. ௬, ௭.

௪. கர்த்தருரைக்கிறதேதெனில், இதோ, நாம் கட்டினதை நாம் இடிக்கிறோம், நாம் நாட்டினதை நாம் பிடுங்குகிறோம், இந்த முழுத்தேசத்தையுங் கூடத்தானே.

௫. நீயோவெனில், உனக்குப் பெரிய காரியங்களைத் தேடுகிறாயோ! தேடாயாக. ஏனெனில், இதோ, எல்லா மாம்சத்தின் மேலும் தீங்கை வரப்பண்ணுகிறேனென்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனால் நீ போகும் சகல தலங்களிலும் * உன்னுடைய ஆத்துமாவை உனக்குக் கிடைக்குங் கொள்ளையுடைமையைப் போலே தருகிறேனென்கிறதை அவனுடனே சொல்லென்றார் என்று சொன்னான்.

* ௩௯, ௰௮

## ௪௬. அதிகாரம்.

[(௧) எரேமியா ஐப்பிராத்து நதியண்டையிலே பார்வோனுடைய முறியடிக்கப்பட்டதையும், (௰௩) நேபுகாத்நேத்சாராலே எகிப்து செயம்பண்ணப்பட்டதையுந் தீர்க்கதரிசனமாயுரைத்தது. (௨௭) தண்டனையிலே வருத்தப்பட்ட யாக்கோபைத் தேற்றினது.]

புறசாதிகளுக்கு விரோதமாய எரேமியா தீர்க்கதரிசிக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨. * எகிப்தைக்குறித்துச் சொல்லுவது ஐப்பிராத்து நதியண்டையில் கற்கேமிசிலேயிருந்ததும், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்திலே முறியடித்ததுமான பார்வோன்நேகோவென்னப்பட்ட எகிப்தினுடைய இராசாவின் இராணுவத்தின்பேரிலே அவர் சொன்னதாவது; * ஏசா. ௰௯, ௧. முதல் எசேக்கி. ௨௯, ௨. முதல்

௩. கேடயங்களையும், பரிசைகளையும் ஆயத்தம்பண்ணி யுத்தத்துக்குச் சேருங்கள்.

௪. குதிரைக்காரரே குதிரைகளின்மேல் சேணங்களை வைத்தேறித் தலைச்சீராக்களைப் போட்டுக்கொண்டவர்களாய் உங்களை நிறுத்துங்கள், ஈட்டிகளைத் துலக்கிக் கவசங்களைத் தரித்துக்கொள்ளுங்கள்.

௫. அவர்கள் கலங்கிப் பின்வாங்குகிறார்களென்று நான் காண்கிறதெப்படி? அவர்களுடைய பராக்கிரமசாலிகள் நறுக்குண்டு திரும்பிப்பாராமல் ஓடவே ஓடுகிறார்கள், சுற்றிலும் பயங்கரமுண்டென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬. வேகமானவன் ஓடிப்போகாதிருக்க, பராக்கிரமசாலி தப்பிப்போகாதிருக்க, வடக்கே ஐப்பிராத்து நதியண்டையிலே யிடறி விழுவார்கள்.

௭. நீரோட்டத்தைப்போலவும், தண்ணீர்கள் மோதியடிக்கிற ஆறுகளைப்போலவும் எழும்பி வருகிறவனார்!

௮. எகிப்தின் நீரோட்டத்தைப்போலவும், தண்ணீர்கள் மோதியடிக்கிற ஆறுகளைப் போலவும் எழும்பி வந்து நான் போய் இந்த தேசத்தை மூடிப்பட்டணத்தையும், அதிற்குடியிருக்கிறவர்களையும் அழிப்பேனென்றான்.

௯. குதிரைகளே போய் ஏறுங்கள், இரதங்களே கடகடென்றோடுங்கள், பராக்கிரமசாலிகளும் கேடயம்பிடிக்கிற எத்தியோப்பியரும், பூத்தியரும், வில்லைப்பிடித்து நாணேற்றுகிற லீதியரும் புறப்படக்கடவர்கள்.

௰. ஆனால் இந்நாள் சேனைகளையுடைய கர்த்தராகிய ஆண்டவரின் நாளும், அவர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிற நாளுமாயிருக்கிறது. ஆகையால் பட்டயம் பட்சித்து அவர்களுடைய இரத்தத்தாலே திருத்தியாகி வெறித்திருக்கும். ஏனெனில், வடதேசத்தில் ஐப்பிராத்து நதியண்டையிலே சேனைகளையுடைய கர்த்தராகிய ஆண்டவருக்குப் பெலியிடுதலுண்டு.

௰௧. எகிப்து குமாரத்தியாகிய கன்னியாஸ்திரீயே * நீ கீலேயாத்துக்குப்போய் எறிப்பிசின் தயிலம் வாங்கு, விருதாவாகத் திரள் ஔஷதங்களைக் கூட்டுகிறாய், உனக்கு ஆரோக்கியமுண்டாகாது. * ௮, அதி. ௨௨.

௰௨. சாதிகள் உன் இலச்சையைக் கேட்கிறார்கள், உன் கூக்குரலாலே தேசம் நிறைந்தது. ஏனெனில், பராக்கிரமசாலி பட்டியிடறி இருவரும் ஏகமாய் விழுந்தார்களென்றார்.

௰௩. எகிப்துதேசத்தையழிக்கப்பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் வருவானென்பதைக்குறித்து எரேமியாதீர்க்கதரிசியுடனே கர்த்தர் சொன்னவசனமாவது;

௰௪. உவகைநிறுத்தி ஆயத்தப்படு. ஏனெனில் பட்டயம் உன்னைச்சுற்றிலும் உண்டானதைப் பட்சித்துப்போட்டதென்றுசொல்லி எகிப்திலே அறிவித்து மிக்தோலிலே கேட்கப்பண்ணி நோப்பிலும், தக்பானேசிலும் கேட்கப்பண்ணுங்கள்.

௰௫. உன்னில் வல்லவர்கள் அடித்துக்கொண்டுபோகப்படுகிறதெப்படி! நிலைநிற்கமாட்டார்கள். ஏனெனில் கர்த்தர் அவர்களைத் தள்ளினார்.

௰௬. அநேகரை இடறப்பண்ணுகிறார், அவனவனுந் தனக்கடுத்தவன்மேல்விழுந்து எழுந்திரு கெடுக்கிறபட்டயத்துக்குத்தப்ப நம்முசனத்தண்டைக்கும், நாம்பிறந்ததேசத்துக்கும் திரும்பிப்போவோமென்கிறார்கள்.

௰௭. எகிப்தின் இராசாவாகிய பார்வோன் பாழ்க்கடிக்கப்பட்டான், அவன் திட்டமான காலத்தைத்தப்பவிட்டானென்று அங்கே கூப்பிடுகிறார்கள்.

௰௮. பருவதங்களிலே தாபோரும், சமுத்திரத்திற கர்மேலுமிருக்கிற உயரமாய் வருவானென்று * சேனைகளின் கர்த்தரென்ற நாமமுள்ள இராசாதமமுடைய ஜீவனைக்கொண்டுசொல்லுகிறார். * சங்கீ. ௨, ௪௰.

௰௯. எகிப்து தேசத்துக் குடியாகியகுமாரத்தியே சிறையிருப்புக்குப்போகும்பயணமுட்டுகளையுனக்குண்டாக்கு. ஏனெனில், நோப்புப்பாழாகும். அது குடியில்லாமற்சுட்டுப்போட்டப்பட்டுக்கிடக்கும்.

௨௰. எகிப்துமகா நேர்த்தியான கன்றுக்குட்டியாயிருக்கிறது, அடிக்கிறவன் வடக்கேயிருந்துவருகிறான்.

௨௧. அதின்நடுவிலிருக்கிற அதினுடைய கூலிப்படைகள் கொழுத்த கன்றுக்குட்டிகளைப்போலிருக்கிறார்கள். ஆகையால், இவர்களும் நிற்காமலே திரும்பிக்கொண்டு ஏகமாயோடிப்போவார்கள். ஏனெனில், * அவர்கள் விசாரிக்கப்படுகிற அவர்களுடைய ஆபத்துநாள் அவர்கள்மேல்வந்தது.

* ௫௰, அதி. ௩௧.

௨௨. அதினுடைய சத்தம்பாம்பின்சத்தமடைவாய்ப் புறப்படும். ஏனெனில், இராணுவபலத்தோடே நடந்து மரங்களைவெட்டுகிறவர்களைப்போலக் கோடாலிகளோடே அதின்மேல்வருவார்கள்.

௨௩. எண்ணப்படாத மரங்களாயிருந்தாலும் அதின்காட்டைவெட்டுவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், வெட்டுக்கிளிகளைப் பார்க்கிலும் அதிகமாயிருக்கிறார்கள், அவர்களுக்கிலக்கமில்லை.

௨௪. எகிப்துக் குமாரத்திவெட்கப்பட்டுருக்கிறாள், வடக்குத்திசைச் சனத்தின்கையில் ஒப்புக்கொடுக்கப்படுகிறாள்.

௨௫. இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நாம்நோப்புப்பட்டணத்திலுள்ள திரளான சனசதளத்தையும், பார்வோனையும், எகிப்தையும் * அதின்தேவர்களையும், அதின் இராசாக்களையும் பார்வோனையும், அவனைநம்பியிருக்கிறவர்களையும்விசாரித்து,

* ௩௪, ௰௨. ஏசாயா. ௰௯, ௧.

௨௬. அவர்களையவர்கள் பிராணனைவாங்கத்தேடுகிறவர்களின் கையிலும், பாபேலின் இராசாவாகிய நேபுகாத் நேச்சாரின்கையிலும், அவனுடைய வேலைக்காரரின் கையிலும் ஒப்புக்கொடுப்போம், அதற்குப்பிறபாடோவெனில், அது பூர்வநாள்களிலிருந்தது போற குடியேறப்பட்டுப்போமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௭. ஆனால் * நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாக. இஸ்ரவேலே, நீ கலங்காயாக. ஏனெனில், இதோ நானுன்னைத்தூரத்திலும் உனவித்தையவர்கள் சிறையிருப்பின் தேசத்திலுமிருந்து விலவித்து இரட்சிப்போம், அப்போது யாக்கோபு திரும்பிவந்து அமைதலோடும், சாங்கோபாங்கத்தோடுமிருப்பான், அவனைத்தத்தளிக்கப்பண்ணுவாரில்லை. * ௩௰, அதி. ௰.

௨௮. நம்முடைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயாகவென்று கர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், நாமுனனுடனேயிருக்கிறோம். நாமுன்னைத்துரத்திவிட்ட எல்லாச்சாதிகளையும் நிர்மூலமாக்குவோம், உன்னையோ நாம்நிர்மூலமாக்காமல் உன்னை * நியாயமட்டாய்த்தண்டிப்போம். ஆனாலுன்னை நாம்குற்றமில்லாமல் நீங்கலாக்கவேவிடுவதில்லையென்றார். * ״, அதி. ௨௪.

## ௪௭. அதிகாரம்.

[பெலிஸ்தருடைய அழிவு சொல்லப்பட்டது.]

பார்வோன் காத்சாவை அழிக்காததற்குமுன்னே * பெலிஸ்தருக்குவிரோதமாகத் தீர்க்கதரிசியாகிய எரேமியாவுக்குண்டான கர்த்தருடையவசனம்.

* ஏசா. ௰௪, ௨௯. எசேக். ௨௫, ௰௫. ஆமோஸ். ௧, ௬. செப்ப. ௨, ௪. ௫. சகரி. ௯, ௫௬.

௨. கர்த்தர்சொல்லுகிறதாவது; இதோ, வடக்கேயிருந்துதண்ணீர்களெழும்பி, வெள்ளநதியாகத் தேசத்தின்மேலும், அதினுடைய நிறைவின்மேலும், பட்டணத்தின்மேலும், அதிற்குடியிருக்கிறவர்களின்மேலும் புரண்டோடும், அப்போது மனுஷர் கூப்பிடுவார், தேசத்தின்குடிகளெல்லாரும் அலறுவார்கள்.

௩. அவர்களுடைய வலுவான குதிரைகளி

னதும்புகள் இரைகிறசத்தத்தையும், அவர்களுடைய இரதங்களின் கடகடப்பையும், அவைகளுடைய உருளைகளின் இரைச்சலையுந்தொட்டுத் தகப்பன்மார் தங்கள் கைகளின் அயர்வினாலே பிள்ளைகளை நோக்கிப்பாராதிருப்பார்கள்.

௪. பெலிஸ்தரையெல்லாம் பாழாக்கடிக்கவும், தீருவுக்கும், சீதோனுக்கும் மீதியான சகாயரை யெல்லாம் சங்காரம் பண்ணவும் வருகிற நாளிலேதானே. ஏனென்றால், * கப்தோரென்கிற கரைதுறையான தேசத்தாரில் மீதியாகிய பெலிஸ்தரையுங் கர்த்தர் பாழாக்கடிப்பார். * ஆமோ. ௯, ௭.

௫. காத்சாவுக்கு மொட்டையிடுதல் வருகிறது, அவர்களுடைய பள்ளத்தாக்கிலே மீதியாகிய அஸ்கலோன் சங்காரமாகுகிறது, எந்தமட்டும் உன்னைக் கீறிக்கொள்ளுவாயென்றார்.

௬. ஆ, கர்த்தரின் பட்டயமே, எந்தமட்டும் அமராதிருப்பாய்! உன் உறையிலே திரும்பு, ஓய்ந்தமர்ந்திரு.

௭. எப்படியமர்ந்திருப்பாய்! அஸ்கலோனுக்கு விரோதமாகவும், கடற்கரைக்கு விரோதமாகவுங் கர்த்தர் அதற்குக் கட்டளை கொடுத்து அவ்விடத்துக்கென்று அதைக் குறித்தாரே.

## ௪௮. அதிகாரம்.

[(௧) மோவாபியருடைய மேட்டிமைக்காகவும். (௭) அவர்களுடைய அஞ்சாமைக்காகவும், (௰௩) யாமார்ந்த பிசகைக்காகவும், (௰௪) அவர்கள் பராபரனையும் அவருடைய சனத்தையும் நிந்தைசெய்ததற்காகவும் அவர்கள் மேல்வரும் நியாயத்தீர்ப்பு. (௪௭) மோவாபியர் முந்தின நிலையடைவது.]

மோவாபுக்குச் சொல்லுவது; இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; நேபோவுக்கு ஐயோ, ஏனெனில், அது பாழாக்கடிக்கப்பட்டது, கீரியாத்தாயீம் வெட்கப்பட்டுப் பிடிக்கப்பட்டுப் போயிற்று, மிஸ்காப்பு வெட்கப்பட்டுக் கலங்கிப்போயிற்று. * ஏசாயா. ௰௫, ௧.

௨. எஸ்போனைத்தொட்டு மோவாபுக்கிருந்த பெத்தரிக்கம் இனியில்லை. அது சாதியாயிராதபடிக்கு அதை நிர்மூலமாக்குவோம் வாருங்களென்று அதற்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்திருக்கிறார்கள், மத்மேனே, நீயுஞ் சங்காரமாவாய், பட்டயம் உன்னைத்தொடரும்.

௩. பாழ்க்கடிப்பினாலும், பெரிய நொறுக்குதலினாலும் உண்டாகுகிற கூப்பிடுதலின் சத்தம் ஒரோனாயிமிலிருந்து கேட்கப்படும்.

௪. மோவாபு நொறுங்குண்டது, அதின் சிறியவர்கள் கூப்பிடுதலைக் கேட்கப்பண்ணினார்கள்.

௫. ஏனெனில், லூகித்துக்கேறுகிற வழியிலே அழுகையின்மேல் அழுகையெழும்பும், ஒரோனாயிமுக்கிறங்கிப்போகிற வழியிலே சத்துருக்கள் நொறுக்குதல் செய்கிறதினால் உண்டாகிய கூப்பிடுதலைக் கேட்கிறார்கள்.

௬. உங்கள் பிராணனைத் தப்புவிக்கஓடிப்போங்கள். ஆனால், * வனாந்தரத்தில் இளைப்பமான செடியைப்போலிருப்பீர்கள்.

* ௰௭, அதி. ௬.

௭. ஏனெனில், நீயுன் கிரியைகளையும், உன் பொக்கிசங்களையும் நம்புகிறபடியினாலே நீயும் பிடிக்கப்படுவாய், அப்போது * காமோஸ் சிறையாக்கப்பட்டுப்போகும், அதின் ஆசாரியரும், பிரபுக்களுங் கூடப்போவார்கள். * ௧. இராசா. ௰௧, ௭.

௮. பாழ்க்கடிக்கிறவன் எல்லாப்பட்டணங்களின்மேலும் வருவான், ஒரு பட்டணமுந் தப்பிப்போவதில்லை, பள்ளத்தாக்குகளுங் கெட்டுப்போகும், சமனான பூமியும் அழிக்கப்படுமென்று கர்த்தர் சொன்னார்.

௯. மோவாபுக்குச் செட்டைகளைக் கொடுங்கள். ஏனெனில், அது பறந்துபோகும், அதின் பட்டணங்களோ குடிகளில்லாதபடியாய்ப் பாழாகும்.

௰. கர்த்தருடைய கிரியையை வஞ்சனையாய்ச் செய்கிறவன் சபிக்கப்பட்டவன், இரத்தத்தைச் சிந்தாதபடிக்குத் தன் பட்டயத்தையடக்கிக்கொள்ளுகிறவன் சபிக்கப்பட்டவன்.

௰௧. மோவாபு தன் சிறுவயதுதுவக்கிச் சாங்கோபாங்கத்தோடேயிருந்து தன் வண்டல்களின்மேல் அசையாமல் நின்று ஒருபாத்திரத்திலிருந்து வேறொரு பாத்திரத்தில் இறக்கிக்கொள்ளப்படாமலும், சிறையிருப்பிற்போகாமலுமிருந்தது. ஆனதுகொண்டு அதின் ருசி அதில் நிலைத்தது, அதின் வாசனை வேறுபட்டுப்போனதில்லை.

௰௨. ஆகையால் இதோ, நாட்கள் வருமென்றுகர்த்தர் சொல்லுகிறார், அப்போது இறக்குகிறவர்களையதற்கனுப்புவோம், அவர்கள் அதையிறக்கி அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி அதின் சாடிகளையுடைப்பார்கள்.

௰௩. அப்போது இஸ்ரவேலின் வீட்டார் தங்கள் நம்பிக்கையான * பெத்தேலாலே வெட்கப்பட்டதுபோலே மோவாபு காமோசாலே வெட்கப்படும். * ௧. இராசா. ௰௨, ௨௯.

௰௪. நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும், நாங்கள் யுத்தத்துக்கான பலத்தமனுஷரென்றும் நீங்கள் சொல்லுகிறதெப்படி!

௰௫. மோவாபு தன் பட்டணங்களுக்கேறிப் போகுமளவில் பாழ்க்கடிக்கப்படும் தெரிந்துகொள்ளப்பட்ட அதினுடைய வாலிபர்

கொலைக்களத்துக்கு இறங்குகிறார்களென்கிற தைச் சேனைகளையுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா சொல்லுகிறார்.

௰௬. மோவாபின் ஆபத்து வரச் சமீபமாயிருக்கிறது, அதின் தீங்கு மிகவுந் தீவரித்துக்கொள்ளுகிறது.

௰௭. அதின் சுற்றுப்புறத்தாரும், அதின் பேரையறிந்தவர்களுமாகிய நீங்களெல்லாரும் அதற்காக அங்கலாய்த்துக்கொள்ளுங்கள். பலத்த கோலும், அலங்காரமான தடியும் எப்படி உடைந்ததென்று சொல்லுங்கள்.

௰௮. தீபோனின் குடியாகிய குமாரத்தியே! நீ மகிமையை விட்டிறங்கித் தவனத்தோடே உட்காரு. ஏனெனில், மோவாபைப் பாழ்க்கடிக்கிறவன் உனக்கு விரோதமாய் வந்தேறி உன் அரணகளையழித்துப் போடுவான்.

௰௯. ஆரோவேரிற் குடியிருக்கிறவளே! நீ வழியிலே நின்று கண்ணோக்கிக்கொண்டிரு, நடந்ததென்னவென்று ஓடிவருகிறவனையும், தப்பிவந்தவளையுங் கேள்.

௨௰. மோவாபு முறியடிக்கப்பட்டபடியினாலே வெட்கப்பட்டது, அலறிக் கூப்பிடுங்கள், மோவாபு பாழ்க்கடிக்கப்பட்டதென்று * அர்னோனில் அறிவியுங்கள்.

* ௪. மோசே. ௨௧, ௰௩.

௨௧. சமனான பூமியாகிய ஓலோனின் மேலும், யாத்சாவின் மேலும், மேப்காத்தின் மேலும்,

௨௨. தீபோனின் மேலும், நேபோவின் மேலும், பெத்திப்லத்தாயீமின் மேலும்,

௨௩. கீரியத்தாயீமின் மேலும், பெத்கமூலின் மேலும், பேத்மெயோனின் மேலும்,

௨௪. கேரியோத்தின் மேலும், பாத்ஸ்ராவின் மேலும், மோவாபு தேசத்திலே தூரத்திலும், சமீபத்திலுமிருக்கிற எல்லாப் பட்டணங்களின் மேலும் நியாயத்தீர்ப்பு வரும்.

௨௫. மோவாபின் கொம்பு வெட்டுண்டது, அவன் புயம் உடைக்கப்பட்டதென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௬. அவனை வெறியாக்குங்கள். ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பெருமையானான், அப்படியே மோவாபு தான் வாந்திபண்ணுகையில் தன்னையடித்துக்கொண்டு தானும் பரியாசமாவான்.

௨௭. ஏனெனில், இஸ்ரவேல் உனக்குப் பரியாசமாயிருந்ததல்லவோ! அவன் திருடருக்குட்கண்டு பிடிக்கப்பட்டானோ! நீ யவனைக் குறித்துப் பேசுகிறபோதெல்லாம் தலையைத் துலுக்குகிறாயே.

௨௮. மோவாபுடைய தேசத்தின் குடிகளே! நீங்கள் பட்டணங்களைவிட்டுப் போய்க் கன்மலையிலே தங்கிக் குகையுடைய வாயின் ஓரங்களிற் கூடுகட்டுகிற புறாவுக்கொப்பாகுங்கள்.

௨௯. மெத்தப் பெருமையாயிருக்கிற மோவாபின் பெருமையையும், அதின் மேட்டிமையையும், அதின் அகந்தையையும், அதின் பெத்தரிக்கத்தையும், அதினுடைய இருதயத்தின் உயர்த்தலையுங் கேட்டோம்.

௩௰. அதின் மூர்க்கத்தை நாமறிவோமென்று கர்த்தர் சொல்லுகிறார், ஆனாலும், அப்படியாகாது, அதின் வீம்பு அதையப்படிச் செய்யப்பண்ணுவதில்லையென்கிறார்.

௩௧. ஆகையால் மோவாபினிமித்தம் நான் அலறி, மோவாபுடைய தேசமனைத்தினிமித்தம் கூக்குரலிடுவேன், கீராரேசுடைய மனுஷரினிமித்தம் பெருமூச்சுவிடப்படும்.

௩௨. சிப்மாவூரின் திராட்சப்பயிரே, யாசேரின் மேல் அழப்பட்டதுபோல உன் மேல் அழுவேன், உன் கொடிகள் கடலைக்கடந்துபோயின, அவைகள் யாசேருடைய கடல் மட்டும் வந்துசேர்ந்தன, பாழ்க்கடிக்கிறவன் உன் விளைச்சலின் மேலும், உன் திராட்சப்பழ அறுப்பின் மேலும் விழுந்தான்.

௩௩. * சந்தோஷமும், களிப்பும் பயிர்வெளியிலும், மோவாபுதேசத்திலும் இருந்து வாங்கப்போனது, ஆலைகளிலே திராட்சப்பழரசத்தின் பொழிதலை ஒய்ப்பண்ணினேன், ஆலையை மிதிக்கிற கொக்கரிப்பில்லை, கொக்கரிப்பு இனிக் கொக்கரிப்பல்ல. * ஏசாயா. ௰௬, ௰.

௩௪. எஸ்போனைத் துவக்கி எலெயாலே மட்டாகவும், யாகாஸ் மட்டாகவும் உண்டாகுங் கூப்பிடுதலைத் தொட்டு அவர்கள் மூன்று வயது கிடாரியைப்போலே சோவாரைத் துவக்கி ஒரோனாயீம் மட்டாகவுந் தங்கள் சத்தத்தைக் காட்டுவார்கள். ஏனெனில், நிம்ரீமின் நீர்ப்பாய்ச்சல்களும் பாழாய்ப் போய்க்கிடக்கும்.

௩௫. மோவாபு தேசத்திலே மேடைகளிற் பலியிடுகிறவனையும், தன் தேவர்களுக்குத் தூபங்காட்டுகிறவனையும் ஒய்ப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௬. ஆகையால், மோவாபினிமித்தம் * என் இருதயம் நாகசுரங்களைப்போலத் துயரமாய்த் தொனிக்கும். கீராரேசின் மனுஷரினிமித்தமும் என் இருதயம் நாகசுரங்களைப் போலே துயரமாய்த் தொனிக்கும், அவர்கள் மீதியாக வைத்துவைத்தது அழிந்துபோகிறபடியினாலேதானே. * ஏசாயா. ௰௬, ௰௧.

௩௭. ஏனெனில், தலைகளெல்லாம் மொட்டையிடும், தாடிகளெல்லாங் கத்தரித்திருக்கும், கைகளிலெல்லாங் கீறுதல்களும், அரைகளில் இரட்டுடுப்பும் உண்டு.

௩௮. மோவாபுடைய சகல வீடுகளின் மேலும், அதினுடைய தெருக்களிலேயும், ஏக புலம்பலுண்டாம். ஏனெனில், விருப்பமில்லாத பாண்டத்தைப்போலே மோவாபை

யுடைத்துப் போட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௯. எத்தனையாய் முறிந்துபோனதென்று அலறுகிறார்கள், மோவாபு எத்தனையாய் முதுகைக்காட்டி வெட்கப்படும்; இப்படி மோவாபு தன் சுற்றுப்புறத்தார் அனைவருக்கும் பரியாசமும், திகைப்புமாயிருக்கும்.

௪௰. ஏனெனில், இதோ * கழுகைப்போலே பறந்துவந்து மோவாபின்மேலே தன் செட்டைகளை விரிப்பான். * ௪௯, ௨௨.

௪௧ பட்டணங்கள் வாங்கப்படும், கோட்டைகள் பிடிக்கப்படும், அந்நாளிலே மோவாபுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம் வாதைப்படுகிற ஸ்திரியின் இருதயத்தைப் போலிருக்கும்.

௪௨. மோவாபு சனமாயிராதபடிக்கு அழிக்கப்படும். ஏனெனில் கர்த்தருக்குவிரோதமாகப் பெருமையாய்ப்போயிற்று.

௪௩. மோவாபுடைய தேசத்தின் குடியே, * திகிலும், படுகுழியும், கண்ணியும் உன்மேல்வருமென்று கர்த்தர்சொல்லுகிறார்.
* ஏசாயா. ௨௪, ௰௭. ௰௮.

௪௪. திகிலுக்கு விலகி ஓடுகிறவன் படுகுழியிலே விழுவான், படுகுழியிலிருந்தேறுகிறவனோ கண்ணியிலே பிடிபடுவான். ஏனெனில், அவர்கள் விசாரிக்கப்படும் வருஷத்தை யதின்மேலே அதாவது மோவாபின்மேலே தானே வரப்பண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௪௫. வல்லமைக்குத் தப்ப ஓடிப்போகிறவர்கள் எஸ்போனின் நிழலிலே தரித்துக்கொள்ளுகிறார்கள். ஆனால், * நெருப்பு எஸ்போனிலும், அக்கினிச்சுவாலை சீகோனுடைய ஊரின் நடுவிலுமிருந்து புறப்பட்டு மோவாபுதேசத்தின் மூலைகளையும், அமளிக்காரரின் உயர்ந்த தலையையும் பட்சிக்கும்.
* ௪ மோசே. ௨௧, ௨௮. ௨௯.

௪௬. மோவாபே, உனக்கையோ, காமோஸ் விக்கிரகத்தின் சனம் அழியும். ஏனெனில், உன் குமாரரும் சிறைபிடிக்கப்பட்டு உன் குமாரத்திகளும் சிறைபிடிக்கப்பட்டுப்போகிறார்கள்.

௪௭. ஆனால் * கடைசிநாள்களில் மோவாபின் சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர் சொல்லுகிறார். மோவாபின்மேல் வரும் நியாயத்தீர்ப்பின்செய்தி இம்மட்டுஞ்சரி. * ௪௯, அதி. ௬.

## ௪௯. அதிகாரம்.

[(௧) அம்மோன்புத்திரருக்குவரும் நியாயத்தீர்ப்பும். (௯) அவர்கள் முந்தின சீருக்கு வருவதும். (௭) ஏதோமுக்கும், (௨௩) தமஸ்குவுக்கும், (௨௮) கேதாருக்கும், (௩௰) காசோருக்கும், (௩௪) ஏலாமுக்கும் வரும் நியாயத்தீர்ப்பும். (௩௯) ஏலாம் முந்தின சீருக்கு வருவதும்.]

அம்மோன்புத்திரருக்குச் சொல்வது; கர்த்தர் சொல்லுகிறதாவது; இஸ்ரவேலுக்குப் பிள்ளைகளில்லையோ? அவனுக்குச் சுதந்தரவாளியில்லையோ? மல்காமகாத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு அதின் சனம் இவன் பட்டணங்களிற் குடியிருப்பானேன்? * எசேக்கி. ௨௫, ௧—௭.

௨. ஆகையால் இதோ நாள்கள் வருமென்று கர்த்தர்சொல்லுகிறார். அப்போது அம்மோன்புத்திரரின் பட்டணமாகிய ரபாவிலே யுத்தத்தின் ஆர்ப்பரிப்பைக் கேட்கப்பண்ணுவேன். அது பாழான மண்மேடாகும். அதற்கடுத்த ஊர்களும் அக்கினியாற் சுட்டெரிக்கப்படும். ஆனால் இஸ்ரவேல் தன் தேசத்தைச் சுதந்தரித்துக் கொண்டவர்களின் தேசத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௩. எஸ்போனே, அலறு. ஏனென்றால், ஆயி பாழாக்கப்பட்டது. ரபாவின் குமாரத்திகளே, கூப்பிடுங்கள். இரட்டை யுடுத்திக்கொண்டு புலம்பி வேலிகளிற் சுற்றித்திரியுங்கள். ஏனெனில், மல்காம *சிறையிருப்பிலே போகிறது அதின் ஆசாரியர்களும், அதின் பிரபுக்களுங்கூடத்தானே. * ௪௮, ௭.

௪. எனக்குவிரோதமாய்வருபவனார் என்று சொல்லி உன்பொக்கிஷங்களை நம்பின மாறுபாடான குமாரத்தியே, நீ பள்ளத்தாக்குகளைப்பற்றிப் பெருமைபாராட்டுவானேன்? உன்னுடைய பள்ளத்தாக்குக் கரைந்துபோகிறது.

௫. இதோ உன்சுற்றுப்புறத்தாராலே எல்லாம் உன்மேலே திகில் வரப்பண்ணுவேனென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். நீங்கள் அவரவர் தம்தம் முன்னிருக்கும்வழியே ஓடத் துரத்தப்படுவீர்கள். அலைந்து வருகிறவர்களைச் சேர்ப்பாருமில்லை.

௬. * அதற்குப்பிறபாடோவென்றால், அம்மோன்புத்திரருடைய சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.
* ௪௮, ௪௭.

௭. * ஏதோமுக்குச்சொல்வது சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறதாவது; தேமானிலே இனி ஞானமில்லையோ? ஆலோசனை உணர்வுள்ளவர்களைவிட்டழிந்ததோ! அவர்களுடைய ஞானங் கெட்டுப்போயிற்றோ?
* ஏசே. ௨௫, ௰௨. ௰௪, ௩௫, ௧. ஷி ஒபதி. ௧. வசனம். ஷி

௮. * தேதானின் குடிகளே, ஓடுங்கள். முதுகைக்காட்டுங்கள். தங்குகிறதற்காக ஆழங்களிற் பதுங்குங்கள். ஏனெனில், ஏசாவின் ஆபத்தையும், அவனை விசாரிக்கும் காலத்தையும் அவன்மேல் வரப்பண்ணுவேன்.

௯. திராட்சப்பழங்களை யறுக்கிறவர்கள

உன்னிடத்திலே வந்தார்களாகிற பின்னின்று
வடைகொள்ளுகிறவர்களோ! இராத்திரி
யில திருடர் வந்தார்களாகில் தங்களுக்குப
போதுமென்றமட்டாகவல்லவோகேடுசெய
வார்கள்.

௰. நாமோவெனில், ஏசாவைத்திறப்பாக்கி
அவன் ஒளித்துக்கொள்ளக்கூடாதபடிக்கு
அவனுடையமறைவுகளை வெளியாக்கிப்போ
டுவோம். அவனுடையவித்தாயிருக்கிறவர்க
ளும், அவனுடைய சகோதரரும், அவனு
டைய அசலாரும் பாழாக்கடிக்கப்படுவார்
கள், அவனினியில்லை.

௰௧. திக்கற்றிருக்கப்போகிற உன் பிள்ளை
களைத்தள்ளிவிடு நாம் அவைகளைஉயிரோடே
காப்பாற்றுவோம். உன்விதவைகள் நம்மை
யே நம்புவார்களாக.

௰௨. ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதா
வது; இதோ, *பாத்திரத்திற் குடிக்கவேண
டுமென்ற நியாயத்தீர்ப்புக்குள்ளாயிராதவர்
கள் அதிற குடிக்கவே குடித்தார்கள். நீ
குற்றமற்று நீங்கலாயிருப்பவனோ? நீ நீங்க
லாயிராமல் அதிற குடிக்கவே குடிப்பாய்.
* உரு, அதி. உ௮. க. பேதுரு. ச, ௰௭.

௰௩. ஏனெனில், * போஸ்றூரம், நிந
தையும், அவாந்தரையும், பழிப்புமாகஇருக்
குமென்றும், அதின் பட்டணங்களெல்லா
ம்நித்தியவனாந்தரங்களாயிருக்குமென்றும்,
நம்மைக்கொண்டு ஆணையிட்டோமென்று
கர்த்தர்சொல்லுகிறார். * ஏசாயா. ௩௪,
௬. ௬௩, அதி. க. ஏசேக்கி. ௩௫, ௯.

௰௪. நீங்கள்கூடிக்கொண்டுஅதற்குவிரோ
தமாகவந்து யுத்தம்பண்ணுகிறதற்கெழும்
புங்களென்றுசொல்லச் சாதிகளண்டைக
குத் தூதனுப்பத்தியம் அனுப்பப்படுகிற செய
தியைக்கர்த்தரிடத்திலேகேள்விப்பட்டேன்.
* ஒபதி க. வசனம்.

௰௫. ஏனெனில், இதோ உன்னைச் சாதிக
ளுக்குள்ளே சிறியதும், மனுஷருக்குள்ளே
அசட்டைபண்ணப்பட்டதுமாக்குகிறோமெ
ன்கிறார்.

௰௬. கன்மலைவெடிப்புகளில்வாசம்பண்ணி
மேடுகளின்உயரத்தைப்பிடித்திருக்கிற உன
னை உன்னுடைய பயங்கரநிலையும், உன்னி
ருதயத்தின் அகந்தையும்மோசம்போக்கின.
* நீ கழுகைப்போலஉயரத்திலேயுன்கூண
டைக்கட்டினாலும் அங்கேயிருந்துன்னைவிழ
ப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகி
றார். * ஒபதி. ச. வசனம்.

௰௭. அப்படியே ஏதோம் கெடியாகவிருக
கும். *அதைக்கடந்துபோகிறவனெல்லாம
அதினுடைய எல்லா வாதைகளினிமித்தம்
பிரமித்துஈசப்போடுவான். * ௫௰, அதி. ௰௩.

௰௮. * சோதோமும், கொமோருவும்,
அவைகளின் அசலார்களும், கவிழ்க்கப்பட
டதற்குச் சமானமாயிருக்குமென்றுகர்த்தர்
சொல்லுகிறார். அங்கே யொருவனும் குடி
யிருப்பதில்லை. அதிலொருமனுஷன் தங்கு
வதுமில்லை. * ரு௰, சய. க. மோ. ௰௯, உ௫.

௰௯. * இதோ, புரண்டோடுகிற யோர்தா
னிடத்திலிருந்து சிங்கத்தைப்போலே பல
வானுடைய தாபரத்துக்கு விரோதமாக
வருகிறான். ஏனென்றால், அவனை அங்கேயிரு
ந்து அசுப்பிலே ஓடிவரப்பண்ணுவோம்.
நாம் அதற்கு விரோதமாகக் கட்டளையிட
டனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவனார்!
ஏனெனில், நமக்குச்சமானமானவனார்! நம
க்குத்திடனசொல்பவனார்! நமக்குமுன்பாக
நிலை நிற்கப்போகிற மேய்ப்பனார்?
* ரு௰, அதி. ௪௪—௪௬.

உ௰. ஆகையாலே கர்த்தர் ஏதோமுக்குவி
ரோதமாக யோசித்த ஆலோசனையையும்,
அவர் தேமானின்குடிகளுக்கு விரோதமாக
நினைத்திருக்கிற நினைவுகளையுங்கேளுங்கள்,
மெய்யாகவேமந்தையிற்சிறியவர்கள் அவர்
களையிடித்திழுப்பார்கள், மெய்யாகவேஅவ
ர்களிருக்கிற அவர்களுடைய தாபரங்களைப்
பாழாக்குவார்.

உ௧. அவர்களுடைய விழுதலின்சத்தத்
தினாலே பூமியதிரும், கூப்பிடுதலின் சத்தம்
நாணற்கடலமட்டுங் கேட்கப்படும்.

உ௨. இதோ, ஒருகழுகைப்போலெழும்பி
ப்பறந்துவந்து தன்செட்டைகளைப்போத்
சிறாவின்மேலவிரிப்பான். அந்நாளிலேஏதோ
முடைய பராக்கிரமசாலிகளின் இருதயம்
* வாதைப்படுகிற ஸ்திரியின் இருதயத்தை
ப்போலிருக்குமென்கிறார். * ரு௰,அதி. ௪௬.

உ௩. * தமஸ்குவுக்குச்சொல்வதாவது
ஆமாத்தும், அர்ப்பாத்தும் வெட்கப்படுகிறது,
பொல்லாதசெய்தியையவர்கள்கேட்டபடி
யினாலேகரைந்துபோகிறார்கள், சமுத்திரத
தோரமாயவிசாரமுண்டு, அது அமர்ந்திருக்
கக்கூடாது. * ஏசா.௰௭,க. ஆமோ க,௩. ௫.

உ௪. தமஸ்குதளரும், ஓடிப்போகும்படி
க்குமுதுகைக்காட்டுமதிக்கில, அதைப்பிடித
துப் பிள்ளைபெறுகிறவளைப்போவிடுக்கமும்,
வேதனைகளும் அதைப்பிடித்தன.

உ௫. என்னுடைய சந்தோஷமான ஊரா
கிய அந்தப் புகழ்ச்சியுள்ளபட்டணந் தப்ப
விடப்படாதேபோனதெப்படி!

உ௬. ஆனதுகொண்டு அதினவாலிபர் அதி
னவீதிகளிலவிழுந்து யுத்த மனுஷரெல
லாம அந்நாளிலேசங்காரமாவார்களென்று
சேனைகளையுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

உ௭. தமஸ்குவின் மதில்களில் அக்கினியை
க்கொளுத்துவோம். அது பெனாதாத்தின
அரமனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

உ௮. பாபேலின் இராசாவாகிய நேபுகாத்
நேச்சார்முறியடித்த கேதாருக்கும், காத்
சோருடைய இராசகியத்துக்குஞ் சொல்வ
து; கர்த்தர் சொல்லுகிறதாவது; எழும்பிக

கேதாருக்கு விரோதமாகப் போயேறிக் கிழக்குத்திசைப்புத்திரரைப்பாழ்க்கடியுங்கள்.

௨௯. அவர்களுடைய கூடாரங்களையும், அவர்கள் மந்தைகளையும் வாங்கி அவர்கள் திரைகளையும், அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுகளையும், அவர்களுடைய ஒட்டகங்களையுந் தங்களுக்கென்று கொண்டுபோய்ப் பயங்குழந்திருக்குமென்று சொல்லி, அவர்கள்பேரிலே ஆர்ப்பரிப்பார்கள்.

௩௰. காத்சோரின் குடிகளே, ஓடி மிகவும் அலையுங்கள். தங்குமடிக்கு ஆழங்களிற் பதுங்குங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், ஏனென்றால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் உங்களுக்குவிரோதமாக ஆலோசனையையோசித்து உங்களுக்குவிரோதமாக நினைவுகளை நினைத்திருக்கிறான்.

௩௧. அசங்காமற் சாங்கோபாங்கத்தோடே குடியிருக்கிறசாதிக்குவிரோதமாகளழும்பிப்போயேறுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார், அதற்குவாசல்களுமில்லை தாழ்ப்பாள்களுமில்லை, அவாந்தரையாய்த்தங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

௩௨ அவர்களுடைய ஒட்டகங்கள் கொள்ளையும், அவர்களுடைய ஆடுமாடுகளின் ஏராளங் குறையுமாய்ப்போகும், நாம் அவர்களைச் சகலகாற்றுத்திசைகளுமான கடையாந்தர மூலைகளிலிருக்கிறவர்களண்டைக்குச் சிதறவடித்துவிட்டு அதினுடையசகலபுறங்களிலுமிருந்து அவர்களுடைய ஆபத்தைவரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௩. காத்சோர்வலுவான சர்ப்பங்களின் தாபரமாகி என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கும், ஒருவனும் அங்கேகுடியிருப்பதில்லை, ஒருமனுஷபுத்திரனும் அதிலே தங்குவதுமில்லையென்கிறார்.

௩௪. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவினுடைய இராசரியபாரத்தின் துவக்கத்திலே ஏலாமுக்கு விரோதமாக எரேமியாவென்ற தீர்க்கதரிசிக்குண்டான கர்த்தருடையவசனம்.

௩௫. சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ நாம் ஏலாமுடைய வில்லென்கிற அவர்களுடைய பிரதான வல்லமையை முறித்துப்போட்டு,

௩௬. வானத்தின் நாற்றிசைகளிலிருந்து நாலுகாற்றுகளை ஏலாமின்மேல் வரப்பண்ணி அவர்களையிந்த எல்லாக்காற்றுத் திசைகளிலுஞ் சிதறவடிப்போம். ஏலாமுடைய தேசத்திலிருந்து துரத்துண்டவர்கள் வராதிருக்குஞ்சாதியில்லை.

௩௭. நாம் ஏலாமியரையவர்கள் சத்துருக்களுக்குமுன்பாகவும், அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களுக்குமுன்பாகவுங்கலங்கப்பண்ணி நமதுகோபத்தில் உக்கிரமா

கிய தீங்கையவர்கள்மேல்வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். நாம் அவர்களை நிர்மூலமாக்குமட்டும்பட்டயத்தையவர்களுக்குப்பின்னுக அனுப்பி,

௩௮. நமமுடைய ஆசனத்தை ஏலாமிலே வைத்து அங்கேயிருந்து இராசாவையும், பிரபுக்களையும் அழித்துப்போடுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௩௯. ஆனால், * கடைசிநாள்களிலே நாம் ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவோமென்றுகர்த்தர்சொல்லுகிறார். *௪௮, ௪௭.

## ௫௰. அதிகாரம்.

[(௧) ௯. ௨௧. ௩௫. பாபேலின் நியாயத்தீர்ப்பும், (௪) ௰௭. ௩௩. இஸ்ரவேலின் மீட்புஞ் சொல்லப்பட்டது.]

கர்த்தர் தீர்க்கதரிசியாகிய எரேமியாவைக்கொண்டு * பாபேலுக்கும், கல்தேயர் தேசத்துக்கும் விரோதமாக உரைத்தவசனமாவது; * ௫௧, ௧. ௱௨ ஏசா. ௰௩, ௧. ௱௨ ௰௪, ௧ ௱௨

௨. பாபேல் பிடிபட்டது, பேல்வெட்கப்பட்டது, மெரோதாக்கு கலங்கிப்போயிற்று, அவர்களுடைய விக்கிரகங்கள் வெட்கப்பட்டன. அவர்களுடைய நரகலான தேவர்கள் கலங்கிப்போயினார்களென்று சாதிகளுக்குள்ளே அறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள், அதைமறைக்காமற் கொடியேற்றிக் கேட்கப்பண்ணுங்கள்.

௩. ஏனென்றால், அதற்குவிரோதமாய் வடக்கேயிருந்து ஒருசாதிபோயேறுகிறது, இது அதின் தேசத்தைப் பாழாக்கிப்போடும், அதிலேகுடியிருப்பாரில்லை. மனுஷரோடே மிருகங்களும் ஓடிப்போய்விடும்.

௪. அந்நாள்களிலும், அக்காலத்திலும் இஸ்ரவேலபுத்திரர் வருவார்கள். அவர்களும், யூதா புத்திரரும் ஏகமாய் * அழுதுநடந்துவந்து தங்கள்பராபரனாகிய கர்த்தரைத்தேடுவார்களென்றுகர்த்தர்சொல்லுகிறார். *௩௧. அதி. ௯.

௫. மறக்கப்படாதநித்திய உடம்படிக்கையாய்க் கர்த்தரைச் சேர்ந்துகொள்வோம் வாருங்களென்று இவ்விடத்துக்குமுகங்களைத் திருப்பினவர்களாகவிருந்து சீயோனுக்குப்போகிற வழியேதென்று விசாரித்துக்கேட்பார்கள்.

௬. நமதுசனங்காணாமற்போன ஆடுகளானவர்கள் அவர்களுடையமேய்ப்பர் அவர்களைச்சிதறப்பண்ணிப்பருவதங்களில் அலையத்திருப்பிவிட்டார்கள். ஒரு பருவதத்திலிருந்து மற்றமேட்டின்மேற்போனார்கள். தங்கள் தொழுவத்தைமறந்துவிட்டார்கள்.

௭. அவர்களைக் கண்டுபிடித்தவர்களெல்லாம் அவர்களைப்பட்சித்து அவர்களுடையசத்துருக்கள் எங்கள்மேற் குற்றமில்லை. ஏனென்றால் அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே

கர்த்தருக்கு விரோதமாய்த் தங்கள் பிதாக்களின் நம்பிக்கையான கர்த்தருக்கு விரோதமாய்த்தானே பாவஞ்செய்தார்களென்றார்கள்.

௮. * பாபேலின் நடுவிலிருந்தோடிக் கல்தேயர் தேசத்தைவிட்டுப் புறப்பட்டு மந்தையின் முன் நடக்குங் கடாக்களைப்போலிருங்கள். * ௫௧, அதி. ௯. ௪௫.

௯. ஏனெனில், இதோ நாம் பாபேலுக்கு விரோதமாக வடதேசத்திலிருக்கும் பெரிய சாதிகளின் கூட்டத்தையெழுப்பி அதைப் போயேறப்பண்ணுவோம், அவர்கள் அதற்கு விரோதமாய் ஆயத்தம்பண்ணுவார்கள், அங்கேயிருந்து வருகிறவர்களால் அது பிடிக்கப்படும், அவர்களுடைய அம்புகள் உணர்வுள்ள பராக்கிரமசாலியின் அம்புகளைப்போலிருக்கின்றன. அவைகள் பழுதாய்த் திரும்பி வருவதில்லை.

௰. கல்தேயர் கொள்ளையாம், அதைக் கொள்ளையிடுகிறவர்களெல்லாரும் பரிபூரணம் அடைவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. அதேனென்றால் நம்முடைய சுதந்தரத்தைக் கொள்ளையிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்தீர்களே, கொழுத்திருக்குங் கன்றுக்குட்டியைப்போலப் பூரித்து வலுவான பாவிகளைப்போலக் கனைப்பீர்களே.

௰௨. உங்கள் தாய் மிகவும் வெட்கி உங்களைப் பெற்றவள் நாணமடைகிறாள். இதோ அவள் சாதிகளுக்குள்ளே கடைசியானவளும், வனாந்தரமும், வறட்சியும், அந்தரவெளியுமாம்.

௰௩. கர்த்தரின் கடுமையினாலே அது * குடியற்றதும், முழுதும் பாழுமாயிருக்கும், பாபேலைக் கடந்துபோகிறவனெல்லாம் அதினுடைய எல்லா வாதைகளினிமித்தமும் பிரமித்து ஈசற்போடுவான். * ௪௯. அதி. ௰௭.

௰௪. வில்லை நாணேற்றுகிற நீங்களெல்லாரும் பாபேலுக்கு விரோதமாகச் சுற்றிலும் பவுஞ்சிட்டு அதிலே உங்கள் அம்புச்செலவைக் குறைக்காதேயுங்கள். ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தது.

௰௫. அதற்கு விரோதமாகச் சுற்றிலும் ஆர்ப்பரியுங்கள், அது தன்னைக் கையளித்தது, அதின் அஸ்திவாரங்கள் விழுந்தன, அதின் மதில்கள் இடிக்கப்பட்டன. ஏனெனில் இது கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுதலாயிருக்கிறது, அதற்கு நீதியைச் சரிக்கட்டுங்கள். * அது செய்ததுபோலே நீங்கள் அதற்குச் செய்யுங்கள். * அறிவி. ௰௮, ௯.

௰௬. விதைவிதைக்கிறவனையும், அறுப்புக் காலத்தில் அரிவாளைப் பிடிக்கிறவனையும் பாபேலில் இராதபடிக்குச் சங்காரம்பண்ணுங்கள், அழிக்கிற பட்டயத்துக்குத் தப்ப * அவரவர் தங்கள் சனத்தண்டைக்குத் திரும்பிக்கொண்டு அவரவர் தங்கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள். * ௪௯, அதி. ௰௯.

௰௭. இஸ்ரவேல் சிங்கங்கள் துரத்திச் சிதறுண்ட ஆடு. முதல் அசூரியாவின் இராசா அதைப் பட்சித்தான், இப்போது கடைசியிலே பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேத்சார் அதின் எலும்புகளை முறித்தான்.

௰௮. ஆகையால் இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ நாம் அசூரியாவின் இராசாவை விசாரித்ததுபோலே பாபேலின் இராசாவையும், அவன் தேசத்தையும் விசாரித்து,

௰௯. இஸ்ரவேலையதின் வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப்பண்ணுவோம், அப்போது அது கர்மேலிலும், பசானிலும் மேயும், எப்பிராயீமின் மலைகளிலும், கிலெயாத்திலும், அதின் ஆத்துமா திருத்தியடையும்.

௨௰. அந்நாட்களிலும், அக்காலத்திலும் இஸ்ரவேலின் அக்கிரமந் தேடப்பட்டால் அதில்லாதிருக்கும். யூதாவின் பாவங்கள் தேடப்பட்டால் அவைகள் கிடையாதிருக்கும். ஏனென்றால், நாம் மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௧. கலகங்களுள்ள தேசத்துக்கு விரோதமாகவும், விசாரிக்கப்படுங் குடிகளுக்கு விரோதமாகவும் போயேறு, நீ அவைகளைத் துரத்துகையிலே யாவையும் பாழ்க்கடித்துச் சங்காரம்பண்ணி நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாஞ் செய்யென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௨௨. தேசத்திலே யுத்தத்தின் சத்தமும், மகா நொறுக்குதலுமுண்டு.

௨௩. * பூமியனைத்தின் சம்மட்டியெத்தனையாய் முறித்துடைக்கப்பட்டது, பாபேல் சாதிகளுக்குள்ளே எத்தனையாய்ப் பாழானது? * ௫௧, அதி. ௨௰.

௨௪. பாபேலே உனக்குக் கண்ணியை வைத்தோம், நீ அதையறியாமல் அதிலே சிக்குண்டுபோனாய், நீ அகப்பட்டும் பிடிபட்டும்போனாய், ஏனென்றால் கர்த்தரோடே யுத்தங்கலந்தாய்.

௨௫. கர்த்தர் தம்முடைய ஆயுதசாலையைத் திறந்து தம்முடைய சினத்தின் பணிமுட்டுகளையெடுத்துவந்தார், ஏனெனில் இது கல்தேயர் தேசத்திலே சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் செய்கிற கிரியை,

௨௬. கடையாந்தரத்திலிருந்து அதற்கு விரோதமாக வந்து அதின் களஞ்சியங்களைத் திறந்து அதைப் போர்களைப்போலே பரப்பி அடித்து அதிலொன்றும் மீதியாகாதபடிக்கு அதைச் சங்காரம்பண்ணுங்கள்.

௨௭. அதின் காளையெருதுகளையெல்லாம் பட்டயத்தால் வெட்டுங்கள், அவைகள் அடிக்கப்பட இறங்கிப்போகக்கடவது, அவர்களுக்கு ஐயோ. ஏனெனில், அவர்கள் விசாரிக்கப்படும் அவர்களுடைய நாள் வந்தது.

௨௮. நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டினதையும், அவர் தமது தேவாலயத்துக்காக நீதியைச் சரிக்கட்டினதையும் சீயோனிலே அறிவிக்கும்படிக்குப் பாபேல் தேசத்திலிருந்து ஓடித் தப்பி வந்தவர்களின் சத்தம் கேட்கப்படும்.

௨௯. எய்கிற எல்லாவிற்காரருமாகிய நீங்கள் பாபேலுக்கு விரோதமாகச் சத்தங்கேட்கப்பண்ணுங்கள், ஒருவரும் தப்பிப்போகாதபடிக்கு அதற்கு விரோதமாகச் சுற்றிலும் பாளயமிறங்குங்கள், அதின் கிரியைக்குத் தக்க பலனை அதற்குச் சரிக்கட்டுங்கள், * அது செய்ததின்படியெல்லாம் அதற்குச் செய்யுங்கள். ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாக இடும்பு செய்தது இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோதமாகத்தானே.
* சங்கீதம். ௱௩௭, ௮.

௩௰. ஆகையால் அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுவார்கள். அதின் யுத்தமனுஷரெல்லாரும் அந்நாளிலே சங்காரமாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௧. இதோ இடும்புள்ளவனே நாமுனக்கு விரோதமாக வருகிறோமென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். ஏனெனில் உன்னை விசாரிக்குங்காலமாகிய உன்னுடைய நாள் வந்தது.

௩௨. இடும்புள்ளவன் இடறி விழுவான், அவனையெடுத்து நிறுத்துவாரில்லை. நாம் அவன் பட்டணங்களில் அக்கினியைக் கொளுத்துவோம், அது அவன் சுற்றுப்புறத்தாரையெல்லாம் பட்சிக்கும்.

௩௩. சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; இஸ்ரவேல் புத்திரரும், யூதா புத்திரரும் ஏகமாய் ஒடுங்குண்டார்கள், அவர்களைச் சிறையாக்கினயாவரும் அவர்களை விடமாட்டோமென்று கெட்டியாய்ப் பிடித்தார்கள்.

௩௪. அவர்களுடைய மீட்பரோவெனில், வல்லமையுள்ளவர், சேனைகளையுடைய கர்த்தரென்பது அவருடைய நாமம், தேசத்தை இளைப்பாறப்பண்ணுவதற்கும், பாபேலின் குடிகளைத் தத்தளிக்கப்பண்ணுவதற்குமாக அவர்களுடைய வழக்கை அவர் வழக்காடவே வழக்காடுவார்.

௩௫. பட்டயம் கல்தேயரின் மேலும், பாபேலுடைய குடிகளின் மேலும், அதினுடைய பிரபுக்களின் மேலும், அதினுடைய ஞானிகளின் மேலும் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩௬. பட்டயம் கட்டுக்கதைக்காரர் மேலும் வரும், அவர்கள் பயித்தியக்காரராவார்கள். பட்டயம் அதினுடைய பராக்கிரமசாலிகள் மேலும் வரும், அவர்கள் கலங்குவார்கள்.

௩௭. பட்டயம் அதினுடைய குதிரைகளின் மேலும், அதினுடைய இரதங்களின் மேலும், அதின் நடுவிலிருக்கிற பலவித சனக்கலப்பினத்தின் மேலும் வரும், அவர்கள் பெண்சாதிகளாவார்கள் பட்டயம் அதினுடைய பொக்கிசங்களின் மேலும் வரும், அவைகள் கொள்ளையாம்.

௩௮. வறட்சி அதினுடைய தண்ணீர்களின் மேல் வரும், அவைகள் வறண்டுபோம். ஏனெனில், அது சுருபங்களின் தேசம், அருக்களிப்பானவைகளின் மேலே பெருமை பாராட்டுகிறார்கள்.

௩௯. ஆகையால், * வனாந்தர சீவன்களும், ஓரிகளும் அதிலே குடியிருக்கும் கோட்டான்கள் அதிலே தங்கும், இனி யென்றென்றைக்கும் அது குடியேற்றப்படுவதில்லை, தலைமுறை தலைமுறையாக ஒருவரும் அதிலே தாபரிப்பதுமில்லை. * ஏசாயா. ௰௩, ௨௧. ௨௨. அறிவிப்பு. ௰௮, ௨.

௪௰. * பராபரன் சோதோமையும், கொமோறாவையும், அதின் அசலூர்களையும் கீழ்மேலதாகக் கவிழ்த்துப்போட்டதும்போலே யிருக்குமென்று கர்த்தர் சொல்லுகிறார். ஒருவரும் அதிற் குடியிருப்பதில்லை, ஒரு மனுபுத்திரனும் அதிலே தங்குவதுமில்லை.
* ௪௯, அதி. ௰௮.

௪௧. இதோ, * வடக்கேயிருந்து சனசதளமும், பெரிய சாதியும் வரும், பூமியின் பக்கங்களிலிருந்து பலத்த இராசாக்கள் எழும்புவார்கள். * ௬. வசனம்.

௪௨. அவர்கள் விற்களையும், ஈட்டிகளையும் பிடித்து வருவார்கள், அவர்கள் இரங்காமற் கொடூரராயிருப்பார்கள், அவர்கள் சத்தம் சமுத்திரத்தைப்போல் இரையும், பாபேல் குமாரத்தியே, அவர்கள் உனக்கு விரோதமாக யுத்தத்துக்காய்த் தயார்பட்ட ஆள்களாய்க் குதிரைகளின் மேலேறி வருவார்கள்.

௪௩. அவர்கள் வருகிற செய்தியைப் பாபேலின் இராசா கேட்கையில் அவன் கைகள் தளரும், இடுக்கமும், பிள்ளைபெறுகிறவளைப்போல் வாதையும் அவனைப் பிடிக்கும்.

௪௪. இதோ, புரண்டோடுகிற யோர்தானிலிருந்து சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான். ஏனென்றால், அவனையங்கேயிருந்து அசுப்பிலே ஓடிவரப்பண்ணுவோம், நாம் அதற்கு விரோதமாகக் கட்டளையிட்டனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவனார்? ஏனெனில், நமக்குச் சமானமானவனார்! நமக்குத் திட்டஞ் சொல்பவனார்! நமக்கு முன்பாக நிற்கப்போகிற மேய்ப்பனார்! * ௪௯, ௰௯—௨௧.

௪௫. ஆகையால் கர்த்தர் பாபேலுக்கு விரோதமாக யோசித்த ஆலோசனையும், அவர் கல்தேயர் தேசத்துக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினைவுகளையுங் கேளுங்கள், மெய்யாகவே மந்தையிற் சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள், மெய்யாகவே அவர்கள் மேலிருக்கிற தாபரங்களைப் பாழாக்குவார்.

௬௪. பாபேல் பிடிபட்டதின் சத்தத்தினால் பூமி அதிரும், அதின் கூப்பிடுதல் சாதிகளுக்குள்ளே கேட்கப்படும்.

## ௫௧. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலரைத் துன்பப்படுத்தினதினாலே பழிவாங்கும்படி பராபரன் பாபேலுக்குச் செய்த நியாயத்தீர்ப்பு, (௬௪) பாபேல் என்றைக்கும் அழிந்து போகுமென்று அடையாளமாக எரேமியா தன் தீர்க்கதரிசனபுஸ்தகத்தை ஐபிராத்திலே போடும்படிக்கு அதைச் செராயாவுக்கு ஒப்புவித்தது.]

கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாகவும், நமக்கு விரோதமாய் எழும்புகிறவர்களின் நடுமையத்திலே குடியிருக்கிறவர்களுக்கு விரோதமாகவும் கேடுள்ள காற்றை எழும்பப்பண்ணி,

௨. தூற்றுகிறவர்களைப் பாபேலுக்கு அனுப்புவோம், அவர்கள் அதைத் தூற்றி வெறுமையாக்கிப்போடுவார்கள். ஏனெனில், தீங்கின் நாளிலே அதற்கு விரோதமாய்ச் சூழ்ந்துகொண்டிருப்பார்கள்.

௩. நாணேற்றுகிறவனுக்கு விரோதமாகவும், தன் சீராவிலே மனமேட்டிமையானவனுக்கு விரோதமாகவும், வில்லாளன் தன் வில்லை நாணேற்றக்கடவான். அதின் வாலிபரைத் தப்பவிடாமல் அதின் சேனையையெல்லாம் சங்காரம்பண்ணுங்கள்.

௪. கல்தேயரின் தேசத்திலே கொலைசெய்யப்பட்டவர்களும், அதின் வீதிகளிலே குத்திப்போடப்பட்டவர்களுமாய் விழுவார்கள்.

௫. ஏனெனில், இஸ்ரவேலும், யூதாவுந்தங்கள் தேசம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு முன்பாகக் குற்றங்களால் நிறைந்தபடியினால் உட்பட்ட * விதவையிருப்பிலே சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனாலே கைவிடப்படவில்லை. * ஏசா. ௫௪, ௭.

௬. * நீங்கள் பாபேலின் அக்கிரமத்திற் சங்காரமாகாதபடிக்கு அதின் நடுவிலிருந்தோடி அவரவர் தங்கள் ஜீவனைத் தப்புவியுங்கள். ஏனெனில், இது கர்த்தர் அதற்கு நீதியைச் சரிக்கட்டுகிற காலமாயிருக்கிறது, அவர் அதற்குப் பதில் செலுத்துவார். * ௫௰, அதி. ௮. அறிவி. ௰௮, ௪. † ஏசா. ௩௪, ௮.

௭. கர்த்தருடைய கையிற் பாபேல் பூமியனைத்தையும் வெறிக்கப்பண்ணின பொற்பாத்திரமாயிருந்தது, அதின் மதுவிற் சாதிகள் குடித்தார்கள். ஆகையாலே சாதிகள் மதிகெட்டுப்போனார்கள்.

௮. * அசுப்பிலே பாபேல் விழுந்து தகர்ந்தது, அதற்காக அலறுங்கள், அதின் நோவையாற்றப் பிசின் தயிலத்தைக் கொண்டுவாருங்கள், ஒருவேளை குணமாம். * அறிவி. ௰௮, ௨.

௯. பாபேலைக் குணமாகும்படிக்குப் பார்த்தோம் அது குணமாகவில்லை, அதைவிட்டு விடுங்கள், நாம் அவரவர் நம்முடைய தேசங்களுக்குப் போகக்கடவோம். ஏனெனில், * அதின் ஆக்கினை வானமட்டும் எட்டி ஆகாயமண்டலங்கள் பரியந்தம் ஏறிப்போயிற்று. * அறிவி. ௰௮, ௫.

௰. கர்த்தர் * நம்முடைய நீதியை வெளிப்படுத்தினார், நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் செய்கையைச் சீயோனிலே விவரிப்போம் வாருங்கள். * சங்கீ. ௩௭, ௬.

௰௧. * அம்புகளைத் துலக்குங்கள், கேடகங்களை நன்றாய்ச் செப்பனிடுங்கள், கர்த்தர் மேதியாவுடைய இராசாக்களின் ஆவியை எழுப்பினார். ஏனெனில், அவருடைய நினைவு பாபேலுக்கு விரோதமாய் அதை அழிப்பதற்கிருக்கிறது அதேதென்றால், இது கர்த்தர் சரிக்கட்டுகிற நீதி, இது தமது தேவாலயத்துக்காக அவர் சரிக்கட்டுகிற நீதிதானே. * ௫௰, ௨௮.

௰௨. பாபேலுடைய மதில்களின் மேற் கொடியேற்றுங்கள், காவலைப் பலப்படுத்துங்கள். சாமங்காக்கிறவர்களை நிறுத்துங்கள், பதிவிருப்பாளரை வையுங்கள். ஆனால் கர்த்தர் எப்படி நினைத்தாரோ அப்படியே தாம் பாபேலின் குடிகளுக்கு விரோதமாகச் சொன்னதைச் செய்வார்.

௰௩. * திரளான தண்ணீர்களின் மேல் வாசம்பண்ணுகிறவளே, பொக்கிசங்கள் பெருத்தவளே, உன் முடிவும், உன் பொருளாசைக்கு ஒழிவும் வந்தது. * அறிவி. ௰௭, ௧.

௰௪. மெய்யாகவே பச்சைக்கிளிகள் தத்தினால் மனுஷரால் உன்னை நிரப்பப்பண்ணுவோம், அவர்கள் உன்பேரிலே ஆர்ப்பரிப்பாகப் பாடுவார்களென்று சேனைகளின் கர்த்தர் தம்முடைய சீவனைக்கொண்டாணையிட்டார்.

௰௫. * பூமியைத் தமது பலத்தினாலே உண்டாக்கிப் பூசக்கரத்தைத் தமது ஞானத்தாற் படைத்துவானத்தைத் தமது உணர்வினாலே விரித்த அவர்தானே. * ௰, அதி. ௰௨.

௰௬. * அவர் சத்தமிடுகையிலே திரளான தண்ணீர் வானத்திலுண்டாகுகிறது, அவர் பூமியின் எல்லைகளிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி மழையுடனே மின்னல்களையுண்டாக்கிக் காற்றைத் தமது பண்டகசாலையிலிருந்தே விடுகிறார். * ௰, அதி. ௰௩.

௰௭. * மனுஷரெல்லாரும் அறிவில்லாமலிருக்குமாறார்கள், தட்டாரெல்லாரும் சுரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள். ஏனெனில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவைகளில் ஆவியில்லை. * ௰, ௰௪. ௰௫.

௰௮. அவைகள் மாயையும், மகா எத்துக்குமான கிரியையுமாயிருக்கின்றன, அவைகள் விசாரிக்கப்படுமநாளிலே அழியும்.

௰௯. * யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போல அல்ல. ஏனெனில், அவர் சர்வத்தையும் உண்டாக்கினவர், அவன் அவ

ருடைய சுதந்தரமான கோத்திரம் சேனைகளையுடைய கர்த்தரென்பது அவருடைய நாமம். * ம, அதி. ௰௬.

௨௰. நீ எனக்குச் * சம்மட்டியும், யுத்த ஆயுதமுமானவன், நானுன்னைக்கொண்டு ஜாதிகளைநொறுக்கி உன்னைக்கொண்டு இராச்சியங்களையழித்துப்போடுவேன்.* ௫௰, அதி. ௨௩.

௨௧. உன்னைக்கொண்டு குதிரையையும், அதின்மேலேறியிருக்கிறவனையும்நொறுக்கி உன்னைக்கொண்டு இரதத்தையும், அதின்மேலேறியிருக்கிறவனையுநொறுக்கி,

௨௨. உன்னைக்கொண்டுபுருஷனையும், ஸ்திரீயையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு கிழவனையும், இளைஞனையும்நொறுக்கி, உன்னைக்கொண்டுவாலிபனையும், கன்னியாஸ்திரீயையும்நொறுக்கி,

௨௩. உன்னைக்கொண்டு மேய்ப்பனையும், அவனுடையமந்தையையும்நொறுக்கி, உன்னைக்கொண்டு உழுகிறவனையும், அவனுடைய ஏர்க்குண்டையையும், தலைவனையும், அதிகாரியையும் நொறுக்கிப்போடுகிறேம்.

௨௪. ஆனாற்பாபேலுக்கும், கல்தேயர்தேசத்தினுடைய சகலகுடிகளுக்கும் நாம் அவர்கள் உங்கள் கண்களுக்குமுன்பாகச் * சீயோனிற்பண்ணின அவர்களுடைய எல்லாப்பொல்லாப்பையுஞ் சரிக்குச்சரிக்கட்டுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.
* ௫௰, அதி. ௨௯.

௨௫. இதோ பூமியெல்லாங் கெடுக்கிற கேடானபருவதமே! நாம் உனக்குவிரோதமாகவந்து நமது கையையுனக்குவிரோதமாக நீட்டி உன்னைக்கன்மலைகளிலிருந்து உருட்டி உன்னை வெந்த பருவதமாக்கிப்போடுவோமென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௨௬. கோடிக்கல்லையாகிலும், அஸ்திபாரங்களைப் போடுகிறகல்லையாகிலும், உன்னிலெடுக்கார்கள். ஏனெனில், என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்கிற ஸ்தலமாவாயென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௨௭. தேசத்திலேகொடியேற்றுங்கள், ஜாதிகளுக்குள் எக்காளமூதுங்கள், ஜாதிகளை யதற்குவிரோதமாகப்பரிசுத்தமாக்குங்கள், ஆரராத்து, மின்னி, அஸ்கேனாஸ் என்ற இராச்சியங்களை யதற்குவிரோதமாக வரக் கூப்பிடுங்கள், தளகர்த்தனை யதற்குவிரோதமாகப் பட்டங்கட்டுங்கள், சிறகடிக்கும் வண்டுகளுக்குச்சாயலாகக் குதிரைகளைப்போய ஏறப்பண்ணுங்கள்.

௨௮. மேதியாதேசத்தின்இராசாக்களும், அதின்தலைவரும், அதினுடைய சகலஅதிகாரிகளும், அவரவருடைய இராச்சியபாரத்துக்குக்கீழான சகல தேசத்தாருமாகியஜாதிகளை யதற்கு விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள்.

௨௯. அப்போதுதேசம் அதிர்ந்துவாதைப்படும். ஏனென்றால் பாபேலின் தேசத்தைக் குடியில்லாதபடியாகப் பாழாக்கும்படிக்குப் பாபேலுக்கு விரோதமாய்க் கர்த்தர் நினைத்தவைகள் நிலைக்கும்.

௩௰. பாபேலின்பராக்கிரமசாலிகள் யுத்தம்பண்ணி ஓய்ந்து கோட்டைகளிலேதரித்திருக்கிறார்கள், அவர்கள்பராக்கிரமம்அழிந்து பெண்டுகளானார்கள், அதின் வாசஸ்தலங்களைக் கொளுத்திப்போட்டார்கள், அதின் தாபரங்கள் உடைக்கப்பட்டன.

௩௧. கடையாந்தர முனைதொடங்கி அவனுடையபட்டணம் பிடிபட்டதென்று, துறைவழிகள் அகப்பட்டுப்போயநாணல்கள் அக்கினியாற் சுட்டெரிக்கப்பட்டனவென்றும், யுத்த மனுஷர் கலங்கியிருக்கிறார்களென்றும்பாபேலின் இராசாவுக்கு அறிவிக்க,

௩௨. ஓட்டக்காரனுக்கெதிராக ஓட்டக்காரனும், அறிவிக்கிறவனுக்கெதிராக அறிவிக்கிறவனும் ஓடுகிறான்.

௩௩. ஏனென்றால் பாபேல்குமாரத்தி மிதிக்கப்படுங்களத்துக்கொப்பானது, அதைமிதித்தடிக்குங் காலமாயிருக்கிறது. இன்னங் கொஞ்சநாளிலே அறுப்புக்காலம் அதற்கு வருமென்று இஸ்ரவேலின்பராபரனாகிய சேனைகளையுடையகர்த்தர்சொல்லுகிறார்.

௩௪. பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்னைப்பட்சித்தான், என்னைக் கலங்கடித்தான், என்னை வெறும்பாத்திரமாக்கவைத்துப்போட்டான்,முதலையைப்போல என்னைவிழுங்கினான் என்செல்வங்களாலே தன்வயிற்றை நிரப்பினான், என்னைத் துரத்தினான்.

௩௫. எனக்கும், என்மாம்சத்துக்குஞ் செய்த கொடுமையின்பழி பாபேலின்மேல்வருகவென்று சீயோனில்வாசமானவளும், என் இரத்தப்பழி கல்தேயர்தேசத்துக்குடிகளின்மேல்வருகவென்றுஎருசலேமுஞ்சொல்லுகிறது.

௩௬. ஆகையாற் கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோநாம் உன்வழக்கை வழக்காடி உனக்குப் பழிவாங்கி * அதின்கடலை வறளவும், அதின் ஊற்றைச் சுவறவும்பண்ணுவோம். * ௫௰, ௩௮.

௩௭. அப்போது பாபேல் * குடியில்லாமற் மேடுகளும், வலுவான சர்ப்பங்களின் தாபரமும், பாழும், ஈசற்போடப்படுதலுமாய்ப்போகும். * ௫௰, அதி. ௰௩.

௩௮. ஏகமாய்ச் சிங்கங்களைப்போற்கெர்ச்சித்துச் சிங்கக்குட்டிகளைப்போற் சத்தமிடுவார்கள்.

௩௯. அவர்களுடைய கொதிப்பிலே நாம் அவர்கள் குடிக்கும் பானத்தை யவர்களுக்குக்குடிக்கக்கொடுத்து அவர்கள் துள்ளத்தக்கவிதமாக அவர்களைவெறியாக்குவோம், அதினாலே அவர்கள் என்றென்றைக்குமவிழிக்காத நித்திரையை அடைவார்களென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௪௰. அவர்களையாட்டுக்குட்டிகளைப்போல வும், ஆட்டுக்கடாக்களையும், வெள்ளாட்டுக் கடாக்களையும்போலவும் அடிக்கப்பட இறங்கிப்போகப்பண்ணுவோம்.

௪௧. * சேசாக்கு பிடியுண்டு பூமியனைத் தின்புகழ்ச்சி வாங்கப்பட்டதெப்படி! பா பேல் சாதிகளுக்குள்ளே திகைப்பானதெப் படி! * ௨௫, அதி. ௨௬.

௪௨. சமுத்திரம் பாபேலின்மேற் புரண்டு வந்தது, அதினுடைய அலைகளின் திரட்சி யால் அது மூடப்பட்டது.

௪௩. அதின் பட்டணங்கள் பாழுமாய், வறட்சியும், வனாந்தரமுமான பூமியுமாய், ஒரு மனுஷனுங் குடியிராததும், ஒரு மனுபுத்திர னுங்கடவாததுமான பூமியுமாய்ப்போயிற்று

௪௪. நாம் பாபேலிலிருக்கிற பேலின்மேல் விசாரிப்பாகி அது விழுங்கினதை அதின் வாயிலிருந்து வெளியாக்கப்பண்ணுவோம். சாதிகளினி அதினண்டைக்கு ஓடிவாரார் கள், பாபேலின் மதிலும் விழும்.

௪௫. நமது சனமே, * அதின் நடுவிலிருந் தும் புறப்படுங்கள், கர்த்தருடைய கோபத் தின் உக்கிரத்துக்குத் தப்ப அவனவன் தன் னுயிரமாவை இரட்சித்துக்கொள்ளக் கட வான். * ௫௰, அதி. அ. அறிவி. ௰அ, ௪.

௪௬. உங்களிருதயந் துவளாமலும், தேசத் திற் கேட்கப்படுஞ்செய்தியினாலே நீங்கள் பயப்படாமலுமிருக்கவுந்தானே, ஏனெனி ல், ஒருவருஷத்திலே செய்தி கேட்கப்பட்டு, அதற்குப்பிறகு ஒருவருஷத்திலே செய்திகே ட்கப்படும், தேசத்திலே கொடுமையுண்டா கும், ஆளுகிறவன் மேல் ஆளுகிறவன் வருவான்.

௪௭. ஆகையால் இதோ நாம் பாபேலு டைய சுரூபங்களுக்குவிரோதமாய் விசாரி ப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெல்லாம் வெட்கப்படும், அதிற் கொ லையுண்கிறயாவரும் அதின் நடுவில் விழுந்து கிடப்பார்கள்.

௪௮. * வானங்களும், பூமியும், அவைகளிலு ள்ளயாவும் பாபேலின்மேற் கெம்பீரிக்கும், ஏனெனில் பாழ்க்கடிக்கிறவர்கள் அதற்கு வடக்கேயிருந்து வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * அறிவி. ௰அ, ௨௰.

௪௯. பாபேல் இஸ்ரவேலிற் கொலையுண்ட வர்களை விழப்பண்ணினதுபோலே பாபேலி லேயுந் தேசமெங்குங் கொலையுண்கிறவர் கள் விழுவார்கள்.

௫௰. பட்டயத்துக்குத் தப்பினவர்களே! தங்கித்திரியாமல் நடந்துவாருங்கள், தூரத் திலே கர்த்தரை நினையுங்கள், எருசலேம் உங்கள் நினைவில் ஏறக்கடவது.

௫௧. நிந்தையைக் கேட்டதினாலே வெட்கப் பட்டோம், கர்த்தருடைய வீட்டின் பரிசுத்த ஸ்தலங்களின்மேலே அன்னியர் வந்ததினா லே நாணம் நம்முடைய முகங்களை மூடிற்று.

௫௨. ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ நாம் அதின் சுரூபங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்கள் வரும், அப்போது அதின் தேசமெங்குங் கொலையு ண்கிறவர்கள் கதறுவார்கள்.

௫௩. பாபேல் * வானபரியந்தம் ஏறினா லும், அது தன் பலத்தின் உயர்ச்சியை அர ணிப்பாக்கினாலும் நம்மாலே அதற்குப் பா ழ்க்கடிக்கிறவர்கள் வருவார்களென்று கர்த் தர் சொல்லுகிறார். * ௪௯, அதி. ௰௬.

௫௪. பாபேலிலிருந்து கூப்பிடுதலின் சத் தமும், கல்தேயர் தேசத்திலிருந்து மகா நொறுக்குதலுங் கேட்கப்படும்.

௫௫. ஏனெனில் கர்த்தர் பாபேலைப் பாழ்க் கடித்து அதிலுள்ள பெரிய சத்தத்தையொ ழியப்பண்ணுவார், அதேனென்றால் அவர்க ளுடைய அலைகள் திரளான தண்ணீர்களைப் போல இரையும், அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்கும்.

௫௬. ஏனெனில், அதின்பேரிலே பாபேலி ன்மேலதானே பாழ்க்கடிக்கிறவன் வருகி றான், அதின் பராக்கிரமசாலிகள் பிடிபடு வார்கள், அவர்களுடைய விற்கள் முறிந்து போம். அதேனென்றால், சரிக்கட்டுதலுக்கினி ன பராபரனுகிய கர்த்தர் பதில் அளிக்கவே அளிப்பார்.

௫௭. அதின் பிரபுக்களையும், அதின் ஞானி களையும், அதின் தலைவரையும், அதின் அதி காரிகளையும், அதின் பராக்கிரமசாலிகளை யும் வெறியாக்குவோம், அப்போது அவர் கள் என்றென்றைக்கும் விழிக்காத தூக்க மாய்த் தூங்கிவிழுவார்களென்று * சேனை களையுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இரா சா சொல்லுகிறார். * ௪௬. ௨௪, ௰.

௫௮. பாபேலின் விஸ்தாரமான மதில்கள் தரையாக்கவே தரையாக்கப்பட்டு அதினு டைய உயரமான வாசல்கள் அக்கினியாற் சுட்டெரிக்கப்படும், அப்படியே சனங்கள் பிரயாசப்பட்டது விருதாவும், சனசதளங் கள் உழன்று இளைத்தது அக்கினிக்கிரையுமாம் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௫௯. யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா இராச்சியபாரம்பண்ணும் நாலாம் வருஷத் திலே பாபேலுக்குப் போகையில் அவனோ டேகூடப்போகிற மக்சேயாவின் மகனான நேரியாவின் குமாரனான சேராயாவுக்கு எரே மியா தீர்க்கதரிசிகற்பித்த வார்த்தை சேரா யாவோவெனில் அமர்ந்த குணமான பிரபுவா யிருந்தான்.

௬௰. பாபேலின்மேல் வரும் எல்லாத்தீங் கையும், பாபேலுக்குவிரோதமாக எழுதப் பட்ட இந்த எல்லா வசனங்களையும் எரேமி யா ஒரு புஸ்தகத்தில் எழுதினான்.

௬௧. பிறகு எரேமியா சேராயாவுடனே சொன்னதாவது; நீ பாபேலுக்கு வந்த பிற

பாடு நீ யிதைப்பார்த்து இந்த எல்லா வச னங்களையும் வாசித்துச்சொல்லவேண்டிய தாவது;

௬௨. கர்த்தாவே இந்த ஸ்தலத்திலே மனு ஷனும், மிருகமும் முதலாயத்தங்கித் தரிக் காதபடிக்கும், அது என்றென்றைக்கும் பா ழாய்க்கிடக்கும்படிக்கும் அதையழித்துப் போடுவேனென்றுதேவரீர் அதைக் குறித் து உரைத்திருக்கிறதை நீ சொல்லி,

௬௩. நீ யிந்தப் புஸ்தகத்தை வாசித்துத் தீர்ந்தபோது அதிலே ஒரு கல்லைக்கட்டி அதை ஐப்பிராத்தின் நடுவில் எறிந்துவிட்டு,

௬௪. * இப்படியே பாபேல் அமிழ்ந்துபோ கும், நான் அதின்மேல்வரப்பண்ணுந் தீங் கிலேயிருந்து எழும்பமாட்டாமல் இளைத்துவிழு வார்களென்றுசொல்லென்று சொல்வாயாக வென் றான், எரேமியாவின் வசனங்களிதுமட்டுந் தானே. * அறிவிப். ௰௮, ௨௧.

## ௫௨. அதிகாரம்.

[(௧) சிதேக்கியா கலகம்பண்ணினதும், (௪) எருசலேம் முற்றிக்கைபோட்டுப் பிடிக்கப் பட்டதும், (௮) சிதேக்கியாவின் குமாரர் கள் கொல்லப்பட்டதும், அவனுடைய கண் கள் பிடுங்கப்பட்டதும், (௰௨) நேபுசாரதா ன் பட்டணத்தைக்கொளுத்தினதும், கொ ள்ளையிட்டதும், (௨௪) அவன் பிடிக்கப்பட் ட சனங்களைச் சிறைவைக்கக்கொண்டுபோ னதும், (௩௨) ஏவில்மெரோதாக்கு யோயா க்கீனையுயர்த்தினதும்.]

சிதேக்கியா இராசாவாகிறபோது இரு பத்தொருவயதாயிருந்தான். * அவன் பதினொருவருஷம் எருசலேமில் இராச்சிய பாரம்பண்ணினான். அவனுடைய தாயின் பேர் அமீத்தாள். இவள் லிப்னா ஊராகிய எரேமியாவின் குமாரத்தி. * ௩௭, அதி. ௧ ௨. இராசா. ௨௪, ௰௮. ௨. நாளாக. ௩௬, ௰. ௰௧.

௨. யோயாக்கீம் செய்ததையெல்லாவற்று க்கும் சரியாய் அவன் கர்த்தருடைய பார் வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.

௩. ஏனென்றால், எருசலேமையும், யூதாவை யும் கர்த்தர் தம்முடைய சமுகத்தைவிட்டுத் தள்ளித்திருமளவும் அவைகளில் அவருடைய கோபத்தினாலேசம்பவித்ததேதெனில், சிதே க்கியா பாபேலின் இராசாவைவிட்டு * மரு ளவிழுந்தான். * ௨. இராசா. ௨௪, ௨௰.

௪. ஆகையால், * அவன் இராச்சியபாரம் பண்ணும் ஒன்பதாம்வருஷத்துப் பத்தாம் மாதம் பத்தாந்தேதியிலே சம்பவித்ததே தென்றால், பாபேலின் இராசாவாகிய நேபு காத்நேச்சார் அவனும், அவனுடைய எல் லா இராணுவமும் எருசலேமுக்கு விரோத மாய்வந்து அதற்கெதிராகப் பாளயமிறங் கிச் சுற்றிலும் அதற்கெதிராகக்கொத்தளங் களைக்கட்டினார்கள். * ௩௯, ௧. முதல் ௨. இரா. ௨௫, ௧. முதல்

௫. அப்படியே பட்டணம் சிதேக்கியா இராசாவின் பதினோராம்வருஷமட்டும் முற் றிக்கைபோடப்பட்டிருந்தது.

௬. நாலாம்மாதம் ஒன்பதாந்தேதியிலே பஞ் சம் பட்டணத்திலே மிகுந்த தேசத்தின் சனத்துக்கு ஆகாரமில்லாதேபோனபோது,

௭. பட்டணத்தின் மதில் திறப்பாயிற்று. அப்போது யுத்த மனுஷரெல்லாம் ஓடிக் கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கை யில் இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்தின் வழியே இரண்டுமதிலுக்கு நடு வான வாசலாற் பட்டணத்திலிருந்து புறப் பட்டு வயல்வழியே போய்விட்டார்கள்.

௮. ஆனால், கல்தேயருடைய இராணுவம் இராசாவைப் பின்தொடர்ந்து எரிகோவின் வயல் வெளிகளில் சிதேக்கியாவைக் கிட்டி னார்கள். அப்போது அவன் இராணுவமெல் லாம் அவனைவிட்டுச் சிதறிப்போனார்கள்.

௯. அவர்கள் இராசாவைப் பிடித்து அவ னைக் காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லாவுக் குப் * பாபேலின் இராசாவாகிய நேபுகாத் நேச்சாரண்டையிலே போயேறப்பண்ணி னார்கள். இவன் அவன்மேல் நியாயங்களைச் சொன்னான். * ௫. மோ. ௨௮, ௩௬.

௰. பிறகு பாபேலின் இராசா சிதேக்கியா வின் பிள்ளைகளை அவன் கண்களுக்கு முன்பாக வெட்டி, யூதாவின் பிரபுக்களையெல்லாம் ரிப்லாவிலே வெட்டி,

௰௧. சிதேக்கியாவின் கண்களைக் குருடாக்கி அவனுக்கிரண்டு வெண்கல விலங்குகளைப் போடுவித்தான். பிறபாடு பாபேலின் இராசா அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோய், அவன் மரணமடையுநாள்மட்டும் அவனைக் காவல்வீட்டிலிருக்கப்பண்ணினான்.

௰௨. ஐந்தாம்மாதம் பத்தாந்தேதியிலே பா பேலின் இராசாவுக்கு முன்பாக நிற்கிறவனா கிய தலையாரிகளின் அதிபதியான நேபுசார தான் எருசலேமுக்கு வந்தான். அது நேபு காத்நேச்சாரென்ற இராசா பாபேலை அரசா ளுகிற பத்தொன்பதாம்வருஷமாயிருந்தது.

௰௩. அவன் கர்த்தருடைய வீட்டையும், இராசாவின் வீட்டையும், எருசலேமிலுள்ள எல்லா வீடுகளையும் ஒவ்வொரு பெரியவனு டைய வீட்டையும் அக்கினியாற் சுட்டெரித் துப்போட்டான்.

௰௪. தலையாரிகளின் அதிபதியோடிருந்த கல்தேயரின் இராணுவமெல்லாம் எருசலே மைச் சுற்றிலுமிருந்த மதில்களனைத்தையு மிடித்துப்போட்டார்கள்.

௰௫. சனத்திலே நீசமானவர்களிற் சிலரை யும், பட்டணத்தில் மீதியான குறைச்சனத் தையும், பாபேலுடைய இராசாவின் வச மாக ஓடிவந்துவிட்டவர்களையும், குறைச்

சனத்தளத்தையுந் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் சிறைகளாகக்கொண்டுபோனான்.

௰௬. ஆனால் நீசமான தேசத்தாரிற் சிலரைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் திராட்சத்தோட்டக்காரராகவும், பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.

௰௭. * கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத்தூண்களையும், கர்த்தருடைய வீட்டிலிருந்த ஆதாரங்களையும், வெண்கலக் கடல்தொட்டியையும் கல்தேயர் உடைத்துப்போட்டு அவைகளின் வெண்கலத்தையெல்லாம் பாபேலுக்கெடுத்துக்கொண்டுபோனார்கள். * ௨௭, ௰௯. ௱

௰௮. செப்புச்சட்டிகளையும், சாம்பலெடுக்குங் கரண்டிகளையும், வெட்டுக்கத்திகளையும், கலங்களையும், கலயங்களையும், ஆராதனை செய்யப்பட்ட சகல வெண்கலமுட்டுகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௰௯. சுத்தப்பொன்னும், சுத்தவெள்ளியுமான கிண்ணிகளையும், தூபகலசங்களையும், கலங்களையும், சட்டிகளையும், விளக்குத்தண்டுகளையும், கலயங்களையும், கரகங்களையுந் தலையாரிகளின் அதிபதியெடுத்துக்கொண்டான்.

௨௰. * சாலொமோன் இராசா கர்த்தருடைய வீட்டுக்காகச்செய்வித்து வைத்த இரண்டு தூண்களும், ஒரு கடல்தொட்டியும், ஆதாரங்களின் கீழ் நின்ற பன்னிரண்டு வெண்கலமாடுகளும் இருந்ததே. இந்தச் சகல முட்டுகளுடைய வெண்கலத்துக்கும் நிறையில்லை. * ௧. இராசா. ௭, ௰௫. ௨. நாளா. ௩, ௰௫. ௱

௨௰௧. அந்தத் தூண்களோவெனில், ஒவ்வொரு தூண் பதினெட்டுமுழ வுயர்ச்சியாயிருந்தது. பன்னிரண்டுமுழ நூல் அதைச் சுற்றும் நாலுவிரற்கடையத்தினகனம் உள்ளே குழாயாயிருந்தது.

௨௰௨. அதின்மீதில் வெண்கலக்குமிழ் உண்டாயிருந்தது. ஒரு குமிழ் உயர்ச்சி ஐந்துமுழமானது. குமிழின்மேல் சுற்றிலும் பின்னலும், மாதளம்பழங்களுமாயிருந்தது. எல்லாம் வெண்கலந்தான். அதற்குச்சரியாய் மற்றத் தூணுக்கு அதுவும், மாதளம்பழங்களுமுண்டாயிருந்தன.

௨௰௩. தொண்ணூற்றாறு மாதளம்பழங்கள் காற்றுத் திசைகளுக்கெதிராக இருந்தன. குமிழிற் சுற்றிலுமிருந்த மாதளம்பழங்கள் நூறு.

௨௰௪. தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனாகிய செராயாவையும், இரண்டாம் ஆசாரியனாகிய செப்பனியாவையும் வாசற்படியின் மூன்று காவற்காரரையும் பிடித்தான்.

௨௰௫. பட்டணத்திலோவென்றால், அவன் யுத்த மனுஷரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானியொருவனையும், இராசாவின் சந்நிதிக்குள்ளிற் பட்டணத்தில் அகப்பட்ட ஏழுபேரையும், தேசத்தின் சனத்தைச் சேவகம் எழுதுகிற தலையான சம்பிரதியையும், தேசத்துச் சனத்திலே பட்டணத்தின் நடுவில் அகப்பட்ட அறுபதுபேரையும் பிடித்தான்.

௨௰௬. அவர்களைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் பிடித்து அவர்களை ரிப்லாவுக்குப் பாபேலுடைய இராசாவண்டையிலே கொண்டுபோய்விட்டான்.

௨௰௭. அப்போது பாபேலின் இராசா காமாத்தென்ற தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவிலே அவர்களை வெட்டிக் கொன்றுபோட்டான். யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து சிறைகளாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.

௨௰௮. நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப் போன சனம் எத்தனையென்றால், ஏழாம் வருஷத்திலே மூவாயிரத்திருபத்து மூன்று யூதரும்,

௨௰௯. நேபுகாத்நேச்சாருடைய பதினெட்டாம் வருஷத்தில் எருசலேமிலிருந்து எண்ணூற்று முப்பத்திரண்டு ஆத்துமாக்களுங் கொண்டுபோகப்பட்டார்கள்.

௩௰. நேபுகாத்நேச்சாருடைய இருபத்துமூன்றாம் வருஷத்திலே தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் யூதரில் எழுநூற்று நாற்பத்தைந்து ஆத்துமாக்களைச் சிறைபிடித்துப்போனான். ஆக நாலாயிரத்தறுநூறு ஆத்துமாக்கள்.

௩௰௧. * யூதாவின் இராசாவாகிய யோயாகீனுடைய சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷத்துப் பன்னிரண்டாம் மாதம் இருபத்தைந்தாந்தேதியிலே சம்பவித்ததேதென்றால், ஏவில்மேரோதாக்கென்ற பாபேலின் இராசாதான் இராசாவான வருஷத்திலே யூதாவின் இராசாவாகிய யோயாகீனைத் தலையையுயர்த்தி அவனைக் காவல்வீட்டிலிருந்து புறப்படப்பண்ணி, * ௨. இராசா. ௨௫, ௨௭. ௱

௩௰௨. அவனோடே அன்பாய்ப்பேசி அவனுடைய ஆசனத்தைத் தன்னோடே பாபேலிலிருந்த இராசாக்களுடைய ஆசனங்களுக்கு மேலாக வைத்து,

௩௰௩. அவனுக்குக் காவல்வீட்டிலிருந்த வஸ்திரங்களை மாற்றினான். அவன் உயிரோடிருந்த சகல நாளும் அவனுக்கு முன்பாக நித்தம் அப்பம் புசிப்பிட்டான்.

௩௰௪. அவனுடைய செலவுக்கோவெனில், அவனுயிரோடிருந்த நாளெல்லாம் அவனுடைய மரணநாள் பரியந்தமும் அவனுக்குப் பாபேலினுடைய இராசாவினாலே யனுதினக்கட்டளையான திட்டம் எப்போதும், அநுதினமுங் கொடுக்கப்பட்டது.

எரேமியாவின் தீர்க்கதரிசனம்
முடிந்தது.

# எரேமியாவின் புலம்பல்.

(கி. பி. முன். ௫௮௮)

## ௧. அதிகாரம்.

[(௧) எருசலேமின் பாவத்தினிமித்தம் அதனுடைய நிர்ப்பாக்கியமுள்ள ஸ்திதி. (௰௨) தன் சிறுமையைக்குறித்து முறையிட்டது. (௰௮) பராபரனுடைய நியாயத்தீர்ப்பு நீதியுள்ளதென்று வெளியிட்டது.]

ஜனம்பெருத்திருந்த பட்டணமானவள் எத்தனை தனிமையாக உட்கார்ந்திருக்கிறாள், விதவைக்கொப்பானாள், சாதிகளிற் பெரியவளும், சீமைகளில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவளானாள்.

௨. இராக்காலத்திலே அழுதே அழுகிறாள், அவளுடைய கண்ணீர் அவள் கன்னங்களில் ஓடி, அவளுடைய எல்லாநேசத்தாரிலும் அவளைத் தேற்றரவுபண்ணுவாரொருவரும் அவளுக்கில்லை, அவளுடைய சிநேகிதரெல்லாரும் அவளுக்குத் துரோகிகளாகி அவளுக்குச் சத்துருக்களாய்ப்போனார்கள்.

௩. உபத்திரவப்படவும், அடிமைவேலையை வெகுதரஞ்செய்யவும் யூதசனம் எடுபட்டுப்போயிற்று, அவள் புறசாதிகளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்பாறுதலையடையாள், அவளைத் துன்பப்படுத்துகிறயாவரும் அவளை நெருக்கஸ்தலங்களில் இடுக்கிலே தொடர்ந்து பிடித்தார்கள்.

௪. பண்டிகைக்கு வருவாரில்லாததினாலே சீயோனின் வழிகள் புலம்புகிறவைகளாயிருக்கின்றன, அதின் வாசல்களெல்லாம் பாழாய்க்கிடக்கின்றன, அதின் ஆசாரியர் தவிக்கிறார்கள், அதின் கன்னியாஸ்திரீகள் சஞ்சலப்படுகிறார்கள், அதற்குக் கசப்பேயுண்டாயிருக்கிறது.

௫. அதின் சத்துருக்கள் தலையானார்கள், அதின் பகைஞர் சுகித்திருக்கிறார்கள். ஏனெனில், அதினுடைய திரளான பாதகங்களினிமித்தம் கர்த்தர் அதைச் சஞ்சலப்படுத்தினார், அதின் பிள்ளைகள் சத்துருவுக்கு முன்பாகச் சிறையிருப்புக்குப்போனார்கள்.

௬. சீயோன் குமாரத்தியின் மகத்துவமெல்லாம் அதைவிட்டுப்போயிற்று, அதின் பிரபுக்கள் மேய்ச்சலைக்காணாத மான்களுக்கொப்பாகித் தொடருகிறவனுக்கு முன்பாகச் சத்துவமில்லாமல் நடந்துபோனார்கள்.

௭. தனக்குச் சிறுமையும், தவிப்புமுண்டாகிய நாள்களிலே எருசலேம் பூர்வநாள்கள்முதற்கொண்டு தனக்குண்டாயிருந்த இச்சிக்கப்பட்டத்தக்க நன்மைகளையெல்லாம் நினைக்கிறது, அதற்கொத்தாசைசெய்வாரில்லாமல் அதினுடைய சனம் சத்துருவின் கையிலே விழுகையில் சத்துருக்கள் அதைப்பார்த்து அதினுடைய ஓய்வுநாள்களின்பேரிலே நகைத்தார்கள்.

௮. எருசலேமென்பவள் பாவஞ்செய்யவே செய்தாள். ஆனபடியினாலே தூரஸ்திரீயைப்போலானாள், அவளைக் கனம்பண்ணினவர்களெல்லாரும் அவளை யசட்டைபண்ணுகிறார்கள். ஏனென்றால், அவளுடைய அவமானத்தைக்கண்டார்கள், அவளும் பெருமூச்சுவிட்டுப் பின்னிட்டுத்திரும்பினாள்.

௯. அவளுடைய அசுத்தம் அவள் வஸ்திர ஓரங்களிலிருந்தது, *தனக்கு வரப்போகிற முடிவை நினையாதிருந்தாள். ஆகையால், அதிசயமாய்த் தாழ்ந்துபோனாள், தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை, கர்த்தாவே என் சிறுமையைப்பாரும். ஏனெனில், பகைஞன் பெருமையடைந்தான்.

* ௫. மோசே. ௩௨, ௨௯.

௰. அவளுடைய இச்சிக்கப்பட்டத்தக்க நன்மைகளின்மேல் சத்துரு தன் கையை நீட்டினான். அதேனெனில், உம்முடைய சபையிலே வரவொண்ணாதென்று தேவரீர் கற்பித்த புறச்சாதியார் உம்முடைய பரிசுத்தஸ்தலத்துக்குட் பிரவேசித்ததைக் கண்டாள்.

௰௧. அவளுடைய சனமெல்லாம் அப்பந்தேடித் தவிக்கிறார்கள், தங்கள் பசியையாற்றும்படிக்குத் தாங்கள் இச்சிக்கப்பட்டத்தக்க நன்மைகளை ஆகாரத்துக்கென்று கொடுத்துவிட்டார்கள், கர்த்தாவே நோக்கிப்பாரும். ஏனெனில், எண்ணமற்றவளானேன்.

௰௨. வழியிற் கடந்துபோகிற எல்லாச் சனங்களே, இது உங்களைச் சேராதோ! கர்த்தர் தமது கோபத்தினுடைய உக்கிரத்தின் நாளிலே என்னைச் சஞ்சலப்படுத்தினதினாலே எனக்குண்டுபண்ணப்பட்ட என்னுடைய நோவுக்குச் சரியான நோவுண்டோவென்று நோக்கிப்பாருங்கள்.

௰௩. உயரத்திலிருந்து என் எலும்புகளில் அக்கினியையனுப்பிவிட்டார், அது அவை

கன்னைப் பிடித்து, என் கால்களுக்கு வலையை வீசினார், என்னைப் பின்னிட்டு விழப்பண்ணினார், என்னைப் பாழாக்கடித்தார், நித்தம் நான் பலட்சயமானவள்.

௧௪. என் பாதகங்களின் நுகத்தடி அவருடைய கையால் கட்டியிருக்கிறது, அவைகள் பிணைக்கப்பட்டு என் கழுத்தின்மேல் ஏறின, என் பலனை விழப்பண்ணினார், ஆண்டவர் என்னை நான் எழுந்திருக்கக்கூடாதபடிக்கு ஒடுக்குகிறவர்களின் கையிலே ஒப்புக்கொடுத்தார்.

௧௫. என்னிலுள்ள பலசாலிகளாகிய என்னுடைய வர்களையெல்லாம் ஆண்டவர் மிதித்துவிட்டார், என் வாலிபரை நொறுக்கும்படிக்கு என்மேல் ஒரு கூட்டத்தை வரவழைத்தார், யூதாகுமாரத்தியாகிய கன்னியாஸ்திரியை ஆண்டவர் ஆலையாக மிதித்தார்.

௧௬. * இவைகளினிமித்தமாக நான் அழுகிறேன், என் கண், என்னுடைய கண்ணே நீராகச் சொரிகிறது. ஏனெனில், என் ஆத்துமாவை உசிப்பாற்றுந் தேற்றரவாளர் என்னை விட்டுத் தூரமானார், பகைஞன் மேற்கொண்டதினால் என் பிள்ளைகள் பாழாக்கடிக்கப்பட்டார்கள். * எரே. ௧௩, ௧௭. ௧௪, ௧௭.

௧௭. சீயோன் என்பவள் தன் கைகளை விரிக்கிறாள், தேற்றரவு பண்ணுவார் அவளுக்கில்லை. கர்த்தர் யாக்கோபின் சுற்றுப்புறத்தாரை யவனுக்குச் சத்துருக்களாகக் கட்டளையிட்டார், எருசலேம் என்பவள் அவர்களுக்குள்ளே தூரஸ்திரிக்கொப்பானாள்.

௧௮. கர்த்தர் நீதிபரர், அவருடைய வாக்குக்கு விரோதமாய் நான் எழும்பினேன் ஆனபடியினாலே சனங்களே, நீங்களெல்லாரும் இதைக்கேட்டு என் வேதனையைப் பாருங்கள், என் கன்னியாஸ்திரிகளும், என் வாலிபரும் சிறையிருப்பிலே போனார்கள்.

௧௯. என்னைச் சிநேகிக்கிறவர்களைக் கூப்பிட்டேன், * அவர்களோ என்னை மோசம் போக்கினார்கள், என் ஆசாரியர்களும், என் மூப்பரும் தங்கள் பசியையாற்றத் தங்களுக்கு அப்பந்தேடுகையில் மூச்சொடுங்கி மாண்டார்கள். * எரேமி. ௩௰, ௧௪.

௨௰. கர்த்தாவே பாரும். ஏனெனில், நெருக்கப்படுகிறேன், * என் குடல்கள் பொங்குகின்றன, நான் மிகவும் மருளவிழுந்தபடியினாலே யென்னிருதயம் எனக்குள்ளே துவண்டது. † வெளியிலே பட்டயம் என்னைப் பிள்ளையற்றவளாக்கிறது. வீட்டுக்குள்ளே மரணச்சாயலாயிருக்கிறது. * சங்கீ. உரு, ௭. † ரு. மோசே. ௩௨, உரு.

௨௧. நான் தவிக்கிறதையவர்கள் கேட்டார்கள், தேற்றரவு பண்ணுபவன் எனக்கில்லை, என் பகைஞரெல்லாரும் என் தீங்கைக் கேட்டு தேவரீர் அதைச் செய்தபடியினாலே சந்தோஷமாயிருக்கிறார்கள், நீர் கூறின நாளை வரப்பண்ணுவீர், அப்போது என்னைப்போலிருப்பார்கள்.

௨௨. அவர்களுடைய பொல்லாப்பெல்லாம் உமது முகத்துக்கு முன்பாக வரக்கடவது, என்னுடைய எல்லாப் பாதகங்களினிமித்தமும் நீர் எனக்குச் செய்ததுபோலே அவர்களுக்குச் செய்யும். ஏனென்றால், என் பெருமூச்சுகள் திரளானவைகள், என்னிருதயம் பலட்சயமாயிருக்கிறது.

## உ. அதிகாரம்.

[(௧) எரேமியா எருசலேமின் உபத்திரவத்தைக் குறித்துப் புலம்பினது. (௨௰) அதைக் குறித்துப் பராபரனிடத்தில் முறையிட்டது.]

சீயோன் குமாரத்தியை ஆண்டவர் தம்முடைய கோபத்தில் எத்தனை மந்தாரத்தாலே மூடினார்! தம்முடைய கோபத்தின் நாளிலே யவர் * தமது பாதப்படியை நினைக்காமல் இஸ்ரவேலின் மகிமையை வானத்திலிருந்து தரையிலே விழத்தள்ளினார். * சங்கீ. ௱௩௨, ௭.

௨. ஆண்டவர் தப்பவிடாமல் யாக்கோபின் வாசஸ்தலங்களையெல்லாம் விழுங்கினார். அவர் யூதாகுமாரத்தியின் அரண்களையெல்லாந் தம்முடைய சினத்திலே யிடித்துத் தரையோடே தரையாக்கிப்போட்டார், இராச்சியத்தையும், அதின் பிரபுக்களையும் பரிசுத்தமறப்பண்ணினார்.

௩. தம்முடைய கோபத்தின் உக்கிரத்திலே இஸ்ரவேலின் கொம்பையெல்லாம் வெட்டிப்போட்டார், அவர் பகைஞனுக்கு முன்பாகத் தம்முடைய வலதுகையைப் பின்னுக்குத் திருப்பி சுற்றிலுமிருக்கிறதைப் பட்சிக்கிற அக்கினிச்சுவாலையைப்போலே யாக்கோபுக்கு விரோதமாகப் பற்றியெரிந்தார்.

௪. பகைஞனைப்போல * தம்முடைய வில்லை நாணேற்றினார், சத்துருவைப்போலத் தம்முடைய வலதுகையை நீட்டிநின்று பார்வைக்கு விருப்பமானதையெல்லாங் கொன்றுபோட்டார், சீயோன் குமாரத்தியின் கூடாரத்திலே தம்முடைய உக்கிரத்தை அக்கினியைப்போலே ஊற்றிவிட்டார். * சங். ௭, ௧௩.

௫. ஆண்டவர் பகைஞனுக்கொப்பானார் இஸ்ரவேலை விழுங்கினார், அதின் அரமனைகளையெல்லாம் விழுங்கினார், அதின் அரண்களை யழித்துச் சீயோன் குமாரத்திக்குத் திரளான துக்கிப்பையும், சலிப்பையுமுண்டாக்கினார்.

௬. தோட்டத்தின் வேலியைப்போலிருந்த தம்முடைய வேலியைப் பலவந்தமாய்ப் பிடுங்கிப்போட்டார், சபைகூடுகிற தம்முடைய ஸ்தலத்தை யழித்தார், கர்த்தர் சீயோனிலே பண்டிகையையும், ஓய்வுநாளையும் மறக்கப்பண்ணித் தமது கோபத்தின் தாங்கலில் இரா

சாலையும், ஆசாரியனையும் புறக்கணித்து விட்டார்.

எ. ஆண்டவர் தமது பலிபீடத்தையொழித்துவிட்டார், தமது பரிசுத்தஸ்தலத்தையருவருத்தார். அதினுடைய அரமனைகளின் மதில்களைப் பகைஞனகையிற் பத்திரப்படுத்திவிட்டார் பண்டிகைநாளுக்கொப்பாகக் கர்த்தரின்வீட்டிலே சத்தமிட்டார்கள்.

அ. கர்த்தர் சீயோன்குமாரத்தியின் அலங்காரத்தை நிர்மூலமாக்க நினைத்தார், நூலைப் போட்டார், அழிக்காதபடிக்குத் தமது கையைஅவர் முடக்கிக்கொண்டதில்லை, அரணிப்பையும், அலங்கத்தையும் புலம்பலாக்கினார். அவைகளேகமாய்ப்பலனற்றுக்கிடக்கின்றன.

கூ. அதின்வாசல்கள் தரையில் அழுந்திக்கிடக்கின்றன. அதின்தாப்பாள்களைக் கெடுத்து உடைத்துப்போட்டார், அதின் இராசாவும், அதின்பிரபுக்களும் புறசசாதியாருக்குள்ளிருக்கிறார்கள் வேதமில்லை. அதின்தீர்க்கதரிசிகளுக்குக் கர்த்தராலே தரிசனங்கிடைக்கிறதுமில்லை.

ய. சீயோன்குமாரத்தியின் மூப்பர்தரையிலுட்கார்ந்து மவுனமாயிருக்கிறார்கள், தங்கள்தலைகளின்மேற் புழுதியைப் போட்டுக்கொள்ளுகிறார்கள், இரட்டுடுத்தியிருக்கிறார்கள், எருசலேமின் கன்னியாஸ்திரிகள் தங்கள் தலைகளைத் தரையைநோக்கி யிறக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

யக. என்சனமாகிய குமாரத்தியினுடைய நொறுங்குதலினிமித்தம் என்கண்கள் கண்ணீரை யுதிர்க்கிறதினாற் பூத்துப்போயின, என்குடல்கள்பொங்குகின்றன, என்ஈரல்தரையிற்சரிகிறது, ஏனெனிற் குழந்தைகளும், பாலகரும் பட்டணத்தின்வீதிகளில் தொய்ந்துகிடக்கிறார்கள்.

யஉ. அவர்கள் குத்துண்டவர்களைப்போற் பட்டணத்தின்வீதிகளில் தொய்யும்போதும், தங்களாத்துமாவைத் தங்கள் தாய்களின்மடியிலூற்றும்போதும் தங்கள் தாய்களுடனே கோதுமையும்,திராட்சப்பழரசமுமெங்கேயென்கிறார்கள்.

யங. எருசலேம் குமாரத்தியே, என்னத்தையுனக்குச் சாட்சியாகச்சொல்லுவேன்? என்னத்துக்குன்னை யொப்பிடுவேன்? சீயோன்குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியே, நானுன்னைத்தேற்றும்படிக்கு என்னத்துக்குன்னைச்சரியிடுவேன்? உன்நொறுக்குதல்சமுத்திரத்தைப்போல விஸ்தாரமாயிருக்கிறதே, உன்னைக் குணமாக்குபவனார்?

யச. உன்தீர்க்கதரிசிகள் அபத்தமும், மதியிலலாமையுமான தரிசனத்தை யுனக்குத் தரிசிப்பித்தார்கள், அவர்கள் உன்சிறையிருப்பை விலக்கும்படிக்கு உன் அக்கிரமத்தைத்திறந்து வைக்காமல் அபத்தகாரியங்களையும், நீ துரத்தப்படுகிறதற்கானவைகளையும், உனக்குத்தரிசிப்பித்தார்கள்.

யரு. வழியிற்போகிறயாவரும் உன்பேரிற்கைகொட்டிக்கொள்ளுகிறார்கள். எருசலேமை, குமாரத்தியின்பேரில் ஈசற்போட்டுத் தங்கள் தலைகளைத் துலுக்கி, பூரணவடிவும், எல்லாப்பூமியின் மகிழ்ச்சியுமானதென்னப்பட்ட பட்டணமிதுவோவென்கிறார்கள்.

யசு. உன்பகைஞர் உன்மேலே தங்கள்வாயைத்திறக்கிறார்கள், ஈசற்போட்டுப்பற்கடிக்கிறார்கள், அதைவிழுங்கினோம்,நாம் காத்திருந்தநாளிதுவே, இப்போதுநமக்குக்கிடைத்தது,அதைக்கண்டோமென்கிறார்கள்.

யஎ. * கர்த்தர்தாம் நினைத்ததைச் செய்தார். தாம் பூர்வநாள்களமுதற்கொண்டு கட்டளைபண்ணின தம் வார்த்தையை நிறைவேற்றிப்போட்டார், அவர் தப்பவிடாமல் நிர்மூலமாக்கி உன்னுறப்பகைஞனுக்குச் சந்தோஷமுண்டுபண்ணினார், உன் சத்துருக்களின்கொம்பையுயர்த்தினார். * ரு. மோசே. உஅ, யரு. ம

யஅ. அவர்கள் இருதயம் ஆண்டவரை நோக்கிக் கூப்பிடுகிறது, சீயோன்குமாரத்தியின் மதிலே இரவும், பகலும் * நதியத்தனைக் கண்ணீரைவிடு, உனக்கு ஓய்வைக்கொடாயாக, உன்கண்களின்கறுப்புவிழி சும்மாயிராதாக, * எரேமி. யச, யஎ.

யகூ. எழுந்திரு, முன்சாம இராத்திரியிலே கூப்பிடு, ஆண்டவரின்முகத்துக்கு முன்பாக வுன்னிருதயத்தைத் தண்ணீரைப்போலூற்று, எல்லாத்தெருக்களின்முனையிலும் பசியினாலேதொய்கிற உன் குழந்தைகளின்பிராணனுக்காக உன்கைகளை யவரண்டைக்கேற்று.

உய. கர்த்தாவே, ஆருக்கிந்தப்பிரகாரமாகச்செய்தீரென்று * நோக்கிப்பாரும், ஸ்திரிகள் † கைக்குழந்தைகளாகிய தங்களுடைய கர்ப்பத்தின்கனியைத்தின்னவேண்டுமோ? ஆண்டவருடைய பரிசுத்தஸ்தலத்தில் ஆசாரியரும், தீர்க்கதரிசியுங் கொலைசெய்யப்படவேண்டுமோ? * க, அதி. உய. † ச, அதி. ய. ரு. மோசே. உஅ, ருங.

உக. தெருக்களில் இளைஞரும், முதிர்ந்தவயதுள்ளவனுந் தரையிலேகிடக்கிறார்கள், என் கன்னியாஸ்திரிகளும், என்வாலிபரும் பட்டயத்தாலவிழுந்தார்கள், உமதுகோபத்தினநாளிலே கொன்று தப்ப விடாமலே கொன்றுபோட்டீர்.

உஉ. பண்டிகைநாளுக்கொப்பாகச் சுற்றிலுமிருந்து எனதிகில்களை வரவழைத்தீர், கர்த்தருடையகோபத்தின்நாளிலே தப்பினவனும், மீதியானவனுமில்லை, நானகைகளில் ஏந்திக்கொண்டு வளர்த்தவர்களை யென் பகைஞன்நாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

[(௧) விசுவாசிகள் தங்கள் துன்பத்தைக் குறித்துத் துக்கிக்கிறது. (௨௨) அவர்கள் பராபரனுடைய இரக்கங்களை நினைத்துத் தங்கள் நம்பிக்கையை ஸ்திரப்படுத்தினது. (௩௭) அவருடைய நீதியை ஒப்புக்கொண்டது. (௫௫) தங்கள் விடுதலைக்காகவும், (௬௪) தங்கள் சத்துருக்களிடத்தில் பழிவாங்குதலுக்காகவும் வேண்டிக்கொண்டது.]

ஆண்டவருடைய சினத்தின் மிலாற்றினாலுண்டான சிறுமையைக் கண்ட புருஷன் நான்.

௨. அவர் என்னை வெளிச்சத்துக்குள் அல்ல, இருளுக்குள்ளே அழைத்து நடத்திவந்தார்.

௩. அவர் எனக்கு விரோதமாகவே நித்தம் தம் முடைய கையை நேரிட்டுத் திருப்பினார்.

௪. என் சதையையும், என் தோலையும் முற்றலாக்கினார், என் எலும்புகளை முறித்தார்.

௫. அவர் எனக்கு விரோதமாகக் கொத்தளங்கட்டிப் பிச்சினாலும், வருத்தத்தினாலும் என்னை வளைந்துகொண்டார்.

௬. * நித்திய காலமாய்ச் செத்துக்கிடக்கிறவர்களைப்போல என்னை இருளான இடங்களிலிருக்கப்பண்ணினார். * சங்கீ. ௮௮, ௫, ௬.

௭. நான் புறப்படக்கூடாதபடி அவர் என்னைச் சூழவேலியடைத்தார், என் விலங்குகளைப் பாரமாக்கினார்.

௮. நான் சத்தமிட்டுக் கூப்பிட்டாலும், என் ஜெபத்துக்கு வழியை அடைத்துப்போட்டார்.

௯. வெட்டின கற்சுவரால் என் வழியை அடைத்துப்போட்டார், என் பாதைகளை மாறுபாடாக்கினார்.

௰. அவர் எனக்குப் பதிவிருக்கிற கரடியும், மறைவிடங்களிலே தங்குகிற சிங்கமுமாயிருக்கிறார்.

௰௧. என் வழிகளை விலக்கி என்னைத் துண்டித்துப்போட்டார், என்னைப் பாழாக்கிவிட்டார்.

௰௨. தம்முடைய வில்லை நாணேற்றி என்னை அம்புக்கு இலக்காக வைத்தார்.

௰௩. தம்முடைய அம்பறாத்தூணியின் அம்புகளை என் உள்ளிந்திரியங்களில் படப்பண்ணினார்.

௰௪. நான் என் சனம் அனைத்தினாலும் பரியாசமும், நித்தம் அவர்கள் இசைப்பாட்டுமாயிருந்தேன்.

௰௫. கசப்புகளால் என்னைத் திர்ப்தியாக்கி, எட்டியினால் என்னை நிரப்பினார்.

௰௬. அவர் பருக்கைக் கற்களால் என் பற்களை நொறுக்கி என்னைச் சாம்பலில் புரளப்பண்ணினார்.

௰௭. என் ஆத்துமாவைச் சமாதானத்துக்குத் தூரமாக்கினார், நன்மையை மறந்தேன்.

௰௮. ஆகையால், என் பலமும், நான் கர்த்தருக்குக் காத்திருந்த நம்பிக்கையும் அழிந்துபோயிற்றென்றேன்.

௰௯. என் சிறுமையையும், என் தவிப்பையும், எட்டியையும், பிச்சையும் நினைத்துக்கொள்ளும்.

௨௰. என் ஆத்துமா அவைகளை நினைத்து நினைத்து எனக்குள் முறிந்துபோகிறதென்கிறதை நினைக்கவே நினைப்பீர்.

௨௧. இதை என் மனதிலே வைப்பேன், இதினிமித்தமாகக் காத்திருப்பேன்.

௨௨. * நாங்கள் நிர்மூலமாய் அழியாதிருக்கிறது கர்த்தருடைய கிருபைகளே. ஏனெனில், அவருடைய இரக்கங்கள் முடிவடைந்ததுமில்லை. * நெகே. ௯, ௩௧. ஏசா. ௧, ௯.

௨௩. * அவைகள் காலைதோறும் புதியவைகள், அவருடைய உண்மை பெருத்திருக்கிறது. * சங்கீ. ௩௰, ௬.

௨௪. * கர்த்தரே என் பங்காயிருக்கிறாரென்று என் ஆத்துமா சொல்லும். ஆகையால், அவருக்குக் காத்திருப்பேன். * சங்கீ. ௭௩, ௨௬.

௨௫. * தமக்குக் காத்திருக்கிறவர்களுக்கும், தம்மைத் தேடுகிற ஆத்துமாவுக்கும் கர்த்தர் நல்லவர். * சங். ௪௰, ௨.

௨௬. கர்த்தருடைய இரட்சிப்புக்குக் காத்தும், அமர்ந்துமிருக்கிறது நல்லது.

௨௭. தன் சிறுவயதிலே நுகத்தடியைச் சுமக்கிறது புருஷனுக்கு நல்லது.

௨௮. அவர் அதைத் தன்மேல் வைத்தாரென்று அவன் தனித்து உட்கார்ந்து மவுனமாயிருப்பானாக.

௨௯. நம்பிக்கை உண்டாயிருக்கிறதாக்குமென்று தன் வாயைத் தூளில் நுழைத்து வாராக.

௩௰. தன்னை அடிக்கிறவனுக்குத் தன் கன்னத்தை ஒப்புக்கொடுத்து, நிந்தையாலே திர்ப்தியாவானாக.

௩௧. ஏனென்றால், ஆண்டவர் என்றென்றைக்கும் ஒழித்துவிடாமல்,

௩௨. * தாம் சஞ்சலப்படுத்தினாலும் பின்பு தம்முடைய மிகுந்த கிருபையின்படி இரங்குகிறார். * ஏசாயா. ௫௪, ௮.

௩௩. ஏனெனில், அவர் மனப்பூர்வமாய் மனுபுத்திரரைச் சிறுமையாக்கிச் சஞ்சலப்படுத்துகிறதில்லை.

௩௪. ஒருவன் பூமியிலுள்ள கட்டுண்டவர்களையெல்லாம் தன் கால்களின் கீழ் நசுக்குகிறதையும்,

௩௫. உன்னதமானவரின் முகத்திற்கு முன்பாக மனுஷருடைய நியாயத்தைப் புரட்டுகிறதையும்,

௩௬. மனுஷனை அவனுடைய வழக்கிலே மாறுபாடாக்குகிறதையும் ஆண்டவர் காணாதிருப்பாரோ!

௩௭. * ஆண்டவர் கட்டளையிடாதகாரியத்

சம்பவிக்குமென்று சொல்லுபவன் யார்?
* உ. சாமுவேல். ௰௬, ௰.

௩௮. * தீமையும், நன்மையும் உன்னதமானவருடைய வாயிலிருந்து புறப்படாதோ!
* ஏசாயா. ௪௫, ௭. ஆமோஸ். ௩, ௬.

௩௯. ஜீவனுள்ள மனுஷன் முறையிடுவானேன்? அவனவன் தன் பாவத்தின்பேரில் முறையிடுவானாக.

௪௰. நாம் நம்முடைய வழிகளைச் சோதித்து ஆராய்ந்து கர்த்தரிடம் திரும்பக்கடவோம்.

௪௧. நாம் நம்முடைய இருதயத்தைக் கைகளோடுங்கூடப் பரமண்டலங்களிலிருக்கிற பராபரனண்டைக்கு ஏறெடுத்து,

௪௨. நாங்கள் துரோகஞ்செய்து கலகம் பண்ணினோம். ஆகையால் தேவரீர் மன்னிக்காதிருந்தீர்.

௪௩. தேவரீர் கோபத்தால் மூடிக்கொண்டு எங்களைத் தப்பவிடாமல் பின்தொடர்ந்து கொன்றீர்.

௪௪. ஜெபம் உட்பிரவேசிக்கக்கூடாதபடிக்கு உம்மை மேகத்தால் மூடிக்கொண்டீர்.

௪௫. சனசதளங்களின் நடுவிலே எங்களைக் குப்பையும், தள்ளுபடியுமாக்கினீர்.

௪௬. எங்கள் பகைஞரெல்லாரும் எங்கள் மேலே தங்கள் வாயைத் திறந்தார்கள்.

௪௭. திகிலும், படுகுழியும், பாழ்க்கடிப்பும், நொறுக்குதலும் எங்களுக்குண்டாயினவென்று விண்ணப்பஞ்செய்யக்கடவோம்.

௪௮. என் சனமாகிய குமாரத்தியின் நிமித்தம் * நீர்க்கால்கள் என் கண்களிலிருந்து பாய்கின்றன. *. ௧, ௰௬. ௨, ௰௮.

௪௯. கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து நோக்கிப் பார்க்குமட்டுக்கும்,

௫௰. என் கண்கள் அமருகையாய் ஓய்வில்லாமற் சொரிகின்றன.

௫௧. என் பட்டணத்தினுடைய எல்லாக் குமாரத்திகளினிமித்தம் என்னுடைய கண் என்னுடைய ஆத்துமாவுக்கு நோவுண்டாக்குகிறது.

௫௨. முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்கள் என்னை ஒரு பட்சியைப் போல வேட்டையாட வேட்டையாடினார்கள்.

௫௩. என் பிராணனைப் பள்ளத்திலே சங்கரித்து என்மீதில் கற்களைப் போட்டார்கள்.

௫௪. தண்ணீர் என் தலையின்மேல் புரண்டது. நாசமானேனென்றேன்.

௫௫. மகா ஆழமான பள்ளத்திலிருந்து கர்த்தாவே, உம்முடைய நாமத்தைப் பற்றிக் கூப்பிட்டேன்.

௫௬. என் சத்தத்தைக் கேட்டீர். என் பெருமூச்சுக்கும், என் கூப்பிடுதலுக்கும் உமது செவியை மறைக்காதேயும்.

௫௭. நான் உம்மை நோக்கிக் கூப்பிட்ட நாளிலே தேவரீர் சேர்ந்து பயப்படாதே என்றீர்.

௫௮. ஆண்டவரே, என் ஆத்துமாவின் வழக்கை வழக்காடினீர். என் பிராணனை மீட்டீர்.

௫௯. கர்த்தாவே, நான் பட்ட அநியாயத்தைக் கண்டீர். என் நியாயத்தைத் தீரும்.

௬௰. அவர்களுடைய குரோதந் தீர்த்துக்கொள்ளுதலெல்லாவற்றையும், அவர்கள் எனக்கு விரோதமாக நினைத்தவையெல்லாவற்றையுங் கண்டீர்.

௬௧. கர்த்தாவே, அவர்களுடைய நிந்திக்குதலையும், அவர்கள் எனக்கு விரோதமாய் நினைத்தவையெல்லாவற்றையும்,

௬௨. எனக்கு விரோதமாய் எழும்பினவர்களின் பேச்சுகளையும், அவர்கள் நித்தம் எனக்கு விரோதமாய் யோசிக்கும் வினைகளையுங் கேட்டீர்.

௬௩. அவர்களுடைய உட்காருதலையும், அவர்களுடைய எழுந்திருக்குதலையும் நோக்கிப்பாரும். நான் அவர்களுடைய கின்னரப் பாடலாயிருக்கிறேன்.

௬௪. கர்த்தாவே, அவர்கள் கைகளின் செய்கைக்குத் தக்கப் பதிற்பலனை அவர்களுக்கு அளிப்பீர்.

௬௫. அவர்களுக்கு இருதயத்தின் முனைக்கேட்டைக் கொடுப்பீர். உம்முடைய சாபம் அவர்கள்மேலிருக்கும்.

௬௬. கோபமாய் அவர்களைப் பின்தொடர்ந்து அவர்களைக் கர்த்தருடைய வானங்களின் கீழிராதபடிக்கு அழித்துவிடுவீர்.

## ௪. அதிகாரம்.

[(௧) சீயோன் தன் பரிதாபமுள்ள ஸ்திதியைக் குறித்து துக்கிக்கிறது. (௰௩) தன் பாவங்களை அறிக்கையிட்டது. (௨௧) ஏதோம் பயமுறுத்தப்பட்டதும், (௨௨) சீயோன் தேற்றப்பட்டதும்.]

ஏத்தனையாய்ப் பொன் மங்கி நல்ல தங்கம் மாறிப் பரிசுத்தஸ்தலத்தின் கற்கள் சகல வீதிகளின் முனையிலுங் கொட்டுண்டு போயின.

௨. எத்தனையாய் அபரஞ்சி கொப்பிடப்பட்ட விலையேறப்பெற்ற சீயோன் குமாரர் குயவனுடைய கைகளின் வேலையான மண் பாண்டங்களுக்குச் சரியாக எண்ணப்படுகிறார்கள்.

௩. திமிங்கலங்களுமுதலாய்க் கொங்கைகளை நீட்டித் தங்கள் குஞ்சுகளுக்கு முலைகொடுக்கின்றன. என் சனமாகிய குமாரத்தியோ வனாந்தர சிவிங்கைப்போல் கொடூரமாயிருக்கவேணும்.

௪. பால்குடிக்குங் குழந்தையின் நாவு தாகத்தால் அதின் மேல் வாயோடே ஒட்டிக்கொண்டிருக்கிறது. குழந்தைகள் அப்பங்கேட்கின்றன. அவைகளுக்குக் கொடுப்பாரில்லை.

௫. ருசிவர்க்கங்களைச் சாப்பிட்டவர்கள் வீதிகளிற் பாழாய்க் கிடக்கிறார்கள். இரத்தாம

பர உடுப்பில்வளர்க்கப்பட்டவர்கள் குப்பைமேடுகளை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.

௬. * கைகளின் பிரயாசமில்லாமல் ஒரு கணப்பொழுதிலாகுமாப்போலே கீழ்த்துமேலதாக்கப்பட்ட சோதோமின் பாவத்தைப் பார்க்கிலும் என் சனமாகிய குமாரத்தியின் அக்கிரமம்பெரிதானது. * க. மோசே. ௰௯, ௨௪. ௨௫.

௭. அவர்களுடைய நசரேயர் உறைந்த மழையைப்பார்க்கிலும் சுத்தமும்,மகாசுப் புரவும், முத்துக்களைப்பார்க்கிலும் சுத்தாங்கமும், நீலக்கல்லிழைத்த மேனியுமாயிருந்தார்கள்.

௮. அவர்களுடைய உருவம் கறுப்பிலும் இருண்டுபோயிற்று. வீதிகளில் அறியப்படமாட்டார்கள். அவர்கள் தோல் அவர்கள் எலும்புகளுக்கொட்டிக்கொண்டு காய்ந்த மரத்துக்கொப்பாயின.

௯. பட்டயத்தால் கொலையுண்டவர்கள் பசியினால் கொலையுண்டவர்களைப்பார்க்கிலும் பாக்கியவான்களாயிருக்கிறார்கள், ஏனெனில்இவர்கள்வயல்களுடையவரத்தில்லாமையால் குத்துண்டிக்கொண்டுபோகிறார்கள்.

௰. * இரக்கமுள்ள ஸ்திரிகளின் கைகள் தங்கள் பிள்ளைகளைச் சமைத்தன, என் சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலில் அவைகள் அவர்களுக்கு ஆகாரமாயின. * உ, ௨௰.

௰௧. கர்த்தர் தமமுடைய சினத்தை நிறைவேற்றித் தமமுடையகோபத்தின் உக்கிரத்தை ஊற்றிப்போட்டுச் சீயோனில் அக்கினியைக்கொளுத்தினார். அது அதின் அஸ்திபாரங்களைப் பட்சித்துப்போட்டது.

௰௨. சத்துருவும், பகைஞனும் எருசலேமின் வாசல்களுக்குட்பிரவேசிப்பானென்கிறதைப் பூமியின் இராசாக்களும், பூச்சக்கரத்தினுடைய சகலகுடிகளும் நம்பாதேபோனார்கள்.

௰௩. அதின் நடுவில் நீதிமான்களின் இரத்தத்தைச் சிந்திப்போட்ட அதினுடைய தீர்க்கதரிசிகளின்பாவங்களினாலும்,அதினுடைய ஆசாரியர்களின் அக்கிரமங்களினாலும் அப்படிவந்தது.

௰௪. குருடர் வீதிகளில் அலைந்து அந்த இரத்தத்தால் கறைப்பட்டு ஒத்திப்போகக்கூடாததினால இவர்கள்வஸ்திரங்களைத்தொட்டார்கள்.

௰௫. விலகுங்கள் தீட்டுண்டாயிருக்கின்றன. தொடாமல் விலகுங்கள் விலகுங்களென்று அவர்களைநோக்கிக் கூப்பிட்டார்கள். மெய்யாய்ப் பறந்தும், அலைந்தும் போனார்கள். இனித் தங்கித் தங்கமாட்டார்களென்றுபுறச்சாதிகளுக்குள்ளே தான்சொல்லப்பட்டது.

௰௬. கர்த்தருடையமுகம் அவர்களைப் பிரித்துவிட்டது. அவர்களை இனிநோக்கார், ஆசாரியர்களுடைய முகத்தைப்பாராமலும், முதிர்ந்தவயதுள்ளவர்களுக்கு இரங்காமலும் போனார்கள்.

௰௭. இன்னம்நாங்களெங்கள் அபத்தமான சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள் கண்கள் பூத்துப்போயின. இரட்சிக்கமாட்டாதசாதிக்கு எதிர்பார்க்கவே எதிர்பார்த்தோம்.

௰௮. நாங்கள் எங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதபடிக்கு எங்கள் நடைகளைவேட்டையாடினார்கள். எங்கள்முடிவுசேர்ந்தது. எங்கள்நாள்கள் நிறைவேறிப்போயின. ஏனெனில், எங்கள்முடிவுவந்தது.

௰௯. எங்களைப்பின்தொடர்ந்தவர்கள் ஆகாசத்துக் கழுகுகளைப்பார்க்கிலும் வேகமாயிருந்தார்கள். பருவதங்களின்மேல் எங்களைக் கடிசாயத்தொடர்ந்தார்கள். வனாந்தரத்தில் எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.

௨௰. எங்கள் நாசியின்மூச்சாகிய கர்த்தர் அபிஷேகம்பண்ணினவருடைய நிழலிலே சாதிகளுக்குள்ளேபிழைப்போம் என்றோமே, * அவனிவர்கள் படுகுழிகளிற் பிடிபட்டான். * எரேமி. ௫௨, ௯.

௨௧. ஊத்ஸ்தேசத்திற்குடியிருக்கிற* ஏதோம்குமாரத்தியே, சந்தோஷித்துமகிழ். பாத்திரம் உன்னண்டைக்குந்தாண்டிவரும். அப்போது வெறித்துத் திறந்துகிடப்பாய்.
* எரேமி. ௪௯, ௰௨. சங்கீ. ௱௩௭, ௭.

௨௨. சீயோன்குமாரத்தியே * உன் அக்கிரமந்தீர்ந்தது, உன்னைப்புறஞ்சிறைபோகப்பண்ணார். ஏதோம் குமாரத்தியே! உன் அக்கிரமத்தைவிசாரிப்பார். உன் பாவங்களைத் திறந்துவைப்பார். * ஏசாயா. ௪௰, ௧. ௨.

## ௫. அதிகாரம்.

[(௧) பராபரனுக்குச்செலுத்தின செபத்திலே சீயோனுடைய பரிதாபமுள்ளமுறைப்பாடு.]

கர்த்தாவே, எங்களுக்கென்ன வந்ததென்று நினைத்துக்கொள்ளும். எங்கள் நிந்தையைநோக்கிப்பாரும்.

௨. எங்கள் சுதந்தரம் அன்னியர் வசமாகவும், எங்கள்வீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும் புரண்டுபோயின.

௩. திக்கற்றவர்களானோம். தகப்பனில்லை. எங்கள்தாய்கள் விதவைகளைப்போலிருக்கிறார்கள்.

௪. எங்கள் தண்ணீரைப்பணத்துக்கு வாங்கிக்குடிக்கிறோம். எங்கள் விறகு விலைக்கிரயமாய்வருகிறது.

௫. எங்கள்கழுத்துக்குப்பாரமாக ஓட்டப்படுகிறோம், நாங்கள் உழைத்திளைத்தாலும் எங்களுக்கிளைப்பாறுதலில்லை.

௬. அப்பத்தாலேதிர்ப்தியாகும்படிக்கும், எகிப்தியருக்கும், அசூரியருக்கும் எங்கள் கையைக்கொடுத்தோம்.

௭. எங்கள் பிதாக்கள் பாவஞ்செய்தார்கள்; அவர்களில்லை. * நாங்கள் அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம். * எரே. ௭, ௨௯.

௮. அடிமைகள் எங்களை யாளுகிறார்கள், எங்களை யவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.

௯. வனாந்தரத்திலிருக்கிற பட்டயத்தைத் தொட்டு எங்கள் அப்பத்தைப் பிராணமோசத்தோடே கொண்டுவருகிறோம்.

௰. பசியின் கடினத்தினாலே எங்கள் தோல் அடுப்பங்கரையைப்போலக் கறுத்துப்போயிற்று.

௰௧. சீயோனிலிருந்த ஸ்திரிகளையும், யூதா பட்டணங்களிலிருந்த கன்னியாஸ்திரிகளையும் அவமானப்படுத்தினார்கள்.

௰௨. பிரபுக்கள் அவர்கள் கையினாலே தூக்கிப்போடப்பட்டார்கள். * முதிர்ந்த வயதுள்ளவர்களின் முகங்கள் எண்ணப்படவில்லை. * ௫. மோசே. ௨௮, ௪௯. ௫௰.

௰௩. வாலிபரை எந்திரம் அரைக்கக் கொண்டுபோகிறார்கள். இளைஞர் விறகு சுமந்து இடறுண்கிறார்கள்.

௰௪. முதிர்ந்த வயதுள்ளவர்கள் வாசல்களில் உட்காருகிறதும், வாலிபர் கின்னரங்களை வாசிக்கிறதும் ஓய்ந்துபோயிற்று.

௰௫. எங்கள் இருதயத்தின் சந்தோஷம் ஒழிந்துபோயிற்று, எங்கள் களிகூருதல் துக்கமாக மாறிற்று.

௰௬. * எங்கள் தலையின் கிரீடம் விழுந்தது. ஆ, நாங்கள் பாவஞ்செய்ததினாலே எங்களுக்கு ஐயோ, * எரேமியா. ௰௩, ௰௮.

௰௭. அதினாலே எங்களிருதயம் பலட்சயமாயிற்று, அதினாலே யெங்கள் கண்கள் இருண்டுபோயின.

௰௮. பாழாய்க்கிடக்கிற சீயோன் பர்வதத்தின்மேல் நரிகள் ஓடித்திரிகின்றன.

௰௯. கர்த்தாவே, தேவரீர் என்றென்றைக்கும் இருக்கிறீர். * உம்முடைய ஆசனந் தலைமுறை தலைமுறையாக நிலைநிற்கும். * சங்கீதம். ௱௨, ௰௨.

௨௰. * தேவரீர் என்றைக்கும் எங்களை மறந்து நெடுங்காலமாக எங்களைக் கைவிட்டிருப்பானேன்! * சங்கீ. ௰௩, ௨.

௨௰௧. கர்த்தாவே, * எங்களையும் உம்மண்டைக்குத் திருப்பிக்கொள்ளும், அப்பொழுது திரும்புவோம், பூருவகாலத்துக்குச் சமானமாக எங்கள் நாட்களைப் புதியவைகளாக்கும். * எரேமியா. ௩௧, ௰௮.

௨௰௨. ஏனெனில், எங்களை வெறுக்கவே வெறுப்பீரோ! மிகுதியாகவும் எங்கள்மேல் கடுமையாயிருப்பீரோ!

எரேமியாவின் புலம்பல் முடிந்தது.

---

# எசேக்கியேலின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௫௱௯௫)

## ௧. அதிகாரம்.

[(௧) கேபார் நதியண்டையிலே எசேக்கியேலின் தீர்க்கதரிசனத்தின் காலமுதல், (௪) நாலு கேருபீன்களையும், (௰௫) நாலு உருளைகளையும், (௨௯) பராபரனுடைய மகிமையையுந் தரிசித்த தரிசனை.]

முப்பதாம் வருஷத்து நாலாம் மாதம் ஐந்தாந் தேதியிலே நான் கேபார் நதியண்டையிலே சிறையிருப்பானவர்களின் நடுவிலிருக்கும்போது சம்பவித்ததேதென்றால், வானங்கள் திறவுண்டு நான் பராபரனுடைய தரிசனைகளைக் கண்டேன். * சங்கீதம். ௱௩௭, ௧.

௨. அப்பொழுது * யோயாக்கீனென்ற இராசாவுடைய சிறையிருப்பின் ஐந்தாம் வருஷம், * ௨. இராசா. ௨௪, ௰௫.

௩. அந்த ஐந்தாந் தேதியிலே கல்தேயர் தேசத்திலுள்ள கேபார் நதியண்டையிலிருந்த பூசியென்ற ஆசாரியனுடைய குமாரனாகிய எசேக்கியேலுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகவேயுண்டாகி அங்கே கர்த்தருடைய கை அவன்மேல் வந்தது.

௪. இதோ வடக்கேயிருந்து பிசறுகாற்றும், பெரிய மேகமும், அத்தேசத்தோடே கலந்த அக்கினியும் வந்ததென்று கண்டேன். அதைச் சுற்றிலும் பிரகாசமும், அதின் நடுவில் அக்கினிக்குள்ளிருந்து விளங்கிய சொகுசாவின் உருவமுமுண்டாயிருந்தது.

௫. அதின் நடுவிலிருந்து புறப்படுகிற நாலு சீவன்களின் உருக்காணப்பட்டது, அவைகளின் உருவம் எப்படியெனில் அவைகள் மனுஷச்சாயலாயிருந்தன.

௬. * அவைகளில் ஒவ்வொன்றிற்கு நந்நான்கு முகங்களும், ஒவ்வொன்றிற்கு நந்நான்கு செட்டைகளுமிருந்தன. * ௰. அதி. ௰௪.

௭. அவைகளுடைய கால் செம்மையான காலானது, அவைகளுடைய உள்ளங்கால்க

கூாடுன

பர உடுப்பிலவார்க்கப்பட்டவர்கள் குப்பை மேடுகளை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.

௬. * கைகளின் பிரயாசமில்லாமல் ஒரு கணப்பொழுதிலாகுமாப்போலே கீழ்துமேலதாக்கப்பட்ட சோதோமின் பாவத்தைப் பார்க்கிலும் என் சனமாகிய குமாரத்தியின் அக்கிரமம்பெரிதானது. * க. மோசே. ௰௯, ௨௪. ௨௫.

௭. அவர்களுடைய நசரேயர் உறைந்த மழையைப்பார்க்கிலும் சுத்தமும், மகாசூப் புரவும், முத்துக்களைப்பார்க்கிலும் சுத்தாங்கமும், நீலக்கல்லிழைத்த மேனியுமாயிருந்தார்கள்.

௮. அவர்களுடைய உருவங் கறுப்பிலும் இருண்டுபோயிற்று. வீதிகளில் அறியப்படமாட்டார்கள். அவர்கள் தோல் அவர்கள் எலும்புகளுக்கொட்டிக்கொண்டு காய்ந்த மரத்துக்கொப்பாயின.

௯. பட்டயத்தால் கொலையுண்டவர்கள் பசியினால் கொலையுண்டவர்களைப்பார்க்கிலும் பாக்கியவான்களாயிருக்கிறார்கள், ஏனெனில்இவர்கள்வயல்களுடையவரத்தில்லாமையால் குத்துண்டிகளைந்துபோகிறார்கள்.

௰. * இரக்கமுள்ள ஸ்திரிகளின்கைகள் தங்கள்பிள்ளைகளைச்சமைத்தன, என்சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலில் அவைகள் அவர்களுக்கு ஆகாரமாயின. * ௨, ௨௰.

௰௧. கர்த்தர் தம்முடைய சினத்தை நிறைவேற்றித் தம்முடையகோபத்தின் உக்கிரத்தை ஊற்றிப்போட்டுச் சீயோனில் அக்கினியைக்கொளுத்தினார். அது அதின் அஸ்திபாரங்களைப் பட்சித்துப்போட்டது.

௰௨. சத்துருவும், பகைஞனும் எருசலேமின் வாசல்களுக்குட்பிரவேசிப்பானென்கிறதைப் பூமியின் இராசாக்களும், பூச்சக்கரத்திலுடைய சகலகுடிகளும் நம்பாதேபோனார்கள்.

௰௩. அதின்நடுவில் நீதிமான்களின் இரத்தத்தைச் சிந்திப்போட்ட அதிலுடைய தீர்க்கதரிசிகளின்பாவங்களினாலும், அதிலுடைய ஆசாரியர்களின் அக்கிரமங்களினாலும் அப்படிவந்தது.

௰௪. குருடர் வீதிகளில் அலைந்து அந்த இரத்தத்தால் கறைப்பட்டு ஒத்திப்போகக்கூடாததினாலே இவர்களவஸ்திரங்களைத்தொட்டார்கள்.

௰௫. விலகுங்கள்தீட்டுண்டாயிருக்கின்றன. தொடாமல் விலகுங்கள் விலகுங்களென்று அவர்களைநோக்கிக் கூப்பிட்டார்கள். மெய்யாய்ப் பறந்தும், அலைந்தும் போனார்கள். இனித் தங்கித் தங்கமாட்டார்களென்றுபுறச்சாதிகளுக்குள்ளே தான்சொல்லப்பட்டது.

௰௬. கர்த்தருடைய முகம் அவர்களைப் பிரித்துவிட்டது. அவர்களை இனிநோக்கார், ஆசாரியர்களுடைய முகத்தைப்பாராமலும், முதிர்ந்தவயதுள்ளவர்களுக்கு கிரங்காமலும் போனார்கள்.

௰௭. இன்னமும்நாங்களெங்கள் அபத்தமான சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள்கண்கள் பூத்துப்போயின. இரட்சிக்கமாட்டாதசாதிக்கு எதிர்பார்க்கவே எதிர்பார்த்தோம்.

௰௮. நாங்கள் எங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதபடிக்கு எங்கள்நடைகளைவேட்டையாடினார்கள். எங்கள்முடிவுசேர்ந்தது. எங்கள்நாட்கள் நிறைவேறிப்போயின. ஏனெனில், எங்கள்முடிவுவந்தது.

௰௯. எங்களைப்பின்றொடர்ந்தவர்கள் ஆகாசத்துக் கழுகுகளைப்பார்க்கிலும் வேகமாயிருந்தார்கள். பருவதங்களின்மேல் எங்களைக்கடிசாயத்தொடர்ந்தார்கள். வனாந்தரத்தில் எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.

௨௰. எங்கள் நாசியின்மூச்சாகிய கர்த்தர் அபிஷேகம்பண்ணிவைத்தவனுடைய நிழலிலே சாதிகளுக்குள்ளேபிழைப்போம் என்றோமே, * அவனிவர்கள் படுகுழிகளிற் பிடிபட்டான். * எரேமி. ௫௨, ௯.

௨௰௧. ஊத்ஸ்தேசத்திற்குடியிருக்கிற* ஏதோம்குமாரத்தியே, சந்தோஷித்துமகிழ். பாத்திரம் உன்னண்டைக்குந்தாண்டிவரும். அப்போது வெறித்துத் திறந்துகிடப்பாய்.
* எரேமி. ௪௯, ௰௨. சங்கீ. ௱௩௭, ௭.

௨௰௨. சீயோன்குமாரத்தியே * உன் அக்கிரமந்தீர்ந்தது, உன்னையப்புறஞ்சிறைபோகப்பண்ணார். ஏதோம்குமாரத்தியே! உன் அக்கிரமத்தைவிசாரிப்பார். உன் பாவங்களைத் திறந்துவைப்பார். * ஏசாயா. ௪௰, ௧. ௨.

## ௫. அதிகாரம்.

[(௧) பராபரனுக்குச்செலுத்தின செபத்திலே சீயோனுடைய பரிதாபமுள்ளமுறைப்பாடு.]

**க**ர்த்தாவே, எங்களுக்கென்ன வந்ததென்று நினைத்துக்கொள்ளும். எங்கள் நிந்தையைநோக்கிப்பாரும்.

௨. எங்கள் சுதந்தரம் அன்னியர் வசமாகவும், எங்களவீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும் புரண்டுபோயின.

௩. திக்கற்றவர்களானோம். தகப்பனில்லை. எங்கள்தாய்கள் விதவைகளைப்போலிருக்கிறார்கள்.

௪. எங்கள் தண்ணீரைப்பணத்துக்கு வாங்கிக்குடிக்கிறோம். எங்கள் விறகு விலைக்கிரயமாய்வருகிறது.

௫. எங்கள்கழுத்துக்குப்பாரமாக ஓட்டப்படுகிறோம், நாங்கள் உழைத்திளைத்தாலும் எங்களுக்கிளைப்பாறுதலில்லை.

௬. அப்பத்தாலேதிர்ப்தியாகும்படிக்கும், எகிப்தியருக்கும், அசூரியருக்கும் எங்கள் கையைக்கொடுத்தோம்.

௭. எங்கள் பிதாக்கள் பாவஞ்செய்தார்கள் அவர்களில்லை. * நாங்கள் அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம். * எரே. ௭, ௨௯.

௮. அடிமைகள் எங்களை யாளுகிறார்கள், எங்களை யவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.

௯. வனாந்தரத்திலிருக்கிற பட்டயத்தைத் தொட்டு எங்கள் அப்பத்தைப் பிராணமோக்ஷயத்தோடே கொண்டு வருகிறோம்.

௰. பசியின் கடினத்தினால் எங்கள் தோல் அடுப்பங்கரையைப்போலக் கறுத்துப்போயிற்று.

௰௧. சீயோனிலிருந்த ஸ்திரீகளையும், யூதா பட்டணங்களிலிருந்த கன்னியாஸ்திரீகளையும் அவமானப்படுத்தினார்கள்.

௰௨. பிரபுக்கள் அவர்கள் கையினாலே தூக்கிப்போடப்பட்டார்கள். * முதிர்ந்த வயதுள்ளவர்களின் முகங்கள் எண்ணப்படவில்லை. * ௫. மோசே. ௨௮, ௪௯. ௫௰.

௰௩. வாலிபரை எந்திரம் அரைக்கக்கொண்டுபோகிறார்கள். இளைஞர் விறகுசுமந்து இடறுகிறார்கள்.

௰௪. முதிர்ந்தவயதுள்ளவர்கள் வாசல்களில் உட்காருகிறதும், வாலிபர் கின்னரங்களை வாசிக்கிறதும் ஒழிந்துபோயிற்று.

௰௫. எங்களிருதயத்தின் சந்தோஷம் ஒழிந்துபோயிற்று, எங்கள் களிகூருதல் துக்கமாக மாறிற்று.

௰௬. * எங்கள் தலையின் கிரீடம் விழுந்தது. ஐயோ, நாங்கள் பாவஞ்செய்ததினாலே எங்களுக்கு ஐயோ, * எரேமியா. ௰௩, ௰௮.

௰௭. அதினாலே எங்களிருதயம் பலட்சயமாயிற்று, அதினாலேயெங்கள் கண்கள் இருண்டுபோயின.

௰௮. பாழாய்க்கிடக்கிற சீயோன் பருவதத்தின்மேல் நரிகள் ஓடித்திரிகின்றன.

௰௯. கர்த்தாவே, தேவரீரோ என்றென்றைக்குமிருக்கிறீர். * உம்முடைய ஆசனந் தலைமுறை தலைமுறையாக நிலைநிற்கும். * சங்கீதம். ௱௨, ௰௩.

௨௰. * தேவரீர் என்றைக்குமெங்களை மறந்து நெடுங்காலமாக எங்களைக் கைவிட்டிருப்பானேன்! * சங்கீ. ௰௩, ௨.

௨௰௧. கர்த்தாவே, * எங்களையும்மண்டைக்குத் திருப்பிக்கொள்ளும், அப்போது திரும்புகிறோம், பூருவகாலத்துக்குச் சமானமாக எங்கள் நாள்களைப் புதியவைகளாக்கும். * எரேமியா. ௩௧, ௰௮.

௨௰௨. ஏனெனில், எங்களை வெறுக்கவே வெறுப்பீரோ! மிகுதியாகவும் எங்கள்மேல் கடுமையாயிருப்பீரோ!

எரேமியாவின் புலம்பல் முடிந்தது.

# எசேக்கியேலின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். ௫௱௯௫)

## ௧. அதிகாரம்.

[(௧) கேபார் நதியண்டையிலே எசேக்கியேலின் தீர்க்கதரிசனத்தின் காலமுதல், (௪) நாலு கேருபீன்களையும், (௰௫) நாலு உருளைகளையும், (௨௬) பராபரனுடைய மகிமையையுந் தரிசித்த தரிசனை.]

முப்பதாம் வருஷத்து நாலாம் மாதம் ஐந்தாந் தேதியிலே நான் கேபார் நதியண்டையிலே சிறையிருப்பானவர்களின் நடுவிலிருக்கும்போது சம்பவித்ததேதென்றால், வானங்கள் திறவுண்டு நான் பராபரனுடைய தரிசனைகளைக் கண்டேன். * சங்கீதம். ௱௩௭, ௧.

௨. அப்போது * யோயாக்கீனென்ற இராசாவுடைய சிறையிருப்பின் ஐந்தாம் வருஷம், * ௨. இராசா. ௨௪, ௰௫.

௩. அந்த ஐந்தாந் தேதியிலே கல்தேயர் தேசத்திலுள்ள கேபார் நதியண்டையிலிருந்த பூசியென்ற ஆசாரியனுடைய குமாரனாகிய எசேக்கியேலுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகவேயுண்டாகி அங்கே கர்த்தருடைய கை அவன்மேல் வந்தது.

௪. இதோ வடக்கேயிருந்து பெருங்காற்றும், பெரியமேகமும், அந்தத் தேசத்தோடே கலந்த அக்கினியும் வந்ததென்று கண்டேன். அதைச் சுற்றிலும் பிரகாசமும், அதின் நடுவில் அக்கினிக்குள்ளிருந்து விளங்கிய சொகுசாவின் உருவமுமுண்டாயிருந்தது.

௫. அதின் நடுவிலிருந்து புறப்படுகிற நாலு ஜீவன்களின் உருக்காணப்பட்டது, அவைகளின் உருவம் எப்படியெனில் அவைகள் மனுஷச்சாயலாயிருந்தன.

௬. * அவைகளில் ஒவ்வொன்றிற்கு நந்நான்கு முகங்களும், ஒவ்வொன்றிற்கு நந்நான்கு செட்டைகளுமிருந்தன. * ௰. அதி. ௰௪.

௭. அவைகளுடைய கால் செம்மையான காலானது, அவைகளுடைய உள்ளங்கால்க

ளோ சன்னுக்குட்டியின் உள்ளங்கால்களுக்கொப்பாயிருந்தன. துலக்கப்பட்ட வெண்கலத்தின் வருணமாய் மின்னிக்கொண்டிருந்தன.

௮. அவைகளுடைய செட்டைகளின் கீழ் அவைகளின் நாலுபக்கங்களிலும் * மனுஷர் கைகளிருந்தன. நாலுக்கும் அதினதின் முகங்களும், அதினதின் செட்டைகளுமுண்டாயிருந்தன. * ௰. அதி. ௰௮.

௯. அவைகள் ஒவ்வொன்று தன்தன் செட்டைகளை மற்றதின் செட்டைகளோடே சேர்த்தன. அவைகள் நடக்கையில் திரும்பிக்கொள்ளாமல் ஒவ்வொன்று தன்தன் முகத்திற்கெதிரான திக்குக்கு நேர்க்கே நடந்தன.

௰. * அவைகளுடைய முகங்களின் சாயலேதெனில், அவைகளுக்கு மனுஷமுகங்களும், அவைகள் நாலுக்கும் வலதுபுறத்திலே † சிங்கமுகங்களும், அவைகள் நாலுக்கும் இடதுபுறத்திலே எருதுமுகங்களும், அவைகள் நாலுக்குங் கழுகுமுகங்களுமிருந்தன. * ௰. அதி. ௰௪. அறி. ௪, ௭. † ௧. இராசா. ௭, ௨௯.

௰௧. அவைகளுடைய முகங்களும், அவைகளுடைய செட்டைகளும் உயரப்பிரிந்திருந்தன. ஒன்றோடொன்று சேர்ந்த இரண்டிரண்டு செட்டைகள் ஒவ்வொன்றிற்கிருந்தன. இரண்டிரண்டு செட்டைகளோ அவைகளுடைய சரீரங்களை மூடின.

௰௨. ஒவ்வொன்று தன்தன் முகத்திற்கெதிரான திக்குக்கு நேர்க்கே நடந்தன. ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்திற்கும் அவைகள் போயின, போகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௩. ஜீவன்களுடைய சாயல் என்னமாயிருந்ததெனில், அவைகள் எரிகிற அக்கினியினுடைய தழலின் உருவமும், தீவெட்டிகளின் உருவமுமானவைகள், இந்த அக்கினி ஜீவன்களுக்குள்ளே நடமாடிக்கொண்டு பிரகாசமாயிருந்தது, அக்கினியிலிருந்து மின்னல் புறப்பட்டது.

௰௪. ஜீவன்கள் மின்னலின் உருவமாக ஓடித்திரிந்தன.

௰௫. நான் இந்த ஜீவன்களைப் பார்த்துக்கொண்டிருக்கையில் இதோ, பூமியின்மேல் ஜீவன்களண்டையிலே ஒரு உருளை தனக்கிருக்கும் நாலுமுகங்களின்படி நின்றது.

௰௬. * உருளைகளின் உருவமும், அவைகளின் வேலையும் தர்ஷீஸ் இரத்தினத்தின் வருணமானது, அவைகள் நாலுக்கும் ஒரேவிதச்சாயலுண்டாயிருந்தது, அவைகளின் உருவமும், அவைகளின் வேலையும் உருளையின் நடுவில் உருளையிருக்குமாப்போலே காணப்பட்டன. * ௰, அதி. ௯. ௰. ௧. இராசா. ௭, ௩௰.

௰௭. அவைகள் ஓடுகையில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும், ஓடுகையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.

௰௮. அவைகளின் சக்கரங்களோவென்றால் பயங்கரமான உயர்ச்சியாயிருந்தன. நாலினுடைய சக்கரங்களுஞ் சுற்றிலுங் கண்களால் நிறைந்திருந்தன. * ௰. அதி. ௰௨.

௰௯. ஜீவன்கள் நடக்கையில் உருளைகள் அவைகளருகே ஓடின, ஜீவன்கள் பூமியிலிருந்தெழும்புகையில் உருளைகளுமெழும்பின.

௨௰. ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்விடத்திற்கும் அவைகள் போயின. அவ்விடத்திற்கு அவைகளின் ஆவியும் போகவேண்டுமென்றிருந்தது. உருளைகளும் அவைகளருகே எழும்பின. ஏனென்றால் ஜீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

௨௧. அவைகள் போகையில் இவைகள் போயின, அவைகள் நிற்கையில் இவைகள் நின்றன, அவைகள் பூமியிலிருந்தெழும்புகையில், உருளைகள் அவைகளருகே எழும்பின, ஏனென்றால் ஜீவனுடைய ஆவி உருளைகளிலிருந்தது.

௨௨. ஜீவனுடைய தலைகளின்மேலோவென்றால் பயங்கரமான பளிங்கின் துலக்கமாய் ஒரு மண்டலமிருந்தது, அவைகள் உயர அவைகளுடைய தலைகளின்மேல் விரிந்திருந்தது.

௨௩. மண்டலத்தின் கீழ் அவைகளுடைய செட்டைகள் ஒன்றுக்கொன்றெதிராகச் செம்மையாய் விரிந்திருந்தன, தங்கள் தங்கள் சரீரங்களை மூடிக்கொள்ளுகிற இரண்டிரண்டு செட்டைகள் இந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலுமிருக்கிற ஒவ்வொன்றிற்குமிருந்தது.

௨௪. அவைகள் நடக்கையில் நான் அவைகளுடைய செட்டைகளின் இரைச்சலைத் திரளான தண்ணீர்களின் இரைச்சலாகவும், சர்வத்திற்கும் வல்லவருடைய சத்தமாகவுங் கேட்டேன், ஒரு இராணுவத்தின் இரைச்சலுக்கொத்த அரவத்தின் சத்தமாயிருந்தது. அவைகள் நிற்கையில் தங்கள் செட்டைகளைத் தளரவிட்டன.

௨௫. அவைகள் நின்று தங்கள் செட்டைகளைத் தளரவிட்டிருக்கையில் அவைகளுடைய தலைகளுக்குமேலான மண்டலத்தின் மீதிலிருந்து சத்தம் பிறந்தது.

௨௬. அவைகளுடைய தலைகளுக்குமேலான மண்டலத்தின்மீதில் நீலக்கல்லின் உருவுக்கொத்த இராசாசனத்தினுடைய சாயலும், உயர இராசாசனத்தினுடைய சாயலின்மேலே மனுஷனுக்கொத்த சுரூபமுமிருந்தது.

௨௭. அவருடைய இடுப்பின் உருவைத் துவக்கி மேலெல்லாம் உட்புறஞ் சுற்றிலும் அக்கினிக்காந்தியான சொக்குச்சாவின் நிறமாகக் கண்டேன், அவருடைய இடுப்பின் உருவைத் துவக்கிக் கீழெல்லாம் அக்கினியுருவமாகவும், அதைச் சுற்றிலும் பிரகாசமாகவுங் கண்டேன்.

உஅ. மழைநாளில மேகததில வானவில லெபபடிககாணபபடுகிறதோ, அபபடிச சுறறிலுமுணடான அநதபபிரகாசங்காணப் படடது. இதுவே கர்ததருடைய மகிமை யினுடையசாயலினதரிசனையாயிருநதது * அதைநானபார்ததபோது நான முகங்குப் புறவிழுநது, பேசுகிற ஒருவருடையசத்தத் தைககேடடேன. * தானியேல. ய, கூ.

## உ. அதிகாரம்.

[(க) எசேகியேலனுபபப்படடது. (சா) அவனுககுக்கொடுககபபடடகற்பனை. (கூ) அவனுடைய பாரமானதீர்ககதரிசனததின சுருள.]

அவர்எனனுடனே, மனுஷபுததிரனே, * உனபாதஙகளினமேலநில, உன னுடனே பேசுவோமெனறார். * தானியேல. ய, யக.

உ. இபபடியவர் எனனுடனே சொலலு கிறபோது, * ஆவி எனககுளவநது எனனை யெனபாதஙகளினமேல நிறுததிறறு. அப போது எனனுடனேபேசுகிறவரின வசனத தைககேடடேன. * கூ, அதி. உச.

ஙூ. அவர் எனனுடனே சொனனதாவது; மனுஷபுததிரனே நமககுவிரோதமாய எழு மபின கலகக்காரசசாதியாகிய இஸ்ரவேல புததிரரணடைககு நாம உனனையனுபபுகி றோம, அவர்களும, அவர்கள பிதாககளும இநநாளவரைககுமே நமககு விரோதமாய ததுரோகஞசெயதார்கள.

ச. * அவர்கள கடினமுகமும, முருட்டா டடமான இருதயமுமுள்ளபுததிரர் அவர்க ளணடைககுநாமுனனையனுபபுகிறோம, கர் ததராகியஆணடவர்இனனதினனதையுரைக் கிறாரெனறு அவர்களோடேசொலவாயாக. * எசாயா. சஅ, ச. எரேமியா. ரு, ஙூ.

ரு. கலகவீடடாராகிய அவர்களகேடடா லும, கேளாவிடடாலுந * தஙகளுககுள ளே ஒருதீர்ககதரிசியிருககிறதை யவர்கள அறியவேணடும. * ஙூ, அதி. யஎ.

சா. மனுஷபுததிரனே, * நீ யவர்களுககுப பயப்படாயாக, அவர்கள வார்ததைகளுக குமபயபபடாயாக, முருடடாட்டககார ரும்,முளளுகளும்உனனிடததிலிருநதாலும், * நீ தேளகளிடததிலே தஙகியிருநதாலும நீ யவர்கள வார்ததைகளுககுப பயபபடா மலும † அவர் முகததிறகுக்கலஙகாமலு மிருபபாயாக. ஏனெனில, அவர்களகலகவீ டடார். * எரே. க, அ. † க.பேது. ஙூ,யச.

எ. கலகக்காரராகிய அவர்களகேடடாலு ம், கேளாவிடடாலும நீ நமமுடைய வார்த் தைகளையவர்களோடேசொலவாயாக.

அ. மனுஷபுததிரனே, நீயோவெனறாலகல கவீடடாரைபபோற கலகக்குணமாயிரா மல, நாம உனனோடேசொலலுகிறதைக கேள, உனவாயைததிறநது * நாம உனக குககொடுககிறதைபபுசியெனறார். * அறிவிபபு. ய, கூ.

கூ. அபபோது இதோ, எனனணடைககு நீடடப்படடகையைககணடேன. இதோ, அதிலே ஒருபுஸ்தகசசுருள.

ய. அவர் அதையெனககுமுனபாக விரித தார், அது முற்புறமும, பிற்புறமும எழுதப படடதாயிருநதது, அதிலேபுலமபலகளும, தவிபபும, ஐயோ எனபதும்எழுதியிருநதது.

## ஙூ. அதிகாரம்.

[(க) எசேகியேல சுருளைபபுசிததது. (ச) பராபரன அவனைததைரியபபடுததினது. (யரு) தீர்ககதரிசனததின சடடததை அவ னுககுககாடடினது. (உஉ) தீர்ககதரிசி யினவாயைமூடினதும, திறநததும.]

பிற்பாடு அவரெனனுடனே மனுஷபுத் திரனே * நீகாணகிறதைபபுசி, இந தச்சுருளை நீ புசிததுபபோய இஸ்ரவேல வீடடாரோடேபேசெனறார்.

உ. அபபடியே என வாயைததிறநதேன. அபபோது அவர் அநதசசுருளை யெனககுப் புசிககக்கொடுததது,

ஙூ. எனனுடனே மனுஷபுததிரனேநாமுனக் குககொடுககிற இநதசசுருளை நீயுனவயிறறி லேயுட்கொணடு அதினாலுனகுடலகளைநிரப புவாயாகவெனறார், அபபோது அதைபபுசி ததேன, * அது எனவாயிலே தேனைபபோ லததிததிப்பாயிருநதது. * அறிவிபபு. ய, ய.

ச. பிறகு அவர் எனனுடனே சொனனதா வது; மனுஷபுததிரனே, நீபோய இஸ்ரவே லவீடடாரிடததிலேசேர்நது நமமுடைய வார்ததைகளைககொணடு அவர்களோடே பேசு.

ரு. ஏனெனறால, அடக்கமானஉதடும,அறி ய அரிதானபாஷையுமுளளசனததணடைக கலல, இஸ்ரவேலவீடடாரணடைககே நீய னுப்பப்படுகிறாய.

சா. அடககமான உதடும, தாஙகளசொல லுமவார்ததைகளை நீ யுணரமாட்டாத அரி தானபாஷையுமுளள அநேக சனசதஙக ளணடைககுநீயனுப்பப்படுகிறதுமிலலையே. நாம அவர்களணடைககுனனை யனுபபினு லும அவர்களுனககுக் கேள்விகொடாதிருப பார்களோ!

எ. இஸ்ரவேலவீடடாரோவெனில, உனக குக கேள்விகொடுககமாட்டோமெனபார் கள. ஏனெனில,நமககுததானே கேள்விகொ டுககமாடடோமெனகிறார்கள. அதேனென றால, இஸ்ரவேலவீடடார் அனைவரும் *முரு டடாட்டநெறறியும, கடின இருதயமுமுள ளவர்கள. * உ. அதி. ச.

அ. இதோ, * உனமுகததையவர்களமுக ததிற கெடுபாகக்கெட்டியும, உனநெறறி

யையவர்கள நெறறிககெதிராகக்கெடடியு மாககுகிறேம. * எரேமி. ௧, ௰௮.

௯. உனநெறறியை வசகிரததைடபோல வும, கனமலையைபபார்ககிலுங கெடடியு மாககிறேம, அவர்களகலகமுளள வீடடா ரெனறு நீ யவர்களுககுபபயபபடாமலும், அவர்களமுகஙகளுககுக் கலஙகாமலுமிருப பாயாகவெனறுர்.

௰. பினனையும அவர் எனனேடேசொனன தாவது; மனுப்புததிரனேநாமஉனனுடனே சொலலும, நமமுடையவார்ததைகளையெல் லாமநீயுனனிருதயததுககுளளேறறுககொ ணடு உனசெவிகளாலேகேடடு,

௰௧. நீ போயசசிறையிருபபான உனசன ததினபுததிரரிடததிலேசேர்நது * அவர்க ளகேடடாலும, கேளாவிடடாலும அவர்க ளுடனேபேசிக்கர்ததராகிய ஆணடவர்இன னதினனதையுரைககிறரெனறு அவர்களோ டேசொலவாயாகவெனறுர். *௨, அதி. ௫,எ.

௰௨. * அபபோது ஆவியெனனையேறெடு ததுக்கொணடது, தனதானத்திலிருநதுவிள ஙகிய கர்ததருடைய மகிமையஸ்தோததிரிக கபபடககடவதெனறு எனககுபபினனுகச் கூபபிடமகா அதிர்தலினசத்தத்தையும, * அ. அதி. ௩.

௰௩. ஒனறேடொனறுசேருகிற சீவனகளு டையசெடடைகளின இரைச்சலையும்,அதற கெதிரோயோடிய உருளைகளினஇரைசசலையு ம்,மகாஅதிர்தலினசத்தத்தையுஙகேடடேன

௰௪. ஆவியெனனையேறெடுததுககொணட து. நானென் ஆவியின உககிரததினுலே கச பபோடடேபோனேன. ஆனுற கர்ததருடைய கையெனமேற பெலனுயிருநதது.

௰௫. கேபார்நதியணடையிலே தெல அவீ பிலேதாபரிக்கிற சிறையிருபபானவர்களண டைககு நானவநது அவர்கள தாபரிககிற தலததிலே தாபரிதது, ஏழுநாள அவர்கள நடுவிலே பிரமிததவனுயத் தஙகினேன்.

௰௬. ஏழுநாளின முடிவிலே சமபவிதததே தெனறுல, கர்ததருடையவார்ததை யெனக குணடாகி அவர்சொனனதாவது;

௰௭. மனுபபுததிரனே, * உனனை இஸ்ர வேலவீடடாருககுக் காவறகாரனுக வைத தோம. நீ நமமுடையவாயினுலேவார்ததை யைககேடடு, நமமுடையநாமததிலே அவர் களையெச்சரிபபாயாக. * ௩௩, அதி. எ—௯.

௰௮ சாகவே சாவாயெனறு நாம ஆகாத வனுககுச்சொலலுகையில நீ யவனையெச்ச ரிககாமலும, நீ ஆகாதவனைததனஆகாதவ ழியிலிராதபடிககு எசசரிககததககதாகவு ம, அவனை யுயிரோடேகாககததககதாகவு மதை யவனுககுசசொலலாமலுமிருநதால, அநத ஆகாதவன தன அக்கிரமததிலே சா வான. ஆனுல அவன இரததபபழியை யுன கையிலேகேட்போம.

௰௯. நீ ஆகாதவனையெசசரிததும, அவன தன ஆகாதியததையும, தன ஆகாதவழி யையுமவிடடுத திருமபாதேபோனுனேயா கில அவனதன அககிரமததிலேசாவான, நீயோவெனில உனனுததுமாவைத தபபப் பணணினுய.

௨௰. அபபடியே * நீதிமானதன நீதியை விடடுததிருமபி, நீதிகேடுசெயயும்போதும், நாம அவனமுன இடறலைவைககும்போதும் அவனசாவான, நீயவனையெசசரிக்காதபடி யினுலேதனபாவததிலேசாவான, அவனசெ யத நீதிகள நினைககபபடுவதிலலை, அவனு டைய இரததபபழியையோ உனகையிலே கேட்போம. * ௰௮. அதி. ௨௪. ௩௩. ௰௨. ௰௩.

௨௧. நீயோவெனறுல நீதிமான பாவஞ செயயாதபடிககு நீதிமானையெசசரிதத பி றகு அவனபாவஞசெயயாவிடடால அவன பிழைககவேபிழைபபான.ஏனெனில,எசசரி ககபபடடுபபோனுன, நீயும் உனனுததுமா வைததபபப்பணணினுயெனறுர்.

௨௨. அவவிடததிலே *கர்ததருடையகை யெனமேலவநது, அவரெனனுடனே நீயெ ழுநதிருநது பளளததாக்குககுபபுறபபடடு பபோ, அஙகேயுனனுடனே பேசுவோமெ னறுர். * ௧. அதி. ௩.

௨௩. அபபடியேயெழுநதிருநது பளளத தாக்குக்குபபுறபபடடுபபோனேன, இதோ * நானகேபார்நதியணடையிலேகணடமகி மைககுசசரியாக, அஙகே கர்ததருடைய மகிமைநினறது, அபபோது நான முகங குப்புறவிழுநதேன. * ௧. அதி. ௩. ௰௯

௨௪. ஆனுல * ஆவியெனககுளவநது என னை யெனபாதஙகளினமேல நிறுததிறறு, அபபோது அவர் எனனுடனேபேசி எனக குசசொனனதாவது; நீபோய உனவீடடுக குளளே யுனனை யடைததுககொணடிரு. * ௨. அதி. ௨.

௨௫. ஏனெனில, இதோ, மனுபபுததிரனே உனமேற கயிறுகளைபபோடடு அவைகளா ல உனனைக்கடடபபோகிறுர்கள, ஆகையா ல நீயவர்களுககுட் புறபபடாயாக.

௨௬. நாம உன நாவை யுனமேலவாயோ டொடடிககொளளபபணணுவோம. நீயவ ர்களுககுக் கடிநதுகொளளுகிற மனுஷனு யிராமலஊமையாயிருபபாய. ஏனெனறுல, அவர்கள கலகவீடடார்.

௨எ. நாம உனனேடே சொலலுமபோ தோவெனில, உனவாயைததிறபபோம, அ பபோது, கர்ததராகிய ஆணடவர்இனனதி னனதையுரைததாரெனறு அவர்களோடே சொலவாயாக, * கேட்கிறவனகேட்பான. கேளாதவனகேளாதிருபபான. ஏனெனறுல, அவர்களகலகவீடடார். * ௨, ௫. எ.

## ௪. அதிகாரம்.

[(௧) முற்றிக்கையின் அடையாளத்திலே எரோபோயாமின் பின்வாங்குதல் முதல் சிறையிருப்புவரைக்கும் உண்டாகிய காலத்தைக் காட்டினது. (௯) முற்றிக்கைக்காகச் செய்த எத்தனத்திலே பஞ்சத்தின் கொடுமையைக் காட்டினது.]

இப்போதும் மனுப்புத்திரனே நீ ஒரு செங்கல்லை யெடுத்துக்கொண்டு அதை யுன்முன்னே வைத்து, அதின்மேல் எருசலேம் என்ற பட்டணத்தைப் பதித்து,

௨. * அதற்கு விரோதமாய் முற்றிக்கைபோட்டு அதற்கு விரோதமாக் கொத்தளங்களைக் கட்டி அதற்கு விரோதமாக அணைபோட்டு, அதற்கு விரோதமாக இராணுவங்களை நிறுத்தி சுற்றிலும் அதற்கு விரோதமாக மதிலை முட்டும் எந்திரங்களை வை.

* ௨. இராசா. ௨௫, ௧.

௩. நீயோவென்றால், இருப்புச்சட்டியை வாங்கிக்கொண்டு அதை யுனக்கும், பட்டணத்திற்கும் நடுவாக இருப்புச்சுவராக்கி, அது முற்றிக்கையாய்க் கிடக்கும்படிக்கு உன்முகத்தை யதற்கு நேராகத்திருப்பி அதை முற்றிக்கை போட்டுக்கொண்டிரு அது இஸ்ரவேல் வீட்டுக்கடையாளம்.

௪. நீயோவெனில், உன்னிடதுபக்கமாய் ஒருக்களித்து இஸ்ரவேல் வீட்டாரின் அக்கிரமத்தை யதின்மேலே சுமத்திக்கொள். நீ யந்தப்பக்கமாய் ஒருக்களித்திருக்கும் நாட்களின் இலக்கத்திற்குத் தக்கதாக அவர்களுடைய அக்கிரமத்தைச் சுமப்பாயாக.

௫. ஏனெனில், அவர்களுடைய அக்கிரமத்தின் வருஷங்களை நாட்களாக எண்ணுங் கணக்காய் உனக்குக் கட்டளையிட்டோம், முந்நூற்றுத்தொண்ணூறு நாட்களாக நீ இஸ்ரவேலின் வீட்டாரின் அக்கிரமத்தைச் சுமக்க வேண்டும்.

௬. நீ இவைகளை நிறைவேற்றின்பிறபாடு மறுபடியும் உன்வலதுபக்கமாய் ஒருக்களித்து யூதாவீட்டாரின் அக்கிரமத்தை நாற்பதுநாளாகச் சுமக்கவேண்டும், ஒவ்வொரு வருஷத்திற்கு ஒவ்வொருநாளை யுனக்குக் கட்டளையிட்டோம்.

௭. நீ எருசலேமின் முற்றிக்கைக்கு நேராகத்திருப்பிக்கொண்ட முகமாகவும், திறந்த புயமாகவுமிருந்து அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ்சொல்வாயாக.

௮. இதோ, நீ முற்றிக்கைபோடுதலின் நாட்களை நிறைவேற்றுமட்டாக ஒருபக்கத்திலிருந்து மறுபக்கத்திற் புரளக்கூடாதபடிக்கு உன்மேலே கயிறுகளைப்போடுவோம்.

௯. இப்போதும் நீ கோதுமையையும், வாற்கோதுமையையும், பெரும்பயற்றையும், சிறுப்பயற்றையும், சாமையையும், கம்பையும் வாங்கி அவைகளை யொருபாண்டத்திலே போட்டு, அவைகளால் உனக்கு அப்பஞ் சுடுவாயாக, நீ யொருக்களித்துப் படுக்கும் நாட்களுடைய இலக்கத்தின்படியே முந்நூற்றுத்தொண்ணூறு நாள் அதைச் சாப்பிடுவாயாக.

௰. நீ சாப்பிடும் போசனப்படி நாளொன்றிற்கு இருபதுசேக்கல் நிறையாயிருப்பது, அப்படி நாளுக்குநாள் சாப்பிடுவாயாக.

௰௧. தண்ணீரையும் அளவாய் ஈனிலே ஆறிலொருபங்கைக் குடிப்பாயாக, அப்படி நாளுக்குநாள் குடிக்கக்கடவாய்.

௰௨. அதை வாற்கோதுமையினுடைய அடையின்சாயலாக்கிச் சாப்பிடுவாயாக, அது மனுஷனிலிருந்து கழிந்த கஷ்டத்தின் வறட்டிகளால் அவர்கள் கண்களுக்கு முன்பாகச் சுடப்படுவதாக.

௰௩. அதற்கொத்தபடியே இஸ்ரவேல் புத்திரர் நாம் தங்களைத் துரத்துகிற புறசாதிகளுக்குள்ளே தங்கள் அப்பத்தைத் தீட்டுள்ளதாகச் சாப்பிடுவார்களென்று கர்த்தர் சொன்னார்.

௰௪. அப்போது நான் ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, என்னுத்துமாத் தீட்டுப்பட்டதில்லை, தானாய்ச் செத்ததையாகிலும் பீறுண்டதையாகிலும் நான் என்சிறுவயதுதுவக்கி யிதுவரைக்குஞ் சாப்பிட்டதில்லை, அருவருப்பான இறைச்சி என்வாய்க்குட்பட்டதுமில்லையென்றேன்.

௰௫. அப்போது அவர் என்னுடனே: பார், மனுஷகஷ்டத்தின் வறட்டிகளுக்குப் பதிலாக உனக்கு மாட்டுச்சாணி வறட்டிகளைக் கட்டளையிடுகிறோம், அவைகளின்மேல் உன் அப்பத்தைச் சுடுவாயாகவென்றார்.

௰௬. பிறபாடு அவர் உரைத்ததாவது; மனுப்புத்திரனே, இதோ, அப்பமும், தண்ணீரும் அவர்களுக்குக் குறையவும், ஒருவனொருவன் திகைக்கவும், அவர்கள் தங்கள் அக்கிரமத்திலே வாடிப்போகவும்,

௰௭. நாம் எருசலேமிலே * அப்பத்தின் ஆதரவுகோலையுடைக்கிறோம், அவர்கள் அப்பத்தை நிறையின்படியேயும், விசாரத்தோடேயும் சாப்பிட்டுத் தண்ணீரை அளவின்படியேயும், திகைத்தலோடேயுங் குடிப்பார்கள். * ௫. அதி. ௰௬. ௰௪. அதி. ௰௩, ௯. யோசே. ௨௬, ௨௬.

## ௫. அதிகாரம்.

[(௧) தலைமயிரின் அடையாளத்திலே, (௫) எருசலேமின் கலகத்துக்காக, (௰௨) பஞ்சத்தினாலும், பட்டயத்தினாலும், சிதறிப்போவதினாலும் அதின்மேல் வரும் நியாயத்தீர்ப்பைக் காட்டினது.]

பின்னையும் மனுப்புத்திரனே, சவரகர் கத்தியாகிய கருக்கான கத்தியை வா

ங்கிக்கொள், அதைவாங்கி அதினாலே உன் தலையையும், உன்தாடியையுஞ் சிரைத்துக்கொண்டு பிறகு நிறுக்குந்தராசைவாங்கி மயிரைப்பங்கிட்டக்கடவாய்.

௨. மூன்றத்தொருபங்கை முற்றிக்கைபோடு மநாள்கள் முடிகிறபோது நீ பட்டணத்தின் நடுவிலே அக்கினியாற்சுட்டெரித்து, மூன்றத்தொருபங்கைவாங்கி அதைப்பிதைச்சுற்றிலுங்கத்தியாலே தட்டி மூன்றத்தொருபங்கைக்காற்றிலே தூற்றக்கடவாய், அவைகளின்பிறகாலே நாம் பட்டயத்தையுருவுவோம்.

௩. இவைகளிற் கொஞ்சமாத்திரமெடுத்து அவைகளையுன் வஸ்திரத்தொங்கல்களில் முடிந்துவைப்பாயாக.

௪. பின்னுமிவைகளிற் சிலவற்றையெடுத்து அவைகளைத்தீயின்நடுவிலெறிந்து அவைகளையக்கினியாற்சுட்டெரிப்பாயாக. இதிலிருந்து இஸ்ரவேல்வீட்டாரனைவருக்கும் விரோதமாக அக்கினிபுறப்படும்.

௫. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இதுபுறச்சாதிகளின் நடுவிலேநாம் வைத்ததும், சுற்றிலுந்தேசங்களிருக்கிறதுமான எருசலேம்.

௬. அதுபுறச்சாதிகளைப்பார்க்கிலும் நம்முடைய நியாயங்களையும், தன்னைச்சுற்றிலுமிருக்கிற தேசங்களைப்பார்க்கிலும் நம்முடைய கட்டளைகளையும் அக்கிரமியமாக மாற்றிப்போட்டது. ஏனெனில், நம்முடைய நியாயங்களைவெறுத்து நம்முடைய கட்டளைகளில் நடவாதேபோனார்கள்.

௭. ஆகையாற் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; * உங்களைச்சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளைப்பார்க்கிலும் அதிகரிக்கிறவர்களாகிய நீங்கள் நம்முடைய கட்டளைகளிலே நடவாமலும், நம்முடைய நியாயங்களைச்செய்யாமலும், உங்களைச்சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளுடைய நீதிநியாயங்களின்படிமுதலாய்ச்செய்யாமலும்போனபடியினாலே, * ௰௧. அதிகாரம். ௰௨.

௮. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இதோ, நாம் நாமேயுனக்குவிரோதமாய்வந்து, புறச்சாதிகளுடைய கண்களுக்குமுன்பாக உன் நடுவிலே நியாயங்களைச்செய்து,

௯. நாம் செய்யாதிருக்கிறதும், இனிச்செய்யாதிருப்பதுமான விதமாய் உனக்கு உன்னுடைய எல்லா அருவருப்புகளினிமித்தமும் செய்வோம்.

௰. ஆனதுகொண்டு * உன் நடுவிலே பிதாக்கள் பிள்ளைகளைத்தின்பார்கள், பிள்ளைகள் பிதாக்களைத்தின்பார்கள், நாம் உன்னில் நியாயங்களைச்செய்து, உன்னில் மீதியாயிருப்பவர்களையெல்லாஞ் சகலகாற்றுத்திசைகளிலுஞ் சிதறிப்போகப்பண்ணுவோம்.

* ௩. மோசே. ௨௮, ௫௩. எரே. ௰௯, ௯.

௰௧. ஆனதுகொண்டு, சீயென்னப்பட்டதுக்களும், அருவருக்கப்பட்ட தக்கதுமான உன் கிரியைகளாலே நீ நமது பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினபடியினாலே * நமது கண் உன்னைத்தப்பவிடாமல், நாமும் உன்னைவாங்கிப்போடுவோம். நாமும் மன்னியோமென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார். * எ. அதி. ௪. ௮. அதி. ௰௮.

௰௨. உன்னிலே மூன்றத்தொருபங்கு பெருவாரிக்காய்ச்சலாற்சாவார்கள், பஞ்சத்தாலும் உன் நடுவிலே மடிந்துபோவார்கள், மூன்றத்தொருபங்கு உன்னைச்சுற்றிலுமிருக்கிறபட்டயத்தால் வெட்டுண்டுவிழுவார்கள், மூன்றத்தொருபங்கை நாம் சகலகாற்றுத்திசைகளிலுஞ்சிதறிப்போகப்பண்ணி, அவர்களின்பிறகாலே பட்டயத்தையுருவுவோம்.

௰௩. இப்படி நம்முடைய கோபம் நிறைவேறும், இப்படிநாம் நம்முடைய உக்கிரத்தையவர்கள்மேலே தங்கப்பண்ணுகிறதினாலே * நம்மை யாற்றிக்கொள்ளுவோம். நாம் நம்முடைய உக்கிரத்தையவர்களில் நிறைவேற்றுகையில் அப்போது கர்த்தராகிய நாம் நம்முடைய வைராக்கியத்திலே யிதைப்பேசினோமென்றறிவார்கள். * ௰௬. அதி. ௪௨.

௰௪. கடந்துபோகிறயாவருடைய கண்களுக்குமுன்பாகவும் நாம் உன்னையுன்சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குள்ளேபாழும், நிந்தையுமாக்கிப்போடுவோம்.

௰௫. நாம் கோபத்தாலும், உக்கிரத்தாலும், உக்கிரமான தண்டனைகளினாலும் உன்னில் நியாயங்களைச்செய்யும்போது * அந்த நிந்தையும், அவகீர்த்தியும் உன்சுற்றுப்புறத்தாராகிய சாதிகளுக்குப் புத்தியாகவும், பிரமிப்பாகவுமிருக்குங் கர்த்தராகிய நாமிதைச்சொன்னோம். * ௫. மோசே. ௨௮, ௩௭. ௨௯. அதி. ௨௪.

௰௬. உங்களையழிப்பதற்கு நாம் அனுப்பும் அழிப்புக்கான பஞ்சத்தின்பொல்லாத அம்புகளைநாம் அவர்களுக்குள்ளே எய்யும்போது * நாம் பஞ்சத்தை யுங்கள்மேல் அதிகரிக்கப்பண்ணி, உங்கள் அப்பத்தின் ஆதரவுக்கோலையுடைப்போம். * ௪, அதி. ௰௬. ௩. மோசே. ௨௬, ௨௬. ஏசா. ௩, ௧.

௰௭. பஞ்சத்தையும் * உன்னைப்பிள்ளைகளில்லாமற்போகப்பண்ணுந் துஷ்டமிருகங்களையும் உங்களுக்குவிரோதமாக அனுப்புவோம், பெருவாரிக்காய்ச்சலும், இரத்தத்தைச்சிந்துதலும் உன்னிற் சுற்றித்திரியும், பட்டயத்தை நாம் உன்மேல்வரப்பண்ணுவோம், கர்த்தராகிய நாமிதைச் சொன்னோமென்றார். * ௩. மோசே. ௨௬, ௨௨.

## ௬. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலின் விக்கிரகத்தொழும்புக்காக வரும் நியாயத்தீர்ப்பு. (௮) மீதியானவர்களின் சவுக்கியம், (௰௧) அவர்களுடைய துன்பங்களைக் குறித்துப் புலம்ப விசுவாசிகள் தூண்டிவிடப்பட்டது.]

கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, * நீ இஸ்ரவேலின் பருவதங்களுக்கு நேராக உன் முகத்தைத் திருப்பி அவைகளுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்துச் சொல்லவேண்டியதேதெனில், * ௩௬, அதி. ௧.

௩. இஸ்ரவேலின் பருவதங்களே, கர்த்தராகிய ஆண்டவரின் வார்த்தையைக் கேளுங்கள், பருவதங்களோடும், குன்றுகளோடும், ஓடைகளோடும், பள்ளத்தாக்குகளோடும் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ, உங்கள் மேல் நாம் பட்டயத்தை வரப்பண்ணி, உங்கள் மேடைகளை அழித்துப்போடுவோம்.

௪. உங்கள் பலிபீடங்கள் பாழாக்கடிக்கப்பட்டு உங்கள் சிலைகள் தகர்க்கப்படும், உங்களிற் கொலையுண்கிறவர்களை உங்கள் நரகலான தேவர்களின் முகத்திற்கு முன்பாக விழப்பண்ணுவோம்.

௫. நாம் இஸ்ரவேல் புத்திரருடைய பிரேதங்களை அவர்களுடைய நரகலான தேவர்களின் முன்னே கிடக்கப்பண்ணி உங்கள் எலும்புகளை உங்கள் பலிபீடங்களின் சுற்றிலுஞ் சிதறப்பண்ணுவோம்.

௬. உங்கள் பலிபீடங்கள் நிர்மூலமும், பாழுமாகும்படிக்கும், உங்கள் நரகலான தேவர்கள் தகர்க்கப்பட்டோய்ந்து உங்கள் சிலைகள் வெட்டுண்டு, உங்கள் கிரியைகள் குலைந்துபோகும்படிக்கும் உங்களுடைய எல்லா வாசஸ்தலங்களிலுமுள்ள பட்டணங்கள் நிர்மூலமும், உங்கள் மேடைகள் பாழுமாம்.

௭. கொலையுண்கிறவர்கள் உங்கள் நடுவில் விழுவார்கள், அப்படியே * நாம் கர்த்தரென்றறிந்துகொள்வீர்கள். * ௭, அதி. ௨௭.

௮. நீங்கள் தேசங்களிற் சிதறடிக்கப்படும்போதோவெனில், புறச்சாதிகளுக்குள்ளே பட்டயத்துக்குத் தப்புவாரை உங்களுக்கு மீதியாக வைப்போம்.

௯. நம்மைவிட்டகன்ற விபசார இருதயத்தைத் தொட்டும், தங்கள் நரகலான தேவர்களைப் பின்பற்றின தங்கள் விபசாரக்கண்களைத் தொட்டும் மனமடிவானேனென்று, உங்களிலே தப்பிப்போன அவர்கள் தாங்கள் சிறைப்பட்டிருக்கும் புறச்சாதிகளுக்குள்ளே நம்மை நினைத்துத் தங்களுடைய எல்லா அருவருப்புகளிலுந் தாங்கள் செய்த பொல்லாப்புகளினிமித்தந் தங்களைத் தாமே அரோசித்து.

௰. இந்தத் தீங்குகளையெல்லாந் தங்களுக்குச் செய்வோமென்று கர்த்தராகிய நாம் விருதாவாய்ச் சொன்னதில்லையென்றறிந்துகொள்ளுவார்களென்றார்.

௰௧. கர்த்தராகிய ஆண்டவர் சொன்னதாவது; நீ உன் கையாலடித்து உன் காலாலே தட்டி இஸ்ரவேல் வீட்டாருடைய எல்லாப் பொல்லாத அருவருப்புகளினிமித்தமும் ஐயோ என்று சொல்லு. ஏனென்றால், * பட்டயத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் விழுவார்கள். * ௫, ௰௨.

௰௨. தூரமாயிருக்கிறவன் பெருவாரிக்காய்ச்சலாலே சாவான், சமீபமாயிருக்கிறவன் பட்டயத்தாலே விழுவான், மீதியாயிருந்து முற்றிக்கை போடப்பட்டவன் பஞ்சத்தினாலே சாவான், இப்படியவர்களில் நம்முடைய உக்கிரத்தைத் தீர்த்துக்கொள்ளுவோம்.

௰௩. அவர்கள் தங்கள் நரகலான தேவர்களுக்கெல்லாம் மதுரவாசனையான தூபத்தைக் காட்டின தலங்களாகிய உயர்ந்த சகல மேட்டிலும், பருவதங்களுடைய சகல சிகரங்களிலும், பச்சையான சகல விருட்சத்தின் கீழும், தழைத்திருக்கிற சகல கர்வாலிமரத்தின் கீழும் அவர்களிற் கொலையுண்டவர்கள் அவர்களுடைய நரகலான தேவர்களின் நடுவிலும், அவர்களுடைய பலிபீடங்களின் சுற்றிலுங் கிடந்திருக்கையில் அப்போது நாம் கர்த்தரென்றறிந்துகொள்வார்கள்.

௰௪. நாம் நம்முடைய கையை அவர்களுக்கு விரோதமாக நீட்டி, அவர்களுடைய எல்லா வாசஸ்தலங்களுமுள்ள தேசத்தைப் பாழாக்கப்பண்ணி, அதைத் திப்லாத்தின் வனாந்தரத்தைப் பார்க்கிலும் பாழாகவே பண்ணுவோம், அப்போது நாம் கர்த்தரென்றறிந்துகொள்வார்களென்றார்.

## ௭. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலுக்கு முடிவில் வந்த நாசம். (௰௬) தப்பித்துக்கொண்டவர்களின் துயரமுள்ள மனஸ்தாபம். (௨௰) இஸ்ரவேலருடைய அருவருப்பினிமித்தஞ் சத்துருக்கள் பரிசுத்தஸ்தானத்தைத் தீட்டுப்படுத்தினது. (௨௩) சங்கிலியின் அடையாளத்தினாலே அவர்களுடைய உபத்திரவமான சிறையிருப்பைக் காட்டினது.]

பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே இஸ்ரவேல் தேசத்தைக் குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதென்றால், முடிவு வருகிறது, தேசத்தினுடைய நாலு முனைகளின் மேலும் முடிவே வருகிறது.

௩. இப்போதும் உன்மேல் முடிவு வருகிறது. நாம் நம்முடைய கோபத்தை உன்மேற்போகவிட்டு உன் வழிகளுக்குத் தக்கதாக உன்னை நியாயந்தீர்த்து உன்னுடைய எல்லா அருவருப்புகளின் பலனையும் உன்மேல் வரப்பண்ணுவோம்.

௪. * நம்முடைய கண் உன்னைத் தப்பவிடாது, நாம் மன்னியாமல் உன் வழிகளுக்குத் தக்கதை உன்மேல் வரப்பண்ணுவோம், உன் அருவருப்புகளுக்குத் தக்கது உன் நடுவில் வந்திருக்கும், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்து கொள்வீர்கள். * ௫, ௰௧. ௮, ௰௮.

௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; தீங்கு வருகிறது, ஏகமான தீங்கு இதோ வருகிறது.

௬. முடிவு வருகிறது முடிவு வருகிறது, அது உனக்கு விரோதமாக விழிக்கிறது, இதோ வருகிறது.

௭. தேசத்திற்குடியிருக்கிறவனே, அந்நாளின் விடியற்காலம் வருகிறது காலம் வருகிறது, அமளியின் நாள் சமீபித்திருக்கிறது, மலைகளிற்கொக்கரிப்பில்லை.

௮. இப்போது கிட்டினகாலத்திலே நம்முடைய உக்கிரத்தை உன்மேலூற்றி நம்முடைய கோபத்தை உன்னிலே தீர்த்துக்கொண்டு, உன்னை உன் வழிகளுக்குத் தக்கதாக நியாயந்தீர்த்து உன்னுடைய எல்லா அருவருப்புகளின் பலனையும் உன்மேல் வரப்பண்ணுவோம்.

௯. நம்முடைய கண் உன்னைத் தப்பவிடாது, நாம் மன்னியாமல் உன் வழிகளுக்குத் தக்கதை உன்மேல் வரப்பண்ணுவோம், உன் அருவருப்புகளுக்குத் தக்கது உன் நடுவில் வந்திருக்கும், அப்படியே அடிக்கிறவராகிய நாம் கர்த்தரென்றறிந்து கொள்வீர்கள்.

௰. இதோ அந்நாள் இதோ வருகிறது, அந்நாளின் விடியற்காலம் உதிக்கிறது, மிலாறு பூக்கிறது, அகந்தை செழிக்கிறது.

௰௧. ஆகாமியத்திற்கு மிலாறாகக் கொடுமை யெழும்புகிறது, அவர்களிலும், அவர்களுடைய திரளான கும்பிலும், அவர்களுடைய அமளியிலும் ஒன்றும் மீதியாயிருப்பதில்லை. அவர்கள் நிமித்தம் புலம்பலுண்டாயிருப்பதுமில்லை.

௰௨. அந்தக் காலம் வருகிறது, அந்த நாள் கிட்டுகிறது, கொள்ளுகிறவன் சந்தோஷப்படாமலும், விற்கிறவன் துக்கப்படாமலுமிருப்பானாக. ஏனென்றால், அதினுடைய திரளான கும்பின்மேலெல்லாம் உக்கிரமிறங்கும்.

௰௩. ஏனெனில், அவர்கள் ஜீவனுள்ளோருக்குள்ளே இன்னம் உயிரோடிருந்தாலும், விற்றவன் விற்கப்பட்டதற்குத் திரும்பிவருவதில்லை, அதேனென்றால், அதினுடைய திரளான கும்பின்மேலெல்லாம் உண்டான தரிசனந் திரும்பாது, தன்னுடைய அக்கிரமத்திலே தன் ஜீவனையநுபவிக்கிற ஒருவனுந் தன்னைத் திடப்படுத்தமாட்டான்.

௰௪. அவர்கள் எக்காளமூதி எல்லாவற்றையும் ஆயத்தம்பண்ணியும், யுத்தத்திற்குப் போகிறவனில்லை. ஏனெனில், நம்முடைய உக்கிரம் அதினுடைய திரளான கும்பின்மேலெல்லாமிறங்குகிறது.

௰௫. வெளியே பட்டயமும், உள்ளே பெருவாரிக்காய்ச்சலும், பஞ்சமுமுண்டு, வயல்வெளியிலிருக்கிறவன் பட்டயத்தாற் சாவான், பட்டணத்திலிருக்கிறவனையோ பஞ்சமும், பெருவாரிக்காய்ச்சலும் பட்சிக்கும்.

௰௬. அவர்களிலே தப்புகிறவர்கள் தப்புவார்கள், ஆனால் இவர்கள் அனைவரும் அவனவன் தன் தன் அக்கிரமத்தினிமித்தந் துக்கித்துக்கூப்பிடுகிற பள்ளத்தாக்குகளின் * புறாக்களைப்போலே பருவதங்களிலிருப்பார்கள். * ஏசா. ௫௯, ௰௧.

௰௭. எல்லாக் கைகளுஞ் சவித்து, எல்லா முழங்கால்களுந் தண்ணீரைப்போல அலையும்.

௰௮. இரட்டையுடுத்துக்கொள்ளுவார்கள், தத்தளிப்பு அவர்களை மூடும், எல்லா முகங்களையும் வெட்கப்படுத்துதலும், எல்லாத் தலைகளையும் மொட்டையிடுதலுமிருக்கும்.

௰௯. தங்கள் வெள்ளியைத் தெருக்களிலெறிந்துவிடுவார்கள், அவர்களுடைய பொன் வேண்டாவெறுப்பாகவிருக்கும், * கர்த்தருடைய சினத்தின் நாளிலே யவர்கள் வெள்ளியும், அவர்கள் பொன்னும் அவர்களை விடுவிக்கக்கூடாது, அவர்கள் அதினாலே தங்கள் ஆத்துமாவைத் திருப்தியாக்குவதுமில்லை, தங்கள் குடல்களை நிரப்புவதுமில்லை, ஏனென்றால், அது அவர்கள் அக்கிரமத்திற்கான இடறலாயிருந்தது. * வாக்கியம். ௰௧, ௪. ஏசா. ௨, ௨௰. செப்பனி. ௧, ௰௮.

௨௰. அவருடைய சிங்காரத்தின் மகிமையை அகந்தைக்கென்று வைத்து அதிலேயருவருக்கப்படத்தக்கதும், சீயென்னப்படத்தக்கதுமான காரியங்களின் சுரூபங்களை யுண்டுபண்ணினார்கள். ஆகையால், நாம் அவைகளை யவர்களுக்கு வேண்டாவெறுப்பாக்கி,

௨௰௧. அதை யன்னியர் கையிலே கொள்ளையாகவும், பூமியிலாகாதவர்களுக்குச் சூறையாகவுங் கொடுப்போம், இவர்கள் அதின் பரிசுத்தத்தைக் குலைப்பார்கள்.

௨௰௨. * நம்முடைய முகத்தை யவர்களை விட்டுத் திருப்பிப்போடுவோம், ஆனதுகொண்டு நம்முடைய அந்தரங்க ஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்குவார்கள், பறிகாரர் அதற்குட்பிரவேசித்து அதின் பரிசுத்தத்தைக் குலைப்பார்கள். * ௫. மோசே. ௩௨, ௨௰.

௨௰௩. ஒரு சங்கிலியைப்பண்ணிவை. ஏனென

எண்ணெயையும், நம்முடைய தூபவர்க்கத்தையும் அவைகளின் முன் படைத்து.

௰௯. நாம் உனக்குக் கொடுத்த நம்முடைய அப்பத்தையும், உனக்குச் சாப்பிடக் கொடுத்த நல்லமாவையும், எண்ணெயையும், தேனையும் நீ யவைகளின் முன் ஆறுதலின் வாசனையாகப் படைத்தாய், அப்படியாயிற்றென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௰. நீ நமக்குப் பெற்ற உன் குமாரரையும், உன் குமாரத்திகளையும் எடுத்து, * அவர்களை யவர்களுக்கிரையாகப் பலியிட்டாய். உன் வேசித்தனங்களின் செயல் அற்பகாரியமோ!
* எரேமியா. எ, ௩௧.

௨௧. நீ நம்முடைய பிள்ளைகளையடித்து, அவர்களை யவர்களுக்குத் தீயில் நடக்கப் பண்ணியொப்புக்கொடுத்தாய்.

௨௨. உன்னுடைய எல்லா அருவருப்புகளிலும், வேசித்தனங்களிலும் நீ நிருவாணமும், அம்மணமுமாயிருந்ததும், உன் இரத்தத்திலே மிதிபடக்கிடந்ததுமான உன் சிறுவயதின் நாள்களை நினையாதே போனாய்.

௨௩. உனக்கு ஐயோ, ஐயோ, என்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனெனில், நீ செய்த எல்லாப் பொல்லாப்புக்கும் பின்பு சம்பவித்ததேதென்றால்,

௨௪. நீ யுனக்குக் கோவில்களைக் கட்டி, உனக்குச் சகல வீதியிலும் உயர்ந்த மேடைகளைச் செப்பனிட்டாய்.

௨௫. நீ சகல வழிமுகனையிலும் உன்னுடைய உயர்ந்த மேடைகளைக் கட்டி, உன்னழகை யருவருப்பாக்கிக் கடந்து வருகிறவனுக்கெல்லாம் உன் கால்களையகற்றி உன் வேசித்தனங்களைத் திரளாய்ப் பெருகப்பண்ணி,

௨௬. சதைபெருத்த உன் அயல் தேசத்தாராகிய எகிப்தின் புத்திரரோடே வேசித்தனம் பண்ணி நமக்குக் கோபமுண்டாகும்படிக்கு உன் வேசித்தனங்களைத் திரளாக்கினாய்.

௨௭. ஆனதுகொண்டு இதோ, நாம் நமது கையை யுனக்கு விரோதமாக நீட்டி, உனக்குக் குறித்த கட்டளையைக் குறைத்து உன் பகையாளிகளாகிய * பெலிஸ்தருடைய குமாரத்திகளின் இச்சைக்கு உன்னை யொப்புக்கொடுத்தோம். இவர்களுன் தோஷமான மார்க்கத்திற்கு நாணப்பட்டார்கள். * நீதி. ௰௬, ௧. ௨. நாளாக. ௨௮, ௰௮.

௨௮. நீ திருத்தியடையமாட்டாததினால் அசூர் குமாரரோடும் வேசித்தனம்பண்ணினாய். அவர்களோடே வேசித்தனம்பண்ணியும் நீ திருத்தியடையாதே போனாய்.

௨௯. கானான் தேசத்திலே கல்தேயர் மட்டுக்கும் உன் வேசித்தனங்களைத் திரளாக்கி இதினாலும் திருத்தியடையாதே போனாய்.

௩௰. வலுசர்வியான ஸ்திரீயின் கிரியையாகிய இவைகளையெல்லாம் நீ செய்து,

௩௧. சகல வழிமுனையிலும் உன்னுடைய கோவில்களைக் கட்டிச் சகல வீதியிலும் உன் மேடைகளைச் செப்பனிட்டதினால் உன் இருதயம் எத்தனையாய்க் களைபட்டிருக்கிறதென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். நீ பணயத்தைத் திரஸ்காரம்பண்ணுகிறதினால் நீ வேசியைப்போலிராமல்,

௩௨. தன் புருஷனுக்குப் பதிலாக அன்னியனைச் சேர்க்கிற விபசார ஸ்திரீயைப் போலிருக்கிறாய்.

௩௩. எல்லா வேசிகளுக்கும் பணயங்கொடுக்கிறார்கள். ஆனால் உன் சிநேகிதர் சுற்றுப்புறங்களிலிருந்து உன் வேசித்தனங்களுக்காக உன்னண்டைக்கு வரும்படிக்கு அவர்களுக்கெல்லாம் நீயே பணயங்கொடுத்து அவர்களுக்குக் காணிக்கைகளைத் தருகிறாய்.

௩௪. அப்படியே யுன்னுடைய வேசித்தனங்களில் வேறே ஸ்திரீகளைப்பார்க்கிலும் உன்னில் வித்தியாசமுண்டு. ஏனென்றால், வேசித்தனம்பண்ண உன்னைப் பின்செல்லார்கள். பணயம் உனக்குக் கொடுக்கப்படாமல் நீயே பணயங்கொடுக்கிறபடியினாலே நீ வேறே.

௩௫. ஆகையினாலே வேசியே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்.

௩௬. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; உன் வேசித்தனம் அதிகப்பாய்ந்தபடியினாலேயும், நீ யுன் காமவிகாரிகளோடும், அருவருப்பாகிய உன்னுடைய நரகலான தேவர்களோடும், வேசித்தனம்பண்ணி, இவைகளுக்கு உன் பிள்ளைகளின் இரத்தத்தைப் படைத்ததினால் உன்னுடைய நிருவாணந் திறக்கப்பட்டபடியினாலேயும்,

௩௭. இதோ, நீ சம்போகம்பண்ணின உன்னுடைய எல்லாக் காமவிகாரிகளையும், நீ சிநேகித்த யாவரையும், நீ பகைத்திருக்கிற அனைவரோடும் நாம் கூட்டி அவர்களைச் சுற்றிலுமிருந்து உனக்கு விரோதமாகச் சேர்த்து அவர்கள் உன்னுடைய நிருவாணத்தையெல்லாங்காணும்படிக்கு, * உன்னுடைய நிருவாணத்தை யவர்களுக்கு முன்பாகத் திறந்து வைத்து, * ௨௩, ௨௯.

௩௮. * விபசாரிகளையும், இரத்தஞ்சிந்தினவர்களையும் நியாயந்தீர்க்கிறபடியே உன்னை நியாயந்தீர்த்து, உன்மேல் * உக்கிரமும், வயிராக்கியமுமாய் இரத்தப்பழியைச் சுமத்தி, * ௨௩, அதி. ௨௪. ௨௫.

௩௯. உன்னை யவர்கள் கைக்கு ஒப்புக்கொடுப்போம். அவர்கள் உன் கோவில்களையிடித்து, உன் மேடைகளைத் தரையாக்கிப்போட்டு, உன் வஸ்திரங்களையுரிந்து, உன் சிங்கார ஆபரணங்களை யெடுத்துக்கொண்டு உன்னை யம்மணமும், நிருவாணமுமாக வைத்துப் போய்,

௪௰. உனக்கு விரோதமாக ஒரு கூட்டத்தை வரச்செய்பண்ணி, உன்னைக் கல்லெறி

ந்து, உன்னைத் தங்களைப் பட்டயங்களால் குத்திப்போட்டு,

௪௧. ✻ உன் வீடுகளை யக்கினியால் சுட்டுப்போட்டு, அநேக ஸ்திரீகளின் கண்களுக்கு முன்பாக உன்னில் நியாயத்தீர்ப்புகளைச் செய்வார்கள். நீ வேசியாயிருக்குதலை யொழியப்பண்ணுவோம். நீ யினிப் பணையங்கொடுப்பதுமில்லை. ✻ உ. இரா. உ௫, ௯.

௪௨. அப்படியே நமது வயிராக்கியம் உன்னைவிட்டு நீங்கும்படிக்கு நாம் நம்முடைய உக்கிரத்தை யுன்னில் ஆறப்பண்ணின பின் இனி நாம் கோபமாயிராமல் அமருவோம்.

௪௩. நீ யுன் இளவயதின் நாள்களை நினையாமல் இவைகளினாலெல்லாம் நமக்குச் சினமுண்டாக்கினபடியினாலே இதோ, நாமும் உன் மார்க்கத்தை ✻ உன் தலையின்மேல் சுமரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். அப்படியே உன்னுடைய எல்லா அருவருப்புகளின்மேலும் அப்படிக்கொத்த தோஷத்தை இனிச் செய்யாதே போவாய். ✻ ௬, ௰. ௰௧, உ௨.

௪௪. இதோ, பழமொழிசொல்லுகிறவர்களெல்லாரும், தாயைப்போல மகளென்று உன்னைக்குறித்துப் பழமொழிசொல்லுவார்கள்.

௪௫. நீ தன் புருஷனையும், தன் பிள்ளைகளையும் அரோசித்த உன்னுடைய தாயின் மகள். நீ தங்கள் புருஷரையும், தங்கள் பிள்ளைகளையும் அரோசித்த உன்னுடைய சகோதரிகளின் சகோதரி, உங்கள் தாய் கேத்தித்தி, உங்கள் தகப்பன் எமோரியன்.

௪௬. உன்னிடதுபுறத்திலே தானும், தன் குமாரத்திகளுமாய்க் குடியிருந்த சமாரியர் ✻ உன்னுடைய தமக்கை, உன் வலதுபுறத்திலே தானும், தன் குமாரத்திகளுமாய்க் குடியிருந்த சோதோம் உன்னுடைய தங்கை. ✻ உ௩, ௪.

௪௭. ஆகிலும் நீ யவர்களுடைய மார்க்கங்களிலே நடவாமலும், அவர்களுடைய அருவருப்புகளின்படியே செய்யாமலும் அது மகா அற்பகாரியமென்கிறதுபோலே நீ யுன்னுடைய எல்லாமார்க்கங்களிலேயும் ✻ அவர்களைப்பார்க்கிலுங் கேடாய்ச்செய்தாய். ✻ உ௩, ௰௧.

௪௮. நீயும், உன்னுடைய குமாரத்திகளுஞ் செய்ததுபோலே உன் சகோதரியாகிய ✻ சோதோமும், அவளுடைய குமாரத்திகளுஞ் செய்ததில்லையென்கிறதை நம்முடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.
✻ க. மோசே. ௰௩, ௰௩.

௪௯. இதோ, உன் சகோதரியாகிய சோதோமுக்கிருந்த அக்கிரமம் பெருமையென்பது அப்பத்தின் பரிபூரணமும், பிரயாசமில்லாத சாங்கோபாங்கமும் அவளுக்கும், அவள் குமாரத்திகளுக்குமிருந்தன. ஆனால் சிறுமையும், எளிமையுமானவனைக் கையை அவள் பலப்படுத்தாதேபோனாள்.

௫௰. அவர்கள் தங்களையுயர்த்தி, நம்முடைய முகத்திற்கு முன்பாக அருவருப்பானதைச் செய்தார்கள். அதை நாம் கண்டபோது அவர்களை யொழித்துவிட்டோம்.

௫௧. சமாரியாவும் உன் பாவங்களில் அரைவாசிசெய்ததில்லை. நீ யவர்களைப்பார்க்கிலும் உன் பாவங்களைப் பெருகப்பண்ணி நீ செய்த உன்னுடைய எல்லா அருவருப்புகளாலும் உன் சகோதரிகளை நீதிவிளங்கப்பண்ணினாய்.

௫௨. இப்போதும் உன் சகோதரிகளைக் குற்றவாளிகளென்று தீர்த்த நீ யவர்களைப் பார்க்கிலும் அருவருப்பாகச்செய்த உன் பாவங்களினிமித்தம் உன் இலச்சையையுஞ் சுமந்திரு. உன்னைப்பார்க்கிலும் நீதியாயிருக்கிறார்கள். இப்போதும் உன் சகோதரிகளை நீதிவிளங்கப்பண்ணின நீ வெட்கமுமடைந்து உன் இலச்சையைச் சுமந்திரு.

௫௩. ஆனால் நீ யவர்களுக்கு ஆறுதலாகவிருந்து உன் இலச்சையைச்சுமந்து நீ செய்தவையெல்லாவற்றினாலுமதாணும்படிக்கு,

௫௪. நாம் சோதோமும், அவளுடைய குமாரத்திகளுஞ் சிறையிருக்கிற அவர்களுடைய சிறையிருப்பையும், அவர்கள் நடுவிலே நீ சிறையிருக்கிற உன்னுடைய சிறையிருப்பையுந் திருப்போம்.

௫௫. உன்சகோதரிகளாகியசோதோமும், அவளுடைய குமாரத்திகளுந் தங்கள் முந்தினசீருக்குத்திரும்புவார்கள். சமாரியாவும், அவளுடைய குமாரத்திகளும் தங்கள்முந்தினசீருக்குத் திரும்புவார்கள். நீயும், உன் குமாரத்திகளும் உங்கள் முந்தினசீருக்குத் திரும்புவீர்கள்.

௫௬. சீரியாவின் குமாரத்திகளும், அவளுடைய சகல சுற்றுப்புறத்தாராகிய பெலிஸ்தரின் குமாரத்திகளும் உன்னைச் சுற்றிலுமிருந்து கொள்ளையிட்ட நிந்தையின்காலமுதலானகாலங்களிலே உன் பொல்லாப்புவெளியாயிற்று.

௫௭. அதற்குமுன் உன்னுடைய பெருமையின்நாளிலே உன்சகோதரியாகியசோதோமின்பேரும் உன்வாயிலே கேட்கப்படவில்லை.

௫௮. உன்தோஷத்தையும், உன் அருவருப்புகளையுமநீசுமப்பாயென்றுகர்த்தர்சொல்லுகிறார்.

௫௯. ஏனெனில், கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது; உடன்படிக்கையை முறித்துப்போடுகிறதினாலே ஆணையையசட்டைபண்ணி நீ செய்ததுபோலே உனக்குஞ்செய்வோம்.

௬௰. ஆகிலும் உன் இளவயதில் உன்னோ

டேபணணின * நமமுடைய உடனபடிக
கையை நாம நினைதது நிததியஉடனபடிக
கையை உனககேர்பபடுத்துவோம.

* ௯. ம்மாசே. உ௯, ௪௨.

௬௧. அபபோது உன தமககைகளையும்,
உனதஙகைகளையும் நீ சேர்ததுககொளளு
கையில, * உனமார்ககஙகளை நினைதது நா
ணுவாய, அவர்களை நாம உனககுக்குமாரத
திகளாகக்கொடுபபோம, உனனுடையஉட
னபடிககையைபபார்ததலல,

* உ௰, அதி. ௬௩.

௬௨. உனனோடே நமமுடையஉடனபடிக
கையைபபணணி யேற்படுததுவோம், அப
போது நாமகர்ததரென றறிவாய.

௬௩. நீ செயததவையெலலாவறறின நிவர்
ததியையும நாம உனககுணடாககுமபோ
து, * நீ நினைததுவெட்கி உனநாணததினு
லேயுன வாயை யினித்திறக்கக்கூடாதபடி
ககுததானேயெனறு கர்ததராகிய ஆணட
வருரைககிறாரெனகிறதைச சொலலெனறார்.

* ௬௯, அதி. ௬௧. ௬௨.

## ௰௭. அதிகாரம்.

[(௧) இரணடுகழுகுகளும, திராட்சச்செடி
யுமாகியவிவைகளினஉவமையைககொணடு,
(௰௧) பாபேலைவிட்டு எகிப்துககு இசைநத
தறகாக எருசலேமினமேல்வரும பராபர
னுடைய நியாயததீர்பபைக காட்டினது.
(உ௨) பராபரனசுவிசேஷமெனனுஙகேது
ருவிருட்சததை நடவாககுத்தத்தமபணணி
னது.]

**க**ர்ததருடைய வார்ததை யெனககுண
டாகியவர்சொனனதாவது;

௨. மனுபபுததிரனே, நீ இஸ்ரவேலவீட
டாருககு ஒருவிடுகதையையும,உவமையை
யுஙகாணபிதது,

௩. சொலலவேணடியதாவது; கர்ததராகி
ய ஆணடவருரைககிறதேதெனில, பெரிய
செட்டைகளையும், நீளமானஇறகுகளையுமு
டையதும், பலவருணமாகிய இறகுகளால
நிறைநததுமாகிய பெரியகழுகு லீபனோ
னிலவநது ஒருகேதுருவின நுனிககிளையைப்
பிடிதது,

௪. அதினுடைய கொழுநதுகளின தலைக
கொபபைப்பிடுஙகி, அதை வர்ததகதேச
ததிறகுககொணடுபோய, அதை வர்ததகரு
டையபட்டணததிலேவைதது,

௫. தேசததினவிதையிலே யொனறையெ
டுதது, அதைபபயிர்நிலததிலேபோட்டது,
அதையெடுதது அநேகநதணணீர்களினஓர
ததிலே மகா எசசரிககையோடேநட்டது.

௬. இது துளிர்தது நனறுயத் தழைககிற
தாழநத அடிமரமுளள திராட்சசசெடியா
யிறறு, இதினகொடிகள அநதக கழுகை
நோககி இதினவேர்கள அதின கீழாகவிருந
தன, இபபடியே அது திராட்சச்செடியா
கிக் கிளைகளைபபிறபபிததுககொபபுகளைவிட்
டது.

௭. ஆனாற்பெரியசெட்டைகளையும், திரளா
னஇறகுகளையுமுடைய வேறொருபெரியகழு
கிருநதது இதோ, அது தனனுடைய நட
வாகிய பாததிகளுககுத தககதாயத் தனக
குத தணணீரைப பாயசசுமபடிககு இநத
த்திராட்சசசெடி யதறகெதிராகத்தனவேர்
களைச்சேரப்பணணித் தனகொடிகளை அத
றகுநேராகவிட்டது.

௮. கொபபுகளைவிடுகிறதறகும, கனியைத
தருகிறதறகும், மகிமையான திராட்சசசெ
டியாகிறதறகும இது அநேகநதணணீர்க
ளின ஓரமாகிய நலலநிலததில நடபபட்டி
ருநததே.

௯. இபபடிசகொததததறகு வாயககுமோ?
அதுபட்டுபபோகுமபடிககு அவன அதின
வேர்களைவெட்டாமலும, அதின கனியைப
பிடுஙகாமலுமிருபபானோ? துளிர்ததஎலலா
இலைகளோடும அதுபட்டுபபோம், அதை
வேர்களறுதலாயப பேர்தெடுகக அவன
பலததபுயததோடும, திரளானசனததோடு
மவரககவையிலலை.

௰. இதோநடபபட்ட அது செழிபபாயி
ருககுமோ? கொணடறகாறறு அதினமேற
படுகையில அது உலரவே உலராதோ?
அதுநடபபட்ட பாததிகளிலேயதுஉலர்ந
துபோமெனறு கர்ததராகிய ஆணடவர்
உரைககிறாரெனறுசொலலெனறார்.

௰௧. பிறபாடு கர்ததருடையவார்ததையெ
னககுணடாகி அவர்உரைத்ததாவது;

௰௨. இபபோதும இவைகளின அர்த்தத்
தைஅறியீர்களோவெனறு நீ கலகவீட்டா
ரைககேட்டுச சொலலவேணடியதாவது;
இதோ, * பாபேலினஇராசாஎருசலேமுக்கு
வநது, அதினஇராசாவையும, அதினபிரபுக்
களையுமபிடிதது அவர்களைத தனனிடமாகப்
பாபேலுககுககொணடுபோகிறபோது,

* உ. இராசா. உ௪, ௰. ௱

௰௩. அவனஇராசவிததிலே ஒருவனைஎடுத
து இவனோடே உடமபடிககைபணணி,

௰௪. இராசசியந தனனையுயர்ததாமலேதா
ழநதததாயிருககுமபடிககும், தனஉடனபடி
ககையை யிவன கைக்கொளளுகிறதினுல
அதுநிலைநிறகுமபடிககும இவனை ஆணைப்
பிரமாணததிற குட்படபபணணித் தேசத
திற பலசாலிகளைப பிடிததுககொணடுபோ
னனே.

௰௫ ஆனால இவன தனககுகுதிரைகளையு
ம, அநேகஞசனததையுந தருதலுபபவே
ணடுமெனறு தன தானுபதிகளை எகிப்திற
கனுபபினனே, அவனைவிட்டு மருளவிழுநது
இபபடிககொததவனுககு வாயககுமோ?
இபபடிசசெயகிறவன தபபுவிததுககொளள

ளுவானோ? உடனபடிக்கையை முறித்துப போட்டிருந்தும் தப்புவித்துக்கொள்ளுவானோ?

௰௬. எவனுடைய ஆணையையசட்டைபணணி எவனுடைய உடனபடிக்கையை முறித்துபபோட்டானோ? தன்னை இராசாவாக வைத்த அந்தஇராசாவினுடைய தானமாகிய பாபேலினநடுவிலே பிவன அவனண்டையிலிருந்து மரணமடைவானெனகிறதை நமதுசீவனைக்கொண்டு சொலலுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொலலுகிறார்.

௰௭. அவன அநேகம ஆத்துமாக்களை நாசமபணணுமபடிக்கு அணைபோட்டுக்கொத்தளங்களைக் கட்டுகையிற * பார்வோன பெரியசேனையோடானாலும, திரளானகூட்டத்தோடானாலும இவனுக்காக யுத்தத்திலொன்றுஞ்செயயவதிலலை. * எரேமி. ௩௭, ௭. அ.

௰௮. இதோ இவன தனகையைக்கொடுத்திருந்தும, உடனபடிக்கையை முறித்துபபோட்டு ஆணையை யசட்டைபணணினான, இபபடியெலலாஞ்செயதவன தப்புவித்துக்கொளவதிலலை.

௰௯. ஆதலினிமித்தங கர்த்தராகிய ஆண்டவர்சொலலுகிறதாவது; அவன நமமுடைய ஆணையை யசட்டைபணணினதையும, நமமுடையஉடனபடிக்கையைமுறித்துபபோட்டதையும * நாம அவனுடைய தலையினமேலவரபபணணுவோமென்று நமமுடைய சீவனைக்கொண்டுசொலலுகிறோம. * ௯, ௰. ௰௧, ௨௧.

௨௰. * அவனை நமமுடையவேட்டைக்குட்பிடிபடுமபடிக்கு நாம நமமுடையவலையை யவனமேலவீசி அவனைப பாபேலுக்குக கொணடுபோய, அவனநமக்குவிரோதமாயபபணணின துரோகத்தினிமித்தம அங்கே யவனோடே நியாயத்திற்குடபிரவேசிபபோம. * ௰௨, ௰௩. ௰௪.

௨௧. அவனோடேகூட ஓடிபபோகிறயாவரும, அவனுடைய எலலாஇராணுவங்களும பட்டயத்தாலவிழுவார்கள, மீதியானவர்களோவென்றால, சகலகாறறுத்திசைகளினுந் தூறறிபபோடபபடுவார்கள, அபபோது கர்த்தராகிய நாமிதைசசொனனோமென்று அறிந்துகொளளுவீர்கள.

௨௨. கர்த்தராகியஆண்டவர் சொலலுகிறதாவது; நாம உயர்நதகேதுருவின நுனிக்கிளையிலொனறையெடுத்து அதை யூனறுவோம, அதினகொழுந்துகளின தலைக்கொபபிலே * இளசாயிருக்கிற ஒனறைபபிடுங்கி அதைநாம † உயரமும, ஓங்கலுமான ஒருபருவதத்தினமேலநாட்டுவோம.

* ஏசாயா. ௰௧, ௧. ௨. † ஏசாயா. ௨, ௨. ௩.

௨௩. இஸ்ரவேலின உயரமான பருவதத்திலேயதைநாட்டுவோம, அது கொபபுகளைவிட்டுக்கனிதந்து மகிமையானகேதுருவாகும, அதினகீழசகலவிதசசெட்டைகளுளள எலலாபபட்சிசாதிகளுநதங்கி அதினுடைய கிளைகளின நிழலிலேதாபரிக்கும.

௨௪. அபபடியே கர்த்தராகிய நாம * உயர்நத விருட்சத்தைத் தாழத்தித் தாழநத விருட்சத்தை யுயரபபணணினோமென்றும, நாமபசசையானவிருட்சத்தை யுலரபபணணி உலர்நதவிருட்சத்தைப பயிராக்கினோமென்றும வெளியின விருட்சங்களுக்கெலலாநதெரியவரும, கர்த்தராகியநாம இதைசசொனனோம, இதை நிர்வாகமுமபணணுவோமென்று உரைத்தாரென்று சொலலெனறார். * ௨௧, ௨௬. மத்தேயு. ௨௩, ௰௨.

## ௰௮. அதிகாரம.

[(௧) பராபரன புளிபபுளளதிராட்சக்காயகளின அநீதியான உவமையைக்கணடித்தது. (௫) நீதியுளளதகபபனோடும, (௰) நீதியுள்ளதகபபனுடையதுஷ்டகுமாரனோடும, (௰௪) துஷ்டத்தகபபனுடையநீதியுள்ள குமாரனோடும, (௰௯) மனநதிருமபுகிறதுன்மார்க்கனோடும, (௨௪) கலகமபணணுகிற நீதிமானோடும தமதுசெயலைச்காட்டினது. (௨௫) அவர்தமது நீதியைபடரிபாலித்தது. (௩௧) மனநதிருபபத்தூணடினது.]

கர்த்தருடையவார்த்தை யெனக்குணடாகி அவர்சொனனதாவது;

௨. * பிதாக்கள திராட்சக்காயகளைத்தினறார்கள, பிளளைகளினபறகள் கூசிபபோயினவெனகிறபழமொழியை நீங்கள இஸ்ரவேலதேசத்திறசொலல உங்களுக்கெனனவிருக்கிறது! * எரேமி. ௩௧, ௨௯. ௩௰.

௩. இனி இஸ்ரவேலிலே யிநதபபழமொழியைச சொலலுகிறதற்கு உங்களுக்கிலலையெனகிறதை நமமுடையசீவனைக்கொணடு சொலலுகிறோமென்று கர்த்தராகியஆண்டவருரைக்கிறார்.

௪. இதோ, எலலாஆத்துமாக்களும நமமுடையவைகளதானே, தகபபன ஆத்துமாவெபபடியோ அபபடியே மகன ஆத்துமாவும நமமுடையதாயிருக்கிறது, பாவஞ்செயகிறஆத்துமாவேசாகும.

௫. ஒருவன நீதிமானாயிருந்து நியாயத்தையும, நீதியையுஞ்செயது,

௬. * மலைகளினமேற சாபபிடாமலும, இஸ்ரவேலவீட்டாரின நரகலான தேவர்களுக்குநேராகத் தனகண்களை யேறெடுக்காமலும, தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத் தீட்டுபபடுத்தாமலும, † தூரஸ்திரீயோடேசேராமலும, * ஏசா. ௫௭, ௭. ௬, ௭. † ௩. மோசே. ௰௮, ௰௯.

௭. * ஒருவனையும ஒடுக்காமலும † கடனவாங்கினவனுக்கு அடைமானத்தைத் திருமபக்கொடுத்துக்கொளளையிடாமல ‡ தன

அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, அம்மணமாயிருக்கிறவனுக்கு வஸ்திரந்தரிப்பித்து, * சங்கீ. ௰௫, ௧ முதல் † ௫. மோசே. ௨௪, ௰. முதல் ‡ மத்தேயு. ௨௫, ௩௫. முதல்

௮. வட்டிக்குக்கொடாமலும், சொச்சம்வாங்காமலும், அநியாயத்திற்குத் தன் கையைவிலக்கி, ஒருவரோடொருவருக்குண்டான வழக்கையுண்மையாய்த்தீர்த்து, * ௨. மோசே. ௨௨, ௨௫. ௩. மோசே. ௨௫, ௩௬.

௯. * உண்மையாய்ச் சஞ்சரிக்கும்படிக்கு, நம்முடைய கட்டளைகளில் நடந்து நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டால், அப்படிக்கொத்த நீதிமான் பிழைக்கவே பிழைப்பானென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௩௬, ௨௭.

௰. ஆனால் அவனுக்கு ஒரு குமாரன் பிறந்து, இவன் கள்ளனும், இரத்தஞ்சிந்துகிறவனும், அந்தக்காரியங்களில் ஒன்றிற்கொத்ததைச் செய்கிறவனும்,

௰௧. இவைகளையோ செய்யாதவனுமாயிருந்து மலைகளின்மேல் சாப்பிட்டுத் தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தி,

௰௨. சிறுமையும்,எளிமையுமானவனையொடுக்கிக் கொள்ளைக்காரனாயிருந்து, அடைமானத்தைத் திருப்பிக்கொடாமல் நரகலான தேவர்களுக்கு நேராகத் தன் கண்களையேறெடுத்து, அருவருப்பானதைச் செய்து,

௰௩. வட்டிக்குக்கொடுத்துச் சொச்சம்வாங்கினால் அவன் பிழைப்பானோ! அவன் பிழைப்பதில்லை, இந்த எல்லா அருவருப்புகளையுஞ் செய்தானே, அவன் சாவவே சாவான். அவன் இரத்தப்பழி யவன்மேலிருக்கும். * ௨௨, அதி. ௰௨. நெகேமி ௫, ௭. முதல்

௰௪. பின்னையும் இதோ, அவனுக்கொரு குமாரன் பிறந்து, இவன் தன் தகப்பன் செய்த எல்லாப் பாவங்களையுங்கண்டு, தான் அவைகளின்படி செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,

௰௫. மலைகளின்மேல் சாப்பிடாமலும், இஸ்ரவேல் வீட்டாரின் நரகலான தேவர்களுக்கு நேராகத் தன் கண்களை யேறெடுக்காமலும், தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தாமலும்,

௰௬. ஒருவனையும் ஒடுக்காமலும், அடைமானத்தை வைத்துக்கொண்டிராமலும், கொள்ளையிடாமலும், தன் அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, அம்மணமாயிருந்தவனுக்கு வஸ்திரந்தரிப்பித்து,

௰௭. சிறுமையானவனுக்கு நோவுண்டாகாதபடிக்குத் தன் கையைவிலக்கி, வட்டியும், சொச்சமும் வாங்காமல், நம்முடைய நியாயங்களைச் செய்து நம்முடைய கட்டளைகளில் நடந்தால், அவன் தகப்பனுடைய அக்கிரமத்தினிமித்தஞ் சாகாமல் பிழைக்கவே பிழைப்பான்.

௰௮. அவன் தகப்பனோவென்றால், ஒடுக்குதலைச் செய்து, சகோதரனைக் கொள்ளையிட்டு, நல்லதல்லாததைத் தன் சனங்களின் நடுவிலே செய்தபடியினாலே, இதோ அவன் தன் அக்கிரமத்தினாலே சாவான்.

௰௯. குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமக்காதிருப்பானேனென்று நீங்கள் கேட்டால், குமாரன் நியாயத்தையும், நீதியையுஞ் செய்து, நம்முடைய கட்டளைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்தானே, ஆகையால் அவன் பிழைக்கவே பிழைப்பான்.

௨௰. * பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும், குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதில்லை, தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை, நீதிமானுடைய நீதி யவன்மேலேதானேயிருக்கும், ஆகாதவனுடைய ஆகாமியமும் அவன்மேலேதானேயிருக்கும். * ௫. மோசே. ௨௪, ௰௬.

௨௧. ஆகாதவன் தான்செய்த எல்லாப் பாவங்களையும்விட்டுத் திரும்பி, நம்முடைய கட்டளைகளையெல்லாங் கைக்கொண்டு நியாயத்தையும், நீதியையுஞ் செய்தானேயாகில் அவன் பிழைக்கவே பிழைப்பான், அவன் சாவதில்லை.

௨௨. அவன்செய்த எல்லாமீறுதல்களும் அவனுக்கு நினைக்கப்படுவதில்லை, அவன் செய்த தன்னுடைய நீதியிலே பிழைப்பான். * ஏசாயா. ௪௩, ௨௫. எரேமி. ௩௧, ௩௪.

௨௩. * ஆகாதவனுடைய மரணத்தை விரும்பவே விரும்புகிறோமோவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். அவன் தன் வழிகளைவிட்டுத் திரும்பிப்பிழைப்பதையேயல்லவோ விரும்புகிறோம். * ௩௨. ௨௪. ௩௩, ௰௧. ௨. பேதுரு. ௩, ௯.

௨௪. * நீதிமான் தன்னுடைய நீதியைவிட்டுத் திரும்பி, நீதிகேடு நடப்பித்து ஆகாதவன் செய்கிற சகல அருவருப்புகளின்படி செய்தானேயாகில், அவன் பிழைப்பானோ! அவன் செய்த அவனுடைய எல்லா நீதிகளும் நினைக்கப்படுவதில்லை. அவன் செய்த தன்னுடைய துரோகத்தினாலேயும், அவன் செய்த தன்னுடைய பாவத்தினாலேயுஞ் சாவான். * ௩, ௨௰. ௩௩, ௰௨.

௨௫. நீங்களோ, * ஆண்டவருடைய வழி செம்மையாயிருக்கவில்லையென்கிறீர்கள், இஸ்ரவேல் வீட்டாரே கேளுங்கள். நம்முடைய வழி செம்மையாயிராதோ! உங்கள் வழிகளல்லவோ செம்மையல்லாதிருக்கிறது. * ௩௩, ௰௭. ௨௰.

௨௬. நீதிமான் தன் நீதியைவிட்டுத் திரும்பி, நீதிகேடு செய்தால், அதினாலே சாவா

ன், அவன் செய்த தன்னுடைய நீதிக்கேட்டி னாலே அவன் சாவான்.

௨௭. ஆகாதவன் தான் செய்த தன்னுடைய அகாமியத்தை விட்டுத் திரும்பி, நியாயத்தையும், நீதியையுஞ் செய்தானேயாகில், அவன் தன் ஆத்துமாவைப் பிழைப்பிக்கப்பண்ணு வான்.

௨௮. அவன் எச்சரிக்கையாகித் தான் செய்த எல்லா மீறுதல்களையும் விட்டுத் திரும்புகிறபடியினாலே அவன் பிழைக்கவே பிழைப்பான்; அவன் சாவதில்லை.

௨௯. இஸ்ரவேல் வீட்டாரோ, ஆண்டவருடைய வழி செம்மையாயிருக்கவில்லையென்கிறார்கள். இஸ்ரவேல் வீட்டாரே, நம்முடைய வழிகள் செம்மையாயிராதோ! உங்கள் வழிகளல்லவோ செம்மையல்லாதிருக்கின்றன.

௩௰. ஆகையால் இஸ்ரவேல் வீட்டாரே, நாம் உங்களில் அவனவனை அவனவன் வழிகளுக்குத் தக்கவிதமாக நியாயந்தீர்ப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * நீங்கள் திரும்பி உங்களுடைய எல்லா மீறுதல்களையும் விட்டு மனந்திரும்புங்கள், அப்போது அக்கிரமம் உங்கள் விழுதலுக்குக் காரணமாயிருப்பதில்லை. * மத்தே. ௩, ௨.

௩௧. நீங்கள் துரோகம்பண்ணின உங்களுடைய எல்லாப் பாதகங்களையும் உங்கள் மேல் நின்று தள்ளிவிட்டு * உங்களுக்குப் புது இருதயத்தையும், புது ஆவியையும் உண்டுபண்ணிக்கொள்ளுங்கள், இஸ்ரவேல் வீட்டாரே, நீங்கள் ஏன் சாகவேண்டும்! * ௰௧, ௰௯. சங்கீதம். ௫௧, ௰௨.

௩௨. * சாகிறவனுடைய சாவை விரும்போமேயென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். ஆகையால் மனந்திரும்புங்கள். அப்போது பிழைப்பீர்கள். * ௨௩. வசனம்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) படுகுழியில் பிடிபட்ட இளஞ்சிங்கங்களின் உவமையைக்கொண்டு இஸ்ரவேலின் பிரபுக்களுக்காகவும், (௰) காய்ந்துபோன திராட்சச்செடியின் உவமையைக்கொண்டு எருசலேமுக்காகவும் புலம்பின புலம்பல்.]

நீயோவென்றால் இஸ்ரவேலுடைய பிரபுக்களின்மேல் ஒரு புலம்பலை யெடுத்து

௨. சொல்லவேண்டியதாவது; உன் தாய் எப்படிக்கொத்தவள்? அவள் சிங்கங்களுக்குள்ளே படுத்துக்கொண்டிருந்த ஒரு பெண்சிங்கந்தானே, அது தன் குட்டிகளை இளஞ்சிங்கங்களின் நடுவிலே வளர்த்து,

௩. தன் குட்டிகளில் ஒன்றைப் பெரியதாக்கிற்று, இது இளஞ்சிங்கமாகி, இரையெடுக்கப்பழகி மனுஷரைப் பாய்ந்து பட்சித்தது.

௪. புறசாதிகள் இதின் செய்தியைக் கேட்டபோது இது அவர்களுடைய படுகுழிகளிற் பிடிபட்டது. இதைத் துறடுகளைப்போட்டு * எகிப்து தேசத்திற்குக் கொண்டுபோனார்கள். * ௨. இராசா. ௨௩, ௩௩. எரே. ௨௨, ௰௧.

௫. தான் காத்திருந்து தன்னுடைய நம்பிக்கை யவத்தமாய்ப்போயிற்றென்று கண்டு, அது தன் குட்டிகளில் வேறொன்றையெடுத்துக்கொண்டு; அதை யிளஞ்சிங்கமாக்கி வைத்தது.

௬. இது சிங்கங்களுக்குள்ளே நடமாடி, இளஞ்சிங்கமாகி இரையெடுக்கப்பழகி மனுஷரைப் பாய்ந்து பட்சித்தது.

௭. அவர்களுடைய விதவைகளையறிந்து, அவர்களுடைய பட்டணங்களைப் பாழாக்கிற்று. இதினுடைய கெர்ச்சிப்பின் சத்தத்தினாலே தேசமும், அதின் நிறைவுந் திகைத்தது.

௮. அல்ல, * சுற்றுச் சீமைகளின் சாதிகள் இதற்கு விரோதமாக எழும்பிவந்து, தங்கள் வலையை யதின்மேல் வீசினார்கள். அப்போது அது அவர்களுடைய படுகுழியிலே பிடிபட்டது. * ௨. இராசா. ௨௪, ௨.

௯. அவர்கள் அதைத் துறடுகளைப்போட்டு ஒரு கூண்டுக்குட்படுத்தி, * அதைப் பாபேலின் இராசாவண்டைக்குக் கொண்டுபோனார்கள். இனியதின் சத்தம் இஸ்ரவேலுடைய பருவதங்களின்மேற் கேட்கப்படாதபடிக்கு அதை யரணான இடங்களுக்குக் கொண்டுபோனார்கள். * ௨. நாளாகமம். ௩௬, ௬.

௰. நீ யமருகையோடிருக்கையில் உன் தாய் தண்ணீர்களின் ஓரமாய் நாட்டப்பட்டதும், வெகுநீர்ப்பாய்ச்சலாற் கனிதருகிறதும், தழைத்ததுமான * திராட்சச்செடியாயிருந்தாள். * சங்கீதம். ௮௰, ௯. ௱

௰௧. ஆளுகிறவர்களின் செங்கோல்களுக்கான பலத்த மிலாறுகள் அதற்கிருந்தன. அதின் வளர்த்தி அடர்த்தியான கொப்புகளுக்குள்ளே உயர ஓங்கித் தன் உயர்வினாலே தன்னுடைய திரளான செடிகளோடேகூடத் தெரியலாயிற்று.

௰௨. அல்ல அது உக்கிரமாய்ப் பிடுங்குண்டு தரையிற் படுக்கப்பட்டது, கொண்டற்காற்று அதின் கனியை உலர்த்திற்று. அதின் பலத்த மிலாறுகள் முறிந்து * பட்டுப்போயின, அக்கினியவைகளைப் பட்சித்தது. * ௫, ௰௪.

௰௩. இப்போது அது வனாந்தரமும், தண்ணீரில்லாததுமான வறந்தரப் பூமியிலே நாட்டப்பட்டது.

௰௪. அதின் கொடிகளிலுள்ள ஒரு மிலாறிலிருந்து அக்கினி புறப்பட்டு அதின் கனியைப் பட்சித்தது, ஆளுகிற செங்கோலுக்கான பலத்த மிலாறு இனி யதிலில்லையென்று சொல்லு, புலம்பல் இதுதான் இது புலம்பலாகவிருக்குமென்றார்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலின் மூப்பர்கள் வேண்டுதலைப் பராபரன் கேளாமலிருந்தது. (௫) எகிப்தி

லும், (௰) வனாந்தரத்திலும், (௨௭) தங்கள் தேசத்திலும் அவர்கள் பண்ணின கலகத்தை அவர் காட்டினது. (௩௩) சுவிசேஷத்திலே அவர்களையொன்றாய்ச் சேர்க்கவாகக் குத்தத்தம் பண்ணினது. (௪௫) வனத்தின் பெயரைக்கொண்டு எருசலேமின் அழிவைக் காட்டினது.]

ஏழாம் வருஷத்து ஐந்தாம் மாசம் பத்தாந் தேதியிலே சம்பவித்ததென்னவென்றால், * இஸ்ரவேலின் மூப்பரிற் சிலர் கர்த்தரைக் கேட்கவந்து, எனக்கு முன்பாக உட்கார்ந்தார்கள். * ௰௪, ௧.

௨. அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௩. மனுஷபுத்திரனே, நீ இஸ்ரவேலின் மூப்பரோடே பேசி அவர்களுடனே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், நீங்கள் நம்மைக் கேட்க வருகிறீர்களோ! உங்களால் நாம் கேட்கப்படோமென்கிறதை நமது சீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லு.

௪. மனுஷபுத்திரனே, நீயவர்கள் நியாயத்தை விசாரிப்பாயோ? விசாரிக்க மனதானால், நீயவர்கள் பிதாக்களின் அருவருப்புகளையவர்களுக்குத் தெரியக்காட்டி,

௫. அவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், நாம் இஸ்ரவேலைத் தெரிந்துகொள்ளுகிற நாளிலே நாம் யாக்கோபு வீட்டாரின் வித்துக்காக நம்முடைய கரத்தையேறெடுத்து, எகிப்து தேசத்தில் நம்மையவர்களுக்கறியப்பண்ணி, நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று நம்முடைய கரத்தையவர்களுக்காக ஏறெடுத்தோம்.

௬. நாம் அவர்களை எகிப்து தேசத்திலிருந்தழைப்போமென்றும், அவர்களுக்காக நாம் பார்த்துவைத்ததாகிய பாலும் தேனும் ஓடுகிறதும், எல்லாத் தேசங்களிலும் சிங்காரமாயிருக்கிறதுமான தேசத்திலேயவர்களைக் கொண்டுவந்துவிடுவோமென்றும் அந்நாளிலே நமது கரத்தையவர்களுக்காக ஏறெடுத்து, * ௨. மோசே. ௩, ௰௬. ௰௭.

௭. அவர்களுடனே சொன்னதாவது; உங்களில் அவரவர் தங்கள் கண்களால் நோக்கின அருவருப்புகளைத் தள்ளிப்போட்டு, எகிப்தின் நரகலான தேவர்களால் உங்களைத் தீட்டுப்படுத்தாதிருப்பீர்களாக, உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாமேயென்றோம்.

௮. அவர்களோவென்றால், நம்முடைய சொற்கேட்க மனதில்லாமல் நமக்கு விரோதமாய் இரண்டகம் பண்ணினார்கள், அவரவர் தங்கள் கண்களால் நோக்கின அருவருப்புகளைத் தள்ளிப்போடாமலும், எகிப்தின் நரகலான தேவர்களைவிடாமலுமிருந்தார்கள். ஆனதுகொண்டு எகிப்துதேசத்தின் நடுவிலே நமது கோபத்தை அவர்களிலே தீர்த்துக்கொள்ளும்படிக்கு நம்முடைய உக்கிரத்தையவர்களின்மேல் ஊற்றுவோமென்றோம்.

௯. ஆகிலும் புறசாதியாருடைய கண்களுக்கு முன்பாக * நம்முடைய நாமம் பரிசுத்தங்குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதினிமித்தங் கிருபைசெய்தோம். ஏனெனில், இவர்களுடைய நடுவிலிருந்தார்கள். நாம் அவர்களையிவர்கள் கண்களுக்கு முன்பாக எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணுவதினால் இவர்களுக்கு அறியப்பட்டோம்.

* ௩௬, ௨௩. ௨௨.

௰. ஆகையால், நாம் அவர்களை எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்தரத்தில் அழைத்துவந்து,

௰௧. நம்முடைய கட்டளைகளை நாம் அவர்களுக்குக் கொடுத்து நம்முடைய நியாயங்களையவர்களுக்குத் தெரியப்பண்ணினோம், * அவைகளின்படியே மனுஷன் செய்தால் அவைகளாற் பிழைப்பான். * ௩. மோசே. ௰௮, ௫.

௰௨. நாம் தங்களைப் பரிசுத்தம்பண்ணுகிற கர்த்தரென்றவர்கள் அறியும்படிக்கு நமக்கும், அவர்களுக்கும் அடையாளமாயிருப்பதற்கான * நம்முடைய ஓய்வுநாள்களையும் அவர்களுக்குக் கட்டளையிட்டோம்.

* ௨. மோசே. ௨௰, ௮—௰௧. ௩௧, ௰௩—௰௭.

௰௩. ஆனால் இஸ்ரவேல்வீட்டார் வனாந்தரத்திலே நமக்கு விரோதமாய் இரண்டகம்பண்ணினார்கள், நம்முடைய கட்டளைகளின்படியே மனுஷன் செய்தால் அவைகளாற் பிழைப்பானே அவர்களோ அவைகளில் நடவாமல் நம்முடைய நியாயங்களை வெறுத்து, நம்முடைய ஓய்வுநாள்களின் பரிசுத்தத்தை மிகவுங் குலைத்துப்போட்டார்கள். ஆனதுகொண்டு அவர்களை நிர்மூலமாக்கும்படிக்கு வனாந்தரத்திலே நம்முடைய உக்கிரத்தையவர்கள்மேல் ஊற்றுவோமென்றோம்.

௰௪. ஆகிலும், புறசாதிகளுடைய கண்களுக்கு முன்பாக நம்முடைய நாமம் பரிசுத்தங்குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதினிமித்தங் கிருபைசெய்தோம். ஏனெனில், இவர்களுடைய கண்களுக்கு முன்பாக அவர்களைப் புறப்படப்பண்ணினோம்.

௰௫. நாம் வாக்குத்தத்தம் பண்ணினதாகிய பாலும், தேனும் ஓடுகிறதும், எல்லாத் தேசங்களிலும் சிங்காரமாயிருக்கிறதுமான தேசத்திலேயவர்களைக் கொண்டுவந்துவிடுவதில்லையென்று * வனாந்தரத்திலே நமது கரத்தையவர்களுக்கு விரோதமாக ஏறெடுத்தோம். * ௪. மோசே. ௰௪, ௰௧. ௰௨.

௰௬. ஏனென்றால், தங்கள் இருதயந் தங்களுடைய நரகலான தேவர்களைப் பின்பற்றினபடியினாலேயவர்கள் நம்முடைய நியாயங்

களை வெறுத்து நம்முடைய கட்டளைகளில் நடவாதே போய், நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப் போட்டார்கள்.

௰௭. ஆகிலும் அவர்களையழிக்காதபடிக்கு நம்முடைய கண் அவர்களைத் தப்பவிட்டது, நாம் அவர்களை வனாந்தரத்திலே நிர்மூலமாக்காமல்,

௰௮. அவர்களுடைய பிள்ளைகளோடே வனாந்தரத்திலே சொன்னதாவது; நீங்கள் உங்கள் பிதாக்களின் முறைமைகளில் நடவாமலும், அவர்களுடைய நியாயங்களைக் கைக்கொள்ளாமலும், அவர்களுடைய நரகலான தேவர்களால் உங்களைத் தீட்டுப்படுத்தாமலுமிருங்கள்.

௰௯. உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாமே, நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு, அவைகளின்படியே செய்து,

௨௰. நம்முடைய ஓய்வுநாட்களைப் பரிசுத்தமாக்குங்கள், நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று நீங்களறியும்படிக்கு, அவைகள் நமக்கும் உங்களுக்கும் அடையாளமாயிருக்குமென்றோம்.

௨௧. ஆனால் பிள்ளைகளும் நமக்கு விரோதமாய் எழும்பினார்கள். நம்முடைய கட்டளைகளின்படியே மனுஷன் செய்தால், அவைகளால் பிழைப்பானே, அவர்களோ அவைகளில் நடவாமலும், நம்முடைய நியாயங்களை யவைகளின்படி செய்யும்படிக்குக் கைக்கொள்ளாமலும், நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள். ஆகையால், வனாந்தரத்திலே நமது கோபத்தை யவர்களின்மேல் தீர்த்துக்கொள்ளும்படிக்கு நம்முடைய உக்கிரத்தையவர்கள்மேல் ஊற்றுவோமென்றோம்.

௨௨. ஆகிலும் நாம் நமது கையைத் திருப்பிக்கொண்டு, நமது நாமம் புறசாதிகளின் கண்களுக்கு முன்பாகப் பரிசுத்தக் குலைச்சலாகாதபடிக்கு அதினிமித்தமாகக் கிருபைசெய்தோம். ஏனென்றால், இவைகளுடைய கண்களுக்கு முன்பாக அவர்களைப் புறப்படப்பண்ணினோம்.

௨௩. நாம் அவர்களைப் புறசாதிகளுக்குள் ளே சிதறவடித்து அவர்களைத் தேசங்களிலே தூற்றிப்போடுவோமென்று நமது கரத்தை வனாந்தரத்திலே யவர்களுக்கு விரோதமாக ஏறெடுத்தோம்.

௨௪. ஏனென்றால், அவர்கள் நம்முடைய நியாயங்களின்படி செய்யாமல், நம்முடைய கட்டளைகளை வெறுத்து, நம்முடைய ஓய்வுநாட்களின் பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள், அவர்களுடைய கண்கள் அவர்கள் பிதாக்களின் நரகலான தேவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருந்தன.

௨௫. ஆகையால், * நல்லதல்லாத கட்டளைகளையும், அவர்கள் பிழைக்கக்கூடாத நியாயங்களையும் நாம் அவர்களுக்கு உண்டாகவும் பண்ணினோம். * ௨. தெசலோ. ௨, ௰. ௰௧.

௨௬. கர்ப்பந்திறந்து பிறக்கிறதையெல்லாம் * அவர்கள் தீயைக் கடக்கப்பண்ணினதைத் தொட்டு, அவர்களையவர்களுடைய காணிக்கைகளாலே தீட்டுப்படப் பண்ணினோம், நாம் அவர்களைப் பாழாக்கடிக்கும்படியாகவும், நாம் கர்த்தரென்று அவர்களறியும்படியாகவுந்தானே. * ௰௬, அதி. ௨௰. ௨௧.

௨௭. ஆகையால், மனுஷபுத்திரனே, நீ இஸ்ரவேல் வீட்டாரோடே பேசி யவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவெனில், உங்கள் பிதாக்கள் அப்புறம் நமக்கு விரோதமான துரோகம்பண்ணி நம்மை மத்தூஷணித்தவிதமாவது;

௨௮. அவர்களுக்குக் கொடுக்கத்தக்கதாக நாம் நயந்து கரத்தை யெடுத்த தேசத்திலே நாம் அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணின பிறபாடு, அவர்கள் உயர்ந்த ஒரு மேட்டையும், தாழ்ந்த ஒரு விருட்சத்தையும் எங்கெங்கே கண்டார்களோ அங்கேயெல்லாந் தங்கள் பலிகளைப் பலியிட்டு, அங்கே கோபமுண்டாக்குதலான தங்கள் காணிக்கைகளைப் படைத்து, அங்கேயாற்றுகிற வாசனையாகத் தங்கள் தூபங்களைக் காட்டி, அங்கே தங்கள் ஊற்றுதல்களையூற்றினார்கள்.

௨௯. அப்போது நாம் அவர்களுடனே, நீங்கள் போகிற அந்தமேடு என்னதென்று கேட்டுச் சொன்னோம். ஆனால் இந்நாள் வரைக்கும் அதின்பேர் மேடென்னப்படும்.

௩௰. ஆகையால், இஸ்ரவேல் வீட்டாரோடே நீ சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவெனில், உங்கள் பிதாக்களுடைய மார்க்கத்தின்படியேயல்லவோ நீங்கள் தீட்டுப்பட்டவர்கள், அவர்களுடைய அருவருப்புகளையல்லவோ நீங்கள் பின்பற்றிச் சோரம்போகிறவர்கள்.

௩௧. நீங்கள் உங்கள் பிள்ளைகளைத் * தீயைக் கடக்கப்பண்ணுகையிலே உங்கள் காணிக்கைகளைப் படைக்கிறபோது இந்நாள்வரைக்கும் அவர்களுடைய எல்லா நரகலான தேவர்களாலும் நீங்கள் தீட்டுப்படுகிறீர்களே, நாம் உங்களாலே கேட்கப்படுவோமோ! இஸ்ரவேல் வீட்டாரே, நாம் உங்களாலே கேட்கப்படோமென்கிறதை நமது ஜீவனைக் கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார். * ௨. இராசா. ௰௬, ௩. ௰௭, ௰௭.

௩௨. மரத்திறதும், கல்லிறதும், ஆராதனை செய்து புறசாதிகளைப்போலேயும், தேசங்களின் வம்சங்களைப்போலேயுமிருப்போமென்று சொல்லுகிறீர்களே, இந்த உங்கள் ஆவியிறங்கியெழுகிற நினைவின்படியே யாகாதேயில்லை.

௩௩. பலத்தகையினாலும், நீட்டப்பட்ட புயத்தினாலும், ஊற்றப்பட்ட உக்கிரத்தினாலும் உங்களையாளுவோமென்கிறதை நம்முடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௩௪. நீங்கள் சனசதளங்களுக்குள்ளிராதபடிக்கு நாம் உங்களைப் புறப்படப்பண்ணி, நீங்கள்சிதறித்தங்குகிற தேசங்களிலிராதபடிக்கு நாமுங்களைப் பலத்தகையினாலும், நீட்டப்பட்ட புயத்தினாலும், ஊற்றப்பட்டஉக்கிரத்தினாலுங்கூட்டி,

௩௫. உங்களைச் சனசதளங்களின் வனாந்தரத்திலேகொண்டுபோய் அங்கே யுங்களோடேமுகமுகமாக நியாயத்திறகுட்பிரவேசிப்போம்.

௩௬. * நாமஎகிப்துதேசத்தின் வனாந்தரத்தில் உங்கள்பிதாக்களோடே நியாயத்திறகுட் பிரவேசித்ததுபோலே உங்களோடே நியாயத்திறகுட்பிரவேசிப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

* ௪. மோசே. ௰௪, ௨௨. ௨௩.

௩௭. நாமஉங்களைக்கோலின்கீழ்க் கடந்துபோகப்பண்ணி உங்களை யுடன்படிக்கையின்கட்டுக்குட்படுத்தி,

௩௮. கலகக்காரரையும், துரோகிகளையும் உங்களைவிட்டுப்பிரித்துப்போடுவோம், அவர்களைத் தாங்கள்தங்குந் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணுவோம், ஆனால் அவர்கள் இஸ்ரவேல் சீமைக்குட் பிரவேசிப்பதில்லை, அப்படியே நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்கள்.

௩௯. இப்போதும்இஸ்ரவேல்வீட்டாரே நீங்கள்நம்முடையசொல்லைக்கேட்கமனதில்லாதிருந்தால், நீங்கள்போயவனவன்தன்தன் நரகலானதேவர்களையினிமேலுஞ் சேவியுங்கள், ஆனால், நம்முடைய பரிசுத்தநாமத்தையுங்கள்காணிக்கைகளாலும்,உங்கள்நரகலான தேவர்களாலும் இனிப்பரிசுத்தக்குலைச்சலாக்காதிருப்பீர்களாகவென்றுகர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

௪௰. ஏனெனில், இஸ்ரவேலின் உயரமான பருவதமாகிய நம்முடையபரிசுத்தபருவதத்திலே இஸ்ரவேலுடைய எல்லாவீட்டாருமாகிய தேசத்திலுள்ளஅனைவரும் நம்மைச் சேவிப்பார்களென்று கர்த்தராகியஆண்டவர்சொல்லுகிறார், அங்கே அவர்கள்மேற்பிரியம்வைப்போம், அங்கே நீங்கள்பரிசுத்தம்பண்ணுகிறவையெல்லாவற்றிலும் உங்கள் செலுத்துதல்களையும்,உங்கள் ஈவுகளின்முதற்பலன்களையுங்கேட்போம். * ௰௭, ௨௰. ஏசாயா. ௨, ௨.

௪௧. நாம் உங்கள்சனசதளங்களிலிருந்து புறப்படப்பண்ணி உங்களை நீங்கள் சிதறுண்டிருக்கிற தேசங்களிலிருந்து கூட்டிக்கொள்ளும்போது, ஆற்றுகிற வாசனையினிமித்தம் நாம் உங்கள்மேற்பிரியமாயிருப்போம், அப்போது புறசசாதிகளின் கண்களுக்குமுன்பாக உங்களால் பரிசுத்தம்பண்ணப்படுவோம்.

௪௨. உங்கள்பிதாக்களுக்குக்கொடுப்போமென்று நம்முடையகரத்தையேற்றெடுத்த தேசமாகிய இஸ்ரவேல் சீமையிலே நாம் உங்களைத் திரும்பிவரப்பண்ணின அப்போது நாம் கர்த்தரென்று நீங்கள் அறிந்துகொண்டு,

௪௩. அங்கேயுங்களுடைய எல்லாவழிகளையும், நீங்கள் தீட்டுப்பட்ட உங்களுடைய எல்லாக்கிரியைகளையும், * நினைத்து நீங்கள்செய்திருந்த உங்களுடையஎல்லாப்பொல்லாப்புகளினிமித்தமும் உங்களைத்தானேயரோசிப்பீர்கள். * ௩௬, ௩௧. ௩௨.

௪௪. இஸ்ரவேல்வீட்டாரே, நாம் நம்முடையநாமத்தினிமித்தம்உங்கள்பொல்லாத வழிகளுக்குத்தக்கதாகவும், உங்கள் கெட்டகிரியைகளுக்குத்தக்கதாகவும் உங்களுக்குச்செய்யாமற்போனஅப்போது நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்களென்கிறதைக்கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்றுசொல்லென்றார்.

௪௫. கர்த்தருடையவார்த்தையெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௪௬. மனுடபுத்திரனே, நீ யுன்முகத்தைத் தென்றிசையாகத் திருப்பித் தெற்குக்குவிரோதமாக உன்வசனத்தைச்சொரிந்து தென்புறமானவயல்வெளியின் காட்டுக்குவிரோதமாகத் தீர்க்கதரிசனமுரைத்து,

௪௭. தெற்குத்திசைக் காட்டை நோக்கிச்சொல்லவேண்டியதாவது; கர்த்தருடைய வார்த்தையைக்கேள், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், இதோ நாம உன்னில் அக்கினியைக் கொளுத்துவோம், அது உன்னிற்பச்சையானசகலமரத்தையும், பட்டிருக்கிறமரத்தையும்பட்சிக்கும், சுவாலிக்கிறசுவாலையவிக்கப்படமாட்டாது, தெற்குத்துவக்கிவடக்குமட்டுமுள்ள தேசமுகங்களெல்லாம் அதினாலவெந்துபோம்.

௪௮. கர்த்தராகிய நாம் அதைக்கொளுத்தினோமென்பதைச்சகலமாம்சருங்காணும், அது அவிக்கப்படுவதில்லையென்று சொல்லென்றார்.

௪௯. அப்போது நான் ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, இவன் உவமைகளையல்லவோ சொல்லுகிறவனென்று அவர்கள் என்னைக்குறித்துச்சொல்லுகிறார்களென்றேன்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) எசேக்கியேல் பெருமூச்சின் அடையாளத்தினாலே எருசலேமுக்குவிரோதமாயத் தீர்க்கதரிசனமுரைத்தது. (௮) எருசலேமு

கும், (௨௫) இராசரியத்திற்கும், (௨௮) அம்மோன் புத்திரருக்கும் விரோதமாக வெளிப்படுங் கூறும், ஒளிவுள்ள பட்டயம்.]

அப்போது கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாய் அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, * நீ யுன்முகத்தை எருசலேமுக்கு நேராகத் திருப்பிப் பரிசுத்த ஸ்தலங்களுக்கு விரோதமாக உன் வசனத்தைச் சொரிந்து இஸ்ரவேல் சீமைக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனமுரைத்து, * ௨௰, அதி. ௪௬.

௩. இஸ்ரவேல் சீமையை நோக்கிச் சொல்ல வேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இதோ நான் உனக்கு விரோதமாக வந்து நம்முடைய பட்டயத்தை அதினுறையிலிருந்துருவி உன்னில் நீதிமானையும், ஆகாதவனையுஞ் சங்காரம் பண்ணுவோம்.

௪. நாம் உன்னில் நீதிமானையும், ஆகாதவனையுஞ் சங்காரம் பண்ணப்போகிறபடியினாலே நம்முடைய பட்டயந் தெற்குத் துவக்கி வடக்குமட்டுமுள்ள எல்லா மாம்சத்திற்கும் விரோதமாக அதினுறையிலிருந்து புறப்படும்.

௫. அப்போது கர்த்தராகிய நாம் நம்முடைய பட்டயத்தை அதினுறையிலிருந்துருவினோமென்பதை யெல்லா மாம்சமும் அறியும், அது இனியதிலே திரும்புவதில்லை.

௬. நீயோவென்றால், மனுஷபுத்திரனே, பெருமூச்சுவிடு, உன் இடுப்புகள் தொய்ந்துக்குமளவாகவும், கஸ்தியாகவும் அவர்கள் கண்களுக்கு முன்பாகப் பெருமூச்சுவிடு.

௭. நீ யெதினிமித்தம் பெருமூச்சு விடுகிறாயென்று அவர்களுன்னைக் கேட்கிறதுண்டானால், நீ சொல்லவேண்டியதாவது: துர்ச்செய்தி வருகிறதினிமித்தந்தானே, அதினால், இருதயங்களெல்லாம் உருகிக் கைகளெல்லாந் தளர்ந்து ஆவிகளெல்லாந் தயங்கி முழங்கால்களெல்லாந் தண்ணீராய்ப்போம், இதோ அது வந்து சம்பவிக்குமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௮. கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௯. மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதரிசனமுரைத்துச் சொல்லவேண்டியதாவது; கர்த்தருரைக்கிறதேதென்றால் பட்டயம் பட்டயமே கூர்மையாக்கப்பட்டிருக்கிறது, துலக்கப்பட்டதுமாயிருக்கிறது.

௰. வெட்டவே வெட்ட அது கூர்மையாக்கப்பட்டிருக்கிறது, மின்னத்தக்கதாய் அது துலக்கப்பட்டிருக்கிறது, சந்தோஷப்படுவோமோ! இது சகல மரங்களையும் அசட்டைபண்ணுகிறதாகிய நம்முடைய குமாரனுடைய கோல்.

௰௧. அதைக் கையிற்பிடிக்கிறதாக அதைத் துலக்கக் கொடுத்தார், கொல்லுகிறவன் கையிலே கொடுக்கும்படிக்கு அந்தப் பட்டயங் கூர்மையாக்கப்பட்டிருக்கிறது, அது துலக்கப்பட்டதுமாயிருக்கிறதென்கிறாரென்று சொல்லு.

௰௨. மனுஷபுத்திரனே, நீ கூப்பிட்டு அலறு, ஏனெனில், அது நம்முடைய சனத்தின் மேல் வரும், அது இஸ்ரவேலுடைய பிரபுக்களெல்லாரின் மேலும் வரும், பட்டயத்தினிமித்தம் நம்முடைய சனத்திற்குள்ளே திகில்கள் உண்டாயிருக்கும். ஆகையால், * உன் இடுப்பிலேயடித்துக்கொள். * ௯, அதி. ௰௧.

௰௩. ஏனெனில், யாவையுங் கண்டிக்கிற கோல் வந்தாலொழிய * இனிச் சோதனையிலே திருக்கிறதென்னவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ஏசாயா. ௯, ௰௩. ௰௪. எரேமி. ௫, அதி. ௩.

௰௪. ஆகையால் மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதரிசனஞ்சொல்லிக் கையோடே கைகொட்டு, ஏனென்றால் பட்டயம் மூன்றுவிசை இரட்டித்து வரும், அது கொலையுண்டவர்களின் பட்டயம், அது கொலையுண்ணப்போகிற பெரியவர்களின் உள்ளறைகளிற் புகுகின்ற பட்டயம்.

௰௫. அவர்களுடைய இருதயங் கரைந்து அவர்களுடைய இடறுதல்கள் திரளாகும்படிக்குப் பட்டயத்தின் கூர்மையை யவர்களுடைய எல்லா வாசல்களுக்கும் நேரிடக் கட்டளையிடுவோம். ஆ, இது மின்னும்படியாகப் பண்ணப்பட்டது, வெட்டும்படியாகத் தீட்டிவைக்கப்பட்டது.

௰௬. ஏகபலமாய் வலதுபுறமாகவும் வெட்டித் திரும்பி இடதுபுறமாகவும் வெட்டு, உன் முகந் திருப்பப்படுந் திக்குக்கெல்லாம் வெட்டு.

௰௭. நாமுங் கையோடே கைகொட்டி, நம்முடைய உக்கிரத்தை யாறப்பண்ணுவோமென்று கர்த்தராகிய நாம் சொன்னோமென்றார்.

௰௮. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௰௯. மனுஷபுத்திரனே, பாபேலுடைய இராசாவின் பட்டயம் வரத்தக்க இரண்டு வழிகளைக் குறித்துக்கொள், ஒரே தேசத்திலிருந்து இரண்டு புறப்பட்டு வரக்கடவது, ஒரு இடத்தைத் தெரிந்துகொள், பட்டணத்திற்குப் போகிற வழியின் முனையிலே அது இருக்கிறதாகத் தெரிந்துகொள்.

௨௰. பட்டயம் அம்மோன் புத்திரரின் பட்டணமாகிய ரப்பாவுக்கு விரோதமாக வரத்தக்க ஒரு வழியையும், யூதாவிலிருக்கிற அரணான எருசலேமுக்கு விரோதமாக வரத்தக்க ஒரு வழியையுங் குறித்துக்கொள்வாயாக.

௨௧. ஏனென்றால், இரண்டு வழிகளின் முனையாகிய வழிப்பிரிவிலே பாபேலின் இரா

சா நிமித்தம்பார்க்கிறதற்காக திரும்பிக்கொள்வான். அம்புகளைத் தீட்டிச் சுரூபங்களை யாலோசனைகேட்டு ஈரலைப்பார்ப்பான்.

௨௨. தலைவரைக் கட்டளையிடுகிறதற்கும், கொலைசெய்கிறதிலே வாயைத் திறக்கிறதற்கும், ஆர்ப்பரிப்பாய்ச் சத்தத்தையுயர்த்துகிறதற்கும், வாசல்களை முட்டும் எந்திரங்களை வைக்கிறதற்கும், அணைபோடுகிறதற்கும், கொத்தளங்களைக் கட்டுகிறதற்குமாக அவனுடைய வலதுபுறத்திலே எருசலேமைக்குறிக்கும் நிமித்தமுண்டாயிருக்கும்.

௨௩. இது அவர்களுக்குத் தப்பான நிமித்தமாகத்தோற்றும்போது, ஆணை சத்தியங்கள் அவர்களுக்குப் பண்ணப்படும். செய்யப்பட்ட அக்கிரமத்தையும் அவன் நினைத்துக்கொண்டு அது பிடிக்கப்படலாமென்பான்.

௨௪. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; உங்கள் துரோகங்கள் வெளியரங்கமாகிறதினாலும், உங்கள் செய்கைகளிலெல்லாம் உங்கள் பாவங்கள் தெரியவருகிறதினாலும், நீங்கள் உங்கள் அக்கிரமத்தை நினைக்கப்பண்ணுகிறீர்களே. நீங்கள் இப்படிக்கொத்தவர்களென்று நினைக்கப்படுகிறீர்களே. ஆனதுகொண்டு கைப்பிடியாய்ப் பிடிக்கப்படுவீர்கள்.

௨௫. இப்போதும் இஸ்ரவேலையாளுகிற பரிசுத்தமற்ற ஆகாத அதிபதியே, அக்கிரமம் நிறைவேறுங்காலத்தில் வருகிற உன்னுடையநாளுக்கேதுவானவனே,

௨௬. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; சரிகைப்பட்டத்தைவாங்கி, கிரீடத்தையெடுத்துப்போடு, அது இனி யப்படிக்கொத்ததல்ல, * தாழ்மையானவனை யுயர்த்தி, உயர்ந்தவனைத் தாழ்த்துவோம்.
* லூக்கா. ௰௪, ௰௧.

௨௭. அதைக்கவிழ்த்துக் கவிழ்த்துங் கவிழ்த்துப்போடுவோம். நியாயத்திற்குடையவர் வருமட்டும் அது இல்லாதிருக்கும். * இவருக்கே யதைக்கொடுப்போம். * லூக்கா. ௧, ௩௨. ௩௩.

௨௮. பின்னையும் மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதரிசனமுரைத்துச்சொல்லவேண்டியதாவது; அம்மோன் புத்திரரையும், அவர்கள் நிந்திக்குதலையுங் குறித்துக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில்,

௨௯. அக்கிரமம் நிறைவேறினகாலத்தில் வந்த தங்களுடையநாளுக்கேதுவாகக்கொலையுண்டுபோனவர்களுடைய பிடரிகளோடேகூட உன்னைத் துன்மார்க்கரின் கையிலே விழப்பண்ணும்படிக்கு உனக்கு அபத்தமானது தரிசிக்கப்படுகிறதாயிலும், உனக்குப் பொய்நிமித்தம் பார்க்கப்படுகிறதாயிலும் பட்டயம், பட்டயமே யுருவப்பட்டது. வெட்டும்படிக்கும், சங்கரிக்கும்படிக்கும் அது மின்னத்தக்கதாயத் துலக்கப்பட்டிருக்கிறது.

௩௰. உன் பட்டயத்தை நீ திரும்ப அதின் உறையிலேபோடு. நீ சிருட்டிக்கப்பட்ட ஸ்தானமாகிய உன்தொழில்களின்தேசத்திலே நாமுன்னை நியாயந்தீர்த்து,

௩௧. நம்முடையசினத்தை யுன்மேலூற்றுவோம். நாம் நம்முடைய சூர்க்கத்தின் அக்கினியை யுன்மேலூதி, எரிக்கிறவர்களும், கேடுசெய்யப்பண்ணுகிறவர்களுமாகிய மனுஷரின் கையிலுன்னை யொப்புக்கொடுப்போம்.

௩௨. அக்கினிக் கிரையாவாய். உன் இரத்தம் உன்தேசத்தினடுவிலிருந்திருக்கும். நீ இனி நினைக்கப்படுவதில்லை. ஏனெனில், கர்த்தராகிய நாமிதைச்சொன்னோமென்றார்.

## ௨௨. அதிகாரம்.

[(௧) எருசலேமின்பாவங்களின் அட்டவணை. (௰௩) பாபரன் தமது உலையின் கலம்ஷம்போலே அவர்களைக் கொளுத்துவானென்பது. (௨௩) தீர்க்கதரிசிகள், குருக்கள், இராசாக்கள், பிரஜைகள், இவர்களின்சாதாரணமானகெடுதி.]

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௨. இப்போதும் மனுஷபுத்திரனே, இரத்தஞ்சிந்தினபட்டணத்தை நீ நியாயம்விசாரிப்பாயோ! விசாரிக்கமனதானால் * நீ யதின் அருவருப்புகளையெல்லாம் அதற்குத்தெரியக்காட்டி, * ௨௰, ௪.

௩. சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர்உரைக்கிறதேதெனில், உன்காலம் வரத்தக்கதாக * உன்னடுவிலே இரத்தஞ்சிந்துகிறதும், உன்னைத் தீட்டுப்படுத்தத்தக்கதாக உனக்கேவிரோதமாய் நரகலானதேவர்களையுண்டுபண்ணுகிறதுமான பட்டணமே.
* மத்தே. ௨௩, ௩௭.

௪. நீ சிந்தின உன் இரத்தத்தினாலே நீ குற்றஞ்சுமந்ததாகி நீ யுண்டுபண்ணின உன் நரகலானதேவர்களாலே நீ தீட்டுப்பட்டு, உன் நாள்களைச் சமீபித்துவரப்பண்ணி, உன்வருஷங்களின் எல்லைக்குவந்தாய். ஆகையால் நாமுன்னைப் புறசாதிகளுக்கு நிந்தையாகவும், தேசங்களுக்கெல்லாஞ் சக்கந்தமாகவும் வைப்போம்.

௫. உனக்குச் சமீபமும், உனக்குத் தூரமுமானதேசங்களின் மனுஷர் உன்னைத் தீழ்ப்பான கீர்த்தியுள்ளதென்றும், அமளிபருத்ததென்றுஞ் சக்கந்தம்பண்ணுவார்கள்.

௬. இதோ, இஸ்ரவேலின் அதிபதிகள் அவனவன் தன்தன் புயபலத்திற்குத்தக்கதாக உன்னில் இரத்தத்தைச் சிந்துகிறதற்கிருந்தார்கள்.

௭. உன்னிலே தாய் தகப்பனை யற்பமாயெண்ணினார்கள். உன்னடுவிலே * பரதேசி

யை யிம்சைபண்ணிச் செய்தார்கள். உன்னிலே திக்கற்றவனையும், விதவையையும் ஒடுக்கினார்கள். * சகரி. ௭,௪, ௬.

௮. நம்முடைய பரிசுத்த கட்டளைகளையசட்டைபண்ணி நம்முடைய ஓய்வுநாள்களின் பரிசுத்தத்தைக் குலைத்தாய்.

௯. இரத்தஞ் சிந்தும்படிக்கு அபாண்டம் பேசுகிறவர்கள் உன்னிலிருந்தார்கள். *பருவதங்களின்மேற் சாப்பிடுகிறவர்களும் உன்னிலிருந்தார்கள். உன்னடுவிலே தோஷஞ் செய்தார்கள். * ௰௮, அதி. ௬.

௰. உன்னிலே தகப்பனுடைய அபிமானத்தைத் திறந்தார்கள். * உன்னிலே தூரஸ்திரியைப் பலவந்தப்படுத்தினார்கள். * ௩. மோசே. ௰௮, ௰௯.

௰௧. உன்னிலொருவன் தனக்கடுத்தவனுடைய பெண்சாதியோடே அருவருப்பானதைச் செய்தான். வேறொருவன் தோஷமாயத் தன் மருமகளைத் தீட்டுப்படுத்தினான். வேறொருவன் தன் தகப்பனுக்குப்பிறந்த தன் சகோதரியைக் கைப்பிடித்தான். * ௩௩, ௨௬. எரேமி. ரு, அதி. ௮.

௰௨. இரத்தஞ்சிந்தும்படிக்கு உன்னிற் பரிதானம் வாங்கினார்கள். * நீ வட்டியையும், சொச்சத்தையும் வாங்கிப் பொருளாசையாய் உனக்கடுத்தவனை இம்சைபண்ணி, நம்மைமறந்துபோனாயென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௰௮, அதி. ௰௩.

௰௩. இதோ, உன்னில் நடந்தேறின உன் பொருளாசையினிமித்தமும், உன்னடுவில் நீ சிந்தின இரத்தத்தினிமித்தமும் நம்முடைய கையில் அடித்துக்கொள்ளுகிறோம்.

௰௪. நாம் உன்னில் நியாயஞ்செய்யுநாள்களில் உன்னிருதயந்தாழுமோ! அப்போது உன் கைகள் திடப்பட்டிருக்குமோ! * கர்த்தராகிய நாமிதைச் சொன்னோம். இதை நிர்வாகம்பண்ணுவோம். * ௰௭, அதி. ௨௪.

௰௫. நாம் உன்னைப் புறச்சாதிகளுக்குள்ளே சிதறவடித்து உன்னைத் தேசங்களிலே தூற்றி உன் அசுத்தத்தை யுன்னில் முடியப்பண்ணுவோம்.

௰௬. அப்படியே நீ புறச்சாதிகளின்கண்களுக்கு முன்பாக உன்னிற் பரிசுத்தக்குலைச்சலாயிருந்து, நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவாயென்று சொல்லென்றார்.

௰௭. கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰௮. மனுபுத்திரனே, இஸ்ரவேல்வீட்டார் நமக்கு * களிம்பாய்ப்போனார்கள், அவர்களெல்லாரும் குகைக்குட் பித்தளையும், வெள்ளீயமும், இரும்பும், காரீயமுமானார்கள். வெள்ளியின் களிம்பாய்ப்போனார்கள். * ஏசாயா. ௧, ௨௨.

௰௯. ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நீங்களெல்லா

ரும் களிம்பாய்ப்போனபடியினாலே இதோ, நாம் உங்களை எருசலேமுக்குள்ளே கூட்டுவோம்.

௨௰. வெள்ளியையும், பித்தளையையும், இரும்பையும், காரீயத்தையும், வெள்ளீயத்தையும் அக்கினியில் ஊதி யுருக்குவதற்காகக் குகைக்குள்ளே கூட்டுகிறதுபோலே நாம் நம்முடைய கோபத்தினாலும், நம்முடைய உக்கிரத்தினாலும் உங்களைக்கூட்டிப்போட்டுருக்குவோம்.

௨௧. நாம் உங்களைக்கூட்டி நம்முடைய சினத்தின் அக்கினியை யுங்கள்மேல் ஊதுவோம். அப்போது அதற்குளுருக்கப்படுவீர்கள்.

௨௨. வெள்ளி குகைக்குள்ளுருக்கப்படுமாப்போலே நீங்கள் அதற்குள்ளுருக்கப்பட்டுக் கர்த்தராகிய நாம் நம்முடைய உக்கிரத்தை யுங்கள்மேல் ஊற்றிப்போட்டோமென்றறிந்துகொள்ளுவீர்களென்றார்.

௨௩. கர்த்தருடையவார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௨௪. மனுபுத்திரனே, நீ சுத்தம்பண்ணப்படாததேசம் என்று அதற்குச்சொல்லு, சினத்தின்காலத்திலே அதற்கு மழைபெய்யாதிருக்கும்.

௨௫. அதினுடைய தீர்க்கதரிசிகள் பண்ணின ஒப்பந்தம் அதின் நடுவிலிருக்கிறது. கர்ச்சிக்கிற சிங்கம் இரையெடுக்கிறதைப்போல அவர்கள் * ஆத்துமாக்களைப்பட்சிக்கிறார்கள். பொக்கிசத்தையும், விலையேறப்பெற்றதையும் வாங்கிக்கொள்ளுகிறார்கள். அதின் விதவைகளின் இலக்கத்தை யதின் நடுவிற் பெருகப்பண்ணுகிறார்கள். * ௩௪, அதி. ௮—௰.

௨௬. அதின் ஆசாரியர்கள் * நம்முடைய வேதத்திற்கநியாயஞ்செய்து நம்முடைய பரிசுத்தக்கட்டளைகளைப் பரிசுத்தக்குலைச்சலாக்குகிறார்கள். பரிசுத்தமானதற்கும், பரிசுத்தமல்லாததற்கும் வித்தியாசம்பண்ணாமலும், அசுத்தமானதற்கும், சுத்தமானதற்கும் உண்டானவேற்றுமையைக் காணாமலுமிருந்து, நம்முடைய ஓய்வுநாள்களை விட்டுத் தங்கள் கண்களை விலக்குகிறார்கள், அப்படியே அவர்கள் நடுவிலுங்களனம்பண்ணப்படுகிறோம். * செப்பனி. ௩, அதி. ௪.

௨௭. அதின் நடுவிலிருக்கிற * அதினுடைய பிரபுக்கள் இரத்தஞ் சிந்துகிறதற்கும், தாம் பொழிவினிமித்தம் ஆத்துமாக்களைக் கெடுக்கிறதற்கும் இரையெடுக்கிற ஓநாய்களைப்போலிருக்கிறார்கள். * மீகா. ௩, ௰௧. செப்பனி. ௩, ௩.

௨௮. * அதின் தீர்க்கதரிசிகள் அவத்தமானதைத்தரிசித்துப் பொய்ச் சாஸ்திரத்தை அவர்களுக்குச்சொல்லிக் கர்த்தர் உரைக்காதிருந்தும் கர்த்தராகிய ஆண்டவர் உரை

த்தர் சொன்னாரென்றுசொல்லி, அவர்களுக்குச் † சாரமற்ற சுண்ணாம்பைப்பூசுகிறார்கள்.
* எரேமி. உங, ருக. ஙஉ. † யங, ய.

உகூ. தேசத்தின் சனம் ஒடுக்கவே ஒடுக்கிப் பறிக்கவே பறித்து, சிறுமையும், எளிமையுமானவனை ஹிம்சைசெய்து, பரதேசியை நியாயமில்லாமல் ஒடுக்குகிறார்கள்.

ஙய. * சுவரை அடைப்பாகுபவனும், நாம் தேசத்தை யழிக்காதபடிக்கு அதற்காக நம் முகத்திற்குமுன்பாகத், † திறப்பிலே நிற்பவனுமாகிய மனுஷனைத் தேடினோம், ஒருவனாகிலுங் காணோம். * யரு, ரு.
† சஙு. ௱கூ, உங.

ஙக. ஆகையால், நாம் அவர்கள்பேரிலே * நம்முடைய சினத்தையூற்றி, நம்முடைய உக்கிரத்தின் அக்கினியால் அவர்களை நிர்மூலமாக்கி, அவர்களுடைய மார்க்கத்தை † அவர்கள் தலையின்மேல் சுமரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார். * எ, அ. † யசூ. அகூ. சரு.

## உங. அதிகாரம்.

[(க) ஒகோலாள், ஒகோலிபாளென்பவர்களுடையவேசித்தனம், (உஉ) ஒகோலிபாள் தன் சிநேகிதராலே உபத்திரவப்படுவது. (ஙசா) தீர்க்கதரிசி அவர்களிருவருடையவேசித்தனத்தைக் கண்டித்தது. (சரு) அவர்கள்மேல்வரும் நியாயத்தீர்ப்புகளைக் காட்டினது.]

கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

உ. மனுஷபுத்திரனே, ஒரே தாயின் குமாரத்திகளாகிய இரண்டு ஸ்திரீகளிருந்தார்கள்.

ங. அவர்கள் * எகிப்திலே வேசித்தனம் பண்ணினார்கள். தங்கள் வாலிபத்திலேதானே வேசித்தனம்பண்ணினார்கள், அங்கே அவர்களுடைய ஸ்தனங்கள் அமுக்கப்பட்டு, அவர்களுடைய கன்னிமையின் கொங்கைகள் தொடப்பட்டன. * உய, அதி. ரு. அ.

ச. அவர்களில் மூத்தவளுக்கு ஒகோலாளென்றுபேரும், அவளுடைய தங்கைக்கு ஒகோலிபாளென்றுபேருமிருந்தது, அவர்கள் நம்முடையவர்களாகி குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றார்கள். அவர்களுடைய பேர்களென்னவென்றால், சமாரியா ஒகோலாளென்பவள், எருசலேம் ஒகோலிபாளென்பவள்.

ரு. ஒகோலாள் நம்முடையவளாயிருந்து சோரம்போனாள்.

சா. அவள் நீலமான உடுப்புள்ள தலைவரும், அதிகாரிகளும், இச்சிக்கப்பட்டத்தக்கவாலிபருமாய், குதிரைகளின்மேலேறுகிறவர்களாயிருந்தசமீபதேசத்தாராகிய * அசூரியரென்றதனுடைய சிநேகிதரையவள்மோகித்து, * யசா, உஅ.

எ. அசூரியபுத்திரரிலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களான அனைவரோடும், தான் மோகித்த அனைவரோடும் தன்வேசித்தனங்களை நடப்பித்து அவர்களுடைய நரகலான எல்லாத்தேவர்களாலும் தீட்டுப்பட்டுப்போனாள்.

அ. தான் எகிப்திலேபண்ணின வேசித்தனங்களையவள் விட்டதுமில்லை. ஏனெனில், அவர்கள் அவளுடைய வாலிபத்திலே அவளோடே சயனித்து, அவளுடைய கன்னிமையின் கொங்கைகளைத்தொட்டு, அவள்மேலே தங்கள் வேசித்தனத்தையூற்றியிருந்தார்கள்.

கூ. ஆகையால், அவளை அவளுடைய சிநேகிதரின் கையிலொப்புக்கொடுத்தோம், அவள் மோகித்திருந்த * அசூர்புத்திரரின் கையிலேதானே, * உ. இராசா. யரு, யகூ. உங. ௱எ, கூ.

ய. இவர்கள் அவளுடைய அவமானத்தைத் திறந்தார்கள், அவளுடைய குமாரரையும், அவளுடைய குமாரத்திகளையும் பிடித்துக்கொண்டு, அவளைப் பட்டயத்தினாலே கொன்றுபோட்டார்கள், அப்படியே அவளில் ஆக்கினைகளைத் தீர்த்துவிட்டபடியினாலே ஸ்திரீகளுக்குள் அபகீர்த்திப்பட்டவளானாள்.

யக. அவளுடைய தங்கையாகிய ஒகோலிபாள் இதைக்கண்டும், * அவளைப்பார்க்கிலும், தன்மோகவிகாரத்திலும் தன்சகோதரியைப்பார்க்கிலும் தன்வேசித்தனங்களிலும்கெட்டவளானாள். * யசா, ருக.

யஉ. மகா அலங்கார உடுப்புள்ள தலைவரும், அதிகாரிகளும், குதிரைகளின்மேலேறுகிறவர்களும், அனைவருமாக இச்சிக்கப்படத்தக்க வாலிபருமான சமீபதேசத்தாராகிய * அசூர்புத்திரரை மோகித்தாள்.
* உ. இராசா. யசா, எ. ஶ்ரீ

யங. அவள் அசுத்தமானாளென்றும், அவர்களிருவருக்கும் ஒரே மார்க்கமுண்டென்றுங் கண்டோம்.

யச. அவள் தன்வேசித்தனங்களில் அதிகப்பட்டுப்போனாள். அதெப்படியென்றால் சாதிலிங்கத்தால் சுவரிற் படமாய்த்தீர்க்கப்பட்ட கல்தேயரின் சுரூபங்களாகிய புருஷரைக் கண்டாள்.

யரு. அவர்கள் தாங்கள்பிறந்த தேசமாகிய கல்தேயாவிலுள்ள பாபேலுடைய புத்திரரின் சாயலாகத் தங்கள் அரைகளிற் கச்சைகட்டினவர்களும், தங்கள் தலைகளிற் சாயந்தீர்ந்த பெரிய பாகைகளைப் போட்டுக்கொண்டவர்களும், பார்வைக்கு எல்லாரும் அதிபதிகளுமாயிருந்தார்கள்.

யசா. அவளுடையகண்கள் அதைப்பார்த்தவுடனே, அவள் அவர்களை மோகித்து, கல்தேயாவுக்கு அவர்களண்டையிலே தூதுகளையனுப்பினாள்.

௰௭. அப்பொழுது பாபேலின் புத்திரர் அவளுடைய சிநேகசம்போகத்திற்குவந்து, தங்கள் வேசித்தனங்களால் அவளைத் தீட்டுப்படுத்தினார்கள், அவளிவர்களாலே தீட்டுப்பட்டுப்போனபின்பு, * அவள்மனது அவர்களைவிட்டுப்பிரிந்தது. * ௨. இராசா. ௨௪, ௧. ௨.

௰௮. அவள் தன் வேசித்தனங்களை வெளியாக்கித் தன் அபிமானத்தைத் திறந்துவிட்டபடியினாலே, நம்முடைய ஆத்துமா அவளுடைய சகோதரியைவிட்டுப்பிரிந்ததுபோலே அவளையும்விட்டுப்பிரிந்தது.

௰௯. அவள் எகிப்துதேசத்திலே வேசித்தனம்பண்ணின தன் வாலிபத்தின் நாள்களை நினைத்துத் தன் வேசித்தனங்களில் அதிகப்பட்டுப்போனாள்.

௨௰. ஆதேதெனில், அவர்களுடைய வைப்பாட்டிகளைப்பார்க்கிலும் அவள் அவர்களை மோகித்தாள், கழுதைகளின் மாம்சமான மாம்சமும், குதிரைகளின் காமியமான காமியமுமுள்ள அவர்களைத்தானே.

௨௧. இப்படியே எகிப்தியரால் உன் வாலிபத்தின் தனங்கள் நிமித்தம் உன் கொங்கைகள் தொடப்பட்டதாகிய உன் சிறுவயதின் தோஷத்தைத் திரும்பத்தேடினாய்.

௨௨. ஆகையால், ஒகோலிபாளே, கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இதோ, உன்மனதுவிட்டுப்பிரிந்த * உன்னுடைய சிநேகிதரை நாம் உனக்குவிரோதமாக எழுப்பி, அவர்களைச்சுற்றிலும் உனக்குவிரோதமாகவரப்பண்ணுவோம்.
* ௰௬, ௩௭.

௨௩. இச்சிக்கப்பட்ட வாலிபரும், எல்லாத்தலைவரும், அதிகாரிகளும், குதிரைகளையேறுகிற ஆதிக்கக்காரருமாகிய பேர்பெற்ற மனுஷருமாயிருக்கிற பாபேலின்புத்திரரையும், கல்தேயரெல்லாரையும், பேக்கோத்து, சோவா, கோவா வென்ற சீமைகளின் மனுஷரையும், அவர்களோடேகூட அசூர்புத்திரரெல்லாரையுந்தானே.

௨௪. அவர்கள் உனக்குவிரோதமாக வண்டில்களோடும், இரதங்களோடும், உருளைகளோடும், சனசந்தளங்களின் கூட்டத்தோடும் வந்து, கேடயங்களும், பரிசைகளும், தலைச்சீராவுமுள்ளவர்களாய் உன்னைச்சுற்றிலும் பாளயமிறங்குவார்கள், அவர்களின்முன்னே நாம் நியாயத்தைவைப்போம், அவர்கள் தங்கள் நியாயங்களின்படி யுன்னை நியாயந்தீர்ப்பார்கள்.

௨௫. உனக்குவிரோதமாக நம்முடைய வைராக்கியத்தைப்போகவிடுவோம், அவர்கள் உன்னையுக்கிரமாய் நடப்பித்து உன் மூக்கையும், உன் காதுகளையும் வாங்கிப்போடுவார்கள், உன்னில் மீதியாயிருப்பதோ பட்டயத்தால் வெட்டுண்டுபோகும், அவர்கள் உன் குமாரரையும், உன் குமாரத்திகளையும் பிடித்துக்கொள்ளுவார்கள், உன்னில் மீதியாயிருப்பதோ அக்கினிக்கிரையாகும்.

௨௬. * அவர்கள் உன் வஸ்திரங்களையுரிந்து, உன்னுடைய சிங்காரமான ஆபரணங்களை வாங்கிக்கொள்ளுவார்கள்.
* ௰௬, அதி. ௨௧.

௨௭. அப்படியே உன் சந்தோஷத்தையும், நீ எகிப்துதேசத்திலே துவக்கின உன் வேசித்தனத்தையும் ஓயப்பண்ணுவோம், நீயினி அவர்களை நோக்கி உன் கண்களையேறெடுக்காமலும், எகிப்தை நினைக்காமலுமிருப்பாய்.

௨௮. ஏனென்றால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ, நீ பகைக்கிறவர்களின் கையிலும், உன்மனதுவிட்டுப்பிரிந்தவர்களின் கையிலும் நாமுன்னையொப்புக்கொடுப்போம்.

௨௯. அவர்கள் பகையாய் உன்னை நடப்பித்து, உன் பிரயாசத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு உன்னையம்மணமும், நிருவாணமுமாக்கிவிடுவார்கள், அப்படியே உன் வேசித்தனத்தின் அபிமானமும், உன்னுடைய தோஷமும், உன் வேசித்தனங்களுந் திறந்துகிடக்கும்.

௩௰. நீ புறச்சாதிகளைப் பின்தொடர்ந்து, அவர்களுடைய நரகலான தேவர்களால் உன்னைத் தீட்டுப்படுத்திக்கொண்ட உன்னுடைய வேசித்தனத்தினிமித்தம் இவைகளையுனக்குச்செய்வார்கள்.

௩௧. உன் சகோதரியின் வழியிலே நடந்தாய். ஆகையால், அவளுடைய பாத்திரத்தையுன் கையிலே கொடுப்போம்.

௩௨. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; நீ யுன் சகோதரியினுடைய ஆழமும், விஸ்தாரமுமான பாத்திரத்தை வாங்கிக்குடித்து, அது நிரம்பப்பிடிக்கிறபடியினாலே, நகைப்பும், பரியாசமுமாவாய்.

௩௩. சமாரியாவென்ற உன் சகோதரியினுடைய பாத்திரமாயிருக்கிற பிரமிப்பும், பாழ்க்கடிப்புமென்ற பாத்திரத்தாலே * வெறியினாலும், சஞ்சலத்தினாலும் நிறையப்படுவாய். * சங்கீ. ௬௰, ௩. ௭௫, ௮. ஏசா. ௫௧, ௰௭. ௨௨.

௩௪. நீ யதிலிருக்கிறதைக் குடித்து உறிஞ்சி அதின் ஓடுகளையுடைத்துப்போட்டு உன் தனங்களைப் பிசுக்கிப்போடுவாய். ஏனென்றால், நாம் அதைச்சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறார்.

௩௫. ஆகையால், * நீ நம்மைமறந்து நம்மை யுன் முதுகுக்குப்பின்னாக எறிந்ததினிமித்தம் நீயும் உன் தோஷத்தையும், உன் வேசித்தனங்களையுஞ் சுமந்துகொள்ளென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.
* எரேமியா. ௨, ௩௨. ௩, ௨௧

௩௬. பின்னையுங் கர்த்தர் என்னுடனே சொ

ளினதாவது; மனுஷபுத்திரனே, நீ ஒகோலாளையும், ஒகோலிபாளையும் நியாயம்விசாரிக்கமனதானால் அவர்களுடைய அருவருப்புகளை யவர்களுக்குத்தெரியக்காட்டு, * ௨௰, ௪. ௨௨, ௨.

௩௭. ஏனென்றால், விபசாரம்பண்ணினார்கள், அவர்கள்கைகளில் இரத்தமுமிருக்கிறது. அவர்கள் தங்கள் நரகலான தேவர்களோடே விபசாரம்பண்ணித் தாங்கள் நமக்குப்பெற்ற * தங்களுடைய பிள்ளைகளையும் அவைகளுக்கிரையாகத் தீயைக் கடக்கப்பண்ணினார்கள். * ௰௬, ௨௰. எரேமி. எ, ௩௮.

௩௮. அவர்கள் இன்னம் நமக்குச் செய்ததேதென்றால், * நம்முடையபரிசுத்தஸ்தலத்தையந்நாளிலேதானே தீட்டுப்படுத்தி நம்முடைய ஓய்வுநாள்களின் பரிசுத்தத்தைக் குலைத்தார்கள். * ௨௨, ௮.

௩௯. அதேதெனில், தங்கள் பிள்ளைகளைத் தங்கள் நரகலான தேவர்களுக்கென்று பலியிட்டபிற்பாடு அவர்கள்நம்முடையபரிசுத்தஸ்தலத்தைப்பரிசுத்தக்குலைச்சலாக்க அந்நாளிலேதானே அதற்குட் பிரவேசித்தார்கள். இதோ, இப்படியே தம்முடைய வீட்டின்நடுவிலேசெய்தார்கள்.

௪௰. இதுவுமல்லாமலே தூரத்திலிருந்துவரப்புருஷரை யழைத்தனுப்பினார்கள், இவர்கள் அண்டைக்குத் தானுப்பியனுப்பப்பட்டான, இதோவந்தார்கள், இவர்களுக்கென்று நீகுளித்து உன்கண்களில்மையிட்டுக்கொண்டு ஆபரணங்களால உன்னையலங்கரித்து,

௪௧. முக்கியமான மஞ்சத்தின்மேலுட்காந்துகொண்டாய, அதின்முன்னே ஒருபீடம்ஆயத்தம்பண்ணப்பட்டிருந்தது. நமது தூபவர்க்கத்தையும், நம்முடையஎண்ணெயையும் அதின்மேலேவைத்தாய.

௪௨. அவர்களிடத்திலே அந்தச் சந்தடியின் இரைச்சல அடங்கினபிறபாடுசனத்திரளானபுருஷரையும் அழைத்தனுப்பினார்கள், சபேயாவனாந்தரத்திலிருந்து வரப்பட்டார்கள், இவர்கள அவர்களுடையகைகளிற சரிகைகளையும், அவர்களுடையதலைகளில அலங்காரமான கிரீடங்களையும்போட்டார்கள்.

௪௩. விபசாரங்களிற கிழவியானவளைக்குறித்து அவர்களின்னம இப்போது தனவேசித்தனங்களைநடப்பித்துக்கொள்ளுவாளோ! என்றேம்.

௪௪. ஆனற பரஸ்திரியினிடத்திலேபிரவேசிக்குமாப்போலே அவளிடத்திறபிரவேசித்தார்கள், இந்தப்பிரகாரமாகத் தோஷக்காரிகளாகிய ஒகோலாளிடத்திலும பிரவேசித்தார்கள்.

௪௫. ஆகையால, * விபசாரிகளைநியாயந்தீர்க்கிறபிரகாரமாகவும, இரத்தஞ்சிந்தினவர்களை நியாயந்தீர்க்கிற பிரகாரமாகவும நீதிக்காரராகிய புருஷர் அவர்களைநியாயந்தீர்ப்பார்கள. ஏனெனில, அவர்களவிபசாரிகள, அவர்களுடையகைகளில இரத்தமிருக்கிறது. * ௰௬, ௩௮.

௪௬. அதேதெனிற கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; நாம அவர்களுக்கு விரோதமாகச் சபையைப்போயேறப்பண்ணி அவர்களை யலைதலுக்கும், கொள்ளையாகுதலுக்கும ஒப்புக்கொடுப்போம.

௪௭. அந்தச்சபையார் அவர்களைக்கல்லெறிந்து தங்களபட்டயங்களால வெட்டிப்போடுவார்கள், அவர்களுடைய குமாரரையும், அவர்களுடைய குமாரத்திகளையுங்கொன்று அவர்களுடைய வீடுகளையக்கினியாற சுட்டெரிப்பார்கள.

௪௮. அப்படியே எல்லாஸ்திரிகளும்புத்தியடைந்து, உங்கள தோஷங்களின்படிசெய்யாதிருக்கும்படிக்குத் தோஷத்தைத்தேசத்தைவிட்டோயப்பண்ணுவோம.

௪௯. உங்கள தோஷத்தை யுங்களமேற் சுமத்துவார்கள, அப்போது நீங்களஉங்கள நரகலான தேவர்களைச்சேவித்த பாவங்களைச்சுமந்து நாம கர்த்தராகிய ஆண்டவரென்றறிந்துகொள்ளுவீர்கள.

## ௨௪. அதிகாரம்.

[(௧) கொதிக்கிற கொப்பரியின உவமையினாலே, (௬) எருசலேமின மாறாத அழிவைக்காட்டினது. (௰௫) எசேக்கியேல தன பெண்சாதியின மரணத்தைக்குறித்துத் துக்கப்படா அடையாளத்தினாலே, (௰௬) யூதருடையதுன்பம விசனத்துக்குமேவிட்டிருக்குமென்று காட்டினது.]

ஒன்பதாம்வருஷத்துப பத்தாம மாதத்தின பத்தாந்தேதியிலே கர்த்தருடையவார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, இந்தநாளின நாமமாகிய இந்தத்தேதியையே நீ யுனக்கெழுதிவை, இத்தேதியிலேதானே பாபேலின இராசா எருசலேமினிட்ட இறங்கினான.

௩. இப்போதும நீ கலகவீட்டாருக்கொருஉவமையைக் காண்பித்து அவர்களுடனே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில, ஒருகொப்பரியை யடுப்பிலேவை அதையடுப்பிலேவைத்து அதிலே தண்ணீரையுமவார்.

௪. சகல நல்ல கண்டங்களாகிய பின்னந்தொடைகளும, முன்னந்தொடைகளுமென்கிற அதின கண்டங்களையதிலேசேர், தெரிந்துகொள்ளப்பட்ட எலும்புகளால அதைநிரப்பு.

௫. ஆட்டுமந்தையிலே தெரிந்துகொள்ளப்பட்டதையெடுத்துக்கொண்டுவாங்கு, எலும்புகளுக்கான கட்டைக்குவியலும அதின்கீழிருக்க வேண்டும, அதற்குள எலும்புகளும வேகத்

த்தக்கவிதமாக அதைப்பொங்கப் பொங்கக் காய்ச்சு.

௬. இதற்காகக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நுரையோடடிக்கொண்டிருக்கிறதும், நுரை நீங்காததுமாகிய கொப்பரியென்னப்பட்ட இரத்தஞ்சிந்திய பட்டணத்திற்கையோ! அதிலிருக்கிறதைக் கண்டங்கண்டமாக எடுத்துப்போடு, அதின்பேரிலே சீட்டுப்போடப்படாதிருப்பதாக.

௭. ஏனென்னில், அதின் இரத்தம் அதின் நடுவிலிருக்கிறது, இதை மண்ணினாலே மூட மண்தரையிலே ஊற்றாமல் வறண்ட கற்பாறையிலே ஊற்றிப்போட்டார்கள்.

௮. நீதியைச் சரிக்கட்டுவதற்காக நாம் அதை உக்கிரத்தை யேறப்பண்ணும்படிக்கு வறண்ட கன்மலையிலே மூடப்படாதிருக்கப் பண்ணினோம்.

௯. * ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இரத்தஞ்சிந்திய பட்டணத்திற்கையோ! நாமும் பெரிதான கட்டைக்குவியலை யெரியப்பண்ணுவோம். * ௨௨, ௩. ௪.

௰. திரளான விறகுகளைக்கூட்டு, அக்கினியைக் கொளுத்து இறைச்சியைமுறுகவேவித்துச் சம்பாரங்களையிடு எலும்புகள் சுட்டப்படக்கடவது.

௰௧. பிற்பாடு கொப்பரிகாய்ந்து அதின் களிம்பு வெந்து அதற்குள்ளிருக்கிற அதின் அழுக்கு உருகி அதினுடைய நுரை நீங்கும்படிக்கு அதையதினுடைய தழலின்மேலே வெறுமையாக வை.

௰௨. அது மகா வருத்தத்தையுண்டாக்கியும், அதின் திரளான நுரை அதைவிட்டு நீங்கினதில்லை, அதின் நுரை அக்கினிக்குள்ளாக வேண்டியது.

௰௩. உன் அழுக்கிலே தோஷமுண்டாயிருக்கிறது, நாம் உன்னைச் சுத்திகரித்தும் நீ சுத்தமாகாதபடியினாலே இனி * நம்முடைய உக்கிரம் உன்னில் ஆறித்தீருமட்டும் உன் அழுக்குக்கு நீங்கலாய்ச் சுத்திகரிக்கப்படமாட்டாய். * ௫, ௰௩.

௰௪. * கர்த்தராகிய நாமிதைச் சொன்னோம் இது வரும் இதைநாம் செய்வோம், நாம் பின்வாங்குவதும், தப்பவிடுவதும், மனஸ்தாபப்படுவதுமில்லை, உன்வழிகளுக்கும், உன் செய்கைகளுக்குந்தக்கதாக உன்னை நியாயந்தீர்ப்பார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௨௩, ௩௪.

௰௫. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகியவர் சொன்னதாவது;

௰௬. மனுஷபுத்திரனே, இதோ நாம் உன் கண்களின் விருப்பத்தையொரு அடியினாலே யுன்னைவிட்டெடுத்துக்கொள்ளுவோம், ஆனால், நீ புலம்பாமலும், அழாமலும், கண்ணீர்விடாமலுமிருப்பாயாக.

௰௭. அமர்ந்து பெருமூச்சுவிடு, இழவுகொண்டாடாயாக, உன்பாகையை உன்தலையிற் கட்டி உன்பாதரட்சைகளை யுன்பாதங்களிலே தொடுத்துக்கொண்டு உன் தாடியைமூடாமலும், சனத்தாரின் அப்பத்தைப் புசியாமலுமிருக்கக்கடவாயென்றார்.

௰௮. காலத்தாலே நான் சனத்தோடே பேசினேன், அன்று சாயங்காலத்திலே என் பெண்சாதி செத்துப்போனாள், ஆகையால் நான் கற்பிக்கப்பட்டபடி விடியற்காலத்திலே செய்தேன்.

௰௯. அப்போது சனம் என்னுடனே, நீர் செய்கிறவைகள் எங்களுக்கென்ன அடையாளம் என்பதை யெங்களுக்கறிவியீரோ வென்றார்கள்.

௨௰. நான் அவர்களோடே சொன்னேன், கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகியவர் சொன்னதாவது;

௨௧. நீ இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்றால், இதோ, உங்கள் பலத்தின் முக்கியமும், உங்கள் கண்களின் விருப்பமும், உங்கள் ஆத்துமாவின் ஆசையுமாகிய நம்முடைய பரிசுத்தஸ்தலத்தை நாம் பரிசுத்தக்குலைச்சலாக்குகிறோம், நீங்கள் விட்டுவந்த உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளும் பட்டயத்தால் விழுவார்கள்.

௨௨. அப்போது நான் செய்தது போலே செய்வீர்கள், தாடியைமூடாமலும், சனத்தாரின் அப்பத்தைப் புசியாமலுமிருப்பீர்கள்.

௨௩. உங்கள் பாகைகள் உங்கள் தலைகளிலும், உங்கள் பாதரட்சைகள் உங்கள் கால்களிலுமிருக்கும், நீங்கள் புலம்பாமலும், அழாமலுமிருந்து உங்கள் அக்கிரமங்களில் வாடிப்போய் ஒருவரையொருவர் பார்த்துத் தவிப்பீர்கள்.

௨௪. அப்படியே எசேக்கியேல் உங்களுக்கு * அற்புத அடையாளமாகவிருப்பான். அவன் செய்தபடியெல்லாஞ் செய்வீர்கள். இப்படி வரும்போது நாம் கர்த்தராகிய ஆண்டவனென்றறிந்து கொள்ளுவீர்களென்று சொல்லென்றுரைத்தாரென்றேன்.
* ௰௨, ௬—௰௧.

௨௫. பின்னையும் மனுஷபுத்திரனே, நாம் எந்த நாளிலே அவர்களுடைய பலத்தையும், அவர்களுடைய அலங்காரத்தின் மகிழ்ச்சியையும், அவர்களுடைய கண்களின் விருப்பத்தையும், அவர்களுடைய ஆத்துமாவின் மேன்மையான வாஞ்சையையும், அவர்களுடைய குமாரரையும், அவர்களுடைய குமாரத்திகளையும் அவர்களை விட்டெடுத்துக்கொள்ளுகிறோமோ!

௨௬. அந்நாளிலேதானே உன்காதுகளுக்குக் கேட்கப்பண்ணும்படிக்குத் * தப்பின

ஒருவன் உன்னண்டைக்கு வருவானல்லவோ! * ஙஙு, உக.

உஎ. அந்நாளிலேதானே தப்பிவந்தவனோ டேகூட உன்னுடைய வாய் திறக்கப்பட்டிருக்கும், இனி ஊமையாயிராமல் அப்போது பேசுவாய், அப்படி யவர்களுக்கு அற்புத அடையாளமாகவிருப்பாய், நாம் கர்த்தரென்று அப்போது அறிந்துகொள்ளுவார்களென்றார்.

## உரு. அதிகாரம்.

[(க) யூதனைநெருக்கின ஆங்காரத்தினால அம்மோனியர், (அ) மோவாப்சேயீர், (யஉ) ஏதோம், (யரு) பெலிஸ்தராகிய இவர்களிடத்திற் பராபரன்பழிவாங்குதல்.]

**க**ர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

உ. மனுஷபுத்திரனே, நீ * அம்மோன் புத்திரருக்கெதிராக வுன்முகத்தைத்திருப்பிக்கொண்டு அவர்களுக்குவிரோதமாகத் தீர்க்கதரிசன முரைத்து, * எரே. சக, க. மு

ங. அம்மோன் புத்திரருக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவருடையவார்த்தையைக் கேளுங்கள், கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதென்னவெனில், நம்முடையபரிசுத்தஸ்தலம் பரிசுத்தக்குலைச்சலாக்கப்படுகிறபோதும், இஸ்ரவேல்தேசம் பாழ்க்கடிக்கப்படுகிறபோதும், யூதாவீட்டார் சிறையிருப்பிலே போகிறபோதும் நீயதற்கு * ஆகாவென்றபடியினாலே,

* உசா, உ. ஙசா, ய

ச. இதோ நாமுன்னைக் கிழக்குத்திசையாருக்குச் சுதந்தரமாக ஒப்புக்கொடுப்போம். இவர்களுன்னிலே தங்கள் அரமனைகளைக் கட்டி யுன்னிலே தங்கள் கூடாரங்களைப் போடுவார்கள், இவர்களுன் கனிகளைப்புசித்து உன்பாலைக்குடிப்பார்கள்.

ரு. நாம் ரப்பாவை ஒட்டகங்களின்கொட்டகையும், அம்மோன்புத்திரரின்தேசத்தை ஆடுகிடையு மாக்குவோம், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவீர்கள்.

சா. ஏனெனிற் கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இஸ்ரவேல் தேசத்துக்கு விரோதமாகக் கைகொட்டி உன் காலாலே தட்டி உன்னுடையஎல்லா நிஸ்காரத்திலும், மனதாரச்சந்தோஷப்பட்டபடியினாலே,

எ. இதோ, உனக்குவிரோதமாக நாம் நம்முடைய கையைநீட்டி உன்னைச் சாதிகளுக்குக் கொள்ளையாக வொப்புக்கொடுத்து உன்னைச் சனசதனங்களுக்குள் வேரறுப்பபோக்கப்பண்ணி உன்னைத்தேசங்களுக்குள்ளே அழிந்து உன்னைநிர்மூலமாக்குவோம். அப்படியேநாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவாயென்பதுதானே.

அ. கர்த்தராகியஆண்டவர் உரைக்கிறதாவது; இதோ யூதாவீட்டார் எல்லாச்சாதிகளுக்குமொத்தவர்களென்று * மோவாபும், சேயீருஞ் சொல்லுகிறபடியினாலே,

* எசாயா. யரு, க. மு எரேமி. சஅ, க. மு

கூ. இதோ, அம்மோன்புத்திரரின்பேர் சாதிகளுக்குள்ளிராதபடிக்கு நாம் அம்மோன் புத்திரரின்தேசத்தைக் கிழக்குத்திசையாருக்குத்திறந்துவைத்துச் சுதந்தரமாகவொப்புக்கொடுக்கிறவண்ணமாக,

ய. நாம் மோவாபுதேசத்தின் பக்கத்திலுள்ள அதிலுடைய கடையாந்தர ஊர்களாகிய பட்டணங்கள் முதற்கொண்டு உண்டான தேசத்தின் அலங்காரமாகிய பெத்யெசிமோத்தையும், பாகால்மேயோனையும், கீரியாத்தாயீமையும் அவர்களுக்குத் திறந்துவைத்து,

யக. மோவாபிலே நியாயங்களைச்செய்வோம், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்கிறார்.

யஉ. கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது; * ஏதோம் யூதாவீட்டாரிற் குரோதந்தீர்த்துக்கொள்ளுதலைச்செய்து பெரிய குற்றத்திற்குட்பட்டு இவர்களிற் குரோதத்தைத்தீர்த்துக்கொண்டபடியினாலே,

* எரே. சக, எ. மு

யங. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நாம் ஏதோந்தேசத்திற்குவிரோதமாக நம்முடையகையைநீட்டி அதிலமனுஷரையும், மிருகங்களையு மிராதபடிக்குச் சங்காரம்பண்ணி அதைத் தேமான்துவக்கித் தேதான்மட்டும் வனாந்தரமாக்குவோம், பட்டயத்தாலேவிழுவார்கள்.

யச. நாம் இஸ்ரவேலாகியநம்முசனத்தின் கையினாலே ஏதோமிலே நீதிசரிக்கட்டுதலைச்செய்வோம், அவர்கள்நம்முடையகோபத்தின்படியேயும், நம்முடைய உக்கிரத்தின்படியேயும் ஏதோமுக்குச் செய்வார்கள், அப்படியே நம்முடையநீதிசரிக்கட்டுதலையறிந்துகொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

யரு. கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது; * பெலிஸ்தர் குரோதக்காரராயிருந்து நித்தியப்பகையாய்க் கேடுசெய்யவேண்டுமென்று நிஸ்காரத்தோடே மனதாரக்குரோதத்தைத் தீர்த்துக்கொண்டபடியினாலே, * எரே. சஎ, க. மு

யசா. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இதோ நாம்பெலிஸ்தருக்குவிரோதமாக நம்முடைய கையைநீட்டிக் கிரேத்தியரைச் சங்கரித்துச் சமுத்திரக்கரையில் மீதியானவர்களையழித்து,

யஎ. உக்கிரமானதண்டனைகளினாலே அவர்களிற் பெரிய நீதிசரிக்கட்டுதலைச் செய்வோம், அப்படியே நாம் அவர்களில் நம்முடைய நீதியைச்சரிக்கட்டுகையில் நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

## ௨௬. அதிகாரம்.

[(௧) எருசலேமை நிந்தனைசெய்ததினிமித்தம் தீருவுக்குத் தீர்க்கப்பட்டது. (௭) அதற்கு விரோதமாக எழும்பும் நேபுகாத்நேச்சாருடைய பலம், (௰௫) அதின் விழுதலினாலே கடற்பிரபுக்கள் துக்கித்ததும், பிரமித்ததும்.]

பதினோராம் வருஷத்து முதலாந்தேதியிலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, தீரு எருசலேமைக் குறித்து, ஆகா, சனசதளங்களின் கதவு உடைக்கப்பட்டதென்றும், என்னிடமாக எல்லாம் புரண்டுவரும், நான் நிரப்பப்படுவேன், அது பாழாக்கடிக்கப்பட்டதென்றும் சொல்லுகிறபடியினாலே,

௩. * கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; தீருவே இதோ நான் உனக்கு விரோதமாக வருகிறேன், சமுத்திரந்தன் அலைகளை எழும்பப்பண்ணுகிறவண்ணமாய் நாம் அநேக சாதிகளை உனக்கு விரோதமாக எழும்பி வரப்பண்ணுவோம். * எசாயா. ௨௩, ௧. முதலியன.

௪. அவர்கள் தீருவின் மதில்களை அழித்து அதின் கொம்மைகளை இடித்துப்போடுவார்கள், நாம் அதின் மண்ணையும் அதிலிராதபடிக்கு விளக்கிப்போட்டு அதை வெறுங்கற்பாறையாக்கிவிடுவோம்.

௫. அது சமுத்திரத்தின் நடுவிலே வலைகளைப் பரப்புகிற ஸ்தலமாயிருக்கும். ஏனென்றால், நாமிதைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார், அது சாதிகளுக்குச் சூறையாகும்.

௬. வெளியிலிருக்கிற அதின் குமாரத்திகளோ பட்டயத்தால் கொன்றுபோடப்படுவார்கள், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௭. ஏனென்றால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ நாம் * இராசாக்களுக்கு இராசாவாகிய நேபுகாத்நேச்சார் என்கிற பாபிலோனின் இராசாவை வடக்கேயிருந்து குதிரைகளோடும், இரதங்களோடும், இராவுத்தரோடும், கூட்டத்தோடும், திரளான சனத்தோடுந் தீருவுக்கு விரோதமாக வரப்பண்ணுவோம். * தானி. ௨, ௩௭.

௮. அவன் வெளியிலிருக்கிற உன் குமாரத்திகளைப் பட்டயத்தாலே கொன்று உனக்கு விரோதமாகக் கொத்தளங்களைக் கட்டி உனக்கு விரோதமாக அணைபோட்டு உனக்கு விரோதமாகக் கேடயங்களை எடுத்து,

௯. உன் மதில்களுக்கு விரோதமாக இடிக்கிற எந்திரங்களைத் தனக்கெதிரே வைத்துத் தன்னுடைய கட்டைப்பாரைகளால் உன் கொம்மைகளை இடித்துப்போடுவான்.

௰. அவனுடைய குதிரைகளின் ஏராளத்தினாலே அவைகளின் தூள் உன்னை மூடும், இடித்துத் திறப்பாக்கப்பட்ட பட்டணத்திற் பிரவேசிக்குமவண்ணமாக உன் வாசல்களுக்குட் பிரவேசிக்கையில் இராவுத்தரும், உருளைகளும், இரதங்களும் இரைகிற சத்தத்தினாலே உன் மதில் அதிரும்.

௰௧. தன் குதிரைகளின் குளம்புகளினாலே உன் வீதிகளையெல்லாம் மிதிப்பான், உன்னுடைய சனத்தைப் பட்டயத்தால் கொன்றுபோடுவான், உன்னுடைய பலமான தூண்கள் தரையிலே விழுந்துபோம்.

௰௨. அவர்கள் உன் ஆஸ்தியைக் கொள்ளையிட்டு, உன் சரக்குகளைச் சூறையாடி, உன் மதில்களை இடித்து உன்னுடைய விருப்பமான வீடுகளைத் தரையாக்கி உன் கற்களையும், உன் மரங்களையும், உன் மண்ணையுந் தண்ணீரின் நடுவிலே போட்டுவிடுவார்கள்.

௰௩. * உன் பாட்டுகளின் சந்தடியை ஓயப்பண்ணுவோம், உன் சுரமண்டலங்களின் சத்தம் இனிக் கேட்கப்படுவதில்லை. * அறிவி. ௰௮, ௨௨.

௰௪. உன்னை வெறுங் கற்பாறையாக்கிவிடுவோம், வலைகளைப் பரப்புகிற ஸ்தலமாயிருப்பாய், இனிக் கட்டப்படாய், ஏனென்றால் கர்த்தராகிய நாமிதைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.

௰௫. தீருவுக்குக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது; உன் நடுவிற் கொலையுண்கிறவர்கள் பெருமூச்சுவிடுகையிலும், மகா கொலைசெய்யப்படுகையிலும் உன் விழுகுதலின் சத்தத்தினாலே தீவுகள் அதிராதோ!

௰௬. கடற்கரைப் பிரபுக்களெல்லாந் தங்கள் ஆசனங்களைவிட்டிறங்கித் தங்கள் சால்வைகளைக் கழற்றித் தங்கள் சித்திரத்தையலாடைகளை யரிந்துபோடுவார்கள். நடுக்கங்களைத் தரித்துக்கொள்ளுவார்கள். தரையில் உட்கார்ந்து ஒவ்வொரு கணப்பொழுதிலே தத்தளித்து, உன்னிமித்தந் திகைத்திருப்பார்கள்.

௰௭. அவர்கள் உன்பேரிலே * புலம்பலையெடுத்து உன்னைக்குறித்துச் சொல்வதாவது; கடற்கரை மனுஷர் குடியிருந்ததும், பேர்போனதுமான பட்டணமே, உன்னிலே தங்கினவர்களுக்கெல்லாம் பயமுண்டாக்கின உன்னுடைய குடிகளோடுங் கூடச் சமுத்திரத்திலே பலத்திருந்த நீ எத்தனையாய் அழிந்துபோனாய்! * அறிவி. ௰௮, ௯. முதலியன.

௰௮. நீ விழுகிற நாளான இப்போது தீவுகள் தத்தளிக்கிறது. நீ அப்புறப்படுகையால் சமுத்திரத்திலுள்ள தீவுகள் கலங்குகிறதென்பார்கள்.

௰௯. ஏனென்றால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நாம் உன்னைக் குடியில்லாத பட்டணங்களைப்போலே பாழான பட்டணமாக்கும்போது திரளான தண்ணீர்கள்

## உசு. அதிகாரம்.

[(க) எருசலேமை நிநதனைசெயததினிமித தமதீருபயமுறுத்தபபடடது. (எ) அதறகுவிரோதமாகவெழுமபும நேபுகாத்நேத்சாருடையபலம, (யரு) அதன விழுதலிலுலே கடற்பிரபுக்கள்துக்கித்ததும,பிரமித்ததும.]

**ப**திினோராம வருஷத்து முதலாநதேதியிலே சமபவித்ததேதெனிற கர்ததருடையவார்ததை யெனககுணடாகி அவர் சொனனதாவது;

உ. மனுபபுததிரனே, தீரு எருசலேமைககுறிதது, ஆகா, சனசதளஙகளின கதவு உடைககபபடட தெனறும், எனனிடமாக எலலாமபுரணடுவரும, நான நிரப்பபபடுவேன அதுபாழககடிககபபடடதெனறுஞ் சொலலுகிறபடியினுலே,

ங. * கர்ததராகிய ஆணடவர்சொலலுகிறதாவது; தீருவே இதோநானுனக்குவிரோதமாகவருகிறேம்,சமுத்திரநதனஅலைகளைஎழுமபபணணுகிற வணணமாய நாம அநேகஞ்சாதிகளை யுனககுவிரோதமாக எழுமபிவரபபணணுவோம. * ஏசாயா. உங,க. முழு

ச. அவர்கள தீருவின மதிலகளையழித்து அதினகொமமைகளை யிடிதது பபோடுவார்கள, நாமஅதினமணணும அதிலிராதபடிககு விளககிபபோடடு அதை வெறுஙகறபாறையாககிவிடுவோம.

ரு. அதுசமுததிரததின நடுவிலே வலைகளை பபரபபுகிற ஸதலமாயிருககும. ஏனெனில, நாமிதைசசொனனேமெனறு கர்ததராகிய ஆணடவர்உரைககிறர், அதுசாதிகளுககுச் சூறையாகும.

சு. வெளியிலிருககிற அதின குமாரத்திகளோ படடயததாற கொனறுபோடடபபடுவார்கள, அபபடியே நாம கர்ததரெனறறிநதுகொளளுவார்கள.

எ. ஏனெனிற கர்ததராகிய ஆணடவர்சொலலுகிறதாவது; இதோ நாம * இராசாககளுககு இராசாவாகிய நேபுகாத்நேத்சாரெனறபாபேலினஇராசாவை வடககேயிருநது குதிரைகளோடும, இரதஙகளோடும, இராணுத்தோடும, கூடடததோடும,திரளானசனததோடுந தீருவுககுவிரோதமாகவரபபணணுவோம. * தானி. உ, ங எ.

அ. அவனவெளியிலிருககிற உனகுமாரததிகளைப படடயததாலேகொனறு உனககுவிரோதமாகக்கொததளஙகளைககடடி உனககு விரோதமாக அணைபோடடு உனககுவிரோதமாகக்கேடயஙகளையெடுதது,

கூ. உனமதிலகளுககு விரோதமாக இடிககிற எததனஙகளைததனககெதிரேவைததுத் தனனுடைய கடடைபபாறைகளால உன கொமமைகளையிடிததுபபோடுவான.

ய. அவனுடைய குதிரைகளின ஏராளததினுலே அவைகளினதூளஉனனைமூடும, இடிதது திறபபாககபபடட படடணததிறபிரவேசிககுமவணணமாக உனவாசலகளுககுட்பிரவேசிககையில இராணுவததேர்களும, உருளைகளும, இரதஙகளும இரைகிற சத்தத்தினுலே உனமதிலஅதிரும.

யக. தன குதிரைகளின குளமபுகளினுலே உனவீதிகளையெலலாம மிதிபபான, உனனுடையசனததைப படடயததாற கொனறுபோடுவான, உனனுடையபலமான தூண்கள தரையிலேவிழுநதுபோம.

யஉ. அவர்கள உன ஆஸ்தியைககொளளையிடடு, உனசரககுகளைச சூறையாடி, உன மதிலகளையிடிதது உனனுடையவிருபபமானவீடுகளைத தரையாககி உன கறகளையும, உனமரஙகளையும, உனமணணையுந தணணீரின நடுவிலேபோடடுவிடுவார்கள.

யங. * உனபாடடுகளின சநதடியையொயபபணணுவோம, உனசுரமணடலஙகளினசததம இனிக்கேட்கபபடுவதிலலை. * அறிவி. யஅ, உஉ.

யச. உனனை வெறுங கறபாறையாககிவிடுவோம, வலைகளைபபரபபுகிற ஸதலமாயிருபபாய, இனிக்கடடபபடாய, ஏனெனிறகர்ததராகிய நாமிதைசசொனனேமெனறு கர்ததராகியஆணடவர்உரைககிறர்.

யரு. தீருவுககுக் கர்ததராகிய ஆணடவர் உரைககிறதாவது; உன நடுவிறகொலையுணகிறவர்கள பெருமூசசுவிடுகையிலும, மகா கொலைசெயயபபடுகையிலும உன விழுகையின சத்தத்தினுலேதீவுகள அதிராதோ!

யசு. கடறகரைப பிரபுக்களெலலாந தங்கள ஆசனஙகளைவிடடிறஙகித் தஙகள சாலவைகளைக கழறறித தஙகள சிததிரததையலாடைகளை யரிநது போடுவார்கள. தத்தளிபபுகளைத தரிததுககொளளுவார்கள. தரையில உளுககாநது ஒவவொரு கணபபொழுதிலே தத்தளிதது, உனனிமிததந திகைததிருபபார்கள.

யஎ. அவர்கள உனபேரிலே * புலமபலையெடுதது உனனைககுறிததுச சொலவதாவது; கடற்கரை மனுஷர் குடியிருநததும, பேர்போனதுமானபடடணமே, உனனிலே தஙகினவர்களுககெலலாம பயமுணடாககின உனனுடைய குடிகளோடுஙகூடசசமுததிரததிலேபலததிருநத நீ யெததனையாய அழிநதுபோனுய! * அறிவி. யஅ, கூ. முழு

யஅ. நீ விழுகிறநாளான இபபோது தீவுகள தத்தளிககிறது. நீயபபுறபபடுகையாற சமுததிரததிலுளள தீவுகள கலஙகுகிறதெனபார்கள.

யகூ. ஏனெனில, கர்ததராகிய ஆணடவர் சொலலுகிறதாவது; நாமுனனைக குடியிலலாத படடணஙகளைபபோலே பாழானபடடணமாககுமபோதுநதிரளானதணணீர்கள்

ருவ, நீ தேவனல்லாத மனுஷனாயிருந்தும், உன்னிருதயம் மேட்டிமையாய்ப்போய், *நான் தேவன், நான் சமுத்திரங்களின் நடுவே தேவனுடைய வாசஸ்தலத்தில் உட்கார்ந்திருக்கிறேனென்று நீ சொல்லி, உன்னிருதயத்தைத் தேவனுடைய இருதயத்தைப்போலாக்குகிறாய். * தானி. ௫, ௨௰. அப்போஸ். ௰௨, ௨௩.

௩. இதோ, தானியேலைப்பார்க்கிலும், நீ ஞானி, இரகசியமானதொன்றும் உமக்கு மறைபொருளல்ல,

௪. நீயுன் ஞானத்தினாலும், உன் உணர்வினாலும் உனக்குப்பெலனையுண்டாக்கிப்பொன்னையும், வெள்ளியையும் உன் பொக்கிஷங்களிற்சேர்த்துக்கொண்டாய்.

௫. உன் வியாபாரத்தில் நீயுன் மகா ஞானத்தினாலேயுன் பெலனைப் பெருகப்பண்ணினாயென்று உன்னிருதயம் உன் பெலனாலே மேட்டிமையாயிற்று.

௬. ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், நீயுன்னிருதயத்தைத் தேவனுடைய இருதயத்தைப்போலாக்குகிறபடியினாலே,

௭. இதோ, ஜாதிகளிற் பலவந்தராகிய மறுதேசத்தாரையுன்மேல் வரப்பண்ணுவோம், அவர்கள் உன் ஞானத்தினுடைய அழகுக்கு விரோதமாகத் தங்கள் பட்டயங்களையுருவி, உன் மினுக்கைக் குலைத்தாக்குவார்கள்.

௮. உன்னைக் குழியிலிறங்கப்பண்ணுவார்கள், நீ சமுத்திரங்களின் நடுவே கொலையுண்கிறவர்களின் சாவாகச் சாவாய்.

௯. உன்னைக் கொன்றுபோடுகிறவனுக்கு முன்பாக நீ நான் தேவனென்று சொல்லுவாயோ! உன்னைக் குத்திப்போடுகிறவனுடைய கையிலே நீ தேவனல்லாத மனுஷனாயிருக்கிறாயே.

௰. மறுதேசத்தாரின் கையிலே நீ சுன்னத்தில்லாதவர்களின் சாவாகச் சாவாய். ஏனெனில், நாமிதைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௧. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰௨. மனுஷபுத்திரனே, நீ தீருவினுடைய இராசாவின்பேரில் *புலம்பலையெடுத்து, அவனுக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதெனில், நீ தீர்மானிப்பின் முத்திரையைப்போலிருக்கிறவன், நீ ஞானத்தால் நிறைந்தவனும், பூரண அழகுள்ளவனுமானவன். * ௨௭, ௨.

௰௩. பராபரனுடைய தோட்டமாகிய ஏதேனிலிருக்கிறவன், கெம்பு, புஷ்பராகம், வச்சிரம், தர்ஷீஸ், இரத்தினம், கோமேதகம், யஸ்பி, நீலக்கல், சிவப்புக்கல், மரகதம், முதலான சகலவித இரத்தினங்களும், பொன்னும் உன்னை மூடிக்கொண்டிருக்கின்றன, நீ பட்டந்தரிப்பிக்கப்படுகிற நாளில் உன் மேளவாத்தியங்களும், உன் நாகசுரங்களும் உன்னிடத்தில் ஆயத்தப்பட்டிருந்தன.

௰௪. நீ காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம்பண்ணப்பட்ட கேருபு, அப்படியாகவுன்னை வைத்தோம், பராபரனுடைய பரிசுத்த பருவதத்திலிருந்தாய், அக்கினிமயமான கற்களின் நடுவே உலாத்துகிறாய்.

௰௫. நீ பட்டந்தரிப்பிக்கப்பட்ட நாள் துவக்கி, உன்னில் அநியாயங்கண்டுபிடிக்கப்பட்டதுமட்டும், உன் வழிகளிற் குறையற்றிருந்தாய்.

௰௬. உன் வியாபாரத்தின் திரளைத் தொட்டு, உன் நடுமையத்தைக் கொடுமையாலே நிரப்பினார்கள், நீ பாவஞ்செய்தாய். ஆகையால், நாம் உன்னைப் பராபரனுடைய பருவதத்திலிருந்து, ஆகாதவனென்று தள்ளிக் காப்பாற்றுகிற கேருபாயிருந்த உன்னையக்கினிமயமான கற்களின் நடுவேயிராதபடிக்கு, அழித்துப்போடுவோம்.

௰௭. உன் அழகைத் தொட்டு உன்னிருதயம் மேட்டிமையாயிற்று, உன் மினுக்கைத் தொட்டு உன் ஞானத்தைக் கெடுத்துப்போட்டாய், உன்னைத் தரையிலே தள்ளிப்போடுவோம், இராசாக்கள் உன்னைப் பார்க்கும்படிக்கு, உன்னையவர்களுக்கு முன்பாக வேடிக்கையாக்குவோம்.

௰௮. உன் அக்கிரமங்களின் ஏராளத்தினாலும், உன் வியாபாரத்தின், அநீதத்தினாலும் உன் பரிசுத்த ஸ்தலங்களைப் பரிசுத்தக்குலைத்தலாக்குகிறாய். ஆகையால், நாமுன்னைப்பட்சிப்பதாகிய ஒரு அக்கினியையுன்னடுவிலிருந்து புறப்படப்பண்ணி, உன்னைப் பார்க்கிற எல்லாருடைய கண்களுக்கு முன்பாகவும் உன்னைப் பூமியின்மேற் சாம்பலாக்குவோம்.

௰௯. சனசதளங்களில் உன்னையறிந்தவனைவரும் உன்னிமித்தந் திகைப்பார்கள், *மகா பயங்கரமாய்ப்போவாய், இனி யென்றென்றைக்குமில்லாதுமிருப்பாயென்றுரைக்கிறாரென்று சொல்லென்றார். * ௨௭, அதி. ௩௬.

௨௰. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨௰௧. மனுஷபுத்திரனே, நீயுன் முகத்தைச் *சீதோனுக்கெதிராகத்திருப்பி, அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனமுரைத்துச் சொல்லவேண்டியது. * ஏசாயா. ௨௩, ௰௨.

௨௰௨. கர்த்தராகிய பராபரன் சொல்லுகிறதேதெனில், சீதோனே, இதோ நாமுனக்கு விரோதமாகவந்து உன் நடுவிலே *மகிமைப்படுவோம், நாம் அதிலே நியாயத்தீர்ப்புகளைச் செய்து, அதிலே பரிசுத்தரென்று விளங்கும்போது, நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள். * ௨ மோசே. ௰௪, ௰௮.

௨௰௩. நாம் அதிலே பெருவாரிக்காய்ச்சலை

யும், அதின் வீதிகளில் இரத்தஞ் சிந்தச் செய்வோம், சுற்றிலும் அதற்கு விரோதமாய் வந்த பட்டயத்தினாலே யதின் நடுவிலே கொலையுண்டு விழுவார்கள், அப்போது நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள்.

உச. இஸ்ரவேல் வீட்டாரை நிஷ்காரம்பண்ணு மவர்களுடைய சுற்றுப்புறத்தாராகிய அனைவரிலும் இனி தைக்கிற முள்ளாகும், நோவுண்டாக்கிற நெருஞ்சிலும் அவர்களுக்கிராது, அப்படியே நாம் கர்த்தராகிய ஆண்டவரென்று அறிந்து கொள்ளுவார்கள்.

உரு. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிற தேதெனில், நாம் இஸ்ரவேல் வீட்டாரை யவர்கள் சிதறடிக்கப்பட்டிருக்கிற சனங்களிடத்திலிருந்து கூட்டிக்கொண்டுவந்து, அவர்களால் சாதிகளின் கண்களுக்குமுன்பாகப் பரிசுத்தரென்று விளங்கும்போது அவர்கள் நம்முடைய தாசனாகிய யாக்கோபுக்கு நாம் கொடுத்த தங்களுடைய தேசத்திலே குடியிருப்பார்கள்.

உசு. அவர்களுடைய சுற்றுப்புறத்தாரில் அவர்களை நிஷ்காரம்பண்ணின அனைவரிலும் நாம் நியாயத்தீர்ப்புகளைச் செய்யும்போது, அவர்கள் அதிலே சுகமாய்க் குடியிருந்து, வீடுகளைக் கட்டித் திராட்சத்தோட்டங்களை நாட்டிச் சுகமாய் வாசம்பண்ணி, நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்று சொல்லுகிறார்.

## உகூ. அதிகாரம்.

[(க) இஸ்ரவேலை மோசம்பண்ணினதற்காக பார்வோன்மேல் வரும் நியாயத்தீர்ப்பு. (அ) எகிப்தினழிவு. (௰௩) நாற்பது வருஷத்திற்குப்பின்பு அதற்கு நடந்திருக்குந் திருப்புதல். (௰எ) நேபுகாத்நேச்சாருக்கு எகிப்து கையாகக் கொடுக்கப்படுவது. (உக) இஸ்ரவேலின் முடி எழும்புவது.]

பத்தாம் வருஷத்துப் பத்தாம் மாதம் பன்னிரண்டாந்தேதியிலே கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

உ. மனுஷபுத்திரனே, நீ எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கெதிராக உன் முகத்தைத் திருப்பி, அவனுக்கும், * எகிப்து வனைத்துக்கும் விரோதமாய்த் தீர்க்கதரிசன முரைத்து, * எசாயா. ௰௯, க.

௩. சொல்லியறிவிக்கவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், எகிப்தின் இராசாவாகிய பார்வோனே, உன் ஆறுகளின் நடுவிலே படுத்துக்கொண்டு, என் ஆறு என்னுடையது, நான் அதைச் செப்பனிட்டேனென்று சொல்லுகிற * பெரிய முதலையே இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து, * ௩உ, அதி. உ.

௪. * உன் குறடுகளிலே தூண்டில்களை மாட்டி உன் ஆறுகளின் மச்சங்களை உன் செதில்களிலே ஒட்டிக்கொள்ளப்பண்ணி, உன்னை யுன் ஆறுகளின் நடுவிலிருந்து தூக்குவோம், உன் ஆறுகளின் மச்சங்களுமெல்லாம் உன் செதில்களிலே ஒட்டிக்கொண்டிருக்கும். * ௩அ, அதி. ௪. எசாயா. ௩எ, அதி. உக.

ரு. உன்னை வனாந்தரத்திலே போட்டுவிடுவோம், உன்னையும், உன் ஆறுகளுடைய எல்லா மச்சங்களையுந் தானே வெட்டவெளியிலே விழுவாய், நீ சேர்த்துக்கொள்ளப்படுவதுமில்லை, உன்னைப் * பூமியின் மிருகங்களுக்கும், ஆகாயத்தின் பறவைகளுக்கும் இரையாகக் கொடுப்போம். * ௩உ, அதி. ௪.

சு. அப்போது எகிப்துதேசத்திலுள்ளவர்களெல்லாம் நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள். ஏனென்றால், அவர்கள் இஸ்ரவேல் வீட்டாருக்கு * நாணற்கோலாயிருந்தார்கள். * எசாயா. ௩சு, சு.

எ. அவர்கள் உன்னைக் கையிலே பிடிக்கும்போது நீ யொடிந்துபோய் அவர்கள் விலாவையெல்லாம் பிளப்பாய், அவர்கள் உன்மேலே சாயும்போது நீ முறிந்து அவர்கள் இடுப்பையெல்லாம் மரத்துப்போகப்பண்ணுவாய்.

அ. ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் உன்மேல் பட்டயத்தை வரப்பண்ணி உன்னில் மனுஷரையும், மிருகங்களையுஞ் சங்காரம்பண்ணுவோம்.

௯. எகிப்துதேசம் பாழும் வனாந்தரமுமாம், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள். ஏனென்றால், ஆறு தன்னுடையது, நாம் அதைச் செப்பனிட்டோமென்றான்.

௰. ஆனபடியினாலே இதோ நாம் உனக்கும், உன் ஆறுகளுக்கும் விரோதமாக வந்து எகிப்துதேசத்தைச் செவேனே துருக்கந்துவக்கி எத்தியோப்பியாவின் எல்லைமட்டும் அவாந்தரையும், பாழுமான வனாந்தரங்களாக்குவோம்.

௰க. மனுஷனுடைய கால் அதைக் கடப்பதுமில்லை, மிருகங்களுடைய கால் அதைக் கடப்பதுமில்லை, அது நாற்பது வருஷமாய்க் குடியற்றிருக்கும்.

௰உ. எகிப்துதேசத்தைப் பாழாய்ப்போன தேசங்களின் நடுவிலே பாழாய்ப்போகப்பண்ணுவோம், அதின் பட்டணங்கள் அவாந்தரையாக்கப்பட்ட பட்டணங்களின் நடுவிலே நாற்பது வருஷம் பாழாய்க்கிடக்கும், நாம் எகிப்தரைச் சாதிகளுக்குள்ளே சிதறடித்து அவர்களைத் தேசங்களுக்குள்ளே தூற்றிவிடுவோம்.

௰௩. ஆனாலும் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நாற்பது வருஷங்கள் முடியும்போது நாம் எகிப்தரை யவர்கள் சிதறு

ண்டிருக்கிற சனசதலங்களிடத்திலிருந்து சேர்த்துக்கொண்டு,

௰௪. எகிப்தரின் சிறையிருப்பைத் திருப்பி அவர்களை யவர்களுடைய வியாபாரச்சீமையாகிய பத்ரோஸ்தேசத்திலே திரும்பிவரப் பண்ணுவோம், அங்கேயவர்கள் தாழ்ந்த இராச்சியமாயிருப்பார்கள்.

௰௫. அது இனிச்சாதிகளின்மேலேதன்னை யுயர்த்தாமல் வேறேஇராச்சியங்களிலுந்தாழ்ந்ததாயிருக்கும். அவர்கள்சாதிகளையாளாதபடிக்கு அவர்களைக் குறுகப்பண்ணுவோம்.

௰௬. அவர்களின்பிறகாலேபோய * அவர்களை நோக்கிக்கொண்டிருக்கிறதினாலே இஸ்ரவேல்வீட்டார் நமக்குத்தங்கள் அக்கிரமத்தை நினைப்பூட்டாதபடிக்கு இனியவர்கள் இவர்களுடைய நம்பிக்கையாயிராதேபோவார்கள், அப்படியே நாம் கர்த்தராகிய ஆண்டவரென்றறிந்துகொள்ளுவார்களென்கிறோமென்றுசொல்லென்றார். * புலம்பல. ச, அதி. ௰௭.

௰௭. இருபத்தேழாம்வருஷத்து முதலாம் மாதம் முதலாந்தேதியிலே சம்பவித்ததென்றால், கர்த்தருடையவார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௰௮. மனுபுத்திரனே, பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தீருவின்முன்னே தன்சேனையைப் பெரியவேலைசெய்யப் பண்ணினான், சகலதலைகளும் மொட்டையாயின. சகல தோட்பட்டைகளின்தோலும் உரிந்துபோயிற்று, அவன் தீருக்கு விரோதமாகச்செய்தவேலையினாலே அவனுக்காகிலும், அவன்சேனைக்காகிலும் பலனுண்டானதில்லை.

௰௯. ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோநாம்பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாருக்கு எகிப்துதேசத்தைக்கொடுக்கிறோம், அவன் அதின் ஏராளத்தைப்பிடித்துக்கொண்டு அதின் ஆஸ்தியைச்சூறையாடி அதின் அவகாசத்தைக் கொள்ளையிடுவான். இது அவனுடைய சேனைக்குப்பலனாயிருக்கும்.

௨௰. எகிப்துதேசத்தைநாம் அவனுக்கவன் அதிலே செய்தவேலையின் வருத்தத்திற்கீடாகக்கொடுத்தோம் ஏனெனில், நமக்காகச்செய்தார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

௨௰௧. அந்நாளிலே நாம் இஸ்ரவேல்வீட்டாரின்கொம்பைமுளைத்தெழும்பப்பண்ணி, அவர்கள்நடுவிலே யுனக்குத்திறந்தவாயைக் கட்டளையிடுவோம், அப்பொழுது நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்றார்.

## ௩௰. அதிகாரம்.

[(௧) எகிப்தும், அதற்குதவிசெய்கிறவர்களும் பாழ்படுவது. (௨௰) எகிப்தனுடைய கைகளை முறிப்பதும் பாபேலினுடைய பலப்படுமென்பது.]

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௨. மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனமுரைத்துச்சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதென்னவெனில், ஐயோ, அந்தநாளென்றலறுங்கள்.

௩. ஏனெனில், * நாள்சமீபமாயிருக்கிறது. ஆம் கர்த்தருடையநாள் சமீபமாயிருக்கிறது. அது மந்தாரமானநாளும், சாதிகளின் காலமுமாயிருக்கும். * யோவே. ௨, ௧. செப்ப. ௧, ௰௪.

௪. பட்டயம் எகிப்திலேவரும், எகிப்திலே கொலையுண்கிறவர்கள் விழும்போது, எத்தியோப்பியாவிலே மகாவேதனையுண்டாயிருக்கும், அதின் ஏராளத்தைப் பிடித்துக்கொண்டுபோவார்கள், அதின் அஸ்திபாரங்கள் நிர்மூலமாக்கப்படும்.

௫. எத்தியோப்பியரும், பூத்தியரும், லூத்தியரும் கலந்த கூட்டமாகிய அனைவரும், கூபியரும், உடன்படிக்கைக்குள்ளான தேசத்தின் புத்திரரும் அவர்களோடேகூடப் பட்டயத்தாலே விழுவார்கள்.

௬. கர்த்தர்சொல்லுகிறதாவது; எகிப்தை யாதரிக்கிறவர்களும் விழுவார்கள், அதினுடையபலத்தின்முக்கியமுந் தாழ்ந்துபோம், அதிலே செவேனேகோபுரந்துவக்கிப் பட்டயத்தாலே விழுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

௭. பாழாய்ப்போனதேசங்களின் நடுவிலே பாழாய்ப்போவார்கள், அதின்பட்டணங்கள் பாழாக்கப்பட்ட பட்டணங்களின்தொகைக்குள்ளாயிருக்கும்.

௮. நாம் எகிப்திலே அக்கினியைப் பற்றவைக்கும்போதும், உனக்கொத்தாசைபண்ணினயாவரும் முறிக்கப்படும்போதும் நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௯. நிர்விசாரமானஎத்தியோப்பியரைத்திகிலடையப்பண்ண அந்நாளிலே நம்முடைய கட்டளையினாலே தூதர்கள் கப்பல்களிலே போவார்கள், அப்பொழுதெகிப்தின்நாளிலே உண்டானதுபோல, அவர்களுக்குள்ளே மகாவேதனை யுண்டாயிருக்கும். ஏனெனில், இதோவரும்.

௰. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதென்னவெனில், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரைக்கொண்டு எகிப்தினுடைய திரளையொழியப்பண்ணுவோம்.

௰௧. இவனும், இவனோடேகூடச் சாதிகளிற்பலவந்தரான இவனுடையசனமுந் தேசத்தை யழிப்பதற்காக ஏவப்பட்டுவந்து * தங்கள்பட்டயங்களை எகிப்திற்குவிரோத

மாக உருவித் தேசத்தைக் கொலையுண்டவர்களாலே நிரப்புவார்கள். * எரேமி. ௪௬. ௰௩.

௰௨. அப்பொழுது நாம் ஆறுகளை வற்றிப்போகப்பண்ணித் தேசத்தைப் பொல்லாதவர்களின் கையிலே விற்று, தேசத்தையும், அதின் நிறைவையும் மறுதேசத்தாரின் கையால் பாழாக்கிப்போடுவோம், கர்த்தராகிய நாமிதைச் சொன்னோம்.

௰௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நாம் நரகலான தேவர்களையழித்து நோப்பின் விக்கிரகங்களை ஒப்பப்பண்ணுவோம், இனி எகிப்துதேசத்தில் அதிபதியில்லை, நாம் எகிப்துதேசத்திற் பயமுண்டாக்கி,

௰௪. பத்ரோசைப் பாழ்க்கடித்துச் சோவானிலே மக்கினியைப்பற்றவைத்து நோப்புப்பட்டணத்தில் ஆக்கினைகளைச்செய்து,

௰௫. எகிப்தினப் பலமுள்ள சீன்மேலே நம்முடைய உக்கிரத்தையூற்றி நோப்புப்பட்டணத்தின் ஏராளத்தைச் சங்கரிப்போம்.

௰௬. எகிப்தில் அக்கினியைப்போடுவோம், சீன் மகா உபாதியடையும், நோப்புப்பட்டணம் பிளந்திடிந்துபோம், நோப்புக்கு அனுதின நெருக்கங்களுண்டாம்.

௰௭. ஆவென், பீபேசேது என்றபட்டணங்களின் வாலிபர் பட்டயத்தால் விழுவார்கள், அவைகளின் குடிகள் சிறையிருப்பிலே போவார்கள்.

௰௮. தக்பானேசிலே பகலிருண்டுபோம், அங்கே எகிப்தின் நுகத்தடிகளை நாம் உடைக்கும்போதும், அதினுடைய பலத்தின் முக்கியம் அதிலே ஓயும்போதும் மந்தாரம் அதைமூடும், அதின் குமாரத்திகள் சிறையிருப்பிலே போவார்கள்.

௰௯. அப்படி எகிப்திலே நியாயத்தீர்ப்புகளைச் செய்வோம், அப்பொழுது நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்களென்றுசொல்லென்றார்.

௨௰. பதினோராம் வருஷத்து முதலாம் மாதம் ஏழாந்தேதியிலே சம்பவித்ததென்னவெனில், கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨௧. மனுப்புத்திரனே, எகிப்தின் இராசாவாகிய பார்வோனுடைய புயத்தை முறித்துப்போடுவோம், இதோ அது குணமாகக் கத்தக்கதாகக் கட்டப்படுவதில்லை, அது பட்டயத்தைப் பிடிக்கத்தக்க பெலனுடையபத்தைப்போடக் கட்டப்படுவதுமில்லை.

௨௨. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ நாம் எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கு விரோதமாக வந்து, அவனுடைய புயங்களை முறித்துப்போடுவோம், பெலனுள்ளதையும், முறிந்ததையுந்தானே, அப்படியே நாம் பட்டயத்தை அவன் கையிலிருந்து விழப்பண்ணி,

௨௩. எகிப்தரைச் சாதிகளுக்குள்ளே சிதறவடித்து அவர்களைத் தேசங்களிலே தூற்றிப்போட்டு,

௨௪. பாபேலுடைய இராசாவின் புயங்களைப் பலப்படுத்தி, அவன் கையிலே நம்முடைய பட்டயத்தைக் கொடுத்துப் பார்வோனின் புயங்களை முறித்துப்போடுவோம், அப்பொழுது கொலையுண்கிறவன் தவிக்குமாப்போல அவனுக்குமுன்பாகத் தவிப்பான்.

௨௫. பாபேலுடைய இராசாவின் புயங்களைப் பலப்படுத்துவோம், பார்வோனின் புயங்களே விழுந்துபோம், இப்படியே நாம் நம்முடைய பட்டயத்தைப் பாபேலுடைய இராசாவின் கையிற் கொடுக்கும்போதும், அவன் அதை எகிப்துதேசத்தின்மேல் நீட்டும்போதும், நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௨௬. நாம் எகிப்தரைச் சாதிகளுக்குள்ளே சிதறவடித்து அவர்களைத் தேசங்களிலே தூற்றிப்போடுவோம் அப்பொழுது நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவார்கள்.

## ௩௧. அதிகாரம்.

[(௧) அசூரியாவின் மகிமையையும், (௰) பெருமைக்காக அதன் விழுதலையும், (௰௮) எகிப்துக்கும் அதைப்போலவரும் அழிவையும் பார்வோனுக்கறிவித்த அறிவிப்பு.]

பதினோராம் வருஷத்து மூன்றாம் மாதம் முதலாந் தேதியிலே கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௨. மனுப்புத்திரனே, எகிப்தின் இராசாவாகிய பார்வோனோடும், அவனுடைய திரளோடும் நீ சொல்லவேண்டியதாவது; நீயுன் மகத்துவத்திலே ஆருக்கொப்பாயிருக்கிறாய்!

௩. இதோ, அசூர் லீபனோனிலே * அலங்காரக் கொப்புகளோடும், நிழலிடுகிற கொப்புகளோடும், உயர்ந்த வளர்த்தியோடுமிருக்கிற கேதுருவிருட்சமாயிருந்தான், அதினுடைய கொம்புகளின் தழைகளுக்குள்ளே அதின் நுனிக்கிளையிருந்தது. * தானியேல். ௪, அதி ௭.

௪. தண்ணீர்கள் அதைப் பெரிதாக்கி, ஆழமும் அதையுயர்ச்சியுமாக்கின, அதின் ஆறுகள் அதின் அடிமரத்தைச் சுற்றி ஓடின, தன் சால்களைக் வெளியின் விருட்சங்களுக்கெல்லாம் பாயவிட்டது.

௫. ஆகையால், வெளியின் விருட்சங்களையெல்லாம்பார்க்கிலும், அதின் வளர்த்தியுயர்ந்தது, அது துளிர்விடுகையிலே திரளான தண்ணீரினாலே அதின் கிளைகள் பெருகி, அதின் கொப்புகள் நீளமாயின.

௬. அதின் கொப்புகளில் ஆகாயத்தின் பறவைகளெல்லாங் கூடுகட்டின, அதின் கொப்புகளின்கீழ் வெளியின் மிருகங்களெல்லாம்

குட்டிகளைப்போட்டன, பெரிதான சகல சாதிகளும் அதின் நிழலிலே குடியிருந்தன.

௭. அப்படியே அது தன் மகத்துவத்தினாலும், தன் கொப்புகளின் நீளத்தினாலும், அலங்காரமாயிருந்தது. ஏனெனில், அதின் வேர் திரளான தண்ணீர்களினருகே இருந்தது.

௮. பராபரனுடைய தோட்டத்திலுள்ள கேதுருக்கள் அதிலும் அதிகப்பட்டிருந்ததில்லை, பாயமரவிருட்சங்கள் அதின் கொப்புகளுக்குச் சமானமாயிருந்ததில்லை, கஸ்தானியமரங்கள் அதின் கொப்புகளைப்போலுமிருந்ததில்லை பராபரனுடைய தோட்டத்திலுள்ள ஒரு விருட்சமும் அதின் அலங்காரத்திலே அதற்கொப்பாயிருந்ததில்லை,

௯. அதினுடைய கொப்புகளின் திரளினாலே அதை அலங்கரிப்பித்தேனே, பராபரனுடைய தோட்டமாகிய ஏதேனின் விருட்சங்களெல்லாம் அதின்மேல் பொறாமையாயிருந்தன.

௰. ஆகையால், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; அது தன் வளர்த்தியிலே மேட்டிமையாகிக் கொப்புகளின் தழைகளுக்குள்ளே தன் நுனிக்கிளையை ஓங்கவிட்டபடியினாலும், அதின் இருதயம் தன் மேட்டிமையினாலே உயர்ந்துபோனபடியினாலும்,

௰௧. நாம் அதைச் சாதிகளில் மகா வல்லமையுள்ளவன் கையிலே, இவன் தனக்குச் சரிப்போனபடி அதற்குச் செய்யும்படிக்கொப்புக்கொடுத்தோம், அதினுடைய அக்கிரமத்தினிமித்தம் அதைத் தள்ளிவிட்டோம்.

௰௨. சாதிகளில் பலவந்தராகிய மறுதேசத்தார் அதை வெட்டிப்போட்டுவிட்டுப்போனார்கள், அதின் கொப்புகள் மலைகளின்மேலும், சகல பள்ளத்தாக்குகளிலும் விழுந்தன, ஆனதுகொண்டு அதின் நிழலிலிருந்த அதின் கிளைகள் தேசத்தினுடைய எல்லாப் பள்ளங்களிலும் நசுங்கடிக்கப்பட்டன, ஆனதுகொண்டு அதின் நிழலிலிருந்த தேசத்தின் சனங்களெல்லாம் அதைவிட்டுக் கலைந்துபோனார்கள்.

௰௩. விழுந்துகிடக்கிற அதின்மேலே ஆகாயத்துப் பறவைகளெல்லாந் தாபரித்தன, அதின் கொப்புகளின்மேலே வெளியின் மிருகங்களெல்லாந் தங்கின.

௰௪. தண்ணீரால் பயிராகுகிற எந்த விருட்சங்களுந் தங்கள் வளர்த்தியினாலே கொம்புகளின் தழைகளுக்குள்ளே தங்கள் நுனிக்கிளையை ஓங்கவிடாமலும், தண்ணீரைக் குடிக்கிற எந்த மரங்களுந் தங்கள் உயர்ச்சியினாலே தங்கள்மேல் நம்பிக்கைவைக்காமலுமிருக்கும் பொருட்டாகத்தானே. ஏனென்றால், மனுஷபுத்திரரின் நடுவே அவர்களெல்லாருங் குழியில் இறங்குகிறவர்களோடேகூட மரணத்திற்கொப்புக்கொடுக்கப்பட்டுப் பூமியின் பாதாளத்திற்குப் போனார்கள்.

௰௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; அவன் பாதாளத்தில் இறங்குகிற நாளிலே புலம்பலை வருவித்தேன், நாம் அவன் நிமித்தம் ஆழத்தை மூடிப்போட்டுத் திரளான தண்ணீர்கள் ஓடாதபடிக்கு அதின் ஆறுகளை அடைத்து, அவன் நிமித்தம் லீபனோனை இருளடையப்பண்ணினேன், வெளியின் விருட்சங்களெல்லாம் அவன் நிமித்தம் பட்டுப்போயின.

௰௬. நாம் அவனைக் குழியில் இறங்குகிறவர்களோடேகூடப் பாதாளத்தில் இறங்கப்பண்ணுகையில் அவன் விழுகிற சத்தத்தினாலே சாதிகளை அதிரப்பண்ணினேன், அப்போது பூமியின் பாதாளத்திலே ஏதேனின் விருட்சங்களும், லீபனோனில் தெரிந்துகொள்ளப்பட்ட மேன்மையாயிருந்த விருட்சங்களும், தண்ணீர் குடித்த சகல மரங்களும் ஆறுதலடைந்தன.

௰௭. அவனோடேகூட இவர்களும், சாதிகளின் நடுவே அவன் நிழலில் குடியிருந்து அவனுக்குப் புயமாயிருந்தவர்களும் பட்டயத்தால் வெட்டுண்டவர்களண்டையிலே பாதாளத்தில் இறங்கினார்கள்.

௰௮. இப்படிப்பட்ட மகிமையிலும், மகத்துவத்திலும் ஏதேனின் விருட்சங்களில் எதற்கு நீ ஒப்பானவன்? ஏதேனின் விருட்சங்களோடேகூட நீயும் பூமியின் பாதாளத்திற்கு இறக்கப்பட்டுப் பட்டயத்தால் வெட்டுண்டவர்களோடேகூடச் சுன்னத்தில்லாதவர்களின் நடுவிலே கிடப்பாய். இவன் பார்வோனும், இவனுடைய சகல திரளுங்கூடத்தானென்று சொல்லென்றார்.

## ௩௨. அதிகாரம்.

[(௧) எகிப்தின் பயங்கரமுள்ள விழுதலைக்குறித்துப் புலம்பல். (௰௧) பாபேலின் பட்டயம் அதை அழிப்பது. (௰௭) விருத்தசேதனமில்லாத மற்றச் சாதியாருக்குள்ளே அதுவும் நரகத்துக்குக் கொண்டுவரப்படுவது.]

பன்னிரண்டாம் வருஷத்துப் பன்னிரண்டாம் மாதம் முதலாந் தேதியிலே கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, நீ எகிப்தின் இராசாவாகிய பார்வோனின் பேரிலே புலம்பலெடுத்து, அவனோடே சொல்லவேண்டியதேதெனில், சாதிகளுக்குள்ளே நீ இளஞ்சிங்கத்திற்கொப்பானவன், நீ கடல்களில் * முதலையைப்போலிருந்து, உன்னுடைய நதிகளில் எழும்பி, உன் கால்களாலே தண்ணீர்களைக் கலக்கி, அதின் ஆறுகளைக் குழப்பிவிட்டாய். * ௨௯, அதி ௩.

௩. ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நாம் அநேகஞ் சனசமூகங்களின் சபையைக் கொண்டு உன்மேலே

நமது * வலையைவீசுவோம், அவர்கள் நமது வலையிலுன்னையிழுத்துவருவார்கள்.
* ௰௨, ௰௩, ௭, ௨௰.

௪. உன்னைத் தரையிலே போட்டுவிடுவோம், நாம் உன்னை வெறுவெளியில் எறிந்துவிட்டு, ஆகாயத்துப் பறவைகளையெல்லாம் உன்மேல் இறங்கப்பண்ணிப் பூமியனைத்தின் மிருகங்களை உன்னாலே திருத்தியாக்கி,

௫. உன் சதையைப் பருவதங்களின்மேல் போட்டு, உன்னுயர்ச்சியினாலே பள்ளத்தாக்குகளை நிரப்பி,

௬. நீ நீந்தின தேசத்தையுன் இரத்தத்தினாலே பருவதங்கள்மட்டும் பாய்ச்சலாக்குவோம். ஆறுகள் உன்னாலே நிரம்பும்.

௭. உன்னையவித்துப்போடுகையில், * நாம் வானத்தைமூடி அதின் நட்சத்திரங்களையிருளாக்கிப் போடப்பண்ணுவோம், சூரியனை மப்பினாலே மூடுவோம், சந்திரனுந் தன் ஒளியைக் கொடாதிருக்கும். * ஏசாயா. ௰௩, ௰.

௮. நாம் வானத்தின் வெளிச்சமான விளக்குகளையெல்லாம் உனக்காக இருளாய்ப் போகப்பண்ணி உன் தேசத்தின்மேல் அந்தகாரத்தை வரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௯. நாம் உன் நொறுங்குதலைச் சாதிகள்மட்டுக்கும், நீயறியாத் தேசங்கள்மட்டுக்கும் எட்டப்பண்ணுகையில், அநேக ஜனசதளங்களின் இருதயத்தை விசனம் அடையப்பண்ணுவோம்.

௰. அநேக ஜனசதளங்களை உன்னிமித்தந் திகைக்கப்பண்ணுவோம், அவைகளின் இராசாக்கள் நாம் தங்கள் முகங்களுக்கு முன்பாக நம்முடைய பட்டயத்தை வீசுகையிலே மிகவுஞ்சுருங்கிப்போவார்கள். நீ விழுநாளில் அவரவர் தங்கள் பிராணனுக்காக ஒவ்வொரு நிமிஷத்திலே தத்தளிப்பார்கள்.

௰௧. ஏனெனில், கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; பாபேலுடைய இராசாவின் பட்டயம் உன்மேல் வரும்.

௰௨. பராக்கிரமசாலிகளின் பட்டயங்களால் உன் திரளை விழப்பண்ணுவோம், அவர்களெல்லாருஞ் சாதிகளில் பலவந்தரானவர்கள். அவர்கள் எகிப்தின் முக்கியத்தைப் பாழாக்கடிப்பார்கள். அதின் ஏராளமனைத்தும் அழிக்கப்படும்.

௰௩. திரளான தண்ணீர்களின் கரைகளில் நடமாடுகிற அதின் மிருகஜீவன்களையெல்லாம் அழிப்போம், இனி மனுஷனுடைய கால் அவைகளைக் கலக்குவதுமில்லை.

௰௪. அப்போது அவர்களுடைய தண்ணீர்களைத் தெளியப்பண்ணி, அவர்கள் ஆறுகளை எண்ணெயைப் போலோடப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. நாம் எகிப்துதேசத்தைப் பாழாக்கும்போதும், தேசந்தன் நிறைவையிழந்து வெறுமையாய்க்கிடக்கும்போதும், நாம் அதில் குடியிருக்கிறயாவரையுஞ் சங்கரிக்கும்போதும், நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௰௬. இது புலம்பல், இப்படிப் புலம்புவார்கள், இப்படிச் சாதிகளின் குமாரத்திகள் புலம்புவார்கள், இப்படி எகிப்துக்காகவும், அதினுடைய எல்லாத் திரளுக்காகவும் புலம்புவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௭. பின்னும் பன்னிரண்டாம் வருஷமாகிய அந்த மாதம் பன்னிரண்டாந்தேதியிலே சம்பவித்ததென்னவென்றால், கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௰௮. மனுஷபுத்திரனே, நீ எகிப்தினுடைய ஏராளத்தின்பேரிலே புலம்பி, அவர்களையும், பிரபலியமான சாதிகளின் குமாரத்திகளையும் * குழியிலிறங்குகின்றவர்களண்டையிலே பூமியின் பாதாளத்திற்குள்ளிறங்கப்பண்ணு.
* ௨௬, அதி. ௨௰. ௩௧, அதி. ௰௪.

௰௯. * நீ ஆரைப்பார்க்கிலும் உசிதமாயிருக்கிறாய்! நீ விருத்தசேதனமில்லாதவர்களிடத்திலேயிரு. * ஏசா. ௰௪, அதி. ௰௧-௰௫.

௨௰. பட்டயத்தால் வெட்டுண்டவர்களின் நடுவிலே விழுவார்கள், பட்டயம் நேமிட்டிருக்கிறது, அவனையும், அவனுடைய எல்லா ஏராளத்தையும் பிடித்திழுங்கள்.

௨௧. பராக்கிரமசாலிகளில் வல்லமையானவர்களும், அவனுக்கொத்தாசை செய்தவர்களுங்கூடப் பாதாளத்தின் நடுவிலிருந்து அவனோடே பேசுவார்கள், பட்டயத்தால் வெட்டுண்டு இறங்கியங்கேயிருக்கிற சுன்னத்தில்லாதவர்கள்தானே.

௨௨. அங்கே அசூரும், அவனுடைய எல்லாக் கூட்டத்தாருமிருக்கிறார்கள், அவனைச் சுற்றிலும் இவர்களுடைய பிரேதக்குழிகளிருக்கின்றன, அவர்களெல்லாரும் பட்டயத்தால் வெட்டுண்டு விழுந்தவர்கள்தானே.

௨௩. பாதாளத்தின் பக்கங்களில் அவர்களுடைய பிரேதக்குழிகளிருக்கின்றன, அவனுடைய பிரேதக்குழியைச் சுற்றிலும் அவனுடைய கூட்டமிருக்கிறது, ஜீவனுள்ளோருடைய தேசத்திலே கெடியுண்டாக்கின அவர்களெல்லாரும் பட்டயத்தால் வெட்டுண்டு விழுந்தவர்கள்தானே.

௨௪. அங்கே ஏலாமும், அவனுடைய பிரேதக்குழியின் சுற்றிலும் அவனுடைய எல்லா ஏராளமுமிருக்கிறது, அவர்களெல்லாரும் பட்டயத்தால் வெட்டுண்டு விழுந்து சுன்னத்தில்லாதவர்களாய்ப் பூமியின் பாதாளத்திற்குள்ளிறங்கினார்கள், ஜீவனுள்ளோருடைய தேசத்திலே தங்களாற் கெடியுண்டாக்கின அவர்கள் குழியிலிறங்கினவர்களோடே

கூடத் தங்கள் அவமானத்தைச் சுமந்து கொண்டிருக்கிறார்கள்.

௨௫. வெட்டுண்டவர்களின் நடுவே அவனை அவனுடைய எல்லாஜனத்திரள்களுங் கிடத்தினார்கள், அவனைச் சுற்றிலும் அவர்களுடைய பிரேதக்குழிகளிருக்கின்றன. அவர்களெல்லாரும் பட்டயத்தால் வெட்டுண்ட சுன்னத்தில்லாதவர்கள் ஜீவனுள்ளோருடைய தேசத்திலே அவர்களாற் கெடியுண்டாகப் பட்டபிறகு அவர்கள் குழியிலிறங்கினவர்களோடே கூடத் தங்கள் அவமானத்தைச் சுமந்து கொண்டார்கள், வெட்டுண்டவர்களின் நடுவே வைக்கப்பட்டிருக்கிறான்.

௨௬. அங்கே மேசேக்கும், தூபாலும், அவர்களுடைய எல்லாஜனத்திரளுங் கிடக்கிறார்கள், அவர்களைச் சுற்றிலும் இவர்களுடைய பிரேதக்குழிகளிருக்கின்றன, அவர்களெல்லாரும் பட்டயத்தால் வெட்டுண்ட சுன்னத்தில்லாதவர்கள், ஜீவனுள்ளோருடைய தேசத்திலே தங்களாற் கெடியுண்டாக்கினார்கள்.

௨௭. ஆனால் சுன்னத்தில்லாதவர்களில் விழுந்த பராக்கிரமசாலிகளோடே இவர்கள் கிடப்பதில்லை, அவர்கள் தங்கள் அக்கிரமந் தங்கள் எலும்புகளின்மேலே யிருக்கும்படியாகத் தங்கள் யுத்த ஆயுதங்களோடே பாதாளத்திலிறங்கித் தங்கள் பட்டயங்களைத் தங்கள் தலைகளின் கீழ் வைத்தார்கள். ஏனெனில், ஜீவனுள்ளோருடைய தேசத்திலே பராக்கிரமசாலிகளுக்குக் கெடியாயிருந்தார்கள்.

௨௮. நீயோவென்றால் சுன்னத்தில்லாதவர்களின் நடுவே நொறுங்குண்டு, பட்டயத்தால் வெட்டுண்டவர்களோடே கிடப்பாய்.

௨௯. அங்கே ஏதோமும், அவனுடைய இராசாக்களும், அதினுடைய எல்லாப் பிரபுக்களுங் கிடக்கிறார்கள், பட்டயத்தால் வெட்டுண்டவர்களிடத்தில் இவர்கள் தங்கள் வல்லமையோடுங்கூடக் கிடத்தப்பட்டார்கள், இவர்கள் சுன்னத்தில்லாதவர்களிடத்திலும், குழியிலிறங்குகிறவர்களிடத்திலும் கிடக்கிறார்கள்.

௩௰. அங்கே வடக்குத்திசை அதிபதிகள் அனைவரும், எல்லாச் சீதோனியருங் கிடக்கிறார்கள், இவர்கள் தங்கள் கெடியிருந்தும், தங்கள் பராக்கிரமத்தாலும் வெட்கப்பட்டு வெட்டுண்டவர்களிடத்திலிறங்கிப் பட்டயத்தால் வெட்டுண்டவர்களோடே சுன்னத்தில்லாதவர்களாய்க் கிடந்து குழியிலிறங்கினவர்களிடத்தில் தாங்கள் அவமானத்தைச் சுமந்து கொண்டிருக்கிறார்கள்.

௩௧. அவர்களைப் பார்வோன் பார்த்துத் தன்னுடைய எல்லாஜனத்தின்மேலே * ஆறுதலடைவான், பட்டயத்தால் வெட்டுண்ட பார்வோனும், அவனுடைய எல்லா இராணுவமுந்தானேயென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ஏசாயா. ௰௪, அதி. ௰.

௩௨. ஏனெனில், நம்முடைய கெடியை ஜீவனுள்ளோருடைய தேசத்தில் உண்டுபண்ணுகிறோம், பார்வோனும், அவனுடைய எல்லாஜனமாகிய பட்டயத்தால் வெட்டுண்டவர்களிடத்திற் சுன்னத்தில்லாதவர்கள் நடுவே கிடத்தப்படுவார்களென்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறானென்று சொல்லென்றார்.

## ௩௩. அதிகாரம்.

[(௧) சனத்துக்கு முன்னறிவிக்கிற காவற்காரன் கடமையைக்கொண்டு எசேக்கியேலின் கடமை யவனுக்குக் கற்பிக்கப்பட்டது. (௰) குணப்பட்டவர்களைக் குறித்தும், கலகக்காரரைக் குறித்தும் பராபரன் தமது நெறிகளின் நீதியைக் காட்டினது. (௰௭) அவர் தமது நீதியை வெளியிட்டது. (௨௧) தீர்க்கதரிசி எருசலேம் பிடிபட்டசெய்தியைக் கேட்டுத் தேசத்தின் அழிவை முன்னறிவித்தது. (௩௰) தீர்க்கதரிசிகளைப் பரிகாசம்பண்ணுகிறவர்களின்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு.]

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி யவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, நீயுன் சனப்புத்திரரோடே பேசி அவர்களோடே சொல்லவேண்டியதாவது; நாம் தேசத்தின்மேற் பட்டயத்தை வரப்பண்ணுகையில் தேசத்தின் சனங்கள் எல்லைகளிலுள்ள ஒரு புருஷனையழைத்து அவனைத் தங்களுக்குக் காவற்காரனாக வைத்தபிறகு,

௩. இவன் பட்டயத்தைத் தேசத்தின்மேலே வரக்கண்டு எக்காளமூதிச் சனத்தை யெச்சரிக்கும்போது,

௪. எக்காளத்தின் சத்தத்தைக் கேட்கிறவன் அதைக்கேட்டும் எச்சரிக்கையறாமற் போகுதும், பட்டயம் வந்து அவனை வாரிக்கொள்ளுகிறதுமுண்டானால் அவனுடைய இரத்தப்பழி அவன் சிரசின்மேலே யிருக்கும்.

௫. அவன் எக்காளத்தின் சத்தத்தைக் கேட்டும், எச்சரிக்கையறாமற் போனான், அவனுடைய இரத்தப்பழி அவன்மேலே யிருக்கும், எச்சரிக்கையாகிறவனேயென்றால் தன் ஜீவனைத் தப்புவித்துக்கொள்ளுவான்.

௬. காவற்காரன் பட்டயத்தை வரக்கண்டும், அவன் எக்காளமூதாமலும், சனம் எச்சரிக்கைப்படாமற் போகிறதும், பட்டயம் வந்து அவர்களில் யாதொரு ஆத்துமாவை வாரிக்கொள்ளுகிறதுமுண்டேயானால், இவன் தன் அக்கிரமத்திலே வாரிக்கொள்ளப்பட்டான், ஆனால், அவன் இரத்தப்பழியைக் காவற்காரன் கையிலே கேட்போம்.

௭. இபபோதும மனுபபுததிரனே, * நாம உனனை இஸ்ரவேலவீட்டாருககுக் காவறகாரனாகவைததோம. ஆகையால, நீ நமமுடையநாட்டததினாலே யவர்களை யெசசரிபபாயாக. * ௩, அதி. ௰௭—௰௯.

௮. நாம ஆகாதவனுககு ஆகாதவனே, சாவவேசாவாயென்று சொலலுகையில, நீ ஆகாதவனைததன ஆகாதவழியிலிராதபடிககு எசசரிககததககதாக அதையவனுககுச சொலலாதேபோனால, அநத ஆகாதவன தன அககிரமததிலேசாவான, ஆனால அவன இரததபபழியை உனகையிலேகேட்போம.

௯. ஆகாதவன தனவழியைவிடடுததிருமபுமபடிககு நீ யவனையதற்காகஎசசரிததும அவன தனவழியைவிடடுத திருமபாதேபோனானேயாகில, இவன தன அககிரமததிலேசாவான, நீயோவெனில உனனுதததுமாவைத தப்பப்பண்ணினாய.

௰. இபபோதும மனுபபுததிரனே, இஸ்ரவேலவீட்டாரோடே நீ சொலலவேண்டியதேதெனில, எஙகள துரோகஙகளும, எஙகள பாவஙகளும எஙகளமேலிருககுமளவிலும, நாஙகள அவைகளில வாடிபபோகுமளவிலும நாஙகள பிழைபபதெபபடியென்று நீஙகளசொலலுகிறீர்கள.

௰௧. கர்ததராகிய ஆண்டவர் உரைககிறதாவது; * நாம ஆகாதவனுடையமரணததைவிருமபாமல, ஆகாதவன தனவழியைவிடடுத திருமபிப்பிழைபபதையே விருமபுகிறோமென்று நமமுடைய சீவனைககொண்டுசொலலுகிறோம. இஸ்ரவேல வீட்டாரே † உஙகள பொலலாதவழிகளைவிடடுததிருமபுஙகள திருமபுஙகள, நீஙகள ஏனசாவவேணும எனகிறோமென்றுஅவர்களோடேசொலலு. * ௰௮, அதி. ௩௰. ௨௩, அதி. ௩௨. ௨. பேது. ௩, ௯. † ௩௰, ௩௧. ஏசாயா. ௫௫, ௭. யோவேல. ௨, ௰௨. ௰௩.

௰௨. மனுபபுததிரனே, உன சனபபுததிரரோடே நீ சொலலவேண்டியதாவது; * நீதிமான துரோகமபண்ணுகிறநாளிலே அவனுடைய நீதி அவனைத தபபுவிபபதிலலை, † ஆகாதவன தன ஆகாததியததைவிடடுத திருமபுகிறநாளிலே அவனதன ஆகாததியததினால விழுநதுபோவதுமிலலை, நீதிமான பாவஞசெயகிறநாளிலே தன நீதியினால பிழைக்ககூடுவதுமிலலை. * ௩, ௨௰. ௰௮, ௨௪. † ௰௮, ௨௭. ௨௮.

௰௩. பிழைககவேபிழைபபாயென்று நாம நீதிமானுககுச்சொனனபோது அவன தன நீதியை நமபி அநியாயஞசெயதால, அவனுடைய நீதியெலலாம நினைககபபடுவதிலலை, அவனசெயததனனுடைய அநியாயத்திலேசாவான.

௰௪. பினனையுஞ சாவவே சாவாயென்று நாம ஆகாதவனுககுச்சொனனபோது, அவன தன பாவத்தைவிடடுத்திருமபி நியாயமும, நீதியுஞசெயது,

௰௫. ஆகாதவனாயிருநத அவன அடைமானததைத்திருப்பககொடுததுக * கொளளையிட்டதைசசெலுததி அநியாயஞசெயயாதபடியாயச சீவனினகட்டளைகளில நடநதுகொண்டால, அவனசாவாமல பிழைககவேபிழைபபான. * லூககா. ௰௯, அதி. ௮.

௰௬. * அவனசெயதஅவனுடைய எலலாப பாவஙகளும அவனுககு விரோதமாக நினைககபபடுவதுமிலலை, நியாயமும, நீதியுஞசெயதுவநதான, பிழைககவேபிழைபபானென்றுசொலலு. * ஏசா. ௪௩, ௨௫. எரே. ௩௧, ௩௪.

௰௭. உனசனபபுததிரரோ * ஆண்டவருடையவழி செமமையாயிருககவிலலையென்கிறார்கள. ஆனால, அவர்களுடைய வழியே செமமையாயிருககவிலலை. * ௰௮, அதி. ௨௫—௨௯.

௰௮. நீதிமான தன நீதியைவிடடுததிருமபி அநியாயஞசெயதாற்சாவான.

௰௯. ஆகாதவன தன ஆகாததியததைவிடடு நியாயமும, நீதியுஞசெயதால, அவைகளில அவனபிழைபபான.

௨௰. நீஙகளோ ஆண்டவருடையவழி செமமையாயிருககவிலலையென்கிறீர்கள, இஸ்ரவேலவீட்டாரே, நாம உஙகளில ஒவவொருவனையவனவழிகளினபடியே நியாயந தீர்பபோமென்றுசொலலென்றார்.

௨௧. எஙகளசிறையிருபபினபனனிரண்டாமவருஷததுப பததாமமாதம பதினைநதாந தேதியிலேசமபவிததேதெனறால, * எருசலேமிலிருநதுதபபின ஒருவன என்னண்டைககுவநது, பட்டணம அழிககபபட்டதென்றான. * ௨௪, அதி. ௨௬. ௨௭.

௨௨. தபபினவனவாரததிறகுமுனனாள் சாயஙகாலததிலே கர்ததருடையகை யென மேலிருநது அவனகாலமே என்னண்டைககு வருமட்டும எனவாயைததிறநதிருககபபண்ணிற்று. நான அபபுறம மவுனமாயிராதபடிககெனவாய திறக்கப்பட்டது.

௨௩. அபபோது கர்ததருடையவார்ததை யெனககுண்டாகி அவர்சொனனதாவது;

௨௪. மனுபபுததிரனே, இஸ்ரவேலதேசததினமேலவநத அநதப் பாழ்ககடிபபுகளின குடிகளசொலலுகிறதேதெனில, ஆபிரகாம ஒருவனாயிருநது, தேசததைசசுதநதரிததுககொண்டான. நாஙகள அநேகராயிருககிறோம. எஙகளுககிநதத் தேசஞ சுதநதரமாகக்கொடுககபபட்டது என்கிறார்கள.

௨௫. ஆகையால நீ அவர்களோடேசொலலவேண்டியதாவது; கர்ததராகிய ஆண்டவர் உரைககிறதேதெனறால, நீஙகள இரத்தத்தோடேகூடியதைத்தின்று உஙகள நரகலானதேவர்களுககுநேராக உஙகள கண

களையேறெடுத்து, இரத்தத்தைச் சிந்தியும், தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பீர்களோ!

௨௬. நீங்கள் உங்கள் பட்டயத்தை நம்பி நின்றும், நீங்கள் அருவருப்பானதைச் செய்து அவனவன் தன் அயலானுடைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தியும், தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பீர்களோவென்கிறாரென்று சொல்லு.

௨௭. நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், பாழ்க்கடிப்புகளில் இருக்கிறவர்கள் பட்டயத்தால் விழுவார்கள். வெளிகளில் இருக்கிறவனை மிருகங்களுக்கு இரையாக ஒப்புக்கொடுப்போம். கோட்டைகளிலும், கெபிகளிலுமிருக்கிறவர்கள் பெருவாரிக்காய்ச்சலால் சாவார்களென்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோம்.

௨௮. அப்படியே நாம் தேசத்தைப் பாழும், அவாந்தரையுமாக்குவோம். அப்போது அதினுடைய பெலத்தின் முக்கியம் ஓய்ந்துபோம். அப்போது இஸ்ரவேலின் பருவதங்களைக் கடந்துபோவாரில்லாமல் அவாந்தரையாய்க் கிடக்கும்.

௨௯. அவர்கள் செய்த அவர்களுடைய எல்லா அருவருப்புகளினிமித்தமும் நாம் தேசத்தைப் பாழும், அவாந்தரையுமாக்கும்போது, நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்களென்கிறாரென்று சொல்லு.

௩௰. இப்போதும், மனுஷபுத்திரனே, உன் சனப்புத்திரர் சுவர்கள் ஓரத்திலும், வாசற்படிகளிலும் உன்னைக் குறித்துப்பேசி, கர்த்தரிடத்திலிருந்து புறப்பட்ட வார்த்தையேதென்று வந்துகேளுங்களென்று ஒருவரோடொருவரும், சகோதரனோடே சகோதரனும் சொல்லி,

௩௧. சனங்கள் வருகிறபிரகாரமாக உன்னண்டைக்குவந்து உனக்குமுன்பாக நம்முடைய சனமாய் உட்கார்ந்து உன் வார்த்தைகளைக் கேட்கிறார்கள்: * ஆனாலும் அவர்கள் அவைகளின்படி செய்யார்கள். அவர்கள் தங்கள் வாயினாலே இன்பமாய்ப் பேசுகிறார்கள். அவர்கள் இருதயமோ அவர்களுடைய பொருளாசையைப் பின்பற்றிப்போகிறது.

* ௰௪, அதி. ௧. முதல் ௨௰, ௧. வரை

௩௨. இதோ, நீ அவர்களுக்கு நேர்த்தியான சத்தமும், நல்லவாசிக்குதலுமாகிய இன்பமான பாட்டைப்போலிருக்கிறாய், அவர்கள் உன் வார்த்தைகளைக் கேட்கிறார்கள். ஆனாலும் அவைகளின்படி செய்யாதேபோகிறார்கள்.

௩௩. ஆனாலும் இதோ, வருகிறதே, அது வருகையில் அப்போது தங்கள் நடுவிலே ஒரு தீர்க்கதரிசியிருந்தானென்றறிந்துகொள்வார்களென்றார்.

## ௩௪. அதிகாரம்.

[(௧) மேய்ப்பர்களைக் கண்டித்தது. (௭) அவர்கள் மேல்வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு. (௰௧) அவருடைய மந்தையின் மேலிருக்கும் தேவபராமரிப்பு. (௨௰) கிறிஸ்துவின் இராச்சியம்.]

**க**ர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, இஸ்ரவேலின் மேய்ப்பருக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனமுரை. நீ தீர்க்கதரிசனமுரைத்து அவர்களோடே சொல்லவேண்டியதாவது; மேய்ப்பருக்குக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், * தங்களைத்தானே மேய்க்கிற இஸ்ரவேலின் மேய்ப்பருக்கு ஐயோ, மந்தையை மேய்ப்பர் மேய்க்கவேண்டாமோ! * ௰௫, ௨. முதல் ௭ரோ. ௨௯, ௧. வரை

௩. நீங்கள் நெய்யைச் சாப்பிட்டு, ஆட்டுமயிரையுடுப்பாக்கிக்கொள்ளுகிறீர்கள். கொழுப்பானதை யடிக்கிறீர்கள். மந்தையை மேய்க்காதேபோகிறீர்கள்.

௪. நீங்கள் பலட்சயமானவைகளைத் திடப்படுத்தாமலும், நசல்கொண்டவைகளைக் குணமாக்காமலும், நசுக்கப்பட்டவைகளைக் காயங்கட்டாமலும், துரத்துண்டவைகளைத் திருப்பிவரப்பண்ணாமலும், காணாமற்போனவைகளைத் தேடாமலும்போய், * வலாத்காரமும், கடூரமுமாய் அவைகளை ஆளுகிறீர்கள். * ௧. பேதுரு ௫, ௩.

௫. மேய்ப்பனில்லாததினாலே அவைகள் சிதறுண்டுபோய், வெளியின் மிருகத்திறகெல்லாம் இரையாகிச் சிதறடிக்கப்பட்டது.

௬. நம்முடைய ஆடுகள் சகல பருவதங்களிலும், உயர்ந்தியான சகல மேடுகளின்மேலும் அலையுண்டு பூமியின்மீதெங்கும் நம்முடைய ஆடுகள் சிதறித்திரிகின்றன. விசாரிக்கிறவனுமில்லை. தேடுகிறவனுமில்லை.

௭. ஆகையால் மேய்ப்பரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௮. கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம் நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறதாவது; மேய்ப்பனில்லாததினால் நம்முடைய ஆடுகள் சூறையாகி, நம்முடைய ஆடுகள் வெளியின் மிருகத்துக்கெல்லாம் இரையாய்ப்போயிற்றே. நம்முடைய மேய்ப்பர் நம்முடைய ஆடுகளுக்காக விசாரிக்காமற்போய் மேய்ப்பர் மந்தையை மேய்க்காமலே தங்களைத்தானே மேய்த்தார்கள்.

௯. ஆகையால் மேய்ப்பரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௰. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இதோ, நாம் மேய்ப்பருக்கு விரோதமாக வந்து, நம்முடைய ஆடுகளை அவர்கள் கையிலே கேட்டு, மேய்ப்பர் இனித் தங்களை

றதைறழிந்தெழும்பண்ணுவோம், அவர்கள் இனித் தேசத்திலே பஞ்சத்தால் வாரிக்கொள்ளப்படுவதுமில்லை, இனிப்புறச்சாதிகளின் இலச்சையைச் சுமப்பதுமில்லை.

௩௰. தங்கள் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற நாம் தங்களோடேகூடயிருக்கிறதையும், இஸ்ரவேல்வீட்டாராகிய தாங்கள் நம்முடைய சனமாயிருக்கிறதையும் அவர்கள் அறிந்துகொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௩௧. நம்முடைய மேய்ப்பாடுகளாகிய நம்முடைய மந்தையாயிருக்கிற நீங்களோவெனில், மனுஷர்; நாமோவெனில், உங்கள் பராபரனென்று கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩௫. அதிகாரம்.

[இஸ்ரவேலைப் பகைத்ததற்காகச் சேயீர் பர்வதத்தின்மேல் வரும் நியாயத்தீர்ப்பு.]

கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுஷபுத்திரனே, நீ உன் முகத்தைச் * சேயீர்பருவதத்திற்கெதிராகத் திருப்பி, அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனமுரைத்து, * ௨௫, ௰௨. ௰௪. எரே. ௪௯, ௭. ஒப.

௩. அதற்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவெனில், சேயீர்பருவதமே, இதோ நாம் உனக்கு விரோதமாக வந்து, நம்முடைய கையை உனக்கு விரோதமாக நீட்டி உன்னைப் பாழும், அவாந்தரையுமாக்குவோம்.

௪. உன்பட்டணங்களை வனாந்தரமாக்கிப் போடுவோம், நீ பாழாய்ப்போவாய், நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவாய்.

௫. நீ நித்திய பகையை வைத்து, இஸ்ரவேல்புத்திரருடைய அக்கிரமம் நிறைவேறுகையில் அவர்களுக்குண்டான ஆபத்தின்காலத்திலே அவர்களைப் பட்டயத்தின் கூர்மையினாலே கரையப்பண்ணினபடியினாலே,

௬. நாம் உன்னை இரத்தமாக்குவோம், இரத்தம் உன்னைப் பின்றொடருமென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம் நம்முடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோம், நீ இரத்தத்துக்கிருந்திலே பகைக்காதபடியினாலே இரத்தப்பழியுன்னைப் பின்றொடரும்.

௭. நாம் சேயீர்பருவதத்தைப் பாழும், அவாந்தரையுமாக்கி, அதிலே போகிறவர்களின் சஞ்சாரமில்லாதபடிக்குச் சங்காரஞ்செய்து,

௮. அதின் பருவதங்களைக் கொலையுண்டவர்களாலே நிரப்புவோம், உன்மேடுகளிலும், உன் பள்ளத்தாக்குகளிலும், உன்னுடைய எல்லா ஆறுகால்களிலும் பட்டயத்தால் வெட்டுண்டவர்கள் விழுவார்கள்.

௯. உன்னை நித்திய அவாந்தரைகளாக்குவோம், உன்பட்டணங்கள் குடியேற்றுவிக்கப்படுவதில்லை, அப்படியே நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௰. இரண்டு சாதிகளும், இரண்டு தேசங்களும் என்னுடையதாகுமென்று, * கர்த்தர் வசமாயிருந்தும் அவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவோமென்று நீ சொல்லுகிறபடியினாலே, * சங்கீ. ௮௩, ௰௩.

௰௧. நீ அவர்களுக்கு விரோதமானபகையிலே செய்த உன்னுடைய கோபத்திற்குத்தக்கதாகவும், உன்னுடைய பொறாமைக்குத்தக்கதாகவும் நாம் செய்வோமென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம் உன்னை நியாயந்தீர்க்கும்போது, அவர்களுக்குள் நம்மை அறியப்பண்ணுவோம்.

௰௨. இஸ்ரவேலின் பருவதங்கள் பாழாய்விட்டு எங்களுக்கு அநுபவமாகக்கொடுக்கப்பட்டதென்று அவைகளுக்கு விரோதமாகச் சொன்ன உன் நிஷ்காரங்களையெல்லாம் கர்த்தராகிய நாம் கேட்டோமென்று அப்போது அறிந்துகொள்ளுவாய்.

௰௩. நீங்கள் உங்கள் வாயினாலே நமக்கு விரோதமாகப் பெருமைபாராட்டி நமக்கு விரோதமாக உங்கள் வார்த்தைகளைப் பெருக்கப்பண்ணினீர்கள், அதை நாம் கேட்டோம்.

௰௪. தேசமெல்லாம் மகிழ்ந்திருக்கிறபோது உன்னைப் பாழாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. இஸ்ரவேல்வீட்டின் சுதந்தரம் பாழாய்ப்போனதற்கு எப்படி மகிழ்ந்துகொண்டாயோ, அப்படியே உனக்குச் செய்வோம், சேயீர்பருவதமே, ஏதோமே, நீ முழுதும் பாழாவாய், அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்களென்று உரைத்தாரென்று சொல்லு.

## ௩௬. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேல்தேசத்தை அலட்சியமாய்ப் பிரயோகப்படுத்தின அஞ்ஞானிகள் அழிவதினாலும், (அ) அதற்குப் பராட்சமாய்ப் பண்ணின வாக்குத்தத்தத்தினாலும் விசேஷசுகாநுகூலமுண்டானது. (௰௬) இஸ்ரவேலர் தங்கள் பாவத்தினிமித்தம் விலக்கப்பட்டு, (௨௧) புண்ணியஞ்செய்யாமற் சேர்க்கப்படுவார், (௨௫) கிறிஸ்துவினுடைய இராச்சியத்தின் ஆசீர்வாதங்கள்.]

இப்போதும், மனுஷபுத்திரனே, நீ * இஸ்ரவேலின் பருவதங்களை நோக்கித் தீர்க்கதரிசனமுரைத்துச் சொல்லவேண்டியதாவது; இஸ்ரவேலின் பருவதங்களே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள். * ௬, ௨.

௨. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; பகைஞன் உங்களைக்குறித்து, * ஆகா என்றும், நித்தியமேடுகளும் எங்களுடையன

சுதந்தரமானதென்றுஞ் சொல்லுகிறபடியினாலே, * ௨௫, ௩.

௩. நீ தீர்க்கதரிசனமுரைத்துச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், நீங்கள் குறைச்சாதிகளின் வசமான சுதந்தரமாயிருக்கும்படிக்கு அவர்கள் உங்களைப் பாழாக்கி, உங்களைச் சுற்றிலுமிருந்து விழுங்கினபடியினாலும், நீங்கள் பேசுகிறவர்களுடைய உதடுகளின் பேச்சும், சனத்தின் அவதூறுமாக்கப்பட்டபடியினாலும்,

௪. இஸ்ரவேலின் பருவதங்களாகிய நீங்கள் கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தையைக் கேளுங்கள், பருவதங்களுக்கும், மேடுகளுக்கும், ஆறுகளுக்கும், பள்ளத்தாக்குகளுக்கும், பாழ்க்கடிக்கப்பட்ட அவாந்தரைகளுக்கும், வெறுமையாய் விடப்பட்ட பட்டணங்களுக்குங் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; சுற்றிலுமிருக்கிற குறைச்சாதிகளுக்கு நீங்கள் கொள்ளையும், பரியாசமுமாய்ப் போனபடியினாலே,

௫. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், நம்முடைய தேசத்தைச் சூறையிட்ட வெளியாக்கும்படிக்கு, அதை முழு இருதயத்தின் சந்தோஷத்தோடும், நிஸ்காரமான மனதோடும் தங்களுக்குச் சுதந்தரமாக நேமித்துக்கொண்ட குறைச்சாதிகளுக்கு விரோதமாகவும், நம்முடைய அக்கினியான எரிச்சலாலே பேசினோமென்று சத்தியமாகச் சொல்லுகிறோம்.

௬. ஆகையால், நீ இஸ்ரவேல் தேசத்தைக் குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்துப் பருவதங்களுக்கும், மேடுகளுக்கும், ஆறுகளுக்கும், பள்ளத்தாக்குகளுக்குஞ் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதென்றால், இதோ, நீங்கள் சாதிகளின் இலச்சையைச் சுமந்தபடியினாலே, நாம் நம்முடைய எரிச்சலினாலும், நம்முடைய உக்கிரத்தினாலும் பேசினோம்.

௭. ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற நாம், * நமது கரத்தையுயர்த்துச் சொல்லுகிறதேதென்றால், உங்களைச் சுற்றிலுமிருக்கிற சாதிகளே தங்களுடைய இலச்சையைச் சுமப்பார்கள்.

* ௨௰, ௫.

௮. இஸ்ரவேலின் பருவதங்களாகிய நீங்களோவென்றால், உங்கள் கொப்புகளைவிட்டு நமது சனமாகிய இஸ்ரவேலுக்கு உங்கள் கனிகளைக் கொடுப்பீர்கள். ஏனெனில், இவர்கள் வரச்சமீபமாயிருக்கிறார்கள்.

௯. ஏனெனில், இதோ, நாம் உங்களுக்காக விசாரிப்பாயிருந்து, உங்கள் அண்டைக்கு நம்முடைய முகத்தைத் திருப்புவோம், நீங்கள் பண்ணையாக்கி விதைக்கப்படுவீர்கள்.

௰. நாம் உங்கள்மேலெல்லாம் இஸ்ரவேலுடைய வீட்டைத்தின மனுஷரைவர்த்திக்கப்பண்ணுவோம், பட்டணங்கள் குடியேற்றப்பட்டு அவாந்தரையான தலங்கள் கட்டுவிக்கப்படும்.

௰௧. உங்கள்மேலே மனுஷரையும், மிருகசீவன்களையும் பெருகிப்பலுகும்படிக்கு வர்த்திக்கப்பண்ணுவோம், உங்கள் பூருவநாட்களில் நீங்கள் இருந்த இருப்பாக நாம் உங்களை ஸ்தாபித்து, உங்கள் முந்தின நாட்களைப் பார்க்கிலும் நன்மை உண்டாக்குவோம், அப்படியே நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள்.

௰௨. நாம் உங்கள்பேரிலே நமது சனமாகிய இஸ்ரவேலின் மனுஷரை நடமாடப்பண்ணுவோம், அவர்கள் உன்னைக் கையாளுவார்கள், அவர்களுக்குச் சுதந்தரமாயிருப்பாய், நீ யினிமேல் அவர்களைச் சாகக்கொடுப்பதில்லை.

௰௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; உங்களை நீ மனுஷரைப் பட்சிக்கிற தேசமென்றும், நீ யுன் சாதிகளைச் சாவக்கொடுக்கிற தேசமென்றும் மனுஷர் சொல்லுகிறபடியினாலே,

௰௪. நீ யினிமேல் மனுஷரைப் பட்சிப்பதில்லையென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௫. நாம் இனிமேற் புறச்சாதிகளின் இலச்சையுனிடத்திலே கேட்கப்பண்ணுவதில்லை, நீ சனசதளங்களின் நிந்தையையினி மேற்சுமப்பதில்லை, நீ யினிமேல் உன் சாதிகளைச் சாவக்கொடுப்பதுமில்லையென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௬. பின்னையுங் கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰௭. மனுபுத்திரனே, இஸ்ரவேல் வீட்டார் தங்கள் சீமையிலே குடியிருக்கையில் அதைத் தங்கள் மார்க்கத்தினாலும், தங்கள் செய்கைகளினாலுந் தீட்டுப்படுத்தினார்கள். அவர்களுடைய மார்க்கம் நம்முடைய முகத்துக்கு முன்பாகத் * தூரஸ்திரீயின் தீட்டத்தைப்போலிருந்தது.

* ௩. மோசே. ௰௫, ௰௯. ஸ்ரீ ஏசாயா. ௬௪, ௬.

௰௮. ஆகையினாலே தேசத்திலே அவர்கள் சிந்தின இரத்தத்தினிமித்தமும், அதையவர்கள் தங்கள் நரகலான தேவர்களாலே தீட்டுப்படுத்தினதின் நிமித்தமும் நாம் நம்முடைய உக்கிரத்தையவர்கள்மேலூற்றி,

௰௯. அவர்களைப் புறச்சாதிகளுக்குட் சிதறவடித்தோம், தேசங்களிலே தூற்றிப்போடப்பட்டார்கள். அவர்களுடைய மார்க்கத்தின்படியேயும், அவர்களுடைய செய்கையின்படியேயும் அவர்களை நியாயந்தீர்ப்போம்.

௨௰. தாங்கள் போன புறச்சாதிகளிடத்திலே அவர்கள் வந்தபோது, இவர்களோ கர்த்தருடைய சனமென்றும், தங்கள் தேசத்தில்

ருந்து புறப்பட்டார்களென்றும், தங்களுக்குச்சொல்லப்பட்டதினாலே * அவர்கள் நம்முடைய பரிசுத்தநாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினார்கள். * ஏசாயா. ருஉ, ரு. உரோமர். உ, உச.

உக. ஆகையால், இஸ்ரவேல்வீட்டார் தாங்கள்வந்து சேர்ந்தபுறச்சாதிகளிடத்திலே பரிசுத்தக் குலைச்சலாக்கின * நம்முடைய பரிசுத்த நாமத்தின் நிமித்தமாகவேயிரங்குகிறோம். * உய, யக. ச. மோசே. யச, யச. ழ

உஉ. ஆனதுகொண்டு நீ இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ரவேல்வீட்டாரே, உங்கள்நிமித்தம் அல்ல, நீங்கள் வந்துசேர்ந்த புறச்சாதிகளிடத்திற் பரிசுத்தக்குலைச்சலாக்கினநம்முடைய பரிசுத்தநாமத்தின் நிமித்தமேநாமிப்படிச்செய்கிறோம்.

உங. புறச்சாதிகளின்நடுவே நீங்கள் பரிசுத்தக் குலைச்சலாக்கினதினாலே அவர்களுக்குட் பரிசுத்தமற்றுப்போன நம்முடைய பெரிய நாமத்தை நாம் பரிசுத்தம்பண்ணுவோம், அப்போது புறச்சாதிகள் தங்கள் கண்களுக்குமுன்பாக நாம் உங்களுக்குட் பரிசுத்தம்பண்ணப்படுகையில் நாம் கர்த்தரென்பதை யறிந்துகொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

உச. நாம் உங்களைப் புறச்சாதிகளிடத்திலிருந்து அழைத்து, உங்களைச்சகலதேசங்களிலுமிருந்து கூட்டிக்கொண்டு உங்களை யுங்கள் தேசத்திலேவரப்பண்ணி,

உரு. நீங்கள் சுத்தமாகும்படிக்கு * உங்கள்பேரிலே சுத்தமானதண்ணீரைத்தெளிப்போம், நாம் உங்களுடைய எல்லா அசுத்தங்களையும், உங்களுடைய எல்லா நரகலான தேவர்களையும் நீக்கி யுங்களைச்சுத்தமாக்கி, * ஏசாயா. சச, ங. சகரியா. யங, க.

உசு. * உங்களுக்கு நவமான இருதயத்தைக்கொடுத்து, உங்கள் உள்ளத்திலே புதிதான ஆவியைக் கட்டளையிடுக்கல்லான இருதயத்தை யுங்கள் மாம்சத்திலிருந்தெடுத்துப்போட்டுச் சதையான இருதயத்தை யுங்களுக்குக்கொடுத்து, * யக, யக.

உஎ. உங்கள் உள்ளத்திலே * நமது ஆவியைத்தந்து, உங்களை நம்முடைய † கட்டளைகளில்நடக்கவும்,நம்முடையநியாயங்களைக்கைக்கொள்ளவும், அவைகளின்படிசெய்யவும் பண்ணுவோம். * நீதது. ங, ச—எ. † ஙஎ, உச.

உஅ. உங்கள் பிதாக்களுக்கு நாம்கொடுத்ததேசத்திலே நீங்கள் குடியிருந்து, * நமக்குச்சனமாயிருப்பீர்கள். நாம் உங்களுக்குப் பராபரனாயிருந்து, * எரேமி. ஙக, ஙங. ஙஉ, ஙஅ.

உகூ. உங்கள் அசுத்தங்களையெல்லாம் நீக்கி, உங்களை இரட்சித்து, உங்கள்பேரிலே பஞ்சத்தைக்கட்டளையிடாமல், கோதுமையை வரவழைத்து, அதை வெகுத்துவமாக்கி,

ஙய. நீங்கள் இனிமேற்சாதிகளுக்குள்ளே பஞ்சத்தின் நிந்தையையடையாதபடிக்கு, விருட்சங்களின் கனிகளையும், வயலின் பலனையும்வெகுத்துவமாக்குவோம்.

ஙக. * அப்போது நீங்கள் உங்கள்பொல்லாதமார்க்கங்களையும், நல்லவையல்லாதிருந்த உங்கள்கிரியைகளையுநினைத்து, உங்கள் அக்கிரமங்களின் நிமித்தமும், உங்கள் அருவருப்புகளின் நிமித்தமும் உங்களைத் தானே அரோசிப்பீர்கள். * யசு, சுக. ழ உய, சங. ழ

ஙஉ. உங்கள் நிமித்தமாக நாமதைச்செய்வோமென்று, கர்த்தராகியஆண்டவர்சொல்லுகிறார், இது வுங்களுக்கும் அறியப்பட்டிருக்கக்கடவது, இஸ்ரவேல் வீட்டாரே, உங்கள் மார்க்கங்களின்நிமித்தம்வெட்கிநாணுங்கள்.

ஙங. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; நாம் உங்கள் அக்கிரமங்களையெல்லாம் நீக்கியுங்களைச் சுத்தமாக்குங்காலத்திலே பட்டணங்களைக்குடியேறவிப்போம், அவாந்தரையான தலங்களுங்கட்டுவிக்கப்படும்.

ஙச. பாழானநிலம் கடக்கிறயாவருடைய பார்வைக்கும் பாழாய்க்கிடந்ததற்குப்பதிலாகப்பயிரிடப்படும்.

ஙரு. பாழாய்க்கிடந்த இந்தத்தேசமேஏதேன் தோட்டத்தைப்போலாயிற்றென்றும், அவாந்தரையும்,பாழும், நிர்மூலமுமாயிருந்தபட்டணங்கள் அரணிப்பானவைகளும், குடியேறினவைகளுமாயிருக்கின்றனவென்றுஞ் சொல்லுவார்கள்.

ஙசு. * கர்த்தராகிய நாம் நிர்மூலமானவைகளைக்கட்டுகிறோமென்றும்,பாழானதைப்பயிர்நிலமாக்குகிறோமென்றும், அப்போதுங்களைச்சுற்றிலுமமீதியானசாதிகள் அறிந்துகொள்ளும் † கர்த்தராகிய நாம் இதைச்சொன்னோம், இதைச்செய்கிறவருமாயிருப்போம். * ஒசே. கூ, க. † யஎ, உக.

ஙஎ. கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; இன்னம் இஸ்ரவேல்வீட்டார்நாம் தங்களுக்குக்கட்டளையிட,நம்மைக்கேட்கும் விண்ணப்பத்தைநாம் அங்கீகரித்து, மனுஷர்மந்தையைப்போல அவர்களைப்பெருகப்பண்ணுவோம்.

ஙஅ. பரிசுத்தம்பண்ணப்பட்ட ஆடுகளும், * எருசலேமிலே அதின்பண்டிகைகளில்வருகிறஆடுகளும்எப்படித்திரளாயிருக்கிறதோ, அப்படி அவாந்தரையாயிருந்த பட்டணங்கள் மனுஷரின்மந்தையால் நிரம்பியிருக்க

ரும், அப்படி நான் கர்த்தரென்பதை அறிந்துகொள்ளுவார்களென்று சொல்லென்றார்.

## ௩௭. அதிகாரம்.

[(௧) உலர்ந்த எலும்புகளின் உயிர்த்தெழுதலினாலே, (௰௧) இஸ்ரவேலின் இராஜ்யத்தின் சீர்ப்படியுண்டானது. (௰௫) இரண்டு கோல்கள் ஒன்றாயிசைகிறதினாலே, (௰௮) யூதாவும், இஸ்ரவேலும் ஒன்றாயிசைவதைக் காட்டினது. (௨௰) கிறிஸ்துவின் இராச்சியத்தைக் குறித்த வாக்குத்தத்தங்கள்.]

கர்த்தருடைய கையென்மேல் வந்து, கர்த்தர் என்னை ஆவிக்குள் வெளியே கொண்டுபோய எலும்புகள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கின் நடுவிலே என்னை நிறுத்தி,

௨. என்னை அவைகளின் ஓரமாய்ச் சுற்றிலும் நடக்கப்பண்ணினார். இதோ, பள்ளத்தாக்கின் வெளியிலே அவைகள் மகா திரளாகக் கிடந்தன, இதோ, மெத்த உலர்ந்தவைகளுமாயிருந்தன.

௩. மனுஷபுத்திரனே, இந்த எலும்புகள் உயிர்க்குமோவென்று அவர் என்னைக் கேட்டார். அதற்கு நான், கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் அதையறிவீரென்றேன்.

௪. அப்பொழுது அவர் என்னோடே சொன்னதாவது; நீ இந்த எலும்புகளைக் குறித்துத் தீர்க்கதரிசனமுரைத்து, அவைகளைப் பார்த்துச் சொல்லவேண்டியதாவது; உலர்ந்த எலும்புகளே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.

௫. கர்த்தராகிய ஆண்டவர் இந்த எலும்புகளுக்குச் சொல்லுகிறதாவது; இதோ, நாம் உங்களில் ஆவியைப் பிரவேசிக்கப்பண்ணுவோம், அப்பொழுது உயிர்ப்பீர்கள்.

௬. நாம் உங்கள் பேரிலே நரம்புகளைக் கட்டவிட்டு, உங்கள் பேரிலே மாம்சமேற்றி, உங்கள் பேரிலே தோலைப் போர்த்து, உங்களில் ஆவியைக் கட்டளையிடுவோம், அப்பொழுது உயிர்த்து நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்களென்றுரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௭. எனக்குக் கற்பிக்கப்பட்டபடி நான் தீர்க்கதரிசனமுரைத்தேன், அப்பொழுது நான் தீர்க்கதரிசனமுரைக்கையில், இரைச்சலுண்டாயிற்று. இதோ, அசைவுண்டாகி எலும்புகள் ஒவ்வொன்றும் தன்தன் எலும்போடே சேர்ந்துகொண்டது.

௮. இதோ, அவைகள் பேரிலே நரம்புகளும், மாம்சமும் ஏறினதுமன்றி, அவைகளின் பேரிலே மேற்புறமே தோல் போர்த்ததென்று கண்டேன். ஆனாலும் அவைகளில் ஆவியில்லாதிருக்கிறது.

௯. அப்பொழுது அவர் என்னோடே சொன்னதாவது; ஆவியை நோக்கித் தீர்க்கதரிசனஞ் சொல். மனுஷபுத்திரனே, நீ தீர்க்கதரிசனமுரைத்து ஆவியை நோக்கிச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், ஆவியே, நீ நாலுகாற்றுத் திசைகளிலுமிருந்து வந்து, கொலையுண்ட இவர்கள் உயிர்க்கும்படிக்கு இவர்களில் ஊதென்கிறாரென்று சொல்லென்றார்.

௰. எனக்குக் கற்பிக்கப்பட்டபடி நான் தீர்க்கதரிசனமுரைத்தேன், அப்பொழுது ஆவி அவர்களுக்குட் பிரவேசித்தது, அவர்கள் உயிர்த்துத் தங்கள் கால்களின்மேல் நின்றார்கள், மகா திரள் சேனையாயிருந்தது.

௰௧. அப்பொழுது அவர் என்னோடே சொன்னதாவது; மனுஷபுத்திரனே, இந்த எலும்புகள் இஸ்ரவேல் வீட்டார் அனைவருந்தானே, இதோ எங்கள் எலும்புகள் உலர்ந்தன. எங்கள் நம்பிக்கையுமிழந்தது, நாங்கள் அறுப்புண்டோமென்கிறார்கள்.

௰௨. ஆகையால், நீ தீர்க்கதரிசனமுரைத்து அவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், இதோ நம்முடைய ஜனமே, நாம் உங்கள் பிரேதக்குழிகளைத் திறந்து, உங்களை உங்கள் பிரேதக்குழிகளிலிருந்தேறவும், உங்களை இஸ்ரவேல் சீமைக்கு வரவும்பண்ணுவோம்.

௰௩. நம்முடைய ஜனமே, நாம் உங்கள் பிரேதக்குழிகளைத் திறந்து உங்களை உங்கள் பிரேதக்குழிகளிலிருந்தேறப்பண்ணும்போது, நாம் கர்த்தரென்றறிந்து கொள்வீர்கள்.

௰௪. நம்முடைய ஆவியை உங்களுக்குட் கொடுப்போம், அதினாலே உயிர்ப்பீர்கள், நாம் உங்களை உங்கள் சீமையிலே வைப்போம், அப்பொழுது நாம் கர்த்தரென்றறிந்து கொள்ளுவீர்கள், இதைச் சொன்னேனும், இதைச் செய்கிறவருமாயிருப்போமென்று கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

௰௫. பின்னையும் கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰௬. இப்பொழுதும் மனுஷபுத்திரனே, நீ யொரு கோலை வாங்கிக்கொண்டு அதிலே யூதாவுக்கும், அதைச் சேர்ந்த இஸ்ரவேல் புத்திரருக்கும் அடுத்ததென்றெழுது, பின்பு ஒரு கோலை வாங்கிக்கொண்டு அதிலே எப்பிராயீமுக்கும், அதைச் சேர்ந்த இஸ்ரவேல் வீட்டாரனைவருக்கும் அடுத்த யோசேப்பின் கோலென்றெழுது,

௰௭. அவைகள் உன்கையில் ஒன்றுபட்டிருக்க அவைகளை யுனக்கொரு கோலாக ஒன்றோடொன்றிசை.

௰௮. இவைகள் உனக்கென்ன அர்த்தங்கொள்ளுமென்பதை யெங்களுக்கறிவியாயோவென்று உன் சனத்தின் புத்திரர் உன்னைக் கேட்டால்,

௰௯. நீ யவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதென்னவென்றால், இதோ எப்பிராயீமுக்கும், அந்த

சேர்ந்த இஸ்ரவேல் கோத்திரங்களுக்கும் அடுத்த யோசேப்பின் கோலை வாங்கி இவைகளை யத்தோடுங்கூட யூதாவின் கோலோடே சேர்த்து அவைகளை ஒரே கோலாக்குவோம், அவைகள் நமது கையில் ஒன்றாயிருக்குமென்று சொல்லு.

௨௰. சொல்லுகையில், நீ யெழுதின கோல்கள் அவர்களுடைய கண்களுக்கு முன்பாக உன் கையிலிருக்கவேண்டும்.

௨௧. நீ யவர்களோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதெதெனில், இதோ * நாம் இஸ்ரவேல் புத்திரரை யவர்கள் போய்ச்சேர்ந்த சாதிகளிடத்திலிருந்து அழைத்துச் சுற்றிலுமிருந்து அவர்களைச் சேர்த்து அவர்களை யவர்கள் சீமையிலே வரப்பண்ணி, * ௩௬, அதி. ௨௪.

௨௨. அவர்களை இஸ்ரவேலின் பருவதங்களாகிய தேசத்தில் * ஒரே சாதியாகத்தோம், ஒரே இராசா அவர்களெல்லாருக்கும் இராசாவாகவிருப்பார், அவர்களினி இரண்டு சாதிகளாயிருப்பதில்லை, அவர்கள் இனிமேல் இரண்டு இராச்சியங்களாகப்பிரிவதுமில்லை. * ஓசே. ௧, அதி. ௰௧.

௨௩. அவர்கள் இனித் தங்கள் நரகலான தேவர்களினாலும், தங்கள் அருவருப்புகளினாலும், தங்களுடைய சகல மீறுதல்களினாலுந் தங்களைத் தீட்டுப்படுத்துவதுமில்லை, அவர்கள் பாவஞ்செய்த அவர்களுடைய சகல வாசஸ்தலங்களுக்கும் நாம் அவர்களை நீங்கலாக்கி இரட்சித்து அவர்களைச் சுத்தம்பண்ணுவோம், அப்போது * நமக்குச் சனமாகவிருப்பார்கள், நாம் அவர்களுக்குப் பராபரனுமாகவிருப்போம். * ௩௬, அதி. ௨௮.

௨௪. * நம்முடைய தாசனாகிய தாவீது அவர்கள் மேல் இராசாவாகவிருப்பார், ஒரே மேய்ப்பர் அவர்களெல்லாருக்குமிருப்பார், † அப்போது அவர்கள் நமது நியாயங்களில் நடந்து நமது கட்டளைகளைக் கைக்கொண்டு அவைகளின்படியே செய்து, * ௩௪, ௨௩. ௨௪. யோவான். ௰, ௰௬. † ௩௬, ௨௭.

௨௫. நாம் நம்முடைய தாசனாகிய யாக்கோபுக்குக் கொடுத்ததும், உங்கள் பிதாக்கள் குடியிருந்ததுமான தேசத்திலே குடியிருப்பார்கள், அவர்களும், அவர்கள் பிள்ளைகளும், அவர்களுடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் அதிலேயென்றென்றைக்குங் குடியிருப்பார்கள். நம்முடைய தாசனாகிய தாவீது என்றென்றைக்கும் அவர்களுக்குப் பிரபுவாயிருப்பார்.

௨௬. * நாம் அவர்களோடே சமாதானத்தின் உடன்படிக்கையைப் பண்ணுவோம் அது அவர்களுக்கு நித்திய உடன்படிக்கையாயிருக்கும். நாம் அவர்களை நிலைப்படுத்தி அவர்களை வர்த்திக்கப்பண்ணி, அவர்கள் நடுவிலே நம்முடைய பரிசுத்த ஸ்தலத்தையென்றென்றைக்கும் வைத்திருப்போம். * ௩௪, ௨௫.

௨௭. * நமது கூடாரம் அவர்களிடத்திலிருக்கும். நாம் அவர்களுக்குப் பராபரனாகவிருப்போம். அவர்கள் நமக்குச் சனமாகவிருப்பார்கள். * ௨. கொரி. ௬, ௰௬. அறிவிப்பு. ௨௧, ௩.

௨௮. அப்படியே நம்முடைய பரிசுத்த ஸ்தலம் அவர்கள் நடுவிலே யென்றென்றைக்கும் இருக்கும்போது நாம் இஸ்ரவேலைப் பரிசுத்தம்பண்ணுகிற கர்த்தரென்று * சாதிகளறிந்துகொள்ளுமென்றிருசொன்றுசொல்லென்றார். * ௩௬, அதி. ௩௬.

## ௩௮. அதிகாரம்.

[(௧) கோகுவின் சேனையும், (௮) அவனுடைய பொறுமையும், (௰௪) அவனுக்கு விரோதமாக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புஞ் சொல்லப்பட்டது.

கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. மனுப்புத்திரனே, மேசேக், தூபால் சாதிகளின் தலையான பிரபுவாயிருக்கிற மாகோகு தேசத்தானாகிய * கோகுக்கெதிராக நீ யுன் முகத்தைத் திருப்பி அவனுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனமுரைத்து, * ௩௯, ௧. அறிவி. ௨௰, ௮.

௩. சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதெதெனில், மேசேக், தூபால் சாதிகளின் தலையான பிரபுவாகிய கோகே, இதோ, நாம் உனக்கு விரோதமாக வருவோம்.

௪. நாம் உன்னைத் திருப்பி * உன் தாடைகளிலே துறடுகளைப்போட்டு உன்னையும், உன்னுடைய எல்லாச் சேனையையும், குதிரைகளையும், எல்லாரும் ஆயுதந்தரித்து முழுச்சிப்பாக வந்திருக்கிற குதிரைக்காரரையும், பரிசையும், கேடயமுமுள்ள திரளான கூட்டத்தையும் புறப்படப்பண்ணுவோம், அவர்களெல்லாரும் பட்டயங்களைப் பிடித்திருப்பவர்கள். * ௨௯, அதி. ௪. ௩௯, அதி. ௨.

௫. அவர்களுடனேகூடப் பெர்சியரும், எத்தியோப்பியரும், பூத்தியருமிருப்பார்கள் அவர்களெல்லாருங் கேடயம்பிடித்துத் தலைச்சோடுதரித்துக்கொண்டிருப்பவர்கள்.

௬. கோமேயரும், அதினுடைய எல்லா இராணுவங்களும், வடபுறங்களிலுள்ள தோகர்மா வீட்டாரும், அவர்களுடைய எல்லா இராணுவங்களுமாகிய திரளான சனங்கள் உன்னுடனே கூடவிருப்பார்கள்.

௭. நீயும், உன்னுடனே கூடின உன்னுடைய எல்லாக் கூட்டமுமாய், * ஆயத்தப்பட்டு முஸ்தீதுபண்ணிக்கொண்டு நீ யவர்களுக்குக் காவற்காரனாயிரு. * எசாயா. ௮, ௯.

அ. அநேகநாளுக்குப்பிறபாடு விசாரிக்கப்படுவாய. பட்டயத்திற்குத்தப்பின தேசமும், அநேகசனசததளங்களிலிருந்துசேர்த்துக்கொள்ளப்பட்டவர்களின தேசத்திலே நீ * வருஷங்களின்முடிவிலேவருவாய. எப்போதும பாழ்க்கிடப்புக்குள்ளாயிருந்து, பிறபாடோவெனில, சனசததளங்களிலிருந்து புறப்படப்பண்ணப்பட்டவர்கள எல்லாருமாயச் சுகத்தோடே குடியிருக்கும இஸ்ரவேலுடைய பருவதங்களுக்குவிரோதமாகததானே. அவர்களெல்லாருமாய அஞ்சாமற குடியிருக்கும்போது, * அறிவி. உய, எ—கூ.

கூ. பாழ்க்கடிக்கிற கொந்தளிப்பைப்போல ஏறிவருவாய. தேசத்தைமூட மப்புக்குச் சமானமாயிருப்பாய. நீயும, உன்னுடைய எல்லா இராணுவங்களும, உன்னோடேகூடயிருக்கும திரளானசனசததளங்களுந்தானே.

ய. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; அந்நாளிலேசமபவிப்பதேதென்றால் பாழாய்க்கிடந்து திரும்பக்குடியேற்றுவிக்கப்பட்ட தலங்களுக்குவிரோதமாகவும, சாதிகளிடத்திலிருந்து சேர்க்கப்பட்டதும, ஆடுகளையும, மாடுகளையும, ஆஸ்தியையுஞ் சம்பாதித்து நடுத்தேசத்திற குடியிருக்கிறதுமான சனத்திற்கு விரோதமாகவும நீ யுன்கையைத்திருப்பும்படிக்கு,

யக. உன்னிருதயத்திலயோசனைகள் கிளம்பும. நீ பொல்லாத நினைவை நினைப்பாய

யஉ. நான கொள்ளையிடவும, சூறையாடவும, கிராமங்களாகிய தேசத்திற்கு விரோதமாயப் போயேறுவேன. சாங்கோபாங்கத்தோடே சுகமாயக்குடியிருக்கிறவர்களின மேலேவருவேன. அவர்களெல்லாரும அலங்கமில்லாமற குடியிருக்கிறார்கள. அவர்களுக்குத் தாழ்ப்பாளுமில்லை கதவுகளுமில்லையென்பாய.

யங. சேபாதேசத்தாரும, தேதானதேசத்தாரும, தர்ஷீசின வர்த்தகரும அதினுடைய இளஞ் சிங்கங்களான அனைவரும உன்னுடனே, நீகொள்ளையிடவல்லவோவருகிறுயென்றும, நீ சூறையாடி, வெள்ளியையும, பொன்னையும எடுத்துக்கொள்ளுகிறதற்கும, ஆடுகளையும, மாடுகளையும, ஆஸ்தியையும்பிடிக்கிறதற்கும, மெத்தவுங்கொள்ளையிடுகிறதற்கும அல்லவோ உன்னுடைய கூட்டத்தைக் கூட்டினுயென்றுஞ் சொல்லுவார்கள.

யச. ஆகையால, மனுப்புத்திரனே, நீதீர்க்கதரிசனமுரைத்துக் கோகுக்குச்சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில, நமதுசனமாகியஇஸ்ரவேல சுகமாயக்குடியிருக்கிற அக்காலத்திலே நீ யல்லவோ அதையறிந்து,

யரு. வடபுறங்களிலுள்ள உன்தானத்திலிருந்துவருவாய, நீயும், உன்னுடனே கூட்டத்

திரளான சனசததளங்களுந்தானே அவர்கள பெரியகூட்டமும, திரளானசேனையுமாயிருந்து எல்லாருங் குதிரைகளின்மேலேறுவார்கள.

யசா. நீ தேசத்தைமூட மப்புக்குச்சமானமாய நமதுசனமாகிய இஸ்ரவேலுக்கு விரோதமாக ஏறிவருவாய, வருஷங்களின்முடிவிலே இதுசம்பவிக்கும, கோகே சாதிகளின கண்களுக்குமுன்பாக உன்னிடத்தில நாமபரிசுத்தம்விளங்கப்படுகிறதினுலே அவைகள நம்மையறியும்படிக்கு உன்னை நமது தேசத்திற்கு விரோதமாக வரப்பண்ணுவோம.

யஎ. உன்னை யவர்களுக்கு விரோதமாகவரப்பண்ணுவோமென்று பூருவநாள்களிலேவருஷங்களைக்குறித்துத் தீர்க்கதரிசனம உரைத்து இஸ்ரவேலின தீர்க்கதரிசிகளாகிய நம்முடையவூழியக்காரரைக்கொண்டு நாம அந்நாள்களிலே சொன்னவன நீ யல்லவோவென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

யஅ. இஸ்ரவேலதேசத்திற்குவிரோதமாகக் கோகுவரும நாளாகிய அன்றைக்குச்சம்பவிப்பதேதெனில, நம்முடைய உக்கிரம நம்முடைய நாசியிலேறுமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

யகூ. அந்நாளிலே இஸ்ரவேல தேசத்திற பெரிய அதிர்தலுண்டாகி,

உய. நம்முடைய பிரசன்னத்தினுற சமுத்திரத்து மச்சங்களும, ஆகாயத்துப்பறவைகளும, வெளியின மிருகங்களும, தரையில ஊருகிற சகல ஊர்வனகளும, தேசமெங்குமுள்ள சகல நரசீவனகளும அதிரும, பருவதங்களிடியும, செங்குத்தானவைகள விழும், எல்லாமதில்களுந் தரையிலே விழுந்துபோமென்று நம்முடைய எரிச்சலினும, நம்முடைய சினத்தின அக்கினியினுஞ் சத்தியப்பிரமாணமாயச்சொல்லுகிறோம.

உக. நம்முடைய எல்லாப் பருவதங்களிலும பட்டயத்தை யவனுக்குவிரோதமாக வரவழைப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், அவனவன்பட்டயம அவனவனுடைய சகோதரனுக்கு விரோதமாயிருக்கும.

உஉ. பெருவாரிக்காய்ச்சலும, இரத்தமும வழங்கும்படியாக நாம அவனோடேநியாயத்திற்குட்பிரவேசித்து அவன்மேலும, அவன இராணுவங்களின்மேலும, அவனோடிருக்குந் திரளான சனசததளங்களின்மேலும வெள்ளமாயடிக்கும மழையையும, பருங்கன்மழையின கற்களையும், * அக்கினியையும், கெந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணுவோம். * சங்கீ. யக, அதி. கூ. அறிவி. உய, கூ.

உங. அப்படியே நாம அநேகசாதிகளின கண்களுக்குமுன்பாக நம்முடைய மகத்து

த்தையும், நம்முடைய பரிசுத்தத்தையும் விளங்கப்பண்ணி அறியப்படுவோம், அப்போது நான் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

## ௩௯. அதிகாரம்.

[(௧) கோகுவின்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பும், (௮) இஸ்ரவேலின் செயமும், (௰௧) ஆமோன்கோகிலே கோகு புதைக்கப்படுவதும், (௰௭) பறவைகளின் விருந்துக்குச் சொல்லப்பட்டதும். (௨௩) இஸ்ரவேலர் தங்கள் பாவங்களுக்காக உபத்திரவப்பட்டு நித்திய தயவோடே ஒன்றாய்ச் சேர்க்கப்படுவது.]

இப்போதும் மனுபுத்திரனே, * நீ கோகுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்துச் சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவருரைக்கிறதேதெனில், மேசேக், தூபால் சாதிகளின் தலையான பிரபுவாகிய கோகே இதோ, நாம் உனக்கு விரோதமாக வருகிறோம். * ௩௮. அதி. ௨. மு.

௨. நாம் உன்னைத் திருப்பி, உன்னை ஆறு துறடுகளால் இழுத்து உன்னை வடபுறங்களிலிருந்தெழும்பவும், இஸ்ரவேலுடைய பருவதங்களில் வரவும் பண்ணி,

௩. உன் வில்லை உன் இடதுகையிலிருந்து போக்கடித்து உன் அம்புகளை உன் வலது கையிலிருந்து விழப்பண்ணுவோம்.

௪. இஸ்ரவேலுடைய பருவதங்களில் விழுவாய், நீயும் உன்னுடனே யெல்லா இராணுவங்களும், உன்னோடிருக்கிற சனசதளங்களுந்தானே. சகலவித செட்டைகளுமுள்ள உராஞ்சுகிற பட்சிகளுக்கும், வெளியின் மிருகங்களுக்கும் உன்னை இரையாகக் கொடுப்போம்.

௫. வெளியின் விசாலத்திலே விழுவாய், ஏனெனில், நாம் அதைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.

௬. நாம் மாகோகிடத்திலும், தீவுகளிற் சுகமாய்க் குடியிருக்கிறவர்களிடத்திலும் அக்கினியையனுப்புவோம், அப்போது நாம் கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௭. இப்படி நாம் நமது சனமாகிய இஸ்ரவேலின் நடுவிலே நம்முடைய பரிசுத்த நாமத்தை அறியப்பண்ணுவோம், நம்முடைய பரிசுத்த நாமத்தை இனிப் பரிசுத்தக்குலைச்சலாகவொட்டோம், அப்படியே புறசாதிகள் நாம் இஸ்ரவேலிற் பரிசுத்தராகிய கர்த்தரென்றறிந்துகொள்ளும்.

௮. இதோ அது வந்தது, அது சம்பவித்தது என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், நாம் சொன்ன நாள் இதுதானே.

௯. இஸ்ரவேலுடைய பட்டணங்களின் குடிகள் வெளியே போய் * ஆயுதங்களிலும், கேடயங்களிலும், பரிசைகளிலும், விற்களிலும், அம்புகளிலும், வளைதடிகளிலும், ஈட்டிகளிலும் எரித்தெரிப்பார்கள், ஏழு வருஷம் அவைகளில் எரித்தெரிப்பார்கள். * சங்கீதம். ௪௬. ௯.

௰. அவர்கள் வெளியிலிருந்து விறகு கொண்டுவராமலும், காடுகளில் வெட்டாமலும் ஆயுதங்களிலெரித்தெரிப்பார்கள், அவர்கள் தங்களைக் கொள்ளையிட்டவர்களைக் கொள்ளையிட்டுத் தங்களைச் சூறையாடினவர்களைச் சூறையாடுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௧. அந்நாளிற் சம்பவிப்பதேதென்றால், அங்கே இஸ்ரவேல் தேசத்திலே கோகு புதைக்கப்படுகிற ஒரு தலத்தைக் கொடுப்போம், சமுத்திரத்திற்குக் கிழக்கே வழிப்போகிறவர்களின் பள்ளத்தாக்கைத்தானே. அது கடந்துபோகிறவர்களின் மூக்கைப் பொத்திக்கொண்டு போகப்பண்ணும், அங்கே கோகையும், அவனுடைய எல்லாச் சேனையையும் புதைத்து அதைக் கோகுடைய சேனையின் பள்ளத்தாக்கென்பார்கள்.

௰௨. இஸ்ரவேல் வீட்டார் தேசத்தைச் சுத்தம்பண்ணும்படிக்கு அவர்களைப் புதைத்துத்தீர ஏழுமாதஞ்செல்லும்.

௰௩. தேசத்தின் சனமெல்லாம் புதைத்துக்கொண்டிருப்பார்கள், நாம் மகிமைப்படும் அந்நாளிலே அது அவர்களுக்குக் கீர்த்தியாக இருக்குமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௪. தேசத்தின் விசாலத்தைச் சுத்தம்பண்ணி அதிற்கிடக்கும் குறைப்பிரேதங்களைப் புதைக்கும்படிக்கு நித்தியவேலையாய்த் தேசத்திற் சுற்றித்திரியும் மனுஷரையும், சுற்றித்திரிகிறவர்களோடே கூடப் புதைக்கிறவர்களையும் பிரித்தெடுப்பார்கள். ஏழுமாதங்கள் முடிந்தபிற்பாடு இவர்கள் தேடி விசாரிப்பார்கள்.

௰௫. தேசத்திற் சுற்றித்திரிகிறவர்கள் திரிவார்கள், மனுஷனுடைய எலும்பை அவர்களில் ஒருவன் காணும்போது புதைக்கிறவர்கள் அதைக் கோகுடைய சேனையின் பள்ளத்தாக்கிலே புதைக்குமட்டும் அதினண்டையிலே ஒரு குறிப்படையாளத்தை நாட்டுவான்.

௰௬. அங்கே ஊரின் பேருண்டாய் அது சேனைபுரமென்னப்படும், இப்படியே தேசத்தைச் சுத்தம்பண்ணுவார்கள்.

௰௭. இப்போதும் மனுபுத்திரனே, கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; * நீ சகலவித இறகுமுள்ள பட்சிகளுக்கும், வெளியிலிருக்கிற சகல மிருகங்களுக்குஞ் சொல்லவேண்டியதேதென்றால், நீங்கள் கூடிக்கொண்டு இஸ்ரவேலின் பருவதங்களில் நாம் உங்களுக்காக அடிக்கும் பெரிய பெ

விட்டிப்பாகிய நம்முடைய பெலியடிப்புக்குச் சுற்றிலுமிருந்து வந்துசேர்ந்து மாம்சந்தின்று இரத்தங்குடியுங்கள். * அறிவி. ௰௯, ௱௭. ௰௮.

௰௮. நீங்கள் பராக்கிரமசாலிகளின் மாம்சத்தைத்தின்று பூமியினுடைய பிரபுக்களின் இரத்தத்தைக்குடிப்பீர்கள், அவர்களெல்லாரும் பாசானிலே கொழுத்துப்போன ஆட்டுக்கடாக்களுக்கும், ஆட்டுக்குட்டிகளுக்கும், வெள்ளாட்டுக் கடாக்களுக்கும், காளைகளுக்கும் சமானமானவர்கள்.

௰௯. நாம் உங்களுக்காக அடிக்கும் நம்முடையபெலியடிப்பிலே நீங்கள் திருப்தியாகக் கொழுப்பைத்தின்று வெறியாக இரத்தங்குடிப்பீர்கள்,

௨௰. நமது பந்தியிலே குதிரைகளையும், வாகனங்களையும், பராக்கிரமசாலிகளையும், சகல யுத்த ஆட்களையுந்தின்று திருப்தியாவீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்பதைச் சொல்லு.

௨௧. * இப்படி நமது மகிமையைப் புறசாதிகளுக்குள்ளே விளங்கப்பண்ணுவோம், நாம் செய்த நமது நியாயத்தையும், அவர்கள்மேல் நாம்போட்ட நமது கையையும் எல்லாச்சாதிகளுங்காணும். * ௩௩. ௩௬, ௬.

௨௨. அன்றுமுதற்கொண்டு நாளதுவரையிலே நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று இஸ்ரவேல்வீட்டார் அறிந்துகொள்ளுவார்கள்.

௨௩. இஸ்ரவேல்வீட்டார் தங்கள் அக்கிரமத்தினிமித்தமே சிறையிருப்பிலே கொண்டுபோகப்பட்டார்களென்பதை அப்போது புறசாதிகள் அறிந்துகொள்ளும். ஏனெனில், அவர்கள் நமக்குவிரோதமாய்த் துரோகம்பண்ணினபடியினாலே நாம் நமது முகத்தை யவர்களுக்கு மறைத்து, அவர்களையவர்கள் சத்துருக்களின் கையிலொப்புக்கொடுத்தோம், அனைவரும் பட்டயத்தாலும் விழுந்தார்கள்.

௨௪. அவர்களுடைய அசுத்தத்திற்குத்தக்கதாகவும், அவர்களை மீறுதல்களுக்குத்தக்கதாகவும் நாம் அவர்களைநடப்பித்து நமது முகத்தை யவர்களுக்குமறைத்தோம்.

௨௫. ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது;

௨௬. அவர்கள் தங்கள் இலச்சையையும், தாங்கள்சுகமாய்ப் பயப்படுத்துவாரில்லாமலே தங்கள் சீமையிலே குடியிருக்கையில் நமக்கு விரோதமாய்ப்பண்ணின தங்களுடைய எல்லாத்துரோகத்தையுஞ் சுமந்து வந்தபிற்பாடு நாம் யாக்கோபின் சிறையிருப்பைத்திருப்பி, * இஸ்ரவேல்வீட்டைத்திறக்கும் இரங்கி நமது பரிசுத்தநாமத்திற்காகப் பத்திவைராக்கியமாயிருப்போம். * உரோமர். ௰௧, ௨௬.

௨௭. நாம் அவர்களைச் சனசதளங்களிலிருந்து திரும்பிவரப்பண்ணி அவர்களை யவர்களுடைய பகைஞரின் தேசங்களிலிருந்து கூட்டிக்கொண்டுவந்து திரளான சாதிகளுடையகண்களுக்குமுன்பாக அவர்களில் மகிமைவிளங்குகையில்,

௨௮. அப்போது தங்களைப் புறசாதிகளிடத்திற்சிறையாகக்கொண்டுபோகப்பண்ணின நாம் தங்களில் ஒருவனையும் அங்கே அப்புறம்வைக்காமல், தங்களைத் தங்கள் சீமையிலே திரும்பக் கூட்டிக்கொண்டுவந்தோமென்பதினாலே நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்றறிந்துகொள்ளுவார்கள்.

௨௯. * நாம் இஸ்ரவேல்வீட்டாரின்மேல் நம்முடைய ஆவியை ஊற்றினபோது நம்து முகத்தை இனியவர்களுக்கு மறையோமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறோர். * ௨௯, ௨௫. யோவேல. ௩, ௧.

## ௪௰. அதிகாரம்.

[(௧) தரிசனையின் காலத்தையும், முறைமையையும், முடிவையும், (௬) கிழக்குவாசலையும், (௨௰) வடக்குவாசலையும், (௨௪) தெற்குவாசலையும், (௩௨) கிழக்குவாசலையும், (௩௫) வடக்குவாசலையும், (௩௯) எட்டுப்பீடங்களையும், (௪௪) அறைகளையும், (௪௮) வீட்டு நடையையுங்குறித்தது.]

நாங்கள் சிறையிருப்பிலே கொண்டுவரப்பட்டிருந்த இருபத்தைந்தாம் வருஷத்தின் துவக்கமான முதலாம் மாதம் பத்தாந்தேதியாகிய அன்றே கர்த்தருடைய கையென்மேல் வந்து அவரென்னை யவ்விடத்திற்குக்கொண்டுபோனார். * பட்டணம் அழிக்கப்பட்டது. அப்போது பதினாலாம் வருஷமாயின. * ௩௩, ௨௧.

௨. தேவதரிசனைகளில் அவரென்னை இஸ்ரவேல் தேசத்திற்குக்கொண்டுபோய் என்னை மகா உயர்ச்சியான ஒரு பருவதத்தின்மேல் நிறுத்தினார். அதின்மேல் தெற்காக ஒரு பட்டணங் கட்டியிருக்கிறதுபோலக் காணப்பட்டது.

௩. அவரென்னையங்கேகொண்டுபோனார். இதோ, அங்கே ஒருபுருஷனிருந்தார், அவருடைய உருவுவெண்கலவுருவாகவிருந்தது, அவர்கையிற்சணற்கயிறும் ஒரு அளவுகோலுமிருந்தது, அவர்வாசலிலே நின்றார்.

௪. அந்தப்புருஷன் என்னோடேசொன்னதாவது; மனுபுத்திரனே, * நீ கண்ணாரப் பார்த்துக் காதாரக்கேட்டு, நாம் உனக்குக் காண்பிப்பதெல்லாவற்றின்பேரிலும் உன் மனதைவை. ஏனெனில், உனக்கதைக்காண்பிக்கும்படிக்கு இங்கேகொண்டுவரப்பட்டாய், நீ காண்பவைகளையெல்லாம் இஸ்ரவேல் வீட்டாருக்கு அறிவியென்றார். * ௪௪, ௫.

௫. இதோ, வீட்டுக்குப்புறம்பேசுற்றிலும

ஒருமதிலிருந்தது, அந்தப் புருஷனுடைய கையிலேயோவென்றால், ஆறுமுழ நீளமான அளவுகோலிருந்தது, ஒவ்வொருமுழம் முழத்திலும் நாலுவிரற்கடை அதிகமானது, அவர் அக்கட்டடியிருந்த அகலத்தை யொருகோலாகவும், உயர்ச்சியை யொருகோலாகவும் அளந்தார்.

௬. பிற்பாடு அவர் கீழ்த்திசைக்கெதிரான ஒலிமுகவாசலுக்குவந்து அதின் படிகளின் மேலேறி, வாசற்படியை ஒருகோல் அகலமாகவும், மறுவாசற்படியை ஒருகோல் அகலமாகவும் அளந்தார்.

௭. ஒவ்வொரு அறை ஒருகோல் நீளமும், ஒருகோல் அகலமுமாயிருந்தது, அறைவீடுகளுக்கு நடுவே ஐந்துமுழமிடமிருந்தது, வாசலின் சாலையருகே உள் வாசற்படி ஒருகோலாயிருந்தது.

௮. வாசலின் சாலையையும் உள்ளே ஒருகோலாக அளந்தார்.

௯. பின்பு வாசலின் சாலையை எட்டுமுழமாகவும், அதின் தூணாதாரங்களை இரண்டு முழமாகவும் அளந்தார், வாசலின் உட்சாலையிதுதானே.

௰. கீழ்த்திசைக்கெதிரான வாசலின் அறைகள் இந்தப்பக்கம் மூன்றும், அந்தப்பக்கம் மூன்றுமாயிருந்தன, அவைகள் மூன்றுக்கும் ஒரு அளவும், இந்தப்பக்கமும், அந்தப்பக்கமுமிருந்த தூணாதாரங்களுக்கொரு அளவுந்தானே.

௰௧. பின்பு வாசலுடைய நடையின் அகலத்தைப் பத்துமுழமாகவும், வாசலின் நீளத்தைப் பதின்மூன்றுமுழமாகவும் அளந்தார்.

௰௨. அறைகளுக்கு முன்னே இந்தப்பக்கமொருமுழ எல்லையும், அந்தப்பக்கமொருமுழ எல்லையுமிருந்தது, ஒவ்வொரு அறை இந்தப்பக்கத்தில் ஆறுமுழமும், அந்தப்பக்கத்தில் ஆறுமுழமுமாயிருந்தது.

௰௩. பிற்பாடு வாசலிலிருந்த அறையின் மெத்தையைத்துவக்கி அந்த அறையின் மெத்தைமட்டுக்கும் இருபத்தைந்துமுழமாக அளந்தார், கதவுக்கெதிரே கதவிருந்தது.

௰௪. தூணாதாரங்களையோ அறுபதுமுழமாக அளவிட்டார், இந்தத்தூணாதாரங்களருகே சுற்றிலும் ஒலிமுகவாசலின் முற்றமிருந்தது.

௰௫. உட்பிரவேசிக்கிற ஒலிமுகவாசலின் முகப்பைத்துவக்கி, உட்புறமான வாசலுடைய சாலையின் முகப்புமட்டுக்கும் ஐம்பது முழமிருந்தது.

௰௬. வாசலுக்குட்புறமாகச் சுற்றிலும் அறைகளுக்கும், அவைகளின் தூணாதாரங்களுக்கும் ஒடுக்கமான பலகணிகளிருந்தன, சாலைகளிலும் அப்படித்தானே, உட்புறமாய்ச் சுற்றிலும் அந்தப்பலகணிகளும், தூணாதாரங்களில் பேரீச்சுகளுமிருந்தன.

௰௭. பிற்பாடு என்னை வெளிமுற்றத்துக்கழைத்துப்போனார். இதோ, அறைவீடுகளும், முற்றத்திலே சுற்றிலும் பதித்திருக்கும் தளவரிசையுமிருந்தன, முப்பது அறைவீடுகள் அந்தத்தளவரிசையிலிருந்தன.

௰௮. வாசல்களுக்குப் பக்கமும், வாசல்களின் நீளத்துக்கெதிருமான அந்தத்தளவரிசை தாழ்வான தளவரிசையாயிருந்தது.

௰௯. தாழ்வானவாசலின் முகப்புத்துவக்கி உள்முற்றத்தினுடைய புறமுகப்புமட்டுமுள்ள விசாலத்தையோவென்றால் கிழக்கேயும், வடக்கேயும் நூறுநூறுமுழமாக அளந்தார்.

௨௰. வெளிமுற்றத்துக்கடுத்த வடதிசைக்கெதிரான வாசலின் நீளத்தையும், அகலத்தையும் அளந்தார்.

௨௧. இந்தப்பக்கம் மூன்றும், அந்தப்பக்கம் மூன்றுமாகிய அதின் அறைகளும், அதின் தூணாதாரங்களும், அதின் சாலைகளும் முந்தின வாசலின் அளவுக்குச் சரியாயிருந்தன, அதின் நீளம் ஐம்பதுமுழமும், அகலம் இருபத்தைந்துமுழமுமானது.

௨௨. அதின் பலகணிகளும், அதின் சாலைகளும், அதின் பேரீச்சுகளும் கீழ்த்திசைக்கெதிரான வாசலின் அளவுக்குச் சரியாயிருந்தன, ஏழுபடிகளால் அதற்கேறுகிறது, அதின் சாலைகள் அவைகளுக்கு முன்னேயிருந்தன.

௨௩. வடதிசையும், கீழ்த்திசையுமான ஒவ்வொரு வாசலுக்கெதிராக உட்புறத்திற்கு வாசல்களிருந்தன, ஒருவாசலைத்துவக்கி மற்றவாசல்மட்டும் நூறுமுழமாக அளந்தார்.

௨௪. பிற்பாடு என்னைத் தென்திசைக்கழைத்துக்கொண்டுபோனார். இதோ, தென்திசைக்கெதிரானவாசலுமிருந்தது, இதின் தூணாதாரங்களையும், இதின் சாலைகளையும் அந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௨௫. அந்தப்பலகணிகளுக்குச்சரியாக இதற்கும், இதின் சாலைகளுக்கும் பலகணிகள் சுற்றிலுமிருந்தன, நீளம் ஐம்பதுமுழமும், அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தன.

௨௬. அதில் ஏறுகிறதற்கு ஏழுபடியும், அதற்கு முன்னாக அதின் சாலைகளுமிருந்தன, அதின் தூணாதாரங்களில் அதற்குப் பேரீச்சுகளும் ஒன்று இந்தப்பக்கமும், ஒன்று அந்தப்பக்கமுமாயிருந்தது.

௨௭. உள்முற்றத்திற்கும் ஒருவாசல் தென் திசைக்கெதிராகவிருந்தது, தென்திசைக்கு ஒருவாசல்துவக்கி மற்றவாசல்மட்டாக நூறு முழமாக அளந்தார்.

௨௮. பின்பு அவர் தெற்குவாசலால் என்னை உள்முற்றத்திற்கழைத்துப்போய், தெற்கு வாசலை அந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௨௯. இதின் அறைகளும், இதின் தூணாதா

ரங்களும், இதின்சாலைகளும் அந்த அளவுக்குச்சரியாகவிருந்தன, இதற்கும், இதின்சாலைகளுக்கும் பலகணிகள்சுற்றிலுமிருந்தன, நீளம் ஐம்பதுமுழமும், அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தது.

௩௰ இருபத்தைந்து முழ நீளமும், ஐந்துமுழ அகலமுமான சாலைகள்சுற்றிலுமிருந்தன.

௩௧. அதின்சாலைகள் வெளிமுற்றத்திலிருந்தன, அதின்தூணுதாரங்களிற் பேரீச்சுகளுமிருந்தன, அதில் ஏறுகிறபடிகள் எட்டு.

௩௨. பிற்பாடு அவர் கீழ்த்திசை வழியாலே என்னையுள்முற்றத்துக் கழைத்துப்போய், இந்தவாசலை அந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௩௩. இதின் அறைகளும், இதின் தூணுதாரங்களும், இதின்சாலைகளும் அந்த அளவுக்குச்சரியாகவிருந்தன, இதற்கும், இதின்சாலைகளுக்கும் பலகணிகள் சுற்றிலுமிருந்தன, நீளம்ஐம்பதுமுழமும், அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தது.

௩௪. அதின்சாலைகள் வெளிமுற்றத்திலிருந்தன, அதின் தூணுதாரங்களில் இந்தப்பக்கமும், அந்தப்பக்கமும் பேரீச்சுகளுமிருந்தன, அதில் ஏறுகிறபடிகள் எட்டு.

௩௫. பிற்பாடவரென்னை வடக்குவாசலுக்கழைத்துப்போய், அந்த அளவுக்குச்சரியாக அளந்தார்.

௩௬. இதின் அறைகளும், இதின்தூணுதாரங்களும், இதின்சாலைகளும் அப்படித்தான், இதற்குப்பலகணிகளுஞ் சுற்றிலுமிருந்தன, நீளம் ஐம்பதுமுழமும், அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தது.

௩௭. அதின் தூணுதாரங்கள் வெளிமுற்றத்திலிருந்தன, அதின்தூணுதாரங்களில் இந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலும் பேரீச்சுகளுமிருந்தன, அதிலேறுகிறபடிகள் எட்டு.

௩௮. அதின் அறைகளும், அதின்கதவுகளும் வாசல்களின் தூணுதாரங்களுக்குள்ளேயிருந்தன, அங்கேதகனபலியைக்கழுவுவார்கள்.

௩௯. வாசலின்சாலையிலோவென்றால், இந்தப்பக்கம் இரண்டுபீடங்களும், அந்தப்பக்கம் இரண்டுபீடங்களும், அவைகளின்மேலே தகனபலியும், பாவம்போக்கும்பலியும், குற்றம்போக்கும் பலியும் அடிப்பதற்காகவிருந்தன.

௪௰. வடக்கு வாசலுக்குட்பிரவேசிக்கிறதற்கு ஏறிப்போகிற வெளிப்புறத்திலே இரண்டுபீடங்களும், வாசலின் சாலையிடத்திலுள்ள மறுபுறத்திலே இரண்டுபீடங்களுமிருந்தன.

௪௧. வாசலின் புறமாய் இந்தப்பக்கம் நாலுபீடங்களும், அந்தப்பக்கம் நாலுபீடங்களாக எட்டுப்பீடங்களிருந்தன, அவைகளின்மேற் பலிகளையடிப்பார்கள்.

௪௨. தகனபலிக்கடுத்த நாலுபீடங்கள் வெட்டினகல்லாயிருந்தன, ஒன்றரைமுழநீளமும், ஒன்றரைமுழ அகலமும், ஒருமுழவுயரமுமாயிருந்தன, அவைகளின்மேலே தகனபலிகளையும், மற்றப்பலிகளையும், அடிக்கிற ஆயுதங்களையும்வைப்பார்கள்.

௪௩. நாலுவிரற்கடையானமுளைகள் உள்ளேசுற்றிலும் வரிசையாயடிக்கப்பட்டிருந்தன, செலுத்தும்பலிகளின்மாம்சமோபீடங்களின்மேல்வைக்கப்படும்.

௪௪. உள்முகத்திலே உள்வாசலுக்குப்புறம்பாகப்பாடுவார்களின் அறைவீடுகளிருந்தன, அவைகளில்வடக்குவாசலின்பக்கமாகவிருந்தவைகள் தென்திசைக்கெதிராகவும், கீழ்க்குவாசற் பக்கமாகவிருந்த வேறொருவரிசை வடதிசைக்கெதிராகவுமிருந்தன.

௪௫. அவரென்னோடேசொன்னதாவது; தென்திசைக்கெதிராயிருக்கிற இந்த அறைகள் வீட்டின் காவலைக்காக்கிற ஆசாரியர்களுடையது.

௪௬. வடதிசைக்கெதிராயிருக்கிற அறைகளோவென்றால்பலிபீடத்தின் காவலைக்காக்கிறஆசாரியர்களுடையது, இவர்களிலேலேவியின் புத்திரரிற் கர்த்தரண்டையிலேயவருக்காராதனை செய்தற்காகச்சேருகிறசாதோக்கின் புத்திரர் என்றார்.

௪௭. அவர் முற்றத்தைநூறுமுழ நீளமாகவும், நூறுமுழ அகலமாகவும் அளந்தார், அது சதுரமானது, பலிபீடமோவென்னில், வீட்டுக்குமுன்னேயிருந்தது.

௪௮. பிற்பாடவரென்னை வீட்டின்சாலைக்கழைத்துப்போய்ச் சாலையின் தூணுதாரத்தை இந்தப்பக்கம் ஐந்துமுழமும், அந்தப்பக்கம் ஐந்துமுழமுமாக அளந்தார், வாசலின் அகலம் இந்தப்பக்கம் மூன்றுமுழமும், அந்தப்பக்கம்மூன்றுமுழமுமாயிருந்தது.

௪௯. சாலையின் நீளம் இருபதுமுழமும், அகலம் பதினொருமுழமுந்தானே. ஏறிப்போகிறபடிகள் அதற்கிருந்தன. தூணுதாரங்களிலே இந்தப்பக்கமாயொருதூணும், அந்தப்பக்கமாயொருதூணுமிருந்தது.

## ௪௧. அதிகாரம்.

[தேவாலயத்தின் அளவுகளும், பிரிவுகளும், அறைகளும், ஆபரணங்களும் சொல்லப்பட்டது.]

பிற்பாடு அவரென்னைத்தேவாலயத்திற் கழைத்துப்போய்த்தூணுதாரங்களை இந்தப்பக்கத்தில் ஆறுமுழ அகலமும், அந்தப்பக்கத்தில் ஆறுமுழ அகலமுமாக அளந்தார். அது கூடாரத்தின் அகலம்.

௨. வாசல் நடையின் அகலம் பத்துமுழமும், வாசல்நடையின்பக்கங்கள் இந்தப

பக்கத்தில் ஐந்து முழமும், அந்தப்பக்கத்தில் ஐந்து முழமுமாயிருந்தது. அதின் நீளத்தை நாற்பது முழமும், அகலத்தை இருபது முழமுமாக அளந்தார்.

௩. பின்பு அவர் உள்ளே போய் வாசல் நடையின் தூணாதாரங்களை இரண்டு முழமாகவும், வாசல்நடையை ஆறு முழமாகவும், வாசல்நடையின் அகலத்தை யேழு முழமாகவும் அளந்தார்.

௪. பிறகு அவர் தேவாலயத்தின் தலையிலே அதின் நீளத்தை இருபது முழமும், அதின் அகலத்தை இருபது முழமுமாக அளந்து, என்னுடனே இது பரிசுத்தத்திற்கும் பரிசுத்த ஸ்தலமென்றார்.

௫. பிறபாடவர் வீட்டின் சுவரை ஆறு முழமாகவும், வீட்டைச் சுற்றிலுமிருந்த பக்கக்கட்டடினுடைய அகலத்தை நாலு முழமாகவும் அளந்தார்.

௬. இந்தப் பக்கக்கட்டடிகளோவென்றால், பக்கக்கட்டடின்மேற் பக்கக்கட்டடாள வரிசைகளாய முப்பத்து மூன்றிருந்தன. அவைகள் வீட்டின் சுவருக்குள்ளே ஊன்றியிராமல், பக்கக் கட்டடிகளுக்காகச் சுற்றிலும், அவைகளுன்றும்படிக்கு வீட்டுக்கிருந்த ஒட்டுச்சுவரிலே பாய்ந்தன.

௭. உயரவுயரச் சுற்றிலும் பக்கக்கட்டடிகளுக்கு அகலமுண்டாயிருந்தது. ஏனெனில், வீட்டைச்சுற்றிலும் உயரவுயர வீட்டினுடைய சுற்றிருந்தது. ஆனதுகொண்டு உயர அதிக அகலம் உள்ளேயிருந்தது. இப்படியே கீழ்நிலையிலிருந்து நடுநிலைவழியாய் மேல்நிலைக்கேறுகிறது.

௮. மாளிகைக்கிருந்த உயரத்தையுஞ் சுற்றிலும் பார்த்தேன். பக்கக்கட்டடிகளின் அஸ்திவாரங்கள் ஆறு பெரிய முழமான ஒரு முழக்கோலின் உயர்ச்சியாயிருந்தன.

௯. புறப்பே பக்கக்கட்டடிக்கிருந்த சுவரின் அகலம் ஐந்து முழமானது. வீட்டுக்கிருக்கும் பக்கக்கட்டடிகளின் மாளிகையிலே வெறுமையாய் விட்டிருந்த இடங்களும் அப்படித்தான்.

௰. வீட்டைச்சுற்றிலும் அறைவீடுகளுக்கு நடுவாகவிருந்த விசாலம் இருபது முழமாயிருந்தது.

௰௧. பக்கக்கட்டடினுடைய வாசல்நடைகள் வெறுமையாயவிட்டிருந்த இடங்களிலிருந்து ஒருவாசல்நடை வடக்கேயும், ஒருவாசல்நடை தெற்கேயுமிருந்தது. வெறுமையாயவிட்டிருந்த இடங்களின் விசாலஞ் சுற்றிலும் ஐந்து முழங்களாயிருந்தன.

௰௨. மேற்றிசைத்திக்கிலே வகுப்பின்முன்னிருந்த மாளிகைமட்டும் அகலம் எழுபது முழமும், மாளிகையினுடைய சுவரின் அகலஞ் சுற்றிலும் ஐந்து முழமும், அதினுடைய நீளந் தொண்ணூறு முழமுமாயிருந்தது.

நூறு

௰௩. அவர் வீட்டை நூறுமுழ நீளமாகவும், வகுப்பையும், மாளிகையையும், அதின் சுவர்களையும் நூறுமுழ நீளமாகவும் அளந்தார்.

௰௪. வீட்டின் முன்புறமும், கிழக்குக்கெதிரான வகுப்புமிருந்த அகலம் நூறுமுழமாயிருந்தது.

௰௫. வகுப்பின் பிறபுறமாக அதற்கெதிரேயிருந்த மாளிகையின் நீளத்தையும், அதற்கு இந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலுமிருந்த நடைகாவணங்களையும் அளந்தார். உள்ளான தேவாலயமும், முற்றத்தின் சாலைகளுமுட்பட அது நூறுமுழமாயிருந்தது.

௰௬. வாசற்படிகளும், ஒடுக்கமான பலகணிகளும், மூன்று பக்கங்களிற் சுற்றிலும் வாசல்களுக்கெதிரான நடைகாவணங்களுக்குச் சுற்றிலுந் தரை தொடங்கிப் பலகணிகள் மட்டாகப் பலகையடித்திருந்தது. பலகணிகள் மட்டாக மூடப்பட்டிருந்தது.

௰௭. வாசலின் மேலே தொடங்கி வீட்டின் உட்புறமும், வெளிப்புறமும், சுற்றிலுஞ் சுவரின் உட்புறமும், வெளிப்புறமுமெல்லாம் அளவிட்டிருந்தன.

௰௮. கேருபீன்களும், பேரீச்சுகளுந் தீரப்பட்டிருந்தன. கேருபீனுக்கும், கேருபீனுக்கும் நடுவாக ஒவ்வொரு பேரீச்சும், * ஒவ்வொரு கேருபீனுக்கு இரண்டு முகங்களுமிருந்தன. * ௰, ௰௪.

௰௯. மனுஷமுகம் இந்தப்பக்கத்திலிருந்த பேரீச்சுக்கெதிராகவும், சிங்கமுகம் அந்தப்பக்கத்திலிருந்த பேரீச்சுக்கெதிராகவுமிருந்தது.

௨௰. * தரைதொடங்கி வாசலின் மேற்புறமட்டாகவும், தேவாலயத்தின் சுவரிலும், கேருபீன்களும், பேரீச்சுகளுந் தீரப்பட்டிருந்தன. * க. இரா. ௬, ௨௯.

௨௧. தேவாலயத்தின் கதவுநிலைகள் சதுரமும், பரிசுத்தஸ்தலத்தினுடைய முகப்பின் உருவு அந்த உருவுக்குச் சரியுமாயிருந்தது.

௨௨. மரமான பலிபீடத்தின் உயரம் மூன்று முழமும், அதின் நீளம் இரண்டுமுழமுமாயிருந்தது. அதற்கதின் கோடிகளிருந்தன. அதின் நீளமும், அதின் பக்கங்களும் மரமானது. அவர் என்னுடனே, இது கர்த்தருக்குமுன்பாக நிற்கிற பீடமென்றார்.

௨௩. தேவாலயத்துக்கும், பரிசுத்தஸ்தலத்துக்கும் இரண்டுவாசல்களும்,

௨௪. வாசல்களுக்கு மடக்குங் கதவுகளாகிய இரட்டைக் கதவுகளுமிருந்தன. ஒரு வாசலுக்கு இரண்டும், மறுவாசலுக்கு இரண்டு கதவுகளுந்தானே.

௨௫. சுவர்களிலே தீரப்பட்டிருந்ததுபோலே தேவாலயத்தினுடைய அந்தக் கதவுகளிலே கேருபீன்களும், பேரீச்சுகளுந் தீரப

பட்டிருந்தன. புறம்பே சாலையின் முன்பாக உத்திரங்களிருந்தன.

௨௬. சாலையின் பக்கங்களில் இந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலும், வீட்டினுடைய பக்கக்கட்டுகளிலும், ஒடுக்கமான பலகணிகளிலும், பேரீச்சுகளும், உத்திரங்களுமிருந்தன.

## ௪௨. அதிகாரம்.

[(௧) ஆசாரியர்களின் அறைகளும், (௰௩) அவைகளினுபயோகமும், (௰௫) வெளிப்பிரகாரத்தின் அளவுகளுஞ்சொல்லப்பட்டது.]

பின்பு அவர் என்னை வடதிசையான வழியாக வெளிமுற்றத்திலே புறப்படப்பண்ணி, வந்தப்புக்கெதிராகவும், மாளிகைக்கெதிராகவும் வடக்கேயிருந்த அறைவீடுகளுக்கென்னை யழைத்துப்போனார்.

௨. நூறுமுழ நீளத்திற்குமுன்னுக்கு வடக்கு வாசலிருந்தது. அவ்விடத்து அகலம் ஐம்பது முழம்.

௩. உள்முற்றத்திலிருந்த இருபது முழங்களுக்கெதிராகவும், வெளிமுற்றத்திலிருந்த தளவரிசைக்கெதிராகவும் ஒன்றுக்கொன்றெதிரான மூன்று நிலைகளுள்ள நடைகாவணங்களிருந்தன.

௪. உட்புறத்திலே அறைவீடுகளின் முன்பாகப் பத்து முழ அகலமான வழியும், ஒரு முழ அடிப்பாடுமிருந்தது. அவைகளின் வாசல்கள் வடக்காயிருந்தன.

௫. உயரவிருந்த அறைவீடுகள் அகலக்கட்டையாயிருந்தன. ஏனெனில், நடைகாவணங்கள் கீழேயிருக்கிற அறைவீடுகளுக்கும், நடுவேயிருக்கிறவைகளுக்குமின்ன உயர்ச்சியான மாளிகையாயிருந்தன.

௬. ஏனெனில், அவைகள் மூன்று நிலையானவைகள். அவைகளுக்கு முற்றங்களின் தூண்களுக்கொத்த தூண்களுமில்லை. ஆகையால் தரையிலிருந்தளக்க, அவைகள் கீழேயும், நடுவேயுமிருக்கிறவைகளைப் பார்க்கிலும், அகலக்கட்டையாயிருந்தன.

௭. புறம்பே அறைவீடுகளுக்கெதிரே வெளிமுற்றத்தின் திசையில் அறைவீடுகளுக்கு முன்பாகவிருந்த மதிலின் நீளம் ஐம்பது முழம்.

௮. ஏனெனில், வெளிமுற்றத்திலுள்ள அறைவீடுகளின் நீளம் ஐம்பது முழந்தானே. ஆனால் இதோ, தேவாலயத்திற்கு முன்னுள்ளது நூறுமுழமாயிருந்தது.

௯. கீழக்கே வெளிமுற்றத்திலிருந்து அந்த அறைவீடுகளுக்குட் பிரவேசிக்கிற நடை அவைகளின் கீழேயிருந்தது.

௰. கீழ்த்திசையான முற்றத்து மதிலின் அகலத்திலே வந்தப்புக்கு முன்பாகவும், மாளிகைக்கு முன்பாகவும் அறைவீடுகளிருந்தன.

௰௧. அவைகளுக்கு முன்னுள்ள வழியிலே அவைகள் தங்கள் நீளத்திலும், தங்கள் அகலத்திலும், தங்களுடைய வெல்லா வாசற்படிகளிலும், தங்கள் திட்டங்களிலும், தங்கள் வாசல்நடைகளிலும் வடதிசையான அறைவீடுகளின் சாயலாயிருந்தது.

௰௨. தென்திசையான அறைவீடுகளின் வாசல் நடைகளொப்பாக ஒரு வாசல்நடை வழியின் முகப்பிலிருந்தது, கீழ்த்திசையில் அவைகளுக்குட்பிரவேசிக்கும்யிடத்திலே செம்மையான மதிலின் முன்னேயிருந்த வழியின் முகப்பிலேதானே.

௰௩. அவர் என்னோடே சொன்னதாவது; வந்தப்புக்கு முன்னிருக்கிற வடபுறமான அறைவீடுகளும், தென்புறமான அறைவீடுகளும் பரிசுத்த அறைவீடுகளாயிருக்கின்றன. கர்த்தரண்டைக்குச் சேருகிற ஆசாரியர் அங்கே பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதையும், காணிக்கைகளையும், பாவம்போக்கும் பலியையும், குற்றம்போக்கும்பலியையும் வைப்பார்கள். ஏனெனில், அந்தஸ்தலம் பரிசுத்தமாயிருக்கிறது.

௰௪. ஆசாரியர் உட்பிரவேசித்தபோது, அவர்கள் பரிசுத்தஸ்தலத்திலிருந்து வெளிமுற்றத்திற்குப் புறப்படாததற்குமுன்னே அங்கே தாங்கள் ஆராதனைசெய்து உடுத்தியிருந்த வஸ்திரங்களைக் கழற்றிவைப்பார்கள். ஏனெனில், அவைகள் பரிசுத்தமானவைகள். வேறே வஸ்திரங்களையுடுத்துக்கொண்டு சனத்தின் முற்றத்திலே சேருவார்களென்றார்.

௰௫. அவர் உள்வீட்டை அளந்துதீர்த்தபிற்பாடு கீழ்த்திசைக்கெதிரான வாசல்வழியா யென்னை வெளியே யழைத்துக்கொண்டு போய் அதைச் சுற்றிலும் அளந்தார்.

௰௬. கீழ்க்காற்றுப் பக்கத்தை யளவுகோலாலே யளந்தார். அது அளவுகோலின்படியே சுற்றிலும் ஐந்நூறு கோல்களாயிருந்தது.

௰௭. வடகாற்றுப்பக்கத்தை யளவுகோலாலே சுற்றிலும் ஐந்நூறு கோல்களாயளந்தார்.

௰௮. தென்காற்றுப் பக்கத்தை யளவுகோலாலே ஐந்நூறுகோல்களாயளந்தார்.

௰௯. மேல்காற்றுப் பக்கத்திற்குத் திரும்பிக்கொண்டு அளவுகோலாலே ஐந்நூறுகோல்களாயளந்தார்.

௨௰. நாலுகாற்றுப்பக்கங்களிலும் அதையளந்தார், பரிசுத்தமானதற்கும், பரிசுத்தமல்லாததற்கும் வித்தியாசம்பண்ணும்படிக்கு, அவைக்கு ஐந்நூறுகோல் நீளமும், ஐந்நூறுகோல் அகலமுமான மதில் சுற்றிலுமிருந்தது.

## ௪௩. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய மகிமை தேவாலயத்திற்குத் திரும்புகிறபடியுண்டானது. (௭) இஸ்ரவேலருடைய பாவம் பராபரனுடைய சமுகத்தைத் தீட்டாக்கல். (௰) அவர்கள் நாணப்படவும், வீட்டினுடைய சட்டத்தை அனுசரிக்கவும் தீர்க்கதரிசி தூண்டினது. (௰௩) பீடத்தின் அளவுகளும், (௰௮) சட்டங்களும்.]

அப்போது அவரென்னைக் கிழக்குத்திசைக்கெதிர்வாசலாகிய வாசலுக்கழைத்துப்போனார்.

௨. இதோ, இஸ்ரவேலருடைய பராபரனுடைய மகிமை கிழக்குத்திசையிலிருந்து வந்தது, * அவருடைய சத்தந் திரளான தண்ணீர்களின் இரைச்சலைப்போலிருந்தது, அவருடைய மகிமையினாலே பூமி வெளிச்சமாயிற்று. * ௧, அதி. ௨௪. அப்பி. ௧, அதி. ௰௫.

௩. நான்கண்ட இந்தத்தரிசனை * நான் பட்டணத்தை அழிக்கவந்தபோது கண்ட தரிசனையின் சாயலாயிருந்தது, இந்தத்தரிசனைகள் † கேபார்நதியண்டையிலே நான்கண்டிருந்த தரிசனையைப்போலிருந்தன, நான் முகங்குப்புற விழுந்தேன். * ௮, அதி. ௪. † ௧, அதி. ௪. ௨௮

௪. கர்த்தருடைய மகிமை கிழக்குத்திசைக்கெதிரான வாசல்வழியாய் வீட்டுக்குட்பிரவேசித்தது.

௫. அப்போது ஆவி என்னையெடுத்து, என்னை உள்முற்றத்திலே கொண்டுபோய்விட்டது. இதோ, * கர்த்தருடைய மகிமை வீட்டை நிரப்பிற்று. * ௨. மோசே. ௪௰, ௩௪. ௧. இராசா. ௮, அதி. ௰. ௰௧.

௬. அவர் வீட்டிலிருந்து என்னுடனே பேசுகிறதைக் கேட்டேன், புருஷன் என்னண்டையிலே நின்றிருந்தார்.

௭. அவரென்னோடே சொன்னதாவது; மனுபுத்திரனே, இந்நாம் என்றென்றைக்கும் இஸ்ரவேலின் புத்திரரின் நடுவே வாசம்பண்ணப்போகிற நம்முடைய ஆசனத்தின் தானமும், நம்முடைய உள்ளங்கால்களின் தானமுமாயிருக்கிறது, இனி இஸ்ரவேல்வீட்டாரும், அவர்களுடைய இராசாக்களும் நமது பரிசுத்தநாமத்தைத் தங்கள் மேடைகளிலே தங்கள் வேசித்தனத்தினாலும், தங்கள் இராசாக்களின் * பிரேதங்களினாலும் தீட்டுப்படுத்துவதில்லை. * ௩. மோசே. ௰௬, ௰௮.

௮. அவர்கள் நமக்கும், தங்களுக்கும் நடுவே ஒரு சுவரிருக்கும்படியாகத் தங்கள் வாசற்படியை நம்முடைய வாசற்படியண்டையிலும், தங்கள் வாசல்நிலைகளை நம்முடைய வாசல்நிலைகளண்டையிலுஞ்சேர்த்து நமது பரிசுத்தநாமத்தைத் தாங்கள் செய்த அருவருப்புகளினாலே தீட்டுப்படுத்தினார்கள். ஆகையால், நம்முடைய கோபத்தினாலே அவர்களை நாசமாக்கினோம்.

௯. இப்போது அவர்கள் தங்கள் வேசித்தனத்தையும், தங்கள் இராசாக்களின் பிரேதங்களையும் நம்மைவிட்டுத் தூரப்படுத்தக்கடவர்கள். அப்போது என்றென்றைக்கும் அவர்கள் நடுவே வாசமாயிருப்போம்.

௰. மனுபுத்திரனே. இஸ்ரவேல் வீட்டார் * தங்கள் அக்கிரமங்களினிமித்தம் நாணும்படிக்கு, நீ அவர்களுக்கிந்த வீட்டைக் காண்பி. அதின் மாதிரியை அளக்கக்கடவர்கள். * ௰௬, ௬௧. ௬௩. ௩௬, ௩௨.

௰௧. * அவர்கள் செய்ததையெல்லாவற்றினிமித்தமும் நாணிக்கொண்டிருந்தால், அப்போதிருந்த வீட்டினுருவத்தையும், அதின் நிலையையும், அதின் வாசற்படிகளையும், அதின் உள்நடைகளையும், அதினுடைய எல்லா உருவங்களையும், அதினுடைய எல்லாக் கட்டளைகளையும், அதினுடைய எல்லா விதங்களையும், அதினுடைய எல்லா நியாயங்களையும் அவர்களுக்குத் தெரியப்படுத்தி, அவர்கள் அதினுடைய எல்லா விதங்களையும், அதினுடைய எல்லாக் கட்டளைகளையுங் கைக்கொண்டு அவைகளின்படி செய்யும்படிக்கு அதையவர்கள் கண்களுக்கு முன்பாக எழுதிவை. * ௪௪, அதி. ௫.

௰௨. வீட்டினுடைய நியாயமாவது; பருவதத்தினுச்சியின்மேலே அதின் எல்லையெல்லாஞ் சுற்றிலும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கும். இதோ, இது வீட்டினுடைய நியாயம்.

௰௩. முழங்களின்படி அளக்கும் பலிபீடத்தின் அளவுகளாவன; ஒவ்வொரு முழத்தை முழத்திலும் நாலுவிரற்கடை நீளமாயிருக்கிறதாகப்பார்த்தால், சுற்றுக்காரம் ஒரு முழவுயரமும், ஒரு முழ அகலமுமாய், அதினுடைய ஓரத்திற்குச் சுற்றும், அதின் எல்லையோரு சாணுமாயிருக்கும். இது பலிபீடத்தைச் சுமக்கும்.

௰௪. தரையிலிருக்கிற ஆதாரத்தைத் துவக்கிக் கீழ்நிலைமட்டும் இரண்டு முழமும், அகலம் ஒரு முழமும், சின்ன நிலைதுவக்கிப் பெரிய நிலைமட்டும் நாலு முழமும், அகலம் ஒரு முழமுமாயிருக்கும்.

௰௫. தேவபீடத்தின் சிகரம் நாலு முழவுயரமாயிருப்பதும், தேவபீடத்தின் சிகரத்திற்கு உயர நாலு கொம்புமிருக்கும்.

௰௬. தேவபீடத்தின் சிகரம் பன்னிரண்டு முழ நீளமும், பன்னிரண்டு முழ அகலமுமாயத் தன்னுடைய நாலு பக்கங்களிலும் நாற்சதுரமாயிருக்கும்.

௰௭. அதின் நாலு பக்கங்களிலுள்ள சட்டம் நீளம் பதினாலு முழமும், அகலம் பதினாலு முழமும், அதைச் சுற்றியுமிருக்கிற விளிம்பு அரை முழமும், அதற்காதாரமானது சுற்றிலும

ஒருமுழமுமாயிருக்கும், அதின்படிகள் கிழக்குக்கு எதிராயிருப்பதென்றார்.

௰௮. அவர் என்னோடே சொன்னதாவது; மனுபுத்திரனே, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், பலிபீடத்தைப் பண்ணின நாளிலே அதின்மேலே தகனபலியிடுகிறதற்கும், அதின்மேல் இரத்தந் தெளிக்கிறதற்குமான அதினுடைய கட்டளைகளாவது;

௰௯. நமக்கு ஆராதனைசெய்கிறதற்கு நம்மண்டையிற் சேருகிற * சாதோக்கின் வித்தான இலேவிக்கோத்திரத்தாராகிய ஆசாரியர்களுக்கு நீ பாவம்போக்கும்பலியாக ஒரு காளைக்கன்றைக் கொடுப்பாயாகவென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௰, ௪௬.

௨௰. இதின் இரத்தத்தில் அள்ளி, அதினுடைய நாலுகொம்புகளிலும், சட்டத்தின் நாலுகோடிகளிலும், சுற்றியிருக்கிற எல்லையிலும் பூசி, அதைப் பாவமற்றதாக்கி,

௨௧. பிற்பாடு * பாவம்போக்குதலின் காளைக்கன்றையெடுத்து, அதை வீட்டின் வெளியே தறுக்குறிக்கப்பட்ட பரிசுத்தஸ்தலத்திற்குப் புறம்பான இடத்திலே சுட்டெரிக்கக்கடவீர்.
* ௩. மோசே. ௰௬, ௨௭.

௨௨. இரண்டாம்நாளிலே ஊனமில்லாத ஒரு வெள்ளாட்டுக் கடாவைப் பாவம்போக்குதலுக்காகப் பலியிடுவாயாக. அதினாலே பலிபீடத்தைக் காளைக்கன்றினாலே செய்ததுபோலே, பாவமற்றதாக்கக்கடவர்கள்.

௨௩. நீ பாவம்போக்குதலை முடித்துத் தீர்ந்தபிற்பாடு, ஊனமில்லாத ஒரு காளைக்கன்றையும், ஊனமில்லாத ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிடுவாயாக.

௨௪. அவைகளைக் கர்த்தருக்கு முன்பாகப் பலியிடுவாயாக. ஆசாரியர்கள் அவைகளுக்கு உப்புப்போட்டு அவைகளைக் கர்த்தருக்குத் தகனபலியிடக்கடவார்கள்.

௨௫. ஏழுநாளாயத்தினம் பாவம்போக்குதலுக்காக ஒரு வெள்ளாட்டுக் கடாவைப் படைப்பாயாக ஊனமில்லாதவைகளான காளைக்கன்றையும், ஆட்டுக்கடாவையும் படைப்பாயாக.

௨௬. ஏழுநாள் பலிபீடத்தைப் பாவமற்றதாக்கி, அதைச் சுத்திகரித்து, அதின் கைகளை நிரப்பிவரக்கடவார்கள்.

௨௭. அந்நாட்களை முடித்தபிற்பாடு, எட்டாம் நாளாயிருக்கும், அதுமுதற்கொண்டு ஆசாரியர்கள் பலிபீடத்தின்மேல் உங்கள் தகனபலிகளையும், உங்கள் ஸ்தோத்திரப் பலிகளையும் படைப்பார்களாக. அப்பொழுது உங்கள்மேற் பிரியமாயிருப்பேனென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

## ௪௪. அதிகாரம்.

[(௧) கிழக்குவாசல் அதிபதிக்கு மாத்திரங் குறிக்கப்பட்டது. (௨) பரிசுத்தஸ்தானத்தைத் தீட்டுப்படுத்தினதற்காக ஆசாரியர்கள் கண்டிக்கப்பட்டது. (௯) ஆசாரியத்தொழிலுக்கு விக்கிரகத்தொழும்பர்கள் பாத்திரரல்லாதவர்களென்பது. (௰௫) அதற்குச் சாதோக்கின்புத்திரர் ஏற்றுக்கொள்ளப்பட்டது. (௰௭) ஆசாரியர்களுக்குக் கட்டளைகள்.]

பிற்பாடவர் என்னைக் கிழக்குக்கெதிரோ பரிசுத்தஸ்தலத்திற்கிருக்கிற புறவாசலின்வழியே திருப்பப்பண்ணினார், அது பூட்டப்பட்டிருந்தது.

௨. அப்பொழுது கர்த்தர் என்னோடே சொன்னதாவது; இந்தவாசல் திறக்கப்படாமற் பூட்டப்பட்டிருக்கும், ஒருவரும் அதற்குட் பிரவேசிப்பதில்லை. ஏனெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அதற்குட்பிரவேசித்தார். ஆகையால், அது பூட்டப்பட்டிருக்கும்.

௩. அதிபதி ஒருவனே, கர்த்தருக்கு முன்பாக அப்பம் புசிக்கிறதற்காக அதிலே உட்காரலாம், அவன் வாசலின் சாலைவழியாய்ப் பிரவேசித்துத் திரும்ப அதுவழியாய்ப் புறப்படுவானாக என்றார்.

௪. பிற்பாடவர் என்னை வடக்குவாசல்வழியாய் வீட்டின் முகப்பிலே அழைத்துவந்தார், இதோ, * கர்த்தருடைய மகிமை கர்த்தருடைய வீட்டை நிரப்பிற்றென்று நான் கண்டு, முகங்குப்புற விழுந்தேன். * ௨. மோ. ௪௰, ௩௪.

௫. அப்பொழுது கர்த்தர் என்னோடே சொன்னதாவது; மனுபுத்திரனே, கர்த்தருடைய வீட்டின் கட்டளைகளெல்லாவற்றையும், அதினுடைய நியாயங்களெல்லாவற்றையுங்குறித்து நாம் உன்னோடே சொல்வதையெல்லாம் * நீ உன் மனதிலே கவனித்து, உன் கண்களினாலே நோக்கி, உன் காதுகளாலே கேட்டு பரிசுத்தஸ்தலத்தினுடைய எல்லாவாசற்படிகளாலும் வீட்டுக்குட் பிரவேசிக்கிறவிதத்தின்பேரிலே உன் மனதை வைத்து, * ௪௦, ௪.

௬. இஸ்ரவேல் வீட்டாராகிய கலகக்காரரோடே சொல்லவேண்டியதாவது; கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ரவேல் வீட்டாரே உங்கள் அருவருப்புகளெல்லாம் போதும்.

௭. நீங்கள் நமதுடைய போசனமாகிய கொழுப்பையும், இரத்தத்தையுஞ் செலுத்துகையில், நமது வீட்டைப் பரிசுத்தக்குலைக்கும்படிக்கு விருத்தசேதனமில்லாத இருதயமும், விருத்தசேதனமில்லாத மாம்சமுமுள்ள அன்னிய புத்திரரை நமதுடைய பரிசுத்தஸ்தலத்திற்குள் அதிலிருக்கிறதற்காய் அழைத்துவந்தீர்கள். நீங்கள் செய்த எல்லா அருவருப்புகளையுந்தொட்டு அவர்கள் நமதுடைய உடன்படிக்கையை மீறுகிறார்கள்.

அ. நீங்கள் நமது பரிசுத்தகாரியங்களின் காவலைக்காக்காமல், உங்களுக்குச் சரிப்போனவர்களை நமது பரிசுத்தஸ்தலத்திலே நம்முடைய காவலைக் காக்கிறதற்காக வைத்தீர்கள்.

கூ. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இஸ்ரவேல்புத்திரரின் நடுவிலிருக்கிற சகல அன்னியபுத்திரரிலும் விருத்தசேதனமில்லாத இருதயமும், விருத்தசேதனமில்லாத மாம்சமுமுள்ள அன்னியபுத்திரனொருவனும் நம்முடைய பரிசுத்தஸ்தலத்திற்குட் பிரவேசிப்பதில்லை.

ய. இஸ்ரவேல் வழிதப்பிப்போகையில் நம்மைவிட்டுத் தூரமானவர்களும், நம்மைவிட்டு வழிதப்பித் தங்கள் நரகலான தேவர்களின் பிறகாலே போனவர்களுமாகிய இலேவியர்முதலாய்த் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.

யக. அவர்கள் நமது பரிசுத்த ஸ்தலத்திலே வீட்டின்வாசல்களைவிசாரிக்கிற வேலைக்காரராயிருந்து வீட்டுக்கூழியஞ்செய்வார்கள். அவர்கள் தகனபலிகளையும், மற்றப் பலிகளையுஞ் சனத்திற்காக அடித்து, இவர்களுக்கூழியஞ்செய்கிறதற்காக இவர்களுக்கு முன்பாக நிற்பார்கள்.

யஉ. அவர்கள் இவர்களுடைய நரகலான தேவர்களுக்குமுன்பாக இவர்களுக்கூழியஞ் செய்து, இஸ்ரவேல்வீட்டாருக்கு அக்கிரமத்திற்கான இடறலாகவிருந்தபடியினாலே அவர்கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமக்கும்படிக்கு நம்முடைய கையையவர்களுக்குவிரோதமாக ஓங்கினோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

யங. அவர்கள் நமக்கு ஆசாரியராய் ஆராதனைசெய்கிறதற்கும், நம்முடைய பரிசுத்தகாரியங்களில் ஒன்றுக்காகிலும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்தைக்கிட்டுகிறதற்கும் நம்மண்டையிற்சேராமலே தங்கள் இலச்சையையும், தாங்கள்செய்த அருவருப்புகளையுஞ் சுமக்கக்கடவார்கள்.

யச. ஆகையால் வீட்டினுடைய எல்லா வேலைக்கும், அதிற் செய்யப்படவேண்டியவையெல்லாவற்றிற்கும் நாம் அவர்களையதிலே காவற்காக்கிறவர்களாயிருக்கக்கட்டளையிடுவோம்.

யரு. ஆனால் இஸ்ரவேல்புத்திரர் நம்மைவிட்டு வழிதப்பிப்போகையில், நமது பரிசுத்தஸ்தலத்தின் காவலைக் காத்துக்கொண்ட * சாதோக்கின்புத்திரராகிய இலேவியரென்ற ஆசாரியர்களே நமக்காராதனைசெய்ய நம்மண்டையிற்சேர்ந்து, கொழுப்பையும், இரத்தத்தையும் நமக்குச்செலுத்த நமக்கு முன்பாக நிற்பார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௧ரா. உ, ௩௫. ௩ரு, யக.

யசு. இவர்கள் நமது பரிசுத்தஸ்தலத்திற்குட்பிரவேசிப்பார்கள். இவர்களே நமக்காராதனைசெய்யப் பீடத்தைக்கிட்டி நமது காவலைக்காப்பார்கள்.

யஎ. உள்முற்றத்தின் வாசல்களுக்குட்பிரவேசிக்கிறபோது சணல்நூல் வஸ்திரங்களையுடுத்துக்கொள்வார்களாக. அவர்கள் உள்முற்றத்தின் வாசல்களிலும், உள்ளேயும் ஆராதனைசெய்கையில், ஆட்டுமயிர் உடுப்பு அவர்கள்மேல் ஏறாதிருப்பதாக.

யஅ. * அவர்களுடைய தலைகளிற் சணல்நூற் குல்லாக்களும், அவர்களுடைய இடைகளிற் சணல்நூற் காற்சட்டைகளுமிருக்கக்கடவது. வேர்வையிலே அரைகட்டார்களாக. * உ. மோ. உஅ. உ௯, சஉ.

யகூ. அவர்கள் வெளிப்பிரகாரமாகிய புறமுற்றத்திலே சனத்தண்டைக்குப் புறப்பட்டுப்போகிறபோது, அவர்கள் * தாங்கள் ஆராதனைசெய்து உடுத்திருந்த தங்கள்வஸ்திரங்களைக்கழற்றி அவைகளைப் பரிசுத்த அறைவீடுகளிலேவைத்து வேறே வஸ்திரங்களை உடுத்துக்கொள்ளக்கடவார்கள். தங்கள் வஸ்திரங்களாலே சனத்தைப் பரிசுத்தம்பண்ணுவார்களாக. * சஉ, அதி. யச.

உய. அவர்கள் தலைகளைச் சிரைக்காமலும், தங்கள் மயிரை நீளமாய் வளர்க்காமலும், தங்கள் தலைகளின்மயிரைக் கத்தரிக்கக்கடவர்கள். * ௩. மோசே. உக, அதி. ரு.

உக. * ஆசாரியர்களிலொருவனும் உள்முற்றத்திற்குட்பிரவேசிக்கும்போது, திராட்சப்பழரசங் குடியாதிருக்க. * ௩. மோசே. ய, கூ.

உஉ. * விதவையையும், தள்ளிவிடப்பட்டவளையும் அவர்கள் விவாகம்பண்ணாமல் இஸ்ரவேல்வீட்டாரின் வித்தாகிய கன்னியாஸ்திரியையாகிலும், ஒரு ஆசாரியனுடைய பெண்சாதியாயிருந்த விதவையையாகிலும் விவாகம்பண்ணக்கடவார்கள். * ௩. மோ. எ, யங. யச.

உங. * அவர்கள் பரிசுத்தமானதற்கும், பரிசுத்தமல்லாததற்கும், தீட்டானதற்கும், சுத்தமானதற்குமிருக்கும் வித்தியாசத்தை நமது சனத்திற்குப்போதித்து அவர்களுக்குத் தெரியப்பண்ணக்கடவார்கள்.
* ௩. மோசே. ய, ய.

உச. வழக்கிருந்தால், இவர்கள் நியாயத்தீர்க்க ஆயத்தமாயிருந்து நம்முடைய நியாயங்களின்படி யதைத்தீர்த்து, நம்முடைய பண்டிகைகளிலெல்லாம் நமது நியாயப்பிரமாணத்தையும், நம்முடைய கட்டளைகளையுங் கைக்கொண்டு, நம்முடைய ஓய்வுநாள்களைப் பரிசுத்தமாக்கக்கடவர்கள்.

உரு. தகப்பன், தாய், குமாரன், குமாரத்தி, சகோதரன், புருஷனுக்கு வாழ்க்கைப்படாத சகோதரி என்றவர்களுடைய சவ

த்திருல அவர்களை தீட்டுப்படுத்தலாமல், அவர்களிலொருவனும் செத்த ஒரு மனுஷனண்டையிலே தீட்டுப்படலாகாது.

௨௬. அவன் சுத்திகரமானபின்பு அவனுக்கு ஏழுநாள் எண்ணப்படவேண்டும்.

௨௭. அவன் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்யும்படிக்குப் பரிசுத்த ஸ்தலமிருக்கிற உட்பிராகாரத்திற்குட் பிரவேசிக்கிறநாளிலேவென்றால், அவன் தனக்காகப் பாவம்போக்கும்பலியைச் செலுத்தக்கடவனென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௨௮. அவர்களுக்குச் சுதந்தரமாவதேதெனில், * நாமே அவர்களுடைய சுதந்தரமாயிருப்போம். ஆகையால் இஸ்ரவேலிலே அவர்களுக்குக் காணியாட்சியைக் கொடீர்களாக. நாமே அவர்களுடைய காணியாட்சி. * ௪. மோ. ௰௮, ௨௰. ௫. மோ. ௰௮, ௧.

௨௯. காணிக்கையையும், பாவம்போக்கும்பலியையும், குற்றம்போக்கும் பலியையும் அவர்கள் புசிப்பார்கள். இஸ்ரவேலிலே பொருத்தனைபண்ணப்பட்டதும், எல்லாம் அவர்களுடையதாயிருப்பதாக.

௩௰. சகலவித முதற்கனிகளிலெல்லாமுந்தினவைகளும், நீங்கள் செலுத்துகிற எந்தவிதமான செலுத்துதல்களிலேதும் ஆசாரியர்களுடையதாயிருப்பதாக. உன் வீட்டில் ஆசீர்வாதத்தைத் தங்கப்பண்ணும்படிக்கு உங்கள் மாப்பிசைதல்களில் முதலிலானதையும் ஆசாரியனுக்குக் கொடுக்கக்கடவார்கள்.

௩௧. * பறவைகளிலும், மிருகங்களிலும் தானாய்ச்செத்ததும், பீறுண்டதுமானதொன்றையும் ஆசாரியர்கள் புசியார்களாக. * ௩. மோசே. ௨௨, ௮.

## ௪௫. அதிகாரம்.

[(௧) பரிசுத்தஸ்தானத்துக்கும், (௬) பட்டணத்திற்கும், (௭) இராசனுக்குமிட்ட தேசத்தின் ஒவ்வொருபங்கு. (௯) இராசனுக்குரிய கட்டளைகள்.]

நீங்கள் தேசத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடும்போதோவெனில், தேசத்தில இருபத்தையாயிரங்கோல் நீளமும், பதினாயிரங்கோல் அகலமுமான பரிசுத்தப்பங்கைக் கர்த்தருக்குப் படைக்கக்கடவீர்கள். இது தன் எல்லையில்லெல்லாஞ் சுற்றிலும் பரிசுத்தமாயிருப்பது.

௨. இதிலே பரிசுத்த ஸ்தலத்திற்சென்று ஐந்நூறுகோல் நீளமும், ஐந்நூறுகோல் அகலமுமான நாற்சதுரமும் அளக்கப்படக்கடவது. அதற்கு ஐம்பதுமுழமான வெளியுஞ் சுற்றிலுமிருக்கவேண்டும்.

௩. இந்த அளவுப்பட்ட இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும், பதினாயிரங்கோல் அகலத்தையும் அளப்பாயாக. அதற்குட் பரிசுத்தஸ்தலமும், பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானஸ்தலமுமிருப்பது.

௪. தேசத்தில் பரிசுத்தமான பங்காகிய இது கர்த்தருக்கு ஆராதனைசெய்யச் சேருகிறவர்களும், பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனை செய்கிறவர்களுமான ஆசாரியருடையது. இது அவர்களுக்கு வீடுகளுக்கான இடமும், பரிசுத்தஸ்தலத்திற்குப் பரிசுத்த இடமுமாயிருப்பது.

௫. பின்னையும் இருபத்தையாயிரங்கோல் நீளமும், பதினாயிரங்கோல் அகலமுமான து வீட்டின் பணிவிடைக்காரராகிய லேவியருடையதாயிருக்கும். அது அவர்களுடைய காணியாட்சி, அதிலிருப்பது அறை வீடுகளிருப்பதாக.

௬. பரிசுத்தப்பங்காகப் படைக்கப்பட்டதற்கெதிரே பட்டணத்தின் காணியாட்சியாக ஐயாயிரங்கோல் அகலத்தையும், இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும் அளந்து கொடுப்பீர்களாக. அது இஸ்ரவேல் வீட்டார் அனைவருடையதாயிருக்கும்.

௭. பரிசுத்தப்பங்காகப் படைக்கப்பட்டதற்கும், பட்டணத்தின் காணியாட்சிக்கும் இந்தப்பக்கத்திலும், அந்தப்பக்கத்திலும், பரிசுத்தப்படைப்புக்கு முன்பாகவும், பட்டணத்தின் காணிக்கு முன்பாகவும், அதிபதியினுடைய பங்கு மேற்கிலே மேற்புறமாகவும், கிழக்கிலே கீழ்ப்புறமாகவுமிருப்பதாக. மேல் எல்லைதுவக்கிக் கீழ் எல்லைமட்டும் நீளமானது பங்குகளிலொவ்வொன்றிற்கெதிராயிருப்பது.

௮. இது அவனுக்கு இஸ்ரவேலிலே காணிபூமியாகவிருக்கக்கடவது. நம்முடைய அதிபதிகள் இனி நமது சனத்தையொடுக்காமல் தேசத்தை இஸ்ரவேல் வீட்டாருக்கு அவர்களுடைய கோத்திரங்களுக்குத்தக்கபடியே விடுவிப்பார்களாக.

௯. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; இஸ்ரவேலின் அதிபதிகளே, * நீங்கள் செய்ததும்போதும். நீங்கள் கொடுமையையும், கொள்ளையிடுதலையுந் தவிர்த்து நியாயத்தையும், நீதியையுஞ்செய்யுங்கள். உங்கள் உத்தண்டங்களை நம்முடைய சனத்தை விட்டகற்றுங்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். * ௪௪, அதி. ௬.

௰. * சுமுத்திரையான தராசும், சுமுத்திரையான மரக்காலும், சுமுத்திரையான பானையுமுங்களுக்கிருக்கக்கடவது. * ௩. மோ. ௰௯, ௩௫ ௩௬.

௰௧. மரக்காலும், பானையும், ஒரே அளவாயிருந்து, மரக்கால் கலத்திலே பத்திலொருபங்கும், பானையுங் கலத்திலே பத்திலொருபங்கும் பிடிக்கக்கடவது. கலத்தின்படியே அதின் அளவு நிருணயிக்கப்படுவதாக.

யஉ. * சேக்கலானது இருபது கேரா, இருபது சேக்கலும், இருபத்தைந்து சேக்கலும், பதினைந்து சேக்கலும், உங்களுக்கொரு ராத்தலாயிருப்பது. * உ. மோ. ஙய, யங.

யங. நீங்கள் செலுத்தவேண்டிய காணிக்கையாவது; ஒரு கலங்கோதுமையிலே ஒரு மரக்காலில் ஆறிலொருபங்கையும், ஒரு கலம் வாற்கோதுமையிலே ஒருமரக்காலில் ஆறிலொருபங்கையும் படைக்கக்கடவீர்கள்.

யச. பாலையால் அளக்கிற எண்ணெயின் கட்டளையாவது; பத்துப்பாலை பிடிக்கிறகலத்திற்குச் சரியான ஒருசாடி எண்ணெயிலே பத்திலொருபங்கைப் படைப்பீர்களாக. ஏனெனில் பத்துப்பாலை ஒருகலமாகுகிறது.

யரு. இஸ்ரவேல் தேசத்திலே புஷ்டியான மேய்ச்சலைமேய்கிறமந்தையிலே இருநூறு ஆடுகளில் ஒரு ஆடும், அவர்களுடைய பாவநிவிர்த்திக்காகக் காணிக்கையாகவும், தகனபலியாகவும், ஸ்தோத்திரபலியாகவுஞ்செலுத்தப்படக்கடவதென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

யசா. இஸ்ரவேலுடைய அதிபதியினருகே பாசத்தேசத்தின் சனமெல்லாம் இந்தக் காணிக்கையைச் செலுத்தக்கடனாளிகளாயிருக்கிறார்கள்.

யஎ. ஆனால் இஸ்ரவேல்வீட்டார் கூடிவரக் குறிக்கப்பட்ட சகல பண்டிகைகளிலும், மாதப்பிறப்புகளிலும், ஓய்வுநாள்களிலும் தகனபலிகளையும், காணிக்கையையும் பானபலியையுஞ்செலுத்துவது அதிபதியின்மேற் சுமந்தக்கடனாயிருக்கும். அவன் இஸ்ரவேல் வீட்டாருக்காகப் பாவநிவாரணம் பண்ணும்படிக்குப் பாவம்போக்கும் பலியையும், காணிக்கையையும், தகனபலியையும், ஸ்தோத்திரபலிகளையும் படைப்பானாக.

யஅ. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; முதலாம்மாதம் முதலாந்தேதியிலே நீ பழுதில்லாத ஒருகாளைக்கன்றைக் கொண்டுவந்து, பரிசுத்தஸ்தலத்தைப்பாவமற்றதாக்குவாயாக.

யகூ. பாவம்போக்குகிற அந்தப்பலியின் இரத்தத்திலே ஆசாரியன் அள்ளி, வீட்டின் வாசல் நிலைகளிலும், பலிபீடத்தினுடைய சட்டத்தின் நாலுகோடிகளிலும், உள்முற்றத்தின்வாசல்நிலைகளிலும், பூசக்கடவான்.

உய. அந்தப்பிரகாரமாக ஏழாந்தேதியிலும் பிழைசெய்தவனுக்காகவும், பேதைக்காகவுஞ் செய்வாயாக. இப்படி வீட்டைப் பாவமற்றதாக்கக்கடவீர்கள்.

உக. * முதலாம்மாதம் பதினாலாந்தேதியிலே புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படுகிற ஏழுநாட்பண்டிகையாகிய பஸ்கா உங்களுக்குத்தகுவதாகும். * ரு. மோசே. உசா, கூ.

உஉ. அந்நாளிலே அதிபதி தனனிமித்தமும், தேசத்திலுடைய எல்லாசனத்தினிமித்தமும் பாவம்போக்குதலுக்காக ஒருகாளையெருதைப்படைப்பானாக.

உங. பண்டிகையின் ஏழுநாள்களிலே அவனந்த ஏழுநாளுங் கர்த்தருக்குத் தகனபலியாக ஊனமில்லாத ஏழுகாளையெருதுகளையும், ஏழுஆட்டுக்கடாக்களையும், தினம்பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் படைப்பானாக.

உச. ஒவ்வொரு காளையெருதோடே ஒருமரக்காலும், ஒவ்வொரு ஆட்டுக்கடாவோடே ஒரு மரக்காலுமான காணிக்கையையும், ஒவ்வொருமரக்காலோடே ஒருபடியெண்ணெயையும் படைப்பானாக.

உரு. ஏழாம்மாதம்பதினைந்தாந்தேதியிலே துவக்குமாகிற பண்டிகையிலே அவன் அப்படியே ஏழுநாளும் அதற்குச்சரியான பிரகாரமாகப் பாவம்போக்கும்பலிகளையும், தகனபலிகளையும், காணிக்கையையும், எண்ணெயையும் படைக்கக்கடவான்.

## சசா. அதிகாரம்.

[(க) தொழுதுகொள்ளுங்கிரமத்தைக்குறித்து இராசனுக்கும், சனத்துக்குமிட்டப்பட்டகட்டளைகள். (யசா) இராசசுதந்தரத்தைக் குறித்த தவிதிநதசட்டம். (யகூ) சமையலுக்கும், சுடுவதற்குமுண்டாகிய வீடுகள்.]

கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறதாவது; கிழக்குக்கெதிரான உள்முற்றத்தினுடையவாசல் வேலைசெய்கிற ஆறுநாளிலும் பூட்டப்பட்டிருந்து, ஓய்வுநாளிலே திறக்கப்படவும், மாதப்பிறப்பிலும் திறக்கப்படவுங்கடவது.

உ. அப்போது அதிபதி வெளியே வாசற்சாலையின் வழியாய்ப்பிரவேசித்து, வாசல்நிலையண்டையிலே நிற்கக்கடவான். ஆசாரியர்களோவென்றால் அவனுடைய தகனபலியையும், அவனுடையஸ்தோத்திரப்பலிகளையும் படைக்கக்கடவார்கள். அவன் வாசற்படியிலே பணிந்து பிற்பாடு புறப்படுவானாக. அந்தவாசலோவென்றால் சாயங்காலமட்டும் பூட்டப்படாதிருப்பதாக.

ங. தேசத்தின்சனமும் ஓய்வுநாளகளிலும், மாதப்பிறப்புகளிலும் அந்தவாசலின்நடையிலே கர்த்தருக்குமுன்பாகப் பணியக்கடவார்கள்.

ச. அதிபதி ஓய்வுநாளிலே கர்த்தருக்குப் பலியிடுந்தகனபலி பழுதில்லாத ஆறு ஆட்டுக்குட்டிகளும், ஊனமில்லாத ஒரு ஆட்டுக்கடாயுமேதானே.

ரு. ஆட்டுக்கடாவோடேகூடக் காணிக்கையாக ஒருமரக்காலையும், ஆட்டுக்குட்டிகளோடேகூடக் காணிக்கையாகத் தன்னுடையகை சுயமாய்த்தருகிற ஈவையும், ஒவ

வொரு மரக்காலோடேகூட ஒருபடியெண்ணெயையும் படைக்கக்கடவான்.

௬. மாதப்பிறப்பான நாளிலோவென்றால், அவன் ஊனமில்லாதவைகளின் ஒருகாளைக்கன்றையும், ஊனமில்லாதிருக்கிற ஆறு ஆட்டுக்குட்டிகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டு,

௭. * காணிக்கையாகக் காளைக்கன்றோடேகூட ஒருமரக்காலையும், ஆட்டுக்கடாவோடேகூட ஒருமரக்காலையும், ஆட்டுக்குட்டிகளோடேகூடத் தன்னுடைய கைக்கெட்டுகிறதையும், ஒவ்வொருமரக்காலோடேகூட ஒருபடி யெண்ணெயையும் படைக்கக்கடவான். * ௪௫, ௨௪.

௮. அதிபதி வருகிறபோது வாசலுடைய சாலைவழியாய்ப்பிரவேசித்து, அந்தவழியாய்த் திரும்பப் புறப்படக்கடவான்.

௯. தேசத்தின்சனங் குறிக்கப்பட்ட நாள்களிற் கர்த்தருக்கு முன்பாகவரும்போதோவென்றால் பணிகிறதற்காக வடக்குவாசல்வழியாய் உட்பிரவேசித்தவன் தெற்குவாசல்வழியாய்ப்புறப்படவும், தெற்குவாசல்வழியாய் உட்பிரவேசித்தவன் வடக்குவாசல்வழியாய்ப் புறப்படவுங்கடவான், தான்வந்த வாசல்வழியாய்த் திரும்பிப்போகாமலே தனக்கெதிரானவழியாய்ப்புறப்படுவானாக.

௰. அவர்கள் உட்பிரவேசிக்கும்போது, அதிபதி அவர்கள் நடுவிலேகூட உட்பிரவேசித்து, அவர்கள் புறப்படும்போது அவன்கூடப்புறப்படுவானாக.

௰௧. பண்டிகைகளிலும், குறிக்கப்பட்ட காலங்களிலும் அவன் படைக்குங் காணிக்கையாவது; காளையொருதோடே ஒருமரக்காலும், ஆட்டுக்கடாவோடே ஒருமரக்காலும், ஆட்டுக்குட்டிகளோடே அவன் கைக்கெட்டியமாத்திரத்திருக்கிற ஒரு ஈவும், ஒவ்வொருமரக்காலோடே ஒருபடி யெண்ணெயுந்தானே.

௰௨. அதிபதி உச்சாகமான தகனபலியையாகிலும், ஸ்தோத்திரப்பலிகளையாகிலுங் கர்த்தருக்கு உச்சாகமாகச்செலுத்தவேண்டுமென்றால், அவனுக்குக்கிழக்குக்கெதிரான வாசல் திறக்கப்படுவதாக. அப்போதவன் ஓய்வுநாளிற்செய்கிறதுபோலே தன்தகனபலியையும், தன் தோத்திரப்பலியையுஞ் செலுத்தித் திரும்பப்புறப்படக்கடவான். அவன்புறப்பட்டபின்போவென்றால் வாசல் பூட்டப்படவேண்டும்.

௰௩. * தினம் ஒருவயதான ஊனமில்லாத ஒரு ஆட்டுக்குட்டியைக் கர்த்தருக்குத்தகனபலியாகப் படைக்கக்கடவாய். காலையில் அதைப்படைக்கக்கடவாய். * ௨. மோசே. ௨௯, ௩௮.

௰௪. அதனோடேகூடக் காலையிலமரக்காலிலே ஆறிலொருபங்கையும், மெல்லிய மாவைப் பிசையும்படிக்கு ஒருபடி யெண்ணெயிலே மூன்றத்தொருபங்கையுங் காணிக்கையாகப்படைக்கக்கடவாய், இது அன்றாடங்கர்த்தருக்குப் படைக்கவேண்டிய நித்திய கட்டளைகளான காணிக்கை.

௰௫. இப்படிக்காலையில் அன்றாடமானதகனபலியாக ஆட்டுக்குட்டியையும், காணிக்கையையும், எண்ணெயையுஞ் செலுத்துவார்களாக.

௰௬. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; அதிபதி தன் குமாரரிலொருவனுக்குத் தன்சுதந்தரத்தில் ஒரு ஈவைக்கொடுத்தால், அது அவன்குமாரருடையதாயிருக்கும். அது சுதந்தரமாய் அவர்களுடைய சொந்தமாம்.

௰௭. அவன் தன் ஊழியக்காரரில் ஒருவனுக்குத்தன்சுதந்தரத்தில் ஒரு ஈவைக்கொடுத்தானேயாகில், அது விடுதலையின் வருஷமட்டும் அவனுடையதாயிருந்து, பிற்பாடு திரும்ப அதிபதியின்வசமாய்ச்சேரும், அதின் சுதந்தரம் அவன் குமாரருக்கேயுரியது, அது அவர்களுடையதாயிருக்கும்.

௰௮. சனத்தைப்பிடுக்கஞ்செய்து, அவர்களுடைய சொந்தத்திறகு அவர்களைப்புறம்பாக்க, அதிபதி அவர்களுடைய சுதந்தரத்திலொன்றும் எடுக்கலாகாது, நமது சனத்தில் ஒருவருந் தங்கள் சொந்தத்திறகுப்புறம்பாக்கிச் சிதறடிக்கப் படாதபடிக்கு, அவன் தன்னுடையசொந்தத்திலே தன்குமாரருக்குச் சுதந்தரங்கொடுக்கக்கடவானென்றார்.

௰௯. பிற்பாடவர் வாசலின்பக்கத்திலிருந்த நடைவழியாய் என்னை வடக்குக்கெதிரான ஆசாரியர்களுடைய பரிசுத்த அறைவீடுகளுக்கழைத்துப்போனார், இதோ அங்கே மேற்கேயிருப்புறத்திலேயும் ஒரு இடமிருந்தது.

௨௰. அவரென்னோடே சொன்னதாவது; குற்றம்போக்கும்பலியையும், பாவம்போக்கும்பலியையும், காணிக்கையையும் ஆசாரியர்கள்வெளியே புறமுற்றத்திலே, சனத்தைப்பரிசுத்தம்பண்ணிக்கொண்டு போகாதபடிக்கு, அவர்கள் அவைகளைச் சமைக்கிறதும், இதைச்சுடுகிறதுமான தலம் இதுவேயென்றார்.

௨௰௧. பிறகு அவரென்னைப் புறமுற்றத்தில் அழைத்துக்கொண்டுபோய், என்னை முற்றத்தின் நான்கு மூலைகளையுங் கடக்கப்பண்ணினார். இதோ, முற்றத்தினுடைய ஒவ்வொரு மூலையிலேயே தனித்த ஒருமுற்றமிருந்தது.

௨௰௨. முற்றத்தினுடைய நான்கு மூலைகளிலும் புகை எழும்புகிறவைகளான இந்தமுற்றங்கள் நாற்பதுமுழநீளமும், முப்பதுமுழ அகலமுமானவைகள், இந்த நான்குமூலை முற்றங்களுக்கும் ஒரே அளவிருந்தது.

௨௰௩. இந்தநாலக்குறந்து சுற்றிலும் உள்

ளாக ஒருசுற்றுக்கட்டு உண்டாயிருந்தது இந்தச் சுற்றுக்கட்டுகளின் சுற்றிலும் அடுப்புகள் போடப்பட்டிருந்தன.

௨௪. அவன் என்னுடனே, இவைகள் வீட்டின் பணிவிடைக்காரர் சனத்தின் பலி பணிவிடைகளைச் சமைக்கிற வீடுகளென்றார்.

## ௪௭. அதிகாரம்.

[(௧) பரிசுத்த தீர்த்தங்களின் தரிசனை. (௯) அவற்றின் பலன். (௰௩) தேசத்தின் எல்லைகள். (௨௨) சீட்டுப்போடுவதினால் அதின் பிரிவு.]

பிற்பாடு அவர் என்னை வீட்டின் வாசலுக்குத் திரும்பிவரப்பண்ணினார். இதோ, தண்ணீர்கள் வாசற்படியின் கீழிருந்து புறப்பட்டுக் கிழக்கேயோடுகிறதாயிருந்தது. ஏனெனில் வீட்டின் முகப்பு கிழக்குக்கெதிரானது அந்தத் தண்ணீர்கள் வீட்டின் வலதுபுறமாய்ப் பலிபீடத்துக்குத் தெற்காகத் தாழ ஓடின.

௨. அவர் என்னை வடக்குவாசல் வழியாய்ப் புறப்படப்பண்ணி என்னை வெளியிலே கிழத்திசைக்கெதிரான புறவாசல்மட்டும் சுற்றிக்கொண்டுபோனார். இதோ, தண்ணீர்கள் வலதுபுறத்திலிருந்து பாய்கிறதாயிருந்தது.

௩. அந்தப் புருஷன் தமது கையில் நூலைப் பிடித்துக்கொண்டு, கிழக்கே புறப்படுகையில் ஆயிரமுழமும் அளந்து என்னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணினார். தண்ணீர் கணைக்கால் அளவாயிருந்தது.

௪. பின்னையும் ஆயிரமுழம் அளந்து என்னைத் தண்ணீரைக் கடக்கப்பண்ணினார். அங்கே தண்ணீர் முழங்கால் அளவாயிருந்தது. பின்னையும் ஆயிரமுழம் அளந்து என்னைக் கடக்கப்பண்ணினார். அங்கே தண்ணீர் அரையளவாயிருந்தது.

௫. பின்னையும் ஆயிரமுழம் அளந்தார், அங்கே அது நான் கடக்கக்கூடாதிருந்த நதியாயிருந்தது, ஏனெனில், தண்ணீர்கள் நீச்சும், ஆழமும், கடக்கக்கூடாத நதியுமாயிருந்தது.

௬. அவர் என்னுடனே மனுபுத்திரனே, இதைக் கண்டாயோவென்று சொல்லி, என்னை நதியோரமாய்த் திரும்பி நடவாது வரப்பண்ணினார்.

௭. நான் திரும்பிவருகையில், இதோ, * நதியோரத்தில் இக்கரையிலும், அக்கரையிலும் வெகு திரளான விருட்சங்கள் உண்டாயிருந்தன. * அறிவி. ௨௨, ௨.

௮. அவர் என்னோடே சொன்னதாவது; இந்தத் தண்ணீர்கள் கிழ எல்லைக்குப் புறப்பட்டுப்போய் வயல்வெளியில் இறங்கிக் கடலில் விழும், இவைகள் கடலில் பாய்ந்து விழுந்தபிற்பாடு, அதின் தண்ணீர்கள் ஆரோக்கியமாம்.

௯. சமபவிப்பதேதென்றால், இந்த நதிகள் எங்கே வந்து சேருமோ, அங்கேயெல்லாம் அசைவாடுகிற சீவப்பிராணிகள் யாவும் பிழைக்கும், வெகு ஏராளமான மச்சங்களும் இந்தத் தண்ணீர் அங்கே வந்தபடியினாலே உண்டாயிருக்கும், இந்த நதி எங்கே வந்து சேருமோ, அங்கே யாவும் ஆரோக்கியப்பட்டுப் பிழைக்கும்.

௰. அப்போது சம்பவிப்பதேதெனில், என்கேதி துவக்கி எனெக்லாயிம் மட்டும் மீன் பிடிக்கிறவர்கள் அதின் கரையிலே நிற்பார்கள். அதெல்லாம் வலைகளைப் பரப்புகிற தலங்களாயிருக்கும், அவைகளின் மச்சங்கள் பெரிய சமுத்திரத்தின் மச்சங்களைப்போலே பலவிதசாதியும் மகா ஏராளமாயிருக்கும்.

௰௧. ஆனால் அதினுடைய உளையான பள்ளங்களும், அதினுடைய மடுக்களும் ஆரோக்கியமாகாமல், உப்புக்கொப்புக்கொடுக்கப்படும்.

௰௨. * நதியோரமாய் அதின் இக்கரையிலும், அக்கரையிலும் புசிப்புக்கான சகலவித விருட்சங்களும் பயிராகும், அவைகளின் இலைகள் உதிர்வதுமில்லை, அவைகளின் கனிகள் மாறுவதுமில்லை, தங்கள் தங்கள் மாதங்களில் புதுக்கனிகளைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும். ஏனெனில், அவைகளுடைய தண்ணீர்கள் பரிசுத்தஸ்தலத்திலிருந்து பாயும், அவைகளின் கனிகள் போசனத்திற்கும், அவைகளின் இலைகள் ஒளஷதத்திற்குமானவைகள். * அறிவி. ௨௨, ௨.

௰௩. கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது; நீங்கள் தேசத்தை இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே சுதந்தரித்துக்கொள்ளவேண்டிய எல்லையாவது; * யோசேப்புக்கு இரண்டு பங்குண்டு. * ௧. நாளா. ௫, ௧. யோசுவா. ௰௭, ௭.

௰௪. சகோதரனோடே சகோதரனுக்குச் சரிபங்குண்டாக அதைச் சுதந்தரித்துக்கொள்ளக்கடவீர்கள். * அதை உங்கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று நமது கையை உயர்த்தினோமே, ஆகையால் உங்களுக்கிந்தத் தேசம் சுதந்தரமாய்க் கிடைக்கும். * ௧. மோசே. ௰௫, ௰௮.

௰௫. தேசத்தின் எல்லையாவது; வடபுறம் பெரிய சமுத்திரத்தைத் துவக்கி செதாதுக்குப்போகிற கெத்லோன் வழியாயிருக்கிற,

௰௬. காமாத்தும், பேரோதாவும், தமஸ்குவின் எல்லைக்கும், காமாத்தின் எல்லைக்கும், நடுவான சிப்ராயிமும், ஆப்ரானின் எல்லையோடே சேர்ந்த காத்சேர் அத்திகோனுமானது.

௰௭. அப்படியே சமுத்திரத்திலிருந்து போகிற எல்லை காத்சேர் ஏனோனும், தமஸ்குவின் எல்லையும் வடமூலையான வடக்கும், காமாத்தின் எல்லையுமானது இது வடபுறம்.

௧௮. கீழ்ப்புறத்தைக் காப்பிரானுக்கும், தமஸ்குவுக்கும் நடுவாகவும், கீலேயாத்திற்கும், யோர்தானின் ஓரமான இஸ்ரவேல் தேசத்திற்கும் நடுவாகவும், கிழக்கடல்மட்டுமிருக்கும் எல்லையாயளப்பீர்களாக, இது கீழ்ப்புறம்.

௧௯. தென்திசையான தென்புறம் தாமாரைத் தொடங்கிக் காதேசிலுள்ள சண்டையின் தண்ணீர்கள்மட்டாகவும், ஆறுமட்டாகவும், பெரிய சமுத்திரமட்டாகவுமிருப்பது, இது தென்திசையான தென்புறம்.

௨௰. மேற்புறம் அந்த எல்லையைத் தொடங்கி ஆமாத்திற்கெதிராக வந்து சேருமட்டுமிருக்கிற பெரிய சமுத்திரந்தானே. இது மேற்புறம்.

௨௧. இந்தத் தேசத்தை நீங்கள் இஸ்ரவேலுடைய கோத்திரங்களின்படியே உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளுவீர்களாக.

௨௨. உங்களுக்கும், * உங்களுக்குள்ளே தங்கி உங்களுக்குள்ளே பிள்ளைகளைப்பெறுகிற பரதேசிகளுக்கும் நீங்கள் அதைச் சீட்டுகளைப்போட்டுச் சுதந்தரமாகக் கொள்ளுவீர்களாக, இவர்கள் உங்களுக்கு இஸ்ரவேல் புத்திரரில் பிறந்தவர்களைப்போலிருந்து, உங்களோடேகூட இஸ்ரவேல் கோத்திரங்களின் நடுவே சுதந்தரத்திற்குட்படுவார்களாக. * ஏசாயா. ௫௬, ௬. ௭.

௨௩. பரதேசி எந்தக் கோத்திரத்தோடே தங்கியிருக்கிறானோ, அதிலே அவனுடைய சுதந்தரத்தை அவனுக்குக் கொடுக்கக்கடவீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

## ௪௮. அதிகாரம்.

[(௧-௨௯) பன்னிரண்டு கோத்திரங்களையும், (௮) பரிசுத்த ஸ்தானத்தையும். (௰௫) பட்டணத்தையும், வெளிப்பாளயங்களையும். (௨௧) இராசாவையும் குறித்த பங்குகள். (௩௰) பட்டணத்தின் அளவும், வாசல்களும் சொல்லப்பட்டது.]

கோத்திரங்களின் நாமங்களாவன; வடமுனையைத் தொடங்கி ஆமாத்திற்குப் போகிற ஏத்லோன் வழியின் ஓரத்திற்கும், ஆத்சார் ஏனானுக்கும், ஆமாத்தண்டையிலே வடக்கேயிருக்கிற தமஸ்குவின் எல்லைக்கும் உள்ளாகக் கீழ்த்திசை தொடங்கி மேற்குமட்டும் தாணுக்கொரு பங்கும்,

௨. தாணின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் ஆசேருக்கொரு பங்கும்.

௩. ஆசேரின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் நப்தலிக்கொரு பங்கும்.

௪. நப்தலியின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் மனாசேக்கொரு பங்கும்.

௫. மனாசேயின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் எப்பிராயீமுக்கொரு பங்கும்.

௬. எப்பிராயீமின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் ரூபனுக்கொரு பங்கும்.

௭. ரூபனின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் யூதாவுக்கொரு பங்குமுண்டாவதாக.

௮. யூதாவின் எல்லையண்டையிலே கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டும் நீங்கள் படைக்கவேண்டிய பங்கிருக்கும், அதிலே, * இருபத்தையாயிரங்கோல் அகலமும், கீழ்த்திசை தொடங்கி மேற்றிசைமட்டுமிருக்கிற பங்குகளில் ஒவ்வொன்றுக்குச் சரியான நீளமுந்தானே பரிசுத்தஸ்தலம் அதின் நடுவிலேயிருப்பதாக. * ௪௫, ௧.

௯. நீங்கள் கர்த்தருக்கு நீங்கள் படைக்கவேண்டிய பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும், பதினாயிரங்கோல் அகலமுமாயிருப்பதாக.

௰. வடக்கே இருபத்தையாயிரங்கோல் நீளமும், மேற்கே பதினாயிரங்கோல் அகலமும், கிழக்கே பதினாயிரங்கோல் அகலமும், தெற்கே இருபத்தையாயிரங்கோல் நீளமுமாகிய இந்தப் பரிசுத்தப் படைப்பு உருடையதென்றால், ஆசாரியருடையதாயிருக்கும், கர்த்தருடைய பரிசுத்தஸ்தலம் அதின் நடுவிலேயிருப்பதாக.

௰௧. இஸ்ரவேல் புத்திரர் வழிதப்பிப்போகையில், லேவியர் வழிதப்பிப்போனது போலே வழிதப்பிப்போகாமல், நமது காவலைக் காத்துக்கொண்ட * சாதோக்கின் புத்திரராகிய பரிசுத்தமாக்கப்பட்ட ஆசாரியர்களுக்கு அது அடுத்திருப்பதாக.
* ௪௪, ௰௫.

௰௨. அப்படியே தேசத்திற் படைக்கப்பட்டதிலே பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான பங்கு அவர்களுக்கு லேவியருடைய எல்லையண்டையிலேயிருப்பதாக.

௰௩. ஆசாரியர்களின் எல்லைக்கெதிராக லேவியர் அடையும் பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும், பதினாயிரங்கோல் அகலமுமாயிருப்பது நீளமெல்லாம் இருபத்தையாயிரங்கோலும், அகலம் பதினாயிரங்கோலுமாயிருப்பதாக.

௰௪. அவர்கள் அதில் ஒன்றையும் விற்கவும், தேசத்தின் முதல் விளைவை மாற்றவும், அப்பாலே கொடுக்கவுமொண்ணாது. ஏனென்றால், அது கர்த்தருக்குப் பரிசுத்தம்.

௰௫. இருபத்தையாயிரங்கோலுக்கெதிராக அகலத்தில் மீதியாயிருக்கும், ஐயாயிரங்கோலோவென்றால், பரிசுத்தமாயிராமல்,

குடியேறும் பட்டணத்திற்கும், வெளிப்பாளையங்களுக்கும் விடப்படவேண்டும்; பட்டணம் அதின் நடுவிலிருப்பதாக.

௰௬. அதின் அளவுகளாவன; வடபுறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், தென்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், கீழ்ப்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலும், மேற்புறம் நாலாயிரத்தைந்நூறுகோலுந்தானே.

௰௭. பட்டணத்தின் வெளிப்பாளையங்கள் வடக்கேயிருநூற்றைம்பதுகோலும், தெற்கேயிருநூற்றைம்பதுகோலும், கிழக்கேயிருநூற்றைம்பதுகோலும், மேற்கேயிருநூற்றைம்பதுகோலுமாயிருப்பதாக.

௰௮. பரிசுத்தப்படைப்புக்கெதிராக நீளத்தில் மீதியானது கிழக்கே பதினாயிரங்கோலும், மேற்கே பதினாயிரங்கோலுமாம். அது பரிசுத்தப்படைப்புக்கெதிராயிருக்கும். அதின் வரத்து பட்டணத்திற் கூழியஞ்செய்கிறவர்களுக்காகாரமாயிருப்பதாக.

௰௯. இஸ்ரவேலின் சகல கோத்திரங்களிலும் எவர்கள் பட்டணத்திற் கூழியஞ்செய்கிறார்களோ அவர்கள் அதைப்பயிரிடுவார்களாக.

௨௰. படைப்பனைத்தும் இருபத்தையாயிரங்கோல் நீளமும், இருபத்தையாயிரங்கோல் அகலமுமாயிருக்கக்கடவது, பட்டணத்தின் காணியுட்பட இந்தப் பரிசுத்தப்படைப்பைச் சதுரமாகப் படைப்பீர்களாக.

௨௧. ஆனாற்பரிசுத்தப்படைப்புக்கும், பட்டணத்தின் காணிக்கும் இந்தப்பக்கமும், அந்தப்பக்கமும் படைப்பினுடைய இருபத்தையாயிரங்கோலின் முன்பாகக் கிழக்கெல்லைமட்டுக்கும், மேற்கிலேயிருபத்தையாயிரங்கோலின் முன்பாக மேற்கெல்லைமட்டுக்கும் மீதியாயிருப்பது அதிபதியினுடையது. பங்குகளுக்கெதிரான அது அதிபதியினுடையதாயிருப்பதாக, அதற்கு நடுவாகப் பரிசுத்தப்படைப்பும், வீட்டின் பரிசுத்தஸ்தலமுமிருக்கும்.

௨௨. அதிபதியினுடையதற்கு நடுவேயிருக்கும் இலேவியரின் காணியைத் துவக்கியும், பட்டணத்தின் காணியைத் துவக்கியும், யூதாவின் எல்லைக்கும், பென்யமீன் எல்லைக்கும் நடுவேயிருக்கிறது அதிபதியினுடையது.

௨௩. மற்றைக் கோத்திரங்களுக்குண்டாகும் பங்குகளாவன; கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் பென்யமீனுக்கொரு பங்கும்,

௨௪. பென்யமீன் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் சிமேயோனுக்கொரு பங்கும்,

௨௫. சிமேயோனின் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் இசக்காருக்கொரு பங்கும்,

௨௬. இசக்காரின் எல்லையண்டையிலே, கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும் செபுலோனுக்கொரு பங்கும்.

௨௭. செபுலோனின் எல்லையண்டையிலே கீழ்த்திசை துவக்கி மேற்றிசைமட்டும், காத்துக்கொரு பங்குமுண்டாயிருப்பதாக.

௨௮. காத்தின் எல்லையண்டையிலே தெற்கு மூலையாகிய தென்றிசையிலே எல்லை, தாமாரைத் துவக்கிக் காதேசிலுள்ள சண்டைமூட்டுதலின் தண்ணீர்கள்மட்டாகவும், பெரியசமுத்திரமட்டாகவும்போகும்.

௨௯. இதுவே நீங்கள் இஸ்ரவேல்கோத்திரங்களுக்குச் சீட்டுப்போட்டுப் பங்கிடுந்தேசமும், இவைகளே அவைகளின் பங்குகளுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், சதுரமான பரிசுத்த பட்டணத்தின் வாசல்களும், நாமமும்.

௩௰. பட்டணத்தின் புறமுகங்களாவன; வடபுறத்திலே நாலாயிரத்தைந்நூறுகோலாகிய அளவுண்டாயிருக்கும்.

௩௧. பட்டணத்தின் வாசல்களோவென்றால், இஸ்ரவேல்கோத்திரங்களுடைய நாமங்களின்படியே அழைக்கப்படக்கடவது, வடக்கே மூன்று வாசல் இருப்பதாக, ரூபேனின் வாசலொன்று, யூதாவின் வாசலொன்று, இலேவியின் வாசலொன்று,

௩௨. கீழ்ப்புறத்திலும் நாலாயிரத்தைந்நூறுகோலும், மூன்று வாசலுமிருப்பதாக, என்னவென்றால், யோசேப்பின் வாசலொன்று, பென்யமீனின் வாசலொன்று, தாணின் வாசலொன்று.

௩௩. தென்புறத்திலும் நாலாயிரத்தைந்நூறுகோலாகிய அளவும், மூன்று வாசலுமிருப்பதாக, சிமேயோனின் வாசலொன்று, இசக்காரின் வாசலொன்று, செபுலோனின் வாசலொன்று.

௩௪. மேற்புறத்திலே நாலாயிரத்தைந்நூறுகோலும், அதின் மூன்று வாசலுமிருப்பதாக, காத்தின் வாசலொன்று, ஆசேரின் வாசலொன்று, நப்தலியின் வாசலொன்று.

௩௫. சுற்றிலும் பதினெண்ணாயிரங்கோலாகிறது, அந்நாள் துவக்கிப் பட்டணத்தின் நாமம் * கர்த்தர் அங்கேயென்பதேயென்றார்.

* ௪௩, ௭. சங். ௬௮, ௰௭. எரேமி. ௩, ௰௭. அதி. ௨௧, ௩. ௨௨, ௩. ௪.

எசேக்கியேலின்தீர்க்கதரிசனம் முடிந்தது

முற்றும்.

# தானியேலின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். ௬௱௭.)

## ௧. அதிகாரம்.

[(௧) யோயாக்கீமின் சிறையிருப்பு. (௩) அஸ்பேனாஸ், தானியேலையும், அனனியாவையும், மீஷாவேலையும், அசரியாவையுந்தெரிந்துகொண்டது. (௮) அவர்கள் இராசாவின் போசனபானத்தின் பங்கை விலக்கிப் பருப்பையும், தண்ணீரையும் புசித்தது (௰௭) அவர்களுடைய ஞானத்தின் மேன்மை.]

யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அரசாண்ட மூன்றாம் வருஷத்திலே, * பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் எருசலேமுக்கு வந்து, அதை முற்றிக்கை போட்டான். * இராசா. ௨௪, ௧.

௨. அப்போது ஆண்டவர் யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமையும், பராபரனுடைய வீட்டின் பணிமுட்டுகளிற் சிலவற்றையும் அவன் கையிலே ஒப்புக்கொடுத்தார், அவைகளையவன் * சிநேயார் தேசத்திலுள்ள தன்னுடைய தேவர்களின் வீட்டிலே கொண்டுபோய், அந்தப் பணிமுட்டுகளைத் தன் தேவர்களின் பொக்கிஷவீட்டுக்குள் வைத்தான். * மோசே. ௰, ௰.

௩. அப்பொழுது இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே * இராசவித்தாயிருக்கிறவர்களிலும், துரைமக்களிலும் ஒரு பழுதுமில்லாதவர்களும், அழகான ரூபமுள்ளவர்களும், சகல ஞானத்திலும் விவேகிகளும், அறிவுள்ளவர்களும், கல்வி சதுரருமானவர்களும் இராசாவின் அரமனையிலே இளைஞரைக் கொண்டுவரவும்,
* ௨. இராசா. ௨௰, ௰௮.

௪. அவர்களுக்குக் கல்தேயரின் எழுத்தையும், பாஷையையும் கற்றுக்கொடுக்கவும், இராசா தன்னுடைய பிரதானிகளின் தலைவனாகிய அஸ்பேனாசுக்குச் சொன்னான்.

௫. அவர்களுக்கு இராசா, இராசாவாகிய தன்னுடைய போசனத்திலேயும், தான் குடிக்கும் திராட்சப்பழரசத்திலேயும் அனுதினபடித்தரத்தைக் குறித்து, அவர்களை மூன்று வருஷமளவும் வளர்க்கும்படிக்கும், இவைகள் சென்றபிறபாடு அவர்கள் இராசாவுக்கு முன்பாக நிற்கும்படிக்கும் கட்டளையிட்டான்.

௬. அவர்களுக்குள் யூதா புத்திரரிலே தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா என்றவர்களிருந்தார்கள்.

௭. அவர்களுக்குப் பிரதானிகளின் தலைவன் நாமங்களைத் தரிப்பித்துத் தானியேலைப் பெல்தெஷாத்சார் என்றும், அனனியாவைச் சாத்திராக் என்றும், மீஷாவேலை மேஷாக் என்றும், அசரியாவை ஆபேத்நேகோ என்றும் அழைத்தான்.

௮. ஆனால் தானியேல் இராசாவின் போசனத்தினாலும், அவர் குடிக்குந் திராட்சப்பழரசத்தினாலுந் தன்னைத் தீட்டாக்கப்படாதென்று, தன்னிருதயத்தில் நிர்ணயம்பண்ணிக்கொண்டு, தன்னைத் தீட்டாக்காதபடிக்குப் பிரதானிகளின் தலைவனை மனுக்கேட்டான்.

௯. பராபரன் தானியேலுக்குப் பிரதானிகளின் தலைவனுக்கு முன்பாகத் * தயவும், இரக்கமுங் கிடைக்கப்பண்ணினார்.
* ௧. மோசே. ௩௯, ௨௧.

௰. பிரதானிகளின் தலைவன் தானியேலுக்குச் சொன்னதாவது; உங்கள் போசனத்தையும், பானத்தையுங் குறித்திருக்கிற இராசாவாகிய என் ஆண்டவனுக்கு நான் பயப்படுகிறேன், இராசாவினிடத்திலே நீங்கள் என் தலைக்கு ஆக்கினைவரப்பண்ண, அவர் உங்கள் முகங்களை உங்களோடொத்த இளைஞரின் முகங்களைப் பார்க்கச் சணைடிப்போனவைகளாகக் காணபானேனென்றான்.

௰௧. அப்போது பிரதானிகளின் தலைவன் தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா என்றவர்களின்பேரிலே விசாரிப்புக்காரனாக வைத்த மேல்ச்சாரோட்டே தானியேல் சொன்னதாவது;

௰௨. பத்துநாள் உம்முடைய அடியாரைச் சோதித்துப்பாரும், எங்களுக்குப் பருப்புமுதலானவைகளைப் புசிக்கவும், தண்ணீரைக் குடிக்கவுங் கொடுத்து,

௰௩. உமக்கு முன்பாக எங்கள் உருவையும், இராசாவின் போசனத்திற் புசிக்கிற இளையருடைய உருவையும் ஒத்துப்பார்க்கடும், பிறகு நீர் காண்கிறதற்குத் தக்கதாக உம்முடைய அடியாருக்குச் செய்யுமென்றான்.

௰௪. அவன் இந்தக் காரியத்திலே அவர்களுக்குக் கேளவிகொடுத்துப் பத்துநாள் அவர்களைச் சோதித்துப்பார்த்தான்.

௰௫. பத்துநாள் சென்றபோதோவெனில், இராசாவின் போசனத்திற் புசித்த எல்லா இளைஞரைப் பார்க்கிலும் அவர்கள் நல்ல

உருவமும், சதைப்பற்றுமுள்ளவர்களாகக் காணப்பட்டது.

௰௫. ஆகையால் மேல்ச்சார் அவர்கள் புசிக்கக்கட்டளையான போசனத்தையும், அவர்கள் குடிக்கக்கட்டளையான திராட்சப்பழ ரசத்தையும் நீக்கிவைத்து அவர்களுக்குப் பருப்புமுதலானவைகளைக் கொடுத்தான்.

௰௬. இந்த நாலு இளைஞருக்கும் தேவன் பராபரனைக்கல் எழுத்திலும், ஞானத்திலும், அறிவையும், புத்தியையுங்கொடுத்தார்; தானியேலைச் சகல தரிசனையிலும், சொப்பனத்திலும் உணர்வுள்ளவனாக்கினார்.

௰௭. இராசா அவர்களைக்கொண்டுவரச் சொன்ன நாள்கள் நிறைவேறினபோது, பிரதானிகளின் தலைவன் அவர்களை நேபுகாத்நேத்சாருக்கு முன்பாகக் கொண்டுவந்து விட்டான்.

௰௮. இராசா அவர்களோடே பேசிக்கொண்டான். ஆனால் அவர்களெல்லாருக்குள்ளும் தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா என்றவர்களோடொத்தவன் காணப்படவில்லை, ஆகையால் இராசாவுக்கு முன்பாக நின்றார்கள்.

௨௰. ஞானத்திலும், உணர்வுக்கும் அடுத்த எந்தக்காரியத்தில் இராசா அவர்களைக் கேட்டு விசாரித்தாலும், அவர்களைத் தன்னுடைய இராச்சியமெங்குமுள்ள சகல சாஸ்திரிகளையும், சோதிரிஷக்காரரையும் பார்க்கிலும் பத்துமடங்கு சமர்த்தராகக் கண்டான்.

௨௧. * கோரேஸ் இராச்சியபாரம்பண்ணும் முதலாம்வருஷமட்டும் தானியேல் அங்கேயிருந்தான். * ௬, அதி. ௨௮.

## ௨. அதிகாரம்.

[(௧) நேபுகாத்நேத்சார் தான் மறந்த கனவை வாசகத்தத்தங்களினாலும், பயமுறுத்தல்களாலும், கல்தேயரை அறிவிக்கச் சொன்னது. (௰) அவர்களுக்கு அது கூடாமையால் அவர்களை மரணத்துக்குத் தீர்மானித்தது. (௰௬) தானியேல் தவணைகேட்டுக் கனவைக் கண்டுபிடித்தது. (௰௯) அவன் பராபரனைத் துதித்ததும். (௨௪) இராசாவுக்கு முன் கொண்டுவரப்பட்டதும். (௩௧) கனவையும், (௩௬) அதின் அருத்தத்தையுஞ்சொல்லி, (௪௯) தானியேலுயர்த்தப்பட்டதும்.]

நேபுகாத்நேத்சார் இராச்சியபாரம்பண்ணும் இரண்டாம்வருஷத்திலே நேபுகாத்நேத்சார் சொப்பனங்களைக் கண்டான். * அதினால் அவனுடைய ஆவி கலங்கி, அவனுடைய நித்திரை யவனிலிருந்து கலைந்தது. * ௧. மோசே. ௪௧, அதி. ௮.

௨. அப்பொழுது தன்னுடைய சொப்பனங்களைத் தனக்கறிவிக்க, இராசா சாஸ்திரிகளையும், சோதிரிஷக்காரரையும், சூனியக்காரரையும், கல்தேயரையும் அழைக்கச் சொன்னான், அவர்கள் வந்து இராசாவுக்கு முன்பாக நின்றார்கள்.

௩. இராசா அவர்களுடனே, ஒரு சொப்பனத்தைக் கண்டேன், அந்தச்சொப்பனத்தையறியவேண்டுமென்று என் ஆவி கலங்கியிருக்கிறதென்றான்.

௪. கல்தேயர் இராசாவுக்குச் சூரியபாஷையிலே, இராசாவே யென்றைக்கும் வாழ்க, சொப்பனத்தை யுமதுடைய அடியாருக்குச் சொல்லும், அப்பொழுது அதின் அர்த்தத்தை விடுவிப்போமென்றார்கள்.

௫. இராசா கல்தேயருக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; என்னிலிருந்து பிறந்த விசேஷமேதென்றால், நீங்கள் சொப்பனத்தையும், அதின் அர்த்தத்தையும் எனக்கறிவிக்காமற்போனால், துண்டித்துப்போடப்படுவீர்கள், உங்கள் வீடுகள் எருக்களங்களாகப் போடப்படும்.

௬. சொப்பனத்தையும், அதின் அர்த்தத்தையுங்காண்பித்தீர்களேயாகில் என்னிடத்திற் காணிக்கைகளையும், நல்பலனையும், பெரிய வெகுமானத்தையும் பெறுவீர்கள். ஆகையாற் சொப்பனத்தையும், அதின் அர்த்தத்தையும் எனக்குக் காண்பியுங்களென்றான்.

௭. அவர்கள் மறுபடியும் பிரதியுத்தரமாக, இராசா சொப்பனத்தைத் தமதுடைய அடியாருக்குச் சொல்வாராக, அப்பொழுது அதின் அர்த்தத்தை விடுவிப்போமென்றார்கள்.

௮. இராசா பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; என்னிலிருந்து விசேஷம் பிறந்தபடியினாலேதானே நீங்கள் காலம்போக்கப்பார்க்கிறீர்களென்று நான் நிச்சயமாக அறிந்துகொள்ளுகிறேன்.

௯. நீங்கள் சொப்பனத்தை யெனக்கறிவிக்காமற்போனால், நீங்கள் எனக்கு முன்பாகப் பொய்யும், நிச்சயமான வஞ்சகத்தை நேரமாறுமட்டுஞ்சொல்ல எத்தனம்பண்ணியிருக்கிறீர்களென்று உங்களைக்குறித்து நிதானிக்கும் ஒரே நிதானிப்பாயிருக்கிறது, ஆகையாற் சொப்பனத்தை யெனக்குச் சொல்லுங்கள், அப்பொழுது அதின் அர்த்தத்தை நீங்கள் எனக்குக் காண்பிக்கலாமென்றறிவேனென்றான்.

௰. கல்தேயர் இராசாவுக்கு முன்பாகப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; இராசா கேட்குங்காரியத்தை யறிவிக்கத்தக்க மனுஷன் பூமியிலில்லை. ஆகையால், மகத்துவமும், வல்லமையுமான எந்த இராசாவும் இப்படிக்கொத்தகாரியத்தை யொரு சாஸ்திரியினிடத்திலும், சோதிரிஷக்காரனிடத்திலும், கல்தேயனிடத்திலுங் கேட்டதுமில்லை.

௰௧. ஏனென்றால், இராசா கேட்கிற காரியம்

அரிதாயிருக்கிறது, மாம்சமாயிருக்கிறவர்களோடே வாசம்பண்ணாத தேவர்களையேயொழிய அதை இராசாவுக்கு முன்பாக அறிவிக்கத்தக்க வேறொருவருமில்லையென்றார்கள்.

௰௨. இதினிமித்தமாக இராசா மகா கோபமும், கடுமையுமுடைந்து, பாபேலிலிருக்கிற எல்லா ஞானிகளையும் அழிக்கச்சொன்னான்.

௰௩. அந்த உத்தரம் வெளிப்பட்டது, ஞானிகள் கொன்றுபோடப்பட்டார்கள், தானியேலும், அவன் தோழரும் கொன்றுபோடப்படத்தேடப்பட்டார்கள்.

௰௪. அப்போது தானியேல் பாபேலின் ஞானிகளைக் கொன்றுபோடப் புறப்பட்ட இராசாவுடைய தலையாரிகளின் அதிபதியாகிய ஆரியோகோடே யோசனையும், புத்தியுமாய்ப்பேசி,

௰௫. இந்தக்கட்டளை இராசாவினாலே இத்தனை கடுக்காயிருக்கிறதென்னவென்று இராசாவின் சேர்வைக்காரனாகிய ஆரியோகைக் கேட்டான், அப்போது ஆரியோகு தானியேலுக்குச் செய்தியைச் சொன்னான்.

௰௬. தானியேலோவென்றால், உட்பிரவேசித்து, அர்த்தத்தை இராசாவுக்குக் காண்பிக்கும்படிக்குத் தனக்குத் தவணை கொடுக்க இராசாவினிடத்திலே விண்ணப்பம்பண்ணினான்.

௰௭. பிற்பாடு தானியேல் தன் வீட்டுக்கும் போய்த் தானும், தன்னுடைய தோழரும் பாபேலின் மீதியான ஞானிகளோடேகூட அழியாதபடிக்குப் பரமண்டலத்தினுடைய பராபரனை இந்த இரகசியத்தினிமித்தம் இரக்கங்கேட்கிறதற்காக,

௰௮. இந்தக்காரியத்தை அனனியா, மீஷாயேல், அசரியாவென்ற தன்னுடைய தோழருக்கறிவித்தான்.

௰௯. பிற்பாடு இராத்திரியில் தரிசனையிலே தானியேலுக்கு இரகசியம் வெளியாக்கப்பட்டது, அப்போது தானியேல் பரமண்டலத்துப் பராபரனை ஸ்தோத்திரித்தான்.

௨௰. தானியேல் வசனித்துச் சொன்னதாவது; பராபரனுடைய நாமம், சதாகாலமும் சதாகாலமாக ஸ்தோத்திரிக்கப்பட்டிருக்கக்கடவது. ஏனெனில், ஞானமும், பெலனும் அவருடையதாயிருக்கிறது.

௨௧. அவர் காலங்களையும், வேளைகளையும் மாற்றி, * இராசாக்களைத் தள்ளி இராசாக்களை வைத்து, ஞானிகளுக்கு ஞானத்தையும், அறிவாளிகளுக்கு அறிவையுங்கொடுக்கிறவர். * ௪, ௰௪. ௨௨, ௫. ௨௧.

௨௨. அவரே ஆழமும், ஒளிப்பிடமுமானதை வெளிப்படுத்துகிறார், இருளிலிருக்கிறதை யவரறிவார், வெளிச்சம் அவருடனேதங்கும்.

௨௩. என் பிதாக்களுடைய பராபரனே, தேவரீர் எனக்கு ஞானமும், பெலனுங்கொடுத்து, நாங்களுமமைக்கேட்டதையிப்போது எனக்கறிவித்தபடியினாலே உம்மைத் துதித்துப்புகழுகிறேன், ஏனெனில், இராசாவின் காரியத்தை யெங்களுக்கறிவித்தீரே யென்றான்.

௨௪. ஆனதுகொண்டு தானியேல் பாபேலின் ஞானிகளையழிக்க இராசா கட்டளையிட்ட ஆரியோகனிடைக்குட்பிரவேசித்துப் போய்ப் பாபேலின் ஞானிகளை யழிக்காதேயும், என்னை இராசாவின் முன்பாக அழைத்துப்போய்விடும், இராசாவுக்கு அர்த்தத்தையறிவிப்பேனென்று அவனோடே சொன்னான்.

௨௫. அப்போது ஆரியோகு தானியேலைத் தீவரத்தோடே இராசாவின் முன்பாக அழைத்துப்போய்விட்டு இவனுடனே சிறைப்பட்டுவந்த யூதேயா தேசத்தாரில் இராசாவுக்கு அர்த்தத்தையறிவிக்கப்போகிற ஒரு புருஷனைக்கண்டுபிடித்தேனென்றான்.

௨௬. இராசா பிரதியுத்தாரங்கொடுத்துப் பெல்தேஷாத்சாரென்று நாமமுள்ள தானியேலுடனே நான்கண்ட சொப்பனத்தையும், அதின் அர்த்தத்தையும் நீ யெனக்கறிவிக்கக்கூடுமோவென்றான்.

௨௭. தானியேல் இராசாவுக்கு முன்பாகப் பிரதியுத்தரங்கொடுத்துச் சொன்னதாவது; இராசா கேட்ட இரகசியத்தை ஞானிகளும், சோதிரிஷக்காரரும், சாஸ்திரிகளும், குறிசொல்லுகிறவர்களும் இராசாவுக்குத் தெரியப்பண்ணக்கூடாது.

௨௮. பரமண்டலங்களிலிருக்கிற பராபரனோவென்றால், இரகசியங்களை வெளிப்படுத்துகிறவர், அவர் பின்னாள்களிற் சம்பவிப்பதை இராசாவாகிய நேபுகாத்நேத்சாருக்கறிவித்தார், உம்முடைய சொப்பனமும் உம்முடைய படுக்கையின்மேல் உம்முடைய தலையிலுண்டான தரிசனங்களுமாவது;

௨௯. இராசாவே, உம்முடைய படுக்கையின்மேல் நீர் படுத்திருக்கையில், இனிமேற் சம்பவிக்கப்போகிறதென்னவென்கிற நினைவுகள் உமக்குள்ளே கிளம்பின, அப்போது இரகசியங்களை வெளிப்படுத்துகிறவர் சம்பவிக்கப்போகிறதை உமக்கறிவித்தார்.

௩௰. இப்போதும் * உயிரோடிருக்கிற யாவரையும்பார்க்கிலும், என்னிலே ஞானமுண்டென்கிறதினாலேயல்ல, அர்த்தம் இராசாவுக்குத் தெரியவரவும், உம்முடைய இருதயத்தின் நினைவுகளை நீர் அறியவும் இந்த இரகசியம் எனக்கு வெளியாக்கப்பட்டது.

* ௧. மோசே. ௪௧, ௰௬.

௩௧. இராசாவே, இதோ, ஒரு பெரிய சிலையை நீர் காணுகிறவராயிருந்தீர், அந்தச் சிலை பெரியதும், அதின் மினுக்கு விசேஷித்

தமாயிருந்தது, அது உமக்கெதிரே நின்றது. அதின் உருவம் பயங்கரமாயிருந்தது.

௩௨. அந்தச்சிலையின் தலை நல்லபொன்னும், அதின் மார்பும், அதின் புயங்களும் வெள்ளியும், அதின் வயிறும், அதின் இடுப்பும் வெண்கலமும்,

௩௩. அதின் தொடைகள் இரும்பும், அதின் கால்கள் பாதி இரும்பும், பாதி களிமண்ணுமாயிருந்தது.

௩௪. நீர் பார்த்துக்கொண்டேயிருக்கையில், கைகளையல்லாமல் ஒருகல் பேர்ந்துருண்டுவந்தது. அது அந்தச்சிலையை இரும்பும், களிமண்ணுமாகிய அதின் கால்களில் மோதி, அவைகளை நொறுக்கிப்போட்டது.

௩௫. அப்போது இரும்பும், களிமண்ணும், வெண்கலமும், வெள்ளியும், பொன்னுமேகமாய் நொறுங்குண்டு, கோடைக்காலத்தில் போரடிக்கிறகளத்திலிருந்து பறந்துபோகிறபதரைப்போலாயின். அவைகளுக்கொரு இடமுங்கிடையாதபடியாய்க் காற்றவைகளையடித்துக்கொண்டுபோயிற்று. சிலையைமோதினகல்லோவென்றால், பூமியையெல்லாம் நிரப்புகிற பெரியபருவதமாயிற்று

௩௬. சொப்பனமிதுதான், அதின் அர்த்தத்தையும் இராசாவுக்குமுன்பாகச்சொல்லுவோம்.

௩௭. இராசாவாகிய நீர். * இராசாக்களுக்கு இராசாவாயிருக்கிறீர். ஏனென்றால் பரமண்டலத்தினுடைய பராபரன் உமக்குஇராசரீகத்தையும், வல்லமையையும், பலத்தையும், மகிமையையுங்கொடுத்தார்.

* ஏசேக்கி. ௨௬, ௭.

௩௮. மனுப்புத்திரரும், வெளியின்மிருகங்களும், ஆகாயத்துப்பட்சிகளுந் தங்கித்திரிகிற சகல இடத்திலுள்ளதை அவர் உமது கையில் ஒப்புக்கொடுத்து, உம்மை அவைகளையெல்லாம் ஆண்டுகொள்ளப்பண்ணினார். பொன்னான அந்தத்தலை நீரே. * எரேமி. ௨௭, ௬. ௨௮, ௰௪.

௩௯. உமக்குப்பிறகு உமக்குக்கீழ்த்தரமான வேறொரு இராசரீயமும், பூமியையெல்லாம் ஆண்டுகொள்ளும், வெண்கலமான மூன்றும் இராசரீயமும் எழும்பும்.

௪௰. நாலாவது இராசரீயமும், இரும்பைப்போல உரமாயிருக்கும். இரும்பு எல்லாவற்றையும் எப்படிநொறுக்கித் திடமற்றுப்போகப்பண்ணுகிறதோ அப்படியிது அவைகளையெல்லாம் நொறுக்கிப்போடுகிற இரும்பைப்போலே நொறுக்கி முறித்துப்போடும்.

௪௧. நீர்கால்களையும், கால்விரல்களையும், பாதி குயவனுடைய களிமண்ணும், பாதி யிரும்புமாயிருக்கக்கண்டதேதென்றால், அது பிரிந்தஇராசரீயமாயிருக்கும். ஆகிலுங்களிமண்ணோடே இரும்புகலந்திருந்ததென்று நீர்கண்டபடியே, இரும்பினுடைய உறுதிப்பிறசிலது அதிலேயிருக்கும்.

௪௨. கால்களின்விரல்கள்பாதி இரும்பும், பாதிகளிமண்ணுமாயிருந்ததேதென்றால், இராசரீயம் ஒருபங்குக்குஉரமும், ஒருபங்குக்கு முறியலுமாயிருக்கும்.

௪௩. நீர் இரும்பைக்களிமண்ணோடே கலந்ததாகக்கண்டதேதெனில், அவர்கள் மனுஷவித்தாய்க்கலப்பாவார்கள். ஆகிலும் இதோ, களிமண்ணோடே இரும்புகலவாததுபோலே அவர்களொன்றுக்கொன்று ஒட்டிக்கொள்ளாதிருப்பார்கள்.

௪௪. இந்த இராசாக்களின் நாள்களிலேயோவென்றால் பரமண்டலத்தின்பராபரன் * என்றென்றைக்கும் அழியாத ஒரு இராசரீயத்தை யெழும்பப்பண்ணுவார். இந்த இராசரீயம் வேறேசனத்திற்கு விட்டுவைக்கப்படுவதில்லை. ஒருகல் கைகளையல்லாமல் மலையிலிருந்து பேர்ந்துருண்டுவந்து இரும்பையும், வெண்கலத்தையும், களிமண்ணையும், வெள்ளியையும், பொன்னையும் நொறுக்கினதை நீர் எப்படிக்கண்டீரோஅப்படியிது அந்த இராசரீயங்களையெல்லாம்நொறுக்கி யில்லாதேபோகப்பண்ணித்தானே என்றென்றைக்கும் நிற்கும். * ௭, ௰௪. ௨௭. மீகா. ௪, ௭. லூக்கா. ௧, ௩௩.

௪௫. இனிமேல் சம்பவிக்கப்போகிறதை மகத்துவமான பராபரன் இராசாவுக்கறிவித்தார். சொப்பனமானது நிச்சயமும், அதின் அர்த்தஞ்சத்தியமுமாயிருக்கிறதென்றான்.

௪௬. அப்போது இராசாவாகிய நேபுகாத்நேத்சார் முகங்குப்புறவிழுந்து தானியேலைப்பணிந்துகொண்டு, அவனுக்குக்காணிக்கையைப்படைக்கவும், தூபங்காட்டவுஞ்சொன்னான்.

௪௭. இராசா பிரதியுத்தரங்கொடுத்துத் தானியேலுடனே, நீ யிந்த இரகசியத்தை வெளிப்படுத்தக்கவனானபடியினாலே உங்கள் பராபரனே தேவாதிதேவனும், இராசாதி ஆண்டவரும், இரகசியங்களைவெளிப்படுத்துகிறவருமென்றது மெய்யாயிருக்கிறதென்றான்.

௪௮. பிறகு இராசா தானியேலைப்பெரியவனாக்கி, அவனுக்கு வெகுவான பெரியகாணிக்கைகளைக்கொடுத்து, அவனைப்பாபேலுடைய சீமையின்மேலெல்லாந்துரையும், பாபேலுடைய எல்லாஞானிகளின்மேலுந் தலையான அதிகாரியுமாக்கினான்.

௪௯. தானியேல் இராசாவை வேண்டிக்கொண்டதற்கு அவன் சாத்ராக்கையும், மேஷாக்கையும், ஆபேத்நேகோவையும், பாபேல்சீமையினுடைய வேலையின் விசாரிப்புக்காரராகவைத்தான். தானியேலோவென்றால், இராசாவின்வாசலிலேயிருந்தான்.

## ௩. அதிகாரம்.

[(௧) நேபுகாத்நேச்சார் தூறாவிலே ஒரு பொற்சிலையை ஸ்தாபித்தது. (௮) சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்பவர்களை அந்தச் சிலையைத் தொழுகிறதில்லையென்று துரோகிகளாகக் குற்றஞ் சாற்றப்பட்டது. (௰௩) அவர்கள் பயமுறுத்தப்பட்டு நல்ல அறிக்கையிட்டது. (௰௯) பராபரன் அவர்களை அக்கினிச்சூளையில் நின்று விடுதலையாக்கினது. (௨௰௬) நேபுகாத்நேச்சார் நடந்த அதிசயத்தைக்கண்டு பராபரனைத் துதித்தது.]

நேபுகாத்நேச்சார் அறுபது முழ உயரமும், ஆறு முழ அகலமுமான பொற்சிலையைப் பண்ணுவித்து, பாபேல் சீமையிலிருக்கிற தூறா என்கிற பள்ளத்தாக்கிலே நிறுத்திவைத்தான்.

௨. பிற்பாடு நேபுகாத்நேச்சாரென்கிற இராசா சபையத்தார்களையும், அதிகாரிகளையும், தலைவரையும், நியாயாதிபதிகளையும், பொக்கிசக்காரரையும், நீதிசாஸ்திரிகளையும், மணியக்காரரையும், சீமைகளையாளுகிற அனைவரையும் நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின சிலையின் பிரதிஷ்டைக்கு வந்து கூட அழைத்தனுப்பினான்.

௩. அப்போது சபையத்தார்களும், அதிகாரிகளும், தலைவரும், நியாயாதிபதிகளும், பொக்கிசக்காரரும், நீதிசாஸ்திரிகளும், மணியக்காரரும், சீமைகளையாளுகிற அனைவரும் நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின பொற்சிலையின் பிரதிஷ்டைக்குக் கூடிவந்து நேபுகாத்நேச்சார் நிறுத்தின சிலைக்கெதிராக நின்றார்கள்.

௪. பறைமுறையிடுகிறவன் உரத்தசத்தமாய்க் கூறினதாவது: எந்தச் சனசதனத்தாரும், சாதியாரும், பாஷைக்காரருமாயிருக்கிறவர்களே, உங்களுக்குச் சொல்லப்படுகிறதேதென்றால்,

௫. காளம், நாககுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழவிழுந்து, இராசாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளக்கடவீர்கள்.

௬. எவனாகிலும் தாழவிழுந்து அதைப் பணிந்துகொள்ளாதேபோனால், அவன் அந்நேரமே எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்படுவானென்றான்.

௭. ஆகையினாலே சகல சனசதனங்களும், காளம், நாககுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம் முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தைக் கேட்டபோதே, சகல சனசதனத்தாரும், சாதியாரும், பாஷைக்காரரும் தாழவிழுந்து நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொண்டார்கள்.

௮. ஆனதுகொண்டு அந்நேரமே கல்தேயா புருஷர் சிலர் சேர்ந்துவந்து, யூதர்பேரிலே குற்றஞ்சாற்றிப்பேசி,

௯. இராசாவாகிய நேபுகாத்நேச்சாருக்குச் சொன்னதாவது; இராசாவே என்றென்றைக்கும் வாழ்க.

௰. காளம், நாககுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தைக் கேட்கிறஎந்த மனுஷனும் தாழவிழுந்து பொற்சிலையைப் பணிந்துகொள்ளவேண்டுமென்றும்,

௰௧. எவனாகிலும் தாழவிழுந்து பணிந்துகொள்ளாதேபோனால், அவன் எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்படுவானென்றும், இராசாவாகிய நீர் தீர்மானம் பண்ணினீரே.

௰௨. * நீர் பாபேல் சீமையின் வேலைக்கு விசாரிப்புக்காரராக வைத்த சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்கிற யூதரான புருஷரிருக்கிறார்கள். இந்தப்புருஷர் இராசாவாகிய உம்மைச் சட்டைபண்ணினதில்லை, இவர்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்யாமலும், நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாமலுமிருக்கிறார்களென்றார்கள். * ௨, ௪௯.

௰௩. அப்போது நேபுகாத்நேச்சார் சினமும், உக்கிரமுமாய்ச் சாத்திராகையும், மேஷாகையும், ஆபேத்நேகோவையும் அழைத்துவரச்சொன்னான். அந்தப்புருஷரையவர்கள் இராசாவின் முன்பாக அழைத்துவந்துவிட்டபோது,

௰௪. நேபுகாத்நேச்சார் அவர்களோடே சொன்ன உத்தரவாவது; சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்பவர்களே என்னுடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்யாமலும், நான் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாமலும் போகிறது நீங்கள் மனதாரவல்லவோ!

௰௫. இப்போதும், காளம், நாககுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு முதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழவிழுந்து, நான் பண்ணுவித்த சிலையைப் பணிந்துகொள்ள ஆயத்தமாயிருந்தால் நல்லது, பணிந்துகொள்ளாதிருந்தீர்களேயானால் அந்நேரமேயெரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்படுவீர்கள். உங்களையென்றன் கைக்குத் தப்புவிக்கப்போகிற தேவன் யாரென்றான்.

௰௬. சாத்திராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்பவர்கள் இராசாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது; நேபுகாத்நேச்சாரே, இந்தவர்த்தமானத்தைக்குறித்து உமக்கு உத்தரவுசொல்ல எங்களுக்குத் தேவையில்லை.

௰எ. இதோ, நாங்கள் ஆராதிக்கிற எங்கள் பராபரன் எங்களைத் தப்புவிக்க வல்லவராயிருக்கிறார். * எரிகிற அக்கினிச்சூளைக்கும், இராசாவாகிய உமதுடையகைக்கும் நீங்கலாக்கி விடுவிப்பார். * சங்கீ. ௩,௨.

௰அ. விடுவிக்காதேபோனாலும் நாங்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்வதுமில்லை, நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்வதுமில்லையென்கிறது இராசாவாகிய உமக்குத் தெரியப்பட்டிருக்கக்கடவதென்றார்கள்.

௰௯. அப்போது நேபுகாத்நேச்சாருடைய முகநாடி சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களுக்குவிரோதமாய் வேறுபட்டதாக, அவன் உக்கிரத்திலே நிறையப்பட்டான், சூளையைக் காய்கையாக்கும் வாடிக்கையைப்பார்க்கிலும், அதை ஏழுதரங் காய்கையாக்க அவன் உத்தரவுகொடுத்தது,

௨௰. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களை எரிகிற அக்கினியின் சூளையிலேபோடுவதற்காக அவர்களைக்கட்டத் தன் இராணுவத்திற்பலத்த ஆள்களாகிய புருஷருக்குச்சொன்னான்.

௨௧. அப்போதந்தப்புருஷர் தங்கள் சால்வைகளோடும், நிசாருகளோடும், பாகைகளோடும், வஸ்திரங்களோடுங் கட்டப்பட்டு எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்பட்டார்கள்.

௨௨. ஆனால் இராசாவின்வார்த்தை கடினமானபடியினாலும், சூளை மிகுதியுங்காய்கையாக்கப்பட்டபடியினாலும் அக்கினியினுக்குவாலை சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களை யுயரக்கொண்டுபோன புருஷரைக்கொன்றுபோட்டது.

௨௩. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற அந்த மூன்றுபுருஷரோவென்றால் கட்டுண்டவர்களாய் எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே விழுந்தார்கள்.

௨௪. அப்போது நேபுகாத் நேச்சாரென்ற இராசா பிரமித்துத் தீவிரமாயெழுந்திருந்து, தன் சேர்வைக்காரருடனே, நாம் மூன்றுபுருஷரையல்லவோ கட்டுண்டவர்களாக அக்கினியிலே போடுவித்தோமென்றுசொன்னான். இராசாவுக்குப்பிரதியுத்தரமாக ஆம் இராசாவேயென்றார்கள்.

௨௫. அவன் மறுமொழியாக இதோ, விடுதலையாய் அக்கினியின் நடுவிலே உலாத்துகிற நாலுபேரைக்காண்கிறேன், அவர்களிற் சேதமில்லை, நாலாம்பேரின் சாயல் தேவர்களின் புத்திரருக்கொப்பானதென்றான்.

௨௬. அப்போது நேபுகாத்நேச்சார் எரிகிற சூளையினுடைய வாசலண்டைக்கு வந்து உன்னதமான பராபரனுடைய தாசராகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களே, புறப்பட்டுவாருங்களென்று சொன்னான். அப்போது சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்கள் அக்கினியிலிருந்து வெளியேவந்தார்கள்.

௨எ. சபையதார்களும், அதிகாரிகளும், தலைவரும், இராசாவின் சேர்வைக்காரருங் கூடிவந்து, * அக்கினி யந்தப்புருஷருடைய சரீரங்களின்மேற் பலஞ்செய்யாமலும், அவர்களுடைய தலைமயிர்கருகாமலும், அவர்களுடைய சால்வைகள் வேறுபடாமலும், அக்கினியின்மணம் அவர்களுக்குட்பிரவேசியாமலும்போயிற்றென்று அவர்களைப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். * எபிரேயர். ௰௧, ௩௪.

௨அ. நேபுகாத்நேச்சார் வசனித்துச்சொன்னதாவது; தங்களுடைய பராபரனைத்தவிர வேறொருதேவனையுஞ் சேவித்துப் பணியாதபடிக்கு அவனை நம்பினவர்களும், இராசாவின்வார்த்தையைத் தள்ளித் தங்கள் சரீரங்களையொப்புக்கொடுத்தவர்களுமாகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற தம்முடைய தாசரைத் தம்முடைய தூதனை யனுப்பிவிடுவித்த அவர்களுடைய பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.

௨௯. சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களுடைய பராபரனுக்கு விரோதமாகத் தூஷணவார்த்தையைச் சொல்லுகிற எந்தச்சனமும், சாதியாரும், பாஷைக்காரரும் துண்டிக்கப்போடப்படுவார். அவன் வீடு எருக்களமாக்கப் போடப்படுமென்று என்னாலே தீர்மானிக்கப்படுகிறது, ஏனெனில், இந்த அடைவாகத் தப்புவித்து விடத்தக்கவேறே தேவனொருவரில்லையென்றான்.

௩௰. பிறகு இராசா சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களைப் பாபேல்சீமையிலேயுயர்த்தினான். * ௨, சங். ௪௯.

நேபுகாத்நேச்சார் அகந்தைக்காரருக்குத் தன்னிற்செய்யப்பட்ட தேவஅற்புதங்களை யெல்லாச்சாதிகளுக்கும் அறிவிக்கிறது.

௧. இராசாவாகிய நேபுகாத்நேச்சார் பூமியெங்குங்குடியிருக்கிற சகல சனத்தாருக்கும், சாதியாருக்கும், பாஷைக்காரருக்கும் எழுதினதாவது; உங்களுடைய சமாதானம் பெருகக்கடவது.

௨. உன்னதமான பராபரன் என்னிடத்தில் செய்த அடையாளங்களையும், அற்புதங்களையும் பிரசித்தம்பண்ணுவது எனக்கு நன்றாயக் கண்டது.

௩. அவருடைய அடையாளங்கள் எத்தனை பெரியவைகள், அவருடைய அற்புதங்கள் எத்தனை வல்லமையுமாயிருக்கின்றன, * அவருடைய இராச்சியம், அவருடைய ஆளுகையும் தலைமுறை தலைமுறையாக நிற்கும். * ௬, ௨௬.

சாத்ராக்

## ௪. அதிகாரம்.

[(௧) நேபுகாத்நேச்சார் பராபரனுடைய அருமையை அறிக்கையிட்டு, (௪) சூனியக்காரர்கள் விடுவிக்கக்கூடாத தன் சொப்பனங்களைச் சொன்னது. (௮) தானியேல் சொப்பனத்தைக் கேட்டு, (௰௯) அதைவிடுவித்தது. (௨௰) அந்தச்சரித்திரவரலாறு.]

நேபுகாத்நேச்சாராகிய நான் என் வீட்டிலே சாங்கோபாங்கமுள்ளவனும், என் அரமனையிலே செழித்தவனுமாயிருந்தேன்.

௨. ஆனால் ஒரு சொப்பனத்தைக் கண்டேன், அது எனக்குத் திகிலையுண்டாக்கிற்று, என் படுக்கையின்மேல் எனக்குண்டான நினைவுகளும், என் தலையின் தரிசனங்களும் என்னைக் கலங்கப்பண்ணின.

௩. ஆகையால், சொப்பனத்தின் அர்த்தத்தை எனக்கறிவிக்கிறதற்காகப் பாபேலின் ஞானிகளெல்லாரும் எனக்கு முன்பாகப் பிரவேசிக்கப்பண்ண என்னால் தீர்மானம் பண்ணப்பட்டது.

௪. அப்போது சாஸ்திரிகளும், சோதிஷக்காரரும், கல்தேயரும், குறிசொல்லுகிறவர்களும் பிரவேசித்தார்கள், அவர்களுக்கு முன்பாக நான் சொப்பனத்தைச் சொன்னேன். ஆனால், அதினர்த்தத்தை எனக்கறிவிக்காதேபோனார்கள்.

௫. கடைசியிலே பெல்தெஷாத்சார் என்று தேவனுடைய நாமத்தின்படியே பேரிடப்பட்ட * பரிசுத்த தேவருடைய ஆவியையுடைய தானியேல் என் முன்பாகப் பிரவேசித்துவந்தான், அவனுக்கு முன்பாக நான் சொப்பனத்தை விவரித்துச் சொன்னதாவது; * ௫, ௰௧. ௰௪.

௬. சாஸ்திரிகளின் அதிபதியாகிய பெல்தெஷாத்சாரே பரிசுத்த தேவருடைய ஆவி உனக்குள்ளிருக்கிறதென்றும், * உனக்கொரு இரகசியமும் அரிதானதல்லவென்றும் நான் அறிவேன், நான் கண்ட என்னுடைய சொப்பனத்தின் தரிசனங்களை அதற்கேவான அர்த்தமுண்டென்றுசொல்லு.

* ஏசேக். ௨௮, ௩.

௭. என் படுக்கையின்மேல் என் தலைக்குண்டான தரிசனங்கள் என்னவென்றால், இதோ, நடுத்தேசத்திலே மகா உயரமாயிருக்கிற ஒரு விருட்சத்தைக் கண்டேன்.

௮. அந்த விருட்சத்தின் உயரம் வானபரியந்தம் எட்டி அது தேசத்தின் எல்லா எல்லைபரியந்தமுந் தெரியத்தக்கதாக வளர்ந்து பலத்திருந்தது.

௯. அதின் இலைகள் நேர்த்தியும், அதின் கனி வெகுவாயுமிருந்தது, எல்லாச் சீவனுக்கும் அதிலே ஆகாரம் உண்டாயிருந்தது, அதின் கீழே வெளியின் மிருகங்கள் நிழலுக்கிருந்தன, அதின் கொப்புகளில் ஆகாயத்தின் பட்சிகள் தாபரித்துச் சகலமாம்சமும் அதினாலே போஷிக்கப்பட்டன.

௰. என் படுக்கையின்மேல் என் தலைக்குண்டான தரிசனங்களில் நான் இதைக் காண்கையில் இதோ பரிசுத்தக்காவலாளி ஒருத்தன் வானத்திலிருந்திறங்கி,

௰௧. உரக்கக்கூப்பிட்டுச் சொன்னதாவது, அந்த விருட்சத்தைவெட்டி அதின் கொப்புகளை அறுத்துப்போடுங்கள், மிருகங்கள் அதின் கீழும், பட்சிகள் அதின் கொப்புகளிலுமிருந்தோடிப்போக அதின் இலைகளைக் கழித்துப்போட்டு அதின் கனியைச் சிதறவடியுங்கள்.

௰௨. ஆனால் அதின் வேர்களாகிய அடிமரம் பூமியிலிருக்கட்டும், இரும்பும், வெண்கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலே தங்கி ஆகாயத்துப்பனியினாலே நனைவானாக, மிருகங்களோடே பூமியின் பூண்டிலே அவனுடைய பங்கிருக்கக்கடவது.

௰௩. அவனுடைய இருதயம் மனுஷ இருதயமாயிராதபடிக்கு மாறி, மிருக இருதயம் அவனுக்குக் கொடுக்கப்படட்டும் இப்படியிருக்கிற அவன்மேலே ஏழு காலங்கள் கடந்துபோகவேண்டும்.

௰௪. * உன்னதமானவர் மனுஷருடைய இராசசியத்தையாண்டு நாம சித்தமாயிருக்கிறவனுக்கதைக்கொடுத்து மனுஷரில் தாழ்ந்தவனையும் அதின்மேல் அதிகாரியாக்குகிறாரென்று நரசீவன்கள் அறியும்படிக்குக் காவலாளிகளின் தீர்ப்பினால் இந்த நியாயமும், பரிசுத்தவான்களின் மொழியினால் இந்த நீதிவிசாரிப்பும் தீர்மானிக்கப்பட்டதென்றான். * ௨, ௨௧.

௰௫. இதை நேபுகாத்நேச்சாரென்ற இராசாவாகிய நான் சொப்பனத்திலே கண்டேன், இப்போதும் பெல்தெஷாத்சாராகிய நீ அர்த்தத்தைச் சொல்லு. ஏனெனில், என் இராசசியத்தின் ஞானிகளெல்லாம் அர்த்தத்தை யெனக்கறிவிக்கத்தகாதவர்கள், நீயோ அதையறிவிக்கத்தக்கவன். ஏனென்றால், பரிசுத்த தேவருடைய ஆவி யுனக்குள்ளிருக்கிறதேயென்றேன்.

௰௬. அப்போது பெல்தெஷாத்சாரென்ற பேருள்ள தானியேல் அவனுடைய நினைவுகள் கலங்கப்பண்ணுகிறதினாலே அவன் ஒரு நாழிகைமட்டுந்திகைத்திருந்தான். இராசா உத்தரவுகொடுத்துப் பெல்தெஷாத்சாரே, சொப்பனமும், அதின் அர்த்தமும் உன்னைக் கலங்கப்பண்ணவேண்டாமென்றான், அப்போது பெல்தெஷாத்சார் பிரதியுத்தரங்கொடுத்துச்சொன்னதாவது; என் ஆண்டவனே, அந்தச்சொப்பனம் உம்முடையப்பகை

லுக்கும், அதின் அர்த்தம் உம்முடைய சத்துருக்களுக்குச் செல்லுவதாக.

௰௭. உயரமானபெரியதும் எட்டிக்கே சமெங்கும் தெரியத்தக்கதாகப் பெரியது ம், பலத்ததுமானதும்,

௰௮. இலைகள் நேர்த்தியும், கனிகள்வெகு வானதும், எல்லாசீவனுக்கும் ஆகாரமு ண்டானதும், கீழே வெளியின் மிருகங்கள் தங்கினதும், கொப்புகளில் ஆகாயத்துப் பட்சிகள் தாபரித்ததுமான விருட்சத்தைக் கண்டீரோ,

௰௯. அது * பெரியவரும், பலத்தவருமா யிருக்கிற இராசாவாகிய நீர்தானே, ஏனெ னில், உமதுமகத்துவம் பெருகி, அதுவான பரியந்தமும், உமது கர்த்தத்துவம் பூமியி னெல்லைபரியந்தமும் எட்டிப்போயிற்று.

* ௨, ௩௭: ௫, ௰௮.

௨௰. அந்தவிருட்சத்தைவெட்டி அதைக் கெடுத்துப்போடுங்கள். ஆனால், அதின் வேர்களாகிய அடிமரந் தரையிலிருக்கட்டு மென்றும், இரும்பும், வெண்கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலேதங்கி, ஆகாயத்துப்பனியினால் நனைவானாக, ஏழுகாலங் கள் அவன்மேலே கடந்துபோகுமட்டுக்கு மிருகங்களோடே யவனுடைய பங்கிருக் கக்கடவதென்றும், வானத்திலிருந்திறங்கிச் சொன்ன பரிசுத்தக்காவலாளியை இராசா கண்டாரோ.

௨௧. இராசாவே, அதின் அர்த்தமென்ன வெனில், மனுஷனைவிட்டுத்தள்ளுண்பீர், வெளி யின்மிருகங்களோடே யும்முடையதாபரிப் பிருக்கும், மாடுகளைப்போலப் புல்லைமேய்ந் து ஆகாயத்துப்பனியினால் நனைவீர்.

௨௨. இப்படியே உன்னதமானவர் மனுஷ ரின் இராசசியத்தை, ஆண்டுகொண்டு தாம் சித்தமாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக் கிறாரென்பதை நீர் அறிந்துகொள்ளுமட் டும் ஏழுகாலங்கள் உம்முடையமேற்கடந் துபோகவேண்டுமென்கிறதே இராசாவாகி ய என்னாண்டவன்மேலேவந்த உன்னதமா னவருடைய தீர்மானம்.

௨௩. ஆனால் விருட்சத்தின்வேர்களாகிய அடிமரந்தரையிலிருக்கட்டுமென்று சொல் லப்பட்டதென்னவென்றால், நீர் பரம அதி காரத்தையறிந்தபின் இராசசியம் உமக்கு நிலைநிற்கும்.

௨௪. ஆகையால் இராசாவே, நீதியைப் பற்றி யும்முடையபாவங்களையும், சிறுமை யானவர்களுக்கிரங்கி உம்முடைய அக்கிர மங்களையும் அறுத்துவிடும், அப்போது ஒருவேளை யும்முடைய சாங்கோபாங்கத் திறகு நீடிப்புண்டாயிருக்குமென்றான்.

௨௫. இவையெல்லாம் இராசாவாகியநேபு காத்நேத்சாரின்மேல்வந்தன.

௨௬. பன்னிரண்டுமாதஞ்சென்றபின் அவ ன்பாபேலிலிருக்கிற இராச அரமனையின் மீதில் உலாத்திக்கொண்டிருந்து,

௨௭. * இது என்வல்லமையின் பலத்தினா லும், என்மகத்துவத்தின் பிரஸ்தாபத்திற் கும் நான் இராச அரமனையாகக்கட்டின மகாபாபிலோனல்லவோவென்று இராசா சொன்னான். * லூக்கா. ௧, ௫௧.

௨௮. இன்னும் இந்தவார்த்தை இராசா வின் வாயிலிருக்கையில், வானத்திலிருந்து ஒருசத்தமிறங்கிச் சொன்னதாவது; நேபு காத்நேத்சாரென்ற இராசாவே இராசசிய பாரம் உன்னைவிட்டுப் போயிற்றென்றும்,

௨௯. மனுஷனைவிட்டுத்தள்ளுண்பாய், வெ ளியின்மிருகங்களோடே யுன்தாபரிப்பிருக் கும், மாடுகளைப்போலே புல்லைமேய்வாய், இப்படியே உன்னதமானவர் மனுஷரின் இராசசியத்தையாண்டுகொண்டு தாமசித்த மாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக்கிறா ரென்பதை நீயறிந்துகொள்ளுமட்டும், ஏழு காலங்கள் உன்மேற் கடந்துபோகுமென் றும் உனக்குச்சொல்லப்படுகிறதென்றது.

௩௰. அந்நேரமே யிந்தவார்த்தை நேபுகா த்நேத்சாரில் நிறைவேறிற்று, * அவன்மனு ஷனைவிட்டுத்தள்ளுண்டு மாடுகளைப்போலே புல்லைமேய்ந்தான், அவனுடையமயிர் கழு குகளுடையமயிர்களும், அவனுடைய நகங் கள் பட்சிகளுடையநகங்களுக்குஞ் சமான மாயவளருமட்டும் அவன்சரீரம் ஆகாயத் துப்பனியினால் நனைந்தது. * ௫, ௰௮ ௨௧.

௩௧. அந்நாட்கள் சென்றபோதோவெனி ல், நேபுகாத்நேத்சாராகிய நான் என்கண் களை வானத்திற்கேறெடுத்தேன், என்புத்தி எனக்குத்திரும்பிவந்தது, அப்போது நான் உன்னதமானவரை ஸ்தோத்திரித்து, என் றென்றைக்கும் பிழைக்கிறவரைப்புகழ்ந்து மகிமைப்படுத்தினேன், அவருடையகர்த்தத் துவமே நித்தியகர்த்தத்துவமானது, அவரு டைய இராசசியமே தலைமுறை தலைமுறை யாக நிற்கும்.

௩௨. பூமியின்குடிகளெல்லாமொன்றுமில்லை யென்றெண்ணப்படவேண்டும், அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின்சேனையையு ம், பூமியின்குடிகளையும் நடப்பிக்கிறார், அவ ருடைய கையைத்தட்டி, அவரைநோக்கி என் னசெய்கிறீரென்று சொல்லத்தக்கவனில்லை யென்றேன்.

௩௩. அவ்வேளையே யென்புத்தி எனக்குத் திரும்பிவந்தது. என் இராசசியபாரத்தின் மேன்மைக்காக என்னுடையமகிமையும், என்னுடைய முகக்களையும் எனக்குத்திரும் பிவந்தது, என்னையென்சேர்வைக்காரரும், என் பெரியமனுஷருந்தேடினார்கள், என் இராசசியத்திலேதிடப்படுத்திவைக்கப்பட் டேன், அதிக மகத்துவமும் எனக்குக் கூட் டப்பட்டது.

## ௪. அதிகாரம்.

[(௧) நேபுகாத்நேத்சார் பராபரனுடைய ஆளுகையை அறிக்கையிட்டு, (௪) ஞானியக்காரர்கள் விடுவிக்கக்கூடாத தன் சொப்பனங்களைச் சொன்னது. (௮) தானியேல் சொப்பனத்தைக் கேட்டு, (௰௯) அதை விடுவித்தது. (௨) அந்தச் சரித்திரவரலாறு.]

நேபுகாத்நேத்சாராகிய நான் என் வீட்டிலே சாங்கோபாங்கமுள்ளவனும், என் அரமனையிலே செழித்தவனுமாயிருந்தேன்.

௨. ஆனால் ஒரு சொப்பனத்தைக் கண்டேன், அது எனக்குத் திகிலையுண்டாக்கிறது, என் படுக்கையின்மேல் எனக்குண்டான நினைவுகளும், என் தலையின் தரிசனங்களும் என்னைக் கலங்கப்பண்ணின.

௩. ஆகையால், சொப்பனத்தின் அர்த்தத்தை எனக்கறிவிக்கிறதற்காகப் பாபேலின் ஞானிகளையெல்லாம் எனக்கு முன்பாகப் பிரவேசிக்கப்பண்ண என்னால் தீர்மானம் பண்ணப்பட்டது.

௪. அப்பொழுது சாஸ்திரிகளும், சோதிரிஷக்காரரும், கல்தேயரும், குறிசொல்லுகிறவர்களும் பிரவேசித்தார்கள், அவர்களுக்கு முன்பாக நான் சொப்பனத்தைச் சொன்னேன். ஆனால், அதினர்த்தத்தை எனக்கறிவிக்காதேபோனார்கள்.

௫. கடைசியிலே பெல்தேஷாத்சார் என்று தேவனுடைய நாமத்தின்படியே பேரிடப்பட்ட * பரிசுத்த தேவருடைய ஆவியையுடைய தானியேல் என் முன்பாகப் பிரவேசித்து வந்தான், அவனுக்கு முன்பாக நான் சொப்பனத்தை விவரித்துச் சொன்னதாவது; * ௫, ௰௧. ௰௪.

௬. சாஸ்திரிகளின் அதிபதியாகிய பெல்தேஷாத்சாரே பரிசுத்த தேவருடைய ஆவி உனக்குள்ளிருக்கிறதென்றும், * உனக்கொரு இரகசியமும் அரிதானதல்லவென்றும் நான் அறிவேன், நான் கண்ட என்னுடைய சொப்பனத்தின் தரிசனங்களை அதற்கேற்ற அர்த்தமுண்டென்று சொல்லு.
* ஏசேக். ௨௮, ௩.

௭. என் படுக்கையின்மேல் என் தலைக்குண்டான தரிசனங்கள் என்னவென்றால், இதோ, நடுத்தேசத்திலே மகா உயரமாயிருக்கிற ஒரு விருட்சத்தைக் கண்டேன்.

௮. அந்த விருட்சத்தின் உயரம் வானபரியந்தம் எட்டி அது தேசத்தின் எல்லா எல்லைபரியந்தமுந் தெரியத்தக்கதாக வளர்ந்து பலத்திருந்தது.

௯. அதின் இலைகள் நேர்த்தியும், அதின் கனிவெகுவாயுமிருந்தது, எல்லாச் சீவனுக்கும் அதிலே ஆகாரமுண்டாயிருந்தது, அதின் கீழே வெளியின் மிருகங்கள் நிழலுக்கிருந்தன, அதின் கொப்புகளில் ஆகாயத்தின் பட்சிகள் தாபரித்துச் சகலமாம்சமும் அதினாலே போஷிக்கப்பட்டன.

௰. என் படுக்கையின்மேல் என் தலைக்குண்டான தரிசனங்களில் நான் இதைக் காணுகையில் இதோ, பரிசுத்தக் காவலாளி ஒருத்தன் வானத்திலிருந்திறங்கி,

௰௧. உரக்கக்கூப்பிட்டுச் சொன்னதாவது, அந்த விருட்சத்தை வெட்டி அதின் கொப்புகளை அறுத்துப்போடுங்கள், மிருகங்கள் அதின் கீழும், பட்சிகள் அதின் கொப்புகளிலுமிருந்தோடிப்போக அதின் இலைகளைக் கழித்துப்போட்டு அதின் கனியைச் சிதறவடியுங்கள்.

௰௨. ஆனால் அதின் வேர்களாகிய அடிமரம் பூமியிலிருக்கட்டும், இரும்பும், வெண்கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலே தங்கி ஆகாயத்துப் பனியினாலே நனைவானாக, மிருகங்களோடே பூமியின் பூண்டிலே அவனுடைய பங்கிருக்கக்கடவது.

௰௩. அவனுடைய இருதயம் மனுஷ இருதயமாயிராதபடிக்கு மாறி, மிருக இருதயம் அவனுக்குக் கொடுக்கப்பட்டும் இப்படியிருக்கிற அவன்மேலே ஏழு காலங்கள் கடந்துபோகவேண்டும்.

௰௪. * உன்னதமானவர் மனுஷருடைய இராச்சியத்தையாண்டு தாம் சித்தமாயிருக்கிறவனுக்கதைக் கொடுத்து மனுஷரில் தாழ்ந்தவனையும் அதின்மேல் அதிகாரியாக்குகிறொன்று நரசீவன்கள் அறியும்படிக்குக் காவலாளிகளின் தீர்ப்பினால் இந்த நியாயமும், பரிசுத்தவான்களின் மொழியினால் இந்த நீதிவிசாரிப்புந் தீர்மானிக்கப்பட்டதென்றான். * ௨, ௨௧.

௰௫. இதை நேபுகாத்நேத்சாரென்ற இராசாவாகிய நான் சொப்பனத்திலே கண்டேன், இப்பொழுதும் பெல்தேஷாத்சாராகிய நீ அர்த்தத்தைச் சொல்லு. ஏனெனில், என் இராச்சியத்தின் ஞானிகளெல்லாம் அர்த்தத்தையெனக்கறிவிக்கத்தகாதவர்கள், நீயோ அதையறிவிக்கத்தக்கவன். ஏனென்றால், பரிசுத்த தேவருடைய ஆவியுனக்குள்ளிருக்கிறதேயென்றேன்.

௰௬. அப்பொழுது பெல்தேஷாத்சாரென்ற பேருள்ள தானியேலை அவனுடைய நினைவுகள் கலங்கப்பண்ணுகிறதினாலே அவன் ஒரு நாழிகைமட்டுந் திகைத்திருந்தான். இராசா உத்தரவுகொடுத்துப் பெல்தேஷாத்சாரே, சொப்பனமும், அதின் அர்த்தமும் உன்னைக் கலங்கப்பண்ணவேண்டாமென்றான், அப்பொழுது பெல்தேஷாத்சார் பிரதியுத்தரங்கொடுத்துச் சொன்னதாவது; என் ஆண்டவனே, அந்தச் சொப்பனம் உம்முடைய பகை

ளுருக்கு, அதின் அர்த்தம் உம்முடைய சத்துருக்களுக்கு செல்லுவதாக.

௰௭. உயரமானபரியந்தம் எட்டிக் தேசமெங்கும் தெரியத்தக்கதாகப் பெரியதும், பலத்ததுமானதும்,

௰௮. இலைகள் நேர்த்தியும், கனிகள் வெகுவானதும், எல்லாசீவனுக்கும் ஆகாரமுண்டானதும், கீழே வெளியின் மிருகங்கள் தங்கினதும், கொப்புகளில் ஆகாயத்துப் பட்சிகள் தாபரித்ததுமான விருட்சத்தைக் கண்டீரே,

௰௯. அது * பெரியவருமா, பலத்தவருமாயிருக்கிற இராசாவாகிய நீர்தானே, ஏனெனில், உமது மகத்துவம் பெருகி, அதுவானபரியந்தமும், உமது கர்த்தத்துவம் பூமியினெல்லைபரியந்தமும் எட்டிப்போயிற்று.

* உ, சா. ௫, ௰௮.

௨௰. அந்தவிருட்சத்தைவெட்டி அதைக் கெடுத்துப்போடுங்கள். ஆனால், அதின் வேர்களாகிய அடிமரந் தரையிலிருக்கட்டுமென்றும், இரும்பும், வெண்கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலே தங்கி, ஆகாயத்துப்பனியிலே நனைவதாக, ஏழுகாலங்கள் அவன்மேலே கடந்துபோகுமட்டுக்கு மிருகங்களோடே யவனுடைய பங்கிருக்கக்கடவதென்றும், வானத்திலிருந்திறங்கிச் சொன்ன பரிசுத்தக்காவலாளியை இராசா கண்டாரே.

௨௧. இராசாவே, அதின் அர்த்தமென்னவெனில், மனுஷரைவிட்டுத்தள்ளுவீர், வெளியின்மிருகங்களோடே யும்முடையதாபரியிருக்கும், மாடுகளைப்போலப் புல்லைமேய்ந்து ஆகாயத்துப்பனியிலே நனைவீர்.

௨௨. இப்படியே உன்னதமானவர் மனுஷரின் இராசியத்தை, ஆண்டுகொண்டு தாம் சித்தமாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக்கிறாரென்பதை நீர் அறிந்துகொள்ளுமட்டும் ஏழுகாலங்கள் உம்முடையமேற்கடந்துபோகவேண்டுமெனகிறதே இராசாவாகிய என்னுடையவன்மேலேவந்த உன்னதமானவருடைய தீர்மானம்.

௨௩. ஆனால் விருட்சத்தின்வேர்களாகிய அடிமரந்தரையிலிருக்கட்டுமென்று சொல்லப்பட்டதென்னவென்றால், நீர் பரம அதிகாரத்தையறிந்தபின் இராசியம் உமக்கு நிலைநிற்கும்.

௨௪. ஆகையால் இராசாவே, நீதியைப் பற்றி யும்முடையபாவங்களையும், சிறுமையானவர்களுக்கிரங்கி உம்முடைய அக்கிரமங்களையும் அறுத்துவிடும், அப்போது ஒருவேளை யும்முடைய சாங்கோபாங்கத்திற்கு நீடிப்புண்டாயிருக்குமென்றான்.

௨௫. இவையெல்லாம் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின்மேல்வந்தன.

௨௬. பன்னிரண்டுமாதஞ்சென்றபின் அவன் பாபேலிலிருக்கிற இராச அரமனையின் மீதில் உலாத்திக்கொண்டிருந்து,

௨௭. * இது என்வல்லமையின் பலத்தினாலும், என் மகத்துவத்தின் பிரதாபத்திற்கும் நான் இராச அரமனையாகக் கட்டின மகாபாபிலோனல்லவோவென்று இராசா சொன்னான். * லூக்கா. ௧, ௫௧.

௨௮. இன்னம் இந்தவார்த்தை இராசாவின் வாயிலிருக்கையில், வானத்திலிருந்து ஒருசத்தமிறங்கிச் சொன்னதாவது; நேபுகாத்நேச்சாரென்ற இராசாவே இராசியபாரம் உன்னைவிட்டுப் போயிற்றென்றும்,

௨௯. மனுஷரைவிட்டுத்தள்ளுண்டாய், வெளியின்மிருகங்களோடே யுன்தாபரியிருக்கும், மாடுகளைப்போலே புல்லைமேய்வாய், இப்படியே உன்னதமானவர் மனுஷரின் இராசியத்தையாண்டுகொண்டு தாமசித்தமாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக்கிறாரென்பதை நீயறிந்துகொள்ளுமட்டும், ஏழுகாலங்கள் உன்மேற் கடந்துபோகுமென்றும் உனக்குச்சொல்லப்படுகிறதென்றது.

௩௰. அந்நேரமே யிந்தவார்த்தை நேபுகாத்நேச்சாரில் நிறைவேறிற்று, * அவன் மனுஷரைவிட்டுத்தள்ளுண்டு மாடுகளைப்போலே புல்லைமேய்ந்தான், அவனுடையமயிர் கழுகுகளுடையமயிர்களும், அவனுடைய நகங்கள் பட்சிகளுடைய நகங்களுக்குச் சமானமாயவளருமட்டும் அவன்சரீரம் ஆகாயத்துப்பனியிலே நனைந்தது. * ௫, ௰௮ ௨௧.

௩௧. அந்நாள்கள் சென்றபோதோ வெனில், நேபுகாத்நேச்சாராகிய நான் என்கண்களை வானத்திற்கேறெடுத்தேன், என்புத்தி எனக்குத்திரும்பிவந்தது, அப்போது நான் உன்னதமானவரை ஸ்தோத்திரித்து, என்றென்றைக்கும் பிழைக்கிறவரைப் புகழ்ந்து மகிமைப்படுத்தினேன், அவருடைய கர்த்தத்துவம் நித்தியகர்த்தத்துவமானது, அவருடைய இராசியம் தலைமுறை தலைமுறையாகநிற்கும்.

௩௨. பூமியின்குடிகளெல்லாம் ஒன்றுமில்லையென்றெண்ணப்படவேண்டும், அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின்சேனையையும், பூமியின்குடிகளையும் நடப்பிக்கிறார், அவருடைய கையைத்தட்டி, அவரைநோக்கி என்னசெய்கிறீரென்று சொல்லத்தக்கவனில்லையென்றேன்.

௩௩. அவ்வேளையே யென்புத்தி எனக்குத்திரும்பிவந்தது. என் இராசியபாரத்தின் மேன்மைக்காக என்னுடையமகிமையும், என்னுடைய முகக்களையும் எனக்குத்திரும்பிவந்தது, என்னையென்சேர்வைக்காரரும், என் பெரியமனுஷரும்தேடினார்கள், என் இராசியத்திலேதிடப்படுத்தவைக்கப்பட்டேன், அதிக மகத்துவமும் எனக்குக் கூட்டப்பட்டது.

௩௭. ஆகையால் நேபுகாத்நேத்சாராகிய நான் பரமண்டலங்களின் இராசாவைப் புகழ்ந்து, உயர்த்தி, மகிமைப்படுத்துகிறேன். ஏனென்றால், அவருடைய கிரியைகளெல்லாஞ் சத்தியமும், அவருடைய வழிகள் நியாயமுமானவைகள், பெருமையாய் நடக்கிறவர்களைத் தாழ்த்த அவராலே ஆம் என்றெழுதினான்.

## ௫. அதிகாரம்.

[(௧) பெல்ஷாத்சாரின் அவபத்தியான விருந்து, (௫) ஞானியகாரர்களுக்குத் தெரியாத கையெழுத்து இராசாவைக் கலங்கச்செய்தது. (௰) இராசஸ்திரியின் யோசனையினாலே தானியேல் கொண்டுவரப்பட்டது. (௰௭) அவன் இராசாவினுடைய மமதையையும், விக்கிரகத் தொழுமையையுங் குறித்து அவனைக் கண்டித்து, (௨௫) எழுத்தைவாசித்து அதின் அர்த்தத்தை வெளியிட்டது. (௩௰) இராச்சியத்தினுடைய மேதியருக்குக்கொடுக்கப்பட்டது.]

பெல்ஷாத்சாரென்ற இராசா தன்னுடைய பெரியமனுஷரில் ஆயிரம் பேருக்குப் * பெரியவிருந்துபண்ணுவித்து, அந்த ஆயிரம்பேருக்கு முன்பாகத் திராட்சப்பழ இரசங்குடித்துக்கொண்டிருந்தான்.

* ஏசாயா. ௨௧, ௫. ௬.

௨. பெல்ஷாத்சார் திராட்சப்பழ இரசத்தைருசிக்கிற ருசியோடேயிருக்கையில், அவன் தன்தகப்பனாகிய நேபுகாத்நேத்சார் எருசலேமின் தேவாலயத்திலிருந்தெடுத்துக்கொண்ட பொன்னும், வெள்ளியுமான பாத்திரங்களை இராசாவாகிய தானும், தன்னுடையபெரியமனுஷரும், தன்பெண்சாதிகளும், தன்வைப்பாட்டிகளும் அவைகளிற் குடிக்கிறதற்காகக் கொண்டுவரச்சொன்னான்.

௩. அப்பொழுது எருசலேமிலிருந்த பராபரனுடையவீடாகிய தேவாலயத்திலிருந்தெடுக்கப்பட்ட பொற்பாத்திரங்களைக்கொண்டுவந்தார்கள், அவைகளில் இராசாவும், அவனுடைய பெரியமனுஷரும், அவனுடைய பெண்சாதிகளும், அவனுடைய வைப்பாட்டிகளுங் குடித்தார்கள்.

௪. அவர்கள் திராட்சப்பழ இரசங்குடித்துப் பொன்னும், வெள்ளியும், வெண்கலமும், இரும்பும், மரமும், கல்லுமாகிய தேவர்களைப் புகழ்ந்தார்கள்.

௫. அந்நேரத்திலே ஒருமனுஷனுடைய கையின்விரல்கள் புறப்பட்டு, விளக்குக்கெதிராக இராசா அரமனையின் சாந்துபூசப்பட்டசுவரிலே எழுதினெழுதுகிற துண்டிக்கையை இராசா கண்டான்.

௬. அப்பொழுது இராசா வேறுருகமாகி, அவனுடைய நினைவுகள் அவனைக் கலங்கப்பண்ணின, அவனுடைய இடுப்பின்கட்டுகள் தளர்ந்து, அவனுடைய முழங்கால்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டிருந்தது.

௭. * சோதிஷக்காரரையும், கல்தேயரையும், குறிசொல்லுகிறவர்களையும் உள்ளே அழைத்துவந்துவிட இராசா உரத்தசத்தமாய்க் கூப்பிட்டான், இராசா பாபேலின் ஞானிகளோடே இந்த எழுத்தை வாசித்து அதின் அர்த்தத்தை யெனக்குக் காண்பிக்கப்போகிற எந்தமனுஷனானாலும், இரத்தாம்பரமும், தன்கழுத்திலே பொற்சரப்பளியுந் தரிக்கப்பட்டு இராச்சியத்திலே மூன்றும் அதிபதியாயிருப்பானென்றுசொன்னான். * உ. உ. ச, ரு.

௮. அப்பொழுது இராசாவின் ஞானிகளெல்லாம்வந்துசேர்ந்தார்கள். ஆனால், அந்த எழுத்தை அவர்கள் வாசிக்கவும், அதின் அர்த்தத்தை இராசாவுக்கறிவிக்கவுங் கூடாததாயிருந்தது.

௯. அப்பொழுது இராசாவாகிய பெல்ஷாத்சார் மிகவுங்கலங்கினான், அவனில் அவனுடையமுகம் வேறுபட்டுப்போயிற்று, அவனுடையபெரியமனுஷர் திகைத்திருந்தார்கள்.

௰. இராசாவும், இவனுடைய பெரியமனுஷரும் இப்படியிருந்த வர்த்தமானத்தினிமித்தமாக, இராசஸ்திரி விருந்துசாலைக்குட் பிரவேசித்தாள், இராசஸ்திரி வசனித்துச் சொன்னதாவது; இராசாவே என்றைக்கும் வாழ்க, உமது நினைவுகள் உம்மைக்கலங்கப்பண்ணவும், உமதுமுகம் வேறுபட்டுப்போகவுமொட்டாதேயும்.

௰௧. உம்முடைய இராச்சியத்திலே ஒரு புருஷனிருக்கிறான், * அவனுக்குட் பரிசுத்த தேவருடைய ஆவியிருக்கிறது, உம்முடையபிதாவின் நாள்களில் அவனுக்குள் வெளிச்சமும், விவேகமும், தேவர்களின் ஞானத்துக்கொத்த ஞானமுங்காணப்பட்டன. ஆகையால், உம்முடையபிதாவாகிய நேபுகாத்நேத்சாரென்ற இராசாசெயத்தென்னவென்றால் உம்முடையபிதாவாகிய இராசா அவனைச்சாஸ்திரிகளுக்கும், சோதிஷக்காரருக்கும், கல்தேயருக்கும், குறிசொல்லுகிறவர்களுக்கும் அதிபதியாக வைத்தார்.

* ச, ௫. ௯, ௰௮.

௰௨. ஆதேனெனில், இராசா பெல்ஷாத்சாரென்றுபேரிட்ட அந்தத்தானியேலுக்குட் சொப்பனங்களை வியார்த்தியானிக்கிறதும், புதைபொருள்களை வெளிப்படுத்துகிறதும், கருகலானவைகளைத் தெளிவிக்கிறதுமான அறிவும், புத்தியுமுள்ளவிசேஷித்த ஆவியுண்டென்றுகாணப்பட்டது, இப்பொழுது தானியேல் அழைக்கப்படட்டும், அவன் அர்த்தத்தை வெளிப்படுத்துவானென்றான்.

௰௩. அப்பொழுது தானியேல் உள்ளே இராசாவின் முன் அழைத்துவரப்பட்டான், இராசா தானியேலோடே வசனித்துச் சொன்னதாவது; நீ என் பிதாவாகிய இராசா யூதாவிலிருந்து சிறைபிடித்துவந்த யூதரிலொருவனாகிய தானியேலல்லவோ.

௰௪. உனக்குள்ளே தேவர்களின் ஆவியுண்டென்றும், உனக்குள்ளே வெளிச்சமும், புத்தியும், விசேஷித்த ஞானமுங் காணப்பட்டதென்றும் உன்பேரில் கேட்டேன்.

௰௫. இப்பொழுதும் இந்த எழுத்தை வாசிக்கிறதற்கும், அதின் அர்த்தத்தை யெனக்கறிவிக்கிறதற்குஞ் சாஸ்திரிகளும், சோதிஷக்காரரும் எனக்கு முன்பாக அழைத்துவிடப்பட்டார்கள். ஆனால் அவர்கள் இந்த வசனத்தின் அர்த்தத்தை வெளிப்படுத்தக்கூடாதே போயிற்று.

௰௬. நீயோவென்றால், வியார்த்திகளை வெளிப்படுத்தவும், கருகலானவைகளைத் தெளிவிக்கவும் மாட்டுவாயென்றுன்பேரிலே நான் கேட்டேன், இப்பொழுதும் நீ இந்த எழுத்தை வாசிக்கவும், அதின் அர்த்தத்தை யெனக்கறிவிக்கவும் சாமர்த்தியமிருந்தால் நீ இரத்தாம்பரமும், உன் கழுத்திலே பொற்சரப்பளியுந் தரிக்கப்பட்டு, இராசசியத்திலே மூன்றும் அதிபதியாயிருப்பாயென்றான்.

௰௭. அப்பொழுது தானியேல் இராசாவுக்கு முன்பாகச் சொன்ன பிரதியுத்தரமாவது; உம்முடைய காணிக்கைகள் உம்மிடத்திலிருக்கட்டும், உம்முடைய உச்சிதங்களை வேறொருத்தனுக்குக் கொடும், எழுத்தையோவென்றால், நான் இராசாவுக்கு வாசித்து அர்த்தத்தை யவருக்கறிவிப்பேன்.

௰௮. இராசாவே, * உன்னதமான பராபரன் உம்முடைய பிதாவாகிய நேபுகாத்நேச்சாருக்கு இராசசியத்தையும், மகத்துவத்தையும், கனத்தையும், மகிமையையுங் கொடுத்தார். * ௨, அதிகாரம். ௩௭.

௰௯. அவருக்கு அவர் கொடுத்த மகத்துவத்தினாலே சகலசனசாதிகளும், சாதியாரும், பாஷைக்காரரும் அவருக்கு முன்பாக நடுங்கிப் பயந்திருந்தார்கள். ஏனெனில், தமக்குச் சித்தமானவனைக் கொன்றுபோடுவார், தமக்குச் சித்தமானவனை யுயிரோடே வைப்பார், தமக்குச் சித்தமானவனை யுயர்த்துவார். தமக்குச் சித்தமானவனைத் தாழ்த்துவார்.

௨௰. ஆனால் * அவருடைய இருதயம் உயர்ந்து, அவருடைய ஆவி அகந்தையாயிருக்கக் கடினப்பட்டபோது, அவர் தமது இராசாசனத்திலிருந்திறக்கப்பட்டார், அவருடைய மகிமை யவரைவிட்டகன்றுபோயிற்று. * ௪, ௨௭. ௩௦

௨௧. அவர் மனுஷரைவிட்டுத் தள்ளுண்டார், அவருடைய இருதயம் மிருகங்களுடைய சாயலாயிற்று, காட்டுக்கழுதைகளோடே அவருடைய தாபரிப்புண்டாயிருந்தது, உன்னதமான பராபரன் மனுஷரின் இராசசியத்தையாண்டுகொண்டு தமக்குச் சித்தமானவனை யதிகாரியாக்குகிறாரென்று அவரறிந்துகொள்ளுமட்டும் மாடுகளைப்போலே புல்லை மேய்ந்தார், அவருடைய சரீரம் ஆகாயத்தின் பனியினாலே நனைந்தது.

௨௨. அவருடைய குமாரனாகிய பெல்ஷாத்சாரென்ற நீரோவென்றால், இதையெல்லாம் அறிந்திருந்தும் உமது இருதயத்தைத் தாழ்த்தாமல்,

௨௩. பரமண்டலத்தின் ஆண்டவருக்கு விரோதமாக உம்மையுயர்த்தினீர் அவருடைய வீட்டின் பாத்திரங்களையுமக்கு முன்பாகக் கொண்டுவந்தார்கள், நீரும், உம்முடைய பெரிய மனுஷரும், உம்முடைய பெண்சாதிகளும். உம்முடைய வைப்பாட்டிகளும் அவைகளில் திராட்சப்பழ இரசங்குடித்தீர்கள், இதுவுந்தவிரத் தம்முடைய கையிலுள்ள உம்முடைய சுவாசத்திற்கும், உமது எல்லாவழிகளுக்கும் அதிகாரியாகிய பராபரனை நீர் மகிமைப்படுத்தாமல், * காணாமலும், கேளாமலும், உணராமலுமிருக்கிற வெள்ளியும், பொன்னும், வெண்கலமும், இரும்பும், மரமும், கல்லுமாகிய தேவர்களைப் புகழ்ந்தீர். * சங்கீ. ௱௰௫, ௪. ௱௩௫, ௰௫.

௨௪. அப்பொழுது அந்தக் கையின் துண்டு அவரிடத்திலிருந்தனுப்பப்பட்டு அதினாலே இந்த எழுத்து வரையப்பட்டது.

௨௫. வரையப்பட்ட எழுத்தோவெனில், மெனே மெனே, தெக்கேல் உப்பார்சின் என்பது.

௨௬. இந்த வசனத்தின் அர்த்தமாவது; மெனேயென்றால், பராபரன் உன் இராசசியத்தை மட்டிட்டு அதற்கு முடிவுண்டாக்கினார்.

௨௭. தெக்கேலென்றால், நீ தராசிலே நிறுக்கப்பட்டுக் குறையக் காணப்பட்டாய்.

௨௮. பேரேஸ் என்றால், உன் இராசசியம் பகரப்பட்டு, மேதியருக்கும் பேர்சியருக்குங் கொடுக்கப்பட்டதென்ற அர்த்தமென்றான்.

௨௯. அப்பொழுது பெல்ஷாத்சார் தானியேலுக்கு இரத்தாம்பரத்தையும், அவனுடைய கழுத்திற் பொற்சரப்பளியையுந் தரிப்பிக்கவும், * இராசசியத்திலே அவன் மூன்றாம் அதிகாரியாயிருப்பவனென்று, அவனைக் குறித்துப் பறைபறையிடவுங் கட்டளையிட்டான். * க. மோசே. ௪௧, ௪௩.

௩௰ அன்று இராத்திரியிலே கல்தேயரின் இராசாவாகிய பெல்ஷாத்சார் கொன்றுபோடப்பட்டான்.

௩௧. மேதியனாகிய தரியுவோவென்றால், அறுபத்திரண்டு வயதுள்ளவனாய் இராசசியத்தைக் கட்டிக்கொண்டான்.

## ௬. அதிகாரம்.

[(௧) தானியேல் தலைவர்களுக்குள்ளே முதலாளியாக்கப்பட்டது. (௪) அவர்கள் அவனுக்கு விரோதமாகத் துர்யோசனை செய்து விக்கிரகப்பதிஷ்டைக்கடுத்த தீர்மானத்தைப் பெற்றுக்கொண்டது. (௰) தானியேல் அதற்குக் கீழ்ப்படியாததினால் குற்றஞ்சுமத்தப்பட்டுச் சிங்கத்தின் குகையிலே போடப்பட்டது. (௰௮) அவன் காக்கப்பட்டது. (௨௪) அவனுடைய சத்துருக்கள் பட்சிக்கப்பட்டது. (௨௫) இராசகட்டளையினாலே பராபரனுடைய மகிமை வெளிப்பட்டது.]

இராச்சியமெங்கும் இருக்கிறதற்காக இராச்சியத்தின்மேல் நூற்றிருபது சுபையத்தார்களையும்,

௨. இராசாவுக்கு நஷ்டம் வராதபடிக்கு அந்தச் சுபையத்தார்கள் கணக்கொப்புவிக்கிறதற்காக அவர்கள்மீதில் மூன்று துரைகளையும் வைக்கத் தரியுவுக்கு நன்றாகக்கண்டது, இவர்களில் ஒருத்தன் தானியேலென்றவன்.

௩. இப்படியிருக்கையில் தானியேலே துரைகளுக்கும், சுபையத்தார்களுக்கும் மேற்பட்டவனாயிருந்தான். ஏனெனில், விசேஷித்த ஆவி அவனுக்குள்ளிருந்தது. ஆகையால், அவனை இராச்சியத்திற்கெல்லாம் அதிகாரியாக வைக்க இராசா நினைத்தான்.

௪. அப்போது துரைகளும், சுபையத்தார்களும் இராச்சியத்தின் விசாரிப்பிலே தானியேலைக் குற்றப்படுத்துஞ் சமயத்தைக் கண்டுபிடிக்கப் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் ஒரு சமயத்தையும், குற்றத்தையுங் கண்டுபிடிக்கக்கூடாதிருந்தது. ஏனெனில், அவன் உண்மையுள்ளவனாயிருந்தான், அவன்மேற் சுமத்த ஒரு தப்பும், ஒரு குற்றமுங் காணப்பட்டதில்லை.

௫. அப்போது அந்தப் புருஷர், நாமிந்தத் தானியேலை அவனுடைய பராபரனின் வேதகாரியத்திலே குற்றப்படுத்துஞ் சமயத்தைக் கண்டுபிடித்தாலொழிய, அவனை வேறொன்றினுங் குற்றப்படுத்துஞ் சமயத்தைக் கண்டுபிடிப்பதில்லையென்றார்கள்.

௬. பிற்பாடு * அந்தத் துரைகளுஞ் சுபையத்தார்களும், ஒருகூட்டமாய் இராசாவண்டைக்குப் போய், அவனோடே சொன்னதாவது; தரியு இராசாவே, என்றைக்கும் வாழ்க. * ௩, ௯—௰௨.

௭. எவனாகிலும் முப்பதுநாள்வரையிலே இராசாவாகிய உம்மையே தவிர எந்தத் தேவனையானாலும், மனுஷனையானாலும் ஒரு காரியத்தைக் கேட்டு விண்ணப்பம்பண்ணினால், அவன் சிங்கங்களின் கெவியிலே போடப்பட இராசா ஒரு கற்பனையைக் கற்பித்து, உறுதியான தாக்கீதையாகக்கவேண்டுமென்று இராச்சியத்தினுடைய எல்லாத் துரைகளும், அதிகாரிகளும், சுபையத்தார்களும், சேர்வைக்காரரும், தலைவரும் ஆலோசனைபண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.

௮. இப்போதும் இராசாவே, மேதியருக்கும், பெர்சியருக்குமிருக்கிற பிசகாத ந்யாயப்பிரமாணத்தின்படியே, அந்தத் தாக்கீது * மாற்றப்படக்கூடாதபடியாக நீர் அதைக் கற்பித்து, அதை எழுதின கட்டளையாக்குவீயுமென்றார்கள். * எஸ்தர். ௧, ௰௯. ௮, ௮.

௯. ஆகையால், இராசாவாகிய தரியு அந்தத் தாக்கீதையெழுதின கட்டளையாக்குவித்தான்.

௰. தானியேலோவென்றால், அது எழுதின கட்டளையாக்கப்பட்டதென்றறிந்தபோது, தன் வளவுக்குட் பிரவேசித்தான், அவனுடைய மேல்வீட்டிலே * எருசலேமுக்கெதிராகத் திறந்த பலகணிகள் அவனுக்கிருந்தன, அங்கே அவன் முன் செய்துவந்தபடியே தினம் மூன்றுவேளையிலும் முழங்காற்படியிட்டுச் செபம்பண்ணித் தன்னுடைய பராபரனுக்கு முன்பாக ஸ்தோத்திரஞ்செலுத்தினான். * ௧. இராசா. ௮, ௪௬—௫௰. சங்கீ. ௱௩௰௮, ௫. ௬.

௰௧. அப்போது அந்தப் புருஷர் கூட்டமாய் வந்து, தானியேல் தன்னுடைய பராபரனுக்கு முன்பாகச் செபம்பண்ணி விண்ணப்பஞ்செய்கிறதைக் கண்டுபிடித்தார்கள்.

௰௨. பிறகு அவர்கள் சேர்ந்துவந்து, இராசாவின் தாக்கீதைக்குறித்து இராசாவுக்கு முன்பாகச் சொன்னதாவது; எந்த மனுஷனாகிலும் முப்பதுநாள்வரையிலே இராசாவாகிய உம்மையே தவிர எந்தத் தேவனையானாலும், மனுஷனையானாலும் ஒரு காரியத்தைக் கேட்டு விண்ணப்பம்பண்ணினால், அவன் சிங்கங்களின் கெவியிலே போடப்பட ஒரு தாக்கீதை யெழுதின கட்டளையாக்கினீரல்லவோ என்றார்கள், இராசா பிரதியுத்தாரமாக, அந்த வார்த்தை மேதியருக்கும், பெர்சியருக்குமிருக்கிற பிசகாத ந்யாயப்பிரமாணத்தின்படி உறுதியாமேயென்றான்.

௰௩. அப்பொழுது அவர்கள் இராசாவுக்கு முன்பாகச் சொன்ன மறுமொழியாவது; * சிறையிருப்பான யூதேயா தேசப்புத்திரரில் ஒருத்தனாகிய தானியேல் உம்மையும், நீர் எழுதிக் கட்டளையாக்கின தாக்கீதையுஞ் சட்டைபண்ணாமல், தினம் மூன்றுவேளையிலுந் தன்னுடைய செபத்தைச் செபிக்கிறான் என்றார்கள். * ௫, ௰௩.

௰௪. இராசா இந்த வர்த்தமானத்தைக் கேட்டபோது தன்னில் மிகவுஞ் சஞ்சலமாகித் தானியேலைக் காப்பாற்றும்படிக்கு அவன்மேலே தன் மனதை வைத்து அவனைத் தப்பப்பண்ணுகிறதற்காகச் சூரியன் அஸ்தமிக்

குமட்டும பிரயாசப பட்டுககொணடிருந தான.

௰௫ அபபோது அநதபபுருஷர் இராசா வணடையிலே கூட்டமாயவநது, இராசா கட்டளையிட்ட எநதத் தாககிதையுங கற் பனையுமாறறபபடககூடாதெனற நியாயப பிரமாணம மேதியருககும, பெர்சியருககும இருககிறதெனறறிவீராகவெனறார்கள.

௰௬. அபபோது இராசாதானியேலைக்கொ ணடுவரசசொனனான அவனைச்சிங்கஙகளின கெவியிலேபோட்டார்கள. இராசா தானி யேலுடனே, நீ இடைவிடாமல ஆராதனை செயகிற உனனுடைய பராபரன உனனைத் தபபுவிபபாராகவெனறுசொனனான.

௰௭. ஒருகல் கெவியினுடையவாசலினமே றகொணடுவநது வைககபபட்டது, ஆனால், தானியேலினமேல தீர்நதநியாயம மாறுட டமபணணபபடாதபடிககு அதை இராசா தனமோதிரததினாலும, தன பெரியமனுஷ ரினமோதிரததினாலும * முததிரைபோட டான. * மத்தே. ௨௭, ௬௬.

௰௮. பிறகு இராசா தன அரமனைககுப போய இராபபோசனமபணணாமலும், கீத வாததியமுதலானதைத் தனககு முனபாக வரவொட்டாமலுமிருநதான, அவனுககு நிததிரைவராமலுமபோயிறறு.

௰௯. காலமே கிழககு வெளுககிறபோது இராசா எழுநதிருநது தீவிரததோடே சிங கஙக்ளின கெவிககுபபோனான.

௨௰. அவன கெவியினகிட்ட வநதபோது தானியேலைத துயரமானசததமாயக் கூப பிட்டான, இராசாதானியேலுடனே தானி யேலே, சீவனுள்ள பராபரனுடைய தாச னே, நீ இடைவிடாமல ஆராதனைசெயகிற உனனுடையபராபரன உனனைச சிஙகங களுக்குத தப்புவிககவலலவராயிருநதாரோ! வெனறுகேட்டான.

௨௧. அபபோது தானியேல இராசாவுட னேசொனனதாவது; இராசாவே எனறைக குமவாழக.

௨௨. * சிஙகஙகள எனககுச சேதமபண ணாதபடிககுப பராபரன தமமுடைய தூத னையனுபபி அவைகளினவாயை அடைதது பபோட்டார். அதேதெனறால், அவருககு முனபாக எனனிற குறறமிலலாமைகாணப பட்டது, இராசாவாகிய உமககுமுனபாக நான நீதிகேடுசெயததுமிலலை எனறான.
* எபிரே. ௰௧, [illegible].

௨௩. அபபோது இராசா தனனிலமிகவுஞ சநதோஷமாகத தானியேலைக கெவியிலிரு நதெடுததுவிடசசொனனான, அபபடியே தானியேலகெவியிலிருநதெடுததுவிடபபட் டான, அவனில ஒருசேதமுஙகாணபபட்ட திலலை. ஏனெனில, தனபராபரனமேலேவிசு வாசிததிருநதான.

௨௪. தானியேலினமேற குறறஞசாறறின அநதப புருஷரையோவெனறால, இராசா கொணடுவரசசொனனான. அவர்களையும், அவர்கள குமாரரையும், அவர்கள பெணசாதி களையுஞ சிஙகஙகளினகெவியிலேபோட்டா ர்கள, அவர்களகெவியினதரையிலே வராத ததறகுமுனனே சிஙகஙகள அவர்களமேறபா யநது அவர்கள எலுமபுகளையெலலாமநொ றுககிவிட்டன.

௨௫. பிறபாடு இராசாவாகிய தரியு தேச மெஙகுங குடியிருககிற எலலாச சனசதள ஙகளுககும, சாதியாருககும, பாஷைககா ரருககும எழுதினதாவது; உஙகளுடைய சமாதானமபெருகக்கடவது.

௨௬. என இராசசியததினுடைய ஆளு கையினகீழ எஙகுமிருககிற யாவருந தானி யேலுடைய பராபரனுககுமுனபாக நடுங கிப பயபபட்டிருககவேணடுமெனறு என னாலே தீர்மானமபணணபபடுகிறது. ஏனெ னில, அவர் சீவனுளளவரும, எனறெனறைக குமநிலைநிறகிறவருமான பராபரனாயிருக் கிறார், அவருடைய இராசசியமஅழியாதது, அவருடைய கர்த்தத்துவம முடிவுபரியநத மிருபபது.

௨௭. தானியேலைச சிஙகஙகளினகைககுத தபபுவிதத அவரேதபபுவிககிறவரும, இரட் சிக்கிறவரும், வானததிலும, பூமியிலும அடையாளஙகளையும, அறபுதஙகளையுஞசெ யகிறவருமாயிருககிறாரெனறெழுதினான.

௨௮. இநதத் தானியேலோவெனறால, தரி யுவின இராசசியபாரகாலததிலும், * பெர் சியனாகிய கோரேசுடைய இராசசியபார காலததிலுஞசெயமாயிருநதான. * ௧, ௨௧.

## ௭. அதிகாரம்.

[(௧) தானியேல நாலுமிருகஙகளையும, (௯) பராபரனுடையஇராசசியததையுங குறித் துககணடதேவதரிசனை. (௰௫) அதினவியா க்கியானம.]

பாபேலுடைய இராசாவாகிய * பெ லஷாத்சாரின முதலாம வருஷதத லே தானியேல ஒரு சொபபனததையும, தனபடுககையினமேல தன தலைககுணடா னதரிசனஙகளையுஙகணடான, பிறபாடு அந தச சொபபனததை எழுதிககாரியஙகளின தொகையை விவரிததான. * ரு, ௧.

௨. தானியேல வசனிததுசசொனனதாவ து; இராததிரிகாலததில என தரிசனததி லே நானகணடதேதெனில, இதோ வானத தின நானகுகாறறுகளும பெரியசமுததிரத தில அடிததது.

௩. அபபோது வெவ்வேறே உருவமுளள நானகுபெரியமிருகஙகள சமுததிரததிலிரு நதெழுமபின.

௪. முநதினது சிஙகததைபபோலிருநதது,

அதற்குக் கழுகின் செட்டைகளும் உண்டாயிருந்தன, நான் பார்த்துக்கொண்டிருக்கையில் அதின் இறகுகள் பிடுங்கப்பட்டன, அது தரையிலிருந்தெடுக்கப்பட்டு மனுஷனைப்போல இரண்டுகாலின்மேல் நிமிர்ந்து நிறுத்தப்பண்ணப்பட்டது, மனுஷ இருதயமும் அதற்குக் கொடுக்கப்பட்டது.

௫. இதோ கரடிக்கொப்பாகிய வேறே இரண்டாம் மிருகத்தைக் கண்டேன், அது ஒருபுறத்திலே நின்றுகொண்டு தன்வாயின் பற்களுக்குள்ளே மூன்று விலாவெலும்புகளைப் பிடித்திருந்தது அதற்கு எழும்பி வெகு மாம்சத்தின்னென்று சொல்லப்பட்டது.

௬. இதற்குப்பிற்பாடு இதோ சிவிங்கியைப்போலிருக்கிற வேறொன்றைக் கண்டேன், அதற்கதின் முதுகின்மேற் பட்சியின் செட்டைகள் நாலிருந்தன, * நான்கு தலைகளும் அந்த மிருகத்திற்கு உண்டாயிருந்தன, அதற்கு ஆளுகை அளிக்கப்பட்டது. * அ, உஉ. ௰௪, ௩. ௪.

௭. இதற்குப்பிற்பாடு இதோ கெடியும், பயங்கரமும், மகாபலத்தமுமான * நாலாம் மிருகத்தை இராத்தரிசனங்களிற் கண்டேன், அது பெரிய இருப்புப்பற்களுள்ளதாயிருந்தது, பட்சித்து நொறுக்கி மீதியானதைத் தன்கால்களால் மிதித்துப்போட்டுத் தனக்கு முன்னிருந்த எல்லா மிருகங்களைப்பார்க்கிலும் வேறு உருவமாயிருந்தது, பத்துக்கொம்புள்ளதாயிருந்தது.
* அறி. ௰௩, உ. ௰௭, ௩.

௮. அந்தக்கொம்புகளை நான் கவனித்திருக்கையில் இதோ, அவைகளுக்குள்ளே வேறொரு சிறியகொம்பு எழும்பிற்று, இதற்கு முன்பாக முந்தின கொம்புகளில் மூன்று பிடுங்கப்பட்டன, இதோ இந்தக்கொம்பிலே மனுஷர்கண்களையொத்த கண்களும், * பெருமைகளைப்பேசும் வாயுமுண்டாயிருந்தன. * அறிவி. ௰௩, ௫.

௯. நான் பார்த்துக்கொண்டிருக்கையில், ஆசனங்கள் வைக்கப்பட்டன, * நீண்ட ஆயுசாயிருக்கிறவர் உட்கார்ந்தார், அவருடைய வஸ்திரம் வெண்மையாகிய உறைந்த மழையைப்போலும், அவருடைய சிரசின் மயிர் துப்புரவான பஞ்சைப்போலுமிருந்தது, அவருடைய ஆசனம் அக்கினியின் சுவாலைகளும், அதின் உருளைகள் எரிகிற நெருப்புமாயிருந்தன. * சங். ௯௰உ, உ௫—உ௮.

௰. அக்கினியான நதி அவர் சந்நிதியிலிருந்து புறப்பட்டோடிற்று, * ஆயிரமாயிரம்பேர் அவரைச் சேவித்தார்கள், கோடாகோடிபேர் அவருக்கு முன்பாக நின்றார்கள், நியாயசங்கம் உட்கார்ந்தது, † புஸ்தகங்கள் திறக்கப்பட்டன. * சங்கீதம். ௬௮, ௰௮. அறிவி. ௫, ௰௧. † அறிவி. உ௰, ௰உ.

௰௧. அப்போது நான் அந்தக்கொம்பு பேசின பெருமையான பேச்சுகளுடைய சத்தத்தினிமித்தம் பார்த்துக்கொண்டிருந்தேன், நான் பார்த்துக்கொண்டிருக்கையில் மிருகம் கொல்லையுண்டது, அதின் உடல் அழிக்கப்பட்டபின் எரிகிற அக்கினிக்கொப்புக்கொடுக்கப்பட்டது.

௰உ. மற்றமிருகங்களுடைய ஆளுகையோவென்றால், அவைகளைவிட்டுப்போயிருந்தும் அவைகளுக்குச் சமயமும், திட்டமான காலமட்டும் உயிரோடே நீடித்திருக்குதலைக் கட்டளையிடப்பட்டிருந்தது.

௰௩. என்னுடைய இராத்தரிசனத்திலே நான் பார்த்துக்கொண்டிருக்குகையில், இதோ வானத்தின் மேகங்களுடனே மனுஷனுடைய குமாரன் சாயலாகிய ஒருத்தர் வருகிறவராயிருந்தார், அவர் நீண்ட ஆயுசாயிருக்கிறவரிடமட்டும் வந்து அவருக்கு முன்பாகச் சேர்ந்துவரப்பண்ணப்பட்டார்.

௰௪. * அவரையெல்லாச் சனத்தாரும், சாதியாரும், பாஷைக்காரரும் சேவிக்கும்படிக்கு அவருக்கே கர்த்தருத்துவமும், கனமும், இராசரீகமுங் கொடுக்கப்பட்டது, † அவருடைய கர்த்தருத்துவம் ஒழிந்துபோகாத நித்திய கர்த்தருத்துவமும், அவருடைய இராச்சியம் அழியாததுவுமாயிருக்கும்.
* அறிவி. ௰௧, ௰௫. † உ, ௪௪. லூக. ௧, ௩௩.

௰௫. தானியேலாகிய என்னுடைய ஆவி என்னுள்ளத்திலே யொடுங்கிப்போயிற்று, என் தலையின் தரிசனங்கள் என்னைக் கலங்கப்பண்ணிற்று.

௰௬. நிற்கிறவர்களி லொருத்தனண்டையிலே நான் சேர்ந்து, இந்த எல்லாவற்றின் பொருளைச் சொல்ல அவனை வேண்டிக்கொண்டேன், அவன் அவர்த்தமானங்களின் அர்த்தத்தை யெனக்கறிவித்துச் சொன்னதாவது;

௰௭. நாலாயிருக்கிற இந்தப் பெரிய மிருகங்கள் பூமியிலிருந்தெழும்புகிற நாலு விதமான இராசாக்கள்தானே.

௰௮. ஆனால் உன்னதமானவருடைய பரிசுத்தவான்கள் இராசரீகத்தைப் பெற்றுச் சதாகாலமும், சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பார்களென்றான்.

௰௯. அப்போது மற்றவைகளையெல்லாம் பார்க்க வேறு உருவமும், கெடியுமாயிருந்ததும், பற்கள் இருப்பும் நகங்கள் வெண்கலமுமாயிருந்ததும், பட்சித்து நொறுக்கி மீதியானதைத் தன்கால்களால் மிதித்துவிட்டதுமான நாலாம் மிருகத்தைக் குறித்தும்,

உ௰. அதினுடைய தலையின்மேலுள்ள பத்துக்கொம்பைக்குறித்தும், தனக்கு முன்பாக மூன்றுவிழ எழும்பிக் கண்களையும், பெருமைகளைப்பேசுகிற வாயையுமுடையதாயிருந்ததும் மற்றவைகளைப்பார்க்கிலும் பருமனாயி

ருந்த அந்த வேறே கொம்பைக்குறித்து நிச்சயத்தையறிய மனதாயிருந்தேன்.

௨௧. ஏனென்னில், நீண்ட ஆயுசாயிருக்கிறவர் வருமட்டாகவும், * நியாயத்தீர்ப்பு உன்னதமானவருடைய பரிசுத்தவான்களுக்குக் கொடுக்கப்படட்டும் பரிசுத்தவான்கள் இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்காலம் வருமட்டாகவும், * க. கொரி. ௬, ௨. அறிவிப்பு. ௨௰, ௪.

௨௨. இந்தக்கொம்பு பரிசுத்தவான்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை மேற்கொண்டதென்றுகண்டிருந்தேன்.

௨௩. அவன் சொன்னதாவது; நாலாம் மிருகம் பூமியிலேயுண்டாகும் நாலாம் இராச்சியமாயிருக்கும். அது எல்லா இராச்சியங்களைப்பார்க்கிலும் வேறாயிருந்து, பூமியையெல்லாம்பட்சித்து அதை மிதித்து அதை நொறுக்கிப்போடும்.

௨௪. * பத்துக்கொம்புகளென்னவென்றால், அந்த இராச்சியத்திலேதான் பத்து இராசாக்கள் எழும்புவார்கள். அவர்களுக்குப்பிறகு வேறொருத்தன் எழும்புவான். அவன் முந்தினவர்களைப்பார்க்கிலும் வேறாயிருந்து, மூன்று இராசாக்களைத் தாழ்த்திவிட்டு,
* அறிவி. ௰௭, ௧. ௰௭, ௰. ௰௨.

௨௫. * உன்னதமானவருக்கெதிராக வார்த்தைகளைப்பேசி, உன்னதமானவருடைய பரிசுத்தவான்களைப் பாழாக்கிக் காலங்களையும், நியாயப்பிரமாணத்தையுமாற்றநினைப்பான். அவர்கள் † ஒருகாலமும், காலங்களும், அரைக்காலமுமட்டும் அவன் கையிலே ஒப்புக்கொடுக்கப்படுவார்கள். * அறிவி. ௰௩, ௬. ௭. † அறிவி. ௰௧, ௨௰. ௨, ௬. ௰௪.

௨௬. ஆனால் நியாய சங்கமுளுக்காரும் அப்போது அவனை முடிவுபரியந்தம் சங்காரமாக்கும்படியாகவும், அழிக்கும்படியாகவும், அவனுடைய ஆளுகையையெடுத்துப்போடுவார்கள்.

௨௭. எல்லாவானங்களின் கீழிருக்கிற இராச்சியங்களின் இராசரிகமும், ஆளுகையும், மகத்துவமும் உன்னதமானவருடைய பரிசுத்தவான்களாகிய சனத்திறக்குக்கொடுக்கப்படும், அவருடைய இராச்சியம் நித்திய இராச்சியமானது. எல்லாக்கர்த்தத்துவங்களும், அவரைச்சேவித்து அவருக்குக்கீழ்ப்படிந்திருக்குமென்றான்.

௨௮. அவன்சொன்னது; இந்தமட்டிலே சரி ஆனால் தானியேலாகிய என்னுடைய முகக்களையென்னில் வேறுபட்டுத்தக்கதாக என் நினைவுகள் மிகவும் என்னைக்கலங்கப்பண்ணின. இந்தவர்த்தமானத்தை என்மனதிலே வைத்துக்கொண்டேன்.

## அ. அதிகாரம்.

[(௧) தானியேல் ஆட்டுக்கடாவையும், வெள்ளாட்டுக்கடாவையுங்கண்டதரிசனம். (௰௩) இரண்டாயிரத்து முந்நூறுநாள்களின்பலி. (௰௫) காபிரியேல் தானியேலுக்குத்தேற்றித்த தரிசனையைவிடுவித்தது.]

இராசாவாகிய பெல்ஷாத்சாருடைய இராச்சியபாரத்தின் மூவாந்தத்திலே * தானியேலாகிய எனக்குக்காணப்பிக்கப்பட்ட தரிசனைக்குப்பிறபாடு அதினுடைய முன்றம்வருஷத்திலே வேறொன்று எனக்குக் காணப்பிக்கப்பட்டது. * ௭, அதி. ௧.

௨. தரிசனையிலே நான் கண்டதாவது; நான் பார்க்கையில், நான் ஏலாமென்னும் சீமையிலே, அரமனையிருக்கிற சூசான் பட்டணத்திலேயிருக்கும்போலேயிருந்தது. அங்கே நான் ஊலாயென்ற ஆற்றண்டையிலிருக்கிறதாகத் தரிசனையிலேகண்டேன்.

௩. நான் என்கண்களை ஏறெடுத்துப்பார்த்தேன். இதோ இரண்டுகொம்புள்ள ஒரு ஆட்டுக்கடா ஆற்றின் முன்பாக நின்றது. அதின் இரண்டு கொம்புகளும் உயர்ந்தவைகளாயிருந்தன. ஆகிலும் ஒன்று மற்றதைப் பார்க்கிலும் உயர்ந்திருந்தது. உயர்ந்ததாகிய இது கடைசியில் ஓங்கிவளர்ந்தது.

௪. அந்த ஆட்டுக்கடா மேற்கேயும், வடக்கேயும், தெற்கேயும் பாய்ந்துகொண்டிருக்கிறதைக்கண்டேன். ஒருமிருகமும் அதின் முன்னே நிற்கக்கூடாதிருந்தது, அதின் கைக்குத் தப்புவிப்பாருமில்லை, அது தன் மனதின்படியேசெய்து, வல்லமையாயிற்று.

௫. நான் அதைக்கவனித்துக்கொண்டிருக்கையில், இதோ மேற்கேயிருந்து, ஒரு வெள்ளாட்டுக்கடா நிலத்திலே காலபாவாமல் தேசத்தின்மீதெங்கும் வந்தது. அந்தவெள்ளாட்டுக்கடாவுக்கு அதின் கண்களுக்குநடுவே வேடிக்கையான ஒருகொம்பிருந்தது.

௬. நான் ஆற்றின்முன்பாக நிற்கக்கண்ட இரண்டுகொம்புள்ள ஆட்டுக்கடாவினிடமட்டும் இது வந்து தன்பலத்தின் உக்கிரத்தோடே அதற்கெதிராகப்பாய்ந்தது.

௭. இது ஆட்டுக்கடாவின் கிட்டச்சேரக்கண்டேன். இது அதின்மேற்கடுமையாகி ஆட்டுக்கடாவைமுட்டி, அதின் இரண்டுகொம்புகளையும் உடைத்துவிட்டது. இதின் முன்னே நிற்க ஆட்டுக்கடாவுக்குப் பலனில்லாமையால் இது அதைத்தரையிலேதள்ளி மிதித்துவிட்டது. இதின்கைக்கு ஆட்டுக்கடாவைத்தப்புவிப்பாரில்லை.

௮. வெள்ளாட்டுக்கடா மிகுதியும் வல்லமையுள்ளதாயிற்று, அது பலத்துப்போன பிறபாடோவென்னில், அந்தப்பெரியகொம்பு உடைந்துபோய், அதற்குப்பதிலாய் ஆகாயத்தின் நான்குகாற்றுத்திசைகளுக்கெதிராக வேடிக்கையான நான்குகொம்புகள் எழும்பின.

௯. அவைகளிலொன்றிலிருந்து சிறியதான ஒருகொம்பு புறப்பட்டுத் தெற்குக்கெதிராகவும், கிழக்குக்கெதிராகவும், * சிங்காரமான தேசத்திற்கெதிராகவும் மிகவும்பெரியதாயிற்று * ௰௧, ௰௬. ௪, ௧.

௰. அது வானத்தின்சேனைபரியந்தம்வளர்ந்து, அந்தச்சேனையாகிய நட்சத்திரங்களிற் சிலவற்றைப்பூமியிலேவிழப்பண்ணி அவைகளைமிதித்தது.

௰௧. அது சேனையினுடைய அதிபதிபரியந்தம்வல்லமையுள்ளதாயிற்று, அதினாலே * அன்றாடப்பலி எடுபட்டுப்போய், அவருடைய பரிசுத்த ஸ்தலத்தின்தானந் தள்ளுண்டது. * ௰௧, ௩௧.

௰௨. சேனையானது அன்றாடப்பலியோடுங் கூடப்பாதகத்தினிமித்தம் ஒப்புக்கொடுக்கப்படும், அது சத்தியத்தைத்தரையிலேதள்ளும், அது அப்படிச்செய்யும் அதற்குக் கைகூடியும்வருமென்று,

௰௩. பரிசுத்தவானாகிய ஒருத்தன்சொல்லக்கேட்டேன், அப்போது பரிசுத்தவானாகிய வேறொருத்தன், அன்றாடப்பலியையும்,பாழ்க்கடிப்பையுண்டாக்கும் பாதகத்தையும், பரிசுத்தஸ்தலமும், சேனையுமிதிபட ஒப்புக்கொடுக்கப்படுவதையுங் குறித்துத்தரிசனையிற்காண்பிக்கப்பட்டது, எந்தமட்டுமிருக்குமென்று அதைச்சொன்னவனைக்கேட்டேன்.

௰௪. அவன் என்னுடனே, இரண்டாயிரத்துமுந்நூறு இராப்பகல்கள்செல்லுமட்டுமிருக்கும், பிற்பாடு பரிசுத்தஸ்தலம் நீதியாக்கப்படுமென்றான்.

௰௫. சம்பவித்ததேதென்றால், தானியேலாகிய நானிந்தத்தரிசனையைக் கண்டிருந்து அதையுணரவகைதேடுகையில் இதோ, புருஷனின் உருவாகிய ஒருத்தன் எனக்கெதிரே நின்றான்.

௰௬. * ஊலாயின் நடுவாந்தரத்திலே † காபிரியேலே இவனுக்குத்தரிசனையையுணரப்பண்ணென்று கூப்பிடுகிற ஒருமனுஷசத்தத்தையுங்கேட்டேன். * உ. விசை† லூக். ௧, ௨௬.

௰௭. அப்போது நான் நின்றதலத்திற்குச் சேரவந்தான். அவன்வருகையில் நான் திடுக்கிட்டு * முகங்குப்புறவிழுந்தேன், அவன் என்னுடனே மனுப்புத்திரனேகவனி. ஏனெனில், இந்தத்தரிசனைமுடிவுகாலத்திற்கடுத்ததென்றான். * ௰. அதி. ௯.

௰௮. அவனென்னோடேபேசுகையில், நான் தரையிலமுகங்குப்புறக்கிடந்து, அசந்துபோனேன். அவனோவெனில், என்னைத்தொட்டு, நான் நின்றிருந்த நிலையிலே என்னை நிற்கப்பண்ணி,

௰௯. சொன்னதாவது; இதோ, சனத்தினுடையமுடிவானகாலத்திலே சம்பவிப்பதை உனக்கறிவிப்பேன், ஏனெனில், இதுமுடிவினுடைய குறித்தகாலத்திற்கடுத்தது.

௨௰. நீ கண்ட இரண்டுகொம்புள்ள ஆட்டுக்கடாமேதியர், பெர்சியர் தேசங்களின் இராசாக்களும்,

௨௰௧. மயிருள்ள அந்த வெள்ளாட்டுக்கடா கிரேக்கதேசத்தின் இராசாவுந்தானே, இதனகண்களுக்குநடுவேயிருந்த பெரியகொம்போவெனில், முதலாம் இராசாவானவன்.

௨௰௨. அது உடைந்துபோய், அதற்குப் பதிலாக நான்கு எழும்பினதேதென்றால், அந்தச்சாதியிலே நான்கு இராச்சியங்கள் எழும்பும். ஆனால், அவைகள் அவனிருந்த வல்லமையோடிராது.

௨௰௩. அவர்களுடைய இராச்சியபாரத்தின் முடிவானகாலத்திலோவென்றால் பாதகர் முடிவை நிறைவேற்றினபோது * வல்லக்காரமுகமும், தந்திரப்பேச்சுக்கு விவேகமுமான ஒரு இராசா எழும்புவான். * ௰௧, ௩௬. ௩௭.

௨௰௪. அவனுடையவல்லமை பலக்கும், ஆனால் * அவனுடைய பலத்தினாலேயல்ல, அவன் அதிசயமான பிரகாரமாக அழிம்புண்டாக்கித் தனக்குக்கைகூடிவருகிறசெவ்வைப்பாய் இப்படிச்செய்துவந்து பலத்தவர்களையும், பரிசுத்தசனத்தையும் அழிப்பான். * அறிவி. ௰௧, ௰௨.

௨௰௫. அவன் தன்விவேகத்தினாலே கவடைத்தன் கைக்குவாய்க்கப்பண்ணித் தன் னிருதயத்திற் பெருமையாகி, நிர்விசாரத்தோடிருக்கிற அநேகரையழித்து அதிபதிகளுக்கதிபதியாயிருக்கிறவருக்கு விரோதமாயெழும்புவான், ஆனால் கையில்லாமல் முறித்துப்போடப்படுவான்.

௨௰௬. சொல்லப்பட்ட இராப்பகல்களின் தரிசனைமெய்யாயிருக்கிறது. நீயோவென்றால் * இந்தத்தரிசனத்தைப் புதைபொருளாகவைத்துவை. ஏனெனில், இன்னம் அநேகம்நாள்செல்லுமென்றான். * ௰௨, ௪. ௯.

௨௰௭. தானியேலாகிய நான் பலட்சயமாகிச்சிலநாள் வியாதியாயிருந்து, பிறகு எழுந்திருந்து, இராசாவின்வேலையைச்செய்து, அந்தத்தரிசனையினாலே திகைத்துக்கொண்டிருந்தேன், ஆனால் ஒருத்தரும் அதை அறிந்ததில்லை.

## ௯. அதிகாரம்.

[(௪) தானியேல் சிறையிருப்பின்காலத்தைச் சிந்தித்து(௩)பாவசங்கீர்த்தனம்பண்ணி வெளியிட்டு,(௰௬) எருசலேமை முந்தினசீருக்குக் கொண்டுவருவதற்காக மன்றாடினது. (௨௰) காபிரியேல் தானியேலுக்கு எழுபதுவாரங்களைக்குறித்து அறிவித்தது.]

கல்தேயருடைய இராச்சியத்தின்மேல இராசாவாக்கப்பட்ட மேதியனின்வித

தாகிய அகாஸ்வேருவினுடைய குமாரனை * தரியு இராச்சியபாரம்பண்ணுகிற முதலாம் வருஷத்திலே, * ௫, ௩௧.

௨. தானியேலாகிய நான் எருசலேமின் பாழ்க்கடிப்புகள் நிறைவேறித்தீர * எழுபது வருஷம் செல்லுமென்று கர்த்தர் எரேமியா தீர்க்கதரிசியோடே சொன்ன வருஷங்களின் தொகையைப் புஸ்தகங்களிற் கவனித்து, * எரே. ௨௫, ௰௧. ௰௨. ௨௯, அதி. ௰.

௩. உபவாசம்பண்ணி, இரட்டுடுத்தி, சாம்பலிலுமிருந்து, பராபரனாகிய ஆண்டவரைச் செபத்தினாலும், விண்ணப்பங்களினாலும் தேட, என் முகத்தை அவருக்கு நேராக்கி,

௪. என் பராபரனாகிய கர்த்தரை நோக்கிச் செபம்பண்ணி, அறிக்கையிட்டுச் சொன்னதாவது; ஆ, ஆண்டவரே! உம்மைச் சிநேகித்து உம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு உடன்படிக்கையையும், கிருபையையும் காக்கிற மகத்துவமும், பயங்கரமுமான பராபரனே.

௫. நாங்கள் பாவஞ்செய்து, அக்கிரமக்காரராயிருந்து, துன்மார்க்கமாய் நடந்து, கலகம்பண்ணி, உம்முடைய கற்பனைகளையும், உம்முடைய நியாயங்களையும் விட்டகன்று போய்,

௬. உமது நாமத்தினாலே எங்கள் இராசாக்களோடும், எங்கள் பிரபுக்களோடும், எங்கள் பிதாக்களோடும், தேசத்தினுடைய சகலசனத்தோடும் பேசின தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழியக்காரருக்குச் செவி கொடாதே போனோம்.

௭. ஆண்டவரே, தேவரீர் நீதியுள்ளவராயிருக்கிறீர், ஆனால் உமக்கு விரோதமாகப் பண்ணின துரோகத்தினிமித்தம் உம்மாலே சமீபமும், தூரமுமான எல்லாத் தேசங்களிலுந் துரத்தப்பட்டிருக்கிற யூதமனுஷரும், எருசலேமின் குடிகளும், சகல இஸ்ரவேலருமாகிய நாங்களிந்நாளிலிருக்கிறபடியே, * வெட்கமுள்ளவர்கள். * எஸ். ௯, ௬. ஆக்கா. ௰௮, ௰௩.

௮. ஆண்டவரே, நாங்களும், * எங்கள் இராசாக்களும், எங்கள் பிரபுக்களும், எங்கள் பிதாக்களும் வெட்கமுள்ளவர்கள். ஏனெனில், உமக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம். * நெகே. ௯,௩௪. எசா. ௪௩, ௨௭. ௨௮.

௯. எங்கள் பராபரனாகிய ஆண்டவரிடத்தில் இரக்கங்களும், மன்னிப்புகளுமுண்டு ஏனென்றால், அவருக்கு விரோதமாகக் கலகம்பண்ணினோம்.

௰. அவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரரைக்கொண்டு எங்களுக்கு முன்பாக வைத்த அவருடைய நியாயப்பிரமாணங்களில் நடக்க, நாங்கள் எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குச் செவிகொடாதே போனோம்.

௰௧. இஸ்ரவேலரெல்லாரும் உமது நியாயப்பிரமாணத்தை மீறி உமது சத்தத்திற்குச் செவிகொடாதபடிக்கு விலகிப்போனார்கள். ஆகையால், பராபரனுடைய தாசனாகிய * மோசேயின் நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலெழுதியிருக்கிற சாபமும், ஆணையும் எங்கள்மேல் ஊற்றப்பட்டது. ஏனென்றால், அவருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம். * ௩. மோ. ௨௬, ௩௧. ௫. மோ. ௮, ௨௭. ௨௮.

௰௨. எருசலேமிற் சம்பவித்ததுபோல வானத்தின்கீழ் எங்கும் சம்பவியாதிருக்கிற பெரிய தீங்கை எங்கள்மேல் வரப்பண்ணினதினாலே, அவர் எங்களுக்கும், எங்களை நியாயந்தீர்த்த நியாயாதிபதிகளுக்கும் விரோதமாகச் சொல்லியிருந்த தம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றினார்.

௰௩. மோசேயின் நியாயப்பிரமாணப்புஸ்தகத்திலெழுதியிருக்கிறதற்குச் சரியாக இந்தத் தீங்கெல்லாம் எங்கள்மேல் வந்தது, ஆனால் நாங்கள் எங்கள் அக்கிரமங்களைவிட்டுத் திரும்புகிறதற்கும், உம்முடைய சத்தியத்தைக் கவனிக்கிறதற்கும், எங்கள் பராபரனாகிய கர்த்தரின் முகத்தை நோக்கிக் கெஞ்சினதில்லை.

௰௪. ஆனதுகொண்டு கர்த்தர் அந்தத் தீங்குக்குக் காக்கிரதையாயிருந்து, அதை எங்கள்மேல் வரப்பண்ணினார். ஏனென்றால், எங்கள் பராபரனாகிய கர்த்தர் தாம் செய்துவருகிற தம்முடைய கிரியைகளிலெல்லாம் நீதியுள்ளவர். ஏனெனில், அவருடைய சத்தத்திற்குச் செவிகொடாதே போனோம்.

௰௫. இப்போதும் உமது சனத்தை வல்லமையுள்ள கையினாலே எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி இந்நாளவரைக்குமிருக்கிறபடி உமக்குக் கீர்த்தியையுண்டாக்கின எங்கள் பராபரனாகிய ஆண்டவரே, நாங்கள் பாவஞ்செய்து துன்மார்க்கருமாய் நடந்தோம்.

௰௬. ஆண்டவரே, * உம்முடைய எல்லா நீதிகளின்படியே உம்முடைய கோபமும், உம்முடைய உக்கிரமும் உம்முடைய பரிசுத்த பர்வதமாகிய எருசலேமென்ற உம்முடைய பட்டணத்தைவிட்டுத் திரும்பட்டும். அதேனென்றால், எங்கள் பாவங்களினாலும், எங்கள் பிதாக்களின் அக்கிரமங்களினாலும் எருசலேமும், உம்முடைய சனமும் எங்களைச் சுற்றிலுமிருக்கிற யாவருக்கும் நிந்தையாயிற்று. * ௧. யோவான். ௧, ௯.

௰௭. இப்போதும் எங்கள் பராபரனே, தேவரீர் உமதடியேனுடைய விண்ணப்பத்தையும், அவனுடைய கெஞ்சுதல்களையுங் கேட்டு, * ஆண்டவரினிமித்தம் உமது முகத்தைப் பாழாக்கப்பட்ட உம்முடைய பரிசுத்தஸ்தலத்தின்மேற் பிரகாசிக்கப்பண்ணும். * சங். ௮௦, ௰௫. ௰௯.

௧௮. என்பராபரனே, உமமுடைய செவியைசசாயததுககேடடருளும, உமமுடைய கணகளைததிறநது, எஙகள பாழககடிபபுகளையும, உமதுநாமந தரிபபிககபபடடபடடணததையும பார்ததருளும. ஏனெனில, எஙகள நீதிகளையலல, உமமுடைய மிகுநத இரககஙகளையே நமபிநாஙகள எஙகளவிணணபபஙகளையுமக்கு முனபாகபபோடடுவைககிறோம.

௧௯. ஆணடவரே கேளும, ஆணடவரே மனனியும, ஆணடவரேகவனியும, என்பராபரனே, உமமுடைய நிமித்தமாக அதைத் தாமதியாமறசெயயும. ஏனெனறால, உமமுடைய படடணததிறகும, உமமுடைய சனததிறகும நாமந தரிபபிககபபடடதேயெனறேன.

௨௰. இபபடி நானபேசிச செபமபணணி, எனபாவததையும, என்சனமாகிய இஸ்ரவேலினபாவததையுமஅறிககையிடடு, எனபராபரனுடைய பரிசுத்தபர்வத்ததிறகாக என விணணபபததை எனபராபரனாகிய கர்ததருககுமுனபாகப போடடுவைததுககொணடிருநதேன.

௨௧. அபபோது * எனசெபததிலேநான இனனமபேசிககொணடிருககையில, முதல தரிசனையிலே நான கணடபுருஷனாகிய † காபிரியேல,பறநதுவரவிடபபடடவேகமாய, அநதிககாணிக்கையின நேரமாகியவேளையிலே யென்னணடையிலநதுசேர்நது,

* ஏசாயா. ௬௫, ௨௪. † ௮, ௧௬.

௨௨. எனககுத தெளிவுணடாககி எனனோடேபேசிசசொனனதாவது; தானியேலே, உனனையுணர்வடையபபணண இபபோது புறபபடடுவநதேன.

௨௩. உனகெஞசுதலகளின துவககததிலே கடடளைபுறபபடடது, நீ மகாபிரியமானவனென்று உனக்கறிவிக்கநானவநதேன, இபபோதுஞசொல்லும வார்த்தையை நீகவனிததுக்கேடடுத்தரிசனையையுணர்நதுகொள்.

௨௪. மீறுதலைத்தவிர்ககிறதறகும, பாவஙகளைததொலைககிறதறகும அககிரமததைநிவர்த்திபணணுகிறதறகும, * நிததிய நீதியை வருவிககிறதறகும, † தரிசனையையும, தீர்ககதரிசனததையுமமுததிரிக்கிறதறகும, ‡ பரிசுத்தத்திறகுப பரிசுத்தமானவரையபிஷேகமபணணுகிறதறகும, உனசனததினமேலும, உனனுடைய பரிசுததபடடணததினமேலும எழுபதுவாரஙகள செலலககுறிககபபடடிருககிறது. * எபி. ௬, ௧௨. † மத். ௧௧, ௧௩. ‡ சஙகீ. ௪௫, ௮. அப. ௪, ௨௭. ௨௮. ௧, ௩௮. ௪௩.

௨௫. இபபோதும் நீயறிநதுணர்நதுகொள்ள வேணடியதேதெனறால, எருசலேமைத் * தலைவராகிய மேசியாவருமடடுமிருக்கத திருமப எடுபபிககிறதறகும, கடடுகிறதறகுமானகடடளை புறபபடடதுமுதறகொணடு ஏழுவாரமும, பினனையறுபததிரணடுவாரமுமுணடு, அவைகளிலவீதிகளும, அலஙகஙகளுந திருமபககடடபபடடுந்திரும, ஆனால இடுக்கணனகாலஙகளிலதானே.

* ஏசாயா. ௫௫, ௪. அபபோ. ௨, ௩௬.

௨௬. இநத அறுபததிரணடுவாரஙகளுககுப பிறபாடு * மேசியா சஙகரிககபபடடு, இராதேபோவார், ஆனாலவரபபோகிறதலைவனினசனம படடணததையும பரிசுத்தஸதலததையும அழிததுவிடும, அதினமுடிவு பிரளயமாயிருககும † யுததத்தினமுடிவுமடடுககும, பாழககடிபபுகளுககநிரணயிக்கப்படடிருககிறது. * ஏசா. ௫௩, ௮. † லூக். ௨௧, ௨௪.

௨௭. ஆனால அவர் ஒருவாரமடடும அநேகருககு உடனபடிககையைத திடபபடுததி, அநதவாரம பாதிசெனறபோது, பலியையும, காணிக்கையையும, ஓயப்பணணுவார். அருவருபபான செடடைகளோடே பாழககடிககிறவனவநதிறஙகுவான. நிரணயிக்கிற நிர்மூலநதிருமடடுசகும பாழக்கடிககிறசனததினமேற சொரியுமெனறான. * மத்தே. ௨௪, ௧௫. மாற்கு. ௧௩, ௧௪.

## ௰. அதிகாரம்.

[(௧) தானியேலதனனைககீழபபடுததித் தரிசனையைக்கணடது. (௰)அவனபயததினாலே கலஙகிதேவதூதனாலேதேறறபபடடது.]

பெர்சியாவின இராசாவாகிய கோரேஸ்அரசாணடமூனறுமவருஷததிலே பெல்தேஷாத்சாவெனனுபேரிடபபடட தானியேலுககொரு காரியம வெளியாககப்படடது. அநதககாரியஞ சததியமும, நீடிய யுதததத்திறகடுததுமாயிருககிறது, அநதக்காரியத்தை யவன கவனித்துத் தரிசனையிலுள்ளதை விளுவிலேவைததுககொணடான.

௨. அநநாள்களில தானியேலாகிய நான மூனறுவாரமாகிய நாள்களமடடுந்துககித்துககொணடிருநதேன.

௩. அநதமூனறுவாரஙகளாகிய நாளகள நிறைவேறுமடடும சவுரியமான அபபததை நானபுசித்ததுமிலலை, இறைசசியும, திராட்சபபழ ரசமும என்வாயககுட்போனதுமிலலை, நான்பரிமளதைலமபூசிககொணடதுமில்லை.

௪. முதலாமாதம இருபததுநானகாநதேதியிலேநான, * இதேக்கலெனறபெரிய ஆறறஙகரையிலிருநது, * ௧. மோசே. ௨, ௧௪.

௫. எனகணகளையேறெடுக்கையில, இதோ * வெண்புடவையுடைகளைததரிததுத் தமதரையிலே ஊபபாசின தஙகமானகசசையைக்கடடிககொணடிருககிற ஒருபுருஷனைக்கணடேன. * அறிவி. ௧, ௧௩—௧௫.

௬. அவருடைய சரீரந்தர்சீஸ் இரத்தினத்தைப்போலவும், அவருடையமுகம் மின்னலின் உருவைப்போலவும், அவருடையகண்கள் எரிகிற தீவட்டிகளைப்போலவும், அவருடையபுயங்களும், அவருடைய கால்களும் துலக்கப்பட்டவெண்கல வருணத்தைப்போலவும், அவருடைய வார்த்தைகளின் சத்தம் முழங்குகிற முழக்கத்தைப்போலவுமிருந்தன.

௭. தானியேலாகிய நானொருத்தன் அந்தத்தரிசனையைக்கண்டேன். என்னோடிருந்த மனுஷரோவென்றால், அந்தத்தரிசனையைக் காணாதிருந்தார்கள். ஆகிலும், மகாபயங்கரம் அவர்கள்மேல் இறங்கிற்று, அவர்கள் ஓடியொளித்துக்கொண்டார்கள்.

௮. நானே தனித்துவிடப்பட்டு, அந்தப் பெரிய தரிசனையைக்கண்டேன். ஆனால்என் க்குள் ஒருதிடனுமிருந்ததில்லை. என் உருவம் என்னில்மாறிவாடிப்போயிற்று, திடனற்றுப்போனேன்.

௯. அவருடைய வார்த்தைகளின் சத்தத்தைக்கேட்டேன், அவருடைய வார்த்தைகளின் சத்தத்தை நான் கேட்கும்போதோவென்றால், * நான் முகங்குப்புற விழுந்து நித்திரைபோகிறவனாகி, முகங்குப்புறத் தரையிலேவிழுந்தேன். * அ, அதி. ௰௮.

௰. ஆனால் இதோ, ஒருத்தன் கை என்னைத்தொட்டு, என் முழங்கால்களும், என் உள்ளங்கைகளுந்தரையை ஊன்றியிருக்க என்னை அசைத்தது.

௰௧. அவன் என்னுடனே பிரியமுள்ள புருஷனாகிய தானியேலே, நான் உன்னுடனே சொல்லும் வார்த்தைகளின்மேலே நீ கவனமாயிருந்து, உன்கால்களை ஊன்றி நில். ஏனெனில், இப்போது உன்னண்டைக்கு அனுப்பப்பட்டு வந்தேனென்றான். இந்த வார்த்தையை அவன் என்னோடேசொல்லுகையில் நடுக்கத்தோடே எழுந்துநின்றேன்.

௰௨. அப்போதவன் என்னோடே சொன்னதாவது; தானியேலே பயப்படாதே. ஏனென்றால், நீ உணர்வடைகிறதற்கும், * உன்னை யுன்னுடைய பராபரனுக்குமுன்பாகச் சிறுமைப்படுத்துகிறதற்கும், உன்னிருதயத்தைப் பிரயோகப்பண்ணினமுதல் நாள்துவக்கி உன்வார்த்தைகள் கேட்கப்பட்டன. இந்த உன்னுடைய வார்த்தைகளுக்காக நான்வந்தேன். * உ, ௩. வச.

௰௩. ஏனெனிற * பெர்சிய இராச்சியத்தின் பிரபு இருபத்தொருநாளமட்டும், என்னோடெதிர்த்துநின்றான். ஆனால் இதோ, † பிரதானபிரபுக்களில் ஒருத்தனாகிய ‡ மிகவேல் எனக்கொத்தாசையாகவந்தான், ஆனது கொண்டு நான் அங்கே பெர்சியாவின் இராசாக்களண்டையிலே தரித்திருந்தேன்.

* எபேசி. ௬, ௰௨. † கொலோ. ௧, ௰௬.

‡ தானியேல ௰௨, ௧. யூதா ௯. ௬. வச. அறிவி. ௰௨, ௭.

௰௪. இப்போதும் பின்னாள்களில், உன்சனத்திறகுச் சம்பவிப்பதை யுனக்குத்தெரியப்பண்ணும்படிக்குவந்தேன். ஏனெனில், இந்தத்தரிசனம் நிறைவேற இன்னமநாள்செல்லுமென்றான்.

௰௫. அவன் இந்தவார்த்தைகளை யென்னோடேசொல்லுகையில், நான் தலையிறங்கிக்கொண்டு தரையைநோக்கிப்பேசச்சற்றுப்போனேன்.

௰௬. ஆனால் இதோ, மனுபுத்திரரின் சாயலாகிய ஒருத்தன் என் உதடுகளைத்தொட்டான். அப்போது நான் என் வாயைத்திறந்துபேசி, எனக்கெதிரே நின்றவனுடனே சொன்னதாவது; என்னாண்டவனே, தரிசனையால் என்மூட்டுகள் புரண்டன. பலனற்றுப்போனேன்.

௰௭. ஆகையால், இந்த என்னுடைய ஆண்டவனோடே, என் ஆண்டவனுடைய இந்தப் பணிவிடைக்காரன் பேசக்கூடுவதெப்படி! இனி என்னிறபலனிராது, என்னில் மூச்சிராது என்றேன்.

௰௮. அப்போது மனுஷ உருவானவன்திருப்ப என்னைத்தொட்டு என்னைத் திடப்படுத்தி,

௰௯. பிரியமான புருஷனே, * பயப்படாதே, உனக்குச் சமாதானம், திடன்கொள், திடன்கொள்ளென்றான். இப்படி அவன் என்னோடேபேசுகையில், நான் திடன்கொண்டு, என் ஆண்டவன் பேசுவாராக, ஏனெனில், என்னைத்திடனடையப் பண்ணினீரென்றேன். * சங்கீதம். ௨௭, ௰௪.

௨௰. அப்போது அவன் சொன்னதாவது; உன்னண்டைக்கு ஏன்வந்தேனென்றறிவாயோ! இப்போது * பெர்சியாவின் பிரபுவோடே யுத்தம்பண்ணத்திரும்பிப்போவேன். நான்புறப்பட்டுப்போனபோது, இதோ கிரேக்கதேசத்தின்பிரபுவருவான். * ௰௩. வச.

௨௧. ஆனால் சத்திய எழுத்திலே எழுதியிருக்கிறதை யுனக்கறிவிப்பேன். * உங்கள் பிரபுவாகிய மிகவேலைத்தவிர என்னோடேகூட அவர்களுக்கு விரோதமாய்ப் பலன்கொள்ளுகிறவர்கள் ஒருத்தருமில்லை. நானும் மேதியனாகிய தரியு, அரசாண்டமுதலாமவருஷத்திலே அவனைத்திடப்படுத்தவும், பலப்படப்பண்ணவுந் துணையாய்நின்றேன்.

* ௰௩. வசனம்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) கிரேக்க இராசா பெர்சிய இராசாவை வெல்வது. (௫) தெற்குவடக்கின் இராசாக்களுக்குண்டாகுமுட்டப்படிக்கையும், அமராட்டங்களும், (௩௰) உரோமர் படையோடுவந்துபண்ணுங்கொடுமை.]

இப்போது * மெய்யான செய்தியை உனக்கறிவிப்பேன். * ௰, ௨௧.

௨. இதோ, இன்னம் மூன்று இராசாக்கள் பெர்சியாவில் எழும்புவார்கள். அதின்பிறகு நான்காம் இராசாவாயிருப்பவன் எல்லாரிலும் மகா ஐசுவரிய சம்பன்னனாவான், அவன் தன் ஐசுவரியத்தினால் பலப்பட்டபிறபாடு கிரேக்க இராச்சியத்திற்கு விரோதமாக எல்லாவற்றையும் எழுப்புவான்.

௩. ஆனால் பராக்கிரமமான ஒரு இராசா எழும்பி பலனுள்ள ஆளுகையாய் ஆண்டு தனக்குச்சரிப்போன்றபோலே செய்வான்.

௪. அவன் எழும்பினபிறபாடோவென்றால், அவனுடைய இராச்சியம் உடைந்துபோய் * வானத்தின் நான்கு காற்றுத் திசைகளிற் பகிரப்படும், ஆனால் அவனுடைய சந்ததியாருக்கல்ல, அவன் ஆண்டிருந்த ஆளுகைப்படியுமிராது. ஏனெனில், அவனுடைய இராச்சியம் பிடுங்குண்டு, அவர்களல்லாத வேறேபேர்களிடமாய்த் தாண்டிப்போம். * ௭, ௬. ௮, ௮.

௫. அவனுடைய பிரபுக்களில் ஒருத்தனாகிய தெற்குத்திசையின் இராசா பலத்துக்கொள்ளுவான். ஆனால் அவனைப்பார்க்கிலும் வேறொருத்தன் பலத்துக்கொண்டு ஆளுவான். இவனுடைய ஆளுகை பலனுள்ள ஆளுகையாயிருக்கும்.

௬. அவர்கள் சிலவருஷங்களுக்குப்பிறபாடு ஒருவருக்கொருவர் உறவுகட்டுவார்கள். சரிசமானமாக்கும்படிக்குத் தெற்குத்திசையின் இராசாவின் குமாரத்தி வடக்குத்திசையின் இராசாவண்டைக்கு வருவாள், ஆனால் புயபலன் அவளுக்கிராமற்போம். அவனும், அவனுடைய புயமும் நிலைநிற்பதுமில்லை. அவளும், அவளை அழைத்துவந்தவர்களும், அவளைப்பெற்றவனும், அவளை அக்காலங்களிற் பலப்படுத்தினவனும் ஒப்புக்கொடுக்கப்படுவார்கள்.

௭. ஆனால் அவளுடைய தேவர்களின் கிளையாகிய ஒருத்தன் தன் தானத்திலெழும்பி இராணுவத்தோடேவந்து வடக்குத்திசையின் இராசாவின் அரணிப்புகளுக்குட்பிரவேசித்துத் தான்வேண்டியதை அவைகளிற்செய்து பலத்துக்கொண்டு,

௮. அவர்களுடைய தேவர்களை முதலாய் அவர்களுடைய அதிபதிகளையும், அவர்களுடைய விலையேறப்பெற்ற வெள்ளியும், பொன்னுமான பண்டம்பாடிகளையுங் கூடப்பிடித்து எகிப்திற்குக்கொண்டுபோய்ச் சில வருஷங்களமட்டும் வடக்குத்திசையின் இராசாவைப்பார்க்கிலும், நிலைமையாய் நிற்பான்.

௯. இவன் தெற்குத்திசையின் இராசாவின் இராச்சியத்திற்கு விரோதமாக வந்தும், தன் சீமைக்குத்திரும்பிப்போவான்.

௰. ஆனால் இவனுடைய குமாரர் யுத்தங்கலந்து, பெரிய இராணுவங்களின் சேனையைக்கூட்டுவார்கள், இவர்களிலொருவன் விரைவாய் வந்து, பிரளயமாய்க்கடந்து, இரட்டித்துவந்து, அவனுடைய அரணிப்புமட்டும் யுத்தங்கலந்து சேருவான்.

௰௧. அப்போது தெற்குத்திசையின் இராசா கடுமையாய்ப்புறப்பட்டு, வடக்குத்திசையின் இராசாவாகிய இவனோடே யுத்தம்பண்ணுவான். இவன் பெரியசேனையைப் படைக்குநிறுத்தினாலும், இந்தச்சேனை அவன் கையில் ஒப்புக்கொடுக்கப்படும்.

௰௨. இந்தச்சேனை நீக்கப்பட்டபடியினாலே அவனுடைய இருதயம் உயர்ந்துபோம், ஆனால் அவன் அநேகமாயிரமான பேரை மடியவைத்திருந்தாலும், பலத்துக்கொள்ளாதேபோவான்.

௰௩. ஏனெனில், வடக்குத்திசையின் இராசா திரும்ப முந்தினதிலும் பெரியசேனையை எடுத்து, சில வருஷங்கள்சென்றபோது மகா இராணுவத்தோடும், வெகு சம்பத்தோடும் வரவேவருவான்.

௰௪. அக்காலங்களில் அநேகர் தெற்குத்திசையின் இராசாவுக்குவிரோதமாக எழும்புவார்கள். அப்போது உன்சனத்திலுள்ள துண்டரிக்கக்காரரின்புத்திரர் தரிசனத்தை நிறைவேற்றத் தங்களையுயர்த்திவிழுவார்கள்.

௰௫. வடக்குத்திசையின் இராசாவந்து அணைபோட்டு, அரணிப்பான பட்டணங்களைப் பிடிப்பான், தெற்குத்திசையின் இராசாவின் புயபலன்களும், அவன் தெரிந்துகொண்ட சனமும் நில்லாமற்போம். நிற்கிறதற்குப் பலனுமில்லை.

௰௬. ஆகையால் அவனுக்குவிரோதமாக வருகிறவன் தனக்குச்சரிப்போன்றபோலே செய்வான், இவனுக்குமுன்பாக நிலைநிற்பவனில்லை, இவன் * சிங்காரமான தேசத்தில் இறங்கியிருப்பான், எல்லாம் இவன் கைக்குள் அகப்பட்டிருக்கும். * ௮, அதி. ௯.

௰௭. தன் இராச்சியத்தின் வல்லமையோடெல்லாந்தாலும், தன்னோடேகூடச் செம்மைமார்க்கத்தாருமாவர இவன் தன்முகத்தைத்திருப்பி இப்படியேசெய்து பெண்பிள்ளையாகிய ஒருகுமாரத்தியை இவன் அவளை அழிக்கும்படிக்கு அவனுக்குக்கொடுப்பான், ஆனால் அவள் இதிலே நிற்பதுமில்லை, இவனுக்காக அப்படிச்செய்வதுமில்லை.

௰௮. பிறபாடு இவன் தன்முகத்தைத் தீவுகளுக்குநேராகத்திருப்பி அநேகங்களைப்பிடித்துக்கொள்ளுவான். ஆனால் ஒருசேனாபதி இவன்செய்கிற நிந்தையை இவனிடத்தில் ஒப்பப்பண்ணுவதுமல்லாமல், இவன்செய்த நிந்தையினிமித்தம் இவனுக்குச் சரிக்குச்சரியுங்கட்டுவான்.

௰௯. ஆகையால், தன்முகத்தைத் தன்தே

சத்தின் அரண்களுக்கு நேராகத் திருப்புவான், அங்கேயிடறிவிழுந்து காணப்படாதே போவான்.

௨௰. இவன் பட்டத்திற்கோவென்றால், தண்டற்காரரைச் செழிப்பான இராச்சியத்தில் திரியப்பண்ணுகிற ஒருத்தன் எழும்புவான், கொஞ்சநாளுக்குள்ளுங் கோபமில்லாமலும், யுத்தமில்லாமலும் முறிக்கப்படுவான்.

௨௧. இவன் பட்டத்திலோவென்றால் கொஞ்ச எண்ணிக்கையாயிருக்கிற ஒருத்தன் எழும்புவான், இவனுக்கு இராச்சியபாரத்தின் மேன்மையைக் கொடாதிருப்பார்கள், ஆனால் சமாதானமாய் வந்து இச்சகம் பேசி இராச்சியத்தைக் கட்டிக்கொள்ளுவான்.

௨௨. பிரளயமாய் வருகிற புயபலன்கள் இவனாலே பிரளயமாய் முறிக்கப்படும், உடன்படிக்கைபண்ணப்பட்ட தலைவனுங் கூடத்தானே.

௨௩. ஏனென்றால், அவனோடே யுறவுகட்டிக்கொண்டநாள் முதல் இவன் கபடம்பண்ணிப்போயேறிக் கொஞ்சச் சனங்களோடே பலத்துப்போவான்.

௨௪. சீமை சுகவாழ்வோடும், சம்பூரணத்தோடுமிருக்கையில், இவன் உட்பிரவேசித்துத் தன் பிதாக்களும், தன் பிதாக்களின் பிதாக்களுஞ் செய்யாததைச் செய்வான், கொள்ளையிட்டுச் சூறையாடிச் சம்பத்து அவர்களுக்கிறைத்துப் பங்கிட்டு அரண்களுக்கு விரோதமாகத் தனக்குள் நினைவுகளை நினைப்பான், அப்படிச் சிலகாலமட்டுமிருக்கும்.

௨௫. பின்னையுந் தெற்குத்திசையின் இராசாவுக்கு விரோதமாகப் பெரிய இராணுவத்தோடே போர்செய்யத் தன் வல்லமையையும், தன் நெஞ்சையும் எழுப்புவான். அப்போது தெற்குத்திசையின் இராசா மிகவும் பலத்த பெரிய இராணுவத்தோடே யுத்தங் கலப்பான். ஆனால், அவன் நிற்கமாட்டான். ஏனெனில், அவனுக்கு விரோதமாகச் சர்ப்பனைகளை நினைப்பார்கள்.

௨௬. அவனுடைய போசனங்களைச் சாப்பிடுகிறவர்கள் அவனை முறியப்பண்ணுவார்கள். ஆகையால், இவனுடைய இராணுவம் பிரளயமாய் வரும், அநேகர் கொலையுண்டு விழுவார்கள்.

௨௭. இந்த இரண்டு இராசாக்களின் இருதயமும் பொல்லாப்புச் செய்வதற்கிருக்கும், ஒரே பந்தியிலிருந்து பொய்பேசிக்கொள்ளுவார்கள். ஆனால், அது வாய்ப்பதில்லை. ஏனென்றால் குறித்தகாலத்துக்கு முடிவு இன்னம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்.

௨௮. இவன் மகா சம்பத்தோடே தன் தேசத்துக்குத் திரும்பித் தன் இருதயத்தைப் பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாக வைத்து அதற்கானதைச் செய்து தன் தேசத்திற்குத் திரும்பிப்போவான்.

௨௯. குறித்தகாலத்திலே திரும்பித் தெற்கிலே வருவான். ஆனால், இவனுடைய பின் நடபடி இவனுடைய முன் நடபடியைப்போலிருப்பதில்லை.

௩௰. இவனுக்கு விரோதமாகக் கித்தீம் தேசத்தின் கப்பல்கள் வரும், அதினால் இவன் மனநோவடைந்து திரும்பிப்போய்ப் பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாக மனமடிவாகி அதற்கானதைச் செய்து பரிசுத்த உடன்படிக்கையை விட்டவர்களைத் திரும்பக் கவனித்துக்கொண்டிருப்பான்.

௩௧. ஆனால், வைக்கப்படும் புயபலன்கள் இறங்கியிருந்து அரணான பரிசுத்தஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி * அன்றாடப் பலியைத் தள்ளிப் பாழக்கடிக்கும் அருவருப்பை யுங்கேவைப்பார்கள். * அ, ௰௪.

௩௨. உடன்படிக்கைக்குத் துரோகிகளாயிருக்கிறவர்களை இச்சகப்பேச்சுகளினாலே கள்ளமார்க்கத்தாராக்குவான், தங்கள் பராபரனையறிந்திருக்கிற சனமோவென்றால், திடன்கொண்டு அதற்கானபடி செய்வார்கள்.

௩௩. சனத்திற் புத்தியைக் கற்றுக்கொடுக்கிறவர்கள் அநேகரை யுணர்வடையப்பண்ணுவார்கள், அநேகநாளமட்டும் பட்டயத்தாலும், அக்கினியாலும், சிறையிருப்பாலும், கொள்ளையாலும் விழுவார்கள்.

௩௪. இப்படியவர்கள் விழுகையிற் கொஞ்ச ஒத்தாசையாற் சகாயம் அடைவார்கள், அப்போது அநேகர் இச்சகவார்த்தைகளோடே அவர்களையொட்டிக்கொள்ளுவார்கள்.

௩௫. புத்திமான்களைப் * புடமிடுகிறதற்கும், சுத்திகரிக்கிறதற்கும், வெண்மையாக்குகிறதற்கும் அவர்களிற் சிலர் அந்த முடிவுக்காலமட்டும் விழுவார்கள். ஏனென்றால், அதற்குக் குறித்தகாலம் வர இன்னஞ்செல்லும்.
* க. பேது. க, சு. எ.

௩௬. இராசா தனக்குச் சரிப்போனபடி செய்து, * தன்னையுயர்த்தித் தேவனென்னப்பட்ட வெல்லாவற்றிலுந் தன்னைப் பெரியவனாக்கி, † தேவாதி தேவனுக்கு விரோதமாக ஆச்சரியமான காரியங்களைப் பேசுவான், சினந்தீருமட்டும் அவனுக்குக் கைகூடியும் வரும். ஏனென்றால், நிருணயிக்கப்பட்டது நடந்தேறும். * உ. தெச. உ, ச. † எ, அ. உரு. அறிவி. ௰௩, ரு. ௬

௩௭. அவன் தன் பிதாக்களின் தேவர்களைக் கவனிக்காமலும், ஸ்திரீகளின் சிநேகத்தையாகிலும், எந்தத்தேவனையாகிலுங் கவனிக்காமலும் எல்லாவற்றிற்குந் தன்னைப்பெரியவனாக்கி,

௩௮. அரணிப்புகளென்ற தேவனைத் தன்னுடைய தானத்திலே கனம்பண்ணித் தன் பிதாக்களறியாத ஒரு தேவனைப் பொன்னினாலும், வெள்ளியினாலும், இரத்தினங்களினாலும்,

உசசிதமானவஸதுககளிலும கனமபண ணுவான.

௩௯. அவன அரணிப்பானகோட்டைகளு ககாகவும, அந்நியதேவனுககாகவும கூட சசெயவதேதெனில, அவைகளையெண்ணிக கொளளுகிறவர்களுககு மகாகனமுண்டாக கி அவர்களையநேகரையாளபபண்ணி அவர் களுககுச சீமையைக கிரயமாகப பஙகிடு வான.

௪௰. முடிவினகாலததிலோவெனறால,தெற் குததிசையின இராசா அவனோடே கூடமுட டுக்கு நிற்பான. ஆனால, வடககுததிசையின இராசா இரதஙகளோடும, குதிரைககார ரோடும, அநேககப்பலகளோடும அவன மேறகொந்தளிப்பாயவிழுந்து, தேசஙகளு ககுட்பிரவேசிதது அவைகளைப பிரளயமா யழுடிக்கடநது,

௪௧. * சிஙகாரமானதேசததிலும வருவா ன. அப்போது அநேகர்விழுவார்கள. ஆனா ல, ஏதோமும, மோவாபும, அமமோனபுத திரரிற பிரதானபஙகுளளவர்கள அவன கைக்குத தப்பிப்போவார்கள. * ௰௬, ௨௪. அ, அதி. ௯.

௪௨. அவன தனகைகளைத தேசஙகளைப பிடிக்க நீட்டுவான, எகிப்துதேசந தப்புவ துமிலலை.

௪௩. எகிப்தினுடைய பொனனும, வெள் ளியுமான ஐசுவரியஙகளையும, உசசிதமான எலலாவஸதுககளையும ஆண்டுகொளளுவா ன, லிபியரும, எததியோப்பியரும அவனை பினசெலலுவார்கள.

௪௪. ஆனால கிழக்கிலும, வடககிலுமிருந துவருஞசெயதிகள அவனைக கலஙகப்பண ணும, அப்போது அவன அநேகரையழிகக வும, சஙகாரமபணணவும மகா உககிரத தோடேபுறப்பட்டுப்போய,

௪௫. தன அரமனையின கூடாரஙகளைச சமுததிரஙகளுககு நடுவே சிஙகாரமான பரி சுதத பருவதத்தணடையிலே போடுவான. ஆனால, அவன தனமுடிவுககு வந்துசேரு வான. அவனுககொததாசைபணணுவாரு மிலலை.

## ௰௨. அதிகாரம்.

[(௧) மிகாவேல இஸரவேலரைத துனபஙக ளிலநினறு விடுதலைசெயவது. (௫) தானியே ல காலஙகளைக குறிதது அறிவிககபபட டது.]

உன சனததினபுததிரருககாக நிறகிற பெரிய பிரபுவாகிய * மிகாவேல அககாலததிலே எழுமபுவான. ஏனெனில, ஒருசாதி தோனறினதுமுதறகொணடு அக காலமட்டுமுணடாயிராத இககட்டுகாலமா யிருககும,அககாலததிலே உனசனம † விடு விககபபடும, புஸதகததிலெழுதியிருககிற வர்களாகக்காணப்படுகிற அனைவரு நதானே. * ௰, ௰௩. அறிவி. ௰௨, ௭. † எரேமி. ௩௰, ௭.

௨. பூமியினதூளிலே நிததிரைபணணுகிற வர்களில * அநேகர் † சிலர் நிததியசீவனு ககும, சிலர் நிததிய நிநதைகளுககும, இக கழ்ச்சிககும விழிததெழுநதிருப்பார்கள. * அறிவி. ௨௪, ௩. † யோவான. ௫, ௨௯.

௩. * புததியைக கறறுககொடுததவர்கள ஆகாயமண்டலததின ஒளியைப்போலவும, அநேகரை நீதிககுளளாககினவர்கள நட்ச ததிரஙகளைப்போலவும என்றென்றைககுமு ளள சதாகாலஙகளாயப பிரகாசிததிருப பார்கள. * மததே. ௰௩, ௪௩.

௪. தானியேலாகிய நீயோவெனறால,முடி வினகாலமட்டும இநத வார்ததைகளைப * புதைபொருளாக வைதது வைதது இந தப்புஸதகததைமுததிரைபோடு, அப்போ து அநேகர் ஓடிவநதாராயவார்கள, அறிவு மபெருகிப்போமெனறான. * அ, ௨௬. அறிவி. ௨௨, ௰.

௫. அப்போது இதோ, தானியேலாகியநா ன வேறே இரண்டுபேரை ஒருததனை * ஆற றுககிககரையிலும, ஒருததனை ஆறறுக்கக் கரையிலுமநிற்கக்கணடேன. * ௰, அதி. ௪.

௬. இவர் * வெளளைபபுடவையுடுப்புகளைத தரிததவரும, † ஆறறினுடையதணணீர்க ளினமீதில நிறகிறவருமாகிய புருஷனைநோக கி, இநதப்புதுமைகளினமுடிவுவர எநதமட டுஞசெலலுமெனறுகேட்டான. * ௰, அதி. ௫. † அ, அதி. ௰௬.

௭. அப்போது வெளளைபபுடவை யுடுப்புக ளைத தரிததவரும, ஆறறினுடைய தணணீர் களினமீதிலநிற்கிறவருமாகியபுருஷனுடைய உததரவைககேட்டேன. அவர் * தமமு டைய வலதுகரததையும, தமமுடைய இட துகரததையும வானததுககேறெடுதது, † ஒருகாலமும, காலஙகளும, அரைககால முமபோகுமட்டுஞசெலலும, பரிசுதத சன ததினபலனைச சிதறவடிககுதல முடிநதிருக குமபோதே இவைகளெலலாம நிறைவேறி யிருக்குமெனறு, எனறெனறைககும பிழைத திருக்கிறவர்பேரிலே ஆணையிட்டார். * அறி விப்பு. ௰, ௫. ௬. ௭, ௨௫. † அறிவி. ௰௧, ௩. ௰௨. ௬, ௰௪.

௮. நான அதைககேட்டேன. உணராமலு மிருநதேன. ஆகையால எனனுடையவனே, இவைகளினமுடிவு எனனமாயிருககுமெனறு கேட்டேன.

௯. அவர் சொனனதாவது; தானியேலே போயவிடு. ஏனெனறால, இநதவார்ததைகள முடிவினகாலமட்டும் * புதைபொருளாகவை க்கப்பட்டும்,முததிரிததுமிருக்கும். * ௪. வச

௰. அநேகர் * சுததமும, வெண்மையுமாக கப்பட்டுப புடமிடப்படுவார்கள. ஆகாத

வர்களோவென்றால், துன்மார்க்கமாய் நடப்பார்கள். † ஆகாதவர்களெல்லாரும் அதையுணராதேபோவார்கள். புத்திமான்களோ அதையுணருவார்கள். * ௰௧, ௩௫. அறிவி. ௨௨, ௰௧.

௰௧. * பாழாக்கடிக்கும் அருவருப்பை வைக்கிறதற்காக அன்றாடப்பலி தள்ளப்பட்ட காலமுதற்கொண்டு ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூறு நாளாகும். * ௰௧, ௩௧. மத். ௨௪, ௰௫.

௰௨. ஆயிரத்து முந்நூற்று முப்பத்தைந்து நாள்மட்டுங் காத்திருந்து சேர்பவன் பாக்கியவான்.

௰௩. நீயோவென்றால், முடிவு வருமட்டும் போயிரு. ஏனெனில், நீ இளைப்பாறிக்கொண்டிருந்து நாள்களின் முடிவிலே உன் சுதந்தரவீதத்திற்கு எழுந்திருப்பாயென்றான்.

தானியேலின் தீர்க்கதரிசனம் முடிந்தது
முற்றும்.

# ஓசெயாவின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். ௭௱௮௫.)

## ௧. அதிகாரம்.

[(௧) ஞானசோரமார்க்கத்தைக் குறித்துப் பராபரனுடைய நியாயத்தீர்ப்பைக் காட்டுதற்கு ஓசெயா கோமேரைச் சேர்த்துக்கொண்டு, (௪) அவளாலே எஸ்ரெயேலையும், (௬) இரக்கம்பெறாதவளையும், (௮) நம்முடைய சனமல்லாதவனையும் பெற்றது. (௰) யூதாவும், இஸ்ரவேலும் முந்தின சீருக்குக்கொண்டுவரப்படுவது.]

ஊசியா, யோத்தாம், ஆகாஸ், இஸ்கியா என்ற யூதாவுடைய இராசாக்களின் நாள்களிலும், யோவாசின் குமாரனாகிய * எரொபெயாம் என்ற இஸ்ரவேலுடைய இராசாவின் நாள்களிலும் பேயெரியின் குமாரனாகிய ஓசெயாவுக்குண்டான கர்த்தருடைய வசனம். * ௨. இரா. ௰௪, ௨௩.

௨. கர்த்தர் ஓசெயாவைக்கொண்டு உரைக்கத்துவக்கும்போது, கர்த்தர் ஓசெயாவுடனே, நீ போய், ஒரு சோரஸ்திரியையும், சோரமார்க்கத்திற் பிறந்த பிள்ளைகளையும் உன்னிடமாகச் சேர்த்துக்கொள். ஏனெனில், தேசங் கர்த்தரைப் பின்பற்றுகிறதைவிட்டுச் சோரம்போகவே போகிறதென்றார்.

௩. அவன் போய்த் திப்லாயீமின் குமாரத்தியாகிய கோமேரைச் சேர்த்துக்கொண்டான். அவள் கர்ப்பந்தரித்து அவனுக்கொரு குமாரனைப் பெற்றாள்.

௪. அப்போது கர்த்தர் அவனோடே சொன்னதாவது; இவனுக்கு எஸ்ரெயேல் என்று பேரிடு. ஏனெனில், இன்னுங் கொஞ்சக்காலத்திலே நாம் ஏகூவின் வீட்டாரிடத்திலே எஸ்ரெயேலின் இரத்தப்பழிகளை விசாரித்து இஸ்ரவேல்வீட்டாரின் இராசரிகபாரத்தை ஓயப்பண்ணுவோம். * ௨. இரா. ௰௫, ௰-௰௨.

௫. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், எஸ்ரெயேலின் பள்ளத்தாக்கிலே இஸ்ரவேலின் வில்லையுடைப்போமென்றார்.

௬. அவள் திரும்பக் கர்ப்பந்தரித்து ஒரு குமாரத்தியைப் பெற்றாள். அப்போது அவர் அவனுக்குச் சொன்னதாவது; இவளுக்கு இரக்கம்பெறாதவளென்று பேரிடு. ஏனெனில், நாமினி இஸ்ரவேல்வீட்டாருக்கிரங்கப்போகிறதில்லை. அவர்களுக்கிருக்கிறவைகளையெல்லாம் எடுக்கவே எடுத்துப்போடுவோம்.

௭. ஆனால் யூதாவின்வீட்டாருக்கு நாம் இரங்குவோம். ஆனால் வில், பட்டயம், யுத்தம், குதிரைகள், குதிரைக்காரர் என்றவைகளால் நாம் அவர்களை இரட்சிக்காமல் * அவர்களுடைய பராபரனாகிய கர்த்தராலே அவர்களை இரட்சிப்போமென்றார். * ஏசாயா. ௩௭, ௩௬. ௨. நாளாக. ௩௨, ௨௧. ௨௨.

௮. அவள் இரக்கம்பெறாதவளை முலைமறக்கப்பண்ணினபிற்பாடு அவள் கர்ப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள்.

௯. அப்போது அவர் சொன்னதாவது; இவனுக்கு நம்முடைய சனமல்லாதவனென்று பேரிடு. ஏனெனில், நீங்கள் நம்முடைய சனமல்ல. நாமும் உங்களுக்குப் பராபரனாயிருப்பதுமில்லை.

௰. என்றாலும், இஸ்ரவேல்புத்திரரின் இலக்கம், * அளக்கப்படவும், எண்ணப்படவுங்கூடாத கடற்கரை மணலைப்போலிருக்கும். ஏனெனில், சம்பவிப்பதேதென்றால், † நீங்கள் நம்முடைய சனமல்லவென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டவிடத்திலே அவர்களுக்குச் சீவனுள்ள பராபரனுடைய பிள்ளைகளேயென்று சொல்லப்படும். * ௧. மோசே. ௰௫, ௰௬. ௨௨, ௰௭. † உரோ. ௯, ௨௫. ௨௬. ௧. பேது. ௨, ௰.

௰௧. * யூதாபுத்திரரும் இஸ்ரவேல்புத்திரரு

ம் ஏகமாய்க் கூட்டிக்கொள்ளப்பட்டுத் தங்களுக்கு ஒரே தலைவனை வைத்துத் தேசத்திலிருந்தெழுந்திருப்பார்கள். ஏனெனில், † எஸ்ரேயேலின் நாள் பெரிய நாளாயிருக்கும். நீங்கள் உங்கள் சகோதரருக்கு அம்மீ என்றும், உங்கள் சகோதரிகளுக்கு ருகாமா என்றும் சொல்லுங்கள். * ரோ. ௯, ௨௫. ௨. † எசா. ௩௭, ௨௨. மிகா. ௨, ௰௨. ௰௩.

## ௨. அதிகாரம்.

[(௧) சனத்தின் விக்கிரகத்தொழும்பு. (௬) அவர்களுக்கு விரோதமாய் வெளிப்படும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். (௰௪) அவர்களோடே ஒப்புரவாகுதலின் அவருடைய வாக்குத்தத்தங்கள்.]

உங்கள் தாயோடே வழக்காடுங்கள். ஏனெனில், அவள் நம்முடைய பெண்சாதியாயிருக்கிறதில்லை. நாம் அவளுடைய புருஷனாயிருக்கிறதுமில்லை.

௨. அவள் தன் வேசித்தனங்களைத் தன் முகத்திலும், தன் விபசாரங்களைத் தன் தனங்களின் நடுவிலுமிருந்து விலக்கிப்போடக்கடவாள்.

௩. மற்றப்படி நாம் அவளை நிர்வாணமாக உரிந்துபோட்டு, * அவள் பிறந்த நாளிலிருந்தவண்ணமாக அவளை நிறுத்தி, அவளை அந்தரவெளியைப்போலாக்கி, அவளை வறண்ட பூமியைப்போல வைத்து, அவளைத் தாகத்தால் சாகப்பண்ணி, * எசேக். ௰௬, ௪.

௪. அவள் பிள்ளைகளுக்கிரங்காதிருப்போம். ஏனெனில், அவர்கள் வேசிப்பிள்ளைகள்.

௫. அதேதென்றால், அவர்களுடைய தாய் சோரம்போனாள், அவர்களைக் கர்ப்பந்தரித்தவள் இலச்சையான காரியங்களைச் செய்தாள். ஏனெனில், என் அப்பத்தையும், என் தண்ணீரையும், என் ஆட்டுமயிரையும், என் பருத்தியையும், என் எண்ணெயையும், என் பானங்களையுந் * கொடுத்துவருகிற என் சிநேகிதரைப் பின்பற்றிப்போவேனென்றாள். * எரேமி. ௪௪, ௰௭.

௬. ஆகையால், இதோ, நாம் உன் வழியை முள்ளுகளைப்போட்டடைப்போம், அவள் தன் பாதைகளைக் கண்டுபிடிக்காதபடிக்கு அவளை வேலியடைத்துமறிப்போம்.

௭. அவள் தன் சிநேகிதரைப் பின்றொடர்ந்தும், அவர்களைக் கிட்டாமலும், அவர்களைத் தேடியுங் கண்டுபிடிக்காமலும்போய், நான் என் முந்தின புருஷனண்டைக்குத் திரும்பிப்போவேன். ஏனெனில், * இப்போதிருக்கிறதைப்பார்க்கிலும் அப்போதெனக்கு நல்லவேளையாயிருந்ததென்பாள். * லூக். ௰௫, ௰௭. ௰௮.

௮. தனக்கு நாம் தானியத்தையும், திராட்சப்பழ இரசத்தையும், எண்ணெயையுங் கொடுத்தவனென்றும், தனக்கு நாம் வெள்ளியையும், பொன்னையும் பெருகப்பண்ணின வனென்றும் அவள் அறியாதேபோனாள், அவைகளைப் பாகாலுடையதாக்கினார்கள்.

௯. ஆனபடியினாலே, நாம் ஏற்றகாலத்தில் நம்முடைய தானியத்தையும், ஏற்றவேளையிலே நம்முடைய திராட்சப்பழரசத்தையுந் திருப்பி எடுத்து, அவளுடைய நிர்வாணத்தைமூடுகிறதற்கிருந்த நம்முடைய ஆட்டுமயிரையும், நம்முடைய பருத்தியையுந் திருப்பப் பிடுங்கிக்கொள்ளுவோம்.

௰. இப்போதும் அவளுடைய சிநேகிதர்களுடைய கண்களுக்கு முன்பாக அவளுடைய பழித்தனத்தைத் திறந்துவைப்போம், ஒருத்தரும் அவளை நம்முடைய கைக்கு நீங்கலாக்கிவிடப்போவதில்லை.

௰௧. நாம் அவளுடைய எல்லா மகிழ்ச்சியையும், அவளுடைய பண்டிகைகளையும், அவளுடைய மாதப்பிறப்புகளையும், அவளுடைய ஓய்வுநாள்களையும், சபை கூடுகிற அவருடைய எல்லா ஆசரிப்புகளையும் ஒய்யப்பண்ணுவோம்.

௰௨. என் சிநேகிதர் எனக்குக் கொடுத்த பணையமாயிருக்கிறதென்று, அவள் சொன்ன அவளுடைய திராட்சச்செடிகளையும், அவளுடைய அத்திமரங்களையும் நாம் பாழாக்கி, அவைகளைக் காடாய்ப்போகப்பண்ணுவோம், வெளியின் மிருகங்கள் அவைகளைத் தின்னும்.

௰௩. அவள் பாகால்களுக்குத் தூபங்காட்டித் தன் நெற்றிப்பட்டங்களாலும், தன் ஆபரணங்களாலுந் தன்னைச் சிங்காரித்துக்கொண்டு தன் சிநேகிதரைப் பின்றொடர்ந்து, நம்மை மறந்துபோன நாள்களினிமித்தம் அவளை விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௪. ஆனதுகொண்டு, இதோ, நாம் அவளை நயம்பண்ணி, அவளை வனாந்தரத்திலே யழைத்துப்போய், அவளோடே * பட்சமாய்ப் பேசி, * எசாயா. ௪௦, ௨. செப்பனி. ௩, ௩.

௰௫. அங்கேயிருந்து அவளுக்கு அவளுடைய திராட்சத்தோட்டங்களையும், நம்பிக்கையின் வாசலாக ஆகோரின் பள்ளத்தாக்கையுங் கொடுப்போம், அப்போது அவள் அங்கேதன் இளவயதின் நாள்களிலும், * தான் எகிப்துதேசத்திலிருந்து வந்தேறின நாளிலுஞ்செய்ததுபோலேபாடுவாள். * ௨. மோசே. ௰௫, ௧. ௨௧.

௰௬. அக்காலத்திற் சம்பவிப்பதேதென்றால், நீ நம்மையினி என் பாகாலேயென்று சொல்லாமல் என் புருஷனேயென்று சொல்லுவாயென்று கர்த்தர் உரைக்கிறார்.

௰௭. பாகால்களுடைய நாமங்களை யவள் வாயில் அற்றுப்போகப்பண்ணுவோம், இனியவைகளின் பேரைச்சொல்லி யவைகளை நினைக்கிற நினைப்பில்லாதேபோகும்.

௰௮. அக்காலத்திலே நாம் அவர்களுக்காக

* வெளியின் மிருகங்களோடும், ஆகாயத்துப் பறவைகளோடும், பூமியின் ஊர்வனவைகளோடும், ஒரு உடன்படிக்கையைப் பண்ணி, † வில்லையும், பட்டயத்தையும், யுத்தத்தையும் தேசத்திலிராதபடிக்கு முறித்து, அவர்களைச் சுகமாய்ப் படுத்துக்கொண்டிருக்கப் பண்ணுவோம். * ஏசா. ௰௧, ௬. ௱ † சங்கீதம். ௪௬, ௰.

௰௯. * நித்திய விவாகத்திற்கென்று உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளுவோம், நீதியும், நியாயமும், கிருபையும், உருக்க இரக்கமுமாய் உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளுவோம். * சங். ௯௫, ௰. ௱ எபே. ௫, ௨௫. ௨௬.

௨௰. விசுவாசத்தாலே உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளுவோம், * நீ கர்த்தரை அறிந்துகொள்ளுவாய். * எரேமியா. ௩௧, ௩௩. ௩௪.

௨௧. அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால், நாம் மறுமொழி கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார், நாம் வானங்களுக்கு மறுமொழி கொடுப்போம், அப்போது அவைகள் பூமிக்கு மறுமொழி கொடுக்கும்.

௨௨. அப்போது பூமி தானியத்திற்கும், திராட்சப்பழ இரசத்திற்கும், எண்ணெய்க்கும் மறுமொழி கொடுக்கும், அப்போது இவைகள் எஸ்றேயேலுக்கும் மறுமொழி கொடுக்கும்.

௨௩. நாம் அவளை நமக்குப் பூமியிலே விதைப்பாடாக்கி, இரக்கம்பெறாதிருந்தவளுக்கு இரங்கி, * நம்முடைய சனமல்லாதிருந்ததற்கு, நீ நம்முடைய சனமென்று சொல்லுவோம், அது என் பராபரனேயென்று சொல்லுமென்றார். * உரோமர். ௯, ௨௫.

## ௩. அதிகாரம்.

[(௧) விபசாரியின் குமாரர் நிவர்த்தியினாலே, (௪) இஸ்ரவேலர் தாங்கள் முந்தினசீருக்குக் கொண்டுவரப்படுமுன்னமே அவர்களுடைய அழிவைக் காட்டினது.]

அந்நிய தேவர்களை நோக்கித் திராட்சப்பழ இரசமுள்ள பாத்திரங்களைச் சிநேகிக்கிறவர்களான இஸ்ரவேல் புத்திரர் பேரிலே கர்த்தர் வைத்திருக்கிற சிநேகத்தின்படியே, நீ பின்னும் போய், வேறொருத்தனால் சிநேகிக்கப்பட்டவளும், விபசாரியுமாய்ப் போன பெண்சாதியைச் சிநேகித்துக்கொண்டிருவென்று கர்த்தர் என்னோடே சொன்னார்.

௨. அப்போது நான் அவளை எனக்குப் பதினைந்து வெள்ளிக்காசுக்கும், ஒன்றரைக் கலம் வாற்கோதுமைக்கும் கொண்டு,

௩. அவளுடனே நீ வேசித்தனம்பண்ணாமலும், ஒருத்தனைச் சேர்ந்திராமலும் அநேக நாளாய் எனக்கிருப்பாயாக, உனக்கு நானுமிருப்பேனென்றேன்.

௪. ஏனென்றால், இஸ்ரவேல் புத்திரர் அநேக நாளாய் இராசாவில்லாமலும், பிரபுவில்லாமலும், பலியில்லாமலும், சிலையில்லாமலும், ஆசாரிய சால்வையும், சுரூபங்களுமில்லாமலுமிருப்பார்கள்.

௫. * பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் திரும்பித் தங்கள் பராபரனாகிய கர்த்தரையும், † தங்கள் இராசாவாகிய தாவீதையும் தேடிக் கர்த்தரண்டைக்கும், அவருடைய நன்மையண்டைக்குங் கடைசி நாட்களில் அஞ்சிவருவார்கள். * உரோ. ௰௧, ௨௫—௩௨. † எசேக். ௩௪, ௨௩. ௨௪.

## ௪. அதிகாரம்.

[(௧) சனத்தின் பாவங்களுக்கும், (௬) ஆசாரியர்களுக்கும், (௰௨) விக்கிரகத்தொழும்புகளுக்கும் விரோதமாக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். (௰௫) இஸ்ரவேலருடைய துன்பத்தினாலே யூதா எச்சரிக்கப்பட்டது.]

இஸ்ரவேல் புத்திரரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள். ஏனெனில், தேசக்குடிகளோடே கர்த்தருக்கு வழக்கிருக்கிறது. அதேனென்றால், தேசத்திலே உண்மையுமில்லை, தயவுமில்லை, பராபரனுடைய அறிவுமில்லை.

௨. பொய்யாணையிடுதல் பொய்சொல்லி, கொலைசெய்து திருடி விபசாரம்பண்ணி மிஞ்சிமிஞ்சிப்போகிறார்கள், இரத்தப்பழிகளோடே இரத்தப்பழிகள் சேர்கின்றன.

௩. இதினிமித்தம் தேசம் புலம்பும். அதில் குடியிருக்கிற அனைவோருங் கூட மிருகஜீவன்களும், ஆகாயத்துப் பறவைகளும் தொய்ந்துபோம், கடலின் மச்சங்களும் வாரிக்கொள்ளப்படும்.

௪. ஆகிலும் ஒருத்தனும் நியாயத்தைக் காண்பிக்கவும், ஒருத்தனும் அவர்களைக் கடிந்துகொள்ளவுங்கூடாது. ஏனெனில், உன் சனம் ஆசாரியனோடே வழக்காடுகிறவர்களைப்போலிருக்கின்றது.

௫. ஆகையால் பகலிலே இடறிவிழுவாய், இரவிலே உன்னோடேகூடத் தீர்க்கதரிசியும் இடறிவிழுவான், உன் தாயை நாசசங்காரம்பண்ணுவோம்.

௬. நம்முடைய சனம் அறிவில்லாமையினாலே சங்காரமாகிறது. ஏனெனில், நீ அறிவை வெறுத்தாய். ஆகையால், நீ நம்முடைய ஆசாரியனாயிராதபடிக்கு உன்னை நாமும் வெறுப்போம், நீ உன் பராபரனுடைய வேதத்தை மறந்தாய். ஆகையால், உன் பிள்ளைகளை நாமும் மறப்போம்.

௭. எத்தனைக்குப் பெருகினார்களோ அத்தனைக்கு நமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்கிறார்கள், அவர்களுடைய கனத்தைக் கனவீனமாக மாறப்பண்ணுவோம்.

அ. நம்முடைய சனம் பாவம் போக்கப்பலியிடுகி றதையவர்கள் தின்று இவர்களுடைய அக்கிரமத்தின்மேல் பசிதாகமாயிருக்கிறார்கள்.

கூ. ஆனதுகொண்டு * சனமும், ஆசாரியனுஞ்சரி, நாம் அவர்களை விசாரித்து அவர்களவழிகளையும், அவர்கள் கிரியைகளையும் அவர்கள்மேல் திரும்பப்பண்ணுவோம்.

* ஏசாயா. உச, உ.

ய. * அவர்கள் தின்று திருத்தியாகாதிருப்பார்கள். ஏனெனில் கர்த்தனை நோக்கிக்கொள்ளுதலைவிட்டுவிட்டார்கள். * ங. மோசே. உசா, உசா.

யக. வேசித்தனமும், திராட்சப்பழரசமும், மதுபானமும் இருதயத்தையயக்கும்.

யஉ. நம்முடைய சனம் தன் மரத்தைக்கேட்கிறது, தன்கட்டைதனக்குச் செய்தியையறிவிக்குமென்றிருக்கிறது. ஏனெனில், வேசித்தன ஆவி அவர்களை வழிதப்பித்திரியப்பண்ணிற்று, அவர்கள் தங்கள் பராபரனுக்குக் கீழ்ப்படியாமல் வேசித்தனம்பண்ணுகிறார்கள்.

யங. அவர்கள் பருவதங்களின் சிகரங்களில் பலியிட்டுமேடுகளிலே கர்வாலிமரங்களின் கீழும், புன்னைமரங்களின்கீழும், அரசமரங்களின்கீழும் அவைகளின் நிழல் நல்லதென்று தூபங்காட்டுகிறார்கள், ஆனதுகொண்டு உங்கள் குமாரத்திகள் வேசித்தனமும், உங்கள் மருமக்கள் விபசாரமும்பண்ணுகிறார்கள்.

யச. நாம் உங்கள் குமாரத்திகளை இவர்கள் வேசித்தனம்பண்ணுகிறதினிமித்தமும், உங்கள் மருமக்களை அவர்கள் விபசாரம்பண்ணுகிறதினிமித்தமும் விசாரியாதிருப்போமோ! ஏனென்றால், வேசிகளோடேகூட அவர்கள் விலகிப்போய்ப்பரஸ்திரீகளோடேகூடப் பலியிடுகிறார்கள், உணர்வில்லாதசனம் அதனால் சிக்கிக்கொண்டுவிழும்.

யரு. இஸ்ரவேலாகிய நீ சோரம்போனால், யூதாவாகிலும் அந்தத்தோஷத்திற்குள்ளாகாதிருப்பதாக, கில்காலுக்கு வராமலும், பெத்தாவேனிலேபோயேறிக் கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லாமலுமிருப்பீர்களாக.

யசா. ஏனெனில், இஸ்ரவேல்சனங் கொடுமையான கிடாரியைப்போலே யடங்காதிருக்கிறது, இப்போது கர்த்தர் அவர்களை விஸ்தாரமான வெளியிலே ஆட்டுக்குட்டியைப்போலே மேய்ந்தலையப்பண்ணுவார்.

யஎ. எப்பிராயீம் சனம் விக்கிரகங்களோடிணையாய்ப்போயிற்று, அதைப்போகவிடு.

யஅ. அவர்களுடைய மதுபானவெறிதெளிந்தும், சோரம் போகவே போகிறார்கள், அவர்களுடைய கேடயங்களானவர்கள் தாருங்களென்று இலச்சையான பொழிவைச் சிநேகிக்கிறார்கள்.

யகூ. காற்று அவர்களையவர்கள் செட்டைகளில் இறுக்கப்பிடிக்கும், அப்போது தங்கள் பலிகளால் வெட்கப்படுவார்கள்.

## ரு. அதிகாரம்.

[(க) இஸ்ரவேலில் ஆசாரியர்களும், சனமும், பிரபுக்களும். (யரு) குணப்படுகிறவரையில் அவர்களுடைய பாவங்களுக்காக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு.]

ஆசாரியர்களே, இதைக்கேளுங்கள், இஸ்ரவேல்வீட்டாரே, கவனியுங்கள், இராசாவின்வீட்டாரே செவிகொடுங்கள், ஏனெனில், இந்த நியாயவிசாரிப்பு உங்களுக்குச்செல்லும். அதேதென்றால், மிஸ்பாவுக்குக் கண்ணியும், தாபோரின்மேல் விரிக்கிற வலையுமானீர்கள்.

உ. தப்பான பலிகளையடிக்கிறதிலே ஆழமாயிறங்கியிருக்கிறார்கள். அவர்களெல்லாரையும் நாம் தண்டிக்கிறவராயிருப்போம்.

ங. எப்பிராயீமை நாம் அறிவோம். இஸ்ரவேல் நமக்குமறைவானதல்ல. எப்பிராயீமே, இப்போது சோரம்போனாயே. இஸ்ரவேல் தீட்டுப்பட்டதே.

ச. தங்கள் கிரியைகளைத் தங்கள் பராபரனண்டைக்குத் திரும்புவதற்கு நோக்காதிருந்தார்கள். ஏனெனில், * வேசித்தன ஆவி அவர்கள் உள்ளத்திலிருக்கிறது. கர்த்தனையறியார்கள். * ச, யஉ.

ரு. இஸ்ரவேலின் அகந்தையவர்கள் முகத்திற்குமுன்பாகச் சாட்சியிடுகிறது. ஆகையால் இஸ்ரவேலும், எப்பிராயீமுந் தங்கள் அக்கிரமத்தினால் இடறுண்டு விழுவார்கள். அவர்களோடேகூட யூதாவும் இடறுண்டு விழும்.

சா. அப்போது அவர்கள் கர்த்தனைத்தேடும்படிக்குத் தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுகளோடும்வந்தும் * கண்டுபிடியார்கள். அவர்களைவிட்டுவிலகினார். * வாக்கி. க,உஅ.

எ. கர்த்தருக்குவிரோதமாகத் துரோகம்பண்ணினார்கள். அதேதெனில், அந்நியபிள்ளைகளைப்பெற்றார்கள். இப்போது மாதப்பிறப்பு அவர்களையும், அவர்கள் பங்குபங்குகளையுங்கூடப் பட்சிக்கும்.

அ. கிபேயாவிலே எக்காளத்தையும், இராமாவிலே பூரிகையையும் ஊதுங்கள். பென்யமீன்கோத்திரத்தாரே, உங்களுக்குப் பின்புறமாகிய பெத்தாவேனிலே கதறுங்கள்.

கூ. தண்டிப்பின்நாளிலே எப்பிராயீம் பாழாம். நிச்சயமாய்வரப்போகிறதை இஸ்ரவேலின்கோத்திரங்களுக்குள்ளே அறிவிக்கிறோம்.

ய. யூதாவின் பிரபுக்கள் * எல்லைகளையொதுக்குகிறவர்களுக்கொப்பானார்கள். அவர்கள்மேல் நம்முடையசினத்தைத் தண்ணீரைப்போல ஊற்றிப்போடுவோம்.

* உ. மோசே. யக, யச. உஎ, யஎ.

௰௧. எபபிருயீமே, ஒடுகெதுணடு நியாயமா யநொறுககப்படடுபபோகிறுன. ஏனெனில, ஆகாத கறபனையை மனதாரப பினபறறிப போனுன.

௰௨. நாம எபபிருயீமுககுப பொட்டரிப பாகவும, யூதாவினவீட்டுககுச சொததைப பிடிபபாகவுமிருபபோம.

௰௩. எபபிருயீம தனவியாதியையும, யூதா தன காயததையுங கண்டபோது, எபபிரு யீம அசூரணடைககுபபோய யாரேப் இரா சாவணடைககு ஆளனுபபிறுன. அவனே வெனறுல உஙகளைக குணமாககவும, உஙக ளிலிருக்கிறகாயததை ஆரோககியமபணண வுங கூடாது.

௰௪. ஏனெனில, நாம எபபிருயீமுககுச சிங் கமாகவும, யூதாவினவீட்டாருககு இளஞ சிஙகமாகவுமிருபபோம. நாம நாமே பீறிப போட்டுபபோயவிடுவோம. தபபுவிபபாரில் லாமல எடுததுககொணடுபோவோம.

௰௫. அவர்கள தஙகள குறறஙகளையுணர்நது தமது முகததைத்தேடுமட்டும நாமபோய நமமுடைய தானததிறகுத திருமபுவோம. * தஙகளுககு இக்கட்டானகாலததிலே நம மைக கருததாயத தேடுவார்கள. * ஏசா. ௨௬, ௰௬.

## ௬. அதிகாரம்.

[(௧) மனநதிருமபததூணடுதல். (௪) அவ ர்களுடைய ஆகாமியததையும அககிரமத தையுங குறிதது முறையிடுதல.]

கர்ததரணடைககுததிருமபுவோமவாரு ஙகள. ஏனெனில, * அவர் நமமைப பீறிபபோட்டார். அவர் நமமைக குணமு மாககுவார். அடிததார். நமமுடைய காயங களைக கட்டுகிறவருமாயிருபபார். * ரு, ௰௪.

௨. இரணடுநாளுககுபபிறபாடு * நமமை உயிர்பபிபபார். மூன்றுமநாளிலே நமமை எழுபபுவார். அபபோது அவருககுமுனபாக பபிழைபபோம. * ரு. மோசே. ௩௨, ௩௯. ஏசேககி. ௩எ, அதி. ௩.

௩. அபபோது நாம அறிவடைநது கர்தத ரை அறியத தொடர்நதுபோவோம. விடி யறகால வெளுபபைப்போலே அவர் வெளி பபிரவேசிககுதல ஆயததப்பட்டிருககும மழையைப்போலே நிலததினமேல இறங குன பின்மாரியைபபோலத்தானே நமமண டைககுவருவார்.

௪. எபபிருயீமே, உனககெனனசெயவோ ம! யூதாவே,உனககெனனசெயவோம? உங கள சன்மார்ககம விடியறகாலததின மேக ததைபபோலவும, காலமே யகனறுபோய விடுகிற பனியைபபோலவுமிருககிறது.

ரு. ஆகையால தீர்ககதரிசிகளைககொணடு வெட்டுவிக்கிறேம. நமது வாயினவார்ததைகளை ககொணடு அவர்களைக கொனறுபோடுகி

றேம



றேம. அதினபிறகு உன நியாயஙகள வெளி சசததைபபோலிருககும.

௬. ஏனெனில, * பலியையலல, இரககத தையும, தகனபலிகளைப்பார்ககிலும, பரா பரனுடைய அறிவையும விருமபுகிறேம. * ௧. சாமு. ௰௫, ௨௨. மத. ௯, ௰௩. ௰௨, எ.

எ. அவர்களோவெனறுல, ஆதாமைபபோ ல உடனபடிக்கையைமீறி, அஙகே நமககு விரோதமாகத துரோகமபணணினுர்கள.

௮. கிலெயாத் அககிரமஞசெயபவர்களின பட்டணம, அது இரததக்காலடிகளாலமிதி ககப்பட்டிருககிறது.

௯. பறிகாரரினகூட்டஙகள ஒருததனுக குக்காததிருபபதுபோலேசீகேமுககுபபோ கிறவழியிலே கொலைகளைசசெயகிற ஆசாரி யரின கூட்டமிருககிறது, தோஷமானகாரி யஙகளையே செயகிறுர்கள.

௰. திடுககிடப்பட்த்தககககாரியததை இஸ்ர வேலவீட்டாரிலே கணடோம. அஙகே எப பிருயீமின வேசிததனமுணடு. இஸ்ரவேல தீட்டுபபட்டுபபோயிறறு.

௰௧. ஆகிலும நாம நமது சனததின சிறை யிருபபைததிருபபுமபோது, யூதா உனககு அறுபபுககாலததிறகுக்காரணமாயிருககும்.

## எ. அதிகாரம்.

[(௧) அபரிமிதமான பாவஙகளைககணடித தல. (௰௧) அவர்களுடைய மாயததைககுறி ததுவரும பராபரனுடைய உககிரம.]

நாம இஸ்ரவேலைக குணமாககு இருக கையில,எபபிருயீமின அககிரமமும், சமாரியாவின பொலலாபபுகளும வெளிப்ப டுகிறது. ஏதெனறுல, வஞசனைசெயகிறுர் கள. உளளே திருடனவருகிறுன. வெளியே பறிகாரரின கூட்டஙகொளளையிடுகிறது.

௨. தஙகளபொலலாபபையெலலாம நினை ததிருககிறேமெனறு அவர்கள தஙகளிருத யததிற சிநதிககிறதிலலை. இபபோதும அவ ர்களுடையகிரியைகள அவர்களைச சூழநது கொணடு நமது முகததிறகெதிரேயிருககி றது.

௩. இராசாவைத தஙகள பொலலாபபினு லும, பிரபுககளைத தஙகளபொயகளினுலுஞ சநதோஷபபடுததுகிறுர்கள.

௪. அவர்களெலலாரும விபசாரககளளர், அபபஞசுடுகிறவனுல எரியிடப்படுகிற அடு பபைப்போலிருககிறுர்கள. மாவைப பிசை நததுமுததறககொணடு அது உபபிப்போகுமட்டும அனலையெழுபபாமல ஓயநதிருககி றுன.

ரு. நமமுடைய இராசாவின நாளெனறு சொலலிப பிரபுககளவனைத திராட்சபபழ இரசததுருததிகளால மெலிதலாககுகிறுர் கள. சரசககாரரோடேகூட அவன தன கையைப நீட்டுகிறுன.

௬. அவர்கள் பதிவிருக்குந்தருவாயிலோ வென்றால், தங்களிருதயத்தை யடுப்பைப் போலவைக்கிறார்கள். அவர்களில் அடுப்பு மூட்டுகிறவன் இராமுழுதுந் தூங்குகிறான். காலையிலேயோவென்றால், அது சுவாலையிடுகிற அக்கினியாயெரிகிறது.

௭. அவர்களெல்லாரும் அடுப்பைப்போல அனலாகித் தங்கள் நியாயாதிபதிகளைப் பட்சிக்கிறார்கள். அவர்களுடைய இராசாக்களெல்லாரும் விழுகிறார்கள். அவர்களில் நம்மைநோக்கிக் கூப்பிடுகிறவனில்லை.

௮. எப்பிராயீம், சனசனங்களோடே கலந்தான். எப்பிராயீம் திருப்பப்படாதேபோன அப்பம்.

௯. அந்நியர் அவனுடைய பலத்தைத் தின்னுகிறார்கள். அவனோ அதையறியான். நரையும் அவனில் தெளித்திருக்கிறது. அவனோ அதை யறியான்.

௰. இஸ்ரவேலின் அகந்தை அவர்கள் முகத்திற்கு முன்பாகச் சாட்சியிட்டாலும், அவர்கள் தங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பாமலும், இதிலெல்லாம் அவரைத் தேடாமலும்போகிறார்கள்.

௰௧. எப்பிராயீம் பேதையான புறாவைப் போலிருக்கிறான். புத்தியில்லை. எகிப்தியனைக் கூப்பிடுகிறார்கள். அசீரியனண்டைக்கும் போகிறார்கள்.

௰௨. அவர்கள்போனால், * நமது வலையை அவர்கள்மேல் வீசுவோம். அவர்களை ஆகாயத்துப் பறவைகளைப்போலே கீழே விழப் பண்ணுவோம். அவர்களுடைய சபையிற் கேட்கப்பட்டதின்படியே யவர்களைத் தண்டிப்போம். * ௨. இராசா. ௰௭, ௬. ௫.

௰௩. அவர்கள் நம்மைவிட்டு அலைந்து திரிகிறபடியினாலே அவர்களுக்கையோ, அவர்களுக்குக் கேடுவரும். ஏனெனில், நமக்கு விரோதமாக இரண்டகம்பண்ணினார்கள். நாம் அவர்களை மீட்டிருந்தும் அவர்கள் நமக்கு விரோதமாகப் பொய்களைப் பேசுகிறார்கள்.

௰௪. அவர்கள் தங்கள் படுக்கைகளில் அலறுகிறபோது தங்களிருதயத்திலே நம்மை நோக்கிக்கூப்பிடுகிறதில்லை. அவர்கள் தானியத்திற்காகவும், இராட்சப்பழ இரசத்திற்காகவுங்கூடி நம்மைவெறுத்து விலகிப்போகிறார்கள்.

௰௫. நாம் தண்டித்தோம். அவர்களுடைய புயங்களைத் திடப்படுத்தவும் பண்ணினோம். ஆகிலும் நமக்கு விரோதமாகப் பொல்லாப்பு நினைக்கிறார்கள்.

௰௬. திரும்புகிறார்கள். ஆனால் உன்னதமானவரண்டைக்கல்ல, * கள்ளவில்லுக்கொப்பாயிருக்கிறார்கள். அவர்களுடைய பிரபுக்கள் தங்கள் நாவினுடைய சினத்தினிமித்தம் பட்டயத்தால்விழுவார்கள். இது எகிப்துதேசத்தைத்தொட்டு அவர்களுக்குவருநிந்தை. * சங்கீ. ௭௮, ௫௭.

## ௮. அதிகாரம்.

[(௧)(௰௨) அவர்களுடைய அவபத்திக்காகவும் (௫) விக்கிரகத்தொழும்புக்காகவும் அழிவு வருமென்று பயமுறுத்தப்பட்டது.]

உன் வாயிலே எக்காளத்தை வைத்துக்கொள், யூதாவீட்டார் நம்முடைய உடன்படிக்கையைமீறி நம்முடைய நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாகத் துரோகம்பண்ணினபடியினாலே, அவர்கள்மேற் கழுகைப்போலே பாய்ந்துவருகிறான். * ஏசா. ௫௮, ௧.

௨. எங்கள் பராபரனே, உம்மையறிந்திருக்கிறோமென்று இஸ்ரவேலர் கூப்பிடுவார்கள்.

௩. ஆனால் இஸ்ரவேலர் நன்மையையொழித்துவிட்டார்கள். சத்துரு அவர்களைத்தொடருவான்.

௪. அவர்கள் இராசாக்களை வைத்துக்கொண்டார்கள். ஆனால் நம்மாலேயல்ல, பிரபுக்களை வைத்துக்கொண்டார்கள். ஆனால் நாமறியோம், அவர்கள் வேரறுப்புண்டுபோகும்படிக்குத் தங்கள் வெள்ளியினாலும், தங்கள் பொன்னினாலுந் தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்வித்தார்கள்.

௫. சமாரியாவே, உன் கன்றுக்குட்டி உன்னை யொழித்துவிடுகிறது. நம்முடைய கோபம் அவர்கள்மேல் மூண்டது, எத்தனை நாள் சுத்தாங்கமடையமாட்டாதிருப்பார்கள்!

௬. ஏனெனில், அது தானும் இஸ்ரவேலருடைய செய்கை, தட்டான் அதைச்செய்தான், அது தேவனல்லவே, ஏனென்றால் சமாரியாவின் கன்றுக்குட்டி துண்டுகளாகப் போம்.

௭. ஏனெனில் காற்றை விதைத்துப் பெருங்காற்றை யறுக்கிறார்கள். விளைச்சல் அவர்களுக்கில்லை. முளையானது மாவைக்கொடுக்கிறதாகுவதாது, அல்லவென்றுவந்தாலும் அந்நியர் அதை விழுங்குவார்கள்.

௮. இஸ்ரவேல் விழுங்கப்படுகிறது, இனிப் புறசாதிகளுக்குள்ளே * விரும்பப்படாத பாத்திரத்தைப்போலிருப்பார்கள். * சங்கீதம். ௩௧, ௰௩.

௯. ஏனெனில், அவர்கள் தனித்துத்திரிகிற காட்டுக்கழுதையைப்போல * அசீரியனண்டைக்குப்போயேறினார்கள். எப்பிராயீமர் சிநேகிதரைக் கூலிபொருந்திக்கொண்டார்கள். ௫, அதி, ௰௩.

௰. ஆனால் அவர்கள் புறசாதியாரைக் கூலிபொருந்திக்கொண்டாலும், இப்போது நாம் இவர்களைக் கூட்டுவோம், பிரபுக்களின் இராசாசுமத்துஞ் சுமையினாலே அவர்கள் குறுகிப்போகத்துவக்குவார்கள்.

நூஉ

௰௧. ஏனெனில், எப்பிராயீமர் பாவஞ்செய்வதற்கான பலிபீடங்களைப் பெருகப்பண்ணினார்கள், பலிபீடங்கள் அவர்களுக்குப் பாவஞ்செய்வதற்காயின.

௰௨. நம்முடைய வேதத்தின் மகத்துவங்களை அவர்களுக்கெழுதிக்கொடுத்தோம்: அவைகள் அந்நியகாரியமாக எண்ணப்பட்டன.

௰௩. நமக்குச்செலுத்தும் பலிகளின் மாம்சத்தை யவர்கள் பலியிட்டுப்புசிக்கிறார்கள். கர்த்தர் அவர்கள்மேற் பிரியமாயிரார், இவ் அவர்களுடைய அக்கிரமத்தை நினைத்து அவர்கள் பாவத்தை விசாரிக்கும்போதோவெனில், அவர்கள் எஜிப்துக்குத்திரும்பிக் கொள்ளுகிறார்கள்.

௰௪. ஏனெனில், இஸ்ராயேல் தன்னையுண்டாக்கினவரைமறந்து ஆலயங்களைக்கட்டுகின்றது. யூதா அரணான பட்டணங்களைப் பெருகப்பண்ணுகின்றது. ஆனால், அதின் பட்டணங்களில் * அக்கினியையனுப்புவோம், அது அவைகளின் அரமனைகளைப் பட்சிக்கும். * எரே. ௰௭, ௨௭. ஆமோஸ். ௨, ௫.

## ௯. அதிகாரம்.

[இஸ்ராயேலின்பாவங்களுக்காகவும், விக்கிரகத்தொழும்புக்காகவும் அவர்களுக்குவருஞ் சிறுமையும், சிறையிருப்பும்.]

இஸ்ராயேலே மகிழ்ச்சியாயிராதே, சனசதனங்களைப்போலக் களிகூராதே. ஏனென்றால், * உன் பராபரனைவிட்டுச்சோரம்போனாய், தானியப்போரடிக்கிற சகல களங்களிலும் பணயத்தைச்சிநேகிக்கிறாய். * சங்கீதம். ௭௩, ௨௭.

௨. போர்க்களமும், ஆலையும் அவர்களைப் பிழைப்பூட்டுவதில்லை. திராட்சப்பழ இரசம் அவர்களுக்குப் பிசகிப்போம்.

௩. அவர்கள் கர்த்தருடையதேசத்திற்குடியிருப்பதில்லை, எப்பிராயீமர்திரும்ப எஜிப்திற்குப்போவார்கள், அசூரியாவிலுந் தீட்டுள்ளதைப் புசிப்பார்கள்.

௪. அவர்கள் கர்த்தருக்குத் திராட்சப்பழ இரசத்தை ஊற்றுவதுமில்லை. அவருக்கு அங்கீகரிப்பாயிருப்பதுமில்லை. அவர்களுடைய பலிகள் அவர்களுக்குப்புலம்புகிறவர்களின் அப்பத்தைப்போலிருக்கும். அதிற் புசிக்கிறயாவருந் தீட்டுப்படுவார்கள். ஏனெனில், அவர்களுடைய அப்பம் அவர்கள் ஆத்துமத்திற்காகக் கர்த்தருடைய வீட்டில்வருவதில்லை.

௫. ஆசரிப்பின் நாளிலும், கர்த்தருடைய பண்டிகையின்நாளிலும் என்ன செய்வீர்கள்.

௬. ஏனெனில், இதோ பாழ்க்கடிப்பினாற் போய்விட்டார்கள், எஜிப்து அவர்களைச்சேர்த்துக்கொள்ளும், மோப் பட்டணம் அவர்களையடக்கம்பண்ணும், அவர்களுடையவெள்ளியிருந்த இச்சிக்கப்பட்டத்தக்கவிடங்களைக் காஞ்சொறிகள் சுதந்தரித்துக்கொள்ளும், அவர்களுடைய தாவரங்களில் முட்செடிகள் முளைக்கும்.

௭. விசாரிப்பின் நாள்களவரும், நீதிசரிக்கட்டும் நாள்கள்வரும் என்பதை இஸ்ராயேலர் அறிந்துகொள்ளுவார்கள், உன்னுடைய மிகுதியான அக்கிரமத்தினிமித்தமும், மிகுதியான பகையினிமித்தமும், தீர்க்கதரிசிகள் பயித்தியக்காரரும், ஆவியின்மனுஷர் பிரமைகொண்டவர்களுமாயிருக்கிறார்கள்.

௮. எப்பிராயீமின்காவற்காரர் என்பராபரனோடேயிருந்து நிற்கிறார்கள், தீர்க்கதரிசி தன்வழிகளெல்லாங் குருவிபிடிக்கிறவனின் கண்ணியாகவும், தன்பராபரனின் வீட்டிலே பகையாளியாகவுமிருக்கிறான்.

௯. * கிபெயாவின் நாள்களில் நடந்தது போலேகெட்டிலே அமிழ்ந்துபோகிறார்கள். அவர்களுடைய அக்கிரமத்தை நினைப்பார், அவர்களுடைய பாவங்களை விசாரிப்பார். * நீதிக்கா. ௰௯, ௰௪. ழு ௨௰, அதி. ௪. ழு

௰. வனாந்தரத்தில் திராட்சக்குலைகளைப்போல இஸ்ராயேலைக் கண்டுபிடித்தோம், அத்திமரத்தில் முந்தினவிளைச்சலைத் தந்த முதற்கனியைப்போல உங்கள் பிதாக்களைக்கண்டோம். ஆனாலவர்கள் * பேகோர் பேல்போகாலண்டைக்குப்போய் இலச்சைக்கென்று பிரிந்து தாங்கள் சிநேகித்தவைகளுக்கொத்த அருவருப்புகளானார்கள். * ௪. மோசே. ௨௫, ௩. ௫.

௰௧. பிறப்பும், உண்டாயிருப்பும், கெர்ப்பந்தரிப்புமில்லாமல் எப்பிராயீமருடைய மகிமை பறவையைப்போலப் பறந்துபோயவிடும்.

௰௨. அவர்கள் தங்கள் பிள்ளைகளைவளர்த்தாலும், அவர்களுக்கு மனுஷர் இராதபடிக்கு அவர்களைப் பிள்ளைகளற்றவர்களாக்குவோம். ஆனால், நாம் அவர்களைவிட்டுப்போகையில் அவர்களுக்கும் ஐயோ.

௰௩. நாம் எப்பிராயீமைத் தீருவின் திசைமட்டுமிருக்கிறபடியேபார்க்கிறபோது அது நல்லதாவரமான தலத்திலே நாட்டப்பட்டிருக்கிறது. ஆனால், எப்பிராயீமர் தங்கள்குமாரரைக் கொலைசெய்கிறவனண்டைக்குக்கொண்டுபோய்விடுவார்கள்.

௰௪. கர்த்தாவே நீர் அவர்களுக்குக்கொடுப்பதைக்கொடும், அவர்களுக்கு விழுந்துபோகிற கெர்ப்பத்தையும், பாலற்றமுலைகளையுங்கொடும்,

௰௫. கில்காலிலே அவர்களுடைய பொல்லாப்பெல்லாம் நடக்கும், அங்கேதான்நடக்கிற அவர்கள் கிரியைகளுடைய பொல்லாப்பினிமித்தம் அவர்களைப்பகைத்திருக்கிறோம். அவர்களை நமது முகத்தைவிட்டுத்துரத்துவோம், இனியவர்களைச் சிநேகியோம்,

அவர்களுடைய பிரபுக்களெல்லாரும் அகங்காரிகள்.

௰௬. எப்பிராயீம் வெட்டுண்டது. அதின்வேர் உலர்ந்துபோயிற்று, கனிகொடாதேபோவார்கள், அவர்கள் பிள்ளைகளைப்பெற்றாலும் அவர்களுடைய கெர்ப்பத்தின்விருப்பமான கனிகளைக்கொன்றுபோடுவேன்.

௰௭. என் பராபரன் அவர்களை வெறுத்து விடுவார். ஏனென்றால், அவருக்குச்செவிகொடாதேபோனார்கள், சாதிகளுக்குள்ளே அலைகிறவர்களாயிருப்பார்கள்.

## ௰. அதிகாரம்.

[இஸ்ரவேலுடைய அவபத்திக்காகவும், விக்கிரகத்தொழும்புக்காகவும் அவர்கள் கண்டிக்கப்பட்டுப் பயமுறுத்தப்பட்டது.]

இஸ்ரவேல் பிரயோசனமில்லாத திராட்சச்செடியானது, கனி அதற்கொத்திருக்கிறது, தன் கனியின் திரளுக்குச்சரியாகப் பலிபீடங்களைத் திரளாக்கிறது, தங்கள் தேசத்தின் நேர்த்திக்குச்சரியாகச் சிலைகளை நேர்த்தியாக்கிறார்கள்.

௨. அவர்கள் இருதயம் அவர்களுக்கிச்சகம்பேசுகிறது, இப்போது குற்றஞ்சுமத்தப்படுவார்கள், இவர் அவர்கள் பலிபீடங்களை மூளியாக்கி, அவர்கள் சிலைகளைப் பாழாக்கடிப்பார்.

௩. ஏதென்றால், நாம் கர்த்தருக்குப்பயப்படாதேபோனபடியினாலே நமக்கு இராசாவில்லை. இராசாவிருந்தாலும் நமக்காக என்னசெய்வானென்று இனிச்சொல்லுவார்கள்.

௪. பொய்யாணையிடுகிற வார்த்தைகளைச்சொல்லி, உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்கள், ஆகையால் வயல்வெளியின்படைச்சால்களில் நஞ்சுக்கொத்த நியாயத்தீர்ப்பு மூளைக்கும்.

௫. சமாரியாவின் குடிகள் பெத்தாவேனிலுள்ள கன்றுக்குட்டியினிமித்தந் திகிலடைவார்கள். ஏனென்றால், அதற்காகக் களிகூர்ந்த அதின் சனமும், அதின் பூசாரிகளும், அதினுடைய மகிமையதைவிட்டு நீங்கிப்போயிற்றென்று அதற்காகத் துக்கங்கொண்டாடுவார்கள்.

௬. அதுவும் அசூரியாவிலே யாரேப் இராசாவுக்குக் காணிக்கையாகக் கொண்டுபோகப்படும். இலச்சை எப்பிராயீமைப்பிடிக்கும், இஸ்ரவேல் தன் ஆலோசனையினாலே வெட்கப்படும்.

௭. தண்ணீரின்மேலிருக்கிற நுரையைப் போலச் சமாரியாவின் இராசா அதம்பண்ணப்படுவான்.

௮. இஸ்ரவேலுடைய பாவமாகிய ஆபேனின் மேட்டிடைகள் அழிக்கப்படும், முட்செடிகளும், முட்பூண்டுகளும் அவர்கள் பலிபீடங்களின்மேல் முளைக்கும், * பருவதங்களைப்பார்த்து எங்களை மூடுங்களென்றும், குன்றுகளைப்பார்த்து, எங்கள்மேல் விழுங்களென்றுஞ்சொல்லுவார்கள். * லூக். ௨௰, ௩௰. அறிவிப்பு. ௬, ௰௬.

௯. இஸ்ரவேலே * கிபேயாவின் நாள்களைத்துவக்கிப் பாவஞ்செய்துவந்தாய், கிபேயாவிலே அக்கிரமக்காரர்மேல்வந்த யுத்தங்களைக்கிட்டுவதில்லையென்று அந்தநிலையிலே நிற்கிறார்கள். * நீதிக்காரர். ௨௰, ௰௨. ௰௩.

௰. சனசதளங்கள் அவர்களுக்கு விரோதமாகக்கூடித்தங்கள் இரண்டுபடைச்சால்களிற்போக அவர்களைப்பிணைக்கும்போது, நமக்குச்சித்தமாகும்வேளையிலே அவர்களைத்தண்டிப்போம்.

௰௧. எப்பிராயீம் போரடிக்கப்பழகினதும், விரும்புகிறதுமான கன்றுக்குட்டி, ஆனால் நாம் அதின் அந்தமான கழுத்தின்மேல்நுகத்தடியை வைப்போம். எப்பிராயீமை ஏர்பூட்டி ஓட்டுவோம், யூதா உழுவான், யாக்கோபு அதற்குப்பரம்படிப்பான்.

௰௨. உங்களுக்கு * நீதிக்கென்று விதை விதையுங்கள். தயவுக்கொத்ததாய் அறுப்பறுங்கள். பயிர் நிலத்தையுங்களுக்குப்புதிதாயப்பண்படுத்துங்கள். ஏனென்றால், கர்த்தர்வந்து உங்களுக்கு † நீதியை வருஷிக்கப்பண்ணுமட்டும் ‡ அவரைத்தேடக்காலமாயிருக்கின்றது. * கலாத்தியர். ௬, ௭. அ. † ஏசா. ௪௫, அ. ‡ ஏசா. ௫௫, ௬.

௰௩. ஆகாததியத்தை உழுதீர்கள், அநியாயத்தை அறுத்தீர்கள், பொய்யின்கனிகளைப்புசித்தீர்கள். ஏனென்றால், உன்வழியையும், உன்பராக்கிரமசாலிகளின் திரளையும் நம்பினாய்.

௰௪. ஆகையால், உன் சனசதளங்களில் அமளியெழும்பும், பிள்ளைகளின்மேல் தாய் சதைத்துப்போடப்பட்ட யுத்தநாளிலே சால்மான் பேத்தார்பேலை அழித்ததுபோலே உன்னுடைய எல்லா அரண்களும் அழிந்துபோடப்படும்.

௰௫. பேத்தேல் உங்கள் பொல்லாப்புடையதோஷத்தினாலே இப்படிக்கொத்ததையுங்களுக்குண்டுபண்ணும், அதிகாலமே இஸ்ரவேலின் இராசா சங்கரிக்கப்படவே சங்கரிக்கப்படுவான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய நன்மையைக்குறித்து இஸ்ரவேலின் நன்றியில்லாமையும், (௫) அவருடைய நியாயத்தீர்ப்பும், (௮) அவர்களுக்குண்டாகிய பராபரனுடைய இரக்கமுஞ்சொல்லப்பட்டது.]

இஸ்ரவேல் இளைஞனாயிருக்கிறபோது அவனை நாம் சிநேகித்தோம், * எகிப்திலிருந்து நம்முடைய குமாரனை வரவழைத்தோம். * மத்தேயு. ௨, ௰௫.

௨. அவர்கள் தங்களை யழைக்கிறவர்களின் முகத்தை விலகிப்போய்விட்டார்கள், பாகால்களுக்குப் பலியிட்டுச் சுரூபங்களுக்குத் தூபங்காட்டினார்கள்.

௩. நாம் எப்பிராயீமனை அவர்கள் கைகளைப் பிடித்து மெதுவாக நடத்தினோம், ஆனால், நாம் தங்களைக் குணமாக்குகிறவரென்றறியாதே போனார்கள்.

௪. மனுஷரைக் கட்டியிழுக்கிற அன்பின் கயிறுகளாலே நாம் அவர்களையிழுத்து அவர்கள் கன்னங்களின்மேலிருந்த நுகத்தடியை எடுத்துப்போடுகிறவரைப்போலே யவர்களுக்கிருந்து அவர்களண்டைக்குச் சாய்ந்து ஆகாரங்கொடுத்தோம்.

௫. அவன் எஜிப்த்து தேசத்திற்குத் திரும்பிப்போவதில்லை, அசூர்தான் அவனுடைய இராசா. ஏனெனில், மனந்திரும்பமாட்டோமென்கிறார்கள்.

௬. ஆகையால், அவர்களுடைய ஆலோசனைகளினிமித்தமாகப் பட்டயம் அவர்கள் பட்டணங்களுக்குட் பாய்ந்து அவர்கள் தாப்பாள்களை நிர்மூலம்பண்ணி அவர்களைப் பட்சிக்கும்.

௭. நமது சனம் நம்மைவிட்டு விலகுகிற மாறுபாட்டைப் பற்றிக்கொண்டேயிருக்கின்றது, அதை யுன்னதமானவரண்டைக்கு வரவழைத்தாலும் ஒருத்தனும் எழும்பான்.

௮. எப்பிராயீமே, நாம் உன்னையென்ன செய்யவேண்டும், இஸ்ரவேலே, உன்னை நாம் ஒப்புக்கொடுக்கவேண்டுமோ! நாம் உன்னை * ஆதாமைப்போலாக்கி உன்னைச் செபோயீமைப்போல வைப்பதெப்படி! † நம்முடைய இருதயம் நமக்குள் திரும்பிக்கொள்ளுகின்றது, நம்முடைய பரதாபங்கள் ஏகமாய்ப் பொங்குகின்றன. * ௫. மோசே. ௨௯, ௨௩. † எரேமியா. ௩௧, ௨௰.

௯. நமது கோபத்தினுடைய உக்கிரத்தின்படியே செய்யாதிருப்போம், எப்பிராயீமை யழிக்கத் திரும்பிக்கொள்ளாதிருப்போம். ஏனென்றால், நாம் மனுஷனாயிராமற் பராபரனாயிருக்கிறோம், நாம் உன் நடுவிற் பரிசுத்தமுள்ளவர். ஆகையாலப்படிப் பட்டணத்திற்கு விரோதமாக வரோம்.

௰. கர்த்தரைப் பின்செல்லுவார்கள், அவர் சிங்கத்தைப்போலே கெர்ச்சிப்பார், அவர் கெர்ச்சிக்கும்போது மேற்குத் திசையார் நடுங்கிவருவார்கள்.

௰௧. எஜிப்த்திலிருந்து குருவிகளைப்போலவும், அசூரின் தேசத்திலிருந்து புறாக்களைப்போலவும் நடுங்கிவருவார்கள், அப்போது அவர்களை யவர்கள் வீடுகளிற் குடியிருக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.



## ௰௨. அதிகாரம்.

[(௧) எப்பிராயீமையும், யூதாவையும், யாக்கோபையுங் கண்டித்தது. (௩) முந்தின தயவினாலே மனந்திரும்புதலுக்குத் தூண்டினது. (௭) எப்பிராயீமின் பாவத்தினாற் பராபரனுக்குக் கோபமூண்டது.]

எப்பிராயீமர் பொய்யாகவும், இஸ்ரவேல் வீட்டார் கபடாகவும், நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள், யூதாவோவென்னில் இன்னம் பராபரனோடே யாண்டு பரிசுத்தவான்களோடே யுண்மையாயிருக்கின்றது.

௨. எப்பிராயீம் காற்றை மேய்ந்து கொண்டற்காற்றைப் பின்தொடருகின்றது, நாள்தோறும் பொய்யையும், கேட்டையும் வர்த்திக்கப்பண்ணி அசூரோடே உடன்படிக்கைபண்ணுகிறார்கள், எஜிப்த்துக்கும் எண்ணெய்கொண்டுபோகப்படுகின்றது.

௩. யூதாவோடுங் கர்த்தருக்கு வழக்கிருக்கின்றது, அவர் யாக்கோபின் வம்சத்தை யதின் வழிகளுக்குத் தக்கதாக விசாரிக்கப்போகிறார், அதின் கிரியைகளுக்குத் தக்கதாக அதற்கு நீதியைச் சரிக்கட்டுவார்.

௪. அவனோவென்றால், * தாயின் கெர்ப்பத்திலே தன் சகோதரன் குதிகாலைப் பிடித்ததுமல்லாமல், † தன் மன இடுக்கத்திலே பராபரனோடே பிரபுவாய்ப் போராடினான்.
* ௧. மோ. ௨௫, ௨௬. † ௧. மோ. ௩௨, ௨௪. ௨௫.

௫. அவன் தூதனானவரோடே பிரபுவாய்ப் போராடி மேற்கொண்டான், அழுது இவரை நோக்கிக் கெஞ்சினான், பேத்தேலிலே யிவர் அவனைக் கண்டு சந்தித்து அவ்விடத்திலும் நம்மோடே பேசினார்.

௬. கர்த்தராகிய அவர் சேனைகளுடைய பராபரன் * கர்த்தரென்பது அவருடைய நாமசங்கீர்த்தனம். * ௨. மோ. ௰௫, ௩.

௭. இப்போதும் உன் பராபரனண்டைக்குத் திரும்பு, தயவையும், நியாயத்தையுங் கைக்கொண்டு நித்தியம் உன் பராபரனை நம்பிக்கொண்டிரு.

௮. கானானியனாயிருக்கிறான், கள்ளத்தராசு அவன் கையிலிருக்கின்றது, இடுக்கண் செய்ய விரும்புகிறான்.

௯. ஆனால் யெய்தான், ஐசுவரியமடைந்தேன், எனக்கு ஆஸ்தியகப்பட்டது. ஆனால் நான் பிரயாசமாய்த் தேடினதிலெல்லாம் பாவமாகிய அக்கிரமம் என்னிற் கண்டுபிடிக்கப்படுவதில்லையென்று எப்பிராயீம் சொல்லுகின்றது.

௰. நாமோவென்றால், உன்னை எஜிப்த்து தேசத்திலிருந்து அழைத்துவந்தது முதற்கொண்டு உன் பராபரனாகிய கர்த்தர். சவைக்கூட்டமான நாள்களுக்கொப்பாக இன்னம்

உன்னைக் கூடாரங்களில் தாபரிக்கப்பண்ணுவோம்.

௰௧. அப்படியே தீர்க்கதரிசிகளோடே சொன்னோம், நாம் அநேகந் தரிசனங்களைக் கட்டளையிட்டுத் தீர்க்கதரிசிகளைக்கொண்டு அதையுவமைகளாற் காண்பித்தோமே.

௰௨. கிலெயாத் அக்கிரமத்தலமோ! ஆம் அபத்தராளர்கள், கில்காலிலே மாடுகளைப் பலியிடுகிறார்கள். அவர்களுடைய பீடங்கள் வயல்களின் தலைகளிலிருக்கிற கற்குவியல்களைத்தனையுமாயிருக்கின்றது.

௰௩. யாக்கோபென்பவன் * சீரியர் நாட்டுக்கோடிப்போய இஸ்ரவேல் † ஒரு பெண்ணுக்காகப் பணிவிடைசெய்து, ஒரு பெண்ணுக்காக ஆடுமேய்த்தான். * ௧. மோ. ௨௮, ௫. † ௧. மோசே. ௨௯, ௨௰.

௰௪. பிறகாலத்திலோவென்றும் கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியைக்கொண்டு இஸ்ரவேலை எகிப்திலிருந்தேறிவரப்பண்ணினார், தீர்க்கதரிசியைக்கொண்டு காக்கப்பட்டார்கள்.

௰௫. எப்பிராயீமோவென்றால், அவனமிகவும் மனமடிவாகவினத்திலே யவருக்குக் கோபமுண்டாக்கிறது. ஆகையால், அதின் ஆண்டவர் அதின் இரத்தப்பழிகளையதின்மேல நிறுத்தி அது செய்த நிந்தையையதின்மேலே திருப்புவார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) விக்கிரகத்தொழுமபினால் எப்பிராயீமின் மகிமைகுறைந்தபோனது. (௫) எப்பிராயீயரின் கொடூரத்திறகாகவரும் பராபரனுடையகோபம். (௯) பராபரன் இரக்கஞ்செய்வோமென்றவாக்குத்தத்தம். (௰௫) கலகத்தைக்குறித்த நியாயத்தீர்ப்பு ]

எப்பிராயீம் கோத்திரந் திடுக்கிடப்பட்டத்தக்கவிதமாய்ப்பேசினபோது அதின்மேல இஸ்ரவேலிலே நேரஞ்சுமந்தது, அது பாகாலானவ குற்றஞ்சமபாதித்துக்கொண்டபோது அதுமடிந்தது.

௨. இப்போதும் அவர்கள் பாவஞ்செய்கிறதிலே தொடர்ந்துபோய்த் தங்கள் வெள்ளியினால் வார்ப்பித்த சுருபங்களையும், தங்கள் புத்திக்கேற்ற விக்கிரகங்களையுந் தங்களுக்குண்டுபண்ணினார்கள், இவைகளெல்லாந் தட்டாருடையசெய்கை, மனுஷரைப்பலியிடுகிறவர்கள் கன்றுக்குட்டிகளைமுத்திசெய்யலாமென்று அவைகளைக்குறித்துச்சொல்லுகிறார்கள்.

௩. ஆகையால், அவர்கள் விடியற்காலத்து மப்பைப்போலவும், காலமேயிருந்து எழும்பிப்போகிற பனியைப்போலவும், பெருங்காற்று * களத்திலிருந்து பறக்கடிக்கிறபதரைப்போலவும், புகைச்சாலகத்திலேறிப்போகிற புகையைப்போலவுமிருப்பார்கள். * சங்கீ. ௧, ௪.

௪. நாமோவென்றால, உன்னை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துவந்ததுமுதற்கொண்டு * உன் பராபரனாகிய கர்த்தர், ஆகையால், நீ நம்மைத்தவிரவேறேதேவனையறியவொண்ணாதே, நம்மைத்தவிர இரட்சகரில்லையே. * ௨. மோசே. ௨௰, ௨.

௫. நாம் உன்னையக்காவறட்சியானதேசமாகிய வனாந்தரத்திலேயறிந்துகொண்டோம். * ௫ மோசே. ௩௨, ௰.

௬. * தங்களுக்கிருந்த மேய்ச்சலினாலே திருத்தியானார்கள், திருத்தியான பிறபாடு அவர்களிருதயமமேட்டிமையாயிற்று, ஆனதுகொண்டு நம்மை மறந்தார்கள். * ௫. மோசே. ௩௨, ௰௫. ௰௬.

௭. ஆகையால், அவர்களுக்குச் * சிங்கத்தைப்போலிருப்போம், சிவிங்கையைப்போல வழியருகேபதிவிருப்போம். * ௫, ௰௪.

௮. குட்டிகளைப்பறிகொடுத்த கரடியைப்போல நாம அவர்களைச்சந்தித்து அவர்கள் நெஞ்சாங்குலையைக்கிழித்து அவர்களையங்கேயொரு சிங்கத்தைப்போலப் பட்சித்துவிடுவோம், வெளியின் மிருகங்கள் அவர்களைப்பீறிப்போடும்.

௯. இஸ்ரவேலே நீயுன் சகாயமாகிய நமக்குவிரோதமானது உன்னுடையகேடு.

௰. * எனக்கு இராசாவையும, பிரபுக்களையுங்கட்டளையிடும் என்றாயே, இப்போதும் உன்னுடைய எல்லாப் பட்டணங்களிலும், உன்னைக்காப்பாற்றும்படிக்கு உன் இராசா எங்கே! உன் நியாயாதிபதிகளெங்கே? * ௧. சாமு. ௮, ௫. ௬.

௰௧. நமது கோபத்திலே உனக்கு இராசாவைக்கொடுத்தோம், நமது சினத்திலே அவனையெடுத்தோம்.

௰௨. எப்பிராயீமின் அக்கிரமங்கட்டி அதின் பாவம்வைத்துவைக்கப்பட்டிருக்கின்றது.

௰௩. பிள்ளைபெறுகிறவர்களின் அபாயங்கள் அதற்குவரும், இவன் ஞானமில்லாத பிள்ளை. ஏனென்றால் பேறுகாலமட்டும் அவன் நிற்கவில்லை.

௰௪. அவர்களை நரகத்தின் அதிகாரத்திற்கு நீங்கலாக்கி மீட்போம், அவர்களை * மரணத்திற்கு நீங்கலாக்கிவிடுவிப்போம்,† மரணமே, உன்பெருவாரிக்காய்ச்சல்களெங்கே! நரகமே, உன் சங்கரிப்பெங்கே! மனஸ்தாபம் நம்முடைய கண்களுக்குமறைவானதாயிருக்கும். * எபி. ௨, ௰௪. ௰௫. † ௧. கொரி. ௰௫, ௫௫.

௰௫. இவன் சகோதரருக்குள்ளே கனிக்கனிபடியினாலே கர்த்தருடைய காற்றாகிய கொண்டற்காற்று வனாந்தரத்திலிருந்தெழும்பிவரும், அதனால் அவனுடைய ஊற்றுவற்றி அவனுடைய துரவு சுவறிப்போம், அது இச்சிக்கப்படத்தக்க சகல தட்டுமுட்டு

சேளுடைய பொக்கிசத்தையும்வாரிக்கொண்டுபோம்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) மனந்திரும்புதலுக்குத் தூண்டல். (௫) பராபரன் ஆசீர்வதிப்போமென்ற வாக்குத்தத்தம்.]

சமாரியா குற்றஞ்சுமந்ததாயிருக்கிறது. ஏனென்றால், தன் பராபரனுக்கு விரோதமாகக் கலகம்பண்ணினது, பட்டயத்தால் விழுவார்கள். அவர்களுடைய குழந்தைகள் சிதைத்துப்போடப்படும், அவர்களுடைய கெர்ப்பவதிகள் பிளக்கப்படுவார்கள்.

௨. இஸ்ரவேலே, * உன்பராபரனாகிய கர்த்தரண்டைக்குத்திரும்பு. ஏனென்றால், உன் அக்கிரமத்திலேவிழுந்தாய்.

* ௰௨, அதி ௭.

௩. இந்தவார்த்தைகளை நீங்கள் மனதிலே வைத்துக்கொண்டு கர்த்தரண்டைக்குத்திரும்புங்கள், தேவரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கியருளி, * நன்மையையேற்றுக்கொள்ளும், அப்பொழுது † எங்கள் உதடுகளின் காளைகளைச் செலுத்துவோமென்றும்,

* ௧, ௫. † எபிரேயர். ௰௩, ௰௫.

௪. அசூர் எங்களை இரட்சிப்பதில்லை, நாங்கள் குதிரைகளின்மேலேறமாட்டோம், எங்கள் கைகளின் கிரியையோடே எங்கள் தேவனே என்று இனிச்சொல்லாதிருப்போம். ஏனெனில், திக்கற்றவன் உம்மாலேயிரக்கம் பெறுகிறானென்றும் அவருடனே சொல்லுங்கள்.

௫. அவர்கள் மாறுபாட்டைக்குணமாக்குவோம், அவர்களை மனப்பூர்வமாய்ச் சிநேகிப்போம். ஏனென்றால், நம்முடைய கோபம் அவர்களை விட்டுத்திரும்பிற்று.

௬. இஸ்ரவேலுக்குப் பனியைப்போலிருப்போம், அது லீலியாபுஷ்பத்தைப்போலப் பூத்து லீபனோனைப்போலத் தன்வேர்களை ஓட்டிவிடும்.

௭. அதின் கிளைகள் ஓங்கிப்போம், அதின் அலங்காரம் ஒலிவமரத்தினுடையதைப்போலவும், அதின் சுகந்தவாசனை லீபனோனுடையதைப்போலவுமிருக்கும்.

௮. அதின் நிழலிற் குடியிருப்பார், திரும்பவருவார்கள், தானியவிளைச்சலைப்போலப் பிழைத்துத் திராட்சச்செடிகளைப்போலச் செழிப்பார்கள், அதின் கீர்த்தி லீபனோனுடைய திராட்சப்பழ இரசத்தின் கீர்த்தியைப்போலிருக்கும்.

௯. இனிமேல் எனக்கும், விக்கிரகங்களுக்குமென்ன! நான் அவருக்குச் செவிகொடுத்து அவரை நோக்கியிருப்பேன், நான் பச்சையான பாயமரவிருட்சத்தைப்போலிருப்பேன், என்னில் உம்முடைய கனிகள் பிடிக்கப்படுமென்று எப்பிராயீம் சொல்லும்.

௰. இவைகளையுணர ஞானமுள்ளவனும், இவைகளைக் கிரகிக்கப் புத்தியுள்ளவனும் ஆர்? ஏனெனில், * கர்த்தருடைய வழிகள் செம்மையானவைகள், நீதிமான்கள் அவைகளில் நடக்கிறார்கள். † பாதகரோவென்றால், அவைகளில்விழுகிறார்கள். * சங்கீ. ௨௫, ௰. † ௧. பேதுரு. ௨, ௭. ௮.

ஓசெயாவின்தீர்க்கதரிசனம்முடிந்தது

முற்றும்.

---

# யோவேலின் தீர்க்கதரிசனம்.

---



## ௧. அதிகாரம்.

[(௧) யோவேல் பராபரனுடைய பல்வகையான நியாயத்தீர்ப்புகளை வெளிப்படுத்தி அவைகளை அநுசரிக்கவும், அவைகளைக்குறித்துத் துக்கிக்கவுந்தூண்டினது. (௰௪) புலம்பலுக்காக உபவாசத்தையேற்படுத்தினது.]

பெத்துவேலின்குமாரனாகிய யோவேலுக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨. பச்சைப்புழு பின்வைத்ததை வெட்டுக்கிளி தின்னுகின்றது, வெட்டுக்கிளி பின்வைத்ததைப் பச்சைக்கிளி தின்னுகின்றது, பச்சைக்கிளி பின்வைத்ததை முசுக்கட்டைப்பூச்சி தின்னுகின்றது.

௩. முதிர்வயதுள்ளவர்களே, இதைக்கேளுங்கள், தேசத்தின் சகலகுடிகளே செவிகொடுங்கள், உங்கள் நாட்களிலாவது, உங்கள் பிதாக்களின் நாட்களிலாவது இப்படிக்கொத்தது சம்பவித்ததுண்டோ!

௪. இதின்செய்தியை நீங்கள் பிள்ளைகளுக்கு விவரியுங்கள், இதை நீங்கள் பிள்ளைகள் தங்கள் பிள்ளைகளுக்கும், அவர்களுடைய பிள்ளைகள் வேறே தலைமுறைக்கும் விவரிக்கக்கடவார்கள்.

௫. வெறியரே, விழித்து அழுங்கள், திராட்-

ப்ப

சப்பழ இரசங்குடிக்கிற சகல சனங்களே, திராட்சரசத்தினிமித்தம் அலறுங்கள். ஏனெனில், அது உங்கள் வாயை விலக அறுப்புண்டுபோம்.

௬. அதேனென்றால், எண்ணிமுடியாத பலத்தசாதி என் தேசத்தில் வந்தேறுகின்றது, அதின் பற்கள் சிங்கத்தின் பற்கள், துஷ்ட சிங்கத்தின் கடைவாய்ப்பற்கள் அதற்கிருக்கின்றன.

௭. அது என் திராட்சச்செடியைப் பாழும், என் அத்திமரத்தைச் சோத்தையுமாக்கிப்போட்டு உரிக்கவே உரித்துவிடுகின்றது, இவைகளின் கொம்புகள் வெண்மையாகின்றன.

௮. தன் வாலவயதின் புருஷனுக்காக இரட்டையுடுத்திருக்கிற பெண்ணைப்போல அலறும்.

௯. காணிக்கையும், ஊற்றுதலுங் கர்த்தருடைய வீட்டைவிட்டு அற்றுப்போய், கர்த்தரின் ஊழியக்காரராகிய ஆசாரியர்கள் துக்கிப்பார்கள்.

௰. வயல்வெளி பாழாகின்றது, பூமி துக்கங்கொண்டாடும். ஏனென்றால், விளைச்சல் அழிக்கப்படுகின்றது, திராட்சத்தாயம் வெட்கமடைகின்றது, எண்ணெய் மாண்டுபோம்.

௰௧. பயிர்க்குடிகளே, கோதுமையும் வாற்கோதுமையுமில்லாததினாலே வெட்கி நில்லுங்கள், திராட்சத்தோட்டக்காரரே அலறுங்கள், ஏனென்றால், வயல்வெளியின் அறுப்பு அழிகின்றது.

௰௨. திராட்சச்செடி வாடி அத்திமரஞ் சாரமற்றுப்போகும், மாதளஞ்செடியும், பேரீச்சும், கொளுஞ்சியுமுதலான வெளியின் விருட்சங்களெல்லாம் வாடிப்போவதினாலே சந்தோஷம் மனுஷபுத்திரரைவிட்டு வாடிப்போகும்.

௰௩. ஆசாரியர்களே, இரட்டுடுத்திப் புலம்புங்கள், பலிபீடத்தின் பணிவிடைக்காரரே, அலறுங்கள், என் பராபரனுடைய பணிவிடைக்காரரே, நீங்கள் உட்பிரவேசித்து இரட்டுடுத்தவர்களாய் இராத்தங்குங்கள். ஏனென்றால், கர்த்தருடைய வீட்டிற் காணிக்கையும், ஊற்றுதலையுஞ் செலுத்துதல் தவிர்க்கப்பட்டது.

௰௪. * உபவாசம் பண்ணும்படி பரிசுத்தநாளைக் குறித்து அதின் ஆசரிப்பைக் கூறுங்கள், மூப்பரையும், தேசத்தின் எல்லாக்குடிகளையும் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிலே கூட்டிக் கர்த்தரை நோக்கிக் கூப்பிடுங்கள். * ௨, ௰௫.

௰௫. அந்தநாளினிமித்தம் ஐயோ, ஏனெனில் * கர்த்தருடைய நாள் சமீபமாயிருந்து சர்வத்திறந்தும் வல்லவராலே பாழ்க்கடிப்பாக வரும். * ௨, ௧. ௨. ஏசாயா. ௰௩, ௬.

௰௬. ஆகாரம் நம்முடைய கண்களையும், சந்தோஷமும், களிகூருதலும் நம்முடைய பராபரனின் வீட்டையும்விட்டு அற்றுப்போகவில்லையோ?

௰௭. விதைகள் தங்கள் மண்கட்டிகளின் கீழ்ச்செத்துப்போகும், விளைச்சல் தீய்ந்து போகிறதினாலே பண்டகசாலைகள் பாழாகிக் களஞ்சியங்கள் இடிந்துபோகும்.

௰௮. மிருகங்கள் எத்தனையாய்த்தவிக்கும், மாட்டுமந்தைகள் தங்களுக்கு மேய்ச்சலில்லாததினால் கலங்கும், ஆட்டுமந்தைகளும் பாழாம். * எரேமியா. ௰௪, ௫. ௬.

௰௯. கர்த்தாவே உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன். ஏனெனில், அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்களைப் பட்சித்துச் சுவாலை வெளியின் விருட்சங்களையெல்லாம் எரித்துவிடும்.

௨௰. * வெளியின் மிருகங்களும் உம்மை நோக்கிக் கதறும். ஏனெனில், தண்ணீர் நதிகளெல்லாம் வறண்டுபோம், அக்கினி வனாந்தரத்தின் மேய்ச்சல்களைப் பட்சித்துப்போடும். * சங்கீதம். ௪௨, ௨. ௱௪, ௨௭.

## ௨. அதிகாரம்.

[(௧) பராபரனுடைய நியாயத்தீர்ப்பின் நடுக்கத்தைச் சீயோனுக்குக் காட்டினது. (௰௨) மனந்திரும்புதலுக்குத் தூண்டினது. (௰௫) உபவாசத்தை ஏற்படுத்தினது. (௰௮) அதற்காக ஆசீர்வாதமுண்டாமென்ற வாக்குத்தத்தம். (௨௧) இப்போதும், இனிமேலும் வரும் ஆசீர்வாதத்தினால் சீயோனைத் தேற்றினது.]

சீயோனிலே எக்காளம் ஊதி நம்முடைய பரிசுத்த பருவதத்திலே சத்தமாய்க் கூப்பிடுங்கள், தேசத்தின் குடிகளெல்லாந் தத்தளிக்கக்கடவார்கள். ஏனெனில், * கர்த்தருடைய நாள் வருகின்றது, அது சமீபமாயிருக்கின்றது. * ௧, ௰௫.

௨. அது இருளும், அந்தகாரமுமான நாள். அது மப்பும், மந்தாரமுமான நாள். விடியற்காலவெளுப்புப் பருவதங்களின்மேற் பரவுகிற தீவிரமாக ஏராளமான பலத்த சாதி வந்து பரவும், அப்படிக்கொத்தது லோகத்தோற்றமுதற்கொண்டுண்டானதுமில்லை. அதின்பிறகு இனித் தலைமுறை தலைமுறையாக வரும் வருஷங்களமட்டும் உண்டாவதுமில்லை.

௩. அக்கினி அதின் முன்னுக்குப் பட்சிக்கும், சுவாலை அதின்பின்னுக்கு எரிக்கும். அது வருமுன் தேசம் ஏதேனென்ற தோட்டத்தைப் போலிருந்தது. அது போனபின் அது பாழான வனாந்தரத்தைப்போலிருக்கும் ஏதாகிலும் அதற்குத் தப்பிப்போவதில்லை.

௪. அவைகளின் உருவம் குதிரைகளின் உருவத்திற்கொத்தது, அவைகள் இராவுத்தரைப்போலே ஓடுகின்றன.

௰௯. போரடிக்கும் பள்ளத்தாக்கிலே ஏராளமான ஜனத்திரள்களுண்டாயிருக்கும், ஏனெனில், போரடிக்கும் பள்ளத்தாக்கிலே கர்த்தர் நியாயஞ்செய்யும் நாள் சமீபமாயிருக்கின்றது.

௨௰. * சூரியனும், சந்திரனும் இருண்டு போகும், நட்சத்திரங்கள் தங்கள் ஒளியை மறைத்துக்கொள்ளும். * அதி. ௨, ௧௦, ௩௧.

௨௧. * கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து எருசலேமிலிருந்து தமது சத்தத்தைக் காட்டுவார், அதனால் வானங்களும், பூமியும் அதிரும். ஆனால் கர்த்தர் தமது சனத்திரளுக்கு அடைக்கலமும், இஸ்ரவேல் புத்திரருக்கு அரணான கோட்டையுமாயிருப்பார்.

* ஓசே. ௰௧. ௰. ஆமோ. ௧, ௨.

௨௨. நமது பரிசுத்த பர்வதமாகிய சீயோனிலே வாசமாயிருக்கிற நாம் * உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அப்போதறிவீர்கள், அப்போது எருசலேம் பரிசுத்தமாயிருக்கும், அந்நியர் இனி அதைக் கடந்து போவதில்லை. * எசேக். ௩௪, ௩௦.

௨௩. அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால் * பர்வதங்கள் திராட்சப்பழரசமாய் வடியும், மேடுகள் பாலாய் ஓடும், யூதாவின் ஓடைகளெல்லாம் தண்ணீராய் ஓடும், † ஒரு ஊற்றுக் கர்த்தருடைய வீட்டிலிருந்து புறப்பட்டுச் சித்திமென்ற பள்ளத்தாக்கை நீர்ப்பாய்ச்சலாக்கும். * ஆமோ. ௯, ௰௩. † எசேக். ௪௭, ௧. † சகரி. ௰௪, ௮. அறிவி. ௨௨. ௧.

௨௪. யூதாவின் புத்திரர் தேசத்திலே குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தி அவர்களுக்குச் செய்த கொடுமையினிமித்தம் எகிப்துமபாழாய், ஏதோமும் பாழான வனாந்தரமாய்ப் போம்.

௨௫. ஆனால், யூதா நித்தியகாலமும், எருசலேம் தலைமுறை தலைமுறையாகவுங் குடியேற்றப்பட்டிருக்கும். நாம் தண்டியாமல் விட்டிருந்த * அவர்களுடைய இரத்தப்பழியைத் தண்டியாமல் விடோம். † கர்த்தர் சீயோனில் வாசமாயிருக்கிறவர்.

* ரு. மோசே. ௩௨, ௪௩. அறிவி. ௬, ௰. ௰௯, ௨. † எசேக். ௪௮, ௩௫.

யோவேலின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

---

# ஆமோசின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௭௱௮௭.)

## ௧. அதிகாரம்.

[(௧) ஆமோஸ் சூரியாமேலும், (௬) பெலிஸ்தர்மேலும், (௯) தீருவின்மேலும், (௰௧) ஏதோமியர்மேலும், (௰௩) அம்மோன் புத்திரர்மேலும் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பைக் காட்டினது.]

தெக்கோவா ஊர் மேய்ப்பருக்குள்ளிருந்த ஆமோஸ் யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாள்களிலும், * இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசுடைய குமாரனான எரொபெயாமின் நாள்களிலும் பூமியதிர்ச்சியுண்டாக இரண்டு வருஷமிருக்கையில், இஸ்ரவேலின்மேற் கண்டு சொன்னவர்த்தமானங்கள். * சகரி. ௰௪, ௫.

௨. * கர்த்தர் சீயோனிலிருந்து கெர்ச்சித்து எருசலேமிலிருந்து தமதுடைய சத்தத்தைக் காட்டுவார், அதினாலே மேய்ப்பரின் தாபரங்கள் துக்கப்படும், கர்மேலின் கொடுமுடியுங் காய்ந்துபோகும்.

* யோவேல். ௩, ௨௧.

௩. * கர்த்தர் சொல்லுகிறதாவது; தமஸ்குவினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும், அவர்கள் கீலேயாத்தை † இருப்பு வண்டில்களாற் போரடித்ததினிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

* ஏசாயா. ௭, ௮. † ௨. இராசா. ௰௩, ௭.

௪. ஆசகேலின் வீட்டிலே அக்கினியைப் போடுவோம், அது பெனாதாதின் அரமனைகளைப் பட்சிக்கும்.

௫. நாம் தமஸ்குவின் தாழ்ப்பாளையுடைத்து ஆவேனென்ற பள்ளத்தாக்கிலுள்ள குடிகளை ஆவேனென்ற பள்ளத்தாக்கிலும், செங்கோல் ஆளுகிறவனைப் பெத்தேதேனிலுமிருந்து சங்காரம்பண்ணுவோம். அப்போது சூரியாவின் சனங்கள் கீருக்குச் சிறைப்பட்டுப் போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬. கர்த்தர் சொல்லுகிறதாவது; காத்சாவினுடைய மூன்று நான்கு பாதகங்களினிமித்தமும், அவர்கள் சிறையிருப்பானவர்களை ஏதோமியர் கையில் ஒப்புக்கொடுக்கும்படிக்கு முழுதுஞ் சிறையாக்கினதினிமித்த

மும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

எ. காத்சாவின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம், அது அதினுடைய அரமனைகளைப் பட்சிக்கும்.

அ. நாம் குடிகளை அஸ்தோத்திலும், செங்கோலாளுகிறவனை அஸ்கலோனிலுமிருந்து சங்காரம்பண்ணிப் பெலிஸ்தரில் மீதியானவர்கள் அழியும்படிக்கு நம் கையை எக்ரோனுக்கு விரோதமாகத் திருப்புவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

கூ. கர்த்தர் சொல்லுகிறதாவது; * தீருவினுடைய மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் சகோதரரின் உடன்படிக்கையை நினையாமல் சிறையிருப்பானவர்களை முழுதும் ஏதோமியர் கையில் ஒப்புக்கொடுத்துவிட்டதினிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,

ய. தீருவின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம், அது அதின் அரமனைகளைப் பட்சிக்குமென்கிறார்.

யக. கர்த்தர் சொல்லுகிறதாவது; ஏதோமினுடைய மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவன் தன் சகோதரனைப் பட்டயத்தோடே தொடர்ந்து தன் மனதை இரக்கமற்றதாக்கித் தன் கோபத்தினாலே என்றைக்கும் அவனைப் பீறிப்போட்டுத் தன் மூர்க்கத்தை நித்தியகாலமாக வைத்திருக்கிறதினிமித்தமும் நாம் அவன் ஆக்கினையைத் திருப்பாமல்,

யஉ. * தேமானிலே அக்கினியைப் போடுவோம், அது போத்ஸ்ராவின் அரமனைகளைப் பட்சிக்குமென்கிறார். * ஏசே. உரு, யஉ. யச.

யங. கர்த்தர் சொல்லுகிறதாவது; அம்மோன் புத்திரரின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் தங்கள் எல்லைகளை விஸ்தாரமாக்கும்படிக்குக் கீலேயாத் தேசத்தின் கெர்ப்பஸ்திரிகளைப் பீறிப்போட்டதினிமித்தமும், நாம் அவர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,

யச. ரபாவின் மதிலுக்குள் அக்கினியைக் கொளுத்துவோம், அது யுத்தநாளின் முழக்கமாகவும், பெருங்காற்றின் புசலாகவும் அதின் அரமனைகளைப் பட்சிக்கும்.

யரு. அவர்களுடைய இராசா சிறையிருப்பிலே போவான், அவனும், அவனுடைய பிரபுக்களுங்கூடத்தானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## உ. அதிகாரம்.

[(க) மோவாபியர் மேலும், (உ) யூதாவின் மேலும், (ங) இஸ்ரவேலர் மேலும் வரும் பராபரனுடைய கோபாக்கினை, (ச) பராபரன் அவர்களுடைய நன்றிகெட்டதனமையைக் குறித்து முறையிட்டது.]

கர்த்தர் சொல்லுகிறதாவது; * மோவாபின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவன் ஏதோமுடைய இராசாவின் எலும்புகளை நீறாகச் சுட்டுப்போட்டதினிமித்தமும் நாம் அவன் ஆக்கினையைத் திருப்பாமல், * எரே. சஅ, க. முதல் செப். உ, அ. ய.

உ. மோவாப் தேசத்தில் அக்கினியைப் போடுவோம், அது கெரியோத்தின் அரமனைகளைப் பட்சிக்கும், மோவாபியர் அமளிக்குள்ளும், ஆர்ப்பரிப்புக்குள்ளும், எக்காளசத்தத்திற்குள்ளும் சாவார்கள்.

ங. நாம் நியாயாதிபதியை யவர்கள் நடுவிலிராதபடிக்குச் சங்காரம்பண்ணி அவனோடேகூட அவர்களுடைய பிரபுக்களையெல்லாங் கொன்றுபோடுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

ச. கர்த்தர் சொல்லுகிறதாவது; யூதாவின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் கர்த்தருடைய வேதத்தைவெறுத்து அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளாமல் தங்கள் பிதாக்கள் பின்பற்றின தங்கள் பொய்களின் மோசத்திற்குள்ளானதினிமித்தமும் நாம் அவர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,

ரு. யூதாவிலே அக்கினியைப் போடுவோம், அது எருசலேமின் அரமனைகளைப் பட்சிக்கும்.

கூ. கர்த்தர் சொல்லுகிறதாவது; இஸ்ரவேலின் மூன்று நாலு பாதகங்களினிமித்தமும், அவர்கள் நீதிமானைப் பணத்திற்கும், * எளியவனை யொருசோடு பாதரட்சைக்கும் விற்றுப்போட்டதினிமித்தமும் அவர்களுடைய ஆக்கினையைத் திருப்பாதிருப்போம். * அ, ரு.

எ. அவர்கள் தரித்திரரின் தலைக்கு மோசமாகப் பூமியின் மண்ணைக்கவிச் சிறுமையானவர்களின் வழியைப் புரட்டுகிறார்கள், நம்முடைய பரிசுத்தநாமத்தைக் குலைத்தலாக்கும்படிக்கு மகனும், தகப்பனும் ஒருபெண்ணிடத்தில் பிரவேசிக்கிறார்கள்.

அ. அவர்கள் சகல பீடங்களருகே அடமானமாய் வாங்கின வஸ்திரங்களின் மேல் படுத்துக்கொண்டு தெண்டம் பிடிக்கப்பட்டவர்களுடைய மதுவைத் தங்கள் தேவர்களின் வீட்டிலே குடிக்கிறார்கள்.

கூ. நாமோவெனில், கேதுருக்களின் உயர்வுக்கொத்த உயர்ச்சியும், கர்வாலிமரங்களைப்போலே உரப்புமாயிருந்த அவனுடைய கனியையும், * எமோரியனை யவர்களுக்கு முன்பாக அழித்து உயர இருந்த அவனுடைய கனியையும், தாழவிருந்த அவனுடைய வேர்களையும் அழித்துப்போட்டு, * உ. மோசே. உக, உக. முதல்

ய. நீங்கள் எமோரியனுடைய தேசத்தை

சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு உங்களை நாம் எகிப்து தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணி உங்களை நாற்பது வருஷமாக வனாந்தரத்திலே வழிநடத்தி,

௧௧ உங்கள் குமாரரிற் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், உங்கள் வாலிபரிற் சிலரை * நசரேயராகவும் ஏற்படப்பண்ணினோம், இஸ்ரவேல் புத்திரரே, இப்படியில்லையோ வென்று கர்த்தர் கேட்கிறார். * ௪. மோசே. ௬, ௨. ௵

௧௨. நீங்களோ வென்றால், நசரேயருக்குத் திராட்சப்பழ இரசங்குடிக்கக்கொடுத்து, தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லவேண்டாமென்று கற்பித்தீர்கள்.

௧௩. இதோ, கோதுமைக்கட்டுகள் நிறை பாரமாக ஏற்றப்பட்ட வண்டில் இருந்துகிறதுபோலே நாம் உங்களை நீங்களிருக்கிற ஸ்தலத்திலிருந்துவோம்.

௧௪. அப்போது வேகமானவனுக்கு ஓட இடமில்லை, திடனுள்ளவன் தன் பலனைப் பலகப்பண்ணுவதுமில்லை, பராக்கிரமமுள்ளவன் தன் பிராணனைத் தப்புவிப்பதுமில்லை.

௧௫. வில்லைப் பிடிக்கிறவன் நிற்பதுமில்லை, வேகமானவன் தன் கால்களால் தப்பிப்போவதுமில்லை, குதிரையின்மேலிருக்கிறவன் தன் பிராணனைத் தப்புவிப்பதுமில்லை.

௧௬. பலசாலிகளுக்குள்ளே தன் நெஞ்சைத் திடப்படுத்துகிறவன் அந்நாளிலே நிர்வாணமாய் ஓடிப்போவானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩. அதிகாரம்.

[(௧) இஸ்ரவேலர்மேல் அவசியம் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு வருமென்பது,(௯) அதின் காரணத்தோடு அதைப் பிரசுரஞ் செய்தல்.]

இஸ்ரவேல் புத்திரரே, உங்களுக்கு விரோதமாகவும், நாம் எகிப்து தேசத்திலிருந்து ஏறப்பண்ணின எல்லா வம்சத்துக்கு விரோதமாகவும் கர்த்தர் சொன்ன இந்த வசனத்தைக் கேளுங்கள்.

௨. * பூமியினுடைய எல்லா வம்சங்களுக்குள்ளும் உங்களைமாத்திரம் அறிந்துகொண்டோம். ஆகையால், உங்களுடைய எல்லா அக்கிரமங்களினிமித்தமும் உங்களை விசாரிப்போம். * ௫. மோசே. ௧௪, ௨.

௩ இரண்டுபேர் ஒருமனப்பட்டிருந்தாலொழிய ஒருமிக்க நடந்துபோவார்களோ

௪. தனக்கு இரை அகப்படாமற் காட்டிலே சிங்கங் கெர்ச்சிக்குமோ! இரையெடுக்காமல் இளஞ்சிங்கந் தன் கெபியிலிருந்து தன் சத்தத்தைக் காட்டுமோ!

௫. தரையிலே குருவி தனக்குக் கண்ணி குத்தப்படாதிருந்தால் கண்ணியிற் சிக்கிக் கொள்ளுமோ! ஒன்றும் படாதிருக்கையில், கண்ணி தரையிலிருந்தெடுத்துக்கொள்ளப்படுமோ?

௬. சனம் அமளியாகாமல் ஊரில் எக்காளமூதப்படுமோ? * கர்த்தருடைய செயலில்லாமல் ஊரில் ஒரு தீங்கு உண்டாகுமோ! * ஏசாயா. ௪௨, ௨௪. ௪, ௫. ௭. புலம்பல். ௩, ௩௭—௩௮.

௭. ஏனென்றால் கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத் தம்முடைய இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தைச் செய்யார்.

௮. * சிங்கங் கெர்ச்சிக்கின்றது, ஆர் பயப்படாதிருக்கலாம்! கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார், ஆர் தீர்க்கதரிசனஞ் சொல்லாதிருக்கலாம்! * ஆமி. ௰, ௩.

௯. நீங்கள் சமாரியாவின் பருவதங்களில் வந்துகூடி அதின் நடுவில் நடக்கிற பெரிய கலகங்களையும், அதற்குட் செய்யப்படுகிற இடுக்கண்களையும் பாருங்களென்று அஸ்தோத்திலே அரமனைகளின்மேலும், எகிப்து தேசத்திலே அரமனைகளின்மேலும் கூறுங்கள்.

௰. அவர்கள் நிதானஞ்செய்ய அறியாமல் தங்கள் அரமனைகளிற் கொடுமையையும், பாழ்க்கடிப்பையும் குவித்துக்கொள்ளுகிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. ஆகையாற் சத்துருவந்து தேசத்தைச் சூழ்ந்துகொண்டு உன்னுடைய பலனை உன்னிலிருந்து விழப்பண்ணுவான், அப்போது உன் அரமனைகள் கொள்ளையிடப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

௰௨. கர்த்தர் உரைக்கிறதாவது; ஒரு மேய்ப்பன் இரண்டு கால்களை அல்லது ஒரு காதின் துண்டைச் சிங்கத்தின் வாயிலிருந்து பிடுங்கித் தப்புவிக்குமாப்போலே சமாரியாவின் குடிகளாகிய இஸ்ரவேல் புத்திரர் ஒரு கட்டிலின் மூலையிலும், ஒரு படுக்கையின் பக்கத்திலும் ஒளித்திருக்கையால் தப்புவிக்கப்படுவார்கள்.

௰௩. நீங்கள் கேட்டு யாக்கோபு வீட்டாருக்குள்ளே சாட்சியாக அறிவிக்கவேண்டியதாவது; சேனைகளின் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதென்னில்,

௰௪. நாம் இஸ்ரவேலுடைய பாதகங்களினிமித்தம் அவனை விசாரிக்கும் நாளிலே நாம் பெத்தேலின் பலிபீடங்களைப் பலிபீடத்தின் கொம்புகள் வெட்டுண்டு தரையிலே விழ விசாரித்து,

௰௫. மாரிக்காலத்திற்கிருக்கிற வீட்டையும், கோடைகாலத்திற்கிருக்கிற வீட்டையும் அழிப்போம், அப்போது தந்தத்தினாலுள்ள வீடுகள் அழியும், விஸ்தாரமான வீடுகளுக்கும் முடிவு வருமென்பதுதானென்று கர்த்தர் சொல்லுகிறார்.

சீயோனில் நிர்விசாரமாயிருக்கிறவர்களும், சமாரியாவின் பர்வதத்தை நம்பிக்கொண்டிருக்கிறவர்களும், சாதிகளின் தலைமையென்னப்பட்டு இஸ்ரவேல் வீட்டார் நாடி வந்து சந்திக்கப்படுகிறவர்களுமாகிய பேர்களுக்கையோ.

௨. *நீங்கள் கல்னேமட்டும் நடந்து அவ்விடத்திலிருந்து ஆமாத்தென்ற பெரிய பட்டணத்திற்குப்போய்ப் பெலிஸ்தருடைய காத் பட்டணத்திற்குப்போய் இறங்கி அவைகள் இந்த இராச்சியங்களைப்பார்க்கிலும் நல்லவைகளோவென்றும், அவைகளின் எல்லைகள் உங்கள் எல்லைகளைப்பார்க்கிலும் விஸ்தாரமோவென்றும்பாருங்கள். * ௧. மோ ௰,௰.

௩. தீங்கு நாளைத் தூரமென்றெண்ணிக்கொடுமையின் ஆசனத்தைச் சேரப்பண்ணி,

௪. * தந்தவேலையான கட்டில்களிற் படுத்துக்கொண்டு தங்கள் மஞ்சங்களின்மேற் செல்வமாய்ச்சயனித்து மந்தையிலிருக்கிற ஆட்டுக்குட்டியையும், மாட்டுக்கொட்டிலிலே கொழுத்துப்போன கன்றுக்குட்டிகளையுந்தின்று, * ௬, ௰௫.

௫. தம்புரா வாசித்துப்பாடித் தாவீதைப்போலக் கீதவாத்தியங்களைத் தங்களுக்குண்டுபண்ணி,

௬. கலங்களில் மதுபானத்தைக்குடித்து மேன்ரமான பரிமளத்தைலங்களைப்பூசிக்கொண்டு யோசேப்புடைய நொறுங்குதலுக்குக்கவலைப்படாதேபோகிறார்கள்.

௭. ஆகையால் இனிச் சிறையிருப்புக்குப்போகிற முதல் தண்டிலே போவார்கள். இப்படியே செல்வமாய்ச் சயனித்தவர்களின் விருந்துண்குதல் நின்றுபோகும்.

௮. நாம் யாக்கோபுடைய முக்கியத்தை யருவருத்து அவனுடைய அரமனைகளைப்பகைக்கிறோம். நாம் பட்டணத்தையும், அதின் நிறைவையும் ஒப்புக்கொடுத்துவிடுவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் தம்முடைய சீவனைக்கொண்டு ஆணையிட்டாரென்பதைச் சேனைகளின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

௯. சம்பவிப்பதேதென்றால், ஒரு வீட்டிலே பத்துமனுஷர்மீதியாயிருந்தாலும் அவர்கள் சாவார்கள்.

௰. அவர்களுடைய உறவின்முறையானாவது இழவாளியாவது எலும்புகளைவீட்டிலிருந்து வெளியே கொண்டுபோகும்படிக்கு அவைகளையெடுத்து வீட்டின்பக்கங்களுக்குள்ளிருக்கிறவனை உன்கிட்ட இன்னமுண்டோவென்றுகேட்பான், அவன் இல்லையென்பான், அப்போது இவன் நீ மவுனமாயிரு. ஏனெனில், கர்த்தருடைய நாமத்தைப்பிரஸ்தாபம்பண்ண இடமில்லையென்றுசொல்லுவான்.

௰௧. அதேதெனில், இதோ கர்த்தர் நிர்மாணிக்கிற கட்டளையென்னவென்றால், பெரிய வீட்டைத் திறப்புகள் உண்டாகவும், சிறிய வீட்டை வெடிப்புகளுண்டாகவும் அடிப்பார்.

௰௨. கன்மலையிலே குதிரைகள் ஓடுமோ! அங்கேயொருத்தன் மாடுகளால் உழுவானோ! * நியாயத்தைப்பிச்சாகவும், நீதியின் கனியை யெட்டியாகவும் மாற்றினீர்கள். * ரு, ௭.

௰௩. நாங்கள் எங்கள்பலத்தினாலே யெங்களுக்குக்கொம்புகளைச் சவதரித்தில்லையோவென்றுசொல்லிக் காரியமில்லாமல் மகிழுகிறார்கள்.

௰௪. ஏனெனில், இஸ்ரவேல் வீட்டாரே, இதோ ஆமாத்திற்குட்பிரவேசிக்கிற வழி துவக்கிச் சமுத்திரநாட்டின் ஆறுமட்டாக உங்களை யிறுக்கப்பிடிக்குஞ்சாதியை நாம் உங்களுக்குவிரோதமாக எழுப்புவோமென்றுசேனைகளின் பராபரனாகியகர்த்தர்சொல்லுகிறார்.

## ௭. அதிகாரம்.

[(௧) வெட்டுக்கிளிகளினாலும், (௪) அக்கினியினாலுமுண்டாகிய நியாயத்தீர்ப்புகள் ஆமோசின் செபத்தினாலே நீங்கினது, (௭) தூக்குநூற்பிரமாணமாய்க் கட்டப்பட்டம் தில்லால இஸ்ரவேலர்தள்ளுண்டுபோவதைக் குறித்தது, (௰) அமத்சியா ஆமோசைக் குற்றஞ்சாட்டினது, (௰௪) ஆமோஸ் தன் அழைப்பைக்காட்டினது, (௰௬) அமத்சியாவுக்குவரும் நியாயத்தீர்ப்பு.]

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக்காண்பித்ததாவது; இதோ இரண்டாங் கந்தாயத்துப்புல் ஓங்கத்துவக்குகையில், அவர் கிளிகளையுருவாக்கினார், இது அது இராசாவினுடையபுல்லறுப்புக்குப்பிறபாடு இரண்டாங்கந்தாயத்துப்புல்லாயிருந்தது.

௨. அப்போது சம்பவித்ததேதெனில், அவைகள் தேசத்தின்புல்லைத்தின்று தீருகிறபோது நான் கர்த்தராகிய ஆண்டவரே, மன்னியுமேன், யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்படி! ஏனெனில், அவன் சிறுகிப்போனவனென்றேன்.

௩. கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு * அப்படியாவதில்லையென்றார். * ௧. மோசே. ௰௮, ௨௬. முதலிய

௪. கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக்காண்பித்ததாவது; இதோ அக்கினியாலே நியாயம்விசாரிப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர்கூப்பிட்டார், அது பெரிய ஆழத்தைப்பட்சிக்கவந்து அதில் ஒருபங்கைப் பட்சித்துத்தீர்ந்தது.

௫. அப்போது நான் கர்த்தராகிய ஆண்டவரே நிறுத்தும், யாக்கோபு திரும்ப எழு

நதிருப்பதேதப்படி? ஏனெனில், அவன் சிறுகிப்போனவனென்றேன். * ச. மோ. யக, உ.

௬. கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு அப்படியுமாவதில்லையென்றார்.

எ அவரெனக்குக் காண்பித்ததாவது; இதோ தூக்குநூல் பிரமாணமாயக் கட்டப்பட்ட ஒருமதிலின்மேல் நின்றார், அவர்கையில் தூக்குநூலிருந்தது.

அ. கர்த்தரென்னுடனே ஆமோசே! நீ யென்னகாண்கிறாயென்றார், தூக்குநூலையென்றேன், அப்போது ஆண்டவர் சொன்னதாவது; இதோ இஸ்ரவேலென்கிற நமது சனத்தின் நடுவாகத் தூக்குநூலைவிடுவோம், இனி அவர்களை மன்னியோம்.

௯. ஈசாக்கின் மேடைகள் பாழும், இஸ்ரவேலின் சுத்தஸ்தலங்கள் அவாந்தரையுமாகப்படும், நாம் எரோபேயாம் வீட்டாருக்கு விரோதமாகப் பட்டயத்தோடேயெழும்பி வருவோமென்றார்.

௰. ஆனால், பேதேலிலே ஆசாரியனான அமத்சியா இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபேயாமுக்குச் சொல்லியனுப்பினதாவது; ஆமோஸ் இஸ்ரவேலின் வீட்டாரின் நடுவிலே யுமக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணுகிறான், தேசம் அவன் வார்த்தைகளையெல்லாந் தாங்கமாட்டாது.

௰க. ஏனெனில், எரோபெயாம் பட்டயத்தினாலே சாவானென்றும், இஸ்ரவேல் தனசீமையிலிருந்து சிறையிருப்பாகக் கொண்டுபோகப்படுமென்றும் ஆமோஸ் சொல்லுகிறானென்று சொல்லியனுப்பி,

௰உ. பிறபாடு ஆமோசோடே அமத்சியா சொன்னதாவது; தரிசனம்பார்க்கிறவனே! போ, நீ யூதாவின் தேசத்திறகோடி அங்கே அப்பந்தின்று அங்கே தீர்க்கதரிசனஞ் சொல்லு.

௰௩. பேதேலிலே இனி தீர்க்கதரிசனஞ் சொல்லலாகாது. ஏனெனனில், இது இராசாவின் பரிசுத்தஸ்தலமும், இராசசியத்தின் அரமனையுமானதென்றான்.

௰ச. ஆமோஸ் அமத்சியாவுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது; நான் தீர்க்கதரிசியுமல்ல நான் தீர்க்கதரிசியின் மகனுமல்ல, நான் மந்தைமேய்க்கிறவனும், காட்டத்திப்பழங்களைப் பொறுக்கிறவனுமாயிருந்தேன்.

௰௫ ஆனால், மந்தையின்பிறகே போகிற என்னைக் கர்த்தர் அழைத்துக் கர்த்தர் என்னுடனே, நீ போய் நமது சனமாகிய இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ் சொல்லென்றார்.

௰௬. இப்போதுங் கர்த்தருடைய வார்த்தையைக் கேள், இஸ்ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனஞ்சொல்லாமலும், ஈசாக்கின் வீட்டாருக்கு விரோதமாகச் * சொரிந்கூள யாமலுமிருப்பாயாகவென்று சொல்லுகிறாயே. * மீகா. உ, ௬.

௰எ. ஆகையால், கர்த்தர் சொல்லுகிறதாவது; உன் பெண்சாதி ஊரிலே வேசியாவாள், உன் குமாரருடம், உன் குமாரத்திகளும் பட்டயத்தால் விழுவார்கள், உன் வயல் அளவுநூலால் பங்கிட்டுக்கொள்ளப்படும், நீயோவெனில் அசுத்தசீமையிலே செத்துப் போவாய், இஸ்ரவேலுந் தனசீமையிலிருந்து சிறையிருப்பிலே கொண்டுபோகப்படுமென்று சொல்லுகிறாரென்றான்.

## அ. அதிகாரம்.

[(க) கூடையில் நிறைந்த கனியிலே இஸ்ரவேலருடைய முடிவின் சமீபத்தைக்காட்டினது, (ச) ஒடுக்குதல் கண்டிக்கப்பட்டது, (௰க) வசனத்தின் பஞ்சம்வருமென்று பயமுறுத்தினது.]

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக்காண்பித்ததாவது; இதோ அறுத்தகனிகளுள்ள ஒருகூடையிருந்தது.

உ. அவர் ஆமோசே, நீ யென்னகாண்கிறாயென்றார், அறுத்தகனிகளுள்ள ஒருகூடையென்றேன், அப்போது கர்த்தரென்னுடனே சொன்னதாவது; நமமுடைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் முடிவுவருகின்றது, * இனியவர்களை மன்னியோம். * எ, அ.

௩. அந்நாளிலே தேவாலயப்பாட்டுகள் அலறுதலாகும், எல்லா இடத்திலுந்திரளான பிரேதங்கள் மௌனமாயெறிந்துவிடப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்.

ச. * தேசத்திற சிறுமைப்பட்டவர்களையொழியப்பண்ண எளியவர்களைவிழுங்கி, * உ, எ.

௫. நாங்கள் மரக்காலைக் குறைத்துச் சேக்கல் நிறையை யதிகமாக்கிக் கட்டுத்தராசினால் வஞ்சனைபண்ணித் தீனத்திரனைப் பணத்திறகும், * எளியவர்களை ஒருசோடு இரட்சைச்சோட்டுக்குங் கொள்ளும்படிக்கும், தானியத்தின் பதரை விற்கும்படிக்கும், * உ, ௬.

௬. மாதப்பிறப்பு நாங்கள் தவசம்விற்கத்தக்கதாகவும், ஓய்வுநாள் நாங்கள் தானியத்தின்பண்டகசாலைகளைத் திறக்கத்தக்கதாகவும் எப்போது கழிந்துபோமென்று சொல்லுகிறவர்களே இதைக்கேளுங்கள்.

எ. அவர்கள் செய்கைகளையெல்லாம்நாம் என்றைக்கும் மறப்பதில்லையென்று கர்த்தர் யாக்கோபுடைய மகிமையின்மேலே ஆணையிட்டார்.

அ. இதினிமித்தந்தேசம் அதிரவும், அதின் குடிகளெல்லாந் துக்கிக்கவும், * எங்கும் நதிகளாய்ப் புரண்டோடவும், எகிப்தினுடைய ஆற்றுவெள்ளத்தைப்போல அடித்

துவெள்ளக்காடாகவும் வேண்டாமோ!
* ௯, ரு.

௯. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், * நாம் மத்தியானத்திலே சூரியனை அஸ்தமிக்கப்பண்ணிப் பட்டப்பகலிலே தேசத்தை அந்தகாரப்படுத்தி, * எரேமி. ௰ரு, ௯.

௰. உங்கள் பண்டிகைகளைத் துக்கிப்பாகவும், உங்கள் பாட்டுகளையெல்லாம் புலம்பலாகவும் மாறப்பண்ணிச் சகல அரைகளிலும் இரட்டையும், சகல தலைகளிலும் மொட்டையையும் வருவித்து அவர்களுடைய துக்கிப்பை * ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்கிறதற்குச் சமானமாக்கி அவர்களுடைய முடிவைக் கசப்பான நாளாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
* எரேமி. ௬, ௨௬.

௰௧. இதோ அப்பத்தின்மேலுள்ள பசியையல்ல, தண்ணீரின்மேலுள்ள தாகத்தையுமல்ல * கர்த்தருடைய வசனங்களைக் கேட்கப்பசியுண்டாயிருக்கிற பஞ்சத்தை நாம் தேசத்திலே யனுப்பும் நாட்கள் வருமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
* ௧. சாமுவே. ௩, ௧.

௰௨. அப்போது அவர்கள் கர்த்தருடைய வசனத்தைத்தேட ஒரு சமுத்திரந்துவக்கி மற்றச்சமுத்திரமட்டுக்கும், வடக்குத்துவக்கிக் கிழக்குமட்டுக்கும் அலைந்து திரிந்தும் அதைக் கண்டுபிடியாதே போவார்கள்.

௰௩. தாணிலிருக்கிற உன் தேவனின் சீவனைக் கொண்டென்றும், பேர்சேபா மார்க்கத்தின் தேவனின் சீவனைக்கொண்டென்றுஞ் சொல்லி,

௰௪. சமாரியாவினுடைய தோஷத்தின்மேலே ஆணையிடுகிறசவுந்தரியமுள்ள கன்னியாஸ்திரிகளும், வாலிபரும் அக்காலத்திலே தாகத்தாலே தொய்ந்துபோய் இனியெழுந்திருக்காதபடியாக விழுவார்களென்றார்.

## ௯. அதிகாரம்.

[(௧) பாழ்க்கடிப்பின் நிச்சயம். (௰௧) தாவீதின் கூடாரத்தைத் திருப்பத்தொடுப்பது.]

ஆண்டவரைப் பலிபீடத்தின்மேல் நிற்கக்கண்டேன், அவர் சொன்னதாவது; நீ வாசல்களின் நிலைகள் அசையும்படிக்குச் சிகரத்தையடித்து அவைகளை அவர்களெல்லாருடைய தலையின்மேலும் விழ உடைத்துப்போடு, அவர்களுக்குப் பின்னுக மீந்தவர்களையோவென்றால் நாம் பட்டயத்தாலே கொன்றுபோடுவோம், அவர்களில் ஓடுகிறவன் ஓடிப்போவதுமில்லை, அவர்களிலே தப்புகிறவன் தப்பிப்போவதுமில்லை.

௨. * அவர்கள் பாதாளத்திலே தோண்டிப் பதுங்கிக்கொண்டாலும், நம்முடைய கையவ்விடத்திலிருந்து அவர்களைப் பிடித்துக்கொண்டுவரும், அவர்கள் ஆகாயமட்டும் ஏறினாலும் அவ்விடத்திலிருந்து அவர்களை யிறங்கப்பண்ணுவோம். * சங்கீ. ௱௩௯, ௮.

௩. அவர்கள் கர்மேலின் கொடுமுடியிலே ஒளித்துக்கொண்டாலும், அங்கேயவர்களைத் தேடிப்பிடிப்போம், அவர்கள் நம்முடைய கண்களுக்குச் சமுத்திரத்தின் ஆழத்திலே மறைந்துகொண்டாலும் அங்கேயவர்களைக் கடிக்கப் பாம்புகளுக்குக் கற்பிப்போம்.

௪. அவர்கள் தங்கள் சத்துருக்களுண்டாக்கச் சிறையிருப்பிலே போனாலும் அங்கேயவர்களைக் கொன்றுபோடப் பட்டயத்துக்குக் கற்பித்து, * நமது கண்களையவர்கள் மேல் நன்மைக்கல்ல, தீமைக்கென்றே வைப்போம். * எரேமியா. ௪௪, ௰௧.

௫. சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் தேசத்தைத் தொடவேயுருகிப்போகும், அப்போது அதின் குடிகளெல்லாருந் துக்கிப்பார்கள், * எங்கும் நதியாய்ப் புரண்டோடி எகிப்தினுடைய ஆற்றின் வெள்ளத்தைப் போல வெள்ளக்காடாகும், * ௮, அதி. ௮.

௬. அவர் பரமண்டலத்திலே தமது ஆசனப்படிகளைக் கட்டிப் பூமியின்மேலிருக்கிற தம்முடைய கூட்டத்தை யஸ்திபாரப்படுத்தினவர், * அவர் சமுத்திரத்தின் தண்ணீர்களையழைத்து அவைகளைப் பூமியினுடைய விசாலத்தின்மேல் ஊற்றுகிறவர், கர்த்தரென்பது அவருடைய நாமம். * ரு, அதி. ௮.

௭. இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் நமக்கு எத்தியோப்பியரின் புத்திரருக்குச் சரியானவர்களல்லவோவென்று கர்த்தர் சொல்லுகிறார். நாம் இஸ்ரவேலை எகிப்துதேசத்திலும், பெலிஸ்தரைக் * கப்தோரிலும், சூரியரைக் கீரிலுமிருந்து வரப்பண்ணினதில்லையோ! * எரேமியா. ௪௭, ௪.

௮. இதோ, கர்த்தராகிய ஆண்டவரின் கண்கள் பாவ இராச்சியத்திற்கு விரோதமாக வைக்கப்பட்டிருக்கின்றன, அதைப் பூமியின்மேலிராதபடிக்கு அழித்துப்போடுவோம். ஆகிலும், யாக்கோபின் வீட்டை நாம் முழுதும் அழித்துப்போடுவதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯. அதேதெனில், இதோ சல்லடையிலே சலித்தரிக்கிறதுபோலே இஸ்ரவேல் வீட்டாரை யெல்லாச்சாதிகளுக்குள்ளும் சலித்தரிக்கும்படிக்கு நாம் கட்டளையிடுவோம். ஆனால், ஒரு கோதுமைமணியுந் தரையிலே விழுவதில்லை. * ஆகா. ௨௨, ௩௧.

௰. தீங்கு எங்களைப் பிடிப்பதுமில்லை. எங்களுக்கு நேரிடுவதுமில்லையென்று நம்மைச் சனத்திரஞ்சொல்லுகிற பாவிகளெல்லாரும் பட்டயத்தினாலே சாவார்கள்.

௰௧. அந்நாளிலே * மீதியானவர்களையும், நம்முடைய நாமம் விளங்கிய சகலசாதிகளையும் வசமாக்கிக்கொள்ளும்படிக்கு, * அப்போஸ்தலர். ௰ரு, ௰௬. ௰௭.

௰௨. அந்நாளிலே நாம் விழுந்ததாகிய தாவீதின் கூடாரத்தைத் திரும்ப எடுத்து அவர்களுடைய திறப்புகளை யடைத்து அதில் இடிந்துபோனதை யெடுப்பித்துப் பூர்வ நாட்களில் இருந்ததுபோல அதைக் கட்டுவோமென்று இதைச் செய்கிற கர்த்தர் சொல்லுகிறார்.

௰௩. இதோ, உழுகிறவன் அறுக்கிறவனையும், திராட்சப்பழங்களை ஆலையாட்டுகிறவன் விதைக்கிறவனையுந் தொடருகிறதும், * திராட்சப்பழ இரசமாய்ப் பர்வதங்கள் வடிகிறதும், மேடுகளெல்லாங் கரைகிறதுமான நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
* யோவேல். ௩, ௨௩.

௰௪. அதேதெனில், * நமது சனமாகிய இஸ்ரவேலின் சிறையிருப்பைத் திருப்புவோம், அவர்கள் பாழான பட்டணங்களைக் கட்டியவைகளிற் குடியிருந்து † திராட்சத்தோட்டங்களை நாட்டி அவைகளுடைய பழங்களின் இரசத்தைக் குடித்துத் தோட்டங்களை யுண்டாக்கி அவைகளின் கனிகளைப் புசிப்பார்கள். * ௫.மோசே. ௩௰, ௩. எரே. ௨௯, ௰௪. † ஏசாயா. ௬௫, ௨௧. எசேக். ௨௮, ௨௬. சகரியா. ௮, ௰௨.

௰௫. அவர்களையவர்கள் சீமையிலே நாட்டுவோம், அவர்கள் நாம் தங்களுக்குக் கொடுத்த தங்கள் சீமையிலிருந்து இனிப் பிடுங்கப்படுவதில்லையென்று உன் பராபரனுகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

ஆமோசின் தீர்க்கதரிசனம் முடிந்தது
முற்றும்.

---

# ஒபதியாவின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன. ௫௱௮௭.)

## ௧. அதிகாரம்.

[(௧) எதோமியருடைய மேட்டிமைக்காகவும், (௰) அவர்கள் யாக்கோபுக்குச் செய்த பிழைக்காகவும் வரும் அழிவு. (௰௭) யாக்கோபினுடைய இரட்சணியமும், செயமும்,]

ஒபதியாவின் தரிசனம், கர்த்தராகிய ஆண்டவர் ஏதோமைக்குறித்துச் சொன்னதென்னவென்றால், எழும்புங்கள் அதற்கு விரோதமாக யுத்தம்பண்ண எழும்புவோம் வாருங்களென்று சொல்லத் * தானுபதி சாதிகளிடத்தில் அனுப்பப்படுஞ் செய்தியைக் கர்த்தர் சொல்லக்கேட்டோம்.
* எரேமியா. ௪௯, ௰௪.

௨. இதோ, உன்னைச் சாதிகளிற் சிறுக்கப்பண்ணுகிறோம், நீ மெத்தவும் அசட்டைபண்ணப்பட்டிருப்பாய்.

௩. கன்மலைவெடிப்புகளாகிய உன் உயர்ந்த நிலையிலே குடியிருந்து என்னைத் தரையிலே விழத்தள்ளுபவனார் என்று உன் இருதயத்திலே சொல்லுகிறவனே, உன் இருதயத்தின் அகந்தை யுன்னை மோசம்போக்குகின்றது.

௪. * நீ கழுகைப்போலே உயர்ந்துபோனாலும், நீ நட்சத்திரங்களுக்குள்ளே யுன் கூட்டைக் கட்டினாலும் அவ்விடத்திலிருந்துன்னை விழத்தள்ளுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * எரேமியா. ௪௯, ௰௬.

௫. எத்தனையாய்ச் சங்காரமானாய்! திருடராகிலும், இராத்திரியிலே பாழாக்கடிக்கிறவர்களாகிலும் உன்னிடத்திலே வந்தார்களாகில் தங்களுக்குப் போதுமென்றமட்டுமல்லவோ திருடுவார்கள்? திராட்சப்பழங்களையறுக்கிறவர்கள் உன்னிடத்திலே வந்தார்களாகில் பின்னறுப்பைக் கொஞ்சம் வையார்களோ!

௬. ஏசாவினுடையது எத்தனையாய்த் திறப்பாக்கப்படும்! அவனுடைய அந்தரங்க பொக்கிஷங்கள் எத்தனையாய் ஆராய்ந்தெடுக்கப்படும்!

௭. உன்னோடே உடன்படிக்கையாயிருந்த எல்லாமனுஷரும் உன்னை எல்லைமட்டும் வழிவிட்டனுப்புவார்கள். உன்னோடே சமாதானமாயிருந்த மனுஷர் உன்னை மோசம்போக்குவார்கள், உன்னை மேற்கொள்ளுவார்கள், உன் அப்பத்தைச் சாப்பிட்டு நீ சேதப்படக் கீழே யெத்தனம் வைப்பார்கள், அவனுக்குணர்வில்லை.

௮. அந்நாளிலேயல்லவோ * நாம் ஏதோமிலே ஞானிகளையும், ஏசாவின் பருவதத்திலே யுணர்வையும் அழிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * எரேமியா. ௪௯, ௭.

௯. தேமானே, ஏசாவின் பருவதத்திலே மனுஷர் கொலையினால் சங்கரிக்கப்படும்படிக்கு உன் பராக்கிரமசாலிகள் கலங்குவார்கள்.

௰. * நீ யுன் சகோதரனுகிய யாக்கோபுக்குச் செய்த கொடுமையினிமித்தம் வெட்கம்

உன்னைவிழுந்ததும், நீ என்றென்றைக்கும் சங்கரிக்கப்பட்டிருப்பாய். * எசேக்கியா. ௨௫, ௰௨. ௩௪. ஆமோஸ். ௧, ௰௧. ௰௨.

௰௧. * நீ எதிரேநின்ற நாளிலும், அந்நியர் அவனுடைய சேனையைச் சிறைபிடித்துப்போகிற நாளிலும் மறுதேசத்தார். அவன் வாசல்களுக்குட்பிரவேசித்து எருசலேமின்மேலே சீட்டுபோடுகையில், நீயும் அவர்களிலொருத்தனைப்போலிருந்தாய்.

௰௨. நீ உன் சகோதரன் அந்நியர்வசமான நாளாகிய அவனுடைய நாளைப்பிரியத்தோடே பாராமலும், யூதாபுத்திரருடைய அழிவின் நாளிலேயவர்கள் நிமித்தஞ் சந்தோஷப்படாமலும், அவர்கள் நெருக்கப்படுகிற நாளிலே உன்வாயை விஸ்தாரமாக்காமலுமிருக்கவேண்டியதாயிருந்தது.

௰௩. நீ என் ஜனத்தின் ஆபத்து நாளிலேயவர்கள் வாசல்களுக்குட்பிரவேசியாமலும், அதின் ஆபத்து நாளிலே யது அனுபவிக்கிற தீங்கை நீயுங்கூடப்பிரியத்தோடே பாராமலும், அதின் ஆபத்துநாளிலே யதின் ஆஸ்தியிறகைபோடாமலும்,

௰௪. அதிலே தப்பினவர்களைச் சங்கரிக்கும்படிக்கு வழிப்பிரிவுகளிலே நிற்காமலும், இக்கட்டுநாளிலே அதில் மீதியானவர்களைக் காட்டிக்கொடாமலுமிருக்கவேண்டியதாயிருந்தது.

௰௫. ஏனெனில், எல்லாச்சாதிகளுக்கும் விரோதமான கர்த்தருடைய நாள் சமீபமாயிருக்கின்றது. * நீ செய்தபடியே யுனக்குச் செய்யப்படும், உன் செய்கையின் பலன் உன் தலையின்மேலே திரும்பும். * அறிவிப். ௰௮, ௬.

௰௬. அதேதெனில் நீங்கள் நம்முடைய பரிசுத்த பருவதத்தின்மேற் குடித்தபடியே எல்லாச்சாதிகளுங்குடிப்பார்கள். அவர்கள் குடித்து விழுங்கி இல்லாதிருந்தவர்களைப்போலிருப்பார்கள்.

௰௭. ஆனால் சீயோன் பருவதத்திலே தப்பியிருப்பாருண்டு, அவர்கள் பரிசுத்தமாயிருப்பார்கள், யாக்கோபின்வீட்டார் தங்களுடைய சுதந்தரங்களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௰௮. யாக்கோபின்வீட்டார் அக்கினியும், யோசேப்பின்வீட்டார் அக்கினிச்சுவாலையும், ஏசாவின்வீட்டாரோவைக்கோலின் துரும்புமாயிருப்பார்கள், அவர்கள் இவர்களைக் கொளுத்தி ஏசாவின்வீட்டில் மீதியாயிராதபடிக்கு இவர்களைப்பட்சிப்பார்கள், என்னிற கர்த்தரிதைச்சொன்னார்.

௰௯. தெற்குச்சீமையார் ஏசாவின் பருவதத்தையும், பள்ளத்தாக்குச்சீமையார் பெலிஸ்தரின் தேசத்தையுஞ் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், அவர்கள் எப்பிராயீமின் நாட்டையும், சமாரியாவின் நாட்டையும் பென்யமீன் மனாஷோவென்கிற கீலேயாத்தையுஞ் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௨௰. சர்பாத்மட்டுங் கானானியருக்குள்ளே சிறைப்பட்டுப்போன இஸ்ரவேல்புத்திரராகிய இந்தச்சேனையும், சேப்பாராத்திற சிறைப்பட்டுப்போன எருசலேம்பட்டணத்தாரும் தெற்குத்திசைப்பட்டணங்களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.

௨௧. ஏசாவின்பருவதத்தை நியாயந்தீர்ப்பதற்காக இரட்சகர்கள் சீயோன்பருவதத்திலேறிவந்தேறுவார்கள், * அப்போது இராச்சியங் கர்த்தருடையதாயிருக்கும்.

* சங்கீ. ௨, ௯. அ. மீகா. ௪, ௭.

ஒபதியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

---

# யோனாவின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். ௮௱௬௨.)

## ௧. அதிகாரம்.

[(௧) யோனா நினிவேக்கு அனுப்பப்பட்டதும், தர்ஷீசுக்கோடிப்போனதும். (௪) அவன் பெருங்காற்றிலகப்பட்டு, (௰௧) கடலில் எறியுண்டு. (௰௭) மச்சத்தினால் விழுங்கப்பட்டது.]

அமித்தாயின் குமாரனாகிய * யோனாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது;

௨. நீ யெழுந்திருந்து பெரியபட்டணமாகிய நினிவேக்குப்போய் அதற்கு விரோதமாகப் பிரசங்கி. ஏனென்றால், அவர்களுடைய பொல்லாப்பு நமக்குமுன்பாக ஏறிவந்ததென்றார்.

௩. அப்போது யோனா கர்த்தருடைய முகத்திற்கு விலகித் தர்ஷீசுக்கோடிப்போகும்படிக்கு எழுந்திருந்து * யோப்பேக்கு இறங்கிப்போய்த் தர்ஷீசுக்குப் போகிறகப்பலைக் கண்டுபிடித்துத் தலைக்கூலிகொடுத்துத்தான் கர்த்தருடைய முகத்திற்கு விலக அவர்க

* ௨. இராசா. ௰௪, ௨௫.

கூளய

ளோடே கூடத் தர்ஷீசுக்குப் போகும்படிக்கு அதிலே ஏறினான். * அப்போ. ௯, ௩௯.

௪. * ஆனால் கர்த்தர் சமுத்திரத்தின் மேல் பெருங்காற்றை வரவிட்டார், அதினாலே கப்பல் உடையுமென்று நினைக்கத்தக்கதான கனகொந்தளிப்புண்டாயிற்று.

* மத்தே. ௮, ௨௪. அப்போ. ௨௭, ௰௪.

௫. அப்பொழுது கப்பலாள்கள் பயந்து அவரவர் தம்தம் தேவனை நோக்கிக் கூப்பிட்டுக் கப்பலிலிருந்த தட்டுமுட்டுகளின் பாரம் அற்றுப்போகிறதினாலே யதை இலேசாக்கும்படிக்கு அவைகளைச் சமுத்திரத்திலே எறிந்துவிட்டார்கள், யோனாவோவென்றால் கப்பலின் கீழ்த்தட்டில் இறங்கிப் படுத்துக்கொண்டு அயர்ந்த நித்திரைபண்ணியிருந்தான்.

௬. அப்பொழுது பெரிய மாலிமியவன் அவனிடைக்குச் சேர்ந்துவந்து, அவனுடனே, நீ நித்திரைபண்ணிக் கிடக்கிறதேது? எழுந்திருந்து உன் தேவனை நோக்கிக் கூப்பிடு, நாம் கெட்டுப்போகாதபடிக்குச் சுவாமி ஒருவேளை நம்மை நினைத்தவாய் நினைப்பாராக்குமென்றான்.

௭. அவர்கள் ஒருத்தரோடொருத்தர், ஆர் நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்கு வருகின்றதென்று நாம் அறியும்படிக்குச் சீட்டுகளைப் போடுவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டு சீட்டுகளைப் போட்டார்கள், அப்பொழுது யோனாவின் பெயருக்குச் சீட்டு விழுந்தது.

௮. அப்பொழுது அவர்கள் இவனோடே, ஆர் நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்கு வருகின்றதென்று நீ யெங்களுக்கறிவி, உன் தொழிலென்ன? நீ யெங்கேயிருந்து வருகிறாய்? உன்னுடைய தேசமேது? நீ யெந்தச் சனத்தானென்று சொல்லிக்கேட்டார்கள்.

௯. அவர்களோடேயிவன், நான் எபிரேயன், சமுத்திரத்தையும், பூமியையும் உண்டாக்கின பரமண்டலங்களுடைய பராபரனாகிய கர்த்தருக்கு நான் பயபத்தியானவனென்றான்.

௰. அப்பொழுது அந்த மனுஷர் மிகவும் பயந்து அவனுடனே, நீ யேனிதைச் செய்தாயென்றார்கள். ஏனெனில், தான் கர்த்தருடைய முகத்திற்கு விலகி ஓடிப்போகிறவனென்கிறதையவன் தங்களுக்கறிவித்ததினாலே அந்த மனுஷர் அதையறிந்தார்கள்.

௰௧. பின்னையுஞ் சமுத்திரம் நமக்கு அமர்ந்துபோகும்படிக்கு உனக்கு நாங்கள் செய்யவேண்டியதென்னவென்று அவனைக் கேட்டார்கள். ஏனென்றால், சமுத்திரங் கொந்தளித்துக்கொண்டேயிருந்தது.

௰௨. அப்பொழுது அவன் அவர்களோடே சொன்னதாவது; நீங்கள் என்னையெடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிடுங்கள், அப்பொழுது சமுத்திரம் உங்களுக்கு அமர்ந்துபோகும். ஏனெனில், என்னிமித்தம் இந்தப் பெரிய கொந்தளிப்பு உங்கள் மேல் வந்ததென்கிறதை நான் அறிவேனென்றான்.

௰௩. அந்த மனுஷர் கரைக்குத் திரும்பும்படிக்குத் தண்டுவலித்தார்கள், ஆனால் அவர்களுக்குக் கூடாதே போயிற்று. ஏனெனில் சமுத்திரம் அவர்களுக்கு விரோதமாகக் கொந்தளித்துக்கொண்டேயிருந்தது.

௰௪. அப்பொழுது அவர்கள் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டுச் சொன்னதாவது; ஆ, கர்த்தாவே, தேவரீர் எங்களை இந்த மனுஷனுடைய சீவனிமித்தம் கெட்டுப்போகவொட்டாமலும், குற்றமில்லாத இரத்தப்பழியை யெங்கள் மேல் சுமத்தாமலுமிருப்பீராக. ஏனெனில், தேவரீர் கர்த்தர், உமக்குச் சித்தமாயிருக்கிறபடியே தேவரீர் செய்கிறீரென்று சொல்லி,

௰௫. யோனாவையெடுத்துச் சமுத்திரத்திலே போட்டுவிட்டார்கள், அப்பொழுது சமுத்திரம் தன் மும்முரத்தைவிட்டு அமர்ந்தது.

௰௬. அப்பொழுது அந்த மனுஷர் கர்த்தருக்கு மிகவும் பயப்பட்டுக் கர்த்தருக்குப் பலியிட்டுப் பொருத்தனைகளைப் பண்ணினார்கள்.

## ௨. அதிகாரம்.

[(௧) யோனாவின் செபம். (௰) மச்சத்துக்குள்ளிருந்து அவன் விடுதலையாக்கப்பட்டது.]

ஆனால் யோனாவை விழுங்கப் பெரிய மீனைக் கர்த்தர் கட்டளையிட்டார், * அந்த மீனினுடைய வயிற்றிலே யோனா மூன்று பகலும், மூன்று இராத்திரியுமிருந்தான். * மத். ௰௨, ௪௰. ௰௬, ௪. லூக். ௰௧, ௨௯.

௨. ஆனால் மீனுடைய வயிற்றிலிருந்து யோனா தன் பராபரனாகிய கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணிச் சொன்னதாவது;

௩. * நான் நெருக்கப்படுகையில் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன், அப்பொழுது எனக்கு உத்தரவருளிச்செய்தார், பாதாளத்தின் வயிற்றிலிருந்து கூக்குரலிட்டேன், அப்பொழுது என் சத்தத்தைக் கேட்டீர். * சங். ௱௨௰, ௧. ௱௩௰, ௧.

௪. ஏனென்றால் சமுத்திரங்களின் நடுமையமாகிய ஆழத்திலே யென்னைத் தள்ளிவிட்டீர், நீரோட்டம் என்னைச் சூழ்ந்துகொண்டது, உம்முடைய எல்லா வெள்ளங்களும், அலைகளும் என் மேல் புரண்டன.

௫. நான் உம்முடைய கண்களுக்கெதிரேயிராதபடிக்குத் தள்ளுண்டேன், ஆகிலும் இன்னம் உம்முடைய பரிசுத்த தேவாலயத்தை நோக்குவேனென்றேன்.

௬. தண்ணீர்கள் என்னைப் பிராணபரியந்தம் நெருக்கிப்பிடித்தது, ஆழம் என்னைச் சூழ்ந்தது, நாணல் என் தலையைச் சுற்றிக்கொண்டது.

௭. பருவதங்களின் அடிவாரங்கள் பரியந்தம் இறங்கினேன், பூமியின் தாழ்ப்பாள்கள் என்றென்றைக்கும் என்னைப் பூட்டிற்றாயிருந்தன, ஆனால் என் பராபரனாகிய கர்த்தாவே என் பிராணனை அழிவுக்குத் தப்புவித்து ஏறிவரப்பண்ணினீர்.

௮. என் ஆத்துமம் என்னிலே தொய்ந்து போகையில் கர்த்தாவே யும்மை நினைத்தேன், அப்போது என் விண்ணப்பம் உமது பரிசுத்த தேவாலயத்திலே உம்மண்டைக்கு வந்து சேர்ந்தது.

௯. பொய்யான மாயையைக் கைக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்.

௰. * நானோவென்றால் துதியின் சத்தத்தோடே உமக்குப் பலியிடுவேன், நான் பண்ணின பொருத்தனையைச் செலுத்துவேன், இரட்சிப்பு கர்த்தருடையதென்றான். * சங். ௫௰, ௰௪. ௱௰௬, ௰௭.

௰௧. ஆனால் கர்த்தர் மீனுக்குச் சொன்னார், அப்போது அது யோனாவைக் கரையிலே கக்கிவிட்டது.

## ௩. அதிகாரம்.

[(௧) யோனா மறுபடியும் அனுப்பப்பட்டு நினிவேயருக்குப் பிரசங்கித்தது. (௫) அவர்கள் குணப்பட்டதின்மேல் பராபரன் ஆக்கினையை நீக்கினது.]

இரண்டாம்விசை கர்த்தருடைய வார்த்தை யோனாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௨. * நீ யெழுந்திருந்து பெரிய பட்டணமாகிய நினிவேக்குப் போய் அதற்கு விரோதமாக நான் உனக்குச் சொல்லும் பிரசங்கத்தைப் பிரசங்கியென்றார். * ௧, அதி. ௨.

௩. அப்போது யோனா எழுந்திருந்து, கர்த்தருடைய வார்த்தையின்படியே நினிவேக்குப் போனான், நினிவேயோவென்றால், மூன்று நாளைப் பயணமான மிகுந்த விஸ்தாரமுள்ள பெரிய பட்டணமாயிருந்தது.

௪. யோனா ஒரு நாளைப் பயணம் பட்டணத்திற்குட் போகத் துவக்கி, இன்னும் நாற்பது நாளிருக்கின்றது, அப்போது நினிவே புரட்டப்பட்டுப் போமென்று பிரசங்கித்தான்.

௫. * அப்போது நினிவே மனுஷர் பராபரன்பேரிலே விசுவாசித்து உபவாசத்தைக் கூறினார்கள். பெரியோர் துவக்கிச் சிறியோர்மட்டும் இரட்டுகளை யுடுத்துக்கொண்டார்கள். * மத்தே. ௰௨, ௪௧.

௬. இந்த வர்த்தமானம் நினிவேயின் இராசாவுக்குப் போயெட்டினபோது இவன் தன் இராசாசனத்தைவிட்டெழுந்திருந்து தான் உடுத்திருந்த உடுப்பை விலக்கிப்போட்டு இரட்டை யுடுத்துக்கொண்டு சாம்பலிலே உட்கார்ந்தான்.

௭. இதுவுமல்லாமல் இராசாவானவன் தானும் தன்னுடைய பிரதானிகளுமாக நிருணயம்பண்ணின கட்டளையாக நினிவேயிலே கூறச்சொன்னதாவது; மனுஷரும், மிருகவாகனங்களும், மாடுகளும், ஆடுகளும் ஒன்றும் ருசிபாராதிருக்கவும், மேயாமலும், தண்ணீர்குடியாமலுமிருக்கவும்,

௮. மனுஷரும், மிருகவாகனங்களும் இரட்டினாலே மூடப்பட்டுப் பராபரனை நோக்கி வலுவாய்க் கூப்பிடவும், அவரவர் தங்கள் பொல்லாத வழியையும், தங்கள் கைகளிலுள்ள கொடுமையையும் விட்டுத் திரும்பவுங் கடவது.

௯. நாம் அழிந்து போகாதபடிக்கு * ஒருவேளை பராபரன் மனஸ்தாபப்பட்டுத் தம்முடைய கோபத்தின் உக்கிரத்தைவிட்டுத் திரும்பிக்கொள்ளுவாராக்கும். ஆருக்குத் தெரியுமென்பதாகவுங் கூறச்சொன்னான். * யோவேல். ௨, ௰௪. தானி. ௪, ௨௪.

௰. அவர்கள் தங்கள் பொல்லாத வழியை விட்டுத் திரும்பினார்களென்று பராபரன் அவர்களுடைய கிரியைகளைப் பார்த்துத் * தாம் அவர்களுக்குச் செய்வோமென்று சொல்லியிருந்த தீங்குக்கு மனஸ்தாபப்பட்டு அதைச் செய்யாதிருந்தார். * எரேமி. ௰௮, ௭. ௮.

## ௪. அதிகாரம்.

[(௧) யோனா பராபரனுடைய இரக்கத்தைக் குறித்து மனமடிவாகி, (௪) ஆமணக்குச் செடியின் அடையாளத்தினாலே தான் கண்டிக்கப்பட்டது.]

ஆனால் யோனாவுக்கு இது மிகுதியும் ஆகாத்தாயக் கண்டது. அவனுக்கு எரிச்சலுண்டாயிற்று.

௨. அவன் கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணிச் சொன்னதாவது; ஆ, கர்த்தாவே, நான் என் தேசத்திலிருக்கையில் நான் சொன்னது; இதுதானல்லவோ! ஆகையாலேதானே தர்ஷீசுக்கோடிப்போகிறதினால் இதற்கு முந்திக்கொள்ளப்பார்த்தேன். ஏனென்றால், தேவரீர் * இரக்கமும், மனவுருக்கமும், நீடியசாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவரும், தீமைக்கு மனஸ்தாபப்படுகிறவருமான தேவனென்றறிவேன். * ௨. மோ. ௩௪, ௬.

௩. இப்போதும் கர்த்தாவே, என் ஆத்துமத்தை என்னைவிட்டெடுத்துக்கொள்ளும். ஏனென்றால், நான் உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் நான் சாகிறது தாவலையென்றான். * யோபு. ௩, ௧. ௰, ௪. எரேமி. ௨௰, ௰௪.

௪. அதற்குக் கர்த்தர் நீ எரிச்சலாயிருக்கிறது நல்லதோவென்றார்.

௫. யோனாவோவென்றால், பட்டணத்திலிருந்து புறப்பட்டுப் பட்டணத்திற்குக் கிழக்க

கே யுளுககாநது அஙகே தனககொரு குடிசையைபபோடடுப் பட்டணததிறகுச சமபவிககபபோகிறதைத் தான பார்க்குமபடிம அதினகீழ நிழலிலே உளுககாநதிருநதான.

சு. ஆனால யோனாவுடைய தலையினமேல நிழலுணடாயிருக்கவும, அவனை அவனுடைய மனமடிவுககு நீஙகலாககவும பராபரனாகிய கர்ததர் ஒரு ஆமணககுசசெடியை முளைககக்கடடளையிடடு அதை யவனமேல ஓஙகிவளரபபணணினார். அநத ஆமணககினமேலே யோனா மிகுநியுஞ சநதோஷபபடடான.

எ. ஆனால மறுநாள கிழககுவெளுககும நேரததிலே பராபரன ஒரு பூச்சியைககடடளையிடடார். அது ஆமணககுசசெடியைக் கடிதது பபோடடது. அதினாலே காயநது போயிறறு.

அ. சூரியனுதிததபோதுசமபவிததேதெனறற பராபரன அமைச்சலுள்ள கிழககாற்றைக் கடடளையிடடார். அபபோது வெயிலயோனாவுடைய தலையிறபடுகிறதினால அவன தொயநதுபோயத் * தன சீவனுக்குச சாவைவிருமபி நான உயிரோடிருககிறதைப்பார்க்கிலும நான சாகிறது தாயமெனறான. * க. வசனம.

கூ. அபபோது பராபரன யோனாவுடனே நீ ஆமணககினிமிததம * எரிச்சலாயிருககிறது நலலதோவெனறார். அதறகவன நான மரணபரியநதமும எரிச்சலாயிருககிறது நலலதெனறான. * ச. வசனம.

ய. அபபோது கர்ததர் சொனனதாவது; நீ பிரயாசபபடாததும, பயிராககாததும, ஒரு இராததிரியிலேமுளைததது, ஒரு இராததிரியிலே அழிநததுமான ஆமணககுககுப் பரிதவிககிறாயே.

யக. தஙகள வலது கைக்கும, தஙகள இடதுகைக்கும விததியாசமறியாத நூற்றிருபதினாயிரமபேருக்கு அதிகமான மனுஷரும, அநேக மிருகஜீவனகளுமிருககிற * பெரிய பட்டணமாகிய நினிவேககு நாம பரிதவிககாதிருபபோமோவெனறார். * ரு, அதி. ரு.

யோனாவின திர்க்கதரிசனம முடிநததுமுறறும.

# மிகாவின் திர்க்கதரிசனம்.



## க. அதிகாரம்.

[(க) மிகாயாககோபின விககிரகாராதனைககாகப பராபரனுடைய கோபம அவனமேல வருவதைக்காடடினது. (ய) துககிபபதறகுததூணடினது.]

யோததாம, ஆகாஸ், எசேககியா வெனற யூதாவின இராசாககளுடையநாள்களில * மொரேசா ஊரானாகிய மிகாவுககுணடானதும, அவன சமாரியாவுககும, எருசலேமுககுமவிரோதமாயத் தரிசனமாகக்கணடதுமான கர்ததருடையவார்ததை * எரோமி. உகூ, யஅ.

உ. * சகல சனசதஙகளே, கேளுஙகள. பூமியே, அதின நிறைவே, கவனி. கர்ததராகிய ஆணடவர் உஙகளுககுவிரோதமாகச சாட்சிவிளஙகுவார். ஆணடவர் தமமுடைய பரிசுததேவாலயததிலிருநது தாமே.

* ரு. மோசே. ருஉ, க. ஏசா. க, உ.

ரு. * ஏனெனில, இதோ, கர்ததர்தமமுதான ததிலிருநது புறபபடடு இறஙகிப பூமியின உயரஙகளை மிதிபபார். * ஏசா. உரு, உக.

ச. அககினிககுமுனபாக மெழுகு உருகுகிறதுபோலேயும, மலைகளிலிருநது பாயுநதணணீர் தணணீரைக கழிககிறதுபோலேயும, * அவர் கீழே பர்வதஙகள உருகிப்பளளஙதாககுகள கிழிநதுபோகும. * சங. கூஎ, ரு.

ரு. இவையெல்லாம யாககோபுடைய மீறுதலநிமித்தமும, இஸ்ரவேல்வீடடாருடைய பாவஙகள நிமித்தமுஞ சமபவிககும. யாககோபின மீறுதலுககுககாரணமேது? சமாரியாவலலவோ! யூதாவினமேடைகளுககுககாரணமேது! எருசலேமலலவோ!

சு. ஆகையால நாம சமாரியாவை வெளியான மணமேடும, திராட்ச நடவுககான நிலமுமாககி அதின கறகளைப் பளளததாககிலே புரளவிழபபணணி அதின அஸ்திபாரஙகளைத திறநதுவைபபோம.

எ. அதின சுருபஙகளெலலாம நொருககபபடும. அதின பணயஙகளெலலாம அககினியால எரிததுபபோடபபடும, அதினவிககிரகஙகளையெலலாம பாழாககுவோம. ஏனெனில, வேசிபபணயததினால சேர்ககபபடடது. திரும்ப வேசிப்பணயமுமாயப்போகும.

அ. இதினிமிததம நான புலமபி அலறு

வேன். பறிகொடுத்தவளாகவும் அம்மணமாகவும் நடப்பேன். நான் வலுசான சர்ப்பங்களைப்போலப் புலம்பலையும், தீக்குருவிகளைப்போலத் துக்கிப்பையுங் கேட்கப்பண்ணுவேன்.

௯. ஏனெனில், அதின்காயம் ஆருத்தாயிருக்கின்றது. அதெதெனில், யூதாமட்டும்வந்தது. என் சனத்தின் வாசலமட்டும் எருசலேமட்டுமே கிட்டிற்று.

௰. * அதைக் காத்பட்டணத்திலே அறிவியாதேயுங்கள். அழவே அழாதேயுங்கள். உள்ளேபுழுதியுள்ள தலத்திலேபோய்ப்புழுதியிலே புரளு. * உ. சாமுவேல். க, உ௰.

௰க. சாப்பீரிற்குடியிருக்கிறவளே, வெட்கமான அம்மணமாய் அப்பாலேபோ. சாயனானிற் குடியிருக்கிறவள் வெளியேவருகிறதில்லை. அசலூரின் புலம்பல் அதில் உங்களுக்கிருந்த ஆதரவை நீங்கமையையெடுத்துப்போட்டது.

௰உ. மாரோத்திற்குடியிருக்கிறவள் இழந்த நன்மையினிமித்தம் நோவுசலாயிருப்பாள். ஏனெனில், எருசலேமின் வாசலுக்கு நேராகத் தீங்கு * கர்த்தரிடத்திலிருந்திறங்குகின்றது. * ஏசாயா. ச௫, எ. ஆமோஸ். ௩, ௬.

௰௩. இலாகிசிற் குடியிருக்கிறவளே, வேகமான வாகனங்களை இரதத்திலேபூட்டு, நீதான் சீயோன்குமாரத்தியின் பாவத்திற்குக் காரணி, ஏனெனில், உன்னில் இஸ்ரவேலின் பாதகங்கள் கண்டுபிடிக்கப்பட்டது.

௰ச. ஆகையால் காத்பட்டணத்தின் கிட்ட உனக்கிருக்கிறதைக் கொடுத்துவிடுவாய். அக்சீபின்வீடுகள் இஸ்ரவேலின் இராசாக்களுக்கு அபத்தமாய்ப்போகும்.

௰௫. மரேசாவிற்குடியிருக்கிறவளே, உனக்கின்னமொரு சுதந்தரவாளியைவரப்பண்ணுவேன். அவன் அதுல்லாமட்டுக்கும், இஸ்ரவேலுடைய மகிமையின்தானமட்டுக்கும் வருவான்.

௰௬. உனக்குக் கனிக்கரமான உன்பிள்ளைகளினிமித்தம் * நீ மொட்டையாகச் சிரைத்துக்கொள், கழுகைப்போல முழு மொட்டையாகத்தானே. ஏனெனில், உன்னைவிட்டுச் சிறையிருப்பிலே போகிறார்கள். * ஏசா. உஉ, ௰உ.

## உ. அதிகாரம்.

[(க) இக்கட்டு விரோதமாகப்பேசினது. (௪) புலம்பினது. (எ) அநீதியையும், விக்கிரகாராதனையையுங் குறித்துக் கண்டித்தது. (௰உ) யாக்கோபைத்திரும்பவுயர்த்துதலினவாக்குத்தத்தம்.]

அக்கிரமநினைத் * யோசித்துத் தங்கள் படுக்கைகளின்மேற் பொல்லாப்புச் செய்துகொண்டிருக்கிறவர்களுக்கு ஐயோ! வெளிச்சமாகிறபோது அதைத் தங்கள் கையில் வல்லமையிருக்கிறபடியினாலே நடப்பித்து,

உ. * வயல்களையிச்சித்துப் பறித்துக்கொண்டு வீடுகளையிச்சித்து எடுத்துக்கொண்டு, புருஷனையும், அவன் வீட்டையும், மனுஷனையும், அவன் சுதந்தரத்தையும் ஒடுக்குகிறவர்களுக்கையோ. * ஏசாயா. ௫, அ.

௩. * ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது; இதோ, நீங்கள் உங்கள் கழுத்துகளை நீங்கலாக்கிவிடக்கூடாத தீங்கை நாம் இந்த வம்சத்தின்மேல் வரப்பண்ண நினைக்கிறோம், அப்போது நீங்கள் மேட்டிமையாய் நடப்பதில்லை. ஏனென்றால், இது தீக்காலம். * ரூ. மோசே. ௫, ௰௩.

௪. அந்நாளிலே உங்கள்மேலே ஒரு சொலவுண்டாகித் துக்கமான புலம்பலாய்ப் பாழாகவே பாழானோமென்றும், என் சனத்தின் வீதத்தை மாற்றிப்போட்டாரென்றும், எப்படி அதையென்னைவிட்டெடுத்துப் போட்டார்? எங்கள் வயல்களைப் பிரிங்கிப் பகுந்துகொடுத்தாரென்றும் புலம்பப்படும்.

௫. மெய்யாகவே, கர்த்தரின் சபையிற் சுதந்தரவீதங்களை யளந்துகொடுக்கிறவர்கள் உனக்கில்லாதிருப்பார்கள்.

௬. * தீர்க்கதரிசனஞ் சொரியாதிருப்பீர்களாக, சொரிந்தால் நிந்தை நீங்கிப்போகாதிருக்கிற இந்தப்பிரகாரமாகச் சொரியவேண்டாமென்கிறார்கள். * ஆமோ. எ, ௰௬.

எ. யாக்கோப்வீட்டாரென்னப்பட்டவர்களே, கர்த்தரின் ஆவியானவர் குறுகியிருக்கிறாரோ! அவருடைய கிரியைகள் இவைகள்தானோ! செம்மையாய் நடக்கிறவனோடே நம்முடையவார்த்தைகள் தயவாயிராதோ!

அ. நம்முடைய சனமோவென்றால், முதலே சத்துருவாக எழும்பிற்று, யுத்தத்திலிருந்து திரும்பிவந்து அஞ்சாமற்கடந்துபோகிறவர்களுடைய வஸ்திரத்தின்மேல் உடுப்பையுரிந்துகொண்டீர்கள்.

௯. நம்முடைய சனத்தின் ஸ்திரிகளையவர்களுடைய சவுக்கியமான வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்கள், அவர்களுடைய குழந்தைகளுக்கிருந்த நம்முடைய அலங்காரத்தை என்றைக்குமில்லாதபடிக்குப் பறித்துக்கொண்டீர்கள்.

௰. எழுந்திருந்து போங்கள். ஏனெனில், இது நீங்கள் இளைப்பாறிக்கொண்டிருக்கத்தக்கதேசமல்ல, அதேனென்றால், தீட்டுப்பட்டுக் கெட்டுப்போயிற்று, கேடு அகோரமுமாயிற்று.

௰க. மனம்போகிற போக்காய்ப்போய் அபத்தமானதைப்பேசுகிற ஒருவன் மதுபானத்தையும், மட்டியையுங் குடித்து நான் உனக்குப் பிரசங்கிப்பேனென்றால், அவனேயிந்தச் சனத்திற்கேற்ற பிரசங்கியாயிருப்பான்.

௰௨. யாக்கோபின்சனமே, * உங்களையெல்லாங் கூட்டமாய்க்கூட்டுவோம், இஸ்ரவேலில் மீதியானவர்களைச் சேர்க்கச்சேர்ப்போம், போத்ஸ்ராவின் ஆடுகளைப்போலே அவர்களை † ஏகக்கூட்டமாகக்குவோம், தன் தொழுத்திறகுள்ளே சேர்ந்த மந்தைக்குச் சமானமாய மனுஷத்திரளினாலே இரைச்சலுண்டாகும். * உரோமர். ௰௧, உ௬.
† யோவா. ௰, ௰௬.

௰௩. தடைகளை நீக்கிப்போடுகிறவர் அவர்களுக்கு முன்பாக நடந்தேறுவார், அவர்கள் தடைகளை நீக்கி வாசலால உள்ளும், புறப்புமாகப்பிரவேசிப்பார்கள், * அவர்கள் இராசா அவர்களுக்கு முன்பாகவும், கர்த்தர் அவர்கள் முன்னணியிலும் நடந்துபோவார். * ௪, எ.

## ௩. அதிகாரம்.

[(௧) துரைத்தனத்தாருடைய கொடுமை. (௫) தீர்க்கதரிசிகளின் கள்ளத்தனம். (அ) அவர்களிறதலின் பயமின்மை.]

நான் சொன்னதாவது; * யாக்கோபின் தலைவர்களே, இஸ்ரவேல்வீட்டாரின் அதிபதிகளே, நியாயமின்னதென்றறிய உங்களுக்கல்லவோ அடுக்கும்? * ஏசா. ௧, ௰. ஞ. செ. ௫, ௧.

௨. ஆனால் நன்மையைப்பகைத்துப் பொல்லாப்பை நேசிக்கிற அவர்கள்மேலிருக்கிற அவர்களுடைய தோலையும், அவர்கள் எலும்புகளின்மேலிருக்கிற அவர்களுடைய சதையையும் பிடுங்கி,

௩. என் சனத்தின் சதையைத் தின்று அவர்கள்மேலிருக்கிற அவர்களுடைய தோலையுரித்துக்கொண்டு அவர்கள் எலும்புகளை முறித்து ஒப்பு பானையிலேபோடும்வண்ணமாகவும், இறைச்சியைக் கொப்பரைக்குள்ளேபோடும் வண்ணமாகவும் அவைகளைத் துண்டிக்கிறார்கள்.

௪. அப்பொழுது கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவார்கள், ஆனால் * அவர்கள் தங்கள் கிரியைகளிற் பொல்லாதவர்களானபடியினாலே இவர் அவர்களுக்கு மறு உத்தரவு கொடாமல் தமது முகத்தை அக்காலத்திலே அவர்களுக்கு மறைப்பார். * ஏசா. ௫௯, ௨.

௫. நமது சனத்தை மோசம்போக்குகிற தீர்க்கதரிசிகளுக்கு விரோதமாகக் கர்த்தர் சொல்லுகிறதாவது; அவர்கள் தங்கள் பல்லுகளினாலே கடிக்கிறவர்களாயிருந்து * சமாதானமென்று கூப்பிட்டுத் தங்கள் வாய்க்குக் கொடாதவனுக்கு விரோதமாக யுத்தத்தை ஆயத்தம்பண்ணுகிறார்கள். * ஏசா. ௫௬, ௰.

௬. ஆகையால், நீங்கள் தரிசனம்பார்க்கக் கூடாத இராத்திரியும், குறிசொல்லக்கூடாத அந்தகாரமும் உங்களுக்கு வரும், தீர்க்கதரிசிகளின்மேல் சூரியன் அஸ்தமித்து அவர்கள்மேலே பகல் காரிருளாய்ப்போகும்.

எ. தரிசனம்பார்க்கிறவர்கள் வெட்கி, குறிசொல்லுகிறவர்கள் நாணிப்போய் உத்தரவு கொடுப்பிக்கிற தேவனில்லாததினாலே அவர்களெல்லாரும் தங்கள் தாடியை மூடுவார்கள்.

அ. நானோவென்றால், * யாக்கோபுக்கு அவன் மீறுதலையும், இஸ்ரவேலுக்கு அவன் பாவத்தையும் அறிவிக்கத்தக்கதாகக் கர்த்தருடைய ஆவியோடேகூடிய பலத்தினாலும், நியாயத்தினாலும், பராக்கிரமத்தினாலும் நிரப்பப்பட்டிருக்கிறேன். * ஏசா. ௫அ, ௧.

௯. நியாயத்தை அருவருத்துச் செம்மையானவைகளையெல்லாங் கோணலாக்கி,

௰. சீயோனை இரத்தப்பழிகளாலும், எருசலேமை அநியாயத்தினாலுங் கட்டுவிக்கிற யாக்கோப்வீட்டாரின் தலைவர்களே, இஸ்ரவேல்வீட்டாரின் அதிபதிகளே, இதைக்கேளுங்கள்.

௰௧. * அதின் தலைவர்கள் பரிதானத்திற்கு நியாயந்தீர்க்கிறார்கள், அதின் ஆசாரியர்கள் கூலிக்கு உபதேசிக்கிறார்கள், அதின் தீர்க்கதரிசிகள் பணத்திற்குக் குறிசொல்லுகிறார்கள், ஆகிலும் அவர்கள் கர்த்தரைச் சார்ந்துகொண்டு, கர்த்தர் எங்கள் நடுவிலில்லையோ தீங்கு எங்கள்மேல் வராதென்கிறார்கள். * செப். ௩, ௩.

௰௨. ஆகையால், * உங்கள் நிமித்தஞ் சீயோன் வயலாக உழப்பட்டு, எருசலேம் மண்மேடுகளும், வீட்டின் பருவதங் காட்டு மேடுகளுமாய்ப்போகும். * எரே. ௨௬, ௰அ. உ௬, ௰அ.

## ௪. அதிகாரம்.

[(௧) திருச்சபையின் மகிமை. (௩) அதன் சமாதானம். (அ) ஆளுகை. (௰௧) செயம்.]

ஆனால் * கடைசிநாட்களிற சம்பவிப்பதென்னவெனில், கர்த்தருடைய வீட்டினுடைய பருவதம் பருவதங்களின் கொடுமுடியாயத்திடப்பட்டு மேடுகளிலும் உயர்ந்ததாயிருந்து சனசதளங்கள் அதற்கோடி, * ஏசா. ௨, ௨.

௨. * திரளான சாதியார் நடந்துவந்து கர்த்தரின் பருவதத்திற்கும், யாக்கோபுடைய பராபரனின் வீட்டுக்கும், அவர் தமது வழிகளை நமக்குப்போதிக்கவும், நாம் அவர் பாதைகளில் நடக்கவும் நாம்போயேறுவோம் வாருங்களென்பார்கள். ஏனெனில், வேதஞ் சீயோனிலும், கர்த்தரின் வசனம் † எருசலேமிலுமிருந்து பரவிப்போகும்.
* ஏசா. ௫௰, ௪. ௫. † லூக். உ௪, ௪எ.

௩. * அவர் திரளான சனசதளங்களுக்குள் நியாயந்தீர்த்துத் தூரப்பரியந்தம்பலத்த சா-

திகளைக் கடிந்துகொள்ளுவார், அப்பொழுது தங்கள் பட்டயங்களை மண்வெட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள், சாதிக்கு விரோதமாய்ச் சாதி பட்டயமெடுப்பதில்லை, இனி யுத்தம் பழகுவதுமில்லை. * ஏசாயா. ௨, ௪.

௪. * அவனவன் தன் திராட்சச்செடியின் கீழும், தன் அத்திமரத்தின் கீழும் தத்தளிக்கப்பண்ணுவாரில்லாமல் உட்காருவான், என்னென்றால் † சேனைகளுடைய கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று. * ௧. இராசா. ௪, ௨௫. † ஏசாயா. ௫௮, ௰௪.

௫. அதேதென்றால் சகல சனசதளங்களும் தங்கள் தங்கள் பராபரனுடைய நாமத்திலே நடப்பார்கள், நாங்களும் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நடப்போம்.

௬. கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அந்நாளிலே நாம் நொண்டியானவளைச் சேர்த்துத் தள்ளுண்டவளையும், நால் திக்கிலுஞ் சிதறப்பண்ணினவளையுங் கூட்டிக்கொண்டு,

௭. * நொண்டியானவளை மீதியான சனமாகவும், தூரமாய்த் தள்ளுண்டுபோனவளைப் பலத்த சாதியாகவும் வைப்போம், அவர்கள் பேரிலே கர்த்தர் சீயோன் பருவதத்திலே † இதுமுதலாய் என்றென்றைக்கும் இராசாவாயிருப்பார். * செப்பனி. ௩, ௰௯. † லூக்கா. ௧, ௩௩.

௮. மந்தையின் துருக்கமே, சீயோன் குமாரத்தியின் கோட்டே, உன்னண்டைக்கு வரும், * முந்தின ஆளுகையும் எருசலேம் குமாரத்தியின் இராசரிகமுமே வரும். * ஏசாயா. ௧, ௨௬.

௯. இப்பொழுதும் நீ கதறுதலாய்க் கதறுவானேன்? இராசாவானவர் உனக்குள்ளே இல்லையோ? உன் ஆலோசனைக்காரர் அழிந்தாரோ? என்னென்றால் பிள்ளைபெறுகிறவளுக்கொத்த அப்பாயம் உன்னைப் பிடித்திருக்கின்றதே.

௰. சீயோன் குமாரத்தியே, பிள்ளைபெறுகிறவளைப்போல அப்பாயப்பட்டுப் பிரயாசப்படு. என்னெனில், இப்பொழுது பட்டணத்திலிருந்து புறப்பட்டு வெளிகளில் தங்கிப் பாபேல் மட்டும் வந்துசேருவாய், அங்கே விடுவிக்கப்படுவாய், அங்கே கர்த்தர் உன்னை உன் சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கிவிடுவார்.

௰௧. இப்பொழுதும் அவள் தீட்டுப்பட்டவளாகக்கடவளென்றும், சீயோனிலே எங்கள் கண் தனக்காசையாயிருக்கிறதைக் காணுமென்றும் அநேகஞ் சாதியார் உனக்கு விரோதமாகக் கூடிக்கொள்ளுவார்கள்.

௰௨. * ஆனாலும், அவர்கள் கர்த்தருடைய நினைவுகளையறியாமலும், அவருடைய யோசனையையுணராமலுமிருக்கிறார்கள். அதேதெனில், அரிக்கட்டுகளைப்போல அவர்களைக் களத்திலே கூட்டுவார். * ஏரே. ௨௧, ௰௧.

௰௩. சீயோன் குமாரத்தியே நீ எழுந்திருந்து போரடி. என்னென்றால், நான் உன் கொம்புகளை யிரும்பும், உன் குளம்புகளை வெண்கலமுமாக்குவோம், நீ அநேக சனசதளங்களை நொறுக்கிப்போடுவாய், அவர்கள் தேடிச்சேர்த்ததைக் கர்த்தருக்கும், அவர்களுடைய ஆஸ்தியைப் பூமியெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கும் நியமிப்பாய்.

௰௪. தண்டு சேனையுடைய பட்டணமே, இப்பொழுது தண்டுதண்டாகக் கூடிக்கொள், நமக்கு விரோதமாக முற்றிக்கைபோடப்படும், இஸ்ரவேலுடைய நியாயாதிபதியை மிலாறினாலே தாடையிலே அடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவின் சனனம். (௪) அவருடைய இராசரியம். (௮) அவருடைய செயம்.]

ஆனால், * எப்பிராத்தா என்னப்பட்ட † பெத்லெகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தாலும், இஸ்ரவேலையாளப்போகிறவர் உன்னிலேயிருந்து புறப்படுவார், அவருடைய புறப்படுதல்கள் ‡ அநாதிநாள்களாகிய பூர்வத்திலுடையவைகள். * ௧. ௩௫, ௰௯. † மத்தே. ௨, ௬. லூக். ௨, ௧—௭. ‡ யோவா. ௧, ௰௪.

௨. ஆகையால், பெறப்போகிறவள் பெறுங்காலமட்டும் அவர்களை யொப்புக்கொடுப்பார், அப்பொழுது அவருடைய சகோதரரில் மீதியானவர்கள் இஸ்ரவேல் புத்திரரோடே கூடத் திரும்புவார்கள்.

௩. அவர் நின்று கர்த்தருடைய பலத்தோடும், தம்முடைய பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தின் முக்கியத்தோடும் மேய்ப்பார். ஆகையால், அவர்கள் தங்கித்தரிப்பார்கள். என்னெனில், இனிப் பூமியின் எல்லைகள் பரியந்தமும் மகிமைப்படுவார்.

௪. * இவரே சமாதானம் அசூர் நம்முடைய தேசத்திலே வரும்போதும், நம்முடைய அரமனைகளை மிதிக்கும்போதும் ஏழு மேய்ப்பரையும், மனுஷரில் எட்டு அதிபதிகளையும் அவனுக்கு விரோதமாக நிறுத்துவோம். * எபே. ௨, ௰௪.

௫. இவர்கள் அசூரின் தேசத்தையும், நிம்றோதின் தேசத்தையும் அதினுடைய வாசல்களுக்குட்புறமாகப் பட்டயத்தினாலே மேய்ந்துபோடுவார்கள். அப்படியே அசூர் நம்முடைய தேசத்திலே வரும்போதும், நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போதும் அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார்.

௬. யாக்கோபிலே மீதியானவர்கள் அநேக சனசதளங்களின் நடுவிலே * கர்த்தரா

லேவந்தபனியைப்போலேயும், மனுஷனுக்குக் காத்திராமலும், மனுபுத்திரனை நம்பியிராமலும் இருக்கிற பூண்டுகள்மேல்வந்தமழைகளைப்போலேயுமிருப்பார்கள். * சங்கீதம். ௱ ௰, ௩.

௭. சாதிகளுக்குள் யாக்கோபிலே மீதியானவர்கள் அநேகஜனசதளங்களின் நடுவிலே சிங்கங் காட்டுமிருகங்களுக்குள்ளேயிருக்கிறதற்குச் சமானமாகவும், கடந்துபோய் மிதித்துத்தப்புவிப்பாரில்லாமற் பீறிப்போடுகிற இளஞ்சிங்கம் ஆட்டுமந்தைகளுக்குள்ளேயிருக்கிறதற்குச் சமானமாகவுமிருப்பார்கள்.

௮. உன்னுடைய கை யுன் விரோதக்காரர்மேலுயரும், உன் சத்துருக்கள் எல்லாரும் சங்கரிக்கப்படுவார்கள்.

௯. கர்த்தர் சொல்லுகிறதாவது; அந்நாளிலே சம்பவிப்பதென்னவென்றால், நாம் உன்குதிரைகளை யுன் நடுவிலிராதபடிக்குச் சங்கரித்து உன் இரதங்களையழித்து,

௰. உன்தேசங்களின் பட்டணங்களைச் சங்கரித்து உன் அரண்களையெல்லாம் நிர்மூலமாக்கி,

௰௧. சூனியங்களை யுன்கையிலிராதபடிக்குச் சங்கரிப்போம், நாள்பார்க்கிறவர்கள் உனக்கில்லாதேபோவார்கள்.

௰௨. * உன் சுரூபங்களையும்; உன் சிலைகளையும் உன் நடுவிலிராதபடிக்குச் சங்கரிப்போம், உன்கைகளின் கிரியையையினிப்பணிந்துகொள்ளாய். * சகரி. ௰௩, ௨.

௰௩. நாம் உன் தோப்புகளை யுன் நடுவிலிராதபடிக்குப் பிடுங்கி உன்பட்டணங்களை யழித்து,

௰௪. கேள்விகொடாத புறசாதிகளிடத்திலே கோபத்தோடும், உக்கிரத்தோடும் நீதியைச்சரிக்கட்டுதலைச் செய்வோமென்றார்.

## ௬. அதிகாரம்.

[(௧) இரக்கமின்மையையும், (௬) அநியாயத்தையும். (௰) அநீதியையும், (௰௩) விக்கிரகாராதனையையுங்குறித்த பராபரனுடையவழக்கு.]

கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள், நீ யெழுந்திருந்து பர்வதங்களோடே வழக்குச்சொல்லு, மேடுகள் உன்சத்தத்தைக் கேட்கக்கடவது.

௨. பர்வதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே, கர்த்தருடையவழக்கைக் கேளுங்கள். ஏனெனில், * கர்த்தருக்கு அவர் ஜனத்தோடே வழக்கிருக்கிறது, இஸ்ரவேலோடே அவர் நியாயம்பேசுவார். * ஏசா. ௫, ௩. ௪.

௩. நமதுசனமே, உனக்கென்னசெய்தோம்? அல்லது எதினாலுன்னை விதனப்படுத்தினோம்? நமக்கெதிரேயுத்தரவுசொல்லு.

௪. நாம் உன்னை எகிப்துதேசத்திலிருந்தே நிவிர்த்திப்பண்ணி அடிமைத்தனவீட்டிலிருந்து உன்னைமீட்டுக்கொண்டு மோசே, ஆரோன், மீரியாமென்பவர்களை யுனக்கு முன்பாக அனுப்பினோம்.

௫. நமதுசனமே, * மோவாபின் இராசாவாகிய பாலாக் பண்ணின யோசனையேதென்றும், பேயோரின்குமாரனான பிலேயாம் அவனுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதேதென்றும், சித்தீம் துவக்கி கில்கால்மட்டும் நடந்ததேதென்றும் நீ கர்த்தருடைய நீதிகளை யறிந்துகொள்ளும்படிக்கு நினைத்துக்கொள். * ௪. மோசே. ௨௨, ௫. ௬.

௬. எதினாலே நான் கர்த்தருக்கு முந்திக்கொண்டு உன்னதமான பராபரனுக்கு முன்பாகக் குனிவேன், தகனபலிகளினாலும், ஒருவயதுக்கன்றுக்குட்டிகளினாலும் அவருக்கு முந்திக்கொள்வேனோ?

௭. ஆயிரங்களான ஆட்டுக்கடாக்களினாலேயும், எண்ணெயாறு பதினாயிரங்களினாலேயும் கர்த்தர் பிரியமாயிருப்பாரோ! என் துரோகத்துக்காக என் முதற்பேற்றையும், என் ஆத்துமத்தினுடைய பாவத்துக்காக என் கர்ப்பக்கனியையுங்கொடுப்பேனோ?

௮. மனுஷனே, நன்மையேதென்று உனக்குக் காண்பித்தார், நியாயஞ்செய்து இரக்கத்தைச் சிநேகித்து உன்பராபரனுக்கு மனத்தாழ்மையாய் நடப்பதையல்லாமல் வேறேயென்னத்தைக் கர்த்தர் உன்னிலேகேட்கிறார்.

௯. கர்த்தருடைய சத்தம் பட்டணத்தை நோக்கிக் கூப்பிடுகிறது. ஏனெனில், உமதுடையநாமம் உத்தமத்தை நோக்குகிறது, மிலாறினைச் செய்தியையும், அதைநியமனம்பண்ணினவரானவரையும் கேளுங்கள்.

௰. அகாதவன்வீட்டிலே அகாமியப்பொக்கிஷங்களும், அருவருக்கப்பட்ட குறைந்தமரக்காலும் இன்னுமிருக்கின்றதல்லவோ?

௰௧. அகாதத்தராசும், கபடப்படிக்கல்லுள்ளபையும் இருக்கையில் சுத்தனாவேனோ?

௰௨. அதெதெனில், அவர்களிலே ஐசுவரியமுள்ளவர்கள் கொடுமையால் நிறைந்திருக்கிறார்கள், அவர்களுடைய குடியானவர்கள் பொய்பேசுகிறார்கள், அவர்கள்வாயிலிருக்கிற அவர்களுடைய நாக்குக் கபடுள்ளது.

௰௩. ஆகையால், நாமும் உன்னையடிக்கிறதிலேயும், உன்பாவங்களினிமித்தம் பாழாக்குகிறதிலேயும் உன்னைப் பலட்சயமாக்குவோம்.

௰௪. நீ புசித்தும் திருத்தியடையாதிருப்பாய், அது உன்னுள்ளத்திலே யுன்னையொடுக்கும், நீ பதனம்பண்ணியும் தப்புவிப்ப

துள

நில்லை, நீ தப்புவிப்பதையோ பட்டயத்திற் கொடுப்பேன்.

௰௫. * நீ விதைத்தும், அறுக்காதேபோவாய், நீ ஒலிவப்பழங்களையும், திராட்சப்பழங்களையும் ஆலையாடியும் எண்ணெய் பூசிக்கொள்வதுமில்லை இரசங்குடிப்பதுமில்லை. * ரு. மோ. ௨௮, ௩௮. ஆகா. ௧, ௬.

௰௬. ஏனென்றால், நாம் உன்னைப் பாழாக்கவும், உன் குடிகளை யிச்சீபோட்டப்படுத்தவும் வைக்கத்தக்கதாக, * அம்ரியினுடைய கட்டளைகளும், † ஆகாப்வீட்டாருடைய எல்லாச்செய்கையுங் கைக்கொள்ளப்பட்டு வருகின்றது, அவர்களுடைய ஆலோசனைகளிலே நடக்கிறீர்கள். ஆகையால், நமது சனத்தின் நிந்தையைச் சுமப்பீர்கள்.
* ௧. இரா. ௰௬, ௨௫—௩௩.

## ௭. அதிகாரம்.

[(௧) திருச்சபையினால் விடப்பட்ட தொகையையும். (௩) சாதாரணச்சீர்கேட்டையுங் குறித்த முறையிட்டு (௫) தன் நம்பிக்கையை மனிதனில் வைக்காமல் பராபரனில் வைத்தது. (௮) அது தன் சத்துருக்களைச் செயங்கொள்வது, (௰௪) பராபரன் அதை வாக்குத்தத்தங்களினாலும், (௰௬) சத்துருக்கள் கலங்கிப்போவதினாலும், (௰௮) தமது இரக்கங்களினாலும் தேற்றினது.]

௧. எனக்கு ஐயோ, ஏனெனில், வசந்தகாலத்துக் கனிகள் சேர்க்கப்பட்டதற்கும், திராட்சப்பழங்கள் அறுக்கப்பட்டதன் பிற்பாடு வருகிறவனைப்போலிருக்கிறேன், புசிக்கிறதற்கு ஒருதிராட்சக்குலையும் என் ஆத்துமா இச்சித்த முதல் அறுப்பின்கனியுமில்லை.

௨. * தேசத்திற் சன்மார்க்கர் அற்றுப்போனார்கள், மனுஷரிற் செம்மையானவனில்லை, அவர்களெல்லாரும் இரத்தஞ்சிந்தப் பதிவிருக்கிறார்கள், அவனவன் தன் சகோதரனை வலையிலே பிடிக்க வேட்டையாடுகிறான். * சங்கீதம். ௰௨, ௨.

௩. நன்றாய்ப் பொல்லாப்புச்செய்ய இரண்டு கைகளுங்கூடும், பிரபுதானே கேட்கிறான், நியாயாதிபதி கைக்கூலிக்கு நியாயந்தீர்க்கிறான், பெரியவன் தன் ஆத்துமத்தின் தீவினையைச் சொல்லுகிறான், பிறகு அதைப் பிரித்துப்போடுகிறார்கள்.

௪. அவர்களில் நல்லவன் முட்செடிக்கொத்தவனும், செம்மையானவன் நெரிஞ்சிலைப் பார்க்கக் கேடுள்ளவனுமாயிருக்கிறான், உன் காவற்காரர் அறிவித்த உன்னுடைய விசாரிப்பின் நாள் வருகின்றது, இனி அவர்களுடைய கலக்கம் வரும்.

௫. சிநேகிதனை விசுவாசியாதேயுங்கள் வழிகாட்டியை நம்பாதேயுங்கள், உன் மடியிலே படுத்துக்கொண்டிருக்கிறவளுக்கு முன்பாக உன் வாயைத்திறக்க எச்சரிக்கையாயிரு.

௬. ஏனெனில், * மகன் தகப்பனை யீனப்படுத்துகிறான், மகள் தன் தாய்க்கு விரோதமாகவும், மருமகள் தன் மாமிக்கு விரோதமாகவும் எழும்புகிறார்கள், மனுஷனுடைய சத்துருக்கள் அவன் வீட்டு மனுஷர்தானே. * மத். ௰, ௨௧. ௩௫, ௩௬. லூக். ௰௨, ௫௩.

௭. * நானோவென்றால் கர்த்தனை நோக்கிக்கொண்டு என் இரட்சிப்பின் பராபரனுக்குக் காத்திருப்பேன், என் பராபரன் என்னைக் கேட்பார். * சங்கீதம். ௪௨, ௬.

௮. என் பகைஞியே! என்னிமித்தஞ் சந்தோஷப்படாயாக, * நான் விழுந்திருந்தால் எழுந்திருப்பேன், நான் இருளிலேயிருக்கிறதால் † கர்த்தர் எனக்கு வெளிச்சமாயிருப்பார். * வாக். ௨௪, ௰௬. † சங். ௨௭, ௧.

௯. கர்த்தர் என் வழக்கை வழக்காடி என் நியாயத்தை விசாரிக்கட்டும், அவருடைய கோபத்தைச் சுமப்பேன். ஏனெனில், அவருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன், என்னை வெளிச்சத்திலே புறப்படப்பண்ணுவார், அவருடைய நீதியை மகிழ்ச்சியாய்ப் பார்ப்பேன்.

௰. உன் பராபரனாகிய கர்த்தரெங்கேயென்று என்னோடே சொல்லுகிற என் பகைஞி அதைப்பார்க்கும்போது வெட்கம் அவளை மூடும், என் கண்கள் அவளில் நீதியைச் சரிக்கட்டுதலைக் காணும், இனி வீதிகளின் சேற்றைப்போல மிதியுண்டுபோவாள்.

௰௧. உன் மதில்களை யெடுப்பிக்கும் நாள் வருகின்றது, அந்நாளிலே பிரமாணந் தூரத்திற்குப் பரவிப்போகும்.

௰௨. அந்நாளிலே அசூரியாதுவக்கி எகிப்தின் பட்டணங்கள் மட்டுக்கும், எகிப்து துவக்கி நதிமட்டுக்கும் ஒரு சமுத்திரந்துவக்கி மற்றச் சமுத்திரமட்டுக்கும் ஒரு பருவதந்துவக்கி மற்றப் பருவதமட்டுக்குமிருக்கிற புறங்களிலிருந்து சனங்கள் உன்னண்டைக்கு வருவார்கள்.

௰௩. ஏனெனில், தன் குடிகளினிமித்தமும், அவர்கள் கிரியைகளுடைய கனிகளினிமித்தமுந் தேசம் பாழாயிருந்தது.

௰௪. கர்மேலின் நடுவிலே தனித்து வனவாசமாயிருக்கிற உமது சுதந்தரமான மந்தையாகிய உம்முடைய சனத்தை உமது கோலினாலே மேயும், பூர்வ நாள்களைப்போலே யவர்கள் பாசானிலும், கிலேயாத்திலும் மேய்வார்களாக.

௰௫. நீ எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாள்களைப்போலே யுனக்கு அதிசயங்களைக் காணப்பண்ணுவோம்.

௰௬. புறசாதிகள் கண்டு தங்களுடைய எல்லாப்பராக்கிரமத்தையுந் தொட்டு வெட்கப்படுவார்கள், கையைவாயின்மேலேபோ

டுக்கொள்ளுவார்கள், அவர்கள் காதுகள் செவிடாய்ப்போகும்.

௰௭. பாம்பைப்போல் * மண்ணை நக்குவார்கள், பூமியின் ஊர்வனகளைப்போலே தங்களடைப்புகளிலிருந்து தத்தளித்துப் புறப்படுவார்கள், திகிலோடே யெங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குச் சேர்ந்து உனக்குப் பயப்படுவார்கள். * சங்கீதம். ௭௨, ௯.

௰௮. * அக்கிரமத்தை நீக்கிவிட்டுத் தமது சுதந்தரத்தில் மீதியானவர்களுக்கு மீறுதலை மன்னித்துவிடுகிற தேவரீரைப்போலொத்த தேவனார்! என்றென்றைக்குங் கோபத்தை வையார். ஏனெனில், அவர் கிருபைசெய்ய விரும்புகிறார். * ௨. யோசே. ௩௪, ௬. ௭. சங்கீதம். ௱௩, ௮—௰௩

௰௯. திரும்ப எங்கள்மேல் இரங்குவார், எங்கள் அக்கிரமங்களையடக்கி யெங்கள் பாவங்களையெல்லாஞ் சமுத்திரத்தின் ஆழங்களிற்போட்டுவிடுவார்.

௨௰. தேவரீர் பூருவநாட்கள்முதற்கொண்டு * எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட சத்தியத்தை யாக்கோபுக்கும் கிருபையை ஆபிரகாமுக்குங் கட்டளையிடுவீர். * லூக். ௧, ௫௪ ௫௫.

மீகாவின்தீர்க்கதரிசனம் முடிந்தது

முற்றும்.

---

# நாகூமின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௭௱௰௫)

## ௧. அதிகாரம்.

[பராபரன் தமது சனத்துக்கு நன்மையிலேயும், தமது சத்துருக்களுக்குத் தீமையிலேயுங் காட்டுமகத்துவம்.]

நினிவேயின் சுமை. எல்க்கோசானாகிய நாகூமின் தரிசனபுஸ்தகம்.

௨. கர்த்தர் * எரிச்சலுள்ளவரும், நீதியைச் சரிக்கட்டுகிறவருமான தேவன், கர்த்தர் நீதியைச் சரிக்கட்டுகிறவரும், உக்கிரசாலியுமானவர், கர்த்தர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறவர், அவர் தம்முடைய பகைஞர்மேற் கோபம் வைக்கிறவர். * ௨. மோசே. ௨௰, ௫.

௩. கர்த்தர் நீடியசாந்தமுள்ளவரும், பலமிகுந்தவருமாயிருக்கிறார். அவர்களை யாக்கினையில்லாமல் நீங்கலாக்கிவிடார், கர்த்தருடைய வழி பெருங்காற்றிலும், கொந்தளிப்பிலுமுள்ளது, மேகங்கள் அவருடைய பாதத்தூளாயிருக்கின்றன.

௪. அவர் சமுத்திரத்தையதட்டி அதை வற்றிப்போகப்பண்ணிச் சகல ஆறுகளையும் வறட்சியாக்குகிறவர், பாசானும், கர்மேலும் வதங்கி லீபனோனின் செழிப்பு வாடிப்போகும்.

௫. அவராற் பருவதங்கள் அதிர்ந்து மேடுகள் கரைந்துபோகும், அவர் சந்நிதியாற் பூமியெடுபடும், பூச்சக்கரமும், அதிற்குடியிருக்கிற அனைவருந்தானே.

௬. * அவர் சினத்திற்கு முன்பாக நிற்பவனார்! அவர் கோபத்தின் உக்கிரத்திலே தரிப்பவனார்! அவருடைய எரிச்சல் அக்கினியைப்போலே பாய்கின்றது, கன்மலைகள் அவராலேயிடியும். * அபிப்பு. ௬, ௰௭.

௭. கர்த்தர் நல்லவரும், இக்கட்டுநாளிலே அரணான கோட்டையுமாயிருந்து தம்மை நம்புகிறவர்களை * அறிந்திருக்கிறார். * சங்கீதம். ௧, ௬. ௨. தீமோத். ௨, ௰௯.

௮. அதின் ஸ்தானத்தைப் புரளவிடுகிற பிரளயத்தினாலே சர்வசங்காரம்பண்ணுவார். இருள் அவர் சத்துருக்களைப் பின்தொடரும்.

௯. நீங்கள் கர்த்தருக்கு விரோதமாகச் செய்ய நினைக்கிறதென்ன! அவர் சர்வசங்காரம்பண்ணுவார். இடுக்கண் மறுபடியும் நிலைகொள்ளாது.

௰. ஏனெனில், அவர்கள் சன்னபின்னலாயிருக்கிற முட்செடிகளுக்குச் சமானமாய் ஒப்பாயிருக்கையிலும், தங்கள் மொடாக்குடியின்படியே வெறித்திருக்கையிலும் முழுதுங் காய்ந்துபோன செத்தையைப்போல வெந்துபோவார்கள்.

௰௧. கர்த்தருக்கு விரோதமாகப் பொல்லாப்பு நினைவாயிருக்கிற பேலியாளின் ஆலோசனைக்காரன் உன்னிலிருந்து புறப்பட்டான்.

௰௨. கர்த்தர் சொல்லுகிறதாவது; அவர்கள் நிறைவாகவும், அநேகருமாயிருந்தாலும் ஒழிந்துபோகத்தக்கவிதமாய் அறுப்புண்டுபோவார்கள். உன்னை நாம் சிறுமைப்படுத்தினோம், இனியுன்னைச் சிறுமைப்படுத்தாதிருப்போம்.

௰௩. இப்போதும் நாம் உன்மேலிருக்கிற அவன் நுகத்தடியை யுடைத்துப்போட்டு உன் கட்டுகளை யறுப்போம்.

௰௪. ஆகவே உனக்கு விரோதமாகக் கர்த்தரிட்ட கட்டளையாவது; இனி யுன்பேருக்கு வித்துவைக்கப்படுவதில்லை, உன் தேவர்களின் வீட்டிலிருக்கிற கருப்பத்தையும், வார்க்கப்பட்ட விக்கிரகத்தையும் நாம் நிர்மூலம் பண்ணுவோம், நீ கனஈனனானபோது அதை யுனக்குக் கல்லறையாக்குவோம்.

## ௨. அதிகாரம்.

[நினிவேக்கு விரோதமாக வரும் பராபரனுடைய பயங்கரமுள்ள செயம் பொருந்திய சேனைகள்.]

இதோ * சமாதானத்தைக் கூறுகிற சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின்மேல் வருகின்றது, யூதாவே! உன் பண்டிகைகளையாசரி, † உன் பொருத்தனைகளைச் செலுத்து. ஏனெனில், பேலியாள் இனியப்புறம் உன்மேல் கடந்துவருவதில்லை, அவன் முழுதும் சங்கரிக்கப்பட்டான். * ஏசாயா. ௫௨, ௭. † சங்கீதம். ௫௦, ௰௪.

௨. சிதறடிக்கிறவன் உன்முகத்துக்கு முன்பாக எதிர்வருகிறான், கொத்தளத்தைக் கா, வழியைநோக்கிக்கொண்டிரு, அரையைக் கெட்டியாய்க் கட்டிக்கொள், உன் பலனை மிகவுந் திடப்படுத்து.

௩. ஏனெனில் கர்த்தர் யாக்கோபின் மகிமையைத் திரும்பிவரப்பண்ணுவார், இஸ்ரவேலின் முக்கியத்தையும் அப்படித்தானே. அதேதென்றால், வெறுமையாக்குகிறவர்கள் அவர்களை வெறுமையாக்கி அவர்களுடைய திராட்சக்கொடிகளைக் கெடுத்துப்போட்டார்கள்.

௪. அவனுடைய பராக்கிரமசாலிகளின் கேடயங்கள் சிவப்பாயிருக்கும். அவன் இராணுவமனுஷர் இரத்தாம்பரந்தரித்துக் கொண்டிருக்கிறார்கள். அவன் தன்னை ஆயத்தம்பண்ணு நாளிலே இரதங்கள் மின்னிக் கொண்டிருக்கிற அரிவாள்களின் முஸ்தீதாயிருக்கும். ஈட்டிகள் குலுங்கும்.

௫. இரதங்கள் வீதிகளில் கடகடென்றோடித் தெருக்களில் திரியும். அவைகள் தீவட்டிகளின் உருவாயிருந்து மின்னல்களைப்போல ஓடும்.

௬. தன்னுடைய பிரஸ்தாபமனுஷரை நினைவுகூருவான். இவர்கள் தங்கள் நடைகளில் இடறி அலங்கத்திறகுத் தீவிரித்தோடுவார்கள். மறைவிடஞ் செப்பனிடப்படும்.

௭. ஆறுகளின் வாசல்கள் திறக்கப்படும், அரமனை வெந்துகரையும்.

௮. அவள் சிறைபிடிப்பாய்க்கொண்டுபோகப்படத் தீர்மானமாயிற்று. அவளுடைய வேலைக்காரிகள் புறாக்களைப்போலச் சத்தமிட்டுத் தங்கள் மார்பிலே யடித்துக்கொண்டு கூடப்போவார்கள்.

௯. நினிவே யுண்டான நாள் துவக்கித் தண்ணீர்க் குளம்போலேயிருந்தது. இப்போதோவெனில், அவர்கள் ஓடிப்போகிறார்கள். நில்லுங்கள் நில்லுங்களென்றாலுந் திரும்பிப்பார்க்கிறவனில்லை.

௰. வெள்ளியைக் கொள்ளையிடுங்கள். பொன்னைக் கொள்ளையிடுங்கள்; ஏனென்றால், சம்பத்திற்கு முடிவில்லை, இச்சிக்கப்படத்தக்க சகல உடைமைகளின் வெகுத்துவமிருக்கின்றது.

௰௧. வெறுமையும், வெளியும், ஆகாயமயமுமாவாள். இருதயம் உருகும். முழங்கால்கள் தத்தளிக்கும். எல்லா இடுப்புகளிலும் மகா வேதனையுண்டாயிருக்கும். எல்லாருடைய முகங்களின் உருவுஞ் சுருங்கும்.

௰௨. கிழச்சிங்கமாகிய சிங்கமும், சிங்கக்குட்டிகளும் பயப்படுத்துவாரில்லாமல் நடமாடித் தங்கின சிங்கத் தாபரமும், இளஞ்சிங்கங்களுக்கிருந்த மேய்விடமுமெங்கே?

௰௩. சிங்கந் தன் குட்டிகளுக்குத் தேவையானதைப் பீறித் தன் பெண் சிங்கங்களுக்கு வேண்டினதைத் தொண்டையைப் பிடித்துக் கொன்றுபோட்டு இரைகளினாலே தன் கெவிகளையும், பீறிப்போட்டவைகளினாலே தன் தாபரங்களையும் நிரப்பிற்று.

௰௪. இதோ நாம் உனக்கு விரோதமாக வந்து இரதங்களைப் புகையெழும்ப எரித்துப் போடுவோம், பட்டயம் உன்னுடைய இளஞ்சிங்கங்களைப் பட்சிக்கும், நீ பிடிக்கப் பாய்கிற வேலையைத் தேசத்தில் அற்றுப் போகப்பண்ணுவோம், உன் தாளுபதிகளின் சத்தம் இனிக் கேட்கப்படுவதில்லையென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

## ௩. அதிகாரம்.

[நினிவேயின் நிர்ப்பாக்கியமான அழிவு.]

இரத்தப்பழிகளின் பட்டணத்திற்கையோ, அது முழுதும் பொய்யினாலும், பறிக்குதலினாலும் நிறைந்திருக்கின்றது.

௨. சவுக்குகளின் இரைச்சலும், உருளைகள் அதிருகிறதும், குதிரைகள் தரையைத் தட்டுகிறதும், இரதங்கள் கடகடென்றோடுகிறதுமான இரைச்சலும்,

௩. இராவுத்தர் ஏறிவருகிற குதிரைகளும், துலங்கிய பட்டயங்களும் மின்னுகிற ஈட்டிகளும், வெட்டுண்டவர்களின் திரளும், பிரேதங்களின் ஏராளமுமுண்டாகும், பிணங்களுக்குத் தொகையில்லை, அவர்கள் அவர்களுடைய பிணங்களில் இடறுவார்கள்.

௪. தன் வேசித்தனங்களினாலே சாதிகளையும், தன் சூனியங்களினாலே வம்சங்களையும் விற்றமகா சூனியக்காரியாயிருக்கிற ரூபவதியான வேசியினுடைய திரளான வேசித்தனங்களினிமித்தமாகத்தானே. * அதிவி. ௰௭, ௧. ௨.

௫. இதோ, நாம் உனக்கு விரோதமாக

வந்து உன் வஸ்திரத்தோரங்களை உன் முகமட்டுந் தூக்கியெடுத்துச் சாதிகளுக்கு உன் நிர்வாணத்தையும், இராச்சியங்களுக்கு உன் அபிமானத்தையுந் தெரியப்பண்ணி,

௬. உன்மேல் சீயென்னப்பட்டத்தக்கவைகளை யெறிந்து உன்னை ஈனப்படுத்தி உன்னை வேடிக்கையாக்கிப்போடுவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௭. அப்பொழுது சம்பவிப்பதேதெனில், உன்னைக் காண்கிறவனெல்லாம் உன்னைவிட்டோடிப்போய் நினிவே பாழாக்கடிக்கப்பட்டதென்றும், அதற்காகத் துக்கங்கொண்டாடுபவர் ஆர்? ஆறுதல் சொல்லுகிறவர்களை யுனக்கெங்கே தேடுவேனென்றுஞ் சொல்லுவான்.

௮. நதிகளுக்குள்ளே குடியேறியிருந்த நோ அம்மோனைப்பார்க்கிலும் நீ நல்லதோ, அதைச் சுற்றிலுந் தண்ணீரிருந்தது, சமுத்திரம் அதின் அரணிப்பும், சமுத்திரக்கால் அதின் மதிலுமாயிருந்தது.

௯. எத்தியோப்பியாவும், எகிப்தும் தொகையில்லாத சனங்களால் அதற்குப் பலமாயிருந்தது, பூத்தும், லிபியாவும் அதற்குச் சகாயமாயிருந்தது.

௰. அப்படிக்கொத்ததுவுங் குடிவிலக்கப்பட்டுச் சிறையிருப்பிலே போயிற்று, அதின் குழந்தைகள் எல்லா வீதிகளின் முனைகளிலுஞ் சதைத்துப்போடப்பட்டன, அதின் கனமுள்ளவர்கள் பேரிலே சீட்டுப்போட்டார்கள், அதின் பெரியவர்கள் சங்கிலிகளாற் கட்டப்பட்டார்கள்.

௰௧. நீயும் மயக்கமாகி யொளித்துக்கொள்ளுவாய், நீயும் உன் சத்துருவுக்குத் தப்ப அரணான கோட்டையைத் தேடுவாய்.

௰௨. உன் அரண்களெல்லாம் முதற்கந்தாயத்துப் பழங்களுள்ள அத்திமரங்களைப்போலிருக்கும், அவைகள் குலுக்கப்பட்டால் தின்னுகிறவன் வாயிலே விழும்.

௰௩. இதோ, உன் நடுவிலிருக்கிற சனம் பெண்சாதிகள், உன் தேசத்தின் வாசல்கள் உன் சத்துருவுக்குத் திறக்கவே திறவுண்டுபோகும், அக்கினி உன் தாழ்ப்பாள்களைப் பட்சிக்கும்.

௰௪. உனக்கு முற்றிகைக்குத் தண்ணீர் மொண்டுவை, உன் அரண்களைப் பலப்படுத்து, சேற்றிலே போய்க் களிமண்ணை மிதி, சூளையைக் கெட்டிப்படுத்து.

௰௫. அங்கே அக்கினி உன்னைப் பட்சிக்கும், பட்டயம் உன்னைச் சங்கரிக்கும், அது பச்சைக்கிளிகளைப்போல் உன்னைப் பட்சித்துப்போடும், உன்னை நீ பச்சைக்கிளிகளத்தனையாக்கிக்கொள், உன்னை வெட்டுக்கிளிகளத்தனையாக்கிக்கொள்.

௰௬. உன் வர்த்தகரை வானத்து நட்சத்திரங்களிலும் அதிகமாக்கினாய், இந்தப் பச்சைக்கிளிகள் பரவிப் பறந்துபோகும்.

௰௭. உன் மகுடவர்த்தனர் வெட்டுக்கிளிகளுக்கும், உன் தளக்கர்த்தர் குளிர்நாளிலே வேலிகளில் பாளயமிறங்குகிற பெருங்கிளிகளுக்குஞ் சமானமாயிருக்கிறார்கள். சூரியனுதித்தபிற்பாடு அவைகள் போகின்றன, பின்பு அவைகளிருந்த அவைகளுடைய இடம் இன்னதென்று தெரியாது.

௰௮. அசூரியாவின் இராசாவே, உன்னுடைய மேய்ப்பர் உறங்குவார்கள், உன்னுடைய பிரபலமுள்ளோர் படுத்திருப்பார்கள், உன் சனம் பருவதங்களின்மேல் சிதறிப்போகும், அதைக் கூட்டிக்கொள்பவனில்லை.

௰௯. உன் நொறுங்குதலுக்கு ஆற்றுதலில்லை, உன் காயங் கேடாயிருக்கின்றது, உன் செய்தியைக் கேட்கப்போகிற யாவரும் உன்பேரில் கைகொட்டுவார்கள். ஏனெனில், ஆர்பேரில் உன் பொல்லாப்பு எந்நேரமும் பாயாமற்போயிற்று.

நாகூமின் தீர்க்கதரிசனம் முடிந்தது
முற்றும்.

---

# ஆபகூக்கின் தீர்க்கதரிசனம்.

(கி. பி. முன். ௬௱௰௬.)

## ௧. அதிகாரம்.

[(௧) தேசத்தின் அக்கிரமத்தைக் குறித்து முறையிடும் ஆபகூக்குக்கு, (௫) கல்தேயராலே வரும் பயங்கரமுள்ள பழிவாங்குதலைக் காட்டினது. (௰௨) அவன் கல்தேயரைப்பார்க்கிலும், அதிக பொல்லாதவர்களால் பழிவாங்குதல் நிறைவேற்றப்படுமென்று முறையிட்டது.]

ஆபகூக்கென்ற தீர்க்கதரிசி தெரிசனமாய்க் கண்ட சுமை.

௨. கர்த்தாவே, * எந்தமட்டும் நீர் கேளாமலிருக்க நான் கூப்பிடுவேன்? நீர் இரட்சிக்காமலிருக்க நான் கொடுமையினிமித்தம் உம்மை நோக்கிச் சத்தமிடுவேன்! * சங். ௰௩, ௨. ௩.

௩. நீர் என்னை அக்கிரமத்தைக் காணப்பண்

ணித் தீவினையைப் பார்த்துக்கொண்டிருப்பானேன்! பாழ்க்கடிப்பும், கொடுமையும் என்கெதிரே நிற்கின்றது, வழக்கையும், வாதையையும் எழுப்புகிறவர்களுண்டு.

௪. ஆகையால், நியாயப்பிரமாணம் பலனற்றதாய் நியாயம் என்றென்றைக்கும் நடந்தேறாமற்போகின்றது. ஏனென்றால், ஆகாதவன் நீதிமானை வளைந்துகொள்ளுகிறான், ஆனதுகொண்டு நியாயந்தாறுமாறாய்ப் புறப்படும்.

௫. நீங்கள் புறச்சாதிகளை நோக்கிப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் பிரமித்துக்கொள்ளுங்கள். ஏனெனில், விவரிக்கப்பட்டால் நீங்கள் விசுவாசியாதிருக்கும் ஒரு கிரியையை உங்கள் நாள்களில் நடப்பிப்போம்.

௬. அதேனென்றால், இதோ, நாம் கல்தேயரென்ற கடுசும், தீவிரமுமான சாதியை எழுப்புவோம், அது தன்னுடைய தல்லாதவாசஸ்தலங்களைக் கட்டிக்கொள்ளத் தேசத்தின் விசாலங்களில் நடந்துவரும்.

௭. அது கெடியும், பயங்கரமுமானது, அதின் நியாயமும், அதின் மேன்மையும் அதினாலே தான் புறப்படும்.

௮. அதின் குதிரைகள் சிவிங்கிகளைப் பார்க்கிலும் வேகமும், அஸ்தமன வேளையில் திரிகிற ஓநாய்களைப் பார்க்கிலுங் கூர்மையுமாயிருக்கின்றன, அதின் குதிரைக்காரர் பரவுவார்கள், அதின் குதிரைக்காரர் தூரத்திலிருந்து வருவார்கள், * இரைக்குத் தீவரிக்கிற கழுகுகளைப்போலப் பறந்து வருவார்கள்.

* மத்தே. ௨௪, ௨௮.

௯. அவர்களெல்லாரும் கொடுமைசெய்ய வருவார்கள், கவவுகிற அவர்களுடைய முகங்கள் கிழக்கே நோக்குகின்றன, அவர்கள் மணலத்தனை சனங்களைச் சிறைபிடித்துச் சேர்ப்பார்கள்.

௰. அவன் இராசாக்களை ஆசடியம்பண்ணுவான், தலைவர்கள் அவனுக்கு நகைப்பாயிருப்பார்கள், அவன் அரண்களையெல்லாம் நகைத்து மண்மேடுகளைப்போட்டு அவைகளைப்பிடிப்பான்.

௰௧. அப்போது அவனுடைய ஆவிமாறுதலினாலே யவன் மிஞ்சிப்போய் இந்தத் தன்னுடைய பலன் தன் தேவனாலே யுண்டானதென்று சொல்லிக் குற்றவாளியாவான்.

௰௨. தேவரீர் பூருவகாலந்தொட்டு என் பராபரனாகிய கர்த்தருமாயிருக்கிறதில்லையோ! * எங்களைச் சாகவொட்டாதேயும், கர்த்தாவே, நியாயத்தீர்ப்புக்காக அவனை வைத்தீர், கண்டிக்கப்படுவதற்காக அவனை நிறுத்தினீர். * எரே. ௰, ௨௪.

௰௩. பொல்லாப்பைப் பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே! தீவினையை நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே, * தேவரீர் துரோகிகளை நோக்கிக்கொண்டிருக்கிறதேது! துன்

னைப்பார்க்கிலும் நீதியுள்ளவனை ஆகாதவன் விழுங்குகையில் தேவரீர் மௌனமாயிருந்து, * யோபு. ௨௧, ௭. ௱ எரே. ௰௨, ௧.

௰௪. மனுஷரைச் சமுத்திரத்து மச்சங்களுக்கும், ஆளுகிறவனில்லாத ஊர்வனங்களுக்கும் சமானமாக்குகிறதேது!

௰௫. அவர்களையெல்லாந் தூண்டிலால் இழுத்துக்கொள்ளுகிறான், அவர்களைத் தன் வலையினாற்பிடித்துத் தன் பறியிலே சேர்த்துக்கொள்ளுகிறான், அதினாலே சந்தோஷப்பட்டுக் களிகூருகிறான்.

௰௬. ஆகையால், அவைகளாலே தன் பங்கு கொழுத்ததும், தன் போசனம் நிணத்ததுமாயப்போயிற்றென்று அவன் தன் வலைக்குப் பலியிட்டுத் தன் பறிக்குத் தூபங்காட்டுகிறான்.

௰௭. இதற்காக அவன் தன் வலையை விரித்துக் கொட்டிக்கொண்டிருந்து சாதிகளையெப்போதுங் கொன்றுபோட இரங்காதவனாயிருக்கவேண்டுமோ!

## ௨. அதிகாரம்.

[(௧) மாறுத்தரவுக்காகக் காத்துக்கொண்டிருக்கும் ஆபகூக்கு விசுவாசத்துடனே காக்கவேணுமென்றுகாட்டினது, (௫) கல்தேயருடைய திருத்தியில்லாமைக்காகவும், (௯) பேராசைக்காகவும், (௰௨) கொடுமைக்காகவும், (௰௫) வெறிக்காகவும், (௰௮) விக்கிரகத்தொழும்புக்காகவும் அவர்கள் மேல்வரும் நியாயத்தீர்ப்பு.]

நான் என் காவலிலே தரித்து அரணிப்பிலே நிலைகொண்டிருந்து அவர் எனக்கென்ன சொல்லுவாரென்றும், என் அங்கலாய்ப்புக்கு நான் என்ன உத்தரவைக் கொண்டுபோவேனென்றும் பார்க்கிறதற்காகக் * கவனிப்பேனென்றேன். * சங்கீ. ௱௨௧, ௧. ௨.

௨. அப்போது கர்த்தர் எனக்குப் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது; நீ தரிசனத்தையெழுதி அதைக் கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிக்குப் பலகைகளிலே தீர்க்கமாக வரை.

௩. அதேதெனில், குறித்தகாலத்திற்குத் தரிசனம் இன்னம் வைத்திருக்கின்றது, முடிவிலே யுத்தரவுவிளங்கப்பண்ணுவார், அவர் பொய்சொல்லார். அவர் தாமதித்தால், * அவருக்குக் காத்திரு. ஏனெனில், † வரவே வருவார், அவர் பிந்தியிருப்பதில்லை.

* சங்கீ. ௨௭, ௰௪. ௪௨, ௯. † எபி. ௰, ௩௭.

௪. இதோ அசட்டையாயிருக்கிறானே, அவனுடைய ஆத்துமா அவனுக்குச் செம்மையானதல்ல. ஏனெனில், தன் விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான். * உரோமர். ௧, ௰௭. கலாத்தியர். ௩, ௰௧. எபிரேயர். ௰, ௩௮.

ரு. அந்தமச்சபானனும், அமர்ந்திருக்கமாட்டாத அகந்தையுள்ள மனுஷனுமோவென்றால், எத்தனை ரோகியாயிருந்தாலும் அவன் தன் ஆத்துமாவைப் பாதாளத்தைப்போல விரிவாக்கித் திருப்தியாகாமல் மரணத்திற்குச் சமானமாய்ச் சகல சாதிகளையுந் தன்வசமாகச் சேர்த்துச் சகல சனசதளங்களையுந் தன்னிடமாகக் கூட்டிக்கொண்டாலும்,

சா. இவர்களெல்லாரும் அவன்பேரிலே ஒரு பழமொழியையும், அவனுக்குரைக்கிற புதைபொருளான சொல்லையுமுண்டாக்கித் தன்னுடையதல்லாததைப் பெருக்கிக்கொள்ளுகிறவனுக்கையோவென்றும், அது எந்தமட்டும் நிற்குமென்றும், அவன் தன்மேற்கெட்டியான சேற்றின்பாரத்தையே சுமந்துகொள்ளுகிறானென்றுஞ் சொல்லார்களோ!

எ. உன்னைக்கடிப்பவர்கள் அசுப்பிலே யெழும்புவதும், உன்னை அலக்கழிப்பவர்கள் விழிப்பதுமில்லையோ? நீ யவர்களுக்குச் சூறையாகாயோ!

அ. நீ அநேகஞ்சாதிகளைக் கொள்ளையிட்டபடியினாலே சனசதளங்களில் மீதியானயாவரும் நீ சிந்தின மனுஷ இரத்தத்தினிமித்தமும், கொடுமையினிமித்தமும் உன்னைக் கொள்ளையிடுவார்கள்.

சு. தீமையின் வல்லமைக்குத் தப்புவித்துக்கொள்ளத் தன்கூட்டை உயரத்திலே வைக்கும்படிக்குத் தன்வீட்டுக்குப் பொல்லாத ஆதாயத்தைத் தேடுகிறவனுக்கையோ.

ய. உன்வீட்டுக்கு வெட்கமுண்டாக ஆலோசனைபண்ணினாய், அநேக சனசதளங்களை வெட்டிப்போட்டதினாலே உன் ஆத்துமாவிற்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தாய்.

யக. ஏனெனில், கற்சுவரிலிருந்து கூப்பிடும், உத்திரம் மச்சிலிருந்து கூவும்.

யஉ. * இரத்தப்பழிகளோடே பட்டணத்தைக் கட்டி அநியாயத்தோடே நகரியைப் பலப்படுத்துகிறவனுக்கையோ. * எரேமி. உஉ, யங.

யங. இதோ சனங்கள் அக்கினிக்கிரையாக வுழைத்துச் சனசதளங்கள் விருதாவாக இளைக்கிறது கர்த்தருடைய செயல் அல்லவோ!

யச. ஏனெனில், * தண்ணீர்கள் சமுத்திரத்தை மூடுமாப்போலே பூமி கர்த்தருடைய மகிமையின் அறிவினாலே நிரப்பப்பட்டுப் போகும். * ஏசாயா. யக, கூ.

யரு. தன்தோழருக்குக் குடிக்கக்கொடுத்துத் தன் துருத்தியை யவர்களண்டையிலே வைத்து அவர்களுடைய நிருவாணங்களைப் பார்க்கும்படிக்கு அவர்களை வெறியுமாக்குகிறவனுக்கையோ.

யசா. கனத்திற்குப்பதிலாகக் கனஈனத்தால் திருப்தியாவாய், * நீயுங்குடித்துச் சுன்னத்தில்லாதவனென்று விளங்கு, கர்த்தருடைய வலதுகையிலிருக்கிற பாத்திரம் உன்னண்டைக்குத் திரும்பும், இலச்சையான வாந்திபண்ணுதல் உன் மகிமையின்மேலே விழும். * சங்கீ. எரு, கூ. எரே. உரு, யரு. யசா.

யஎ. ஏனெனில், லீபனோனுக்குச் செய்த கொடுமையுன்னைமூடும், சிந்தின மனுஷ இரத்தத்தினிமித்தமும், தேசத்திற்கும், பட்டணத்திற்கும், அதின் குடிகளெல்லாருக்குஞ் செய்தகொடுமையினிமித்தமும் அந்த மிருகங்களை யழைக்கச்செய்த பாழ்க்கடிப்புந் தானே கலங்கப்பண்ணும்.

யஅ. சித்திரக்காரனுக்கு அவன் செப்பனிட்ட சுரூபமும், ஊமையான தேவர்களையுண்டுபண்ணினதான உருவாக்கின சுரூபத்தை நம்பினவனுக்கு அதைவார்க்கப்பட்டதும், பொய்ப்போதகம்பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்னத்திற்குதவும்!

யகூ. மரத்தைப்பார்த்து விழியென்றும், ஊமையான கல்லைப்பார்த்து எழும்பென்றுஞ் சொல்லுகிறவனுக்கையோ அது போதிக்குமோ! * இதோ அது பொன்னும், வெள்ளியுமான தகடு அடித்திருக்கிறது, அதின் உள்ளத்திலே ஒரு ஆவியுமில்லையே. * சங்கீ. ௱கரு, யரு—யஅ.

உய. கர்த்தரோவென்றால், * தமது பரிசுத்த தேவாலயத்திலிருக்கிறார், பூமியெல்லாம் அவருக்குமுன்பாக * மௌனமாயிருக்கக்கடவது. * சங். யக, ச. * சங். எசா, யஅ.

## ங. அதிகாரம்.

[(க) ஆபகூக் தன் செபத்திலே பராபரனுடைய மகத்துவத்தைப்பார்த்து நடுங்கினது, (யஎ) தன் விசுவாசத்தின் உறுதி.]

ஆபகூக்குத்தீர்க்கதரிசியினுடைய தூய ராகீதமாகிய செபம்.

உ. கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் கேட்டேன், எனக்குப் பயமாயிற்று, கர்த்தாவே, வருஷங்கள் நடுவிலே உம்முடைய கிரியையை யுயிர்ப்பித்து வருஷங்களின் நடுவிலேயதைத் தெரியப்பண்ணும், கோபத்திலே இரக்கத்தை நினைத்துக்கொள்வீராக.

ங. பராபரன் தேமானிலும் பரிசுத்தருள்ளவர், * பாரான் பர்வதத்திலுமிருந்து வருவார், சேலா. அவருடைய மகிமை வானங்களை மூடிக்கொண்டது, † அவர் புகழ்ச்சியினாலே பூமி நிறைந்தது. * ரு. மோசே. நங, உ. † உ. மோசே. யரு, யசு.

ச. பிரகாசம் வெளிச்சமாயிருந்தது, அவர் கையிலிருந்து இருபுறமும் எழும்புகிற சோதிகள் அவருக்குண்டாம் அங்கே யவருடைய பலன் ஒளித்திருந்தது.

ரு. அவர் முகத்திற்கு முன்பாகப் பெருவாரிக் காய்ச்சல் நடந்தது, அவர் அடிகளுக்கு முன்பாக எரிப்பான நோக்கொதிப்புறப்பட்டது.

௬. அவர் நின்று தேசத்தை அளந்தார், அவர் பார்த்துப் புறசாதிகளைக் கரையப்பண்ணினார், பூர்வ பருவதங்கள் சிதறடிக்கப்பட்டன, என்றுமிருந்த மேடுகள் தாழ்ந்தன, அவருடைய நடைகள் நித்திய நடைகளாயின.

௭. கூஷானின் கூடாரங்களை அக்கிரமத்தின் கீழ் அகப்பட்டிருக்கக் கண்டேன், மீதியான் தேசத்தின் திரைகள் அசைந்தன.

௮. கர்த்தர் நதிகளின்மேல் எரிச்சலாயிருந்தாரோ? தேவரீர் உம்முடைய குதிரைகளின்மேலும், இரட்சிப்புண்டாக்குகிற உம்முடைய இரதங்களின்மேலும் ஏறிவருகிறபோது உமது கோபம் * நதிகளுக்கும், உமது சினம் † சமுத்திரத்திறகும் விரோதமாயிருந்ததோ? * ௨. மோசே. ௭, ௨௰. † ௨. மோசே. ௰௪, ௨௯. ௱

௯. கோத்திரங்களுக்கிடப்பட்ட ஆணைகளுடைய வார்த்தையின்படியே உம்முடைய வில் நாணேற்றப்பட்டதாக விழித்தது, சேலா. * ஆறுகளுண்டாகப் பூமியைப் பிளந்தீர். * ௨. மோசே. ௰௭, ௬.

௰. பருவதங்கள் உம்மைக்கண்டு திகில் அடைந்தன, * தண்ணீர்களின் வெள்ளம் கடந்துபோயிற்று, ஆழம் தன் இரைச்சலைக் கேட்கப்பண்ணி உயரத் தன் கைகளை எடுத்தது, * யோசுவா. ௩, ௰௬.

௰௧. * சந்திரசூரியன் தன் மண்டலத்தில் நின்றது, உமது அம்புகளின் வெளிச்சத்தோடும், உமது ஈட்டியினுடைய மின்னலின் பிரகாசத்தோடும் நடந்துவந்தார்கள். * யோசுவா. ௰, ௰௩.

௰௨. சினத்தோடே தேசத்தில் நடந்தேறினீர், கோபத்தோடே புறசாதிகளைப் போரடித்தீர்.

௰௩. உம்முடைய சனத்தின் இரட்சிப்புக்காகவும், நீர் அபிஷேகம்பண்ணிவைத்தவனோடே இரட்சிப்புக்காகவும் புறப்பட்டீர், கழுத்தளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி ஆகாதவனுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்டினீர், சேலா.

௰௪. அவனுடைய செங்கோல்களாலே இவனுடைய கிராமத்தாரின் தலையை உருவக் குத்தினீர், என்னைச் சிதற அடிப்பதற்குக் கொந்தளிப்பாய் வந்தார்கள், சிறுமையானவனை ஒளிப்பிடத்திற பட்சிப்பது அவர்களுக்குக் களிகூருதலாயிருக்கும்.

௰௫. திரளான தண்ணீர்களாகிய குவியலாகிய சமுத்திரத்திற்குள் உமது குதிரைகளோடே வழிப்போனீர்.

௰௬. நான் கேட்கிற செய்தியினாலேயோ என் வயிறு அதிர்ந்தது, அந்தச் சத்தத்தினால் என் உதடுகள் நடுங்கின, மக்கல் என் எலும்புகளிலுண்டாயிற்று, என் நிலையிலே நடுங்கினேன், எங்களைப் பாழாக்கும் சனத்தின் படைக்குப்போயேறும் இக்கட்டு நாளிலே இளைப்பாறுவேன்.

௰௭. ஏனெனில், அத்திமரம் துளிர்விடுவதில்லை. திராட்சச்செடிகளிற் பலனுண்டாவதுமில்லை, ஒலிவமரத்தின் செய்தவேலை பிசகிப்போகும், வயல்கள் ஆகாரங்கொடாதிருக்கும், தொழுவத்தில் ஆடுகள் முதலற்றுப்போகும், மாட்டுக்கொட்டிலிலே மாடுமில்லாதே போகும்.

௰௮. நானோவென்றால் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருப்பேன், என் இரட்சிப்பின் பராபரனுக்குட் களிகூருவேன். * ஏசா. ௬௧, ௰. பிலிப்பி. ௪, ௪.

௰௯. ஆண்டவராகிய கர்த்தர் என்னுடைய பலன், அவர் என் கால்களை மான்கால்களைப்போலாக்கி என் உயரமான தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார், என் கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கொப்புவிக்கப்பட்டது.

ஆபகூக்கின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

---

# செப்பனியாவின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௬௱௩௰.)

## ௧. அதிகாரம்.

[பலவகையான பாவங்களுக்காக யூதர்களுக்குவரும் பராபரனுடைய உக்கிரமுள்ள நியாயத்தீர்ப்பு.]

ஆமோனின் குமாரனாகிய யோசியாவென்ற யூதாவினுடைய இராசாவின் நாள்களிலே எசேக்கியாவினுடைய குமாரனாயிருக்கிற ஆமரியாவுக்குக் குமாரனான கெதலியாவென்றவனுடைய மகனாகிய கூஷியின் குமாரன் செப்பனியாவுக்குண்டான கர்த்தருடைய வசனம்.

௨. தேசத்திலுண்டானதையெல்லாம் வாரவே வாரிக்கொள்ளுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௩. மனுஷரையும், மிருகஜீவன்களையும் வா

ரிக்கொள்ளுவோம், நாம் ஆகாயத்துப்பட்சி களையும், சமுத்திரத்து மச்சங்களையும், ஆகாதவர்களோடேகூட * இடறல்களையும் வாரிக்கொண்டு தேசத்திலுண்டான மனுஷரைச் சங்காரம்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார். * மத்தே. ௰௩, ௪௧.

௪. நாம் யூதாவின்மேலும், எருசலேமுடைய எல்லாக்குடிகளின்மேலும் நமது கையை நீட்டிப் பாகாலில் மீதியாயிருக்கிறதையும், பூசாசாரிகளின் பெயரையும் அவர்களோடேகூட ஆசாரியர்களையும்,

௫. வீடுகளின்மேல் வானத்துச்சேனையைப் பணிகிறவர்களையும், கர்த்தர்பேரிலும், ஆணையிட்டுத் தங்கள் மோளோக்பேரிலும் ஆணையிட்டுப்பணிகிறவர்களையும்,

௬. கர்த்தரைவிட்டுப்பின்வாங்குகிறவர்களையும், கர்த்தரைத்தேடாமலும், அவருக்காகக்கேட்டு விசாரியாமலும்போகிறவர்களையும் இவ்விடத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.

௭. கர்த்தராகிய ஆண்டவருக்குமுன்பாக மவுனமாயிருங்கள். ஏனெனில், கர்த்தருடையநாள்கிட்டியிருக்கின்றது. அதேதென்றால், கர்த்தர் ஒருபலியடிக்குந்தலை ஆயத்தம்பண்ணித் தாம் அதற்கழைத்தவர்களைப் பரிசுத்தம்பண்ணினார்.

௮. கர்த்தருடைய பலியின்நாளிற் சம்பவிப்பதேதென்றால், நாம் பிரபுக்களையும், இராசகுமாரரையும், மறுதேசத்து உடை தரிக்கிற யாவரையும் விசாரிப்போம்.

௯. வாசற்படியைத்தாண்டிக்கொடுமையினாலும்,கபடினாலும் தங்கள் எசமான்களின் வீட்டை நிரம்பப்பண்ணுகிற யாவரையும் அந்நாளில் விசாரிப்போம்.

௰. அந்நாளிலே மீன் வாசலிலிருந்து கூக்குரலின்சத்தமும், பட்டணத்தின் இரண்டாமவகுப்பிலிருந்து அலறுதலும், மேடுகளிலிருந்து மகா நொறுங்குதலின் இரைச்சலுமுண்டாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. கீழ்த்தெருவின்குடிகளே, அலறுங்கள். ஏனெனில், வர்த்தகசனமெல்லாஞ்சங்காரமாயின, காசுக்காரரெல்லாரும்வெட்டுண்டுபோனார்கள்.

௰௨. அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், நாம் எருசலேமை விளக்குகளாற்சோதித்துத் தங்கள் வண்டிகளின்மேற் குழம்பியிருக்கிறவர்களும், கர்த்தர்நன்மைசெய்வதுமில்லை, தீமைசெய்வதுமில்லையென்று தங்கள் இருதயத்திற் சொல்லுகிறவர்களுமான மனுஷரை விசாரிப்போம்.

௰௩. அவர்களுடைய ஆஸ்திகுறையும்,அவர்களுடையவீடுகள் கொள்ளையுமாகும், அவர்கள் *வீடுகளைக்கட்டியும் அவைகளிற்குடியிருப்பதில்லை, அவர்கள் திராட்சத்தோட்டங்களை நாட்டியும் அவைகளின் பழ இரசத்தைக் குடிப்பதில்லை. * ஆமோஸ். ௫, ௰௧.

௰௪. * கர்த்தருடைய பெரியநாள்கிட்டியிருக்கின்றது, அது கிட்டிச்சேர்ந்து மிகவுந் தீவரிக்கின்றது, கர்த்தருடைய நாளின் சத்தத்திற்குப் பராக்கிரமசாலி முதலாய் அங்கே கசப்பாய்க்கதறுவான். * யோவேல். ௨, ௰௧.

௰௫. * அந்தநாள் கினத்தினுடைய நாள், அது இக்கட்டும், இடுக்கணுமுள்ள நாள், அது கொந்தளிப்பும், பாழ்க்கடிப்புமுள்ள நாள், அது இருளும், அந்தகாரமுமானநாள், அது மப்பும், மந்தாரமுமானநாள். * யோவேல். ௨, ௰௧. ஆமோஸ். ௫, ௰௮.

௰௬. அது அரணிப்பான பட்டணங்களுக்குவிரோதமாகவும், உயரமான கொத்தளங்களுக்குவிரோதமாகவும் எக்காளமூதுகிறதும், ஆர்ப்பரிக்கிறதுமான நாள்.

௰௭. நாம் மனுஷரைக் குருடரைப்போல நடக்கத்தக்கவிதமாக இறுகப்பிடிப்போம், ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்தார்கள், அவர்கள் இரத்தம் புழுதியைப்போலவும், அவர்கள் மாம்சம் எருவைப்போலவும் இறைந்துகிடக்கும்.

௰௮. கர்த்தருடைய கினத்தின் நாளிலே * அவர்கள் வெள்ளியும், அவர்கள் பொன்னும் அவர்களைத்தப்புவிக்கமாட்டாது, அவருடைய எரிச்சலின் அக்கினியினாலே தேசமெல்லாமழியும், அதேதெனில் தேசத்தின் குடிகளையெல்லாம் அகப்பாயத்தானே நிர்மூலம்பண்ணுவார். * எசே. ௭, ௰௯.

## உ. அதிகாரம்.

[(௧) குணப்படுதலுக்குத் தூண்டுதல், (௪) பெலிஸ்தரின்மேலும், (௮) மோவாபின்மேலும், அம்மோன்புத்திரர்மேலும், (௰௨) எத்தியோப்பியர்மேலும், அசூரின்மேலும்வரும் நியாயத்தீர்ப்பு.]

வாஞ்சையில்லாத சாதியே, கட்டளையின்படியேமுடிந்து தீர, நாள் துரும்பைப்போலப் பறந்துபோகிறதற்குமுன்னும் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம உங்களமேல் இறங்காததற்குமுன்னும், கர்த்தருடையகோபநாள் உங்களமேல் வராததற்குமுன்னும்,

உ. * நீங்கள் உங்களையுய்ச்சதாராய்ந்து சோதியுங்கள். * உ. கொரிந். ௰௩, ௫.

௩. கர்த்தருடைய நியாயத்தை நடப்பிக்கிற தேசத்திலுள்ள எல்லாச்சிறுமையானவர்களே, அவரைத்தேடுங்கள், நீதியைத்தேடுங்கள், மனத்தாழ்மையைத்தேடுங்கள். அப்போது ஒருவேளை கர்த்தருடைய கோபத்தின் நாளிலே மறைக்கப்படுவீர்கள்.

௪. ஏனெனில், காத்சாகை விடப்பட்டுப்போகும், அஸ்கலோன்பாழாய், அஸ்தோத்

கூ. அவர்நின்றுதேசததையளநதார், அவர் பார்ததுபபுறசசாதிகளைக கரையபபண ணினார், பூருவபருவதஙகள சிதறடிககபப டடன, என்றுமிருநதமேடுகள தாழநதன, அவருடைய நடைகள நிததிய நடைகளா யின.

எ. கூஷானின கூடாரஙகளை யககிரமததின கீழ அகபபடடிருக்கக்கணடேன, மீதியா னதேசததினதிரைகள அசைநதன.

அ. கர்ததர் நதிகளினமேல எரிசசலாயிரு நதாரோ? தேவரீர் உமமுடைய குதிரைக ளினமேலும, இரட்சிபபுணடாககுகிற உம முடைய இரதஙகளினமேலும ஏறிவருகிற போது உமதுகோபம * நதிகளுககும, உமதுசனம † சமுததிரததிறகும விரோத மாயிருநததோ? * உ. மோசே. எ, உய. † உ. மோசே. யச, உகூ. மூ

கூ. கோததிரஙகளுககிடடபபட்ட ஆணைக ளுடையவார்ததையினபடியே யுமமுடைய வில நாணேறறபபடடதாகவிழிததது, சே லா. * ஆறுகளுணடாகப பூமியைபபிளந தீர். * உ. மோசே. யஎ, கூ.

ய. பருவதஙகள உமமைககணடு திகில அடைநதன, * தணணீர்களின வெளளங கடநதுபோயிறறு, ஆழநதது இரைசசலை கேட்கபபணணி உயரந் தனகைகளையெ டுததது, * யோசுவா. ரு, யரு.

யக. *சநதிரசூரியன தனதுமணடலததில நினறது, உமதமபுகளினவெளிசசததோடும, உமது ஈடடியினுடைய மினனலின பிரகா சததோடும நடநதுவநதார்கள. * யோசு வா. ய, யரு.

யஉ. சினததோடே தேசததிலநடநதேறி னீர், கோபததோடே புறசசாதிகளைபபோ ரடிததீர்.

யங. உமமுடைய சனததின இரட்சிபபுக காகவும், நீர் அபிஷேகமபணணிவைததவ னோடே இரட்சிபபுக்காகவும்புறபபடடீர், கழுததளவாக அஸ்திபாரததைத்திறபபாக்கி ஆகாதவனுடைய வீடடிலிருநத தலை வனைவெடடினீர், சேலா.

யச. அவனுடைய செஙகோலகளாலே இவனுடைய கிராமததாரின தலையையுருவ க்குததினீர், எனனைச சிதற அடிபபதறகு கொநதளிபபாயவநதார்கள, சிறுமையான வனை யொளிபபிடததிற பட்சிபபது அவர் களுககுக களிகூருதலாயிருககும.

யரு. திரளான தணணீர்கள குவியலாகிய சமுததிரததிறகுள உமது குதிரைகளோ டேயேகிபபோனீர்.

யகூ. நான கேட்கிற செயதியினாலேயோ எனவயிறு அதிர்நதது, அநதசசத்தத்திறகு எனனுதடுகள நடுஙகின, மககல எனனெலு மபுகளிலுணடாயிறறு, என நிலையிலே யதி ர்நதேன, எஙகளைபபாழாககுஞ சனததை யடைககுபபோயேறுமஇக்கடடுநாளிலே யெபபடியிளைபபாறுவேன.

யஎ. ஏனெனில. அததிமரந துளிர்விடுவது மிலலை. திராட்சச்செடிகளிற பலனுணடா வதுமிலலை, ஒலிவமரததிறசெயதவேலை பிச கிபபோகும, வயலகள ஆகாரஙகொடா திருக்கும, தொழுவததில ஆடுகளமுதலறறுப போகும, மாடடுககொடடிலிலே மாடுமில லாதேபோகும.

யஅ. நானோவெனிற கர்ததருககுள மகிழ் சசியாயிருபபேன, என இரட்சிபபினபரா பரனுககுட்களிகூருவேன. * ஏசா. கூக, ய. பிலிபபி. ச, ச.

யகூ. ஆணடவராகிய கர்ததர் எனனுடை ய பலன, அவர் எனகாலகளை மான்காலக ளைபபோலாககி என உயரமான தலஙகளில எனனைநடககபபணணுவார், என் கினனர ஙகளில வாசிகக இராகததலைவனுககொப புவிககபபடடது.

ஆபகூக்கின்றீர்க்கதரிசனம் முடிந்தது

முற்றும்.

---

# செப்பனியாவின் றீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன. கூாஙய.)

## க. அதிகாரம்.

[பலவகையான பாவஙகளுககாக யூதர்களு ககுவரும பராபரனுடைய உககிரமுளள நியாயததீர்பபு.]

ஆமோனின குமாரனாகிய யோசியா வெனற யூதாவினுடைய இராசாவி னநாள்களிலே எசேக்கியாவினுடைய குமா ரனாயிருககிற அமரியாவுககுக் குமாரனான கேதலியாவெனறவனுடைய மகனாகிய கூஷி யின்குமாரன செபபனியாவுக்குணடான கர்த தருடையவசனம.

உ. தேசததிலுணடானதையெல்லாமவார வே வாரிககொளளுவோமெனறு கர்ததர் சொலலுகிறார்.

ங. மனுஷரையும, மிருகசீவனகளையும வா

ரிக்கொள்ளுவோம், நாம் ஆகாயத்துப் பறவைகளையும், சமுத்திரத்து மச்சங்களையும், ஆகாதவர்களோடேகூட * இடறல்களையும் வாரிக்கொண்டு தேசத்திலுண்டான மனுஷரைச் சங்காரம்பண்ணுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார். * மத்தே. ௰௩, ௪௧.

௪. நாம் யூதாவின்மேலும், எருசலேமுடைய எல்லாக்குடிகளின்மேலும் நமது கையை நீட்டிப் பாகாலில் மீதியாயிருக்கிறதையும், பூசாசாரிகளின் பெயரையும் அவர்களோடேகூட ஆசாரியர்களையும்,

௫. வீடுகளின்மேல் வானத்துச் சேனையைப் பணிகிறவர்களையும், கர்த்தர்பேரிலும், ஆணையிட்டுத் தங்கள் மோளோக்பேரிலும் ஆணையிட்டுப்பணிகிறவர்களையும்,

௬. கர்த்தரைவிட்டுப்பின்வாங்குகிறவர்களையும், கர்த்தரைத்தேடாமலும், அவருக்காகக்கேட்டு விசாரியாமலும்போகிறவர்களையும் இவ்விடத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணுவோம்.

௭. கர்த்தராகிய ஆண்டவருக்குமுன்பாக மவுனமாயிருங்கள். ஏனெனில், கர்த்தருடையநாள்கிட்டியிருக்கின்றது. அதேதென்றால், கர்த்தர் ஒருபலியடிக்குத்தலே ஆயத்தம்பண்ணித் தாம் அதற்கழைத்தவர்களைப் பரிசுத்தம்பண்ணினார்.

௮. கர்த்தருடைய பலியின்நாளிற் சம்பவிப்பதேதென்றால், நாம் பிரபுக்களையும், இராசகுமாரரையும், மறுதேசத்து உடைதரிக்கிற யாவரையும் விசாரிப்போம்.

௯. வாசற்படியைத்தாண்டிக்கொடுமையினாலும், கபட்டினாலுந் தங்கள் எசமான்களின வீட்டை நிரம்பப்பண்ணுகிற யாவரையும் அந்நாளில் விசாரிப்போம்.

௰. அந்நாளிலே மீன் வாசலிலிருந்து கூக்குரலின்சத்தமும், பட்டணத்தின் இரண்டாமவகுப்பிலிருந்து அலறுதலும், மேடுகளிலிருந்து மகா நொறுங்குதலின் இரைச்சலுமுண்டாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. கிடங்கு வீதியின்குடிகளே, அலறுங்கள். ஏனெனில், வர்த்தகசனமெல்லாஞ் சங்காரமாயின, காசுக்காரரெல்லாரும்வெட்டுண்டுபோனார்கள்.

௰௨. அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், நாம் எருசலேமை விளக்குகளாற்சோதித்துத் தங்கள் வண்டிகளின்மேற் குழம்பியிருக்கிறவர்களும், கர்த்தர்நன்மைசெய்வதுமில்லை, தீமைசெய்வதுமில்லையென்று தங்கள் இருதயத்திற் சொல்லுகிறவர்களுமான மனுஷரை விசாரிப்போம்.

௰௩. அவர்களுடைய ஆஸ்திகுறையும், அவர்களுடையவீடுகள் கொள்ளையுமாகும், அவர்கள் *வீடுகளைக்கட்டியும் அவைகளிற்குடியிருப்பதில்லை, அவர்கள் திராட்சத்தோட்டங்களை நாட்டியும் அவைகளின் பழ இரசத்தைக் குடிப்பதில்லை. * ஆமோஸ். ௫, ௰௧.

௰௪. * கர்த்தருடைய பெரியநாள்கிட்டியிருக்கின்றது, அது கிட்டிச்சேர்ந்து மிகவுந் தீவிரிக்கின்றது, கர்த்தருடைய நாளென்ற சத்தத்திற்குப் பராக்கிரமசாலி முதலாய் அங்கே கசப்பாயக்கதறுவான். * யோவே. ௧, ௰௫.

௰௫. * அந்தநாள் சினத்தினுடைய நாள், அது இக்கட்டும், இடுக்கணுமுள்ள நாள், அது கொந்தளிப்பும், பாழ்க்கடிப்புமுள்ள நாள், அது இருளும், அந்தகாரமுமான நாள், அது மப்பும், மந்தாரமுமான நாள். * யோவேல. ௨, ௰௧. ஆமோஸ். ௫, ௰௮.

௰௬. அது அரணிப்பான பட்டணங்களுக்கு விரோதமாகவும், உயரமான கொத்தளங்களுக்குவிரோதமாகவும் எக்காளமூதுகிறதும், ஆர்ப்பரிக்கிறதுமான நாள்.

௰௭. நாம் மனுஷரைக் குருடரைப்போல நடக்கத்தக்கவிதமாக இறுகப்பிடிப்போம், ஏனென்றால் கர்த்தருக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்தார்கள், அவர்கள் இரத்தம் புழுதியைப்போலவும், அவர்களமாம்சம் எருவைப்போலவும் இறைந்துகிடக்கும்.

௰௮. கர்த்தருடைய சினத்தின் நாளிலே * அவர்கள் வெள்ளியும், அவர்கள் பொன்னும் அவர்களைத் தப்புவிக்கமாட்டாது, அவருடைய எரிச்சலின் அக்கினியினாலே தேசமெல்லாமழியும், அதேதெனில் தேசத்தின் குடிகளையெல்லாம் அசுப்பாயத்தானே நிர்மூலம்பண்ணுவார். * எசா. ௭, ௰௯.

## ௨. அதிகாரம்.

[(௧) குணப்படுதலுக்குத் தூண்டுதல், (௪) பெலிஸ்தரின்மேலும், (௮) மோவாபின்மேலும், அம்மோன்புத்திரர்மேலும், (௰௨) எத்தியோப்பியர்மேலும், அசூரின்மேலும்வரும் நியாயத்தீர்ப்பு.]

வாஞ்சையில்லாத சாதியே, கட்டளையின்படியேமுடிந்து தீர, நாள் துரும்பைப்போலப் பறந்துபோகிறதற்குமுன்னுங் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் உங்கள்மேல் இறங்காததற்குமுன்னும், கர்த்தருடையகோபநாள் உங்கள்மேல் வராததற்குமுன்னும்,

௨. * நீங்கள் உங்களை யுய்த்தாராய்ந்து சோதியுங்கள். * ௨. கொரிந். ௰௩, ௫.

௩. கர்த்தருடைய நியாயத்தை நடப்பிக்கிற தேசத்திலுள்ள எல்லாச்சிறுமையானவர்களே, அவரைத்தேடுங்கள், நீதியைத்தேடுங்கள், மனத்தாழ்மையைத்தேடுங்கள். அப்போது ஒருவேளை கர்த்தருடைய கோபத்தின் நாளிலே மறைக்கப்படுவீர்கள்.

௪. ஏனெனில், காத்சாகை விடப்பட்டுப்போகும், அஸ்கலோன்பாழாம், அஸ்தோத்

தாளைப் பட்டப்பகலிலே பறக்கடிப்பார்கள். எக்ரோன் வேரோடே பிடுங்கப்படும்.

௫. சமுத்திரக்கரைக் குடிகளாகிய கிரேத்தியரின் சாதிக்கு ஐயோ, * பெலிஸ்தரின் தேசத்தாராகிய கானானே சாதியே, கர்த்தருடைய வார்த்தை யுங்களுக்கு விரோதமாயிருக்கின்றது, உன்னிற் குடியில்லாதபடிக்கு உன்னை அழிப்போம். * எசே. ௨௫, ௧௬.

௬. சமுத்திரக்கரைத்தேசம் மேய்ப்பர் வெட்டின கெபிதாபரங்களும், ஆட்டுத்தொழுவங்களுமாகிப்போகும்.

௭. அந்தத்தேசம் யூதாவீட்டாரில் மீதியானவர்களின் வசமாகும், அவர்கள் அவ்விடங்களில் மந்தையை மேய்ப்பார்கள், அஸ்கலோனின் வீடுகளிலே சாயங்காலத்திற் படுத்துக்கொள்வார்கள். ஏனெனில், அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அவர்களை விசாரித்து, * அவர்கள் சிறையிருப்பைத் திருப்புவார். * எரேமியா. ௨௯, ௰௪. ௩௰, ௩. ௰௮.

௮. மோவாபின் நிந்தனையையும், அம்மோன் புத்திரர் நமது சனத்தை நிந்தித்துத் தங்கள் எல்லைக்கு மிஞ்சிப் பெருமைபண்ணின தூஷணங்களையுங் கேட்டோம்.

௯. ஆகையால், மோவாப் சோதோமைப்போலும், அம்மோன் புத்திரரின் தேசங் கொமோராவைப்போலுமாகிக் காஞ்சொறிகளுக்கு விடப்பட்ட நிலமும், உப்புப்பள்ளமும், சதாகாலமட்டும் பாழுமாயிருக்கும், நமது சனத்தில் மீந்தவர்கள் அவர்களைக் கொள்ளையிட்டு நமது சாதியில் மீதியானவர்கள் அவர்களைச் சுதந்தரிப்பார்களென்கிறதை நம்முடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகிறோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறார்.

௰. இது அவர்கள் மேட்டிமைக்கீடாக அவர்களுக்கு வரும். ஏனென்றால், அவர்கள் நிந்தித்துச் சேனைகளுடைய கர்த்தரின் சனத்திற்கு விரோதமாகப் பெருமைபண்ணினார்கள்.

௰௧. கர்த்தர் அவர்கள்மேற் கெடியுள்ளவராயிருப்பார். ஏனெனில், பூமியின் தேவர்களையெல்லாம் இளைத்துப்போகப்பண்ணுவார். அப்போது சாதிகளுடைய சகல தீவுகளின் மனுஷரும் அவரவர் தங்கள் தங்கள் தானத்திலிருந்து அவரைப் பணிந்துகொள்ளுவார்கள்.

௰௨. எத்தியோப்பியராகிய நீங்களும் நமது பட்டயத்தாற் கொலையுண்பீர்கள்.

௰௩. தமது கையை வடக்குக்கு விரோதமாக நீட்டி, அசூரை அழித்து, நினிவேயைப் பாழும் வனாந்தரத்திற்கொத்த வறட்சியான தலமுமாக்கிப்போடுவார்.

௰௪. அதின் நடுவிலே மந்தைகளும் * சாதி சாதியான சகல ஜீவன்களும் படுத்துக்கொள்ளும், அதினுடைய சிகரங்களின்மேலே நாரையும், கோட்டானும் இராத்தங்கும், பலகணிகளிற் கூவுகிற சத்தம் பிறக்கும், வாசற்படிகளிற் பாழ்க்கடிப்பிருக்கும், ஏனெனில் கேதுருமரங்களின் மச்சைத் திறப்பாக்கிப்போடுவார். * ஏசாயா. ௰௩, ௨௧. ௨௨. ௩௪, ௰௧—௰௫.

௰௫. சுகமாய்க் குடியிருந்து நானே, என்னைத்தவிர வேறொருத்தியுமில்லையென்று தன்னிருதயத்திற் சொன்ன களிகூருதலான பட்டணமிதுதானே. எப்படியது பாழும், மிருகஜீவன்களின் தாபரமுமாயப்போயிற்று அதைக்கடந்துபோகிறவனெல்லாம் ஈசற்போட்டுத் தன்கையை ஆட்டுவான்.

## ௩. அதிகாரம்.

[(௧) எருசலேமின் பல்வகையான பாவங்களுக்காகக் கொடுமையாய்க் கண்டித்தல், (௮) இஸ்ரவேலர் முந்தின சீருக்குக் கொண்டுவரப்படக் காத்துக்கொண்டிருப்பதற்கும், (௰௪) பராபரனாலேயுண்டாகும் இரட்சிப்புக்காக மனங்களிப்பதற்குந் தூண்டுதல்.]

இடுக்கண்செய்கிற ஊத்தையும், அழுக்குமான பட்டணத்திற்கையோ!

௨. அது சத்தத்திற்குக் கேள்விகொடுக்கவில்லை, அது கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள்ளவில்லை, அது கர்த்தரை நம்பவில்லை, அது தன் பராபரனண்டைக்குச் சேரவில்லை.

௩. அதற்குள்ளேயிருக்கிற * அதின் பிரபுக்கள் கெர்ச்சிக்கிற சிங்கங்கள், அதின் நியாயாதிபதிகள் சாயங்காலத்திற் புறப்படுகிற ஓநாய், விடியற்காலமட்டும் ஒரு எலும்பை மீதியாக வைக்காததுமான ஓநாய்கள். * எசேக்கி. ௨௨, ௨௭. மீகா. ௩, ௰௧.

௪. அதின் தீர்க்கதரிசிகள் வெலெழுச்சியும், துரோகமுமுள்ள மனுஷர் அதின் ஆசாரியர்கள் பரிசுத்தஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி வேதத்திற்கு அநியாயஞ்செய்தார்கள்.

௫. அதற்குள்ளிருக்கிற கர்த்தர் நீதியுள்ளவர், அவர் அநியாயஞ்செய்கிறதில்லை, அவர் குறையில்லாமற் காலையிலே தம்முடைய நியாயத்தை வெளிச்சத்திலே வைக்கிறார், ஆகிலும் அநியாயக்காரன் வெட்கமறியான்.

௬. சாதிகளைச் சங்கரித்தோம், அவர்கள் துரோகங்கள் பாழாயிற்று, அவர்களுடைய வீதிகளை ஒருத்தருங் கடந்துபோகாதபடிக்குப் பாழாக்கடித்தோம், அவர்களுடைய பட்டணங்கள் மனுஷனில்லாதபடிக்கும், குடியில்லாதபடிக்கும் அவாந்தரையாயின.

௭. உன்வாசஸ்தலம் நிர்மூலமாகாதபடிக்கு நீ நமக்குப் பயந்து, கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள்ளுவாயென்றோம். ஆனால், நாம் அதையெப்படி விசாரித்தாலும் அவர்கள் * தங்கள் கிரியைகளைக் கெடாக்கத் தீவிரித்தார்கள். * எரேமியா. ௪, ௨௨.

௮. ஆகையால், நாம் கொள்ளையாட எழும்

புயநாளமட்டும் நமக்குக் காத்திருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனென்றால், நம்முடைய கோபத்தினுடைய முழு உக்கிரமான நம்முடைய சினத்தை அவர்கள்மேல் ஊற்றும்படிக்குச் சாதிகளைச் சேர்க்கவும், இராச்சியங்களைக் கூட்டவும் நம்மில் தீர்ந்த நியாயமாயிருக்கின்றது. அதேதென்றால், தேசமெல்லாம் நம்முடைய எரிச்சலின் அக்கினியினால் அழியும்.

௯. அப்போது சனங்களெல்லாங் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு ஏகருத்தாய் அவருக்கு ஆராதனைசெய்யும்படிக்கு நாம் அவர்கள் உதடுகளைச் சுத்தமுள்ளவைகளாக மாறப்பண்ணுவோம்.

௰. * சிதறுண்டிருந்து நம்மை விண்ணப்பம் பண்ணப் போகிற நம்முடைய சபையார் எத்தியோப்பியாவின் நதிகளுக்கக்கரையிலிருந்து நம்முடைய காணிக்கையை நமக்குக் கொண்டுவருவார்கள். * மல்கி. ௧, ௰௧.

௰௧. நீ நமக்கு விரோதமாய்த் துரோகம் பண்ணிச் செய்திருந்த உன்னுடைய எல்லாக் கிரியைகளினிமித்தமும் அந்நாளிலே வெட்கப்படாதிருப்பாய். ஏனெனில், நீ நம்முடைய பரிசுத்த பருவதத்தினிமித்தம் இனிமேல் இடறலடையாதபடிக்கு, நாம் உன் பெருமையைத் தொட்டுக் களிகூர்ந்தவர்களை அப்போது உன் நடுவிலிருந்து விலக்கி,

௰௨. உன் நடுவிலே * சிறுமையும், எளிமையுமான சனத்தை மீதியாக வைப்போம், அவர்கள் கர்த்தருடைய நாமத்தின்மேல் நம்பிக்கையாயிருப்பார்கள். * ஓக. ௰௨, ௩௨.

௰௩. இஸ்ரவேலில் மீதியானவர்கள் அநியாயஞ்செய்வதில்லை, அவர்கள் பொய்பேசுவதுமில்லை, * கபடநாக்கு அவர்கள் வாயிற் கண்டுபிடிக்கப்படுவதுமில்லை, அவர்கள் பயப்படுத்துவாரில்லாமல் மேய்ந்து படுத்துக்கொள்ளுவார்கள். * அறிவி. ௰௪, ௫.

௰௪. * சீயோன் குமாரத்தியே கெம்பீரி. இஸ்ரவேலரே, ஆர்ப்பரியுங்கள், எருசலேம் குமாரத்தியே நீ முழு இருதயத்தோடும் மகிழ்ந்து களிகூரு. * சகரி. ௯, ௯.

௰௫. கர்த்தர் உன் ஆக்கினைகளை அகற்றி, உன் சத்துருக்களை விலக்கினார். இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தர் * உன் நடுவிலேயிருக்கிறார், இனி நீ பொல்லாங்கையத்தைக் காணாதிருப்பாய். * மத்தேயு. ௨௮, ௨௰.

௰௬. அந்நாளிலே எருசலேமைப் பார்த்துப் பயப்படாதேயென்றும், சீயோனைப் பார்த்து உன் கைகளைத் தளரவொட்டாதேயென்றும் சொல்லப்படும்.

௰௭. உன் பராபரனாகிய கர்த்தர் உன் நடுவிலிருக்கிறார், * அவர் வல்லமையுள்ளவராய் இரட்சிப்பார், அவர் உன்மேற் சந்தோஷமாய் மகிழ்ந்து, தம்முடைய சிநேகத்தினிமித்தம் கூப்பிடாதிருப்பார், அவர் உன்மேல் கெம்பீரமாய்க் களிகூருவார். * ௧. கொரி. ௰௫, ௫௭.

௰௮. உன் சபையின் மனுஷராயிருந்து பண்டிகையாசரிப்பில்லாமையால் உண்டான நிந்தையதின்மேற் பாரமானதினாலே சஞ்சலப்பட்டவர்களைக் கூட்டிக்கொள்ளுவோம்.

௰௯. இதோ, அக்காலத்திலே உன்னைச் சிறுமைப்படுத்தின யாவருக்கும் வேறேபிரகாரமாகச்செய்து, * நொண்டியானவனை யிரட்சித்துத் தள்ளுண்டவனைச் சேர்த்துக்கொண்டு அவர்கள் வெட்கம் அனுபவித்த சகல தேசங்களிலும் அவர்களைப் புகழ்ச்சியும், கீர்த்தியுமாக வைப்போம்.

௨௰. * அக்காலத்திலே யுங்களைக் கூட்டிக்கொண்டுவருவோம். அக்காலத்திலே யுங்களைச் சேர்த்துக்கொள்ளுவோம். அதேதென்றால், நீங்கள் கண்ணாரக்காண நாம் உங்கள் சிறையிருப்பைத் திருப்பும்போது நாம் உங்களைக் கீர்த்தியும், புகழ்ச்சியுமாக வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். * எரேமி. ௨௯, ௰௪.

செப்பனியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது
முற்றும்.

---

# ஆகாயின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௫௱௨௰.)

## ௧. அதிகாரம்.

[(௧) சனந் தேவாலயத்தைக் கட்டாதிருந்ததினாலே ஆகாய் அவர்களைக் கண்டித்தது, (௭) அதைக் கட்ட அவர்களைத் தூண்டினது, (௰௨) அதைச் சீக்கிரத்திற் செய்பவர்களுக்குப் பராபரனுடைய உதவியுண்டாகுமென்று சொன்னது.]

இராசாவாகிய தரியு அரசாண்ட இரண்டாம் வருஷம் ஆறாம் மாதம் முதலாந் தேதியிலே கர்த்தருடைய வார்த்தை * ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேல் என்ற யூதாவின் தலைவனுக்கும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவா என்ற பிரதான

ஆசாரியனுக்கும் உண்டாகி அவர் சொன்னதாவது; * எஸ்தர். ௫, ௧. ௨.

௨. இந்தச் சனங்கள் கர்த்தருடைய வீட்டைக் கட்டுஞ் சமயமான காலம் இன்னும் வந்ததில்லையென்கிறார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௩. ஆனால் ஆகாய் தீர்க்கதரிசியைக் கொண்டு கர்த்தருடைய வார்த்தையுண்டாகி அவர் சொன்னதாவது;

௪. இந்த வீடு பாழாய்க் கிடக்கையில், நீங்கள் மச்சுப்பாவப்பட்ட உங்களுடைய வீடுகளிற் குடியிருக்குங் காலம் உங்களுக்கு வந்திருக்கின்றதோ?

௫. இப்போதும் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், உங்கள் வழிகளின் மேல் உங்கள் மனதை வையுங்கள்.

௬. * நீங்கள் திரளாய் விதைத்துங் கொஞ்சமாய் அறுத்துக்கொண்டு வருகிறீர்கள், நீங்கள் புசித்தும், திருப்தியாகாமலும், குடித்தும் பரிபூரணமடையாமலும் போகிறீர்கள், உடுப்புடுத்தும் உடுத்தவனுக்குக் குளிர் விடுவதில்லை, கூலியைச் சம்பாதிக்கிறவன் பொத்தலான முடிப்பிலே வைக்கிறவனையொத்திருக்கிறான். * ௫. மோசே. ௨௮, ௩௮.

௭. உங்கள் வழிகளின்மேல் உங்கள் மனதை வையுங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௮. நீங்கள் பருவதத்தின்மேல் ஏறிப்போய் மரங்களை வெட்டி வந்து வீட்டைக் கட்டுங்கள், அப்போது அதின்மேல் நாம் இஷ்டமாயிருந்து அதினால் கனம் அடைவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯. அநேகமாய் வருமென்று நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தும் இதோ, கொஞ்சமாய்ப் போகின்றது, நீங்கள் அறுத்து வீட்டுக்குக் கொண்டுவந்தும் நாம் அதை ஊதிப்போடுகிறோம் எதினிமித்தமென்றால், நீங்கள் அவரவர் தம் தம் வீட்டுக்கென்று திரிகையில் நம்முடைய வீடு பாழாய்க் கிடக்கிறதினிமித்தமாகத்தானென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰. ஆனபடியால் * உங்கள்மேலிருக்கிற வானம் பனியைக் கொடாமலும், பூமி பலனைக் கொடாமலும் போயிற்று. * ௫. மோசே. ௨௮, ௨௩.

௰௧. ஏனெனில், * நாம் நாட்டின்மேலும், பருவதங்களின்மேலும், தானியத்தின்மேலும், திராட்சரசத்தின்மேலும், எண்ணெயின்மேலும், பூமி முளைப்பிக்கிறவெல்லாவற்றின்மேலும், மனுஷரின்மேலும், மிருகங்களின்மேலும், கைகளின் பாடனைத்தின்மேலும் வறட்சியை வரவழைத்தோமென்றார். * ஆமோஸ். ௪, ௯.

௰௨. அப்போது செயலத்தியேலின் குமாரனாகிய செருபாபேலும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனும், சனத்தில் மீதியான அனைவரும், தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்திற்கும், தங்கள் பராபரனாகிய கர்த்தர் அனுப்பின ஆகாய் தீர்க்கதரிசியினுடைய வார்த்தைகளுக்குங் கேள்வி கொடுத்தார்கள், சனங் கர்த்தருக்கு முன்பாகப் பயந்தது.

௰௩. * அப்போது கர்த்தருடைய தூதனாகிய ஆகாய் கர்த்தர் தூதனுப்பின வார்த்தையாகச் சனத்திற்கு நாம் உங்களோடேயிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான். * மலகி. ௨, ௭.

௰௪. கர்த்தர் செயலத்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவின் தலைவனுடைய ஆவியையும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனின் ஆவியையும் சனத்தில் மீதியான எல்லாருடைய ஆவியையும் எழுப்பினார், அவர்கள் வந்து தங்கள் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலே வேலை செய்தார்கள்.

௰௫. தரியூ இராசாவின் இரண்டாம் வருஷம் ஆறும்மாதம் இருபத்துநான்காந்தேதியிலே தானே.

## ௨. அதிகாரம்.

[(௧) முந்தின தேவாலயத்தைப் பார்க்கிலும் பிந்தின தேவாலயம் அதிக மகிமையுள்ளதாயிருக்குமென்று சனத்தை வேலைக்குத் தைரியப்படுத்தினது, (௰) தூய்மையுற்றதும், தூய்மையற்றதுமான பொருள்களின் அடையாளத்தினாலே தங்கள் பாவங்கள் வேலைக்குத் தடை செய்ததென்று காட்டினது, (௨௰) செருபாபேலுக்குண்டான பராபரனுடைய வாக்குத்தத்தம்.]

ஏழாம்மாதம் இருபத்தோராந்தேதியிலே ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக் கொண்டு கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று. அவர் சொன்னதாவது;

௨. நீ செயலத்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவின் தலைவனோடும், யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனோடும், சனத்தில் மீதியானவர்களோடுஞ் சொல்லவேண்டியதேதெனில்,

௩. தன் முந்தின மகிமையோடிருந்த இந்த வீட்டைக் கண்டவர்களில் உங்களுக்குள்ளே மீதியாயிருக்கிறவனார்! இப்போது இது எப்படியிருக்கிறதென்று காண்கிறீர்கள். * அதற்கு இது ஒன்றுமில்லையென்று உங்கள் கண்களுக்குக் காண்கிறதல்லவோ! * எஸ்ற. ௩, ௰௨.

௪. இப்போதும் செருபாபேலே, திடனாயிரு என்று கர்த்தர் சொல்லுகிறார். யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிர

தான ஆசாரியனே, திடனாயிரு. தேசத்தின் எல்லாச் சனமே, திடனாயிருந்து வேலையை நடத்துங்களென்று கர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், நாம் உங்களோடேயிருக்கிறோமென்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

௫. நீங்கள் எகிப்திலிருந்து புறப்படுகிறபோதுநாம் உங்களோடே உடன்படிக்கை பண்ணின * வார்த்தையோடுங் கூடத்தானே, நம்முடைய ஆவியும் உங்களுக்குள் நிலைகொண்டிருப்பார், பயப்படாதேயுங்கள். * ௨. மோசே. ௩௪, ௰. யோவா. ௧, ௧.

௬. ஏனெனில், சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; * இன்னமொருதரங் கொஞ்சப்பொழுதிலேதானே, நாம்வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், வெட்டாந்தரையையும் அசையப்பண்ணி, * எபிரே. ௰௨, ௨௬. ௨௭.

௭. * சகலசாதிகளாலும்இச்சிக்கப்பட்டவரணைக்குவரச்சகலசாதிகளையும் அசையப்பண்ணி, இந்தவீட்டை மகிமையாலே நிறையப்பண்ணுவோமென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார். * ஏசா. ௨, ௨. ௩. ௪௬, ௬. எரே. ௩, ௰௭. மலகி. ௩, ௧. லூக்கா. ௨, ௰.

௮. வெள்ளியுநம்முடையது பொன்னும நம்முடையது என்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

௯. இந்தப்பிந்தின வீட்டினமகிமைமுந்தினதிலுடையதைப் பார்க்கிலும், * பெரியதாயிருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார். இவ்விடத்திலே † சமாதானங் கட்டளையிடுவோமென்கிறதைச்சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார். * மலகி. ௩, ௧. சகரி. ௯, ௰. † யோவா. ௰௪, ௨௭.

௰. தரியுவின் இரண்டாம்வருஷம் ஒன்பதாமாதம் இருபத்துநான்காந்தேதியிலே ஆகாய என்றதீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று, அவர்சொன்னதாவது;

௰௧. ஒருத்தன் தன்வஸ்திரத்தின் தொங்கலிலே பரிசுத்தமாம்சத்தைச் சுமந்துதன் தொங்கலோடே அப்பத்தையாகிலும், ஒரு பதார்த்தத்தையாகிலும், திராட்சப்பழஇரசத்தையாகிலும், எண்ணெயையாகிலும், எந்தவகைப் போசனத்தையாகிலுந்தொட்டாலிது பரிசுத்தமாகுமோவென்று நீ ஆசாரியர்களைவேத நியாயத்தைக்கேளென்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறாரென்றார்.

௰௨. ஆசாரியர்கள்பிரதியுத்தாரமாகப்பரிசுத்தமாகாதென்றார்கள்.

௰௩. பிணத்தால் தீட்டுப்பட்டவன் இவைகளில் எதையாகிலுந்தொட்டால் இது தீட்டுப்படுமோவென்று ஆகாய பின்னையுங்கேட்டான். ஆசாரியர்கள் பிரதியுத்தாரமாக, * தீட்டுப்படுமென்றார்கள். * ௩. மோசே. ௨௨, ௪. ௰௧, ௨௪. ௪. மோசே. ௰௯, ௰௬-௨௨.

௰௪. அப்போது ஆகாய உத்தரவுகொடுத்துச்சொன்னதாவது; இப்படியேயிந்தச்சனமும், இப்படியேயிந்தச்சாதியும் நமக்குமுன்பாக விருக்கின்றதென்று கர்த்தர் சொல்லுகிறார். இப்படியே யவர்களுடைய கைகளின் கிரியையெல்லாமிருக்கின்றன, அவர்கள் அங்கேகொண்டுவந்து படைக்கிறது * தீட்டுப்பட்டிருக்கின்றது * தீத்து. ௧, ௰௫.

௰௫. இப்போதுங் கர்த்தருடைய தேவாலயத்தில் கல்லின்மேற்கல் ஏறத்தாயிருந்த இந்நாளுக்குமுந்தின காலத்திலே நடந்ததை உங்கள் மனதிலே சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௰௬. இவைகள் ஆகாததற்குமுன்னே * ஒருத்தன் இருபதுமரக்காலாகப் பார்த்த அம்பாரத்தண்டையிலே வந்தபோது பத்து இருந்தது, ஒருத்தன் ஆலையின்தொட்டியில் ஐம்பதுகுடம்மொள்ள ஆலையண்டையிலேவந்தபோதிருபதிருந்தது. * ௧, அதி. ௯.

௰௭. * கருக்காயினாலும், விஷப்பனியினாலும், கன்மழையினாலும் உங்களையுங்கள் கைகளின் வேலையிலெல்லாம் அடித்தோம், ஆனாலுமநீங்கள் நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௧, ௰௧. ஆமோஸ். ௪, ௯.

௰௮. இப்போதும இந்நாளுக்கு முந்தின காலத்தில் நடந்ததையுங்கள்மனதிலே சிந்தியுங்கள். ஒன்பதாமாதம் இருபத்துநான்காந்தேதியாகிய இந்நாளுக்கும், கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம்போடப்பட்ட அந்நாளுக்குஞ் சென்றகாலத்தில் நடந்ததையேயுங்கள்மனதிலே சிந்தியுங்கள்.

௰௯. களஞ்சியத்தில் இன்னம் விதைத்தானியமுண்டோ! திராட்சச்செடியும், அத்திமரமும், மாதுளஞ்செடியும், ஒலிவமரமுங்கூட்டக்கனிகொடுக்கவில்லையே, இந்நாள்முதற்கொண்டோ உங்களையாசீர்வதிப்போமென்றுசொல்லுகிறாரென்றான்.

௨௰. இருபத்துநான்காந்தேதியாகிய அந்நாளிலே கர்த்தருடைய வார்த்தையிரண்டாம்விசை ஆகாயக்குண்டாகி அவர்சொன்னதாவது;

௨௰௧. நீ யூதாவின்தலைவனாகியசேருபாபேலோடே சொல்லவேண்டியதேதெனில், * நாம்வானத்தையும், பூமியையும அசையப்பண்ணி, * ௬.வசனம்.

௨௰௨. இராச்சியங்களின்இராசாசனத்தைக் கவிழ்த்துச் சாதிகளுடைய இராச்சியங்களின் பலத்தையழித்துஇரதத்தையும், அதிலேறியிருக்கிறவர்களையுங் கவிழ்த்துப்போடுவோம், குதிரைகளோடேகூட அவைகளிலேறியிருக்கிறவர்களும்அவனவன்தன்சகோதரன் பட்டயத்தாலே விழுவார்கள்.

௨௩. சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; செயல்த்தியேலின் குமாரனாகிய செருபாபேலென்ற நம்முடைய ஊழியக்காரனே, உன்னை நாம் அந்நாளிலே சேர்த்துக்கொண்டு உன்னை முத்திரையாக வைப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார். ஏனென்றால், உன்னைத் தெரிந்துகொண்டோமென்று சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறோமென்கிறதைச் சொல்லென்றார்.

ஆகாயின் தீர்க்கதரிசனம் முடிந்தது முற்றும்.

---

# சகரியாவின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. முன். ௫௱௨௰.)

## க. அதிகாரம்.

[(௧) சகரியா குணப்படுதலுக்குத் தூண்டினது, (௭) குதிரைகளின் தரிசனை, (௰௨) சம்மனசின் வேண்டலினால் ஆறுதலுள்ள வாக்குத்தத்தங்கள் எருசலேமுக்குக் கொடுக்கப்பட்டது, (௰௮) நாலு கொம்புகளும், நாலு தச்சர்களும் தோற்றிய தரிசனை.]

தரியு அரசாண்ட இரண்டாம் வருஷம் எட்டாம் மாதத்திலே இத்தோவின் மகனான பெரோயாவினுடைய குமாரனாகிய * சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகி யவர் சொன்னதாவது;

௨. கர்த்தர் உங்கள் பிதாக்களின்மேற் கடுங்கோபமாயிருந்தார்.

௩. ஆகையால், நீ யவர்களோடே சொல்லவேண்டியதாவது; சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதென்றால், * நம்மண்டைக்குத் திரும்புங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், அப்போது உங்களண்டைக்குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார். * யாக். ௪, ௮.

௪. உங்கள் பொல்லாத வழிகளையும், உங்கள் பொல்லாத கிரியைகளையும் விட்டுத் திரும்புங்களென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று முந்தின தீர்க்கதரிசிகள் உங்கள் பிதாக்களைப் பார்த்துக் கூப்பிட்டாலுங் கேளாமலும், நம்மைக் கவனியாமலும் போன அவர்களைப்போல நீர்களாகவென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௫. உங்கள் பிதாக்களெங்கே! தீர்க்கதரிசிகளோவென்றால் என்றென்றைக்கும் உயிரோடிருப்பார்களோ!

௬. இராவிட்டாலும் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரருக்கு நாம் கட்டளையிட்ட நம்முடைய வார்த்தைகளும், நம்முடைய தீர்மானங்களும் உங்கள் பிதாக்களைப் பிடித்ததில்லையோ! எங்கள் வழிகளின்படியேயும், எங்கள் கிரியைகளின்படியேயுஞ் சேனைகளுடைய கர்த்தர் எங்களுக்குச் செய்ய நிர்ணயித்திருந்தாரோ அப்படியே யெங்களுக்குச் செய்தாரென்று அவர்கள் திரும்பவந்து சொன்னதில்லையோவென்று சொல்லென்றார்.

௭. தரியூ அரசாண்ட இரண்டாம் வருஷம் சேடாத்மாதமாகிய பதினோராம் மாதம் இருபத்துநான்காந்தேதியிலே கர்த்தருடைய வார்த்தை இத்தோவின் மகனான பெரோகியாவினுடைய குமாரன் சகரியாவென்ற தீர்க்கதரிசிக்குண்டாயிற்று. அவன் சொன்னதாவது;

௮. இதோ, இன்று இராத்திரி சிவப்புக் குதிரையின்மேல் ஏறியிருக்கிற ஒரு புருஷனைக் கண்டேன். அவர் பள்ளத்தாக்கிலிருக்கிற மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்துநின்றார். அவர் பிறகாலே சிவப்பும், மங்கின நிறமும், வெண்மையுமான குதிரைகளிருந்தன.

௯. என் ஆண்டவரே, இவர்களாரென்று கேட்டேன். அப்போது என்னோடே பேசுகிற தூதனானவர், இவர்களாரென்று நாமுனக்குக் காண்பிப்போமென்று சொன்னார்.

௰. அப்போது மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்துநிற்கிற அந்தப் புருஷன் பிரதியுத்தரமாக, இவர்கள் தேசத்தைச் சுற்றித்திரியக் கர்த்தர் அனுப்பினவர்களென்றார்.

௰௧. பிறபாடு இவர்கள் மிருதுச்செடிகளுக்குள்ளே தரித்துநின்ற கர்த்தருடைய தூதனாயிருக்கிறவருக்கு மறுமொழியாக நாங்கள் தேசத்தைச் சுற்றித்திரிந்தோம், இதோ, தேசமெல்லாந் தணிவும், அமருகையுமாயிருக்கின்றதென்றார்கள்.

௰௨. அப்போது கர்த்தருடைய தூதனானவர் மறுமொழியுரைத்துச் சொன்னதாவது; சேனைகளுடைய கர்த்தாவே, நீர் இந்த எழுபது வருஷமாய்ச் சினம் வைத்த எருசலேமின்மேலும், யூதாவினுடைய பட்டணங்களின்மேலும் எந்தமட்டும் இரங்காதிருப்பீர்.

௰௩. அப்போது கர்த்தர் என்னோடே பேசின தூதருக்கு நல்வார்த்தைகளையும், ஆறு

தலானவார்த்தைகளையும் பிரதியுத்தரமாகச் சொன்னார்.

௰௪. அப்போது என்னோடே பேசின தூதர் என்னோடே சொன்னது, நீ கூறவேண்டியதாவது; சேனைகளுடைய கர்த்தருரைக்கிறதேதென்றால், * நாம் எருசலேமுக்காகவும், சீயோனுக்காகவும் மகா வயிராக்கியமடைந்தோம். * அ, உ.

௰௫. சுகித்திருக்கிற சாதிகளுக்கு விரோதமாக நாம் மகா கடுமையுள்ள கோபமாயிருக்கிறோம் ஏனெனில், நாம் கொஞ்சக் கடுமையடைந்தபோது இவர்கள் கேட்டுக்கு உதவியாயிருந்தார்கள்.

௰௬. ஆகையால் * பின் உருக்கத்தோடே எருசலேமண்டைக்குத் திரும்பினோமென்று கர்த்தர் சொல்லுகிறார், நம்முடைய வீடு அதிலே கட்டப்படும், எருசலேமின் அளவு நூல் பிடிக்கப்படுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று கூறென்றார். * அ, ரு.

௰௭. இன்னம் நம்முடைய பட்டணங்கள் நன்மையினாலே பரம்பிப்போகும், இன்னங் கர்த்தர் சீயோனைத் தேற்றரவுபண்ணுவார், இன்னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவாரென்கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று பின்னையுங் கூறென்றார்.

௰௮. நான் என் கண்களையேறெடுக்கும்போது இதோ நாலுகொம்புகளைக் கண்டேன்.

௰௯. இவைகளென்னவென்று என்னோடே பேசின தூதனைக் கேட்டேன். அப்போது அவர் என்னுடனே இவைகள் யூதாவையும், இஸ்ரவேலையும், எருசலேமையுஞ் சிதற அடித்த கொம்புகளென்றார்.

௨௰. பிற்பாடு கர்த்தரெனக்கு நான்குகருமான்களைக் காண்பித்தார்.

௨௧. இவர்கள் என்னசெய்கிறதற்குவருகிறார்களென்றுகேட்டேன். அப்போது அவர் சொன்னதாவது; ஒருத்தனுந் தன் தலையையேறெடுக்கக் கூடாதபடியாய் அந்தக்கொம்புகள் யூதாவைச்சிதற அடித்ததே, அவைகளுக்குப்பயமுறுத்துகிறதற்கும், யூதாவின் தேசத்தைப்பாழ்க்கடிக்கக் கொம்பெடுத்த சாதிகளுடைய கொம்புகளைவிழத்தள்ளுகிறதற்கும் இவர்கள் வந்தார்களென்றார்.

## ௨. அதிகாரம்.

[(க) பராபரன் எருசலேமைக்காப்பாற்றி அதையளக்க ஒருவனை அனுப்பினது, (௬) சீயோனின் மீட்பு, (௰) தேவசமுகங் கிடைக்குமென்கிறவாக்குத்தத்தம்.]

நான் என் கண்களை யேறெடுத்தபோது இதோ ஒரு புருஷனைக் கண்டேன், அவர் கையிலே அளவுநூலிருந்தது.

௨. நீர் எவ்விடத்திற்குப்போகிறீரென்று கேட்டேன், அவர் என்னுடனே எருசலேமின் அகலம் எவ்வளவென்றும், அதின் நீளம் எவ்வளவென்றுந் தெரிய அதை யளக்கிறதற்குப்போகிறேனென்றார்.

௩. அப்போது இதோ, என்னோடே பேசின தூதனானவர் புறப்பட்டுப்போனார். வேறொருதூதன் அவருக்கெதிராகப் புறப்பட்டுவந்தான்.

௪. இவரோடே யவர்சொன்னதாவது; நீ யோடி இந்தவாலிபனோடே சொல்லவேண்டியதேதெனில் எருசலேம் தன் நடுவிற்கூடும் மனுஷரின் திரளினாலும், மிருகஜீவன்களின் திரளினாலும் வெளிப்பாளயங்களாயக் குடியேறும்.

௫ * நாம், அதற்குச்சுற்றிலும் அக்கினி மதிலாயிருந்து அதின் நடுவில் மகிமையுண்டாகவிருப்போமென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௬, அ.

௬. ஓய், நீங்கள்எழும்பிவடதேசத்திலிருந்தோடிவாருங்களென்று கர்த்தர்சொல்லுகிறார். ஏனெனில், கொஞ்சங்குறைய ஆகாயத்து நான்கு காற்றுத் திசைகளிலும் உங்களை நாம் சிதறப்பண்ணினோமே.

௭. * ஓய், பாபேல்குமாரத்தியண்டையிலே குடியிருக்கிற சீயோனே, தப்பித்துக்கொள். * ஏசாயா. ௪அ, ௨௰.

௮. ஏனெனிற பிற்பாடு மகிமையுண்டாகுமென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார், உங்களைக்கொள்ளையிட்டசாதிகளண்டைக்கு நம்மையனுப்பினார். ஏனென்றால், * உங்களைத்தொடுகிறவன் அவருடைய கண்விழியைத் தொடுகிறான். * சங்கீ. ௰௭, அ.

௯. அதேதெனில், இதோ நாம் நமது கையை யவர்களுக்குவிரோதமாக ஆட்டுகிறோம், அதனால் அவர்கள் தங்களைச்சேவித்தவர்களுக்குக் கொள்ளையாவார்கள். அப்போது சேனைகளின் கர்த்தர் நம்மையனுப்பினாரென்றறிவீர்கள்.

௰. சீயோன் குமாரத்தியே, கெம்பீரித்துச் சந்தோஷமாயிரு. ஏனெனில், இதோ நாம் வந்து உன் நடுவில் வாசம்பண்ணுவோமென்று கர்த்தர்சொல்லுகிறார்.

௰௧. அந்நாளிலே * அநேகஞ்சாதிகள் கர்த்தரைச்சேர்ந்து நமக்குச் சனமாவார்கள், நாம் உன் நடுவிலே வாசமாயிருப்போம், சேனைகளின்கர்த்தர் நம்மையுன்னண்டைக்கனுப்பினாரென்று அப்போது அறிவாய். * க. மோசே. ௪௬, ௰.

௰௨. கர்த்தர் பரிசுத்ததேசத்திலே யூதாவைத் தமது பங்காகச் சுதந்தரித்து * இன்னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவார். * க, ௰௭.

௰௩. எல்லா மாம்சமே, கர்த்தருக்குமுன்பாக மவுனமாயிரு. ஏனெனில், தமது பரிசுத்த வாசஸ்தலத்திலிருந்து விழிக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩. அதிகாரம்.

[(௧) யோசுவாவின் அடையாளத்தினாலே சபை திரும்பவுண்டாகுமென்பதும், (௮) கிளையாகிய கிறிஸ்துவாகுத்தத்தம்பண்ணப்பட்டதும.]

அவர்பிரதான ஆசாரியனாகிய யோசுவாவை யெனக்குக் காண்பித்தார். அவன கர்த்தருடைய தூதனுக்குமுன்பாக நின்றான, சாத்தான அவனுக்குவிரோதிக்கும்படி அவன வலதுபக்கத்திலேநின்றது.

௨. அப்பொது கர்த்தர் சாத்தானோடே சொன்னதாவது; * கர்த்தர் உன்னை உதமபுவாராக, சாத்தானே எருசலேமைத்தெரிந்துகொண்ட கர்த்தர் உன்னை உதமபுவாராக, இவன அக்கினியிலிருந்து தப்புவிக்கப்பட்ட கொள்ளியல்லவோவென்றார். * யூதா.௯.

௩. யோசுவாவோவெனில அழுக்கு வஸ்திரங்களைத் தரித்தவனாயத் தூதனுக்குமுன்பாக நின்றிருந்தான.

௪. அவர் மறுமொழிகொடுத்து இவனிலிருக்கிற அழுக்குவஸ்திரங்களைக்களைந்துபோடுங்களென்று தமக்குமுன்பாக நிற்கிறவர்களோடேசொல்லி இவனோடே சொன்னதாவது; பார், நாம உன அக்கிரமத்தையுன்னிலிருந்து நீங்கிப்போகப்பண்ணி, * உனக்கு புதுவஸ்திரங்களைத் தரிப்பித்தோமென்றார். * ஏசாயா. ௬௧, ௰.

௫. அவன சிரசின்மேற சுத்தமான குல்லாவை வைப்பார்களாகவென்றேன. அப்பொது சுத்தமான குல்லாவை யவன சிரசின்மேல வைத்து அவனுக்கு வஸ்திரங்களைத்தரிப்பித்தார்கள, கர்த்தருடைய தூதனவர் அங்கே நின்றார்.

௬. கர்த்தருடைய தூதனானவர் யோசுவாவுக்குச சாட்சியாக அறிவித்துச்சொன்னதாவது;

௭. சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில, நீ நமது வழிகளில நடந்து நமது காவலைக்காத்தால நீ நமமுடைய வீட்டின நியாயங்களையும விசாரிப்பாய, நமமுடைய முற்றங்களையுங காவற்காப்பாய, * இங்கே நிற்கிறவர்களுக்குள்ளே நடமாடத்தலை நாம உனக்குக்கட்டளையிடுவோம. * சங்கீ. ௧௧, ௰௧.

௮. இப்பொதும பிரதான ஆசாரியனாகிய யோசுவாவே, நீ கேள். உனக்குமுன்பாக உட்காந்திருக்கிற உனதோழருங்கூடக் கேட்கக்கடவார்கள. ஏனெனில, இவர்கள அற்புதமனுஷர், என்னவென்றால, இதோ * கிளையென்னப்பட்டவராகிய நமமுடைய ஊழியக்காரனை நாமவரப்பண்ணுகிறோம. * ஏசாயா. ௪, ௨. ௰, ௧.

௯. அதேதென்றால, இதோ, நாம யோசுவாவுக்குமுன்பாகவைத்த * கல் அந்த ஒரே கல்லின்மேல † ஏழுகண்களுமவைக்கப்பட்டிருக்கின்றன, இதோ, நாம அதினசித்திர வேலையைத்தீர்த்து இந்தத்தேசத்தின அக்கிரமத்தை ‡ ஒரேநாளிலே நீக்கிப்போடுவோமென்று சேனைகளின்கர்த்தர்சொல்லுகிறார். * ஏசா. ௨௮, ௰௬. மத். ௨௧, ௪௨. † ௪, ௰. ‡ எபிரே. ௯, ௰௨.

௰. அந்நாளிலே நீங்கள ஒருத்தனையொருத்தர் * திராட்சச்செடியின்கீழும, அத்திமரத்தின்கீழும வரவழைப்பீர்களென்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறாரென்றார். * மீகா. ௪, ௪.

## ௪. அதிகாரம்.

[(௧) பொன் விளக்குத்தண்டினாலே சேருபாபேலின அஸ்திபாரந்திடப்படுவதையும, (௰௧) இரண்டு ஒலிவமரங்களாலே அபிஷேகமபண்ணப்பட்டஇருவரையுங்காட்டினது.]

என்னோடேபேசினதூதர் திரும்பிவந்து நித்திரைபண்ணுகிற ஒருத்தன எழுப்பப்படுகிறதுபோலென்னையெழுப்பி,

௨. என்னுடனே நீ காண்கிறதென்னவென்றார். நானசொன்னதாவது; இதோ, முழுதும்பொன்னான தண்டாவிளக்கைக்காண்கிறேன, அதினசிகரத்தினமேல அதினகிண்ணியும, அதினமேலஅதின ஏழுதீபங்களும், அதினுடைய சிகரத்தினமேலிருக்கிறதீபங்களுக்குப்போகிறஎவ்வேழு குழாய்களுமிருக்கின்றன.

௩. அதற்குமேலாக இரண்டு ஒலிவமரங்கள ஒன்றுகிண்ணிக்குவலது புறமாகவும, ஒன்றுஅதற்கிடதுபுறமாகவுமிருக்கின்றதென்றேன.

௪. நான என்னோடே பேசின தூதரோடேபேசிக்கொண்டு ஆண்டவரே, இதேதென்று கேட்டேன.

௫ அப்பொது என்னோடே பேசினதூதர் மறுமொழியாக என்னோடே இதேதென்றுனக்குத்தெரியாதோவென்றார், ஆண்டவரே எனக்குத்தெரியாதென்றேன.

௬. அப்பொது அவர் எனக்குப்பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது; சேருபாபேலுக்குச்சொல்லப்படுகிற கர்த்தருடையவார்த்தையேதென்றால, பலத்தினாலுமல்ல, வல்லமையினாலுமல்ல, நமமுடைய ஆவியினாலே ஆகுமென்றுசேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார்.

௭. சேருபாபேலுக்கு முன்பாக நிற்கிற பெரியபருவதமே! நீ எம்மாத்திரம்! நீ யொத்த தரையாவாய, பிரதானமானகல்லை அவனபிறப்பிப்பான, அதற்குக்கிருபையுண்டாக, கிருபையுண்டாகவென்று ஆர்ப்பரிப்பார்களென்றார்.

௮. பின்னையும கர்த்தருடைய வார்த்தை யெனக்குண்டாகி அவர்சொன்னதாவது;

கூ. செருபாபேலின் கைகள் இந்தவீட்டுக்கு அஸ்திபாரம்போட்டன, அவன் கைகள் அதை முடித்துத்தீர்க்கிறவைகளுமாயிருக்கும் அப்படியே சேனைகளுடைய கர்த்தர் நம்மை உங்களண்டைக்கனுப்பினாரென்றறிவாய்.

ய. ஏனெனில் கொஞ்சமான துவக்கங்களின் நாளை ஆர் அசட்டைபண்ணலாம்! பூமியெங்குஞ் சுற்றிப்பார்க்கிறவைகளாகிய கர்த்தருடைய இந்த * ஏழுகண்களுஞ் செருபாபேலின் கையிலிருக்கிற வெள்ளியத்தூக்கைச் சந்தோஷமாய்ப் பார்க்கின்றனவென்றார். * ரு, கூ. அறி. ரு, சா.

யக. நான் அப்புறம்பேசிக்கொண்டு தண்டாவிளக்குக்கு வலதுபுறமாகவும், அதற் கிடதுபுறமாகவுமிருக்கிற இந்த இரண்டு ஒலிவமரங்கள் ஏதென்று அவரைக்கேட்டேன்.

யஉ. மறுபடியும் நான் அவரைக்கேட்டுச் சொன்னதாவது; பொன்னுள இரண்டுகுழாய்களண்டையிலே தொங்கிப் பொன்னிறமான எண்ணெயைத் தங்களிலிருந்து இறங்கப்பண்ணுகிறவைகளாகிய ஒலிவமரங்களின் இரண்டுகுலைகள் ஏதென்றுகேட்டேன்.

யரு. அவரென்னோடே, இவைகளேதென்றுனக்குத்தெரியாதோவென்றார். ஆண்டவரே, எனக்குத்தெரியாதென்றேன்.

யச. அப்போது அவர் சொன்னதாவது; இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவரண்டையிலே நிற்கிற * இரண்டு எண்ணெயாள்களென்றார். * அறி. யக, ரு. ச.

## ரு. அதிகாரம்.

[(க) பறக்கிற சுருளினாலே திருடர்மேலும், ஆணையிடுகிறவர்கள்மேலும் வருஞ்சாபத்தையும், (ரு) மரக்காலிலேயுட்கார்ந்த ஒருஸ்திரியினாலே பாபேலின் கடைசிவேதனையையுங்காட்டினது.]

நான் திரும்பியென்கண்களை யேறெடுக்கையில் இதோ பறக்கிற ஒருபுஸ்தகச்சுருளைக்கண்டேன்.

உ. என்னுடனே, நீ காண்கிறதென்னவென்றார். பறக்கிற ஒருபுஸ்தகச்சுருளை நான் காண்கிறேன், அதின் நீளம் இருபதுமுழமும், அதின் அகலம் பத்துமுழமுமானதென்றேன்.

ரு. அப்போது அவர் என்னோடேசொன்னதாவது; இத்தேசத்தின்மீதெங்கும் புறப்பட்டுப்போகிறசாபம். ஏனெனில், எந்தத் திருடனும் அதிலொருபுறத்திலிருக்கிறதின்படியேகுற்றஞ்சுமக்காதேபோகிறான், ஆணையிடுகிற எவனும் அதிலமறுபுறத்திலிருக்கிறதின்படியே குற்றஞ்சுமக்காதேபோகிறான்.

ச. அது திருடன்வீட்டிலும், நமதுநாமத்தைக்கொண்டு பொய்யாணையிடுகிறவன்வீட்டிலும்வந்து, அவன்வீட்டின் நடுவிலேதங்கி அதையதின்மரங்களோடும், அதின் கற்களோடுங்கூட நிர்மூலமாக்குகிறதற்காக அதைப் புறப்படப்பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர்சொல்லுகிறாரென்றார்.

ரு. பிறகு என்னோடேபேசின தூதர்புறப்பட்டு என்னோடேசொன்னதாவது; நீ யுன் கண்களையேறெடுத்துப் புறப்படுகிறதாகிய அது என்னவென்று பாரென்றார்.

சா. அது என்னவென்றுகேட்டேன். அப்போது அவர் அதுபுறப்படுகிறதாகியவொரு மரக்காலென்றார். அப்புறம் அவர்சொன்னதாவது; பூமியெங்கும் அதுதான் அவர்களுடைய கண்ணோக்கமென்றார்.

எ. இதோ, ஒருதாலந்து நிறையான ஈயமூடிதூக்கிவரப்பட்டது மரக்காலின் நடுவிலேயொவென்றால், உட்கார்ந்த ஒருஸ்திரியிருந்தாள்.

அ. அப்போது அவர், இவள் * அக்கிரமமானவளென்றுசொல்லியவளை மரக்காலுக்குள்ளேதள்ளி, ஈயக்கட்டியை யதின்வாயிலேபோட்டார். * தெச. உ, எ. அறிவி. யஎ, ரு.

கூ. நான் என்கண்களையேறெடுக்கிறபோது இதோ, புறப்படுகிற இரண்டுஸ்திரிகளைக் கண்டேன், அவர்கள் செட்டைகளிற்காற்றிருந்தது. அதேதெனில், அவர்களுக்குச் செங்கால்நாரையின் செட்டைகளுக்கொத்த செட்டைகளிருந்தன, இவர்கள் மரக்காலைப் பூமிக்கும், வானத்திற்கும் நடுவாயத் தூக்கிப்போனார்கள்.

ய. நான் என்னோடேபேசின தூதனையிவர்கள் மரக்காலையெங்கேகொண்டுபோகிறார்களென்றுகேட்டேன்.

யக. அப்போது அவர் என்னோடேசொன்னதாவது; * சினெயார்தேசத்திலேயதற்கொரு வீட்டைக்கட்டும்படிக்கு அதைக்கொண்டுபோகிறார்கள், அங்கேயது நிலைநிறுத்தப்பட்டுத்தன் நிலையிலேவைக்கப்படுமென்றார். * க. மோசே. யக, உக.

## சா. அதிகாரம்.

[(க) நாலு இரதங்களின்தரிசனை, (கூ) யோசுவாவின் கிரீடங்களினாலேகிளையாகிய கிறிஸ்துவின் ஆலயத்தையும், இராச்சியத்தையுங்காட்டினது.]

நான் திரும்பி என்கண்களையேறெடுக்கையில் இதோ, இரண்டுபருவதங்களின்நடுவாகப்புறப்படுகிறநாலுஇரதங்களைக்கண்டேன், அந்தப்பருவதங்கள் வெண்கலப்பருவதங்களாயிருந்தன,

உ. முதலாம் இரதத்திற் சிவப்புக்குதிரைகளும், இரண்டாம் இரதத்திற் கறுப்புக்குதிரைகளும்,

ரு. மூன்றும் இரதத்தில் வெள்ளைக்குதிரை

களும், நான்காம் இரதத்திலே புள்ளி புள்ளியான செங்குதிரைகளும் பூட்டியிருந்தன.

௪. நான் என்னோடே பேசின தூதனை, என் ஆண்டவரே, இவைகள் என்னவென்று கேட்டேன்.

௫. அப்பொழுது அந்தத் தூதன் எனக்குப் பிரதியுத்தரமாக * இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கு முன்பாக நின்று புறப்படுகிற வானத்தினுடைய நான்கு காற்றுகளென்றார். * சங். ௱௪, ௪.

௬. ஒன்றிலே பூட்டப்பட்டிருந்த கறுப்புக் குதிரைகள் வடதேசத்திற்குப் புறப்பட்டுப் போயின, வெண்மையானவைகள் அவைகளின் பிறகாலே புறப்பட்டுப் போயின. புள்ளி புள்ளியானவைகள் தென்தேசத்திற்குப் புறப்பட்டுப் போயின.

௭ சிவப்புக் குதிரைகளோவென்றால் பூமியிற் சுற்றித்திரியப் பார்க்கும்படிக்குப் புறப்பட்டன. போய்ப் பூமியிற் சுற்றித்திரியுங்களென்றார், அப்படியே பூமியிற் சுற்றித்திரிந்தன.

௮. அவர் என்னைக் கூப்பிட்டு, பார். வடதேசத்திற்குப் புறப்பட்டுப் போனவைகள் நம்முடைய கோபத்தை வடதேசத்திலே யிறங்கப்பண்ணினவென்று என்னோடே சொன்னார்.

௯. கர்த்தருடைய வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௰. சிறையிருப்பின் மனுஷராகிய எல்தாயும், தொபியாவும், எதாயாவும், பாபேலிலிருந்து வந்திருக்கும் அந்நாளிலே நீ போய்ச் செப்பனியாவின் குமாரனாகிய யோசியாவின் வீட்டுக்குட் பிரவேசித்து,

௰௧. அங்கே அவர்கள் கையிலே வெள்ளியையும், பொன்னையும் வாங்கிக் கிரீடங்களைச் செய்து, யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிரதான ஆசாரியனுடைய சிரசிலே வைத்து,

௰௨. அவனோடே சொல்லவேண்டியதாவது; சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ ஒரு புருஷன் அவருடைய * நாமம் கிளையென்னப்படுகின்றது. அவர் தம்முடைய தாழ்விடத்திலிருந்து முளைத்தெழும்பி † கர்த்தருடைய தேவாலயத்தைக் கட்டுவார். * ௩, ௮. ஏசாயா. ௰௧, ௧. † மத்தே. ௰௬, ௰௮. ௨. கொரி. ௬, ௰௬.

௰௩. அவர்தான் கர்த்தருடைய தேவாலயத்தைக் கட்டுவார். அவர் மகத்துவந் தரித்துக்கொண்டு, * தம்முடைய இராசாசனத்தின் மேல் உட்கார்ந்து ஆண்டு, தம்முடைய இராசாசனத்தின்மேல் ஆசாரியராயிருப்பார், இவருக்குள்ளே சமாதானத்தின் ஆலோசனையிருக்கும். * சங். ௱௰, ௧. ௪.

௰௪ இந்தக் கிரீடங்களோவென்றால் கர்த்தருடைய தேவாலயத்திலே ஏலேமுக்கும், தொபியாவுக்கும், எதாயாவுக்கும், செப்பனியாவின் குமாரனாகிய ஏனுக்கும் நினைப்பூட்டுதலுக்கென்று இருப்பதாக.

௰௫. தூரத்தார் வந்து கர்த்தருடைய தேவாலயத்திலே கூடக்கட்டுவார்கள். அப்பொழுது சேனைகளின் கர்த்தர் என்னை யுங்களண்டைக்கனுப்பினாரென்றறிவீர்கள். நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே கேட்டீர்களானால் இப்படியாகுமென்று சொல்லென்றார்.

## ௭. அதிகாரம்.

[(௧) சிறையிருப்பிலிருப்பவர்கள் உபவாசத்தைக் குறித்து விசாரித்தது. (௨) அவர்களின் உபவாசத்தைச் சகரியா கண்டித்தது. (௩) அவர்கள் சிறையிருப்புக்குக் காரணம் பாவமென்பது.]

தரியு இராசா அரசாண்ட நான்காம் வருஷங் கிஸ்லேயென்னப்பட்ட ஒன்பதாமாதம் நான்காந் தேதியிலே சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாயிற்று.

௨ ஏனெனில், கர்த்தருடைய சமுகத்தில் விண்ணப்பம்பண்ணவும்,

௩. நாங்கள் இத்தனை வருஷம் வரையிலே செய்ததுபோலே ஐந்தாமாதத்திலே அழுது தவம்பண்ணவேண்டுமோவென்று சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலிருந்த ஆசாரியர்களையும், தீர்க்கதரிசிகளையுங் கேட்கவுஞ் சரேத்சேரும், ரேகெமெலேக்கும், அவனுடைய மனுஷரும் பராபரனுடைய வீட்டுக்கனுப்பப்பட்டார்கள்.

௪. அப்பொழுது சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தையெனக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௫. நீ தேசத்தின் எல்லாச் சனத்தோடும், ஆசாரியர்களோடுஞ் சொல்லவேண்டியதேதெனில், நீங்களிந்த எழுபது வருஷமாக * ஐந்தாமாதத்திலும், ஏழாமாதத்திலும், † உபவாசம்பண்ணிப் புலம்பினபோது நீங்கள் நமக்குத்தானே யுபவாசம்பண்ணினீர்களோ. * ௮, ௰௯. ஏசாயா. ௫௮, ௮.

௬. நீங்கள் புசிக்கிறபோதும், குடிக்கிறபோதும் நீங்களாய்ப் புசிக்கிறீர்கள். நீங்களாய்க் குடிக்கிறீர்களல்லவோ,

௭. எருசலேமும், அதைச் சுற்றிலும் அதினுடைய பட்டணங்களும் குடியேறியிருந்து சுகமாய் வாழ்கிறதும், தெற்குச் சீமையும், பள்ளத்தாக்குச் சீமையுங் குடியேறியிருக்கிறதுமான முற்காலத்திலிருந்த தீர்க்கதரிசிகளைக் கொண்டு கர்த்தர் பிரசங்கிப்பித்த வார்த்தைகள் இவைகள்தானல்லவோவென்று சொல்லென்றார்,

௮. கர்த்தருடைய வார்த்தை சகரியாவுக்குண்டாகி அவர் சொன்னதாவது;

௯. சேனைகளுடைய கர்த்தர் உரைத்ததே

தெனில, * நீஙகள உணமையாய நியாயந தீர்த்து, அவனவன தனசகோதரனுககுதத யவும, இரககமுஞசெயது, * ௮, ௰௬.

௰. * விதவையையும, திககறறவனையும, பரதேசியையும, சிறுமையானவனையும ஒடுககாமலும, ஒருததனும தனசகோதரனுக்கு விரோதமாய உஙகளிருதயததிற பொலலாபபை நினையாமலுமிருஙகளெனறார். * ௨. மோ. ௨௨, ௨௧-௨௪. ௩. மோ. ௰௯, ௩௩. ௫. மோ. ௨௪, ௰௭.

௰௧. அவர்களோவெனிற கவனிககமனதிலலாமல, அடஙகாத தோளைககாட்டிக கேளாதபடிககுத தஙகளசெவிகளை யழுததபபடுததி,

௰௨. *வேதத்தையும, சேனைகளுடையகர்த்தர் முநதின தீர்ககதரிசிகளைககொண்டு அனுபபின தமமுடைய ஆவியோடே கூடிய வார்த்தைகளையுங கேளாதபடிககு வயிரமாககினார்கள ஆகையால, மகாகடுஙகோபஞ சேனைகளுடைய கர்ததரிடததிலிருநதுணடாயிற்று. * ஏசாயா, ௪௮. ௪.

௰௩. ஆன்கொணடு நாம கூபபிட்டபோது, அவர்களெபபடிக்கேளாதேபோனார்களோ அபபடியவர்கள கூபபிட்டபோது நாமுஙகேளாதேபோய,

௰௪. அவர்களை யவர்கள அறியாத புறசசாதிகளுககுளளே பறககடிததோம. அபபோது அவர்கள பினவைத்துப்போனதேசம போககுவரததிலலாமற பாழாயிறறு. அபபடியே இசசிககபபடததகக தேசததைப பாழாயபபோகப பணணினார்களெனறார்.

## ௮. அதிகாரம்.

[(௧) எருசலேமுதது தின சீருககுக்கொணடு வருதல, (௯) தஙகளமேலிருககும பராபரனுடைய தயையினாலே அவர்கள தேவாலயததைக கட்டுதறகுத தைரியபபடுததபபட்டது, (௰௬) நற்கிரியைகள அவர்களிடததிலுணடாகவேணடுமெனபது. (௰௮) சநதோஷமும, சிறை நீஙகலும வாககுத்தத்தமபணணப்பட்டது.]

சேனைகளுடைய கர்த்தரினவார்த்தையுணடாகி அவர்சொனனதாவது;

௨. நாம சீயோனுக்காக மகா எரிசசலான வயிராககியம அடைநதோம. அதறகாக மகா உககிரமான வயிராககியம நமககுணடாயிறறெனறு சேனைகளின கர்ததர் உரைககிறார்.

௩. * நாம சீயோனணடைககுததிருமபி எருசலேமின நடுவிலே வாசமபணணுவோம. எருசலெம உணமையினபட்டணமெனறும், சேனைகளுடையகர்ததரின பருவதம பரிசுததபருவதமெனறும் அழைககபபடுமெனறு கர்த்தர்சொலலுகிறார். * ௧, ௰௬. ௨. ௰௨.

௪. இனனம எருசலேமினவீதிகளில முதிர்நதவயதினாலே தம்தம் தடியைத தஙகள கைகளிறபிடிததிருககிற கிழவரும, கிழவிகளுங குடியிருபபார்கள.

௫. இனனம பட்டணததின தெருககளிலே விளையாடுகிற ஆண்பிளளைகளாலும, பெணபிளளைகளாலும அதினவீதிகள நிறைநதிருககுமெனறு, சேனைகளுடைய கர்ததர் சொலலுகிறார்.

௬. சேனைகளுடைய கர்த்தர்சொலலுகிற தேதெனில, அது இநதசசனததில மீதியானவர்களின பார்வைககு இநநாள்களில ஆசசரியமாயிருநதால * நமது பார்வைககும ஆசசரியமாயிருககுமோவெனறு. சேனைகளுடையகர்ததர்சொலலுகிறார். * எரோமியா. ௩௩, ௨. லூககா. ௧, ௩௭.

௭. இதோ, சூரியனுதிககிறதிசையானதேசததிலும, அஸதமிககிறதிசையானதேசததிலுமிருககிற நமதுசனததை நாம இரட்சிதது,

௮. அவர்கள எருசலேமின நடுவிலே குடியிருகக அவர்களை அழைதது வருவோம. உணமையும, நீதியுமாய அவர்கள நமககுச சனமுமாயிருபபார்கள. நாம அவர்களுககுப பராபரனுமாயிருபபோமெனறுசேனைகளுடைய கர்ததர்சொலலுகிறார். * எரோமியா. ௨௪, ௭. ௩௧-௩௩.

௯. சேனைகளுடைய கர்த்தரினவீடாகிய தேவாலயஙகட்டபபடுமபடிககு அதின அஸதிபாரஙகள போடபபட்ட நாளமுதறகொணடிருககிற தீர்ககதரிசிகளின வாயினாலே யிநதவார்ததைகளை முனனாளகளிறகேட்டுவருகிறவர்களே, உஙகளகைகள திடபபடககடவதெனறு சேனைகளுடைய கர்ததர்சொலலுகிறார்.

௰. ஏனெனில,* இநநாளகளுககு முனனே மனுஷனுடைய வேலையாற பலனுமிலலை. மிருகசீவனுடைய வேலையாற பலனுமிலலை போகிறவனுககும, வருகிறவனுககும, நெருககிடையினாலே சமாதானமுமிலலை. எலலா மனுஷனையும ஒருவர்ககொருவர் விரோதமாயபபோகவிட்டோம. * ஆகா. ௧, ௯. ௰. ௨, ௰௬. ௰௭.

௰௧ இபபோதோவெனில, இநதசசனததில மீதியானவர்களுககு நாம முநதினநாளகளில இருநதுபோல இரோமெனறு சேனைகளுடைய கர்ததர்சொலலுகிறார்.

௰௨. அதேதெனறால விதைபபுசசமாதானமுளளதாயிருககும. திராட்சசசெடி தன கனியைததரும, பூமிதனபலனைததரும, வானந தனபனியைததரும, இநதசசனததில மீதியானவர்கள இதையெலலாஞசுதநதரிக்கக்கடவர்களாயிருபபோம.

௰௩. சமபவிபபதேதெனில, யூதாவீட்டாரும, இஸரவேலவீட்டாருமாகிய நீஙகள புறசசாதிகளுககுளளே சாபமாயிருநதுபோ

லே நாம் உங்களை நீங்கள் ஆசீர்வாதமாயிருக்கும்படிக்கு இரட்சிப்போம். * பயப்படாதேயுங்கள் உங்கள் கைகள் திடப்படக்கடவது. * ஏசாயா. ௩௫, ௩.

௰௪. ஏனெனில், சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது; உங்கள் பிதாக்கள் நமக்குக்கங்கோபம் உண்டாக்குகையில், நாம் உங்களுக்குப்பொல்லாப்புச்செய்ய நினைத்து மனஸ்தாபப்படாமலும்போனதுபோலே,

௰௫. எருசலேமுக்கும், யூதாவுக்கும் நன்மைசெய்ய இந்தநாட்களில் திரும்பநினைத்தோம். பயப்படாதேயுங்கள்.

௰௬. நீங்கள் செய்யவேண்டிய காரியங்களேதென்றால், அவனவன் தனக்கடுத்தவனோடே * உண்மையைப்பேசுங்கள். உங்கள் வாசல்களில் † உண்மையுமாய்ச் சமாதானநியாயமுமாய் நியாயந்தீருங்கள். * எபேசி. ௪, ௨௫. † ௭, ௯.

௰௭. * ஒருத்தருந் தனக்கடுத்தவனுக்கு விரோதமாய் உங்களிருதயத்திலே பொல்லாப்பை நினையாமலும், பொய்யாணையைச் சிநேகியாமலுமிருங்கள். ஏனெனில், இவைகளெல்லாம் நாம் பகைக்கிற காரியங்களென்று கர்த்தர்சொல்லுகிறார். * ௭, ௰.

௰௮. சேனைகளுடைய கர்த்தரின்வார்த்தையெனக்குண்டாகி, அவர் சொன்னதாவது;

௰௯. * நாலாமாதத்தின் உபவாசமும், ஐந்தாமாதத்தின் உபவாசமும், ஏழாமாதத்தின் உபவாசமும், பத்தாமாதத்தின் உபவாசமும், யூதாவீட்டாருக்கு மகிழ்ச்சியாகவும், சந்தோஷமாகவும், நல்ல பண்டிகைகளாகவுமாறிப்போகும். ஆகையால், உண்மையையும், சமாதானத்தையுஞ் சிநேகியுங்களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். * ௭, ௫.

௨௰. இன்னுஞ் சனசதளங்களும், அநேகம் பட்டணங்களின்குடிகளும் வருவதுண்டென்று, சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௨௧. * நாம்கர்த்தருடையசமுகத்திலே விண்ணப்பம்பண்ணவும், சேனைகளின் கர்த்தரைத்தேடவும், போவோம்வாருங்கள். நாங்களும்போவோமென்று ஒரு பட்டணத்தின் குடிகள் மறு பட்டணத்தின்குடிகளோடே போய்ச் சொல்லுவார்கள். * ஏசா. ௨, ௩.

௨௨. அநேக சனசதளங்களும், பலத்த சாதிகளும் எருசலேமிலே சேனைகளுடைய கர்த்தரைத்தேடவும், கர்த்தருடைய சமுகத்திலே விண்ணப்பம்பண்ணவும் வருவார்கள்.

௨௩. அந்நாட்களிலே புறசாதிகளான சகலவித பாஷைக்காரரிலும் பத்துமனுஷர் ஒரு யூத மனுஷனுடைய வஸ்திரத்தொங்கலைப் பிடித்து, உங்களோடேகூடப்போவோம். ஏனென்றால், பராபரன் உங்களோடேயிருக்கிறாரென்கிறதைக்கேட்டோமென்றுசொல்லி, அவனைப் பிடிப்பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

## ௯. அதிகாரம்.

[(௧) பராபரன் தமது சபையைக் காத்தது. (௯) கிறிஸ்து வருவதற்காகவும், அவருடைய சமாதானமுள்ள இராச்சியத்திற்காகவுங் களிகூரும்படிக்குச் சீயோன் தூண்டிவிடப்பட்டது. (௰௨) பராபரனாற்செய்த்துக்கருங் காப்புக்குமுண்டாகிய வாக்குத்தத்தம்.]

ஆதிறாக் தேசத்திற்கு விரோதமானதும், தமஸ்குவிலே தங்குவதுமான கர்த்தருடையவார்த்தையின் சுமையுண்டு. ஏனென்றால், மனுஷரின்மேலும், இஸ்ரவேலுடைய சகல கோத்திரங்களின்மேலும் கர்த்தருக்குக் கண்ணோக்கமுண்டாயிருந்தது.

௨. ஆமாத்தும், மிகவும் ஞானமுள்ள தீருவும், சீதோனுங்கூட அதின் எல்லைகளாயிருக்கும்.

௩. தீரு தனக்கு அரணைக்கட்டி மண்ணத்தனை வெள்ளியையும், வீதிகளின்சேற்றத்தனை பொன்னையுஞ் சேர்த்துவைத்தது.

௪. இதோ, ஆண்டவர் அதை ஏழையாக்கிச் சமுத்திரத்திலே அதின் பலத்தை முறித்துப்போடுவார். அதுவோவென்றால், அக்கினிக்கிரையாகும்.

௫. அஸ்கலோனும், காத்சாவும், எக்கிரோனுங்கூட அதைக்கண்டு பயப்பட்டு மிகவுந் திகிலடையும். ஏனெனில், அவைகளின் நம்பிக்கை வெட்கப்பட்டுப்போகும். காத்சாவிலே இராசா அழிந்துபோவான். அஸ்கலோன் குடியற்றிருக்கும்.

௬. அஸ்தோத்திலே வேசிப்பிள்ளைகள் குடியிருப்பார்கள். நாம் பெலிஸ்தரின் முக்கியத்தைச் சங்காரம்பண்ணி,

௭. அவனுடைய இரத்தப்பழிகளை யவன் வாயிலும், அவனுடைய அருவருப்புகளை யவன் பற்களின் நடுவிலும் இராதபடிக்கு நீக்கிப்போடுவோம். அவனுந் தம்முடைய பராபரனுக்கென்று மீதியாகவைக்கப்பட்டு யூதாவிலே பிரபுவைப்போலிருப்பான். எக்கிரோனும் எபூசியனைப்போலுமிருப்பான்.

௮. இராணுவத்திற்கும், போகிறவர்களுக்கும், வருகிறவர்களுக்கும் விலக்கமாயக்காக்க * நமது வீட்டைச் சுற்றிலும் பாளயம் போடுவோம். இனி யிறுக்கப்பிடிக்கிறவன் அவர்கள்மேற் கடந்துவருவதில்லை. ஏனெனில், இப்போது அதை நம்முடைய கண்களினாலே நோக்கியிருக்கிறோம். * ௨, ௫.

௯. சீயோன்குமாரத்தியே, மிகவுங் களிகூரு. எருசலேம் குமாரத்தியே, கெம்பீரி. இதோ, உன் இராசா உனக்குவருவார். அவர் நீதியுள்ளவரும், இரட்சிக்கிறவரும், தாழ்

மையானவரும், கழுதையின்மேலும், கழுதைக்குட்டியாகிய மறியின்மேலும் ஏறிவருகிறவருமாயிருக்கிறார். * ஏசாயா. கூஉ, யக. செப்பனி. ௩, யச. மத். உக, ௫. ரு. யோவான. யஉ, யசு. யரு.

ய. எனெனில், எப்பிராயீமில இரதங்களையும், எருசலேமிற குதிரைகளையும் அறுப்போகப்பண்ணுவோம். யுத்தவில்லுமில்லாதேபோகும். * அவர் சாதிகளுக்குச சமாதானமெனபார். அவருடைய இராச்சியம் ஒரு சமுத்திரந்துவக்கி மறு சமுத்திரபரியந்தமும், நதிதுவக்கிப பூமியின எல்லைகள்பரியந்தமுமபோகும். * சங்கீ. எஉ, ௯. எ, அ.

யக. உனக்கு நாம் செயவதேதெனில், * தண்ணீரில்லாத குழியிலேயடைபட்டிருக்கிற உன்னுடையவர்களை நாம உன உடனபடிக்கையின இரத்தத்தினாலே விடுதலைபண்ணுவோம். * கலாத்தி. ௯, உ. ௯.

யஉ. நமபிக்கையோடே யடைபட்டவர்களே, அரணுக்குத திருமபுஙகள. இரட்டிப்பான நனமையையும் அளிவிப்பாரை இனறைக்கு உனக்குக்கொடுக்கப்போகிறேம.

ய௩. அதேதெனில, நாம யூதாவை நமக்கு நாணேறறி எப்பிராயீமினாலே வில்லைநிரப்பி, சீயோனே, உன்னுடைய புத்திரரைக் கிரேக்கதேசப புத்திரருக்குவிரோதமாக எழுப்பி உன்னைப பராக்கிரமசாலியின படடயத்திறகொப்பாக்குவோம.

யச. அவர்களமீதிற கர்த்தர் காணப்படுவார். அவருடையஅமபு மின்னலைபபோலப புறப்படும. கர்த்தராகிய ஆணடவர் எக்காளமூதித தெறகுத திசையின புயலகளோடே நடந்துவருவார்.

யரு. சேனைகளுடையகர்த்தர் அவர்களைக் காப்பாறறுவார். அவர்கள பட்சித்துக் கவணடின கற்களால கீழ்ப்படுத்திக்கொள்ளுவார்கள. அவர்கள குடித்து மதுபானத்தாலானதுபோல இரைந்து, கலஙகளைப்போலேயும், பலிபீடத்தின கொடிகளைபபோலேயும், நிறைந்திருப்பார்கள.

யசு. தமமுடைய சனமான மந்தையாகிய அவர்களை யவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அந்நாளிலிரட்சிப்பார். அதெதெனில, அவருடையதேசத்தில அவர்களகொடியாக ஏறறப்பட்ட கிரீடகற்களாயிருப்பார்கள.

யஎ. ஏனெனில், அவருடைய தயவு எத்தனை பெரியது! அவருடைய சவுந்தரியம எத்தனைபெரியது! தானியம வாலிபரையும், திராட்சப்பழ இரசங் கனனியாஸ்திரிகளையுங்வளரப்பண்ணும்.

## ய. அதிகாரம்.

[(க) விக்கிரகஙகளையலல பராபரனைகேட்கவேணடுமெனபது, (ரு) பாவத்தினிமித்தம அவர் தமது மந்தையைத தணடித்தது போலே அவர்களை இரட்சித்து முந்தின சீருக்குக்கொணடுவருவாரெனபது.]

பின்மாரிகாலத்து மழையைக் கர்த்தரைக்கேளுங்கள. * அப்பொழுது கர்த்தர் மின்னல மேகஙகளை யுணடாக்கி வெளியிலே யவரவருக்குப் பயிருணடாக அவர்களுக்கு மழை யிறங்கங்களைக் கட்டளையிடுவார். * சங்கீ. கூஅ, ய.

உ. ஏனெனில், சுருபஙகள மாயையைச சொலலின. குறிசொல்லுகிறவர்கள பொயயைத் தரிசித்தார்கள. சொப்பனக்காரர் வீணானதைசசொலலி, மாயையாய்த் தேறறரவுபண்ணினார்கள. ஆகையால, ஆடுகளைப போலே திரிந்து, * மேயப்பனில்லாததினாலேசிறுமைபபட்டார்கள. * மத். க, ௩கூ.

௩. மேயப்பருக்குவிரோதமாக நமதுடைய கோபமூணடது. கடாக்களுக்குவிரோதமாக விசாரிப்பாயிருப்போம. எனனறால, சேனைகளுடையகர்த்தர் யூதாவீட்டாராகிய தமது மந்தையைவிசாரித்து அவர்களை யுத்தத்திலே தமமுடைய மகத்துவமுள்ள குதிரையாக நிறுத்துவார்.

௪. அவர்களிலிருந்து கோடிக்கலலும், அவர்களிலிருந்து கூடாரக்கூசசும, அவர்களிலிருந்து யுத்தவில்லுமவரும. அவர்களிலிருந்து ஆளுகிற யாவரும, ஏகமாய்ப்புறப்படுவார்கள.

ரு. யுத்தத்திலே யவர்கள வீதிகளிய சேறறை மிதிக்கிற பராக்கிரமசாலிகளைப்போலிருந்து யுத்தமபண்ணுவார்கள. ஏனெனில், கர்த்தர் அவர்களோடேகூடவிருப்பார். குதிரைகளின்மேலேறிவருகிறவர்கள வெட்கப்படுவார்கள.

சு. நாம யூதாவீட்டாரைப பலப்படுத்தி, யோசேப்பு வீட்டாரை இரட்சித்து, அவர்களைத திருமப நிலைக்கப்பணணுவோம. ஏனெனில், அவர்களுக்கிரங்கினோம. அவர்கள நமமால ஒருக்காலும தள்ளப்படாதவர்களைபபோலிருப்பார்கள. ஏனெனில், நாம அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் நாம அவர்களைக்கேட்போம.

எ. எப்பிராயீமர் பராக்கிரமனைப்போலிருப்பார்கள. அவர்களிருதயம * மதுபானத்தாலாகிறதுபோல மகிழ்ச்சியாயிருக்கும. அவர்களுடைய பிளளைகளும, அதைக்கணடு மகிழ்ச்சியாயிருப்பார்கள. * அவர்களிருதயங் கர்த்தருக்குள் களிகூரும. * சங்கீ. ௱௪, யரு.

அ. நாம அவர்களைபபார்த்துப பயிலபோட்டு அவர்களைக் கூட்டிக்கொள்ளுவோம. ஏனெனில், அவர்களை மீட்டோம. அவர்கள பெருகியிருந்ததுபோலப்பெருகிப்போவார்கள.

௯. நாம் அவர்களைச் சனசதளங்களுக்குள்ளே யிறைத்தபின் அவர்கள் தூரதேசங்களிலிருந்து நம்மை நினைக்கத் தங்கள் பிள்ளைகளோடுங்கூடப் பிழைத்துத் திரும்புவார்கள்.

௰. நாம் அவர்களை எகிப்து தேசத்திலிருந்து திரும்பிவரப்பண்ணி, அவர்களை அசூரியாவிலிருந்து கூட்டிக்கொண்டு, அவர்களைக் கிலேயாத்தேசத்திறகும், லீபனோனுக்கும் வரப்பண்ணுவோம். அவர்களுக்கிடங்காணுதே போகும்.

௰௧. * இடுக்கமென்ற சமுத்திரத்தைக் கடக்கையில் அவர் சமுத்திரத்தில் அலைகளை யடிப்பார். அப்போது நதியின் ஆழங்களெல்லாம் வறண்டுபோகும். அசூரிய ருடைய அகந்தை தாழ்த்தப்படும். எகிப்தின் கோல் விலகிப்போகும். * உ. மோசே. ௰௪, ௰௬.

௰௨. நாம் அவர்களைக் கர்த்தருக்குள் பலப்படுத்துவோம். அவர்கள் * அவருடைய நாமத்திலே நடந்துகொள்ளுவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார். * மிகா. ௪, ௫.

௰௧. அதிகாரம்.

[(௧) எருசலேமின் அழிவு, (௫) தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் காக்கப்பட்டிருக்க மற்றவர்கள் தள்ளப்படுவார்கள். (௯) கிறிஸ்துவை விலக்குவதினாலே அழகும், அழிவுமாகிய கோல்கள் முறிக்கப்படும், (௰௫) புத்தியற்ற மேய்ப்பனுடைய அடையாளமும், சாபமும்.]

லீபனோனே, அக்கினி உன் கேதுருக்களைப் பட்சிக்கும்படிக்கு உன் கதவுகளைத் திற.

௨. பாயமரவிருட்சங்களே, புலம்புங்கள். ஏனெனில், கேதுருமரங்கள் விழுந்தன, பிரபலியமானவைகள் பாழ்க்கடிக்கப்பட்டன, பாசானின் கர்வாலியுமரங்களே புலம்புங்கள். ஏனெனில், யோர்தானின் முக்கியம் பாழ்க்கடிக்கப்பட்டது.

௩. எனபராபரனாகிய கர்த்தர் சொன்னதாவது; கொலையுண்கிற ஆடுகளை மேயும்.

௪. ஏனெனில், அவைகளுக்குடையவர்கள் * அவைகளைக் கொன்றுபோட்டுத் தங்களைக் குற்றமில்லாதவர்களைப்போலக் காண்பிக்கிறார்கள், அவைகளை விற்கிற அவரவர், கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர், நானைசுவரியமுள்ளவனானேனென்கிறான், அவைகளை மேய்க்கிறவர்களிலொருத்தனும் அவைகள்மேல் இரக்கம் வைக்கிறதில்லை. * யோவா. ௰, அ

௫. ஏனெனில், நாம் இனித்தேசத்துக்குடையருடிகளின்மேல் இரக்கம் வைக்கமாட்டோம். மனுஷரில் அவனவனை அவனவனுக்கடுத்தவன் கையிலும், அவன் இராசாவின் கையிலும் அகப்படப்பண்ணுவோம், இவர்கள் தேசத்தை நொறுக்கியும் நாம் இவர்கள் கைக்கு



அவர்களைத் தப்புவிப்பதில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௬. மந்தையிற சிறுமைப்பட்டவைகளே உங்களுக்காக நாம் கொலையுண்கிற ஆடுகளை மேய்த்து, இரண்டுகோல்களை வைத்துக்கொண்டோம், ஒன்றை நயமென்றோம், ஒன்றை அழிக்கிறதென்றோம், அப்படியே நாம் மந்தையை மேய்த்து,

௭. மூன்று மேய்ப்பரையும் ஒரே மாதத்திலே அதம்பண்ணினோம், நம்முடைய ஆத்துமம் அவர்களைச் சலித்தது, அவர்கள் ஆத்துமம் நம்மையும் அரோசித்தது.

௮. இனிநாம் உங்களை மேய்ப்பதில்லை, சாகிறது சாகட்டும், அதமாகிறது அதமாகட்டும், மீதியானவைகளோவென்றால், ஒவ்வொன்றும் மற்றதின் மாம்சத்தைத் தின்னக்கடவதென்று நாம் சொல்லி,

௯. நயமென்னப்பட்ட நம்முடைய கோலை வாங்கி, நாம் அந்த எல்லாச் சனசதளங்களோடும் பண்ணியிருந்த நம்முடைய உடன்படிக்கையை யற்றுப்போகப்பண்ணும்படிக்கு அதையுடைத்துப்போட்டோம்.

௰. அது அந்நாளிலே யற்றுப்போயிற்று, அப்படியே மந்தையில் நமக்குக்காத்திருக்கிற சிறுமைப்பட்டவைகள், அது கர்த்தருடைய வார்த்தையென்றறிந்துகொண்டது.

௰௧. உங்கள் பார்வைக்கு நன்றாய்க்கண்டால் நம்முடைய கூலியைத்தாருங்கள், இல்லாவிட்டால், இருக்கட்டுமென்று அவர்களோடே சொன்னோம், அப்போது நம்முடைய கூலியாக * முப்பதுவெள்ளிக்காசை நிறுத்தார்கள். * மத்தேயு. ௨௬, ௰௫.

௰௨. கர்த்தர் நம்முடனே அதைக் குயவனுக்கெறிந்துவிடுமென்றார், இது நாம் அவர்களால் மதிக்கப்பட்ட மேன்மையான மதிப்பு, நாம் அந்த முப்பது வெள்ளிக்காசை வாங்கி, * அவைகளைக் குயவனுக்கென்று, கர்த்தருடைய வீட்டிலேயெறிந்துவிட்டோம். * மத்தேயு. ௨௭, ௫. ௯, ௰.

௰௩. நாம் யூதாவுக்கும், இஸ்ரவேலுக்குமிருக்கிற சகோதரக் கட்டையற்றுப்போகப்பண்ணும்படிக்கு, அழிக்கிறதென்ற நம்முடைய இரண்டாங்கோலையும் உடைத்துப்போட்டோம்.

௰௪. கர்த்தரென்னோடே சொன்னதாவது; மதியற்ற ஒருமேய்ப்பனுடைய ஆயுதங்களையினமும் வைத்துக்கொள்.

௰௫. ஏனெனில் இதோ, * அதமாகிறவைகளைப் பராமரிக்காமலும், சிதறுண்டதைத் தேடாமலும், நொறுங்குண்டதைக் குணமாக்காமலும் நிலைத்திருக்கிறதையாதரிக்காமலும், கொழுத்ததின் மாம்சத்தைத் தின்று, அவைகளுடைய குளம்புகளையுடைக்கிற மேய்ப்பனை நாம் தேசத்திலெழும்பப்பண்ணுகிறோம். * எசே. ௩௪, ௨. ஏசே. ௩௩, ௪. ௨.

௰௭. * மந்தையைத் தள்ளிவிடுகிற அவத்தமான மேய்ப்பனுக்கையோ! பட்டயம் அவன் வலதுபுயத்தின்மேலும், அவன் வலதுகண்ணின்மேலும் வரும், அவன் புயமுழுதும் வேகும், அவன் வலதுகண் இருளடைந்துபோமென்றார். * யோவா. ௰, ௰௨.

## ௰௨. அதிகாரம்.

[(௧) எருசலேம் தனக்கு நிக்கத்தின் பாத்திரமாகவும், (௩) தன் சத்துருக்களுக்குப் பளுவான கல்லாகவும் மாற்றப்படுவது, (௬) யூதாவுக்கு வருஞ் செயமுள்ள மீட்பு, (௰) எருசலேமின் மனஸ்தாபம்.]

இஸ்ரவேலைக்குறித்த கர்த்தர் சொன்னவார்த்தையின் சுமை, * வானங்களை விரித்துப் பூமியை ஸ்திபாரப்படுத்தி, மனுஷனுடைய ஆவியை அவனுக்குள் உருவாக்குகிற கர்த்தர் சொல்லுகிறதாவது; * ஏசாயா. ௪௨, ௫.

௨. இதோ, சுற்றிலுமிருக்கிற எல்லாச் சனசதளங்களுக்கும் நான் எருசலேமை * தத்தளிப்பின் பாத்திரமாக்குகிறேன், எருசலேமுக்கு விரோதமாகப் போடப்படும் முற்றிக்கையிலே யூதாவின்மேலுமிருக்கும். * ஏசாயா. ௫௧, ௨௨.

௩. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், நான் எருசலேமைச் சகல சனசதளங்களுக்கும் பாரமான கல்லாக்குவேன், அதைக் கிளப்பவேண்டுமென்ற யாவருஞ் சதைக்கச் சதைக்கப்படுவார்கள், ஏனென்றால் பூமியின் சாதிகளெல்லாம் * அதற்கு விரோதமாகக் கூடிக்கொள்ளும். * ௰௪, ௨.

௪. அந்நாளிலே நான் குதிரைகளுக்கெல்லாந் திகைப்பையும், அவைகளிலேறியிருக்கிறவர்களுக்கெல்லாம் புத்திமயக்கத்தையும், வரப்பண்ணி யூதாவீட்டாரின்மேல் நம் கண்களைத் திறந்து வைத்துச் சனசதளங்களுடைய எல்லாக் குதிரைகளுக்குங் குருட்டாட்டத்தையுண்டுபண்ணுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௫. எருசலேமின் குடிகள் சேனைகளின் கர்த்தராகிய தங்கள் பராபரனுடைய துணையினாலே எங்களுக்குப் பலமானவர்களென்று அப்போது யூதாவின் தலைவர் தங்கள் இருதயத்திலே சொல்லுவார்கள்.

௬. அந்நாளிலே யூதாவின் தலைவரை விறகுகளுக்குள்ளெரிகிற அக்கினியடுப்புக்கும், வைக்கோற்கட்டுகளுக்குள்ளெரிகிற தீவட்டிக்கும் ஒப்பாக்குவேன், அவர்கள் வலதுபுறமும், இடதுபுறமுமாகப் புறப்பட்டுச் சுற்றிலுமிருக்கிற எல்லாச் சனசதளங்களையும் பட்சிப்பார்கள், எருசலேம் இனி எருசலேமாகிய தன்ஸ்தானத்திலேதானே குடியேறினதாயிருக்கும்.

௭. தாவீதுவீட்டாரின் மகிமையும், எருச

தக்க

லேமுடைய குடிகளின் மகிமையும் யூதாவின்மேலே தன்னை உயர்த்தாதபடிக்குக் கர்த்தர் யூதாவின் கூடாரங்களை முதல் முதல் இரட்சிப்பார்.

௮. அந்நாளிலே எருசலேமின் குடிகளைக் கர்த்தர் காப்பாற்றுவார், அவர்களில் தவள்ளாடினவன் அந்நாளிலே தாவீதைப்போலிருப்பான், தாவீதுவீட்டார் அவர்களுக்குமுன்பாகப் பராபரனைப்போலும், கர்த்தருடைய தூதனைப்போலுமிருப்பார்கள்.

௯. அந்நாளிலே சம்பவிப்பதேதெனில், எருசலேமுக்கு விரோதமாய் வருகிற எல்லாச் சாதிகளையும் அழிக்கப்பார்ப்பேன்.

௰. ஆனால் தாவீதுவீட்டாரின்மேலும், எருசலேமுடைய குடிகளின்மேலும், கிருபையின் ஆவியையும், விண்ணப்பங்களின் ஆவியையும், * ஊற்றுவேன், அப்போது அவர்கள் † தாங்கள் குத்தின நம்மைநோக்கிக்கொண்டு, ஒரேபேறானவனுக்காகப் புலம்புகிறதுபோலே நமக்காகப் புலம்பித் தலைச்சனபிள்ளைகளுக்காகத் துக்கிக்கிறதுபோலே நமக்காகத் துக்கிப்பார்கள். * யோவே. ௨, ௨௮. † யோ. ௰௯, ௩௭.

௰௧. * மெகிதோன் பட்டணத்தின் பள்ளத்தாக்கின் ஊராகிய ஆதத்ரிம்மோனின் புலம்பலைப்போலே அந்நாளிலே எருசலேமிற் புலம்பல் பெரிதாயிருக்கும். * ௨. நாளாக. ௩௫, ௨௨. ௨௩.

௰௨. தேசம் புலம்பிக்கொண்டிருக்கும் ஒவ்வொருவம்சங்கள் தனித்தனியாகத்தானே தாவீதுவீட்டுவம்சத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனியேயும், நாத்தான்வீட்டுவம்சத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனியேயும்,

௰௩. லேவிவீட்டுவம்சத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனியேயும், சீமேயிவீட்டுவம்சத்தார் தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனியேயும்,

௰௪. மற்றுண்டான எல்லாவம்சங்களிலும் ஒவ்வொருவம்சங்களின் மனுஷர் தனித்தனியேயும், அவர்கள் ஸ்திரீகள் தனித்தனியேயும் புலம்புவார்கள்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) விக்கிரகாராதனையிலும், (௨) கள்ளத்தீர்க்கதரிசனத்திலும், எருசலேமைச் சுத்தியாக்குமூற்று, (௭) கிறிஸ்துவின் மரணமும், சனத்தில் மூன்றாம்பங்கைப் பாதுகாத்ததும்.]

பாவத்தையும் * அழுக்கையும் நீக்க அந்நாளிலே தாவீதுவீட்டாருக்கும், எருசலேமின் குடிகளுக்குந் திறக்கப்பட்ட ஊற்றுண்டாயிருக்கும். * கொலோசே. ௧, ௰௪.

௨. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால்,

விக்கிரகங்களின் பேரைத் தேசத்தில் இராதபடிக்கு அழிப்போம், அவைகள் இனி நினைக்கப்படுவதில்லை, தரிசனஞ்சொல்லுகிறவர்களையும், அசுத்தத்தின் ஆவியையுந் தேசத்திலிருந்து போய்விடவும் பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

௩. இனி ஒருத்தன் தரிசனஞ்சொன்னால், சம்பவிப்பதேதெனில், அவனைப் பெற்ற அவன் தகப்பனும், அவன் தாயும் அவனுடனே * நீ உயிரோடிருக்கப்படாது. ஏனெனில், நீ கர்த்தருடைய நாமத்தைச் சொல்லிப் பொய்யைப் பகருகிறாயென்று அவனைப் பெற்ற அவன் தகப்பனும், அவன் தாயும் அவன் தரிசனஞ்சொல்லும்போது அவனைக் குத்திப்போடுவார்கள். * ௫. மோசே. ௰௩, ௫௯.

௪. சம்பவிப்பதேதென்றால், தரிசனஞ் சொல்லுகிற அவனவன் தான் சொன்ன தரிசனத்தினால் அந்நாளிலே வெட்கப்பட்டுப் பொய்சொல்லும்படிக்கினி மயிருள்ள தோற்சால்வையைப் போர்த்துக்கொள்ளாமல்,

௫. நான் தரிசனஞ் சொல்லுகிறவனல்ல, நான் நிலத்தைப் பயிரிடுகிறவன். ஏனென்றால், என் சிறுபோதே ஒரு மனுஷன் என்னை வேலைகொண்டானென்பான்.

௬. ஆனால் உன் கைகளிலிருக்கிற இந்தவடுக்களேதென்று அவனைக் கேட்டால், என் சிநேகிதரின் வீட்டிலே யிப்படியடிக்கப்பட்டேனென்பான்.

௭. பட்டயமே, நம்முடைய மேய்ப்பன் மேலும், நமக்கடுத்த புருஷன் மேலும் எழும்பென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார், * மேய்ப்பனை வெட்டு, அப்போது ஆடுகள் சிதறிப்போகும். ஆனால் நமது கரத்தைச் சிறியோர் பேரிலே திருப்பநீட்டுவோம்.

* மத்தே. ௨௬, ௩௧. மாற். ௰௪, ௨௭.

௮. தேசமெங்கும் சம்பவிக்குங்காரியமேதென்றால். அதிலிருக்கிற இரண்டு பங்கு மனுஷர் சங்கரிக்கப்பட்டு மாண்டுபோவார்கள், மூன்றாம் பங்கோவெனில், அதில் மீதியாயிருக்கும்.

௯. அந்த மூன்றாம் பங்கை நாம் அக்கினிக்குட்படப்பண்ணி, அவர்களை வெள்ளியையுருக்குகிறது போலவுருக்கி, அவர்களைப் பொன்னைப் புடமிடுகிறதுபோலப் புடமிடுவோம், அவர்கள் நமது நாமத்தைத் தொழுதுகொள்ளுவார்கள், அப்போது நாம் அவர்களைக் கேட்டருளுவோம், இது நமது சனமென்று நாமுஞ்சொல்லுவோம், கர்த்தர் எம்பராபரனாயிருக்கிறாரென்று அதுவுஞ்சொல்லும்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) எருசலேமை அழிப்பவரின் அழிவும், (௪) கிறிஸ்துவின் வருகையும், அவருடைய இராச்சியத்தின் மேன்மைகளும், (௰௨) எருசலேமின் சத்துருக்களுடைய வேதனை, (௰௬) மீதியானவர்கள் கர்த்தரிடத்திற்குத் திரும்புவார்கள், (௨௰) அவர்களுடைய கொள்ளை பரிசுத்தமாவது.]

இதோ, உன்னுடைய கொள்ளையுன் நடுவிற் பங்கிடப்படுகிற கர்த்தருடைய நாள் வரும்.

௨. அதேதெனில், எருசலேமுக்கு விரோதமாக யுத்தம்பண்ணச் சகல சாதிகளையுங் கூட்டுவோம், பட்டணம் பிடிக்கப்படும், வீடுகள் கொள்ளையாகும், ஸ்திரீகள் அவமானப்படுவார்கள், பட்டணத்தாரிற் பாதி மனுஷர் சிறைப்பட்டுப்போவார்கள், மற்ற சனமோவென்றால் பட்டணத்தைவிட்டு அறுப்புண்டு போவதில்லை. * ௰௨, ௩.

௩. ஏனெனிற் கர்த்தர் புறப்பட்டுத் தாம் படையின் நாளிலே யுத்தம்பண்ணியிருக்கிறதற்கொத்தப்பிரகாரமாக அந்தச் சாதிகளோடே யுத்தம்பண்ணுவார்.

௪. அந்நாளிலேயவருடைய பாதங்கள் எருசலேமுக்கெதிரே கிழக்காகவிருக்கிற ஒலிவமலையின்மேல் நிற்கும், அப்போது மகா பெரிய பள்ளத்தாக்குண்டாக ஒலிவமலை தன் நடுமையத்திலே கிழக்கிறதும், மேற்குக்குமெதிராகப் பிளந்துபோனபடியினாலே, ஒரு பாதி வடபக்கத்திலும், ஒரு பாதி தென்பக்கத்திலும் விலகும்.

௫. அப்போது நமது மலைகளின் பள்ளத்தாக்கு வழியாய் ஓடிப்போவீர்கள். ஏனெனில், மலைகளின் பள்ளத்தாக்கு ஆச்சால் மட்டும் போகும், நீங்கள் யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாள்களிற் * பூமியதிர்ச்சிக்குத் தப்பி ஓடிப்போனதுபோல் ஓடிப்போவீர்கள், அப்போது என் பராபரனாகிய கர்த்தர் வருவார், † தேவரீரோடே எல்லாப் பரிசுத்தவான்களுங் கூடத்தானே.

* ஆமோ. ௧, ௧. † யூதா. ௰௪.

௬. அந்நாளிற் சம்பவிப்பதேதென்றால், வெளிச்சமில்லாமல், ஒருவேளை பிரகாசமும், ஒருவேளை மப்புமாயிருக்கும்.

௭. ஒரு நாளுண்டு, அது கர்த்தருக்குத் தெரிந்தது. அது பகலுமல்ல, இரவுமல்ல, ஆனாற் சம்பவிப்பதேதெனிற் சாயங்காலத்திலே வெளிச்சமாம்.

௮. அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், * சீவனுள்ள தண்ணீர்கள் எருசலேமிலிருந்து புறப்பட்டுப் பாதி கிழக்குச்சமுத்திரத்திற்கும், பாதி மேற்குச்சமுத்திரத்திற்கும் போய், மாரிகாலத்திற்கும், கோடைகாலத்திற்குமிருக்கும். * எசேக்கி. ௪௭, ௧. அறுவி. ௨௨, ௧.

௯. * அப்போது கர்த்தர் பூமியின் மீதெல்லாம் இராசாவாயிருப்பார், அந்நாளிற் கர்த்தர் ஒருத்தராயிருப்பார், அவருடைய நாமமும் ஒன்றாயிருக்கும். * சங்கீ. ௯௯,

௰. தேசமெல்லாங் கேபாவைத் துவக்கி எருசலேமுக்குத் தெற்கேயிருக்கிற ரிம்மோன் மட்டும் ஒத்ததளமாகத் திருத்தப்படும். எருசலேமோவென்றால், உயர்ந்ததாகித் தன் தானத்திலே பென்யமீன் வாசலைத் துவக்கி முதல்வாசலென்ற தலமட்டுக்கும் கோடிவாசல் மட்டுக்கும், அனனியேல் கோபுரந் துவக்கி இராசாவின் ஆலைகள் மட்டுக்கும் குடியேறப்பட்டிருக்கும்.

௰௧. அதிலே குடியிருப்பார்கள், * இனிச் சங்கரிப்பில்லாமல் எருசலேம் சுகமாயத் தங்கியிருக்கும். * அபிவி. ௨௨, ௩.

௰௨. எருசலேமுக்கு விரோதமாயுத்தம் பண்ணின எல்லாச் சனசதளங்களையுங் கர்த்தர் வாதிக்கும் வாதையாவது, அவனவன் சதையைவாடப்பண்ணுவார், தங்கள் கால்களின் மேல் அவர்கள் நிற்கையில் அவர்கள் கண்கள் தங்கள் கண்மண்டைகளிலே வாடி, அவர்கள் நாக்கு அவர்கள் வாயிலே வறண்டு போகும்.

௰௩. அந்நாளில் சம்பவிப்பதென்னவென்றால், கர்த்தரால் பெரிய கலக்கம் அவர்களுக்குள் ளிருக்கும். அவனவன் தன் அடுத்தவனின் கையைப்பிடிப்பான், அவனவனுடைய கை அவனவனுக்கடுத்தவனுடைய கைக்கு விரோதமாக எழும்பும்.

௰௪. யூதாவும் எருசலேமுக்கெதிராக யுத்தம்பண்ணும், அப்போது சுற்றிலுமிருக்கிற சகலசாதிகளுடைய ஆஸ்தியாகிய பொன்னும், வெள்ளியும், வஸ்திரங்களும் மகா திரளாகச் கூட்டப்படும்.

௰௫. அந்தப் பாளயங்களிலிருக்கும் குதிரைகள் கோவேறுகழுதைகள் ஒட்டகங்கள் கழுதைகள் முதலான எல்லாமிருகசீவன்களின் வாதையும் அந்தவாதையைப்போலிருக்கும்.

௰௬. சம்பவிப்பதென்னவென்றால், எருசலேமுக்கு விரோதமாக வந்திருந்த எல்லாச் சாதிகளிலும் மீதியானயாவரும், * சேனைகளின் கர்த்தராகிய இராசாவைப் பணிந்துகொள்ளும்படிக்கும், கூடாரங்களின் பண்டிகையை யாசரிக்கும்படிக்கும், வருஷந்திறகு வருஷம் வந்தேறுவார்கள். * ஏசா. ௬௬, ௨௩.

௰௭. அப்போது சம்பவிப்பதென்னவென்றால், பூமியின் வம்சங்களில் எது சேனைகளின் கர்த்தராகிய இராசாவைப்பணிந்துகொள்ள எருசலேமுக்கு வந்தேறாதே போமோ அதின் மேல் மழைவருஷிப்பதில்லை.

௰௮. எகிப்தின் வம்சம் வந்தேறாமலும், சேராமலும் போனால், அவர்கள் மேல் வருஷிக்காதே போவது கூடாரங்களின் பண்டிகையை யாசரிக்க வந்தேறாத சாதிகளைக் கர்த்தர் வாதிக்கும் அந்த வாதையாயத்தானிருக்கும்.

௰௯. இது எகிப்தருடைய பாவத்திறகும், கூடாரங்களின் பண்டிகையையாசரிக்க வந்தேறாத சகலசாதிகளுடைய பாவத்திறகும் வருமாக்கினை.

௨௰. அந்நாளிலே குதிரைகளின் சதங்கைகளிலே கர்த்தருக்குப் பரிசுத்தமென்றவிலாசமிருக்கும், கர்த்தருடைய வீட்டிலுள்ள பானைகள் பலிபீடத்திற்கு முன்பாக இருக்கிற கலங்களுக்கு அப்போது சரியாயிருக்கும்.

௨௰௧. அப்போது எருசலேமிலும், யூதாவிலுமுள்ள எல்லாப்பானைகளும் சேனைகளின் கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும், பலியிடுகிறயாவரும் வந்து அவைகளில் எவைகளையாகிலும் வாங்கி அவைகளிற் சமைப்பார்கள், அந்நாள் முதற்கொண்டு சேனைகளுடைய கர்த்தரின் வீட்டிலொருகானானியனும் இருப்பதில்லை.

சகரியாவின் தீர்க்கதரிசனம் முடிந்தது
முற்றும்.

---

# மலகியாவின் தீர்க்கதரிசனம்.

---

(கி. பி. மூன். ௪௱௨௰௨.)

## ௧. அதிகாரம்.

[(௧) மலகியா இஸ்ரவேலருடைய இரக்கமில்லாமையையும், (௬) அவபத்தியையும், (௰௨) தேவ நிந்தனையையுங்குறித்து முறையிட்டது.]

மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவேலுடனே சொன்ன வார்த்தையின் சுமை.

௨. உங்களைச் சிநேகித்தோமென்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனால் நீங்கள் எங்களை எதிலே சிநேகித்தீர் என்கிறீர்கள், கர்த்தர் சொல்லுகிறதாவது; ஏசா யாக்கோபுக்குச் சகோதரனல்லவோ! ஆகிலும் யாக்கோபை நாம் சிநேகித்தோம்.

௩. ஏசாவையோ நாம் பகைத்து, * அவனுடைய பருவதங்களைப் பாழும், அவனுடைய சுதந்தரத்தை வனாந்தரத்திலுள்ள வலுசர்ப்பங்களின் தாவுமாக்கினோம்.

* ஏசா. ௩௪, ௫. யிரேமி. ௪௯, ௰௨—௰௪.

ச. எளிமைப்பட்டோம், ஆனாலும் பாழாய்ப்போனவைகளைத் திரும்பக் கட்டுவோமென்று ஏதோம் சொன்னாலும், கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அவர்கள் கட்டுவார்கள். நாமோவென்றால், நிர்மூலமாக்குவோம், அவர்களைத் துன்மார்க்கத்தின் எல்லையென்றும், கர்த்தர் என்றைக்குஞ் சினமவைக்கிற சனமென்றும் அழைப்பார்களென்கிறார்.

ரு. * இதையுங்கள் கண்கள் காணும், அப்போது நீங்கள் கர்த்தர் இஸ்ரவேலுடைய எல்லைக்கப்பாலே மகிமைப்படுவாரென்பீர்கள். * சங்கி. ருஉ, அ.

சு. குமாரன் பிதாவையும், ஊழியக்காரன் தன் ஆண்டவனையுங் கனம்பண்ணவேண்டுமே. இப்போதும் நாம் பிதாவானால் நமது கனமெங்கே, நாம் ஆண்டவரானால் நமக்குப் பயப்படும் பயமெங்கேயென்று சேனைகளுடைய கர்த்தர் தமது நாமத்தை யசட்டைபண்ணுகிற ஆசாரியர்களாகிய உங்களைக் கேட்கிறார், அதற்கு நீங்கள், எதனாலேயும் உமது நாமத்தை யசட்டைபண்ணினோமென்கிறீர்கள்.

எ. நம்முடைய பீடத்தின்மேல் அசுத்தமான அப்பத்தைப் படைக்கிறதினாலேதானே, ஆனாலும் உம்மை யெதனாலேயசுத்தப்படுத்தினோமென்கிறீர்கள், கர்த்தருடைய பந்தியெண்ணமற்றுப்போயிற்றென்று நீங்கள் சொல்லுகிறதினாலேதானே.

அ. நீங்கள் * கண் ஊனமானதைப் பலியிடக்கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல, நீங்கள் கால் ஊனமானதையும், நசற்பிடித்ததையுங் கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல, அதை நீயுன் அதிபதிக்குச் செலுத்து. அவன் உன்மேலே பிரியமாயிருப்பானோ, அல்லவென்று உன்முகமாட்டத்தைப் பார்ப்பானோவென்று சேனைகளின் கர்த்தர் கேட்கிறார். * ரு. மோசே. உஉ, யஎ- உரு.

கூ. இப்போதும் பராபரனுடைய சமுகத்தை நோக்கிக் கெஞ்சுங்கள், அப்போது நம்முடையமேலிரங்குவார். இது உங்களாலேவந்தகாரியம் உங்கள் முகமாட்டத்தைப் பார்ப்பாரோவென்று சேனைகளின் கர்த்தர் கேட்கிறார்.

௰. உங்களில் ஆராகிலுங் கதவுகளைப் பூட்டினாலுதாவலே. இப்படி விருதாவாய் நம்முடைய பலிபீடத்தில் அக்கினியைக் கொளுத்தீர்களாக, உங்கள் பேரிலே நமக்குப் பிரியமில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், உங்கள் கைகளிலுள்ள காணிக்கை நமக்குப் பொருந்தினதல்ல.

யக. ஏனெனில் சூரியனுதிக்கிறதிசை தொடங்கி, அது அஸ்தமிக்கிறதிசைமட்டும், நமது நாமஞ் சாதிகளுக்குள்ளே பெரிதாயிருக்கும், எல்லாஸ்தலத்திலும் நமது நாமத்திற்குத் தூபமும், சுத்தமான காணிக்கையுஞ் செலுத்தப்படும். ஏனெனில், நமது நாமஞ் சாதிகளுக்குள்ளே பெரிதாயிருக்குமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

யஉ. நீங்களோவென்றால் கர்த்தருடைய பந்தியசுத்தமானதென்றும், அதின் ஆகாரமாகிய அதின்வரத்து எண்ணமற்றுப்போனதென்றுஞ் சொல்லுகிறதினாலேயதைப் பரிசுத்தக்குலைச்சலாக்குகிறீர்கள்.

யஈ. இதோ, எத்தனை வருத்தமென்றும் நீங்கள் சொல்லி, அதைச் சிரமையாயப்பேசிப் பறிக்கப்பட்டதையும், கால் ஊனமாயிருக்கிறதையும், நசற்கொண்டதையுங் கொண்டுவந்து காணிக்கையாகச் செலுத்தினீர்களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார், அதையுங்கள் கைகளில் அங்கிகரித்துக் கொள்ளுவோமோவென்று கர்த்தர் கேட்கிறார்.

யச. ஆனால் தன் மந்தையில் தனக்கு ஆணிருக்கையில், கெட்டுப்போனதை யாண்டவருக்கு நேர்ந்துகொண்டு பலியிடுகிறகபடஸ்தன் சபிக்கப்பட்டவன். ஏனெனில், நாம் பெரிய இராசாவென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், நமது நாமஞ் சாதிகளுக்குள்ளே பயங்கரமாயிருக்கும்.

## உ. அதிகாரம்.

[(க) உடன்படிக்கையை அசட்டைபண்ணினதற்காக ஆசாரியர்களையும், (யக) விக்கிரகாராதனைக்காகவும், (யச) விபசாரத்திற்காகவும், (யஎ) நம்பிக்கையின்மைக்காகவுஞ் சனத்தையுங் கொடுமையாய்க்கண்டித்தது.]

இப்போதும் ஆசாரியர்களே, இந்தக் கற்பனையுங்களுக்குச் சொல்லும்.

உ. நீங்கள் கேளாமலும், நமது நாமத்திற்கு மகிமையைச் செலுத்தும்படிக்கு இதைமனதிலே வைக்காமலும் போனால், நாம் உங்களுக்குள்ளே சாபத்தையனுப்பி, உங்கள் ஆசீர்வாதங்களைச் சபிப்போமென்று, சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார், ஆம், நீங்களிதை மனதிலே வைக்காமற்போனால், அவைகளைச் சபிப்போம்.

ஈ. இதோ, நாம் உங்களுக்கிருக்கும்பயிரைக் கெடுத்துச் சாணியையுங்கள் முகங்களில் இறைப்போம், * உங்கள் பண்டிகைகளின் சாணியைத்தானே, அது உங்களைத் தன்னோடே கூட்டத்தள்ளும்படியாகும். * ஆமோ. ரு, உக.

ச. இலேவியோடே பண்ணின நம்முடைய உடன்படிக்கையிருக்கும்படிக்கு இந்தக் கற்பனையையுங்களண்டைக்கு அனுப்பினோமென்பதை அப்போது அறிந்துகொள்ளுவீர்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

ரு. அவனோடிருந்த நம்முடைய உடன்ப

டிக்கைசீவனும், சமாதானமுமாகவிருந்தது, அவன் நமக்குப் பயப்படும் பயத்தோடேயிருக்கவேண்டுமென்று இவைகளையவனுக்குக் கட்டளையிட்டோம், அப்படியேயவன் நமது நாமத்திற்குத் திடுக்கிட்டுமிருந்தான்.

௬. சத்தியவேதம் அவன்வாயிலிருந்தது, அவனுடைய உதடுகளில் நியாயக்கேடு காணப்பட்டதில்லை, அவன் நம்மோடே சமாதானமும், செம்மையார்க்கமுமாய்ச் சஞ்சரித்து, அநேகரையக்கிரமத்தைவிட்டுத் திருப்பப்பண்ணினான்.

௭. ஏனெனில், ஆசாரியன் உதடுகள் * அறிவைக் காக்கவேண்டும், வேதத்தையவன்வாயிலே தேடுவார்களே. ஏனென்றால், அவன் சேனைகளுடையகர்த்தரின் தூதன்.
* லேவி. ௰, ௯. ஆகா. ௨, ௰௧. கலா. ௪, ௰௪.

௮. நீங்களோவெனில் வழியைவிட்டுவிலகி, அநேகரை வேதத்தில் இடறப்பண்ணினீர்கள், லேவியின் உடன்படிக்கையைக் கெடுத்துப்போட்டீர்களென்று சேனைகளின் கர்த்தர்சொல்லுகிறார்.

௯. ஆனதுகொண்டு நீங்கள் நம்முடைய வழிகளைக் கைக்கொள்ளாமல் வேதத்திலே முகமாட்டம்பார்க்கிறபடியினாலே நாமும் உங்களையெல்லாச்சனத்திற்கும் எண்ணமற்றவர்களும் தாழ்ந்தவர்களுமாக்கினோம்.

௰. * நமக்கெல்லாம் ஒரேபிதாவில்லையோ? ஒரேபராபரன் நம்மைச்சிருஷ்டித்ததில்லையோ? நாம் நம்முடையபிதாக்களின் உடன்படிக்கையைப் பரிசுத்தக்குலைச்சலாக்க அவனவன் தன்சகோதரனைத் துரோகம்பண்ணுவானேன்? * யாக. ௨, ௧.

௰௧. யூதசனந் துரோகம்பண்ணிற்று, இஸ்ரவேலிலும், எருசலேமிலும் அருவருப்பானகாரியஞ் செய்யப்பட்டது, அதென்னென்றால் கர்த்தர்சிநேகிக்கிற பரிசுத்தத்தை யூதசனங்குலைத்து, அந்நியதேவனுடையகுமாரத்திகளை விவாகம்பண்ணினார்கள்.

௰௨. இப்படிச்செய்கிறவனையும், காவல்காக்கிறவனையும், உத்தரவுகொடுக்கிறவனையும், சேனைகளுடையகர்த்தருக்குக் காணிக்கைசெலுத்துகிறவனையும் யாக்கோபின் கூடாரங்களில் இராதபடிக்குக் கர்த்தர் சங்கரிப்பார்.

௰௩. அதனோடே நீங்கள் இரண்டாவது செய்கிறதேதெனில், நீங்கள்கர்த்தருடைய பீடத்தைக் கண்ணீரினாலும், அழுகையினாலும், பெருமூச்சினாலும் மூடப்பண்ணுகிறீர்கள். ஆகையால், அவர் இனிக்காணிக்கையைப்பார்க்கவும், அதையுங்கள் கைகளிற்பிரியமாய் ஏற்றுக்கொள்ளவுங்கூடாது.

௰௪. ஏனென்றுகேட்கிறீர்கள், கர்த்தர் உனக்கும், உன் இளவயதின்பெண்சாதிக்குஞ் சாட்சியாயிருக்கிறபடியினாலும், உன்தோழியும், உன் உடன்படிக்கையின்பெண்சாதியுமாகிய இவளை நீ துரோகம்பண்ணினபடியினாலுந்தானே.

௰௫. * ஒருத்தனேயிருந்தவன் அப்படிச் செய்ததில்லை. ஆவியவனுக்குப்பரிபூரணமாயிருந்தது, ஒருத்தனேயிருந்த அவன் என்ன செய்தான்? பராபரன்சொன்ன வித்தைத் தேடினான், ஆகையால் ஒருத்தனுந் தன் இளவயதான பெண்சாதியைத் துரோகம்பண்ணாதபடிக்கு, உங்கள்ஆவிக்கு எச்சரிக்கையாயிருங்கள். * ஏசாயா. ௫௧, ௨.

௰௬. ஏனென்றால், தள்ளிவிடுதலைத் தாம் பகைக்கிறவரென்று இஸ்ரவேலின்பராபரனாகிய கர்த்தர்சொல்லுகிறார், அப்படிக்கொத்தவன் தன்வஸ்திரத்தின்மேற் கொடுமையையுடுத்திக்கொள்ளுகிறானென்று சேனைகளுடையகர்த்தர்சொல்லுகிறார். ஆகையால், நீங்கள்துரோகம்பண்ணாமல், உங்கள் ஆவிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௰௭. உங்கள்பேச்சுகளினாலே கர்த்தருக்கு வருத்தமாயிருக்கிறீர்கள்; எதினாலேயவருக்கு வருத்தமாயிருக்கிறோமென்கிறீர்கள், பொல்லாப்புச்செய்கிறவனெல்லாங் கர்த்தரின்பார்வைக்கு நல்லவன், இப்படிக்கொத்தவர்கள்மேலேயவர் பிரியமாயிருக்கிறாரென்றும், நியாயந்தீர்க்கிறபராபரன் எங்கேயென்றும் நீங்கள் சொல்லுகிறதினாலேதானே.
* ௩, ௰௪—௰௫.

## ௩. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவின் தூதனையும், மகத்துவத்தையும், கிருபையையுங்குறித்தது. (௭) பிரசைகளின்கலகத்தையும், (௮) திவ்வியபண்டத்தின் கொள்ளையையும், (௰௩) நம்பிக்கையின்மையையுங்குறித்தது. (௰௬) பராபரனுக்குப் பயப்படுகிறவர்களுக்குண்டாகிய வாக்குத்தத்தம்.]

இதோ, நாம் நம்முடையதூதனையனுப்புகிறோம், அவன் நமக்குமுன்பாக வழியை யாயத்தம்பண்ணுவான், அப்போது நீங்கள்தேடுகிற ஆண்டவரும், நீங்கள் இச்சிக்கிற உடன்படிக்கையின் தூதருமானவர் தீவிரமாய்த் தம்முடைய தேவாலயத்திற்கு வருவார். இதோ, வருகிறாரென்று சேனைகளுடைய கர்த்தர்சொல்லுகிறார். * மத்தேயு. ௰௧, ௰. மாற். ௧, ௨. லூக். ௭, ௨௭.

௨. ஆனால், அவர்வருகையின் நாளைத்தாங்குபவனார்? அவர்காணப்படுகையில் நிலைநிற்பவனார்? ஏனெனில், அவர் புடமிடுகிறவனுடைய அக்கினியைப்போலேயும், வண்ணாருடைய சவுக்காரத்தைப்போலேயுமிருப்பார்.

௩. * அவர் உருக்காந்து வெள்ளியைப் புடமிட்டுச்சுத்திகரித்துக்கொண்டிருப்பார் அவர் லேவியின்புத்திரரைச்சுத்திகரித்து, அவர்கள் கர்த்தருடையவர்களாயிருக்கும்படிக்கு நீதியாகக்காணிக்கைகளைச்செலுத்த

த்துப்படிக்கும், அவர்களைப் பொன்னைப்போலேயும், வெள்ளியைப்போலேயும் உருக்குவார். * மத்தே. ௨௬, ௫௫.

௪. அப்போது பூர்வநாள்களைப்போலேயும், முந்தின வருஷங்களைப்போலேயும் யூதாவின் காணிக்கையும், எருசலேமின் காணிக்கையும் கர்த்தருக்கு இன்பமாயிருக்கும்.

௫. நாம் உங்களண்டைக்கு நியாயத்தீர்ப்புக்கென்று சேர்ந்து வந்து, சூனியக்காரருக்கும், விபசாரருக்கும், பொய்யாணையிடுகிறவர்களுக்கும், விதவைகளும், திக்கற்றவர்களுமான கூலிக்காரரின் கூலியைத் திருடுகிறவர்களுக்கும், நமக்குப் பயப்படாமல் பரதேசிக்கு அநியாயஞ்செய்கிறவர்களுக்கும் விரோதமாகத் தீவிரமான சாட்சியாயிருப்போமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௬. கர்த்தராகிய நாம் மாறாதிருக்கிறபடியினாலேயாகக் கோபின் புத்திரராகிய நீங்கள் நிர்மூலமானதில்லை.

௭. நீங்கள் உங்கள் பிதாக்களின் நாள்கள் துவக்கி நம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்ளாமல் அவைகளைவிட்டு விலகிப்போனீர்கள். * நம்மண்டைக்குத் திரும்புங்கள். அப்போது உங்களண்டைக்குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார். நாங்கள் எதிலே திரும்பவேண்டுமென்கிறீர்கள்! * சகரி. ௧, ௩.

௮. மனுஷன் பராபரனை வஞ்சனைபண்ணலாமோ? நீங்களோவென்றால், நம்மை வஞ்சனைபண்ணுகிறீர்கள். எதிலே நம்மை வஞ்சனைபண்ணினோமென்கிறீர்கள்? தசம்பாகத்திலும், செலுத்தத் தக்கவைகளிலுந்தானே.

௯. நீங்கள் சாபம்பிடித்தவர்களாயிருக்கிறீர்கள். ஏனென்றால், நீங்கள் சாதியனைத்துமாய் நம்மை வஞ்சனைபண்ணுகிறீர்கள்.

௰. நம்முடைய வீட்டில் ஆகாரமுண்டாயிருக்கும்படிக்குத் தசம்பாகங்களையெல்லாம் பண்டகசாலையிலே கொண்டுவாருங்கள். அப்போது நாம் உங்களுக்கு வானத்தின் பலகணிகளைத் திறந்து, உங்கள்மேல் ஆசீர்வாதத்தை இடங்கொள்ளாதே போகுமட்டும் ஊற்றமாட்டோமோவென்றும், அதினால் நம்மைச் சோதித்துப்பாருங்களென்றுஞ் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௧. பூமியின் கனியைத்தின்னுகிறவைகள் அவைகளையுங்களுக்குக் கெடுத்துப்போடாதபடிக்கு நாம் அவைகளையுங்களுக்காக உதம்புவோம். நிலத்தின் திராட்சப்பயிர் பழுதாய்ப் போவதுமில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௨. அப்போது எல்லாச் சாதிகளும் உங்களைப் பாக்கியவான்களென்பார்கள். ஏனெனில், விருப்பமான தேசமாயிருப்பீர்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

௰௩. * உங்கள் பேச்சுகள் நமக்கு விரோதமாகப் பலத்துப்போயிற்றென்று கர்த்தர் சொல்லுகிறார். ஆனாலும் உமக்கு விரோதமாக என்னத்தைச்சொன்னோமென்கிறீர்கள். * ௨, ௰௭.

௰௪. நீங்கள் சொல்வதேதெனில், கர்த்தருக்கு ஊழியஞ்செய்கிறது விருதாவாயிருக்கிறது. நாங்கள் அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறதினாலும், சேனைகளுடைய கர்த்தருக்கு முன்பாகத் துக்கித்து நடக்கிறதினாலும் என்ன பிரயோசனம்!

௰௫. இப்போதும் அகந்தைக்காரரை நாங்கள் பாக்கியவான்களென்கிறோம். அக்கிரமஞ் செய்கிறவர்கள் திடப்படுகிறார்களே, அவர்கள் பராபரனைப் பரிட்சைபார்த்தாலும் விலக்கப்படுகிறார்களேயென்று சொல்லுகிறீர்கள்.

௰௬. அப்பொழுது கர்த்தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோடே ஒருவர் சொல்வதாவது; கர்த்தர் கவனித்துக் கேட்டிருக்கிறார். கர்த்தருக்குப் பயந்தவர்களுக்காகவும், அவருடைய நாமத்தை நினைக்கிறவர்களுக்காகவும் நினைப்பூட்டுதலுக்கான புஸ்தகம் அவருக்கு முன்பாக எழுதப்பட்டிருக்கின்றதென்பார்கள்.

௰௭. * சம்பத்தை நாம் பிரித்துக்கொள்ளும்நாளிலே இவர்கள் நம்முடையவர்களாயிருப்பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார். ஒரு மனுஷன் தனக்கூழியஞ்செய்கிற தன்னுடைய குமாரனைத் தப்பவிடுமாப்போலே † அவர்களைத் தப்பவிடுவோம். * ௧. பேது. ௨, ௯. † ௧. மோசே. ௭, ௨௩. ௰௬, ௰௬.

௰௮. அப்போது நீங்கள் திரும்பவும், * நீதிமானுக்கும், ஆகாதவனுக்கும், பராபரனுக்கூழியஞ்செய்கிறவனுக்கும், அவருக்கூழியஞ்செய்யாதவனுக்குமிருக்கிற வித்தியாசத்தைக்காண்பீர்கள். * ஏசாயா. ௬௫, ௱௩. ௰௪.

## ௪. அதிகாரம்.

[(௧) துன்மார்க்கர்மேல்வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பும், (௨) நல்லோர்மேல்வரும் அவருடைய ஆசீர்வாதமுஞ்சொல்லப்பட்டது. (௪) நியாயப்பிரமாணத்தைக் காக்கத்தூண்டி, (௫) எலியாவின் வருகையையும், தொழிலையுமறிவித்தது.]

ஏனெனில், இதோ, சூளையைப்போல எரிகிறநாள்வரும். அப்போது எல்லா அகந்தைக்காரரும், ஆகாத்தியஞ்செய்கிற அனைவரும் * துரும்பாயிருப்பார்கள். அவர்களை வரப்போகிற அந்தநாள் கொளுத்திவிட்டு, அவர்களில் வேரையும், கொப்பை

யுமவைககாதேபோகுமெனறு சேனைகளு டையகர்த்தர்சொலலுகிறர். * மத. ௩, ௰௨.

௨. ஆனலநமது நாமத்திறகுபபயநதிருக கிற உஙகளுககு நீதியினுடைய சூரியன* உதிககும, அதினுடைய செட்டைகளின கீழ ஆரோககியமிடைககும, நீஙகள வெளிபபுறபபடடுக † கொழுககுங கன்றுககுடடிகளைபபோலவளருவீர்கள, * லூககா. ௧, ௭. ௮, ௭௯. † ஏசாயா. ௬௰, ௧. ௨.

௩. ஆகாதவர்களைமிதிப்பார்கள். ஏனெனில், நாமிதைசசெயயுமநாளிலே யவர்களுஙகள உளளஙகாலகளினகீழச சாமபலாயிருபபார்களெனறு சேனைகளுடைய கர்த்தர் சொலலுகிறர்.

௪. * நாம ஓரேபிலே இஸரவேலனைததிறகுமாக நமமுடைய ஊழியககாரனுகிய மோசேககுக கறபிதத அவனுடைய நியாயபபிரமாணமாகிய கடடளைகளையும, நியாயஙகளையும நினையுஙகள. * ௨. மோசே. ௨௰, ௧. ழி

௫. இதோகர்த்தருடைய பெரியதும, பயஙகரமுமான நாளவராததறகுமுனனே நாம உஙகளுககு * எலியாதீர்ககதரிசியை யனுபபுகிறேம. * மத. ௰௧, ௰௪. ௰௭, ௰௨. மாற்கு. ௯, ௰௩.

௬. நாம வநது பூமியைச சஙகாரததால அடிககாதபடிககு, அவன * பிதாககளுடைய இருதயததைப பிளளைகளண்டைககும, பிளளைகளுடைய இருதயததை யவர்கள பிதாக்களண்டைக்குநதிருபபுவான. * லூக். ௧, ௰௭.

மலகியாவின தீர்க்கதரிசனம் முடிந்ததுமுற்றும்.

THE

# NEW TESTAMENT

OF OUR

## LORD AND SAVIOUR JESUS CHRIST.

IN TAMIL.

WITH CONTENTS OF THE CHAPTERS AND CHRONOLOGY, FROM THE ENGLISH, AND REFERENCES.

---

உலக இரட்சகராகிய

இயேசுக்கிறிஸ்துநாதர்

அருளிச்செய்த

# புதிய ஏற்பாடு.

இதின்மூலவாக்கியம்

இரோனியுசையரால்

கிரேக்கபாஷையிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டும்,

சென்னபட்டணத்திலுள்ள

சத்தியவேதசங்கத்தாரால்பரிசோதித்து

ஏற்படுத்தப்பட்டுமிருக்கிறது.

கி-பி-து அமாசசஹுபேலே

சென்னபட்டணத்தில் அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

MADRAS:

PRINTED AT THE AMERICAN MISSION PRESS, FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY, AND AMERICAN MISSION.

1844.

# மத்தேயு என்பவர் எழுதின சுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

கிறிஸ்து பிறநததெனறு சொல்லப்பட்ட வழககமான வருஷததொகைக்குமுன், ௫. வருஷம்.

[(௧) ஆபிரகாமுதல யோசேபபுவரைககுமுளள கிறிஸ்துவினுடைய வம்சவரிசையின அட்டவணை. (௰௮) கனனிமரியாள யோசேபபுககு நேமிககபபட்டபோது அவர் பரிசுதத ஆவியினால உற்பவிதது அவளிடததிற பிறநதது. (௰௯) தேவதூதன யோசேபபினுடைய தகாதயோசனைகளை நீககிககிறிஸ்துவின திருநாமஙகளுககு அர்த்தமுரைத்தது.]

ஆபிரகாமின சநததியாகிய தாவீதின சநததியாயிருககிற இயேசுககிறிஸ்துவினுடைய வம்சவரிசையின அட்டவணையாவது,

௨. * ஆபிரகாம ஈசாக்கைப்பெறறான, ஈசாககு யாககோபைப்பெறறான, யாககோபு யூதாமுதலானகுமாரர்களைப பெறறான. * லூக். ௩. ௩௨.

௩. யூதாதாமாரெனபவளைசசேர்நது பாரேசையும, சாராவையுமபெறறான, பாரேசு எசுரோமைபபெறறான.

௪. எசுரோம் ஆராமைபபெறறான, ஆராம் அமினதாபைப்பெறறான, அமினதாபு நவசோனைபபெறறான.

௫. நவசோன சலுமோனைப்பெறறான, சலுமோன இராகாபபெனபவளைச்சேர்நதுபோவோசைப்பெறறான, போவோசு உரூதடெனபவளைசசேர்நது ஓபேதைபபெறறான, ஓபேத்து ஏசேயைபபெறறான.

௬. ஏசே இராசனாகிய தாவீதைபபெறறான, இராசனாகிய தாவீது ஊரியாவுக்கு மனைவியாயிருநதவளைசசேர்நது சொலொமோனைபபெறறான.

௭. சொலொமோன உரோபோவாமைப் பெறறான, உரோபோவாம் அபியாவைப பெறறான, அபியா அசாவைபபெறறான.

௮. அசாயோசபாததைபபெறறான, யோசபாதது யோராமைபபெறறான, யோராம ஓசியாவைபபெறறான.

௯. ஓசியாயோததாமைபபெறறான, யோததாம ஆகாசைபபெறறான, ஆகாசு எசேககியாவைபபெறறான.

௰. எசேககியாமனாசேயைபபெறறான, மனாசே அமோனைபபெறறான, அமோன யோசியாவைபபெறறான.

௰௧. (யூதர்கள) பாபிலோனதேசததுக்குச சிறைபபட்டுபபோகுங் காலததிலேயோசியா எகோனியாமுதலான குமாரர்களைப்பெறறான.

௰௨. அவர்கள பாபிலோன தேசததிறகுச சிறையாகக் கொணடுபோகப பட்டபினபு, எகோனியாசாலாததியேலைபபெறறான, சாலாததியேல சொரோபாபேலைபபெறறான.

௰௩. சொரோபாபேல அபியூதைபபெறறான, அபியூது எலியாகிமைபபெறறான, எலியாகிம அசோரைபபெறறான.

௰௪. அசோர்சாதோககைபபெறறான, சாதோககு ஆகிமைபபெறறான, ஆகிம எலியூதைபபெறறான.

௰௫. எலியூது எலேயாசாரைபபெறறான, எலேயாசார் மததானைபபெறறான, மததான யாககோபைப்பெறறான.

௰௬. யாககோபு மரியாளுடைய புருஷனாகிய யோசேபபைப்பெறறான. அநதமரியாளிடததிலே கிறிஸ்து எனனபபட்டிருககிற இயேசுபிறநதார்.

௰௭. இவவணணமாயஉணடானதலைமுறைகளெலலாம ஆபிரகாமுதல தாவீதுவரைககும பதினாலுதலைமுறைகளும, தாவீதுமுதற பாபிலோனதேசததுககு யூதர்கள சிறைபபட்டுபபோன காலமவரைககும பதினாலு தலைமுறைகளும, பாபிலோனதேசததுககு கொணடுபோனகாலமுதற கிறிஸ்துவரைக்கும பதினாலு தலைமுறைகளுமேயாம.

௰௮. இநத இயேசுககிறிஸ்துவினுடைய உற்பததியின விவரமாவது, * அவருடைய தாயாகிய மரியாளயோசேபபுககு (மனைவியாக) நியமிககபபட்டபினபு அவர்களகூடிவாழகிறதறகுமுன்னமே அவளபரிசுதத ஆவியினாலே கருபபவதியானாள. * லூக். ௧. ௨௬—௩௮. ௨. ௧—௨௧.

௰௯. அவளுடைய புருஷனாகிய யோசேபபு நீதிமானாகையால, அவளை அவதூறுபணண மனதிலலாமல இரகசியமாய அவளையொழிததுவிடடபடியாயச சிநதிததான.

௨௰. அவன் அப்படி நினைத்திருக்கையிற் பராபரனுடைய தூதன் சொப்பனத்திலே அவனுக்குக்காணப்பட்டுத் தாவீதின்சந்ததியாகிய யோசேப்பே! நீ உன்மனைவியாகிய மரியாளைச்சேர்த்துக்கொள்ள ஐயப்படவேண்டாம். என்னத்தினாலென்றால், அவளிடத்தில் உண்டாயிருக்கிறது பரிசுத்த ஆவியினாலுண்டானது.

௨௧. அவள் ஒருகுமாரனைப்பெறுவாள், * அவர் தம்முடைய சனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பாராகையால அவருக்கு இயேசுவென்று பேரிடுவாயாகவென்றான். * லூக். ௧. ௩௧.

௨௨. தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தர் சொன்னது நிறைவேறும்படிக்கு அவையெல்லாம் நடந்தன.

௨௩. அவர்சொல்லுவித்ததென்னவென்றால், இதோ * ஒருகன்னிகருப்பவதியாகி ஒருகுமாரனைப்பெறுவாள், அவருக்கு இம்மானுவேலென்று பேரிடுவார்களென்பதே. இம்மானுவேல் * என்பதற்குப்பராபரன் நம்முடனேயிருக்கிறாரென்று அருத்தமாம்.

* ஏசா. எ. ௰௪. அ. ௰.

௨௪. யோசேப்பு நித்திரைதெளிந்தெழுந்தபொழுது தனக்குக் கர்த்தருடைய தூதன் கட்டளையிட்டபடி தன் மனைவியைச்சேர்த்துக்கொண்டு,

௨௫. அவள் முதற்பேறான குமாரனைப்பெறும்வரைக்கும் அவளையறியாதிருந்து (அந்தக்குமாரன் பிறந்தபின்பு) அவருக்கு இயேசு என்றுபேரிட்டான்.

## ௨. அதிகாரம்.

[(௧) கிழக்கிலிருந்த சாஸ்திரிகள் நட்சத்திரத்தினால் கிறிஸ்துவினிடத்திற்கு வழிநடத்தப்பட்டது. (௰௧) அவரைப்பணிந்து காணிக்கைகளைச் செலுத்தினது. (௰௪) இயேசுவையும், அவருடைய தாயையுங் கூட்டிக்கொண்டு யோசேப்பு எகிப்துக்கோடிப்போனது. (௰௬) ஏரோதே குழந்தைகளைக்கொலைசெய்தது, (௰௯) பின்பு தான் மரணமடைந்தது. (௨௩) கலிலேயாவிலுள்ள நாசரேத்துக்குக் கிறிஸ்து மறுபடியுங்கொண்டுவரப்பட்டது.]

ஏரோதென்னும் இராசனுடைய காலத்திலே யூதேயா தேசத்திலுள்ள பெத்லகேமூரில் இயேசுவானவர் பிறந்தபின்பு கிழக்குத்திசையிலிருந்து சாஸ்திரிகள் எருசலேமநகரத்துக்குவந்து,

௨. (இக்காலத்தில்) பிறந்திருக்கிற யூதருடைய இராசாவைக் குறித்துத்தோன்றிய நட்சத்திரத்தைக் கிழக்கிலேநாங்கள்கண்டு அவரைப்பணிந்துகொள்ளவந்தோம். அவரெங்கேயென்றார்கள்.

௩. ஏரோது இராசா அதைக்கேட்டபொழுது அவனும், அவனுடனேகூட எருசலேம் நகரத்தாரனைவருங் கலங்கினார்கள்.

௪. அல்லாமலும் அவன் சனங்களிற் பிரதானமான ஆசாரியர் வேதபாரகரெல்லாரையுங் கூடிவரச்செய்து கிறிஸ்து எங்கே பிறப்பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.

௫. அவர்கள் அவனைநோக்கி, யூதாவினூராகிய பெத்லெகேமிலே அவர்பிறப்பார். என்னத்தினாலென்றால், யூதேயாத்தேசத்திலுள்ள பெத்லெகேமூரே! என்னுடைய சனங்களாகிய இஸ்ரவேலரையாளும் பிரபு உன்னிடத்திலே தோன்றுவாராகையால யூதாவிலுள்ள பிரபுக்களில் நீ சிறியதல்லவென்று,

௬. தீர்க்கதரிசியினாலே * எழுதப்பட்டிருக்கின்றதென்றார்கள். * மீகா ௫. ௧.

௭. அப்பொழுது ஏரோது அந்தச்சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து, அந்த நட்சத்திரங் காணப்பட்ட காலத்தைக்குறித்து அவர்களிடத்திலே விசாரித்துக்கொண்டு,

௮. நீங்கள் போய் அந்தப்பிள்ளையைக்குறித்து நன்றாய் ஆராய்ந்துபாருங்கள். மேலும், நீங்கள் அதைக்கண்டபின்பு நானும் போய் அதைப் பணிந்துகொள்ளும்படிக்கு எனக்கறிவியுங்களென்றுசொல்லி அவர்களைப்பெத்லெகேமுக்கு அனுப்பிவிட்டான்.

௯. இராசாசொன்னதை அவர்கள் கேட்டுப்போனார்கள். போகையிற் கிழக்கிலேயவர்கள் கண்டநட்சத்திரம் அந்தப்பிள்ளையிருக்கிறஸ்தலத்துக்குமேலேவந்து நிற்கும்வரைக்கும் அவர்களுக்குமுன்பாக நடந்தது.

௰. அவர்கள் அந்த நட்சத்திரத்தைக்கண்டு மிகுந்த ஆநந்த சந்தோஷத்தையடைந்து,

௰௧. பின்பு அந்த வீட்டிற்பிரவேசித்துப் பிள்ளையையும், அதினுடைய தாயாகிய மரியாளையுங்கண்டுவலக்கமாயவிழுந்து அதைப்பணிந்துகொண்டுதங்கள் பொக்கிசப்பெட்டிகளைத் திறந்துபொன்னையும், தூபவருக்கத்தையும், வெள்ளைப்போளத்தையும் அதற்குக் காணிக்கையாகவைத்தார்கள்.

௰௨. பின்பு ஏரோதினிடத்துக்குத் திரும்பிப்போகாதிருங்களென்று அவர்கள் சொப்பனத்திலே தேவ உத்தரவுபெற்றுவேறுவழியாய்த் தங்கள் தேசத்திற்குப்புறப்பட்டுப்போனார்கள்.

௰௩. அவர்கள் புறப்பட்டுப்போனபின்புகர்த்தருடையதூதன் சொப்பனத்திலே யோசேப்புக்குக்காணப்பட்டு ஏரோது இந்தப்பிள்ளையைக் கொலைசெய்யத் தேடுவான். ஆகையால, நீயெழுந்துபிள்ளையையும், அதினுடைய தாயையுங்கூட்டிக்கொண்டு எகிப்துதேசத்திற்கு ஓடிப்போய் நான் உனக்

குச்சொல்லுமளவாக்கும் அவ்விடத்திலிருவென்றான்.

௰௪. உடனே அவன் எழுந்து இராத்திரியிலே பிள்ளையையும், அதினுடைய தாயையுங் கூட்டிக்கொண்டு எகிப்துக்குப் புறப்பட்டுப்போய்,

௰௫. ஏரோது மரணமடைந்தகாலமளவாக்கும் அவ்விடத்திலிருந்தான். எகிப்திலிருந்து என்னுடைய குமாரனை வரவழைத்தேனென்று தீர்க்கதரிசியைக்கொண்டு * கர்த்தர் திருவுளம்பற்றினது நிறைவேறும்படிக்கு இப்படி நடந்தது. * ஓசே. ௰௧, ௧.

௰௬. அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிகளால் வஞ்சிக்கப்பட்டதைக்கண்டு, மிகுந்த கோபமடைந்து, அந்தச்சாஸ்திரிகளிடத்திலே தான் கேட்டாராய்ந்த காலத்தின்படி பெத்லெகேமூரிலும், அதினுடைய எல்லைகள்யாவிலும் இரண்டுவயதுமுதற்கொண்டு அதற்குத் தாழ்ந்திருந்த வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாரையுங் கொலைசெய்ய ஆள்களையனுப்பினான்.

௰௭. அப்பொழுது எரேமியா தீர்க்கதரிசியினாற்சொல்லப்பட்டது * நிறைவேறிற்று. அவன் சொன்னதென்னவென்றால், * எரே. ௩௧. ௰௫.

௰௮. இராமாவூரிலே புலம்பலும், அழுகையும், மிகுந்த துக்கிப்புமுள்ள கூக்குரல் கேட்கப்பட்டது. இராகேல் தன்பிள்ளைகளைக் குறித்து அழுதுகொண்டு, * அந்தப்பிள்ளைகளில்லாதபடியால் ஆறுதல் அடையாதிருக்கிறாளென்பதே. * ௧. மோசே. ௩௫, ௰௯.

௰௯. ஏரோது இறந்தபின்பு, சொப்பனத்திலே கர்த்தருடைய தூதன் எகிப்திலே யோசேப்புக்குக்காணப்பட்டு,

௨௰. பிள்ளையினுடைய பிராணனை வாங்கத் தேடினவர்கள் இறந்துபோனார்கள். ஆகையால், நீ எழுந்து பிள்ளையையும், அதினுடைய தாயையுங்கூட்டிக்கொண்டு இஸ்ரவேல்தேசத்துக்குப்போவென்றான்.

௨௧. அந்தப்படியே அவன் எழுந்திருந்து பிள்ளையையும், அதினுடைய தாயையுங்கூட்டிக்கொண்டு இஸ்ரவேல் தேசத்திற்குப் புறப்பட்டபொழுது,

௨௨. அர்கேலாவு என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதினுடைய பட்டத்துக்குவந்து யூதேயாவை ஆளுகிறானென்று கேள்விப்பட்டு அங்கேபோகப்பயந்தான். அப்பொழுது சொப்பனத்திலே அவன் தேவ உத்தரவுபெற்றுக் கலிலேயா நாட்டினுடைய திசைகளைநோக்கிப் புறப்பட்டுப்போய்,

௨௩. நாசரேயனென்று அழைக்கப்படுவானென்கிறதாய்த் தீர்க்கதரிசியாற்சொல்லப்பட்டது * நிறைவேறும்படிக்கு நாசரேத்தூரிலே வந்து வாசம்பண்ணினான். * ஏசா. ௰௧. ௧; சகரியா ௬. ௰௨.

## ௩. அதிகாரம்.

[(௧) யோவான் பிரசங்கித்தது. அவருடைய ரூபம், நடக்கை, ஞானஸ்நானம். (௭) அவர் பரிசேயர்களைக் கடிந்துகொண்டது. (௰௩) கிறிஸ்துவுக்கு யோர்தானில் ஞானஸ்நானங்கொடுத்தது.]

அக்காலத்திலே * யோவான்ஸ்நானன் வந்து, * மாற். ௧. ௨—௮; லூக். ௩. ௧—௰௮; யோவா. ௧. ௬. ௭.

௨. பரலோக இராச்சியஞ்சமீபமாயிருக்கிறபடியால் மனந்திரும்புங்களென்று * யூதேயாவின் வனாந்தரத்திலே பிரசங்கம்பண்ணினான். * ௪. ௰௭.

௩. அவன் யாவனென்னில், கர்த்தருக்காக மார்க்கத்தை நன்றாக்கச்செய்யுங்களென்றும், அவருடைய பாதைகளைச்செவ்வைப்பண்ணுங்களென்றும், வனாந்தரத்திலே ஒருவன் சத்தமிடுவானென்று * ஏசாயாவென்னுந் தீர்க்கதரிசியினாற் சொல்லப்பட்டவனே.
* ஏசா. ௪௰. ௩.

௪. அல்லாமலும் அந்தயோவான் ஒட்டகமயிர் உடையைத்தரித்துத் தன்னுடைய அரையில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான், வெட்டுக்கிளிகளுங் காட்டுத்தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்தன.

௫. அக்காலத்திலே எருசலேம்நகரத்தாரும் யூதேயாதேசத்தாரனைவரும், யோர்தான் நதிக்கடுத்த சுற்றுப்புறத்தார்யாவரும் அவனிடத்திற்குப் புறப்பட்டுப்போய்,

௬. தங்கள் பாவங்களை யறிக்கையிட்டு யோர்தான் நதியில் அவனாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௭. அப்படியிருக்கையில், பரிசேயர் சதுசேயர் என்பவர்களிலும் அநேகர் தன்னாலே ஞானஸ்நானம்பெறும்படிக்கு வருகிறதை அவன் கண்டு, அவர்களைநோக்கி, விரியன் பாம்புகளின் குட்டிகளே! இனிவருங்கோபத்துக்கு நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்களுக்குவகைகாட்டினவன் எவன்?

௮. மனந்திரும்புதலுக்குத்தக்க கனிகளைக்கொடுங்கள்.

௯. ஆபிரகாம் எங்களுடைய பிதாவென்று சொல்ல, உங்களுடைய உள்ளத்திலே நினைத்துக்கொள்ளாதிருங்கள், ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக்கற்களிற் பிள்ளைகளையுண்டுபண்ணவல்லவராயிருக்கிறாரென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௰. இப்பொழுதே கோடரிமரங்களுடைய வேரருகே வைத்திருக்கிறது, ஆகையால் நல்லகனிகளைக்கொடாத மரங்களெல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும்.

௰௧. நீங்கள் மனந்திரும்பும்படிக்கு நான் சலத்தினாலே யுங்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறேன், * எனக்குப்பின்வருகிறவர்

எனனிலும அதிகவல்லமையுடையவர், அவருடைய பாத இரட்சைகளைசசுமககிறததறகு நானபாததிரவானலல, அவரோ பரிசுததஆவியினாலும, அககினியினாலுமுஙகளுககு ஞானஸநானஙகொடுபபார். * மாறகு. க. எ—அ; லூக. ௩. ௰௬; யோவா. க. உ௬; அப. உ. ௩. ச.

௰உ. அவருடைய கையில தூறறுககூடையிருககினறது, அவர் தமதுகளம் முழுவதையுமவிளககித தமமுடைய கோதுமையைககளஞசியததிற சேர்பபார், பதரை அவியாத அககினியிலாசுடடுபபோடுவாரெனறான.

௰௩. அப்பொழுது இயேசுவானவர்யோவானாலே ஞானஸநானமபெறுவதறகு * கலிலேயா நாடடைவிடடு யோர்தான அருகே அவனிடததிறகுபபோனார். * மாறகு க. ௯—௰க; லூக். ௩. உக. உஉ.

௰ச. யோவான அவருககுத தடைபணணி உமமாலே நான ஞானஸநானமபெறவேணடுவதாயிருகக, நீர் எனனிடததுககு வரலாமாவெனறான.

௰௫. அதறகு இயேசுவானவர் அவனைநோக்கி, இவவிதமாயச சகல நீதியையும நிறைவேறறுகிறது நமககேறறதாயிருககினறது. ஆகையால, இபபொழுது சமமதிபபாயாகவெனறார். அபபொழுது அவன சமமததான.

௰௬. இயேசுவானவர் ஞானஸநானமபெறறுச்சலத்தைவிடடேறிவநதவுடனே இதோ வானம அவருககுத திறக்கபபடடது, அலலாமலும பராபரனுடைய * ஆவிபுறாவைபபோலிறஙகி அவர்மேல வருகிறதைககணடான. * ஏசா. ௰க. உ; யோ. க. ௩உ—௩ச.

௰எ. மேலும * இவர் எனககனபாயிருககிற எனனுடையகுமாரன இவரிற பிரியமாயிருககிறேனெனறு வானததிலிருநது சததமுணடாயிறறு. * ௰எ. ௫; ஏசா. சஉ. க.

## ச. அதிகாரம்.

[(க) கிறிஸது உபவாசித துச்சோதிககபபடடது. (௰க) தேவதூதர்கள அவருக்குபபணிவிடைசெயதது. (௰௩) அவர் கபபர்நாகூமிலேவாசமபணணி, (௰எ) பிரசஙகிககததுவககி, (௰அ) பேதுருவையும, அநதிரேயாவையும, (உக) யாகமகோபையும,யோவானையும அழைதது, (உ௩) எலலாவியாதிஸதர்களையுங குணமாககினது.]

அபபொழுது இயேசுவானவர் பசாசானவனாலே சோதிக்கபபடுவதறகு ஆவியினாலேவனாந்தரத்திறகொணடுபோகப்படடார்.

உ. * (அஙகே) அவர்நாறபதுநாள் இரவும, பகலுமஉபவாசமபணணினபினபுஅவருககுப பசியுணடாயிறறு. * யாத்கு க. ௰உ. ௰௩; லூககா ச. க—௰௩.

௩. அபபொழுது அநதச்சோதிக்கிறவன அவரிடததிறகுவநது, நீ பராபரனுடைய குமாரனானால இநதககறகள அபபஙகளாகுமபடி கடடளையிடு எனறான.

ச. அதறகவர் மாறுததரமாக சொனனது, மனிதனானவன அபபததினாலேமாததிரமலல, பராபரனுடைய வாயமலர்நதருளிசசெயகிற எநதவாககினாலும பிழைபபானெனறெழுதியிருககினறதெனறார்.

௫. * அபபொழுது பசாசானவன அவரைப பரிசுத்த நகரததிறகுக் கொணடுபோய அவரைததேவாலயததினமேலஉபபரிகையில நிறுததி, * ரு. மோ. அ. ௩; லூக். ச. ச.

௬. உனனைககுறிதது தமமுடைய தூதர்களுககுக் கடடளையிடுவாரெனறும, உனனுடையபாதஙகலவிலிடறாதபடிககு அவர்கள உனனைக கைகளிலேநதிக்கொணடுபோவார்களெனறும * எழுதியிருககினறதாகையால நீ பராபரனுடையகுமாரனானால தாழககுதியெனறான. * சங்கீ. ௯க. ௰க—௰உ.

எ. அதறகு இயேசுவானவர்சொனனது, அதுவுமலலாமல உனனுடைய தேவனாகிய பராபரனைப பரிட்சைபாராதிருபபாயாகவெனறும * எழுதியிருக்கினறதெனறார். * ரு. மோசே ௬. ௰௬.

அ. மறுபடியும பசாசானவன அவரைமிகவும் உயர்நதமலையினமேற கொணடுபோய உலகததிலுள்ள இராச்சியங்களெல்லாவறறையும, அவைகளினமகிமையையும அவருக்குக்காணபிதது,

௯. நீ விழுநது எனனைததொழுதுகொணடால இவைகளெலலாவறறையும உனககுத் தருவேனெனறுசொனனான.

௰. அபபொழுது இயேசுவானவர் அவனைநோககி,உனனுடையதேவனாகியபராபரனைததொழுதுகொணடு, * அவரொருவருககே ஆராதனைசெயவாயாகவெனறெழுதியிருககினறதாகையால, சாததானே! அபபுறமபோவெனறார். * ௬. ௰௩.

௰க. அபபொழுது பசாசானவன அவரைவிடடுபபோனான, உடனே தேவதூதர்கள சேர்நதுவந்து அவருக்குபபணிவிடைசெயதார்கள்

௰உ. பினபு * யோவான காவலிலவைக்கப்படடானெனறு இயேசுவானவர் கேள்விப்பட்டுக் † கலிலேயாநாடடுக்குப் புறப்படடுப்போய, * மாறகு க. ௰ச—உ௰; † லூக. ச. ௰ச.

௰௩. நாசரோத்தூரைவிடடுச் சேபுலோன நவுதலியெனனும நாடுகளின எலலைகளிறகடறகரையருகேயிருககினற கபபர்நாகூமபடடினததிலவநது வாசமபணணினார்.

௰ச. அதினாலேகடறகரையருகிலும,யோர்தான் நதியோரததிலுமுளள அஞஞானிகள அடங்கியிருக்கிறகலிலேயாதேசமாகியசேபுலோனதேசத்தாரும,நவுதலதேசததாருமா

கிய இருளிலிருக்கின்ற சனங்கள் மிகுந்த ஒளியைக்கண்டார்கள்.

௰௫. மரணநிழலுள்ள திசையிலிருக்கிறவர்களுக்கு ஒளிதோன்றிற்றென்று,

௰௬. *ஏசாயாதீர்க்கதரிசியினாற் சொல்லப்பட்டது நிறைவேறிற்று. * ஏசா. ௯. ௧, ௨.

௰௭. அக்காலத்திலே இயேசுவானவர் பரலோக இராச்சியஞ் சமீபித்ததாகையால் * மனந்திரும்புங்களென்று பிரசங்கிக்கத் தொடங்கினார். * மத்தே. ௩. ௨.

௰௮. ஒருகாலத்திலே *இயேசுவானவர் கலிலேயாநாட்டின் கடலருகே நடந்துபோகையில் மீன்பிடிக்கிறவர்களாகிய பேதுரு என்னப்பட்ட சீமோனும், அவனுடைய சகோதரன் அந்திரேயாவுமாகிய இருவருங் கடலிலே வலை போட்டுக்கொண்டிருக்கிறபொழுது அவர்களைக்கண்டு, * மாற்கு ௧. ௰௬, ௨௰.

௰௯. என்பின்னேவாருங்கள், உங்களை மனிதரைப்பிடிக்கிறவர்களாக்குவேனென்று அவர்களுடனே சொன்னார்.

௨௰. உடனே அவர்கள் வலைகளைவிட்டு அவரைப் பின்பற்றினார்கள்.

௨௧. அவர் அவ்விடம்விட்டு அப்புறம்போகையிற் செபெதேயுவினுடைய மகன் யாக்கோபும், அவனுடைய சகோதரன் யோவானுமாகிய இருவருந் தங்கள் தகப்பன் செபெதேயுவுடனே படவிலிருந்து தங்கள் வலைகளைத் தைத்துக்கொண்டிருக்கிறபொழுது அவர்களைக்கண்டு அவர்களையும் அழைத்தார்.

௨௨. உடனே அவர்கள் படவையும், தங்கள் தகப்பனையும் விட்டு அவரைப்பின்பற்றினார்கள்.

௨௩. பின்பு இயேசுவானவர் கலிலேயாநாடெங்குஞ் சுற்றிநடந்து அவர்களுடைய செப ஆலயங்களிற் சனங்களுக்கு உபதேசஞ்செய்து பரலோக இராச்சியத்தைக் குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துச் சனங்களுக்குண்டாயிருந்த சகலவிதமான வியாதிகளையும், சகலவிதமான நோய்களையும் (நீக்கி அவர்களைக்) குணமாக்கினார்.

௨௪. அவருடைய கீர்த்தி சீரியாதேசத்திலெங்கும் பிரபலமாயிற்று. பின்பு பலபல வியாதிகளையும், வேதனைகளையும் அடைந்த பிணியாளிகள் யாவரையும், பசாசுபிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும், திமிர்வாதக்காரரையும் அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள், அவர்களைக்குணமாக்கினார்.

௨௫. கலிலேயாவிலும், தெக்கப்போலியிலும், எருசலேமிலும், யூதேயாவிலும், யோர்தானதிக்கப்புறத்திலுமிருந்து மிகுந்த சனங்கள் வந்து அவர்பின்சென்றார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து பர்வதத்தின்மேல் தம்முடைய பிரசங்கத்தைத் தொடங்கினது. (௩) பாக்கியவான்கள் இன்னாரென்பது. (௰௩) பூமியின் உப்பு, (௰௪) லோகத்தின் வெளிச்சம், மலையின்மேற்பட்டணம், (௰௫) விளக்கு, என்பவைகளைக் குறித்தது. (௰௭) தாம் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றவந்தாரென்றும், (௨௧) கொலை, (௨௭) விபசாரம், (௩௩) பொய்யாணையினன்றென்றும் அறிவித்தது: (௩௮) அநியாயத்தைச் சகிக்கவும், (௪௪) சத்துருக்களைச் சிநேகிக்கவும், (௪௮) பூரண சற்குணராயிருக்கப்பிரயாசப்படவும் உபதேசித்தது.]

அவர் அந்தச் சனங்களைக்கண்டு மலையின்மேலேறி உட்கார்ந்தபொழுது, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

௨. * அப்பொழுது அவர் தமது திருவாயைத்திறந்து அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னதாவது, * யோப. ௩. ௨௰, ௨௬.

௩. * ஆவியில் எளிமையுள்ளவர்கள் பரலோக இராச்சியத்தையடைவார்கள். ஆகையால், அவர்கள் பாக்கியவான்கள். * ஏசா. ௫௭. ௰௫.

௪. * துயரப்படுகிறவர்கள் ஆறுதலடைவார்கள். ஆகையால், அவர்கள் பாக்கியவான்கள். * ஏசாயா ௬௧. ௧, ௩.

௫. சாந்தகுணமுள்ளவர்கள் * பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள். ஆகையால், அவர்கள்பாக்கியவான்கள். * சங். ௩௭. ௰௧.

௬. நீதியின்மேற் * பசிதாகமுள்ளவர்கள் திருத்தியடைவார்கள். ஆகையால், அவர்கள் பாக்கியவான்கள். * ௫௫. ௧.

௭. * இரக்கமுள்ளவர்கள் இரக்கத்தையடைவார்கள். ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள். * வாக்கி. ௰௬. ௰௭; ௨௧. ௨௧; யாக. ௨. ௰௩.

௮. * சுத்தமான இருதயமுள்ளவர்கள் † பராபரனைத் தரிசிப்பார்கள். ஆகையால், அவர்கள் பாக்கியவான்கள். ௧. யோவான் ௩. ௨, ௩; † சங்கீ. ௨௪. ௩, ௪; ௬௧. ௰௨.

௯. சமாதானத்தை நடப்பிக்கிறவர்கள் பராபரனுடைய புத்திரரென்னப்படுவார்கள். ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௰. * நீதியினிமித்தந் துன்பப்படுகிறவர்கள் பரலோக இராச்சியத்தையடைவார்கள். ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள். * ௧. பேதுரு ௩. ௰௪; உரோமர் ௮. ௰௭.

௰௧. * என்னிமித்தம் உங்களை நிந்தித்துத் துன்பப்படுத்திப் பலவித தீமையானமொழிகளையுங்களின்மேற் பொய்யாய்ச் சொன்னார்களானால் நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள். * ௧. பேதுரு ௪. ௰௪.

௰௨, பரலோகத்திலே உங்களுக்கு மிகுந்த பலனிடைப்பதினாலே நீங்கள் சந்தோஷப்பட்டு மிகவுங் * களிகூருங்கள். உங்களுக்கு

முன்னிருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப்படுத்தினார்கள். * லூக். ௬. ௨௩.

௰௩. நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள். உப்பானது * சாரமற்றதேயானால் எதினால் சாரமாக்கப்படும், அது வெளியே கொட்டப்படுவதற்கும், மனிதராலே மிதிக்கப்படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்குமாகாது. * மாற்கு ௯. ௫௰; லூக்கா ௰௪. ௩௪.

௰௪. நீங்கள் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறீர்கள். மலையின்மேலிருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது.

௰௫. மேலும் * விளக்கைக்கொளுத்தி மரக்காலால் மூடிவையாமல் ஒரு தண்டின்மேலே வைப்பார்கள், அப்பொழுது அது வீட்டிலிருக்கிற யாவருக்கும் பிரகாசங்கொடுக்கும். * மாற்கு ௪. ௨௧.

௰௬. அப்படியே * மனிதரானவர்கள் உங்கள் நற்கிரியைகளைக்கண்டு பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவின் மகிமையை விளங்கப்பண்ணத்தக்கதாக உங்கள் ஒளி அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது. * ௧. பேதுரு ௨. ௰௨.

௰௭. வேதப்பிரமாணத்தையாகிலும், தீர்க்கதரிசனங்களையாகிலும் தள்ளிவிடுகிறதற்கு நான் வந்ததாக நினையாதிருங்கள், அவைகளைத் தள்ளிவிடுகிறதற்கல்ல நிறைவேற்றுகிறதற்கு வந்தேன்.

௰௮. * வானமும், பூமியும் ஒழிந்துபோனாலும் வேதமுழுவதும் நிறைவேறுவதன்றி அதிலொரு சின்ன எழுத்தாகிலும், ஒரு எழுத்தினுடைய உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன். * லூக்கா ௰௬. ௰௭.

௰௯. ஆகையால், இந்தக் கற்பனைகளில் மிகவுஞ் சிறியகற்பனையையாகிலுந் தள்ளி அவ்வண்ணமாய் மனிதருக்கு உபதேசிக்கிறவனெவனோ அவன் பரலோக இராச்சியத்திலே மிகவுஞ் சிறியவனென்றெண்ணப்படுவான், அவைகளின்படி செய்து உபதேசிக்கிறவனே பரலோக இராச்சியத்திலே பெரியவனென்றெண்ணப்படுவான்.

௨௰. ஆதலால், * வேதபாரகர்களும், பரிசேயர்களுமானவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகப்படாதிருந்தால் பரலோக இராச்சியத்திற்குட் பிரவேசிக்கமாட்டீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். * மத்தே. ௨௩. ௨௫, ௨௮.

௨௧. கொலைசெய்யாதிருப்பாயாகவென்பதும், கொலைசெய்தவன் நியாயத்தீர்ப்புக்கேதுவாயிருப்பானென்பதும் பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௨௨. அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது; சகோதரனை வீணாய்க் கோபித்துக்கொள்பவனெவனோ அவன் நியாயத்தீர்ப்புக்கேதுவாயிருப்பான், சகோதரனை வீணனென்கிறவனெவனோ அவன் பெரிய சங்கத்தீர்ப்புக்கேதுவாயிருப்பான், அவனை மதிகேடனென்கிறவனெவனோ அவன் * எரிநரகத்துக்கேதுவாயிருப்பான். * ௧. யோ. ௩. ௰௫.

௨௩. ஆகையால், நீ பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்தவந்து உன்மேல் சகோதரனுக்கு விரோதமுண்டென்று அங்கே நினைவுகொள்வாயாகில்,

௨௪. அந்தப் பலிபீடத்தின்முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப்போய் முன்பு சகோதரனுடனே ஒப்புரவாகிப் பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்துவாயாக.

௨௫. உன் எதிராளியானவன் உன்னை நியாயாதிபதிக்கொப்புவியாமலும், அந்த நியாயாதிபதி உன்னை ஊழியக்காரனுக்கொப்புவியாமலும், நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலுமிருக்கும்படிக்குச் சீக்கிரமாய் உன் எதிராளியுடனே வழியிலிருக்கும்பொழுதே * அவனுடனே நல்மனம்பொருந்துவாயாக. * லூக்கா ௰௨. ௫௮, ௫௯.

௨௬. (பொருந்தாவிட்டால்) நீ ஒரு காசுங்குறைவின்றி முழுமையுஞ் செலுத்துகிறவரைக்கும் அவ்விடத்தைவிட்டுத் திரும்பிவரமாட்டாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன்.

௨௭. விபசாரம்பண்ணாதிருப்பாயாகவென்பது பூர்வத்தாருக்குரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௨௮. அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, ஒரு ஸ்திரியை * இச்சிப்போடே பார்க்கிறவனெவனோ அவன் தன்னிருதயத்தில் அவளோடே விபசாரஞ் செய்தாயிற்று. * யோபு ௩௧. ௧.

௨௯. ஆகையால், * உன் வலதுகண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அதைப் பிடுங்கியெறிந்துபோடு, உன் சரீரமுழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு உன் அவயவங்களிலொன்று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே. * மத்தேயு. ௰௮. ௮, ௯. மாற்கு ௯. ௪௩, ௪௮. கொலா. ௫. ௨௪.

௩௰. அன்றியும், உன் வலதுகை உன்னைக் கெடுக்கிறதற்கேதுவானால் அதைத் தறித்தெறிந்துபோடு. உன் சரீரமுழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு உன் அவயவங்களிலொன்று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே.

௩௧. அல்லாமலும், * யாவனாகிலுந் தன் மனைவியைத் தள்ளிவிட்டால் தள்ளுதற்சீட்டை யவளுக்குக்கொடுக்கக் கடவனென்று சொல்லப்பட்டது. * ௫. மோசே ௨௪. ௧.

௩௨. அப்படியிருந்தும் * எவனாகிலுந் தன

மனைவிவேசித்தனமில்லாமலிருக்கையில் அவளைத் தள்ளிவிட்டால் அவன் அவளை விபசாரஞ்செய்யப்பண்ணுகிறவனாயிருப்பானென்றும், எவனானாலுந் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணினால் விபசாரஞ்செய்கிறவனாயிருப்பானென்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். * மத்தேயு ௰௯. ௯.

௩௩. அன்றியும் * பொய்யாணையிடாதிருப்பாயாகவென்பதும், உன் ஆணைகளைக் கர்த்தருக்குச் செலுத்துவாயாகவென்பதும் பூர்வத்தாருக்குரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். * ௩. மோசே ௰௯. ௰௨; ௪. மோசே ௩௰. ௩.

௩௪. அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, எவ்விதத்திலுஞ் சத்தியம்பண்ணக்கூடாது, வானம் * தேவாசனமாயிருக்கிறபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது, பூமி பராபரனுடைய பாதபடியாயிருக்கிறபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது. * ஏசாயா ௬௬. ௧.

௩௫. எருசலேம் பெரிய இராசனுடைய நகரமாயிருக்கிறபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது.

௩௬. உன் சிரசின் ஒரோமயிரையும் நீ வெண்மையும், கறுப்புமாக்கத் திராணியில்லாதபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது.

௩௭. * உள்ளதை யுள்ளதென்றும், இல்லதை யில்லதென்றுஞ் சொல்லக்கடவீர்கள். இவைகளுக்கு மேற்பட்டது தீமையினாலுண்டாயிருக்கின்றது. * யாக்கோபு ௫. ௰௨.

௩௮. கண்ணுக்குப் பதிலாகக் கண்ணையும், பல்லுக்குப் பதிலாகப் பல்லையும், (வாங்கவேண்டுமென்று) * சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். * ௨. மோசே ௨௧. ௨௪; ௩. மோசே ௨௪. ௨௰.

௩௯. நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, * பொல்லாதவனோடே எதிர்த்து நிற்கக்கூடாது. † ஒருவன் உன்னுடைய வலது கன்னத்தில் அடித்தால் மறுகன்னத்தையும் அவனுக்குத் திருப்பிக்காட்டு, * வாக். ௨௰. ௨௨; † லூக்கா ௬. ௨௯.

௪௰. உன்னுடனே * வழக்காடி உன்னுடைய மேலங்கியை யெடுத்துக்கொள்ளவேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் வஸ்திரத்தையும் விட்டுவிடு. * ௧. கொரி. ௬. ௭.

௪௧. ஒருவன் உன்னையொரு காதவழி வரும்படியாகப் பலவந்தம்பண்ணினால் அவனோடே யிருகாதவழி கூடநடந்துபோ.

௪௨. * உன்னை வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு, உன்னிடத்திற் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணாதிருப்பாயாக. * லூக்கா ௬. ௩௰.

௪௩. * நீ பிறனில் அன்புவைத்து † உன் சத்துருவைப் பகைக்கக்கடவாயென்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். * ௩. மோசே ௰௯. ௰௮; † ௫. மோசே ௭. ௨; ௨௩. ௬.

௪௪. நான் உங்களுக்குச் சொல்லுகிறது, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா பொல்லாதவர்கள் மேலும், நல்லவர்கள் மேலுந் தமது சூரியனை உதிக்கவும், நீதியுள்ளவர்கள்மேலும், அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யவும்பண்ணுகிறார்.

௪௫. அப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரராயிருக்கும்படிக்கு உங்கள் * சத்துருக்களில் அன்புகூர்ந்து உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்து உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும், உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவுஞ் செபம்பண்ணுங்கள். * லூக்கா ௬. ௨௭, ௩௫; † லூக். ௨௩. ௨௪.

௪௬. அல்லாமலும், உங்களில் அன்புகூருகிறவர்கள்மேல்மாத்திரம் அன்பாயிருப்பீர்களானால் உங்களுக்கு என்னபலன்வரும், ஆயக்காரரும் அப்படியேசெய்கிறார்களல்லவோ.

௪௭. உங்கள் சகோதரரைமாத்திரம் வாழ்த்திக்கொள்வீர்களானால் அது பெரியசெய்கையாகுமா! அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்களல்லவோ.

௪௮. ஆகையால் பரமண்டலங்களிலிருக்கிற * உங்கள் பிதா பூரணசற்குணராயிருக்கிறதுபோல நீங்களும் பூரணசற்குணராயிருக்கக்கடவீர்கள். * கொலோ. ௩. ௰௨, ௰௪.

## ௬. அதிகாரம்.

[(௧) அப்பாலுங் கிறிஸ்து பர்வதத்தில் பிரசங்கம்பண்ணி, தருமத்தையும், (௫) செபத்தையும், (௰௪) நம்முடைய சகோதரர்களை மன்னிப்பதையும், (௰௬) உபவாசத்தையும், (௰௯) நம்முடைய பொக்கிசத்தைக் கூட்டிவைக்கவேண்டிய இடத்தையும், (௨௪) பராபரனுக்கும், லோகப்பொருளுக்கும் ஊழியஞ்செய்வதையுங் குறித்துச் சொல்லி, (௨௫) உலககாரியங்களுக்காகக் கவலையுள்ளவர்களாயிராமல், (௩௩) பராபரனுடைய இராசகியத்தைத் தேடும்படிக்கு உபதேசித்தது.]

நீங்கள் மனிதர்களாலே காணப்படும்பொருட்டாய் உங்கள் தருமத்தை அவர்களுக்கு முன்பாகச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள், செய்தால் பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவினிடத்திலே பலன்பெறுதிருப்பீர்கள்.

௨. ஆகையால், நீ தருமஞ்செய்கிறபொழுது மனிதர்களாற் புகழப்படுவதற்குச் செப ஆலயங்களிலும், வீதிகளிலுஞ்செய்கிறவஞ்சகரைப்போல நீ உனக்குமுன்பாகத் தா

ளை பூதபபணணககூடாது. அவர்கள தங
கள பலனை யடைநது தீர்நததெனறுமெய
யாகவே உஙகளுககுசசொலலுகிறேன.

௩. நீ தருமஞசெயகிறபொழுது உன தரு
மம் அநதரஙகமாயிருக்குமபடிககு உனவல
துகை செயகிறதை உனனிடதுகையறியா
திருக்கக்கடவது.

௪. அபபொழுது அநதரஙகமாயிருககிற
தைநோககுகிற உனபிதாதாமே * வெளிய
ரஙகமாய உனக்குபபலனளிப்பார். * லூக்
கா ௰௪. ௰௪.

௫. அனறியும நீ செபமபணணுகிறபொ
ழுது வஞசகரைபபோலிருககககூடாது,
அவர்கள மனிதர்களாற காணபபடுமபடிக
குச செப ஆலயஙகளிலேயும், வீதிகளின
சநதிகளிலேயும் நினறுகொணடு செபமப
ணணவிருமபுகிறார்கள, அவர்கள தஙகளப
லனையடைநது தீர்நததெனறு மெயயாக
வே யுஙகளுககுசசொலலுகிறேன.

௬. நீ செபமபணணுகிறபொழுது உன
வீட்டின அறைககுட்பிரவேசிதது அதினக
தவைப பூட்டினபினபு அநதரஙகததிலிருக
கிற உனபிதாவைநோககிச செபம்பணணு,
அபபொழுது அநதரஙகமாயிருககிறதை
நோககுகிற உன பிதா வெளியரஙகமாய
உனககுபபலனளிபபார்.

௭. அலலாமலும செபமபணணுகிறபொ
ழுது நீஙகள * அஞஞானிகளைபபோல வீ
ணாய வசனிககக்கூடாது, அவர்களதாஙகள
அதிகமாய வசனிததாற் கேட்கபபடுவோ
மெனறுநினைககிறார்கள. * ௧. இராசா ௰௮.
௨௬, ௨௯.

௮. அவர்களுக்கொபபாயச செயயாதிருங
கள, நீஙகள உஙகளபிதாவைநோககிவேண
டிககொளளுமுனனமே அவர் உஙகளுககு
வேணடுவதினனதெனறு அறிநதிருக்கிறாரே.

௯. ஆகையால, நீஙகள செபமபணணை
* வேணடுவதெபபடியெனில, பரமணடல
ஙகளிலிருககிற எஙகளபிதாவே, உமமுடை
ய நாமம பரிசுததமாயவணஙகபபடுவதாக.
* லூக். ௰௧. ௨, ௪.

௰. உமமுடைய இராசசியம வருவதாக,
உமமுடைய சித்தம பரமணடலத்திலே செ
யயபபடுகிறதுபோலப பூமியிலேயுஞ்செய
யபபடுவதாக.

௰௧. இனறைககு எஙகளுககு வேணடிய
ஆகாரததை எஙகளுககுததாரும.

௰௨. எஙகள கடனாளிகளுககு நாஙகள்மன
னிபபதுபோலத தேவரீரெஙகள் கடனகளை
மனனிததருளும.

௰௩. நாஙகள சோதனையிற பிரவேசியாத
படிசெயது தீமையினினறு எஙகளை இரட்
சிததுக்கொளளும, இராசசியமும, வலலமை
யும், மகிமையுமஉமககேயெனறெனறைககு
முணடாயிருககினறன ஆமென்னபதேயாம்.

௰௪. மனிதர்கள (உஙகளுககுச்)செயததப
பிதஙகளைமனனிபபீர்களானால, உஙகள பர
மபிதா உஙகளுககும் மனனிபபார்.

௰௫. மனிதர்கள (உஙகளுககு) செய்தநப
பிதஙகளை *மனனியாதிருபபீர்களாகில உங
களபிதா உஙகள தபபிதஙகளையும் மனனி
யாதிருபபார். * மத்தே. ௰௮. ௨௮, ௩௫.

௰௬. மேலும நீஙகள உபவாசமபணணு
ம்பொழுது வஞசகரைபபோலமுகம வாட
லாயிருககக்கூடாது, அவர்களஉபவாசமப
ணணுகிறது மனிதர்களாறகாணபபடுமபொ
ருட்டாயத தஙகளமுகஙகளை வாடபபண
ணுகிறார்கள, அவர்கள தஙகளபலனையடை
நது தீர்நததெனறு மெயயாகவே உஙகளுக
குசசொலலுகிறேன.

௰௭. நீ உபவாசிககுமபொழுது அநதஉப
வாசம் மனிதர்களுககுக காணபபடாமல
அநதரஙகததிலிருககிற உனபிதாவுக்கே கா
ணப்படுமபடிககு உனசிரசைத தயிலததாற
பூசி உனமுகததைக கழுவககடவாய.

௰௮. அபபொழுது அநதரஙகமாயிருககிற
தைநோககுகிற உனபிதா வெளியரஙகமா
யுனககுபபலன அளிபபார்.

௰௯. பூமியிலே நீஙகள உஙகளுககாகப
பொககிசஙகளைக கூட்டிவையாதிருஙகள,
அவவிடததிலே * பூசசியும், துருவும அவை
களைககெடுககும, திருடருங் கனனமிடடுத்
திருடுவார்கள். * யாககோ. ௫. ௧, ௩.

௨௰. * பரலோகததிலே உஙகளுககாகப
பொககிசஙகளைக கூட்டிவையுஙகள, அவ
விடததிலேபூசசியாவது, துருவாவதுஅவை
களைக்கெடுககிறதுமில்லை, அஙகேதிருடர்கள
னமிடடுததிருடுகிறதுமிலலை. * லூக். ௰௨.
௩௩; ௧. தீமோ. ௬. ௰௭, ௰௯.

௨௧. உஙகளபொககிசமெஙகேயோ அங
கே உஙகள இருதயமுமிருக்குமே.

௨௨. கணணனது சரீரததினவிளககாயிரு
ககினறது. ஆகையால, உனகணசொஸ்த
மாயிருநதால உனசரீரம் முழுவதுமவெளிச
சம அடைநதிருககும.

௨௩. உனகண வியாதியாயிருநதால உன
சரீரமமுழுவதும இருள அடைநதிருககும,
அபபடியிருகக, உனனிலுள்ளவெளிசசம
இருளாயிருநதால இருளேமிகவும் மிகுதி
யாயிருக்குமல்லவோ.

௨௪. * ஒருவன இரணடெசமானகளுககு
ஊழியஞ செயயமாட்டான. எனனததினா
லெனில, ஒருவனை அவனபகைதது மறற
வனைச சிநேகிபபான, அலலது ஒருவனைப
பறறிக்கொணடுமற்றவனையசடடைபண்ணு
வான, நீஙகளபராபரனுககும, உலகபபொ
ருளுககும ஊழியஞசெயயமாட்டீர்கள.
* லூக். ௰௬. ௰௩.

௨௫. ஆகையால, உஙகள சீவனுககாக
* எனனததைபபோசனஞ செயவோம,

என்னத்தைப் பானம் பண்ணுவோமென்றும், உங்கள் சரீரத்துக்காக என்னத்தை உடுப்போமென்றும் கவலைப்படாதிருங்களென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகாரத்திற்கு சீவனும், உடைக்குச் சரீரமும் அதிகமாயிருக்கிறதல்லவோ. * லூக். ௰உ. உஉ, ஙக; எபி. ௰ங. ரு; சங்கீ. ௱சரு. ௰ரு, ௰கூ.

உசு. ஆகாசத்துப் பறவைகளை நோக்கிப் பாருங்கள், அவைகள் விதைக்கிறதும், அறுக்கிறதும், களஞ்சியங்களிற் கட்டி வைக்கிறதுமில்லை, அவைகளுக்கும் உங்கள் பரமபிதா உணவை கொடுக்கிறார், அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவர்களல்லவா!

உஎ. அல்லாமலும், உங்களிலொருவன் கவலைப்படுகிறதினாலே தன் சரீர அளவுக்கு ஒரே முழத்தையுங் கூட்டுவானா! (மாட்டானே.)

உஅ. பின்னும் உடைகளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன! வெளியிலே லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிறவகையையுற்றுப்பாருங்கள், அவைகள் வருந்துகிறதுமில்லை, நூற்கிறதுமில்லை.

உகூ. அப்படியிருந்தும் மிகுந்த மகிமையுடைய சாலோமோனும் அவைகளிலொன்றைப்போலாகிலும் (அழகாய்) உடுக்கவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

ஙய. அப்படியிருக்க, அற்பவிசுவாசிகளே! இருநாள் வளருகிறதுமாய், மறுநாள் அடுப்பிற் போடப்படுகிறதுமாயிருக்கிற புல்லுக்குப் பராபரன் இவ்விதமாய் உடுத்துவிக்கிறதால் மிகவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவிப்பாரல்லவோ?

ஙக. ஆகையால், என்னத்தைப் போசனஞ் செய்வோமென்றும், என்னத்தைப் பானம்பண்ணுவோமென்றும், என்னத்தையுடுப்போமென்றும் நீங்கள் கவலைப்படாதிருங்கள், அப்படிப்பட்டவைகளையெல்லாம் அஞ்ஞானிகள் தேடுவார்கள்.

ஙஉ. உங்கள் பரமபிதா இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகளென்று அறிந்திருக்கிறார்.

ஙங. முதலாவது பராபரனுடைய இராச்சியத்தையும், அவருடைய நீதியையுந் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.

ஙச. ஆகையால், நாளைக்காகக் கவலைப்படாதிருங்கள், நாளைக்காக நாளைக்குத்தானே கவலையுண்டாகும் ஒவ்வொரு நாளைக்கு அதினதினுடைய வருத்தம் போதுமே.

## எ. அதிகாரம்.

[(க) கிறிஸ்து மற்றவர்களைக் குற்றமாய்த் தீர்ப்பதைக் கண்டித்து, (சு) பரிசுத்தமானவைகளை நாய்களுக்குப் போடக்கூடாதென்று சொல்லி, (எ) செபம்பண்ணவும், (௰௩) இடுக்கமான வாசல் வழியாய்ப் பிரவேசிக்கவும், (௰ரு) கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், (உக) வார்த்தையைக் கேட்கிறவர்களாய் மாத்திரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயிருக்கவும் (உச) (அப்படிச் செய்வது) கன்மலையின்மேல் வீடு கட்டுவதுபோலென்றும், (உசு) (அப்படிச் செய்யாமலிருப்பது) மணலின்மேல் வீடு கட்டுவதுபோலென்றும் உபதேசித்து, பர்வதத்தின்மேலே பண்ணின பிரசங்கத்தை முடித்தது.]

நீங்கள் (மற்றவர்களை) எண்ணுகிறபடியே அப்படி நீங்களும் எண்ணப்படுவீர்கள்.

உ. அல்லாமலும் நீங்கள் அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அளப்பார்கள்.

ங. ஆகையால், நீங்கள் (நியாயமின்றி ஒருவரையும்) குற்றவாளிகளென்றெண்ணாதிருங்கள், எண்ணினால் உங்களையும் அப்படியே எண்ணுவார்கள். மேலும் நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைப் பாராமற் சகோதரனுடைய கண்ணிலிருக்கிற சிராயைப் பார்க்கிறதென்ன!

ச. உத்திரமே உன் கண்ணிலிருக்கையில் நீ சகோதரனை நோக்கி, உன் கண்ணிலிருக்கிற சிராயை நான் எடுத்துப்போடுகிறேன் இடங்கொடு என்று நீ சொல்வதென்ன!

ரு. வஞ்சகனே, முதலாவது உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தையெடுத்துப்போடு, பின்பு சகோதரனுடைய கண்ணிலிருக்கிற சிராயையெடுத்துப்போட நன்றாய்ப்பார்ப்பாய்.

சு. * பரிசுத்தமானதை நீங்கள் † நாய்களுக்குக் கொடுக்கக்கூடாது, அல்லாமலும் உங்கள் முத்துக்களைப் பன்றிகளுக்குப் போடக்கூடாது, அப்படிச் செய்தால் அவைகள் அந்த முத்துக்களைத் தங்கள் கால்களால் மிதித்து பின்பு திரும்பிக்கொண்டு உங்களைப் பீறும். * க. கொரி. ௰. உக; † உ. பேதுரு உ. உஉ.

எ. வேண்டிக்கொள்ளுகிற எவனும் * வாங்கிக்கொள்ளுகிறான், தேடுகிறவன் கண்டடைகிறான். * எரே. உகூ. ௰உ, ௰ங.

அ. தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும், ஆகையால், வேண்டிக்கொள்ளுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும், தேடுங்கள் அப்பொழுது கண்டடைவீர்கள், தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.

கூ. உங்களிலெந்த மனிதனாகிலுந் தன்னிடத்தில் அப்பங்கேட்டுக்கொள்ளுகிற தன் மகனுக்குக் கல்லைக்கொடுப்பானா!

௰. மீனையவன் கேட்டுக்கொண்டால் அவனுக்குப் பாம்பைக்கொடுப்பானா!

௰க. ஆதலாற் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச்

செய்யும்படியறிந்திருக்க, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா தம்மைவேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு மிகவும், அதிகமாய் * நன்மைகளைக் கொடாமலிருப்பாரா.
* லூக்கா ௰௧. ௯, ௰௩.

௰௨. ஆனதினால் மனிதர்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறவைகளெவைகளோ அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள், இதுவே * நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிசனங்களுமாம்.
* உரோமர் ௰௩. ௰.

௰௩. கேட்டுக்குக்கொண்டுபோகிற வாசல் விரிவாயும், வழிவிசாலமாயுமிருக்கின்றன. அதின்வழியாயப்பிரவேசிக்கிறவர்கள் அநேகர். * லூக். ௰௩. ௨௪.

௰௪. ஜீவனுக்குக்கொண்டு போகிறவாசல் மிகவும் இடுக்கமாயும், வழி * நெருக்கமாயுமிருக்கின்றன. சிலர்மாத்திரமதைக் கண்டடைகிறார்கள். ஆதலால், நீங்கள் * இடுக்கமான வாசல்வழியாய்ப் பிரவேசியுங்கள்.
* அப். ௰௪. ௨௨.

௰௫. மேலும் * ஆட்டைப்போல உருவும், பீறுகிற ஓநாய்களைப்போல † மனதுமுடையவர்களாய் உங்களிடத்திற்குவருகிற ‡ கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் இடங்கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள்.
* உரோ. ௰௬. ௰௮; † ௨. கொரி. ௰௧. ௰௩. ௰௫; ‡ ௨. பேது. ௨. ௧.

௰௬. அவர்களுடைய கனிகளினாலே அவர்களையறிவீர்கள், முட்செடிகளில் திராட்சப்பழங்களையும், முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையும் பறிக்கிறார்களா!

௰௭. அப்படியே நல்லமரங்களெல்லாம் நல்லகனிகளைக்கொடுக்கும், கெட்டமரம்பொல்லாதகனிகளைக்கொடுக்கும்.

௰௮. நல்லமரம் பொல்லாதகனிகளையும், கெட்டமரம் நல்லகனிகளையுங் கொடுக்கமாட்டாது.

௰௯. * நல்லகனிகளைக்கொடாதமரங்களெல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலேபோடப்படும். * மத். ௩. ௰.

௨௰. ஆதலால், அவர்களுடைய கனிகளினாலே அவர்களையறிவீர்கள்.

௨௧. என்னைக் * கர்த்தாவே கர்த்தாவேயென்றுசொல்லுகிற எவனும் பரலோகஇராச்சியத்திற்பிரவேசிப்பதில்லை, பரமண்டலங்களிலேயிருக்கிற என்பிதாவினுடைய * சித்தத்தின்படிசெய்கிறவனே அதிற்பிரவேசிப்பான். * லூக. ௬. ௪௬; * யாக்கோ. ௧. ௨௨; உரோ. ௨. ௰௩.

௨௨. அந்நாளிலே அநேகர் என்னைநோக்கி, ஆ, கர்த்தாவே! கர்த்தாவே உமது நாமத்தினாலேநாங்கள் தீர்க்கதரிசனமுரைத்தோமல்லவோ? உமதுநாமத்தினாலேபசாசுகளைத்துரத்தினோமல்லவோ! உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச்செய்தோமல்லவோ என்பார்கள்.

௨௩. அப்பொழுது நான் அவர்களைநோக்கி, நான் ஒருக்காலுமுங்களையறியவில்லை. அக்கிரமக்காரரே! நீங்கள் * என்னைவிட்டுப்போங்களென்று அவர்களுக்கு அறிவிப்பேன். * மத். ௨௫. ௪௧.

௨௪. ஆகையால், * நான் சொல்லியவசனங்களைக்கேட்டு அவைகளின்படிசெய்கிறவனெவனோ அவனைத்தன்வீட்டைக் கன்மலையின்மேற்கட்டின புத்தியுள்ள மனிதனுக்கொப்பிடுவேன். * லூக. ௬. ௪௭, ௪௯.

௨௫. அந்தவீடு கன்மலையின்மேல் அஸ்திபாரம்போட்டிருந்தபடியால், பெருமழைசொரிந்தும், பெருவெள்ளம்வந்தும், காற்றுகளடித்து அந்தவீட்டின்மேல் மோதியும் அது விழவில்லை.

௨௬. நான் சொல்லியவசனங்களைக்கேட்டும் அவைகளின்படிசெய்யாதிருக்கிறவனெவனோ, அவன் தன்வீட்டைமணலின்மேற்கட்டினபுத்தியீனனுக்கொப்பாயிருப்பான்.

௨௭. பெருமழைசொரிந்துபெருவெள்ளம்வந்து காற்றுகளும் அடித்து அந்தவீட்டின்மேல் மோதிப்பொழுது அதுவிழுந்தது முழுவதும் இடிந்துபோயிற்றென்றார்.

௨௮. பின்பு நடந்ததென்னவெனில், இயேசுவானவர் இந்தவசனங்களைச்சொல்லிமுடித்தபொழுது, அவர்வேதபாரகரைப்போலல்ல,

௨௯. அதிகாரமுடையவரைப்போலப்போதித்தபடியினாலே சனங்கள் அவருடைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.

## ௮. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து குஷ்டரோகியைச் சுத்தமாக்கி, (௫) சேர்வைக்காரனுடைய வேலைக்காரனையும், (௰௪) பேதுருவினுடைய மாமியையும், (௰௬) மற்றநேகம்பிணியாளிகளையுங் குணமாக்கி, (௰௮) தம்மைப்பின்செல்லவேண்டிய விதத்தைக்காண்பித்து, (௨௩) கடலிலேகொந்தளிப்பை அமர்த்தி, (௨௮) பிசாசு பிடித்த இரண்டுபேர்களிலிருந்து பிசாசுகளைத்துரத்தி, (௩௧) அவைகளப்பன்றிகளுக்குள்போக உத்தாரங்கொடுத்தது.]

அவர் மலையிலிருந்திறங்கி வந்தபொழுது திரளான சனங்கள் அவரைப்பின்றொடர்ந்தார்கள்.

௨. அப்பொழுது * ஒரு குஷ்டரோகிவந்து அவருக்குமுன்பாக வணங்கி ஆண்டவரே! உமக்குச்சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகுமென்றான். * மாற்கு ௧. ௪௰, ௪௫.

௩. இயேசுவானவர் தமது கையைநீட்டி, அவனைத்தொட்டு எனக்குச் சித்தமுண்டு. சுத்தமாகு என்றார். உடனே குஷ்டரோகம்

நீங்கி அவன் சுத்தமானான். * ௩. மோசே. ௰௪. ௨. ௱

௪. அல்லாமலும் இயேசுவானவர் அவனை நோக்கி நீ இதை ஒருவனுக்குஞ் சொல்லாமலிருக்க நினை. அவர்களுக்குச் சாட்சியாகும்படிக்கு நீ * போய் ஆசாரியனுக்கு உன்னைக்காண்பித்து மோசே கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்து என்றார்.

௫. * இயேசுவானவர் கப்பர்நகூமபட்டினத்திற் பிரவேசித்தபின்பு நூற்றுப்பேருக்குச் சேர்வைக்காரனொருவன் அவரிடத்தில் வந்து அவரை நோக்கி, * லூக். ௭. ௧, ௰.

௬. ஆண்டவரே! என் வேலைக்காரன் திமிர்வாதமுள்ளவனாய் வீட்டிலே கிடந்து மிகவும் உபாதிப்படுகிறானென்று வேண்டிக்கொண்டான்.

௭. அவனுடனே இயேசுவானவர் நான் வந்து அவனைக் குணமாக்குவேனென்றார்.

௮. அதற்கு அந்தச்சேர்வைக்காரன் சொன்னது, ஆண்டவரே! நீர் என் வீட்டுக்குட் பிரவேசிப்பதற்கு நான் பாத்திரனல்ல,

௯. அல்லாமலும் நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குட்பட்டிருக்கிற சேவகரிலொருவனைப்போவென்னப் போகிறான், மற்றொருவனைவாவென்ன வருகிறான், எனக்கு அடிமையானவனை இதைச் செய்யென்னச் செய்கிறான். ஆகையால் நீர் ஒருவார்த்தைமாத்திரஞ்சொன்னாலே என் வேலைக்காரன்சொஸ்தம் அடைவானென்றான்.

௰. இயேசுவானவர் அதைக்கேட்டு ஆச்சரியப்பட்டுத் தமக்குப் பின்செல்லுகிறவர்களைநோக்கி, இஸ்ரவேலருக்குள்ளும் நானிப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௰௧. பின்னும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது; அநேகம்பேர் * கிழக்கிலும், மேற்கிலுமிருந்துவந்து பரலோக இராச்சியத்திலே ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடனேகூடப் பந்தியிலிருப்பார்கள். * ஏசாயா ௪௯. ௰௨.

௰௨. * இராச்சியத்தின் பிள்ளைகள் காரிருளிலே புறம்பாகத்தள்ளப்படுவார்கள். அங்கே அழுகையும், பற்கடிப்புமுண்டாயிருக்குமென்று சொன்னபின்பு, * மத்தேயு. ௨௧. ௪௩.

௰௩. அவர் அந்தத் தலைவனைநோக்கி, நீ போகலாம் உன் விசுவாசத்தின்படி உனக்காகக் கடவதென்றார். அந்நாழிகையிலே அவனுடையவேலைக்காரன் சொஸ்தமடைந்தான்.

௰௪. * இயேசுவானவர் பேதுருவின்வீட்டிலேவந்து அவனுடையமாமி சுரமாய்க்கிடக்கிறதைக்கண்டு, * மாற்கு ௧. ௨௯, ௩௪.

௰௫. அவள்கையைத்தொட்டார். உடனே சுரம் அவளைவிட்டு நீங்கிற்று. அவள் எழுந்திருந்து அவர்களுக்கூழியஞ்செய்தாள்.

௰௬. அஸ்தமனமானபொழுது, பசாசுபிடித்திருந்த அநேகரை அவரிடத்துக்குக் கொண்டுவந்தார்கள். அவர் நமது பெலவீனங்களையேற்றுக்கொண்டு நம்முடைய நோய்களைச் சுமந்தாரென்று தீர்க்கதரிசியாகிய * ஏசாயாசொன்னது நிறைவேறும்படிக்கு, * ஏசாயா ௫௩. ௪.

௰௭. அவர் அந்த ஆவிகளை ஒருவார்த்தையினாலே துரத்திப் பிணியாளிகளெல்லாரையுஞ் சுகமாக்கினார்.

௰௮. பின்பு * இயேசுவானவர் அநேகசனங்கள் தம்மைச்சூழ்ந்திருக்கக்கண்டு, அக்கரைக்குப்போகக் கட்டளையிட்டார். * லூக்கா ௯. ௫௭, ௬௰.

௰௯. அப்பொழுது வேதபாரகனொருவன் வந்து அவரைநோக்கி, போதகரே, நீர் எங்கே போனாலும் உம்மைப் பின்பற்றுவேனென்றான்.

௨௰. அவனுடனே இயேசுவானவர் சொன்னது, நரிகளுக்குக் குழிகளும், ஆகாசத்துப் பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு. * மனிதனுடைய குமாரனோ தலைசாய்க்கிறதற்கு இடமில்லாதவனாயிருக்கிறனென்றார். * ௨. கொரி. ௮. ௯; சகரி. ௯. ௯.

௨௧. பின்னும் அவருடைய சீஷர்களிலொருவன் அவரைநோக்கி, ஆண்டவரே முன்பு நான்போய் என்தகப்பனை அடக்கம்பண்ணுவதற்கு உத்தரவுதாருமென்றான்.

௨௨. அவனுடனே இயேசுவானவர்சொன்னது, * மரித்தோர் தங்களிடத்தில் மரித்தவர்களை அடக்கம்பண்ணட்டும், நீ என்னைப் பின்பற்றிவா என்றார். * எபேசி. ௨. ௧; ௧. தீமோத். ௫. ௬; அறி. ௩. ௧.

௨௩. பின்பு * அவர் படவில் ஏறுகிறபொழுது சீஷர்கள் அவர்பின்சென்று ஏறினார்கள். * மாற்கு ௪. ௩௫, ௪௧; லூக். ௮. ௨௨, ௨௫.

௨௪. அப்பொழுது படவு அலைகளினாலே மூடப்படத்தக்கதாய்க் கடலிலே பெருங்காற்றுண்டாயிற்று, அவரோ நித்திரைபண்ணினார்.

௨௫. அப்பொழுது அவருடையசீஷர்கள் வந்து அவரை * யெழுப்பி ஆண்டவரே, எங்களை இரட்சிக்கவேண்டும், கெட்டுப்போகிறோமேயென்றார்கள். * சங்கீ. ௩௫. ௨௩; ௪௪. ௨௪.

௨௬. அவர்களை அவர்நோக்கி, ஆ, அற்ப விசுவாசிகளே, ஏன் பயப்படுகிறீர்களென்று சொல்லி எழுந்து காற்றுகளையும், கடலையும் அதட்டினார், உடனேமிகுந்த அமைதலுண்டாயிற்று.

௨௭. அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டுக் காற்றுகளும்,கடலும் இவருக்குக்கீழ்ப்படிய

ததககதாக இவர் எபபடிபபடடவரோவெனறுசொனனூர்கள்.

௨௮. பினபு * அவர் அககரையிலே கெர்கேசேனர் தேசததிலே சேர்நதார், அவவழியாய் மறறொருவரும நடவாமலிருககததககதாக மிகுநத துஷடராயபபசாசுபிடிதத மனிதர்கள இரணடுபேர் பிரேதக கலலறைகளிலிருநது புறபபடடு அவருககு எதிராக வநதது. * மாறகு ரு. ௧, ௨௰; லூக. ௮. ௨௯, ௩௯.

௨௯. ஆ, இயேசுவே, பராபரனுடைய குமாரனே, எஙகளுககும, உமககுமெனன * காலமவருமுனனமே எஙகளை வேதனைபபடுததுமபடிககுஇஙகே வநதீரோவெனறு கூபபிடடார்கள. * ௨. பேதுரு ௨. ௪.

௩௰. அலலாமலும அவர்களுககுச சறறே தூரமாய் அநேகமபனறிகளகூடடமாயமேயநதுகொணடிருநதன.

௩௧. அபபொழுது பசாசுககள நீர் எஙகளைததுரததிவீரானால நாஙகள அநதபபனறிககூடடததிற பிரவேசிககும்படிககு உததரவுகொடுமெனறு அவரைவேணடிககொணடார்கள.

௩௨. போஙகளெனறு அவர்களுக்குச்சொனனூர் உடனே அவர்கள புறபபடடுபபனறிககூடடததிற பிரவேசிததார்கள. அபபொழுது பனறிகளெலலாம உயர்நதமேடடிலிருந்து கடலிறபாயநது சலததிலேமாணடுபோயின.

௩௩. அவைகளை மேயததவர்களோ ஒடிபபடடினத்திறசென றுஎல்லாவற்றையும்,பசாசுபிடிததிருநதவர்களுடைய சஙகதியையும அறிவிததார்கள.

௩௪. அபபொழுது படடினததாரெல்லாரும இயேசுவுககு எதிராகபபுறபபடடு அவரைககணடு தஙகளஎலலைகளைவிடடுபபோகுமபடிககு அவரைவேணடிககொணடார்கள்.

## ௯. அதிகாரம்.

[(௨) கிறிஸ்துத் திமிர்வாதககாரனொருவனை சசொஸ்தமாககி, (௯) ஆயததுறையிலிருநத மததேயுவையழைதது, (௰) ஆயககாரரோடும, பாவிகளோடும புசிதது, (௰௪) தமமுடைய சீஷர்கள உபவாசமபணணுததைககுறிதது நியாயஞசொலலி, (௨௰) பெருமபாடுளள ஒருஸதிரியை ஆரோககியமாககி, (௨௩) யாவீருடைய மகளை மரணததினினறெழுபபி, (௨௭) இரணடுகுருடருககுபபார்வைகொடுதது, (௨௮) பிசாசுபிடிதத ஒரு ஊமையனைககுணமாககி, (௩௯) குமபுகளபேரில மனதுருகினது.]

அபபொழுது * அவர் படவிலேறி இககரைபபடடுத தமதுபபடடினததிலவநதார். * மாறகு ௨. ௧, ௰௨; லூக. ரு. ௰௭, ௨௯.

௨. அஙகேபடுககையினமேறகிடநத திமிர்வாதககாரனை யவரிடததுககுககொணடுவந்தார்கள. இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசததைககணடு திமிர்வாதககாரனை நோககி, மகனே, திடமாயிரு. உன பாவஙகள மனனிககப்படடனவெனறூர்.

௩. அஙகேயிருநத வேதபாரகரிற சிலர் இவன தேவதூஷணஞ்சொலலுகிறானெனறு எணணிககொணடார்கள.

௪. இயேசுவானவர் அவர்களுடைய நினைவுகளையறிநது நீஙகள உஙகளிருதயஙகளிற பொலலாஙகானவைகளைநினைககிறதெனன?

௫. உன பாவஙகள மனனிககபபடடனவெனறு சொலலுகிறதோ, எழுநதிருநது நடவெனறுசொலலுகிறதோ,

௬. எது எளிது! மனிதனுடையகுமாரன பூமியிற பாவஙகளை மனனிககிறதறகு அதிகாரமுடையவனென்பதை நீங்கள் அறியுமபடிககு அவர் திமிர்வாதககாரனைநோககி, நீயெழுநதிருநது * உனபடுக்கையையெடுத்துக்கொணடு உனவீடடுககுபபோவெனறூர். * யோவா. ரு. ௮.

௭. உடனே அவனெழுநது தன வீடடுககுபபோனூன.

௮. அதைககணட சனஙகள ஆச்சரியபபடடு மனிதருககுஇபபடிபபடட அதிகாரததைககொடுததபராபரனைபபுகழநதார்கள.

௯. இயேசுவானவர் அவவிடமவிடடுப புறபபடடுபபோகையில, * ஆயததுறையிலுககாநதிருநத ஒரு மனிதனைககணடார். அவனுககு மததேயுவெனறுபேர். அவனை அவர்நோககி, எனனைப பினபறறிவாவெனறூர். அவனெழுநதிருநது அவர் பினசெனறுன. * மாறகு ௨. ௰௪, ௨௨; லூக. ரு. ௨௭, ௩௯.

௰. பினபு அவர்வீடடிலே போசனபநதியிருககையில, அநேகம ஆயககாரரும, பாவிகளுமவநது இயேசுவுடனேயும,அவருடைய சீஷர்களுடனேயுஙகூடடப பநதியிருநதார்கள.

௰௧. பரிசேயர் அதைககணடு அவருடைய சீஷர்களைநோககி, எனனததினாலே உஙகள போதகர் ஆயககாரரோடும, பாவிகளோடும போசனமபணணுகிறாரெனறூர்கள.

௰௨. இயேசுவானவர் அதைக்கேடடு அவர்களைநோககி, சொஸதமுளளவர்களுககு வயித்தியனவேணடுவதிலலை, வியாதியுளளவர்களுககே அவனவேணடும.

௰௩. மேலும * பலியிலுமஇரக்கத்தையிருமபுகிறேனெனகிற (வாக்கியததினகருத்தை) நீஙகளபோயப் படிததுககொளளுஙகள, அநதபபடி நான நீதியான்களையல்ல,† பாவிகளையேமனநதிருமபுதறகு அழைககவநதேனெனறூர். * ஓசெ. ௬. ௬; மிகா ௬. ௭, ௮; † ௧. திமோ. ௧. ௰ரு.

௰௪. அந்நேரத்திலேயோவானுடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து, நாங்களும், பரிசேயரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணியிருக்கிறோம், உம்முடைய சீஷர்களோ உபவாசம்பண்ணாமலிருக்கிறார்கள், அதேனென்றார்கள்.

௰௫. இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது, கலியாணத்துக்கு வந்த மனிதர்கள் * மணவாளன் தங்களோடிருக்கையில் துயரப்படுவார்களா? மணவாளன் அவர்களைவிட்டு நீக்கப்படுங்காலம் வரும், அப்பொழுது அவர்கள் உபவாசம்பண்ணுவார்கள்.

* யோவா. ௩. ௨௯.

௰௬. ஒருவனும் கோடித்துணியைப் பழைய வஸ்திரத்தின்மேல் போட்டிணைக்கமாட்டான், இணைத்தால் அதிலிணைத்த துண்டு அவ்வஸ்திரத்திலேயிட்டுப்போக அதிக பொத்தலுண்டாகும்.

௰௭. மேலும் திராட்சப்பழங்களின் புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்க்கமாட்டார்கள், வார்த்தால் துருத்திகள் கிழிந்துபோகும், இரசமும் சிந்திப்போகும், துருத்திகளுங் கெட்டுப்போகும், புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவைத்தால் அப்பொழுது இரண்டும் பத்திரப்பட்டிருக்குமென்றார்.

௰௮. அவரிவைகளை அவர்களோடே பேசுகையில், * தலைவனொருவன் வந்து வணக்கமாயவிழுந்து அவரை நோக்கி, இந்நேரத்திலே என்மகள் இறந்துபோனாள், நீர் வந்து அவள்மேல் உம்முடைய கையை வையும் அப்பொழுது பிழைப்பாள் என்றான். * மாற்கு ௫. ௨௨, ௪௩; லூக்கா ௮. ௪௧, ௫௬.

௰௯. இயேசுவானவர் எழுந்திருந்து தம்முடைய சீஷர்களோடுகூட அவன் பின்னே போனார்.

௨௰. அவர் போகையில் பன்னிரண்டுவருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ வந்து,

௨௧. இவருடைய * வஸ்திரத்தைத் தொட்டமாத்திரமே சொஸ்தம் அடையலாமென்று தன் உள்ளத்திலே எண்ணி அவருக்குப் பின்னாலே போய் அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள். * மத். ௰௪. ௩௬.

௨௨. அப்பொழுது இயேசுவானவர் திரும்பி அவளை நோக்கி, மகளே, திடமாயிரு உன் விசுவாசத்தினாலே உனக்குச் சுகமுண்டாயிற்றென்றார், அந்நேரமே அந்த ஸ்திரீ சொஸ்தமடைந்தாள்.

௨௩. பின்பு இயேசுவானவர் அந்தத் தலைவனுடைய வீட்டிற் சேர்ந்து தாரை யூதுகிறவர்களையும், இரைகிற சனங்களையுங் கண்டு,

௨௪. அவர்களை நோக்கி, வெளியே போங்கள் இந்தப் பெண் இறந்துபோகவில்லை * நித்திரைபண்ணுகிறாளென்றார், அவர்கள் அவரை நோக்கி நகைத்தார்கள். * யோ. ௰௧. ௰௧.

௨௫. சனங்கள் வெளியே துரத்தப்பட்டபின்பு அவர் உள்ளே பிரவேசித்து அந்தப் பெண்ணின் கையைப் பிடித்தார், உடனே அவள் எழுந்திருந்தாள்.

௨௬. இந்தச் செய்கையினாலே அவருடைய கீர்த்தி அந்தத் தேசத்திலெங்கும் பிரபலமாயிற்று.

௨௭. இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் போகையில் குருடரிருவர் அவர் பின்னே சென்று, ஆ, தாவீதின் குமாரனே, எங்களுக்கிரங்குமென்று கூப்பிட்டார்கள்.

௨௮. அவர் வீட்டிலே வந்தபின்பு அந்தக் குருடர் அவரிடத்துக்கு வந்தார்கள், இயேசுவானவர் அவர்களை நோக்கி, இப்படிச் செய்ய எனக்கு வல்லமையுண்டென்று விசுவாசிக்கிறீர்களோவென்றார், ஆண்டவரே, விசுவாசிக்கிறோமென்றார்கள்.

௨௯. அப்பொழுது அவர் அவர்களுடைய கண்களைத் தொட்டு * உங்கள் விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கடவதென்றார்.

* மத்தே. ௮. ௰௩.

௩௰. உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன, பின்பு இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்களிதை ஒருவனுக்கும் அறிவிக்கவேண்டாமென்று கட்டளையிட்டார்.

௩௧. அவர்களோ புறப்பட்டு அந்தத் தேசத்திலெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௩௨. அவர்கள் புறப்பட்டுப்போகையில், பசாசுபிடித்திருந்த ஊமையனை அவரிடத்துக்குக் கொண்டுவந்தார்கள்.

௩௩. பசாசு துரத்தப்பட்டபின்பு ஊமையன் பேசினான், சனங்கள் ஆச்சரியப்பட்டு இப்படியாக இஸ்ரவேலருக்குள்ளே ஒருக்காலுங் காணப்பட்டதில்லையென்றார்கள்.

௩௪. பரிசேயர் இவன் * பசாசுகளுடைய தலைவனாலே பசாசுகளைத் துரத்துகிறானென்றார்கள். * மத்தேயு ௰௨. ௨௪.

௩௫. பின்பு இயேசுவானவர் சகல பட்டணங்களையும், கிராமங்களையுஞ் சுற்றி நடந்து செப ஆலயங்களிலே போதகம்பண்ணி இராச்சியத்தைக் குறித்த சுவிசேஷத்தைப் பிரசங்கித்துச் சனங்களுக்குண்டான எந்த வியாதியையும், எந்த நோயையும் நீக்கி அவர்களைக் குணமாக்கினார்.

௩௬. அப்பொழுது அவர் மிகுந்த சனங்களைப் பார்த்து * மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல அவர்கள் சோர்ந்துபோய்ச் சிதறப்பட்டவர்களாயிருந்தபடியால், அவர்களைக் குறித்து மிகவும் மனதுருக்கமுடையவராகி,

௩௭. தம்முடைய சீஷர்களை நோக்கி, † அறுப்பு மிகுதியாகவேயிருக்கின்றது, வேலையாட்கள் கொஞ்சமாத்திரமிருக்கிறார்கள். * சகரி. ௰. ௨; மாற். ௬. ௩௪; † லூக்கா ௰. ௨; யோவா. ௪. ௩௫.

௩௭. ஆதலால் அறுப்புக்கு எசமானதமது அறுப்புக்கு வேலையாள்களை அனுப்பவேண்டுமென்று அவரை வேண்டிக்கொள்ளுங்களென்றார்.

## ௰. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத் தமமுடைய பன்னிரண்டு அப்போஸ்தலர்களுக்கும் அற்புதங்களைச் செய்யத்தக்க வல்லமையையளித்தது, (௫) அவர்களுக்கு அதிகாரங்கொடுத்து அவர்களைப்படிப்பித்தது, (௰௬) அவர்களுக்கு வரப்போகிற துன்பங்களுக்கடுத்த ஆறுதலைச் சொல்லி, (௪௰) அவர்களையேற்றுக்கொள்ளுகிறவர்களுக்கு ஆசீர்வாதத்தை வாக்குத்தத்தம்பண்ணி, அவர்களை அனுப்பினது.]

அப்பொழுது * அவர் தமமுடைய பன்னிரண்டு சீஷர்களையுந் தம்மிடத்தில் அழைத்து அசுத்தமான ஆவிகளைத் துரத்தவும், சகலவிதமான வியாதிகளையும், நோய்களையும் நீக்கவும் அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார். * மாற். ௩. ௭; ௰௩. ௰; லூக்கா ௯. ௧, ௨.

௨. அந்தப் பன்னிரண்டு அப்போஸ்தலர்களின் * நாமங்களென்னவெனில், முந்தினவனாகிய பேதுருவென்னப்பட்ட சீமோன், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயா, செபெதேயுவின் குமாரன் யாக்கோபு, அவனுடைய சகோதரன் யோவான். * அப். ௧. ௰௩.

௩. பிலிப்பு, பருத்தொலோமேயு, தோமா, ஆயக்காரனும் மத்தேயு, அல்பேயின் குமாரனாகிய யாக்கோபு, ததேயுவென்னும் மறுநாமமுள்ள லெபேயு.

௪. கானானாகிய சீமோன், இயேசுவைக் காட்டிக்கொடுத்தவனான யூதாஸ்காரியோத்து என்னப்பட்டவர்களே.

௫. இயேசுவானவர் அந்தப் பன்னிருவரையும் அனுப்ப அவர்களுக்குக் கட்டளையிட்டுச் சொன்னதாவது, * நீங்கள் புறத்தேசத்தாரிடத்துக்குப் போகாமலும், * அப். ௰௩. ௪௬.

௬. * சமாரியருடைய பட்டினங்களிற் பிரவேசியாமலுங் காணாமற்போன ஆடுகளாயிருக்கிற † இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்துக்குப் புறப்பட்டுப்போய், * ௨. இராசா ௰௭. ௨௪; † மத்தே. ௰௫. ௨௪.

௭. * பரலோக இராச்சியம் சமீபமாய்வந்ததென்று கூறி, * மத்தே. ௩. ௨; மத்தே ௪. ௰௭.

௮. வியாதிப்பட்டவர்களைச் சுகமாக்கிக் குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்ணி மரித்தோரை யெழுப்பிப் பசாசுகளைத் துரத்துங்கள், நீங்கள் * இலவசமாய்ப்பெற்றுக்கொண்டீர்கள், இலவசமாய்க்கொடுங்கள். * அப்போ. ௮. ௰௮, ௨௰; ௧. பேதுரு ௫. ௨.

௯. நீங்கள் கச்சைகளிற் * பொன்னையாவது, வெள்ளியையாவது, செம்பையாவது, வழிக்குப் பையையாவது, இரண்டங்கிகளையாவது, பாதரட்சைகளையாவது, தடியையாவது உங்களுக்காகத் தேடிவைக்கவேண்டாம். * லூக். ௨௨. ௩௫, ௩௬.

௰. * வேலைசெய்கிறவன் தனக்கு வேண்டிய ஆகாரத்தைப்பெறும்படிக்குப் பாத்திரவானாயிருக்கிறானே. * லூக். ௰. ௭; ௧. தீமோ. ௫. ௰௭, ௰௮.

௰௧. அல்லாமலும் எந்தப்பட்டினத்திலும், கிராமத்திலும் நீங்கள் பிரவேசிக்கும்பொழுது, அதிலேயிருக்கிற பாத்திரவான் இன்னானென்று விசாரித்துக்கொண்டு நீங்கள் புறப்படுமளவும் அவனிடத்திலிருங்கள்.

௰௨. அந்த வீட்டுக்குட் பிரவேசிக்கிறபொழுது நீங்கள் அதிலிருக்கிறவர்களை வாழ்த்திக்கொள்ளுங்கள்.

௰௩. அந்தக் குடும்பத்தார் பாத்திரவான்களாயிருந்தால் நீங்கள் அவர்களுக்குச் சொன்ன சமாதானம் அவர்களைச் சேரக்கடவது; பாத்திரவான்களல்லாதிருந்தால், அந்த வாழ்த்துதல் உங்களிடமாய்த் திரும்பக்கடவது.

௰௪. எங்கேயாகிலும் அவர்கள் உங்களை அங்கிகரித்துக்கொள்ளாமலும், உங்கள் வசனங்களுக்குச் செவிகொடாமலுமிருந்தால், நீங்கள் அந்த வீட்டையாவது, பட்டினத்தையாவது விட்டுப் புறப்படுகையில் உங்கள் கால்களிலுள்ள தூளை உதறிப்போடுங்கள்.

௰௫. * நியாயத்தீர்ப்பு நாளிலே சொதோம் கொமோரா தேசத்தைப்பார்க்கிலும், அந்தப் பட்டினத்துக்கு அதிகத் தண்டனை கிடைக்குமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். * மத்தே. ௰௧. ௨௪.

௰௬. பாருங்கள் * ஆடுகளை ஓநாய்களுக்குள்ளே (அனுப்புகிறதுபோல) உங்களை அனுப்புகிறேன். ஆகையால், நீங்கள் பாம்புகளைப்போல விவேகமுள்ளவர்களாயும், புறாக்களைப்போலக் கபடமில்லாதவர்களாயுமிருக்கவேண்டும். * ௧. சாமுவேல் ௨௪. ௰௨; உரோ. ௰௬. ௰௯.

௰௭. அப்படியே நீங்கள் மனிதர்களிடத்திற் சாவதானமாயிருங்கள், என்னத்தினாலெனில் உங்களைப் பெரியசங்கத்தாருக்கு * ஒப்புக்கொடுத்து, தங்கள் ஆலயங்களிலே உங்களைவாரினால் அடிப்பார்கள். * மத்தேயு ௨௪. ௯.

௰௮. என்னிமித்தம் நீங்கள் துரைகளிடத்துக்கும், இராசாக்களிடத்துக்குங் கொண்டுபோகப்பட்டு அவர்களுக்கும், புறத்தேசத்தாருக்கும் முன்பாகச் சாட்சிகளாயிருப்பீர்கள்.

௰௯. அவர்கள் உங்களை ஒப்புக்கொடுக்கும்பொழுது நீங்கள் பேசவேண்டியது அந்

நேரத்திலே உங்களுக்கு அருளிச்செய்யப்படும். ஆகையால் * எப்படி எதைப்பேசுவோமென்று கவலைப்படாதிருங்கள்.
* யாத்ர. ௰௩. ௰௨.

௨௰. பேசுகிறவர்கள் நீங்களல்ல, * உங்கள் பிதாவின் ஆவியானவர் உங்களிலிருந்து பேசுகிறவர். * ௨. சாமு. ௨௩. ௨.

௨௧. அல்லாமலும் சகோதரன் தன் சகோதரனையும், தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்துக்கொப்புக்கொடுப்பார்கள், தாய் தகப்பன்மாரைப் பிள்ளைகள் விரோதித்து அவர்களையுங் கொலை செய்யும்படிக்குச் செய்விப்பார்கள்.

௨௨. என்னுடைய நாமத்தினிமித்தம் நீங்கள் எல்லாராலும் பகைக்கப்படுவீர்கள், ஆகிலும் * முடிவு பரியந்தம் நிலைத்திருக்கிறவனே இரட்சிக்கப்படுவான். * அதி. ௨. ௰.

௨௩. அல்லாமலும் மனிதனுடைய குமாரன் வருமளவுக்கும் நீங்கள் இஸ்ரவேலருடைய பட்டினங்களையெல்லாம் கடந்து போய் வரமாட்டீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன், ஆதலால் ஒரு பட்டினத்திலே உங்களைத் துன்பப்படுத்தினால் மறுபட்டினத்துக்கு ஓடிப்போங்கள்.

௨௪. சீஷனானவன் போதகனிலும், அடிமைப்பட்டவன் தன் எசமானிலும் மேற்பட்டவர்களல்ல,

௨௫. சீஷன் தன் போதகனைப்போலவும், அடிமைப்பட்டவன் தன் எசமானைப்போலவுமிருக்கிறது அவர்களுக்குப் போதுமே. * வீட்டெசமானைப் பெயெல்செபூலென்று அவர்கள் சொல்வார்களானால் அவனுடைய வீட்டாரை அதிகமாய் அப்படிச் சொல்வார்களல்லவா! ஆதலால் அவர்களுக்குப் பயப்படாதிருப்பீர்களாக. * மத்தே. ௧௨. ௨௪.

௨௬. வெளியாக்கப்படாத மறைபொருளில்லை. அறியப்படாத இரகசியமுமில்லை.

௨௭. நான் உங்களுக்கு இருளிலே சொல்லுகிறதை நீங்கள் வெளிச்சத்திலே சொல்லுங்கள். நீங்கள் இரகசியமாய்க் கேட்கிறதை மேடைகளிலிருந்து பிரசித்தஞ்செய்யுங்கள்.

௨௮. அல்லாமலும் ஆத்துமாவைக் கொலை செய்யத் திராணியில்லாமற் சரீரத்தைமாத்திரங் கொலைசெய்கிறவர்களுக்கு நீங்கள் பயப்படவேண்டாம். ஆத்துமாவையும், சரீரத்தையும் நரகத்திலே கெடுக்கவல்லவருக்குப் பயப்படுங்கள்.

௨௯. ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்களல்லவோ, ஆகிலும் உங்கள் பிதாவின் உத்தரவில்லாமல் அவைகளில் ஒன்றுந் தரையிலே விழாது.

௩௰. அல்லாமலும் உங்கள் தலையின் மயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்கிறது.

௩௧. ஆதலாற் பயப்படாதிருங்கள். அநேகம் அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும் நீங்கள் மேன்மையாயிருக்கிறீர்கள்.

௩௨. அப்படியிருக்க * மனிதர்களுக்கு முன்பாக என்னை அறிக்கைபண்ணுகிறவனெவனோ, அவனை நானும் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாமுன்பாக அறிக்கைபண்ணுவேன். * அறி. ௩. ௫.

௩௩. மனிதர் முன்பாக * என்னை மறுதலிக்கிறவனெவனோ அவனை நானும் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவுக்கு முன்பாக மறுதலிப்பேன். * மாற்கு. ௮ ௩௮; ௨. தீமோ. ௨. ௰௨.

௩௪. பூமியின்மேற் * சமாதானத்தை வரப்பண்ண வந்தேனென்றெண்ணிக்கொள்ளாதிருங்கள், சமாதானத்தையல்ல சண்டையை வரப்பண்ண வந்தேன். * லூக்கா. ௰௨. ௫௧, ௫௩.

௩௫. எப்படியெனில், குமாரன் தன் தகப்பனையும், மகள் தன் தாயையும், மருமகள் தன் * மாமியையும் விட்டுப் பிரிந்துபோகப்பண்ண வந்தேன். * மீகா. ௭. ௬.

௩௬. அப்படி ஒரு மனிதனுடைய குடும்பத்தாரே அவனுக்குச் சத்துருக்களாயிருப்பார்கள்.

௩௭. * என்னிலும் தகப்பனையாவது, தாயையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப் பாத்திரனல்ல, என்னிலும் மகனையாவது, மகளையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப் பாத்திரனல்ல. * லூக். ௰௪. ௨௬.

௩௮. அல்லாமலுந் தன் சிலுவையை யெடுத்துக்கொண்டு என்பின்னே செல்லாதவன் எனக்குப் பாத்திரனல்ல.

௩௯. தன் சீவனைக் காக்கிறவன் அதை யிழந்துபோவான், என்னிமித்தந் தன் சீவனை யிழந்துபோகிறவன் அதைக் காப்பான்.

௪௰. உங்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் * என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறான், என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைச் சேர்த்துக்கொள்ளுகிறான். * யோவா. ௰௩. ௨௰.

௪௧. தீர்க்கதரிசியென்கிற நாமத்தினிமித்தம் ஒரு தீர்க்கதரிசியை யேற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய பலனையடைவான், நீதிமானென்கிற நாமத்தினிமித்தம் நீதிமானையேற்றுக்கொள்ளுகிறவன் நீதிமானுக்குரிய பலனையடைவான்.

௪௨. * இந்தச் சிறியவர்களிலொருவன் சீஷனாயிருக்கிறதினிமித்தம் அவனுக்கு ஒரு கலயந் தண்ணீர்மாத்திரந் தாகத்துக்குக் கொடுக்கிறவன் தன் பலனை யிழந்துபோகானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார். * மத். ௨௫. ௪௰; மாற். ௯. ௪௧; எபிரே. ௬. ௰.

## ௰௧. அதிகாரம்.

[(௨) யோவான் தன்னுடைய சீஷர்களைக் கிறிஸ்துவண்டைக்கு அனுப்பினது. (௭) யோவானைக்குறித்துக் கிறிஸ்துப்பகர்ந்தசாட்சி (௰௬) யோவானையும், கிறிஸ்துவையும்குறித்த சனங்களுடைய தாற்பரியம். (௨௰) கோருசின், பெத்சாயிதா, கப்பர்நாகூம் என்கிற பட்டணங்களுடைய நன்றியறியாமையையும், குணப்படாமையையுங்குறித்துக் கிறிஸ்துக்கண்டித்தது. (௨௫) சுவிசேஷத்தைப் பேதைமையுள்ளவர்களுக்கு அறிவிக்கிறதிலே தோன்றுகிற தம்முடைய பிதாவின் ஞானத்தைப் புகழ்ந்து, (௨௮) பாவச்சுமையை உணர்ந்தவர்களையாவரையுந் தம்மிடத்தில்வரும்படி அழைத்தது.]

இயேசுவானவர் தம்முடைய பன்னிரண்டு சீஷருக்குங் கட்டளைகொடுத்து முடித்தபின்பு அவர்களுடைய பட்டணங்களிலே உபதேசம்பண்ணிப் பிரசங்கிக்கும்படிக்கு அவ்விடம்விட்டுப்புறப்பட்டார்.

௨. அத்தருணத்திலே காவலிலிருந்த * யோவான் கிறிஸ்துவின் கிரியைகளைக்கேள்விப்பட்டுத் தன் சீஷரில் இரண்டுபேரை அழைத்து, * லூக்கா ௭. ௰௮, ௩௫.

௩. நீங்கள்போய் அவரைநோக்கி, * வருகிறவர் நீர்தாமோ, அல்லது, வேறொருவர் வரக்காத்திருக்கவேண்டுமோவென்றுகேளுங்களென்றுசொன்னான். * ௫. மோசே ௰௮. ௰௫.

௪. அவர்கள் அப்படியேவந்து கேட்டபொழுது இயேசுவானவர் அவர்களுக்குமாறுத்தரமாகச்சொன்னதாவது; நீங்கள் கேட்டுங் கண்டுமிருக்கிறவைகளை யோவானுக்குப்போய் அறிவியுங்கள்.

௫. என்னவெனில், என்னாலே * குருடர்பார்வையடைகிறார்கள், சப்பாணிகள் நடக்கிறார்கள், குஷ்டரோகிகள் சுத்தமடைகிறார்கள், செவிடர்கேட்கிறார்கள், மரித்தோர் எழுந்திருக்கிறார்கள், † எளியவர்களுக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகின்றது.
* ஏசா. ௩௫. ௫, ௬; † ஏசா. ௬௧. ௧.

௬. அல்லாமலும் என்னைக்குறித்து இடறலடையாதிருக்கிறவன் பாக்கியவானென்றுசொல்லி, அவர்களை யனுப்பினார்.

௭. அவர்கள் போனபின்பு இயேசுவானவர் சனங்களைநோக்கி, யோவானைக்குறித்துச்சொன்னதாவது; நீங்கள் வனாந்தரத்திலே எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள், காற்றிலே அடித்தலைசக்கப்படுகிற நாணலையோ எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்.

௮. அல்லதுமெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையோமெல்லிய வஸ்திரங்களையுடுத்திருக்கிறவர்கள் அரசர்மாளிகைகளிலிருக்கிறார்கள்.

௯. அல்லது எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள், தீர்க்கதரிசியையோ ஆம்தீர்க்கதரிசியிலும் அதிகமேன்மையுள்ளவனையேயென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௰. அதெப்படியெனில், * இதோ நான் என்னுடையதூதனை உமக்குமுன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்குமுன்னே உம்முடைய மார்க்கத்தைச் செவ்வைபண்ணுவானென்று எழுதியிருக்கிறதே அவனிவன்தான். * மல். ௩. ௧.

௰௧. அல்லாமலும், ஸ்திரிகளிடத்திற பிறந்தவர்களில் யோவான்ஸ்நானனிலும் பெரியவனொருவனும் எழும்பவில்லையென்றுமெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன். ஆகிலும் பரலோக இராச்சியத்திலே சிறியவனானவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.

௰௨. அல்லாமலும் யோவான்ஸ்நானன்தோன்றின காலமுதற்கொண்டு இதுவரைக்கும் பரலோக இராச்சியம் பலவந்தப்படுகின்றது, பலவந்தம்பண்ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

௰௩. நியாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசிகள் யாவரும் அதையோவானவரைக்குந் தீர்க்கதரிசனமாய் அறிவித்தார்கள்.

௰௪. நீங்கள் ஏற்றுக்கொள்ள மனதிருந்தால் * வருபவனாகிய எலியா இவன்தான்.
* மத். ௰௭. ௰௨; மல்கி. ௪. ௫.

௰௫. கேட்கிறதற்குக் காதுள்ளவன்கேட்கக்கடவன்.

௰௬. * இந்தச்சந்ததியை ஆருக்குநிகர்சொல்வேன், சந்தைகளில் உட்கார்ந்து தங்கள்தோழரைநோக்கி, * லூக். ௭. ௩௧, ௩௫.

௰௭. உங்களுக்காக ஊதினோம் நீங்கள் கூத்தாடவில்லை. உங்களுக்காகப்புலம்பினோம் நீங்கள் மார்பிலடிக்கவில்லையென்றுசொல்லிக் கூப்பிடுகிறபிள்ளைகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.

௰௮ எப்படியென்றால், யோவான்வந்து, * போசனபானம்பண்ணாமலிருந்தானப்பசாசைக்கொண்டிருக்கிறான் என்றார்கள்.
* மத். ௩. ௪.

௰௯. மனிதனுடைய குமாரன்வந்து * போசனபானம்பண்ணுகிறான். இதோ, பெருந்தீனிக்காரனென்றும், குடிக்கிறவனென்றும், ஆயக்காரருக்கும், பாவிகளுக்குஞ் சிநேகிதனென்றுஞ் சொல்லுகிறார்கள். ஆனாலும், ஞானமானது தன்பிள்ளைகளாலே நீதியாயெண்ணப்படுமென்றார். * மத். ௯. ௰, ௰௧.

௨௰. அப்பொழுது அவர்தமதுபலத்தசெய்கைகளில் அநேகங்களைக்கண்டபட்டணத்தார் மனந்திரும்பாமலிருந்தபடியினாலே அவர்களைக்கடிந்துகொள்ளத் தொடங்கிச்சொன்னதாவது;

௨௧. * ஐயோ! கோராசினபட்டினத்தாரே உங்களுக்குவேதனைவரும், ஐயோ! பெத்சாயிதாபட்டினத்தாரே உங்களுக்கும் வேதனைவரும், உங்களுக்குள்ளே நடந்தபலத்தசெய்கைகள் தீருசிதோனபட்டினத்தாருக்குள்ளே நடந்திருந்தால அவர்கள் சீக்கிரமாய இரட்டையுந்திச்சாம்பலில உளுக்காந்துமனந்திரும்பியிருப்பார்கள்.
* லூக். ௰. ௰௩.

௨௨. ஆதலால, நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களைப்பார்க்கிலும் நீங்களே அதிகத்தண்டிப்பை அடைவீர்களென்று உங்களுக்குச சொல்லுகிறேன.

௨௩. வானபரியந்தமுயர்ந்தகப்பர்நாகூம் பட்டினத்தாரே, ஐயோ! பாதாளபரியந்தந் தாழ்த்தப்படுவீர்கள், உங்களுக்குள்ளே நடந்த பலத்தசெய்கைகள் சோதோம்பட்டினத்தாருக்குள்ளே நடந்திருந்தால அவர்களுடைய பட்டினம இந்நாளவரைக்குமிருக்குமே.

௨௪. ஆதலால, * நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களுக்குவருந் தண்டிப்பு எளிதாயிருக்கும, நீங்களே அதிகத்தண்டிப்பை அடைவீர்களென்று உங்களுக்குசசொல்லுகிறேனென்றார். * மத். ௰. ௰௫.

௨௫. அக்காலத்திலே * இயேசுவானவர் சொன்னதாவது; பிதாவே, வானத்தையும, பூமியையும ஆளுகிறவரே, நீர் இவைகளை (மேலாக) † ஞானிகளுக்கும, கல்விமானகளுக்கும மறைத்துக்குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினபடியினாலே உம்மைத்துதிக்கிறேன. * லூக். ௰. ௨௧. ௨௨; † ௧. கொரி. ௧. ௨௬, ௨௭; சங்கீ. ௮. ௩.

௨௬. ஆ, பிதாவே, இப்படியே உமக்குப்பிரியமாயிருந்ததென்றார்.

௨௭. அல்லாமலும், சகலமும என்பிதாவினாலே எனக்கு * ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றது, பிதாதவிர மற்றொருவனுங் குமாரனையறியான, குமாரனதவிரமற்றொருவனும்பிதாவையறியான. மேலும எவனுக்குக்குமாரன அவனைவெளிப்படுத்தச்சித்தமாயிருக்கிறாரோ அவனும பிதாவையறிவான. * மத். ௨௮. ௰௮; யோவா. ௩. ௩௫; மத். ௰௭. ௨.

௨௮ வருத்தப்பட்டுப்பாரஞ்சுமந்துகொளளுகிறவர்களாகிய நீங்களெல்லாரும என்னிடத்திலவாருங்கள நான உங்களுக்காறுதல்செய்வேன.

௨௯. நானசாந்தமாயும், மனத்தாழ்மையாயுமிருக்கிறபடியினாலும், நானவைக்கிறநுகத்தடிமெதுவாயும, * நானஏற்றுகிறசுமையிலேசாயுமிருக்கிறபடியினாலும, * ௧. யோ. ௫. ௩.

௩௰. நீங்கள என்னுடைய நுகத்தடியையேற்றுக்கொண்டு என்னிடத்திறகற்றுக்கொளளுங்கள அப்பொழுதுங்கள ஆத்துமாக்களுக்காறுதலகிடைக்குமென்றார்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) ஓய்வுநாளினமீறுதலைக்குறித்துப் பரிசேயர்களுடைய குருட்டாட்டத்தை, (௩) வேதத்தினாலும, (௬) நியாயத்தினாலும, (௰௩) ஒரு அற்புதத்தினாலுங் கிறிஸ்துக்கடிந்துகொண்டது. (௨௨) அவர்பிசாசுபிடித்ததருமிம, ஊமையுமான ஒரு மனுஷனைக்குணமாக்கினது. (௩௧) பாசுத்த ஆவிக்கு விரோதமாய்ச் செய்யப்படுந்தூஷணம் மன்னிக்கப்படுவதில்லையென்பது. (௩௬) வீண் வார்த்தைகளுக்கும நியாயத்தீர்ப்புக்கேட்கப்படுமென்பது. (௩௮) ஒரு அடையாளத்தைக்கேட்ட அவிசுவாசிகளை அவர் கடிந்துகொண்டு, (௪௬) அவர் தம்முடைய சகோதரனும, சகோதரியும, தாயுமிவனென்று காண்பித்தது.]

அக்காலத்தில ஓய்வுநாளிலேஇயேசுவானவர் * பயிர்வழியேபோனார், அப்பொழுது அவருடைய சீஷர் பசியாயிருந்தபடியினாலேகதிர்களைக்கொய்துசாப்பிடத்தொடங்கினார்கள் * பாற். ௨. ௨௩, ௨௮.

௨. அதைக்கண்டபரிசேயர் அவனைநோக்கி, இதோ ஓய்வுநாளிறசெய்யத்தகாததை உம்முடையசீஷர்கள செய்கிறார்களென்றார்கள.

௩. அவர்களுக்கு அவர்சொன்னதாவது; * தாவீதும, அவனோடிருந்தவர்களும்பசியாயிருந்தபொழுது, * ௧. சாமுவேல ௨௧. ௬.

௪. அவன தேவாலயத்திறபிரவேசித்து, * ஆசாரியரேயன்றி, தானும, தனனோடிருந்தவர்களுஞசாப்பிடத்தகாத தேவசமுகத்தப்பங்களைசசாப்பிட்டாமென்று நீங்கள் வாசிக்கவில்லையா! * ௩. மோசே. ௨௪. ௫, ௬.

௫. அல்லது * ஆசாரியரானவர்கள தேவாலயத்திலே ஓய்வுநாள்களில ஓய்ந்திராமல வேலைசெய்தும குற்றமிலலாதிருக்கிறார்களென்று நீங்கள வேதத்திலே வாசிக்கவில்லையா! * ௪ மோசே. ௨௮. ௯, ௰.

௬. தேவாலயத்திலும பெரியவர் இங்கேயிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன.

௭. மேலுமபலியையும் * இரக்கத்தையேவிரும்புகிறேனென்கிற (வாக்கியத்தின்கருத்தை) நீங்கள் அறிந்தீர்களானால குற்றமில்லாத இவர்களைநீங்கள குற்றப்படுத்தமாட்டீர்கள. * மத்தே. ௯. ௰௩.

௮. அல்லாமலும மனிதனுடைய குமாரனானவர் ஓய்வுநாளைக்குறித்துங் கர்த்தராயிருக்கிறாரென்றார்.

௯. பின்பு அவர் அவவிடம்விட்டுப்போய அவர்களுடைய * செப ஆலயத்திற பிரவேசித்தார். * மாற். ௩. ௧, ௬; லூக். ௬. ௬, ௰௧.

௰. அங்கே சூம்பின கையையுடைய மனிதனொருவன் இருந்தான். அப்பொழுது அவர்கள் அவர்மேல் குற்றஞ்சாற்றும்படிக்கு அவரை நோக்கி, * ஓய்வுநாளில் சுகமாக்குகிறது நியாயமாவென்று கேட்டார்கள்.
* லூக்கா ௰௩. ௰௪; ௰௪. ௩.

௰௧. அவர் சொன்னது, உங்களில் எவனொருவனுடைய ஆடு ஓய்வுநாளில் ஒரு குழியிலே விழுந்தால் அதைப்பிடித்துத் தூக்கிவிடானல்லவா!

௰௨. ஆட்டிலும் மனிதனானவன் மிகமேன்மையாயிருக்கிறான், ஆதலால் ஓய்வுநாளிலே நன்மைசெய்கிறது நியாயந்தானென்று சொல்லிப்பின்பு அந்த மனிதனை நோக்கி,

௰௩. உன் கையை நீட்டென்றார். அவன் அதை நீட்டினான். உடனே அது மறுகையைப்போலவே சுகமாயிற்று.

௰௪. அப்பொழுது பரிசேயர் புறப்பட்டுப்போய் அவரைச் சங்கரிக்கும்படிக்கு யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

௰௫. அதை இயேசுவானவர் அறிந்து அவ்விடம்விட்டுப் போனார். அப்பொழுது அநேக சனங்கள் அவர் பின்னே சென்றார்கள்.

௰௬. எல்லாரையும் அவர் சுகமாக்கிப் பின்பு தம்மைப் பிரசித்தம்பண்ணாதபடிக்கு * அவர்களுக்குக் கட்டளையிட்டார். * மத்தேயு ௯. ௩௰; மாற்கு ௩. ௰௨.

௰௭. அதினாலே இதோ நான் தெரிந்துகொண்ட ஊழியக்காரன், எனக்கு அன்பானவர், என் ஆத்துமாவுக்குப் பிரியமானவர், இவரிடத்திலே என்னுடைய ஆவியிருக்கச்செய்வேன், இவர் நியாயமானதை உலகத்தாருக்கறிவிப்பார்.

௰௮. சண்டைபண்ணாமலும், கூக்குரலிடாமலுமிருப்பார், இவருடைய சத்தம் வீதிகளிலொருவராலுங் கேட்கப்படுவதில்லை.

௰௯. நியாயமானது செயமாயிருக்கும்படி செய்கிறவரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை முறியாமலும், மங்கியெரிகிற திரியை அணையாமலுமிருப்பார்.

௨௰. இவருடைய நாமத்தின்மேலே புறத்தேசத்தார் நம்பிக்கையாயிருப்பார்களென்று,

௨௧. * ஏசாயாதீர்க்கதரிசி உரைத்தவசனம் நிறைவேறிற்று. * ஏசாயா. ௪௨. ௧, ௪.

௨௨. அப்பொழுது பசாசுபிடித்துக் குருடும் * ஊமையுமான ஒருவன் அவரிடத்திற்குக் கொண்டுவரப்பட்டான், குருடும், ஊமையுமானவன் பேசவும், காணவுந்தக்கதாக அவனைக் குணமாக்கினார். * மத்தே. ௯. ௩௨; லூக. ௰௧, ௰௪.

௨௩. சனங்களெல்லாரும் பிரமித்து, இவர் தாவீதின் குமாரனல்லவாவென்றார்கள்.

௨௪. பரிசேயர் அதைக்கேட்டு, இவன் * பசாசுகளுடைய தலைவனாகிய பெயெல்செபூவினாலே பசாசுக்களைத் துரத்துகிறானேயன்றி மற்றப்படியல்லவென்றார்கள். * மத்தேயு. ௯. ௩௪.

௨௫. இயேசுவானவர் அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து அவர்களை நோக்கி, ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளே தானே பிரிவினைபண்ணினால் அழிந்துபோவார்கள், அல்லாமலும் ஒரு பட்டினத்தாராகிலும், குடும்பத்தாராகிலுந் தங்களுக்குள்ளே பிரிவினைபண்ணினால் நிலைநிற்கமாட்டார்கள்.

௨௬. அப்படிப்போலச் சாத்தான் மற்றொரு சாத்தானைத் துரத்தினால் அவர்களுக்குள்ளே தானே பிரிவினையுண்டாகுமே, அப்படியானால் அவனுடைய இராச்சியம் எப்படி நிலைநிற்கும்!

௨௭. அல்லாமலும் நான் பெயெல்செபூவினாலே பசாசுக்களைத் துரத்துகிறவனென்றால், உங்கள் பிள்ளைகள் அவைகளை ஆராலே துரத்துகிறார்கள், ஆகையால் அவர்களே உங்களுக்கு நியாயந்தீர்ப்புக்கொடுப்பார்கள்.

௨௮. * நான் பராபரனுடைய ஆவியாலே பசாசுக்களைத் துரத்துகிறபடியால் பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்தில் வந்திருக்கின்றது. * ௧. யோவான் ௩. ௮.

௨௯. அல்லது முன்பு பலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்தலத்திலே ஒருவன் எப்படிப் பிரவேசித்து அவனுடைய உடைமைகளைக் கொள்ளையிடுவான், (பலவானைக் கட்டினபின்பல்லவா) அவனுடைய வாசஸ்தலத்தைக் கொள்ளையிடுவான்.

௩௰. என்பக்கத்திலிராதவன் எனக்கு விரோதமாயிருக்கிறான், என்னுடனே கூடச்சேர்த்துக்கொள்ளாதவன் சிதற அடிக்கிறான்.

௩௧. ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, * எந்தப் பாவமும், தூஷணமும் மனிதர்களுக்கு மன்னிக்கப்படும், தேவ ஆவியை (நிந்திக்கும்) தூஷணமாத்திரம் மனிதருக்கு மன்னிக்கப்படுவதில்லை.
* மாற்கு ௩. ௨௮. ௩௰.

௩௨. எவனொருவன் மனிதனுடைய குமாரனுக்கு விரோதமம் பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்படும். எவனாகிலும் பரிசுத்த தேவ ஆவிக்கு விரோதம் பேசினால் அது அவனுக்கு இம்மையிலும், மறுமையிலும் மன்னிக்கப்படுவதில்லை.

௩௩. மேலும், ஒரு மரத்தின் தன்மையை அதின் கனிகளாலே அறியலாம். ஆகையால் நீங்கள் * ஒரு மரத்தை நல்லமரமென்றெண்ணினால் அதின் கனியையும் நல்லதென்றெண்ணுங்கள். அல்லது நீங்கள் ஒரு மரத்தைக் கெட்டமரமென்றெண்ணினால் அதின் கனியையும் கெட்டதென்றெண்ணுங்கள்.
* மத். ௭. ௰௬. ௱௭.

௩௪. இருதயத்தின் நிறைவினாலே வாய் பே

௩௪. ஆதலால் விரியன்குட்டிகளே, நீங்கள் பொல்லாதவர்களாயிருக்க நன்மையானவைகளை யெப்படிப்பேசுவீர்கள்.

௩௫. * நல்ல மனிதனானவன் தன் இருதயத்திலுள்ள நல்ல பொக்கிஷத்தில் நல்லவைகளை யெடுத்துக்காண்பிக்கிறான். பொல்லாத மனிதன் தன் பொல்லாத பொக்கிஷத்திற் பொல்லாதவைகளை யெடுத்துக் காண்பிக்கிறான். * லூக். ௬. ௪௫.

௩௬. மனிதர்கள்பேசும் வீணான வார்த்தைகளெல்லாவையுங்குறித்து நியாயத்தீர்ப்புநாளிலே உத்தரவுகொடுப்பார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௩௭. எப்படியும் உன் வார்த்தைகளினாலே நீதிமானென்றும், உன்வார்த்தைகளினாலே குற்றவாளியென்றுந்தீர்க்கப்படுவாய்.

௩௮. அப்பொழுது வேதபாரகரிலும், பரிசேயரிலுஞ்சிலர் அவரைநோக்கி, போதகரே, உம்மாலே * ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோமென்றார்கள். * மத். ௰௬. ௧. ௪; லூக். ௰௧. ௨௯, ௩௨.

௩௯. அதற்கு அவர்சொன்னது, சோரமார்க்கமாய்ப்போகிற பொல்லாதசந்ததியாகிய இவர்கள் ஒரு அடையாளத்தைக்கேட்கிறார்கள், யோனாதீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி வேறு அடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

௪௰. என்னவென்றால், * யோனாவென்பவன் இரவும், பகலும் மூன்றுநாள் ஒருபெரிய மீனுடைய வயிற்றிலிருந்ததுபோல மனிதனுடையகுமாரனும் இரவும், பகலும்மூன்றுநாள் பூமியின் இருதயத்திலேயிருப்பாரென்பதே. * யோனா. ௨. ௧.

௪௧. * யோனாவென்பவன் பிரசங்கம்பண்ணினபொழுது நினிவேபட்டினத்தார் மனந்திரும்பினார்கள். யோனாவிலும் அதிக மேன்மையானவர் இதோ, இங்கேயிருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே நினிவேபட்டினத்தார் எழும்பி இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பார்கள். * ௩. ௫.

௪௨. அல்லாமலுந் தெற்கு இராசஸ்திரீ மிகுந்த தூரமானதேசத்திலிருந்து * சாலோமோனுடைய ஞானத்தைக் கேட்கவந்தாள். சாலோமோனிலும் அதிக மேன்மையானவர் இதோ இங்கேயிருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அந்த இராசஸ்திரீயெழும்பி, இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பாள். * ௧. இரா. ௰. ௧.

௪௩. * அல்லாமலும் * அசுத்தமான ஆவி ஒருமனிதனைவிட்டுப் புறப்பட்டபின்பு தண்ணீரில்லாத இடங்களிலலைந்து இளைப்பாறுதற்கான இடத்தைத் தேடியுமடையாமலிருக்கும்பொழுது, * லூக். ௰௧. ௨௪.

௪௪. அது என்வீட்டுக்குத் திரும்பிப்போவேனென்றுசொல்லி, (அங்கே) சென்று அவ்விடத்தை வெறுமையாயும், பெருக்கிச் சோடிக்கப்பட்டதாயுமிருக்கக்கண்டு திரும்பிப்போய்,

௪௫. தன்னிலும் அதிகபொல்லாத வேறே ஏழு ஆவிகளைத் தன்னுடனே கூட்டிக்கொண்டுவந்து பிரவேசித்து அங்கே வாசம்பண்ணும் * இவ்விதமாய் அந்தமனிதனுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிககேடுள்ளதாயிருக்கிறது. அப்படியே இந்தப்பொல்லாத சந்ததிக்குஞ் சம்பவிக்குமென்றார். * ௨. பேது. ௨. ௨௰.

௪௬. அவர் இப்படிச்சனங்களுடனேபேசுகையில் * அவருடையதாயும், சகோதரருமவந்து வெளியேநின்று அவரோடேபேசத்தேடினார்கள். * மாற். ௩. ௩௧; லூக். ௮. ௰௯, ௨௧.

௪௭. அப்பொழுது ஒருவன் அவரைநோக்கி, இதோ உம்முடைய தாயாரும், சகோதரரும் வெளியேநின்று உம்மோடேபேசத்தேடுகிறார்களென்றான்.

௪௮. அப்படித்தம்மைச்சொன்னவனுக்கு அவர்மாறுத்தரமாக என்னுடைய தாயார் யார், என்சகோதரர்யாரென்றுசொல்லி,

௪௯. தம்முடைய கையைத் தம்முடைய சீஷர்மேலேநீட்டி, இதோ, இவர்கள் என் தாயும் என் சகோதரருமாயிருக்கிறார்கள்.

௫௰. எவனாகிலும் பரமண்டலங்களிலிருக்கிற என்பிதாவினுடைய சித்தத்தின்படிசெய்தால் அவனே என்சகோதரனும்சகோதரியும் தாயுமாயிருக்கிறானென்றார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) விதைக்கிறவனையும், விதையையும்உவமையாகக்காட்டியது. (௰அ) அதினுடைய வியாக்கியானம். (௨௪) களைகளையும், (௩௧) கடுகுவிதையையும், (௩௩) புளித்தமாவையும், (௪௪) வயலில் ஒளித்துவைக்கப்பட்ட பொக்கிஷத்தையும், (௪௫) முத்தையும், (௪௭) கடலிற்போடப்பட்ட வலையையும் உவமையாகக்காட்டியது. (௫௩) கிறிஸ்துத் தம்முடைய சொந்தஊராரால் அசட்டைபண்ணப்பட்டது.]

அந்நாளிலே இயேசுவானவர் வீட்டிலிருந்து புறப்பட்டுக் கடலோரத்திலே யுட்காந்தார்.

௨. அப்பொழுது அநேகசனங்கள் அவரிடத்திற் கூடிவந்தபடியால் அவர்படவிலேறி உட்காந்து சனங்களெல்லாருங் கரையிலேநிற்க.

௩. அநேகவிசேஷங்களை உவமைகளால் அவர்களுக்குச்சொன்னதாவது; * விதைக்கிறவனொருவன் விதைக்கப்புறப்பட்டான், அவன்விதைக்கையிற்சில (விதை) வழியருகேவிழுந்தன. * மாற்கு ௪. ௩; லூக். ௮. ௫.

௪. அவைகளைப் பறவைகள்வந்து பட்சித்தன.

௫. வேறுசில (விதை) மிகுந்த மண்ணில்லாத கற்பாறையிடங்களில் விழுந்து ஆழமான மண்ணில்லாததினாலே உடனே முளைத்தன.

௬. வெயில் தோன்றினபொழுது அவை தீய்ந்துபோய் வேரில்லாததினாலே உலர்ந்து போயின.

௭. வேறுசில (விதை) முள்ளுகளுள்ள இடத்திலே விழுந்தன, முள்ளுக்கள் வளர்ந்து, அவைகளை நெருக்கிப்போட்டன.

௮. வேறுசில (விதை) நல்ல நிலத்தில் விழுந்து சில நூறாகவும், சில அறுபதாகவும், சில முப்பதாகவும் பலன்கொடுத்தன.

௯. கேட்கிறதற்கு காதுள்ளவன் கேட்கக்கடவனென்றார்.

௰. அப்பொழுது சீஷர்கள் அவரிடத்தில் வந்து என்னத்தினாலே உவமைகளால் அவர்களோடே பேசுகிறீரென்றார்கள்.

௰௧. அதற்கு அவர் சொன்னது, பரலோக இராச்சியத்தின் இரகசியங்களை அறியும்படிக்கு * உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது, அவர்களுக்கு அப்படி அளிக்கப்படவில்லை. * மத்தேயு ௰௧. ௨௫.

௰௨. எப்படியெனில், * எவன் உள்ளவனாயிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான், எவன் உள்ளவனல்லாதவனாயிருக்கிறானோ அவனிடத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும். * ௨௫. ௨௯.

௰௩. அவர்கள் கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும், சிந்தித்துக்கொள்ளாமலுமிருக்கிறபடியினாலே நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகிறேன்.

௰௪. இந்த சனங்கள் கண்களினாலே காணாமலும், காதுகளினாலே கேளாமலும், இருதயத்தினாலே சிந்தித்துக்கொள்ளாமலும், திரும்பாமலும், என்னால் ஆரோக்கியமடையாமலுமிருக்கும்படிக்கு அவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயமுடையவர்களுமாய், வருத்தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய், மூடிக்கொண்டிருக்கிற கண்களையுடையவர்களுமாயிருக்கிறபடியினாலே,

௰௫. நீங்கள் * உற்றுக்கேட்டாலும், சிந்தித்துக்கொள்ளாமலுமிருப்பீர்கள். உற்றுப்பார்த்தாலும், அறியாமலிருப்பீர்களென்று ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறுகின்றது. * ஏசா. ௬. ௯. ௰.

௰௬. உங்கள் கண்கள் காணுகிறபடியினாலும், உங்கள் காதுகள் கேட்கிறபடியினாலும் * பாக்கியமுள்ளவைகள். * லூக். ௰. ௨௩, ௨௪.

௰௭. அநேக தீர்க்கதரிசிகளும், நீதிமான்களும் நீங்கள் காணுகிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியுங் காணாமலும், கேளாமலும்போனார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௮. ஆகையால் விதைக்கிறவனுடைய உவமையைக் கேளுங்கள்.

௰௯. ஒருவன் பரலோக இராச்சியத்தைக் குறித்த வசனத்தைக் கேட்டும் அதைச் சிந்தித்துக்கொள்ளாமலிருக்கிறபொழுது பொல்லாங்கனவந்து அவனுடைய இருதயத்திலே விதைக்கப்பட்டதையெடுக்கிறான். அவனே விதைவிழுந்த வழிக்கொப்பானவன்.

௨௰. விதைவிழுந்த கற்பாறைக்கொப்பானவன் அந்தவசனத்தைக் கேட்டு உடனே அதைச் சந்தோஷத்தோடே பெற்றுக்கொண்டு,

௨௧. பின்பு அதுதனக்குள்ளே வேர்ப்பற்றியிராமல் கொஞ்சக்காலமாத்திரம் அதைப்பற்றிக்கொள்ளுவான். அந்தவசனத்தினிமித்தம் உபத்திரவமும், துன்பப்படுத்தலுமுண்டாகிறபொழுது உடனே அவன் தவறுவானென்பதே.

௨௨. விதைவிழுந்த முள்ளுள்ள இடத்துக்கொப்பானவன் அந்தவசனத்தைக் கேட்கிறபொழுது லவுகீகக்கவலைகளும், * ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வசனத்தை நெருக்கிப்போடுகிறதால் கனியற்றவனாவானென்பதே. * ௧. தீமோ. ௬. ௯.

௨௩. விதைவிழுந்த நல்லநிலத்துக்கொப்பானவன் அந்தவசனத்தைக் கேட்டுச், சிந்தித்தும், அதின்படிசெய்தும், நூறும், அறுபதும், முப்பதுமாகப்பலனைக்கொடுத்தும் வருவானென்பதேயென்றார்.

௨௪. பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார். அதாவது, பரலோகஇராச்சியம் ஒருவயல்நிலத்துக்கொப்பாயிருக்கின்றது. அந்தநிலத்திலே எசமானவன் நல்லவிதையை விதைத்தான்.

௨௫. பின்பு மனிதர் நித்திரைபண்ணுகையில், அவனுடைய பகைஞனவந்து கோதுமைக்குள்ளே களைகளை விதைத்துப் போனான்.

௨௬. பயிரானது வளர்ந்து தானியத்தை உண்டாக்கினபொழுது அந்தக்களைகளும் காணப்பட்டன.

௨௭. வேலைக்காரர் எசமானிடத்தில் வந்து ஆண்டவனே, நீர் உம்முடைய வயல்நிலத்திலே நல்லவிதையை விதைக்கவில்லையா! களைகள் அதிலே எப்படியுண்டாயினவென்றார்கள்.

௨௮. அதற்கவன் பகைஞன் அப்படிச் செய்தானென்றான். அப்பொழுது வேலைக்காரர் நாங்கள்போய் அவைகளைப்பிடுங்கிப்போடச் சித்தமாயிருக்கிறீரோவென்று கேட்டார்கள்.

௨௯. அதற்கவன் சொன்னது, வேண்டாம். களைகளைப்பிடுங்குகிறபொழுது நீங்கள் கோ

௭. அக்காலத்திலே அவன் பிரசங்கம்பண்ணினதாவது; * என்னிலும் அதிக வல்லமையுடையவர் எனக்குப் பின்வருகிறார். அவருடைய பாதரட்சைகளின் வாரைக் குனிந்து அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்ல.
* யோவா. ௧. ௨௭.

௮. நான் * சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்தேன். அவர் பரிசுத்த ஆவியினாலே யுங்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பாரென்பதே. * யோவா. ௧. ௨௬.

௯. அந்தநாள்களில் இயேசுவானவர் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து யோர்தான்நதியிலே யோவானாலே ஞானஸ்நானம்பெற்று,

௰. சலத்தினின்றேறினவுடனே, வானம்பிரிந்ததையும், * ஆவியானவர் புறாவைப்போலத் தம்மேலிறங்கினதையுங்கண்டார்.
* யோவா. ௧. ௩௨, ௩௪.

௰௧. அப்பொழுது நீர் எனக்கன்பாயிருக்கிற என் குமாரன், உம்மிற் பிரியமாயிருக்கிறேனென்று பரமண்டலங்களிலிருந்து சத்தமுண்டாயிற்று.

௰௨. அதின்பின்பு ஆவியானவர் அவரை வனாந்தரத்திற்குப்போகப்பண்ணினார்.

௰௩. அந்த வனாந்தரத்திலே யவர் நாற்பதுநாளிருந்து, சாத்தானாலே சோதிக்கப்பட்டு * காட்டுமிருகங்களுக்குள்ளேயிருந்தார். பின்பு தேவதூதர்கள் அவருக்குப் பணிவிடைசெய்தார்கள். * மத். ௪. ௧—௰௧; லூக். ௪. ௧—௰௩.

௰௪. * யோவான் காவலில்வைக்கப்பட்டபின்பு இயேசுவானவர் கலிலேயாநாட்டிலே வந்து, * மத். ௪. ௰௨—௨௨.

௰௫. * காலம் நிறைவேறியிருக்கின்றது. பராபரனுடைய இராச்சியத்தின் ஆளுகை சமீபமாய்வந்தது. நீங்கள் மனந்திரும்பிச் சுவிசேஷத்தை விசுவாசித்துக்கொள்ளுங்களென்று பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணினார். * கலா. ௪. ௫.

௰௬. அல்லாமலும் இயேசுவானவர் கலிலேயாநாட்டின் கடலருகே நடக்கையில், மீன்பிடிக்கிறவர்களாகிய சீமோனும், அவனுடைய சகோதரன் அந்திரேயாவுங் கடலில் வலைவீசியிருக்கிறபொழுது,

௰௭. அவர்களைக்கண்டு, எனக்குப் பின்சென்றுவாருங்கள். உங்களை நான் மனிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேனென்றார்.

௰௮. உடனே யவர்கள் தங்கள் வலைகளை விட்டு அவரைப் பின்பற்றினார்கள்.

௰௯. அவர் அவ்விடம்விட்டுச் சற்றேதூரம் போனபின்பு செபேதேயுவின் குமாரன் யாக்கோபும், அவனுடைய சகோதரன் யோவானும் படவிலே வலைகளைமுடிந்துகொண்டிருக்கையில் அவர்களைக்கண்டு, உடனே யவர்களையும் அழைத்தார்.

௨௰. அப்பொழுது கூலியாள்களுடனே கூடப் படவிலிருக்கிற தங்கள் தகப்பனாகிய செபேதேயுவைவிட்டு அவருக்குப் பின்சென்றார்கள்.

௨௧. * பின்பு கப்பர்நாகூமூரிற் பிரவேசித்தார்கள். ஓய்வுநாளிலே யவர் தாமதியாமற் செப ஆலயத்திற்குப்போய்ப் போதகம்பண்ணினார். * லூக. ௪. ௩௧. முதலிய

௨௨. அவர் வேதபாரகரைப்போலல்ல, * அதிகாரமுடையவரைப்போலப் போதகம்பண்ணினபடியினாலே சனங்கள் அவருடைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள். * மத். ௭. ௨௮; யோவா. ௭. ௪௬.

௨௩. அவர்களுடைய செப ஆலயத்திலே அசுத்த ஆவியுள்ள ஒரு மனிதனிருந்தான்.

௨௪. அவன் * நாசரேத்தூரானாகிய இயேசுவே எங்களுக்கும் உமக்குமென்ன! எங்களைக் கெடுக்கவா வந்தீர்! உம்மையறிந்திருக்கிறேன். நீரே பராபரனுடைய பரிசுத்தரென்று கூப்பிட்டான். * ரு. ௭; மத்தேயு. ௮, ௨௯.

௨௫. இயேசுவானவர் சொன்னது. நீ பேசாமல் இவனைவிட்டுப் புறப்பட்டுப்போவென்று அவனிலுள்ள (ஆவியை) அதட்டினார்.

௨௬. அப்பொழுது அந்த அசுத்த ஆவி யவனை அலக்கழித்து, மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்டுப் புறப்பட்டுப்போயிற்று.

௨௭. (அதைக்கண்ட) எல்லாரும் பிரமிப்படைந்து ஒருவரையொருவர்பார்த்து, இவர் அதிகாரத்தோடே அசுத்த ஆவிகளுக்குங் கட்டளையிடுகிறார். உடனேயவைகள் இவருக்குக்கீழ்ப்படிகின்றன. இதென்ன! இதெப்படிப்பட்ட புதிய உபதேசமென்றுசொல்லிக்கொண்டார்கள்.

௨௮. அதுமுதல் அவருடைய கீர்த்தி கலிலேயாநாட்டின் திசைகளிலெங்கும் பிரசித்தமாயிற்று.

௨௯. உடனேயவர்கள் செப ஆலயத்தைவிட்டுப் புறப்பட்டு யாக்கோபோடும், யோவானோடுங்கூடச் * சீமோன், அந்திரேயா என்பவர்களுடைய வீட்டில் வந்தார்கள். அங்கே சீமோனுடைய மாமி சுரமாய்க்கிடந்தாள். * மத். ௮. ௰௪, ௰௫.

௩௰. உடனே யவர்கள் அவளைக்குறித்து அவருக்குச்சொன்னார்கள்.

௩௧. அவர்போய் அவளுடைய கையைப்பிடித்து, அவளைத்தூக்கிவிட்டார். உடனே சுரம் அவளை விட்டு நீங்கிற்று. அவள் அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

௩௨. சூரியன் அஸ்தமிக்கும் * மாலைக்காலத்திலே சகலவித்மான பிணியாளிகளையும், பசாசுபிடித்தவர்களையும் அவரிடத்திற்கொண்டுவந்தார்கள். * மத். ௮. ௰௬.

௩௩. அல்லாமலும் பட்டினத்தாரெல்லாரும் (அவரிருந்த) வீட்டுவாசலுக்குமுன்பாகக் கூடிவந்தார்கள்.

௩௪. அப்பொழுது அவர் பலவியாதிகளால் உபத்திரவப்படுகிற அநேகரைக் குணமாக்கி அநேகம் பசாசுகளையுந் துரத்தினார். தம்மை யின்னாரென்று பசாசுகளறிந்தபடியால் அவைகள் பேசுகிறதற்கு அவர் இடங்கொடுக்கவில்லை.

௩௫. அதிகாலையிலே இருட்டோடே யவர் எழுந்திருந்து புறப்பட்டு * வனாந்தரமான ஓரிடத்திற்குப்போய், அங்கே செபம்பண்ணினார். * லூக. ௫. ௰௬.

௩௬. சீமோனும், அவனோடிருந்தவர்களும் அவருக்குப்பின்னேபோய், அவரைக்கண்டபொழுது,

௩௭. சனங்களெல்லாரும் உம்மைத்தேடுகிறார்களென்றுசொன்னார்கள்.

௩௮. அவர்களுடனேயவர்சொன்னது, * பிரசங்கம்பண்ணும்படிக்குப்புறப்பட்டேனே, ஆகையால் இங்கே சுற்றியிருக்கிற கிராமங்களுக்கும்போவோம் வாருங்களென்றுசொல்லி, * ஏசா. ௬௧. ௧.

௩௯. (புறப்பட்டுக்) கலிலேயாநாட்டிலெங்கும் (போய்ச்) சனங்களுடைய செபஆலயங்களிற் பிரசங்கம்பண்ணிப் பசாசுகளைத் துரத்தினார்.

௪௰. அப்படியிருக்கையில், ஒரு குஷ்டரோகி அவரிடத்தில் வந்து முழங்காற்படியிட்டு, உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகுமென்று அவரை வேண்டிக்கொண்டான்.

௪௧. * இயேசுவானவர் மனதுருகிக் கையை நீட்டி அவனைத்தொட்டு எனக்குச் சித்தமுண்டு. சுத்தமாகுவென்றார். * மத். ௮. ௨—௪; லூக. ௫. ௰௨, ௰௬.

௪௨. இப்படியவர் சொல்லுகையில், உடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்க, அவன் சுத்தமானான்.

௪௩. பின்பு அவர் அவனைநோக்கி, நீயிதை யொருவருக்குஞ்சொல்லவேண்டாம். * அல்லாமலும் நீபோய் உன்னை ஆசாரியனுக்குக் காண்பித்து உனக்குண்டான சுத்தத்தைக் குறித்து அவர்களுக்குச் சாட்சியாகும்படிக்கு மோசே கட்டளையிட்டவைகளைப் பலியிடு என்று கண்டிப்பாய்ச்சொல்லி, * மத். ௬. ௩௰.

௪௪. உடனே யவனை யனுப்பிவிட்டார்.

௪௫. அப்படியிருந்தும் அவன் புறப்பட்டுப்போய் இந்தச்சங்கதியைமிகவும்பிரசங்கிக்கவும், அறிவிக்கவுந்தொடங்கினான். ஆதலால் அவர் வெளியரங்கமாய்ப் பட்டினத்திற்பிரவேசிக்கமாட்டாமல் வெளியாகியவனாந்தரமான இடங்களிலே தங்கிவந்தார். அங்கேயும் எல்லாத்திசைகளிலிருந்தும் அவரிடத்திற்கு வந்தார்கள்.

## ௨. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து ஒரு திமிர்வாதக்காரனைக் குணமாக்கி, (௰௪) ஆயத்துறையிலிருந்த மத்தேயுவை அழைத்து, (௰௫) ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசனம்பண்ணி, (௰௮) தம்முடைய சீஷர்கள் உபவாசம்பண்ணாதிருந்ததைக் குறித்தும், (௨௩) ஓய்வுநாளில் கதிர்களைக் கொய்ததைக் குறித்தும் உத்தரவுசொன்னது.]

* சிலநாள்களுக்குப்பின்பு அவர் மறுபடியுங் கப்பர்நாகூமூருக்குப்போனார். அவர் வீட்டிலேயிருக்கிறாரென்று சனங்கள் கேள்விப்பட்டபொழுது, * லூக். ௫. ௰௭—௨௬.

௨. உடனேவாசற்படிக்கு வெளியிலேயும் இடமில்லாதிருக்கத்தக்கதாக அநேகர் கூடிவந்தார்கள். அவர்களுக்குச் (சுவிசேஷ)வசனத்தைப்போதித்தார்.

௩. அப்பொழுது நாலுபேர் * ஒரு திமிர்வாதக்காரனைச் சுமந்துகொண்டு அவரிடத்திற்கு வந்தார்கள். * மத். ௯. ௧, ௮.

௪. சனங்கள் மிகுதியானபடியினாலே, அவர்கள் அவருக்குச் சமீபமாய்ச் சேர இடம்பெறாமல், அவரிருந்த வீட்டின்மேற் கூரையைப் பிரித்து வழியுண்டாக்கித் திமிர்வாதக்காரன் கிடக்கிற படுக்கையையிறக்கினார்கள்.

௫. இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி, மகனே, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டனவென்றார்.

௬. அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரிற் சிலர் (அதைக்கேட்டு,)

௭. இப்படித் தேவதூஷணங்களாக இவன் சொல்லுகிறதென்ன! பராபரனொருவருக்கேயன்றி மற்றொருவனுக்கும் பாவங்களை மன்னிக்கவல்லமையுண்டாவென்று தங்களிருதயங்களிலே சிந்தித்துக்கொண்டார்கள்.

௮. அவர்கள் அப்படித் தங்களுக்குள்ளே சிந்தித்திருக்கிறார்களென்று இயேசுவானவர் தம்முடைய ஆவியினாலேயறிந்து உடனே யவர்களை நோக்கி, நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படி என் சிந்திக்கிறீர்கள்?

௯. இந்தத்திமிர்வாதக்காரனுடனே உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டனவென்று சொல்லுகிறதோ, எழுந்திருந்து உன் படுக்கையையெடுத்துக்கொண்டு நடவென்று சொல்லுகிறதோ, எது எளிது?

௰. மனிதனுடையகுமாரன் பூமியிலே பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவனாயிருக்கிறதை,

௰௧. நீங்கள் அறியும்படிக்குப் (பாருங்களென்றுசொல்லித்) திமிர்வாதக்காரனை நோக்கி, நீ எழுந்திருந்து, உன் படுக்கையையெடுத்துக்கொண்டு உன் வீட்டிற்குப்போ

வென்று உனக்குக் கட்டளையிடுகிறேனென்றார்.

௰௨. உடனே அவன் எல்லாருக்கும் முன்பாக எழுந்திருந்து, தன் படுக்கையையெடுத்துக்கொண்டுபோனான். அப்பொழுது யாவரும் பிரமித்து, நாம் ஒருக்காலும் இப்படிக் காணவில்லையென்றுசொல்லி, பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௰௩. * பின்பு அவர் புறப்பட்டு மறுபடியுங் கடலின் அருகே போனபொழுது, சனங்களெல்லாரும் அவரிடத்தில் வந்தார்கள். அவர்களுக்கு உபதேசம்பண்ணினார். * லூக். ௫. ௨௭-௩௨.

௰௪ அவர் கடந்துபோகையில் * ஆயத்துறையில் உட்கார்ந்திருக்கிற அல்பேயுவின் குமாரனாகிய லேவியென்பவனைக் கண்டு நீ என்பின்சென்றுவாவென்றார். அவன் எழுந்து அவருக்குப் பின்சென்றான். * மத். ௯. ௯-௰௭.

௰௫. அல்லாமலும் அவனுடைய வீட்டிலே அவர் போசனபந்தியிருக்கையில், அநேகம் ஆயக்காரரும், பாவிகளும் அவருக்குப் பின்சென்றுவந்தபடியால், அவர்களும் இயேசுவானவருடனேயும், அவருடைய சீஷருடனேயுங் கூடப்பந்தியிலிருந்தார்கள்.

௰௬. அப்படியவர் ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசனம்பண்ணுகிறதை வேதபாரகரும், பரிசேயருங் கண்டு, அவருடைய சீஷரை நோக்கி, அவர் ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசனம்பண்ணலாமா என்றார்கள்.

௰௭. இயேசுவானவர் அதைக் கேட்டு, அவர்களை நோக்கிச் சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை. வியாதியுள்ளவர்களுக்கேயவன் வேண்டும். நான் நீதிமான்களையல்ல பாவிகளையே மனந்திரும்புதலுக்கு அழைக்கவந்தேனென்றார்.

௰௮. அன்றியும் யோவானுடைய சீஷரும், பரிசேயருடைய சீஷரும் உபவாசம்பண்ணிவந்தார்கள். அப்பொழுது சிலர் அவரிடத்தில் வந்து, யோவானுடைய சீஷரும், பரிசேயருடைய சீஷரும் உபவாசம்பண்ணுகிறார்கள். உம்முடைய சீஷர்மாத்திரம் ஏன் உபவாசம்பண்ணவில்லையென்றார்கள்.

௰௯. அதற்கு இயேசுவானவர் சொன்னது, கலியாணத்திற்கு வந்தமனிதர் தங்களுடனே மணவாளன் இருக்கையில், உபவாசம்பண்ணுவார்களா? தங்களுடனே மணவாளன் இருக்கிறகாலத்திலே உபவாசம்பண்ணமாட்டார்கள்.

௨௰. மணவாளன் அவர்களைவிட்டு நீக்கப்படுங்காலம் வருகின்றது. அக்காலத்திலேயவர்கள் உபவாசம்பண்ணுவார்கள்.

௨௧. ஒருவனுங் கோடித்துணியைப் பழையவஸ்திரத்தில் இணைக்கமாட்டான். இணைத்தால் அதில் இணைத்தபுதியதுண்டு பழையவஸ்திரத்திலெபட்டுப்போக அதிகப்பொத்தலுண்டாகுமே.

௨௨. அல்லாமலும் ஒருவனுந் திராட்சங்களின் புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்த்துவைக்கமாட்டான். வைத்தால் அந்தப்புதிய இரசந் துருத்திகளைக் கிழித்துப்போடும். இரசமுஞ்சிந்திப்போம். துருத்திகளுங்கெட்டுப்போம். புதிய இரசத்தைப் புதியதுருத்திகளில்வார்த்து வைக்கவேண்டுமேயென்றார்.

௨௩ பின்பு ஓய்வுநாளில் * அவர் பயிர்வழியேபோனபொழுது, அவருடைய சீஷர் நடக்கையிற் கதிர்களைக்கொய்யத்தொடங்கினார்கள். * மத். ௰௨. ௧-௮; லூக். ௬. ௧-௫.

௨௪. ஆதலாற் பரிசேயர் அவரை நோக்கி இதோ, இவர்கள் ஓய்வுநாளிற்செய்யத்தகாததை ஏன்செய்கிறார்கள் என்றார்கள்.

௨௫. அவர்களுக்கு அவர் சொன்னது, அபியத்தாரென்னும் பிரதான ஆசாரியனுடைய நாள்களிலே தாவீது தாழ்வுபட்டுத் தானும், தன்னோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,

௨௬. * தேவாலயத்திற்குட்பிரவேசித்து, ஆசாரியரேயன்றி மற்றொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களைப் புசித்ததையும், தன்னோடிருந்தவர்களுக்குக் கொடுத்ததையும் நீங்கள் ஒருக்காலும் அறியவில்லையோவென்றுசொல்லி, * ௧. சாமுவேல். ௨௧. ௬.

௨௭. பின்பு மனிதர் ஓய்வுநாளுக்காக உண்டாக்கப்படவில்லை. ஓய்வுநாள் மனிதருக்காக உண்டாக்கப்பட்டது.

௨௮. ஆகையால், மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளின் கர்த்தனாயிருக்கிறானென்றார்.

## ௩. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவானவர் சூம்பின கையுள்ளவனையும், (௰) மற்றப்பிணியாளிகளையுஞ் சுகமாக்கி, (௰௧) அசுத்த ஆவிகளை அதட்டி, (௰௩) பன்னிரண்டு அப்போஸ்தலர்களையுந் தெரிந்துகொண்டு, (௨௨) பேயை செபூலினுடைய சாசுக்களோதுரத்தக்கூடுமென்கிற தூஷணத்தையெடுத்துக்காட்டி, (௩௧) தம்முடைய சகோதரர்களும், சகோதரிகளும், தாயாரும் இன்னாரென்று காட்டினது.]

மறுபடியும் அவர் செப ஆலயத்திற்பிரவேசித்தார். * அங்கே சூம்பின கையுடையவொருமனிதனிருந்தான். * மத். ௰௨. ௯-௰௪; லூக். ௬. ௬-௰௧.

௨. அவர் ஓய்வுநாளில் அவனைச்சொஸ்தமாக்கினால் அவர்மேற் குற்றஞ்சாற்றலாமென்று அவர்களெண்ணி, அவரையுற்றுப்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

௩. ஆதலால் அவர் சூம்பின கையுள்ளவனை

நோககி, நீயெழுநதுநடுவிலேவநதிருஎனறு சொலலி,

௪. பினபு அவர்களைநோககி, ஓய்வுநாள்களிலநனமைசெயகிறதோ! தீமைசெயகிறதோ சிவனை யிரட்சிககிறதோ! சிவனைவாஙகுகிறதோ எதுநியாயமாயிருககினறது எனறுகேட்டார். அவர்களபேசாமலிருநதார்கள.

௫. அபபொழுது அவர் அவர்களுடைய இருதயததினகடினததினாலே விசனபபடடுக கோபததோடேயவர்களைச சுறறிபபார்ததுப பினபு அநதமனிதனைநோககி, உனகையைநீடடெனறார். அவனநீடடினான. உடனேயதுமறறக கையைபபோலச சொஸதமாயிறறு

௬. பினபுபரிசேயர்புறபபடடுபபோயஅவரையழிககுமபடிககு, ஏரோதேயின மனிதரோடுகூட அவருககுவிரோதமாய உடனே ஆலோசனைபணணினார்கள.

௭. இயேசுவானவர் தமமுடைய சீஷருடனேகூட அவவிடமவிடடுக கடலோரததிறகுபபோனார்.

௮. கலிலேயாநாடடிலும, யூதேயாநாடடிலும, எருசலேம்நகரததிலும, இதுமேயாநாடடிலும, யோர்தானநதியிககரைகளிலுமிருநது மிகவுநதிரளாகவநதசனஙகள் அவருககுபபினசெனறார்கள. அலலாமலுந தீரு,சீதோனஎனனுமபடடினஙகளினதிசைகளிலிருநது மிகவுநதிரளாகவநதசனஙகள அவர்செயத அறபுதஙகளைககேள்விபபடடு, அவரிடததிலவநதார்கள.

௯. அபபொழுது அநேகரையவர்சொஸதமாககினபடியினாலே உபததிரவபபடடவர்களெவர்களோ அவர்களவரைத தொடுமபடிககு அவர்மேலேவிழுநதார்கள

௰ ஆதலாலதாம சனஙகளாலநெருககபபடாதபடிககு, அவர் தமமுடையசீஷரை நோககித் தமககாக ஒருபடவையெபபொழுதும ஆயததமாயிருககும்படி சொனனார்.

௰௧. அசுததமான ஆவியானவர்களும அவரைக்கணடவுடனே அவருககுமுனபாகவிழுநது, நீர்பராபரனுடைய குமாரனெனறுகூபபிடடார்கள.

௰௨. * தமமையவர்கள பிரசிததமபணணாதபடிககு அவர்களுககுககணடிபபாயககடடளையிடடார். * க. உ௫.

௰௩. பினபு * அவர் ஒருமலையினமேலேறித் தமககுச்சிததமானவர்களை வரவழைததார். அவர்கள அவரிடததிலவநதார்கள. * லூக். ௬. ௰௨—௰௬.

௰௪. அபபொழுது அவர் தமமுடனேகூடவிருககவும், (சுவிசேஷததைப) பிரசஙகமபணணுமபொருடடாயனுபபவும,

௰௫. வியாதிகளை நீககிபபசாசுககளைத துரத்தததக்கதாக அதிகாரமுளளவர்களாகவும பனனிரணடுபேரையேறபடுததினார்.

௰௬. அவர்களயாரெனறால * சீமோன, செபதேயுவினகுமாரனாகிய யாககோபு.
* மத. ௰. ௨.

௰௭. யாககோபின சகோதரனாகிய யோவான, அநதிரேயா, பிலிபபு, பாதொலொமேயு, மததேயு, தோமா, அலபேயுவினகுமாரனாகிய யாககோபு, ததேயு, கானானாகிய சீமோன,

௰௮. அவரைககாடடிககொடுததயூதாஸகாரியோதது எனபவர்களே.

௰௯. இவர்களில முநதின சீமோனுககுப பேதுரு எனறும, செபதேயுவினகுமாரராகிய யாககோபுககும, யோவானுககும போவனெர்கெஸஎனறும நாமஙகளைககொடுததார். போவனெர்கெஸ எனபதறகு இடிமுழககமிடுகிறவர்களெனறு அருததமாம.

௨௰. பினபு வீடடிறகுபபோனார்கள.

௨௧. அஙகேயவர்கள போசனமபணணுகிறதறகுககாலமிலலாதபடிககு அநேகசனஙகளமறுபடியுங கூடிவநதார்கள. அவருடையஇனததார் அதைககேடடு அவருககு மயககமுணடாயிறறெனறுசொலலி அவரைப பிடிததுககொளளுமபடிககு வநதார்கள.

௨௨. எருசலேமநகரததிலிருநதுவநதவேதபாரகர் * அவன பெயெலசெபூலைககொணடிருககிறான. பசாசுககளுடையதலைவனாலேபசாசுககளைத துரத்துகிறானெனறார்கள.
* மத். ௰௨. ௨௪; லூக. ௰௧. ௰௫.

௨௩. அவர்களையவர் அழைதது உவமைகளால அவர்களுடனேசொனனதாவது, சாததான சாததானைத துரததுவதெபபடி!

௨௪. ஒரு இராசசியததார் தஙகளுககுளளேபிரிவினையுணடுபணணினால அநதஇராசசியம நிலைநிறகமாடடாதே.

௨௫. ஒருகுடுமபததார் தஙகளுககுளளே பிரிவினையுணடுபணணினால, அநதக்குடுமபம நிலைநிறகமாடடாதே.

௨௬. (அபபடிபபோலச) சாததான தனககுததானே விரோதமாக எழுமபிப பிரிநதால அவன நிலைநிறகமாடடாமல முடிவு அடைவான.

௨௭. ஒருவனமுனபுபலவானைககடடாவிடடால அவனுடைய வீடடிலே பிரவேசிககவும, அவனுடைய ஆஸதிகளைககொளளையிடவுமாடடான. (கடடினால) அவனுடைய வீடடைககொளளையிடுவான.

௨௮. * மனிதர் செயகிற பாவஙகளயாவும, அவர்களசெயகிற எநதத்தூஷணஙகளும மனனிககபபடும. * லூக. ௰௨. ௰.

௨௯. பரிசுதத ஆவியைத தூஷணிககிறவனமாததிரம எனறெனறைககும மனனிபபடையாமல நிததியஆககினைககுப பாததிரனாயிருககிறானெனறு மெயயாய உஙகளுககுச்சொலலுகிறேனெனறார்.

௩௰. அசுத்தமான ஆவியைக்கொண்டிருக்கிறானென்று, அவர்கள் சொன்னபடியினாலே (அவர் இப்படிச் சொன்னார்.)

௩௧. அத்தருணத்திலே அவருடைய * தாயாரும், சகோதரரும் வந்து வெளியே நின்று அவரையழைக்கும்படி ஆளனுப்பினார்கள். * மத். ௧௨. ௪௬—௫௰; லூக். ௮. ௰௯—௨௧.

௩௨. அப்பொழுது அவரைச் சுற்றியிருக்கிற சனங்கள் அவரை நோக்கி அதோ, உம்முடைய தாயாரும், உம்முடைய சகோதரரும் வெளியே நின்று உம்மைத் தேடுகிறார்களென்றார்கள்.

௩௩. அதற்கவர் என்னுடைய தாயும், என்னுடைய சகோதரரும் யாரென்று சொல்லி,

௩௪. தம்மைச் சூழ உட்கார்ந்தவர்களைச் சுற்றிப்பார்த்து * என்னுடைய தாயும், என் சகோதரரும் இவர்களே. * யோவா. ௰௫. ௰௪; எபி. ௨. ௰௧.

௩௫. எப்படியெனில், பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவனெவனோ அவனே என் சகோதரன், என் சகோதரி, என் தாயாயிருக்கிறானென்றார்.

## ௪. அதிகாரம்.

[(௧) விதைக்கிறவனைக் குறித்த உவமை. (௰௪) அதின் வியாக்கியானம். (௨௧) நம்முடைய ஞானத்தைக் காட்டவேண்டியது. (௨௬) மறைவாய் வளர்ந்த விதையையும், (௩௰) கடுகு விதையையும், உவமையாகக் காட்டியது. (௩௫) கிறிஸ்து கடற்கொந்தளிப்பை யமர்த்தினது.]

பின்பு அவர் மறுபடியும் * கடலோரத்திலே போதகம்பண்ணத்தொடங்கினார். மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்தில் வந்தபடியினாலே அவர் படவிலேறிக் கடலில் உட்கார்ந்தார். சனங்களெல்லாரும் கடற்கரையிலிருந்தார்கள். * மத். ௰௩. ௧—௨௩; லூக். ௮. ௪—௰௮.

௨. அப்பொழுது அவர் உவமைகளாய் அநேககாரியங்களை யவர்களுக்குப் போதித்தார், போதிக்கிறபொழுது அவரவர்களுடனே சொன்னதாவது, கேளுங்கள்.

௩. பயிரிடுகிறவன் விதைக்கப் புறப்பட்டான்.

௪. அவன் விதைக்கையில் சில விதை வழியருகே விழுந்தன. அப்பொழுது ஆகாயத்தின் பறவைகள் வந்து அவைகளைப் பட்சித்தன.

௫. சில விதை மிகுந்த மண்ணில்லாத கற்பாறை நிலத்தில் விழுந்தன. அதற்கு மிகுந்த மண்ணில்லாததினாலே உடனே முளைத்து,

௬. சூரியகாந்தி தோன்றினபொழுது, தீந்து அவைகளுக்கு வேரில்லாமையினால் உலர்ந்துபோயின.

௭. சில விதை முள்ளுக்களுள்ள நிலத்திலே விழுந்தன. முள்ளுக்கள் எழும்பி அவைகளை பலன்கொடாதபடிக்கவைகளை நெருக்கிப்போட்டன.

௮. சில விதை நல்ல நிலத்திலே விழுந்து ஓங்கி வளர்ந்து ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன்கொடுத்தன.

௯. கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்று திருவுளம்பற்றினார்.

௰. பின்பு அவர் தனித்திருக்கையில் பன்னிருவரோடுங்கூட அவரைச் சூழ இருந்தவர்கள் அந்த உவமையைக் குறித்து அவரிடத்தில் விசாரித்தார்கள்.

௰௧. அவர்களுடனே யவர் சொன்னது, பராபரனுடைய இராச்சியத்தின் இரகசியத்தை யறியும்படி உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது.

௰௨. * புறம்பேயிருக்கிறவர்கள் மனந்திரும்பாமலும், தங்கள் பாவமன்னிப்படையாமலுமிருக்கத்தக்கதாக உற்றுப்பார்த்தும் அறியாமலும், உற்றுக்கேட்டும் உணராமலுமிருக்கும்படிக்கு அவைகளெல்லாம் உவமைகளாக அவர்களுக்குச் சொல்லப்பட்டுவருகின்றனவென்று சொல்லி, * ஏசா. ௬. ௯, ௰; அப்போஸ். ௨௮. ௨௬. ௨௭.

௰௩. பின்பு அவர்களை நோக்கி, நீங்கள் இந்த உவமையை யறியவில்லையா! அப்படியானால், மற்ற எல்லா உவமைகளையும் எப்படி யறிவீர்கள்.

௰௪. விதைக்கிறவன் வசனத்தை விதைக்கிறவனே.

௰௫. விதைவிழுந்த வழிக்கொப்பானவர்கள் விதைக்கப்படுகிற வசனத்தைக் கேட்டவுடனே சாத்தான் வந்து, அவர்களிருதயங்களின்மேல் விதைக்கப்பட்ட வசனத்தை யெடுத்துப்போடுகிறான்.

௰௬. விதைவிழுந்த கற்பாறை நிலத்துக்கொப்பானவர்கள் அந்த வசனத்தைக் கேட்கிறபொழுது உடனே யதைச் சந்தோஷத்தோடே யேற்றுக்கொண்டும்,

௰௭. தங்களில் வேரூன்றியிராமல் கொஞ்சக்காலமாத்திரம் அதைப்பற்றிக்கொள்ளுகிறார்கள். அவ்வசனத்தினிமித்தம் உபத்திரவமும், துன்பப்படுத்தலுமுண்டானவுடனே வழுவுகிறார்கள்.

௰௮. விதைவிழுந்த முள்ளுக்களுள்ள நிலத்துக்கொப்பானவர்கள் அவ்வசனத்தைக் கேட்டும்,

௰௯. அது பலனற்றதா யிருக்கும்படிக்கு இவ்வுலகக்கவலைகளும், * ஐசுவரியத்தின் வஞ்சனையும், மற்றக் காரியங்களின்மேலுண்டாகிற இச்சைகளுந் தோன்றி அந்த வசனத்தை நெருக்கிப்போடுகிறதற்கு (இடங்கொடுக்கிறார்கள்.) * ௧. தீமோ. ௬. ௯, ௰.

௨௰. விதைவிழுந்த நல்ல நிலத்திற்கொப்பானவர்கள் அவ்வசனத்தைக் கேட்டுப் பற்றிக்கொண்டு ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன்கொடுக்கிறார்களென்றார்.

௨௧. அன்றியும் அவர் அவர்களுடனே சொன்னது, * விளக்கை ஒரு தண்டின்மேலே வைக்கிறதற்கேயன்றி மரக்காலின் கீழாகிலும், கட்டிலின் கீழாகிலும் வைக்கிறதற்குக் கொண்டுவருவார்களா! * மத். ௫. ௰௫.

௨௨. ஆதலால், வெளியரங்கமாகாத அந்தரங்கமான பொருளுமில்லை. வெளிக்குவாராத மறைபொருளுமில்லை.

௨௩. கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவனென்றார்.

௨௪. அன்றியும் அவர்களுடனே யவர் சொன்னது, நீங்கள் கேள்விப்படுகிறதின்னதென்று சிந்தித்துக்கொள்ளுங்கள். எந்த அளவினால் நீங்கள் அளப்பீர்களோ அதினாலே யுங்களுக்கும் அளக்கப்படும்.

௨௫. அல்லாமலும், * எவன் உள்ளவனாயிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும். எவன் இல்லாதவனாயிருக்கிறானோ அவனிடத்திலே உள்ளதும் எடுத்துப்போடப்படும். ஆகையாற் கேள்விப்படுகிற உங்களுக்கு அதிகமுங்கொடுக்கப்படுமென்றார். * மத். ௰௩. ௰௨;— ௨௫. ௨௯.

௨௬. அன்றியும் அவர் சொன்னதாவது, பராபரனுடைய இராச்சியம் ஒரு மனிதன் தன்னிலத்திலே விதை விதைக்கிறதற்கொப்பாயிருக்கின்றது.

௨௭. பின்பு இராத்திரிதோறும் நித்திரைபண்ணிப் பகல்தோறும் எழுந்திருப்பான்.

௨௮. அவனுக்குத் தெரியாமற் பூமியானது முன்பு முளையையும், பின்பு கதிரையும், பின்பு கதிரிலே நிறைந்த தானியத்தையும் பலனாகத் தானாய்க் கொடுக்கின்ற தன்மையுள்ளதாயிருக்கிறபடியால், அந்தவிதை முளைத்துப் பயிராம்.

௨௯. அப்படிப் பயிர்ப்பருவமானபொழுது அறுப்புக்காலமானபடியினாலே அவன் அதை யறுக்கிறதற்கு ஆள்களையனுப்புவானென்றார்.

௩௰. அன்றியும் அவர் சொன்னது, நாம் பராபரனுடைய இராச்சியத்தை யெதற்கொப்பாக்கலாம்? அதையெந்த உவமையினாலே காண்பிக்கலாம்.

௩௧. * அது ஒரு கடுகுவிதைக்கொப்பாயிருக்கின்றது. அது நிலத்தில் விதைக்கப்படுகிறபொழுது பூமியிலுள்ள சகலவிதைகளிலும் அது சிறிதாயிருந்தும், * மத். ௰௩. ௩௧—௩௨; லூக். ௰௩. ௰௯.

௩௨. விதைக்கப்பட்டபின்பு வளர்ந்து சகல கீரைகளிலும் பெரிதாகி ஆகாயத்துப் பறவைகள் அதின் நிழலில் வந்தடையத்தக்கதாக விஸ்தாரமான கிளைகளைவிடுகின்றதென்றார்.

௩௩. கேட்டறியும்படிக்குச் சனங்களுக்குண்டான கிராணித்துக்குத்தக்கதாக அவர் இப்படிப்பட்ட அநேக உவமைகளினாலே யவர்களுக்கு வசனத்தைச் சொன்னார்.

௩௪. உவமைகளினாலேயன்றி, அவர் அவர்களுக்கொன்றுஞ்சொல்லவில்லை. தம்முடைய சீஷருடனே அவர் தனித்திருக்கிறபொழுதுமாத்திரம் அவர்களுக்கு எல்லாவற்றையும் விவரித்துச்சொன்னார்.

௩௫. * அந்தநாளிலே சாயங்காலமான பொழுது, அவர் அவர்களைநோக்கி அக்கரைக்குப்போவோம் வாருங்களென்றார்.
* மத். ௮. ௨௩-௨௭; லூக். ௮. ௨௨-௨௫.

௩௬. ஆதலால் அவர்கள் சனங்களைவிட்டு அவர் படவிலிருந்தபடியே யவரைக்கொண்டுபோனார்கள். வேறுபடவுகளும் அவரோடேகூடப்போயின.

௩௭. அப்பொழுது அவர் பின்பக்கத்திலே ஒரு தலையணையை வைத்து நித்திரைபண்ணிக்கொண்டிருக்கையில், பலத்த சுழல்காற்றுண்டானதினாலே படவுமூடிக்கொள்ளத்தக்கதாக அலைகள் அதின்மேல்மோதின.

௩௮. உடனேயவர்கள் அவரையெழுப்பிப் போதகரே, நாங்கள் மடிந்துபோகிறது உமக்குக் கவலையில்லையா என்றார்கள்.

௩௯. அவர் எழுந்து காற்றுக்குக் கட்டளையிட்டுக் கடலையுநோக்கிக் கோஷமாயிராதே, அமைதலாயிரு என்றார். உடனே காற்று நின்றுபோக, மிகுந்த அமைதலுண்டாயிற்று.

௪௰. பின்பு அவர் அவர்களைநோக்கி, இப்படியேன் பயப்படுகிறீர்கள், என்னத்தினாலே யுங்களுக்கு விசுவாசமில்லை என்றார்.

௪௧. அவர்கள் மிகவும் பயந்து, காற்றும், கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே, இவர் யாரோ என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) லேகியோனென்னும் பேய்களைப்பிடித்தவனைக் கிறிஸ்து விடுதலையாக்கினபோது, (௰௩) அவைகள் பன்றிகளுக்குள் பிரவேசித்தது. (௨௫) அவர் பெரும்பாடுள்ள ஸ்திரியை குணமாக்கி, (௩௫) யாவீரென்பவனுடைய மகளை மரணத்தினின்றெழுப்பினது.]

* பின்பு அவர்கள் கடலுக்கக்கரையிலுள்ள கதரேனருடைய தேசத்திற்கு வந்தார்கள். * மத்தே. ௮. ௨௮—௩௪; லூக்கா. ௮. ௨௬—௩௯.

௨. அவர் படவிலிருந்திறங்கின உடனே அசுத்த ஆவியுள்ள ஒருமனிதன் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கெதிராக வந்தான்.

௩. அவனுடைய குடியிருப்பு பிரேதக்கல்லறைகளிலேயிருந்தது. ஒருவனும் அவனைச் சங்கிலிகளினாலுங் கட்டக்கூடாததாயிருந்தது.

௪. அநேகந்தரம் அவன் விலங்குகளினாலும், சங்கிலிகளினாலுங் கட்டப்பட்டிருந்தும், அவன் அந்தச் சங்கிலிகளை முறித்து, விலங்கு

களைத் தகறித்துப்போட்டான். ஒருவனும் அவனைக் கீழ்ப்படுத்தக்கூடாததாயிருந்தது.

௫. அல்லாமலும் அவன் எப்பொழுதும் இரவும் பகலும் மலைகளிலும், கல்லறைகளிலுந் தங்கிக் கூக்குரலிட்டுத் தன்னைத்தானே கற்களால் கீறிக்கொண்டிருந்தான்.

௬. அவன் தூரத்திலே இயேசுவானவரைக் கண்டு *ஓடிவந்தபொழுது அவரை நோக்கி,
* ௩. ௰௧.

௭. அசுத்த ஆவியே நீ இந்த மனிதனைவிட்டுப் போவென்று அவர் கட்டளையிட்டபடியினாலே,

௮. அவன் அவருக்குத் தாழ்ந்து வணங்கி, இயேசுவே, உன்னதமான பராபரனுடைய குமாரனே, எனக்கும், உமக்குமென்ன என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு, உமக்குப் பராபரன் மேல் ஆணையிடுகிறேனென்று மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்டான்.

௯. அவர் அவனை நோக்கி, உன் பேரென்னவென்று கேட்டார். அதற்கு அவன் அநேகராயிருக்கிறோமாகையால் என் பேர் இலேகியோனென்று சொல்லி,

௰. பின்பு அத்திசையிலிருந்துதங்களை ஓட்டிவிடாதபடிக்கு அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.

௰௧. அவ்விடத்திலே மலையினருகே மிகுந்த கூட்டமான பன்றிகள் மேய்ந்துகொண்டிருந்தன.

௰௨. அப்பொழுது பசாசுகளெல்லாரும் அவருடனே சொன்னது, நாங்கள் பன்றிகளிற் பிரவேசிக்கும்படிக்கு எங்களையனுப்புமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௰௩. உடனே இயேசுவானவர் அவர்களுக்கு உத்தரவு கொடுத்தார். அப்பொழுது அசுத்த ஆவிகள் புறப்பட்டுப் பன்றிகளுக்குள்ளே பிரவேசித்தன. உடனே ஏறக்குறைய இரண்டாயிரம் பன்றிகளாகிய அந்தக் கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து அதில் அமிழ்ந்து மாண்டது.

௰௪. அப்பொழுது பன்றிகளை மேய்த்தவர்கள் ஓடி, அதைப் பட்டணத்திலும், வெளிப்புறங்களிலும் அறிவித்தார்கள். பின்பு சம்பவித்ததைப் பார்க்கும்படிக்குச் சனங்கள் புறப்பட்டு,

௰௫. இயேசுவினிடத்தில் வந்து இலேகியோனாகிய பசாசுக்கள் பிடித்திருந்தவன் வஸ்திரம் உடுத்திக்கொண்டு உட்கார்ந்து, புத்தியடைந்திருக்கிறதைக் கண்டு பயந்தார்கள்.

௰௬. பசாசுகள் பிடித்தவனுக்குப், பன்றிகளுக்கும் சம்பவித்ததைக் கண்டவர்களும் அவர்களுக்கு விவரமாய்ச் சொன்னார்கள்.

௰௭. அப்பொழுது தங்கள் எல்லைகளைவிட்டு அப்புறம் போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௰௮. அந்தப்படியவர் படவிற் பிரவேசிக்கிற பொழுது பசாசு பிடித்திருந்தவன் அவருடனே கூடப்போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்.

௰௯. இயேசுவானவர் அவனுக்கு உத்தரவு கொடாமல், நீ உன் வீட்டிலே உன் இனத்தாரிடத்திற்குப் போய்க் கர்த்தர் உன்மேல் இரங்கி உனக்குச் செய்த மிகுந்த விசேஷங்களை அவர்களுக்கு அறிவிப்பாயாகவென்றார்.

௨௰. அந்தப்படியவன் போய்த் தனக்கு இயேசுவானவர் செய்த விசேஷங்களைத் தெக்கப்போலியென்னுந் தேசத்திலே பிரசித்தம் பண்ணினான், யாவரும் ஆச்சரியப்பட்டார்கள்.

௨௧. பின்பு இயேசுவானவர், மறுபடியும் படவிலேறி இக்கரைக்கு வந்து கடலோரத்திலேயிருந்தபொழுது மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்தில் வந்தார்கள்.

௨௨. அப்பொழுது செப ஆலயத்தலைவரிலொருவனாகிய யாவீரு என்பவனும் வந்து அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்தினருகே விழுந்து,

௨௩. என் குமாரத்தி மரண அவஸ்தைப்படுகிறாள். அவள் ஆரோக்கியமடையும்படிக்கு நீர் வந்து, அவள்மேற் கைகளை வைத்தருளும். அப்பொழுது பிழைப்பாளென்று அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.

௨௪. *அவர் அவனோடே கூடப்போனார். அவரை நெருக்கத்தக்கதாக அநேக சனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள். * மத்தே. ௯. ௰௮; லூக்கா. ௮. ௪௧.

௨௫. * அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியானவள்,
* மத். ௯. ௨௰, ௨௧; லூக்கா. ௮. ௪௩.

௨௬. அநேக பரிகாரிகளால் மிகுந்த வருத்தப்பட்டுத் தனக்குண்டானயாவையுஞ் செலவழித்தும் ஒரு சுகமுமடையாமல் அதிக வருத்தப்படுகிறபொழுது,

௨௭. இயேசுவைக் குறித்துக் கேள்விப்பட்டு அவருடைய வஸ்திரங்களை மாத்திரந் தொட்டால் சுகமடையலாமென்றெண்ணி,

௨௮. சனங்களுக்குள்ளே (செல்லுகிறவர்களுக்குப்) பின்னாலே வந்து அவருடைய வஸ்திரத்தைத் தொட்டாள்.

௨௯. உடனே அவளுடைய இரத்த ஊறல் நின்றுபோயிற்று. அந்த வேதனை நீங்கத்தான் ஆரோக்கியமடைந்ததை அவள் சரீரத்திலுணர்ந்தாள்.

௩௰. உடனே இயேசுவானவர் தம்மிலிருந்து வல்லமை புறப்பட்டதைத் தமக்குள் அறிந்து, திரும்பிச் சனங்களைப் பார்த்து என் வஸ்திரங்களைத் தொட்டவர் யாரென்றார்!

௩௧. அதற்கு அவருடைய சீஷர்கள் சொன்னது, சனங்கள் உம்மை நெருக்குகிறதை நீர் கண்டும் என்னைத் தொட்டவர் யாரென்று எப்படிச் சொல்லுகிறீரென்றார்கள்.

௩௨. அவ அப்படிச்செய்தவளைக்காணு மபடிக்குச்சுற்றிலும்பார்த்தார்.

௩௩. அப்பொழுது தனனிடத்திலே நடந்த தையறிநதஸ்திரி பயந்து நடுங்கிவந்து, அவ ரைச சாஷடாங்கமாய்வணங்கி எல்லாவற றையும அவருக்கு உணமையாயசசொன னள.

௩௪. அவருடனே அவர் சொனனது, மக ளே, * உனவிசுவாசம உனனை சுகமாக கிறது. நீ சமாதானததோடேபோய உன வேதனையினறிச்சுகமாயிருவெனருர்.

* ம. ௯௨.

௩௫. அவர் பேசிக்கொண்டிருக்கையில, செப ஆலயத்தலைவனுடையவீட்டிலிருந்து சிலர்வந்து, உமமுடையகுமாரத்தி இறந்து போனுள. இனியேன்போதகரைவருத்தப படுத்துகிறீரென்றர்கள.

௩௬. அவர்களசொன்னவார்த்தையை இயே சுவானவர்கேட்டு உடனே ஆலயத்தலைவனை நோக்கி, நீ பயப்படவேணடாம. விசுவாச மாகவேயிருவென்றுசொலலி,

௩௭. பின்பு பேதுருவும, யாககோபினச கோதரனுகிய யோவானுந்தவிர வேறொரு வருந் தமக்குப பினசெலலுகிறதறகு இடங கொடாமல,

௩௮. ஆலயத்தலைவனுடைய வீட்டிலேசே ர்ந்து சந்தடியையும, அழுதுகொண்டுமிக வும்புலமபுகிறவர்களையுங்கணடு,

௩௯. உட்பிரவேசித்து நீங்களசந்தடிபண ணி அழுதுகொளளுகிறதென்ன? பிளளை * பி றந்துபோகாமல நித்திரைபணணுகிறுளெ ன்றுர். * யோவா. ௰௧. ௰௧.

௪௰. அவர்கள அவரைநோக்கி,நகைத்தார் கள. பின்பு அவர் எலலாரையும வெளியே போகப்பணணிப்பிளளையின தகப்பனையும. தாயையும, தமமோடே வந்தவர்களையும அழைத்துக்கொண்டுபிளளைகிடக்கிற இடத திறபிரவேசித்து,

௪௧. அதின கையைப்பிடித்துத் தலித்தா கூமியென்றுர். அதறகுச் சிறுபெணணே எழுந்திரு. உனக்குக் கட்டளையிடுகிறேனெ னறு அருததமாம.

௪௨. உடனேபனனிரணடுவயதுளள அந்த பபெண எழுந்து நடந்தாள. (அதைக்கண டவர்கள) மிகுநத ஆசசரியத்தோடே பிர் மித்தார்கள.

௪௩. அப்பொழுது அவர்கள அதை ஒருவ ருக்கும அறியயாதபடிக்கு உறுதியாயக் கட்டளையிட்டு,பின்பு அவளுக்குச்சாப்பாடு கொடுக்குமபடிச்சொன்னுர்.

## ௬. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து தமமுடைய ஊராராலே அசட்டைபணணப்பட்டது. (௭) அவர்ப னனிரணடு சீஷர்களுக்கும அசுதத ஆவிகளி னமேல அதிகாரத்தைக்கொடுத்தது. (௰௪) கிறிஸ்துவைக்குறித்த பலவிதமான அறப பிராயங்கள. (௰௮) யோவானஸ்நானனை தலை வெட்டுணடு, (௨௯) அடக்கம பணணப்பட டது. (௩௰) அப்போஸ்தலர்களபிரசஙகம பணணித்திருமபி வந்தது. (௩௭) ஐந்து அப்பங்களினுலும, இரணடுமீனகளினுலுஞ் செயயப்பட்ட அறபுதம. (௪௮) கிறிஸ்து கடலினமேல நடந்தது. (௫௩) அவரைத் தொட்டயாவருஞ் சுகமடைந்தது.]

அவர் அவவிடமவிட்டுப புறப்பட்டுத் தாமவளர்ந்த * ஊருக்குப்போனு ர். அவருடையசீஷர் அவருக்குப பினசென ருர்கள. * மத. ௰௩. ௫௩—௫௮; லூக. ௪. ௰௬—௩௰

௨. ஓயவுநாளவந்தபொழுது, அவர்செப ஆலயத்திலே யுபதேசயபணணத்தொடங கினுர். அதைக்கேட்ட அநேகர் பிரமிப்ப டைந்து, எங்கேயிருந்து இவைகள இவனு க்குத்தெரியவந்தன. இவனுடைய கைகளி னுல இப்படிப்பட்டபலத்த அறபுதங்களந டக்கத்தக்கதாக இவனுக்குக்கொடுக்கப்ப ட்டஞானமெப்படிப்பட்டது.

௩. இவன மரியாளுக்குக்குமாரனும, யாக கோபு, யோசே, யூதா, சீமோன எனபவர் களுக்குச் சகோதரனுமாகிய * தச்சனல்ல வா! இவனுடைய சகோதரிகளும இங்கே நமமிடத்திலிருக்கிறுர்கள அலலவாவென்று சொலலி, அவரைக்குறித்து வெறுப்படை ந்தார்கள. * யோவா. ௬. ௪௨.

௪. அவர்களுடனே இயேசுவானவர்சொன னது, *ஒரு தீர்க்கதரிசி தனனூரிலும, தன இனததாரிடத்திலும், தன குடும்பத்திலுமே யனறி (மறற இடங்களிலே) கன ஈனம அடையானெனறுர். * யோவா. ௪. ௪௪.

௫. அங்கே அவர் சில நோயாளிகளமேற கைகளைவைத்து அவர்களைக் குணமாக்கின தேயனறி, வேறொரு அறபுதத்தைச்செயய மாட்டாமல,

௬. அவர்களுடைய அவிசுவாசத்தைக்கு றித்து ஆசசரியப்பட்டார்.

௭. பின்பு அந்தத்திசையிலுள்ள கிராமங்க ளிலேதிரிந்து உபதேசமபணணினுர். அல லாமலும * அவர் பனனிருவரையும அழை த்து, அசுத்தமான ஆவிகளினமேல அவர்க ளுக்கு அதிகாரங்கொடுத்து, * மத்தே. ௰. ௧; லூக்கா. ௯. ௧—௫.

௮. அவர்கள பையையாவது, ஆகாரத் தையாவது, கச்சையிற பணத்தையாவ தும வழிக்காகக்கூட்டக்கொணடுபோகாமல ஒருதடியைமாத்திரம எடுத்துப்போகவும,

௯. பாதரட்சைகளைப்போட்டுக்கொண டுபோகவும, இரணடங்கிகளைத்தரியாதிருக் கவும அவர்களுக்குக் கட்டளையிட்டு,

௰. பின்பு அவர்களுக்குச் சொன்னதாவது; எங்கேயாகிலும் நீங்கள் ஒரு வீட்டிற் பிரவேசித்ததுமுதல் அவ்விடத்தைவிட்டுப் புறப்படுகிறவரைக்கும் அங்கேதானே தங்கியிருங்கள்.

௰௧. எவர்கள் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும், உங்களுக்குச் செவிகொடாமலுமிருக்கிறார்களோ, அவர்களுடைய இடத்தை நீங்கள்விட்டுப் புறப்பட்டு அவர்களுக்கு விரோதமான சாட்சியாக உங்கள் உள்ளங்காலிலிருக்கிற தூசியை உதறிப்போடுங்கள். நியாயத்தீர்ப்புநாளிலே சோதோம் கொமோரா பட்டினத்தாரிலும் அந்தப் பட்டினத்தார் அதிக்கனடிப்பை யடைவார்களென்று மெய்யாகவே யுங்களுக்குச் சொல்லுகிறேனென்றுசொல்லி, இரண்டிரண்டு பேராக அவர்களையனுப்பினார்.

௰௨. அவர்கள் புறப்பட்டு * மனந்திரும்புங்களென்றுபிரசங்கித்து, * மத்தேயு. ௩. ௨; ௪. ௰௭.

௰௩. அநேகம்பசாசுக்களைத் துரத்தி, அநேகம் நோயாளிகளை எண்ணெயாற்பூசிக் குணமாக்கினார்கள்.

௰௪. * அவருடையபேர்பிரசித்தமானபடியினாலேயிராசனாகியஏரோது (அவரைக்குறித்துக்) கேள்விப்பட்டு, யோவான்ஸ்நானன் மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்டிருக்கிறான்
* மத்தேயு. ௰௪. ௧–௰௨; லூக்கா. ௯. ௭–௯.

௰௫. ஆதலாற்பலத்தஅற்புதங்களவனாலே செய்யப்படுகின்றனவென்றான். சிலர் * அவரை எலியாவென்றும், சிலர் அவரை ஒருதீர்க்கதரிசி அல்லது தீர்க்கதரிசிகளிலொருவனைப்போலிருக்கிறாரென்றுஞ் சொன்னார்கள்.
* மத்தேயு. ௰௬. ௰௪.

௰௬. ஏரோது அதைக் கேட்டபொழுது, அவன் நான் சிரச்சேதம்பண்ணின யோவான்றான். அவன் மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்டிருக்கிறானென்றான்.

௰௭. அதெப்படியென்றால், ஏரோது * தன் சகோதரனாகிய பிலிப்பினுடைய மனைவி ஏரோதியாளை விவாகம்பண்ணினபொழுது,
* லூக்கா. ௩. ௰௯-௨௰.

௰௮. யோவான் ஏரோதைநோக்கி, நீர் உம்முடைய சகோதரனுடைய மனைவியைக் கொள்ளுகிறது நியாயமல்லவென்றுசொன்னபடியினாலே, ஏரோது (ஆள்களையனுப்பி) அவனைப்பிடித்துக் காவலறை கட்டிவைத்தான்.

௰௯. அல்லாமலும் ஏரோதியாள் அவனுக்குக் கெடுதிநினைத்து, அவனைக்கொலைசெய்ய வலிருமபினாள்.

௨௰. ஏரோது யோவானை நீதியும், பரிசுத்தமுமுள்ளவனென்று அறிந்து அவனுக்குப் பயந்து அவனை நன்றாய்க்காத்து அவனுடைய ஆலோசனையின்படி அநேககாரியங்களைச்செய்து விருப்பத்தோடே யவனுடையசொற்கேட்டுவந்தான். ஆகையால், அவள் அப்படிச்செய்யக்கூடாமலிருந்தது.

௨௧. பின்பு அதற்கேற்றநாள் வந்தது. எப்படியென்றால், ஏரோது தன் ஜென்மநாளிலே தன்னுடைய மந்திரிகளுக்கும், சேனாபதிகளுக்கும், கலிலேயாநாட்டின் பிரபுக்களுக்கும் விருந்துபண்ணினகாலத்திலே,

௨௨. ஏரோதியாளுடைய குமாரத்தி உள்ளேசென்று ஏரோதுக்கும், பந்தியிருந்த மற்றவர்களுக்கும் பிரியமுண்டாகத்தக்கதாக நடனம்பண்ணினபொழுது, இராசா அந்தச் சிறுபெண்ணைநோக்கி உனக்குவேண்டியதையென்னிடத்திற்கேள். நான் உனக்குத் தருவேனென்று சொன்னதுமல்லாமல்,

௨௩. நீ என் இராசியத்திற் பாதிவரைக்கும் எதைக்கேட்டாலும் அதை யுனக்குத் தருவேனென்று அவளுக்கு ஆணையுமிட்டான்.

௨௪. அப்பொழுது அவள் வெளியேபோய்த் தன் தாயைநோக்கி நான் என்னகேட்கவேண்டுமென்று சொன்னதற்கு யோவான்ஸ்நானனுடைய தலையைக்கேளென்றாள்.

௨௫. உடனேயவள் சீக்கிரமாய் இராசாவினிடத்திற்குத் திரும்பிப்போய், நீர் இப்பொழுதுதானே ஒருதாலத்திலே யோவான்ஸ்நானனுடைய தலையை யெனக்குத்தரவேண்டுமென்றுகேட்டாள்.

௨௬. அப்பொழுது இராசா மிகுந்த துக்கமடைந்தான். அப்படியிருந்தும் ஆணைகளினிமித்தமும், பந்தியிருந்தவர்களினிமித்தமும் அவளுக்கு அதை மறுக்கமனதில்லாமல்,

௨௭. உடனேயவனுடைய தலையைக்கொண்டுவரும்படிக்குப் போர்ச்சேவகனாகிய காவற்காரனுக்குக் கட்டளையிட்டனுப்பினான். அந்தப்படியே யவன்போய்க் காவற்கூடத்திலே யோவானைச் சிரச்சேதம்பண்ணி,

௨௮. ஒருதாலத்திலே யவனுடைய தலையைக்கொண்டுவந்து அதைச் சிறுபெண்ணுக்குக்கொடுத்தான். சிறுபெண் அதைத்தன் தாய்க்குக்கொடுத்தாள்.

௨௯. அவனுடைய சீஷர் அதைக்கேட்டுவந்து அவனுடலையெடுத்து ஒருகல்லறையிலேவைத்தார்கள்.

௩௰. அந்தருணத்திலே அப்போஸ்தலர்கள் இயேசுவினிடத்திற் கூடிவந்து தாங்கள் செய்ததியாவையும், போதகம்பண்ணினயாவையும் அவருக்கு அறிவித்தார்கள்.

௩௰௧. பின்பு அவர்கள் போசனம்பண்ணும்படிக்கு * சமயமில்லாதிருக்கத்தக்கதாக வருகிறவர்களும், போகிறவர்களும் மிகுதியானபடியினாலே அவர் அவர்களைநோக்கி, நீங்கள்வனாந்தரமான இடத்திலே தனித்து

ருந்துசற்றே யிளைப்பாற வாருங்களென்று சொன்னார். * மத். ௰௪. ௰௩—௨௧; லூக். ௯. ௰—௰௭; யோவா. ௬. ௫—௰௩.

௩௨. அந்தப்படியவர்கள் தனித்திருக்கும்படிக்குப் படவிலேறிவெளிந்து வனாந்தரமான இடத்திற்குப்போனார்கள்.

௩௩. அவர்கள் புறப்பட்டுப் போகிறதைச் சனங்கள் கண்டு, அவர்கள் (போகிற) இடத்தையறிந்து சகலபட்டணங்களிலுமிருந்து காலநடையாய் அவ்விடத்திற்கோடி அவர்களுக்குமுன்னேயங்கேசேர்ந்து அவரிடத்திற்கூடிவந்தார்கள்.

௩௪. இயேசுவானவர் கரையிலேவந்திருந்து சனங்களைக் கண்டபொழுது, அவர்கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போலிருந்தபடியினாலே அவர்கள்மேல் உருக்கமாயிரங்கி அநேககாரியங்களையவர்களுக்கு உபதேசித்தார்.

௩௫. பின்பு பொழுதுமிகவுங் கழிந்துபோனபடியால், அவருடைய சீஷர் அவரிடத்தில்வந்து இது வனாந்தரமானஇடம். அல்லாமலும் மிகவும்பொழுதுபோயிற்று.

௩௬. போசனம்பண்ணுகிறதற்கு இவர்களிடத்திலொன்றுமில்லை. ஆகையால், இவர்கள் சுற்றியிருக்கிறஊர்களுக்கும்,கிராமங்களுக்கும்போய்த் தங்களுக்காகஅப்பங்களைவாங்கிக்கொள்ளும்படிக்கு இவர்களையனுப்பிவிடவேண்டுமென்றார்கள்.

௩௭. அதற்கவர், நீங்களே யிவர்களுக்குப் போசனங்கொடுங்களென்றார். அவர்கள் சொன்னது, இவர்களுக்குப் போசனங்கொடுக்கும்படிக்கு நாங்கள்போய் இருநூறு தேநாரியப்பணத்திற்கு அப்பங்களைவாங்கிக்கொண்டுவரலாமாவென்றார்கள்.

௩௮. அதற்கவர் எவ்வளவு அப்பங்களுங்களிடத்திலுண்டு. போய்ப் பாருங்களென்றார். அவர்கள் விசாரித்து (வந்து) ஐந்து அப்பமும், இரண்டு மீனுமிருக்கின்றனவென்று சொன்னார்கள்.

௩௯. அப்பொழுது அவர் கூட்டங்கூட்டமாக எல்லாச் சனங்களையும் பச்சையான புல்லின்மேல் உட்காரப்பண்ணும்படிக்குக் கட்டளையிட்டார்.

௪௰. அப்படி நூற்றுப்பேர் ஒரு கூட்டமாம், ஐம்பதுபேர் ஒரு கூட்டமுமாகச் சாரிசாரியாய் உட்கார்ந்தார்கள்.

௪௧. பின்பு அவர் அவ்வைந்து அப்பங்களையும், அவ்விரண்டுமீனையும் எடுத்து வானத்தை யண்ணாந்துபார்த்து, அவைகளை யாசீர்வதித்துப் பின்பு அப்பங்களைப்பிட்டுச் சனங்களுக்குக்கொடுக்கும்படிக்கு அவைகளைச் சீஷர்களுக்குக்கொடுத்தார். பின்பு அவ்விரண்டுமீனையும் அவரெல்லாருக்கும் பங்கிட்டார்.

௪௨. எல்லாருஞ்சாப்பிட்டுத்திருத்தியடைந்தார்கள்.

௪௩. அல்லாமலும் (அப்பங்களிலும்) மீன்களிலுமுண்டு சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்கள்.

௪௪. ஏறக்குறைய ஐயாயிரம்புருடர் போசனம்பண்ணினார்கள்.

௪௫. * பின்புதாம் சனங்களையனுப்புகையில் தமக்குமுன்னுகச்சீஷர்கள் படவிலேறி அக்கரையிற்பெத்சாயிதாவென்னும் ஊருக்குப்போகும்படிக்கு அவர்களைத்துரிதப்படுத்தினார். * மத். ௰௪. ௨௨.

௪௬. பின்பு அவர்சனங்களையனுப்பிச் செபதியானம் பண்ணும்படிக்கு மலையிலேறினார்.

௪௭. சாயந்தரமானபொழுது படவுகடலின்நடுவிலே சேர்ந்தது. * அவர்மாத்திரங் கரையிலேயிருந்தார். * யோவான். ௬. ௰௬.

௪௮. அப்பொழுது காற்றுஅவர்களுக்கெதிரானபடியினாலே அவர்கள் வருத்தத்தோடே (படவைத்) தள்ளினதை யவர்கண்டு, பின்பு இராத்திரியில் நாலாஞ்சாமத்திலே புறப்பட்டுக் கடலின்மேல்நடந்து அவர்களிடத்திற்குச்சமீபித்து, அவர்களைக் கடந்து போகமனதாயிருந்தார்.

௪௯. கடலிலேநடந்துபோகிற அவரையவர்கள் கண்டபொழுது, அது ஆவேசமென்றெண்ணிச்சத்தமிட்டார்கள்.

௫௰. அல்லாமலும் எல்லாரும் அவரைக் கண்டு கலக்கமடைந்தார்கள். உடனேயவர் அவர்களைநோக்கித் திடமாயிருங்கள். நான்தான். பயப்படாதிருங்களென்று அவர்களுடனேசொன்னார்.

௫௧. பின்பு அவர் அவர்களிருக்கிறபடவிற் பிரவேசித்த உடனே, காற்றுநின்றுபோயிற்று.

௫௨. அவர்கள் கடினமான இருதயமுடையவர்களானபடியால், அந்த அப்பங்களைக்குறித்துச் சிந்தனைபண்ணாமலிருந்தபடியினாலே மிகவுமதிருதியாய்த் தங்களுக்குள்ளே பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௫௩. பின்பு அவர்கள் புறப்பட்டுக் * கெநேசரேத்துநாட்டின்மேல் வந்துகரைபிடித்தார்கள். * மத். ௰௪. ௩௪—௩௬.

௫௪. அவர்கள் படவைவிட்டிறங்கினவுடனே, சனங்கள் அவரையறிந்து,

௫௫. அந்தத்திசையிலெங்கும் ஓடித்திரிந்து படுக்கைகளிற் கிடக்கிற பிணியாளிகளையெடுத்து, அவர்வந்திருக்கிறாரென்றுகேள்விப்பட்ட இடங்களிற்கொண்டுவரத்தொடங்கினார்கள்.

௫௬. அல்லாமலும் அவர்பிரவேசித்தகிராமம்,பட்டணம், ஊர் எவைகளோ, அவைக

ளின்சந்தைகளிற்பிணியாளிகளைவைத்து அவர்களவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைமாத்திரந்தொடும்படிக்கு, அவரை வேண்டிக்கொண்டார்கள். எவர்கள் அதைத்தொட்டார்களோ, அவர்கள் சொஸ்தம் அடைந்தார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) சீஷர்கள் கைகழுவாமற் போசனம்பண்ணினதைக்குறித்துப் பரிசேயர் குறைபிடித்தது. (௮) அந்தப் பரிசேயர் முதலியவர்கள் மனுஷர்களுடைய பாரம்பரை நியாயங்களினாற் பராபரனுடைய கட்டளைகளை மீறினது. (௰௪) போசனம் மனுஷனை அசுசிப்படுத்தாதென்பது. (௨௪) கிறிஸ்து சீரோபேனிக்கே சாதியான ஒரு ஸ்திரியின் மகளிடத்திலிருந்த அசுத்த ஆவியை நீக்கி, (௩௧) செவிடனும் திக்குவாயனுமான ஒருவனைச் சுகப்படுத்தினது.]

* பரிசேயரும், மற்றயூதர்களெல்லாரும் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கைக்கொள்ளும்படிக்கு, மணிக்கட்டுவரைக்குங் கைக்கழுவாமற் போசனம்பண்ணமாட்டார்கள். * மத். ௰௫. ௧-௨௰.

௨. அல்லாமலுஞ் சந்தைகளிலிருந்து (வந்தால்) ஸ்நானம்பண்ணுமற் போசனம்பண்ணமாட்டார்கள். மேலும், சல்பாத்திரங்களையும், குடங்களையும், செப்புப்பானைகளையும், கட்டில்களையும் ஸ்நானம்பண்ணுவித்து, மற்றும் அப்படிப்பட்ட அனேகஞ்சடங்குகளைப் பற்றிக்கொள்ளுவார்கள்.

௩. ஆதலாற் பரிசேயரும், வேதபாரகரிற் சிலருங்கூடி எருசலேம் பட்டினத்திலிருந்து அவரிடத்தில் வந்து,

௪. அவருடைய சீஷரிற் சிலர் கைகழுவாமல் அசுத்தமான கைகளோடே போசனம்பண்ணுகிறதைக் கண்டபொழுது, அவர்கள் அவரை நோக்கி,

௫. உம்முடைய சீஷர் பெரியோருடைய பாரம்பரை நியாயத்தைமீறிநடந்து, கைகழுவாமற் போசனம்பண்ணுகிறதென்னவென்றுகேட்டார்கள்.

௬. அதற்கு மாறுத்தரமாக அவர் சொன்னது, * நீங்கள் பராபரனுடைய கட்டளையை விட்டுக் குடங்களையும், சல்பாத்திரங்களையும் ஸ்நானம்பண்ணுவித்து, மற்றும் அப்படிப்பட்ட அநேகசடங்குகளைச்செய்து, மனிதர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கைக்கொள்ளுகிறீர்கள். * மத். ௰௫. ௨௫-௨௬.

௭. ஆகையால், இந்தச்சனங்கள் உதடுகளினாலே யென்னைக்கனம்பண்ணியும் இவர்களுடைய இருதயம் எனக்குத் தூரமாயல்லவிருக்கின்றதென்றும்,

௮. * மனிதர்களுடைய கற்பனைகளாகிய உபதேசங்களையிவர்கள் கற்றுக்கொண்டு வீணுய் எனக்கு ஆராதனைசெய்கிறார்களென்றும், ஏசாயாவென்பவன் மாயக்காரராகிய உங்களைக்குறித்து நன்றாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லியிருக்கிறானென்றுசொல்லி,

* கொலோ. ௨. ௨௰-௨௨. † இசெ. ௨௯. ௰௩.

௯. பின்பு உங்கள் பாரம்பரை நியாயங்களைக் காத்துக்கொள்ளும்படிக்கு, நீங்கள் பராபரனுடைய கட்டளையைத் தள்ளிக்கொண்டுவருகிறது நன்றாயிருக்கிறது.

௰. எனனென்றால், * உன் தகப்பனையும், உன் தாயையுங் கனம்பண்ணுவாயாகவென்றும், தகப்பனையாவது, தாயையாவது நிந்திக்கிறவனுக்கு மரண ஆக்கினையைக் கொடுக்கவேண்டுமென்றும் மோசே சொன்னாரே. * ௨. மோசே. ௨௰. ௰௨.

௰௧. நீங்கள் ஒருவன் தன் தகப்பனையாவது, தாயையாவது நோக்கி உங்களுக்கு என்னாலே உதவுகிறதேதோ அது (தேவாலயத்திற்குக் காணிக்கையாகிய) கொர்பானுவதாக வென்று சொன்னால்.

௰௨. பின்பு அவன் தன் தகப்பனுக்கும், தன் தாய்க்கும் உதவிசெய்யவேண்டுவதில்லையென்று உத்தரவுகொடுத்து,

௰௩. இவ்விதமாய் உங்களால் உண்டாக்கப்பட்ட பாரம்பரை நியாயத்தினாலே பராபரனுடைய வசனத்தை அவமாக்குகிறீர்கள். அதுபோல நீங்கள் மற்றும் அநேககாரியங்களையுஞ்செய்கிறீர்களென்றுசொல்லி,

௰௪ பின்பு எல்லாச்சனங்களையும் அழைத்து அவர்களுடனே சொன்னது, நீங்களெல்லாரும் எனக்குச்செவிகொடுத்துச் சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௰௫. ஒருமனிதனுக்குப் புறம்பேயிருக்கிற எந்தப்பொருளும் அவனுக்குட் பிரவேசிக்கிறபொழுது, அவனைச் சுசிப்படுத்தமாட்டாது. அவனுள்ளத்திலிருந்து புறப்படுகிற பொருள்களே அவனை அசுசிப்படுத்துகின்றன.

௰௬. கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனானால் கேட்கக்கடவனென்றார்.

௰௭. பின்பு அவர் சனங்களைவிட்டு வீட்டிற் பிரவேசித்தபொழுது, அவருடைய சீஷர்கள் அந்த உவமையைக்குறித்து அவரிடத்தில் வினவினார்கள்.

௰௮. அவர்களுடனேயவர் சொன்னது, நீங்களும் புத்தியில்லாதவர்களா? புறம்பேயிருக்கிற எந்தப்பொருளும் மனிதனுக்குட் பிரவேசிக்கும்பொழுது, அவனைச் சுசிப்படுத்தமாட்டாதென்று நீங்களும் அறிந்திருக்கவில்லையா?

௰௯. அது அவனுடைய இருதயத்திலே பிரவேசியாமல் வயிற்றிற் பிரவேசிக்கிறதே. அதிலிருந்து, எல்லாப்போசனங்களையுங் கழிக்கிற ஆசனவழியாய்ப் புறப்படுகின்றன.

௨௰. மனிதனுடைய உள்ளத்திலிருந்து புறப்படுகிறதே அவனைச் சுசிப்படுத்துகின்றது.

௨௧. அதெப்படியெனில், *மனிதருடைய இருதயத்திலிருந்து, * மத். ௰௫. ௰௯, ௨௰.

௨௨. விபசாரம், வேசைத்தனம், கொலை, திருட்டு, (தகாத) பொருளாசை, மூர்க்கம், கபடம், காமவிகாரம், பொறாமை, தூஷணம், அகந்தை, மதிகேடு என்பவைகளுக்கு ஏதுவான பொல்லாதயோசனைகள் புறப்படுகின்றன.

௨௩. தீமையான இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்பட்டு, மனிதனையசுசிப்படுத்துகின்றனவென்று திருவுளம்பற்றினார்.

௨௪. * பின்பு அவர் எழுந்து, அவ்விடம் விட்டுத் தீரு, சீதோன்பட்டினங்களின் எல்லைகளுக்குப்போனார். அங்கேயவர் ஒருவீட்டிலே பிரவேசித்தபின்பு தம்மையொருவரும் அறியாமலிருக்கும்படிக்கு மனதாயிருந்தும், அவர்மறைந்திருக்கிறதற்கு ஏதுவில்லை. * மத். ௰௫. ௨௧—௨௮.

௨௫. எப்படியென்றால், சூர்பேநீக்கியா தேசத்திற்பிறந்த அஞ்ஞானியாகிய ஒரு ஸ்திரீயானவளுக்கு அசுத்த ஆவியையுடைய மகளிருந்தாள்.

௨௬. அந்தஸ்திரீ அவரைக்குறித்துக் கேள்விப்பட்டபொழுது, அவள் வந்து வணக்கமாய் அவருடைய பாதங்களினருகேவிழுந்து, தன்னுடைய மகளிலிருந்துபசாசைத் துரத்தவேண்டுமென்று அவரைவேண்டிக்கொண்டாள்.

௨௭. இயேசுவானவர் அவளைநோக்கிப்பிள்ளைகளுடைய ஆகாரத்தையெடுத்து, நாய்களுக்குக்கொடுக்கிறது நியாயமல்ல. ஆகையால், முதலாவது பிள்ளைகள்திருத்தியடையட்டுமென்றார்.

௨௮. அதற்கு அவள்சொன்னது, ஆண்டவரே, அதுசரிதான். ஆனாலும்போசனப்பலகைகளின்கீழிருக்கிறநாய்கள்பிள்ளைகளுடைய உச்சிட்டங்களைத்தின்னுமேயென்றாள்.

௨௯. அப்பொழுது அவர் சொன்னது, நீ இந்தவசனத்தைச் சொன்னபடியினாலே (சந்தோஷமாய்ப்) போ. பசாசு உன்மகளிலிருந்து புறப்பட்டுப்போயிற்றென்றார்.

௩௰. அவள் தன்வீட்டிலேபோய்ச் சேர்ந்தபொழுது, பசாசு புறப்பட்டுப் போனதையும், தன்மகள் கட்டிலின்மேற் படுத்திருக்கிறதையுங்கண்டாள்.

௩௧. * பின்பு அவர்தீரு, சீதோன்பட்டினங்களின்திசைகளைவிட்டுப்புறப்பட்டுத் தெக்கப்போலியென்னும் தேசத்தின் திசைகளின் வழியாய் மறுபடியுங் கலிலேயா நாட்டின் கடலருகேவந்தார். * மத். ௰௫. ௨௯. ௩௧.

௩௨. அங்கே கொன்னைவாயையுடையசெவிடனையவரிடத்திற்கொண்டுவந்து அவர் தமதுகையை அவன்மேல்வைக்கும்படிக்கு அவரைவேண்டிக்கொண்டார்கள்.

௩௩. அப்பொழுது அவர்கூட்டத்திலிருந்து அவனையொருபக்கத்திலேகொண்டுபோய்த் தம்முடையவிரல்களையவனுடைய காதுகளில் வைத்து * உமிழ்ந்து, அவனுடையநாவைத்தொட்டு, * ௮. ௨௩.

௩௪. பின்புவானத்தை * அண்ணாந்துபார்த்து, மூச்சைவிட்டு, எப்பத்தாவென்றார். எப்பத்தாவென்பதற்குத் திறக்கப்படுவாயாக என்று அருத்தயாம். * யோவா. ௰௧. ௪௧.

௩௫. உடனேயவனுடைய காதுகள் திறக்கப்பட்டன. அவன் நன்றாய்ப்பேசத்தக்கதாக, அவனுடைய நாவின் கட்டும் நீக்கப்பட்டது.

௩௬. பின்பு அவர்கள் அதையொருவருக்குஞ்சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார். அப்படியிருந்துந் தங்களுக்கு அவர் அப்படிக் கட்டளையிட்டதெவ்வளவோ அவ்வளவாய் அதைப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௩௭. அல்லாமலும், அவர் சகலத்தையும் நன்றாய்ச்செய்தருளினார். செவிடர்கேட்கவும், ஊமையர்பேசவும்பண்ணுகிறாரென்று மிகவும் மிகுதியான ஆச்சரியத்தோடே சொல்லிக்கொண்டார்கள்.

## ௮. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து நாலாயிரம்பேருக்கு அற்புதமாய்ச்சாப்பாடுகொடுத்தது. (௰) பரிசேயருக்கு ஒரு அடையாளமுங் கொடுக்கப்படுவதில்லையென்பது. (௰௪) பரிசேயருடைய புளித்தமாவுக்கும், ஏரோதேயினுடைய புளித்தமாவுக்கும் எச்சரிக்கையாயிருக்கப்போதித்தது. (௨௨) ஒருகுருடனுக்குப்பார்வையளித்தது. (௩௰) பாடுபட்டு உயிரோடே எழுந்திருக்கப்போகிறவராகியகிறிஸ்துதாமே என்று அறிவித்தது. (௩௪) சுவிசேஷத்தினிமித்தமாய்வருந் துன்பங்களைப்பொறுமையோடே சகிக்கவேண்டுமென்று போதித்தது.]

*அந்தநாள்களிலே சனங்கள் மிகுந்த கூட்டமாய்ப் போசனம்பண்ணுகிறதற்கு ஒன்றுமில்லாதிருந்தபொழுது, இயேசுவானவர் தம்முடைய சீஷர்களை அழைத்து, * மத். ௰௫. ௩௨.

௨. இந்தச் சனங்கள் என்னிடத்தில்வந்து மூன்றுநாளாயிற்று. இப்பொழுது போசனம்பண்ணுகிறதற்கு இவர்களுக்கு ஒன்றுமில்லையே. ஆகையால் இவர்கள்மேல் *உருக்கமாயிரங்குகிறேன். * ௬. ௩௪.

௩. அல்லாமலும் இவர்களிற்சிலர் தூரத்திலிருந்துவந்தவர்களாகையால் நான் அவர்களைப் பட்டினியாய் வீட்டிற்கு அனுப்பினால் வழியிலேசோர்ந்துபோவார்களென்று சொன்னபொழுது,

௪. சீஷர்கள் அவருக்கு மாறுத்தரமாக,

இந்த வருந்தரத்திலே ஒருவன இவர்களுக்கு அப்பங்களினாலே திருத்தியாக்குவதெப்படியென்றார்கள.

௫. அதற்கு அவர், எத்தனை அப்பங்கள உங்களிடத்திலுண்டென்றுகேட்டார். ஏழு அப்பங்களுண்டென்றார்கள.

௬. அப்பொழுது சனங்கள தரையிலேயிருக்கும்படி கட்டளையிட்டுப பினபு அந்த ஏழு அப்பங்களையும எடுத்துத் தோத்திரம பணணி, அவைகளைபபிட்டு, அவர்களுக்குளளே பரிமாறும்படிக்கு அவைகளைச சிஷர்களிடத்திறகொடுத்தார். அந்தபபடியேயவர்கள சனங்களுக்குப பரிமாறினார்கள.

௭. அல்லாமலுஞ சில சிறுமீனகள அவர்களிடத்திலிருந்தன. அவர் தோத்திரஞசொனனபினபு அவைகளையும பரிமாறும்படிக்குக்கட்டளையிட்டார்.

௮. அப்படிச சனங்கள * சாபபிட்டுத திருத்தியடைந்தார்கள. ஏழுகூடை நிறையச சேஷமானவைகளையும எடுத்துக்கொணடார்கள. * ௨. இராசா. ௪. ௪௪.

௯. சாபபிட்டவர்கள ஏறக்குறைய நாலாயிரமபேருணடு.

௰. பினபு அவர்களை யனுபபிவிட்டு உடனே தமமுடைய சிஷருடனேகூடப் படவிலேறித்தலுமனுத்தாவூரின திசைகளிலவந்தார்.

௰௧. * அங்கேயிருந்து பரிசேயர் அவரைப் பரிட்சைபார்க்கும்படிக்குப புறபபட்டு வந்து அவருடனே தருக்கமபணண ஆரமபித்து அவர் வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைககாட்டும்படி கேட்டார்கள.
* மத. ௰௬. ௧—௪.

௰௨. அப்பொழுது அவர் தமது உள்ளத்திலிருந்து பெருமூச்சுவிட்டு இந்தத் தலைமுறையார் என்னத்தினாலே ஓரடையாளத்தைககேட்கிறார்கள. * இந்தச் சந்ததியாருக்கு ஓரடையாளமுங கொடுக்கப்படுவதில்லையென்று மெயயாய் உங்களுக்குச்சொல்லுகிறேனென்றுசொலலி, * லூக். ௰௧.௨௯.

௰௩. அவர்களைவிட்டு, மறுபடியும படவிலேறி அக்கரைக்குபபோனார்.

௰௪. * சிஷர்கள அப்பங்களைககூடக்கொண்டுபோக மறந்தார்கள. படவிற (பிரவேசிக்கையில) ஒரே அப்பமாத்திரம அவர்களிடத்திலிருந்தது. * மத. ௰௬. ௫—௰௨.

௰௫. அப்பொழுதவர் அவர்களைநோக்கி, நீங்கள பரிசேயருடைய புளிப்புளளமாவுக்கும,ஏரோதினுடைய புளிப்புளளமாவுக்கும விலகி மிகவும * எச்சரிக்கையாயிருக்கக் கடவீர்களென்று அவர்களுக்குக் கட்டளையிட்டார். * லூக. ௰௨. ௧; கலா. ௫. ௯.

௰௬. அவர்கள (அதைககேட்டுத்) தங்களுக்குளளே யோசனைபணணிக்கொணடு நமமிடத்தில அப்பங்களிலலாதபடியால இப்படிச்சொனனாரென்றார்கள.

௰௭. இயேசுவானவர் அதையறிந்து அவர்களைநோக்கி, உங்களிடத்தில அப்பங்களிலலாததைககுறித்து ஏன் யோசனைபணணுகிறீர்கள. * இதுவரைக்கும நீங்கள அறிந்துகொளளாமலும, சிந்தித்துககொளளாமலுமா இருக்கிறீர்கள? இதுவரைக்கும உங்களிருதயங கடினமாயிருக்கிறதா! * ௬. ௫௨.

௰௮ கண்களிருந்தும, நீங்கள காணாமலா இருக்கிறீர்கள! காது இருந்தும, நீங்கள கேளாமலா இருக்கிறீர்கள! நீங்கள நினைவுகூரவிலலையா!

௰௯. அந்த ஐயாயிரமபேருக்குளளே நான * அவ்வைந்து அப்பங்களையுமபிட்டுக் கொடுத்தபொழுது, எவவளவுகூடைநிறையச் சேஷமானவைகளை யெடுத்தீர்களென்றுகேட்டதறகுபபனனிரணடுகூடைநிறையவெடுத்தோமென்றார்கள. * ௬. ௪௩, ௪௪.

௨௰. அல்லாமலும * அந்த நாலாயிரமபேருக்குளளே (நான) அந்த ஏழு அப்பங்களையுங (கொடுத்த) பொழுது, எவவளவு கூடைநிறையச சேஷமானவைகளை யெடுத்துககொணடீர்களென்றுகேட்டதறகு ஏழுகூடைநிறைய என்றார்கள. * ௮. ௯.

௨௧. அவர் சொனனது, அப்படியிருக்க, நீங்கள சிந்தித்துககொளளாமலிருபபதெப்படியென்று திருவுளமபற்றினார்.

௨௨. பினபு அவர் பெத்சாயிதாவூருக்கு வந்தார். அங்கே ஒரு குருடனையவரிடத்திறகுக் கொணடுவந்து, அவனைத்தொடும்படிக்கு அவரை வேணடிககொணடார்கள.

௨௩. அப்பொழுது அவர் குருடனுடைய கையைபபிடித்து * அவனைக கிராமத்திறகுப புறமபேகொணடுபோய, அவனுடைய கண்களில உமிழ்நீரைத்தடவித் தமமுடைய கைகளையவனமேலவைத்து, உனக்கு ஏதாகிலுந்தோனறுகிறதாவென்றுகேட்டார்.
* ௭. ௩௩.

௨௪. அவன அணணாந்து நடந்துபோகிற மனிதரை மரங்களைப்போலக் காண்கிறேனென்றான.

௨௫. பினபு அவர்மறுபடியுந் தமமுடைய கைகளை யவனுடைய கண்களினமேல்வைத்து, அவன திருமப அண்ணாந்துபார்க்கும்படிசெய்தார். அப்பொழுது அவனநனறாயக் குணமாககப்பட்டுச சகலத்தையுந் தெளிவாயப்பார்த்தான.

௨௬. பினபு அவர் * அவனைநோக்கி, நீ கிராமத்திறபிரவேசியாமலும, அதிலொருவனுககும இதைசசொல்லாமலுமிருவென்று சொலலி, அவனை வீட்டிறகு அனுபபிவிட்டார். * ௭. ௩௬.

௨௭. * பினபு இயேசுவானவர் தமமுடைய சிஷர்களோடுங்கூட அவவிடமவிட்டுபபுறப்பட்டுப் பினபு கெசரியாபபட்டினத்தருகேயிருக்கிறகிராமங்களுக்குபபோனார். வழியிலேயவர்தம

முடைய சீஷர்களை நோக்கி, என்னைக் குறித்து மனிதர் என்னசொல்லுகிறார்களென்று கேட்டார். * மத். ௰௬. ௰௩-௨௰; லூக். ௯. ௰௮-௨௰.

௨௮. அவர்கள் சொன்னது, சிலர் உம்மை ஸ்நானனாகிய யோவானென்றும், சிலர் எலியாவென்றும், சிலர் உமக்குத் தீர்க்கதரிசிகளிலொருவரென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.

௨௯. அப்பொழுது அவர் நீங்கள் என்னைக் குறித்து என்னசொல்லுகிறீர்களென்றார். அதற்குப் பேதுரு * நீர் கிறிஸ்துவேயென்றான். * யோவா. ௬. ௬௯; — ௯. ௯.

௩௰. * அப்பொழுது தம்மைக்குறித்து அப்படியொருவருக்குஞ் சொல்லாதபடிக்குக் கெட்டியாயவர்களுக்குக் கட்டளையிட்டார். * மத். ௰௬. ௨௧; லூக். ௯. ௨௧—௨௭.

௩௧. அல்லாமலும், மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும், பெரியோர்கள் பிரதான ஆசாரியர் வேதபாரகரென்பவர்களாலே தள்ளப்படவும், மரணம் அடையவும், பின்பு மூன்றுநாளுக்குள்ளே உயிரோடெழுந்திருக்கவும் வேண்டுமென்று அவர்களுக்கு அறிவிக்கத்தொடங்கினார்.

௩௨. அப்படியவர் வெளியரங்கமாய்ப் பேசிக்கொண்டபொழுது, பேதுரு அவரைப் பக்கத்திலே யழைத்து, அவரைக் கடிந்துகொள்ளத்தொடங்கினான்.

௩௩. உடனே அவர் திரும்பித் தம்முடைய சீஷர்களை நோக்கிப்பார்த்துப் பின்பு பேதுருவை நோக்கி * நீ பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சிந்தியாமல், மனிதருக்குப் பிரியமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே சாத்தானே, நீ யென்முன்னிராமற்போவென்று அவனைக் கடிந்துகொண்டு,
* உ. சாமு. ௰௯. ௨௨.

௩௪. பின்பு தம்முடைய சீஷருடனே சனங்களையழைத்து, எனக்குப் பின்செல்லவிரும்புகிறவனெவனோ அவன் தன்னைத்தான் வெறுத்துத், தன் சிலுவையையெடுத்துக்கொண்டு, எனக்குப் பின்செல்லக்கடவன்.

௩௫. என்னத்தினாலென்றால், எவனாகிலும், * தன் சீவனை இரட்சிக்கவிரும்பினால், அதை யிழந்துபோவான். என்னிமித்தமும், சுவிசேஷத்தினிமித்தமும் தன் சீவனையிழந்துபோகிறவனெவனோ அவனே யதை இரட்சிப்பான்.
* மத். ௰. ௩௯.

௩௬. அல்லாமலும் ஒருவன் உலகமையாவையும் சம்பாதித்துக்கொண்டாலும், தன் சீவனையிழந்துபோனால், அவனுக்கு என்னலாபமுண்டாகும்.

௩௭. அல்லது * ஒருமனிதன் தன் சீவனை மீட்கும்படிக்கு, என்னத்தைக் கொடுப்பான்.
* சங். ௪௯. ௯.

௩௮. அன்றியும், * விபசாரமும், பாவமுமுள்ள இந்தச்சந்ததியாருக்குள்ளே எவன் என்னையும், என்வசனங்களையுங்குறித்து இலச்சையடைவானோ! அவனைக் குறித்து மனிதனுடைய குமாரன் தம்முடைய பிதாவினம கிமையோடும், பரிசுத்த தூதர்களுடனேயுங் கூடவரும்பொழுது இலச்சையடைவார்.
* மத். ௰. ௩௩; ௨. தீமோ. ௨. ௰௨.

## ௯. அதிகாரம்.

[(௨) இயேசு மறுரூபமடைந்தது. (௰௧) அவர் எலியாவின் வரவைக்குறித்துத் தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னது. (௰௪) ஊமையும், செவிடுமான ஒரு ஆவியைத் துரத்தினது. (௩௰) தம்முடைய மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது. (௩௩) சீஷர்களுக்குத் தாழ்மையைப் படிப்பித்தது. (௩௮) அவர்களை விரோதியாதவர்களைத் தடைபண்ணாமலும், விசுவாசிகளுக்கு இடறலுண்டாக்காமலும் இருக்கப் போதித்தது.]

* அல்லாமலும், இங்கே நிற்கிறவர்களிற் சிலர் பராபரனுடைய இராச்சியம் பலத்தோடே வருகிறதைக்காணுமளவும் மரணம் அடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.
* மத். ௰௬. ௨௮; மத். ௰௭. ௧—௰௩; லூக். ௯. ௨௭—௩௬.

௨. ஆறுநாளுக்குப்பின்பு இயேசுவானவர் பேதுருவையும், யாக்கோபையும், யோவானையுங் கூட்டித் தனித்திருக்கும்படிக்கு அவர்களை உயரமானமலையிற்கொண்டுபோய் அவர்களுக்குமுன்பாக மறுரூபப்பட்டார்.

௩. அவருடைய வஸ்திரங்கள் பூமியிலே வண்ணான் செய்யக்கூடாத வண்ணமாயும், உறைந்தமழையைப்போலவும் மிகவும் வெண்மையாய்ப் பிரகாசித்தன.

௪. அல்லாமலும், மோசேயும், எலியாவும், அவர்களுக்குக் காணப்பட்டு, இயேசுவுடனே பேசிக்கொண்டார்கள்.

௫. அப்பொழுது பேதுரு இயேசுவை நோக்கி, இரபீ, நாமிங்கேயிருக்கிறது நல்லது. ஆகையால், உமக்காகவும், மோசேயுக்காகவும், எலியாவுக்காகவும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்களையுண்டுபண்ணுவோமென்றான்.

௬. மிகுந்த பயம் அவர்களைப் பிடித்தபடியால், அவன் தான் பேசுகிற வசனங்களைத் தானேயறியாமல் அப்படிச் சொன்னான்.

௭. அப்பொழுது ஒரு மேகம் அவர்களை மூடிக்கொண்டது. அல்லாமலும், * இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன். இவருக்குச் செவிகொடுங்களென்று அந்த மேகத்திலிருந்து ஒருசத்தமுண்டாயிற்று.
* மத். ௩. ௰௭; ௨. பேது. ௧. ௰௭.

௮. உடனே யவர்கள் சுற்றிப்பார்த்தபொழுது, தங்களோடே கூடவிருந்த இயேசுவையேயன்றி, மற்றொருவரையுங் காணவில்லை.

௯. பின்பு அவர்கள் மலையிலிருந்திறங்கின பொழுது, அவர் அவர்களை நோக்கி, நீங்கள் (மலையிலே) கண்டவைகளை மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னே யொருவருக்குஞ் அறிவியாதிருங்களென்று கட்டளையிட்டார்.

௰. அவர்கள் அந்த வசனத்தை ஞாபகப்படுத்தி, மரித்தோரிலிருந்து எப்படி உயிரோடெழுந்திருக்கலாமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,

௰௧. பின்பு அவரை நோக்கி, முன்பு எலியா வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்லுகிறார்களே யென்று வினவினார்கள்.

௰௨. அதற்கவர் சொன்னது, முன்பு எலியா வந்து சகலத்தையுஞ் சீர்ப்படுத்தவேண்டுவதுதான். அல்லாமலும் மனிதனுடைய குமாரன் மிகவும்பாடுபடவும், அசட்டைபண்ணப்படவும்வேண்டுமென்று எழுதியிருக்கிறதுபோல, அவனும் பாடுபடவேண்டும்.

௰௩. * எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் அவனைக்குறித்து எழுதியிருக்கிறபடி அவனையவர்கள் தங்கள் இஷ்டப்படிக்குச் செய்தார்களென்றார். * மத். ௰௧. ௰௪.

௰௪. * பின்பு அவர் (மற்றச்) சீஷர்களிடத்தில் வந்தபொழுது, அவர்களைச் சூழ மிகுந்த சனங்களையும், அவர்களுடனே தருக்கம்பண்ணின வேதபாரகரையுங் கண்டார். * மத். ௰௭ ௰௪—௨௧; லூக்கா. ௯. ௩௭—௪௩.

௰௫. சனங்களெல்லாரும் அவரைக்கண்டவுடனே, அவர்கள் மிகவும் பிரமித்து ஓடிவந்து அவரைவந்தனஞ்செய்தார்கள்.

௰௬. அப்பொழுது அவர் வேதபாரகரை நோக்கி, நீங்கள் எதைக்குறித்து இவர்களுடனே தருக்கம்பண்ணுகிறீர்களென்று கேட்டார்.

௰௭. அதற்குச் சனங்களிலொருவன் சொன்னது, போதகரே ஊமையான ஆவியையடைந்திருக்கிற என்மகனை உம்மிடத்திற் கொண்டுவந்தேன்.

௰௮. அந்த ஆவி எவ்விடத்திலாகிலும் அவனைப் பிடித்துக்கொள்ளுகிறபொழுது, அவனைத் (தரையிலே) மோதுகின்றது. பின்பு அவன் (வாயினாலே) நுரைதள்ளத் தன்பற்களைக்கடித்துக்கொண்டு சோர்ந்துபோகிறான். அதைத்துரத்தும்படிக்கு உம்முடைய சீஷரைவேண்டிக்கொண்டேன். அப்படிச்செய்யும்படிக்கு அவர்களாற் கூடாமற்போயிற்றென்றான்.

௰௯. அப்பொழுது அவர் பிரதியுத்தரமாக: ஆ, விசுவாசமில்லாத சந்ததியாரே, எதுவரைக்கும் நான் உங்களோடிருப்பேன். எதுவரைக்கும் உங்களிடத்தில் பொறுமையாயிருப்பேன். அவனையென்னிடத்திற் கொண்டுவாருங்களென்றார். அவனை யவரிடத்திற் கொண்டுவந்தார்கள்.

௨௰. அவரைக்கண்டவுடனே, அந்த ஆவி அவனை யலக்கழித்தது. மேலும் அவன் தரையிலேவிழுந்து (வாயினாலே) நுரைதள்ளப் புரண்டான்.

௨௰௧. அப்பொழுது இயேசுவானவர் அவனுடைய தகப்பனை நோக்கி, இப்படி இவனுக்குண்டாய் எத்தனைநாளாயிற்றென்று கேட்டதற்கு அவன் சொன்னது, சிறுவயதுமுதற்கொண்டு இருக்கிறது.

௨௰௨. அல்லாமலும் இவனையழிக்கும்படிக்கு, அது அநேகந்தரம் நெருப்பிலேயும், சலத்திலேயுந் தள்ளிற்று. அப்படியிருந்தும், நீர் ஏதாகிலுஞ் செய்யக்கூடுமானால் எங்களுக்கு உருக்கமாய் இரங்கி, உதவிசெய்தருளுமென்றான்.

௨௰௩. இயேசுவானவர் சொன்னது, நீ விசுவாசிக்கக்கூடுமானால், ஆகும். விசுவாசிக்கிறவனுக்கு * எதுவும் நடக்குமென்று சொன்னவுடனே, * லூக்கா. ௰௭. ௯.

௨௰௪. அந்தப்பிள்ளையின் தகப்பன் அழுதுகொண்டு, ஆண்டவரே, விசுவாசிக்கிறேன். என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யுமென்று கூப்பிட்டான்.

௨௰௫. அத்தருணத்திலே சனங்கள் ஓடிவந்து கூட்டமாகிறதை இயேசுவானவர் கண்டபொழுது, அவர் அந்த அசுத்த ஆவியுடனே சொன்னது, ஊமையும், செவிடுமான ஆவியே, நீ இவனைவிட்டுப் புறப்பட்டு, இனியிவனிடத்திற் பிரவேசியாமற்போவென்று உனக்குக் கட்டளையிடுகிறேனென்று சொல்லி, அதையதட்டினார்.

௨௰௬. அப்பொழுது அது சத்தமிட்டு அவனை மிகவும் அலக்கழித்துப் புறப்பட்டுப்போயிற்று. அவன் இறந்துபோனானென்று அநேகர் சொல்லத்தக்கதாகச் செத்தவனைப்போலக்கிடந்தான்.

௨௰௭. இயேசுவானவர் அவனுடைய கையைப்பிடித்து, அவனையெடுத்தார், உடனே யவன் எழுந்திருந்தான்.

௨௰௮. பின்பு அவர் வீட்டிற்குவந்தபொழுது, அவருடைய சீஷர் இரகசியமாய் அவரை நோக்கி, நாங்கள் அதைத்துரத்தும்படிக்கு எங்களுக்கு ஏன் திராணியில்லையென்று கேட்டார்கள்.

௨௰௯. அவர் சொன்னது, செபத்தினாலும், உபவாசத்தினாலுமேயன்றி, மற்றொருவிதமாய் அந்தச்சாதியைத்துரத்தக் கூடாதென்றார்.

௩௰. * பின்பு அவர்கள் அவ்விடம்விட்டுப் பிரயாணப்பட்டுக் கலிலேயாநாட்டின் வழியாய்ப்போகிறபொழுது, அவர் தம்முடைய சீஷர்களுக்கு உபதேசம்பண்ணவேண்டுமென்றிருந்தபடியினாலே, (தாம்போகிறதை) ஒருவரும் அறியாமலிருக்கவேண்டுமென்று

விருமபிஞர். * மததேயு. ௰௭. ௨௨—௨௩; லூககா. ௯. ௪௩—௪௫.

௩௧. பினபுஅவர் அவர்களைநோககி, * மனிதனுடையகுமாரன மனிதர்களுடையகையிலஒபபுககொடுககபபடுவான. அவர்கள அவனைக்கொலைசெயவார்கள, மரிததபினபு அவன மூனருமநாளிலே உயிரோடெழுநதிருபபானெனருர். * ௮. ௩௧.

௩௨. அவர்கள அநதசசஙகதியை யறிநதுகொளளவிலலை. மேலும அவரிடததிலவிசாரிக்கிறதறகும பயநதார்கள.

௩௩. * பினபு அவர் கபபர்நாகூம பட்டணததிறசேர்நது, ஒருவீட்டிலேயிருநதபொழுது, அவர் அவர்களைநோககிவழியிலே நீங்களஎதைக்குறிததுஉஙகளுககுள்ளேதருக்கம்பண்ணிக்கொணடீர்களென்றுகேட்டார். * லூக். ௯. ௪௬—௫௰.

௩௪. அவர்கள் தங்களிலெவனபெரியவனென்று ஒருவரோடொருவர் வழியிலேதருககமபணணிககொணடபடியினாலே, பேசாமலிருநதார்கள.

௩௫. அபபொழுது அவர் உளுககாநதுபனனிருவரையும அழைததுசசொனனது, * ஒருவனமுதலவனுபிருககவிருமபிஞலஅவன எலலாருககும பிநதினவனுமாய, எலலாருககும ஊழியககாரனுமாயிருக்கக்கடவனெனறுசொலலி, * மதத். ௨௰. ௨௬. — * மதத. ௰௮. ௯.

௩௬. ஒரு பிளளையையெடுதது அதையவர்களுககுளளே நிறுததிப பினபு அதை * யணைததுககொணடு, * ௰. ௰௬.

௩௭. இபபடிபபட்ட பிளளைகளிலொனறை எனனுடைய நாமததினாலே சேர்ததுககொளளுகிறவனெவனே அவன எனனைசசேர்ததுககொளளுகிறான. அலலாமலும எனனைசசேர்ததுககொளளுகிறவனெவனே அவன எனனை (மாததிரம) அலல, எனனையனுபபினவரையுஞ சேர்ததுக்கொள்ளுகிறானெனருர்.

௩௮. அபபொழுதுயோவான அவரைநோககிபபோதகரே, நமககுபபினசெலலாமலிருககிறஒருவனஉமமுடையநாமததினாலேபசாசுகளைததுரததக்கணடோம. அவன் நமககுபபினசெலலாதபடியால, அவனஅபபடிசசெயயாதபடிககுச சொனனேமெனருன.

௩௯. அதறகு இயேசுவானவர்சொனனது, நீஙகள அவனுககுத தடைபணணவேணடாம. எனனததினாலெனருல, எனனுடைய நாமததினாலே யறபுதஞசெயகிறவன எனனைககுறிததுச சீககிரமாயததீமைசொலலமாட்டான.

௪௰. அலலாமலும உஙகளுககு விரோதியலலாதவன உஙகளபஙகிலிருககிறான.

௪௧. * அனறியும நீஙகள கிறிஸதுவினுடையவர்களாயிருககிறபடியினாலே ஒருவன எனநாமததினிமித்தம் ஒருகலயந்தணணீர் உங்களுக்குக்கொடுத்தால் அவன தனபலனை யிழநதுபோவதிலலையெனறுமெயயாய்உங்களுககுச்சொலலுகிறேன. * மத். ௰. ௪௨.

௪௨. அனறியும எனனை விசுவாசிககிறவர்களாகிய இநதசசிறியவர்களி * லொருவனகுறறஞசெயவதறகுக் காரணமாயிருககிறவனெவனே அவனதன கழுததிலே எநதிரககலலைககட்டபபட்டுச சமுததிரததிலே தளளபபட்டால, அவனுககு நனமையாயிருககும. * மத். ௰௮. ௬—௯.

௪௩. உனகையுனனைககெடுககிறதறகு ஏதுவானுல, அதைத்தறிததுபபோடு. நீ பிரணடுகையையுடையவனுய. * மத. ௫. ௨௯—௩௰.

௪௪. நிததிய நரக அககினியிலே போவதிலும ஊனனுயச சீவனிறபிரவேசிககிறதேயுனககு நலமாயிருககும. * அநநரகததிறகுரியவர்களுடைய புழுசசாவாமலும, அககினியவியாமலுமிருககினறன. * ஏசா. ௬௬. ௨௪.

௪௫. அலலாமலும உனகால உனனைககெடுககிறதறகேதுவானுல, அதைத் தறிததுபபோடு. நீ யிரணடுகாலையுடையவனுய,

௪௬. நிததிய நரக அககினியிலே தளளபபடுகிறதிலும, சபபாணியாயச சீவனிறபிரவேசிககிறதே யுனககு நலமாயிருககும. அநநரகததிறகுரியவர்களுடைய புழுசசாவாமலும, அககினி யவியாமலுமிருககினறன.

௪௭. அலலாமலும உனகண உனனைககெடுககிறதறகேதுவானுல, அதைபபிடுஙகிபபோடு.

௪௮. நீ யிரணடுகணணையுடையவனுய நரக அககினியிலே தளளபபடுகிறதிலும ஒறறைககணணனுயப பராபரனுடைய இராசசியததிலே பிரவேசிககிறதே யுனககு நலமாயிருககும. அநநரகததிற குரியவர்களுடைய புழுசசாவாமலும, அககினியவியாமலுமிருககினறன.

௪௯. எலலாபபலிகளும உபபினாலே சாரமாககபபடுகிறதுபோல, * யாவனும அககினியினாலே சாரமாககபபடுவான. * ௩. மோசே. ௨. ௰௩.

௫௰. * உபபானது நலலது. உபபானது சாரமறறதேயானுல, எதினாலே யதறகுச சாரமுணடாககுவீர்கள. உஙகளுககுளளே உபபுணடாயிருககுமபடிசெயயுஙகள. அலலாமலும ஒருவரோடொருவர் சமாதானமாயிருக்கக்கடவீர்களெனருர். * மத. ௫. ௰௩.

## ௰. அதிகாரம.

[(௨) கிறிஸது விவாகபபிரிவைககுறிததுப பரிசேயர்களுககு உததரவுசொலலி, (௰௩) தமமிடததிற கொணடுவரபபட்ட பிளளைகளை ஆசீர்வதிததது, (௰௭) நிததிய சீவனடையுமவழியைககுறிததது ஓர் ஐசுவரி

யவானுககு நியாயஞசொலலி, (௨௫) ஐசுவரியததின திமைகளைககுறிததுச சிஷர்களுககு அறிவிதது, (௨௮) சுவிசேஷததினிமிததம யாதொனறை வெறுததுவிடுகிறவர்கள, தருநதபலனடைவார்களென்று கூறி, (௩௨) தமமுடையமரணததையும, உயிர்ததெழுதலையும முனனறிவிதது, (௩௫) பெருமையுளள இருவருடைய விணணபபததை மறுதது அவர்களுககுமனததாழமையைப படிபபிதது, (௪௬) குருடனாயிருநத பர்த்திமேயுவுககுப பார்வையளிததது.]

* **பி**னபு அவர் எழுநது யோர்தானுககேயுள்ள யூதேயாநாட்டினதிசைகளுக்குபபோனார். அஙகேமறுபடியுஞசனஙகள்அவரிடததிறகூடிவநதார்கள. அவரும வழககததினபடி யவர்களுககுமறுபடியும உபதேசமபணணினார். * மத. ௰௯. க-௰௨.

௨. அலலாமலும பரிசேயர் அவரைசசோதிககுமபடிககு அவரிடததிலவநது, புருஷனானவன தனமனைவியைத தளளிவிடலாமாவென்றுகேட்டார்கள.

௩. அவர்களையவர்நோககி மோசேயெனபவர் உஙகளுககு எபபடிக கடடளையிடடாரென்றார்.

௪. அவர்கள சொனனது, தளளுதற சீடடையெழுதி அவளைததளளிவிடுமபடிககு * மோசேஉததரவுகொடுததாரெனறார்கள.
* ௫. மோசே. ௨௪. க.

௫. அப்பொழுது இயேசுவானவர் அவர்களுககுசசொனனது, உஙகளுடைய இருதயகடினமானபடியினாலே மோசே உஙகளுககிநதககடடளையையெழுதினார்.

௬. உலகமுணடானதுமுதறகொணடு பராபரன அவர்களை ஆணும, பெணணுமாகச செயதார்.

௭. * அதினிமிததம ஒருவனதனதகபபனையும, தாயையுமவிடடுததனமனைவியுடனேயிசைநதிருபபானெனறும,* க.மோ.௨.௨௪.

௮. அவர்களிருவரும ஒரே சரீரமாயிருபபார்களெனறுஞ சொலலியிருககிறபடியினாலே அவர்கள இருவராயிராமல, ஒரேசரீரமாயிருககிறார்கள.

௯. ஆகையால பராபரனிணைததததைமனிதன பிரியாமலிருக்கக்கடவனென்றார்.

௰. பினபு வீடடிலே யவருடைய சிஷர்கள அதைககுறிதது மறுபடியும அவரிடததில விசாரிததபொழுது,

௰௧. அவர்சொனனது, * தனமனைவியைத தளளிவேறொருததியை விவாகமபணணுகிறவனெவனோ அவன அவளுககுவிரோதமாய விபசாரஞசெயகிறவன. * மத். ௫. ௩௨.

௰௨. அலலாமலும, மனைவியானவள தனபுருஷனைததளளி வேறொருவனை விவாகமபணணினால்அவளவிபசாரஞசெயகிறவளெனறார்.

௰௩. * அப்பொழுது அவராலே தொடபபடுமபடிககுப பிளளைகளை யவரிடததிறகுககொணடுவநதார்கள, சிஷர்கள அவைகளைக்கொணடுவநதவர்களையதடடினார்கள.
* மத். ௰௯. ௰௩-௰௫; லூக். ௰௮. ௰௫-௰௭.

௰௪. இயேசுவானவர் அதைககணடு விசனமடைநது பிளளைகள எனனிடததிலவருகிறதறகுத தடைபணணாமல இடஙகொடுஙகள. பராபரனுடைய இராசசியம அபபடிப்படடவைகளுககுடையதானதே.

௰௫. * எவனாகிலும ஒருபிளளையைபபோலப பராபரனுடைய இராசசியததையேறறுககொளளாமலிருநதால அவன அதிறபிரவேசிபபதிலலையெனறுமெயயாயஉஙகளுககுசசொலலுகிறேனெனறுசொலலி, * மத். ௰௮. ௩; க.பேது. ௨. ௨; க.கொரிந.௰௪.௨௰.

௰௬. பினபு * அவைகளை யணைததுககொணடு தமமுடைய கைகளை யவைகளமேலவைதது அவைகளையாசீர்வதிததார்.
* ௯. ௩௬.

௰௭. * பினபு அவர்புறபபடடு வழியிலே நடககையில ஒருவன அவரிடததிறகோடிவநது முழஙகாறபடியிடடு நலலபோதகரே, நிததியசீவனைசசுதநதரிததுககொளளுமபடிககு நானசெயயவேணடியதெனனவென்றுகேடடான. * மத். ௰௯. ௰௬-௨௯; லூக. ௰௮. ௰௮-௨௭.

௰௮. அவனுடனேயவர்சொனனது, நீயெனனை நலலவனெனறு ஏனசொலலுகிறாய! பராபரனாகியஒருவரேயனறி மறறொருவனும நலலவனலலவே.

௰௯. விபசாரம பணணாமலிருபபாயாக. கொலைசெயயாதிருபபாயாக. களவுசெயயாதிருபபாயாக. பொயசசாட்சிசொலலாதிருபபாயாக. வஞசனை செயயாதிருபபாயாக. உனதகபபனையும, தாயையுஙகனமபணணுவாயாகவெனறிருககிற கறபனைகளையறிநதிருககிறாயேயெனறார்.

௨௰. அதறகவனசொனனது, போதகரே, அவைகளையெலலாம நான எனசிறுவயதுமுதற கைக்கொணடுவருகிறேனெனறான.

௨௧. அப்பொழுது இயேசுவானவர் அவனைபபார்தது அவனிடததில அனபுகூர்நது சொனனது, உனனிடததிறபினனுமொனறு குறைவாயிருககிறது. நீ போய உனககுணடானவைகளைவிறறுப * பரமணடலத்திலே பொககிசததை யடைநதுகொளளததககதாக அவைகளை ஏழைகளுககுக கொடுததுப பினபுவந்து சிலுவையையெடுததுககொணடு எனககுபபினசெலலுவாயாகவெனறார்.
* ௰௩. ௯. ௰௯, ௨௰.

௨௨. அவனமிகுந்த ஆஸ்திகளையுடையவனானபடியினாலே யநதவசனததைககேடடு மனமநொநது துககததோடே யவவிடடுபபோனான.

௨௩. அபபொழுது இயேசுவானவர் சுறறிப பார்ததுத் தமமுடைய சிஷர்களுடனே சொனனது, பொருளகளைப பெறறவர்கள பராபரனுடைய இராசசியததிறபிரவேசிக கிறதுமிகவும அரிது எனருர்.

௨௪. அல்லாமலுஞசிஷர்கள அநதவசனங் களைககுறிததுத திகைததபொழுது, இயேசுவானவர் அவர்களுககுப பினனுஞசொன னது, பிளளைகளே, பொருளகளினமேல ✻நம பிககையாயிருககிறவர்கள பராபரனுடை யஇராசசியததிற பிரவேசிககிறது மிகவும அரிதாகவேயிருககிறது. ✻ சங. ௬௨. ௰௧.

௨௫. ஐசுவரியமுளளவன பராபரனுடைய இராசசியததிற பிரவேசிககிறதிலும ஒட்ட கமானது ஒரு ஊசியினகாதிலநுழைகிறது எளிதாயிருககினறதெனருர்.

௨௬. அவர்கள அதிசயாயப்பிரமிதது அப படியானால இரட்சிககபபடுபவர்களயாரெ னறு தஙகளுககுளளேசொல்லிககொணடா ர்கள.

௨௭. அபபொழுது இயேசுவானவர் அவர் களைபபார்தது மனிதர்களுககு அது கூடா தகாரியநதான. பராபரனேயெதையுஞசெ யயததிராணியுளளவராகையாற பராபரனு ககு ✻ அது கூடாதகாரியமலலவெனருர். ✻ லூக. ௧. ௩௭; ௧. மோ. ௰௮. ௰௪.

௨௮. ✻ பினபு பேதுரு அவரைநோககி, இதோ, நாஙகள எலலாவறறையும விட்டு உமககுபபினசெனறோமேயெனறுன.
✻ மத. ௰௯. ௨௭-௩௰; லூக. ௰௮. ௨௮-௩௰.

௨௯. அதறகு இயேசுவானவர்சொனனது, எனனிமிததமும, சுவிசேஷததினிமிததமும வீட்டையாவது, சகோதரர்களையாவது, சகோதரிகளையாவது, தகபபனையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிளளைக ளையாவது, நிலஙகளையாவதுவிட்டு,

௩௰. பினபு இமமையிலே துனபஙகளுட னேகூடநூறுமடஙகாயவீடுகளையும, சகோ தரர்களையும, சகோதரிகளையும, தாயகளை யும, பிளளைகளையும, நிலஙகளையும, மறு மையிலே நிததியசீவனையும பெறறுககொள ளாமலிருககிறவனஒருவனுமிலலையெனறும,

௩௧. ✻ முநதினோராகிய அநேகர் பிநதி னோராயும, பிநதினோர் முநதினோராயுமிரு பபார்களெனறும மெயயாய உஙகளுககுச சொலலுகிறேனெனருர். ✻ மத. ௨௰. ௰௬.

௩௨. ✻ அனறியும அவர்கள எருசலேமநக ரததிறகுபபிரயாணமாயபபோனபொழுது, இயேசுவானவர் அவர்களுககுமுனனேநடந தார். அவர்களபிரமிததுபபயததோடேயவ ருககுபபினசெனருர்கள. அபபொழுதுஅவ ர்பனனிருவரையும மறுபடியுமஅழைதது தமககுச சமபவிக்குஙகாரியஙகளையவர்களு ககு அறிவிததுசசொனனது, ✻ மத. ௨௰. ௰௭—௰௯; லூக. ௰௮. ௩௧—௩௪.

௩௩. இதோ, எருசலேமுககுபபோகிறோ ம. அஙகேமனிதனுடையகுமாரன பிரதா ன ஆசாரியருககும, வேதபாரகருககும ஒ பபுககொடுககபபடுவான. அவர்கள அவ னை மரண ஆககினைககுட்படுததுமபடிககு த்தீர்பபுசசெயது, அவனைபபுறததேசததா ருககு ஒபபுககொடுபபார்கள.

௩௪. அவர்கள அவனை இழிவுசெயது, அவ னைவாரினால அடிதது, அவனமேலேதுபபி, அவனைககொலைசெயவார்கள. ஆகிலும் மூ னறுமநாளிலே அவன உயிரோடெழுநதிரு பபானெனருர்.

௩௫. ✻ பினபுசெபெதேயுவினகுமாரர்களா கிய யாககோபும, யோவானும அவரிடத திலவநது, போதகரே, நாஙகளவேணடி ககொளளுகிறபடி நீர் எஙகளுககுசசெய யவேணடுமெனறு விருமபுகிறோமெனருர்க ள. ✻ மத்தே. ௨௰. ௨௰—௨௮.

௩௬. அதறகவர், நானுஙகளுககுசசெயய நீஙகள விருமபுகிறதெனனவென்ருர்.

௩௭. அவர்களசொனனது, நீர்மகிமையை யடைநதிருககுமபொழுது, எஙகளிலொரு வன உமமுடையவலதுபககததிலேயும, ஒரு வன உமமுடைய இடதுபககததிலேயுமிருக் க அனுககிரகம பணணவேணடுமெனறு சொனனார்கள.

௩௮. இயேசுவானவர்சொனனது, நீஙகள கேட்டது உஙகளுககேதெரியவிலலை. நான பானமபணணும பாததிரததிற பானமபண் ணவும, நானபெறறுககொளளும ஸ்நானத் தைப பெறறுககொளளவும உஙகளாறகூ டுமாவெனறுசொனனதறகு,

௩௯. அவர்கள கூடுமெனருர்கள. அபபொ ழுது இயேசுவானவர் அவர்களைநோககி, நா ன பானமபணணும பாததிரததில நீஙகளு ம பானமபணணுவீர்கள. அலலாமலும நா னபெறறுககொளளும ஸ்நானததை நீஙக ளும பெறறுககொளவீர்கள. அதுமெய தான.

௪௰. ஆனாலுங குறிககபபட்டவர்களுககே யனறி (மறறொருவருககும) என வலதுபக கத்திலும, என இடதுபககததிலுமிருபபத றகான (கனததை) நான கொடுககக்கூடா தெனருர்.

௪௧. மறறபபததுபபேரும அதைககேள விபபட்டு, யாககோபினமேலும, யோவான மேலுங கோபமாயிருககததொடஙகினார் கள.

௪௨. அபபொழுது இயேசுவானவர் அவ ர்களை யழைததுசசொனனது, நீஙகள அறி நதிருககிறபடி உலகததாருககுளளே பிரபு ககளெனனபபட்டிருககிறவர்கள இறுமாப பாய ஆளுகிறார்கள. அலலாமலும, அவர்க ளுடையபெரியோர்களஇஷ்டப்படிககு அவ ர்களமேல அதிகாரஞசெலுததுகிறார்கள.

௪௩. அபபடி யுஙகளுககுளளே யிருககக் கூடாது. உஙகளுககுளளேபெரியவனுயிருக் கவிருமபுகிறவன உஙகள ஊழியககாரனுயி ருக்கக்கடவன.

௪௪. உஙகளிலமுதலாளியாயிருககவிருமபு கிறவன எலலாருககுநம அடிமையாயிருககக் கடவன.

௪௫. மனிதனுடையகுமாரனும ஊழியம அடையுமபடிககு வாராமல, ஊழியஞசெ யயுமபடிககும, அநேகரை மீட்குமபொரு ளாகத தனனுடையசீவனைககொடுககுமபடி ககுமவநதானேயெனருர்.

௪௬. பினபு அவர்கள எரிகோபட்டினததி றகுவநதார்கள அவரும, அவருடையசிஷர் களும, மிகுநத சனஙகளும * அதைவிட்டுப போனபொழுது, திமேயு எனபவனுடைய மகனுகிய குருடனுன பர்திமேயு எனப வன வழியிலே பிசசைகேட்டுககொணடிருக கையில, * மத. ௨௰. ௨௯.

௪௭. நாசரேததூரானாகிய இயேசுவானவர் வருகிருரெனறு கேள்விபபட்டு இயேசுவே, தாவீதினகுமாரனே, எனமேலிரககமாயிரு மெனறு கூபபிடததொடஙகினுன.

௪௮. அவன பேசாமலிருககுமபடிககு அநேகர் அவனைக கடிநதுகொணடார்கள. அபபடியிருநதும அவன தாவீதின குமார னே, எனமேலிரககமாயிருமெனறு அதிக மாயககூபபிட்டான.

௪௯. அபபொழுது இயேசுவானவர்நினறு, அவனை யழைததுவரசசொனனுர். அநதப படி சிலர் அவனையழைதது, திடமாயிரு. எழுநதிரு. அவர் உனனை யழைககிருரென ருர்கள.

௫௰. உடனே யவன தன வஸதிரததைத் தளளி யெழுநது இயேசுவானவரிடததிலவந தான.

௫௧. அவர் அவனைநோககி, நான உனக கெனனசெயயவேணடுமெனறிருககிருயென ருர். குருடனுனவன சொனனது, இரபூனி. நீர் எனககுப பார்வைகொடுககவேணடுமெ னறுன.

௫௨. இயேசுவானவர்சொனனது, * உன விசுவாசமுனனைககுணமாககிறது. நீ போக லாமெனருர் உடனே யவன பார்வையடை நது, வழியிலே இயேசுவுககுப பினசென்று ன. * ௫. ௩௪.

## ௰௧. அதிகாரம்.

[(௧) கிறிஸது சிறபபாய எருசலேமுககுள் பிரவேசிததது (௰௨) கனியறற அததிமரத தைச சபிததது. (௰௫) தேவாலயததைச் சுத்திகரித்தது. (௨௰) விசுவாசததில உ றுதிகொளளவும, பகைஞரை மனனிகக வும சிஷர்களுககுபபோதிததது, (௨௭) பரா பரனுல அனுப்பபபட்ட யனுஸநானகிய யோவானுடைய சாட்சியினுல அவருடைய செயகைகளுககு உதாரணஙகொடுததது.]

* பினபு அவர்கள எருசலேம நகரத திறகுச சமீபமாயபபோய, ஒலி வமலையருகேயிருககிற பெதபாகே,பெததா னியாவூர்களுககுச்சேர்நதபொழுது, அவர் தமமுடைய சிஷரிலிரணடுபேரைநோககி, * மத. ௨௧. ௧—௰௭; லூககா. ௰௯. ௨௯; யோவா. ௰௨. ௰௨—௰௯.

௨. உஙகளுககுமுனபாகவிருககிற அநதக கிராமததிறகுபபோஙகள நீஙகள அதிறபிர வேசிததவுடனே, ஒருவருமேறுமறககட்டப பட்டிருககிற (கழுதையின) குட்டியைக காண்பீர்கள. அதின கட்டவிழதது, அதைக கொணடுவாருஙகள.

௩. ஒருவன ஏன இபபடிசசெயகிறீர்களெ னறு உஙகளுடனேசொனனுல, ஆணடவரு ககு இதுவேணடுமெனறு சொலலுஙகள. உடனேயவன அதையிவவிடததிறகு அனு பபிவிடுவானெனறு அனுபபினுர்.

௪. அநதபபடி யவர்களபோய வெளியே தெருவிற கதவினருகே கட்டபபட்டிருககிற (கழுதையின) குட்டியைககணடு, அதின கட்டவிழககிறபொழுது,

௫. அஙகேநினற சிலர் அவர்களைநோககி, நீஙகள ஏன இதின கட்டவிழககிறீர்கள எனருர்கள.

௬. இயேசுவானவர் தஙகளுககுக கட்டளை யிட்டபடி சிஷர் அவர்களுககு உததரவு சொனனுர்கள. அபபொழுது அவர்களைவிட் டுவிட்டார்கள.

௭. ஆகையால, சிஷர் அநதக குட்டியை இயேசுவினிடததிறகுககொணடுவநது, தங களவஸதிரஙகளையதினமேறபோட்டார்கள. அவர் அதினமேலேறிபபோனுர்.

௮. அபபொழுது அநேகர்தஙகள வஸதி ரஙகளை வழியிலே விரிததார்கள. சிலர்மரங களின கிளைகளைமுறிதது, வழியிலேபரபபி ணுர்கள.

௯. அலலாமலும, முனனடபபாரும, பின னடபபாரும * ஓசனனு! பராபரனுடைய நாமததினுலேவருகிறவர் தோததிரஞசெய யபபடககடவர். * சங. ௱௰௮. ௨௫, ௨௬.

௰. பராபரனுடைய நாமததினுலே வருகி றவர் நமமுடையபிதாவாகிய தாவீதினஆளு கைவாழததிககொளளபபடககடவது.உன னதமான இடஙகளிலே ஓசனனுவெனறுகூப் பிட்டார்கள.

௰௧. அபபொழுது இயேசுவானவர் எருச லேமிலேயும, தேவாலயததிலேயும பிரவே சிததார். அஙகே யவர் எலலாவறறையுஞ சுறறிபபார்தது, பினபு சாயநதரமானபொ ழுது பனனிருவருடனே புறபபட்டுபபெத தானியூருககுபபோனுர்.

யினால், கிறிஸ்து பூதர்களுக்கும், அந்நியர்களுக்கும் அடுத்த நிலைமையையெடுத்துக் காண்பித்தது. (௰௩) இராயனுக்கு வரிகொடுப்பதைக்குறித்துப் பரிசேயருக்கும், ஏரோதேயினமனுஷருக்கும் உத்தரவுசொன்னது. (௰௮) உயிர்த்தெழுதலில்லையென்று சாதித்த சதுசேயருடைய தப்பறையைக்காண்பித்து, அந்த உபதேசத்தை நிச்சயித்தது. (௨௮) பிரதான கற்பனையேதென்று கேட்டவேதபாரகனுக்கு உத்தரவு அருளிச்செய்தது. (௩௫) கிறிஸ்துவைக்குறித்து வேதபாரகர் கொண்டிருந்த தாற்பரியத்தைக் கண்டித்தது. (௩௮) அவர்களுடைய பெருமையையும், மாயத்தையுங் குறித்துச்சனங்களை எச்சரித்தது. (௪௧) இரண்டுகாசை தருமப்பெட்டியிற் போட்ட ஏழைவிதவையைப்புகழ்ந்தது.]

*அவ்வாமலும் அவர் உவமைகளாய அவர்களுடனேசொன்னது, ஒரு மனிதன் ஒருதிராட்சத்தோட்டத்தையுண்டுபண்ணி, அதைச்சுற்றிவேலியடைத்து, அதில் ஆலையைநாட்டி, ஒருகோபுரத்தையுங் கட்டிப் பின்பு அதைத்தோட்டக்காரர்வசமாய விட்டுப் புறத்தேசத்திறகுப்போனான். * மத். ௨௧. ௩௩-௪௰; லூக். ௨௰. ௯—௰௯.

௨. தகுதியானகாலத்திலே அந்தத்திராட்சத்தோட்டத்தினகனிகளில் ஒருபாகத்தைத் தோட்டக்காரரிடத்தில் வாங்கிக்கொள்ளும்படிக்கு அவன் ஒரு ஊழியக்காரனையவர்களிடத்திறகு அனுப்பினான்.

௩. அவர்கள் அவனைப்பிடித்து, அடித்து, வெறுமையாய அனுப்பினார்கள்.

௪. மறுபடியும் அவன்வேறொரு ஊழியக்காரனையவர்களிடத்தில் அனுப்பினான். அவன்மேல் அவர்கள்கல்லெறிந்து, தலையிறகாயப்படுத்தி, கனஈனத்தோடேயவனையனுப்பினார்கள்.

௫. பின்பு அவன்வேறொருவனையனுப்பினான். அவனையவர்கள் கொலைசெய்தார்கள். (அப்படியவனால் அனுப்பப்பட்ட) அநேகரிற்சிலரையடித்து, சிலரைக்கொலைசெய்தார்கள்.

௬. அவனுக்குப் பிரியமான ஒரேகுமாரன் இருந்தான். ஆதலால், அவன்தன்குமாரனுக்கஞ்சுவார்களென்றெண்ணிக் கடைசியிலே அவனையும்அவர்களிடத்தில்அனுப்பினான்.

௭. அந்தத்தோட்டக்காரர் (அவனைக்கண்டு) இவன் சுதந்தரவாளி, இவனுடைய சுதந்தரம் நமக்கு வசமாகும்படிக்கு நாம் இவனைக் கொலைசெய்யக்கடவோமவாருங்களென்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டு,

௮. பின்பு அவனைப்பிடித்துக் கொலைசெய்து, திராட்சத்தோட்டத்திறகுப் புறம்பே தள்ளினார்கள்.

௯. ஆனபடியினாலே அந்தத் தோட்டத்தினெசமானனென்னசெய்வான்! அவன்வந்து அந்தத் தோட்டக்காரரையழித்துத் தோட்டத்தை மற்றவர்களுக்கு ஒப்புக்கொடுப்பானல்லவா!

௰. * வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளினகல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று. * சங். ௱௰௮. ௨௨.

௰௧. * அது பராபரனாலேயாயிற்று. அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறதென்கிற வேதவாக்கியத்தை நீங்கள் வாசிக்கவில்லையாவென்றார். *சங். ௱௰௮. ௨௩.

௰௨. அப்பொழுது அவர்கள் தங்களைக்குறித்து இந்த உவமையைச்சொன்னாரென்றறிந்தபடியால், அவரைப்பிடிக்கமனதாயிருந்தார்கள். * ஆனாலுஞ் சனங்களுக்குப்பயந்து அவரைவிட்டுப்போனார்கள். * மத். ௰௪. ௫.

௰௩. * பின்பு அவர்கள் வசனங்களினாலே அவரையகப்படுத்தும்படிக்குச் சில பரிசேயரையும், ஏரோதேயின மனிதரையும் அவரிடத்தில் அனுப்பினார்கள். * மத்தே. ௨௨. ௰௫—௨௨; லூக். ௨௰. ௨௰—௨௯.

௰௪. அவர்கள்வந்து அவரைநோக்கி, போதகரே, நீர் மனிதருடையமுகத்தைப்பாராமல், பராபரனுடையமார்க்கத்தைச் சத்தியமாயஉபதேசிக்கிறவராயிருக்கிறீர். ஆகையால் நீர்சத்தியமுடையவருமாய, ஒருவரையுங்குறித்துக் கவையில்லாதவருமாயிருக்கிறீரென்று அறிந்திருக்கிறோம். இராயனுக்கு வரிப்பணத்தைக்கொடுக்கிறது நியாயமோ இல்லையோ?

௰௫. நாம் கொடுக்கவேண்டுமா? கொடாமலிருக்கவேண்டுமா! என்றார்கள். அவர் அவர்களுடைய மாயத்தையறிந்து, நீங்கள் என்னை ஏன் சோதிக்கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு ஒரு தெநாரியு எனக்குக்கொண்டுவாருங்களென்றார்.

௰௬. அவர்கள் கொண்டுவந்தார்கள். அப்பொழுது அவர்சொன்னது, இந்தச் சொரூபமும், மேலெழுத்தும் யாருடையவைகளென்றார். அதற்கு அவர்கள் இராயனுடையவைகளென்றார்கள்.

௰௭. இயேசுவானவர்சொன்னது, * இராயனுடையவைகளை இராயனுக்கும், பராபரனுடையவைகளைப் பராபரனுக்குஞ் செலுத்துங்களென்றுசொன்னார். அப்பொழுது அவரைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள். * உரோம. ௰௩. ௭.

௰௮. பின்பு உயிரோடெழுந்திருக்கும் மறுமையில்லையென்றுசொல்லுகிற * சதுசேயரென்பவர்கள் அவரிடத்திலவந்து, * மத். ௨௨. ௨௩—௩௩; லூக். ௨௰. ௨௭—௪௰; அப். ௨௩. ௮.

௰௯. போதகரே, * ஒருவன் பிள்ளைகளில்லாமல் தன் மனைவியைவிட்டிறந்தால், அவ

னுடைய சகோதரன் அவன் மனைவியை விவாகம்பண்ணி, அவனுக்குச் சந்ததியுண்டாக்கவேண்டுமென்று, நமக்கு மோசே கட்டளையிட்டிருக்கிறார். * ரு. மோசே. ௨௫. ரு.

௨௰. ஒரிடத்தில் ஏழுபேர் சகோதரரிருந்தார்கள். அவர்களில் மூத்தவன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணி, பின்பு சந்ததியில்லாமல் இறந்துபோனான்.

௨௧. அப்பொழுது இரண்டாஞ் சகோதரன் அவளை விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் இறந்துபோனான். மூன்றாஞ் சகோதரனும் அப்படியேபோனான்.

௨௨. ஏழ்பேரும் அவளை விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமற்போனார்கள். எல்லாருக்கும்பின்பு அந்தப்பெண்ணும் இறந்துபோனாள்.

௨௩. ஆகையால் அவர்கள் உயிரோடெழுந்திருக்குங்காலத்திலே ஏழ்பேருக்கும் மனைவியாயிருந்த அவள் அவர்களிலெவனுக்கு மனைவியாயிருப்பாளென்று கேட்டார்கள்.

௨௪. அவர்களுடனே இயேசுவானவர் சொன்னதாவது; நீங்கள் வேதவாக்கியங்களையும், பராபரனுடைய வல்லமையையும் அறியாமலிருக்கிறபடியால்லவா வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

௨௫. மரித்தவர்கள் உயிரோடெழுந்திருக்கும்பொழுது, பெண்கொள்வதும், கொடுப்பதுமிராது. அவர்கள் பரலோகத்திலுள்ள தூதரைப்போல இருப்பார்களே.

௨௬. மரித்தோர் எழுப்பப்படுவதைக்குறித்து, நான் ஆபிரகாமினுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய தேவனுமாய், யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிறவனென்று செடியிலிருந்து பராபரன் மோசேயுடனே சொல்லியவாக்கியம் மோசேயின் ஆகமத்திலே * எழுதியிருக்கிறதே. அதை நீங்கள் வாசிக்கவில்லையா! * ௨. மோசே. ௩. ௬.

௨௭. அவர் மரித்தவர்களுடைய தேவனாயிராமல், சீவனுள்ளோருடைய தேவனாயிருக்கிறார். ஆகையால் நீங்கள் மிகவும் வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்களென்றார்.

௨௮. * அவர்கள் அப்படிப்பேசிக்கொண்டதைவேதபாரகரிலொருவன்கேட்டு, அவர் அவர்களுக்கு நன்றாய் மாறுத்தரஞ்சொன்னாரென்றறிந்து, அவரைநோக்கி, கற்பனைகளில் எது பிரதானமானதென்று கேட்டான். * மத்தே. ௨௨. ௩௪—௪௰.

௨௯. அதற்கவர் சொன்னது, கற்பனைகளிற் பிரதானமான கற்பனை யெனனவென்றால், * இஸ்ரவேலே, கேள். உன் தேவனாகிய பராபரன் ஒருவரே பராபரன். * ரு. மோசே. ௬. ௪—௫.

௩௰. உன் தேவனாகிய பராபரனிடத்தில் நீ உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும, உன் முழு மனதோடும, உன் பெலன்களெல்லாவற்றோடும் அன்பு கூர்வாயாகவென்பதே பிரதானமான கற்பனை.

௩௧. இரண்டாங் கற்பனை * யதற்கொப்பாயிருக்கின்றது. என்னவெனில், உன்னிடத்தில் அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வாயாகவென்பதே. இவைகளிலும் வேறொருபெரிதான கற்பனையில்லையென்றார். * ௩. மோசே. ௰௯. ௰௮.

௩௨. வேதபாரகன் சொன்னது,' நல்ல போதகரே, நீர் சதக்கியத்தினபடி சொன்னீர். ஒரே தேவனுண்டு. அவரைத்தவிர வேறொரு தேவனில்லை.

௩௩. அல்லாமலும் தகனபலி முதலான பலிகளிலும் முழு இருதயத்தோடும், முழு மனதோடும், முழு ஆத்துமாவோடும, முழுப்பலத்தோடும் அவரிடத்தில அன்புகூர்வதும், தன்மேல அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வதுமே மேன்மையாயிருக்கின்றனவென்றான்.

௩௪. அவன் புத்தியோடேபேசினதை இயேசுவானவர்கண்டு, நீ பராபரனுடைய இராச்சியத்திற்குத் தூரமானவனல்லவென்று, அவனுடனேசொன்னார். பின்பு ஒருவனும் அவரிடத்தில் வினவத் துணியவில்லை.

௩௫. இயேசுவானவர் தேவாலயத்திலே உபதேசம்பண்ணுகையில், அவர் அவர்களை நோக்கி, * தாவீதுதானே பரிசுத்த ஆவியினாலே சொன்னது, † பராபரன் என் கர்த்தரை நோக்கி, உம்முடைய சத்துருக்களை நான் உமது பாதப்படியாக்குமளவும், நீர் என்னுடைய வலதுபாரிசத்திலே யுட்காருமென்றாரென்பதே. * மத். ௨௨. ௪௪; லூக. ௨௰. ௪௨, ௪௩; † சங். ௱௰. ௧.

௩௬. * ஆகையாற் கிறிஸ்து தாவீதினுக்குமாரனென்று வேதபாரகர் எப்படிச்சொல்லுகிறார்கள்! * லூக். ௨௰. ௪௧.

௩௭. தாவீதுதானே அவரைக் கர்த்தரென்றுசொல்லியிருக்க, அவர் எப்படி அவனுடைய குமாரனாயிருக்கிறாரென்றுசொன்னார். அநேக சனங்கள் அவருடைய உபதேசத்தை விருப்பமாய்க்கேட்டார்கள்.

௩௮. * அன்றியும் அவர் உபதேசம்பண்ணுகையில் அவர்களுடனேசொன்னது, நீள மான அங்கிகளைத்தரித்திருந்து நடக்கவும், சந்தைகளிலே வாழ்த்துதல் அடையவும், * மத். ௨௩. ௧—௩௩, லூக். ௨௰. ௪௫—௪௭.

௩௯. * செப ஆலயங்களில் முதல் ஆசனங்களிலிருக்கவும், போசனபந்திகளில் முதல் இடங்களிலிருக்கவும் விரும்பி விஸ்தாரமாய்ச் செபமந்திரங்களைச் சொல்லுகிறோமென்று சொல்லிக் கைம்பெண்களுடைய ஆஸ்திகளைப் பட்சித்துவருகிற வேதபாரகருக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள். * லூக் ௰௧. ௪௩—௫௨.

௪௰. அவர்கள் அதிக தண்டிப்பையடைவார்களென்றார்.

௪௧. அல்லாமலும் * இயேசுவானவர் பொக்கிசப்பெட்டிக்கெதிரா யுட்கார்ந்தபொழுது, அதிலே சனங்கள் பணத்தைப்போடுகிறதைப்பார்த்தார். அநேக ஐசுவரியவான்கள் மிகவும்போட்டார்கள். * இரா. ௨௧. ௧—௪.

௪௨. எளியவளான ஒரு கைம்பெண்ணும் வந்து, ஒருகோதிராந்தேசெனனும் இரண்டு காசைப்போட்டாள்.

௪௩. அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களையழைத்து, இந்தப் பொக்கிசப்பெட்டியிலே போட்டவர்களெல்லாரிலும் * இவ் வேழைக் கைம்பெண் அதிகமாய்ப்போட்டாளென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன். * ௨. கொரி. ௮. ௰௨.

௪௪. என்னத்தினாலென்றால், அவர்களெல்லாரும் தங்களுக்குண்டான சம்பூரணத்திலிருந்து சிலபோட்டார்கள். இவள் தன் எளிமையிலே தன் சீவனத்திற்குண்டானயாவையும்போட்டாளென்றார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத் தேவாலயத்தின் அழிவையும், (௯) சுவிசேஷத்தினிமித்தமாயுண்டாகுந் துன்பத்தையும், (௰) சுவிசேஷஞ் சகலசாதிகளுக்கும் பிரசங்கிக்கப்படுவதையும், (௰௪) யூதர்களுக்குண்டாகும் உபத்திரவங்களையும், (௨௪) அவர் நியாயத்தீர்ப்புக்குவரும் விதத்தையும், (௩௨) அந்த நேரம் ஒருவருக்குந் தெரியாதிருக்கிறபடியால் மரணத்தின்வழியாய் எவனிடத்திலும் அவர் வரும்போது, அவர்கள் ஆயத்தமுள்ளவர்களாயிருக்கும்படிக்கு எவனும் விழித்துச் செப்பண்ணவேண்டுமென்பதையும் முன்னறிவித்தது.]

பின்பு * அவர் தேவாலயத்தைவிட்டுப் புறப்படுகிறபொழுது, அவருடைய சீஷரிலொருவன் அவரைநோக்கி, போதகரே, இதோ, இவைகள் எப்படிப்பட்ட கற்கள்? இது எப்படிக்கட்டப்பட்டிருக்கின்றதென்றான். * மத். ௨௪. ௧—௩௯; லூக். ௨௧. ௫—௩௩.

௨. அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இந்தப் பெரிய மாளிகையைப்பார்க்கிறாயா! * இதில் ஒரு கல்லின்மேலே மற்றொரு கல்வைக்கப்படுவதில்லை. எல்லாம் இடிக்கப்படுமென்றார். * லூக். ௰௯. ௪௪.

௩. பின்பு அவர் தேவாலயத்திற்கெதிராக ஒலிவமலையின்மேல் உட்கார்ந்திருக்கையில், பேதுருவும், யாக்கோபும், யோவானும், அந்திரேயாவும் தனித்து அவரைநோக்கி,

௪. இவைகள் எப்பொழுது நடக்கும்! இவைகளெல்லாம் நிறைவேறுங்காலத்திலே என்ன அடையாளந்தோன்றும்? அதை யெங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டார்கள்.

௫. அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது, அநேகர் தோன்றி என்னுடைய நாமத்தைவைத்து, நானே அவரென்றுசொல்லி, அநேகரை வஞ்சனைசெய்வார்கள்.

௬. ஆகையால், ஒருவனும் உங்களை வஞ்சனைசெய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௭. அல்லாமலும் நீங்கள் யுத்தங்களையும், யுத்தங்களுக்கேற்ற பேச்சுக்களையுங் கேள்விப்படும்பொழுது கலக்கம் அடையாதிருங்கள்.

௮. இப்படி நடக்கவேண்டியதே. அப்பொழுது முடிவு உடனே வாராது. ஆகையால், ஒருசனக்கூட்டம் மற்றொருசனக்கூட்டத்திற்கும், ஒரு இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும் விரோதமாய் எழும்புவார்கள். பல இடங்களிலே பூமியதிர்ச்சிகளும், பஞ்சங்களும், கலகங்களுஞ் சம்பவிக்கும். இவைகள் வேதனைகளின் ஆரம்பமாயிருக்கும்.

௯. அப்பொழுது நீங்கள் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்கள். என்னத்தினாலென்றால், என்னிமித்தம் உங்களைப் பெரியசங்கத்தாருக்கொப்புக்கொடுப்பார்கள். செப ஆலயங்களிலே நீங்கள் அடிக்கப்பட்டு, தேசாதிபதிகளுக்கும், இராசாக்களுக்குஞ் சாட்சியாக அவர்களுக்குமுன்பாக நிறுத்தப்படுவீர்கள்.

௰. அல்லாமலும் முன்பு சுவிசேஷமானது, உலகத்தாரெல்லாருக்கும் பிரசங்கம்பண்ணப்படவேண்டும்.

௰௧. * அப்படி ஒப்புக்கொடுக்கும்படிக்கு உங்களைக்கொண்டுபோகும்பொழுது நீங்கள் என்னபேசுவோமென்று முன் கவலைப்படாமலும், சிந்தித்துக்கொள்ளாமலுமிருங்கள். நீங்களல்ல, பரிசுத்த ஆவியே பேசுகிறவராகையால், அந்நேரத்திலே உங்களுக்கு அளிக்கப்படுவதையே பேசக்கடவீர்கள். * மத்தே. ௰. ௰௯.

௰௨. * அன்றியும் ஒருவன் தன் சகோதரனையும், தகப்பன் தன்பிள்ளையையும் மரணத்துக்கொப்புக்கொடுப்பார்கள். பிள்ளைகளுந் தங்களைப்பெற்றவர்களுக்கு விரோதமாய் எழும்பி அவர்களை மரணம் அடையும்படிசெய்விப்பார்கள். * மீகா. ௭. ௬.

௰௩. நீங்களும் என் நாமத்தினிமித்தம் யாவராலும் பகைக்கப்படுவீர்கள். எப்படியும் முடியுமளவாக்கும் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪. * மேலும் பாழாக்குகிற அருவருப்பைக் குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொன்னதை (அதை) வாசிக்கிறவன் சிந்திக்க

கொள்ளக்கடவன். அது நிற்கப்படாத இடத்திலே நீங்கள் அதை நிற்கக்காணும்பொழுது யூதேயாவிலுள்ளவர்கள் மலைகளுக்கோடிப்போகக்கடவார்கள். * தானி. ௯. ௨௭.

௰௫. வீட்டின்மேலிருப்பவன் தன் வீட்டிற்குள்ளே பிரவேசியாமலும், ஆதிலிருந்தாதையாகிலும் எடுத்துக்கொண்டு போகும்படி பிரவேசியாமலும் போகக்கடவன்.

௰௬. அல்லாமலும் வயலிலிருப்பவன் தன் வஸ்திரத்தை யெடுத்துப்போகும்படிக்குப் பின்னிட்டுத்திரும்பாமற்போகக்கடவன்.

௰௭. ஐயோ, அந்நாட்களிற் கருப்பவதிகளுக்கும், பாலுகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவமிருக்கும்.

௰௮. மேலும் பராபரன் உலகத்தையுண்டாக்கின துமுதற்கொண்டு இதுவரைக்குஞ் சம்பவியாததுமாய், இனிமேலுஞ் சம்பவியாததுமாயிருக்கிற உபத்திரவமே அந்நாட்களிலிருக்கும்.

௰௯. ஆதலால் நீங்கள் ஓடுகிறது மாரிகாலத்திலே சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்கடவீர்கள்.

௨௰. அல்லாமலும் பராபரன் அந்நாட்களைக் குறையப்பண்ணாமலிருந்தால், ஒருவருந் தப்பிப்போவதில்லை. அவர் தெரிந்துகொண்டவர்களினிமித்தமே அந்நாட்களைக்குறைத்தார்.

௨௧. அன்றியும் * கள்ளக்கிறிஸ்துக்களும், கள்ளத்தீர்க்கதரிசிகளுமெழும்பித்தெரிந்துகொள்ளப்பட்டவர்களை (வஞ்சிக்கக்) கூடுமானால், அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக அதிசயங்களையும், அற்புதங்களையுஞ் செய்வார்கள். * ௫. மோசே. ௰௩. ௧—௩; ௨. தெசலோனி. ௨. ௯—௰௨.

௨௨. ஆகையால் அக்காலத்திலே யொருவன் இதோ, இங்கேகிறிஸ்தென்றும், அதோ அங்கே கிறிஸ்தென்றும் உங்களுடனேசொன்னால் அவனை நீங்கள் நம்பவேண்டாம்.

௨௩. எச்சரிக்கையாகவேயிருங்கள். இதோ இவைகளெல்லாவற்றையுமுங்களுக்குமுன்னறிவித்தேன்.

௨௪. அன்றியும் அக்காலத்திலே அந்த உபத்திரவத்திற்குப்பின்பு * சூரியன் இருளடையும். சந்திரன் பிரகாசங்கொடாமலிருக்கும். * மத். ௨௪. ௨௯.

௨௫. * நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும். அல்லாமலும் வானத்திற்பலமுள்ளவைகளெல்லாம் அசைக்கப்படும். * அபி. ௬. ௰௨.

௨௬. அப்பொழுது * மனிதனுடைய குமாரன் மிகுந்தவல்லமையோடும், மகிமையோடும், மேகங்களின்மேல்வருவார். அவனையவர்கள் காண்பார்கள். * தானி. ௭. ௰௩.

௨௭. அல்லாமலும் அவர் அப்பொழுது தம்முடைய தூதரையனுப்பி வானத்தின் எல்லைகளாகிய நாலுதிசைகளிலுமிருந்து தாம் தெரிந்துகொண்டவர்களைச் சேர்த்துக்கொள்வார்.

௨௮. * அத்திமரத்தினாலே உவமையாக ஒருவிசேஷத்தைக் கற்றுக்கொள்ளுங்கள். அதனிலைகள் துளிர்த்து, இலைகளைக்கொடுக்கிறபொழுது, வசந்தகாலஞ்சமீபமாயிருக்கிறதென்று அறிகிறீர்கள். * மத். ௨௪. ௨௪—௩௪.

௨௯. அப்படிப்போல இவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது மிகவுஞ் சமீபமாயிருக்கிறதென்றறியக்கடவீர்கள்.

௩௰. இவைகளையாவுஞ் சம்பவிக்குமளவும் இந்தச்சந்ததி யொழிந்துபோவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.

௩௧. * வானமும், பூமியும் ஒழிந்துபோம். என்வசனங்களோ ஒழியாமலிருக்கும். * மத். ௨௪. ௩௫.

௩௨. (அவைசம்பவிக்கும்) நாளையும், நாழிகையையும், பிதாவானவரேயன்றி மற்றொருவனும் அறியமாட்டான். பரமண்டலங்களிலுள்ள தூதரும், குமாரனும் அதையறியார்கள்.

௩௩. * அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால், எச்சரிக்கையாய் விழித்துக்கொண்டு, செபம்பண்ணக்கடவீர்கள். * மத்தே. ௨௫. ௰௩—௨௪. ௩௭; லூக்கா. ௨௧. ௩௪—௩௬.

௩௪. ஒரு மனிதன் தன் வீட்டைவிட்டுப் புறத்தேசத்திற்குப்போக மனதாய்த் தன் ஊழியக்காரருக்கு அதிகாரங்கொடுத்து, ஒவ்வொருவருக்கு ஒவ்வொருவேலையை நியமித்துக் காவற்காரன் விழித்துக்கொண்டிருக்கும்படிக்குக் கட்டளையிடுகிறதுபோலவிருக்கின்றது.

௩௫. ஆகையால் வீட்டெசமான் சாயந்தரம் பாதிராத்திரி சேவல்கூவும்நேரங் காலையிவைகளில் இன்னவேளையில் வருவானென்று நீங்கள் அறியாதிருக்கிறபடியால்,

௩௬. அவர் சடுதியாய்வந்து உங்களைத்தூங்குகிறவர்களென்று கண்டுபிடியாதபடிக்கு விழித்துக்கொண்டிருங்கள்.

௩௭. விழித்துக்கொண்டிருங்களென்று நான் உங்களுக்குச்சொன்னதுபோல மற்றயாவருக்கும் அப்படியே சொல்லுகிறேனென்றார்.

## ௰௪. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவுக்குவிரோதமாகப்பண்ணப்பட்ட ஆலோசனை. (௩) ஒருஸ்திரீ தயிலத்தை அவர்சிரசின்மேல்வார்த்தது. (௰) யூதாதன் ஆண்டவரைப் பணத்துக்கு விற்றது. (௰௨) கிறிஸ்துத் தம்முடையசீஷர்களிலொருவனாற் காட்டிக்கொடுக்கப்படுவதை முன

னறிவித்து, (௨௨) பஷா ஆயத்தம்பண்ணப்பட்டுப் புசிக்கப்பட்டபின்பு இராப்போசனத்தையேற்படுத்தி, (௨௩) சீஷர்களெல்லாருந் தம்மைவிட்டோடிப்போவதையும், பேதுரு தம்மை மறுதலிப்பதையுங்குறித்து முன்னறிவித்தது. (௨௪) யூதா அவரை முத்தத்தினாற் காட்டிக்கொடுத்தது. (௨௫) அவர் தோட்டத்திற் பிடிக்கவும், (௨௬) அநியாயமாயக் குற்றஞ்சாட்டவும் யூதர்களுடைய ஆலோசனைச்சங்கத்தாரால் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவும், (௨௭) அவர்களால் நிந்திக்கவும், (௨௮) பேதுருவினால் மூன்றுவிசை மறுதலிக்கவுமுட்பட்டது.]

இரண்டுநாளுக்குப்பின்பு, புளியாத அப்பஞ்சாப்பிடுகிற பஸ்காப்பண்டிகை வந்தது. * பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் தந்திரமாய் அவரைப்பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு வகைதேடிக்கொண்டிருக்கையில், * மத். ௨௬. ௨-௫; லூக். ௨௨. ௧, ௨.

௨. அவர்கள்சொன்னது, பண்டிகையிலே யப்படிச்செய்யக்கூடாது செய்தாற் சனங்களுக்குள்ளே கலகமுண்டாகுமென்றார்கள்.

௩. அவர்பெத்தானியூரிலே குஷ்டரோகியாயிருந்த சீமோனுடைய வீட்டிற் போசனபந்தியிருக்கையில், * ஒருஸ்திரீயானவள்மிகவும் விலையேறப்பெற்ற களங்கமில்லாத சுகந்தவருக்கத்தாற்செய்த நருதுஎன்னும் பரிமளதைலமுள்ள வெண்கற் பரணியையெடுத்துவந்து, அதைத்திறந்து, அதிலுள்ள தைலத்தை அவருடைய தலையின்மேலவார்த்தாள். * மத். ௨௬. எ-௰௩; யோவா. ௰௨. ௩-அ.

௪. அப்பொழுது சிலர் தங்களுக்குள்ளே விசனம் அடைந்து இந்தப்பரிமளதைலத்தை யேன்கெடுத்துப்போடுகிறாள்.

௫. இதை முந்நூறு தேநாரியுவெள்ளிக்குமேலான கிரயத்துக்குவிற்று ஏழைகளுக்குக் கொடுக்கலாமேயென்றுசொல்லி அவளுக்குவிரோதமாய் முறுமுறுத்தார்கள்.

௬. அப்பொழுது இயேசுவானவர்சொன்னது, இவளைவிட்டுவிடுங்கள். ஏன் இவளைவருத்தப்படுத்துகிறீர்கள்! இப்படி இவளொருநற்கிரியையென்னிடத்திற்செய்தாள்.

எ. ஏழைகள் எப்பொழுதும் உங்களுடனேயிருப்பார்கள். மனதிருந்தால், நீங்கள் அவர்களுக்குநன்மைசெய்யலாம். நானெப்பொழுதும் உங்களிடத்திலிரேன்.

அ. இவள் தன்னாலானமட்டுஞ்செய்தாள். என்சரீரத்தை யடக்கம்பண்ண எத்தனமாகும்படிக்கு இவள்முந்தியிதிற்சுகந்தவருக்கமிட்டாள்.

௯. உலகம் முழுவதிலும் இந்தச்சுவிசேஷம்பிரசங்கிக்கப்படுமிடம் எங்கேயோ அங்கே யிவளை நினைந்துக்கொள்வதற்கு இவள் இப்பொழுது செய்ததுஞ்சொல்லப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

௰. * பின்புபன்னிருவரிலொருவனாகிய யூதாஸ்காரியோத்தென்பவன் பிரதான ஆசாரியருக்கு அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கு அவர்களிடத்திற்போனான். * மத். ௨௬. ௰௪—௰௬; லூக். ௨௨. ௩—௬.

௰௧. அவனுடைய வார்த்தைகளை யவர்கள் கேட்டுச் சந்தோஷப்பட்டு அவனுக்குப் பணங்கொடுக்கும்படிக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்கள். பின்பு அவன் அவரைக்காட்டிக்கொடுப்பதற்குத் தகுதியான காலத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

௰௨. * புளியாத அப்பங்களைச்சாப்பிடும் நாள்களிற்பஸ்கா ஆட்டுக்குட்டி பலியிடப்படும் முதல்நாளிலே அவருடைய சீஷர்கள் அவரைநோக்கி, நீர்பஸ்காவைப்புசிக்கும்படிக்கு, நாங்கள் எங்கேபோய் எத்தனம்பண்ணச் சித்தமாயிருக்கிறீரென்று கேட்டார்கள். * மத். ௨௬. ௰எ-௨௫; லூக். ௨௨. எ-௰அ.

௰௩. அப்பொழுது அவர்தம்முடைய சீஷரிலிரண்டுபேரையழைத்து, நீங்கள் பட்டினத்திற்குப்போங்கள். அங்கே ஒருமனிதன் தண்ணீர்க்குடத்தைச்சுமந்துகொண்டு, உங்களுக்கெதிராய்வருவான். அவனுக்குப் பின்செல்லுங்கள்.

௰௪. அல்லாமலும் அவன்பிரவேசிக்கும்வீட்டிலே நீங்களும் (பிரவேசித்து,) அந்த எசமானை நோக்கி, நான் என் சீஷர்களுடனே பஸ்காவைப் போசனம்பண்ணத்தக்கதான இடமெங்கேயென்று போதகர் கேட்கிறாரென்றுசொல்லுங்கள்.

௰௫. அப்பொழுது அவன்கம்பளமுதலானவைகள்விரித்து எத்தனமாக்கப்பட்டிருக்கிறவிஸ்தாரமானமேல்வீட்டிற்பெரிய அறையையுங்களுக்குக் காண்பிப்பான். அங்கே நமக்காக எத்தனம்பண்ணுங்களென்று சொல்லியனுப்பினார்.

௰௬. அந்தப்படியவருடைய சீஷர்கள்புறப்பட்டுப் பட்டினத்திலவந்து, தங்களுக்கு அவர்சொன்னபடியேகண்டு, பஸ்காப்போசனத்தையெத்தனம்பண்ணினார்கள்.

௰எ. சாயந்தரமானபொழுது, அவர்பன்னிருவருடனேகூட அவ்விடத்திற்குப்போனார்.

௰அ. அவர்கள்பந்தியிலிருந்து சாப்பிடுகையில், இயேசுவானவர் அவர்களைநோக்கி, * என்னோடேகூடச்சாப்பிடுகிற உங்களிலொருவனேயென்னைக் காட்டிக்கொடுப்பானென்று, மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார். * லூக். ௨௨. ௨௧-௨௩; யோவா. ௰௩. ௨௧-௩௰.

௰௯. அவர்கள் அதைக்கேட்டு, மிகுந்த

த்துக்கம் அடைந்து, நானோ நானோவென்று ஒவ்வொருவராய் அவரிடத்தில் கேட்கத் தொடங்கினார்கள்.

௨௰. அவர்களுக்குப் பிரதியுத்தரமாக அவர் சொன்னது, பன்னிருவரிலொருவனேயென்னோடே கூடத் தாலத்திலே தோய்க்கிறவனே (அப்படிச்செய்வான்.)

௨௧. மனிதனுடைய குமாரன் தன்னைக்குறித்து எழுதியிருக்கிறபடி போகிறான். ஆனாலும் ஐயோ! மனிதனுடைய குமாரனைக் காட்டிக்கொடுப்பவனெவனோ அவனுக்கு வேதனைவரும். அம்மனிதன் பிறவாமலிருந்தானானால், அவனுக்கு நலமாயிருக்குமென்றார்.

௨௨. * அல்லாமலும், அவர்கள் சாப்பிடுகிறபொழுது, இயேசுவானவர் அப்பத்தை யெடுத்து, ஆசீர்வாதஞ்செய்து, அதைப்பிட்டு அவர்களுக்குக் கொடுத்து, இதையெடுத்துப் புசியுங்கள். இது என்னுடைய சரீரமாயிருக்கிறதென்று சொல்லி, * மத்தே. ௨௬. ௨௬–௨௯; லூக். ௨௨. ௰௯. ௨௰.

௨௩. பின்பு பாத்திரத்தையுமெடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி, அதையவர்களுக்குக் கொடுத்து, அவர்களெல்லாரும் அதிற் பானம்பண்ணினபின்பு, சொன்னதாவது;

௨௪. இது புதிய உடன்படிக்கைக்கேற்றதாய அநேகருக்காகச் சிந்தப்படுமென்னுடைய இரத்தமாயிருக்கிறது.

௨௫. பராபரனுடைய இராச்சியத்திலே நானதிராட்ச இரசத்தை நவமாயுங்களுடனே பானம்பண்ணுநாள்வரைக்கும் அதை நான் மறுபடியும் பானம்பண்ணுவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௬. * அவர்கள் ஸ்தோத்திரம்பாடினபின்பு ஒலிவமலைக்குப் போனார்கள். * மத். ௨௬. ௩௰–௩௫; யோவா. ௰௮. ௧.

௨௭. அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, * மேய்ப்பனானவனை அடிப்பேன். அப்பொழுது ஆடுகள் சிதற அடிக்கப்படுமென்றெழுதியிருக்கிறபடியால், நீங்களெல்லாரும் இந்த இராத்திரியிலேயென்னைக் குறித்து இடறுவீர்கள். * சகரி. ௰௩. ௭; யோவா. ௰௬. ௩௨.

௨௮. ஆனாலும், நான் உயிரோடிருக்கும்படி எழுப்பப்பட்டபின்பு உங்களுக்கு முன்னே கலிலேயா நாட்டுக்குப் போவேனென்றார்.

௨௯. அதற்குப் பேதுரு, எல்லாரும் உம்மைக்குறித்து இடறுவினாலும் நான் அப்படிச் செய்யமாட்டேனென்றான்.

௩௰. அவனுடனே இயேசுவானவர் இந்த இராத்திரியிலே சேவல் இரண்டாந்தரங் கூவுமுன்னமே, நீ மூன்றுதரம் * என்னைமறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேனென்றார். * லூக். ௨௨. ௩௪; யோவா. ௰௩. ௩௮.

அப

௩௧. அதற்கவன் நான் உம்மோடே சாக வேண்டியதாயிருந்தாலும், உம்மைமறுதலிக்கமாட்டேனென்று அதிக உறுதியாய்ச் சொன்னான். மற்றவர்களெல்லாரும் அப்படியே சொன்னார்கள்.

௩௨. * பின்பு அவர்கள் கெத்செமனேயென்னுமிடத்திற் சேர்ந்தார்கள். அங்கேயவர் தம்முடைய சீஷர்களை நோக்கி, நான் போய்ச் செபம்பண்ணுகையில், நீங்கள் இங்கேயிருங்களென்றுசொல்லி, * மத். ௨௬. ௩௬–௪௬; லூக். ௨௨. ௩௯–௪௬.

௩௩. பேதுருவையும், யாக்கோபையும், யோவானையுங்கூட்டிக்கொண்டுபோய், மிகுந்த திகிலையும், வியாகுலத்தையும், அடையத்தொடங்கி,

௩௪. என் ஆத்துமா மரணவேதனைப்படுகிறது. நீங்கள் இங்கே தங்கி விழித்திருங்களென்றுசொல்லி,

௩௫. சற்றேதூரம்போய், தரையிலேவிழுந்து, அந்தநேரந்தம்மைவிட்டு நீங்கக்கூடுமானால், அது நீங்கும்படிக்கு,

௩௬. அப்பா, பிதாவே, உம்மாலேயெல்லாமாகும். இந்தப்பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படிசெய்யும். இல்லாவிட்டால், * என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே யாகக்கடவதென்றுசெபம்பண்ணினார். * யோவா. ௫. ௩௮.

௩௭. பின்பு அவர்வந்து அவர்கள் தூங்குகிறதைக்கண்டு, பேதுருவுடனே சொன்னது, சீமோனே தூங்குகிறாயா? ஒருமணிநேரம் நீ விழித்துக்கொள்ளக்கூடாதா!

௩௮. குற்றஞ்செய்வதற்கான காரணத்தில் நீங்கள் பிரவேசியாதபடிக்கு, விழித்துக்கொண்டு செபம்பண்ணுங்கள். ஆவியானது மனதுள்ளதுதான். மாம்சமோ பெலவீனமுள்ளதென்றுசொல்லி,

௩௯. மறுபடியும் அப்புறம்போய், மேற்சொல்லிய விதமாய்ச் செபம்பண்ணினார்.

௪௰. பின்பு அவர் திரும்பி, அவர்களுடைய கண்கள் கனமான தூக்கத்தையடைந்தபடியினாலே, மறுபடியும் அவர்கள் தூங்குகிறதைக்கண்டார். அல்லாமலும் அவர்கள் அவருக்குச் சொன்ன மாறுத்தரத்தையும் அவர்கள்தாமே யறியவில்லை.

௪௧. பின்பு அவர்மூன்றுந்தரம் அவர்களிடத்தில்வந்து, நீங்கள் பின்னுந்தூங்கி இளைப்பாறுகிறீர்களா? இதுபோதும். நேரம்வந்தது. இதோ, மனிதனுடைய குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிறான்.

௪௨. அதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் சமீபிக்கிறான். எழுந்திருங்கள். நாம் போவோம் வாருங்களென்றார்.

௪௩. * உடனே அவர் பேசுகையில், பன்னிருவரிலொருவனாகிய யூதாவும், அவனோடே

கூட்டப்பெரிய ஆசாரியராலும், வேத பாரகராலும், மூப்பராலும் அனுப்பப்பட்டுக் கத்திகளையும், தடிகளையும் பிடித்துக்கொண்டு வருகிற மிகுந்தசனங்களுந்தானிருந்தார்கள்.
* மத்தே. ௨௬. ௪௭—௫௬; லூக்கா. ௨௨. ௪௭—௫௩; யோவா. ௰௮. ௨—௰௪.

௪௪. அவரைக்காட்டிக்கொடுக்கவந்தவன் எவனைமுத்தஞ்செய்வேனோ அவனேயவன். அவனை நீங்கள் பிடித்துப் பத்திரமாய்க் கொண்டுவரவேண்டுமென்று, அடையாளமாக மற்றவர்களுக்குச் சொல்லியிருந்தான்.

௪௫. ஆகையால், அவன் வந்தவுடனே, அவரிடத்திற்சேர்ந்து, இரபீ, இரபீ, என்றுசொல்லி, அவரைமுத்தஞ்செய்தான்.

௪௬. அப்பொழுது அவர்கள் அவரைக் கைப்பிடியாகப்பிடித்தார்கள்.

௪௭. உடனேசமீபமாய் நின்றவர்களிலொருவன் கத்தியையெடுத்துப் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக் காதற வெட்டினான்.

௪௮. அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, ஒருகள்ளனைப் (பிடிக்கிறதற்குப்புறப்படுகிறது) போல நீங்கள் என்னைப் பிடிக்கும்படிக்குக் கத்திகளோடும், தடிகளோடும் புறப்பட்டுவந்தீர்கள்.

௪௯. நாடோறும் நான் உங்களுக்குள்ளே தேவாலயத்திலே யுபதேசம்பண்ணினேன். அப்பொழுது நீங்கள் என்னைப்பிடிக்கவில்லை. ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறைவேறவேண்டுமென்றுசொன்னார்.

௫௰. உடனே (சீஷ)ரெல்லாரும் அவரை விட்டு ஓடிப்போனார்கள்.

௫௧. ஒருவாலிபன் ஒரு வஸ்திரத்தைமாத்திரந் தன்மேற்போர்த்துக்கொண்டு, அவருக்குப்பின்சென்றான். அவனைச்சேவகர்பிடித்தார்கள்.

௫௨. அப்பொழுது அவன் தன்வஸ்திரத்தைவிட்டுநிருவாணமாய் அவர்களைவிட்டோடிப்போனான்.

௫௩. * இயேசுவானவரை அவர்கள் பிரதான ஆசாரியனிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அங்கே ஆசாரியரெல்லாரும், மூப்பரும், வேதபாரகருங்கூடிவந்தார்கள்.
* மத். ௨௬. ௫௭; யோவா. ௰௮. ௰௫—௨௭.

௫௪. பேதுரு தூரமாக அவருக்குப்பின்சென்று, பிரதான ஆசாரியனுடைய மாளிகையின் பிரகாரத்தில்வந்து, அங்கே ஊழியக்காரருடனே, நெருப்பினருகே யுட்கார்ந்து அனல்காய்ந்துகொண்டிருந்தான்.

௫௫. அந்தத்தருணத்திலே பிரதான ஆசாரியரும், மற்றப்பெரிய சங்கத்தாரெல்லாரும் இயேசுவானவரைக் கொலைசெய்யும்பொருட்டாய் அவருக்குவிரோதமாய்ச் சாட்சிகளைத்தேடினார்கள்.

௫௬. அகப்படவில்லை. அநேகர் அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சிசொல்லியும் அந்தச்சாட்சிகளொவ்வவில்லை.



௫௭. அப்பொழுது சிலர் எழுந்து இவன் * கையினாற்செய்யப்பட்ட இந்தத்தேவாலயத்தை நான் இடித்துப் பின்பு மூன்றுநாளுக்குள்ளே கையினாலல்லாமல் வேறொன்றைக்கட்டுவேனென்று சொல்லக்கேட்டோமென்று,
* யோவா. ௨. ௰௯—௨௧.

௫௮. அவருக்கு விரோதமாகப்பொய்ச்சாட்சிசொன்னார்கள்.

௫௯. அப்படியும் அவர்களுடைய சாட்சி ஒவ்வாமலிருந்தது.

௬௰. பின்பு பிரதான ஆசாரியன் நடுவிலே யெழுந்து, இயேசுவானவரைநோக்கி, நீமாறுத்தரஞ் சொல்லுகிறதில்லையா? இவர்கள் உனக்குவிரோதமாயென்னசாட்சிசொல்லுகிறார்களென்றுகேட்டான்?

௬௧. அவர் * மாறுத்தரமாக ஒன்றும் பேசாமலிருந்தார். பிரதான ஆசாரியன் மறுபடியும் அவரைநோக்கி தோத்திரஞ்செய்யப்படத்தக்கவருடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோவென்றுகேட்டான்?
* ஏசா. ௫௩. ௭.

௬௨. இயேசுவானவர் சொன்னது, அவர் நான்தான். * அல்லாமலும் மனிதனுடைய குமாரன் சர்வவல்லமையுள்ளவருடைய வலதுபாரிசத்திலே யுட்காரவும், வானத்தின் மேகங்களின்மேல்வரவுங் காண்பீர்களென்றார். * மத். ௨௪. ௩௰.

௬௩. அப்பொழுது பிரதான ஆசாரியன் தன்வஸ்திரத்தைக்கிழித்து,

௬௪. வேறுசாட்சிநமக்குவேண்டுமோ? இத்தூஷணத்தைக்கேட்டீர்களே, உங்களுக்கெப்படித் தோன்றுகின்றதென்றான். அவர்களெல்லாரும் அவன் மரண ஆக்கினைக்குப் பாத்திரனென்று தீர்மானம்பண்ணினார்கள்.

௬௫. அப்பொழுது சிலர் அவர்மேலேதுப்பி, அவருடைய முகத்தைமூடிக் கையினாலேயடித்து நீ தீர்க்கதரிசனஞ்சொல்லென்று அவருடனேசொல்லத்தொடங்கினார்கள். அல்லாமலும், ஊழியக்காரர் அவரைக்கன்னத்தில அடித்தார்கள்.

௬௬. அந்தத்தருணத்திலே பேதுருமாளிகையின் பிரகாரத்திற் கீழேயிருக்கிறபொழுது பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரிகளிலொருத்திவந்து,

௬௭. அனல்காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக்கண்டு, அவனை யுற்றுப்பார்த்து, நீயும் நாசரேத்தூரானாகிய இயேசுவுடனே இருந்தாயேயென்றாள்.

௬௮. அதற்கவன் சொன்னது, (அவனை) அறியமாட்டேன் நீசொல்லுகிறதையுந்தான் அறியேனென்று மறுதலித்துப் பின்பு வெளியிலேயுள்ள மண்டபத்திற்குப் போனான். அப்பொழுது சேவல் கூவிற்று.

௬௯. பின்பு வேலைக்காரி அவனை மறுபடியும் பார்த்துச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி, இவன் அவர்களிலொருவனென்றாள். அவன் மறுபடியும் மறுதலித்தான.

௭௦. சற்றுநேரத்திற்குப்பின்பு, அங்கே நின்றவர்கள் மறுபடியும் பேதுருவை நோக்கி, நீ மெய்யாய் அவர்களிலொருவனாயிருக்கிறாய். நீ கலிலேயா நாட்டானுந்தான. உன் பேச்சு அதைக் காண்பிக்கின்றதென்றார்கள்.

௭௧. அதற்கவன நீங்கள் சொல்லுகிற மனிதனை நான அறியமாட்டேனென்று சொல்லிச் சபிக்கவும், ஆணையிடவுந் தொடங்கினான்.

௭௨. உடனே சேவல இரண்டாந்தரங் கூவிற்று அப்பொழுது, சேவல இரண்டாந்தரங் கூவுமுன்னமே, நீ யென்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று தனக்குடனே இயேசுவானவர் சொன்ன வசனத்தைப் பேதுரு நினைத்து விலகிப்போய் அழுதுகொண்டான.

## ௰௫. அதிகாரம்.

[(௧) இயேசு கட்டுண்டு பிலாத்துக்கு முன பாகங்கொண்டுபோகப்பட்டுக் குற்றஞ்சாற்றப்பட்டது. (௰௫) ஜனங்களுடைய கூக்குரலின்மிகுதியாய், கொலைபாதகனாகிய பறபாசு விடுதலைபெற இயேசு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புவிக்கப்பட்டது. (௰௭) அவர் முள்முடி தரிப்பிக்கவும், (௰௯) துப்பவும், பரியாசம்பண்ணவும் பட்டது. (௨௧) சிலுவைசுமப்பதில அவர் சோர்வடைந்தது. (௨௭) இரண்டு கள்ளர்களின் நடுவிலே தொங்கப்பட்டது. (௨௯) யூதர்களுடைய பெருமையுள்ள நிந்தைகளைச் சகித்தது. (௩௯) அவர் தேவகுமாரனென்று சேர்வைக்காரனால அறிக்கையிடப்பட்டு, (௪௩) மேன்மையாய் அடக்கம்பண்ணப்பட்டது.]

* அதிகாலையிலே பிரதான ஆசாரியரும், மூப்பரும், வேதபாரகரும், மற்றப் பெரிய சங்கத்தார் யாவரும் ஆலோசனைபண்ணிக்கொண்டபின்பு அவர்கள் அவரைக் கட்டிக்கொண்டுபோய்ப் பிலாத்துக்கு ஒப்புக்கொடுத்தார்கள். * மத். ௨௭. ௧, ௨. ௰௧—௩௰; லூக. ௨௩. ௧—௫; யோவா. ௰௮ ௨௮; ௰௯. ௧—௰௬.

௨. பிலாத்து அவரை நோக்கி, நீ யூதர்களுடைய இராசாவாவென்று கேட்டான. அதற்கவர், நீர் (சரியாய்ச்) சொன்னீரென்றார்.

௩. அல்லாமலும், பிரதான ஆசாரியர் அவர்மேல அநேககுற்றங்களைச் சாற்றி வருகிறபொழுது,

௪. பிலாத்து மறுபடியும் அவரை நோக்கி, இதோ, இவர்கள் உனக்கு விரோதம் கமித்த சாட்சிகளைச் சொல்லுகிறார்களே அதற்கு நீ ஒன்றையுஞ் சொல்லுகிறதில்லையா! வென்று கேட்டான.

௫. இயேசுவானவர் பிலாத்து தானே ஆச்சரியப்படத்தக்கதாக ஒன்றையுஞ் சொல்லவில்லை.

௬. பண்டிகைதோறும் அவர்கள் கேட்டுக்கொள்ளும் பாதகனெவனோ அவனை அவர்களுக்காக விடுதலையாக்குகிறது வழக்கமாயிருந்தது.

௭. கலகம்பண்ணிக் கலகத்திலே கொலை செய்து பின்பு கட்டப்பட்டவர்களில ஒருவனாகிய பறபாசென்பவனிருந்தான.

௮. ஆதலால, வழக்கத்தின்படி தங்களுக்குப் பிலாத்துச் செய்யவேண்டுமென்று சனங்கள் கூப்பிட்டுக் கேட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள்.

௯. அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, நான யூதர்களுடைய இராசனை யுங்களுக்காக விடுதலையாக்கவிருப்பமுண்டாவென்றான.

௰. பிரதான ஆசாரியர் பொறாமையினாலே யவரை யொப்புக்கொடுத்ததை யவன அறிந்தபடியால அப்படிக் கேட்டான.

௰௧. அப்பொழுது பிரதான ஆசாரியர் பறபாசைத் தங்களுக்காக விடுதலையாக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளவேண்டுமென்று சனங்களை ஏவினார்கள்.

௰௨. மறுபடியும் பிலாத்து அவர்களை நோக்கி, யூதர்களுடைய இராசாவென்று நீங்கள் சொல்லுகிறவனை நான என்னசெய்யவிரும்புகிறீர்களென்றான.

௰௩. அவனைச் சிலுவைமரத்திலே யறையவேண்டுமென்று மறுபடியுங் கூப்பிட்டார்கள்.

௰௪. அதற்குப் பிலாத்துச் சொன்னது, ஏன! இவன என்ன தீமைசெய்தானென்றான. அதற்கவர்கள் இவனைச் சிலுவைமரத்திலே யறையவேண்டுமென்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௰௫. அப்பொழுது பிலாத்து சனங்களைச் சமாதானப்படுத்த மனதாய்ப் பறபாசை விடுதலையாக்கி, இயேசுவை வாரினால அடிப்பித்துச் சிலுவைமரத்திலே யறையும்படிக்கு அவரை யொப்புக்கொடுத்தான.

௰௬. உடனே போர்ச்சேவகர் அவரை நியாயத்தலமாகிய மண்டபத்திற்குள்ளே கொண்டுபோய்ப் போர்ச்சேவகராகிய கூட்டமெல்லாங் கூடிவரவழைத்து,

௰௭. பின்பு சிவப்பான அங்கியை யவருக்கு உடுத்தி முள்ளுகளால ஒரு முடியைப் பின்னி அவர்மேல வைத்து,

௰௮. யூதருடைய இராசாவே, நீர் வாழ்கவென்று அவரை வாழ்த்துதல் செய்து,

௰௯. பின்பு ஒரு கோலினாலே அவருடைய தலையில அடித்து அவர்மேலே துப்பி முழங்காற்படியிட்டு அவரை வணங்கினார்கள்.

௨௰. * அப்படியவர்கள் அவரையிழிவுசெய்தபின்பு அந்தச் சிவப்பான அங்கியை அவ

ரிலிருந்துக் களைந்து அவருடைய வஸ்திரங்களையவருக்குடுத்தி அவரைச் சிலுவையரத்தில் அறையும்படிக்குக் கொண்டுபோனார்கள். * மத். ௨௭. ௩௧-௩௪; லூக். ௨௩. ௨௬-௩௫; யோவா. ௰௯. ௰௭—௨௪.

௨௧. வழியிலே அலெக்சந்தர், ரூப்பு என்பவர்களுடைய தகப்பனாகிய சிரேனே ஊரானான சீமோனென்பவன் நிலத்திலிருந்து வருகிறபொழுது, அவனைப் பலவந்தத்தினாலே (பிடித்து) அவருடைய சிலுவைமரத்தையெடுத்துக்கொண்டுபோகும்படி செய்து,

௨௨. பின்பு அவரைத் தலையோட்டிடமென்னும் அர்த்தங்கொள்ளும் கொல்கதா என்னும் இடத்திற்குக் கொண்டுபோய்,

௨௩. கசப்புக்கலந்த திராட்ச இரசத்தைக் குடிக்கும்படி யவருக்குக் கொடுத்தார்கள். அவர் அதை யநுபவிக்கவில்லை.

௨௪. அல்லாமலும் அவரைச் சிலுவைமரத்திலே யறைந்தபின்பு அவர்கள் அவருடைய * வஸ்திரங்களைப் பங்காக வைத்து ஒவ்வொருவன் ஒவ்வொரு பங்கை யெடுத்துக்கொள்ளும்படிக்கு அவைகளைக் குறித்துச் சீட்டுப் போட்டார்கள். * சங். ௨௨. ௰௮.

௨௫. அவரைச் சிலுவைமரத்திலே யறைந்தபொழுது, மூன்றும் மணிநேரமாயிற்று.

௨௬. அவருடைய மரணத்தின் காரணத்தை யறிவிக்கும்படிக்கு இவன் யூதர்களுடைய இராசாவென்று எழுதி அதைச் (சிலுவையின்மேற்) கட்டினார்கள்.

௨௭. அல்லாமலும் அவருடைய வலதுபக்கத்திலொரு கள்ளனும், அவருடைய இடதுபக்கத்திலொரு கள்ளனுமாக இரண்டு கள்ளரையவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

௨௮. அதினாலேயவர் * அக்கிரமக்காரரோடே யெண்ணப்பட்டாரென்று சொல்லிய வேதவாக்கியம் நிறைவேறிற்று. * ஏசா. ௫௩. ௰௨.

௨௯. அல்லாமலும் அவ்வழியாய் நடந்துவருகிறபேர்கள் தங்கள் தலைகளையசைத்து, ஆ,* தேவாலயத்தை யிடித்து மூன்றுநாளுக்குள்ளே யதைக் கட்டுகிறவனே,

* ௰௪. ௫௮; யோவா. ௨. ௰௯—௨௧.

௩௦. உன்னை இரட்சித்துக்கொண்டு சிலுவையிலிருந்திறங்கிவாவென்றுசொல்லி, அவரைத் தூஷணித்தார்கள்.

௩௧. அப்படிப்போலப் பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் ஒருவரையொருவர் நோக்கி, மற்றவர்களையிவன் இரட்சித்தான். தன்னைத்தானே இரட்சிக்கத்திராணியில்லை.

௩௨. நாம் கண்டு விசுவாசிக்கும்படிக்குக் கிறிஸ்துவுமாய், இஸ்ரவேலருடைய இராசாவுமாயிருக்கிறவன் இப்பொழுது சிலுவையிலிருந்திறங்கி வரக்கடவனென்று பரியாசமாகச் சொன்னார்கள். அவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்டபேர்களும் அவரை நிந்தித்தார்கள்.

௩௩. ஆறும் மணிநேரமுதல் ஒன்பதாம் மணிநேரமவரைக்கும் தேசமெங்கும் அந்தகாரமுண்டாயிற்று.

௩௪. ஒன்பதாம்மணிநேரத்திலே இயேசுவானவர் எலோயி எலோயி லம்மா சபக்தானியென்று மிகுந்தசத்தத்தோடு * கூப்பிட்டார். அதற்கு என்தேவனே, என்தேவனே, ஏன் நீரென்னைக் கைவிட்டீரென்று அர்த்தமாம். * சங். ௨௨. ௧.

௩௫. சமீபமாய் நின்றவர்களிற்சிலர் அதைக் கேட்டு இதோ, இவன் எலியாவை யழைக்கிறானென்றார்கள்.

௩௬. ஒருவன் பொறுத்துக்கொள்ளுங்கள். இவனையிறக்கும்படிக்கு எலியாவருவனைப் பார்ப்போமென்று சொல்லி, ஒரு கடற்காளானைக் * காடியிலே தோய்த்து அதை யொருகம்பின்மேற்பூட்டிச் சுவைக்கும்படி அவருக்குக் கொடுத்தான். * சங். ௬௯. ௨௧.

௩௭. * பின்பு இயேசுவானவர் மிகுந்த சத்தமிட்டுச் சீவனைவிட்டார். * மத். ௨௭. ௫௦—௫௬; லூக். ௨௩. ௪௬—௪௯; யோவா. ௰௯. ௩௦—௩௭.

௩௮. உடனே தேவாலயத்திலுள்ள திரைச்சீலை மேலேதொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக் கிழிந்தது.

௩௯. அல்லாமலும், அவருக்கெதிரே நின்ற சேனைத்தலைவன் அவர் அப்படிப்பட்டசத்தத்தோடே சீவனைவிட்டதைக்கண்டு மெய்யாய இந்தமனிதன் தேவகுமாரனாயிருந்தானென்றான்.

௪௦. ஸ்திரீகளுந்தூரத்திலிருந்து பார்த்தார்கள். அவர்களிற் கலிலேயாநாட்டிலே * யவருக்குப்பின்சென்று ஊழியஞ்செய்துவந்த மகதலேனூராளாகிய மரியாளும், சின்னயாக்கோபுக்கும், யோசேப்புக்குந் தாயாகிய மரியாளும், சாலோமேயென்பவளும்,

* லூக். ௮. ௨, ௩.

௪௧. அவருடனேகூட எருசலேமுக்குவந்த மற்ற அநேக ஸ்திரீகளுமிருந்தார்கள்.

௪௨. ஓய்வுநாளுக்கு முந்தினநாள் எத்தன்நாளானபடியினாலே சாயந்தரமானபொழுது,

௪௩. * அரிமத்தியாவூரானாய், கனம்பொருந்திய ஆலோசனைக்காரனுமாய், பராபரனுடைய இராச்சியத்தினுவருகைக்காத்துக்கொள்ளுகிறவனுமாயிருந்த யோசேப்பென்பவன் தயிரியங்கொண்டு பிலாத்துவினிடத்திற்குப்போய், இயேசுவினுடைய சரீரத்தைக் கேட்டுக்கொண்டான். * மத். ௨௭. ௫௭; லூக். ௨௩. ௫௦-௫௨; யோவா. ௰௯. ௩௮.

௪௪. அவர் அப்படிச் சீக்கிரமாய மரணம் அடைந்ததைக் குறித்துப் பிலாத்து ஆச்சரியப்பட்டு, சேனைத்தலைவனை யழைப்பித்து,

அற

அவர் இறந்துபோய் வெகுநேரமாயிற்றோ வென்று விசாரித்து,

௪௬. சேவகனாலே அறிந்துகொண்டபின்பு, அந்தச் சரீரத்தை யோசேப்புக்குக் கொடுத்தான்.

௪௬. அவன் போய், மெல்லிய துப்பட்டியை வாங்கிக்கொண்டுவந்து, சரீரத்தையிறக்கிப் புடவையிலே சுற்றிக் கன்மலையிலே வெட்டப்பட்ட கல்லறையிலே அதை வைத்து, அந்தக் கல்லறையின் திறப்பிலே ஒரு கல்லைப் புரட்டி வைத்தான்.

௪௭. அவரை வைக்கப்பட்ட இடத்தை மகதலேனாளாகிய மரியாளும், யோசேப்பின் தாயாகிய மரியாளும் பார்த்தார்கள்.

௰௬. அதிகாரம்.

[(௧) ஒருதேவதூதன் கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலை மூன்று ஸ்திரீகளுக்கு அறிவித்தது. (௯) கிறிஸ்துதாமே மகதலேனாளாகிய மரியாளுக்கும், (௰௨) கிராமத்துக்கு நடந்துபோகிற இரண்டுபேருக்கும், (௰௪) பின்பு அப்போஸ்தலர்களுக்கும் தரிசனையானது. (௰௫) அப்போஸ்தலர்களை உலகமெங்கும் பிரசங்கிக்கும்படி அனுப்பினது. (௰௯) அவர் பரமண்டலத்துக்கேறினது.]

* ஓய்வுநாளானபின்பு, மகதலேனாளாகிய மரியாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், சலோமேயென்பவளும் அவருக்கு அபிஷேகம் பண்ணும்படிக்குச் சுகந்தவர்க்கங்களை வாங்கிக்கொண்டு,

* மத். ௨௮. ௧—௪; லூக். ௨௪. ௧-௪.

௨. ஓய்வுநாளுக்குப்பின், முதல் நாளின் அதிகாலையில் சூரியன் உதயமாகிறபொழுது, கல்லறைக்குப் போனார்கள்.

௩. (போகையில்) அவர்கள் அந்தக் கல்லறையின் திறப்பிலேயிருக்கிற கல்லை நமக்காக யாவன் தள்ளிப்போடுவானென்று சொல்லி,

௪. பின்பு அண்ணாந்து பார்க்கிறபொழுது அந்தக் கல் மிகவும் பெரிதாயிருந்தும், அது தள்ளப்பட்டதென்று கண்டார்கள்.

௫. கல்லறையிலே அவர்கள் பிரவேசித்தபொழுது, வலதுபக்கத்திலே வெண்மையான அங்கியைத் தரித்து உட்கார்ந்திருக்கிற ஒரு வாலிபனைக் கண்டு மிகவும் பயந்தார்கள்.

௬. * அவன் அவர்களுடனே சொன்னது, பயப்படாதிருங்கள். சிலுவையிலே அறையப்பட்ட நாசரேத்தூராகிய இயேசுவைத் தேடுகிறீர்கள். அவர் எழுந்தார். அவர் இங்கேயில்லை. இதோ, அவரை வைக்கப்பட்ட இடம்.

* மத். ௨௮ ௫—௮; லூக். ௨௪. ௫-௭.

௭. ஆகையால், நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திலும், பேதுருவினிடத்திலும் போய், உங்களுடனே அவர் சொன்னபடி, உங்களுக்கு முன்பாகக் கலிலேயா நாட்டுக்குப் போவார். அங்கே * அவரைக் காண்பீர்களென்று அவர்களுக்குச் சொல்லுங்களென்றான்.

* ௰௪. ௨௮.

௮. உடனேயவர்கள் புறப்பட்டுத் தீவிரமாய்க் கல்லறையைவிட்டோடிப்போனார்கள். அவர்கள் பயப்பட்டபடியினாலே, ஒருவருக்கும் ஒன்றையுஞ் சொல்லவில்லை.

௯. ஓய்வுநாளுக்குப்பின், முதல்நாளின் அதிகாலையில் அவர் எழுந்தருளினபின்பு * முதலாவது மகதலேனாளாகிய மரியாளுக்குக் காணப்பட்டார். * யோவா. ௨௰. ௰௪-௰௮.

௰. அவராலே ஏழுபேய்களினின்று நீக்கப்பட்டவள் அவளே. அவள் புறப்பட்டுப்போய் அவருடனேயிருந்தவர்களுமாய்த் துக்கித்து அழுதுகொண்டிருக்கிறவர்களுமாயிருந்த (சீஷர்களுக்கு) அறிவித்தாள்.

௰௧. அவர் உயிரடைந்து, அவளாலே காணப்பட்டாரென்று அவர்கள் கேள்விப்பட்டும், அதை நம்பவில்லை.

௰௨. அதின்பின்பு அவர்களில் இரண்டுபேர் ஒரு * ஊருக்குப் புறப்பட்டுப்போகையில், அவர்களுக்கும் அவர் மறுரூபத்தோடே காணப்பட்டார். * லூக். ௨௪. ௰௩-௩௫.

௰௩. அவர்களுந் திரும்பி அதை மற்றவர்களுக்கறிவித்தார்கள். அவர்களையும் இவர்கள் நம்பவில்லை.

௰௪. பின்பு * அவர் போசனபந்தியிலிருந்தபதினொருவருக்குங் காணப்பட்டுத் தாம் உயிரோடெழுந்து வந்ததைக் கண்டவர்களுடைய (வார்த்தையை) யவர்கள் நம்பாமலிருந்தபடியால், அவர்களுடைய அவிசுவாசத்துக்காகவும், இருதயத்திலுள்ள கடினத்திற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டார். * லூக். ௨௪. ௩௬-௪௰.

௰௫. அல்லாமலும் அவர் அவர்களை நோக்கி, * நீங்கள் உலகத்திலெங்கும்போய்ச் சிருட்டிக்கப்பட்டிருக்கிற யாவருக்குஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணுங்கள்.

* மத். ௨௮. ௰௯.

௰௬. விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான். * விசுவாசியாதவன் ஆக்கினைக்குள்ளாக்கப்படுவான். * யோவா. ௩. ௰௮.

௰௭. அன்றியும், விசுவாசமுள்ளவர்களால் எப்படிப்பட்ட அதிசயங்கள் நடக்குமென்றால், என்நாமத்தினாலேயவர்கள் பேய்களைத் துரத்திப் * புதியபாஷைகளைப் பேசிக்கொண்டு, * அப். ௨. ௪.

௰௮. பாம்புகளையும் பிடித்துக்கொள்வார்கள். அல்லாமலும், மரணத்திற்கேதுவானதையவர்கள் குடித்தால், அது அவர்களைச் சேதப்படுத்தாமலிருக்கும். அல்லாமலும், பிணியாளிகளின்மேல் அவர்கள் கைகளை வைக்கும்பொழுது, அவர்கள் சொஸ்தமடைவார்களென்றார்.

௰௯. * கர்த்தர் அவர்களுடனே பேசிக்கொண்டபின்பு அவர் பரமண்டலத்துக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டு பராபரனுடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார். * லூக். ௨௪. ௫௧; அப்போ. ௧. ௯—௰௧.

௨௰. அவர்கள் புறப்பட்டு எங்கும் பிரசங்கம்பண்ணினார்கள். அப்பொழுது கர்த்தர் அவர்களுடனே கூடக்கிரியை செய்து, அதிசயங்களை நடக்கப்பண்ணினதினாலே, (அவர்களுடைய) உபதேசத்தை உறுதியாக்கினார். ஆமென்.

# லூக்கா என்பவர் எழுதின சுவிசேஷம்.

கிறிஸ்து பிறந்ததென்று சொல்லப்பட்ட வழக்கமான வருஷத்தொகைக்கு முன் ஆறும் வருஷம்.

## ௧. அதிகாரம்.

[(௧) லூக்காவின் முகவுரை. (௫) யோவான் ஸ்நானனும், (௨௬) கிறிஸ்துவும் உற்பத்தியானது. (௩௯) எலிசபேத்தும், மரியாளும் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்கதரிசனமுரைத்தது. (௫௭) யோவானுடைய ஜனனமும், சுன்னத்தும் சொல்லப்பட்டது. (௬௭) சகரியா கிறிஸ்துவைக்குறித்தும், (௭௬) யோவானைக்குறித்தும், தீர்க்கதரிசனஞ்சொன்னது.]

மிகுந்த கனம்பொருந்திய தேயோப்பிலுவே! எங்களுக்குள்ளே நிறைவேறின சங்கதிகளை ஆதிமுதற் கண்ணினாலே, (கண்டு சுவிசேஷ) வசனத்தைப் போதித்திருக்கிறவர்கள் எங்களுக்கு ஒப்புக்கொடுத்தின்படியே,

௨. அவைகளைக்குறித்துச் சரித்திரத்தை யெழுதும்படிக்கு அநேகர் துணிந்தார்கள்.

௩. ஆகையால், * ஆதிமுதல் எல்லாவற்றையும் நன்றாய் ஆராய்ந்துபார்த்த நானும் உமக்குப் போதிக்கப்பட்ட பொருள்களின் நிச்சயத்தை நீர் அறியும்படிக்கு, * ௧. யோ. ௧—௩.

௪. அவைகளை யொழுங்காய் உமக்கெழுத வேண்டுமென்று, எனக்கு நன்றாய்த் தோன்றிற்று. (அவையாவன.)

௫. யூதேயாதேசத்தின் இராசாவாகிய ஏரோதேயின் நாள்களிலே * அபியா என்னும் ஆசாரியவகுப்பிற் சகரியாவென்னப்பட்ட ஆசாரியன் இருந்தான். ஆரோனின் குடும்பத்திற் பிறந்த எலிசபேத்தென்னப்பட்டவள் அவனுக்கு மனைவியாயிருந்தாள். * ௧. நாளா. ௨௪. ௰.

௬. அவ்விருவரும் பராபரனுக்குமுன்பாக நீதியுள்ளவர்களாய்க் கர்த்தர் இட்ட சகல கற்பனைகளின்படியேயும், நியாயங்களின்படியேயுங் குற்றமில்லாமல் நடந்துவந்தார்கள்.



௭. எலிசபேத்து மலடியாயிருந்தபடியால், அவ்விருவரும் வயதுசென்றவர்களான படியினாலே அவர்களுக்குப் பிள்ளையில்லை.

௮. அப்படியிருக்குங் காலத்தில், அவன் தன் ஆசாரியவகுப்பின் முறைமைக்குத் தக்கதாகப் பராபரனுக்குமுன்பாக ஆசாரிய ஊழியஞ்செய்து வருகிறபொழுது,

௯. ஆசாரியருடைய வழக்கத்தின்படி அவன் * தூபங்கொடுக்கிறதற்குச் சீட்டுப்பெற்றுத் தேவாலயத்திற் பிரவேசித்தான். * ௨. மோ. ௩௰. ௭, ௮.

௰. தூபங்கொடுக்கிறவேளையிலே கூட்டமான சனங்களெல்லாரும் புறம்பே செபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௧. அப்பொழுது பராபரனுடைய தூதனொருவன் தூபபீடத்தின் வலதுபக்கத்திலே நின்று, அவனுக்குக் காணப்பட்டான்.

௰௨. சகரியா அவனைக்கண்டு கலங்கிப் பயமடைந்தான்.

௰௩. தூதன் அவனைநோக்கி, சகரியாவே நீ பயப்படவேண்டாம். உன் விண்ணப்பங் கேட்கப்பட்டது. உன் மனைவியாகிய எலிசபேத்து ஒருகுமாரனைப் பெறுவாள். அவனுக்கு யோவானென்று பேரிடுவாயாக.

௰௪. அவனாலுனக்குச் சந்தோஷமும், களிப்புமுண்டாகும். அவனுடைய பிறப்பைக் குறித்து அநேகர் சந்தோஷப்படுவார்கள்.

௰௫. என்னத்தினாலென்னில், அவன் பராபரனுக்குமுன்பாகப் * பெரியவனாய்த் திராட்ச இரசத்தையும், மதுவையுங் குடியாமல் தன் தாயின் வயிற்றிலே பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டிருப்பான். * மத். ௰௧. ௯—௰௧.

௰௬. அல்லாமலும், அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் அநேகரை யவர்களுடைய தேவனாகிய பாராபரனிடத்திற்குத் திருப்புவான்.

௰௭. பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய புத்திக்குந் திருப்பிச் சேய

மையான சனங்களைப் பராபரனுக்காக எத்தனம் பண்ணும்படிக்கு, அவன் * எலியாவின் ஆவியையும், பலத்தையுமுடையவனாய் அவருக்கு முன்னே நடப்பானென்றான். * மல்கி. ௪. ரு—௬; மத். ௰௧. ௰௪.

௰௮. அப்பொழுது சகரியா தேவதூதனை நோக்கி, நான் அதையெதனாலே யறிவேன்? நான் கிழவனாயிருக்கிறேன். என் மனைவியும் வயதுசென்றவளாயிருக்கிறாளேயென்றான்.

௰௯. அவனுக்குத் தூதன் மாறுத்தரமாகச் சொன்னது: நான் தேவனுடைய சந்நிதானத்திலே நிற்கிற * காபிரியேலென்பவன்; உன்னுடனே பேசி இவைகளையுனக்குச் சுவிசேஷமாக அறிவிக்கும்படிக்கு அனுப்பப்பட்டுவந்தேன். * தானியே. ௮. ௰௬; ௯. ௨௧.

௨௰. என் வார்த்தைகள் தகுதியான காலத்திலே நிறைவேறும். அவைகளை நீ விசுவாசியாதபடியினாலே, இந்தக் காரியங்கள் சம்பவிக்கும் நாள்வரைக்கும் நீ பேசத்திராணியில்லாமல் ஊமையனாயிருப்பாயென்றான்.

௨௧. சகரியாவைக் (காணக்) காத்திருந்த சனங்கள் அவன் தேவாலயத்திலே தாமதித்ததினாலே ஆச்சரியப்பட்டார்கள்.

௨௨. அவன் வெளியே வந்தபொழுது அவர்களோடே பேசத்திராணியில்லாமலிருந்தான். அதினாலே தேவாலயத்திலே ஒரு தரிசனையைக் கண்டிருப்பானென்றறிந்தார்கள். அவனும் அவர்களுக்குச் சயிகைக்காட்டி, ஊமையனாகவிருந்தான்.

௨௩. பின்பு அவன் தன் ஊழியத்தின் நாள்கள் நிறைவேறினபொழுது தன் வீட்டுக்குப் போனான்.

௨௪. அந்நாள்களுக்குப்பின்பு அவனுடைய மனைவியாகிய எலிசபேத்துக் கருப்பந்தரித்து,

௨௫. * சனங்களுக்குள்ளே எனக்குண்டாயிருந்த நிந்தையை நீக்கும்படிக்குப் பராபரன் இந்த நாள்களில் என்னை நோக்கி, இப்படியெனக்குச் செய்தாரென்று சொல்லி, ஐந்து மாதமளவாயும் ஒளித்துக்கொண்டாள். * ௧. மோசே. ௩௰. ௨௩.

௨௬. ஆறாம் மாதத்திலே காபிரியேலென்னுந் தூதன் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தென்னும் பட்டினத்திலே,

௨௭. தாவீதின் குடும்பத்தானாகிய யோசேப்பென்னும் நாமமுள்ள புருஷனுக்கு * நியமிக்கப்பட்டிருந்த கன்னியாகிய மரியாளென்பவளிடத்திற்குப் பராபரனால் அனுப்பப்பட்டு, * மத்தே. ௧. ௰௮.

௨௮. அவளிருக்கிற வீட்டுக்குட் பிரவேசித்து, கிருபைபெற்றவளே, நீ வாழ்க. பராபரன் உன்னுடனேயிருக்கிறார். பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவளென்றான்

௨௯. அவள் அவனைக்கண்டு, அவனுடைய வார்த்தையைக்கேட்டுக் கலங்கி, இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்தாள்.

௩௰. தூதன் அவளுடனே சொன்னது, மரியாளே, நீ தேவனிடத்திற் கிருபைபெற்றபடியினாலே நீ பயப்படவேண்டாம்.

௩௧. * நீ கருப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெறுவாய். அவருக்கு † இயேசு என்று பேரிடுவாயாக. * ஏசா. ௭. ௰௪. † மத். ௧. ௨௧.

௩௨. அவர் பெரியவராய் உன்னதமானவருடைய குமாரனென்னப்படுவார், அல்லாமலும் தேவனாகிய பராபரன் அவருக்கு அவருடைய பிதாவாகிய தாவீதின் * சிங்காசனத்தைக் கொடுப்பார். * ஏசாயா. ௯. ௬, ௭; ௨. சாமு. ௭. ௰௨, ௰௩.

௩௩. அவர் யாக்கோபினுடைய குடும்பத்தின்மேல் என்றென்றைக்கும் இராசனாயிருப்பார். * அவருடைய ஆளுகைக்கு முடிவிராதென்றான். * தானி. ௨. ௪௪; ௭. ௰௪. மீகா. ௪. ௭.

௩௪. அதற்கு மரியாள், தூதனை நோக்கி; இதெப்படியாகும்; ஒரு புருஷனையும் அறியேனேயென்றாள்.

௩௫. தூதன் அவளுக்கு மாறுத்தரமாகச் சொன்னது, * பரிசுத்த தேவ ஆவி உன்மேல் வரும். உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும். ஆகையால் உன்னிடத்திற் பிறக்கும் பரிசுத்தமானது தேவனுடைய குமாரனென்னப்படும். * மத். ௧. ௰௮—௨௰.

௩௬. அல்லாமலும் * பராபரனாற் கூடாத காரியமொன்றுமில்லாதபடியினாலே, * ௧. மோசே. ௰௮. ௰௪.

௩௭. உனக்கு இனமாயிருக்கிற எலிசபேத்தும், தன் முதுமையான வயதிலே ஒரு புத்திரனைக் கருப்பந்தரித்தாள், மலடியென்னப்பட்ட அவளுக்கிது ஆறுமாதமேயென்றான்.

௩௮. அதற்கு மரியாள், இதோ, நான் ஆண்டவருக்கு அடிமையாயிருக்கிறேன். உம்முடைய வார்த்தையின்படி எனக்காகக்கடவதென்றாள், அப்பொழுது தேவதூதன் அவளைவிட்டுப் போனான்.

௩௯. அந்த நாள்களில் மரியாள் எழுந்து மலைத்தேசத்திலே யூதாவிலுள்ள பட்டினத்திற்குத் தீவிரமாய்ப் போய்,

௪௰. சகரியாவின் வீட்டிற் பிரவேசித்து, எலிசபேத்தை வாழ்த்துதல் செய்தாள்.

௪௧. எலிசபேத்து மரியாளுடைய வாழ்த்துதலைக் கேட்டபொழுது, அவளுடைய வயிற்றிலிருந்த பிள்ளை துள்ளிற்று. அல்லாமலும் எலிசபேத்துப் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு,

௪௨. மிகுந்த சத்தத்துடனே சொன்னதாவது; பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள். உன் கருப்பத்தின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டது.

எகூ. பாலகனே, நீ மரணநிழலாகிய இருளிலேயகப்பட்டிருக்கிறவர்களுக்கு * ஒளியுண்டாகும்படியாயும், நம்முடையகால்களைச்சமாதானமுள்ளமார்க்கத்திலே நடத்தும்படியாயும், * ஏசா. கூ. உ; சய. கூ-எ.

எஎ. * உன்னதத்திலிருந்து சூரியஉதயம நமக்குத்தோனறப பண்ணின நம்முடைய தேவனுடைய மிகுந்த இரக்கங்களினாலே, * மல்கி. ச. உ.

எஅ. அவருடைய சனங்களுக்குப பாவமன்னிப்பாகிய இரட்சணியத்தைத்தெரியப்படுத்தி,

எகூ. இவ்விதமாய*அவருக்காக மார்க்கத்தைசசெம்மையாக்கும்பொருட்டாக அவருக்குமுனனே நடப்பாய. ஆகையால், நீஎல்லாரிலுமமேலானவருடைய தீர்க்கதரிசியென்னப்படுவாயெனறான. * ஏசா. சய. ங.

அய. பினபு அந்தப்பிள்ளைவளர்ந்து, ஆவியிலேபலங்கொணடு, இஸ்ரவேலருக்குத்தன்னைக்காணபிக்கும நாளவரைக்கும வனாந்தரங்களிலிருந்தான.

## உ. அதிகாரம்.

[(க) அகுஸ்து இராசா உரோம இராசசியத்தைக் குடிமதிப்புச்செய்தது. (கூ) கிறிஸ்து பிறந்தது. (அ) அதை ஒருதூதனமேய்ப்பர்களுக்குஅறிவித்தது. (யஉ) அதறகாகஅநேகம்தூதர்ஸ்தோத்திரமபாடினது. (உக) கிறிஸ்துக்குவிருத்தசேதனம்பண்ணப்பட்டது. (உஉ) மரியாள சுத்திகரிக்கப்பட்டது. (உஅ) சிமேயோனும, அன்னாளும கிறிஸ்துவைக்குறித்துத்தீர்க்கதரிசனம உரைத்தது. (சய) இயேசு ஞானத்தில வளர்ந்தது, (சகூ) தேவாலயத்தில சாஸ்திரிகளோடே சமபாஷித்தது, (ருக) தாய்தகப்பனுக்குக கீழ்ப்படிந்திருந்தது.]

அந்நாள்களிற குடிகளெல்லாருக்குமுண்டாகிய பேர்முதலானவைகளையும எழுதவேணடுமென்று * அகுஸ்து இராயனுடைய கட்டளைவந்தது. * க. மோசே. சகூ. ய.

உ. சீரியாநாட்டிலே சிரேனியென்பவன தலைவனானபொழுது, முதலாவது இந்தக் குடிமதிப்புணடாயிறறு.

ங. அந்தப்படியெல்லாரும எழுதப்படும்படிக்குத தங்கள தங்கள ஊர்களுக்குப போனார்கள.

ச. அப்பொழுது யோசேப்பும, * தாவீதினுடைய கோத்திரத்தானும வம்சத்தானுமாயிருந்தபடியினாலே, தனக்கு நியமிக்கப்பட்ட கர்ப்பவதியாகிய மனைவி மரியாளுடனேகூட எழுதப்படும்படிக்குக் கலிலேயாநாட்டிலுள்ள நாசரேத்தூரைவிட்டு, * க. உஎ.

ரு. யூதேயாநாட்டிலுள்ளபெத்லகேமென்னப்பட்ட தாவீதின ஊருக்குப்போனான.





சு. அவ்விடத்திலேயவர்களிருக்குங்காலத்தில அவள பிள்ளைபெறுகிறதற்குக் காலஞ் சமபவித்தது.

எ. அப்பொழுது அவள தன * முதறபேறானகுமாரனைப்பெறறு, அவனைப பிடவைகளிறசுறறிச சத்திரத்திலே (வேறு) இடமிலலாதபடியினாலே அவனைப பசுத்தொட்டியிலேவைத்தாள. * மத். க. உரு.

அ. அன்றியும அந்தத் திசையிலே மேய்ப்பர் வெளியிலேதங்கி, இராத்திரியிலே தங்கள ஆட்டுக்கூட்டத்தைக காத்துக்கொணடிருந்தார்கள.

கூ. அப்பொழுது பராபரனுடைய தூதன அவர்களிடத்திலவந்து நிறக, பராபரனுடையமகிமை யவர்களைசசுறறிப பிரகாசித்தது. அவர்கள மிகவும்பயந்தார்கள.

ய. உடனே தேவதூதன அவர்களைநோக்கி, பயப்படாதிருங்கள. எல்லாச சனங்களுக்குமுணடாகும மிகுந்தசந்தோஷத்தை யுங்களுக்குச சுவிசேஷமாகஅறிவிக்கிறேன.

யக. என்னவென்றால, இன்று கர்த்தராகிய கிறிஸ்தென்னும இரட்சகர் * தாவீதினூரிலே யுங்களுக்காகப பிறந்தார். * மீகா. ரு. க.

யஉ. பிள்ளையைப் பிடவைகளிறசுறறிப் பசுத்தொட்டியிலே வைத்திருக்கக்காணபீர்கள. அதுவே யுங்களுக்கடையாளமென்றான.

யங. அப்பொழுது சடுதியாயப் பரமணடலத்திலுள்ள மிகுந்தசேனைகள அந்தத்தூதனுடனேகூடவிருந்தன.

யச. உன்னதங்களிலிருக்கிற பராபரனுக்குப புகழ்ச்சியும, பூமியிலே சமாதானமும, மனிதர்மேற பிரியமுமுணடாவதாகவென்று பராபரனைத் துதித்தார்கள.

யரு. பினபு தேவதூதர்கள அவர்களைவிட்டுப பரமணடலத்திறகுப போனபொழுது, மேய்ப்பர் ஒருவரையொருவர்நோக்கி, நாம பெத்லகேமூருக்குப்போய, கர்த்தராலநமக்கறிவிக்கப்பட்டு நடந்த இந்தச்சங்கதியைப்பார்ப்போம வாருங்களென்றுசொல்லிக் கொணடு,

யசு. தீவிரமாயப்போய மரியாளையும, யோசேப்பையும, பசுத்தொட்டியிலே கிடக்கிற பிள்ளையையுங்கணடார்கள.

யஎ. பினபு அவர்கள அந்தப் பிள்ளையைக் குறித்துத் தங்களுக்குச சொல்லப்பட்ட வார்த்தையைப் பிரசித்தமபணணினார்கள.

யஅ. மேய்ப்பராற சொல்லப்பட்டவைகளைக கேட்ட யாவரும அவைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள.

யகூ. மரியாள அவ்வார்த்தைகளையெல்லாந்தனஇருதயத்திலேகாத்துச்சிந்தித்துக்கொணடாள.

உய. மேய்ப்பருந்தங்களுடனே சொல்லப்பட்டதினபடியே கேட்டுக் கணடயாவுக

காகவும் பராபரனைப் புகழ்ந்து, துதித்துக் கொண்டு திரும்பினார்கள்.

௨௧. பிள்ளைக்கு விருத்தசேதனஞ்செய்கிறதற்குரிய * எட்டாம்நாளிலே அது கருப்பமாகிறதற்குமுன்னே † தேவதூதனாலே சொல்லப்பட்ட இயேசு என்னும் நாமம் அதற்குக்கொடுக்கப்பட்டது. * ௩. மோ. ௰௨. ௰௨; † ௧. ௩௧.

௨௨. அல்லாமலும் மோசேயின் * நியாயப்பிரமாணத்தின்படியே அவர்களைச் சுத்திகரிப்பதற்கான நாள்கள் நிறைவேறினபொழுது, * ௩. மோ. ௰௨. ௨.

௨௩. * முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் பராபரனுக்குப் பிரதிஷ்டையாக்கப்படவேண்டுமென்று பராபரன் அருளிச்செய்த நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி, * ௨. மோ. ௰௩. ௨;-௨௨. ௨௯;-௩௪. ௰௯.

௨௪. அவர்கள் அதைப் பராபரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கும், பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற் சொல்லியிருக்கிறபடி, * ஒருசோடிக் காட்டுப்புறாவை அல்லது இரண்டு புறக்குஞ்சுகளைப் பலியிடும்படிக்கும் பிள்ளையை எருசலேமுக்குக் கொண்டுபோனார்கள். * ௩. மோ. ௰௨. ௮.

௨௫. அப்பொழுது சிமேயோனென்றுபேர் கொண்ட மனிதன் எருசலேமிலிருந்தான். அவன் நீதியும், தேவபத்தியுமுள்ளவனுமாய் இஸ்ரவேலருக்கு ஆறுதல்செய்கிறவர் வரக்காத்திருக்கிறவனுமாயிருந்தான். அவனிற் பரிசுத்த ஆவியானவரிருந்தார்.

௨௬. அல்லாமலும் பராபரனுடைய கிறீஸ்துவைக்காணுமுன்னே நீ மரணம் அடைவதில்லையென்று பரிசுத்த ஆவியினாலே அவனுக்கு உத்தரவுண்டாயிருந்தது.

௨௭. அவன் அந்த ஆவியினாலே யேவப்பட்டுத் தேவாலயத்திலே வந்திருந்தான். அப்பொழுது இயேசு என்னும்பிள்ளையை நியாயப்பிரமாண முறைமையின்படி செய்யத் தாயதகப்பன்மார் அவரை உள்ளேகொண்டுவருகையில்,

௨௮. அவன் அவரைத்தன்கைகளில் ஏந்திக்கொண்டு பராபரனைத் தோத்திரித்துச் சொன்னது,

௨௯. ஆண்டவரே, புறத்தேசத்தார்களுக்கு அறிவைக்கொடுப்பதற்கும், உம்முடைய சனங்களாகிய இஸ்ரவேலருக்கு மகிமையுண்டாக்கு * வதற்குமான ஒளியாய், * ஏசா. ௪௨. ௬, ௭.

௩௰. உம்மாலே * எல்லாச்சனங்களுக்கு முன்பாகவும். * ஏசா. ௫௨. ௰.

௩௧. எத்தனமாக்கப்பட்ட இரட்சகரைத் தான் என்கண்களாலே கண்டபடியினாலே,

௩௨. தேவரீர் உம்முடைய வார்த்தையின்படி இப்பொழுது அடியேனைச்சமாதானத்தோடே யனுப்பிவிடுகிறீரென்றான்.

௩௩. அப்படி அவரைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளை அவருடையதாயும், யோசேப்புங்கேட்டு, ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪. பின்னுஞ்சிமேயோன் அவர்களையாசிர்வதித்து, அவருடைய தாயாகிய மரியாளுடனேசொன்னது, இதோ, அநேகருடைய * இருதயசிந்தனைகள் வெளியரங்கமாகும்படிக்கு, * ஏசா. ௮. ௰௩-௰௫; ௧. கொரி. ௧. ௨௩, ௨௪.

௩௫. இஸ்ரவேலரில் அநேகர்விழுகிறதும், எழுந்திருக்கிறதும், விரோதமாய்ப்பேசப்படும் அடையாளமாயிருப்பதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். உன் ஆத்துமாவையே ஒருகத்திஉருவிப்போமென்றான்.

௩௬. அல்லாமலும், ஆசேருடைய கோத்திரத்திலே பானுவேலின் குமாரத்தியும், தீர்க்கதரிசியுமாகிய அன்னாளென்பவளிருந்தாள். அவள்கன்னிகையாயப் பின்பு ஏழுவருஷம் புருஷனுடனே வாழ்ந்துமிகுந்தவயதுசென்றவளாயிருந்தாள்.

௩௭. ஏறக்குறைய எண்பத்திநாலுவயதுள்ள அந்தக்கைம்பெண் தேவாலயத்தைவிட்டு நீங்காமல், இரவும், பகலுஞ்செபம்பண்ணி உபவாசித்து, ஆராதனைசெய்துகொண்டுவந்தாள்.

௩௮. அவளும் அவ்வேளையிலேபோய் நின்று, பராபரனைத்துதித்து, எருசலேமிலே மீட்புண்டாகக்காத்திருந்தயாவருடனேயும் அவரைக்குறித்துப்பேசினாள்.

௩௯. பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படிச்சகலத்தையும் அவர்கள்செய்து முடித்தபின்பு கலிலேயாதேசத்திலுள்ள தங்களூராகிய நாசரேத்தூருக்குத்திரும்பினார்கள்.

௪௰. * பிள்ளையானது வளர்ந்து, ஆவியிலே பலன்கொண்டு, ஞானத்தால் நிறையப்பட்டுத்தேவகடவுளளவரானார். * ௫௨. வசனம்.

௪௧ அவருடைய தாயதகப்பன்மார் * பஸ்காவின்பண்டிகைக்குவருடந்தோறும் எருசலேமுக்குப்போவார்கள். * ௫. மோ. ௰௬. ௨௩.

௪௨. அந்தப்படிக்கு அவர்பன்னிரண்டுவயதுள்ளவரானபொழுது, அவர்கள்பண்டிகை முறைமையின்படி எருசலேமுக்குப்போய்,

௪௩. வேண்டியநாளங்கேயிருந்து, பின்பு திரும்பிவருகிறபொழுது, பிள்ளையாகியஇயேசுதம்முடைய தாயக்கும், யோசேப்புக்குந்தெரியாமல்எருசலேமிலேதானேயிருந்தார்.

௪௪. அவர்கள் அவர் பிரயாணக்காரருடைய கூட்டத்திலிருப்பாரென்றெண்ணி, ஒருநாட்பிரயாணமாய நடந்துபோய் இனத்தாருக்குள்ளும், அறிமுகமானவர்களுக்குள்ளும் அவரைத்தேடி,

௪௫. அவரைக்காணமலிருக்கிற பொழுது, எருசலேமுக்குத்திரும்பி அவரைத்தேடி,

௪௬. மூன்றுநாட்களுக்குப்பின்பு தேவாலயத்திலே அவர் போதகர்களுக்குள்ளே யுட்கார்ந்திருக்கவும், அவர்களுக்குச் செவிகொடுக்கவும், அவர்களை வினவுவுங் கண்டார்கள்.

௪௭. அவருடைய வசனங்களைக் கேட்டயாவரும் அவருடைய புத்தியையும் மாறுத்தரங்களையுங்குறித்துப் பிரமித்தார்கள்.

௪௮. (தாயுந்தகப்பனுமார்) அவரைக்கண்டு, அதிசயப்பட்டார்கள். அல்லாமலும், அவருடைய தாய் அவரைநோக்கி, மகனே ஏன் எங்களுக்கு இப்படிச்செய்தாய்! இதோ, உன்தகப்பனும், நானும் விசாரத்தோடே உன்னைத்தேடினோமேயென்றாள்.

௪௯. அதற்கவர், நீங்களென்னையேன்தேடினீர்கள். நான் என்தகப்பனுக்குரியவைகளிலே யிருக்கவேண்டியதென்றறியீர்களா என்றார்.

௫௰. அவர்கள் தங்களுக்கு அவர்சொன்ன வார்த்தையின் (கருத்தை) யுணர்ந்துகொள்ளவில்லை.

௫௧. பின்பு அவர்களுடனே கூடப்போய் நாசரேத்தூரிலேசேர்ந்து அவர்களுக்குக்கீழ்ப்படிந்திருந்தார். நடந்தசங்கதிகளையெல்லாம் அவருடைய தாய் தன்னிருதயத்திலே காத்துக்கொண்டாள்.

௫௨. இயேசுவானவர் ஞானத்தையும், வயதையும், * பராபரனிடத்திலும், மனிதரிடத்திலுந் தயவையும் அதிகமதிகமாய் அடைந்துகொண்டார். * ௧. சாமு. ௨. ௨௬.

## ௩. அதிகாரம்.

[(௧) யோவானுடைய பிரசங்கத்தையும், ஞானஸ்நானத்தையுங் குறித்தது. (௰௫) அவன் கிறிஸ்துவைக் குறித்துக்கொடுத்தசாட்சி. (௰௯) ஏரோதே யோவானைக் காவலில் வைத்தது. (௨௧) கிறிஸ்து ஞானஸ்நானம் பெற்றபோது பரமண்டலத்திலிருந்து சாட்சி வெளிப்பட்டது. (௨௩) கிறிஸ்துவின் ஆயசிற்பிரயாணமும், யோசேப்பைத்தொடங்கி, மேற்போகின்ற அவருடைய வம்சவரிசையின் அட்டவணையுமடங்கியது.]

திபேரியு இராயன் இராச்சியபரிபாலனம் பண்ணினபதினைந்தாம் வருஷத்திலே, பொந்தியுபிலாத்தென்பவன் யூதேயாநாட்டுக்குத் துரையாயும், ஏரோதென்பவன்காற்பங்காகிய கலிலேயாநாட்டுக்கு அதிபதியாயும், அவனுடைய சகோதரனாகிய பிலிப்பென்பவன்காற்பங்காகிய இத்துரேயாநாட்டுக்கும், திராகோனித்திநாட்டுக்கும் அதிபதியாயும், லிசானியென்பவன் காற்பங்காகிய அபிலேனேநாட்டுக்கு அதிபதியாயும்,

௨. அன்னா, காய்பா என்பவர்கள் பிரதான ஆசாரியராயிருந்தகாலத்திலே வனாந்தரத்திலே சகரியாவின்குமாரனாகிய * யோவானுக்குத் தேவவசனமுண்டாயிற்று.
* மத். ௩. ௧-௧௨; மாற். ௧. ௧—௮.

௩. அப்படியால், அவன் யோர்தானதிக்கருகான தேசமெங்கும் நடந்துபோய்ப் பாவமன்னிப்புக்காக மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக் குறித்துப் பிரசங்கித்தான்.

௪. பராபரனுக்காக மார்க்கத்தை நன்றாக்கச்செய்து, அவருக்காகப் பாதைகளைச் செம்மைப்படுத்துங்களென்றும்,

௫. பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும்; சகலமலைகளும், குன்றுகளுந் தாழ்த்தப்படும். கோணலானபாதைகள் செவ்வையாகும். கரடுமுரடானவழிகள் சமனாகுமென்றும், மனிதரெல்லாரும் பராபரனுடைய இரட்சிப்பைக்காண்பார்களென்றும்,

௬. வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தமுண்டென்று * ஏசாயாதீர்க்கதரிசியினுடைய புத்தகத்தில் எழுதியிருக்கிறபிரகாரமாகப் பிரசங்கித்தான். * ஏசா. ௪௰. ௩-௫; ௫௨. ௰.

௭. ஆதலால், அவன் தன்னாலே ஞானஸ்நானம்பெறும்படிக்குப் புறப்பட்டுவந்தசனங்களைநோக்கி, விரியன்பாம்புக்குட்டிகளே, இனிவருங்கோபத்திற்கு நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய், உங்களுக்குவகைகாட்டினவனெவன்?

௮. (தப்பவிரும்பினால்) மனந்திரும்புகிறதற்கேற்றகனிகளைக்கொடுங்கள். ஆபிரகாம் எங்களுக்குத் தகப்பனென்று உங்களுள்ளத்திற் சொல்லத்தொடங்காதிருங்கள். ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக்கற்களாலேயும் பிள்ளைகளையுண்டுபண்ண வல்லவராயிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௯. அல்லாமலும், இப்பொழுதே கோடரியானது மரங்களின்வேரருகில் வைத்திருக்கின்றது. ஆகையால், நல்லகனிகொடாதமரங்களெல்லாம்வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படுமென்றான்.

௰. அப்பொழுது சனங்கள் அவனைநோக்கி, அப்படியானால் நாங்கள் என்னசெய்யவேண்டுமென்றுகேட்டார்கள்.

௰௧. அவர்களுக்கு மாறுத்தாரமாக * அவன்சொன்னது, இரண்டுசட்டைகளையுடையவன் சட்டையில்லாதவனுக்குக்கொடுக்கக்கடவன். ஆகாரமுடையவனும் அப்படியே செய்யக்கடவனென்றான். * ௧. யோ. ௩. ௰௭.

௰௨. பின்பு ஆயக்காரரும் ஞானஸ்நானம் பெறும்படிக்கு, அவனிடத்திற் சேர்ந்து, போதகரே, நாங்கள் என்னசெய்யவேண்டுமென்றார்கள்.

௰௩. அவர்களுடனேயவன்சொன்னது, உங்களுக்குக்கட்டளையிடப்பட்டதற்குமேலாக ஒன்றையும் பலவந்தமாயக்கேட்டுக்கொள்ளாதிருங்களென்றான்.

௰௪. போர்ச்சேவகரும் அவனைநோக்கி,

நாங்கள் என்னசெய்யவேண்டுமென்று கேட்டார்கள். அவர்களுடனேயவன் சொன்னது, நீங்கள் ஒருவனுக்கும் இடுக்கண்செய்யாமலும், ஒருவன்மேல் குற்றஞ்சாட்டிப் பொய்ச்சாட்சி சொல்லாமலும் உங்கள் சம்பளமே போதுமென்றெண்ணிக் கொண்டிருக்கக்கடவீர்களென்றான்.

௰௫. அப்பொழுது ஜனங்கள் காத்திருந்து யோவான் கிறிஸ்துவாயிருக்கிறாரோவென்று எல்லாருந்தங்களிருதயங்களில் அவனைக்குறித்துச் சிந்தனைகொண்டிருக்கிறபொழுது,

௰௬. யோவான் எல்லாருடனேயுஞ்சொன்னது, நான் ஜலத்தினாலேயுங்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறேன். என்னிலும் அதிக பலத்தவர் வருகிறார். அவருடைய பாதரட்சைகளின் வாரையவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்ல. அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுப்பார்.

௰௭. தூற்றுங்கூடை அவருடைய கையிலிருக்கின்றது. அவர் தமதுடைய களத்தை நன்றாய் விளக்கிக் கோதுமையைத் தம்முடைய களஞ்சியத்திலே சேர்த்துப் பதரை அவியாத அக்கினியினாலே சுட்டெரிப்பாரென்று சொன்னதுமன்றி,

௰௮. மற்றும் அநேகம் புத்திகளைச்சொல்லி ஜனங்களுக்குச் சுவிசேஷத்தையறிவித்தான்.

௰௯. அப்படியிருக்குங் காலத்திலே *கால்பங்குதேசாதிபதியாகிய ஏரோதென்பவன் தன்சகோதரனான பிலிப்பினுடைய மனைவியாகிய ஏரோதியாளின் நிமித்தமாகவும், மற்றப்பொல்லாங்குகளைச் செய்ததினிமித்தமாகவும் யோவானாலே கடிந்துகொள்ளப்பட்டபொழுது, * மத். ௰௪. ௩; மாற். ௬. ௰௭

௨௰. தான்செய்துவந்த பொல்லாங்குகளையல்லவுமன்றி, யோவானையுங் காவலில் அடைத்தான்.

௨௧. *ஜனங்களெல்லாருமஞானஸ்நானம் பெற்றுக்கொண்டகாலத்தில், இயேசுவானவரும் ஞானஸ்நானம்பெற்றார். அப்பொழுது அவர்ஜெபம்பண்ணுகையில், வானந்திறக்கப்பட்டதுமல்லாமல், * மத். ௩. ௰௩; மாற். ௧. ௯—௰௧.

௨௨. கண்ணுக்குத்தோன்றிய உருவாய் ஒருபுறாவைப்போலப்பரிசுத்த ஆவியானவர் அவர்மேல் இறங்கினார். *அன்றியும், நீர் என்னுடைய அன்பான குமாரனாயிருக்கிறீர். உம்மிடத்தில் பிரியமாயிருக்கிறேனென்று வானத்திலிருந்து சத்தமுண்டாயிற்று. * ௯. ௩௫.

௨௩. இப்படி இயேசுவானவர் ஏறக்குறைய முப்பது வயதுள்ளவராய் வெளிப்படத்தொடங்கினார்.

௨௪. ஜனங்கள் அவரை யோசேப்பின் குமாரனென்றெண்ணினார்கள்.

௨௫. அந்த யோசேப்பு, எலியின்குமாரன். எலி, மாத்தாத்தின்குமாரன். மாத்தாத்து, இலேவியின்குமாரன். இலேவி, மெல்கியின் குமாரன். மெல்கி, இயன்னாவின்குமாரன். இயன்னா, யோசேப்பின்குமாரன். யோசேப்பு, மத்தத்தியாவின் குமாரன். மத்தத்தியா, ஆமோசின்குமாரன். ஆமோசு, நாகூமின்குமாரன். நாகூம், எஸ்லியின்குமாரன். எஸ்லி, நங்காயின்குமாரன்.

௨௬. நங்காய், மாகாத்தின்குமாரன். மாகாத்து, மத்தத்தியாவின்குமாரன். மத்தத்தியா, சேமேயின்குமாரன். சேமேய், யோசேப்பின்குமாரன். யோசேப்பு, யூதாவின்குமாரன். யூதா, யோவன்னாவின்குமாரன்.

௨௭. யோவன்னா, இரேசாவின் குமாரன். இரேசா, சொரொபாபேலின்குமாரன். சொரொபாபேல், சலாத்தியேலின்குமாரன் சலாத்தியேல், நேரியின்குமாரன்.

௨௮. நேரி, மெல்கியின்குமாரன். மெல்கி, அத்தியின்குமாரன். அத்தி, கோசாமின் குமாரன். கோசாம், எல்மோதாமின்குமாரன். எல்மோதாம், ஏரின்குமாரன். ஏர், யோசேயின்குமாரன்.

௨௯. யோசே, எலியேசரின்குமாரன். எலியேசர், யோரீமின்குமாரன். யோரீம், மாத்தாத்தின் குமாரன். மாத்தாத்து, இலேவியின்குமாரன்.

௩௰. இலேவி, சிமியோனின்குமாரன். சிமியோன், யூதாவின்குமாரன். யூதா, யோசேப்பின்குமாரன். யோசேப்பு, யோனானுடைய குமாரன் யோனான், எலியாக்கீமின்குமாரன்.

௩௧. எலியாக்கீம், மெலெயாவின்குமாரன். மெலெயா, மயினானுடையகுமாரன். மயினான், மாத்தாத்தாவின்குமாரன். மாத்தாத்தா, * நாத்தானுடையகுமாரன் நாத்தான், தாவீதின்குமாரன். * ௨. சாமு. ௫. ௰௪.

௩௨. தாவீது, இயேசாயின்குமாரன். இயேசாய், ஓபேதின்குமாரன். ஓபேது, போவாசின் குமாரன். போவாசு, சல்மோனுடையகுமாரன் சல்மோன், நகசோனுடையகுமாரன்.

௩௩. நகசோன், அம்மினதாபின்குமாரன். அம்மினதாப், ஆராமின்குமாரன். ஆராம், எஸ்ரோமின்குமாரன். எஸ்ரோம், பாரேசின்குமாரன். பாரேசு, யூதாவின்குமாரன். யூதா, யாக்கோபின்குமாரன்.

௩௪. யாக்கோபு, ஈசாக்கின்குமாரன். ஈசாக்கு, ஆபிரகாமின்குமாரன். ஆபிரகாம், தாராவின்குமாரன். தாரா, நாகோரின்குமாரன்.

௩௫. நாகோர், செரூக்கின்குமாரன். செரூக்கு, இராகுவின்குமாரன். இராகு, பலேக்கின்குமாரன். பலேக்கு, ஏபேரின்குமாரன். ஏபேர், சாலாமின்குமாரன்.

௩௬. சாலாம், கேனானுடையகுமாரன். கேனான், அற்பக்சாத்தின்குமாரன். அற்பக்சாத்து, சேமின்குமாரன். சேம், நோவாவின்குமாரன். நோவா, இலாமேக்கின்குமாரன்.

௩௭. இலாமேக்கு, மெத்தூசலாவின் குமாரன். மெத்தூசலாக்கு, ஏனோக்கின் குமாரன். ஏனோக்கு, யாரேத்தின் குமாரன். யாரேத்து, மகலெலேயேலின் குமாரன். மகலெலேயேல், காயினானுடைய குமாரன். காயினான், ஏனோசின் குமாரன்.

௩௮. ஏனோசு, சேத்தினுடைய குமாரன். சேத்து, ஆதாமின் குமாரன். ஆதாம் பராபரனாலுண்டானவன்.

## ௪. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துசோதிக்கப்பட்டு உபவாசம் பண்ணினது. (௰௫) அவர்பசாசைச்செயித்தது. (௰௪) அவர்பிரசங்கிக்கத் தொடங்கினது. (௰௬) நாசரேத்தூரார் அவருடைய கிருபையுள்ளவார்த்தைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டது. (௩௫) பசாசுபிடித்தவனையும், (௩௮) பேதுருவின் மாமியையும், (௪௰) பின்னும் பலவிதவியாதிக்காரரையும் சொஸ்தப்படுத்தினது. (௪௧) பசாசுக்கள் அவரை இன்னாரென்று சொன்னதற்காகக் கடிந்துகொள்ளப்பட்டது. (௪௩) அவர்பட்டணங்கள்தோறும்பிரசங்கித்தது.]

*இயேசுவானவர் பரிசுத்த ஆவியினாலே நிறைந்தவராய்யோர்தானைவிட்டுத் திரும்பி, ஆவியினாலே வனாந்தரத்திற்கொண்டுபோகப்பட்டார். * மத். ௪. ௧-௰௧; மாற்கு. ௧. ௰௨, ௰௩.

௨. அங்கேநாற்பது நாள் பசாசினாலே * (குறறஞ்செய்யத்) தூண்டப்பட்டு, அந்நாட்களிலே யொன்றும் புசியாமலிருந்தார். * ௨. மோ. ௩௪. ௨௮.

௩. அவைகள் முடிந்தபின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது பசாசானவன் அவரைநோக்கி, நீதேவனுடையகுமாரனானால் இந்தக் கல்லை அப்பமாகும்படிசொல்லென்றான்.

௪. அதற்கு இயேசுவானவர், *மனிதன் அப்பத்தினாலேயாத்திரமல்ல, பராபரனுடைய வார்த்தையெதுவோ, அதினாலும் பிழைப்பானென்றெழுதியிருக்கின்றதென்றார். * ௫. மோ. ௮. ௩.

௫. பின்பு பசாசானவன் அவரை யுயர்ந்த மலையின்மேற்கொண்டுபோய் ஒரு நிமிஷத்திலே யுலகத்தின் இராச்சியங்களையெல்லாம் அவருக்குக்காண்பித்து,

௬. இவையெல்லாவற்றின்மேலும் அதிகாரமும், இவைகளின் மகிமையும் எனக்கொப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், நான் இவைகளை யுனக்குத் தருவேன். என் இஷ்டப்படிக்கே நான் இவைகளை யெவனுக்குங் கொடுக்கிறேன்.

௭. ஆகையால் நீ யென்னைத் தொழுதுகொண்டால் எல்லாம் உன்னுடையதாயிருக்குமென்று அவருடனே சொன்னான்.

௮. இயேசுவானவர் அவனுக்குச்சொன்னது, சாத்தானே, நீ யெனக்குப் பின்னாகப் போ. * உன் தேவனாகிய பராபரனைத்தொழுதுகொண்டு அவரொருவருக்கே ஆராதனை செய்வாயாக வென்றெழுதியிருக்கின்றதே யென்றார். * ௫. மோ. ௬. ௭;-௰. ௨௰.

௯. அன்றியும் அவன் அவரை எருசலேம் பட்டினத்திற்குக்கொண்டுபோய் அவரைத் தேவாலயத்தின் உப்பரிகையின்மேல் நிறுத்தி, உன்னைக்காப்பாற்றும்படிக்கு உன்னைக்குறித்துத் தமமுடைய தூதர்களுக்குக் கட்டளையிடுவாரென்றும்,

௰. உன்கால் கல்லிலேயிடறாதபடிக்கு அவர்கள் தங்கள் கைகளில் உன்னை ஏந்திக்கொண்டுபோவார்களென்றும், * எழுதியிருக்கின்றது. * சங்கீ. ௯௧. ௰௧, ௰௨.

௰௧. ஆகையால் நீ தேவனுடையகுமாரனானால் இங்கேயிருந்து தாழக்குதியென்று அவருடனேசொன்னான்.

௰௨. அதற்கு மாறுத்தரமாக * இயேசுவானவர்சொன்னது, உன்னுடையதேவனாகிய பராபரனைப் பரீட்சைபாராதிருப்பாயாக வென்றுசொல்லியிருக்கின்றதென்றார். * ௫. மோ. ௬. ௰௬.

௰௩. பசாசானவன் (அவரைத்) தூண்டிவிடுகிறவைகளையெல்லாம் முடித்தபொழுது சிலகாலம் அவரைவிட்டுப்போனான்.

௰௪. * பின்பு இயேசுவானவர் ஆவியினுடைய பலத்தினாலே கலிலேயாநாட்டுக்குத் திரும்பினார். அதைச் சூழ்ந்திருக்கிற தேசமெங்கும் அவருடைய கீர்த்தி பரவிற்று. * மத்தே. ௪. ௰௭; மாற்கு ௧. ௰௪;-௰௫. ௨௧, ௨௨.

௰௫. அல்லாமலும் அவர்களுடைய செப ஆலயங்களில் அவர் உபதேசம்பண்ணி, எல்லாராலும் புகழ்ச்சியடைந்தார்.

௰௬. அவர் தாம் வளர்ந்த நாசரேத்தூருக்குப்போய், தமக்கு வழக்கமானபடி ஓய்வுநாளிலே செப ஆலயத்திற்பிரவேசித்து வாசிக்க எழுந்துநின்றபொழுது,

௰௭. ஏசாயாதீர்க்கதரிசியின் புத்தகத்தை அவருக்குக்கொடுத்தார்கள். அந்தப் புத்தகத்தை அவர் விரித்தபொழுது,

௰௮. பராபரனுடைய ஆவி என்னிலிருக்கின்றது. தரித்திரருக்கு நான் சுவிசேஷத்தை யறிவிக்கும்படி எனக்கு அபிஷேகம்பண்ணினார். நருக்குண்டவர்களைக் குணமாக்கும்படிக்கும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப்பார்க்குதலையும் பிரசங்கிக்கும்படிக்கும், நொறுங்குண்டவர்களைவிடுதலையாக்கி,

௰௯. பராபரனாலே யங்கிகரிக்கப்படுவதற்கான வருஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கும் என்னை யனுப்பினாரென்று * எழுதியிருந்த இடத்தைக்கண்டு, * ஏசா. ௬௧. ௧-௩.

உ0. புத்தகத்தைச்சுருட்டி, ஊழியக்காரனிடத்திலேகொடுத்துவுட்கார்ந்தார். செப ஆலயத்திலுள்ள எல்லாருடைய கண்களும் அவர்மேல் நோக்கமாயிருந்தன.

உக. அப்பொழுதவர் அவர்களுடனே பேசத்தொடங்கி, நீங்கள் கேட்ட வேதவாக்கியம் இன்றைத்தினமே நிறைவேறிற்றென்றார்.

உஉ. எல்லாரும் அவருக்கு நல்ல சாட்சி கொடுத்து, அவர் திருவாய்மலர்ந்தருளிச்செய்த கிருபையுள்ள வசனங்களைக்குறித்து ஆச்சரியப்பட்டுப் பின்பு இவன் யோசேப்பினுடைய குமாரனல்லவோவென்றார்கள்.

உங. அவர்களுடனே யவர் சொன்னது, வயித்தியனே, உன்னைத்தானே குணமாக்கு என்கிற வழக்கச்சொல்லையும், நாங்கள் கேள்விப்பட்டபடி, கப்பர்நாகூமூரில (உன்னாலே) செய்யப்பட்டதெதுவோ, அதை உன் ஊராகிய இவ்விடத்திலேயுஞ் செய்யென்பதையும் நீங்கள் என்னுடனே சொல்லுவீர்களென்பதற்குச் சந்தேகமில்லை.

உச. அப்படியிருக்க, * தீர்க்கதரிசியானவன் தன் ஊரிலே அங்கீகரிக்கப்பட்டவனல்லவென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன். * யோவா. ச. சச.

உரு. அன்றியும் * எலியாவின்காலத்திலே மூன்றுவருடமும், ஆறுமாதமும் வானம் அடைக்கப்பட்டு, தேசமெங்கும் மிகுந்த பஞ்சமுண்டாயிருந்தபொழுது, இஸ்ரவேலருக்குள்ளே யநேகங்கைம்பெண்களிருந்தும், * க. இராசா. யஎ. க—கூ.

உசு. சீதோன்நாட்டிலுள்ள சரேப்பத்தாவூரிலிருந்த ஒரு கைம்பெண்ணிடத்திற்கேயன்றி, மற்றொருத்தியினிடத்துக்கும் எலியாவென்பவர் அனுப்பப்படவில்லை.

உஎ. அல்லாமலும் * எலிசாவென்னுந்தீர்க்கதரிசியின்காலத்திலே இஸ்ரவேலருக்குள்ளே அநேகங்குஷ்டரோகிகளிருந்தும் சீரியதேசத்தானாகிய நாகமானேயன்றி, அவர்களில் வேறொருவனுஞ் சுத்தமாக்கப்படவில்லையென்றுசத்தியத்தின்படியேயுங்களுக்குச்சொல்லுகிறேனென்றார். * உ. இரா. ரு. யச.

உஅ. செப ஆலயத்திலிருந்த எல்லாரும் இவைகளைக் கேட்டபொழுது,

உகூ. கோபத்தால் நிரப்பப்பட்டெழுந்து அவரை யூருக்குப் புறம்பேதள்ளித் தங்களூருக்கட்டுத்த செங்குத்தானமலையின் சிகரத்திலிருந்து அவரைத் தாழத்தள்ளும்படிக்கு அவ்விடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

ங0. அவர் * அவர்கள் மத்தியினின்று கடந்துபோனார். * யோவா. அ. ருகூ.

ஙக. பின்பு அவர் கலிலேயாதேசத்திலுள்ள கப்பர்நாகூம்பட்டினத்திற்குப்போய் ஓய்வுநாள்களில் சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்.

ஙஉ. * அவருடையவசனம் அதிகாரமுள்ளதாயிருந்தபடியினாலே அவர்கள் அவருடைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள். * மத். எ. உஅ, உகூ. யோவா. எ. சகூ.

ஙங. * அல்லாமலுஞ் செப ஆலயத்திலே அசுத்தமான ஆவியுள்ள ஒரு மனிதனிருந்தான். * மாற். க. உங—ஙச.

ஙச. அவன் (அவரைக்கண்டு) ஐயோ, நாசரேத்தூரானாகிய இயேசுவே, எங்களுக்கும், உமக்குமென்ன! எங்களைக் கெடுக்கவா வந்தீர். உம்மை யறிந்திருக்கிறேன். நீர் பராபரனுடைய * பரிசுத்தரோவென்றுமிகுந்த சத்தத்துடனேகூப்பிட்டான். * க. ஙரு.

ஙரு. அதற்கு இயேசுவானவர், நீ பேசாமல் இவனைவிட்டுப்போவென்று அதை யதட்டினார். அப்பொழுது பசாசு அவனைச் சனங்களுக்குள்ளே தள்ளி அவனுக்கு ஒரு சேதமுஞ்செய்யாமல் அவனை விட்டுப்போயிற்று.

ஙசு. எல்லாரும் பிரமிப்படைந்து இவர் அதிகாரத்தோடும், வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக்கட்டளையிட அவைகளும் புறப்படுகின்றனவே. இதென்னவசனமென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

ஙஎ. அவருடையகீர்த்தி யத்தேசத்திலுள்ள இடங்களெல்லாம்பிரசித்தமாயிற்று.

ஙஅ. பின்பு அவர் செப ஆலயத்தைவிட்டுச் சீமோனென்பவனுடையவீட்டுக்குப்போனார். * சீமோனுடையமாமி மிகுந்த சுரமாயக்கிடந்தாள். அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள். * மத். அ. யச, யரு.

ஙகூ. அப்பொழுது அவர் அவளிடத்திற்குனிந்து நின்று சுரத்தை யதட்டினார். அது அவளைவிட்டு நீங்கிற்று. உடனே யவள் எழுந்திருந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

ச0. பின்பு சூரியன் அஸ்தமித்தபொழுது, * அநேக சனங்கள் தங்களிடத்திலிருந்த பல வியாதிகளுள்ளவர்களை அவரிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அவர்களெல்லார்மேலும் அவர் தம்முடைய கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கினார். * மத். அ. யசு.

சக. * அநேகரிடத்திலிருந்து பசாசுகளும் புறப்பட்டன. அவைகள் நீர்பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்தென்று கூப்பிட்டன. அவர் தம்மைக் கிறிஸ்தென்று அவைகளறிந்தபடியினாலே அவைகள் பேசுகிறதற்கு இடங்கொடாமல் அதட்டினார். * மாற. க. ஙரு—ஙகூ.

சஉ. * உதயமானபொழுது அவர் புறப்பட்டு வனாந்தரமான இடத்திற்குப்போனார். சனங்கள் அவரைத்தேடி அவரிடத்திற்போய்த் தங்களைவிட்டுப் போகாதபடிக்கு அவரை நிறுத்திக்கொண்டார்கள்.

சங. அதற்கவர் அவர்களைநோக்கி, நான் மற்ற ஊர்களுக்கும் பராபரனுடைய ஆளு

ஸ்திரிகளும் உட்கார்ந்திருந்தார்கள். பிணியாளிகளைக் குணமாக்கத்தக்கதாகக் கர்த்தருடைய வல்லமை உண்டாயிருந்தது. *மாற். ௨. ௧-௧௨.

௰௮. அப்பொழுது சில மனிதர் ✻ திமிர்வாதக்காரனொருவனைப் படுக்கையோடே யெடுத்துக்கொண்டு உள்ளே போகவும், அவர்முன்பாக வைக்கவும் வகைதேடி, *மத். ௯. ௨-௮.

௰௯. மிகுந்த கூட்டமிருந்தபடியினாலே அவனை உள்ளே கொண்டுபோகிறதற்கு இடங்காணாமல், வீட்டின்மேலேறி தட்டோடு வழியாய்ப் படுக்கையுடனே கூட நடுவிலே இயேசுவுக்கு முன்பாக அவனையிறக்கினார்கள்.

௨௰. அவர்களுடைய விசுவாசத்தை யவர் கண்டு மனிதனே, * உன்பாவங்களுனக்கு மன்னிக்கப்பட்டனவென்று அவனுடனே சொன்னார். ✻ எ. ௪௮.

௨௰௧. அப்பொழுது வேதபாரகரும்,பரிசேயரும் யோசனைபண்ணிச் சொன்னது, தேவதூஷணங்களைச் சொல்லுகிற இவனியாவன்! பராபரனொருவரேதவிரப் பாவங்களை மன்னிக்கத்திராணியுள்ளவர்யாரென்றார்கள்!

௨௰௨. இயேசுவானவர் அவர்களுடைய யோசனைகளையறிந்து அவர்களை நோக்கி, நீங்கள் உங்கள் இருதயங்களில் சிந்திக்கிறதென்ன!

௨௰௩. உன்பாவங்கள் மன்னிக்கப்பட்டனவென்றுசொல்லுகிறதோ எழுந்து நடவென்றுசொல்லுகிறதோ எது எளிது!

௨௰௪. பூமியிலே பாவங்களை மன்னிக்கிறதற்கு மனிதனுடையகுமாரன் அதிகாரமுடையவனென்று நீங்கள் அறியும்படிக்கு (பாருங்களென்று) சொல்லித் திமிர்வாதக்காரனை நோக்கி, நீ யெழுந்து உன்படுக்கையையெடுத்துக்கொண்டு உன் வீட்டுக்குப்போவென்றுனக்குச்சொல்லுகிறேனென்றார்.

௨௰௫. உடனேயவன் அவர்களுக்கு முன்பாக எழுந்திருந்து தன்படுக்கையையெடுத்துக்கொண்டு பராபரனைப்புகழ்ந்து தன்வீட்டுக்குப் போனான்.

௨௰௬. ஆதலால் எல்லாரும் பிரமிப்படைந்து பராபரனைப்புகழ்ந்தார்கள். அல்லாமலும் அவர்கள் பயத்தால் நிறையப்பட்டு ஆச்சரியமானவைகளை யின்றுகண்டோமென்றார்கள்.

௨௰௭. ✻ அதின்பின்பு அவர் புறப்பட்டு ஆயத்துறையிலுட்கார்ந்திருந்த இலேவியென்னும் ஆயக்காரனைக்கண்டு நீ யெனக்குப் பின்சென்றுவாவென்றார். ✻ மத். ௯. ௯-௰௩; மாற்கு. ௨. ௰௪-௨௨.

௨௰௮. அந்தப்படியவன் எல்லாவற்றையும்விட்டெழுந்திருந்து அவருக்குப்பின்சென்றான்.

௨௰௯. அல்லாமலும் அந்த இலேவியென்பவன் தன்வீட்டிலே யவருக்குப்பெரியவிருந்துபண்ணினான். அநேக ஆயக்காரரும், மற்றப்பேர்களும் அவர்களுடனே பந்தியிருந்தார்கள்.

௩௰. உடனே அவ்விடத்து வேதபாரகரும், பரிசேயரும் அவருடையசீஷருக்கு விரோதமாக ✻ பொறுமொறுத்து என்னத்தினாலே நீங்கள் ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசனபானம்பண்ணுகிறீர்களென்றார்கள். ✻ எ. ௩௯.

௩௰௧. இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தரமாகச்சொன்னது, சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை. வியாதியுள்ளவர்களுக்கேயவன் வேண்டும்.

௩௰௨. மேலும் நீதிமான்களையல்ல, பாவிகளையே மனந்திரும்பும்படிக்கு அழைக்கவந்தேனென்றார்.

௩௰௩. பின்பு * அவர்கள் அவரைநோக்கி, யோவானுடைய சீஷரும், பரிசேயருடைய சீஷரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணிச் செபம்பண்ணுகிறார்களே, உம்முடைய சீஷர் போசனபானம்பண்ணுவானேனென்றார்கள். * மத். ௯. ௰௪—௰௭.

௩௰௪. அதற்கவர் சொன்னது, மணவாளன் கலியாணத்திற்கு வந்த மனிதரோடிருக்கும் காலத்திலே நீங்கள் அவர்களை உபவாசம் பண்ணும்படி செய்யக்கூடுமா?

௩௰௫. மணவாளன் அவர்களைவிட்டு நீங்கப்படும்நாள்களுவரும். அப்பொழுது அவர்கள் உபவாசிப்பார்களென்றுசொல்லி,

௩௰௬. பின்னும் உவமையாய்ச்சொன்னது, ஒருவனும் புதியவஸ்திரத்துண்டைப் பழையவஸ்திரத்தோடே பிணைக்கமாட்டான் இணைத்தால் புதியதானது (பழையதைக்) கிழிக்கும். அல்லாமலும்புதியவஸ்திரத்துண்டு பழையதற்கு ஒவ்வமாட்டாது.

௩௰௭. அன்றியும் ஒருவனும் புதிய திராட்சரசத்தைப் பழையதுருத்திகளில் வார்த்து வைக்கமாட்டான். வைத்தால் புதிய இரசந் துருத்திகளைக்கிழிச்சுப்போடும். அப்பொழுது அது சிந்திப்போம். துருத்திகளுங்கெட்டுப்போம்.

௩௰௮. புதிய இரசத்தைப் புதியதுருத்திகளில்வார்த்துவைத்தால் இரண்டுங் காத்துக்கொள்ளப்படும்.

௩௰௯. அல்லாமலும் பழைய இரசத்தைப்பானம்பண்ணுகிறவன் உடனே புதியஇரசத்தை விரும்பமாட்டான். பழையஇரசம் அதிகநல்லதென்றுசொல்லுவானேயென்றார்.

## ௬. அதிகாரம்.

[(௧) ஓய்வுநாளை ஆசரிப்பதைக்குறித்துப் பரிசேயருடைய குருட்டாட்டத்தைக் கிறிஸ்து வேதத்தினாலும், புத்தியினாலும், அறபுதத்தினாலும் கண்டித்தது. (௰௩) பன்னிரண்டு அப்போஸ்தலர்களைத்தெரிந்தேற

படுத்தினது. (௰௭) பிணியாளிகளைக் குணமாக்கினது. (௨௰) ஆசீர்வாதங்களையும், சாபங்களையுங்காட்டி, (௨௭) பகைஞரைச் சிநேகிக்கவேண்டிய விதத்தையும், (௪௯) அஸ்திவாரமில்லாதவீடு விழுந்து போவது போலச்சோதனையின்காலத்தில் நாமவிழாமலிருக்க வசனத்தைக்கேட்பதோடே நற்கிரியைகளான கீழ்ப்படிதலுங் கலந்திருக்கவேண்டுமென்பதையுஞ் சனங்களுக்குமுன்பாகச் சீஷர்களுக்குப்போதித்தது.]

# ௬. அதிகாரம்.

புனிதமான அப்பங்களைச் சாப்பிடுகிற நாள்களில் இரண்டாம்நாளுக்குப் பின்வந்த முதலாம் ஓய்வுநாளிலே அவர் * பயிர்வழியே நடந்துபோகிறபொழுது, அவருடைய சீஷர்கதிர்களைக் கொய்து கைகளினாலேகசக்கித்தின்றார்கள். மத் * ௰௨. ௧-அ; மாற். ௨. ௨௩-௨௮.

௨. அவர்களுடனே பரிசேயரிற்சிலர் ஓய்வுநாள்களிற்செய்யத் தகாததை நீங்கள் செய்யவேண்டுவதென்னவென்றார்கள்.

௩. * அவர்களுக்குமாறுத்தரமாக இயேசுவானவர்சொன்னது, தாவீதும், அவனோடிருந்தவர்களும்பசியாயிருந்தபொழுது அவன்தேவாலயத்திற் பிரவேசித்து,

* ௧. மோ. ௨௪. ௫-௯.

௪. ஆசாரியர்மாத்திரமேயன்றி மற்றொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களையெடுத்துப் புசித்துப்பின்பு தன்னோடிருந்தவர்களுக்குங் கொடுத்தானென்று * நீங்கள் வாசிக்கவில்லையாவென்றுசொல்லி,

* ௧. சாமு. ௨௧. ௬.

௫. பின்பு மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளுக்குந்தும் ஆண்டவராயிருக்கிறாரென்று அவர்களுடனேசொன்னார்.

௬. * மற்றொரு ஓய்வுநாளிலே அவர் செப ஆலயத்திற்பிரவேசித்துப்போதித்தார். அங்கே சூம்பின வலதுகையையுடைய ஒருமனிதனிருந்தான். * மத். ௰௨. ௯-௰௪; மாற். ௩. ௧-௬.

௭. அப்பொழுது வேதபாரகரும், பரிசேயரும் அவரிடத்திற் குற்றங்காணும்படிக்கு ஓய்வுநாளிலுங் குணமாக்குவாராவென்று * எண்ணி அவரைநோக்கிக் காத்திருந்தார்கள். * ௰௪. ௧-௬.

௮. அவர்களுடைய யோசனைகளையவர் அறிந்து சூம்பினகையை யுடையவனைநோக்கி, நீயெழுந்து நடுவே நில்லென்றார். அந்தப்படி யவன் எழுந்து நின்றான்.

௯. அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, நான் உங்களிடத்தில் ஒன்றுகேட்கிறேன். ஓய்வுநாள்களில் நன்மைசெய்கிறதோ? தீமைசெய்கிறதோ? சீவனைக்காக்கிறதோ? அழிக்கிறதோ! எது நியாயமென்று சொல்லி,

௰. அவர்களெல்லாரையுஞ் சுற்றிப்பார்த்து அந்தமனிதனைநோக்கி, உன்கையை நீட்டென்றார். அவன் அப்படிச்செய்தான். உடனே அவனுடையகை மற்றகையைப்போலச் சொஸ்தமாயிற்று.

௰௧. பின்பு அவர்கள் மதியில்லாமையால் நிறையப்பட்டு இந்த இயேசுவை யென்ன செய்யலாமென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

௰௨. * அன்றியும் அந்நாள்களில் அவர் செபம்பண்ணும்படிக்கு மலைக்குப்போய் இராத்திரிமுழுவதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டு, * மாற். ௩. ௰௩—௰௯.

௰௩. பின்பு உதயமாகிறபொழுது தம்முடைய சீஷரைவரவழைத்து,

௰௪. * அவர்களிற்பேதுருவென்றுதாம்பேரிட்ட சீமோனையும், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயாவையும், யாக்கோபையும், யோவானையும், பிலிப்பையும், பர்த்தொலொமேயுவையும், * மத்தே. ௰. ௨-௪.

௰௫. மத்தேயுவையும், தோமாவையும், அல்பேயுவினுடையகுமாரனாகியயாக்கோபையும், வைராக்கியனென்னப்பட்ட சீமோனையும்,

௰௬. யாக்கோபின *சகோதரனாகியயூதாவையும், பின்பு தம்மைக்காட்டிக்கொடுத்த இஸ்காரியோத்தூரானாகியயூதாவையும் இப்படிப் பன்னிரண்டுபேரையுந்தெரிந்துகொண்டு அவர்களை அப்போஸ்தலரென்றுபேர் சொல்லி, * யூதா. ௧. ௧. வசனம்.

௰௭. பின்பு அவர்களுடனேகூட இறங்கிச் சமனான ஒரு இடத்திலேநின்றார். அங்கே அவருடைய சீஷரில் அநேகம்பேர் அவருடைய உபதேசத்தைக்கேட்டுத் தங்கள் வியாதிகளினின்று குணமாக்கப்படும்படிக்கு யூதேயாநாட்டின் திசைகளயாவற்றிலும் எருசலேம் நகரத்திலுந்திரு, சீதோன்பட்டினங்களுள்ள கடலோரத்திலுமிருந்து அநேகசனங்களும்வந்திருந்தார்கள்.

௰௮. அசுத்தமான ஆவிகளால் வாதிக்கப்பட்டவர்களுங் கூடிவந்திருந்து ஆரோக்கியம் அடைந்தார்கள்.

௰௯. வல்லமை யவரிலிருந்து புறப்பட்டு, எல்லாரையுங்குணமாக்கினபடியினாலே சனங்களெல்லாரும் அவரைத் தொடப்பார்த்தார்கள்.

௨௰. அப்பொழுது அவர்தம்முடைய சீஷர்களை நோக்கிப்பார்த்துச் சொன்னதாவது; * தரித்திரராகிய நீங்கள் பராபரனுடைய இராச்சியத்தை யுடையவர்களாகையால் நீங்கள் பாக்கியவான்கள். * ரு. ௬-௭; மத். ரு. ௨.

௨௧. இப்பொழுது பசியாயிருக்கிற நீங்கள் (இனித்) திர்ப்தியடைவீர்களாகையால் நீங்கள் பாக்கியவான்கள். இப்பொழுது

* அழுகிற நீஙகள (இனி) நகைபபீர்களா கையால நீஙகளபாககியவானகள. * ஏசா. ௬௧. ௩—௩.

௨௨. மனிதனுடைய குமாரனிமித்தமாக ச சனஙகள * உஙகளைபபகைத்து உங்களை விலககி நிநதைபபடுததி உஙகளநாமததை பொலலாததெனறு தளளிபபோடுமபொழுது நீஙகள பாககியராயிருபபீர்கள. * க. பேதுரு. ச. ௰௪.

௨௩. பரமணடலததிலே யுஙகளபலனமிகுதியாயிருபபதால அககாலததிலே * நீஙகள சநதோஷபபடடுககளிகூருஙகள. அவர்களுடைய பிதாககள திர்ககதரிசிகளுககும அபபடியேசெயதார்கள. * அப. ரு. சக.

௨௪. ஐசுவரியவானகளாகிய நீஙகள உஙகள் * நனமைகளையடைநதுதீர்நதபடியால் ஐயோஉஙகளுக்குவேதனைவரும. * யகூ. ௨௫.

௨௫. திர்ப்தியுளளவர்களாகிய நீஙகளபசியையடைவீர்களாகையால ஐயோ, உங்களுககு * வேதனைவரும. இபபொழுது நகைக்கிற நீஙகள (இனித) துககபபடுவீர்களாகையால ஐயோ உஙகளுககுவேதனைவரும. * ஏசாயா. ௬௫. ௰௩, ௰௪.

௨௬. எலலாமனிதர்களும உஙகளைககுறித்துபபுகழசசியாயபபேசுமபொழுது ஐயோ உஙகளுககுவேதனைவரும. அவர்களுடைய பிதாககள களளத திர்ககதரிசிகளுககும அபபடியேசெயதார்கள.

௨௭. அனறியும (எனககுச) செவிகொடுககிற உஙகளுககு நான கடடளையிடுகிறதாவது; உஙகள * சததுருககளில அனபுகூர்நது உஙகளைபபகைககிறவர்களுககுநனமைசெயது, * மததேயு. ரு. சச, சரு.

௨௮. உஙகளைசசபிககிறவர்களை யாசிர்வதிதது உஙகளை வருததபபடுததுகிறவர்களுககாகசசெபமபணணுஙகள.

௨௯. * உனகனனததில அறைகிறவனுககு மறுகனனததையுஙகொடு. உனவஸ்திரததை யெடுததுககொளளுகிறவனுககு உன அஙகியையும எடுததுககொளளத தடைபணணாதிருபபாயாக. * மததேயு. ரு. ௩௯—சக.

௩௰. * உனனைவேணடிககொளளுகிறயாவனுககுஙகொடுபபாயாக. உனனுடையதை ஒருவன எடுததுககொணடால அவனிடததிலஅதைத்திருமபக்கேளாதிருபபாயாக. * மததேயு. ரு. ச௨.

௩௧. * சனஙகள உஙகளுககுச செயயுமபடி நீஙகள விருமபுகிறதெபபடியோ அபபடியே நீஙகளும அவர்களுககுசசெயயககடவீர்கள. * மததேயு. எ. ௰௨.

௩௨. * உங்களைச்சிநேகிக்கிறவர்களை (மாத்திரம) நீஙகள சிநேகிததால உஙகளுககு எனன பலனவரும! பாவிகளுந தஙகளைச சிநேகிககிறவர்களைச சிநேககிகிறார்களே. * மததேயு. ரு. ச௬, ச௭.

௩௩. உஙகளுககு நனமைசெயகிறவர்களுககு (மாததிரம) நீஙகள நனமைசெயதால உஙகளுககு எனனபலனவரும!

௩௪. பாவிகளுமஅபபடிசசெயகிறார்களே, திருமபககொடுபபார்களெனறு நீஙகள நம்பி அபபடிசசெய்பவர்களுககு (மாததிரம) கடனகொடுததால உஙகளுக்கு எனனபலனவரும! பாவிகளுஞசரியாயததிருமப அடைநதுகொளளுமபடியாய மறறபபாவிகளுககுக கடனகொடுககிறார்களே.

௩௫. ஆகையால உஙகள சததுருககளைச சிநேகிதது நனமைசெயதுகைமாறெணணாமற கடனகொடுஙகள. அபபொழுது உஙகள பலன மிகுதியாயிருககும. * அலலாமலும நனறியறியாதவர்களமேலும, பொலலாதவர்களமேலுந தயவாயிருககிற உனனதமானவருககுப பிளளைகளாயிருபபீர்கள. * மததே. ரு. சச, சரு.

௩௬. ஆகையால உஙகளபிதா * இரககமுளளவராயிருக்கிறதுபோல நீஙகளும இரககமுளளவர்களாயிருஙகள. * மத. ரு. ச௮.

௩௭. மறறவர்களைக * குறறவாளிகளெனறு எணணிககொளளாதிருஙகள. அபபொழுது நீஙகளுஙகுறறவாளிகளெனறு எணணிககொளளபபடாதிருபபீர்கள. மறறவர்களை ஆககினைககுளளாககுமபடித்தீராதிருஙகள. அபபொழுது நீஙகளும ஆககினைககுளளாகுமபடி தீர்ககபபடாதிருபபீர்கள. விடுதலைபணணுஙகள. அபபொழுது நீஙகளுமவிடுதலையாககபபடுவீர்கள. * மத. எ. க.

௩௮. கொடுஙகள, * அபபொழுது உஙகளுககுஙகொடுககபபடும. அமுககிக குலுககிசசரிநதுவிழும்படிநனறாய் அளநது உஙகளமடியிலேபோடுவார்கள. நீஙகள அளககிற அளவு எதுவோ அதினாலே யுஙகளுககுத திருமப அளககபபடுமேயெனறார்.

* வாககியம். ௰௯. ௰௭.

௩௯. பினனும அவர் உவமையாய அவர்களுடனே சொனனதாவது; * குருடனுககுக குருடன வழிகாடடலாமா? இருவருமபளளததிலவிழுவார்களலலவா! * மத. ௰௫, ௰௪.

௪௰. சிஷன தன போதகருககு மேறபடடவனலல. நிறைவாயககறறுககொணடவனே தனபோதகனைபபோலிருபபான.

௪௧. * நீ யுனனுடையகணணிலுளள உததிரததையுணராமல உன சகோதரனுடைய கணணிலுளள சிராயைபபார்ககிறதெனன! * மததேயு. எ. ௩—ரு.

௪௨. அலலது நீயுன கணணிலுளள உத்திரததைககாணாமலிருகக நீயுன சகோதரனை நோககிச சகோதரனே, நானுனகணணிலுளள சிராயையெடுததுபபோடுகிறேன, இடஙகொடுவெனறு எபபடிசசொலலலாம்! வஞசகனே, முனபு நீ உனகணணிலிருககிறஉததிரததை யெடுததுபபோடு. பினபு உனச

சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை யெடுத்துப்போடும்வகையைத் தெளிவாக அறிவாய்.

௪௩. * கெட்டகனிகொடுக்கிறமரம் நல்ல மரமல்ல. நல்லகனிகொடுக்கிறமரம்கெட்ட மரமல்ல. * மத்தேயு. ௭. ௰௭, ௰௮.

௪௪. முட்செடிகளில் அத்திப்பழங்களைப் பறிக்கிறதுமில்லை. நெருஞ்சிச் செடியிலே திராட்சத்தைப் பறிக்கிறதுமில்லை. ஆகை யால், எந்தமரமும் அதினதினுடையகனியா ல் அறியப்படும்.

௪௫. நல்லமனிதன் தன்னிருதயத்திலுள்ள * நற்பொக்கிஷத்தில் நல்லதையேயெடுத் துக்காண்பிப்பான். பொல்லாதமனிதனுந் தன்னிருதயத்திலுள்ள பொல்லாத பொக் கிஷத்திற பொல்லாததையேயெடுத்துக்கா ண்பிப்பான். இருதயத்தின் பரிபூரணத்தினா ல் அவனுடையவாய்பேசும். * மத்தேயு. ௰௨. ௩௪, ௩௫.

௪௬. அன்றியும் நான் கட்டளையிடுகிறவை களை நீங்கள் செய்யாமலிருக்க என்னை * ஆண்டவரே ஆண்டவரேயென்று என்ன த்துக்கழைக்கிறீர்கள்! * மத். ௭. ௨௧-௨௩.

௪௭. * என்னிடத்தில்வந்து என்வசனங்க ளைக்கேட்டு, அவைகளின்படி செய்கிறவனை யுங்களுக்குக்காண்பிப்பேன். * மத். ௭. ௨௪.

௪௮. அவன் எவனுக்கு ஒப்பாயிருக்கிறா னென்றால், ஆழமாயத் தோண்டிப்பாறை யின்மேல் அஸ்திபாரம்போட்டு வீடுகட்டின மனிதனுக்கே ஒப்பாயிருக்கிறான். பெருவெ ள்ளமுண்டானபொழுது நீரோட்டம் அந் தவீட்டிலேமோதியும் அது கல்மலையின்மேல் அஸ்திபாரம்போட்டிருந்தபடியால், அதை யசைக்கக்கூடாமற்போயிற்று.

௪௯. (என்வசனத்தைக்) கேட்டும் அதின் படிசெய்யாதவனோ அஸ்திபாரமில்லாமற் பூமியின்மேல் வீடுகட்டினவனுக்கொப்பா யிருக்கிறான். வெள்ளம் அதிலேமோதினவுட னே அது விழுந்துமிகவும் இடிந்துபோயிற் றென்றார்.

## ௭. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து ஒரு அஞ்ஞானியாயிருந் த சேர்வைக்காரனிடத்தில் யூதரின் விசு வாசத்திலும், அதிக விசுவாசத்தைக்கண் டது. (௰) அவனுடையவேலைக்காரனைக்குண மாக்கினது. (௰௭) நாயீனூர்விதவையின் மகனை உயிரோடெழுப்பினது. (௰௯) யோ வானனுப்பினதூதர்களுக்குத்தம்முடைய அற்புதங்களை ஒருதிப்பாகக்காட்டி, உத் தரவருளிச்செய்தது. (௨௪) யோவானைக் குறித்துத்தம்முடைய தாற்பரியத்தைச்சன ங்களுக்கு அறிவித்தது. (௩௰) யோவானு டைய செய்கைகளினாலாவது, தம்முடைய செய்கைகளினாலாவது, குணப்படாதயூதர் களைக்கடிந்துகொண்டு, (௩௬) மகதலேனு ளாகிய மரியாளுக்குச்செய்த கிருபையி னால் விசுவாசித்துக்குணப்படுகிறபாவிகளுக் குப்பாவங்களை மன்னிக்கிறபாவிகளுடைய சிநேகிதரென்றுதம்மைத்திருஷ்டாந்தப்படு த்தினது.]

* சனங்கள்கேட்கத்தக்கதாக அவர் தம் முடைய வாக்கியங்களையெல்லாஞ் சொல்லிமுடித்தபின்பு கப்பர்நகூமூருக் குப்போனார். * மத். ௮. ௫—௰௩.

௨. அங்கே நூறுபோர்ச் சேவகருக்குத்த லைவனாகிய ஒருவனுக்குப்பிரியமான வேலை க்காரன்வியாதியினாலே மரணத்துக்கேது வாயிருந்தான்.

௩. அந்தத்தலைவன் இயேசுவைக்குறித்துக் கேள்விப்பட்டபொழுது அவர்வந்து தன் வேலைக்காரனைக்குணமாக்கவேண்டுமென்று அவரைவேண்டிக்கொள்ளும்படிக்கு யூதரு டைய மூப்பரையவரிடத்தில் அனுப்பினான்.

௪. அவர்கள் இயேசுவினிடத்திற்போய் அவரைமிகவும் வேண்டிக்கொண்டு பின்பு சொன்னது, அவன்நம்முடைய தேசத்தா ரில் அன்பாயிருந்து எங்களுக்காகவொரு செபஆலயத்தையுங்கட்டினான்.

௫. ஆகையால், உம்முடைய தயவுக்கு அவன்பாத்திரனாயிருக்கிறானென்றார்கள்.

௬. இயேசுவானவர் அவர்களுடனேகூடச் சென்றார். வீட்டுக்குச்சமீபமாயப் போன பொழுது அந்தத்தலைவன் சிநேகிதரைநோ க்கி, (நீங்கள் அவரிடத்திற்போய்) ஆண்ட வரே, நீர் என்வீட்டுவாசலுக்குட் பிரவே சிக்கிறதற்கு நான்பாத்திரனல்ல.

௭. அதினாலே நான்தானேயுமிடத்தில்வரு கிறதற்குமென்னையபாத்திரனென்றெண்ணி னேன். ஆகையால், நீர்வருத்தப்படாதிரும்.

௮. அல்லாமலும், நான்அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும் எனக்குக்கீழிருக் கிற சேவகரிலொருவனைப் போவென்னப் போகிறான். மற்றொருவனைவாவென்னவருகி றான். என்வேலைக்காரனைநோக்கி, இதைச் செய்யென்னச்செய்கிறான். ஆகையால், நீர் ஒருவார்த்தைமாத்திரஞ்சொன்னால் என்வே லைக்காரன் சொஸ்தம் அடைவானென்று சொல்லுங்களென்று அனுப்பினான்.

௯. இயேசுவானவர் அதைக்கேட்டு அவ னைக்குறித்து ஆச்சரியப்பட்டுத் திரும்பிக் கொண்டு தமக்குப்பின்செல்லுகிற சனங்க ளைநோக்கி, இப்படிப்பட்ட விசுவாசத்தை நான் இஸ்ரவேலருக்குள்ளுங் காணவில்லை யென்றுங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

௰. அனுப்பப்பட்டவர்கள் திரும்ப வீட்டு க்குவருகிறபொழுது வியாதியாயிருந்த வே லைக்காரன் ஆரோக்கியம் அடைந்திருக்கிற தைக்கண்டார்கள்.

௰௧. மறுநாளிலே அவர் நாயீனென்னுமூருக்குப்போனார். அவருடைய சீஷர் அநேகரும், மற்றநேக சனங்களும் அவருடனே கூடப்போனார்கள்.

௰௨. அவர் ஊரின்வாசலுக்குச் சமீபமானபொழுது ஒருகைம்பெண்ணுடைய ஒரே குமாரன் இறந்துபோய் வெளியேகொண்டு வரப்பட்டான். ஊராரில் அநேகசனங்களும் அவளுடனே கூடவந்தார்கள்.

௰௩. கர்த்தர் அவளைப்பார்த்து அவள்மேல் உருக்கமாய் இரங்கி, நீ அழவேண்டாமென்றுசொல்லிக் கிட்டப்போய்ப் பாடையைச்சுமக்கிறவர்கள் நின்றார்கள்.

௰௪. உடனேயவர் அதைத்தொட்டு வாலிபனே * எழுந்திரு என்றுனக்குச்சொல்லுகிறேனென்றார். * மாற. ரு. ௪௧; யோவா. ௰௧. ௪௩.

௰௫. அப்பொழுது மரித்தவன் எழுந்து உட்கார்ந்து பேசத்தொடங்கினான். அவனையவர்தாய்க்கு ஒப்புக்கொடுத்தார்.

௰௬. எல்லாரும் பயமடைந்து மகாதீர்க்கதரிசி நமக்குள்ளேதோன்றியிருக்கிறானென்றும், பராபரன் தம்முடைய சனங்களைச் சந்தித்துப் பார்த்தாரென்றுஞ்சொல்லிப் பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௰௭. அல்லாமலும் இந்தச்சங்கதி யூதேயா நாடு முழுவதிலும், சுற்றியிருக்கிற தேசங்களியாவற்றிலும் பிரசித்தமாயிற்று.

௰௮. இவையெல்லாவற்றையும் யோவானுடைய சீஷர் அவனுக்கு அறிவித்தார்கள்.

௰௯. அப்பொழுது * யோவான் தன் சீஷரிலிரண்டுபேரையழைத்து நீங்கள் இயேசுவினிடத்திற்போய் வருவாரென்றுசொல்லப்பட்டவர் நீரா! அல்லதுவேறொருவர்வரக்காத்திருக்கவேண்டுமாவென்றுகேளுங்களென்றுசொல்லியனுப்பினான். * மத. ௰௧. ௨-௬.

௨௰. அந்தப்படியவர்கள் அவரிடத்திற்போய் வருவாரென்றுசொல்லப்பட்டவர் நீரா! அல்லதுவேறொருவர்வரக்காத்திருக்கவேண்டுமாவென்று கேட்கும்படிக்கு யோவான்ஸ்நானன் எங்களையுமிடத்திற்கனுப்பினானென்றார்கள்.

௨௧. அவ்வேளையிலே அவர்வியாதிகளையும், வேதனைகளையும், பொல்லாத ஆவிகளையுமுடைய அநேகம்பேரைக் குணமாக்கிக் குருடர் அநேகருக்குப்பார்வையையருளினார்.

௨௨. அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச்சொன்னது, குருடர் பார்வையையடைகிறார்கள். சப்பாணிகள் நடக்கிறார்கள். குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள். செவிடர்கேட்கிறார்கள். மரித்தோர் எழுப்பப்படுகிறார்கள். தரித்திரருக்குச் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டுவருகின்றது. இப்படி நீங்கள்பார்க்கிறவைகளையுங் கேட்கிறவைகளையும் யோவானுக்குப்போய் அறிவியுங்கள்.

௨௩. அல்லாமலும் என்னாலே இடறலடையாமலிருக்கிறவன் பாக்கியவானென்றார்.

௨௪. யோவானுடைய தூதர்கள்போன பின்பு அவர் யோவானைக்குறித்துச் சனங்களுடனேசொன்னது, * காற்றினால் அசைக்கப்படுகிற நாணலையா நோக்கிப்பார்க்கும்படிக்கு வனாந்தரத்திற்குப்போனீர்கள். * மத. ௰௧. ௭—௰௫.

௨௫. அல்லது மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையா பார்க்கும்படிக்குப் புறப்பட்டீர்கள். மகிமையான உடுப்போடும், செல்வத்தோடுமிருக்கிறவர்கள் அரசருடைய அரமனைகளிலிருக்கிறார்களே.

௨௬. அல்லது ஒரு தீர்க்கதரிசியையா பார்க்கும்படிக்குப் புறப்பட்டீர்கள். ஒரு தீர்க்கதரிசியிலும் அதிகமானவனையே (பார்த்தீர்களென்று) உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௭. இதோ, * நான் என்னுடைய தூதனை உமக்குமுன்பாக அனுப்புகிறேன். அவன் உமக்குமுன் நடந்து உமக்காக மார்க்கத்தைத்திருத்துவானென்று ஒருவனைக்குறித்து எழுதியிருக்கின்றதே அவன் இவன்தான். * மல்கி. ௩. ௧.

௨௮. ஆகையால், நானுங்களுக்குச்சொல்லுகிறதாவது; ஸ்திரிகளிடத்திற்பிறந்தவர்களில் யோவான்ஸ்நானனிலும் பெரிய தீர்க்கதரிசியொருவனுமில்லை. ஆனாலும் பராபரனுடைய இராச்சியத்திலே சிறியவனானவன் அவனிலும்பெரியவனாயிருக்கிறான்.

௨௯. அன்றியும், (யோவானுடைய உபதேசத்தைக்)கேட்டசகலசனங்களும், ஆயக்காரரும் அவனாலே ஞானஸ்நானத்தைப் பெற்றுப் பராபரன் நீதிபரனென்று அறிக்கையிட்டார்கள்.

௩௰. பரிசேயரும், நியாயசாஸ்திரிகளுமானவர்களமாத்திரம் அவனாலே ஞானஸ்நானத்தைப்பெறாமல் தங்களைக்குறித்துப் பராபரனுடைய ஆலோசனையைத் தள்ளினார்கள்.

௩௧. அப்படியிருக்க, * இந்தத்தலைமுறையின் மனிதரை நான் யாருக்கு நிகர்சொல்வேன்! இவர்கள் யாருக்கொப்பாயிருக்கிறார்கள்? * மத. ௰௧. ௰௬—௰௯.

௩௨. சந்தையிலுட்கார்ந்து ஒருவரையொருவர்நோக்கி, உங்களுக்காக ஊதினோம். நீங்கள் கூத்தாடவில்லை. உங்களுக்காகப் புலம்பினோம். நீங்கள் அழவில்லையென்று எதிர்க்கூப்பிடுகிற பிள்ளைகளுக்கொப்பாயிருக்கிறார்கள்.

௩௩. எப்படியெனில், யோவான்ஸ்நானன் வந்து அப்பம் புசியாமலும், திராட்ச இர

சகுடியாமலுமிருந்தான். அதினாலே பேய்கொண்டவனென்கிறீர்கள்.

௩௪. மனிதனுடையகுமாரன்வந்து போசனபானம்பண்ணுகிறான். அதினாலே இதோ, போசனப்பிரியன், மதுபானப்பிரியன், ஆயக்காரருக்கும், பாவிகளுக்கும் சிநேகிதனென்கிறீர்கள்.

௩௫. ஆனாலும் ஞானமானது தன்னையடைந்தவர்களாலே நீதியாக்கப்படுகின்றதென்றார்.

௩௬. பரிசேயரிலொருவன் தன்னுடனே போசனம்பண்ணும்படிக்கு அவரைவேண்டிக்கொண்டான். அந்தப்படி அவர் பரிசேயனுடைய வீட்டிற்குப்போய்ப் பந்தியிருந்தார்.

௩௭. அப்பொழுது பட்டினத்திலுள்ள பாவியாகிய ஒருஸ்திரி அவர்பரிசேயனுடைய வீட்டிலே பந்தியிருக்கிறதையறிந்து * ஒரு பரணியிற பரிமளதயிலங்கொண்டுவந்து,

* யோவா. ௰௨. ௩.

௩௮. அவருடைய பாதங்களினருகே பின்னாக நின்று அழுதுகொண்டு அவருடைய பாதங்களைக்கண்ணீரினாலே நனைத்துத் தன் தலைமயிராலே துடைத்து அவருடைய பாதங்களைமுத்தஞ்செய்து பரிமள தயிலத்தைப்பூசினாள்.

௩௯. அவரையழைத்த பரிசேயன் அதைக்கண்டபொழுது இவர் தீர்க்கதரிசியானால் தம்மைத்தொடுகிற ஸ்திரியினாளென்றும், இப்படிப்பட்டவளென்றும் அறிந்திருப்பார். * இவள் பாவியாயிருக்கிறாளேயென்று தனக்குளளேயெண்ணிக்கொண்டான்.

* ௰௫. ௨.

௪௰. இயேசுவானவர் அவனைநோக்கி, சீமோனே, உனக்கு ஒருவார்த்தைசொல்ல விரும்புகிறேனென்றார். போதகரே, சொல்லுமென்றான்.

௪௧. (இயேசுவானவர்சொன்னது,) கடன்காரனொருவனுக்குக் கடனாளிகள் இரண்டுபேரிருந்தார்கள். அவர்களிலொருவன் ஐந்நூறுவெள்ளிக்காசும், மற்றொருவன் ஐம்பது வெள்ளிக்காசுங்கொடுக்கவேண்டியிருந்தது.

௪௨. அவர்கள் கொடுக்கிறதற்குத் திராணியில்லாதவர்களானபொழுது இருவருக்குங் கடனைமன்னித்தான். ஆகையால், அவர்களிலெவன் அவனிடத்தில் அதிக அன்பாயிருப்பான். அதைச்சொல்லென்றார்.

௪௩. சீமோன் மாறுத்தரமாகச்சொன்னது, அதிகமான மன்னிப்பைப்பெற்றவனெவனோ, அவனேயென்று நினைக்கிறேனென்றான். அப்பொழுது அவர் நிதானமாய்த்தீர்த்தாயென்றுசொல்லி,

௪௪. பின்பு ஸ்திரியினிடத்திலே திரும்பிச் சீமோனுடனேசொன்னது, இந்தஸ்திரியைப்பார்க்கிறாயா? நான் உனது வீட்டில்வந்தபொழுது நீ யென்காலகளுக்குத் தண்ணீர் தந்ததில்லை. இவள் கண்ணீரினாலேயென்கால்களை நனைத்துத் தன் தலைமயிராலே துடைத்தாள்.

௪௫. நீ யென்னை முத்தஞ்செய்யவில்லை. இவள் இங்கே பிரவேசித்தது முதல் என் பாதங்களை ஓயாமல் முத்தஞ்செய்தாள்.

௪௬. நீ யென்தலையில் எண்ணெய்ப்பூசவில்லை இவள் பரிமளதயிலத்தை என்பாதங்களிற் பூசினாள்.

௪௭. ஆனதால் இவள்செய்த அநேகபாவங்கள் மன்னிக்கப்பட்டபடியினாலே மிகவும் அன்பாயிருக்கிறாளென்று உனக்குச்சொல்லுகிறேன். அல்லாமலும் கொஞ்சம் மன்னிக்கப்பெற்றவனெவனோ அவன் கொஞ்சம் அன்பாயிருக்கிறானென்றுசொல்லி,

௪௮. பின்பு அவளைநோக்கி, * உன்பாவங்கள் மன்னிக்கப்பட்டனவென்றார். * ௫. ௨௰, ௨௧.

௪௯. அப்பொழுது பந்தியிலிருந்தவர்கள் பாவங்களை மன்னிக்கிற இவன் யாவனென்று சொல்லிக்கொண்டார்கள்.

௫௰. அவர் (பின்னும்) ஸ்திரியைநோக்கி, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. சமாதானத்தோடேபோவென்றார்.

## ௮. அதிகாரம்.

[(௧) ஸ்திரிகள் கிறிஸ்துவுக்குத் தங்கள் ஆஸ்திகளாலே உதவிசெய்தது. (௪) கிறிஸ்து அப்போஸ்தலர்களோடே பலவிடங்களிலும் பிரசங்கம்பண்ணினபின்பு விதைக்கிறவனுவமையையும், (௰௬) விளக்கினுவமையையும் எடுத்துக்காட்டி, (௨௧) தம்முடைய தாயும், சகோதரரும் இன்னாரென்று அறிவித்து, (௨௨) காற்றை அதட்டி, (௨௬) ஒருவனைப்பிடித்திருந்த பசாசுக்களைப் பன்றிகளின் கூட்டத்திலே துரத்தினது. (௩௭) அவர் கதரேனரால் விலக்கப்பட்டது. (௪௩) பெரும்பாடுள்ள ஒருஸ்திரியைக் குணமாக்கினது. (௪௯) யாவீரு என்பவனுடையமகளை உயிரோடே எழுப்பினது.]

பின்பு அவர் பிரயாணமாய்ப்பட்டணங்கள்தோறும், ஊர்கள்தோறுந்திரிந்து பராபரனுடைய இராச்சியத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசங்கம்பண்ணினார்.

௨. பன்னிருவரும், பொல்லாத ஆவிகளினின்றும், வியாதிகளினின்றுங்குணமாக்கப்பட்ட சிலஸ்திரிகளும் * அவருடனேகூடப்போனார்கள் * மாற்கு. ௰௬. ௯.

௩. ஏழுபசாசுக்களினின்றும் நீக்கப்பட்டமகதலேனாளென்னப்பட்டமரியாளும், ஏரோதேயின்காரியக்காரனாகிய கூசாவின்மனைவியாகிய யோவன்னாளும், சூசன்னாளும், தங்கள் ஆஸ்திகளால் அவருக்குப்பணிவிடைசெய்து

கொண்டுவருகிற மற்ற அநேகஸ்திரீகளும் அவருடனேயிருந்தார்கள்.

௪. * பட்டினங்களிலிருந்து மிகுந்தசனங்கள் வந்து அவரிடத்திற் கூடியிருக்கிறபொழுது அவர் உவமையாய்ச்சொன்னது, *மாற். ௪. ௧—௨௫.

௫. * பயிரிடுகிறவன் தன்விதையைவிதைக்கப்புறப்பட்டான். அவன் விதைக்கையிற் சிலவிதைவழியருகேவிழுந்து மிதிக்கப்பட்டன. ஆகாசத்தின் பறவைகளும்வந்து அவைகளைப்பட்சித்தன. *மத். ௰௩. ௩-௨௩

௬. சிலவிதைகற்பாறையின்மேல் விழுந்தன. அவைமுளைத்தபின் ஈரமில்லாததினாலே உலர்ந்துபோயின.

௭. சிலவிதை முட்செடிகளுள்ள இடத்திலேவிழுந்தன. முட்செடிகள் கூடவளர்ந்து அவைகளைநெருக்கிப்போட்டன.

௮. சிலவிதை நல்லநிலத்திலேவிழுந்து முளைத்து நூறுமடங்காயப் பலன்தந்தனவென்று சொல்லிப் பின்பு கேட்கிறதற்குக்காதுள்ளவன் கேட்கக்கடவனென்று கூப்பிட்டார்.

௯. அப்பொழுது அவருடையசீஷர் அவரைநோக்கி, இந்தஉவமையின்கருத்தென்னவென்றுகேட்டார்கள்.

௰. அவர்சொன்னது, பராபரனுடையஇராச்சியத்தின் இரகசியங்களையறியும்படிக்கு நீங்கள் அருள்பெற்றவர்கள். மற்றவர்கள் கண்டுகாணாமலும், கேட்டும் உணராமலுமிருக்கத்தக்கவிதமாக (அவைகள்) உவமைகளாய்அவர்களுக்குச்சொல்லப்படுகின்றன.

௰௧. அந்தஉவமையின்கருத்தாவது, விதையானது பராபரனுடையவசனமே.

௰௨. (விதைவிழுந்த) வழியானது (அந்தவசனத்தைக்) கேட்கிறபொழுது விசுவாசியாமலும், இரட்சிக்கப்படாமலுமிருக்கும்படிக்குத் தங்களிருதயத்திலிருந்து அவ்வசனம்பசாசினாலே யெடுக்கப்படுகிறவர்களேயாம்.

௰௩. (விதைவிழுந்த) கற்பாறையானது (அவ்வசனத்தைக்) கேட்கிறபொழுது சந்தோஷத்தோடேயேற்றுக்கொண்டு பின் அது தங்களுக்குள்ளே வேர்கொள்ளும்படி செய்யாமற் சிலகாலம் (மாத்திரம்) விசுவாசித்துச்சோதனைக்காலத்திலேவழுவிப்போகிறவர்களேயாம்.

௰௪. (விதைவிழுந்த)முட்செடிகளுள்ளநிலமானது தேவவசனத்தைக் கேட்கிறவர்களாயிருந்தும், நிறைந்த பலனைக்கொடாதபடிக்குக் கவலைகளும்,* ஐசுவரியமும்,சீவனத்தின் செல்வமுமுள்ளவர்களாய் நடந்து அவைகளினாலே அதைநெருக்கிப்போடுகிறவர்களேயாம். * ௰அ.௨௪;௧. தீமோ. ௬.௯.

௰௫. (விதைவிழுந்த) நல்லநிலமானதுஅவ்வசனத்தைக்கேட்டுநன்றும்,உண்மையுமான இருதயத்திலேயதைக்காத்துக்கொண்டு இடைவிடாமல் * பலன்கொடுக்கிறவர்களேயாம். * கலா. ௫. ௨௨.

௰௬. ஒருவனும் * விளக்கைக்கொளுத்தி அதைஒருபாத்திரத்தினாலேமூடவும், கட்டிலின்கீழேவைக்கவுமாட்டான். உள்ளே வருகிறவர்கள்வெளிச்சங்காணும்படிக்கு அதைத்தண்டின்மேலேவைப்பான். * மத். ௫ ௰௫.

௰௭. அந்தப்படிவெளியரங்கமாகாத அந்தரங்கமுமில்லை. அறியப்பட்டுவெளிக்குவாராதமறைபொருளுமில்லை.

௰௮. ஆதலால் நீங்கள்கேட்கிறவிதத்தைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள். எப்படியென்னில், உள்ளவனுக்குக்கொடுக்கப்படும். இல்லாதவனுக்கு உண்டென்றுநினைக்கிறபொருளும் அவனிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்படுமென்றார்.

௰௯. அப்பொழுது * அவருடைய தாயும், சகோதரரும் அவரிடத்திற்குப்போகையிற் சனக்கூட்டத்தினிமித்தம் அவர்கள் அவரைச்சேருகிறதற்கு இடமில்லை. * மத். ௰௨. ௪௬—௫௰

௨௰. அப்பொழுதுசிலர் அவரைநோக்கி, உம்முடையதாயும், சகோதரரும் உம்மைப்பார்க்கவேண்டுமென்று வெளியேநிற்கிறார்களென்று அறிவித்தார்கள்.

௨௧. அவர்களுக்குமாறுத்தரமாக * அவர் சொன்னது, பராபரனுடையவசனத்தைக் கேட்டு அதின்படிசெய்கிறவர்களே என்தாயுமாய் என் சகோதரருமாயிருக்கிறார்களென்றார். * யோவா. ௰௫ ௰௪.

௨௨. * ஒருநாளிலேஅவர்தம்முடையசீஷரோடுங்கூட ஒருபடவிலேறி அவர்களைநோக்கிக்கடலின் அக்கரைக்குப்போகக்கடவோமென்றார். அந்தப்படிக்கவரையைவிட்டுப்போனார்கள். * மத். அ. ௨௩—௨௭; மாற். ௪. ௩௫—௪௧.

௨௩. அவர்கள் படவை நடத்துகையில், அவர் நித்திரைபண்ணினார். அப்பொழுது படவுசலத்தினாலேநிரப்பப்படவும், அவர்களுக்குமோசம்வரவுந்தக்கதாகக் கடலிற்சுழல்காற்றுண்டாயிற்று.

௨௪. உடனேயவர்கள்சேர்ந்து ஆண்டவரே, ஆண்டவரேநாங்கள்கெட்டுப்போகிறோமேயென்று (கூப்பிட்டு) அவரையெழுப்பினார்கள். அப்பொழுது அவர் எழுந்து காற்றையும், சலத்தின் உக்கிரத்தையும் அதட்டினார்.உடனேஅவைகள்நின்றுபோகஅமைதலுண்டாயிற்று.

௨௫. பின்பு அவர் அவர்களைநோக்கி, உங்கள்விசுவாசம் எங்கேயென்றார். அவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு இவர்எப்படிப்பட்டவரோகாற்றுக்களுக்கும், சலத்திற்குங் கட்டளையிடுகிறாரே, அவைகளும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவேயென்று ஒருவரோடொருவர்சொல்லிக்கொண்டார்கள்.

௨௬. * பின்பு கலிலேயா நாட்டுக்கெதிரான கதரேனர்தேசத்திலேசேர்ந்தார்கள்.
* மத். ௮. ௨௮—௩௪; மாற்கு. ௫. ௧-௨௦.

௨௭. அவர் அக்கரையிலிறங்கினபொழுது அநேகநாளாய்ப்பசாசுகள் பிடித்தவனுமாய், வஸ்திரந்தரியாதவனுமாய், வீட்டிலே தங்காமற் பிரேதக்கல்லறைகளிலே தங்கினவனுமாயிருந்த அப்பட்டணத்து மனிதனொருவன் அவருக்கெதிராக வந்தான். அநேகந்தரம் அந்த அசுத்த ஆவியவனையலக்கழித்துவந்தது.

௨௮. அல்லாமலும், அவன் சங்கிலிகளாலும், விலங்குகளாலுங் கட்டப்பட்டுக் காவல் பண்ணப்பட்டிருந்தும் அவன் விலங்குகளைத் தறித்துப்போட்டுப் பசாசினாலே வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டான். ஆதலால் இயேசுவானவர் அந்த ஆவியவனைவிட்டுப் போகும்படிக்குக்கட்டளையிட்டார்.

௨௯. ஆனபடியினாலே அவன் இயேசுவானவரைக்கண்டபொழுது கூக்குரலிட்டு அவருக்குமுன்பாகவிழுந்து இயேசுவே, உன்னதமானபராபரனுடையகுமாரனே, எனக்கும், உமக்குமென்ன! என்னைவேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேனென்றான்.

௩௦. அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, உன்பேரென்னவென்றுகேட்டார். அதற்கவன், இலேகியோனென்று * சொன்னான். அநேகம்பசாசுகள் அவனுக்குட்புகுந்தபடியால், அந்தப்பேர் அவனுக்குண்டாயிற்று.

௩௧. அல்லாமலுந்தங்களைப் பாதாளத்திற்குப்போகும்படி கட்டளையிடாதபடிக்கு அவைகள் அவரைவேண்டிக்கொண்டன.

௩௨. அப்பொழுது அவ்விடத்திலே அநேகம்பன்றிகள் கூட்டமாய் மலையிலேமேய்ந்துகொண்டிருந்தன. அவைகள் அந்தப்பன்றிகளுக்குட்பிரவேசிக்கும்படி உத்தரவுகொடுக்கவேண்டுமென்று அவரைவேண்டிக்கொண்டன. அப்படியேயவைகளுக்கு உத்தரவு கொடுத்தார்.

௩௩. உடனே பசாசுகள் அந்தமனிதனைவிட்டுநீங்கிப்பன்றிகளுக்குட்புகுந்தன. அப்பொழுது அந்தப்பன்றிக்கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலேபாய்ந்து அமிழ்ந்துபோயிற்று.

௩௪. அவைகளை மேய்த்தவர்கள் அதைக்கண்டு ஓடிப்போய்ப் பட்டணத்திலும், வெளிப்புறங்களிலும் அறிவித்தார்கள்.

௩௫. அப்படிநடந்ததைச் சனங்கள்பார்க்கும்படிக்குப் புறப்பட்டு, இயேசுவினிடத்திற்போய்ப் பசாசுகள்விட்டுப் போன மனிதன் இயேசுவினுடைய பாதங்களருகே வஸ்திரந்தரித்தவனாய் உட்கார்ந்து புத்தியடைந்திருக்கிறதைக்கண்டு பயப்பட்டார்கள்.

௩௬. பசாசுகள் பிடித்திருந்தவன் இரட்சிக்கப்பட்ட வகையைக் கண்டவர்களும் அதையவர்களுக்கு அறிவித்தார்கள்.

௩௭. அப்பொழுது கதரேனருடையசுற்றுத்தேசத்தின்திரளான சனங்களெல்லாரும் மிகுந்தபயம் அடைந்தவர்களானபடியினாலே தங்களைவிட்டுப்போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள். அந்தப்படியவர் படவிலேறித்திரும்பினார்.

௩௮. பசாசுகள் விட்டுப்போன மனிதன் அவருடனேகூடப் போயிருக்கும்படிக்கு அவரிடத்தில் உத்தரவுகேட்டுக்கொண்டான்.

௩௯. இயேசுவானவர் அவனைநோக்கி நீ உன்வீட்டிற்குத்திரும்பிப்போய்ப் * பராபரன் உனக்குச்செய்த விசேஷங்களையறிவிப்பாயாகவென்றுசொல்லி யனுப்பிவிட்டார். அந்தப்படி யவன்போய்த் தனக்கு இயேசுவானவர்செய்த விசேஷங்களைப் பட்டணத்திலெங்கும் பிரசித்தம் பண்ணினான்.
* மாற் ௫. ௧௯, ௨௦.

௪௦. பின்பு இயேசுவானவர் திரும்பிவந்தபொழுது அவர்வரக்காத்துக்கொண்டிருந்த சனங்களெல்லாரும் அவரையுபசாரஞ்செய்தார்கள்.

௪௧. * அப்பொழுது ஜெப ஆலயத்தலைவனாயவீருவென்பவன்வந்து இயேசுவின்பாதங்களிடத்தில்விழுந்து தனக்குண்டான பன்னிரண்டு வயதுள்ள ஒரேகுமாரத்தி மரணத்திற்கேதுவாயிருந்தபடியினாலே, * மத். ௯. ௧௮, ௧௯; மாற். ௫. ௨௨.

௪௨. தன் வீட்டிலேவரும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான். அவர் அவனுடனே கூடப்போகையிற் சனங்கள் அவரைநெருக்கினார்கள்.

௪௩. அப்பொழுது * பன்னிரண்டுவருஷம் பெரும்பாடுபட்டுத் தன்பொருள்களையாவையும் பரிகாரிகளுக்குச்செலவழித்தும் ஒருவராலுஞ் சுகமடையாத ஒருஸ்திரீ (யவருக்குப்) பின்னாலேசேர்ந்து,

௪௪. அவருடையவஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள். உடனேயவளுடைய இரத்தவூறல்நின்றுபோயிற்று. * மத் ௯. ௨௦-௨௨.

௪௫. அப்பொழுது இயேசுவானவர் என்னைத்தொட்டவர்யாரென்றார். நாங்கள் அறியோமென்று எல்லாருஞ் சொன்னபொழுது பேதுருவும், அவனோடிருந்தவர்களும் அவரைநோக்கி, ஐயரே, சனங்கள் உம்மைநெருக்கி, புரஞ்சிக்கொண்டிருக்கிறார்களே. அப்படியிருக்க, என்னைத்தொட்டவர் யாரென்று எப்படிக்கேட்கிறீரென்றார்கள்.

௪௬. இயேசுவானவர்சொன்னது, என்னை

* இலேகியோனென்பதற்கு ஏறக்குறைய நாலாயிரம்பேரென்று அருத்தமாம்.

விருந்து பலம் புறப்பட்டதை யறிந்திருக்கி றேன். ஆகையால் ஒருவர் என்னைத்தொட்டா ரென்றார்.

௪௭. அப்பொழுது ஸ்திரீயானவள் மறைந்திருக்கக்கூடாதென்று கண்டு, நடுங்கிவந்து, அவர்முன்பாகச் சாஷ்டாங்கமாய் விழுந்து, தான் அவரைத் தொட்டகாரணத்தையும், உடனே குணம் அடைந்ததையும் எல்லாச் சனங்களுக்கும் முன்பாக அவருக்கறிவித்தாள்.

௪௮ அவர் அவளுடனேசொன்னது, மகளே, சந்தோஷமாயிரு. உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. * சமாதானத்தோடே போவென்றார். * எ. ரு௰.

௪௯. அவர் அப்படிப் பேசிக்கொண்டிருக்கை யில் ஜெப ஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து ஒருவன்வந்து, அவனைநோக்கி, உம்முடைய குமாரத்தி இறந்துபோனாள். போதகரை (வீணி)வருத்தப்படுத்தாதிருமென்றான்.

௫௰. இயேசுவானவர் அதைக்கேட்டு யாவீரு என்பவனைநோக்கி, நீர் பயப்படாமல் விசுவாசமாயிரும். அப்பொழுது இரட்சிக்கப்படுவாளென்றார்.

௫௧. பின்பு அவர் வீட்டிலே சேர்ந்தபொழுது, * பேதுருவையும், யாக்கோபையும், யோவானையும், பெண்ணுடைய தகப்பனையும், தாயையுந்தவிர மற்றொருவரும் உள்ளே பிரவேசிக்கிறதற்கு இடங்கொடாமல், * மத். ௰௭. ௧; ௨௬. ௩௭.

௫௨. எல்லாரும் அவளைக்குறித்து அழுது துக்கங்கொண்டாடுகிறதைக் (கண்டு) நீங்கள் அழவேண்டாம். அவள் இறந்துபோகவில்லை. நித்திரைபண்ணுகிறாளென்றார்.

௫௩. அவள் இறந்துபோனாளென்று அவர்கள் அறிந்து அவரைக்குறித்து நகைத்தார்கள்.

௫௪ பின்பு அவர் எல்லாரையும் வெளியே போகப்பண்ணி, அவளுடைய கையைப்பிடித்துப் பிள்ளையே, எழுந்திருவென்று கூப்பிட்டார்.

௫௫. * உடனே அவளுடைய ஆவி திரும்பி வந்தபடியால், அவள் எழுந்திருந்தாள். அவளுக்குச் சாப்பாடு கொடுக்கும்படிக்குக் கட்டளையிட்டார். * எ.௰௫; யோவ. ௰௧. ௪௪.

௫௬. அவளுடைய தாய், தகப்பன்மார் பிரமித்தார்கள். அப்பொழுது நடந்ததை யொருவருக்குஞ் சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

## ௯. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத் தம்முடைய அப்போஸ்தலர்களை அற்புதங்கள்செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. (௰௭) அவர் ஐயாயிரம் பேரைப்போஷித்தது. (௰௮) உலகத்தார் தம்மைக்குறித்து எவ்விதமாய் நினைக்கிறார் களென்றுகேட்டு, தம்முடைய பாடுகளை முன்னறிவித்து, (௨௯) தம்முடைய பொறுமையை மாதிரியாகக்காண்பித்தது. (௨௮) அவர் மறுரூபப்பட்டது. (௩௭) சந்திரரோகியைச்சுகமாக்கினது. (௪௩) தம்முடைய பாடுகளை மறுபடியுஞ் சீஷர்களுக்கு முன்னறிவித்தது. (௪௯) தாழ்மையாய் நடந்து, (௫௧) குரோதங்கொள்ளாமல், யாவரோடும் சாந்தமாயிருக்க அவர்களைப்படிப்பித்தது. (௫௭) தங்கள் சுய இஷ்டப்படி ஒப்புவாரானாலும், அநேகர் கிறிஸ்துவைப் பின்செல்லுவார்களென்பது.]

பின்பு * அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரைக் கூடிவரவழைத்து, எந்தப் பசாசுகளையும், வியாதிகளையுமநீக்குவதற்கு வல்லமையையும், அதிகாரத்தையும் அவர்களுக்குக்கொடுத்து, * மத். ௰. ௧; மாற். ௬. ௭-௰௩.

௨. பராபரனுடைய இராசசியத்தைக்குறித்துப் பிரசங்கிக்கும்படிக்கும், பிணியாளிகளைச் சொஸ்தமாக்கும்படிக்கும் அவர்களை யனுப்ப,

௩. அவர்களுடனேசொன்னது, வழிக்குத் தடிகளையாவது, பையையாவது, அப்பத்தையாவது, காசையாவது எடுத்துக்கொள்ளாதிருங்கள். இரண்டங்கிகளையுங் கொண்டுபோகவேண்டாம்.

௪. நீங்கள் பிரவேசிக்கும் வீடு எதுவோ, அதிலே நீங்கள் புறப்படுகிறவரைக்குந் தங்குங்கள்.

௫. * உங்களை யேற்றுக்கொள்ளாதவர்களெவர்களோ, அவர்களுடைய பட்டினத்தைவிட்டுப் புறப்படுகிறபொழுது, அவர்களுக்கு விரோதமான சாட்சிக்காக உங்கள் கால்களின் தூளை உதறிப்போடுங்களென்று சொல்லி யனுப்பினார். * ௰. ௰, ௰௧.

௬. அந்தப்படி யவர்கள் புறப்பட்டுக் கிராமங்கள்தோறும்போயத் திரிந்து சுவிசேஷத்தைப் பிரசங்கித்துப் (பிணியாளிகளைக்) குணமாக்கினார்கள்.

௭. * அக்காலத்திலே காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதே அவராலே செய்யப்பட்ட யாவையுங் கேள்விப்பட்டுச் சிலர் யோவான் மரித்தோரிலிருந்தானென்றும், * மத். ௰௪. ௧, ௨.

௮. சிலர் எலியா தோன்றினானென்றும், சிலர் பழைய தீர்க்கதரிசிகளிலொருவன் உயிர் அடைந்தெழுந்தானென்றுஞ் சொன்னபடியினாலே கலக்கம் அடைந்து,

௯. யோவானை நான் சிரச்சேதம்பண்ணினேன். இப்படிப்பட்டவைகளைச்செய்ய நான் கேள்விப்படுகிற இவன்யாவனென்று ஏரோதேசொல்லி, அவரைப்பார்க்கவிரும்பினான்.

௰. * அப்போஸ்தலர்கள் திரும்பிவந்து,

உசு. * பினபு கலிலேயாநாட்டுக்கெதிரான கதரேனர்தேசத்திலேசேர்ந்தார்கள்.
* மத். அ. உஅ—கூச; மாறகு. ரு. க-உய.

உஎ. அவர் அக்கரையிலிறங்கினபொழுது அநேகநாளாயப்பசாசுக்கள் பிடித்தவனுமாய, வஸ்திரந்தரியாதவனுமாய, வீட்டிலே தங்காமற பிரேதக்கல்லறைகளிலே தங்கினவனுமாயிருந்த அப்பட்டினத்து மனிதனொருவன அவருக்கெதிராகவந்தான. அநேககாலம அந்த அசுத்த ஆவியவனைப்பிடித்திருந்தது.

உஅ அல்லாமலும, அவன சங்கிலிகளாலும, விலங்குகளாலுங்கட்டப்பட்டுக் காவலபண்ணப்பட்டிருந்தும அவன விலங்குகளைத் தறித்துப்போட்டுப் பசாசினால வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டான. ஆதலால இயேசுவானவர் அந்த ஆவியவனைவிட்டுப்போகும்படிக்குக்கட்டளையிட்டார்.

உகூ. ஆனபடியினாலே அவன இயேசுவானவரைக்கண்டபொழுது கூக்குரலிட்டுஅவருககுமுனபாகவிழுந்து இயேசுவே, உன்னதமானபராபரனுடையகுமாரனே, எனக்கும, உமக்குமஎன்ன! என்னைவேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேனென்றான.

ஙய. அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, உன்பேரென்னவென்றுகேட்டார். அதற்கவன, இலேகியோனென்று * சொன்னான. அநேகம்பசாசுக்கள் அவனுக்குட்புகுந்தபடியால, அந்தப்பேர் அவனுக்குணடாயிற்று.

ஙக. அல்லாமலுந்தங்களைப் பாதாளத்திறகுப்போகும்படி கட்டளையிடாதபடிக்கு அவைகள அவரைவேண்டிக்கொண்டன.

ஙஉ. அப்பொழுது அவ்விடத்திலே அநேகம்பன்றிகள கூட்டமாய மலையிலேமேய்ந்துகொண்டிருந்தன. அவைகள அந்தப்பன்றிகளுக்குட்பிரவேசிக்கும்படிஉத்தரவுகொடுக்கவேணடுமென்று அவரைவேண்டிக்கொண்டன. அப்படியேயவைகளுக்கு உத்தரவுகொடுத்தார்.

ஙங. உடனே பசாசுக்கள அந்தமனிதனைவிட்டுநீங்கிப்பன்றிகளுக்குட்புகுந்தன. அப்பொழுது அந்தப்பன்றிக்கூட்டம உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலேபாய்ந்து அமிழ்ந்துபோயிற்று.

ஙச. அவைகளை மேய்த்தவர்கள அதைக்கணடு ஓடிப்போயப் பட்டினத்திலும, வெளிப்புறங்களிலும அறிவித்தார்கள.

ஙரு. அப்படிநடந்ததைச் சனங்களபார்க்கும்படிக்குப் புறப்பட்டு, இயேசுவினிடத்திறபோயப் பசாசுக்களவிட்டுப் போனமனிதன இயேசுவினுடைய பாதங்களருகே வஸ்திரந்தரித்தவனும் உணர்ககாந்து புத்தியடைந்திருக்கிறதைக்கணடு பயப்பட்டார்கள.

ஙசு. பசாசுக்கள பிடித்திருந்தவன இரட்சிக்கப்பட்ட வகையைக் கணடவர்களும அதையவர்களுக்கு அறிவித்தார்கள.

ஙஎ. அப்பொழுது கதரேனருடையசுற்றுத்தேசத்தினதிரளான சனங்களெல்லாரும மிகுந்தபயம அடைந்தவர்களானபடியினாலே தங்களைவிட்டுப்போகும்படிக்கு அவரை வேண்டிக்கொணடார்கள. அந்தப்படியவர் படவிலேறித்திரும்பினார்.

ஙஅ. பசாசுக்கள விட்டுப்போன மனிதன அவருடனேகூடப் போயிருக்கும்படிக்கு அவரிடத்திலஉத்தரவுகேட்டுக்கொண்டான.

ஙகூ. இயேசுவானவர் அவனைநோக்கி நீ உனவீட்டிறகுத்திரும்பிப்போயப் * பராபரன உனக்குச்செய்த விசேஷங்களையறிவிப்பாயாகவென்றுசொல்லி யனுப்பிவிட்டார். அந்தப்படி யவனபோய்த் தனக்கு இயேசுவானவர்செய்த விசேஷங்களைப் பட்டினத்திலெங்கும பிரசித்தம பணணினான.
* மாற. ரு. யகூ, உய.

சய. பினபு இயேசுவானவர் திரும்பிவந்தபொழுது அவர்வரககாத்துக்கொணடிருந்த சனங்களெல்லாரும அவரையுபசரணைசெய்தார்கள.

சக. * அப்பொழுது செப ஆலயத்தலைவனாயாவீருஎன்பவன வந்து இயேசுவின பாதங்களிடத்திலவிழுந்து தனக்குணடான பன்னிரணடு வயதுள்ள ஒரேகுமாரத்திமரணத்திறகேதுவாயிருந்தபடியினாலே, * மத். கூ. யஅ, யகூ; மாற். ரு. உஉ.

சஉ. தன வீட்டிலேவரும்படிக்கு அவரை வேண்டிக்கொணடான. அவர் அவனுடனே கூடப்போகையிற சனங்கள அவரைநெருக்கினார்கள.

சங. அப்பொழுது * பன்னிரணடுவருஷம பெரும்பாடுபட்டுத் தனபொருள்களையாவையும்பரிகாரிகளுக்குச்செலவழித்து ஒருவராலுஞ்சுகமடையாத ஒருஸ்திரி (யஉருக்குப) பினனாலேசேர்ந்து,

சச. அவருடையவஸ்திரத்தின ஓரத்தைத் தொட்டான. உடனேயவளுடைய இரத்தவூறல் நின்றுபோயிற்று. * மத் கூ.உய-உஉ.

சரு. அப்பொழுது இயேசுவானவர் என்னைத்தொட்டவர்யாரென்றார். தாங்கள அறியோமென்று எல்லாருஞ் சொன்னபொழுது பேதுருவும, அவனோடிருந்தவர்களும அவரைநோக்கி, ஐயரே, சனங்கள உம்மைநெருக்கி, புரஞ்சிக்கொணடிருக்கிறார்களே. அப்படியிருக்க, என்னைத்தொட்டவர் யாரென்று எப்படிக்கேட்கிறீரென்றார்கள.

சசு. இயேசுவானவர்சொன்னது, என்னி

* இலேகியோனென்பதற்கு ஏறக்குறைய நாலாயிரம்பேரென்று அருத்தமாம.

விருநது பலம புறபபடடதை யறிநதிருககிறேன. ஆகையால ஒருவர் என்னைததொடட ராணடென்றார்.

௪எ. அபபொழுது ஸதிரீயானவள மறைநதிருககக்கூடாதென்று கணடு, நடுஙகிவநது, அவர்முனபாகச சாஷடாஙகமாயவணஙகி, தான அவரைத தொடடகாரணததையும, உடனே குணம அடைநததையும எலலாச சனஙகளுககுமுனபாக அவருககறிவிததாள.

௪அ அவர் அவளுடனேசொன்னது, மகளே, சநதோஷமாயிரு. உன விசுவாசமஉன்னை இரட்சிததது. * சமாதானததோடேபோவென்றார். * எ. ௫0.

௪௯. அவர் அபபடிப பேசிககொணடிருககையில செப ஆலயததலைவனுடையவீடடிலிருநது ஒருவனவநது, அவனைநோககி, உமமுடையகுமாரததி இறநதுபோனாள. போதகரை (யினி)வருததப்படுததாதிருமென்றான.

௫0. இயேசுவானவர் அதைககேடடு யாவீருவென்பவனைநோககி, நீர் பயப்படாமல விசுவாசமாயிரும. அபபொழுது இரட்சிககப்படுவாளென்றார்.

௫க. பினபு அவர் வீடடிலே சேர்நதபொழுது, * பேதுருவையும, யாககோபையும, யோவானையும, பெணணுடைய தகபபனையும, தாயையுந்தவிர மற்றொருவரும உளளே பிரவேசிககிறதறகு இடஙகொடாமல, * மத. ௰எ. க; உ௬. ௩எ.

௫உ. எலலாரும அவளைககுறிதது அழுது புலமபிககொணடாடுகிறதைக (கணடு) நீஙகள அழவேணடாம. அவள இறநதுபோகவிலலை. நிததிரைபணணுகிறாளென்றார்.

௫௩. அவள இறநதுபோனாளென்று அவர்கள அறிநது அவரைககுறிததுநகைததார்கள.

௫௪. பினபு அவர் எலலாரையும வெளியேபோகபபணணி, அவளுடைய கையைபபிடிததுப பிளளையே, எழுநதிருவென்று கூபபிடடார்.

௫௫. * உடனே அவளுடையஆவி திருமபிவநதபடியால, அவள எழுநதிருநதாள. அவளுககுச சாபபாடு கொடுககுமபடிககுக்கடடளையிடடார். * எ.௰௫; யோவ. ௰க. ௪௪.

௫௬. அவளுடைய தாய, தகபபனமார் பிரமிததார்கள. அபபொழுது நடநததையொருவருககும சொலலாதபடிககு அவர்களுககுக்கடடளையிடடார்.

## கூ. அதிகாரம்.

[(க) கிறிஸது தமமுடைய அபபோஸதலர்களை அற்புதஙகளசெயயவும, பிரசஙகிககவும அனுபபினது. (௰எ) அவர் ஐயாயிரம பேரைபபோஷிததது. (௰அ) உலகததார் தமமைககுறிதது எவவிதமாய நினைககிறார்களென்றுகேடடு, தமமுடைய பாடுகளை முன்னறிவிததது, (உ௩) தமமுடைய பொறுமையை மாதிரியாகக்காணபிததது. (உ௮) அவர் மறுரூபப்படடது. (௩எ) சநதிரரோகியைச சுகமாககினது. (௪௩) தமமுடைய பாடுகளை மறுபடியும சீஷர்களுககு முன்னறிவிததது. (௪௬) தாழமையாயநடநது, (௫௩) குரோதஙகொளளாமல, யாவரோடும சாநதமாயிருகக அவர்களைப்படிபபிததது. (௫எ) தஙகள சுய இஷடபபடி ஒபபுவாராலுல, அநேகர் கிறிஸதுவைப பினசெலலுவார்களென்பது.]

பினபு * அவர் தமமுடைய பனனிரணடு சீஷரைக கூடிவரவழைதது, எநதப பசாசுககளையும, வியாதிகளையுமநீககுவதறகு வலலமையையும, அதிகாரததையும அவர்களுககுககொடுதது, * மத. ௰. க; மாற. ௬. எ-௰௩.

உ. பராபரனுடைய இராசசியததைககுறிததுப பிரசஙகிககுமபடிககும, பிணியாளிகளைச சொஸதமாககுமபடிககும அவர்களை யனுப்ப,

௩. அவர்களுடனேசொன்னது, வழிககுத தடிகளையாவது, பையையாவது, அப்பததையாவது, காசையாவது எடுததுககொளளாதிருஙகள. இரணடஙகிகளையும கொணடுபோகவேணடாம.

௪. நீஙகள பிரவேசிககும வீடு எதுவோ, அதிலே நீஙகள புறபபடுகிறவரைககுந தஙகுஙகள.

௫. * உஙகளை யேறறுககொளளாதவர்களெவர்களோ, அவர்களுடைய படடினததைவிடடுப புறபபடுகிறபொழுது, அவர்களுககுவிரோதமான சாட்சிககாக உஙகள கால்களின்தூளை உதறிபபோடுஙகளென்று சொலலி யனுபபினார். * ௰. ௰, ௰க.

௬. அநதபபடி யவர்கள புறபபடடுக கிராமஙகளதோறுமபோயத் திரிநது சுவிசேஷததைப பிரசஙகிததுப (பிணியாளிகளைக) குணமாககினார்கள.

எ. * அககாலததிலே காற்பஙகு தேசாதிபதியாகிய ஏரோதே அவராலே செயயப்படட யாவையுங கேள்விபபடடுச சிலர் யோவான மரிததோரிலிருநதானென்றும,

* மத். ௰௪. க, உ.

அ. சிலர் எலியா தோனறினானென்றும, சிலர் பழைய தீர்ககதரிசிகளிலொருவனஉயிர் அடைநதெழுநதானென்று சொன்னபடியினாலே கலககம அடைநது,

௯. யோவானை நான சிரச்சேதமபணணினேன. இப்படிப்படடவைகளைசசெயயநான கேள்விபபடுகிற இவனயாவனென்று ஏரோதே சொலலி, அவரைபபார்ககவிருமபினான.

௰. * அபபோஸதலர்கள திருமபிவநது,

தாங்கள் செய்ததியாவையும் அவருக்கு விவரித்துச்சொன்னார்கள். அப்பொழுது அவர் அவர்களைக் கூட்டிக்கொண்டு, தனித்திருக்கும்படிக்குப் பெத்சாயிதா என்னும் பட்டணத்தைச்சேர்ந்த வனாந்தரத்திற்குப்போனார். * மத். ௰௪. ௰௩-௨௧; மாற். ௬. ௩௰.

௰௧. சனங்கள் அதையறிந்து, அவருக்குப் பின்போனார்கள். அவர்களையவர் அங்கிகரித்துக்கொண்டு, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசிச் சொஸ்தம் அடையவேண்டுமென்றிருந்தவர்களைச் சொஸ்தமாக்கினார்.

௰௨. சாயந்தரத்திலே பன்னிருவருஞ்சேர்ந்து, அவரைநோக்கி, இங்கேவனாந்தரமான இடத்திலேயிருக்கிறோம். ஆகையாற் சனங்கள் சுற்றியிருக்கிறபட்டினங்களுக்கும்,ஊர்களுக்கும்போய், விடாய்தீர்ந்து போசனஞ் சம்பாதித்துக்கொள்ளும்படிக்கு அவர்களையனுப்பிவிடவேண்டுமென்றார்கள்.

௰௩. அதற்கு அவர் நீங்களே அவர்களுக்குச் சாப்பாடுகொடுங்களென்றார். ஏறக்குறைய ஐயாயிரம் புருஷரிருந்தபடியினாலே,

௰௪. அவர்கள் சொன்னது, ஐந்து அப்பமும், இரண்டுமீனுமாத்திரம் எங்களிடத்திலுண்டு. ஆகையால் நாங்கள்போய், இந்தச் சனங்களெல்லாருக்காகவும் போசனத்திறகேற்றவைகளை வாங்கிக்கொள்ளாவிட்டால் (திர்ப்தியுண்டாகமாட்டாதே)யென்றார்கள்.

௰௫ அவர் தம்முடைய சீஷருடனேசொன்னது, இவர்கள் ஐம்பதைம்பதாகப் பந்தியிலுளுக்காரும்படிசெய்யுங்களென்றார். அவர்கள் அப்படியே செய்தார்கள். எல்லாரும் உளுக்காந்தார்கள்.

௰௬. அப்பொழுது அவர் அவ்வைந்து அப்பங்களையும், இரண்டுமீன்களையும் எடுத்து, வானத்தை யண்ணாந்து பார்த்து, அவைகளையாசீர்வதித்துப் பிட்டுச் சனங்களின்முன்வைக்கும்படிக்குச் சீஷருக்குக்கொடுத்தார்.

௰௭. எல்லாரும் புசித்துத் திர்ப்தியடைந்தார்கள். அல்லாமலும் பன்னிரண்டுகூடை நிறையச் சேஷமானவைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டன.

௰௮ * பின்பு ஒருநாள் அவர் தம்முடைய சீஷர்கூடவிருக்கத் தனித்துச் செபம்பண்ணும்பொழுது, அவர் அவர்களைநோக்கி, என்னைக்குறித்துச் சனங்களென்னசொல்லுகிறார்களென்றுகேட்டார். * மத். ௰௬. ௰௩-௨௰; மாற். ௮. ௨௭ ௩௰.

௰௯ அவர்கள் மாறுத்தரமாகச் சொன்னது, சிலர் உபமையோவானஸ்நானனென்றும், சிலர் எலியாவென்றும்,சிலர்பழையதீர்க்கதரிசிகளிலொருவன் உயிர் அடைந்தெழுந்தானென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.

௨௰. அவர்சொன்னது, நீங்கள் என்னைக்குறித்து என்ன சொல்லுகிறீர்களென்றார். அதற்குப்பேதுரு, நீர் பராபரனுடைய கிறிஸ்து என்றான்.

௨௧. அப்பொழுது அவர்கள் அதை யொருவருக்குஞ் சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கெட்டியாயக் கட்டளையிட்டார்.

௨௨. அன்றியும் அவர்சொன்னது, மனிதனுடையகுமாரன் அநேகம் பாடுபடவும், மூப்பராலும்,பிரதானஆசாரியராலும்,வேதபாரகராலும் தள்ளப்படவும், கொலைப்படவும், பின்பு மூன்றாநாளிலே உயிரோடெழுந்திருக்கவும்வேண்டுமென்றார்.

௨௩. அல்லாமலும் * அவர் எல்லாருடனேயுஞ்சொன்னது, ஒருவன் எனக்குப் பின்செல்லமனதாயிருந்தால் அவன் தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவைமரத்தைத் தினந்தோறும் எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன். * மத்தேயு. ௰௬. ௨௪; மாற்கு. ௮. ௩௪.

௨௪. என்னத்தினாலென்னில், * தன் சீவனை யிரட்சித்துக்கொள்ளவிரும்புகிறவன் அதை யிழந்துபோவான். என்னிமித்தந் தன் சீவனையிழந்துபோகிறவன் அதை யிரட்சித்துக்கொள்வான். * யோவா. ௰௨. ௨௫.

௨௫. அன்றியும் மனிதனானவன் உலகம் யாவையுஞ் சம்பாதித்துக்கொண்டு, தன்னைத்தான் அழித்தால், அல்லது சேதப்படுத்தினால், அவனுக்கு என்ன இலாபமுண்டாயிருக்கும்?

௨௬. அன்றியும் என்னைக்குறித்தும், என் வசனங்களைக்குறித்தும் வெட்கப்படுகிறவனெவனோ அவனைக்குறித்து மனிதனுடைய குமாரன் தம்முடைய மகிமையோடும்,பிதாவானவருடைய மகிமையோடும், பரிசுத்ததூதருடைய மகிமையோடும் வரும்பொழுது, வெட்கமடைவான்.

௨௭. இங்கே நிற்கிறவர்களிற் சிலர் பராபரனுடைய ஆளுகையைக்காணுமளவும்மரணத்தை யடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௨௮. * இந்த வசனங்களை யவர் சொல்லி ஏறக்குறைய எட்டுநாளானபொழுது, அவர் பேதுருவையும், யோவானையும், யாக்கோபையுங்கூட்டிக்கொண்டு † செபம்பண்ணும்படிக்கு ஒரு மலையிலேறினார். * மத்தே. ௰௭. ௧—௮; மாற். ௯ ௨—௮; † ௬. ௰௨.

௨௯. அவர் செபம்பண்ணுகையில் அவருடைய முகரூபமாறிற்று. அல்லாமலும் அவருடையவஸ்திரம் வெண்மையாகிப் பிரகாசங்கொடுத்தது.

௩௰ அன்றியும் மோசே, எலியா இவ்விரண்டுபேரும் மகிமையோடே காணப்பட்டு அவருடனேபேசி,

௩௧. அவர் எருசலேமிலே நிறைவேறும் மரணத்தைக்குறித்துச் சமபாஷணைபண்ணிக்கொண்டார்கள்.

௩௨. பேதுருவும், அவனோடிருந்தவர்களுங் கனமான நித்திரையடைந்து, விழித்துக்கொண்டபொழுது அவருடைய மகிமையையும், அவரிடத்தில் நின்ற அவ்விரண்டுபேரையுங் கண்டார்கள்.

௩௩. அன்றியும் அவ்விருவரும் அவரைவிட்டுப் பிரிந்துபோகையில், பேதுரு இயேசுவை நோக்கி, ஐயரே, நாமிங்கேயிருக்கிறது நல்லது. நாங்கள் உமக்கும், மோசேயுக்கும், எலியாவுக்கும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்களையுண்டாக்குவோமென்று தகுதியான யோசனைபண்ணாமற் சொன்னான்.

௩௪. அப்படி யவன் சொல்லுகிறபொழுது ஒரு மேகம் வந்து அவர்கள்மேலே நிழலிட்டது. அவ்விருவரும் மேகத்திற்குட் பிரவேசிக்கையிற் சீஷர் பயந்தார்கள்.

௩௫. அப்பொழுது *இவர் (எனக்கு) அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன். இவருக்குச் செவிகொடுக்கவென்று மேகத்திலிருந்து சத்தமுண்டாயிற்று. * ௩. ௨௨.

௩௬. அந்தச்சத்தமுண்டாகுகையில் இயேசுவானவர் மாத்திரமிருந்தார். பின்பு அவர்கள் கண்டவைகளிலொன்றையும் அக்காலத்திலே யொருவருக்கும் அறிவியாமல் மவுனமாயிருந்தார்கள்.

௩௭. மறுநாளிலே அவர்கள் மலையிலிருந்திறங்கினபொழுது அநேகசனங்கள் அவருக்கெதிர்கொண்டுவந்தார்கள்.

௩௮. * அல்லாமலும் அவர்களிலொருவன் கூப்பிட்டுச்சொன்னது, போதகரே, நீர் என் மகனை நோக்கிப்பார்க்கும்படிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். அவன் எனக்கு ஒரேபிள்ளையானவன். * மத். ௰௭. ௰௪-௨௧; மாற்கு. ௯. ௰௪—௨௯.

௩௯. ஒரு ஆவி யவனைப்பிடிக்கிறது. உடனே அலறுகிறான். அவனை நுரைதள்ள அலக்கழித்து அவனைக்கசக்கின பின்பும் அவனைவிட்டு நீங்குகிறது அரிதாயிருக்கின்றது.

௪௰. அதைத்துரத்தும்படிக்கு உம்முடைய சீஷரை வேண்டிக்கொண்டேன். அவர்களுக்கு அப்படிச்செய்யத் திராணியில்லையென்றான்.

௪௧. இயேசுவானவர் மாறுத்தரமாகச் சொன்னது, விசுவாசமில்லாத மாறுபாடான சந்ததியே, எதுவரைக்கும் உங்களிடத்திலிருந்து உங்களிற் பொறுமையாயிருப்பேனென்றுசொல்லிப் பின்பு உன் மகனை யிங்கேகொண்டுவாவென்றார்.

௪௨. அவன் வருகிறபொழுது பசாசு அவனைநொறுக்கி அலக்கழித்தது. இயேசுவானவர் அந்த அசுத்த ஆவியையதட்டிப் பிள்ளையைச்சுகமாக்கி அவனைத்தகப்பனுக்கு ஒப்புக்கொடுத்தார்.

௪௩. (அதைக்கண்ட) எல்லாரும் பராபரனுடைய மகத்துவத்தைக்குறித்துப் பிரமித்தார்கள். இயேசுவானவர் செய்த எல்லாவற்றையுங்குறித்து யாவரும் ஆச்சரியப்படுகிறபொழுது அவர் தம்முடைய சீஷரை நோக்கிச்சொன்னது,

௪௪. மனிதனுடைய குமாரன் *மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுவான். இந்த வசனங்களை நீங்கள் நன்றாய்க்கேட்டுக்காத்துக்கொள்ளக்கடவீர்களென்றார். * ௰௮. ௩௨-௩௪.

௪௫. அவர்கள் அந்த வசனங்களின் கருத்தையறியாமலிருந்தார்கள். அது அவர்களுக்குத் தோன்றாதபடிக்கு மறைபொருளாயிருந்தது. அல்லாமலும் அவர்கள் அந்த வசனங்களைக்குறித்து அவரிடத்தில் விசாரித்துக்கொள்ளுகிறதற்குப் பயப்பட்டார்கள்.

௪௬. ஒருநாள் * அவர்கள் தங்களில் எவன் பெரியவனாயிருப்பானென்று யோசனைபண்ணிக்கொண்டார்கள். * மாற். ௯. ௩௩-௩௭.

௪௭. * அவர்களுடைய இருதயத்தின் யோசனையை இயேசுவானவர் அறிந்து ஒரு பிள்ளையையெடுத்து அதைத் தமக்கு அருகே நிறுத்தி, * மத்தே. ௰௮. ௨, ௩.

௪௮. இந்தச்சிறுபிள்ளையை என்நாமத்தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னையே ஏற்றுக்கொள்ளுகிறான். என்னையேற்றுக்கொள்ளுகிறவன் என்னையனுப்பினவரையேற்றுக்கொள்ளுகிறான். ஆதலால், * உங்களெல்லாரிலுஞ் சிறியவனாயிருக்கிறவனே பெரியவனாயிருப்பானென்றார். * ௰௮. ௰௪.

௪௯. அப்பொழுது யோவான் (அவரை நோக்கி) ஐயரே, உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத் துரத்துகிற ஒருவனை நாங்கள் கண்டு அவன் எங்களுடனே கூட (உமக்குப்) பின்செல்லாதபடியினாலே அவனுக்குத் தடைபண்ணினோமென்றான்.

௫௰. அதற்கு இயேசுவானவர் சொன்னது, நமக்கு விரோதமாயிராதவன் நம்முடைய பங்கிலிருக்கிறான். ஆகையால், நீங்கள் அவனுக்குத் தடைபண்ணவேண்டாமென்றார்.

௫௧. அவர் எடுக்கப்படும்படிக்குக் காலஞ் சமீபமானபொழுது அவர் எருசலேமுக்குப் போகக் கண்ணோட்டமாகித் தமக்குமுன்பாகத் தூதர்களையனுப்பினார்.

௫௨. அவர்கள்போய் அவருக்காக இடம் எத்தனம்பண்ணும்படிக்குச் சமாரியருடைய ஒருகிராமத்திலே பிரவேசித்தார்கள்.

௫௩. அவர் எருசலேம் நகரத்திற்குப் போகிறவரானபடியினாலே அவ்வூரார் அவரையேற்றுக்கொள்ளவில்லை.

௫௪. அவருடைய சீஷராகிய யாக்கோபும், யோவானும் அதைக்கண்டு, ஆண்டவரே, * எலியாவானவர் செய்ததுபோல நாங்கள் இவர்களையழிக்கும்படிக்கு வானத்திலிருந்து அக்கினிவரும்படி சொல்லச் சித்தமாயிருக்கிறீராவென்றார்கள். * ௨. இராசா. ௧. ௰—௰௨.

௫௫. அப்பொழுது * அவர் திரும்பி, அவர்களையதட்டி, நீங்கள் இன்ன ஆவியையுடையவர்களென்றறியீர்களா! * மத். ௰௬. ௨௩.

௫௬. மனிதனுடைய குமாரன் மனிதருடைய ஜீவனையழிக்கும்படிக்கல்ல, * இரட்சிக்கும்படிக்கு வந்தானேயென்றார். * யோ. ௩. ௰௭.

௫௭. பின்பு வேறொரு கிராமத்திற்குப்போனார்கள். அவர்கள் வழியிலே போகையிலொருவன் * அவரை நோக்கி, ஆண்டவரே, நீர்போகும் இடமெங்கேயோ அங்கேயுமக்குப்பின் செல்லுவேனென்றான். * மத். ௮. ௰௯-௨௨.

௫௮. அவனுடனே இயேசுவானவர் சொன்னது, நரிகளுக்குக் குழிகளும், ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு. மனிதனுடைய குமாரனமாத்திரந் தன் தலையைச் சாய்க்கிறதற்கு இடமில்லாதவனாயிருக்கிறானென்றார்.

௫௯. வேறொருவனை யவர் நோக்கி, எனக்குப் பின்சென்றுவாவென்றார். (அதற்கு) அவன் சொன்னது, ஆண்டவரே, முன்பு நான் போய் என் தகப்பனை யடக்கம்பண்ணும்படிக்கு உத்தரவுகொடுக்கவேண்டுமென்றான்.

௬௰. அதற்கு இயேசுவானவர் சொன்னது, மரித்தோர் தங்களிடத்தில் மரித்தவர்களை யடக்கம்பண்ணட்டும். நீ புறப்பட்டுப் பராபரனுடைய ஆளுகையைப்பிரசித்தம்பண்ணென்றார்.

௬௧. பின்பு வேறொருவன் வந்து உமக்குப் பின்செல்லுவேன். அதற்குமுன்பு நான் போய் என்வீட்டிலிருக்கிறவர்களிடத்தில் அனுப்பிக்கொண்டுவரும்படி உத்தரவுகொடுமென்றான்.

௬௨. அவனுடனே இயேசுவானவர் சொன்னது, கலப்பையைப் பிடித்துக்கொண்டு * பின்னுக்குப்பார்க்கிற எவனும் பராபரனுடைய இராச்சியத்திற்குத் தகுதியானவனல்லவென்றார். * பிலிப்பி. ௩. ௰௪.

## ௰. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து எழுபது சீஷர்களை அற்புதங்கள்செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. (௰௭) அவர்களைத் தாழ்மையாயிருக்கவேண்டியதென்றும், இன்னதின்னதிற் சந்தோஷப்படவேண்டியதென்றும் புத்திசொன்னது. (௨௧) தம்முடைய பிதாவின் கிருபைக்காக அவரை ஸ்தோத்திரம்பண்ணி, (௨௩) தம்முடைய சபையின் மேன்மையைப் பாராட்டினது. (௨௫) நித்திய ஜீவனை அடையும்வழியையும், உள் இரக்கத்தைவிரும்புகிறவன் உண்டாகிறவனென்கிறதையும் படிப்பித்து, (௪௧) மார்த்தாளைக் கடிந்துகொண்டு, அவளுடைய சகோதரியாளைப் புகழ்ந்தது.]

பின்பு கர்த்தர் * வேறு எழுபதுபேரை நியமித்துத் தாம்போகச்சித்தமானபட்டினம், ஊர்களியாவுக்கும் அவர்களை இருவரிருவராகத் தமக்குமுன்னேயனுப்புகையில் அவர்களுடனே சொன்னதாவது; அறுப்பு மிகுதியாகவேயிருக்கின்றது. * ௪. மோசே. ௰௧. ௰௬—௨௪.

௨. * வேலையாட்கள் சிலர்மாத்திரமிருக்கிறார்கள். ஆகையால் அறுப்புக்கெசமான அறுக்கிறதற்குத் (அதிக) வேலையாட்களையனுப்பும்படிக்கு † அவரை வேண்டிக்கொள்ளுங்கள். * மத்தே. ௯. ௩௭, ௩௮; † ௨. தெச. ௩. ௧, ௨.

௩. நீங்கள்புறப்படுங்கள். * ஆடுகளைக் கோனாய்களுக்குள்ளே அனுப்புகிறதுபோல உங்களையனுப்புகிறேன். * மத்தே. ௰. ௰௬.

௪. * பணப்பையையாவது, சாமான்பையையாவது, பாதரட்சைகளையாவது கூட எடுத்துக்கொண்டுபோகாமலும், வழியிலொருவரையும் வினவுதல்செய்யாமலுமிருங்கள். * ௯. ௩; மத். ௰. ௯—௰௩.

௫. ஒரு வீட்டிற் பிரவேசிக்கிறபொழுது, இந்தவீட்டாருக்குச் சமாதானசவுக்கியமுண்டாவதாகவென்று முதலாவது சொல்லுங்கள்.

௬. அவ்விடத்திலே சமாதான சவுக்கியத்திற்குப் பாத்திரனொருவனிருந்தால் நீங்கள் வாழ்த்தியசமாதான சவுக்கியம் அவனிடத்திலேதங்கும். அப்படிப்பட்டவனல்லாதிருந்தால் அது உங்களிடமாய்த் திரும்பும்.

௭. அந்தவீட்டிலே நீங்களிருந்து வேலையாள் தன் கூலிக்குப்பாத்திரனானபடியினாலே அவர்களுக்குண்டாயிருக்கிறவைகளைப் போசனபானம்பண்ணுங்கள். வீடுகள்தோறும்போகாதிருங்கள்.

௮. ஒரு பட்டினத்தில் நீங்கள் சேர்ந்தபொழுது அங்கே அவர்கள் உங்களைச்சேர்த்துக்கொண்டால் உங்கள் முன்வைக்கிறவைகளைப்புசித்து,

௯. அவ்விடத்திலுள்ள பிணியாளிகளைச் சுகமாக்கிப் பராபரனுடைய ஆளுகை உங்களுக்குச் சமீபமாய்வந்ததென்று அவர்களுக்கு அறிவியுங்கள்.

௰. * ஒருபட்டினத்திலே நீங்கள்பிரவேசித்தபொழுது அங்கே அவர்கள் உங்களைச்சேர்த்துக்கொள்ளாதிருந்தால், அதின் வீதிகளில் நீங்கள்புறப்பட்டு, * ௯. ௫.

௰௧. எங்களில் ஒட்டின உங்கள்பட்டினத்தின்புழுதியையும் உங்களுக்கெதிராகத் துடைத்துப்போடுகிறோம். ஆகிலும் பராபரனுடைய ஆளுகை யுங்களுக்குச்சமீபமாய் வந்ததென்கிறதை யறியக்கடவீர்களென்று சொல்லுங்கள்.

௰௨. அந்நாளிலே சோதோம்பட்டினத்தாரிலும் அப்படிப்பட்ட பட்டினத்தார் அதிகத்தண்டிப்பை யடைவார்களென்றுங்களுக்குச்சொல்லுகிறேன்.

௰௩. * ஐயோ கோராசினபட்டினததாரே, ஐயோ பெதசாயிதாப பட்டினததாரே, உஙகளுககு வேதனைவரும. உஙகளுககுள ளே நடநத பலததசெயலைகள திரு, சீதோ னெனனுமபட்டினஙகளில் நடநதனவானுல் அவர்கள சீககிரமாயத (துககததினுலே) இரட்டையுடுததிச சாமபலிலுமுளுககாந து மனநதிருமபியிருபபார்கள. * மததே. ௰௧. ௨௧—௨௪.

௰௪. ஆகையால, நியாயததீர்பபுநாளிலே திரு, சீதோனபட்டினததாருககுவருந தண டிபபு எளிதாயிருககும. நீஙகள அதிகதண டிபபையடைவீர்கள.

௰௫. வானபரியநதமுயர்நத கபபர்நாகூம பட்டினததாரே, நீஙகளும பாதாளபரியந தந் தாழததபபடுவீர்களெனறுசொலலி,

௰௬. பினபு மறுபடியுஞ சீஷரைநோககி, உஙகளுககுசசெவிகொடுககிறவன எனககு சசெவிகொடுககிறன. உஙகளைததளளுகிற வன எனனைத்தளளுகிறன. * எனனைத்தள ளுகிறவன எனனையனுபபினவரைத் தளளுகி றனென்றுசொலலியனுபபினுர். * யத். ௰. ௪௰; யோவா. ௰௩. ௨௰.

௰௭. பினபு அநத எழுபதுபேருஞ சந தோஷததுடனே திருமபிவநது ஆண்டவ ரே, பசாசுககளும உமமுடைய நாமததினு லேயெஙகளுககுக கீழபபட்டிருககினறன வெனறுர்கள.

௰௮. அபபொழுது அவர் அவர்களைநோக கி, சாததானவானததிலிருநது மினனைப போலவிழுகிறதைககணடேன.

௰௯. இதோ, * பாமபுகளமேலும், தேள்க ளமேலும், சததுருவின வலலமையெலலா வறறினமேலும், மிதிககததககதாக அதிகா ரததையுஙகளுககுககொடுககிறேன. ஒனறு ம உஙகளைசசேதபபடுததமாட்டாது. * உரோ. ௰௬. ௨௰; சஙகீ. ௯௧. ௰௩.

௨௰. ஆகிலும ஆவிகள உஙகளுககுககீழப பட்டிருககிறதினுலே நீஙகள சநதோஷப படாமல, * உஙகள நாமஙகள பரமணட லஙகளில எழுதியிருககிறதினுலே சநதோ ஷபபடுஙகளெனறுர். * அறிவி. ௩. ௫.

௨௧. அநநேரததிலே இயேசுவானவர் ஆவி யிலேகளிகூர்நதுசொனனதாவது; * பிதா வே, வானததையும, பூமியையும் ஆளுகிறவ ரே, நீர் இவைகளை (யுலக) ஞானிகளுககும், கலவிமானகளுககும மறைததுப பாலகரு ககுவெளிபபடுததினபடியினுலே, உமமைத துதிசெயகிறேன. ஆ, பிதாவே, அபபடியே யுமககுபபிரியமாயிருநததெனறுசொலலி, * மத. ௰௧. ௨௫.

௨௨ பினபு * சகலமும எனபிதாவினுல எனககு ஒபபுககொடுககப பட்டிருககினற ன. பிதாத்தவிர ஒருவனும குமாரனையறி யான. குமாரனதவிர ஒருவனும பிதாவை யறியான. குமாரன எவனுககு அவரைவெ ளிபபடுததச சித்தமாயிருககிறுரோ அவ னும அவரையறிவானெனறுசொலலி, * மத. ௨௮. ௰௮.

௨௩. பினபுசீஷரைமாததிரமநோககி, நீங் கள இவைகளைப பார்ககிறவர்களானபடியி னுலே நீஙகள பாககியமுளளவர்கள.

௨௪. அநேகதீர்ககதரிசிகளும, இராசாக களுமநீஙகள பார்ககிறவைகளைககாணவும, நீஙகளகேட்கிறவைகளைககேட்கவும, விரு மபியும, காணுமலும், கேளாமலும போனுர் களெனறுஉங்களுககுச்சொலலுகிறேனென் றுர். * க. பேது. க. ௰—௰௨.

௨௫. அபபொழுது நியாயசாஸ்திரியொ ருவன எழுநதிருநது, அவரைச்சோதிககும படிககுடபோதகரே, நிததியசீவனைசசுதந தரிததுககொளளுமபடிககு, நான என்ன செய்யவேணடுமெனறுகேட்டான.

௨௬. அதறகு அவர், வேதபபிரமாணததி லே என்ன எழுதியிருககினறது? எனனதை யறிநதிருககிறீரெனறுர்!

௨௭. அவன, பிரதியுததரமாககச சொன னது, உனமுழு இருதயததினுலும, உன முழு ஆததுமாவினுலும, உன்முழுபபலத தினுலும், உன்முழுசசிநதையினுலும உன் தேவனுகிய பராபரனிடததில அனபுகூர வும, நீயுனனிடததில அனபுகூருகிறதுபோ லப்பிறனிடததில அனபுகூரவும வேணடுமெ னறெழுதியிருககினறதெனறுன.

௨௮. அவர்சொனனது, நீர்சரியாயசசொ னனீர். நீர்அபபடிசசெயதாற்சீவனையடை வீரெனறுர்.

௨௯. அபபொழுது அவனதனனைநீதிமா னென்று காணபிககமனதாய இயேசுவை நோககி, எனககடுததபிறனயாவனெனறுன!

௩௰. அதறகு இயேசுவானவர் சொனனது, ஒருமனிதன எருசலேம நகரததிலிருநது எரிகோபட்டினததுககுபபோகையிற கள ளர்கையில அகபபட்டான. அவர்கள அவ னுடைய வஸ்திரஙகளைககழறறி, அவனைக காயபபடுததி, அரையுயிராக விட்டுபபோ னுர்கள.

௩௧. அபபொழுது தற்செயலாய ஒரு ஆசாரியன அநதவழியேசெனறு அவனைக கணடுபககமாயவிலகிபபோனுன.

௩௨. அபபடிபபோல ஒரு இலேவியனும அவவிடததிறசேர்நது அவனைககணடுபக்க மாயவிலகிபபோனுன.

௩௩. பினபுசாமாரியனெருவன பிரயாண மாயபபோய அவனிடததிறசேர்நது அவ னைககணடு,

௩௪. உருககமாயிரஙகி அணுகி அவனு டைய காயஙகளிலஎணணெயும், திராட்ச இரசமுமவார்ததுககாயஙகளைககட்டி அவ னைத்தனமிருகததினமேலேறறி ஒருமண்ட

பத்திறக்கொண்டுபோயப் பராமரித்துக்கொண்டு,

௩௫. மறுநாளிலே புறப்படுகிறபோது இரண்டுவெள்ளிக்காசையெடுத்து மண்டபத்தானைசயிலே கொடுத்து, நீ இவனைவிசாரித்துக்கொள். அதிகமாயிவனுக்காக எதையாகிலுஞ்செலவழித்தால அதைநானதிரும்பவரும்பொழுது உனக்குக்கொடுப்பேனென்றான்.

௩௬. அப்படியிருக்கக் கள்ளர்கையில அகப்பட்டவனுக்கு அந்தமூனறுபேரிலெவன் அயலத்தானாயிருந்தான்? உமக்கெப்படித் தோன்றுகின்றதென்றார்.

௩௭. அவனிடத்தில இரக்கஞ்செய்தவனே யென்றான். அப்பொழுது இயேசுவானவர் நீரும்போய அந்தப்படியேசெய்யுமென்றார்.

௩௮. பின்பு அவர்கள்பிரயாணமாய்ப்போகையில அவர் ஒருகிராமத்திறபிரவேசித்தார். அங்கே * மார்த்தாளென்றுபேர்கொண்ட ஒருஸ்திரியவரைத்தனவீட்டிலே யுபசாரஞ்செய்தாள். * யோவா. ௰௧. ௧.

௩௯. அவளுக்குச் சகோதரியானமரியாள இயேசுவின பாதங்களருகேயுட்கார்ந்துகொண்டிருந்து அவருடைய வசனத்திறகுச் செவிகொடுத்தாள.

௪௦. மார்த்தாள மிகவும ஊழியஞ்செய்யக் கவலையுள்ளவளாய அவரிடத்திறசேர்ந்து நின்று ஆண்டவரே, நானமாத்திரம ஊழியஞ்செய்யும்படிக்கு எனசகோதரி யென்னைவிட்டிருக்கிறதைக் குறித்துக் கவலையில்லையா? அவள எனக்கு உதவிசெய்யும்படி சொல்லுமென்றாள.

௪௧. இயேசுவானவர் அவளுக்குமாறுத்தரமாகச்சொன்னது, மார்த்தாளே, மார்த்தாளே, நீ அநேககாரியங்களுக்காகக் கவலைப்பட்டுக் கலக்கமாயிருக்கிறாய.

௪௨. * ஒன்றுமாத்திரயவேண்டும். மரியாளே நல்லபங்கைத் தெரிந்துகொண்டிருக்கிறாள. அது அவளிடத்திலிருந்து எடுக்கப்படுவதில்லையென்றார். * மத். ௬. ௩௩.

## ௰௧. அதிகாரம்.

[(௧) பராபரன நல்ல ஈவுகளைக்கொடுப்பாரென்று ஊக்கமாய்ச்செபமபண்ணப்படிப்பித்து, ஊமையான பிருபசாசைத்துரத்தி, தூஷணமுள்ள பரிசேயரைக்கண்டித்து, (௨௮) ஆசீர்வதிக்கப்பட்டவர்கள இன்னாரென்றுகாண்பித்து, (௨௯) சனங்களுக்குப் பிரசங்கித்து, பரிசேயர், வேதபாரகர், நியாயசாஸ்திரிகள என்பவர்களுடையமாயமான வேஷத்தைக்கண்டித்தது.]

ஒருநாள அவர் ஒரு இடத்திலிருந்து செபமபண்ணி முடித்தபின்பு அவருடையசீஷரிலொருவனவரைநோக்கி, ஆண்டவரே, யோவானதன்சீஷருக்குச் செபமபண்ணும்வகையைப்போதித்ததுபோல்நீரும் எங்களுக்குப் போதிக்கவேண்டுமென்றான்.

௨. அதற்கு அவர்சொன்னது, நீங்கள செபமபண்ணும்பொழுது, * பரமண்டலங்களிலிருக்கிற எங்கள பிதாவே, உமமுடையநாமம் பரிசுத்தமாயத் தொழுதுகொள்ளப்படுவதாக, உமமுடைய ஆளுகைவருவதாக. உமமுடைய சித்தம பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோலப் பூமியிலேயுஞ் செய்யப்படுவதாக. * மத். ௬. ௯-௰௩.

௩. தினந்தோறும எங்களுக்குவேண்டிய ஆகாரத்தைத்தாரும.

௪. எங்களுக்குக் குற்றஞ்செய்தபாவருக்கும நாங்கள மன்னிக்கிறபடியினாலே நீரும எங்கள்பாவங்களை மன்னித்தருளும. நாங்கள குற்றஞ்செய்வதற்கான காரணத்திற பிரவேசியாதபடிசெய்து பொல்லாங்கினின்று எங்களை யிரட்சித்துக்கொள்ளுமென்றுசொல்லுங்களென்றார்.

௫. அன்றியும, அவர் அவர்களுடனேசொன்னதாவது; உங்களிலொருவன பாதிராத்திரியிலே தனக்குச்சிநேகதனானவனிடத்திறகுப்போய்ச் சிநேகிதனே, என்சிநேகிதன பிரயாணமாயஎன்னிடத்தில்வந்திருக்கிறான.

௬. அவன போசனம்பண்ணச்செய்யும்படிக்கு என்னிடத்திலொன்றுமில்லை. ஆகையால, நீ எனக்கு மூன்று அப்பங்களைக் கடனகொடுக்கவேண்டுமென்று கேட்கும்பொழுது,

௭. வீட்டினுள்ளிருக்கிறவன எனக்குத்தொந்தரைசெய்யாதிரு. இப்பொழுது கதவு பூட்டியாயிற்று. என்பிள்ளைகளென்னுடனே கூடப்படுத்துக்கொண்டிருக்கிறார்கள். நான் எழுந்து உனக்குக்கொடுக்கக்கூடாதென்று மாறுத்தரமாகச்சொல்லி,

௮. தனக்கு அவன சிநேகிதனாயிருக்கிறதினாலே யவனுக்குக்கொடாதிருந்தும, பின்பு தன்னை அவன அதிகவருத்தஞ்செய்கிறபடியினாலே எழுந்திருந்து அவனுக்கு வேண்டியபடிக்குக் கொடுப்பானென்றுங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௯. அந்தப்படி நானுங்களுக்குச் சொல்லுகிறதாவது; * வேண்டிக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்களுக்குக்கொடுக்கப்படும. தேடிக்கொள்ளுங்கள. அப்பொழுது கண்டடைவீர்கள. தட்டுங்கள. அப்பொழுது உங்களுக்குத்திறக்கப்படும. * மத். ௭. ௭—௰௧.

௰. எனனத்தினாலெனில், வேண்டிக்கொள்ளுகிற எவனும வாங்கிக்கொள்ளுகிறான. தேடிக்கொள்ளுகிறவன கண்டடைகிறான. தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும.

௰௧. அன்றியும உங்களில தகப்பனானவனிடத்திற் குமாரன அப்பங்கேட்கிறபொழுது அவனுக்குக் கல்லைக்கொடுப்பானோ? மீனைக்

டுதததுவாளெனறெணணிருனெனறு கர்ததர் சொலலி,

௬. பினபு அநீதியுள்ள அநததியாயாதிபதி சொனனதைசசிநதியுஙகள்.

௭. அநதபபடி பராபரன தாநதெரிநது கொணடவர்களைககுறிததுத் தாமதிததுத் தமமைநோககி இரவும,பகலுஙகூபபிடுகிற அவர்களுக்காகப பழிவாஙகாமலிருபபாரா?

௮. சீககிரததில அவர்களுககாகபபழிவாஙகுவாரெனறுஙகளுககுச சொலலுகிறேன ஆகிலும் மனிதனுடையகுமாரனவருமபொழுது பூமியிலேவிசுவாசததைக்காணபாரோவெனறார்.

௯. அனறியுநதஙகளை நீதிமானகளெனறு நமபி மறறவர்களை அறபமாயெணணினசிலருககு அவர்சொனன உவமையாவது,

௰. இரணடுமனிதர் செபமபணணுமபடிககுத தேவாலயததிறகுபபோனார்கள. அவர்களிலொருவன பரிசேயன, மறறவன ஆயககாரன.

௰௧. *பரிசேயனானவன தனிததுநினறுபணணினசெபமாவது, பராபரனே, தான பறிகாரர். அநீதர். விபசாரர். இபபடிபபடட மறறமனிதரைபபோலவும இநத ஆயககாரனைபபோலவுமிராதவனானபடியினாலே உமககுததோததிரஞசெலுததுகிறேன.
* மத. ௬. உ௰.

௰௨. வாரததுக்குளளே யிரணடுதரமுபவாசிககிறேன. எனககுணடான யாவறறிலுமபததிலொனறைச் செலுததுகிறேனெனறான.

௰௩. பினபு ஆயககாரன தூரமாயநினறு தனகணகளையும வானததுக்குயர்ததத்துணியாமல தனமார்பிலே யடிததுககொணடு பராபரனே, பாவியாகிய எனமேலிரககமாயிருமெனறான.

௰௪. அவனலல, இவனே நீதிமானாககபபடடவனாயத தன வீடடுககுததிருமபிபபோனானெனறு உஙகளுககுச சொலலுகிறேன. * தனனையுயர்ததுகிறவன தாழததபபடுவான. தனனைத தாழததுகிறவனே உயர்ததபபடுவானெனறார். * மத்தே. உ௩. ௰உ.

௰௫. பினபு * குழநதைகளை யவர்தொடுமபடிககு அவரிடததிறகொணடுவநதார்கள. சீஷர் அதைககணடு அவர்களையதடடினார்கள. * மத. ௰௯. ௰௩-௰௫. மாற். ௰. ௰௩-௰௬.

௰௬. இயேசுவானவர் அவைகளைககொணடுவருமபடிகடடளையிடடுச்சொனனது, பிள்ளைகள எனனிடததிலவருகிறதறகுத தடைபணணாமலவிடுஙகோ. * பராபரனுடைய இராசசியம அபபடிபபடடவர்களையுடையதே. * மததே. ௰அ. ௩.

௰௭. எவனாகிலும பிள்ளையைபபோலபபராபரனுடைய இராசசியததையேறறுககொளளாவிடடால அதிற பிரவேசிககமாடடானெனறார்.

௰அ. அபபொழுது * தலைவனொருவன அவரைநோககி, நலலபோதகரே நிததியசீவனைசசுதநதரிததுக்கொளளுமபடிககு நான எனனசெயயவேணடுமெனறுகேடடான.
* மத. ௰௯. ௰௬-உ௯; மாற். ௰. ௰௭-உ௭.

௰௯. அதறகு இயேசுவானவர்சொனனது, நீர் எனனைநல்லவனெனறுஏனசொல்லுகிறீர்? பராபரனொருவரேயலலாமல மற்றொருவனும்நலலவனலலவே

உ௰. விபசாரமபணணாதிருபபாயாக. கொலைசெயயாதிருபபாயாக. களவுசெயயாதிருபபாயாக. பொயசசாட்சிசொல்லாதிருபபாயாக. உனதகபபனையும, தாயையுஙகனமபணணுவாயாகவெனறு சொலலுகிற கறபனைகளையறிநதிருக்கிறீரேயெனறார்.

உ௧. அதறகு அவன அவைகளையெல்லாம என சிறுவயதுமுதற கைக்கொணடிருககிறேனெனறான.

உ௨. இயேசுவானவர் அதைக்கேடடு அவனுடனேசொனனது, பினனும் ஒனறை நீர் செயயவேணடியதாயிருககிறது. உமககுணடானவைகளையெலலாம நீர்விறறு *பரமணடலததிலேயுமககுபபொககிசமுணடாயிருககுமபடிககுத தரிததிரருககுபபஙகிடடுககொடுததுப பினபுவநது எனககுபபின செலலவேணடுமெனறார். * மத். ௬. உ௰.

உ௩. அவனமிகுநத ஐசுவரியவானானபடியினாலே அநதவசனததைக கேடடபொழுது மிகுநத துககம அடைநதது (போனான.)

உ௪. அவனமிகுநத துககம அடைநததை இயேசுவானவர்கணடுசொனனதாவது; ஆஸ்திகளையுடையவர்கள பராபரனுடைய இராசசியததிற பிரவேசிபபது மிகவும அரிது.

உ௫. ஒடடகமானது ஒரு ஊசியினகாதிலே நுழைவது எளிதானால ஐசுவரியவான பராபரனுடைய இராசசியததிற பிரவேசிககிறதும எளிதாயிருககுமெனறார்.

உ௬. அதைககேடடவர்கள சொனனது, அபபடியானால யார் இரட்சிககபபடுவார்களெனறார்கள.

உ௭. அதறகவர்சொனனது, மனிதரால ஆகமாடடாதவைகள பராபரனாலேயாகுமெனறார்.

உ௮. * அபபொழுது பேதுரு அவரை நோககி, இதோ நாஙகள எலலாவறறையும் விடடு உமககுபபினசெனறுவருகிறோமெனறான. * மத. ௰௯. உ௭; மாற். ௰. உ௮-௩௧.

உ௯. அதறகவர்சொனனது, பராபரனுடைய இராசசியததினிமிததமாக வீடடையாவது,தாயதகபபனமாரையாவது, சகோதரரையாவது, மனைவியையாவது, பிளளைகளையாவது விடடயாவரும.

௩௰. இமமையிலே அதிகமடஙகாயும மறுமையிலே நிததிய சீவனையும அடையாமலிருபபதிலலையெனறார்.

௩௧. பின்பு * அவர் பன்னிருவரைச்சேர்த்துக்கொண்டு அவர்களுடனே சொன்னது, † இதோ எருசலேமுக்குப்போகிறோம். அங்கே மனிதனுடைய குமாரனைக்குறித்துத் தீர்க்கதரிசிகளாலெழுதப்பட்ட யாவும் நிறைவேறும். * மத். ௨௰. ௧௭; மாற். ௰. ௩௨; † மத். ௨௰. ௰௮; மாற். ௰. ௩௩.

௩௨. எப்படியெனில், அவன் புறத்தேசத்தாருக்கொப்புக்கொடுக்கப்பட்டுப் பரியாசமும், நிந்தையும் அடைந்துத் துப்பப்படுவான்.

௩௩. * அல்லாமலும் அவனை வாரினாலடித்துக் கொலைசெய்வார்கள். மேலும் மூன்றாம் நாளிலே உயிரோடெழுந்திருப்பானென்றார். * ௯. ௨௨; மத். ௨௰. ௰௯; மாற். ௰. ௩௪.

௩௪. அவர்கள் இவைகளிலொன்றையும் உணரவில்லை. அவைகளின் பொருள் அவர்களுக்கு மறைவாயிருந்தது. அவர் சொன்னவைகளை யறியாமலிருந்தார்கள்.

௩௫. அவர் இயெரிகோவூருக்குச் சமீபமானபொழுது, * வழியருகேயுள்ளக்காருந்து பிச்சைகேட்டுக்கொண்டிருக்கிற ஒருகுருடன். * மத். ௨௰. ௩௰; மாற். ௰. ௪௬.

௩௬. சனங்கள் நடக்கிறதைக் கேள்விப்பட்டு, இதென்னவென்று விசாரித்தான்.

௩௭. நாசரேத்தூரானாகிய இயேசு நடந்து போகிறாரென்று அவனுக்கறிவித்தார்கள்.

௩௮. அப்பொழுது அவன் இயேசுவே, தாவீதின்குமாரனே, எனக்கிரங்குமென்று அதிகமாய்க்கூப்பிட்டான்.

௩௯. முன்னடப்பார் அவன் பேசாமலிருக்கும்படிக்கு அவனையதட்டினார்கள். அவன் தாவீதின் குமாரனே எனக்கிரங்குமென்று அதிகமாய்க்கூப்பிட்டான்.

௪௰. அப்பொழுது இயேசுவானவர் நின்று அவனைத் தம்மிடத்திற் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். அவன் கிட்டவந்தபொழுது அவர் அவனை நோக்கி,

௪௧. நானுனக்கு என்னசெய்யவேண்டுமென்றிருக்கிறாயென்றார். அதற்கவன் ஆண்டவரே, நான் பார்வையடையும்படி செய்யவேண்டுமென்றான்.

௪௨. இயேசுவானவர் அவனை நோக்கி, நீ பார்வையடைவாயாக. உன் விசுவாசம் உன்னையிரட்சித்ததென்றார்.

௪௩. உடனே யவன் பார்வையடைந்து பராபரனைப்புகழ்ந்து அவருக்குப்பின்சென்றான். அதைக்கண்ட சனங்களெல்லாரும் பராபரனுக்குத் துதிசெலுத்தினார்கள்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) ஆயக்காரனான சகேயுவைக்குறித்துச் சொல்லியது. (௰௧) பத்து இராத்தல் வெள்ளியைப்பெற்ற ஊழியக்காரரை உவமையாக்காட்டியது. (௨௮) கிறிஸ்துக் கெம்பீரமாய எருசலேமுக்குள் பிரவேசிக்கையில், (௪௧) அதைக்குறித்து அழுது, (௪௫) தேவாலயத்தில் விற்கிறவர்களையும், கொள்ளுகிறவர்களையுந் துரத்தி, (௪௭) அதிலே நாடோறும் உபதேசித்தது. அதிகாரிகள் அவரைக் கொலைசெய்யவிரும்பிச் சனங்களுக்கு அஞ்சினதினாலே கூடாமற்போயிற்று.

பின்பு அவர் இயெரிகோவூரிற்பிரவேசித்து அப்புறம் நடந்துபோனார்.

௨. அப்பொழுது ஆயக்காரருக்குத் தலைவனும் ஐசுவரியவானுமாயிருந்த சகேயுவென்னப்பட்ட மனிதன் இயேசுவானவரையறியும்படிக்கு அவரைப்பார்க்க வகைதேடினான்.

௩. அவன் குறியவனானபடியால் சனக்கூட்டத்திலே அவரைக்காணக் கூடாமலிருந்தது.

௪. அப்பொழுது அவன் அவரைப்பார்க்கும்படிக்கு முன்னாக ஓடி அவர் செல்லுகிற வழியிலே நிற்கின்ற காட்டத்திமரத்தின் மேலேறினான்.

௫. இயேசுவானவர் அந்த இடத்திற்சென்றபொழுது அண்ணாந்துபார்த்து அவனைக்கண்டு சகேயுவே! இன்றைக்கு நானுன் வீட்டிலே தங்கவேண்டும். ஆகையால், நீ சீக்கிரமாயிறங்கிவாவென்றார்.

௬. அந்தப்படியவன் சீக்கிரமாயிறங்கிச் சந்தோஷத்தோடே யவருக்கு உபசாரஞ் செய்தான்.

௭. அதைக்கண்ட அனைவருஞ்சொன்னது, * இவர்பாவியானமனிதனிடத்திலே தங்கும்படிக்குப்போகிறாரென்று முறுமுறுத்தார்கள். * ௰௫. ௨.

௮. சகேயுவென்பவன் நின்று கர்த்தரை நோக்கி, * ஆண்டவரே, என் ஆஸ்திகளிற் பாதியை ஏழைகளுக்குக்கொடுக்கிறேன். அல்லாமலும், நான் ஒருவனிடத்தில் எதையாகிலும் அநியாயமாய் எடுத்திருந்தேனானால் நாலுமடங்காய்ப் பதிற்செலுத்துகிறேனென்றான். * ௰௧. ௪௧.

௯. அப்பொழுது இயேசுவானவர் அவனைக்குறித்துச்சொன்னது, * இழந்துபோனதைத்தேடி யிரட்சிக்கும்படிக்கு மனிதனுடைய குமாரன் வந்திருக்கிறபடியினாலே இன்றைக்கு இந்தக்குடும்பத்திற்கு இரட்சிப்புண்டாயிற்று. * மத். ௯. ௰௩;—௰௮. ௰௧; ௧. தீமோ. ௧. ௰௫.

௰. இவனும் ஆபிரகாமினுடைய சந்ததியானல்லவாவென்றார்.

௰௧. அன்றியும் அவர்கள் இவைகளைக்கேட்டுக்கொண்டிருக்கையில் அவர் எருசலேமுக்குச் சமீபமானபடியினாலும், பராபரனுடைய ஆளுகை சீக்கிரமாகக்காணப்படுமென்று அவர்கள் நினைத்தபடியினாலும் அவர் சொன்ன உவமையாவது,

௰௨. * உயர்குலத்தானாகிய ஒருவன் ஒரு

இராசசியததைபபெறறுககொணடு பினபு திருமபிவருமபடிககுத தூரதேசததுககுப் போகமனதாய, * மத. ௨௫. ௰௪—௩௰.

௰௩. தனனுடையபதது ஊழியக்காரரை யழைதது அவர்களுககுப பதது இராத்தல திரவியஙகொடுதது நான வருகிறவரைககும இதினாலே தொழிலசெய்யுஙகளெனறுசொலலிப்போனான.

௰௪. அவனுடையபட்டணததார் அவனைப பகைதது அவன எஙகளையாளுகைசெய்ய எஙகளுககு மனதிலலையெனறு சொலலும படிககு அவனுககுபபினனாக தானாபதிக ளையனுபபினார்கள.

௰௫. அபபடியிருநதும அவன இராசசியததைபபெறறுககொணடு திருமபிவநது தான திரவியஙகொடுக்கபபெறறிருநத அநத ஊழியக்காரர்தொழில செய்ததினாலே ஆதாயமாககிககொணடது. இவவளவெனறு அறியுமபடிககு, அவர்களைததனனிடத துக்கழைததுவரசசொனனான.

௰௬. அநதபபடியே முநதினவன சேர்நது ஆணடவனே, உமமுடையஇராததல பதது இராததலை ஆதாயம்பணணிற்றெனறான.

௰௭. அவனுடனே எசமானசொனனது, நலலது உததம ஊழியககாரனே, நீ கொஞசததிலே யுணமையாயிருநதபடியினாலே பததுப்பட்டினஙகளுககு அதிகாரியாயிருவெனறான.

௰௮. பினபு இரணடாமூழியககாரன சேர்நது ஆணடவனே, உமமுடையஇராததல ஐநது இராததலை ஆதாயம பணணிறறெனறான.

௰௯. அவனுடனேயும அவனசொனனது, நீயும ஐநதுபட்டினஙகளுககு அதிகாரியாயிருவெனறான.

௨௰. பினபு வேறொருவனசேர்நது, ஆணடவனே, நீர் வையாததைஎடுககிறவருமாய,விதையாததைஅறுககிறவருமாயிருக்கிற கடினமுளள மனிதனாயிருககிறதை நான அறிநது உமககுப்பயப்படடபடியினாலே,

௨௧. உமமுடையஇராததலை ஒருசீலையிலேவைததுககொணடேன. இதோ, அது இருககினறதெனறான.

௨௨. அவனுடனேயவனசொன்னது, பொலலாத ஊழியககாரனே, * உனவாககினபடி உனககு நியாயததீர்பபுககொடுககிறேன. நானவையாததைஎடுககிறவனுமாய, விதையாததை யறுககிறவனுமாயிருககிற கடினமுளளமனிதனெனறறிநதாயே.

* மத. ௰௨. ௩௭.

௨௩. ஆகையால நானதிருமபிவருகிறபொழுது எனதிரவியததை வட்டியோடேபெறறுககொளளுமபடிககு நீயதை (வட்டிக் காகக்) காசுககடையிலே ஏனகொடுககவிலலையெனறுசொலலி,

௨௪. சமீபமாய நிறகிறவர்களை நோககி, நீஙகள அநதஇராததலைஇவனிலிருநதெடுதது பதது இராத்தலுளளவனுககுக கொடுஙகளெனறுகட்டளையிட்டபொழுது,

௨௫. அவர்கள ஆணடவனே, அவனுககுப் பத்து இராததலுணடேயென்ன,

௨௬. அவன பினனுஞசொனனது, நான உஙகளுககுசசொலலுகிறதாவது; உளளவனுக்குக்கொடுக்கபபடும. இலலாதவனுககு ணடாயிருககிறதும அவனிலிருநதெடுககபபடும.

௨௭. அனறியும நானதஙகளுககு இராசாவாயிருககமனதிலலாமல எனககுசசததுருக்களான அவர்களை இஙகேகொணடுவநது எனககுமுனபாக வெட்டிபபோடுஙகளெனறு சொனனானெனறார்.

௨௮. இவைகளையவர்சொனனபினபு அவர் எருசலேமுககுபபோகுமபடி முனனே நடந்தார்.

௨௯. அபபடியவர் * ஒலிவமலையென்னபபட்ட மலையினருகேயிருககிற பெதபாகே யூருககும, பெததானியாவூருககுஞ சமீபமானபொழுது அவர்தமமுடைய சீஷரிலிருவரைநோககி, * மத். ௨௧. ௧—௰௧; மாற. ௰௧. ௧—௰; யோவா. ௰௨. ௰௨—௰௯.

௩௰. அதோ உஙகளுக கெதிராயிருககிற கிராமததுககுபபோஙகள. அதிறபிரவேசிககுமபொழுது மனிதரி லொருவனாகிலும ஒருககாலும ஏறாதக்கழுதைககுட்டியைக கட்டியிருக்கக்காணபீர்கள. அதையவிழ்த் துககொணடுவாருஙகள.

௩௧. இதையேன அவிழ்ககிறீர்களெனறு ஒருவன உஙகளிடததிறகேட்டால ஆணடவருககு இதுவேணடுமெனறு அவனுககுச சொலலுஙகளெனறார்.

௩௨. அநதபபடி அனுப்பப்பட்டவர்கள போய்த்தஙகளுககு அவர்சொனனபிரகாரமாகக்கணடார்கள.

௩௩. கழுதைககுட்டியையவர்கள அவிழ்க் கிறபொழுது அதின எசமானகள அவர்களை நோககிக் குட்டியை ஏன அவிழ்க்கிறீர்களெனறார்கள.

௩௪. அதறகு அவர்கள ஆணடவருககுஇது வேணடுமெனறுசொலலி,

௩௫. அதை இயேசுவினிடததிறகுக்கொணடுவநது தஙகள வஸதிரஙகளைக குட்டியின மேறபோட்டு இயேசுவை அதினமேலேறறினார்கள.

௩௬. அபபடியவர்போகையில அவர்கள தஙகளவஸதிரங்களைவழியிலேவிரித்தார்கள்.

௩௭. அலலாமலும அவர் ஒலிவமலையின அடிவாரமாயச சேர்நதுவருகிறபொழுது, சீஷரின கூட்டததாரெலலாருந தாஙகள கணட சகலஅறபுதஙகளையுங குறிதது சநதோஷபபட்டு மிகுநதசத்தத்துடனே

பராபரனைத் துதிக்கத் தொடங்கிப் * பராபரனுடைய நாமத்தினாலே வருகிற இராசா தோத்திரிக்கப்பட்டவர். * சங். ௱௰௮. ௨௬.

௩௮. பரமண்டலத்தில் சமாதானமும், உன்னதங்களில் புகழ்ச்சியும் உண்டாவதாகவென்றார்கள்.

௩௯. அப்பொழுது கூட்டத்திலிருந்த பரிசேயரிற் சிலர் அவரை நோக்கிப் போதகரே, நீர் உம்முடைய சீஷரை யதட்டவேண்டுமென்றார்கள்.

௪௰. அவர்களுக்கு மறுமொழியாக அவர் சொன்னது, இவர்கள் பேசாமலிருந்தால் கற்களே கூப்பிடுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

௪௧. அன்றியும் அவர் பட்டினத்துக்குச் சமீபமானபொழுது அவர் அதைப்பார்த்து அதைக்குறித்துக் கண்ணீர்விட்டு நீ யுனக்குக்கிடைத்த இந்தநாளிலே * உன் சமாதானத்துக்கேற்றவைகளைச் சிந்தித்துக்கொண்டால் நலமாயிருக்கும். * ௫.மோ.௩௨.௨௯.

௪௨. இப்பொழுது அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்கின்றன.

௪௩. உன்னைச் சந்திக்குங் காலத்தை நீ சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறபடியினாலே உன் சத்துருக்கள் உன்னைச் சூழ மதில் போட்டு உன்னை வளைந்துகொண்டு,

௪௪. எங்கும் உன்னை யிறுகப்பிடித்து உன்னையும், உன்னிலுள்ளவர்களையுந் தரையாக்கி உன்னிடத்தில் * ஒருகல் மற்றொருகல்லின் மேலிராதபடிக்குச் செய்யும் நாள்கள் உனக்கு வருமென்றார். * ௨௧. ௬.

௪௫. பின்பு அவர் தேவாலயத்திற் பிரவேசித்து,

௪௬. அதிலே * விற்கிறவர்களையும், கொள்ளுகிறவர்களையும் நோக்கி, † நம்முடைய ஆலயம் ஜெபமண்ணுகிற ஆலயமென்றெழுதியிருக்கிறதே. நீங்கள் இதைக் ‡ கள்ளர் குகையாக்கினீர்களென்று சொல்லி, அவர்களைப் புறம்பே துரத்தினார். * மத். ௨௧. ௰௨—௰௪; மாற். ௰௧. ௰௫; † ஏசா. ௫௬. ௭; ‡ எரே. ௭. ௰௧.

௪௭. அல்லாமலும் நாடோறும் அவர் தேவாலயத்தில் உபதேசம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், சனத்தின் மூப்பரும் அவரைக் கொலைசெய்ய வகைதேடி,

௪௮. சனங்களெல்லாரும் மிகுந்த சிந்தையோடே யவருக்குச் செவிகொடுத்தபடியினாலே வகையைக் காணாமற் போனார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) ஆட்சேபித்த பரிசேயருக்குக் கிறிஸ்து தம் அதிகாரத்தை யோவானுடைய ஸ்நானத்தைக் குறித்த கேள்வியினாலே ஸ்தாபித்தது. (௯) திராட்சத்தோட்டக்காரரை உவமையாக எடுத்துச்சொன்னது. (௰௯) இராயனுக்கு வரிசெலுத்துவதைக் குறித்துச் சொன்னது. (௨௭) உயிர்த்தெழுதலில்லையென்ற சதுசேயருக்கு அதையுண்டென்றெண்பித்தது. (௪௧) கிறிஸ்து தாவீதின் குமாரனென்றறிவித்ததைச் சொன்னது. (௪௫) வேதபாரகரைக் குறித்துச் சீஷர்களை எச்சரித்தது.]

அந்நாள்களிலொருநாளிலே * அவர் தேவாலயத்தில் சனங்களுக்கு உபதேசம்பண்ணிச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறபொழுது, பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், மூப்பரும் அவருக்கு விரோதமாய் வந்து கூடினாலும், * மத். ௨௧. ௨௩—௨௭; மாற். ௰௧. ௨௭.

௨. அவரை நோக்கி, * நீர் எந்த அதிகாரத்தினாலே இவைகளைச் செய்கிறீர். இப்படிப்பட்ட அதிகாரத்தை யுமக்குக் கொடுத்தவர் இன்னாரென்று எங்களுக்குச் சொல்லுமென்றார்கள். * யோவா. ௰௧. ௨௮.

௩. அதற்குமாறுத்தரமாக அவர் சொன்னது, நானும் உங்களிடத்தில் ஒரு விஷயத்தைக் கேட்பேன்.

௪. என்னவென்றால், யோவான் கொடுத்த ஸ்நானம் தேவனாலுண்டாயிற்றோ மனிதராலுண்டாயிற்றோ அதையெனக்குச் சொல்லுங்களென்றார்.

௫. அப்பொழுது அவர்கள் தங்களுக்குள்ளே யோசனைபண்ணினதாவது;

௬. தேவனாலுண்டாயிற்றென்று நாஞ்சொன்னால், நீங்கள் அவரை ஏன் விசுவாசிக்கவில்லையென்பார். அது மனிதராலுண்டாயிற்றென்று நாஞ்சொன்னால், எல்லாச் சனங்களும் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணிக்கொள்ளுகிறபடியினாலே, நம்மேற் கல்லெறிவார்களென்று யோசனைபண்ணி,

௭. பின்பு அது வந்தவிதம் எங்களுக்குத் தெரியாதென்றார்கள்.

௮. அதற்கு இயேசுவானவர் சொன்னது, அப்படியானால், நான் இன்ன அதிகாரத்தினாலே இவைகளைச் செய்கிறேனென்று நானும் உங்களுக்குச் சொல்லமாட்டேனென்றார்.

௯. பின்பு அவர் சனங்களுடனே சொன்ன உவமையாவது, * ஒரு மனிதன் திராட்சத்தோட்டத்தையுண்டாக்கி, அதைத் தோட்டக்காரர் வசமாய்விட்டு, அநேககாலமாய்ப் புறதேசம்போயிருந்தான். * மத். ௨௧. ௩௩; மாற். ௰௨. ௧—௰௨.

௰. தகுதியான காலத்திலே அந்தத் தோட்டக்காரர் திராட்சத்தோட்டத்தின் கனிகளிலொரு பங்கைத் தனக்குக் கொடுத்தனுப்பும்படிக்கு, அவன் ஒரு ஊழியக்காரனை அவர்களிடத்துக்கு அனுப்பினான். அந்தத் தோட்டக்காரர் அவனையடித்து, வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.

௰௧. பினபு அவனவேறொரு ஊழியககார னையனுபபினன. அவனையும அவர்கள அடிதது, நிநதைபபடுததி, வெறுமையாயனுப பிவிடடார்கள.

௰௨. அதன பினபு அவன மூனறாமூழியக காரனையனுபபினன. அவனையும அவர்கள காயபபடுததித்துரததினார்கள.

௰௩. அபபொழுது திராட்சததோடடத தின எசமான எணணினது, நான என்ன செயயலாம! எனககுபபிரியமானகுமாரனை யனுபபினால, அவர்களகணடு கனஞசெய வார்களெனறெணணி அவனையனுபபினன.

௰௪. தோடடககாரர் அவனைககணடபொ ழுது, இவனசுதநதரவாளி. சுதநதரம நமமு டைய தாகுமபடிககு இவனைககொலைசெய யவேணடுமெனறு தஙகளுககுளளேயோச னைபணணி,

௰௫. வாருஙகளெனறுசொலலி, அவனைத திராட்சததோடடததுககு வெளியேதளளி ககொலைசெயதார்கள. ஆதலால, திராட்ச ததோடடததின எசமான அவர்களையென னசெயவான?

௰௬. அவனவநது அநதத்தோடடககார ரையழிததுத திராட்சத்தோடடததை வே றுமனிதருககுககொடுபபானலலவாவெனறு ர். அதையவர்களகேடடு, அபபடியாகாதி ருபபதாகவெனறார்கள.

௰௭. அபபொழுது அவர் அவர்களைபபார்தது, வீடுகடடுகிறவர்கள ஆகாதெனறுதள ளினகலலே கோடிககுததலையான கலலா யிறறெனறு எழுதியிருககிறவேதவாககியத தின கருததென்ன!

௰௮. அநதககலலினமேல விழுகிறவனெவ னோ அவன * நொறுககபபடுவான. அனறி யும அது விழுபபடுபவனெவனோ அவனைநசு ககிபபோடுமெனறார். * ஏசா. ௮. ௰௪,௰௫.

௰௯. அபபொழுதுதஙகளைககுறிததுஅநத உவமையைசசொனனாரெனறு, பிரதானஆ சாரியரும, வேதபாரகரும அறிநதுஅநநே ரததிலே அவர்மேற்கைகளைபபோடவிருமபி னார்கள. சனங்களுக்குபபயபபடடபடியால் (நிறுததினார்கள.)

௨௰. பினபு அவர்கள அவரையேநோககிக் கொணடு, ஆளுகைககும, நியாயாதிகாரத துககுமமுனபாக அவரையொபபுககொடுக கிறதறகேதுவாக, * அவருடைய வசனததி றகுறறஙகணடுபிடிககுமபடிககுத தஙகளை நீதிமானகளபோலக்காணபிககிறவேவுகார ரை அவரிடததில அனுபபினார்கள. * மத. ௨௨. ௰௫—௨௨; மாற. ௰௨. ௰௩—௰௭.

௨௧. அவர்களவநதுஅவரைநோககிபபோ தகரே, நீர் செமமையாயபபேசியுபதேசிக் கிறவரெனறும, பட்சபாதமிலலாமற சத் தியமாயப பராபரனுடைய மார்ககததைப போதிககிறவரெனறும அறிநதிருககிறோம.

௨௨. நாம இராயனுககுவரிகொடுககலா மோ? கொடாமலிருககலாமோவெனறு, அ வரிடததிறகேடடார்கள.

௨௩. அவர்களுடைய தநதிரததை அவர் அறிநது அவர்களைநோககி, நீஙகள எனனை யேனசோதிககிறீர்கள்!

௨௪. பணததை யெனககுககாணபியுங க ள. அதிலிருக்கிறசொருபமும்,மேலெழுதது ம்யாருடையவைகளெனறார். அவை இராய னுடையவைகளெனறுமாறுததரஞசொன னார்கள.

௨௫. அவர்சொனனது, அபபடியானால, நீஙகள * இராயனுடையதை இராயனு ககும, பராபரனுடையதைப பராபரனு ககுஞசெலுததுஙகளெனறார். * உரோ. ௰௩. ௭.

௨௬. அவர்கள அவரைசசனஙகளுககுமுன் பாக ஒருவசனததில அகபபடுததககூடா மல அவருடைய மாறுத்தரததைககுறிதது ஆசசரியபபடடு மவுனமாயிருநதார்கள.

௨௭. பினபு * மறுமையாகிய உயிரோடெ ழுமபுதலிலலையெனறுசொலலுகிற சதுசே யரிற சிலர் அவரிடததிலவநது கேடடதா வது, * மத. ௨௨. ௨௩—௩௩; மாற. ௰௨. ௰௮—௨௭.

௨௮. போதகரே*பெணணைவிவாகமபண ணின ஒருவன பிளளையிலலாமல இறநது போனால, அவனுடைய மனைவியையவனு டையசகோதரன (சேர்நது) தனசகோதர னுககுச சநததியுணடாக்கவேணடுமெனறு மோசே நமககுககடடளையாக எழுதினார். * ௫. மோசே. ௨௫. ௫.

௨௯. அநதபபடி (ஓரிடததிலே) சகோ தரர் ஏழுபேரிருநதார்கள. அவர்களிலமூத தவன ஒருபெணணை விவாகமபணணிபபிள ளையிலலாமலிறநதுபோனான.

௩௰. அபபொழுதுஇரணடாஞசகோதரன அநதபபெணணை விவாகமபணணி, அவ னும பிளளையிலலாமலிறநதுபோனான.

௩௧. மூனறாஞசகோதரனமுதல ஏழுபேர் வரைககும அநதபபடியேயவளை விவாகம பணணிபபிளளைகளைபபெறாமலஇறநதுபோ னார்கள.

௩௨. அவர்களெலலாருககும பினபு அநத பபெணணும இறநதுபோனாள.

௩௩. இவவிதமாய ஏழுபேரும அவளைவிவா கமபணணினவர்களாயிருகக, (மரிததோர்) உயிரோடெழுநதிருககுங காலததில அவர் களிலெவனுககு அவள மனைவியாயிருபபா ளெனறார்கள.

௩௪. அவர்களுககுமாறுததரமாக இயேசு வானவர்சொனனது, இமமையிலிருககிறவர் களபெணகொணடும், கொடுததுமவருகிறார் கள.

௩௫. மறுமையிலுளள பாககியததையும,

மரிததோரிலிருநதெழுநதிருககுதலையும அடைவதறகுப் பாத்திரராயெணணபபடுபவர்களபெணகொளவதுமி, கொடுபபதுமிலலை.

௩௬. எனனததினாலெனில, அவர்கள உயிரோடெழுநதிருககததககவர்களாயிருககத் தேவ தூதருக கொபபானவர்களுமாய பராபரனுடைய பிளளைகளுமாயிருபபதால அவர்களினிமரிக்கக் கூடாதிருபபார்களே.

௩௭. அனறியும, மரிததோர் எழுநதிருபபார்களெனபதை * மோசேயும முட்செடியைககுறிததெழுதின சரிததிரததிலேகாணபிததார். எபபடியெனில, அவர்பராபரனை ஆபிரகாமினுடைய தேவனென்றும், ஈசாக்குடையதேவனெனறும, இயாக்கோபினுடையதேவனென்றுஞசொலலியிருககிறார்.
* ௨. மோ. ௩. ௬.

௩௮. பராபரன மரிததோருடைய தேவனாயிராமற சீவனுளளோருடைய தேவனாயிருககிறார். அவர்களெலலாரும அவருககுப பிழைததிருககிறார்களேயெனறார்.

௩௯. வேதபாரகரிறசிலர் அதைககேட்டுப போதகரே,நனறாயச்சொனனீரெனறார்கள்.

௪௰. பினபு அவர்கள அவரிடததில வேறொனறைககேட்கததுணியவிலலை.

௪௧. அபபொழுது அவர் அவர்களைநோககிக்கிறிஸ்துவானவர் * தாவீதின குமாரனாயிருபபாரெனறெனனததினாலே சொலலுகிறார்கள. * மத. ௨௨. ௪௧; மாற. ௰௨. ௩௫—௩௭.

௪௨. அலலாமலும, பராபரன எனகர்ததாவைநோககி, நான உமமுடைய சததுருக்களை உமது பாதபபடியாககிபபோடுமளவும,

௪௩. நீர் எனதுவலதுபாரிசததில உளுககாருமெனறொனறுதாவீதுதானே * சஙகீதபபுத்தகததிறசொலலியிருககிறாரே.
* சங்கீ. ௱௰. ௧.

௪௪. தாவீது அவரைககர்ததரெனறுசொலலியிருக்க, எபபடியவர்அவனுடையகுமாரனுவாரெனறார்.

௪௫. அபபொழுது சனஙகளெலலாருங கேட்க * அவர்தமமுடைய சீஷருடனே சொனனதாவது; * மத. ௨௩. ௧.

௪௬. * நீளமானவஸதிரஙகளைததரிததுநடக்கமனதாயிருநது சநதைகளில வாழததுதலையும், செப ஆலயஙகளில முதல ஆசனஙகளையும, விருநதுகளில முதலிடஙகளையும *விருமபி, மாற. ௰௨. ௩௮—௪௰.

௪௭ * கைமபெணகளுடைய பொருளகளைபபட்சிதது வஞசகமாய விஸதாரமான செபமபணணிவருகிறவேதபாரகருககு நீங்களிடஙகொடாம லெசசரிககையாயிருஙகள. அவர்களே அதிக ஆககினையையடைவார்களெனறார். * எசேகி. ௨௨. ௭.



## ௨௧. அதிகாரம.

[(௧) கிறிஸ்து தருமபபெட்டியிலே இரணடுகாசைபபோட்ட ஒரு கைமபெணணைப புகழ்நதது, (௫) தேவாலயமும, எருசலேமும அழிககபபடுவதைமுனனறிவிததது, (௨௫) கடைசிநாளுககு முனனுணடாகும அடையாளஙகளைககாட்டி, (௩௪) அவர்களவிழிதநதிருககுமபடிககுப புததிசொனனது.]

பினபு * அவர் கணணையுயர்ததிபபார்க்கிறபொழுது, ஐசுவரியவானகள தஙகள காணிககைகளைததருமபபெட்டியிற் போடுகிறதைககணடார். * மாற். ௰௨. ௪௧.

௨. அலலாமலும, இரணடுகாசையதிலே போட்ட ஒரு ஏழைக கைமபெணணையும அவர்கணடு,

௩. இநத ஏழைககைம்பெண் மறறெலலாரிலும அதிகமபோட்டாளெனறு மெயயாய உஙகளுககுச்சொலலுகிறேன.

௪. எபபடியெனில, அவர்களெலலாருந தஙகள பரிபூரணததிலெடுததுத்தேவகாணிககைபபெட்டியிறபோட்டார்கள. இவள தன குறைவிலே தன சீவனததுககுணடானயாவையுமபோட்டாளெனறார்.

௫. பினபு * சிலர்தேவாலயததைககுறிதது அது அழகான கற்களாலும, காணிககைகளாலும அலஙகரிக்கப்பட்டிருககினறதென்று சொனனபொழுது, அவர்சொனனது,
* மத். ௨௪. ௧; மாற். ௰௩. ௧.

௬. நீஙகள பார்ககிற இவைகளில ஒருகல் மறறொரு கல்லினமேலிராதபடிககு எலலாம இடிக்கப்படுமநாள்களவருமெனறார்.

௭. அபபொழுது அவரையவர்களநோககி, போதகரே, இவைகள எபபொழுது நடககும? அவைகள சமபவிககுஙகாலததுககடையாளமெனனவெனறுகேட்டார்கள.

௮. அதறகவர்சொனனது, அநேகர் என நாமததையெடுததுத் தஙகளை அவரேயெனறும, காலஞசமீபமாயவநததெனறுஞசொலலுவார்கள. நீஙகளவஞசிககப்படாதபடிககு எசசரிககையுளளவர்களாய அவர்களுககுப பினசெலலாமலிருஙகள.

௯. அலலாமலும யுத்தஙகளையும, கலகஙகளையுங்குறிதது கேள்விபபடுமபொழுது, திகில்டையாதிருஙகள. அப்படிப்பட்டவைகள முன்னடககவேணடுமே. ஆனாலுமமுடிவு உடனே வாராதெனறுசொலலிப பினபு திருவுளமபறறினதாவது;

௰. ஒரு சனக்கூட்டம மறறொரு சனககூட்டததுககும, ஒரு இராசசியததார் மறறொரு இராசசியததாருககுமவிரோதமாக எழுமபுவார்கள.

௰௧. அலலாமலும பல இடஙகளிலே பூமி மிகவும அதிர்தலும, பஞசஙகளும, பெருவாரிககாய்ச்சலகளுமுணடாயிருககும. வா

னத்திலிருந்து பயமுண்டாக்குகிறகாரியங்களும், பெரிய அடையாளங்களுமுண்டாகும்.

௰௨. அவைகளெல்லாவற்றுக்கு முன்னே என்னுடைய நாமத்தினிமித்தம் அவர்கள் உங்கள்மேலே * தங்கள் கைகளைப்போட்டு உங்களைத் துன்பப்படுத்தி ஜெப ஆலயங்களுக்கும், சிறைச்சாலைகளுக்கும் ஒப்புக்கொடுத்து இராசாக்களுக்கும், அதிபதிகளுக்கு முன்பாகக் கொண்டுபோவார்கள். * யோவ. ௰௬. ௨.

௰௩. ஆனாலும் அது நீங்கள் சாட்சிகொடுக்கும்படிக்கு ஏதுவாயிருக்கும்.

௰௪. ஆகையால் எப்படி மாறுத்தரவு சொல்லலாமென்று நீங்கள் * கவலைப்படாதிருக்கும்படி உங்கள் மனதைத் திடப்படுத்துங்கள். * மத். ௰. ௰௯.

௰௫. நானே உங்களுக்குத் (தகுதியான) பேச்சையும், ஞானத்தையுங்கொடுப்பேன். உங்கள் * எதிராளிகளியாவரும் அதற்கு விரோதமாய்ப் பேசவும், எதிர்நிற்கவும் மாட்டார்கள். * உ. மோ. ௪. ௰௨.

௰௬. அன்றியும், பெற்றாராலும், * சகோதரராலும், இனத்தாராலும், சிநேகிதராலும் காட்டிக்கொடுக்கப்படுவீர்கள். உங்களிற் சிலரைக் கொலைசெய்விப்பார்கள். * மீகா. ௭. ௬.

௰௭. என் நாமத்தினிமித்தம் நீங்கள் சகலவிதமான மனிதராலும் பகைக்கப்படுவீர்கள்.

௰௮. * ஆனாலும் உங்கள் தலையின் மயிரிலொன்றாகிலும் அழியாது. * ௰௨. ௭.

௰௯. பொறுமையினாலே உங்களாத்துமாக்களைக் காத்துக்கொள்ளக்கடவீர்கள்.

௨௰. அன்றியும் சேனைகளால் எருசலேம் வளைக்கப்பட்டிருக்கிறதை நீங்கள் காணும்பொழுது, அதின் அழிவு சமீபமாயிற்றென்று அறியுங்கள்.

௨௧. அப்பொழுது யூதேயா நாட்டிலிருப்பவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகவும், எருசலேமுக்குள்ளேயிருப்பவர்கள் வெளியே புறப்படவும், நாட்டுப்புறங்களிலிருப்பவர்கள் அதற்குட்பிரவேசியாமலிருக்கவுங்கடவர்கள்.

௨௨. எழுதியிருக்கிறயாவும் நிறைவேறும்படியாய் அந்நாள்கள் பழிவாங்குதற்கானவைகளாயிருக்கும்.

௨௩. அந்நாள்களில் கர்ப்பவதிகளுக்கும், பால்கொடுக்கிறவர்களுக்கும் வேதனையுண்டாயிருக்கும். என்னத்தினாலெனில், இத்தேசத்தின்மேல் மிகுந்த இடுக்கணும், இந்தச் சனத்தின்மேற் கோபாக்கினையுமுண்டாகும்.

௨௪. கட்கங்களினாலே அறுப்புண்டு விழுவார்கள். அல்லாமலும், புறத்தேசத்தார் யாவருக்குள்ளேயுஞ் சிறைப்பட்டுப்போவார்கள். அன்றியும், புறத்தேசத்தாருடைய காலங்கள் * நிறைவேறுகிறவரைக்கும் எருசலேம் புறத்தேசத்தாராலே மிதிக்கப்படும். * உரோ. ௰௧. ௨௫.

௨௫. * சூரியனிலும், சந்திரனிலும், நட்சத்திரங்களிலும் அடையாளங்கள் தோன்றும். பூமியின்மேலுள்ள சனங்களுக்குள்ளே கலக்கமான உபத்திரவமுண்டாகும். சமுத்திரமும், அலைகளுங் கோஷ்டமாயிருக்கும். * ௨ பே. ௩. ௰௩. ௰.

௨௬. வானத்திறப்பலமானவைகளும் அசையும். ஆதலாற் பூலோகத்தின்மேல் வருகிறகாரியங்களுக்குப் பயந்து அவைகளை நோக்கிப் பார்க்கிறதினாலே மனிதர்கள் சோர்ந்துபோவார்கள்.

௨௭. அப்பொழுது * மனிதனுடைய குமாரனை மிகுந்த வல்லமையோடும், மகிமையோடும் மேகத்தில் வரக்காண்பார்கள். * அப். ௧. ௰௧.

௨௮. அவைகள் சம்பவிக்கத்தொடங்கும்பொழுது, * உங்கள் மீட்புச் சமீபமாய் வருவதால் நீங்கள் நிமிர்ந்து, உங்கள் தலைகளை உயர்த்தக்கடவீர்களென்று சொல்லி,

* உரோ. ௮. ௨௩.

௨௯. பின்பு உவமையாய்ச் சொன்னதாவது; அத்திமரத்தையும், மற்றச் சகல மரங்களையும் பாருங்கள்.

௩௰. அவைகள் தளிர்க்கிறதை நீங்கள் காணும்பொழுது, வசந்தகாலஞ் சமீபமாயிற்றென்று அறிகிறீர்கள்.

௩௧. அந்தப்படியே நான்சொன்னவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது, பராபரனுடைய ஆளுகை சமீபமாயிற்றென்றறியக்கடவீர்கள்.

௩௨. அவையெல்லாஞ் சம்பவிக்கிறவரைக்கும் இந்தச் சந்ததி ஒழிந்துபோகாதென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௩. * வானமும், பூமியும் ஒழிந்துபோம். என் வசனங்கள் ஒழிந்துபோகாது. * ௰௬. ௰௭; சங். ௱௨. ௨௬, ௨௭.

௩௪. அன்றியும், பூமியிலெங்குங்குடியிருக்கிற அனைவர்மேலும், அந்தநாள் * ஒரு வலையைப்போல வருவதால், * ௧. தெச. ௫. ௩.

௩௫. உங்கள் இருதயங்கள் * பெருந்தீனியினாலும், வெறியினாலும், பிழைப்பின் கவலையினாலும் பாரமடையாதபடிக்கும், அந்தநாள் உங்களுக்குச் சடிதியாய் வாராதபடிக்கும் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்கள்.

* உரோ. ௰௩. ௰௩, ௰௪; எபே. ௫. ௰௮.

௩௬. ஆகையால், இனிச் சம்பவிப்பவைகள் யாவுக்கும் நீங்கள் தப்பித்துக்கொண்டு, மனிதனுடைய குமாரனுக்கு முன்பாக நிற்கப் பாத்திரவான்களென்றெண்ணப்படும்படிக்கு, எக்காலமுஞ் செபம்பண்ணி விழித்திருக்கக்கடவீர்களென்றுதிருவுளம்பற்றினார்.

௩௭. அன்றியும், அவர் பகற்காலங்களிலே

தேவாலயத்தில் உபதேசித்துக்கொண்டு, இராக்காலங்களில் வெளியே போய் ஒலிவமலையென்னப்பட்ட மலையிலே தங்கிவந்தார்.

௩௮ அவருடைய உபதேசத்தைக் கேட்கும்படிக்குச் சனங்களெல்லாரும் அதிகாலையிலே தேவாலயத்தில் அவரிடத்துக்கு வந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

[(௧) யூதர்கள் கிறிஸ்துவைக் கொலைசெய்யும்படி தேடினது. (௩) அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கு சாத்தான் யூதாவை ஏவினது. (௭) அப்போஸ்தலர்கள் பஸ்காவை ஆயத்தம்பண்ணினது. (௧௯) கிறிஸ்து பரிசுத்த இராப்போசனத்தைக் கட்டளையிட்டு, (௨௧) தம்மைக் காட்டிக்கொடுப்பவனைக் குறிப்பாகச் சொல்லி, (௨௪) மற்ற அப்போஸ்தலர்கள் பெருமையற்றிருக்கப் போதித்தது, (௩௧) பேதுருவின் விசுவாசம் அவனைவிட்டுப் போகாதேபோனாலும், (௩௪) அவன் தம்மை மூன்றுதரம் மறுதலிப்பானென்று முன்னறிவித்தது. (௩௯) அவர் மலையின்மேல் ஜெபம்பண்ணி, இரத்தவேர்வைவிட்டு, (௪௭) முத்தியிட்டவனாலே காட்டிக்கொடுக்கப்பட்டு, (௫௦) மல்குஸின் அறுப்புண்ட காதைச் சொஸ்தப்படுத்தி, (௫௪) பேதுருவினாலே மூன்றுதரம் மறுதலிக்கவும், (௬௩) பரியாசத்தூஷணம்பண்ணவும்பட்டு, (௬௬) தம்மைப் பராபரனுடைய குமாரனென்று அறிக்கையிட்டது.]

*

**ப**ஸ்கா என்னப்பட்ட புளியாத அப்பப்பண்டிகை சமீபமாயிற்று.

* மத். ௨௬. ௨; மாற். ௧௪. ௧.

௨. அப்பொழுது *பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் சனங்களுக்குப் பயப்பட்டபடியினாலே, அவரைக் கொலைசெய்யும்படிக்கு (இரகசியமாய்) வகைதேடினார்கள்.

௩. அக்காலத்திலே பன்னிருவரில் ஒருவனாகிய ஸ்காரியோத்தென்றும்பேர்கொண்ட யூதாவுக்குள்ளே சாத்தான் புகுந்தான்.

௪. ஆதலால் அந்த யூதாவென்பவன் பிரதான ஆசாரியரும், ஆலயத்தலைவருமானவர்களிடத்திற்போய், அவர்களுக்கு அவரைக் காட்டிக்கொடுக்கும்வகையைக் குறித்து, அவர்களுடனே யோசனைபண்ணிக்கொண்டான்.

௫. அவர்கள் சந்தோஷப்பட்டு அவனுக்குத் திரவியங்கொடுக்கத் தீர்மானித்தார்கள்.

௬. *அதற்கு அவன் பொருந்தி சனக்கூட்டமில்லாதபொழுது, அவரையவர்களுக்குக் காட்டிக்கொடுக்கும்படிக்குத் தருணமான காலத்தைத் தேடினான். * மத். ௨௬. ௧௬; மாற். ௧௪. ௧௧.

௭. * பஸ்காவின் ஆட்டுக்குட்டியைப் பலியிடவேண்டிய புளியாத அப்பநாள் வந்தது. * மத். ௨௬. ௧௭; மாற். ௧௪. ௧௨.

௮. அப்பொழுது அவர் பேதுருவையும், யோவானையும் அழைத்து, நாம் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு நீங்கள் போய் நமக்காக அதை ஆயத்தம்பண்ணுங்களென்றார்.

௯. அதற்கு அவர்கள், நாங்கள் அதை எங்கே ஆயத்தம்பண்ணவேண்டுமென்கிறீரென்றார்கள்.

௰. அவர் சொன்னது, நீங்கள் பட்டணத்துக்குள் பிரவேசிக்கும்பொழுது, ஒருவன் தண்ணீர்க்குடம் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிர்ப்படுவான். நீங்கள் அவனுக்குப் பின்சென்று அவன் போகும் வீட்டிலே போய்,

௧௧. அந்த வீட்டெசமானை நோக்கி, நான் என் சீஷரோடுங்கூடப் பஸ்காவைப் புசிக்கத்தக்க இடமெங்கேயென்று போதகர் உம்மிடத்தில் கேட்கச்சொன்னாரென்று சொல்லுங்கள்.

௧௨. அவன் கம்பளம் முதலானவைகள் விரித்திருக்கிற விஸ்தாரமான மேல்வீட்டை உங்களுக்குக் காண்பிப்பான். அங்கே ஆயத்தம்பண்ணுங்களென்றாருடபின்னர்.

௧௩. அவர்கள் போய், அவர் சொன்னபிரகாரமாகக் *கண்டு, பஸ்காபோசனத்தை ஆயத்தம்பண்ணினார்கள். * ௧௯. ௩௨.

௧௪. தருணமானநேரம் வந்தபொழுது, அவரும், அவருடனேகூடப் பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியிலிருந்தார்கள்.

௧௫. அப்பொழுது, அவர் அவர்களை நோக்கி, நான் பாடுபடுகிறதற்கு முன்னே உங்களுடனே கூட இந்தப் பஸ்காபோசனம்பண்ணவும் ஆசையாயிருந்தேன்.

௧௬. என்னத்தினாலென்றால், பராபரனுடைய இராச்சியத்திலே அது நிறைவேறுமளவும் நானதினாலே இனிப் புசிப்பதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லி,

௧௭. பின்பு பாத்திரத்தையெடுத்துக்கொண்டு ஸ்தோத்திரஞ்செய்து,

௧௮. பராபரனுடைய இராச்சியம் வருமளவும் நான் மறுபடியும் திராட்சரசத்தைப் பானம்பண்ணுவதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால், நீங்கள் இதையெடுத்து உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளுங்களென்றார்.

௧௯. அல்லாமலும், அவர் *அப்பத்தையெடுத்துக்கொண்டு ஸ்தோத்திரம்பண்ணி அதைப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்து, இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது. என்னை நினைக்கிறதற்காக இப்படிச் செய்யுங்களென்று சொல்லி, இராப்போசனம்பண்ணினபின்பு,

* மத். ௨௬. ௨௬—௨௮; மாற். ௧௪. ௨௨—௨௪; ௧. கொரி. ௧௧. ௨௩—௨௫.

௨௰. அந்தப்படியே பாத்திரத்தையுங்கொடுத்து, இந்தப் பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற என் இரத்தத்தினாலே ஆகிய உடன்படிக்கையாயிருக்கிறதென்று சொல்லி,

உக. பின்பு இதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவனுடைய கை என்னுடனே கூடப் பந்தியிலிருக்கின்றது.

உஉ. தீர்மானத்தின்படியே மனிதனுடைய குமாரன் போகிறான். அதுமெய்தான். ஆனாலும் ஐயோ, எந்த மனிதன் அவனைக் காட்டிக்கொடுக்கிறானோ அந்த மனிதனுக்குவே தனைவருமென்றார்.

உ௩. அப்பொழுது அவர்கள் நம்மிலாயாவன் அப்படிச் செய்வானென்று தங்களுக்குள்ளே விசாரிக்கத் தொடங்கினார்கள்.

உ௪. அன்றியும், அவர்கள் * தங்களில் எவன் பெரியவனாயிருப்பானென்று தங்களுக்குள்ளே வாக்குவாதம்பண்ணிக்கொண்டிருந்த பொழுது, * மார். கூ. ௩௪.

உ௫. அவர் அவர்களுக்குச் சொன்னதாவது; புறதேசத்தாருடைய இராசாக்கள் அவர்களைப் பலவந்தமாய் ஆண்டுகொள்ளுகிறார்கள். அல்லாமலும், அவர்கள்மேல் அதிகாரஞ்செலுத்துகிறவர்கள் தருமதுரைகளென்றழைக்கப்படுகிறார்கள்.

உ௬. * உங்களுக்குள்ளே அப்படியிருக்கக்கூடாது. உங்களிற் பெரியவன் சிறியவனைப்போலவும், தலைவன் ஊழியக்காரனைப் போலவுமிருக்கக்கடவன். * க. பேது. ரு. க—௬.

உ௭. பந்தியிலிருக்கிறவன், ஊழியஞ்செய்கிறவன் இவ்விருவரில் எவன் பெரியவன்! பந்தியிலிருக்கிறவனல்லவா! ஆனாலும், * நான் உங்களுக்குள்ளே ஊழியஞ்செய்கிறவனைப் போலிருக்கிறேன். * யோவா. ௰௩. ௰௪; பிலி. உ. ௭—அ.

உஅ. மேலும் எனக்கு வந்த துன்பகாலங்களில் என்னுடனேயிருந்தவர்கள் நீங்களே.

உகூ. ஆகையால், என் பிதா எனக்கு இராச்சியத்தை ஏற்படுத்தியிருக்கிறபடியால்,

௩௰ நீங்கள் என் இராச்சியத்தில் என் பந்தியிலே போசனபானம்பண்ணி, இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தாருக்கு நியாயந்தீர்ப்புக்கொடுக்கிறவர்களாய் * ஆசனங்களின்மேலுட்காரும்படிக்கு நான் உங்களையே நியமிக்கிறேனென்றார். * மத். ௰கூ. உஅ.

௩க. கர்த்தர் பின்னுஞ் சொன்னதாவது; சீமோனே சீமோனே, கோதுமையைச் சுளகினால் புடைக்கிறதுபோல உங்களைப் புடைக்கும்படிக்குச் * சாத்தான் உத்தரவு கேட்டான். * க. பேது. ரு. அ.

௩உ. நானோ உன் விசுவாசம் ஒழிந்துபோகாதபடிக்கு உனக்காக வேண்டிக்கொண்டேன். அந்தப்படி நீ மனந்திரும்பின பின்பு உன் சகோதரரை ஸ்திரப்படுத்துவாயாகவென்றார்.

௩௩. அதற்கு அவன் சொன்னது, ஆண்டவரே, உம்முடனேகூட நான் காவலிலும், சாவிலும் வர ஆயத்தமாயிருக்கிறேனென்றான்.

௩௪. அவர் சொன்னது, * பேதுருவே, இன்று சேவல் கூவுமுன்னே நீ என்னை அறியேனென்று மூன்றுதரம் மறுதலிப்பாயென்று உனக்குச் சொல்லுகிறேனென்றார்.
* யோவா. ௰௩. ௩அ.

௩௫. பின்னும் அவர் அவர்களுடனே சொன்னது, நானுங்களைப் * பணப்பையும், சாமான்பையும், பாதரட்சைகளுமில்லாமல் அனுப்பினபொழுது, ஏதாகிலும் உங்களுக்குக் குறைவாயிருந்ததாவென்றார். ஒன்றுங் குறைவாயிருக்கவில்லையென்றார்கள். * கூ. ௩; மத். ௰. கூ, ௰.

௩௬. அவர் சொன்னது, இப்பொழுது பணப்பையையும், சாமான்பையையுமுடையவன் அவைகளையெடுத்துக்கொள்ளக்கடவன் அல்லாமலுங் கத்தியில்லாதவன் தன் வஸ்திரத்தைவிற்று ஒன்றைக்கொள்ளக்கடவன்.

௩௭. என்னத்துக்கென்றால், என்னைக்குறித்தெழுதியிருக்கிறவைகள் முடிகிறபடியினாலே * அக்கிரமக்காரரோடே எண்ணப்பட்டாரென்றெழுதியிருக்கிறது என்னிடத்தில் நிறைவேறவேண்டுமென்றுங்களுக்குச் சொல்லுகிறேனென்றார். * ஏசா. ரு௩. ௰உ.

௩அ. அதற்கவர்கள், ஆண்டவரே, இதோ, இரண்டு கத்திகளுண்டென்றார்கள். (அவைகளே) போதுமென்று அவர்களுடனே சொன்னார்.

௩கூ. பின்பு * அவர் புறப்பட்டு வழக்கத்தின்படியே ஒலிவமலைக்குப் போனார். அவருடைய சீஷரும் அவருக்குப் பின் சென்றார்கள். * மத். உ௬. ௩௬; மாற். ௰௪. ௩உ; யோவா. ௰அ. க.

௪௰. அவ்விடத்திற் சேர்ந்தபொழுது, அவர் அவர்களை நோக்கி, நீங்கள் குற்றஞ்செய்தற்கான காரணத்திற் பிரவேசியாதபடிக்குச் செபம்பண்ணுங்களென்று சொல்லி,

௪க. கல்லெறிதூரத்தில் அவர்களைவிட்டுப் போய்,

௪உ. முழங்காற்படியிட்டுப் பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும். இல்லாவிட்டால் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியேயாவதாகவென்று செபம்பண்ணினார்.

௪௩. அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி அவரைப் பலப்படுத்தினான்.

௪௪. பின்னும் * அவர் கொடிய வேதனைப்பட்டு அதிக உக்கிரத்தோடே செபம்பண்ணினார். அப்பொழுது அவருடைய வேர்வை இரத்தத்துளிகளைப்போலாகித் தரையில் விழுந்தது. * யோவா. ௰உ. உ௭.

௪௫. பின்பு அவர் செபம்பண்ணிமுடித்த பொழுது, எழுந்திருந்து தம்முடைய சீஷ

ரிடத்திற்போய் அவர்கள் துக்கத்தினாலே நித்திரைபண்ணக்கண்டு,

௪௬. என்னத்திற்காகத் தூங்குகிறீர்கள்! நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு எழுந்திருந்து செபம்பண்ணுங்களென்றார்.

௪௭. * அவர் அப்படிப்பேசுகையிற் சனங்கள் கூட்டமாய்ச்சேர்ந்தார்கள். அவர்களுக்குமுன்னாகப் பன்னிருவரிலொருவனான யூதாவென்பவன் நடந்துபோய் இயேசுவை முத்தஞ்செய்யும்படிக்கு அவரிடத்திற்சேர்ந்தான். * மத். ௨௬. ௪௭; மாற். ௰௪. ௪௩; யோவா. ௰௮. ௨.

௪௮. அப்பொழுது இயேசுவானவர் அவனைநோக்கி, யூதாவே, நீ மனிதனுடைய குமாரனை முத்தத்தினாலேயா காட்டிக்கொடுக்கிறாயென்றார்.

௪௯. அல்லாமலும், அவரைச்சூழ்ந்திருந்தவர்கள் சம்பவிப்பதையறிந்து அவரைநோக்கி, ஆண்டவரே, கத்தியினாலே நாங்கள் வெட்டலாமாவென்றுசொல்ல,

௫௰. (உடனே) அவர்களிலொருவன் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனை வலதுகாதறவெட்டினான்.

௫௧. அப்பொழுது இயேசுவானவர் இம்மட்டில் நிறுத்துங்களென்றுசொல்லி அவனுடைய காதைத்தொட்டு அவனைக்குணமாக்கினார்.

௫௨. பின்பு இயேசுவானவர் தமக்குவிரோதமாய்வந்தபிரதான ஆசாரியரையும், தேவாலயத்தலைவரையும், மூப்பரையும்நோக்கி, ஒருகள்ளனைப்பிடிக்கப் புறப்படுகிறதுபோல நீங்கள் கத்திகளோடும்,தடிகளோடும்புறப்பட்டுவந்தீர்கள்.

௫௩. தினந்தோறும் நான் தேவாலயத்தில் உங்களுடனேயிருக்கையில், நீங்கள் என்மேற்கைகளைப்போடவில்லை. இதுவே உங்களுக்கேற்ற நேரமுமாய், இருளின் வல்லமையுமாயிருக்கின்றதென்றார்.

௫௪. அப்பொழுது * அவர்கள் அவரைப்பிடித்துப் பிரதான ஆசாரியனுடையமாளிகைக்குக்கொண்டுபோனார்கள். பேதுருவுந்தூரமாக அவருக்குப்பின்சென்றான். * மத். ௨௬—௫௭; மாற். ௰௪. ௫௩; யோவா. ௰௮. ௰௨.

௫௫. அல்லாமலும், அவர்கள் மாளிகையின்பிரகாரத்தின் நடுவிலே நெருப்பையுண்டுபண்ணி அதைச்சுற்றியுட்கார்ந்தபொழுது, * பேதுருவும் அவர்களுக்குள்ளேயுட்கார்ந்தான். * மத். ௨௬. ௫௮; மாற். ௰௪. ௫௪; யோவா. ௰௮. ௰௬—௨௭.

௫௬. அப்பொழுது ஒருவேலைக்காரி அவனை நெருப்பினிடத்திலிருக்கக்கண்டு அவனையுற்றுப்பார்த்து இவனும் அவனோடிருந்தானென்றாள்

௫௭. அதற்கு அவன் ஸ்திரீயே, அவனையறியேனென்று அவரைமறுதலித்தான்.

௫௮. சற்றுநேரத்துக்குப்பின்பு வேறொருவன் அவனைக்கண்டு நீயும் அவர்களிலொருவனென்றான். அதற்குப்பேதுரு மனிதனே, நானல்லவென்றான்.

௫௯. ஏறக்குறைய ஒருமணிநேரத்துக்குப்பின்பு வேறொருவன் அவனைப்பார்த்து மெய்யாய் இவனும் அவனோடிருந்தான். இவன் கலிலேயன்தானேயென்று நிச்சயத்தோடேசொன்னான்.

௬௰. அதற்குப்பேதுரு மனிதனே, நீபேசுகிறதையறியேனென்றான். உடனே அவன் பேசுகையிற்சேவல்கூவிற்று.

௬௧. அப்பொழுது கர்த்தர் திரும்பிப்பேதுருவைநோக்கிப்பார்த்தார். உடனேபேதுரு சேவல்கூவுமுன்னே நீ யென்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்றுதன்னோடேகர்த்தர்சொன்னவசனத்தைநினைத்துக்கொண்டு,

௬௨. வெளியேபோய் மிகுந்த மனத்துக்கத்தோடே அழுதான்.

௬௩. * இயேசுவைப் பிடித்துக்கொண்ட மனிதர் அவரையச்சடைபண்ணி, * ஏசா. ௫௰. ௬.

௬௪. அடித்து, அவருக்கு முகக்காட்டிட்டு, அவருடையமுகத்தில் அறைந்து உன்னையடித்தவன்யாவன்! அதைத்தீர்க்கதரிசனமாய்ச்சொல்லென்றுசொல்லி,

௬௫. மற்றும் அநேகவிதமாய் அவரைத்தூஷணித்தார்கள்.

௬௬. உதயமானபொழுது சனத்தின் மூப்பரும், பிரதான ஆசாரியரும், வேதபாரகருங்கூடிவந்து தங்கள் ஆலோசனைச்சங்கத்தில் அவரைக்கொண்டுவரும்படி செய்து அவரைநோக்கி,

௬௭. நீ கிறிஸ்துவானால் அதையெங்களுக்குச்சொல்லென்றார்கள். அதற்கவர், நானுங்களுக்குச்சொன்னாலும் என்னைநம்பமாட்டீர்கள்.

௬௮. நான் உங்களிடத்தில் விசாரித்தாலும் நீங்கள் எனக்குமாறுத்தரஞ்சொல்லவும், என்னைவிடுதலையாக்கவுமாட்டீர்கள்.

௬௯. இதுமுதல் மனிதனுடைய குமாரன் சருவவல்லமையுள்ள பராபரனுடைய வலதுபாரிசத்தில் உட்காருவாரென்றார்.

௭௰ அதற்கவர்களெல்லாரும்அந்தப்படி நீ பராபரனுடைய குமாரனோவென்றார்கள். அவர்சொன்னது, நீங்கள் சொல்லுகிறபடி நானேயவரென்றார்.

௭௧. அப்பொழுது அவர்கள்சொன்னது, இனிவேறுசாட்சி நமக்குவேண்டுவதென்ன! நாந்தாமே இவனுடையவாயினாலே கேட்டோமேயென்றார்கள்.

## ௨௩. அதிகாரம்.

[(௧) இயேசுபிலாத்துவுக்குமுன்பாகக்குற்றஞ்சாட்டப்பட்டு, ஏரோதேயினிடத்துக்கு

அடிப்பட்டது. (அ) ஏரோதே அவரைப் பரியாசம்பண்ணினது. (௰௨) விரோதிகளாயிருந்த ஏரோதேயும், பிலாத்துவுஞ் சிநேகிதர்களானது. (௰௩) பரபாசென்பவன் சனங்களுடைய கேட்பிகை கொள்ளுதலினாலே பிலாத்துவினாலே விடுதலையாக்கப்பட, இயேசுவானவர் சிலுவையில் அறையும்படி ஒப்புக்கொடுக்கப்பட்டது. (௨௭) தமக்காகப் புலம்பின ஸ்திரீகளுக்கு வருங்கேட்டின் அழிவைச் சொல்லி, (௩௪) தம்முடைய சத்துருக்களுக்காக வேண்டிக்கொண்டது. (௩௯) இரண்டு திருடர்களும் அவருடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டது. (௪௬) அவர் மரித்து, (௫௰) அடக்கம்பண்ணப்பட்டது.]

பின்பு அவர்களுடைய கூட்டத்தாரெல்லாரும் எழுந்திருந்து அவரைப் பிலாத்தென்னுந் துரையினிடத்துக்குக் கொண்டுபோய்,

௨. இவன் தன்னை இராசாவாகிய கிறிஸ்தென்றும், சனங்கள் இராயனுக்கு வரிகொடுக்கவேண்டுவதில்லையென்றுஞ் சொல்லி அவர்களைக் கலகப்படுத்தக் கண்டோமென்று அவர்மேற்குற்றஞ்சாற்றத்தொடங்கினார்கள்.

௩. * அப்பொழுது பிலாத்தென்பவன் அவரைநோக்கி, நீ யூதருடைய இராசாவாவென்று கேட்டான். அதற்கு அவர், நீர் சொல்லுகிறபடியே யிருக்கிறேனென்றார். * மத். ௨௭. ௰௧—௨௬; மாற். ௰௫. ௨—௰; யோவா. ௰௮. ௨௯—௩௩;—௰௯. ௧—௰௬.

௪. பின்பு பிலாத்தென்பவன் பிரதான ஆசாரியரையும், சனக்கூட்டத்தையும் நோக்கி, இந்த மனிதனிடத்திலே யொரு குற்றத்தையுங் காணேனென்றான்.

௫. அதற்கு அவர்கள் சொன்னது, இவன் கலிலேயா நாட்டிலே தொடங்கி இவ்விடம் வரைக்கும் யூதேயா நாட்டிலெங்கும் உபதேசம்பண்ணிச் சனங்களைக் கலக்கப்படுத்துகிறானென்று அதிக உக்கிரத்தோடே சொன்னார்கள்.

௬. கலிலேயா நாடென்பதைப் பிலாத்துக் கேட்டபொழுது இம்மனிதன் கலிலேயனோவென்று விசாரித்தபின்பு,

௭. * அவர் ஏரோதென்னும் இராசாவின் அதிகாரத்துக்குள்ளானவரென்றறிந்து அந்நாட்களில் எருசலேமிலேயிருந்த ஏரோதினிடத்துக்கு அவரை யனுப்பினான். * ௩. ௧.

௮. ஏரோதென்பவன் இயேசுவைக் குறித்த அநேக காரியங்களைக் கேள்விப்பட்டிருந்தபடியினாலே * அநேக நாளாய் அவரைக் காண ஆசையாயிருந்தான். ஆதலால், அவன் அவரைக் கண்டபொழுது மிகவுஞ் சந்தோஷப்பட்டு, அவர்செய்யும் அற்புதத்தைப் பார்க்கலாமென்றெண்ணி, * ௯. ௯.

௯. அநேக காரியங்களைக் குறித்து அவரிடத்தில் வினவினான். அவர் அவனுக்கு மறுமொழியொன்றுஞ் சொல்லவில்லை.

௰. பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் வந்துநின்று உக்கிரமாய் அவர்மேற்குற்றஞ் சாற்றினார்கள்.

௰௧. அப்பொழுது ஏரோதென்பவனும், அவனுடைய போர்ச்சேவகரும் அவரையசட்டைபண்ணி பிரகாசமுள்ள வஸ்திரத்தை அவருக்குடுத்தி யிப்படிப் பரியாசம்பண்ணின பின்பு,

௰௨. அவரைத் திரும்பப் பிலாத்துவினிடத்துக்கனுப்பினான். அந்தநாளிலே முன்னே ஒருவருக்கொருவர் பகைஞராயிருந்த பிலாத்தென்பவனும், ஏரோதென்பவனுஞ் சிநேகிதரானார்கள்.

௰௩. அப்பொழுது பிலாத்தென்பவன் பிரதான ஆசாரியரையும், தலைவரையும், சனங்களையுங் கூடிவரச்செய்து அவர்களைநோக்கி,

௰௪. நீங்கள் இந்த மனிதன் சனங்களைக் கலக்கப்படுத்துகிறவனென்று சொல்லி, இவனை என்னிடத்திற்கொண்டுவந்தீர்கள். அந்தப்படி நானுங்களுக்குமுன்பாக இவனைச் சோதித்தபொழுது, நீங்கள் இவன்மேற்சாற்றின குற்றங்களிலொன்றையும் நான் இவனிடத்திலே காணவில்லை.

௰௫. பின்பு உங்களை ஏரோதினிடத்துக்கு அனுப்பினேன். அவரும் இவனிற் குற்றங் காணவில்லை.

௰௬. ஆதலால் இவன் மரணத்துக்கேதுவானதொன்றுஞ் செய்யாதவனாயிருக்கிறபடியால், நான் இவனைத் தண்டித்து விடுதலையாக்குவேனென்றான்.

௰௭. பண்டிகைதோறும் அவன் அவர்களுக்காக ஒருவனை விடுதலையாக்கவேண்டியிருந்தபடியால் அப்படிச் சொன்னான்.

௰௮. திரளான சனங்களெல்லாரும் அதைக் கேட்டு, இவனை ஆக்கினைக்குட்படுத்தி பரபாசை யெங்களுக்காக விடுதலையாக்கவேண்டுமென்று கூக்குரலிட்டார்கள்.

௰௯. அந்தப் பரபாசென்பவன் நகரத்திலே நடந்த ஒரு கலகத்துக்காகவும், கொலைபாதகத்துக்காகவுங் காவலிலே வைக்கப்பட்டிருந்தான்.

௨௰. அப்பொழுது பிலாத்தானவன் இயேசுவை விடுதலையாக்கமனதாய் மறுபடியும் அவர்களுக்குச் சொன்னான்.

௨௧. அதற்கவர்கள், இவனைச் சிலுவைமரத்திலே அறையவேண்டும், இவனைச் சிலுவைமரத்திலே அறையவேண்டுமென்று கூக்குரலிட்டார்கள்.

௨௨. அவன் மூன்றாந்தரஞ் சொன்னது, இவன் எந்தப்பொல்லாங்கைச் செய்தான். இவனிடத்திலே மரணத்துக்கேதுவான குற்றமொன்றையுங் காணேனே. ஆகையால்,

நான் இவனைத் தண்டித்து விடுதலைபண்ணுவேனென்றான்.

௨௩. அப்படியிருந்தும் அவனைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்கு அவர்கள் மிகுந்த சத்தத்தோடே கேட்டுக்கொண்டார்கள். அவர்களும் பிரதான ஆசாரியருமிட்ட கூக்குரல் * அதிகப்பட்டது. * யோவா. ௰௯. ௰௨.

௨௪. அப்பொழுது பிலாத்தென்பவன் அவர்களுடைய மனுவின்படி யாகும்படிக்குத் தீர்மானம்பண்ணி,

௨௫. கலகத்தினிமித்தமும், கொலைபாதகத்தினிமித்தமுங் காவலில் வைக்கப்பட்டிருந்தவனை யவர்களுடைய விண்ணப்பத்தின்படி அவர்களுக்காக விடுதலையாக்கி, இயேசுவானவரையே அவர்களுடைய இஷ்டத்துக்கு ஒப்புக்கொடுத்தான்.

௨௬. அந்தப்படி அவர்கள் அவரைக் கொண்டுபோகிறபொழுது வயலிலிருந்து வருகிற * சிரேனேயூராகிய சீமோனென்பவனைப் பிடித்துச் சிலுவைமரத்தை இயேசுவின் பின் சுமந்துபோகும்படி அவன்மேலே வைத்தார்கள். * மத். ௨௭. ௩௨; மாற். ௰௫. ௨௧.

௨௭. திரளான கூட்டமாகிய சனங்களும், அவருக்காகத் துக்கப்பாயப் புலம்பியழுகிற ஸ்திரிகளும் அவருக்குப் பின்சென்றார்கள்.

௨௮. அப்பொழுது இயேசுவானவர் அவர்கள் முகமாயத் திரும்பிச் சொன்னது, எருசலேமின் ஸ்திரிகளே, நீங்கள் எனக்காக அழாமல், உங்களுக்காகவும், உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுதுகொள்ளுங்கள்.

௨௯. என்னத்தினாலென்றால், மலடிகளும், பிள்ளைபெறாத ஸ்திரிகளும், பாலகொடாத ஸ்திரிகளும் பாக்கியமுள்ளவர்களென்று சொல்லப்படும் நாள்கள் வரும்.

௩௰. அப்பொழுது இவர்கள் * மலைகளை நோக்கி, எங்கள்மேல் விழுங்களென்றும், குன்றுகளை நோக்கி, எங்களை மூடிக்கொள்ளுங்களென்றுஞ் சொல்லுவார்கள். * ஓசே. ௰. ௮.

௩௧. பச்சையான மரத்துக்கிப்படிச் செய்தால் பட்டுப்போன மரத்துக்கு மிகவும் அதிகமாய் இப்படிச் செய்யப்படுமல்லவோவென்றார்.

௩௨. * குற்றவாளிகளாகிய வேறிரண்டுபேரும் அவரோடேகூட மரணம் அடைவதற்குக் கொண்டுபோகப்பட்டார்கள்.
* ஏசா. ௫௩. ௰௨.

௩௩. தலையோட்டிடமென்னப்பட்ட இடத்திலே அவர்கள் சேர்ந்தபொழுது அங்கே யவரையும், அவருடைய வலதுபக்கத்திலே யொரு குற்றவாளியையும் * அவருடைய இடதுபக்கத்திலே மற்றக்குற்றவாளியையுஞ் சிலுவைமரங்களில் அறைந்தார்கள். * மத். ௨௭. ௩௫—௪௪; மாற். ௰௫. ௨௪—௩௭.

௩௪. அப்பொழுது இயேசுவானவர் * பிதாவே, இவர்கள் தங்கள் செய்கையின் தன்மையையறியாதிருக்கிறார்கள். ஆதலால், இவர்களுக்கு மன்னித்தருளுமென்றார். † அவருடைய வஸ்திரங்களை யவர்கள் பங்கிட்டு, (அவைகளைக்குறித்துச்) சீட்டுப்போட்டார்கள்.
* ஏசா. ௫௩. ௰௨; † சங். ௨௨. ௰௮.

௩௫. சனங்கள் நின்று பார்த்துக்கொண்டார்கள். அவர்களுடனேகூடத் தலைவரும் அவரையிகழ்ந்து இவன் மற்றவர்களை யிரட்சித்தான். இவன் பராபரனாலே தெரிந்துகொள்ளப்பட்ட கிறிஸ்துவானால் தன்னைத்தானே யிரட்சிக்கலாமேயென்றார்கள்.

௩௬. போர்ச்சேவகரும் அவரையச் சட்டைபண்ணி அவரிடத்திற் சேர்ந்து அவருக்குக் காடியைக் காண்பித்து,

௩௭. நீ யூதரின் இராசாவானால் உன்னையிரட்சித்துக்கொள்ளென்றார்கள்.

௩௮. அவருக்குமேலாக இவன் யூதருடைய இராசாவென்று கிரேக்கை, லத்தீன், எபிரேயு என்னும் பாஷைகளால் எழுதப்பட்டிருந்தது.

௩௯. அல்லாமலுந் தூக்கிப்போடப்பட்ட குற்றவாளிகளிலொருவன் அவரைத் தூஷணித்து, நீ கிறிஸ்துவானால் உன்னையும், எங்களையும் இரட்சித்துக்கொள்ளென்றான்.

௪௰. அப்பொழுது மற்றவன் அவனுடனே சொன்னது, இந்த ஆக்கினைக்குள்ளாயிருக்கிற நீயும் பராபரனுக்குப் பயப்படாமலா இருக்கிறாய். நாம் நம்முடைய நடக்கைகளுக்குத் தகுதியாக இந்த ஆக்கினையை நியாயமாய் அடைகிறோம்.

௪௧. இவர் தகாததொன்றையும் நடப்பிக்கவில்லையென்று அவனைக் கடிந்துகொண்டு,

௪௨. பின்பு இயேசுவுடனே சொன்னது, ஆண்டவரே, நீர் உம்முடைய இராச்சியத்திற் சேரும்பொழுது அடியேனை நினைத்தருளுமென்றான்.

௪௩. அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசிலிருப்பாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேனென்றார்.

௪௪. பின்பு ஏறக்குறைய ஆறுமணிநேரமாயிற்று. (அதுமுதல்) ஒன்பதாமணிநேரமளவுக்கும் அந்தத்தேசத்திலெங்கும் அந்தகாரமுண்டாகச் சூரியனிருள் அடைந்தது.

௪௫. அல்லாமலுந் தேவாலயத்திலுள்ள திரைச்சீலை நடுவிலே கிழிந்துபோயிற்று.

௪௬. அல்லாமலும் இயேசுவானவர் பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புக்கொடுக்கிறேனென்று * மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அதின்பின்பு சீவனை விட்டார். * மத். ௨௭. ௫௰; மாற். ௰௫. ௩௭; யோவா. ௰௯. ௩௰.

௪௭. அப்படிச் சம்பவித்தவைகளைப் படைத்தலைவன் கண்டு, மெய்யாய் இந்த மனிதன் நீதிமானாயிருந்தானென்று பராபரனைத் துதி செய்தான்.

௪௮. அல்லாமலும் அந்தச் சங்கதியைப் பார்க்கக்கூடிவந்திருந்த சனங்களெல்லாரும் சம்பவித்தவைகளைப் பார்த்தபொழுது, தங்கள் மார்புகளில் அடித்துக்கொண்டு திரும்பினார்கள்.

௪௯. அன்றியும் அவருக்கறிமுகமானவர்களெல்லாரும், கலிலேயாவிலிருந்து அவரைப் பின்சென்று வந்த ஸ்திரிகளுந் தூரத்திலே நின்று இவைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

௫௰. பின்பு யூதருடைய பட்டணமாகிய அரிமத்தியாவூரானுமாய், உத்தமும், நீதியுமுள்ளவனுமாய், பராபரனுடைய ஆளுகைவரக் காத்திருந்தவனுமாய்,

௫௧. யூதர்களுடைய ஆலோசனைக்கும், செய்கைக்குஞ் சம்மதியாத ஆலோசனைக்காரனுமாயிருந்த யோசேப்பென்பவன் பிலாத்துவினிடத்திற்போய்,

௫௨. இயேசுவின் சரீரத்தைக் கேட்டு (உத்தரவுபெற்றபின்பு,)

௫௩. அதையிறக்கி மெல்லிய புடவையிலே சுற்றிக் கல்மலையில் வெட்டப்பட்டதுமாய், ஒருக்காலும் ஒருவனையும் வைக்கப்படாததுமாயிருந்த ஒரு கல்லறையிலே வைத்தான்.

௫௪. அந்தநாள் ஆயத்த நாளாயிருந்தது. ஓய்வுநாளும் ஆரம்பமாயிற்று.

௫௫. கலிலேயாவிலிருந்து அவருடனேகூட வந்திருந்த ஸ்திரிகள் அவனுக்குப் பின்சென்று கல்லறையையும், அவருடைய சரீரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து,

௫௬. பின்பு திரும்பிப்போய்ச் சுகந்தவர்க்கங்களையும், பரிமள தயிலங்களையும் ஆயத்தம் பண்ணிக் கற்பனைப்படியே ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

## ௨௪. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துவினுயிர்த்தெழுதல் இரண்டு தூதர்களாலே கல்லறையினிடத்தில் வந்திருந்த ஸ்திரிகளுக்கு அறிவிக்கப்பட்டது. (௯) இந்தச்செய்தியை இவர்கள் மற்றவர்களுக்கு அறிவித்தது. (௰௩) கிறிஸ்து எம்மாவென்னுங் கிராமத்துக்குப்போகிற இரண்டு சீஷர்களுக்குத் தரிசனையாகி, (௩௬) பின்பு அப்போஸ்தலர்கள் எல்லாருக்குங் காணப்பட்டு அவர்களுடைய அவிசுவாசத்தைச் கடிந்து கொண்டு, (௪௭) அவர்களுக்கு கற்பனை கொடுத்து, (௪௯) பரிசுத்த ஆவியை அனுப்புவோமென்று வாக்குத்தத்தம்பண்ணி, (௫௧) பின்பு பரமண்டலத்துக்கேறினது.]

* வாரத்தின் முதல்நாள் அதிகாலையிலே அவர்கள் தாங்கள் ஆயத்தம் பண்ணின சுகந்தவர்க்கங்களையெடுத்துக் கொண்டு வேறுசில ஸ்திரிகளுடனேகூடக் கல்லறையினிடத்திற்சென்று, * மத்தே. ௨௮. ௧—௰; மாற். ௰௬. ௧—௰௧; யோவா. ௨௰. ௧—௰௮.

௨. அதின்மேலிருந்த கல் தள்ளப்பட்டிருக்கிறதைக் கண்டு,

௩. உட்பிரவேசித்துக் கர்த்தராகிய இயேசுவின் சரீரத்தைக் காணாமல்,

௪. அதைக்குறித்து மிகுந்த கலக்கமடைந்துகொண்டிருக்கையில்,

௫. பிரகாசமான வஸ்திரங்களையுடைய இரண்டுபேர் அவர்களருகே நின்றார்கள்.

௬. அப்பொழுது அந்த ஸ்திரிகள் பயந்து தரையைநோக்கிக் குனிந்து நிற்கையில் அவ்விரண்டுபேரும் அவர்களைநோக்கி, உயிரோடிருக்கிறவரை நீங்கள் மரித்தோரிடத்தில் என்னத்தினாலே தேடுகிறீர்கள். அவரிங்கேயில்லை. எழுந்துபோனார்.

௭. முன்னே யவர் கலிலேயா நாட்டிலிருந்த காலத்திலே * மனிதனுடைய குமாரன் பாவிகளான மனிதர்கைகளில் ஒப்புக்கொடுக்கப்படவும், சிலுவையில் அறையப்படவும், மூன்றாம் நாளிலே திரும்ப எழுந்திருக்கவும் வேண்டுமென்று உங்களுடனேசொன்னதை நினைத்துக்கொள்ளுங்களென்றார்கள். * ௯. ௨௨.

௮. அப்பொழுது அவர்கள் அவருடைய திருவசனங்களை நினைத்து,

௯. கல்லறையைவிட்டுத் திரும்பி அந்தச் சங்கதியைப் பதினொருவருக்கும், மற்றெல்லாருக்கும் அறிவித்தார்கள்.

௰. அதை அப்போஸ்தலருடனே சொன்னவர்கள் * மகதலாவூராளாகிய மரியாளும், யோவன்னாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், இவர்களுடனேயிருந்த மற்ற ஸ்திரிகளுமே. * அ. ௨, ௩.

௰௧. அவர்கள் சொன்ன வசனங்களை அப்போஸ்தலர்கள் ஒரு கட்டுக்கதையைப்போல எண்ணி, அவர்களுடைய சொல்லை நம்பவில்லை.

௰௨. அனாலும் பேதுரு எழுந்து கல்லறையினிடத்துக்கோடி அதற்குள்ளே பார்க்கக் குனிந்து சேலைகளைத் தனியே வைத்திருக்கக் கண்டு, சம்பவித்திருக்கிறதைக்குறித்துத் தனனில் ஆச்சரியப்பட்டுக்கொண்டு போனான்.

௰௩. அன்றியும் அன்றைத்தினமே யவர்களில் * இரண்டுபேர் எருசலேமுக்கு அறுபது ஸ்தாதி * வழிதூரமான எம்மாவு என்னும் ஊருக்குப் போனார்கள். * மாற். ௰௬. ௰௨, ௰௩.

௰௪. (போகையில்) அவர்கள் சம்பவித்தி

---

* அறுபது ஸ்தாதியென்பது ஏறக்குறைய ஏழு நாழிகை வழியாயிருக்கும்.

ருநததிககாரியஙகளயாவையுங்குறிததுஒரு வரோடொருவர் பேசிககொணடார்கள.

௰௫. அபபடியவர்கள பேசி விசாரிததுக கொளளுகிறபொழுது, இயேசுவானவர் தாமுந சமீபமாகி அவர்களுடனேகூட நடநதார்.

௰௬. அபபடியிருநதும, அவரை யறியாத படிககு அவர்களுடையகண்கள மறைக்கப் படடிருநதன.

௰௭. அபபொழுது அவர் அவர்களைநோககி, நீஙகள துககமுகமுளளவர்களாய வழிநட நது ஒருவருககொருவர் சொலலிககொளளு கிற காரியஙகளெனனவெனறார்.

௰௮. அதறகுஅவர்களிலொருவனாகியகிலே யோபபாவெனபவனசொனனது, நீமாத்திர மோ எருசலேமில இநநாள்களிற சமபவித தவைகளை யறியாத அனனியனாயிருககிற யெனறான.

௰௯. அவர் எவையெனறார். அதறகு அவர் களசொனனது, நாசரேததூரானாகிய இயே சுவைககுறிததவைகளே. அவர் பராபரனுக குமு, சகல சனஙகளுககுமுனபாகச செய கையிலும, வசனததிலும வலலமையுளள தீர்ககதரிசியாயிருநதார்.

௨௰. அபபடியிருநதும, நமமுடைய பிர தான ஆசாரியருமு,தலைவருமு அவரைமரண ஆககினைககுட்படுததிச சிலுவைமரததில அறைநதார்கள.

௨௧. * இஸ்ரவேலரைமீட்பவர் அவரேயெ னறு நாஙகள நமபினோம. அவைகள சமப விததது இனறு மூனறுநாளாகிறதே.
* அப். க. சு.

௨௨. எஙகளிற சில ஸதிரீகள அதிகாலையி லேகலலறையினிடததிறபோய அவருடைய சரீரததைககாணாமல திருமபிவநது,

௨௩. அவருயிரோடிருக்கிறாரெனறு சொன ன தேவதூதரைத் தரிசிததோமெனறுசொ லலி, எஙகளைப பிரமிககப்பணணினார்கள.

௨௪. அபபொழுது எஙகளிற சிலர் கலல றையினிடததிறபோய ஸதிரீகள சொனன படியேகணடார்கள. அவரைககாணவிலலை யெனறார்கள.

௨௫. அபபொழுது அவர் அவர்களுடனே சொனனது, தீர்க்கதரிசிகள்சொனனயாவை யுமு விசுவாசிககிறதறகுப புததியிலலாமல மநத இருதயமுள்ளவர்களே,

௨௬. கிறிஸதுவானவர்பாடுபடவும, தமது மகிமைககுட்பிரவேசிககவும வேணடியதா யிருநததிலலையாவெனறுசொலலி,

௨௭. மோசேயையுமு, சகல தீர்ககதரிசிக ளையுநதொடஙகி,வேதவாககியஙகளெலலா வறறிலுந தமமைககுறிததுச சொலலியிரு ககிறவைகளை யவர்களுககு விவரமாய்க்கா ண்பிததார்.

௨௮. அததருணததிலே தாஙகள போகிற ஊருககுச சமீபமானார்கள. அபபொழுது அவர்அபபுறம்போகமனதைக்காணபித்தார்.

௨௯. அவர்களசொனனது, சாயநதரமா யிற்றே. பொழுதும்போகின்றதே. ஆகையா ல நீர் எஙகளிடததிலேதஙகவேணடுமென று மிகவுமவேணடிககொணடார்கள். அத னபினபு அவர் அவர்களிடததிலே தஙகும படிபிரவேசிததார்.

௩௰. அப்படியவர்களுடனே பநதியிருக கையில, அவர் அப்பத்தையெடுதது ஆசீர் வாதஞ்சொலலி அதைப்பிட்டு அவர்களுக குககொடுத்தார்.

௩௧. அபபொழுது அவர்களுடைய கணக ளதிறக்கப்பட அவரையறிநதார்கள.

௩௨. உடனே அவர் அவர்களுககு விலகி னார். அபபொழுது அவர்கள ஒருவரையொ ருவர்நோககி, வழியிலே அவர்நமமுடனே பேசி,

௩௩. வேதவாககியஙகளை நமககு விளக்க மாய்க்காணபித்தபொழுது, நமக்குளளஇரு தயமு அன்பாய்க்கொழுநதுவிடடு வளரவி லலையாவெனறுசொலலி அநநேரமேயெழு நது எருசலேமுககுததிருமபிப்போயப்பதி னொருவருமு, அவர்களோடிருநதவர்களுங் கூடியிருககக்கணடு,

௩௪. கருத்தர் மெய்யாய் எழுநதிருநது * சீமோனுககுத்தரிசனையானாரெனறு அவ ர்களசொலலக்கேடடு, * க. கொரி. ௰௫. ௫.

௩௫. பினபு வழியிலே நடந்தவைகளையுமு, அவர் அப்பத்தைப்பிட்கையில தாஙகள அவரையறிநதுகொணடதையுமு விவரிதது சசொனனார்கள.

௩௬. அப்படி அவர்கள பேசிக்கொளளு கையில * இயேசுவானவர் தாமேயவர்களு ககுளளேநினறு உஙகளுககுச்சமாதானசவு ககியமுணடாவதாகவெனறு அவர்களுட னேசொனனார். * மாற்கு. ௰௬. ௰௪; யோ வான. ௨௰. ௰௯.

௩௭. அவர்கள அவரையொரு ஆவியென றெணணிக்கலக்கமுமு, பயமும் அடைநதார் கள.

௩௮. அபபொழுது அவர் அவர்களைநோக கி, நீஙகள என்னத்திறகாகக்கலஙகுகிறீர்க ள? எனனததிற்காக உஙகளிருதயஙகளிற சநதேகஙகளெழுமபுகினறன?

௩௯. எனகைகளையுமு, கால்களையுமுபாருங கள. நானதானிருககிறேன. எனனைததொ டடுபபாருஙகள. நீஙகளகாணகிறபடி என ககுமாமசமுமு, எலுமபுகளுமுணடாயிருக கிறதுபோல ஒரு ஆவிககுமிலலையேயென றுசொலலி,

௪௰. கைகளையுமு, காலகளையுமு அவர்களுக் குக்காணபிததார்.

௪௧. அப்படியிருநதுஞ் சநதோஷத்தினா லே அவர்கள பினனுமு விசுவாசியாமற பிர

மிப்பாயிருக்கிறபொழுது போசனத்துக்கு ஏதாகிலும் இங்கேயுண்டாவென்றார்.

௪௨. அப்பொழுது அவர்கள் பொரித்த மீன்கண்டத்தையும், தேன்கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக் கொடுத்தார்கள்.

௪௩. அவைகளையவர் எடுத்து அவர்களுக்கு முன்பாகப் புசித்து,

௪௪. பின்பு அவர்களுடனே சொன்னதாவது; மோசேயின் பிரமாணப்புத்தகத்திலேயும், தீர்க்கதரிசனப்புத்தகங்களிலேயும், சங்கீதப்புத்தகத்திலேயும் என்னைக்குறித்தெழுதியிருக்கிறயாவும் நிறைவேறவேண்டுமென்று நான் உங்களோடேயிருந்தகாலத்திலேயுங்களுடனே சொல்லிக்கொண்ட சங்கதிகள் இவைகளேயென்றுசொல்லி,

௪௫. பின்பு வேதவாக்கியங்களையவர்கள் அறிந்துகொள்ளும்படி அவர்களுடைய மனதுக்குப்புத்திகொடுத்து அவர்களுடனே சொன்னதாவது;

௪௬. இவ்விதமாய் எழுதியிருக்கிறது. அல்லாமலும் அந்தப்படியே கிறிஸ்துப்பாடுபடவும், மூன்றாம்நாளிலே மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவும்,

௪௭. எருசலேம்நகர்தொடங்கிச் சகலதேசத்தாருக்கும், அவருடையநாமத்திலே * மனந்திரும்புதலையும், பாவமன்னிப்பையும் பிரசங்கிக்கவேண்டியதாயிருந்தது. * அப். ௫. ௩௧.

௪௮. நீங்களே அவைகளுக்குச்சாட்சிகளாயிருக்கிறீர்கள்.

௪௯. பின்புநான் * என்பிதா வாக்குத்தத்தம்பண்ணினதை யுங்களுக்கு அனுப்புவேன். நீங்கள் உன்னதத்திலிருந்து வரும்பலனைப் பெற்றுக்கொள்ளுமளவாகவும் எருசலேம்நகரத்திலிருங்களென்றார். * யோவா. ௰௪. ௨௬; அப். ௧. ௪.

௫௰. பின்பு அவர் பெத்தானியூர்வரைக்கும் அவர்களை அழைத்துக்கொண்டுபோய்த்தம்முடைய கைகளையுயர்த்தி, அவர்களையாசீர்வதித்தார்.

௫௧. அவர்களையாசீர்வதிக்கையில், அவர் அவர்களைவிட்டுப்பிரிந்து, * பரமண்டலத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டார். * மாற். ௰௬. ௰௯, ௨௰; அப். ௧. ௪—௯.

௫௨. அப்பொழுது அவர்கள் அவரைத்தொழுதுகொண்டு, மிகுந்த சந்தோஷத்தோடே எருசலேம்நகரத்துக்குத்திரும்பி,

௫௩. இடைவிடாமல் தேவாலயத்திலே பராபரனைத்துதித்து வாழ்த்திக்கொண்டிருந்தார்கள். ஆமென்.

---

# யோவான் என்பவர் எழுதின சுவிசேஷம்.

---

(கி. பி. பின். ௨௯. வரு)

## ௧. அதிகாரம்.

[(௧) இயேசுகிறிஸ்துவினுடைய தெய்வீகத்தையும், மனுஷீகத்தையும், உத்தியோகத்தையுங்காட்டியது. (௰௫) அவரைக்குறித்து யோவான்கொடுத்த சாட்சியைச்சொல்லியது. (௩௬) அந்திரேயா, பேதுரு முதலான சீஷர்கள் அழைக்கப்பட்டது.]

ஆதியிலே * வார்த்தையிருந்தது. அவ்வார்த்தை பராபரனிடத்திலிருந்தது. அவ்வார்த்தையே † பராபரன். * ௧. யோவா. ௧. ௧; ௫. ௭; அறி. ௰௯. ௰௩ † ௧. யோவா. ௫. ௨௰.

௨. அது ஆதியிலே * பராபரனிடத்திலிருந்தது. * வாக்கி. ௮. ௨௨—௩௰.

௩. சகலமும் * அதினாலேயுண்டாயின. அதுவில்லாமல் ஒருசிருட்டியுமுண்டாகவில்லை. அதிலே சீவனுண்டாயிருந்தது. * சங்கீதம். ௩௩. ௬. கொலோ. ௧. ௰௬, ௰௭.

௪. அந்தச் * சீவன் மனிதருடைய ஒளியாயிருந்தது. * ௫. ௨௬.

௫. அந்த * ஒளியிருளிலே பிரகாசமாயிருக்கிறது. இருளானது அதைப்பற்றிக்கொள்ளவில்லை. * அ. ௰௨;—௯. ௫;—௰௨. ௪௬.

௬. * யோவானென்னும் ஒருமனிதன் பராபரனால் அனுப்பப்பட்டான். * மத். ௩. ௧.

௭. தன்னாலேயெல்லாரும் விசுவாசிக்கும்படிக்கு அந்த ஒளியைக்குறித்துச்சாட்சிகொடுக்கவந்தான்.

௮. அவன் அந்த ஒளியல்ல. அந்தஒளியைக்குறித்துச் சாட்சிகொடுக்கவேவந்தான்.

௯. மெய்யான ஒளியானவர் உலகத்திலே தோன்றுகிறமனிதர்யாவரையும் பிரகாசிப்பிக்கிறார்.

௰. அவர் உலகத்திலிருந்தார். அல்லாமலும், உலகம் அவராலே * யுண்டாயிற்று. உலகம் அவரையறியவில்லை. * எபி. ௧. ௨.

௰௧. அவர் தமது சொந்தத்திற்சேர்ந்தார். அவருக்குச்சொந்தமானவர்கள் அவரையேற்றுக்கொள்ளவில்லை.

௰௨. அவருடையநாமத்தின்மேல் விசுவாசமாய் அவரையேற்றுக்கொண்டவர்கள்

கிறபடியால, எனனைககொலைசெயயததேடு கிறீர்கள.

௩௮. நான எனபிதாவினிடததிலே கணட தைபபேசுகிறேன. அபபடியே நீஙகளும உஙகள பிதாவினிடததிலே கணடதைசசெயகிறீர்களெனறார்.

௩௯. அதறகவர்கள * ஆபிரகாமேயெஙகளதகபபனுயிருககிறானெனறார்கள. இயேசுவானவர்சொனனது, நீஙகள ஆபிரகாமினபிளளைகளானுல ஆபிரகாமின கிரியைகளுககொபபாயசசெயவீர்களே. * மத. ௩. ௯.

௪௰. நீஙகள பராபரனிடததிறகேளவிபபடடசததியததையுஙகளுககுசசொனனமனிதனுகிய எனனைககொலைசெயயததேடுகிறீர்கள. ஆபிரகாம இபபடிசசெயயவிலலையே.

௪௧. நீஙகள உஙகள பிதாவினகிரியைகளுககொபபாயசசெயகிறீர்களெனறார். அதறகவர்களசொனனது, நாஙகள வேசைமார்ககததிலேலே பிறநதவர்களலல, ஒரேபிதா எஙகளுககுணடு. பராபரனே யவரொனறார்கள.

௪௨. இயேசுவானவர்சொனனது, பராபரனிலிருநதே புறபபடடுவநதேன. நான எனனுலேவரவிலலை. அவரேயெனனையனுபபினுர். ஆகையால, பராபரன உஙகளபிதாவாயிருநதால நீஙகள எனனிடததில அனபுகூருவீர்கள.

௪௩. எனனததினுலே எனனுடைய பேசசையறியாமலிருககிறீர்கள. எனனுடைய உபதேசததைககேட்க மனதிலலாதபடியினுலலவோ (அபபடியிருக்கிறீர்கள.)

௪௪. *பசாசானவனேயுஙகளபிதா. (ஆகையால,) உஙகள பிதாவின இசசைகளினபடி செயயவிருமபுகிறீர்கள. ஆதிமுதறகொணடு அவன மனிதககொலைகாரனுயிருககிறுன. அலலாமலும, † சததியததில அவனநிலைநிலலாதபடியாறசததியம அவனிடததிலிலலை. அவனபொயயனுமாயபபொயயினதகப்பனுமாயிருககிறபடியாற பொயபேசுகிறபொழுது தனசொநதத்திலெடுததுபபேசுகிறுன. * க. யோ. ௩. ௮; † யூத. ௬. வசனம.

௪௫. நான சததியததையுஙகளுககுசசொலலுகிறபடியினுலே நீஙகள எனனைவிசுவாசிககிறதிலலை.

௪௬. எனனிடததிறபாவமுணடெனறுஉங்களிலெவனநிசசயமாயச்சொலவான! ஆகையால, நானசததியததைசசொலலுகிறவனுயிருகக நீஙகள எனனையெனனததினுலே விசுவாசிககிறதிலலை.

௪௭. * பராபரனுலுணடானவன பராபரனுடைய வசனஙகளுககுச செவிகொடுககிறுன. நீஙகள பராபரனுலுணடாயிராதபடியாற செவிகொடாயலிருககிறீர்களெனறார். * க. யோவா. ௪. ௬.

௪௮. அபபொழுது யூதர்கள அவரைநோககி, நாஙகள உனனைச சமாரியனெனறும, * பேயையுடையவனென்றும நியாயமாயச்சொலலுகிறோமலலவாவெனறார்கள. * ௰. ௨௰.

௪௯. இயேசுவானவர்சொனனது, நானபேயையுடையவனல்ல. நான எனபிதாவைககனமபணணுகிறேன. நீஙகள எனனைககனனமபணணுகிறீர்கள.

௫௰. அனறியும, நான எனககுககனமவரததேடுகிறதிலலை. அதைததேடி நியாயநதீர்ககிறவரொருவரிருககிறார்.

௫௧. *மெயயாகவேநானுஙகளுககுசசொலலுகிறதாவது; ஒருவனஎனனுடையவசனததைககைக்கொணடாலஅவன ஒருககாலும் மரணததையடைவதிலலையெனறுசொனனபொழுது, * ௫. ௨௪; ―௰௧. ௨௫. ௨௬.

௫௨. யூதர்கள அவரைநோககி, நீ பேயையுடையவனெனறிபபொழுது அறிநதிருககிறோம. ஆபிரகாமும, தீர்ககதரிசிகளும மரிததார்கள. நீ சொலலுகிறது ஒருவன எனவசனததைககைககொணடால அவன ஒருககாலும மரணததை ருசிபார்ககமாட்டானெனகிறுய.

௫௩. எஙகள பிதாவாகிய ஆபிரகாமிலும் நீபெரியவனு? அவர்மரிததார். தீர்ககதரிசிகளும மரிததார்கள. நீ உனனை எபபடிபபடடவனுககுகிறுயெனறார்கள.

௫௪. இயேசுவானவர்சொனனது, நானே எனனைக கனமபணணினுல, அநதக கனம வீணுயிருககும. எனபிதாவே எனனைககனமபணணுகிறார். அவரை நீஙகள உஙகளதேவனெனறுசொலலுகிறீர்கள.

௫௫. அபபடியிருநதும நீஙகள அவரையறியவிலலை. நான அவரையறிநதிருககிறேன. அவரை யறியமாட்டேனெனறு சொனனேனுகில நான உஙகளைபபோலப பொயயனுயிருபபேன. அவரைநானஅறிநது அவருடைய வசனததைக கைககொணடுவருகிறேன.

௫௬. உஙகள பிதாவாகிய ஆபிரகாம எனனுடையநாளைககாணககளிபபாய ஆசைபபடடு அதைக்கணடு சநதோஷபபட்டானென்றார்.

௫௭. அபபொழுது யூதர்கள அவரைநோககி, உனககு ஐமபதுவயதிலலையே, நீ ஆபிரகாமைககணடாயாவெனறார்கள.

௫௮. இயேசுவானவர்சொனனது, ஆபிரகாமபிறநதகாலததிறகு முனனும நானிருககிறேனெனறு மெயயாகவே யுஙகளுககுசசொலலுகிறேனெனறார்.

௫௯. அபபொழுது அவர்மேலெறியும்படிககுக் கற்களை யெடுததுககொணடார்கள. இயேசுவானவர்மறைநது * அவர்கள நடுவேநடநது தேவாலயததைவிடடு அபபுறமபோனுர். * லூக. ௪. ௩௰.

## ௯. அதிகாரம்.

[(௧) இயேசுவினாலே ஒரு பிறவிக்குருடன பார்வையடைநது, (௮) பரிசேயரிடததிற கொணடுவரபபடடு, (௰௩) அதினிமிததம அவர்கள கோபமடைநது, அவனைபபுறமபே தளளினது. (௩௫) அவன இயேசுவினாலே அங்கீகரிககபபடடு, அவரைககுறிதது நலலம் கையிடடது. (௩௯) கிறிஸ்துவினுற பிரகாசிககிறவர்களினுடையொனறது.]

அவர் அபபுறமபோகையிற பிறவிககுருடனாகிய ஒருமனிதனைககணடார்.

௨. அபபொழுது அவருடைய சீஷர் அவனைநோககி, இரபீ, இவன குருடனாயபபிறககுமபடிககு, இவனோ! இவனைபபெறறவர்களோ! ஆர் பாவஞ்செயதாரகளெனறு கேடடார்கள்.

௩. அதறகு இயேசுவானவர் சொனனது, இவனுமம பாவஞ்செயயவிலலை. இவனைபபெறறவர்களும பாவஞ்செயயவிலலை. *பராபரனுடைய கிரியைகள இவனிடததிலவெளிபபடுமபொருடடாக (இபபடிப பிறநதான.) * ஏசாயா. ௫௰. ௫.

௪. பகறகாலமிருககுமளவும நான எனனையனுபபினவருடைய கிரியைகளைசசெயய வேணடும. ஒருவனுங்கிரியையைசசெயயககூடாதபடிககு இராததிரிவருகினறது.

௫ நான உலகததிலிருககையில * உலகததின ஒளியாயிருககிறேனெனறார். * அ ௰௨.

௬. இபபடியவர் சொலலிபபினபு * தரையிலேதுபபி உமிழநீரினுற சேறுணடாககி அநதசசேறறைக குருடனுடைய கண்களினமேறபூசி, * மாறகு. அ. ௨௩.

௭. பினபு நீ * சீலோவாககுளததிறபோயககழுவெனறார். சீலோவா எனபதறகு அனுபபபபடடவனெனறு அருததம. அநதபபடி அவனபோயக கழுவிபபார்வையடைநது திருமபிவநதான. * நெகேமி. ௩. ௰௫.

௮. அபபொழுது அயலகததாரும, முனனே அவன பிசசைககாரனாயிருநததைககணடவர்களும அவனைபபார்தது (இஙகே) உளுககாநது பிசசைகேடடுககொணடிருநதவன இவனலலவாவெனறார்கள.

௯. வேறுசிலர் அவன இவனதானெனறார்கள. வேறுசிலர் இவன அவனுடைய சாயலாயிருககிறானெனறார்கள. அவன சொனனது, நானேயவனெனறான.

௰. அபபொழுது அவர்கள அவனைநோககி, உனகணகள எபபடித திறககபபடடனவெனறார்கள.

௰௧. அவன சொனனது, இயேசு எனபவர் சேறுணடாககி (அதை) யெனகண்களினமேலேபூசி நீசீலோவாககுளததிறகுபபோயக்கழுவெனறார். அநதபபடிநானபோயக்கழுவினபொழுதுபார்வையடைந்தேனெனறான.

௰௨. அவர்கள்சொனனது, அநதமனிதனெஙகேயெனறார்கள. அவன எனககுததெரியாதெனறான.

௰௩. அபபொழுது முனனேகுருடனாயிருநதவனைபபரிசேயரிடததிறகுககொணடுபோனார்கள.

௰௪. இயேசுவானவர் சேறுணடாககி அவனுடைய கணகளைததிறநதநாள * ஓயவுநாளாயிருநதது. * ரு. ௯.

௰௫. ஆதலால பரிசேயரும அவனைநோககி, நீயெபபடிபபார்வையடைநதாயெனறு கேடடார்கள். அதறகவன சொனனது, அவர் சேறறை எனகணகளினமேலவைததார். பினபுநானகழுவினேன. இபபொழுது காண்கிறேனெனறான.

௰௬. அபபொழுது பரிசேயரிற சிலர்சொனனது, அமமனிதன ஓயவுநாளைக் கைககொளளாதிருககிறபடியினாலே அவனபராபரனால வநதவனலலவெனறார்கள. வேறுசிலர்சொனனது, பாவியாயிருககிற ஒருவன இபபடிபபடட அறபுதஙகளைசசெயவதெபபடியெனறார்கள. ஆகையால அவர்களுககுளளே பிரிவினையுணடாயிறறு.

௰௭. மறுபடியும அவர்கள குருடனாயிருநதவனைநோககி, உன கண்களைததிறநத அவனைககுறிதது நீ யெனனசொலலுகிறாயெனறார்கள. அவன சொனனது, அவர் தீர்ககதரிசியாயிருககிறாரெனறான.

௰௮. அபபொழுது அவன குருடனாயிருநது பினபு பார்வையடைநதானெனபதை யூதர்கள நமபாமல பார்வையடைநதவனுடைய தாயதகபபனமாரை யழைபபிதது,

௰௯. அவர்களைநோககி, உஙகள குமாரன குருடனாயபபிறநதானெனறு நீஙகள்சொல்லுகிறீர்களே. அவன இவனோ! இபபொழுது இவனுககு எபபடிப பார்வையுணடாயிறறெனறு கேடடார்கள.

௨௰. அதறகு அவனுடைய தாயதகபபனமார்சொனனது, இவன எஙகள குமாரனெனறும, குருடனாயபபிறநதானெனறும அறிநதிருககிறோம.

௨௧. இபபொழுது இவன பார்வையடைநதவகை எஙகளுககுததெரியாது. அவனுடைய கண்களைததிறநதவனையும அறியோம. இவனபெரியவனாயிருககிறானே, இவனிடததிலே கேளுஙகள. தனனைககுறிதது இவனேபேசுவானெனறார்கள.

௨௨. அக்காலததிறகு முனனே இயேசுவை கிறிஸ்தெனறுசொலபவனெவனோ அவனை சபைக்கு ஆலயததிறகுபபுறமபாககவேணடுமெனறு யூதர்கள தீர்மானமபணணியிருநதபடியால குருடனாயிருநதவனுடைய தாயதகபபனமார் * அவர்களுககுபபயநது,
* எ. ௰௩.

௨௩. இவன பெரியவனாயிருககிறானே, இவ

னிடத்திற் கேளுங்களென்று சொன்னார்கள்.

௨௪. ஆதலால் அவர்கள் குருடனாயிருந்தவனையிரண்டாந்தரம் அழைத்து நீ பராபரனைக் கனம்பண்ணுவாயாக. அம்மனிதன் பாவியாயிருக்கிறானென்று நாங்கள் அறிந்திருக்கிறோமென்றார்கள்.

௨௫. அதற்கவன் சொன்னது, அவர் பாவியோ அல்லவோ அது எனக்குத் தெரியாது. நான் குருடனாயிருந்தேன். இப்பொழுது காண்கிறேன். இதொன்றையே அறிந்திருக்கிறேனென்றான்.

௨௬. அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவனை நோக்கி, உனக்கென்னசெய்தான்! உன் கண்களை யெப்படித் திறந்தானென்றார்கள்.

௨௭. அவன் சொன்னது, முன்னேயதையுங்களுக்குச் சொன்னேன். நீங்கள் செவிகொடுக்கவில்லை. அதைமறுபடியுங் கேட்க என்னத்துக்கு விரும்புகிறீர்கள்? நீங்களும் அவருக்குச் சீஷராக மனதுள்ளவர்களாயிருக்கிறீர்களாவென்றான்.

௨௮. அப்பொழுது அவர்கள் அவனைவைது, நீயே அவனுடைய சீஷன். நாங்கள் மோசேயினுடைய சீஷர்.

௨௯. மோசேயானவருடனே பராபரன் பேசினதை அறிந்திருக்கிறோம். அவன் வந்த இடத்தை அறியமாட்டோமென்றார்கள்.

௩௦. அதற்கு அந்தமனிதன் சொன்னது, அவர் என் கண்களைத் திறந்திருந்தும், அவர் வந்த இடத்தை நீங்கள் அறியாமலிருக்கிறது ஆச்சரியமான காரியம்.

௩௧. அல்லாமலும் பாவிகளுக்குப் பராபரன் செவிகொடுக்கிறதில்லையென்றும், அவர் மேல் பக்தியாயிருந்து அவருடைய சித்தத்தின்படி செய்கிறவனெவனோ அவனுக்குச் செவிகொடுக்கிறாரென்றும் அறிந்திருக்கிறோம்.

௩௨. குருடனாய்ப் பிறந்தவனுடைய கண்களை ஒருவன் திறந்தானென்று உலகமுண்டானது முதற்கொண்டு கேள்விப்படவில்லையே.

௩௩. அவர் பராபரனால் வாராதவராயிருந்தால் இப்படிப்பட்டவைகளில் ஒன்றையாகிலுஞ் செய்யத் திராணியிருக்கமாட்டாதேயென்றான்.

௩௪. அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, முழுவதும் பாவங்களிலே பிறந்த நீயா எங்களுக்கு உபதேசம்பண்ணுகிறவனென்று சொல்லி, அவனைப்புறம்பே தள்ளினார்கள்.

௩௫. அவனையவர்கள் புறம்பே தள்ளினதை இயேசுவானவர் கேள்விப்பட்டு பின்பு அவனைக்கண்டு நீ பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறாயாவென்றார்.

௩௬. அதற்கவன் ஆண்டவரே, நான் அவர்மேல் விசுவாசமாயிருக்கும்படிக்கு, அவர் இன்னாரென்று (காட்டவேண்டுமென்றான்.)

௩௭. இயேசுவானவர் சொன்னது, நீயவரைக் கண்டாய். * உன்னுடனே பேசுகிறவரே யவரென்றார். * ௪. ௨௬.

௩௮. உடனே அவன் ஆண்டவரே, விசுவாசிக்கிறேனென்றுசொல்லி அவரைத் தொழுதுகொண்டான்.

௩௯. பின்பு இயேசுவானவர் சொன்னது, * காணாதவர்கள் காணவும், காண்கிறவர்கள் குருடராகவும் நடக்கத்தக்கதாக நியாயத்தீர்ப்புக் கொடுப்பதற்கு நானிவ்வுலகத்திலே வந்தேனென்றார். * ௨. கொரி ௪. ௪—௬.

௪௦. பரிசேயரிற் சிலர் அவருடனேகூட விருந்து அதைக்கேட்டபொழுது அவர்கள் அவரைநோக்கி, நாங்களுங் குருடரோவென்றார்கள்.

௪௧. இயேசுவானவர் சொன்னது, நீங்கள் குருடராயிருந்தால், உங்களுக்குப் பாவமுண்டாயிருக்கமாட்டாது. நீங்கள் காண்கிறோமென்று சொல்லுகிறபடியால், உங்கள் பாவம் நிற்கும்.

## ௰. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து வாசலும், நல்லமேய்ப்பருமானவரென்றது. (௰௯) அவரைக்குறித்த பலருடைய தாற்பரியங்களைச்சொல்லியது. (௨௪) தாம் பராபரனுடைய குமாரனும் கிறிஸ்துவென்று தம்முடைய கிரியைகளினாலே திருஷ்டாந்தப்படுத்தி, (௩௯) யூதர்களுக்கு விலகி, (௪௦) மறுபடியும் யோர்தானைக் கடந்துபோனபோது, அவரில் அநேகர் விசுவாசித்தது.]

மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது; ஆட்டுக்கிடையின் வாசல்வழியாய் அதிலே பிரவேசியாமல், வேறுவழியாய் அதிலே பிரவேசிக்கிறவன் திருடனுமாய், கொள்ளைக்காரனுமாயிருக்கிறான்.

௨. வாசலின்வழியாய்ப் பிரவேசிக்கிறவனே ஆடுகளின் மேய்ப்பனாயிருக்கிறான்.

௩. வாசலைக்காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறான். ஆடுகளும் அவனுடைய சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன. அவனுந்தன்னுடைய ஆடுகளைப் பேர்பேராக அழைத்து, அவைகளை வெளியேகொண்டுபோகிறான்.

௪. மேலும் அவன் தன்னுடைய ஆடுகளை வெளியிலேவிட்டபின்பு, அவைகளுக்கு முன்னுக்கு நடந்துபோகிறான். மேலும் ஆடுகள் அவனுடைய சத்தத்தை யறிகிறபடியினாலே அவைகள் அவனுக்குப்பின்செல்லுகின்றன.

௫. அந்நியருடைய சத்தத்தையறியாதபடியினாலே அவைகள் அந்நியனுக்குப்பின்செல்லாமல் அவனை விட்டோடிப்போகுமென்றார்.

௬. இந்த உவமையை இயேசுவானவர் அவர்களுடனேசொன்னபொழுது, அவர்கள்

தங்களுக்கு அவர் சொன்னவைகளின் கருத்தை யறியவில்லை.

௭. ஆதலால் இயேசுவானவர் மறுபடியும் அவர்களை நோக்கி, நானே ஆடுகளின் வாசலென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௮. * எனக்கு முன்னே வந்தவர்களெல்லாரும் திருடருமாய், கொள்ளைக்காரருமாயிருந்தார்கள். ஆடுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை. * எரேமி. ௨௩. ௧.

௯. நானே வாசல். ஒருவன் என்னாலே யுட்பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான். அல்லாமலும் அவன் உள்ளும், புறம்புஞ் சென்று, மேய்ச்சலைக் கண்டுபிடிப்பான்.

௰. திருடனானவன் திருடுகிறதற்கும், கொலைசெய்கிறதற்கும், கெடுக்கிறதற்குமேயன்றி, வேறொன்றுக்கும் வரான். நான் * அவர்களுக்குச் சீவனும், பரிபூரணமுமுண்டாகும்படிக்கு வந்தேன். * சங்கீ. ௨௩. ௧.

௰௧. * நானே நல்ல மேய்ப்பன். நல்ல மேய்ப்பனானவன் ஆடுகளுக்காகத் தன் சீவனைக் கொடுக்கிறான். * சங்கீ. ௮௰. ௧; ஏசாயா. ௪௰. ௰௧; எசேக். ௩௪. ௨௩.

௰௨. மேய்ப்பனல்லாதவனுமாய், ஆடுகளையுடையவனல்லாதவனுமாயிருக்கிற கூலியாள் கோனாய் வரக்காணும்பொழுது ஆடுகளை விட்டோடிப்போவான். அப்பொழுது கோனாய் அந்த ஆடுகளைப் பிடித்துச் சிதறடிக்கும்.

௰௩. மேலுங் கூலியாளானவன் கூலிக்காக வேலைசெய்கிறவனானபடியினாலும், ஆடுகளைக் குறித்து அவனுக்குக் கவலையில்லாதபடியினாலும் ஓடிப்போவான்.

௰௪. * நானே நல்ல மேய்ப்பன். என் பிதா என்னை யறிந்திருக்கிறதுபோலவும், நான் பிதாவையறிந்திருக்கிறதுபோலவும், * மத். ௰௧. ௨௭.

௰௫. * நான் என்னுடையவைகளையறிந்து, என்னுடையவைகளால் அறியப்பட்டு, ஆடுகளுக்காக என் சீவனைக் கொடுக்கிறேன். * ௨. தீமோ. ௨. ௰௯.

௰௬. அன்றியும் இந்தக் கிடையிலுள்ளவைகளல்லாமல், வேறு ஆடுகளும் எனக்குண்டு. அவைகளையும் நான் கொண்டுவரவேண்டும். அவைகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கும். அப்பொழுது ஒரே ஆட்டுக்கூட்டமும், ஒரே மேய்ப்பனுமுண்டாயிருக்கும்.

௰௭. நான் என் சீவனைப் பின்னும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினாலே பிதா என்னிடத்தில் அன்பாயிருக்கிறார்.

௰௮. ஒருவனும் என்னிடத்திலிருந்து அதை வாங்கமாட்டான். நான் என்னாலே யதைக் கொடுக்கிறேன். * அதைக் கொடுக்கிறதற்கும், அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளுகிறதற்கும் என்னிடத்தில் அதிகாரமுண்டு. இந்தக் கட்டளையை யென் பிதாவினாலே பெற்றுக்கொண்டேனென்றார். * ௨. ௰௯.

௰௯. இந்த வசனங்களைக் குறித்து யூதருக்குள்ளே மறுபடியும் பிரிவினையுண்டாயிற்று.

௨௰. அவர்களில் அநேகர் சொன்னது, * அவன் பசாசையுடையவன். பயித்தியக்காரனாயிருக்கிறான். என்னத்திற்காக அவனுக்குச் செவிகொடுக்கிறீர்களென்றார்கள். * ௭. ௨௰.

௨௰௧. மற்றப்பேர்கள் சொன்னது, இப்படிப்பட்ட வசனங்கள் பேய்கொண்டவனுடையவைகளல்லவென்றும், குருடரின் கண்களைப் பேயானவன் திறப்பானோவென்றுஞ் சொன்னார்கள்.

௨௰௨. பின்பு மாரிகாலத்தில் எருசலேம் நகரத்திலே தேவாலயப்பிரதிஷ்டையின் பண்டிகையைக் கொண்டாடி வருகையில்,

௨௰௩. இயேசுவானவர் தேவாலயத்தில் * சாலோமோனுடைய மண்டபத்தில் உலாவிக்கொண்டிருக்கிறபொழுது, * ௧. இராசா. ௬. ௩.

௨௰௪. யூதர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு அவரை நோக்கி, எதுவரைக்கும் எங்கள் ஆத்துமாக்களைச் சந்தேகமுள்ளவைகளாயிருக்கும்படி செய்கிறீர். நீர் கிறிஸ்துவானால் (அதை) எங்களுக்குத் தாராளமாய்ச் சொல்லுமென்றார்கள்.

௨௰௫. அதற்கு இயேசுவானவர் சொன்னது, அதை யுங்களுக்குச் சொன்னேன். நீங்கள் விசுவாசிக்கவில்லை. என் பிதாவின் நாமத்தினாலே நான் செய்கிற கிரியைகளே யென்னைக் குறித்துச் * சாட்சிகொடுக்கின்றன. * ௫. ௩௬.

௨௰௬. அப்படியிருந்தும் நீங்கள் என்னிடையின் ஆடுகளல்லாதவர்களானபடியினாலே விசுவாசியாமலிருக்கிறீர்கள்.

௨௰௭. நான் உங்களுக்குச் சொன்னபடியே * என் ஆடுகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன. அல்லாமலும் நான் அவைகளை யறிந்திருக்கிறேன். அவைகளும் எனக்குப் பின்செல்லுகின்றன. * ௮. ௪௭.

௨௰௮. அல்லாமலும் நான் அவைகளுக்கு நித்திய சீவனைக் கொடுக்கிறேன். அவைகள் ஒருக்காலுங் கெட்டுப்போகாது. ஒருவனும் அவைகளை யென்கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

௨௰௯. அவைகளை எனக்குத் தந்த என் பிதா எல்லாரிலும் பெரியவராயிருக்கிறார். ஒருவனும் அவைகளை என் பிதாவின் கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

௩௰. நானும், பிதாவும் ஒன்றாயிருக்கிறோமென்றார்.

௩௰௧. அப்பொழுது யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு மறுபடியுங் கற்களையெடுத்துக்கொண்டார்கள்.

௩௰௨. இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் என் பிதாவினாலே யநேக நற்கிரியைக

லேயுமங்களுக்குக்காண்பித்தேன். அவைகளில் எந்தக்கிரியையினிமித்தம் நீங்கள் என்மேற் கல்லெறிவீர்களென்றார்.

௩௩. யூதர்கள் சொன்னது, நற்கிரியையினிமித்தமல்ல, நீ மனிதனாயிருக்க உன்னைத் தேவனென்றுசொல்லி இவ்விதமாயத்தேவதூஷணஞ்செய்கிறதினிமித்தமேயுன்மேற் கல்லெறிவோமென்றார்கள்.

௩௪. அதற்கு இயேசுவானவர்சொன்னது, * தேவர்களாயிருக்கிறீர்களென்று நான் சொன்னேனென்படிக்கு உங்கள் வேதத்தில் எழுதியிருக்கவில்லையா! * சங். ௮௨. ௬.

௩௫. பராபரனுடையவசனத்தைப்பெற்றுக்கொண்டவர்களையவர் தேவர்களென்று சொல்ல வேதமுந் தள்ளப்படக்கூடாததாயிருக்க,

௩௬. பிதாவினாற் பரிசுத்தமாக்கப்பட்டும், உலகத்தில் அனுப்பப்பட்டுமிருக்கிற நான் என்னைப் பராபரனுடைய குமாரனென்று சொன்னதினாலே தேவதூஷணஞ்செய்தாயென்றுசொல்லலாமா?

௩௭. நான் என்பிதாவின் கிரியைகளைச்செய்யாதிருந்தால் நீங்கள் என்னைவிசுவாசிக்கவேண்டுவதில்லை.

௩௮. (அவைகளை) நான் செய்திருக்கிறபடியால் நீங்கள் என்னைவிசுவாசியாதிருந்தாலும் * பிதாவென்னிலேயும், நானவரிலேயுமிருக்கிறதையறிந்து விசுவாசித்துக்கொள்ளும்படிக்கு நீங்கள் அந்தக்கிரியைகளைவிசுவாசிக்கவேண்டுமேயென்றார். * ௰௪. ௰,௰௧.

௩௯. அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவரைப்பிடிக்கத்தேடினார்கள். அவர் * அவர்களுடைய கைகளினின்றுவிலகிப்புறப்பட்டு, * ௮. ௫௯; லூக். ௪. ௨௯, ௩௰.

௪௰. யோர்தானுக்கறின அக்கரையிலேமுன்னே யோவானஞானஸ்நானங்கொடுத்தவிடத்திற்குத்திரும்பிப்போய் அங்கேதங்கினார்.

௪௧. அநேகம்பேர் அவரிடத்திற்சென்று பின்புசொன்னது, யோவான் ஒருஅற்புதமுஞ்செய்யாதிருந்தும் இவனைக் குறித்துச் சொன்னயாவும் மெய்யாயிருக்கின்றனவென்றார்கள்.

௪௨. அவ்விடத்திலே யநேகம்பேர் அவர் மேல் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) மரித்து நாலுநாள் அடக்கம்பண்ணப்பட்டிருந்தலாசருவைக் கிறிஸ்து உயிரோடெழுப்பினது. (௪௫) அநேகயூதர்கள் அவரைவிசுவாசித்தது. (௪௭) கிறிஸ்துவுக்குவிரோதமாகப்பிரதான ஆசாரியர்களும், பரிசேயர்களும் ஒரு சங்கத்தையுண்டாக்கினது. (௪௯) காய்பாவென்றவன் அவரைக்குறித்துத் தீர்க்கதரிசனமுரைத்தது. (௫௪) இயேசு தம்மை மறைத்துக்கொண்டது. (௫௫) பஸ்காப்பண்டிகையிலே சனங்கள் அவரைத்தேடினது.]

அன்றியும் * மரியாளும், அவளுடையசகோதரியாகிய மார்த்தாளுமிருந்தபெத்தானியூராகிய இலாசருவென்பவன் வியாதியுள்ளவனாயிருந்தான். * லூக். ௰. ௩௮ — ௪௨

௨ அந்தமரியாள் * கர்த்தர்மேற்பரிமளதயிலத்தைப் பூசித்தன்மயிரால் அவருடைய பாதங்களைத் துடைத்தவளே, அவளுடைய சகோதரனாகிய இலாசரு வியாதிப்பட்டிருந்தான். * ௰௨. ௩.

௩. அப்பொழுது அவனுடையசகோதரிகள் ஆண்டவரே, உமக்கு அன்பாயிருக்கிறவன் வியாதியாயிருக்கிறானென்று சொல்லியனுப்பினார்கள்.

௪. இயேசுவானவர் அதைக்கேட்டு அந்த வியாதிமரணத்திற்கேதுவாயிராமற் * பராபரனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்குப் பராபரனுடைய மகிமை விளங்குதற்கே யேதுவாயிருக்குமென்றார். * ௯. ௩.

௫. இயேசுவானவர் அந்தமார்த்தாளிடத்திலும், அவளுடையசகோதரியினிடத்திலும், இலாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார்.

௬. அப்படியிருந்தும் அவன் வியாதியாயிருக்கிறதையவர்கேட்டபின்பு அவர் தாம் இருந்தவிடத்திலே பின்னும் இரண்டுநாள் தங்கினார்.

௭. அதின்பின்பு அவர் (தம்முடைய) சீஷரை நோக்கி, நாம் மறுபடியும் யூதேயாநாட்டிற்குப்போவோம் வாருங்களென்றார்.

௮. அதற்குச்சீஷர்சொன்னது, இரபீ சில நாளுக்கு முன்னே யூதர்கள் உம்தமேற் * கல்லெறியமனதுள்ளவர்களாயிருந்தார்களே, நீர் மறுபடியும் அவ்விடத்திற்குப் போகலாமா என்றார்கள். * ௮. ௫௯.

௯. இயேசுவானவர்சொன்னது, பகலுக்குப் பன்னிரண்டுமணிநேரமில்லையா! பகற்காலத்திலே நடக்கிறவன் இவ்வுலகத்தின் ஒளியைக்காணுகிறபடியினாலே இடறமாட்டான்.

௰ இராத்திரிகாலத்திலேநடக்கிறவன் தனக்கு ஒளியில்லாதபடியினாலே யிடறுவானென்றுசொல்லி,

௰௧. பின்பு நமக்குச்சிநேகிதனாகிய இலாசரு * நித்திரையடைந்தான். நான் அவனையெழுப்பப்போகிறேனென்றார். * மத்தே. ௯. ௨௪.

௰௨. அப்பொழுது அவருடையசீஷர்சொன்னது, ஆண்டவரே, அவன்நித்திரையடைந்திருந்தால் சுகமடைவானென்றார்கள்.

௰௩. இயேசுவானவர் அவனுடையமரணத்தைக்குறித்து அப்படிச்சொல்லியிருந்தார். அவர்கள் அவர் நித்திரைபண்ணுதலைக்குறித்தேபேசினாரென்றுநினைத்தார்கள்.

௰௪. அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, லாசரு மரித்தானென்று தெளிவாய்ச் சொல்லி,

௰௫. பின்பு நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு நான் அங்கேயிராததினாலே உங்கள் நிமித்தஞ் சந்தோஷப்படுகிறேன். இப்பொழுது அவனிடத்திற்குப் போவோம் வாருங்களென்றார்.

௰௬. அப்பொழுது திதிமு என்னப்பட்ட தோமாஸ் மற்றச் சீஷரை நோக்கி, அவரோடே கூட மரிக்கும்படிக்கு நாமும் போவோம் வாருங்களென்றான்.

௰௭. ஆதலால், இயேசுவானவர் போனபொழுது, அவன் கல்லறையில் வைக்கப்பட்டு நாலு நாளாயிற்றென்று அறிந்தார்.

௰௮. பெத்தானியூர் எருசலேம் நகரத்திற்குச் சமீபமாய் ஏறக்குறையப் பதினைந்து நாழிவழி தூரத்திலிருந்தது.

௰௯. அன்றியும், யூதரில் அநேகர் மார்த்தாள், மரியாள் என்பவர்களுடைய சகோதரனைக் குறித்து அவர்களுக்கு ஆறுதல் சொல்லும்படிக்கு அவர்களிடத்திற்குப் போயிருந்தார்கள்.

௨௰. இயேசுவானவர் வருகிறாரென்று மார்த்தாள் கேட்டபொழுது அவருக்கெதிர்கொண்டு போனாள். மரியாள் வீட்டிலேயிருக்காநின்றாள்.

௨௧. பின்பு மார்த்தாள் இயேசுவினிடத்தில் (சேர்ந்து) ஆண்டவரே, நீர் இங்கேயிருந்தீரானால் என் சகோதரன் மரிக்கமாட்டான்.

௨௨. இப்பொழுதும் நீர் பராபரனிடத்திற் கேட்டுக்கொள்வதெதுவோ அதைப் பராபரன் உமக்குக் கொடுப்பாரென்று அறிந்திருக்கிறேனென்றாள்.

௨௩. அதற்கு இயேசுவானவர், உன் சகோதரன் உயிரோடெழுந்திருப்பானென்றார்.

௨௪. மார்த்தாள் சொன்னது, * கடைசி நாளிலே (மரித்தோர்) உயிரோடெழுந்திருக்கும்பொழுது அவனும் எழுந்திருப்பானென்றறிந்திருக்கிறேனென்றாள். * ரு. ௨௮, ௨௯.

௨௫. அதற்கு இயேசுவானவர் சொன்னது, * நானே உயிரோடெழுப்புகிறவனுமாய், ஜீவனுமாயிருக்கிறேன். என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான். * ௰௪. ௬.

௨௬. அல்லாமலும், உயிரோடிருக்கையில் என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனெவனோ அவன் ஒருக்காலும் மரியாமலிருப்பான். இதை விசுவாசிக்கிறாயாவென்றார்.

௨௭. அவள் சொன்னது, ஆம் ஆண்டவரே, நீர் கிறிஸ்து. நீர் பராபரனுடைய குமாரன். நீர் உலகத்தில் வரவேண்டியவரென்று நான் விசுவாசிக்கிறேனென்றாள்.

௨௮. இப்படிச் சொன்னபின்பு, அவள் போய்த் தன் சகோதரி மரியாளை இரகசியமாய் அழைத்துப் போதகர் வந்திருக்கிறார். உன்னையழைக்கிறாரென்றாள்.

௨௯. அதையவள் கேட்டவுடனே, சீக்கிரமாயெழுந்து அவரிடத்திற் போனாள்.

௩௰. அக்காலத்திலே இயேசுவானவர் கிராமத்திற்குள்ளே செல்லாமல், மார்த்தாள் தம்மைச் சந்தித்த இடத்திலேயிருந்தார்.

௩௧. அப்பொழுது வீட்டிலே அவளுடனே கூடவிருந்து அவளுக்கு ஆறுதல் செய்கிற யூதர்கள், மரியாள் சீக்கிரமாயெழுந்து புறப்பட்டுப் போகிறதைக் கண்டு, அவள் கல்லறையினிடத்திலே அழுதுகொள்ளும்படி போகிறாளென்று பேசிக்கொண்டு அவளுக்குப் பின் சென்றார்கள்.

௩௨. இயேசுவானவரிருந்த இடத்திலே மரியாள் சேர்ந்து அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்தின் கீழ் விழுந்து ஆண்டவரே, நீர் இங்கேயிருந்தீரானால், என் சகோதரன் மரிக்கமாட்டானேயென்றாள்.

௩௩. அவளும், அவளுடனே கூடப்போன யூதரும் அழுகிறதை இயேசுவானவர் கண்டபொழுது, உள்ளத்திலே நொந்து பெருமூச்சு விட்டுக் கலங்கி,

௩௪. அவனை யெங்கே வைத்தீர்களென்றார். ஆண்டவரே, நீர் வந்து பாருமென்றார்கள்.

௩௫. இயேசுவானவர் கண்ணீர் விட்டார். யூதர்கள் அதைப் பார்த்து,

௩௬. இதோ, அவர் அவனிடத்தில் மிகவும் பட்சமாயிருந்தாரேயென்றார்கள்.

௩௭. அவர்களில் சிலர் சொன்னது, குருடனுடைய கண்களைத் * திறந்த இவர் அவனை மரியாமலிருக்கப் பண்ணவுங் கூடாதாவென்றார்கள். * ௯. ௬, ௭.

௩௮. அப்பொழுது இயேசுவானவர் மறுபடியுந் தமக்குள்ளே பெருமூச்சு விட்டுப் பின்பு கல்லறையினிடத்திற் சேர்ந்தார். அது ஒரு குகையாயிருந்தது. அதின் மேலே ஒரு கல் வைக்கப்பட்டிருந்தது.

௩௯. அப்பொழுது இயேசுவானவர், கல்லையெடுத்துப் போடுங்களென்றார். மரித்தவனுடைய சகோதரியாகிய மார்த்தாள் அவரை நோக்கி, ஆண்டவரே, இவன் புதைக்கப்பட்டு நாலு நாளானபடியினாலே, நாறுமேயென்றாள்.

௪௰. அவளை இயேசுவானவர் நோக்கி, நீ விசுவாசித்தால் பராபரனுடைய மகிமையைக் காண்பாயென்று நான் உனக்குச் சொல்லவில்லையாவென்றார்.

௪௧. பின்பு செத்தவன் வைக்கப்பட்ட குகையிலிருந்த கல்லையெடுத்துப் போட்டார்கள். அப்பொழுது இயேசுவானவர் கண்களையுயர்த்தி, பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடியினாலே உம்மைத் தோத்திரஞ் செய்கிறேன்.

௪௨. நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிறதையறிந்திருக்கிறேன். சூழ்ந்திற

ஈடுள

ரசனங்கள் *நீர் என்னை அனுப்பினதை விசுவாசிக்கும்படிக்கு அவர்களினிமித்தமேயிப்படிச் சொன்னேனென்று சொல்லி, *௰௨. ௩௰.

௪௩. பின்பு லாசருவே, வெளியே வாவென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்.

௪௪. அப்பொழுது மரித்தவன் கால்களும் கைகளும் கட்டப்பிரேதச் சேலைகளோடும், முகஞ் சுற்றப்பட்டிருந்த சீலையோடும் வெளியே வந்தான். பின்பு இயேசுவானவர் சொன்னது, இவனுடைய கட்டவிழ்த்து, இவனை விட்டுவிடுங்களென்றார்.

௪௫. அப்பொழுது மரியாளிடத்திற்குப் போய இயேசுவானவர் செய்தவைகளைக் கண்ட யூதரில அநேகர் *அவரிடத்தில விசுவாசமானார்கள். *௰௨. ௰.

௪௬. வேறுசிலர் பரிசேயரிடத்திற்குப் போய இயேசுவானவர் செய்தவைகளையவர்களுக்கு அறிவித்தார்கள்.

௪௭. அப்பொழுது பிரதான ஆசாரியரும், பரிசேயரும் பெரிய *ஆலோசனைச் சங்கத்தார் வந்து கூடும்படி செய்து பின்பு சொன்னதாவது; இந்த மனிதன் அநேக அற்புதங்களைச் செய்து வருகிறான். *சங்கீ. ௨. ௧, ௨; மத். ௨௬. ௩.

௪௮. நாம் இவனுக்கு இடங்கொடுத்தால், எல்லாரும் அவனிடத்தில விசுவாசமாவார்கள். பின்பு ரோமாபுரத்தார் வந்து, நம்முடைய ஸ்தலத்தையும், சனங்களையும் எடுத்துக்கொள்வார்கள். ஆதலால், நாம் என்னசெய்வோமென்றார்கள்.

௪௯. அப்பொழுது அவர்களிலொருவனும், அவ்வருஷத்துப் பிரதான ஆசாரியனுமாயிருந்த காய்பாவென்பவன் அவர்களை நோக்கி, நீங்கள் ஒன்றுந்தெரியாதவர்கள்.

௫௰. சனங்களெல்லாருங் கெட்டுப்போகாதபடிக்கு ஒரே மனிதன் சனங்களுக்காக மரணம் அடைவதே நமக்கு நலமாயிருக்குமென்று நீங்கள் சிந்தியாமலுமிருக்கிறீர்களென்றான்.

௫௧. இப்படியவன் தானாயச் சொல்லாமல், அவன் அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனாயிருக்க இயேசுவானவர் யூதசனங்களுக்காக மரணம் அடைவதைத் தீர்க்கதரிசனமாய்ச் சொன்னான்.

௫௨. மேலும், அந்தச்சனங்களுக்காகமாத்திரமல்ல அங்கங்கே சிதறிப்போயிருக்கிற பராபரனுடைய பிள்ளைகளை *ஒன்றாய்க் கூட்டிக்கொள்ளுகிறதற்காகவும் அவர் மரணம் அடைவதையே குறித்தான். *எபே. ௨. ௰௪.

௫௩. ஆதலால், அந்நாள்முதல அவர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணிக்கொண்டு வந்தார்கள்.

௫௪. அதினாலே இயேசுவானவர் பின்னும், வெளியரங்கமாய் யூதருக்குள்ளே திரியாமல அவ்விடத்தைவிட்டு வனாந்தரத்திற்குச் சமீபமான இடமாகிய எப்பிராயீமூருக்குப்போய அங்கேதம்முடைய சீஷருடனேகூடச் சஞ்சரித்தார்.

௫௫. அக்காலத்திலே யூதருடைய பஸ்காப்பண்டிகை சமீபமாயிருந்தது. அதற்குமுன்னே அந்நாட்டிலிருந்து அநேகர் தங்களைச் சுத்திகரிக்கும்பொருட்டாக எருசலேமுக்குப் போனார்கள்.

௫௬. அங்கே அவர்கள் இயேசுவைத்தேடிக்கொண்டு தேவாலயத்திலே நிற்கையில ஒருவரையொருவர் நோக்கி, உங்களுக்கெப்படித்தோன்றுகிறது. அவர் பண்டிகைக்கு வராமலிருப்பாரோவென்று பேசிக்கொண்டார்கள்.

௫௭. பிரதான ஆசாரியரும், பரிசேயரும் அவரைப்பிடிக்கும்படிக்கு யோசித்து அவரிருக்கிற இடத்தையொருவன் அறிந்தால அதை யறிவிக்கவேண்டுமென்று கட்டளை கொடுத்திருந்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) மரியாள் இயேசுவின்பாதங்களைப் பரிமளத்தைலத்தாற்பூசினது. (௯) அநேகசனங்கள் லாசருவைக்காணவந்தது. (௰) பிரதான ஆசாரியர் லாசருவைக்கொலைசெய்ய யோசித்தது. (௰௨) அவர் எருசலேமுக்குச் சவாரியின்பேரிற்போனது (௨௰) கிரேக்கர் அவரைக்காணவிரும்பினது. (௨௩) அவர் தம்முடைய மரணத்தை முன்னறிவித்தது. (௩௭) யூதர்கள் அவிசுவாசிகளாயிருந்தாலும், (௪௨) யூதப்பிரபுக்களில அநேகர் இரகசியமாய் விசுவாசித்தபடியினாலே, (௪௪) அவர்கள் தங்கள் விசுவாசத்தை வெளிப்படுத்தும்படி இயேசு புத்திசொன்னது.]

பின்பு பஸ்காப்பண்டிகைவருகிறதற்கு ஆறுநாளுக்குமுன்னே இயேசுவானவர் தம்மால் மரணத்திலிருந்தெழுப்பப்பட்ட *லாசரு இருக்கிற பெத்தானியூருக்குப்போனார். *௰௧. ௧.

௨. அங்கே அவருக்கு இராவிருந்துபண்ணினார்கள். மார்த்தாள் பணிவிடைசெய்தாள். லாசருவானவனும் அவருடனேகூடப் பந்தியிருந்தவர்களிலொருவனாயிருந்தான்.

௩. அப்பொழுது மரியாள் *விலையேறப்பெற்றதாகிய களங்கமில்லாத நருதென்னுந் தயிலத்தில் ஒரு இராத்தலையெடுத்து அதை இயேசுவினுடைய கால்களில் பூசித் தன் மயிரால் அவைகளைத் துடைத்தாள். அந்தத் தயிலத்தின் பரிமளத்தினாலே வீடு நிரப்பப்பட்டது. *மத். ௨௬. ௭-௰௩; மாற். ௰௪. ௩-௯.

௪. அப்பொழுது சீஷரிலொருவனுமாய், அவரைக் காட்டிக்கொடுத்தவனுமாய, சீமோனுடைய குமாரனுமாயிருந்த யூதாஸ்காரியோத்தென்பவன் சொன்னது,

ரு. இந்தத் தயிலம முந்நூறு தேநாரியுவிலைக்குவிற்றுத் தரித்திரருக்குக்கொடுக்கலாமே, என்னத்திறைலே யப்படிச்செய்யவில்லையென்றான.

சு. அவன தரித்திரரைக்குறித்துக்கவலைப்படுகிறவனாக அப்படிச்சொல்லாமல அவன திருடனாயப் *பணப்பையையவைத்துக்கொண்டு (அதிலே) போடப்பட்டவைகளைச்சுமக்கிறவனானபடியினாலே இப்படிச்சொன்னான. * யங. உகூ.

எ. அப்பொழுது இயேசுவானவர்சொன்னது, இவளைவிட்டுவிடு. என்னையடக்கம்பண்ணும நாளுக்காக இவள இதைக்காத்துக்கொண்டிருந்தாள.

அ * தரித்திரர் எப்பொழுதும உங்களிடத்திலிருக்கிறார்கள. நான எப்பொழுதும உங்களிடத்திலேயிரேனேயென்றார்.
* ரு. மோ. யரு. யக.

கூ. பின்பு யூதரில அநேகசனங்கள அவர் அங்கேயிருக்கிறதையறிந்து, இயேசுவின பொருட்டாகமாத்திரமல்ல, அவரால மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்ட இலாசருவைக் காணும்பொருட்டாகவும அவ்விடத்திலே போனார்கள.

ய. இலாசருவினாலே யூதர்களில அநேகம பேர் இயேசுவானவரிடத்திலேபோய அவர் மேல விசுவாசமவைத்தபடியினாலே,

யக. பிரதான ஆசாரியர் இலாசருவையுங கொலைசெய்யும்படி திர்மானமபண்ணினார் கள.

யஉ. * மறுநாளிலே இயேசுவானவர் எருசலேமுக்குவருகிறாரென்று பண்டிகைக்குப போன சனங்கள அநேகர் கேள்விப்பட்டு,
* மத். உக. க—யக; மாற். யக க—யஎ; லூக. யகூ. உகூ—சஅ.

யங. குருத்தோலைகளைப்பிடித்து அவருக் கெதிர்கொண்டுபோகும்படி புறப்பட்டு, * ஓசன்னா பராபரனுடைய நாமத்தினாலே வருகிற இஸ்ரவேலரின இராசா வாழ்த்தப் படக்கடவரென்று சத்தமிட்டார்கள.
* சங்கீ. ஙயஅ. உகூ.

யச. அல்லாமலுங குமாரத்தியாகிய சீயோனே, நீ பயப்படாதிரு. இதோ, உன இராசா ஒரு கழுதைக்குட்டியின்மேலேறிவருகிறாரென்று * எழுதியிருக்கிறபடியே, * சகரி. கூ. கூ.

யரு. இயேசுவானவர் ஒரு கழுதையின்குட்டியைக்கண்டு அதின்மேலேறிப்போனார்.

யசு. அவரைக்குறித்து அப்படி எழுதியிருக்கிறதை அவருடையசீஷர் ஆக்காலத்திலே யறியவில்லை இயேசுவானவர் மகிமையை யடைந்தபின அவர்கள அதையும், தாங்கள அப்படி யவருக்குச செய்ததையும நினைத் துக்கொண்டார்கள.

யஎ. அன்றியும அவருடனேயிருந்த சனங் கள அவர் இலாசருவைக்கல்லறையிலிருந்து வெளியே வரவழைத்து அவனை உயிரோடெழுப்பினதைக்குறித்துச் சாட்சிகொடுத்தார் கள.

யஅ. அப்படிப்பட்ட அற்புதத்தை அவர் செய்தாரென்று சனங்கள கேள்விப்பட்டதினாலே அவர்கள அவருக்கெதிர்கொண்டுபோனார்கள.

யகூ. ஆதலால பரிசேயர் ஒருவரையொருவர்நோக்கி, நாம செய்கிறதினாலே ஒரு பிரயோசனமுமில்லையென்று அறிவீர்களாக. உலகமே யவனுக்குப பின்செல்லுகின்றதேயென்று சொல்லிக்கொண்டார்கள.

உய. அன்றியும (பராபரனைத) தொழுதுகொள்ளும்படி பண்டிகைக்குப போனவர்களுக்குள்ளே கிரேக்கரிருந்தார்கள.

உக. அவர்கள கலிலேயாநாட்டின பெத்சாயிதாவூரானாகிய * பிலிப்பினிடத்திறபோய ஐயா, நாங்கள இயேசுவானவரைக் காணவிரும்புகிறோமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள. * க. சங, சரு.

உஉ. பிலிப்பென்பவன அதைஅந்திரேயாவுக்குச்சொன்னான. பின்பு அந்திரேயாவும, பிலிப்பும அதை இயேசுவுக்குச்சொன்னார் கள.

உங. அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது, * மனிதனுடைய குமாரன மகிமைப்படும்படிக்குக்காலமவந்தது. * எ. உ.

உச. மெய்யாகவே நான உங்களுக்குச சொல்லுகிறதாவது; * கோதுமையணி நிலத்திறவிழுந்து செத்துப்போகாவிட்டால தனித்திருக்கும. அது செத்ததானாலமிகுந்த பலனைக்கொடுக்கும. * க. கொரிந். யரு. ஙசு.

உரு. * தன சீவனைச சிநேகிக்கிறவன அதை யிழப்பான. இவ்வுலகத்திலே தன சீவனைப பகைக்கிறவன அதை நித்திய சீவனவரைக குங்காத்துக்கொள்வான. * லூக. யஎ. ஙங.

உசு. ஒருவன எனக்கூழியஞ்செய்யவிரும்பினாலே எனக்குப பின்செல்லக்கடவன. அப்பொழுது, * நான இருக்குமிடம எங்கேயோ அங்கே என ஊழியக்காரனுமிருப்பான. அல்லாமலும எனக்கூழியஞ்செய்கிறவனைப பிதா கனம்பண்ணுவார். * யச. ங; யஎ. உச.

உஎ. இப்பொழுது என ஆத்துமா கலங்குகின்றது. நான என்னசொல்லுவேன? பிதாவே, இந்தநேரத்திலிருந்து என்னை இரட்சிக்கவேண்டுமென்று (சொல்வேனோ!) இந்த நேரத்தின்பொருட்டாகவே வந்தேனென்று சொல்லி,

உஅ. பின்பு பிதாவே, உமது நாமத்தின மகிமையைக் காண்பியுமென்றார். அப்பொழுது அதின மகிமையைக்காண்பித்தேன.

இன்னும் அதைக்காணப்பட்டேனென்று வானத்திலிருந்து சத்தமுண்டாயிற்று.

௨௯. அங்கே நின்ற சனங்கள் அதைக்கேட்டு, இடிமுழக்கமுண்டாயிற்றென்றார்கள். வேறுசிலர் சொன்னது, தேவதூதனொருவன் அவருடனே பேசினானென்றார்கள்.

௩௰. அப்பொழுது இயேசுவானவர் சொன்னது, இந்தச் சத்தம் என்னிமித்தமுண்டாகாமல் * உங்கள் நிமித்தமேயுண்டாயிற்று. * ௰௧. ௪௨.

௩௧. இப்பொழுது இவ்வுலகத்திற்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கப்படுகின்றது. இப்பொழுது * இவ்வுலகத்தின் பிரபு புறம்பாகத் தள்ளப்படுவான். * ௰௪. ௩௰.

௩௨. அல்லாமலும் * நான் பூமியிலிருந்து உயர்த்தப்பட்டிருக்கும்பொழுது, † எல்லாரையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்வேனென்று, * ௩. ௰௪, ௰௫; † ௮. ௨௮.

௩௩. தாம் மரணம் அடையும் விதத்தைக் குறித்தார்.

௩௪. அப்பொழுது சனங்கள் அவரை நோக்கி, * கிறிஸ்துவானவர் என்றைக்குமிருக்கிறாரென்று நாங்கள் வேதத்தாற் கேள்விப்பட்டிருக்கிறோமே. அப்படியிருக்க மனிதனுடைய குமாரன் உயர்த்தப்படவேண்டுமென்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்! இந்த மனிதகுமாரன் எவனென்றார்கள்! * சங். ௱௰. ௪.

௩௫. அதற்கு இயேசுவானவர் சொன்னது, சிலகாலமாத்திரம் ஒளியானது உங்களுடனேயிருக்கும். இருள் உங்களைப் பிடியாதபடிக்கு நீங்கள் ஒளியையுடையவர்களாயிருக்கையில் (அதிலே) நடவுங்கள். இருளிலே நடக்கிறவன் தான் நடந்துபோகிற இடம் இன்னதென்று அறியான்.

௩௬. நீங்கள் * ஒளியையுடையவர்களாயிருக்க, ஒளியின் பிள்ளைகளாகும்படிக்கு ஒளியானதிலே விசுவாசமாயிருப்பீர்களாகவென்று இயேசுவானவர் சொல்லிப் புறப்பட்டு அவர்களுக்கு விலகி மறைந்தார். * எபே. ௫. ௮.

௩௭. அவர் இவ்வளவு அற்புதங்களை அவர்களுக்கு முன்பாகச் செய்திருந்தும், அவர்கள் அவர்மேல் விசுவாசமாயிருக்கவில்லை.

௩௮. அதினாலே * கர்த்தாவே, எங்கள் பிரசங்கத்தை விசுவாசித்தவனியாவன்! பராபரனுடைய புயம் யாவனுக்கு வெளிப்பட்டதென்று ஏசாயாதீர்க்கதரிசி சொன்ன வசனம் நிறைவேறிற்று. * ஏசா. ௫௩. ௧; உரோ. ௰. ௰௬.

௩௯. ஏசாயாவென்பவன் அவருடைய மகிமையைக்கண்டு அவரைக்குறித்துப் பேசிக்கொண்டிருக்கிறபொழுது,

௪௰. * அவன் பின்னுஞ் சொன்னது, அவர்கள் தங்கள் கண்களினாலே காணாமலும், தங்கள் இருதயத்தினால் உணராமலும், மனந்திரும்பாமலும், என்னாலே யாரோக்கியம் அடையாமலும் இருக்கும்படிக்கு அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்கள் இருதயத்தைக் கடினமாக்கினாரென்றதே. * ஏசா. ௬. ௯, ௰.

௪௧. அதினாலே அவர்கள் விசுவாசிக்கக்கூடாதிருந்தார்கள்.

௪௨. ஆகிலும் தலைவரில் அநேகரும் அவர்மேல் விசுவாசமாயிருந்தார்கள்.

௪௩. அப்படியிருந்தும் அவர்கள் * பராபரனாலே வருகிற கனத்திலும், மனிதராலே வருகிற கனத்தை யதிகமாய் விரும்பினபடியினாலே, பரிசேயராலே † செப ஆலயத்திற்குப் புறம்பாக்கப்படாதபடிக்கு, (அதை) அறிக்கையிடாமலிருந்தார்கள் * ௫. ௪௪; † ௯. ௨௨.

௪௪. அப்பொழுது இயேசுவானவர் சத்தத்தோடே சொன்னதாவது; என்மேல் விசுவாசமாயிருக்கிறவன் என்மேல் மாத்திரமல்ல, என்னையனுப்பினவர் மேலும் விசுவாசமாயிருக்கிறான்.

௪௫. அல்லாமலும் * என்னைக்காண்கிறவன் என்னையனுப்பினவரைக் காண்கிறான். * ௰௪. ௯.

௪௬. என்மேல் விசுவாசமாயிருக்கிற யாவரும் இருளிலிராதபடிக்கு * நான் உலகத்தில் ஒளியாக வந்தேன். * ௧. ௯.

௪௭. அன்றியும், நான் * உலகத்தாரை ஆக்கினைக்குட்படுத்தும்பொருட்டல்ல, அவர்களை இரட்சிக்கும்பொருட்டே வந்தேன். ஆகையால், ஒருவன் என் வசனங்களைக்கேட்டும், விசுவாசித்துக்கொள்ளாமற்போனால், அவனை நான் ஆக்கினைக்குட்படுத்தியாட்டேன். * ௩. ௰௭.

௪௮. என்னைத்தள்ளி என் வசனங்களையேற்றுக்கொள்ளாதவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறதொன்றிருக்கின்றது. நான் பண்ணின உபதேசமே கடைசிநாளிலே அவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்.

௪௯. என்னத்தினாலென்றால், நானாக ஒன்றும் பேசவில்லை. என்னையனுப்பின பிதாவே நான் பேசவும், உபதேசிக்கவும் வேண்டியவைகளையெனக்குக் கட்டளையிட்டார்.

௫௰. அவருடைய கட்டளையே நித்திய சீவனென்றறிந்திருக்கிறேன். ஆகையால், நான் உபதேசிக்கிறவைகளைப் பிதா எனக்குச் சொன்னபடியே உபதேசிக்கிறேனென்றார்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) சீஷர்களுடைய கால்களைக்கழுவி, பணிந்தாழ்மையும், சிநேகமுமுள்ளவர்களாயிருக்கும்படி இயேசு புத்திசொன்னது. (௰௮) யூதா தம்மைக் காட்டிக்கொடுப்பானென்று முன்னறிவித்து, ஒரு குறிப்பினால் அதை யோவானுக்கு வெளிப்படுத்தினது. (௩௪) சீஷர்கள் ஒருவரையொருவர் சிநேகிக்கும்படி புத்திசொல்லி, (௩௬) பேதுரு தம்மை

மறுதலிப்பதைக்குறித்து அவனுக்கறிவித்தது.]

**ப**ஸ்காப்பண்டிகைக்குமுன்னே இயேசுவானவர் இவ்வுலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப்போகும்படிக்குத் தம்முடைய காலம் வந்ததென்றறிந்து, இவ்வுலகத்திலுள்ள தம்முடையவர்களிடத்தில் வைத்த அன்பை முடிவுபரியந்தமும் அவர்களிடத்தில் வைத்தார்.

௨. ஆகையால், அக்காலத்திலே * பசாசானவன் சீமோனுடைய குமாரனாகிய யூதாஸ்காரியோத்தின் இருதயத்திலே அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கு எண்ணத்தை (யோசனையை) வைத்திருந்த பின்பு, * லூக். ௨௨. ௩.

௩. அவர்கள் இராப்போசனம்பண்ணிக் கொண்டிருக்கையில் இயேசுவானவர் * தமக்குச் சகலத்தையும் பிதா ஒப்புக்கொடுத்ததையும், தாம் பராபரனிடத்திலிருந்து வந்ததையும், பராபரனிடத்திற்குப்போகிறதையும் அறிந்து, * மத். ௰௧. ௨௭; ௨௮. ௰௮.

௪. இராப்போசனத்தை விட்டெழுந்து, மேலங்கியைக் கழற்றி ஒரு சீலையை எடுத்துத் தம்மைச் சுற்றிக் கட்டிக்கொண்டு,

௫. பின்பு ஒரு சட்டியிலே தண்ணீர் வார்த்துச் சீஷருடைய கால்களைக் கழுவவும், தாம் கட்டிக்கொண்டிருந்த சீலையினாலே துடைக்கவுந் தொடங்கினார்.

௬. அவர் சீமோன் பேதுருவினிடத்தில் சேர்ந்தபொழுது அவன் அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் என் கால்களைக் கழுவலாமாவென்றான்.

௭. அதற்கு இயேசுவானவர் சொன்னது, நான் செய்கிறதின்னதென்று நீ இப்பொழுது அறியவில்லை, இனிமேல் அதை அறிவாயென்றார்.

௮. பேதுருவென்னும் அவரை நோக்கி, நீர் என் கால்களை ஒருக்காலுங் கழுவக்கூடாதென்றான். அதற்கு இயேசுவானவர் சொன்னது, நான் உன்னைக் கழுவாவிட்டால் என்னிடத்திலே உனக்குப் பங்கில்லையென்றார்.

௯. அப்பொழுது சீமோன் பேதுரு ஆண்டவரே, (அப்படியானால்) என் கால்களை மாத்திரமல்ல, என் கைகளையும், தலையையுங்கூடக் கழுவவேண்டுமென்றான்.

௰. இயேசுவானவர் சொன்னது, ஸ்நானம்பண்ணினவனுடைய கால்களை மாத்திரங் கழுவவேண்டும். மற்றயாவும் அவனிடத்தில் சுத்தமாயிருக்கும். நீங்கள் * சுத்தமாயிருக்கிறீர்கள். ஆனாலும் எல்லாருமல்லவென்றார். * ௰௫. ௩.

௰௧. அவர் * தம்மைக் காட்டிக்கொடுக்கிறவனை அறிந்திருந்தபடியினாலே நீங்கள் சுத்தமாயிருக்கிறீர்கள். ஆனாலும் எல்லாருமல்லவென்றார். * ௬. ௬௪.

௰௨. அவர்களுடைய கால்களைக் கழுவினபின்பு அவர் தமது மேலங்கியைத் தரித்துக்கொண்டு, திரும்ப உட்கார்ந்து அவர்களுடனே சொன்னதாவது; நான் உங்களுக்குச் செய்ததை அறிந்திருக்கிறீர்களா?

௰௩. நீங்கள் என்னைப் போதகனென்றும், ஆண்டவனென்றும் அழைக்கிறீர்கள். * நான் அவர்தான். ஆகையால் நீங்கள் சரியாய்ச் சொல்லுகிறீர்கள். * மத். ௨௩. ௮—௰.

௰௪. அப்படியிருக்க * ஆண்டவரும், போதகருமாகிய நானே உங்கள் கால்களைக் கழுவினபடியால் நீங்களும் ஒருவருடைய கால்களை யொருவர் கழுவக்கடவீர்கள். * பிலிப். ௨. ௫—௭.

௰௫. நான் உங்களுக்குச் செய்ததுபோல நீங்களுஞ் செய்யும்படிக்கு * உங்களுக்கு வகையைக் காண்பித்தேன். * ௧. பேது. ௨. ௨௧.

௰௬. மெய்யாகவே நானுங்களுக்குச் சொல்லுகிறதாவது; ஊழியக்காரனானவன் தன் எசமானிலும், அப்போஸ்தலனானவன் தன்னை அனுப்பினவரிலும் பெரியவனல்ல.

௰௭. நீங்கள் இவைகளை அறிந்திருக்கிறபடியால் இவைகளைச் செய்வீர்களானால் பாக்கியராயிருப்பீர்கள்.

௰௮. உங்களெல்லாரையுங்குறித்து நான் பேசவில்லை. நான் தெரிந்துகொண்டவர்களை அறிந்திருக்கிறேன். * வேதவாக்கியம் நிறைவேறும்படியாக என்னுடனே அப்பம் புசிக்கிறவன் எனக்கு விரோதமாய்த் தன் குதிகாலைத் தூக்கினான். * சங். ௪௧. ௯.

௰௯. அது நடக்கும்பொழுது நானே அவரென்று நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு அது நடப்பதற்குமுன்னாகிய இப்பொழுது அதை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰. என்னாலே * அனுப்பப்படுகிறவனை எவனாவது ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னையுமேற்றுக்கொள்ளுகிறான். என்னையேற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரையு மேற்றுக்கொள்ளுகிறானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார். * மத். ௰. ௪௰.

௨௰௧. இவைகளைச் சொல்லினபின்பு இயேசுவானவர் தமது ஆவியிலே கலக்கமடைந்து உங்களிலொருவன் என்னைக் காட்டிக்கொடுப்பானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சாட்சியிட்டார்.

௨௰௨. அப்பொழுது சீஷர் ஆரைக்குறித்துச் சொல்லுகிறாரோ என்றையப்பட்டு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

௨௰௩. அவ்வேளையிலே அவருடைய சீஷரிலொருவன் அவருடைய மடியிலே சாய்ந்திருந்தான். அவன்மேலே இயேசுவானவருடைய அன்பாயிருந்தார்.

௨௰௪. அப்படியிருக்க அவர் இன்னாரைக் குறித்துச் சொல்லுகிறாரென்று விசாரிக்கும்படி

டிக்குச் சீமோன்பேதுரு அவனுக்குச் சைகைகாட்டினான்.

௨௫. அப்பொழுது அவன் இயேசுவின்மார்பிலே சாய்ந்துகொண்டு ஆண்டவரே, அவன் யாவனென்றான்?

௨௬. இயேசுவானவர் சொன்னது, நானிந்தத் துணிக்கையைத் தோய்த்துக் கொடுக்கப்படுபவனெவனோ, அவனேயென்றுசொல்லித் துணிக்கையைத் தோய்த்துச் சீமோன் குமாரனாகிய யூதாஸ்காரியோத்திற்குக் கொடுத்தார். துணிக்கையை யவன்வாங்கின்பின்பு,

௨௭. சாத்தான் அவனுக்குட்புகுந்தான். அப்பொழுது இயேசுவானவர் அவனைநோக்கி, நீ செய்கிறதைச் சீக்கிரமாய்ச்செய்யென்றார்.

௨௮. அவர் இப்படி யவனுடனே சொன்னதின் கருத்தைப் பந்தியிருந்தவர்களிலொருவரும் அறியவில்லை.

௨௯. சிலர் நினைத்தது யூதா* பணப்பையை வைத்துக்கொண்டிருக்கிறபடியினாலே அவன்போய்ப் பண்டிகைக்குவேண்டியபதார்த்தங்களைக் கொள்ளும்படிக்காவது, தரித்திரருக்கேதாகிலுங் கொடுக்கும்படிக்காவது, இயேசுவானவர் அவனுடனேசொல்லியிருப்பாரென்று நினைத்தார்கள். * ௰௨. ௬.

௩௰. அவன் அந்தத் துணிக்கையை வாங்கினவுடனே புறப்பட்டுப்போனான். அப்பொழுது இராக்காலமாயிருந்தது.

௩௧. அவன்புறப்பட்டுப்போனபின்பு இயேசுவானவர்சொன்னதாவது; இப்பொழுது மனிதனுடைய குமாரன் மகிமைப்படுவான். அவனாலே பராபரனுடைய மகிமையும் விளங்கும்.

௩௨. பராபரனுடைய மகிமை அவனாலே விளங்கும்பொழுது *பராபரன் அவனையும் மகிமைப்படுத்துவார். சீக்கிரமாய் அவனை மகிமைப்படுத்துவார். * ௰௭. ௨.

௩௩. பிரியமான பிள்ளைகளே! * இன்னுஞ் சில காலமாத்திரம் நான் உங்களுடனே கூடவிருப்பேன். நீங்கள் என்னைத்தேடுவீர்கள். அல்லாமலும் நான்போகுமிடத்திற்கு நீங்கள் வரக்கூடாதென்று நான் யூதரோடே சொன்னதுபோல இப்பொழுது உங்களோடுஞ் சொல்லுகிறேன். * ௭. ௩௩, ௩௪.

௩௪. நீங்கள் * ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள். நான் உங்களிடத்தில் அன்பாயிருந்ததுபோல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்களென்று புதிதான கற்பனையை யுங்களுக்குக் கொடுக்கிறேன். * எபே. ரு. ௨.

௩௫. நீங்கள் * ஒருவரிலொருவர் அன்பாயிருந்தால் நீங்கள் என்னுடைய சீஷரென்று எல்லாரும் அறிவார்களென்றார். * ௧. யோவா. ௨. ௬, ௰.

௩௬. சீமோன் பேதுரு அவரைநோக்கி, ஆண்டவரே! நீர் எங்கேபோகிறீரென்றான். அதற்கு இயேசுவானவர்சொன்னது, நான் போகிற இடத்திற்கு நீ இப்பொழுது என்க்குப் பின்செல்லமாட்டாய். * பின்பு என்க்குப்பின்செல்லுவாயென்றார். * ௨௧. ௰௮.

௩௭. பேதுரு சொன்னது, ஆண்டவரே! நான் என்னத்தினாலே இப்பொழுது உமக்குப் பின்செல்லக்கூடாது. உமக்காக என் சீவனைக் கொடுப்பேனென்றான்.

௩௮. இயேசுவானவர்சொன்னது, நீ என்க்காக உன் சீவனைக்கொடுப்பாயா? சேவல் கூவுகிறதற்குமுன்னே * நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயென்று மெய்யாகவே யுனக்குச்சொல்லுகிறேன். * மாற். ௰௪. ௩௰; லூக்கா. ௨௨. ௩௪.

## ௰௪. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத் தம்முடைய சீஷர்களை யோடசமடையலாமென்ற நம்பிக்கையினாலே தேற்றினது. (௬) தமமை வழியென்றும், சத்தியமென்றும், சீவனென்றும், பிதாவோடேயொருவராயிருக்கிறவரென்றுங்கூறி, (௰௩) தமதுநாமத்தை முன்னிட்டு அவர்கள்செய்யுஞ்செபங்கள் பலிக்குமென்கிற நிச்சயத்தைக்காட்டி, (௰௫) தம்மிடத்தில் அவர்கள் அன்பும் அடக்கமுமுடையவர்களாயிருக்கும்படி புத்திசொல்லி, (௰௬) தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியையனுப்புவேனென்று வாக்குத்தத்தம்பண்ணி, (௨௭) சமாதானஆசீர்வாதத்தை அருளிச்செய்தது.]

உங்கள் இருதயங் கலங்காதிருப்பதாக. ௧. பராபரனில் நம்பிக்கையாயிருங்கள். என்னிடத்திலும் நம்பிக்கையாயிருங்கள்.

௨. என் பிதாவின்வீட்டில் அநேகம்வாசஸ்தலங்களுண்டு. அப்படியில்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன். ஒருஸ்தலத்தை யுங்களுக்காக எத்தனம்பண்ணப்போகிறேன்.

௩. நான்போய் உங்களுக்காக ஸ்தலத்தை யெத்தனம்பண்ணினபின்பு, * நானிருக்கிற இடத்தில் நீங்களுமிருக்கும்படிக்குத்திரும்பிவந்து உங்களை என்னிடத்திற்சேர்த்துக்கொள்வேன். * ௰௨. ௨௬;—௰௭. ௨௪.

௪. நான்போகிற இடத்தையறிந்திருக்கிறீர்கள். வழியையுமறிந்திருக்கிறீர்களென்று சொன்னபொழுது,

௫. தோமாவென்பவன் அவரைநோக்கி, ஆண்டவரே, நீர்போகிற இடத்தையறியோமே. வழியைநாங்களெப்படியறிவோமென்றான்.

௬. அதற்கு இயேசுவானவர் சொன்னது, * நானேவழியுமாய், சத்தியமுமாய், சீவனுமாயிருக்கிறேன். என்னாலேயல்லாமலொருவனும் பிதாவினிடத்திற்குச் செல்லமாட்ட

டான். * எபே. ௩. ௰௨; எபிரே. ௭. ௨௫;-௰. ௰௯—௨௨.

௭. நீங்கள் என்னையறிந்தால் என்பிதாவையும் அறிந்திருப்பீர்கள். மேலும் இப்பொழுது நீங்கள் அவரையறிந்தும் அவரைக்கண்டுமிருக்கிறீர்களென்றார்.

௮. பிலிப்புச்சொன்னது, ஆண்டவரே! நீர் பிதாவையெங்களுக்குக்காண்பிக்கவேண்டும். அப்பொழுது எங்களுக்குத்திர்ப்தியுண்டாயிருக்குமென்றான்.

௯. அவனுடனே இயேசுவானவர்சொன்னது, பிலிப்பே! நான் இவ்வளவுகாலம் உங்களுடனேகூடவிருந்தும் நீயென்னையறியவில்லையா? என்னைக்கண்டவன் பிதாவைக்கண்டான். அப்படியிருக்கப் பிதாவையெங்களுக்குக்காண்பிக்கவேண்டுமென்று நீ எப்படிச்சொல்லுகிறாய்?

௰. நான்பிதாவிலேயும், பிதா என்னிலேயுமிருக்கிறதை நீ விசுவாசியாமலிருக்கலாமா? நான் உங்களுடனேசொல்லுகிறவசனங்கள் என்னாலே சொல்லவில்லையே. (என்) கிரியைகளையும், என்க்குள்வாசமாயிருக்கிற பிதாவானவரேசெய்துவருகிறார்.

௰௧. நான்பிதாவிலேயும், பிதா என்னிலேயுமிருக்கிறதை நம்புங்கள். (என்வசனத்தினிமித்தம்) நம்பாதிருந்தால் என்கிரியைகளினிமித்தமே யென்னைநம்புங்கள்.

௰௨. மெய்யாகவே நான் உங்களுக்குச்சொல்லுகிறதாவது; என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் நான்செய்கிற கிரியைகளைப்போலக்கிரியைகளைச்செய்வான். இவைகளிலும் அதிகப்பெரியவைகளையே செய்வான். என்னத்தினாலெனில், நான் என்பிதாவினிடத்திற்குப்போகிறேன்.

௰௩. அந்தவுயல்லாமல் நீங்கள் என்னுடைய நாமத்தினாலே கேட்டுக்கொள்வதெதுவோ அதைப்பிதா குமாரனாலே புகழப்படும்பொருட்டு நான்செய்வேன்.

௰௪. நீங்கள் என் நாமத்தினாலேகேட்டுக்கொள்வதெதுவோ அதைநான்செய்வேன்.

௰௫. நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தால் * என் கற்பனைகளைக்கைக்கொள்ளுங்கள். * ௰௫. ௰; ௧. யோவா. ௫. ௩.

௰௬. மேலும் என்றென்றைக்கும் உங்களுடனேகூடவிருக்கும்படிக்கான சத்திய ஆவியாகிய வேறுதேற்றுகிறவரைப்பிதாவானவர் உங்களுக்குக்கொடுக்கும்படிக்கு நான் அவரைவேண்டிக்கொள்வேன்.

௰௭. அந்தச்சத்திய ஆவியானவரை உலகத்தார்காணாமலும், அறியாமலுமிருக்கிறபடியால் அவர்கள் அவரையடைந்துகொள்ளமாட்டார்கள். அவர் உங்களுடனேகூடவிருந்து உங்களுக்குள்ளேயிருப்பதால் நீங்கள் அவரை யறிவீர்கள்.

௰௮. நான் உங்களைத்திக்கற்றவர்களாகவிடுவதில்லை.

௰௯. உங்களிடத்தில் வருவேன். சிலகாலத்திற்குப் பின்பு உலகத்தார் என்னைக்காணார்கள். நீங்கள் என்னைக்காண்பீர்கள். நான் பிழைக்கிறபடியால், நீங்களும் பிழைப்பீர்கள்.

௨௰. * நான் என்பிதாவிலேயும், நீங்கள் என்னிலேயும்,நானுங்களிலேயுமிருக்கிறதை அந்நாளிலேயறிவீர்கள். * ௰௭. ௨௧, ௨௨.

௨௧. என்கற்பனைகளையடைந்து அவைகளைக்கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில் அன்புகூருகிறவன். என்னிடத்தில் அன்புகூருகிறவன்மேல் என்பிதா அன்பாயிருப்பார். * நானும் அவன்மேல் அன்பாயிருந்து என்னையவனுக்கு வெளிப்படுத்துவேனென்று சொன்னபொழுது, * வாக்கி. ௮. ௰௭.

௨௨. ஸ்காரியோத்தல்லாத யூதாவென்பவன் அவரைநோக்கி, ஆண்டவரே, நீர் உம்மை உலகத்தாருக்கல்ல, எங்களுக்குவெளிப்படுத்துகிறதற்குக்காரணமென்னவென்றான்.

௨௩. அதற்கு இயேசுவானவர்சொன்னது, ஒருவன் என்னிடத்தில் அன்புகூர்ந்தால், அவன் என்வசனத்தைக் கைக்கொள்வான். அவனிடத்தில் என்பிதா அன்பாயிருப்பார். அல்லாமலும், நாங்கள் அவனிடத்தில்வந்து, அவனோடேவாசம்பண்ணுவோம்.

௨௪. என்னிடத்தில்அன்புகூராமலிருக்கிறவன் என்வசனங்களைக் கைக்கொள்ளமாட்டான். நீங்கள்கேட்கிறவசனம் என்னுடையதல்ல. என்னையனுப்பின பிதாவினுடையதாகவேயிருக்கின்றது.

௨௫. நானுங்களுடனேயிருக்கையில்,இவைகளையுங்களுக்குச்சொன்னேன்.

௨௬. பின்பு * பிதாவானவர் என்நாமத்தினாலேயனுப்பும் பரிசுத்த ஆவியாகியதேற்றுகிறவரே சகலத்தையும் உங்களுக்கு உபதேசம்பண்ணி, நானுங்களுக்குச்சொன்னயாவையும் நீங்கள் நினைக்கும்படிசெய்வார். * ௰௫. ௨௬.

௨௭. * சமாதானத்தையுங்களுக்குக்கொடுத்துப்போகிறேன். என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குத்தருகிறேன். உலகத்தார்கொடுக்கிறதுபோல, நான் உங்களுக்குக்கொடுக்கமாட்டேன். உங்களிருதயங்கலங்கவும், பயப்படவும்வேண்டுவதில்லை. * பிலி. ௪. ௭.

௨௮. நான்போயப்பின்பு, உங்களிடத்திற்குத்திரும்பிவருவேனென்று நானுங்களுடனேசொன்னதைக் கேட்டீர்களே, நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தீர்களானால் என்னிலும் பிதா பெரியவராகையால், நான்பிதாவினிடத்திற்கு போகிறதைக்குறித்து நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.

௨௯. அது நடக்கும்பொழுது, நீங்கள்

மேறபட்டவனலலவெனறு நான உங்களுக்குச்சொனனவசனததை நினைததுக்கொள்ளுங்கள். அவர்கள என்னைத்துனபப்படுத்தினதுபோல உங்களையுந் துனபப்படுத்துவார்கள். அவர்கள எனவசனததைக்கைக்கொண்டதுபோல, உங்களுடையதையுங் கைக்கொள்வார்கள். * மத. ௰. ௨௪, ௨௫.

௨௧. * என்னையனுப்பினவரை யறியாதபடியினாலே அவர்கள என்னுமத்தினிமித்தமே இப்படிப்பட்டயாவையும உங்களுக்குச்செய்வார்கள். * ௰௬. ௩.

௨௨. நானவநது, அவர்களுக்குச்சொல்லாதிருநதேனானால், அவர்களுக்குப்பாவமுண்டாயிருக்கமாட்டாது. இப்பொழுதோ அவர்கள தங்கள பாவததிறகுப் போக்குச்சொல்ல இடமில்லை.

௨௩. என்னைப்பகைக்கிறவன என்பிதாவையும்பகைக்கிறான.

௨௪. மற்றொருவனசெய்யாத கிரியைகளை நான அவர்களுக்குளளே செய்யாதிருநதேனானால், அவர்களுக்குப்பாவமுண்டாயிருக்கமாட்டாது. அவைகளை அவர்கள்கண்டிருநதும, என்னையும, என்பிதாவையும்பகைக்கிறார்கள.

௨௫. * நிமித்தமில்லாமல என்னைப்பகைத்தார்களென்று அவர்களுடைய வேதத்தில எழுதியிருக்கிறவாக்கியம நிறைவேறததக்கதாக (இப்படிச்செய்கிறார்கள.) * சங்கீ. ௬௯. ௪.

௨௬. பிதாவினிடததிலிருநது நான உங்களுக்கு அனுப்பப்படுபவருமாய், பிதாவினிடததிலிருநது புறப்படுகிறவருமாயிருக்கிற சததிய ஆவியாகிய * தேறறுகிறவர் வரும்பொழுது, அவர் என்னைக்குறிததுச்சாட்சி கொடுப்பார். * ௰௪. ௨௬.

௨௭. * நீங்களும ஆதிமுதல என்னுடனே கூடவிருநதபடியாறசாட்சிகொடுப்பீர்கள. * அப். ௧. ௮.

## ௰௬. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து, தமமுடைய சீஷர்களுக்கு வருந துனபததைக்குறிதது ஆறுதலாகப் பரிசுதத ஆவியினவருகையையும, தாம உயிர்தெழுநது பரமமண்டலததுக்கேறுவதையும முன்னறிவிதது, (௨௩) தமமுடைய நாமததினாலசெய்யப்படும விண்ணப்பம பிதாவினால அங்கீகரிக்கப்படுமென்றுதிருவுளமபறறி, (௩௩) அவர்கள தமக்குட்சமாதானமும, உலகததினாலேதுனபமும அடைவார்களென்றுசொன்னது.]

நீங்கள வழுவாதபடிக்கு இவைகளை யுங்களுடனேசொன்னேன்.

௨. * அவர்கள உங்களைச்செப ஆலயததிறகுப்புறமபாக்குவார்கள். அதுவுமலலாமல உங்களைக்கொலைசெய்கிறவனெவனும அவனபராபரனுக்கு ஆராதனைசெய்கிறேனென்று நினைக்குங்காலம வரும. * மத். ௨௪. ௯.

௩. அவர்கள * பிதாவையும, என்னையும அறியாதபடியினாலே இப்படிப்பட்டவைகளை உங்களுக்குச்செய்வார்கள். * ௰௫. ௨௧.

௪. * அந்தக்காலம வரும்பொழுது நான இப்பொழுது உங்களுக்குச சொனனதை நீங்கள நினைக்கும்படிக்கு இவைகளை யுங்களுடனேசொன்னேன. நானதானே யுங்களுடனேகூடவிருநதபடியினாலே நான இவைகளை ஆரம்பததிலே யுங்களுடனே சொல்லவில்லை. * ௰௩. ௰௯.

௫. இப்பொழுது நான என்னையனுப்பினவரிடததிறகுப்போகிறேன. எங்கேபோகிறீரென்று உங்களிலொருவனும என்னிடததிற கேளாமல,

௬. நானிவைகளை யுங்களுக்குச்சொன்னதினாலே துக்கம்நிறைநத இருதயமுளளவர்களாயிருக்கிறீர்கள.

௭. நான உங்களுக்குச்சததியததைச்சொல்லுகிறேன. * நானபோகிறது உங்களுக்குப்பிரயோசனமாயிருக்கும. எப்படியெனில, நானபோகாதிருநதால, அந்தத்தேறறுகிறவர் உங்களிடததிலவாரார். போவேனேயாகில், அவரை யுங்களிடததிறகனுப்புவேன. * ௰௪. ௰௬.

௮. அவர்வநது பாவததையும, நீதியையும, நியாயததீர்ப்பையுங் குறிதது உலகததாருக்கு மெய்யறிவைக்கொடுப்பார்.

௯. அவர்கள என்னிடததில விசுவாசமாயிராதபடியினாலே பாவததைக்குறிததும,

௰. நீங்கள இனி என்னைக்காணாதபடிக்கு நான என பிதாவினிடததிறகுப போகிறபடியினாலே நீதியைக்குறிததும,

௰௧. * இவ்வுலகததினபிரபு நியாயததீர்ப்புஅடைநதபடியினாலே நியாயததீர்ப்பைக்குறிததுமே அறிவைக்கொடுப்பார். * ௰௨. ௩௧.

௰௨. நான இன்னும அநேககாரியங்களை யுங்களுக்குச் சொல்லவேண்டியிருக்கிறது. நீங்கள அவைகளை யிப்பொழுது சகிக்கமாட்டீர்கள.

௰௩. சததியஆவியானவர் வரும்பொழுது, சகலசததியததிலேயும உங்களைநடததுவார். அவர் தமமுடைய சுயமாயப்பேசாமல, தாம கேள்விப்படுபவைக ளெவைகளோ அவைகளைப்பேசி இனிவருங்காரியங்களையும உங்களுக்கறிவிப்பார்.

௰௪. அவர் என்னுடையதிலே யெடுதது உங்களுக்கறிவிப்பதால, அவர் என்னுடையமகிமையைவிளங்கப்பண்ணுவார்.

௰௫. * பிதாவினுடையவைகளயாவும என்னுடையவைகள. அதினாலே அவர் என்னுடையதிலெடுதது உங்களுக்கறிவிப்பாரென்றுசொன்னேன. * ௰௭. ௰.

௧௬. நான் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே சற்றுக்காலமானபின்பு நீங்கள் என்னைக் காணாதிருப்பீர்கள். மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்களென்றும் அவர் சொன்னபொழுது,

௧௭. அவருடைய சீஷரில் சிலர் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டதாவது; சற்றுக்காலமானபின்பு என்னைக் காணாதிருப்பீர்களென்றும், மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்களென்றும், நான் பிதாவினிடத்திற்குப் போகிறேனென்றும் அவர் நம்முடனே சொன்னதின் கருத்தென்ன!

௧௮. சற்றுக்காலமென்று அவர் சொன்னதின் கருத்தென்ன! அவர் சொன்னது நமக்கு விளங்கவில்லையேயென்றார்கள்.

௧௯. பின்னும் தம்மிடத்தில் அவர்கள் விசாரிக்க விரும்புகிறதை இயேசுவானவர் அறிந்து அவர்களுடனே சொன்னது, சற்றுக்காலமானபின்பு என்னைக் காணாதிருப்பீர்கள். மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்களென்று நான் சொன்னதைக் குறித்து நீங்கள் உங்களுக்குள்ளே விசாரிக்கிறீர்கள்.

௨௦. மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது; நீங்கள் அழுது புலம்புவீர்கள். உலகத்தார் சந்தோஷப்படுவார்கள். நீங்கள் துக்கப்படுவீர்கள். உங்கள் துக்கம் சந்தோஷமாகும்.

௨௧. கர்ப்பஸ்திரியானவளுக்குப் பிரசவகாலம் வந்தபொழுது அவள் துக்கம் அடைகிறாள். பிள்ளைபெற்றபின்பு ஒரு மனிதன் உலகத்தில் பிறந்ததினாலே வருகிற சந்தோஷத்தினிமித்தம் அந்த உபத்திரவத்தை நினையாள்.

௨௨. அதுபோல நீங்களும் இப்பொழுது துக்கம் அடைந்திருக்கிறீர்கள், நான் மறுபடியும் உங்களைக் காண்பேன். அப்பொழுது உங்கள் இருதயம் சந்தோஷப்படும். அல்லாமலும், உங்கள் சந்தோஷத்தை ஒருவனும் உங்களிடத்திலிருந்து எடுத்துப்போடமாட்டான்.

௨௩. அந்த நாளிலே நீங்கள் ஒன்றையும் என்னிடத்தில் கேட்கமாட்டீர்கள். மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, நீங்கள் * என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குக் கொடுப்பார். * ௧௪. ௧௩.

௨௪. இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றையுங் கேட்கவில்லை. கேட்டுக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்குப் பெற்றுக்கொள்வீர்கள்.

௨௫. இவைகளை நான் உவமைகளாய் உங்களுடனே பேசினேன். காலம் வரும் அப்பொழுது நான் பிதாவைக் குறித்து உவமைகளாய் உங்களுடனே பேசாமல் வெளிப்படையாகவே உங்களுக்கு அறிவிக்கக்கொடுப்பேன்.

௨௬. அந்த நாளிலே நீங்கள் என் நாமத்தினாலே விண்ணப்பம் பண்ணுவீர்கள். உங்களைக் குறித்து நான் பிதாவை நோக்கிக் கேட்டுக்கொள்ளுகிறேனென்று உங்களுடனே சொல்லமாட்டேன்.

௨௭. நீங்கள் என்னைச் சிநேகித்து என்னைப் பராபரனிடத்திலிருந்து வந்தவனென்று * விசுவாசித்திருக்கிறபடியினாலே பிதாவானவர்தாமே உங்களைச் சிநேகிக்கிறார்.
* ௧௭. ௨௧.

௨௮. நான் பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு உலகத்திலே வந்தேன். மறுபடியும் உலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேனென்று சொன்னபொழுது,

௨௯. அவருடைய சீஷர் அவரை நோக்கி, இப்பொழுது நீர் உவமையில்லாமல் வெளிப்படையாய்ப் பேசுகிறீர்.

௩௦. நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீரென்றும், ஒருவன் உம்மிடத்தில் விசாரிக்கிறது உமக்கு வேண்டியதில்லையென்றும் இப்பொழுது அறிந்திருக்கிறோம். இதினாலே நீர் பராபரனிடத்திலிருந்து வந்ததை விசுவாசிக்கிறோமென்றார்கள்.

௩௧. அதற்கு இயேசுவானவர் சொன்னது, இப்பொழுது விசுவாசிக்கிறீர்கள் கேளுங்கள்.

௩௨. நீங்கள் என்னைத் தனியே வைத்துச் * சிதறி அவரவரிடத்திற்குப் போகும் நேரம் வரும். அது இப்பொழுது வந்திருக்கிறது. நான் தனித்திரேன். பிதாவானவர் என்னுடனே யிருக்கிறார். * மாற். ௧௪. ௨௭.

௩௩. என்னாலே நீங்கள் சமாதானமுள்ளவர்களாயிருக்கும்படிக்கு இவைகளை உங்களுடனே சொன்னேன். * இவ்வுலகத்தில் உங்களுக்கு உபத்திரவமுண்டாயிருக்கும். ஆனாலும், தயிரியங்கொள்ளுங்கள். நானே உலகத்தை ஜெயித்தேனென்றார். * ௧௪. ௨௭; உரோ. ௫. ௧.

## ௧௭. அதிகாரம்.

[(௧) கிறிஸ்துத்தம்முடைய பிதாவை நோக்கித் தம்மை மகிமைப்படுத்தவும், (௬) அப்போஸ்தலர்களை, (௰௧) ஒருமையிலும், (௰௭) சத்தியத்திலுங் காக்கவும், (௨௰) அவர்களோடே மற்றெல்லா விசுவாசிகளையுந் தம்முடனேகூட மோட்சத்தில் மகிமைப்படுத்தவும் வேண்டிக்கொண்டது.]

இவைகளை இயேசுவானவர் சொன்னபின்பு அவர் தம்முடைய கண்களை வானத்திற்கு நேராக உயர்த்தித் திருவுளம்பற்றினதாவது;

௨. * பிதாவே, நேரம் வந்தது. நீர் உம்முடைய குமாரனுக்குக் கொடுத்த யாவருக்கும் அவன் நித்தியசீவனைக் கொடுக்கும்பொருட்

டாய † மனிதர்யாவர்மேலும் அவனுக்கு அதிகாரங்கொடுத்தபடியே புயமுடையகுமாரன் உம்முடைய மகிமையை விளக்கும்படிக்கு நீர் அவனை மகிமைப்படுத்துவீராக. * ௰௨. ௨௩; † மத். ௰௧. ௨௭.

௩. ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும், நீர் அனுப்பின * இயேசுக்கிறிஸ்துவையும் அறிந்துகொள்ளுகிறதே நித்தியஜீவன். * வாக. அ. ௩.

௪. பூமியிலே நான் உம்முடைய மகிமையை விளக்கினேன். நான் செய்யும்படிக்கு நீர் கொடுத்த க்கிரியையை முடித்தேன்.

௫. இப்பொழுதும் பிதாவே, உலகமுண்டாகிறதற்குமுன்னே உம்மிடத்தில் எனக்குண்டாயிருந்த உம்முடைய மகிமையினாலே என்னை மகிமைப்படுத்தும்.

௬. நீர் உலகத்தாரிலேயிருந்து எனக்குக் கொடுத்த மனிதருக்கு உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தினேன். அவர்கள் உம்முடையவர்களாயிருந்தார்கள். * அவர்களை எனக்குக் கொடுத்தீர், அவர்கள் உம்முடைய வசனத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். * ௬. ௩௭.

௭. நீர் எனக்குக் கொடுத்தயாவும் உம்மாலேயுண்டாயினவென்று அவர்கள் இப்பொழுது அறிந்துகொண்டார்கள்.

௮. அல்லாமலும், நீர் எனக்குக்கொடுத்த வசனங்களை நான் அவர்களுக்குக்கொடுத்தேன். * அவர்கள் அவைகளை யேற்றுக்கொண்டு என்னையும்மிடத்திலிருந்து புறப்பட்டுவந்தவனென்று மெய்யாய் அறிந்து நீர் என்னையனுப்பினீரென்று விசுவாசித்திருக்கிறார்கள். * ௧. யோவ. ௪. ௰௪.

௯. நான் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன். உலகத்தாருக்காகவல்ல, நீர் எனக்குக்கொடுத்தவர்கள் உம்முடையவர்களானபடியால், அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰. * என்னுடையயாவையும் உம்முடையவைகள். உம்முடையவைகள் என்னுடையவைகளாயிருக்கின்றன. என்னுடைய மகிமை அவர்களுக்குள்ளே விளங்கியிருக்கின்றது. * ௰௬. ௰௫.

௰௧. நான் உலகத்தில் இனியிரேன். அவர்கள் உலகத்திலேயிருப்பார்கள். நான் உம்மிடத்திற்கு வருகிறேன். பரிசுத்தமுள்ள பிதாவே, நீர் எனக்குக்கொடுத்தவர்கள் * நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு நீர் அவர்களை யும்முடைய நாமத்திலே காத்துக் கொள்ளும். * ௰. ௩௰.

௰௨. இவ்வுலகத்திலே நான் அவர்களுடனேகூடவிருக்கையில் அவர்களையும்முடைய நாமத்திலே காத்துக்கொண்டேன். நீர் எனக்குக் கொடுத்தவர்களைக் காத்துக்கொண்டேன். * வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகக் கேட்டின்மகன் கெட்டுப்போனானேயல்லாமல் அவர்களிலொருவனும் கெட்டுப்போகவில்லை. * சங். ௱௯. ௮.

௰௩. இப்பொழுது நான் உம்மிடத்திற்கு வருகிறேன். இவர்கள் என்னில் நிறைவாயச் சந்தோஷப்படும்படிக்கு இவ்வுலகத்திலே இவைகளைச் சொல்லுகிறேன்.

௰௪. நான் உம்முடைய வசனத்தை இவர்களுக்குக் கொடுத்தேன். மேலும், நான் இவ்வுலகத்தின் தன்மையிலல்லாதவனாயிருக்கிறதுபோல அவர்களும் இவ்வுலகத்தின் தன்மையிலல்லாதவர்களாயிருக்கிறபடியினாலே * உலகத்தார் அவர்களைப் பகைக்கிறார்கள். * ௰௫. ௰௮, ௰௯.

௰௫. நீர் அவர்களை உலகத்திலிருந்தெடுத்துக்கொள்ளும்படியல்ல, அவர்களைப் பொல்லாங்கிலிருந்து காப்பாற்றும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰௬. நான் உலகத்தானல்லாதவனாயிருக்கிறதுபோல அவர்களும் இவ்வுலகத்தாரல்ல.

௰௭. உம்முடைய சத்தியத்தினாலே அவர்களைப் பிரதிஷ்டையாக்கும். * உம்முடைய வசனமே சத்தியம். * சங்கீ. ௱௰௯. ௱௪௨.

௰௮. நீர் என்னை இவ்வுலகத்திலே அனுப்பினதுபோல நானும் அவர்களை உலகத்திலே அனுப்புகிறேன்.

௰௯. அல்லாமலும் அவர்களும் சத்தியமாயப் பிரதிஷ்டையாக்கப்பட்டவர்களாயிருக்கும்படிக்கு, * அவர்களுக்காக நான் என்னைத் தானே பிரதிஷ்டையாக்குகிறேன். * எபிரே. ௰. ௰.

௨௰. அல்லாமலும் நான் இவர்களுக்காக மாத்திரமல்ல, இவர்களுடைய போதகத்தினாலே என்னிடத்தில் விசுவாசமாகும் பேர்களுக்காகவும், எல்லாரும் ஒன்றாயிருக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௧. அப்பிதாவே! நீர் என்னை யனுப்பினதை யுலகத்தார் விசுவாசிக்கத்தக்கதாக, நீர் என்னிலேயும், நான் உம்மிலேயுமிருக்கிறதுபோல அவர்களும் நம்மில் * ஒன்றாயிருக்கும்படிக்கே (வேண்டிக்கொள்ளுகிறேன்.) * கலாத். ௩. ௨௮.

௨௨. அல்லாமலும் நாம் ஒன்றாயிருக்கிறதுபோல அவர்களும் ஒன்றாயிருக்கும்படிக்கு நீர் எனக்குக்கொடுத்த மகிமையை நான் அவர்களுக்குக்கொடுத்தேன்.

௨௩. அவர்கள் ஒருமைப்பாட்டிலே நிறைந்தவர்களாயிருக்கும்படிக்கும் நீர் என்னை யனுப்பினதையும், நீர் என்னிடத்தில் அன்புகூருகிறதுபோல அவர்களிடத்திலும் அன்புகூருகிறதையும் உலகத்தார் அறியும்படிக்கும் நான் * அவர்களிலேயும், நீர் என்னிலேயுமிருக்கவேண்டும். * ௧. கொரி. ௬. ௰௭.

௨௪. பிதாவே! உலகத்தோற்றத்தினகாலத்திற்குமுன்னே நீர் என்னிடத்தில் அன்புகூர்ந்

தபடியினாலே எனக்குக்கொடுத்த என்னுடைய மகிமையை நீர் எனக்குக்கொடுத்தவர்கள் காணும்படிக்கு * நான் இருக்கும் இடமெங்கேயோ அங்கேயவர்களும் என்னோடேகூடவிருக்கவேணுமென்று விரும்புகிறேன். * ௰௨. ௨௬.

௨௫. நீதியுள்ள பிதாவே! உலகத்தார் உம்மையறியவில்லை. நான் உம்மையறிந்திருக்கிறேன். அல்லாமலும் நீரென்னை யனுப்பினதையிவர்கள் அறிந்திருக்கிறார்கள்.

௨௬. அன்றியும் நீரென்னிடத்தில் வைத்திருக்கிற அன்பு இவர்களிலே யிருக்கும்படிக்கும், நான் இவர்களிலே இருக்கும்படிக்கும் உம்முடைய நாமத்தை யிவர்களுக்குத் தெரியப்படுத்தினேன். பின்னும் அப்படியே தெரியப்படுத்துவேனென்றார்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) யூதா இயேசுவைக் காட்டிக்கொடுத்தது. (௬) சேவகர் தரையிலே விழுந்தது. (௰) பேதுரு மல்குஸின் காதை வெட்டினது. (௰௨) அன்னா, காய்பா என்பவர்களுக்கு முன்பாக இயேசு கொண்டுபோகப்பட்டது. (௰௫) பேதுரு மறுதலித்தது. (௰௯) இயேசுவானவர் காய்பாவுக்கு முன்பாகச் சோதிக்கப்பட்டது. (௨௮) அவர் பிலாத்துவுக்கு முன்பாகக் குற்றஞ்சாற்றப்பட்டது. (௩௬) தாம் தம்முடைய இராச்சியத்தைக்குறித்துச் சொல்லியது. (௪௰) யூதர்கள் பரபாவை விடுதலையாகும்படி கேட்டுக்கொண்டது.]

இயேசுவானவர் இவைகளைச் சொன்னபின்பு, அவர் தம்முடைய சீஷருடனேகூடக் * கீதரோனென்னும் ஆற்றுக்கப்புறம் போனார். அங்கே யொரு தோட்டமிருந்தது. அதிலே அவரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள். * ௨. சாமு. ௰௫. ௨௩.

௨. இயேசுவானவர் தம்முடைய சீஷருடனேகூட அடிக்கடியங்கே கூடிவந்திருந்தபடியினாலே, அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அந்த இடத்தையறிந்தான்.

௩. * ஆதலால் யூதாவானவன் போர்ச்சேவகரின் கூட்டத்தையும், பிரதான ஆசாரியர் பரிசேயரென்பவர்களால் அனுப்பப்பட்ட ஊழியக்காரரையுங் கூட்டிக்கொண்டு, பந்தங்களோடும், தீவட்டிகளோடும், ஆயுதங்களோடும் அவ்விடத்திற்குப் போனான்.
* மத்தே. ௨௬. ௪௭; மாற். ௰௪. ௪௩; லூக்கா ௨௨. ௪௭.

௪. அப்பொழுது இயேசுவானவர் தமக்கு மேல்வரும் யாவையும் அறிந்து, புறப்பட்டு அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்களென்றார்.

௫. அதற்கவர்கள், நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோமென்றார்கள். இயேசுவானவர், நானேயவனென்றார். அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அவர்களுடனே கூடநின்றான்.

௬. நானேயவனென்று அவர் சொன்னபொழுது, அவர்கள் பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள்.

௭. பின்பு அவர் மறுபடியும் அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்களென்று கேட்டார். நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோமென்றார்கள்.

௮. இயேசுவானவர் சொன்னது, நானேயவனென்று உங்களுடனே சொன்னேனே. நீங்கள் என்னைத் தேடினீர்களானால் இவர்களை விட்டுவிடுங்களென்றார்.

௯. அதினாலே * நீர் எனக்குக் கொடுத்தவர்களிலொருவனையாகிலும் நான் இழக்கவில்லையென்று அவர் சொல்லிய வசனம் நிறைவேறிற்று. * ௰௭. ௰௨.

௰. அப்பொழுது சீமோன்பேதுரு தன்னிடத்திலிருக்கிற கத்தியையுருவிப் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனுடைய வலதுகாதறவெட்டினான். அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ் என்னும் பேர்.

௰௧. இயேசுவானவர் பேதுருவை நோக்கிக் கத்தியையுறையிலே போடு. பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம்பண்ணாமலிருப்பேனோவென்றார்.

௰௨. பின்பு போர்ச்சேவகரும், ஆயிரஞ்சேனைக்குத் தலைவனும், யூதர்களுடைய ஊழியக்காரரும் * இயேசுவைப் பிடித்து அவரைக் கட்டி, * லூக். ௨௨. ௫௪; மாற். ௰௪. ௪௬; மத். ௨௬. ௫௭.

௰௩. முதலாவது அன்னாவென்பவனிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அந்த அன்னா அவ்வருஷத்துப் பிரதான ஆசாரியனாகிய காய்பாவென்பவனுக்கு மாமனாயிருந்தான்.

௰௪. * ஒரு மனிதன் சனங்களுக்குப் பதிலாக மடிந்துபோனால் நலமாயிருக்குமென்று யூதருக்கு ஆலோசனை சொன்னவன் அந்தக் காய்பாவே. * ௰௧. ௪௯—௫௨.

௰௫. * சீமோன்பேதுருவும், வேறொரு சீஷனும் இயேசுவுக்குப் பின்சென்றார்கள். அல்லாமலும் அந்தச் சீஷன் பிரதான ஆசாரியனுக்கறிமுகமுள்ளவனாய், இயேசுவுடனேகூடப் பிரதான ஆசாரியனுடைய மாளிகைக்குட் பிரவேசித்தான். * மத். ௨௬. ௫௮; மாற். ௰௪. ௫௪; லூக். ௨௨. ௫௪, ௫௫.

௰௬. பேதுரு வெளிவாசற்படியிலே நின்றான். ஆதலால் பிரதான ஆசாரியனுக்கறிமுகமுள்ள அந்த மற்றச் சீஷன் வெளியே போய், வாசலைக்காக்கிறவளுடனே சொல்லிப் பேதுருவையுள்ளே யழைத்துக்கொண்டான்.

௰௭. அப்பொழுது வாசலைக்காக்கிற வேலைக்காரி பேதுருவை நோக்கி, நீயும் அந்த மனிதனுடைய சீஷரிலொருவனல்லவா

னுன. அவனதான அபபடிபபடடவனலல வெனறுன.

௰௮. குளிர்ச்சியான காலமானபடியினுலே வேலைககாரரும, ஊழியககாரரும நெருப பையுணடாககி நினறு குளிர்காயநதார்கள. அவர்களுடனே பேதுருவும நினறு குளிர் காயநதான.

௰௯. பிரதான ஆசாரியன இயேசுவானவ ருடைய சீஷரையும, போதகததையுங்குறி ததுஅவரிடததிலவிசாரிததான.

௨௰. அவனுடனே இயேசுவானவர் சொன னதாவது; அநதரங்கததிலே நான ஒனறு மபேசாமல வெளியரங்கமாய லோகதது டனேபேசினேன. செப ஆலயததிலேயும, யூதர்களெலலாருங் கூடிவருகிற தேவாலய ததிலேயும எபபொழுதும உபதேசமபண ணினேன.

௨௧. எனனததிறகு நீர்எனனிடததிலவிசா ரிககிறீர். எனககுசசெவிகொடுததவர்களுக கு நானசொலலியவைகளைககுறிதது அவர் களிடததிலே விசாரிபபீராக. நானபேசின வைகளையறிநதிருககிறுர்களேயெனறுர்.

௨௨. இபபடியவர்சொனனபொழுது சமீ பமாய நினற * ஊழியககாரரிலொருவன பிரதான ஆசாரியனுககு இபபடிமாறுத்த ரவுசொல்லலாமாவெனறுசொலலி, இயே சுவானவரையொரு அடியடிததான. அவ னுடனே இயேசுவானவர்சொனனது,

* அபபோ. ௨௩. ௨.

௨௩. நான தகாதவிதமாயசசொனனேனு ைல, தகாததாயிருககிறதை யொபபுவி. நான தகுதியாயச்சொலலியிருகக எனனத திறுலே எனனையடிககிறுயெனறுர்.

௨௪. அனனுவெனபவன கடடபபடடவ ரான அவரைபபிரதான ஆசாரியனுன காயி பாவினிடததிறகு அனுபபியிருநதான.

௨௫. சீமோனபேதுரு நினறு குளிர்காயந தான. அபபொழுது சிலர் அவனைநோககி, நீயும அவனுடைய சீஷரிலொருவனலலவா வெனறுர்கள. அதறகவன தானலலவெனறு மறுதலிததான.

௨௬. பினபு பிரதான ஆசாரியனுடைய வேலைககாரரிலொருவனுமாய, பேதுருவி னுலே காதறவெடடபபடடவனுககு இனத தானுமாயிருநதவன அவனைநோககி, நான உனனையவரோடேகூடத தோடடததிலே காணவிலலையாவெனறுன.

௨௭. அபபொழுது பேதுரு மறுபடியும மறுதலிததான. உடனே சேவலகூவிறறு.

௨௮. * விடியறகாலமானபொழுது, அவ ர்களகாயிபாவினிடததிலிருநது இயேசுவா னவரைபபெரியதுரையின நியாயஸ்தலததி றகுககொணடுபோனுர்கள. அவர்கள தீட்டுப் படாமற பஸ்காவைப புசிககுமபடிககுத தாஙகள அநத நியாயஸ்தலததிறகுட்பிர

வேசிககவிலலை. * மத. ௨௭. ௧. ௨; மாற. ௰௫ ௧; லூக. ௨௩. ௧.

௨௯. ஆதலாற பிலாததெனனுந துரை யவர்களிடததிறகுபபோய இநத மனிதன மேலஎனனகுறறஞசாறறுகிறீர்களெனறுன.

௩௰. அவனுடனே யவர்கள சொனனது, இவன பொலலாஙகுசெயதவனலலவாதிருந தால, இவனையுமககொபபுககொடுககமாட டோமெனறுர்கள.

௩௧. ஆதலால பிலாததெனபவன அவர்க ளைநோககி, * இவனை நீஙகளே கொணடு போய உஙகள நியாயசாஸ்திரததினபடியி வனுககு நியாயததீர்பபுக கொடுஙகளென றுன. அதறகுயூதர்களசொனனது, ஒருவனு ககு மரணததைககொடுககிறதறகு எஙகளி டததில அதிகாரமிலலையேயெனறுர்கள.

* ௰௯. ௬.

௩௨. * இயேசுவானவர் தமககு மரணமவ ருமவகையைக குறிததுச சொனனவசனம நிறைவேறததககதாக (அபபடிப பேசினுர் கள.) * ௰௨. ௩௨, ௩௩.

௩௩. அபபொழுது பிலாததானவன மறுப டியும நியாயஸ்தலததிறகுட்பிரவேசிதது, இயேசுவையழைதது நீ யூதருடைய இராச னுவெனறுகேடடான.

௩௪. அவனுடனே இயேசுவானவர்சொன னது, இதை நீர் உமமாலே சொலலுகிறீ ரோ அலலது மறறவர்களஎனனைககுறிதது இதையுமககுசசொனனுர்களோவெனறுர்.

௩௫. பிலாதது மறுமொழியாகசசொனன து, நான யூதனு! உனனுடைய தேசததாரு ம, பிரதான ஆசாரியருமஉனனை யெனககு ஒபபுககொடுததார்கள. என்ன செயதாய எனறுன.

௩௬. அதறகு இயேசுவானவர் சொனனது, என இராசசியம இவவுலகததினதனமையு ளளதலல, என இராசசியம இவவுலகததின தனமையுளளதானுல, நான யூதர்கையில அகபபடாதபடிககு என ஊழியககாரர் போராடடஞசெயவார்கள. என இராசசி யம இமமையினதனமையுடையதலலவென றுர்.

௩௭. அபபொழுது பிலாததானவன அவ ரைநோககி, ஆகலால நீ இராசனல்லவாவெ னறுன. * இயேசுவானவர்சொனனது, நீர் சொலலுகிறபடி நானஇராசனதான. சததி யததைககுறிததுச சாட்சிகொடுககுமபடி ககு நான பிறநதேன. அதறகாகவே இவவு லகததிறகுவநதேன. சததியததின தன்மை யுளளவனெவனே, அவன எனககுச செவி கொடுககிறுனெனறுர். * ௧. தீமோ. ௬. ௰௩.

௩௮. அதறகுப பிலாதது சததியம எது வெனறுசொலலி, மறுபடியுமயூதரிடததிறகு போய, அவர்களைநோக்கி, நான அவனிட ததில ஒரு குறறமுஙகாணேன.

௱௬௯

௩௯. பஸ்காப்பண்டிகையிலே நான் உங்களுக்காக ஒருவனை விடுதலைபண்ணுகிற வழக்கமாயிருக்கிறதே, ஆகையால் நான் யூதருடைய இராசனை யுங்களுக்காக விடுதலைபண்ண உங்களுக்கு விருப்பமுண்டாவென்றான்.

௪௰ அப்பொழுது அவர்களெல்லாரும் இவனையல்ல, பரபாவை விடுதலைபண்ணவேண்டுமென்று கூப்பிட்டார்கள். பரபாவென்பவன் கள்ளனாயிருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து வாரினால் அடிக்கவும், முள்முடி தரிக்கவும், கையினால் அறையவும் பட்டது. (௪) பிலாத்து அவரை விடுதலையாக்க நினைத்தும், யூதர்களுடைய அட்டியினால் சிலுவையில் அறையும்படி அவரை ஒப்புவித்தது. (௨௩) அவர்கள் அவருடைய வஸ்திரங்களுக்காகச் சீட்டுப்போட்டது. (௨௬) அவர் தம்முடைய தாயாரை யோவானிடத்தில் ஒப்புவித்து, (௨௮) மரணமடைந்தது. (௩௧) அவருடைய விலா ஈட்டியினாற் குத்தப்பட்டது. (௩௮) யோசேப்பும், நிக்கோதேமும் அவரை யடக்கம்பண்ணினது.]

அப்பொழுது * பிலாத்தென்பவன் இயேசுவைப் பிடித்து வாரினால் அடிப்பித்தான். * மத். ௨௭. ௨௬-௩௰. மாற். ௰௫. ௰௫—௨௰: லூக்கா. ௨௩. ௨௫.

௨ அல்லாமலும் * போர்ச்சேவகர் முள்ளுகளினால் ஒரு முடியைப் பின்னி, அதை யவருடைய சிரசின்மேல் வைத்து, ஒரு சிவப்பான அங்கியை யவருக்குத் தரிப்பித்து, * மத். ௨௭. ௨௯, ௩௰.

௩. யூதருடைய இராசாவே, வாழ்கவென்று சொல்லி, அவருடைய கன்னத்தில் அடித்தார்கள்.

௪. பிலாத்தானவன் மறுபடியும் வெளியே போய், அவர்களை நோக்கி, இதோ, இவனிடத்தில் ஒரு குற்றத்தையும் நான் காணவில்லையென்கிறதை நீங்கள் அறியும்படிக்கு இவனை யுங்களிடத்துக்குக் கொண்டுவருகிறேனென்றான்.

௫. உடனே முண்முடியும், சிவப்பான அங்கியுந் தரிக்கப்பட்டவராய் இயேசுவானவர் வெளியே வந்தார். அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, இந்த மனிதனைப் பாருங்களென்றான்.

௬. பிரதான ஆசாரியரும், ஊழியக்காரரும் அவரைக் கண்டபொழுது இவனைச் சிலுவைமரத்திலே யறையும், இவனைச் சிலுவைமரத்திலே யறையுமென்று கூப்பிட்டார்கள். அதற்குப் பிலாத்து சொன்னது, இவனிடத்தில் ஒரு குற்றத்தையுங் காணவில்லையே. ஆகையால் நீங்களே இவனைக் கொண்டுபோய்ச் சிலுவைமரத்தில் அறையுங்களென்றான்.

௭. யூதர்கள் மறுமொழியாகச் சொன்னது, எங்களுக்கொரு நியாயப்பிரமாணமுண்டு. இவன் தன்னைப் பராபரனுடைய குமாரனென்று சொன்னபடியினாலே, அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன் சாகவேண்டுமென்றார்கள்.

௮. இந்த வசனத்தைப் பிலாத்துக் கேட்டபொழுது, அதிகமாய்ப் பயந்து, மறுபடியும் நியாயஸ்தலத்திற்குள்ளே போய்,

௯. இயேசுவானவரை நோக்கி, நீ எவ்விடத்தானென்றான். அதற்கு இயேசுவானவர் மாறுத்தரஞ்சொல்லவில்லை.

௰ அதினால் பிலாத்து அவரை நோக்கி, நீ யெனக்கு மறுமொழிசொல்லுகிறதில்லையா! உன்னைச் சிலுவைமரத்திலறையும்படி யெனக்கதிகாரமுண்டென்றும், உன்னை விடுதலைபண்ணும்படியும் எனக்கதிகாரமுண்டென்றும் நீ யறியாமலா இருக்கிறாய் என்றான்.

௰௧ இயேசுவானவர் சொன்னது, இந்த அதிகாரம் உமக்கு உயரத்திலிருந்து கொடுக்கப்படாதிருந்தாலே எனக்கு விரோதமாய்ச் செய்யும் அதிகாரம் உமக்குண்டாயிருக்க மாட்டாது. ஆனபடியினாலே யென்னை உமக்கொப்புக்கொடுத்தவன் அதிக பாவமுள்ளவனென்றார்.

௰௨. அதுமுதற் பிலாத்தானவன் அவரை விடுதலைபண்ணத் தேடினான். யூதர்கள் அவனை நோக்கி, இவனை விடுதலைபண்ணினால், நீ இராயனுக்குச் சிநேகிதனல்ல, தன்னை இராசாவென்கிறவனெவனும் இராயனுக்கு விரோதியாயிருக்கிறானென்று கூப்பிட்டார்கள்.

௰௩. அந்நாள் பஸ்காவுக்கு எத்தனமாக்கப்படுகிற நாளுமாய், ஏறக்குறைய ஆறுமணி நேரமுமாயிருக்க,

௰௪. பிலாத்தானவன் இந்த வசனத்தைக் கேட்டபொழுது, அவன் இயேசுவை வெளியே யழைத்துப்போய், தளவரிசைப்படுத்த இடமென்றும், எபிரேயுபாஷையிலே கப்பத்தாவென்றுஞ்சொல்லப்பட்ட இடத்திலே நியாயாசனத்தின்மேல் உட்கார்ந்து யூதர்களை நோக்கி, உங்கள் இராசாவைப் பாருங்களென்றான்.

௰௫. அவர்கள் இவனை யகற்றும், அகற்றும். இவனைச் சிலுவைமரத்திலே யறையுமென்று கூப்பிட்டார்கள். பிலாத்தானவன் சொன்னது, உங்கள் இராசாவை நான் சிலுவைமரத்திலே யறையலாமாவென்றான். அதற்குப் பிரதான ஆசாரியர் இராயனையல்லாமல் ஒரு இராசா எங்களுக்கில்லையென்றார்கள்.

௰௬. அப்பொழுது அவரைச் சிலுவைமரத்திலே யறையும்படிக்கு அவன் அவரை யவர்களுக்கு ஒப்புக்கொடுத்தான். அந்தப்படி யவர்கள் இயேசுவானவரைப் பிடித்துக்கொண்டுபோனார்கள்.

௰௭. * அவர் தம்முடைய சிலுவைமரத்தைச் சுமந்துகொண்டு எபிரேயுபாஷையிலே கொல்கதா என்று சொல்லப்பட்ட தலையோட்டிடமென்னும் இடத்திற்குப் புறப்பட்டுப்போனார். * மத். ௨௭. ௩௧; மாற். ௰௫. ௨௰; லூக். ௨௩. ௨௬.

௰௮. * அங்கே யவர்கள் நடுவிலே அவரையும், அவருடனேகூட இருபக்கங்களிலே வேறிரண்டுபேரையுஞ் சிலுவைமரங்களில் அறைந்தார்கள். * மத். ௨௭. ௩௫; மாற். ௰௫. ௨௪; லூக். ௨௩. ௩௩.

௰௯. அன்றியும் பிலாத்தானவன் * நசரேத்தூரானாகிய இயேசு யூதருடைய இராசாவென்று எபிரேயுபாஷையிலேயும், கிரேக்கப்பாஷையிலேயும், இலத்தின்பாஷையிலேயும் எழுதி அதைச் சிலுவைமரத்தின்மேற் சேர்த்தான். * மத். ௨௭. ௩௭.

௨௰. இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்டிருக்கிற இடம் நகரத்திற்குச் சமீபமாயிருந்தபடியினாலே யூதர்களில் அநேகம்பேர் அந்த மேலெழுத்தை வாசித்தார்கள்.

௨௧. அப்பொழுது யூதருடைய பிரதான ஆசாரியர் பிலாத்துவினிடத்திற்குப் போய், யூதருடைய இராசாவென்று நீர் எழுதாமல் தான் யூதருடைய இராசா என்று அவன் சொன்னானென்று எழுதவேண்டுமென்றார்கள்.

௨௨. அதற்குப் பிலாத்து நானெழுதினது எழுதியாயிற்றென்றான்.

௨௩. போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவைமரத்திலே * அறைந்தபின்பு அவருடைய வஸ்திரங்களையெடுத்து ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு பங்காகும்படி நாலுபங்காக்கினார்கள். அங்கியையும் எடுத்தார்கள். அந்த அங்கி தைத்தலில்லாமல் மேலேதொடங்கி முழுவதும் நெய்யப்பட்டிருந்தபடியால், * மத். ௨௭. ௩௫; மாற். ௰௫. ௨௪; லூக். ௨௩. ௩௪; சங்கீ. ௨௨. ௰௮.

௨௪. அவர்கள் இதைக் கிழியாமல் இதைப் பெற்றுக்கொள்ளுகிறவனை யறியும்படிக்குச் சீட்டுப்போடக்கடவோமென்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். * என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொண்டு, என் உடையின்மேற் சீட்டுப்போட்டார்களென்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகப் போர்ச்சேவகர் அப்படிச் செய்தார்கள். * சங்கீ. ௨௨. ௰௮.

௨௫. அல்லாமலும் இயேசுவின் சிலுவைமரத்தின் அருகே அவருடைய தாயும், அவளுடைய சகோதரியாகிய கிலெயோப்பா மரியாளும், மக்தலேனாளாகிய மரியாளும் நின்றார்கள்.

௨௬. அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய தாயையும், அங்கே நின்ற தமக்கு அன்பான சீஷனையுங்கண்டு,

௨௭. தம்முடைய தாயைநோக்கி, ஸ்திரீயே, இவனே உன் மகனென்றார். பின்பு அந்தச் சீஷனைநோக்கி, இவளே உன் தாயென்றார். அந்நேரமுதற்கொண்டு அந்தச் சீஷன் அவளைத் தன்னிடமாயச் சேர்த்துக்கொண்டான்.

௨௮. இதின்பின்பு இயேசுவானவர் எல்லாம் முடிந்துதீர்ந்ததென்றறிந்து, வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகத் * தாகமாயிருக்கிறேனென்றார். * சங்கீ. ௬௯. ௨௧.

௨௯. அங்கே காடிநிறைந்தபாத்திரம் வைக்கப்பட்டிருந்தது. ஆதலால் அவர்கள் கடற்காளானைக் காடியிலே தோய்த்து ஈசோப்புத்தண்டிற் பூட்டி அவருடைய வாயினிடத்தில் நீட்டிக்கொடுத்தார்கள்.

௩௰. * இயேசுவானவர் காடியைவாங்கினபின்பு முடிந்ததென்று சொல்லித் தலையைச் சாய்த்து ஆவியையொப்புவித்தார். * மத். ௨௭. ௫௰; மாற். ௰௫. ௩௭; லூக். ௨௩. ௪௬.

௩௧. அந்தநாள் பெரிய ஓய்வுநாளுக்காயத்தநாளானபடியினாலே உடல்கள் அந்த ஓய்வுநாளிலே சிலுவைமரங்களிலிராதபடி யூதர்கள் பிலாத்துவினிடத்திற்குப்போய் அவர்களுடைய காலெலும்புகள் முறிக்கப்படும்படிக்கும், உடல்கள் எடுத்துப்போடப்படும்படிக்கும் அவனிடத்தில் உத்தரவுகேட்டுக்கொண்டார்கள்.

௩௨. அந்தப்படி போர்ச்சேவகர்போய் அவருடனேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட முந்தினவனுடைய காலெலும்புகளையும், மற்றவனுடைய காலெலும்புகளையும் முறித்தார்கள்.

௩௩. அவர்கள் இயேசுவினிடத்திற்சேர்ந்தபொழுது அவர் மரித்திருக்கக்கண்டு, அவருடைய காலெலும்புகளை முறிக்கவில்லை.

௩௪. போர்ச்சேவகரிலொருவன் ஈட்டியினாலே அவருடைய விலாவிற்குத்தினான். உடனே இரத்தமும், சலமும் புறப்பட்டன.

௩௫. அதைக்கண்டவன் அதைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறான். அவனுடைய சாட்சி மெய்யாயிருக்கிறது. நீங்கள் விசுவாசிக்கும்படிக்குத் தான்சொல்லுகிறது மெய்யென்று அவன் அறிந்திருக்கிறான்.

௩௬. அவருடைய * எலும்புகளிலொன்றும் முறிக்கப்படுவதில்லையென்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக இவை நடந்தன. * ௨. மோ. ௰௨. ௪௬.

௩௭. அல்லாமலும், * தாங்கள் குத்தினவரைப் பார்ப்பார்களென்றும் வேறொரு வேதவாக்கியஞ் சொல்லுகிறது. * சகரி. ௰௨. ௰.

௩௮. அதற்குப்பின்பு அரிமத்தியா ஊரானுமாய், இயேசுவானவருக்குச் சீஷனாயிருந்தும் யூதர்களுக்குப் பயப்பட்டதினாலே அ

தை மறைத்தவனுமாயிருந்த யோசேப்பென்பவன் இயேசுவினுடைய சரீரத்தையெடுத்துக்கொள்ளும்படிக்குப் பிலாத்துவினிடத்தில் உத்தரவுகேட்டான். பிலாத்து உத்தரவுகொடுத்தான். ஆகையால், அவன்போய் இயேசுவின் சரீரத்தையெடுத்துக்கொண்டான். * மத். ௨௭. ௫௭; மாற்கு. ௰௫. ௪௩; லூக். ௨௩. ௫௰.

௩௯. * ஆரம்பத்திலே ஒரிராத்திரியில் இயேசுவினிடத்திற்குப் போயிருந்த நிக்கோதேமென்பவனும் சேர்ந்து, வெள்ளைப்போளமும், கரியபோளமுங் கலந்த ஏறக்குறைய நூறுஇராத்தல் பரிமளத்தைக்கொண்டுவந்தான். * ௩. ௧, ௨.

௪௰. அவர்கள் இயேசுவின் சரீரத்தையெடுத்துக்கொண்டு, யூதர்கள் சவங்களிறக்குந்த ஒழுங்கின்படி அதைச் சுகந்தவர்க்கங்களுடனே கூடச் சேலைகளினாற் கட்டினார்கள்.

௪௧. மேலும் அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்திலேயொரு தோட்டமும், அந்தத்தோட்டத்திலே யொருக்காலும், ஒருவனும் வைக்கப்படாத புதியகல்லறையுமிருந்தன.

௪௨. யூதருடைய ஆயத்த நாளானபடியினாலும், அந்தக்கல்லறை சமீபமானபடியினாலும் இயேசுவானவரை அவ்விடத்திலே வைத்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) மரியாளும், (௩) பேதுருவும், யோவானும், அவர் உயிர்த்தெழுந்ததை யறியாமற் கல்லறையினிடத்திற்போனது. (௰௧) இயேசு மகதலேனா மரியாளுக்கும், (௰௯) தம்முடைய சிஷர்களுக்குங் காட்சியானது. (௨௪) தோமாவின் அவநம்பிக்கையையும், நல்லறிக்கையையுங் குறித்துச்சொல்லியது. (௩௰) வேத எழுத்துக்கள் இரட்சணியத்துக்குப் போதுமானவைகளென்பது.]

* வாரத்தின் முதலாங் கிழமைக் காலையிலே இருட்டிருக்கையில், மகதலேனாளாகிய மரியாள் கல்லறையினிடத்திற்குப்போய், அதிலிருந்த கல்லையெடுத்துப்போட்டதைக்கண்டாள். * மத். ௨௮. ௧; மாற். ௰௬. ௧. ௬; லூக். ௨௪. ௧.

௨. ஆதலால், அவள் ஓடிச் சீமோன்பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சிஷனிடத்திலும்போய்க் கல்லறையிலிருந்த கர்த்தரையெடுத்துக்கொண்டார்கள். அவரை வைத்த இடம் எங்களுக்குத்தெரியவில்லையென்றாள்.

௩. அப்பொழுது பேதுருவும், அந்தமற்றச் சிஷனும் கல்லறையினிடத்திற்குப்போகும்படிபுறப்பட்டு இருவரும் ஒருமித்து ஓடினார்கள்.

௪. பேதுருவிலும் அந்தமற்றச்சிஷன் அதிசீக்கிரமாய் ஓடி, முந்திக் கல்லறையினிடத்திற்சேர்ந்து,

௫. குனிந்துநின்று அதற்குள்ளே பார்க்கையிற் சேலைகள் வைத்திருக்கக்கண்டான்.

௬. அவன் உள்ளே போகவில்லை, சீமோன் பேதுரு அவனுக்குப் பின்சென்றுபோய்க் கல்லறைக்குள்ளே பிரவேசித்து,

௭. சேலைகள் வைத்திருக்கிறதையும், அவருடைய தலையைச் சுற்றியிருந்த சேலை மற்றச் சேலைகளுடனே வையாமல் தனியாய் ஓரிடத்திலே சுருட்டி வைத்திருக்கிறதையுங் கண்டான்.

௮. அப்பொழுது முந்திக் கல்லறையினிடத்திற்குப்போன மற்றச்சிஷனும் உள்ளே பிரவேசித்துக்கண்டு, நம்பினான்.

௯. அவர் மரித்தோரிலிருந்தெழுந்திருக்க வேண்டுமென்கிற வேதவாக்கியத்தை அவர்கள் அதுவரைக்கும் அறிந்துகொள்ளாதிருந்தார்கள்.

௰. பின்பு அந்தச் சிஷர் தங்களுடைய இடத்திற்குத்திரும்பினார்கள்.

௰௧. மரியாள் கல்லறையினருகான வெளியிலே அழுதுகொண்டு நின்றாள். அப்படி அழுதுகொள்ளுகையில், அவள் கல்லறைக்குள்ளே குனிந்துபார்த்து,

௰௨. இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே வெண்மையான உடையுள்ளவர்களாய்த் தலைமாட்டிலே ஒருவனும், கால்மாட்டிலே யொருவனுமாக இரண்டு தூதர்கள் உட்கார்ந்திருக்கிறதைக்கண்டாள்.

௰௩. அவர்கள் அவளை நோக்கி, ஸ்திரீயே என்னத்தினாலேயழுகிறாய் என்றார்கள். அதற்கவள் சொன்னது என் கர்த்தரைவெடுத்துக்கொண்டுபோனார்கள். அவரை வைத்த இடம் எனக்குத்தெரியவில்லை. அதினாலே (யழுகிறேன்) என்றுசொல்லிப் பின்னாகத்திரும்புகையில் இயேசுவானவர் நிற்கிறதைக் கண்டாள்.

௰௪. அவள் அவரை இயேசு என்றறியவில்லை. அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்கி,

௰௫. ஸ்திரீயே என்னத்தினாலே அழுகிறாய் ஆரைத்தேடுகிறாயென்றார். அவள் அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி அவருடனேசொன்னது, ஐயா நீர் அவரையெடுத்துக்கொண்டுபோனீரானால் அவரை வைத்தவிடத்தையெனக்குச் சொல்லவேண்டும். நான்போய் அவரையெடுத்துக்கொள்ளுவேனென்றாள்.

௰௬. அப்பொழுது இயேசுவானவர் மரியாளேயென்று அவளுடனேசொன்னார். உடனே யவள் திரும்பிக்கொண்டு இரபூனியென்று அவருடனேசொன்னாள். இரபூனி

யென்பதற்குப் போதகரேயென்று அர்த்தமாம்.

௰௭. இயேசுவானவர் சொன்னது, நீ யென்னைத் தொடாதிரு. இன்னம் என் பிதாவினிடத்திற்குநான் எழுந்துபோகவில்லையே* இப்பொழுது நீ யென் சகோதரரிடத்திற்குப் போய், என் பிதாவினிடத்திற்கும், உங்கள் பிதாவினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும், உங்கள் தேவனிடத்திற்குமெழுந்துபோகிறேனென்று அவர்களுடனே சொல்லென்றார். * சங்கீ. ௨௨. ௨௨.

௰௮. மகுதலேனூராளாகிய மரியாள் போய்த் தான் கர்த்தரைக் கண்டதையும், அவர் தன்னுடனே சொன்னவைகளையுஞ் *சீஷருக்கறிவித்தாள். * மாற்கு. ௰௬. ௰.

௰௯. * வாரத்தின் முதற்கிழமையாகிய அன்றைத்தினம் அஸ்தமனகாலத்தில் சீஷர்கள் யூதர்களுக்குப் பயப்பட்டதினாலே கதவுகளைப் பூட்டிக்கூடியிருக்கையில் இயேசுவானவர் தோன்றி, நடுவே நின்று உங்களுக்குச் சமாதான சவுக்கியமுண்டாவதாகவென்று சொல்லி, * மாற்கு. ௰௬. ௰௪; லூக். ௨௪. ௩௬.

௨௰. தம்முடைய கைகளையும், விலாவையும், அவர்களுக்குக் காண்பித்தார். சீஷர் கர்த்தரைக் கண்டபொழுது, சந்தோஷப்பட்டார்கள்.

௨௧. பின்பு இயேசுவானவர் மறுபடியும் அவர்களுடனே சொன்னது. உங்களுக்குச் சமாதான சவுக்கியமுண்டாவதாக. *பிதா என்னையனுப்பினதுபோல நானும் உங்களையனுப்புகிறேனென்று சொல்லி, * ௰௭. ௰௮.

௨௨. அவர்கள் மேலூதிப் பின்பு சொன்னதாவது; பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

௨௩. *எவர்களுடைய பாவங்களை மன்னிப்பீர்களோ அவர்களுக்கு அவைகள் மன்னிக்கப்பட்டிருக்கும். எவர்களுடைய பாவங்களை மன்னியாமலிருப்பீர்களோ அவர்களுக்கு அவைகள் மன்னிக்கப்படாமலிருக்குமென்றார். * மத். ௰௬. ௰௯;—௰௮. ௰௮.

௨௪. அப்பொழுது இயேசுவானவர் வந்திருந்த காலத்திலே பன்னிருவரிலொருவனாகிய திதிமு என்னப்பட்ட தோமா அவர்களுடனே கூடவிருக்கவில்லை.

௨௫. ஆதலால் மற்றச் சீஷர் அவனை நோக்கி நாங்கள் கர்த்தரைக் கண்டோமென்றார்கள். அதற்கவன் சொன்னது அவருடைய கைகளில் ஆணிகள் அடித்திருந்த தழும்பைத் தான் கண்டு அந்தத் தழும்பிலே யென் விரலை வைத்து, அவருடைய விலாவிலே யென் கையை வையாவிட்டால் விசுவாசிக்கமாட்டேனென்றான்.

௨௬. எட்டுநாளுக்குப்பின்பு அவருடைய சீஷர் மறுபடியும் அறைக்குள்ளேயிருந்தார்கள். தோமாவும் அவர்களுக்குள்ளேயிருந்தான். கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. அப்பொழுது இயேசுவானவர் தோன்றி நடுவே நின்று உங்களுக்குச் சமாதான சவுக்கியமுண்டாவதாகவென்று சொல்லி,

௨௭. பின்பு தோமாவை நோக்கி உன் விரலை யிங்கே நீட்டி என் கைகளைப்பார். மேலும், உன் கையை நீட்டி என் விலாவிலே வை. அவிசுவாசியாயிராமல் விசுவாசியாயிருப்பாயாகவென்றார்.

௨௮. அதற்கு மாறுத்தரமாகத் தோமா அவரை நோக்கி, என் கர்த்தாவே, என் தேவனே, யென்றான்.

௨௯. இயேசுவானவர் சொன்னது, தோமாவே, நீ என்னைக் கண்டபடியினாலே விசுவாசித்தாய் *காணாதிருந்தும் விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்களென்றார். * ௧. பேது. ௧. ௮, ௯.

௩௰. அன்றியும், இந்தப் புஸ்தகத்தில் எழுதப்படாத* அநேக அற்புதங்களையும் இயேசுவானவர் தம்முடைய சீஷருக்கு முன்பாகச் செய்தார். * ௨௧. ௨௫.

௩௧. இவைகள் இயேசுவானவர் பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்துவென்று நீங்கள் விசுவாசிப்பதற்கும், விசுவாசித்தபின்பு அவருடைய நாமத்தினாலே சீவனையடைவதற்கும் ஏதுவாக எழுதப்பட்டிருக்கின்றன.

## ௨௧. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து மறுபடியும் சீஷர்களுக்குத் தரிசனையாகி, அவர்களுக்குப் பிடிபட்ட ஏராளமான மீன்களினாலே வலையவர்கள் இன்னாரென்று அறிந்துகொண்டது. (௰௨) அவர் அவர்களோடே அசனம்பண்ணி, (௰௫) பேதுருவைத் தம்முடைய ஆட்டுக்குட்டிகளையும், ஆடுகளையும் மேய்க்கும்படி உறுதியாய்க் கற்பித்து, (௰௮) அவனுடைய மரணத்தின் விவரத்தை அவனுக்கு முன்னறிவித்து, (௨௨) யோவானைக் குறித்துத் தம்மைக் கேட்ட கேள்விக்கு உத்தரவு சொன்னது. (௨௫) முடிவுரை.]

அதன்பின்பு இயேசுவானவர் திபேரியாவின் கடற்கரையிலே சீஷருக்குத் தம்மை மறுபடியுங் காண்பித்தார். அங்கே காண்பித்தபிரகாரமாவது.

௨. சீமோன் பேதுருவும், திதிமு என்னப்பட்ட தோமாவும், கலிலேயா நாட்டிலுள்ள கானாவூரானாகிய *நாத்தான்வேலும், செபெதேயுவின் குமாரரும், அவருடைய சீஷரில் வேறிரண்டுபேரும் கூடியிருக்குங் காலத்திலே சீமோன் பேதுரு மற்றவர்களை நோக்கி, நான் மீன்பிடிக்கப்போகிறேனென்றான். அவர்கள் நாங்களும் உன்னுடனே கூடவருகிறோமென்றார்கள். * ௧. ௪௯.

௩. உடனே யவர்கள் புறப்பட்டுப்போய்,

படவேறினார்கள். அந்த இராத்திரியிலேயவர்கள் ஒன்றும்பிடிக்கவில்லை.

௪. விடியற்காலமானபொழுது, இயேசுவானவர் கரையிலே நின்றார். அவரை இயேசுவென்று சீஷர் அறியாமலிருந்தார்கள்.

௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, பிள்ளைகளே, போசனம்பண்ணுகிறதற்கேதாகிலும் உங்களிடத்திலுண்டாவென்றார். அதற்கவர்களொன்றுமில்லையென்றார்கள்.

௬. அவர்சொன்னது, நீங்கள் படவுக்கு வலப்புறமாக வலையைப்போடவேணும். அப்பொழுது உங்களுக்ககப்படுமென்றார். அந்தப்படியவர்கள் போட்டுத் திரளான மீன்கள் அகப்பட்டதினாலே அதையிழுக்கமாட்டாதிருந்தார்கள்.

௭. ஆதலால் * இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன் பேதுருவைநோக்கி, அவர் கர்த்தரென்றான். அவர் கர்த்தரென்று சீமோன் பேதுரு கேட்டவுடனே தான் வஸ்திரமில்லாதவனானபடியினாலே சட்டையைக் கட்டிக்கொண்டு கடலிலே குதித்தான். * ௰௩. ௨௩.

௮. மற்றச் சீஷர் ஏறக்குறைய இருநூறு முழமாத்திரங் கரைக்குத் தூரத்திலேயிருந்தபடியினாலே மீன்களுடனே வலையையிழுத்துக்கொண்டு படவிலேறிட்டே (கரையைச்) சேர்ந்தார்கள்.

௯. அவர்கள் கரையிறசேர்ந்திறங்கினபொழுது, அக்கினி கனாக்ள இருக்கிறதையும், அதின்மேல் மீன்வைத்திருக்கிறதையும், அப்பத்தையுங்கண்டார்கள்.

௰. பின்பு இயேசுவானவர்சொன்னது, நீங்களிப்பொழுது பிடித்த மீன்களில் சிலகொண்டுவாருங்களென்றார்.

௰௧. அப்பொழுது சீமோன்பேதுரு படவுக்குத்திரும்பி நூற்றைம்பத்துமூன்று பெரிய மீன்களால் நிறைந்த வலையைக் கரையிலிழுத்தான். இவ்வளவு இருந்தும் வலைகிழியவில்லை.

௰௨. பின்புஇயேசுவானவர் அவர்களையழைத்துப் போசனம்பண்ணவாருங்களென்றார். அப்பொழுது அவரைக் கர்த்தரென்று சீஷர் அறிந்தபடியினாலே, அவர்களிலொருவனும் நீர் ஆரென்று கேட்கத்துணியவில்லை.

௰௩. அன்றியும் இயேசுவானவர் சேர்ந்து, அப்பத்தையும், மீனையுமெடுத்து அவர்களுக்குப் பரிமாறினார்.

௰௪. இயேசுவானவர் மரித்தோரிலிருந்தெழுந்தபின்பு, தம்முடைய சீஷருக்குக்காட்டின தரிசனைகளில் இது மூன்றாவது.

௰௫. அவர்கள் போசனம்பண்ணினபின்பு, இயேசுவானவர் சீமோன் பேதுருவைநோக்கி, யோனாவின்குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் நீ யென்னிடத்தில் அதிகமாய அன்புகூருகிறாயாவென்றார். அதற்கவன்சொன்னது, ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்பாயிருக்கிறதை நீர் அறிந்திருக்கிறீரென்றான். அவர்சொன்னது, என் ஆட்டுக்குட்டிகளைப் போஷிப்பாயாகவென்றார்.

௰௬. பின்பு அவர் இரண்டாந்தரம் அவனை நோக்கி, யோனாவின்குமாரனாகிய சீமோனே, என்னிடத்தில் அன்புகூருகிறாயாவென்றார். அதற்கவன்சொன்னது, ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதையறிந்திருக்கிறீரென்றான். அவர்சொன்னது, என் ஆடுகளை மேய்ப்பாயாகவென்றார்.

௰௭. பின்பு அவர்மூன்றாந்தரம் அவனைநோக்கி, யோனாவின்குமாரனாகிய சீமோனே, நீ யென்னிடத்தில் அன்புகூருகிறாயாவென்றார். என்னிடத்தில்அன்புகூருகிறாயாவென்றவர்மூன்றாந்தரந் தன்னுடனே சொன்னபடியினாலே, பேதுரு துக்கப்பட்டு, ஆண்டவரே, * நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர். நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதையும் அறிந்திருக்கிறீர் என்றான். இயேசுவானவர்சொன்னது, என் ஆடுகளைப்போஷிப்பாயாக. * ௰௬. ௩௰.

௰௮. அல்லாமலும் நீ பாலவயதுள்ளவனாயிருக்கையில், நீயே யுன் அரையிற் கச்சைக்கட்டிக்கொண்டு, உனதிஷ்டப்படிக்குச் சஞ்சரித்தாய். நீ முதிர்ந்தவயதுள்ளவனாயிருக்கும்பொழுது, உன் கைகளை நீட்டுவாய். மேலும் வேறொருவன் உன் அரையிற் கச்சைக்கட்டி உனக்கிஷ்டமில்லாத இடத்திற்குக்கொண்டுபோவானென்று மெய்யாகவே உனக்குச்சொல்லுகிறேனென்றார்.

௰௯. * அவர் பராபரனுக்குப் புகழுண்டாகத்தக்கதாக அவனடையும் மரணவகையைக் குறித்து, இப்படிச்சொன்னார். அப்படிச் சொன்னபின்பு, எனக்குப்பின்சென்றுவாவென்று அவனுடனேசொன்னார். * ௨. பேது. ௧. ௰௩, ௰௪.

௨௰. அந்தப்படி பேதுரு பின்செல்லுகையில் திரும்பிப்பார்த்து * இயேசுவுக்குஅன்பாயும், இராப்போசனம்பண்ணுகையிலவருடைய மார்பிலேசாய்ந்து, ஆண்டவரே, உம்மைக் காட்டிக்கொடுப்பவன் யாவனென்று கேட்டுமிருந்த சீஷனும் பின்செல்லுகிறதைக்கண்டு, * ௰௩. ௨௫.

௨௧. இயேசுவானவரைநோக்கி, ஆண்டவரே, இவன் என்னவாயிருப்பான் என்றான்.

௨௨. அதற்குஇயேசுவானவர்சொன்னது, நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால், அதினாலே யுனக்கென்ன நீயே யெனக்குப் பின்செல்லென்றார்.

௨௩. அதினாலே யந்தச் சீஷன் மரிப்பதில்லையென்கிற பேச்சுச் சகோதரருக்குள்ளே யுண்டாயிற்று. இயேசுவானவர் அவன்மரிப்பதில்லையென்று சொல்லாமல் நான்வருமளவும் அவனிருக்க எனக்குச் சித்தமானால், அதினாலே யுனக்கென்னவென்றுசொன்னார்.

௨௪. அந்தச் சீஷனே இந்தச்சங்கதிகளைக் குறித்துச் சாட்சிகொடுத்து இவைகளை யெழுதியிருக்கிறான். அவனுடைய சாட்சி மெய்யென்றறிந்திருக்கிறோம். அன்றியும் இயேசுவானவர் செய்த * மற்றஅநேககாரியங்களுமுண்டு. அவைகள் ஒவ்வொன்றாய் எழுதப்பட்டால், அதினாலே யுண்டாகும் புத்தகங்களை வைக்கிறதற்கு உலகம்போதா தென்றெண்ணுகிறேன். * ௨௰. ௩௰. ஆமென்.

---

# அப்போஸ்தலருடைய நடக்கைகள்.

---



## ௧. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து பரமண்டலம்போவதை அப்போஸ்தலர் காணும்பொருட்டு ஒலிவமலையண்டையில் அவர்களைக்கூட்டி, உலகசாட்சிகளாயிருக்கும்படிச் சிலநாளுக்குப்பின்பு பரிசுத்த ஆவியையனுப்புவோமென்று வாக்குத்தத்தம்பண்ணி எருசலேமிலே அவர்கள் அந்த ஆவியின் வருகைக்குக் காத்திருக்கும்படி கற்பித்தது. (௯) அவர் பரமண்டலத்துக்கேறினபின்பு இரண்டுதூதர்கள் அவருடைய இரண்டாம்வருகைக்கெதிர்பார்த்திருக்க அவர்களுக்குப்புத்திசொன்னது. (௰௨) அவர்கள் எருசலேமுக்குப்போய் யூதாவுக்குப்பதிலாக மத்தியாவை அப்போஸ்தலனாகத் தெரிந்துகொண்டது.]

தெயோப்பிலுவே! இயேசுவானவர் தாம்தெரிந்துகொண்ட அப்போஸ்தலருக்குப் பரிசுத்த ஆவியினாலே கட்டளையிட்டபின்பு,

௨. * அவர் உயர்த்தப்பட்டநாள்வரைக்குஞ் செய்தும், உபதேசித்துமிருந்த யாவையுங்குறித்து, † முதலாம் பிரபந்தத்தைப் பண்ணினேன். * லூக்கா. ௨௪. ௫௰, ௫௧. † லூக்கா. ௧. ௧—௪.

௩. அவர் பாடுபட்டபின்பு, நாற்பதுநாளளவும் அவர்களுக்குத் தரிசனையாகிப் பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசிக்கொண்டு, இவ்விதமாய் அவர்களுக்கு அநேகந்திருட்டாந்தங்களினாலே தம்மை உயிரோடிருக்கிறவரென்றுகாண்பித்தார்.

௪. அன்றியும் அவர் அவர்களைக்கூடிவரச்செய்து அவர்களைநோக்கி, * யோவான் சலத்தினாலே ஞானஸ்நானங்கொடுத்தான். நீங்கள் சிலநாளுக்குப்பின்பு பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்வீர்கள். * மத்தே. ௩. ௰௧.

௫. ஆகையால் நீங்கள் எருசலேமநகரத்தைவிட்டுப்போகாமல் * என்னிடத்திற் கேள்விப்பட்ட பிதாவினவாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்களென்று கட்டளையிட்டார். * யோவா. ௰௪. ௰௬, ௨௭.

௬. அப்பொழுது கூடிவந்திருந்தவர்கள் அவரைநோக்கி: ஆண்டவரே! இராச்சியபரிபாலனத்தை * இஸ்ரவேலருக்கு நீர் இக்காலத்திலா திருப்பிக்கொடுப்பீரென்று கேட்டார்கள். * லூக்கா. ௨௪. ௨௧.

௭. அதற்கவர் சொன்னது, பிதாவானவர் தமமுடைய அதிகாரத்திலே வைத்திருக்கிற காலங்களையாகிலும், வேளைகளையாகிலும் அறிகிறது உங்களுக்குத்தகாது.

௮. பரிசுத்த ஆவி யுங்களிடத்தில் வரும்பொழுது நீங்கள் பெலனடைந்து எருசலேமிலும், யூதேயா, சமாரியாதேசங்களிலெங்கும் பூமியின்கடைசிவரைக்கும் * எனக்குச்சாட்சிகளாயிருப்பீர்களென்றார். * யோவான். ௰௫. ௨௭.

௯. இவைகளைச்சொன்னபின்பு அவர் * அவர்களுடைய கண்களுக்குமுன்பாக உயர்த்தப்பட்டார். அவர்கள் அவரைக் காணாதபடிக்கு ஒருமேகம் அவரையெடுத்துக்கொண்டுபோயிற்று. * லூக்கா. ௨௪. ௫௧.

௰. அவர்போனபொழுது, அவர்கள் வானத்தையண்ணாந்து பார்த்திருக்கையில் வெண்மையான வஸ்திரமுள்ள மனிதரிரண்டுபேர் அவர்களினருகே நின்று,

௰௧. கலிலேயராகிய மனிதரே! நீங்களென்னத்திற்காக வானத்தையண்ணாந்துபார்த்து நிற்கிறீர்கள்! உங்களைவிட்டு வானத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட அந்த இயேசுவானவர் உங்கள் கண்களுக்குமுன்பாக வானத்திற்கெழுந்துபோனவிதமாய்த் திரும்பிவருவாரென்றார்கள்.

௰௨. அப்பொழுது அவர்கள் ஒலிவ என்னப்பட்ட மலையைவிட்டு எருசலேமநகரத்திற்குத்திரும்பினார்கள். அந்தமலை ஒருஓய்வுநாட் பிரயாணதூரமாய் எருசலேமுக்குச் சமீபமாயிருக்கிறது.

௰௩. அவர்கள் அங்கே போனபொழுது, மேல்வீட்டிலேறினார்கள். * அங்கே பேதுருவும், யாக்கோபும், யோவானும், அந்திரே

யாவும், பிலிப்பும், தோமாவும், பர்த்தொலோமேயும், மத்தேயும், அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபும், செலோத்தேயென்னப்பட்ட சீமோனும், யாக்கோபின் சகோதரனாகிய யூதாவுந் தங்கியிருந்தார்கள்.
* மத்தேயு. ௰. ௨—௪.

௰௪. இவர்களெல்லாரும் இயேசுவின் தாயாகிய மரியாள் முதலான ஸ்திரீகளோடும், அவருடைய சகோதரரோடுங் கூட ஒருமனப்பட்டுச் செபத்திலேயும், வேண்டுதலிலேயும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

௰௫. அந்நாள்களிலொருநாள் ஏறக்குறைய நூற்றிருபதுபேர் கூடிவந்திருந்தபொழுது பேதுரு என்பவன் சீஷருக்குள்ளே யெழுந்திருந்து சொன்னதாவது;

௰௬. சகோதரர்களே! இயேசுவைப் பிடித்தவர்களுக்கு வழிகாட்டின யூதாவைக்குறித்துப் பரிசுத்த ஆவி தாவீதின் வாக்கினாலே முன்சொன்ன * வேதவாக்கியம் நிறைவேற வேண்டியதாயிருந்தது. * சங்கீ. ௪௧. ௯.

௰௭. அவன் நமக்குள்ளே ஒருவனாக எண்ணப்பட்டு இந்த ஊழியத்திற்பங்கைப் பெற்றவனாயிருந்தானே.

௰௮. அன்றியும் அவனே அநியாயமான கூலியினாலே ஒரு நிலத்தைச் சம்பாதித்துக்கொள்ள ஏதுவாயிருந்து பின்பு * தலைகீழாக விழுந்து நடுவாய் வெடிக்கப்பட்டான். அவனுடைய குடல்களெல்லாஞ் சரிந்துபோயின. * மத்தே. ௨௭. ௫.

௰௯. அதை எருசலேமிலுள்ள குடிகளெல்லாரும் அறிந்திருக்கிறார்கள். அதனாலேயந்த நிலம் அவர்களுடைய பாஷையிலே * இரத்த நிலமென்றர்த்தங்கொள்ளுகிற அக்கெலதாமா என்னப்பட்டிருக்கின்றது. * மத்தே. ௨௭. ௭, ௮.

௨௰. சங்கீதபுஸ்தகத்திலே யெப்படியெழுதியிருக்கிறதென்றால், * அவனுடைய வாசஸ்தலம் பாழாகக்கடவது, ஒருவனும் அதில் வாசம்பண்ணாதிருப்பதாகவென்றும், † அவனுடைய கண்காணிப்பை வேறொருவன் பெறக்கடவனென்றும் எழுதியிருக்கின்றது.
* சங்கீ. ௬௯. ௨௫; † சங்கீ. ௱௯. ௮.

௨௧. ஆதலால் கர்த்தராகிய இயேசுவானவர் யோவான் ஞானஸ்நானங்கொடுத்த காலமுதற்கொண்டு தாம் நம்மைவிட்டு எடுத்துக்கொள்ளப்பட்ட நாளளவாகத்தும்,

௨௨. நமக்குள்ளே வருகிறவராயும், போகிறவராயுமிருந்த காலங்களிலே நம்முடனே கூடவிருந்த மனிதர்களிலொருவன் அவர் உயிரோடெழுந்திருக்கிறதைக்குறித்து நம்முடனே கூடச் சாட்சியாகவேண்டுமென்றான்.

௨௩. அப்பொழுது அவர்கள் யுஸ்துவென்னும் மறுநாமமுள்ள பருசபா என்னப்பட்ட யோசேப்பு, மத்தியா, இவ்விரண்டுபேரையுந் தெரிந்தெடுத்துச் செபம்பண்ணினதாவது,

௨௪. * எல்லாருடைய இருதயங்களையும் அறிந்திருக்கிற கர்த்தாவே! * சங்கீ. ௭. ௯.

௨௫. யூதாவானவன் தனக்கேற்ற இடத்திற்றுப்போகும்படிக்கு அப்போஸ்தல ஊழியத்தின் பங்கை விட்டுவிலகினானே. அந்தப் பங்கைப்பெற்றுக்கொள்ளும்படிக்கு நீர் இவ்விரண்டுபேரில் தெரிந்துகொண்டவனெவனோ, அவனையெங்களுக்குக் காண்பிப்பீராகவென்று சொல்லி,

௨௬. பின்பு அவர்களைக்குறித்துச் சீட்டுகளைப்போட்டார்கள். சீட்டானது மத்தியாவின்பேருக்கு விழுந்தது. அப்பொழுது அவன் பதினொரு அப்போஸ்தலருடனே (அப்போஸ்தலனாகச்) சேர்த்துக்கொள்ளப்பட்டான்.

## ௨. அதிகாரம்.

[(௧) அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டுப் பலபாஷைகளைப்பேசினபோது, சிலராற் புகழப்பட்டுச் சிலரால் இகழப்பட்டது. (௰௪) இகழ்ந்தவர்களைப் பேதுரு கடிந்துகொண்டு, அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவியின் பலத்தினாலே பேசினார்களென்றும், இயேசு உயிர்த்தெழுந்து பரமண்டலத்துக்கேறி, பரிசுத்த ஆவியையளித்துப் பலவித அற்புதங்களைச் செய்து பராபரனால் அங்கீகரிக்கப்பட்டவரும், அவருடைய ஆதித்தீர்மானத்தின்படி சிலுவையிலறையப்பட்டவருமான மேசியாவென்று காண்பித்து, (௩௭) குணப்பட்ட அநேகரை ஞானஸ்நானம்பண்ணினது. (௪௧) குணப்பட்டவர்கள் அந்நியோந்நிய ஐக்கியமாயிருந்ததையும், அப்போஸ்தலர்கள் பல அற்புதங்கள் செய்ததையும், பராபரன் திருச்சபையை நாளுக்குநாட்பெருகச்செய்ததையுங் காட்டியது.]

பெந்தேகோஸ்தென்னும் நாள்வந்திருக்கையில் அவர்களெல்லாரும் அவ்விடத்திலே * ஒருமனப்பட்டிருந்தார்கள். * ௧. ௰௪.

௨. அப்பொழுது சடுதியாய்ப் பலத்த காற்று அடிக்கிற முழக்கம்போல வானத்திலிருந்து முழக்கமுண்டாகி அவர்கள் உட்கார்ந்திருந்த * வீடுமுழுவதையும் நிரப்பிற்று. * ௧. இராசா. ௮. ௰௧.

௩. அல்லாமலும் அக்கினியுள்ள நாவுகள்போலப் பிரிக்கப்பட்ட நாவுகள் அவர்களுக்குக் காணப்பட்டு அவர்கள் யாவர்மேலும் வந்திருந்தன.

௪. * அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டுத் தங்களுக்கு ஆவியானவர் கொடுத்த திராணியின்படி † வேறு பாஷைகளிலே பேசத்தொடங்கினார்கள். * ௧. ௪; † மாற்கு. ௰௬. ௰௭.

௫. (அக்காலத்திலே) வானத்தின்கீழிருக்க

றெ சகலவிதமான தேசத்தாரிலுமிருந்து வந்த தேவபத்தியுள்ள யூதர்கள் எருசலேமிலே வாசம்பண்ணினார்கள்.

௬. அந்தச் சத்தமுண்டானபொழுது திரளான சனங்கள்கூடிவந்து யாவருந்தங்கள் தங்கள் பாஷையிலே யவர்கள்பேசுகிறதைக் கேட்டபடியினாலே கலக்கம் அடைந்தார்கள்.

௭. எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு, ஒருவரையொருவர் நோக்கிப்பேசுகிற இவர்களெல்லாருங் கலிலேயரல்லவா!

௮. நம்முடைய சென்மபாஷைகளிலே யவர்கள்பேசநாம்யாவருங்கேட்கிறோமே. அதெப்படியாயிற்று!

௯. பருத்தரும், மேதரும், எலாமித்தரும், மெசொப்பொத்தாமியா, யூதேயா, கப்பத்தோக்கியா, பொந்து, ஆசியா, பிரிகியா, பம்பீலியா,

௰. எகிப்தென்னுந்தேசங்களிலேயும், கிரேனேபட்டினத்தைச்சுற்றியிருக்கிற லிபீயாவின் திசைகளிலேயுங் குடியிருப்பவர்களும், இங்கே சஞ்சரிக்கிற உரோமைப்பட்டினத்தாரும்,

௰௧. யூதரும், யூதமார்க்கத்திற் சேர்க்கப்பட்டவர்களும், கிரேத்தைத்தீவாரும், அரபிதேசத்தாருமாகிய நம்முடையபாஷைகளிலே அவர்கள் பராபரனுடைய மகிமைகளைப்பேசிக்கொள்ளக் கேட்கிறோமேயென்றார்கள்.

௰௨. பின்னும் எல்லாரும்பிரமித்துமிகவுஞ் சந்தேகப்பட்டு இதென்னவாம் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௰௩. மற்றப்பேர் மதுபானத்தினாலே நிறைந்திருக்கிறார்களென்று பரியாசம்பண்ணினார்கள்.

௰௪. அப்பொழுது பேதுருவென்பவன்பதினொருவரோடேகூடநின்று, உரத்தசத்தத்தோடே யவர்களுடனேசொன்னதாவது; யூதரும், எருசலேமிற்குடியிருக்கிற மற்றவர்களுமாகிய நீங்களெல்லாரும் அறிந்துகொள்வீர்களாக. என்வார்த்தைகளுக்குச்செவிகொடுப்பீர்களாக.

௰௫. என்னவெனில், நீங்கள் நினைக்கிறதுபோல இவர்கள்வெறிகொண்டவர்களல்ல, பொழுதுவிடிந்து மூன்றும் மணிவேளையாயிருக்கிறதே.

௰௬. * தீர்க்கதரிசியாகிய யோவேலினால் உரைக்கப்பட்டபடி இதுவே நடந்துவருகிறது. * யோவேல். ௨. ௧.

௰௭. (அவரைக்கொண்டு) பராபரன் உரைத்ததாவது; கடைசிநாள்களில் நான் சகல மனிதர்மேலும் என்னுடைய ஆவியைஊற்றுவேன். அப்பொழுது உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளுந்தீர்க்கதரிசனஞ்சொல்லுவார்கள். உங்கள்வாலிபர் தரிசனைகளைக்காண்பார்கள், உங்கள் மூப்பர்சொப்பனங்களையடைவார்கள்.

௰௮. என்னுடைய ஊழியக்காரர்மேலும், என்னுடைய ஊழியக்காரிகள்மேலும் அந்நாள்களில் என்னுடைய ஆவியையூற்றுவேன். அப்பொழுது தீர்க்கதரிசனஞ்சொல்லுவார்கள்.

௰௯. அல்லாமலும், கர்த்தருடைய பெருமையும் பிரகாசமுமான நாள்வருமுன்னே உயர்ந்தவானத்தில் அற்புதங்களையும், தாழ்ந்த பூமியில் அதிசயங்களையும் உண்டாக்குவேன்.

௨௰. இரத்தமும், அக்கினியும், புகைக்காடுமுண்டாகும்படிசெய்வேன். * சூரியன் இருளாகவும், சந்திரன் இரத்தமாகவும் மாறிப்போம். * யோவே. ௩. ௨,௩; மத். ௨௪. ௨௯.

௨௧. அப்பொழுது பராபரனுடைய நாமத்தைத்தொழுது கூப்பிடுபவனெவனோ அவன் இரட்சிக்கப்படுவானென்பதே.

௨௨. இஸ்ரவேலரே! நான்சொல்லும்வார்த்தைகளைக்கேளுங்கள், நீங்கள் அறிந்திருக்கிறபடி, நாசரேத்தூராராகிய இயேசுவானவராலே பராபரன் உங்களுக்குள்ளேபலத்தசெய்கைகளையும், அற்புதங்களையும், அதிசயங்களையுஞ்செய்து, அவைகளினாலே அவரையுங்களுக்குவெளிப்படுத்தினார்.

௨௩. அப்படியிருந்தும், பராபரன் நியமித்திருந்த ஆலோசனையின்படியேயும், அவர்முன்னறிந்ததின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்பட்ட அந்த இயேசுவை நீங்கள்பிடித்து, அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவைமரத்தில் அறைந்துகொலைசெய்தீர்கள்.

௨௪. அவரைக்குறித்துத் தாவீதுசொல்லுகிறதாவது; நான் அசைக்கப்படாதபடிக்குப்பராபரன் என்வலதுபாரிசத்திலேயிருக்கிறபடியினாலே, *நான் எப்பொழுதும் அவரையென்கண்முன்பாக வைத்துக்கொள்ளுகிறேன். *சங். ௰௬. ௮.

௨௫. அதினாலேயென் இருதயம் மகிழ்ச்சியாயிருக்கின்றது. என்நாவு சந்தோஷமாய்ப்பேசுகின்றது.

௨௬. மேலும், நீர் என் ஆத்துமாவை மரித்தோரிடத்திலேவிடவும், உம்முடைய பரிசுத்தவான் அழிவைக்காணும்படி செய்யவுமாட்டீர்.

௨௭. சீவமார்க்கங்களையெனக்குத்தெரியப்படுத்தினீர். உம்முடைய சந்நிதானத்திலே யென்னைச் சந்தோஷத்தாலே நிரப்புவீர். ஆதலால், என்னுடைய சரீரமும், நம்பிக்கையோடேபடுத்துக்கொள்ளுமென்னுஞ்சொல்லியிருக்கிறார்.

௨௮. ஆனபடியினாலேமரணமானது இயேசுவையடக்கிக்கொள்ளக் கூடாதிருக்கப்பராபரன் அதின் உபாதிகளின்கட்டவிழ்த்து, அவரையெழுப்பினார்.

௨௯. *சகோதரர்களே! நமது கோத்திரத் தலைவனாகிய தாவீதைக்குறித்து, நான் உங்களுடனே தயிரியமாய்ப்பேசுகிறேன். கேட்பீர்களாக. அவர்மரணம் அடைந்து அடக்கம்பண்ணப்பட்டார். அவருடைய சமாதி இந்நாள்வரைக்கும் நம்மிடத்திலிருக்கின்றது. * ௰௩. ௩—௬.

௩௰. ஆதலால், அவர்தீர்க்கதரிசியாயிருந்து, *உன் ஆசனத்தில் வீற்றிருக்கும்படிக்குச்சரீரசம்பந்தமாய் உன்னுடைய சந்ததியிற் கிறிஸ்துவையெழும்பப்பண்ணுவேனென்று, பராபரன்தனக்கு ஆணைகொடுத்ததையறிந்து, * உ.சாமு. எ. ௰உ. ௰௩.

௩௧. அவர்கிறிஸ்துவினுடைய ஆத்துமா மரித்தோர்ஸ்தலத்திலே விடப்படுவதில்லையென்றும், அவருடையசரீரம்அழிவடைவதில்லையென்றும்முன்னறிந்து அவர் உயிரோடெழுந்திருப்பதைக்குறித்துப்பேசினார்.

௩௨. இந்த இயேசுவையே பராபரன் எழுப்பினார். அதற்கு நாங்களெல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம். மேலுந்தாவீது பரமண்டலத்திற்கு எழுந்து போகவில்லை.

௩௩. அதுவுமல்லாமல், அவர்சொன்னது, உம்முடைய சத்துருக்களைநான் உமதுபாதப்படியாக்கிப்போடுமளவும்,

௩௪. என்துவலதுபாரிசத்திலே யுட்காரும் என்று, * பராபரன் என் ஆண்டவருடனேசொன்னாரென்றான். * சங். ௱௰. ௧.

௩௫. ஆதலால், இயேசுவானவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலே யுயர்த்தப்பட்டபின்புபரிசுத்த ஆவியைக்குறித்துப்பிதாவினாலே வாக்குத்தத்தத்தைப் பெற்றபடியால், நீங்களிப்பொழுதுகண்டு கேட்கிறபடி அதையூற்றினார்.

௩௬. ஆனபடியினாலே நீங்கள்சிலுவைமரத்தில் அறைந்த அந்த இயேசுவையே பராபரன் ஆண்டவருமகிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ரவேலகுடும்பத்தார்யாவரும் நிச்சயமாய அறியக்கடவர்களென்றான்.

௩௭. அதை அவர்கள் கேட்டபொழுது, இருதயத்திற் குத்தப்பட்டவர்களாகிப்பேதுருவையும்,மற்றஅப்போஸ்தலரையும்நோக்கிச் சகோதரரே! நாங்கள் என்னசெய்யவேண்டும் என்றார்கள்.

௩௮. அதற்குப் பேதுருசொன்னதாவது; உங்களுக்குப் பாவமன்னிப்புண்டாகும்படிக்கு, நீங்கள் மனந்திரும்பி ஒருவனொருவனாய் இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது பரிசுத்த ஆவியாகிய ஈவையும் பெறுவீர்கள்.

௩௯. (அதைக்குறித்து) வாக்குத்தத்தமானது, உங்களுக்கும், உங்கள் பிள்ளைகளுக்கும், நம்முடையதேவனாகியபராபரன்*வரவழைக்குந்தூரத்திலுள்ளயாவருக்குமுண்டாயிற்றேயென்றுசொல்லி, * யோவான். ௰. ௰௬.

௪௰. மற்ற அநேக வார்த்தைகளாலும், (அதைக்குறித்துச்) சாட்சியிட்டுத் தாறுமாறுள்ள இந்தச்சந்ததியைவிட்டு இரட்சிக்கப்படுவீர்களாகவென்று புத்திசொன்னான்.

௪௧. அந்தப்படியே அவனுடைய வார்த்தையைச்சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டவர்களெவர்களோ அவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அந்நாளிலேயேற்க்குறைய மூவாயிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

௪௨. அவர்கள் அப்போஸ்தலருடையஉபதேசத்திலேயும், ஒருவரோடொருவர் ஐக்கியப்படுதலிலேயும், அப்பம்பிட்குதலிலேயும், செபம்பண்ணுதலிலேயும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

௪௩. ஆத்துமாக்களியாவுக்கும் பயபத்தியுண்டாயிற்று. அன்றியும், அப்போஸ்தலர்களாலே அநேக அற்புதங்களும் அதிசயங்களுஞ்செய்யப்பட்டன.

௪௪. எல்லாவிசுவாசிகளும் ஒருமித்திருந்து, * சகலத்தையும் பொதுவாய்வைத்தனுபவித்து, * ௪. ௩௨; ௫. மோசே. ௰௫. ௪.

௪௫. *ஆஸ்திகளையும், உடைமைகளையும்விற்று, அவைகளில் ஒவ்வொருவனுக்குவேண்டுவதெவ்வளவோ அவ்வளவுபகிர்ந்துகொடுத்தார்கள். * ௪. ௩௪, ௩௫; ஏசா. ௰௨. ௩௩.

௪௬. தினந்தோறும் அவர்கள் ஒருமனப்பட்டுத் தேவாலயத்திலேதரித்திருந்து, வீடுகள்தோறும் அப்பம்பிட்டு, மகிழ்ச்சியும், கபடமில்லாமையுமுள்ள இருதயத்தோடு போசனம்பண்ணிப் பராபரனைப் புகழ்ந்துகொண்டு,

௪௭. (மற்றச்) சனங்களெல்லாரிடத்திலுங்கிருபைபெற்றிருந்தார்கள். அன்றியும்,இரட்சிக்கப்படுகிற (மற்றப்) பேர்களைக்கர்த்தர் தினந்தோறுஞ் சபையோடே சேர்த்தார்.

## ௩. அதிகாரம்.

[(௧) குணமாக்கப்பட்ட ஒருசப்பாணியைப்பார்க்கவந்த சனங்களுக்குப்பேதுருபிரசங்கித்து, (௰௨) அவன்குணமாக்கப்பட்டதுதனக்கும், யோவானுக்குமிருந்த வல்லமையினாலும், பரிசுத்தத்தினாலுமல்ல, பராபரனாலும், அவருடைய குமாரனாகியஇயேசுவின் நாமத்தின்மேலுள்ள விசுவாசத்தினாலுமேயென்றுசொல்லி, (௰௩) இயேசுவைச் சிலுவையில் அறைந்ததற்காக அவர்களைக்கடிந்துகொண்டது. (௰௭) பராபரனுடைய ஆதித்தீர்மானத்தின்படியும், வேதஎழுத்துகளின்படியும் நடந்ததாயினும் அந்தப்பாதகத்தையவர்களறியாமையினாலே

யேறறுககொணடதினலே, (௰௯) அவர்கள மனநதிருமபிவிசுவாசிதது அநத இயேசுவினலேயே பாவமனனிபபும, இரட்சிபபுமடையும்படிபுத்திசொனனது.]

அககாலததில ஒருநாளசெபவேளையாகிய ஒனபதாம மணிநேரததிலே பேதுருவும, யோவானுநதேவாலயததிறகுபபோனார்கள.

௨. அபபொழுது தனதாயினவயிறறிலிருநது*சபபாணியாயபபிறநத ஒருமனிதனசுமநதுவரபபடடான. தேவாலயததிற பிரவேசிபபவர்களிடததிற பிசசைகேட்குமபடிக்கு நாடோறும அவனைஅலஙகாரவாசலெனனபபடடதேவாலய வாசலினிடததிலேவைபபார்கள. * ௰௪. ௮.

௩. தேவாலயததிற பிரவேசிககுமபடிபோகிறபேதுருவையும, யோவானையும அவனகணடுபிசசைகேடடான.

௪. அபபொழுது யோவானுடனே கூடபபேதுரு அவனையுறறுபபார்தது, எஙகளைநோககிபபாரெனறான.

௫. அவன அவர்களுடையகையில ஏதாகிலும பெறறுக்கொளளலாமெனறெணணிஅவர்களைநோககிபபார்ததான.

௬. அபபொழுது பேதுரு சொனனது, வெளளியும, பொனனுமெனனிடததிலிலலை. எனககுணடானதை யுனககுத் தருகிறேன. நாசரேததூராராகிய இயேசுககிறிஸதுவினநாமததினலே நீயெழுநதுநடவெனறுசொலலி,

௭. வலதுகையினலே அவனைபபிடிததுததூககியெடுததான. உடனே யவனுடையகாலகளும, கரடுகளுமஸதிரமஅடைநதன.

௮. அவன குதிததெழுநது நினறுநடநதுஅவர்களுடனேகூடத தேவாலயததிறபிரவேசிதது, நடநது, குதிததுப பராபரனைததுதிசெயதான.

௯. அவன நடககிறதையும, பராபரனைததுதிககிறதையுஞ சனஙகளெலலாருஙகணடார்கள.

௰. அலலாமலுந தேவாலயததின அலஙகாரவாசலினிடததிலே பிசசைகேட்க உடகாநதிருநதவன இவனதானெனறு அவர்கள அறிநது, அவனுககுச சமபவிததததைககுறிதது மிகவும பிரமிதது, அதிசயபபடடார்கள.

௰௧. அனறியுஞ சுகமாககபபடட சபபாணி பேதுருவையும, யோவானையும அநதுககொணடிருநதபடியால, சனஙகளெலலாரும பிரமிபபுளளவர்களாயச சாலோமோன மணடபமெனனபபடட மணடபததிலே யவர்களிடததில ஓடிபபோயககூடினார்கள்.

௰௨. பேதுரு அதைககணடு, சனஙகளுடனேசொனனதாவது; இஸரவேலரே! இதைககுறிதது நீஙகள ஆசசரியபபடுகிறதெனன? அலலது நாஙகள எங்கள சுயவல்லமையினலாவது, பததியினலாவது இவனை நடககபபணணினவர்களாக நீஙகள எஙகளைநோககிபபார்க்கிறதெனன!

௰௩. நமமுடைய முனனோர்களாகிய ஆபிரகாம, ஈசாககு, யாககோபெனபவர்களுடையதேவனயிருக்கிறவர் தமமுடையகுமாரனாகிய இயேசுவை மகிமைபபடுததினார். அநத இயேசுவைபபிலாதது விடுதலையாக்க எணணினபொழுது, நீஙகள அவனுககுமுனபாக அவரைக்காட்டிக்கொடுதது மறுதலிததீர்கள.

௰௪. *பரிசுததமும, நீதியுமுளளவரை நீங்கள மறுதலிததுககொலைபாதகனான மனிதனை யுஙகளுககாக விடுதலையாககவேணடுமெனறுகேடடீர்கள. ஜீவனையுடைய அதிபதியையே கொலைசெயதீர்கள. * மததே. ௨௭. ௨௰—௨௩.

௰௫. அவரைபபராபரன மரிததோரிலிருநதெழுபபினார். அதறகு நாஙகள சாட்சிகளாயிருககிறோம.

௰௬. மேலும அவருடைய நாமததினமேலுளள விசுவாசததினலே யவருடைய நாமமே நீஙகள பார்ததறிநதிருக்கிற இவனைஸதிரபபடுததிறறு. அவராலுணடாகிய விசுவாசமே உஙகளெலலாருககுமுனபாகவும இநதச்சர்வாஙக சுகததை யிவனுககுககொடுததது.

௰௭. சகோதரரே! நீஙகளும, உஙகளதலைவரும அதையறியாமையினலே செயதீர்களெனறு அறிநதிருககிறேன.

௰௮. பராபரன கிறிஸதுபபாடுபடவேணடுமெனறு தமமுடைய தீர்ககதரிசிகளெலலாருடைய வாககினாலும முனனறிவிததவைககளை யிவவிதமாய நிறைவேறறினார்.

௰௯. ஆனபடியினலே பராபரனுடையசனனிதானததிலிருநது சவுக்கியமுணடாகுமகாலஙகளவரவும முனனே குறிககபபடட * இயேசுககிறிஸதுவை யவர் உஙகளிடததில அனுபபவுநதககதாக, † உஙகளபாவஙகள நிவர்ததிசெயயபபடுமபடிககு,

* அறிவிப. ௨௨. ௰௨—௰௪; † ௨. ௩௮.

௨௰. நீஙகள மனதைத்திருததிக குணபபடுஙகள.

௨௧. உலகமுணடானது முதற பராபரன தமமுடைய பரிசுதத தீர்க்கதரிசிகளெலலாருடையவாககினாலும உரைததவைகளெலலாம நிறைவேறுஙகாலமவருமபரியநதம, இயேசுவானவர் பரமணடலததிலே யிருககவேணடும.

௨௨. அநதத்தீர்ககதரிசிகளில மோசேயானவர் நமமுடைய முனனோர்களுடனே சொனனதாவது; உஙகள தேவனாகிய பரா

மிகுந்த பஞ்சம் வருமென்று ஆவியினாலே அறிவித்தான். அந்தப்படியே அது கிலவுதி இராயனுடைய காலத்திலே சம்பவித்தது. * ௨௧. ௰.

௨௯. அப்பொழுது * சீஷரில் அவரவர் தங்கள் தங்கள் திராணியின்படியே யூதேயாநாட்டிலிருக்கிற சகோதரருக்குத் தருமசகாயம்பண்ணியனுப்பவேண்டுமென்று தீர்மானம்பண்ணினார்கள். * ௨ரோ. ௰௫. ௨௫—௨௭.

௩௰. அந்தப்படியவர்கள் சிலபொருள்களைச் சேர்த்துக்கொண்டு பர்னபா, சவுல் என்பவர்கள் கையிலே கொடுத்து மூப்பரிடத்திற்கனுப்பினார்கள்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) ஏரோதே இராசா கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தி யாக்கோபைக் கொலைசெய்து பேதுருவைக் காவலிலடைத்தபோது, அவன் சபையின் செபத்தின்படி ஒரு தேவதூதனாலே விடுதலையாக்கப்பட்டது. (௨௰) ஏரோதே பெருமைபாராட்டித் தேவனுக்குத் தக்கனத்தைத் தனக்குச் செலுத்தும்படி செய்ததினிமித்தம் ஒரு தேவதூதனால் அடிக்கப்பட்டு நிர்ப்பந்த மரணமடைந்தது. (௨௪) அவன் மரணமடைந்தபின்பு பராபரனுடைய வசனம் பிரபலமானது.]

அக்காலத்திலே ஏரோதே என்னும் இராசா சபையிற் சிலரைத் துன்பப்படுத்தும்படிக்குத் தொடங்கினான்.

௨. யோவானுடைய சகோதரனாகிய யாக்கோபையவன் கத்தியினாலே கொலைசெய்தான்.

௩. மேலும், அது யூதருக்குப் பிரியமாயிருக்கிறதென்று அவன் கண்டு, பேதுருவையும் பிடிக்கத்தொடர்ந்தான். அந்நாள்கள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாள்களாயிருந்தன.

௪. அவனைப் பிடித்தபின்பு, பண்டிகை கழித்து அவனைச் சனங்களுக்கு முன்பாகக் கொண்டுபோகவேண்டுமென்று ஏரோதே யெண்ணி அவனைச் சிறைச்சாலையிலே வைத்து, ஒரு வகுப்பிற்கு நான்கு போர்ச்சேவகராக நான்கு வகுப்புகள் அவனைக் காக்கும்படி யொப்புக்கொடுத்தான்.

௫. அப்படிப் பேதுரு காவலிலே காக்கப்பட்டிருக்கையில், சபையார் அவனுக்காகத் இடைவிடாமற் பராபரனை நோக்கிச் செபம்பண்ணினார்கள்.

௬. அப்பொழுது ஏரோதே அவனை வெளியே கொண்டுவரும்படி குறித்த நாளுக்கு முன்னான இராத்திரியிலே பேதுரு இரண்டு சங்கிலிகளினாலே கட்டப்பட்டு, இரண்டு சேவகர் நடுவே நித்திரைபண்ணிக்கொண்டிருக்கக் காவற்காரரும் கதவுக்குமுன்னிருந்து காவலறையைக் காத்துக்கொண்டிருக்க,

௭. சடுதியாய் அறையிலே பிரகாசமுண்டாகத்தக்கதாகக் * கர்த்தருடைய தூதனொருவன் தோன்றிப் பேதுருவின் விலாவிலே தட்டிச் சீக்கிரமாயெழுந்திருவென்று அவனையெழுப்பினான். அப்பொழுது சங்கிலிகள் அவனுடைய கைகளைவிட்டு விழுந்தன. * ௫. ௰௯.

௮. மேலும், தூதன் அவனுடனே சொன்னது, உன் அரையைக் கட்டி, உன் பாதரட்சைகளைத் தொடுத்துக்கொள்ளென்றான். அவன் அப்படிச் செய்தான். தூதன் பின்னும் சொன்னது, உன் வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு, என் பின்னே சென்றுவாவென்றான்.

௯. அந்தப்படி அவன் புறப்பட்டு அவனுக்குப் பின்சென்று தூதனால் செய்யப்பட்டது மெய்யென்றறியாமல், இது ஒரு தரிசனையென்று நினைத்தான்.

௰. அவர்கள் முதலாங்காவலையும், இரண்டாங்காவலையுங் கடந்து, பின்பு பட்டணத்திற்குப் போகிற இருப்புக்கதவினிடத்திற் சேர்ந்தபொழுது, அவர்களுக்கு அது தானேயத் திறக்க அதின்வழியாய் அவர்கள் புறப்பட்டு ஒருவீதியிலே நடந்துபோனார்கள். உடனே தூதன் அவனைவிட்டு நீங்கினான்.

௰௧. பேதுருவுக்குத் தெளிவுவந்தபொழுது ஏரோதேயின் கைக்கும், யூதருடைய விருப்பங்களியாவுக்கும் என்னை விடுதலையாக்கும்படிக்குக் கர்த்தர் தம்முடைய தூதனையனுப்பினாரென்று நான் இப்பொழுது மெய்யாயறிந்திருக்கிறேனென்றான்.

௰௨. இப்படி அவன் சிந்தனைகொண்டு, மாற்கு என்று பேர்கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள் வீட்டிற்குப் போனான். அங்கே அநேகர் கூடிச் செபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௩. பேதுரு வாசற்கதவைத் தட்டினபொழுது, உரோதாளென்னும் பேர்கொண்ட ஒரு வேலைக்காரி ஒற்றுக்கேட்கவந்து,

௰௪. பேதுருவின் சத்தத்தையறிந்து, சந்தோஷத்தினாலே வாசலைத் திறவாமல், உள்ளே ஓடிப்போய் வாசலுக்குமுன்னே பேதுரு நிற்கிறாரென்று அறிவித்தாள்.

௰௫. அவர்கள் நீ பயித்தியமாய்ச் சொல்லுகிறாயென்றார்கள். அவள் அப்படியல்ல, அவர்தானிருக்கிறாரென்றாள். அப்பொழுது அவர்கள் சொன்னது, அவன் அவருடைய தூதனென்றார்கள்.

௰௬. பேதுருவோ தட்டிக்கொண்டிருந்தபொழுது, அவர்கள் திறந்து அவனைக் கண்டு பிரமித்தார்கள்.

௰௭. உடனே அவர்கள் பேசாமலிருக்கும்படி அவன் கையினாற் சைக்கைகாண்பித்துக் கர்த்தர் தன்னைக் காவலிலிருந்து விடுதலையாக்கினவகையை அவர்களுக்கு விவரமாயக்

காட்டி இவைகளையாக்கோபுக்கும், மற்றச் சகோதரருக்கும் அறிவியுங்களென்று சொல்லிப் புறப்பட்டு, வேறொரு இடத்திற்குப் பிரயாணமாய்ப் போனான்.

௰௮. * பொழுது விடிந்தபின்பு பேதுருவைக் குறித்துச் சேவகருக்குள்ளே யுண்டான கலக்கங் கொஞ்சமல்ல, * ௫. ௨௨-௨௪.

௰௯. ஏரோதே அவனைத் தேடிக் காணாமற் போனபொழுது, காவற்காரரைக் கேட்டு விசாரணை செய்து அவர்களைக் கொலைசெய்யும்படி கட்டளையிட்டபின்பு யூதேயா நாட்டைவிட்டுச் செசரியாபட்டினத்திற்குப் போய் அங்கே சஞ்சரித்தான்.

௨௰. அக்காலத்திலே ஏரோதே தீரியருக்கும், சீதோனருக்கும் மிகவும் பகையாயிருந்தான். அப்பொழுது அவர்கள் தங்கள் பிழைப்புக்கு வேண்டியவைகளை இராசாவினுடைய தேசத்திலிருந்து வாங்கிக்கொள்ளுகிறபடியால் அவர்கள் ஒருமனப்பட்டு அவனிடத்திற்குப் போய், இராசாவினுடைய வீட்டு விசாரணைக்காரனாகிய பிலாஸ்தென்பவனைத் தங்கள் வசமாக்கிக்கொண்டு, சமாதானமாயிருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்.

௨௧. அப்பொழுது குறித்த நாளிலே ஏரோதேயானவன் இராச அங்கியைத் தரித்துக்கொண்டு, சிம்மாசனத்தின்மேலுட்கார்ந்து அவர்களுக்குப் பிரசங்கம்பண்ணினான்.

௨௨. அதற்கு சனங்கள், இது ஒரு மனிதனுடைய சத்தமல்ல, தேவனுடைய சத்தமேயென்று கூப்பிட்டார்கள்.

௨௩. அவன் பராபரனுக்கே புகழ்ச்சியுண்டாவதாகவென்று அறிக்கையிடாதபடியினாலே, உடனே கர்த்தருடைய தூதன் அவனையடித்தான். அவன் புழுக்களாலே தின்னப்பட்டு இறந்தான்.

௨௪. பராபரனுடைய வசனம் வளர்ந்து பெருகிற்று.

௨௫. பின்பு பருனபாவும், சவுலும் * தரும ஊழியத்தை நிறைவேற்றினபொழுது, மார்க்கு என்று மறுபேர்கொண்ட யோவானைக் கூட்டிக்கொண்டு, எருசலேமைவிட்டுத் திரும்பினார்கள். * ௰௧. ௨௯, ௩௰.

௰௩. அதிகாரம்.

[(௧) பவுலும், பருனபாவும் அந்தியோகியாவிலிருந்து பிரசங்கிக்க அனுப்பப்பட்டது. (௭) செர்கியு பவுலையும், எலிமா என்னப்பட்ட ஸ்தம்பனவித்தைக்காரனையுங் குறித்தது. (௰௪) இயேசுவானவர் கிறிஸ்து வென்று பவுல் அந்தியோகியிலே பிரசங்கித்தது. (௪௨) அந்நியர்கள் விசுவாசித்தது. (௪௫) யூதர்கள் மொறுமொறுத்துத் தூஷணித்ததினாலே, (௪௬) அவர்கள் அந்நியர்களிடத்திற்குப் போனது. (௪௮) நித்திய சீவனுக்குக் குறிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தது.]

அந்தியோகியாப்பட்டணத்திலுள்ள சபையிலே பருனபாவென்றும், நீகரென்னப்பட்ட சிமேயோனென்றும், சிரேனே ஊரானாகிய லூக்கியென்றும் தேசத்தின் காற்பங்குக்கு அதிபதியாகிய ஏரோதேயுடனே கூட வளர்க்கப்பட்ட மனாயெனென்றும், சவுலென்றும் பேர்களையுடைய இவர்கள் * தீர்க்கதரிசிகளுமாய், போதகருமாயிருந்தார்கள். * ௰௧. ௨௭.

௨. அவர்கள் கர்த்தருக்கு ஆராதனைசெய்து உபவாசித்துக்கொண்டிருக்கிறபொழுது பரிசுத்த ஆவியானவர்சொன்னது, * பருனபாவையும், † சவுலையும் நான் அழைத்த கிரியைக்காக அவர்களைத் தெரிந்தெடுத்துப் பிரியுங்களென்றார். * ௪. ௩௬. † ௯. ௰௫.

௩. உடனே அவர்கள் * உபவாசித்துச் செபம்பண்ணி † அவர்கள்மேற் கைகளை வைத்து அனுப்பினார்கள். * ௰௪. ௨௩. † ௬. ௬.

௪. ஆதலால், அவர்கள் பரிசுத்த ஆவியினால் அனுப்பப்பட்டுச் செலுக்கியா பட்டணத்திற்குப்போய் அங்கேயிருந்து கப்பலேறிச் சீப்புருத்தீவிற் சேர்ந்தார்கள்.

௫. பின்பு அவர்கள் சாலமிஸ் பட்டணத்திற்குப் போனபொழுது யூதருடைய செப ஆலயங்களில் (அவர்களுக்குப்) பராபரனுடைய வசனத்தை யறிவித்தார்கள். * யோவானென்பவனும் அவர்களுக்கு உதவிக்காரனாயிருந்தான். * ௰௨. ௰௨. ௨௫.

௬. அவர்கள் அந்தத் தீவைக் கடந்து பாப்போப்பட்டணம் பரியந்தம் போனபொழுது பரியேசுவென்று பேர்கொண்ட ஸ்தம்பனக்காரனாய், கள்ளத்தீர்க்கதரிசியுமாய், * ௨. மோசே. ௭. ௰௧.

௭. புத்திசாலியாகிய செர்கியுபவுலென்னும், பிரதிதுரையினிடத்தில் தங்கினவனுமாயிருந்த ஒரு யூதனைக் கண்டார்கள். அந்தத் துரை பருனபாவையும், சவுலையும் அழைப்பித்துப் பராபரனுடைய வசனத்தைக் கேட்க ஆசையாயிருந்தபொழுது,

௮. * ஸ்தம்பனக்காரனென்று அர்த்தங்கொள்ளுகிற எலிமாவென்னப்பட்ட அவன் பிரதிதுரையை விசுவாசத்திலிருந்து விலக்கும்படி தேடி அவர்களோடெதிர்த்துப் பேசினான். * ௨. மோசே. ௭. ௰௧.

௯. அப்பொழுது பவுலென்றுஞ் சொல்லப்பட்ட சவுல் பரிசுத்த ஆவியினால் நிறைந்தவனாய் அவன்மேற் கண்ணோக்கிச் சொன்னதாவது;

௰. எல்லாவிதமான கபடமும், எல்லாவித மானபொல்லாங்கும் நிறைந்தவனே * பசாசின் மகனே சகல நீதிக்கும் பகைஞனே நீ கர்த்தருடைய செம்மையான மார்க்கங்களைப் புரட்டுகிறதில் ஓயமாட்டாயா? * அ. ௪௪.

௰௧. இப்பொழுதே கர்த்தருடைய கை உன

மேல் வருகின்றது. சில்காலம் நீ சூரியனைக் காணாமல் குருடனாயிருப்பாயென்றான். உடனே மந்தாரமும், இருளும் அவன்மேல் விழுந்தன. அவன் திரிந்து கைலாகு கொடுக்கிறவர்களைத் தேடினான்.

௰௨. இப்படிச் சம்பவித்ததைப் பிரதிநிதி கண்டு கர்த்தரைக்குறித்துச் சொல்லிய உபதேசத்திற்காக அதிசயப்பட்டு விசுவாசமுள்ளவனானான்.

௰௩. பின்பு பவுலும், அவனைச் சேர்ந்தவர்களும் பாப்போபட்டினத்தை விட்டுப் பம்பிலியா நாட்டிலுள்ள பெருகேபட்டினத்திற்குப் போனார்கள். யோவான் அவர்களை விட்டுப் பிரிந்து எருசலேமுக்குத் திரும்பினான்.

௰௪. பின்பு அவர்கள் பெருகேபட்டினத்தை விட்டுப் புறப்பட்டுப் பிசீதியநாட்டிலுள்ள அந்தியோகியாவுக்குப் போய் ஓய்வுநாளிலே செப ஆலயத்திற்குப் போய் உட்கார்ந்தார்கள்.

௰௫. (அங்கே) நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிசன (ஆகமமும்) வாசிக்கப்பட்டுத் தீர்ந்த பின்பு சகோதரர்களே நீங்கள் சனங்களுக்குப் புத்தி சொல்லவிரும்பினால் சொல்லுவீர்களாகவென்று ஆலயத்தலைவர் அவர்களுக்குச் சொல்லி அனுப்பினார்கள்.

௰௬. அப்பொழுது பவுல் எழுந்து கையினால் சாடைகாண்பித்துச் சொன்னதாவது; இஸ்ரவேலரே, பராபரனுக்குப் பயந்து நடக்கிற சகல சனங்களே கேட்பீர்களாக.

௰௭. இந்த இஸ்ரவேல் சந்ததியாருடைய தேவன் நம்முடைய முன்னோர்களைத் தெரிந்துகொண்டு எகிப்து தேசத்திலே சஞ்சரித்துவந்த அவர்களுடைய சந்ததியை மேன்மைப்படுத்திப் பலத்த வல்லமையினாலே அதிலிருந்து அவர்களைப் புறப்படப்பண்ணி,

௰௮. நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலே அவர்களைப் போஷித்துக்கொண்டு,

௰௯. கானான் தேசத்திலுள்ள ஏழுவகைச் சனக் கூட்டங்களை நீக்கிவிட்டு அவர்களுடைய தேசத்தை அவர்களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டு,

௨௰. பின்பு ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷத்திற்குள்ளே சாமுவேல் தீர்க்கதரிசி வரைக்கும் அவர்களுக்காக நியாயாதிபதிகளை ஏற்படுத்தினார்.

௨௧. சாமுவேலின் காலமுதல் அவர்கள் ஒரு இராசா வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதின்படி பராபரன் அவர்களுக்குப் பென்யமீனுடைய கோத்திரத்தானாகிய கீசென்பவனுடைய குமாரனாகிய சவுலைக் கொடுத்தார். அவன் நாற்பது வருஷமிருந்தான்.

௨௨. பின்பு அவர் அவனை விலக்கி இயெசேயென்பவனுடைய குமாரனாகிய தாவீதை * எனது இருதய உள்ளத்திற்கேற்றவனென்று கண்டேன். அவன் என்னுடைய சித்தத்தின்படி முழுவதுஞ் செய்வானென்று தாவீதைக் குறித்துச் சாட்சியிட்டு அவனையே அவர்களுக்கு இராசனாக ஏற்படுத்தினார்.

* ௧. சாமு. ௰௩. ௰௪;-௰௬. ௰௨.

௨௩. அவனுடைய * சந்ததியிலே பராபரன் தமது வாக்குத்தத்தத்தின்படி இஸ்ரவேலருக்காக இயேசுவென்னும் இரட்சகரைத் தோன்றப்பண்ணினார். * ௨. சாமு. ௭. ௰௨; மத். ௧. ௧.

௨௪. அவருடைய பிரவேசத்திற்கு முன்னே யோவான் மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தை எல்லா இஸ்ரவேலருக்கும் பிரசங்கித்தான்.

௨௫. மேலும் யோவான் (பணிவிடை) ஓட்டத்தை நிறைவேற்றுகிறபொழுது (சனங்களுடனே) சொன்னதாவது; நீங்கள் என்னை எவனென்று எண்ணுகிறீர்கள். * நான் அவரல்ல. † எனக்குப் பின் ஒருவர் வருகிறார். அவருடைய பாதரட்சையை அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்லவென்று சொன்னான். * யோவா. ௧. ௨௰; † லூக். ௩. ௰௬.

௨௬. ஆபிரகாமின் சந்ததியாராகிய சகோதரர்களே பராபரனுக்குப் பயப்படுகிற மற்றவர்களே இந்த இரட்சிப்பையறிவிக்கிற உபதேசம் உங்களுக்கே அனுப்பப்பட்டிருக்கின்றது.

௨௭. என்னவெனில், எருசலேமிற்குடியிருக்கிறவர்களும், அவர்களுடைய தலைவரும் அவரையாவது, ஓய்வுநாள்தோறும் வாசிக்கப்படுகிற தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களையாவது அறியாமல் அவரை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்ததினாலே அவைகளை நிறைவேற்றினார்கள்.

௨௮. மரணத்திற்கேதுவான ஒன்றையும் (அவரிடத்திற் காணா)திருந்தும், அவர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்குப் பிலாத்துவை வேண்டிக்கொண்டார்கள்.

௨௯. அவரைக்குறித்து எழுதியிருக்கிற யாவையும் அவர்கள் முடித்தபின்பு (சிலர்) அவரை மரத்திலிருந்திறக்கிக் கல்லறையிலே வைத்தார்கள்.

௩௰. பராபரனோ அவரை மரித்தோரிலிருந்தெழுப்பினார்.

௩௧. அன்றியும் அவர் தம்முடனே கூடக் கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குப் போனவர்களுக்கு அநேகநாள் தரிசனையானார். அவர்களே சனங்களுக்குமுன்பாக அவருடைய சாட்சிகளாயிருக்கிறார்கள்.

௩௨. நீர் என்னுடைய குமாரன். இன்று நான் உம்மை ஜெனிப்பித்தேனென்று * இரண்டாஞ் சங்கீதத்திலே எழுதியிருக்கிறபடி, * சங்கீ. ௨. ௭.

௩௩. இயேசுவையெழுப்பினதினாலே பராபரன் (நம்முடைய) முன்னோர்களுக்குண

டான வாக்குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைகளாகிய நமக்கு நிறைவேற்றினாரென்று நாங்களும் உங்களுக்கு விசேஷமாய் அறிவிக்கிறோம்.

௩௪. அவர் மறுபடியும், மரியாதபடிக்கு அவரை மரித்தோரிலிருந்தெழுப்பச் சித்தமானபடியினாலே * தாவீதுக்குச் (செய்த) உறுதியான தயவுகளை உங்களுக்குக் கட்டளையிடுவேனென்று திருவுளம்பற்றினார். * ஏசா. ௫௫. ௩.

௩௫. அன்றியும், * உம்முடைய பரிசுத்தவானை அழிவையடையப்படி செய்யமாட்டீரென்று வேறொரு சங்கீதத்திலே சொல்லியிருக்கின்றது. * சங். ௰௬. ௰.

௩௬. * தாவீது தன்னுகாலத்திலே பராபரனுடைய சித்தத்துக்கு ஊழியஞ்செய்தபின்பு நித்திரையடைந்து தன் பிதாக்களிடத்திற் சேர்க்கப்பட்டு அழிவையடைந்தான். * ௨. ௨௯.

௩௭. பராபரனாலே யெழுப்பப்பட்டவர் அழிவையடையவில்லை.

௩௮. ஆதலாற் சகோதரர்களே, அவர்மூலமாய் உங்களுக்குப் * பாவமன்னிப்புண்டாகுமென்று அறிவிக்கப்படுகின்றது. * லூக். ௨௪. ௪௭.

௩௯. அல்லாமலும், மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே நீங்கள் விடுதலையாக்கக்கூடாத காரியமெதுவோ அதினின்று விசுவாசிக்கிறயாவனும் அவராலே * விடுதலையாகிறானென்று அறிந்துகொள்வீர்களாக. * ஏசா. ௫௩. ௰௧.

௪௰. அன்றியுந்தீர்க்கதரிசிகளுடைய புஸ்தகத்திலே அசட்டைக்காரரே பாருங்கள். உங்கள் நாள்களில் ஒரு கிரியைசெய்வேன். ஒருவன் அதையுங்களுக்கு விவரித்துச்சொன்னாலும் நீங்கள் விசுவாசியாமலிருப்பீர்கள் அது அப்படிப்பட்ட கிரியையாகவேயிருக்கும்.

௪௧. ஆதலால் * பிரமிப்படைந்து அழிந்துபோங்களென்று சொல்லியிருக்கிறதின்படி உங்களுக்கு வாராதபடிக்குச் சாவதானமாயிருப்பீர்களாகவென்றான். * ஏசாயா. ௨௯. ௰௪; ஆபகூக். ௧. ௫.

௪௨. பின்பு அவர்கள் புறப்படுகையில் மறு ஓய்வுநாளிலேயிந்தவசனங்களைத் தங்களுக்குச் சொல்லவேண்டுமென்று புறத்தேசத்தார் வேண்டிக்கொண்டார்கள்.

௪௩. மேலுஞ்செப ஆலயச் சபைகலைந்துபோனபின்பு யூதர்களிலும், யூதமார்க்கத்திற் பிரவேசித்த தேவபத்தியாயிருந்தவர்களிலும் அநேகர் பவுலுக்கும், பருனபாவுக்கும் பின்சென்றார்கள். அவர்களுடனே யவர்கள் பேசிக்கொண்டு பராபரனுடைய கிருபையினாலே, * நிலைகொண்டிருக்கும்படிக்குப் புத்திசொன்னார்கள் * ௰௧. ௨௩;-௰௪. ௨௨.

௪௪. மறு ஓய்வுநாளிலே கொஞ்சங்குறைய பட்டணத்தாரெல்லாரும் பராபரனுடைய வசனத்தைக்கேட்கும்படிக்குக்கூடி வந்தார்கள்.

௪௫. யூதர்கள் அவ்வளவு சனங்களைக் கண்டபொழுது, பொறாமையினாலே நிறையப்பட்டுப் பவுல் சொன்னவைகளுக்கு விரோதமாய்ப் பேசினார்கள். விரோதித்தும், தூஷணித்தும் வந்தார்கள்.

௪௬. அப்பொழுது பவுலும், பருனபாவுந் தயிரியங்கொண்டு சொன்னதாவது; முதலாவது உங்களுக்கே பராபரனுடைய வசனத்தைச் சொல்லவேண்டியதாயிருந்தது. நீங்கள் அதைத்தள்ளி உங்களை நித்திய சீவனுக்கு அபாத்திரரென்று தீர்த்துக்கொள்ளுகிறபடியினாலே, நாங்கள் புறத்தேசத்தாரிடத்திற்குப் போகிறோம்.

௪௭. நீர் பூமியின் எல்லைபரியந்தமும் இரட்சகராயிருக்கும்படிக்கு, உம்மைப் புறத்தேசத்தார்களுக்கு ஒளியென்றேற்படுத்தினேனென்கிற வேதவாக்கியத்தின்படி பராபரன் எங்களுக்குக் கட்டளையிட்டருளினபடியினாலே அப்படிச்செய்கிறோமென்றார்கள். * ஏசாயா. ௪௯. ௬.

௪௮. புறத்தேசத்தார்கள் அதைக்கேட்டுச் சந்தோஷமடைந்து, கர்த்தருடைய வசனத்தைப் புகழ்ந்து, நித்தியசீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் எவர்களோ அவர்கள் விசுவாசித்தார்கள்.

௪௯. பின்பு கர்த்தருடைய வசனம் அந்தத்தேசமெங்கும் பிரபலமாயிற்று.

௫௰. யூதர்கள் பத்தியும், கனமும்பொருந்திய ஸ்திரீகளையும், பட்டணத்தின் முதலாளிகளையும் எழுப்பிப் பவுல், பருனபா என்பவர்களைத் துன்பப்படுத்தும்படிசெய்து தங்கள் எல்லைகளிலிருந்து அவர்களைத் துரத்தினார்கள்.

௫௧. அப்பொழுது அவர்கள் * தங்கள்காலகளிற்பட்ட தூளை யவர்கள்மேற் சாட்சியாகவுதறிப்போட்டு, இக்கோனியாப்பட்டணத்திற்குப்போனார்கள். சீஷரானவர்கள் சந்தோஷத்தினாலும், பரிசுத்த ஆவியினாலும் நிறையப்பட்டார்கள். * மத்தே. ௫. ௰௨.

## ௰௪. அதிகாரம்.

[(௧) பவுலும், பருனபாவுந் துன்பப்பட்டு இக்கோனியாவைவிட்டது. (௮) லீஸ்திராவிலே பவுல் ஒரு சப்பாணியைக் குணமாக்கினதினால் அவர்கள் தேவர்களென்றெண்ணப்பட்டது. (௰௯) பவுல் கல்லெறியப்பட்டது. (௨௧) அவர்கள் பற்பல ஊர்களிலிருந்த சபைகளைச் சந்தித்துச் சீஷர்களை விசுவாசத்திலும், பொறுமையிலும் ஸ்திரப்படுத்தி, (௨௬) அந்தியோகுக்குத்திரும்பிவந்து பராபரன் அவர்களைக்கொண்டு செய்ததை அறிவித்தது.]

இக்கோனியாப்பட்டணத்திலே யவர்களிருவரும் யூதருடைய செப ஆலயத்திற்குட்போய்ப் பிரசங்கம்பண்ணினபொழுது யூதரிலும், கிரேக்கரிலுந் திரளான சனங்கள் விசுவாசித்தார்கள்.

௨. விசுவாசியாத யூதர்கள் சகோதரருக்கு விரோதமாகப் புறத்தேசத்தாருடைய மனதை யெழுப்பி, பகையுண்டாக்கினார்கள்.

௩. அப்படியிருந்தும் அவர்கள் அங்கே நெடுங்காலஞ் சஞ்சரித்துக் கர்த்தரைக்குறித்துத் தயிரியமாய்ப் போதகம்பண்ணினார்கள். அவர் தமது கிருபையைக்காட்டிய வசனத்திற்குச் சாட்சியுண்டாக * அதிசயங்களும், அற்புதங்களும் அவர்கள் கைகளாற் செய்யப்படும்படி அனுக்கிரகித்தார். * ரு. ௰௨.

௪. அந்தப்பட்டணத்தின் சனங்கள் பிரிந்து சிலர் யூதரையும், சிலர் அப்போஸ்தலரையுஞ் சேர்ந்தார்கள்.

௫. அப்பொழுது அவர்களை நிந்தித்து அவர்கள்மேற் கல்லெறியும்பொருட்டாகப் புறத்தேசத்தாரும், யூதர்களும் அவர்களுடைய தலைவருடனேயுங்கூடக் கலகம்பண்ணுகிறதை அவர்கள் அறிந்து,

௬. இலிக்கவோனியா நாட்டிலுள்ள இலிஸ்திராவூருக்கும், தெருபையூருக்கும், அவைகளைச் சூழ்ந்தபுறத்திற்கும் * ஓடிப்போய், * மத்தே. ௰. ௨௩.

௭. அங்கே சுவிசேஷத்தை அறிவித்துக்கொண்டுவந்தார்கள்.

௮. இலிஸ்திராவூரிலே ஒருவன் * தன் தாயின் வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்து ஒருக்காலும் நடவாமற் பெலனில்லாத காலுள்ளவனாயிருந்தான், * ௩. ௨.

௯. பவுல் பேசுகிறதைக் கேட்டான். அவன்மேற் பவுல் கண்ணூன்றி, இரட்சிக்கப்படும்படிக்கான விசுவாசம் அவனுக்குண்டென்று கண்டு,

௰. நீ * உன் கால்களையூன்றிச் செம்மையாய் எழுந்து நில்லென்று, மிகுந்தசத்தத்தோடே சொன்னான். உடனே யவன் குதித்தெழுந்து நடந்தான். * ஏசாயா. ௩௫. ௬.

௰௧. பவுல் செய்ததைச் சனங்கள் கண்டு * தேவர்கள் மனிதரூபமெடுத்து நம்மிடத்தில் இறங்கியிருக்கிறார்களென்று இலிக்கவோனியாப் பாஷையிலே சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள். * ௨௮. ௬.

௰௨. மேலும் பருனபாவை இயூப்பித்தர் தேவனென்றும், பவுல் பிரசங்கத்தை நடத்தினவனானபடியினாலே அவனை மெர்க்கூரி தேவனென்றும் அழைத்தார்கள்.

௰௩. அல்லாமலும் பட்டணத்திற்குப்புறம்பேயிருந்த இயூப்பித்தருடைய பூசாசாரி எருதுகளையும், பூமாலைகளையும் வாசலினருகே கொண்டுபோய்ச் சனங்களோடேகூடப் பலியிடமனதாயிருந்தான்.

௰௪. அப்போஸ்தலராகிய பருனபாவும், பவுலும் அதைக்கேள்விப்பட்டு, (இதனிமித்தம்) தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௰௫. கூட்டத்திற்குள் ஓடி மனிதர்களே! என்னத்திற்கு இப்படிச்செய்கிறீர்கள்! நாங்களும் உங்களைப்போலப் பாடுள்ள மனிதராயிருந்து,

௰௬. நீங்களிந்த வீணான தேவர்களைவிட்டு * வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள யாவையுமுண்டாக்கின சீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டுமென்று உங்களுக்குச் சுவிசேஷமாய்ச் சொல்லுகிறோம். சென்றகாலங்களில் அவர் எல்லாப் புறத்தேசத்தாரையுந் தங்கள் தங்கள் வழிகளிலே நடக்கவிட்டிருந்தும், * சங்கீ. ௱௪௬. ௫; அபி. ௰௪. ௭.

௰௭. அவர்களுக்கு நன்மைசெய்து வந்து வானத்திலிருந்து மழைகளையும், செழிப்புள்ள காலங்களையும் நமக்குக்கொடுத்து ஆகாரத்தினாலும், சந்தோஷத்தினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி இவ்விதமாய் அவர் தம்மைக்குறித்துச் சாட்சிகொடாமலிருக்கவில்லையென்று கூப்பிட்டார்கள்.

௰௮. இப்படியவர்கள் சொல்லித் தங்களுக்குச் சனங்கள் பலியிடாதபடிக்குப் பிரயாசத்தோடே நிறுத்தினார்கள்.

௰௯. பின்பு அந்தியோகியாவூரிலும், இக்கோனியூரிலுமிருந்து யூதர்கள் அங்கேபோய்ச் சனங்களுக்குப் போதனைசெய்து, * பவுலின்மேற் கல்லெறிந்து, அவன் மரித்தானென்றுநினைத்து, அவனைப் பட்டணத்திற்குவெளியேயிழுத்தார்கள். * ௨. கொரி. ௰௧. ௨௫.

௨௰. அங்கே சீஷர்கள் அவனைச் சூழ்ந்துகொள்ளுகையில், அவனெழுந்து ஊருக்குட்பிரவேசித்து, மறுநாளிலே பருனபாவுடனே தெருபையூருக்குப்போனான்.

௨௧. அந்தவூராருக்குச் சுவிசேஷத்தையறிவித்து, அநேகரைச் சீஷராக்கினபின்பு அவர்கள் இலிஸ்திராவூருக்கும், இக்கோனியூருக்கும், அந்தியோகியாவூருக்குந்திரும்பி,

௨௨. சீஷருடைய ஆத்துமாக்களை ஸ்திரப்படுத்தி, விசுவாசத்திலே நிலைத்திருக்கும்படிக்குப் புத்திசொல்லி, நாம் * அநேக உபத்திரவங்களின் வழியாய்ப் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கவேண்டுமென்றுஞ்சொல்லிக்கொண்டார்கள். * மத். ௰. ௩௮.

௨௩. அன்றியுஞ்சபைகடோறும் அவர்களுக்காக மூப்பரைத்தெரிந்தேற்படுத்தி உபவாசித்துச்செபம்பண்ணி, அவர்கள் விசுவாசித்துக்கொண்டிருந்த கர்த்தருக்கவர்களையொப்புவித்தார்கள். பின்பு அவர்கள் பிசிதி

யா நாட்டைக்கடந்துபோயப் பம்பீலியா நாட்டிலேசேர்ந்து,

௨௫. பெருகேயூரிலே சுவிசேஷ வசனத்தையறிவித்து,

௨௬. அத்தாலியாபட்டினத்திறகுச் சென்று, அங்கேகப்பலேறி,

௨௬. தாங்கள் நிறைவேற்றின கிரியைக்காகப் பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டுப் * புறப்பட்ட அந்தியோகியாபட்டினத்திறகுப் போனார்கள். * ௧௩. ௧—௩.

௨௭. அங்கே சேர்ந்தபொழுது, அவர்கள் சபையைக் கூடிவரப்பண்ணித் தங்களாற் பராபரன்செய்தவைகளையும், அவர் புறத்தேசத்தார்களுக்கு விசுவாசத்தினக்கதவைத் திறந்தாரென்பதையும் அறிவித்தப் பின்பு அங்கே சீஷருடனேகூட அநேககாலஞ் சஞ்சரித்துக்கொண்டுவந்தார்கள்.

# ௧௫. அதிகாரம்.

[(௧) சுன்னத்தைக்குறித்துப் பெரியவாக்குவாதமுண்டானது. (௬) அப்போஸ்தலர் அதைக்குறித்து ஆலோசித்த, (௨௨) அவர்களுடைய தீர்மானத்தை நிருபங்களவழியாயச் சபைகளுக்கு அனுப்பினது. (௩௬) பவுலும், பருனபாவும் ஒருமித்துச் சகோதரரைச் சந்திக்கநினைத்தும் விசுறப்பட்டுப் பிரிந்துபோனது.]

அக்காலத்திலே சிலர் யூதேயாவிலிருந்தபோய நீங்கள் * மோசேயின் முறைமையின்படியே விருத்தசேதனம்பெற்றுக்கொள்ளாவிட்டால், இரட்சிக்கப்படமாட்டீர்களென்று சகோதரருக்குப்போதகம்பண்ணினார்கள். * கலாத். ரு. உ—௪.

௨. அதினிமித்தம் கலகமும், அவர்களுக்கும், பவுல், பருனபா என்பவர்களுக்கும் மிகுந்த தருக்கமுமுண்டானபொழுது, அந்தத்தருக்கக்காரியத்தைக்குறித்துப் பவுலும், பருனபாவுந் தங்களிலேவேறே சிலரும் எருசலேமிலுள்ள அப்போஸ்தலரிடத்திறகும், மூப்பரிடத்திறகும் போகவேண்டுமென்று தீர்மானம்பண்ணினார்கள்.

௩. அந்தப்படி அவர்கள் சபையாராலே வழிவிட்டனுப்பப்பட்டபின்பு பெனிக்கே, சமாரியாநாடுகளின்வழியாயப்போய, புறத்தேசத்தார் மனந்திரும்பினதை யறிவித்துச் சகோதரரெல்லாருக்கும் மிகுந்த சந்தோஷத்தையுண்டாக்கினார்கள்.

௪. எருசலேமிலே யவர்கள்சேர்ந்துசபையினாலும், அப்போஸ்தலராலும், மூப்பராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டபின்பு, தங்களாற் பராபரன்செய்தவைகளை யறிவித்தார்கள்.

௫. அப்பொழுது பரிசேயராகிய வகுப்பிலேவிசுவாசிகளான சிலர் எழுந்து அவர்களை விருத்தசேதனத்தைப் பெற்றுக்கொண்டு மோசேயின்பிரமாணத்தைக் கைக்கொள்ளும்படிக்கு உத்தரவு அனுப்பவேண்டுமென்றார்கள்.

௬. பின்பு அப்போஸ்தலரும், மூப்பரும் அந்தக் காரியத்தை ஆராயந்துபார்க்கும்படிக்குக்கூடினார்கள்.

௭. மிகுந்த தருக்கமுண்டானபொழுது, பேதுரு எழுந்து அவர்களுடனே சொன்னதாவது; சகோதரரே, நீங்கள் அறிந்திருக்கிறபடி பராபரன் அநேகநாள்களுக்குமுன்னே உங்களிலொருவனாகிய * என்னுடைய வாயினாலே புறத்தேசத்தார்கள் சுவிசேஷத்தினவார்த்தையைக்கேட்டு விசுவாசிக்கும்படி (என்னைத்) தெரிந்தெடுத்தார். * ௰. ௩௪—௪௭.

௮. மேலும் * இருதயங்களை அறிந்திருக்கிற பராபரன் நமக்குக்கொடுத்ததுபோல அவர்களுக்கும் பரிசுத்த ஆவியைக்கொடுத்து, * சங்கி. ௭. ௰.

௯. (இவ்விதமாய) அவர்களைக்குறித்துச் சாட்சியிட்டு அவர்கள் இருதயங்களை விசுவாசத்தினாலே சுத்தமாக்கி அவர் நமக்கும், அவர்களுக்கும் * ஒருவித்தியாசமும்பண்ணவில்லை. * ௰. ௪௩, ௪௫.

௰. அப்படியிருக்க நம்முடைய பிதாக்களாலும், நம்மாலுஞ் சுமக்கக்கூடாதிருந்த நுகத்தடியைச் சீஷருடைய கழுத்தின்மேற் பிணைக்கிறதினாலே நீங்கள்பராபரனைச்சோதிக்கிறதென்ன?

௧௧. அப்படியல்ல, கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின * கிருபையினாலே அவர்கள் இரட்சிக்கப்படுகிற பிரகாரமாக நாம் அப்படியே இரட்சிக்கப்படுவோமென்று நம்பியிருக்கிறோமேயென்றான். * எபேசி. உ. ௮, ௯.

௧௨. அதன்பின்புகூடிவந்தயாவரும்மௌனமாயிருந்து பருனபாவும், பவுலுந் தங்களாலே பராபரன் புறத்தேசத்தார்களுக்குள்ளே செய்த அதிசயங்களையும், அற்புதங்களையும் விவரித்துச் சொல்லக்கேட்டார்கள்.

௧௩. அவர்கள் பேசிமுடிந்தபின்பு யாக்கோபு சொன்னதாவது; சகோதரர்களே, எனக்குச்செவிகொடுப்பீர்களாக.

௧௪. பராபரன் தமது நாமத்திறகாகப் புறத்தேசத்தார்களில் ஒரு சனக்கூட்டத்தைத் தெரிந்துக்கொள்ளும்படிக்கு முதலாவது அவர்களைநோக்கிப் பார்த்ததைச் சீமோன் சொன்னானே.

௧௫. அதற்குத் தீர்க்கதரிசிகளுடையவசனங்களும் ஒத்திருக்கின்றன.

௧௬. மற்ற மனிதர்களும், என்னுடையநாமத்தைப்பெற அழைக்கப்படும் புறத்தேசத்தாரெல்லாரும் பராபரனைத்தேடிக்கொள்ளும்படிக்கு,

௰௭. நான் இதற்குப்பின்பு திரும்பிவந்து விழுந்த தாவீதின்கூடாரத்தை மறுபடியும் எழுப்புவேன். அதில் இடிந்துபோன இடங்களைத் திரும்பக்கட்டி அதைத் திரும்பச் செம்மையாக நிறுத்துவேனென்று இவைகளையெல்லாஞ்செய்கிற பராபரன் சொல்லுகிறானென்று * எழுதியிருக்கின்றதே.
* ஆமோ. ௯. ௰௧, ௰௨.

௰௮. அநாதிகாலமுதலாய்ப் பராபரனுடைய கிரியைகளெல்லாம் அவருக்குத் தெரிந்திருக்கின்றன.

௰௯. ஆகையாற்புறத்தேசத்தார்களிற்பராபரனிடத்திற்குமனந்திரும்புகிறவர்களைக் கலக்கப்படுத்தாதபடிக்கு,

௨௰. அசுசிப்படுத்துகிற விக்கிரகபோசனங்களுக்கும், வேசித்தனத்திற்கும், நெருக்குண்டுசெத்தவைகளுக்கும், இரத்தத்திற்கும் விலகும்படியே அவர்களுக்கெழுதவேண்டுமென்றெண்ணுகிறேன்.

௨௧. பூர்வகாலமுதற்கொண்டு செப ஆலயங்களில் ஓய்வுநாள்தோறும் மோசேயின் ஆகமங்கள் வாசிக்கப்பட்டுவருகிறபடியாற் பட்டினந்தோறும் அவைகளைப் பிரசித்தம்பண்ணுகிறவர்களுமுண்டேயென்றான்.

௨௨. அப்பொழுது அப்போஸ்தலரும், மூப்பரும், சபையாரெல்லாருந் தங்களிற் சகோதரருக்குள்ளே கனம்பொருந்திய பருசபாவென்னப்பட்ட யூதாவையும், சீலாவையுந்தெரிந்துகொண்டு அவர்களைப் பவுலுடனேயும், பருன்பாவுடனேயுங்கூட அந்தியோகியாபட்டினத்திற்கு அனுப்பவேண்டுமென்றுயோசித்து எழுதின நிருபமாவது;

௨௩. அந்தியோகியாபட்டினத்திலும், சீரியாநாட்டின் மற்ற இடங்களிலும், சிலீக்கியாநாட்டிலுமிருக்கிற புறத்தேசத்தார்களிலிருந்துண்டான சகோதரர்களுக்கு அப்போஸ்தலரும், மூப்பரும், (மற்றச்) சகோதரருமாகிய நாங்கள் சவுக்கியமுண்டாகும்படி வாழ்த்துகிறோம்.

௨௪. எங்களாற் கட்டளைபெறாத சிலர் எங்களிடத்திலிருந்து புறப்பட்டு நீங்கள்விருத்தசேதனம் அடையவேண்டுமென்றும், நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளவேண்டுமென்றுஞ்சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தைகளினாலே உங்களைக் கலக்கப்படுத்தி, உங்கள் ஆத்துமாக்களைத் தள்ளாடப்பண்ணியிருக்கிறார்களென்று நாங்கள் கேள்விப்பட்டபடியினாலே,

௨௫. நாங்கள் தெரிந்துகொண்ட சில மனிதரை நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாமத்திற்காகத் தங்கள்பிராணனையும்விட எத்தனமாயிருந்தவர்களுமாய,

௨௬. எங்களுக்குப் பிரியமானவர்களுமாயிருக்கிற பருன்பாவோடும், பவுலோடுங்கூட உங்களிடத்திற்கனுப்பவேண்டுமென்று ஒருமனப்பட்டு யோசனைபண்ணிக்கொண்டு,

௨௭. அந்தப்படியே யூதாவையும், சீலாவையும் அனுப்புகிறோம். அவர்களும் இவைகளை வாக்கினாலே யுங்களுக்கறிவிப்பார்கள்.

௨௮. எவையெனில், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளுக்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததற்கும், வேசித்தனத்திற்கும் நீங்களவிலகியிருக்கவேண்டும். இது வேயல்லாமல் வேறதிகமான பாரமொன்றும் உங்கள்மேற்போடாமலிருக்கும்படிக்கு,

௨௯. பரிசுத்த ஆவியும், நாங்களுஞ்சித்தமாயிருக்கிறோம். மேற்சொல்லியவைகளினின்று நீங்களுங்களைக் காத்துக்கொண்டால் நன்றுசெய்வீர்கள். சுகமாயிருப்பீர்களாகவென்றெழுதி, அவர்கள்கையிற்கொடுத்தனுப்பினார்கள்.

௩௰. அவர்கள் அனுப்பிவிடப்பட்டு அந்தியோகியாபட்டினத்திற்குப்போய்ச் சபையைக்கூடிவரச்செய்து அந்த நிருபத்தைக் கொடுத்தார்கள்.

௩௧. அதை யவர்கள் வாசித்தபின்பு அதிலடங்கிய ஆறுதலானவசனங்களைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௩௨. பின்பு யூதாவும், சீலாவும், தாங்களுந் தீர்க்கதரிசிகளானபடியினாலே அநேக வசனங்களினாலே சகோதரருக்குப் புத்திசொல்லி, அவர்களை ஸ்திரப்படுத்தி,

௩௩. சிலகாலம் அங்கேயிருந்துபின்புசகோதரராற் சமாதானத்துடனே அப்போஸ்தலரிடத்திற்கனுப்பிவிடப்பட்டார்கள்.

௩௪. சீலா பின்னும் அங்கே தங்கினால் நலமாயிருக்குமென்றெண்ணியிருந்தான்.

௩௫. அன்றியும் பவுலும், பருன்பாவும் அந்தியோகியாவூரிலேசஞ்சரித்து வேறு அநேகரோடுங்கூடக் கர்த்தருடைய வசனத்தையுபதேசித்துச் சுவிசேஷமாய்ப் பிரசங்கித்துக்கொண்டுவந்தார்கள்.

௩௬. சிலநாளுக்குப்பின்பு பவுல் பருன்பாவைநோக்கிக் கர்த்தருடையவசனத்தைநாம் அறிவித்திருந்த சகல பட்டினங்களிலுமுள்ள சகோதரர் சுகமாயிருக்கிறார்களோ, இல்லையோவென்று அதைப்பார்க்கும்படிக்குத் திரும்பிப்பிரயாணமாய்ப்போவோமவாவென்றான்.

௩௭. அப்பொழுது பருன்பாவானவன் * மாற்கு என்றழைக்கப்பட்ட யோவானைக் கூட அழைத்துக்கொள்ளும்படி யோசனை சொன்னான். * ௰௨, ௰௨;—௰௩. ௫.

௩௮. பவுல் * பம்பிலியாநாட்டிலே தங்களுடனே கூடக்கிரியைக்குவாராமல் தங்களைவிட்டுப்பிரிந்துபோன அவனையழைத்துக்கொள்ளத்தகாதென்றுசொன்னான்.
* ௰௩. ௰௩.

௩௯. அப்பொழுது கோபமுண்டானதினா

லே அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்தார்கள். பர்னபாவானவன் மாற்குவைக் கூட்டிக்கொண்டு கப்பலேறிச் சீப்புரு தீவுக்குப் போனான்.

௪௰. பவுலானவன் சீலாவைத் தெரிந்துகொண்டு சகோதரராலே பராபரனுடைய கிருபைக்கொப்புவிக்கப்பட்டு,

௪௧. புறப்பட்டுச் சீரியா நாட்டிலேயும், கிலிக்கியா நாட்டிலேயுந் திரிந்து சபைகளை ஸ்திரப்படுத்தினான்.

## ௰௬. அதிகாரம்.

[(௧) பவுல் தீமோத்தேயுவைச் சுன்னத்துப் பண்ணி, (௭) பரிசுத்த ஆவியினால் மறுதேசங்களுக்குப்போகத் தரிசனையடைந்து, (௰௪) லீதியாளைக் குணப்படுத்தி, (௰௬) ஒரு பேயைத் துரத்தினது. (௰௯) அதினிமித்தம் பவுலும், சீலாவும் அடிக்கப்பட்டுக் காவலிலே வைக்கப்பட்டது. (௨௬) காவற்கதவுகள் திறந்தது. (௩௧) காவற்காரன் குணப்பட்டது. (௩௭) அவர்கள் விடுதலையானது.]

பின்பு அவன் தெர்பேயூருக்கும், லீஸ்திராவூருக்கும் போனான். அங்கே * தீமோத்தேயு என்னப்பட்ட சீஷனிருந்தான். அவனுடைய தாய் விசுவாசமுள்ள ஒரு யூதஸ்திரீயானவள். அவனுடைய தகப்பன் கிரேக்கனானவன். * ௨. தீமோ. ௧. ௫.

௨. மேலும் அவன் லீஸ்திராவிலும், இக்கோனியாவிலும் இருக்கிற சகோதரராலே நற்சாட்சி பெற்றவன்.

௩. அவனைப் பவுல் தன்னுடனே கூட்டிப் புறப்படவேண்டுமென்று விரும்பி அவனுடைய தகப்பன் கிரேக்கனென்று அவ்விடங்களிலிருக்கிற யூதர்களெல்லாரும் அறிந்தபடியால் அவனுக்கு விருத்தசேதனம்பண்ணினான்.

௪. பின்பு அவர்கள் பட்டணங்களில் திரிந்து நடக்கையில் எருசலேமிலுள்ள அப்போஸ்தலராலும், மூப்பராலுந் தீர்மானம்பண்ணப்பட்ட * சட்டங்களைக் காத்துக்கொள்ளும்படிக்குச் சனங்களுக்கு ஒப்புவித்தார்கள். * ௰௫. ௨௮, ௨௯.

௫. அதினாலே சபைகள் விசுவாசத்திலே ஸ்திரப்பட்டு நாடோறும் பெருகினார்கள்.

௬. பின்பு அவர்கள் பிரிகியா நாட்டிலேயும், கலாத்தியா நாட்டிலேயுந் திரிந்துகொண்டு வருகிறபொழுது, ஆசியா தேசத்திலேயவர்கள் சுவிசேஷவசனத்தைச் சொல்லாதபடிக்குப் பரிசுத்த ஆவியினாலே தடைபண்ணப்பட்டு,

௭. பின்பு மீசியா நாட்டிற்குப் போய்ப் பித்தினியா நாட்டிற்குப் போகப் பிரயத்தனம்பண்ணினார்கள். அதற்கும் யேசுவினுடைய ஆவியானவர் தடைபண்ணினார்.

௮. அப்பொழுது அவர்கள் மீசியா நாட்டைக் கடந்து துரோவாஸ் பட்டினத்திற்குப் போனார்கள்.

௯. அங்கே இராத்திரியிலே பவுலுக்கொரு தரிசனையுண்டாயிற்று. என்னவெனில், மக்கேதோனியா தேசத்தானொருவன் நின்று நீ மக்கேதோனியாவில் வந்து எங்களுக்குதவி செய்வாயாகவென்று அவனை வேண்டிக்கொண்டதாகவிருந்தது.

௰. அந்தத் தரிசனையை அவன் கண்டபொழுது, அவர்களுக்குச் சுவிசேஷத்தையறிவிக்கும்படிக்குக் கர்த்தர் எங்களையழைத்தாரென்று நாங்கள் நிச்சயமாயறிந்து உடனே மக்கேதோனியா தேசத்திற்குப் புறப்பட்டுப்போகப் பிரயத்தனம்பண்ணி,

௰௧. கப்பலேறித் துரோவாஸ் பட்டினத்தைவிட்டு நேராய்ச் சமொத்திராக்கேயுக்கும், மறுநாளிலே நெயாப்போலிப் பட்டினத்திற்கும் போய்,

௰௨. அங்கேயிருந்து மக்கேதோனியா தேசத்தின் தலையானதுமாய், உரோமர் குடியேறினதுமாயிருக்கிற பிலிப்பிப் பட்டணத்திற் சேர்ந்து சில நாள் அதிலே சஞ்சரித்தோம்.

௰௩. பட்டினத்திற்கு வெளியே ஆற்றினருகே வழக்கமாய்ச் செபம்பண்ணுகிறதான இடத்திற்கு ஓய்வுநாளில் நாங்கள் போய், அங்கே உட்கார்ந்து கூடிவந்திருந்த ஸ்திரிகளுடனே பேசிக்கொண்டோம்.

௰௪. ஒரு ஸ்திரி தியத்திரா ஊராளுமாய், இரத்தாம்பரம் விற்கிறவளுமாய், தேவபத்தியுள்ளவளுமாய், லீதியாளென்று பேர்கொண்டவளுமாயிருந்தாள். அவள் பவுலினாற் சொல்லப்பட்டவைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில், அவைகளுக்கு அவள் எச்சரிக்கையாயிருக்கும்படிக்கு, கர்த்தர் அவளுடைய இருதயத்தைத் திறந்தார்.

௰௫. பின்பு அவளும், அவளுடைய குடும்பத்தாரும் ஞானஸ்நானம் பெற்றபொழுது, அவள் எங்களை நோக்கி, நீங்கள் என்னைக் கர்த்தாவினிடத்தில் விசுவாசமானவளென்றெண்ணினால் என் வீட்டிலே வந்து தங்கியிருப்பீர்களாகவென்று எங்களை மிகவும் வேண்டிக்கொண்டிருந்தாள்.

௰௬. நாங்கள் செபத்திற்குப் போகையில், பீத்தோனுடைய ஆவியைக்கொண்டிருந்து, குறிசொல்லுகிறதினாலே தன் எசமான்களுக்கு * மிகுந்த ஆதாயத்தையுண்டாக்கின ஒரு வேலைக்காரி எங்களுக்கெதிர்ப்பட்டாள். * ௰௯. ௨௪.

௰௭. அவள் பவுலுக்கும், எங்களுக்கும் பின்சென்று * இந்த மனிதர் உன்னதமான பராபரனுடைய ஊழியக்காரர். உங்களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை அறிவிக்கிறவர்களென்று கூப்பிட்டாள். * மாற். ௧. ௨௪.

௰௮. இப்படி அநேக நாட் செய்தாள். அப்பொழுது பவுல் விசனமடைந்து திரும்பிக

கொணடு அநத ஆவியுடனேசொனனது, இவளைவிடடுபபுறபபடுமபடிககு இயேசுக்கிறிஸ்துவினுடைய நாமததினாலே யுனககுக கடடளை யிடுகிறேனெனறான. அநநேரம அது புறபபடடுபபோயிறறு.

௰௯. அவளுடைய எசமானகள தஙகள ஆதாயததின நமபிககையறறுபபோயிறறெனறு அறிநது; பவுலையும, சீலாவையுமபிடிததுசசநதைவெளியிலுளள தலைவரிடததிறகு இழுதது,

௨௰. பினபு அவர்களைத துரைகளுககுமுனபாகக்கொணடுபோய யூதர்களாகிய இநத மனிதர் நமமுடையபபடடணததைக கலஙகபபணணி,

௨௧. உரோமராகிய நமமாலே யேறறுககொளளவும, செயயவுமபடாத முறைமைகளை யறிவிககிறார்களெனறார்கள.

௨௨. அபபொழுது சனஙகள அவர்களுககு விரோதமா யெழுமபினதுமலலாமல, துரைகள அவர்கள வஸ்திரஙகளைக கிழிததுபபோடவும, அவர்களை யடிககவுஞசொலலி,

௨௩. மிகுதியாய அவர்களையடிபபிததபின புசிறைசசாலையிலேவைதது, அவர்களைப பததிரமாயககாககுமபடிககுசசிறைசசாலைககாரனுககுக கடடளையிடடார்கள.

௨௪. அவன இபபடிபபடட கடடளையைப் பெறறபொழுது, அவர்களை உளளுககுளளானகாவலறையிலேபோடடு அவர்கள காலகளை மரததிலஅடிததுவைததான.

௨௫. அபபடியிருநதும பாதிஇராததிரியிலே பவுலும, சீலாவுஞ செபமபணணிப பராபரனைத துதிததுபபாடினார்கள. காவலிலவைககபபடடமறறவர்கள அதைககேடடுககொணடிருநதார்கள.

௨௬. சடுதியிலே சிறைசசாலையின அஸ்திபாரஙகள அசையததககதாகப பூமிமிகவும அதிர்நதது. உடனே * கதவுகளெலலா நதிறககபபடடன. எலலாரையுஙகடடியிருநதசஙகிலிகள அறறுபபோயின. * ௫. ௰௯.

௨௭. சிறைசசாலைககாரன விழிததுசசிறைசசாலையினகதவுகள திறநதிருககிறதைககணடு, அதில வைககபபடடவர்கள ஓடிபபோனார்களெனறுநினைதது, கததியையுருவிததனனைககொலைசெயய எததனமாயிருநதான.

௨௮. பவுலெனபவன நாஙகளெலலாரும இஙகேயிருககிறோம. ஆகையால, நீ யுனககுககேடொனறுஞ செயயாதிருபபாயாகவெனறு மிகுநத சத்தத்தோடே கூபபிடடான.

௨௯. அபபொழுது அவன விளககுகளைய ழைபபிதது, உளளேஓடி நடுககமஅடைநதவனாயப பவுலுககும, சீலாவுககும முனபாகவிழுநது,

௩௰. பினபு அவர்களைவெளியே அழைதது பபோயப ஆணடவர்களே, இரட்சிககபபடுகிறதறகு நான எனனசெயயவேணடுமெனறான.

௩௧. அதறகவர்கள, * கர்ததராகிய இயேசுககிறிஸ்துவை விசுவாசிததுககொளவாயாக. அபபொழுது நீயும, உனவீடடாரும இரட்சிககபபடுவீர்களெனறுசொலலி,
* யோவா. ௩. ௰௫, ௰௬.

௩௨. அவனுககும, அவனுடையவீடடிலிருநதயாவருககும கர்ததருடைய வசனததைபபோதிததார்கள.

௩௩. மேலும அவவிராததிரியில அநநேரததிலே அவன அவர்களைச்சேர்த்துககொணடு, அடிகளாலான காயஙகளைக கழுவினான. அனறியும அவனும, அவனைசசேர்நதயாவரும உடனேஞானஸ்நானமபெறறார்கள.

௩௪. பினபு அவன அவர்களைத தனவீடடிறகுள அழைததுபபோய, அவர்களுககுப போசனஙகொடுதததாலும, தனவீடடாரனைவரும பராபரனிலவிசுவாசிகளானபடியினாலே மிகவும மகிழ்ச்சியாயிருநதான.

௩௫. உதயமானபொழுது, துரைகள தலையாரிகளையழைதது அநதமனிதரை விடடுவிடுமபடி சொலலுஙகளெனறனுபபினார்கள.

௩௬. சிறைசசாலைககாரன பவுலுடனே சொனனதாவது; உஙகளை விடுதலையாககுமபடிககுத துரைகள கடடளையனுபபினார்கள. ஆகையால நீஙகளபுறபபடடுசசமாதானத்துடனேபோவீர்களாகவெனறான.

௩௭. அதறகுபபவுலசொனனது, * உரோமராகிய எஙகளையவர்கள நியாயமவிசாரியாமலவெளியரஙகமாய அடிபபிததுசசிறைசசாலையிலேபோடடு, இபபொழுது இரகசியமாய எஙகளைவிடுதலையாககுகிறார்களா? அபபடியலல, அவர்களேவநது எஙகளைவெளியே அழைதது அனுபபிவிடககடவர்களெனறான. * ௨௨. ௨௫.

௩௮. இநத வசனஙகளைத தலையாரிகள துரைகளுககறிவிததார்கள. உரோமராயிருககிறார்களெனறு அவர்கள கேடடபொழுது, பயம அடைநதுவநது அவர்களுடனே தயவாகபபேசிககொணடு,

௩௯. பினபு அவர்களைவெளியே அழைததுபபோயப * படடணததைவிடடுபபோகுமபடி கேடடுககொணடார்கள. * மத். ௮. ௩௪.

௪௰. அநதபபடி அவர்கள சிறைசசாலையிலிருநது புறபபடடு, லீதியாளிடததிறகுபபோயச சகோதரரைககணடு, அவர்களுககுத தேறுதலசொலலிப புறபபடடுபபோனார்கள.

## ௰௭. அதிகாரம்.

[(௧) பவுல தெசலோனிக்கேபபடடணததிறபிரசஙகிததது. (௪) அவவிடததிற சிலர் அவரைவிசுவாசிததும், சிலர் அவரைததூஷ

ணித்தது. (௰)அவர்பெரோயாபட்டணத்து க்கனுப்பப்பட்டு அங்கே பிரசங்கித்தது. (௰௫) பின்பு அத்தேனே பட்டணத்துக்குவ ந்து அவவூராரோடே தறகித்து, அவர்கள அறியாதேவனை அவர்களுககு அறிவித்த து. (௩௪) அதனால அநேகர் கிறிஸதவர்க ளானது.]

அவர்கள அமபிபோலிபட்டினத்தை யும, அபபோலோனியபட்டினத தையுங்கடந்து * தெசலோனிக்காபட்டி னத்திறகுபபோனார்கள. அங்கே யூதர்களு ககாக ஒருசெபஆலயமிருந்தது. * ௨. தீமோ. ௪. ௰.

௨. பவுலதனவழககத்தினபடி யவர்களிட த்திறகுபபோய, மூனறு ஓயவுநாள்களில வேதவாககியங்களின நியாயங்களையெடுத து அவர்களுடனே சமபாஷித்துககொண்டு வருகையில,

௩. * கிறிஸதுப பாடுபடவும, மரித்தோரி லிருந்தெழுந்திருக்கவும வேணடுமென்றுகா ணபித்து, நானுங்களுககறிவிககிற இயேசு வேகிறிஸது என்று திருட்டாந்தபபடுத்தி னான. * லூக. ௨௪. ௨௬, ௪௭

௪. அவர்களிற்சிலர் அதறகுசசமமதித்து பபவுலையும, சீலாவையுஞசேர்ந்துகொண டார்கள. தேவபத்தியுள்ள கிரேககரிலும அநேகமபேரும, கனமபொருந்தியஸதிரிக ளில மிகுதியானபேரும அபபடியேசெய தார்கள.

௫. சமமதியாத யூதர்கள வயிராககியங கொணடு தெருககளிலே திரிந்தலைகிற சில பொலலாதமனிதரைச சேர்த்துககொணடு கூட்டங்கூடிப பட்டினத்தைககலககபபடு த்தி, யாசோனுடைய வீட்டிறகுமுனபோ யநினறு அவர்களைச சனங்களுககுமுனபாக க்கொணடுபோகுமபடி வகைதேடினார்கள.

௬. அவர்களைக காணுமலிருந்தபொழுது, அவர்கள யாசோனையும, சிலசகோதரரை யும பட்டினத்தலைவரிடத்திறகு இழுத துககொணடுபோய உலகத்தைக * கலக கபபடுத்துகிறவர்கள இங்கேயும வந்திருககி றார்கள. * ௰௬. ௨௰.

௭. யாசோன இவர்களை யேறறுககொண டான. இவர்களெலலாரும இயேசுவென்னு ம வேறொருவனை இராசாவென்றுசொலலி, இராயனுடையகட்டளைககு விரோதமாயச செயகிறார்களென்றுகூப்பிட்டு,

௮. இவைகளைக கேட்டுககொணடசனங க ளையும, பட்டினத்துத தலைவரையுங கலங் கபபணணினார்கள.

௯. அபபொழுது அவர்கள யாசோனிடத திலும, மறறவர்களிடத்திலுங கையெழுத துவாங்கிககொணடு அவர்களை விட்டுவிட டார்கள.

௰. உடனே சகோதரர்கள இராத்திரிகால த்திலே பவுலையும, சீலாவையும பெரோயா ஊருககனுபபிவிட்டார்கள. அவர்கள அங கேசேர்ந்து, யூதர்களுடைய செப ஆலயத் திறகுபபோனார்கள.

௰௧. தெசலோனிககேயிலுள்ளவர்களிலும, அவர்களயேனமையுளளவர்களாய மிகுந்த மனபபூர்வத்தோடே சுவிசேஷவசனத்தை யேறறுககொணடு, காரியங்களமெயயாய அபபடிபபட்டவைகளோ அலலவோவென று நாடோறுமவேதவாககியங்களை * ஆரா யந்தார்கள. * யோவா. ௫. ௩௯.

௰௨. ஆகலால அவர்களில அநேகமபேரு ம, கனமபொருந்திய அநேக கிரேககஸதிரி களும, புருஷரும விசுவாசிகளானார்கள.

௰௩. பெரோயாவூரிலேயும பராபரனுடை யவசனம பவுலினால அறிவிககபபடுகினற தென்று தெசலோனிககேயரான யூதர்கள அறிந்தபொழுது, அங்கேயுமபோயச சன ங்களைககலககபபடுத்தினார்கள.

௰௪. உடனே சகோதரர்கள பவுலைசசமு த்திரத்தின வழியாயபபோக அனுபபினார் கள. சீலாவும், தீமோத்தேயுமபினனுமஅங கேதஙகினார்கள்.

௰௫. பவுலைவழிநடத்திபபோனவர்கள்அவ னை அத்தேனே பட்டினத்திறகழைத்துப போய, அங்கே சீலாவும், தீமோத்தேயும் அதிசீககிரந தனனிடத்தில வரவேணடுமெ னறு அவர்களுககுசசொலலுமபடி கறபனை பெறறுபபுறபபட்டுபபோனார்கள.

௰௬. அவர்களவருமபடிககுப பவுலெனப வன அத்தேனேபட்டினத்திற காத்துககொ ணடிருககையிலபட்டினமவிககிரகங்களால நிறைந்திருககிறதைபபார்த்து மனதிலமிகு ந்த வயிராககியத்தை யடைந்துகொணடு,

௰௭. பினபு செப ஆலயத்திலேயூதர்களோ டும, மறறத்தேவபத்தியுளள பேர்களோடும், சந்தைவெளியிலே தனககெதிர்பபட்டவர்க ளோடும நாளதோறும்பேசிககொணடான.

௰௮. அபபொழுது எபபிக்கூரரும, ஸதோ யிககருமான ஞானிகளிற சிலர் அவனுடனே வாககுவாதமபணணிககொணடு வருங்கால த்திலே சிலர் இந்தவாயாடி எனனபேசுவா னென்றார்கள. சிலர் அவன இயேசுவையும, மரித்தோரிலிருந்தெழுந்திருக்குதலையும்அவ ர்களுககுப பிரசங்கித்தபடியினாலே, இவன அனனியதேவர்களை யறிவிககிறவனென்று தோன்றுகினறதென்றார்கள.

௰௯. அபபொழுது அத்தேனேபட்டினத தாரெலலாரும அங்கேதங்குமபடி வருகிற அந்நியரும புதியவைகளைககேட்கிறதிலு ம, பேசுகிறதிலுமேயனறி, மறறொருவித மாயத தஙகள காலத்தைபபோகக விரும பாதவர்களானபடியால,

௨௰. அவர்கள அவனை மாருஸதேவனுடை

யமேடையிலுள்ள நியாயஸ்தலத்திற்கழைத்துப்போய, நீ சொல்லுகிறபுதிய உபதேசத்தை நாங்களறியலாமா?

௨௧. நவமானகாரியங்களையே எங்களகாதுக்கேட்கப்பண்ணுகிறாய ஆகையால நாங்கள அவைகளை அறியவேணடுமென்றிருக்கிறோமென்றார்கள.

௨௨. அப்பொழுதுபவுல மாருஸ் மேடையினடுவிலே நின்றுசொன்னதாவது; அத்தேனரே! எல்லாவற்றிலுநீதவபத்தியேயுங்களுக்கு மிகவுமுணடாயிருக்கிறதென்று என்கருத்தோன்றுகின்றது. எப்படியென்றால, நான திரிந்து, உங்கள தேவாராதனைக்கேற்றவைகளை நோக்கிப்பார்த்தபொழுது அறியப்படாத தேவனுக்கென்றெழுதியிருக்கிற ஒருபீடத்தையுங்கணடேன.

௨௩. நீங்கள அறியாமற பணிவுசெய்கிறவரையே நானுங்களுக்கறிவிக்கிறேன.

௨௪. உலகத்தையும, அதிலுள்ளயாவையுமுணடாக்கின, தேவனானவர்வானத்திற்கும, பூமிக்கும ஆணடவரானதால, கைகளாற செயயப்பட்டகோவில்களிலவாசமபணணுகிறதுமில்லை.

௨௫. * யாதொன்றுதமக்குவேணடுவதாக மனிதர்கைகளாறபணிவிடைகொள்ளுகிறதுமில்லை. †எல்லாருக்குஞ்சீவனையும, சுவாசத்தையும, மற்றயாவையும அவர்கொடுத்திருக்கிறரே. * சங். ௫0. ௯; † க. மோசே. ௨. ௭; யோபு. ௩௩. ௪; ஏசா. ௪௨. ௫.

௨௬. அல்லாமலும அவரே ஒரே இரத்தத்திலிருந்து மனிதரெல்லாருந் தோன்றப்பணணி, நமமிலொருவருக்குந் தூரமல்லாத பராபரனுகிய தம்மையவர்கள தடவியடைந்து கொள்ளத்தக்கதாக,

௨௭. தம்மைத்தேடும்படிக்கு, அவர்களுக்காக முன்திட்டமாக்கப்பட்டகாலங்களையுங்குடியிருப்பெல்லைகளையுங்குறித்து அவர்கள பூமியிலெங்குங் குடியிருக்கும்படி செய்தார்.

௨௮. அவரால நாமபிழைக்கிறோம. அசைகிறோம. இருக்கிறோம. அதுபோல உங்களிற சில புலவர்களும, அவருடைய வம்சத்தாராயிருக்கிறோமென்றுசொன்னார்கள.

௨௯. ஆதலால நாம பராபரனுடையவம்சத்தாராயிருக்கத * தெயவம மனிதருடையசித்திரவேலையினாலும், தோற்றுதலினாலும், பொன, வெள்ளி, கல இவைகளாறசெயயப்பட்டதறகொப்பாயிருக்கின்றதென்று நாம நினைக்கலாகாது. * ஏசா. ௪௰. ௰௮. ௨௫.

௩௰. * அறியாமையுள்ளகாலங்களைப பராபரன காணாதவர்போலிருந்தார். இப்பொழுதுமனந்திருப்பவேணடுமென்று எவ்விடத்திலுமுள்ள மனிதர்யாவருக்கும † கட்டளையிடுகிறார். * ௰௪. ௰௬. † லூக. ௨௪. ௪௭.

௩௰௧. மேலும ஒருநாளைக்குறித்தார். அதிலேயவர் தாம நியமித்த ஒருவரைக்கொண்டு பூசசக்கரத்திலுள்ள யாவருக்கும நியாயத்தீர்ப்புக்கொடுப்பார். அவரை மரித்தோரிலிருந்தெழுப்பினதினாலே அவர் அதினநிசசயத்தை எல்லாருக்கும விளங்கப்பணணினாரென்றான.

௩௰௨. மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்குறித்து அவர்கள கேட்டபொழுது சிலர் இகழ்ந்தார்கள. சிலர்பினனொருவேளை இதைக்குறித்து உன்னிடத்திறகேட்போமென்றார்கள.

௩௰௩. அப்பொழுது பவுல் அவர்களிலிருந்து புறப்பட்டுப்போனான.

௩௰௪. சிலர் அவனைப்பற்றிக்கொணடு பினபுவிசுவாசிகளானார்கள. அவர்களில தியொனீசியெனனும நியாயாதிபதியும, தாமரியென்றுபேருள்ள ஒருஸ்திரியும, இவர்களுடனேகூடவேறுசிலருமிருந்தார்கள.

## ௰௮. அதிகாரம்.

[(௧) பவுல தனகைகளால வேலைசெய்து கொரிந்துப்பட்டணத்திலே அஞ்ஞானிகளுக்குப்பிரசங்கித்தது. (௯) கர்த்தர் ஒருதரிசனையில அவனுக்குத்தைரியஞ்சொன்னது. (௰௨) அவன பிரதிஞையாகிய கலலியோனுக்கு முனபாகக் குற்றஞ்சாற்றப்பட்டுமவிடுதலையானது. (௰௮) பினபுபட்டணங்களதோறுமபோய சீஷர்களைத்திடப்படுத்தினது. (௨௪) அப்பொலலோ ஆக்கிலாவாலும, பிரிஸ்கில்லாளாலும்போதிக்கப்பட்டு, (௨௮) பிரயோசனமுணடாகக்கிறிஸ்துவைக்குறித்துப்பிரசங்கித்தது.]

அதனபினபு பவுல அத்தேனேபட்டினத்தைவிட்டுக் கொரிந்துபட்டினத்திற்குப்போய,

௨. இராயனாகியகிலவுதி யூதரெல்லாரையும உரோமை நகரியைவிட்டுப்போகும்படி கட்டளையிட்டபடியினாலே, இத்தாலி நாட்டினின்று நவமாயவந்திருந்த ஆக்கிலாவென்று நாமமுள்ள பொந்துதேசத்தானாகிய ஒரு யூதனையும, அவனுடையமனைவியாகிய பிரிஸ்கிலலாளையும அங்கேகணடு,

௩. அவர்களிடத்திறபோயத் தானும, அவர்களும ஒரேதொழில செயதவர்களானபடியினாலே, * அவர்களிடத்திலே தங்கித்தொழிலசெயதான. அவர்களுடைய தொழில கூடாரமபணணுதல. * க. கொரி. ௪. ௰௨.

௪. அன்றியும அவன ஓயவுநாள்தோறுஞ்செப ஆலயத்திலே சமபாஷணைபணணி, யூதருக்கும, கிரேக்கருக்கும புத்திசொன்னான.

௫. மக்கேதோனிநாட்டிலிருந்து * சீலாவும், தீமோத்தேயுமவந்தபொழுது, பவுலதன ஆவியிலே அதிக வயிராக்கியங்கொணடு இயேசுவானவரே கிறிஸ்து என்று யூதருக்குக்காணபித்தான. * ௰௭. ௰௪, ௰௫.

௬. அவர்கள் எதிர்த்துப்பேசித் தூஷணித்த பொழுது, *அவன் தன் வஸ்திரங்களையுதறி, உங்களுக்குச் சேதிவருமபடிக்கு நீங்களே ஏதுவாயிருக்கிறீர்கள். * நெகெமி. ரு. ௰௩.

௭. நான் சுத்தமாயிருக்கிறேன். இதுமுதல் நான்புறதேசத்தாரிடத்திற் போகிறேனென்று அவர்களுடனேசொல்லி, அவ்விடத்தைவிட்டுத் தேவபத்தியுள்ள யூஸ்து என்பவனுடைய வீட்டிலேபோனான். அந்தவீடு செப ஆலயத்திற்கு அடுத்ததாயிருந்தது.

௮. மேலும் செப ஆலயத் தலைவனாகிய * கிறிஸ்பு தன் வீட்டாரனைவரோடுங்கூடக் கர்த்தரைவிசுவாசித்தான். கொரிந்தியரில் அநேகரும் சுவிசேஷத்தைக்கேட்டு, விசுவாசித்து ஞானஸ்நானம்பெற்றார்கள். * க. கொரிந். க. ௰௪.

௯. பின்பு இராத்திரியிலே கர்த்தர் தரிசனத்திலே பவுலுடனே சொன்னதாவது: இந்தப்பட்டினத்திலே அநேகம்பேர் என்னுடைய சனங்களாயிருக்கிறார்கள். ஆகையால் நான் உன்பக்கமிருப்பேன். ஒருவனும் உனக்குத்தீமைசெய்யும்படிக்கு உன்மேல் கைபோடுவதில்லை.

௰. ஆனபடியினாலே * நீ பயப்படாமற் பேசுவாயாக. மவுனமாயிராதிருப்பாயாக வென்றார். * ௨௩. ௰௧.

௰௧. அந்தப்படி அவன் ஒரு வருஷமும், ஆறுமாதமும் அங்கேதங்கிப் பராபரனுடைய வசனத்தை அவர்களுக்குள்ளேயுபதேசம்பண்ணிக்கொண்டிருந்தான்.

௰௨. பின்பு கல்லியோனென்பவன் அகாயா நாட்டிலே பிரதிநிதியானபொழுது, யூதர்கள் ஒருமனப்பட்டுப் பவுலுக்குவிரோதமாயெழும்பி, அவனை நியாயாசனத்திற்குமுன்பாகக்கொண்டுபோய்,

௰௩. இவன் வேதத்துக்குவிரோதமானவிதமாய்ப் பராபரனைச் சேவிக்கும்படி மனிதருக்குப் போதிக்கிறானென்றார்கள்.

௰௪. அதற்குப் பவுல் தன் வாயைத்திறக்கையிற் கல்லியோன் யூதருடனேசொன்னதாவது; யூதரே இது அநீதி, அல்லதுமிகவும் பொல்லாங்கானகாரியமானால் நான் உங்களுக்குப்பொறுமையாய்ச் செவிகொடுக்க நியாயமுண்டாயிருக்கும்.

௰௫. இது உபதேசத்துக்கும், நாமங்களுக்கும், உங்கள் வேதத்துக்குமேற்ற தருக்கமானபடியினாலே இப்படிப்பட்டவைகளைக் குறித்து நான் நியாயாதிபதியாயிருக்கவிரும்புகிறதில்லை. ஆகையால் நீங்களேபார்ப்பீர்களாகவென்றுசொல்லி,

௰௬. அவர்களை நியாயாசனத்தைவிட்டுப் போகப்பண்ணினான்.

௰௭. அப்பொழுது கிரேக்கரெல்லாரும் செப ஆலயத்தலைவனாகிய சொஸ்தெனேயைப்பிடித்து நியாயாசனத்திற்குமுன்பாகத்தானே அடித்தார்கள். அதைக்குறித்துக் கல்லியோன் விசாரணைபண்ணாதிருந்தான்.

௰௮. பின்னும் பவுல் அநேகநாள் அங்கே தரித்திருந்தபின்பு அவன் சகோதரருடைய உத்தரவுவாங்கிக்கொண்டு தனக்கொரு *பிரார்த்தனையுண்டாயிருந்தபடியால் கெங்கிரேயாப்பட்டினத்திலே சிரசு சவரம்பண்ணிச் சீரியாத்தேசத்திற்குப்போகும்படிக் கப்பலேறிப்போனான். பிரிஸ்கில்லாளும். ஆக்கில்லாவும் அவனுடனேகூடப்போனார்கள். * ௪. மோசே. ௬. ரு.

௰௯. அவன் எபேசுபட்டினத்திற்குச்சேர்ந்தபொழுது அவர்களையங்கேவிட்டுச்செப ஆலயத்திற்குட்பிரவேசித்து யூதருடனே சம்பாஷணைபண்ணினான்.

௨௰. அவர்கள் அவனைச்சிலகாலந் தங்களுடனே யிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபொழுது, அவன் சம்மதியாமல்,

௨௧. *வருகிறபண்டிகையிலேதானெப்படியும் எருசலேமிலிருக்கவேண்டும் † பராபரனுக்குச்சித்தமானால், திரும்பி உங்களிடத்திலவருவேனென்றுசொல்லி அவர்களுடைய உத்தரவுவாங்கிக்கொண்டுகப்பலேறி எபேசுபட்டினத்தைவிட்டு, * ௰௯. ௨௧; ௨௰. ௰௬; † க. கொரி. ௪. ௰௯; எபி. ௬. ௩; யாக். ௪. ௰ரு.

௨௨. செசாரியாப்பட்டினத்திற்குப்போய்ப்பின்பு (எருசலேமுக்குப்) போய்ச்சபையாரின் சுகத்தை விசாரித்துக்கொண்டு, பின்பு அந்தியோகியாவூருக்குச்சென்று,

௨௩. அங்கே சிலகாலஞ் சஞ்சரித்தப்பின்பு, புறப்பட்டுக் கலாத்தியா நாட்டிலேயும், பிரிகியா நாட்டிலேயும் ஊர்கள்தோறுந் திரிந்து, சீஷரெல்லாரையுமஸ்திரப்படுத்திக்கொண்டுவந்தான்.

௨௪. அக்காலத்திலே அலெக்சந்திரிப்பட்டினத்திற் பிறந்தவனுமாய், சதுரியவானுமாய், வேத எழுத்துக்களில்வல்லவனுமாயிருக்கிற அப்பொல்லோஸ் என்னும்பேர்கொண்ட ஒருயூதன் எபேசுபட்டினத்திற்குப் போனான்.

௨௫. அவன்கர்த்தருடைய மார்க்கத்தைக் குறித்து உபதேசங்கேட்டு, யோவான்கொடுத்த ஸ்நானத்தைமாத்திரம் அறிந்தவனாயிருந்தும், கர்த்தாவுக்குரியவைகளை மிகுந்த சாக்கிரதையுள்ள மனதோடேபேசித் திட்டமாய்ப் போதகம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௨௬. செப ஆலயத்திலே தயிரியமாய்ப் பேசினான். ஆக்கில்லாவும், பிரிஸ்கில்லாளும் அவன் பேசுகிறதைக் கேட்டபொழுது, அவனைச்சேர்த்துக்கொண்டு, பராபரனுடைய மார்க்கத்தையவனுக்கு அதிக திட்டமாய்க்காண்பித்தார்கள்.

௨௭. பின்பு அவன் அகாயா நாட்டிலே போகவேண்டுமென்றிருக்கையில், சீஷர்கள்

அவனையுபசாரஞ் செய்யும்படிக்குச் சகோதரர் அவர்களுக்கெழுதினார்கள்.

௨௮ அவன் அங்கே சேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தர்க்கம்பண்ணிக்கொண்டு, இயேசுவே கிறிஸ்து என்று வேதவாக்கியங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியாற் கிருபையினாலே விசுவாசிகளாயிருந்தவர்களுக்கு * மிகுந்த உதவியாயிருந்தான். * ௧. கொரி. ௩. ௬.

## ௰௯. அதிகாரம்.

[(௧) பவுல் கைகளைவைத்ததால் பரிசுத்த ஆவியளிக்கப்பட்டது. (௯) அவனுடைய உபதேசங்களை யூதர்கள் தூஷணித்தும் அவைகள் அற்புதங்களாலெமெய்ப்பிக்கப்பட்டன. (௰௩) யூதர்களுக்குள்ளிருந்த மந்திரவாதிகள், (௰௬) பசாசினால் அடிக்கப்பட்டது. (௰௯) மந்திர தந்திரபுஸ்தகங்கள் சுட்டெரிக்கப்பட்டது. (௨௪) தெமேத்திரியுஆகாயத்தினிமித்தம் பவுலுக்கு விரோதமாய்ப் பண்ணின கலகத்தை, (௩௫) சம்பிரதி அமர்த்தினது.]

அப்பொல்லோவென்பவன் கொரிந்துபட்டினத்திலிருக்கையிற் பவுல் மேலான தேசங்களில் திரிந்துகொண்டு, எபேசுபட்டினத்திற்குப்போனபொழுது,

௨. சில சீஷர்களைக்கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது, பரிசுத்த ஆவியைப்பெற்றுக்கொண்டீர்களாவென்றான். அதற்கவர்கள் பரிசுத்த ஆவியுண்டென்று நாங்கள் கேள்விப்படவுமில்லையென்றார்கள்.

௩. அப்பொழுது அவன் சொன்னது, அப்படியானால், எப்படிப்பட்ட ஞானஸ்நானம் பெற்றீர்களென்றான். அவர்கள் *யோவான் கொடுத்த ஸ்நானத்தைப்பெற்றோமென்றார்கள். * ௰௮. ௨௫.

௪. அப்பொழுது பவுல் சொன்னது, யோவான் தனக்குப்பின் வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவேண்டுமென்று சனங்களுக்குச்சொல்லி, மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானேயென்றான்.

௫. அதையவர்கள் கேட்டபொழுது அவர்கள் கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௬. அல்லாமலும், பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, * பரிசுத்த ஆவியானவர் அவர்களிடத்தில் வந்தார். அவர்கள் அந்நியபாஷைகளைப்பேசித் தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள். * ௨. ௪.

௭. அந்த மனிதரெல்லாரும் ஏறக்குறையப் பன்னிரண்டுபேராம்.

௮. பின்பு (பவுல்) செப ஆலயத்திற்குப் போய்த் தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதமளவும் பராபரனுடைய இராச்சியத்திற்குரியவைகளைப்பேசித் தெளிவாய்க் காண்பித்துக்கொண்டுவந்தான்.

௯. சிலர் கடினமான மனதுள்ளவர்களுமாய், அவிசுவாசிகளுமாயிருந்து, கூட்டத்திற்கு முன்பாக இந்த மார்க்கத்தை நிந்தித்தபொழுது அவன் அவர்களை விட்டுவிலகிச் சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு, திறன்னு என்பவனுடைய பள்ளிக்கூடத்திலே நாடோறுஞ் சம்பாஷித்துக்கொண்டுவந்தான்.

௰. இப்படி இரண்டுவருஷம் நடந்தது. ஆதலால் ஆசியாவிலே குடியிருந்த யூதர்கள், கிரேக்கர் இவர்களெல்லாருங் கர்த்தராகிய இயேசுவைக்குறித்து வசனத்தைக் கேள்விப்பட்டார்கள்.

௰௧. அன்றியும், * அதிசயமான அற்புதங்களைப் பராபரன் பவுலின் கைகளினாலே செய்துவருகையில், * ௰௪. ௩.

௰௨. * அவனுடைய சரீரத்திலிருந்து வேர்வைச்சேலைகளையும், கச்சைகளையும் வியாதியுள்ளவர்கள்மேல் வைத்தவுடனே, வியாதிகள் அவர்களைவிட்டுநீங்கிப்போயின. பொல்லாத ஆவிகளும் அவர்களிலிருந்து புறப்பட்டன. * ௫. ௰௫, ௰௬.

௰௩. அப்பொழுது தேசாந்திரிகளாய்த்திரிகிற மந்திரவாதிகளாகிய யூதரிற்சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்தவர்கள்மேற் கர்த்தராகிய இயேசுவின்நாமத்தைச்சொல்லத்துணிந்து, பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின்பேரிலே உங்களுக்கு ஆணையிடுகிறோமென்றார்கள்.

௰௪. பிரதான ஆசாரியனாகிய இஸ்கேவாவென்னும் யூதனுடைய குமாரர் ஏழுபேர்களிப்படிச்செய்தார்கள்.

௰௫. அவர்களுக்குத்தரவாகப் பொல்லாத ஆவிசொன்னதாவது; இயேசுவையறிந்திருக்கிறேன். பவுலையும் அறிவேன். நீங்கள் யாரென்றுசொன்னவுடனே,

௰௬. பொல்லாத ஆவியையுடைய மனிதன் அவர்கள்மேற் பாய்ந்து, அவர்களைத்தனக்குட்படுத்திச்செயிக்க, அவர்கள் நிருவாணிகளாயும், காயப்பட்டவர்களாயுமந்த வீட்டைவிட்டோடிப்போனார்கள்.

௰௭. அது எபேசிலே குடியிருக்கிற யூதர், கிரேக்கரெல்லாருக்குந் தெரியவந்தபொழுது அவர்களெல்லாரும் பயமடைந்தார்கள். அல்லாமலும், கர்த்தராகிய இயேசுவின்நாமம் அவர்களுக்குள் மேன்மைப்பட்டது.

௰௮. அன்றியும், விசுவாசிகளானவர்களில் அநேகர் சேர்ந்து, தங்கள் செய்கைகளைவெளிப்படுத்தி, அறிக்கையிட்டார்கள்.

௰௯. அன்றியும், வினைவித்தைக்காரராயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக்கொண்டுவந்து, எல்லார்முன்பாகவுஞ் சுட்டெரித்தார்கள்.

அவனை ஏற்றுக்கொள்ளும்படி சகோதரர் அவர்களுக்கெழுதினார்கள்.

௨௮ அவன் அங்கே சேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தருக்கம்பண்ணிக்கொண்டு, இயேசுவே கிறிஸ்து என்று வேதவாக்கியங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியால் கிருபையினாலே விசுவாசிகளாயிருந்தவர்களுக்கு * மிகுந்த உதவியாயிருந்தான். * ௧. கொரி. ௩. ௬.

## ௰௯. அதிகாரம்.

[(௧) பவுல் கைகளை வைத்ததால் பரிசுத்த ஆவியளிக்கப்பட்டது. (௯) அவனுடைய உபதேசங்களை யூதர்கள் தூஷணித்தும் அவைகள் அற்புதங்களால் மெய்ப்பிக்கப்பட்டன. (௰௩) யூதர்களுக்குள்ளிருந்த மந்திரவாதிகள், (௰௬) பசாசினால் அடிக்கப்பட்டன. (௰௯) மந்திர தந்திர புஸ்தகங்கள் சுட்டெரிக்கப்பட்டது. (௨௪) தெமேத்திரியு ஆதாயத்தினிமித்தம் பவுலுக்கு விரோதமாய்ப் பண்ணின கலகத்தை, (௩௫) சம்பிரதி அமர்த்தினது.]

அப்பொல்லோ என்பவன் கொரிந்து பட்டினத்திலிருக்கையில் பவுல் மேலான தேசங்களில் திரிந்துகொண்டு, எபேசுபட்டினத்திற்குப் போனபொழுது,

௨. சில சீஷரைக் கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டீர்களாவென்றான். அதற்கவர்கள் பரிசுத்த ஆவியுண்டென்று நாங்கள் கேள்விப்படவுமில்லையென்றார்கள்.

௩. அப்பொழுது அவன் சொன்னது, அப்படியானால், எப்படிப்பட்ட ஞானஸ்நானம் பெற்றீர்களென்றான். அவர்கள் *யோவான் கொடுத்த ஸ்நானத்தைப் பெற்றோமென்றார்கள். * ௰௮. ௨௫.

௪. அப்பொழுது பவுல் சொன்னது, யோவான் தனக்குப்பின்வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவேண்டுமென்று ஜனங்களுக்குச் சொல்லி, மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானேயென்றான்.

௫. அதையவர்கள் கேட்டபொழுது அவர்கள் கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௬. அல்லாமலும், பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, * பரிசுத்த ஆவியானவர் அவர்களிடத்தில் வந்தார். அவர்கள் அந்நியபாஷைகளைப் பேசித் தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள். * ௨. ௪.

௭. அந்த மனிதரெல்லாரும் ஏறக்குறையப் பன்னிரண்டுபேராம்.

௮. பின்பு (பவுல்) ஜெப ஆலயத்திற்குப் போய்த் தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதமளவும் பராபரனுடைய இராச்சியத்திற்குரியவைகளைப் பேசித் தெளிவாய்க் காண்பித்துக்கொண்டுவந்தான்.

௯. சிலர் கடினமான மனதுள்ளவர்களுமாய், அவிசுவாசிகளுமாயிருந்து, கூட்டத்திற்கு முன்பாக இந்த மார்க்கத்தை நிந்தித்தபொழுது அவன் அவர்களை விட்டுவிலகிச் சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு, திறன்னு என்பவனுடைய பள்ளிக்கூடத்திலே நாள்தோறும் சம்பாஷித்துக்கொண்டுவந்தான்.

௰. இப்படி இரண்டுவருஷம் நடந்தது. அதினாலே ஆசியாவிலே குடியிருந்த யூதர்கள், கிரேக்கர் இவர்களெல்லாரும் கர்த்தராகிய இயேசுவைக்குறித்து வசனத்தைக் கேள்விப்பட்டார்கள்.

௰௧. அன்றியும், * அதிசயமான அற்புதங்களைப் பராபரன் பவுலின் கைகளினாலே செய்துவருகையில், * ௰௪. ௩.

௰௨. * அவனுடைய சரீரத்திலிருந்த வேர்வைச் சேலைகளையும், கச்சைகளையும் வியாதியுள்ளவர்கள்மேல் வைத்தவுடனே, வியாதிகள் அவர்களைவிட்டு நீங்கிப்போயின. பொல்லாத ஆவிகளும் அவர்களிலிருந்து புறப்பட்டன. * ௫. ௰௫, ௰௬.

௰௩. அப்பொழுது தேசாந்திரிகளாய்த் திரிகிற மந்திரவாதிகளாகிய யூதரில் சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்தவர்கள்மேல் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தைச் சொல்லத்துணிந்து, பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின் பேரிலே உங்களுக்கு ஆணையிடுகிறோமென்றார்கள்.

௰௪. பிரதான ஆசாரியனாகிய இஸ்கேவா என்னும் யூதனுடைய குமாரர் ஏழுபேர்களே அப்படிச் செய்தார்கள்.

௰௫. அவர்களுக்குத் துரவாகப் பொல்லாத ஆவி சொன்னதாவது; இயேசுவை அறிந்திருக்கிறேன். பவுலையும் அறிவேன். நீங்கள் யாரென்று சொன்னவுடனே,

௰௬. பொல்லாத ஆவியையுடைய மனிதன் அவர்கள்மேல் பாய்ந்து, அவர்களைத் தனக்குட்படுத்திச் செயிக்க, அவர்கள் நிருவாணிகளாயும், காயப்பட்டவர்களாயும் அந்த வீட்டைவிட்டோடிப்போனார்கள்.

௰௭. அது எபேசிலே குடியிருக்கிற யூதர், கிரேக்கரெல்லாருக்குந் தெரியவந்தபொழுது அவர்களெல்லாரும் பயமடைந்தார்கள். அல்லாமலும், கர்த்தராகிய இயேசுவின் நாமம் அவர்களுக்குள் மேன்மைப்பட்டது.

௰௮. அன்றியும், விசுவாசிகளானவர்களில் அநேகர் சேர்ந்து, தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி, அறிக்கையிட்டார்கள்.

௰௯. அன்றியும், வீண்வித்தைக்காரராயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக் கொண்டுவந்து, எல்லார் முன்பாகவுஞ் சுட்டெரித்தார்கள்.

வார்த்தைகளைமாத்திரம பேசவே அதிகமாய விருமபுகிறேன.

௨௰. சகோதரரே! * நீஙகளபுததிகளுக்குக் குழநதைகளாயிராமல் துர்க்குணததிறகுக்குழநதைகளைபபோலிருஙகள. புததியிலலே தேறினவர்களாவீர்களாக. * உரோ. ௰௬. ௰௯.

௨௧. * மறுபாஷைகளாலும, மறுஉதடுகளினாலும இநதசசனஙகளுடனே பேசுவேன. அபபடியும அவர்கள எனககுசசெவிகொடுபபதிலலையென்று கர்த்தர் சொலலுகிறாரென்று வேதத்தில எழுதியிருககிறதே. * ஏசாயா. ௨௮. ௰௧, ௰௨.

௨௨. ஆனபடியினாலே அநநியபாஷைகள் விசுவாசிகளுககலல, அவிசுவாசிகளுககடையாளமாயிருககினறன. தீர்க்கதரிசனஙகாட்டுதல அவிசுவாசிகளுககலல, விசுவாசிகளுக்கடையாளமாயிருககினறது.

௨௩. அபபடியிருககச சபையாரெலலாரும ஏகமாயககூடிவநது எலலாரும அநநியபாஷைகளில பேசிககொணடால, கலலாதவர்கள அலலது அவிசுவாசிகள உளளேபிரவேசிககுமபொழுது நீஙகளபயிததியமபிடித்தவர்களெனபார்களலலவோ.

௨௪. எலலாரும தீர்க்கதரிசனஙகாட்டினால, அவிசுவாசி அலலதுகலலாதவனொருவன உளளேபிரவேசிககுமபொழுது அவன எலலாராலுங கணடிககபபட்டும, எலலாராலும நிதானிககபபட்டுமிருபபான.

௨௫. * அவனுடைய இருதயததின அநதரஙகஙகளும வெளியரஙகமாம. இவவிதமாய அவனமுகங கீழாகவிழுநது பராபரனைப பணிநதுகொணடு பராபரனமெயயாய உங்களுககுளளே யிருககிறாரெனறறிககையிடுவான. * எபி. ௪. ௰௨.

௨௬. அபபடிககனறி, சகோதரரே, நீஙகள கூடியிருககிறபொழுது உஙகளில ஒருவன சஙகீதமபாடவும, ஒருவன போதகமபணணவும, ஒருவன அநநியபாஷைபேசவும, ஒருவன இரகசியததை வெளிபபடுததவும, ஒருவன வியாககியானமபணணவுமவேணடுவதெனன! அவையெலலாம எழுபபுதலுணடாகததககதாக நடக்கக்கடவது.

௨௭. அநதபபடி ஒருவன அநநியபாஷையிலேபேசவேணடுமானால அவன இரணடு அலலது மிஞ்சினால மூனறு (வாககியஙகளை) மாததிரம வெவவேறாகபபேசவும, ஒருவன வியாககியானமபணணவுமவேணடும.

௨௮. வியாககியானமபணணுகிறவனிலலாவிடடால சபையிலேபேசாமல தனககும, பராபரனுககுந தெரியபபேசககடவன.

௨௯. தீர்க்கதரிசனங காட்டுகிற இரணடு பேர் அலலது மூனறுபேர்பேசலாம. மறறவர்கள நிதானிக்கக்கடவர்கள.

௩௰. அபபொழுது உளுககாரதிருக்கிறமற றொருவனுககு எதாகிலும வெளிபபடுததபபட்டால முநதினவன பேசாமலிருக்கக்கடவன.

௩௧. எலலாருங கறகிறதறகும, எலலாரும ஆறுதலையடைகிறதறகும நீஙகளெலலாரும ஒருவரொருவனாகத தீர்க்கதரிசனஙகாட்டலாமே.

௩௨. தீர்க்கதரிசனங காட்டுகிறவர்களுககுணடான ஆவிககுரியவரஙகள அதைககாட்டுகிறவர்களுடைய அதிகாரததிறகுளளேயிருககுமே.

௩௩. பராபரனுங கலகததிற பிரியமானவரலல, சமாதானததிற பிரியமானவராயிருககிறார். பரிசுததவானகளுடைய எலலாச சபைகளிலேயும நடககிறதுபோல,

௩௪. * உஙகள சபைகளிலேயும பெணபிளளைகள பேசாமலிருக்கக்கடவர்கள. பேசுமபடிககு அவர்களுககு உததரவிலலை. அவர்கள † கீழ்ப்படியவேணடும.
* ௧. தீமோ. ௨. ௰௨; † ௧. மோ. ௩. ௰௬.

௩௫. அபபடி வேதமுஞ சொலலுகினறது. அவர்கள ஒருகாரியததைககறறுககொளள விருமபினால வீட்டிலே தஙகள புருஷரிடததிலே விசாரிக்கக்கடவர்கள. ஸதிரிகளசபையிலே பேசுகிறது அவலட்சணமாயிருககிறதே.

௩௬. அலலது பராபரனுடையவசனமுஙகளிடததிலிருநதா புறபபட்டது? அலலது அது உங்களிடததிறகுமாததிரமா வநதது!

௩௭. ஒருவன தனனைததீர்க்கதரிசி அலலது ஆவியைப பெறறவனென்றெணணினால, நானுஙகளுககெழுதுகிறவைகள் கர்த்தருடைய கறபனைகளாயிருககினறனவெனறறிக்கையிடக்கடவன.

௩௮. ஒருவன அறியாமறபோனால, அவன அறியாமறபோகட்டும.

௩௯. ஆகையால சகோதரரே, தீர்க்கதரிசனங காட்டுகிற வரததைத் தேடிககொளவீர்களாக. அநநியபாஷைகளைப பேசுகிறதறகுந தடைபணணாதிருஙகள.

௪௰. சகலமும நலலொழுககமாயும், சட்டததினபடியேயுமநடக்கக்கடவது.

## ௰௫. அதிகாரம.

[(௩) கிறிஸதுவினஉயிர்ததெழுதலினால (௰௨) உயிர்ததெழுதலிலலையெனறவர்களுககெதிரிடையாக நமமுடைய உயிர்ததெழுதலைத திருஷடாநதபபடுததி, (௨௧) அதறகுமூலமும, (௩௫) வகையுஞசொலலி, (௫௧) உயிரோடிருககிறவர்கள அடையும ஆறுதலைககுறிததுஞசொனனது.]

அனறியுஞ சகோதரரே, நானுஙகளுககுச சுவிசேஷததைப பிரசஙகததேனே, நீஙகளும அதையேறறுககொணடு அதிலே நிறகிறீர்களே.

உ. அல்லாமலும் நீங்கள் வீணாய் விசுவாசியாமல் நான் உங்களுக்குப் பிரசங்கித்தவிதமாய் அதைக் கைக்கொண்டிருந்தால், இரட்சிப்பு உங்களுக்கு அதினாலே கிடைக்குமே. அந்தச் சுவிசேஷத்தை நான் உங்களுக்கு மறுபடியும் அறிவிக்கிறேன்.

ஈ. * நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததுமென்னவென்றால் கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்து, * கலா. க. ௰உ.

ச. வேதவாக்கியங்களின்படி அடக்கம்பண்ணப்பட்டும், மூன்றாம் நாளில் எழுந்துமிருக்கிறார்.

ரு. * கேபாவுக்கும், † பின்பு பன்னிருவருக்குந் தரிசனமானார். * லூக். உச. ஈச; † யோவா. உ௰. ௰சு—உசு.

சு. அதின்பின்பு,* அவர் ஐந்நூறுபேருக்கதிகமான சகோதரருக்கும் ஒருமிக்கத் தரிசனமானார். அவர்களில் சிலர்மாத்திரம் நித்திரையடைந்தார்கள். மற்றநேகமானவர்கள் இந்நாள்வரைக்குமிருக்கிறார்கள். * மத். உஅ. ௰.

எ. பின்பு யாக்கோபுக்கும், அதின்பின்பு அப்போஸ்தலரெல்லாருக்குந் தரிசனமானார்.

அ எல்லாருக்கும்பின்பு எனக்குந் * தரிசனமானார். நான் பூரண கர்ப்பத்திற் பிறவாமல் அகாலத்திற் பிறந்த பிள்ளையைப்போல அப்போஸ்தலனானவன். * அப. கூ. ரு. உஉ. ௰எ; உ. கொரி. ௰உ. க, உ.

கூ. நான் அப்போஸ்தலரெல்லாரிலுஞ் சிறியவனாயிருக்கிறேன். பராபரனுடைய சபையைத் துன்பப்படுத்தினபடியினாலே நான் அப்போஸ்தலனென்றழைக்கப்படுகிறதற்குப் பாத்திரனல்ல.

௰. * பராபரனுடைய கிருபையினாலே யிருக்கிறேன். அன்றியும் அவர் என்மேல் வைத்த கிருபை வீணாயிருக்கவில்லை. மற்றெல்லாரிலும் நான் அதிகமாயுழைத்தேன். நானல்ல, என்னுடனே யிருக்கிற பராபரனுடைய கிருபையினாலே அப்படிச்செய்தேன். * ரு. ௰.

௰க. ஆகையால் நானாவது, அவர்களாவது இப்படியேபிரசங்கித்துவருகிறோம். நீங்களும் இப்படியே விசுவாசித்துவருகிறீர்கள்.

௰உ. அந்தப்படி கிறிஸ்து மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறாரென்று பிரசங்கித்திருக்க, மரித்தோர் உயிரோடெழும்புதலில்லையென்று உங்களிற் சிலர் எப்படிச் சொல்லலாம்?

௰ஈ. மரித்தோர் உயிரோடெழும்புகிறதில்லையாயிட்டால், கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

௰ச. கிறிஸ்து எழும்பாதிருந்தால், எங்கள் பிரசங்கம் அபத்தமாயிருக்குமே. உங்கள் விசுவாசமும் அபத்தமாயிருக்குமே.

௰ரு. மரித்தோர் மெய்யாய் எழும்பாவிட்டால் பராபரன் எழுப்பாத கிறிஸ்துவைப் பராபரனெழுப்பினாரென்று அவரைக்குறித்துச் சாட்சிசொன்னதினாலே நாங்கள் பராபரனுக்காகப் பொய்ச்சாட்சிகளாயிருப்போமே.

௰சு. அந்தப்படி மரித்தோர் எழும்பாவிட்டால் கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

௰எ. அன்றியும் கிறிஸ்து எழும்பாமலிருந்தால் உங்கள் விசுவாசம் வீணாயிருக்குமே. நீங்கள் எப்பொழுதும் உங்கள் பாவங்களோடே யிருப்பீர்களே.

௰அ. கிறிஸ்துவைப்பற்றி நித்திரையடைந்தவர்களுங் கெட்டிருப்பார்களே.

௰கூ. அந்தப்படி நாம் கிறிஸ்துவின்மேலே இம்மைக்காகமாத்திரம் நம்பிக்கையாயிருந்தால், எல்லாமனிதர்களிலும் நாம் அதிக நிர்ப்பாக்கியமுள்ளவர்களாயிருப்போமே.

உ௰. அப்படியல்ல, கிறிஸ்து நித்திரையடைந்தவர்களில் * முதற்பாகமாக மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறார். * அப். உசு. உஈ.

உக. அந்தப்படி ஒரு மனிதனால் மரணமுண்டானபடியினாலே, ஒருமனிதனாலும் மரித்தோரினின்று உயிரோடெழும்புதலும் உண்டாயிருக்கின்றது.

உஉ. ஆதாமினாலே எல்லாரும் மரிக்கிறதுபோல, கிறிஸ்துவினாலே எல்லாரும் உயிராக்கப்படுவார்கள்.

உஈ. அவனவன் தன் இன்வரிசையிலே பப்படியாவான். முதற்பாகமானவர் கிறிஸ்து. பின்பு * அவர்வரும்பொழுது அவரைச்சேர்ந்தவர்கள் எழுந்திருப்பார்கள். * அந்ய். உ௰. கூ.

உச. அதன்பின்பு முடிவிருக்கும். அப்பொழுது அவர் சகல துரைத்தனத்தையும், சகல அதிகாரத்தையும், வல்லமையையும் பரிகரித்து, இராச்சியபரிபாலனத்தைப் பிதாவாகிய பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பார்.

உரு. இப்படியவர் * எல்லாச் சத்துருக்களையுந் தம் பாதத்திற்குக் கீழாக்கிப்போடுமவரைக்கும் அவர் அரசுசெய்யவேண்டும். * சங். ௱௰. க.

உசு. * அவர் பரிகரிக்கும் கடைசிச்சத்துருமரணம். * அறிவி. உ௰. ௰ச;—உக. ச.

உஎ. * எல்லாவற்றையும் அவருடைய பாதத்திற்குக் கீழ்ப்படுத்தினாரே, ஆகிலுஞ் சகலமும் அவருக்குக் கீழ்ப்படுத்தப்பட்டதென்று சொல்லும்பொழுது, சகலத்தையும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர்தவிர என்பது வெளியரங்கமாயிருக்கின்றது. * சங். அ. எ, அ.

உஅ. சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்பொழுது, பராபரனே எல்லா இடத்

களிலும், எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கத்தக்கவிதமாக, குமாரன்றாமுந்தமக்கெல்லாவற்றையுங்கீழ்ப்படுத்தினவருக்குக்கீழ்ப்பட்டிருப்பார்.

௨௯. பின்னும் மரித்தோரெழும்பாவிட்டால், மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம்பெறுகிறவர்கள் என்னசெய்வார்கள்! மரித்தவர்களுக்காக ஏன் ஞானஸ்நானம்பெறுவார்கள்?

௩௰. நாங்களும் ஏன் எந்நேரமும் மோசத்திற்கேதுவாவோம்!

௩௧. * நாடோறும் நான் மரிக்கிறேன். அதைநம்முடைய கர்த்தராகிய கிறிஸ்துஇயேசுவினாலே உங்களைக்குறித்து எனக்குண்டாயிருக்கிற மேன்மையின்பேரிலே நிச்சயமாய்ச்சொல்லுகிறேன். * ௨. கொரி. ௪. ௰, ௰௧.

௩௨. மரித்தோர் எழும்பாவிட்டால் நான் எபேசிலே மனிதர்வழக்கமாய்த் துஷ்டமிருகங்களுடனே போராடினத்தினாலே எனக்கென்னபிரயோசனம்வரும்! நாளைக்குச்சாவோம். ஆகையால் * புசிக்கவும், குடிக்கவுங்கடவோமென்றுசொல்லலாமே. * ஏசா. ௨௨. ௰௩.

௩௩. வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக. பொல்லாதசம்பாஷணைகள் நல்லொழுக்கங்களைக்கெடுக்கும்.

௩௪. நீங்கள் பின்னும் பாவஞ்செய்யாமல் நியாயமானபடி தெளிவுஅடையுங்கள். (உங்களில்) சிலர் பராபரனையறியாதிருக்கிறார்களே. உங்களுக்கு வெட்கம்வர இதைச்சொல்லுகிறேன்.

௩௫. மரித்தோர் எப்படி எழும்புவார்கள்! எப்படிப்பட்ட சரீரத்தோடே வருவார்களென்றுகேட்டால்,

௩௬. * ஆ! புத்தியீனனே, நீ விதைக்கிற தானியங் கெட்டாவிட்டால் புதிதானபயிர் தோன்றமாட்டாதே. * யோவா. ௰௨. ௨௪.

௩௭. மேலும் நீ விதைக்கிறபொழுது இனிமேல்விளையும் உடலைவிதையாமல் கோதுமை அல்லது மற்றொருதானியத்தினுடைய வெறுமணியையேவிதைக்கிறாய்.

௩௮. அதற்குப்பராபரன் தமதுசித்தத்தின்படியே உடலைக்கொடுக்கிறார். அந்தப்படி விதைவகைகளெல்லாவற்றிற்கும் அதற்கதற்கேற்ற உடலுண்டு.

௩௯. எல்லாமாம்சமும் ஒரேவிதமானமாம்சமல்ல. மனிதருடைய மாம்சமும்வேறே மிருகங்களுடையமாம்சமும்வேறே மச்சங்களுடையதும்வேறே. பறவைகளுடையதும்வேறே.

௪௰. பரமண்டலத்திற்குரிய தேகங்களுமுண்டு. பூமிக்குரியதேகங்களுமுண்டு. பரமண்டலத்திற்குரிய தேகங்களுடைய மகிமையும்வேறே. பூமிக்குரிய தேகங்களுடையமகிமையும்வேறே.

௪௧. சூரியனுடையமகிமையும்வேறே சந்திரனுடையமகிமையும்வேறே. நட்சத்திரங்களுடையமகிமையும்வேறே. அவைகளில் ஒருநட்சத்திரத்தினுடையமகிமை மற்றொருநட்சத்திரத்தின் மகிமைக்கு மேற்பட்டிருக்கிறதே.

௪௨. அப்படிப்போல மரித்தோர் உயிரோடெழும்புதலுமுண்டாயிருக்கும். அழிவுள்ளசரீரம் விதைக்கப்பட்டுப் பின்பு அழிவில்லாமையாய் எழுந்திருக்கும்.

௪௩. கனவீனமானசரீரம் விதைக்கப்பட்டுப் பின்பு * மகிமையாயெழுந்திருக்கும். பலவீனமுள்ளசரீரம் விதைக்கப்பட்டுப் பின்பு பலமாயெழுந்திருக்கும். * பிலி. ௩. ௨௰, ௨௧.

௪௪. ஜீவனானசரீரம்விதைக்கப்படும். ஆவிக்குரிய சரீரம் எழுந்திருக்கும். இரத்தமாம்சமுடையசரீரமுமுண்டு. ஆவிக்குரியசரீரமுமுண்டு.

௪௫. ஆனதால் வேதத்திலே யெழுதியிருக்கிறபடி * முந்தின மனிதனாகிய ஆதாம் ஜீவஆத்துமாவானான். பிந்தின ஆதாம் உயிர்ப்பிக்கிற ஆவியானார். * ௧. மோசே. ௨. ௭.

௪௬. ஆவியானசரீரம் முந்தினதாயிராமல், இரத்தமாம்சமுடைய சரீரமே முந்தினதாயிருக்கிறது.

௪௭. பின்பு ஆவியானசரீரமுண்டாம். முந்தின மனிதன் பூமியின்மண்ணானவன். இரண்டாம்மனிதன் பரமண்டலத்துக்குரியகர்த்தர்.

௪௮. மண்ணானவன் எப்படியோ அப்படி மண்ணானவர்களுமிருப்பார்கள். பரமண்டலத்துக்குரியவர் எப்படியோ அப்படிப் பரமண்டலத்திற்குரியவர்களுமிருப்பார்கள்.

௪௯. மேலும் மண்ணானவனுடைய சாயலை நாம் அணிந்திருக்கிறதுபோலப் பரமண்டலத்திற்குரியவருடையசாயலையும் அணிந்துகொள்வோம்.

௫௰. சகோதரரே, மாம்சமும், இரத்தமும் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிக்கக்கூடாது. அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிக்கமாட்டாது. ஆனதால் இவைகளைச்சொன்னேன்.

௫௧. மேலும் நான் உங்களுக்கு இரகசியத்தையறிவிக்கிறேன். (என்னவெனில்,) நாமெல்லாரும் * நித்திரையடைந்துபோவதில்லை. ஆகிலும் எல்லாருங் கடைசி எக்காளந்தொனிக்கும்பொழுது, ஒரு நிமிஷத்திலே ஒரு இமைப்பொழுதிலே மறுரூபமாக்கப்படுவோம். * ௧. தெச. ௪. ௰௬, ௰௭.

௫௨. * எக்காளந்தொனிக்குமே. அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாயெழும்புவார்கள். * மத். ௨௪. ௩௧.

௫௩. அன்றியும் அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கேதுவாகிய இது சாவாமையையுந் தரித்துக்கொள்ளவேண்டியபடியால், நாமும் மறுரூபமாக்கப்படுவோம்.

௫௪. அந்தப்படி அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கினமாகிய இது சாவாமையையுந் தரித்துக்கொள்ளும்பொழுது மரணஞ் ஜெயமாக விழுங்கப்பட்டதென்று * எழுதியிருக்கிறவார்த்தை நிறைவேறும். * ஏசா. உ௫. அ; ஓசே. ௰௩. ௰௪.

௫௫. ஆ, மரணமே! உன் கூர் எங்கே? பாதாளமே, உன் ஜெயமெங்கே! மரணத்தின் கூர்மை பாவம்.

௫௬. பாவத்தின் பெலன் நியாயப்பிரமாணம்.

௫௭. நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு நமக்கு ஜெயங்கொடுத்திருக்கிற பராபரனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

௫௮. ஆகையால் எனக்குப் பிரியமான சகோதரரே, கர்த்தரைக்குறித்து உங்கள் வேலை வீணாயிராதென்றறிந்து, நீங்கள் உறுதிப்பட்டவர்களாயும், அசையாதவர்களாயுங் கர்த்தருடைய கிரியையிலே எப்பொழுதும் பெருகுகிறவர்களாயுமிருப்பீர்களாக.

## ௰௬. அதிகாரம்.

[(௧) எருசலேமிலுள்ள எளிய கிறிஸ்தவர்களுக்குத் தருமங்களைச் சேர்த்தனுப்பவேணுமென்றும், (௰) தீமோத்தேயை அங்கீகாரம்பண்ணவேணுமென்றுஞ் சொல்லி, (௰௩) சில பட்சமுள்ள புத்திமதிகளையுமெழுதி, (௰௬) அநேகவாழ்த்தி நிருபத்தை முடித்தது.]

பரிசுத்தவான்களுக்காகச் * சேர்க்கப்படுந் தருமங்களைக்குறித்து நான் கலாத்தியதேசத்துச் சபைகளுக்குப் பண்ணின திட்டத்தின்படியே நீங்களுஞ் செய்வீர்களாக. * உரோம. ௰௫. உ௬, உ௭.

௨. நான் வரும்பொழுதே தருமஞ்சேர்க்குதலுண்டாயிராதபடிக்கு, உங்களில் அவனவன் * வாரத்தின் முதல் நாள்கள்தோறுந் தன்தன் வாழ்வுக்குத்தக்கதாக எதையாகிலுமெடுத்துத் தன்னிடத்திலே சேர்த்துவைக்கக்கடவன். * அப்போ. உ௰. ௭.

௩. நான் வந்திருக்கும்பொழுது, உங்களுடைய உபகாரத்தை எருசலேமுக்குக் கொண்டுபோகும்படிக்கு நீங்கள் நிருபங்களினாலே ஏற்படுத்துகிறவர்களெவர்களோ அவர்களை யனுப்புவேன்.

௪. நானும் போகத்தகுதியானால், அவர்கள் என்னுடனேகூட வரலாம்.

௫. நான் மக்கெதோனியா நாட்டின் வழியாய்ப் போகிறேன். அதின் வழியாய்ப்போகும்பொழுது உங்களிடத்துக்கு வருவேன்.

௬. ஒருவேளை நான் உங்களிடத்தில் சிலகாலந் தரித்திருப்பேன். நான் எங்கேபோனாலும் நீங்கள் என்னை வழிவிட்டனுப்பும்படிக்கு ஒருவேளை மாரிகாலமுழுவதும் இருப்பேன்.

௭. ஆனதால் நான் இப்பொழுது போக்குப்பிரயாணத்திலே உங்களைப்பார்க்கமாட்டேன். கர்த்தர் உத்தரவுகொடுத்தால் உங்களிடத்தில் சிலகாலந் தரித்திருக்கலாமென்று நம்பியிருக்கிறேன்.

௮. இந்த எபேசுபட்டினத்திலே பெரிதும், பெலனுமான கதவு எனக்குத் திறக்கப்பட்டிருக்கிறபடியினாலும், விரோதஞ்செய்கிறவர்களும் அநேகரிருக்கிறபடியினாலும்,

௯. பெந்தெகொஸ்தேப் பண்டிகைவரைக்கும் இங்கேயிருப்பேன்.

௰. தீமோத்தேயு உங்களிடத்திற்கு வரும்பொழுது, அவன் உங்களிடத்தில் பயமில்லாமலிருக்கும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள். என்னைப்போல அவனுங் கர்த்தருடைய கிரியையை நடப்பிக்கிறானே.

௰௧. ஆனபடியினாலே ஒருவனும் அவனை அற்பமாய் எண்ணாதிருப்பானாக. அன்றியும் அவனும், அவனுடனேகூட இருக்கிற சகோதரரும் வருகிறதற்கு நான் காத்திருக்கிறபடியால், நீங்கள் அவனைச் சமாதானத்தோடே என்னிடத்தில் வரும்படிக்கு வழிவிட்டனுப்புங்கள்.

௰௨. சகோதரனாகிய அப்பொல்லோவும் இந்தச் சகோதரரோடேகூட உங்களிடத்தில் வரும்படிக்கு அவனை மிகவும் வேண்டிக்கொண்டேன். அப்படியிருந்தும் இப்பொழுது போக அவனுக்குமனதேயில்லை. அவனுக்கு நற்சமயமுண்டாயிருக்கும்பொழுது உங்களிடத்தில் வருவான்.

௰௩. விழித்திருங்கள். விசுவாசத்திலே நிலைத்திருங்கள். புருஷராயிருங்கள். பெலன்கொள்ளுங்கள்.

௰௪. உங்கள் காரியங்களையெல்லாம் அன்போடே செய்வீர்களாக.

௰௫. சகோதரரே, ஸ்தேவானுடைய குடும்பத்தார் ஆகாயதேசத்திலே முதற்பலனானவர்களென்றும், பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்கள் தங்களை ஒப்புவித்தவர்களென்றும் அறிந்திருக்கிறீர்களே.

௰௬. இப்படிப்பட்டவர்களுக்கும், உதவிசெய்து பிரயாசப்படுகிற மற்றெல்லாருக்கும் நீங்கள் கீழ்ப்படிந்திருக்கவேணுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௭. ஸ்தேவானும், பொர்த்துநாத்தும், அகாயிக்குக்கும் வந்துசேர்ந்ததினாலே சந்தோஷமாயிருக்கிறேன்.

௰௮. உங்கள் ஆவிக்குச் செய்ததுபோல அவர்கள் என்னுடைய ஆவிக்கும் ஆறுதல் செய்தபடியால், நீங்கள் இல்லாததினாலுண்டான குறைவை நீக்கி நிறைவுண்டாக்கினார்கள். இப்படிப்பட்டவர்களைக் கனமாய் எண்ணிக்கொள்வீர்களாக.

௰௯. ஆசியாதேசத்திலுள்ள சபையார்கள் உங்களைவாழ்த்துதல்செய்கிறார்கள். ஆக்கிலாவும், பிரிசில்லாளுந் தங்கள் வீட்டிலே கூடியசபையோடேகூடக் கர்த்தரைப்பற்றி உங்களைமிகவும் வாழ்த்துகிறார்கள்.

௨௰. சகோதரரெல்லாரும் உங்களைவாழ்த்துகிறார்கள். நீங்களொருவரையொருவர் பரிசுத்தமானமுத்தத்தினாலே வாழ்த்துதல் செய்வீர்களாக.

௨௧. * பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதல்செய்கிறேன். * ௨. தெச. ௩. ௰௭.

௨௨. ஒருவன் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினிடத்தில் அன்புகூராமற்போனால், அவன் சபிக்கப்பட்டவனாயிருப்பான். அவனுக்குத் தண்டிப்பாகக் கர்த்தர்வருவார்.

௨௩. கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனேகூடவிருக்கக்கடவது.

௨௪. என்னுடைய அன்பு கிறிஸ்துஇயேசுவைப் பற்றிக்கொள்ளுகிற உங்களெல்லாரோடுங்கூடவிருக்கின்றது.—ஆமென்.

---

அப்போஸ்தலனாகியபவுல்

# கொரிந்தருக்கெழுதின இரண்டாந்நிருபம்.

---

(கி. பி. பின். ௬௰. ௵)

## ௧. அதிகாரம்.

[(௧) அப்போஸ்தலன் தன் உபத்திரவங்களிலெல்லாம் விசேஷமாய், (௮) ஆசியாவிலே அடைந்ததுன்பத்திலுண்டான ஆறுதலினாலே சபைக்குஆறுதல்சொல்லி, (௰௨) தான் சுவிசேஷத்தின் மாறாதசத்தியத்தை உத்தமமாய்ப்பிரசங்கித்ததற்குத் தன்மனச்சாட்சியையும், அவர்களுடைய மனச்சாட்சிகளையுஞ் சாட்சியிட்டு, (௰௫) தான் கொரிந்துக்குவராததற்கு நியாயஞ்சொன்னது.]

பராபரனுடையசித்தத்தினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயுங் கொரிந்து பட்டினத்திலுள்ள பராபரனுடையசபைக்கும், அகாயதேசமெங்குமுள்ள எல்லாப்பரிசுத்தவான்களுக்குங்கூடஎழுதுகிறதாவது;

௨. நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும், சமாதானமுமுண்டாகக்கடவது.

௩. நம்முடையகர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்பிதாவுமாய், பராபரனுமாய், மிகுந்த தயையுடையபிதாவுமாய், * சகலவிதமான ஆறுதலையும் அனுக்கிரகிக்கிற தேவனுமாயிருக்கிறவர் தோத்திரிக்கப்படக்கடவர். * உரோ. ௰௫. ௫.

௪. அவரேயெங்களுக்கு வருஞ்சகல உபத்திரவகாலங்களிலேயும் எங்களுக்கு ஆறுதல்செய்கிறவர். பராபரனாலே நாங்கள் அடைகிற ஆறுதலினாலே சகலவித உபத்திரவகாலங்களிலும் அகப்படுகிறமற்றவர்களுக்கு நாங்கள் ஆறுதல்செய்யத் திராணியாயிருக்கிறோம்.

௫. எப்படியெனில், * கிறிஸ்துவினிமித்தம் பாடுகள் எங்கள்மேலே பெருகுகிறதுபோலக் கிறிஸ்துவினாலே எங்களுக்கு ஆறுதலும் பெருகுகின்றது. * சங. ௯௪. ௰௯.

௬. ஆனதால், நாங்கள் உபத்திரவப்பட்டால், அது உங்கள் ஆறுதலுக்காகவும், இரட்சிப்புக்காகவுமிருக்கும். நாங்கள் ஆறுதலடைந்தால், அதுவும் உங்கள் ஆறுதலுக்காகவிருக்கும். நாங்கள் பாடுபடுகிறதுபோல நீங்களும்படுகிற பாடுகளைப்பொறுமையோடேசகிக்கிறதினாலே அந்த ஆறுதல்பலனைச்செய்கிறது.

௭. அப்படி நீங்கள் எங்களோடே கூடப் பாடுபடுகிறதுமல்லாமல், எங்களோடேகூட ஆறுதலையும் அடைகிறீர்களென்று நாங்கள் அறிந்து, உங்களைக்குறித்து உறுதியான நம்பிக்கையுள்ளவர்களாயிருக்கிறோம்.

௮. ஆகையால் சகோதரரே! * ஆசியாவிலே எங்களுக்குவந்த உபத்திரவத்தை நீங்கள் அறியாதிருக்கவேண்டுமென்று எங்களுக்கு மனதில்லை. என்னவெனில் பிழைப்போமாவென்றும் நாங்கள்மிகவுஞ் சந்தேகப்படத்தக்கதாக (எங்கள்) பலத்திற்குமிஞ்சின அதிகபாரம் எங்களுக்குண்டாயிற்று.

* அப. ௰௯. ௨௨, ௨௩.

௯. மேலும் மரணம்வருமென்று நாங்கள் எங்களுக்குள்ளே நிச்சயித்திருந்தோம். அது எங்கள்மேலேயல்ல, மரித்தோரை எழுப்

எங்களை நெருக்கி ஏவுகின்றது. எப்படி நிதானிக்கிறோமென்றால், * எல்லாருக்காகவும் ஒருவரே மரித்திருக்க, எல்லாரும் மரித்தார்கள். * ௧. தீமோ. ௨. ௫.

௰௫. மேலும் * பிழைத்திருக்கிறவர்கள் இனித் தங்களுக்கென்று பிழையாமல் தங்களுக்காக மரித்தெழுந்தவருக்கென்று பிழைக்கும்படிக்கு, அவர் எல்லாருக்காகவும் மரித்தாரேயென்று நிதானிக்கிறோம்.
* உரோ. ௰௪. ௭. ௬.

௰௬. ஆகையால், இதுமுதற்கொண்டு நாங்கள் ஒருவனையும், மாம்சத்தின்படி அறியோம். முன்னே நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி அறிந்திருந்தும், இப்பொழுதோ, இனிமேலும் அவரையப்படியாக அறியோம்.

௰௭. கிறிஸ்துவுக்குளிருக்கிறவன் * புதுச்சிருட்டியாயிருக்கிறான். பழையவைகள் ஒழிந்துபோயின. † சகலமும் புதிதாயிற்றே. * கலா. ௬. ௰௫; † அறி. ௨௧. ௫.

௰௮. இவையெல்லாம் பராபரனாலே யிருக்கின்றன. அவர் இயேசுகிறிஸ்துவைக்கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்குக் கொடுத்தார்.

௰௯. என்னவெனில், கிறிஸ்துவினாலே பராபரன் உலகத்தாருடைய பாவங்களை அவர்கள்மேலே சுமத்தாமல் அவர்களைத் தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குதலாகிய உபதேசத்தை எங்களிடத்தில் ஏற்படுத்தினார்.

௨௰. அப்படியினாலே நாங்கள் கிறிஸ்துவுக்காகத் தானாதிபதிகளாயிருக்கிறோம். பராபரனே எங்களாலே புத்திசொல்லுகிறவராயிருக்க, நாங்கள் கிறிஸ்துவுக்காக (மனிதர்களை) வேண்டி,

௨௧. பாவத்தையறியாதவராலே * நாம் பராபரனுக்கு முன்பாக நீதிமான்களாக்கப்படும்படிக்குப் பராபரன் † அவரை நமக்காகப் பாவமாக்கினார். ஆகையால், பராபரனோடே ஒப்புரவாகுங்களென்று வேண்டிக்கொள்ளுகிறோம். * எரேமியா. ௨௩. ௬; ௧. கொரி. ௧. ௩௰; † ஏசா. ௫௩. ௪—௬.

## ௬. அதிகாரம்.

[(௧) தன்போதகத்தினாலும், (௩) நன்னடக்கையினாலும், (௪) சுவிசேஷத்தினிமித்தம் பொறுமையோடே சகிக்கும் எல்லாத் துன்பத்தினாலும், நிந்தையினாலும் தன்னைக் கிறிஸ்துவின் உத்தம ஊழியக்காரனென்று திருஷ்டாந்தப்படுத்தி, (௰) அதைக்குறித்துத் தாராளமாயப் பட்சமுள்ள தன் இருதயத்தை அவர்களுக்கு விரித்துக்காண்பித்ததுபோல, (௰௩) அவர்களும் பட்சத்தைப் பாராட்டும்படி விரும்பி, (௰௪) அவர்கள் ஜீவனுள்ள பராபரனுடைய தேவாலயங்களாயிருக்க அஞ்ஞானிகளையும், அவர்கள் நடபடிகளையும் விலகியிருக்கச்சொல்லியது.]

மேலும் (எனக்கு) * தகுதியான காலத்திலே நான் உனக்குச் செவிகொடுத்து இரட்சணியநாளிலே உனக்கு உதவிசெய்தேனென்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே; பாருங்கள். இப்பொழுதே மிகவுந்தகுதியான காலம். இப்பொழுதே இரட்சணியநாள். * ஏசா. ௪௯. ௮.

௨. ஆனதால், எங்களுடனே கூடவேலைசெய்கிறவர்களே! * நீங்கள் பராபரனுடைய கிருபையை வீணாய்ப் பெறாதபடிக்குப் புத்திசொல்லுகிறேன். * ௧. கொரி. ௩. ௯.

௩. நம்முடைய ஊழியத்தைக்குறைப்படுத்தத்தக்கதாக நாம் ஒருவருக்கும் இடறுகாரணத்தைக் கொடாமல், எல்லாவிதத்திலேயும் நம்மைப் பராபரனுடைய ஊழியக்காரராக ஒப்புவிக்கக்கடவோம்.

௪. உபத்திரவங்கள், இக்கட்டுகள், நெருக்கங்கள்,

௫. * அடிகள், காவல்கள், கலகங்கள், பிரயாசங்கள், தூக்கமில்லாமை, உபவாசங்களுள்ள காலங்களில் மிகுந்த பொறுமையினாலும், கற்பினாலும், அறிவினாலும்,
* ௰௧. ௨௪, ௨௫.

௬. நீடியசாந்தத்தினாலும், தயவினாலும், பரிசுத்தமனதினாலும், வஞ்சகமில்லாத அன்பினாலும்,

௭. சத்தியமுள்ளவசனத்தினாலும், திவ்விய பலத்தினாலும், நீதியாகிய வலதிடதுபக்கத்தாயுதங்களினாலும்,

௮. கனத்தையும், கனஈனத்தையும், பெறுங்காலத்திலேயும், துர்க்கீர்த்தியையும், நற்கீர்த்தியையும் பெறுங்காலத்திலேயும், * எத்தரென்னப்பட்டாலும், நிசஸ்தராகவும்,
* மத். ௨௭. ௬௩.

௯. அறியப்படாதவர்களென்னப் பட்டாலும், நன்றாய் அறியப்பட்டவர்களாகவும், மரித்தவர்களென்னப்பட்டாலும், உயிரோடிருக்கிறவர்களாகவும், தண்டிக்கப்பட்டவர்களானாலும் கொலைசெய்யப்படாதவர்களாகவும்,

௰. துக்கப்படுகிறவர்களென்னப்பட்டாலும், எப்பொழுதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும், தரித்திரரென்னப்பட்டாலும், அநேகரை ஐசுவரியவான்களாக்குகிறவர்களாகவும், ஒன்றுமில்லாதவர்களென்னப்பட்டாலும், சகலத்தையுமுடையவர்களாகவும் நம்மையொப்புவிக்கக்கடவோம்.

௰௧. ஆ, கொரிந்தரே! எங்கள்வாய் உங்களுக்காகத் திறக்கப்பட்டிருக்கிறது. எங்களிருதயம் விஸ்தாரமாக்கப்பட்டிருக்கின்றது.

௰௨. எங்களுள்ளம் உங்களைக்குறித்து நெ

ருக்கபபடவிலலை. உஙகள உளளமே எஙக ளைக்குறிதது நெருககபபடடிருககினறது.

௰௩. ஆதலால, மறு ஈடாக நீஙகளுமவிஸ தாரமாகுஙகளெனறு (என்) * பிளளைகளைப் போல உஙகளிடததிற கேடடுககொளளுகி றேன. * க. கொரி. ௪. ௰௪.

௰௪. ஒரே *நுகததிலே அவிசுவாசிகளுட னே பூடடபபடாதிருபபீர்களாக. எனனத திறுலெனில, நீதிககும, அக்கிரமததிறகும எனனசம்பநதமிருககிறது. † இருளுககும, ஒளிககும ஐக்கமெனன? * உ. மோசே. ௯௪. ௰உ; † எபே. ரு. ௰க.

௰ரு. கிறிஸதுவுககும, பசாசககும இசை வுணடா? அலலது அவிசுவாசியுடனேவிசு வாசிககுபபஙகுணடா?

௰௬. விககிரகக்கோவிலகளுக்கும, பராபர னுடைய ஆலயததிறகுஞசம்பநதமுணடா? * நான அவர்களுககுளளே வாசம்பணணி அவர்களுககுளளே நடநதுகொணடு அவர் களுடைய தேவனுயிருப்பேனெனறும்,அவர் கள எனனுடையசனஙகளாயிருபபார்களெ னறும பராபரன சொனனபடி, நீஙகள † சீவனுளளபராபரனுடைய ஆலயமாயிரு க்கிறீர்களே. * ௩. மோசே. உ௬. ௰உ; † க. கொரி. ௩. ௰௬.

௰எ. * ஆனபடியினாலே நீஙகள அவர்களி டததிலிருநது புறபபடடுபபிரிநதுபோய, அசுததமானதைத்தொடாதிருஙகள.
* ஏசா. ருஉ. ௰க; அறி. ௰அ. ௪.

௰அ. அபபொழுது நான உஙகளையஙகி கரிததுககொணடு, * உஙகளுககுபபிதாவா யிருபபேன. நீஙகள எனககுககுமாரருமா ய,குமாரததிகளுமாயிருபபீர்களெனறுசர்வ வலலமையுளளபராபரனசொலலுகிறுர்.
* சங. ௱௩. ௰௩; எரே. ௩க. ௯-உ௰.

## எ. அதிகாரம்.

[(க) பரிசுததமாயநடக்குமபடிக்கும, (உ) தானஅவர்களுககுபபாராடடினபட்சததை அவர்கள தனககுபபாராடடவும, (௩) தன னுடைய முநதினநிருபததில அவர்களுககு சசொலலியபுததிகளைமேறறுககொணடுதே யவயததனமாயத துககபபடடதைத்திதது விளுற கேள்விபபடடதறகாகவும, (௰௩)தா லமுநதி அவர்களைககுறிததுப பெருமைபா ராடடினதற்கொத்ததாய் அவர்களதிததுவி ல அனபுகூர்நது அவனுககுக்கீழபபடிநத தற்காகவுந தன உபததிரவஙகளிலுஞ சந தோஷபபடடானெனறுசொலலியது.]

இபபடிபபடடவாக்குததத்தங்கள்நம க்குணடாயிருக்க, பிரியமானவர்க ளே! சரீரததையும், ஆவியையும் அசுசிபபடு த்துகிறயாவறறிறகும நாம்விலகி, நம்மைச சுததிகரிததுக்கொணடு தேவபயததோடே

முழுவதும பரிசுததவானகளாகுமபடி நட நதுகொளளக்கடவோம.

உ. எஙகளையங்கிகரிததுக் கொளளுஙகள. நாஙகள ஒருவனுககும அநியாயஞசெயய விலலை. ஒருவனையுஙகெடுக்கவிலலை.

௩. ஒருவனையும் வஞசிக்கவிலலை உஙகளைக் குறறவாளிகளாக்குமபொருடடாக இபபடி நானசொலலுகிறதிலலை. முனனே நான சொனனபடி உஙகளுடனே கூடசசாகவு ம, கூடபபிழைக்கவுநதக்கதாக, * எஙகளி ருதயஙகளிலிருக்கிறீர்களே. * ௬. ௰க, ௰உ.

௪. ஆனதால, மிகுநதபபிரியததோடே உஙகளுடனேபேசுகிறேன. உஙகளைக்குறித துமிகவும்பெனமைபாராட்டுகிறேன. ஆறு தலால நிறையபபடடிருக்கிறேன. எஙகளு க்குவநதிருக்கிறமிகுநத உபததிரவததிலே பரிபூரணசநதோஷபபடுகிறேன.

ரு. எபபடியெனறால, நாஙகள மக்கெதோ னியாநாடடிலேவநதபொழுது, எங்களசரீ ரததிறகு அமைதலொனறுமிலலாமல எபப க்கததிலேயும உபததிரவபபடடோம. புற ம்பேபோராடடஙகளும, உளளேபயஙகளு மிருநதன.

௬. ஆகிலும, * தாழமையானவர்களுககு ஆறுதலசெயகிற பராபரன திததுவநதத் னாலே யெங்களுககு ஆறுதலசெயததார்.
* க. ௪, ரு.

எ.அவனவநததினாலமாத்திரமல்ல.உஙகள வாஞசையையும்,உங்களதுககிபபையும்என ககாக உஙகளுககுளளபததி வயிராககியத தையும் அவன எங்களுக்கறிவிததபொழுது, தான உங்களாலே ஆறுதலையடைநததினா லும, அதிகமாயச சநதோஷபபடடேன.

அ. ஆனதால, நான என * நிருபததினா லேயுஙகளைததுக்கபபடுததியிருநதும், மன ஸதாபப்படமாடடேன. அநத நிருபங்கொ ஞசபபொழுதாகிலும் உங்களைததுக்கபபடு ததிறறெனறு நானபார்தது, மனஸதாபப் படடிருநதும, இபபொழுது நீஙகள துக கபபடடதினாலேயலல. * உ. ௪.

௯. நீஙகள மனநதிருமபுகிறதறகேதுவாக த்துககபபடடதினாலே சநதோஷபபடுகி றேன. நீஙகள ஒனறிலும எங்களாலநஷ்ட பபடாதபடிககுததேவெத்தனமான துக்கம் அடைநதீர்களே.

௰. * தேவெததனமான துககம பினனேம னஸதாபமிலலாமல இரட்சிபபுககேதுவான மனநதிருமபுதலையுணடாக்குகினறது. † லவு கிகதுக்கமமரணததையுணடாககுகினறது.
* மத. உ௬. எரு; உ. சாமு. ௰உ. ௰௩; † க. திமோ. ௬. ௰.

௰க. பாருங்கள. நீஙகள தேவெததனமா ன துககம அடைநதது உங்களிடததில எ ததனைசாககிரதையையும, எததனைநியாய ஞசொல்லுதலையும்,எத்தனைவிசனததையும்,

பபான. பரிபூரணமாய விதைககிறவன பரிபூரணமாய அறுபபான. * வாக.யக. உச;- யகூ. ௰எ.

எ. அவனவன விதனமாயலல, கட்டாயமாயுமலல, தான மனதிலே விருமபுகிறபடியே கொடுக்கக்கடவன.

அ. * சந்தோஷமாயக கொடுக்கிறவனிடததிற பராபரன அனபாயிருககிறுரே. பராபரனும நீஙகள எலலாவறறிலேயும, எபபொழுதும மிகுநத திருததியுடையவர்களாய, சகலவித நறகிரியைகளுககுஞ சமபூரணமுளளவர்களாயிருககுமபடிககு உஙகளிடததிற சகலவித கிருபையுஞ சமபூரணமாயிருக்கச செயய வலலவராயிருககிறுர். * உ. மோ. உரு. உ.

கூ. அவன தெளிததான. * ஏழைகளுககுக கொடுததான. அவனுடைய நீதி என்றென்றைககும நிறகுமென்றெழுதியிருககிற விதமாயிருககும. * சங. ௱யஉ. கூ.

௰. அநதபபடி விதைககிறவனுககு விதையையும, புசிககிறதறகு அபபததையும அளிககிறவர் உஙகளவிதையையும அதிகமாயப பெருகபபணணி உஙகள நீதியின விளைசசலகளைவளரச செயவார்.

யக. அதினுலே நீஙகள மிகுநத உதாரமுளளவர்களாயிருககுமபடிககு எலலாவிதத்திலேயுஞ சம்பூரணமுளளவர்களாவீர்கள. அதினுலே நாஙகளும பராபரனுககுத தோத்திரமுசெலுததததறகு எழுபபப்படுவோம்.

யஉ. இநதத்தருமநடததையினூழியமானது பரிசுததவானகளுடையகுறைவுகளை நீககுகிறதறகுமாததிரமலல, அநேகர் பராபரனைத தோத்திரிக்கிறதறகும ஏதுவுளளதாயிருககின்றதே.

யங. அவர்களிவவூழியததினுசததையுக்கண்டு, நீஙகள கிறிஸதுவினசுவிசேஷததை கீழ்ப்படிதலோடே அறிககைபணணுகிறதறகாகவும, நீஙகளுககும, மறற யாவருக்கும உதாரமாயத தருமததைச செயகிறதறகாகவும பராபரனைத துதிககும,

யச. உஙகளுககாக வேணடுதல செயது, பராபரன உஙகளுககு அளிதத மிகவும மேனமையான கிருபையினிமித்தம உஙகளமேலவாஞசையாயிருககிறுர்கள.

யரு. பராபரன அனுககிரகததுக்குச் சொலல * முடியாததான ஈவுக்காக அவருககுத தோத்திரமுணடாவதாக. * உரோ. அ. ஙஉ.

## ய. அதிகாரம்.

[(க) தனனைஇகழ்ச்சிசெயத களளஅபபோஸதலர்களுககுத தனனுடைய அதிகாரத்தையும, அவர்களை வெலலுகிறதறகுத்தேவான தனனிடததிலுளள ஞானபுததிகளையுமின்னதெனறுகூறி, (எ) நிருபஙகளிலேவலலமையுளளவனுயிருககிறதுபோலத் தான அவர்களிடததில வருமபோது வசனததிலும வலலவனுயிருபபேனென்றுசொலலி, (யஉ) அவர்களுடைய வீணபெருமைபாராட்டலையும, அவர்களமறறவர்களுடைய பிரயாசைகளைத தஙகளுடையவைகளாகச்சொல்ளவதையுங கடிநது கொணடது.]

மேலும உஙகளுககுமுனபாக விருககுமபொழுது தாழமையாயும, தூரததிலே யிருககுமபொழுது உஙகளமேல தயிரியமாயுமிருககிறபவுலாகிய நான * கிறிஸதுவினசாநததினுலும, தயையினுலும உஙகளுககுப புததிசொலலுகிறேன. * மத். யக. உகூ.

உ. நான கேடடுககொளளுகிறதெனனவெனில, நான உஙகளமுனபாகவிருககும்போது, எஙகளைச சரீரததினபடி நடககிறவர்களெனறு எணணுகிறசிலருககு நான கணடிப்பாயிருககநினைககிறதால அநதத் துணிவோடே நான தயிரியமுளளவனுயிராதபடிககுச செயவீர்களாக.

ங. நாஙகளசரீரததோடே நடநதுதிரிந்தும சரீரததினபடி போராட்டமபணணாட்டோம்.

ச. எஙகளுடையபோர் * ஆயுதஙகள மாம்சததிறகேறற (பலவீனமுளள) வைகளாயிராமல, அரணகளை நிர்மூலமாககுகிறதறகு வலிய பெலனுளளவைகளாயிருககின்றனவே. * எபே. சு, யச.

ரு. அவைகளால நாஙகள அசநதையான சிநதனைகளையும, பராபரனையறிகிற அறிவுககுவிரோதமாய உயருகிறஎலலாவித மேட்டிமையையும நிர்மூலமாககி, எநதபபுததியையும கிறிஸதுவுககுக்கீழ்ப்படியசசிறைபபடுத்ததுகிறவர்களாயிருநது,

சு. நீஙகளநிறைவாயக கீழ்ப்படிதலிருககுமபொழுது எலலாக கீழ்ப்படியாமைககும நீதியுளளதணடனையைச செலுதத எததனமாயிருககிறேம்.

எ. முகததிறகு முனனிருககிறவைகளை (மாத்திரம) பார்ககிறீர்களா! ஒருவன தனனைக கிறிஸதுவுககுரியவனெனறு நமபிககொணடால அவனதான கிறிஸதுவுககுரியவனுயிருககிறதுபோல நாஙகளும கிறிஸதுவுககுரியவர்களெனறு தனனுலேதானே சிந்திக்ககடவன.

அ. அனறியுமலலாமல * உஙகளை நிர்மூலமாககுகிறதறகலல, எழுபபுகிறதறகுக்கர்த்தர் எஙகளுககுக்கொடுதத அதிகாரததைக குறித்து நான இனனுஞ்சறறே யதிகமாய மேனமைபாராட்டினுலும், நான வெட்கபபடுவதிலலை. * யங. ௰.

கூ. நான நிருபஙகளாலேயுஙகளைப பயமுறுததுகிறவனுபத தோனறுதபடிககுச்

திரம் (அப்படி மேன்மைபாராட்டமாட்டேன்.)

௰. அவனுடைய நிருபங்கள் பாரமும், பெலனுமுள்ளவைகள். ஆகிலுஞ் சரீரத்தின் தோற்றம் பலவீனமுமாய், அவனுடைய வசனம் அற்பமுமாயிருக்கிறதென்கிறார்களே.

௰௧. அப்படிச் சொல்லுகிறவன் நிருபங்களின் வசனத்தினாலே தூரத்திலிருக்கிற நாங்கள் தோன்றுகிறதெப்படியோ அப்படி முகத்திற்கு முன்பாகவும், கிரியையிலேயும் நாங்கள் தோன்றுவோமென்று சிந்திக்கக்கடவன்.

௰௨. ஆகிலுந் தங்களைத்தாமே புகழுகிற சிலருக்கு நாங்கள் எங்களைச் சரியாக்கவும், ஒப்பிடவுந் துணியமாட்டோம். அவர்கள் தங்களாலே தங்களை அளந்து கொண்டு, தங்களுக்கே தங்களை ஒப்பிட்டுக்கொண்டு (தங்களை) அறியாதவர்களாயிருக்கிறார்கள்.

௰௩. நாங்கள் (எங்களுக்கு) அளந்து கொடாதவைகளைக் குறித்து மேன்மை பாராட்டாமல் உங்களிடமவரைக்கும் எட்டத்தக்கதாகப் பராபரன் எங்களுக்கு அளந்துகொடுத்த அளவின்படியே மேன்மைபாராட்டுகிறோம்.

௰௪. கிறிஸ்துவின் சுவிசேஷத்தோடே நாங்கள் உங்களிடமவரைக்கும் வந்தோமே ஆகையால் உங்களிடத்தில் வந்தெட்டாதவர்களாய் நாங்கள் அளவுக்கு மிஞ்சிப்போகிறதில்லை.

௰௫. அளவுக்கு மிஞ்சி அந்நியருடைய வேலைக்குட்பட்டு, மேன்மை பாராட்டமாட்டோம்.

௰௬. ஆகிலும் உங்கள் விசுவாசம் வளர்ந்திருக்கும்பொழுது உங்களுக்கு அப்புறமான இடங்களிற் சுவிசேஷத்தை யறிவிக்கவும், அந்நிய எல்லைகளுக்குள்ளே செய்யப்பட்டவைகளை நாங்கள் செய்ததாக மேன்மைபாராட்டாதிருக்கவுந்தக்கதாக, எங்கள் அளவு உங்களாலே மிகவும் பெருகுமென்று நம்பிக்கையாயிருக்கிறோம்.

௰௭. * மேன்மை பாராட்டுகிறவன் கர்த்தாவைக் குறித்தே மேன்மைபாராட்டக்கடவன். * எரே. ௯. ௨௩; ௧. கொரி. ௧. ௩௧.

௰௮. * தன்னைத்தான் புகழுகிறவனல்ல. கர்த்தராலே புகழப்படுகிறவனெவனோ அவனே உத்தமனாயிருப்பான். * வாக. ௨௭. ௨.

## ௰௧. அதிகாரம்.

[(௧) தன்னைப்பார்க்கிலுங் கள்ள அப்போஸ்தலர்களை மேன்மையாக எண்ணின கொரிந்தர்பேரிலே தனக்கிருந்த வைராக்கியத்தினாலே தன்னைக் கட்டாயத்தினாலே மேன்மை பாராட்டி, (௫) தான் பிரதான அப்போஸ்தலருக்குச் சரியானவனென்றும், (௭) கொரிந்தருக்கு இலவசமாய்ச் சுவிசேஷத்தை யறிவித்தவனென்றும், (௰௫) கள்ளப்போதகர்களைப்பார்க்கிலும் தான் வெளிக்க மேன்மைகளிலும், (௨௫) கிறிஸ்துவின் ஊழியத்திலும், பலபாடுகளிலுங் குறைந்தவனல்லவென்றுஞ் சொல்லியது.]

நீங்கள் என் புத்தியீனத்துக்குச் சற்றே பொறுமையாயிருந்தால் நலமாயிருக்கும். எனக்குப் பொறுத்துமிருக்கிறீர்களே.

௨. * நானுங்களைக் கற்புள்ள கன்னிகாஸ்திரியாகக் கிறிஸ்துவென்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியால் உங்களுக்காகத் தேவவைராக்கியமாய வைராக்கியங்கொண்டிருக்கிறேன். * ஓசே. ௨. ௰௯, ௨௰.

௩. ஆகிலும் * அந்தப்பாம்பு தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல, உங்கள் மனதுங் கிறிஸ்துவின்மேலுள்ள பத்தியின் உண்மையை விட்டு விலகிக்கெடுக்கப்படுமோவென்று பயந்திருக்கிறேன். * ௧. மோசே. ௩. ௧.

௪. எப்படியெனில், (உங்களிடத்தில்) வந்திருக்கிறவன் நாங்கள் பிரசங்கியாத * வேறொரு இயேசுவைப் பிரசங்கித்தாலாவது, அல்லது நீங்கள் பெறாத வேறொரு ஆவியையும், நீங்கள் ஏற்றுக்கொள்ளாத வேறொரு சுவிசேஷத்தையும் (அவனாலே) பெற்றீர்களானால், அவனை நன்றாய் ஏற்பீர்கள். * கலா. ௧. ௬—௮.

௫. * மிகவும்பெரிய அந்த அப்போஸ்தலருக்கு நானெவ்வளவாகிலுங் குறைவுள்ளவனல்லவென்றெண்ணுகிறேன். * ௧. கொரி. ௰௫. ௰.

௬. நான் பேச்சிலே கல்லாதவனாயிருந்தாலும், அறிவிலே கல்லாதவனல்ல. எப்பொழுதும், எல்லாவிதங்களிலேயும் உங்களுக்குள்ளே (அப்படியே) வெளிப்பட்டிருக்கிறோமே.

௭. அல்லது நீங்களுயர்த்தப்படும்படிக்கு நான் என்னைத்தாழ்த்திப் பராபரனுடைய சுவிசேஷத்தை யிலவசமாய் உங்களுக்கறிவித்ததினாலே குற்றஞ்செய்தேனோ?

௮. (இல்லையே) உங்களுக்கே யூழியஞ்செய்யும்படிக்கு, மற்றச் சபைகளைக்கையிலே நான் சம்பளம்பற்றிக்கொண்டேன்.

௯. நானுங்களிடத்திலிருந்து குறைச்சலனுபவித்தபொழுதும், ஒருவரையும் நான் வருத்தப்படுத்தவில்லை. மக்கெதோனியாவிலிருந்து வந்த சகோதரர் என் குறைவை நீக்கினார்களே. எவ்விதத்திலேயும் உங்களுக்குப் பாரமாயிராதபடிக்குப் பார்த்தேன். இனிமேலும் அப்படியே பார்ப்பேன்.

௰. * அகாயா நாட்டின் திசைகளிலே இந்தப் புகழ்ச்சி யென்னிடத்தினின்று நீங்குவதில்லையென்று, என்னிலுள்ள கிறிஸ்துவினுடை

படிக்கு அது பராபரனுடைய ஈவாயிருக்கிறது.

௰. நற்கிரியைகளைச்செய்வதற்கு நாம் கிறிஸ்து இயேசுவினாலே சிருட்டிக்கப்பட்டுப் * பராபரனுடைய செய்கையாயிருக்கிறோமே. அவைகளை நாம் செய்து நடக்கும்படிக்கு அவர் நம்மை முன்னுக்கு எத்தனம்பண்ணியிருக்கிறார். * சங்கீ. ௱௩௮. ௮; ௨. கொரி. ௫. ௰௭.

௰௧. ஆனபடியினாலே முன்னே சரீரத்தின்படி புறத்தேசத்தாராயிருந்து, சரீரத்திலே கையினால் செய்யப்படுகிற விருத்தசேதனமுள்ளவர்களாலே விருத்தசேதனமில்லாதவர்களென்னப்பட்ட நீங்கள்,

௰௨. அக்காலத்திலே கிறிஸ்துவைச்சேராதவர்களுமாய், இஸ்ரவேலருடைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களுமாய், வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கைகளுக்கு அந்நியருமாய், நம்பிக்கையில்லாதவர்களுமாய், பராபரனை யறியாதவர்களுமாய் இவ்வுலகத்திலே யிருந்தீர்களென்று நினைத்துக்கொள்வீர்களாக.

௰௩. முன்னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது கிறிஸ்து இயேசுவைச்சேர்ந்து கிறிஸ்துவினுடைய இரத்தத்தினாலே சமீபமானீர்கள்.

௰௪. எப்படியெனில், * அவரே நம்முடைய சமாதானத்திற்குக்காரணராகி, இருதிறத்தாரையும் ஒன்றாக்கி, பிரிவினையாகிய நடுச்சுவரைத்தகர்த்து, * ஏசா. ௯. ௬, ௭.

௰௫. சடங்குச்சட்டங்களைக்குறித்துண்டான கற்பனைகளாகிய நியாயப்பிரமாணமாகிய பகையைத் தம்முடைய சரீரத்தினாலே நீக்கிப்போட்டு, இப்படிச்சமாதானம்பண்ணினதால், இருதிறத்தாரையுந் தமக்குள்ளாக * ஒரே புதிய மனிதனுக்குச் சிருட்டித்து, * ௨. கொரி. ௫. ௰௭.

௰௬. பகைக்கேதுவானதைத் தம்மாலே அழித்ததால், சிலுவையினாலே இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகப் பராபரனுக்கு ஒப்புரவாக்கினார்.

௰௭. அல்லாமலும், அவர் வந்து, தூரமாயிருந்த உங்களுக்கும், சமீபமாயிருந்த அவர்களுக்கும் * சமாதானத்தைச் சுவிசேஷமாக அறிவித்தார். * ஏசா. ௫௭. ௰௯.

௰௮. அந்தப்படியே நாம் இருதிறத்தாரும் ஒரே ஆவியோடே * பிதாவினிடத்தில் சேருஞ்சிலாக்கியத்தை அவராலே பெற்றிருக்கிறோம். * உரோ. ௫. ௨.

௰௯. ஆகையால், நீங்களினிமேல் அந்நியருமாய், குடும்பத்தைச் சேராதவர்களுமாயிராமல், * பரிசுத்தவான்களோடே கூடப்பட்டவர்களுமாய், பராபரனுடைய குடும்பத்தைச்சேர்ந்தவர்களுமாய், * கலா. ௪. ௨௬, ௩௧.

௨௰. அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகளென்பவர்களுடைய அஸ்திபாரத்தின்மேல் கட்டப்பட்டவர்களுமாயிருக்கிறீர்கள். அந்த அஸ்திபாரத்திற்கு இயேசுக்கிறிஸ்துதாமே * மூலைக்கல்லாயிருக்கிறார். * ஏசாயா. ௨௮. ௰௬.

௨௧. அவர்மேலே மாளிகை முழுவதும் இசைவாய் இணைக்கப்பட்டுக் கர்த்தருக்குப் பரிசுத்த ஆலயமாகப்பெருகுகிறது.

௨௨. அவர்மேலே நீங்களும் ஆவியினாலே பராபரனுடைய வாசஸ்தலமாகக் கூடக்கட்டப்பட்டிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

[(௩) புறச்சாதிகளும் இரட்சிக்கப்படுவார்களென்ற, (௪) பரம இரகசியம். (௫) பவுலுக்கு வெளிப்படுத்தப்பட்டு, (௬) தனக்கருளகிடைத்ததென்று சொல்லி, (௰) அதை யாவருக்கும் அறிவிக்க, (௰௩) தான் அநுபவிக்கிற உபத்திரவங்களினிமித்தம் அவர்கள் சோர்ந்துபோகாதிருக்கவும், (௰௪) அவர்கள்மேல் கிறிஸ்துப்பாராட்டினமிகுந்த அன்பை அவர்கள் அறியவும், (௰௪) பவுல் வேண்டிக்கொண்டது.]

இதுமுகாந்தரமாக, பவுலென்னும் நான் புறத்தேசத்தாராயிருக்கிற உங்களுக்காகக் கிறிஸ்து இயேசுவினிமித்தம் * காவலில் வைக்கப்பட்டவனாயிருக்கிறேன். * ௪. ௧.

௨. * உங்களுக்காக எனக்குக்கொடுத்திருக்கிற தேவ கிருபையைக்காட்டிய உத்தியோகமின்னதென்று கேட்டிருப்பீர்களே. * அப்போ. ௨௨. ௨௧.

௩. என்னவெனில், * புறத்தேசத்தார் சுவிசேஷத்தினாலே உடன்சுதந்தரருமாய், அவர்களுடனேகூட ஒரே சரீரமுமாய், கிறிஸ்துவின்மேல் அவர்பண்ணின வாக்குத்தத்தத்திற்கு உடன்பங்காளிகளுமாயிருக்கிறார்களென்று இந்த இரகசியத்தை யவர் எனக்கு வெளிப்படுத்தியறிவித்தார். * ௨. ௰௩.

௪. முன்னே நான் இதைக்குறித்துச் சுருக்கமாய் எழுதினேன்.

௫. அதை நீங்கள் வாசிக்கையில் கிறிஸ்துவின் இரகசியத்தைக்குறித்து எனக்குண்டாயிருக்கிற அறிவையறிந்துகொள்வீர்கள்.

௬. அந்த இரகசியம் * இப்பொழுது அவருடைய பரிசுத்த அப்போஸ்தலருக்குந் தீர்க்கதரிசிகளுக்கும் தேவ ஆவியினாலே வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல முன்னிருந்த தலைமுறைகளின் மனிதர்களுக்குத் தெரியப்படுத்தப்பட்டிருக்கவில்லை. * ௧. ௯, ௰.

௭. இந்தச்சுவிசேஷத்திற்கு நான் பராபரனுடைய பலத்தத்துவத்தால் எனக்களிக்கப்பட்ட கைமாறில்லாத கிருபையினாலே ஊழியக்காரனானேன்.

பெண்சாதிகளில் அன்புகூரவேண்டியதைக் குறித்துச்சொன்னது.]

இவ்விதமாய் * நீங்கள் பிரியமான பிள்ளைகளைப்போலப் பராபரனைப் பின்பற்றுகிறவர்களாகி, * மத்தே. ௫. ௪௮.

௨. கிறிஸ்துவானவர் நமக்காகத் தம்மைப் பராபரனுக்குச் சுகந்த வாசனையான காணிக்கையாகவும், பலியாகவும் ஒப்புக்கொடுத்து, நம்மிடத்தில் அன்புகூர்ந்ததுபோல, நீங்களும் அன்புள்ளவர்களாய் நடந்துகொள்ளுங்கள்.

௩. அன்றியும் பரிசுத்தவான்களுக்கேற்றபடியே, * வேசித்தனமும், மற்றெந்த அசுத்தமும், அல்லது பொருளாசையும் உங்களுக்குள்ளே சொல்லப்படவுங்கூடாது. * கொலோ. ௩. ௫.

௪. வம்பும், புத்தியீனமான பேச்சும், பரியாசமும் அப்படியேயிருக்கப்படாது. அவைகள் தகாதவைகள், தோத்திரஞ்செய்தலே தகும்.

௫. * வேசித்தனக்காரன், அல்லது அசுத்தவான், அல்லது விக்கிரக ஆராதனைக்காரனாகிய பொருளாசைக்காரனொருவனும் பராபரனுடைய இராச்சியமாகிய கிறிஸ்துவின் இராச்சியத்திலே சுதந்தரத்தையடைவதில்லையென்றறிந்திருக்கிறீர்களே, * ௧. கொரி. ௬. ௯, ௰.

௬. இப்படிப்பட்டவைகளுக்காகக் * கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகள்மேலே பராபரனுடைய கோபாக்கினை வருவதால், ஒருவனும் உங்களை வீணான வார்த்தைகளால் வஞ்சியாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து, * கொலோ. ௩. ௬.

௭. அவர்களுக்குப் பங்காளிகளாகாதிருப்பீர்களாக.

௮. முற்காலத்திலே அந்தகாரமுள்ளவர்களாயிருந்தீர்கள். இப்பொழுது கர்த்தரைக்கொண்டு ஒளியுள்ளவர்களாயிருக்கிறீர்கள். * ஒளியின் பிள்ளைகளுக்கேற்றதாய் நடந்துகொள்ளுங்கள். * பிலிப். ௨. ௰௫.

௯. ஒளியின் கனி சகலவித நற்குணமும், நீதியும், சத்தியமுமானது.

௰. கர்த்தருக்குப் பிரியமானதின்னதென்று நீங்கள் ஆராய்ந்துபார்த்து,

௰௧. * பலனற்ற அந்தகாரக் கிரியைகளுக்கு உடன்பாடாயிராமல், அவைகளைக் கடிந்துகொள்வீர்களாக. * ௨. கொரி. ௬. ௰௪.

௰௨. அவர்களால் ஒளிப்பிடமாய்ச் செய்யப்படுங் கிரியைகளைச் சொல்லுகிறதும் அவலட்சணமாயிருக்கிறதே.

௰௩. அவைகளெல்லாம் ஒளியினாற் கடிந்துகொள்ளப்பட்டு வெளியரங்கமாகும். வெளியரங்கமாக்குகிறவையெல்லாம் ஒளியாயிருக்கின்றது.

௰௪. ஆதலால் * தூங்குகிற நீ விழித்து மரித்தோரைவிட்டெழுந்திரு. அப்பொழுது கிறிஸ்து உன்னைப் பிரகாசிப்பிப்பாரென்று சொல்லியிருக்கிறது. * ஏசா. ௬௰. ௧.

௰௫. ஆனபடியினாலே நீங்கள் ஞானமற்றவர்களைப்போலல்ல, ஞானமுள்ளவர்களைப்போலவே எச்சரிக்கையாய் நடந்துகொள்ளப்பார்த்து,

௰௬. நாட்கள் பொல்லாதவைகளாயிருக்கிறபடியால், * காலத்தை வாங்கிக்கொள்ளுங்கள். * கொலோ. ௪. ௫.

௰௭. ஆகையால் நீங்கள் மதியற்றவர்களாகாமல், கர்த்தருடைய சித்தமின்னதென்று அறிந்திருக்கிறவர்களாகி,

௰௮. * கெட்ட மார்க்கத்துக்கேதுவாய்த் திராட்சரசத்தால் வெறிகொள்ளாமல், ஆவியினாலே நிறையப்பட்டு, * வாக்கி. ௨௩. ௨௯—௩௫; ஏசா. ௫. ௰௧, ௰௨.

௰௯. * சங்கீதங்களாலும், கீர்த்தனங்களாலும், ஞானப்பாட்டுகளாலும் ஒருவருக்கொருவர் புத்திசொல்லிக்கொண்டு, உங்கள் இருதயத்திலே கர்த்தரைப்பாடிக் கீர்த்தனம்பண்ணி, * கொலோ. ௩. ௰௬, ௰௭.

௨௰. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே எப்பொழுதும் எல்லாவற்றிற்காகவும் பிதாவாகிய பராபரனைத் தோத்திரித்து,

௨௧. தேவபயத்தோடே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்.

௨௨. * ஸ்திரீகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறதுபோல நீங்கள் உங்கள் சுய புருஷருக்குக் கீழ்ப்படிங்கள். * ௧. பேது. ௩. ௧; கொலோ. ௩. ௰௮.

௨௩. கிறிஸ்து (தமது) சபையாகிய சரீரத்திற்குத் தலையாயும், இரட்சகராயுமிருக்கிறதுபோலப் * புருஷனானவன் (தன்) மனைவிக்குத் தலையாயிருக்கிறான். * ௧. கொரி. ௰௧. ௩.

௨௪. ஆகையால் சபையானது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிகிறதுபோல மனைவிகளும் எக்காரியத்திலேயுந் தங்கள் சொந்த புருஷர்களுக்குக் கீழ்ப்படவேண்டும்.

௨௫. புருஷர்களே, கிறிஸ்துத் தமது சபையில் அன்புகூர்ந்து அதற்காகத் தம்மைத் தாமே ஒப்புக்கொடுத்ததுபோல நீங்களும் * உங்கள் மனைவிகளில் அன்புகூரக்கடவீர்கள். * கொலோ. ௩. ௰௯.

௨௬. அவர் தமது சபையை மாசுகிளாமுதலானவைகளிலொன்றுமில்லாமற் * பரிசுத்தமும், பிழையற்றதுமான மகிமையுள்ளதாகத் தமக்குமுன் நிறுத்திக்கொள்ளும்பொருட்டாக; * சங். ௪௫. ௰௩, ௰௪.

௨௭. அதைப் பரிசுத்தமாக்கத் திவ்விய வசனத்தோடே கூடிய தண்ணீர் முழுக்கி

தேவனாம், என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்.

௫. நான் உங்களுக்காகச் சந்தோஷத்தோடே விண்ணப்பம்பண்ணி,

௬. உங்களிடத்தில் *நற்கிரியையைத் தொடங்கினவர் இயேசுக்கிறிஸ்துவினுடைய நாள்வரைக்கும் அதை முடிய நடத்துவாரென்று நம்பியிருக்கிறேன். * யோவ. ௬. ௨௯.

௭. * நான் கட்டப்பட்டுச் சுவிசேஷத்திற்காக உத்தரவுசொல்லி அதைத் திடப்படுத்திக்கொண்டிருக்கையில் நீங்களெல்லாரும் உங்கள் இருதயத்திலே என்னைத் தரித்துக்கொண்டு, என்னோடேகூடக் கிருபையிற் பங்குள்ளவர்களாயிருக்கிறபடியினாலே, உங்களெல்லாரையுங்குறித்து நான் இப்படி நினைக்கிறது நியாயமாயிருக்கிறது. * அப். ௨௮. ௰௬.

௮. அந்தப்படி இயேசுக்கிறிஸ்துவினுடைய உருக்கமான அன்பைப்போலுள்ள அன்பிலே நான் உங்களெல்லார்மேலும் எவ்வளவாய் ஆசையாயிருக்கிறேனென்பதைக்குறித்துப் பராபரனே எனக்குச் சாட்சியாயிருக்கிறார்.

௯. மேலும் வித்தியாசமானவைகளை வகையறுத்தறிகிறதற்காக நீங்கள் அறிவிலும், சகலவித உணர்விலும் அதிகமதிகமான அன்புள்ளவர்களாயும்,

௰. கிறிஸ்துவின் நாள்வரைக்கும், உண்மையும், வழுவில்லாமையுமுள்ளவர்களாயும்,

௰௧. பராபரனுக்குத் துதியும், புகழ்ச்சியுமுண்டாக இயேசுக்கிறிஸ்துவினாலே வருகிற நீதியாகிய கனியினாலே நிறைந்தவர்களாயுமிருக்கும்படிக்குச் செபம்பண்ணுகிறேன்.

௰௨. அன்றியும், சகோதரரே! நான் உங்களுக்கு அறிவிக்கவிரும்புகிறதென்னவென்றால், எனக்குச் சம்பவித்தவைகள் * சுவிசேஷம் அதிகப் பிரபலமாகும்படிக்கு ஏதுவாயிருந்தன. * லூக். ௨௧. ௰௩; அப்போ. ௰௬. ௰௯—௨௪.

௰௩. எப்படியென்றால், நான் கிறிஸ்துவினிமித்தங் கட்டப்பட்டிருக்கிறது. இராசஅரமனையிலெங்குமுள்ளவர்களுக்கும், மற்றெல்லாருக்கும் வெளியரங்கமானதுமல்லாமல்,

௰௪. கர்த்தரைப்பற்றிய சகோதரரில் அநேகமானவர்கள் நான் கட்டப்பட்டிருக்கிறதினாலே திடன்கொண்டு, (திவ்விய) வசனத்தைப் பயமில்லாமற்சொல்லும்படி அதிகத் துணிவுள்ளவர்களானார்கள்.

௰௫. சிலர் பொறாமையினாலும், விரோதத்தினாலும், சிலர் நல்லமனதினாலும் கிறிஸ்துவைப் பிரசங்கித்து வருகிறார்கள்.

௰௬. இவர்கள் சுவிசேஷத்திற்காக நான் நியாயம்பேசிக்கொள்ளும்படி வைக்கப்பட்டிருக்கிறதை அறிந்து, அன்பினாலே அப்படிச் செய்கிறார்கள்.

௰௭. அவர்கள் நான் கட்டப்பட்டிருக்கிற உபத்திரவத்தோடே உபத்திரவத்தைக் கூட்டலாமென்றெண்ணி, உண்மையில்லாமல், விரோதத்தினாலே கிறிஸ்துவைப் பிரசங்கிக்கிறார்கள்.

௰௮. இதினாலென்னவாயிற்று, வஞ்சகத்தினாலாகிலும், உண்மையினாலாகிலும் பிரசங்கத்தாலும் கிறிஸ்துவே அறிவிக்கப்படுகிறார். அதினாலே சந்தோஷப்படுகிறேன். இன்னுஞ் சந்தோஷப்படுவேன்.

௰௯. நான் ஒன்றிலும் வெட்கப்படாமல், மிகுந்த தயிரியமாயிருந்து, எப்போதும்போல இப்பொழுதும் சீவனாலாகிலும், சாவினாலாகிலுங் கிறிஸ்து என் சரீரத்திலே புகழப்படுவாரென்று நான் மிகவும் ஆசைப்பட்டு நம்பிக்கொண்டிருக்கிறபடியே,

௨௰. அந்தப்பிரகாரம் உங்கள் வேண்டுதலினாலும், இயேசுக்கிறிஸ்துவினுடைய ஆவியினுதவியினாலும் அது எனக்கு இரட்சிப்பாக முடியுமென்றறிந்திருக்கிறபடியால், (அப்படிச் சந்தோஷப்படுகிறேன்.)

௨௧. * கிறிஸ்து எனக்குச் சீவனாயிருக்கிறார், சாவும் எனக்கு ஆதாயமாயிருக்கும். * கலா. ௨. ௨௰.

௨௨. ஆகிலும் தேகத்திற் பிழைக்கிறதினாலே என் கிரியைக்குப் பலனுண்டாயிருப்பதால், நான் தெரிந்துகொள்ளவேண்டியது இன்னதென்று எனக்குத் தெரியாது.

௨௩. அவ்விரண்டினாலும் நான் நெருக்கப்படுகிறேன். * மரித்துப்போய்க் கிறிஸ்துவினிடத்திலிருக்கும்படி மிகவும் விரும்புகிறேன், அது மிகவும் அதிக நன்மையாயிருக்கும். * ௨. கொரி. ௫. ௮; லூக். ௨௩. ௪௩.

௨௪. அப்படியிருந்தும், தேகத்தில் இருக்கிறது உங்களுக்காக அதிக அவசியமாயிருக்கிறது.

௨௫. இதை நான் நிச்சயமாய் அறிந்திருக்கிறபடியால், நான் மறுபடியும் உங்களிடத்தில் வருகிறதினால் நீங்கள் என்னைக்குறித்துக் கிறிஸ்துஇயேசுவினாலே மேன்மைபாராட்டிக்கொள்ளுதல் பெருகும்பொருட்டு,

௨௬. விசுவாசத்தில் நீங்கள் சம்பூரணமும், சந்தோஷமுமுள்ளவர்களாகும்படிக்கு நான் பின்னும் (உயிர்) தரித்துக்கொண்டு, உங்களெல்லாரோடுங்கூட இருப்பேனென்று அறிந்திருக்கிறேன்.

௨௭. எப்படியும் நான் வந்து உங்களைக் கண்டாலும், உங்களுக்குத் தூரமாயிருந்தாலும், நீங்கள் ஒரே ஆவியிலே நிலைநின்று, ஒரே ஆத்துமாவினாலே சுவிசேஷத்தின் விசுவாசத்திற்காகக் கூடப்போராட்டம்பண்ணி, எதிர்க்கிறவர்களால் ஒன்றிலும் மருளாதிருக்கிறீர்களென்று உங்களைக்குறித்துத் தான் கேட்கும்படிக்கு, நீங்கள் கிறிஸ்துவி

ன சுவிசேஷத்திற்குப் பாத்திரராக மாத்தி ரம் நடந்துகொள்ளக்கடவீர்கள்.

உஅ. அதுவே அவர்கள் கெட்டுப்போகு றதற்கும், நீங்கள் இரட்சிக்கப்படுகிறதற்கும் அ டையாளமாயிருக்கிறது. அது பராபர னுடைய செயல்.

உகூ. அவராலே நீங்கள் கிறிஸ்துவின்பே லே விசுவாசமாயிருக்கிறதற்குமாத்திரமல் ல, முன்னே * என்னிடத்தில் நீங்கள் கண்ட தும், இப்பொழுது என்னைக்குறித்துக் கேள்விப்படுகிறதுமாயிருக்கிற போராட் டமுங்களுக்குமுண்டாயிருக்கிறதால்,
* அப். யசு. உஉ, உங.

ஙo. அவர் நிமித்தம் பாடுபடுகிறதற்கும் அருளப்பெற்றீர்களே.

## உ. அதிகாரம்.

[(க) அவர்களை ஏகசிந்தையுள்ளவர்களும், தா ழ்மையுள்ள மனதுள்ளவர்களுமாயிருந்து, தாழ்மைப்பட்டு மேன்மையடைந்த கிறிஸ்து வைப் பின்பற்றவும், (யஉ) இந்தச் சீர்கெட்ட லோகத்திற் சுடர்களைப்போலப் பிரகாசிக்க வும், (யங) பராபரனுக்குச் செலுத்தப்படும் படி ஆயத்தமாயிருக்கிற அவர்களின் அப் போஸ்தலனுக்கு ஆறுதலாயிருக்கவு ம், இரட்சிப்பின் பாதையிலே எச்சரிக்கையா ய் நடக்கவும் புத்திசொல்லி, (யகூ) அவர்க ளிடத்தில் தான் அனுப்புகிற தீமோத்தேயு வையும், (உரு) அனுப்பின எப்பாப்பிரோதீத் துவையும் மெய்ச்சிக்கொண்டது.]

இதினாற் கிறிஸ்துவுக்குள் யாதொரு ஆறுதலும், அன்பினாலே சந்தோ ஷப்படுத்தலும், ஆவியோடே ஐக்கியமும், உருக்கமான பட்சமும், இரக்கங்களுமுண் டானால்,

உ. நீங்கள் ஒரேவிதமாயச் சிந்தைபண் ணிக்கொண்டு, * ஒரேவிதமான அன்புள்ள வர்களாய், இசைந்த ஆத்துமாக்களாய் ஒன் றையே சிந்தித்துக்கொண்டு இப்படி என் சந்தோஷத்தை நிறைவேற்றுவீர்களாக.
* க. உஎ.

௩. * ஒன்றையும் நீங்கள் வாதத்தினாலே யும் வீண்பெருமையினாலேயும் செய்யாமல் மனத்தாழ்மையினாலே † ஒருவரையொரு வர் தங்களிலும் மேன்மையானவர்களென் றெண்ணிக்கொள்ளுவீர்களாக. * கலாத். ரு. உகூ; † உரோ. யஉ. ய.

௪. * அவனவன் தங்களுக்கானவைகளை மாத் திரமல்ல, பிறருக்கானவைகளையும் நோக்கு வீர்களாக. * க. கொரி. ய. உ௪.

ரு. * கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தை யே உங்களிலுமிருக்கக்கடவது. * மத்தே. யக. உகூ.

௬. அவர் * பராபரனுடைய சாயலாயிருந் தும், பராபரனுக்கொப்பாயிருக்குதலைக்

உககு



கொள்ளையிடப்பட்ட உடைமையென்றெண் ணாமல், * கொலோ. க. யரு.

எ. தம்மைத்தாமே வெறுமையாக்கி * அ டிமையின் உருவெடுத்து † மனிதர் சாய லாகப் பிறந்ததுமல்லாமல், * ஏசா. ருங. ங; † யோவா. க. யச.

அ. அவர் மனுஷரூபமாகக் காணப்பட்டபி ன்பு, மரணத்திற்குத் * தம்மைத்தாழ்த்திச் சிலுவையின் மரணத்திற்குங் கீழ்ப்பட்டவரா னார். * எபி. யஉ. உ.

கூ. அதினாலே பராபரனும், * அவரை மிக வும் உயர்த்தி, * எபே. க. உo-உஉ.

ய. பரமண்டலத்திலும், பூமண்டலத்திலு ம், கீழ்லோகத்திலுமுள்ளவைகளாவும், * இயேசு வின் நாமத்தைத் தொழுதுமுழங்காற்படியி டும்படிக்கும், * ஏசாயா. ௪ரு. உங, உ௪; அப்பி. ரு. அ—யங.

யக. பிதாவாகிய பராபரனுக்குத் துதியுண் டாக இயேசுக்கிறிஸ்துக் கர்த்தரென்று நாவு களெல்லாம் அறிக்கையிடும்படிக்கும் சகல நாமங்களுக்கும் மேலான நாமத்தை அவரு க்குக் கொடுத்தார்.

யஉ. ஆகையினாலே எனக்குப் பிரியமானவ ர்களே, நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிகிற படி நான் உங்களுக்குச் சமீபமாயிருக்கிற பொழுது மாத்திரமல்ல, நான் தூரமாயிருக் கிறஇப்பொழுதும் அதிகமாய் * பய த்தோடும், நடுக்கத்தோடும் உங்கள் இரட் சிப்பையடையப் பிரயாசப்படுங்கள்.
* க. பேது. க. யஎ.

யங. விருப்பத்தையும், செய்கையையும் பராபரன் உவப்பாய் உங்களுக்குள்ளேயு ண்டாக்குகிறவராயிருக்கிறார்.

ய௪. கோணலும், மாறுபாடுமுள்ள சந்ததியா ருக்குள்ளே நீங்கள் குற்றமற்ற, கபடமில் லாதவர்களாயும், பராபரனுடைய மாசில் லாத பிள்ளைகளாயுமிருப்பதற்கு,

யரு. சகலத்தையும் * முறுமுறுப்பில் லாமலும், தர்க்கிப்பில்லாமலும் செய்வீர் களாக. * க. பேது. ௪. கூ, ய.

யசு. நான் வீணாக ஓடினதும், வீணாய்ப் பி ரயாசப்பட்டதுமில்லையென்று கிறிஸ்துவின் நாளிலே எனக்கு மேன்மையுண்டாயிருப் பதற்கு நீங்கள் * ஜீவவசனத்தைப் பிடித் துக்கொண்டு உலகத்திலே அவர்களுக்குள் ளே † சுடர்களைப்போலப் பிரகாசியுங்கள்.
* உ. தீமோ. க. யங. † மத். ரு. யச. எபேசி. ரு. அ.

யஎ. நான் உங்கள் விசுவாசமாகிய பலியி ன்மேலும், ஊழியத்தின்மேலும் * வார்க்கப் பட்டுப்போனாலும் மகிழ்வேன். உங்களனை வரோடுங்கூட மகிழ்ச்சியாகவுமிருப்பேன்.
* உ. தீமோ. ௪. சு.

யஅ. இதற்காக நீங்களும் மகிழ்

ஸ்து இயேசுவை * அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்றெண்ணிக்கொண்டிருக்கிறேன். அவருக்காகத்தான் அவைகளையெல்லாம் நஷ்டமாக்கத்தள்ளினேன். * யோவா. ௰௭. ௩.

௯. நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கும், * நியாயப்பிரமாணத்தினால் வருகிற சுயநீதியையல்ல, கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே வருகிறதுமாய், விசுவாசமூலமாய்ப் பராபரனாலே வருகிறதுமாயிருக்கிற நீதியையுடையவனாயிருந்து, இப்படிக் கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவனாய்க் காணப்படும்படிக்கும் சகலத்தையுங் குப்பையைப்போல் எண்ணியிருக்கிறேன். * உரோ. ௩. ௨௰.

௰. இப்படி நான் அவரையும், * அவர் உயிரோடெழும்புதலின் பலத்தையும், அவருடைய பாடுகளோடே ஐக்கியத்தையும் அறிந்திருக்கிறதுமல்லாமல், * உரோ. ௬. ௪, ௫.

௰௧. எப்படியும் நானும் மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்திருப்பதற்குத் தகுதியாகும்படிக்கு அவருடைய மரணத்திற்கொப்பான மரணத்துக்கேதுவாயிருக்கிறேன்.

௰௨. (அதை) நான் இப்பொழுதே அடைந்தவனாக அல்லது இப்பொழுதே தேறினவனாகச் சொல்லாமல் * கிறிஸ்து இயேசுவினாலே நான் எதற்காகப் பிடிக்கப்பட்டேனோ † அதைப் பிடித்துக்கொள்ளும்படி பின்தொடருகிறேன். * யோவா. ௰௨. ௩௨; † ௧. தீமோ. ௬. ௰௧, ௰௨.

௰௩. சகோதரரே, நான் (அதைப்) பிடித்துக்கொண்டேனென்றெண்ணுகிறதில்லை. ஒன்று செய்கிறேன். பின்னானவைகளை நான் மறந்து முன்னானவைகளைச் சாக்கிரதையாய் நாடி,

௰௪. கிறிஸ்து இயேசுவினாலே பராபரன் உயரத்திலிருந்து என்னை அழைத்த அழைப்பின் * பந்தயப்பொருளுக்காகக் குறித்திருக்கிற மார்க்கமாய்ப் பின்தொடருகிறேன். * ௧. கொரி. ௯. ௨௪.

௰௫. ஆகையால் நம்மில் தேறினவர்கள் யாவரும் இப்படியே சிந்திக்கக்கடவோம். எதையாகிலும் நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்திப்பீர்களானால், அதையும் பராபரன் உங்களுக்கு வெளிப்படுத்துவார்.

௰௬. எப்படியும் நாம் எதுவரையில் வந்திருந்தாலும், இந்தப் பிரமாணத்தின்படியே நடந்துகொண்டு * ஒரேவிதமாய்ச் சிந்தைபண்ணக்கடவோம். * ௧. பேது. ௩. ௮.

௰௭. சகோதரரே, நீங்கள் * என்னோடேகூடப் பின்பற்றுகிறவர்களாகி, நாங்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை நோக்குங்கள். * ௧. கொரி. ௪. ௰௬;—௰௧. ௧.

௰௮. அநேகர் கிறிஸ்துவின் சிலுவைக்குப்

உளகள

பகைஞராக நடக்கிறார்கள். அவர்களைக்குறித்து நான் உங்களுக்கு அநேகந்தரஞ் சொன்னேன். இப்பொழுது அழுதுகொண்டேயும் (அப்படி) சொல்லுகிறேன்.

௰௯. அவர்களுடைய முடிவு அழிவு. * அவர்களுடைய தேவன் வயிறு. அவர்களுடைய மகிமை அவர்கள் இலச்சையிலிருக்கிறது. பூமிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள். * உரோ. ௰௬. ௰௮.

௨௰. நம்முடைய இருப்பிடம் * பரமண்டலங்களிலிருக்கின்றது. † அங்கேயிருந்து கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து இரட்சகர் ‡ வரப்பார்த்துக்கொண்டிருக்கிறோம். * எபேசி. ௨. ௬; கொலோ. ௩. ௧—௩; † அப்போ. ௧. ௰௧; ‡ தீத்து. ௨. ௰௩.

௨௰௧ அவர் எல்லாவற்றையுந் தமக்குக் கீழ்ப்படுத்தும்படிக்கு மிகுந்த பலமுடையவராகையால், * நம்முடைய அற்பமான சரீரம் மகிமையுள்ள தம்முடைய சரீரத்திற்கொப்பாயிருக்கும்படி அதை மறுரூபப்படுத்துவார். * ௧. கொரி. ௰௫. ௪௩—௫௩.

## ௪. அதிகாரம்.

[(௧) தனித்தும், (௪) பொதுவாகவுஞ் சில புத்திகளைச் சொல்லி, (௰) காவலிலிருந்த தனக்கு அவர்கள் அனுப்பின உதவிக்காகவும், விசேஷமாக அவர்களிருந்த தேவகிருபைக்காகவுஞ் சந்தோஷப்பட்டு, (௰௯) அவர்களுக்காகச் செபம்பண்ணி அவர்களை வாழ்த்தினது.]

இப்படியினாலே எனக்கு அன்பானவர்களுமாய், என்னாலே ஆசிக்கப்பட்டவர்களுமாய், * எனக்குச் சந்தோஷமுங் கிரீடமுமாயிருக்கிற சகோதரரே, பிரியமானவர்களே, இந்தப்படியே கர்த்தரிடத்தில் நிலைகொண்டிருப்பீர்களாக. * ௧. தெச. ௨. ௰௯, ௨௰.

௨. கர்த்தராலே ஒரேவிதமான சிந்தையாயிருக்கும்படிக்கு ஐயோதியாளுக்குஞ், சிந்திகேயாளுக்கும் புத்திசொல்லுகிறேன்.

௩. அல்லாமலும் என் உத்தமக்கூட்டாளியே, அவர்களுக்குத் துணையாயிருக்கும்படிக்கு உன்னையும் வேண்டிக்கொள்ளுகிறேன். அவர்கள் கிலெமெந்தோடும், மற்ற என் உடன் வேலையாட்களோடுங்கூடச் சுவிசேஷத்தைக் குறித்து என்னோடேகூடப் போராடினார்கள், அவர்களுடைய நாமங்கள் * ஜீவபுஸ்தகத்திலிருக்கின்றன. * லூக். ௰. ௨௰; அறிவி. ௩. ௫;—௨௰. ௰௨;—௨௧. ௨௭.

௪. * கர்த்தருக்குள் எப்பொழுதுஞ் சந்தோஷமாயிருங்கள். சந்தோஷமாயிருங்களென்று மறுபடியுஞ் சொல்லுகிறேன். * ௩. ௧.

௫. உங்கள் சாந்தகுணம் எல்லாச்சனங்களுக்குந் தெரியவரக்கடவது. * கர்த்தர் சமீபமாயிருக்கிறார். * யாக். ௫. ௮, ௯.

௬. * நீங்களொன்றுக்குங் கவலைப்படாமல், எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களைத் தோத்திரத்துடனே கூடிய செபத்தினாலும், வேண்டுதலினாலும் பராபரனுக்கு அறிவிப்பீர்களாக. * ௧. பேதுரு. ௫. ௭.

௭. அப்பொழுது * எல்லாப்புத்திக்கும் மேலான தேவசமாதானங் கிறிஸ்து இயேசுவினாலே உங்களிருதயங்களையும், சிந்தைகளையுங் காப்பாற்றும். * யோவா. ௧௪. ௨௭.

௮. சகோதரரே, கடைசியிலே சத்தியமுள்ளவைகளெவைகளோ, இலக்கணமுள்ளவைகளெவைகளோ, நீதியுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவைகளோ, சிநேகத்திற்கேதுவானவைகளெவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகளெவைகளோ, மற்றப்புண்ணியமெதுவோ, புகழ்ச்சியுள்ளதெதுவோ அவைகளையே சிந்தித்துக்கொள்வீர்களாக.

௯. நீங்கள் என்னிடத்திற்கற்றும், அடைந்தும், கேட்டும், கண்டுமிருக்கிறவைகளைச் செய்யுங்கள். அப்பொழுது சமாதானம்பொருந்திய பராபரன் உங்கள்பக்கலேயிருப்பார்.

௰. என்னை விசாரிக்கும்படிக்கு நீங்கள் இக்காலத்திலே மறுபடியும் மலர்ந்திருக்கிறபடியினாலே, கர்த்தராலே மிகவுஞ் சந்தோஷப்பட்டேன். (முன்னேயும்) இப்படிச்செய்யச் சிந்தையாயிருந்தீர்கள். சமயமாத்திரம் உங்களுக்கு நேரிடவில்லை.

௧௧. என்குறைச்சலினாலே நான் இப்படிச் சொல்லவில்லை. எந்தநிலைமையிலிருந்தாலும் * மனச்சந்தோஷமாயிருக்கக்கற்றுக்கொண்டேன். * ௧. தீமோத். ௬. ௬.

௧௨. தாழ்ந்திருக்கவும் எனக்குத்தெரியும். பெருகியிருக்கவும் எனக்குத்தெரியும். எவ்விடத்திலேயும், எல்லாவற்றிலேயுந் திருப்தியாயிருக்கவும், பசியாயிருக்கவும், பரிபூரணப்படவும், குறைவுபடவும்படித்தேன்.

௧௩. * என்னைப் பலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே நான் எவற்றையுஞ் செய்யத்திராணியுண்டு, * யோவா. ௧௫. ௫.

௧௪. அப்படியிருந்தும் என் உபத்திரவத்திலே என்னுடனே ஐக்கப்பட்ட நீங்கள் நன்றாய்ச்செய்தீர்கள்.

௧௫. பிலிப்பியரே, உங்களுக்குந்தெரிந்திருக்கிறபடி, சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான் மக்கெதோனியா நாட்டுக்குப் புறப்பட்டபொழுது, நீங்கள்மாத்திரமேயல்லாமல், வேறொருசபையுங் கொடுக்கல்வாங்கலென்பதைக்குறித்து உதவியாயிருக்கவில்லை.

௧௬. நான் தெசலோனிக்கேயிலிருந்தபொழுதும், நீங்களே என்குறைச்சலை நீக்கும்படிக்கு இரண்டொருதரம் அனுப்பினீர்கள்.

௧௭. காணிக்கையை நான் விரும்பாமல் * உங்கள் கணக்குப்பெருகவேண்டுமென்று பலனைவிரும்புகிறேன். * ௨. கொரி. ௯. ௬.

௧௮. இப்பொழுது வேண்டியவையெல்லாம் எனக்குவந்திருக்கின்றன. பரிபூரணமுண்டாயிருக்கின்றது. உங்களால் அனுப்பப்பட்டவைகளாயும், பராபரனுக்குச் சுகந்தவாசனையாயும், பிரியமும், சந்தோஷமுமான பலியாயுமிருக்கிறவைகளை எப்பாப்பிரோதீத்துவினகையில வாங்கிக்கொண்டதால், நான் நிறைவாயிருக்கிறேன்.

௧௯. அன்றியும் என்தேவனானவர் தம்முடைய மகிமையுள்ள ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவுகளையாவையுங் கிறிஸ்து இயேசுவினாலே நீக்கி நிறைவை அருளிச்செய்வார்.

௨௰. நம்முடைய பராபரனும், பிதாவுமானவருக்கே என்றென்றைக்கும் மகிமையுண்டாகக்கடவது. ஆமென்.

௨௧. கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்களியாவருக்கும் வாழ்த்துதல்சொல்லுங்கள். என்னுடனேயிருக்கிற சகோதரர் உங்களுக்கு வாழ்த்துதல்சொல்லுகிறார்கள்.

௨௨. பரிசுத்தவான்களனைவரும், விசேஷமாக இராசனுடைய அரமனையிலுள்ளவர்களும் உங்களுக்கு வாழ்த்துதல்சொல்லுகிறார்கள்.

௨௩. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபை யுங்களனைவரோடுங் கூடவிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகியபவுல்

# கொலோசருக்கெழுதினநிருபம்.

(கி. பி. பின். ௬௪. ௵)

## ௧. அதிகாரம்.

[(௧) அவர்களைவாழ்த்தி அவர்கள் விசுவாசத்துக்காகப் பராபரனை ஸ்தோத்திரித்து, (௭) எப்பாப்பிறாவின் உபதேசத்தை ஸ்திரப்படுத்தி, (௯) அவர்கள்கிருபையிலவளரும்படி செபம்பண்ணி. (௰௪) மெய்யானகிறிஸ்துவின மகிமையைக்கூறி, (௨௧) அவரை யவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி ஏவித்தன ஊழியத்தைக்குறித்துச்சொல்லியது.]

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய அப்போஸ்தல

னாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயும்,

௨. கொலோசெயூரிலே கிறிஸ்துவுக்குள்ளிருக்கிற பரிசுத்தவான்களுமாய், விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரருக்கு எழுதுகிறதாவது; நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும், சமாதானமும் உண்டாகக்கடவது.

௩. நீங்கள் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருக்கிறதையும் சத்தியவசனமாகிய சுவிசேஷத்தினாலே முன்பு கேட்டதுமாய்,

௪. * பரமண்டலங்களிலுங்களுக்காக வைக்கப்பட்டதுமாயிருக்கிற (நித்திய சுதந்தரத்தை) நம்புகிறதினாலே சகல பரிசுத்தவான்கள்மேலும் அன்புகூருகிறதையும் நாங்கள் கேள்விப்பட்டு, * ௧. பேதுரு. ௧. ௪, ௫.

௫. உங்களுக்காக எப்பொழுதும் ஜெபம் பண்ணி, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாய், தேவனுமாயிருக்கிறவரைத் தோத்திரஞ்செய்கிறோம்.

௬. இந்தச் சுவிசேஷம் உலகத்திலெங்கும் வியாபித்துப் பலனைக்கொடுக்கிறதுபோல, (அது) உங்களிடத்திலுஞ் சேர்ந்து, நீங்கள் பராபரனுடைய கிருபையையுண்மையாய்க் கேட்டறிந்துகொண்டநாள்முதல் உங்களுக்குள்ளும் பலனைக்கொடுக்கிறதாயிருக்கின்றது.

௭. அதை நீங்கள் எங்களுக்குப் பிரியமான உடன்வேலைக்காரனுமாய், உங்களுக்காகக் கிறிஸ்துவினுடைய உண்மையான ஊழியக்காரனுமாயிருக்கிற * எப்பாப்பிறாவினிடத்திற் கற்றுக்கொண்டவர்களாயுமிருக்கிறீர்கள். * ௪. ௰௨; பிலே. ௨௩. வசனம்.

௮. ஆவிக்கேற்ற உங்கள் அன்பை அவன் எங்களுக்கு அறிவித்தவனுமாயிருக்கிறான்.

௯. ஆகையால் அதைக் கேள்விப்பட்டநாள்முதல், நாங்கள் உங்களுக்காக விண்ணப்பம் பண்ணி, * நீங்கள் எல்லாவிதமான நற்கிரியைகளைச் செய்கிறவர்களாயும், † பராபரனையறிகிற அறிவை மிகமிதிகமாய் அடைகிறவர்களாயும், * எபேசி. ௪. ௧-௩; பிலிப்பி. ௧. ௨௭; † எபேச. ௧. ௰௭—௰௯.

௰. சந்தோஷத்தோடேபொறுமையாயும், நீடியசாந்தமாயுமிருப்பதற்கு, அவருடைய மகிமைபொருந்திய வல்லமையினாலே எல்லாவிதமான பலத்தையுடையவர்களாயும்,

௰௧. ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்திற்குப் பங்காளிகளாவதற்கு நம்மைத் தகுதியானவர்களாக்கி, இருளினுடைய * அதிகாரத்தினின்று விடுதலைபண்ணித் தமக்கு அன்பாயிருக்கிற குமாரனுடைய இராச்சியத்திற்குட்படுத்திவைத்த பிதாவை



த் தோத்திரஞ்செய்கிறவர்களாயுமிருந்து, * எபேச. ௨. ௯.

௰௨. (இப்படி) கர்த்தாவுக்குப் பாத்திரமாயும், மிகுந்த பிரியமாயும் நடக்கும்படிக்கு,

௰௩. எல்லா ஞானத்தோடும், பரிசுத்த ஆவிக்கேற்ற விவேகத்தோடுந்தம்முடைய திருச்சித்தத்தையறிகிற அறிவினாலே யுங்களை நிரப்பவேண்டுமென்று, ஓயாமல் அவரை நோக்கி வேண்டிக்கொள்ளுகிறோம்.

௰௪. * அவருடைய குமாரன் தம்முடைய திரு இரத்தத்தைச் சிந்தினதினாலே நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்கின்றது. * எபேச. ௧. ௭.

௰௫. * அவர் அதரிசயமாயிருக்கிற பராபரனுடையசாயலுமாய், * எபிரே. ௧. ௩; ௨. கொரிந். ௪. ௪.

௰௬. பரமண்டலங்களிலும், பூமியிலுமுள்ள காணப்படுகிறவைகளும், காணப்படாதவைகளுமாகிய யாவற்றையும், சிங்காசனங்களிலிருக்கிறவர்களையும், கர்த்தத்துவமுடையவர்களையும், பிரபுக்களையும், அதிகாரிகளையுமுண்டாக்கினபடியினாலே, சிருஷ்டிகளையாவற்றுக்கும் முதலானவருமாயிருக்கிறார். *சகலமும் அவராலும், அவருக்காகவுஞ் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. * யோவான். ௧. ௩; எபிரேயர். ௧. ௨.

௰௭. *எல்லாவற்றிற்கும் முன்னமேயிருக்கிறார். சகலவஸ்துக்களும் அவராலே நிலையாயிருக்கின்றன. * யோவா. ௧. ௧.

௰௮. அவர் தமது சபையாகிய சரீரத்திற்குத் தலையாயிருக்கிறதுமல்லாமல், எல்லாவற்றிற்கும் அவர் முந்தினவராயிருக்கும்படிக்கு ஆதியும், * மரித்தோரிலிருந்தெழுந்த முதற்பேறுமானவராயிருக்கிறார்

* அப. ௨௬. ௨௩; ௧. கொரி. ௰௫. ௨௰; அபி. ௧. ௫.

௰௯. * சகலசம்பூரணமும், அவருக்குள்ளே வாசமாயிருக்கும்படிக்கும், * ௨. ௯.

௨௰. அவர் சிலுவைமரத்திலே சிந்தின தம்முடைய இரத்தத்தினாலே சமாதானமுண்டு பண்ணினபின் பூமியிலும், பரமண்டலங்களிலுமுள்ள * வஸ்துக்களையாவையும் அவராலே தம்முடனே யொப்புரவாக்கும்படிக்கும் பிதாவானவர் பிரியமாயிருந்தார்.

* ௨. கொரி. ௫. ௰௯; ௧. யோவா. ௨. ௨.

௨௧. முன்னே நீங்கள் பொல்லாத கிரியைகளினாலே (உங்கள்) மனதிலே சத்துருக்களுமாய், அந்நியருமாயிருந்தீர்கள்.

௨௨. இப்பொழுது உங்களைப் பரிசுத்தவான்களாகவும், மாசற்றவர்களாகவும், குற்றஞ்சாற்றப்படாதவர்களாகவுந் தமக்கு முன்பாக நிறுத்தும்படிக்கு. அவர் தமது மாம்சதேகத்தை மரணத்திற்கொப்புக்கொடுத்ததினாலே உங்களையும் ஒப்புரவாக்கினார்.

௨௩. நீங்கள் கேட்டதாயும், வானத்தின

௰௧. அங்கே * கிரேக்கனென்றும், யூதனென்றும், விருத்தசேதனமுள்ளவனென்றும், விருத்தசேதனமில்லாதவனென்றும், புறத்தேசத்தானென்றும், இஸ்கித்தனென்றும், அடிமையென்றும், சுயாதீனனென்றும் (சொல்லப்பட்ட வேற்றுமை) யில்லை. கிறிஸ்துவே யெல்லாருக்குள்ளும், எல்லாமுமாயிருக்கிறார். * உரோ. ௰. ௰௨.

௰௨. அப்படியிருக்க நீங்கள் பராபரனாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களாயும், பரிசுத்தராயும், சிநேகிக்கப்பட்டவர்களாயுமிருக்கையால், * உருக்கமான இரக்கத்தையும், தயையையும், மனத்தாழ்மையையும், பொறுமையையும், நீடிய சாந்தத்தையுந் தரித்துக்கொண்டு, * எபே. ௪. ௩௨.

௰௩. * ஒருவரையொருவர் தாங்கி ஒருவன் மற்றொருவன்மேல் விதனமாயிருந்தால் கிறிஸ்து உங்களுக்கு மன்னித்ததுபோல † நீங்களும் ஒருவருக்கொருவர் மன்னியுங்கள். * எபே. ௪. ௨, ௩; † மத். ௰௮. ௩௩.

௰௪. அன்றியும் அவைகளெல்லாவற்றின்மேலும் அன்பைத் தரித்துக்கொள்ளக்கடவீர்கள். அதுவே பூரணசற்குணங்களையிணைக்கிற கச்சையாயிருக்கிறது.

௰௫. அல்லாமலும் பராபரனுடைய சமாதானம் உங்களிருதயங்களுக்குள்ளே ஆளுகைசெய்யக்கடவது. நீங்கள் ஒரே சரீரமாயிருக்கும்படிக்கு அந்தச் சமாதானத்திற்கு அழைக்கப்பட்டீர்களே. நன்றியறிதலுள்ளவர்களாயுமிருப்பீர்களாக.

௰௬. கிறிஸ்துவினுடைய வசனம் உங்களுக்குள்ளே பரிபூரணமாய் வாசமாயிருக்கக்கடவது. சகல ஞானத்தோடும், * சங்கீதங்களினாலும், கீர்த்தனைகளினாலும், மற்ற ஞானப்பாட்டுகளினாலும் ஒருவருக்கொருவர் போதித்துப் புத்திசொல்லிக்கொண்டு பராபரனை உங்களிருதயங்களிலே யினிதாய்ப்பாடி, * எபே. ௫. ௰௯, ௨௰.

௰௭. * நீங்கள் வசனத்தைச்சொன்னாலும், கிரியைசெய்தாலும், எதைச்செய்தாலும் அவைகளையெல்லாம் கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்திலே செய்து அவர் முன்னிலையாய்ப் பிதாவாகிய பராபரனைத் தோத்திரியுங்கள். * ௧. கொரி. ௰. ௩௧.

௰௮. * ஸ்திரீகளே, கர்த்தருக்கேற்கும்படி யுங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்படிருங்கள். * எபே. ௫. ௨௨—௨௪; ௧. பேது. ௩. ௧, ௨.

௰௯. புருஷர்களே, உங்கள் மனைவிகளில் அன்புகூருங்கள். அவர்களுக்குக் கசப்புக் கொடாதிருங்கள். * எபே. ௫. ௨௫—௩௩; ௧. பேது. ௩. ௭.

௨௰. * பிள்ளைகளே, உங்களைப் பெற்றவர்களுக்கு எவ்விதத்திலுங் கீழ்ப்படிருங்கள். அதுவே பராபரனுக்குப் பிரியமாயிருக்கிறது. * எபே. ௬. ௧—௩.

௨௧. * பிதாக்களே, உங்கள் பிள்ளைகள் திடனற்றுப்போகாதபடி அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள். * எபே. ௬. ௪.

௨௨. * வேலைக்காரரே, சரீரத்தின்படி யுங்களுக்கு எசமான்களானவர்களுக்கு நீங்கள் எவ்விதத்திலுங் கீழ்ப்படிந்து, மனுஷருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்களைப்போல எசமான்கள் காணும்பொழுது மாத்திரம் ஊழியஞ்செய்கிறவர்களாயிராமல் பராபரனுக்குப் பயந்து கபடமில்லாத இருதயத்தோடே கீழ்ப்படியுங்கள். * எபே. ௬. ௫—௮; ௧. பேது. ௨. ௰௮.

௨௩. மேலும் நீங்கள் கர்த்தாவாயிருக்கிற கிறிஸ்துவுக்கூழியஞ்செய்கிறபடியால், சுதந்தரமென்னும் பலனைப் பெறுவோமென்றறிந்தவர்களாய்,

௨௪. எவைகளைச்செய்தாலும் அவைகளையெல்லாம் மனிதருக்காகவல்ல, கர்த்தருக்காகவே மனசந்தோஷமாய்ச் செய்யுங்கள்.

௨௫. * அநியாயஞ்செய்கிறவன் தான்செய்த அநியாயத்தால் வரும்பலனை யடைவான். பட்சபாதமேயில்லை. * ௧. பேது. ௧. ௰௭.

## ௪. அதிகாரம்.

[(௧) அவர்கள் செபம்பண்ணவும், கிறிஸ்துவின் மெய்யறிவுக்கு வந்தேட்டாதவர்களைக் குறித்து ஞானமாய் நடந்துகொள்ளவும் புத்தி சொல்லி, (௰) அவர்களை வாழ்த்தினது.]

எசமான்களே, * உங்களுக்கும் பரமண்டலங்களிலே எசமானிருக்கிறாரென்றறிந்தவர்களாய் நீங்கள் வேலைக்காரருக்கு நீதியுமாய், செவ்வையுமாயிருக்கிறதைக் கொடுங்கள். * எபே. ௬. ௯.

௨. * தோத்திரத்தோடே விண்ணப்பம்பண்ணுதற்கு விழித்திருந்து, உறுதியாய் விண்ணப்பம்பண்ணுங்கள். * லூக். ௰௮. ௧.

௩. அவ்வேளையிலே கிறிஸ்துவின் மறைபொருளினிமித்தங் கட்டப்பட்டிருக்கிற நான் பேசவேண்டியபிரகாரமாக அதை வெளிப்படுத்திப் பேசும்படிக்கு,

௪. பராபரன் இந்த வசனத்திற்கு வாசலைத் திறக்கவேண்டுமென்று * எங்களுக்காகவும் விண்ணப்பம்பண்ணுங்கள். * எபே. ௬. ௰௯, ௨௰.

௫. * நீங்கள் காலத்தைப் பற்றிக்கொண்டு புறம்பானவர்களுக்குமுன்பாக ஞானமாய் நடந்துகொள்வீர்களாக. * எபேசி. ௫. ௰௫, ௰௬.

௬. நீங்கள் அவனவனுக்குத் தகுதியான உத்தரவுசொல்லும்வகையை யறியும்படிக்கு உங்கள் வசனம் எப்பொழுதும் * இனிதாயும், † உப்பால் இரசமேற்றுகிறது

போலவுமிருக்கக்கடவது. * எபே. ௪. ௨௯; † மாற. ௯. ௫௰.

௭. பிரியமான சகோதரனுமாய், உண்மையுள்ள ஊழியக்காரனுமாய், என்னுடனேகூடக் கர்த்தருக்கு வேலையாளுமாயிருக்கிற தீகிக்கென்பவன் என் செய்திகளையெல்லாம் உங்களுக்கறிவிப்பான்.

௮. உங்கள் செய்திகளையறிந்து உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல்செய்யும்படிக்கு,

௯. நான் அவனையும், உங்களிலொருவனாகிய உண்மையுள்ள பிரிய சகோதரனான * ஒநேசிமு என்பவனையும் உங்களிடத்திலனுப்பியிருக்கிறேன். அவர்கள் இவ்விடத்துச் செய்திகளையெல்லாம் உங்களுக்கறிவிப்பார்கள். * பிலே. க. ௰.

௰. என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறவனாகிய அரிஸ்தர்க்கென்பவனும், பர்னபாவுக்கினத்தானாகிய மாற்கென்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள். இந்த மாற்கைக்குறித்துக் கட்டளைகளையடைந்தீர்களே. அவன் உங்களிடத்தில் வரும்பொழுது, அவனை யங்கிகரித்துக்கொள்ளுங்கள்.

௰௧. இயுஸ்து என்னப்பட்ட இயேசுவும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான். விருத்தசேதனமுள்ளவர்களில் இவர்கள் மாத்திரம் பராபரனுடைய இராச்சியத்திலே யென்னுடனேகூட ஊழியக்காரராய் எனக்கு ஆறுதல்செய்துகொண்டுவந்தார்கள்.

௰௨. உங்களிலொருவனாயிருக்கிற கிறிஸ்துவின் ஊழியக்காரனாகிய எப்பாப்பிறாவென்பவன் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான். நீங்கள் பராபரனுடைய சித்தமானவைகளெல்லாவற்றிலேயும் அறிவு நிறைந்தேறினவர்களுமாய், நிறைவுள்ளவர்களுமாயிருக்கும்படிக்கு அவன் எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பங்களினால் போராடுகிறான்.

௰௩. அப்படியே அவன் உங்களுக்காகவும், இலாவோதிக்கேயா, இயேராப்பொலியென்னுமூர்களிலுள்ளவர்களுக்காகவும் மிகுந்த சாக்கிரதையுள்ளவனாயிருக்கிறானென்பதற்குச் சாட்சியாயிருக்கிறேன்.

௰௪. பிரியமான வயித்தியனாகிய * லூக்காவென்பவனும், தேமாவென்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்.
* ௨. தீமோ. ௪. ௰௧.

௰௫. இலாவோதிக்கேயாவிலிருக்கிற சகோதரர்களுக்கும், நிம்பாவென்பவனுக்கும், அவன் வீட்டில் கூடுகிற சபையாருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்கள்.

௰௬. இந்த நிருபம் உங்களிடத்தில் வாசிக்கப்பட்டபின்பு, இலாவோதிக்கேயாச்சபையிலும் வாசிக்கப்படும்படிக்கும், இலாவோதிக்கேயாவிலிருந்துவரும் நிருபத்தை நீங்களும் வாசிக்கும்படிக்கும் செய்யுங்கள்.

௰௭. அர்க்கிப்புவை நோக்கி, நீ கர்த்தரிடத்தில் பெற்ற ஊழியத்தை நிறைவேற்றப் பார்ப்பாயாகவென்று சொல்லுங்கள்.

௰௮. பவுலாகிய நான் உங்களுக்கு வாழ்த்துதல்செய்து இதை யென்கையினாலே யெழுதினேன். நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்துக்கொள்ளுங்கள். கிருபை உங்களுடனேயிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கெழுதின

# முதலாம் நிருபம்.

---

(கி. பி. பின். ௫௪. ௵)

## க. அதிகாரம்.

[(க) தெசலோனிக்கேயரைப் பவுலெப்போதும் நினைவுகூர்ந்து அவர்களுக்காகத் தோத்திரமும், செபமும்பண்ணினதையும், (௫) அவர்களுடைய விசுவாசத்தின் நிச்சயத்தையும், அவர்களுடைய குணப்படுதலின் உத்தமத்தையுங் குறித்துத் தானடைந்திருந்த நிச்சயத்தையும் அறிவித்தது.]

பவுலும், சில்வானும், தீமோத்தேயும், பிதாவாகிய பராபரனுக்குள்ளும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்குள்ளுமிருக்கிற தெசலோனிக்கேயூரிலுள்ள சபைக்கு

எழுதுகிறதாவது; நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௨. பராபரனாலே அன்புகூரப்பட்ட சகோதரரே, எங்கள் சுவிசேஷ வசனம் வார்த்தைமாத்திரமல்ல, வல்லமையோடும், பரிசுத்த ஆவியோடும், மிகுந்த நிச்சயத்தோடும் உங்களுக்குள்ளே பிரவேசித்ததினாலே,

௩. நீங்கள் (அவராலே) தெரிந்துகொள்ளப்பட்டவர்களென்று நாங்கள் அறிந்து,

௪. நம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு முன்பாக விசுவாசத்தினாலே நீங்கள் செய்கிற கிரியையையும், அன்பினாலே பண்ணுகிற பிரயாசத்தையும், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேலுள்ள நம்பிக்கையினாலே காணபிக்கிற பொறுமையையும் நாங்கள் இடைவிடாமல் நினைத்துக்கொண்டு,

௫. எங்கள் செபங்களிலே உங்களைக்குறித்துப் பேசி, உங்களெல்லாருக்காகவும் எப்பொழுதும் பராபரனைத் தோத்திரஞ்செய்கிறோம்.

௬. நாங்கள் உங்களுக்குள்ளேயிருந்தபொழுது, உங்களுக்காக இப்படிப்பட்டவர்களாயிருந்தோமென்று அறிந்திருக்கிறீர்களே, அன்றியும் நீங்கள் மிகுந்த உபத்திரவத்திலே பரிசுத்த ஆவியின் சந்தோஷத்தோடே வசனத்தை ஏற்றுக்கொண்டு, எங்களையும், *கர்த்தரையும் பின்பற்றி, *௧. கொ. ௪. ௧௬.

௭. இப்படி மக்கெதோனியா நாட்டிலும், அகாயா நாட்டிலுமுள்ள விசுவாசிகள் யாவருக்கும் மாதிரியானவர்களானீர்கள்.

௮. எப்படியெனில், உங்களிடத்திலிருந்து கர்த்தருடைய வசனம் மக்கெதோனியா, அகாயா நாடுகளில் பிரசித்தமானதுமல்லாமல், நாங்கள் அதைக்குறித்து ஒன்றையாகிலுஞ்சொல்லவேண்டியிராதபடிக்கு நீங்கள் பராபரனைப்பற்றின விசுவாசம் எவ்விடங்களிலேயும் வெளியரங்கமாயிற்று.

௯. நாங்கள் உங்களிடத்தில் அடைந்த பிரவேசம் இப்படியிருந்ததென்றுஞ் சிலையுடைய மெய்யான தேவனுக்குப் பணிவிடைசெய்யும்படிக்கும், அவர் மரித்தோரிலிருந்தெழுப்பினவருமாய், இனிவருங்கோபாக்கினையினின்று நம்மையெடுத்து இரட்சிக்கிறவருமாயிருக்கிற அவருடைய குமாரனாகிய இயேசுவைப் * பரமண்டலங்களிலிருந்து வரப் பார்த்துக்கொண்டிருக்கும்படிக்கும்,

* பிலி. ௩. ௨௰.

௰. நீங்கள் விக்கிரகங்களைவிட்டுப் பராபரனிடத்திற்கு இவ்விதமாய் மனந்திரும்பினீர்களென்றும் அவர்களே தெரியப்படுத்துகிறார்களே.

## ௨. அதிகாரம்.

[(௧) தெசலோனிக்கேயருக்குள் சுவிசேஷம் வந்து பிரசங்கிக்கப்பட்ட விதத்தையும், அவர்கள் அதையேற்றுக்கொண்ட விதத்தையும், (௰௪) பரிசுத்தவானாகிய பவுல் வெகுகாலம் அவர்களிடத்திற்குவராதிருந்ததற்கும், அவர்களைவந்துபார்க்க விருப்பமுடையவனாயிருந்ததற்கு முகாந்தரத்தையுஞ்சொல்லியது.]

அன்றியுஞ் சகோதரரே! உங்களிடத்திலே நாங்கள் அடைந்த பிரவேசம் வீணாயிருக்கவில்லையென்று நீங்களேயறிந்திருக்கிறீர்கள்.

௨. அல்லாமலும், உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி முன்னே, * பிலிப்புப்பட்டணத்திலே நாங்கள் பாடுகளையும், நிந்தைகளையும் அடைந்திருந்தும், † பராபரனுடைய சுவிசேஷத்தைப் மிகுந்த போராட்டத்தோடே உங்களுக்குச் சொல்லும்படி நம்முடைய பராபரனாலே தைரியமுள்ளவர்களாயிருந்தோம். * அப்போ. ௰௬. ௨௨—௨௪;-† அப்போ. ௰௭. ௧—௩.

௩. அன்றியும் எங்கள் போதகம் வஞ்சகத்தினாலும், அசுத்தத்தினாலுமிருந்ததொன்றுமில்லை. அது கபடமுள்ளதாயிருக்கவுமில்லை.

௪. சுவிசேஷத்தையெங்களுக்கு ஒப்புவிக்கத்தக்கதாகப் பராபரன் எங்களையுத்தமரென்றெண்ணினபடியே, நாங்கள் மனிதருக்கல்ல. எங்களிருதயங்களைச் சோதித்தறிகிற பராபரனுக்கே பிரியமாய்ச்சொல்லுகிறோம்.

௫. அன்றியும், உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, நாங்கள் ஒருக்காலும் இச்சகமான வசனங்களைச் சொல்லவுமில்லை. பொருளாசையைமூடிக்கொண்டு நடக்கவுமில்லை. அதற்குப் பராபரனே சாட்சியாயிருக்கிறார்.

௬. உங்களிடத்திலாவது, மற்றவர்களிடத்திலாவது, நாங்கள் மனிதர் மகிமையைத் தேடவுமில்லை. நாங்கள் கிறிஸ்துவின் அப்போஸ்தலராயிருக்கிறபடியால், (உங்கள்மேல்) பாரத்தையேற்றலாமே.

௭. அப்படியிருந்தும் தாயானவள் தன்பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல உங்களுக்குள்ளே குணமாக நடந்தோம்.

௮. இப்படி நாங்கள் உங்கள்மேல் மிகவும் விருப்பமாயிருந்து, * பராபரனுடைய சுவிசேஷத்தைமாத்திரமல்ல. நீங்கள் எங்களுக்குப் பிரியமானவர்களானபடியினாலே எங்கள் சீவனையும், உங்களுக்குப் பகிர்ந்துகொடுக்க மனதாயிருந்தோம். * உரோமர். ௧. ௰௧; ௰௫ ௨௯.

௯. அன்றியுஞ் சகோதரரே * நாங்கள்பட்ட பிரயாசமும், வருத்தமும் உங்களுக்கு ஞாபகமாயிருக்கும். உங்களிலொருவனுக்காகிலும் பாரமாயிராதபடிக்கு இரவும், பகலும்

நாங்கள் வேலைசெய்து, பராபரனுடைய சுவிசேஷத்தை யுங்களிடத்தில் பிரசங்கித்தோமே. * க. கொரிந். ௪. ௰௨.

௰. விசுவாசிகளாகிய உங்களுடனே நாங்கள் எவ்வளவு பரிசுத்தமாகவும், நீதியாகவும், பிழையில்லாமையாகவுமிருந்ததற்கு, நீங்களும் பராபரனோடேகூடச் சாட்சிகளாயிருக்கிறீர்கள்.

௰௧. மேலும் தம்முடைய இராச்சியத்திற்கும், மகிமைக்குமுங்களையழைத்திருக்கிற பராபரனுக்கு * நீங்கள் பாத்திரமாய் நடக்கவேண்டுமென்று, * பிலிப்பி. ௧. ௨௭.

௰௨. தகப்பன் தன் பிள்ளைகளுக்குச் செய்கிறதுபோல நாங்கள் உங்களில் யாவருக்கும் புத்தியும், ஆறுதலும், சாட்சியுஞ்சொன்னதையறிந்திருக்கிறீர்கள்.

௰௩. ஆகையால் நீங்கள் பராபரனுடைய வசனத்தை யெங்களாலே கேள்விப்பட்டு ஏற்றுக்கொண்டபொழுது, அதை மனிதர் வசனமென்றல்ல, பராபரனுடைய வசனமென்றேயேற்றுக்கொண்டதினாலே நாங்கள் இடைவிடாமற் பராபரனுக்குத் தோத்திரஞ்செலுத்துகிறோம். அது மெய்யாய் அவருடைய வசனந்தான், விசுவாசிக்கிற உங்களுக்குள்ளே யது பலனுஞ்செய்கின்றது.

௰௪. எப்படியென்றால் சகோதரரே! நீங்கள் யூதேயாநாட்டிலே கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பராபரனுடைய சபைகளைப் பின்பற்றினவர்களாகி, அவர்கள் யூதராலே பாடுபட்டதுபோல நீங்களும் உங்கள் சுயகோத்திரத்தாராலே பாடுபட்டீர்கள்.

௰௫. அந்த யூதர்கள் கர்த்தராகிய இயேசுவையுந் தங்கள் தீர்க்கதரிசிகளையும் * கொலைசெய்து, எங்களையுந் துன்பப்படுத்தியிப்படிப் பராபரனுக்குப் பிரியமாயிராதவர்களுமாய், மனிதர்யாவருக்குந் விரோதிகளுமாயிருக்கிறார்கள். * மத்தேயு. ௨௩. ௩௪-௩௭.

௰௬. அவர்கள் தங்கள் பாவங்களை யெப்பொழுதும் நிறைவாக்கத்தக்கதாகப் புறதேசத்தார் இரட்சிக்கப்படுதற்கு நாங்கள் அவர்களோடே பேசாதபடிக்குத் தடைபண்ணுகிறார்கள். கோபாக்கினையிறுதிக்கிரமாய் அவர்களுக்கு வருகின்றது.

௰௭. சகோதரரே! நாங்கள் இருதயத்தினாலல்ல, முகமுகமாய் (மாத்திரம்) கொஞ்சக்காலம் உங்களைக்காணாமற் பிரிந்திருந்தபடியினாலே, உங்கள் முகத்தைப்பார்க்கவேண்டுமென்றுமிகுந்த ஆசையோடே அதிகமாய்ப் பிரயத்தனம்பண்ணினோம்.

௰௮. ஆனபடியினாலே உங்களிடத்தில் வருகிறதற்கு நாங்கள் இரண்டொருதரம் மனதாயிருந்தோம். பவுலாகிய நானவிசேஷமாக அப்படியிருந்தேன். சாத்தானமாத்திரம் எங்களுக்குத் தடைபண்ணினான்.

௰௯. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வருமபொழுது, அவருடைய சந்நிதானத்திலே ஆர்? * எங்களுக்கு நம்பிக்கையும், சந்தோஷமும், புகழ்ச்சியாகிய கிரீடமும் வருவதற்கேதுவாயிருப்பார்கள். நீங்களல்லவோ அப்படியிருப்பீர்கள். * ௨. கொரிந். ௧. ௰௪.

௨௰. நீங்கள் எங்களுக்கு மகிமையுமாய், சந்தோஷமுமாயிருக்கிறீர்களே.

## ௩. அதிகாரம்.

[(௧) அவர்களைப் பலப்படுத்தித் தேற்றும்படி தீமோத்தேயுவை அவர்களிடத்தில் அனுப்பினதினாலும், அவர்களுடைய நற்சீரில் தான் சந்தோஷப்பட்டதினாலும், (௰) அவர்களுக்காகச் செபம்பண்ணி அவர்களிடத்தில் சுகமாய் வந்து சேரவிரும்பினதினாலும் பவுல் தெசலோனிக்கேயர்பேரில் தனக்கிருந்த பெரிய அன்பைப் பாராட்டினது.]

ஆகையால், நாங்கள் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல், அத்தேனே பட்டணத்திலே தனித்துவிடப்படவிரும்பி,

௨. இந்த உபத்திரவங்களினாலே ஒருவரும் அசைக்கப்படாதபடிக்கு, உங்கள் விசுவாசத்தைக்குறித்து, உங்களை ஸ்திரப்படுத்தும்பொருட்டாக நம்முடைய சகோதரனுமாய், பராபரனுடைய ஊழியக்காரனுமாய், கிறிஸ்துவின் சுவிசேஷத்தில் எங்களுடன் வேலையாளுமாயிருக்கிற தீமோத்தேயுவையனுப்பினோம்.

௩. நீங்களே அறிந்திருக்கிறபடி * இப்படிப்பட்டதைச் சகிக்கிறதற்கு நாம் † வைக்கப்பட்டிருக்கிறோமே. * எபேச. ௩. ௰௩; † அப்போஸ்தலர். ௰௪. ௨௨; ௨௰. ௨௩; ௧. பேது. ௨. ௨௩.

௪. மேலும் நமக்கு உபத்திரவம் வருமென்று நாங்களுங்களிடத்திலிருந்தபொழுது உங்களுக்கு முன்னறிவித்தோமே. அப்படியும் நடந்தது. அதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

௫. ஆனபடியினாலே நான் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல், எங்கள் வேலை வீணாய்ப்போகத்தக்கதாகச் சோதனைக்காரன் உங்களைச் சோதனைக்குட்படுத்தினானோவென்று உங்கள் விசுவாசத்தையறியும்படிக்கு அவனையனுப்பினேன்.

௬. சகோதரரே! இப்பொழுது தீமோத்தேயு உங்களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்து, நீங்கள் விசுவாசமாயும், அன்பாயுமிருந்து எப்பொழுதும் எங்களை நன்றாய் நினைத்துக்கொண்டு,

௭. நாங்களுங்களைக்காண மிகுந்த ஆசையாயிருக்கிறதுபோல, நீங்களும் எங்களைக் காண ஆசையாயிருக்கிறீர்களென்று எங்களுக்கு நற்செய்தியைச்சொன்னவுடனே எங்களுடைய உபத்திரவம், இடுக்கணாயவற்றி

லேயும் உங்கள் விசுவாசத்தினாலே உங்களைக் குறித்து ஆறுதல் அடைந்தோம்.

௮. நீங்கள் கர்த்தரிடத்தில் நிலைநிற்கிறதால் இப்பொழுது பிழைக்கிறோம்.

௯. அல்லாமலும் நாங்கள் உங்களைக் குறித்து நம்முடைய பராபரனுடைய சந்நிதானத்திலே அடைந்திருக்கிற மிகுந்த சந்தோஷத்திற்காகப் பராபரனுக்கு எந்தத் தோத்திரஞ்செலுத்துவோம்.

௰. உங்கள் முகத்தைக் கண்டு உங்கள் விசுவாசத்தின் குறைவுகளை நீக்கி நிறைவுண்டாக்கும்பொருட்டாக, இரவும் பகலும் மிகவும் வேண்டுதல்செய்கிறோம்.

௰௧. அந்தப்படியே நம்முடைய பிதாவாகிய பராபரனும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் எங்கள் வழியை உங்களிடத்திற்கு (நேராக்கக்கடவர்.)

௰௨. அல்லாமலும் நாங்கள் உங்கள்மேல் வைத்திருக்கிற அன்புக்கொப்பாய் நீங்களும் ஒருவரிடத்திலொருவரும் மற்றெந்த மனிதரிடத்திலும் அதிகமாய் நிறைந்த அன்புள்ளவர்களாகும்படி கர்த்தர் செய்து,

௰௩. இவ்விதமாய் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து தம்முடைய பரிசுத்தவான்கள் அனைவரோடுங்கூட வரும்பொழுது நீங்கள் * நம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு முன்பாகப் பிழையில்லாத பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கும்படி உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்தக்கடவர். * மத். ௨௫. ௩௧; யூதா. ௰௪. வசனம்.

## ௪. அதிகாரம்.

[(௧) பரிசுத்தமும், (௩) சன்மார்க்கமுமாய் நடக்கவும், (௯) ஒருவரையொருவர் சிநேகிக்கவும், (௰௧) அமைதலாய்த் தங்கள் சொந்த அலுவல்களைச் செய்யவும், (௰௩) மரித்தவர்களுக்காக மட்டாய்த் துக்கங்கொண்டாடவும் புத்திசொல்லி, (௰௬) உயிர்த்தெழுதலினாலேயும் கிறிஸ்து நியாயந்தீர்க்க உலகத்தில் இரண்டாமிசை வருவதைக் குறித்துஞ் சில நியாயங்கள் சொல்லியது.]

மேலும் சகோதரரே, நீங்கள் இன்னவின்னபிரகாரமாக நடக்கவும், பராபரனுக்குப் பிரியமாயிருக்கவும் வேண்டுமென்று எங்களால் ஏற்றுக்கொண்டபடியே * அதிகமதிகமாய்ப் பெருகும்படிக்குக் கர்த்தராகிய இயேசுவினாலே உங்களை வேண்டிக்கொண்டு புத்திசொல்லுகிறோம். * எபே. ௪. ௰௫.

௨. கர்த்தராகிய இயேசுவினாலே நாங்கள் உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளை அறிந்திருக்கிறீர்களே.

௩. நீங்கள் பரிசுத்தமுள்ளவர்களாகிறதே பராபரனுடைய சித்தமாயிருக்கின்றது. அந்தப்படி * நீங்கள் வேசிமார்க்கத்திற்கு விலகி, * ௧. கொரி. ௬. ௰௮.

௪. * பராபரனையறியாத அஞ்ஞானிகளைப்போல விரகதாபமாகிய இச்சைக்குள்ளாகவல்ல, * எபே. ௪. ௰௭--௰௯.

௫. பரிசுத்தத்திற்கும், கனத்திற்குமுள்ளாகவே உங்களில் அவனவன் தன்தன் சரீரபாண்டத்தைக் காத்துக்கொள்ளுகிறதற்கு வகையையறிந்து,

௬. இந்தச் * செய்கையினாலே தன் சகோதரனை ஒடுக்காமலும், வஞ்சியாமலுமிருக்க வேண்டும். முன்னேயும் நாங்கள் உங்களுக்குச் சொல்லிச் சாட்சிகொடுத்தபடி, இப்படிப்பட்ட எல்லாவற்றையுங்குறித்துக் கர்த்தர் நீதியாய்ப் பழிவாங்குகிறவராயிருக்கிறாரே. * ௩. மோசே. ௰௯. ௰௧-௰௩; மத். ௭. ௰௨; † ௨. தெச. ௧. ௮.

௭. பராபரன் நம்மை அசுத்தத்திற்கல்ல, பரிசுத்தத்திற்கு அழைத்தாரே.

௮. ஆனதால் அசட்டைபண்ணுகிறவன் * மனிதனையல்ல, தமது பரிசுத்த ஆவியை எங்களுக்குக்கொடுத்த பராபரனையே அசட்டைபண்ணுகிறான். * லூக. ௰. ௰௬.

௯. சகோதர சிநேகத்தைக்குறித்து நான் உங்களுக்கெழுதவேண்டுவதில்லை. நீங்கள் தாமே ஒருவரிடத்திலொருவர் அன்பாயிருக்கும்படிக்குப் பராபரனாலே போதிக்கப்பட்டவர்களாயிருக்கிறீர்களே.

௰. அந்தப்படியேயும் நீங்கள் மக்கெதோனியா நாடெங்குமுள்ள சகோதரரெல்லாருக்குஞ்செய்துவருகிறீர்கள்.

௰௧. இன்னுஞ் சகோதரரே, அதிலே நீங்கள் அதிகமாய்ப் பெருகவும், * புறம்பேயிருக்கிறவர்களுக்கு நீங்கள் யோக்கியமாய் நடந்து, * கொலோ. ௪. ௫.

௰௨. ஒருகுறைவையுமடையாதபடிக்கு * நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டபடி அமைதலாயிருக்க மிகுதியாய் விரும்பவும், உங்களுடைய சொந்த அலுவலைப் பார்த்துக்கொள்ளவும், உங்கள் சொந்தக் கைகளினாலே வேலைசெய்யவும் வேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறோம். * ௨. தெச. ௩. ௰-௰௨.

௰௩. அல்லாமலுஞ் சகோதரரே, * நம்பிக்கையற்றவர்களைப்போல நீங்களுந் துக்கப்படாதபடிக்கு நித்திரையடைந்தவர்களைக் குறித்து நீங்கள் அறியாமலிருக்கிறது எனக்கு விருப்பமில்லை. * எபே. ௨. ௰௨.

௰௪. என்னத்தினாலெனில், இயேசுவானவர் மரித்துப் பின்பு எழுந்திருக்கிறாரென்று நாம் விசுவாசிக்கிறதுபோல இயேசுவைப்பற்றி நித்திரையடைந்தவர்களையும் பராபரன் அவரோடேகூடப் புறப்படப்பண்ணுவார்.

௰௫. மேலுங் கர்த்தருடைய வார்த்தையின்படி நாங்கள் உங்களுக்கு அறிவிக்கிறதென்னவென்றால், கர்த்தர் வரும்பொழுது உயி

ரோடே மீதியாயிருககும. நாம நிததிரை யடைநதவர்களுககு முநதிககொளளுவதிலலை.

௰௬. அதெபபடியெனில, * கர்ததர்தாமே ஆரவாரததோடும, பிரதான தூதனுடைய சத்தத்தோடும, தேவ† எக்காளததோடுமேவானததிலிருநதிறஙகிவருவார். அபபொழுது கிறிஸதுவிலிருநது மரிததவர்கள முதலாவது எழுமபுவார்கள. * மத. ௨௪. ௩௰, ௩௧; † ௧. கொரி. ௰௫. ௫௧, ௫௨.

௰௭. பினபு உயிரோடே மீதியான நாமும ஆகாயததில வருகிற கர்ததாவுககு நேராக அவர்களோடேகூட * மேகஙகளி லெடுததுககொணடுபோகபபடடு இபபடியெபபொழுதும † கர்ததருடனேகூடவிருபபோம. * அப. ௧. ௯; † யோவா. ௰௨. ௨௬; ௰௪. ௩; ௰௭. ௨௪.

௰௮. ஆகையால இநத வார்ததைகளினாலே நீஙகள ஒருவருககொருவர் ஆறுதலசெயயுஙகள.

௫. அதிகாரம.

[(௧) கிறிஸது நியாயநதீர்கசவருவதைககுறிததுசசொலலி, பலபுததிமதிகளபடிபபிததது, (௨௩) நிருபததைமுடிததது.]

இவைகளநடககுங காலஙகளையும, நேரஙகளையுங்குறிதது சகோதரரே! நான உஙகளுககெழுதவேணடுவதிலலை.

௨. * இரவிலே திருடனவருகிறவிதமாயக கர்ததருடைய நாளவருமெனறு நீஙகளே நனறாய அறிநதிருககிறீர்கள. * ௨. பேது. ௩. ௰.

௩. * சமாதானமும, சவுககியமுமுணடெனறு அவர்கள சொலலுமபொழுது, கர்பபவதியானவளுக்கு வேதனைவருகிறதுபோல அழிவு சடுதியாய அவர்களமேலவரும. அவர்களதபபிபபோவதேயிலலை. * மததேயு. ௨௪. ௩௯.

௪. சகோதரரே! அநதநாள திருடனைபபோல உஙகளையும பிடிததுககொளளத்தககதாக நீஙகள அநதகாரததிலிருககிறவர்களலல.

௫. நீஙகளெலலாரும * ஒளியின பிளளைகளுமாய, பகலின பிளளைகளுமாயிருககிறீர்களே. நாம இரவுககும, அநதகாரததிறகுமுளளானவர்களலல. * எபே. ௫. ௮.

௬. ஆகையால மறறவர்களைபபோல நாம தூஙகாமல * விழிததுககொணடு தெளிவாயிருக்கக்கடவோம. * லூக. ௨௧. ௩௬.

௭. தூஙகுகிறவர்கள இராததிரியில தூஙகுவார்களே. வெறிகொளளுகிறவர்கள இராததிரியில வெறிகொளளுவார்களே.

௮. * பகலமனிதராகிய நாம விசுவாசம, அனபு எனனும மார்பின கவசததையும, இரட்சிபபின நமபிககையெனனுந தலைசசீராவையுநதரிததுககொணடு தெளிவாயிருககக்கடவோம. * உரோ. ௰௩. ௰௨—௰௪.

௯. பராபரன நமமைக் கோபாககினைக்கலல, நமமுடைய கர்ததராகிய இயேசுகிறிஸதுமூலயாய இரட்சிபபை யடைநதுகொளளுதறகு ஏறபடுததினாரே.

௰. * நாமவிழிததிருபபவர்களானாலும, நிததிரையடைநதவர்களானாலுந தமமுடனேகூட உயிரோடிருககுமபடிககு அவர் நமககாக மரிததாரே. * உரோ. ௰௪. ௮, ௯.

௰௧. ஆகையால நீஙகள செயதுவருகிறதுபோல ஒருவருககொருவர் ஆறுதலசொலலி, ஒருவனையொருவர் ஊனறக்கடவீர்கள.

௰௨. அனறியுஞ சகோதரரே, * உஙகளுக்குளளே பிரயாசபபடடுக கர்ததருககுளளாக உஙகளுககுமுதலாளிகளாயிருநது உஙகளுககுப புததிசொலலுகிறபேர்களை நீஙகள அறிநதுகொணடு, * எபி. ௰௩. ௰௭.

௰௩. அவர்களுடைய கிரியையினிமிததம அவர்களை மிகவும அனபாய எணணிககொளளுமபடிககு உஙகளைவேணடிககொளளுகிறேம. உஙகளுககுளளே சமாதானமாயிருபபீர்களாக.

௰௪. அனறியுஞ சகோதரரே, நாஙகள உஙகளுக்குஎசசரிக்கையாகசசொலலுகிறதெனனவெனறால, ஒழுஙகிலலாதவர்களுககுப புததிசொலலுஙகள. திடனறறவர்களுககு ஆறுதலசெயயுஙகள. பலவீனரைத்தாஙகுங்கள. எலலாருககும நீடிய சாநதமாயிருஙகள.

௰௫. * ஒருவனும்மறறொருவனசெயயுந்தீமைககுத தீமையைச செயயாமல, எபபொழுதும உஙகளுககுளளும, மறறு யாவருககுளளும நனமைசெயயப பின்றொடருமபடி எச்சரிககையாயிருபபீர்களாக. * உரோமர். ௰௨. ௰௭.

௰௬. * எபபொழுதும சநதோஷமாயிருஙகள. † இடைவிடாமறு செபமபணணுஙகள. * லூக. ௰. ௨௰; † லூக. ௰௮. ௧.

௰௭. * எலலாவறறிலேயுந தோத்திரஞ்செயயுஙகள. * எபே. ௫. ௨௰.

௰௮. அபபடிச்செயகிறதே கிறிஸதுஇயேசுவுககுளளுஙகளைககுறிததுப பராபரனுடைய சிததமாயிருககினறது.

௰௯. ஆவியை யடககிபபோடாதிருபபீர்களாக.

௨௰. தீர்ககதரிசனஙகளை அசடடைபணணாதிருஙகள.

௨௧. * யாவறறையும ஆராயநதுபார்தது நலமானதைப பிடிததுககொளளுஙகள. * ௧. யோவா. ௪. ௧.

௨௨. பொலலாஙகாயததோனறுகிறயாவறறையுமவிடடு விலகுவீர்களாக.

௨௩. சமாதானததின பராபரனே முழுவதும உஙகளைப பரிசுததமாககுவாராக. இபபடி உஙகள முழு ஆவியும, ஆததுமாவும,

உண்மையும், எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்திரமுமான வார்த்தையாயிருக்கின்றது. பாவிகளில் நான் பிரதானமானவன். * மத. ௬. ௰௩; லூக. ௰௬. ௰.

௰௬. அப்படியிருந்தும் நித்தியஜீவனையடையும்படி இனிமேல் இயேசுகிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருப்பவர்களுக்குத் திருஷ்டாந்தத்தைக் கொடுக்கும்பொருட்டாகப் பிரதானபாவியாகிய என்னிடத்தில் எல்லா நீடியபொறுமையைக் காண்பிக்கும்படிக்கு இரக்கம்பெற்றேன்.

௰௭. நித்தியமும், அழிவில்லாமையும், அதரிசனமுமுள்ள இராசனுமாய, *ஒருவராகிய ஞானமுள்ள பராபரனுமாயிருக்கிற அவருக்குக் கனமும், துதியும், என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக. ஆமென். * உரோமர். ௰௬. ௨௭; யூதா. ௨௫. வசனம்.

௰௮. என் குமாரனாகிய தீமோத்தேயே! உன்னைக்குறித்து முன் உண்டான தீர்க்கதரிசனங்களின்படியே நான் இந்தக் கட்டளையை யுனக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

௰௯. அந்தப்படி நீ விசுவாசமும், நற்சாட்சியையுடைய மனதுமுள்ளவனாய் அவைகளாலே * நல்ல போராட்டம்பண்ணுவாயாக. அப்படிப்பட்ட மனதைச் சிலர் தள்ளி † விசுவாசமாகிய கப்பலைச் சேதப்படுத்தினார்கள். * ௬. ௰௨; † ௧. ௬.

௨௰. அவர்களில் இமெனேயும், அலெக்சந்தருமிருக்கிறார்கள். அவர்கள் தூஷணியாதபடிக்குக் கற்றுக்கொள்ளும்பொருட்டாய அவர்களைச் * சாத்தானுக்கு ஒப்புக்கொடுத்தேன். * ௧. கொரி. ௫. ௫.

## ௨. அதிகாரம்.

[(௧) யாவருக்காகவும் செபம்பண்ணவேண்டுமென்றும், அதற்குமுகாந்தரமின்னதென்றும், (௯) ஸ்திரீகள் இவ்விதமாய் உடுக்கவேண்டியதென்றும், (௰௨) அவர்கள் சபையிலே போதிக்கக்கூடாதென்றும், (௰௫) அவர்கள்மேல் பராபரனுடையகோபாக்கினையிருந்தாலும் அவர்கள் விசுவாசத்திலே நிலைநிற்பார்களானால் பிள்ளைபேற்றிலே இரட்சிக்கப்படுவார்களென்றும் சொல்லியது.]

பின்னும் நான் பிரதானமாய்ப் புத்திசொல்லுகிறதென்னவெனில், எல்லா மனிதருக்காகவும் விண்ணப்பங்களையும், செபங்களையும், வேண்டுதலையும், தோத்திரங்களையும் பண்ணவேண்டும்.

௨. நாம் எல்லாப் பத்தியோடும், யோக்கியதையோடும் கலகமில்லாமல் அமைதலுள்ள சீவனம்பண்ணும்படிக்கு * இராசாக்களுக்காகவும், அதிகாரமுள்ள யாவருக்காகவும் அப்படியே செபம்பண்ணவேண்டும். * எரேமி. ௨௯. ௭.

௩. நம்முடைய இரட்சகராகிய பராபரனுக்கு முன்பாக அது நன்மையாயும், பிரியமாயுமிருக்கின்றது.

௪. * எல்லா மனிதரும் இரட்சிக்கப்படவும், சத்தியத்தை யறிகிற அறிவுக்குவரவும் அவர் சித்தமாயிருக்கிறார். * ௨. பேது. ௩. ௯; எசே. ௰௮. ௨௩.

௫. ஏனெனில், * பராபரன் ஒருவரே. பராபரனுக்கும், மனிதருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே. * யோவா. ௰௭. ௩.

௬. * எல்லாரையும் மீட்கும்பொருளாகத் தம்மை யொப்புக்கொடுத்த மனிதனாகிய கிறிஸ்து இயேசு அவரே. (அந்த மீட்பு) தகுதியானகாலங்களிற் சாட்சிசொல்லப்பட்டுவருகின்றது. * ௧. யோவா. ௨. ௨.

௭. அதற்காக நான் புறதேசத்தாருக்கு விசுவாசத்தையும், சத்தியத்தையும் விளங்கப்பண்ணுகிற போதகனாகவும், பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். நான் பொய்சொல்லாமல் உண்மையே சொல்லுகிறேன்.

௮. அல்லாமலும் என்னுடைய சித்தமென்னவென்றால், எல்லா இடங்களிலேயும் புருஷர்கள் கோபமும், தருக்கமுமில்லாமல் பரிசுத்தமான கைகளை யுயர்த்திச் செபம்பண்ணவேண்டும்.

௯. அந்தப்படி ஸ்திரீகளும் மயிரைப்பின்னுதலாலாவது, பொன்னாலாவது, முத்துக்களாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது, தங்களை அலங்கரியாமல் தேவபத்தியைக்காண்பிக்கிற பெண்பிள்ளைகளுக்கேற்றபடியே,

௰. தகுதியான வஸ்திரத்தாலும், * நாணத்தாலும், தெளிவானபுத்தியாலும், நற்கிரியைகளாலுந் தங்களை அலங்கரிக்கவேண்டும். * ௧. பேது. ௩. ௩, ௪.

௰௧. ஸ்திரீயானவள் அமைதலோடேயிருந்து கொண்டு இப்படியெவ்விதத்திலுங் கீழ்ப்படிதலைக்காண்பிக்கக்கடவள்.

௰௨. * உபதேசம்பண்ணும்படியாயும், † புருஷன்மேலே அதிகாரத்தைச்செலுத்தும்படியாயும், நான் ஸ்திரீயானவளுக்கு உத்தரவுகொடுக்கிறதில்லை. * ௧. கொரி. ௰௪. ௩௪; † ௧. மோ. ௩. ௰௬.

௰௩. அவள் அமைதலாயிருக்கவேண்டும். என்னத்தினாலெனில் முதலாவது ஆதாமும், இரண்டாவது ஏவாளுமுருவாக்கப்பட்டார்கள்.

௰௪. மேலும் ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை. ஸ்திரீயானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்குட்பட்டாள்.

௰௫. அப்படியிருந்தும், அவர்கள் தெளிவானபுத்தியோடே விசுவாசத்திலும், அன்பிலும், பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால், பிள்ளையைப்பெறுகிறதினாலே இரட்சிக்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) கண்காணிகளுக்கும், உதவிக்காரர்களுக்கும் அவர்கள் பெண்சாதிகளுக்குமிருக்கவேண்டிய இலட்சணங்களைக் காண்பித்து, (௰௪) இவைகளைக்குறித்துத் தீமோத்தேயுக்குப் பவுல் எழுதவேண்டியமுகாந்தர மின்னதென்றுசொல்லி, (௰௫) சபையைக் குறித்தும், அதிலேபோதிக்கப்படவேண்டியவருமையான மகிமையுள்ளசத்தியத்தைக்குறித்துஞ்சொல்லியது.]

கண்காணிப்பை விரும்புகிறவன், நல்லவேலையைவிரும்புகிறான். இதுமெய்யானவார்த்தை.

௨. ஆகையால் *கண்காணியானவன் குற்றமில்லாதவனுமாய், ஒரேமனைவியையுடைய புருஷனுமாய், தெளிந்தபுத்தியுள்ளவனுமாய், விவேகியுமாய், நல்லொழுக்கமுள்ளவனுமாய், அந்நியரையுபசரிக்கிறவனுமாய், போதிக்கிறதற்குத் தகுதியானவனுமாயிருக்கவேண்டும். * தீத். ௧. ௬—௯; ௧. பேது. ௫. ௧. ௩.

௩. அவன்திராட்ச இரசத்திற்பிரியனுமாய், அடிக்கிறவனுமாய், அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாயிராமல், சாந்தனுமாய், * சண்டைபண்ணாதவனுமாய், பணத்தின்மேற்பிரியமில்லாதவனுமாய், * ௨. தீமோத். ௨. ௨௪.

௪. தன்சொந்தக்குடும்பத்தை நன்றாய்நடத்துகிறவனுமாய், தன்பிள்ளைகளை யெவ்வித்த்திலும் யோக்கியமாய், கீழ்ப்படியப்பண்ணிக்கொள்ளுகிறவனுமாயிருக்கவேண்டும்.

௫. ஒருவன் தன்சொந்தக்குடும்பத்தைநடத்த அறியாதிருந்தால்பராபரனுடையசபையையெப்படிவிசாரிப்பான்!

௬. மேலும் அவன் இறுமாப்படைந்து, பசாசுவிழுந்த ஆக்கினையிலேவிழாதபடிக்கு நூதனமானசீஷனாயிருக்கக்கூடாது.

௭. மேலும் அவன் நிந்தனையிலும், பசாசின்கண்ணியிலும் விழாதபடிக்குப்புறம்பானவர்களால் நற்சாட்சியைப்பெற்றவனுமாயிருக்கவேண்டும்.

௮. அந்தப்படியே உதவிக்காரரும், இருநாக்குள்ளவர்களாயும், திராட்ச இரசத்திற்பிரியராயும், அவலட்சணமான ஆதாயத்தையிச்சிக்கிறவர்களாயுமிராமல்,

௯. யோக்கியருமாய், *விசுவாசத்தின் இரகசியத்தைச் சுத்தமானமனதிலே காத்துக்கொள்ளுகிறவர்களுமாயிருக்கவேண்டும். * ௧. ௰௯.

௰. அல்லாமலும், முன்பு அவர்களுஞ்சோதிக்கப்படவேண்டும். அப்பொழுது குற்றமில்லாதவர்களானால், அவர்கள் உதவிக்காரருடைய உத்தியோகத்தைச்செய்யலாம்!

௰௧. அப்படிப்போல அவர்களுடையஸ்திரீகளும்யோக்கியருமாய், * தூஷணியாதவர்களுமாய், தெளிந்தபுத்தியுள்ளவர்களுமாய், எவ்விதத்திலேயும் உண்மையுள்ளவர்களுமாயிருக்கவேண்டும். * தீத். ௨. ௩.

௰௨. மேலும் உதவிக்காரரானவர்கள் ஒவ்வொருமனைவிக்குப்புருஷருமாய் (தங்கள்) பிள்ளைகளையும், சொந்தக்குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாயிருக்கவேண்டும்.

௰௩. இப்படி உதவிக்காரருடைய உத்தியோகத்தை நன்றாய்ச்செய்கிறவர்கள் தங்களுக்கு * நல்லபதவியையும், கிறிஸ்து இயேசுவினிடத்திலுள்ள விசுவாசத்தின்மேல்மிகுந்த தைரியத்தையுஞ் சம்பாதிக்கிறார்கள். * மத். ௰௯. ௰௨;-௨௫. ௨௧.

௰௪. நான் உன்னிடத்திற்குச் சீக்கிரமாய் வருவேனென்று நம்பியிருக்கிறேன்.

௰௫. நான் தாமதித்தால் சத்தியத்தைக்காக்கிறதூணுமாய், அஸ்திபாரமுமாயிருக்கிற ஜீவனுள்ளபராபரனுடைய சபையாகியதேவாலயத்திலேநடக்கவேண்டியவகையைநீயறியும்படிக்கு, இவைகளையுனக்கெழுதினேன்.

௰௬. அன்றியும், * பராபரன் மாம்சமுள்ளவராகவெளிப்பட்டும், ஆவியிலே நீதியுள்ளவனென்றேற்படுத்தப்பட்டும், தேவதூதர்களாற்காணப்பட்டும், புறதேசத்தாருக்குள்ளே பிரசங்கிக்கப்பட்டும், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டும் † மகிமையிலேயுயர்த்தப்பட்டுமிருக்கிறாரென்றுசொல்லிய மெய்த்தேவபக்திக்குரிய இந்த இரகசியம்யாவராலும் அறிக்கையிடப்பட்டபடிமேன்மையாயிருக்கிறது. * யோவா. ௧. ௰௪; † மாற். ௰௬. ௰௯.

## ௪. அதிகாரம்.

[(௧) முடிவுகாலத்தில் விசுவாசத்தில் நின்று வழுவுதல்வருமென்று முன்னறிவித்து, (௬) தீமோத்தேயு தன்கடமைகளைக் கிரமமாய் நிறைவேற்றும்பொருட்டு அதற்கேற்ற பல புத்திகளைச் சொல்லியது.]

ஆகிலுந்தேவ ஆவியானவர்தெளிவாய்ச்சொல்லுகிறபடி * பிற்காலங்களிலே பொய்யருடைய வஞ்சகத்தினாலே சிலர்வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், தேமோன்களைக்குறித்துச்சொல்லுகிற உபதேசங்களுக்குஞ் செவிகொடுத்து அந்தவிசுவாசத்தைத் தள்ளிநடப்பார்கள். * ௨. தெச. ௨. ௩—௰௨; தானி. ௭. ௨௫;-௰௧. ௩௫—௩௭.

௨. அந்தப்பொய்யர் சூடுண்டமனதுள்ளவர்களாய், விவாகம்பண்ணக்கூடாதென்றும், * போசனபதார்த்தங்களை விலக்கவேண்டுமென்றுங்கட்டளையிடுவார்கள்.
* ௧. மோசே. ௯. ௩.

௩. பராபரன் அவைகளைவிசுவாசிகளாலும், சத்தியத்தையறிந்தவர்களாலுந் தோத்

விசுவாசததையும, நீடியசாநதத்தையும, அன்பையும, பொறுமையையும,

௰௧. * அநதியோகூர், இக்கோனியூர், லிஸ்திராவூர் இவவிடஙகளிலே யெனககுணடான துன்பஙகளையும், பாடுகளையும நனறாய அறிநதுகொணடிருககிறாய. இப்படிப்பட்ட துன்பஙகளைச் சகித்தேன. அவைகளெலலாவற்றிலநினறுங கர்த்தரெனனை இரட்சித்து இரட்சித்தார். * அபபோ. ௰௩. ௫௰;—௰௪. ௨.

௰௨. அனறியும் கிறிஸ்து இயேசுவைப்பற்றித் தேவபத்தியாயசசீவனமபணணமனதாயிருககிற யாவரும * துன்பப்படுவார்கள. * அப்போ. ௰௪. ௨௨.

௰௩. பொலலாத மனிதரும, வஞ்சகருமானவர்களமாததிரம (மற்றவர்களை) வஞ்சித்தும், வஞ்சிக்கப்பட்டுமிருநது மேன்மேலுங கெட்டவர்களாவார்கள.

௰௪. நீ கறறுககொணடதெதுவோ, நீ நிச்சயிக்கப்பட்டதெதுவோ அதிலே நிலைநிற்பாயாக. உனககுபபோதககறசெயததெவனென்றுநீ அறிநதிருககிறதுமலலாமல,

௰௫. இயேசுககிறிஸ்துவைப்பற்றுமவிசுவாசததினாலே இரட்சிப்புககேதுவான ஞானததையுனகதுக்கொடுக்கத்தகுதியான வேதஎழுத்துககளை நீ சிறுவயதுமுதறகொணடு அறிநதவனென்றும அறிநதிருககிறாயே.

௰௬. * வேதவாககியஙகளெலலாந தேவஆவியினாலுணடானவைகளுமாய, பராபரனுடைய மனிதன நிறைநத நனமையுளளவனும, எநதநற்கிரியையுஞசெயயமிகுநததகுதியுளளவனுமாகுமபொருட்டாய,
* ௨. பேது. ௧. ௨௰, ௨௧.

௰௭. * உபதேசமபணணுதறகும, கடிநதுகொளளுதறகும, செமமையாககுதறகும், நீதியைப் படிப்பிககிறதறகும பிரயோசனமானவைகளுமாயிருககின்றன. * சங. ௰௯.

## ௪. அதிகாரம்.

[(௧) தீமோததேயுவைச சாககிரதையோடும, சுறுசுறுப்போடும தேவவூழியததைச செயயசசொலலி, (௬) தன்மரணஞசமீபமாயிருககிறபடியால (௯) அவனைத்தனனிடத்தில் வரவும், மாறகையைத் தககொணடு, சிலவஸ்துககளைக்கொணடுவரவும, (௰௪) கன்னானிய அலெக்சாநதரைககுறிதது எசசரிககையாயிருக்கவும், (௰௬) சத்தியத்துக்காக உரோமாவிலே தானமுதலவிசை சாட்சிபகர்நதபோது தனககுச சமபவித்ததையுஞசொலலி, (௰௯) நிருபத்தை முடித்தது.]

இனபடியினாலே பராபரனுககுமுனபாகவும, தாம பிரசன்னமாகித் தம இராசசியத்தின (மகிமையை) வெளிபபடுததுஙகாலத்திலே உயிரோடிருககிறவர்களுககும, மரிததவர்களுககும நியாயதீர்பபுசெயயபபோகிற கர்த்தராகிய இயேசுககிறிஸ்துவுககுமுனபாகவும,

௨. நான உனககுச சாட்சியாயக் கட்டளையிடுகிறதெனனவெனில, சாவகாசமாயிருநதாலும, இலலாதிருநதாலும அநதவசனததையிடைவிடாமற பிரசஙகமபணணி, எலலாவிதமான நீடியசாநதமாயும, உபதேசததிறமையாயும மெயயைவிளககசசெயது கடிநதுகொணடு புததிசொலவாயாக.

௩. எனனததினாலெனில, அவர்கள ஆரோககியமான உபதேசததைப பொறுகக மனதிலலாமற செவிகளிச்சையுளளவர்களாகி, தஙகள சுயஇச்சைகளுககுத்தக்கதாக,

௪. தஙகளுககுப போதகரைக் கூட்டிக்கொணடு, சத்தியத்துக்குச செவியைவிலககிக் கட்டுக்கதைகளைச் சாருஙகாலமவரும.

௫. நீமாததிரம எலலாவறறிலேயுந தெளிநதபுததியுளளவனாயிருநது தீமையைச் சகிததுச சுவிசேஷகனுடைய வேலையைசசெயது, உனஊழியததை நிறைவேற்றுவாயாக.

௬. நானே பானபலியாக வார்க்கப்படுகிறவனமாயிருககிறேன. நான இதை விட்டுப் போகிறதறகுக் காலஞ சமீபமாயிருக்கிறது.

௭. * நலலபோராட்டததைப்பணணியிருககிறேன. ஓட்டததை முடிததிருககிறேன. விசுவாசததைக் காததுககொணடிருக்கிறேன. * ௧. கொரி. ௯. ௨௫—௨௭.

௮. இனிமுதல நீதியெனனுங கிரீடம எனககாக வைக்கப்பட்டிருக்கிறது. * நீதியுளள நியாயாதிபதியாகிய கர்த்தர் அநநாளில அதை யெனககுமாததிரமலல, அவர் பிரசன்னமாகுதலை விருமபின யாவருககுந தநதருளுவார். * ௧. பேது. ௫. ௪; அப். ௨. ௰.

௯. நீ சீககிரமாய எனனிடததிலவருமபடி சாககிரதையாயிருபபாயாக.

௰. * தேமாவெனபவன இப்பிரபஞ்சததின மேல ஆசைவைதது எனனைவிட்டுத் தெசலோனிககேயூருககுபபோனான. கிரேஸ்கேயெனபவன கலாத்தியநாட்டிறகும, தீததெனபவன தலுமாத்தியநாட்டிறகும்போனார்கள.
* ௧. யோவா. ௨. ௰௫.

௰௧. * லூககாவெனபவனமாததிரம எனனோடேயிருககிறான. † மாற்கெனபவன என ஊழியததிலே எனககுபபிரயோசனமாயிருககிறபடியினாலே அவனைக கூட்டிககொணடுவா. * கொலோ. ௪. ௰௪; † கொலோ. ௪. ௰.

௰௨. தீகிக்கெனபவனை நான எபேசுவூருக்கு அனுபபினேன.

௰௩. துரோயாபட்டினததிலுளள கறபெனபவனிடததிலே நான வைததுவநத மேல அஙகியையும, புததகஙகளையும், விசேஷமாகத் தோற்காகிதஙகளையும நீவருகிறபொழுது எடுததுககொணடுவா.

௰௪. கன்னானிய அலெக்சநதர் எனககு

மிருந்த தீமைகளைச்செய்தான். அவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாகக் கர்த்தர் அவனுக்குப் பதிற்கொடுக்கக்கடவர்.

௧௫. நம்முடைய வார்த்தைகளுக்கு அவன் மிகவும் விரோதித்தபடியால், நீயும் அவனைக் குறித்து எச்சரிக்கையாயிருப்பாயாக.

௧௬. நான் முந்தவிலே எனக்காக உத்தரவு சொல்லி நின்றபொழுது, ஒருவனும் என் பக்கலிராமல் யாவருமென்னைவிட்டார்கள். அது அவர்களுக்குக் (குற்றமாக) எண்ணப்படாதிருப்பதாக.

௧௭. (திவ்வியவசனம்) என்னாலே சம்பூரணமாய்ப் பிரசங்கிக்கப்படத்தக்கதாகவும், புறதேசத்தார் யாவரும் அதைக்கேட்கத்தக்கதாகவுங் கர்த்தர்மாத்திரம் என் பக்கலிருந்து என்னைப் பலப்படுத்தினார். இப்படி நான் சிங்கத்தின்வாயிலிருந்து இழுக்கப்பட்டேன்.

௧௮. மேலும் மற்றெந்தப் பொல்லாத கிரியையினின்றும், கர்த்தர் என்னை விடுவித்துத் தமது பரம இராச்சியத்திற் பிரவேசிக்கப்பண்ணி இரட்சிப்பார். அவருக்கு என்றென்றைக்குந் துதியுண்டாவதாக. ஆமென்.

௧௯. * பிரிஸ்காளுக்கும், அக்கிலாவுக்கும், ஒநேசிப்போருடைய குடும்பத்தாருக்கும் வாழ்த்துதல்செய்கிறேன். * அப். ௧௮. ௨.

௨௰. எரஸ்தென்பவன் கொரிந்துப்பட்டணத்திலே தரித்திருந்தான். துரோப்பீமுவென்பவனை மிலேத்துப்பட்டணத்திலே வியாதிப்பட்டவனாகவிட்டுவந்தேன்.

௨௧. மாரிகாலத்திற்குமுன்னே நீ இங்கே வந்துசேரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக. ஐபூலுவும், புதேந்சும், லீனுவும், கலவுதியாளும், மற்றெல்லாச் சகோதரரும் உனக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்.

௨௨. கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உன் ஆவியுடனேயிருக்கக்கடவர். கிருபை உங்களோடேயிருப்பதாக. ஆமென்.

---

## அப்போஸ்தலனாகிய பவுல்

# தீத்து என்பவனுக்கெழுதின நிருபம்.

---

(கி. பி. பின். ௬௫. ௵)

### ௧. அதிகாரம்.

[(௫) தீத்துக் கிரேத்தாவிலவைக்கப்பட்ட முகாந்தரமின்னதென்றும், (௬) தேவவூழியக்காரருடைய லட்சணங்களின்னவைகளென்றும், (௰௧) கள்ளபோதகர்களுடைய வாய் அடைக்கப்படவேண்டுமென்றும், (௰௨) அவர்களிப்படிப்பட்டவர்களென்றுஞ் சொல்லியது.]

பொய்யுரையாத பராபரன் இவ்வுலக்காலங்களுக்குமுன்னே, நித்தியசீவனைக்குறித்து * வாக்குத்தத்தம்பண்ணி, * ௧. மோசே. ௩. ௰௫.

௨. * ஏற்றகாலங்களிலே நம்முடைய தேவனாகிய இரட்சகருடைய கட்டளையின்படியெனக்கொப்புவிக்கப்பட்ட பிரசங்கத்தினாலே தமது வார்த்தையை வெளிப்படுத்தினார்.
* எபேச. ௧. ௯, ௰.

௩. அந்த நித்திய சீவனைக்குறித்து நம்பிக்கையுண்டாகத்தக்கதாகத் தேவபத்திக்கேதுவான சத்தியத்தையறிகிற அறிவும், விசுவாசமுந் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்குண்டாகும்படிக்கு ஏதுவாய், பராபரனுடைய ஊழியக்காரனுமாய், இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனுமாயிருக்கிற பவுல்,

௪. பொதுவான விசுவாசத்தினாலே என் * உத்தமகுமாரனாகிய தீத்துக்கு எழுதுகிறதாவது, பிதாவாகிய பராபரனாலும், நம்முடைய இரட்சகரும், கர்த்தருமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உனக்குக் கிருபையும், சமாதானமுமுண்டாவதாக.
* ௧. தீமோ. ௧. ௨.

௫. நான் உனக்குக் கட்டளையிட்டபடி, நீ கிரேத்தைத்தீவிலே [illegible] குறைவாயிருக்கிறவைகளைச் செம்மைப்படுத்திப் பட்டணங்கடோறும் மூப்பரையேற்படுத்தும்படிக்கு உன்னைவிட்டுவந்தேனே.

௬. * குற்றமில்லாதவனுமாய், ஒரே மனைவிக்குப் புருஷனுமாய், கெட்டமார்க்கமென்னுங் குற்றமில்லாமையும், கீழ்ப்படிதலும், விசுவாசமுமுள்ள பிள்ளைகளையுடையவனுமாய் ஒருவனிருந்தால், (அவனை வைக்கலாம்.) கண்காணிப்பாளவன் † பராபரனுடைய உக்கிராணக்காரனுக்கேற்றதாகக் குற்றஞ் சாற்றப்படாதவனுமாய், * ௧. தீமோ. ௩. ௨. ௫; † ௨. தீமோ. ௨. ௨௪.

௭. தன் இஷ்டப்படி (மாத்திரம்) செய்ய

மனதிலலாதவனுமாய, கடுஞசினமிலலாத வனுமாய, மது இரசததை மிகவுபவிருமபா தவனுமாய, அடிககிறவனுமாயிராதவனுமாய, அவலட்சணமானவிதமாய ஆதாயததைத் தேடாதவனுமாய,

அ. அநநியருககு உபசாரஞசெயகிறவனு மாய, நலலோர்மேற பிரியமுளளவனுமாய, விவேகமும், நீதியும், பரிசுததமுட, இசசை யடக்கமுமுளளவனுமாய,

கூ. ஆரோககியமான உபதேசததினாலே புததிசொலலி, எதிர்பேசுகிறவர்களுககு மெயயறிவைக்கொடுகக்த்திராணியுளளவனு மிருககுமபடிக்குத் தான போதிககபபட டதற்கேறற உணமையான உபதேசததைக் கனறாயபபறறிக கொளளுகிறவனுமாயிருக கவேணடும.

ய. எனனததினாலெனறால, * அநேகர் விசேஷமாகவிருத்தசேதனத்தையுடையவர் கள (சததியததறகுக) கீழபபடியாதவர்க ளுமாய,வீணவைகளைபபேசுகிறவர்களுமா ய, மனதைவஞசிககிறவர்களுமாயிருககிறார் கள. * க. தீமோத. க. கூ, எ.

யக. அவர்களுடையவாயை யடககிபபோ டவேணடும. அவர்கள அவலட்சணமான ஆதாயததிறகாகத் தகாதவைகளையுபதேசி தது முழுக்குடுமபஙகளையுங கவிழக்கிறார்கள.

யஉ. அவர்களிலொருவனாகிய தீர்ககதரிசி யானவனதானே. கிரேத்தைத்தீவார்எபபொ ழுதும பொயயருமாய, துஷடமிருகஙகளு மாய, சோமபலுளள தேகஙகளுமாயிருக்கி றார்களெனறுசொனனான.

யக. அநதசசாட்சிமெயதான. ஆதலாற கா நதரமாக, அவர்களவிசுவாசததிலே ஆரோ ககியமடையுமபடிக்கும, யூதருடைய கட டுக்கதைகளுககும், சததியததைவிட்டுவிலகு கிற மனிதருடைய கறபனைகளுககும செவி கொடாதிருககுமபடிக்கும்,

யச. நீ யவர்களைககணடிபபாயககடிநது கொளவாயாக.

யரு. சுததமுளளவர்களுககுச * சகலமுஞ சுததமாயிருககும. அசுததரும, அவிசுவாச முமுளளவர்களுககுமாததிரம ஒனறுஞசுத தமாயிருக்கமாட்டாது. அவர்களுடையபுத தியும், மனசசாட்சியும் அசுசியாயிருககிற தே. * மத. யரு. யக.

யகூ. அவர்கள பராபரனையறிகிறோமென றுசொலலியும், தஙகள கிரியைகளால அதை மறுதலிககிறார்கள. அவர்கள அருவருக்கப படத்தககவர்களாயும், கீழபபடியாதவர்க ளாயும, எநதநற்கிரியையையுஞ் செயயத ககத தெரியாதவர்களாயுமிருககிறார்களே.

## உ. அதிகாரம்.

[(க) நமபவும, செய்யவும,வேணடியவைக ளைக்குறித்துத தீததுககுசசொனனது. (கூ) வேலைககாரரும், மறறககிறிஸதவர்களயாவ ருஞசெயயவேணடிய கடமைகளைககுறிதது.]

நீயே ஆரோககியமான உபதேசததி றகேறறவைகளைப பேசிககொளவா யாக.

உ. முதிர்நதவயதுளள புருஷர்கள தெளி நதபுததியுளளவர்களாயும,யோக்கியராயும், விவேககளாயும, விசுவாசததிலும, அனபி லும, பொறுமையிலும ஆரோககியமுளள வர்களாயுமிருக்குமபடி (போதிபபாயாக.)

ங. அபபடிபபோல, முதிர்நதவயதுளள ஸதிரிகளும் பரிசுத்தருக்கேறறவிதமாய நட க்கிறவர்களாயும, பொயயாயக்குறறஞசாற் றுதவர்களாயும, மிகுததிராட்ச இரசத தைககுடியாதவர்களாயும,

ச. பராபரனுடைய வசனநதூஷணிக்கப படாதபடிககு வாலிபஸதிரிகளதஙகள புரு ஷரையும், பிளளைகளையுஞ சிநேகிக்கிறவர்க ளுமாய,

ரு. விவேகிகளுமாய,கறபுளளவர்களுமாய, வீட்டிலதரிததிருக்கிறவர்களுமாய, நலலவர் களுமாய, * தஙகள புருஷருககுக்கீழப்ப டிகிறவர்களுமாயிருககும்படி, அவர்களுககு பபுததிசொலலததகக நற்போதகிகளாயு மிருககுமபடிககுப (போதிபபாயாக)
* எபேச. ரு. உஉ.

கூ. அபபடிபபோல, வாலிப வயதுளள ஆணபிளளைகளும விவேகமாயிருககுமபடி நீ புததிசொலலி,

எ. நற்கிரியைகளுககேறறமார்ககததை நீ தானே * எலலாவறறிலும (மறறவர்களு ககுத) திருஷடாநதபபடமாயிரு வாயாக.
* க. தீமோ. ச. யஉ; க. பேது. ரு. ங.

அ. அநதபபடி * எதிராளியானவன உஙக ளைககுறிததுபபொலலாஙகைசசொலலுகைத் தொனறுமில்லாமல,வெட்கபபடததக்கவித மாக நீஉபதேசததிலேவிகற்பமிலலாதவனு மாய, யோககியமுளளவனுமாய, குறறம பிடிக்கபபடககூடாத ஆரோககியமுளளவ சனததைப பேசுகிறவனுமாயிருபபாயாக.
* க பேது. உ. யஉ.

கூ. அனறியும, *வேலைககாரர்நமமுடைய இரட்சகராகிய பராபரனுடைய உபதேச ததை எலலாவறறிலும அலஙகரிககத்தக கவிதமாக. * எபேச. கூ ரு—அ.

ய. தஙகள எசமானகளுககுக கீழபபடிய வும, எதிர்பேசாமல எலலாவறறிலும, பிரியமாயநடக்கவும், திருட்டுத்தனமாயநட வாமல் சகலவிதமாயும நலலுணமையைக் காணபிக்கவும்புத்திசொலலுவாயாக.

யக. எனனததினாலெனில, இரட்சிபபைக் கொடுககிறதேவகிருபை யெலலாவிதமான

மனிதருக்கும் * பிரசன்னமாகி, * ௩. ௪; மத்தே. ௨௮. ௰௯.

௰௨. * நாம் அவபத்தியையும், லவுகீக இச்சைகளையும்வெறுத்து நற்புத்தியும், நீதியும், தேவபத்தியுமுள்ளவர்களாயும், * ௧. யோவா. ௨. ௰௫-௰௭.

௰௩. நாம்நம்பிக்கொள்ளுகிறபாக்கியமவருமென்றும்,நமக்குமகாதேவனும்,இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின்மகிமைப்பிரசன்னமாகுமென்றுங் காத்துக்கொண்டிருக்கிறவர்களாயும், இவ்வுலகத்திலே சீவனம்பண்ணும்படிநமக்குப்போதிக்கின்றது.

௰௪. அந்த இயேசுக்கிறிஸ்துநம்மைச்சகல அக்கிரமங்களினின்றுமீட்டுக்கொண்டு,தமக்குச்சொந்தமாயும், *நற்கிரியைகளைச்செய்யமிகுந்த விருப்பமாயுமிருக்கிற சனங்களாகச் சுத்திகரிக்கும்படிக்கு, † நமக்காகத்தம்மைத்தாமே (மரணத்திற்கு) ஒப்புக்கொடுத்தார். * மத். ௫. ௰௬; † கலாத். ௧. ௪.

௰௫. இவைகளை நீ மிகுந்த அதிகாரத்தோடே போதித்துப் புத்திசொல்லிக் கடிந்துகொள்வாயாக. * ஒருவனும் உன்னை அசட்டைபண்ணாதிருக்கக்கடவன். * ௧. தீமோ. ௪. ௰௨.

## ௩. அதிகாரம்.

[(௧) தீத்து இன்னதைப்போதிக்கவும், இன்னதைப்போதியாதிருக்கவும், (௰) கெட்ட வேதப்புரட்டனை நீக்கவும் பவுல் கற்பித்தது. (௰௨) அவன் தன்னிடத்தில்வரவேண்டிய காலத்தையும், இடத்தையுஞ்சொல்லி, நிருபத்தைமுடித்தது.]

* துரைத்தனங்களுக்கும், அதிகாரங்களுக்குங் கீழ்ப்படிந்து அடக்கமாயிருக்கும்படிக்கும், எல்லாவிதமான நற்கிரியைகளையுஞ்செய்யஎத்தனமாயிருக்கும்படிக்கும், * ௧. பேது. ௨. ௰௩. ௰௪.

௨. ஒருவனையும், தூஷணியாமலும், சண்டைபண்ணவிரும்பாமலும், * சாதுவான மனதுள்ளவர்களாய் எல்லாமனிதருக்கும் எல்லாவிதத்திலுஞ் சாந்தத்தைக்காண்பிக்கும்படிக்கும்,அவர்களுக்கு ஞாபகப்படுத்துவாயாக. * பிலி. ௪. ௫.

௩. என்னத்தினாலெனில், *முற்காலத்திலே நாமும் புத்தியீனருமாய், கீழ்ப்படியாதவர்களுமாய்,வஞ்சிக்கப்பட்டவர்களுமாய், பலவிதமான இச்சைகளுக்கும், இன்பங்களுக்கும் அடிமைகளுமாய், துர்ப்புத்தியோடும், பொறாமையோடுஞ் சீவனம்பண்ணுகிறவர்களுமாய்,அருவருக்கப்படத்தக்கவர்களுமாய், ஒருவரையொருவர் பகைக்கிறவர்களுமாயிருந்தோம். * எபேச. ௨. ௨, ௩.

௪. நம்முடைய இரட்சகராகிய பராபரனுடையதயையும், மனிதர்மேலுள்ள *அன்பும் பிரசன்னமானபொழுது, * ௨. ௰௧; ௧. யோவா. ௪. ௯.

௫. நாம் செய்த நீதிக்கேற்ற கிரியைகளினிமித்தமல்ல, * மறுபிறப்பாகிய முழுக்கினாலும், பரிசுத்த ஆவிசெய்கிற புதிதாக்குதலினாலுமே † அவர் தமது சுய இரக்கத்தினாலே நம்மையிரட்சித்தார். * யோவா. ௩. ௫; † எபே. ௨. ௪-௯; ௨. தீமோ. ௧. ௯, ௰.

௬. தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு நித்தியசீவனைக்குறித்துண்டாயிருந்த நம்பிக்கையின்படி சுதந்தரராகும்படிக்கு,

௭. அவர் நம்முடையஇரட்சகராகியஇயேசுக்கிறிஸ்துவின்மூலமாய் * அந்தப்பரிசுத்த ஆவியை நமக்குச் சம்பூரணமாய்க் கொடுத்தருளினார். * யசே. ௩௬. ௨௫; யோவே. ௨. ௨௮.

௮. இந்தவார்த்தை உண்மையுள்ளது. பராபரனிடத்தில் விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச்செய்ய எச்சரிக்கையாயிருக்கும்படிக்கு நீ இந்தச் (சுதந்தரனாக) குறித்துக் கெட்டியாய்ப் போதிக்கவேண்டுமென்று விரும்புகிறேன். இவைகளே நன்மையானவைகளாயும், மனிதருக்குப் பிரயோசனமானவைகளாயுமிருக்கின்றன.

௯. * புத்தியீனமான தர்க்கங்களும், வம்சவரிசைகளை ஆராய்தலும், வாக்குவாதங்களும், நியாயப்பிரமாணத்தைக் குறித்துண்டாகிற சண்டைகளும், அப்பிரயோசனமும், அபத்தமுமுள்ளவைகள். ஆகையால் அவைகளுக்கிடங்கொடாதிருப்பாயாக. * ௧. தீமோ. ௧. ௩;-௪. ௭; ௨. தீமோ. ௨. ௨௩.

௰. * சத்தியத்தைப் புரட்டுகிறவனாயிருக்கிற ஒருவனுக்கு நீ இரண்டொருதரம் புத்திசொன்னபின்பு, (அவன் செவிகொடாவிட்டால்) அவனைவிட்டு விலகுவாயாக. * மத். ௰௮. ௰௭; உரோ. ௰௬. ௰௭, ௰௮; ௨. தெச. ௩. ௬—௰௪; ௨. யோவா. ௰. வசனம்.

௰௧. அப்படிப்பட்டவன் தாறுமாறுபட்டு, தன்னிலே ஆக்கினைத்தீர்ப்புள்ளவனாய்ப் பாவஞ்செய்கிறவனென்று அறிந்துகொள்வாயாக.

௰௨. நான் அர்த்தேமாவை, அல்லது * தீக்குவை உன்னிடத்தில் அனுப்பும்பொழுது, நீ சாக்கிரதையாய் நிக்கோப்போலியூருக்கு என்னிடத்தில்வருவாயாக. மாரிக்காலத்திலே அங்கே தங்க யோசனையாயிருக்கிறேன். * அப். ௨௰. ௪; எபே. ௬. ௨௧.

௰௩. நியாயசாஸ்திரியாகிய சேனாவும், *அப்பொல்லோவும் பிரயாணமாய் வரும்பொழுது, அவர்களுக்குக் குறைச்சலொன்றுமிராதபடிக்கு விசாரித்துச் சாக்கிரதையாய் அவர்களையனுப்பிவிடுவாயாக. * அப். ௰௮. ௨௪.

௰௪. (கிரேத்தைத்தீவிலே) நம்மைச்சேர்ந்தவர்களுங் கனியற்றவர்களாயிராமற்குறைச

சலகளை நீக்குதற்கேற்ற நல்ல தொழில்களை நடத்திக்கொள்ளப் படிக்கக்கடவர்கள்.

யரு. என்னோடிருக்கிற யாவரும் உனக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள். விசுவாசத்தைப் பற்றிக்கொண்டு நம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு நான் வாழ்த்துதல்செய்கிறேன். கிருபை உங்களெல்லாரோடுங்கூடவிருக்கக்கடவது. ஆமென்.

---

## அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலேமோனுக்கெழுதின நிருபம்.

---

(கி. பி. பின். சுச. ௵)

### க. அதிகாரம்.

[(க) பிலேமோனுடைய விசுவாசத்தையும், அன்பையுங் குறித்துச் சந்தோஷப்பட்டு, (கூ) அவன் தன் ஊழியக்காரனாகிய ஒநேசிமுவை மன்னித்து அன்பாயேற்றுக்கொள்ளும்படி அவனை வேண்டிக்கொண்டது.]

இயேசுகிறிஸ்துவினிமித்தங் கட்டப்பட்டிருக்கிறவனாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயுவும் எங்களுக்குப் பிரியனுமாய், உடன்வேலையாளுமாயிருக்கிற பிலேமோனுக்கும், எங்களுக்குப் பிரியமான அப்பியாளுக்கும்,

உ. எங்களுடனேகூடப் போர்ச்சேவகனாகிய * அர்க்கிப்புக்கும், † உமது வீட்டிலே கூடிவருகிற சபைக்கும் எழுதுகிறதாவது;
* கொலோ. ச. யஎ; † உரோ. யசு. ரு.

ங. நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும், சமாதானமுமுண்டாகக்கடவது.

ச. கர்த்தராகிய இயேசுவின்மேலும், எல்லாப் பரிசுத்தவான்கள்மேலுமுள்ள உம்முடைய அன்பையும், உமது விசுவாசத்தையும் நான் கேள்விப்பட்டு,

ரு. என் செபங்களில் உம்மை நினைத்துக்கொண்டு எப்பொழுதும் என் பராபரனுக்குத் தோத்திரஞ்செய்து,

சு. உங்களிலுள்ள சகலவித நன்மைகளையும் (மற்றவர்கள்) அறிந்துகொள்ளுகிறதினாலே உமது விசுவாசத்திற்குரிய தருமத்தை கிறிஸ்து இயேசுவுக்காகப் * பலனைக் காண்பிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன். * தீத்து. ங. யச.

எ. சகோதரனே! பரிசுத்தவான்களுடைய இருதயங்கள் உம்மாலே சவுக்கியப்பட்டதால், உம்முடைய அன்பினாலே மிகுந்த சந்தோஷமும், ஆறுதலுமடைந்திருக்கிறோம்.

அ. ஆகையால் விருத்தாப்பியமுள்ளவனுமாய், இயேசுகிறிஸ்துவினிமித்தம் இப்பொழுது கட்டப்பட்டவனுமாயிருக்கிற பவுலாகிய நான்,

கூ. தகுதியான காரியத்தைக்குறித்து உமக்குக் கட்டளையிடும்படிக்குக் கிறிஸ்துவினாலே மிகுந்த தைரியமுள்ளவனாயிருந்தும், (அப்படிச்செய்யாமல்) அன்பினாலே உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்.

ய. என்னவென்றால், நான் கட்டப்பட்டிருக்கையில் பெற்றவனாயும்,

யக. முன்னே உமக்குப் பிரயோசனமில்லாதவனாயும், இப்பொழுது உமக்கும், எனக்கும் * நல்ல பிரயோசனமுள்ளவனாயுமிருக்கிற என் மகனாகிய ஒநேசிமுக்காகவே உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். அவனைத் திரும்ப அனுப்பினேன். * கொலோ. ச. கூ.

யஉ. அவனை நீர் என் உள்ளம்போல ஏற்றுக்கொள்வீராக.

யங. சுவிசேஷத்தினிமித்தங் கட்டப்பட்டிருக்கிற எனக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு உமக்குப் பதிலாக அவனை என்னிடத்தில் வைத்துக்கொள்ளவேண்டுமென்றிருந்தேன்.

யச. ஆனாலும் உம்முடைய நன்மை கட்டாயத்தினாலல்ல, மனப்பூர்வத்தாவிருக்கத்தக்கதாக நான் உமது சம்மதியில்லாமல் ஒன்றுஞ்செய்ய மனதில்லை.

யரு. இனிமேல் அவன் உமக்கு அடிமையானவனாகவல்ல, அடிமையானவனுக்கு மேலாகப் பிரியமான சகோதரனாகவும், என்றென்றைக்கும் உம்முடையவனாகவுமிருக்கும்படிக்கு,

யசு. அவன் கொஞ்சக்காலமாய் உம்மை விட்டுப் பிரிக்கப்பட்டானென்று தோன்றுகிறது. எனக்கும், அவன் பிரியமான சகோதரன்தான். உமக்குச் சரீரத்தின்படியேயும், கர்த்தர் நிமித்தமும் மிகவும் அதிகமாய் அப்படியிருக்கிறானல்லவா!

யஎ. ஆதலால் நீர் என்னை உமக்கு ஐக்க

மானவனென்று எண்ணினால், அவனை என்னைப்போல ஏற்றுக்கொள்ளவேண்டும்.

௰௮. அவன் உமக்கு யாதொரு அநியாயஞ் செய்ததும், அல்லது கடன்பட்டதுமுண்டானால், அதை யென் கணக்கிலே யெழுதுவீராக.

௰௯. பவுலாகிய நான் என் கையெழுத்துப் போட்டேன். நானே செலுத்தித் தீர்ப்பேன். நீர் உம்மைத்தாமே எனக்குக் கடனுகச்செலுத்தவேண்டுமென்று நான் உமக்குச்சொல்லாதபடிக்கு அப்படிச் செய்கிறேன்.

௨௰. ஆ, என் சகோதரனே! கர்த்தர்நிமித்தம் உம்மாலே இந்தப்பிரயோசனம் எனக்குண்டாகக்கடவது. கர்த்தர் நிமித்தம் என் இருதயத்தை ஆறுதல்செய்வீராக.

௨௧. நீர் கீழ்ப்படிவீரென்று நான் நிச்சயமாய் அறிந்து, இப்படி யுமக்கு எழுதினேன். நான் கேட்டதற்குமேலாகவுஞ் செய்வீரென்றும் அறிந்திருக்கிறேன்.

௨௨. அல்லாமலும் * உங்கள் விண்ணப்பங்களினாலே உங்களுக்குத்(திரும்பக்)கொடுக்கப்படுவேனென்று நான் † நம்பியிருக்கிறபடியால், நான் இருக்கும்படிக்கு ஓரிடத்தை யெனக்காக எத்தனம்பண்ணுவீராக. * ௨. கொரி. ௧. ௰௧; † பிலி. ௧. ௨௫, ௨௬.

௨௩. கிறிஸ்து இயேசுவினிமித்தம் என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிற * எப்பாப்பிறாவும், * கொலோ. ௪. ௰௨.

௨௪. என்னுடன்வேலையாட்களாகிய * மாற்குவும், அரிஸ்தர்க்குவும், † தேமாவும், லூக்காவும் உமக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள். * கொலோ. ௪. ௰; † கொலோ. ௪. ௰௪.

௨௫. நமமுடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்கிருபை யுங்கள் ஆவியுடனே யிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபிரேயருக்கெழுதின நிருபம்.

---

(கி. பி. பின். ௬௪ ௵)

## ௧. அதிகாரம்.

[(௧) இக்கடைசிநாள்களில் பிதாவிலிருந்து நம்மிடத்திற்குவந்த கிறிஸ்து, (௪) தன்மையிலும், செய்கையிலும் தேவதூதர்களைப்பார்க்கிலுஞ் சிறந்தவரென்றுசொல்லியது.]

பூர்வீகத்திலே பலகாலங்களிலும் பலவிதமாய், பராபரன் (நம்முடைய) முன்னோர்களுடனே தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் திருவுளம்பற்றினதுமன்றி,

௨. இந்தக் கடைசிக்காலத்திலே குமாரன் மூலமாய் நம்முடனே திருவுளம்பற்றினார். * அவரைச் சகலத்திற்குஞ் சுதந்தரவாளியாக வைத்தார். † அவராலே உலகங்களையு முண்டாக்கினார். * மத்தேயு. ௨௮. ௰௮; † யோவா. ௧. ௩.

௩. அவர் * பராபரனுடைய மகிமையின் பிரகாசமாயும், † அவருடைய தன்மையின்சொரூபமாயும், எல்லாவற்றையுந் தம்முடைய வல்லமையுள்ளவசனத்தினாலே தாங்குகிறவராயுமிருந்து, பின்பு தம்மாலேதாமே நம்முடையபாவங்களை நிவிர்த்திசெய்து ‡ உன்னதத்திலுள்ள மகத்துவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார். * யோவா. ௧. ௰௪; † கொலோ. ௧. ௰௫; ‡ மாற். ௰௬. ௰௯.

௪. இப்படி அவர் தேவதூதரிலும் * அதிகவிசேஷமாகச் சுதந்தரித்துக்கொண்ட நாமமெவ்வளவோ அவ்வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்மையுள்ளவராயிருக்கிறார். * பிலிப்பி. ௨. ௯. ௰௧.

௫. எப்படியெனில், * நீர் என்னுடைய குமாரனென்றும், இன்று நான் உம்மைச் ஜெனிப்பித்தேனென்றும், † அவருக்குப் பிதாவாயிருப்பேன். அவர் எனக்குக்குமாரனாயிருப்பாரென்றும், பராபரன் ஒருகாலத்திலாகிலுந் தூதர்களில் ஒருவனுக்குச்சொன்னாரா? * சங். ௨. ௭; † ௨. சாமு. ௭. ௰௪.

௬. மறுபடியுந் தமது * முதற்பேறானவரை இவ்வுலகத்திற் பிரவேசிக்கச்செய்தபொழுது, † தேவதூதர்யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக்கடவர்களென்றார். * கொலோ. ௧. ௰௮; † சங். ௯௭. ௭.

௭. அன்றியுந்தேவதூதரைக்குறித்துச்சொல்லியிருக்கிறதாவது; * தம்முடைய தூதர்களைக்காற்றுக்களாகவும், தம்முடைய ஊழியக்காரரை அக்கினிச்சுவாலைகளாகவுஞ்செய்தாரென்றுசொல்லியிருக்கிறது. * சங். ௱௪. ௪.

௮. குமாரனைக்குறித்து எப்படிச்சொல்லியிருக்கிறதென்றால், * பராபரனே! உமது

சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளதாயிருக்கும். உம்முடைய இராச்சியத்திலுள்ள செங்கோல் செம்மையான செங்கோலாயிருக்கிறது. * சங்கீ. ௪௫. ௬.

௯. நீதியில் அன்புகூர்ந்து அக்கிரமத்தைப் பகைத்திருக்கிறீர். ஆதலாற் பராபரனே! உம்முடைய பராபரன் உம்முடைய தோழரிலும் உம்மை மகிழ்ச்சியென்னும் எண்ணெயினாலே அபிஷேகம்பண்ணினாரென்றும்,

௰. * கர்த்தாவே! ஆதியிலே நீர் பூமியை அஸ்திபாரப்படுத்தினீர். வானங்கள் உம்முடைய கைகளின் கிரியைகளாயிருக்கின்றன. * சங்கீ. ௱௨. ௨௫.

௰௧. அவைகள் அழிந்துபோம். நீர்மாத்திரம் நிலைத்திருப்பீர். அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழமையாய்ப்போம்.

௰௨. ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர். அப்பொழுது மாறிப்போம். நீர்மாத்திரம் (எப்பொழுதும்) ஒரேவிதமாயிருப்பீர். உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லையென்றுஞ் சொல்லியிருக்கின்றது.

௰௩. மேலும் * நான் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதப்படியாக்கிப்போடுமளவும், என் வலதுபாரிசத்திலுட்காருமென்று இப்படி அவர் ஒருகாலத்திலாகிலுந் தூதர்களிலொருவனுக்குச் சொன்னாரா? * சங்கீ. ௱௰. ௧.

௰௪. * இரட்சிப்பைச் சுதந்தரிப்பவர்களுக்கு † ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்களெல்லாரும் அனுப்பப்படுகிற பணிவிடை ஆவிகளாயிருக்கிறார்களல்லவா! * உரோமர் ௮. ௰௭; † சங்கீ. ௩௪. ௭—௯௧. ௰௧, ௰௨.

## ௨. அதிகாரம்.

[(௧) நாம் கிறிஸ்து இயேசுவுக்குக் கீழ்ப்படியவேண்டுமென்றும், (௫) அதற்கு அவர் தம்முடைய சுபாவத்தை [(௰௪, வேண்டிய படி] பெற்றுக்கொண்டாரென்றுங் காட்டியது.]

ஆகையால், நாம் கேட்டறிந்தவைகளைவிட்டு விலகாதபடிக்கு அதிக எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

௨. என்னத்தினாலெனில், * தேவதூதராற் சொல்லப்பட்டவசனத்திற்கு விரோதமான எந்தச்செய்கைக்கும், கீழ்ப்படியாமைக்கும் நீதியானதண்டனைவரத்தக்கதாக, அவர்களுடைய வசனம் உறுதிப்பட்டிருந்ததாயிருக்க, * அப்போ. ௭. ௫௩; கலா. ௩. ௰௯.

௩. முதலாவது, * கர்த்தராலேயறிவிக்கப்பட்டுப் பின்பு அவரிடத்திற் கேட்டவர்களால் நமக்கு உறுதியாக்கப்பட்டதுமாய், * ௰௨. ௨௫.

௪. அடையாளங்களினாலும், அற்புதங்களினாலும், பலவிதமான பலத்த செய்கையினாலும், பரிசுத்த ஆவியைத் தம்முடைய சித்தத்தின்படி (நமக்குப்) பகிர்ந்துகொடுத்ததினாலும், பராபரன் சாட்சிகொடுக்கப்பட்டதுமாயிருக்கிற இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக் குறித்து நாம் கவலையில்லாமற்போனால் (தண்டனைக்கு) * எப்படித் தப்பிப்போவோம்! * ௰. ௨௮, ௨௯.

௫. அன்றியும் இனிமேல்வரும் உலகத்தைக் குறித்துப்பேசுகிறோமே. அதையவர் தூதர்களுக்குக் கீழ்ப்படுத்தவில்லை. ஒரு இடத்திலே ஒருவன் சாட்சியாகச்சொன்னது,

௬. * மனிதனை நீர் நினைத்துக்கொள்ளுகிறதற்கும், அல்லது மனிதனுடைய புத்திரனை நீர் விசாரித்துக்கொள்ளுகிறதற்கும் அவன் எம்மாத்திரம். * சங்கீ. ௮. ௪.

௭. கொஞ்சக்காலமாய் அவனைத் தேவதூதரிலுஞ் சிறியவனாக்கினீர். பின்பு மகிமையோடுங், கனத்தோடும் அவனுக்கு முடிசூட்டி, உம்முடைய கைகளின் கிரியைகளுக்கு அதிகாரியாக வைத்துச் சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீரென்றான்.

௮ இந்தப்படியவர் சகலத்தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்துகையில் அவனுக்குக்கீழ்ப்படாதபடிக்கு நாம் ஒரு பொருளையும் வைத்துக்கொள்ளவில்லை. இப்பொழுது சகலமும் அவனுக்குக்கீழ்ப்படக்காணோம்.

௯. இயேசுவானவர்மாத்திரம் பராபரனுடைய கிருபையினாலே * யாவருக்காகவும் மரணத்தை யனுபவிக்கும்பொருட்டாகக் கொஞ்சக்காலமாய்த் தேவதூதரிலுஞ் சிறியவராக்கப்பட்டுப் பின்பு மரணத்தைச்சகித்ததினாலே † மகிமையோடுங், கனத்தோடும் முடிசூட்டப்படக்காண்கிறோம். * ௧. யோவான். ௨. ௨; † மத். ௨௮. ௰௮.

௰. மேலும் * தமக்காகச் சகலத்தையும் உண்டாக்கினவர் அநேகம்பிள்ளைகளை மகிமைக்குக் கொண்டுபோகையில் அவர்களுக்கு இரட்சணியத்தையுண்டாக்கின அதிபதியை உபத்திரவங்களின்வழியாய்த் தேறினவராக்குகிறது அவருக்குத் தகுதியாயிருந்தது. * லூக்கா. ௨௪. ௨௬.

௰௧. எப்படியெனிற் பரிசுத்தஞ்செய்கிறவரும், பரிசுத்தஞ்செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் ஒருவரிலிருந்து வருகிறார்கள். அதினாலேதானே அவர்களைச் * சகோதரரென்றழைக்கவெட்கப்படாமல். * யோவா. ௨௰. ௰௭.

௰௨. * உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கறிவித்துச் சபையாருக்குள்ளே உமக்குத் துதியாகப் பாடுவேனென்றும், † நான் அவரிடத்தில் நம்பிக்கையாயிருப்பேனென்றும், * சங்கீ. ௨௨. ௨௨; † ஏசா. ௮. ௰௭.

௰௩. இதோ, நானும், பராபரன் எனக்குக்

கொடுத்தபிள்ளைகளுமென்றுசொல்லியிருக்கிறார்.

௰௪. ஆனதால் பிள்ளைகளமாம்ச இரத்த தேகமுள்ளவர்களாயிருக்க அவரும் *மரணத்தைவருவிக்க வல்லமையுடையவனாகிய பசாசானவனைத் (தமது) மரணத்தினாலே டழிக்கும்படிக்கும், * ௧. மோசே. ௩. ௰௫

௰௫. சீவகாலமளவும் மரணத்திற்குப்பயந்து அடிமையாயிருந்தயாவரையும் விடுதலைபண்ணும்படிக்கும் அவர்களைப்போல மாம்ச இரத்ததேகமுள்ளவரானார்.

௰௬. ஆதலால் அவர் தேவதூதரின் சுபாவத்தையெடுத்துக்கொள்ளாமல் ஆபிரகாமின்சந்ததியிலே (மனிதசுபாவத்தை) யெடுத்திருக்கிறார்.

௰௭. அன்றியும் அவர் (தமமுடைய) சனங்களின் பாவங்களை நிவிர்த்திசெய்வதற்கேதுவாக இரக்கமுள்ளவராயும், பராபரனுக்குரியவைகளைக்குறித்து உண்மையானபிரதான ஆசாரியராயுமிருக்கும்படிக்கு எவ்விதத்திலும், (தமமுடைய) * சகோதரருக்கொப்பாகவேண்டியதாயிருந்தது. * பிலி. ௨. ௭, ௮.

௰௮. ஆனதால் அவர்தாமே * சோதிக்கப்பட்டுப்பாடு அனுபவித்ததினாலே சோதிக்கப்படுகிறவர்களுக்குச் சகாயஞ்செய்யத்திராணியுள்ளவராயிருக்கிறார். * ௪. ௰௫, ௰௬.

## ௩. அதிகாரம்.

[(௧) மோசேயிலும் கிறிஸ்து அதிகமகிமையுள்ளவராகையால், (௭) அவரைநாம விசுவாசியாவிட்டால், கடினநெஞ்சுள்ள இஸ்ரவேலரைப்பார்க்கிலும், அதிக ஆக்கினைக்குப்பாத்திரவர்களாயிருப்போமென்று சொல்லியது.]

இப்படியிருக்கப் பரம அழைப்பையடைந்தவர்களாகிய பரிசுத்த சகோதரரே! நாம அறிக்கைபண்ணுகிற * அப்போஸ்தலருமாய், பிரதான ஆசாரியருமாயிருக்கிற கிறிஸ்து இயேசுவை உற்றுப்பாருங்கள். * யோவா. ௨௰ ௨௧.

௨. * மோசேயென்பவன் தேவ ஆலயமெங்கும் உண்மையாயிருந்ததுபோல, அவருந் தம்மை ஏற்படுத்தினவருக்கு உண்மையுள்ளவராயிருந்தார். * ௪. மோசே. ௰௨. ௭.

௩. எந்த ஆலயமும் மனிதனாலேயுண்டாக்கப்பட்டிருக்கின்றது. பராபரனசகலத்தையுமுண்டாக்கினவர்.

௪. ஆகையால் ஆலயத்திலும் ஆலயத்தையுண்டாக்கினவருக்கு உண்டாயிருக்கிறதினமெவ்வளவோ அவ்வளவாய் மோசேயிலும் இயேசுவானவர் அதிக மகிமைக்குப்பாத்திரராயிருக்கிறார்.

௫. அந்தப்படிச் சொல்லவேண்டியிருந்தவைகளுக்குச்சாட்சியாக மோசே ஊழியக்காரனாய், அவருடைய ஆலயமெங்கும் உண்மையுள்ளவனாயிருந்தான்.

௬. கிறிஸ்துவானவர் அவருடைய ஆலயத்திற்குமேலானகுமாரனாய் (உண்மையாய்) இருக்கிறார். (நீதிய சிவனபேறுள்ள) நம்பிக்கைக்குச்சேர்ந்த தயிரியத்தையும், மேன்மை பாராட்டலையும் முடிவுபரியந்தம் உறுதியாய்ப்பற்றிக்கொண்டால், * நாமே அவருடைய ஆலயமாயிருப்போம்.
* ௧. தீமோ. ௩. ௰௫.

௭. ஆகையாற் பரிசுத்த ஆவியானவர்சொல்லுகிறபடியே, * இன்று நீங்கள் அவருடைய சத்தத்தைக்கேட்கையில வனாந்தரத்திலே, * சங். ௬௫. ௭.

௮. * உங்கள்முன்னோர்கள் என்னைச்சோதித்து எனக்குக் கோபமூட்டினநாளிலே நடந்ததுபோல, * ௨. மோசே. ௰௭. ௨-௭; ௪. மோசே. ௰௪. ௧—௰.

௯. உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள். அவர்கள் நாற்பதுவருஷமாய் என்னுடைய கிரியைகளைக்கண்டிருந்தும் என்னைச்சோதித்து என்னை நிதானித்தார்கள்.

௰. ஆனதால் நான் அந்தச்சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்பொழுதும் வழிதப்பிநடக்கிற மனதுள்ளவர்களாய் என்னுடைய நெறிகளையறியாதிருக்கிறார்களென்றுசொல்லி,

௰௧. * இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில அவர்கள் பிரவேசியாமலிருக்கக்கடவர்களென்று என் கோபத்தினால்ஆணையிட்டேனென்றார். * ௪. மோசே. ௰௪. ௨௧—௨௩.

௰௨. அந்தப்படிச் சகோதரரே! சீவனையுடைய பராபரனைவிட்டு விலகுதற்கேதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களிலொருவனிடத்திலுமிராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருந்து,

௰௩. உங்களிலொருவனாகிலும் பாவத்தின வஞ்சனையினாலே கடினப்பட்டுப்போகாதபடிக்கு, இன்றென்னப்படுமளவும் ஒருவருக்கொருவர் நாடோறும் புத்திசொல்லி வருவீர்களாக.

௰௪. நாம நம்பிக்கையையடைந்ததுமுதல், * முடிவுபரியந்தம் அதை உறுதியாய்ப் பற்றிக்கொண்டால நாங் கிறிஸ்துவினிடத்திற பங்குள்ளவர்களாயிருப்போமே.
* அறி. ௨. ௰.

௰௫. இன்றைக்கு நீங்கள் அவருடைய சத்தத்தைக்கேட்கையிற கோபமூட்டுதலுள்ள நாளிலே நடந்ததுபோல உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்களென்றுசொல்லியிருக்கிறபடியால், அப்படியே பற்றிக்கொள்ளவேண்டும்.

௰௬. அதெப்படியெனிற கேட்டவர்களிற

சிலர் கோபமூட்டினார்கள். அப்படிச்செய்தவர்கள் மோசேயினாலே எகிப்திலிருந்து புறப்பட்ட யாவருமல்ல. மேலும் அவர் நாற்பது வருஷமாய் எவர்களை யரோசித்தார்?

யஎ. பாவஞ்செய்தவர்களையல்லவா? * அவர்களுடைய சரீரங்கள் வனாந்தரத்திலே விழுந்துபோயின. * ச. மோசே. உசு. சுச, சுரு.

யஅ. பின்னும் இளைப்பாறுதலான என்னுடைய இடத்திலே பிரவேசியாதிருக்கக்கடவர்களென்று அவர் ஆணைக்குறித்து ஆணையிட்டார்! விசுவாசியாதவர்களைக்குறித்தல்லவா?

யகூ. ஆனதால், அவிசுவாசத்தினாலே அவர்கள் அதிற்பிரவேசிக்கக்கூடாமற் போனார்களென்று பார்க்கிறோமே.

## ச. அதிகாரம்.

[(க) விசுவாசத்தினால் கிறிஸ்தவர்களுக்கு இளைப்பாறுதலுண்டென்றும், (யஉ) பராபரனுடையவசனம் வல்லமையுள்ளதென்றும், (யச) பாவமில்லாமற்பலவீனங்களுக்குரிய தேவகுமாரனும்,பிரதான ஆசாரியருமாகிய இயேசுவினால், (யசு) நாம் கிருபாசனத்தண்டைக்குத் தயிரியத்தோடே போகக்கூடுமென்றுஞ் சொல்லியது.]

ஆனபடியினாலே இளைப்பாறுதலான அவருடைய இடத்திலே பிரவேசிக்கும்படிச்சேற்ற வாக்குத்தத்தம் பின்னும் நமக்குண்டாயிருக்க, நம்மிலொருவனாகிலும் (அதையடையாதபடி) தாமதமாயிருக்கிறவனாகத் தோன்றாதபடிக்குப் பயந்திருக்கக்கடவோம்.

உ. எப்படியெனில் சுவிசேஷம் அவர்களுக்கறிவிக்கப்பட்டதுபோல, நமக்கும் அறிவிக்கப்பட்டது. அந்தவசனத்தைக்கேட்டும் அவர்களுக்குள்ளே விசுவாசமில்லாதபடியால், அந்தக்கேள்வி அவர்களுக்குப் பிரயோசனமாயிருக்கவில்லை.

ங. விசுவாசிகளாகிய நாம் இளைப்பாறுதலான இடத்திற்பிரவேசிப்போம். அன்றியும் திருஷ்டாந்தமாக உலகஞ் சிருஷ்டிக்கப்பட்டபொழுது தம்முடைய கிரியைகளைச் செய்து முடித்திளைப்பாறினபின்பவர் சொன்னது, * இளைப்பாறுதலான என்னுடைய இடத்திலே அவர்கள் பிரவேசிப்பதில்லையென்று நான் ஆணையிட்டேனென்று சொன்னார். * சங. கூரு. யக.

ச. அன்றியுந்திருஷ்டாந்தமாக ஓரிடத்திலே ஏழாநாளைக்குறித்துச் சொல்லியிருக்கிறதென்னவென்றால் * பராபரன் ஏழாநாளிலே தம்முடைய கிரியைகளையெல்லாமுடித்து, ஆசோதையாயிருந்தாரென்றுசொல்லியிருக்கிறது. * க. மோசே. உ. உ.

ரு. மறுபடியும் மேற்சொல்லிய இடத்திலேயவர்களிளைப்பாறுதலான என்னுடைய இடத்திற் பிரவேசியாமலிருக்கக்கடவர்களென்றுஞ் சொல்லியிருக்கிறார். * ச. மோ. யச. உங.

சு. ஆகையாற்பின்னுஞ்சிலர் அதிற்பிரவேசிக்கிறதற்கேதுவுண்டாயிருந்தபடியினாலும், முதலாவது சுவிசேஷத்தைக்கேட்டவர்களும் அவிசுவாசத்தினாலே அதிற்பிரவேசியாமற்போனபடியினாலும்,

எ. * இன்று அவருடைய சத்தத்தைக் கேட்கையில் உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருக்கவென்று அநேககாலத்திற்குப்பின்பு தாவீதின்புத்தகத்திலே சொல்லியிருக்கிறபடி, இன்றைக்கென்பதினாலே (பராபரன்) பின்னும் ஒரு நாளைக்குறித்திருக்கிறார். * சங. கூரு. எ, அ.

அ. யோசுவாவென்பவன் அவர்களை இளைப்பாறச்செய்தானானால் பின்பு அவர் வேறொருநாளைக்குறித்துப் பேசமாட்டாரே.

கூ. ஆனபடியால், இளைப்பாறும்படிக்கான காலம் பின்னும் பராபரனுடைய சனங்களுக்கு வருகிறதாயிருக்கின்றது.

ய. அந்தப்படிப் பராபரன் * தம்முடைய கிரியைகளை முடித்து ஓய்ந்திருந்ததுபோல இளைப்பாறுதலான அவருடைய இடத்திற் பிரவேசித்தவனுந் தன்கிரியைகளை முடித்தோய்ந்திருப்பான். * அறி. யச. யங.

யக. ஆகையால், அந்தத்திருஷ்டாந்தத்தின்படி ஒருவனாகிலும் அவிசுவாசத்தினாலே விழாதபடிக்கு நாம் மேற்சொல்லிய இளைப்பாறுதலான இடத்திற் பிரவேசிக்கச்சாக்கிரதையாயிருக்கக்கடவோம்.

யஉ. * பராபரனுடைய வார்த்தையுயிர்ப்பிக்கிறதுமாய், பலமுள்ளதுமாய், இருபுறமும் கருக்குள்ள எந்தக்கத்தியிலுங் கருக்கானதுமாய், ஆத்துமாவையும், ஆவியையும், (சரீர) மொழிகளையும், ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக்குத்துகிறதுமாய், இருதயத்தின் சிந்தனைகளையும், யோசனைகளையும் வகையறுத்துத் தீர்க்கிறதுமாயிருக்கிறதே. அவருக்குமுன்பாகத் தோன்றாதிருக்கிறசிருஷ்டியொன்றுமில்லை. * எரே. உங. உசு.

யங. * சகலமும் அவருடைய கண்களுக்குமுன்பாக நிருவாணமாயும், வெளியரங்கமாயுமிருக்கின்றன். அவருக்கே நாங்கணக்கு ஒப்புவிக்கவேண்டும். * சங. ளகசு. யக, யஉ.

யச. ஆகையால், * வானங்களின்வழியாயப் (பரமண்டலத்திற்குப்) போன தேவகுமாரனாகிய இயேசுவென்னும் மகா பிரதான ஆசாரியர் நமக்கிருக்கிறபடியினாலே, (அவரை) அறிக்கையிடுகிறதில உறுதியாயிருக்கக்கடவோம். * அ. க, உ.

யரு. * அவர் நம்முடைய பலவீனங்களைக்

குறித்து நமக்கிரங்கத்திராணியில்லாத பிரதான ஆசாரியரல்லவே. பாவத்தைத்தவிர மற்றெந்தவிதத்திலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டாரே. * ௨. ௰எ, ௰அ; பிலிப்பி. ௨. எ, அ.

௰௬. ஆதலால், * நாம் இரக்கத்தைப்பெற்றுக்கொள்ளும்படிக்கும், காலத்திற்குத்தகுதியான உதவியாகிய கிருபையையடைந்துகொள்ளும்படிக்கும் தைரியமாய்க் கிருபாசனத்தினிடத்திலே சேரக்கடவோம். * ௰. ௰௯-௨௨.

## ௫. அதிகாரம்.

[(௧) நம்முடைய இரட்சகரின் ஆசாரியப்பட்டத்துக்குரிய அதிகாரத்தையும், மேன்மையையுஞ்சொல்லி, (௰௧) அந்த அறிவுக்குவந்தெட்டாதிருப்பதைக்குறித்துக் கடிந்துகொண்டது.]

அன்றியும் மனிதரில்லெடுக்கப்பட்ட பிரதான ஆசாரியனெவனும் பாவங்களுக்காகக் காணிக்கைகளையும், பலிகளையுஞ்செலுத்தி, இப்படி மனிதருக்காகத்தேவகாரியங்களை நடப்பிக்கும்படிக்குவைக்கப்படுவான்.

௨. அல்லாமலும் அவன் தானும் பலவீனமுள்ளவனானபடியினாலே, அறியாதவர்களுக்கும், வழுவிப்போனவர்களுக்கும் மனவுருக்கமாயிருக்கத்தக்கவனாயிருப்பான்.

௩. அந்தக்காரணத்தினாலே அவன் ஜனங்களுடைய பாவங்களுக்காகப் பலியிடுகிறதுபோலத் * தன்னுடைய பாவங்களுக்காகவும் பலியிடவேண்டியதாயிருக்கிறது. * ௩ மோசே. ௯. எ.

௪. மேலும் ஒருவனும் இந்தக்கனமான உத்தியோகத்தைத் தானாலே பெற்றுக்கொள்ளாமல், * ஆரோன் அழைக்கப்பட்டதுபோலப் பராபரனாலே யதற்கு அழைக்கப்படுவான். * ௨. மோ. ௨௮. ௧.

௫. அந்தப்படிக் கிறிஸ்துவும், பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்மைத்தாமே உயர்த்தவில்லை. * நீர் என்னுடைய குமாரன். இன்று நான் உம்மைச்செனிப்பித்தேனென்று அவரோடே (சொன்னவரே அவரையுயர்த்தினார்.) * சங். ௨. எ; ௰௩. ௩. ௰.

௬. அப்படி வேறொரு இடத்திலேயும், * நீர் மெல்கிசேதேக்கின் முறைமையாய் என்றென்றைக்கும் ஆசாரியரானவரென்று சொல்லியிருக்கிறது. * சங். ௱௰. ௪.

எ. (அன்றியும்) அவர் மனிதருடைய பூமியிலே சஞ்சரிக்கையில் தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்தத்தோடும், அழுகையோடும் * விண்ணப்பம்பண்ணி, மிகவும் வேண்டிக்கொண்டு, தமக்குண்டான பயத்தினின்று விடுதலையாக்கப்பட்டு, * லூக். ௨௨. ௩௯-௪௪; மத். ௨௭. ௪௬.

அ. குமாரனாயிருந்தும், தாம் பட்டபாடுகளாலே கீழ்ப்படிதலைக்கற்றுக்கொண்டு,

௯. * தாந்தேறினவரானபின்பு தமக்குக் கீழ்ப்படிகிறயாவருக்கும் நித்தியமான இரட்சிப்பையடைவதற்குக் காரணராகி, * ௨. ௰.

௰. (இப்படி) பராபரனாலே மெல்கிசேதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியரென்று வாழ்த்தப்பட்டார்.

௰௧. இந்தச்சங்கதியைக்குறித்து நான் விஸ்தாரமாய்ப்பேசலாம். நீங்கள் மந்தமாய் அறிகிறவர்களானபடியால் அதை விவரித்துக்காண்பிக்கிறது அரிதாயிருக்கின்றது.

௰௨. காலத்தைப்பார்க்கிறபொழுது போதகராயிருக்கவேண்டிய உங்களுக்குப் பராபரனுடைய வாக்கியங்களின் முதல் நியாயங்களை மறுபடியும் போதிக்கவேண்டியதாயிருக்கின்றது * உணவையல்ல, பாலைச்சாப்பிடத்தக்கவர்களானீர்கள். * ௧. கொரி. ௩. ௧, ௨.

௰௩. பாலுண்கிறவன் குழந்தையாயிருக்கிறபடியினாலே நீதிக்குரிய வசனத்தையறிந்துகொள்ளத் திராணியுள்ளவனல்லவே.

௰௪. கெட்டியான உணவு நிறைவாய் வளர்ந்தவர்களாயும், நன்மையையும், தீமையையும் வகையறுக்கிறதற்கு முயற்சியினாலே தகுதியாக்கப்பட்ட புத்தியுள்ளவர்களாயுமிருக்கிறவர்களுக்கேயுரியதாயிருக்கின்றது.

## ௬. அதிகாரம்.

[(௧) விசுவாசத்தைவிட்டு மருளவிழாமல், (௰௧) உறுதியாயிருந்து, (௰௨) பராபரனைச் சாகசிரத்தையோடும், பொறுமையோடும் நோக்கியிருக்கக்கற்பித்து, (௰௩) பராபரன் தம்முடைய வாக்குத்தத்தங்களை நிறைவேற்றுவாரென்று சொல்லியது.]

ஆகையால் மரணத்திற்கேதுவான கிரியைகளைவிட்டு மனந்திரும்புகிறதற்கும், பராபரனை விசுவாசிக்கிறதற்கும்,

௨. ஸ்நானங்களுக்கடுத்த உபதேசத்திற்கும், கைகளை வைக்கிறதற்கும், மரித்தோர் உயிரோடெழும்புதற்கும், நித்தியமான நியாயத்தீர்ப்புக்கும் ஏதுவான உபதேசங்களிலே நாம் மறுபடியும் அஸ்திபாரம் போடாதபடிக்கு, கிறிஸ்துவுக்குரிய முதல் நியாயங்களைச்சொல்லுகிற உபதேசத்தை நாம் இப்பொழுது நிறுத்தி, உயர்ந்த உபதேசங்களைக்குறித்துப் பேசிக்கொள்வோமாக.

௩. * பராபரனுக்குச் சித்தமானால், அப்படிச்செய்வோம். * அப்போ. ௰௮. ௨௧; ௧ கொரி. ௪. ௰௯.

௪. ஏனென்றால், ஒருகாலத்திலே பிரகாசமாக்கப்பட்டும், பரம ஈவைருசி பார்த்தும், பரிசுத்த ஆவியைப்பெற்றும்,

௫. பராபரனுடைய நல்வார்த்தையையும், இனிமேல்வரும் யுகத்தின் பெலன்களையும் ருசிபார்த்துமிருக்கிறவர்கள் மறுதலித்துவிழுந்தபின்பு,

௬. * பராபரனுடைய குமாரனைத் தங்களுக்குள்ளே மறுபடியுஞ்சிலுவையில் அறைந்து அபகீர்த்திசெய்தபடியால் மனந்திரும்புதற்கேதுவாய் அவர்களை மறுபடியும் புதிதாக்கக்கூடாத காரியமாயிருக்கின்றது.
* ௰. ௨௬—௨௯.

௭. எந்தத்திருட்டாந்தமாக, பூமியானது தன்மேல் அடிக்கடிவருகிற மழையையுட்கொண்டு தன்னிடத்திற் பயிரிடுகிறவர்களுக்கேற்ற பயிரை முளைப்பிக்கும்பொழுது, பராபரனால் ஆசீர்வதிக்கப்படுகின்றது.

௮. * முட்செடிகளையும், முட்பூண்டுகளையும், முளைப்பிக்கிறநிலந்தகாததாயும், சபிக்கயப்படுகிறதற்குச் † சமீபமாயுமிருக்கின்றது. கடைசியிலே அது முழுவதுங் காயந்துபோம். * ஏசாயா. ௫. ௬; † மத்தேயு. ௩. ௰.

௯. பிரியமானவர்களே! நாங்களிப்படிச் சொல்லியும், இரட்சிப்புக்கேற்ற நன்மையான யோசனைகள் உங்களுக்குண்டாயிருக்கின்றனவென்று நம்பிக்கையாயிருக்கிறோம்.

௰. * பராபரனும் உங்கள் கிரியையையும், பரிசுத்தவான்களுக்கு நீங்கள் ஊழியஞ்செய்ததினாலும், செய்துவருகிறதினாலுந் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள பிரயாசத்தையும் † மறக்கத்தக்கதாக அநியாயமுள்ளவரல்லவே. * மத்தேயு. ௰. ௪௨; † மல்கி. ௩. ௰௬.

௰௧. ஆகையால், நீங்கள் தாமதமாயிராமல், வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும், நீடியபொறுமையினாலும் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருக்கும்படிக்கு,

௰௨. நீங்கள் யாவரும் (எங்கள்) நம்பிக்கை பரிபூரணமுள்ளதாகும்படி முடிவுபரியந்தஞ் சாக்கிரதையையே காண்பிக்கவேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

௰௩. ஆபிரகாமுக்குப் பராபரன் வாக்குத்தத்தம்பண்ணினபொழுது, ஆணையிடும்படி தம்மிலும் பெரியவரொருவருமில்லாதபடியினாலே * தமதுபேரிலே ஆணையிட்டு,
* ௧. மோ. ௨௰. ௨௮; சங்கீ. ௱௫. ௯.

௰௪. நான் உன்னை மிகவும் ஆசீர்வதித்து, உன்னை மிகவும் பெருக்கப்பண்ணுவேனென்றார்.

௰௫. அவனும் அந்தப்படியே பொறுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப்பெற்றான்.

௰௬. அதெப்படியெனில், மனிதர்கள் தங்களிலும் பெரியவன்பேரில் ஆணையிடுவார்கள். உறுதியுண்டாயப்படிக்கேற்ற ஆணையே அவர்களுக்குள்ளே * சகல வியாச்சியங்களையும் நிறைவேற்றும். * ௨. மோ. ௨௨. ௰௧.

௰௭. அந்தப்படி பராபரனும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது யோசனையின் மாறாத நிச்சயத்தைக்காண்பிக்கும்படி அதிக சித்தமுள்ளவராய் ஓராணையினாலே அவைகளை ஸ்திரப்படுத்தினார்.

௰௮. பராபரன் பொய்பேசக்கூடாததாயிருக்க, நாம் நம்பிக்கொள்ளும்படி நமக்கு முன்வைக்கப்பட்டதைப் பிடிக்கிறதற்கு ஓடிவந்த நாம் மாறாத இரண்டு பொருள்களினாலே பலத்த ஆறுதலுள்ளவர்களாகும் பொருட்டாக அப்படிச்செய்தார்.

௰௯. அந்த நம்பிக்கை நம்முடைய ஆத்துமாவுக்கு நிலையும், உறுதியுமான நங்கூரம் போலாகித் திரைச்சீலைக்குட்போகிறதாயிருக்கின்றது.

௨௰. நமக்கு முன்னோடினவராகிய இயேசு மெல்கிசேதேக்கின்முறைமையின்படி * நித்தியமான பிரதான ஆசாரியராய் நமக்காக அந்தத்திரைச்சீலைக்குட் பிரவேசித்திருக்கிறார். * ௫. ௬, ௰.

## ௭. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து இயேசுமெல்கிசேதேக்கின் முறைமைப்படிக்கு ஆசாரியராயிருக்கிறபடியினாலே, (௰௧) ஆரோனின் முறைமைப்படிக்குண்டாயிருக்கிற ஆசாரியர்களைப்பார்க்கிலும் மேன்மையுள்ளவரென்று சொல்லியது.]

௧. * அந்த மெல்கிசேதேக்கென்பவன் இராசாக்களையடித்துத் திரும்பிவந்த ஆபிரகாமுக்கு எதிர்கொண்டு, அவனையாசீர்வதித்து, அவனாலே பத்திலொருபாகத்தைப் பெற்றுக்கொண்டவன். * ௧. மோ. ௰௪. ௰௮—௨௰.

௨. அவன் சலேமின் இராசா உன்னதமான தேவனுக்கு முன்பாக ஆசாரியனாயிருந்தவன். முதற்பேராகிய மெல்கிசேதேக்கென்பதற்கு நீதியுள்ள இராசாவென்று அருத்தமாம். பின்பு சலேமின் இராசாவென்பதற்குச் சமாதானமுள்ள இராசாவென்றருத்தமாம்.

௩. அவன் தகப்பனும், தாயும், வம்ச அட்டவணையுமில்லாதவன். அவனுடைய (உத்தியோக) நாள்களின் ஆரம்பமும், சீவனின்முடிவுஞ் சொல்லப்படடிராததினாலே, அவன் பராபரனுடைய குமாரனுக்கு ஒப்பாக்கப்பட்டவனாய்த் தன் முழுச்சீவகாலமளவும் ஆசாரியனாயிருக்கிறான்.

௪. அவனுடைய மேன்மையைப் பாருங்கள். கோத்திரத்தலைவனாகிய ஆபிரகாமுங்கொள்ளையிடப்பட்டவைகளிற் பத்திலொருபாகத்தை யவனுக்குக்கொடுத்தானே.

௫. * லேவியின் புத்திரரில் ஆசாரியப்பட்டத்தையடைகிறவர்களும், ஆபிரகாமின் சந்ததியாராகவேயிருக்கிற தங்கள் சகோதரராகிய சனங்களின் கையிலே நியாயப்பிரமாணத்தின்படி பத்திலொன்றை வாங்குகிறதற்குக் கட்டளைபெற்றிருக்கிறார்கள்.

* ௪. மோசே. ௰௮. ௨௰—௨௮.

௬. அது மெய்தான். ஆகிலும், அவர்களுடைய வம்சத்திலிராதவனாகிய (மெல்கிசேதேக்கென்பவன்) பத்திலொன்றை ஆபிரகாமின் கையிலே வாங்கி * வாக்குத்தத்தங்களைப்பெற்றவனையே ஆசிர்வதித்தான்.

* ௧. மோ. ௰௨. ௨, ௩.

௭. சிறியவன் பெரியவனாலே ஆசிர்வதிக்கப்படுவான்.

௮. அதற்குச்சந்தேகமில்லையே. அன்றியும், இவ்விடத்திலே மரிக்கத்தக்க மனிதர் பத்திலொன்றை வாங்குவார்கள். அவ்விடத்திலே பிழைத்திருக்கிறானென்று சாட்சிபெற்றவன் வாங்கினான்.

௯. அன்றியும் மெல்கிசேதேக்கென்பவன் ஆபிரகாமுக்கெதிர்கொண்டுபோனபொழுது, லேவியானவன் தன் தகப்பனுடைய அரையிலிருந்தபடியால்,

௰ பத்திலொன்றைவாங்குகிற லேவியும் ஆபிரகாமினாலே பத்திலொன்றைக் கொடுத்தானென்று சொல்லலாம்.

௰௧. அல்லாமலும் (இஸ்ரவேல்) சனங்கள் லேவிகோத்திர ஆசாரியமுறைமைக்குள்ளாயல்லவோ நியாயப்பிரமாணத்தைப்பெற்றார்கள்! அந்த லேவிகோத்திர ஆசாரியமுறைமையினாலே * நிறைவுள்ள ஆசிர்வாதம் மெய்யாய் வந்தால் ஆரோனுடைய முறைமையின்படியல்ல, † மெல்கிசேதேக்குனுடைய முறைமையின்படியே அழைக்கப்பட்ட வேறொரு ஆசாரியன் எழும்பவேண்டுவதென்ன? * கலா. ௨. ௨௧; † சங். ௱௰. ௪.

௰௨. ஆகையால், ஆசாரியமுறைமை மாற்றப்பட்டிருக்க, நியாயப்பிரமாணமும் மாற்றப்படவேண்டியதாயிருந்தது.

௰௩. இவைகளாற் சொல்லப்பட்டிருக்கிறவர் எவரோ அவர் வேறொருகோத்திரத்தைச் சேர்ந்தவராயிருக்கிறார். அந்தக்கோத்திரத்திலொருவனாகிலும் பலிபீடத்திலே ஆராதனைசெய்யவுமில்லையே.

௰௪. நம்முடைய கர்த்தரானவர் * யூதாவின்கோத்திரத்திற் பிறந்தாரென்பதும் நிச்சயமாயிருக்கிறதே. அந்தக்கோத்திரத்தாருக்கு மோசேயென்பவன் ஆசாரியப்பட்டத்தைக்குறித்து ஒன்றுஞ்சொல்லவில்லையே.

* ௧. மோ. ௪௯. ௰; ஏசாயா. ௰௧. ௧, ௨.

௰௫. அல்லாமலும் மெல்கிசேதேக்குக் கொப்பாய வேறொரு ஆசாரியர் எழும்புகிறாரென்பதினாலே யது மிகவும் அதிகத்தெளிவாயிருக்கின்றது.

௰௬. அவர் சரீரத்துக்கேற்ற கட்டளையாகிய நியாயப்பிரமாணத்தின்படியல்ல.

௰௭. மெல்கிசேதேக்கின் முறைமையாய * நீர் என்றென்றைக்குமுள்ள ஆசாரியராயிருப்பீரென்று சொன்னசாட்சிக்குத் தக்கதாக நீங்காத சீவனுக்குரிய வல்லமையின்படியே ஆசாரியரானார். * சங். ௱௰. ௪.

௰௮. ஆகையால் முன்கொடுக்கப்பட்டக்கட்டளை பலவீனமாயும், அப்பிரயோசனமாயுமிருந்தபடியால் அது நீக்கப்பட்டது.

௰௯. * நியாயப்பிரமாணம் ஒன்றையும் நிறைவாக்கவில்லை. அதிகநன்மையான நம்பிக்கைக்கேதுவானது (பின்னாலே) உண்டாக்கப்பட்டு நிறைவாக்குகிறது. அதினாலே நாம் பராபரனிடத்திற் சேருகிறோம்.

* அப். ௰௩. ௩௯.

௨௰. அன்றியும் முந்தினவர்கள் ஆணையில்லாமல் ஆசாரியரானார்கள். பிந்தினவர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி * நீர் என்றென்றைக்குமுள்ள ஆசாரியரென்று ஆணையிட்டு தம்முடனே சொன்ன கர்த்தராலே ஆணையோடேயப்படியானார். * சங். ௱௰. ௪.

௨௧. ஆனதால் இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்கப்பட்டு,

௨௨. (அவர்களுக்கதிகமாயிருக்க) அதிக நன்மையான உடம்படிக்கைக்கேற்ற பிணையாளியானார்.

௨௩. அன்றியும், அந்தஆசாரியர் எப்பொழுதுமிருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடியால், அநேகராயிருந்தார்கள்.

௨௪. அவர் என்றென்றைக்குமிருக்கிறவரானதினாலே நீங்காத ஆசாரியப்பட்டமுள்ளவராயிருக்கிறார்.

௨௫. அன்றியும், தம்மாலே * பராபரனைச் சேருகிறவர்களுக்காக வேண்டுதல்செய்யும்படிக்கு எப்பொழுதுமுயிரோடேயிருக்கிறவரானதால், அவர்களை முற்றும் இரட்சிக்க வல்லமையுள்ளவராயுமிருக்கிறார்.

* ௧. யோவா. ௧. ௨.

௨௬. பரிசுத்தராயும், தீமைசெய்யாதவராயும், அசுத்தமில்லாதவராயும், பாவிகளை விட்டுப்பிரிந்தவராயும், வானங்களுக்கு மேலுயர்ந்தவராயுமிருக்கிற இப்படிப்பட்டபிரதான ஆசாரியரே நமக்குவேண்டும்.

௨௭. அவர் முந்தின ஆசாரியர்களைப்போல முதலாவது தம்முடைய * சொந்தப்பாவங்களுக்காகவும், பின்பு சனங்களுடைய பாவங்களுக்காகவும் நாடோறும் பலியிடவேண்டுவதில்லை. அவர்களுக்காக அவர் ஒரேதரந் தம்மைப்பலியிட்டாரே. * ௫. ௩.

௨௮. நியாயப்பிரமாணமானது பலவீனத்தையுடைய மனிதர்களை ஆசாரியராக ஏற்படுத்துகின்றது. நியாயப்பிரமாணத்திற்குப் பின்பு ஆணையோடேயிருந்தவசனம் என்றெ

டம்படிக்கையின் பெட்டியுமிருந்தன. அந்தப் பெட்டியிலே † மன்னாவென்பதையுடைய பொற்பாத்திரமும், ‡ துளிர்கொண்ட ஆரோனுடைய கோலும், உடன்படிக்கையின் பலகைகளுமிருந்தன. * ௨. மோ. ௨௫. ௨௬; † ௨. மோ. ௰௬. ௩௩, ௩௪; ‡ ௪. மோ. ௰௭. ௩—௮.

௫. அதற்குமேலே மகிமையுள்ள கேருபீன்கள் வைக்கப்பட்டுக் * கிருபாசனத்திற்கு நிழலிட்டிருந்தன. இவைகளைக்குறித்து நான் இப்பொழுது விவரஞ்சொல்லக்கூடாது.
* ௨. மோசே. ௨௫. ௰௭—௨௨.

௬. அவைகள் இவ்விதமாய் ஏற்கனமாக்கப்பட்டிருந்தபின்பு, ஆசாரியரானவர்கள் ஆராதனைகளை நிறைவேற்றும்படிக்கு எக்காலத்திலேயும் முந்தின கூடாரத்திலே பிரவேசிப்பார்கள்.

௭. இரண்டாங் கூடாரத்திலே பிரதான ஆசாரியன்மாத்திரம் * வருஷத்தில் ஒரேதரம் இரத்தத்தோடே பிரவேசித்து, அந்த இரத்தத்தைத் தனக்காகவும், ஜனங்களுடைய தப்பிதங்களுக்காகவுஞ் செலுத்துவான்.
* ௩. மோசே. ௰௬. ௩௪.

௮. அதினாலே, முதலாங் கூடாரம் நிற்கையில் பரிசுத்தமான இடங்களுக்குப் போகிற மார்க்கம் வெளியாக்கப்படவில்லையென்று பரிசுத்த ஆவியானவர் குறித்திருக்கிறார்.

௯. அந்தக் கூடாரம் இந்தக் காலமளவாக்கும் உவமையாயிருந்தது. அதிலே காணிக்கைகளும், பலிகளுஞ் செலுத்தப்பட்டுவருகின்றன.

௰. அவைகள் செம்மையாக்குதலுள்ள காலமளவும் (இஸ்ரவேலருக்குக்) கட்டளையிடப்பட்ட போசனபானங்களாலும், பலஸ்நானங்களாலும், சரீரத்திற்கேற்ற (மாம்ச) சடங்குகளாலும் மாத்திரம் ஆராதனைசெய்கிறவனுடைய மனதிற்கு நிறைவுண்டாக்கக்கூடாதவைகளாயிருக்கின்றன.

௰௧. கிறிஸ்துவானவர் (உலகத்தில்) வந்து இவ்வுலகப் பொருளாயிராமலும், கையால் செய்யப்படாமலும், * அதிக மேன்மையாயும், அதிக நிறைவாயுமிருக்கிற கூடாரத்தின் வழியாய் வருங்காரியங்களாகிய நன்மைகளைக் குறித்த ஆசாரியராய், * ௰. ௰௯—௨௧.

௰௨. வெள்ளாட்டுக்கடா, இளங்காளை, இவைகளுடைய இரத்தத்தினாலேயல்ல, தமது சொந்த இரத்தத்தினாலே நமக்காக நித்திய மீட்புண்டாக்கி, எல்லாக் காலங்களுக்காகவும் ஒரேதரம் * பரிசுத்தமான தலங்களில் பிரவேசித்தார். * ௪. ௰௪.

௰௩. அதெப்படியெனில், * காளை, வெள்ளாட்டுக்கடா, இவைகளின் இரத்தமும், கடாரியின் சாம்பலும் † அசுசிப்பட்டவன்மேல் தெளிக்கப்பட்டு, அவனுடைய சரீர அசுசியை நீக்கத்தக்கதாக அவனைச் சுத்தமாக்கிக் கொண்டிருக்க, * ௩. மோ. ௰௬. ௰௪, ௰௫; † ௪. மோசே. ௰௯. ௰௯.

௰௪. நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதில்லாத பலியாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுத்த * கிறிஸ்துவினுடைய திரு இரத்தம் மிகவும் அதிகமாய் மரணத்திற்கேதுவான கிரியைகளை நீக்கி, ஜீவனுடைய பராபரனுக்கு நாம் ஊழியஞ்செய்வதற்கு நம்முடைய மனதைச் சுத்தமாக்குமல்லவா!
* ௧. பேது. ௧. ௧௮—௰௯; ௧. யோவா. ௧. ௭; அறி. ௧. ௫.

௰௫. இதினாலே முதல் உடன்படிக்கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்திசெய்வதற்கென்று அவர் மரித்தபின்பு, அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தமான நித்திய சுதந்தரத்தை அடைந்துகொள்ளும்படிக்கே அவர் * புதிய உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிறார். * ௰௨. ௨௪; ௧. தீமோ. ௨. ௫.

௰௬. அதெப்படியென்றால், ஒரு உடம்படிக்கை (பலிகளுடைய மரணத்தினாலே) உறுதியாக்கப்படும்.

௰௭. ஏற்படுத்தப்பட்ட (பலி) உயிரோடிருக்குமளவும், உடன்படிக்கை பெலனிருக்கமாட்டாதே. ஆகையால், ஒரு உடன்படிக்கை செய்யப்படும்பொழுது, ஏற்படுத்தப்பட்ட பலியினுடைய மரணமுந்தோற்றப்படவேண்டும்.

௰௮. அந்தப்படி முதலாம் உடன்படிக்கையும் இரத்தமில்லாமல் பிரதிஷ்டையாக்கப்படவில்லை.

௰௯. எப்படியெனில், * மோசேயென்பவன் வேதப்பிரமாணத்தின்படி சகல ஜனங்களுக்கும் எல்லாப் பிரமாணங்களையுஞ் சொன்னபின்பு ஆட்டுமாடுகளின் இரத்தத்தைத் தண்ணீரோடும், சிவப்பான பஞ்சினோடும், ஈசோப்பென்னுஞ் செடியோடுங் கூட எடுத்து, வேதப்புத்தகத்தின்மேலும், ஜனங்களெல்லார்மேலுந் தெளித்து, * ௨. மோ. ௨௪. ௩—௮.

௨௰. பராபரன் உங்களுடனே (செய்ய) கட்டளையிட்ட உடன்படிக்கைக்கேற்ற இரத்தம் இதுவேயென்று சொன்னான்.

௨௧. இவ்விதமாய்க் * கூடாரத்தின்மேலும், ஆராதனைக்கேற்ற தட்டுமுட்டுகளின்மேலும் இரத்தத்தைத் தெளித்தான். * ௩. மோ. ௮. ௰௫;—௰௬. ௩௰; ௰௬. ௰௪. ௨௰.

௨௨. நியாயப்பிரமாணத்தின்படி சிலகுறைய மற்றெல்லாப் பதார்த்தங்களும் இரத்தத்தினாலே சுத்தமாக்கப்பட்டு வருகின்றன. * இரத்தஞ்சிந்துதலில்லாமல் மன்னிப்புமில்லை. * ௩. மோசே. ௰௭. ௰௧.

௨௩. ஆனதால் பரமண்டலங்களிலுள்ளவைகளுக்கு உவமையானவைகள் இப்படிப்பட்ட (பலிகளினாலே) சுத்தமாக்கப்பட

வேண்டியதாயிருக்கிறபடியால் பரமண்டலங்களிலுள்ளவைகள் தாமே அவைகளிலும் அதிகதகுதியான (பலிகளாலே) சுத்தமாக்கப்படவேண்டும்.

உச. அந்தப்படிக் கிறிஸ்துவானவர் * இப்பொழுது நமக்காகப் பராபரனுடைய சந்நிதானத்திலே தோன்றிநிற்கும்படிக்கு மெய்யானவைகளுக்கு திருஷ்டாந்தங்களாகிய கையால்செய்யப்பட்ட பரிசுத்தஸ்தலங்களிலல்ல. பரமண்டலத்திலேதானே பிரவேசித்திருக்கிறார். * க. யோவா. உ. க.

உரு. அந்தப் பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தைப்பிடித்து * வருஷந்தோறும் பரிசுத்தஸ்தலங்களிலே பிரவேசிக்கிறதுபோல அவர் தம்மை யடிக்கடி பலியிடும்படிக்கு (அப்படிப்பிரவேசிக்கவில்லை) * உ. மோ. கூ௰. ௰.

உசா. அதெப்படியானால் அவர் உலகமுண்டான துமுதற்கொண்டு அடிக்கடி பாடுபடவேண்டியிருக்கும். அப்படியல்ல. அவர் தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும்பொருட்டாக (யுகத்தின்) யுகத்தின்முடிவிலே ஒரேதரம் வெளிப்பட்டார்.

உஎ. அன்றியும் மனிதர்கள் ஒரேதரம் மரிக்கிறதும், பின்பு நியாயத்தீர்ப்பு அடைகிறதும் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறதால்,

உஅ. அதுபோலக் கிறிஸ்துவும், * அநேகருடைய பாவங்களைச் சுமந்துகொண்டுபோகும்படிக்கு ஒரேதரம் பலியிடப்பட்டுத் தமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பைக்கொடுப்பதற்கு இரண்டாந்தரம் பாவப்பலியில்லாமல் தோன்றுவார். * உரோ. ரு. ௰ரு—௰அ.

## ௰. அதிகாரம்.

[(க) நியாயப்பிரமாணப்பலிகளினால் பூரண நிவிர்த்தியில்லையென்றும், (௰) ஒரேவிசை செலுத்தப்பட்ட கிறிஸ்துவின் சரீரப்பலி (௰ச) பாவங்களைப் பூரணமாய் நிவாரணம்பண்ணுகிறதென்றும், (௰கூ) அதினிமேலுண்டாகிய விசுவாசத்தையுறுதியாய்ப் பொறுமையோடும், ஸ்தோத்திரத்தோடும் பற்றிக்கொள்ளவேண்டுமென்றுஞ்சொல்லியது.]

இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது * வருகிறவைகளாகிய நன்மைகளின்பொருளுள்ளதாயிராமல், அவைகளின் † நிழலையாத்திரங் காண்பிக்கிறதாயிருக்கிறதால் வருஷந்தோறும் இடைவிடாமற்செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான பலிகளினாலே அவைகளைச் செலுத்துகிறவர்களுக்கு நிறைவான (ஆசீர்வாதத்தை) யொருக்காலுங் கொடுக்கமாட்டாது * கூ. ௰க; † கொ. உ. ௰கூ, ௰எ.

உ. கொடுத்ததானால், ஆராதனைசெய்தவர்கள் ஒருதரஞ் சுத்தமாக்கப்பட்டபின் இனியும் பாவங்களுண்டென்று தங்கள் மனதிலே அதிகமாய் நினையாதிருப்பதால், அந்தப் பலிகளைச்செலுத்துகிறது நிறுத்தப்படுமல்லவா!

ங. அப்படியிராதபடியால் பாவங்களுண்டென்று அவைகளினாலே வருஷந்தோறும் நினைவுகூருதலுண்டாயிருக்கிறதே.

ச. அல்லாமலும் ஆடுமாடுகளுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.

ரு. ஆனதால் அவர் உலகத்திற்பிரவேசித்திருக்கிறபொழுது, * பலியையும், காணிக்கையையும் நீர் விரும்புகிறதில்லை. ஒரு சரீரத்தை யெனக்கு எத்தனமாக்கினீர். * சங்கீ. ச௰. கூ.

சா. தகனபலிகளும், பாவப்பலிகளுமுமக்குப் பிரியமல்லாதபொழுது,

எ. நானசொன்னது, பராபரனே! என்னைக்குறித்து வேதபுஸ்தகத்திலே யெழுதியிருக்கிறபடி உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேனென்று சொன்னேனென்றார்.

அ. நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டுவருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்லியபடி பலியையும், காணிக்கையையும், தகனபலிகளையும், பாவப்பலிகளையும் விரும்பமாட்டீர். அவைகளுமக்குப் பிரியமானவைகளல்லவென்று சொன்னபின்பு,

கூ. பராபரனே! உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கிப்பொழுது, வருகிறேனென்றுசொன்னதால், இரண்டாம (ஏற்பாட்டை) ஸ்தாபிக்கும்படிக்கு முதலானதை யெடுத்துப்போட்டார்.

௰. அந்தச் சித்தத்தின்படி எல்லாக் காலங்களுக்காகவும், * ஒரேதரம் இயேசுக்கிறிஸ்துவினுடைய சரீரம் பலியிடப்பட்டதினாலே நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம். கூ. ௰உ.

௰க. அன்றியும் எந்த ஆசாரியனும் நாடோறும் ஆராதனைசெய்கிறவனாய்ப் பாவங்களை யொருக்காலும் நிவிர்த்திசெய்யமாட்டாத ஒரேவித பலிகளை அடிக்கடிச் செலுத்திவருவான்.

௰உ. அவர்மாத்திரம் என்றென்றைக்கும் பாவங்களை நீக்கும்படிக்கான ஒரே பலியைச்செலுத்திப் * பராபரனுடைய வலதுபாரிசத்திலே யுளுக்காந்து, * க. ங.

௰ங. * அதுமுதல் தம் முடையசத்துருக்கள் தம்முடையபாதங்களின்படியாக்கப்படுமென் றுங்காத்துக்கொண்டிருக்கிறார். * சங். ௱௰. க.

௰ச. ஆகையால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களை அவர் ஒரே பலியினாலே என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்களாக்கினார்.

௰ரு. இதைக்குறித்துப் பரிசுத்த ஆவியானவரும் நமக்குச் சாட்சிசொல்லுகிறார்.

௰சா. எப்படியெனில், * அந்த நாட்களுக்க

குப்பின் நான் அவர்களுடனே இந்த உடம்படிக்கைபண்ணுவேனென்று சொன்னபின்பு, கர்த்தர் திருவுளம்பற்றினது, நான் என்னுடைய பிரமாணங்களை யவர்களுடைய இருதயங்களிலே சொப்பேன். அவைகளை யவர்களுடைய மனதின்மேலே யெழுதுவேன். * அ. ௰; எரே. ௩௧. ௩௩, ௩௪.

௰௭. அவர்களுடைய பாவங்களையும், அக்கிரமங்களையும் நான் ஒரு காலத்திலாகிலும் நினைத்துக்கொள்வதில்லையென்றார்.

௰௮. அந்தப்படி யிவைகள் மன்னிக்கப்பட்டபடியால் பாவப்பலி யினிச்செலுத்தப்பட வேண்டுவதில்லையே.

௰௯. ஆகையால் சகோதரரே! பரிசுத்தமான இடங்களுக்குப்போகிற மார்க்கத்தை இயேசுவானவர் * தமது சரீரமாகிய திரைச்சீலையின்வழியாயப் புதிதும், ஜீவனுமான மார்க்கமாக நமக்குண்டுபண்ணிவைத்ததால், * மத். ௨௭. ௫௧.

௨௰. அந்த மார்க்கத்திற் பிரவேசிக்கிறதற்கு அவருடைய திருவிரத்தத்தினாலே நமக்குத் தைரியமுண்டாயிருக்கிறபடியினாலும்,

௨௧. பராபரனுடைய ஆலயத்திலே நமக்குப் பெரிய ஆசாரியருண்டாயிருக்கிறபடியினாலும்,

௨௨. நாம் குற்றத்தைச் சாற்றுகிற மனது நீங்கத் தெளிக்கப்பெற்ற இருதயமுள்ளவர்களாய் உண்மையுள்ள இருதயத்தோடும், விசுவாசத்தினாலாகிற நிச்சயத்தோடும் பராபரனைச்சேரக்கடவோம்.

௨௩. அல்லாமலும் சுத்தமான சலத்தாற் கழுவப்பட்ட சரீரமுள்ளவர்களாய், நம்முடைய நம்பிக்கையை யறிக்கையிடுகிறதில் அசைவில்லாமல் உறுதியாயிருக்கக்கடவோம். வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவராயிருக்கிறாரே.

௨௪. மேலும் * அன்புகூருகிறதற்கும், நற்கிரியைகளைச்செய்கிறதற்கும் எழுப்புதலுண்டாயிருக்கும்படிக்கு ஒருவரையொருவர் நோக்கிப்பார்த்து, * ௰௩. ௧; ௧. தெச. ௫. ௰௧.

௨௫. சபைகூடிவருதலைச் சிலர் விட்டுப்போகிறதுபோல நாம் அப்படிச்செய்யாமல், * ஒருவருக்கொருவர் புத்திசொல்லக்கடவோம். அந்தநாள் சமீபமாகிறதை நீங்கள் அறிந்திருக்கிறதால், அதிகமாய் அப்படியேசெய்யவேண்டும். * கொலோ. ௩. ௰௬.

௨௬. * சத்தியத்தை யறிந்துகொண்டபின் நாம் மனப்பூர்வமாய்ப் பாவஞ்செய்தால், வேறொருபாவப்பலி நமக்கு மீதியாயிருப்பதில்லை. * ௬. ௪—௮.

௨௭. * விரோதஞ்செய்கிறவர்களைப் பட்சிக்கும் அக்கினியுள்ள உக்கிரமும், நியாயத்தீர்ப்புமுண்டுமென்று பயத்தோடே காத்திருக்குதலே நமக்குண்டாயிருக்கும்.
* ௨. தெச. ௧. ௮.

௨௮. மோசேயினுடைய பிரமாணத்தைத் தள்ளினவனெவனோ அவன் இரண்டு மூன்று பேர் சாட்சிசொன்னபின்பு இரக்கமில்லாமற் கொலைசெய்யப்பட்டானே.

௨௯. பராபரனுடைய குமாரனைக் காலினாலே மிதித்துப்போட்டுத் தன்னைப் பரிசுத்தஞ்செய்த உடம்படிக்கையின் திருவிரத்தத்தை அசுத்தமென்றெண்ணிக் கிருபையின் ஆவியை நிந்தைபண்ணினவன் எவ்வளவு அதிக ஆக்கினைக்குப் பாத்திரவானாயிருப்பான்.

௩௰. நீங்களே யோசனைபண்ணுங்கள். * பழிவாங்குதல் எனக்குரியது. நானே பதிற்செய்வேனென்று சொன்ன கர்த்தரை யறிந்திருக்கிறோமே. அன்றியும் † கர்த்தர் தம்முடைய சனங்களுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுப்பாரென்றுஞ்சொல்லியிருக்கிறதே. * ௫. மோ. ௩௨. ௩௫; † ௫. மோ. ௩௨. ௩௬.

௩௧. ஆ, ஜீவனுள்ள பராபரனுடைய கைகளிலேவிழுகிறது பயங்கரமாயிருக்கின்றது.

௩௨. நீங்கள் முந்தினநாட்களை ஞாபகப்படுத்துங்கள். அவைகளில் நீங்கள் பிரகாசமாக்கப்பட்டிருந்தபொழுது பாடுகளால் மிகுந்த போராட்டத்தைச் சகித்துக்கொண்டீர்களே.

௩௩. நீங்கள் நிந்தைகளாலும், உபத்திரவங்களாலும் மற்றவர்களுக்கு வேடிக்கைக்கேதுவானவர்களாயும், அப்படியான மற்றவர்களுக்குத் தோழராயுமிருந்தீர்கள்.

௩௪. கட்டுப்பட்டிருந்த என்னோடேகூட நீங்கள் பாடுபட்டீர்களே. பரமண்டலங்களில் அதிக மேன்மையும், உறுதியுமான ஆஸ்தி உங்களுக்குண்டென்று நீங்கள் அறிந்து உங்கள் (லௌகீக) ஆஸ்திகளை (மற்றவர்கள்) கொள்ளையிட்டதற்குச் சந்தோஷமாய் இடங்கொடுத்தீர்கள்.

௩௫. ஆகையால் * மிகுந்த பலனுக்கேதுவான உங்கள் தயிரியத்தை யெறிந்துவிடாதிருப்பீர்களாக. * மத். ௰. ௩௨.

௩௬. நீங்கள் பராபரனுடைய சித்தத்தின்படிசெய்கிறவர்களாய் வாக்குத்தத்தத்தினன்மையைப் பெறும்படிக்குப் * பொறுமையுங்களுக்குவேண்டும். * லூக். ௨௧. ௰௯.

௩௭. * வருகிறவர் அதிககாலந்தாமதமாயிராமற் சீக்கிரமாய் வருவாரென்றும்,
* ஆப. ௨. ௩.

௩௮. * விசுவாசத்தினாலே நீதிமானானவன் பிழைப்பான். அவன் பின்வாங்கிப்போனாலே அவன்மேல் என்னுடைய ஆத்துமா பிரியமாயிராதென்றும், (எழுதியிருக்கின்றது.)
* ஆப. ௨. ௪.

௩௯. நாம் கெட்டுப்போகிறதற்கேதுவாகப் பின்வாங்குகிறவர்களாயிராமல் (நமது) ஆத்துமாவைக் காக்கிறதற்கேதுவாக விசுவாசமுள்ளவர்களாயிருக்கிறோம்.

௰௯. இப்படிப்பட்டவாக்குத்தத்தங்களைப் பெற்றவன் இவனை மரித்தோரிலிருந்தெழுந்திருக்கப்பண்ணப் பராபரன் வல்லவராயிருக்கிறாரென்றெண்ணித் தனக்கு ஒரே பேறான வனையே பலியாக ஒப்புக்கொடுத்தான். ஆனதால் உவமையாகும்படியே அவனைத் திரும்பப்பெற்றுக்கொண்டான்.

௨௰. * ஈசாக்கென்பவனும் பிறகாலத்திற்குரியவைகளின்மேலுள்ள விசுவாசத்தினாலே யாக்கோபையும், ஏசாவையும் ஆசீர்வதித்தான். * ௧. மோசே. ௨௭. ௨௮.

௨௧. * இயாக்கோபென்பவனும் மரண காலத்தில் விசுவாசத்தினாலே இயோசேப்பினுடைய குமாரரிருவரையும் ஆசீர்வதித்துத் தன் கோலின் முனையிலே (சாய்ந்து) தொழுதுகொண்டான் * ௧. மோ. ௪௮. ௫-௬.

௨௨. இயோசேப்பென்பவனும் இஸ்ரவேல் சந்ததியார் (எஜிப்து தேசத்தை) விட்டுப் புறப்படுவார்களென்று * தன் சீவகாலத்தின் முடிவில் விசுவாசத்தினாலே அறிவித்துத் தன் எலும்புகளைக்குறித்துக் கட்டளைகொடுத்தான். * ௧. மோசே. ௫௰. ௨௪, ௨௫.

௨௩. மோசேயென்பவன் பிறந்தபொழுது அவனுடைய தாய்தகப்பன்மாரும் * பிள்ளை அழகுள்ளதென்று கண்டு விசுவாசத்தினாலே இராசாவினுடைய கட்டளைக்குப் பயப்படாமல், அந்தப்பிள்ளையை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்கள். * ௨. மோசே. ௨. ௧, ௨.

௨௪. * மோசேயென்பவனும் பெரியவயதுள்ளவனானபொழுது பார்வோனுடைய குமாரத்தி மகனென்றழைக்கப்படுகிறதை விசுவாசத்தினாலே வெறுத்து, * ௨. மோசே. ௨. ௰௧—௰௫.

௨௫. * அநித்தியமான பாவ சந்தோஷங்களை அனுபவிப்பதையல்ல, பராபரனுடைய சனங்களோடேகூடத் துன்பத்தையனுபவிப்பதையே அதிகமாய்த் தெரிந்துகொண்டான். * சங். ௮௪. ௰௧.

௨௬. இனிமேல்வரும் பலனை அவன் நோக்கிப்பார்த்து எஜிப்திலுள்ள பொக்கிசங்களிலும் கிறிஸ்துவினிமித்தம் வருகிற நிந்தையை அதிக ஐசுவரியமென்றெண்ணினான்.

௨௭. காணப்படாதவரைக் கண்டாற்போல உறுதியாய்ப் பற்றிக்கொண்டதால் அவன் விசுவாசத்தினாலே இராசாவினுடைய மூர்க்கத்திற்குப் பயப்படாமல் எஜிப்தைவிட்டுப் போனான்.

௨௮. தலைப்பிள்ளைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவேலரைத் தொடாதபடிக்கு அவன் விசுவாசத்தினாலே * பஸ்காவையும், இரத்தம் பூசுதலையும் ஏற்படுத்தினான். * ௨. மோசே. ௰௨. ௨௧-௨௮.

௨௯. விசுவாசத்தினாலேயவர்கள் * சிவந்த சமுத்திரத்தை உலர்ந்த தரையைப்போலக் கடந்துபோனார்கள். எஜிப்தார் அப்படிச் செய்யத் தேடினபொழுது அமிழ்ந்துபோனார்கள். * ௨. மோசே. ௰௪. ௰௬.

௩௰. (இஸ்ரவேலருடைய) விசுவாசத்தினாலே * எரிகோப்பட்டணத்தின் மதில்கள் (அவர்களால்) ஏழுநாளாகச் சூழப்பட்டு விழுந்தன. * யோசு. ௬. ௧—௨௰.

௩௧. * வேசியாயிருந்த இராகாப்பென்பவள் விசுவாசத்தினாலே வேவுகாரரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டு அவிசுவாசிகளோடே அழிக்கப்படாதிருந்தாள். * யோசுவா. ௬. ௨௨—௨௫.

௩௨. பின்னும் ஆரைக்குறித்துச் சொல்லலாம்! கிதெயோனையும், பாராக்கையுஞ் சமுசோனையும், இயெப்பத்தாவையும், தாவீதையும், சாமுவேலையும், தீர்க்கதரிசிகளையுங்குறித்து நான் விவரஞ்சொல்லவேண்டுமானால் காலம்போதாது.

௩௩. அவர்களும் விசுவாசத்தினாலே இராச்சியங்களைச் செயித்துக்கொண்டு நீதியை நடப்பித்து வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைப் பெற்றுக்கொண்டு * சிங்கங்களுடைய வாய்களையடைத்து † அக்கினியின் பலத்தை அவித்து, * தானியே. ௬. ௨௨; † தானியே. ௩. ௨௩.

௩௪. கட்கங்களின் கூர்மைக்குத் தப்பிப் பலவீனத்திலே பலன்கொண்டு, யுத்தகாலத்தில் வல்லவர்களாகி அந்நியருடைய பாளயங்களைக் கவிழ்த்துப்போனார்கள்.

௩௫. (விசுவாசத்தினாலே) * ஸ்திரிகளுஞ் செத்துப்போன தங்களுக்குரியவர்களை உயிரோடெழுந்திருக்கப்பெற்றார்கள். (விசுவாசத்தினாலே) வேறுசிலர் அதிகமேன்மையாய உயிரோடே யெழும்பும்படிக்கு மீட்பையங்கீகரியாமல் இழுப்புண்டுவாதிக்கப்பட்டார்கள். * ௨. இராசா. ௪. ௩௨—௩௭.

௩௬. (விசுவாசத்தினாலே) வேறு சிலர் நிந்தைகளையும், அடிகளையும், சங்கிலிகளையும், காவலையுஞ் சகித்துக்கொண்டார்கள்.

௩௭. கல்லெறியப்பட்டார்கள். வாளால் அறுக்கப்பட்டார்கள். சோதிக்கப்பட்டார்கள். கட்கத்தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள். செம்மறியாட்டுத் தோல்களையும், வெள்ளாட்டுத்தோல்களையும், போர்த்துக்கொண்டு குறைச்சலையும், உபத்திரவத்தையும், துன்பத்தையுஞ் சகித்துத் திரிந்து,

௩௮. வனாந்தரங்களிலேயும், மலைகளிலேயும், குகைகளிலேயும், பூமியின் வெடிப்புகளிலேயுஞ் சிதறிநடந்தார்கள். உலகம் அவர்களுக்கு அபாத்திரமாயிருந்தது.

௩௯. அவர்களெல்லாரும், விசுவாசத்தைக்குறித்து நற்சாட்சிபெற்றிருந்தும், வாக்குத்தத்தம்பண்ணப்பட்டதையடையாமற்போனார்கள்.

௪௰. பராபரன் நம்மைக்குறித்து அதிக நன்மையானதை யேற்படுத்தினதால் அவ

ர்கள் நம்மையன்றி நிறைவான ஆசீர்வாதத்தை அடையாதபடிக்கு (அப்படியே போனார்கள்.

## ௰௨. அதிகாரம்.

[(௧) இடைவிடாத விசுவாசமும், பொறுமையும், தேவபத்தியுமுடையவர்களாயிருக்கப் புத்திசொல்லி, (௨௨) பழைய ஏற்பாட்டைப்பார்க்கிலும் புதிய ஏற்பாடு மேன்மையுள்ளதென்று காட்டியது.]

ஆகையால் மேகம்போல இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, * நாம் பாரமான யாவற்றையும், நம்மைச் சுற்றி நிற்கிற பாவத்தையுந் தள்ளிப்போட்டு, விசுவாசத்தை யாரம்பமாக நடத்துகிறவராயும், முடிக்கிறவராயுமிருக்கிற இயேசுவை நோக்கி நமக்கு முன்வைக்கப்பட்ட போராட்டசாலையிலே † பொறுமையோடே ஓடக்கடவோம். * உரோ. எ. ௨௧-௨௪; † ௰. ௩௬; ௧. கொரி. ௯. ௨௪, ௨௫.

௨. அவர் தமக்கு முன்பாக வைத்திருந்த சந்தோஷத்திற்காக அவலட்சணப்படுதலையெண்ணாமற் சிலுவையில் (மரணத்தைச்) சகித்துப் பின்பு * பராபரனுடைய ஆசனத்தின் வலதுபாரிசத்திலுட்காந்திருக்கிறார். * அப். ௩. ௨௧.

௩. ஆனதால் உங்கள் ஆத்துமாக்கள் இளைப்புள்ளவைகளாயிருக்கும்பொழுது நீங்கள் தயிரியமற்றவர்களாய்ப் போகாதபடிக்குப் பாவிகளால் இப்படிப்பட்ட விரோதத்தைச் சகித்த அவரையே நன்றாய்த் தியானித்துக்கொள்வீர்களாக.

௪. அந்தப்பாவத்திற்கு விரோதமாய்ப் போராட்டஞ்செய்கிற நீங்கள் இதுவரைக்கும் * இரத்தஞ்சிந்தப்படத்தக்கதாக எதிர்த்தாகவில்லையே. * ௧. கொரி. ௰. ௰௩.

௫. அன்றியும், * என் மகனே! கர்த்தருடைய தண்டனையை அற்பமாக எண்ணாமலும், அவராற் கடிந்துகொள்ளப்படுகையில் தயிரியமற்றவனாகாமலுமிருப்பாயாகவென்றும், * வாக். ௩. ௰௧, ௰௨.

௬. * கர்த்தராலே அன்புகூரப்பட்டவனெவனோ அவனை அவர் தண்டிக்கத் தாஞ் சேர்த்துக்கொள்ளுகிற எந்தமகனையானாலும் அடித்து வருவாரென்றும், பிள்ளைகளாகிய உங்களுக்குச் சொல்லியிருக்கிற ஆறுதலுள்ள வசனத்தை மறந்தீர்கள். * அப். ௩. ௰.

௭. நீங்கள் (அவருடைய) தண்டிப்புக்குட்பட்டிருக்கிறபடியால் பராபரன் உங்களைத் (தமது) பிள்ளைகளைப்போல எண்ணி நடப்பிக்கிறார். தகப்பனால் தண்டிக்கப்படாத பிள்ளையொன்றுண்டோ?

௮. எல்லாப் (பிள்ளைகளும்) தண்டிக்கப்பட்டதுபோல நீங்களுந் தண்டிக்கப்படாவிட்டால் பிள்ளைகளாயிராமல், வேசிப்பிள்ளைகளாயிருப்பீர்களே.

௯. அன்றியும் நம்முடைய சரீரத்திற்குத் தகப்பன்மாரானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொழுது, நாம் அவர்களுக்கு வந்தனஞ்செய்திருக்க, ஆவிகளுக்குப் பிதாவானவருக்கு நாம் பிழைக்கும்படி மிகவும் அதிகமாய்க் கீழ்ப்படியவேண்டுமல்லவா?

௰. அந்தத்தகப்பன்மார்கள் தங்களுக்குத் தோன்றினபடிக் கொஞ்சகாலமாய் நம்மைத் தண்டித்தார்கள். அவர் தம்மைப்போல நாம் பரிசுத்தராகுதற்கேதுவான பிரயோசனம் வரும்பொருட்டே அப்படிச்செய்கிறார்.

௰௧. தண்டனையுண்டாயிருக்கும்பொழுது அது (நமக்குச்) சந்தோஷமாகவல்ல. துக்கமாகத் தோன்றுகின்றது. பின்பு அதினாலே முயற்சிப்பட்டவர்களுக்கு அது நீதியென்னும் பாக்கியப்பலனைக் கொடுக்கின்றது.

௰௨. ஆகையால், * தளர்ச்சியாயிருக்கிற (உங்கள்) கைகளையும், தளர்ப்புள்ள (உங்கள்) கால்களையுஞ் செம்மைப்படுத்துவீர்களாக. * ஏசா. ௩௫. ௩.

௰௩. முடமுள்ள (அவயவம்) புரண்டுபோகாமற் சொஸ்தமாகும்படிக்கு உங்கள் கால்களுக்காகச் சரியான பாதைகளைச் செய்வீர்களாக.

௰௪. * யாவருடனேயுஞ் சமாதானமாயிருக்கவும், † பரிசுத்தராயிருக்கவுஞ் சாக்கிரதையாயிருப்பீர்களாக. பரிசுத்தமில்லாதவன் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.
* உரோ. ௰௨. ௰௮; † மத். ௫. ௮.

௰௫. ஒருவரும் பராபரனுடைய கிருபையை இழந்துபோகாதபடிக்கும், மற்றேகரும் அசுசிப்படத்தக்கதாக் * கசப்புள்ள வேர் உங்களுக்குள்ளே தோன்றிக் கலக்கமுண்டாக்காதபடிக்கும், * ௫. மோசே. ௨௯. ௰௮.

௰௬. ஒருவரும் * வேசிமார்க்கமாயும், † ஏசாவென்பவன்போல லவுகீக நடத்தையுள்ளவர்களாயுமிராதபடிக்கும் எச்சரிக்கையாயிருப்பீர்களாக. அவன் ஒருவேளைச்சாப்பாட்டுக்காக முதற்பேறானவனுக்குரிய சுதந்தரங்களைவிட்டுவிட்டானே. * எபே. ௫. ௩. † ௧. மோசே ௨௫. ௨௯—௩௪.

௰௭. பின்பு, உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, அவன் (தன் தகப்பனுடைய) ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ளவிரும்பியுந் தள்ளப்பட்டான். அதைக் கண்ணீரோடே மிகவுந் தேடியும் (தகப்பனிடத்தில்) மாறுதலைக் காணாமற்போனானே.

௰௮. அன்றியும், * தொட்டப்படும் அக்கினி பற்றியெரிகிற மலையினிடத்திலும், மந்தாரத்தினிடத்திலும், இருளினிடத்திலும்,
* ௨. மோசே. ௰௯. ௰௬—௰௯.

௰௯. பெருந்தொனியினிடத்திலும், * எக்காளத்தின் முழக்கத்தினிடத்திலும், வார்த்தைகளின் தொனியினிடத்திலும், நீங்கள் வரவேண்டியவர்களல்லவே. அந்தத்தொனியைக் கேட்டவர்கள் பின்னும் வசனந்தங்களுக்குச் சொல்லப்படாதபடிக்கு வேண்டிக்கொண்டார்கள். * ௨. மோ. ௨௰. ௰௮, ௰௯.

௨௰. என்னத்தினாலெனில், இந்த மலையை * ஒரு மிருகந்தொட்டால் அதின்மேலே கல்லெறியவேண்டும். அல்லது அதை அம்பினாலே எய்து கொலைசெய்யவேண்டுமென்று சொல்லப்பட்ட கட்டளையை யவர்கள் சகிக்கமாட்டாதிருந்தார்கள். * ௨. மோ. ௰௯. ௰௨, ௰௩.

௨௧. அந்தத்தரிசனை மிகவும் பயங்கரமாயிருந்தது. அதினாலே மோசேயும், நான் மிகவும் அதிகமாய்ப் பயப்பட்டு நடுங்குகிறேனென்றான்.

௨௨. நீங்களோ மலையாகிய சீயோனிடத்திற்கும், சீவனுள்ள தேவனுடைய பட்டணமாகிய * பரம எருசலேமினிடத்திற்கும், அநேகம் பதினாயிரமாகிய தூதர்களின் விசேஷமான சங்கத்தினிடத்திற்கும், * கலா. ௪. ௨௬.

௨௩. * பரமண்டலத்திலே பேரெழுதியிருக்கிற முதற்பேறானவர்களின் சபையினிடத்திற்கும், யாவருக்குந் நியாயாதிபதியினிடத்திற்கும், நிறைந்தபாக்கியமுள்ளவர்களாகிய நீதிமான்களின் ஆவிகளினிடத்திற்கும், * லூக. ௰. ௨௰.

௨௪. புதிதான உடன்படிக்கைக்கேற்ற மத்தியஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், * ஆபேலினுடைய இரத்தங்கூப்பிட்டதுபோலல்ல. அதிக நன்மையானவைகளை அறிவிக்குந்தெளிக்கப்படுகிற இரத்தத்தினிடத்திற்கும் சேருகிறவர்களாயிருக்கிறீர்கள். * ௧. மோ. ௪. ௰.

௨௫. திருவுளம்பற்றுகிறவரை நீங்கள் அசட்டைபண்ணாதபடிக்குப் பாருங்கள். என்னத்தினாலெனில், பூமியிலே பேசினவரை அசட்டைபண்ணின அவர்கள் (ஆக்கினைக்கு) தப்பாமலிருக்க, பரமண்டலத்திலிருந்து பேசுகிறவரை நாம் விட்டுவிலகினால், (ஆக்கினைக்குத்) * தப்பிப்போவோமா? * ௨. ௪. ௨௬;-௰. ௨௮, ௨௯.

௨௬. அவருடையசத்தம் முற்காலத்திலே பூமியை அசையப்பண்ணினது. அன்றியும், * இன்னும் ஒருகாலத்திலே பூமியைமாத்திரமல்ல. வானத்தையும் அசையப்பண்ணுவேனென்று இப்பொழுது வாக்குத்தத்தஞ் செய்திருக்கிறார். * ஆகா. ௨. ௭.

௨௭. இன்னும் ஒருகாலத்திலேயென்று சொன்னவசனம் அசைவில்லாதவைகள் நிலையாயிருக்கத்தக்கதாக (அற்பமாய்) செய்யப்பட்டவைகளாகிய அசைவுள்ளவைகள் நீக்கப்படுமென்று குறிக்கிறது.

௨௮. ஆனதால், அசைவில்லாத இராச்சியத்தை நாம் பெற்றுக்கொண்டிருக்க, * நம்முடைய பராபரன் (பொல்லாதவர்களை) பட்சிக்கும் அக்கினியாயிருக்கிறபடியினாலே, * ௫. மோசே. ௪. ௨௪.

௨௯. * நாம் வணக்கத்தோடும், மெய்த்தேவபக்தியோடும் பராபரனுக்குப் பிரியமாய் ஆராதனைசெய்யத்தக்க கிருபையுள்ளவைப்பற்றிக்கொள்ளக்கடவோம். * பிலி. ௨. ௰௨.

## ௰௩. அதிகாரம்.

[(௧) சயானமும், (௪) கற்புமுடையவர்களாயிருக்கவும், (௫) பொருளாசையை நீக்கவும், (௭) தேவ ஊழியக்காரர்களைப் பராமரிக்கவும், (௯) அந்நிய உபதேசங்களுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், (௰) கிறிஸ்துவை அறிக்கையிடவும், (௰௬) தருமஞ்செய்யவும், (௰௭) அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியவும், (௰௮) தனக்காகச் செப்பமண்ணவுஞ்சொல்லி, (௨௰) நிருபத்தை முடித்தது.]

* சகோதரசிநேகம் நிலையாயிருக்கக்கடவது. * ௨. ரோ. ௰௨. ௰.

௨. அந்நியரை யுபசாரஞ்செய்கிற குணத்தினாலே சிலர் (தங்களுக்கு) தெரியாதபடிக்குத் * தேவதூதரை யுபசரித்ததால் நீங்கள் அந்நியரை யுபசாரஞ்செய்ய மறவாதிருப்பீர்களாக. * ௧. மோ. ௰௮. ௩; ௰௯. ௧.

௩. கட்டப்பட்டிருக்கிறவர்களோடேகூடக் கட்டப்பட்டவர்கள்போல நீங்கள் அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள். உங்களையுஞ் சரீரத்தோடிருக்கிறவர்களென்றறிந்து பாடுபடுகிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்.

௪. விவாகமென்னுந்நல யாவருக்குள்ளுங் கனம்பொருந்தியதாயிருக்கக்கடவது. (சமுசாரமார்க்கத்தாருடைய) படுக்கை (விபசாரத்தினாலே) அசுசிப்படாதிருப்பதாக. * வேசிமார்க்கருக்கும், விபசாரக்காரருக்கும்பராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுப்பார். * கலா. ௫. ௰௯—௨௧; அப். ௨௨. ௰௫.

௫. * உங்களுக்குண்டானவைகள் போதுமென்கிற மனதுள்ளவர்களாய்ப் பணத்தின்மேலுள்ள ஆசையில்லாமல் நடந்துகொள்வீர்களாக. † நான் உன்னை ஒருக்காலும்விட்டுவிலகுவதில்லை. உன்னை யொருக்காலுங் கைவிடுவதுமில்லையென்று அவர் அருளிச்செய்தாரே. * ௧. திமோ. ௬. ௬—௰௧; † யோசு. ௧. ௫.

௬. * அதினாலே நான் பயப்படேன் கர்த்தர் எனக்குச்சகாயராயிருக்கிறார். மனிதனெனக்கென்னசெய்வானென்று நான் பயப்படவேண்டுவதில்லையென்று சொல்லலாமே. * சங். ௱௰௮. ௬.

௰௮. அவர் சித்தமானபடியால் தம்முடைய சிருஷ்டிகளில் நாம் முதற்பலன்களாகும்படிக்கு நம்மைச் * சத்திய வசனத்தினாலே ஜெனிப்பித்தார். * ௧. பேது. ௧. ௨௩.

௰௯. ஆகையால், என்க்குப் பிரியமான சகோதரரே! யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும், * பேசுகிறதற்குத் தாமதமாயும், * வாகி. ௰௭. ௨௭. ௨௮.

௨௰. பராபரனுக்கேற்ற நீதியை மனிதருடைய * கோபம் நடப்பிக்கமாட்டாதபடியினாலே கோபிக்கிறதற்குத் தாமதமாயுமிருக்கக்கடவர்கள். * பிர. ௭. ௯.

௨௧. ஆகையால் * அழுக்கு யாவையும் மிகுதியான பொல்லாங்குகளையும் நீங்கள் தள்ளிவிட்டு நடப்பட்டதாயும், உங்கள் ஆத்துமாக்களை இரட்சிக்கத் தக்கதாயுமிருக்கிற வசனத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்ளுங்கள். * கொலோ. ௩. ௮, ௯.

௨௨. அல்லாமலும் நீங்கள் உங்களை வஞ்சியாதபடிக்கு வசனத்தைக் கேட்கிறவர்களாய் மாத்திரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயுமிருப்பீர்களாக. * மத். ௭. ௨௪—௨௭.

௨௩. என்னத்தினாலெனில், ஒருவன் வசனத்தைக் கேட்டும் அதின்படி செய்யாதவனானால் கண்ணாடியிலே தன் சுபாவ முகத்தைப் பார்க்கிற மனிதனுக்கொப்பாயிருப்பான்.

௨௪. அவன் தன்னைத்தானே பார்த்துப் பின்பு புறப்பட்டுப் போனவுடனே தானிருந்த விதத்தை மறப்பான்.

௨௫. சுயாதீனத்திற்கேதுவான நிறைவுள்ள பிரமாணத்தை உற்றுப்பார்த்து அதிலே நிலையாயிருக்கிறவனே (அதை) மறந்துபோகத்தக்கதாகக் கேட்கிறவனாயிராமல் அதற்கேற்ற கிரியை செய்கிறவனுமாயிருந்து தன் செய்கையிற் * பாக்கியவானாயிருப்பான். * யோவா. ௰௩. ௰௭.

௨௬. உங்களிலொருவன் * தன் நாவையடக்காமல், தன் இருதயத்தை வஞ்சித்துத் தன்னைத் தேவபத்தியுள்ளவனென்று நினைத்தால், அவனுடைய தேவபத்தி வீணாயிருக்கும். * சங்கீ. ௩௪. ௰௩.

௨௭. திக்கற்ற பிள்ளைகளும், கைம்பெண்களும் படுகிற உபத்திரவத்திலே அவர்களை விசாரிக்கிறதும், * உலகத்தால் அசுசிப்படாதபடிக்குத் தன்னைக் காத்துக்கொள்ளுகிறதுமே பிதாவாகிய பராபரனுக்கு முன்பாக மாசில்லாத சுத்தமான பத்தியாயிருக்கின்றது. * ௧. யோவா. ௨. ௰௫, ௰௬.

## ௨. அதிகாரம்.

[(௧) ஐசுவரியவான்களை மாத்திரங் கனம்பண்ணி ஏழைகளை இகழ்வது கிறிஸ்துமார்க்கத்துக்கொவ்வாதென்றும், (௰௩) யாவர்மேலும் அன்பையும், இரக்கத்தையும் பாராட்டவேண்டுமென்றும், (௰௪) கிரியையில்லாத விசுவாசத்தின் பெருமை பாராட்டக் கூடாதென்றும், (௰௭) அது செத்த விசுவாசமும், (௰௯) பேய்களுடைய விசுவாசமுமாயிருக்கிறதொழிய, (௨௧) ஆபிரகாம், (௨௫) ராகாப் என்பவர்களின் விசுவாசமாயிருக்கவில்லையென்றுஞ் சொல்லியது.]

என் சகோதரரே! மகிமையுள்ள நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேலுள்ள விசுவாசம் உங்களுக்குள்ளே பட்சபாதத்தோடேயிராதபடிக்குப் பாருங்கள்.

௨. அதெப்படியெனில், பொன் மோதிரத்தையும், பிரகாசமுள்ள வஸ்திரத்தையுந் தரித்திருக்கிற ஒரு மனிதனும், கந்தையான வஸ்திரத்தைத் தரித்திருக்கிற ஒரு தரித்திரனும் உங்கள் ஜெப ஆலயத்தில் பிரவேசிக்கும்பொழுது,

௩. பிரகாசமுள்ள வஸ்திரத்தைத் தரித்தவனை நீங்கள் கனமாய் நோக்கி நீர் கனமாய் இவ்விடத்திலுட்காருமென்றும், தரித்திரனை நீ அங்கே நில்லு. அல்லது இங்கே என் பாதப்படியிடத்திலே உட்காரு என்றும் நீங்கள் சொன்னால்,

௪. உங்களுக்குள்ளே பேதகப்பண்ணி துர்ச்சிந்தனைகளோடே நியாயாதிபதிகளாவீர்களல்லவா!

௫. என்க்குப் பிரியமான சகோதரரே! கேளுங்கள். விசுவாசத்தில் ஐசுவரியவான்களாகவும், தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்பண்ணின இராச்சியத்தைச் சுதந்தரிக்கிறவர்களாகவும், * இவ்வுலகத்தின் தரித்திரரைப் பராபரன் தெரிந்துகொள்ளவில்லையா! * ௧. கொரி. ௧. ௨௬—௨௮.

௬. அப்படியிருந்தும் நீங்கள் தரித்திரனைக் கனவீனம்பண்ணுகிறீர்கள். ஐசுவரியவான்களல்லவோ உங்களை ஒடுக்குகிறார்கள். அவர்களல்லவோ உங்களை நியாயாசனங்களுக்கு முன்பாக இழுக்கிறார்கள்.

௭. அவர்களல்லவோ உங்களுக்குக் கொடுக்கப்பட்ட நல்ல நாமத்தைத் தூஷணிக்கிறார்கள்.

௮. உன்மேல் அன்பாயிருக்கிறதுபோலப் * பிறனிடத்திலேயும் அன்புகூருவாயாகவென்று வேதவாக்கியஞ் சொல்லுகிற இராசரீகமான பிரமாணத்தை நீங்கள் நிறைவேற்றினால் நன்மை செய்வீர்கள். பட்சபாதமாயிருப்பீர்களானால் பாவத்தை நடப்பித்து, * மாற். ௰௨. ௩௧.

௯. அக்கிரமக்காரரென்று நியாயப்பிரமாணத்தால் கண்டிக்கப்படுவீர்களே.

௰. எப்படியெனில், ஒருவன் * வேதநூல் முழுவதையுங் கைக்கொண்டாலும், ஒரே பிரமாணத்திறகுத் தப்பி நடந்தால் எல்லாப்பிர

மாணவர்களுக்கும் விரோதமாய்க் குற்றவாளியாயிருப்பான். * ௫. மோசே. ௨௭. ௨௬; மத். ௫. ௰௯.

௰௧. என்னத்தினாலென்றால், விபசாரம்பண்ணாதிருப்பாயாகவென்று சொன்னவர் கொலைசெய்யாதிருப்பாயாகவென்றுஞ் சொன்னார். ஆனதால், நீ விபசாரம்பண்ணாதிருந்தாலும், கொலைசெய்தாயானால் வேதநூலை மீறி நடந்திருப்பாயே.

௰௨. *சுவாதீனத்திற்கேதுவான வேதநூலின்படி நியாயத்தீர்ப்படையப்போகிறவர்களாய்ப் பேசியும், செய்துமிருப்பீர்களாக. * ௧. ௨௫.

௰௩. என்னத்திற்காகவென்றால், * இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில்லாமல் நியாயத்தீர்ப்புக்கிடைக்கும். நியாயத்தீர்ப்புக்கு முன்பாக இரக்கமேன்மைபாராட்டும். * மத். ௰௮. ௨௮-௩௫.

௰௪. என் சகோதரரே! * ஒருவன் தனக்கு விசுவாசமுண்டென்று சொல்லியுங் கிரியைகளில்லாதவனானால் அவனுக்கு என்ன பிரயோசனம் வரும்? விசுவாசம் அவனை இரட்சிக்குமா! * மத். ௭. ௨௧.

௰௫. சகோதரன் அல்லது சகோதரி வஸ்திரமில்லாதவர்களாயும், நாடோறும் வேண்டிய பிழைப்பில்லாதவர்களாயுமிருக்கும்பொழுது,

௰௬. உங்களிலொருவன் அவர்களை நோக்கி, நீங்கள் சமாதானத்தோடே போய்க் குளிர்காய்ந்து பசியாறுங்களென்று சொல்லிச் சரீரத்திற்கு வேண்டியவைகளை அவர்களுக்குக் கொடாவிட்டால் அதினால் என்ன பிரயோசனமிருக்கும்!

௰௭. அப்படிப்போல விசுவாசமுங் கிரியைகளில்லாதிருந்தால்,

௰௮. தனியேயிருப்பதினாலே செத்ததாயிருக்கும். ஒருவன் வந்து உனக்கு விசுவாசமுண்டு எனக்குக் கிரியைகளுண்டு. கிரியைகளில்லாமல் உன் விசுவாசத்தை எனக்குக் காண்பி. நான் என் விசுவாசத்தை என் கிரியைகளாலே காண்பிக்கிறேனென்பான்.

௰௯. பராபரன் ஒருவருண்டென்று விசுவாசிக்கிறாய். அப்படிச் செய்கிறது சரிதான். பசாசுகளும் அப்படி விசுவாசித்து நடுங்குகின்றன.

௨௰. ஆ, வீணான மனிதனே! கிரியைகளில்லாத விசுவாசஞ் செத்ததென்றறிய விரும்புகிறாயா!

௨௧. நம்முடைய பிதாவாகிய * ஆபிரகாம் தன் குமாரன் ஈசாக்கைப் பலிபீடத்தின்மேல் ஏற்றிவைத்தபொழுது, கிரியைகளினாலேயல்லவோ நீதிமானாக்கப்பட்டான். * ௧. மோசே. ௨௨. ௯—௰௨.

௨௨. அவனுடைய விசுவாசம் அவனுடைய கிரியைகளோடே கூடமுயற்சிசெய்து அந்தக் கிரியைகளினாலே முடிக்கப்பட்டதையும்,

௨௩. * ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான். (அது) அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டதென்கிற வேதவாக்கியம் நிறைவேற்றப்பட்டதையும், † அவன் பராபரனுடைய சிநேகிதனென்னப்பட்டதையும் பார்த்திருக்கிறாயே. * ௧. மோசே. ௰௫. ௬; † ஏசாயா. ௪௧. ௮.

௨௪. ஆனதால் ஒரு மனிதன் விசுவாசத்தினாலேமாத்திரமல்ல, கிரியைகளினாலேயும் நீதிமானாக்கப்படுகிறானென்றறிவீர்களாக.

௨௫. அப்படிப்போல வேசியாயிருந்த இராகாப்பென்பவள் * தூதர்களையேற்றுக்கொண்டு வேறுவழியாய் அனுப்பிவிட்டபொழுது, கிரியைகளினாலேயல்லவோ நீதியுள்ளவளாக்கப்பட்டாள். * யோசு. ௨. ௧.

௨௬. ஆகையால் ஆவியில்லாத சரீரஞ் செத்ததாயிருக்கிறதுபோலக் கிரியைகளில்லாத விசுவாசமுஞ் செத்ததாயிருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

[(௧) தாம் மற்றவர்களைக் கடூரமாயும், அகங்காரமாயும், கடிந்துகொள்ளாமல், (௮) நன்மைக்கும், தீமைக்கும், கருவியாயிருக்கிற நாவை யடக்கவேண்டுமெனவும், (௰௩) மெய்ஞ்ஞானிகள் பகையும், போராட்டமுமில்லாமற் சாந்தமும், சமாதானமுமாயிருக்கிறார்களென்றுஞ் சொல்லியது]

என் சகோதரரே! அதிக ஆக்கினையையடைவோமென்று நாயறிந்திருக்க, (உங்களில்) அநேகர் போதகராகாதிருப்பீர்களாக.

௨. நாமெல்லாரும் அநேகவிதமாய்த் தவறுகிறோம். சொல் தவறாதிருக்கிறவனே தேறினவனும், தன் சரீரமனைத்தையும் (ஞானக்) கடிவாளத்தினாலே அடக்கிக்கொள்ளுகிறவனுமாயிருக்கிறான்.

௩. குதிரைகளைப்பாருங்கள். அவைகள் நமக்குக் கீழ்ப்படியும்படிக்கு வாய்களிற் கடிவாளங்களைப்போட்டு, அவைகளுடைய முழுச்சரீரத்தையும் நடத்துகிறோம்.

௪. கப்பல்களையும் பாருங்கள். அவைகள் இவ்வளவு பெரியவைகளாய்க் கடுங்காற்றுக்களால் அடிக்கப்படாமலும் அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோசிக்கும் இடம் எவ்விடமோ அவ்விடத்திற்கு மிகவுஞ் சிறிதான சுக்கானாலே திருப்பப்படும்.

௫. அப்படிப்போல * நாவானது சிறிய அவயவமாயிருந்தும் பெருமையானவைகளைச் செய்யும். கொஞ்ச நெருப்பைப் பாருங்கள். அது எத்தனை பெரிய காட்டைக் கொளுத்துகின்றது. நாவே நெருப்பு * சங்கீ. ௰௨. ௪, ௫; ௫௭. ௪; ௭௩. ௮, ௯.

௬. அது அநீதியினால் நிறைந்தலோகம்.

அந்தப்படி நாவு நம்முடைய அவயவங்களுக்குள்ளிருந்து * முழுச்சரீரத்தையுங் கறைப்படுத்துகிறதாயும், சுபாவமுறைமையைக் கொளுத்துகிறதாயும், நரக அக்கினியினாற் கொளுத்தப்படுகிறதாயுமிருக்கின்றது.
* மத்தேயு. ௰௫. ௰௧.

௭. எல்லாவிதமான மிருகங்களுக்கும், பறவைகளுக்கும், ஊரும் பிராணிகளுக்கும், நீரிலுள்ள ஜந்துக்களுக்குமுண்டாயிருக்கிற சுபாவம் கீழ்ப்படுத்தப்பட்டுமிருக்கிறது. அப்படி மனிதருடைய சுபாவத்தால் கீழ்ப்படுத்தப்பட்டுமிருக்கிறது.

௮. நாவையோவெனில் ஒரு மனிதனும் கீழ்ப்படுத்தமாட்டான். அது அடங்காதபொல்லாங்குள்ளதுமாய், சாவுக்கேதுவான விஷத்தால் நிறைந்ததுமாயிருக்கிறது.

௯. பிதாவாகிய பராபரனை நாம் அதினாலே ஸ்தோத்திரிக்கிறோம். பராபரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனிதரை அதினாலே சபிக்கிறோம்.

௰. ஆசீர்வதித்தலும், சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்படுகின்றன. என் சகோதரரே! இப்படியிருக்கக்கூடாது.

௰௧. நீரூற்றானது ஒரே துவாரத்திலிருந்து தித்திப்பும், கசப்புமுள்ள தண்ணீரைச் சுரக்குமா!

௰௨. என் சகோதரரே! அத்திமரம் ஒலிவப்பழங்களையும், அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களையுங் கொடுக்குமா! அப்படியே உவர்ப்பான நீரூற்றுத் தித்திப்பான சலத்தைக் கொடுக்கவுமாட்டாது.

௰௩. உங்களில் ஞானியுமாய், அறிவுள்ளவனுமாயிருக்கிறவன் எவனோ அவன் ஞானத்திற்குரிய சாந்தத்தோடே தன் கிரியைகளை * நல்லநடக்கையினாலே காண்பிக்கக்கடவன்.
* எபே. ரு. ௮--௰௫.

௰௪. உங்கள் இருதயத்திலே கசப்பான வைராக்கியத்தையும், விரோதத்தையும் வைத்துக்கொண்டால், நீங்கள் மேன்மைபாராட்டாமலும், சத்தியத்திற்கு விரோதமாய்ப் பொய்யைச் சொல்லாமலுமிருப்பீர்களாக.

௰௫. அப்படிச்செய்கிறது உயரத்திலிருந்து வருகிற ஞானமல்ல, அது இந்தப்பூமிக்கும், மாம்சத்துக்கும், பேய்க்கும் உரித்தானது.

௰௬. வைராக்கியமும், விரோதமும் எங்கேயோ அங்கே கலக்கமும், சகலவிதமான துர்ச்செய்கைகளுமுண்டே.

௰௭. உயரத்திலிருந்து வருகிற ஞானமோ முதலாவது, சுத்தமுள்ளதுமாய், பின்பு சமாதானமும், சாந்தமும், இணக்கமுமுள்ளதுமாய், இரக்கத்தாலும், நற்கிரியைகளாலும் நிறைந்ததுமாய், பட்சபாதமில்லாததுமாய், வஞ்சனையில்லாததுமாயிருக்கின்றது.

௰௮. இப்படிச் * சமாதானத்தை நடப்பிக்கிறவர்களாலே சமாதானத்தோடே நீதியாகிய கனி விதைக்கப்படுகின்றது. * ஏசா. ௩௨. ௰௭, ௰௮.

## ௪. அதிகாரம்.

[(௧) பொருளாசை (௪) உலகத்தன்மை (௫) பொறாமை (௰௧) பிறரவர்களைக் குற்றமாய்த் தீர்க்கிற குணமுதலியவைகளை நீக்கி, (௰௩) லௌகீக காரியங்களில் நாம் என்னவைத் துணிந்து சொல்லாமல், தேவனைச் சார்ந்து நடந்து நம்மையும், நம்முடைய காலங்களையும் பராபரனுடைய பராமரிப்புக்கு ஒப்புக்கொடுக்கச் சொல்லியது.]

உங்களுக்குள்ளே யுத்தங்களும், சண்டைகளும் எதினாலே வருகின்றன. உங்கள் அவயவங்களில் * போர்செய்கிற செல்வத்திற்கேற்ற இச்சைகளாலல்லவோ வருகின்றன. * ௧ பேது. ௨. ௰௧.

௨. நீங்கள் இச்சித்தும் உங்களுக்கு அகப்படுகிறதில்லை. நீங்கள் கொலைசெய்தும் பொறாமையுள்ளவர்களாயிருந்தும் (இஷ்டப்படி) அடையாமற்போகிறீர்கள். நீங்கள் சண்டையும், யுத்தமும் பண்ணியும் விண்ணப்பம் பண்ணாமலிருக்கிறதால் உங்களுக்குச் சித்திக்கிறதில்லை.

௩. உங்கள் இச்சைகளுக்கேற்றதாகச் செலவழிக்கும்படிக்குத் * தாக்குணமாய் விண்ணப்பம்பண்ணுகிறதால் நீங்கள் விண்ணப்பம்பண்ணியும் பெற்றுக்கொள்ளாமலிருக்கிறீர்கள். * ஏசாயா. ௧. ௰௫; யோவான். ௯. ௩௧.

௪. ஆ, விபசாரரே! விபசாரிகளே! * உலகத்தோடே சிநேகமாயிருக்குதல் பராபரனுக்கு விரோதமான பகையாயிருக்கிறதென்று நீங்கள் அறியவில்லையா! ஆகையால் உலகத்திற்குச் சிநேகமாயிருக்க விரும்புகிறவன் பராபரனுக்குப் பகைஞனாயிருக்கிறான். * ௧. யோவா. ௨. ௧௫. ௰௬.

௫. அல்லது வேதநூல்வீணாய்ச்சொல்லுகிறதென்றும், * நம்மிடத்தில் வாசமாயிருக்கிற ஆவியானவர் பொறாமைக்கேதுவாக இச்சிக்கிறாரென்றும் நினைக்கிறீர்கள். * ௪. ரோம. ௰௧. ௨௯.

௬. அவர் அதிக தயவை * அநுக்கிரகஞ்செய்கிறாரே. அன்படியால் அகந்தையுள்ளவர்களுக்குப் † பராபரன் விரோதஞ்செய்து மனத்தாழ்மையுள்ளவர்களுக்குக் கிருபையளிக்கிறாரென்று சொல்லுகிறார். * ௧. பேது. ரு. ரு; † வாக்கி. ௩. ௩௪.

௭. ஆகையால் பராபரனுக்குக் கீழ்ப்படியுங்கள். * பசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள். அப்பொழுது † அவன் உங்களைவிட்டு ஓடிப்போவான். * ௧. பேது. ரு. ௯; † மத். ௪. ௰௧.

௮. பராபரனைச் சேருங்கள் அப்பொழுது அவரும் உங்களைச் சேர்வார். ஆ, பாவிகளே! உங்கள் * கைகளைச் சுத்தமாக்குங்கள்.

இருமனமுள்ளவர்களே! உங்களிருதயங்களைப் பரிசுத்தஞ்செய்யுங்கள். * ஏசா. ௧. ௰௬.

௯. நீங்கள் * உபத்திரவப்பட்டுத் துக்கமடைந்து அழுங்கள். உங்கள் நகைப்புத் துக்கப்படுதலாகவும், உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்கடவது. * மத். ௫. ௪.

௰. * கர்த்தருக்கு முன்பாகத் தாழ்மைப்படுங்கள். அப்பொழுது உங்களையுயர்த்துவார். * ௧. பேதுரு. ௫. ௬.

௰௧. சகோதரரே! * ஒருவருக்கொருவர் விரோதமாய்ப் பேசாதிருப்பீர்களாக. சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசித் தன்சகோதரனைக் குற்றப்படுத்துகிறவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாய்ப் பேசி நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படுத்துகிறான். நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படுத்தினால் நீ நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவனாயிராமல், அதற்கு நியாயாதிபதியாயிருப்பாய். * மத்தே. ௭. ௧-௫.

௰௨. நியாயப்பிரமாணத்தைக் கட்டளையிடுகிறவர் ஒருவரே. அவரே இரட்சிக்கவும், அழிக்கவும் வல்லமையுள்ளவர். * மற்றொருவனைக் குற்றப்படுத்துகிற நீயாவன்? * உரோ. ௰௪. ௪.

௰௩. மேலும் * நாங்கள் இன்றைக்கு அல்லது நாளைக்கு இன்னவின்னபட்டினத்திற்குப் போய் அங்கேயொருவருஷந்தங்கி வியாபாரம்பண்ணி ஆதாயம்பெறுவோமென்கிறவர்களே! கேளுங்கள். * வாக்கி. ௨௭. ௧; லூக்கா. ௰௨. ௰௮—௨௰.

௰௪. நாளைக்கு நடப்பதை யறியாமலிருக்கிறீர்களே. உங்கள் ஜீவன் எப்படிப்பட்டது! கொஞ்சநேரந்தோன்றிப் பின்பு தோன்றாமற்போகிற புகையைப்போலிருக்கிறதே.

௰௫. மேற்சொல்லியதற்குப்பதிலாக நீங்கள் * ஆண்டவருக்குச் சித்தமானால் நாங்களும் உயிரோடிருந்தால் இப்படிச்செய்வோமென்று சொல்லவேண்டும். * அப்போஸ். ௰௮. ௨௧.

௰௬. இப்பொழுது உங்கள் வீம்பான பேச்சுகளில் மேன்மைபாராட்டுகிறீர்கள். இப்படிப்பட்ட மேன்மைபாராட்டலாவும் பொல்லாங்காயிருக்கின்றன.

௰௭. ஆனதால் * ஒருவன் நன்மைசெய்ய அறிந்திருந்தும் அப்படிச்செய்யாவிட்டால் அவனுக்குப் பாவமுண்டாயிருக்கும். * லூக. ௰௨. ௪௭.

## ௫. அதிகாரம்.

[(௧) அக்கிரமக்காரராகிய ஐசுவரியவான்களைப் பராபரனுடைய கோபாக்கினைக்கு அஞ்சவும், (௭) தீர்க்கதரிசிகளும், யோபுவுஞ் சகித்தபடியே நாமுந் துன்பங்களைப் பொறுமையோடே சகிக்கவும், (௰௨) சத்தியம்பண்ணாதிருக்கவும், (௰௩) தரித்திரத்திலே வேண்டிக்கொள்ளவும், செல்வத்திலே பாடவும், (௰௬) குற்றங்களையொருவருக்கொருவர் அறிக்கையிட்டு ஒருவருக்காகவொருவர் செபம்பண்ணவும், (௰௯) சத்தியத்துக்கு விலகிப்போன சகோதரனைத் திருப்பவுஞ்சொல்லியது.]

பின்னும் * ஐசுவரியவான்களே! கேளுங்கள். உங்கள்மேல் வருகிற உபத்திரவங்களினிமித்தம் அலறி அழுங்கள். * லூக். ௬. ௨௪, ௨௫.

௨. * உங்கள் ஐசுவரியம் அழிந்து உங்கள் வஸ்திரங்கள் பொட்டுப்பூச்சியினால் தின்னப்பட்டுப்போயின. * மத்த். ௬. ௰௯.

௩. உங்கள் பொன்னையும், வெள்ளியையும் பாசிபிடித்தது. * அவைகளின் பாசி உங்களுக்கு விரோதமாகச் சாட்சியாயிருந்து அக்கினியைப்போல உங்கள் சரீரங்களைத் தின்னும். கடைசிநாட்களிலே பொக்கிஷத்தைச் சேர்த்தீர்கள். * யோபு. ௰௬. ௮.

௪. பாருங்கள் உங்கள் வயல்களை அறுத்த வேலைக்காரருடைய கூலி உங்களால் அநியாயமாய் வைக்கப்பட்டுக் கூப்பிடுகிறது. அறுத்தவர்களுடைய கூக்குரலும், சேனைகளுடைய கர்த்தாவின் செவிகளிற்பட்டது.

௫. பூமியிலே * நீங்கள் செல்வத்தோடும், சம்பிரமத்தோடும் ஜீவனம்பண்ணினீர்கள். சிதைப்புநாளுக்காகச் செய்கிறதுபோல உங்களைக் கொழுப்பாக்கினீர்கள். * லூக. ௰௬. ௰௯.

௬. உங்களுக்குவிரோதமாய் நில்லாத நீதிமானை நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்துக் கொலைசெய்தீர்கள்.

௭. இப்படியிருக்கச் (சகோதரரே!) கர்த்தர்வருமளவும் * நீடிய பொறுமையாயிருங்கள். பாருங்கள் பூமியின் விலையேறப்பெற்ற கனியையடைய வேண்டுமென்றிருக்கிற குடியானவன் முன்மாரியும், பின்மாரியும் வருமளவும் நீடியபொறுமையாய்க் காத்திருக்கிறான். * லூக்கா. ௨௧. ௰௯.

௮. நீங்களும் நீடியபொறுமையாயிருந்து கர்த்தர்வருகை சமீபமாயிருக்கிறபடியால் உங்களிருதயங்களை ஸ்திரப்படுத்துவீர்களாக.

௯. சகோதரரே! நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு ஒருவருக்கு விரோதமாய் ஒருவர் முறுமுறுக்காதிருங்கள். நியாயாதிபதி கதவுக்குமுன்னே நிற்கிறார்.

௰. என்சகோதரரே! கர்த்தருடைய நாமத்தினாலே பேசின தீர்க்கதரிசிகள் உபத்திரவப்பட்டு நீடியபொறுமையாயிருந்ததால் அவர்களை உங்களுக்கு மார்க்கத்தைக் காண்பிக்கிறவர்களென்று எண்ணிக்கொள்ளுங்கள்.

௰௧. * பொறுமையாயிருக்கிறவர்களைப் பாக்கியவான்களென்கிறோம். † யோபென்பவன் காண்பித்த பொறுமையைக் குறித்து

௰௬. * சுயாதீனமுள்ளவர்களாயிருந்தும் உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு மூடியாகச் சேர்த்துக்கொள்ளாமல் பராபரனுடைய அடிமைகளாய் நடப்பீர்களாக. * யோவா. ௮. ௩௬.

௰௭. எல்லாரையும் கனம்பண்ணுங்கள். சகோதரரிடத்தில் அன்புகூருங்கள். பராபரனுக்குப் பயந்திருங்கள். இராசாவைக் கனஞ்செய்யுங்கள்.

௰௮. வீட்டு * வேலைக்காரரே! மிகுந்த பயத்துடனே எசமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள். நல்லவர்களுக்கும், இணக்கமுள்ளவர்களுக்குமாத்திரமல்ல, செம்மையில்லாதவர்களுக்கும் (அப்படிச்செய்யவேண்டும்.) * எபே. ௬. ௫-௮.

௰௯. என்னத்தினாலேயெனில், ஒருவன் அநியாயமாய்ப் பாடுபட்டுப் பராபரனுக்கு முன்பாக உண்மையாயிருக்கிற மனதினிமித்தம் * துக்கங்களைப் பொறுமையாய்ச் சகித்தால் அது மேன்மையுள்ளது. * மத். ௫. ௰.

௨௰. நீங்கள் குற்றஞ்செய்து அடிக்கப்பட்டபொழுது அதைப் பொறுமையோடே சகித்தால், அதென்னப்பட்ட கீர்த்தியாயிருக்கும்! நீங்கள் நன்மைசெய்து பாடுபடும்பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால் அதுவே பராபரனுக்கு முன்பாக மகிமையாயிருக்கும்.

௨௧. * இதற்காக நீங்கள் அழைக்கப்பட்டுமிருக்கிறீர்கள். எப்படியெனில், கிறிஸ்துவும் உங்களுக்காகப் பாடுபட்டு நீங்கள் தம்முடைய காலடிகளைத் தொடர்ந்து வரும்படி உங்களுக்கு மார்க்கத்தைக் காட்டிப்போனார். * ௧. தெச. ௩. ௩.

௨௨. * அவர் பாவஞ்செய்யவில்லை. அவருடைய வாயிலே வஞ்சனை காணப்படவுமில்லை. * ஏசா. ௫௩. ௯.

௨௩. * அவர் வையப்பட்டபொழுது பதில் வையாமலும், பாடுபட்டபொழுது பயமுறுத்தாமலும், நியாயமாய்த் தீர்ப்புக்கொடுக்கிறவருக்கு ஒப்புவித்தார். * ஏசா. ௫௩. ௭, ௮.

௨௪. நாம் பாவங்களுக்கு விலகி நீதியுள்ளவர்களாய்ப் பிழைக்கும்படிக்கு அவர் தம்முடைய சரீரத்திலே * நம்முடைய பாவங்களைத் தாங்கிக்கொண்டு அவைகளைச் சிலுவைமரத்திலே நிவிர்த்திசெய்தார். * ஏசா. ௫௩. ௪; ௧. யோவா. ௩. ௫.

௨௫. அவர் காயப்பட்டதினாலே குணமானீர்கள். (முன்னே) * நீங்கள் வழிவிட்டுப்போன ஆடுகளைப்போலிருந்தீர்கள். இப்பொழுது உங்களாத்துமாக்களுக்கு † மேய்ப்பரும், கண்காணியுமானவரிடத்தில் திரும்பப்பட்டிருக்கிறீர்கள். * ஏசா. ௫௩. ௬; † யோவா. ௰. ௰௪.

## ௩. அதிகாரம்.

[(௧) மனைவிகளும், புருஷர்களும், ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய கடமைகளைக் குறித்து, (௮) யாவரும் ஒருமையும், சிநேகமுள்ளவர்களாயிருக்கவும், (௰௪) துன்பத்தைச் சகிக்கவும் புத்திசொல்லி, (௰௯) பூர்வீகத்தார்பேரில் கிறிஸ்துவின் புண்ணியப் பலன்களின்னவென்றுங் கூறியது.]

அந்தப்படி * ஸ்திரீகளே! (புருஷர்களில்) சிலர் (தேவவசனத்திற்குக் கீழ்ப்படியாமலிருக்கிறபொழுது வசனமின்றி, * எபே. ௫. ௨௨, ௨௪.

௨. உங்கள் பயமும், வணக்கமுமுள்ள நடக்கையை அவர்கள் பார்த்து, அப்படிப்பட்ட நடக்கையினாலே சம்பாதித்துக்கொள்ளப்படும்படிக்கு உங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்படிகிறவர்களாக.

௩. * நீங்கள் உங்கள் மயிரைப் பின்னிப் பொன்னாபரணங்களைத் தரித்து முக்கியமான வஸ்திரங்களையுடுத்தி, * ௧. தீமோ. ௨. ௯, ௰; ஏசா. ௩. ௰௬—௨௪.

௪. இவ்விதமாய்ப் புறம்பே உங்களை அலங்கரியாமல் உள்ளாக மறைந்திருக்கிற இருதயமானது பராபரனுடைய திருப்பார்வையிலே மிகுந்த விலையேறப்பெற்றிருக்கிற சாந்தமும், அமைதலுமான ஆவியென்னும் அழியாமையுள்ள அலங்காரத்தையடையும்படி செய்யுங்கள்.

௫. இப்படியே பூர்வீகத்திலே பராபரன்மேல் நம்பிக்கையான பரிசுத்த ஸ்திரீகளும் தங்களையலங்காரஞ்செய்து தங்களுடைய புருஷருக்குக் கீழ்ப்படிந்தார்கள்.

௬. அந்தப்படிச் * சாராள் ஆபிரகாமை எசமானென்றழைத்து அவனுக்குக் கீழ்ப்பட்டாள். நீங்கள் நன்மைசெய்து எவ்வளவான துன்பத்திற்கும் பயப்படாதவர்களாய் அவளுக்குப் பிள்ளைகளானீர்கள். * ௧. மோசே. ௰௮. ௰௨.

௭. அன்றியும், * புருஷரே! உங்கள் ஜெபங்களுக்குத் தடைவராதபடிக்கு மனைவியானவள் பலவீன பாத்திரமாயிருக்கிறபடியினாலே நீங்கள் அறிவின்படி அவளுடனே கூடவாசம்பண்ணவேண்டியதுமல்லாமல் உங்களுடனேகூட அவளும் நித்திய சீவனுடைய கிருபையைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறவளானபடியினாலே அவளுக்குக் கனஞ்செய்துவருவீர்களாக. * எபே. ௫. ௨௫.

௮. மேலும் நீங்களெல்லாரும் * ஒருமனப்பட்டவர்களாயும், பரிதாபமுள்ளவர்களாயும், சகோதரசிநேகமுள்ளவர்களாயும், மனவுருக்கமுள்ளவர்களாயும், மனத்தாழ்மையுள்ளவர்களாயும், * உரோ. ௰௨. ௰௫, ௰௬.

௯. * தீமைக்குத் தீமையையும், உதாசினத்துக்கு உதாசினத்தையும் பதிற்செய்யா

யை யளிக்கிறார். * எபே. ௫. ௨௧; † மத. ௨௩. ௰௨.

௬. ஆகையால் ஏற்றகாலத்திலே பராபரன் உங்களை உயர்த்தும்படிக்கு * அவருடைய பலத்த கைக்குள் அடங்குவீர்களாக. * யாக. ௪. ௰.

௭. அவரே உங்களை விசாரித்துக்கொள்ளுகிறபடியால் * உங்கள் கவலைகளையெல்லாம் அவர்மேலே வைத்துவிடுங்கள். * பிலி. ௪. ௬, ௭; எபி. ௰௩. ௫.

௮. * தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருங்கள். விழித்திருங்கள். ஏனென்றால் உங்கள் எதிராளியாகிய பசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல எவனையும் விழுங்க வேண்டுமென்று வகைதேடித் திரிகிறான். * ௧. தெச. ௫. ௬.

௯. உலகத்திலுள்ள உங்கள் சகோதரரிடத்திலே அப்படிப்பட்ட பாடுகளே நிறைவேறிவருகிறதென்று அறிந்து விசுவாசத்திலுறுதியாய் * அவனுக்கெதிர்த்து நில்லுங்கள். * எபே. ௬. ௰—௰௬.

௰. சகலவித கிருபைக்கும் காரணருமாய், * கொஞ்சக்காலம்பாடுபடுகிற நம்மைக் கிறிஸ்து இயேசுவினாலே தமது நித்திய மகிமைக்கழைத்தவருமாயிருக்கிற பராபரன்தாமே உங்களை நிறைவுள்ளவர்களாக்கி ஸ்திரப்படுத்தித் திடப்படுத்தி அஸ்திபாரப்படுத்தக்கடவர். * ௧. ௭.

௰௧. அவருக்கே துதியும், வல்லமையும் என்றென்றைக்கு முண்டாயிருக்கக்கடவது. ஆமென்.

௰௨. (உங்களுக்குப்) புத்திசொல்லும்படிக்கும், நீங்கள் (அடைந்து) நிற்கிற கிருபை பராபரனுடைய மெய்யான கிருபைதானென்று சாட்சிகொடுக்கும்படிக்கும் நான் சுருக்கமாய் உங்களுக்கெழுதி எனக்குத்தோன்றுகிறபடி உண்மையாயிருக்கிற சகோதரனாகிய சில்வானுவினகையிலே (இதைக்) கொடுத்தனுப்பினேன்.

௰௩. உங்களுடனேகூடத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிற பாபிலோனிலுள்ள சபையும், என் குமாரனாகிய மார்க்கும் உங்களை வாழ்த்துகிறார்கள்.

௰௪. ஒருவரையொருவர் அன்பின் முத்தத்தினாலே வாழ்த்துதல்செய்வீர்களாக. கிறிஸ்து இயேசுவைப் பற்றியிருக்கிற உங்களெல்லாருக்குஞ் சமாதானமுண்டாவதாக. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## இரண்டாம் நிருபம்

---

(கி. பி. பிய். ௬௬. ௵)

### ௧. அதிகாரம்.

[(௪) அவர்களைத் தங்கள் புண்ணிய நடக்கைகளில் உறுதிப்படுத்தி, (௫) விசுவாசத்தினாலும், நற்கிரியைகளினாலும் தங்கள் அழைப்பை நிச்சயிக்கச்சொல்லி, (௰௨) தன் மரணஞ் சமீபமானபடியால், இக்காரியங்களை கருதித்து அவர்களுக்கு நினைப்பூட்டி (௰௬) அப்போஸ்தலர்கள் கண்ட மகத்துவக்காட்சியினாலும், பிதாவானவருடைய திர்க்கதரிசிகளுரைத்த சாட்சியினாலும், பராபரனுடைய மெய்யான சுதனாயிருக்கிற கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தில் நிலைகொண்டிருக்க வுஞ்சொல்லியது.]

நம்முடைய பராபரனுமாய், இரட்சகருமாயிருக்கிற இயேசுகிறிஸ்துவின் நீதியில் எங்களைப்போல அருமையான விசுவாசத்தைப் பெற்றவர்களுக்கு இயேசுகிறிஸ்துவின் ஊழியக்காரனும், அப்போஸ்தலனுமாகிய சீமோன் பேதுரு எழுதுகிறதாவது;

௨. பராபரனையும், நம்முடைய கர்த்தராகிய இயேசுவையும் அறிகிற அறிவினாலே * உங்களுக்குக் கிருபையும், சமாதானமும் சம்பூரணமாயுண்டாகக்கடவது. * ௧. பேதுரு. ௧. ௨.

௩. மகிமையாலும், புண்ணியத்தாலும் நம்மையழைத்தவரை அறிகிற அறிவினாலே சீவனுக்கும், தேவபத்திக்குமேற்றவைகளையும் அவருடைய திவ்விய வல்லமை * நமக்குக்கொடுத்தபடியினாலும், * ௧. பேது. ௨. ௬.

வனை மறுதலித்து (இப்படித்) தங்களுக்குத் தீவிரமான அழிவை வருவித்துக்கொள்ளுவார்கள். * எரேமி. ௨௩. ௨௪; † அப்போ. ௨௰. ௨௯.

௨. அவர்களினிமித்தம் சத்தியமார்க்கந் தூஷிக்கப்படும். அவர்களுடைய கெட்ட மார்க்கங்களை அநேகர் பின்பற்றுவார்கள்.

௩. பொருளாசையுள்ளவர்களாய் அவர்கள் தந்திரமான வார்த்தைகளால் உங்களை வாங்கிக்கொள்ளத் தேடுவார்கள். அவர்களுக்குப் பூர்வத்தில் (தீர்மானித்திருக்கிற) ஆக்கினை தாமதமாயிராது. அவர்களுக்குத்தக்க அழிவு உறங்காது.

௪. * பாவஞ்செய்த தூதர்களைப் பராபரன் தப்பவிடாமல், அந்தகாரச் சங்கிலிகளினாலே கட்டிப் பாதாளத்திலே தள்ளி, நியாயத்தீர்ப்புப்பரியந்தம் காக்கப்படுவதற்கு ஒப்புக்கொடுத்திருக்க, * யோவா. ௮. ௪௪. யூதா. ௬. ௭. வசனம்.

௫. * பழைய உலகத்தையுந் தப்பவிடாமல், நீதியைப் பிரசங்கித்தவனாகிய நோவா முதலான எட்டுப்பேரைமாத்திரம் அவர் காப்பாற்றிப் பக்தியற்றவர்களுள்ள உலகத்தின் மேற் சலப்பிரளயத்தை வரப்பண்ணியிருக்க, * ௧. மோசே. ௭. ௨௩, ௨௪.

௬. * சோதோம் கொமோரா என்னும் பட்டணங்களையுஞ் சாம்பலாகக் கவிழ்த்துப்போட்டு, இப்படி ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, பிற்காலத்திலே அவபக்தியாய் நடப்பவர்களுக்குக் கடையாளமாக வைத்திருக்க, (அவர்களையெப்படித் தப்பவிடுவார்?) * ௧. மோசே. ௰௯. ௨௪.

௭. அக்கிரமக்காரருடைய காமவிகாரநடக்கையால் வருத்தப்பட்ட நீதிமானாகிய உலோத்தென்பவனைமாத்திரம் இரட்சித்துவிட்டார்.

௮. அந்த நீதிமான் அவர்களுக்குள்ளே குடியிருக்கையில், நாடோறும் அவர்களுடைய அக்கிரமக்கிரியைகளைக் கண்டு கேட்டு, நீதியுள்ள தன்னுடைய இருதயத்திலே அவைகளாலே * வேதனைப்பட்டான். * சங்கீ. ௱௰௯. ௱௩௮.

௯. கர்த்தரோ தேவபக்தியுள்ளவர்களைத் * துன்பத்தினின்று இழுத்து இரட்சிக்கவும், அக்கிரமக்காரரை நியாயத்தீர்ப்புநாளிலே ஆக்கினைக்குள்ளாகும்படிக்குக் காக்கவும் அறிந்திருக்கிறார். * ௧. கொரிந். ௰. ௰௩.

௰. * பிரதானமாக அசுத்தத்தின் இச்சையோடே மாம்சத்திற்கேற்றபடி நடந்து, துரைத்தனத்தை அசட்டைபண்ணுகிறவர்களையே அப்படிச்செய்வார். அவர்கள் துணிவுகாரர், அகங்காரிகள், மகிமையுடையவர்களைத் தூஷிக்க நடுங்காதவர்கள். * யூதா. ௰௬. வசனம்.

௰௧. அதிக பலத்தையும், வல்லமையையு



முடைய தேவதூதருங் கர்த்தருக்கு முன்பாக அவர்களுக்குவிரோதமாய்த் தூஷணமான தீர்ப்பைச்சொல்லமாட்டார்கள்.

௰௨. * இவர்களோ பாத்திரம் பிடியுண்டழிக்கப்படுவதற்குண்டான புத்தியற்றமிருகஜீவன்களைப்போலத் தங்களுக்குத்தெரியாதவைகளைத் தூஷித்துத் தங்கள் கேட்டினாலே முழுவதும் அழிக்கப்பட்டு, * எரே. ௱௨. ௬.

௰௩. அநியாயத்திற்கேற்ற பலனை அடைவார்கள். அவர்கள் பகற்காலத்திலே சம்பிரமமாயிருத்தலை இன்பமென்றெண்ணுகிறவர்கள் மாசுகளும், அவலட்சணங்களுமானவர்கள் விருந்தாக உங்களோடே கூடச்சாப்பிடுகையில் தங்கள் வஞ்சனைகளினாற் சம்பிரமமாய்வாழ்கிறவர்கள்.

௰௪ விபசாரத்தால் நிறைந்தவைகளாயும், பாவத்தைவிட்டோயாதவைகளாயுமிருக்கிற கண்களுள்ளவர்கள் ஸ்திரமில்லாத ஆத்துமாக்களைத் தந்திரமாய்ப்பிடிக்கிறவர்கள் பொருளாசைகளில் பயிற்சியான இருதயத்தையுடையவர்கள் சபிக்கப்பட்ட பிள்ளைகள்.

௰௫. செம்மையான மார்க்கத்தைவிட்டுத் தப்பிநடந்து, * பேயோருடைய குமாரனாகிய பிலேயாமின் வழியைப் பின்பற்றுகிறவர்கள் அவன் அநியாயத்தின் கூலியைவிரும்பினான். * ௪. மோசே. ௨௨. ௫; அறிவி. ௨. ௰௪.

௰௬. பின்பு தன்னுடைய அக்கிரமத்திற்காகக் கடிந்துகொள்ளப்பட்டான். பேசாதிருக்கும் மிருகம் மனிதர் பாஷையைப்பேசி அந்தத் தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டைத் தடைசெய்தது

௰௭. (மேலும்) அவர்கள் தண்ணீரில்லாத கிணறுகள். அவர்கள் சுழல்காற்றினால் அடிக்கப்படுகிற மேகங்கள். என்றென்றைக்கும் காரிருளே அவர்களுக்கு வைத்திருக்கின்றது.

௰௮. வஞ்சகமாய் நடக்கிறவர்களை விட்டுத் தப்பினவர்களுக்கு அவர்கள் மிகவும் அகந்தையான வீண்வார்த்தைகளைப்பேசிச் சரீர இச்சைகளினாலும், காமவிகாரங்களினாலும் அவர்களைத் தந்திரமாய்ப்பிடிக்கிறார்கள்.

௰௯. தாங்களே கேட்டுக்கடிமைகளாயிருந்தும், அவர்களுக்குச் சுவாதீனத்தைவாக்குத்தத்தம்பண்ணுகிறார்கள். * அவனெவனாலே ஜெயிக்கப்பட்டிருக்கிறானோ அதற்கு அடிமையாக்கப்பட்டிருக்கிறான். * யோவான். ௮. ௩௪.

௨௰. ஆகையால் * கர்த்தருமாய், இரட்சகருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள் மறுபடியும் அவைகளில் சிக்கிக்கொண்டு ஜெயிக்கப்பட்டால் அவர்களுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிகக்கேடுள்ளதாயிருக்கும். * மத். ௰௨. ௪௫; எபிரே. ௰. ௨௬, ௨௭.

உக. அப்படிப்பட்டவர்கள் நீதியின்மார்க்கத்தை * அறிந்தபின் தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட பரிசுத்த கற்பனைகளைவிட்டு விலகுகிறதிலும் அதையறிந்துகொள்ளாமலிருக்கிறதே யவர்களுக்கு நன்மையாயிருக்கும். * லூக்கா. யஉ. சஎ.

உஉ. அப்பொழுது * நாய் தான்கக்கினதைத் தின்னும்படி திரும்புகிறதென்றும், கழுவப்பட்ட பன்றி மறுபடியுஞ் சேற்றிலே புரளுகிறதென்றுஞ் சொல்லுகிற மெய்யான பழமொழியின்படி அவர்களுக்குச் சம்பவித்தது.
* வாகங். உசு. யக.

## ௩. அதிகாரம்.

[(க) கிறிஸ்துவருகையைக்குறித்துப் பரியாசம்பண்ணுகிறவர்களுக்கு விரோதமாகக் கிறிஸ்து நியாயத்தீர்ப்புக்கு வருவாரென்று நிச்சயித்து, (அ) பத்தியுள்ளவர்கள் சீக்கிரமாயக்குணப்பட்ட பராபரனுடைய பொறுமையை முன்னிட்டு எச்சரித்து, (ய) உலகம் அழிக்கப்படும்விதத்தைக்குறித்து அறிவித்து, அதற்குத்தகுதியான பரிசுத்தவான்களாயிருக்கவேண்டுமென்றும் புத்திசொல்லி, (யரு) பவுல் தன் நிருபங்களில் எழுதினபடியே பராபரனுடைய பொறுமை அவர்களிரட்சிப்புக்கேதுவென்று சொல்லியது.]

பிரியமானவர்களே! இவ்விரண்டாம் நிருபத்தை இப்பொழுது உங்களுக்கெழுதுகிறேன். பரிசுத்த தீர்க்கதரிசிகளால்,

உ. முன்சொல்லப்பட்ட வார்த்தைகளையும், இரட்சகராயிருக்கிற கர்த்தருடைய அப்போஸ்தலராகிய எங்களுடைய கற்பனையையும் நீங்கள் நினைக்கும்படியாக இவைகளால் உங்கள் உண்மையான மனதிற்கு * ஞாபகப்படுத்தி எழுப்புகிறேன். * க. யச, யரு.

௩. முதலாவது நீங்கள் அறியவேண்டியதென்னவென்றால் * கடைசிநாள்களில் பரியாசக்காரர் தோன்றுவார்கள். அவர்கள் தங்கள் சுயஇச்சைகளின்படி நடந்துகொண்டு,
* உ. தீமோத. ௩. க.

ச. அவர் வருவாரென்று சொல்லுகிற வாக்குத்தத்தம் எங்கேயிருக்கிறது. பிதாக்கள் நித்திரையடைந்தபின்பு சகலமும் சிருஷ்டிப்பின் தோற்றமுதல் இருந்தவிதமாயிருக்கிறதேயென்று சொல்லுவார்கள்.

ரு. பூர்வகாலத்திலே * பராபரனுடைய வார்த்தையினாலே வானங்களும், சலத்தினாலேயும், சலத்திற்குள்ளேயும் நிலைகொண்ட பூமியும் இருந்தும் † அப்பொழுதிருந்த உலகம் அதினாலே வெள்ளங்கொண்டழிந்துபோயிற்றே. * சங். ௩௩. எ; † க. மோசே. எ. யஎ—உ௩.

சு. அதுபோல * இப்பொழுதிருக்கிற வானங்களும், பூமியும் அந்தவார்த்தையாலே





அக்கினிக்கிரையாக வைக்கப்பட்டுத் தேவபத்தியில்லாத மனிதர்களுக்கு நியாயத்தீர்ப்பும், கேடுமுண்டாகும் நாளவரைக்கும் காக்கப்படுகின்றன. * உ. தெச. க. சு, எ.

எ. இதையந்தப்பரியாசக்காரர் அறிந்தும் நினையாமலிருக்கிறார்கள்.

அ. பிரியமானவர்களே! * நீங்கள் கர்த்தரிடத்தில் ஒரு நாள் ஆயிரம் வருஷங்களைப்போலவும், ஆயிரம் வருஷங்கள் ஒருநாளைப்போலவுமிருக்கின்றதென்றிருக்கிற இந்த ஒரே காரியத்தைமறவாதிருப்பீர்களாக.
* சங்கி கூய. ச.

கூ. * தாமதித்திருக்கிறாரென்று சிலர் எண்ணுகிறபிரகாரமாய்க் கர்த்தர் (தமது) வாக்குத்தத்தத்தைக் குறித்துத் தாமதமாயிராமல் ஒருவருங் கெட்டுப்போகாதபடிக்கு எல்லாரும் மனந்திரும்பவேண்டுமென்று விரும்பி, † நமதுமேல் நீடியசாந்தமுள்ளவராயிருக்கிறார். * ஆப்கூ. உ. ௩; † எசே. ௩௩. யச; உரோ. உ. ச; க. தீமோத. உ. ச.

ய. * கர்த்தருடைய நாள் இரவிலே திருடன் வருகிறவிதமாய் வரும் † அப்பொழுது வானங்கள் மடமடவென்று அகன்றுபோம். பூதங்கள் எரிந்து கரைந்துபோம். பூமியும், அதிலுள்ள கிரியைகளும் வெந்துபோம்.
* க. தெச. ரு. உ, ௩; † மத. உச. ௩ரு.

யக. இப்படி இவையெல்லாம் கரைந்துபோகிறதாயிருக்க, நீங்கள் பரிசுத்த நடக்கையிலேயும், தேவபத்தியிலேயும் எப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டும்!

யஉ. வானங்கள் வெந்துகரைந்து பூதங்கள் எரிந்துருகிப்போகும். பராபரனுடைய நாள் வருகிறதற்கு நீங்கள் மிகுந்த ஆசையோடே காத்திருக்கிறீர்களே.

ய௩. * அவருடைய வாக்குத்தத்தத்தின்படியே புதிய வானங்களும், புதிய பூமியுமுண்டாகுமென்று காத்திருக்கிறோம். அவைகளிலே நீதிவாசமாயிருக்கும். ஆகையால், பிரியமானவர்களே! * எசா. சுரு. யஎ; அறிவி. உக. க.

யச. அவைகள் வரக்காத்திருக்கிற நீங்கள் அவரால் மாசும், குற்றமுமில்லாதவர்களாய்ச் சமாதானத்தோடே காணப்படும்படிக்குச் சசாக்கிரதையாயிருந்து,

யரு. நமமுடைய கர்த்தாவின் நீடியசாந்தம் இரட்சிப்புக்கேதுவாயிருக்கிறதென்றெண்ணிக்கொள்வீர்களாக. நமக்குப்பிரியமான சகோதரனாகிய பவுலுந்தனக்குக்கொடுக்கப்பட்ட ஞானத்தினாலே அப்படியே உங்களுக்கெழுதியிருக்கிறான்,

யசு. எல்லாநிருபங்களிலேயும் இவைகளைக்குறித்துப்பேசியிருக்கிறான். * அவன் எழுதினவைகளிற்சில (வாக்கியங்கள்) அறிகிறதற்கு அரிதாயிருக்கின்றன. படியாதவர்

னாலே நாம் பிழைக்கும்படிக்கு அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினாலே பராபரன் நம்மேல் வைத்த அன்பு வெளிப்பட்டது. * யோவா. ௩. ௰௬.

௰. நாம் பராபரனிடத்தில் அன்புகூர்ந்ததினாலல்ல. அவர் நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நம்முடைய பாவங்களை நீக்குங் கிருபையுண்டாகும்படி தம்முடைய குமாரனையனுப்பினதினாலே அன்புண்டாயிருக்கின்றது.

௰௧. பிரியமானவர்களே! * பராபரன் இவ்விதமாய் நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால், நாமும் ஒருவரிடத்திலொருவர் அன்புகூரக் கடனாளிகளாயிருக்கிறோம். பராபரனை ஒருவரும் ஒருக்காலுங் காணவில்லை. * யோவா. ௰௩. ௰௨, ௰௬.

௰௨. நாம் ஒருவரிடத்திலொருவர் அன்புகூர்ந்தால் பராபரன் நமக்குள்ளே நிலைத்திருப்பார். அவருடைய அன்பு நம்மிடத்தில் நிறைவுள்ளதாயுமிருக்கும்.

௰௩. * அவர் தம்முடைய ஆவியில் நமக்குக் கொடுத்ததினாலே நாம் அவரிலும், அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதை யறிந்திருக்கிறோம். * உரோ. ௮. ௯.

௰௪. * பிதாவானவர் குமாரனை உலக இரட்சகராக அனுப்பினதை நாங்கள் பார்த்திருந்து சாட்சியிடுகிறோம். * யோவா. ௧. ௰௪.

௰௫. இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று அறிக்கைபண்ணுகிறவனெவனோ, அவனிடத்தில் பராபரன் நிலைத்திருக்கிறார். பராபரனிடத்திலே அவனும் நிலைத்திருக்கிறான்.

௰௬. பராபரன் நம்மேல் வைத்திருக்கிற அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம். பராபரன் அன்பாகவேயிருக்கிறார். அன்பிலே நிலைத்திருக்கிறவன் பராபரனிடத்தில் நிலைத்திருக்கிறான். பராபரனும் அவனிடத்திலே நிலைத்திருக்கிறார்.

௰௭. நியாயத்தீர்ப்பின் நாளிலே நமக்குத் தைரியமுண்டாயிருக்கத்தக்கதாக அன்பு நம்மிடத்தில் நிறைவுள்ளதாயிற்று. ஆனதால் அவர் இருக்கிறபிரகாரமாக நாமும் இந்த உலகத்திலிருக்கிறோமே.

௰௮. அன்பிலே பயமில்லை. நிறைந்த அன்பு பயத்தைப் புறம்பே தள்ளுகின்றது. பயமானது வேதனையுள்ளதே.

௰௯. பயப்படுகிறவன் நிறைந்த அன்புள்ளவனல்ல. * அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நாமும் அவரிடத்தில் அன்புகூருகிறோம். * உரோ. ௫. ௮.

௨௰. ஒருவன் தன் சகோதரனைப் பகைத்து நான் * பராபரனிடத்தில் அன்புகூருகிறேனென்று சொன்னால் அவன் பொய்க்காரனாயிருப்பான். எப்படியெனில், அவன் தான் கண்டிருக்கிற சகோதரனிடத்தில் அன்புகூராமலிருக்கத் தான் காணாதிருக்கிற பராபரனிடத்திலே எப்படி அன்பாயிருப்பான்? * உ. ௰.

௨௰௧. அன்றியும் பராபரனிடத்தில் அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்திலும் அன்புகூரவேண்டுமென்ற இந்தக் கட்டளையை அவராலே பெற்றிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

[(௧) பராபரனைச் சிநேகிக்கிறவன் பராபரனுடைய பிள்ளைகளையுஞ் சிநேகித்து அவருடைய கட்டளைகளைக் கைக்கொண்டு, அந்தக் கட்டளைகள் விசுவாசிகளுக்குப் பாரமாயிராமலிலேசாயிருக்கிறதென்றுணர்ந்திருப்பானென்றும், (௬) தேவசுதனாகிய இயேசுவானவர் நம்மை இரட்சிக்கவும், (௰௪) நாம் நமக்கும், மற்றவர்களுக்குஞ் செய்யும் வேண்டுதல்களைக் கேட்கவும் வல்லவரென்றுஞ் சொல்லியது.]

இயேசுவென்பவர் கிறிஸ்துவென்று விசுவாசிக்கிறவனெவனோ, அவன் * பராபரனிற் பிறந்திருக்கிறான். அன்றியும் பிறப்பித்தவரிடத்தில் அன்புகூருகிற யாவரும் அவரிற் பிறந்தவனிடத்திலும் அன்புகூருகிறார்கள். * யோவா. ௧. ௰௨, ௰௩.

௨. நாம் பராபரனிடத்திலே அன்புகூர்ந்து அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு வருகிறதினாலே, நம்மைப் பராபரனுடைய பிள்ளைகளிடத்தில் அன்புகூருகிறவர்களென்று அறிந்துகொள்ளுகிறோம்.

௩. * நாம் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே அவரிடத்தில் அன்புகூருகிறதாம். இப்படி † அவருடைய கற்பனைகள் பாரமானவைகளுமல்ல. * யோவா. ௰௪. ௨௰௧, ௨௰௩; † மத். ௰௧. ௩௰.

௪. எப்படியெனில், பராபரனிற் பிறந்தவனெவனோ, அவன் * உலகத்தை ஜெயிக்கிறான். நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம். * உ. ௰௩—௰௭

௫. * இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறவனேயன்றி, வேறு யாவன் உலகத்தை ஜெயிக்கிறவன்? * ௧. கொரி. ௰௫. ௫௭.

௬. இயேசுகிறிஸ்துவாகிய அவரே * ஜலத்தினாலும், இரத்தத்தினாலுந் தோன்றிவந்தவர். ஜலத்தினாலேயாத்திரமல்ல. ஜலத்தினாலும், இரத்தத்தினாலுமே (வந்தார்.) ஆவியானவர் சத்தியமாகையால் ஆவியானவரே சாட்சிகொடுக்கிறவர். * யோவான். ௰௯. ௩௪, ௩௫.

௭. ஆனதால் பரமண்டலத்திலே * பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவியென்கிற மூவருஞ் சாட்சியிடுகிறார்கள். அம் † மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள். * யோவா. ௧. ௧; † யோவா. ௰. ௩௰.

அ. பூமியிலேயும் ஆவி, சலம், இரத்தமென்கிற மூன்றுஞ் சாட்சியிடுகின்றன. அம்மூன்றும் ஒன்றுக்குப் பொருந்துகின்றன.

கூ. நாம் ஏற்றுக்கொள்ளுகிற மனிதருடைய சாட்சியிலும், * பராபரனுடைய சாட்சி அதிகமாயிருக்கின்றது. பராபரன் தமது குமாரனைக்குறித்துக்கொடுத்த சாட்சி அதுவே. * யோவா. அ. யஅ.

ய. பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான். பராபரனை விசுவாசியாதவன் அவரைப் பொய்யனென்கிறவனாக விருக்கிறான். பராபரன் தம்முடைய குமாரனைக்குறித்துக்கொடுத்த சாட்சியை விசுவாசிக்கவில்லையே.

யக. அந்தச் சாட்சி யென்னென்னில் பராபரன் நமக்கு நித்திய சீவனைக்கொடுத்திருக்கிறார். * அந்தச் சீவன் அவருடைய குமாரனிலிருக்கிறதென்பதே. * யோவா. க. ச

யஉ. * குமாரனையுடையவன் அந்தச் சீவனையுடையவனாயிருக்கிறான். பராபரனுடைய குமாரனில்லாதவன் அந்தச் சீவனில்லாதவனாயிருக்கிறான். * யோவா. ங. ஙசா.

யங. பராபரனுடைய குமாரனுடைய நாமத்தில் விசுவாசமாயிருக்கிற நீங்கள் நித்திய சீவனையுடையவர்களென்றறிந்து, பராபரனுடைய குமாரனுடைய நாமத்தின்மேலே விசுவாசமாயிருக்கும்படிக்கு இவைகளை யுங்களுக்கு எழுதினேன்.

யச. * நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படியே கேட்டால், அவர் நமக்குச்செவிகொடுப்பாரென்பதே. அவரால் நமக்குண்டாயிருக்கிறதயிரியம். * ங. உக. உஉ.

யரு. அன்றியும் நாம் எதைக்கேட்டாலும் அவர் நமக்குச்செவிகொடுப்பாரென்று நாம் அறிந்திருக்க அவரிடத்தில் நாம் பண்ணின விண்ணப்பங்களைப் பெற்றோமென்றும் அறிந்திருக்கிறோம்.

யசா. ஒருவன் மரணத்திற்கேதுவல்லாத பாவத்தைத் தன் சகோதரன் செய்யக்கண்டால் (கர்த்தாவைநோக்கிச்) செபம்பண்ணக்கடவன். அப்பொழுது அவர் அவனுக்கு மரணத்திற்கேதுவல்லாத பாவத்தைச் செய்தவர்களுக்கு ஏற்ற உயிரைக்கொடுப்பார். * மரணத்திற்கேதுவான பாவமுண்டு. அதைக்குறித்துச் செபம்பண்ணச் சொல்லமாட்டேன். * மாற். ங. உஅ, உகூ; எபி. சா. ச—சா;-ய. உசா—உஎ.

யஎ. அநியாயம் யாவும் பாவந்தான். மரணத்திற்கேதுவல்லாத பாவமுமுண்டு.

யஅ. நாம் அறிந்துகொண்டபடி பராபரனிற பிறந்தவனெவனோ, அவன் பாவஞ்செய்யமாட்டான். பராபரனிற பிறந்தவன் தன்னைக் காக்கிறான். ஆகையாற் பொல்லாங்கன் அவனைத் தொடான்.

யகூ. மேலும் நமக்குத்தெரிந்திருக்கிறபடி நாம் பராபரனாலுண்டாயிருக்கிறோம். உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள்ளே கிடக்கின்றது.

உய. மேலும் நமக்குத்தெரிந்திருக்கிறபடி நாம் மெய்யானவரை யறிந்துகொள்வதற்குப் பராபரனுடைய குமாரன்வந்து நமக்குப் புத்தியைக் கொடுத்தார். அந்தப்படி நாம் அவருடையகுமாரனாகிய இயேசுகிறிஸ்துவிலுள்ள மெய்யானவரைப் பற்றியிருக்கிறோம். * அவரே மெய்யான தேவனுமாய், நித்திய சீவனுமாயிருக்கிறார். * உரோ. கூ. ரு; க. தீமோ. ங. யசா; எபி. க. அ.

உக. பிள்ளைகளே! நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்துக்கொள்வீர்களாக. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின இரண்டாம் நிருபம்.

---

(கி. பி. பின். கூய. ஞூ)

[(க) கனம்பொருந்திய ஒரு அம்மாளும், அவளுடைய பிள்ளைகளுங் கிறிஸ்துமார்க்கத்துக்கடுத்த அன்பிலும், விசுவாசத்திலும் நிலைநின்று, (உ) தங்கள்பலனையிழந்துபோகாதிருக்கவும், (ய) கிறிஸ்து இயேசுவின் சத்திய உபதேசத்தைக்கொண்டுவராதகள்ளப் போதகர்களையேற்றுக் கொள்ளாமலிருக்கவும் அவர்களுக்குப்புத்திசொல்லியது.]

நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய், என்றென்றைக்கும் நம்மோடிருப்பதுமாயிருக்கிற சத்தியத்தினிமித்தம் நான்மாத்திரமல்ல, சத்தியத்தையறிந்திருக்கிற மற்ற யாவரும் உண்மையாய்ச் சிநேகித்திருக்கிற,

உ. தெரிந்துகொள்ளப்பட்ட அம்மாளுக்கு

கும், அவளுடைய பிள்ளைகளுக்கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது;

௩. பிதாவாகிய பராபரனாலும், பிதாவின் குமாரனாகிய கர்த்தாவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினாலுங் கிருபையும், இரக்கமும், சமாதானமும் சத்தியத்தோடும், அன்போடுங்கூட உங்களுக்குண்டாயிருக்கக்கடவது.

௪. உம்முடைய பிள்ளைகளிற் சிலர் பிதாவினால் நாம் கற்பனையடைந்தபடி சத்தியத்திலே நடக்கிறவர்களென்று நான் கண்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டேன்.

௫. இப்பொழுது அம்மாளே! நான் உமக்குப் புதிய கற்பனையாகவல்ல, * ஆதிமுதல் நமக்குண்டாயிருக்கிற கற்பனையாக எழுதிவைக்கொள்ளுகிறேனன்னவெனில், † நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரவேண்டும்.

* யோவா. ௰௩. ௩௪;-௰௫. ௰௨; எபே. ௫. ௨; ௧. பேது. ௪. ௮; ௧. யோவா. ௩. ௨௩; † ௧. யோவா. ௨. ௭, ௮.

௬. * நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்கிறதே யன்புகூருகிறதாம். நீங்கள் ஆதிமுதற்கேட்டிருக்கிறபடி அதிலே நடந்துகொள்ள வேண்டுமென்பதே யந்தக்கற்பனையாயிருக்கின்றது. * ௧. யோவா. ௫. ௩.

௭. அநேகவஞ்சனைக்காரர் உலகத்திலே தோன்றியிருக்கிறார்கள். இயேசுக்கிறிஸ்து வானவர் மாம்சமாகவொன்று அறிக்கைபண்ணாமலிருக்கிறார்கள். இப்படிப்பட்டவனே வஞ்சனைக்காரனுமாய், கிறிஸ்துவுக்கெதிராளியுமாயிருக்கிறான்.

௮. * நாம் நம்முடையவேலைகளையிழந்து போகாமல், நிறைந்தபலனைப்பெறும்படிக்கு, எச்சரிக்கையாயிருங்கள். * எபி. ௪. ௧.

௯. கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநில்லாமல், மீறிநடக்கிற எவனும் பராபரனை யடையாதவனாயிருக்கிறான். கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைநிற்கிறவனே பிதாவையும், குமாரனையும் அடைந்திருக்கிறான்.

௰. * ஒருவன் உங்களிடத்தில் வந்து இந்த உபதேசத்தைக்கொண்டுவராமலிருந்தால், அவனை நீங்கள் உங்கள் வீட்டிலே சேர்த்துக்கொள்ளவும், அவனுக்கு வாழ்த்துதல் சொல்லவுங்கூடாது. * உரோ. ௰௬. ௰௭, ௰௮.

௰௧. அவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்காளனாகிறானே.

௰௨. நான் பின்னும் அநேககாரியங்களை யுங்களுக்கு அறிவிக்கவேண்டும். காகிதத்தினாலும், மையினாலும் அப்படிச்செய்ய மனதில்லை. நமக்குச் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கு உங்களிடத்தில் வந்து முகமுகமாய்ப் பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.

௰௩. தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின மூன்றாம் நிருபம்.

---

(கி. பி. பின். ௯௰. ௵)

[(௧) காயுவைத்தன்னைநேசபத்திக்கும், (௫) உத்தமபோதகர்களுக்குச்செய்யும், உபசாரத்துக்கும் புகழ்ந்து, (௯) பெருமையுள்ள தியோத்திரேப்பே என்றவனுடைய கெட்ட நடக்கையைக்குறித்து விதனப்பட்டு, (௰௧) அந்த நடக்கையை ஒருவரும் பின்பற்றுமலிருக்கச்சொல்லி, (௰௨) தேமேத்திரியுவென்றவனுக்கு நற்சாட்சி பகர்ந்தது.]

மூப்பனாகிய நான் * உண்மையாய் அன்புகூருகிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது; பிரியமானவனே! * ௨. யோ. ௧. வசனம்.

௨. உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்கவேண்டுமென்று வேண்டுகிறேன்.

௩. சகோதரர் வந்து, நீ சத்தியத்தில் நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்மையைக்குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மிகவுஞ் சந்தோஷப்பட்டேன்.

௪. என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படுகிறதினால் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான சந்தோஷம் எனக்கில்லை.

௫. பிரியமானவனே! நீ சகோதரருக்கும், பரதேசிகளுக்குஞ்செய்கிற கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கிறாய்.

௬. அவர்கள் உன்னுடைய அன்பைக்குறித்துச் சபைக்குமுன்பாகச் சாட்சிசொன்னார்கள். அவர்களை நீ பராபரனுக்கு முன்பாகப் பாத்திரமானபடி வழிவிட்டனுப்பினால் நன்மைசெய்வாய்.

எ. அவருடைய நாமத்தினிமித்தம் அவர்கள் அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்காமற் புறப்பட்டார்களே.

அ. ஆகையால், நாம் சத்தியத்திற்கு உதவி செய்கிறவர்களாயிருக்கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக்கடனாளிகளாயிருக்கிறோம். நான் சபைக்கு எழுதினேன்.

கூ. அப்படியிருந்தும், அவர்களுக்குள் முதலாளியாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

௰. ஆனபடியினாலே நான் வரும்பொழுது அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாதவார்த்தைகளைப் பேசிச்செய்து வருகிற கிரியைகளை நினைத்துக்கொள்ளுவேன். அவைகளும் அவனுக்குப் போதாது. அவன்தானே சகோதரரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ளமனதாயிருக்கிறவர்களையுந் தடைசெய்து சபைக்குப் புறம்பே தள்ளுகிறான்.

௰க. பிரியமானவனே! நீ பொல்லாங்கானதையல்ல, நலமானதைப் பின்பற்றுவாயாக. நன்மைசெய்கிறவன் பராபரனாலுண்டாயிருக்கிறான். * பொல்லாங்குசெய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை. * க. யோ. ௩. ௬.

௰உ. தேமேத்திரியென்பவனுக்கு எல்லாராலும், சத்தியத்தாலுந்தானே நற்சாட்சியுண்டாயிருக்கிறது நாங்களுஞ் சாட்சிகொடுக்கிறோம், எங்கள் சாட்சிமெய்யென்றறிந்திருக்கிறீர்கள்.

௰௩. நான் * அநேககாரியங்களையுனக்கெழுதவேண்டும். அவைகளை மையினாலும், இறகினாலும் எழுதமனதில்லை. * உ. யோ. ௰உ. வசனம்.

௰௪. நான் சீக்கிரமாய் உன்னைப்பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன். அப்பொழுது முகமுகமாய்ப் பேசுவோம். உனக்குச் சமாதானமுண்டாயிருக்கக்கடவது.

௰௫. (எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை வாழ்த்துதல்செய்கிறார்கள். உன்னிடத்திலுள்ள சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்த்துதல்செய்வாயாக. முற்றும்.

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின நிருபம்.

(கி. பி. பின். கூ௰. ௵)

[(க) விசுவாசத்தை உறுதியாய்க்கைக்கொள்ளப் புத்திசொல்லி, (௩) அவர்களைக்கெடுக்கும்படி பிரவேசித்திருக்கிற கள்ளப்போதகர்களுடைய சாபத்தைத்தரும் உபதேசத்துக்கும், நடக்கைக்கும் உக்கிரமான ஆக்கினைகிடைக்குமென்றும், (உ௰) உத்தமர்களோ பரிசுத்த ஆவியின் ஏவுதலினாலும், பராபரனைநோக்கி வேண்டிக்கொள்ளுகிறதினாலும் ஊக்கமடைந்து கிருபையிலே வளர்ந்து தங்களைக் காத்துக்கொள்ளுவதுமன்றி எத்தர்கள் வைத்த கண்ணிகளிலகப்பட்டவர்களைக் காப்பார்களென்றுஞ் சொல்லியது.]

இயேசுக்கிறிஸ்துவினுடைய * ஊழியக்காரனுமாய், யாக்கோபினுடைய சகோதரனுமாயிருக்கிற யூதாவென்பவன், பிதாவாகிய பராபரனாலே பரிசுத்தமாக்கப்பட்டும், இயேசுக்கிறிஸ்துவினால் காக்கப்பட்டும், அழைக்கப்பட்டுமிருக்கிறவர்களுக்கு எழுதுகிறதாவது; * ஆக. ௬. ௰௬.

உ. இரக்கமும், சமாதானமும், அன்புமுங்களுக்குச் சம்பூரணமாயுண்டாகக்கடவது.

௩. பிரியமானவர்களே! பொதுவான இரட்சிப்பைக்குறித்து உங்களுக்கெழுதவேண்டுமென்று நான் மிகுந்த கருத்துள்ளவனாயிருக்கையில், முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற விசுவாசத்தினிமித்தம் நீங்கள் கெட்டியாய்ப் போராட்டம்பண்ணும்படிக்கு உங்களுக்குப் புத்தியையெழுதுகிறது எனக்கு அவசியமாய்த் தோன்றிற்று.

௪. என்னத்தினாலெனில், நம்முடைய பராபரனுடைய கிருபையைக் *காமவிகாரத்திற்கேதுவாகப் புரட்டி, ஒன்றான சுயாதிபதியான பராபரனுமாய், நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை † மறுதலிக்கிற துன்மார்க்கரான சில மனிதர்கள் பக்கவழியாய் நுழைந்திருக்கிறார்கள். அவர்கள் அடையும் ஆக்கினையைக்குறித்துப் பூர்வகாலத்திலே முன்னெழுதியிருக்கின்றது.

* கலாத். ரு. ௰௩; † உ. பேது. உ. க.

௫. அந்தப்படி நீங்கள் முன்னேயறிந்திருந்தும், நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறதென்னவென்றால், கர்த்தர் எகிப்துதேசத்திலிருந்து * சனத்தை இரட்சித்துப் பின்பு விசுவாசியாதவர்களை யழித்தார். * ௧. கொரி. ௰. ௧-௫.

௬. அன்றியும் * தங்களுடைய ஆதிநிலைமையைக் காவாமல் தங்களுக்கேற்ற இருப்பிடத்தைவிட்டு விலகின தூதர்களைப் பெரிய நியாயத்தீர்ப்புநாள்வரைக்கும் நித்தியசங்கிலிகளினாலே (கட்டப்பட்டு) அந்தகாரத்திலிருக்கும்படி நியமித்தார். * ௨. பேது. ௨. ௪.

௭. * அப்படியேபோலச் சோதோம், கொமோருப்பட்டினத்தார்களும், அவைகளைச் சூழ்ந்த பட்டினத்தார்களும் இவர்களுடைய விதமாய் வேசித்தனத்தில் அமிழ்ந்து அந்நியமாம்சத்தைச் சேர்ந்து போனதினாலே நித்திய அக்கினியை ஆக்கினையாக அடைந்து, திருட்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள். * ௨. பேது. ௨. ௬.

௮. அப்படியேபோல இந்தச் சொப்பனக்காரர் மாம்சத்தை அசுசிப்படுத்திக்கொண்டு, கர்த்தத்துவத்தை யசட்டைபண்ணி, மகத்துவங்களைத் தூஷணிக்கிறார்கள்.

௯. பிரதான தூதனாகிய * மிகாவேலும் மோசேயினுடைய சரீரத்தைக்குறித்துப் பிசாசானவனுடனே தருக்கித்துப்பேசின பொழுது, தூஷணமுள்ள தீர்ப்பையவனுக்குச் சொல்லத்துணியாமல் † கர்த்தருன்னைக் கடிந்துகொள்வாராகவென்று (மாத்திரம்) சொன்னான். * தானி. ௰. ௰௩; வெளி. ௰௨. ௭; † சகரி. ௩. ௧, ௨.

௰. * இவர்கள் தங்களுக்குத்தெரியாதவைகளைத் தூஷணிக்கிறார்கள். † புத்தியில்லாத மிருகங்களைப்போலச் சுபாவப்படித் தங்களுக்குத் தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுக்கிறார்கள். * ௨. பேது. ௨. ௰௨; † உரோ. ௧. ௨௧, ௨௨.

௰௧. ஐயோ, அவர்களுக்கு வேதனையுண்டாகும். அவர்கள் * காயீனுடைய வழியில் நடந்து † பாலாம் கூலிக்காகச்செய்த வஞ்சகத்திலே விரைந்தோடி ‡ கோராவிரோதமாய்ப் பேசினதினாலே கெட்டுப்போனார்கள். * ௧. மோ. ௪. ௮; † ௨. பே. ௨. ௰௫; ‡ ௪. மோ. ௰௬. ௧.

௰௨. * இவர்கள் உங்கள் அன்புவிருந்துகளில் மாசுகளாயிருந்து, பயமில்லாமல் விருந்துண்டு தங்களை மேய்க்கிறார்கள். அவர்கள் † காற்றுக்களால் அடிக்கப்பட்டலைகிற நீரில்லாத மேகங்களும், உலர்ந்து கனியற்று இரண்டுதரஞ்செத்து வேரற்றுப்போன மரங்களும், * ௨. பேது. ௨. ௰௩, ௰௪; † ௨. பே. ௨. ௰௭.

௰௩. * தங்கள் சுய இலச்சைகளை நுரைபோலக் கக்குகிற உக்கிரத்தையுடைய கடலின் அலைகளும், மார்க்கந்தப்பித் திரிகிற நட்சத்திரங்களுமாயிருக்கிறார்கள். என்றென்றைக்குமுள்ள காரிருளே அவர்களுக்காக வைக்கப்பட்டிருக்கிறது. * ஏசா. ௫௭. ௨௰.

௰௪. ஆதாம் முதற்கொண்டு ஏழாந்தலைமுறையிலுண்டாயிருந்த * ஏனோக்கென்பவன் இவர்களைக்குறித்தும் முன்னறிவித்ததாவது; இதோ, கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படிக்கும், அவர்களில் தேவபத்தியில்லாத யாவருந் துன்மார்க்கமாய்ச் செய்த சகல துன்மார்க்கக்கிரியைகளினிமித்தமும், தமக்கு விரோதமாய். * ௧. மோ. ௫. ௰௮-௨௪.

௰௫. தேவபத்தியில்லாத பாவிகள் பேசின கடினவார்த்தைகளெல்லாவற்றினிமித்தமும் அவர்களைக் கண்டிக்கும்படிக்குத் * திரளான சேனைகளாகிய தம்முடைய பரிசுத்தவான்களோடுங்கூட வருகிறாரென்று அறிவித்தான். * தானி. ௭. ௰; மத். ௨௫. ௩௧.

௰௬. இவர்கள் முறுமுறுக்கிறவர்களுமாய், முறையிட்டுத்திரிகிறவர்களுமாய், தங்களிச்சைகளின்படி நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள். இவர்கள் வாயினாலே மிகவும் * இறுமாப்பானவைகளைப்பேசிப் பொழிவுக்காகப் பெரியோர்களைப் புகழுகிறார்கள். * ௨. பேது. ௨. ௰௮.

௰௭. பிரியமானவர்களே! நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலரால் முன்சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்துக்கொள்ளுங்கள்.

௰௮. * கடைசிக்காலத்திலே தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற பரியாசக்காரர் தோன்றுவார்களென்று உங்களுக்குச் சொன்னார்களே. * ௨. தீமோ. ௩. ௧-௫.

௰௯. இவர்களே பிரிந்துபோகிறவர்களும், சென்மசுபாவத்தாரும், (தேவ) ஆவியில்லாதவர்களுமானவர்கள்.

௨௰. பிரியமானவர்களே! நீங்கள் உங்களுக்குண்டாயிருக்கிறது மிகவும் பரிசுத்தமான விசுவாசத்தின்மேலே உங்களைப் பொருந்தக்கட்டிக்கொண்டு,

௨௧. பரிசுத்த ஆவியைக்கொண்டு செபம்பண்ணிப் பராபரனுடைய அன்பிலே உங்களைக் காத்துக்கொண்டு, நித்தியசீவனுக்கேதுவாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய இரக்கம் வரப்பாத்திருங்கள்.

௨௨. அல்லாமலும் வகையறுக்கிறவர்களாய் நீங்கள் * சிலருக்கு இரங்கி, சிலரை அக்கினியிலிருந்து இழுத்துக்கொண்டு, பயத்தோடே இரட்சித்து, மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்கிற அங்கியையும் வெறுத்துப்போடுங்கள். * கலா. ௬. ௧.

௨௩. நீங்கள் வழுவாதபடிக்கு உங்களைக் காத்துக்கொள்ளுதற்கும், மாசில்லாமல் மகி

ழ்ச்சியோடே உங்களைத் தமது மகிமையுள்ள சந்நிதானத்திலே நிறுத்துகிறதற்கு வல்லமையுள்ளவருமாய,

௨௫. நம்முடைய இரட்சகரான ஞானமுள்ள * ஒருவராகிய தேவனுமாயிருக்கிறவருக்கு இப்பொழுதும் இனிமேலிருக்கும் எல்லாக்காலங்களிலேயும் புகழ்ச்சியும், மகத்துவமும், வல்லமையும், அதிகாரமும், உண்டாயிருக்கக்கடவது. ஆமென். * உரோ. ௰௬. ௨௭.

---

தெய்வவசனபோதகராகிய

# யோவானுக்குவெளிப்படுத்தினவிசேஷம்.

---

(கி. பி. பின். ௯௬. ஷு)

## ௧. அதிகாரம்.

[(௧) ஏழுபொன்விளக்குத்தண்டுகளுக்கு ஒப்பனையாகக்கப்பட்ட ஆசியாவிலிருந்த ஏழுசபைகளுக்கு யோவான் அறிவிப்பையெழுதி, (௭) கிறிஸ்துவின் வருகையைக்குறித்தும், (௰௩) அவருடைய மகிமையுள்ள வல்லமையையும், மகத்துவத்தையுங்குறித்துஞ்சொல்லியது.]

சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பராபரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்கும்படிக்கு இயேசுக்கிறிஸ்துவுக்குக்கொடுத்ததும், இவர்வெளிப்படுத்தினதுமானவிசேஷம். அவர் தம்முடைய ஊழியக்காரனாகிய யோவானிடத்திற்குத் தம்முடைய தூதனையனுப்பி, அவனுக்கவைகளைக் குறிப்பாகக்காட்டினார்.

௨. அவன் பராபரனுடைய வசனமும், இயேசுக்கிறிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமாகிய தான்கண்டயாவற்றையும் அறிவித்திருக்கிறான்.

௩. காலஞ்சமீபமாயிருக்கிறது. ஆகையால், * இந்தத்தீர்க்கதரிசனமான வசனங்களை வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும், இதில் எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கியவான்கள். * ௨௨. ௭.

௪. யோவான் ஆசியாவிலுள்ள சபைகள் * ஏழுக்கும் எழுதுகிறதாவது; † இருக்கிறவரும், இருந்தவரும், வருகிறவருமானவராலும், அவருடைய ஆசனத்திற்கு முன்பாகவிருக்கிற ஏழு ஆவிகளாலும், * ௰௧. வசன. † உரோ. ௧. ௰௪.

௫. உண்மையுள்ள சாட்சியும், * மரித்தோரிலிருந்து முதற்பிறந்தவரும், † பூமியின் இராசாக்களுக்கதிபதியுமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும், உங்களுக்குக்கிருபையும், சமாதானசவுக்கியமுமுண்டாகக்கடவது. ‡ நம்மிடத்தில் அன்புகூர்ந்து தமதிரத்தத்தினாலே நம்முடைய பாவங்களற நம்மைக் கழுவி, * ௩. ௰௪; யோவா. அ. ௰௪; ௧. திமோ. ௬. ௰௩. † ௪. கொரி. ௰௫. ௨௰;

௬. தம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு (முன்பாக) நம்மைத் தமது * இராசியத்தாராகவும், ஆசாரியராகவுஞ்செய்திருக்கிற அவருக்கு மகிமையும், வல்லமையும் என்றென்றைக்கு முண்டாயிருக்கக்கடவது. ஆமென். * ௧. பேது. ௨. ௬.

௭. அதோ * மேகங்களுடனே வருகிறார். கண்களியாவும், அவரைக் குத்தினவர்களும் (அவரைக்காண்பார்கள்.) பூமியின்கோத்திரத்தார்களெல்லாரும் † அவரைக்குறித்துத் துக்கத்தோடேபுலம்புவார்கள். மெய்யாய் அப்படியிருக்கும். ஆமென். * மத். ௨௪. ௩௰; † சகரி. ௰௨. ௰.

௮. இருக்கிறவரும், இருந்தவரும், வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர் நான் * அல்பாவும், ஓமேகாவும், ஆதியும், அந்தமுமாயிருக்கிறேனென்று திருவுளம்பற்றுகிறார். * ஏசா. ௪௧. ௪;-௪௪. ௬.

௯. உங்கள் சகோதரனுமாய், இயேசுக்கிறிஸ்துவினிமித்தம்வருகிற உபத்திரவத்திற்கும், அவருடைய இராசியத்திற்கும், பொறுமைக்கும் உங்களுடனே பங்காளனுமாயிருக்கிற யோவானாகிய நான் பராபரனுடைய வசனத்தினிமித்தமும், இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சிசொன்னதினிமித்தமும் பத்மு என்னப்பட்ட தீவிலே இருந்தேன்.

௰. (அங்கே) கர்த்தருடையநாளில் ஆவிக்குள்ளானேன்.

௰௧. அப்பொழுது நீ காண்கிறதை ஒரு புத்தகத்திலேயெழுதி, ஆசியாவிலிருக்கிற எபேசு, சிமிர்னா, பெருகமு, தியத்தைரா, சருதை, பிலதெல்பியா, இலவோதிக்கையா

இவைகளிலுள்ள சபைகளேழுக்கும் அனுப்பு என்று எனக்குப் பின்னாலே எக்காளசத்தம் போன்ற மிகுந்த சத்தத்தைக் கேட்டேன்.

௰௨. அப்பொழுது என்னுடனே சத்தமிட்டுப் பேசினவரைப் பார்க்கத் திரும்பினேன்.

௰௩. திரும்பினபொழுது, * ஏழு பொன் விளக்குத்தண்டுகளையும், ஏழுவிளக்குத்தண்டுகளின் மத்தியிலே நிலையங்கியைத்தரித்து, மார்பருகே பொற்கச்சைக்கட்டியிருந்த † மனிதகுமாரனுக்கொப்பானவரையுங்கண்டேன். *

௰௪. அவருடைய சிரசும், மயிரும் வெண்மையான பஞ்சியையும், உறைந்தமழையையும் போல வெண்மையாயிருந்தன. * அவருடைய கண்கள் அக்கினிச்சுவாலையைப்போலிருந்தன. * ௰௪. ௨.

௰௫. அவருடைய கால்கள் உலைக்களத்திற் காய்கிற பிரகாசமுள்ள செம்பைப்போலிருந்தன. அவருடைய சத்தம் பெருவெள்ள இரைச்சலைப்போலிருந்தது.

௰௬. அல்லாமலும் அவர் வலதுகையிலே ஏழுநட்சத்திரங்களை யேந்திக்கொண்டிருந்தார். * அவர் வாயிலிருந்து இருபுறமுங் கருக்குள்ள கட்கம் புறப்பட்டது. † அவருடைய முகம் உச்சிக்காலத்திலே வல்லமையாய்ப்பிரகாசிக்கிற சூரியனைப்போலிருந்தது. * ௰௬. ௰௫; ஏசா. ௪௯ ௨; எபிரே. ௪. ௰௨; † மத். ௰௭. ௨.

௰௭. இப்படியவரைக் கண்டபொழுது செத்தவனைப்போல அவருடைய பாதங்களிடத்தில் விழுந்தேன். அப்பொழுது அவர் தமது வலதுகரத்தை என்மேல் வைத்து, (என்னுடனே) சொன்னதாவது; நீ பயப்படவேண்டுவதில்லை. நான் முந்தினவனும், பிந்தினவனும், உயிருள்ளவனுமானவன்.

௰௮. நான் மரித்தும் இதோ, என்றென்றைக்கும் உயிரோடிருந்து மரணத்திற்கும், மரித்தோர் ஸ்தலத்திற்கும்உரிய திறவுகோல்களையுடையவனாயிருக்கிறேன்.

௰௯. ஆகையால் நீ கண்டவைகளையும், இருக்கிறவைகளையும், இவைகளுக்குப்பின் நடப்பவைகளையும் எழுது.

௨௰. என்னுடைய வலதுகரத்தில் நீ கண்ட நட்சத்திரங்களேழின் இரகசியத்தையும், பொன்விளக்குத்தண்டுகளேழின் குறிப்பையுமே யெழுது. இந்த நட்சத்திரங்களேழும் சபைகளேழினுடைய * தூதர்களாயிருக்கின்றன. நீ கண்டவிளக்குத்தண்டுகளேழும் ஏழுசபைகளாயிருக்கின்றன. மல்கி. ௨. ௭.

## ௨. அதிகாரம்.

[(௧) எபேசு, (௮) சிமிருனா, (௰௨) பெர்கமு, (௰௮) தியாத்தீரா என்ற சபைகளினுடைய மேய்க்காரர்களாகிய தூதர்களிற் புகழப்படத்தக்கதும், இகழப்படத்தக்கதுமானவைகளை எழுதியனுப்பும்படி உண்டான கட்டளையைச் சொல்லியது.]

எபேசுபட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு எழுதவேண்டியதென்னவெனில், * ஏழுநட்சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில் ஏந்திக்கொண்டு ஏழு பொன் விளக்குத்தண்டுகளின் மத்தியிலே உலாவிக்கொண்டிருக்கிறவர் சொல்லுகிறதாவது; * ௧. ௰௬. ௨௰.

௨. உன் கிரியைகளையும், உன் பிரயாசத்தையும், உன் பொறுமையையும், நீ பொல்லாதவர்களுக்கு இடங்கொடாமலிருக்கிறதையும், அப்போஸ்தலரல்லாதவர்கள் தங்களை அப்போஸ்தலரென்று சொல்லுகிறதை நீ சோதித்து அவர்களைப் பொய்யரென்று கண்டறிந்ததையும்,

௩. நீ பொறுமையைக் காத்துக்கொண்டு வருகிறதையும், என் நாமத்தினிமித்தம் இளைப்படையாமற் பிரயாசப்பட்டதையும் அறிந்திருக்கிறேன்.

௪. ஆனாலும் நீ ஆதியிற்கொண்டிருந்த அன்பை விட்டபடியால், உன்மேல் விசனமாயிருக்கிறேன்.

௫. ஆகையால் நீ யிப்படிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்ததை நினைத்து, மனந்திரும்பி, ஆதியிற்செய்த கிரியைகளைச்செய்வாயாக. நீ மனந்திரும்பாவிட்டால், நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, உன் விளக்குத்தண்டை அவ்விடத்திலிருந்து நீக்குவேன்.

௬. * நிக்கொலாவின்மார்க்கத்தாரின் கிரியைகளைப் பகைக்கிறாய். இது உன்னிடத்திலுண்டு. அவைகளை நானும் பகைக்கிறேன். * ௰௫. ௪௪.

௭. ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனுக்குப் பராபரனுடைய * பரதீசின் மத்தியிலிருக்கிற ஜீவவிருட்சத்தின் கனியைப் புசிக்கக் கொடுப்பேனென்கிறார் என்றெழுது. * ௨௨ ௨; ௧. மோசே. ௨. ௯.

௮. சிமிருனாப்பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில், * மரித்து உயிரோடிருக்கிற முந்தினவரும், பிந்தினவருமானவர் சொல்லுகிறதாவது; * ௧. ௰௭, ௰௮.

௯. உன் கிரியைகளையும், உபத்திரவத்தையும், ஐசுவரியமுள்ள உனக்கிருக்கிற தரித்திரத்தையும், தங்களை யூதரென்று சொல்லியும், யூதராயிராமற் சாத்தானுடைய ஆலயமாயிருக்கிறவர்கள் செய்கிற தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.

௰. * உனக்கு வருந் துன்பங்களைக்குறித்து எவ்வளவாகிலும் பயப்படாதிருப்பாயாக.

கேள்! நீங்கள் சோதிக்கப்படும்பொருட்டாகப் பிசாசானவன் உங்களிற்சிலரைக் காவலிற்போடுவான். பத்து நாள் உபத்திரவப்படுவீர்கள். ஆகிலும் மரணபரியந்தம் உண்மையாயிரு. அப்பொழுது † சீவகிரீடத்தை உனக்குத்தருவேன். *மத்தே. ய. உஅ; † யாக. க. யஉ.

யக. ஆவியானவர் சபைகளுக்குச்சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். செயங்கொள்ளுகிறவன் * இரண்டாம்மரணத்தால் சேதப்படுவதில்லையென்கிறார் என்றெழுது. * உய. யச;-உக. அ.

யஉ. பெருகமுப்பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில், * இருபுறமுங்கருக்குள்ள கட்கத்தையுடையவர் சொல்லுகிறதாவது;
* க. யகூ.

யங. உன்கிரியைகளையும், சாத்தானுடைய * ஆசனமிருக்கிற இடத்தில் நீ குடியிருக்கிறதையும், சாத்தான்குடியிருக்கிற உங்களிடத்திலே யெனக்கு உண்மையுள்ளசாட்சியாகிய அந்திப்பாவென்பவன் கொல்லப்பட்டநாள்களிலேயும் என்னைப்பற்றும் விசுவாசத்தை மறுதலியாமல் என்னுடையநாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன். * யகூ. உ.

யச. ஆகிலும் சில காரியங்களைக்குறித்து உன்மேல் விசனமாயிருக்கிறேன். விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப்புசிப்பதற்கும், வேசித்தனம்பண்ணுவதற்குமேதுவான கேடுகளை இஸ்ரவேல்புத்திரர் முன்பாகப் போடும்படிக்குப் * பாலாகென்பவனுக்குப் போதனைசெய்த பாலாமுடைய போதகத்தைப்பிடித்திருக்கிறவர்கள் உன்னிடத்திலிருக்கிறார்கள். * ச. மோ. உரு. க-ங;-ஙக யகூ.

யரு. அல்லாமலும் * நிகொலாவினமார்க்கத்தாருடைய போதகத்தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களுமுன்னிடத்திலுண்டு. *கூ வச.

யகூ. ஆகையால் நீ மனந்திரும்புவாயாக. இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில்வந்து, * என்வாயின்கட்கத்தால் அவர்களோடே யுத்தம்பண்ணுவேன்.
* யகூ. யரு.

யஎ. ஆவியானவர் சபைகளுக்குச்சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். செயங்கொள்ளுகிறவனுக்கு நான்மறைவான * மன்னாவைப்புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்மையானகல்லையும், அந்தக்கல்லின்மேலே எழுதப்பட்டதுமாய், பெறுகிறவனேயன்றி வேறொருவனும் அறியாததுமாயிருக்கிற புதியநாமத்தையுங் கட்டளையிடுவேனென்கிறார் என்றெழுது. * யோவா. கூ. ருய, ருக.

யஅ. தியத்தைராப் பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ யெழுதவேண்டியதென்னவெனில், * அக்கினிச்சுவாலையைப்போன்ற கண்களும், உருக்கியசெம்பைப்போன்றகால்களுமுள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது; * க யச, யரு.

யகூ. உன்கிரியைகளையும், உன் அன்பையும், உன் ஊழியத்தையும், உன் விசுவாசத்தையும், உன்பொறுமையையும், நீ பின்பு செய்தகிரியைகள் முந்தினகிரியைகளிலும் அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

உய. ஆகிலும் (சிலவற்றைக்குறித்து) உன்மேல் விசனமாயிருக்கிறேன். என்னவெனில், வேசித்தனம்பண்ணும்படிக்கும், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கும்படிக்கும், தன்னைத் தீர்க்கதரிசியென்று சொல்லிக்கொள்ளுகிற * யேசபேலென்னும் ஸ்திரீ என்னுடைய ஊழியக்காரருக்குப் போதித்து வஞ்சிக்கிறாள். அவளுக்கு நீ இடங்கொடுக்கிறாய். * க. இரா. யகூ. ஙக.

உக. அவள் மனந்திரும்பும்படியாய்க்காலத்தை அவளுக்குக்கொடுத்தேன். அவள் தன் வேசிமார்க்கத்தைவிட்டு மனந்திரும்ப விருப்பமில்லை.

உஉ. (ஆகையால்) கேள்! அவளும், * அவளுடனேகூட விபசாரஞ்செய்தவர்களும், தங்களுடைய கிரியைகளைவிட்டு மனந்திரும்பாவிட்டால், நான் அவளை ஒருகட்டிலின்மேலும், இவர்களை மிகுந்த உபத்திரவத்திலேயும்போட்டு, அவளுடைய பிள்ளைகளைக் கொலைசெய்வேன். * யஅ. கூ.

உங. அப்பொழுது நானே * உள்ளிந்திரியங்களையும், இருதயங்களையும் ஆராய்கிறவனென்று எல்லாச்சபைகளும் அறிந்துகொள்வார்கள். அல்லாமலும் உங்களில் அவனவனுடைய கிரியைகளின்படியே யாவருக்கும்பதில்கொடுப்பேன். * சங. எ. ய.

உச. இந்தப் போதகத்தைப் பற்றிக்கொள்ளாமலும், அவர்கள்சொல்லுகிறபடி சாத்தானுடைய ஆழங்களையறிந்துகொள்ளாமலுமிருக்கிற தியத்தைராவிலுள்ள மற்றவர்களாகிய உங்களுக்கு நான்சொல்லுகிறதாவது; உங்கள்மேல் வேறொருபாரத்தையும் போடமாட்டேன்.

உரு. * உங்களுக்குண்டானதை நான்வருமளவும் பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள். * ங. யக.

உகூ. செயங்கொண்டு முடிவுபரியந்தம் என் கிரியைகளைக்காத்துக்கொள்ளுகிறவனெவனோ அவனுக்கு * என்னுடைய பிதாவினிடத்தில் நான்பெற்றதுபோலச்சனக்கூட்டங்கள்மேல் அதிகாரத்தைக்கொடுப்பேன். * சங். உ. அ, கூ.

உஎ. அவன் இருப்புக்கோலால் அவர்களை நடத்திக்கொள்வான். அவர்கள் மட்கலங்களைப்போல நொறுக்கப்படுவார்கள்.

௨௮. அலலாமலும, விடிவெள்ளிநட்சத்திரத்தையவனுக்குககொடுபபேன.

௨௯. ஆவியானவர் சபைகளுககுச சொலலுகிறதைக காதுள்ளவனகேட்கக்கடவனென்றெழுது.

## ௩. அதிகாரம்.

[(௧) சர்தேசசபையினதூதன கடிநதுகொள்ளபபடடு, (௩) குணபபடுமபடிபுததிசொலலபபடடு, குணபபடாமைககுப பயமுறுததபபடடது. (௭) பிலதெலபியாசசபையின தூதன. (௰) தனசுறுசுறுபபுககாகவும, பொறுமைககாகவும மெய்சசக்கொளளபபடடது. (௰௫) இலவோதிககேயாசசபையினதூதன அனலும், குளிருமிலலாதிருநதததினிமிததங்கடிநதுகொள்ளபபடடு, (௰௯) சுறுசுறுபபடையுமபடி ஏவபபடடது. (௨௰) கிறிஸ்துவாசலணடையிலநினறுதடடுகிறுரெனபது.]

சருதையூரிலுள்ள சபையினதூதனுக்கு நீ எழுதவேணடியதெனனவெனில, பராபரனுடைய *ஏழாவிகளையும, †ஏழுநட்சததிரஙகளையுமுடையவர்சொலலுகிறதாவது; உனகிரியைகளை யறிநதிருககிறேன. நீ உயிருளளவனெனறு பேர்கொணடிருநதுஞ் செததவனாயிருககிறாய். * ௧. ௪; † ௧. ௰௬.

௨. உனகிரியைகளபராபரனுக்குமுனபாக நிறைநதவைகளலலவெனறுகணடிருககிறேன. ஆகையால, * நீவிழிததுககொணடு, சாகிறதறகேதுவான மறறவைகளைஸதிரபபடுததுவாயாக. *

௩. மேலும நீ கேடடுபபெறறுககொணடவைகளை நினைததுக கைக்கொணடுமனநதிருமபுவாயாக. * நீ விழிததுககொளளாவிடடால, † திருடனைபபோல உனமேலவருவேன. நான உனமேலவருமநேரததை யறியாதிருபபாய. * ௨. ௫; † மத். ௨௪. ௪௩; ௧. தெசலோ. ௫. ௨.

௪. தஙகளவஸதிரஙகளை அசசிபபடுததாத சிலபேர் சருதையூரிலே யுனனோடேயுணடு. அவர்கள்பாததிரவானகளானபடியால, என்னுடனேகூடவெணமையான உடைகளைத தரிததுநடபபார்கள.

௫. செயங்கொளளுகிறவனவெணமையான வஸதிரஙகளால உடுததபபடுவான. நான * ஜீவபுஸதகததில † அவனுடைய நாமததைக கிறுககிபபோடாமல, அதை என பிதாமுனபாகவும, அவருடைய தூதர்முனபாகவும அறிக்கைபணணுவேன. * ௨௰. ௨௨; † மத்தே. ௰. ௩௨.

௬. ஆவியானவர் சபைகளுககுச சொலலுகிறதைககாதுளளவன கேடகக்கடவனென்றெழுது.

௭. பிலதெலபியாவூரிலுள்ள சபையினதூதனுககு நீ எழுதவேணடியதெனனவெனில, * தாவீதினதிறவுகோலையுடையவருமாய, ஒருவரும பூடடககூடாதபடிககுததிறககிறவருமாய, ஒருவருநதிறககக்கூடாதபடிககுப பூடடுகிறவருமாயிருக்கிறபரிசுததமும், †சததியமுமுளளவர்சொலலுகிறதாவது; * ஏசா. ௨௨. ௨௨; † ௧. ௫; ௧யோவா. ௰. ௪. ௬.

௮. உனகிரியைகளை யறிநதிருககிறேன. * கொஞசபபெலன (மாததிரம) உனககிருநதும, நீ யெனனுடைய நாமததைமறுதலியாமல, என வசனததைக கைக்கொணடபடியினாலே இதோ, உனககுமுனபாகததிறநதிருககிற வாசலைககொடுததேன. அதை யொருவனும பூடடமாடடான. * லூககா. ௰௨. ௩௨; ௨. கொரி. ௪. ௭.

௯. கேள். யூதரலலாதிருநதும * தஙகளை யூதரெனறு பொய்சொலலுகிறவர்களாகிய சாததானுடைய ஆலயததாரில (சிலரை) உனககுததருகிறேன. கேள். அவர்கள உன பாதஙகளுக்குமுனபாகவநதுபணிநது, நான உனமேல அனபாயிருககிறதையறிநதுகொளளுமபடிசெயவேன. * ௨. ௯.

௰. என்னுடைய பொறுமையைககுறிநதுசசொலலுகிறவசனததை நீ கைக்கொணடபடியினாலே நானும பூமியினமேறகுடியிருககிறவர்களைச சோதிக்குமபடிககுப பூசசககரததினமேலவருமவருஞ சோதனைகாலததிறகுததபபுமபடி யுனனைக காபபாறறுவேன.

௰௧. * சீககிரமாயவருகிறேன. ஒருவனும உனகிரீடததையெடுததுக்கொளளாதபடிககு உனககுளளதைபபததிரமாயப † பறறிககொளவாயாக. * ௨௨. ௰௨; † ௨ தீமோ. ௧. ௰௩, ௰௪.

௰௨. செயஙகொளளுகிறவனை நான என தேவனுடைய ஆலயததிலேஸதமபமாககுவேன. அதினினறு * அவன ஒருககாலும நீஙகான. மேலும, எனதேவனுடையநாமத்தையும், எனதேவனாலவானத்திலிருநதிறங்குகிற † புதிய எருசலேமாகிய என்தேவனுடைய படடினததின நாமததையும, என்து புதியநாமததையும அவனமேலேயெழுதுவேன. * ௨௨. ௪; † ௨௧. ௨—௰.

௰௩. ஆவியானவர் சபைகளுககுசசொலலுகிறதைக காதுளளவன கேடகக்கடவனென்றெழுது.

௰௪. இலவோதிககையாவூரிலுள்ள சபையினதூதனுககு நீ யெழுதவேணடியதெனனவெனில, * உணமையும, சததியமுமானசாட்சியுமாய, † பராபரனுடைய சிருஷடிகளுககு ஆதியுமாயிருககிற ஆமெனெனபவர் சொலலுகிறதாவது; * ௧. ௫; † கொலோ. ௧. ௰௫—௰௭.

௰௫. உனகிரியைகளையறிநதிருககிறேன. நீ குளிர்சசியுளளவனுமலல. அனலுளளவனுமலல, நீ குளிர்சசியையாவது, அனலையாவது உளளவனாயிருநதால நலமாயிருககும.

௰௬. இபபடி நீ குளிர்சசியும, அனலுமில லாமல வெதுவெதுபபுளளவனானபடியினு லே உனனை எனவாயினினறும்வாநதிபணணு வேன.

௰௭. நீ நிர்ப்பாககியமுளளவனும், பரதபி க்கபபடத்தககவனும, எளியவனும், குரு டனும், நிருவாணியாயுமிருககிறதையறியா மல, நான ஐசுவரியமுளளவனெனறும், அதி கதிரவியததைச சமபாதிததவனெனறும, எனககொனறும் வேணடுவதிலலையெனறும சொலலுகிறாய.

௰௮ ஆதலால, நான உனககு ஆலோசனை யாயசசொலலுகிறதாவது; நீ ஐசுவரியவா னாகுமபடிககு நெருபபிலே புடமிடபபடட பொனனையும, * உன நிருவாணமாகிய அவ லட்சணநதோனறுமலிருககததககதாக நீ உடுததிககொளளுமபடிககு வெணமையான வஸதிரஙகளையும எனனிடததிலேவாஙகிக † கொளளவும, நீபார்வையடையுமபடிக்கு உனகணகளுககு மாததிரையைபபோடவும வேணடுமெனறுசொலலுகிறேன.

* ௰௬ ௰௫; † ஏசா. ௫௫. ௧.

௰௯. * என்னுறசிநேகிககபபடுகிறவர்களெ வர்களோ அவர்களைககடிநதுகொணடுதண டிக்கிறேன. ஆகையால, நீ சாககிரதையா யிருநது மனநதிருமபககடவாய. * வாகி. ௩. ௰௨.

௨௰. இதோ, வாசறபடியிலே நினறுதடடு கிறேன. ஒருவன எனசததத்தைககேடடுக கதவைததிறநதால, * அவனிடததிலநான பிரவேசிதது அவனோடே இராபபோசனம பணணுவேன. அவனும எனனோடே இராப போசனமபணணுவான. * யோவான. ௰௪. ௨௧—௨௩.

௨௧. நானசெயஙகொணடு எனபிதாவினு டைய ஆசனததிலே அவரோடேகூட உளு க்காநததுபோலச * செயஙகொளளுகிறவ னை எனனுடைய ஆசனததிலே எனனோடே கூட உளுககாருமபடி அருளசெயவேன. * லூக. ௨௨. ௨௮—௩௰; ௨. தீமோததே. ௨. ௰௨.

௨௨. ஆவியானவர்சபைகளுக்குசசொலலு கிறதைககாதுளளவன கேட்கக்கடவனென றெழுது எனறார்.

## ௪. அதிகாரம்.

[(௧) யோவானகணடபரமணடலததிலுள்ள பராபரனுடைய ஆசனததையும, (௪) இரு பததுநாலுமூபபர்களையும, (௬) சர்வாஙக முங கணகள நிறைநதநாலுசீவனகளையும. (௰) மூபபர்கள தஙகள கிரீடஙகளைக கழற றி ஆசனததினமேலஉளுக்காநதிருககிறவரை வணஙகினதையும குறிததுசசொலலியது.]

இவறறிற்குபபினபு அதோ, வானததி லே ஒருவாசல திறநதிருககக்கண டேன. அலலாமலும, * முனனே நானகேட் குமபடி எககாளமபோல எனனுடனேபேசி னசததம எனனுடனேசொனனது, இஙகே ஏறிவா. இதறகுபபினபு சமபவிககததகக வைகளையுனககுககாணபிபபேனெனறார்.

* ௧. ௰௧.

௨. உடனே * ஆவிககுளளானேன. அப பொழுது வானததில ஒரு ஆசனமவைககப படடிருககவும, அநத ஆசனததினமேல. † ஒருவர் உளுககாநதிருககவுஙகணடேன.

* ௧. ௰; † ஏசா. ௬. ௧; எசேக. ௧. ௨௬.

௩. (அதில) உளுககாநதிருநதவர் பார்வை க்கு யவாககலலும, சிவபபுககலலுமபோல ததோனறினார். அநத ஆசனததைசசுறறி யொருவானவிலலிருநதது. அது பார்வைக்கு மரகதம்போலததோனறிறறு.

௪. மேலும அநத ஆசனததைசசூழ இரு பததுநானகு ஆசனஙகளுமிருநதன. அநத ஆசனஙகளினமேலே வெணமையானவஸதி ரஙகளைத தரிபபிககபபடட இருபததுநான குமூபபர்கள உளுக்காநதிருநதார்கள. அவ ர்கள தஙகள சிரசுகளினமேலே பொனகிரீ டஙகளையுடையவர்களாயிருநதார்கள.

௫ அனறியும, அநதஆசனததிலிருநதுமின னும இடிமுழககஙகளும, (மறறச) சததங களும புறபபடடன. மேலும பராபரனு டைய ஏழு ஆவிகளாகிய ஏழுதீவெடடிகள ஆசனததிறகுமுனபாக எரிகிறவைகளாயிரு நதன.

௬. மேலும அநத ஆசனததிறகுமுனபா கபபளிஙகுககணணாடியைபபோனற கடலி ருநதது. அதுவுமலலாமல, அநத ஆசனத தினமததியிலும, ஆசனததினசுறறிலும * நா னகுசீவனகளிருநதன. அவைகளமுனபுறமு ம், பினபுறமுங கணகளால நிறைநதவைக ளாயிருநதன. * எசே. ௧. ௫.

௭. * முதலாஞசீவனசிஙகததிறகொபபாக வும, இரணடாஞசீவனகனறுககுடடிககொ ப்பாகவும், மூனறுஞ்சீவனமனிதனைபபோனற முகமுளளதாகவும, நானகாஞசீவனபறககிற கழுகுககொபபாகவுமிருநதன. * எசே. ௧. ௰.

௮. * அநதநானகுசீவனகளிலும ஒவவொ னறு ஆறாறு சிறகுகளுளளவைகளுமாய, சுறறிலும, உளளேயுங கணகளால நிறைநத வைகளுமாய, † இருநதவரும், இருககிறவரும், வருகிறவருமாகிய சர்வவலலமையுள்ள தேவ னாயிருககிறபராபரனபரிசுததர், ‡ பரிசுததர், பரிசுததர் எனறு இரவும, பகலும ஓயவில லாமறசொல்லிக்கொள்ளுகிறவைகளுமாயிரு நதன. * ஏசா. ௬. ௨; † ௧. ௮; ‡ ஏசா. ௬. ௩.

௯. மேலும ஆசனததினமேலுளுககாநதி ருநது எனறெனறைககும் உயிரோடிருககிற வருககு அநதசசீவனகள துதியையும, கன ததையும, தோததிரததையுஞ செலுததும் பொழுது,

## ௬. அதிகாரம்.

[(௧) முத்திரைகளை ஒவ்வொன்றாய்த் திறக்கப்பட்டபோது, உலகமுடிவு மட்டும் சம்பவிக்கப்போகிற காரியங்கள் தீர்க்கதரிசனமாயக் குறிக்கப்பட்டது.]

பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ஒன்றைப் பேர்க்கக் கண்டேன். அல்லாமலும் நான்கு ஜீவன்களில் ஒன்று (என்னிடத்தில்;) நீ வந்து பாரென்று இடிமுழக்கம்போலச் சொல்லக் கேட்டேன்.

௨. அப்பொழுது நான் பார்க்கையில் வெள்ளைமையான குதிரையைக் கண்டேன். * அதின் மேலிருந்தவன் வில்லைப் பிடித்திருந்தான். அவனுக்கு ஒரு கிரீடங் கொடுக்கப்பட்டது. அவன் ஜெயமுள்ளவனாயச் ஜெயிக்கும்படிக்குப் புறப்பட்டான். * ௰௯. ௰௧—௰௬;- சங்கீ. ௪௫. ௫. ௬.

௩. பின்பு அவர் இரண்டாம் முத்திரையைப் பேர்த்தபொழுது, இரண்டாம் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன்.

௪. உடனே அக்கினி நிறமுள்ள வேறொரு குதிரை புறப்பட்டது. அதின் மேலிருந்தவன் பூமியிலுள்ளவர்கள் ஒருவரையொருவர் கொலைசெய்யத்தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்து எடுத்துப்போடுகிறதற்கு அதிகாரமும், ஒரு பெரிய பட்டயமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

௫. பின்பு அவர் மூன்றாம் முத்திரையைப் பேர்த்தபொழுது, மூன்றாம் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன். உடனே நான் பார்க்கையில், ஒரு கறுப்புக் குதிரையைக் கண்டேன். அதின்மேலிருந்தவன் * ஒரு தராசைத் தன் கையிற் பிடித்திருந்தான். * ௯. யோவே. ௨௬. ௨௭.

௬. அப்போது ஒரு பணத்துக்கு கோதுமைக் கொரு தெநாரிப்படியும், ஒரு பணத்துக்கு வார்கோதுமைக்கு ஒரு தெநாரிப்படி மூன்றும், எண்ணெயையும், திராக்ஷரசத்தையும் சேதப்படுத்தாதிருப்பாயாக என்றும், நான்கு ஜீவன்களின் மத்தியிலிருந்துண்டான சத்தத்தைக் கேட்டேன்.

௭. பின்பு அவர் நான்காம் முத்திரையைப் பேர்த்தபொழுது, நான்காம் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன்.

௮. உடனே நான் பார்க்கையில், மங்கின நிறமுள்ள குதிரையைக் கண்டேன். அதின் மேலிருந்தவனுக்கு மரணமென்று பேர். பாதாளமானது அவனுடனே கூடச் சென்றது. கட்டத்தினாலும், பஞ்சத்தினாலும், சாவினாலும், பூமியின் துஷ்டமிருகங்களினாலும் பூமியின் காற்பங்கிலுள்ளவர்களைக் கொலை செய்யும்படிக்கு அதிகாரம் அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

௯. பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப் பேர்த்தபொழுது, * பராபரனுடைய வசனத்தினிமித்தமும், தாங்கள் கொடுத்த சாட்சியினிமித்தமுங் கொலைப்பட்டவர்களுடைய ஆத்துமாக்களைப் பலிபீடத்தின் கீழே கண்டேன். * ௨0. ௪.

௰. அவர்கள் பரிசுத்தரும், சத்தியமுமுள்ள ஆண்டவரே! எதுவரைக்கும் தேவரீர் நியாயத்தீர்ப்புக்கொடாமலும், பூமியின்மேற் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள் இரத்தத்தைக் குறித்துப் பழிவாங்காமலுமிருப்பீரென்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௧. அப்பொழுது அவர்களுக்கு * வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டதுமல்லாமல், அவர்கள் தங்களைப்போலக் கொலைசெய்யப்படுபவர்களாகிய தங்களுடன் பணிவிடைக்காரரும், தங்களுடைய சகோதரருமவர்கள் நிறையுமளவும் பின்னுங் கொஞ்சக்காலம் இளைப்பாறவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது. * ௩. ௫; ௭. ௯.

௰௨. பின்பு அவர் ஆறாம் முத்திரையைப் பேர்க்கக்கண்டேன். உடனே * பூமியசைவும் அதிர்ந்தது. † சூரியனும் கம்பளியைப்போலக் கறுப்பாயிற்று. சந்திரன் முழுவதுமிரத்தம்போலாயிற்று. * ௰௬. ௰௮; † அப். ௨. ௨0.

௰௩ வானத்தின் நட்சத்திரங்களும் பெருங்காற்றினால் அசைக்கப்பட்ட அத்திமரம் பருவமில்லாத தன் காய்களை உதிர்க்கிறது போலப் பூமியின்மேல் விழுந்தன.

௰௪. வானமும் சுருட்டப்பட்ட புத்தகம் போலாகி விலகிப்போயிற்று. மலைகள், தீவுகளாவும் தங்கள் இடங்களைவிட்டு விலகிப்போயின.

௰௫. மேலும் பூமியின் இராசாக்களும், பெரியோர்களும், சேனைத்தலைவர்களும், ஐசுவரியவான்களும், பலவான்களும், அடிமைகள் யாவரும், சுவாதீனரியாவரும் * பர்வதங்களின் குகைகளிலும், கன்மலைகளுக்குள்ளும் ஒளித்துக்கொண்டு பர்வதங்களையும், கன்மலைகளையும் நோக்கி, * ஏசா. ௨. ௰௯.

௰௬. அவருடைய கோபாக்கினை தோன்றுகிற பெரியநாள் வந்திருக்கின்றதே. நிலைநிற்கத் திராணியுள்ளவன் யாவன்!

௰௭. ஆகையால் நீங்கள் எங்கள்மேல் விழுந்து ஆசனத்தின்மேலுளுக்காந்திருக்கிறவருடைய முகத்திற்கும், ஆட்டுக்குட்டியின் கோபத்திற்கும் எங்களை மறைத்துக்கொள்ளுங்களென்று கூப்பிட்டார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) ஒரு தூதன் பராபரனுடைய அடியார்களின் நெற்றிகளில் முத்திரைபோட்டதையும், (௪) இஸ்ரவேல் கோத்திரங்களில் முத்திரைபோடப்பட்டவர்களின் இலக்கத்தையும், (௯) பறசாதிகளில் எண்ணிலாத

திரளான கூட்டம் ஆசனத்துக்கு முன்பாக வெண்மையான வஸ்திரந்தரித்துத் தங்கள் கைகளிற் குருத்தோலைகளைப் பிடித்து நின்றதையும், (௰௪) அவர்கள் வஸ்திரங்கள் ஆட்டுக்குட்டியின் இரத்தத்தில் தோய்க்கப்பட்டதென்றதையுஞ் சொல்லியது.]

அவற்றிற்குப்பின்பு பூமியின் நான்கு திசைகளினிடத்திலும் நான்கு தூதர்கள் நின்று ஒரு காற்றும் பூமியின் மேலாவது, சமுத்திரத்தின் மேலாவது, ஒரு மரத்தின் மேலாவது அடியாதபடிக்குப் பூமியின் நான்கு காற்றுகளையும் பிடித்திருக்கக் கண்டேன்.

௨. மேலும் சீவனுள்ள பராபரனுடைய முத்திரைக்கோலையுடைய வேறொரு தூதனைச் சூரியனுதிக்குந் திசையிலிருந்து ஏறிவரக் கண்டேன். அவன் பூமியையும், சமுத்திரத்தையுஞ் சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த நான்கு தூதரையும் நோக்கி,

௩ * நாம் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்றிகளில் முத்திரைபோட்டுத்தீருமளவும் பூமியையும், சமுத்திரத்தையும், மரங்களையுஞ் சேதப்படுத்தாதிருங்களென்று மிகவுஞ் சத்தமிட்டுக் கூப்பிட்டான். * எசே. ௯. ௪—௬.

௪. மேலும் முத்திரைபோடப்பட்டவர்களின் தொகையைக் கேட்டேன். இஸ்ரவேல் சந்ததியாராகிய சகல கோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள், ௱௪௪௲ம்பேர்.

௫. அதற்குவகை, யூதாகோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். ரூபன்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். காத்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர்.

௬. அசேர்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். நவ்தலிகோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். மனாசேகோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர்.

௭. சிமேயோன்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். லேவிகோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். ஈசஷார்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர்.

௮. செபுலோன்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். யோசேப்புக்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர். பென்யமீன்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲பேர்.

௯. இவற்றிற்குப்பின்பு நான் பார்த்துச் சகல தேசத்தாரிலும், கோத்திரங்களிலும், (மற்றச) சனக்கூட்டங்களிலும், பாஷைக்காரரிலுமிருந்து வந்ததுமாய், ஒருவனும் எண்ணக்கூடாததுமாயிருந்த திரளான கூட்டமாகிய சனங்கள் * வெள்ளை அங்கிகளைத் தரித்துத் தங்கள் கைகளிற் குருத்தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்கு முன்பாகவும், ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன். * ௩. ௫.

௰. மேலும் அவர்கள் * இரட்சிப்பின் (கனம்) ஆசனத்தின்மேலிருக்கிற எங்கள் பராபரனுக்கும், ஆட்டுக்குட்டியானவருக்குஞ் செலுத்தப்படக்கடவதென்று மிகவுஞ் சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள். * சங்கீ. ௩. ௮; ஏசா. ௪௩. ௰௧.

௰௧. அல்லாமலும் * தூதர்கள் யாவரும் ஆசனத்தையும், மூப்பரையும், நான்கு சீவன்களையுஞ் சூழ்நின்று ஆசனத்திற்கு முன்பாகச் சாஷ்டாங்கமாய்விழுந்து, பராபரனைத் தொழுதுகொண்டு, * ௫. ௰௧, ௰௨.

௰௨. ஆமென். எங்கள் பராபரனுக்குத் துதியும், மகிமையும், ஞானமும், தோத்திரமும், கனமும், வல்லமையும், பெலனும் என்றென்றைக்குமுண்டாகக்கடவது. ஆமென் என்றார்கள்.

௰௩. அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி, வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற இவர்கள் ஆர்? எங்கேயிருந்து வந்தார்களென்று கேட்டான்.

௰௪. அதற்கு நான் என்னாண்டவனே! அது உமக்குத் தெரியுமென்றேன். அப்பொழுது அவன் சொன்னதாவது; இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள். இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய * இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்கள். * ௧. ௫; ௧. யோவா. ௧. ௭.

௰௫. ஆனபடியாலிவர்கள் பராபரனுடைய ஆசனத்திற்கு முன்பாகவிருந்து இரவும், பகலும் அவருடைய ஆலயத்திலே அவருக்குப் பணிவிடைசெய்வார்கள். ஆசனத்தின்மேலிருக்கிறவர் இவர்களுக்குள் வாசமாயிருப்பார்.

௰௬. * இனி இவர்கள் பசியடைவதுமில்லை. தாகமடைவதுமில்லை. வெயிலாவது, மற்றெந்த உட்டிணமாவது அவர்கள்மேற் படுவதுமில்லை. * ஏசா. ௪௯. ௰.

௰௭. ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்டுக்குட்டியானவரே * அவர்களை மேய்த்து அவர்களைச் சீவத்தண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு நடத்துவார். இவர்களுடைய கண்ணீர் யாவையும் † பராபரன் துடைப்பாரென்றான். * சங்கீ. ௨௩. ௨; † ௨௧. ௪; ஏசா. ௨௫. ௮.

## ௮. அதிகாரம்.

[(௧) ஏழாம் முத்திரை திறக்கப்பட்டபோது, (௨) ஒவ்வொரு எக்காளத்தைப் பிடித்த ஏழு தூதர்கள் தோன்றி, (௩) அவர்களில

நாலுபேர் எக்காளங்களை யூதினபோது பெரியவாதைகளுண்டானதையும், (௩) மற்றொருதூதன் பொற்பீடத்தின்மேலுள்ள பரிசுத்தவான்களின் செபங்களோடே சுகந்தவர்க்கங்களிட்டதையுஞ் சொல்லியது.]

பின்பு அவர் ஏழாம் முத்திரையைப் பேர்த்தபொழுது பரமண்டலத்திலே ஏறக்குறைய அரைமணிநேரமளவும் அமைதலுண்டாயிற்று.

௨. மேலும், பராபரனுக்குமுன்பாக நின்ற ஏழுதூதர்களையுங் கண்டேன். அவர்களுக்கு ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டன.

௩ வேறொருதூதனுந் தூபங்காட்டும்பொற்கலசத்தைப்பிடித்துவந்து, பலிபீடப்படியிலே நின்றான். அல்லாமலும் ஆசனத்திற்குமுன்பாகவிருந்த பொற்பீடத்தின்மேலே பரிசுத்தவான்களெல்லாருடைய * செபங்களுடனேயுங் கூடக் கொடுக்கும்படிக்கு அநேகசுகந்தவருக்கங்கள் அவனுக்குக்கொடுக்கப்பட்டன. * ரு. அ.

௪. அப்படியே * பரிசுத்தவான்களுடைய செபங்களுடனே கூடச் சுகந்தவருக்கங்களின்புகை தூதனுடைய கையிலிருந்து பராபரனுக்குமுன்பாக எழும்பிற்று. * சங்கீ. ௱௪௧. ௨.

௫. பின்பு அந்தத் தூதன் தூபகலசத்தையெடுத்துக்கொண்டு அதைப் பலிபீடத்திலுள்ள நெருப்பினாலே நிரப்பிப் பூமியிற் கொட்டினான். உடனே சத்தங்களும், இடிமுழக்கங்களும், மின்னல்களும், பூமியதிர்தலுமுண்டாயின.

௬. பின்பு ஏழெக்காளங்களையுடைய ஏழு தூதர்கள் எக்காளத்தை யூதுகிறதற்கு எத்தனம்பண்ணினார்கள்.

௭. முதலாந்தூதன் எக்காளமூதினான். அப்பொழுது இரத்தங் கலந்த கல்மழையும், அக்கினியுமுண்டாகித் தரையிலே கொட்டப்பட்டன. அதினாலே தரையில் மூன்றிலொருபங்கு சுட்டெரிக்கப்பட்டது. மரங்களில் மூன்றிலொருபங்கு வெந்துபோயிற்று. பசும்புல்லெல்லாம் எரிந்துபோயின.

௮. இரண்டாந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது அக்கினியால் வேகிற ஒரு பெரிய பருவதம்போலானது சமுத்திரத்திலே போடப்பட்டது. அதினாலே சமுத்திரத்தின் மூன்றிலொருபங்கு இரத்தமாயிற்று.

௯. சமுத்திரத்திலிருந்த சீவனுள்ள சிருட்டிகளின் மூன்றிலொருபங்கு செத்துப்போயிற்று. கப்பல்களில் மூன்றத்தொருபங்கு அழிந்தது.

௰ மூன்றாந்தூதன் எக்காளமூதினான். அப்பொழுது ஒரு பெரிய நட்சத்திரந் தீவெட்டியைப்போலெரிந்து வானத்திலிருந்துவிழுந்தது. அது ஆறுகளில் மூன்றத்தொருபங்கினமேலும், நீரூற்றுகளின்மேலும் விழுந்தது.

௰௧. அந்த நட்சத்திரத்திற்கு எட்டியென்னும்பேர். அதினாலே தண்ணீரில் மூன்றத்தொருபங்கு எட்டியைப்போலக் கசப்பாயிற்று. இப்படிக் கசப்பான தண்ணீரினாலே மனிதரில் அநேகர் செத்தார்கள்.

௰௨. நாலாந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது சூரியனில் மூன்றத்தொருபங்கும், சந்திரனில் மூன்றத்தொருபங்கும், நட்சத்திரங்களில் மூன்றத்தொருபங்குஞ் சேதப்படுத்தப்பட்டன. அதினாலே அவற்றவற்றின் மூன்றிலொருபங்கு இருளடைந்தது. பகலிலும், மூன்றிலொருபங்கு பிரகாசமில்லாமலிருந்தது. இரவிலும் அப்படியேயாயிற்று.

௰௩. பின்பு ஒருதூதன் வானத்தின் மத்தியிலே பறந்துவரக்கண்டேன். அவன் இனிமேல் எக்காளம் ஊதவேண்டிய மற்ற மூன்று தூதருடைய எக்காளசத்தங்களால் பூமியிற்குடியிருக்கிறவர்களுக்கு ஐயோ, ஐயோ, ஐயோ வேதனைவருமென்று மிகுந்த சத்தமிட்டுக்கூப்பிடக்கேட்டேன்.

## ௯. அதிகாரம்.

[(௧) ஐந்தாந்தூதன் எக்காளத்தை யூதினபோது, வானத்திலிருந்துவிழுந்த நட்சத்திரமென்னுஞ் சாத்தானுக்குப் பாதாளத்தின் திறவுகோல் கொடுக்கப்பட்டதையும், (௨) அவன் பாதாளத்தைத் திறந்தவுடனே தேள்களைப்போல வெட்டுக்கிளிகள் புறப்பட்டதையும், (௰௨) அப்பொழுது முதலாவது வாதை கடந்துபோனதையும், (௰௩) ஆறும் எக்காளமூதப்பட்டதையும், (௰௪) கட்டப்பட்டிருந்த நாலு தூதர்கள் விட்டுவிடப்பட்டதையுஞ் சொல்லியது.]

ஐந்தாந்தூதன் எக்காளமூதினான். அப்பொழுது * வானத்திலிருந்து பூமியின்மேல்விழுந்த நட்சத்திரத்தைக்கண்டேன். அதற்குப் பாதாளமாகிய குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்டது. * அ. ௰.

௨. அது பாதாளக் குழியைத் திறந்தது. உடனே பெருஞ்சூளையின் புகையைப்போல அந்தக் குழியிலிருந்து புகையெழும்பிற்று. அந்தக்குழியின்புகையினாலே சூரியனும், ஆகாயமும் அந்தகாரப்பட்டன.

௩. அல்லாமலும் அந்தப் புகையிலிருந்து வெட்டுக்கிளிகள்புறப்பட்டுப் பூமியின்மேல் வந்தன. அவைகளுக்குப் பூமியின் தேள்களுக்குண்டாயிருக்கிற அதிகாரத்திற்கொப்பான அதிகாரங் கொடுக்கப்பட்டது.

௪. மேலும் அவைகள் * பராபரனுடைய முத்திரையை நெற்றிகளில் தரியாத மனிதரையாத்திரமேயன்றி, பூமியின் புல்லையும், பசுமையான எந்தப் பூண்டையும், எந்தமர

றுகிற * மிருகம அவர்களோடே யுத்தமபண்ணி, அவர்களைசசெயிதது அவர்களைக கொலைசெய்யும. * ௧௩. ௧. ௭.

௮. அவர்களுடைய உடலகள பெரியபட்டினத்தின பெரியவீதியிலேகிடக்கும. அந்தபபட்டினஞ சோதோமெனறும், எகிப்தெனறும் ஞான அருத்தமாயசசொல்லபபடும். அதிலே அவர்களுடைய கர்த்தாவுஞசிலுவையிலேயறையபபட்டார்.

௯. சனக்கூட்டஙகளிலும், கோத்திரங்களிலும், பாஷைக்காரரிலும், புறதேசத்தார்களிலும (அநேகர்) அவர்களுடைய உடலகளை மூனறரைநாளவரைக்கும பார்த்துககொண்டுவருததுமலலாமல, அவைகளைககல்லறைகளிலவைக்கிறதற்கு இடங்கொடுககவுமிலலை.

௰. அவவிரண்டுதீர்க்கதரிசிகளும பூமியின குடிகளுக்குவேதனைசெயததபடியினாலே அவர்கள (போனதற்காக) பூமிபிறகுடியிருக்கிறவர்கள சந்தோஷபபட்டுக களிகூர்ந்து ஒருவருக்கொருவர் காணிக்கைகளையனுப்புவார்கள்.

௧௧. மூனறரைநாளுககுபபினபு பராபரனிடத்திலிருந்து சீவ ஆவி அவர்களுக்குட்பிரவேசித்தது. அவர்கள தஙகள காலகளையூனறிநினறார்கள. அபபொழுது அவர்களைபபார்த்தவர்களுக்குமிகுந்தபயமுணடாயிற்று.

௧௨. பினபு இஙகே ஏறிவாருஙகளெனறு வானத்திலிருந்து தங்களுக்குணடானபெரிய சத்தத்தை அவர்கள கேட்டு ஒருமேகத்திலே வானத்திறகுபபோனார்கள. அவர்களுடைய சத்துருககள அவர்களைநோககிபபார்த்தார்கள.

௧௩. அந்நேரத்திலேபூமிமிகவும அதிர்ந்தது. உடனே அநதபபட்டினத்திறபத்திலொருபங்கு விழுந்துபோயிறறு. மனிதர் ஏழாயிரமபேருமபூமியதிர்தலால அழிந்தார்கள. மீதியானவர்கள பயமடைந்து பரமணடலத்தின பராபரனுககுத துதியைசசெலுத்தினார்கள்.

௧௪. * இரணடாமவேதனைபோயிறறு. இதோ, மூனறாமவேதனை சீககிரமாயவருகினறது. * ௮. ௧௩; -௯. ௧௨.

௧௫. அபபொழுது * ஏழாந்தூதன எககாளமூதினான. உடனே உலகத்தின † இராச்சியஙகள நமமுடைய கர்த்தனையும், அவருடைய கிறிஸ்துவையுஞ சேர்ந்தனவெனறும, அவர் எனறெனறைககும இராசரிகம்பணணுவாரெனறும, ‡ மிகுந்த சத்தஙகள பரமணடலத்திலுணடாயின. * ௰. ௬, ௭; † ௧௨. ௰; ‡ ௰௯. ௬; யோசுவா. ௬. ௧௬.

௧௬. அபபொழுது பராபரனுக்குமுனபாகத தஙகள ஆசனஙகளமேல உட்கார்ந்த அவ * இருபத்து நானகுமூபபர்களுஞ சாஷ்டாங்கமாய்விழுந்து, * ௪. ௰.

௧௭. * இருக்கிறவரும், இருந்தவருமாகியசர்வவலலமையுடைய தேவனாகிய பராபரனே! தேவரீர் உமதுபலத்தவலலமையை யெடுத்துக்கொண்டு இராசரிகமபணணுகிறீர். * ௧. ௮.

௧௮. புறதேசத்தார் கோபமாயிருந்தார்கள. அபபொழுது உமதுகோபந்தோனறிறறு. மரித்தோர் நியாயத்தீர்ப்படைகிறதற்கும, தீர்க்கதரிசிகளாகிய உமமுடைய ஊழியக்காரருக்கும், பரிசுத்தவானகளுக்கும், உமது நாமத்தினமேற பயபத்தியாயிருந்த சிறியோருக்கும, பெரியோருக்கும பலனளிக்கிறதற்கும, * பூமியைக்கெடுத்தவர்களைக்கெடுக்கிறதற்குங்காலமுமவந்தது. ஆகையால, உமமைத்தோத்திரஞ செயகிறோமெனறு பராபரனைததொழுதுகொணடார்கள. * ௰௯. ௨, ௩.

௧௯. பினபு பரமணடலத்திலே * பராபரனுடைய ஆலயந்திறக்கபபட்டது. அவருடைய ஆலயத்திலே அவருடைய உடம்படிக்கையின பெட்டிகாணபபட்டது. மேலும், † மினனலகளும, சத்தஙகளும, இடிமுழக்கஙகளும், பூமியதிர்தலும், பெருஙகலமழையுமுணடாயின. * ௧௫ ௫; † ௰௬. ௧௮.

## ௧௨. அதிகாரம்.

[(௧) சூரியனையணிந்த ஒருஸ்திரீ கெர்ப்பவேதனையடைந்ததையும, (௩) சிவப்பான ஒருபெரிய வலுசர்ப்பம அவளபிளளையைபபட்சிக்க அவளமுனபாகநினறதையும, (௫) அவளபிரசவித்தவுடனே வனாந்தரத்திறகோடிப்போனதையும, (௭) மிகாவேலும, அவனுடைய தூதர்களும வலுசர்ப்பத்தோடே யுத்தமபணணி அதைவெனறதையும, (௰௩) வலுசர்ப்பம பூமியினமேல தளளபபட்டபோதுஸ்திரீயைத்துனபப்படுத்தினதையுஞ சொலலியது.]

அனறியும, ஒருபெரிய அடையாளம் வானத்திலேகாணப்பட்டது. (எனனவெனில,) ஒருஸ்திரீசூரியனை அணியபபட்டுத் தனனுடைய பாதஙகளின கீழேசந்திரனையும, தனனுடைய சிரசினமேறபனனிரணடு நட்சத்திரஙகளுளள கிரீடத்தையுமுடையவளாய்,

௨. கருபபத்தினாலேவருத்தமடைந்து, பிளளைபெறுமபடி * வேதனைப்பட்டு அலறிக்கொணடிருந்தாள. * ௧. மோசே. ௩. ௧௬.

௩. அனறியுமவேறொரு அடையாளமவானத்திலேகாணபபட்டது. (எனனவெனறால,) ஏழுதலைகளையும, பத்துககொமபுகளையுந்தன தலைகளினமேல ஏழுமுடிகளையுமுடைய சிவபபானபெரியவலுசருப்பமிருந்தது.

௪. அதினவால வானத்தின நட்சத்திரஙகளில்மூனறிலொரு பஙகையிழுத்து அவைகளைப்பூமியின்மேறறளளிறறு அலலாமலும,

பிள்ளைபெறுகிறவளாகிய அந்தஸ்திரிபிள்ளை பெற்றவுடனே, அவளுடைய பிள்ளையைப் பட்சித்துப்போடும்படிக்கு அந்தவல்லசரு ப்பம் அவளுக்கு முன்பாக நின்றது.

௫. அவள் * சனங்களெல்லாவற்றையும், இருப்புக்கோலால் ஆளுகைசெய்யும்படிக்கான ஆண்பிள்ளையைப் † பெற்றாள். உடனே அவளுடைய பிள்ளை பராபரனிடத்திற்கும், அவருடைய ஆசனத்திற்கும் எடுத்துக்கொள்ளப்பட்டது. * சங்கீ. ௨. ௮; † ஒசே. ௬. ௪, ௫; கலாத. ௪. ௰௯.

௬. ஸ்திரியானவளும் வனாந்தரத்திற்கோடிப்போனாள். அங்கே * ஆயிரத்திருநூற்றறுபது நாளளவும் அவளைப்போஷிப்பதற்காகப் பராபரனால் எத்தனமாக்கப்பட்ட இடம் அவளுக்குண்டாயிருக்கிறது.
* ௰௪. ௬.

௭. அன்றியும், பரமண்டலத்திலே யுத்தமுண்டாயிற்று. * மிகாவேலும், அவனைச்சேர்ந்த தூதரும் அந்தவல்லசருப்பத்தோடேயுத்தம்பண்ணினார்கள். வல்லசருப்பமும், அதைச்சேர்ந்த தூதரும் யுத்தம்பண்ணியுஞ்செயம் அடையவில்லை. * தானி. ௰௨. ௧.

௮. பின்னே பரமண்டலத்திலே அவர்களுக்கு ஓரிடம் அகப்படவுமில்லை.

௯. உலகமியாவையும் வஞ்சித்துவருகிறபிசாசென்றும், சாத்தானென்றுஞ்சொல்லப்பட்ட *பழையபாம்பாகியபெரியவல்லசருப்பந்தள்ளப்பட்டது. அது பூமியிலேதள்ளப்பட்டது. அதினோடேகூட அதைச்சேர்ந்த தூதருந்தள்ளப்பட்டார்கள். * ௧. மோ. ௩. ௧.

௰. அப்பொழுது நம்முடைய சகோதரர்மேல் * குற்றஞ்சாற்றுகிறவன் தாழத்தள்ளப்பட்டிருக்கிறதால் † இப்பொழுது இரட்சிப்பும், வல்லமையும், ஆளுகையும் நம்முடையபராபரனுக்கும், அதிகாரம் அவருடைய கிறிஸ்துவுக்குமுண்டாயிருக்கின்றன. இரவும் பகலும் அவன்பராபரனுக்குமுன்பாக அவர்கள்மேல் குற்றஞ்சாற்றினான்.
* யோபு. ௧. ௯;-௨. ௪—௫; சகரி. ௩. ௧; † ௰௧. ௰௫.

௰௧. அவர்கள் மரணபரியந்தமுந் தங்கள் சீவனைச்சிநேகியாமல் ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும், தங்கள் சாட்சியின்வசனத்தினாலும் அவனைச்செயித்தார்கள்.

௰௨. ஆகையால்பரமண்டலங்களே! அவைகளில்வாசமாயிருக்கிறவர்களே! களிகூருங்கள். பூமியிலும், சமுத்திரத்திலுங் குடியிருக்கிறவர்களே! உங்களிடத்திலேபசாசு இறங்கித்தனக்குக் கொஞ்சக்காலமுண்டென்றறிந்து மிகுந்தகோபங் கொண்டிருக்கிறபடியால் ஐயோ, உங்களுக்கு வேதனையுண்டாயிருக்குமென்று பரமண்டலத்திலேபெருஞ்சத்தத்தைக்கேட்டேன்.

௰௩. அந்தப்படி வல்லசருப்பமானவன்தான் பூமியிலே தள்ளப்பட்டதையறிந்து, அந்த ஆண்பிள்ளையைப்பெற்ற ஸ்திரிக்குப்பின் தொடர்ந்தான்.

௰௪. அந்தஸ்திரி அந்தப்பாம்பின் முகத்திற்குவிலகி * ஒருகாலமும், காலங்களும், அரைக்காலமுமாகப்போஷிக்கப்படத் தங்கவனாந்தரத்திலுள்ள தன இடத்திற்குப்பறந்து போகும்படியாயப்பெருங்கழுகின இரண்டு சிறகுகளும் அவளுக்குக்கொடுக்கப்பட்டன.
* தானி. ௭. ௨௫;-௰௨. ௭.

௰௫. அப்பொழுது சருப்பமானவன் ஸ்திரியை வெள்ளங்கொண்டுபோகும்படிக்குத்தன வாயிலிருந்து ஒருநதியத்தனைசலத்தையவளுக்குப்பின்னாகக்கொப்புளித்தான்.

௰௬. பூமிஸ்திரிக்கு உதவியாகத்தன்வாயைத்திறந்து, வல்லசருப்பந் தன்வாயிலிருந்து கொப்புளித்த நதியைவிழுங்கிற்று.

௰௭. அப்பொழுது வல்லசருப்பமானவன் ஸ்திரியின்மேற் கோபமாயிருந்து, பராபரனுடையகற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும், இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியையுடையவர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனேயுத்தம்பண்ணப்போனான்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) கடலிலிருந்து எழும்பின ஏழுதலைகளும், பத்துக்கொம்புகளுமுள்ள ஒரு மிருகத்துக்கு வலுசர்ப்பந் தன அதிகாரத்தைக் கொடுத்ததையும், (௰௧) மற்றொருமிருகம் பூமியிலிருந்தெழும்பி, (௰௪)மேற்சொல்லிய மிருகத்தின் சுரூபத்தைச்செய்வித்து, (௰௫) மனுஷர்கள் அதைவணங்கி, (௰௬) அதின முத்திரையைத் தரித்துக்கொள்ளச்செய்ததையுஞ்சொல்லியது.]

பின்பு நான் கடலோரத்தின்மணலின்மேல நிறுத்தப்பட்டேன். அப்பொழுது சமுத்திரத்திலிருந்து ஒருதுஷ்டமிருகம் எழும்பிவரக்கண்டேன். அதற்குப் பத்துக்கொம்புகளும், * ஏழுதலைகளுமிருந்தன. அதினகொம்புகளின்மேலே † பத்துமுடிகளும், அதினதலைகளின்மேலே தூஷணமானநாமங்களுமிருந்தன. * ௰௭. ௩; † தானி. ௭. ௭.

௨. மேலும் நான் கண்டமிருகம் புலியைப்போலிருந்தது. அதின்கால்கள்கரடியின்கால்களைப்போலவும், அதின்வாய் சிங்கத்தின் வாயைப்போலவுமிருந்தன. மேலும்வல்லசருப்பமானவன் தன்வல்லமையையும், தன் ஆசனத்தையும், மிகுந்த அதிகாரத்தையும் அதற்குக்கொடுத்தான்.

௩. பின்பு அதினதலைகளிலொன்று சாவுக்கேதுவாயக் காயப்படுத்தப்பட்டதாகக் கண்டேன். பின்பு சாவுக்கேதுவான காயஞ்சொஸ்தமாக்கப்பட்டது. மேலும் பூமியிலுள்ள

யாவரும் ஆச்சரியத்தோடே அந்தத் துஷ்ட மிருகத்தைப் பின்பற்றி.

௪. அம்மிருகத்திற்கு அப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்தபடியினாலே வலுசர்ப்பத்தைத் தொழுதுகொண்டார்கள். அல்லாமலும், மிருகத்திற்கொப்பானவன் யாவன்? அதினுடனே யுத்தம்பண்ணத்தக்கவன் யாவனென்று மிருகத்தையுந்தொழுதுகொண்டார்கள்.

௫. மேலும் * பெருமையானவைகளையும், தூஷணங்களையும் பேசுகிறதற்கான வாய் அதற்குக் கொடுக்கப்பட்டது. அல்லாமலும், † நாற்பத்திரண்டுமாதம் நடந்துகொள்ளுகிறதற்கு அதிகாரம் அதற்கு அளிக்கப்பட்டது. * தானி. ௭. ௨௫; † ௰௧. ௨.

௬. அந்தப்படி அது பராபரனுடைய நாமத்தையும், அவருடைய கூடாரத்தையும், பரமண்டலத்திலே வாசமாயிருக்கிறவர்களையுந் தூஷிக்கிறதற்குத் தன்வாயைத் தூஷணமாகத் திறந்தது.

௭. மேலும் * பரிசுத்தவான்களோடேயுத்தம்பண்ணி அவர்களைச் செயிக்கும்படிக்கு அதற்கு (இடம்) கொடுக்கப்பட்டது. எந்தக்கோத்திரத்தின்மேலும், சனக்கூட்டத்தின்மேலும், பாஷைக்காரர்மேலும், தேசத்தார்மேலும் அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது. * ௰௧. ௭; தானி. ௭. ௨௨.

௮. ஆதலால் உலகமுண்டானது முதல் (பலியாக) அடிக்கப்பட்டபடி (நியமிக்கப்பட்ட) ஆட்டுக்குட்டியினுடைய * சீவபுஸ்தகத்திலே பேரெழுதப்படாத பூமியின்குடிகள் யாவரும் அதை நமஸ்காரம்பண்ணுவார்கள். * ௩. ௫; ௰௭. ௮.

௯. யாவனொருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவன்.

௰. சிறையாகப்பிடித்துக்கொண்டுபோகிறவன் சிறையாகக்கொண்டுபோகப்படுவான். * கட்கத்தினாலே கொலைசெய்கிறவன் கட்கத்தினாலே கொலைசெய்யப்படவேண்டும். † இங்கே பரிசுத்தவான்களுடைய பொறுமையும், விசுவாசமும்விளங்கும். * ௰௪. ௰௨; † மத்தே. ௨௬. ௫௨.

௰௧. அன்றியும் வேறொருமிருகத்தைத் தரையிலிருந்தெழும்பக்கண்டேன். அது * ஆட்டுக்குட்டிக்கொப்பாய இரண்டுகொம்புகளையுடையதாய் வலுசர்ப்பத்தைப்போலப் பேசினது. * ௰௬. ௰௩; மத்தே. ௭. ௰௫.

௰௨. அல்லாமலும் அது முந்தின மிருகத்தின் அதிகாரமியாவையும் அதின் முன்பாக நடப்பித்துச் சாவுக்கேதுவான காயம் ஆறச் சொஸ்தமடைந்த முந்தின மிருகத்தைப் பூமியும், அதின்குடிகளும் நமஸ்காரம்பண்ணும்படி செய்ததுமன்றி,

௰௩. மனிதருக்குமுன்பாக வானத்திலிருந்து அக்கினியையும், பூமியின்மேலிறங்கப்பண்ணத்தக்கவிதமாகப் * பெரிய அடையாளங்களைச்செய்து, * மத். ௨௪. ௨௪; ௨. தெசலோ. ௨. ௯, ௰.

௰௪. மிருகத்தின்முன்பாகச் செய்யும்படி தனக்களிக்கப்பட்ட அடையாளங்களினாலே பூமியின்குடிகளை வஞ்சித்துக் கட்கத்தினாலே காயப்பட்டும் பின்பு பிழைத்த மிருகத்திற்கொரு சொரூபம் பண்ணவேண்டுமென்று பூமியின்குடிகளுக்குச் சொல்லுகின்றது.

௰௫. மேலும் அம்மிருகத்தின் சொரூபம் பேசத்தக்கதாகவும், அம்மிருகத்தின் சொரூபத்தை நமஸ்காரம்பண்ணாத யாவரையுங் கொலைசெய்யப்பண்ணத்தக்கதாகவும், அம்மிருகத்தின் சொரூபத்திற்கு ஆவியைக் கொடுக்கும்படி அதற்குத் திராணியளிக்கப்பட்டது.

௰௬. அந்தப்படி அது சிறியோர், பெரியோர், ஐசுவரியவான்கள், தரித்திரர், சுவாதீனர், அடிமைகள் இவர்களியாவருந் தங்கள் தங்கள் வலதுகைகளிலே அல்லது தங்கள் நெற்றிகளிலே ஒரு அடையாளத்தைப் பெறும்படிக்கும்.

௰௭. அம்மிருகத்தின் அடையாளமாகிய அந்த நாமத்தையாவது, அதினுடைய நாமத்தின் இலக்கத்தையாவது தரித்துக்கொள்ளுகிறவனைத்தவிர வேறொருவனுங்கொள்ளவும், விற்கவுங்கூடாதபடிக்குஞ் செய்கின்றது.

௰௮. * இங்கேஞானம்விளங்கும். மிருகத்தின் இலக்கம் ஒரு மனிதனுடைய இலக்கமாயிருக்கிறபடியால் புத்தியுடையவன் அதின் இலக்கத்தைக் கணக்குப்பார்க்கக்கடவன். அதினுடைய இலக்கம்-௬௱௬௰௬. * ௰௭. ௯-௰௪.

## ௰௪. அதிகாரம்.

[(௧) ஆட்டுக்குட்டியானவரும், அவருடையவர்களும் சீயோன்மலையின்மேல் நின்றதையும், (௬) ஒரு தூதன் சுவிசேஷத்தைப் பிரசங்கித்ததையும், (௮) பாபிலோன் விழுந்ததையும், (௰௫) உலகத்தின் அறுப்புக்காலத்தையும், அறுப்பிலே அரிவாளிடப்பட்டதையும், (௨௰) பராபரனுடைய கோபமாகிய திராட்சப்பழத்தின் ஆலையையும், ஆலையையுங்குறித்துச் சொல்லியது.]

௧. பின்பு நான்பார்க்கையில் * சீயோன் பருவதத்தின்மேலே ஆட்டுக்குட்டியையும், அதினோடேகூட அவருடைய பிதாவின்நாமந் தங்கள் நெற்றிகளிலே எழுதப்பட்டிருந்த † நூற்று நாற்பத்து நாலாயிரம்பேரையும் நிற்கக்கண்டேன். * சங்கீ. ௨. ௬; † ௭. ௪.

௨. அல்லாமலும் * பெருவெள்ள இரைச்சலைப்போலவும், பெரிய இடிமுழக்கம்போலவும் ஒரு சத்தம் பரமண்டலத்திலிருந்துண்டாகக்கேட்டேன். மேலும் நான் கேட்ட சத்தந்தங்கள் சுரமண்டலங்களை வாசிக்கிற

சுரமண்டலக்காரருடைய ஓசையைப்போலவிருந்தது. * ௰௯. ௬.

௩. அவர்கள் அந்த ஆசனத்திறகு முனபாகவும், நான்கு சீவன்களுக்கும், மூப்பருக்கும் முனபாகவும் * புதிய்பாட்டைப்பாடினார்கள். அந்தப்பாட்டைப் பூமியிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்ட அந்த நூற்றுநாற்பத்து நாலாயிரம்பேரையல்லாமல் வேறொருவரும் கற்றுக்கொள்ளக் கூடாததாயிருந்தது.
* ரு. ௯.

௪. அவர்களே * கறபுடையவர்களாய் ஸ்திரீகளால் தங்களை அசுசிப்படுத்தாதவர்கள். அவர்களே † ஆட்டுக்குட்டி எங்கேபோனாலும் அதைப் பின்பற்றுகிறவர்கள். அவர்களே மனிதரிலிருந்து பராபரனுக்கும், ஆட்டுக்குட்டிக்கும் முதலவிளைவாக மீட்டுக்கொள்ளப்பட்டவர்கள். * ௨. கொரிந். ௰௧. ௨; † மத்தே. ௰௬. ௨௪.

௫. அவர்கள் மாசில்லாதவர்களானபடியால் அவர்களுடையவாயிலே * கபடம் அகப்படவில்லை. * சங்கீ. ௩௨. ௨.

௬. அன்றியும் வேறொருதூதன் பூமியின் குடிகளுக்கும், சகல தேசத்தாருக்கும், கோத்திரத்தாருக்கும், பாஷைக்காரருக்கும், சனக்கூட்டத்தாருக்கும் அறிவிக்கத்தக்கதாக நித்திய சுவிசேஷத்தையுடையவனாய் வானத்தின்மத்தியிலே பறக்கக்கண்டேன்.

௭. அவன் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டதாவது; பராபரன் நியாயத்தீர்ப்பைக் கொடுக்குமநேரமவந்தபடியால், * அவருக்குப்பயப்பட்டு அவருடையமகிமையைப்பாராட்டுங்கள். வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், நீரூற்றுகளையுமுண்டாக்கினவரையே தொழுதுகொள்ளுங்களென்று கூப்பிட்டான். * சங்கீ. ௩௩. ௮; ௧௪௬. ௭.

௮. வேறொருதூதன் பின்சென்று * பெரிய பட்டினமாகிய பாபிலோனவிழுந்துபோயிற்று விழுந்துபோயிற்று. அவள் தன் வேசித்தனமாகிய உக்கிரரசத்தைச்சகலதேசத்தாருங்குடிக்கப்பண்ணினாளேயென்றான்.
* ௰௮. ௨, ௩; ஏசா. ௨௧. ௯.

௯. அவர்களுக்குப்பின்னே மூன்றாந்தூதன் வந்து மிகுந்த சத்தத்தோடே சொன்னதாவது; மிருகத்தையும், அதின்சொரூபத்தையும் நமஸ்காரம்பண்ணித் தன் நெற்றியிலாவது, தன்கையிலேயாவது, அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவனெவனோ?

௰. அவன் * பராபரனுடையகோபாக்கினியாகிய பாத்திரத்திலேகலப்பில்லாமல் வார்க்கப்பட்ட அவருடைய உக்கிர இரசத்தைக்குடித்துப் பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும், ஆட்டுக்குட்டிக்குமுன்பாகவும் அக்கினியாலும், கந்தகத்தாலும்வாதிக்கப்படுவான். * சங்கீ. ௭௫. ௮.

௰௧. அவர்கள்படுமவாதையின்புகை * என்

காசுக

வெளிப்படுத்தினவிசேஷம். ௰௪. அதிகாரம்.

றென்றைக்கும் எழும்பும். (இப்படி) மிருகத்தையும், அதின் சொரூபத்தையும் நமஸ்காரம்பண்ணுகிறவர்களுக்கும், அதினுடைய நாமத்தின் அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவனுக்கும், † இரவும், பகலும் இளைப்பாறுதலிராது. * ௰௯. ௩; † மாற். ௯. ௪௪.

௰௨. * இங்கே பராபரனுடைய கற்பனைகளையும், இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தையுங் காத்துக்கொள்ளுகிறவர்களாகிய பரிசுத்தவான்களுடைய பொறுமைவிளங்கும். * ௰௩. ௰; எபிரே. ௰. ௩௬.

௰௩. பின்னும் * இதுமுதற் கர்த்தருக்குட்பட்டு மரிக்கிறவர்கள் பாக்கியவான்களென்றெழுது என்று பரமண்டலத்திலிருந்து சத்தம் உண்டாகக்கேட்டேன். மெய்யாயவர்கள் தங்கள்பிரயாசங்களைவிட்டொழிந்து, இளைப்பாறுவார்கள். அவர்களுடைய கிரியைகள் அவர்களுடனேகூடப் போகின்றனவென்று ஆவியானவரும் திருவுளம்பற்றுகிறார். * ௧கொ. ௨௩. ௪௩.

௰௪. பின்பு நான்பார்த்து வெண்மையான மேகத்தையும், அந்த மேகத்தின்மேலே * மனிதகுமாரனுக்கொப்பானவனாய்த் தன்னுடையசிரசின்மேற் பொற்கிரீடத்தையும், தன்கையிலே கருக்குள்ள அரிவாளையுமுடைய ஒருவன் உட்கார்ந்திருக்கிறதையுங் கண்டேன். * ௧. ௰௩; தானி. ௭. ௰௩.

௰௫. அப்பொழுதுவேறொருதூதன் தேவாலயத்திலிருந்துபுறப்பட்டு மேகத்தின்மேலுட்கார்ந்திருக்கிறவனைநோக்கிப் பூமியின் பயிர் பருவமானபடியால் அறுக்கிறதற்குக் காலமவந்தது. ஆகையால் * உமமுடைய அரிவாளைநீட்டி அறுத்துப்போடுமென்று மிகுந்த சத்தத்தோடேகூப்பிட்டான்.
* யோவே. ௩. ௰௩.

௰௬. உடனே மேகத்தின்மேலுட்கார்ந்தவன் தன்னுடைய அரிவாளைப்பூமியின்மேற்போட்டான். பூமி அறுக்கப்பட்டது.

௰௭. பின்பு வேறொருதூதன் தானுங்கருக்குள்ள அரிவாளைப்பிடித்துப் பரமண்டலத்திலுள்ள தேவாலயத்திலிருந்து புறப்பட்டு வந்தான்.

௰௮. பின்பு அக்கினியின்மேல் அதிகாரமுள்ளவேறொருதூதனும் பலிபீடத்திலிருந்து புறப்பட்டுவந்துகருக்குள்ள அரிவாளைப்பிடித்திருக்கிறவனைநோக்கிப் பூமியின்திராட்சக்குலைகள் பழுத்திருக்கிறபடியால் கருக்குள்ள உமது அரிவாளைநீட்டி அதின்குலைகளையறுத்துப்போடுமென்று மிகுந்தசத்தத்தோடேகூப்பிட்டான்.

௰௯. அந்தப்படி அந்தத் தூதன்தன் அரிவாளைப்பூமியிலேபோட்டுப் பூமியின்திராட்சங்குலைகளையறுத்துப் பராபரனுடையகோபத்

தின பெரிய திராட்சத்தொட்டியிலே போட்டான்.

௨௰. * பட்டணத்திற்குப் புறம்பேயுள்ள அந்தத் திராட்சத்தொட்டியிலே மிதிக்கப்பட்டது. அந்தத் திராட்சத்தொட்டியிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதித்தூரத்திற்கு இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள் மட்டும் வந்தது. * ௰௯. ௰௫.

## ௰௫. அதிகாரம்.

[(௧) கடைசியான ஏழு வாதைகளையுடைய ஏழு தூதர்களையும், (௩) மிருகத்தை ஜெயித்தவர்கள் பாடின பாட்டையும், (௭) பராபரனுடைய கோபத்தால் நிறைந்த ஏழு பொற்கலசங்களையுங் குறித்துச் சொல்லியது.]

பின்பு வானத்திலே பெரிதாம், அச்சரியமுமான வேறொரு அடையாளமாகிய ஏழு கடைசிவாதைகளையுடைய ஏழு தூதரைக் கண்டேன். அவைகளால் பராபரனுடைய கோபமுடிகிறபடியால், (அவைகளே கடைசி வாதைகள்.)

௨. அன்றியும், * அக்கினிகலந்த பளிங்கான கடலுக்கொப்பானதையும், மிருகத்திற்கும், அதின் சொரூபத்திற்கும், அதின் அடையாளத்திற்கும், அதின் நாமத்தின் இலக்கத்திற்கும் உள்ளாகாமற் ஜெயங்கொண்டவர்கள் தேவ சுரமண்டலங்களைப் பிடித்துக்கொண்டு பளிங்கான கடற்கரையிலே நிற்கிறதையுங் கண்டேன். * ௪. ௬.

௩. அவர்கள் பராபரனுடைய ஊழியக்காரனாகிய * மோசேயின் பாட்டையும், ஆட்டுக்குட்டியின் பாட்டையும் பாடுகிறார்கள். எப்படியெனில், சருவவல்லமையுள்ள தேவனாகிய பராபரனே! தேவரீருடைய கிரியைகள் பெருமையும், ஆச்சரியமுமானவைகள். உலகத்தாரின் இராசாவே! தேவரீருடைய வழிகள் நீதியும், சத்தியமுமானவைகள். * ௨. மோசே. ௰௫. ௧.

௪. கர்த்தாவே! ஆர் உமக்குப் பயப்படாமலும், உமது நாமத்தைத் துதியாமலுமிருக்கலாம்! என்னத்தினாலெனில், நீரொருவரே பரிசுத்தமுள்ளவர். உலகத்தாரெல்லாரும் வந்து உமக்குமுன்பாக நமஸ்காரஞ்செய்வார்கள். உம்முடைய நியாயத்தீர்ப்புகள் வெளியரங்கமாயினவென்றார்கள். * எரே. ௰. ௭.

௫. இவைகளுக்குப்பின்பு நான் கண்டதாவது; * பரமண்டலத்திலே சாட்சியையுடைய கூடாரமாகிய ஆலயந் திறக்கப்பட்டது. * ௰௧. ௰௯.

௬. அந்த ஆலயத்திலிருந்து ஏழுவாதைகளையுடைய அவ்வேழு தூதர்கள் சுத்தமும், பிரகாசமுமான புடவையைத் தரித்து, மார்புகளின்மேற் பொற்கச்சைகளைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

௭. அல்லாமலும், அந்த நான்கு ஜீவன்களிலொன்று என்றென்றைக்கும் பிழைக்கிற பராபரனுடைய கோபாக்கினையால் நிறைந்த பொற்கலசங்களை அவ்வேழு தூதர்களுக்குங் கொடுத்தது.

௮. அப்பொழுது தேவாலயமானது * பராபரனுடைய மகிமையாலும், அவருடைய வல்லமையாலும் பிறந்த புகையினாலே நிரப்பப்பட்டது. (ஆதலால்,) ஏழு தூதர்களுஞ் செய்யும், ஏழு வாதைகளும், முடியுமளவுக்கும் ஒருவருந் தேவாலயத்திற்குட்பிரவேசிக்கக்கூடாததாயிருந்தது. * ஏசா. ௬. ௪.

## ௰௬. அதிகாரம்.

[(௨) தூதர்கள் கோபக்கலசங்களை ஊற்றினபோது, (௬) உண்டான வாதைகளையும், (௰௫) கிறிஸ்துத் திருடனைப்போல வருவாராகையால் விழித்திருக்கிறவர்கள் பாக்கியவான்களென்பதையுஞ் சொல்லியது.]

அப்பொழுது தேவாலயத்திலிருந்து உண்டான பெரிய சத்தம் * அந்த ஏழு தூதருடனே, நீங்கள் போய்ப் பராபரனுடைய கோபாக்கினையுள்ள கலசங்களைப் பூமியின்மேல் ஊற்றுங்களென்று சொல்லக்கேட்டேன். * ௰௫. ௬, ௭.

௨. அந்தப்படி முதலாம் (தூதன்) போய்த் தன் கலசத்திலுள்ளதைத் தரையின்மேல் ஊற்றினான். உடனே * மிருகத்தின் அடையாளத்தையுடையவர்களும், அதின் சொரூபத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களுமாகிய மனிதர்களிற் † பொல்லாத கொடிய புண் உண்டாயிற்று. * ௰௩. ௰௬-௰௭; † ௨. மோ. ௯. ௰, ௰௧.

௩. பின்பு இரண்டாந்தூதன் தன் கலசத்திலுள்ளதைச் சமுத்திரத்தின்மேலூற்றினான். உடனே * அது செத்தவனுடைய இரத்தம் போலாயிற்று. சமுத்திரத்திலுள்ள பிராணிகளெல்லாஞ் செத்துப்போயின. * ௨. மோ. ௭. ௰௭—௨௧.

௪. பின்பு மூன்றாந்தூதன் தன் கலசத்திலுள்ளதை யாறுகளிலும், நீரூற்றுக்களிலும் ஊற்றினான். உடனே அவைகள் இரத்தமாயின.

௫. அப்பொழுது சலங்களின் தூதனானவன் * இருக்கிறவரும், இருந்தவருமாகிய பரிசுத்தரே! தேவரீர் இப்படி நியாயந்தீர்த்ததால், நீதியுள்ளவராயிருக்கிறீர். * ௧. ௪; ௰௧. ௰௭.

௬. அவர்கள் * பரிசுத்தவான்களுடைய இரத்தத்தையும், தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தையுஞ் சிந்தினபடியினாலே இரத்தத்தையே அவர்களுக்குக் குடிக்கக்கொடுத்தீர். (அதற்கு) பாத்திரராயிருக்கிறார்களென்று சொல்லக்கேட்டேன். * ௰௭. ௬.

௭. வேறொருவனுஞ் சருவவல்லமையுள்ள தேவனாகிய பராபரனே! மெய்யாய் உம்முடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும், நீதி

யுமானவைகளென்று * பலிபீடத்திலிருந்து சொல்லக்கேட்டேன். * ௯. ௬, ௰.

௮. பின்பு நான்காந் தூதன் தன் கலயத்தி லுள்ளதைச் சூரியன்பேரிலே யூற்றினான். தீயினால் மனிதரைச் சுடும்படியாய் அவனுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

௯. அந்தப்படியே மனிதர்கள் மிகுந்த உஷ்ணத்தினாலே சுடப்பட்டார்கள். (அப்படியிருந்தும்) பராபரனுடைய மகிமையைப் பாராட்ட அவர்கள் மனந்திரும்பாமல், அந்த வாதைகளைச் செய்ய அதிகாரமுள்ள அவருடைய நாமத்தைத் தூஷணித்தார்கள்.

௰. பின்பு ஐந்தாந்தூதன் தன் கலயத்திலுள்ளதை மிருகத்தினுடைய ஆசனத்தின்மேல் ஊற்றினான். உடனே அதின் இராச்சியம் இருளடைந்தது. அப்படியிருந்தும் அவர்கள் * தங்கள் கிரியைகளைவிட்டு மனந்திரும்பாமல் வருத்தத்தினாலே தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டு. * ௯. ௨௰, ௨௧.

௰௧. தங்கள் வருத்தங்களாலும், தங்கள் புண்களாலும் பரமண்டலத்தின் பராபரனைத் தூஷணித்தார்கள்.

௰௨. பின்பு ஆறாந்தூதன் தன் கலயத்திலுள்ளதை ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றின் மேலூற்றினான். உடனே சூரிய உதயத்திலிருந்து * வரும் இராசாக்களுக்கு வழியுண்டாகும்படிக்கு அந்த ஆற்றின் தண்ணீர் வற்றிப்போயிற்று. * ௯. ௰௪—௰௬.

௰௩. அல்லாமலும், வலுசர்ப்பத்தின் வாயிலும், மிருகத்தின் வாயிலும், கள்ளத்தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளைகளுக்கொப்பான மூன்று அசுத்த ஆவிகள் புறப்படக் கண்டேன்.

௰௪. அவைகள் அடையாளங்களைச் செய்கிற பசாசுகளின் ஆவிகளாயிருக்கின்றன. பூமியிலெங்குமுள்ள இராசாக்களைச் * சருவ வல்லமையுள்ள பராபரனுடைய பெரிதான நாளிலிருக்கும் யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படிக்கு அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப்போகின்றன. * ௰௬. ௰௧—௰௬.

௰௫. கேளுங்கள். நான் * திருடனைப்போல வருகிறேன். விழித்துக்கொண்டு தன் அவலட்சணத்தை அவர்கள் காணத்தக்கதாக † நிருவாணமாய் நடவாதபடிக்குத் தன் வஸ்திரங்களைக் காக்கிறவன் பாக்கியவான்.
* லூக். ௨௧. ௩௫, ௩௬; ௧. தெச. ௫. ௨, ௩; † ௩. ௰௮.

௰௬. எபிரேயுபாஷையிலே அர்மகெத்தோனென்னப்பட்ட இடத்திலே அவர்களைக் கூட்டிக்கொண்டுபோனான்.

௰௭. ஏழாந் தூதன் கலயத்திலுள்ளதை ஆகாசத்தின்மேலேயூற்றினான். அப்பொழுது பரமண்டலத்துத் தேவாலயத்திலுள்ள ஆசனத்திலிருந்து * ஆயிற்றென்று சொன்ன பெரிய சத்தம் புறப்பட்டது. * ௰௧. ௰௫.

௰௮. அல்லாமலும், சத்தங்களும், இடிமுழக்கங்களும், மின்னல்களுமுண்டாயின. * பூமி மிகவும் அதிர்ந்தது. பூமியின்மேல் மனிதர்களுண்டான நாள்முதற்கொண்டு தோன்றாத பெரிய அதிர்தலுண்டாயிருந்தது. * ௰௧. ௰௩—௰௯.

௰௯. அப்பொழுது மகாபட்டினம் மூன்று பங்காகப் பிரிக்கப்பட்டது. உலகத்தாருடைய பட்டினங்கள் விழுந்தன. பெரிய பாபிலோனுக்குப் * பராபரனுடைய உக்கிரமான கோபாக்கினையாகிய இரசமுள்ள பாத்திரத்தைக் கொடுக்கும்படிக்கு அது அவருக்குமுன்பாக நினைக்கப்பட்டது. * ௰௪. ௮. ௰.

௨௰. * தீவுயாவும் அகன்றுபோயின. பருவதங்கள் காணப்படாமற்போயின.
* ௬. ௰௪.

௨௧. தாலந்து நிறையான பெரிய * கல்மழையும் வானத்திலிருந்து மனிதர்மேலிறங்கிற்று. அப்படியிருந்தும் அந்தக் கல்மழையினாலுண்டான வாதைமிகவுங் கொடிதானபடியால், மனிதர்கள் அந்த வாதையினிமித்தம் பராபரனைத் தூஷணித்தார்கள்.
* ௰௧. ௰௯.

## ௰௭. அதிகாரம்.

[(௩, ௪) இரத்தாம்பரமும், சிவப்பாடையுந் தரித்த ஒருஸ்திரி, தன் கையிற் பொற்பாத்திரத்தைப் பிடித்துக்கொண்டு, (௫) எல்லா அருவருப்புகளுக்குந் தாயாகிய மகாபாபிலோன் என்ற மிருகத்தின்மேல் உளுக்காந்ததையும், (௯) ஏழுதலைகளுக்கும், (௰௨) பத்துக்கொம்புகளுக்கும் வியாக்கியானமின்னதென்பதையும், (௮) வேசிக்குவருந் தண்டனையையும், (௰௪) ஆட்டுக்குட்டியின் செயத்தையுஞ் சொல்லியது.]

பின்பு ஏழு கலயங்களையுடைய அந்த ஏழுதூதரில் ஒருவன் வந்து என்னை நோக்கி, நீவா. * திரளான தண்ணீர்கள்மேல் உளுக்காந்தவளோடே பூமியின் இராசாக்கள் † வேசித்தனம்பண்ணினார்களே. அவளுடைய வேசித்தனமாகிய இரசத்தாற் பூமியின் குடிகளும் வெறியடைந்தார்களே.
* எரே. ௫௧. ௰௩; † ௰௪. ௮;–௰௮. ௩.

௨. அந்த மகாவேசிக்குவருகிற ஆக்கினையை உனக்குக் காண்பிக்கிறேனென்று சொல்லி,

௩. ஆவியில் என்னை வனாந்தரத்திற்குக் கொண்டுபோனான். அப்பொழுது தூஷணமான நாமங்களால் நிறைந்த ஏழுதலைகளையும், பத்துக்கொம்புகளையுமுடைய சிவப்புநிறமுள்ள மிருகத்தின்மேல் ஒருஸ்திரியேறியிருக்கக் கண்டேன்.

௪. அந்தஸ்திரி * இரத்தாம்பரமும், சிவப்பான ஆடையுந் தரித்துப் பொன்னினாலும்,

இரத்தினத்தாலும், முத்துக்களாலும், அலங்கரிக்கப்பட்டுத் தன் வேசித்தனமாகிய அருவருப்புகளாலும், அசுத்தத்தாலும் நிறைந்த பொற்பாத்திரத்தைத் தன் கையிலே பிடித்திருந்தாள். * ௰௮. ௰௬.

௫. மேலும் இரகசியமென்றும், பூமியிலுள்ள அருவருப்புகளுக்கும், வேசிகளுக்குந் தாயாகிய * மகாபாபிலோனென்றும், அவளுடைய நெற்றியிலே † நாமம் எழுதியிருந்தது. * ௰௬. ௰௯; † ௨. தெசலோனிக். ௨. ௭.

௬. மேலும் அந்த ஸ்திரி * பரிசுத்தவான்களின் இரத்தத்தாலும், இயேசுவினுடைய சாட்சிகளின் இரத்தத்தாலும் வெறிகொண்டிருக்கிறதைக் கண்டேன். அவளை நான் கண்டு, மிகவும் ஆச்சரியப்பட்டேன். * ௰௮ ௨௪.

௭. அப்பொழுது தூதனானவர் என்னை நோக்கி, என்னத்தினாலே ஆச்சரியப்படுகிறாய்? இந்த ஸ்திரியின் இரகசியத்தையும், இவளைச் சுமக்கிற ஏழு தலைகளையும், பத்துக் கொம்புகளையுமுடைய மிருகத்தின் இரகசியத்தையும் உமக்குச் சொல்லுகிறேன்.

௮. நீ கண்ட மிருகம் (முன்னே) இருந்தது. (இப்பொழுது) அது இல்லை. (இனிமேல்) * அது பாதாளத்திலிருந்து திரும்ப ஏறிவந்து † அழிவுக்குப்போம். அன்றியும் லோகத்தோற்றமுதற் சீவபுத்தகத்திலே பேரெழுதப்படாத பூமியின் குடிகள் முன்னிருந்ததுமாய், (இப்பொழுது) இராததுமாய், (இனி) இருப்பதுமாயிருக்கிற மிருகத்தைப்பார்த்து ஆச்சரியப்படுவார்கள். ‡ ஞானமுள்ள புத்தி யிங்கேவிளங்கும். * ௰௧. ௭; † ௰௯. ௨௰; ‡ ௰௩. ௮.

௯. * அந்த ஏழு தலைகளும் ஏழுமலைகளே. அவைகளின்மேல் ஸ்திரி உளுக்காந்திருக்கிறாள். * ௰௩. ௧.

௰. அவைகள் ஏழு இராசாக்களாயுமிருக்கின்றன. (இவர்களில்) ஐந்துபேர் விழுந்தார்கள். ஒருவனிருக்கிறான். மற்றவன் இதுவரைக்கும் வரவில்லை. வரும்பொழுது அவன் கொஞ்சகாலந் தரித்திருக்கவேண்டும்.

௰௧. இருந்ததும், (இப்பொழுது) இராததுமாகிய மிருகமே எட்டாவதுமாய், அவ்வேழிலொன்றுமாயிருந்து அழிவுக்குப்போகின்றது.

௰௨. அன்றியும் * நீ கண்ட பத்துக்கொம்புகளும் பத்து இராசாக்களே. அவர்கள் இதுவரையிலும் இராசரிகம் பெறவில்லை. அவர்கள் மிருகத்துடனேகூட ஒருமணிநேரமளவும் இராசாக்களைப்போல அதிகாரம் பெற்றுக்கொள்ளுகிறார்கள் * ௰௩. ௧; தானி. ௭. ௨௪.

௰௩. அவர்கள் ஏகயோசனையுடையவர்கள் மேலும் அவர்கள் தங்கள் வல்லமையையும், அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுக்கிறார்கள்.

௰௪. அவர்களே ஆட்டுக்குட்டியுடனே யுத்தம்பண்ணுவார்கள். ஆட்டுக்குட்டி * கர்த்தாதிகர்த்தாவுமாய், இராசாதிராசாவுமாயிருக்கிறபடியால், அவர்களைச் செயிக்கும். அதினோடே கூடயிருக்கிறவர்களாகிய அழைக்கப்பட்டவர்களுமாய், தெரிந்துகொள்ளப்பட்டவர்களுமாய், உண்மையுள்ளவர்களுமாயிருக்கிறவர்களும் (அவர்களைச் செயிப்பார்கள்) என்றான். * ௰௯. ௰௬.

௰௫. பின்னும் அவன் என்னுடனே சொன்னதாவது; அந்த வேசி உளுக்காந்திருக்கிற தண்ணீர்களைக் கண்டாயே. அவைகள் சனங்களையும், கூட்டங்களையும், தேசத்தாரையும், பாஷைக்காரரையுங்குறிக்கின்றன.

௰௬. அன்றியும் நீ கண்ட பத்துக்கொம்புகளும், அந்த மிருகமுமானவர்கள் அந்த வேசியைப் பகைத்து, அவளைப் பாழும், நிருவாணமுமாக்கி அவளுடைய மாம்சத்தைத் தின்று, அவளை நெருப்பினாற் சுட்டெரித்துப்போடுவார்கள்.

௰௭. என்னத்தினாலென்றால் பராபரன் தம்முடைய யோசனையை அவர்கள் செய்கிறதற்கும், ஏகயோசனையாய்ச் செய்கிறதற்கும், பராபரனுடைய வார்த்தைகள் நிறைவேறுமளவுந் தங்கள் இராசரிகத்தை மிருகத்திற்குக் கொடுக்கிறதற்கும் அவர்களுடைய இருதயங்களில் (யோசனையைக்) கொடுத்தார்.

௰௮. அன்றியும் நீ கண்ட ஸ்திரியானவள் பூமியின் இராசாக்களின்மேல் இராசரிகத்தைச் செலுத்துகிற மகா பட்டணமேயாமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

[(௨) பாபிலோன்விழுந்ததையும், (௪) அவளைவிட்டுப் பிரிந்துபோகப் பராபரனுடைய சனங்களுக்குக் கற்பிக்கப்பட்டதையும், (௯) அவளுக்காகப் பூமியின் இராசாக்களும், (௰௧) வியாபாரிகளும், கப்பற்காரரும் புலம்பினதையும், (௨௰) பராபரனால் அவளுக்கு கிடைத்த ஆக்கினைக்காகப் பரிசுத்தவான்கள் சந்தோஷப்பட்டதையுஞ் சொல்லியது.]

இவைகளுக்குப்பின்பு மிகுந்த அதிகாரமுள்ள வேறொரு தூதன் வானத்தினின்று இறங்கக்கண்டேன். அவனுடைய மகிமையினாலே பூமி பிரகாசமாக்கப்பட்டது.

௨. அவன் பலத்தசத்தத்தோடே கூப்பிட்டதாவது; * மகா பாபிலோன் விழுந்தது. விழுந்தது. † அது பசாசுகளின் குடியிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளுடைய காவலும், அசுத்தமும், அருவருப்புமுள்ள சகலவிதப் பறவைகளுடைய காவலுமாயின.
* ௰௪ ௮; ஏசா. ௨௧. ௯; † ஏசா. ௰௩. ௨௧, ௨௨; எரே. ௫௰. ௩௯, ௪௰; -௫௧. ௩௭.

௩. * அதினுடைய வேசித்தனத்தின் உக்கி

மான இரசத்தை எல்லாத்தேசத்தாருங்குடித்தும், பூமியின் இராசாக்கள் அவளோடே வேசித்தனம்பண்ணியும், பூமியின் வியாபாரிகள் அவளுடைய போகவிகாரத்தின் வலுமையினால் ஐசுவரியவான்களாகியு மிருக்கிறபடியினாலே அப்படியாயிற்றென்றான்.
* ௰௭. ௧, ௨.

௪. பின்பு வேறொருசத்தம் வானத்திலிருந்துண்டாகக்கேட்டேன். அதென்னவென்றால், * என்னுடையசனங்களே! அவளுடையபாவங்கள் வானபரியந்தந்தொடர்ந்தபடியினாலும், அவளுடைய அநியாயங்களைப் பராபரன் நினைத்துக்கொண்டிருக்கிறபடியினாலும், * ஏசா. ௪௮. ௨௰; எரேமி. ௫௧. ௬-௪௫.

௫. நீங்கள் * அவளுடைய பாவங்களுக்கு ஐக்கமாகாமலும், அவளுடைய வாதைகளிற்பங்குபெறாமலுமிருக்கும்படிக்கு அவளிடத்திலிருந்து புறப்படுங்கள். * எரே. ௫௧. ௬.

௬. அவள் * உங்களுக்குப்பதில்செய்தது போல நீங்களும் அவளுக்குப் பதில்செய்து அவளுடைய கிரியைகளின்படி அவளுக்கு இரட்டிப்பாகக்கொடுத்துத்தீருங்கள். அவள் கலந்துகொடுத்த பாத்திரத்திலே இரட்டிப்பாக அவளுக்குக்கலந்துகொடுங்கள்.
* சங். ௱௩௭. ௭; எரே. ௫0. ௰௫—௨௯.

௭. * அவள் தன்னைமகிமைப்படுத்தி மோகவிகாரங்கொண்டதெவ்வளவோ, அவ்வளவாய்வாதையையும், துக்கத்தையும் அவளுக்கு இடுங்கள். தான் இராசஸ்திரியாயிருக்கார்ந்திருக்கிறவளென்றும், தான் கைம்பெண்ணல்லவென்றும், தான் துக்கத்தைக்காண்பதில்லையென்றும் அவள் † தன் இருதயத்திலேயெண்ணிக்கொள்ளுகிறபடியால்,
* ஏசா. ௪௭. ௧—௫; † ஏசா. ௪௭. ௭—௰.

௮. ஒரேநாளிலே அவளுக்கு வாதைகளாகியசாவும், துக்கமும், பஞ்சமும்வரும். அவள் * அக்கினியினாலேசுட்டெரிக்கப்படுவாள். அவளுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்குந்தேவனாகிய பராபரன் பலமுள்ளவராயிருக்கிறாரே. * ௰௭. ௰௬.

௯. * அவளுடனே வேசித்தனம்பண்ணி மோகவிகாரத்தோடே வாழ்ந்த பூமியின் இராசாக்களும் அவள் வேகிறதினாலுண்டான புகையைக்காணும்பொழுது, * ௰௭. ௧.

௰. அவளுக்குண்டானவாதையினாலே பயந்து தூரத்திலேநின்று ஐயையோ மகாபட்டினமாகிய பாபிலோனே! வல்லபட்டினமே! ஒரேமணிநேரத்தினுனக்கு ஆக்கினை வந்ததேயென்று அவளைக்குறித்து அழுது புலம்புவார்கள்.

௰௧. பூமியின் வியாபாரிகளுந் தங்கள்வியாபார பதார்த்தங்களாகிய பொன்னையும், வெள்ளியையும், இரத்தினங்களையும், முத்துக்களையும், மெல்லிதான புடவையையும், இரத்தாம்பரத்தையும், பட்டையும், சிவப்பாடையையும்,

௰௨. சகலவித வாசனைக்கட்டைகளையும், தந்தத்தினாற்செய்திருக்கிற சகலவிதபதார்த்தங்களையும், விலையுயர்ந்தமரத்தாலும், வெண்கலத்தாலும், இரும்பினாலும், வெண்கற்களாலுஞ்செய்திருக்கிற சகலவிதபதார்த்தங்களையும்,

௰௩. இலவங்கப்பட்டையையும், கந்தவர்க்கங்களையும், தயிலத்தையும், தூபவர்க்கத்தையும், திராட்ச இரசத்தையும், எண்ணெயையும், மெல்லியமாவையும், கோதுமையையும், சுமைசுமக்கிற மிருகங்களையும், ஆடுகளையும், குதிரைகளையும், இரதங்களையும், மனிதருடைய ஆத்துமாக்களையும், சரீரங்களையும் இனிக்கொள்வாரில்லாதபடியால், அவளைக்குறித்து அழுதுகொண்டு புலம்புவார்கள்.

௰௪. உன் ஆத்துமா இச்சித்த மாரிக்காலத்தின்பலன்கள் உன்னைவிட்டு நீங்கிப்போயின. சுவைக்கினிமையானவைகள், சிறப்பானவைகள். இவையெல்லாம் உன்னைவிட்டுப்போயின. நீ அவைகளை இனிக்காண்பதில்லை.

௰௫. இப்படிப்பட்டவைகளை வியாபாரம்பண்ணி, இவளால் ஐசுவரியவான்களானவர்கள் தூரமாய்நின்று அவளுக்குவந்த வாதையினாலேபயந்து,

௰௬. ஐயையோ, மெல்லியபுடவையும், இரத்தாம்பரமும், சிவப்பாடையுந்தரித்துப் பொன்னினாலும், இரத்தினத்தினாலும், முத்துக்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்த மகாபட்டினமே! ஒரேமணிநேரத்தில் இவ்வளவு ஐசுவரியமும் அழிந்துபோயிற்றேயென்று அழுது துக்கிப்பார்கள்.

௰௭. * மாலுமிகளியாவருங், கப்பல்களமேலேறிப்போகிறயாவருங் கப்பல்களும், சமுத்திரத்திலே தொழில்செய்கிறயாவருந் தூரத்திலேநின்று, * எசே. ௨௭. ௨௯—௩௧.

௰௮. அவள் வேகிறதினாலுண்டான புகையைப்பார்த்து, இந்த மகாபட்டினத்திற்கொப்பாயிருந்த பட்டினமெது? என்றுசத்தமிட்டு,

௰௯. தங்கள் தலைகளமேற்புழுதியைப்போட்டுக்கொண்டு, ஐயையோ, மகாபட்டினமே! சமுத்திரத்திலே கப்பல்களையுடைய அனைவரும் இதின் உச்சிதமானசம்பூரணத்தினாலே ஐசுவரியவான்களானார்கள். ஒரேமணிநேரத்தில் இதுபாழாய்ப்போயிற்றேயென்றழுது துக்கித்துச்சத்தமிட்டார்கள்.

௨௰. * வானமே! பரிசுத்தவான்களே, அப்போஸ்தலரே, தீர்க்கதரிசிகளே, உங்களுக்காகப் பராபரனவளிடத்திலே நியாயாக்கினையைச்செலுத்தினபடியினாலே யவளைக்குறித்துக்களிகூருங்களென்றான். * ஏசா. ௪௪. ௨௩.

௨௧. அப்பொழுது பலமுள்ள தூதனொருவன் பெரிய எந்திரக் கல்லைப்போலொத்த ஒரு கல்லையெடுத்துச் * சமுத்திரத்திலே யெறிந்துசொன்னதாவது; இப்படியே மகா பட்டினமாகிய பாபிலோன் வேகமாய்த் தள்ளுண்டு இனிக் காணப்படாமற்போம்.
* எரே. ௫௧. ௬௩, ௬௪.

௨௨. சுரமண்டலக்காரரும், கீதவாத்தியக்காரரும், நாகசுரக்காரரும், எக்காளக்காரருமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலே கேட்கப்படுவதுமில்லை. எந்தத் தொழிலாளியும் இனி யுன்னிடத்திற் காணப்படுவதுமில்லை. எந்திரத்தின் சத்தம் இனியுன்னிடத்திற் கேட்கப்படுவதுமில்லை.

௨௩. விளக்குவெளிச்சம் இனி யுன்னிடத்திற் பிரகாசிப்பதுமில்லை. மணவாளனும், மணவாட்டியுமானவர்களுடைய சத்தம் இனியுன்னிடத்திலே கேட்கப்படுவதுமில்லை. உன் வியாபாரிகள் பூமியிற் பெரியோர்களானபடியினாலும், உன் சூனியத்தால் எல்லாத் தேசத்தாரும் வஞ்சிக்கப்பட்டபடியினாலும் (அப்படியேயாம்.)

௨௪. * தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும், பரிசுத்தவான்களுடைய இரத்தமும், பூமியின் மேற் கொல்லப்பட்ட அனைவருடைய இரத்தமும் அதினிடத்திலே காணப்பட்டதென்றான். * ௰௭. ௬.

## ௰௯. அதிகாரம்.

[(௧) பெரிய வேசி நியாயந்தீர்க்கப்பட்டதற்காகவும், பரிசுத்தவான்களின் இரத்தம் பழிவாங்கப்பட்டதற்காகவும் வானோர் பராபரனைப் புகழ்ந்ததையும், (௭) ஆட்டுக்குட்டியின் கலியாணத்தையும், (௰) தூதன் தேவவணக்கத்தைத் தன்னளவில் விலக்கினதையும், (௰௭) பெரிய சங்காரத்துக்குப் பட்சிகள் அழைக்கப்பட்டதையுஞ் சொல்லியது.]

இவைகளுக்குப்பின்பு * பரமண்டலத்திலே திரளான கூட்டம் இடுகிற சத்தம்போன்ற ஒரு சத்தத்தைக் கேட்டேன். என்னவென்றால், * ௰௮. ௨௰.

௨. தன் வேசித்தனத்தினாலே பூமியைக் கெடுத்த பெரிய வேசிக்கு நம்முடைய பராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுத்துத் தம்முடைய ஊழியக்காரரின் இரத்தத்திற்காக அவளிடத்திற் பழியை வாங்கினதினாலே * அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும், நீதியுமுள்ளவைகளாகையால், அல்லேலூயா † இரட்சணியமும், மகிமையும், கனமும், வல்லமையும் அவருக்குண்டாயிருக்கின்றனவென்பதே. * ௰௫. ௩, ௪; † ௰௧. ௰௫-௰௮.

௩. மறுபடியும் அல்லேலூயா * அவளுடைய புகை என்றென்றைக்கும் எழும்புமென்றார்கள். * ௰௪. ௰௧.

௪. அல்லாமலும் * இருபத்துநான்கு மூப்பரும், நான்கு ஜீவன்களும் (வணக்கமாய) விழுந்து, ஆமென். அல்லேலூயாவென்று சொல்லி, ஆசனத்தின்மேல் உட்கார்ந்த பராபரனைத் தொழுதுகொண்டார்கள்.
* ௪. ௪.

௫. மேலும் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரே! அவருக்குப் பயப்படுகிற சிறியோரும், பெரியோருமானவர்களே! நீங்கள் யாவரும் அவரைத் துதியுங்களென்றொரு சத்தம் ஆசனத்திலிருந்து புறப்பட்டது.

௬. அப்பொழுது திரளான சனங்களுடைய சத்தம்போலவும், பெருவெள்ள இரைச்சலைப்போலவும், பலத்த இடிமுழக்கம்போலவும் ஒருசத்தமுண்டாகக் கேட்டேன். என்னவென்றால், சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரன் * இராசரிகம்பண்ணுகிறார். ஆகையால் அல்லேலூயா. * ௰௧. ௰௫—௰௭.

௭. ஆட்டுக்குட்டியினுடைய கலியாணம் வந்தது. அவருடைய மனைவி தன்னை ஆயத்தம்பண்ணினாள். சுத்தமும், பிரகாசமுமான மெல்லிய புடவையைத் தரித்துக்கொள்ளும்படி அவளுக்கு அளிக்கப்பட்டது. ஆகையால் நாம் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து அவருக்குத் துதியைச் செலுத்தக்கடவோமென்பதே.

௮. மெல்லிய புடவை * பரிசுத்தவான்களுடைய நீதிகளே. * ஏசா. ௬௧. ௰.

௯. பின்னும் அவன் என்னுடனே சொன்னது, ஆட்டுக்குட்டியின் கலியாணவிருந்துக்கழைக்கப்பட்டவர்கள் பாக்கியவான்களென்றெழுதென்றான். பின்னும் * இவைகள் பராபரனுடைய சத்தியமானவார்த்தைகளாயிருக்கின்றனவென்று என்னுடனே சொன்னான்.
* ௨௧. ௫.

௰. அப்பொழுது * அவனைத்தொழுதுகொள்ளும்படி அவனுடைய பாதங்களின் முன்பாக விழுந்தேன். அவன் என்னுடனே சொன்னது, இப்படிச் செய்யாதபடிக்குப் பார். நான் உன்னோடும், இயேசுவின் சாட்சியையுடைய உன் சகோதரரோடுங்கூட ஊழியக்காரனாயிருக்கிறேன். பராபரனைத் தொழுதுகொள். இயேசுவின் சாட்சி தீர்க்கதரிசனத்தின் ஆவியாயிருக்கிறதேயென்றான். * ௨௨. ௮, ௯.

௰௧. பின்பு நான் வானந்திறந்திருக்கக்கண்டேன். உடனே இதோ * ஒருவெண்குதிரை தோன்றிற்று. அதின்மேலிருந்தவர் † உண்மையும், சத்தியமுமுள்ளவனென்னப்படுகிறார். அவர் நீதியாய்த் தீர்ப்புக்கொடுத்து யுத்தம்பண்ணுகிறார். * ௬. ௨; † ௧. ௫; ௩. ௰௪.

௰௨. * அவருடைய கண்கள் அக்கினிச் சுவாலையைப்போலிருந்தன. அவருடைய சிரசின்மேல் அநேக முடிகளிருந்தன. அவருக்கேயன்றி, வேறொருவனுக்குந் தெரியாத ஒரு நாமம் எழுதியிருந்தது. * ௧. ௰௪.

௰௩. * இரத்தத்திலே தோய்க்கப்பட்ட வஸ்திரத்தை யுடுத்தியிருந்தார். அவருடைய நாமமே † பராபரனுடைய வார்த்தையென்னப்பட்டது. * ஏசா. ௬௩. ௧-௪; † யோவா. ௧. ௧.

௰௪. * பரமண்டலத்திலுள்ள சேனைகள் வெண்மையும், சுத்தமுமான மெல்லிய புடவையைத் தரித்துக்கொண்டவர்களாய் வெண்குதிரைகள்மேலிருந்து அவருக்குப் பின் சென்றார்கள். * ௰௭. ௰௪.

௰௫. உலகத்தாரை வெட்டும்படிக்கு * அவருடைய வாயிலிருந்து கூர்மையான கட்கம் புறப்படுகின்றது. † இருப்புக்கோலால் அவர்களை ஆளுகைசெய்வார். அவர் சர்வவல்லமையுள்ள பராபரனுடைய உக்கிரகோபமாகிய இரசமுள்ள திராட்சத்தொட்டியில மிதிக்கிறார். * ௧. ௰௬; ௨. தெச. ௨. ௮; † சங்கீ. ௨. ௯.

௰௬. * இராசாதி இராசாவும், கர்த்தாதி கர்த்தாவுமானவரென்னும் நாமம் அவருடைய வஸ்திரத்தின்மேலும், தொடையின்மேலும் எழுதப்பட்டிருந்தது. * ௰௭. ௰௪.

௰௭. பின்பு சூரியனிடத்தில் ஒரு தூதன் நிற்கக்கண்டேன். அவன் வானத்தின் மத்தியில் பறக்கிற சகல பறவைகளையும் நோக்கி,

௰௮. * நீங்கள் இராசாக்களுடைய மாம்சத்தையும், சேனைத்தலைவருடைய மாம்சத்தையும், பலவான்களுடைய மாம்சத்தையும், குதிரைகளுடைய மாம்சத்தையும், அவைகளின்மேலிருக்கிறவர்களுடைய மாம்சத்தையும், சுவாதீனர், அடிமைகள், சிறியோர், பெரியோர் இவர்களெல்லாருடைய மாம்சத்தையுந் தின்னும்படிக்கு மகா பராபரனுடைய விருந்துக்குக் கூடிவாருங்களென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான். * எசே. ௩௯. ௰௭—௨௰.

௰௯. பின்பு அம்மிருகமும், பூமியின் இராசாக்களும், அவர்களுடைய சேனைகளும் அந்தக் குதிரையின்மேலிருக்கிறவரோடும், அவருடைய சேனையோடும் யுத்தம்பண்ணும்படிக்குக் கூடிக்கொண்டிருக்கக்கண்டேன்.

௨௰. அப்பொழுது அம் * மிருகமும் அதின் முன்பாகச்செய்த அடையாளங்களால் மிருகத்தின் அடையாளத்தைத் தரித்தவர்களையும், அதின் சொரூபத்தைத் தொழுதுகொண்டவர்களையும், வஞ்சித்த † கள்ளத்தீர்க்கதரிசியுங்கூடப் பிடிக்கப்பட்டு இருவரும் உயிரோடே கந்தகம் எரிகிற அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டார்கள். * ௰௩. ௪; † ௰௩. ௰௩.

௨௧. மற்றவர்களுங் குதிரையின்மேலிருக்கிறவருடைய வாயிலிருந்து புறப்படுகிற கட்கத்தாற் கொலைசெய்யப்பட்டார்கள். பறவைகள்யாவும் அவர்களுடைய மாம்சத்தினாலே திருத்தியடைந்தன.

## ௨௰. அதிகாரம்.

[(௧) சாத்தான் ஆயிரம்வருஷங் கட்டப்பட்டதையும், (௬) முதலாம் உயிர்த்தெழுதலையும், அதிற் பங்கு பெறுகிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களென்பதையும், (௭) சாத்தான் மறுபடியும் விடுதலையானதையும், (௮) கோகு, மாகோகின் காரியத்தையும், (௰) அக்கினியும், கந்தகமுமுள்ள கடலிலே பசாசு தள்ளப்பட்டதையும், (௰௨) பொதுவான கடைசி உயிர்த்தெழுதலையுங் குறித்துச் சொல்லியது.]

அன்றியும் ஒரு தூதன் பாதாளத்தின் * திறவுகோலையும், பெரிய சங்கிலியையுந் தன் கையிலே பிடித்துக்கொண்டு வானத்திலிருந்திறங்கக்கண்டேன். * ௧. ௰௮.

௨. அவன் * பசாசென்றும், சாத்தானென்றுஞ்சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்பத்தைப்பிடித்து அதை ஆயிரம் வருஷமளவுங் கட்டிப் பாதாளத்திலே தள்ளியடைத்து அதின்மேல் முத்திரைபோட்டான். * ௰௨. ௯.

௩. அந்த ஆயிரம்வருஷம் நிறைவேறுமளவுக்கும் அது உலகத்தாரை வஞ்சனைசெய்யாதபடிக்கே (அப்படிச்செய்தான்.) அவற்றிற்குப்பின்பு அது கொஞ்சக்காலம் விடுதலையாகவேண்டும்.

௪. அன்றியும் நான் ஆசனங்களைக்கண்டேன். அவைகளின்மேல் உட்கார்ந்தார்கள். நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படி அவர்களுக்கு அளிக்கப்பட்டது. இயேசுவினுடைய சாட்சியினிமித்தமும், பராபரனுடைய வசனத்தினிமித்தமும் சிரச்சேதம்பண்ணப்பட்டவர்களுடைய ஆத்துமாக்களையும், மிருகத்தையாவது, அதின் சொரூபத்தையாவது தொழுதுகொள்ளாமலும், தங்கள் நெற்றியிலும், தங்கள் கையிலும் அதினடையாளத்தைத் தரித்துக்கொள்ளாமலும் இருந்தவர்களையுங் (கண்டேன்.) அவர்கள் உயிரடைந்து கிறிஸ்துவுடனேகூட ஆயிரம்வருஷம் இராசரிகம்பண்ணினார்கள்.

௫. மரித்த மற்றவர்கள் ஆயிரம்வருஷம் நிறைவேறுமளவும் உயிரடையவில்லை. இது முதலாம் உயிரோடெழுந்திருக்குதல்.

௬. முதலாவது உயிரோடெழுந்திருக்குதலுக்குப் பங்குள்ளவன் பாக்கியவானுமாய், பரிசுத்தனுமாயிருக்கிறான். அவர்கள்மேல் * இரண்டாம்மரணம் அதிகாரத்தையுடையதல்ல. அவர்கள் † பராபரனுக்கும், கிறிஸ்துவுக்கும் முன்பாக ஆசாரியராயிருந்து அவரோடேகூட ஆயிரம்வருஷம் இராசரிகம்பண்ணுவார்கள். * ௨. ௰௧; † ௫. ௰.

௭. அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்பொழுது சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலையாகி,

குட்டியினுடைய மனைவியாகிய ஸ்திரீயை உனக்குக் காண்பிக்கிறேன் வாவென்று என்னோடே சொல்லி, * ௰௯. ௭.

௰. பெரிதும், உயரமுமான ஒரு பர்வதத்தின்மேல் என்னை ஆவிக்குட்கொண்டுபோய்ப் பராபரனுடைய பரமண்டலத்திலிருந்திறங்கினதும், பராபரனுடைய மகிமையையுடைத்திருக்கிறதுமான எருசலேமென்னும் பரிசுத்த பட்டணத்தை எனக்குக் காண்பித்தான்.

௰௧. அதின் ஒளி அருமையான * இரத்தினக்கல்லைப்போலவும், பளிங்கொளியுள்ள யாஸ்பிக்கல்லைப்போலவுமிருந்தது. * ௪. ௩.

௰௨. அதுபெரிதும், உயரமுமான மதிலையும், * பன்னிரண்டு வாசல்களையும், அந்த வாசல்களின்மேலே பன்னிரண்டு தூதரையுமுடையதாயிருந்தது. (அவைகளின்மேலே) இஸ்ரவேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரத்தாருடைய நாமங்கள் எழுதப்பட்டிருந்தன. * எசேக். ௪௮. ௩௧—௩௪.

௰௩. கிழக்கே மூன்று வாசல்களும், வடக்கே மூன்று வாசல்களும், தெற்கே மூன்று வாசல்களும், மேற்கே மூன்று வாசல்களுமுண்டாயிருந்தன.

௰௪. அன்றியும், பட்டணத்தின் மதில் * பன்னிரண்டு அஸ்திபாரங்களுமுடையதாயிருந்தது. அவைகளில், ஆட்டுக்குட்டியின் பன்னிரண்டு அப்போஸ்தலருடைய பன்னிரண்டு நாமங்களுமிருந்தன. * எபே. ௨. ௨௰.

௰௫. அல்லாமலும், என்னோடே பேசினவன் * பட்டணத்தையும், அதின் வாசல்களையும், அதின் மதிலையும் அளக்கிறதற்குப் பொன்னாகிய கோலைப்பிடித்திருந்தான். * சகரி. ௨. ௧, ௨.

௰௬. மேலும் அந்தப் பட்டணம் சதுரமாயிருக்கின்றது. அதின் அகலம் எவ்வளவோ அவ்வளவாய் நீளமுமிருக்கிறது. அவன் அந்தக் கோலினாலே பட்டணத்தையளந்தான். பன்னீராயிரம் ஸ்தாதியாயிருந்தது. அதின் நீளமும், அகலமும், உயரமும் சமமாயிருக்கின்றன.

௰௭. தூதனுக்கிருந்த மனித அளவின்படியேயவன் அதின் மதிலையளந்தபொழுது நூற்றுநாற்பத்துநான்கு முழமாயிருந்தது.

௰௮. மேலும், அதின் மதில் யாஸ்பிக்கல்லாற் கட்டப்பட்டிருந்தது. பட்டணம் சுத்தப் பளிங்குக்கொப்பாகிய சுத்தப்பொன்னாயிருந்தது.

௰௯. அன்றியும், பட்டண மதில்களின் அஸ்திபாரங்கள் * சகலவித இரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. (அவையாவன.) முதலாம் அஸ்திபாரக்கல் யாஸ்பிக்கல். இரண்டாவது நீலக்கல். மூன்றாவது வயிரம். நான்காவது மரகதம். * ஏசாயா. ௫௪. ௰௧, ௰௨.

௨௰. ஐந்தாவது கோமேதகம். ஆறாவது சிவப்பு. ஏழாவது அக்கினிக்கல். எட்டாவது படிகப்பச்சை. ஒன்பதாவது புஷ்பராகம். பத்தாவது வயிடூரியம். பதினோராவது பதுமராகம். பன்னிரண்டாவது சுகந்திக்கல் இவைகளே.

௨௧. மேலும் பன்னிரண்டு வாசல்களும், பன்னிரண்டு முத்துக்களாயிருந்தன. வாசல்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு முத்தாயிருந்தது. மேலும் பட்டணத்தின் வீதி தெளிவுள்ள கண்ணாடியைப்போலச் சுத்தப்பொன்னாயிருந்தது.

௨௨. தேவாலயத்தை நான் அதிலே காணவில்லை. சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரனும், ஆட்டுக்குட்டியுமே அதின் ஆலயம்.

௨௩. * பட்டணத்தைப் பிரகாசிப்பிக்கும்படிக்குச் சூரியனும், சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை. பராபரனுடைய மகிமையே யதைவெளிச்சமாக்கிறது. ஆட்டுக்குட்டியே அதின் விளக்கு. * ௨௨. ௫; ஏசா. ௬௰. ௰௯, ௨௰.

௨௪. * உலகத்தார்கள் அதின் ஒளியிலே நடப்பார்கள். பூமியின் இராசாக்கள் தங்கள் மகிமையையும், கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள். * சங்கீ. ௭௨. ௰௧; ஏசா. ௬௰. ௩.

௨௫. அங்கே * இராக்காலமில்லாதபடியால் † அதின் வாசல்கள் ஒருக்காலும் பூட்டப்படாதிருக்கும். * ௨௨. ௫; † ஏசாயா. ௬௰. ௰௧.

௨௬. உலகத்தார்களுடைய மகிமையையும், கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

௨௭. அசுசிப்படுத்துகிறதும், அருவருப்பையும், பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதிற்பிரவேசியாது. ஆட்டுக்குட்டியின் * ஜீவபுஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள்மாத்திரம் (அதிற் பிரவேசிப்பார்கள்.) * ௩. ௫; ௨௰. ௰௨.

## ௨௨. அதிகாரம்.

[(௧) ஜீவத்தண்ணீருடைய நதியையும், (௫) பராபரனுடைய பட்டணத்திற்கு வெளிச்சம் பராபரன்தாமேயென்பதையும், (௯) தேவதூதன் தேவவணக்கத்தைத் தனக்கு வாங்கவில்ல விலக்கினதையும், (௰௮) பராபரனுடைய வசனத்திலெதையாகிலுஞ்சேர்க்கவும், குறைக்கவுங்கூடாதென்றதையுஞ் சொல்லியது.]

அன்றியும் * பராபரனும், ஆட்டுக்குட்டியுமிருக்கிற ஆசனத்திலிருந்து புறப்பட்டுவந்து பளிங்கைப்போலத் தெளிவான ஜீவத்தண்ணீருள்ள நதியையெனக்குக் காண்பித்தான். * எசேக். ௪௭. ௧—௰௨.

௨. பட்டணத்தின் நடுவீதியிலும், நதியின் இருகரையிலும் பன்னிரண்டுவிதமான கனிகளைச் சுமந்து மாதந்தோறுந் தன் கனியைக் கொடுக்கிற * ஜீவவிருட்சமிருந்தது. அந்த விருட்சத்தின் இலைகள் உலகத்தார்கள் ஆரோ

சுகமடைகிறதற்கேதுவானவைகள். இனி மேற் சாபமில்லை. * ௨. ௭; ௧. யோ. ௨. ௯.

௩. பராபரனும், ஆட்டுக்குட்டியுமிருக்கிற ஆசனமே யதிலிருக்கும்.

௪. அவருடைய ஊழியக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து, * அவருடையசமுகத்தைத்தரிசிப்பார்கள். † அவருடையநாமம் அவர்களுடையநெற்றிகளிலிருக்கும். * மத். ரு. அ; † ௩. ௰௨; -௰௪. ௧.

௫. *அங்கேயிரவில்லை. ஒருவிளக்கும், சூரியனுடைய ஒளியும் அவர்களுக்கு வேண்டுவதில்லை. தேவனாகியபராபரனே யவர்களுக்கு ஒளியைக்கொடுப்பார். அவர்கள் † என்றென்றைக்கும் இராசரிகம்பண்ணுவார்கள்.
* ௨௧. ௨௩-௨௫; † தானி. ௭. ௨௭.

௬. பின்பு அவர் என்னுடனே சொன்னதாவது; * இந்தவசனங்கள் உண்மையும், சத்தியமுமானவைகள். † சீக்கிரமாயச் சம்பவிக்கவேண்டியவைகளைத் தம்முடையஊழியக்காரருக்குக்காண்பிப்பதற்குத் தீர்க்கதரிசிகளின் ஆவிகளுடைய தேவனாகிய பராபரன் தம்முடைய தூதனையனுப்பினார்.
* ௨௧. ரு; † ௧. ௧.

௭. கேளுங்கள். சீக்கிரமாயவருகிறேன். * இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கியவானென்றார். * ௧. ௩.

௮. யோவானாகிய நானே இவைகளைக்கண்டுகேட்டேன். நான் கேட்டுக்கண்டபொழுது இவைகளையெனக்குக்காண்பித்த * தூதனுடையபாதங்களின்முன்பாகத் தொழுதுகொள்ளவிழுந்தேன். * ௰௯. ௰.

௯. அவன் என்னைநோக்கி, நீ இப்படிச் செய்யாதபடிக்குப்பார். உன்னோடும், உன் சகோதரராகிய தீர்க்கதரிசிகளோடும், இந்தப் புத்தகத்தினவசனங்களைக் கைக்கொள்ளுகிறவர்களோடுங்கூட நானும் ஊழியக்காரனாயிருக்கிறேன். பராபரனைத் தொழுதுகொள் என்றான்.

௰. மேலும் அவர் என்னுடனேசொன்னதாவது; * காலஞ் சமீபமானபடியினாலே இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளை முத்திரைபோடாதிருப்பாயாக.
* ௧. ௩.

௰௧. * அக்கிரமக்காரன் பின்னும் அக்கிரமஞ்செய்யட்டும். அழுக்காயிருக்கிறவன் பின்னும் அழுக்காயிருக்கட்டும். † நீதியுள்ளவனும் பின்னும் நீதிசெய்யட்டும். பரிசுத்தமுள்ளவனும் பின்னும் பரிசுத்தமாகட்டும். * ௨. தீமோ. ௩. ௰௩; † ௨. கொரி ௭. ௧.

௰௨. கேளுங்கள். சீக்கிரமாயவருகிறேன். * அவனவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாய் அவனவனுக்குப் பதில் அளிக்கும்படிக்கு என் பலன் என்னோடேகூடவருகிறது. * உரோ. ௨. ௬.

௰௩. * நான் அல்பாவும், ஓமேகாவுமாகிய ஆதியும், அந்தமுமாய், முந்தினவரும், பிந்தினவருமாயிருக்கிறேன். * ௧. அ; -௨௧. ௬.

௰௪. ஜீவவிருட்சத்தின்மேல் அதிகாரமுள்ளவர்களாகும்படிக்கும், வாசல்களால் பட்டணத்திற்குட்பிரவேசிக்கும்படிக்கும், அவருடைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௰௫. * நாய்களும், சூனியக்காரரும், வேசிமார்க்கரும், கொலைபாதகரும், விக்கிரக ஆராதனைக்காரரும் பொய்யைவிரும்பி நடப்பிக்கிறயாவரும் புறம்பேயிருப்பார்கள்.
* ௨௧. அ.

௰௬. சபைகளுக்காக இவைகளை யுங்களுக்கு அறிவிக்கும்படிக்கு இயேசுவாகிய நான் என்னுடைய தூதனையனுப்பினேன். * நான் தாவீதின் வேருமாய், சந்ததியுமாய், † பிரகாசமுள்ள விடிவெள்ளிநட்சத்திரமுமாயிருக்கிறேனென்றார். * ரு. ரு; † ௨. பேது. ௧. ௰௯.

௰௭. ஆவியும், மணவாட்டியும் வாவென்கிறார்கள். (இவைகளைக்) கேட்கிறவனும் வாவென்பானாக. * தாகமாயிருக்கிறவன் வரக்கடவன். விருப்பமுள்ளவன் ஜீவத்தண்ணீரைக் கைம்மாறில்லாமல் வாங்கக்கடவன். * ௨௧. ௬; யோவா. ௭. ௩௭.

௰௮. மேலும் இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளைக்கேட்கிறயாவருக்கும் நான் அறிவிக்கிறதாவது; ஒருவன் இவைகளோடே (எதையாகிலும்) கூட்டினால் இந்தப்புத்தகத்தில் எழுதியிருக்கிற வாதைகளைப் பராபரன் அவன்மேல் கூட்டுவார்.

௰௯. ஒருவன் இந்தத் தீர்க்கதரிசன புத்தகத்தின்வார்த்தைகளில் (எதையாகிலும் எடுத்துப்போட்டால் இந்தப்புத்தகத்தில் எழுதப்பட்டவைகளாகிய ஜீவவிருட்சத்திலும், பரிசுத்தபட்டணத்திலுமுள்ள பங்கைப்பராபரன் அவனிடத்திலிருந்து எடுத்துப்போடுவார்.

௨௰. இவைகளை யறிவிக்கிறவர் மெய்யாய் நான் சீக்கிரமாய்வருகிறேனென்கிறார். ஆமென். கர்த்தராகிய இயேசுவே! வாரும்.

௨௧. நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்கிருபை உங்கள் அனைவரோடுங் கூடவிருப்பதாக. ஆமென்.

முற்றிற்றுமுற்றும்.